கழக வெளியீடு: கஉகஅ

உ

திருச்சிற்றம்பலம்

கவிஞர் பெருமான் கச்சியப்ப முனிவர்

அருளிய

# தணிகைப் புராணம்

## விளக்கவுரையுடன்



உரையாசிரியர்கள்:

பேராசிரியர் கந்தசாமியார்

செல்லூர்க்கிழார்,

செ ரெ இராமசாமிப் பிள்ளை

பெருமழைப் புலவர்,

பொ வே சோமசுந்தரனார்



திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,

திருநெல்வேலி - 6. சென்னை - 1.

1965



திருத்தணிகைப்பெருமான் வள்ளி தெய்வயானையுடன்
எழுந்தருளியிருக்கும் திருக்கோலம்

# பதிப்புரை

தணிகைப் புராணம் என்னும் இந்நூல் திருத்தணிகையில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் பரம்பொருளாகிய முருகப் பெருமானின் திருவருட் செயல்களை விளக்கும் முகத்தான் மக்களாகப் பிறந்தாரனைவரும் அடைதற்குரிய அறம் பொருள் இன்பம் வீடுபேறு என்னும் உறுதிப் பொருள்கள் நான்கையும் நன்கு விளக்கிக் கூறும் ஒப்புயர்வற்ற மாண்பு சான்ற ஒரு பெருநூலாகும். இத்தகு சிறப்பு வாய்ந்த நூலைக் கவிஞர் பெருமக்களாகிய விண்மீன்களுக்கிடையே நிறைவெண் மதியெனத் திகழ்ந்த தவத்திரு கச்சியப்ப முனிவர் இயற்றியருளினார்.

சங்க நூல்கள், காப்பியங்கள், திருமுறைகள், மெய்கண்ட நூல்கள், ஏனைய திருவூர்ப் புராணங்கள் முதலாகவுள்ள எல்லா நூல்களின் சாரமாகவும் இந்நூல் விளங்குவதால் கற்றுணர்ந்த யாவராலும் நன்கு பாராட்டப்படுகின்றது. பொதுவாகக் கூறுமிடத்து நம் தமிழன்னையும், தமிழ்நாடும் செய்த தவத்தின் பயனே இந்நூலைத் தோற்றுவித்தது என்றே சொல்லுதல் தகும்.

இது நாட்டுப் படலம் முதல் நாரதன் அருள் பெறு படலம் ஈறாக இருபது படலங்களையும், காப்பும், அவையடக்கமும், படலங்கள் இருபதும் சேர்ந்த ௩௧௬௧ செய்யுள்களையும் பெற்று விளங்குகிறது. இந்நூலில் உள்ள செய்யுள்களில் ௧௫௭௬க்குப் பேராசிரியர் திரு. கந்தசாமியாரவர்கள் முன்னரே உரை எழுதி வைத்திருந்தார்கள். அவர்கள் இறைவன் திருவடியில் இரண்டறக் கலந்து விட்டதால் கையெழுத்துப் படியிலிருந்த அதனை அரிதின் முயன்று தேடிப் பெரும் பொருள் கொடுத்துப் பெற்றுப் பதிப்பிக்கத் தொடங்குகையில் எஞ்சியுள்ள பகுதிகளுக்கும் உரையிருந்தால் நலமாயிருக்குமென எண்ணி உரைகாண வல்லாரை நாடினேன். அவ்வமயம் திருவாளர்கள் செ. ரா. இராமசாமிப் புலவரவர்களும், பெருமழைப் புலவர் பொ. வே. சோமசுந்தரனாரவர்களும் தாமாகவே முன்வந்து உரை எழுதி உதவினார்கள். எவராலும் உரைகாண இயலாது என்று கருதப்பட்டு வந்த தணிகைப் புராணத்திற்கு உரை எழுதி உதவியது மிகமிகப்

போற்றத்தகுந்த செயலாகும். நுண்மாண் நுழைபுலம்மிக்க இப் பேரறிஞர்களின் செயலால் நம் தமிழன்னையும், தமிழ்நாடும் பெரும் பயனுறுவது திண்ணம்.

தணிகைப்புராணத்தை அதன் பெருமைக்கு ஏற்ற உரையுடன் பதிப்பித்து நல்கும் பேறு எங்கள் கழகத்திற்கு வாய்த்தது குறித்துப் பெருமிதமும் பெருமகிழ்வும் அடைந்துள்ளோம்.

கற்பவர்களின் நலனைக் கருதியும், திருத்தணிகையைக் குறித்து இம்முனிவரர் பாடியருளிய நூல்கள் மூன்றும் சேர்ந்து ஒரே தொகுதியாக இருப்பதுவே பொருத்தமாகும் என்பது கருதியும் திருத்தணிகைப் பதிற்றுப்பத்து அந்தாதி, திருத் தணிகை ஆற்றுப்படை என்னும் இருநூல்களையும் இந்நூலின் பின்னர் இணைத்துள்ளோம்.

திருத்தணிகைப் பதிற்றுப்பத்து அந்தாதிக்கு எங்கள் கழகப் புலவர் திரு. ஆ. பொன்னுசாமிப்பிள்ளையவர்கள் குறிப்புரை எழுதியுதவியுள்ளார்கள். அதற்கு இதுவரையிலும் யாரும் உரை எழுதவில்லை.

திருத்தணிகையாற்றுப்படைக்குப் புரசை அட்டாவதானம் சபாபதி முதலியாரவர்கள் எழுதியருளிய விரிவுரை சாலச்சிறந்ததாக இருந்தமையால் அவ்வுரையுடன் அதனைப் பதிப்பிக்கலானோம்.

பேராசிரியர் திரு கந்தசாமியாருட்பட எல்லா உரையாசிரியர்களுக்கும் நாங்கள் எழுமையும் நன்றி பாராட்டக் கடமைப் பட்டுள்ளோம்.

இந்நூல் வெளியீட்டுச் செலவுத் தொகையில் ஒருபகுதி மத்திய அரசின் அறிவியலாராய்ச்சி பண்பாடு செய்தித் துறை அமைச்சரால் நன்கொடையாக வழங்கப் பெற்றிருக்கிற தென்பதை நன்றியறிதலுடன் தெரிவித்துக் கொள்ளுகின்றோம்.

நம் செந்தமிழன்னைக்குப் பெருமைமிக்க அணிகலன்களாக விளங்கும் இந்நூல்களையும் தமிழகம் ஏற்றுக்கொண்டு மேலும் இத்தகைய திருப்பணியில் எங்களை ஊக்கத்தோடு நடுபடும்படி செய்யும் என நம்புகின்றோம்.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்**

# உள்ளுறை


| | பக்கம் |
|---|---|
| பதிப்புரை | 3 |
| ஆராய்ச்சி முன்னுரை | 9 |
| நூலாசிரியர் வரலாறு | 52 |
| உரை வரலாறு | 57 |
| திருத்தணிகைப் புராண உரைநடைச் சுருக்கம் | 65 |
| விநாயகர் காப்பு | ௧ |
| கடவுள் வாழ்த்து | ௩ |
| அவையடக்கம் | ௧௦ |
| திருநாட்டுப் படலம் | ௧௨ |
| திருநகரப் படலம் | ௯௨ |
| நைமிசப் படலம் | ௧௫௯ |
| புராண வரலாற்றுப் படலம் | ௧௬௭ |
| வீராட்டகாசப் படலம் | ௨௦௫ |
| குமரேசப் படலம் | ௨௫௬ |
| பிரமன் சிருட்டி பெறு படலம் | ௨௭௪ |
| நந்தி யுபதேசப் படலம் | ௩௧௬ |
| அகத்தியன் அருள்பெறு படலம் | ௩௮௩ |
| சிபரிபூரண நாமப் படலம் | ௬௩௫ |
| பிரமனருள் பெறு படலம் | ௮௬௬ |
| நாரணனருள்பெறு படலம் | ௮௭௬ |
| இந்திரன் அருள்பெறு படலம் | ௮௮௮ |
| நாகமருள் பெறு படலம் | ௮௯௩ |
| இராமன் அருள்பெறு படலம் | ௯௦௩ |
| களவுப் படலம் | ௯௨௧ |
| வள்ளிநாயகி திருமணப் படலம் | ௧௨௬௧ |
| விடையருள் படலம் | ௧௩௫௨ |
| நாரதன் அருள்பெறு படலம் | ௧௩௬௮ |
| செய்யுள் முதற்குறிப்பு அகரவரிசை | ௧௪௦௫ |
| அருஞ்சொற்பொருள் அகரவரிசை | ௧௪௩௬ |
| திருத்தணிகைப் பதிற்றுப்பத்தந்தாதி | ௧௪௮௧ |
| திருத்தணிகையாற்றுப்படை | ௧௫௨௭ |



கவிஞர் பெருமானர் கச்சியப்ப முனிவர்



கச்சியப்ப முனிவர் கற்கோவில்

பிள்ளையார்பாளையம், காஞ்சீபுரம்

# ஆராய்ச்சி முன்னுரை

[பெருமழைப்புலவர், பொ. வே. சோமசுந்தரனார்]

'**தணிகைப் புராணம்**' என்னும் இத்தண்டமிழ்ப் பெருங் காப்பியம் நந்தமிழகத்தில் கி. பி. பதினெட்டாம் நூற்றாண்டிற் றோன்றிய தமிழிலக்கியங்களிற் றலைசிறந்ததொரு பேரிலக்கிய மாகும். இதனை இயற்றியருளிய புலவர் பெருமான் கச்சியப்ப முனிவர் எனும் வினையின் நீங்கி விளங்கிய அறிவின் மெய்த்தவத் துறவோர் ஆவர். இத்தகைய துறவோரே மக்கட்கு உறுதிப் பொருள்களை யுணர்த்தும் தகுதியுடையோராவர் என்பதனை, திருக் குறளில் '**நீத்தார் பெருமை**' என்னும் அதிகாரத்திற்கு ஆசிரியர் பரிமேலழகர் முன்னுரையில் "அஃதாவது, முற்றத்துறந்த முனிவரது பெருமை கூறுதல். அவ்வறமுதற் பொருள்களை உலகிற்கு உள்ளவாறுணர்த்துவார் அவராகலின் இது வான் சிறப்பின்பின் வைக்கப்பட்டது," என்று நுண்ணிதின் ஓதுமாற்றா லுணரலாம். தணிகைப் புராணத்தைத் திருவாய்மலர்ந்தருளிய கச்சியப்பமுனிவர்தாமும் தாமெடுத்துக்கொண்ட திருக்கோயிற் சிறப்புக்களையே பாரித்துக் கூறுகின்ற ஏனைய கோயிற் புராணங் களைப் போலாது இப்புராணத்தில் தணிகையின் பெருமை கூறு மாற்றால் மக்கள் வாழ்க்கைக்கு இன்றியமையாத '**அறம் பொருள் இன்பம் வீடு**' என்னும் உறுதிப்பொருள் நான்கனையுமே கூறு மொரு பெருங் காபபியமாகவே இயற்றியிருக்கின்றனர். இவ் வாற்றால் புராணங்களுள் வைத்து இத்தணிகைப் புராணம் தனிப் பெருஞ் சிறப்புடையதாம்.

இனி, நமது செந்தமிழ் நூல் வரலாற்றை நோக்கின் இலக் கியங்கள் காலந்தோறும் புதிய புதிய முறையிலே தோன்றி யிருத்தலை யுணரலாம். மிகப் பழைய நம் இலக்கியங்கள் பாட்டுந் தொகையும் கீழ்க்கணக்கும் என்னும் முக்கூற்றனவாய் அமைந் திருத்தலும், சங்க நூல்கள் என்னும் இவற்றிற்குப் பின்னர் ஐம் பெருங் காப்பியங்களும் ஐஞ்சிறு காப்பியங்களும் ஆகிய இவை யெல்லாம் ஒருவகைபபட்ட இலக்கியங்களாக அமைந்திருத்தலும், இக்காப்பியங்களின் பின்னர்த் தேவாரமே, திருவாசகமே, பிரபந் தங்களே என்னும் இவையெல்லாம் ஒருவகைப்பட்ட இலக்கியங் களாக அமைந்திருத்தலும், இவற்றிற்குப் பின்னர்த் திருத் தொண்டர் புராண முதலிய புராணவகை இலக்கியங்களும் பிறவு மாக அமைந்திருத்தலும் காண்க.

நமது செந்தமிழில் உள்ள எல்லா இலக்கியங்கட்கும் முற்பட்ட நூலாகும் தொல்காப்பியம் என்னும் நமது வியத்தகு மிலக்கண

நூல். இவ்விலக்கண நூல் தனக்கு முற்பட்ட இலக்கியங்களினின்றும் தோன்றியதேயாயினும் பின்னர்க் காலந்தோறும் காலந்தோறும் புதிது புதிதாகத் தோன்றுகின்ற இலக்கியங்கள் அனைத்திற்கும் அப்பழம்பெருந் தொல்காப்பியமே இலக்கண நூலாகவும் அமைகின்ற அதன் சிறப்பினை யாரே கூறவல்லார்? அந்த ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியத்திலேயே பிற்காலத்தே தோன்றிய இத்தகைய புராணங்கட்கும் இலக்கணங் காணப் படுதல் வியப்பேயாகும். அத்தொல்காப்பியத்தில்,

"அம்மை யழகு தொன்மை தோலே
விருந்தே யியைபே புலனே இழைபெனாஅப்
பொருந்தக் கூறிய" (தொல். செய். க)

என்வகை வனப்பு நூல்களில், "தொன்மை" என்னும் வனப்பு நூலே பிற்காலத்தே புராணங்கள் என்று கூறப்படுகின்றன. தொன்மை எனினும் புராணம் எனினும் ஒக்கும். தொன்மை தூய செந்தமிழ்ச் சொல்; புராணம் வடசொல். இத்துணையே வேற்றுமை. இரண்டற்கும் பொருள் ஒன்றேயாம்.

இனி, இத்தொன்மை என்னும் வனப்பியலுக்கு ஆசிரியர் தொல்காப்பியனார் சிறப்பிலக்கணங் கூறுங்கால்,

"தொன்மை தானே
யுரையொடு புணர்ந்த பழமை மேற்றே" (செய். உகூஎ)

என்றோதுவர். இதற்கு உரைவகுத்த பேராசிரியர், "தொன்மை யென்பது உரைவிராஅய்ப் பழமையவாகிய கதைபொருளாகச் செய்யப்படுவது" என்று கூறி, "அவை பெருந்தேவனாரால் பாடப்பட்ட பாரதமும் தகடூர் யாத்திரையும் போல்வன" என்று எடுத்துக் காட்டுமோதினர். இத்தணிகைப் புராணத்திற்கும் இதுவே இலக்கணமாகும் என்க.

இனி, புராணம் என்னும் இப்பெயர் வடமொழியின்கண் ஒருசார் நூல்களின் பெயராகும். வடமொழியாளர் இத்தகைய புராணங்கள் பதினெட்டு என்று தொகுத்துக் கூறுவர். அதனை இந்நூலாசிரியர் நைமிசப் படலத்தில் "வாய்ந்த மூவாறு புராணம் மூன்பு இவண் வகுத்துரைத்தனை" என அந் நைமிசாரணியத்து இருடிகள் சூதமுனிவனை நோக்கிக் கூறுவதாக அமைத்துள்ளமை யானும் உணர்க. அச்சூதமா முனிவன் பதினெண் புராணங்களுள் வைத்துக் கந்தபுராணத்தி லமைந்த ஐந்தாஞ் சங்கிதையாகிய சங்கர சங்கிதையின்கண் இறுதியில் இத் திருத்தணிகையின் சிறப்புக் கூறப்பட்டுளதென்றும், அதனை நுங்கட்குக் கூறக் கேண்மின்! என்றும் தோற்றுவாய் செய்து இத்தணிகைப்

புராணத்தை நைமிசாரண்யத்து இருடிகளுக்குக் கூறுகின்றான் என்று இந்நூலாசிரியர் அறிவுறுத்தியுள்ளார்.

இக்காரணத்தால், இத்தணிகைப் புராணம் ஒரு மொழி பெயர்ப்பு நூலென்றே கூறுவாருமுளர். அங்ஙனமாயின் "மொழி பெயர்த்தல் யாப்பான் நூல் செய்துரைப்பான் புகுந்த ஆசிரியர் வேறு படச் செய்துரையார்" (சிவஞானமுனிவர் சிவஞானபோதம் சூத்திரம்-கக) எனவும், "அவ்வாறு மொழிபெயர்த்துச் செய்யுங்கால் அது கிடந்தவாற்றானே செய்யப்படும்; தொகுத்தும் விரித்தும் தொகை விரியாகவும் செய்ததனாற் பயனில்லை தமிழர்க்கும் ஆசிரியர்க்கும்;" (பேராசிரியர், தொல். மரபு. கூஎ) என்றும் சான்றோர் பலரும் கூறுதற்கிணங்கக் கச்சியப்ப முனிவரும் சங்கர சங்கிதையின் பிற்பகுதியிலே இத்தணிகை மான்மியம் கிடந்தவாறே இத்தணிகைப் புராணத்தை அதர்ப்பட மொழிபெயர்த்தனர் என்னல் வேண்டும்; வேண்டவே இத்தணிகைப் புராணத்தின்கட் கிடந்த பொருளெல்லாம் சங்கர சங்கிதையினுங் கிடந்தனவாம். அங்ஙனமாயின், இந்நூலிற் கிடந்த சைவசித்தாந்தம் அனைத்தும் அச்சங்கர சங்கிதையின்கண்ணிருந்தே கச்சியப்ப முனிவர் மொழி பெயர்த்தனர் என்பது போதரும். அம்மட்டோ? இத்தணிகைப் புராணத்தில் இந்நூலாசிரியர் இயற்றியுள்ள களவுப் படலமும் அந்தச் சங்கர சங்கிதையிலே கிடத்தல் வேண்டுமே? களவுப் படலம் ஆண்டுக் கிடக்குமேல் தமிழ் மொழிக்கே சிறந்துரிமையுடைய பொருளிலக்கணமும் சங்கரசங்கிதையிற் கிடந்தன எனல் வேண்டும். பின்னரும் இந்நூலாசிரியர் மறைஞானசம்பந்த நாயனார் அருளிச்செய்த சிவதருமோத்தரம் என்னும் நூலின் பொருள் முழுவதையும் அகத்தியனருள்பெறு படலத்தின்கண் எல்லோரும் எளிதிலுணரும் பொருட்டுப் பொதிந்து வைத்தனரல்லரோ! அந்தச் சிவதருமோத்தரமும் அச் சங்கர சங்கிதையிற் கிடந்ததேயாதல் வேண்டும். பொருளிலக்கணம் எட்டுணையும் அறியாத வடவர் கந்த புராணத்துள் ஒரு மூலையிலே நந்தம் அருமைப் பொருளிலக்கணங்கள் முழுதும் அடங்கிக்கிடந்தன வென்னல் கைப்பிற்கே இடனுமன்றோ! இவற்றையெல்லாம் கூர்ந்துணராது இந்நூலை மொழிபெயர்ப்பு நூலென்பது விந்தையினும் விந்தையேயாம்.

இனி, இந்நூலாசிரியர் வடநூலார் புராணம் கூறும் மரபு பற்றியே இத்தணிகைப் புராணத்திற்கும் வரலாறு கூறியுள்ளார். வடவர் புராணங்கூறு மரபாவது: என்றாவது ஒருநாள் சூத முனிவன் நைமிசாரண்யத்துக்கு எழுந்தருளுவன். அங்கு வாழ்கின்ற இருடிகள் அம்முனிவன் அடிவணங்கித் தமக்கு யாதானும் ஒரு புராணத்தை ஓதியருள்க! என்று வேண்டுவர். அம்முனிவ

னும் அவர் வேண்டுகோட்கிணங்கி அவர் விரும்பிய புராணத்தைக் கூறத் தொடங்குவான். இம்முறை வடநூலார் புராணத்தைத் தோற்றுவாய் செய்தற்கு மேற்கொண்டுள்ளதொரு நூனெறி வழக்கமேயன்றி வாய்மையாகாது. கச்சியப்ப முனிவரும் அந்த மரபுபற்றியே இத்தணிகைப் புராணத்தையும் தோற்றுவாய் செய்துகொண்டு தாம ஓதியுணர்ந்த செந்தமிழ் நாட்டுச் சைவ சித்தாந்தத்தையும் பழந்தமிழ் இலக்கியங்களாகிய சங்க நூல்களிற் ரும் பயின்று இன்புற்ற பழந்தமிழர் பண்பாடாகிய அகப்புற வாழ்க்கை நெறிகளையுமே இப்பேரிலக்கியத்தின் உள்ளீடாக அமைத்திருத்தலை இதனைப் பயில்வோர் நன்குணர்தல் கூடும். ஆசிரியர் பரஞ்சோதி முனிவரும் இவ்வடவர் மரபு பற்றியே திருவிளையாடற் புராணத்தைக் கூறுவர். மதுரையினிகழ்ந்த இறைவன் திருவிளையாடல்கள் சங்கரசங்கிதையிலிருந்தே தாம் கூறுவதாக அம்முனிவர் கூறுவதைத் திருவிளையாடற் புராணத்திற் காண்க.

இனி, இத்தணிகைப் புராணத்தின் அமைப்பு முறையினைக் கூர்ந்து ஆராயின், இப்புலவர் பெருமான் தெய்வப் புலமைத் திருவள்ளுவனார் திருக்குறள் செய்திருக்கின்ற முறையினையே மேற்கொண்டுள்ளனர் என்பது தெரியவரும். என்னை? ஆசிரியர் திருவள்ளுவனார் பாயிரவியல் என்னும் புறவுறுப்போடு அறத்துப்பால் பொருட்பால் காமத்துப்பால் எனத் தமது தெய்வநூலை முப்பாறபடுத்தமைத்தபடியே இவரும் இத்தணிகைப் புராணத்தைக் கடவுள் வாழ்த்துத் தொடங்கி நந்தியுபதேசப் படலம் ஈறாகவுள்ள படலங்களைத் திருக்குறளிற் கடவுள் வாழ்த்து முதலாக அறன்வலியுறுத்தல் என்னும் அதிகாரம் ஈறாகவுள்ள பாயிரவியல் போன்றும், அகத்தியன் அருள்பெறு படலத்தில் இல்லறவியலும் துறவறவியலும் காட்டி அறத்துப்பால் போன்றும், அடுத்து வருகின்ற சீபரிபூரணநாமப்படலந் தொடங்கி இராமனருள்பெறு படலம் முடியப் போர்ச்செயலும் பொருள் வருவாயுங் காட்டிப் பொருட்பாலாகவும் பின்னர்க் களவுப்படலந் தொடங்கி நூன்முடியுந் துணையும் களவும் கற்புங் காட்டிக் காமத்துப்பால் போன்றும் அமைத்திருத்தலான் என்க.

## மக்கள் வாழ்க்கையும் கடவுளுணர்ச்சியும்

இனி, உலகில் உடம்பெடுத்து வாழ்கின்ற பிறப்பு வகைக்கு ஓர் எல்லை காண்பரிது; ஆயினும் பண்டைத் தமிழ்ச் சான்றோர் உயிரினங்களைத் தம் கூர்த்த மதியா லாராய்ந்து அவைகள் அறிவு வகையால் ஆறு வகைப்படும் என்று அறுதியிட்டுள்ளனர். அவை புல் மர முதலிய ஓரறிவுடையன முதலாக மக்களாகிய

ஆறறிவுடையன ஈறாக ஆறுவகைப்படுவனவாம். இவற்றுள் ஒன்றறிவுயிர் முதல் ஐயறிவுடையன ஈறாகவுள்ள எல்லா வுயிரினங்களையும் 'அஃறிணை' என்னும் ஒரு கூற்றினுளடக்கி ஆறறிவுயிராகிய மக்கட் பிறப்பு ஒன்றுமே சிறப்புடைய பிறப்பென்று கருதி அதனை 'உயர்திணை' என ஒரு கூறாக்கிக் கூறியிருக்கின்ற நுணுக்கம் பெரிதும் வியக்கத்தகுந்த தொன்றாகும். வியத்தகு பிறப்பாகிய இம்மக்கட் பிறப்பினை உயர்திணை என்றதற்குக் காரணம் மக்கள் நெஞ்சத்தில் 'கடவுள்' என்னும் பொருளைப்பற்றிய உணர்ச்சியொன்று குடிகொண்டிருப்பதேயாகும். இக்கடவுளுணர்ச்சியை மட்டும் விலக்கிவிட்டு, மக்கள் வாழ்க்கையை நோக்கின் அவர்களும் விலங்குகளுள் வைத்து வியத்தகு மொருவகை விலங்கே ஆகிவிடுதல் தேற்றம். மற்று மக்கள் உள்ளத்தே முகிழ்க்கின்ற அறம் பொருள் இன்பம் வீடு என்னும் உணர்ச்சிகளும் அந்தக் கடவுளுணர்ச்சியின் காரியங்களேயாம். கடவுளுணர்ச்சி அகற்றப்படின் இவ்வுணர்ச்சிகள் பொருளற்ற மூடப்பழக்கங்களாகவே எஞ்சிநிற்கும்.

ஏனைய எந்தப் பிறப்பினும் காணப்படாமல் மனிதன் உள்ளத்தில் மட்டும் இக்கடவுளுணர்ச்சியும் அதனைச் சார்ந்த அறமுதலிய வுணர்ச்சிகளும் அரும்பியிருப்பதற்கு ஒரு காரணமும் இருத்தல் வேண்டும். மனிதனுடைய அறியாமையே அவ்வுணர்ச்சிகளுக்குக் காரணம் என்று எளிதாகவே விடையிறுப்போரும் மக்களுட் சிலர் உளராயினும் மக்களிற் றாழ்ந்துள்ள அஃறிணையுயிர்களே அறியாமையில் மிக்கவை ஆதலால் அறியாமையே கடவுள் உணர்ச்சிக்குக் காரணமாயின் அஃறிணையுயிர்களிடத்தேதான் அவ்வுணர்ச்சி மிக்கிருத்தல் வேண்டும். ஆதலால் இக்கூற்றுத் தருக்க முறையோடு பொருந்துவதன்று. மக்களாய்ப் பிறந்திருந்தும் கடவுள் இல்லை என்பதற்குக் காரணம் அவர்தம் அறியாமை என்பதே சான்றோர் கொள்கையாகும். இக்கொள்கை தருக்க முறைக்கும் பொருந்திய கொள்கை என்க.

இனிச் சிறப்பாக இக்கடவுள் உணர்ச்சியை இயற்கையிலேயே உடைய மக்கள் அவ்வுணர்ச்சியற்ற அஃறிணை யுயிர்கள்போன்று இந்நிலவுலகத்தில் கவலையின்றி அமைந்து வாழ்தற்கு அவ்வுணர்ச்சி இடங்கொடுப்பதில்லை. விலங்குகள் இவ்வுலகில் உடலால் மட்டும் வாழ்வன. ஆதலால் உடம்பிற்கின்றியமையாத உணவுக்கும் இணைவிழைச்சிற்குமே அவைகள் அலைகின்றனவாயினும் அவற்றைப் பெற்றபொழுது முழு நிறைவுடன் நன்கு உறங்குகின்றன. மக்கட்கும் உடலுண்டு ஆதலால் அவர்க்கும் அவ்விரண்டும் இன்றியமையாதனவேயாயினும், மக்கள் அவற்றை நிரம்பப் பெற்றபொழுதும் அமைதி கொள்வதில்லை. ஏன்?

மக்கள் உடலாலும் வாழ்ந்து உள்ளத்தாலும் வாழ்தல் வேண்டும்; ஆகவே மக்கள் உடலிற்கு வேண்டிய உணவும் உள்ளத்திற்கு வேண்டிய கடவுளும் என இருவகைப் பொருள் களையும் பெறவேண்டியவராகின்றார். உடம்பிற்கு உணவு அமைதி தருமாறுபோல மக்கள் உள்ளத்திற்கு அமைதி தருவது கடவுளே யாகும். மக்கள் உள்ளத்திற் குடிகொண்டிருக்கின்ற கடவு ளுணர்ச்சி கடவுட்காட்சி அவ்வுள்ளத்தில் முழுமை பெறுந் துணையும் மக்களைத் தூண்டியவண்ணமிருக்கிறது.

அந்தக் கடவுளைக் காணவேண்டும் என்று அவரை இடை யறாது அவ்வுணர்ச்சி தூண்டுவதே அவர் இந்நிலவுலக வாழ்க்கை யில் அமைதி காணமாட்டாமைக்குக் காரணம் ஆகும். அவ ருடைய அறிவு வளருந்தோறும் இவ்வுணர்ச்சியும் கூடவே வளர் கின்றது. ஆதலால் அவ்வுணர்ச்சி மேலும் ஆற்றலுடையதாகி அவரை எந்த நிலையினும் அமைதிகொள்ளவிடாமல் மேலும் மேலும் தூண்டிய வண்ணமே இருக்கின்றது.

மிகப் பழைய காலத்திலேயே மெய்க்காட்சியாளர்கள் அந்தக் கடவுளைப்பற்றிப் பெரிதும் ஆராய்ந்து அதன் இயல்பு இத்தகை யது என்றும், அதனை அடைந்தாலன்றி மனிதன் கவலையின்றி அமைதிகொள்ளவியலாது என்றும் அறுதியிட்டுக் கூறியுள்ளனர்.

"தனக்குவமை யில்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்ற லரிது"

என்பது மெய்க்காட்சியாளருள் தலைசிறந்த நந்தெய்வப் புலவர் திருவள்ளுவனாரின் பொன்மொழியாகும். மேலும், திருவள்ளுவனார் மனிதன் உள்ளத்தே சிறப்பாகத் தோன்றியிருக்கின்ற அக்கடவு ளுணர்ச்சிக்குப் பொருளாக விருக்கின்ற அக்கடவுளை அவன் கண்டு கோடற்பொருட்டே ஏனைய எந்தப் பிறப்பிற்கும் அமையாத மொழி அல்லது கல்வி என்னும் ஒரு கருவியும் அவனுக்குச் சிறப்பாக அமைந்துளது. ஆகவே, மனிதன் கடவுளைக் கண்டடைதற்குக் கருவியாகிய கல்வியை அவன் பெரிதும் முயன்று பெருக்கிக் கொள்ளக்கடவன். கல்வி இந்நிலவுலக வாழ்க்கைக்கும் மிக மிக இன்றியமையாததே. ஆயினும் கற்றவனொருவன் கடவுள் நெறி நின்றொழுகானாயின் அவன் கற்றதனாற் சிறிதும் பயனில்லை என்றே நம்மனோர்க்குச் செவியறிவுறுத்துகின்றார். அவ்வறிவுரையே,

"கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅ ரெனின்" (கடவுள் வா. ௨)

எனவரும் பொருளுரையாகும்.

## புராணங்களும் கடவுளும்

எங்கிருந்தோ வந்து மக்கள் உள்ளத்திற் குடிகொண்டுவிட்ட அக்கடவுளுணர்ச்சிக்குப் பொருளான அந்தக் கடவுளைக் காண்டற் பொருட்டு அம்மக்களினம் தோன்றிய காலந் தொடங்கி இற்றை நாள்காறும் செய்திருக்கின்ற செயல்கள் தாம் எத்துணை! எத்துணை! அவர்கள் எடுத்திருக்கின்ற திருக்கோயில்கள் தாம் எத்துணை! எத்துணை! எழுதியுள்ள நூல்கள் எத்துணை! எத்துணை! அரியணையையும் செங்கோலையும் கோமுடியையும் எறிந்துவிட்டு வளநாட்டையுந் துறந்து அக்காணொணாத கடவுளைத் தேடிக் காட்டகம்புக்க காவலர் தாம் எத்தனைபேர்!

இவ்வாறு வரலாறறியாத காலத்திலிருந்தே மக்கட் குலத்தை ஆட்டி அலைத்து வருகின்ற அவ்வுணர்ச்சிக்குப் பொருளாகின்ற காண்டற்கும் கருதுதற்கும் ஒண்ணாத அந்தக் கடவுளையே மக்கள் முன்னிலையில் கொணர்ந்து காட்டுகின்ற ஒப்பற்ற தெய்வக் கருவிகளே நம் புராணங்கள் என்றுணர்தல் வேண்டும். இதோ திருநாவுக்கரசர் ஓதுமொரு திருத்தாண்டகத்தை நோக்குமின்!

"முன்னம் அவனுடைய நாமங் கேட்டாள்
மூர்த்தி யவனிருக்கும் வண்ணங் கேட்டாள்
பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்
பெயர்த்தும் அவனுக்கே பிச்சி யானாள்
அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்
அகன்றா ளகலிடத்தார் ஆசாரத்தைத்
தன்னை மறந்தாள்தன் நாமங் கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே"

என்பது அப்பெரியார் அருண்மொழி. இதன்கண் திருநாவுக்கரசர் நங்கையெனப் பெண்பாலாகக் கூறியிருப்பது மக்கள் உயிரையே யாம். இந்த மக்கள் அக்கடவுளுடைய பெயரை எப்பொழுது கேள்வியுற்றனர்? யார் முதன் முதலாகக் கடவுளைக் கண்டு வந்து மக்களுக்குக் கூறினர்? இச்செய்தி யாருக்குந் தெரியாது. உயிர்கள் புல்லாகிப் பூடாகி இன்னோரன்ன எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்து மக்கட் பிறப்பெய்துங்காறும் கடவுளை நினைத்து மறிய மாட்டா; மக்கட் பிறப்பெய்திய பின்னரே கடவுளின் திருப்பெயரை அவைகள் கேள்விப்படுகின்றன. மக்கட் பிறப்பிற்கே அஃதியற்கை. ஆதலால் அப்பிறப்பெய்தும் பேறுபெற்றோரெல்லாம் முதலில் அவன் பெயரையே கேள்வியுறுகின்றனர். எப்படியோ கடவுளின் பெயரைக் கேட்டாயிற்று; அவனை யின்றியமையாது தன்னுயிரென்றும் உணர்கின்றாள் அவ்வுயிர் நங்கை. அந்நங்கை இனி அவனைக் காணாமல் ஒரு நொடிப்பொழுதும் அமைதி கொள்ள

இல்லாள். கடவுள் என்கின்ற அந்தத் தலைவன் எங்கிறத்தான்? எவ்வளவு உயரமுடையான்? என்று அவனுடைய அடையாளங் களைக் கேட்டறிய அவள் அவாவுகின்றாள். யாரிடத்தில் கேட்பது? அப்பொழுது அவளுக்கு உசாஅத்துணைத் தோழியாகப் புராண நங்கை அவளெதிரே வருகின்றாள். அவளிடத்தேதான் உயிர் நங்கை அத்தலைவனைப்பற்றி வினவித் தெரிந்துகொள்ளவேண்டும். இவை தெரிந்த பின்னர் அவன் எங்கிருக்கின்றான்? என்றும் வினவுகின்றனள். புராண நங்கைக்கு மட்டுமே அவனைப்பற்றிய செய்தியனைத்தும் நன்கு தெரியுமாம். அவன்—மிக அண்மையிலே தான்—ஆரூரிலேதான்-இருக்கின்றான் என்று அவனிருக்குமிடமும் அறிவுறுத்திவிட்டாள்.

இத்துணையும் கேள்வியுற்ற பின்னரேனும் அவள் அமைதி யுற்றனளா? அதுதான் இல்லை. இப்பொழுது உயிர்நங்கை அவனைக் காணவேண்டும் என்னும் பித்துத் தலைக்கேறியவளாகி விட்டாள். இனி அவனைக் காணாமல் அரைநொடியும் அவள் அமைதியுறாள். தன்னையீன்ற அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள். அகலிடத்தார் ஆசாரத்தைச் சிறிதும் மதித் திலள். அன்றே அவற்றைக் கைநெகிழவிட்டு அகன்றாள். தன்னையே மறந்துவிட்டாள்; தன் பெயர்தானும் இன்னதென் றறியாளாயினள். எத்தனை பேரார்வம் இவ்வுயிர் நங்கைக்கு? ஓடினள் அந்த ஆரூரிலேயே அந்தத் தலைவனைக் கண்டு அவன் திருவடிகளைச் சிக்கெனப் பிடித்துக்கொண்டாள் என்பது இறை பணி நிற்கும் அப்பெரியார் கருத்தாகும்.

இனி, மூலமலத்தால் தனக்கியல்பான அறிவும் இன்பமும் செயலும் மறையுண்டு கிடக்கும் உயிரை இறைவன் றனக்கியல்பான அருளுடைமை காரணமாகப் பிறப்பின்பாற் படுத்துவான் என்றும் அவற்றிற்கு அசுத்த மாயையினின்றும் உடலும் உட்கருவிகளும் உலகமும் நுகர்ச்சிப் பொருள்களும் படைத்துக் கொடுத்து ஒன்றறி யுலகமுதல் ஆறறிவுலகம் ஈறுகவுள்ள உலகங்களின் வழியே நெடியதோர் யாத்திரையும் செய்விக்கின்றான் என்றும்; இந்த யாத்திரையின் பயன் அவற்றின் மலநீக்கமே என்றும் இறுதியிலே அவற்றிற்கு அம்முழுமுதல்வன் இன்பப் பிழம்பாகிய தன்னையே பரிசாக வழங்கிப் பின்னர் என்றும் அழியாத அப் பேரின்பத்திலே நிலைபெறுமாறு செய்கின்றனன் என்றும் தத்துவ நூலோர் கூறுவர். இவ்வருட்செயலெல்லாம் அவ்வுயிர்களின் காட்சிக்கும் கருத்திற்கும் அப்பால் நின்றே செய்வன் இறைவன்; இக்காரணத்தால் உயிர்கள் தமது பொறி புலன்களுக்கு அப் பாலான அவ்விறைவனை எஞ்ஞான்றும் காணவியலாது என்றும் கூறுவர் அத் தத்துவ நூலோர்.

தத்துவ நூல்கள் கூறுவது முற்றும் வாய்மையேயாயினும் ஆறுவது அறிவுலகத்தை அவனருளாலே எய்திய வுயிர்கள் தமக்குத் தோன்றாத் துணையாயிருக்கின்ற அம்முதல்வன் தாஞ்செய் செய்யுமுதவிக்குத் தகுந்த கைம்மாறு செய்வனபோலத் தமக்கு அம்முதல்வன் செய்தாற்போன்றே சுத்தமாயையினின்றும் அம் முழுமுதல்வனுக்கும் உடம்பும் உட்கருவிகளும் உலகங்களும் நுகர்ச்சிப் பொருளும் தமது மெய்யுணர்வினாலே படைத்து வழங்குகின்றன. இவ்வாற்றால் உயிர்கள் அந்த இறைவன் மக்களே தாம் என்னும் தமது சிறப்பினை மெய்ப்பித்து வைக்கின் றன. அசுத்தமாயையினோடு அவ்விறைவனருளாலே யாத்திரை செய்கின்ற உயிரினம் ஆறறிவுயிர் என்னும் மக்கட் பிறப்புற்று அப்பிறப்பினும் நெடுந்தொலை வந்த அந்த யாத்திரையின் பயனைப் பெற்ற மெய்யுணர்வினாலே படைத்துக் கொடுத்த சுத்தமாயையா லியன்ற அந்த விண்ணுலகிலே அஃதாவது புராணங்களிலே அந்த இறைவன்றானும் அம் மக்கள் படைத்துக் கொடுத்த அழகிய தெய்வ உடம்புகளிலே ஆர்வத்துடன் இறங்கி அவ் வன்பருடைய மெய்யுணர்வுக் கண்ணுக்குப் புலனாகி அவரை ஆட்கொள்ளுகின்றனன். ஈண்டு யாம் கூறியாங்குச் சுத்தமாயையி னின்று தோன்றிய விண்ணுலகமே கடவுட் புராணங்கள் என்றுணர்க.

நில முதலிய ஐம்பெரும் பூதங்களின் கூட்டமே நாம் வாழ்தற் கியன்ற உலகம் என்பது யாவரும் அறிந்த வுண்மையாகும். இங்ஙனமே சுத்தமாயையினின்றும் பிறந்த சொற்களாலியன்ற புராண வுலகத்திலேதான் இறைவன் அருளுருவம் கொண்டு எழுந்தருளி வந்து அவர்களோடு அளவளாவி அவர்க்குக் காட்சி தருகின்றனன். ஆதலால் புராணங்களே விண்ணுலகம் என்றறி தல் வேண்டும். ஒலி சுத்தமாயை என்பர் தத்துவ நூலோர். ஒலியாலியன்றதே சொல்; அச் சொற்களாலியன்றதே புராணம். ஒலி விண்ணின் குணமன்றோ? ஆதலினாற்றான் புராணங்கள் விண்ணுலகம் எனப்பட்டன. இறைவன் உயிர்கட்கு மண் ணுலகைப் படைத்துக் கொடுத்தான். உயிர்கள் அவன் வாழ விண்ணுலகைப் படைத்து அவ்விறைவனும் மனைவி மக்களோடு, வாழவைத்தன. கடவுள் உயிர்களின் மொழியாற் பேசப்படாததும் மனத்தால் நினைக்கப் படாததுமாகும் என்று தத்துவ நூல்கள் பேசுகின்றன. மற்றுப் புராணங்களோ இறைவன் நுமக்கு மிகவும் அணுக்கமானவன் ஆரூரிலிருக்கின்றான், தில்லையில் கூத்தாடுகின்றான், தணிகையிலே ஆறுமுகத்தோடு எழுந்தருளி யிருக்கின்றான் என்று இனிதினியம்பி அவன் திருமுன்னர் அழைத்தேகுகின்றன. மேலும்,

"அஞ்சு முகந்தோன்றின் ஆறுமுகந் தோன்றும்
வெஞ்சமரில் அஞ்சலென வேல்தோன்றும்—நெஞ்சில்
ஒருகால் நினைக்கின் இருகாலுந் தோன்றும்
முருகாஎன் றோதுவார் முன்"

என்று தேற்றமாக அறிவிக்கின்றன. தத்துவ நூலோர் என்ஞ்ஞான்றும் உயிர்களால் காணப்படாதவன் என்று அறுதியிட்டுக் கூறிய அந்தக் கடவுளே சண்டுத் தன்பால் அன்புடையார் நெஞ்சில் ஒருகால் முருகா என்றோதுமளவிலே தனதிரண்டு திருவடிகளையும் தோற்றுவிக்கின்றான். தத்துவ நூலறிவுடையோர் தம்மறிவின் ஆற்றலாலே இறைவனைத் தேடித் தேடி அவனைக் காணாது கையற்றுப் போய் ஆண்டவன் ஒருவன் உளன் என்று யாம் எம்முடைய கருதலளவையாற் காண்கின்றோம். ஆனால் அவ்விறைவனை யாம் எப்பொழுதும் காணமாட்டேம்; கண்டதுமில்லை என்று கூறினர். அவர் காணவுமியலாது. மற்றுப் புராணங்களோ அறிவியல் நூல்களல்ல, அன்பு நூல்களாகும். இறைவன் உளனோ இலனோ என்னும் ஐயப்பேய் அறிவுடையாரையே பற்றி அலைக்கவல்லது. புராணத்தைப் போற்றும் இவ்வன்பர்பா லணுக மாட்டாது. ஆகவே ஒருதலையாகத் தன்பா லன்பு வைத்துள்ள மெய்யடியாராகிய இந்த ஏழைகளுக்கு அந்த இறைவனும் ஏழையே யாகி அவரவர் நினைத்த வடிவத்தோடு அவர் நினைக்கு முன்பே இதோ வந்துவிட்டேன் என்று அவர் முன்பு வந்து நிற்கின்றான். புராணங்கள் இத்தகைய அன்பர்களையும் அவர்பால் அவர் கருதுமுருவத்தோடும் விரைந்து ஓடிவருகின்ற அந்தக் கடவுளர்களையுமே நமக்கு அறிமுகம் செய்துவைக்கின்றன. இறைவன் இந்தப் புராணங்கள் கூறுமாறு உருவங்கொள்ள வியலாது என்று நம்மால் மறுக்கவும் ஒண்ணாது. என்னை? அவன்றான்,

"பந்தமும் வீடு மாய பதபதார்த் தங்க ளல்லான்
அந்தமு மாதி யில்லான் அளப்பில னாத லாலே
எந்தைதான் இன்ன னென்றும் இன்னதா மின்ன தாகி
வந்திடா னென்றுஞ் சொல்ல வழக்கொடு மாற்ற மின்றே"
(சி. சித்தி, சுப. கக௯)

ஆகலான் என்க.

இனி, அறிவியல் நூலாகிய தத்துவ நூலிற் கூறப்படும் மெய்யறிவோடு அன்பியல் நூலாகிய இந்தப் புராணங்களில் யாம் காணுகின்ற மெய்யன்பருடைய அன்புக்கு நிகரான மெய்யன்பும் ஆகிய இருபெரு நலங்களும் ஒருசேரப் பெறுகின்ற திருவுடையோரே முழுமையுற்ற மெய்க்காட்சியாளர் ஆவர் என்பதில் ஐயமில்லை. இவ்விரண்டில் அன்பு கலவாது அறிவுமட்டுமே பெருகப் பெற்றவர் ஆண்டவன் திருவருட்கு ஆளாதல் அரிதே

யாம். அவர்தம் கூர்த்த அறிவே ஆண்டவன்றிருவருளை உணர் தற்குப் பெருந்தடையாகவும் அமைந்துவிடுகின்றது. மற்று அறிவுபெருகாமல் அன்புமட்டுமே பெருகியிருப்போருமுளர்; இவர் ஆண்டவன் திருவருட்கு மிகமிக எளிதாகவே ஆளாகிவிடு கின்றனர். எனினும் இவர் பெறுகின்ற பேறே முற்ற முடிந்த பேறுதல் இல்லை. மெய்யுணர்வும் மெய்யன்பும் சமநிலையில் முதிர்ந்தோரே என்றும் அழியாத பேரின்ப வீட்டிற் புகுதற்குரிய ராவார். ஆகவே அறிவும் அன்பும் மெய்க்காட்சியாளர்க்கு ஒரு பொருளையே முழுதுறக் காண்கின்ற இரண்டு கண்களே யாகும் என்னலாம். இதனால், இத் தணிகைப் புராணத்தில் ஆசிரியர் கச்சியப்ப முனிவர் அன்பர் வரலாற்றாலே மெய்யன்பின் திறத்தினை யும் சைவசித்தாந்தத் தாலே மெய்யறிவின் திறத்தினையும் மிகமிக நுண்மையாக விளக்கியிருக்கின்றார். இவ்வாற்றால் புராணங்களுள் வைத்து இத் தணிகைப் புராணத்திற்கு ஒப்பாகப் பிறிதொரு புராணமும் இல்லை என்று துணிந்து கூறலாம்.

இனி, இந்த நூலாசிரியர் இப்புராணத்தைத் தணிகைப் புராணம் என்னும் பெயரால் பல்வேறு திருமுதூர்களில் வைத்துத் திருத்தணிகை ஒன்றற்கே சிறந்துரிமையுடையதுபோல இயற்றினா ரேனும், இந்தப் புராணம் மெய்யுணரும் வேட்கையுடையாரனைவர்க் கும் பொதுவாகத் திகழ்கின்ற அறிவுக் களஞ்சியமாகவே இருக் கின்றது. கச்சியப்ப முனிவர் போன்று மெய்யுணர்வு பெறுதவரும் புலமைத்திறம் வாய்க்கப் பெறுதவரும் இயற்றிய கோயிற் புராணங் கள மலிந்து கிடக்கின்ற காரணத்தால் புராணம் என்ற பெயரே இக்காலத்திற்றன் சிறப்பிழந்து நிற்கின்றது. ஆசிரியர் காலத்தே புராணங்கள் நன்கு மதிக்கப்பட்டிருந்தன போலும். ஆதலால் இதற்கும் அவர் அப் பெயரையே சூட்டியுள்ளார். நூல்களின் பெயரிலும் ஒரு கவர்ச்சித்திறனுண்டு. இக் கவர்ச்சித்திறனுடை யனவாகப் பெயர் இருத்தலைக் கருதியே அகநானூற்றை முக்கூறு படுத்திய பழைய புலமையாளர், அவற்றிற்கு நித்திலக்கோவை என்றும் மணிமிடை பவளம் என்றும் களிற்றியானை நிரை யென் றும் பெயர் சூட்டினர். இப் பெயர்க்குக் காரணம் அந் நூல்களிற் காணக்கிடையாது. ஆயினும் இப் பெயர்களோ நம் நெஞ்சத்தை எத்துணைக் கவர்கின்றன காண்மின். சிலப்பதிகாரம் முதலிய ஐம்பெருங் காப்பியங்களும் தம் பெயரானும் பெரிதும் கவர்ச்சி யுடையன. இவற்றையே சீவக புராணம், கண்ணகி புராணம் எனக் கூறிக் காண்மின்; இவை நூலின் கவர்ச்சியையும் குறைப்பன வாதல் புலப்படும். யாதேனும் கவர்ச்சியுடைய ஒரு பெயரை இத் தணிகைப் புராணத்திற்கு இப் புலவர் பெருமான் சூட்டி யிருத்தலாகாதோ என்று யாம் இப்பொழுது குறைப்பட்டுக் கொள்வதாற் பயனென்னை?

மொந்தை பழையதாயினும் அதனுட் பெய்யப்பட்டுளது நறுஞ்சுவைத் தேனே என்று சிறிது சுவைத்தறிந்த பின் யாரே அதனைக் கைவிடத் துணிவார்? புராணமாயினும் கச்சியப்ப முனிவர் அதனுட் பெய்து வைத்திருக்கின்ற கலையமிழ்தமோ பருகப் பருகத் தெவிட்டாததே என்பதனை இப் புராணத்தை ஆழ்ந்து பயில்வோர் உணர்ந்து கொள்வர் என்பது தேற்றம்.

புலமையின் சிறப்பினை ஒரு புலவன் இயற்றிய செய்யுள்களே தம்மை ஓதுபவர் தமது பொருளை உணர்வதற்கு முன்பே தம் முடைய இன்னோசையாலும் அழகாலும் நன்குணர்த்தி விடுகின்றன. இவற்றுள் செய்யுளினது அழகுக்கும் இன்னோசைக்கும் யாரும் இலக்கணம் கூறியதில்லை. அணியிலக்கணம் செய்யுளின் அழகைத்தானே விளக்குகின்றது? அங்ஙனமிருப்பவும் செய்யுள் அழகிற்கு இலக்கணம் யாரும் கூறியதில்லை என்பது பொருந்தாதென்று கருதவேண்டா. வாய்மையாகவே செய்யுளினது அழகு அதற்குக் கூறப்பட்ட அணி இலக்கணங்களை யெல்லாம் கடந்து நிற்பதாம். ஆசிரியர் தொல்காப்பியனார் செய்யுளியலில் அதற்கு இலக்கணம் வகுக்கும்போது மாத்திரை முதலாக அம்மை முதலிய எண்வகை வனப்புகளிறுக முப்பத்து நான் குறுப்புகளும் தொகுத்தோதிப் பின்னர் விரித்தோதுவாரேனும் யாம் ஈண்டுக் கூறிய அழகு அவ்வுறுப்புகளுள் அடங்கிற்றில்லை. இவற்றுள் ஆசிரியர் தொல்காப்பியனார் 'அழகு' என்றும் 'வனப்பு' என்றும் பேசுவாரேனும், அழகு என்னும் உறுப்பாவது,

"செய்யுண் மொழியாற் சீர்புனைந்து யாப்பின்
அவ்வகை தானே அழகெனப் படுமே"

என அதனியல்பு கூறுமிடத்து அந்த அழகிற்கு நன்கு இலக்கணம் கூறிவிட்டார் என்று பாராட்டுதற்கில்லை. ஏனெனின் செய்யுள் மொழியாலே சீர்புனைந்து யாத்த செய்யுள்கள் எல்லாம் அழகு பெற்றுத் திகழ்வதில்லை யாகலான். தொல்காப்பியர் தாமால் அதற்கு இலக்கணம் கூறுதலும் அரிதே என்பது தோன்றவே அவ்வகைதானே அழகெனப்படும் என்புழி வகை என்னும் மிகை யாற் புலப்படுத்தினராதல் வேண்டும். செய்யுள் அழகிய சொல்லா லியன்ற தொகுப்பே ஆயினும் அச் செய்யுளின் அழகுமட்டும் சொன்னலம் கடந்து நிற்பதாகும்; தெய்வத் தன்மையுடைய தாகும். ஆதலால் அதனை யாராலும் கூறிக் காட்டொணாது என்க.

இனி, தொல்காப்பியனார்க்குப் பன்னூறாண்டு கழித்து நன்னூல் இயற்றிய பவணந்தி முனிவர், ஒரு செய்யுள் பயில்வோருளத்தை உருக்குகின்ற பண்புடையதாயிருப்பதற்கும் செய்யுட்

கோதிய எல்லா வுறுப்பிலும் சிறிதும் குறைபாடின்றி இருக்கவும் பிறிதொரு செய்யுள் சிறிதும் சுவையின்றி யிருத்தற்கும் காரணம் என்ன என்று நீள நினைந்து பார்த்திருத்தல் வேண்டும். இதற்குக் காரணம் தொல்காப்பியத்திற் கூறப்படவில்லை. ஆதலால் அதனை யாம் கூறவேண்டும் என்று துணிந்து அக்காரணம் இதுதான் என்று நம்மனோர்க் குணர்த்தியுள்ளார். இச் சிறப்பு தொல்காப்பியர்க்கும் இல்லாது பவணந்தியார்க்கே உரிய தனிப்பெருஞ் சிறப்பே என்பதில் ஐயமில்லை. அப்பெரியார் செய்யுள் என்னும் பெயர்க்கிலக்கணமோதுமாற்றால் ஓதுகின்ற அந்த ஒப்பற்ற நூற்பா வருமாறு:—

"பல்வகைத் தாதுவின் உயிர்க்குடல் போற்பல
சொல்லாற் பொருட்கிட னாக உணர்வினின்
வல்லோர் அணிபெறச் செய்வன செய்யுள்" (பெயரி. உசஅ)

என்பது அப் பல்கலைக்குரிசில் அதற்குக் காரணங் கண்டு நுண்ணிதின் ஓதிய நூற்பாவாகும்.

இவ்வருமந்த நூற்பாவிற்கு உரை வரைந்த ஆசிரியர் பலரும் இதன்கண் முனிவர் '**உணர்வினின் வல்லோர்**' என்ற சொற்பொருளின் சிறப்பினை உணராமல் அதற்குக் "**கல்வி யறிவினுற் செய்யுளியற்ற வல்லோர்**" என்று சிறப்பில்லா வறும் பொருளை கூறியொழிந்தார். வாய்மையாகவே உணர்வினின்வல்லோர் என்று பவணந்தியார் கூறியது **அழகை உணரும் உணர்ச்சியின்கண் வன்மையுடையோர்**தம்மையேயாம் என்றுணர்க. செய்யுள் உறுப்புக்களிற் சிறிதும் குறைவின்றி யிருந்தாலும் இவ்வழகுணர்ச்சி குறைந்தோர் செய்யும் செய்யுள் சுவையற்றனவைகளாகவே இருக்கும். மற்று, அவ்வுணர்வினின் வல்லோர் செய்யும் செய்யுள்களோ ஓரோவழிச் செய்யுளிலக்கணம் குன்றியவிடத்தும் செய்யுளின்பமுடையனவாகத் திகழ்தலைக் காணலாம். ஆயினும் செய்யுள் செய்யும் ஆற்றலும் அதற்கின்றியமையாத உணர்வு வன்மையும் இயற்கையிலே உடையாராக விருப்போரே நல்ல புலமையுடையோராவர். இவைகள் ஒருவனுக்கு ஒரு பிறப்பிலேயே எய்துவனவல்ல பண்டும் பண்டும் இயற்கை யழகிலே பற்பல பிறப்புக்களிலே நெஞ்சம் பறிகொடுத்துப் பயின்று வருவதனுல் அவர் உள்ளத்தே பெருகி வருமொரு பெருஞ் செல்வமே இப்புலமைச் செல்வம். இங்ஙனமிருத்தலானன்றோ பேரிசைப் புலவர் சிலர் மழலைமொழி மாறுத இளம் பருவத்திலேயே மிகச் சிறந்த செய்யுள்களை மிக மிக எளிதாகவே பாடத்தொடங்கி விடுகின்றனர். இவர்கள் அழகுத் தெய்வமாகிய கலைமகளின் திருவருட்குப் பெரிதும் அணுக்கரானவர். ஆதலால் இத்தகைய பேற்றினையுடையோரைக்

கடவுட்டன்மை யுடையராக இவ்வுலகம் என்றென்றும் போற்றி வருகின்றது.

இனி, இத்தகைய இயற்கைப் புலவருள் ஒருசிலர் கல்வியறிவு நிரம்பப் பெறாதாரும் உளர். மற்று இவர்களே இவ்வியற்கை யுணர்வுவன்மையோடு நூலறிவும் நிரம்பப்பெற்றவராய்விடின் உலகம் போற்றும் மாபெரும் புலவர்களாகிவிடுகின்றனர். இத்தகைய நலனெலாம ஒருசேர ஒருவர்க்கு அமைதல் அரிதாம். இக் காரணத்தால் இத்தகைய புலவர் ஒருசில நூற்றாண்டுகட்கிடையே ஒருசிலரே தோன்றுகின்றனர்.

இனி, கல்வியறிவானிரம்பப்பெற்ற சான்றோர் பெரும்பாலும் எந்தக் காலத்திலும் உளராவார். செய்யுளியற்றுதற்கு வேண்டிய இலக்கிய இலக்கணப் பயிற்சியால் எத்துணை நிரம்பினும் இன்பங் கெழுமிய செய்யுள் ஒன்றனையேனும் இயற்றும் ஆற்றல் இத்தகையோர்க்கிருப்பதில்லை வாய்மையே நோக்கின் அருணிரம்பிய பேரிசைப் புலவன் ஒருவனியற்றிய செய்யுளின்பத்தை நுகரத் தானும் தெரியாதார் இவருட் பலரைக் காணலாம். கலைமகளின் அருட்கு அணுக்கனாய் இன்பம்கெழுமப் பாடிய புலவன் செய்யுளை நுகர்தற்கும் அக்கலைமகளின் கடைக்கண்ணருள் ஒருசிறிதேனும் வேண்டும். இவ்வருள் பெற்றோர் கல்லாது வைத்தும் செஞ்சொற் கவியைக் கேட்புழி, இன்பத்தால் கண்ணீரரும்பி மெய்சிலிர்த்துத் தம்மையும் மறந்துபோகின்றனர். இத்தகையோரைச் சிறந்த சொற்பொழிவாளன் பேசும் அரங்கிலே சிற்சில செவ்வியிற் காண்டல் கூடும். இங்ஙனமிருந்தவாற்றுலன்றோ ஒரு புலவன், "ஓதியும் ஓதார் உணர்விலர் ஓதாதும் ஓதி யனையார் உணர்வுடையார்" என்று அறுதியிட்டுரைத்தனன். நந்தம் குமரகுருபரவடிகளார் தாமும்,

> "எத்துணைய வாயினுங்கல்வி யிடமறிந்
> துய்த்துணர் வில்லெனின் இல்லாகும்—உய்த்துணர்ந்து
> சொல்வன்மை யின்றெனின் என்னும் அஃதுண்டேல்
> பொன்மலர் நாற்ற முடைத்து" (நீதிநெறி விளக்கம் ௬)

என்று ஓதியிருத்தலும் உணர்க.

இனி, இத்தணிகைப் புராணத்தை இயற்றியருளிய கச்சியப்ப முனிவர், காப்பியஞ் செய்யுந்திறத்திலே—இயற்கை அழகுணர்ச்சியிலே—நம் நாட்டிற்றோன்றிய கம்பநாடருக்கு அடுத்து நிறுத்தி நினைக்கத்தக்கவராவார் என்பது என்னுடைய தாழ்ந்த கருத்து. இனிக் கல்வியறிவின் பெருக்கத்திலே ஒரோவழி இக் கச்சியப்ப முனிவர் அக் கம்பநாடர்க்கும் முன்னிற்குந் தகுதியுடையோர் என்று கருதவும் என்னுள்ளம் இடந்தருகின்றது.

கச்சியப்ப முனிவர் மாதவச் சிவஞானயோகியாருடைய மாணவருட் டலைசிறந்த மாணவர் ஆவர் என்று வரலாறு கூறுகின்றது. மாதவச் சிவஞானயோகியாரின் சிறப்பினை உணராதவர் தமிழறியாதவரேயாவர். வடமொழிக் கடலையும் தென்மொழிக் கடலையும் நிலைகண்டுணர்ந்த பேரறிவுக் கடலாவார் அச் சிவஞானயோகியார். அவரை ஆசிரியராகப் பெறுதற்கு இக் கச்சியப்பமுனிவர் தவம் பல செய்திருத்தல் வேண்டும் என்பதில் ஐயமில்லை. அங்ஙனமே இக் கச்சியப்ப முனிவரைத் தம் மாணாக்கராகப் பெற்றமைக்கும் அச்சிவஞானமுனிவர் மாதவம் செய்திருத்தல் வேண்டும் என்பதும் மிகையன்று.

கச்சியப்ப முனிவரும் கல்வியிற் பெரியர்; புலமையும் உடையர். மாதவச் சிவஞானமுனிவரும் கல்வியிற் பெரியர்; புலமையும் உடையர். இந்த மாணவரையும் ஆசிரியரையும்போல அமைந்த மாணவரையும் ஆசிரியரையும் யாம் வேறெவ்விடத்தும் கண்டிலேம்.

கச்சியப்ப முனிவர் தாம் பிறந்த திருவூராகிய திருத்தணிகை யில் மலைமிசை எழுந்தருளிய செந்தமிழ்க் கடவுளாகிய செவ்வேளிடத்து அளவிலாப் பேரன்புடையவராவர். அவ்வன்பு காரணமாக அம்முருகப் பெருமானுக்குத் தாமே புனைந்து சூட்டிய தீந்தமிழ்ச் சொன்மாலைகள் திருத்தணிகைப் பதிற்றுப்பத்தந்தாதியும் திருத்தணிகையாற்றுப்படையும் ஆகும். இத்தணிகைப் புராணமோ அம்முருகப் பெருமான் அத்திருத்தணிகையிலே புதுமணம் புணர்ந்த வள்ளிநாய்ச்சியாரோடு உவந்தபோதெல்லாம் புகுந்து விளையாடுதற்கென அப்புலவர் பெருமான் அமைத்துக் கொடுத்ததொரு செந்தமிழ்ப் பூம்பொழிலே என்னலாம்.

இனி யாம் இங்ஙனம் இத்தணிகைப் புராணம் என்னும் முருகு மணக்கும் தண்டமிழ்ப் பூம்பொழிலின் புறம் புறமே திரியாமல் அக்கச்சியப்ப முனிவரின் திருவடிச் சுவடுபற்றி உட்புகுந்தும் அதன் அழகை—அது தரும் சுவையை—அதன் ஓக்கத்தை—அதன் பரப்பினை அகக்கண்ணாற் கண்டு களிப்போமாக.

திருத்தணிகைமலை நம் செந்தமிழ் நாட்டில் தொண்டை நாட்டின்கண்ணது. ஒரு நாட்டின் சிறப்பு அது நீர்வளம் நிலவளம் செந்நெல்வளம் முதலியவற்றை நிரம்பப்பெற்றிருப்பதால் மட்டும் உண்டாவதொன்றன்று. இந்த வளங்கள் குறைந்திருந்தாலும் குற்றமில்லை. ஆன்றவிந்த சான்றோர் பலர் தன்பால் வாழுகின்ற பேறே வாய்மையாக ஒரு நாட்டிற்குத் தலைசிறந்த சிறப்பாகும் என்பது சங்ககாலத்துப் புலவர்கள் கொண்டிருந்த கொள்கையாகும். இந்தத் தனிப்பெருஞ் சிறப்பை நந்தமிழகத்திலே இத் தொண்டை நாடே பெற்றிருக்கின்றது. பழந்தமிழ்ச் சான்றோர்,

நல்லோர் வாழுநாடே நாட்டினுள் தனிசிறந்த நாடாகும் என்னும் கொள்கையுடையார் என்பதனை,

> "நாடா கொன்றோ காடா கொன்றோ
> அவலா கொன்றோ மிசையா கொன்றோ
> எவ்வழி நல்லவர் ஆடவர்
> அவ்வழி நல்லை வாழிய நிலனே" (புறநா. 187)

எனவரும் அச் சங்ககாலத் தமிழ் மூதாட்டியாகிய ஔவையார் அருண்மொழியே உணர்த்தும்.

பிற்காலத்தே தோன்றிய ஔவையார் இத்தகைய சிறப்பினை இத்தொண்டை நாட்டிலே கண்கூடாகக் கண்டு மகிழ்ந்தார். மகிழ்ந்ததோடன்றி இச்சிறப்பினை "என்றும் கிறியாத" தம் பாட்டொன்றிலே சேர்த்தும் வைத்தார். அத்திருநாட்டிலே தோன்றுந் திருவுடைய நம் கச்சியப்ப முனிவர் அச்செய்யுளைக் கண்டு உளம் பூரித்திருத்தல் வேண்டும். இவ்வாறு புலவர் பாடும் இத்தகைய ஒப்பற்ற புகழையுடைய இத்தொண்டை நாட்டிற்கு வேறு எந்த நாடுதான் ஈடாகவியலும் என்று இவர் பெருமை பேசிக்கொள்கின்றார். இதோ அவர் கூறுவதைக் கேளுங்கள்:

> "மான்றவர் வினைகால் சீக்கும் வளங்கெழு தொண்டை நாடு
> சான்றவ ருடைத்தென் றேதுந் தகுமொழிக் கதிரான் மற்றை
> ஏன்றசீர் நாட்டின் சீர்த்தி யென்னுமீ ரொளிமை யாப்ப
> ஆன்றசெம் பருதி யாயதனையதண் டகநன் னாடு" (திருநாட். 7)

என்பது அம்முனிவர் கூற்று. இதனோடு அந்த ஔவையார் பாடிய அரிய செய்யுளையும் காண்பாம். அது வருமாறு:

> "வேழ முடைத்து மலைநாடு மேதக்க
> சோழ வளநாடு சோறுடைத்து—பூழியர்கோன்
> தென்னாடு முத்துடைத்துச் செப்பலரு நற்றொண்டை
> நன்னாடு சான்றோ ருடைத்து"

என்பதாம். செப்பேட்டிற் செதுக்கி வைத்தாலும் கல்லில் உளி கொண்டு பொறித்து வைத்தாலும் இந்தச் சீர்த்தி ஒருகாலத் தழிந்துபோதல் ஒருதலை. அந்தத் தமிழ்க் கிழவி தன் பாட்டிற் பொதிந்து வைத்தமையால் இப்புகழ் இந்நாட்டிற்குத் தமிழ்மொழி யிருக்கும் காலமெல்லாம் நின்று நிலவுமே! இத்தகைய புகழ்க்கு முன்னே ஏனைய நாட்டின் புகழ்களெல்லாம் ஞாயிற்றொளியின் முன்னே நாண்மீன்களின் புல்லொளி மறைவதுபோல மறைவன வாம் என்கின்றார் இப்புலவர் பெருமான்.

இனி, கச்சியப்ப முனிவர் இச் செய்யுளைப் பாடியபொழுது செந்தமிழ்க்கடலன்ன ஔவையாரின் பாட்டொன்று அவர் நினை

வில் நின்றது என்பது வெளிப்படை. அதுவேயுமன்றி இச் செய்யுளை முனிவர் பாடியபொழுது மற்றுமொரு புலவருடைய செய்யுளும் அவர் மனத்தின் ஆழத்திலிருந்து மேலெழுந்து வந்து அவர்க்குக் கைகொடுத்து நிற்கின்றது. அப் புலவர் யார்? அவர் தாம் உலகப் பெரும் புலவருள் ஒருவராய்த் திகழ்கின்ற கவிச் சக்கரவர்த்தி கம்பநாடர். என்னே! இஃதென்னே! கம்பநாடர்க்கும் இச் செய்யுட்கும் தொடர்பொன்றும் இல்லையே! என்று ஐயுறு கின்றீர்களா? இதோ வருவது கம்பநாடர் செய்யுள்:

"என்புகழ் கின்ற தேழை யெயினனே னிரவி யென்பான்
தன்புகழ்க் கற்றை மற்றை யொளிகளைத் தவிர்க்கு மாபோல்
மன்புகழ் பெருமை நுங்கண் மரபினோர் புகழ்க ளெல்லாம்
உன்புக ழாக்கிக் கொண்டா யுயர்குணத் துரவுத் தோளாய்"

எனவரும் இதன்கண் அமைந்த உவமையின் அழகில் ஈடுபட்டுக் கச்சியப்பர் எத்துணையும் பன்முறை இன்புற்றிருத்தல் வேண்டும். இருந்தவாற்றால், அந்த அழகிய உவமை இவருடைய பொருளே யாகி, "தொண்டை நாடு சான்றவருடைத் தென்றேதுந் தகு மொழிக் கதிரான் மற்றை ஏனறசிர் நாட்டின் சீர்த்தி யென்னும் மீனொளி மையாப்ப ஆன்ற செம் பருதியாய தணைய தண்டக நாடு" என்று மிக அருமையாக உருக்கொண்டமைகின்றது. அங்ஙனமே கச்சியப்ப முனிவர் தமக்கு முன்னிருந்த மாபெரும் புலவர் நல னெல்லாம் தம்முடைய நலமாக்கிக்கொண்டனர். இவ்வுண்மையை இத்தணிகைப் புராணத்தில் எங்கெங்குங் காண்டல் கூடும்.

இனி, ஒரு புலவரின் சிறப்பினை உள்ளவாறே எடுத்தோத அறியாதார் சிலர் மற்றொரு புலவரைக் காட்டி இவரினும் இப் புலவர் சாலப் பெரியர் கண்டீர்! என்று கூறுவர். ஒவ்வொரு பெரும் புலவனும் தன்றனக் கென அமைந்த தனிச்சிறப்பு ஒவ் வொன்றுடையனாகவே இருப்பான். அச்சிறப்பு அவனுக்கு முன்னும் ஏன்? பின்னுங்கூட மற்றொரு புலவனுக்கும் வாய்ப்ப தில்லை. திருவள்ளுவர்க்கென்று ஒரு தனிச் சிறப்புண்டு. அச் சிறப்பு அவருக்குமுன் வேறெந்தப் புலவனுக்கும் இருந்ததில்லை. மற்று அவருக்குப்பின் இதுகாறும் வேறெந்தப் புலவனுக்கும் அது வாய்த்ததுமில்லை. இனி எதிர்காலத்தும் அதனை எந்தப் புலவனும் பெறப் போவது மில்லை. இங்ஙனம் இருத்தலால் திருவள்ளுவருக்கு நிகர் திருவள்ளுவரேயாவர். கம்பனுக்கு நிகர் அவனேயன்றிப் பிறர் யாருமில்லை. இத்தணிகைப் புராணத்தை இயற்றியருளிய கச்சியப்ப முனிவருக்கும் இது பொருந்தும் ஆதலால், மாபெரும் புலவராகிய கச்சியப்ப முனிவர் தமக்குரிய தனிச்சிறப்பு எப்பொழுதும் தம்மிற்றணவாது நிற்பவே தமக்கு முற்பட்ட கம்பனுடைய அத் தனிச்சிறப்பையும்

அக்காப்பனிடத்தே பன்முறை கண்டு கழிபேருவகையுங் கொண்டிருப்பர். ஒருபுலவன் தனக்கு முற்பட்ட புலவனுடைய சொல்லையும் பொருளையும் கண்டின்புறும்போது அவை இவனுடையன வாகவே ஆகிவிடுகின்றன. இங்ஙனமாவது இவனுக்குப் பெருமை தருவதுமாகும். இக்காரணத்தால் மிகப் பழைய காலத்துப் புலவர் கருத்துக்கள் புதுமையாக்கப் பெற்றுப் பல்வேறிடத்தினு நின்று பிற்காலத்தவர்க்கு ஆக்கமளிக்கின்றன. கச்சியப்ப முனிவருடைய இத் தணிகைப்புராணத்தின்கண் பல்லாயிரம் ஆண்டு கடந்து முற்பட்ட, தொல்காப்பியர் முதலாக அவரோடொருகாலத்தவராகிய சிவஞான முனிவர் ஈறாக வுள்ள புலவர் பெருமக்கள் கண்ட கருத்துக்கள் சாலப்பல இடம் பெற்றுப் புதுமையோடு மிளிர்கின்றன. அங்ஙனம் பழைமை இடம் பெற்றுப் புதுமை பெற்று மிளிர்வதனாலேதான் யாம் கச்சியப்ப முனிவரையும் அவர் அருளிச் செய்த நூல்களையும் தலையாலே வணங்கித் தொழுகின்றோம். இப்பழைய புலவர்களின் கருத்துக்களினூடே தான் இக் கச்சியப்ப முனிவர் தமக்கேயுரிய தனிப்பெருஞ் சிறப்போடு திகழ்கின்றனர்.

இனி, இக் கச்சியப்ப முனிவர்க்கு ஏற்றங்கூறக் கருதி "**ஆசிரியர் கச்சியப்ப முனிவர் கம்பரைப் புகழ்தல் பொருந்தாராகிக் கம்பருடைய ஆறு செய்யுளிலே நூறு குற்றங்காட்டினர். அது கண்டு கம்பரைப் புகழ்ந்த அந்த வம்பர் வாயடங்கி முனிவர்க்குத் திறை செலுத்தினர்.**" என்பதுபடக் கச்சியப்பர் நூலில் முன்னுரை ஒன்றில் வரைந்திருக்கக் கண்டு யான் நெஞ்சு துணுக்குறுகின்றேன். இங்ஙனம் கூறியவர் யாவரேயாயினும் அவர் கம்பரையும் அறியார்; தாம் புகழப்போந்த கச்சியப்பரையும் அறியார் என்பது தேற்றம்.

உண்மையான புலவர் தம்மெதிரே அறியாமையால் பிறர் வாய் தந்தன கூறியபொழுதும் வாய்வாளாதிருப்பதன்றி அவர்க்குக் குற்றங் கூறுவாரல்லர். அங்ஙனமிருக்கக் கச்சியப்பர் கம்பரின் ஆறு செய்யுளில் நூறு குற்றம் காட்டினர் என்பது வெறுங் கட்டுக்கதையேயன்றி வாய்மையாகா தென்பது என் கருத்தாகும். மேலும், இங்ஙனம் கூறுவது குளிக்கப்போய்ச் சேறுபூசிக்கொள்வது போலக் கச்சியப்பரைப் புகழப்போய் அவரையே பழிப்பதாவதனையும் அறியாமலே இவ்வாறு கூறியவர் கூறியிருத்தலும் உணர்க.

இவ்வாறு பேரிசைப் புலவரை அழுக்காறுடையராகக் காட்டுகின்ற இந்தப் பொய்க்கதை இவரோடும் அமைய வில்லை. இவர் ஆசிரியராகிய சிவஞான முனிவருக்கும் இங்ஙனம் ஒரு வரலாறு கூறப்பட்டுளது. அஃதாவது:-

சிவஞான முனிவர் கம்பராமாயணத்திற் காணப்படுகின்ற முதற் செய்யுள் முழுவதுமே குற்றம் என்று கூறிப் பல சங்கைகளைக் கூறினர் அவற்றிற்கு மாற்றார் மாற்றந்தரமாட்டாது விழிக்கப் பின்னர், அடிகளே அவற்றிற்கு மாற்றமும் கூறினராம். இச்சங்கையும் உத்தரமும் **கம்பராமாயண முதற் செய்யுட் சங்கோத்தரவிருத்தி** என்னும் நூலாக நின்று நிலவுகிறது என்பதாம்.

இச் சங்கோத்தரவிருத்தி சிவஞான முனிவரையே பேதைமைப் படுத்திவிடுகின்றது. கம்பராமாயணத்திலுள்ள "நாடிய பொருள் கைகூடும்" என்னும் செய்யுள் கம்பர்பாடிய செய்யுளுமன்று. பிறர் செய்யுளாயினும் கம்பராமாயணத்தே முன்னிற்பதன்றோ எனினும், தாம் காட்டிய குற்றமே மீண்டும் குற்றமாகாமற் போவதெங்ஙனம்? இதனால் இச் சங்கோத்தர விருத்தி என்பது யாரோ ஒருவராற் செய்யப்பட்ட மருணூல் எனவே உண்மையாதலுணர்க. இத்திருவிளையாடலைச் சிவஞான முனிவர் செய்திருப்பர் என்று நினைத்துப் பார்க்கவும் யாம் கூசுகின்றோம்.

இனி, இடைப்பிறவரலாக ஈண்டுக் கூறியவை நிற்க, யாம் கச்சியப்பர் நூலின்பாற் புகுவோம்.

தொண்டைநாடு நீர்வளமிக்க நாடன்று. அந்நாட்டிலொழுகும் பாலியாறு உட்பட எல்லாயாறுகளுமே எப்பொழுதேனும் புனல் பெருகுவதல்லால் யாண்டுதோறும் காவிரிபோன்று புனல் நிரம்பி யொழுகமாட்டா. பாலியாற்று நிரம்ப வெள்ளம புரண்டோடுதலை ஆறுமுறை ஒருவர் காணல் வேண்டுமெனின் அவர் நூறாண்டு வாழ்பவராகவு மிருத்தல் வேண்டும். இங்ஙனம் பல யாண்டுகட்கு ஒருமுறை புனல் பெருகும் அந்தப் பாலியாற்றையுள்ளிட்ட அந்த நாட்டின் யாறுகட்கும் ஒரு தனிச்சிறப்புப் பேசுகின்ற இக் கச்சியப்ப முனிவருடைய வித்தகப் புலமையை இதோ வருகின்ற செய்யுளை ஓதிக் காண்மின்!:

"கோண்முறை பிறழ்ந்து மாரிக் குளிர்பெயல் வறக்கு மேனும்
தாண்முறை தப்பா வண்ணம் தகைமலை லகழூந் தோறும்
ஊண்முறைப் புனல்வந் தோடும் ஒலிநதிக் குலத்தா லேனை
வீண்முறை நாட்டை யெல்லாம் விழ்த்தது தொண்டை நாடு."

ஆம் உண்மையே! உண்மை! அந்த நாட்டின் யாறுகள் பெருக்கற்றுப் புழுதி புரண்டு கிடக்கின்ற காலத்திலேயும் தம் மருங்கிலமைந்த மருதப்பரப்பிற்கு வேண்டுமளவு நீர் வழங்கும் வண்மையுடையனவாகவே இருக்கின்றன. எங்ஙனமெனின், உழவர்கள் மணலாகிக் கிடக்கின்ற அந்த யாறுகளின் இடையே ஓரிரு கல்

தொலைவு அந்த மணலை வாய்க்கால்களாக அகழ்ந்து கொடு போய்த் தம்மூர்ப் பாய்ச்சல் மதகுகளின் வாயிலே சேர்த்துவிடுவர். அந்த வாய்க்காலினூடே ஊறுகின்ற நன்னீர் பெருக்கெடுத்து வரும் மதகுகள் நிரம்பப் பாய்ந்து கழனிகளை நிரப்புகின்றன. இந்த வியத்தகு நிகழ்ச்சியை யாமும் பாலியாற்றிலே கண்கூடாகக் கண்டு வியந்துள்ளோம். "இல்லான் கொடையே கொடை!" பெருநிதிக் கிழவர் கொடைக்கு அத்துணைச் சிறப்பில்லையல்லவா! அத்தகையோர் கொடை பெரும்பாலும் வீணான ஆரவார நீர்மை யுடையனவும், குறியெதிர்ப்பை நீரவுமாதலு மியற்கை. ஈண்டுக் கச்சியப்ப முனிவர் காவிரி முதலிய ஏனைய யாறுகள் ஒழுகுகின்ற நாட்டை யெல்லாம் வீண்முறை நாடு என்று பழிக்கின்றார். இவ்வாறு அவர் கூறியபோது அவர் திருவாயில் ஒரு புன்சிரிப்புத் தவழ்ந்திருத்தல் வேண்டும். அத்துணை இனிமையானதும் ஆழ்ந்ததுமாய நகைச்சுவையை அந்த 'வீண்முறை' என்னும் இகழ்ச்சிச் சொல் தன்னுட் கொண்டுள்ளது. என்னை? காவிரி போன்ற அந்தப் பேரியாறுகள் எத்துணைமுறை கட்டுக் கடங்காமல் பெருகிக் கரைகடந்து தம்மை நம்பி வாழுமக்களைத் துன்பத்தில் மிதக்கவிடுகின்றன. அதுவேயுமன்றி எத்துணை யளவு நீரை மக்கட்குப் பயன்படாதபடி வீணாகவே கொண்டு போய்க் கடலிற் கவிழ்த்துவிடுகின்றன. இச் செயல் செல்வர்க்கு விருந்துணவு வழங்குவது போன்றதொரு வீண்செயலே என்பதில் ஐயமில்லை. குடிமக்கள் பெரும்பாடுபட்டு மண்ணகழ்ந்து கோலிய வயல் வரம்புகளையும் குளக்கரைகளையும் ஒரே நாளிலே தரைமட்டமாக்கிவிடுகின்றன. வீண்முறை என்பதனால் இத்துணையும் உய்த்துணர்ந்து மகிழவே அப்புலவர் பெருமான் அச் சொல்லைத் திறம்பட அமைத்துள்ளார். இனி, அவர்தம் தொண்டை நாட்டு நதிகள் குல நதிகளாம். அந் நாட்டுமக்கள்தாம் உயர்ந்த குலத்திற்றோன்றிய சான்றோர் என்று முன்னர்க் கண்டோம். நதிகள்கூட உயர்ந்த குலமுடையனவாம்!

என்னே பெருமை! அவர்தம் நாட்டு நதிகள் குலமகளிர் போன்று அடங்கி நடப்பதன்றிப் பிறநாட்டு நதிகள்போன்று ஒருபொழுதும் கரைகடந்து ஒழுகா; பிறரை வருத்தா; எனவே குலநதிகள் ஆயின. ஈண்டு முனிவர் தாள்முறை தப்பாவண்ணம் என்றது, தம் குடிமக்களுடைய தாளாண்மை தவறிவிடாதவாறு வேண்டுங்கால் வேண்டுமளவு நீரை வழங்கும் என்றவாறு. தாளாண்மை - வேளாண்மை; உழவுத் தொழில். இன்னும் ஊண் முறைப்புனல் வந்தோடும் என்பதோ காவிரி முதலிய யாற்று நீர்கள் பெரும்பாலும் செம்புலப் பெய்நீராய்க் கலங்கல் நீராகவே காணப்படும், பருகுவதற்குதவமாட்டா என எதிர்மறை வாயி

லாகவும் அந்த வீண்முறை நதிகளைப் பழிக்கின்றது. ஊற்றுப் பெருக்காலுலகூட்டும் இத்தொண்டை நாட்டு நதிகளின் நீரோ எப்பொழுதும் மிகமிகத் தெளிந்த தூய நீராகவே இருக்குமாம். தூய நீரையே எப்பொழுதும் பருகிவாழும் மாந்தர் தூய சான்றோ ராதலும் இயற்கையன்றோ? இந்தப் பெருமை எங்கள் நதிகளுக்கே உண்டென்பதற்கே ஊண்முறைப் புனல் வந்தோடும் நதி என்கின்றார் இவ்வாறே இவர்தம் செய்யுள்களும் இவர் நாட்டு நதிகள்போன்று அகழுந்தொறும் அகழுந்தொறும் புதுப்புதுப் பொருள் சுரந் தளிக்குஞ் சிறப்புடையனவாம். ஈண்டுக் கச்சியப்ப முனிவர் கூறிய இச் செய்யுளினோடே சேக்கிழாரடிகளாரும் கரந்துறை கின்றார்; அதனை ஆராய்ந்து கண்டுகொள்க.

இனி ஆசிரியர் கச்சியப்ப முனிவர் திருவள்ளுவர் கருத்துக் களையும் சொற்களையும் கையாளுவதில் ஏனைய எந்தப் புலவர் களினும் விஞ்சியிருக்கின்றார். திருக்குறள்களை மட்டுமோ? அக் குறள்களுக்கு உரைவகுத்த நுண்மாணுழைபுலனுடைய பரிமே லழகர் உரையின் அருமையுணர்ந்து இன்றியமையாத இடங் களிலே அந்த உரையாகிய மணிகளையும் தமது செய்யுளாகிய பொற்பேழையிலே பொதிந்து வைத்துள்ளார். இங்ஙனமே இவர் தொல்காப்பிய உரையாசிரியர் சொற்களையும் எடுத்துத் தமது செய்யுளிலே அழகுற அமைத்துள்ளனர். அவற்றையெல்லாம் விரிவஞ்சி ஈண்டு எடுத்துக் காட்டுகின்றிலேம். ஆயினும் திருக் குறளை இவர் எடுத்தாளுகின்ற முறையை அறிந்து கோடற் பொருட்டுக் கீழே தருகின்ற செய்யுள்களை ஓதி அவற்றைத் திருக் குறளினும் இந்நூல் உரையினும் ஆராய்ந்துணர்ந்து கொள்க.

"வருபுனல் வாய்ந்த வோங்கல் வல்லர ணிருநீ ரென்னும்
பொருவில்பல் லுறுப்பிற் றாகிப் பொங்கிய செல்வ மேமம்
வெருள்பிணி யின்மை யின்பம் விளைவுநன் கணிந்த தாழ்வில்
திருவினர் தக்கோர் சாலச் செறிந்தது தொண்டை நாடு"
(திருநாட் - ௪)

"மலிபெரும் பொருளாற் பெட்கும் வன்மையு நாடா தியாதும்
மெலிவுக வுதவும் வாய்ப்பும் மெலிகலார் மெலிந்த காலும்
நலிதரா வளனு மெல்லா நலிவுநீத் தாற்ற வீண்டும்
ஒலிகெழு விளைவு ளோடுமுடையது தொண்டை நாடு"(ஷை-௫)

"பல்குழு வேந்தலைக்கும் படர்கொலைக் குறும்பு தீய
பல்குழுட் பகையு டற்றும் பகையுறு பசிநீ ராகோய்
புல்குறி தானு மின்றிப் பொறையொருங் குறுகாற் றுங்கி
நல்கிறை வேந்தர்க் குய்க்கு நலத்தது தொண்டை நாடு"
(ஷை - ௬)

எனவரும் இச் செய்யுள்களுள் வைத்து, கச்சியப்ப முனிவரையும் தெய்வப்புலமைத் திருவள்ளுவரையும் ஒரு சேரக் கண்டு தொழலாகும்.

இனி, மிகப் பழம் பெருநாடாகிய அத்தொண்டைநாடு வள்ளன்மை என்னும் மாற்றாரால் உள்ளழிக்கலாகா வன்மை மிக்க மெய்க்காப்பினைப் போர்த்து மிக்க அறங்கள் என்னும் கூர்த்த படைக்கலன்களைக் கைப்பற்றி வாய்மையும் ஒழுக்கமும் பொறையும் அன்புமாகிய நாற்பெரும் படைகளையும் செலுத்திக் கடலெனப் பெருகிய தீவினைகளாகிய தன் பகைவரை யெல்லாம் வென்று வாகை சூடித் திகழ்ந்தது என்னும் பொருள் பொதிந்த,

"கொடைப்புகழ்க் கவயம் போர்த்துக் கூரறப் படைக ளேந்தி
விடைப்பரு வேழம் பொற்றேர் விரைசெலற் பரியாள் வாய்மை
படைப்பருஞ் சீல நோன்பு பத்திமை யாகப் பாய்த்திக்
கடைப்படு பாவத் தெவ்வைக் கடந்தகத் தொல்லை நாடு"

என்னும் இவ்வருமையான செய்யுள் தனது சொல்லானும் பொருளானும் அணியானும் ஆற்றவும் சிறந்த செய்யுளாகும். இதன பொருளை விரிக்கப்புகின் கடலென விரிவதாம். இத்தகைய செய்யுள்களிலே ஆசிரியர் கச்சியப்ப முனிவரின் தனிப்பெருஞ் சிறப்பினைக் காணலாம்.

இனி, இப் புலவர் பெருமான் இந்த நாட்டுப் படலத்திலே நமக்குக் காட்டும் இன்பங் கெழுமிய காட்சிகளையும் அறமுதலிய உறுதிப் பொருள்களையுங் கண்டு களிக்கச் சின்னாட் பல்பிணிச் சிற்றறிவினோமாகிய நமக்குப் போதிய பொழுதில்லை. இந் நாட்டின்கண் அமைந்த தணிகைமா நகரத்தின் நலனெல்லாம்,

"முழுதுணர்ந்த நித்தியர்தமக் காயினும்
முழுவதும் சொலப்புக்கால்
பொழுதின்றாய் விடும்

என அம்முனிவரே கூறுவாரெனின், யாம் எம்மாத்திரம்! இனி இந்த நாட்டினின்றும் அந்த நகரத்திலும் புகுந்து ஆடு தழை தின்றாற் போன்று ஆங்காங்குச் சில கண்டு களித்து அப்பாற் செல்வேம். கச்சியப்ப முனிவரோடு யாம் அவர் அரிதிற் படைத் தளித்த இத்தணிகைமா நகரம் புகுமுன்பே அப்பெரியார் நமக்கு அந்நகரத்தைப்பற்றி ஒருசிறிய முன்னுரை வழங்குகின்றார். அஃதாவது: "நமரங்காள்! இந்த நகரத்தின் சிறப்புக்களை யான் உங்கட்கு நன்கு அறிவித்து விடுவேன் என்று முழுவதும் என்னையே நம்பிவிடாதீர்கள்! நீயிரே சென்று நும் முணர்ச்சிக் கியன்றவாறு கண்டு மகிழுமின்! உலகிலே புலவர்கள்,

"திருவிளங்கிய வனப்பினில் அறிவினில்
திறத்தினில் அருள்தன்னில்"

யாரேனும் ஒருவரை உயர்த்தக் கருதிய பொழுதெல்லாம் முருகனையே உவமையாக எடுப்பர்; ஏன்? அவனின் மிக்க ஆடவர் இவ்வுலகிலும் தேவருலகிலும் இல்லை அன்றோ! அதனாலேதான், அம் முருகன் ஒருவனையே உவமையாக்குகின்றார். உயர்வற வுயர்ந்த அந்தச் சிறப்பு அவனுக்கிருப்பது போலவே அவன் எழுந்தருளியிருக்கும் இத் தணிகை நகரத்திற்கும் உண்டு கண்டீர்! அதனாலேதான் இந் நகரத்திற்கு உவமை கூறி உங்கட்கு விளக்க என்னாலியாதென்கின்றேன்."

"அன்னான்,

பொருவில் வள்ளியோ டாடுட மாகிய
புகழ்த்தணி கையும் யாங்கும்
ஒருந கர்க்கணி புயர்த்தமுன் னுவமையா
வுரைப்பது"

என்பது கச்சியப்பர் பொன்மொழியாகும்.

இவ்வாறு தோற்றுவாய் செய்துகொண்டு முனிவர் தனக்குவமை யில்லாததொரு நகரத்தை இப் படலத்திலே நமக்குக் கண்கூடாகத் தோன்றுமாறு படைத்தளிக்கின்றார்.

நன்மை யொன்றிருந்தால் அங்குத் தீமையும் உடனிருப்பதே இவ்வுலகியற்கை. இவர் நகரக் காட்சியைப் பெருமிதம்படப் பேசி வரும் பொழுதே அந்தத் தணிகை நகரத்துப் பரத்தையர் சேரிக்கும் நம்மை அழைத்துப் போகின்றார். இவ்விடத்தேயும் நமக்கு ஒரு கட்டளை பிறப்பிக்கின்றார். அஃதாவது:

"இளமை கெழுமிய நண்பரீர்! இச் சேரியிலே வாழும் பரத்தை மகளிரைக் கூர்ந்து நோக்காமல் வம்மின்! அம்மம்ம! நும்போல்வார் சில இளைஞர் தம்மையே பெரிதும் விரும்பும் மெய்க்காதலுடைய தம் மனைவிமார் வீட்டிற் கிடந்தழும்படிவிட்டு இந்தப் பரத்தையர் சேரியிற் புகுகின்றனர். இப் பரத்தையர் அந்தக் காளையர் ஈட்டிய பொருள் முழுவதையும் கவர்ந்து கொண்டு பாவம்! அவருயிரையும் கவர்ந்து கொள்வர்! அத்தகைய கொடியோர் இவர். இவரை நல்லார் என்பது கொடிய நச்சுப்பாம்பினை நல்லபாம்பு என்பதனையே ஒக்கும். இப் பரத்தையர்க்கு இவருகின்ற நும்மனம் இவர் பாலுறின் உய்கலீர்" என்று அறிவுறுத்துகின்றார். முனிவர் ஈண்டு நம்மனோர்க்குப் பரத்தையர் சேரி காட்டுவார் போன்று பொருட் பெண்டிர் பொய்ம்மை முயக்கத்தை ஒழிமின் என்று அறங்கூறுமொரு சூழ்ச்சி இது. மேலும் அவர்,

"உடம்புபிணி யாலிற வுளுற்றற மிகர்து
மடம்படவு ளம்பொருள்கண் மற்றுமுகு மாற்றால்
விடம்புரையும் வேசையர் விழைச்செசன வுணர்ந்தும்
உடம்படுவ ரென்னிலவ ருய்க்குநலன் எற்றே!"

என அந்தப் பொய்ம்மாயப் புலைமகளிரால் விளையும் கேட்டையும் எத்துணை நயம்பட எடுத்தோதுகின்றார் காண்மின். இவ்வாறு பரத்தையர் திறம் பேசும்போது இவர்தம் ஆசிரியராகிய சிவஞான முனிவர் செய்யுள் ஒன்றும் நம் நினைவிலெழுகின்றது; அது வருமாறு:

"தவமறைக் கிழவன் மாயோன் தானுமென் றிவரு மிவ்வூர்
கவர்மனப் பரத்தை மாதர் கண்வலைப் பட்டே யின்றும்
இவறிய வலரோன் மாலோன் பித்தனென் றிப்பேர் பெற்றார்
சிவசிவ யாவ ரேயோ வவர்திறத் தகப்ப டாதார்"

என்பர் அப் பெரியார். இதன்கண் சிவசிவ என்று இவர் இரங்கும் சொற்கள் நம்முள்ளத்தைத் தொடுகின்றன. ஆயினும் மறைக் கிழவனும் மாயனும் தானும் எங்குப் பரத்தை மாதர் கண்வலைப் பட்டார்? இது நிற்க.

இனி, சிவ! சிவ! இத்தணிகைநகர்க் கவர்மனப் பரத்தை மாதர் சேரியில் யாம் நிற்றலும் தீதேயாம். விரைந்து இந்நகர் அங்காடித் தெருவை யணுகுவோம். இந்த அங்காடித் தெரு வணிகர் நந்தண்டமிழ் நாட்டில் சங்ககாலத்திலே வாழ்ந்த வணிகப் பெருங்குடி மக்கள் வழித்தோன்றல்கள் என்பதில் ஐயம் சிறிதுமில்லை. எற்றாலெனின், நம் பழைய வணிகப் பெருங்குடி மக்கள்,

"நெடுநுகத்துப் பகல்போல
நடுவுநின்ற நன்னெஞ்சினோர்
வடுவஞ்சி வாய்மொழிந்து
தமவும்பிறவும் ஒப்பநாடிக்
கொள்வதூஉ மிகைகொளாது
கொடுப்பதூஉங் குறைகொடாது
பல்பண்டம் பகர்ந்துவீசும்" (பட்டின - உ0எ - கக)

பண்புடையோரல்லரோ! அவர்தம் பெருந்தகைமையை யாம் பட்டினப்பாலையிற் பார்த்து மகிழ்ந்திருக்கின்றோமல்லமோ? இக் கச்சியப்பர் திருத்தணிகையினும் அந்தப் பெருந்தகை வணிகரே வாணிகஞ் செய்கின்றனர். எங்ஙனோ? இங்கும்,

"மடுக்குங் காலையிற் குறைய வாங்கியும்
விடுக்குங் காலை மிதப்ப நல்கியும்
அடுக்கும் செல்வம்விண் ணரசு மேசற
எடுக்கும் பண்பினர் யாரு மென்பவே."

இத்தகைய மக்கட் பண்பு மிக்க வாணிகரை இற்றை நாள் இந்த நாடு முழுதும் இழந்து விட்டமை கருதி வருந்துகின்றோம். இத் தணிகைப் பெருநகரத்துக் கடைத் தெருவில் இல்லாத பொருள் உலகில் வேறெங்குமில்லையாம். இந் நகர வாணிகர் ஊக்கம் பெரிதுமுடையார். அவர்பால் மடி என்பதே கிடையாது. ஒரே ஒரு செய்தியில் மட்டும் அவர் அனைவரும் மிகச் சோர்வுடையரா யிருப்பர் என்கின்றார் முனிவர். எதன்கண்? இதோ அவரே கூறுகின்றார் கேண்மின்!

"பொன்னும் வெள்ளியும் பூணு மாடையும்
மின்னு பன்மணி விராய கோவையும்
என்ன வேண்டினும் இல்லை என்னும்அச்
சொன்னி கழ்த்திடாச் சோர்வங் குள்ளதே"

என்பது நூலாசிரியர் கூற்று. எப்பொருளைக் கேட்டாலும் உண்டென்று விரைந்து கூறுமியல்புடைய இவ்வணிகர் யாதேனும் ஒரு பொருளை இல்லை என்று சொல்வதற்குத் தானும் ஊக்கமின்றிச் சோர்வெய்துவர் கண்டீர்! என்று கூறிப் புன்னகை கொள்கின்றனர் இப் புலவர் பெருந்தகை. இவ் வங்காடியில் சிற்றுண்டிக் கடைகள் ஆங்காங்கே இருப்பதனை அக் கடைகளிற் செய்கின்ற பண்ணிகாரங்களின் நறுமணங்களே மிகத் தொலைவில் நிற்கின்ற நமக்கு அறிவித்து விடுகின்றன. ஆ! ஆ! எத்துணை இனிய மணம்! இந்தப் பண்ணிகார மணத்தை நுகர்ந்த வுடனேயே "வாயுணர்வின் மாக்களாகிய" எம்மனோர் நாவில் நீர் ஊறிச் சொட்டுகின்றது. அப்பொழுதே காமவேளும் மலர்க்கணை சில தொடுத்துவிடுகின்றான். ஆம், இத்தகைய இனிய பண்ணி காரங்களை நம்முள்ளங் கவர்ந்த காதலியோடிருந்து தின்றால் சுவை பின்னும் சுவையுடையதாமன்றோ என்று எண்ணி இளங் காளையர் சிலர் அச் சிற்றுண்டிக் கடைகளில் சென்று அவற்றை நிரம்ப வாங்கிப் போகின்றனர். இதனை முனிவர் மிகவும் அழகாக ஓதுதல் காண்மின்!

"கனிவ ருக்கமுங் கமழ்சிற் றுண்டியும்
இனிய விற்குந ரிடஞ்சென் முன்னரே
நனிம ணம்புன றுவிற் றேற்றுமுன்
பனிம லர்க்கணைப் படர்கண் தோற்றுமே"

என்பது ஆசிரியர் கூற்று. இக்காலத்திலும் சிற்றுண்டிக் கடைகள் நகரங்களிலே இருக்கவே இருக்கின்றன. ஆயினும் அவற்றின் பண்ணிகார மணம் புறங்கமழ்த லரிது. இளங்காளையர் வயிற்றுத் தீத்தணியவே அவற்றை உண்கின்றனர். இப் பண்டங்களைத் தின்னும்போது இவர்களும் தம் காதலிமாரை நினைகின்றனர்.

எற்றிற்கு? அவரோடு உண்ணவேண்டும் என்றெழும் அன்பினு லன்று. அவர்க்குத் தெரிந்தால் வைவரே என்னும் அச்சமே இவர்கள் காதலிமாரை நினைத்தற்குக் காரணம்.

இந்த அங்காடித் தெருவிற்கு அயலே இருப்பது வேளாண் மாந்தர் தெருவாம். ஈங்கு வாழுகின்ற வேளாண் மாந்தர் உழுதுண் போரும் உழுவித்துண்போருமே யாவர். இந் நூலாசிரியர் இத் தெருவினைப் பரிவுடன் நோக்கிப் பாராட்டுகின்றனர். 'உப்பிட்ட வரை உள்ளளவும் நினை' என்பது பழமொழி உலகிற்கே உணவுப் பொருளை உண்டாக்கித் தருகின்ற இவ் வேளாளரை நன்றியுடை யார் யாவரும் அன்புடனே பாராட்டுதலியல்பேயாம். உழவினார் கைம்மடங்கின் விழைவதூஉம் விட்டேம் என்பார்க்கும் நிலை இல்லை யாகலின், பற்றற்ற இம் முனிவர் பெருமானும் தமது செந்நாவாற் பாராட்டுகின்றனர். இப் பாராட்டு அவ்வுழவர்க்கு மேலும் சிறப்பை யுண்டாக்கும் என்பதில் ஐயமில்லை. இவர் அவரைப் பாராட்டும் அருமையைப் பார்மின்!

"ஆதியீ றமைந்த பொருள்சிறந் தனவென்
றருமறை யினிதெடுத் தியம்பும்
நீதியான் முகத்திற் சிறந்துபூங் கமல
நிகர்த்தவிர் வேதனுர் பதத்தில்
கோதிலா தெழுந்து வரைதுலாக் கோலும்
குளிர்ந்த செங்கோலும் வேய்ங்கோலும்
தீதிலா மூவர் செலுத்தஏர்ச் சிறுகோல்
செலுத்துநர் வீதிகள் பலவால்"

என்பது இம் முனிவர் உழவர்க்குக் கூறும் பாராட்டு.

உழவர்க்குப் பாராட்டெடாத சான்றோர் இந்நாட்டில் யாரே யுளர்? தெய்வப் புலவர் திருவள்ளுவனார் தாமும் "உழுவார் உலகத்தார்க்கு ஆணி" என்றும் "உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்" என்றும் வானளாவப் புகழ்ந்து பாராட்டினர். இளங்கோ வடிகளார்,

"இரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமும்
உழவிடை விளைப்போர்" (நாடுகாண் - ௧௪௯-௫௦)

என ஏத்தினர். பின்னரும், கம்பநாடர் முதலிய புலவர் பெரு மக்களில் யாரே இவ் வேளாண் மாந்தரை விரும்பிப் புகழாதார்? இம் மாபெரும் புலவர் வழிவழி வந்த நம் கச்சியப்ப முனிவரும் அச் சிறப்பெலாந் தோன்றப் புகழ்கின்றனர். புதுமைப் புலவர் சுப்பிரமணிய பாரதியார் "உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை

செய்வோம்" என்று தலைவணங்கி வாழ்த்துதலும் ஈண்டு நினைக்கத் தகும்.

'ஆரியக் கூத்தாடினும் காரியத்திலே கண்' என்பது ஒரு பழமொழி. சைவர் தழைக்கவும் தமிழ் தழைக்கவுமே கச்சியப்ப முனிவர் இத் தணிகைப் புராணம் இயற்றியருளினர். ஆதலால் அவர் காலத்தே சைவ சமயம் புரக்கத் தோன்றிய திருவாவடுதுறைத் திருமடம் போன்ற எண்ணிலாத் திருமடங்கள் இத் திருத்தணிகையிலிருக்கின்ற காட்சியையும் அவற்றின் சிறப்பினையும் அவரே கூறக் கேட்போம்.

"மும்மலச் செருக்கை முதலொடு முருக்கி
முழுத்தபே ரறிவெனக் கிளைத்த
விம்முயிர் கெடுத்து விங்கிய அருளை
வியங்கொளுந் திருக்கிளை மிளிர்த்துச்
செம்மைமெய் யருளைக் கடந்தொளிர் சிவத்திற்
றினகர விழியெனக் கலக்கும்
இம்முறை யுண்மை ஞானமீ ரைந்து
மியங்குநர் மடங்களெண் ணிலவால்"

என்பது அவர் அருண்மொழி.

இவ்வழகிய செய்யுளில் அடிகளார் பரந்த சைவசித்தாந்தக் கடலினையே ஒரு துளியாகச் சுருக்கித் தந்துள்ளமை அவருடைய புலமைப் பேராற்றலைத் தெற்றென விளக்குவதாம். அகத்திய முனிவன் உவர்க் கடலினை உழுந்தளவாக்கினன் என்ப. ஆம், தவப் பேராற்றலுடையார்க்குச் செயற்கரிய செயலும் உண்டுகொல்? ஈண்டுக் கச்சியப்ப முனிவர் தாமும் அறிவுப் பெருங்கடலை இந்த விருத்தப்பாவினுள் அடக்கிவைத்துள்ளனர். இதன் விரிவினை விரிந்த நூல்களிற் காண்க. பொருளை இந்நூலின் உரையிற் கண்டு தெளிக.

இனி, இத் தணிகை மாநகரத்தில் அசைந்தாடும் நெடிய பொற் கொடிகள் திருத்தக்க முனிவருடைய இராசமாபுரத்துப் பொற் கொடிகளை போல்கின்றன. இத் தணிகை நகரின்கண்,

"செம்பொன் வார்கொடி சேணுற நிவந்துநற் பகத்தின்
வம்பு லாவிய பொன்னகர் மதிற்புறம் புடைப்ப
இம்பர் மேம்படு மிந்நகர் நிகர்க்கலாற் றுநீ
உம்பர் வாழ்தலொண் ணுதென வொறுப்பபோன் றனவால்"

என் றோதுகின்றார் கச்சியப்ப முனிவர். இனி, திருத்தக்க முனிவர் தமது இராசமாபுரத்துக் கொடிகள்,

"இஞ்சி மாக நெஞ்சுபோழ்ந் தெல்லே காண வேகலின்
மஞ்சு சூழ்ந்து கொண்டணிந்து மாகம் நீண்ட நாகமு
மஞ்சு நின்னை என்றலின் ஆண்டு நின்று நீண்டதன்
குஞ்சு மாண்கொ டிக்கையாற் கூவி விட்ட தொத்ததே"

என்றோதுவர். திருத்தக்க தேவர் கொடி "விண்ணுலகே! நீ கீழிறங்கி வந்து எம்மிராசமாபுரத்திற்கு அடங்கிக் கிட" என்றும், இன்றேல் உன்னை அழிப்பேம் என்றும் அறை கூவி நிற்கின்றன. பிற்காலத்து நம் கச்சியப்ப முனிவர் கண்ட இத் தணிகை நகரத்துக் கொடிகளோ யாதொரு தடையுமின்றி விண்ணுலகிலேயே புகுந்து அதன் மதிலரணைத் தாக்கி, "உயர்ந்த எந்தணிகையை நீ சிறிதும் ஒவ்வாய் காண்! தாழ்ந்த நீ உயர்ந்த இடத்திலிருப்பது முறைமையன்று, ஆதலால், நீ இவ்விடத்திராமல் கீழே போ!" என்று நாடு கடத்துகின்றன. இத்துணையே வேற்றுமை. இன்னும் திருத்தக்க தேவர் தாங்கண்ட இராசமாபுரத்து மக்கள் மாபெருஞ் செல்வர் என்றும், இவர்தாம் தமது பேரணிகலம் நழுவி வீழ்ந்து விட்டாலும் குனிந்து மீண்டும் அவற்றை எடுத்துக் கோடல் தம் பெருமைக் கிழுக்கென்று கருதி எடாமலே போவார் எனின், இத்தகையோர் செல்வப் பெருமையை யாரே இயம்பவல்லார் என்றும் செப்பி மகிழ்கின்றார்.

இனி, இத் தணிகையின்கண் வாழும் தாழ்விலாச் செல்வர் தாமும்,

"தாழ்ந்தி டாவளத் தருக்கினு லென்கோ?
ஆர்ந்த பல்சன வடர்ச்சியா லென்கோ?
சோர்ந்து கைத்தலஞ் சுடர்பொற் காசுகள்
வீழ்ந்த நேடிலார் வீதி வாயினே"

என்று இக் கச்சியப்ப முனிவரும் இயம்புவர்.

இவ்வாறு இக் கச்சியப்ப முனிவர் தமது பழந்தமிழ்க் கருவூலந் திறந்து இன்றியமையாதவற்றை அவ்வப்போது எடுத்துக் கொள்ளுதல் அவர்க் கிழுக்காகாது. பாட்டனார் பணப்பேழையைப் பெயரனார் கையாளுதல் முறையே யன்றிப் பிழையாதலில்லை. புலவர் பெருமக்கள் அனைவரும் ஒரே குலத்திற் றோன்றிய தாயத்தார்களே யாவர். புலமையாளர்கட்கு இடவேறுபாடு கால வேறுபாடு சமய வேறுபாடு மொழி வேறுபாடு என்பன சிறிதும் இல்லை. தமிழ்நாட்டுக் கச்சியப்பரும் கம்பநாடரும் வடநாட்டுக் காளிதாசரும் வான்மீகியாரும் ஆங்கில நாட்டுச் சேக்குப்பிரியரும் மிலித்தனும் பண்பினால் மிக மிக அணுக்கமானவர். ஒரே குலத்திற் பிறந்தவர். திருவள்ளுவன் கருத்து ஒன்றனை மேலைநாட்டு மிலித்தன் ஒதி

யுணரும் வாய்ப்புப் பெற்றிருந்தால் உணரும் போதே அவனுள்ளம் மகிழ்ச்சியாற் கோடுகோடேறிக் குதித்திருக்கும் மன்! அங்ஙனமே சேக்குப்பிரியர் நாடகத்தில் அழகிய கருத்தொன்றனை நம் நாட்டுப் புலவர் பெருமக்கள் கண்டுழிக் கழிபேருவகை கொள்வர் என்பதில் ஐயமில்லை. எளிய சமயக் கணக்கர் மட்டுமே பிற பிற சமயக் கணக்கரை வெறுக்கும் சிறுமை யுடையோர். மற்றுப் பேரிசைப் புலமை யுடையோர் மற்றொரு மொழிப் புலவனையாதல் மற்றொரு சமயத்தைச் சார்ந்த புலவனையாதல் ஒரு சிறிதும் வெறுப்பதில்லை. இவர் தம்மின் மிக்கவர் எக்குடிப் பிறப்பினும் எந்நாட்டிற் பிறப்பினும் எந்த மொழி பேசினும் சிறிதும் வேற்றுமை கொள்ளார். இப் புலவர் பெருமக்கள் வழிபடும் தெய்வந்தானும் ஒன்றே யாம். அஃதியாதெனின் அழகெனும் அம்மாபெருந்தெய்வமேயாம். இத்தகைய பெருமை சான்ற பெரும் புலமையாளரினத்தினராகிய கச்சியப்ப முனிவரோ சேக்கிழாரடிகளோ தம்மின் மூத்தவரும் மிக்கவருமாகிய திருத்தக்க முனிவர் நெறிபற்றி நடத்தலை முனிவாரல்லர்.

இங்ஙனமாகவும் கச்சியப்ப முனிவர் "பல வித்துவான்களும் தமிழிலே புறச்சமயியாற் செய்யப்பட்ட சீவக சிந்தாமணியைப் பேரிலக்கியமாகக் கொண்டாடுதலைச் சிந்தத்திலே கொண்டு அதினும் மாட்சிமை பெறத் திருத்தணிகைப் புராணத்தை மொழிபெயர்த்தருளிச் செய்தார்கள்" என வரலாறு எழுதுவோர், கச்சியப்ப முனிவரே "புறச் சமயியாற் செய்யப்பட்ட" அந்தச் சிவக சிந்தாமணி யென்னும் திருப்பாற் கடலிலே பன்னெடுங்காலம் முழுகித் திளைத்தார் என்பதற்குச் சான்று கூறுகின்ற இத்தகைய செய்யுள்களை ஓதுகின்ற பொழுது என்னினைப்பரோ அறிகின்றிலேம்.

இனி, ஆசிரியர் கச்சியப்ப முனிவர்க்கே சிறந்துரிமையுடைய திறம் ஒன்றனை இத் தணிகைப் புராணத்திலே யாண்டும் காணலாம். ஆசிரியர் கச்சியப்ப முனிவர் சொல்லும் வாயெல்லாம் வேதாந்தம் மெய்ச்சமய மென்றுணர்ந்த சைவசமயக் கருத்துக்களை வியத்தகு முறையிலே செல்லும் வாயெல்லாம் அழகாக உவமைகளில் வைத்து விளக்கியிருத்தல் பெரிதும் போற்றத் தருந்தகும். காட்சிப் பொருட்குக் கருத்துப் பொருள்களை உவமையாக எடுத்தோதுதலும் தாம் உவமையாகக் கூறி உணர்த்தக் கருதிய பொருளை உவர்த்தலை விட உவமையாக எடுத்த கருத்துக்களையே ஓதுபவர் உள்ளத்தில் ஊன்றி உணர்வித்தலும் இவர்க்கே கைவந்த ஒரு புலமைப் பேராற்றலாகும். இதனை விளக்குதற்குக் கம்பர் காவியத்தினின்றும் ஒன்று எடுத்துக்காட்டுதும். கம்பநாடர், நகர் நீங்கு படலத்தின்கண் இராமனுடைய அறவுரை கேட்டு இலக்குவன் சீற்றந்துறந்து நிற்பானை இராமன் உவந்து தழுவுகின்றான். இந்நிகழ்ச்சியைக் கம்பநாடர் கூறும்பொழுது,

" அன்னான் றனைஉயனும் ஆதியொ டந்த மென்றுந்
தன்னாலு மளப்பருந் தானுந்தன் பாங்கர் நின்ற
பொன்மா னுரியானுந் தழீஇயெனப் புல்லிப் பின்னைச்
சொன்மாண் புடையன்னை சுமித்திரை கோயில் புக்கான் "

எனவரும் இச் செய்யுளின்கண் இராமனும் இலக்குவனுந் தழுவிக் கொண்டது திருமாலும் சிவபெருமானும் தழுவிக் கொண்டாற் போன்றிருந்தது என்கின்றார். சிறப்பை நிலைக்களனாகக் கொண் டெழுந்த இவ்வுவமை கம்ப நாடருடைய சமய வெறியின்மையை நமக்கு மறைவாக ஓதி உவமைத் திறத்தாலும் பேரழகுற்றுத் திகழ்கின்றதாயினும் இவ்வுவமை காட்சிப் பொருளுக்குக் காட்சிப் பொருளே உவமையாக வருதலின் ஓர் எளிய உவமையே யாகும். 'ஆப்போலும் ஆமா' என்பது போல்வதே இது. இனி மற்றோ ரிடத்தே இந்த இராமனும் பரதனும் தழுவிக்கொள்ள நேர்ந்த பொழுது அவர் கூறும் வியத்தகு உவமை ஒன்றனைக் கேண்மின்!

" அயாவுயிர்த் தழுகணீ ரருவி மார்பிடை
உயாவுறத் திருவுள முருகப் புல்லினான்
நியாயமத் தனைக்கும்ஓர் நிலைய மாகினான்
தயாமுதல் அறத்தினைத் தழுவி யென்னவே "

என வருகின்ற இச் செய்யுளின்கண் இராமனும் பரதனும் தழுவிக் கொள்வது அன்பும் அறமும் தழுவிக்கொள்வது போன்றுளது என்று கூறுகின்றனர். ஈண்டு இராமனும் பரதனுமாகிய காட்சிப் பொருள் பொருளாக, அன்பும் அறமுமாகிய கருத்துப் பொருள் களைக் கம்பநாடர் அவற்றிற்கு உவமை எடுத்திருத்தலைக் காண லாம். இந்த வுவமையின் ஆழம் பெரிது. இராமனையும் பரதனை யும் கம்பர் இங்கு நமக்கு இந்த வுவமையாலே விளக்கக் கருதுகின் றிலர். அவர் கருத்து, இந்த இராமன் வாயிலாக அன்பின் அளக் கலாகாப் பெருமையினையும் பரதன் வாயிலாக அறத்தின் துளக்க லாகாச் சிறப்பினையுமே நம்மனோர்க்கு உணர்த்துதலே யாகும். இவ்வாறு புலவன் தான் உணர்த்தக் கருதிய பொருளை உவமை யாக எடுத்துக் கொண்டு வேறொரு பொருளை உணர்த்துவான் போல அப்பொருளாலே உவமையையே விளக்கும் அருமை வித்தகப் புலமையாளர்க்கே கைவந்த பண்பாகும். இதற்குக் காரணம் கருத்துப் பொருட்குக் காட்சிப் பொருள் சிறந்த உவமை யாகாமையேயாம்.

ஈண்டு, அன்பும் அறமும் ஒன்றில் வழி மற்றொன்றும் இல்லை யாம் அத்துணை இயைபுடையன அவ்விரு பண்புகளும். எவ்வா றெனில் இராமனும் பரதனும் போல என்று கூறின் அன்பும் அறனும் நன்கு விளக்கப்படாமை யுணர்க.

இனி, கம்பநாட ரிடத்தும் இத்தகைய உயரிய உவமை அருகியே காணப்படும். இக் கச்சியப்ப முனிவர் நூலில் எங்குப் பார்த்தாலும் இத்தகைய உவமைகளே காணப்படுகின்றன. ஏன்?

கச்சியப்ப முனிவர் இந்நூலை ஓதுபவர்க்குத் தத்துவங்களை நன்கு உணர்த்துவதே குறிக்கோளாகக் கொண்டவர். எனவே தத்துவங்களிற் பெரும்பாலன கருத்துப் பொருள்களே ஆதலால் இத்தவுவமையே அவர்க்குச் சிறந்த கருவியாய் அமைகின்றது. இனி இத் தணிகைப் புராணத்தினின்றும் எடுத்துக்காட்டாக ஒரு சில காண்பாம்.

தொண்டைநாட்டு உழவர் வித்திய விதைகள் முளைத்து நாற்றங்காலில் பின்னும் தழைத்தற்கிடம் பெருவாய்ச் செறிந்து கிடப்பக் கண்டு அவற்றைப் பெயர்த்து அவை நன்கு செழித் தோங்கி வளரும்படி பண்படுத்தப்பட்ட கழனிகளிலே நட்டு அவற்றைக் கண்ணுங் கருத்துமாய்ப் பேணுகின்றனராம். இவ் வுழவர்க்குவமை காட்டும் வாயிலாக மூலமல முதலியவற்றால் மூடப் பட்டுக் கிடக்கின்ற உயிரினங்களை உய்வித்தற் பொருட்டு உலகத் தைப் படைத்து உயிர்களை அதன்கட் பிறப்பித்து அப் பிறப்பின் பக்குவந் தேர்ந்து அவை மேலும் ஆக்கம் எய்துதற்பொருட்டு அவ்விடத்தினின்றும் பெயர்த்து வேறிடத்துப் பிறப்பித்துப் பாது காக்கும் சிவபெருமானை உவமையாக்குகின்றார்.

"வித்து நிலத்தின் வெறுத்தபயிர்
விறப்பி னீங்க விடைவாங்கிப்
பைத்த நிலத்தி னகன்றபயி
ரகல்வி னீங்கப் பதித்தோம்பும்
மைத்த வுடலி னுழவர்வினை
மாற்றி யூட்டி யினிதளிக்கும்
சுத்த னிகர்த்தார் பணையெல்லாம்
தோற்றத் திலங்கு முயிர்போன்ற"

எனவரும் இதன்கண் கச்சியப்ப முனிவர் உழவரியல்பு கூறுவார் போன்று நம்மனோர்க்கு இறைவனியல்பினை உணர்த்துகின்றார். இன்னும் கிழங்கினை அகழாது அதன் கொடி முதலியவற்றை உழவர் அரிந்துவிட்டனராக; பின்னும் அக்கிழங்கினின்றும் புதிய கொடி தோன்றிப் பண்டு போல மலர்ந்து வளர்வதற்கு, உயிரானது எடுத்ததோருடலின் அழிவின்கண் பிறப்பு ஒழியாமல் மீண்டும் மலத்தினின்றும் பிறப்புறுவதனை,

"எடுத்ததோ ருடலுயி ரிகவு முற்றினும்
அடுத்தவா ணவத்தின்மீட் டாதல் போன்ம்"

என உவமையாக எடுத்தோதுதலும், கழனிகளிற் செழித்த செந்நெற் பயிர் கதிரீன்று அது முதிருங்காறும் எரு நீர் முதலியன வேண்டி நின்று கதிர் நன்கு முற்றிய பின்னர் அக் கழனியினின்றும் எரு நீர் முதலியன வேண்டாது நிற்றலை.

**"உடல் கருவி புவனம் உறுபோகம் எல்லாம் உடங்கியைந்துஞ் சிவன் தோற்றம் ஒன்றே காணும் மடனகன்ற சீரடியார் நுகர்ச்சி யாதும் மருவாமை ஒழிந்து நிற்கும் வாய்மையை,"** உவமை கூறி விளக்குதலும், ஆகிய இன்னோரன்ன கருத்துப் பொருளைக் காட்சிப் பொருட்குவமை காட்டி வெளிப்படையாக உவமையாற் பொருள் விளக்குவார் போன்று ஓதுவாருள்ளத்தே தம் குறிக்கோளாகிய தத்துவவுணர்ச்சியையே பெரிதும் வளர்த்து விடுகின்ற செயற்கரிய செயலை இத் தணிகைப் புராணத்திற் பன்னூறிடங்களிலும் காணலாம். இவ்வாறு செய்யுள் செய்வதில் இப் புலவர் பெருமானுக்கு இவரே நிகராவர். இஃது இவர்க்கே யுரிய தனிப்பெருஞ் சிறப்பென்பேம்.

யாண்டும் இத் தணிகைப் புராணத்தின்கண் தலைசிறந்து திகழ்வது அன்புச் சுவையே யாகும். நகை முதலிய எண் வகைச் சுவைகளும் ஆங்காங்கு நன்கு புலப்பட்டுக் கற்போர்க்குக் கழிபேருவகை தருகின்றன.

இனி, அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றும் உறுதிப் பொருள் என்று கொள்வர் தமிழ் நூலோர். வீடு மனத்தான் நினையவும் மொழியாற் கூறவும் மாந்தர்க்கியல்வதன்று. ஆகவே அறங் கூறவே அதன் பயனாகிய வீடும் கூறப்பட்டதேயாம். இத் தணிகைப் புராண ஆசிரியர் இந் நூலின்கண் (க) நாட்டுப் படலம் முதலாக (அ) அகத்தியப் படலம் ஈறாக வமைந்த படலம் எட்டனுள்ளும் இல்லறம் துறவறம் என்னும் இருவகைப்பட்ட அறத்தின் மாண்பினையே ஓதுகின்றமையும், அதன்பின், சீபரிபூரண நாமப் படலம் முதலாக, (கச) இராமனருள் பெறு படலம் ஈறாக வமைந்த ஏழு படலங்களில் பொருளின் சிறப்பை ஓதியிருத்தலையும் அவற்றின் பின்னர் (கரு) களவுப் படலம் முதலாக (கஅ) நாரதனருள் பெறு படலம் முடிய அமைந்த நான்கு படலங்களில் இன்பச் சிறப்பினை ஓதியிருத்தலையும் கூர்ந்து நோக்குவார் கச்சியப்ப முனிவர் இந் நூலை அறம் பொருள் இன்பம் என்னும் பழைய தமிழ் மரபினை மேற்கொண்டு முறை செய்தமைத்துளார் என்று ஊகிக்கலாம்.

ஈண்டுக் கூறியவாற்றால் இந்நூல் நூலின் பயனாகிய அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நாற்பொருளும் பயப்ப ஏனைய வுறுப்புக்களையும் தாங்கிச் சிறந்ததொரு செந்தமிழ்ப் பெருங்காப்பியமாகவே விளங்குகின்றது.

## (க) நாட்டுப் படலம் (உ) நகரப் படலம்

இந் நூலிலமைந்த படலங்களுள் வைத்து நாட்டுப் படலமும் நகரப் படலமும் இப் பெருங்காப்பியத் தலைவனாகிய முருகப் பெருமான் எழுந்தருளியிருக்கின்ற தொண்டை நாட்டின் வளத்தையும் தலைவன் வீற்றிருந்து அருளாட்சி புரிகின்ற தலைநகரமாகிய தணிகைமா நகரத்தின் பெருமையையும் திறம்பட விரித்து விளம்புகின்றன. இந்த இரு படலங்களிலும் முனிவருடைய கற்பனைத் திறம் பெரிதும் சிறப்புற்றுத் திகழ்கின்றது.

## (ந) புராண வரலாற்றுப் படலம்

இனி, மூன்றுவது புராண வரலாற்றுப் படலத்தில் இத் தணிகைப் புராணம் வந்த வரலாற்றினைக் கூறுமாற்றால் சிவபெருமான் எழுந்தருளியிருக்கின்ற வெள்ளிமலை முதலாகத் திருவல்லம் ஈறுக அறுபத்து நான்கு திருவூர்களும் செவ்வேள் எழுந்தருளிய பவானி முதலாகத் திருத்தணிகை ஈறுக அறுபத்து நான்கு திருவூர்களும் கூறப்பட்டிருக்கின்றன. இதன்கண் கூறப்பட்டுள்ள சிவன் திருவூரும் செவ்வேள் திருவூரும் என இரு கூற்று ஒரு நூற்றிருபத்தெட்டுத் திருவூர்களுள்ளும் மிகமிகச் சிறந்த திருவூர் இத் தணிகையே என்று தோற்றுவாய் செய்துகொண்டு ஆசிரியர் கச்சியப்ப முனிவர் 'சீபரிபூரணகிரி' என்று இத் தணிகைக்கு ஒரு பெயர் உளதென்று அப் பெயர்க்குரிய காரணங்களையும் இனிதினெடுத் தியம்புவர். இவ்வாறே தணிகைக் கெய்திய திருப்பெயர் பத்துள என்றும் அவற்றையும் அவற்றிற்குரிய காரணங்களையும் கூறுமாற்றால் தணிகை மலையின் சிறப்பினைப் பாரித்து விளம்புகின்றனர். இவ்வண்ணம் இத் தணிகையின் சிறப்பினை யியம்பிப் பின்னர்,

> " அத்தகு வரைப்பின் எழுகனை யாடி
> அருந்தவ மாதிக ளியற்றின்
> சித்தமா சிரிய விழிஞரு மொல்லை
> சிவத்தினைச் சிவனுவர் கண்டீர்
> இத்தகு முனிவ ரெழுவர்க்கு நந்தி
> யெம்பிராற் குரியமா றைக்கன்
> மெய்த்தவக் குமரன் விளக்கிய ததனை
> வினைச்சம மிலார்க்குரைக் கொணுதால் "

எனவரும் இதன்கண் திருத்தணிகைமலை தரும் பயனும் இத் தணிகைப் புராண வரலாறும் கூறி, இது கேட்டற்குரிய தகுதியுடையோரையும் முனிவர் பேரன்பு ததும்பப் பேசுகின்றனர். பின்னர் இதன்கண் சுட்டிய முனிவர் வரலாறும் மொழிகின்றார்.

## (௪) வீராட்டகாசப் படலம்

இதன்கண், திருக்கயிலையில் இறைவன் இறைவியோடும் இளங் குழவியாகிய முருகப்பெருமானோடும் வீற்றிருக்கும் பொழுது ஆங்கு வந்த சந்திரகாசன் என்னும் முனிவன் இறைவனைக் கண்டு அன்பாலுள முருகி வழிபாடியற்றி இறைவனை வாயார வாழ்த்து கின்ற பாடல்கள் தேவாரமும் திருவாசகமும் போல ஆற்றவும் இனியனவாக விளங்குகின்றன. இப்பாடல்கள் சைவசமயத் தத்துவங்களைப் பெரிதும் தம்முட் கொண்டுள்ளன.

இப் படலத்தில் முருகப் பெருமான் பிரமன் செருக்கொழித் துச் சிறையிட்டமையும், திருவேங்கடமலை வருணனையும் மிகவும் அழகாகக் கூறப்படுகின்றன. இப் படலத்தில் பிரமனைச் சிறை வீடு செய்யத் திருவுளங் கொண்டு சிவபெருமான் முருகப் பெரு மானைத் தன்பால் அழைத்துக் கூறும் மொழிகள் அறிவுரைகளோ? வேண்டுகோளோ? என்று துணிய வொண்ணாதபடி முனிவரால் மிகவும் திறம்படக் கூறப்பட்டிருக்கின்றன.

"விடையு கைத்தவன் பாணினிக் கிலக்கண மேனாள்
வடமொ ழிக்குரைத் தாங்கியன் மலய மாமுனிக்குத்
திடமு றுத்தியும் மொழிக்கெதிர் ஆக்கிய தென்சொல்"

ஆகிய செந்தமிழ்க்குக் கடவுளாகிய முருகப்பெருமான் வடமொழியி லியன்ற மநுநீதி முதலியவற்றைச் சிறிதும் மதித்திடான் என்று கருதிப் போலும் செந்தமிழ் மறையாகிய திருக்குறள்களையே அவ் விடையுகைத்தவன் எடுத்துக்காட்டித் தெருட்டுகின்ற அருமையை நோக்குமின்! 'மைந்தகேள்!'

"பேதைமைப் பாலினாதல் பெருங்கிழமையினா னாதல்
மேதக நட்டோர் மாட்டும் விரவிடும் பிழைக ளெல்லாம்
காதுதற் பால வல்ல காதிடிற் கண்ணி னோடி
நோதுக வோச்சி மெல்ல நோன்றவே யெறிகு வாரால்"

என்பது சிவபெருமான் கூற்று.

இனி இதன்கண், கடவுள் ஒருவனே ஆவன் அவனையே சிவன் என்றும் முருகன் என்றும் அறிஞர் கூறுவர். சிவனுக்கு முருகன் மகன் என்று கூறுவது பௌராணிக மதமேயன்றிப் பிறிதில்லை என்று தேற்றுவார் நம் கச்சியப்ப முனிவர்,

"தனக்குத் தானேமக னாகிய தத்துவன்
தனக்குத் தானேயொரு தாவருங் குருவு மாய்த்
தனக்குத் தானேயருட் டத்துவங் கேட்டலும்
தனக்குத் தா னிகரினுன் றழங்கிநின் றுடினான்." (வீரா - ௬௮)

என மெய்யுணர்ந்த வித்தகரும் வியக்குமாறு பாடியிருத்தல் நினைந்து நினைந்து மகிழற்பாலதாம். இவ்வாறு இறைவன் ஆர்த்து நின்றுடியது இத் தணிகையிலே தான் ஆதலாற்றான் இத் தணிகைக்கு "வீராட்டகாசம்" எனவும் ஒரு பெயருளதாயிற்று என்றறிவுறுத்துகின்றார் நூலாசிரியர்.

இனி, தணிகை என்னும் இத் தமிழ்ப் பெயர்க்குக் காரணம் கூறுவார்,

"இரணவல் லவுணக் கிளையெலா முருக்க
இலங்கருட் டிருவுருத் தாங்கி
அரணமா யமரர்ப் புரப்பவ னென்றும்
அமர்ந்தருள் தணிகை மாநகரம்"

எனப் பெயர் வந்தது என்பது முனிவர் கருத்து. கந்தபுராணம் பாடிய கச்சியப்ப சிவாசாரியர் கருத்து மிதுவேயாம்.

இனி, இத் தணிகை என்னும் பெயர்க்கு இயற்கையிலேயே செய்யுளியற்றும் ஆற்றலுடன் பிறந்த கவிவரர் சுப்பிரமணிய பாரதியார் கூறுகின்ற காரணமும் ஈண்டுக் கருதற்பாலதாம்:

"திருத்தணிகை மலைமேலே குமார தேவன்
திருக்கொலுவீற் றிருக்குமதன் பொருளைக் கேளீர்
திருத்தணிகை யென்பதிங்கு பொறுமை யின்பேர்
செந்தமிழ்கண் டீர்பகுதி 'தணி'என் றுஞ்சொல்
பொருத்தமுறுந் தணிகையினாற் புலமை சேரும்
பொறுத்தவரே பூமியினை யாள்வார் என்னும்
அருத்தமிக்க பழமொழியுந் தமிழி லுண்டாம்
அவனியிலே பொறையுடையான் அவனே தேவன்"

என்பது அப்புதுமைக் கவிவரரின் பொன் மொழியாகும். தணிகை என்பது பொறுமையின் பெயர் என்று பாரதியார் பொருள் கண்டு கூறுதலும் ஒரு புதுமையே! அதனாலன்றோ அவரை நாம் புதுமைக் கவிவரர் என்று போற்றுகின்றோம்!

## (ரு) குமாரேசப் படலம்

இதன்கண் முருகப் பெருமான் அருட்குறி நட்டுச் சிவ பெருமானை வழிபாடு செய்தமையும் அதனால் தணிகையிலுள்ள சிவபெருமான் 'குமாரேசன்' என்று வழங்கப்படுதலும் தணிகையிலுள்ள குமரேசன் குமரனுக்கு ஞானசத்தி வழங்கியதனால் அதனைப் பெற்ற முருகன் ஞானசத்திதரன் என்றொரு திருப்பெயர் பெற்றமையும் திருத்தணிகையிலெழுந்தருளிய முருகனுடைய திருப்

பெயர்களுள் "ஞானசத்திதரனென்னச் சாற்று நாமம் பொருண் மிகுத்த பல பெயரின் மிக்க பெயராயங்குப் பொலிந்தமையும் ஈங்குள்ள குமாரதீர்த்தம் ஏனைய தீர்த்தங்களினும் காட்டில் மிகச் சிறந்த தீர்த்தமாகும்' என்பதும் பேசப்படுகின்றன. இத்தீர்த்தத்தின் சிறப்பினைக் கச்சியப்பர்,

"எத்தினத்தா யினுமொருகான் முழுகினர் எப்
பிணியுமொழு காது மோப்பிப்
புத்தியறி வாயுள்கூசி புகழ்சூழ்ச்சி
வீரர்வலி பொருண்மேம் பாடு
மித்திரர்புத் திரர்மனைவி முதலான
வெறுக்கையெலா மேவி யீற்றில்
கொத்திறைநெங் கந்தலோ கத்தைஅவன்
உருக்கொண்டு குறுகி வாழ்வார்" (சச)

என்று இனிதிசைதுகின்றனர். இனி இதனை அடுத்துக் கூறுகின்ற முருகப்பெருமான் பெருமை ஆற்றவினியது—கடலினும் ஆழ்ந்த கருத்துடையது—சைவசமயத்தின் சாறு போல்வது—ஓதுகின்றவர் உள்ளத்தில் பேணி வைத்துக் கொள்ள வேண்டிய பீடுடையது.

அவ்வினிய செய்யுள் இதோ வருகின்றது—

"செங்கமல மலரேய்க்கு மொருதிருக்கை
குறங்கமைத்தாச் செம்பொன் மேருத்
துங்கவரிச் சிலைக்கடவுள் அருள்ஞான
சத்தியொரு தொடிக்கை யேந்திப்
பொங்குமருட் கருணைவிழிக் கடையொழுக
மலர்ந்தமுகப் பொலிவினோடும்
அங்கணமர் ஞானசத்தி தரனையகத்
துறநினைப்போ ரவனே யாவர்." (சரு)

என்பதாம்.

## (க) பிரமன் சிருட்டிபெறு படலம்

இப்படலத்தில் செருக்குடைமையாலே தன் பெருமையிழந்து சிறையும் புகுந்த நான்முகன் தான் இழந்துவிட்ட படைப்பாற்றலை மீண்டும் எய்தக்கருதிக் குற்றால வனத்திருந்து தவஞ்செய்தலும் பின்னர்த் திருவூர் சிலவற்றிற் சென்று வழிபாடு செய்தலும் திருத்தணிகையிற் சென்று ஞானசத்திதரனை வணங்கி அவனருளாலே மீண்டும் தனக்குரிய படைப்பாற்றலைப் பெற்றுய்தலும் பிறவும் கூறப்படுகின்றன.

நினைவைவிட்டகலாத பேரழகினையுடைய சீர்விழுச்சியினை யுடைய திருக்குற்றாலம் கச்சியப்ப முனிவருடைய திருவுள்ளத்தைப் பெரிதும் கவர்ந்திருக்கும் என்று கூறவும் வேண்டுமோ? அந்த அழகிய குற்றாலக் காட்சியே இந்தப் படலத்தில் செய்யுள்களாக உருக்கொண்டுள்ளன. குற்றால மலையின்கண் வேர்ப்பலாக்கனிகள் நிலத்தினூடேயே நிலம் பிளப்பப் பருத்துக் கனிந்து கிடத்தலால் அவற்றின் நறுமணம் யாண்டும் பரவிக் கமழ்கின்றது. இந் நறுமணத்தை நுகர்ந்து இங்ஙனம் மணக்கும் பலாக்கனி எங்குளது என்று இம்முனிவர் தேடியுமிருப்பர். மணத்தின் வழிச் சென்று தேடி அவைவேரிற் பழுத்த கனிகளாதல் கண்டு வியந்து நின்றன ராதலும் கூடும். அப்பொழுதே அதற்கோருவமையை இவர் புலமையுள்ளம் தனக்குள்ளேயே தேடிக் கண்டு கொள்கிறது. அதனைச் செய்யுளாக வடிக்கின்றது இவருடைய செந்நா. இதோ அச்செய்யுள் வருகின்றது:

"கரந்து வைகினும் கற்றவர் தம்புகழ்
நிரந்து தோற்றப் படுவது நேர்மனுள்
பரந்த வேர்ப்பல வின்பழம் யாவர்க்கும்
சுரந்த வாசத்திற் றேற்றுமோர் பாலெலாம்."

வாய்மையாகவே புகழ்மகளைப் பெறவேண்டும் என்று பெரிதும் விரும்பித் தேடுவார் கண்ணில் அத்தெய்வமகள் புலப்படுவதே யில்லை; கரந்து மறைந்து விடுகின்றாள். மற்று அப்புகழ் மகளோ தன்னை எய்துதற்குரிய தகுதியுடையாரைக் காண்டற்கு யாண்டுந் தேடி வருகிறாள். அத் தகுதியுடையாரோ தம்மைத் தாமே கரந்து வைகின்றனர். முடிவில் புகழ்மகள் அவரைக் கண்டு பிடித்து அவர் புகழ் உலகெலாம் காலமெலாம் கமழச் செய்து விடுகின்றாள். இத்தகைய புகழாளர் புகழே என்றும் நின்று நிலவும் மெய்ப் புகழாகும். தாமே தம்மைப் புகழ்வித்துக் கொள்ளும் புகழ் வெறும் போலி என்று முனிவர் இச்செய்யுளால் உணர்த்து கின்றனர்.

இன்னும் இக்குற்றாலக் காட்டிலே, இவர் நம்மனோர்க்குக் காட்டும் காட்சிகளும் அவற்றைத் தலைக்கீடாகக் கொண்டு அவர் அறிவுறுத்தும் நல்லறங்களும் பெரிதும் நலமுடையனவாகும். ஓரிடத்தே வளமிக்க செங்காந்தள்கள் மலர்ந்து செறிந்துள்ளன. அம்மலரினூடே வண்டுகள் வந்து தேன் பருகுதற்கு நுழை கின்றன. அயலிலே குரங்குகள் பல களித்தாடுகின்றன. இந்தக் காட்சியைக் கண்டுகளித்த முனிவர் தற்குறிப்பேற்றமாக அக் காட்சியினின்றும் அறம் ஒன்றனை நமக்கு அறிவுறுத்துகின்றனர். அச்செய்யுள் வருமாறு :

"வண்டு போய்மலர்க் காந்தளின் மூசுதல்
கண்டழற்குட் கவிழ்ந்தன வென்றுநீர்
நொண்டு நுண்டுளி தூஉய்ப்பெயர்த் தோகையுட்
கொண்டு மந்தி குனிக்குமொர் பாலெலாம்" (கரு)

எனவரும் இச்செய்யுளில் கூறப்படுகின்ற அக்குற்றாலக் காட்டுக் குரங்குகள் காந்தள் மலர்களைத் தீப்பிழம்புகளாகவே கருதியிருந்தன. அம்மலரினூடு புகும் வண்டுகள் தீயின்கண் வீழ்ந்து விட்டன என்று அக் குரங்குகள் பெரிதும் இரக்கமுற்று அயலிலுள்ள சுனைநீரைக் கையான் முகந்து அத்தீயை அவிக்கலாயின. அங் கிருந்த வண்டுகள் அலமந்தெழுந்தோடுதலைப் பார்த்து அவை யிற்றை யாம் இற்றைநாள் பிழைப்பித்து அறமுடையோம் ஆயினோம் என்னும் களிப்பினாலேதான் இக்குரங்குகள் கூத்தாடுகின்றனவாம். இங்ஙனம் கூறுகின்றனர் இப்புலவர் பெருமான். நமது மூதாதைய ராகிய இக்குற்றாலக் குரங்கின் அருளுடைமை நம் மக்கள்பால் பெருகவேண்டும் என்பதே இச்சான்றோர் கருத்தாகும்.

இப் படலத்தில் நான்முகன் அறுமுகனை வழிபாடு செய்து வாழ்த்திப் பாடுகின்ற வாழ்த்துப் பாடல்கள் ஓசையின்பமும் சொல்லழகும் பொருளாழமும் பெரிதும் உடையன; ஓத ஓத இனிக்கும் பண்புடையன.

கம்பராமாயணத்தில் உயுத்த காண்டத்தின்கண் நாகபாசப் படலத்தில் கருடனுடைய கூற்றாகவருகின்ற திருமால் வாழ்த்தினை முழுவதும் பின்பற்றியே முனிவர் ஈங்கு இச்செய்யுளை ஓதுகின்றனர் என்பதிற் சிறிதும் ஐயம் இல்லை. கம்பராமாயணத்தில் மேற்கூறப்பட்ட பகுதி கற்றோர் உள்ளத்தைக் கனிந்துருகச் செய்யும் ஆற்றலுடையதாகும். சுருங்கக் கூறின் கம்பர்கூட முற் பகுதிகளைப் பாடிப்பாடிப் பெற்றிருந்த பயிற்சித் திறத்தாலே இங்ஙனம் பாடவல்லவர் ஆயினர் என்றும் நினைக்கச் செய் கின்றன அச்செய்யுள்கள். இங்கும் எவ்வாற்றானும் கச்சியப்ப முனிவர் இயற்றுஞ் செய்யுள்களும் ஏறத்தாழ அச்செய்யுள் களின் தரத்தையே எட்டி விடுகின்றன என்னலாம். ஈண்டுப் பிரமனுடைய கூற்றில் வைத்துக் கச்சியப்ப முனிவர் முருகப் பெருமானுடைய முழுமுதற் றன்மையை இச் செய்யுள்களால் விளக்குகின்றனர். இச்செய்யுள்கள் முடிவுறுங்கால் முனிவரே இவ்வுண்மையை **"வேத மத்தகம் அளைந்துகிடந்த விழுப்பெருந்துதி"** எனக் கூறுவது முழுவதும் பொருந்தும். இனி இப் படலத்தில் வருகின்ற **"தென்றல் சந்தனம் செந்தமிழென்றிவை நன்றளிப்ப நறும் பொதியம்"** (உக) என்னும் சொற்றொடர் தமிழின்ப நுகர்வோ ருளத்தைப் பெரிதும் குளிர்விப்பதுணர்க.

## (எ) நந்தியுபதேசப் படலம்

இப் படலத்தின்கண் முனிவர்பெருமான் இத்தணிகைப் புராணம் பயில்வோரை முழுவதும் தத்துவ ஆராய்ச்சியில் இறக்கி விட்டுவிடுகின்றனர். முனிவர் பெருமான் இப்படலத்தில் தமது இயற்கை மதிநுட்பத்தாலும் நல்லாசிரியரையடுத்துப் பயின்றமையாலும் தாம் எய்திய மெய்யுணர்வைப் பயில்வோர் எண்மையாக வுணர்ந்து தமதாக்கிக் கொள்ளும்படி செய்திருக்கின்றனர். நூலாசிரியரே இப்படலத்தின் இறுதியில் இவ்வுண்மையைப் பெருமிதம்படக் கூறுகின்றனர். "**பொருவில் ஆகமத்தில் உயர் உபதேசக் கலையினைப் புகன்றவா புகன்றும்**" என்பது நூலாசிரியர் கூற்றாகும்.

யாமறிந்த வரையில் தத்துவ ஆராய்ச்சியின் வாயிலாக அஃதாவது—அறிவு கருவியாகக் கொண்டு காணப்பட்ட உலகப் பொருளை ஆராய்ந்து அளவைகளாலே கடவுளியல்பு கூறுகின்ற சமயங்களுள் வைத்துச் சைவ சமயத்திற்கு ஈடான மற்றொரு சமயம் இருப்பதாகத் தெரியவில்லை. இக்காலத்தே வளர்ந்து வருகின்ற விஞ்ஞானம் என்னும் பூத நூலறிவுக்கு முழுவதும் பொருந்தி வருவதும் இந்தச் சைவ சமயமேயாகும். இந்தச் சைவ சமயத்தின் வேர் தமிழ் நாட்டிலே தமிழ்மொழியிலே இருப்பதனை யாம் உணர்ந்திருக்கின்றோம். அதனால் யாம் தமிழோடு சைவ சமயமே மிகவும் நெருங்கிய தொடர்புடையது என்று கருதுகின்றோம். இச் சைவ சமய நூல்கள் மெய்கண்ட நூல்கள் என்று போற்றப்படுவது மிகவும் பொருத்தமே என்றும் எண்ணுகின்றோம். இந்த மெய்கண்ட நூல்களின் சாறாகத் திகழ்கின்றது நந்தியுபதேசப் படலம். ஆதலால் இப்படலம் ஒன்றே ஒரு மாபெருந் தத்துவ நூலாகவும் விளங்குகின்றது. இப் படலத்தில் முனிவர் மணிவாசகப் பெருமான் திருவாய் மலர்ந்தருளிய திருவாசகத்தைப் பெரிதும் நினைவு கூர்ந்து பாடுகின்றார். அதனை,

> "வெளியிடை யொன்றாய் நின்ற வெளிமுதல் வெளியே போற்றி
> வளியிடையிரண்டாய் நின்ற வளிமுதல் வளியே போற்றி
> ஒளியிடை மூன்றாய் நின்ற வொளிமுதல் ஒளியே போற்றி
> தெளிபுன னான்காய் நின்ற தெளிபுனன் முதலே போற்றி" (௩௨)

> "படியிடை யைந்தாய் நின்ற படிமுதற் படியே போற்றி
> சுடரிரண்டாகி நின்ற சுடரினுட் சுடரே போற்றி
> உடலுயிராகி நின்ற உயிரினுள் உயிரே போற்றி
> தொடர்செய்யெண் பொருளு மெய்யாத் துன்னிய புராண போற்றி"
> (௩௩)

"முந்திய பொருள்க ளெல்லாம் பிந்தமுந் துள்ளாய் போற்றி
பிந்துறு பொருள்க ளெல்லாம் முந்தப்பிந் துறுவாய் போற்றி
மந்திரப் பொருள்க ளெல்லாம் வழுத்துமந் திரத்தாய் போற்றி
வெந்திறற் படைக ளெல்லாம் வியத்தகும் படையாய் போற்றி"
(௪௬)

என நிகழ்கின்ற இச்செய்யுளோடு மணிவாசகப் பெருமானும் நம் முள்ளத்தே எழுந்தருளுதலா லறிக.

இனி, இப்படலத்தில் வேடிக்கை பார்க்கவோ, விளையாடவோ, சிறிதும் இடமில்லை. அறிவுக்குப் பெருமைப்பையே இப்படலம் உண்டாக்கிவிடுகின்றது. எங்கும் ஆழ்ந்து ஆராய்தல் வேண்டும். இப்படலத்தின் சிறப்பை இப் புறவுரையில் விரிப்பது மிகை. நூலை ஓதியும் வல்லார்வாய்க் கேட்டும் இவற்றிற்கும் அப்பாலாக ஆண்டவன் அருள் கைவரப் பெற்றும் உணர்தற்குரியது இந்தப் படலம்.

## (௯) அகத்தியனருள்பெறு படலம்

எட்டாவதாக வமைந்த இப்படலம் **மறைஞானசம்பந்தநாயனார் அருளிச் செய்த சிவதருமோத்தரம்** என்னும் சைவாகமத்தைக் கச்சியப்ப முனிவர் எளிதாக யாவரும் உணரும்படி செய்தருளிய வாறும். சிவதருமோத்தரம் தமிழ் நூலேயாயினும் அரிதுணர் பொருளதாகலின் இத்தணிகைப் புராணத்தை ஓதுபவர் அவ் வாகமப்பொருளையும் எளிதாக உணர்ந்து கொள்ளுக என்றெழுந்த நல்லுணர்ச்சியால் அடிகளார் அந்நூற் பொருளைச் சிறிதும் எஞ்சாமல் இப்படலத்தி லமைத்திருக்கின்றார்.

இதன்கண், சைவ சமயத்தார்க்குரிய ஒழுக்கமும் சிவஞான தானவியலும் ஐவகை வேள்வியியலும் பலவிசிட்ட காரணவியலும் சிவதருமவியலும் பாவவியலும் சுவர்க்கநரகவியலும் செனன மரணவியலும் சுவர்க்கநரக சேடவியலும் சிவஞானயோகவியலும் பரிகாரவியலும் கோபுரவியலும் எனப் பன்னிரு கூறுபடுத்து அம்மறைஞான சம்பந்தநாயனாரால் கூறப்பட்ட செய்திகள் கூறப் பட்டுள்ளன. சிவதரு மோத்தரத்தில் ஆயிரத்திருநூற்றெட்டுச் செய்யுளில் அமைந்துள்ள இச்செய்திகளைக் கச்சியப்ப முனிவர் ஐநூற்றுப் பதின்மூன்று செய்யுளில் கூறியிருக்கின்றனர்.

## (௧௦) சீபரிபூரணநாமப் படலம்

முற்கூறப்பட்ட அகத்தியனருள்பெறு படலம் ஈறுகவமைந்த படலங்கள் பெரும்பான்மைபற்றி அறத்துப்பாலாகக்கொள்ளலாம். சீபரிபூரணநாமப் படலத்திலிருந்து இராமனருள்பெறுபடலமுடியும் துணையும் பொருட்பாலாகக் கொள்ளலாம். இவற்றுள் இச்சீபரி

பூரண நாமப்படலத்தில் சூரன் முதலியோர் வரலாறும் அவர்கள் அமரர்க்குச் செய்த துன்பங்களும் அமரர்க்காக அறுமுகக் கடவுள் அவுணர் மேற்சென்று போராற்றி வென்றமையும் அறுமுகனுக்கு அவுணர் ஊர்தியும் கொடியுமான செய்தியும் கூறப்படுகின்றன. இனி, சூரன் முதலிய அவுணர்கள் என்றது உயிரின்கண் அநாதியாகவமைந்த ஆணவ இருளை உருவகப்படுத்த வாறும். அமரர்கள் என்றது உயிர்க்கியல்பான நல்லியல்புகளை உருவகப்படுத்த வாறும். அமரர் அவுணர்கள் செய்யும் இடுக்கணுக்கு ஆற்றாமல் அறுமுகனுக்கு அடைக்கலமானது காமமுதலியவற்றால் துன்புற்ற உயிர் மெய்யுணர்வு பெற்று இறைவன்பாற் றஞ்சம் புகுவதனை உருவகப்படுத்தவாறும். ஆறுமுகப் பெருமான் அமரர் வேண்டு கோட் கிணங்கிப் போர் மேற்சென்று அவுணரை அழித்து அமரரைப் பாதுகாத்தமை, இறைவன் தன் முனைப்பற்று அடைக்கலம் புக்க உயிரைப் பாதுகாத்து வீடு நல்குவதனை உருவகப் படுத்தோதியவாறும். இங்ஙனம் கொள்ளல் தத்துவ நூலோர் கருத்தாகும். இதன்கண் கச்சியப்ப முனிவர் போர் நிகழ்ச்சியை வீரச்சுவைபடக் கூறியிருப்பது பாராட்டற்பாலது. செவ்வேள் அமரர்க்கிடுக்கண்செய்த அவுணர்மேற் சினந்து போய்ப்போரியற்றி வாகை சூடி மீண்டும் வந்து சினந்தணிந்து அமைந்திருந்தமையால் இது தணிகை என்று வழங்கப்படுகின்றது என்பது புராணக் கருத்து. இத் தொடர்புபற்றி இப் பெரும் போர் நிகழ்ச்சி இங்குக் கூறப்பட்டபடியாம்.

இதன்கண் போர் நிகழ்ச்சிகள் நந் தமிழ்ப் புறப்பொருளிலக்கண நெறிபற்றிக் கூறப்படுகின்றன.

## (௧௦) பிரமனருள்பெறு படலம்

இதன்கண் தணிகையிலுள்ள பிரமதீர்த்த வரலாறு கூறப் படுகின்றது.

## (௧௧) நாரணனருள்பெறு படலம்

இதன்கண் விட்டுணு தீர்த்த வரலாறும் பெருமையும் கூறப்படுகின்றன.

(௧௨). (௧௩). (௧௪). இம்மூன்று படலங்களும் அவ்வாறே இந்திரன் முதலியோர் வரம் பெற்றமையும் தீர்த்தப் பெருமையும் இயம்புகின்றன.

## (௧௫) களவுப் படலம்

இப்படலத்தில் சுந்தரி அமுதவல்லி என்னும் இருமகளிர் முருகப் பெருமானைக் கொழுநனாக அடைதற்கு எண்ணி மலர்விரி

சரவணப் பொய்கையின் பாங்கர் அருந்தவமாற்றிய செய்தியும் அவ்விருவருள் அமுதவல்லி "இந்திரன் பாங்கர் அண்மிமன்னு நாற் கோட்டு வேழும் வளர்த்திடத் தெய்வயானை என்னும் அப்பெயரின்" வைகிய செய்தியும் "எம்பிரான் பரங்குன்றத்து முன்னினன் வதுவை யாற்றத் தவப்பயன் முற்றி" நின்ற செய்தியும் ஒரு செய்யுளிலேயே நயமபடக் கூறிவைத்துப் பின்னர்ச் சுந்தரிப் பெயரினள் எரி வளர்த்து அத் தூலதேகத்தை நீக்கி, சூக்குமதேகத்தால் தொண்டை நாட்டில் மேற்பாடி நாட்டுக் குறிஞ்சி நிலத்திலே உயர் தவம் ஆற்றிய செய்தியும், அப் பெருமகள் மான்மகளாய செய்தியும், வேடர் கோமான் கண்டெடுத்துப்போய் அன்புடன் வளர்த்தமையும், அவள் தினைப்புனம் காவல் பூண்டமையும், யாழ் முனிவன் நாரதன் வள்ளியின் வனப்பினை முருகன் மனமுருகும்படி கூறிய செய்தியும், முருகன் வள்ளியைக் களவு மணம் புணர்ந்தமையும் அழகுற முனிவர் பாரித்து விளம்புகின்றனர். சிவபரிபூரணநாமப் படலம் செந்தமிழ்க்கேயுரிய பொருணெறி மரபுகள் இரண்டனுள் புறப்பொருளின்பாற் படுகின்ற பொருட்பாலாகும் என்று முன்னரே கூறினேம். ஈண்டு வருகின்ற களவுப் படலம் முதலியன அகப்பொருள் எனப்படும் காமத்துப்பாலாம் என்றும் கூறினேம். இக்கருத்தே கொண்டு இந்நூலாசிரியர் இந்நூலின் படலங்களை முறை செய்து பாடுகின்றார் என்னும் உண்மையை அம் முனிவரே கூறக் கேண்மின்!—வள்ளியை மணம் புணர எம்பிரான் இன்றே எழுந்தருளுக, என்று நாரதன் கூற முருகக் கடவுள்,

"கேட்டலும் மகிழ்ந்திங் கிருவென முனியைக்
கிழமையி னிருத்திமுன் புறத்தின்
ஈட்டிய பொருளின் துறைகளும் கற்பி
னியற்றுமக் கடியுமண் வழங்கக்
காட்டிய குமரன் களவெனு மின்பக்
கடற்றுறை வழக்கமும் உலகில்
நாட்டிய நுதலும் கருத்தொடு தமியே
நண்ணினன் வள்ளிபால் விலங்கல்"

என்பது நூலாசிரியர் கூற்று.

களவெனு மின்பக் கடற்றுறையில் இம் முனிவர் பெருமான் காட்டிய செய்யுள்கள் இனிபேரின்பம் நல்குகின்றன. இவர்க்குமுன் இச் செய்தியைப் பாடிய கச்சியப்ப சிவாசாரியார் புராண மரபு பற்றித் தமது கந்தபுராணத்தில் பாடியுள்ளார். ஒரோவழி கந்த புராணம் பாடிய அம்மாபெரும் புலவர் கச்சியப்ப சிவாசாரியரே தமது முதுமைப் பொழுதில் வள்ளி திருமணத்தைத் தாம் அகப் பொருணெறிபற்றிப் பாடாது விட்டமை ஒரு பெருங் குறையென்று கருதும் குறை கிடந்த மனத்தோடு பூதவுடல் நீத்தவர் அவ்வினைக்

குறை தீர்த்தற்பொருட்டு முருகப் பெருமான் அருளாலே இத் தணிகை நகரத்திலே மறுவலும் பிறந்து அவ்விறைவனருளாலே அந்தப் பெயரையே பெற்று இத் தணிகைப் புராணத்தையும் இயற்றி இதன்கண் இக் களவுப் படலம் பாடித் தங்குறை தீரப் பெற்றனரோ? என்று யாம் கூறத் துணிகின்றேம், கச்சியப்ப முனிவர் அத்துணைத் தமிழார்வம் உடையவர் என்னும் எம் கருத்துணர்த்தவே யாம் இவ்வாறு கூறினேம். எம் கூற்று இருபெரும் புலவர்க்கும் ஏற்றங் கூறுங் கூற்றேயாம்.

இனி இப் புலவர் பெருமான் இவர்க்கு முன்சென்ற சான்றோர் நெறியையே மேற்கொண்டு கோவைக் கலித்துறை யென்னும் செய்யுளால் விரித்துக் கூறுகின்ற இக் களவுப் படலத்தின்கண் இவர்க்கேயுரிய கற்பனை நயங்களையும் நுணுக்கங் களையும் ஈண்டு விரித்துக் கூற அஞ்சுகின்றேம். அவற்றை நாநலம் பெற ஓதி ஓதி இன்புறுதலே நன்றாகும்.

### (கசு) வள்ளிநாயகி திருமணப் படலம்

அடுத்து வருகின்ற இப்படலம் அகத்திணைக் கைகோள் இரண்டனுள் இரண்டாவதாகிய கற்பு என்னும் கைகோளின் பாற் படும் என்பது கூறாமலே பெறப்படும்.

### (கஎ) விடையருள் படலம்
### (கஅ) நாரதன் அருள்பெறு படலம் என்னும்

இறுதியினின்ற இரண்டு படலங்களும் அகப்பொருளின் பாலே அடங்குவனவாம்.

இதுகாறும் கூறியவாற்றால் இந்நூலைக் கற்போர் தாமும் இந்நூலை இன்னவாறு ஆராய்ந்து கற்றுப் பயன் பெறுதல் வேண்டும் என்று ஒருவாறு ஊக்குவதே எம் கருத்தாகும். இந்நூல் தரும் இன்பத்தையும் பயனையும் யாவரே முழுதுறக் கூறவல்லுநர் ஆவர். ஆகவே யாமும் இப்பணியை இவ்வளவின் நிறுத்தி வேறு பணியிற் புகுதற்கு அத்தணிகைத் தண்டமிழ்க் கடவுளாகிய முருகப்பெருமான் திருவருளை,

> "காக்குங் கடவுள் கரந்து சிலம்பனாய்
> வாக்குங் கரக மணிநீர் கரத்தேற்றுப்
> பூக்கும் பொலங்கொம்பனையாட்கு அருளின்பம்
> தேக்கும் தணிகைச் சிலம்பற் றொழப் பெற்றேம்
> சிந்தும் வினையும் செருக்கும் விடை கொண்ட"

என்று பாராட்டி விடை கொள்கின்றேம்.

வாழ்க செந்தமிழ்! வளர்க கச்சியப்ப முனிவர் வண்புகழ்!

# நூலாசிரியர் வரலாறு

செந்தமிழ்ப் புராணங்களுள் சிறந்து விளங்கும் இத் தணிகைப் புராணத்தை இயற்றிய புலவர் பெருமான் கச்சியப்ப முனிவராவார். வினையினீங்கி விளங்கிய மெய்யறிவினையுடைய இவர் தொண்டை மண்டலத்திலுள்ள திருத்தணிகையிலே தோன்றியவராவார். இவர் பிறந்த குடியைக் காஞ்சிச் சைவ வேளாளர் பெருங்குடி என்று வழங்குவர் என்று அறியப்படுவதனால் இவர் முன்னோர் காஞ்சியினின்றும் திருத்தணிகையில் குடியேறியவர் என்றறிகின்றோம்.

இந்நூலாசிரியர் கருவிலேயே மெய்யுணர்வுத் திருவுடையராய்ப் பிறந்தவர் ஆவர். ஆதலால் இவர் இளமையிலேயே இவ்வுலகியல் வாழ்விலே நாட்டமிலராய்த் துறவு மனப்பான்மையுடையராய்த் திகழ்ந்தார். மிக்க இளமைப் பருவத்திலேயே தென்மொழி வடமொழி யிரண்டனையுமே நன்கு பயின்று இரு மொழியினும் வல்லுநராய்த் திகழ்ந்தனர்.

கல்வியறிவு முதிர்ந்தபின்னர் மெய்யுணர்வு பெறுதற்குரிய நல்லாசிரியரைக் காணவிழைந்து திருக்கோயில் யாத்திரை தொடங்கினர்.

> " மூர்த்திதலம் தீர்த்தம் முறையாய்த் தொடங்கினர்க்கோர்
> வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே"

என்பது தாயுமானவர் திருமொழியாகும். இத் திருமொழிக் கிணங்கவே கச்சியப்ப முனிவர் அந்த யாத்திரையிலே தில்லை முதலிய திருவூர் பலவற்றையும் கண்டு வழிபாடு செய்து திருவருள் கூட்டுவித்தலாலே திருவாவடுதுறையை எய்தி அங்குள்ள சித்தாந்த சைவத் திருமடத்தின்கண் தலைமை பூண்டிருந்த பின் வேலப்ப தேசிகர் என்னும் நமச்சிவாய மூர்த்தியைக் கண்டு வணங்கி அப் பெரியாருடைய திருவருளோக்கமும் கைவரப் பெற்றனர்.

பின்னர், அத் திருவாவடுதுறைத் திருமடத்துத் துணைத் தலைமை பூண்டிருந்த அம்பலவாண தேசிகரிடத்துச் சைவ சித்தாந்த நூல்களைப் பயின்று மெய்யுணர்வு பெருகப் பெற்றனர். அம்பலவாண தேசிகரிடத்தே தீக்கையும் பெற்று மாபெருஞ் சைவத் துறவியாகித் திகழ்ந்தனர். பின்னரும் பின் வேலப்ப தேசிகராகிய நமச்சிவாய தேசிகரிடத்திலே ஞான தீக்கை பெற்றவரும் தென்மொழிக் கடலும் வடமொழிக்

கடலும் நிலைகண்டுணர்ந்தவருமாகிய மாதவச் சிவஞான யோகியாரிடம் கச்சியப்ப முனிவர் தொல்காப்பியம் முதலிய தமிழிலக்கணங்களையும் பாணினீய முதலிய வடமொழி இலக்கணங்களையும், இருமொழியினுமுள்ள இலக்கியங்களையும் இனிது பயின்று அச் சிவஞான முனிவரே போன்று கல்வித் துறையிற் பெரிதும் சிறப்புற்றுத் திகழ்வாராயினர். இவ்வாற்றால் சிவஞான முனிவருக்கும் கச்சியப்ப முனிவருக்கும் ஞானாசிரியர் பின்வேலப்ப தேசிகர் என்னும் நமச்சிவாயமூர்த்திகளேயாவார் என்றும் சிவஞான முனிவர் கச்சியப்ப முனிவர்க்கு வடமொழி தென்மொழி யிரண்டனையும் பயிற்றுவித்த நல்லாசிரியராவார் என்றும் தெரிகின்றது. துறைசையாதீனம் என்னும் திருவாவடுதுறைத் திருமடத்திலே பெரிய பட்டம் என்கின்ற பெருந்தலைமை பூண்டோரை நமச்சிவாய மூர்த்திகள் என்றே குறிப்பிடுதலும் சின்னப்பட்டம் என்கின்ற துணைத்தலைமை பூண்டோரை அம்பலவாணர் என்றே குறிப்பிடுதலும் வழக்கமாகும். இக் காரணத்தால் மாதவச் சிவஞான யோகியார்க்கு இவர்தம் நூலில் வணக்கம் கூறாமல் ஞானாசிரியராகிய நமச்சிவாய மூர்த்திகளுக்கே வணக்கம் கூறுவாராயினர். அது வருமாறு :—

"அருள்வளர் நந்தி மேதகை விளக்கி
யருள்சிவ ஞான போதத்தைத்
தெருள்வளர் தமிழ்ச்செய் தளித்த மெய்கண்ட
தேவனற் சந்ததி விளங்க
வருமொரு துறைசைத் திருநகர் நமச்சி
வாயதே சிகனெடு மிந்தக்
குருபரன் வழிவந் தருணனி கொழிக்குங்
குரவர்கள் பலரையுந் துதிப்பாம்"

என்பது, கச்சியப்ப முனிவர் தணிகைப் புராணத்தில் கூறுகின்ற ஆசிரியர் வணக்கமாகும்.

இனி, இதன்கண் "இந்தக் குருபரன் வழிவந் தருணனி கொழிக்கும் குரவர்கள் பலரையும் துதிப்பாம் என்பதனால் இப்புலவர் பெருமான் தம் புலமைக்குப் பேராசிரியரா யமைந்த சிவஞான முனிவர்க்கும் வணக்கம் கூறியவராதல் நுண்ணுணர்வினாற் கண்டுகொள்க.

இனி, சிவஞான முனிவர் தாமும் தமது காஞ்சிப் புராணத்திலே வேலப்ப தேசிகனருள் சென்னி சேர்ப்பாம் என வணங்குவதும் ஈண்டுக் கச்சியப்ப முனிவர் நமச்சிவாய தேசிகன் என்று குறிப்பிடுவதும் ஒரு ஞானாசிரியரையே என்றுணர்க.

இவ்வுண்மை யுணராதார் கச்சியப்ப முனிவர் தம் நூலில் தம் ஆசிரியராகிய சிவஞான முனிவர்க்கு வணக்கம் கூறுமை யால் சிவஞான முனிவர் இவர்க்கு ஆசிரியர் என்பது பொருந்தா தென்பர்.

இனி, கச்சியப்ப முனிவர் சிவஞான யோகியார்க்கும் மாணவராயிருந்தமையை அம் மாபெருந் துறவியாகிய சிவஞான யோகியார் சிவத்தோடிரண்டறக் கலந்த காலத்தே அச் சிவ ஞான முனிவரை இக் கச்சியப்ப முனிவர் மனமுருகி வணங்கிய செய்யுள் ஒன்று விளக்குகின்றது. அதுவருமாறு:—

"திண்ணை வின்பச் சேவடியுந் திருவிழியும்
திருமார்பும் செல்வக் கையும்
நண்ணு மன்பர்க் கருள்கருணைத் திருமுகமும்
பசுங்குழவி நடையே யாகிப்
புண்ணி யத்தின் பொலிவாகி யற்புதக்கோ
லக்கொழுந்தாய்ப் புலைநா யேற்குக்
கண்ணை விட்டு நீங்காத சிவஞான
சற்குருவே கருணை வாழ்வே"

எனவரும் இக் கையறுநிலைச் செய்யுள் கச்சியப்ப முனிவர் சிவஞான முனிவரை நினைந்தோதியதாம்.

இனி, சிவஞான முனிவரும் நமச்சிவாய மூர்த்திகள்பால் (பின்வேலப்ப தேசிகர்) சமய தீக்கை பெற்றவரே என்பதனை, சிவஞான முனிவரை மதுரையில் நான்காவது தமிழ்ச்சங்கம் நிறுவிய பாண்டித்துரைத்தேவர் புகழ்ந்து பாடிய செய்யுளின் கண் அம்முனிவரை,

"கலைதேர் நமச்சி வாயகுரு கருணைக்கடலிற் றிளைத்தாடிக்
கலகப் பாசத் தொடரறுத்துக் காமத்தறியை அறவீழ்த்தி
அலையும் சமயத் தருக்கனைக்கி மூடிவேரொடு மகழ்ந்தெறிந்திட்(டு)
அருளின் படாத்தை முகமேற்கொண்(டு) ஆதிவேதாகமங்க ளெனும்
தொலையா மணிக ளிருமருங்குந் தொனிக்கச் சைவ மதம்பொழிந்து
துங்கமோடு முலகமுற்றுஞ் சுற்றும் வெற்றி வாரணமே
மலையா தருளு முனிவர் சிகா மணியே வருக வருகவே!
வளமார்துறைசைச் சிவஞான வள்ளால் வருக வருகவே!"

எனப் பாராட்டிய அழகிய அன்புச் செய்யுளாலறிக.

இனி, சிவஞான முனிவரும் கச்சியப்ப முனிவரும் அகவை யானும் மிகவும் வேற்றுமையுடையரல்லர். இவ் விரு பெரியோ ரும் பிறந்த காலம் தேற்றமாகத் தெரிந்து கோடற்கிடமில்லை

யாயினும் இவ்விரு பேரொளிப் பிழம்புகளும் மறைந்த காலங்கள் ஐயமறத் தெரிகின்றன. இவர் ஆசிரியராகிய சிவஞான முனிவர் சிவத்தொடு கலந்த காலம் சாலிவாகன சகாப்தம் ஆயிரத் தெழுநூற்றெட்டு விசுவாவசுயாண்டுச் சித்திரைத் திங்கள் எட்டாம்நாள் திங்கட் கிழமை ஆயிலிய நாள் (கி. பி - 1784) என்று கூறுப. இதனை, சிவஞானமுனிவர் திருவாய் மலர்ந்தருளிய "செங்கழுநீர்ப்பிள்ளையார் பிள்ளைத்தமிழ் என்னும் நூலிற் பாயிரத்தில் வருஞ் செய்யுளாலறிக. அது வருமாறு:—

"இலகுசக வீரெட்டு நூற்று நாற்பத்தேழி
னிற்கரங் கும்பமிருபத்
தேழிரே வதிவெள்ளி பூர்வபக் கத்துதியை
யேர்க்கவுல வுஞ்சுப்பிரம்
கலவியுறு சுபதினங் கன்னிலக் கினமதிற்
கலைசைப் பதிக்குள் வாழ்செங்
கழுநீர் விநாயகர்த மீதுபிள் ளைத்தமிழ்க்
கவிபாடி வானோருண
அலைமலிகடற் கடைந் தமிழ்தூட்டு மாலென்ன
வவனியிற் புலவர் செவியா
லார்ந்திடத் துறைசைவாழ் சிவஞான தேசிக
வரங்கேற்றி னனுதலால்
நலசுகுண மணிகுவளை யணிப்புயன் வீரப்ப
னல்குமக ராசயோக
னங்கள்நே சவபூப னனுசர்சேய் சுற்றமு
நன்மைதரு வாழ்வுறுகவே"

என்பது.

இனி இத்தணிகைப் புராண ஆசிரியராகிய கச்சியப்பமுனிவர் சிவத்தொடு கலந்த காலம் சாலிவாகன சகாப்தம் ஆயிரத்தெழு நூற்றுப் பன்னிரண்டு சாதாரணயாண்டு, சித்திரைத் திங்கள் பதினொன்றாம்நாள், செவ்வாய்க்கிழமை புனர்பூசநாள் (கி. பி-1788) என்று கூறுப. இதனை

"ஏர்தரு சாலி வாகன சகாத்தம்
ஆயிரத் தெழுசதத் தொருபத்
திரண்டின்மேற் சாதா ரணவரு டத்தில்
இயைதரு சித்திரைத் திங்கள்
சார்தரு நேரி பத்தினொன் றோன்று
தருசெவ்வாய் வாரம்பூருவத்தில்
சத்தமி புனர்பூ சத்திரு நாளில்
தவலறு கும்பலக் கினத்திற்

*சீர்தரு துறைசை வாழ்சிவ ஞான*
*தேவன்மா ணாக்கருண் முதன்மை*
*திகழ்ந்துள கச்சி யப்பமா முனிவன்*
*திருப்பெருங் காஞ்சியி லெய்திச்*
*சேர்தரு மடியார் தமதக விருளைத்*
*தினகரன் முன்னிரு ளென்னத்*
*திருந்துதன் னருளா லகற்றிவீ டுறுத்திச்*
*சிறந்தபூ ரணமடைந் தனனே."*

*எனவருஞ் செய்யுளால் உணர்க.*

*இனி, இப்புலவர் பெருமான்* **இத்தணிகைப் புராணமேயன்றி, திருவானைக்காப் புராணம், பூவாளூர்ப் புராணம், பேரூர்ப் புராணம், விநாயக புராணம், காஞ்சிப் புராணம் (பிற்பகுதி), சென்னை விநாயகர் பிள்ளைத் தமிழ், கச்சியானந்த ருத்திரேசர் வண்டுவிடு தூது, ஆனந்த ருத்திரேசர் பதிற்றுப்பத்தந்தாதி, திருத்தணிகைப் பதிற்றுப்பத்தந்தாதி, பஞ்சாக்கரவந்தாதி, திருத்தணிகையாற்றுப்படை** *என்னும் அரிய வேறு பல நூல்களையும் இயற்றியுள்ளார். இவர் புகழ் விரிப் பினகலும் தொகுப்பின் எஞ்சும்.*

வாழ்க கச்சியப்ப மாமுனிவர் வண்புகழ் !

வாழ்க செந்தமிழ்மணிமொழி வாழியவே.

*இங்ஙனம்,*

**மேலப்பெருமழை**
*18—1—1965*

**புலவர். பொ. வே. சோமசுந்தரன்.**

# உரை வரலாறு

**தணிகைப் புராணம்** என்னும் இத் தண்டமிழ்ப் பேரிலக்கியம் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரால் முதன் முதலாகச் சிறந்த உரையுடன் இப்பொழுது வெளியிடப்படுகின்றது. பழைய தமிழிலக்கியச் செல்வம் அழிந்து போகாதபடி காலஞ் சென்ற டாக்டர் மகாமகோபாத்தியாய உ. வே. சாமிநாதையர் அவர்களை உள்ளிட்ட பல சான்றோர்கள் பெரிதும் முயன்று நாடெலாஞ் சென்று வீடுவீடாக நுழைந்து தேடிக் கண்டுபிடித்துப் பேணி வைத்தனர். அப்பழம் பெருஞ் செல்வங்களை இக்காலத்திற் கியன்ற முறையில் பழைய உரைகளைப் புதுக்கியும் உரையில்லாதவற்றிற்கு இக்காலத்தில் உரையெழுதும் ஆற்றல்வாய்ந்த புலவர் பெருமக்களைக் கொண்டு உரையெழுதுவித்தும் அழகுக்கு அழகு செய்து கண்டோர் கண்கவர் வனப்புடன் நூல்வடிவிலே வெளியிட்டுச் செந்தமிழ்மொழிக்கு ஒப்பற்ற பெருந்தொண்டு செய்து வருகின்றது மேற்கூறப்பட்ட சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்.

மேலும் அப்பழம் பேரிலக்கியங்களைச் சங்க நூல்கள் என்றும் காப்பியங்கள் என்றும் இனம் இனமாக முழுவதும் ஒரு சேரத் தொகுத்து அவற்றிற்கு வெளியீட்டு விழாக்களும் எடுத்துத் தெருவெல்லாம் பண்டைத் தமிழ் மணம் கமழும்படியும் செய்து வருகின்றது அந்த மாண்புமிக்க கழகம். இக்கழகத்தின் இத் திருத்தொண்டினை இப்பொழுது இத்தமிழகம் நன்கறிந்து அத் தொண்டாலியன்ற பயனைப் பெற்று நுகர்ந்தும் வருகின்றது.

தமிழ்ப் பேரிலக்கியங்களை மேலே கூறியபடி பேணி வருவதனையே குறிக்கோளாகக் கொண்ட அக்கழகத்தாரால் பேணத் தகுந்த சிறப்பு வாய்ந்த இலக்கியங்களுள் இத்தணிகைப் புராணமும் ஒன்றாகும். இந்தநூல் புராணம் என்னும் பெயருடைய தாயினும் இஃது ஏனைய கோயிற் புராணங்கள் போலாது கம்ப ராமாயணம் போன்றதொரு சிறந்த பெருங்காப்பியமேயாகும். இத்தணிகைப் புராணத்தை மூல நூலாக முதன் முதல் யாழ்ப் பாணத்துப் பேரறிஞர் சி. வை. தாமோதரம் பிள்ளையவர்கள் தமக்குச் சைவ சமயத்தின்பாலும் தமிழின்பாலும் உண்டான பேரார்வம் காரணமாகக் கி. பி. 1883 ஆம் ஆண்டிலே அச்சிட்டு வெளிப்படுத்தினார்கள். பின்னர் அஃதாவது—கி. பி. 1929 ஆம் ஆண்டில், சென்னை, கா. நமச்சிவாய முதலியாரவர்கள் மூல நூலாகவே அச்சிட்டு வழங்கினார்கள். அந்நூல் இறுதியில் இத் தணிகைப் புராணத்திற்குச் சிதம்பரம் ஈசானியமடம். இராமலிங்க சுவாமிகள் எழுதிவைத்திருந்த குறிப்புரையும் சேர்க்கப்பட்டுளது.

தணிகைப் புராணம் சங்க காலத்துத் தமிழ் நலங்களும் சைவ சமயத் தத்துவ நூல்களின் நலங்களும் ஒருங்கேயமைந்த பெரு நூலாகும். ஆகவே இந்நூலைப் பொருளுணர்ந்து பயில்வதற்குத் தொல்காப்பிய முதலிய பழைய இலக்கணப் பயிற்சியும் பாட்டும் தொகையுமாகிய சங்க நூற்பயிற்சியும் ஏனைய இலக்கியப் பயிற்சியும் உடையராதல் வேண்டும். இத்தகையோர் தமிழ் மொழி பெரிதும் புறக்கணிக்கப்பட்டிருந்த வெள்ளையர் ஆட்சிக் காலத்தே மிகவும் அரியராகவே இருந்தனர். ஆதலின் இப்பேரிலக்கியத்தின் பெருமையைத் தமிழகம் உணர மாட்டாதாயிற்று.

இனி இந்தத் தணிகைப்புராணத்தைச் சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக் கழகம் தோன்றிய காலத்தில் வித்துவான் இறுதி வகுப்பிற்குப் பாடமாக வைத்திருந்தனர். அப்பல்கலைக் கழகத்தில் இத்தணிகைப் புராணத்தைப் பயிற்றுவிக்கும் ஆற்றல் பெற்ற பேராசிரியர் ஒருவரிருந்தனர். அவர் மாபெருந்துறவி. **கந்தசாமியார்** என்பது அவர் திருப்பெயராகும். அப்பல்கலைக் கழகத்தில் அவர் ஒருவரே இத்தணிகைப் புராணத்தை மாணவர்க்கு அறிவுறுத்தி வந்தனர். யானும் அப்பெரியார்பால் இத்தணிகைப் புராணத்தைப் பயின்ற மாணவருள் ஒருவன் ஆவேன் என்பதைப் பெருமையுடன் கூறிக்கொள்கின்றேன். ஆண்டு மாறிப் பாடங்களும் வேறு வேறு ஆசிரியரிடம் மாறிப் போயினும் இத்தணிகைப் புராண மட்டும் பேராசிரியர் கந்தசாமியாரை விட்டு மாறுவதில்லை.

கந்தசாமியாரவர்கள் மாணவர்க்குப் பாடம் பயிற்றுவதில் பெரிதும் ஊக்கமுடையவர் ஆவார். ஆதலால் மூல நூலாக இருந்த இத்தணிகைப் புராணத்தில் பல்கலைக்கழகத்தில் பாடமாக வந்த பகுதிகளுக்கு மட்டும் இவர் உரையெழுதிவைத்திருந்தனர். இப்பேராசிரியர் உரையெழுதும்போது அவ்வுரையை அச்சேற்றி வெளியிட வேண்டும் என்னும் கருத்தோடு எழுதினாரில்லை. மாணவர்க்குப் பாடம் கூறும்போது மறதி முதலியவற்றால் வழுவுண்டாகாதிருத்தற் பொருட்டே அவர் உரை எழுதி வைத்திருந்தனர்.

இனி, உரையில்லாதிருந்த இத் தணிகைப் புராணத்தின் பெருமையை நன்குணர்ந்திருந்த சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்து அமைச்சர் உயர்திரு வ. திருவரங்கம் பிள்ளையவர்கள் அப் பேரிலக்கியத்திற்கு நல்லுரை எழுதுவித்து வெளியிட வேண்டும் என்று பெரிதும் விரும்பினார்கள். எல்லாற்றானும் உரையெழுத வல்லாரைக் கண்டு பிடிப்பதில் முயன்று வந்தார்கள்.

பேராசிரியர் கந்தசாமியார் காலஞ்சென்ற பின்னர் அமைச்சர் திரு. வ. திருவரங்கம் பிள்ளையவர்கள், கந்தசாமியார் எழுதிய

உரைக் கையெழுத்துப்படி ஒன்றிருந்த செய்தியைக் கேள்வியுற்று, அவ்வுரை அப்பேராசிரியர் குடும்பத்தாரிடமாதல், அவரோடு தொடர்புடையாரிடத்திலாதல் இருக்கக்கூடும் என்றும் கருதி அந்த உரைப்படியினைக் கண்டுபிடித்துக் கைப்பற்றுதற் பொருட்டு 1943 ஆம் ஆண்டில் பேராசிரியர் கந்தசாமியார் அவர்கள் பிறந்த ஊருக்குச் சென்றனர். பேராசிரியர் கந்தசாமியார் குடும்பத்தைச் சேர்ந்தவர்களையும் அப்பேராசிரியரோடு தொடர்பு கொண்டிருந்தோரையும் ஆர்வத்துடன் வினவினர். அவ்வாராய்ச்சியால் அப்பேராசிரியர்பால் கையெழுத்துப்படியாக இருந்த உரை நூல் இருக்குமிடம் சிறிதும் புலப்படவில்லை. எனவே அமைச்சரவர்கள் பெரிதும் உளம் வருந்தி மீண்டு வந்தார்கள்.

இனி, இச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தை நிறுவி நந்தமிழன்னையின் திருத்தொண்டிற்கே தம்மை முழுதும் ஆளாக்கியிருந்த அந்தப் பெருந்தகை அமைச்சர் வ. திருவரங்கம் பிள்ளையவர்களும் காலமான பின்னர், அவர்தம் உளக்கருத்தையெல்லாம் நிறைவேற்றிவைப்பதற்கே அவர்தம் தம்பியாராகப் பிறந்தவராகிய உயர்திரு. வ. சுப்பையா பிள்ளையவர்களும் தந்தமையனார் உள்ளத்தே முகிழ்த்து நிறைவேறாதெஞ்சி நின்றதாகிய இத்தணிகைப் புராண உரை வெளியீட்டுப் பணியைத் தமதுள்ளத்தே முதன்மையாகக் கொண்டு அவ்வழி அதற்கியன்ற முயற்சியிலீடுபட்டிருந்தனர்.

“எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்” (குறள் - ௬௬௬)

என்பது வள்ளுவர் பொன்மொழி

தம் அண்ணனார் எண்ணியவற்றைத் தாமும் திண்மையாக எண்ணுமியல்புடைய திரு. வ. சு. பிள்ளையவர்கள் இத்தணிகைப் புராண உரை வெளியீடுபற்றித் திண்ணமாக எண்ணிய எண்ணத்தின் உறைப்பினாலும் திருவருளின் துணையாலும் தந்தமையனார் தேடியும் கிடைக்கப்பெறாத பேராசிரியர் கந்தசாமியார் வரைந்து வைத்திருந்த தணிகைப் புராண உரைப்படி இருக்குமிடத்தைக் கேள்வியுற்றனர். தமக்கெனச் செயலொன்றுமில்லை; எல்லாம் இறைவன் செயலே என்று திரு பிள்ளையவர்கள் தமது பட்டறிவினாலே நன்குணர்ந்தவர்கள் ஆதலால் அச்செய்தி கேட்டவுடன் இதுவும் இறைவன் செயலே என்று எண்ணி இறும்பூதெய்துவாராயினர்.

“தேடுங்கள் கண்டடைவீர்கள்!” என்பது இயேசு பெருமான் திருமொழியாகும். இப் பொன்மொழிக்கேற்பத் தாம் செல்லுமிடமெல்லாம் தணிகைப் புராணத்திற்கு உரை எழுத வல்லார் யார்? என்றும், பேராசிரியர் கந்தசாமியார் உரை யாத்திருத்தல்

கூடும்? என்றும் வினவி விடாது முயன்று வந்த பிள்ளையவர்கள் 1955 ஆம் ஆண்டு மதுரை மாவட்டத்திற்குச் சென்றிருந்த பொழுது அந்த மாவட்டத்துள்ள மேலூர், மாவட்ட உயர்நிலைப் பள்ளித் தலைமைத் தமிழாசிரியர் புலவர் உயர்திரு வீ. குமாரசாமி ஐயர் அவர்களைக் கண்டபொழுது வழக்கம்போலக் கந்தசாமியார் தணிகைப் புராண உரைச் சுவடியைப்பற்றி வினவினார்கள். வீர சைவப் பெருமகனாராகிய குமாரசாமியையரவர்கள் கந்தசாமியா ரவர்கள்பால் நெருங்கிப் பழகிய மாணவருள் ஒருவராவார். மேலும் கந்தசாமியார் அவர்கள் தணிகைப் புராணத்திற்கு உரை காணும்பொழுது அவ்வுரையினை ஏட்டில் எழுதி அப் பேராசிரி யர்க்கு உதவி செய்தவரும் இக் குமாரசாமியையரவர்களே யாவர். கந்தசாமியார் அவர்கள்பாலிருந்த தணிகைப் புராண வுரை யிருக்குமிடத்தை ஆராய்ந்தறிந்திருந்த ஐயரவர்கள் அந்தவுரை கந்தசாமியார் தாயத்தார் பாலிருக்கின்றதென்றும், அதனைத் தம் பள்ளித் தலைமையாசிரியர் திரு. சதாசிவத்தேவர் கந்தசாமியார் தாயத்தார்க்கு நெருங்கிய உறவினர் ஆதலால் அவர்கள் வாயிலாய் அவ்வுரைச் சுவடியைப் பெறுதல் கூடும் என்றும் கூறி அத் தலைமையாசிரியர்பால் பிள்ளையவர்களை அழைத்துப் போய் அறிமுகஞ் செய்து வைத்தனர்.

திரு. சதாசிவத் தேவரவர்கள் அவ்வுரைக்குத் தகுந்த கைம்மாறு கொடுப்பீர்களாயின் அதனை வாங்கித் தருதல் கூடும் என்று கூறவே பிள்ளையவர்கள் அவ்வுரைக்குத் தகுந்த கைம்மாறு தருவதாக உடம்பட்டு அவ்வுரைச்சுவடியிலிருந்து பத்துச் செய்யுள் உரையைப் படியெடுத்துத் தமக்கு அனுப்பும்படியும் கூறினார்கள். தேவரும் அவ்வாறே பத்துச் செய்யுள் உரையைப் படியெடுத்தனுப்பித் தணிகைப் புராணத்திலுள்ள மூவாயிரத்து நூற்றறுபத்தொரு செய்யுள்களில் கந்தசாமியார் உரை ஆயிரத்துத் தொளாயிரத் தெழுபத்தாறு செய்யுள்கட்கு மட்டுமே இருக் கின்றது என்றும், எஞ்சிய செய்யுள்கட்கு அவர் உரை இல்லை என்றும் அறிவித்தனர்.

திரு. சதாசிவத் தேவரவர்களாற் படியெடுத் தனுப்பப்பட்ட அப் பேராசிரியர் உரையைக் கண்டு மகிழ்ந்த பிள்ளையவர்கள் அவர்கள் உரை முழுநூலுக்கும் இல்லாமைக்காக வருந்தினார்கள். கிடைத்த உரையை உடனே வாங்கிக்கொள்ளத் துணிந்தார்கள். அக் கையெழுத்துப் படியை விலைகொடுத்து வாங்கிக்கொள்வதாக வும் திரு. தேவர் அவர்களுக்கும் கடிதமெழுதி அறிவித்தார்கள்.

8. 9. 1956 ஆம் ஆண்டு திரு. சதாசிவத் தேவரவர்கள் மேலூர் உயர்நிலைப் பள்ளியினின்றும் ஓய்வு பெற்று முருகப் பெருமானுடைய படைவீடாறனுள் ஒன்றாகிய திருப்பரங்குன்றத்தி

லுள்ள முக்குலத்தோர் உயர்நிலைப் பள்ளித் தலைமையாசிரியர் பணியை ஏற்றுக்கொள்வாராயினர். இச் செய்தியறிந்த பிள்ளையவர்கள் தேவர்பாற் சென்று விலைகொடுத்துக் கந்தசாமியார் உரையினை வாங்கி வருதற் பொருட்டு அதற்கு வேண்டிய பொருளொடு கழக மேலாள் திரு. தி. வள்ளிநாயகம் பிள்ளையவர்களைத் திருப்பரங்குன்றத்திற்குச் செல்ல விடுத்துத் தாம் அப்பொழுது (4-11-1956) காஞ்சி நகரத்தில் சிந்தாமணிச் செல்வர், வித்துவான் மே. வீ. வேணுகோபால பிள்ளையவர்கட்கு நிகழ்ந்த மணிவிழாக்காணக் காஞ்சி நகரத்திற்குச் சென்றார்கள்.

காஞ்சியிற் சென்று கற்றோர் குழுவினிற் கலந்து அவர்களோடு அளவளாவி மகிழ்ந்த பிள்ளையவர்கள் மேற் கூறப்பட்ட தணிகைப்புராணம் பற்றிய செய்தியை அவர்கட்குக் கூறிய பொழுது அவ்வறிஞர் குழாம் தணிகைப் புராணத்தைப் பற்றியும் அதன் ஆசிரியராகிய கச்சியப்ப முனிவர் புலமைப் பெருமை பற்றியும் பிள்ளையவர்கட்குக் கூறியதோடன்றி அந்த மாபெருந் துறவியும் பேரிசைப் புலவருமாகிய கச்சியப்ப முனிவருடைய பூதவுடலை அடக்கம் செய்யத்தகுந்த மாதவமும் இக் காஞ்சி நகரமே செய்திருந்தது என்றும் அறிவிப்பாராயினர். திரு. வ. சு. பிள்ளையவர்கள் இவ்வறிவிப்பினைக் கேட்டு அதனை ஒரு நன்னிமித்தமாகவே கருதி அங்ஙனமாயின் அப் பெரியாருடைய சமாதியைக் கண்டு வழிபாடாற்றவேண்டுமே! என்னுள்ளம் பூரிக்கின்றது என்று கூறி அறிஞர் சிலருடன் கச்சியப்ப முனிவர் புகழுடல் நிற்கப் பூதவுடல் அடக்கஞ் செய்யப்பட்டுள்ள அந்தப் புண்ணிய நிலத்திற்கு வழிபாட்டுப் பொருளோடு சென்றார்கள்.

திருக்காஞ்சியின்கண் **பிள்ளைப்பாளையம்** என்னும் பகுதியில் சைவ சித்தாந்த மடத்தைச் சார்ந்ததொரு பொழிலிலே கச்சியப்ப முனிவருடைய சமாதியைக் கண்டு கண்ணீர் பெருகவும் அன்பாலே உள்ளமும் உடம்பும் உருகவும் கைகுவித்துத் தொழுதேத்துவாராயினர்.

திரு. பிள்ளையவர்கள் திருக் காஞ்சியில் முனிவர் சமாதியை வழிபாடு செய்து வணங்கிய அந்த நாளிலே அதே நேரத்திலே திருப்பரங்குன்றத்திற்குத் தணிகைப் புராணவுரை பெறுதற்குச் சென்றிருந்த கழக மேலாள் திரு. தி. வள்ளிநாயகம் பிள்ளையவர்கள் அத் திருப்பரங்குன்றத்திலே திரு. சதாசிவத் தேவரவர்களிடம் பொருள் கொடுத்துத் தணிகைப் புராண வுரையைப் பெற்றார்களாம். இந்தச் செய்தியைப் பின்னர்க் கழக மேலாள் அவர்கள் கூறக் கேட்டு இதுவும் முருகப்பெருமான் திருவருளேயாகும் என்று மகிழ்ந்தார்களாம்.

ஈண்டுக் கூறப்பட்ட தணிகைப் புராண வுரைபெற்ற இவ் வரலாற்றை எனக்குக் கழக ஆட்சியாளர் அவர்களே அறிவித் தார்கள். அதுகேட்டு யானும் ஆற்றவும் உவகை கொண்டேன். முன்னவனே முன்னின்றால் எந்தக் காரியந்தான் கைகூடாது?

இனி, இவ்வாறு பிள்ளையவர்கள் தந்தையனார் முயன்ற முயற்சியைக் கைவிடாது பின்னரும் முயன்று கந்தசாமியார் உரையைக் கைப்பற்றிய பின்னர், அத்தணிகைப் புராணத்தில் எஞ்சிய செய்யுட்கும் உரைவகுத்து வெளியிடுதற்கு விடாப் பிடியாக முயல்வாராயினர்.

அப்பொழுது கழகத்திலிருந்து தமிழ்ப்பணி புரிந்து வந்த ஆன்ற செந்தமிழ்ப் புலவராகிய செல்லூர்க் கிழார் செ. ரெ. இராமசாமிப்பிள்ளையவர்களைக் கொண்டு உரை எழுதுவித்தனர். அப்பெரியார். அகத்தியனருள் பெறுபடலம் முதற்செய்யுளிற் றொடங்கி ககச ஆம் செய்யுள்காறும் எழுதிமுடித்தபொழுது அடியேன் சென்னைக்குச் சென்றேன். இத்தணிகைப் புராண வரலாற்றை அப்பொழுதுதான் பிள்ளையவர்கள் என்னிடம் கூறினார்கள். யானும் பேராசிரியர் கந்தசாமியார் அவர்களிடம் பயிற்சிபெற்ற மாணவனேயாவேன். அவர்பால் தணிகைப் புராண உரையும் கேட்டுள்ளேன் என்று அறிவித்தேன்; அது கேட்ட பிள்ளையவர்கள் இதுவும் இறைவனருளே என்று கருதி, அங்ஙனமாயின் நீங்களே கந்தசாமியாரவர்களால் விடப்பட்ட செய்யுள்களுக்கு உரைவகுத்துத் தரவேண்டும் ஈண்டுக் கழகப் பணிபுரிந்த திரு. இராமசாமிப் புலவரவர்களை அவ்வுரை எழுத விடுத்தமையால் கழகப்பணிகள் சில செய்யப்படாமற் கிடக் கின்றன ஆதலால், அவர் மீண்டும் கழகப்பணியே புரிக. நீங்கள் தணிகைப் புராணவுரையினை வரைந்து தருக! என்று பணித்தார்கள். அடியேனும் இஃது எம்மன்னை தமிழ்த் தெய் வத்தின் கட்டளையாகவே கருதி அந்தப் பணிசெய்யத் துணிந்து எஞ்சிய செய்யுட்கெல்லாம் என்னறிவிற் கெட்டியவாறு உரை வகுத்து முற்றுவிப்பேனாயினேன்.

இவ்வாறு இத்தணிகைப் புராணவுரை நூல் கழக ஆட்சி யாளர் இருவர் இடையறு முயற்சியினாலும் தமிழ்ப் புலவர் மூவர் முயற்சியினாலும் இனிது முடிந்து இற்றைநாள் வெளிவரு கின்றது. இந்நூல் இத்தமிழ் நாட்டறிஞர் பெருமக்களால் நன்கு வரவேற்கப்படும் என்று நம்புகின்றேன்.

"பசுகரணங்கள் எல்லாம் பதிகரணங்களாக
வசிபெறு மடியார்க் காயின் மன்னிய வொருமைதன்னால்
இசையுமற் றவரி னுன்றோர்க் கென்னுரை ஓம்புகென்னக்
கசிவறு மனத்தினேனும் கட்டுரைப் பதுமாண்பன்றே"

இனி, இத்தணிகைப்புராணத்தின்கண் ஆசிரியர் கந்தசாமியார் அவர்கள் வரைந்தவுரைக்குரிய செய்யுள் கலஎசு. அவை வருமாறு :

(க) கடவுள் வாழ்த்து அவையடக்கம் செய்யுள் கக
(உ) திரு நாட்டுப் படலம் ... கஎ0
(ங) திரு நகரப்படலம் ... கசக
(ச) நைமிசப் படலம் ... உக
(ரு) புராண வரலாற்றுப் படலம் ... ககூ
(சா) வீராட்டகாசப் படலம் ... கஉஅ
(எ) குமாரேசப் படலம் ... சக
(அ) பிரமன் சிருட்டிபெறு படலம் ... க0கூ
(கூ) நந்தி யுபதேசப் படலம் ... கஙங
(கக) சிபரிபூரண நாமப் படலத்தில் ஙகங-முதல் ககச முடிய க00
(ககூ) இராமனருள்பெறு படலத்தில், கக-முதல்- சங வரையில் - கூ0
(கஎ) களவுப் படலத்தில், க-முதல் ஙஙக. ஙஙக. ஆகச் செய்யுள். கஃஎக.

கழகப் புலவர் இராமசாமிப் புலவர் அவர்கள் அகத்தியனருள் பெறுபடலம் க. முதல் ககச வரையில் ககச.

எஞ்சிய செய்யுள்கள் பெருமழைப் புலவர் பொ. வே. சோமசுந்தரனர். க0எக

ஆக மூவராலும் உரைவகுக்கப்பட்ட செய்யுள்கள் கூகககக. இங்ஙனம் கண்டுகொள்க.

இங்ஙனம்,
உரையாசிரியன்
பொ. வே. சோமசுந்தரன்.

மேலப்பெருமழை
18—1—65

# திருத்தணிகைப் புராண உரைநடைச் சுருக்கம்

## நாடு

தொண்டை நாடானது விண்ணுலகத்தை எள்ளி நகையாடுவது போன்ற சிறப்புடன் விளங்கும். ஒன்பது கோள்களும் தங்கநிலை மாறி மழை மறுத்த போதும் ஆற்று மணலில் இருந்து ஊறும் நீர் நாட்டின் வளத்தை மேம்படுத்தும். இந்நாட்டில் நாட்டிற்குரிய சிறப்புக்களெல்லாஞ் சிறந்து திகழும். செல்வர்களும் சான்றோர்களும் மிகுந்திருப்பார்கள். இந்நாடு எவ்வகையான பகையும் அற்றது. தேவர்களும், அவுணர்களும், சித்தர்களும், வித்தியாதரர்களும், கருடரும், நாகரும், மனிதரும் ஆகிய எல்லோருக்கும் நன்மை பயப்பதாகிய யாறுகளைத் தன்னகத்தே கொண்டது.

## நகரம்

இத்தொண்டை வளநாட்டில் திருமுருகப்பெருமான் திருக்கோயில் கொண்டருளிய திருத்தணிகை ஒப்பற்ற பெருமையுடையதாகும். இத்தணிகையானது இந்திரனுடைய விண்ணுலகத்தைப் போலவும், நான்முகனுடைய சத்தியலோகத்தைப் போலவும், திருமாலுடைய வைகுண்டத்தைப் போலவும், சிவபெருமானுடைய சிவலோகத்தைப் போலவும் சிறந்து விளங்கும். மேலும் நான்முகன் திருமால் சிவபிரான் என்னும் மும்மூர்த்திகளைப்போல் சிறப்பினையுமுடையது. இத்தணிகை மலையின் சிறப்பினைப் பிறர் சொல்லக் கேட்டாலும் இம்மலையை அடைந்து முருகக் கடவுளைப் போற்றி வழிபடுவோம் என்னும் நோக்கத்தோடு திருத்தணிகைமலையை நோக்கிப் புறப்பட்டாலும் அவ்வாறு புறப்பட்டவர்களுடைய தீவினைமுற்றும் அழிந்தொழிந்து போகும். தணிகை நகரத்தைச் சூழ்ந்த மதில் குளக்கரையாகும். நவமணிகள் பதித்துச் செய்யப்பட்ட மாளிகைகள் பல நிறங்களையுடைய மலர்களைப் போல் விளங்கும். அந்நகரம் முத்துக்களையுடைய பொய்கையாகும். தணிகைமலையைச் சூழ்ந்த மதில்கள் பூவிதழின் ஒழுங்காகும். விளங்குகின்ற சிறப்பினையுடைய சிகரங் கொட்டையாகும். இத்தகைய தெய்வத்தன்மையுடைய அம்மலையாகிய தாமரை மலரிடத்தில் முருகக் கடவுள் புகழ் பொருந்திய சரவணப் பொய்கையின்கண் பிறந்த காலத்தில் எழுந்தருளியிருந்த தன்மையைப் போல் எழுந்தருளியிருப்பர். இத் தணிகையின் சிறப்பை உள்ளத்தவாவைத் தடுக்கமுடியாமையின் ஒரு சிறிதுரைப்போம்.

நைமிசம்

தாமரை மலரில் எழுந்தருளியிருந்த நான்முகன் செலுத்திய தருப்பைப்புல் சென்று தங்கிய இடமாகிய *தருப்பைக் காட்டில் முனிவர்கள் பலர் தங்கி யிருந்தனர். அம்முனிவர்கள் நஞ்சு தங்கப் பெற்ற கரிய கழுத்தினையுடைய சிவபெருமானுடைய திருவடிகளை உள்ளத்தின் கண்ணே தங்கச் செய்து தவத்தைச் செய்தலோடு அப்பெருமானுடைய புகழினையும் விரும்பிக் கேட் பவர்கள். அம்முனிவர்களுடைய பெயர் பிருகு, உக்கிரசிலன், போதாயணன், பிசிங்கி, விபாண்டகன், துருவாசன், நாரதன், சுப்பிரன், புதன், சுமதி, அத்திரி, சங்கமன், அரிதகன், பவுலன், சுமுந்தரன், ஆபத்தம்பன், அகத்தியன், கருணன், அங்கிரசன், பருப்பதன், கார்த்தியாயணன், கண்ணுவன், பவுமன், பாசதரன், பராசரன், பங்கு, பப்புரு, பக்குவன், கவுசிகன், கபிலன், கலாதரன், காணன், காலன், கைவல்லியன், கவுதமன், சரபங்கன், முற்கலன், காலவன், பண்டிதோத்தமன், சவுனகன், சதானந்தன், வாரன், சாதாதபன், சமதக்கினி, சாமதக்கினி, சற்சரன், சயன், சனி,பரந்தபன், சத்தியன், தூமபன், சுகன், சத்தி, மாண்டவியன், சுதீக்கணன், இரதிதன், வாமதேவன், பரத் துவசன், வசு, சாபாலன், காண்டிப்பியன், விண்டு, விருத்தன், குண்டலன், காசிபன், தேவலன் என்பனவாகக் கூறப்பெறும். இவர்களோடு இவர்களது ஏவலைச் செய்பவர்களாகிய மாணவர் களும் பலர் இருந்தனர்.

ஒரு நாள் அந்தத் தருப்பைக் காட்டிற்குச் சூத முனிவர் எழுந்தருளினர். அவருடைய சடை கதிரவனுடைய ஒளிகளை யெல்லாம் இணைத்துவிட்டதைப் போல் விளங்கியது. அவருடைய திருநுதலிலோ தீவினைகளையெல்லாம் போக்கும் தன்மை யுடையதும் திங்களைப் பொடி செய்து எடுத்தாற் போன்றதுமாகிய திருநீறு விளங்கியது. கண்டத்திலோ சிவகண்மணிமாலை திகழ்ந்தது. தருப்பைக்காட்டு முனிவர்கள் சூதமுனிவரை எதிர் கொண்டு வரவேற்றுப் பாராட்டிப்போற்றினர். திருத்தணிகையின் சிறப்பினை மீண்டும் ஒருமுறை கூறவேண்டும் என்று வேண்டிக் கொண்டனர். தருப்பைக் காட்டு முனிவர்களுடைய விருப்பப்படி சூத முனிவரும் உரைக்கலானர்.

புராண வரலாறு

திருக்கைலாய மலையானது உலகெலாம் அழிந்தொழிகின்ற ஊழிக் காலத்திலும் அழியாத சிறப்பினையுடையது. அம்மலையின் கண்ணே சிவபெருமான் உமாதேவியாரோடு எழுந்தருளியிருந்தார்.

* தருப்பைக் காடு - நைமிசாரணியம்.

அக்காலையில் திருமாலும் நான்முகனும் இந்திரனும் பதினெண் கணத்தவரும் பிறரும் வந்து சிவபெருமானை வணங்கிச் சென்றார்கள். வீடுபேற்றினை யடைதற்குரிய முனிவர்கள் எழுவர் மீண்டுஞ் சிவபெருமானை வணங்கி நின்றார்கள். அவர்களுடைய குறிப்பினையுணர்ந்த இறைவன், நந்தி தேவரிடத்தில் சித்தாந்த நுண்பொருள்களை ஐயந்திரிபறவுணர்ந்து மெய்யறிவு கைவரப் பெற்ற சனற் குமார முனிவரைப் பார்த்து, "இம்முனிவர்கட்கு மெய்ப் பொருளினை உரைப்பாயாக" என்று திருவாய் மலர்ந்தருளித் தாம் இறைவியோடு திருவோலக்க மண்டபத்தைவிட்டு வேறு இடத்திற்குச் சென்றார். சனற்குமார முனிவர் அம் முனிவர்கட்கு உண்மைப் பொருளை உரைத்தருளினர். பிறகு தங்கியிருந்து தவஞ் செய்தற்குரிய திருவூர்கள் பலவற்றையுங் கூறினர். இறுதியில் திருமுருகப்பெருமானுக்குச் சிறந்தனவாகிய நான்கு பதிகள், சயந்தபுரம், குமராசலம், திருவேங்கடம், சீபூரணகிரி என்னும் திருத்தணிகை என்று கூறி மேலும் உரைக்கலானார்.

### திருத்தணிகைக்கு வழங்கும் பிற பெயர்கள்

பொன்னுலகத்தில் உள்ள செல்வங்களெல்லாம் தன்னிடத்திலே நிறையப் பெற்ற காரணத்தால் இவ்வூர் சீபூரணகிரி என்று பெயர் பெற்றது. அடியார்களுடைய விருப்பங்களை ஒரு கணப்பொழுதில் நிறைவேற்றுதலால் கணிகாசலம் என்று பெயர் பெற்றது. எல்லாவற்றிற்கும் மூலகாரணனாகிய சிவ பெருமானே முருகக் கடவுளை மூல காரணன் என்று தொழுதபடியால் மூலாத்திரி என்று பெயர் பெற்றது. கருங்குவளை மலர் நாள்தோறும் மலர்தலின் அல்லகாத்திரி என்று பெயர் பெற்றது. இக்காரணத்தினால் நீலோற்பலகிரி, உற்பலகிரி, கல்லாரகிரி, காவிமலை, நீலகிரி, குவளைச் சிகரி எனப் பலவாறு கூறுதலும் உண்டு. கற்பத்தின் முடிவிலும் இந்நகர் அழியாமையால் கற்பசித் என வழங்குதலும் உண்டு. சூரபதுமனோடு செய்த போரினால் உண்டாகிய சினமும் வேடர்களோடு செய்த போரினால் உண்டாகிய சினமுந் தணியப்பெற்ற இடமாதலால் செருத்தணி எனவும் திருத்தணிகை எனவுங் கூறப்பெறும். முருகக் கடவுள் பிரணவப் பொருளைச் சிவபிரானுக்கு உரைத்தருளிய இடமாகையால் பிரணவார்த்த நகரம் எனவும், இந்திரன் வரம் பெற்ற இடமாகையால் இந்திரநகரி எனவும், நாரதர் விருப்பமுற்ற இடமாகையால் நாரதப் பிரியம் எனவும், அகோரன் என்னும் தவத்தினன் வீடு பெற்ற நகராகையால், அகோர கைவல்யப்ரதம் எனவும், கந்தக் கடவுள் வீற்றிருப்பதால் கந்தகிரி எனவும் இப்பதிக்குப் பெயர்கள் உள்ளன.

வீராட்டகாசம்

திருக்கைலாயமலையிலே சிவபெருமான் உமாதேவியாரோடு எழுந்தருளியிருந்தார். அவர்கட்கு நடுவில் முருகப் பெருமான் அமர்ந்திருந்தார். அப்பொழுது அந்த இடத்திற்குச் சந்திரகாசன் என்பவன் வந்தான். அவன் சிவகணங்களுக்குட் பிறந்தவன். அவன் சிவபெருமானைப் பலவாறு புகழ்ந்து போற்றினன். தனக்குப் பிரணவப் பொருளை உரைத்தருள வேண்டும் என்று வேண்டிக் கொண்டான். சிவபெருமான் திருவருள் செய்து சந்திரகாசனுக்குப் பிரவணப் பொருளை உரைத்தருளினர். முருகக் கடவுள் சிவபெருமான் சந்திரகாசனுக்குரைத்தருளிய பிரணவப் பொருளுரையைத் தெரிந்துகொண்டார். ஆனால் தாம் அதனைக் கேட்டுணர்ந்து கொண்ட தன்மையை வெளியே காட்டிக் கொள்ளவில்லை. நாட்கள் பல சென்றன.

பிறகு முருகக்கடவுள் இறைவனையும் இறைவியையும் விட்டுத் தனியாக விருந்த திருக்கோயில் ஒன்றிலே எழுந்தருளியிருந்தார். அக்கோயில் சிவபெருமானுடைய திருவோலக்க மண்டபத்திற்குச் செல்லும் வழியில் அமைந்திருந்தது. ஒருநாள் தேவர்களும் திருமாலும் இந்திரனும் நான்முகனுஞ் சிவபிரானை வழிபடற் பொருட்டுத் திருக்கைலையை அடைந்தார்கள். அத் தேவர்களுள் நான்முகன் ஒழிந்த பிற தேவர்கள் முருகக்கடவுளையும் வணங்கிச் சென்றார்கள். நான்முகன் ஒருவன் மட்டும் இம் முருகன் சிறுவன் தானே இவனை எதற்காக வணங்கவேண்டும் என்னும் எண்ணமுடையவனாய் வணங்காது ஒதுங்கிச் சென்றான்.

இறைவனை வணங்கச் சென்ற தேவர்களில் நான்முகன் ஆணவத்தோடு சென்ற தன்மையை அறுமுகப்பரமன் அறிந்து கொண்டார். நான்முகனுடைய செருக்கினை அழித்தொழிக்க வேண்டும் என்று முடிவுசெய்தார். "தேவர்கள் வெளியே வரும் பொழுது நான்முகனைப் பிடித்துக் கொண்டுவந்து என்முன் நிறுத்துவாயாக" என்று தம்முடைய இளவலாகிய வீரவாகு தேவர்க்குக் கட்டளையிட்டருளினர். வீரவாகு தேவரும் அறுமுகப்பரமன் கட்டளைப்படி நான்முகனைப் பிடித்து வந்து திருமுன் நிறுத்தினர். இதனைக் கண்ட பிறதேவர்கள் அச்சங்கொண்டவர்களாய்த் திக்குக்கொருவராக ஓடிப்போயினர்.

முருகக்கடவுள் நான்முகனைப்பார்த்து, "நீ எதனில் மிக்கவன்? வாழ்வில் மிகுந்தவன் என்றால் எந்தையாகிய சிவபிரானை நாள் தோறும் வந்து வணங்கவேண்டிய கட்டாயமில்லை. வீரத்தில் மிக்கவன் என்றால் என் தம்பியால் பிடிபட்டு வந்ததுபோல் வந்திருக்கமாட்டாய்; எல்லாவற்றையும் நான் படைப்பேன் என்று

கூறுவாயாகில் உன்னையும் திருமாலையும் சிவகணத்தவரையும் நீ படைக்கவில்லை" என்று இப்படிப் பலவாறு கூறவும், நான்முகன் அப்பொழுதுகூட வணங்காமலும் மறுமொழி கூறாமலும் நின்றனன். உடனே முருகப்பெருமான் அந் நான்முகனுடைய தலையிற் பலமாகக் குட்டிக் கடிய சிறையில் அடைத்தருளினர். பிறகு தாம் திருவேங்கடமலையை அடைந்து திருக்கோயில் கொண்டருளியதோடு படைப்புத் தொழிலையுந் தாமே மேற்கொண்டருளினர். இவ்வாறு சிலகாலஞ் சென்றது திருமால் முதலியோர் இச்செய்தியைச் சிவபிரானிடந் தெரிவித்தனர். சிவபிரான் திருமால் முதலிய தேவர்களைப் பார்த்துச், "செம்மையான ஞான சத்தியின் திருவுருவத்தினைத் தனக்குத் திருவுருவமாகக் கொண்ட தலைவனாகிய முருகன் எம்மினும் வேறுபட்டவனல்லன். யாமும் அவனிலிருந்து வேறாக உள்ளேம் அல்லேம். இளமை பொருந்திய வடிவினையுடைய அம்முருகனிடத்தில் அன்பு செய்தவர்கள் நம்மிடத்தில் அன்பு செய்தோராவர்; பிழைசெய்தவர்கள் நம்மிடத்திற் பிழைசெய்தவர்களாவர். மிகுந்த குற்றத்தினைச் செய்த நான்முகனுக்குக் கிடைத்த தண்டமானது தகுதியுடையதேயாகும். அந் நான்முகனை எவ்வாறு சிறையில் இருந்து வெளிப்படுத்த முடியும்?" என்று கூறினர். தேவர்கள் நான்முகன் செய்த குற்றத்தினைப் பொறுத்தருள வேண்டும் என்று வேண்டிக் கொண்டார்கள்.

சிவபெருமான் நந்திதேவரை யழைத்து, "நீ முருகனிடஞ் சென்று வணங்கி, நான்முகனைச் சிறையில் இருந்து வெளிவிடுமாறு யாங் கூறியதாகக் கூறிவிடச்செய்து முருகனையும் இங்கு அழைத்துக்கொண்டு வருவாயாக" என்று திருவாய் மலர்ந்தருளினர். திரு நந்திதேவர் ஆறுமுகப் பரமனிடஞ் சென்று வணங்கிச் சிவபெருமான் கூறிய செய்தியைத் தெரிவித்தார். அவ்வளவில் முருகப்பெருமான் நான்முகனைச் சிறையிலிருந்து விடுவித்துத் தாமும் திருக்கைலையை அடைந்தார். சிவபெருமான் முருகக்கடவுளைப் பார்த்து, "அறிவினாலே பெருந்தன்மையுடையவர்களாகிய பெரியவர்கள் செய்தற்கரிய பிழைகளை மனதறிந்து செய்யமாட்டார்கள். சிற்றறிவுடையவர்கள் அறிந்தோ அறியாமலோ பிழைகளைச் செய்வார்கள். பெரியோர்கள் அக்குற்றத்தினை ஒரு பொருளாக மனத்திற் கொள்ளமாட்டார்கள். ஒறுக்க வேண்டிய காலத்துங் கடிதோச்சி மெல்ல எறிவர். தன்னிடத்திற் சிறந்த அறிவு இன்மையாலே நான்முகன் உன்னை வணங்காது நம் பக்கல் அடைந்தனன். நீ அவனுடைய குற்றத்தைப் பொறுக்காமல் பெரிதாகக் கொண்டு தண்டஞ்செய்து வருத்திவிட்டாய். தேவர்களுடைய துன்பத்தைப் போக்கி இன்பத்தினைக் கொடுக்க வந்த நீ இவ்வாறியற்றுதல் தகுதியாகுமோ?" என்று உசாவினர்.

முருகக்கடவுள் சிவபிரானைப் பார்த்து, "எந்தையே நான் முகனைச் சிறந்த அறிவற்றவன் என்றாய். சிறந்த அறிவில்லா தவன் பிரணவம் என்னும் அருமறையின் மெய்ப்பொருளை உணர மாட்டான். இத்தகைய நிலையில் உள்ளவனுக்குப் படைப்புத் தொழிலை ஏன் வழங்கினை?" என்று உசாவினார். சிவபிரான் முருகக் கடவுளைப் பார்த்து, "நீ பிரணவத்தின் பொருளை அறிவா யானால் கூறுவாயாக" என்று சொன்னார். அதற்கு முருகப் பிரான், "அதனைக் கூறவேண்டிய முறைப்படி கூற வேண்டுமே யல்லாமல் கண்டபடி சொல்லலாமோ?" என்றார். சிவபிரான் முருகக் கடவுளைப் பார்த்து, "நீ விருப்பத்தோடு தங்கியிருக்கும் தணிகைமலைக்கு அருளுரை பெறும்பொருட்டு நாம் வருகின்றோம். மாசிமகமும் வருகின்றது. அப்பொழுது கூறுவாயாக" என்றார். அவ்வாறே தணிகைமலைக்குச் சென்று வடகிழக்கெல்லையில் ஒரு கணப்பொழுது தணிகாசல முருகனை எண்ணி யமர்ந்தார். குரு நாதனாகிய முருகக்கடவுள் சிவபிரான் இருந்த இடத்திற்குத் தெற்குப் பக்கத்தில் வந்து அமர்ந்து தந்தையாகிய சிவபிரானுக்குப் பிரணவ மறைப் பொருளை முறையோடு உரைத்தருளினார்.

தனக்குத்தானே மகனுங் குருவும் மாணவனும் ஆகிய சிவபிரான் ஓங்கார வடிவினனாகிய முருகக் கடவுளின் அறிவுரை யைக் கேட்ட அளவில் பெரு முழக்கஞ் செய்து நகைத்துக் கூத் தாடினார். சிவபெருமான் அவ்வாறு பெரு முழக்கஞ் செய்து இன்பக் கூத்தாடியபடியால் அவ்விடம் வீராட்டகாசம் என்று பெயர் பெற்றது. பிரணவப் பொருளைக் கூறியபடியால் தணிகை பிரணவ அருத்த நகர் என்னும் பெயரையும் பெற்றது. இத் தணிகையில் ஒரு கணப்பொழுது தவம் முதலிய நல்வினைகளைச் செய்பவர்கள் பெறுதற்கரும் பயனை அடைவார்கள்.

### குமாரலிங்கம்

ஒருகாலத்தில் முருகக் கடவுள் ஞானசக்தியாகிய வேற் படையைப் பெற விரும்பினார். திருக்கைலையில் உள்ள கங்கை யைத் தணிகைமலைக்கு வரவழைத்தார். தாம் இருக்குமிடத்திற்கு வடகீழ்ப்பக்கத்தில் ஆபத்சகாய மூர்த்தியை அமைத்து வழிபட் டார். சிவக் குறியினையும் நிலைபெறுத்திப் போற்றினார். சிவபிரான் முருகக் கடவுளின் திருமுன்னர்த் தோன்றி, "உனக்கு வேண்டியது யாது?" என்று கேட்டார். முருகக் கடவுள் "அவுணர்களுடைய உயிரைக் குடிக்கும் ஞானசக்தி வேண்டும்" என்று கேட்டார். சிவபிரான் அச்சிறப்பினைக் கொடுத்துச் சிவக் குறியிடையே மறைந் தருளினார். இவ்விலிங்கத்துக்கு குமாரலிங்கம் என்று பெயர். இது மலைமீது கோயிலின் வடக்குச் சுற்றில் உள்ளது. ஞான சத்தி பெற்ற சுவாமிக்கு ஞானசக்திதரர் என்று பெயர். அவரால்

வரவழைக்கப்பெற்ற கைலைக் கங்கைக்குக் குமார தீர்த்தம் என்று பெயர். மாசிமகத்தில் இப்புனிதநீரில்நீராடிக் குமாரலிங்கத்தையும் ஞானசத்தி தரரையும் போற்றி வழிபடுதல் சிறப்புடையது.

**நான்முகன் படைப்புத் தொழில் பெறுதல்**

முருகப்பெருமானால் சிறையிலிருந்து விடுபட்ட நான்முகன் தன்னுடைய உலகத்திற்குப் போய்ப் படைப்புத்தொழில் செய்ய முயன்றான். படைப்புத் தொழில் கைகூடவில்லை. அதனால் மனம் வருந்தினான். சிவபெருமானை நோக்கித் தவஞ் செய்தான். சிவபெருமான் நான்முகனுக்கு முன் தோன்றினார். தணிகை மலையின் பெருமையைக் கூறி, "நீ நம்முடைய சேயைக் குறித்து அப்பதியில் தவஞ் செய்வாயானால் உன்னுடைய எண்ணம் நிறை வேறும்" என்று திருவாய் மலர்ந்தருளினார். நான்முகன் தணிகைமலையை அடைந்து மலைக்குக் கிழக்குத் திக்கில் புனிதநீர் ஒன்று உண்டாக்கி ஆபத்சகாய விநாயகரைப் போற்றினான். இறைவனையும் முருகக் கடவுளையும் வணங்கி முருகப் பெருமானைக் குறித்துத் தவஞ் செய்தான். முருகக் கடவுள் காட்சி கொடுத்து விரும்பிய வரத்தினையுங் கொடுத்தருளினார். வைகாசித் திங்கள் விசாகநாளில் பிரமதீர்த்தத்தில் நீராடுவது மிகச் சிறப்பாகும்.

**நந்தி அருளுரை பெறுதல்**

ஒரு காலத்தில் திருநந்தி தேவர் சிவபெருமானை வணங்கிப் பேரின்பமாகிய வீட்டு நிலையை விளக்கியருளுதல் வேண்டும் என்று வேண்டிக் கொண்டார். சிவபெருமான் திருநந்திதேவரைப் பார்த்து, "நீ தணிகைமலைக்குச் சென்று தவம்புரிந்தால் முருகன் தெய்வத் திருவருளமைந்த யாறு ஒன்றை வரவழைத்து நின்னை அதில் மூழ்கச் செய்து தூய்மையை அளிப்பான்; பேரின்ப நிலையையும் விளக்கியருள்வான்" என்று கூறியருளினார். அதனைக் கேட்ட நந்தி தேவர் திருத்தணிகையை அடைந்து ஒரு குகையில் தங்கிப் பலகாலந் தவமியற்றினார். முருகக்கடவுள் மயிலூர்தியில் திருநந்தி தேவர் எதிரே தோன்றினார். நந்தி தேவரின் உடலைத் தம்முடைய திருக்கைகளால் தடவியருளினார். "நந்தியே! மிகுந்த தவத்தைச் செய்து உடல் வருந்தினாய்; நீ விரும்பிய சிறப்பு யாது?" என்று கேட்டார். நந்தி தேவர் முருகக் கடவுளைப் பார்த்துச், "சிவதத்துவ அமிர்தம் எனப்படும் புனிதநீரை வரவழைத்து அதில் யான் மூழ்குமாறு செய்தருளுதல் வேண்டும்; மேலும் பதி பசு பாச இலக்கணங்களை உணர்ந்து கடைத்தேறவும் அருள்புரிதல் வேண்டும்" என்று வேண்டினார்.

முருகப் பெருமான் தணிகைக்கு நிருதி திக்கில் இருந்து அப்புனித நீரை வரவழைத்தருளினார். அது தணிகைமலையை

வலமாக வந்து வீராட்டகாசத்தை யடைந்து கடலுக்குச் சென்றது. அத்திருத்த நீராற்றுக்கு "நந்தி நந்தினி" "நந்தி யாறு" என்பன பெயர்களாம். நந்திதேவர் தவஞ்செய்திருந்த குகை நந்தி குகை என்னும்பெயரைப்பெற்றது. நந்திதேவர் அவ்வாற்றில் மூழ்கிப் பதி பசு பாச இலக்கணங்களையெல்லாம் உரைக்கப் பெற்றார். இந்த ஆற்றில் தைப்பூச நாளில் நீராடுவது மிகு பலனைத் தரும். அருளுரை பெற்ற திருநந்தி தேவர் திருக்கோயிலை வணங்கிப், பிறகு குன்றினை வணங்கிப் பிறகு நந்தியாற்றை வணங்கித், தணிகைமலை கண்ணுக்கு மறையும் வரையிலும் அம் மலையைப் பார்த்துக் கொண்டு புறங்காட்டாது சென்று திருக் கயிலையை அடைந்தார்.

**அகத்தியர் அருளுரை பெறுதல்**

அகத்திய முனிவர் ஒருகாலத்தில் சிவபெருமானுடைய திருவடிகளில் விழுந்து வணங்கிச், "செந்தமிழ் மொழியை எனக்கு அறிவுறுத்தி மெய்யறிவினையும் வழங்குதல் வேண்டும்" என்று வேண்டிக் கொண்டார். சிவபெருமான் அகத்தியரை நோக்கி, "எத்தகைய மேன்மை வேண்டுமாயினும் நாம் அறிவுரை பெற்ற இடமாகிய திருத்தணிகைமலைக்குச் சென்று முருகனை நோக்கித் தவஞ்செய்வாயாக. அவ்வாறு செய்யின் உன்னுடைய எண்ணம் நிறைவேறும். அத்தணிகைக்குப் போகலாம் என்று ஒருவர் எண்ணினாலும், அவ்வூர்ப் பக்கமாகச் சென்றாலும் செல்வேன் என்று கூறிப் பத்தடி நடந்தாலும் அவர்களுடைய நோயெல்லாம் அடியோடு ஒழிந்து போகும்.

அத் தணிகைப் பதியில் உள்ள குமார தீர்த்தம், குறை நோய், வாதநோய், சூலைநோய் முதலிய நோய்களையெல்லாம் போக்குவதன்றிப் பேய் பூதம் முதலியவைகளால் உண்டாகிய துன்பங்களையும் நீக்கும். மந்திரங்களின் வஞ்சனைகளையும் ஒழிக்கும்; மகளிர் கருவைச் சிதைத்தல், தந்தை, தாய், இளமங்கையர், பெரியோர் ஆன் முதலிய கொலைகளால் உண்டாகிய தீவினை யையும் ஒழிக்கும். பகைவர்களைப் பணியச் செய்ய எண்ணினாலும், நட்பைப் பெருக்க வேண்டினாலும், மிக நல்லவற்றைத் தம் முடைய சுற்றத்தார்க்குச் செய்ய விரும்பினாலும், புதல்வர்களை அடைய எண்ணினாலும், புலமை பெற விழைந்தாலும், அரச பதவியை அடைய அவாக் கொண்டாலும், எண்வகைச் சித்திகளையும் எய்தற்கெண்ணினாலும் மூவுலகங்களையும் அடக்க நினைத்தாலும் இவைகளையெல்லாம் அத்திருத்த நீராடலால் அடையலாம்.

அறியாமை பொருந்திய உள்ளத்தையுடைய ஒருவன் தணிகைமலை என்று ஒருகாற் சொன்னாலும், பலவகையான

தீவினைக் கூட்டங்களும் துன்பங்களும் விரைவில் ஒழிந்துபோகும். ஒரு முறை அத்தணிகைமலையை வணங்கப் பெற்றால் அவர்களுக்கு அறுமுகப் பெருமானுடைய திருவருள் உண்டாகும். மக்கட் பிறப்பால் அடைய வெண்ணிய நால்வகைப் பயன்களையும் விரும்பியவர்கள் அந்தத் தணிகைமலையை உள்ளத்தில் எண்ணினாலும் நல்வினை அவர்களை அடைவதற்குக் காலத்தினை எதிர் பார்த்துக் கொண்டிருக்கும். அருட் செல்வம் மிகுந்த தணிகை மலையை அடைந்து அங்கு இறப்பவர்கள் கீழ்க்குலத்தினராயினும் மலங்கள் யாவும் ஒழியப் பெற்று வீட்டுலகத்தினை அடைவர். விலைமகளிரின் மேற் கொண்ட விருப்பத்தாலோ தொழின்முறைகளாலோ தணிகைக்குச் சென்று முருகப்பெருமானை வணங்குவோருங்கூட மறுபிறவியில் கந்தலோகத்தையடைந்து இன்புறுவார்கள். தணிகைப்பதியிற் செய்யப்பெறும் அறங்கள் பிறவிடங்களிற் செய்வதினும் கோடி மடங்கு சிறந்ததாகும். அப்பதியில் முருகக் கடவுள் இச்சை, ஞானம், செய்கை என்னும் மூன்று சத்திகளும் மூன்று இலைகளாகக் கிளைத்தெழுந்த வேற்படையை வலக்கையில் ஏந்தி, இடது கையைத் தொடையில் இருத்தி ஞான சத்திதரன் என்னும் பெயரோடு விளங்குவார். அத்திருவுருவை உள்ளத்திலே நன்கு பொருந்த எண்ணுகிறவர்கள் அம்முருகப் பெருமானேயாவர். ஆதலின் அங்குச் செல்வாயாக" என்று கூறினர்.

இவ்வாறு பல சிறப்புக்களைச் சிவபிரான் எடுத்துக்கூறியதைக் கேட்ட அகத்தியர் பெருமகிழ்ச்சி யடைந்தார். உடனே விடை பெற்றுக் கொண்டு திருத்தணிகைக்கு வந்தார். நந்தியாற்றில் நீராடினர்; வீராட்டகாசத்தையும் முருகக் கடவுளையும் போற்றி வணங்கினர். ஓரிடத்தில் சிவக்குறியை நிலைநாட்டி வழிபட்டார். பிறகு அறுமுகப் பரமனை உள்ளத்தில் எண்ணிப் பல நாள் அருந்தவம் புரிந்தார். முருகக் கடவுள் அகத்தியர் முன் தோன்றிக் காட்சி கொடுத்து அகத்தியருக்குத் தமிழ்மொழியின் இலக்கணங்களையெல்லாம் உரைத்தருளினர். அகத்தியர் தணிகை மலையில் நெடுநாள் இருந்து பிறகு பொதியமலையை அடைந்தார்.

**8 பரி பூரணப் பெயர்**

முன்னே ஒரு கற்பத்தில் பிரபாகரன் என்னும் பெயரையுடைய ஓர் அரசன் இருந்தான். அவனுடைய மனைவியின் பெயர் சுகுமாரி. இவர்களுக்கு நான்கு மக்கள் பிறந்தனர். இந்நால்வருக்கும் சூரன், பதுமன், சிங்கன், தாரகன் என்று பெயர். தந்தைக்குப் பிறகு இவர்கள் நால்வரும் அரசாட்சி செய்தனர். ஒரு சமயம் அகத்திய முனிவர் இவர்களிடம் வந்தார். சூரனும் பதுமனும் அகத்தியரை வரவேற்றுப்

போற்றினர். அவர் இவர்களுக்கு முருகக் கடவுளின் பெருமையை எடுத்து உரைத்தார். பிறகு ஒருநாள் திருணபிந்து முனிவர் சிங்கனுக்குந் தாரகனுக்குங் காளியின் பெருமையையும் ஐயனாரின் சிறப்பையுஞ் சொன்னார். சூரன், சிங்கன், தாரகன் என்னும் மூவரும் முறையே ஊர்தியான மயில், சிங்கம், யானை ஆகும் பெருமையையும், பதுமன் குமாரக் கடவுளின் கொடியான கோழியாகும் பெருமையையும் அடைய விரும்பினர். அதற்காக மிகுந்த விருப்பத்தோடு அவ்வக் கடவுளை நோக்கித் தவம் புரிந்தார்கள். முன்னரே ஊர்தியாகவும் கொடியாகவும் இருந்த மயிலுங் கோழியும் இவர்கள் இவ்வாறு தங்கள் பதவியைக் கவர்ந்து கொள்வதற்குத் தவம் புரிதலை உணர்ந்து, "எங்கள் பதவியை நீங்கள் பறித்துக் கோடற்கு முயலுகிறபடியினால் பூதகணங்களாகக் கடவீர்கள்" என்று இந் நால்வருக்கும் வசவுரை வழங்கின.

இவ்வாறு வசவுரையினால் பூதகணங்களாகிய நால்வரும் சிவ கணங்களோடிருந்தபோது தேவர்களோடு சேர்ந்துகொண்டு அசுரர்களைத் தொலைத்தன. அசுரர் தலைவன் இச் செய்தியைச் சிவ பிரானிடம் இயம்பினான். சிவபிரான், "எமது கட்டளையில்லாமல் நீங்கள் தேவர்கட்கு உதவி செய்யும் பொருட்டுக் காவல் வேலையை விட்டுச் சென்றீர்கள். ஆகவே அசுரர் குலத்திற் பிறந்து அத் தேவர்கட்கே துன்பஞ் செய்யக் கடவீர்கள்" என்று வசவுரை வழங்கினார். இவ்வாறு அவுணர் குலத்தில் தோன்றிய சூரன், பதுமன் (சூரபதுமன்), சிங்கன் (சிங்கமுகாசுரன்), தாரகன் (தாரகாசுரன்) என்னும் இவர்கள் தேவர்கட்கு மிகுந்த துன்பம் விளைவித்தனர். தவஞ் செய்துகொண்டிருந்த இவர்கட்கு வசவுரை வழங்கிய மயிலையுங் கோழியையும் முருகக் கடவுள் சினந்து, "தவத்தைக் குலைத்த தீவினையால் நீங்கள் எமக்கு அண்மையில் இருக்கும் பேற்றை இழந்தீர்கள்" என்று கூறி அவைகளை விலக்கினார். அவைகள் காஞ்சிமாநகரை யடைந்து முருகப்பெருமானை நோக்கித் தவஞ் செய்து அவருடைய திருவடி நீழலை யடைந்தன. சூரபதுமனும் அவனுடைய தம்பியரும் செய்யுங் கொடுமைகளைப் பொறுக்க முடியாத தேவர்கள் முருகக் கடவுளிடம் முறையிட்டனர். முருகக் கடவுள் தேவர்களுடைய முறையீட்டுக்குத் திருவுளம் இரங்கித் தம்முடைய வேற்படையினால் சூரபதுமனைப் பிளந்தார். சூரன் மயிலாகவும், பதுமன் கோழியாகவும் மாறித் தாங்கள் முதலில் விரும்பியவாறே முருகக்கடவுளைத் தாங்கும் மயிலாகவும் கொடியாகிய கோழியாகவும் ஆயினர்.

சிவபிரானுடைய வசவுரையினால் அசுரர்களான சிங்கனுந் தாரகனும் முருகக்கடவுளால் அழிக்கப்பட்ட பிறகு தாம் முதலில் எண்ணிய எண்ணத்தை நிறைவேற்றிக்கொள்ளக் கருதினர்.

திரு நந்தி தேவரிடஞ் சென்று, "ஐயனே! காளியின் ஊர்தியாகிய சிங்கமும் ஐயனாருடைய ஊர்தியாகிய யானையும் ஆகும் பேற்றினைப் பெறுதற் கெண்ணிப் பலநாள் தவஞ் செய்தோம். இடையே இடையூறுகள் பல ஏற்பட்டன. எங்களுடைய எண்ணத்தை இனியேனும் நிறைவேற்றுதல் வேண்டும்" என்று வேண்டிக் கொண்டனர். நந்தி தேவர் அதுவரையிலும் ஊர்திகளாய் வீடு பேற்றினை நாடியிருந்த காளியின் ஊர்தியாகிய அரிமாவுக்கும் ஐயனாரின் ஊர்தியாகிய யானைக்கும் வீடுபேற்றைக் கொடுத்துச், சிங்கனையும் தாரகனையும் முறையே காளிக்கும் ஐயனார்க்கும் புதிய ஊர்திகளாக அனுப்பிவைத்தார். இவ்வாறு நால்வருடைய விருப்பமும் நிறைவேறியது.

சூரனை யழித்த ஆறுமாமுகப் பெருமானைத் தேவர்கள் வழி பட்டனர். தேவர் தலைவனாகிய இந்திரன் திருப்பரங்குன்றத்தில் தன் மகளான தெய்வயானையை முருகப்பெருமானுக்குத் திருமணஞ் செய்துவைத்தான். பிறகு முருகக் கடவுள் தெய்வானையம்மை யோடு கந்தவெற்புக்குச் சென்றார். அங்குத் தெய்வானையம்மையை நிறுத்திவைத்துவிட்டுத் தாம்மட்டும் தணிகைமலைக்கு வந்து அமர்ந்தார். அசுரர்கள் ஆண்டுகொண்டிருந்த உலகங்களில் தொகுத்துவைக்கப்பட்டிருந்த அரும்பொருள்களான, காமதேனு, சிந்தாமணி முதலிய பல வளங்களையும் முருகக் கடவுள் தணிகை மலையிற் சேர்ப்பித்த காரணத்தால் தணிகைமலை சிபூரணகிரி (செல்வம் நிறைந்தமலை) என்னும் பெயரைப் பெற்றது.

**நான்முகன் அருள்பெறுதல்**

ஒரு காலத்தில் நான்முகன் கலைமகளோடு திருத்தணிகைக்கு வந்து முருகக் கடவுளைப் பூசித்து வழிபட்டான். முருகக் கடவுள் நான்முகனுக்கு முன் எழுந்தருளி, "உனக்கு வேண்டிய மேன்மை யாது?" என்று உசாவினார். நான்முகன் அறுமுகப்பெருமானைப் பார்த்து, "எங்களுடைய உலகத்தில் இருந்த செல்வங்களையெல் லாம் சூரபதுமன் தன்னுடைய நாட்டிற்குக் கொண்டுபோய் வைத் திருந்தான். அவைகளெல்லாம் இப்பொழுது இத் தணிகை மலையில் உள்ளன. வழிபாட்டினையுடைய நின் அடியேனுக்கு நின் தந்தையாகிய சிவபெருமான் முன் காலத்தில் வழங்கியருளிய செல் வங்களையெல்லாம் மீளவும் எனக்குக் கொடுத்தருளுதல்வேண்டும்; கலைமகள் ஈண்டுச் சிவக்குறியினை நிறுத்தி வழிபாடு செய்தாளா கலின் என்னுடைய பெயரோடு இங்கு விளங்குகின்ற புனிதநீர் கலைமகள் பெயரோடு விளங்கச் செய்தல்வேண்டும். ஈண்டுள்ள சிவக்குறியும் கலைமகள் பெயரினைப் பெறுதல்வேண்டும். தேவரீர் அடியேனுக்கு அருள்புரிகின்ற இம் மார்கழித் திங்களில் திருவா திரை நாளோடு வரும் முழுத்திங்களில் இப் புனிதநீரில் நீராடிச்

சிவக்குறியைப் பணிவோர் கல்விச் செல்வத்தை அடையுமாறும் அருள்புரியவேண்டும்'' என்று கூறி வேண்டிக்கொண்டான். முருகக் கடவுளும் அவ்வாறே திருவருள்செய்து மறைந்தருளினர்.

**காரணன் அருள்பெறுதல்**

திருமால் தாம் இழந்த செல்வங்களை மீண்டும் அடைய எண்ணினர். வைகுந்தத்தைவிட்டுத் திருத்தணிகைக்கு மேற்குப் பக்கத்தில் அரையோசனை தொலைவில் அமைந்த ஒரு பொழிலை யடைந்தார். அவ்விடத்திலே பெரிய நகரம் ஒன்றை அமைத்துப் புனிதநீர் ஒன்றினையும் உண்டாக்கிச் சிவக்குறியை நிலைநிறுத்தி அங்கமர்ந்து தவஞ் செய்துகொண்டிருந்தார். சிவபிரான் திருமாலுக்கு முன்னே தோன்றினர். "அன்பனே! நீ விரும்பியவைகளைத் தணிகைமலைக்குச் சென்று அடைவாயாக'' என்று கூறி மறைந்தருளினர். பிறகு திருமால் தணிகைமலையை அடைந்து குமார தீர்த்தத்தில் நீராடித் திருவெண்ணீறு சிவகண்மணிமாலை முதலியவைகளை அணிந்து, தணிகைமலைக்கு மேற்குப் பக்கத்தில் விளங்கின ஒரு பொய்கைக்கரையில் அமர்ந்து தம்முடைய உடலிலே புற்றுமூடப் பலகாலந் தவஞ் செய்தார். திருமாலின் தவத்திற் கிரங்கிய தணிகாசல முருகப்பிரான் மயிலூர்தியின் மீது எழுந்தருளிவந்து காட்சிதந்தார். திருமாலைப் பார்த்து, "நீ தவஞ் செய்து உடல் இளைத்தனை'' என்று கூறி உடலைத் தடவிக்கொடுத்தார். திருமால் தம்முடைய கைகளைக் கூப்பி முருகப்பெருமானைப் போற்றினர். பலவாறு புகழ்ந்தார்; தாருகாசுரனால் கவரப்பட்ட தம்முடைய உருளைப்படை, சங்கு முதலியவைகளைத் தாம் மீளவும் அடையவேண்டும் என்று வேண்டிக்கொண்டார். முருகப்பெருமான் அவைகளைத் திருமாலுக்கு வழங்கியருளினர்; இந்தப் பொய்கையில், பங்குனியுத்திரமும் ஞாயிற்றுக்கிழமையுங் கூடிய நன்னாளில் நீராடுபவர்கள் தாம் நினைத்தவைகளையெல்லாம் அடைவர் என்று கூறி மறைந்தருளினர்.

**இந்திரன் அருள்பெறுதல்**

அசுரக் கூட்டங்களை அழித்தருளிய அறுமுகப்பரமன், விண்ணவர் நல்ல தவச் செல்வம் பெற்றிராமையை உள்ளத் தமைத்து அவ்வானவர்களுடைய மிகுந்த செல்வங்களைத் திரும்பக் கொடுக்கவில்லை. இந்திரன் தன்னுடைய செல்வத்தை மீளவும் அடைய வேண்டும் என்று உள்ளத்திலே எண்ணினன். விண்ணுலகத்தை விட்டு மண்ணுலகத்தை அடைந்தான். தணிகைமலைக்குத் தெற்குப் பக்கத்தில் அரையோசனை தொலைவில் இருந்த கடம்ப மரக்காவை அடைந்து ஆங்கொரு புனிதநீர் அமைத்துச் சிவபெருமானுடைய திருவடிவத்தையும் அமைத்து ஐம்பொறிகளையும்

அடக்கி வழிபாடு செய்தான். இந்திரனால் நிலைபெறுத்தப்பட்ட சிவபிரான் அமராபதீசர் என்று பெயர் பெற்றார்.

பிறகு இந்திரன் தணிகைமலையை அடைந்தான். மலைக்குத் தென்பக்கத்தில் ஒரு சுனையிருத்தலைக் கண்டான். முருகக் கடவுளை நாள்தோறும் வழிபட எண்ணினான்; தேவர் உலகில் இருந்து கருங்குவளைக்கொடி ஒன்றை வரவழைத்தான். அதனைச் சுனையில் வளர்க்கக் கருதினான். கரையில் ஆனைமுகக் கடவுளை அமைத்து வழிபட்டான். அதனால் அக் கடவுளுக்குச், செங்கழுநீர் விநாயகர் என்று பெயர் உண்டாகியது. காலை, நண்பகல், மாலை என்னும் மூன்று வேளைகளினும் கருங்குவளை மலர அம்மலர்களால் இந்திரன் தணிகாசல முருகேசனை நாள்தோறும் முக்காலமும் வழிபட்டான். முருகக்கடவுள் இந்திரனுக்கு முன்னே தோன்றி, "உனக்கு வேண்டியது யாது?" என்று கேட்டார். இந்திரன் முருகப் பெருமானைநோக்கித், "தேவர்களனைவரும் தேவரீரை வழிபடு தற்கு இங்கு வந்துள்ளார்கள். அவுணர்களால் கைப்பற்றப்பட்ட எங்களுடைய செல்வங்களெல்லாம் இங்குக் கொண்டுவந்து வைக்கப் பட்டிருக்கின்றன. அவைகளை நாங்கள் பெறுதற்கு விரும்புகின் றோம். மேலும் இச் சுனையில் கருங்குவளைமலர்கள் எக்காலத்தி லேயும் மாறாமல் மலரவும் தேவரீர் இம்மலர்களை அணியவும் அதனால் எனக்கு இடர்ஒழியவும், இப்புனிதநீரைத் தெளித்துக் கொண்டவர்களுடைய தீவினைகள் யாவும் ஒழியவும் திருவருள் செய்யவேண்டுமென்று வேண்டிக்கொண்டான். முருகப்பெருமான் அவ்வாறே அருளினார். காமதேனு, சங்கநிதி, பதுமநிதி, சிந்தா மணி முதலியவைகளையெல்லாம் இந்திரன் அடையுமாறு அருள் செய்து மறைந்தார். இந்திரநீலச்சுனையின் புனிதநீரும் மலரும் இன்றும் முருகப்பெருமானுக்குப் பயன்படுகின்றன. இதனால் திருத்தணிகைக்கு இந்திரநகரம் என்னும் பெயரும் உண்டாயிது.

**நாகம் அருள்பெறுதல்**

முன்னாளில் தேவர்கள் போர்புரியுங்காலத்தில் இறவாநிலையை அடைதற்கு எண்ணினார்கள். அதன்பொருட்டு அமுதத்தை யுண்ண முடிவுசெய்தார்கள். அமுதத்தை அடையும்பொருட்டுத் தேவர்களும் அசுரர்களும் மந்தரமலையை மத்தாக்கி வாசுகியை நாணாக்கித் தேவர்கள் ஒருபக்கமும் அசுரர்கள் ஒருபக்கமுமாக நின்று இழுத்துப் பாற்கடலைக் கடைந்தார்கள். அப்பொழுது அப்பாம்பு மிகுந்த வருத்தத்தையடைந்து நஞ்சினைக் கக்கியது. அதனைக் கண்டு அசுரர்களும் தேவர்களும் நாலுபக்கங்களினும் ஓடலானார்கள். ஓடியவர்கள் இறைவனை அடைந்து அப்பெரு மானுடைய அருளைப்பெற்று மீண்டுங் கடைந்து அமுதத்தை

யெடுத்தார்கள். கடல்கடைதற்குக் கயிருக வமைந்த வாசுகி மந்தர மலை உராய்ந்தபடியினுல் தன்னுடைய உடல்முழுவதுந் தோல் கழன்று புண்ணுகி யிருத்தலைக் கண்டது. அதனுடைய ஆற்றலுங் குறைவுபட்டிருந்தது. அவைகளைப் போக்கிக்கொள்ள எண்ணிய வாசுகி தணிகைமலையை அடைந்தது. குமாரதீர்த்தத் தில் நீராடி மலைமீது ஏறி முருகவேளைப் போற்றி வழிபட்டுக்கொண்டு அவ்விடமே தங்கியிருந்தது. மறுநாள் மேற்குத்திக்கிலே சுனை யொன்றைக் கண்டு அதனில் நீராடி முருகவேளைப் போற்றியது. பிறகு தவஞ் செய்துகொண்டிருந்தது. இதனுல் வாசுகியின் தொல்லை நீங்கியது. மேலும் வாசுகி முருகப்பெருமானைப் போற்றி வழிபட்டுத் தன்னுடைய நாகநாட்டை யடைந்தது. வாசுகி யாடிய படியினுல் நாகசுனையென்று பெயர்பெற்ற அப்புனிதநீரில் ஆதி சேடன் திருமாலோடு வந்து நீராடிப் பலவகையான செல்வங்களை யும் முருகப்பெருமானுடைய திருவருளையும் பெற்றுச்சென்றுன். வலிமையை விரும்புவோரும், தமக்குண்டாகிய நோயைப் போக்க எண்ணியவர்களும், புகழை விரும்பியவர்களும் செல்வத்தை விரும்பியவர்களும் வள்ளன்மையை விரும்பியவர்களும் இச்சுனையில் நீராடினுல் முருகப்பெருமானுடைய திருவருளையும் தாம் விரும்பி யவைகளையும் விரைவிற் பெறுவார்கள்.

### இராமன் அருள்பெறுதல்

முருகப்பெருமானுடைய திருவருட்குரிய அன்பர்கள் இல் லறத்திலேயிருந்தாலும் குற்றமற்ற சிறப்புடையோராவர். துற வறத்திலே நின்றுலும் முருகப்பெருமானை உள்ளத்தின்கண்ணே நினையாதவர் நல்வினை தீவினை என்னும் இருவினைகளையும் வெல்ல முடியாதவர்களாவர். இராமபிரான் காட்டில் தங்கியிருந்த காலத் தில், இராவணன் வஞ்சகஞ்செய்து சீதாபிராட்டியை எடுத்துக் கொண்டுபோய் இலங்கையில் மறைத்து வைத்துவிட்ட படியால் துன்பக்கடலில் மூழ்கினுர். அகத்தியமுனிவரிடம் போய்ச் சீதை யைக் கவர்ந்த கொடியவர்களை வெல்லும் ஆற்றலை எனக்குத் தந் தருளவேண்டும் என்று வணங்கி வேண்டிக்கொண்டார். அகத்திய முனிவர் திருவெண்ணீறு சிவகண்மணி ஆகியவைகளின் பெருமை யையும் அவைகளின் இலக்கணத்தையும் இராமபிரானுக்கு இயம் பினுர். இவைகளைப் பற்றுக்கோடாகக்கொண்டு சிவபூசைசெய்து உன்னுடைய எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்வாயாக என்று சொன்னுர். அகத்தியர் அருளியபடியே இராமபிரான் சிவபூசை செய்தார். சிவபிரான் இராமபிரான் திருமுன்பு தோன்றினுர். இராமபிரானைப் பார்த்து, "உனக்குச் சிவஞானத்தைத் தரு கிறேம். அதனை நீ பெறுவாயானுல் மனித வாழ்க்கை மாயை என்பது உனக்குப் புலப்படும்" என்று கூறினுர். இதனைக்

கேட்ட இராமபிரான் சிவபிரானுடைய திருவருளை மறுத்தற்கு அஞ்சினார். சிவபெருமானுடைய திருவடிகளிற் பலமுறை விழுந்து வணங்கினார். "ஐயனே! அடியேன் இருவினையினிடத்திலே அகப்பட்டு மயங்கித் திரிபவன். அரக்கர்களுடைய செய்கைகளை எண்ணும் பொழுதெல்லாம் எனக்கு மிகுந்த சினம் உண்டா கின்றது. சீதையினுடைய அழகை நினைக்கும் பொழுதெல்லாம் காமம் உண்டாகின்றது" என்று கூறினார். இதனைக்கேட்ட சிவ பிரான் நகைத்தார். இராமபிரானுக்கு வேண்டிய ஆற்றலையும் படைக்கலங்களையுந் தந்து மறைந்தருளினார்.

இராமபிரான் அவைகளின் உதவியால் இராவணனை அழித் தார். பிறகு இராமேசுவரத்தை அடைந்து சிவபூசை செய்தார். அந்தோ சிவபிரான் எனக்கு அறிவுரைவழங்கி மெய்யறிவு கொடுப் பதாகக் கூறியபொழுது மோகத்தின் வழிப்பட்டவனாய் நல்லசம யத்தை இழந்துவிட்டேன் என்று உள்ளம் இரங்கினார். இனி மேலாயினும் மெய்யறிவுபெற வேண்டும் என்று எண்ணினார். சிவ பெருமானை எண்ணி யோகத்தில் இருந்தார். அப்பொழுது சிவ பெருமான் தோன்றி இராமபிரானைப் பார்த்து, "உன்னுடைய உள்ளம் இன்னும் அடங்கவில்லை, உள்ளம் அடங்காவிட்டால் சிவ ஞானம் உண்டாக மாட்டாது. நீ, திருத்தணிகைக்குச் சென்றால் மனம் அடங்கும்; மெய்யறிவும் பெறுவாய்" என்று திருவாய் மலர்ந்தருளி மறைந்தார். இராமபிரான் திருத்தணிகையை அடைந்தார். அங்குள்ள நந்தி தீர்த்தம் முதலிய புனிதநீர்களில் நீராடித் தவஞ் செய்தார். முருகப்பெருமான் இராமபிரான் முன்னர்த் தோன்றிச் சிவஞானத்தைக் கொடுத்தருளினார். இராவணனைக் கொன்று வெற்றிகொண்டு வந்தமையால் இராம பிரானுக்கு விசயராகவன் என்னும் பெயர் உண்டாகியது. [இவ் விசயராகவருடைய திருக்கோயில் கீழ்த் திருத்தணியில் ஆறுமுகசாமி கோயிலுக்குத் தென்பால் உள்ளது.]

### வள்ளியம்மை களவு

திருமாலின் பெண்களாகிய சுந்தரி என்பவளும், அமுதவல்லி என்பவளும் முருகப்பெருமானைத் திருமணம்புரிய எண்ணிக் கங்கைச் சரவணப்பொய்கையினிடத்திலே முன்னாளில் தவஞ்செய்து கொண்டிருந்தார்கள். முருகப்பெருமான் அவ்விடத்தில் எழுந் தருளி, "அமுதவல்லியே! நீ இந்திரனிடஞ்சென்று வளர்வாயாக. சுந்தரியே! நீ நிலவுலகில் சிவமுனிவன்பால் தோன்றி வேடர் மரபிலே வளர்வாயாக. உங்களிருவருடைய எண்ணமும் நிறை வேறுமாறு பிறகு யாம்வந்து திருமணம் புரிந்துகொள்வோம்" என்று திருவாய மலர்ந்தருளி மறைந்தார். அவ்வாறே அமுத

வல்லி உம்பர்கோனிடம் தோன்றி ஐராவதம் என்னும் தெய்வயானையினால் வளர்க்கப்பட்டுத் தெய்வயானை என்னும் பெயரைப் பெற்றாள். அவளை முருகக்கடவுள் திருப்பரங்குன்றத்தில் திருமணஞ் செய்துகொண்டார்.

சுந்தரி தன்னுடைய வடிவத்தை நீக்கி நுண்ணுடலோடு தொண்டைவளநாட்டில் மேற்பாடி என்னும் ஊருக்கு அண்மையில் உள்ள மலைச்சாரலில் தவஞ் செய்து கொண்டிருந்தாள். அதே மலைச்சாரலில் திருமாலின் கூறுகிய சிவமுனி என்பவர் தவஞ் செய்து கொண்டிருந்தார். திருமகள் பெண்மானாகி அப்பக்கத்தில் சுற்றிக் கொண்டிருந்தாள். சிவமுனிவர் அம்மானின் அழகைக் கண்டார். அதன் அழகு அவருடைய உள்ளத்தைக் கவர்ந்தபடியால், காட்சியால் இன்பம் நுகர்ந்து முன்போலத் தவஞ் செய்து கொண்டிருந்தார். அச்சமயத்தில் சுந்தரி அம்மானின் வயிற்றிற் கருவாகச் சென்று அமைந்தாள். கருப்பமடைந்த மான் வள்ளிக் கிழங்குகள் அகழ்ந்தெடுக்கப்பட்ட ஒரு குழியில் குழந்தையைப் பெற்றது. அக்குழந்தை தன்னுடைய இனமாக இல்லாதிருப்பதைப் பார்த்து மருட்சியடைந்து அக்குழந்தையை விட்டுவிட்டுப் போய்விட்டது. குழந்தை பலவகையான அணிகளுடனும் தழையாலாகிய ஆடையுடனும் பழம் பிறப்பின் உணர்ச்சியற்றதாக விளங்கியது. இவ்வாறு தனிமையாக விடப்பட்ட குழந்தை மிகவும் இனிமையான மெல்லிய குரலில் அழுதது. அப்பொழுது இறைவனுடைய அருளால் அவ்விடத்திற்குத் தன் மனைவியோடும் உறுதிச் சுற்றத்தினரோடும் வேடர் தலைவன் வந்தான். அவனுடைய பெயர் நம்பிராசன். அவன் குழந்தையின் அழுகையொலியைக் கேட்டான். மகிழ்ச்சியோடு சென்று அக்குழந்தையை எடுத்தான். தன்னுடைய மனைவியைப் பார்த்துப், "பெண் குழந்தைப் பேறில்லாத நமக்கு மலைக்கடவுளே இக் குழந்தையைக் கொடுத்தருளினார்" என்று கூறித் தன்னுடைய மனைவியின் கையிற் கொடுத்தான். மகிழ்ச்சி மிகுதியால் இன்பக் கூத்தாடினான். நம்பிராசனுடைய மனைவி தன்னுடை தனங்களில் சுரந்த பாலைக் குழந்தைக்குக் கொடுத்து மகிழ்ந்தாள்.

வேடராசன் தன்னுடைய இல்லத்தையடைந்து தன்னுடைய உறவினர்களோடு விருந்துண்டு மகிழ்ந்தான். தொண்டகப்பறை முழங்கக் குரவைக் கூத்தாடச் செய்தான். பிறகு முருகப்பெருமானுக்குத் திருவிழா நடத்தினான். குழந்தைக்குக் காப்பிட்டு மயிலிறகு கட்டப் பெற்ற அழகிய தொட்டிலில் இட்டார்கள். முதியோர்கள் வந்துகூடி, "வள்ளிக்கிழங்கு தோண்டப்பட்ட குழியில் இக்குழந்தை பிறந்தபடியினால் இதனுடைய பெயர், 'வள்ளி' என்று வழங்குக" என்று சொன்னார்கள். வேடராசன்

வள்ளியைத் தன்னுடைய மகள் என்று உரிமை பாராட்டி வளர்த்தான். வள்ளிக்கு ஆண்டுகள் பன்னிரண்டு நிறைந்தன. வேடர்கள் குலவழக்கப்படி வள்ளியை நம்பிராசன் தினைப்புனங் காவல் செய்ய ஏற்பாடு செய்தான். வள்ளியம்மையார் பரணில் இருந்து பறவைகளைவிரட்டிக் காலங்கழித்துக் கொண்டிருந்தார்.

நாரத முனிவர் திருத்தணிகைக்குச் சென்று முருகக்கடவுளைப் போற்றி வழிபட்டார். முருகக் கடவுளைப்பார்த்து, "இறைவனே! இவ்வூருக்கு மேற்குத் திக்கிலே மேற்பாடி என்னும் ஊர் இருக்கிறது. அங்கு மலைச்சாரலில் உள்ள வேடுவர் சேரியில் வள்ளி என்னும் பெயருடைய மாது ஒருத்தி இருக்கிறாள். அவள் அழகெலாம் திரண்டு ஒருருவெடுத்தாற் போன்ற பேரழகினள். அவள் தங்கட்கே உரியவள் என்று எண்ணி இங்கு வந்தேன்" என்று கூறினார்.

முருகக் கடவுள் வள்ளியம்மைமீது காதல் கொண்டார். அவளைக் களவுமணஞ் செய்ய எண்ணினார். அழகுள்ள வேடுவ இளைஞனாகக் கோலங் கொண்டார். வேட்டையாடுபவரைப் போற் சென்று வள்ளியம்மையைக் கண்டார். மெதுவாக நெருங்கி இனிய மொழிகளைப் பேசிக் கொண்டிருந்தார். அச்சமயத்தில் கொம்புகளை ஊதிக் கொண்டு வேடர்கள் சூழ்ந்துவர நம்பிராசன் அங்கு வந்தான். அவ்வளவில் வேட்டுவக் கோலக் குமரன் வேங்கை மரமாக விளங்கி நின்றார். வேடுவராசன் தன்னுடைய மகளுக்கு உணவுப் பொருள்கள் கொடுத்தான். பிறகு அங்குப் புதிதாக நின்ற வேங்கை மரத்தைப் பார்த்து ஐயமுற்றான். அவனோடு வந்தவர்கள் அப்புதிய வேங்கை மரத்தைக் கண்டு இஃதேதோ மாயையாக இருக்கிறது. இதனை உடனே வெட்டியெறிந்துவிட வேண்டுமென்று கூறி அதனை வெட்ட முனைந்தனர். வேடுவராசன் வேடர்களை விலக்கிவிட்டு "இப்புதிய மரம் இங்கு எப்படி வந்தது"? என்று மகளை உசாவினான். வள்ளியம்மை, "நான் அறியேன்; திடீரென்று விண்ணில் இருந்து நம்முடைய குலதெய்வமே இதனைக் கொண்டு வந்து சேர்த்ததாகத் தெரிகிறது" என்று கூறினாள். "நல்லது; இம்மரம் உனக்கு நிழலைக் கொடுக்கும்" என்று கூறிவிட்டு வேடர்களோடு அவ்விடம் விட்டுச் சென்றான் நம்பிராசன்.

பிறகு ஒருநாள் வேடராசன் தன்னுடைய மகளிருக்குந் தினைப்புனத்திற்கு வந்தான். அச்சமயத்தில் முருகக் கடவுள் தம்முடைய ஒரு கூற்றினை வேங்கை மரத்தில் இருத்திப் பிறிதொரு கூற்றோடு முதுமைக் கோலங்கொண்டு நம்பிராசனுக்கு முன்னே சென்றார். நம்பிராசனுக்குத் திருநீறு நல்கி வாழ்த்துரை

கூறினர். நம்பிராசன் இன்று நமக்கு நல்ல காலம் என்று உள்ளம் மகிழ்ந்தான். "அடிகட்கு என்ன வேண்டும்?" என்று கேட்டான். முதுமைக் கோலம் பூண்டு வந்த முருகவேள், நாம் இம்மலையிலுள்ள குமரியாட வந்தோம்" என்று கூறினர். நம்பிராசன் "அவ்வாறாயின் நீங்கள் சொன்ன திருத்த நீரில் நாள் தோறும் நீராடிக் கொண்டு இங்கு தனித்திருக்கும் என்னுடைய மகளுக்குத் துணையாக இருங்கள்" என்று கூறிவிட்டு அவ்விடம் விட்டுச் சென்றான்.

நம்பிராசன் சென்ற பிறகு முதுமைக் கோல முருகர் பசியால் மிகவும் வாடினவர் போல நடித்தார். வள்ளியம்மை தேன்கலந்த தினைமாவைக் கொடுத்தாள். முருகப்பெருமான் அதனை வாங்கி யுண்டவுடன், "அந்தோ நீர் வேட்கை மிகுதியாக இருக்கிறதே" என்று சொல்லித் துடித்தார். வள்ளியம்மை முதுமைக் கோல முருகரைப் பார்த்து, "இம்மலைக்கு அப்பால் ஏழு குன்றுகளைக் கடந்து சென்றால் அவ்விடத்தில் ஒரு சுனை இருக்கிறது; அங்குச் சென்றால் தண்ணீர் அருந்தலாம்" என்று கூறினள். முதுமைக் கோல முருகர் "என் நா உலர்ந்து விட்டது. இம்மலைகளில் உள்ள வழிகளை நான் அறியேன். நீ கூட வந்து சுனையைக் காட்டுவாயாக" என்று சொன்னர். வள்ளியம்மை உடன் வரச் சுனைக்குச் சென்று நீர் அருந்தினர். உடனே வள்ளிநாயகியைப் பார்த்து, "நான் குமரியாட வந்தேன் என்று நவின்றது உண்மையாகி விட்டது. இந்நீரைப் பருகியதும் என்னுடைய முதுமை மாறிவிட்டது. உன் மேல் வேட்கை மிகுதியாகி விட்டது. என்னுடைய நீர் வேட்கையைப் போக்கிய நீ காமவேட்கையையும் போக்குவாயாக" என்று கூறிக் குறையிரந்தார். இதனைக் கேட்ட வள்ளியம்மை அஞ்சினள். முதுமைக் கோல முருகனைப் பார்த்துச் சினங்கொண்டாள். "முதியவரே! உமக்கு நல்லுணர்வு சற்றுமில்லை. இழிகுலத்தினளாகிய என்னை விரும்பினீர். பித்துக் கொண்டவரைப் போலப் பிதற்றுகிறீர். வேடர் குடிக்குப் பழியை உண்டாக்குகிறீர்" என்று கடிந்து பேசினள். முதுமைக் கோல முருகரிடம் அகப்படாமலிருத்தற்கு அவ்விடம் விட்டு ஓடினள். அச்சமயத்தில் அறுமுகப்பெருமான் ஆனைமுகப் பெருமானை வேண்ட அவர் துணைக்கு வந்து இருவரையும் ஒன்று படுத்தினர்.

தினைப்பயிர் முதிர்ந்து பயனை யளித்தது. வள்ளியம்மை தினைப்புனக் காவல் விடுத்து இல்லத்தை யடைந்தாள். முருகப்பிரானுடைய கூட்டுறவால் வேறுபட்டவளாய் விளங்கினள். செவிலியுந் தாயும் மகளை உற்று நோக்கினர். "உனக்கு உடல் வேறாகியது, யாதோ தவறு நேரிட்டிருக்கிறது. இனிமேல்

இல்லத்தை விட்டு வெளியே செல்லற்க" என்று கூறி இல்லத்தி லேயே இருக்கச் செய்தார்கள். மகளை மலைத்தெய்வம் தீண்டியிருக் கிறதென்று வெறியாட்டு நடத்தினார்கள். அப்பொழுது வேலவன் வெறியாடுவோன்மீது தோன்றி, "இவள் தனித்தவளாயிருந்த புனத்தினில் தொட்டனம். எனதுள்ளம் மகிழுமாறு பெருஞ் சிறப்புச் செய்வீர்களாயின் இக்குறை நீங்கும்" என்று குறிப்பாகக் கூறியருளினன். செவிலித்தாய் சிறப்புச் செய்வதாக உறுதி மொழி உரைத்தாள்.

முருகப்பெருமான் வள்ளியம்மையைக் களவாக வீட்டிலிருந்து அழைத்துக்கொண்டு சென்றார். செய்தியை உணர்ந்த வேடர்கள் தொடர்ந்து வந்து போர்செய்து அம்பினைச் செலுத்தினார்கள். முருகப்பெருமானுடைய கொடியாக நின்ற கோழி நிமிர்ந்தெழுந்து கொக்கரித்தது. இடியைப்போன்ற அவ்வொலியின் அதிர்ச்சியால் நம்பிராசனும் அவனுடைய மக்களும் உறவினர்களும் பிறரும் மாண்டு வீழ்ந்தார்கள். பிறகு முருகப்பெருமானுடைய அருளால் நம்பிராசனும் அவனைச் சேர்ந்தவர்களும் உயிர்பெற்றனர். நம்பி ராசன் வள்ளியம்மையைத் திருமணஞ் செய்துகொள்ள வேண்டு மென்று வேண்டிக்கொண்டான். முருகப்பெருமான் எல்லோரையும் தணிகைமலைக்கு வருமாறு கூறிவிட்டுத் தாம் வள்ளியம்மையோடு தணிகைமலையை அடைந்தார்.

### வள்ளியம்மை திருமணம்

முருகக் கடவுள் வள்ளியம்மையோடு திருத்தணிகையை அடைந்தவுடன் குமாரலிங்கத்தில் இருந்து சிவபெருமான் உமா தேவியாரோடு வெளிப்பட்டுத் தோன்றினார். முருகக் கடவுள் தாய்தந்தையரைப் பணிந்தார். சிவபெருமான் முருகவேளைத் தழுவிக்கொண்டு, "மைந்தனே! உன்னுடைய திருமணத்தைக் காண்பதற்காக வந்தோம்" என்று கூறினார். அங்கிருந்த நாரத முனிவர், "இம்மாசித் திங்களில் பூசவிண்மீன் நாள் திருமணத் திற்கு ஏற்றதாகும்" என்று கூறினார். திருமணத்தை நடத்தி வைக்கும் தலைவராக ஆபத்சகாய விநாயகமூர்த்தி அமர்ந் தருளினார். அவர் தம்முடைய தம்பியைப் பார்த்துக், "கந்த மலையில் உள்ள தேவப் படைகளையெல்லாம் இங்கு வரவழைப் பாயாக" என்று கூறினார். முருகப்பெருமான் கந்தமலைக்கு வீரவாகு தேவரை அனுப்பினார். திருமணமண்டபம் தெய்வத் தச்சனால் மிகு புதுமையானதாக அமைக்கப்பெற்றது. தேவ கோடிகள் திருத்தணிகைக்கு வந்துசேர்ந்தன. முனிவர்களுடைய கூட்டம் தணிகைமலையை நாடி வந்தன. தேவயானை அம்மையும் வந்துசேர்ந்தாள். அவ்வம்மையை முருகப்பெருமான் தமது இடப் பாகத்தில் அமர்த்தியருளினார்.

திருமணநாள் வந்தது. நான்முகன் திருமண வேள்விப் பொருள்களைக் கொண்டு வந்து சேர்த்தான். சிவபிரானும் உமா தேவியும் ஓர் இருக்கையில் அமர்ந்தனர். வள்ளியம்மையை வளர்த்த வளர்ப்புத் தந்தையாகிய நம்பிராசன், "சிவபெருமானுடைய அழல்விழியில் தோன்றிய முருகப்பெருமானுக்கு என்னுடைய வளர்ப்பு மகளைக் கொடுத்தேன்" என்று தன்முறை வழிப் பெயருங் கூறித் தன் மனைவியைத் தானநீர் வார்க்கச் செய்தான். நாரதமுனிவர் மறைமுறைப்படி திருமண வேள்வியைச் செய்தார். முருகப்பெருமான் வள்ளியம்மையை ஏற்ற அப்பொழுதே வள்ளியம்மைக்குத் தெய்வ ஒளி உண்டாகியது. கண்கள் இமைக்கவில்லை. உருவத்தில் நிழல் உண்டாகவில்லை, மாலை வாடவில்லை, உடலில் அழுக்குகள் சேரவில்லை, மாலையில் வண்டுகள் பொருந்தவில்லை. தெய்வத்தன்மை உண்டாகியது. இதனைக் கண்டோர் மிகுந்த வியப்படைந்தனர். திருமணமானவுடன் முருகப்பெருமான் தம்முடைய தாய் தந்தையர்களை வணங்கினார். அவர்கள் வாழ்த்துரை வழங்கினார்கள்.

**விடையருளுதல்**

திருமால் நான்முகன் முதலிய அனைவரும் விடை பெற்றுக் கொண்டு தத்தம் இருப்பிடங்கட்குச் சென்றனர். அனைவருஞ் சென்றபிறகு வள்ளியம்மை தேவயானையின் அடிகளில் விழுந்து வணங்கினாள். தேவயானை வள்ளியம்மையை அணைத்தெடுத்தாள். எனக்குத் தங்கைபோலச் சிறந்த துணையாக வந்தனை என்று கூறிப் பாராட்டினாள். முருகக்கடவுளைப் பார்த்து, "இவள் யார்? வேடர் வழிமுறையில் ஏன் பிறந்தாள்?" என்று உசாவினாள். முருகவேள் இவர்கள் இருவருடைய வரலாற்றையுங் கூறினார். மேலும் அவர்களைப் பார்த்து, "ஒரு காலத்தில் கண்ணுவ முனிவர் திருமாலைப் பார்க்கும் பொருட்டு வைகுந்தத்திற்குச் சென்றார். திருமால் உபேந்திரன் முதலியோர் சூழத் திருமகளோடு எழுந்தருளியிருந்தார். கண்ணுவ முனிவரை ஒரு பொருட்படுத்தாமல் இருந்து விட்டார். திருமாலின் செய்கையைக் கண்டு கண்ணுவ முனிவர் வெகுண்டார். 'இத்திருமால் பல பிறப்புக்களை யெடுக்க' என்று வசவுரை வழங்கினார். 'பல பிறப்புக்கள் மானாகப் பிறக்கக் கடவை' என்று திருமகளுக்கும் வசவுரை கொடுத்தார். உபேந்திரன் முதலியோரைப் பார்த்து, 'நீங்கள் பலமுறை வேட்டுவப் பிறவியை எடுங்கள்' என்று கூறி மீண்டார்.

"கண்ணுவ முனிவரின் கடுமையான வசவுரைகளைக் கேட்ட திருமால் முதலானோர் அஞ்சி நடுங்கினார்கள். சிவபூசை செய்து சிவபெருமானைப் போற்றினார்கள். சிவபிரான் கண்ணுவ முனிவரை அழைத்து, 'இவர்கள் செய்த பிழைக்காக ஒரு பிறவியோடு

வசவுரை முடியுமாறு அருள்புரிக' என்று கூறினர். கண்ணுவ முனிவரும் கண்ணுதற்பரமன் கட்டளைப்படி கடுமையான வசவுரையை மாற்றினர். இதனால் திருமால் சிவமுனிவர் என்னும் முனிவராகி மேற்பாடிக் கண்மையில் தவம் புரிந்துகொண்டிருந்தார். திருமகள் மானாகி அம்மலைப்பக்கங்களில் சுற்றிக்கொண்டிருந்தாள். உபேந்திரனே நம்பிராசனாகப் பிறந்திருந்தான். சுந்தரி வள்ளியாகத் தோன்றி வளர்ந்தாள்'' என்று பழைய நிகழ்ச்சிகளையும் உரைத் தருளினர். வள்ளியம்மை திருத்தணிகையின் பெருமையை உசாவினள். முருகப்பெருமான் தணிகைமலையின் சிறப்புக்களை யெடுத்துக் கூறினர். மேலும் வள்ளியம்மையைப் பார்த்து, "இம் மலையைத் தொழுதவர்களுடைய தீவினைகளெல்லாம் ஒழியும். இம் மலைக்கு வந்து இச் சுனையில் முறைப்படி நீராடி எம்மை வணங்கு பவர்கள் எம்முடைய திருவடி நீழலில் வாழ்வார்கள். இம்மலையினை யடைந்து ஐந்து நாட்கள் எம்முடைய திருவடிகளே கதியென்று உள்ளத்தில் எண்ணி எம்மை வழிபடுபவர்கள் தம்முடைய விருப் பங்களெல்லாம் நிறைவேறப் பெற்று இறுதியில் பேரின்ப வீட்டை யடைந்து வாழ்வார்கள்.

"தேவர்களாயினும் முனிவர்களாயினும் சிறந்தவர்கள் யாவ ராயினும் இத் தணிகைமலையைத் தொழாதவர்கள் மரம் புல் முதலிய அசையாப்பொருள்களினும் கீழ்ப்பட்டவர்களாவார்கள். உலகத்தை வலமாக வந்தாலும் அவர்களுடைய தீவினை நீங்க மாட்டாது. தீவினைகள் பலவற்றைச் செய்தவர்களாயினும், நாள் தோறும் தீவினையைச் செய்பவர்களாயினும் எம்மீதுள்ள அன் பினால் தணிகைமலைக்கு வருபவர்களாயின் அவர்களே நான்முகன் திருமால் முதலியோரினுஞ் சிறந்தவர்களாவார்கள்; எல்லாவற் றினும் மேம்பட்டவர்களுமாவார்கள். இம் மலையில் உள்ளோர் செய்த ஓர் அறம் பலவாகி வளரும். அவர்கள் பல தீவினைகளைச் செய்தாலும் அவை மிகச் சிறிதாகித் தேய்ந்தொழியும்'' என்று கூறியருளினர். இவைகளைக்கேட்டு வள்ளியம்மை மகிழ்ந்தாள்.

**நாரதர் அருள்பெறுதல்**

ஒரு காலத்தில் நாரதர் திருக்கைலைக்குச் சென்று சிவபெரு மானை வணங்கித் திரும்பினர். திரும்பி வரும்போது நான்முகன் உலகத்தை அடைந்து தன் தாதையாகிய நான்முகனைக் கண்டு வணங்கினர். நான்முகனைப் பார்த்துத், "தந்தையே! எனக்குச் சில ஐயங்கள் உள்ளன. எடுத்துக்காட்டாக; யானை, குதிரை, பல்லக்கு, தேர் முதலிய ஊர்திகள் இருக்கச் சிவபெருமான் காளையை ஏன் ஊர்தியாகக் கொண்டார்? மணந்தரக் கூடிய நல்ல பொருள்கள் பல இருக்கத் திருநீற்றை ஏன் அணிந்து கொள்ளு கிறார்?'' என்று கேட்டார்.

நான்முகன் நாரதரைப் பார்த்து, "இவ்வினாக்கட்கு விடையளிக்க நான் வல்லவன் அல்லன். சிவபெருமான்தாம் இவைகளின் உண்மையை உணருவார். அவரல்லாமல் அவருடைய நெற்றிக்கண்ணில் தோன்றிய முருகப்பெருமானும் அறிவர். இவர்கள் இருவரைத்தவிர மற்றையோர் அறியமாட்டார்கள். நீ தணிகைமலைக்குச் சென்று முருகப்பெருமானை வணங்குவாயாகில் உன்னுடைய ஐயங்கள் யாவும் அகலும்" என்று கூறினர். நாரதர் "கந்தமலை முதலிய பல மலைகள் இருக்கத் தணிகைமலையை ஏன் சிறப்பாகக் கூறினீர்?" என்று கேட்டார். நான்முகன் தணிகைமலையின் சிறப்புக்களையெல்லாம் நாரதருக்கு நவின்றார். நாரதர் தந்தையின் மொழிகளைக் கேட்டு மகிழ்ச்சியடைந்தார். தணிகைக்கு வந்து சிவக்குறி அமைத்து வழிபாடு செய்தார். அக்குறி நாரதலிங்கம் என்று பெயர் பெற்றது.

பிறகு மலைமேற் சென்று முருகக் கடவுளைப் போற்றி வணங்கித் தவஞ் செய்தார். முருகக் கடவுள் நாரதர் முன்பு தோன்றினர். "உனக்கு வேண்டியது யாது?" என்று உசாவினர். நாரதர் தம்முடைய இரண்டு ஐயங்களையும் முதலிற் சொன்னர். அதற்கு முருகக்கடவுள், "திருமால் முதலிய சிறந்த தேவர்களும் அழிந்துபோவதை அறிந்த அறக்கடவுள் தவஞ் செய்து காளையூர்தியாகி இறைவனைத் தாங்கும் அழியாத பேற்றைப் பெற்றது. இறந்தொழியும் திருமால் முதலிய தேவர்கள் அழிந்தொழிய அந் நீற்றைச் சிவபெருமான் அணிவதால் தாம் அழிவற்ற பரம்பொருள் என்பதை உலகிற்குணர்த்துகிறார்" என்று கூறி இரண்டு ஐயங்களையும் போக்கினர். மேலும் நாரதருக்கு ஏற்பட்டிருந்த ஐயங்களையெல்லாம் அகற்றினர். நாரதர் அறுமுகப்பெருமானை வணங்கி மனத்தெளிவடைந்தார்.

சூத முனிவர் கூறிய தணிகைச் சிறப்பினைக் கேட்ட தருப்பைக் காட்டு முனிவர்கள் மனமுருகி மகிழ்ச்சியுற்றுத் தணிகைமலைக்கு வந்து முருகப்பெருமானைத் தொழுது பேரின்பம் அடைந்தார்கள்.

செங்கமல மலரேய்க்கும் ஒருதிருக்கை
குறங்கமைத்துச் செம்பொன் மேரு
துங்கவரிச் சிலைக்கடவுள் அருள்ஞான
சத்தியொரு தொடிக்கை யேந்திப்
பொங்குமருட் கருணைவிழிக் கடையொழுக
மலர்ந்தமுகப் பொலிவி னேடும்
அங்கணமர் ஞானசத்தி தரனையகத்
துறநினைப்போர் அவனே ஆவர்.

---

உ

திருச்சிற்றம்பலம்

# தணிகைப் புராணம்

---

## விநாயகர் காப்பு

மும்ம தத்தனென் றொருபெயர் தனக்குமொய் கூந்தற்
கொம்மை வெம்முலைக் கோற்றொடிக் கொடிச்சியை யிலைவேற்
கைம்ம லர்த்தனி யிளவற்குங் கஃறெனுங் கானத்
தம்ம முந்துபுக் குறுத்தவ னடிமலர் பணிவாம்.

**(இதன் பொருள்)** *முற்காலத்தில் கஃறென்னும் கரு நிறத்தை யுடைய காட்டின்கண் யானை வடிவாய்ச் சென்று, மூன்று மதத்தை யுடைய யானை முகத்தனென்ற ஒப்பற்ற பெயரைத் தனக்கும், செறிந்த குழலினையும் கண்டார்க்கு விருப்பினைத் தருகின்ற பருத்த தனங்களையும், திரண்ட வளையினையுமுடைய வள்ளி நாயகியாரை இலைத்தொழிலமைந்த வேற்படையைத் தாங்கிய திருக்கையாகிய தாமரை மலரினையுடைய முருகக் கடவுளுக்கும் சேர்த்தவனாகிய விநாயகக் கடவுளின் பாதமாகிய தாமரை மலரை வணங்குவாம்.*

**(விளக்கம்)** *தனக்கு மும்மதத்தனென்ற பெயரினையும், இளவற்கு வள்ளி நாயகியாரையும் சேர்த்தவ னடிமலரைப் பணிவாமென வினை முடிபு செய்க.*

*மூத்த பிள்ளையாருக்கு யானையுறுப்புக் கண்டத்திற்குக் கீழின்றாதலின் மும்மதத்தனாதல் இயையா தாயினும் மெய்யடியார்க ளெல்லாம் அவனை மும்மதத்தனென்றே கூறிப்போந்தனராதலின் அவர் சொற்பழு துறுவண்ணம் யானை வடிவங்கொண்டான் என்பார் 'மும்மதத்தன்' என்றார்; என்ற வென்னும் பெயரெச்சத்தகரம் விகாரத்தாற் றொக்கது; கோல் - திரட்சி; இனி நீலமென்பது நீலெனக் கடைகுறைந்து நின்றாற்போல, கோலமென்பது ஈறு கெட்டுநின்றதெனினுமாம்; கஃறு - கருமை 'இதனைத் தொல்காப்பியம் (எழுத்ததிகாரம்) உருவினு மிசையினும்' என்னுஞ் சூத்திர வுரையின்கண் 'கஃறென்னுங் கல்லதரத்தம்' என நிறத்தின்கண்ணும் வருமென வுரையாசிரியர் கூறிய வுரையா னுணர்க. தன்னை மும்மதத்தனென்ற அடியாரெண்ண முற்றுறப் பெயரைத் தனக்கும், வள்ளிநாயகியாரை வேட்டுத்தன்னை நினைந்த இளையோற்கு அவரையுஞ் சேர்த்தவன் யாமும் வணங்கின் இந்நூல் இடையூறின்றி இனிது முற்றுறச்செய் தவைக்களத்திற் சேர்ப்பனென்பது தோன்ற 'உறுத்தவனடிமலர் பணிவாம்' என்றார்; "எவ்வயிற் பெயரும் வெளிப்படத் தோன்றி அவ்வயினிலையல் செவ்விதென்ப" என்பதோத்தாகலின் யாம் என்னும் எழுவாய் தொக்குநின்றது. இனி முந்துபுக் குறுத்தவனென்பதற்குப் பிறவாறு முரைப்பர். அம்ம வியப்பிடைச் சொல்.* (௧)

ஊற்றிருக்கு மதக்கலுழி யுன்னுமடி
யாருளத்துக் கறையை மண்ணக்
கூற்றிருக்குங் கூர்நுதிவெண் கோடுவெளிற்
றறிவிரண்டுங் குமைப்ப மேனி
தோற்றிருக்கு மளப்பரிய சுடர்நிறைப்பத்
தோரணக்கம் பத்தெஞ் ஞான்றும்
விற்றிருக்கும் பெருமானை விரைமலர்தூய்ப்
பணிந்தெழுந்தெம் மெலிவு தீர்வாம்.

(இ - ள்.) ஊற்றிருந் தொழுகுகின்ற மதமாகிய கான்யாறு தன்னை யிடையறாது நினைக்கின்ற அடியாருள்ளத்தின்கணுளவாகிய அஞ்ஞானமாகிய களங்கத்தைக் கழுவ (கொலைத் தொழில் கருதி) இயமன் தங்கியிருக்கும் மிக்க நுதியினையுடைய வெள்ளிய கொம்பு உள்ளீடிலவாகிய பாச வறிவு பசு வறிவென்னும் இரண்டையுங் கெடுக்க, இறைவன்றிருவாயினின்றுந் தோன்றிய வேதங்களும் அளத்தற்கரிய திருமேனி (பரஞானமாகிய) சுடரை அவருள்ளத்து நிறைக்கத் தோரண கம்பத்தினிடத்து, எந்நாளும் வேறொருவர்க்கில்லாத சிறப்புடனெழுந்தருளியிருக்கும் பெருமையையுடைய விநாயகப் பெருமானை வாசனையுடைய மலர்களால் அருச்சித்து வணங்கி எமது வருத்தத்தை நீக்குவாம்.

(வி - ம்.) பாசஞானம் – பரை பைசந்தி மத்திமை வைகரியென்னும் நால்வகை வாக்காகிய சத்தப்பிரபஞ்சமும் மண்முதலனதமீறாகிய அருத்தப் பிரபஞ்சமுமாகிய இவை காரணமாக நிகழும் அறிவு; பசுஞானம்-இவை கீழ்நாடலாலே[1] காதலினால் நான்பிரமமென்னும் ஞானம்; இவையிரண்டும் பதிஞானம் போன்றுரனின்மையான் 'வெளிற்றறி' வென்றார். வெளிறு-உள்ளீடின்மை; இதனை "வெளிற்றுப் பனந்துணியின் வீற்றுவீற்றுக் கிடப்ப" என்னும் புறநானூற்றடியா னுணர்க. பணிந்தெழுந் தென்பது ஒருசொல் விழுக்காடு. கூற்று – கூற்றின்றன்மை அஃதாவது கொலைத் தொழில்; இனிக் கூற்றுப் புகழெனினுமாம். தோற்றிருக்கு: வினைத்தொகை. தோற்றிருக்கும் அளப்பரிய மேனி சுடர் நிறைப்ப என இயைக்க. சொற்கிடந்தவாறே இருக்கும் அளப்பரிய சுடர் எனினுமாம். (௨)

---

1. வேதசாத். சிவஞான சித்தியார், க. க-க.

# கடவுள் வாழ்த்து

*சிவபெருமான்*

உலகிரு ளுருவத் தொளிகளி னிரித்தாங்
　　குறுபொரு ளவற்றையுந் தெரித்துள்
விலகிருண் முழுது மருள்கொடு நுமித்து
　　விரவியொளிர் தன்னையுந் தன்னால்
இலகுயிர் தனையுந் தெரித்தறி வுறுக்குர்
　　இயல்பினைக் காலமும் பிறழா
தலகிலற் புதக்கூத் துமையினைக் காட்டும்
　　அடிகள்சே வடிகளைப் பணிவாம்.

(இ - ள்.) *உலகின்கட் டங்கியுள்ள புறவிருளைத் தனது திருமேனியின்கண்ணுள்ள ஞாயிறு முதலிய வொளிகளானீக்கி, அவ்வுலகின்கண்ணுள்ள நிலையியற்பொருள் இயங்கியற்பொருள் எல்லாவற்றையுங் கண்ணுக்குப் புலப்படச் செய்து, ஆன்மாக்களகத்தே அறிவு நீங்குதற்கேதுவாயுள்ள ஆணவ விருள் முழுவதையும் அருளாகிய வொளிகொண்டு கெடுத்து, அவ் வான்மாக்களோடு கலந்து விளங்குகின்ற சிவமாகிய தன்னையும் தன்னால் விளங்குகின்ற ஆன்மாக்களையுந் தெரிவித்து, அவ் வான்மாக்களுக் கிவ்வாறு பெத்தமுத்தியிரண்டினும் அறிவுறுத் துபகரிக்கும் பெருங்கருணைத் தன்மையி னின்றும் எக்காலத்து மாறுபாடின்றி அளவிட முடியாத வியப்புடைய திருக்கூத்தினை உமையம்மையாருக்குக் காட்டியருளும்இறைவனுடைய செம்மையானபாதங்களை வணங்குவாம்.*

(வி - ம்.) *அற்புதக் கூத்து—பஞ்ச கிருத்தியம் நிகழ்தற்கு ஏதுவாய சூக்கும நடனம்; ஆன்மாக்களதனைக் காண்டற்கறி, விச்சை, செயல்களினுரனின்மையான் ''பாலுண்குழவி பசுங்குடர் பொறாதென, நோயுண் மருந்து தாயுண்டாங்கு''*[1] *அம்மையார் காண்டலின் அலகிலற்புதக் கூத்துமையினைக் காட்டு மென்றார். தன்னையுந் தன்னாலிலகுயிர் தனையுந் தெரித்தென்றதனால் விசாரமும், அருள்கொடு நுமித் தென்றதனால் மல நீக்கமும், அறிவுறுக்கு மியல்பினைக் காலமும் பிறழா தென்றதனால் அநுபூதியுங் கூறியவாறு காண்க. இறைவனுக்குக் கண்மூன்றும் முச்சுடராதலின் அவை உருவத் தொளிகளெனப்பட்டன; உமைக்கு: வேற்றுமை மயக்கம்; தெரித்து விவ்விகுதி தொக்குநின்றது. இலகுதல் - விளங்குதல்; பானு மதி உடுக்கள் முதலியன உருவத் தொளிகளென்பதைத் திருக்கண்புதைத்த*[2] *கதையா லறிக. உருவத்தொளி, உருவத்தைப் புலப்படுத்தற் கேதுவாகிய வொளியெனினு மமையும். அத்து: அல்வழி வந்த சாரியை.* (க)

*சிவசத்தி*

சீரணி சிருக்கு மணிவடஞ் சங்கு
　　திகிரிசூ லப்படை யிலைவேல்
போரணி பாச மங்குசங் கழைவில்
　　பூங்கணை வேறுவே றணியா

1. குமரகுருபரர், சிதம்பர மும்-உ. 2. சித்தியார். க-உ-கஎ.

ஆரணன் மாய னரனிப முகத்தன்
அனங்கனென் றிவர்தொழிற் கெல்லாங்
காரண மாத றெளித்தருள் கொழிக்குங்
கன்னியை யுன்னியேத் தெடுப்பாம்.

(இ - ள்.) சிறப்புப் பொருந்திய யாகத்திற்கு நெய் யொழுக்கு மொருவகைக் கருவியும், உருத்திராக்க மாலையும், பாஞ்சசன்னியமும், சக்கரப் படையும், சூலப் படையும், வெற்றிலை வடிவாகச் செய்யப் பட்ட வேற்படையும், போர்க்குப் பொருந்திய பாசமும், தோட்டியும், கருப்பு வில்லும், பூவம்புமாகிய இவற்றை வெவ்வேருகத் தரித்து, அயனும் அரியும் அரனும் யானைமுகத்தை யுடையவனும் அநங்கனு மென்று சொல்லப்படுகின்ற ஐவர்களியற்றுஞ் செயல்களெல்லாவற் றிற்கும் (சிவ சத்தியாகிய தான்) காரணமாதலை யாவர்க்குந் தெளிவித் துக் கருணைபுரிகின்ற கன்னியாகிய சிவசத்தியை நினைத்துத் துதிப்பாம்.

(வி - ம்.) ஆரணன் மாயோன் முதலியோர் தொழில்களெல்லாஞ் சிவசத்தியா னிகழ்வனவென்பது வேதாகமங்களின் துணிபாம். இங் ஙனம் நிகழ்வதனை யாவருங்காண இவ்வாயுதங்களே காட்டுமென்பார். வேறு வேறணியா இவர் தொழிற்கெல்லாங் காரணமாத றெளித்தருள் கொழிக்குங் கன்னி யென்ருர். இதனுல், ஈறிலாதவளாகிய ஒருத்தியே எல்லாச் சத்திகளுமாய் நின்று தொழில் செய்வளென்பது போந்தது; இதனை 'எத்திறம் நின்ருனீச னத்திறமவளு நிற்பள்' என்னுஞ் சிவ ஞானசித்தித் திருவிருத்தத்தா (உ. ச-ரு.) னறிக; என்றவென்னும் பெய ரெச்சத்தகரம் விகாரத்தாற் ருெக்கது; சிருக்கு முதலிய பத்தும் அம் மையார் திருக்கரத்தினுள்ளன வென்க. அணியா செய்யாவென்னும் வாய் பாட்டு வினையெச்சம்; அயன் முதலிய ஐவருக்கும் ஆயுதங்களை முறையே யிரண்டிரண்டாகக் கொள்க, தெளித்து - விவ்விகுதி தொக்கு நின்றது; ஏத்தெடுப்பா மென்பது ஒருசொல் விழுக்காடு. (உ)

ஆபச்சகாய விநாயகர்

பண்ணிய மேந்துங் கரந்தனக் காக்கிப்
பானிலா மருப்பமர் திருக்கை
விண்ணவர்க் காக்கி யரதனக் கலச
வியன்கரந் தந்தைதாய்க் காக்கிக்
கண்ணிலா னவவெங் கரிபிடித் தடக்கிக்
கரிசினேற் கிருகையு மாக்கும்
அண்ணலைத் தணிகை வரைவளா ராபச்
சகாயனை யகந்தழீஇக் களிப்பாம்.

(இ - ள்.) மோதகத்தைத் தாங்கிய திருக்கரத்தைத் தம் பொருட் டாக்கியும், பிறைச்சந்திரன் போலுங் கொம்பு பொருந்திய திருக்கரத் தைத் தேவர்கள் பொருட்டாக்கியும், இரத்தின கும்பம் வைத்திருக்கும் பெரிய திருக்கரத்தை அம்மையப்பரை வழிபடுதற் காக்கியும், சிறிதுங்

கண்ணோட்டமில்லாத ஆணவமலமாகிய கொடிய யானையைப் பிடித்தடக்கும் பொருட்டு அம்மலக் குற்றத்தையுடைய வடியேனுக்கு இரண்டு திருக்கரங்களையுமாக்குந் தலைவராகிய, தணிகாசலத்தின்கண் நித்திய வாசஞ்செய்யும் ஆபச்சகாய னென்னுந் திருப்பெயரையுடைய விநாயகப் பெருமானை மனத்தாற் றழுவிக் களிப்படைவாம்.

(வி - ம்.) ஆக்கி, ஆக்கி, ஆக்கி. ஆக்கு மண்ணலெனக் கூட்டுக. பண்ணியமீண்டு மோதகத்தை யுணர்த்தின்றது; மருப்பமர் திருக்கரம் கயமுகனைக் கெடுத்துச் சுரர் துன்பங்களைந்து அவர்க்கு வாழ்வளித்தலின், விண்ணவர்க்காக்கி யென்றார். அரதன கலசம் வைத்திருத்தல் அம்மையப்பரை நீராட்டி வழிபடும் பொருட்டாகலின் தந்தை தாய்க் காக்கி யென்றார்; அடக்க வென்னுஞ் செயவெனெச்சம் செய்தென் னெச்சமாகத் திரிந்துநின்றது. என்னை? "வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய" என்பதோத்தாகலின். (௫)

சுப்பிரமணியர்

ஓங்கொளியாய் விசும்பாதி தொறுமியலுந்
தனதியல்பை யுருவின் மாட்டும்
பாங்குபெறத் தெரித்ததுபோற் பலபொறியாப்
பரமர்விழி பயந்த ஞான்று
தேங்கொளியாய் வெளியடர்ந்து வளிதொடர்ந்தோன்
ளொளிபடர்ந்து தெளிநீர்ப் புக்கு
நீங்கிவிளை யாட்டயர்ந்து தணிகையமர்
பெருவாழ்வை நினைந்து வாழ்வாம்.

(இ - ள்.) எல்லாவற்றினும் மேம்பட்ட வொளியாகிய தமது சத்தி யுருவமாகி ஓசை யூறொளி சுவை நாற்றமென்னும் அருவமாகிய சூக்கும பூதங்க ளெந்தன்கண்ணு மிக்க சோதிவடிவமாகக் கலந்த தனது பொதுவியல்பை தூலபஞ்ச பூதங்களினிடத்தும் பகுதிப்படத் தெரிவித்ததுபோற் பலபொறிகளாம்படி இறைவன் றிருக்கண் வெளியிட்ட காலத்து மிகுந்த வொளியாய் ஆகாயத்தினிடத்து நிறைந்து வாயுவாற் றொடரப்பெற்று, மிக்க வொளியையுடைய அங்கியாற் செலுத்தப்பெற்றுத், தெளிந்த நீரிடத்துச் சென்று பின்னரதனின்றும் நீங்கித் திருவிளையாட்டைச் செய்து தணிகாசலத்தின்க ணெழுந்தருளிய பெருவாழ்வாகிய முருகப் பெருமானைத் தியானித்து வாழ்வாம்.

(வி - ம்.) ஓங்கொளியா யியலுந் தனதியல் பென்க; விசும்பாதி ஆகாய முதலிய சூக்கும பஞ்சபூதங்கள்; இயலுமியல்பு - கலந்த தனதிலக்கணம்; உரு ஈண்டுத் தூலபஞ்ச பூதங்கள்; வெளி - ஆகாயம் அடர்தல் - நிறைதல்; இனி அயர்ந்து என்னுஞ் செய்தென்னெச்சத்தை செயவெனெச்சமாகத் திரித்து விளையாட்டயரத் தணிகையமர்பெருவாழ்வெனக் கூட்டினு மமையும்; இனி விசும்பாதி தொறுமென்பதற்கு வானே முதல்களையி னென்புழிப்போலத் தோற்ற முறைபற்றி விசும்புக்குக் கீழுள்ள தத்துவங்களும் ஒடுங்கு முறைபற்றி விசும்புக்கு மேலுள்ள தத்துவங்களுமாகிய எல்லாத் தத்துவங்களினு மென்றலு

மொன்று; இனி உருவின் மாட்டுமென்பதற்குத் திருவுருக்கொண்ட விடத்தும் எனக் கூறலுமாம். (௫)

தெய்வயானை வள்ளியம்மையார்

இறைகதித்த சூர்முதலை யிறுப்பவர
னேயிளையோ னுன வாற்றன்
முறைகதித்த விருசுடரே முகத்துவிழி
யெனத்தெரிக்கு முறைமை யேய்ப்ப
நறைகதித்த மலர்க்கழுநீர் நளினமவன்
விழியருகு நலக்க வேந்தி
நிறைகதித்த வுளத்தோடிடம் வலமமர்ந்த
மாதர்பத நினைத்தல் செய்வாம்.

(இ - ள்.) இறைமைத் தன்மையா லுயர்ந்த சூரனாகிய தலைவனைக் கெடுக்க இறைவனே முருகக் கடவுளாகத் திருவவதாரஞ்செய்த தன்மையான், (நாடோறும்) முறையாகச் செல்லுதலைப் பொருந்திய சூரிய சந்திரர்களே அவன் திருமுகமண்டலத்திலுள்ள விழிகளென்று தெரிவிக்கு முறைமையைப்போல உயர்ந்த மணமுடைய செங்கழுநீர் மலரையும் தாமரை மலரையும் அப்பெருமான் திருக்கண்களின் பக்கலிலே நன்மை யுண்டாகத் தாங்கிக் கற்பு மேம்பட்ட வுள்ளத்தோடு இடமும் வலமுமாக வெழுந்தருளிய தெய்வயானை வள்ளியம்மையாராகிய இருவர் பாதங்களைத் தியானஞ் செய்வாம்.

(வி - ம்.) இறைமை - இறைமைத் தன்மை, கதித்தல் ஈண்டு உயர்தல்; நிறை - கற்பு; ஏய்ப்ப ஏந்தி அமர்ந்த மாதரெனக் கூட்டுக; தெய்வயானையார் வலப்பாகத்திலும் வள்ளியம்மையா ரிடப்பாகத்திலு மிருத்தல் நூன்மரபு; ஏகாரங்கள் தேற்றப் பொருளில் வந்தன; மலர் பின்னருங் கூட்டப்பட்டது; இடம் வலம் என்புழி உம்மைகள் தொக்கன. (௬)

திருநந்தி தேவர்

கள்ளகந் தளித்த மலர்த்தலைச் சேக்குங்
கடவுளு ரணன்முத லானோர்
உள்ளகந் தழும்ப மலர்ப்பத மமைத்திட்
டுடலெலாந் தழும்ப[1]வேத் திரத்தின்
வள்ளலங் கமலத் தனிக்கர மமைத்த
வரதனைக் கற்றைவெண் கதிர்கால்
வெள்ளியங் கயிலைக் காவல்பூண் டருளும்
வீரனை வார்கழல் பணிவாம்.

1. 'வேத்திரந்திண்' என்றிருப்பிற் பொருத்தம்.

(இ - ள்.) தேன் தன்னிடத்தே துளித்தலைச் செய்கின்ற தாமரை மலரிடத்துத் தங்குகின்ற பிரமன் நாரணன் முதலானோர் பலகாலு நினைத்தலால் தம்முள்ளிடம் வடுவுடையனவாகத் தாமரை மலர் போன்ற திருவடிகளைத் தங்கச்செய்து, உடல் முழுவதும் வடுவுண்டாக வள்ளற் றன்மைபொருந்திய அழகிய ஒப்பற்ற தாமரை மலர்போன்ற திருக்கரத்தில் வலிய பிரம்பை வைத்துள்ள, மேலானவனும் கூட்ட மாகிய வெள்ளிய ஒளியைக் கக்குகின்ற அழகிய வெள்ளிமலையாகிய கைலையைக் காத்தலை மேற்கொண்டு யாவர்க்குந் திருவருள் செய்யும் வீரனுமாகிய நந்தி யெம்பெருமானது நீண்ட திருவடிகளை வணங்கு வாம்.

(வி - ம்.) கள் - தேன்; வேத்திரம் - பிரம்பு; தளி - துளி; சேக்கும் - தங்கும்; தழும்ப - பலகாற் சிந்தனை செய்தலால் வடுவுண்டாக; அமைத்திட்டு - அமைத்து; வள்ளல் - வள்ளற்றன்மை; வேத்திரம் கமலக்கரம் அமைத்த எனக் கூட்டுக; காவல் - தொழிற் பெயர்; வரதனை வீரனைக் கழல் பணிவாம் என்க; வேண்டுவார் வேண்டிய ஈதலானே வள்ளலங் கமலக்கர மென்றார். (௬)

நவ வீரர்

ஈர வான்மதி மிலைச்சிய பொலஞ்சடை
யிறைவனு ரருள்கூரக்
கார வாவிய குழலுமை நூபுரக்
கதிர்மணி யிடைத்தோற்று
நார வாவியி னறுமலர்க் காவிநேர்
நயனமா தர்களீன்ற
வீர வாகுவை முதலிய வீரர்தம்
விரைமலர்ப் பதம்போற்றி.

(இ - ள்.) குளிர்ச்சி பொருந்திய மேலாகிய ஞானசந்திர கலையினைச் சூடிய பொன்போன்ற சடையையுடைய சிவபெருமான் அருள் மிகுதலால் (கருமைக்குத் தோற்றுக்) கருமை நிறத்தையடைய மேகமும் விரும்பிய அளகபாரத்தையுடைய உமையம்மையார் திருப்பதங்களிலணிந்த சிலம்புகளிற் பதித்துள்ள ஒளிபொருந்திய நவமணிகளிடத்துத் தோற்றிய நீர்நிறைந்த தடாகத்திலுண்டாகிய வாசனையையுடைய நீலோற்பல மலர்போன்ற கண்களையுடைய நவசத்திகளும் ஈன்றருளிய வீரவாகுவை முதலாகவுடைய ஒன்பது வீரர்களுடைய வாசனை பொருந்திய மலர்போன்ற திருவடிகள் நம்மாற் போற்றப் படுவன.

(வி - ம்.) தம்-சாரியை; இறைவன் ஆர் அருள்கூரவெனப் பிரிப்பாருமுளர்; காரவாவிய வெனத் தெளிவுபற்றி இறந்த காலத்தாற் கூறினார்; மணியிடைத் தோற்று மாதரெனக் கூட்டுக. நாரம் - நீர்; வீரவாகுவை - ஐ சாரியை; மாதர்களின் வரலாறு கந்தபுராணம் உற்பத்திப் படலத்திற் காண்க. (அ)

சமய குரவர்

முன்னாலுந் துளைக்கரத்தோன் முருகவேள்
பிடித்தெழுந்து மோய்ம்பிற் றூவப்
பின்னாலுங் கதிர்ச்சடிலப் பிஞ்ஞகனா
ரடித்தொண்டின் பெருக்க வீறு
பொன்னாலும் பெண்ணாலு மறிவுறுத்திவ்
வுலகினிடர் பொன்றி யாண்ட
அந்நால்வர் பதகமல மகந்தழீஇப்
புகழ்ந்திறைஞ்சி யரந்தை தீர்வாம்.

(இ - ள்.) முன்னர்த் தொங்குகின்ற துளைபொருந்திய கையை யுடைய மூத்தபிள்ளையாரும், விருப்பத்தைத்தரு மிளையபிள்ளையாரும், கையாற் பற்றித் திருத்தோளிற் றூவாசிக்க, பின்னர்த் தொங்குகின்ற ஒளிபொருந்திய சடையையுடைய இறைவர் தந்திருவடித் தொண்டின் பெருக்கத்தின் சிறப்பை உலகத்தில் பொன்னினாலும், பெண்ணினாலு மறிவுறுத்தி, இவ்வுலகத்திலுள்ளாருடைய துன்பத்தைப் பொன்று வித்து, அடிமை கொண்டருளிய சம்பந்தர், அப்பர், சுந்தரர், மணி வாசகராகிய நால்வருடைய திருவடியாகிய தாமரைப் பூவை அகத்தே தழுவிப் புகழ்ந்து வணங்கிப் பிறவித் துன்பத்தினின்றும் நீங்குவாம்.

(வி - ம்.) தாவ காலுஞ்சடில மெனக்கூட்டுக; நாலுதல் - தொங் குதல்; வீறு - பெருமை; பொன்றி - பொன்றுவித்து, குடிபொன்றி யென்றாற்போலக் கொள்க; பொன்னாலும் பெண்ணாலு மறிவுறுத்தல் - சம்பந்தர் படிக்காசுபெறல், பொற்கிழிபெறல், மழவன் மகள் நோய் தீர்த்தல், எலும்பைப் பெண்ணாக்கல் முதலியனவாம்; அப்பர் படிக்காசு பெறல், உழவாரப் படையிலகப்பட்ட பொன்மணிகளை வாரியெறிதல். அரம்பை முதலிய பெண்களை வெறுத்தொதுக்கல் முதலியனவாம்; சுந்தரர் ஆற்றிலிட்டபொருள் குளத்தில் வரச்செய்தல், செங்கலைச் செம்பொன்னாக்கல், பரவை சங்கிலியாரை யுரிமையாகக் கோடல், வனப்பகை சிங்கடியாரை மகண்மைமுறை கோடல் முதலியனவாம்; மணிவாசகர் பாண்டியன் பொருளைக்கொண்டு திருப்பணிபுரிதல், ஊமைப்பெண்ணைப் பேசும்படி செய்தல் முதலியனவாம்; பெருக்கம் - பெருமை; தாவப்பின்னாலு மென்பதற்கு தாவுதலினாற் பின்னேயாடு மெனப் பொருள் கூறுவாருமுளர்; அகரம் பண்டறி சுட்டு. (அ)

சண்டேசுரர்

புண்ணியம் பாதக மாகப் போற்றிய
அண்ணலந் தக்கனா ரகத்து நாணிய
புண்ணியம் பாதக மாகப் போற்றிய
அண்ணலந் தண்டித ளடிகள் போற்றுவாம்.

(இ - ள்.) யாகமாகிய புண்ணியச் செயல் சிவபெருமானைப் பேணாமையால் பாதகமாய் முடியும்வண்ணஞ் செய்த அழகிய பெரு

மையையுடைய தக்கன் உள்ளத்தின்கண் நாணமடையும்படி, வேதிய னாகிய தாதையைக் கோறலாகிய பாதகமே (சிவனடிக் கன்பினாலே) சிவபுண்ணியமாய் முடியும்வண்ணஞ் செய்த அழகிய பெருமைபொருந் திய சண்டேசுரரது திருவடிகளை வணங்குவாம்.

(வி - ம்.) நாணிய - நாண; கருத்து வகையான் புண்ணியம் பாவ மாகவும், பாவம் புண்ணியமாகவுங் கொள்ளப்படுமென்க; "அரனடிக் கன்பர் செய்யும் பாவமு மறமதாகும், பரனடிக் கன்பிலாதார் புண்ணி யம் பாவ மாகும், வரமுடைத் தக்கன் செய்த மாவேள்வி தீமை யாகி, நரரினிற் பாலன் செய்த பாதக நன்மை யாய்த்தே" என்றுஞ் சிவஞான சித்தித் திருவிருத்தம் ஈண்டுக் கருதத் தக்கது. ஆர்விகுதி இழித்தற்கண் வந்தது. (௯)

*திருத்தொண்டர்*

பாய வாருயிர் முழுவதும் பசுபதி யடிமை
ஆய வெவ்வகைப் பொருள்களு மவனுடைப் பொருள்கள்
மேய விவ்வண மலதுவே றின்றென வுணர்ந்த
தூய மெய்த்தவத் தடியவர் துணையடி தொழுவாம்.

(இ - ள்.) எங்கும் நிறைந்த மக்கள் ஆகிய உயிர்கள் எல்லாம் இறைவனடிமைகளாம், தோன்றிய (நிலமுதலுதமீறாகிய) எத்திறப் பொருள்களும் அப்பசுபதிக்கு உடைமைப் பொருள்களாம், அவைகட் குப் பொருத்தமாய் இவ்வாறின்றிப் பிறவாறின்றென மெய்யுணர்வா லறிதலாகிய புனிதமான மெய்த் தவத்தையுடைய சிவனடியார்க ளுடைய இரண்டு திருவடிகளையும் வணங்குவாம்.

(வி - ம்.) ஏனைய தவங்களெல்லாம் மலநடையாய்ப் பொய்யாகப் போதலின் இங்ஙன முணர்தலைத் தூயமெய்த் தவமென்றார்; இதனைப் 'பரனுணர்வி னாலுணரு மெய்த்தவரை மேவா வினை' என்ற சிவஞான போத வெண்பா அடியானு முரையானு முணர்க. ஆருயிர் முழுவது மென்பது எஞ்சாப் பொருட்டாய் மூவகை யான்மாக்களையு முணர்த்தி நின்றது; மேய என்பது மேவிய என்பதன் விகாரம். (௧௦)

*ஆசிரியர் பரம்பரை*

அருள்வளர் நந்தி மேதகை விளக்கி
யருள்சிவ ஞானபோ தத்தைத்
தெருள்வளர் [1]தமிழ்ச்செய் தளித்தமெய் கண்ட
தேவனற் சந்ததி விளங்க
வருமொரு துறைசைத் திருநகர் நமச்சி
வாயதே சிகனொடு மிந்தக்
குருபரன் வழிவந் தருணனி கொழிக்குங்
குரவர்கள் பலரையுந் துதிப்பாம்.

(இ - ள்.) கதிரை மிகுகின்ற பெரிய தகுதியையுடைய நந்தியம் பெருமான் தம் மாணாக்கராகிய சனற்குமார முனிவர்க்கு விளக்கியுப

1. 'தமிழ் செய்' என்றிருப்பிற் பொருத்தம்.

தேசித்தருளிய சிவஞானபோதமென்னுந் திப்பிய நாலினை உண்மை யறிவு மிகுதற்கேதுவாய்த் தமிழாற் செய்துலகிற் குபகரித்தருளிய மெய் கண்டதேவ நாயனார் பரம்பரை விளங்கும் பொருட்டு ஒப்பற்ற திருவாவடுதுறை நகரத்தில் திருவவதாரஞ் செய்த பரமாசாரியராகிய நமச்சிவாய தேசிகரையும் இக்குரவர் பெருமான் சந்தானமாக வாழையடி வாழையாக வந்து மிகவும் அருள் செய்கின்ற ஆசிரியர்கள் பலரையுந் தோத்திரஞ் செய்வாமென்க.

(வி - ம்.) சந்தான குரவர்கள் ஒருவர்பின் ஒருவராய் மாணவர் முறையில் வந்தார் திருப்பெயர்கள் வருமாறு:

திருக்கயிலை காக்குந் திருநந்தி தேவர், சனற்குமார முனிவர், சத்திய ஞான தரிசனிகள், பரஞ்சோதி முனிவர், மெய்கண்டதேவர், அருணந்தி சிவாசாரியர், மறைஞானசம்பந்தர், உமாபதி சிவாசாரியர் என்பனவாம்.

ஐயுருபு நிற்றற்குரியவிடத்து ஒடுவுருபு நின்றது; இனி நமச்சிவாய தேசிகனோடும் குரவர்கள் பலரையும் வணங்குவாமெனினுமமையும். (௯௯)

---

## அவை யடக்கம்

கருவிக ளனைத்து மென்னுட் கலந்துநின் றியக்கா நிற்கும்
ஒருவனை யன்றி யானே யுஞற்றுத லின்மை யாலே
மருவுமென் பாடற் குற்றம் பொறுமென மதிக்க நாணித்
திருவமர் கல்வி சான்றோர் திறத்தொன்றுஞ் செப்பி லேனால்.

(இ - ள்.) என்னுள்ளே பிரிவறக் கலந்து நின்று, எனக்கறிவிச்சை செயல்கள் விளங்குதற்கேதுவாகிய கரணங்களனைத்தையு மியங்குமாறு செய்தருளும் முதல்வனையல்லாமல் அம்முதல்வன் பாடுவித்தாற் பாடுவோனாகிய அடியேன் சுதந்தரமாகச் செய்தலின்மையால் எளியேன் பாடலிற் பொருந்துங் குற்றங்களைப் பொறுத்துக் கொண்மின் என நாணமுற்றுச் சொற்பொருளாகிய செல்வந் தங்கப்பெற்ற கல்வியானமைந்த பெரியோரிடத்தொன்றுஞ் சொல்லேனென்க.

(வி - ம்.) கருவிகள் ஆன்ம தத்துவ முதலிய அகக்கருவி முப்பானாறும். நால்வகை வாக்கு முதலிய புறக்கருவிகள் அறுபதுமாம். எனவும் மதிக்கவுமென்னும் எண்ணும்மைகள் தொக்கன; மதிக்க என்பதற்கு நினைக்கவெனப் பொருள் கூறுவாருமுளர்; என என்பதனை மதிக்க வென்பதனோடுங் கூட்டுக; பொறும் என்பதை "உண்மென விரக்குமோர் களிமகன் பின்வரும்" (மணிமேகலை ௩ : ௧௦௩.) என்றாற்போலப் பொருள் கொள்க. நாணி ஒன்றுஞ் செப்பிலேனெனக் கூட்டுக; (௧)

பசுகர ணங்க ளெல்லாம் பதிகர ணங்க ளாக
வசிபெறு மடியார்க் காயின் மன்னிய வொருமை தன்னால்
இசையுமற் றவரி னன்றோர்க் கென்னுரை போலு மென்னக்
கசிவுறு மனத்தி னோடுங் கட்டுரைப் பதுமாண் பன்றே.

(இ - ள்.) சிவகரணங்களெல்லாஞ் சிவகரணங்களாகும் வண்ணம் வகரசிகரத்தை யருள்வடிவாகிய பரமாசிரியன் பாற்பெற்ற மெய்யடியார்க்காயின், இரண்டறப் பொருந்திய வொற்றுமையால் என் பாடற் குற்றம் பொறுமெனவும் மதிக்கவெனவுங்கூறல் பொருந்தும்; அவரைப் போல ஆன்றோரிடத்து என்றுரையைக் காத்தருள்கவென்று இளகுதலற்ற மனத்தையுடைய வெளியேனுஞ் சொல்வது தகுதியன்றென்க.

(வி - ம்.) ஒருமை - ஒற்றுமை; வசியொன்று மடியார்கள் அதன் பொருளோடு ஏகனாகி நிற்குந்தன்மையால் என் பாடலென்றும், அவையடக்கங்கூறல் ஆன்றோராசாரமாதலின் அந்நியமந்தப் பாவண்ணம் குற்றம் பொறுமென்றும், கூறல் முறைமையாம். பேதமுடைய யான்கூறல் முறையன்றென்க. (௨)

முதுக்குறை வுடையோர் நிற்ப முழங்குதன் காதை யென்னால்
விதுக்குறை முடியோன் மைந்தன் விரிந்தசெந் தமிழ்ச்சொல் லாகப்
புதுக்குபு கேட்கு மார்வம் பாகடை புன்சி றார்கை
மதுக்குலாந் தொடையன் மார்பர் வைத்துவாய் கவர்தல் போலாம்.

(இ - ள்.) மூன்றும் பிறையைத் தரித்த திருமுடியையுடைய இறைவன் றிருக்குமாரர் பேரறிவுடையார் பலரும் நிற்கவும் மெய்ந் நூல்களெல்லாம் முழங்காநின்ற தனது திப்பிய சரிதத்தைச் சிற்றறிவுடைய வென்னால் செந்தமிழின்கட் பெருங்காப்பியமாகப் புதுக்குவித்துத் திருச்செவியிற் கேளா நிற்குமாசை. என்போலவெனின் தேன் பொருந்திய மாலையை யணிந்த மார்பினையுடைய தந்தைமார் தம் புல்லிய சிறார்களின் கரத்திற் பாக்கு வெற்றிலையை வைத்துத் தம் வாயினால் கவரும் விருப்பத்தை யொக்குமென்க.

(வி - ம்.) கலைகளான் நிறைந்த நிறைமதியினை யணியாது விடுத்துக் குறைமதியினை யணிந்த பெருமான் றிருக்குமாரராதலின், கலைகளானிறைந்த நிறைமதியினையுடையார் பலரிருப்ப அவரை விடுத்துக் குறைமதியினையுடைய வெளியேனாற் புதுக்குபு கேட்டல் முறையாகலின் விதுக்குறையுடையோன் மைந்தன் புதுக்குபு கேட்கு மார்வமென்றார்; செந்தமிழ் விரிந்த சொல்லாக வென்க; சொல் ஆகுபெயர்; என்னாற் கேட்கு மார்வம் பாகடையைச் சிறார் கைவைத்துக் கவர்தல் போலுமென்க. முதுக்குறைவு. பேரறிவு; விதுக்குறை குறைச்சந்திரன்; பாகு-பாக்கு; அடை கண்டு வெற்றிலை; நிற்பவுமென்னும் எச்சவும்மையும் புதுக்குவித்து என்னும் பிறவினை புணர்த்தும் விகாரத்தியந் தொக்கன. (௩)

———

# க. திருநாட்டுப் படலம்

வட்டவாய்க் கமலத் தண்ணன் மணிமுடி துளங்க வோச்சிக்
குட்டிய குமரப்புத்தேள் குலாவிய தணிகைக் குன்றம்
அட்டொளி மணியின் மோலி யணிந்தெனத் தன்பாற் கொண்ட
முட்டறு பாலி நாடு மூச்சகத் துயர்ந்த தொன்றே.

(இ - ள்.) *வட்டமாகிய வாயினையுடைய தாமரை யாசனத்தி லெழுந்தருளியிருக்கின்ற பிரமனது அழகிய சிரங்கள் குலுங்கும்படி திருக்கரங்களினால் வீசிக்குட்டுதலைச் செய்த குமாரக் கடவுள் எழுந்தருளுதலால் விளங்கிய தணிகைமலையை உருக்கிய வொளியையுடைய அரதனங்கள் பதித்த கிரீடமணிந்ததென்று சொல்லும்படி தன்னிடத்துக்கொண்ட நாட்டிற்குளவாகிய எண் வகையாகிய குற்றமற்ற பாலி நாடானது மூவுலகத்தினு முயர்ந்ததொன்றே யாமென்க.*

(வி - ம்.) *குன்றத்தைத் தன்பாற் கொண்ட பாலிநாடென்க. ஓச்சல் - வீசல்; குன்றம் இரண்டாவதன்றொகை; அட்டொளி - உருக்கிய வொளி, இதனை ''அட்டொளி யரத்த வாய்க்கணிகை'' என்னுஞ் சிந்தாமணி நாமகளிலம்பகம் 69 செய்யுளுரையானுணர்க. முட்டு - குற்றம், நாட்டிற்குவரும் எண்வகைக் குற்றமாவன – ''விட்டில் கிளி நால்வாய் வேற்றரசு தன்னரசு, நட்டம் பெரும்பெயல் காலெட்டு' என்றதனாலும், ''எண்ணி னிடரெட்டு மின்றிவயற் செந்நெற், கண்ணின் மலருங் கருநீலம் – விண்ணின் வகைத்தாய் வளனோடு வைகின்று வெள்வேல், நகைத்தாரான் றன்விரும்புநாடு'' என்னும் புறப்பொருள் வெண்பா மாலை யானு மறிக; ஏகாரம் பிரிநிலையுந் தேற்றமுமாம்; கமலம் : ஆகு பெயர்; உயர்ந்தது இறந்தகால வினைமுற்று; இது பிரிநிலை யுயர்வு நவிற்சியணி;* (க)

துலங்கலில் போக மூட்டித் தொக்கநாளிற்ற காலை
யலங்கலி லறத்தி னற்று லருங்கதி யுயிரை யேய்த்துப்
புலங்கெழு தன்பாற் போகம் புலர்ந்துழிக் கிழக்க தாக்கும்
நலங்கெழு துறக்க விண்ணை நக்கது தொண்டை நாடு.

(இ - ள்.) *தொண்டை நாடானது தன்கட் பிறந்த வுயிரை அசுரர் முதலியோரா லிடையிடுறுந் துறக்க வின்பம்போலாது பகைவராற் கெடுதலில்லாத போகத்தை யுண்பித்து வரையறை செய்த நாள் முடிவுற்ற காலத்துப் போகம்நுகர்தலாற் கெட்டொழியாது, சிவநல்வினைப் பயனால் பெறுதற்கரிய வீட்டுலகிற் சேர்த்துப் பஞ்சப்புலன்களுக்கு விடயமாகிய தன்னிடத்துள்ள வின்பம் நுகர்ந்தொழிந்த காலத்துக் கீழ் வீழச் செய்யும் நன்மை பொருந்திய துறக்கமாகிய விண்ணாட்டினைச் சிரித்ததென்க.*

(வி - ம்.) *தொண்டைநாடு தன்கட் பிறந்த வுயிரைப்போக மூட்டிக் கதியேய்த்து விண்ணை நக்கதென்க. அருங்கதி - பெறுதற்கரிய வீட்டுலகம்; ஏய்த்தல் - வீட்டுலகிற் குடியேற்றுதல்; அலங்கலிலறம் - போக நுகர்தலாற் கெட்டொழியாது மேற்கதியுய்க்குஞ் சிவநல்வினை; துலங்கல் – கெடுதல்; துளங்கல் என்பது எதுகை நோக்கி விகாரப்பட்*

டது; போலியெனினும் பொருந்தும். புலர்தல் - கெடுதல்; கிழக்கு - கீழ்; இதனை "செறுநரைக் காணிற் சுமக்க விறுவரை, காணிற் கிழக்காந் தலை" யென்னுந் திருக்குறளானறிக; புலர்ந்த வென்னும் பெயரெச்சத்தகரந்தொக்கது; அது பகுதிப் பொருள் விகுதி; இஃது ஒழிபுயர்பு நவிற்சியணி. (உ)

கோண்முறை பிறழ்ந்து மாரிக் குளிர்பெயல் வறக்கு மேனுந்
தாண்முறை தப்பா வண்ணந் தகைமண லகழுந் தோறும்
ஊண்முறைப் புனல்வந் தோடு மொலிநதிக் குலத்தா லேனை
விண்முறை நாட்டை யெல்லாம் விழ்த்தது தொண்டை நாடு.

**(இ - ள்.)** *தொண்டைநாடு நவக்கிரகங்கள் (தாங்கள் இயங்குகின்ற) முறைமையினின்று மாறுபடுதலால் மாரிக்காலத்துளவாகுங் குளிர்ந்த மழை பெய்யாது பொய்க்குமாயினும், செறிந்த மணலைத் தோண்டுந்தோறும் முயற்சியின் பாகுபாடு தவறுவண்ணம் உண்ணுந் தகுதியையுடைய புனல் சுரந்தூறுகின்ற செழித்த நதியின் கூட்டத்தால் அந்நீதியையுடைய மற்றைய நாட்டையெல்லாங் கீழாக்கியதென்க.*

**(வி - ம்)** *கோள்-நவக்கிரகம்; பிறழ்ந்து என்னுஞ் செய்தெனெச்சம் காரணப்பொருட்டாய் நின்றது; மாரி என்பது காலத்தையுணர்த்தி நின்றமையின் ஆகுபெயர்; ஒலித்தல் - தழைத்தல்; 'வாரொலி கூந்தனின் மணமகன்றன்னை' என்னுஞ் சிலப்பதிகாரப் பதிகத்துரையில் ஒலித்தல் தழைத்தலெனப் பொருள் கூறியிருப்பதை நோக்குக; ஊண் முறைப்புனல் - ஊணைக்கொடுத்தற் கேதுவாகிய புனலென்பாருமுளர். கோள்முறை பிறழ்தல் - வெள்ளி முதலிய கோள்கள் மழைக்குக் காரணமாகாத இராசிகளிற் சேறல்; இது பிரிநிலை யுயர்வு நவிற்சியணி.* (௩)

வருபுனல் வாய்ந்த வோங்கல் வல்லர ணிருநீ ரென்னும்
பொருவில்பல் லுறுப்பிற் றுகிப் பொங்கிய செல்வ மேமம்
வெருள்பிணி யின்மை யின்பம் விளைவுநன் கணிந்து தாழ்வில்
திருவினர் தக்கோர் சாலச் செறிந்தது தொண்டை நாடு.

**(இ - ள்.)** *தொண்டைநாடானது இடையறாது வருகின்ற நீரும் அந்நீரையுடைய வாய்ப்புடைத்தாகிய மலையும், வலிய மதிலும் மேனீருங் கீழ்நீருமாகிய ஒப்பில்லாத பல அங்கங்களையுடையதாகி மிகுந்த செல்வமுங் காவலும் அஞ்சத்தக்க பிணியின்மையும் இன்பமும் பலவகை விளைவும் நன்றாகப் பொருந்தி என்றுங் கெடுதலில்லாத செல்வர்களும் தகுதியையுடைய சான்றோரும் செறிந்துறையப்பட்டது.*

**(வி - ம்.)** *வருபுனல் - அருவிநீர்; இருநீர் - மேனீர் கீழ்நீர்; "மலையரண் காட்டரண் மதிலரண் நீரரண்; வகையுறு சிறப்பினால் வகையரணே" எனக் கூறியிருத்தலின் இவைகள் அரணமெனக்கொள்க.*

*"தள்ளா விளையுளும்" "இருபுனலும்" "பிணியின்மை" இம்முதற் குறிப்புடைய குறள்களின் பொருள் இச்செய்யுளில் அமைந்திருத்தல் காண்க. மாரிக்காலத்து மலை, நீரையுட்கொண்டு கோடைக்காலத்தில் வெளியிடுதலின் வாய்ந்த வோங்கல் என்றார். இது தற்குறிப்பேற்றம்.*

மலிபெரும் பொருளாற் பெட்கும் வண்மையு நாடா தியாது
மெலிவுக வுதவும் வாய்ப்பு மெலிகலா மெலிந்த காலும்
நலிதரா வளனு மெல்லா நலிவுநீத் தாற்ற விண்டும்
ஒலிகெழு விளையு ளோடு முடையது தொண்டை நாடு.

**(இ - ள்.)** *தொண்டைநாடு அளவிறந்த பொருண்மையால் யாவரும் விரும்பும் வளப்பமும், சிறிதுந் தேடாது துன்பம் நீங்கக் கொடுக்கும் விளைவும் வறுமையடையத் தகாதவர் வறுமையுற்ற காலத்தும் வருந்தாமைக் கேதுவாகிய வளனும் எல்லாத் துன்பத்தையும் நீக்கி மிகவும் பெருகுகின்ற தழைத்த பழனங்களோடும் பொருந்தியுள்ளது.*

**(வி - ம்.)** *நாடாது யாதும் - சிறிதுந் தேடாது; மெலிவுக - வருத்தங்கெட; வாய்ப்பு, ஈண்டு விளைவு; ஈண்டும் - அதிகரிக்கும். "பெரும் பொருளால்" "கேடறியாக்" என்னும் முதற் குறிப்புக்களையுடைய குறள்களினும் அவற்றினுரைகளினு முள்ள பொருள் இச்செய்யுளில் அமைந்திருத்தல் காண்க. இதுவும் மேலையணி.* **(௯)**

பல்குழு வேந்த லைக்கும் படர்கொலைக் குறும்பு தீய
பல்குழுட் பகையு டற்றும் பகையுறு பசிநீ ராநோய்
புல்குறி தானு மின்றிப் பொறையொருங் குறுகாற் றுங்கி
நல்கிறை வேந்தர்க் குய்க்கு நலத்தது தொண்டை நாடு.

**(இ - ள்.)** *தொண்டைநாடு, சங்கேத வயத்தான் மாறுபட்டுக் கூடும் பல கூட்டமும், அளவு வந்தால் அரசனைக் கொலை நாடுங் குறும்பரும், உடனுறையாநின்றே பாழாகச் செய்யுந் தீயகுணங்கள் நிறைந்த உட்பகையும் புறத்தே நின்று வந்து அழிவு செய்யும் புறப்பகையும் மிக்க பசியும் பெருங்கால் பெருவயிறு முதலிய தீராதநோய்களுமாகிய இவைகள் பொருந்தும் அடையாளங்கள்தாமு மின்றிப் பிற நாடு பொறுத்த பாரமெல்லாம் ஒருங்கு தன்கண் வருங்கால் அவற்றைத் தாங்கிக் கொடுக்குமிறையை இறைவற்கு ஒருங்கு கொடுக்கும் நன்மையையுடையது.*

**(வி - ம்.)** *எண்ணும்மைகள் தொக்கன; சங்கேதமாவது சாதி பற்றியும் கடவுள் பற்றியும் பலர்க்குளதா மொருமை; குறும்பராவார் சிற்றரசர், உட்பகை, ஆறலைப்பார், கள்வர், குறளை கூறுவார் முதலிய மக்களும் புலி கரடி முதலிய விலங்குகளுமாம்; புல்குறி - பொருந்துமடையாளங்கள்; அஃதாவது முதலிரண்டடியிற் கூறிய செயல்கள் நிகழ்தற் கேதுவாக முன்னே நிகழும் உற்பாதங்கள்; புல் என்பதை முதனிலைத் தொழிற்பெயராக்கிக் கொண்டு குறிதானுமென்பதற்குச் சிறிதானு மெனப்பொருள் கூறுவாருமுளர்; "பல்குழுவும்" "உறுபசியும்" "பொறை யொருங்கு" என்னுமுதற் குறிப்புக்களையுடைய குறள்களின் பொருள்கள் இச் செய்யுளில் அமைந்திருத்தல் காண்க; வாழ்வாரது நலம் நாட்டின்மேலேற்றப்பட்டது; இது தொடர்புயர்பு நவிற்சியணி.* **(க)**

கறைகெழு களத்தெம் மண்ணல் கரைந்தபல் லாக மத்தின்
முறைநெறி யொழுக்கி னேடு முடிவில்பல் லறமு மின்பம்
நிறையும்விம் மிதமு மென்று நீக்கமில் லணிக லன்கள்
இறைவியா லணியப் பட்ட திலங்குதுண் டீர நாடு.

(இ - ள்.) விளக்கம் பொருந்திய துண்டீர நாடானது, நஞ்சணியுந் திருமிடற்றினையுடைய எம்முடைய சிவபெருமான் றிருவாய் மலர்ந் தருளிய பலவாகிய வாகமங்களிற் கூறிய விதிவழியே யொழுகுகின்ற ஒழுக்கத்தினேடு கெடுதலில்லாத பல தருமமும் இன்ப நிறைதற் கேதுவாகிய அதிசயங்களென்று சொல்லப்படுகின்ற நீக்குதலில்லாத அணிகலன்களும் தலைவியாகிய காமாட்சியம்மையாரால் அணியப்பட்டுள்ளது.

(வி - ம்.) அணிகலன் - இரண்டாவதன் றொகை; தொண்டைநாடு ஒரு காலத்தில் துண்டீரன் என்னுமரசனால் ஆளப்பட்டமையின் துண்டீர நாடெனப்பட்டது; விம்மிதம் காஞ்சிப்புராணத்து விம்மிதப் படலத்துக் கூறப்பட்டவை. விம்மிதம் - சாதியொருமை; இஃது உயர்வு நவிற்சி. (எ)

மான்றவல் வினைகால் சீக்கும் வளங்கெழு தொண்டை நாடு
சான்றவ ருடைத்தென் றேதுந் தகுமொழிக் கதிரான் மற்றை
யேன்றசீர் நாட்டின் சீர்த்தி யென்னுமீ னெளிமை யாப்ப
ஆன்றசெம் பருதியாய தனையதண் டகநன் ஞடு.

(இ - ள்.) அத்தன்மை பொருந்திய நல்ல தண்டக நாடானது மயங்குதற் கேதுவாகிய வலிய வினைகளைத் துடைக்கும் வளம்பொருந்திய தொண்டைநாடு சான்றோருடைத்தென்று கூறும் ஆன்றோர் வசனங்களாகிய கிரணத்திஞல் ஏனைய சிறப்புப்பொருந்திய மற்றைய நாட்டின் கீர்த்தியென்று சொல்லப்படுகின்ற நட்சத்திரத்தி னெளி மழுங்க உயர்ந்த செஞ்ஞாயிறுயது.

(வி - ம்.) மான்றல் - மயங்கல்; கால் சீத்தல்-துடைத்தல்; கதிர் - கிரணம்; மையாத்தல் - மயங்கல்; ஈண்டு ஒளிகுறைதல், இதனை "மலர் காணின் மையாத்தி நெஞ்சே" என்னுங் குறளுரையா லுணர்க. "தொண்டைநாடு சான்றோருடைத்தென்"பதை 'வேழமுடைத்' என்னும் வெண்பாவா னறிக. (அ)

கோடைப் புகழ்க் கவயம் போர்த்துக் கூரறப் படைக ளேந்தி
விடைப்பரு வேழம் பொற்றேர் விரைசெலற் பரியாள் வாய்மை
படைப்பருஞ் சீல நோன்பு பத்திமை யாகப் பாய்த்திக்
கடைப்படு பாவத் தெவ்வைக் கடந்ததத் தொல்லை நாடு.

(இ - ள்.) பழமையாகிய அத்தொண்டை நாடானது, ஈகையான் வருகின்ற கீர்த்தியாகிய மெய்புகு கருவியைப் போர்த்து, கூரிய தருமமாகிய படைக்கலன்களைத் தாங்கி, விரோதித்தலருமையாகிய யானையும் அழகிய தேரும் விரைவாகச் செல்கின்ற குதிரையும் காலாளுமாகிய

நான்குவகைப் படைகள் முறையே உண்மை தேடுதற்கரிய வொழுக்கம் விரதம் சிவபக்தியுமாகச் செலுத்தி இழிந்த பாவமாகிய பகைவனை வென்றதென்க.

• (வி - ம்.) விடைப்பு - விரோதித்தல்; கவயம் - உடம்புக்கிடு; தெவ்: ஆகுபெயர்; கடந்தது - வென்றது; இஃது உருவக உயர்வு நவிற்சியணி. இனி விடைப்பரும் வேழம் என்பதற்கு வெல்லுதற்கரிய வேழமென்பாருமுளர். (௯)

முரிதிரை சுருட்டிப் பல்வீ மொய்த்தபஃ றீர்த்த மாடி
விரிபுகழ்த் தலங்கள் சால மேவியா னந்தக் கூத்தர்க்
குரியபல் வடிவந் தன்னு ளுறுத்தலால் வீடு வெஃகிக்
கரிசறுத் தவர்கள் போன்று கவின்றதப் பொருவி னாடு.

(இ - ள்.) ஒப்பில்லாத தொண்டை நாடானது துணியும் அலைகளை மடக்கிப் பல பூக்கள்மொய்த்த பல தீர்த்தங்களிலாடி விரிந்த புகழையுடைய திப்பிய தேசங்களை மிகவும் பொருந்தி ஆனந்தக் கூத்தராகிய நடராசப் பெருமானுக்குரிய உமைகேள்வர் முதலிய பல வடிவங்களையுந் தன்னிடத்து நிலைபெறுத்தலால் வீட்டை விரும்பிக் குற்றத்தை நீக்கிய பெரியோர்களைப் போன்று விளங்கியதென்க.

(வி - ம்.) ஆடியென்பதற்கு நாட்டிற்கேற்பப் பொருந்தியெனவும் அடியார்க்கேற்ப மூழ்கியெனவும், மேவியென்பதற்குத் தலங்கள் மிகுதியாக நாட்டிற் பொருந்தியெனவும் அடியார்கள் சென்றெனவும், உள் என்பதற்கு நாட்டிற்கேற்ப இடமெனவும், அடியார்க்கேற்ப உளமெனவும் பொருள்கொள்க. வெஃகி - விரும்பி; கரிசைச் செய்வதனைக் கரிசு என்றார். கரிசு - குற்றம். இது சிலேடையணி; ஆனந்தக் கூத்தர்க்குரிய பல வடிவங்களை 'மதியணியுஞ் சடை' என்னுஞ் செய்யுளானறிக. (௧௦)

கருங்குழல் கானிற் றேற்றிக் கதிர்முலை மலையிற் றேற்றி
யிருங்கையும் பணையிற் றேற்றி யெரிமணிக் கலாப வல்குல்
பெருங்கடற் றேற்றி வேத வொழுக்கெனுங் கணவற் பின்னி
யொருங்குநாற் பயனு மக்க ளுயிர்த்தளிப் பஃதந் நாடு.

(இ - ள்.) அத்தொண்டைநாடு கரிய கூந்தலை முல்லை நிலத்தாற் காட்டியும், ஒளிபொருந்திய தனத்தை மலைசார்ந்த குறிஞ்சி நிலத்தாற் காட்டியும், பெரிய கரங்களைப் பொலிவுபெற்ற மருதநிலத்தாற் காட்டியும் ஒளிவீசுகின்ற மணிகள்கோத்த கலாபத்தையணிந்த அல்குலைப் பெரிய கடலாகிய நெய்தனிலத்தாற் காட்டியும், வேதத்தில் விதித்துள்ள ஒழுக்கமென்னுங் கணவனைக்கூடி ஒருசேர அறம்பொருளின்பம் வீடாகிய நால்வகைப் பயனாகிய மக்களைப் பெற்றுக் காப்பாற்றுவதாம்

(வி - ம்.) குழலை முல்லைநிலத்தாற் றேற்றியென்றார் கான்கூந்தற் குவமையாதலானென்க: தனத்தை மலையாற்காட்டிக் கையைப் பணையாற் றேற்றுவித்தல், மலையும் மருதநிலத்துள்ள தாமரை கரும்பு மூங்கில் களும், கடலும் இவ்வவயவங்கட் குவமையாதலானோக்கியென்க. கான் - முல்லைநிலம்; பணை - மருதநிலம்; மலை - குறிஞ்சிநிலம்; கடல் - நெய்தல்

*னிலம்; "மூன்றுயிர் வருமிடத் தாய்தப்புள்ளி மன்னல் வேண்டும் அல்வழி யான" என்பதோத்தாகலின் ஆய்தம் விரிந்துநின்றது; கலாபம்-பதினாறு கோவை.* (கசு)

விண்ணவ ரவுணர் சித்தர் விஞ்சையர் கருடர் நாகர்
மண்ணவ ரெவருந் தோய்ந்து வரம்பெறு மேன்மை சான்ற
புண்ணிய நதிகள் பல்ல பொங்கொளி மணிநீர்ப் பாலி
அண்ணல்வார் நதியி னோடு மணிந்தநப் பொருள்கூர் நாடு.

(இ - ள்.) *அப்பொருள் மிகுந்த தொண்டைநாடு தேவர்களும் அவுணர்களும் சித்தர்களும் வித்தியாதரரும் கருடரும் நாகரும் மனிதர்களுமாகிய யாவரும் மூழ்கி விரும்பிய வரத்தைப் பெறுகின்ற மேன்மை பொருந்திய புண்ணிய வடிவாயுள்ள நதிகள் பலவற்றையும் மிக்க வொளியோடு கூடிய அழகுபொருந்திய நீரோடுகூடிய தலைமையையுடைய நீண்ட பாலிநதியோடு அலங்கரித்துக்கொண்ட தென்க;*

(வி - ம்.) *நாடு நதிகள் பலவற்றைப் பாலியினோடு அணிந்ததெனக் கூட்டுக.* (கஎ)

கடவுள் வெண்கரி விசும்போரீஇப் புரந்தரன்
காவலன் திசைநோக்கிப்
படர்வ தொத்துவெண் ணிறமுகிற் குழாமணி
படுகடற் பரப்பண்மித்
தொடலை வெண்டிரைப் பெரும்புனன் முகந்தது
தொல்லைபோ லொருசாபம்
அடர வல்விரைந் தெழுந்தென வுடல்கறுத்
தந்தரத் தெழுந்தன்றே.

(இ - ள்.) *வெண்மைநிறம் பொருந்திய மேகக்கூட்டங்கள் தெய்வத்தன்மை வாய்ந்த (ஐராவதமென்னும்) வெள்ளை யானையானது தேவருலகத்தினின்று நீங்கி இந்திரன் காவல்செய்கின்ற அழகிய கிழக்குத் திசையை நோக்கிச் செல்வதொத்து முத்துப் பிறத்தற்கிடமாகிய கடற்பரப்பை யணுகி மாலைபோ லொழுங்காகிய வெள்ளிய அலைகளோடு கூடிய கடனீரைமொண்டு அவ் வயிராவதமானது முன்னர்த் துருவாசரிட்ட சாபம்போல ஒருசாபம் வந்து தொடராநிற்க மிக விரைவுற்று எழுந்தாற்போல உடல் கறுக்கப்பெற்று ஆகாயத்தி லெழுந்தது.*

(வி - ம்.) *ஏனைய திசையில் கடல்கள் உளவாகவும் கீழ்த்திசைக் கடலைக் கூறினார், மேகங் கீழ்த்திசைக் கடலைநோக்கிச் சேறலியல்பாகலின்; தொடலை - மாலை போன்றவெனத் தொகையாகக் கொள்க. அது வென்றது வெண்கரியை; அகரம் பண்டறிசுட்டு; எழுந்தாலென்னும் வினையெச்ச விறுதொக்கது; அம்: சாரியை; இது விரியுவமையணியும் பதப் பொருட்காட்சி யணியுமாம்.* (கஅ)

தேத்த டைத்திரள் கிழிந்தசும் பருவரைச்
செழுங்கிரி தனைமன்றுட்

கூத்தி யற்றருட் பரம்பரன் மதலையைக்
குறித்துநோன் புழந்தேதம்
நீத்தி டக்கரி யடுத்தென நந்தித
னெடுமலை முதலாகத்
தூத்த டப்பொலங் குவட்டுயர் சிலம்பெலாந்
தொடர்ந்துசென் றிறுத்தன்றே.

(இ - ள்.) அவ்வயிராவதயானை தேன்கூட்டின் றிரள்கிழிதலால் துளித்தனீங்காத பக்க மலைகளையுடைய செழித்த தணிகை வரையை அடுத்ததுபோலப் பொன்னம்பலத்தின்கண் நடனத்தைச் செய்கின்ற அருளோடுகூடிய நடராசப் பெருமானுடைய புத்திரராகிய முருகக் கடவுளைக் குறித்துத் தவஞ்செய்து சாபத்தினால் வந்த குற்றத்தை நீக்கும்படி நீண்ட நந்திமலை முதலாகப் பெரிய பரிசுத்தமாகிய பொன்னிறத்தையுடைய சிகரங்களோடு கூடிய உயர்ந்த மலைகளினெல்லாம் பொருந்திச் சென்று தங்கியது.

(வி - ம்.) எழுவாய் மேலைச் செய்யுளினின்றும் வருவித்துரைக்கப் பட்டது. இதனை முன்வருஞ் செய்யுட்குங் கொள்க. தேத்தடை-தேன் கூடு; 'ஒற்றுமிகு தகரமொடு நிற்றலு முரித்தே' யென்பதனால் தேன் அடை - தேத்தடை யென்றுயது; அசும்புதல் - துளித்தல்; அசும்பு முதனிலைத் தொழிற்பெயர்; வரையும் வரைசார்ந்த நிலமும் குறிஞ்சியாதலின், ஈண்டுவரை யென்றது குறிஞ்சி நிலத்தை; மூங்கிலென்பாருமுளர்; ஏதம் ஈண்டுச் சாபத்தையுணர்த்தி நின்றது; குவடு - சிகரம்; சிலம்பு - மலை; கிழிந்தென்பது காரணப்பொருட்டாய வினையெச்சம்;. தன்: சாரியை; இது உவமையணி. (௧௭)

செம்ம லார்க்கியஞ் சாத்தமேக் குயர்த்தவா
சிகையெனச் சிலைவாங்கி
விம்மு வாண்மணித் தீபவா ராதனை
விளைத்தெனத் தடித்தின்று
சும்மை யேத்தெடுத் தெனமுழக் கெழீஇவிழி
சொரிந்தெனப் பொழிந்தெங்கு
மம்ம ரேதநீத் தொளிர்ந்தென வெண்ணிற
வயக்கமாண் டதுமாதோ.

(இ - ள்.) அவ்வியானை தலைவராகிய முருகக் கடவுளுக்குச் சாத்தற்பொருட்டு மேலே யுயர்த்திய திருவாசிகை யென்று சொல்லும்படி வில்லை வளைத்து மிக்க வொளி பொருந்திய இரத்தின தீபவாராதனை செய்ததென்று சொல்லும்படி மின்னலை வெளியிட்டுப், பேரோசையாகிய தோத்திரஞ்செய்ததென்று சொல்லும்படி முழக்கத்தைச்செய்து, ஆனந்தக் கண்ணீர் சொரிந்ததென்று சொல்லும்படி மழையைப் பொழிந்து, மயக்குறுத்து மச்சாபக் குற்றத்தை நீக்கி முன்னைய வடிவு பெற்று எழுந்ததென்று சொல்லும்படி வெண்ணிறமாகிய விளக்கத்தினால் மாட்சிமையடைந்தது.

(வி - ம்.) மேகக்கூட்டம் வாங்கி ஈன்று எறிஇ பொழிந்து நீத்து மாண்டதெனக் கூட்டுக. மேக்கு - மேல்; வாசிகை - திருவாசி; வாசிகை வாசி யென்பன ஒரு பொருளன; "ஓங்காரமே நற்றிருவாசி" என்பதனாலும் "பாத்தியமணிகள் கொண்டிழைத்திலங்கும் பார வாசிகை மணிமேகஞ் சாத்தியதென வில்வளைத்துறுஞ் சோண சைலனே கயிலைநாயகனே" என்பதனாலும் அறிக. சிலை - வானவில்; சும்மையேத்து - முழக்கமாகிய தோத்திரம், வயக்கம் - விளக்கம்; ஏதம் - சாபத்தாலுண்டாகிய கருநிறம்; இதுவும் மேலையணி. (கo)

உருகு வெஞ்சின வெம்மைதா னுடற்றுழி
யுடைகுளி ரொளித்தாங்குப்
பெருகு தண்குளிர்க் குடைந்திது பொழுதுபோர்
பெட்டல்யா வருங்கண்ணுக்
குருகு முன்கையார் குங்கும முலைகளிற்
கொம்மெனக் கரந்தன்றுற்
றிருகு தம்பகை சார்தனங் கிடைக்குமேற்
சிவணுரு தவர்யாரே.

(இ - ள்.) எல்லாப் பொருளும் உருகுதற்கேதுவாகிய கோபத் தோடுகூடிய வெப்பமானது தான் போர் செய்த காலத்துத் தனக்கு முன்னர்த் தோற்ற குளிர் ஒளித்ததுபோலத் தானும் மிக்க குளிர்ச்சி பொருந்திய குளிருக்குத் தோற்று இப்போது போர்க்கு விரும்பிச் சேறலை எவருங் கருதாத வளையல்களணிந்த முன் கையையுடைய பெண்களுடைய குங்குமச் சாந்தணிந்த தனங்களில் விரைவாகச் சென்று ஒளித்தது, மாறுபட்ட தம்முடைய பகைசார்ந்த தனங்கிடைக் குமானால் அதனைப் பொருந்தாதவர் யாவருளர்? ஒருவருமில்லை.

(வி - ம்.) இது பொழுது - இப்பொழுது; வெம்மை இப்பொழுது உடைந்து கரந்ததெனக் கூட்டுக. கன்று - ஈறுகெட்ட பெயரெச்சம் கையார் என்ற பெயரொடு முடிந்தது; குருகு - வளை; கொம்மென விரைவுக்குறிப்பு; தனம் முலையெனவும் நிதியெனவும் பொருள் கொள்க; பகை : ஆகுபெயர்; சிவணுதல் - பொருந்துதல்; பெட்டல் - ஈண்டு விருப்பின்கண்ணிகழுஞ் செல்லுதற் றொழிலை யுணர்த்திற்று; பெண்கள் தனம் சீதளகாலத்து வெம்மையினையும் வெம்மைக்காலத்துச் சீதளத்தினையும் தருமென்பது. "வாவியுறை நீரும் வடநிழலும் பாவக மும், ஏவனைய கண்ணாரிள முலையும் - ஓவியமே, மென்சீத காலத்து வெம்மைதரும் வெம்மைதனில், இன்பாருஞ் சீதளமேயாம்." (நீதி வெண்பா-சுஉ) என்பதனாலறிக. இது வேற்றுப் பொருள் வைப்போடு கூடிய சிலேடையணி. (கக)

உண்ட பாற்சுவை நினைந்தொரு முனிதவ
முழந்துபாற் கடல்பெற்ற
பண்டை நீர்மைதேர்ந் தமரரான் பயந்தின்முன்
படிந்தநந் தியங்குன்று

மண்டு மாதவம் புரிந்தது வரத்தழீஇ
வழிதர மேற்பெய்து
கொண்ட தாமென வாவயின் விழுந்தநீர்
சூலாய்வழிந் ததையன்றே.

(இ - ள்.) முன்னர்க் காமதேனுவின் பாலிற்றோய்ந்த நந்தியங் குன்றானது ஒப்பற்ற உபமன்னிய முனிவர் தாம் முன்னர் (வசிட்டர் ஆச்சிரமத்தில்) உண்ட பாலின் சுவையை நினைந்து பெரிய தவத்தினை யியற்றித் திருப்பாற்கடலினையடைந்த பழைய நீர்மையினை யுணர்ந்து நெருங்கிய பெரிய தவத்தினைச் செய்தலால் அத்தவத்தின் பயனாக அப் பாற் கடல்வர அதனைத் தழுவி வழியும்படி தன் மேலே பெய்துகொண் டதுபோல அந்நந்தி மலையின்மேல் விழுந்த நீர் எங்கும் பரந்து வழிந்தது.

(வி - ம்.) அது என்றது பாற்கடலைச் சுட்டியது; ஆவயின் - சுட்டு நீண்டது; இ: சாரியை; அன்று, ஏ : அசை; பாற்கடலுண்டது வெளிப் படை - இது தற்குறிப் பேற்றவணி. (கஎ)

காந்தளம் போது வேய்ந்து களிமயில்
கடாவிப் பல்பூ
வேய்ந்தமென் குழற்கோம் பன்னார் வெறியயர்
களத்துச் சார்ந்து
வாய்ந்தவிங் குலிகச் சேற்றின் வயங்குதன்
னுருவந் தோற்றிப்
போந்துலாய்ச் சிலம்பின் செவ்வேள் போன்றது
பாலி நீத்தம்.

(இ - ள்.) பாலியாற்றிற் செல்லும் வெள்ளமானது அழகிய காந்தட் பூவினை அலையாகிய கையாற் பறித்து அணிதலாலும், களிப்பை யுடைய மயிலைச் செலுத்திப் பல பூக்களையணிந்த மிருதுவாகிய கூந்தலை யுடைய பூங்கொம்பை யொத்த குறிஞ்சிநிலப் பெண்கள் வெறியாட்டுச் செய்கின்ற களத்தை யடைதலாலும் தன்கட் பொருந்திய சாதிலிங்கச் சேற்றினால் விளங்குகின்ற தன்னுடைய உருவைச் செந்நிறமாகத் தோற்றுவித்தலாலும் குறிஞ்சி நிலத்தில்வந்து பிறத்தலாலும் செந் நிறத்தோடுகூடிய முருகக்கடவுளை யொத்தது.

(வி - ம்) சேற்றின் என்புழி இன்னுருபை முருகக்கடவுளை நோக்க உவமைப் பொருட்டாகவும் நதியை நோக்க ஏதுப்பொருட்டாக வுங் கொள்க. சிலம்பின் செவ்வேள் என்புழி நிலக்கிழமைக்கண் வரும் ஆறுவது விரித்துரைக்க; பாலிநீத்தமென்னும் எழுவாயை முன்வருவன வற்றிற்குங் கொள்க. காந்தட் பூவேய்தலும் மயிலைச் செலுத்தலும் வெறியாட்டிடத்துச் சேர்தலும் செவ்வேளுக்குரிய தொழிலாதலின் அத்தொழில் அந்நதியின் மாட்டு மமைந்திருத்தல் காண்க. செய்தெ னெச்சங்கள் • காரணப் பொருட்டாய் நின்றன. எண்ணும்மைகள் விகாரத்தாற் றொக்கன; மேல்வருவனவற்றிற்குங் கொள்க. இச்செய்

புள் முதல் "கலையொடுவாளம்" (செய்யுள், ௯0) என்பதிறுதியாகவுள்ள செய்யுட்கள் சிலேடையணி. (௧௮)

ஆழ்ந்தநீர்ச் சுனைபுக் காடி யவிர்பளிக் கறையின் வைகி
விழ்ந்தவ ராகந் தோய்ந்து வேங்கைதண் குறிஞ்சி குற்றுத்
தாழ்ந்தபைங் குரல வேனற் றவிர்ந்துபுள் விலங்கு மோப்பி
வாழ்ந்திடுங் கொடிச்சி மார்த மொழுக்கமு மரீஇய தாங்கண்.

(இ - ள்.) அக்குறிஞ்சி நிலத்தின்கண் அவ்வெள்ளமானது ஆழமாகிய நீர்ச்சுனைகளிற் புகுந்தாடுதலாலும் விளங்குகின்ற பளிக்குப் பாறையின்கண் தங்குதலாலும் தன்னுண்மூழ்கிய ஆடவர்களின் சரீரத்தைப் புல்லுதலாலும் வேங்கைப் பூவையும் குளிர்ச்சிபொருந்திய குறிஞ்சிப் பூவையும் பறித்தலாலும் தாழ்வாகிய பசிய கதிர்களையுடைய தினைப்புனத்தின்கட் டங்குதலாலும் அத்தினைக் குரல்களைக் கவரவரும் பறவையையும் விலங்குகளையும் ஓட்டுதலாலும் அக்குறிஞ்சிக்கண் வாழ்கின்ற வேடப் பெண்களின் ஒழுக்கத்தையும் பொருந்தியது.

(வி - ம்.) அவிர்பளிக்கறை - வினைத்தொகை ; அவிர்தல் - ஒளி விசுதல். சுனையாடிப் பளிக்குப் பாறையிற்றங்கி விரும்பிய கணவர் மார்பைத் தோய்ந்து பூக்குற்றுப் புனத்திற்றங்கிப் புள்ளோப்புதல் கொடிச்சியார் செயலாகலின் அச்செயலை நதியுமுடைத்தாதல் காண்க. வீழ்ந்தவர் - கொடிச்சியரை நோக்க விரும்பியவரெனவும் நதியை நோக்கத் தன்னுள் விழுந்தவரெனவும் பொருள் கொள்க; குற்று - பறித்து; தவிர்ந்து - தங்கி; ஏனல், தனக்கிடமாகிய புனத்தை யுணர்த்தலின் ஆகுபெயர். (௧௯)

கோழரை யகிலுஞ் சந்துங் குங்கும வனமுஞ் சாடி
வாழிய குறிஞ்சி புக்கு வளத்தினை வாரி வித்தி
வீழுமென் கிழங்கு கெண்டி விரைத்ததே னழித்து மாந்தி
யூழுறு சிலைக்கை வேட ரொழுக்கமும் விராய தாங்கண்.

(இ - ள்.) அக்குறிஞ்சி நிலத்து அவ்வெள்ளமானது கொழுவிய தூரையுடைய அகின்மரத்தையும் சந்தனமரத்தையும் குங்குமவனத்தையும் அலையாகிய கையால் முறித்தலாலும் குறிச்சியினிடத்துப் புகுந்து, ஆண்டுள்ள வளங்களையும் தினையையும் வாரிச் சிதறுதலாலும் நிலத்தின் கீழ்வீழும் மெல்லிய கிழங்குகளைத் தோண்டியெடுத்தலாலும் வாசனையுடைய தேன்கூடுகளைக் கெடுத்துத் தேனைத் தன்னுட்கொள்ளுதலாலும் முறையாகவுற்ற சிலையோடுகூடிய கையையுடைய குறிஞ்சிநில மாக்களாகிய வேடர்களின் ஒழுக்கத்தையும் பொருந்தியது.

(வி - ம்.) கோழரை - கொழுவிய அடிப்பகுதி; அஃதாவது வழுவழுப்பான அடிமரம். காடுவெட்டலும் தினைவித்தலும் கிழங்கெடுத்தலும் தேனழித்து உணவு கொள்ளுதலும் வேடரொழுக்கமாதலின் அவ்வொழுக்கினை நதியுமுடைத்தாதல் காண்க. வளத்தினை - வளங்களையெனப் பொருள்கொள்ளலுமாம். விரைத்த - மணந்த. மாந்தி - நதியை நோக்கத் தன்னுட் கொண்டெனவும் வேடரை நோக்க உண்டெனவும் பொருள்கொள்க. கெண்டி - தோண்டி; ஊழ் - முறை. (௨௦)

சிலையலங் கணிச்சி வெண்ணெய் தெவ்விவா னிமிர்ந்து வாரி
நிலைபுகுந் துழக்கி யொல்கு நிலனெடுத் திருவி யண்டர்
உலைதர வெறிக்கொண் டெற்றி யுறுகலி முடிவு தோற்றித்
தலைவரு மாயோ னென்னத் தவழ்ந்தது புறவத் தம்மா.

(இ - ள்.) அவ்வெள்ளமானது முல்லைநிலத்தின்கண் வில்லையும் கலப்பையையும் பரசினையும் வெண்ணெயையும் வாரிக்கொள்ளுதலானும் ஆகாயமளவும் நிமிர்தலினாலும் கடலினிடத்துப் புகுந்து கலக்குதலாலும் வருவாய் சுருங்கிய நிலங்களை அலையாகிய கரங்களால் எடுத்து வளத்தின் மேம்படுத்தி நிறுத்தலானும் இடையர்கள் வருந்தும்படி வேகங்கொண்டு மோதுதலானும் மிக்க துன்பமுடிவைத் தோற்றுத லானும் அம் முல்லைநிலத்திற் கதிதெய்வமாய் வரும் மாயோனென்று சொல்லும்படி முல்லைநிலத்திற் சென்றது.

(வி - ம்.) சிலை, அலம், கணிச்சி, வெண்ணெய் ஆகிய நான்கின் குறிப்பால் முறையே இராமாவதாரமும், பலராமாவதாரமும், பரசுராமாவதாரமும் கிருஷ்ணாவதாரமுங் கொள்க. வானிமிர்ந்து என்ற குறிப்பால் வாமனாவதாரமும், வாரிநிலை புகுந்துழக்கியென்ற குறிப்பால் மச்சாவதாரமும் கூர்மாவதாரமும் அண்டர் உலைதர வெறிக் கொண்டெற்றி என்ற குறிப்பால் நரசிங்காவதாரமும் ஆகிய தசாவதாரமுங் கண்டுகொள்க. தெவ்வி - கைக்கொண்டு; தெவ்வுக் கொளற் பொருட்டே யென்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தா னுணர்க.

தெவ்வி யென்பதனை முன்மூன்றிடத்துங் கூட்டுக. வாரிநிலை - நீர் நிலை ஈண்டுக் கடலையுணர்த்திற்று; ஒல்குநிலன் - நிலைபெயர்ந்த பூமி; இருவி - இருத்தி: வினையெச்சம்; அண்டர் நதியை நோக்க இடையரென வும் மாயோனை நோக்கத் தேவரெனவும், வெறி - நதியை நோக்க வேக மாகவெனவும், நரசிங்கத்தை நோக்க இரத்தமுண்ட மயக்கமாகவென வும், கலிமுடிவு நதியை நோக்கத் துன்பமுடிவாகவெனவும், மாயோனை நோக்கக் கலியுக முடிவாகவெனவும் பொருள்கொள்க. தலை - அவ் விடமாகிய முல்லைநிலம்; வாரிபுகுதலை மீனுக்கும் உழக்கலை ஆமைக்குங் கொள்க; வாரியென்பதனை யிரிடத்துங் கூட்டுக. (உக)

முனிதயிர் நறுநெய் பெய்யு மூரியங் கலன்கள் பாடி
புனியெடுத் தியங்கி யாங்காங் குற்றவை மாற்றிப் பொன்னும்
தெனிமணித் திரளு மற்றுஞ் செறித்துராய்க் குளவிச் செந்தேன்
துனிகுழற் பொதுவ மாதர் தொழின்மையும் பயின்ற தாங்கண்.

(இ - ள்.) அம்முல்லை நிலத்தின்கண் அவ்வெள்ளமானது ஆயர் பாடியிலுள்ள கட்டித் தயிரும் நறிய நெய்யும் பெய்துநிறைத்த பெரிய அழகிய கலசங்களை அலையாகிய கரங்களால் எடுத்துச் சேறலானும் ஆங்காங்குப் பொருந்திய பொருள்களைக் களைதலானும் பொன்னையும் தெளிந்த மணித்திரளினையும் ஏனைப் பொருள்களையும் குவித்துலாவுத லானும் காட்டுமல்லிகையின் செவ்விய தேனைத் துளிக்கின்ற கூந்தலை யுடைய ஆய்ச்சியரது தொழிலின்றன்மையையும் பழகியது.

(வி - ம்.) நெய்க் கலசங்களையும் தயிர்க் கலசங்களையும் எடுத்து நகரங்களிற் சென்று பண்டமாற்றுதல் செய்து பொன்மணி முதலிய

வற்றைச் சேர்த்தல் ஆய்ச்சியர் தொழிலாதலின் அத்தொழில் நதியி னிடத்தும் உளவாதலைக் கண்டுகொள்க.

பாடி ஆய்ச்சியரைக் குறிக்கும்போது ஏனைய நகரமெனவும் நதியைக் குறிக்கும்போது ஆயர்பாடியெனவும், உற்றனைமாற்றி - மாதரைக் குறிக்கும்போது உற்றனவாகிய பொருள்களுக்கு விற்று எனவும் நதியைக் குறிக்கும்போது எதிருற்ற பொருள்களை நீக்கியெனவும் பொருள்கொள்க. முளி - கட்டி; இதனை "முளிதயிர் பிசைந்தகாந்தண் மெல்விரல்" (செய்யுள்-௧௬௭) என்னும் குறுந்தொகைச் செய்யுளா னறிக. உராய் - பெயர்ந்து, குளவி-காட்டுமல்லிகை; மலைப்பச்சை யென்பாருமுளர்; தொழின்மை - தொழிலுடைமை; இதனை "மூவினை மையின்" என்னுஞ் சிவஞானபோத வுரையா னுணர்க. (௨௨)

திணிகவைக் கோடும் வேயுந் திரிபுரி நாருந் தாங்கி
மணிநிரை யோம்பி நேரும் வல்விடை தழுவித் தோய்ந்த
வணிநிறை மகளிர் கூந்த லலங்கலங் கொன்றை சூட்டிப்
பிணிதபு மாயர் செய்கை பேணியும் பெயர்வ தாங்கண்.

(இ - ள்.) அம் முல்லைநிலத்தில் வெள்ளமானது திண்ணிய (முள் முதலியவற்றை யெடுக்குங் கருவியாகிய) இருபிளவுள்ள கொம்பையும் மூங்கின்மரங்களையும் சாறடைக் கொடிகளையுந் தாங்கிச் சேறலானும், மணியின் நிரைகளைப் பாதுகாத்தலானும் எதிர்ப்பட்ட வலிய ஏறுகளைத் தழுவுதலானும், தன்னுள் மூழ்கிய அழகிய கற்பினையுடைய ஆய்ச்சியரது கூந்தலின்கண் அழகிய கொன்றைமலரைச் சூட்டுதலாலும் நோய் நீங்கிய ஆயர் செய்கையைப் பொருந்தியுஞ் செல்வது.

(வி - ம்.) கவைக்கொம்பும் புல்லாங்குழலும் கன்றனை கயிறுந் தாங்கி ஆனிரை யோம்பிக் கொல்லேறு தழுவி மாலையணிந்து மகளிரைக் கூடுதல் ஆயர் செய்கையாதலின் அச்செய்கை நதியுமுடைத்தாதல் காண்க.

வேய் நதியைக் குறிக்கும்போது மூங்கிலெனவும் ஆயரைக் குறிக்கும்போது புல்லாங்குழலெனவும், திரிபுரிநார் - நதியைக் குறிக்கும்போது சாறடைக் கொடியெனவும் ஆயரைக் குறிக்கும்போது திரித்த கன்றனை கயிறெனவும், மணிநிரை நதியைக் குறிக்கும்போது இரத்தினக் கூட்டமெனவும் ஆயரைக் குறிக்கும்போது மணிகட்டிய ஆனிரையெனவும், விடைதழுவல் நதியைக் குறிக்கும்போது தன்னுட்பொருந்திய இடபங்களைச் சூழ்ந்தெனவும், ஆயரைக் குறிக்கும்போது மணத்தின்பொருட்டுக் கொல்லேறு தழுவியெனவும், தோய்ந்த நதியைக் குறிக்கும்போது தன்னுள் மூழ்கியவெனவும் ஆயரைக் குறிக்கும்போது சேர்ந்தவெனவும் பொருள்கொள்க. தபும் - நீங்கிய. (௨௩)

பூத்தசெந் தாமரைக்கண் மெய்யெலாம் பொலியத் தோற்றித்
தூத்தகை வயிரம் பற்றித் துலங்குவா ரணமேற் கொண்டு
காத்தலை மருவி நீண்ட கற்சிலை பலவுஞ் சிந்தி
யேத்துவிண் ணரச னென்ன விறுத்தது பழனப் பாங்கர்.

(இ - ள்.) அவ்வெள்ளமானது மருதநிலத்தின்கண் மலர்ந்த செந்தாமரை மலர்த்தேன் வடிவமெங்குஞ் செறியத் தோற்றுதலாலும், பரி

சுத்தம் பொருந்திய அழகோடுகூடிய வயிரமணிகளை (அலையாகிய கரங்களால்) பற்றுதலானும், விளங்குகின்ற சங்கினங்களைத் தன்மேற் கோடலானும், பூஞ்சோலைகளினிடத்துப் பொருந்துதலானும், நீண்ட கல்லணை பலவற்றையும் (அகழ்ந்து) சிதறுதலானும் அந்நிலத்திற்கதி தேவதையாகத் துதிக்கப்படுகின்ற இந்திரனென்று சொல்லும்படி தங்கியது.

(வி - ம்.) செந்தாமரை மலர்போன்ற கண்கள் மெய்யிற் பொலிய வச்சிரப்படையைக் கரத்திற்றாங்கிய யானையின் மீதேறிக் கற்பகக்காவிலிருந்து மலைகளினிறகறுத்தல் இந்திரனுக்குரிய செயலாகலின் அச்செயல் நதியின் மாட்டும் அமைந்திருத்தல் காண்க. செந்தாமரைக்கண் மெய்யெலாம் பொலிய-நதியை நோக்கத் தேனெனவும் இந்திரனை நோக்கக் கண்ணெனவும், வயிரம் நதியை நோக்க வயிரக்கல்லெனவும் இந்திரனை நோக்க வச்சிராயுதமெனவும், வாரண மேற்கொண்டு நதியை நோக்க சங்கினங்களைத் தன்மேற் கொண்டெனவும் இந்திரனை நோக்க வெள்ளை யானையின் மேலிருத்தலைக் கொண்டெனவும், காத்தலை மருவி நதியை நோக்கச் சோலைகடோறும் பொருந்தியெனவும் இந்திரனை நோக்கக் கற்பகச்சோலையின்கட் பொருந்தியெனவும், கற்சிறை நதியை நோக்கக் கல்லணையெனவும் இந்திரனை நோக்க மலையின் சிறகெனவும் பொருள்கொள்க. ஏத்து விண்ணரசு-செயப்படுபொருள் செய்பொருள் போலக் கூறப்பட்டது. (உச)

மருதமர் கிள்ளை யஞ்ச வயின்வயி னியம்பிச் சென்று
முருகமர் வயலிற் பூத்த முண்டகங் குமுதங் கட்டுக்
குருமணிக் காஞ்சிச் சூழற் கொழுநனை மலரப் புல்லித்
திருவியல் கடைசி மார்தஞ் செய்கையுந் தழீஇய தாங்கண்.

(இ - ள்) மருதநிலத்தின்கண் அவ்வெள்ளமானது மருத மரத்தின்கட் டங்கிய கிளிகள் அச்சமடைய இடந்தொறு மொலித்துச் செல்லுதலானும், வாசனைதங்கிய வயலினிடத்துப் பூத்த தாமரை மலர்களையும் அல்லி மலர்களையுங் களைந்தெறிதலானும், நிறத்தோடுகூடிய அழகிய காஞ்சி மரச்சோலையினிடத்துள்ள செழித்த அரும்புகள் மலரும்படி தழுவுதலானும் அழகமைந்த மள்ளப்பெண்களினது செய்கையையும் பொருந்தியது.

கிளிகள் நாணவார்த்தையாடி வயலிற் பூத்த தாமரையுங் குமுதமுமாகிய களைகளைக் களைந்தெறிந்து காஞ்சி நீழற்கண் தங்கணுயகராகிய மள்ளர்கள் மகிழும்படி புல்லுதல் கடைசி மாதர் செய்கை ஆதலின் இச்செய்கை நதியின் மாட்டும் அமைந்திருத்தல் காண்க. இயம்பி - என்பதற்கு நதியைக் குறிக்கும்போது ஒலித்தெனவும் பெண்களைக் குறிக்கும்போது உரையாடியெனவும், கட்டென்பதற்கு நதியைக் குறிக்கும்போது பிடுங்கி யெறிந்தனவும், கடைசி மாதரைக் குறிக்கும்போது களைபறித்தெனவும், கொழுநனை யென்பதற்குச் சோலையைக் குறிக்கும்பொழுது செழித்த அரும்பெனவும் கடைசி மாதரைக் குறிக்கும்பொழுது நாயகரெனவும், புல்லியென்பதற்கு நதியைக் குறிக்கும்பொழுது பொருந்தியெனவும் கடைசி மாதரைக் குறிக்கும்பொழுது தழுவியெனவும் பொருள் கொள்க. முருகு - வாசனை; முண்டகம் -

தாமரை; குரு - நிறம்; சூழல் - இடம்; திருஇயல் கடைசிமார் - அழகமைந்த மள்ளப்பெண்கள். (உரு)

தளைசெறி வயலிற் சென்று தக்கன செய்து பின்னர்
விளைவினைக் கொய்து மோட்டு வியன்களத் தேற வுய்த்து
முளைதகை கருப்பங் காடு முழுவது மெறிந்தங் காட்டித்
திளைமகிழ் களமர் தங்கள் செயற்கையும் படைத்த தாங்கண்.

(இ - ள்.) அவ்வெள்ளமானது மருதநிலத்தின்கண் பந்தித்தல் செறிந்த செய்களினிடத்துச் சென்று மேட்டைப் பள்ளமாக்கலும், பள்ளத்தை மேடாக்கலுமாகிய தகுதியான தொழில்களைச் செய்தலானும் பின்னர் வயலின்கண் விளைந்த நெற்கதிர் முதலிய விளைவுகளை யரிதலானும் அரிந்தவற்றை உயர்ந்த பெரியகளத்தின்கண்ணே ஏறும்படி சேர்த்தலானும் முளைத்தலோடு அழகு பொருந்திய கருப்பஞ்சோலைகள் எல்லாவற்றையும் ஒடித்து அசைத்தலானும், மகிழ்ச்சியில் மூழ்குகின்ற களமர்களின் செய்கையையும் பொருந்தியது.

(வி - ம்.) நன்செயிற் சென்று ஆண்டு செய்யத்தக்க தொழிலைச் செய்து விளைவினை யறுத்துக் களத்திற்கொணர்ந்து கருப்பங்காடுகளை வெட்டி ஆலையிலாட்டுதல் களமர் செயலாகலின் அச்செயலை இந்நதியுமுடைத்தாதல் காண்க. தளை - நான்கு வரம்பு சேர்ந்து வட்டித்தவயல்; வரம்புமாம்; உழவர் தக்கன செய்தல் மேட்டைப் பள்ளமாக்கப் பள்ளத்தை மேடாக்கல், சேடை செய்தல், உழுதல், எருவிடுதல், நீர்பாய்ச்சல்; நதிதக்கன செய்தல், வரம்பை நிறைத்தல், வரம்பை யழித்தல் பள்ளத்தை மேடாக்கல் மேட்டைப் பள்ளமாக்கல்; எறிதல் நதியைக் குறிக்கும்பொழுது முறித்தலெனவும் களமரைக் குறிக்கும்பொழுது வெட்டியெனவும், ஆட்டி யென்பது நதியைக் குறிக்கும்பொழுது அலைத்து என்றும், களமரைக் குறிக்கும்பொழுது ஆலையிலாட்டி எனவும் பொருள் கொள்க, மகிழ்திளை களமர் தங்கள் என மாற்றுக. மகிழ்-முதனிலைத் தொழிற்பெயர் - ஏழாவதன் தொகை. (உச)

மேற்றிசைத் தொடர்பி னோடும் விரிகடற் பயிற்சி காட்டித்
தோற்றெழி லுகச் சூழற் றுன்னுமத் தொடர்புங் காட்டி
யேற்றெதிர் மகர முந்தி யெந்நில வளனும் போற்றி
யாற்றல்சால் வருண னென்ன வணைந்தது கானற் பாங்கர்.

(இ - ள்.) அவ்வெள்ளமானது கடற்கரை யோரத்து மேற்குத் திசைக்கணின்று போந்த தொடர்ச்சியினோடும் விரிந்த கடலின்கண் பெருகுதலைக் காட்டுதலானும், கண்டார்க்கு அழகைத் தோற்றுவிக்கும் புன்னைமரச் சோலைகளிற் பொருந்தும் சம்பந்தத்தையுங் காட்டுதலானும் எதிர்க்கின்ற ஏறுகிய சுறாமீன்களைத் தள்ளுதலானும் ஏனைய நான்கு நிலங்களின் வளங்களையெல்லாம் பாதுகாத்தலானும் அந்நிலத்ததிதெய்வமாகிய வல்லமை மிக்க வருணனென்றுஞ் சொல்லும்படி பொருந்தியது.

(வி - ம்.) மேற்றிசை யுரிமையும் கடற்கிறைமையும் பூண்டு வலைவளர் தப்பின் அந்நிலமாக்கள் புன்னைச் சூழலிற் சுறுமுண் மருப்பை

நாட்டி ஆவாகனஞ் செய்ய ஆண்டுச் சேறலும், சுறவேறுகிய கொடியைச் செலுத்தலும், நிலங்களின் வளத்தைப் பாதுகாத்தலும் வருணற்குரிய செயலாகலின் நதியுமச் செயலுடைத்தாதல் காண்க.

நாகச்சூழல் துன்னுந்தொடர்பு - நதியைக் குறிக்கும்பொழுது புன்னைமரச் சூழலிற் பொருந்துதலெனவும், வருணனைக் குறிக்கும் பொழுது சுறாமுண் மருப்பிற்றுன் சேறல் எனவும்; மகரமுந்தல் நதியைக் குறிக்கும்போது மகரமீனைத் தள்ளலெனவும், வருணனைக் குறிக்கும்பொழுது மகரக்கொடியைச் செலுத்தலெனவும்; எந்நிலவளனும் போற்றல் நதியைக் குறிக்கும்பொழுது நான்கு நிலத்தினுஞ் சென்று வளத்தினையுளவாக்கலெனவும், வருணனைக் குறிக்கும்பொழுது ஏனைய நிலத்தினை மழைபெய்வித்துப் பாதுகாத்தலெனவும் பொருள்கொள்க.

கானற்பாங்கர் - கடற்கரையோரம்; எதிர் ஏற்று மகரமெனமாறுக; ஏற்றுமகரம் அல்வழிக்கண் றகரமிரட்டியது; 'இடுகாட்டேேனற்றைப்பனை' என்புழிப்போலக் கொள்க. (நாலடி) (உஎ)

முண்டக நீல ஞாழல் முருகெழ முடியிற் சூடி
மண்டிய விலைக்கைக் கொண்டு வளைமுதல் வேட்டோர்க் குய்த்து
மிண்டிமீன் கவர்புள் ளோப்பி வெய்துமிக் கிரக்கங் காட்டித்
தொண்டைவாய்ப் பரத்தி மார்தந் தொழின்மையும் பெற்ற தாங்கண்.

(இ - ள்.) அந் நெய்தனிலத்தின்கண் அவ்வெள்ளமானது தன் றலையில் தாமைப்பூவினையும், நீலப் போதினையும் ஞாழற்போதினையும், வாசனை யெழாநிற்க முடியிற் சூடுதலானும், செறிந்த இலைகளை (அலையாகிய) கையாற் பறித்துக்கொள்ளுதலினாலும், சங்கின முதலியவற்றை விரும்பிக் கொள்வார்க்குச் சிதறுதலானும் நெருங்கிய மீனைக் கவர்கின்ற புட்களை ஓடச் செய்தலானும் கொவ்வைப் பழம்போன்ற அதரத்தினையுடைய பரத்திமார்தன் றொழிலின் றன்மையையும் பெற்றது.

(வி - ம்.) மலர் முதலியவற்றைச் சூடி விலைப்பொருளுக்குச் சங்கு முதலியவற்றை மாற்றிப் புள்ளோப்பி நாயகர் பிரிந்தமைக்கு இரங்கல் பரத்திமார் தொழிலாகலின் அத்தொழிலை நதியுமுடைத்தாதல் காண்க.

மண்டிய விலையென்பதற்கு நதியைக் குறிக்கும்பொழுது செறிந்த இலையெனவும், மாதரைக் குறிக்கும்பொழுது விலைப்பொருளெனவும்; இரக்கங் காட்டியென்பதற்கு நதியைக் குறிக்கும்பொழுது ஒலியுண்டாக்கியெனவும், மாதரைக் குறிக்கும்பொழுது அந்நிலத்தின் உரிப்பொருளாகிய இரங்கல் எனவும் பொருள்கொள்க. ஞாழல் நெய்தநிலக் கருப்பொருளாகிய ஒருவகை மரம். 'ஐயவி யன்ன சிறுவீ ஞாழல்' என்றார் குறுந்தொகையிலும். (உஅ)

கடுங்களி யுப்பு மெத்திக் கழிபல வுழக்கி நீந்தி
நெடுங்கடல் குளித்துக் கீழ்நீர் நித்திலந் துவர்மே லாக்கிப்
படுங்கலன் பலவுந் தள்ளிப் பரத்தியர் தோயப் புல்லிக்
கொடுங்கோலைப் பரவ மாக்கள் கொள்கையுங் கெழீஇய தாங்கண்.

(இ - ள்.) அந் நெய்தனிலத்து அவ்வெள்ளமானது கடிய களிமண்ணோடு கலந்த உப்பை மிகச் செய்தலானும் பல உப்பங்கழிகளைக்

கலக்குதலானும், அவ் வுப்பங்கழியை நீத்து நெடிய கடலின்கட் குளித்தலானும், (தான் செல்லும் விரைவால்) நீர்க்கீழுள்ள முத்தங்களையும் பவளங்களையும் மேலே கொணர்தலானும், கடலிலுளவாகிய மரக்கலங்கள் பலவற்றையும் அலையாகிய கையாற் றள்ளுதலானும், தன்னுள் மூழ்கிய பரத்திமார் தழுவப்பொருந்துதலானும், கொடிய கொலைத்தொழிலையுடைய பரதவரது கொள்கையையும் பொருந்தியது.

(வி - ம்.) உப்பை விளைவித்து உப்பங்கழியைக் கலக்கி நீந்தி விளையாடிக் கடலில் மூழ்கி முத்தினையும் பவளத்தினையுங் குளித்து மேலே கொணர்ந்து மரக்கலங்களை யியக்கிப் பரத்தியரைப் புல்லல் பரதவர்க் கியல்பாகலின் இந்நதியு மச்செயலை யுடைத்தாதல் காண்க.

களியுப்பு - களிமண்ணோடு கூடிய வுப்பு; மெத்தி - நிறைத்து; கீழ்நீர் - நீர்க்கீழ் என மாற்றுக. படுகலன் பலவுந் தள்ளியென்பதற்கு-நதியைக் குறிக்கும்பொழுது கடலிலுண்டாகிய மரக்கலங்களைத் தள்ளியெனவும் பரதவரைக் குறிக்கும்போது பொருந்திய ஆபரணங்களை நீக்கியெனவும், பரத்தியர் தோயப் புல்லி யென்பதற்கு நதியைக் குறிக்கும்பொழுது பரத்திமார் தன்னுள் மூழ்க அவரைப் பொருந்தியெனவும், பரதவரைக் குறிக்கும்பொழுது அவர் தழுவப் பொருந்தியெனவும் பொருள் கொள்க. (உ௯)

கலையொடு வாளம் பற்றிக் கன்னியாய்க் குரவம் போது
தலைமலைந் தெயிற்றி மாராய்த் தனுவொடா றலைத்து மாந்தர்க்
குலைவுசெ யெயின ராயு முருப்பவிர் முரம்பு தோறும்
அலைதிரைப் பாலி நீத்த மமிழ்தென வொழுகிற் றம்மா.

(இ - ள்.) கலைமானையும் வாளாயுதத்தையும் இழுத்துச் சேறலால் துர்க்கையாகியும், குராமலர்களைத் தன்னிடத்தணிந்து செல்லுதலால் அந்நிலப் பெண்களாகிய எயிற்றிமாராகியும், விற்களோடு வழியிலுள்ள பொருள்களையும் பறித்துச் சேறலான் மக்களுக்கு வருத்தஞ் செய்கின்ற வேடராகியும், வெப்பமிகுகின்ற பாலையிடந்தோறும் கரையை யலைக்கும் திரையையுடைய பாலிநதியானது அமிர்தமென்று சொல்லும்படி பெருகிய தென்க.

(வி - ம்.) தனு நதியைக் குறிக்கும்போது வில்லெனவும் வேடரைக் குறிக்கும்போது ஆற்றெதிர்ப்பட்டாரது உடலெனவும்; ஆறலைத்தல் நதியைக் குறிக்கும்போது வழிகளைக் கெடுத்தலெனவும் வேடரைக் குறிக்கும்போது வழிச்செல்வோர் பொருள்களை அபகரித்தலெனவும் பொருள் கொள்க.

முரம்பு - கல் விராய நிலம்; அஃதாகுபெயராய்ப் பாலைநிலத்தை யுணர்த்திற்று. வாளம் - அம் சாரியை. (௩௰)

முழங்கு சேய்நதி நந்தினி முகலியே யாதிப்
பழங்கண் டீர்நதி பலவுமிப் பாலியி னோடுந்
தழங்கு நீர்கொடு தலையளி புரியுநா னிலத்து
வழங்கு மைந்திணை வளஞ்சிறி துரைத்திடப் படுமால்.

(இ - ள்.) தன் பெருமையைப் பல தேசத்தாருங் கூறுகின்ற சேயாறு நந்தினி முகலி முதலிய (தம்மிடத்து மூழ்கினவர்களின்) பிறவித் துன்பத்தை நீக்குகின்ற பல நதிகளும் பாலியாற்றினோடு ஒலிக்கின்ற நீரால் தலையளி செய்யப்படும் முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலென்னும் நால்வகை நிலத்தின்கண் பயில்கின்ற ஐந்திணையின் வளஞ் சிறிது சொல்லப்படும்.

(வி - ம்.) முழங்குதல் - தன் பெருமையைப் பல தேசத்தாரு மிகக் கூறுதல்; நந்தி நந்தினியென்பது முதல் குறைந்து நந்தினியென நின்றது; சேய்நதி - சேயாறு; இவையிரண்டையுங் காஞ்சிப்புராணத்தி லறிக; பழங்கண் - துன்பம்; 'முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து நல்லியல் பழிந்து நடுங்குதுய ருறுத்துப் பாலை யென்பதோர் படிவங் கொள்ளும்'' என்றாராகலின் நானிலத்து வழங்கு மைந்திணை யென்றார். நீரைக் கொடு யாறுகள் பலவும் இப்பாலி யாற்றோடு கூடித் தலையளி செய்யும் நானிலமெனக் கூட்டுக. தீர்க்கும் நதி : விகாரம். நானிலத்து வழங்கும் ஐந்திணை வளஞ்சிறிதுரைப்பாமென்ற குறிப்பால் திணைமயக்கங் கூறுதலும் பெற்றாம். (கக)

## குறிஞ்சி

மருந்துண் விண்ணர மடந்தையர்க் கரியதன் மார்பந்
திருந்து தங்குலத் தவட்கருள் சிறப்பினுன் மகிழ்ந்து
விருந்து நித்தலுஞ் செய்வபோல் வேற்பவே லிறைக்குப்
பொருந்து பூசனை விழாத்தினை மெடுப்பது பொருப்பு.

(இ - ள்.) தேவாமிர்தத்தை யுணவாக உண்ணுகின்ற தேவலோகத்தின்கணுள்ள அரமடந்தையர்க்குத் தழுவுதற் கரியதாகிய தனது திருமார்பத்தை (உலகிலுள்ளவர்கள் தரிசித்து உள்ளம்) திருந்துதற்கேதுவாகிய தங்குலத் துதித்தவளாகிய வள்ளிநாயகிக்கு அருளிச்செய்த சிறப்பினால் மகிழ்ச்சியுற்று அந்நிலத் தலைவராகிய வேற்படையை யுடைய முருகக் கடவுளுக்கு விருந்தினை நாடோறுஞ் செய்வனபோல் பூசனையும் விழாவும் குறிஞ்சி நிலத்துள்ள கானவரால் நாடோறு மெடுக்கப்படுவது பொருப்பு.

(வி - ம்) பூசனை விழா : உம்மை தொக்கது. மருந்து - அமிர்தம். விண் : ஆகுபெயர். மகளிர்க்கு மென்னு முயர்வுசிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. இது தற்குறிப் பேற்றவணி. (கஉ)

வணங்கு மாருயிர்க் குகைதோறும் வதிதலாற் குகனென்
றிணங்கு வான்பெயர்க் கியையுமா றிருப்பது போலாற்
றிணங்கோள் வேற்படை தின்மல னிரையாவரிக் குகையின்
கணங்கோண் டோங்கிய மலைக்கெலாங் கடவுளாய்க் கலத்தல்.

(இ - ள்.) பகைவருடலிற் புகுதலால் மாமிசத்தைத் தன்னிடத்தே கொண்ட வேற்படையையுடைய மலமில்லாதவராகிய குமரநாயகர் வரிசையாக மணிகள் தங்கப்பெற்ற குகைகளின் கூட்டத்தைத் தன்னிடத்தே கொண்டுயர்ந்த மலைக்கெல்லாங் கடவுளாகப் பொருந்தி

யிருத்தல் தம்மை வழிபடுகின்ற அரிய உயிர்களாகிய குகைகள்தோறும் (எள்ளிலெண்ணெயைப்போற் கலந்து நீக்கமின்றி நிற்றலான்) குக னென்று சொல்லப்படும் காரணப் பெயர்க்குப் பொருந்துமாறிருப்பது போலாம்.

(வி - ம்.) கலத்தல் – சேர்ந்திருத்தல். உயிர்க்குகை - பண்புத் தொகை; வணங்குமா ருயிர்க்குகை தொறும் - தம்மை வழிபடுமரிய உயிர்களின் இதயக் குகைதோறும் என்றலுமொன்று; "தகரமாங் குகை யுட் டியானஞ்செய் திருமுறை" என்பதும் நோக்குக. (கஉ)

நொடித்த ரிதென நுனித்தறிந் திருந்தினை விளைப்பார்
துடித்த லைப்படர் சந்தனக் குங்குமத் தொகுதி
வடித்த நவ்வியா லெறிந்தெரி மடுக்குமொண் புகையுந்
தடித்து மேகமுந் தவழ்வன வேற்றுமை காட்டா.

(இ - ள்.) பெரிய தினையை விளைவிப்பவராகிய குறிஞ்சிநில மாக்கள் (ஓரறிவுமுத லாறறிவீறாயுள்ள உயிர்களை) அழித்தல் தீதென்று கூர்த்துச் சென்றறிந்து வைத்தும் அசைதலைத் தன்னிடத்துப் பொருந் திய சந்தனமுங் குங்குமமுமாகிய மரத்தின் கூட்டங்களைக் கூர்மைசெய்த கோடரியால் வெட்டி எரியிலிடுதற்கணுளவாகிய புகையும் மின்வலை யுடைய மேகங்களும் வேற்றுமை காட்டாதனவாய்ச் செல்வனவாம்.

(வி - ம்.) நொடித்தல் - அழித்தல்; இதனை 'நொடித்தான் மலை யுத்தமனே' என்னுந் தேவாரத் திருவாக்கானறிக. அறிந்து மென்னு மும்மை விகாரத்தாற்றொக்கது. அறிந்தும் விளைப்பார் எறிந்து மடுக் கும் புகையெனக் கூட்டுக. வடித்தல் - கூராக்கல்; துடித்தல் - அசை தல்; இனி துடிதக்கோல மரமெனவும் தலைப்படர் சந்தனமென்பதற்கு அவ்விடத்துப் படர்கின்ற சந்தனமெனப் பொருள் கூறுவாருமுளர். ( )

சுள்ளி வேலிய குறிச்சியர் சுரைபடு மிரும்பின்
வள்ளி கெண்டிய குழிகளின் மாலைவெள் ளருவி
யள்ளி யுய்த்தவெள் வயிரமு மாரமு நிதியின்
பள்ளி போன்மெனப் பசும்பொனொ டிமைப்பன பலவும்.

(இ - ள்.) மராமரமாகிய வேலியையுடைய குறிச்சியின்கண் ணுள்ள இறவுளர்கள் துவாரம் பொருந்திய இரும்பாலாகிய கருவியான் வள்ளிக்கிழங்கை யெடுக்கத் தோண்டிய பள்ளங்களின்மாட்டு (அக் குறிச்சிக்கணின்று) மாலையைப்போல வொழுகுகின்ற வெள்ளிய அருவி நீரானது அள்ளிவீசிய வச்சிரங்களும் முத்தங்களும் பலவாகிய மற்றை இரத்தின வருக்கங்களும் பசிய பொற்கட்டிகளோடு பொருட் குவியலைச் சேமித்து வைத்திருக்குமிடமென்று சொல்லும் வண்ணம் ஒளி வீசின.

(வி - ம்.) சுள்ளி - மராமரம்; இனிச் சிறுகொம்பென்பாருமுளர்; சுரை - துவாரம்; இரும்பு : ஆகுபெயர்; கெண்டிய-தோண்டிய; "செக் கர் ஞெண்டின் குண்டளை கெண்டி" என்பதனா லறிக. வள்ளி : ஆகு பெயர். போன்ம் : மகரக்குறுக்கம்; பள்ளி - இடம். ஆரமும் வயிர மும் ஏனைய பலவும் பொன்னொடு இமைப்பனவெனக் கூட்டுக.

"வள்ளி வாரிய குழியின் வளர்பொன்னும் வயிரமு மிமைக்குஞ்
கள்ளி வேலியி னீங்கித் துறக்கம்புக் கிடுமெனச் சூழ்ந்து
வெள்ளி வெண்டிரள் விசித்து நிலத்தொடு தறிபுடைத் தவைபோற்
றுள்ளி வீழுய ரருவி வனகிரி தோன்றிய தவணே"

என்ற சிந்தாமணி கனகமாலையாரிலம்பகம் ஒன்பதாஞ் செய்யுளின் கருத்தும் ஒத்திருத்தல் காண்க. (௯௫)

கொடிச்சி மார்விழிக் கூர்ங்கணை குளிப்பகா னவர்தோள்
வடித்த வாங்கவர் வார்கணை குளிப்பமால் வேழந்
தடித்த வேழத்தின் கோடுகள் குளிப்பபூந் தருக்கள்
கடித்த பூந்தருக் கோடுகள் குளிப்பவான் கங்கை.

(இ - ள்.) குன்றத்தியர் விழிகளாகிய கூரிய அம்புகள் குன்றவாணர்கள் தோள்களின்கண் மூழ்குவன; அக்குன்றவாணர்களுடைய கூரிய நீண்ட வம்புகள் மதமயக்கத்தையுடைய யானையின்மேன் மூழ்குவன: பருத்த யானைகளின் கொம்புகள் பூக்களையுடைய மரங்களைக் குத்திக் குழிசெய்வன; வாசனையையுடைய மலர்களையுடைய மரங்களின் கிளைகள் ஆகாய கங்கையின்கட் டோய்வனவாம்.

(வி - ம்.) தடித்த - பருத்த; கடித்த வாசனையையுடைய; கடி - வாசனை; ஆங்கு - அசை; இஃதொற்றை மணிமாலை யணி. (௯௬)

விழிக்கு டைந்தமான் செவிகண்மெல் லியனல்லார் தடிந்தவ்
வுழிக்க ஞற்றியாங் குயர்பணை கண்பொதி பாளை
கழிக்கு மற்றவை மறையவெண் கதிர்மணி யுகுக்குங்
கொழிக்கு நித்தில மறையமேற் கொட்டும்வண் டேரை.

(இ - ள்.) (குறிஞ்சி நிலத்தின்கணுள்ள) மெல்லிய இலக்கணமமைந்த பெண்கள் தங்கள் விழிக்குத் தோற்ற மான் கூட்டங்களின் செவிகளைக் குறைத்து அவ்விடத்தே நிறைத்தாற்போல உயர்ந்த மூங்கில்களானவை தம் கணுக்களைமூடிய மடல்களை நீக்கும்; அம்மடல்கள் மறையும் வண்ணம் வெள்ளிய ஒளியுடைய முத்தங்களைச் சொரியும், அங்ஙனஞ் சொரிந்த முத்தங்கள் மறையும் பொருட்டு அவைகளின்மீது அரிசியைக் கொட்டும்.

(வி - ம்.) தடிதல் - குறைத்தல். 'தடிந்தெழிலி' என்றதும் இப் பொருட்டாதல் காண்க. கஞற்றல் - நிறைத்தல்; கண் - வரை, கணு; தோரை - மூங்கிலரிசி; பணை கழிக்கும் உகுக்கும் கொட்டுமென வினை முடிவு செய்க; மூங்கிலின்பாளை மான் செவிபோலக் கழன்று விழுமென் பதனை "நுண்பொறி மான் செவிபோல வெதிர்முளை கண்பொதி பாளை கழன்றுகும் பண்பிற்றே" என்னும் ௪௩ கலியானுணர்க. (௯௭)

மழைத்த கார்முகி லகடுகீண் டெழுந்துவா னேங்குந்
தழைத்த வேய்நுதிக் களிமயி லகவுவ சமர்க்கட்
குழைத்த மாமரங் கீழ்ந்தவன் கோயின்முன் மணியின்
இழைத்த கேதனத் திளமயி லகவலோ டியையும்.

(இ - ள்.) களிப்பினையுடைய மயில்களானவை ஈரித்த கரிய மேகத்தின் நடுவிடத்தைக் கிழித்தெழுந்து ஆகாயம்வரை யுயர்ந்த செழித்த மூங்கின் மரங்களின் நுதியினிடத்திருந்தாடுவன போரின்கட் டழைத்த (சூரபன்மாவாகிய) மாமரத்தைப் பிளந்தவனாகிய குமர நாயகனது திருக்கோயிலின் முன்னர் மணிகளழுத்திச் செய்யப்பெற்ற கொடிமரத்தில் இளமயிலாடுவதோடு ஒத்துத்தோன்றும்.

(வி - ம்.) மழை - குளிர்ச்சி: அகடு - நடுவிடம்; குழைத்த: தழைத்த; கேதனம் - கொடி: இஃதாகு பெயர்; இயையும் - ஒக்கும்; அகவல் - ஆடல்: 'அகவ லாடலொலிப் பேர்' என்னும் நிகண்டானறிக. சூரன் மாமரமானது வெளிப்படை. (௧அ)

இளகு காழகிற் சந்தனப் பொதும்பரேவ் விடனும்
வளகு மேய்ந்துசே வகங்கொளு மான்மத மொழுக்குங்
குளகு தேரிய வருடைமான் குப்புறு மடுக்கத்
தளகி னேடுபாட் டிரட்டுமா லளைதொறுங் குரால்கள்.

(இ - ள்.) யானைகள் தளிர்த்த வயிரத்தோடு கூடிய அகின்மரங் களும் சந்தனமரங்களுஞ் செறிந்த சோலைகளினிடமெங்கும் வளகென் னும் புதலையருந்தி மதத்தை யொழுக்காநிற்கும், இலையுணவைத் தேர வரையாடுகள் தாவுகின்ற அரைமலையின்கணுள்ள குகைகடோறும் கோட்டான்கள் தம் பெட்டைகளோடும் பாட்டினைப் பாடாநிற்கும்.

(வி - ம்.) இளகு - தளிர்த்த: காழ் - வயிரம்; காரகிலெனவும் பாடம்; வளகு - வளகென்னும்புதல்; இதனை 'புணர்நிலை வளாகின் குள கமர்ந்துண்ட' என்னும் ௬௨ கலிப்பாட்டானு முரையானு முணர்க.

சேவகங் கொளுமான் - யானை; சேவகம் - யானை துயிலுமிடம்; குளகு - இலையுணவு; 'இலை நுகர் விலங்குணவே குளகென வியம்பலா கும்' என்று நிகண்டானறிக; தேரிய - தேர் செய்யிய என்னும் வாய் பாட்டு வினையெச்சம்; வருடைமான் - வரையாடு; "வருடைமான் குழவிய வளமலைநாட" என்னுங் கலியானுணர்க. குப்புறல் - தாவல்; அடுக்கம் - அரைமலை: "நடுக்கின்றி நிலியரோவத்தை யடுக்கத்து" என் னும் புறநானூற்றடி யுரையா னுணர்க. அளகு - கூகைப்பெடை; "அயர்வுறுகோழி கூகையல்லாப் பெண்ணள கென்றோதார்" என்னும் நிகண்டானும், "கோழி கூகையா யிரண்டல்லவை யாயுங்காலை யள கென லமையா" என்னுந் தொல்காப்பிய மரபியற் சூத்திரத்தா னு முணர்க. அளை - குகை; குரால் - கோட்டான்; ஆல் : அசை. (௧௯)

வணங்கு நுண்ணிடை மாதரார் வனமுலைக் கோட்டோ
டணங்கு போர்செய வளைந்தன போலடற் கரிக்கோ
டிணங்கு வேலிசூழ் குறிச்சியெங் கணுமினி தெழுந்த
கணங்கொள் வள்ளைகேட் டுறங்குவ களிப்பொழிற் கிள்ளை.

(இ - ள்.) துவளுகின்ற நுண்ணிய இடையினையுடைய வேடப் பெண்களின் அழகுபொருந்திய முலையாகிய கோடுகளோடு வருத்தத் தைத் தரத்தக்க போரினைச் செய்ய வளைந்தாற்போல கொலை குறித்தலை யுடைய யானைக் கொம்புகள் பொருந்திய வேலியாகச் சூழ்ந்த அச்

சிற்றாரினிடமெங்கும் இனிதாகவெழுந்த கூட்டங்கொண்ட உலக்கைப் பாட்டினைக் கேட்டுக் கனிகள் பொருந்திய சோலையினிடத்துள்ள கிளிகள் உறங்குவன.

(வி - ம்.) கரிக்கோடு வளைந்தனபோல விளங்கும் வேலியென வியைக்க. வள்ளைப்பாட்டு - தலைவியுந் தோழியும் யானைக்கொம்பா லாகிய உலக்கையால் நெற் குற்றும்போது தலைவனைப் புகழ்ந்து பாடும் பாட்டு இதனைக் கலி. ௪௧-ஆவது செய்யுளுரையா னுணர்க. கிளி குறிஞ்சிநிலக் கருப்பொருள். (௫௦)

உடுக்க வொள்ளிணர்த் தழைபல கொய்தூழ் தினைகள்
மடுக்கும் புள்ளெறி கவண்கலான் வார்பனை பொதிர்த்தும்
இடுக்க ணேபுரி மாதரை யிற்செறிப் பாமென்
றடுக்கல் வேங்கைக ளெரியகைத் தெனவல ரூழ்க்கும்.

(இ - ள்.) அரைமலையின்கணுள்ள வேங்கைமரங்கள் உடையாக உடுக்கும் பொருட்டு, நிறம் பொருந்திய பூங்கொத்துக்களையுடைய பல இலைகளைப் பறித்தும் பதனழிந்த தினைகளை வாய்நிறைத்துண்ணும் பறவைகளை யெறிகின்ற கவணென்னுங் கருவியின்கணுள்ள கல்லால் நீண்ட கிளைகளைத் துளைத்தும் எஞ்ஞான்றுந் தமக்கு இன்னலைச் செய்கின்ற இவ் வேட்டுவப் பெண்களைப் புறத்தே செல்லாமல் இல்லின்கட் செறிப்போமென்று நெருப்பினை யறுத்துவிட்டதென்று சொல்லும்படி மலரை யுதிர்க்கும்.

(வி - ம்.) புனத்தின்கண் வெட்டாது நிற்கும் வேங்கைமரங்கள் பூத்தவுடன் தினையறுத்தல் மரபு; தினைகொய்த பின்னர்த் தலைவியை இல்லின்கட் சேர்த்தல் முறைமையாம்; இதனை வேங்கைகள் செய்ததாகக் குறித்தலின் தற்குறிப்பேற்றம்.

ஊழ்தினை - பதனழிந்த தினை; பதனழிதல் - ஈண்டுத் தினைமுதிர்தல்; மடுத்தல் - வாய்நிறைத்தல், ஈண்டுக் கவர்தல்; பனை - கிளை; இற்செறித்தல் - மனையின்கட் சேர்த்தல்; பொதிர்த்தல் - துளைத்தல்; அகைத்தல் - அறுத்தல்;—'அகைத்தல் வெதனை யொடித்த லறுத்திடலுயர்த்தலாமே' என்னும் நிகண்டா னறிக: ஊழ்க்கும் - உதிர்க்கும்; இற்செறிப்பா மென்றலரூழ்க்குங் கருத்தினை 'நங்குலத் தருவாழ்க்கையைக் கெடுத்து' என்னுங் காஞ்சிப்புராணச் செய்யுளா னறிக. (௫௧)

உருமி னார்த்துடன் றெதிரேறு முழுவையோ டும்பல்
பொருத முற்றொழில் கனவலிற் பொருக்கென வெழுந்தங்
கருகு நின்றவொள் வீயிணர் வேங்கையை யலைக்கும்
மருவு வெஞ்சின மூண்டுழி வகுத்தறி யார்போல்.

(இ - ள்.) யானைகளானவை இடிபோல முழங்கிக் கோபித்து எதிர்த்த வலிய புலியுடனே கனவிற்செய்த போர்த்தொழில் வாசனாரூபமாய் மனத்தினிடத்துத் தங்கிக் கிடத்தலான் அதனைக் கனவின் காண்டலால் கடுக விழித்தெழுந்து அவ்விடத்துத் தன் பக்கலினின்று ஒள்ளிய பூங்கொத்துக்களையுடைய வேங்கைமரத்தை மிக்க கொடிய

கோபம் பொருந்திய காலத்துச் செய்வதின்னது தவிர்வதின்னதெனப் பாகுபாடு செய்துணராது நினைத்ததைச் செய்து முடிப்பார்போல அலைத்தலைச் செய்யும்.

(வி - ம்) உருபின் ஐந்தாவது ஒப்புப்பொருட்டு; கனவல் - கனுக் காண்டல்; கனவு பின்வருதலால் பொருதமுற்றெழில் நனவை யுணர்த் திற்று; வீ - பூ;

> கொடுவரி தாக்கி வென்ற வருத்தமொடு
> நெடுவரை மருங்கிற் றுஞ்சும் யானை
> நனவிற் றான்செய்தது மனத்த தாகலிற்
> கனவிற் கண்டு கதுமென வெரீஇப்
> புதுவ தாக மலர்ந்த வேங்கையை
> யதுவென வுணர்ந்தத னணிநல முருக்கிப்
> பேணு முன்பிற்றன் சினந் தணிந்து."

என்னுங் கலி. ௬௧-ஆம் செய்யுளும் ஈண்டு நோக்கத்தக்கது; இது மயக்கவணி. (௬௨)

**வாய்வ தாகிய பொருளினை வல்விரைந் தன்றே**
**வாய்வ தாகில ராக்குவான் புகுந்தழிப் பார்போற்**
**காய்வ தாகிய திறத்தினாற் கதழ்ந்துதா யிடத்து**
**வீழ்வ தாக்கியுண் ணுதுபோ துவவின வேங்கை.**

(இ - ள்.) இளமை பொருந்திய வேங்கைக் குட்டிகள் ஐயோ ஊழான் இயல்பின் வந்துபொருந்துவதாகிய பொருளினை ஆக்கும் பொருட்டு முனைந்து ஆக்கக்கேடு முதலியவற்றிற்குரிய உபாயங்களான் ஆராய வேண்டுவதனை ஆராயாதவராகி மிக விரைந்து கெடுப்பவர் களைப்போலக் கொல்வதாகிய திறமொன்றனையே கருதியதனால் வேகங் கொண்டு பாய்ந்து இடப்பக்கத்து உயிர்நீத்து வீழும் வண்ணஞ்செய்து அதனை யுண்ணாது செல்வன.

(வி - ம்.) வாய்வதாகிய பொருள் - ஊழாற்றமக் கியல்பாக வந்த மையும் பொருள்; கதழ்ந்து - விரைந்து; தாய் - தாவி;—செய்தென் வாய்பாட்டு வினையெச்சம்; வேங்கைகள் ஒளிந்திருந்து பாய்ந்துகொன்று வீசிய மிருகம் இடப்பக்கத்து வீழின் உண்ணாது செல்லுமென்பதனை அகநானூற்றானும், "கடமா தொலைச்சிய, கானுறை வேங்கை யிடம் வீழ்ந்த துண்ணா திறக்கும்" என்னும் நாலடிச் செய்யுளானு முணர்க. அன்றே - இரக்கக் குறிப்பு. (௬௩)

**குருவி யோப்புதங் கவண்கலாற் குலைந்திரு வினத்தோ**
**டுருவ வாசினி யுக்கன வசும்பின நிலத்து**
**மரும லர்ப்பதம் வழுக்கிவீழ்ந் தினைவர்மா னனையார்**
**ஒருபொ ருட்கிடர் செயினவை மறுகணத் துருகொல்.**

(இ - ள்.) (கண்டார் காதல் கோடற்குக் காரணமாகிய) மான் போலு நோக்கத்தினையுடைய அக் குறிஞ்சிநிலப் பெண்கள் (புனத்தின் கண் தினைக்குரலைக் கவர்கின்ற) குருவிகளை யோட்டுகின்ற தங்கள்

கவணில் வைத்து வீசுகின்ற கற்களால் அழகிய பலாப்பழங்கள் தேன் கூட்டினோடு சிதைந்து வழிந்துகிடக்கும் வழுக்கு நிலத்திடத்து வாசனை பொருந்திய தாமரை மலர்போன்ற பாதங்கள் வழுக்குதலுறுதலால் விழுந்து வருந்துவார்கள். ஒருவன் ஒருபொருளினுக்குத் தீங்குகளை யிழைப்பானாயின் அத்தீங்குகள் செய்த அவனுக்குப் பிற்கணத்தின்கண் வந்து சேராவோ? சேரும்.

(வி - ம்.) ஒப்புதல் - ஓட்டுதல்; குலைந்திரூல் - பெயரெச்சத் திறு தொக்கது; 'புகழ்புரிந் தில்லிலோர்க்கில்லை' யென்றாற்போல; உருவ ஆசினி - அழகினையுடைய பலாப்பழம்; ஆசினி - ஆகுபெயர்; உருவம் - அழகு; 'உருவ வொண்கொடி யூழினுடங்குவ' என்னும் சிந்தா. நாமகள் கஎ-ஆம் பகுதியினுரையா னறிக; அசும்பு - சிறுதிவலை; 'அசும்பறுத தெற்றிய சேயுயர் மதில்வகை செப்புகின்றதே' என்னுஞ் சிந்தாமணி நாமகளிலம்பகம் (எ0) செய்யுளுரையானறிக. நான்காமடியின் கருத்தை ''பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா பிற்பகற் றாமே வரும்'' என்னுங் குறளா னறிக. உக்கனவாகி யசும்பின நிலமென முடிவு செய்க. இது வேற்றுப் பொருள்வைப்பணி. (௪௪)

ஆழ்ந்த நீரல காதிக ளளித்திடப் படுவ
வாய்ந்த மாமணி யாதிய வயின்றொறு மிறைவ
தாழ்ந்த வாயினு மரியவே லுயர்ந்தவாய்த் தகையும்
வீழ்ந்த வாயினு மெளியவேற் றாழ்ந்தவாய் விடுமே.

(இ - ள்.) ஆழமாகிய கடலின்கட் பிறந்த பலகறை சங்குமணி முதலியவைகள் அந்நில மக்களாற் சேமித்துப் பாதுகாக்கப்படுவன வாம்; அந்நிலத்திற் பொருந்திய பெரிய வயிர முதலியனவாகிய இரத்தி னங்களிடங்கடோறும் சிந்திக்கிடப்பனவாம். இழிந்தனவாகிய பொருள் களாயினும் கிடைத்தற்கு அரியனவாயின் உயர்ந்தனவாகிப் பெருமை யுறும். யாவராலும் விரும்பப்படுவனவாகிய பொருள்கள் எளிதிற் கிடைப்பனவாயின் இழிந்தனவாகி விடும்.

(வி - ம்,) அளித்திடப்படுவ - காக்கப்படுவன; தகையும் - பெரு மையுறும்; 'தகையென்ப தழகுபண்பு தயையொடு பெருமை நாற்பேர்' என்னும் நிகண்டானறிக; வீழ்ந்த - விரும்பிய; இறைவ - சிதறுவ; தங்குவன வெனினுமாம்; இதுவும் மேலையணி. (௪௫)

கொழுவி டைக்கறை விராவிய பலிக்குறை நிரப்பி
வழுவில் பல்பிரப் பிரீஇவெறி யாட்டயர் மன்றத்
தொழுகு பல்லிய வோதையு முரவுவெள் ளருவி
இழுமெ னோதையு மெழுகட லிமியினு மவியா.

(இ - ள்.) கொழுவிய கிடாயினது இரத்தங் கலந்த முருகர்க்கு இன்றியமையாத வெள்ளரிசியை நிறையச்செய்து, குற்றமில்லாத பெருண்டியையும் படைத்துக் குறமகளிர் முருகனை ஆற்றுப்படுத்தற்கு வெறியாட்டைச் செய்கின்ற ஊர்க்கு நடுவேயுள்ள மரத்தடியின்கண் வரிசையா யெழுகின்ற பல வாத்தியங்களினோசையும், வலியோடுகூடிய வெள்ளிய அருவியிழிதலானுளவாகிய இழுமென்னு மோசையும் அலை யெழுகின்ற கடலோசை யடங்கினு மடங்காவாம்.

(வி - ம்.) விடை - கிடாய்; இதனை 'மாத்தாட் கொழுவிடை' என்னும் திருமுருகாற்றுப் படையா னுணர்க. பலி - அரிசி; 'சில் பலிச் செய்து பல்பிரப்பிரீஇ' (முருகு உ௩௯) குறை இன்றியமையாமைப் பொருட்டு; பிரப்பு - பேருண்டி. 'பிரப்பென்றுரைப்பது பேருண்டி யாகும்' என்னும் பிங்கலந்தையானுணர்க; இனி குறுணி யென்னு மளவைக் கொண்ட பாத்திரங்களில் பல்லுணக்களைப் பரப்பிவைத்தல் பிரப்பென்பாருமுளர்; அவர் "குறுணி யொவ்வொன்றதாகக் கொள் கலம் பல்லுணக்கள் பெறுமுறை பரப்பிவைப்ப பிரப்பெனப் பேச லாமே" என்னும் நிகண்டினை மேற்கோளாகக் காட்டுவர்; இனி யாசிரி யர் நச்சினார்க்கினியர் பிரப்புக் கூடையுமா மென்பர்; மன்றம்-ஊர்க்கு நடுவேயுள்ள மரத்தடி; ஒழுகு - வரிசை; எழுகடல் - வினைத்தொகை; ஏழு கடலெனினுமாம்; இழுமென்னோதை-அநுகரண வோசை. (௪௬)

தேனுஞ் செந்தினை யிடிகளுந் தீஞ்சுவைக் கனியு
மூனுந் துய்ப்பன வுடுப்பன மரவுரி தழைகள்
வானுந் தோய்சுனை யாடுவ மணிவரை யிருப்ப
ஏனஞ் சூழ்ந்தகுன் றவர்க்கொரு நல்குர வின்றே.

(இ - ள்.) அக் குறிஞ்சிநில மக்களா லுண்ணப்படுவன தேற் றேனும் செவ்விய தினைமாவும்; இனிய சுவையையுடைய கனிகளுமாம்; உடையாக உடுக்கப்படுவன மரத்தினின்று முரிக்கப்பட்ட பட்டையும் தழைகளுமாம்; ஆடப்படுவன தேவர்களும் வந்து தோயும்படியான சுனைநீராம்; இருக்கப்படுவன அழகிய மலைகளாம்; ஆகையினாற் றினைப் புனத்தாற் சூழப்பட்ட மலைவாணர்க்கு ஒருவகையான வறுமையுமின் றென்க.

(வி - ம்.) வான் - இடவாகுபெயர்; அக் குறிஞ்சிக்கண் வாழ் வார்க்கு பொருட் செலவின்றி யெப்பொருளும் எளிதினகப்படுமென் பார் ஒரு நல் குரவின்றென்றார்; ஏனம் - ஆகுபெயர்; இனி ஏன மென் பதனைப் பன்றியெனப் பொருள் கொள்வாருமுளர். வானுமென்னு மும்மை சிறப்போடெச்சம்; நல்குரவும் என்னும் முற்றும்மை விகாரத் தாற் றொக்கது. (௪௭)

அன்பி னைந்திணைக் களவலாற் களவொன்று மறியார்
இன்ப மாண்பிரி வினைவலா வினையொன்று மெய்தார்
துன்ப மோட்டுவாய்ப் பொய்யலாற் பொய்யொன்றுஞ் சொல்லார்
முன்பு மாதவப் பயத்தினு லவண்முயக் கமர்வார்.

(இ - ள்.) முன்னர்ச் செய்த தவத்தின் பயனால் அக்குறிஞ்சி நிலத்தின்கட் கூடுதலைப் பொருந்திய குன்றவாணர்கள், அன்பு காரண மாக ஐந்திணையின்கணிகழும் களவெனுங் கைகோளன்றிக் கைக் கொளும் வேறு களவொன்றினையு மறியாராவார்; இன்பமானது மேன் மேலுமதிகரித்தற்குக் காரணமாக நாயகன் நாயகியைப் பிரியும் பெருமை பொருந்திய பொருள்வயிற் பிரிவாலுளதாந் துன்பினையன்றி வேறு துன்பினையறியார்; தலைவியர்க்குத் துன்பத்தினை நீக்குகின்ற வாயாற் கூறும் பொய்ப்பாராட்டலையன்றிப் பிறர்க்குத் தீங்கு பயக்கத் தக்க வேறு பொய் யொன்றினையுஞ் சொல்லார்.

(வி - ம்.) இன்னவு - துன்பம்; பொய் - பொய்பாராட்ட லென்னுந் துறை; இதனை இந்நூல் களவுப்படலம் 'இயங்குந் திறனுடைந்' தென்னும் கஉ ஆம் செய்யுளானறிக. இனிப் பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த நன்மை பயக்குமெனின்' என்னுங் குறளின் கருத் திற்கிணங்கப் பொருள் கூறினுமமையும். (௬அ)

உயங்கு வாரல தின்புறு ரென்பதுண் மையினுன்
முயங்கு வாரைமுன் றுயர்செய்தன் முறைதெரித் தாங்கு
வயங்கு வாகிய மாரவேள் பகழியாய் மலர்ந்த
தயங்கு தேமல ரசோகங்க டழீஇயது குறிஞ்சி.

(இ-ள்.) இன்பமெய்தற்கு நிமித்தமாகிய வழிகளின் மனமொழி மெய்களைச் செலுத்தித் துன்பினை யடைகின்ற ஆடவர்களையல்லாமல் அவ்வழிகளின் மனமொழி மெய்களைச் செலுத்தாதவர்கள் இன்பத்தினை ஒருகாலத்தும் எய்தமாட்டாரென் றறநூல் கூறுவது எக்காலத்தும் உளதாந் தன்மையாதலினால் அம்முறைப்படி குறிஞ்சிநிலமானது பின்னர்க் கூடியின்புறுவாரை முன்னர்ப் புணரும் நிமித்தமாகத் துய ருறுவிக்குந் தன் றன்மையை யாவர்க்குந் தெரிவித்தாற்போல வெற்றி பொருந்திய மாரனுக்கு அம்பாகி விளங்கிய தேனோடுகூடிய மலரை யுடைய அசோக மரங்களைத் தழுவியது.

(வி - ம்.) செய் தன்முறை : வினைத்தொகை. அசோகு உணவை நீக்கி முன் துன்புறுத்திப் பின்பு புணர்ச்சிக்கேதுவா யின்பஞ் செய்தலின் இடத்தினிகழ் பொருளின் றொழிலை இடத்தின்மேலேற்றிக் கூறினார். அசோகுமலர் மதனம்பென்பதனை "முல்லையசோகு" என்பதனானறிக. துன்புற்றாரல தேனையோ ரின்புறுரென்பதனை "துன்பமுற்றவர்க்கலா லின்பமில்லை" என்னுஞ் சிந்தாமணியா னறிக. (௬௯)

பாலை
வேறு

பகைத்துடிப் படுப்பவர் பகைக்கட் பாய்கலை
உகைக்குமச் செய்கையா லுவப்பச் செய்வபோன்
மிகைத்திறக் குமரிக்கு விழாவெ டுத்தலுர்
துகைத்திருப் பதுதோகு முரப்புச் சூழலே.

(இ - ள்.) முல்லையுங் குறிஞ்சியு முறைமையாற் றிரிந்த பாலை யானது பகைப் புலத்தின்கண் துடியென்னும் வாத்தியத்தை யடித்துச் செல்லுமியல்பினையுடைய மறவர்கள், போர்முனையின்கண் தாவிச் செல்கின்ற மானினைச் செலுத்தித் தமக்கு வென்றி தருந் தன்மையினால் தாங்களும் அவனை மகிழ்வித்தல் செய்வதுபோல மிக்க வீரத்தினை யுடைய துர்க்கைக்கு விழாக்களைச் செய்து துயரத்தைக் கெடுத்திருப்ப தாகும்.

(வி - ம்.) பகைத் துடிப்படுப்பவர் - வேடர்; நிலங்கடந்தான்றூய தென்றூற் போல வாளா பெயராய் நின்றது; பகை - ஆகுபெயர்; கலை மான் - துர்க்கை வாகனம்; உகைத்தல் - செலுத்துதல்; மிகை - மிகுதி; குமரி - துர்க்கை; அலுர் - துன்பம்; 'அலுரறிவிலரே துக்கம்' என்னும் நிகண்டானறிக. துகைத்தல் - கெடுத்தல்; முரப்புச்சூழல் - கல்விர

யுயர்ந்த மேட்டிடமாகிய பாலையிடம்; "முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற்றிரிந்து நல்லியல்பழிந்து நடுங்கு துயருறுத்துப், பாலையென்பதோர் படிவங் கொள்ளும்" (சிலப். கக. சுஎ.) என்பவாகலின் தொகுமுரப்புச் சூழல் என்றார்; பகைக்கண் - பகையாகிய விழியென்பாருமுளர். (௬௦)

வரையுறை கடவுளா மகனை நீங்குதற்
கருமையி னடுத்தமை யறையுஞ் சண்டிகை
கிரியினுங் கிரிபுறங் கெழீஇய கானினும்
பெரிதுமாம் பாலையம் பிராட்டி யாயதே.

(இ - ள்.) துர்க்கையானவள் குறிஞ்சி நிலத்திலும் அக்குறிஞ்சி நிலத்தின்புறத்தே பொருந்திய முல்லைநிலத்திலு மிகுதியுமுள தாகும் பாலைக்குத் தெய்வமாயிருக்குந்தன்மை குறிஞ்சிநிலத்திற்குத் தலைவராக வாண்டுறைகின்ற முருகக்கடவுளாகிய குமாரனைவிட்டுப் பிரியமாட்டாமையின் ஆண்டுப் பொருந்தியிருத்தலை யறிவிக்கும்.

(வி - ம்.) சண்டிகை - துர்க்கை; உமையின் கூறுதலின் மகளென்றார்; கிரி ஈண்டுக் குறிஞ்சிநிலம்; கான் - முல்லைநிலம்; ஏனைய நெய்தலினும் மருதத்தினும் பாலை உளதாயினும் இக்குறிஞ்சியினும் முல்லையினு மிக்குளவா மென்பது நாற்றுணிபாகலின் 'பெரிதுமாம்பாலை' யென்றார், அறையும் - இலக்கணை; 'ஐம்பானிகழ் பொழுதறை வினையிடைநிலை' யென்றுங்குக் கொள்க. (௬௧)

தூதுணம் பறவைக நுதுண் டோவறக்
காதலந் துணையொடு கழுமிப் புல்லுவ
வேதுண வுண்ணினு மெவர்க்கும் வேள்கணை
தீர்திற மரிதெனத் தெளிப்ப போன்றன.

(இ - ள்.) பருக்கைக் கற்களை யுணவாக உண்கின்ற அழகிய பாலைக் கருப்பொருளாகிய புறவினங்கள் வேறுணவின்மையின் ஆண்டுக் கிடக்கின்ற பருக்கைக் கற்களையே யுணவாக வுட்கொண்டு நீங்குதலின்றி அன்பிற்குரிய அழகிய பெண்புறவினத்தோடு மயக்கமுற்றுத் தழுவுவன; உணவாக சருகுநீர் காற்று முதலியவைகளில் எதனையுட்கொள்ளினும் எத்துணைப் பெரியராகிய மனவசிலர்க்கும் மன்மதபாணத்திறுலுளதாந் துன்பத்தினின்றும் நீங்கும் வகை யருமையுடைத்தென்று தெரியச் செய்வன போன்றனவாம்.

(வி - ம்.) தூது - பருக்கைக்கல்; கழுமல் - மயங்கல்; "பூத்துகள் கழுமிய பொலிவின தொருபால்" என்னுஞ் சிந்தாமணி நாமகளிலம்பகம் செய்யுளுரையா னுணர்க; உண வேதுண்ணினு மென மாற்றுக; எவர்க்கும் உம்மை உயர்வு சிறப்பு; தீர்திறம் - நீங்கும்வகை; வேள்கணை : ஆகுபெயர். (௬௨)

எயிற்றிய ரிளமுலை யிணைய வெண்ணுபு
வெயிற்றலை மாதவம் விளைத்தல் விழ்வன
பயிற்றிய தெனநிறம் பரந்த மெல்லிதழ்க்
குயிற்றிய தெனமுகைத் தெழுந்த கோங்கமே.

(இ - ள்.) வரிசையாகச் செய்து வைத்ததென்று சொல்லும்படி யரும்பி' பலகாற் சாய முதலியவற்றிற் றோய்த்துப் பழக்கியதென்று கூறும்படி நிறம் பரவிய மெல்லிய இதழ்கள் விரிந்த கோங்குமரங்கள் நிற்றல், அப்பாலை நிலப் பெண்களின் இளமை பொருந்திய தனங்களைப் போல அரும்புவர நினைத்து வெயிற்க(ணின்று) பெரிய தவத்தைச் செய்தலை யொப்பனவாகும்.

(வி - ம்.) இழைய - ஒப்ப; வீழ்வன - ஒப்பன; இவை இணைவிழ் என்னும் உவம உருபடியாகப் பிறந்த வினையெச்சங்கள். இனி ஓவிய ராற் சித்திரிக்கப்பட்ட மலரானவை நிறங்குன்றாமல் அலர்தல் குவிதல் செய்யாது என்று மொருபெற்றித்தாயிருக்குமாதலின் செய்தாற் போல வெனப் பொருள்படும்படி பயிற்றியதென நிறம் பரந்த கோங்கமென்றா ரெனினுமமையும்; குயிற்றுதல் வரிசையாகச் செய்துரைத்தல்; இது இல்புலப் பயன் றற்குறிப் பென்னுமணி. (சுகூ)

குரவலர்ப் பாவைபெற் றெடுப்ப கோழரை
மரவம்வெள் ளணியினுல் வயக்க மாறுவ
விரவலர் தூற்றுவ வேரிப் பாடலம்
பரவிசை பகர்வன பறவைக் கோகிலம்.

(இ - ள்.) குராமரமானது பூவாகிய பாவையை யீன்றெடுப்பன; கொழுவிய அரையுடைய குங்கும மரங்கள் வெள்ளணியினாலே விளங்கு தலை யொப்பனவாகிப் பூத்தன; வாசனை பொருந்திய பாதிரிமரங்கள் பொருந்திய அலரைத் தூற்றுவனவாம்; குயிற்பறவைகள் யாண்டுஞ் செல்லும்படியான வாழ்த்திசையைப் பாடுவனவாம்.

(வி - ம்.) தலைவி புதல்வற் பயந்தமையை யறிந்த செவிலி முதலா யினார் தலைவன் வரும்பொருட்டுச் சேடியர்க்கு வெள்ளணி யணிந்து சேரிக்குய்ப்ப அதனைக் கண்ணுற்ற பரத்தையர் அவர் தூற்றலும் பாணர் முதலியோர் தலைவன் இசையைப் புகழ்தலுமாகிய செய்கைகள் இக் கவியினமைந்திருத்தல் காண்க. குராப் பூ பாவை போன்று மலர் தலினால் 'குரவலர்ப் பாவைபெற் றெடுப்ப' என்றார்; இதனை,

''நறவிரி சோலை யாடி நாண்மலர்க் குரவம் பாவை
நிறையப்பூத் தணிந்து வண்டுந் தேன்களு நிழன்று பாட
விறைவளைத் தோளி மற்றென் றோழியீ தென்று சேர்ந்து
பெறலரும் பாவை கொள்வாள் பெரியதோ ணீட்டி னாளே.''

என்னுஞ் சிந்தாமணிப் பதுமை. 105ஆம் செய்யுளானறிக. குங்கும மரம் வெண்ணிறப் பூக்களைப் பூத்தலின் மரவம் வெள்ளணியினால் வயக்கம் மாறுவ வென்றார்; குராமரம் தலைவியராகவும், பாதிரிமரம் பரத்தையராகவும் குயில்கள் பாணர் முதலிய வாயில்களாகவுங்கொள்க. அலர் - மலர்; பழிச்சொல். இசை - இராகம், புகழ். வெள்ளணி - வெள் ளிய உடை. (ஙல)

விரிமுகி லிடையிடை விராய மீனமுஞ்
சுரிமுழன் முச்சியிற் றூக்கு நித்திலச்

சொரிகதிர் மணிகளுந் துணையு மென்பவே
பொரிகெழு பொகுட்டரை யிருப்பைப் பூத்தன.

(இ - ள்.) பொருக்குகள் பொருந்திய முதிர்ச்சியையுடைய தூரோடு கூடிய இருப்பை மரங்கள் பூத்திருப்பன (ஆகாயத்தில்) பரந்த மேகங்களினிடையிடையே கலந்தொளிர்கின்ற உடுக்களையும் சுரிந்த கூந்தலினையுடைய பெண்களின் உச்சிக்கொண்டையிற் செருகுகின்ற ஒளியைச் சொரிகின்ற முத்துக்களையு மொக்கும் என்று சொல்வர் அறிவுடையோர்.

(வி - ம்.) சுரிகுழல் - அன்மொழித்தொகை; தாழ்குழல் என்றுங் கொள்க; முச்சி - உச்சிக்கொண்டை; கதிர்சொரி நித்திலமாகிய மணியென்க. பொகுட்டு - இருப்பைமரத்திற் றோன்றும் புடைப்பு; இனி 'என்ப' என்பதை யசையாக்கி ஒப்பாகுமெனப் பொருள் கொள்ளினுமமையும்; "வெலற்கருங் குஞ்சர" மென்னும் ஏதக் குறிப்பையுடைய சிந்தாமணிச் செய்யுளி னிறுதியில் 'பிறவு மென்பவே' என வந்திருத்தல் காண்க. இது உவமையணி. (௯௯)

நிகழ்தரு நால்வகை நிலனு மெல்லையாத்
திகழ்தரு பாலையந் திணைக்கங் கேற்புற
விகழ்தருஞ் சுரத்தவ ரெய்து போகமும்
புகழ்தரு நானிலத் தவர்தம் போகமே.

(இ - ள்.) குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் என நான்கு வகையாகச் சொல்லப்படுகின்ற நிலங்களுந் (தனக்கு) இடமாக விளங்குகின்ற அழகிய பாலைத்திணைக்குப் பொருந்த யாவராலு மிகழப்பெறுகின்ற பாலைநிலமாக்களடைகின்ற போகங்களும் யாவராலும் புகழப்படுகின்ற (பாலையொழிந்த ஏனைய) நான்கு நிலத்திலுமுள்ளாருடைய போகமேயாம்.

(வி - ம்.) நிகழ்தரு - சொல்லப்பெறுகின்ற; எல்லை - இடம்; பாலைத்திணைக்கு ஏற்புறுதல் - தனக்குச் சிறிதுமிடமின்றி ஏனைய நானிலத்திலுங் கலந்திருத்தல்; பாலைநிலத்தவர் போகமாதல் - நானிலத்துள்ளாரையும் ஆறலைத்தலானும் ஆண்டுச்சென்று சூறைகொள்ளுதலானும் வந்தபொருளை நுகர்தலாம்; இவ்விரு வகையினர் செயல்களை நோக்கி 'இகழ்தரு' 'புகழ்தரு' என அடைகொடுத்தார்; அம்முந் தம்முஞ் சாரியை. (௧00)

உடங்குசெல் பவர்க்கிடை யூறுறன் றின்றியே
யடங்கரும் பெருமகிழ் வாக்கி மாதரை
யிடங்களி லீஇயவர் செலவ முங்குமா
தொடங்கலி னுதவியிற் சுரமொப் பில்லையே.

(இ - ள்.) விதி தம்முட் கூட்டக்களவிற் புணர்ந்து உடன்போக்கிற் கூடச் செல்கின்ற தலைவன் தலைவியர்க்கு தந்தை தன்னைமாரால் இடையூறொரு சிறிதுமில்லையாகத் தாங்கற் கருமையாகிய பெரிய மகிழ்ச்சியினை யுளவாக்கிப் பெண்களை (அயர் வுயிர்க்கும் பொருட்டு)

அவ்விடங்களிலிருக்கச் செய்து அகலுங் காலையர் செலவைத் தடை செய்யுமாறு தொடங்குதலினால் உதவி செய்தற்கான பாலைநிலத்திற் கொப்பாக வேறொன்றில்லை யென்க.

(வி - ம்.) செலவழுங்குமாறு - விகாரம்; சுரத்துக்கென நான்காவது விரிக்க; சுரம் புணர்தற்கு இனிதாகிய இடமுடைத்தாதலிற் சுர மொப்பில்லை யென்றார்; ஒன்று மென்னும்உம்மை தொக்கது. இன்றி யென்பது எச்சத் திரிபு; இடையூறிலவாகச் செய்தல் விருந்துவிலக்கல் முதலியன. (௬எ)

பிரிந்தவர் பசலையம் பெரிய போர்வையுட்
டிருந்துவ ரென்னத்தன் செய்கை தோற்றியாங்
கரந்தைசெய் மதன்கணை யாகப் பூத்தமா
மரந்தழீஇ யதுநலம் வளாய பாலையே.

(இ - ள்.) இன்பங்கலந்த பாலையானது முன்னர் விதி தம்முட் கூட்ட வெதிர்ப்பட்டுப் புணர்ந்து இவ்வொழுக்கம் புறத்தார்க்குப் புலனு மென்றஞ்சிப் பின்னர்ப் பிரிந்த தலைவிமார்கள் பசலையாகிய பெரிய போர்வையினுள் மூழ்குவரென்று பொருளுறால் கூறுகின்ற தன்றொழிலைப் பிறர்க்குத் தோன்றும்படி செய்தாற்போலப் பிரிந்த காலத்துத் துன்பங்களைச் செய்கின்ற மன்மதன் கணையாகப் பூத்தலைச் செய்த மாமரங்களைத் தழுவியது.

(வி - ம்.) தன் னென்றது ஈண்டுப் பாலைநிலத்தை; தோற்றி - தோற்றுவிக்க; 'தோன்று தோற்றி' என்றாற்போலக் கொள்க; மா பிரிந்தவர்க்குப் பசலையை யுளவாக்கித் துன்பஞ்செய்து மீண்டும் புணர் தற் கேதுவாகலின் இடத்து நிகழ்பொருளின் றொழிலை இடத்தின்மே லேற்றித் தன் செய்கை தோற்றியாங்கெனக் கூறினார். மதன்கணை மா மலரென்பதனை 'முல்லை யசோகு முழுநீலஞ் சூதப்பூ' எனக்கூறி யிருத்தலானறிக. பிரிதலும் பிரிதனிமித்தமும் பாலையாகலின் களவொழுக்கம் புறத்தார்க்குப் புலனாகாமைப் பிரிதல் இன்பமாகவும் பிரிதனிமித்தம் துன்பமாகவுங் கொள்க. பசலை - பசத்தல்; இது கண்ணாடி மண்டிலத்தில் வாயினாலூதிய ஆவிபட்டு அம்மண்டிலம் மழுக்கமடைவது போலத் தலைவியின் முகத்திலுள்ள ஒளி தலைவனைப் பிரிதலால் மழுங்கித் தோன்றுதல். இதனைப் பொன்னெனவும் பீர் எனவும் உரைப்பார். "வெண்மண லெக்கர் விரிதிரை தந்தநீர், கண்ணாடி மண்டலத்தூதாவி யொத்திழியுந், தண்ணந்துறைவர் தகைவிலரே தற்சேர்ந்தார், வண்ணங் கடைப்பிடியா தார்" என்னுஞ் செய்யுளானு மிதனை யறிக. திருந்துதல் - இலக்கணை, ஈண்டு மூழ்குதலின் மேற்று. (௬அ)

முல்லை

வேறு

ஆக்கங் கருதித் துணைநீங்கவள் ளோர்கி ளந்த
வாக்கின் படிமங் கையராருயிர் வாழ்ந்தி ருக்கை
காக்குந் தொழிலென் றுபுரக்குமக் கண்ணாற் கன்பு
பூக்குஞ் செயலாற் பொலிவுள்ளது பூத்த கானம்.

(இ - ள்.) பொலிவுபெற்ற முல்லைநிலமானது கல்விச் செல்வம் மேன்மே லுயரும்பொருட்டு நினைந்து நாயகர் பிரிய அவர் பிரிவினை யுணர்ந்த தலைவிமார் நின்னிற் பிரியேன் பிரியினுயிர்வாழே னெனக்கூற அத்தலைவி யறக்கற்பாற்றி யுயிர் தாங்கியிருக்கும் பொருட்டு அத் தலைவர்கள் கார்முந்துமுன் றேர்முந்துமென்று சொல்லிய சொல்லின் படி அப்பெண்கள் அரிய உயிர் உடலோடு கூடிக் கற்பாற்றி வாழ்ந் திருக்கையைத் தனக்குரிய காத்தற் றொழிலாகுமென் றுட்கொண்டு பாதுகாக்கின்ற அக்காத்தற் கடவுளாகிய மாயோனுக்கு அன்பு தழைக் குஞ் செயலினால் பொலிவை யடைந்ததென்க.

(வி - ம்.) ஆக்கம் - கல்வி செல்வங்களான் மேன்மேலுயர்தல்; இருக்கை இரண்டாவது விரிக்க; வாக்கு - கார்முந்து முன்றேர் முந்து மென்ற சொல்; அஃதாவது கார்காலத்து வருவேனென்று கூறுதல்; கண்ணன் - மாயோன்; திருக்கோவையா ருரையி லிதனைப் பேராசிரியர் பாகதச் சிதைவென்பர். இருத்தலும் இருத்தனிமித்தமும் முல்லையாத லின் உயிர்வாழ்ந் திருக்கை யென்றார்; பூத்தல் - தழைத்தல்; கானம் - முல்லைநிலம்; அகரம் பண்டறிசுட்டு; துணைவர் ஈறுகெட்டுத் துணை யென நின்றது. (௧௯)

ஆளிக் கொடியேந் தியதங்கை யகற்சி யாற்றான்
மூளுற் றவார்வத் தணிமைக்கண் முற் றிற்று நேராம்
காளக் குருமே னிமுராரிகல் சூழ்மு ரம்பு
கோளுற் றகானக் கொருதெய்வத மாய தொன்றே.

(இ - ள்.) கரிய நிறம்பொருந்திய திருமேனியையுடைய முர னென்னும் அசுரனுக்குப் பகைவனாகிய மாயோன் குறிஞ்சிநிலத்தைச் சூழ்ந்த பாலைநிலத்தைத் தன்னிடத்தே கொண்ட முல்லைநிலத்திற்கு ஒப்பற்ற அதி தெய்வமாகிய தன்மையானது (தனது வெற்றிக் கடை யாளமாக) யாளியை வரைந்த கொடியினை உயர்த்திய தங்கையாகிய துர்க்கையை (விட்டு) நீங்குதலைப் பொறாதவனாகி மேன்மேலுமெழு கின்ற அன்பினாலே அணிமைக் கண்ணடைந்திருத்தலை யொப்பாகும்.

(வி - ம்.) குரு - நிறம்; 'குருவுங்கெழுவு நிறனுமாகு' மென்ற தொல்காப்பியச் சூத்திரத்தானறிக. காளம் - கருநிறம்; அகற்சி யிரண் டாவதன் றொகை. முற்றுதல் - அடைதல்; தெய்வதம் வடமொழிச் சிதைவு; சிந்தாமணியிற் காண்க. (௨0)

தூங்குங் கனிமல் கியகொன்றை துணர்த்த லர்ந்து
பாங்கெங் கணுநிற் பதுருத்திர பல்க ணங்கள்
வீங்கும் புகழ்மால் விடைபற்றிவெள் ளிச்சி லம்பி
னோங்கும் பெருமான் முனமுய்ப்பவந் துற்ற தொப்பாம்.

(இ - ள்.) கனிகள் நிறைவுற்றுத் தொங்குகின்ற கொன்றை மரங்கள் கொத்துக்கொண்டு மலர்ந்து பக்கங்கள் எவ்விடத்து நிற்குந் தன்மையானது, உருத்திரராகிய பலகணத் தலைவர்கள் மிக்க புகழ் நிறைந்த திருமாலாகிய இடபத்தினைக் கைப்பற்றி வெள்ளிமலையின்க ணெழுந்தருளி யிருக்கின்ற யாவரினுமேம்பட்ட பெருமான் திருமுன் னரே கொண்டுபோய் விடுதற்காக வந்து சேர்ந்திருத்தலை நிகர்க்கும்.

(வி - ம்.) மால் விடை - விண்டுவாகிய இடபம்; துணர்த்தல் - கொத்தாக விருத்தல். (சுக)

விலகா விறன்மா லறிந்தோர்விளை யாட லாற்றுற்
பலமா யவுருக் கொடுநின்றொளிர் பான்மை போலாம்
மலரா னிறைகொன் றையலங்கிய சூழ லெல்லாம்
புலரா மதுமா மலர்பூவைகள் பூத்த காட்சி.

(இ - ள்.) பூக்களானிறைந்த கொன்றை மரங்கள் விளங்கி நிற்கு மிடங்களிலெல்லாம் புலராத தேன் பொருந்திய கரிய பூக்களைக் காயா மரங்கள் பூத்திருக்குந் தோற்றமானது நீங்காத வலிமைபொருந்திய திருமால் (உருத்திர கணங்கள்பற்றிக் கொடுபோக வந்த சூழ்ச்சியை) அறிந்து ஒப்பற்ற திருவிளையாட்டின் முறைமையால் பலவாகிய மாய வடிவைக்கொண்டு நின்று விளங்குந் தன்மை போலாகும்.

(வி - ம்.) அறிந்து - உருத்திர கணங்கள் பற்றவந்ததைத் தெரிந்து; அலங்கிய - விளங்கிய; மா - கரிய; காட்சி - தோற்றம்; மாயம் - வஞ்சனை. (சுஉ)

இருந்தைக் குவையொத் தனபூவைக ளிண்டு கோபந்
திருந்துந் தழலொத் தனகொன்றைகள் செம்பொ னொத்த
பெருந்தூட் குவையொத் தனபூத்த பிடாம ரங்கள்
பொருந்தேர் முகிலொத் ததுபொற்றொழில் வல்ல கொல்லன்.

(இ - ள்.) (அம் முல்லைநிலத்தில்) காயாமரங்கள் கரிக்குவியலை யொத்திருந்தன; ஆண்டுப் பொருந்திய இந்திரகோபம் செந்நிறமாகிய அக்கினியை யொத்தன; கொன்றைப் பூக்கள் செம்மையான பொன்னை யொத்தன; பூத்திருக்கும் பிடாமரங்கள் நெருங்கிய தழன்மேன் மூடிய நீற்றின் குவியலை யொத்தன; அழகுபொருந்திய மேகம் பொற்றொழில் செய்தலில் வன்மையுடைய கொல்லனை யொத்தது.

(வி - ம்.) இருந்தை - கரி; பூவையுங் கொன்றையு மாகுபெயர்; பிடா - ஒருவகை மரம்; முல்லையும் பிடவுந் தளவும் என்று எடுத்துக் காட்டிய தொல்காப்பிய வுரையான் அறிக. தூள்-குவை; தூட்குவை-தழன் மேன்மூடியபொடி; பிடாப்பூ வெண்ணிற முடையதாம்; பொன் முதலியவற்றைக் கூட்டுதற்குக் கொல்லன் காரணமாதல்போல இவ் வளங்கள் நிகழ்தற்குக் காரணம் மேகமாதலின் தொழிலுங் குணமும் பற்றிய வுவமை; இக்கருத்து "இருள்கிழிப் பதுபோன் மின்னி வானந், துளிதலைக் கொண்ட களிபெய னடுநாள், மின்மினி மொய்த்த முரவு வாய்ப் புற்றம், பொன்னெறி பிதிரிற் சுடர வாங்கிக், குரும்பி கெண்டும் பெருங்கை யேற்றை, யிரும்புசெய் கொல்லெனத் தோன்று மாங்கண்" என்னும் அகப்பாட்டு; (எஉ) அடிகளிலொருவா றமைந்திருத்தல் காண்க. பொற் கொல்லன், கரியும் தழலும் பொன்னும், தூட்குவை களும் வைத்துத் தொழில் செய்வதுபோலத் தோன்றியது என்க. (சுஈ)

விரிகான் மலர்வா சநுகர்ச்சி விழைந்து தத்த
முரிநா சியொன்று லமையாதுலப் பற்ற நாசி

**பரியா விமையோ ரவணிற்குமப் பண்பு தோற்றும்**
**வரிபா டளிவீ ழமணிக்குமிழ் பூத்த மாண்பு.**

*(இ - ள்.) இசைப் பாட்டைப் பாடுகின்ற வண்டுகளானவை விரும்பும் வண்ணம் அழகிய குமிழ்மரங்கள் பூத்த தன்மையானது, தேவர்கள் விரிந்த முல்லைநிலத்தின்கணுள்ள மலர்களின் வாசனை நுகர்ச்சியை விரும்பித் தத்தமக்குரிய ஒவ்வொரு மூக்கான் அவ்வாச நுகர்ச்சி அமையாமல் அளவில்லாத நாசிகளைத் தாங்கி, அந்நிலத்தில் நிற்குமப் பண்பினைக் காட்டாநின்றன.*

*(வி - ம்.) கான் - ஆகுபெயர்; உரியநாசி - பெயரெச்சத் திறு தொக்கது; உலப்பற்ற - அளவற்ற; அப்பண்பு - பரித்த பண்பு: பரியா - செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சம்; வரி - இசைப்பாட்டு. ( )*

**மானு கமலத் திருமாதவ னாகி மாயோன்**
**ஆனு வொளிநா முறவள்ளியை யீன்ற வாற்றான்**
**நாநா ளுமிவற் றணவேமென நண்ணி யாங்குத்**
**தாநா ளுமிகுந் துழல்கின்றன தாவு மான்கள்.**

*(இ - ள்.) (அம் முல்லைநிலத்தின்கண்) தாவுகின்ற மானினங்கள் தாமரை மலரிலெழுந்தருளியுள்ள இலக்குமி மான் வடிவாக மாயோன் பெரிய தவத்தையுடைய சிவமுனியாகி யாங்கள் அமையாத புகழை யடைய வள்ளியம்மையாரைப் பெற்ற தன்மையால் யாமெப்பொழுது மிம் மாயோனைவிட்டு நீங்குவே மல்லமென்று கருதிப்) பொருந்திய தைப் போலத் தாங்களெந்நாளு மிக்குற்றுச் சஞ்சரிக்கின்றன.*

*(வி - ம்.) மலர்த்திரு மானாகவெனவும், மாயோன் மாதவனாகி யெனவு மாற்றுக; மாதவன் - சிவமுனிவன்; ஒளி - புகழ்; நாமென்றது மான்களை; இவன் - மாயோன்; தணத்தல் - நீங்கல்.* ([illegible])

**தணியா விமையோர்க் குணவூட்டுநர் சால வாங்கண்**
**அணிநா மணியார்ப் பெழுநான்முறை யாய்ந்த தேபோன்**
**மணியார்ப் பெழவெங் கணுமேய்வது மண்ண கத்தோர்**
**பணிதே வரெலா ருமுறுப்பிற்ப யின்ற நல்லா.**

*(இ - ள்.) அம் முல்லைநிலத்தில் பூமியிடத்துள்ளோர் வணங்குகின்ற எல்லாத் தேவர்களும் தம் முறுப்பிற்றங்கிய நல்ல பசுக்கூட்டங்கள் தம்மை வழிபடுவார்க்கு அருள்செய்தலிற் குறையாத தேவர்களுக்கு உணவை உண்பிக்கின்ற சிவாசாரியர்கள் அழகிய நாவினோடு கூடிய மணியோசையை யெழுப்புதற்குக் காரணமாகிய (சிவாகமமாகிய) நான் முறையை மிக ஆய்ந்ததைப்போல் கழுத்திற் பூட்டியமணி யார்ப்பெழும் படி எவ்விடங்களினு மேயாநின்றன.*

*(வி - ம்.) ஆங்கு நல்லா ஊட்டுநர் எழுப்பும் நான்முறை சாலத் தாங்களு மாய்ந்ததுபோல மேய்வதாகுமென முடிக்க. இனி நல்லா மேய்வதுபோன்ம் என முடிப்பாருமுளர்; எழு - எழுப்புகின்ற நான் முறையையெனப் பிறவினை வினைத்தொகை யாக்குக. தேவர்கள் உறுப்*

பிற் றங்கியிருத்தலால் மணியோசையுடன் மேய்வது அவர்கட்கு மணி யடித்து உணவூட்டலை யொக்குமென்க; ஆங்கணென்பது நல்லாவென்ப தனோடும், சாலவென்பது ஆய்ந்தவென்பதனோடும் இயையும்; பசுவி னுறுப்பிற்றேவர்கள் தங்கியிருத்தலை சிவதருமோத்தரம் – கோபுரவியலி லும், இந்நூல் அகத்திய னருள்பெறு படலத்தும் காண்க. (௬௬)

உழலைத் தொழுவா னிரைசாலவு வக்கும் வண்ணங்
குழலத் தெழுமின் னிசையெவ்வுயி ருங்கு ளிர்ப்ப
எழுநற் றதுநல் லவர்இன்புறத் தக்க தியார்க்குங்
கழலற் றவின்பப் பயனுய்க்களிப் பிப்ப தன்றே.

(இ - ள்.) நல்லோர்கள் இன்புறத் தகுந்த செயல் யாதாயினும் யாவர்க்கும் நீங்குதலற்ற இன்பமாகிய பயனாகி நின்று களிப்படையச் செய்வதொன்றன்றோ, ஆதலால் உழலைமரத்தாற் றடைசெய்யப்பட்ட வாயிலோடு கூடிய தொழுவின்கணுள்ள பசுவினங்கள் மிக மகிழும் வண்ணம் புல்லாங்குழலினின்று மெழுகின்ற இனிய விசையானது (ஓரறிவுடைய புன்மர முதலிய) எவ்வகை யுயிர்களும் (இன்பமாகிய கடலில் மூழ்கிக்) குளிர்ச்சியடையும் வண்ண மெழலுற்றது.

(வி – ம்.) உழலை - பசுக்கள் வெளியே செல்லாது வாயி லிருபக் கத்து நாட்டிய கம்பங்களிலுள்ள துவாரங்களில் கோத்திருக்குங் கழிகள். அத்து : சாரியை; கழலற்ற – நீங்குதலற்ற; கழல் : முதனிலைத் தொழிற்பெயர்; குழலகத்து : விகாரம். இது வேற்றுப்பொருள் வைப்பணி. (௬௭)

அல்லும் பகலுங் கருதன்பர ளித்த வேற்று
வெல்லும் பரபோ கம்விளைத்தருள் வேந்து நேரப்
புல்லும் புனலுந் தமையூட்டுநர் போற்ப விண்ணோர்க்
கொல்லும் பயமா தியுணப்பய னுய்க்குங் கற்று.

(இ - ள்.) தம்மை யற்பமாகிய புல்லினையும் எளிதிற்கிடைக்கு நீரினையுங் கொண்டுண்பிப்பவர் அழகினையுடைய தேவர்களுக்கு அவி யாகப் பொருந்தும் பால் முதலிய உணவினைத் தமக்குச் செய்த உதவிக் குப் பயனாக இடையருக்குக் கொடுக்குங் கன்றையுடைய பசுக்கள் இரவும் பகலுந் தம்மை மனமொழி மெய்களான் வழிபடுமன்பர் தமக் கிடும் பத்திர புட்ப முதலியவற்றை யேற்று அப்பூசனையின் பயனாக வவர்க்கு மேம்பட்ட சிவலோகத்தினை விளைவித்து அருள்செய்கின்ற அகிலலோக வரசனாகிய சிவபெருமானை யொப்பன.

(வி – ம்.) ஊட்டுநர் போற்ப உய்க்கும் என இயையும். வேந்து ஈண்டு சிவபெருமான்; அளித்த உருபு மும்மையும் விகாரத்தாற் றொக் கன. பயம் - பால்; ஆதி யென்றதனால் கோசல கோமயம் ததி முதலிய வற்றையுங் கொள்க. தமக்கு : விகாரம். (௬௮)

தாற்றுக் கதிர்கால் வரகம்பயிர் சாமை சொன்ன
லாற்றக் கிளருந் துவரைப்பயி ராதி முற்றுந்

தோற்றிக் கிளையோ டினிதுண்டின மூன்றுந் துன்றப்
போற்றிக் குடிமல் கியபொற்பின பாடி யெல்லாம்.

(இ - ள்.) ஆயரூர்களெல்லாம் குலையோடுகூடிய கதிரைக் கக்குகின்ற வரகின் பயிரும் சாமை சோளம் மிகவுமுயர்ந்து வளருந் துவரையுமாகிய இவைகளின் பயிர் முதலியவற்றையெல்லாந் தோற்றுவித்துச் சுற்றத்தாரோடு இனிதாக வுண்ணுதலைச்செய்து பசுவுமெருமையும் ஆடுமாகிய மூவினங்களும் விருத்தியடையும்படி பாதுகாத்துக் குடிமக்கள் நிறைந்த பொலிவினை யுடையனவாம்.

(வி - ம்.) தாறு - குலை; இதனை "தாற்றுக்குலைவர கொடுசாமை" எனவரும் நம்பியகப்பொருளா னறிக. சொன்னல் - சோளம்; தோற்றி - பிறவிலை; இனமூன்று பசுவும் எருமையும் ஆடுமாம்; 'மூவின மேய்த்தல் சேவினந் தழுவல்' என்னும் நம்பி யகப்பொருளானறிக. குடி: ஈண்டு மக்களை யுணர்த்தினமையின் ஆகுபெயர். (௬௯)

குளிர்மென் மொழிதே ருவதென்றுகொ ழுஞ்சு வைப்பால்
ஒளிர்செந் தழலுய்த் துறுநாமமற் றென்ற தாக்கி
வளமங் கையர்மத் தினுடைத்தலு மாழ்கி யோவென்
றளறுஞ் செயல்போற் குமிறுர்ப்பெழுங் காலை யெங்கும்.

(இ - ள்.) அவ் வாயர்பாடி யெங்கணும் நாட்காலையில் அழகினையுடைய இடைக்குல மகளிர் தங்கள் குளிர்ந்த மென்மையாகிய சொல்லைக் கொழுவிய சுவையினையுடைய பால் ஒப்பாவதென்று கருதி அப்பாலை விளங்குகின்ற சிவந்த அக்கினிக்கண்ணே சேர்த்து அதற்குப் பொருந்தும் பாலென்னும் பெயரை (தயிரென்னும்) வேறு பெயராகச் செய்து மத்தினாலுடைக்க வருந்தி ஐயோவென்றலறுஞ் செய்கைபோல முழங்கும் ஒலியெழா நிற்கும்.

(வி - ம்.) மாழ்கி - வருந்தி. அளறுதல் - அலறுதல் - ஒலித்தல் (போலி). குமிறு வினைத்தொகை : அது பகுதிப்பொருள் விகுதி. தயிர் கடையும் ஒலி பால் அடிபட்டு வருந்தி யலறும் ஒலி போலும். (௭௦)

வார்கண் டமுலைத் துணைவாண்முக மங்கை நல்லார்
கார்கண் டுகவிழ்த் தவிழிப்புனல் கால்செய் தன்பர்
தேர்கண் டுமிழோ கைவிழிப்புனல் சேர வாரும்
ஊர்கண் டநெடும் பணைசென்றினி தோம்பு மன்றே.

(இ - ள்.) கச்சைத் தன்னிடத்தே பொருந்தச் செய்த இரண்டாகிய தனங்களையும் ஒளிபொருந்திய வதனத்தையு முடைய மங்கைப் பருவத்துப் பெண்கள் தந்தலைவர்கள் குறித்துச் சொல்லிய கார்காலம் வருதலைக் கண்டு கண்கள் கொட்டியநீர் கால்வாயாகப் பெருக்கெடுத்தோடுதலைச் செய்து (பின்னர்) தமதன்பராகிய தலைவர்கள் தேர் வரவினைக் கண்டு விழிகள் மகிழ்வாற் கொட்டிய நீருஞ் சேர்தலால் (நதியாகப்) பெருக்கெடுத்து மருதநிலத் தூர்களிற்பொருந்திப் பெரிய வயல்களிற்போய் அவ்வயல்களிலுள்ள நெற்பயிர்களை யினிதாகப் பாதுகாக்கும்.

(வி - ம்.) கார் - கார்காலத்தை யுணர்த்தலின் ஆகுபெயர். கால் செய்து - காலாகவோடி; புனலூழும்மை விகாரத்தாற் றொக்கது; ஆரு - செயவெனெச்ச விறுகெட்டது. ஊர் மருதநிலத்தூர்; கண்ட - செய்த. (எக)

தடக்குங் குமத்தை யனல்லார்தமி யாய காலைக்
கிடக்குங் கிடையல் லதில்லாமைகி ளக்கு மாபோற்
கடக்குங் கழைவார் சிலையான்கணை யாக வேவும்
அடக்கும் பசுந்தேன் கமழ்முல்லைய ணிந்த முல்லை.

(இ - ள்.) முல்லைநிலமானது குங்குமச் சாந்தையணிந்த முலையையும் அழகையுமுடைய நல்லாராகிய பெண்கள் (நாயகரைப் பிரிந்து) தனியாக விருக்கின்ற காலத்து (காமநோயினாற்) கிடத்தலைச் செய்யும் இடையென்னுந் தொழிலை யல்லாமல் வேறொரு செயலுமில்லா திருத்தலைப் பிறர்க்கு வெளியிடுமாறுபோல (உலக மூன்றையும்) வெல்லும் நீண்ட கருப்பு வில்லையுடையவனாகிய மன்மதன் (தனியாக விருப்பவர் மீது) அம்பாகச் செலுத்தும் பசிய தேனைத் தன்னகத்தடக்கிய மணம் வீசுகின்ற முல்லைக்கொடிகளை அழகாகக் கொண்டது.

(வி - ம்.) தமி - தனி; கிடை - கிடத்தல்; "முல்லை கிடைகாட்டு மாதே முழுநிலங் கொல்லு மதனம்பின் குணம்" என்னும் (இரத்தினச் சுருக்கச் செய்யுளானறிக. கடக்கும் - வெல்லும்; கிளத்தல் - இருத்தலும் இருத்தனிமித்தமு முணர்த்துதல். முல்லைக்கொடிகளைத் தன்னிடத்துக்கொண்டது முல்லைநில மென்க. அணிந்த தென்னும் முற்றீறுதொக்கது. (எஉ)

மருதம்

வேறு

விலகிவில் லுமிழு மோலி வேந்தருக் குறுப்பாந் தாங்கள்
உலகமூன் றவிக்கும் வேந்தை யும்பனுக் கோட னன்றென்
றிலகுபே ருழவ ரெல்லா மிந்திர தெய்வம் போற்ற
அலகில்சீர் வளத்தி னோங்கு மலர்தலைப் பழனச் சூழல்.

(இ - ள்.) விரிந்த விடத்தையுடைய மருதநிலமானது விளங்குகின்ற பெருமை பொருந்திய உழவர்கள் யாவரும் இடைவிட்டுப் பிரகாசத்தைக் கக்குகின்ற முடியையுடைய (ஒருலகத்தையாளும்) அரசனுக் குறுப்பாகிய தாங்கள் மூன்றுலகத்தையுங் காவல்செய்கின்ற இந்திரனையே தேவனாகக் கோடனன்றென்று கருதி இந்திரனாகிய தெய்வத்தைப் போற்றலால் அளவிடமுடியாத சிறப்பினையுடைய வளப்பத்தினாலோங்கு மென்க.

(வி - ம்.) உழவர்கள் வேந்தருக்குறுப்பாதல் "படை குடிகூழ மைச்சு" என்னுங் குறளா னறிக. உறுப்புப் போறலின் உறுப்பென்றார்; உம்பன் - தேவன்; ஈண்டு இந்திரனை யுணர்த்திற்று; "ஓங்குவாவுடை யும்பனயனரி" என்னும் பிரபுலிங்கலீலைச் செய்யுளா னறிக. ' ()

தெவ்விய வவுணர்க் காய்ந்து திருவர சளித்துக் கேண்மை
வவ்விய விளவன் மாயன் மருங்கக லாமை போலாம்
நவ்விய புறவஞ் சூழ்ந்த நறும்புனற் சூழற் கின்பம்
கவ்விய கற்ப வேந்தன் கடவுளாய் வதியும் வண்ணம்.

(இ - ள்.) மான்களையுடைய முல்லைநிலத்தாற் சூழப்பட்ட நறிய மருதநிலத்திற்கு இன்பத்தைத் தன்னிடத்தே கொண்ட கற்பகச் சோலைக்குத் தலைவனாகிய விந்திரன் அதிதேவதையாக விருக்குந் தன்மை யானது தனது செல்வத்தையு மரசையுங் கவர்ந்த அவுணர்களை வருத்தி அவைகளை மீளத் தனக்குக் கொடுத்து நட்பைக் கைக்கொண்ட உபேந் திரனாகிய மாயோன் பக்கத்தினின்றுந் தானீங்காமை போலாம்.

(வி - ம்.) தெவ்விய - கைக்கொண்ட; "தெவ்வுக் கொளற் பொருட்டே" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தானறிக. இளவல் - பின்னோன் ஈண்டு உபேந்திரனாகிய மாயோனை யுணர்த்தி நின்றது; நவ்வி- மான்; புனற்சூழல் - மருதநிலம்; வண்ணம் - தன்மை; 'வண்ணமேர் சந்தம் பண்பாமென்னு' நிகண்டானறிக. இனித் தெவ்விய என்பதற் குப் பகைத்தவெனப் பொருள் கொள்வாரு முளர். (எச)

அருப்புனற் கால்க ளோடை யகனதி மணிக்காழ் பூண்டு
சுருப்பயி லிலஞ்சி பொய்கை தொகுபணை யிலைப்பூண் டாங்கி
நருப்பொழிற் பொதும்பர் நந்தா வனவுடை நலக்கச் சூழ்ந்து
மருப்பகை கடக்கு நொச்சி வளைசெறித் தன்றச் சூழல்.

(இ - ள்.) அம் மருதநிலமானது நீரறுத வாய்க்கால்களும் நீர்நிலை யும் விரிந்த ஆறுகளுமாகிய பலமணிகள் கோத்த மேகலையை யணிந்து சுருமீன்கள் பயிலுகின்ற வாவிகளும், மானிடராக்காத நீர்நிலைகளும், தொகப்பெற்ற வயல்களுமாகிய இலைச்செறிவு பொருந்திய பூணினை யணிந்து தேனோடுகூடிய காக்களோடு சோலையு நந்தவனமுமாகிய ஆடையை அழகுண்டாகச் சுற்றி மறுக்கக்கூடாத பகைவர்களை வெல் லும் மதிலாகிய வீரவளையையும் செறித்ததென்க.

(வி - ம்.) புனலறுக்கால்க ளெனமாற்றுக; காழ் - சரம், ஈண்டு மேகலையை யுணர்த்திற்று; இதனைப் பல்காசு நிரைத்தசில் காழல்குல்' என்னும் முருகு அடியானுணர்க. இலஞ்சி - மடு; "களிறுமாய்க்குங் கதிர்க்கழனி, யொளிறிலஞ்சி யடை நிவந்த" என்னு மதுரைக்காஞ்சி (உசஎ, உசஅ) யடியுரையா னறிக; பொழில் - கா; பொதும்பர் - இள மரக்கா; நொச்சி - மதில்; வளை - வீரவளை. இஃதுருவகவணி. (எரு)

பூஞ்சினை வஞ்சி பாங்கர்ப் புணைந்தநற் கேற்பப் பைத்தூர்
ஆஞ்சிறை யடமேற் செல்லு மவையதன் றொழின்முற் றுமை
காஞ்சிவேய்ந் ததற்கங் கேற்பக் கடிமரு தினத்திற் சிந்துந்
தீஞ்சுவை நறவநீ ரோடை செறுநதி கால்க ளெங்கும்.

(இ - ள்.) யாண்டும் இனிய சுவையையுடைய தேனாகிய நீரோடு கூடிய நீர்நிலைகளும், வயல்களும், நதிகளும், கால்களுமாகிய விடங்

களிலுமுள்ள நீர், மலர்களோடுகூடிய இலைகளையுடைய வஞ்சி மரங்களைப் பக்கத்தே அணிந்ததற்குப் பொருந்த விரிந்த ஊர்களாகிய அரண் கெடும்படி பெருகி மேற்செல்லும். அவ்வூர்கள் அந்நீரின் தொழின் முடிவடையா வண்ணங் காஞ்சி மரத்தாற் சுற்றப்பட்டிருப்பதற்கியைய நீரானது வாசனை பொருந்திய மருதமரக் கூட்டங்களால் அவ்வூரை யழிக்கும்.

(வி - ம்.) பாங்கர் - பக்கம்; பைத்து - விரிந்து; அவை - ஊர்கள்; வஞ்சியணிந்தவர் பகைமேற் செல்வர்; அதன் றொழின்முற்றுமை - வஞ்சியணிந்து பகைமேற் செல்லுந் தொழின் முடிவுபெறுமை; வஞ்சியணிந்தாரைக் காஞ்சியணிந்தாரெதி ரேற்றல் முறையாகலின் இவ்வூர்களுங் காஞ்சிமரத்தாற் சுற்றப்பட்டு நிற்றல் எதிரூன்றலாம். "வெருவ மேற்செறல் வஞ்சி மீட்டெதிரூன்றல் காஞ்சி" என்று நிகண்டானறிக. நறைநீர் - தேனுகிய நீர்; நதிகால்கள் செல்லுமென இடத்தினிகழ் பொருளின் றொழில் இடத்தின்மேனின்றது. அவை சுட்டுப்பெயர். ()

காலிரு மருங்கு நீண்ட கரைக்கலித் தெழுந்த வேழம்
வாலிய பூத்து நிற்கும் வண்ணஞ்செங் களத்துப் போர்வேட்
டாலிய மன்னர் சேனை யணிவகுத் துடற்ற வேந்தும்
வேலிருங் கூட்ட மென்ன விளங்குவ விடங்க டோறும்.

(இ - ள்;) அம் மருதநிலத் திடங்களெங்கும் கால்வாய்களினிரு மருங்கும் வளைந்துநீண்ட கரைக்கண்ணே தழைத்தெழுந்த கொறுக்கச்சித் தட்டைகள் வெள்ளியவாகப் பூத்து நிற்கின்ற தன்மை போர்க்களத்துப் போரை விரும்பி முழங்கிய பகையரசர் படையை யணிவகுத்தெழுந்து செல்லுகையில் வகுத்துள்ள பெரிய வேலின் கூட்டங்களென்று சொல்லும்படி விளங்கும்.

(வி - ம்.) மன்னர் அணிவகுத்து உடற்ற ஏந்தும் வேலிருங் கூட்டமென்ன விளங்குமென முடிக்க. கலித்த - தழைத்த; வேழம் - கொறுக்கச்சி; இது ஒரு நாணல் விசேடம்; வாலிய - வெள்ளிய; செங்களம் - போர்க்களம்; 'செங்களம் படக்கொன் றவுணர்த் தேய்த்த' என்னுங் குறுந்தொகை யடியானுணர்க. ஆலிய - முழங்கிய. (எஎ)

அளிநரம் புளர நாரை யமிழ்திசைப் பிலி யூதத்
தெளிதிரை முரச மார்ப்பச் சேவடி கம்புள் சூட
நளிசிறைக் குரண்டந் தாழ்ந்து நலத்தக வொடுங்கி நிற்ப
மிளிர்மணி மலர்மே லன்னம் வீற்றிருப் பனநீ ரோடை.

(இ - ள்.) வண்டுகள் நரம்புக் கருவியினிசை போன்ற விசையைப் பாடவும் நாரைகள் தேவாமிர்தம் போலுமிசையை யுடைய சிறுசின்னங்களை யூதவும், தெளிவாகிய அலைகள் முரசினொலிபோலொலியைச் செய்யவும், தண்ணீருள் மூழ்கிச் செல்லும் சம்பங் கோழிகள் (அன்னப் பறவைகளின்) சிவந்த பாதங்களை முடியிற்கொள்ளவும், குளிர்ந்த சிறையினையுடைய கொக்குகள் வணங்கி நன்மை பொருந்த ஒடுங்கி நிற்கவும், அம் மருதநிலத்துள்ள நீரோடைகளில் கொட்டைகள் விளங்குகின்ற தாமரை மலரின்மேல் வேறொன்றற்கில்லாத சிறப்புடன் அன்னப் பறவைகள் கொலுவிருக்கின்றன வென்க.

(வி - ம்.) உளர்தல் - தடவல்; ஈண்டுப் பாடலின்மேற்று; பீலி - சிறுசின்னம்; கம்புள் - சம்பங்கோழி; "கரைசின் ருது மொருமயில் தனக்குக், கம்புட் சேவல் கனைகுரன் முழவா" என்ற மணிமேகலை யடியா லுணர்க. குரண்டம் - கொக்கு. வீற்றிருத்தல் வேறொன்றற்கில்லாத சிறப்புடனிருத்தல். "பாடின் னருவிப் பனிநீ ரின்னிசை, தோடமை முழவின் றுதைகுர லாக, கணக் கலையிகக்குங் கடுங்குரற் றூம்பொடு மலைப்பூஞ் சாரல் வண்டியா ழாக" அகம். அஉஆம் பாட்டி னடிகளின் கருத்து இப்பாட்டி னமைந்திருத்தல் காண்க. (எஅ)

இந்திரற் காக்கம் வேண்டி யிட்டிய வேள்வித் தீயின்
வந்தெழு மவுணர் தாக்க மறுகுமேழ் முனிவ ரேப்ப
முந்துசெங் கமலத் தேனுண் மூசலி வெண்பூச் * செற்றுத்
தந்தலை மிதிப்ப வன்னந் தணப்பன விலஞ்சி தோறும்.

(இ - ள்.) அன்னப் பறவைகள் இந்திரனுக்காக்க முண்டாதலை விரும்பிச் செய்யப்பட்ட யாகாக்கினியினின்றுந் தோன்றிய அவுணர்கள் எதிர்த்தலினால் மனமறுகுகின்ற ஏழு முனிவர்களைப்போலச் செந்தாமரை மலரின்கணுள்ள தேனை முன்னருண்ண மொய்க்கின்ற வண்டுகள் வெண்டாமரை மலரை நிகர்க்கும் தங்கள் தலைகளை மிதித்தலினால் மடுக்கடோறும் நீங்குவனவாம்.

(வி - ம்.) ஏழு முனிவர்கள் - இந்திரனேவலாற் செய்யப்பட்ட யாக குண்டத்தில் அசுரர் தோன்றி அவர்களைத் துரத்தினர் என்பது புராண கதை. மூசல் - மொய்த்தல்; வெண்பூ - அன்னத்தின் சூட்டு; அதனைப் பூவென வுலகவழக்கு. தம் ஈண்டன்னங்கள்; செத்து - உவமவுருபு. இது பொதுமையணியும் உவமையணியுங் கலந்திருத்தலால் கலவையணி. (எசு)

ஓம்புதன் குறியி னோடு முறைந்தெனக் கமலம் பூத்த
தீம்புனற் றடத்துண் மேதி சென்றுமேய்ந் துழக்க விண்ணில்
தாம்பெரு வானை வெய்யோற் றுக்குவ கமலத் தேவி
கூம்புறப் பானு ணீங்குங் குற்றங்கண் டொறுத்தன் மான.

(இ - ள்.) உலகத்திலுள்ள வுயிர்களைப் பாதுகாக்கின்ற சீரானது தன்னடையாளமாகிய தாமரையுடன் வதிந்ததென்று சொல்லத் தாமரை மலர்ந்த இனிய நீரையுடைய தடாகத்தின்கண் எருமைகள் சென்று (அப்பூக்களை) யுண்டுகலக்க ஆகாயத்திற் றுவாநிற்கும் வாளைமீன்கள் தாமரையாகிய மனைவி வருந்தப் பாதிநாளில் நீங்குகின்ற குற்றத்தை யறிந்து தண்டனை செய்தலை யொப்ப (அவள் நாயகனாகிய) சூரியனைத் தாக்குவனவாம்.

(வி - ம்.) தன் என்றது ஈண்டு சீரை; குறி - அடையாளம் 'குறிகள் வச்சிரத்தினோடு' என்னுஞ் சிவஞானசித்தி சுபக்கம் இரண்டாஞ் சூத்திரம் ௭௬ஆம் செய்யுளானறிக. தாவுமென்னுஞ் செய்யுமென்னெச்சத் திற்றுயிர்மெய் கெட்டது. பானாள் - பாதிநாள்; பகலும் இரவும் கூடியது ஒருநாள்; அதிற் பாதிநாள் இரவெனக் கொள்க. (அ0)

* செத்தும் - பாடபேதம்.

4

பண்டொரு கோள்வாய்ப் பெய்து பாற்றிய காரிப் புத்தேள்
மீண்டிய கோள்க ளுள்கள் வேறுள மீன முற்றும்
உண்டுபின் னுமிழ்வ போல வுரைத்தவன் னவற்றை யெல்லாங்
கொண்டுள மடக்கிக் கால்வ குருமலர்ப் பொதும்ப ரீட்டம்.

(இ - ள்.) நிறம் பொருந்திய மலர்களையுடைய சோலையின் கூட்டங்கள் முற்காலத்தில் மறைக் கோளாகிய சுக்கிரனை உட்கொண்டு கக்கிய வைரவக் கடவுள் நெருங்கிய ஏனைய எட்டுக் கோள்களையும் இருபா னெழுநாள்களையும் வேறுள்ளனவாகிய மீன்கள் யாவற்றையும் உட்கொண்டு பின் உமிழ்வபோல மேற்சொல்லிய நாள்கோள் முதலியவற்றையெல்லாம் அகத் தடக்கிக்கொண்டு கக்குவனவாம்.

(வி - ம்.) சுக்கிரனைச் சாத்தனுண்டு பின் னுமிழ்ந்தலைக் காசிக் கண்டத்திற் காண்க. காரிப்புத்தேள் – ஐயனார்; கோள் - நவக்கிரகம்; உளம் - அம்:சாரியை. குரு - நிறம்; முன்னர்க் கூறினும். (௪௧)

வேறு

புரிமுறுக் குடைந்து தேறல்வார்ந் திழியும்
புதுமலர்க் கற்பகம் வளைந்த
விரிபுகழ்த் துறக்க வேந்துதெய் வதமாய்
மேதக வதிந்தகா ரணத்தால்
உரிமைகொண் டுகைக்கு மூர்தியாந் தாமு
முடங்கவட் பயில்வது போலாம்
வரியளி முரலும் பொழிரொறு நிவந்த
மதிரொறு மழைக்குலம் பயிறல்.

(இ – ள்.) வரிப்பாட்டினை வண்டுகள் பாடுஞ்சோலையிடங்களிலும் உயர்ந்த மதில்களிலும் மேகக்கூட்டங்கள் தங்குதல், கட்டவிழ்ந்து தேன்பெருக்கெடுத்தொழுகுகின்ற அன்றலர்ந்த பூக்களையுடைய கற்பகச் சோலை சூழ்ந்த புகழ் விரிந்த துறக்க நாட்டிற்கு வேந்தனாகிய இந்திரன் (இம்மருத நிலத்திற்கு) அதி தெய்வமாகி மேன்மை பொருந்தத்தங்கிய காரணத்தால் (அவ்வேந்தன்) உரிமையாகக் கொண்டு செலுத்தும் மேகவாகனமாகிய தாங்களும் (அவனுடன்) சேரத்தங்குதலை யொக்கும்.

(வி - ம்.) தாமும் என்றது மேகமும்; உம்மை யிறந்தது தழீஇயது. (௪௨)

மணிநிறக் கழுகு மிடறிறக் கலித்த
வாய்விரி யாதமென் பாளை
துணிபுனற் கயத்துத் தோற்றிய நிழலைச்
சூர்த்தவன் மீனென வெருவி
அணிமலர் மிசையா தகலெரு மையின்பி
னடரிரு டுரந்துசென் மதிபோல்
திணிமுலை யொழுக்குந் தீம்பய னுகர்ந்து
செல்லுவ சிறையனத் தொழுதி.

(இ - ள்.) தெளிந்த நீரையுடைய தடாகங்களில் தோன்றப்பட்ட நீலமணி போலும் நிறத்தையுடைய கழுகுகளின் மிடறொடியும் வண்ணம் தழைத்தமடல் வாய் விரியாத மெல்லிய பாளையின் நிழலை அச்சத்தைத் தரும் முதலையென்று பயந்து அழகிய மலர்களை யுண்ணாது செல்கின்ற எருமைக்குப்பின்னே சிறையினையுடைய அன்னக்கூட்டங்களானவை திணிந்த இருளைத் துரத்திச் செல்லா நின்றசந்திரனைப்போலத் திண்ணிய முலைகளாலொழுக்கப்பட்ட இன்சுவையுடைத்தாகிய பாலையுண்டு செல்வனவாம்.

(வி - ம்.) மணி - நீலமணி; கலித்த - எழுந்த, துணி; தெளிவு...... சிலப்பதிகாரம்; சூர்த்த - அச்சந்தருகின்ற, வன்மீன் - முதலை - பயன் - பால். ஓடுமியல்பின்றி நிலையாக விருக்கும் புனலைத் துணிபுன லென்பாருமுளர்; இது மயக்கவணி. (அக)

தெளிபுன லுகுத்துத் தங்களைப் புரக்குஞ்
செய்ந்நன்றி மதித்துவர் பருகும்
அளிமுகிற் குலத்துக் கருஞ்சுவை யிளநீ
ரளிக்கிய விழைந்தன போலும்
வளிவழக் கழுங்க மிடைந்துபல் குலைகண்
மடலிறக் கான்றுபூம் பாளைக்
குளிர்மணங் கஞற்றி நிழன்றுவா னேங்கிக்
குயின்குழாந் தைவருந் தாழை.

(இ - ள்.) காற்றியங்கல் தடைபட நெருக்கமுற்றுப் பல குலைகள் பாளைகள் மடலொடியும்படி ஈன்று பொலிவு பெற்ற பாளைகள் குளிர்ந்த வாசனையை யெழுப்பி நிழலைச் செய்து ஆகாயத்திலுயர்ந்து மேகக்கூட்டங்களைத் தடவுவனவாகிய தென்னை மரங்கள், தெளிந்த மழையாகிய புனலைச் சிந்தித் தங்களைப் பாதுகாக்கின்ற அச்செய்ந்நன்றியைக் கருதிக் கடலையுண்ணுகின்ற (உயிர்கண்மாட்டுக்) கருணையையுடைய மேகக்கூட்டத்திற்கு அருமையான சுவையினையுடைய இளநீரைக் (கைம்மாறாகக்) கொடுக்க விரும்பின போலும்.

(வி - ம்.) அளிக்கிய - அளிக்க; எச்சத்திரிபு; அழுங்க - கெட; கான்று - வெளியிட்டு; கான்றல் - தொங்குதல்; கஞற்றி - நெருங்கச் செய்து; நிழற்றி - நிழல் செய்து; தாழை - தென்னை; குயின் - மேகம்; உவர்பருகுமுகில் அளிமுகில் எனத் தனித்தனி சென்றியையும்; இது தற்குறிப்பேற்றவணி. (அஉ)

சிறையளிக் குலங்கண் முரன்றலர் தோறுஞ்
செல்லுவ திவவியா ழெழுப்பி
நறைமலர் தொறும்போய் நிறைகொளுந் தேவர்
நயப்புற விண்ணிலை நிறுத்தி
நிறைவரங் கிடைத்துப் போதுமெய் பாடியார்
நிகர்தரு நந்தன வனங்கள்
பொறையுயிர் தாது குவிவன வயற்றைப்
பொழிமதுப் பெயர்ப்பன பணைக்கே.

(இ-ள்.) சிறையினையுடைய வண்டினங்கள் இசை பாடிக்கொண்டு பூக்கடோறுஞ் செல்வன முறுக்காணியையுடைய யாழின் இசையை இசைவித்து வாசனையையுடைய பூக்கடோறுந் தனித்தனியெழுந்தருளியிருக்கும் தேவர்கள் இன்பமடைய இசையைப்பாடி. (அத்தேவர் பால்) கருதிய நிறைந்த வரங்கள் கிடைக்கப் பெற்றுச் செல்லும் அடியார்களை நிகர்தரப்பெற்ற நந்தனவனங்களால் வெளியிடுகின்ற மகரந்தங்கள் குவிவனவாம். (அங்ஙனம் குவிவனவாகிய) அம் மலர்ப்பொடிகளை (அந்நந்தனவனங் கொட்டுகின்ற) தேன் பெருக்கு வயல்களிடத்துப் பெயர்த்துச் சேர்ப்பனவாகும்.

(வி-ம்.) ஒவ்வொரு மலரினும் தனித்தனி தேவர்களிருத்தலைப் புட்பவிதி யென்னும் நூலிற் காண்க. செல்லுவ சிறையளிக்குலமென மாற்றுக; திவவு - முறுக்காணி; வேறிறை கொளல் - ஈண்டுத் தனித் தனியாகத் தங்குதல்; நிகர்தரு நந்தனவனங்களென்பது நிகர்பெற்ற நந்தனவனங்களெனச் செயப்படு பெயராய் நின்றது; இஃது உவமையணி. (அ௫)

மங்கையர் தடந்தோள் வடிவமு மதர
வணப்பும்வா லெயிற்றுநீர்ச் சுவையும்
தங்கிய நலத்தாற் றளைதொறு முழவர்
தலையளி புரிவன கரும்பர்
அங்கவை குழைய வணக்குநா ளுக
வயலெலா மடர்வன சுரும்பர்
பங்கமெங் கணும்வே ளெய்கணை யாகப்
பரம்புவ தாமரை யரும்பர்.

(இ-ள்.) வயல்கடோறும் உழவர்களால் கரும்புகள் தத்தந் தலைவிமார்களின் பெரிய தோளின் வடிவமும் உதடுகளினழகும் பல்லினின்றும் ஊறிய நீரின் சுவையுந் தங்கப் பெற்றிருத்தலால் தலையளி செய்யுந் தன்மையுடையனவாம்; அவ்வயலின் பக்கங்களிலெல்லாம் வண்டுகள் அக்கரும்புகளை வருந்த வளைக்கும் நாணாக நெருங்குவனவாம்; தாமரையரும்புகள் எங்கணுமுள்ள சேற்றில் மன்மதனெய்யும் கணை விரிந்துகிடப்பனவாம்.

(வி-ம்.) தளை - வயல்; தோளும், அதரமும், வடிவமும் வண்ணமும் பற்றி வந்த உவமமாகக்கொள்க; குழைய - வருந்த; பங்கம் - சேறு; பரம்புவ - விரிந்துகிடப்பன; அயல் - பக்கம்; அடர்வன - நெருங்குவன; (அ௬)

இரவெலாங் கணவன் கலவியிற் றிளைத்த
விருநில மடந்தையக் கலப்பின்
விரவுசெந் நிறத்த விழிகளுந் தந்த
விழுக்குறி யிதழ்க்கனி வாயும்
பரர்விழிப் படுத்தற் குள்ளக நாணிப்
பாணியான் மூடியா தேய்ப்ப
வரமலர்க் கழுநீர் குமுதமுன் பகலின்
மலர்முகங் குவிவன வயல்கள்.

(இ - ள்.) இராக்காலமெல்லாம் (விண்டுவாகிய) நாயகனோடுளதாகிய புணர்ச்சியில் மூழ்கிய பெரிய பூதேவியாகிய பெண், அக்கூட்டத்தினால் செந்நிறம் விரவப்பெற்ற விழிகளையும் சிறந்த பற்குறியையுடைய கொவ்வைக்கனி போன்ற அதரத்தோடுகூடிய வாயையும் (நாயகரல்லாத) ஏனையோர் விழிகளுக்குப் புலப்படுத்தற்கு உள்ள நாணமுற்றுக் காலமாகிய கையால் மூடியதை யொப்பச் செய்களில் மேலாகிய மலர்ந்த செங்கழுநீர் மலரும் அல்லி மலரும் முற்பகலிற் கூம்புவனவாகும்.

(வி - ம்.) கணவன் - விண்டுவாகிய நாயகன்; சந்திரனென்பாரு முளர்; தந்தக்குறி - பற்குறி; பரர் - நாயகரல்லாத ஏனையோர்; மங்கையர் நாயகனோடு இரவின் நடந்த கலவிக் குறியை ஏனையோர் பகலிற் காண்டல் முறையன்மையால் அதற்கு நாணிமறைப்பது வழக்காறுகலின், முன் பகற்காலமாகிய கையான் மூடியென்றார்; பாணி - காலம், கை. மலர்முகங்குவிதல் - கூம்பல். இனி மலர்போன்ற முகங்குவிதல் - கூம்பல்; இனி மலர்போன்ற முகஞ்சாம்புலெனக் கொள்ளினு மிழுக்காது. முன்பகல் - முன்னாள், பின்பகலாகிய மாலைக்காலத்து இவை மலர்வனவாகலின் குவிதற்கு முன்பகலைக் கூறினார். (அஎ)

மேகமண் டலத்தைத் தைவரு வாழை
விரவுவ தொருபுற மாகப்
பூகமென் றயிர்ப்ப நிவந்தெழு கரும்பு
பொதுளுவ தொருபுற மாக
நாகவல் லிகளு மஞ்சளிஞ் சிகளும்
நலப்பன வொருபுற மாகக்
காய்கதிர்ச் செந்நெ லிடமெலாம் விளைக்கும்
களமர்கள் கம்பலை மிகுமால்.

(இ - ள்.) ஒரு பக்கத்து மேகமண்டலத்தைத் தடவுகின்ற வாழைமரங்கள் கலந்திருக்கும்; இஃதல்லாமல் ஒரு பக்கத்துக் (கண்டோர்) கமுகமென் றையங்கொள்ள உயர்ந்தெழுகின்ற கரும்பு நெருங்கியிருக்கும்; இஃதன்றி யொருபக்கத்து வெற்றிலைக் கொடிகளும் மஞ்சளுமிஞ்சியும் நன்மையாயிருப்பனவாகும்; முற்றிய கதிரோடு கூடிய செந்நெற் பயிர்களை எல்லாவிடங்களிலும் விளைவிக்கின்ற உழவர்கள் ஆரவாரமிகும்.

(வி - ம்.) ஆகவென்ற மூன்று சொல்லும் அசைநிலை; இனி, களியானைக தத்தானைக வென்றாற்போல விகற்பப்பொருளாகக் கொள்வாரு முளர்; நாகவல்லி - வெற்றிலைக் கொடி; நலப்பன - நன்மையாகவிருப்பன; இச்செய்யுளான் நன்செய் புன்செய் வளங்கள் வேறு வேறாக உள்ளன என்பது கூறப்பட்டது. (அஅ)

பள்ளிகொண் டுறங்கும் புள்ளினம் தீய
பண்பினர் போலெழுந் திரியக்
கள்ளயி னசையின் வண்டினந் தக்கோர்
கடுப்பவிழ் மலரொடுந் துவள

வள்ளலப் படைகள் பூட்டுபு களமர்
மலர்முத றுமிதரக் கடவும்
வெள்ளமெண் ணிலவென் றுரைதரு பகட்டேர்
விளாவுவ வியனில நெளிய.

(இ - ள்) (மலர்களைத்) துயிலுமிடமாகக் கொண்டு தூங்குகின்ற பறவைக்கூட்டங்கள் (நட்டார்க்கிடையூறு வந்தகாலை விட்டு நீங்குந்) தீய குணமுடையவர்களைப்போல (மலரைவிட்டு எழுந்தோடவும்,) தேனையுண்ணும் விருப்பினையுடைய வண்டினங்கள் (நட்டார்க்கிடையூறுற்றகாலைத் தாமுமுடனனுபவிக்கு மேன்மக்களைப்போல) வீழ்கின்ற மலர்களோடு புரளவும், படையுழவர்கள் கலப்பைகளிற்பூட்டி மலரின் வேர் பிளக்கும்படி செலுத்தும் வெள்ளமென்னு மளவு கணக்கிலவாகுமென்று உரைக்கத் தகுந்த கடாக்கள் பூட்டிய ஏர்கள் பெரிய நிலனெளியும்வண்ணம் உழுவனவாம்.

(வி - ம்.) பள்ளி - துயிலுமிடம்; அயிறல் - உண்ணல்; வள் - கூர்மை. பூட்டுபு - பூட்டி; மலர்முதல் - தார்; துமிதர - கெட; வெள்ளம் - ஒருவகையெண்; உரைத்தகு - உரைக்கத் தகுந்த; விளாவுதல் - சுற்றுதல்; "அற்றகுளத்தி னறுநீர்ப்பறவைபோல்" என்னுஞ் செய்யுளின் கருத்தமைந்திருத்தலைக் காண்க; ஏர்கள் விளாவுவவெனக. (அக)

உழுநர்க ளொருபா லுழுதசே றழுந்த
வொண்புனல் பாய்த்துந ரொருபால்
அழுகுசே றறிந்து மறுவலும் விளாவி
யைதுறக் குழப்பிநே ராக்கி
விழுமிய முளைக டெய்வதம் போற்றி
மேதக வித்துந ரொருபால்
செழுமுளை சேற்றிற் பதிந்தபின் றெளிநீர்
கீழ்மடைக் கவிழ்க்குந ரொருபால்.

(இ - ள்.) (அம்மருதத்தில்) உழவுத் தொழில் செய்வோ ரொரு பக்கத்திலும், அங்ஙனமுழுதசேறு மூழ்கும்வண்ணம் ஒள்ளிய நீரைப் பாய்ச்சுகின்றவர்கள் ஒரு பக்கலிலும், சேறுபக்குவப்படுந் தன்மையறிந்து மீண்டுமுழுது அழகாகக் குழைத்து (பரம்படித்தலால்) சேமப் படுத்திச் சிறந்த நென்முளைகளை (அந்நிலத்தலைவனாகிய) இந்திரனைத் துதித்து மேன்மை பொருந்த விதைக்கின்றவர்கள் ஒரு பக்கத்திலும், நிறம் பொருந்திய முளைகள் சேற்றினிடத்துப் பதிந்த பின்னர்த் தெளிந்த நீரைக் கீழ்மடையின் வழியாகக் கவிழ்க்கின்றவர்கள் ஒரு பக்கத்திலுமாகப் பொருந்தியுள்ளார்கள்.

(வி - ம்.) அழுகு சேறு - பதப்பட்ட சேறு; மறுவலும் - மறுபடியும்; விளாவி - உழுது; ஐது - அழகு, நேராக்கல் - பரம்படித்துச் சமப்படுத்தல்; கெழு - நிறம்; 'குருவுங் கெழுவு நிறனு மாகும்' என்னும் (தொல், உரி.) சூத்திரத்தா னறிக. கீழ்மடை - முளைநீர் கவிழ்க்கு மடை. (க0)

திறந்தகீழ் மடைகள் சிக்கெனச் சிறைத்துச்
செறித்தமேன் மடைகளைச் சித்து
விறந்தநீர் பரவ முளைப்புனல் பாய்த்தி
விழுமிய விடரொரீஇப் புரப்ப
நிறந்தழை மதிபோல் வெள்ளொளி விரிக்கு
நென்முளை முழுவது மதியின்
உறைந்தபைங் கிரண மெனப்பசந் தெழுந்தாங்
குயர்வன பண்ணைக டோறும்.

(இ - ள்) திறக்கப்பெற்ற முளைநீர் கவிழ்க்கும் கீழ்மடைகளைச் சிக்கெனத் தடைப்படும்படி அடைத்து மேலேயடைக்கப்பட்ட மடைகளைத் திறந்து மிகுந்த நீர் எங்கும் பரவும் வண்ணம் முளைநீர் பாயச்செய்து மிக்க துன்பத்தை நீக்கிக் காக்க நிறந்தழைக்கப்பெற்ற சந்திரனைப் போல வெள்ளிய ஒளியைப் பரப்புகின்ற நென்முளை முழுவதும் சந்திரனிடத்துத் தங்கிய களங்கம் விரவிய கிரணமென்று சொல்லும்படி பச்சைநிறங் கொண்டு ஆண்டுள்ள வயல்கடோறும் உயர்ந்து வளர்வனவாம்.

(வி - ம்.) சிறைத்து - தடைப்படுத்தி ; சித்து - திறந்து ; விறந்த - செறிந்த ; 'விறப்பு முறப்பும் வெறுப்புஞ் செறிவே' என்னும் (தொல் உரி.) சூத்திரத்தானறிக. மதியின் பைங்கிரணம் - களங்கத்தோடு கூடிய கிரணம். (கக)

வேறு

நாறு பறித்துக் குணின்மோதி நறுநீ ரலைத்து முடிசெய்த
வேறு நிலத்தி னுழத்தியர்கள் விரவிப் பதிப்ப வளர்தோற்றம்
கூறு படுத்தி வதியுடலங் குற்றங் களைந்து கூற்றெழிப்பப்
பேறு கதுவ வேற்றுடலம் பெய்து செழிக்கு முயிர்போலும்.

(இ - ள்.) மள்ளப் பெண்கள் ஒருங்குகூடிப் பிடுங்கி மண்ணைக் குறுந்தடியி லடித்துப் போக்கி நன்னீரி லலைத்துக்கட்டப்பட்ட நாற்றினை வேறு புலங்களில் நட வளருங் காட்சியினால் இயமன்முன்னர்த் தங்கிய உடம்பினின்றும் வேறுபடுத்தி அவ்வுடம்பு மொண்டுகொண்டனுபவித்த வினையை நீக்கிவிட நல்வினை வருதலால் வேறோருடம்பைக் கூடிச் செழிப்பையடையும் உயிர்வருக்கம் போலும்.

(வி - ம்.) குணில் - குறுந்தடி ; முடிசெய்த - தொழிற் பெயர் ; உடலங்கூறுபடுத்தியென மாற்றுக ; குற்றங்களைதல் - குற்றத்திற்குத் தகவொறுத்தல் ; கூற்று - இயமன் ; உடம்பினின்றுமுயிரைக் கூறு படுத்தலின் கூற்றனெனப் பெயர்பெற்றனனென்க ; பேறு - நல்வினைப் பயன் ; கதுவ - பொருந்த ; பெய்து - பெய்ய - எச்சத்திரிபு. (கஉ)

வித்து நிலத்தின் வெறுத்தபயிர் விறப்பி னீங்க விடைவாங்கிப்
பைத்த நிலத்தி னகன்றபயி ரகல்வி னீங்கப் பதித்தோம்பும்

மைத்த வுடலி னுழவர்வினை மாற்றி யூட்டி யினிதளிக்குஞ்
சுத்த னிகர்த்தார் பணையெல்லாந் தோற்றத்திலங்கு முயிர்போன்ற.

(இ - ள்.) (கைவிதைப்பாக) விதைத்த நிலத்தின்கண் செறிந்த பயிர்கள் அச்செறிவினின்றும் நீங்க இடையிடையே பறித்து விரிந்த நிலத்தின்கண் அகற்சியுற்றுள்ள பயிர்கள் அவ்வகற்சியினின்று நீங்கும் படி நடுதலைச்செய்து பாதுகாக்கும் கரிய உடலினையுடைய உழவர்கள் வினைப்பயன்களைச் செய்த முறையன்றி மாற்றிப் போகத்தை யுண்பித்துக் காக்கும் சுத்தனாகிய சிவபெருமானை யொத்தனர். வயல்களெல்லாம் உடம்போடு கூடி விளங்கும் உயிர் போன்றன.

(வி - ம்.) வித்துநிலம் - கைவிதைப்பு விதைத்தநிலம்; வெறுத்த - செறிந்த; விறப்பு - செறிவு; பைத்த - விரிந்த; அகன்றபயிர் - நெருக்கமில்லாது கலந்துள்ள பயிர்; அகல்விநீங்கல் - நெருங்கல்; மைத்த - கரிய; வினைமாற்றி ஆன்மாக்கள் செய்த வினைப்பயனைச் செய்த முறையன்றி மாற்றி; இதனை நந்தியுபதேசப்படலம் 15ஆவது செய்யுளில் ''புரிதரு முறையிற் பிறழ்ந்துயிர் தெய்வம் பூதமென் றிவற்றினு ளொன்றான்' எனக் கூறியிருத்தலைக் கொண்டறிக. ஊட்டி - அப்போகத்தை யுண்பித்து; சுத்தன் - நிருமலனாகிய சிவபெருமான்; தோற்றம் ஈண்டுடம்பு. (௧௧)

வேறு

விண்பட லொழிகென மிதித்த பூந்தழை
எண்படு தன்னுரு விறந்து பைம்பயிர்
மாண்பட வளர்ப்பன மாய்ந்துந் தக்கவர்
பூண்பரா லுதவியென் பொருள்வி ளக்குமே.

(இ - ள்.) (முதிர்ந்து முதிர்ந்து) வீணாகக் கழிதலை நீங்குகவென்று (உழவர்கள்) காலால் மிதித்த பொலிவுபெற்ற தழைகள் யாவராலு மெண்ணப்படுகின்ற தம்முடைய வடிவங்கெட்டுப் பசிய பயிர்கள் மாட்சிமைப்பட வளர்ப்பன தகுதியுடைய பெரியார் தாங்கள் இறந்தும் பிறர்க்குதவி செய்தலை மேற்கொள்வார்கள் என்கிற பொருளைக் காட்டும்.

(வி - ம்.) எண்படு - எண்ணப்படுகின்ற விகாரம்; மாண்பட - மாட்சிமைப்பட; என் - என்கின்ற; விளக்கும் ஈண்டுக் காட்டுமெனப் பொருள்கொள்க. மாய்ந்தும் உம்மை எச்சவும்மை; இறந்தும் உதவி புரிதலைத் ததீசி முதலியோர் மாட்டுக் காண்க. (௧௨)

கோசலம் வீராய்க்குளம் பழுந்திச் சேறதாய்
மாசென வழித்தெறிந் துலர்ந்த வாப்பியும்
பூசனோ டுழவர்கள் போதர் வார்பழி
ஆசிலார்க் கடுப்பினு மாய்ந்து ணோர்விடார்.

(இ - ள்.) குற்றமற்ற நல்லோர்க்குப் பழியடுத்ததாயினும் நூல்களை யாராய்ந்த நல்லோர் அவரைக் கைவிடார். அதுபோலக் கோமயத்

தோடு கலந்து குளம்பினால் நிலத்தில் அழுந்தப்பெற்றுச் சேறுமிக் குற்றமுடைய தென்று வழித்தெறிதலால் உலர்ந்த சாணத்தினையும் உழவர்கள் ஆரவாரத்தோடு வயல்களுக்கு அள்ளிக்கொண்டு செல் வார்கள்.

(வி - ம்.) கோசலம் - பசுவினீர்; ஆப்பி - சாணம்; எறிந்து - எச்சத்திரிபு; பூசல் - முழக்கம்; போதருவார் என்பது விகாரமாயிற்று.

பரம்புபல் லுயிர்தொறும் பாகத் தெல்லையிற்
புரம்பொடித் தவனருள் பொருந்துந் தன்மைபோல்
வரம்பின தெல்லையின் மண்டு காற்புனல்
நிரம்பிநின் றதுநெடும் பணைக டோறுமே.

(இ - ள்.) (இருநூற்றிருபத்து நான்கு புவனங்களிலும்) பரவி யுள்ள பல ஆன்மாக்கடோறும் (அவ்வான்மாக்களுக்குரிய) பக்குவத்தின் அளவு எவ்வளவோ அவ்வளவில் திரிபுரத்தை யெரித்தவனாகிய இறை வன் றிருவருள் பொருந்தி நிற்குந்தன்மைபோல வாய்க்கால் வழியாக வந்து செறிந்த நீரானது நீண்ட வயல்கடோறும் வரம்பினளவாக நிறைந்து நின்றதென்க.

(வி - ம்.) பரம்பு - பரவிய; பாகத்தெல்லை - பக்குவத்தினளவு; வரம்பின தெல்லையில் - வரம்பினளவில்; இறைவனருள் ஆன்மாக்களின் பக்குவத்திற்கேற்ப நிறைதல்போல வரம்பினளவாக நீர்நிறைந்து நின்றதென்க; இஃது உவமையணி. (௧௬)

மருவுபல் லுயிருமேல் வளர்க்கும் பைம்பயிர்
குருகின முன்புபோற் குறுகு ருவகை
சுருள்விரித் தமன்றுயிர்த் தொகைக ளோம்புவ
அருளின ரென்றுமவ் வருளிற் றீர்வரோ.

(இ - ள்.) (உயிர்கள்மாட்டு) அருளுடைய பெரியோர் எக்காலத் திலும் அவ்வருட் குணத்தினின்றும் நீங்கார். (அதுபோல) (உலகின் கட்) பொருந்திய பல உயிர்த்தொகுதியையும் விளைந்த பின்னர்க் காத் தலைச் செய்யும் பயிர்கள் பறவைக் கூட்டங்கள் (பயிராக இருக்கும் காலத்து வந்து மீன் முதலியவற்றை உண்ண அடைவதுபோல) அடையாவண்ணம் குருத்தை விரித்து நிறைந்து மீன்ஞெண்டு முதலிய உயிர்க் கூட்டங்களைப் பாதுகாப்பனவாம்.

(வி - ம்.) அமன்று-நிறைந்து. "பயிர்கள் விளைந்த பின்னர் உயிர் களைக் காத்தலன்றிப் பயிராக இருக்கும் காலத்தும் மீன் முதலிய வகை களைக் காத்தலால், "என்றுமவ் வருளிற்றீர்வரோ" என்றார் உயிர்த் தொகை - மீன்ஞெண்டு முதலியன. எடுத்துக்காட் டுவமையணி. (௧௭)

எடுத்ததோ ருடலுயி ரிகவு முற்றினும்
அடுத்தவா ணவத்தின்மீட் டாதல் போன்மெனக்
கெடுத்தமா மலர்முதல் கிழங்கு நிற்றலின்
விடுத்தெழுந் தெங்கணு மிடைதன் மேவுவ.

(இ - ள்.) ஆன்மா கன்மத்திற் கீடாக எடுத்ததாகிய ஒப்பற்ற உடலானது நீங்கினும் (ஆன்மாவிற் சமநிறைவாக) நிறைந்த ஆணவ மல சம்பந்தத்தினால் மீட்டும் அவ்வுடல் தோற்றுதல் போலுமென்று ஆன்றோர் கூறுவதற்கேற்ப, முன்னரறிந்த மலர்முதலும் கிழங்கும் கெடாது நிற்றலின், (அக்கிழங்கினை) விடுத்து எழுந்து எவ்விடத்திலும் மலர்கள் நிறைதலைப் பொருந்துவனவாம்.

(வி - ம்.) உயிரானது உடலை நீப்பினும் ஆணவத்தால் மீட்டுமவ் வுடல் தோன்றுதல்போல மலர்முதலும் கிழங்கும் நிற்றலால் மேவுவ என்க. இகவுமுற்றினும் - நீங்குதலடையினும். மிகுத்த - நிறைந்த. முதல் - வேர். வேர் உயிர்க்கும், கிழங்கு ஆணவத்திற்கும், மலர், உடம்பிற்கும் உவமையாகக் கொள்க. மலர்மேவுவ என முடிவுசெய்க. போலும் என்பது மகரக் குறுக்கம். (௧௮)

அளமரு பிறப்புக வமலர்க் குய்த்திடும்
வளமலர் களையென வழங்கப் பட்டன
*விளறருந் தகையரு மிடைந்தோ ருத்தர்பால்
தளர்வுசெய் வாரெனிற் றாழ்க்கற் பாலரே.

(இ - ள்.) வெள்ளறிவு சிறிதுமில்லாத பெருந்தகையுடைய பெரியாரும் ஒருவர் பக்கலின் நெருங்கி அவருக்குத் துன்பஞ் செய்வாராயின் தாழ்வு செய்யும் பகுதியுடையோராவர். ஆதலால் (மேலும் கீழும் கொள்ளி வட்டமும் காற்றாடியும்போற்) சுழலுகின்ற பிறவி கெட, மலமற்றவனாகிய சிவபெருமானுக்கு (அர்ச்சனை செய்து) சேர்க்கும் அழகையுடைய மலர்கள் (பயிர்க்கு இடையூறு செய்தலால்) களை யென்னும் பெயரால் வழங்கப்பட்டன.

(வி - ம்.) வளம் - அழகு. அளமருதல் - சுழலுதல்; போலி. களையென - களைந்தெறிவாரெனவும் பெயராகவும் கொள்க. விளறு - வெண்மை. அருமை : இன்மைமேற்று. அருங்கேடன் என்றாற்போலக் கொள்க. (௧௯)

அரிய லார்ந்த வனந்தரு ளத்தினன்
மருதம் பாடும் வயற்றலை யாடவர்
பருவங் காட்டலும் பாய்களை கட்பச்செல்
கரிய வாட்டங் கண்ணிய ரெங்கணும்.

(இ - ள்.) கள்ளினை யுண்டதனால் வந்த மயக்கம் பொருந்திய மனக்களிப்பால் மருதப்பண்ணைப் பாடாநின்ற வயலிடத்திலுள்ள மள்ளர்கள் (களை களையும்) பக்குவத்தைக் காட்டப் பரவிய களைகளைக் களையச் செல்லுகின்ற கரிய வாள்போலும் பெருமை பொருந்திய கண்ணையுடைய கடைசியர்கள் எங்கணுமுள்ளார்.

(வி - ம்.) அரியல் - கள். அனந்தர் - மயக்கம். உளம் - ஈண்டுக் களிப்பை உணர்த்தலால் ஆகுபெயர். இதனை, "அரியலார்ந்தமர்தலின் அனந்தர் நோக்குடைக், கரியவாய் நெடியகட் கடைசி மங்கையர்,

* வெளிறரும் - பாடபேதம்.

வரிவரால் பிறழ்வயல் குவளை கட்பவர்'' என்னும் சிந்தாமணி (பதுமை. அ௬) செய்யுளா னறிக. மருதம் - மருதப்பண். பாய் - பரவிய. கட்ப- களைய. தடம் - பெருமை. ''தடவும் கயவும் நளியும் பெருமை'' என்னும் தொல்காப்பியத்தா னுணர்க. உள்ளார் என ஒருசொல் வருவித்து முடிக்க. (௬00)

பணைம லர்க்களை பற்றிப்ப றித்தலும்
பிணைய னம்பெடை யோடிரி வுற்றன
வினைம லர்க்குல மென்னக் கவற்றுவார்
துணையு நம்மையு மென்று துணிந்தென.

(இ - ள்.) (கடைசிமார்) வயல்களில் மலராகிய களைகளைக் கையாற் பற்றிப் பறிக்க (அதனையறிந்த) விருப்பினையுடைய அம்மலரிலிருந்த அன்னச்சேவல்கள் (நடையாலொக்கும்) நம்மையும் ஒன்றோடொன் றிணைந்த மலர்க்கூட்டங்களை வருத்துதல்போல வருத்துவார்களென்று துணிந்தாற்போல் பெட்டை யன்னத்தொடு செல்லுதலுற்றன.

(வி - ம்.) துணையும் நம்மையும் மலர்க்குலமென்னக் கவற்றுவார் என்று துணிந்தனபோல இரிவுற்றன என்க. துணை - ஒப்பு. துணிந் தென - துணிந்தாற்போல. (மள்ளப்பெண்கள்) வயல்களிலுள்ள மலராகிய களையைக் (கையாற்) பற்றிக் களைந்த காலத்தில் அம்மலர்களிலே சேர்ந்திருந்த அன்னச்சேவல்கள் அவரை நடையாலொத்திருக்கும் நம்மையும், மலர்க்கூட்டங்களைக் களைந்தாற்போல, வருத்துவார்களென்று துணிந்தாற்போலத் தம் பெட்டை யன்னங்களோடு ஓடின என்க. (௬0௧)

செங்கை தாடி தலைக்குய மானனம்
பொங்கு தாமரைப் போதெனற் கேற்புறப்
பங்க மோடு பயின்றன கட்டுலாம்
அங்க ணுற்றுக்கா லாட்டியர்க் கென்பவே.

(இ - ள்.) அம் மருதநிலத்தின்கண் களைகளைந் துலாவுகின்ற கடைசியர்க்குச் செம்மை நிறம்பொருந்திய கரங்களும், தாள்களும், தேமலோடு கூடிய தனங்களும், முகங்களும் அழகுமிகுந்த தாமரை மலரென்று (கவிகள்) சொல்லுதற்குப் பொருந்த அவ்வுறுப்புக்கள் சேற்றொடு பழகியிருந்தன.

(வி - ம்.) திதலை - தேமல். குயம் - தனம். ஆனனம் - முகம். கட்டு - களைந்து. ஆற்றுக்காலாட்டியர் - மருதநிலப் பெண்கள். ''பங்கமோடு பயிறல் கைகால் முதலிய அவயவங்களிற் சேறுதங்கப் பெற்றிருத்தல். தாமரைக்குப் பங்கயமென்னும் பெயர் காரணக் குறியாம்.
(௬0௨)

பகைமை தோன்றப் பறித்தடு காலையும்
முகைகளு ரிந்தமு டிப்பன மோப்பன
தகைக ளுண்பன சாத்துய ரேய்க்கினும்
அகைந லத்தனுங் காரமைந் தாரரோ.

(இ - ள்.) கல்வியறிவொழுக்கங்களா னமைந்த சான்ேறார் சாதற் கேதுவாகிய துயரை (தம்மிடத்தொருவர்) வருவிப்பாராயினும் (தங்களுக்குரிய) உயர்ந்த நன்மைக்குணத்தினின்றும் குறையார். அதுபோலக் கடைசியர்களால் பகைமை வெளிப்படக் கையாற் பறித்து வருந்துகின்ற காலத்தும் (அவர்களால்) நெரிந்த அரும்புகள் முடிக்கப்படுவனவாயும் மோக்கப்படுவனவாயும் அழகிய கண்ணுண்ணத்தக்கனவாயுமிருந்தன வென்க.

(வி - ம்.) எய்க்கினும் - பொருந்தினும். அகை - உயர்ச்சி. "அகைத்தல் வேதனையடர்த்தல் அறுத்திட லுயர்த்தலாமே". என்னும் நிகண்டானறிக. அமைந்தார் - கல்வியறிவொழுக்கங்களா னமைந்தார். தகைக்கள் என்பது எதுகை நோக்கி இயல்பாயிற்று. (௧0௫.)

மதுநு கர்ந்தம யக்கினர் பாங்குளார்
வதன மாதி களையென வௌவுவார்
கதிய தம்படை காய்பகை போற்செயும்
முதுமை யந்திர மூழ்குநர் போன்றுளார்.

(இ - ள்.) வேகத்தையுடைய தம்முடைய சேனைகளையே தம்மைக் கொல்லும் பகைபோலக் கருதும் வண்ணம் மயக்கம் செய்யும் பழைய மயக்கத்தின் முதிர்வைத் தருகின்ற மயக்கக்கணை (மோகனாத்திரம்) யாலே மூழ்கியவரைப் போன்றவர்களாகிய மள்ளப் பெண்கள் கள்ளையுண்ட மயக்கத்தினை யுடைவர்களாய்ப் பக்கத்துள்ள பெண்களினுடைய முகமுதலிய அவயவங்களைக் களையெனக் கருதி அவற்றைப் பற்றுவார்கள்.

(வி - ம்.) கதிய - வேகத்தையுடைய. படை - இரண்டாவதன் தொகை. வௌவுவார் - பற்றுவார். மையத்திரம் - மோகனாஸ்திரம்.

இது மயக்க அணி. (௧0௬)

களையக் கைகளைப் பற்றுதொ றுந்தொழில்
உளையப் பூவென் றொளிமுகம் பாய்வன
விளைமட் டூட்டலர் வீதனி றுத்துமத்
தெளிவைத் தேறிய போற்சிறை வண்டினம்.

(இ - ள்.) சிறகையுடைய வண்டினங்கள், விளைந்த தேனை உண்டாக்குகின்ற பூக்கள் சாதலை (சாவாமல்) நிலைநிறுத்தும் தெளிவை ஆராய்ந்தனபோல, கை களையைக் களையப் பற்றுந்தொறும் பற்றுந்தொறும் (அக்களை பறிக்கும்) தொழில் முட்டுப்படும் வண்ணம் ஒளிர்கின்ற கடைசியர் முகத்தைப் பூ எனக் கருதிப்பாய்வனவாம்.

(வி - ம்.) வீதல்-சாதல். தெளிவு-நூற்றெளிவு. தொழிலுளைய-தொழில் முட்டுப்பட. பூவென்று எனப் பொருள் கொள்வாருமுளர்.

இது மேலையணி, (௧0௭)

வயலிற் பாய்வன மாதர்வி ழிக்கயல்
வயலி ருங்கயல் வாண்முகம் பாய்வன

அலரிற் பாய்வன வாரள கத்தளி
அலரின் வண்டள கத்தலர் பாய்வன.

(இ-ள்.) கடைசியர்கள் கண்களாகிய கயன்மீன்கள் களைகளையும் தன்மையால் வயலிடத்துப் பாய்வனவாம். வயலின்கணுள்ள பெரிய கயன்மீன்கள் அப்பெண்களின் ஒளிபொருந்திய முகத்திற்பாய்வனவாம். இயற்கை மணம் நிறைந்த கூந்தலிலுள்ள வண்டுகள் அவ்வயலிலுள்ள பூக்களிற் பாய்வனவாம். பூக்களிலுள்ள வண்டுகள் கூந்தலின்கணுள்ள பூக்களிற் பாய்வனவாம். இது பரிவர்த்தனை யென்னுமணி. (௧0௬)

எள்ளுங் காற்கிரிந் தாங்களை ஞெண்டுபோம்
பள்ள நீரிற் பகட்டுவ ரால்புகும்
அள்ளல் கூர்ம மழுந்தும டர்த்தெறி
கள்ள வம்புயங் கங்கிற்க விழுமே.

(இ - ள்.) (தங்களை யொப்பில்லை யென்)றிகழும் அம்மள்ளப் பெண்களுடைய முழந்தாள், கணுக்கால், புறந்தாளாகிய இவைகளுக்குத் தோற்றோடினாற்போல நண்டுகள் வளையிற் செல்லும். ஆழமாகிய நீரில் பெரிய வராலினங்கள் மூழ்கும். சேற்றில் ஆமையமுந்தும். பறித்தெறிகின்ற தேன்களைத் தன்னிடத்தேயுடைய தாமரை மலர்கள் வரம்புகளிற் கவிழ்ந்துகிடக்கும்.

(வி - ம்.) எள்ளும் - தம்மையிகழும். ஈண்டுத் தம் என்றவை நண்டு, வரால், ஆமை, தாமரை முதலியனவாம். கால், முழந்தாள், கணுக்கால், புறங்கால்களை யென்க. அள்ளல் - சேறு. கள்ள - தேனைத்தன்னகத்துடைய. கங்கு - வரம்பு. அடர்ந்த - பறித்து, (௧0௭)

கமலஞ் செங்கழு நீரனிச் சங்கமழ்
குமுதம் வள்ளை கொடிவிடு சைவலம்
அமிழ்த மென்மொழி யாற்றுக்கா லாட்டியர்
தமது மெய்யினல் லாற்றளை யில்லையே.

(இ – ள்.) தாமரையும், செங்கழுநீரும், அனிச்சமும், மணம் வீசுகின்ற ஆம்பலும், வள்ளைக்கொடியும், கொடிப்பாசியுமாகிய இவைகள் அமிழ்தன்ன மெல்லிய சொற்களையுடைய கடைசியர்கள் சரீரத்தின்கணன்றி வயலினிடத்தில்லையென்க.

(வி - ம்.) தாமரை முதலியன கடைசியர்முகம், கால், கண், வாய், காது, கூந்தல் முதலியவற்றிற்குவமைப் பொருளாதல் காண்க. இவை களைக் களையாக வேறறக்களைந்தமையால் "தளையில்லை" என்றார். தளை - வயல். தளை : ஏழாம் வேற்றுமைத் தொகை. (௧0௮)

உறுப்பி னுக்கின மாயொளிர் யாவையும்
கறுத்த டர்த்த கடைசியர் புன்முதல்
இறுத்தெ றிந்தன ரீண்டினஞ் சாடுவோர்
வெறுத்தற் கஞ்சுவ ரேமற்றை வேற்றினம்.

(இ - ள்.) (தங்கள்) அவயவத்திற்கு இனமாகி விளங்குகின்ற தாமரை முதலிய மேற்கூறிய உவமைப் பொருள்கள் எல்லாவற்றையும் வெகுண்டு கொன்ற மள்ளப் பெண்கள் (அவ்வயலி)லுள்ள புல்முதலிய பொருள்களையும் கொன்றெறிந்தார்கள். இவ்வுலகத்தில் தம்இனத்தைக் கொள்கின்றவர் (தம்மினமல்லாத) வேற்றினத்தைக் கொல்வதற் கஞ்சுவரோ ? அஞ்சார் என்க.

(வி - ம்.) கறுத்து - கோபித்து "கறுப்புஞ் சிவப்பும் வெகுளிப் பொருள" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தானறிக. இறுத்து - கெடுத்து. மற்றை - இடைச்சொல், (க0க)

மதுநு கர்ச்சியின் வாண்முகஞ் சேந்தன
கதுவு நீரிற் கரங்கள்வி ளர்த்தன
செதுவ தட்டகு டிம்பயிர்க் கீத்தலாற்
புதுமை யிரோளி பூத்தன போன்றன.

(இ - ள்.) கள்நுகர்தலினால் (கடைசியர்) முகங்கள் சிவப்புற்றன. பற்றுகின்ற நீராற் கைகள் வெண்மை நிறமுற்றன. (கரமும் முகமும்) பயிரினுக்குக் (களையாகி) வருத்தத்தக்கனவற்றைக்கெடுத்து, நல்லபயிர்கட்கு அருளினையீதலால், புதுமையான அடுதலாலுளதாகிய பிரதாபமுமருளானுளதாகிய புகழும் இரண்டொளிகளும் உளவாதலை நிகர்த்தன.

(வி - ம்.) உலகத்துப் பகைவரைக் கொன்று தம்மையடுத்தவர்க்கு அருள் செய்வோரிடத்துப் புகழும் பிரதாபமும் சேறலியல்பு. இடையூறு இயகளையை அடுதலால் வீரமும், பயிருக்கு அருள் செய்தலாற் புகழுமாகிய இரண்டொளிகளாற் கரமும் முகமும் பொலிவன போன்றன என்க. புகழுக்கு வெண்ணிறமும், பிரதாபத்திற்குச் செந்நிறமும் கொள்க. இதனை, "தனது கீர்த்தியும் திறற்பிர தாபமும் தரைமேல் அனல்செய் கோபமும் முல்லையுமென எங்குமமைத்து" என்னும் காஞ்சிப்புராணச் செய்யுளானறிக. கதுவும் — பற்றும். ஈரொளி - வீரம்புகழ் இவற்றினொளி. பூத்தன - உண்டாவன. இதனைப் "பொருளற்றார் பூப்பர்" என்னும் குறளானுணர்க. செது - ஆகுபெயர். அது தீமையை யுணர்த்தல் "செதுமொழி சீத்தசெவி செறுவாக" என்னும், கலியானுணர்க. செது அது சுட்டு - தீமையாகிய அதனைத் தொலைத்து. தீம்பயிர்க்கு அருள் ஈத்தலால் எனக் கூட்டுக. (கஉ0)

அன்னத் தோடக நாணவொ துங்குபு
கின்ன ரத்தொகை யஞ்சக்கி ளந்துபோய்
நன்னர்த் தம்வயி னண்ணுவ ராபவே
முன்னிப் பண்ணை முழுக்களை கட்டுளார்.

(இ - ள்.) களை களையக்கருதி (வயல்களிற்சென்று) களைகளைந்தவராகிய கடைசியர்கள் அன்னக்கூட்டங்கள் தம் நடையினைக் கண்டு உள்ளத்தினிடத்து நாணமடைய மெத்தென நடந்தும், கின்னரப் பறவைகள் அஞ்சும் வண்ணம் உரையாடிச் சென்றும், அழகு பொருந்திய தம் இல்லங்களிற் சென்று பொருந்துவராவர்.

(வி - ம்.) தோடு - கூட்டம். "தோடுகொள் வேலித் தோற்றம் போல" என்றார் பிறரும். ஒதுங்குபு - நடந்து. இன்னரம் - ஒரு வகைப் பறவை. ஆப - முற்றுச் சொல். முழுக்களை - களையெல்லாம். எஞ்சாப் பொருளுணர்த்தி நின்றது; "முழுதென்கிளவி யெஞ்சாப் பொருட்டே" என்பது தொல்காப்பியச் சூத்திரமாதலான். (ககக)

தூறை யாட்டயர் வார்தொலை வெய்தலும்
பாறி னோர்படர்ந் தாங்குப் படுகளை
கோறல் செய்தவர் நீங்கலுங் கொம்மெனச்
சேற றுவயற் செற்றின புள்ளெலாம்.

(இ - ள்.) சூறையாடுதலைச் செய்பவர் (தாங் கருதியதைச் செய்து) நீங்க (இவர்களைக் கண்டஞ்சி) ஓடினோர் மீண்டு வந்தமைபோல உண்டாகிய களைகளைக் கட்டவராகிய கடைசியர் நீங்க விரைவாகப் பறவைகளெல்லாம் சேறு நீங்காத வயலினிடத்து நெருங்கின.

(வி - ம்.) சூறையாட்டயர்வார் - கொள்ளையிடுதல் செய்வார். பாறினோர் - ஓடினோர். கொம்மென - விரைவுக் குறிப்பு. செற்றின - நெருங்கின. (ககஉ)

கைகள் சீப்புக் களைதொழி னீவுதல்
நெய்க டிப்புன லாநில வுந்தலை
செய்க ளாகத் திருநில மங்கைதன்
மைக ருங்குழ லாவள ரும்பயிர்.

(இ - ள்.) (கடைசியர்கள்) கரங்கள் சீப்பாகவும், களைகட்டுந் தொழில் (தலையைக்) கோதுதலாகவும், வாசனை பொருந்திய நீர் எண்ணெயாகவும், விளங்குகின்ற தலைகள் வயல்களாகவும், நெற்பயிர்கள் அழகிய நில மடந்தையினுடைய கரிய கூந்தலாகவும் வளரும்.

(வி - ம்.) களை தொழில் - களை பறிக்குந்தொழில். நீவுதல் - தடவுதல். நெய் - எண்ணெய். மை - மேகம்.

இஃதுருவக அணி. (ககங)

ஒளிகண் மாய்ப்ப வொலிதெங்கு பூகதம்
துளிமை மாய்ப்பன வாழைதொ குங்கழை
வளியின் மண்டில மாய்ப்பன வென்றுதாம்
களிறு மாய்ப்பக் கதழ்ந்தெழும் பூம்பயிர்.

(இ - ள்.) தழைத்திருக்கின்றதெங்கும், கமுகமரங்களும், துளித் தலையுடைய மேகத்தினை மறைப்பன ஆகும். வாழை மரங்களும், கரும்புகளும், வாயுமண்டலத்தை மறைப்பனவாகுமென்று கருதி யானைகளை மறைப்ப வேகத்தோடு மேலெழுகின்ற பயிர்கள் தாம் சூரிய சந்திரர்களை மறைப்பனவாகும்.

(வி - ம்.) இது விற்பூட்டுப் பொருள்கோள். பயிர்கள் ஒளிகள் மாய்ப்ப எனக்கூட்டுக. மாய்தல்-மறைதல். "பகன்மாய்ந்தமாலை மணி

விளங்கக்காட்டி" சிலப்பதிகாரம் களுத்திறமுரைத்த காதையடிகளா னுணர்க. "களிறுமாய்க்கும் கதிர்க்கழனி" என்னும் மதுரைக் காஞ்சி யடியானுமுணர்க. (௧௧௭)

வேறு

எழுந்துவளர் பசும்பயிரின் றோற்றம் நோக்கி
யெமைப்பொதிந்து துவக்கியுடன் முழுதுஞ் சால
அழுந்திநனி கண்டூதி யாக்கு மீதென்
றஞ்சியிடை மடக்குவகை யகத்து நாடிச்
செழுஞ்சுவைத்தே னமிழ்தகிர ணங்க டம்மாற்
செறிகருப்பக் கனமுறுத்து வளரா நிற்கும்
விழுங்கியிருட் பிழம்புமுரஞ் சொலிகான் றெங்கும்
வெறிகஞற்றும் குமுதமகட் புணருஞ் செல்வன்.

(இ - ள்.) இருட்டிரட்சியினையுட்கொண்டு முதிர்ந்த ஒளியினைக் கக்கியும் எப்பக்கங்களினும் வாசனையை நிறைவிக்கும் ஆம்பலாகிய பெண்ணைக்கூடும் சந்திரன், வளர்ந்து எழுகின்ற பசிய பயிரின் காட்சியைக் கருதி எம்மை மூடிக்கட்டி, உடன்முழுதும் மிக அழுந்துதல் செய்து, மிகவும் தினவை யிப்பயிர் உண்டாக்குமென் றச்சமுற்று வளர்ச்சியுறாது இடையிலே மடக்குந் திறத்தை மனத்தி லாய்ந்து செழித்த சுவையையுடைய தெளிந்த அமிழ்த கிரணங்களாற் செறிந்த கருப்பம் ஆகிய பாரத்தையுறுவித்து வளராநிற்கும் என்க.

(வி - ம்.) சந்திர கிரணம் பயிர்களிற் படினல்லது அப்பயிர்கள் மணிபிடியாதென்க. துவக்கி - பந்தித்து, கண்டூதி - தினவு. உறுத்து - உறுவித்து. முரஞ்சொளி - முதிர்ந்த வொளி ; நிறைந்த வொளியென்க. "முரஞ்சன் முதிர்வே" யென்னும் தொல்காப்பியச் சூத்திரத்தானறிக. கஞற்றும் - நெருங்கும். செல்வன் - கதிர்ச்செல்வன், சந்திரன். (௧௧௮)

களபநெடு வாய்க்கினைக்கு மினங்கோ டென்னக்
கவவுமடல் கிழித்தெழுவெண் கதிர்க ளெல்லாம்
வளர்திறங்க ணகன்புடவி முழுது மான
வல்லவுண னெண்ணிறலம் வதியப் பெற்றங்
களவை யிடற்கரிய பிரான் வரத்தி னூற்றல்
அங்கநிறை புரோமமெல்லா மமரர் கோமான்
உளநடுங்க வயிரநுதி யீட்டி யாக்கி
யும்பர்பொதிர்த் தடநெடுகு மூக்க மானும்

(இ - ள்.) யானைக்கன்றின் வாயினின்றுந் தோன்றும் இளங் கொம்பென்று சொல்லும் வண்ணம் அகத்திட்ட மடலைக் கிழித்துக் கொண்டு எழுகின்ற வெண்மை நிறம் பொருந்திய கதிர்கள் யாவும் நீண்டு வளர்ந்த தன்மையானது இடமகன்ற உலகமுழுதும் தன்வடிவ மாகிய வலிய அவுணன் அளவிடமுடியாத திப்பிய தேசங்கள் தன்னிடத்தே தங்கப்பெற்று ஆண்டெழுந்தருளியிருக்கின்ற (காட்சி முதலிய) அளவைகளான் அளத்தற்கருமையாகிய சிவபெருமான் வரத்

தின் வல்லமையால் உடலின்கண் நிறைந்த உரோமங்களையெல்லாம் தேவர்கட்கிறைவனாகிய இந்திரன் உள்ளம் நடுங்கும் வண்ணம் கூர்மை பொருந்திய வயிர ஈட்டியாக்கித் தேவருலகத்தைத் துளைத்து வருத்த நீள்விக்கும் உயர்ச்சியை யொக்கும்.

(வி - ம்.) அவுணன் பெற்று ஆக்கிஅட நெடுகு மூக்கமானு மென முடிக்க. களபம் - யானைக்கன்று. கவவு - அகத்திடுதல். "கவ வகத்திடுதல்" என்னும் தொல்காப்பியச்சூத்திரத்தா னறிக. எண்ணில் தலம் - அளவிறந்த திருப்பதிகள், பொதிர்ந்து - துளைத்து, நெடுகும் - நீள்விக்கும், ஊக்கம் - உயர்ச்சி. புவிமுழுதும் அவுணனுதல் இராமா யணத்திற் காண்க. இஃது உவமையணி. (௧௧௬)

உடன்முழுதும் பலயோனி தழுவி யெண்ணி
 லொண்டொடியா ரோருருக்கொண் டிருந்தா லன்ன
அடர்பசும்பொ னுலகிறைவன் செய்தி கேளா
 வறியாது போர்முயன்ற மந்தோ வென்று
தடவுமனத் தெழுஞ்சமழ்ப்பா லொளிவே றுயத்
 தனிப்படைக டலையிறங்குந் தன்மை போலும்
மடல்கிழித்து விசும்பெழுந்த கதிர்க ளெல்லா
 மரகதத்தி னொளிதழைத்து வணங்குந் தோற்றம்.

(இ - ள்.) இதழைக் கிழித்து ஆகாயத்தினெழுந்த நெற்கதிர் களெல்லாம் மரகத மணியினொளிபோலும் பச்சொளி தழைக்கப் பெற்று (தலை) வணங்கும் காட்சியானது. அங்கமுற்றிலும் பல பெண் குறிகளைப் பொருந்தி அளவிட ஒண்ணாத ஒள்ளிய வளையலையணிந்த மாதர் ஒரு வடிவங் கொண்டிருந்தது போன்ற தோற்றத்தையுடைய நெருங்கிய பசும் பொன்னுலகத்திறைவனாகிய இந்திரன் செய்தியைக் கேட்டு (இவ்விறைவன் நிலைமை) அறியாது போரைத் தொடங்கினேம். ஐயோ வென்று கூறி மாறுபட்ட மனத்தின்கண் உண்டாகின்ற நாணத் தால் நிறம்வேறாகி (மேற்கூறிய) ஒப்பற்ற ஈட்டிப்படைகள் தலையை வணங்குகின்ற தன்மையை யொக்கும்.

(வி - ம்,) மடல் - நெற்பயிரின் தோடு. அன்ன இறைவனெனக் கூட்டுக. தடவு - மாறுபட்ட. "தடவென் கிளவி கோட்டமுஞ் செய் யும்" என்னும் தொல்காப்பியச்சூத்திரத்தா னறிக. சமழ்ப்பு - நாணம். "சான்றோர் சமழ்த்தன்ன" என்னும் நாலடியானுணர்க. படை - மேற் கூறிய ஈட்டி. நிறம்வேறுதல் - மேற்கூறிய வெள்ளொளி போய்ப் பச்சொளியாதல். கதிர் வெண்மையாத் தோன்றிப்பின் பச்சொளி யாதலை,

"ஈன்றெடுத்தோர் குணமகவுக் கியையுமுறைப் படிவித்திற்
றேன்றுமுளை முன்விளர்த்துப் பின்பசந்த தொடர்பினுல்
ஆன்றசெழுங் கதிர்களுமுன் றூவெள்ளை யாயெழுந்து,
மான்றுமர கதமேனி வாய்த்துமடல் கிழித்தெழுமால்"

எனும் காஞ்சிப்புராணச் செய்யுளானறிக. இஃது உவமையணி.

(௧௧௭)

மன்னுசிவஞ் சதாசிவனென் றுடலம் வெண்மை
　　வாய்ந்தீச னெனநீல வுருவர் பூண்டு
பின்னரரா னெனச்சிவந்த வடிவந் தாங்கும்
　　பெற்றிமைபோல் வித்துமுளை வெண்மை யாகி
நன்னர்மர கதவொளியின் பயிரா யோங்கி
　　நயந்ததற்பின் செம்பொனிற வயக்க மாண்ட
கொன்னும்விளை வாய்ப்பழுத்து நாளுந் தாழ்ந்த
　　குழவியயந் தவர்மணிப்பூண் கொங்கை யென்ன.

(இ - ள்.) என்றுஞ் நிலைபெற்ற சுத்த சிவம் (அனுக்கிரகம் செய்யுங்கால்) சதாசிவனென்று சொல்லப்பெற்று உடல் வெண்மை நிறம் வாயக்கப்பெற்று (திரோபவம் செய்யுங்கால்) மகேசனெனும் பெயரைப் பெற்று, நீல வடிவத்தை மேற்கொண்டு (சங்காரம் செய்யுங் கால்) அரனென்று சொல்லப்பெற்றுச் சிவந்த வடிவத்தை மேற்கொள்ளும் தன்மைபோல விதையிலுண்டாகு முளை வெண்ணிறமுடையன வாகி நல்ல மரகத இரத்தினத்தின் ஒளிபோலப் பயிராக ஓங்கி நன்மையைத் தந்து கதிர்கான்ற பின்னர் செம்பொன்னின் நிறம் போன்ற (ஒளியின்) விளக்கத்தால் மாண்புற்றன. மகவையீன்ற மகளிர், இரத்தினங்களழுத்திய ஆபரணமணிந்த தனங்களென்று சொல்லும் வண்ணம் பெருமை பொருந்திய விளைவுடைத்தாகிப் பழுத்து நாளும் தலை வணங்கினவாம்.

(வி - ம்.) சிவம், எழுவாய். வித்து, எழுவாய். மாண்ட — மாட்சிமையடைந்தன. முற்று. கொன் — பெருமை. வயக்கம் - விளக்கம். தாழ்ந்த — தலைவணங்கின. முற்று. வித்துமுளை மாண்டன தாழ்ந்தன என முடிக்க. இந்நூல் அகத்தியப்படலம் 437-ஆம் செய்யுளில் "தவள நிறம் கனகநிறம் சிந்தூர நீலம், தனுவிதய தேவர்முதல் நால்வர்க்கும் என்னும் பகுதியானறிக. (ககஅ)

பரவுசிவ ஞானமுண ரடியார் செங்கைப்
　　படுத்தபொருள் பெரும்பயனைப் பயக்கு மாபோல்
விரவுமுழ வர்களளித்த சிலகொண் டாற்ற
　　வியன்பணைகள் பெரும்பயனை விளைத்த சாலி
மரகதமேல் லுருத்தணந்து கவுர மேனி
　　வயங்கியறம் பற்பலவும் வளர்க்கு மாற்றால்
இரவு[1]வனங் கதிர்ச்சடிலக் குழகன் பாங்க
　　ரிருந்தருளு முமைமாதும் புரையு மன்றே.

(இ - ள்.) யாவரும் துதிக்கின்ற சிவஞானத்தை யுணர்ந்த அடியார்கள் செவ்விய கரங்களிற் பெய்த (தானப்) பொருள் (வீடு பேறு முதலிய) பெரிய பயனைக் கொடுக்குமாறுபோல, பெரிய வயல்கள், கலந்த உழவர்கள் (தம்பால் வித்திய) சில வித்தை யேற்றுக்கொண்டு

---

[1] வளர்கதிரென்றும் பாடம்.

மிகப் பெரும்பயனைக் விளைவித்த நெற்கள் மரகத மணி போன்ற மெல்லிய உருவம் நீங்கப் பொன்போன்ற மேனியோடு விளங்கிப் பல் அறங்களையும் வளர்க்கும் தன்மையால் இரவில் வளத்தைச் செய்கின்ற கதிரைச் சடையி லமைத்துள்ள சிவபெருமான் பாகத்தி லெழுந்தருளியிருக்கின்ற உமையம்மையாரையு மொக்கும்.

(வி - ம்.) விரவு - (வயலிற்) கலந்த; கவுரம் - பொன்னிறம்; உமையம்மையார் பொன்னிறம் பெற்ற கதை காஞ்சிப் புராணத்திற் காண்க. இரவு வளஞ்செய் கதிர் - சந்திரன்; உமைமாதும் என்ற உம்மை இறந்தது தழீஇயது. "சிவஞானமுணர்ந்தோர் கையிற்றானம்" என்னும் சிவஞான சித்திச் செய்யுளும், "தாஞ்சிறிதாயினும் தக்கார் கைப்பட்டக்கால், வான்சிறிதாப் போர்த்து விடும்" என்னும் நாலடிச் செய்யுளின் கருத்தையும் முதலடியிற் காண்க. ஆற்ற - மிக; இதுவும் மேலையணி. உழவர் அளித்த சில உதவிகளாவன; உழுதல், எருவிடல், களைகட்டல், நீர்கால்யாத்தல் என்பன. வளக்கதிர் இசை நோக்கி மெலிந்து நின்றது. (கககூ)

உடல்கருவி புவனமுறு போக மெல்லா
முடங்கியைந்துஞ் சிவன்றேற்ற மொன்றே காணும்
மடனகன்ற சீரடியார் நுகர்ச்சி யாது
மருவாமை யொழிந்துநிற்கும் வாய்மை யொப்ப
இடனகன்ற தலைகடோறும் விளைந்த சாலி
யிரும்புனல்வேண் டாமையொழி பருவ நோக்கித்
தடநெடுந்தோ ளுழவரெல்லா மண்மி யாத்த
தண்புனலைக் கவிழ்த்துணக்குந் தொழிற்க ணின்றார்.

(இ - ள்.) பாசத்தாலாகிய அறியாமை நீங்கிய சிவஞானச் செல்வர்களாகிய அடியார்கள் கன்ம நுகர்ச்சிக் கேதுவாகிய தனுகரண புவனங்கள் அனுபவிக்கும் போகங்களாகிய யாவும், ஒருசேரக் கூடியிருந்தும் அவற்றாலாகும் இன்பதுன்ப நுகர்ச்சியில் தாம் பொருந்தாது வேறாய் நிற்கும் உண்மைநிலைபோல, இடமகன்ற வயல்கடோறும் விளைந்த நெற்பயிர்கள் மிக்க நீரை விரும்பாமை நீங்குகின்ற பக்குவத்தைக் கருதிப் பெருமை பொருந்திய தோளையுடைய உழவர்கள் யாவரும் அணுகி வயல்களிற் கட்டிய குளிர்ச்சி பொருந்திய நீரை வடித்து (வெளியேற்றி) உலரச் செய்யும் தொழிற்கணின்றனர்.

(வி - ம்.) அண்மி - நெருங்கி; யாத்த - கட்டிய; உணக்கும் - உலர்த்தும்; புனல் வேண்டாமைக்கு நுகர்ச்சி மருவாமை உவமம். இதுவும் மேலையணி. (கஉ0)

வேறு

ஆக்கும் பொழுதாக் கியளித் துலகம்
போக்கும் பதநேர் தலும்போக் குமருள்
தேக்கும் பரநேர் விளைசெந் நெலெலாம்
தாக்கும் வகைகண் ணினர்சார் குவரால்.

(இ-ள்.) உலகத்தை உளவாக்குங்கால் உளவாக்கிக் காக்குங் காலத்துக் காத்து அழிக்கும் பருவம் நேர அழிக்கும் அருணிறைந்த பரசிவத்தை நேர விளைந்த செந்நெற்கதிர்களை அரியும்வகையைக் கருதினராகிச் சார்வார்கள்.

(வி-ம்.) ஆக்கும்பொழுதாக்கி என்றதற்கேற்ப அளிக்கும்பொழுது அளித்தெனக் கூட்டுக. பதம் - காலம்; நேர்தலும் - நேர; அருள்தேக்கும் பரம் - நிலங்கடந்தான் தாயதென்றாற்போல வானா பெயராக நின்றது. நேர் என்பதை நேர என வினையெச்சமாக்குக. தாக்கும் வகை - ஈண்டறியும் வகை. (கஉக)

தகவா யினுந்தா மனிசெய் தவென
முகநே ரெதிர்வுக் குளமுன் னலர்மற்
றுகவீழ் விளைவிம் பருறந் தெவரும்
இகவா வினிறுத் தனர்பின் னிடுவார்.

(இ-ள்.) உழவர்கள் யாவரும் (கதிர்களை யறுத்தல்) தகுதியாயினும் தங்களாற் காக்கப்பட்டனவென்று (அறுத்து) முகத்திற்கு நேரே பிடித்தற்கு உள்ளத்திற் கருதாதவராய் இவ்வயல்களிடத்து மிகச் சிந்த வீழ்கின்ற கதிர்களை அரிவாளால் அறுத்துப் பின்னே இடுவார்கள்.

(வி-ம்.) தகவாயினும் - அறுத்தல் தகுதியாயினும்: செய்த - செய்யப்பட்டன எனச் செயப்பாட்டு வினையாக்குக. முன்னலர் - கருதலராய்; முற்றெச்சம். மற்று : அசை. உகவீழ் விளைவு - சிந்த வீழ்கின்ற விளைவை என இரண்டாவது விரிக்க. இறுத்தனர் - இறுத்து, முற்றெச்சம். இக-முன்னிலையசை. இக-கெடவெனப் பொருளுரைப்பாருமுளர். உழவர் யாவரும் முன்னலராய் உகவீழ்ந்த விளைவை இவ்விடத்து மிகப் பின்னிடுவரென வினை முடிவு செய்க. கதிரை யறுத்துப் பின் போக்குதல் வழக்காறுதலின் முகநேரெதிர்வுக்குள முன்னலர் என்றார். உறந்து - உறவென என எச்சந் திரிந்துநின்றது. (கஉஉ)

விளைவைத் தடிவார் வளைமின் கமடம்
உளையக் கொலைசெய் தொருபா லிடுவார்
திளைநல் வினையார்க் கொருசெய் தொழிலில்
கிளைபல் பொருள்வாய்த் திடுகேண் மையவே.

(இ-ள்.) இன்பம் நுகர்தற்கேதுவாகிய ஆகூழுடையார்க்குச் செய்தொழிலொன்றினால் பலவாகக் கிளைக்கின்ற நற்பொருள்கள் வாய்க்கப்பெறு முறைமை யுலகிலுளவாதல்போல, நெற்கதிரையறுப்பார் சங்கும் மீனும் ஆமையுமாகிய இவைகள் வருந்தக்கோறலைச் செய்து ஒரு பக்கத்தே போடுவாரென்க.

(வி-ம்.) திளைத்தல்-அனுபவித்தல். நல்வினையார் - ஈண்டு ஆகூழுடையார். பலவாகக் கிளைக்கின்றபொருள்; கேண்மை - முறைமை; விளைவு - ஈண்டு நெற்கதிர். உளைய - வருந்த. (கஉக)

வயன்மீட் டுமெழுந் தமலர்ப் புதல்கள்
குயவாய் வினைவொ டுகுறைந் தனவால்

பயில்பங் கமளா யலர்பட் டவர்பால்
துயரே பலகாற் றுறுவிப் பர்களே.

(இ-ள்.) தங்கிய குற்றத்தோடு கலந்து அதனாற் பழிச்சொல்லை யடைந்தார்மாட்டு உலகினர் பலமுறையும் துன்பத்தையே இயைவிப் பார்கள். அதுபோல வயல்களிற் கட்ட பின்னர்த் தோன்றிய மாலோடு கூடிய புதர்கள் அரிவாளின் வாயிலுறுகின்ற நெற்கதிர்களோடும் அறுபட்டன.

(வி-ம்.) பங்கமளாவி யலர்படுதல் - நீரிற் றோன்றும் தாமரை முதலிய கொடிகளுக்குளவாதல் காண்க. பங்கம் - சேறு; குற்றம். அலர் - மலர், பழிச்சொல். துறுவித்தல் - சேர்த்தல். புல் — புதர், கொடிகளின் கூட்டம். குயம் - அரிவாள். (கஉச)

நிலையா யெழுகா லிருந்தார் நிகரும்
சிலைபோ லிருந்தே துயில்வார் சிவணும்
தலைதாழ் தருகாற் றடிவுற் றிடலும்
அலையாப் படைகொண் டவரோத் ததரோ.

(இ-ள்.) நெற்பயிரானது நிலைநின்றதாகி யெழுகின்ற காலத்து ஆதனத்தின்கண் இறுமாந்திருந்தாரை யொக்கும். (அப்பயிர் விளைந்து) தலைசாய்தரு காலத்து விற்போல வளைந்திருந்து உறங்குவாரை யொக்கும். (அப்பயிர் விளைந்து) அறுத்தல் செய்தபின்னர்க் கண்படை கொண்டவரை யொத்தது.

(வி-ம்.) தலைதாழ்தருகால் சிலைபோலிருந்தே துயில்வார் சிவணும் என மாற்றுக. அலையாப்படை — (பாயாவேங்கை என்றாற் போல) கண்படையை யுணர்த்திற்று. கண்படை - உறக்கம். இருந்தார் — ஆதனத்தின்கண் இறுமாந்திருந்தார். பயிர் : தோன்று எழுவாய்: பயிர் - சாதியொருமை. (கஉரு)

வேறு

குறைத்தபூங் கதிர்ச்சாலி கொடுபோந்து களனெங்கும்
செறித்திதனைப் பலவாற்றுற் செலுத்தறத்தி னுயிர்துறக்கம்
இறுப்பதுவேண் டாவிதனு னெய்துவா மெனவுளத்தின்
அறுத்தவர்போ லுழவரெல்லா மைதுநெடும் போரிடுவார்.

(இ-ள்.) அத் தொண்டை நாட்டிலுள்ள உழவர்களெல்லாம் அரிதலைச் செய்த பொலிவு பெற்ற நெற்கதிர்களைச் சுமை சுமையாகக் கொடுபோந்து களனெங்கும் நெருங்கச்செய்து இந்நெல்லினைப் பலவாறுகப் பயன்தரும்வண்ணம் செய்கின்ற அறப்பயனால் உயிர்கள் விண்ணுலகிற் சென்று தங்குவது வேண்டா; இந்நெற் போரானே அடைவோமென்று உள்ளத்தின்கண் வரையறை செய்தவரைப்போல வியப்பைத் தருகின்ற போரைச் செய்வார்.

(வி-ம்.) இறுப்பது - தங்குவது; வேண்டா - ஐம்பால் மூவிடத்தும் புகுவது புகுதலாக வந்த எதிர்மறை வியங்கோள் வினைமுற்று, இதனை "பண்டைய மல்ல வேண்டா படுக்கவென் றாடிற் றன்றே!" என்

னும் சிந்தாமணிச் செய்யுளானறிக. அறுத்தவர் - நூன்முறையான் வரையறை செய்தவர். ஐ : வியப்பு, 'ஐ வியப்பாகும்' என்னும் தொல் காப்பியச் சூத்திரத்தா னறிக. து : சாரியை. (கஉசு)

விண்ணறுத்து மேக்கிவர்ந்தார் வியன்றுறக்கத் தவர்மகளிர்
அண்ணன்முலை முயக்கன்றி யறியாமை யெதிர்நோக்கிப்
பண்ணரிய தவந்தானப் பயப்பாட்டி னெடும்விளங்கும்
மண்ணகலா ரறிஞரென வல்லியவ னுருதிழிவார்.

(இ - ள்.) வானிலை இடைபோழ்ந்து அங்கெற்போரின் மேலே யேறிய உழவர்கள் அகன்ற வானத்துள்ள தேவர்கள், பெண்களின் பெருமை பொருந்திய தனமுயக்கத்தையல்லாமல் வேறொன்றையு மறியாமையை எதிரே கண்ணுற்று இணைவிழைச்சாகிய இழிந்த போக மொன்றேயன்றி வீடு பயத்தற் கேதுவாகிய செயல்கள் ஒன்றும் இன்மையா னன்றே செய்தற்கரிய தானம் தவமாகிய இவற்றின் பயன்படுதலோடு விளங்குகின்ற மண்ணுலக வாழ்க்கையை அறிவுடையார் நீங்காராகி மேற்கொண்டவர் என்று அவ்விண்ணுலகத்துப் பொருந்தாது விரைய (போரினின்றும்) இறங்குவார்.

(வி - ம்.) துறக்கத்தார் முயக்கன்றி வேறொன்றறியாமை நோக்கி விளங்கு மண்ணை அறிஞ ரகலாரென விழிவர் என வினைமுடிபு செய்க. இது தற்குறிப்பேற்ற அணி. (கஉஎ)

இவற்றின்வழி யிங்கேவரு மிவர்வரெனப் பலகோளும்
தவச்சிதர்ப்ப வைகலுறுந் ததைந்துரிஞ்ச் செலனோக்கிக்
கவர்ச்சியிமை யார்க்குறுத்தல் கடனன்று லெனக்கதிர்ப்போர்
அவற்றையெலாந் தணித்துழவ ருருந்தொடக்குக் கடாவிடுவார்.

(இ - ள்.) இங்கெற்போர்களின் வழியா மண்ணுலகின்கண் ணுள்ள யாவரும் விண்ணுலகினுக்கிவர்வரென்று கருதி ஒன்பான்கோள்களும் அப்போரினை மிகக் கெடுக்க நாடோறும் நெருங்கி யுராய்ந்து செல்லுதலைக் கண்ணுற்று உழவர்களும், தேவர்களுக்கு நஞ்செயலா வின்னலுறுத்தல் முறையன்றென்று கருதி நெற்போர்க ளெல்லாவற்றையும் கீழே தணியும்படி செய்து அருமையாகிய பிணையற்கடாக்களைச் சுற்றும்படி விடுவர்.

(வி - ம்.) தவ - மிக. சிதர்ப்ப - சிதைக்க. உரிஞுதல் - உராய்தல். கவற்சி - கவலுதல். தணித்து - கீழே தள்ளி. தொடக்குக் கடா - பிணையற் கடாக்கள். விடுதல் - ஈண்டுச் சுற்றச் செய்தல். இதுவும் மேலையணி. (கஉஅ)

தென்புலத்தார்க் கெதிர்முறைசெய் செயல்போலத் தென்றிசைக்கோன்
தன்பகட்டுக் கினமான தாங்கள்செய றக்கதென
முன்புவப விடஞக முன்னிவிளா வியவிண்டும்
இன்புறுக்குங் கதிர்த்துகைப்பி விடவேர்பு திரிந்தனவால்.

(இ - ள்.) தென்புலவாணருக்குச் (செய்யுஞ் செயல்களை) எதிர் முறையாகச் செய்கின்ற செயலினைப்போலத் தென்திசைக் இறைவனாகிய இயமனுடைய எருமைக் கடாவிற்கினமான தாங்களும் (எதிர்முறையாகச்) செய்தல் தகுதியென்று கருதி மள்ளர் வயலின்கண் இடப்பக்கமாகச் சுற்றிய கடாக்கள் இக்களத்திலும் யாவர்க்கும் இன்பத்தையெய்துவிக்கும் கதிரை மிதித்தலின், இடப்பக்கத்தே எழுந்து சுற்றின.

(வி - ம்.) எதிர்முறையாவது சிரார்த்த தருப்பண முதலிய கருமங்களில் தூபதீப நீர்வளாவுதல் முதலியவற்றை இடஞ்சுற்றுவது மரபு. வலது பக்கத்திலிருந்து மாட்டை யடித்தோட்டினால் வலது பக்கத்திலிருந்து அம்மாடுகள் இடது பக்கமாகத் திரும்புமென்க. ஏர்பு-எழுதல். "வலனேர்பு திரிதரு" என்ற திருமுருகாற்றுப்படை யடி இப்பொருள் தருதலை யறிக. வளாவிய - சுற்றிய. தென்புலத்தார் அயனாற் படைக்கப்பட்ட கடவுட்சாதி யென்பர் திருக்குறளுரையாசிரியர். (௧௧௯)

**செயற்றலைநின் றுழப்பவர்க டேக்கெறிவ ரெனுமொழிக்கண்**
**அயிர்ப்பதுமுண் டேதொடக்கி யடித்துகைப்பக் குலாலன்வினை**
**இயக்குதிகி ரியிற்பெயர்கா லிருங்கதிர்கௌ வுபுகுதட்டி**
**வயிற்றடக்கி யுடல்விக்கி மதப்பனவன் பகட்டினங்கள்.**

(இ - ள்.) வலிய எருமைக்கடாக்கள், தொழிலினிடத்து நிலை பெற்று அத்தொழிலான் வருந்துபவர்கள் உண்டு தெவிட்டுவரென்னு முதுமொழியிடத்து ஐயங் கோடலுமுளதோ? இல்லையென்க. (உழவர்கள் கடாக்களை) அடித்துச் செலுத்த அக்கடாக்கள், மண்வினைஞன் தொழில்காரணமாகச் சுற்றுகின்ற சக்கரத்தைப்போலச் சுற்றுகின்ற காலத்து மிக்க கதிர்களை வாயாற் கௌவி வாயுதப்பி வயிற்றின்கணடக்கி உடலைப் பெருக்கச் செய்து செருக்கடைவன.

(வி - ம்.) செயல் - தொழில். உழப்பவர் - தொழில்செயுங்கால் வருந்துவோர். தேக்கெறிதல் - உவட்டெடுத்தல். ஏகாரம் எதிர்மறை. குதட்டி - வாயுதப்பி. வீக்கி - விம்மி. மதப்பன - செருக்கடைவன. (௧௨0)

**சுற்றமெலாம் வேருக்கித் தொடர்ந்தவரை யோகிருத்தும்**
**நற்றவர்போல் வைப்பதடி நவைதுவரத் தணப்பித்துக்**
**கொற்றவனு தியர்க்களித்துக் குலாவியபண் டியிற்கொடுபோய்**
**முற்றநெடுங் கூடுதிலன் முதுகுனைய வுறுத்துவரால்.**

(இ - ள்.) (தனக்குக் கிளைகளாகிய) பெண்டு பிள்ளைகள் முதலிய சுற்றத்தாரை யெல்லாம் வேறாகச் செய்து (தம்மைப் பின்பற்றிய) மாணவர்களை யோகின்கண்ணே தங்கச் செய்யும் நல்ல தவத்தையுடைய சிவராஜ யோகிகளைப் போல வைக்கோலும் பதருமாகிய குற்றங்களை முற்ற நீங்கச்செய்து (ஆறிலொரு கூறரையன் முதலியோர்க்குக் கொடுத்து எஞ்சிய நெற்குவியலை) விளங்கிய பண்டியிற்கொண்டு சென்று முற்றத்தின்கண் நீண்ட நெற்கூட்டில் நிலத்தின் முதுகு வருந்தும்வண்ணம் தங்கச் செய்வார்கள் என்க.

(வி - ம்.) வையையும் பதடியையும் சுற்றமாகவும், நெல்லைக் கூட்டில் தங்கச் செய்தல் மாணவர்களை யோகிற் றங்கச் செய்தலாகவும்

சொன்க. துவர - முற்ற. " துவரத் துறவாமை" என்றவிடத்து இப்பொருட்டாதலை யறிக. வை - வைக்கோல். பதடி பதர். தணத்தல் - நீக்கல். கூடு - நெற்கூடு, குதிர் முதலியன. உறுத்தல் - தங்கச் செய்தல். இது தற்குறிப்பேற்றவணி. (கசுக)

வித்துணக்க லொருபாலாம் வெறுத்தவரி சனமிஞ்சித்
தொத்தெடுப்ப தொருபாலாஞ் சுவைக்கரும்பு தடிந்தாலை
வைத்தடுவ தொருபாலாம் வார்கமுகா தியிற்குலைத்த
கொத்திறுப்ப தொருபாலாங் குளிர்பணைத்தண் ணடைகடோறும்.

(இ - ள்.) குளிர்ச்சி பொருந்திய வயல்களையுடைய மருதநிலத் தூர்கடோறும் விதைநெற்களை யுலர்த்தல் ஒரு பகுதியினும் (ஒன்றிறோடொன்று) செறிந்த மஞ்சளும் இஞ்சியுமாகிய இவற்றின் கொத்துக்களை யெடுத்தல் ஒரு பகுதியினும். இனிய சுவையையுடைய கரும்பை வெட்டி இயந்திரங்களில் வைத்து (நெரித்துச் சாறுண்டாக்கி யதனைக்) காய்ச்சுவதொரு பகுதியினும். நீண்ட கமுகு முதலிய (புறக்காழுடைய வற்றிற்) குலைசெய்த (காய்க்) கொத்துக்களை அறுப்பதொரு பகுதியினும்.

(வி - ம்.) வெறுத்த - செறிந்த. " விறப்பும் வெறுப்பும் உறப்புஞ் செறிவே " என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தானறிக. அரிசனம் - மஞ்சள். தொத்து - கொத்து. ஆலை - இயந்திரம். குலைத்த-குலைசெய்த. இறுப்பது - அறுப்பது. தண்ணடை - மருதஞ்சாரூர். " தண்ணடை மருதஞ்சாரூர் " என்னும் நிகண்டானறிக. (கசுஉ)

மங்கலத்தின் பெருமகிழ்வும் வருபுனலாட் டயர்வியப்பும்
கொங்குயிர்த்த மலர்ச்சோலைக் குலாய்நுகருந் தனிநயப்பும்
திங்கடோறுந் தேவகுலச் சிறப்பெடுக்கு மிகுகளிப்பும்
பொங்குவன வூர்கடோறும் பொலிதருமாந் தருக்கெல்லாம்.

(இ - ள்.) அம்மருத நிலத்தூர்கடோறும் மக்களுக்கெல்லாம் மங்கலங் காரணமாக உளவாகிய பெரிய மகிழ்ச்சியும், ஓடுகின்ற புனலாட்டைப் பரத்தையரோடு புறநகரின்கட் சென்று செய்கின்றதனு லுளவாகிய இறும்பூதும், வாசனையை வெளியிடுகின்ற மலர்களையுடைய சோலைக்கட் பொருந்தி யின்பம் நுகருதல் காரணமாக உளவாகிய விருப்பமும், மாதங்கடோறும் தேவாலயங்களில் விழா எடுத்தலா லுளவாகிய மிக்க களிப்பும் பொலிவன.

(வி - ம்.) மங்கலம் - மணம். புனலாட்டு - பரத்தையரோடு புறநகரின்கட் சென்று புனலாடல். கொங்கு - வாசனை. குலாய்-பொருந்தி. நயப்பு - விருப்பம். திங்கள் - மாதம். தேவகுலம் - தேவாலயம். சிறப்பு - விழா. "சிறப்பொடு பூசனை" என்னுமிடத்து இப்பொருட்டாதலை யறிக. சோலைக்குலாய் நுகர்தல் - பொழினுகர்தல். (கசுங)

பரத்தைமையாற் கணவருடன் பாவையர்கள் புலந்தொழிக்கும்
வரத்தகலா மலதேனைக் கலாம்வருவ தறியாதங்.

கிரக்கலுறு வார்க்களித்து மிடருழப்பார்க் கிடர்துமித்தும்
புரக்கவிரங் குவதன்றிப் புகாதுயங்கி யிரங்குவதே.

(இ-ள்.) அவ்வூர்கள், பரத்தமை ஏதுவாக நாயகருடன் பது மையை யொத்த தலைவியர்கள், புலவியுற்று நீக்கும் மேன்மை பொருந் திய சிறுகலாம் அல்லாது, ஏனைய கலகங்கள் தோன்றலை யறியாதாம். இரக்கத் தொடங்கினவர்க்கு (அவர் வேண்டிய பொருளைக்) கொடுத்தும் துன்பத்தினை யனுபவிப்பவர்களுக்கு அத்துன்பத்தினைக் கெடுத்தும் காத் தற்கிரங்குவதன்றி வருந்தி யிரங்குவது அம்மருதநிலத்தார்களிற் புகாது.

(வி - ம்.) பரத்தமை - அயன்மை; அயலாரிடத்துச் செல்லுந் தன்மை. "பண்பில் காதலன் பரத்தமை நோனாது" என மணிமேகலை யிலும் வந்திருத்தல் காண்க. புலந்து - புலவிகொண்டு. சிறு கலாம் - பரத்தமையிற் பிரிந்தமை. பின்னரின்பம் விளைவிக்குமாதலால் 'கலா மென்னாது' வரத்தகலாம் என்றார். அங்கு - அம்மருதநிலத்தார்களில். துமித்தும் – கெடுத்தும். (௧௧௪)

தணந்துபரத் தையர்மாட்டுச் சார்காலு மூடலினும்
உணர்ந்துணர்த்தும் பாணியினு முலவாமை யெழுநினைவு
புணர்ந்ததன தியல்தெரித்தாற் போலமதன் கணையாகி
மணங்கமழ்பங் கயமலர்கண் மலிஇத்திகழுந் திணைமருதம்.

(இ - ள்.) தலைவியர்களை நீக்கிப் பரத்தையரிடத்துப் பொருந்து கின்ற காலத்தும், ஊடலினும், (அங்ஙனம் நிகழ்ந்த ஊடலை) யறிந்து தீர்க்கின்ற காலத்தும், கெடாமலெழுகின்ற நினைவைப் பொருந்திய தனதிலக்கணத்தைப் பிறர்க்குத் தெரிவித்தாற்போல மன்மதனுடைய அம்பாகி வாசனை பரிமளிக்கின்ற தாமரை மலர்கள் பொருந்தப்பெற்று விளங்கும் மருதத்திணை.

(வி - ம்.) ஊடலும் ஊடல்நிமித்தமும் மருதத்திற்கு உரிப்பொரு ளாதலின் நீங்குகின்ற காலத்தும், ஊடலைத் தீர்க்கின்ற காலத்தும் நினை வையுண்டாக்குகின்ற தன் தன்மையைப் பிறர்க்கறிவித்ததுபோல மன் மதன் கணையாகிய தாமரைப்பூக்களை யுடையது மருதநிலமென்க. தாமரை மலர் மதன் கணையாதலை "நினைக்குமரவிந்தம்" என்பதனு ணர்க. உணர்ந்துணர்த்தும்பாணி - ஊடலைத் தீர்க்கின்ற காலம். (௧௧௫)

நெய்தல்

வேறு

விருப்பின் மீன்கவர் வினைஞர் கோட்சுறு
மறுப்பி னுடலும் வருதன் மாண்புணர்ந்
தொருப்பட் டீர்ம்புன லும்பற் போற்றித்தம்
கருத்து வாய்ப்பது கருங்க டற்புரம்.

(இ - ள்.) விருப்பத்தினால் மீனை (வலையெறிந்து) கவர்கின்ற பர தர்கள் வலியினையுடைய சுறா மீனின் கொம்பினை நட்டு (நினைத்து) நாடாநிற்க (அவன் ஆண்டு) எழுந்தருளும் மாட்சியைக் கண்கூடாக அறிந்து (அந்த நெய்தல்நில மக்கள் யாவரும்) ஒற்றுமைப்பட்டு, கடற்

இறையாகிய அவ்வருணனைப் போற்றுதல் செய்து தங்களெண்ணங்க ளெல்லாம் வாய்க்கப்பெறுவது நெய்தல் நிலம்.

(வி - ம்.) சுறு மருப்பில் வருணனை நிறுவிநாடாநிற்க அவன் வரும் மாட்சியை யறிந்து தங்களெண்ணங்கள் வாய்க்கப்பெறுவது நெய்தனிலமெனக் கூட்டுக. கோள் - வலி; சுறுமருப்பின் நாடல் - சுறுவின் கொம்பை நட்டு வருணனை யதில் நிலவச்செய்து வழிபடல். இதனை, "சுறவமுண்மருப் பணங்கயர்வன கழிச்சூழல்" என்னும் பெரிய புராணச் செய்யுளானறிக. கடற்புறம் - கடலிடம். கருத்து - கருதப்படும் பொருள்களை யுணர்த்தலின் ஆகுபெயர்; உம்பன் - தேவன். 'ஓங்குவாவுடையும்பன்' எனும் பிரபுலிங்க லீலையடியா னுணர்க. (கஙக)

கிழக்கு மேற்கெனக் கெழுமச் செப்பலாற்
கிழக்கு மாதிரக் கிழவன் பண்ணைசூழ்
முழக்கு நீர்க்கடன் முதல்வ னெனது
வழக்கு மேற்றிசை வருணற் கென்பவே.

(இ - ள்.) (உலகத்தொருவன் கிழக்கெனக் கருதிக் கூறிய !அக்) கீழ்த்திசையே (அவனுக்குக் கிழக்கிலுள்ளானொருவன் அதனை) மேற்குத் திசையெனக் காண்டலளவைக்குப் பொருந்தக் கூறலான், கிழக்குத் திசையினுக்குரியவனாகிய இந்திரன் வாழுகின்ற மருதநிலத்தாற் சூழப் பட்ட முழக்கத்தைச் செய்கின்ற நீர் நிறைந்த கடலுக்குத் தலைவனாயது மேற்றிசைக் கிறைவனாகிய வருணனுக்கு வழக்காறுகும் என்று சொல் வார்கள் அறிந்தோர்கள்.

(வி - ம்.) கிழக்கையே மேற்கென இயைபுறக் கூறலால் கீழ்த் திசைக் கடலுக்கு மேற்றிசை வருணன் நாயகனானது முறையாமென்க. திக்குக்கள் நித்தமாய் வியாபகமாய் இருப்பினும் உபாதிவயத்தான் கிழக்கு மேற்கு முதலியவாகப் பாகுபாடு செய்யப்படுதலின் இஃதே கிழக்கென ஒருவராலும் வரையறை செய்ய இயலாதென்பார் "கிழக்கு மேற்கெனக் கெழுமச் செப்பலான்" என்றார். இனி யொருசாரார் கிழக்கு மேற்கென இயைபுறக் கூறலால் கீழ்த்திசைக் கடலுக்கு நாயக னானது வருணற்கு முறையாமென்பர்.

கிழக்கு இரண்டாவதன்றொகை. மாதிரம்-திசை. கிழவன்-ஈண்டு இந்திரன். பண்ணை - ஈண்டு மருதநிலம். வழக்கு - முறை. கடல் - நான் காவதன்றொகை. (கஙஎ)

புரையில் புன்னைகள் பூசை நீர்க்கடல்
அரையற் காற்றுவா னமைத்தல் போன்மெனத்
திரையொ துக்கிய தெய்வச் சங்கினுள்
விரைம துப்புனல் வியு குப்பன.

(இ - ள்.) (அந்நெய்தனிலத்து) குற்றமில்லாத (நெய்தனிலக் கருப்பொருளாகிய) புன்னை மரங்கள் பூசனையை நீரையுடைய கடலாகிய வரையனுக்குச் செய்யும்பொருட்டு அமைத்திருத்தல்போலுமென்று சொல்லும்வண்ணம் அலைகள் கரையோரங்களிலொதுக்கிய தெய்வத்

தன்மைபொருந்திய சங்கினிடத்து வாசனையோடு கூடிய தேனுகிய நீரை யும் பூவையும் கொட்டுவன.

(வி - ம்.) கடலரையன் — கடலாகிய அரையன். இனி ஒருசாரார் வருணனென்பர். மதுப்புனல் - தேனுகிய நீர். வீ - மலர். இது தற் குறிப்பேற்றவணி. (கஅ)

பொய்ம்மை யண்ணல்பாற் புகன்ற தீங்கெலாம்
மைம்ம ணிக்கடல் வைக லும்படிந்
தம்ம நீக்குமா றடுத்த போன்றன
விம்மு தேமலர் விறந்த முண்டகம்.

(இ - ள்.) நறுமணம் நிறைந்த மலர்கள் செறிந்த தாமரை மரங்கள் பெருமை பொருந்திய சிவபெருமான் பக்கலில் (முன்னர்) முடி கண்டே னென்று கூறிய பொய்யானுளவாகிய குற்றங்களை யெல்லாம் நீலமணி போலும் நிறத்தினையுடைய கடலின்கண் நாடோறும் மூழ்கி (அக்குற் றங்களையெல்லாம்) நீக்கும்வண்ணம் அடுத்தன போன்றன.

(வி - ம்.) பொய்ம்மை - பொய்; அண்ணல் — ஈண்டுச் சிவபெரு மான்: தீங்கு — தீங்கு பயத்தற்கேதுவாய குற்றங்கள். மைம்மணி நீல- மணி. அம்ம - இடைச்சொல். விறந்த - செறிந்த. முண்டகம் - தாமரை. இதனை " முண்டகம் தாமரை கள்ளு முளரி " என்னும் நிகண்டானறிக. இது மேலையணி. (ககூ)

தடித்தெ ழுந்தொறுந் தாமரை பூப்பன
அடுத்த தண்கட லண்மி நீர்முகில்
எடுத்த செல்வமற் றிஃதெ னுவுளம்
மடுத்த காதலின் மகிழ்ச்சி கொண்டென.

(இ - ள்.) தாமரைமரங்கள் அண்மியிருக்கின்ற குளிர்ச்சிபொருந் திய கடலைப் பொருந்தி நீரையுட்கொள்ளு மேகங்கள் நீரோடு கைக் கொண்ட செல்வம் இஃதாமென்று உள்ளத்தின்கணிறைந்த அன்பினுல் மகிழ்ச்சிகொண்டாற்போல மின்னலுண்டாகுந்தோறும் பூத்தலைச் செய் வன.

(வி - ம்.) தடித்து — மின்னல்; மின்னலைக் கண்டவுடன் தாமரை பூப்பதியல்பு; இதனை, "மின்பொ ருட்டினுற் கேதகை மலர்ந்திடும் விளங்கும், என்பொ ருட்டினுல் மாமழை சொரிந்திடு மீட்டும், பொன்பொ ருட்டினுல் யாவுமுண் டாமது போல, உன்பொ ருட்டினு லவுணர்க்கு மேன்மைய துளதாம் " (மாயைப் - எ.) என்னும் கந்தபுரா ணச் செய்யுளானறிக. செல்வமென்றது மின்னை. தாம அண்மிய விடத்திலுள்ள செல்வத்தைப் பிறர் கொள்ள உவத்தல் மேலோர்க் கியல்பாகலின் அதுபோல மேகங்கள் கடலையண்மி நீரோடு கொண்டு சென்ற செல்வமிஃதாமென எண்ணி மின்னலைக் கண்டவுடன் தாமரை கள் பூத்தல் மகிழ்தலை யொத்திருந்தன என்க. கொண்டென - கொண் டாற்போல. தாமரையாகிய தாமடுத்திருக்கும்படியான கடல். நீரை முகத்தலானிம் மின்னலுளதாய தென்க. (கஉ)

தாழை பூவொடு தழைந்த முன்னெலாம்
ஞாழல் வீத்திர ணன்று குப்பன
வாழி வாளொடு வளைந்த கள்வர்முன்
வீழ ணித்தொகை வீசு வாரென.

(இ - ள்.) வாளாயுதத்தோடு (தம்மெதிர்வந்த) கள்வருக்கெதிரே தாங்கள் விரும்பி யணிந்திருந்த அணிகலன்களின் தொகுதியினை வீசுகின்றவர்களைப்போலத் தாழைமரங்கள் பூக்களோடு நெருங்கியுள்ள முன்னிடங்களில் நெய்தனிலக் கருப்பொருளாகிய ஞாழலென்னுமொருவகை மரம் நன்றாகப் பூத்திரளைச் சொரிவன.

(வி - ம்.) தாழை பூவோடு நிற்றல் வாளொடு நிற்கும் கள்வருக்கும் ஞாழன்மரம் பூவைச் சொரிதல் அணிசிந்துவாருக்கும் உவமையாகக் கொள்க. ஞாழல் - நெய்தனிலத்துக்குரிய ஒருவகை மரம். இதன் பூ பொன்னிறமாக இருக்கும். குங்கும மரமென்பாரும் உளர். வாழி - அசை; வீழ் - விரும்புகின்ற. அணித்தொகை - அணிகலன்களின் கூட்டம். (௧௭௪)

கலவி னார்பழி கரக்கு மேதைபோற்
குலவு நாகமுங் கொங்கு ஞாழலும்
நிலவு கைதையு நெய்த லுங்கடற்
புலவ றக்கடி போர்ப்ப வெங்கணும்.

(இ - ள்.) தம்மொடு கலந்தவர் பழிச்சொற்களை மறைக்கும் அறிவுடையாரைப்போல விளங்குகின்ற புன்னைமரங்களும் வாசனையோடு கூடிய ஞாழன்மரமும், பொருந்திய தாழைமரங்களும், நெய்தற்கொடிகளுமாகிய இவைகள் பூவைச் சொரிந்து கடலிலுளவாகிய புலால்நாற்றம் நீங்க எவ்விடத்தும் வாசனையால் மூடுவன.

(வி - ம்.) கலவினார் - கலந்தவர்; நட்புக்கொண்டவர். கடி - வாசனை. போர்ப்ப - மூடுவன. புலவு - புலால் நாற்றம். (௧௭௫)

இழிவு ளாருளு மேற்ப வர்க்கெலாம்
அழிவி லாவர மருளு வாருளர்
கழிபு லாற்கருங் கடல கன்றுறை
முழுகு வோரைவான் முன்னு விக்குமே.

(இ - ள்.) இறைமைக் குணமின்றி இழிவுள்ளனவாகிய (செத்துப் பிறக்கின்ற புன்சிறு) தெய்வங்களுள்ளும் தம்மைத் தலைவனாகக் கருதி வந்து இரப்பவர் எல்லாருக்கும் கெடாத வரத்தினை அளித்தல்செய்வாரும் உளர். அதுபோல மிக்க புலால் நாற்றத்தையுடைய கரிய கடலானது, தனது பெரிய துறைக்கண்ணே (அர்த்தோதயம் மகோதயம் முதலிய புண்ணிய காலங்களில்வந்து) நீராடுபவரை விண்ணுலகத்திற் சேர்க்கும்.

(வி - ம்.) இழிவுளார் - செத்துப் பிறக்கின்ற புன்சிறு தெய்வங்கள். முன்னுவித்தல் - சேர்த்தல். (௧௭௬)

தெள்ளி யோர்ப்பொருஞ் செயற்கு விஞ்சுற
உள்ளு வான்பொரு ளுதவு பூங்கடல்
தொள்ளை யோர்ப்பொருந் தொடுதற் கேற்புற
அள்ளு நீரெழு மார்வக் கேணிகள்.

(இ - ள்.) நெய்தனிலமாக்கள் முத்து பவள முதலிய பொருள்களை மூழ்கி எடுக்குந் தொழிலுக்கு மிகுதியாக யாவரும் விரும்பத்தக்க உயரிய பொருள்களை அவர்களுக்குக் கொடுக்கின்ற பொலிவுபெற்ற கடல் (பல நூல்களையும் நுனித்தறிந்த) தெளிவுடையாரை ஒக்கும். தோண்டிய அளவுக்கு இயைய மொள்ளத்தக்க நீர் மேலெழுந்தூறுகின்ற விருப்பத்தையுடைய கேணிகள் கீழோரை ஒக்கும்.

(வி - ம்.) செயல் : முத்தெடுக்கும்பொருட்டு மூழ்குகின்ற செய்கை. விஞ்சுற - மிகுதியாக. உள்ளுதல் - விரும்புதல். 'உள்ளத்தான் உள்ளலும்' என்னும் குறளானறிக. வான்பொருள் - முத்து பவளம் முதலிய பொருள்கள். தொள்ளையோர் – கீழோர். கடல்பொரும், கேணிகள் பொரும் என முடிக்க. " தொட்டனைத்தூறு மணற்கேணி " என்னும் திருக்குறளின் கருத்து தொடுதற்கேற்புற " அள்ளுநீரெழுமார்வக் கேணிகள் " என்னும் பகுதியில் அமைந்திருத்தலைக் காண்க. கீழோர், பிறர் முயற்சியளவினதாகிய பயனையே அளிப்பர். தெள்ளியோர் பிறர் முயற்சி சிறிதாயினும் பெரும்பயன் அளிப்பரென்பது தெளிவாம். இது தற்குறிப்பேற்றவணி. (கசச)

கருவு யிர்ப்பன கங்கு டிப்பன
மருவி னத்தினை வாய்ம டுப்பன
உருகு நோக்கினு ளுவப்ப மீன்குலம்
உருவ மாதிக ளுறழ்வ காட்டுமே.

(இ- ள்.) (தம்மாலீனப்பட்டவை இன்னவை என்று தெரிந்து கொள்ளும்பொருட்டுத் தாமீன்ற) முட்டைகளை மோப்பனவும் (அங்ஙனமோர்ந்தறிந்துகொண்டபின்னர் அம்முட்டையீன்ற சோகம் தீர்தற் பொருட்டு) நீரைக் குடிப்பனவும் (தம்முடன்) பொருந்தும் சிறுமீன்களாகிய) இனத்தினையுண்பனவும் (தாமீன்ற முட்டைகள் வெடிக்கப் பின் அவற்றினின்றும் குஞ்சுகள் உண்டாகி யுய்யும்பொருட்டு கெஞ்சு) உருகுதற்கு ஏதுவாகிய கட்பார்வையால் மகிழ்வனவும் (ஆகிய) மீன் கூட்டங்கள் உருவவிரசகந்தம் (கந்தவிரசவுருவமாகத் தம்மிடத்துத் தங்கிமுறாய்) மாறிநிற்பனவற்றைக் காட்டாநிற்கும். ஏ : அசை.

(வி - ம்.) மீன்குலம் காட்டும் என முடிக்க. உருகும் என்பது காரியத்தின் கண்வந்த பெயரெச்சம்; அது நோக்கு என்னும் காரணப்பெயர் கொண்டது. பஞ்சபூதங்களில் ஆகாயமாகிய மூல பூதத்தினின்று வாயுவும், அவ்வாயுவினின்று தேயுவும், தேயுவினின்று அப்பும், அவ்வப்புவினின்று பிருதிவியும் தோன்றி ஆகாயம், வாயு, தேயு, அப்பு, பிருதிவி எனத் தோற்றமுறையாக இருக்கும் ஐம்பூதங்களின் குணங்களையெடுத்து முறைப்படுத்துங்கால் தோற்றமுறைமை யொழித்து, காரியத்திலும் காரணம் சிறந்தமையின் காரியத்தின்முன்னரே காரணம் வைத்தல் மரபாம். அது கருதி மூலபூதமாகிய ஆகாயமானது வாயுவா

கிய காரியத்திற்குத்தான் காரணமாயிருத்தலின் அவ்வாகாய குணமாகிய சத்தத்தை முன்னும், வாயுகுணமாகிய பரிசத்தை அதன்பின்னும் வாயுவானது தேயுவாகிய காரியத்திற்குத்தான் காரணமாயிருத்தலின் அவ்வாயுகுணமாகிய பரிச காரணத்தைத் தேயுகுணமாகிய ரூபகாரியத்தின் முன்னும், ரூபகுணமாகிய காரியத்தை அதன் பின்னும் தேயுவானது அப்புவாகிய காரியத்திற்குத்தான் காரணமாயிருத்தலின் அத்தேயுகுணமாகிய ரூபகாரணத்தை அப்புகுணமாகிய இரசகாரியத்தின் முன்னும் இரசகுணமாகிய காரியத்தை அதன்பின்னும் அப்புவானது பிருதிவியாகிய காரியத்திற்குத்தான் காரணமாயிருத்தலின் அவ்வப்புகுணமாகிய இரசகாரணத்தைப் பிருதிவிகுணமாகிய கந்தகாரியத்திற்குமுன்னும் கந்தகாரியத்தை அதன்பின்னும் ஒடுக்கமுறையாக முறைப்படவைத்து சப்தபரிச ரூபரசகந்தங்களென ஆன்றோர்கள் எண்ணுவாராயினர். இங்ஙனம் கூடிய ஐங்குணங்களில் இரசகந்த குணங்களிரண்டினைக்காட்டிலும் ரூபகுணமுற்படும் அவ்ரூபகுணத்திற்கு இரசகுணம் பிற்படும் கந்தகுணம் இவ்விரசகுணத்திற்குப் பிற்படும் நிற்றலால் ரூபரசகந்தமென முறைப்பட்டு நிற்கற்பாலவை, மீன்குலங்களிடத்து முட்டைகளையீன்று அம்முட்டைகளை மோந்தறியும் கந்தகுணம் முற்படும், கங்குடித்தலும் இனத்தினை வாய்மடுத்தலும் ஆகிய இரசகுணம் முட்டைகளையீன்று மோந்தறிந்தபின் நிகழ்வதாகலின் அதனிற்பிற்படும் அவ்விரசகுணம் நிகழ்ந்தபின்னரே முட்டைகளை நோக்கினால் கண்டுவக்கும் உருவகுணம் நிகழ்வதாகலின் அதனிற்பிற்படும் நிற்றல் காண்க. இம்முறைக்கியைய கந்தரசரூபமென முறைப்பட்டுத் தலைகீழாம் மாறிநிற்குந்தன்மை மீன்குலங்களின்மாட்டுக் காணக்கிடத்தலின் “ மீன்குலம், உருவமாதிகள் உறழ்வ காட்டுமே ” என்றார்.

இனி, மீன்குலங்களிடத்தமைந்திருக்கும் இங்ஙனமாய ரூபரச கந்தங்கள் ஏனையுயிர்கள்மாட்டின்றி இம்மீன்குலங்களிடத்திலேயே அமையப்பெற்று அவ்வுயிர்களினும் வேறுபட்டிருக்குந் தன்மையுடையனவாகையால் “ மீன்குலம் உருவமாதிகள் உறழ்வ காட்டுமே ” என்றாரெனினு மமையும்.

தாமீன்ற முட்டைகள் ஏனைய மீன்களீன்ற முட்டைகளோடு கலக்க அவற்றுள் தம்முடையன இன்னவையென மோந்தறியும், கந்தகுணமும், தாம் வசித்தற்கிடமாகிய நீரையே குடித்து இனத்தையும் உண்ணும் இரசகுணமும், முட்டைகள் வெடித்துக் குஞ்சுகளுண்டாயுய்வதற்குக் காரணமாகப் பார்க்கும் ரூபகுணமும் மீன்குலங்களுக்கேயன்றி ஏனைய உயிர்கள்மாட்டு அமையாதிருத்தல் ஈண்டு நோக்கத்தக்கது.

(சஉ)

இப்பி வாலிடம் புரிவ லம்புரி
தப்ப ருஞ்சலஞ் சலங்கள் பன்முறை
பப்பின் முற்றிய பாஞ்ச சன்னியம்
எப்ப ரிசனத் திறைவ னெக்குமே.

(இ - ள்.) இப்பியும், வெள்ளிய இடம்புரிச் சங்கமும், வலம்புரிச் சங்கமும், நீங்குதற்கரிய சலஞ்சலங்களும் தன்னைச் சுற்றிப் பலமுறையாகப் பரத்தலால் வளைதலைத் தன்னிடத்துக்கொண்ட பாஞ்சசந்நியமானது எவ்வகையான பரிசனங்களையுமுடைய அரசனை ஒக்கும்.

(வி - ம்.) பப்பு - பரப்பு. 'பப்பென்ப பரப்போ டொப்பாம்' என்னும் நிகண்டாலறிக. முற்றிய - விளைந்த. எப்பரிசனத்திறைவன் - அகப்பரிசாரம் புறப்பரிசாரம் ஆகிய எவ்வகைப் பரிசனங்களையுமுடைய அரசன். எப்பரிசனம் - எல்லாப் பரிசனம். இப்பொருட்டாதலை 'எவ்வெல்லாத் திசையெலா மீண்டிக் காரொடு பவ்வரின் றியம்புறும் பான்மைத் தாயவே' என்னும் சிந்தாமணிச் செய்யுளானறிக. இங்ஙனம் சங்கினங்கள் ஒன்றினையொன்று சுற்றியிருத்தலை,

'இப்பியா யிரமே சூழ்ந்த திடம்புரி யென்று கூறும்
ஒப்பில்சங் காயி ரஞ்சூ ழுறுவலம் புரியென் றோதும்
அப்படி யதுவுஞ் சூழ்ந்த சலஞ்சல மாகு மற்றைத்
தப்பிலாச் சலஞ்ச லங்கள் சார்ந்தது பாஞ்ச சன்னியம்'

எனச் சூடாமணி நிகண்டிற் கூறியிருத்தலா னறிக. (கசகூ)

விலங்கித் தாந்திரை விரைந்து வேறுபல்
புலங்க ளிற்பொருள் போக்கி யேற்றுலாம்
கலங்கள் காழ்வினை கழிப்பி னூர்ந்துசெல்
அலங்க லாக்கையி னுவி போன்றன.

(இ - ள்.) குறுக்கிட்டுத் தாவுகின்ற அலைகளையுடைய கடலின்கண் விரைந்து பலவேறாகிய அயனாடுகளில் தாம் ஏற்றிக் கொணர்ந்த பொருள்களை மாற்றி ஆண்டுள்ள பொருள்களை யேற்றிக்கொண்டு இயங்குகின்ற மரக்கலங்கள், முதிர்ந்த ஒருவினை நீக்கத்தின்கண் ஆகாமியம் ஏறப்பெற்றுச் செல்கின்ற விளங்குகின்ற யாக்கையின்கண்ணுள்ள உயிர்களை யொத்தன.

(வி - ம்.) விலங்குதல் - குறுக்கிடுதல். தாம் இடைக்குறை. திரை ஆகுபெயர். வினைகழிப்பு - வினைநீக்கம். ஊர்ந்து - ஆகாமியம் ஏறப்பெற்று. விரைந்துலாம் கலங்கள் எனவும் ஊர்ந்துசெல் ஆவி எனவும் வினை முடிவு செய்க. (கசஎ)

துப்பு நித்திலத் தொகைகள் சங்கினம்
உப்பு மீனமு முயர்த்த வாடவர்
மைப்பெ ருங்கணார் விலையின் மாற்றுவ
ஒப்பின் றெப்பன வுருவு போலவே.

(இ - ள்.) நெய்தனிலத் தலைவர்கள் (தங்கள் தலைவிமாருடைய அவயவங்களுக்கு ஒப்பாவன எனக் கருதி) பவளத்திரளையும், முத்துக்களையும், கூட்டங்கொண்ட சங்கினங்களையும், உப்புகின்ற மீன்களையும் உயர்த்தாரிப்ப, அவைகள், மை தீட்டிய பெரிய கண்களையுடைய அத்தலைவியரால் தங்கள் வடிவம்போல ஒப்பில்லாமல் ஒத்திருப்பன என்று கருதி விலைப்பொருள்களுக்கு மாற்றப்படுவன.

(வி - ம்.) ஆடவர்கள் பெண்களுடைய அவயவங்களுக்கு ஒப்பென்று குவிக்க அப்பெண்கள் தம் அவயவத்திற்கு ஒப்பல்லவென்று அவற்றை மாற்றுவார்கள். உப்புமீனம் - உப்பிய மீனம். தங்கள் வடி

வோடு ஒப்புமையின்றி ஒப்பாவன உவையெனக் கருதி மாற்றுவார்கள். என்று என்பது சொல்லெச்சம். ஒப்பலொப்பு இஃதென்பதனைத் தொல்காப்பியச் சொல்லதிகாரம் ௭௪-ஆம் சூத்திரத்தா னறிக. (௧௪௮)

சீரி யோர்பலி [1]தேடி யோக்குமக்
காரி யிதுணக் கடனன் றாலென
ஆர வண்முதோ றகல வோப்புவார்
ஈர மீனுணக் கேந்து கொங்கையார்.

(இ - ள்.) நெய்தனிலத்தின்கண் ஈரித்த மீனினை உணக்குகின்ற தலைநிமிர்ந்த முலைகளையுடைய பரத்தியர், பெரியோர்கள் சோற்றைத் தேடியழைத்துக் கொடுக்கும் அத்தகுதியுடைய காக்கைகள் (புலால்நாற்றம் பொருந்திய இம்மீனினை உண்ணல் முறையன்று என்று கருதி உண்ண அணுகுந்தோறும் சேய்மைக்கட்செல்ல ஓட்டுவர்.

(வி - ம்.) சிரியோர் – பெரியோர். பலி - காகப்பலியாகிய சோறு. தேடியோக்கல் - அழைத்துத் தருதல். காரி – காக்கை. அண்முதோறும் என்பது கடைக்குறைந்துநின்றது. ஈரமீன் - அப்பொழுது பிடித்துலர்ந்த ஈரித்த மீன். (௧௪௯)

நீங்கு காதலர் நீண்ட தேர்வழி
பாங்கின் மாதரார் பார்த்தங் காற்றுதல்
தேங்கு நீர்க்கட றெரிந்து கட்பகை
தூங்கி நீருகத் தூர்க்க முன்னுமே.

(இ-ள்) குறியிடத்துக் கூடிநீங்குகின்ற தலைவருடைய தேர் சென்ற நீண்ட வழியை அழகினையுடைய பெண்கள் கண்டு தம் மனத்தைத் தாமே யாற்றிக்கொள்ளுந் தன்மையை, நிறைந்த நீரோடுகூடிய கடலானது அறிந்து கண்ணாகிய பகை தாழ்ந்து நீரைச் சொரியும்வண்ணம் அவ்வழியை அழிக்கக் கருதும்.

(வி - ம்.) பாங்கு - அழகு. ஆற்றுதல் - தம் மனத்தைத் தாமே ஆற்றியிருத்தல். கட்பகை - கண்ணாகிய பகை. கண்ணுக்குக் கடலை உவமையாகக் கோடலின் கட்பகையென்றார். தூங்கி – தாழ்ந்து. (௧௫௦)

துணைவ னீங்கினார் தொழுதிப் புன்னொடும்
அணையும் வண்டொடு மலையு மீனொடும்
புணரு மின்னலிற் புலம்பன் மேயினார்
உணர்வித் தன்னவற் றுரைகொள் வாரென.

(இ - ள்.) கூட்டமாகிய புள்ளினங்களோடும் (தங்கள் முகத்தை மலரெனக் கருதி யாண்டுப்) பொருந்திய வண்டினங்களோடும், (இரையைக் கருதி யாங்காங்கலைந்து திரிகின்ற) மீனினங்களோடும், தம் உயிர்த்துணைவராகிய தலைவரைப் பிரிந்த தலைவியர்கள் (அப்பிரிவு காரணமாகத்) தம்மை வந்தடைந்த துன்பத்தினின்றும் நீங்க (அத்துன்பத்தைப் பறவை வண்டு மீன் முதலியவைகளுக்கு) அறிவித்து (அத்துன்

[1]தேடியேர்க்கு, தேடியேற்கு என்பதும் பாடம்.

பத்தை நீக்கும் வாயிலாக) அவைகள் கூறுகின்ற வார்த்தையை ஏற்றுக் கொள்பவர்களைப்போலப் புலம்புதலைப் பொருந்தினார்.

(வி - ம்.) தலைவரைப் பிரிந்த தலைவியர் கேளாதனவற்றைத் தம்மைப் புணர்ந்த துன்பங்காரணமாகக் கேட்பனவாக வைத்து இன்னலைக் கூறினரென்க. இதனுள் 'கேட்குநபோலவும் கிளக்குநபோலவும்' என்னும் நன்னூற் சூத்திரக் கருத்தமைந்திருத்தலை நோக்குக. (கஅச)

சாத லன்னதோர் தளர்வு செய்தம
நீதி காட்டிய நிகரில் பூங்கழைக்
கோதை வார்சிலைக் குமரன் கூர்ங்கணை
யாத லிலமங் கணிந்த நெய்தலே.

(இ - ள்.) இறத்தலுக்கொப்பாகிய இரங்கலும், இரங்கனிமித்தமுமாகிய தளர்வைச் செய்து தம்முடைய நீதிகளைப் பிறர்க்கறிவிக்க ஒப்பில்லாத பொலிவும்பெற்ற ஒழுங்கிணையுடைய நீண்ட வில்லோடு கூடிய மன்மதனது கூர்மைபொருந்திய அம்பாதலுடைய நீலோத்பல மலரை நெய்தனிலமானதணிந்தது.

(வி - ம்.) இரங்கலும், இரங்கனிமித்தமும் நெய்தற்குரிய பொருளாதலில், அதனைப் பிறர்க்கறிவிக்க மன்மதனம்பாதலுடைய நீலோத்பலத்தை நெய்தனிலமணிந்ததென்க. தம் + அ தம - ஆறும் வேற்றுமை. காட்டிய -'காட்ட. கோதை - ஒழுங்கு. கணையாதல்நீலம் - கணையாதலுடைய நீலமென்க. அணிந்ததென்னும் முற்றிறுதிதொக்கது. (கஅரு)

மன்னு நானில வரைப்பி னைந்திணை
சொன்ன வாறினிச் சொற்ற நானில
முன்னி யொன்றினோ டொன்று முற்றிய
அன்ன நீர்மையு மறைய நின்றதே.

(இ - ள்.) (இதுகாறும்) நிலைபெற்ற குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தலாகிய நான்குவகையாகிய நிலத்தின்கணுள்ள ஐந்திணைவளத்தைச் சொல்லியவாறாகும். இனி மேலே கூறிய நான்குவகை நிலங்களும் கருதி ஒன்றனோடொன்று கலந்த அத்தன்மையாகிய (திணைமயங்குதலாகிய) குணத்தையுஞ் சொல்ல நின்றது.

(வி - ம்.) முற்றிய - கலந்த. நீர்மை - குணம். (கஅசு)

திணைமயக்கம்

வேறு

வரைத்தி னைக்குர னுகர்கிளி கொல்லையின்
வளரிறுங் கினுக்கேக
நிரைத்த கொல்லையிற் சொன்னனுண் வாரண
நெடும்புனத் தினைக்கேகிப்

புரைத்த தாயினும் பெற்றது புல்லிதாப்
பெருததிற் புகலாமென்
றுரைத்தநன் மொழி புதுக்குறும் விம்மித
மோங்குவ தொருபாங்கர்.

(இ - ள்.) குறிஞ்சிநிலத்தின்கண் தினைக்கதிர்களை யுண்ணுகின்ற கிளிகள், முல்லைநிலத்தில் வளர்கின்ற சோளக்கதிரை யுண்ணச் செல்லாநிற்க, வரிசையாக அமைந்துள்ள முல்லைநிலத்தின்கண்ணுள்ள சோளத்தையுணவாகக் கொள்கின்ற கானங்கோழிகள், குறிஞ்சிநிலத்தின்கண்ணுள்ள தினைப்புனத்திற்குச் சென்று உயர்ந்த பொருளாக இருப்பினும் தானடைந்த பொருளை இழிந்த பொருளாகக் கருதித் தானடையாத பொருள்களில் விருப்பமதிகமாகுமென்று ஆன்றோர்கள் கூறிய நல்ல முதுமொழியைப் புதிதாகச் செய்கின்ற வியப்புயர்வது ஒரு பக்கத்துள்ளாகும்.

(வி - ம்.) இறுங்கு - சோளம். சொன்னல் - சோளம்: திசைச் சொல். வாரணம் - கானங்கோழி. புரைத்தது - உயர்ந்தது. புகல் - விருப்பம். பெருதது - பெருததாகிய பொருள். வினையாலணையும் பெயர். 'உரைத்த நன்மொழி' 'பெற்றது சிறிது பெருததிற் பெரிது பண்ணும், உற்ற ஆணவத்தின் செய்கை' எனவும், 'அரிது பெற்றிடினும் பெற்றதில் விருப்பமரு து' எனவும் ஆன்றோர்கள் கூறிய முதுமொழி. (கஙச)

மல்லன் மந்திரந் தளைத்தென முழைதொறு
மணிப்பணி யசைவற்று
முல்லைத் தீங்குழ லுகர்தர மானமா
முதிர்புதன் மயிர்யாப்பச்
செல்லுருதவ ணிற்றல்போற் றினையுணச்
செல்லுறு பதநோக்கிப்
பல்லி ணர்க்கோடி மாதவி நறுநிழற்
பயில்வது முளதாங்கண்.

(இ - ள்.) (ஓதுபவர்களுக்கு எல்லா) வளங்களையும் கொடுக்கின்ற மந்திரவலியாற் கட்டுண்டதென்று சொல்லும்வண்ணம் மலைக்குகை தோறும் மணிகளையுடைய பாம்பினங்கள் அசையாதுகிடந்து முல்லைநிலத்துள்ள ஆயர்களூதுகின்ற புல்லாங்குழலினிசையைச் செவியாற்பருக (முல்லைநிலத்தின்கண்ணுள்ள) கவரிமான்கள், முதிர்ந்த புதர்களில் மயிர் சிக்கிக்கொள்ளச் செல்லாதாண்டுநிற்றலைப்போல (குறிஞ்சிநிலத்தின்கணுள்ள) தினையை யருந்தச் செல்லுகின்ற காலத்தைக் கருதிப் பலவாகிய பூங்கொத்துக்களையுடைய கொடியோடுகூடிய குருக்கத்தியின் நல்ல நிழலின்கண் தங்குவதும் அவ்விடத்துள்ளது.

(வி - ம்.) மல்லல் - வளப்பம். 'மல்லல்வளனே' என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தா னறிக. தளைத்தல் - கட்டுதல். குழல் - குழலிசையை யுணர்த்தலின் ஆகுபெயர்; மானமா - கவரிமா. பதம் - காலம்.

நோக்கி - கருதி. பயில்வது - தங்குவது. மானமா, தன் மயிர் யாப்ப மேற்செல்லாதுநிற்றலைப்போலவே, இனியருந்தக் காலம் பார்த்துத் தங்குவதுமுள்ளதென முடிக்க. (கஎ0)

பூரி யோர்குழாஞ் சீரியர் சீரியோர்
பொதியிற்பூ ரியர்சேரில்
சேரு மவ்வவ ராகவே மதித்திடப்
படுவராற் செறிபண்ணை
வாரு நாகவல் லிகளுநராய்க் கறியென
மலைக்கறி யுடன்மேவும்
கூடும் வெள்ளிலை யுடனது வெனக்கறி
கூடுவ தொருபாங்கர்.

(இ - ள்.) (நற்குண நற்செய்கைகள் சிறிதுமிலவாகிய) கீழ் மக்கள் கூட்டுறவினையும், (நற்குண நற்செய்கைகள் நிறையப்பெற்ற) சான்றோருடைய கூட்டுறவினையும் முறையே சான்றோர் பொதியினும் கீழோர்கள் சேரினும் பொருந்தும் அவ்வக்குழுவினராகவே உலகத்தாரால் மதிக்கப்படுவர். (அதுபோல) பல வளங்களும் செறிந்த மருத நிலத்தின்கண் நேராக ஓடுகின்ற வெள்ளிலைக் கொடிகள் தம்மிடத்தினின்றும் பெயர்ந்து கண்டார் மிளகுக் கொடியெனக் கருதும்வண்ணம் குறிஞ்சி நிலத்துள்ள மிளகுக்கொடியுடன் பொருந்தும். மருதநிலத்திலுள்ள மிக்க வெள்ளிலைக்கொடிகளோடு அவ்வெள்ளிலைக் கொடியெனக் கருதும்வண்ணம் குறிஞ்சி நிலத்தின்கண்ணும் மிளகுக்கொடி பொருந்துவது ஒருபக்கத்துள்ளது.

(வி - ம்.) நிரனிறை. பூரியோர் - கீழோர். சீரியோர் - மேலோர். வாருதல் - நீடல். "வார்தல் போகல் ஒழுகல் மூன்றும், நேர்பும் நெடுமையும் செய்யும் பொருள" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தானறிக. நாகவல்லி - வெற்றிலை. கறி - மிளகுக்கொடி. (கஎக)

வேழ மென்றுதன் பெயர்கொளத் தகாதென
வெகுண்டகன் பணையண்மி
வேழம் யாவையும் வரைத்தலை வேழங்கள்
வித்துணப் பகடென்ன
வாழி தன்பெயர் கொண்டதென் னெனச்சினை
மதமலை வறங்கூர
வாழை யாதிகற் புகுந்திருங் கடாவடும்
வளப்புமா யிடைமல்கும்.

(இ - ள்.) குறிஞ்சி நிலத்துள்ள யானைகள் (மருதநிலத்துள்ள கரும்புகளானவை) தம் பெயர்களை வேழமெனக் கோடல் தகாதெனச் சிற்றங்கொண்டு அகன்ற மருதநிலத்தினை யணுகி ஆங்குள்ள கரும்பினங்களெல்லாவற்றையும் அழித்துண்ணா நிற்ப, மருதநிலத்தின்க

னுள்ள எருமைக்கடாக்கள், குறிஞ்சிநிலத்தின்கணுள்ள யானையினங்கள் பகடென்று தம்பெயரைக் கோடல் என்ன காரணமென்று சீற்றங்கொண்டு அம்மதமலையாகிய யானைகள் வற்கட மடைய மலையின்கட் சென்று மலைவாழை முதலியவற்றை அழிக்கும் அழகானது அவ்விடத்து நிறைந்திருக்கும்.

(வி - ம்.) வரைத்தலை வேழம் - மலையிடத்துள்ள யானை. வேழம் - கரும்பு. வீத்து-அழித்து. பகடு - யானை; எருமை. வறம்கூர்-வற்கட மிக. கல் - மலை. "கற்பாடழித்த கனமாமணித் தூண்செய் தோளான்" எனும் சிந்தாமணிச் செய்யுளானறிக. இருங்கடா - பெரிய எருமைக் கடா. வாழி - அசை. (கஙஎ)

பரந்த பன்னதி மடுப்பினு மமைவுறுப்
பாழகட் டினைக்கார்கோள்
இரங்க மாலைவெள் எருவியாற் குழிப்பமேக்
கெழுவரை வரைதன்னைத்
தரங்க நீள்கரத் திரள்களாற் சிதர்படத்
தடவுரத் தெதிர்ந்தோச்சிச்
சுரந்த வோகையிற் பெருங்கட றெழித்திடுந்
தொடர்புள தொருபாங்கர்.

(இ - ள்.) (குறிஞ்சிநிலத்தின்கண்) மேலேயுள்ள வரையானது விரிந்த பல யாறுகள் நிறையினும் நிறையாத பாழாகிய கடல் வயிற்றினை அக்கடலான திரங்கும்வண்ணம் ஒழுங்காகிய வெள்ளிய அருவியாற் குழியாக்குவதும். அம்மலையை அலைகளாகிய நீண்ட கரங்களின் கூட்டத்தினால் தூளாம்படி பெருமைபொருந்திய மார்பினிடத்து எதிர்த்து ஓச்சியெறிதலாலுளதாகிய மகிழ்ச்சியாற் பெரிய கடலானது முழக்குவதும் ஆகிய சம்பந்தம் ஒருபக்கத்துள்ளது.

(வி - ம்.) அமையுறு - நிறையாத. அகடு - கடல்வயிறு. கார்கோள் - கடல். "கார்கோள் முகந்த கமஞ்சூல் மாமழை" என்னும் திருமுருகாற்றுப்படை யடியானுணர்க. மாலை - ஒழுங்கு. குழிப்ப - குழியாக்குவன. மேக்கு - மேல் அவ்வரைதன்னையென்று அகரச்சுட்டு வருவிக்க. சிதர் - தூள். ஓச்சி - எறிந்து. தெழித்திடும் - முழக்கியிடும். (கஙஅ)

காந்து நாகத்தின் மணிகளும் வயிரமுங்
கலையரு வியினேங்கல்
ஏந்தி நீள்கடற் கனிப்பவீர்ம் புணரியு
மிலங்குவித் துருமத்தோ
டார்ந்த நித்திலந் திரைகளி னடுக்கலுக்
களித்திரு பெருவேந்தர்
சேர்ந்த போதுசெய் வரிசைகள் காட்டுமத்
திருவுமா யிடைமன்னும்,

(இ - ள்.) குறிஞ்சி நிலத்தின்கணுள்ள மலையானது ஒளிவிடுகின்ற அரவங்களின் மணிகளையும் வயிரங்களையும் ஒலிக்கின்ற அருவியாகிய கரங்களால் நீண்ட கடற்குக் கொடுப்ப, குளிர்ச்சி பொருந்திய கடலும் விளங்குகின்ற பவளங்களோடு நிறைந்த முத்தினைத் திரைகளாகிய கரங்களால் மலைக்குக் கொடுத்து, இரண்டு பேரரசர்கள் தம்முட் டலைப் பெய்தகாலத்து ஒருவர்க்கொருவர் செய்கின்ற வரிசையினைக் காட்டா நிற்கும் அழகும் ஆயிடைப் பொருந்தும்.

(வி - ம்.) வித்துருமம் - பவளம். ஓங்கல் - மலை. திரு - அழகு. (௧௩௯)

குரும்பை மென்முலை தோன்றுமுன் பாளையங்
குரூஉத்துகின் மிசைபோர்த்திட்
டரும்பி முன்வரு காலது நீவுவ
தழகெனப் புறவத்து
விரும்பு முல்லைகள் சிரிப்பநீர்ப் பழனத்து
விறந்தநெட் டிலைத்தெங்கு
பெரும்ப ழங்களாற் றவவிலைச் சிதைத்திடும்
பிணக்குள தொருபாங்கர்.

(இ - ள்.) செறிந்த நீண்ட இலைகளோடுகூடிய தென்னைமரம், குரும்பையாகிய மெல்லியதனங்கள் காணப்படுவதற்குமுன் பாளையாகிய நிறம்பொருந்திய ஆடையால் மேலே போர்த்து அரும்பி வெளி வருங்கால் அத்துகிலை நீக்குவது அழகன்றென முல்லைநிலத்துள்ள யாவராலும் விரும்பப்படுகின்ற முல்லைக்கொடிகள் சிரியாநிற்ப, அத்தென்னை மரம் பெரிய பழங்களால் அம்முல்லையினை அழிக்கின்ற மாறுபாடு ஒரு பக்கத்துள்ளது.

(வி - ம்.) குரு - நிறம். "குருவும் கெழுவும் நிறமு மாகும்" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தானறிக. முன்வருகால் - வெளியே தோன்றும் காலத்து. அது - பாளையாகிய ஆடை. நீவுவது - நீக்குவது. அழகு என்பது குறிப்புமொழியாய் அழகன்றென்னும் பொருள் தந்துநின்றது. விறந்த - செறிந்த. நெட்டிலை - நீண்ட ஓலை. இதனை "பழங்கொள் தெங்கிலையெனப் பரந்து பாய்புனல்" என்னும் சிந்தாமணியா னறிக. (௧௪௦)

கேழ்த்த பொன்மலர்க் கடுக்கைசூழ் மாதவிக்
கிளர்கொழுந் திருண்மேகம்
தாழ்த்த சாகைய வயன்மரு தினங்களைத்
தாவவந் நிலவேழும்
சூழ்த்த நீள்கொடி வயலைமென் கொழுந்துக
டுறுவனத் தெழுபூவை
வாழ்த்த பூஞ்சினைத் தாய்ப்பரத் தையர்கருத்
துறழ்வனங் கனுமாங்கண்.

(இ - ள்.) நிறத்தோடுகூடிய மலர்களையுடைய கொன்றை மரத்தைச் சூழ்ந்த குருக்கத்தியினது விளங்குகின்ற கொழுந்தானது, இருண்ட மேகத்தைத் தாழச்செய்தற் கேதுவாகிய கிளைகளையுடைய மருதநிலத்துள்ள மருதமரங்களின் கூட்டத்தைப்பற்றிப் படர, அம் மருதநிலத்தின்கண் கருப்பங்கழிகளைச் சுற்றிய நீண்ட வயலைக்கொடியின் மெல்லிய கொடிகள் சிறுதூறுகள் நெருங்கிய முல்லைநிலத்தின்கண் தோன்றிய காயாமரத்தினது பதனழிந்த பூக்களோடு கூடிய கிளைகளைத் தாவி விலைமாதருடைய எண்ணங்களை ஒத்துத் தோன்றுகின்ற வளங்களுமாண்டுள்ளன.

(வி - ம்.) பரத்தையர் கருத்துறழ்தலாவது தான்பற்றிய ஒரு நாயகனோ டமையாது அயலாரிடத்தும் பொருட்குப் படர்தல். அதுபோல, குருக்கத்திக் கொடியும் வயலைக்கொடியும் தமக்குரிய நிலங்களிலுள்ள மரங்களிற் படர்தலையொழிஇ ஏனைய நிலங்களிலுள்ள மரங்களிற் படர்ந்தன என்க. மாதவிக் கொழுந்து தாவ என்க. சூழ்ந்த என்பது விகாரம். "சூழ்த்து மதுகர முரலும் தாரோயை" என்றாற் போலக் கொள்க. துறு - நெருங்கிய. ஊழ்த்த - பதனழிந்த. உறழ்தல் - ஒத்தல். வயலை - மருதநிலத்துள்ள ஒருவகைக் கொடி. 'வயலைக் கொடியின் வாடிய மருங்கின், உயவ லூர்திப் பயலைப் பார்ப்பான்" என்னும் புறநானூற்றடியா னுணர்க. (கக)

புலவு வீசுதற் கஞ்சிநா சியைக்கருஞ்
சாந்தினுற் புதைத்தன்ன
சுலவு காரளி யிமிர்குமிழ் காட்டிடைத்
துறுவன மவண்மாதர்
கலகை வாள்விழி மானடற் கஞ்சுபு
கண்கண்மூ டியதென்ன
அலரு நீலங்கள் பகற்கழி குவிதரு
மழகுகாட் டுவதோர்பால்.

(இ - ள்.) முல்லை நிலமாகிய பெண் (நெய்தனிலம்) புலால் நாற்றத்தை வீசுதற்குப் பயந்து மூக்கினைக் கத்தூரி கலந்த சாந்தத்தினால் மூடியதென்று சொல்லும் வண்ணம் கரிய வண்டினங்கள் சுற்றி யொலிக்கின்ற குமிழைக் காட்டாநிற்ப (அம்முல்லை நிலத்தின்கணுள்ள) இடைப்பெண்கள் காமப் போரை விளைக்கின்ற வாள்போன்ற நயனங்களால் ஆண்டுள்ள மான்களைக் கொல்லுதலைக்கண் டச்சமுற்றுக் கண்களை மூடியதென்று சொல்லும் வண்ணம் அலர்ந்த நீலோற்பல மலர்கள் பகற்காலத்தே குவிகின்ற அழகைக் கழிக்கரையானது காட்டுவதொரு பக்கமுள்ளது.

(வி - ம்.) கருஞ்சாந்து - கத்தூரி கலந்த சந்தனம். வனங்காட்டிட வென்க. கடலை யுணர்த்தலின் ஆகுபெயர். கடலஞ்சிக் கண்களை மூடியது போல நீலங்கள் குவிதருமென்க. (கஉ)

மாய னுகிய மீனந்தன் வரைப்பிடை
வதிதரப் புகுந்தாங்கு

மேய வாழியி னெழுந்தமீன் புறவத்து
விரைக்குறுஞ் சுனைவிழ
ஏய பூஞ்சுனை மீனமன் னதனிட
மெதிர்கொளக் குதித்தோடிப்
பாய வேலைநீர்ப் புகுந்துலாய்த் திரிதரு
பரிசுமவ் வுழித்தாகும்.

(இ - ள்.) விண்டுவாகிய மீனம் தனது நிலமாகிய முல்லையின் கட்டங்கப் புகுந்தது போலத் தான் வாசமாகப் பொருந்திய கடலினின்றும் குதித்தெழுந்த மீனானது முல்லை நிலத்தின்கண் ணுள்ள குறுஞ் சுனையின் கண் வீழாநிற்கப் பொலிவு பெற்ற அச்சுனையிற் பொருந்திய மீனானது அக் கடன்மீன் தன்னிடமாகிய கடலில் எதிர் கொள்ளும்படி குதித்துச் சென்று பரவிய கடனீரிற் புகுந்து உலாவித் திரிகின்ற தன்மையும் அவ்விடத் துளதாகும்.

(வி - ம்.) தன்வரைப்பு - முல்லை நிலம். குறுஞ்சுனை - முல்லை நிலக் கருப் பொருள். (ககங)

கலவர் மீன்படுத் தெழுப்புசாப் பறையொலி
கறங்கறீ தெனத்தன்னுள்
அலவர் சாலிகொய் தண்ணுமை ததும்பொலி
யடக்கிமே லெழநோக்கிக்
குலவு நீணதிப் பழனமென் றுறைப்புனல்
கூர்ப்புறக் கடலேறி
நிலவு தன்னிடத் தடக்கிடு மயக்கமு
நீடுவ தொருஞாங்கர்.

(இ - ள்.) மரக்கல மோட்டுபவர்கள் மீன்களை யகப்படுத்து எழுப்புகின்ற நெய்தற் பறையொலி முழங்குதல் (மக்களுக்குத்) தீங்கை யுளதாக்கு மெனக் கருதி (மருத நிலமாகிய) தன்னிடத்துக் கலப்பைப் படையை யுடைய உழவர்கள் நெற்கதிரை யறுத்தற்கு முழக்குகின்ற மத்தளத்தினின்றும் ததும்புகின்ற ஒலியானது (அச் சாப்பறை யொலியை) அடக்கி மேலெழாநிற்க அதனைக் கருதி மருத நிலத்தின் கண் ணுள்ள விளங்குகின்ற நதித் துறைகளிலுள்ள நீரெல்லாம் உவர்ப்பு மிக அந்நீரைக் கடலானது அலையாலேறிப் பொருந்துகின்ற தன்னிடத் தடக்கிக் கொள்ளும் மயக்கமும் ஒரு பக்கத்து மிகுவது.

(வி - ம்.) கலவர்-மரக்கல மோட்டுவோர். படுத்து-அகப்படுத்து. சாப்பறை - நெய்தற்பறை. தன்னென்றது ஈண்டு மருத நிலத்தை. அலவர் - கலப்பைப் படையை யுடைய மருதநில மாக்கள். கூர்ப்புற - உவர்ப்புற. மயக்கம் - கலப்பு. ஏறி அலையாலேறி யென்க. நோக்கி - அதனைக் கருதியெனச் சுட்டு வருவிக்க. ஞாங்கர் - பக்கம், பழனம் - மருதநிலம், கறங்கல் - ஒலித்தல். (ககச)

வாங்கு செந்நெலின் கதிர்கவர்ந் தினக்குரீஇ
மகரநீர்க் கடற்பாங்கர்
ஓங்கு புன்னையிற் கோறிப்பவங் குணக்குமீ
ஞெய்யெனக் கவர்ந்தோடித்
தேங்கு நீர்ப்பணைக் காஞ்சியிற் கொடியினஞ்
சேர்ந்துதம் பதிநீங்கிப்
பாங்கு வேற்றிடம் புகுங்கொடி யோரெனப்
பயில்வது முளதாங்கண்.

(இ - ள்.) (மருத நிலத்தின்கண்) முதிர்தலால் வளைந்த செந்நெற்களின் கதிர்களைக் கூட்டமாகிய குரீஇ யினங்கள் வாயாற் கவர்ந்து மகர மீனை யுடைய நீர் நிறைந்த கடற் பக்கத்தே உயர்ந்த புன்னை மரங்களின் மேலிருந்து கொறியாநிற்ப அங்கெய்த நிலத்தின்கண் உணக்குகின்ற மீனைக் காக்கையி னினங்கள் விரைவாகக் கவர்ந்து சென்று நீர் நிறைந்த வயல்களோடு கூடிய மருத நிலத்தின்கணுள்ள காஞ்சி மரங்களில் பொருந்தி (தக்க இடமும் உணவுக்காம் பொருளும் இருப்ப) பக்கத்தி லுள்ள வேற்றிடங்களுக்குச் செல்லும் கொடியவர்களைப் போலத் தங்கு வதும் அவ்விடத்துளது.

(வி - ம்.) கொறித்தல் - தின்னுதல். கொடி - காக்கை. தக்க இடமும் உணவுக்காம் பொருளும் இருக்க அயலிடத்திற்குச் சேறலின் கொடியோ ரென்றார். தம் பதியினின்றும் பிறர் பொருளைக் கவர்ந்து வேற்றிடம் புகும் கொடியோ ரெனினும் அமையும். கொடியோரைப் போலக் கொடியினமும் செய்தது எனக் கூறிய சொன்னயம் காண்க. (கஅஇ)

குரும்பி தேரிய முதையஞர்ப் படப்பையுங்
குன்றினெண் குகள்செல்ல
இரும்பு லாரிய புனம்வயற் கொல்லையா
னின்றகன் றுகள்செல்ல
அரும்பு மூசிய குறுஞ்சுனை கற்சுனை
யாவிவண் டுகள்செல்ல
வரம்பி லாரிமை யாரியன் முறைதெரி
வயினெனக் கலப்போர்சார்.

(இ - ள்.) உழுத புழுதியினையுடைய முல்லை நிலத்தின்கண்ணும் ஊர்ப்புறத் தோட்டங்களிலும் மலையின்கண்ணுள்ள கரடிகள் புற்றுஞ் சோறுகிய உணவை யாராயச் செல்லாநிற்க, பெரிய புல்லாகிய உணவை யுண்ணக் குறிஞ்சி நிலத்தும் வயலினிடத்தும் முல்லை நிலத்தின்கணுள்ள பசுக்களீன்ற கன்றுகள் செல்லாநிற்ப அரும்புகள் மொய்த்த முல்லை நிலத்தின்கணுள்ள குறுஞ்சுனைகளிலும் குறிஞ்சி நிலத்தின்கணுள்ள சுனைகளிலும், மருத நிலத்தின்கணுள்ள நீர்நிலையிற் றங்குகின்ற வண்டுகள் செல்லாநிற்பக் கயவருந் தேவரு மியல்கின்ற முறைகளைத் தெரிவிக்கின்ற இடம்போலக் கலத்தல் ஒரு பக்கத் துளது.

(வி - ம்.) குரும்பி - புற்றுஞ்சோறு. தேரிய - உண்ண ஆராய. முதையல் - உழுத புழுதியை யுடைய முல்லை. படப்பை - ஊர்ப்புறத் தோட்டம். ஆரிய - உண்ண. குறுஞ்சுனை - முல்லைக் கருப் பொருள். ஆவி - தடாகம். மூசிய - மொய்த்த. வரம்பிலார் - கயவர். படப்பையும் என்பத னும்மையை முதையலோடுங் கூட்டுக. இயன் முறையாவது - விரும்பினவற்றைச் செய்கின்ற ஒழுங்கு. "தேவரனையர் கயவர் அவரும் தாம், மேவன செய்தொழுக லான்" என்னும் குறளின் கருத்தமைந் திருத்தல் காண்க. (கசக)

வேழம் வாய்திறந் தெழுமணி புறநகர்
வேலையு முரம்பாக்க
ஆழி வீசிய மணிகுளஞ் சுனையவ
லடவவை வயன்மாதர்
கோழி யோச்சிய குழைபடக் கிழிந்தகுன்
றகத்திறல் புன்னுக
வாழி தேத்தடை யருவிகள் பெயர்த்தலை
வாயிடும் வளனோர்சார்.

(இ - ள்.) கரும்புகளானவை முதிர்ந்து வெடித்தலால் எழுகின்ற முத்தங்கள் புறநகரையும் கடலையும் கல்விரா யுயர்ந்த நிலமாகச் செய்ய, கடலானது அலைகளால் வீசிய முத்துக்கள் மருத நிலத்தின்கணுள்ள குளங்களும் குறிஞ்சி நிலத்தின்கணுள்ள சுனைகளு மாகிய இவற்றின் பள்ளங்களைத் தூர்க்க, மணிகளை, மருதநிலப் பெண்கள் கோழியை யெறிந்த காதணிகள் படுதலால் குன்றினிடத்துக் கிழிந்தனவாகிய தேன் கூட்டினின் றொழுகுந் தேனும், சுரபுன்னை மரத்தினிடத்துள்ள தேன் கூட்டினின் றொழுகுகின்ற தேனருவிகளும் பெயர்த்துக் கடலி னிடத்துச் சேர்க்கும் வளமும் ஒரு பக்கத்துள்ளது.

(வி - ம்.) முரம்பு - கல்விரா யுயர்ந்திருக்கும் நிலம். புறநகர் வேலை - உம்மைத் தொகை. மணி எழுவாய். அவல் - பள்ளம். "நாடா கொன்றோ காடா கொன்றோ, அவலா கொன்றோ மிசையா கொன்றோ" என்னும் புறநானூற்று லறிக. அவை - அம்மணிகளை. கோழி - இரண் டன்றொகை. இறுல் - தேன்கூடு. புன்னாகம் - சுரபுன்னை. வாழி : அசை. தேத்தடை - தேன்கூடு. அவைகளைப் பெயர்த்து அலைவாயிடு மெனக் கூட்டுக. பெருஞ் செல்வ ரென்பது தோன்றக் "கோழி யோச்சிய குழை" எனக் கூறினர். "விரீஇ யுற்றவர் கோழி எறிந்த ஒண் குழை" என்னும் சிந்தாமணியா லறிக. (கசஎ)

கான வாரணங் கழனியுங் கானலுங்
கலாவுறக் கடிநல்லூர்த்
தான வாரணம் பாக்கமும் பாடியுந்
ததைதரத் திரைமுந்நீர்க்
கூன வாரணங் கொழும்புனற் கால்களுங்
குரைப்பருக் கானியாற்றுப்

பேன வாரமுந் தவழ்ந்திட மிருவளம்
பிணைந்ததா லொருமாடு.

(இ - ள்.) காட்டின்கணுள்ள கோழிகள் வயலினிடத்தும் கடற்கரைச் சோலைகளிடத்தும் கலக்க, காவலோடு கூடிய மருத நிலத்தார்களிலுள்ள மதத்தோடு கூடிய யானைகள் நெய்த னிலத்தார்களிலும் நெருங்க, அலைகளோடு கூடிய கடலின்கணுள்ள வளைதலுள்ள சங்குகள் செழித்த நீரோடு கூடிய கால்வாய்களிலும் ஒலி நீங்காத கான்யாற்றினிடத்தோடுகின்ற நுரையோடு கூடிய நீரினிடத்தும் ஊர்ந்து செல்ல மிகுந்த வளம் ஒருபக்கத்து நெருங்கியுளது.

(வி - ம்.) கான வாரணம் - கான்கோழி. கானல் - கடற் கரைச் சோலை. நல்லூர் - மருத நிலத்தூர். பாக்கம் - நெய்தனிலத்தூர். பாடி - முல்லை நிலத்தூர். கூன வாரணம் - வளைதலையுடைய சங்கம். குரைப்பு - ஒலி. பேனம் - நுரை. வாரம் - நீர். யானை - குறிஞ்சிக்குரிய கருப் பொருளாயினும் அரசர்க்குரிய சதுரங்கங்களி லொன்றாக இருத்தலால் "கடிநல்லூர்த் தானவாரணம்" என்றார். (கசஅ)

வள்ளி மௌவனீள் வயலைதுப் பிலதைகண்
மலர்விரி கணிகொன்றை
கள்ள வஞ்சிநா கத்தினுட் டந்நிலக்
கடிமர மொரீஇமூன்றும்
நள்ள மீப்படர்ந் தொருவழிக் கோத்திர
நண்ணினர் தமைநீவி
ஒள்ளி யோர்ப்புணர் மாதர்போன் றுறுவள
மொருமருங் குளதாமால்.

(இ - ள்.) குறிஞ்சி நிலத்தின்கண்ணுள்ள வள்ளிக் கொடியும், முல்லை நிலத்தின்கண்ணுள்ள முல்லைக் கொடியும் மருத நிலத்தின்கண்ணுள்ள நீண்ட வயலைக் கொடியும் நெய்த னிலத்தின்கணுள்ள பவளக் கொடியுமாகிய நான்கும், இந் நான்கு நிலக் கருப் பொருள்களாகிய மலர் விரியப்பெற்ற வேங்கை மரமும், கொன்றை மரமும், கள்ளைத் தன்னிடத்தேயுடைய வஞ்சி மரமும், சுரபுன்னை மரமுமாகிய நான்கனுள் அக் கொடிகள் தன் நிலக் கருப் பொருளாகிய மரத்தை நீக்கி ஏனை மூன்று நில மரங்களும் தன்னை நெருங்க அவைகளின்மீது படர்ந்து ஒரு குடியுட் பிறந்து தம்மை அணுகினோராகிய ஆடவரை விடுத்து (ஏனைய கோத்திரத்துப் பிறந்த) ஒள்ளியோராகிய அறிவுடையோர்களைப் புணர்கின்ற மாதர்களைப் போன்று பொருந்துகின்ற வளம் ஒரு பக்கம் உளதாம்.

(வி - ம்.) துப்பிலதை - பவளக்கொடி. மூன்றும் - தன்னில மர மொழிந்த ஏனை மூன்று நில மரங்கள். ஒள்ளியோர் - வேறு கோத்திரத்துட் பிறந்த அறிவாற் சிறந்த ஆடவர். தமது குடியிற் கொள்ளுதல் உலக வழக்கன்மையின் ஒருவழிக் கோத்திரம் நண்ணினர்தமை நீவி என்றார். (கசகூ)

இனையவாறுபல் வளங்களும் விராவிய
விடங்களு ளுவராதி
புனையுமாழிதன் னிழிவறிந் தகற்சியிற்
போற்றிநின் றிடக்கானும்
வனைக லாப்புகழ்ப் பழனமு மருங்குற
வள்ளிநா யகற்றுங்கி
வினையெ லாந்தபும் விலங்கல்வீற் றிருப்பது
தணிகையந் தலமாதோ.

(இ - ள்.) இவ்வாறு பல வளங்களும் கலந்த இடங்களுள் வைத்து, உப்பு புலால் நாற்ற முதலியவற்றைத் தன்னிடத்துக் கொண்ட கடலான்து தன்னிழிவைத் தானே யறிந்து சேய்மைக் கண்ணே நின்று துதியாநிற்ப, முல்லை நிலமும், ஒருவராலும் அலங்கரித்துக் கூறற்கியலாத புகழோடு கூடிய மருத நிலமும் தனதண்மையிற் பொருந்த வள்ளி நாயகிக்குத் தலைவராகிய முருகக் கடவுளைத் தாங்கி (மக்கள் பிறப்பிறப்புக்களிற் சுழலுதற் கேதுவாகிய) நல்வினை தீவினையாகிய வினைகளை யெல்லாம் நீக்கும் மலையானது, தணிகையாகிய தலத்தின்கண். வேறொன்றற் கில்லாத சிறப்புட னிருப்பது.

(வி - ம்.) அகற்சி - தூரம். ஆதியென்றதனாற் புலால் நாற்றம் முதலியனவும் கொள்க. வனைகலாப்புகழ் - ஒருவராலும் அலங்கரித்துக் கூறமுடியாத கீர்த்தி. பழனம் - மருத நிலம். தபும் - நீக்கும். தலத்தின் கண் என ஏழாவது விரிக்க. விலங்கல் வீற்றிருப்பது என வினை முடிவு செய்க. (௯௦)

திருநாட்டுப் படலம் முற்றிற்று.

ஆகச் செய்யுள்—௧௮௧.

—:—

## திருநகரப் படலம்

திருவி ளங்கிய வனப்பினி லறிவினிற்
றிறத்தினி லருடன்னில்
ஒருவர் தங்களை யுயர்த்தமுன் முருகனை
யுவமையாக் குவரன்னுன்
பொருவில் வள்ளியோ டாடிட மாகிய
புகழ்த்தணி கையுமியாங்கும்
ஒருந கர்க்கணி யுயர்த்தமுன் னுவமையா
வுரைப்பதா லெவராலும்.

(இ - ள்.) செல்வத்தானும், விளங்குதலைச் செய்கின்ற அழகினாலும், வலியினாலும், அருளினாலும், (உலகத்திலுள்ள) ஒரு தலைவரை உயர்த்திச் சொல்ல முதலாக முருகப் பெருமானை உவமப் பொருளாக்கிக் கூறுவார்கள் அறிவுடையோர்கள். அத்தகைய முருகப் பெருமான் (அழகிற்றனக் குயர்வொப்பில்லாத) வள்ளி நாயகியாரோடு கூடு மிடமாகிய தணிகை யென்னும் நகரமும் எப்பொழுதும் ஒரு நகரத்தினை அழகால் உயர்த்திச் சொல்ல முதலில் எல்லாப் புலவர் பெருமக்களாலும் உவமப் பொருளாக உரைக்கப்படுவதா மென்க.

(வி - ம்.) திரு - செல்வம். திறம் - வலி. முன் - முதல். ஆடிடம் - கூடுமிடம்; விளையாடு மிடம். உயர்த்த - உயர்த்திச் சொல்ல. எவராலு முரைக்கப்படுவ தெனக் கூட்டுக. ஒரு நகர்க்கு - வேற்றுமை மயக்கம். (4)

ஓங்கு பன்மறை யாதியின் முதலெழுத்
துறுபொரு ளுணர்கல்லாத்
தீங்கு தேர்ந்துவன் சிறையிடப் பட்டவன்
சிருட்டியி லுளதாயின்
பூங்கள் வார்குழல் வள்ளியோ டாடுதல்
புகன்றிடா னதனுன்முற்
றுங்கி லையயகப் படைப்புறி யறுமுகன்
முன்படைத் தஃதொன்றே.

(இ - ள்.) உயர்ந்த பலவாகிய வேத முதலிய கலைகளின் முதலெழுத்தாகிய பிரணவத்தின் கண்ணுற்ற பொருளை யறியு (மதுகை) யில்லாத குற்றத்தை யாராய்ந்து வலிய சிறையி லிடப்பட்டவனாகிய நான்முகன் படைப்பில் (இத் தணிகை) யுளதாமாயின் பூக்களிலுள்ள தேனொழுகுகின்ற கூந்தலோடு கூடிய வள்ளியம்மையாரோடு கூடுதலை விரும்பான். ஆதலால் அறுமுகக் கடவுள் (பிரமனைச் சிறையி லிட்டுப் படைக்குந் தொழிலை) முதன்மையாக மேற்கொண்டு உலகத்தை யுளவாக்குங் காலத்துத் தன்னாலாக்கப்பட்டது அத் தணிகை யொன்றேயாம்.

(வி - ம்.) முதலெழுத்து - ஏழாவதன்றொகை. ஆடல் - விளையாடல். புகன்றிடான் - விரும்பான். முற்றுங்கி - முதன்மையாக மேற்கொண்டு. படைப்புழி - (பிரமனைச் சிறையிலிட்டுப்) படைக்குங் காலத்து. (௨)

குண்டு கண்ணபேழ் வாயின விங்கிய
குடவயிற் றினபூதம்
மிண்டு தேவர்க டலைக்கல னராத்தொடை
வியன்புயக் கணநாதர்
மண்டு வெள்ளியங் குன்றுமொவ் வாதெனின்
மழவிளங் கதிர்கோடி
கொண்ட மேனியி னமரர்சூ ழித்திருக்
குன்றமொப் பதுமுண்டே.

(இ - ள்.) ஆழமாகிய கண்ணை யுடையனவும், அகன்ற வாயினை யுடையனவும், பெருத்த குடம்போன்ற வயிற்றை யுடையனவுமாகிய பூதங்களும், வலியோடு கூடிய (பிரம விட்டுணுவாகிய) தேவர்களின் தலைமாலையாகிய ஆபரணங்களையும், பாம்பாகிய மாலையையு மணிந்த புயத்தோடு கூடிய கணத்தலைவர்களும், நெருங்கிய வெள்ளியங் குன்றும் கோடிக் கணக்காகிய இளஞ் சூரியர் ஒளியைத் தன்னிடத்தே கொண்ட மேனியை யுடைய தேவர்கள் வலஞ்செய்கின்ற இத்த ணிகைமலைக்கு ஒப்பாகா தென்றால், ஒப்பாவதாகிய வேறு மலையு முள்ளதோ? இல்லை.

(வி - ம்.) கண்ண, வாயின, வயிற்றின பூதம் எனக் கூட்டுக. (௩)

சங்க மேந்திய தலைவனும் பிரமனுஞ்
சதமகத் திறையோனும்
பொங்கு தந்நக ரொழிவன முழுவதும்
புகுந்துபோற் றுபுவாங்கி
அங்கண் வைகினர் வாழலுற் றாரெனி
லறுமுக னரசாளும்
நங்கள் காவியங் கிரிவள மொன்றொடு
நாட்டவும் படுமேயோ.

(இ - ள்.) பாஞ்சசந்ய மென்னும் சங்கினைக் கையிற் றாங்கிய விண்டுவும், பிரமனும் நூறு யாகங்களைச் செய்து தலைமைபெற்ற இந்திரனும், (எல்லா வளங்களும்) மிகுந்த தங்கள் நகரங்களாகிய வைகுந்தம், சத்தியலோகம், அமராவதி முதலிய நகரங்களின் கண்ணிலவாகிய செல்வங்க ளெல்லாவற்றையும், (தணிகையில்) வந்து (முருகக் கடவுளைத்) துதித்து வாங்கி அவ்வவ் வுலகங்களில் தங்கினவர்களாகி வாழ்தலுற்றன ரென்றால், அறுமுகக் கடவுள் (வீற்றிருந்து) அரசாட்சி செய்கின்ற நமது காவிமலையின் வளப்பமானது வேறொரு பொருளோடு உவமையாக நிலைநிறுத்துச் சொல்லப்படுமோ?

(வி - ம்.) ஒழிவளம் - (தங்கள் நகரங்களில்) இல்லாத செல்வம். காவியங்கிரி - தணிகை. இந்திரன், முருகக் கடவுளை வழிபடும் பொருட்டுத் தேவருலகினின்று கொணர்ந்து இம்மலைச் சுனையில் காவியை வைத்து மலர் பறித்து வழிபட்டமையிற் காவியங்கிரியெனத் தணிகைக்குப் பெயர் வந்ததென்க. அங்கண் - அவ்வவ் வுலகங்கள் நாட்டவும் நிலைநிறுத்துச் சொல்லப்படுமோ என்க. (ச)

புல்லி தாகிய பொன்னக ராதிமேற்
பொருந்துவ தடாதென்ன
வல்லை நூறிய வெழுவதோர்ந் தித்தலம்
வருத்துழி வரைகீண்டோன்
செல்லு றுவகைப் பலவரை யாப்புறச்
சிவணுவித் தாற்றுவென்
றல்ல னுக்குபன் மணிச்சிலம் பிடைப்படைத்
ததன்றலை யமர்ந்திட்டான்.

(இ - ள்.) கிரௌஞ்ச கிரியைப் பிளந்த முருகக் கடவுள் இத்தணிகையைப் படைக்கின்ற காலத்து இத்தணிகையானது அற்பமாகிய தேவருலக முதலிய உலகங்கள் மேலே பொருந்துவது இயையாதென்று விரைவாக அழிக்க எழுவதுணர்ந்து, மேலே செல்லாதவண்ணம் பல வரையாகிய ஆப்புகளுறும்படி பொருந்துவித்து அவ்வாப்புகள் போதாதன என்று கருதி இருளைக் கெடுக்கின்ற பல மணிகளோடு கூடிய தணிகை மலையை நகரிடையே படைத்து அதன் முடியின் கண்ணே விரும்பித் தங்கினன்.

(வி - ம்.) நூறிய - அழிக்க. வரைகீண்டோன் இத் தலம் வருத்துழி என மாற்றுக. வரைகீண்டோன் : எழுவாய். வரையாப்புற - வரை ஆகிய ஆப்பு உறும்படி. சிவணுவித்து - பொருந்துவித்து. ஆற்றுதனவென்று - பொறுக்காதன வென்று கருதி. அனுக்கு - கெடுக்கின்ற. மணிச்சிலம்பு - தணிகைக் குன்றம். தலை - சிகரம். (ரு)

பரவு காஞ்சியிற் பற்பல விம்மிதம்
பணித்தவ னொழியாமை
அரவ மாலைய னமைந்தது முலகெலா
மழிப்பமேக் கெழும்பௌவம்
விரவு றுதயல் விலக்கலுங் குருமொழி
விளம்பிய விடனுமிக்
குரவ னின்வரை யெல்லையி னிருந்தவக்
கொள்கையைக் குறித்தன்றே.

(இ - ள்.) யாவராலும் துதிக்கப் பெறுகின்ற காஞ்சிமா நகரத்தின் கண் பற்பல ஆச்சரியச் செயல்களைச் செய்து அக்காஞ்சிக்க ணின்றும் நீங்காமல் அரவ மாலையையுடைய சிவபெருமான் எழுந்தருளி யிருந்த

தும், உலகங்க ளெல்லாவற்றையும் அழிப்ப மேலே பொங்கி வருகின்ற கடலானது கலக்காமல் பக்கத்தே விலகச் செய்ததும், ஆகிய இவ்விரு செயல்களும் தனக்குச் செவியறி வுறுத்திய இடமாகிய பரமாசாரியனும் முருகக் கடவுள் எழுந்தருளி யிருக்கின்ற தணிகாசலத்தின் எல்லையின் கண் தான்செய்த பெரிய தவத்தின் கொள்கையைக் குறித்த தல்லவா?

(வி - ம்.) இறைவன் தணிகை எல்லையிற் றவஞ் செய்ததை,

''வளமலைச் சாரலின் வடகிழக் கெல்லையின்
இளமதிச் சடையவிழ்த் திம்பரிற் ருழ்த்துபு
களமிகுப் போரெனக் கருதருந் தியானமோ
டுளமலி தவமொரு கணிகமுற் றுனரோ''

என்னும் வீராட்டகாசப் படலம் ககசஆம் பாட்டா னறிக.

மேக்கு - மேல். குருமொழி விளம்பல் - உபதேசம் செய்தல். குரவனிள்வரை : தணிகை. (சு)

ஓவ வம்பல மிரசித வம்பல
மொளிர்பொனம் பலங்கண்டோர்
பாவ நுங்கொளி யரதன வம்பலம்
பதமெடுத் திறையாடல்
மேவ வஞ்செவிக் குருமொழி வைத்தவன்
வியன்றணி கையைநோக்கின்
சாவ வவ்வுழித் தென்றிசைக் கடவுளைச்
சாடுதற் கருத்தன்றே.

(இ - ள்.) சித்திர சபையின்கண்ணும் வெள்ளியம்பலத்தின்கண்ணும் விளங்குகின்ற பொன்னம்பலத்தின் கண்ணும் தரிசித்தோர் பாவத்தைக் கெடுக்கின்ற ஒளியோடு கூடிய இரத்தின சபையின் கண்ணும் இறைவன் திருவடியைத் தூக்கித் தென் திசையை நோக்கித் திருநடனம் செய்தல் அழகிய செவியிடத்துப் பொருந்த உபதேசஞ் செய்தவனாகிய பரமாசாரியன் எழுந்தருளி யிருக்கின்ற தணிகை மலையை நோக்கினால், நோக்கிய அவ்விடத்தே சாம்படி தென்திசைக் கிறைவனாகிய இயமனை உதைத்துக் கொல்லும் கருத்தாம்.

(வி - ம்.) ஓவ அம்பலம் - சித்திரசபை; குற்றாலத்தின் கண்ணது. இரசத அம்பலம் - வெள்ளியம்பலம்; மதுரையின்கண்ணது. பொன்னம்பலம் - கனகசபை; சிதம்பரத்தின்கண்ணது. அரதன அம்பலம் - இரத்தினசபை; திருவாலங்காட்டின்கண்ணது. ஆடல் : எழுவாய். இறைவன் தெற்கு முகமாய்த் திருவடி யெடுத்தாடல், தணிகையின் கண்ணுள்ளாரைக் கொல்ல நோக்கின் இயமனை உதைத்துக் கொல்லும் கருத்து என்க. தணிகை - இடவாகு பெயர். அஞ்செவி மேவ எனக் கூட்டுக. அவ்வுழிச் சாவ என மாற்றுக. (எ)

வார ணப்பிரான் மணிநகர் துறக்கமே
மணிப்பொருட் டலர்வாழ்க்கை

ஆரணப்பிரா னணிநகர் சத்திய
வுலகமே யராப்பள்ளி
நார ணப்பிரா னகர்கள்வை குந்தமே
நன்றெழுந் தார்த்தாடுங்
காரணப்பிரா னகர்சிவ லோகமே
கரைந்தவத் தலைமாதோ.

(இ - ள்.) *மேற் கூறிய அத்தணிகையானது (முருகப் பெருமான் பக்கலில் வேட்ட வரங்களைப் பெறுதற்கு ஆண்டுத் தங்குதலால்) வெள்ளை யானையை யுடைய தலைவனாகிய இந்திரனது அழகிய நகர மாகிய துறக்கமே யாகும். (வேட்ட வரங்களைப் பெறுதற்குத் தங்க லால்) வேதத்திற்குத் தலைவனாகிய பிரமன் நகரமாகிய அழகிய சத்திய வுலகமாகும். (விரும்பிய வரங்களைப் பெறுதற்குத் தங்கலால்) பாம் பாகிய அணையை யுடைய நாரணனாகிய தலைவன் நகராகிய வைகுந்தமே யாம். (விரும்பிய வரம் பெறுதற்கு ஆண்டுத் தங்கலால்) எழுந்தருளி நன்றாக ஆர்த்தாடுகின்ற (எல்லா வுலகிற்கு மூல) காரணராகின்ற தலைவராகிய சிவபெருமான் நகரமாகிய சிவலோகமேயாம்.*

(வி - ம்.) *அத்தலை – தணிகையாகிய அவ்விடம். நகராகிய துறக் கம் என்க. இவ் விறைவர்கள் தங்குமுவுடன் ஈண்டுதிவதலின் இவ்வாறு கூறினார். நகர்கள் என்பதில், கள் பகுதிப் பொருள் விகுதி. நன்றாக எழுந்தாடு மெனக் கூட்டுக.* (அ)

புடைந கர்த்தலை யசுத்தகத் துவமெனப்
பொலிந்தது வளஞ்சான்ற
இடைந கர்த்தலை யிலங்குசுத் தாசுத்த
மெனப்பொலிந் தஃதுள்ளால்
மிடைந கர்த்தலை சுத்தகத் துவமென
விளங்கிய தவைமூன்றும்
உடைய தத்துவ மவைகடந் தொளிர்வதொத்
தோங்கிய துயர்குன்றம்.

(இ - ள்.) *புடை நகரிடமானது அசுத்த தத்துவமென்று சொல் லும்படி விளங்கியது. (பலவகை) வளங்களும் நிறையப்பெற்ற இடை நகரிடமானது, விளங்காநின்ற சுத்தா சுத்த தத்துவமென்று சொல்லும் படி விளங்கியது அதனுள்ளே பொருந்திய உண்ணகரிடமானது சுத்த தத்துவமென்று சொல்லும்படி விளங்கியது. இவை மூன்றையு முடைய தாகிய உண்மைப் பொருளாகிய சிவம் இம் மூவகைத் தத்துவங்களையும் கடந்து (அப்பாற்பட்டு) விளங்குவதை யொத்தோங்கியது உயர்ந்த தணிகை மலையானது.*

(வி - ம்.) *புடைநகர் முதலிய மூன்றும் ஒன்றினொன் றுயர்ந்த மூவகைத் தத்துவமாகக் கூறினார்.* (க)

அசுத்த தத்துவம் - ஆன்ம தத்துவமாகிய இருபத்து நான்கு. சுத்தா சுத்த தத்துவமாவன - வித்யா தத்துவ மேழு. சுத்தம் - சிவ தத்துவமாகிய ஐந்து. இவற்றைச் சிவஞான சித்தியாரிற் காண்க. (க)

ஆய பல்படை யாதிக ளாக்கலிற்
புடைநக ரயன்போலும்
மாய மென்மொழி மயக்கியா டவர்துனி
மாதரை யுயிர்காத்து
மேய போகங்கள் விளைத்தலி னிடைநகர்
விண்டுவொத் திடுமற்றோர்க்
கோய வின்னல்க ளறன்கடை துடைத்தலி
னுண்ணக ரரனேரும்.

(இ - ள்.) புடைநகரமானது அழகிய வேற்படை முதலிய படைக்கலன்களை யுளவாக்கலினாலே, பிரமனை யொக்கும். இடை நகரமானது வஞ்சகத்தோடு கூடிய மெல்லிய இன்சொற்களால் மயக்குதலைச் செய்து அவ் வாடவரோடு சிறுகலாத்தை விளைக்கின்ற மாதர்கள் உயிர்களைக் காத்தல் செய்து (அவ்வவர் கருமத்துக் கீடாக) பொருந்திய போகங்களை யுளவாக்கலினால் விண்டுவை யொக்கும். உண்ணகரானது தன்னை யடைந்தோர்க்கு இன்னல்கள் நீங்க அக் குற்றங்களை நீக்கலின் உருத்திரனை யொக்கும்.

(வி - ம்.) மகதக் கொல்லரும் மராட்டத் தச்சரு முதலாகிய பணித்தொழிலாளர் புடை நகரின்கட் டங்கிக், கைவிடாப்படை கைவிடும் படை முதலிய படைகளும், தோற்கருவி, துளைக்கருவி முதலிய பல கருவிகளையும், புதிது புதிதாக ஆக்கலின் அயன்போலு மென்றார். அற்றைப் பரிசம் கொள்வாராகிய பதியிலார், இடை நகரின்கட் டங்கித் தம்பால் வந்த ஆடவரை வஞ்சக மொழியால் மயக்கி அவர்கள் முலை விலையாகத் தரும் பொருளுக் கேற்பப் போகங்களை யளந்து கொடுத்தலின் விண்டு ஒத்தது என்றார். அந்தணர் அருந்தவத்தோர் முதலாய சான்றோர் உண்ணகரின்கட் டங்கித் தம்மையடைந்தோர்க் குளவாகிய குற்றங்களைச் சிவாகம விதியால் கழுவாய் செய்து புனிதப்படுத்தலின் அரனேரும் என்றார். அறன்கடை, அறத்தின் இழிந்தது எனப் பொருள் பட்டுக் குற்றங்களைக் குறித்தது. (கூ)

அடுத்து ளோரிளைப் பலர்கயப் பொழில்களா
லுக்கலா லரன்போலும்
மடுத்த மாணெழிற் புடைநகர் மாநரார்
மறைத்துநல் கிடுமின்பம்
தொடுந்த காதலி னிடைநக ரீசனைத்
துணையும்வேட் டனதுய்ப்பக்
கொடுத்து மேவலி னுண்ணகர் சதாசிவக்
கோற்றவன் றனைநேரும்.

(இ - ள்.) மாட்சி நிறைந்த அழகோடு கூடிய புடை நகரானது, தன்னை அடுத்தவரது இளைப்பினைப் பூக்களையுடைய பெரிய சோலைகளால் கெடுத்தல் காரணமாக உருத்திர மூர்த்தியை யொக்கும். இடைநகரானது பொது மகளிர் தாம் பெற்ற பொருளளவுக் கேற்ப மறைத்துக் கொடுக்கின்ற இன்பத்தினிடத்து மீண்டும் பொருந்திய காதலுடைமையால் மகேசுரனை ஒக்கும். உண்ணகரானது, ஆண்டுள்ளவர்கள் விரும்பினவற்றை யெல்லாம் அநுபவிக்க அளித்துப் பொருந்துதலால் தலைவனாகிய சதாசிவ மூர்த்தியை ஒக்கும்.

(வி - ம்.) அரன் கொள்ளி வட்டமும் காற்றாடியும்போல் மேலுங் கீழுமாகப் பிறப் பிறப்புக்களிற் செல்லும் ஆன்மாக்களை அழித்தல், இளைப்பாற்றலின் பொருட்டாம். அதுபோலப் புடை நகரும் தொழின் முயற்சி காரணமாக உண்ணகர் முதலியவற்றின்கட் சென்று களைத்து வரும் மாந்தர்களின் களையை நீக்கி யிளைப்பாறப் புடைநகர் சோலைகளாற் செய்தலின் "அரன்போலு" மென்றார். மகேசுரன் ஆன்மாக்களின் பக்குவத்திற் கேற்ப மறைத்தல் செய்து பின்னரு மின்பத் தொடர்ச்சி யுளதாதற்குரிய காதலுடைமையைச் செய்தல்போல இடைநகர், பதியிலார் ஆடவர் மாட்டுப் பொருளளவுக் கேற்ப இன்பத்தை மறைத்து நல்கி மீண்டு மவ்வின்பத்திற் காதலுளவா மாற்றிற் கேதுவாயிருத்தலான் "இடை நகரீசனைத் துணையும்" என்றார். சதாசிவப் புத்தேள் தம்மையடைந்த ஆன்மாக்கள் விரும்பிய புத்தி முத்திகளைக் கொடுத்தல் போல உண்ணகரானது அப்போக நுகர்ச்சிக் கேதுவாகிய அறிவின் விளக்கமும் வீட்டு நெறிக் கேதுவாகிய தத்துவ வுணர்ச்சியையும் உடைய பெரியார் பலரிருந்து தம்மை யடைந்த மக்களுக்குப் புத்தி முத்திகளை யுபதேசித்தலின் உண்ணகர் சதாசிவக் கொற்றவன்றனை நேருமென்றார். அழித்தலால் உருத்திரனையும், மறைத்தலான் மகேசுரனையும், அனுக்கிரகம் செய்தலான் சதாசிவனையும் இந் நகரங்கள் ஒத்தன என்க.

"அழிப்பிளைப் பாற்ற லாக்கல் அவ்வவர் கருமமெல்லாம்
கழித்திட லுகரச் செய்தல்"

என்னுஞ் சிவஞான சித்தித் திருவிருத்தத்தா னறிக.

அநுக்கல் - கெடுத்தல். மறைத்து நல்கிடு மின்பந் தொடுத்தலாவது, மறைத்துப் பின் இன்பத் தொடர்ச்சியை யுண்டாக்குங் காதலுடைமை. (கக)

முழுது ணர்ந்தநித் தியர்தமக் காயினு
முழுவதுஞ் சொலப்புக்கால்
பொழுதின் முய்விடு மாதலின் மூவகைப்
புரவள மெழுகூற்றில்
பழுதில் பல்பவ மெண்பத்து நான்குநூ
றாயிரம் பட்டாங்குக்
குழூமி நின்றிடு மவற்றுளுஞ் சிலவினிக்
கோண்டிவ ணுரைப்பாமால்.

(இ - ள்.) எல்லாவற்றையும் தமதுண்மை ஞானத்தால் நுனித்தறிந்த சிவஞானிகளுக்காயினும் இந் நகரங்களின் வளங்களெல்லாவற்றினையும் சொல்லப்புகின் காலமிலவாகும். ஆதலினால், எழுவகைப் பட்ட பிரிவினுள்ளே குற்றமில்லாத பல பிறவிகள் எண்பத்துநான்கு நூறுயிர பேதமாகப் பொருந்தினாற் போலப் புறநகர் இடைநகர் உண்ணகராகிய மூவகைப் புரங்களின் வளங்கள் எண்ணிறந்தனவாய் நிற்கும். அவற்றுள் ஒன்றும் சிலவற்றை எடுத்துக்கொண்டு இவ்விடத்துச் சொல்வாம்.

(வி - ம்.) எழுகூறு என்பது மக்கள், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்பவற்றை யுணர்த்தும். (௧௨)

வேறு

அலங்குகதிர்ச் செழுஞ்சாலி கோழரையை
மறைத்தலினா லலர்பூஞ் சோலைக்
கிலங்குமணி மேகலையா மிணர்த்தபொழில்
பாம்புரியோ டெழுந்த நொச்சி
நலங்கிளரு மரைமறைத்து நிற்றலினா
லதற்குடையா நாம விஞ்சி
விலங்கலுயர் தடவரையை மறைத்தலினா
லதற்குடையாய் விளங்கு மன்றே.

(இ - ள்.) அசைகின்ற கதிர்களோடு கூடிய நெற்பயிர்கள் கொழுவிய அரையை மறைத்தலினால், அலர்ந்த பூக்களோடு கூடிய சோலைக்கு விளங்குகின்ற அழகிய ஆடையாம். பூங்கொத்துக்களை யுடைய சோலையானது பாம்புரியோ டுயர்ந்த மதிலினது நன்மை விளங்குகின்ற அரையை மறைத்து நிற்றலினால் அதற்கு ஆடையாம். கண்டார்க்கு அச்சத்தைத் தரத்தக்க மதிலானது ஆகாயத்தைக் குறுக்கிட்டுயர்ந்த பெருமை பொருந்திய தணிகை மலையை மறைத்தலினாலே அத் தணிகை மலைக்கு ஆடையாக விளங்கும்.

(வி - ம்.) அலங்குதல் - அசைதல். "அலங்கு கதிர்க் கழனியும் பிறங்கு நீர்ச் சேர்ப்பினும் புள்ளொருங் கெழூமே" என்னும் புறநானூற்றா னறிக. மேகலை - ஆடை. பாம்புரி - சுவரினடிப் பரப்பில் கழித்த பாகத்தை பாம்புரி என்பது பாண்டி நாட்டு வழக்கு. நொச்சி - மதில். நாம் என்ற உரிச்சொல் நாம என நின்றது; "பேநா முருமென வரூஉம் கிளவி, ஆமுறை மூன்றும் அச்சப் பொருள" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தா னறிக. இஞ்சி - மதில். விலங்கல் - குறுக்கிடுதல். தடம் - பெருமை. "தடவும் கயவும் நளியும் பெருமை" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தா னறிக. (௧௩)

துன்றுகதிர்ப் பசுஞ்சாலி படிக்குயர
வதற்குயர்ந்து சோலை தோன்ற
மன்றல்கமழ் பொழிற்குயர்ந்து மதிரேன்றும்
பெருங்காட்சி வள்ளி பாகன்

வென்றகழ ரெழப்புகுமெய் யடியவர்கண்
மனமிவர்ந்து விலங்கல் சேர
ஒன்றுமணி பலகுயின்ற சோபான
மடுத்துயந்த வோக்கங் காட்டும்.

(இ - ள்.) நெருங்கிய கதிர்களோடு கூடிய பசிய நெற் பயிர்கள் பூமிக்கு மேலே எழுந்து தோன்ற, அந்நெற் பயிருக் குயர்ந்து சோலைகள் தோன்று நிற்க வாசனை பரிமளிக்கின்ற சோலைக்குயர்ந்த மதில் தோன்று கின்ற பெரிய காட்சியானது, வள்ளி நாயகியார் திருக்கணவராகிய முருகக் கடவுளின் மேம்பட்ட திருவடிகளை வணங்கச் செல்லும் மெய் யடியவர்கள் மனங்களானவை ஏறித் தணிகை மலையை யடையப் பொருந் திய பல மணிகள் பதித்த படிகளானவை யொன்றை யொன்று அடுத் துயர்ந்த எழுச்சியைக் காட்டாநிற்கும்.

(வி - ம்.) இவர்ந்து-ஏறி. சோபானம்-படி. ஓக்கம்-எழுச்சி. (கச)

வளச்சாலி மலர்ப்பொழின்முன் றலைவணக்கு
மலர்ச்சோலை மதின்முன் காய்த்த
தளிர்ச்சாகைத் தலைவணக்குந் தடமதினின்
கிரிமுன்மிசை தரித்து வானம்
அளப்பான கொடித்தலைகள் வணக்குமருஞ்
சாதிமுன்னோர்க் கடுத்த பின்னோர்
திளைப்பான மகிழ்சிறக்க முறைநின்று
தலைவணக்குஞ் செய்கை மான.

(இ - ள்.) அருமையான உத்தம குலத்திற் பிறந்த மூத்தோர்க்ளுக்கு அடுத்த பின் பிறந்த இளையோர்கள் அனுபவித்தற் கேதுவாகிய மகிழ்ச்சி அதிகரிக்க முறையாக நின்று தலையால் வணக்கம் செய்யும் தொழிலை யொப்ப, வளத்தையுடைய நெற்பயிர்கள், தாம் பிறந்த இடமாகிய மருத நிலத்தின்கண் ணுள்ள (தன்னின் முற்பட்ட) சோலைகளின்முன் தலையை வணக்கி நிற்கும். மலர்களோடு கூடிய சோலைகளானவை தாம் இருத்தற் கிடமாகிய மருதநிலத் தூர்களிலுள்ள மதில்களின் முன்னர்க் காய்க்கப்பெற்ற தளிர்களோடு கூடிய தலைகளை வணக்காநிற்கும். நீண்ட தணிகை மலைமுன் அப் பெருமை பொருந்திய மதிலானது தன் மேலே தாங்கப் பெற்று ஆகாயத்தை யளப்பதற் கேதுவான கொடியாகிய தலைகளை வணக்காநிற்கும்.

(வி - ம்.) அருஞ்சாதி முன்னோ ரென்பதற்கு அந்தண ரெனப் பொருள் கொண்டு அவர்க்கு அரசரும், அவர்க்கு வணிகரும், அவர்க்கு வேளாளரும் வணக்கம் செய்யும் தன்மைபோல எனப் பொருள் கூறினு மமையும். முன்னர்ச்சாதி என்றது குலத்தை என்க. "திணைகுலம் ஒழுக்கம் சாதி" என்னும் நிகண்டா னறிக. முன்னோர் - வயதின் மூத்தோர். பின்னோர் - ஆண்டி விளையோர். "அடுத்த பின்னோர்" என்றதனால் காலத்தாற் பிற்பட்ட வரென்க. பின்முன் என்பன காலத்தைக் குறிக் கின்ற பெயர்கள். (கரு)

கோடியனவே குளிர்போதும்புங் கோடியனவே
யிஞ்சியுங்கோ புரமுஞ் சாலக்
கோடியனவே யிவைமுறையாற் கொழுங்கண்மடுத்
தலர்தூற்றுங் குறுகார் சேரின்
அடிபெயரா தவ்வழியே தலைதுமிக்கும்
பொறிபடைக்கு மலரி யாதி
மிடிதுளக்குந் தேவர்தமை யாறலைத்துக்
கலக்கநனி விளைத்துத் தட்கும்.

(இ - ள்.) குளிர்ச்சி பொருந்திய சோலைகள் கொடிய தன்மை யுடையன. (படர் கொடியை யுடையன) மதிலும் கொடிய தன்மை யுடையன. (துகிற் கொடியை யுடையன) கோபுரங்களும் மிகவும் கொடிய தன்மையை யுடையன. (அவிட்ட நாள்களை யுடையன.) இவைகள் முறையே (கொழுவிய கள்ளை யுட்கொண்டு பழிச் சொல்லைத் தூற்றும்) கொழுவிய கள்ளை நிறைத்துப் பூக்களைச் சொரிதலாற் கொடியனவாம். பகைவர்கள் வரின் பிறக்கடியிடா வண்ணம் அவ்விடத்தே யவர்கள் தலையை வெட்டும்படியான இயந்திரங்களை யுடையனவாம். வறுமையால் நிலை பெயர்கின்ற சூரியன் முதலாகிய தேவர்களை ஆகாய வழியில் வருத்திக் கலக்கத்தை யடைய மிகுதியாகத் தடை செய்வனவாம்.

(வி - ம்.) போதும்பு கொடியன - படர்கொடியை யுடையன வாதலால் கள்ளை நிறைத்தலர் தூற்றுமென்க. கொடியோர் கள்ளைத் தம் முட் கொண்டு பழிச்சொற் கூறுவர். இஞ்சி கொடியன - மதில் துகிற் கொடி யுடையன வெனச் செம்பொருளாகக் கொள்க. கொடிய தன்மையை யுடையன வெனப் பொருள் கொள்ளுங்கால் அணுகிய பகைவர் தலையை அப்பொழுதே துமிக்கும் இயந்திரங்களை யுடையன ஆதலிற் கொடிய தன்மையை யுடையன எனச் சிலேடைப் பொருள் கொள்க. கோபுரமுஞ் சாலக் கொடியன - கோபுரங்கள் அவிட்ட நாளிடத்தைத் தம்பா லுடையன வெனச் செம்பொருள் கொள்க. கொடிய தன்மையை யுடையனவாகிய இராகு கேதுக்களைப் பொருந்தி நிற்றலாற் கொடுந் தன்மையை யுடையனவெனச் சிலேடைப் பொருள் கொள்க. அவிட்டத்தின் பெயர்-காகப்புள். காகத்தின் பெயர் கொடியாதலின் அவிட்ட நட்சத்திரங்களை யுடைமையால் கொடியன வென்றார். கொடி யென்பது பாம்பிற்கும் பெயராதலால் பாம்பாகிய இராகு கேதுக்களைப் பொருந்தி நிற்றலால் கொடியன வென்றார். துமித்தல் - ஈண்டு வெட்டுதல். அலரி - சூரியன். ஆதி - முதலான. "அலரியே யரியேபானு" எனும் நிகண்டா னறிக. மிடி - வறுமை. ஆறு - ஈண் டாகாயவழி. அலைத்து - வருத்தி. "அலைப்பினும் குழவி யன்னே யென்றோடும்" எனும் நான் மணிக் கடிகையா னறிக. தட்கும் - தடுக்கும். "ஒக்கல் வாழ்க்கை தட்கு மாகாலே" (புறம்.) என்னுமிடத்து இப்பொருட்டாதலை யறிக. (கசு)

கடியனவே யகன்வயலுங் கடியனவே
தண்டலையுங் கயமுஞ் சாலக்
கடியனவே யிவைமுறையா லுழுதுழக்கிப்
புண்படுக்கக் கலங்கு மாதர்

அடியெடுத்திட் டுதைத்துவைது கட்டிமணி
வாய்க்கவ்வி யயிற்க ணேக்கிப்
பொடிமதுப்பல் வளம்பறிக்கப் படுங்குடைந்து
மாசுறுத்தப் புலர்பு மன்றே.

(இ - ள்.) அகன்ற வயலுமிக்க கடுந்தன்மை யுடையன (விலக்கப் படுவன) சோலைகளுமிகக் கடுந்தன்மை யுடையன (விலக்கப்படுவன) தடாகங்களும் மிக்க கடுந்தன்மை யுடையன (விலக்கப்படுவன) இவை கள் முறையாக உழுதலைச்செய்து கலக்கி வருத்தக் கலங்காநிற்கும். பெண்கள் அடிகளை யெடுத்துதைத்தலாலும், வைதலாலும், தழுவுத லாலும், அழகிய வாயாற் கவ்வுதலாலும், வேற்படை போன்ற கண் ணுற் பார்த்தலாலும் உளவாகிய தேன் முதலாகிய பலவளங்களும் பறிக்கப்படும். மூழ்கி அழுக்கைப் போக்க ஒலிக்கும் என்க.

(வி - ம்.) அகன்ற வயலும் கடியன என்பதற்கு - உழுது கலக் கிப் புண்படுத்தக் கலங்கி நெல் முதலிய பயனை வலிதிற் கலக்கமுற் றளித்தலால் கடுந்தன்மை யுடையன எனச் செம்பொருளாகக் கொள்க. வயல் உழுது உழக்கிப் புண்படுத்தக் கலக்கமுற்று வருந்தலின் கலக்க முறு மதனிடத்துள்ள பொருளை யுண்டுயிர் வாழ்தல் அறிவுடையார்க் கழகன் றுதலின் கடியன வென்பதற்கு நீக்கப்படுவன எனச் சிலேடைப் பொருள் கொள்க.

தண்டலை கடியன என்பதற்கு, பெண்கள் உதைத்தல், நிந்தித் தல், கட்டியணைத்தல், வாயாற் கவ்வல், கண்ணால் நோக்கல் ஆகிய துன் பஞ் செய்யப் பூத்துத் தேன் பழ முதலிய பலவைத் தருதலாற் கடுந் தன் மையை யுடையன வெனச் செம்பொருளாகக் கொள்க. சோலை தன்பா லுள்ள பொருள்களை வல்லவருன்ற வடியாப்போல் உவகையின்றி யளித்தலின் அதனை யேற்றுண்ணல் அறிவுடையார்க் கழகன்றுதலின் "கடியன" என்பதற்கு விலக்கப்படுவன் எனச் சிலேடைப் பொருள் கொள்க.

தடாகம் கடியன என்பதற்கு, பிறர்மாட்டுள்ள மாசை நீக்குந் தன்மை இயல்பாக அமைந்திருந்தும் அதனை நீக்குங் குணமின்றி வாளா விருப்ப, மூழ்குவோர் அசுத்தங்களைச் சேர்க்க அதனையேற் றேலமிடுத லின் கடுந்தன்மை யுடையன எனச் செம்பொருள் கொள்க.

தடாகங்கள் அசுத்தங்களைத் தன்னுட்கொண்டு அரவஞ் செய்தலின் அசுத்த முடையாரை அணுகல் அறிவுடையார்க் கழகன் றுதலின் "கடியன" என்பதற்கு விலக்கப்படுவன எனச் சிலேடைப் பொருள் கொள்க.

பெண்கள் உதைக்க அசோகமும், நிந்திக்கப் பாடலமும், சுவைக்க மகிழும், பார்க்க மாவும் மலருமென்க. இதனை "ஏடவிழ் மகிழ் சுவைக்க" என்னும் நிகண்டுச் செய்யுளா னறிக. ஈண்டு வள மென்றது பூ கனி முதலாயின. குடைந்து மாசுறுத்தப் புலம்புதலாவது மூழ்கி யழுக்கைச் சேர்க்க ஒலி செய்தல். (கஎ)

பூத்திருந்தும் புனற்றடங்கள் யாவரையுந்
தோய்ந்துபுகழ்ப் பொருளு மாக்கும்

காத்திருந்தும் கடிமலர்கள் கமழ்நறுந்தேன்
சோர்வுடைத் தாய்க் களிப்பு மாக்கும்
ஏத்திருந்தும் வயவர்சிலை யெதிர்ந்தவர்தம்
முயிர்வாங்கி யிசையு மீட்டும்
பாத்திருந்தும் புலவர்குழா மொருகலைமான்
றனைமணந்து பழியுந் தீரும்.

(இ - ள்.) நீர் நிறைந்த தடாகங்கள் பூ மலரப் பெற்றிருந்தும் (பூப்படைந்திருந்தும்) யாவரையுஞ் சேர்ந்து புகழாகிய பொருளையு முளவாக்கும். காக்களிலே திருந்தப்பெற்ற (காத்துக்கொண்டிருந்தும்) வாசனையுடைய பூக்கள் பரிமளிக்கின்ற நல்ல தேனைச் சொரிதலுடையனவாய் (களவு போதலையுடைத்தாய்) களிப்பை யுளவாக்கும். அம்புகளாற் றிருத்தமடையும் வீரர்களுடைய விற்கள் எதிர்த்த பகைவர்களுடைய உயிரை வெளவி (துதித்தலமைந்திருந்தும்) புகழையு முண்டாக்கும். பாக்கள் திருந்தப் பெற்ற புலவர் கூட்டங்கள் (பகுப்புற்றிருந்தும்) கலைமானாகிய சரசுவதியை(ஆண்மானை)க் கூடிப் பழியும் நீங்கு மென்க.

பூத்திருந்தும் - மலர்ந்திருந்தும்; பூப்படைந்திருந்தும். யாவரையும் தோய்தல்-பெண்கள் யாவரையும் கூடல்; தடாகம் யாவரையும் பொருந்தல்: ஈண்டு மூழ்குதலாற் பொருந்துதலென்க. பூப்படைந்திருக்குங் காலத்துப் புணரின் பழிக்குள்ளாவரென்பது வழக்காறாகலின் ஈண்டுப் பூப்படைந்த தன்னைச் சேர்ந்தோரைத் தடாகஞ் சுத்தப்படுத்தலின். "புகழ்ப் பொருளுமாக்கும்" என்றார். காத்திருந்தும் - காக்களிற்றிருந்திய; காத்துக்கொண்டிருந்தும். சோர்வு-ஈண்டுத் தேன் வழிதல்; சோர்வு காரணமாகக் களவு போதல். தன்னிடத்துள்ள தேன் முதலிய பொருணீங்கத் துக்க முளவாக அஃதின்றி யச்சோர்வு களிப்பைத் தருதலான் கமழ் நறுந்தேன் சோர்வுடைத்தாய்க் "களிப்புமாக்கும்" என்றார். உயிரைக் கோறலாற் பாவமும் பழியு முளவாதலின்றி யதற்கு மாறாக எதிர்ந்த வீரருயிரை வில்லானெய்து போக்கலின் வீரசுவர்க்க முதலியன கிடைத்தலின் "உயிர்வாங்கி யிசையுமீட்டும்" என்றார். ஒரு மாதினைப் பல்லோர் மணத்தல் உலகியலுக்கு மாறாகிய பழியாமாகலின் அதற்கு மாறாகப் புலவர் கூட்டங்கள் சரசுவதியாகிய பெண்ணைக் கூடிப் பழியினின்று நீங்கலின் "ஒரு கலைமான்றனை மணந்து பழியுந்தீரும்" என்றார்.

(வி - ம்.) ஏ - பாணம். பா - கவி. கலைமான் - சரசுவதி; ஆண்மான். மணந்து - கலந்து, புணர்ந்து. (௧௮)

வேறு

ஆழ்ந்துகிடந் துங்கரப்ப தகழுன் றேனை
யறிஞரினி தமைத்தவருஞ் செய்யு டானுந்
தாழ்ந்துகிடந் தும்புகழுத் தக்க மைந்தர்
தடங்கரமன் றவரறஞ்சா னெஞ்சந் தானும்
போழ்ந்துகிடந் தும்புனைவ வனையன் றேனைப்
பொருகளிற்றுக் கோடுகளும் பொழிலி னுள்ளால்

வீழ்ந்துகிடந் தும்முயர்வ மலரன் றேனை
வியனகருள் வெறுத்தபொருள் பலவு மன்றே.

(இ - ள்.) கிழலகம் வரையி லாழ்முற்றுக் கிடந்தும் (தன்னுட் கிடந்த பொருள்களை) மறைப்பது (அந்நகரைச் சூழ்ந்து கிடந்த) அகழி மட்டுமன்று. (மதிநுட்ப நூலோடுடைய) புலவர்கள் (சொன்னயம் பொருணயம்) இனிதமையச் செய்த (அருமையான செய்யுள்களும் (தன்னுட் கிடந்த பொருள்களை மறைப்பனவாகும்). (முழந்தாளளவும்) தாழ்வுற்றுக் கிடந்தும் புகழத்தக்கன (அந்நகரிலுள்ள) மைந்தர்கள் பெருமை பொருந்திய கைகள் மாத்திரமன்று; (அம் மைந்தர்கள்) பலவகை யறச் செயல்கள் நிறைந்த மனமும் (பலவகைப் பொருளும் தங்கிக் கிடந்து) யாவராலும் புகழத் தக்கனவாம். அறுபட்டுக் கிடந்தும் புனையப்படுவன (அந் நகர் மாதர்கள் கையிலணியும்) வளையல்கள் மாத்திரமன்று. போர் செய்யும் யானைகளின் கொம்புகளும் (அறுக்கப்பட்டும்) கிம்புரி (தந்தப் பூண்) முதலியவற்றால் அணி செய்யப்படுவனவாம். சோலையினுள்ளிடத்தில் கீழே விழ்ந்து கிடந்தும் உயர்வடைவன மலர்கள் மாத்திரமன்று. (அந் நகரிலுள்ள பெண்கள் நாயகரோடு கூடி) வெறுப்புற்று வீசியெறிந்த பொருள்கள் பலவும் உயர்வடைவனவாம்.

(வி - ம்.) போழ்தல் - அறுத்தல். வீழ்ந்து கிடந்தும் - கீழே விழ்ந்து கிடந்தும். வெறுத்த - ஊடலால் வெறுத்து வீசிய. (௧௯)

வேறு

நகர மூன்றினும் விராய்த்தொடை படுப்பன நாடித்
தொகையி னுற்சில வுரைத்தன மினித்தொகு நகருள்
வகையி னுற்சில வேறுவே றுரைப்பது மதித்துப்
புகரி லாப்புடை நகர்வள முந்துறப் புகல்வாம்.

(இ - ள்.) அக நகர், இடை நகர், புடை நகராகிய மூன்றினிடத்துங் கலந்து தொகுதியாகச் சேர்வனவற்றை ஆராய்ந்து கூட்ட வகையாற் சிலவற்றை யுரைத்தாம். இக் கூடிய நகர்களில் வகை முறையாற் சிலவற்றை வேறுவேறாக உரைப்பதைக் கருதிப் புடைநகரின் வளத்தை முன்னர்ச் சொல்வாம்.

(வி - ம்.) தொடை படுப்பன - தொகுதியாகச் சேர்வனவற்றை. மதித்து - கருதி. (௨௦)

புறநகர்

கூவிரத்தடந் தேர்கடாய்க் குமரர்கள் பயிலும்
தாவி லெல்லைய சக்கரங் குழித்தவா றொழுங்கு
மேவி யிந்நகர்க் குமரரை விண்டவர் நகரி
ஏவ நன்றுழப் படுவதென் றியம்பலொத் துளவே.

(இ - ள்.) கொடிஞ்சியோடு கூடிய பெரிய தேரைச் செலுத்தி ஆடவர்கள் விளையாடுகின்ற கேடுதலில்லாத எல்லையின்கண் ணுள்ள

வாகிய சக்கரம் குழிக்கப்பெற்ற நீண்ட ஒழுங்கானது, பொருந்தி இந் நகரின்கணுள்ள குமரர்க்கு விரோதித்தவர் நகரமானது இவ்விதம் நன்றாக உழுதலைச் செய்யப் பெறுமென்று சொல்லுதலை யொத்துளது.

(வி - ம்.) எல்லையின்கண் ணுள்ளவாகிய ஒழுங்கென்க. வாரொழுங்கு - மீமிசைச் சொல். குமரர்க்கு - வேற்றுமை மயக்கம் விண்டவர் - பகைவர். நகரி - எழுவாய். ஏவம் - இவ்விதம். உழுதல் - கழுதை யேர் பூட்டி வரகும் கொள்ளும் வித்தல். "கடுந்தேர் குழித்த ஞெள்ளலாங்கண், வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டிப், பாழ்செய் தனையவர் நனந்தலை நல்லெயில்." என்னும் புறநானூற்றுச் செய்யுளா னறிக. ஒழுங்குமேவி யியம்ப லொத்துள தென்க. (௨௪)

பருமம் நின்றுகு மணிபரல் சொரிவதாப் பகட்டின்
அருவி மும்மதம் விலாழிநீ ராவடி மிதித்தல்
உருவ வன்மர மிடிப்பதா நிலம்வலி யுறுப்பார்
விரவி நின்றவச் சூழலொத் துளசெண்டு வெளிகள்.

(இ - ள்.) குதிரைக் கல்லணையினின்றும் கொட்டுகின்ற இரத்தினங்கள் பருக்கைக் கற்களைச் சொரிவதாகவும், யானைகளினின்றும் அருவிபோ லொழுகுகின்ற மூன்று மதங்களும், குதிரையின் பல்லடி நுரையும் நீராக அவைகளை அடிகளான் மிதித்தல், பெரிய வடிவோடு கூடிய மரத்தா லிடிப்பதாகவும், நிலத்தை (கல்லுமிட்டிகையும் நீரும் பெய்து) வலிமையுறக் குற்றுதல் செய்வோர் கலந்து நின்ற அவ்விடத்தை ஒத்துள்ளன குதிரை வையாளி செல்லும் வீதிகள்.

(வி - ம்.) பருமம் - குதிரைக்கல்லணை. பரல் - பருக்கைக் கல். விலாழி - குதிரைப் பல்லடி நுரை. செண்டு வெளி - குதிரை வையாளி செல்லும் வீதி. மூன்றிடத்தும் செயவெனெச்சத் திறுதொக்கன. வலி யுறுப்பர் - குற்றுதல் செய்வோர். "கல்லு மிட்டிகையும் பெய்து குற்றுச் செய்த நிலத்தை வன்னில" மென்று கூறும் வழக்கை தொல் - சொல். சேனா. ௪௪ஆம் சூத்திர வுரையா னுணர்க. (௨௫)

வற்க மிட்டவாம் பரிபயில் வன்னில மவற்றின்
அற்கும் வன்குர மகழ்ந்தொளி ரரைமுழுச் சுவடு
விற்க லைக்குழ மதிமுழு மதியென விளங்கப்
பொற்க லைக்கடி தடங்குறி பொறித்தன போலும்.

(இ - ள்.) வாயின் வடிகயிற்றையிட்ட தாவிச் செல்கின்ற குதிரைகள் பயில்கின்ற (குற்றுச் செய்த) வலிய நிலத்தின்கண் அக்குதிரைகளின் (கீழே) தங்கப்பெற்ற வலிய குளம்புகளால் அகழப்பெற்று ஒளிர்கின்ற அரைச்சுவடும் முழுச்சுவடும், ஒளி பொருந்திய கலைகளோடு கூடிய இளமை பொருந்திய பிறை மதியும் நிறை மதியு மென்று சொல்லும்படி விளக்கமுறப் பொன்னுடையை யணிந்த நிதம்பத்தில் நகக்குறி பதித்தனவற்றை ஒக்கும்.

(வி - ம்.) வற்கம் - குதிரை வாயிலிடும் வடிகயிறு. "மறுவறு குதிரை வாயின் வடம் வடிகயிறு வற்கம்" என்னும் நிகண்டா னறிக. அற்கும் - தங்கும். "அற்கா இயல்பிற்றுச் செல்வம் அதுபெற்றால், அற்

குப ஆங்கே செயல்" என்னும் திருக்குறளா னறிக. குழமதி முழுமதி- அர்த்த சந்திரன் பூரண சந்திரன். என - என்று சொல்லும்படி. பொற் கலை - பீதாம்பரம். கடிதடம் - நிதம்பம். குறி - ஆண்டுச் செய்யும் நகக் குறி. பொறித்தன - சுண்டுப் பதித்தன வென்க. (௨௧)

கட்டும் வாரினர் கழலினர் காளையர் கதித்து
முட்டும் வேல்சிலை நாந்தக முழுதுங்கல் லூரிக்
கொட்டில் வாய்ப்பயில் வாரது குறித்தனர் நோக்க
வட்ட வான்பயில் விஞ்சையர் மனத்துளும் பயில்வார்.

(இ - ள்.) கட்டப்பெற்ற கச்சினை யுடையரும் வீரக் கழலினை யுடையருமாகிய காளையர் எழுந்து, பாயும் வேலும், வில்லும் வாளு மாகிய எல்லாப் படைக்கலங்களையும் கலைபயிலிடத்தில் பயிற்சி செய் வார்கள். அங்ஙனம் பயிறலை (வித்தியாதரர்) கருதி நோக்குதலால் வட்டமாகிய ஆகாயத்தில் இயங்குகின்ற அவ்வித்தியாதரர் மனத்துள் ளும் தங்குவார்.

(வி - ம்) வாரினராகிய கழலினரென முற்றெச்ச மாக்குக. கதித்து - எழுந்து. முட்டும் வேல் - பகைவர் மார்பிற் பாயும் வேல். நாந்தகம் - வாள். கல்லூரிக் கொட்டில் - கலைபயிலிடம். அது - அப் பயிறல். குறித்தனர் - குறித்து; முற்றெச்சம். நோக்க - நோக்கலால்; செயவெ னெச்சம் காரணப் பொருளில் வந்தது. விஞ்சையர் - தேவரி லொரு பகுதியார். மனத்துளும் என்ற உம்மை இறந்தது தழீஇயது. மனத்துட் பயிறல் - விஞ்சையர் இவர் கல்வி நலன்களைக் கண்ணுற்று அழுக்காறு கொண் டெப்பொழுதும் அவர்கள் ஆக்க முதலியவற்றைச் சிந்தித்துக் கொண்டிருத்தலின் இந் நகரத்துக் குமரர்கள் அவ்விஞ்சையர் மனத்துட் டங்குவா ரென்க. முன்னுள்ள பயிறல் - பழகல். (௨௨)

புரவி போம்வழி பொற்குலாஞ் சங்கிலிப் படலை
கரிகள் போம்வழி கதிர்ப்பணி யடுக்கிவீழ் காழ்கள்
இரத மூர்வழி யிணர்மலர்த் தொடைத்திரண் மாந்தர்
பரவு நீள்வழி பங்கயத் தாமமா நகர்க்கே.

(இ - ள்.) இந் நகரமாகிய பெண்களுக்குக் குதிரைகள் செல் கின்ற வழி பொன்னாற் செய்யப்பட்டு விளங்குகின்ற சங்கிலிமாலையாம். யானைகள் செல்லும்வழி பிரகாசம் பொருந்திய ஆபரணங்களில் அடுக்கி நிறைக்கப் பெற்றுக் கீழே தொங்குகின்ற மணிவடங்களாம். இரதங்கள் செல்கின்றவழி கொத்துக்களோடு கூடிய மலர்களாற் றொடுக்கப்பட்ட மாலையின் கூட்டங்களாம். மாந்தர் பரந்து செல்கின்ற நீண்டவழி தாமரைப்பூ மாலையாகும்.

(வி - ம்.) இந் நகரமாகிய பெண் மகளுக்கு வழி நான்கும் சங்கிலி யும், மணிவடமும், மலர் மாலையும், தாமரை மாலையும் ஆகுமென்க. வழி களில் அடிச்சுவடு முறையாகத் தொடர்ந்து பதிந்திருத்தலின். சங்கிலிப் படலையாகவும், காழ்களாகவும், தொடையாகவும் பங்கயத் தாமமாகவும் உருவகம் செய்யப்பட்டன. (௨௩)

தண்ட மேந்துகைக் குஞ்சரம் வெளிறபுத் தேகும்
தண்ட மூற்றெழ வாக்கிய மும்மதத் தாரை
வண்டு துன்றலிற் புடைநகர் மாதரான் வயிற்றுக்
கொண்டெ ழுந்துநீண் மணிமயி ரொழுக்கெனக் குலவும்.

(இ - ள்.) தண்டாயுதத்தை ஏந்துகின்ற கரங்களோடு கூடிய யானைகள் கட்டுத் தறியைப் பறித்தெறிந்து தாங்கள் செல்கின்ற வழி யானது ஊற்றெழும்படி கொட்டிய மும்மத ஒழுங்கானது வண்டுகள் மொய்த்தலினால் புடை நகராகிய பெண்ணின் உதரத்தைத் தனக்கிட மாகக் கொண்டு எழுந்து நீண்ட கரிய மயிரொழுங்கென்று சொல்லும் படி விளங்கும்.

(வி - ம்.) தண்டம் யானைக் கையில் இருக்கும் தண்டாயுதம். வெளிறு - யானைகட்டுந் தறி. தபுத்தெறிந்து - பறித்தெறிந்து. தண் டம் - யானை செல்லும் நெறி. தாரை குலவும் எனக் கூட்டுக. இனி வயிற்றுக் கொண்டெழுதல் - வயிற்றில் எழுதல் எனினும் ஒக்கும். (உ௧)

தோய்ந்து நீர்பரி திக்கிறைத் தலதுநீ ரும்
வாய்ந்த மாதவ ருண்டிடா வளமைபோன் மணிக்கைப்
பாய்ந்த நீருடன் முழுவது மெறிந்தும்பர்ப் பனித்துக்
காய்ந்த வேழங்கள் பின்புவாய் மடுப்பன கமழ்நீர்.

(இ - ள்) நீரில் மூழ்கி (மூழ்கியபின்) சூரியனுக்கு, நீரை அர்க்கி யம் கொடுத்த பின்னரல்லது நன்மை பொருந்திய நீரினையும் பொருந் திய தவத்தை யுடைய பெரியார் உண்ணுதல் செய்யாத தன்மை போல அழகிய துதிக்கையின்கண் பாய்ந்த நீரினைத் தேக முழுவதும் வீசி நிரைத்து மேலிடத்தையும் குளிரச் செய்து பசியாற் காய்ந்த யானைகள் வாசனையை யுடைய நீரைப் பின்னருண்பன.

(வி - ம்.) நீர் தோய்ந்து என மாற்றுக. பரிதிக் கிறைத்தல் - அருக்கியந் தருப்பண முதலியன செய்தல். உம்மை யிழிவு சிறப்பு. பாய்ந்த - பரவிய. உம்பர் பனித்து - மேலே துளித்து. மடுப்பன - உண்பன என்க. (உ௨)

தடத்து நீர்த்திரைத் திரளுமத் தடத்துநீர் மடுப்பான்
இடத்து நீங்கிய வாம்பரித் திரளுநேர்ந் திரும்போர்
நடத்த மேற்செலு மாறுபோ லெழுந்துதாய் நடந்தங்
கடுத்த போதவை யடியர்போற் றலைபணிப் பனவால்.

(இ - ள்.) தடாகங்களினுள்ள நீரிலுளவாகிய அலையின் கூட்டங் களும் அத் தடாகங்களில் நீரருந்தும் பொருட்டு (தாங்கள்) நிற்கும் நிலைகளினின்றும் நீங்கிய தாவிச் செல்கின்ற குதிரையின் கூட்டங்களும் (தம்மு) ளெதிர்த்துப் பெரும் போரினைச் செய்யப் (பகை) மேற் செல லுந் தன்மை போல எழுந்து தாவி நடந்து அவைக ளிரண்டும் கரையை யண்மிய போது (சிவ)னடியார்கள் (தம்மு‌ளெதிர்ப்படின்) ஒருவர்க்

டொருவர் தலை வணக்கம் செய்தல்போலத் தலையை வணக்கஞ் செய்வனவாம்.

(வி - ம்.) இடத்துநீங்கல், தாய்நடத்தல், அடுத்தல் குதிரைக்கும் அலைக்கும் ஒப்பக் கொள்க. அடுத்தபோது - கரையைச் சமீபித்தபோது. பணிப்பன - தலையை வணக்குவன. (உஅ)

ஒற்றை யஞ்சகட் டிரதமு மொன்றலா தில்லாக்
கற்றை யங்கதிர்ப் பரிதிந லுலகினைக் காய்வான்
உற்ற தோத்தன வுருள்பல பூண்டபஃ றேர்கள்
முற்ற வுள்ளுறீஇ முகில்கிழித் தெழுந்ததேர் நிலைகள்.

(இ - ள்.) அழகிய ஒற்றைச் சக்கரத்தை யுடைய இரதமும் ஒன்றே யல்லது பிறிதில்லாத கூட்டமாகிய அழகிய கிரணங்களை யுடைய சூரியனது உலகத்தை யழிக்கும் பொருட்டுப், பல சக்கரங்களைத் தம்மிடத்துக் கொண்ட பல இரதங்களை யெல்லாம் தம்மிடத்து அடக்கி மேக மண்டலத்தைக் கிழித்து எழுந்த தேர் நிலைகள் பொருந்தியதை ஒத்தன.

(வி - ம்.) உலகு - சூரிய மண்டலம். முற்ற உள்ளுறீஇ - முழுதும் உள்ளடக்கி. முகில் - மேக மண்டலம். தேர்நிலை - தேர் நிற்குமிடங்கள். (உகூ)

கண்ணி றந்திவை போலடுங் கடன்வலாச் சமழ்ப்பால்
வெண்ணி றம்படை களிறுமொன் றல்லது மேவாப்
புண்ணி றம்படப் பொருமர சுலகடப் பொலிந்தாங்
கெண்ணி றந்தவுட் டளைத்தெழுந் தனவிபக் கூடம்.

(இ - ள்.) கண் வேகத்தைக் கடந்து (இந் நகரத்து) யானைகளைப் போலப் (பகைவர்களைக்) கொல்கின்ற முறைமையில் வன்மையில்லாத நாணத்தால் வெண்மை நிறம் படைத்த அயிராவத மென்னும் யானை யொன்றல்லது வேறு யானைகளைப் பொருந்தப் பெறுத புண்ணுனது மார்பிற் பொருந்தப் (பகைவருடன்) போர் செய்கின்ற இந்திர னுலகத்தைப் பாழ்படுத்தப் பொலிந்ததைப் போல அளவிறந்தனவாகிய யானைகளை யுள்ளே தடுத்து யானைக் கூட்டங்கள் எழுந்தன.

(வி - ம்.) கண்ணிறந்து - கண் வேகத்தையும் கடந்து. கண்ணோட்டங் கெட்டு இவைகள் போலடுங் கடனெனக் கொள்ளினும் பொருந்தும். இவை - இந்நகரத்துள்ள யானைகள். கடன் - முறை. வலா - வல்லமை யில்லாத; இடையு மிறுதியும் தொக்க எதிர்மறைப் பெயரெச்சம். "நிறம் புண்படப் பொருமரசு" எனக் கூட்டுக. நிறம் - மார்பு. "குருநிறத் திழிதோற்றம்" என்னும் காஞ்சிப் புராணத்தானறிக. எண்ணிறந்த - எண்ணிறந்தனவாகிய யானைகள். விணையாலணையும் பெயர். (கூ௦)

சுந்த ரந்தமக் கீட்டிய துரகதப் பிறவி
வந்த நாளிது வாமெனு மகிழ்ந்துமிப் பரித்தாங்

கந்த ரம்வரு மசுவதி நாடவழ் முடிய
மந்தி ரம்பல வகந்தழீஇ வான்றெடு மாடம்.

(இ - ள்.) பல குதிரைக் கூட்டங்களைத் தன்னகத்தே தழுவி ஆகாயத்தை யளாவிய மாடங்கள் அழகைத் தமக்குச் சேர்க்க குதிரைப் பிறவி (உலகத்திற்கு) வந்து தோன்றிய நக்கத்திர மிதுவாகுமென்று மகிழ்ச்சியுற்று மேலாகத் தாங்கியது போல ஆகாயத்திற் சஞ்சரிக்கின்ற அசுவிநி நக்கத்திரந் தங்குமுடியை யுடையன.

(வி - ம்.) சுந்தரம் - அழகு. ஈட்டிய - ஈட்ட. மந்திரம் பல - பல குதிரைக் கூட்டம். மாடம் அசுவதி நாள் தவழ்கின்ற முடியை யுடையன எனக் கூட்டுக. (௧௧)

கடக முள்வயிற் காட்டிய கூடங்கண் மிசையுங்
கடகங் காட்டிய வென்பது கண்டகந் தழீஇய
உடலும் வில்லின வும்பரும் வில்லின வென்ன
அடலின் விண்ணிவந் தெழுந்தன வத்திர சாலை.

(இ - ள்.) அம்புகள் வைத்துள்ள இல்லங்கள் யானைக் கூட்டங்களைத் தம்முள்ளே காட்டியனவாகிய யானைக் கூடங்கள் தம்முடியின் மீதும் கடக விலங்கினத்தைக் காட்டியன என்பதனை நோக்கித் தம் முள்ளே தழுவியன, மாறுபடுதற் கேதுவான வில்லை யுடையன தங்கள் முடியின்மீது மூலநாளினை யுடையனவென்று சொல்லும் வண்ணம் வலியோடு ஆகாயத்தி லோங்கி யெழுந்தன.

கடகம் - யானைத்திரள். இதனைக் "கடகம் யானைத்திரட்பேர்" என்னும் நிகண்டா னறிக. கடகம் - கடக விராசி. உடலும் - மாறுபடுகின்ற. வில்லின - வில்லை யுடையன. மூல நாளினை யுடையன. இதனை "தேட்கடை குருகு கொக்குச் சிலையுட னன்றி லானி. ஈட்டிய அசுர நாளிவ் வேழ்பெயர் மூலமென்ப" என்னும் நிகண்டா னறிக. (௧௨)

கிடுகு கூவிரங் கிம்புரி புரசைமத் திகைவார்
வடுவில் கூர்ங்கணை வாள்சிலை யாதியா நான்கு
படையி னுர்ப்பன வுறுப்பெலாம் பண்பின ரியற்றல்
அடைவின் முற்றிய சேரியு மனந்தமா லவனே.

(இ - ள்.) தேர்மரச் சுற்றும், தேர் மொட்டும், தந்தப் பூணும், யானைக் கழுத்திடு கயிறும், குதிரைச் சம்மட்டியும், நீண்ட குற்றமில்லாத கூரிய கணைகளும், வாளும், வில்லும் ஆகிய கருவிகளையும், நால்வகைப் படையிற் கட்டப்படுவனவுமாகிய எல்லா அங்கங்களையும் தொழிற் பண்பினை நுனித்தறிந்த வினைஞர்கள் இயற்ற முறையாகச் சுற்றிய சேரிகள் அந்நகரத்துப் பலவுளவாம்.

(வி - ம்.) ஆதியாம் என்னும் பெயரெச்சம் உறுப்பென்னும் பெயரோடியையும். உறுப்பு - அவயவம் கருவி என இரு பொருள் கொள்க. அடைவு - முறை. முற்றிய - சுற்றிய. வார் - இடையிற் கட்டும் வாரெனினுமாம். பண்பினர் - ஈண்டுத் தொழிலியற்றுந் துறையிற் கைபோயவர். அனந்தம் + ஆல்; ஆல்: அசை. அவன் + ஏ; ஏ: அசை. (௧௩)

விஞ்சை வல்லவர் படையெலாம் விறந்துமே வாதார்
நெஞ்சு துட்கெனும் புடைநகர் வளநிகழ்த் தினமேல்
அஞ்சி லோதிய ராடவ ரொடுமத னமர்த்தல்
எஞ்சு றுதபா சறையெனு மிடைநகர் மொழிவாம்.

(இ - ள்.) தத்தம் வித்தைகளிற் கைதேர்ந்த வல்லுநர்கள் (தங்கள் மதிநுட்பத்தா லியற்றிய) படைக்கலங்கள் யாவும் செறியப் பெற்று (மேற்சென்று முற்றுகையிட்ட) பகையரையர்களின் மனமானது துட் கென்னும் அச்சக் குறிப்பினை யடைதற் கேதுவாகிய புடைநகரின் வளத் தினை இதுகாறுங் கூறினேம். இனி, அழகிய சிலவாகிய கூந்தலையுடைய மாதர்களோடும் ஆண்மக்களோடும் மன்மதனனவன் போர் செய்தல் எக்காலத்துங் குறையாத பாடி வீடென்று சொல்லுதற் கேதுவாகிய இடைநகர் வளத்தினைச் சொல்வாம்.

(வி - ம்.) விஞ்சை - வித்தை. விறந்து - செறிந்து. மேவாதார் - ஈண்டு முற்றிய பகைவர். துட்கெனும் - அச்சக்குறிப்பு. சில்லோதி - ஐம்பால்; வெளிப்படை. ஆடவரோடு மென்ற வும்மையை ஓதியரோடு மெனப் பிரித்துக் கூட்டுக. அமர்த்தல் - போர் செய்தல். பாசறை - பாடி வீடு. (கசு)

## இடைநகர்

### வேறு

புளினமுங் குயிற்றுபொற் குன்றும் பொய்கையும்
அளிமல ரோடையு மலங்குய் யானமும்
களிபெறு மாடமுங் கலந்த நீர்மையால்
ஒளிவிசும் புலகினு மொண்மை மிக்கதே.

(இ - ள்.) மணற் குன்றுகளும், செய் குன்றுகளும், மானிடராக் காத நீர்நிலையும் வண்டுகள் தங்கப்பெற்ற மலர்களோடு கூடிய நீர்நிலை களும், விளங்குகின்ற இளமரக்காக்களும், களித்தலைப் பெறுதற் கிட மாகிய மாடங்களும் தம்முட் கலந்திருக்கப் பெற்ற தன்மையால் ஒளி யோடுகூடிய தேவருலகத்தினைக் காட்டினு மழகுமிக்கதிவ் வகநகராம்.

(வி - ம்.) புளினம் - மணற்குன்று. பொய்கை - மானிடராக்காத நீர்நிலை. ஓடை - மானிடராக்கிய நீர்நிலை. உய்யானம் - இளமரக்கா; அரசர் விளையாடும் காவற்சோலையுமாகும் "உய்யானத்திடை யுயர்ந் தோர் செல்லார்" என்றும் மணிமேகலை யடியானும் குறிப்புரையானு முணர்க. ஒண்மை - ஈண்டழகு. (கஏ)

அவலெறி யுலக்கைபோ யதிரத் தாக்கலும்
இவர்குலைத் தெங்கிள நீர்கள் சிந்துவ
தவலருந் தாகநோய் தவிர வோச்சுவார்க்
குவகையி னளித்திடு முதவி போன்றன.

(இ - ள்.) அவலினை யிடிக்கின்ற உலக்கைகளானவை மேலே சென்று (மடி) அதிரும் வண்ணம் மோத எழுந்த கோட்புக்க தெங்கி

ணங்கள் இளநீரைச் சிந்துவன. (அவ்வவலினை) இடிக்கின்றவர்க் குள வாகிய கெடுதலற்ற நீர் வேட்கையா லுளதாகிய நோயானது நீங்கும் வண்ணம் மகிழ்ச்சியோ டளிக்கின்ற உதவியை ஒத்தன.

(வி - ம்.) எறிதல் - இடித்தல். இவர் தெங்கெனக் கூட்டுக. இவர்தல் - எழுதல். (ருசு)

வன்மையி னிடித்திடும் வாசப் பொற்சுணம்
வின்மலி நுண்டுக ளெழுந்து மேவலின்
பன்மலர் பொற்கெனும் பரிசு தேன்விரைஇப்
பொன்மலர் மணத்தொடும் பூத்த போன்றவே.

(இ - ள்.) (அந்நகரத்துள்ள நல்லார், தங்கள்) வலிமையா லிடிக்கப்பெற்ற வாசனையோடு கூடிய பொற் பொடியாகிய ஒளிமிகுந்த நுண்ணிய துகள்கள் மேலெழுந்து பொருந்துதலால் (காக்களிலுள்ள) பல மலர்களும் பொற்கென்னும் நிறத்தோடு தோன்றும் தன்மை தேனோடு கலந்து பொற்பூ மணத்தொடு மலர்ந்தனவற்றைப் போன்றன.

(வி - ம்.) வில் - ஒளி. பரிசு - தன்மை. (கூஎ)

வேறு

கந்து கம்புடைப் பார்முலை கச்சுக
அந்தில் வீறுவ தம்மிணை யாகிய
பந்தொ றுப்பன பார்ப்பவ வாய்வெளி
வந்து தோற்றிய வண்ணநி கர்ப்பன.

(இ - ள்.) பந்தினை யடிக்கின்ற பெண்களின் முலைகள் மேலிறுகக் கட்டப்பட்டுள்ள கச்சினங்கள் கெடும்வண்ணம் (அதனைப் பிதிர்த்து மேற்செல்வன தமக்குவமையாகிய பந்தினை (அம்மாதரார்) தண்டஞ் செய்வனவற்றைப் பார்க்க ஆசை கொண்டு வெளிவந்து) தோன்றிய தன்மையை ஒக்கும்.

(வி – ம்.) கந்துகம் - பந்து. உக – கெட. அந்தில் - அசைநிலை. அவ்விடமெனவும் ஆம். வீறுவ - கச்சைப் பிதிர்த்து மேற் செல்வன. இணை – ஒப்பு. ஒறுத்தல் – தண்டித்தல். வண்ணம் - தன்மை. "வண்ணமேர் சந்தம் பண்பாம்" என்னும் நிகண்டா னறிக. (கூஅ)

வார்ந்த காதொடு மாலுவ தென்றிழை
யார்ந்து ளாரலைக் கப்படு மூசலிச்
சார்ந்த மாதரைத் தாங்கிய நெஞ்சமும்
ஊர்ந்த லைக்கப் படுமென்ப தொத்ததே.

(இ - ள்.) (தோளளவு) தாழ்ந்த காதோடுவமை யாவதென்று கருதி அணிகலன்க ளணிந்த பெண்களால் அசைக்கப்படு மூசலானது (இவ்வூசலிற்) றங்கிய மாதரிடத்துத் தங்கிய ஆடவர் மனமும் அப்பெண்களாற் செலுத்தப் பெற்று வருத்தப்படு மென்பதை யொத்துளது.

(வி - ம்.) வார்தல் - ஒழுகல்; ஈண்டு தாழ்தல். இழையார்ந் துளார் - அணிகலன்கள் நிறையப் பெற்ற பெண்கள். சார்ந்த மாதர் - ஊசலிற் பொருந்தியுள்ளாராகிய பெண்கள். (நுக)

ஆட லம்மனை யவ்வளைத் தோளியர்
பாட லம்பசுந் தேன்பெருக் குந்தொறும்
கோடமன்ற குழைத்தலைப் பொங்கரும்
பீட மன்றபைந் தேறல்பெ ருக்குமே.

(இ - ள்.) அம்மனை யாடுகின்ற அழகிய வளையணிந்த தோள்களை யுடைய அந்நகரத்துப் பெண்கள் இசைப் பாட்டாகிய அழகிய தேனைப் பெருக்குந் தோறும் கிளைகள் நெருங்கிய தளிர்த்தலை யுடைய சோலைகள் பெருமை பொருந்திய பசிய தேனைப் பெருக்கும்.

(வி - ம்.) பாடலாகிய தேன். அம்மனை யாடல்தோளிய ரென மாற்றுக. அமன்ற - நெருங்கிய. சோலையானது பெண்கள் பாட மலரு மரம் உடைத்தாதலான் தேறல் பெருக்கு மென்றார். குழைத்த - தளிர்த்த. பொங்கர் - சோலை. இசைத் தேன் பெருக்கு மங்கையர்க்கு மலர்த் தேன் பெருக்கி வழங்கும் சோலைகள் என்க. (சo)

பொன்ன னூர்புகுந் தாடவி ரிந்துபோம்
அன்ன மீட்டு மணைந்தன வேற்றுமை
மன்ன லாற்றம வாழ்க்கைம லர்க்கயம்
இன்ன வென்றறி யாவிடர் மூழ்குமே.

(இ - ள்.) இலக்குமி யொத்த (அந்நகரத்துப்) பெண்கள் சென்று மூழ்க (கயத்தினின்றும்) ஓடிப்போன அன்னப் பறவைகள் மறுபடியு மாண்டணைந் தனவாகித் தம்முடை யிருப்பிடமாகிய மலர்களை யுடைய தடாகங்கள் (தம்மியல்பினின்றும்) வேறுபாட்டைப் பொருந்தலால் யாம் வாழ்வது எத்தன்மை யுடையதென் றறியாமல் துன்பமாகிய கடலுண் மூழ்கும்.

(வி - ம்.) வேற்றுமை மன்னல் - (சந்தனம், கத்தூரி, பொற் சுண்ண முதலியவற்றாலும் மலர்கள் சிதைதல் முதலியவற்றாலும்) வேறுபா டடைதல். "இன்னவென்றறியா" என்புழி முற்றிறுதிய மெச்ச விறுதியுந் தொக்கன. (சஉ)

எக்கர் மீதுமி மைத்தபொற் குன்றினும்
நக்க தேனலர் நங்கையர் சூடுவான்
தொக்கி ருப்பன தொல்வரைக் கோட்டகம்
புக்கு மஞ்ஞைதி ரண்டன போன்றன.

(இ - ள்.) மணற் குன்றுகளினும், பொன்னிறமுள்ள செய் குன்றுகளினும் அந்நகரத்துப் பெண்கள், விரிந்த தேனினையுடைய மலர்களைச் சூடும் பொருட்டுக் குழுமி யிருத்தலான் அவை பழமையான சிகரங்களின் மயிற் கூட்டங்கள் புகுந்து சேர்தலைப் போன்றன.

(வி - ம்.) இருப்பன - இருத்தலானவை. திரண்டன போன்றன - சேர்தலைப் போன்றன. அகரம் தொழிற் பன்மையான் வந்த தொழில் விகுதி. (சஉ)

தொண்டை வாய்மணித் தூநகை மாதரார்
வண்ட லாட்டயர் சூழல்கள் வந்தெதிர்
கண்ட காளையர் கண்ணொடு முள்ளகம்
விண்டி டாவகை மெய்ப்பய னல்குமே.

(இ - ள்.) கொவ்வைக் கனிபோன்ற அதரத்தினையும் முத்துப் போன்ற தூய பற்களையுமுடைய பெண்கள் விளையாட்டைச் செய்கின்ற இடங்கள் தம்பால் மருவி நேரிற் கண்ட இளையவர் கண்களோடு மனமும் நீங்கா வண்ணம் காமவின்பத்தை நல்கும்.

(வி - ம்.) சூழல்கள் நல்குமென முடிவு செய்க. மெய்ப்பயன்-காம இன்பம். விண்டிடா வகை - நீங்கா வண்ணம். (சங)

வடிவின் வென்றவ ளங்கொடி யிட்டமும்
மிடறு வென்றவி ரிதலைப் பூகமும்
மடந லார்திறை வாங்குவர் பாகடை
தடவு மாடமி ருந்தவை தாழவே.

(இ - ள்.) இளமை பொருந்திய அந் நகரத்து மாதரார் பெருமை பொருந்திய மேன் மாடங்களி லிருந்து வடிவினாலே (தாங்கள்) வெற்றி கொண்ட வளப்பம் பொருந்திய வெற்றிலைக் கொடிகளும் (தங்கள்) கண்டத்தால் வென்ற விரிந்த தலையினையுடைய கமுக மரங்களும் ஆகிய அவைகள் தாழும் வண்ணம் வெள்ளிலையும் பாக்குமாகிய திறையை வாங்குவார்.

(வி - ம்.) நல்லாரிருந்து கொடியும் கமுகுமாகிய அவைகள் தாழப் பாகடையாகிய திறையை வாங்குவாரென முடிவு செய்க. (சச)

ஊடி முன்னுமின் னுருடை மேகலை
வீட மைந்தர்கள் வெய்தென வீர்த்தலும்
ஆட கப்பொடி யான்விளக் கட்டுந்தம்
தோடு வில்லிடத் தூண்மறைந் துட்குவார்.

(இ - ள்.) (நாயகரோடு) சிறுகலாஞ்செய்து (போதற்கு) மூற் படுகின்ற மின்னை யொத்த அந்நகரத்து மாதராருடையும், மேகலையும் நீங்க ஆடவர்கள் விரைவாக ஈர்க்க அப் பெண்கள், பொற்பொடியான் விளக்கினை யணைத்துந் தாங்களணிந்திருந்த காதணிகள் ஒளியை யுண் டாக்க (நாணி)த் தூணின்கண்ணே மறைந்து வருந்துவார்.

(வி - ம்.) முன்னும்-முற்படும். உடைமேகலை-உம்மைத்தொகை. வீட - நீங்க. வெய்தென - விரைவாக, ஈர்த்தல் - இழுத்தல். (சரு)

வீசு சுண்ணமு மென்மலர்ச் சுண்ணமும்
வாச மென்மலர் வார்மது வும்விரைஇத்

தேசு மிக்க திருநகர் கூட்டுமெய்ப்
பூசி நின்றபொற் பிற்றெனத் தோன்றுமே.

(இ - ள்.) அந்நகரத்து மாதரார் ஒருவர் மேலொருவர் வீசுகின்ற பொற் சுண்ணமும் மெல்லிய மலர்ப் பொடியும் மணத்தோடு கூடிய மலர்களினின்றும் ஒழுகுகின்ற தேனுங்கலந்து அழகினால் மிகுந்த அழகிய தணிகை நகரமானது கலவைச்சாந்தினை மெய்யின் கண்ணே அணிந்துநின்ற பொற்பினை யுடைத் தென்று சொல்லும் வண்ணம் தோன்றும்.

(வி - ம்.) விரவுதலாற் றேசுமிக்க நகரானது தோன்று மென்க. கூட்டு - கலவைச் சந்தனம். மெய்ப்பூசி - உடலிற்பூசி. (௬௬)

சோலை வாயினுந் தோய்புனற் றேத்துமின்
மாலை மார்பினர் மாட்டுநன் காட்டயர்
வேலை மாதரின் விழணி பம்புறல்
கோல மாநகர் கொண்டது போன்றதே.

(இ - ள்.) சோலையினிடத்தும், மூழ்குதற்குரிய புனலிடத்தும் ஒளியோடு கூடிய மாலையினையணிந்த மார்பினையுடைய ஆடவரிடத்தும், நன்றாக விளையாட்டைச் செய்கின்றகாலத்தில் பெண்கள்மாட் டிருந்து வீழ்கின்ற ஆபரணங்கள் நிறைதல் பெரிய நகரமானது அழகைக் கைக் கொண்டது போன்று தோன்றும்.

(வி - ம்.) தேத்து – இடம். ஆட்டயர்வேலை - விளையாடுகின்றகாலை. பம்புறல் – நிறைதல். கோலம் - அழகு. (௬௭)

தோட்டுக் காதினர் தூழ்கலை யின்சுவை
கேட்டுக் கற்றசு வாகதங் கேண்மையிற்
கூட்டுக் கண்ணிருந் தோதக்கு றித்தவை
கோட்டுக் கிள்ளைகள் கொண்டுந டாத்துமே.

(இ – ள்.) குழையையணிந்த காதினொடு கூடிய (அந்நகரத்து) மாதரார் ஆராய்கின்ற நூல்களின் சொன்னயம் பொருணயங்களாகிய சுவையினை (அம்மாதரார் இடையறாது சொல்ல முறையாகக்) கேட்டுப் பயின்ற கிளிகள் அச்சுவையினிடத்துத் தங்களுக்குளவாகிய நட்பினால் மாடங்களிற் கட்டிய கூட்டினிடத்திருந்து பலகாலும்சொல்லாநிற்க, அங்ஙனம் சொல்லா நிற்குஞ் சொற்களைக் கிளைகளில் வாழுங் கிளிகள் பலவிடங்களினும் கொண்டுசென்று பயிலும்.

(வி - ம்.) சூழ - ஆராய்கின்ற. சுவாகதம் – கிளி. கூடு – மாடங் களிற் கட்டிய கூடு. குறித்து - கருதி. கொண்டுநடாத்தும் - பல விடங் களிலும் கொண்டு சென்று பயிலும். (௬௮)

பூவை பைங்கிளி பூங்குயில் வண்டினம்
தாவு மந்தியும் யூகமுந் தத்தம

தாவி யந்துணை யோடும ளவளாய்
மேவி யும்பர்க்கும் வேட்கைபெ ருக்குமே.

(இ - ள்.) நாகணவாய்ப்புள்ளும், பசிய கிளிகளும், பொலிவு பெற்றகுயிலும், வண்டின் கூட்டங்களும், தாவுகின்ற செங்குரங்குகளும், கருங்குரங்குகளும் தத்தம் உயிரை யொத்த பெட்டைகளோடும் கலந்து பொருந்தித் தேவர்களுக்கும் மெய்யுறு புணர்ச்சிக்கண் விருப்பத்தினை மிகச்செய்யும்.'

(வி - ம்.) ஊகம் - கருங்குரங்கு. அளவளாய் - கலந்து. தேவருலகத்து நோக்காற் புணர்தலின்றி இவ்வாறு மெய்யுறு புணர்ச்சியின்மையான், "தேவர்க்கும் வேட்கை பெருக்கும்" என்றார். (சக)

ஏர்மி குத்தவி டைநக ரீதினி
நீர்மி குத்தநி ழற்கிடங் கும்பொறிப்
போர்மி குத்தபொன் னிஞ்சியுஞ் சூழ்ந்துநற்
சீர்மி குத்தவ கநகர் செப்புவாம்.

(இ - ள்.) அழகு மிகுந்த இடை நகரத்தின் நிலைமை யீதாகும். இனி நீர் நிறைந்த குளிர்ச்சியோடு கூடிய அகழும், இயந்திரங்களின் போர்த் தொழில் மிகுந்த அழகிய மதிலும் சூழ்ந்த நல்ல சிறப்பு மிகுந்த அக நகரின் நிலைமையைச் சொல்வாம்.

(வி - ம்.) நிழல் - குளிர்ச்சி. பொறிப் போர் - பொறிகள் செய்யும் போர். (ருo)

## அகநகர்

### வேறு

வேலவன்முன் விழுங்குகெனப் பணித்திடலும்
வீரமகேந் திரத்தை யுண்டு
சாலவத னிடத்தமர்ந்த தகுவர்குல
மேயழித்துத் தந்திட் டிங்கு
நீலநெடுங் கடலனது நவையுமவ
னருட்டிறத்தா லீங்கிப் பண்டு
போலநனைச் சூழ்கிடந்தாற் போன்றதுபொன்
மதிலுடுத்த கிடங்கு மாதோ.

(இ - ள்.) அழகிய மதிலாற் சூழப்பட்ட அகழியானது முருகப் பெருமான் (கடலை நோக்கி) முற்காலத்து வீரமகேந்திர மென்னும் பட்டினத்தை விழுங்குவாயாக வென்று கட்டளையிடக் கரிய கடலானது அந் நகரத்தினை யுட்கொண்டு மிகுதியாக அந் நகரத்தின்கட் டங்கும் அசுரர் குலத்தை மாத்திரம் அழித்து இத்தணிகைக்கண் அந் நகரத்தைக் கொணர்ந்து நிறுவி (ஆணை கடத்தலாகிய) குற்றத்தையும் அம் முருகப்

பெருமான் அருள்வகையா னீங்கி முன்னர்ப்போல அவ்வீர மகேந்திர மென்னும் நகரத்தினைச் சுற்றிக் கிடந்தாற் போன்றது.

(வி - ம்.) கடலானது தருவர் குலத்தை மாத்திரம் அழித்து மீட்டும் அம் மகேந்திரத்தை யுண்டாக்கிச் சூழ்ந்து கிடந்தாற் போன்றதென முடிவு செய்க. வீரமகேந்திரம் - சூரன் பட்டினம். அதனை : அப் பட்டினத்தை. உண்டென்னும் செய்தெனெச்சம் "தந்தென்"னும் எச்சத்தோடு முடிந்தது. நவை - இறைவனுடைய கடத்தலாகிய குற்றம். (௩௧)

சூர்கவர்ந்த வளம்வேண்டிச் சுரரடுத்த
ஞான்றுதன்பாற் சூழ வைகும்
ஏர்கனிந்த திசைக்கிறைவ ருடன்மான
சோத்திரம்வந் திருந்தா லன்ன
போர்கடந்த மதிற்புறத்துப் பூங்கிடங்கம்
மலைவதிபுட் கரஞ்சூழ் சுத்த
நீர்கலந்த கடலுமுடங் கணைந்ததனைச்
சூழ்கிடந்த நிலையுங் காட்டும்.

(இ - ள்.) சூரன் (தேவர்கள்பால்) வௌவிய செல்வங்களை (மீட்டும் பெற) விரும்பித் தேவர்கள் (தணிகை மலையை வந்து) அண்மிய காலத்து மானசோத்திர மென்னும் மலையானது தன் பக்கத்துச் சூழத் தங்குந் திக்குப் பாலகருடன் வந்திருந்தாலொத்த (பகைவர் மேற் சென்றுவரின்) போரினைச் செய்யும் மதிலின் பக்கத்தே யுள்ள பொலிவு பெற்ற அகழியானது அம்மானசோத்திர மலையின்கட் டங்கிய புட்கர மென்னுந் தீவைச் சூழ்ந்த நல்லநீர் கலக்கப்பெற்ற சுத்தநீர்க் கடலும் ஒரு சேரப் பொருந்தி அம்மானசோத்திர மலையைச் சுற்றிக் கிடக்கும் நிலையையும் காட்டா நிற்கும்.

(வி - ம்.) அடுத்த ஞான்று தானும் வந்திருந்தா லன்னவென முடிக்க. புட்கரத் தீவில் பெரும்புறக் கடல் சூழப் பெற்றிருக்கிற மான சோத்திர மலையின் எண்டிக்கிலும் அட்டபாலக ரிருத்தலால் "திசைக் கிறைவருடன்" என்றார். கிடங்கு காட்டு மென்க. புட்கரஞ் சூழ் - புட்கர மென்னும் தீவைச் சூழ்ந்த. அதனை - மானசோத்திர மலையை. (௩௨)

கோடுநெருங் கியதமது குலம்பணித்த
றனக்கன்றிக் குறிய தொண்டன்
பாடுமரு வியவிறைவற் பணிந்துவரம்
பெறநேமிப் பறம்பு மப்பால்
பீடுபிறங் கியகடலு மதில்கழிப்
பெயர்பூண்டு பெயர்ந்த வோவென்
றுடுகொடி மதிலுகப்பு மகழியகற்
சியுமெவரு மயிர்ப்ப மல்கும்.

(இ - ள்.) சிகரங்கள் (கரைகள்) பொருந்திய (மலையும் கடலு மாகிய) தங்கள் குலத்தினை யடர்கல் (குமரக் கடவுளாகிய) தனக்கே யல்லாமல் குறுமுனிவன் ஆகிய அடியான் மாட்டும் அத்தொழிலை வைத்த இறைவனாகிய முருகப் பெருமானை வணங்கி வேண்டும் வரங் களைப் பெறச் சக்கரவாளகிரியும், அதன் பக்கலிற் பெருமையோடு விளங்கிய பெரும்புறக் கடலும் மதிலென்னும் பெயரையும், அகழி யென்னும் பெயரையும் பூண்டு (இத்தனிகை வரையை) அடைந் தனவோ என்று யாவரும் கூறும் வண்ணம் அசைகின்ற கொடிகள் கட் டப்பெற்ற மதிலினுயர்ச்சியும் அகழியின் விரிவும் (கண்டோர் யாவரும்) ஐயக்கொள்ளும் வண்ணம் பொருந்தும்.

(வி - ம்.) கோடு நெருங்கிய - மலையைக் குறிக்கும் பொழுது சிக ரங்கள் நெருங்கிய எனவும், கடலைக் குறிக்கும் பொழுது கரைகள் நெருங்கிய எனவும் பொருள் கொள்க. குலம் என்றது கடலினத்தை யும் மலையினத்தையு மென்க. குறிய தொண்டன் - அகத்தியன். மதிலகழிப் பெயர் - மதிலென்கிற பெயரும் அகழி என்கின்ற பெயரும். உகப்பு - உயர்ச்சி. "உகப்பே யுயர்வு" என்னும் தொல்காப்பியச் சூத் திரத்தா னுணர்க. (௯௩)

பாதலமுன் னுலகமெலாம் படிந்தாடிப்
பருகியுளப் பரிவு தீர
ஆதிகம டந்துளைந்து களிதூங்க
வழற்கால வரனுர் தங்கும்
சோதியழ றழலாமை யப்புவனத்
தினிதமர்வோர் தோய்ந்து மெய்யிற்
சீதமுற வவ்வளவுஞ் சென்றுழ்ந்து
கிடந்ததிந்தத் தெளிநீர்ச் சூழல்.

(இ - ள்.) கீழுலகினை முதலாக வுடைய ஏழுலகங்களி லுள்ளாரும் மூழ்கி விளையாடி யுண்டுள்ளத்தின்கண் ணுள்ள துன்பம் நீங்கவும், விண்டுவாகிய முதலாமை துளைந்து விளையாடி இன்பத்திலே தங்கவும். காலாக்கினி யுருத்திரனுர் வாசம் பண்ணுகின்ற ஒளியோடு கூடிய அக் கினியானது வெதுப்பாமல் அக்காலாக்கினி யுருத்திர புவனத்தின்கண் ணினிதாகத் தங்குபவர்கள் மூழ்கித் தங்கள் மெய்யின்கட் குளிர்ச்சியுறும் படி அக்காலாக்கினி புவனம் வரையும் சென்றுழமுற்றுக் கிடந்தது இவ் வகழியாகிய தெளிந்த நீரையுடைய இடம்.

(வி - ம்.) பாதல முன்னுலகம் - கீழுலக முதலாகிய ஏழுலகம். உம்மைகள் எண்ணின்கண் வந்து தொக்கு நின்றன. தழலாமை-வெதுப் பாமல்; நீர்ச்சுழல் ஈண்டுக் கிடக்கும் என்க. (௯௪)

அந்தரத்தில் விண்ணவர்கட் கணிநகரம்
பற்பலவு மமைத்த வேதன்
இந்தநக ரனைத்துமொரு மதலையின்றே
லற்காவென் றெண்ணி வல்லே

மைந்துபெறு மொருமலையந் நகரனைத்துஞ்
செறிந்தோங்க வகுத்தல் போலும்
கொந்தொளிவிட் டெறிக்குமணி குயின்றுவெளி
யடைத்துகந்த கோனை நொச்சி.

(இ - ள்.) ஆகாயத்தின்கண்ணே தேவர்களுக் கழகிய நகரங்கள் பற்பலவற்றையும் செய்த பிரமன் (யானுளவாக்கிய) இந் நகரங்களெல்லாம் (தம்மைத் தாங்குவதொரு) தூணொன்றின்றாயின் ஆகாயத்தின்கட் டங்கமாட்டாவென்று கருதி வலிமையைப் பெறுகின்ற ஒருமலையை அந் நகரங்க ளெல்லாஞ் செறிந்து உயர்ச்சியை யடையச் செய்ததுபோலாகும் கூட்டமாகிய ஒளியினை வீசி விளங்குகின்ற மணிகளழுத்திய ஆகாயத்தை மறைத்துயர்ந்த அழியாத மதில்.

(வி - ம்.) இந்த நகரம் - அந்தர நகரம். மதலை - தூண். "மதலையே கொன்றை பிள்ளை மரக்கலம் கொடுங்கை தூணும்" என்னும் நிகண்டா னறிக. அற்கா - தங்கா. கொந்து - கொத்து. வெளி - ஆகாயம். உகந்த - உயர்ந்த. கோனை - அழியாத. (௫௫)

கிழக்கமர்ந்த வேழுலகுந் தமக்குமக
ழெனவுடுத்த கிடங்கும் விண்ணோர்
வழக்கமர்ந்த வேழுலகுந் தமக்குமதி
லெனவளைத்த மதிலும் வேத
முழக்கமர்ந்த தணிகைவரை முருகனிடர்
துமித்ததுமேன் மொய்யா தோம்ப
வழக்கமர்ந்த தனதருளை விடுப்பவது
போய்வளைந்த வுருவம் போலும்.

(இ - ள்.) கீழே தங்கிய ஏழுலகங்களும் தங்களுக்கும் அகழியாகப் பொருந்திய அகழியும், தேவர் வழங்குதல் பொருந்திய (ஆகாயத்தின் கட் டங்கிய) ஏழுலகங்களும் தங்களுக்கும் மதிலாகக் கொண்ட மதிலுமாகிய இவை யிரண்டும் வேத வொலி பொருந்திய தணிகை மலையின்கணெழுந்தருளிய முருகப் பெருமான் இப் பதினான்குலகின்கணுள்ள (மூவகையான மக்களுக்குளவாகிய) பிறப் பிறப்பாகிய துன்பங்களைக் கெடுத்து அத்துன்பமானது மேலும் பொருந்தாது பாதுகாப்பதற்கு (தம்மை வழிபடும் அடியார்களுக்கு) வழங்குதல் பொருந்திய தனது (கைம்மாறில்லாத) நல்ல அருளினை(க் காக்கும் வண்ணம்) செலுத்த அவ்வருளானது சென்று விளைந்த வடிவத்தை யொக்கும்.

(வி - ம்.) முருகப் பெருமான் மேல் கீழுலகி னுள்ளாருடைய இடரைத் துமித்து அவ்விடரானது மீண்டும் அவர்களைப் பற்றாவண்ணம் ஓம்பும்பொருட்டு விடுத்த அருளென்க. கிழக்கு - கீழ். "காணிற் கிழக்காந்தலை" எனும் பொய்யா மொழியா னுணர்க. வழக்கமர்ந்த - வழங்குதல் பொருந்திய, அடியார்கட்கு வழங்குதல் பொருந்திய எனக் கூட்டுக. அது - அவ்வருள். (௫௬)

களவொழுக்கி னைந்திணையு நானிலரு
மொருங்கடுத்த கலப்பி னுற்ற
உளமதித்த வேற்கடவு ளோங்கல்புற
வம்பணையின் றுறுத றேக்கி
அளவையிடற் கரிதாக வேறமைத்த
கடல்போலு மகழி வேனில்
தளர்வகல வாட்டயர்வார் சமைத்துறுத்த
பலமதலை தாங்கு மன்றே.

(இ - ள்.) கள வொழுக்கத்தின்கண் நிகழு மைந்திணைப் புணர்ச்சியையும் நால்வகை நிலமும் பொருந்திய கலப்பினிடத்துச் செய்யத் திருவுளத்திற் கொண்ட வேற்படையை யுடைய முருகக் கடவுள், குறிஞ்சியும், முல்லையும், மருதமுமாகிய மூவகை நிலங்களு மிவ்விடத்தே பொருந்தி யிருத்தலைக் கருதி (யாவராலும்) அளவிடற் கருமையாக வேறு செய்த கடலினை யொக்கும் அகழி.

(வி - ம்.) அவ்வகழி வேனிலா லுளவாகிய தளர்ச்சி நீங்கும் வண்ணம் (புனலாட்டைச் செய்யும் தலைவர்கள்) கரிமுக வடிவாகவும் பரிமுக வடிவாகவும் செய்த பல மரக்கலங்களைத் தாங்கு மென்க.

களவொழுக்கி னைந்திணை - களவொழுக்கினு ளுளவாகிய ஐந்திணைப் புணர்ச்சி; ஐந்திணை புணர்ச்சிக்கானமையின் ஆகு பெயர். ஒருங்கடுத்த கலப்பினுற்ற - ஒருங்கு சேர்ந்த கலப்பினிடத்துச் செய்ய. இன் ஏழாவத னுருபு. வேனிற்றளர்வு - வேனிலா லுளவாகிய சோர்வு. ஆட்டயர்வார் - (இருகாமத்திணை ஏரி முதலியவற்றி லாடுவார் போல) புனலில் விளையாட்டுச் செய்பவர். உறுத்த - சேர்ந்த. மதலை - மரக்கலம். "மதலையே கொன்றை பிள்ளை மரக்கலம் கொடுங்கை தூணும்" என்னும் நிகண்டா னறிக. (௩௪)

முத்தனைய நகைமடவார் வீசியசுண்
ணமுமுலையிற் கழிந்த சாந்தும்
மைத்தகுழன் மலர்த்தாது மஞ்சளுமாட்
டயர்காலை மலிந்த யாவும்
தத்துதிரைப் பேரகழி யெறிந்தொதுக்கும்
வண்டலொலி தழைக்கு மாற்றுற்
சுத்தநறுங் கடல்சூழ்ந்த தமனியப்பார்
பொருமடுத்த சூழ லெல்லாம்.

(இ - ள்.) முத்தினை யொத்த பல் வரிசையை யுடைய அந்நகரத்திளம் பெண்கள் (ஒருவர்மே லொருவர்) வீசியெறிந்த பொற்பொடியும், தங்கள் தனங்களினின்றும் கழித்த கலவைச் சந்தனமும், கரிய கூந்தலின் கண்ணுள்ள மலர்ப் பொடியும் மஞ்சளும், புனலாடுகின்ற காலத்து வீழ்ந்து மலிந்தனவாகிய எல்லாப் பொருள்களும், தாவுகின்ற அலைகளையுடைய பெரிய அகழி (அலையாகிய கையால்) எறிந்தொதுக்குகின்ற

வண்டலாகும். அவ்வண்டல் (பொன்போல்) ஒளியை வீசும் தன்மை யால் (அவ்வகழியை) அடுத்துள்ள இடங்களெல்லாம் நறிய நன்னீரை யுடைய பெரும்புறக் கடலைச் சூழ்ந்த பொன்னிறத்தை யுடைய பூமி யினை யொக்கும்.

(வி - ம்.) மைத்த-கரிய. சுண்ணமும், சாந்தும், மஞ்சளும், மலிந்த யாவும் வண்டலென முடிக்க. அவ்வண்ட லொளிவிடுதலால் அகழி யைச் சுற்றிய இடமெல்லாம் புறவாழியை யடுத்த பொன்னிறப் பூமி யினை யொக்குமெனக் கூட்டுக. (கஅ)

வீங்குபுனற் சரவணத்து வேற்கடவு
டனைவிரிபொற் றவிச தாகத்
தாங்குமல ரினமென்று தாமரையும்
வரைகிழித்த தடந்தோண் மாலைப்
பூங்குவளை மலரினமென் றிருகுவளைப்
பலமலரும் பூத்த தென்ப
ஓங்குமவ னருட்குரியார் தமக்கடுத்தா
ரையுட்போற்று முறுவர் மான.

(இ - ள்.) உயர்ந்த முருகப் பெருமா னடியார்க் கடியாரையும் போற்று முனிவரை யொப்ப மிக்க நீரையுடைய சரவணப் பொய்கை யில் வேற்படையை யுடைய முருகக் கடவுளை விரிந்த அழகிய ஆசன மாகத் தாங்கிய தாமரை மலருக்கினமாகு மென்று தாமரை மலரும், கிர வுஞ்ச மலையைப் பிளந்த பெருமை பொருந்திய தோளினிடத் துளவாகிய மாலையிற் பொருந்திய பொலிவு பெற்ற குவளைமலருக் கினமாகுமென்று கருங்குவளையுஞ் செங்குவளையுமாகிய இருவகை மலர்களும் மலர்ந்தன வென்று சொல்வார்கள்.

(வி - ம்.) இரு குவளை - கருங்குவளை, செங்குவளை. அருட்குரியார் தமக்கடுத்தார் - அடியார்க்கடியார். உறுவர் - முனிவர். இதனை "உறற் பால நீக்க லுறுவர்க்கு மாகா" என்ற நாலடிச் செய்யுளா னுணர்க. (கக)

இன்னுமறை பலகாலிங் கிகப்புறினுங்
கடலமுத மெடுக்க வேண்டி
மன்னமரர் துயவுறினு மிடர்நமக்கெய்
தாவெனமான் மகிழ்ச்சி கூரத்
துன்னுமக ரங்களுமோட் டாமையுமன்
னவன்கரத்துத் தூய வாழி
மின்னகுகூ ரிழந்தேனென் றல்லாக்கு
மிடங்கர்களும் விறக்கு மன்னே.

(இ - ள்.) (முன்னர் மறைகளைச் சோமகாசுரன் கொண்டு கடலி லொளித்தது போல) இனியும் வேதங்களானவை பன்முறை யிவ்வுலகை விட்டு நீங்கினும் பாற்கடலின்கண் ணமுதமெடுக்க விரும்பித் தேவர்

கள் வருந்தினும் (கொணர்தலும் தாங்கலுமாகிய) துன்பங்கள் நமக்குப் பொருந்தா வென்று விண்டு மகிழ்ச்சி மிக (அவ்வகழியின்கண்) பொருந்துகின்ற சுறா மீன்களும் பெரிய ஆமைகளும் அவ்விண்டுவின் கரத்தில் (ஆதிமூலமே யென்ன யானையைப் பிடித்த முதலையை வெட்டுப் பட்டு வெற்றி பெற்றுத்) தங்கிய பரிசுத்தமான சக்கரப் படையானது ஒளியோடு விளங்குகின்ற கூரிணையிருந்தோ மென்று மயங்குதற் கேதுவாகிய முதலைகளும் செறிந்து வதியும்.

(வி - ம்.) இகப்புறினும் - நீங்கினும். துயவு - வருந்தம். அல்லாக்கும் - மயங்கும். விறக்கும் - செறியும். (கo)

நெடுங்கைவழிப் புழையகந்து நிறைகடலோ
டமைமடுத்து நிலத்து மீளக்
கடுங்கொலைய களிற்றுமுகக் கடவுள்பல்கால்
விடுத்தெமது கரஞ்சேர் சங்கம்
அடுங்கணங்கோண் டகன்றிடினுங் கவலையிலே
மெனத்திருமா லயர்வு நீங்கப்
படுங்கதிர்வெண் மணிகொழிக்கும் பலவளைசூழ்
தலைப்பணிலம் பல்ல சூழும்.

(இ - ள்.) கடிய கொலைத் தொழிலையுடைய யானைமுகத்தையுடைய மூத்த பிள்ளையார் நீண்ட துதிக்கையின்கண் உள்ள துளையினிடத்து நிறைந்த பாற்கடலோ டெம்மையு முட்கொண்டு இப் பூமியின்கண் (திருவிளையாடலாக) இன்னும் பலதரம் மீள விடுதலைச் செய்து எமது கரத்திலுள்ள சங்கத்தை (இவ்வுலகத்தை யெல்லாம்) கொல்ல வல்ல (அப்பெருமான் பரிவாரமாகிய) பூதகணங்கள் கொண்டு செல்லினும் யாம் கவலையடையே மெனத் திருமால் வருத்தம் நீங்கும் வண்ணம் ஒளி பொருந்திய முத்துக்களைச் சொரியும் வலம்புரிச் சங்கம் ஆயிரம் சூழப்பெற்ற பாஞ்சசந்ய மென்னும் சங்கங்கள் பல மொய்க்கப்பெறும்.

(வி - ம்.) தலைப்பணிலம் - பாஞ்சசந்யம். பாஞ்சசந்ய மென்னும் சங்கினை ஆயிரம் வலம்புரிச் சங்கங்கள் சூழல் முறையாகலின் "மணி கொழிக்கும் பல்வளைசூழ் தலைப்பணில" மென்றார். இதனை "இப்பி யாயிரமே சூழ்ந்த" என்னும் நிகண்டா னறிக. (கக)

மந்தரநட் டரவநெடுங் கயிறியைத்துக்
கடைந்துலவா மருந்து காண
அந்தரரு மினிவருவர் போலுமென
முகிலினங்க ளாழி நோக்கா
திந்தமணி நெடுங்கிடங்கி னரும்புனல்வாய்
மடுத்தெழுந்தவ் விளைப்பு நீங்கச்
சந்தமணி மதிற்றலையிற் கிடந்துவெளி
பரந்தெங்குந் தளிக்கு மன்றே.

(இ - ள்.) மந்தர மென்னும் மலையை மத்தாக நட்டுப் பாம்பாகிய [illegible] கயிற்றினாற் கடைதலைச் செய்து சாவா மருந்தாகிய அமிர்தத்தை [illegible] வல்லவராகிய தேவரும் இன்னும் வருவார்களென்று மேகக் கூட்டங்கள் (நீரை யுட்கொள்ளக்) கடலினை நோக்கிச் செல்லாது இத் தணிகையின்கண் ணுள்ள அழகிய நீண்ட அகழியின்கண் ணுள்ள நல்ல நீரை யுட்கொண்டெழுந்து (அங்ஙன முண்ட அயர்வு நீங்க) அழகினை யுடைத்தாகிய அந்நகர் மதிலிடத்துத் தங்கி ஆகாயத்தின்கட் பரவி எங்கும் மழையைத் துளிக்கும்.

(வி - ம்.) உலவா மருந்து - என்றுஞ் சாவா மருந்தாகிய அமிர்தம். சுந்தம் - அழகு. வெளி - ஆகாயம். தளிக்கும் - துளிக்கும்; ''தளி யென்பதுளியே கோவில்'' என்னும் நிகண்டா னறிக. (சுஉ)

ஒழுகுதிரைக் கிடங்கிடைநீண் மதில்கடல்க
  ளொருங்குவிரா யுறுநீர் நாப்பண்
விழுதுநிகர் சடைப்பெருமான் றழற்பிழம்பா
  யெழுந்தவுரு விழையக் கங்கை
பழுதறுமால் பதந்துருவிப் புனல்கரப்பப்
  பங்கயத்தோன் பறவை யாகி
எழுமளவி லோசனிக்கு முறைகாட்டி
  யிடைமதிற்கட் டுளும்பு மன்றே.

(இ - ள்.) நீண்ட வல்லகளோடு கூடிய அகழியினிடத்து நீண்ட மதிலானது எழுவகைக் கடலும் பெருகியொருசேர விரவிக்கலந்த மிக்க பிரளய வெள்ளத்தி னடுவில் விழுதினையொத்து நீண்ட சடையினை யுடைய சிவபெருமான் திப்பிழம்பாக எழுந்தருளிய வடிவினை யொப்ப (பிரமனைப்போல் முடிகண்டாமெனக்) குற்றம்படுதலிலவாகிய விண்டு, அடியினைத் தேடி(ப் பன்றி வடிவாக) நீரின்கண் மறையத் தாமரை மலரின்கண் வதியும் பிரமன் அன்னப் பறவையாகி யெழுங் காலத்திற் சிறையடிக் கொள்ளும் முறைமையினைக் காணச்செய்து (ஆகாய) கங்கையானது மதிலிடையிலே துளிக்கும்.

(வி - ம்.) ஒழுகுதல் - நீளல்; 'வார்தல் போதலொழுகல் மூன்றும், நேர்பும் நெடுமையுஞ் செய்யும் பொருள' என்பதனு னறிக. மதில் எழுவாய். கடல்க ளொருங்குவிரா யுறுநீர் - பிரளய வெள்ளம். நாப்பண் - நடுவிடம். விழுது - ஆல்முதலியவற்றினின்று மிரங்கும் ஒரு வகைக் கொடி. கங்கை துளும்புமெனக் கூட்டுக. ஓசனித்தல் - சிறையடிக் கோடல். இதனை ''உடைதிரை முத்தஞ் சிந்த ஓசனிக்கின்ற வண்ணம்'' என்னும் சிந்தாமணி (2652)ச் செய்யுளி னுரையா னுணர்க. (சுங)

கோளுறுவிண் ணரவமணி கொழிக்குமகன்
  கிடங்குடுத்துக் குரூஉக்கல் வேய்ந்து
வாளுறுதிண் மதிலிடைத்த னுடலுரிஞ்த்
  தவழ்ந்தேகும் வளப்பு முந்நீர்த்

அக்கினி தன்னிற் கலக்க. ஒளி, நெடும்புவி விரவு விரிநீர்தன்னை விரவி நின்றதுபோல் - அவ்வக்கினியானது நீண்ட பூமியைத் தன்னுள் ளடக்கிய விரிந்த நீரைத் தன்னுள்ளடக்கி நின்றதுபோல என்க. இதனால் ஆகாயத்திற் காற்றும், காற்றுள் நெருப்பும், நெருப்புள் நீரும், நீருட் பூமியும் அடங்கி நிற்கு முறை தெற்றெனப் புலனும். இவ் வைம்பெரும் பூதங்களி னடுநிற்றலாகிய நெருப்பு, மேலுள்ள இரு பூதங்களினும் கீழுள்ள இரு பூதங்களினும் கலந்து நின்று பிளிர்வதுபோல இம்மதில் பூமியைத் தன்னிடத்துக் கொண்ட அகழி நீரையும், ஆகாயத்தோடு கலந்த வாயு மண்டலத்தையும் அக்கினி பூதம்போலக் கலந்து நின்றமையால் "ஒளிவிரவி நின்றதுபோல் விரவு செம்பொன் மதி" லென்றார். ஞாயில் - ஏப்புழைக்கு நடுவே எய்து மறையும் சூட்டென்பர் நச்சினார்க்கினியர். குருவித்தலை யென்பர் அடியார்க்கு நல்லார். "ஞாயிலுஞ் சிறந்து நாட்கொடி நுடங்கும் வாயில்" என்னும் சிலப்பதிகாரத்து (217, 218) அடி அடைக்கலக் காதையா னுணர்க. இம்முறையால் - இத்தன்மையால். (௬௫)

குழுமுபொறி மடங்கல்களி றடுபுலிவா
னரம்பாந்தள் குலாய நீரால்
எழுவரையிற் குவட்டினங்க ளெனநிரந்த
ஞாயிலினெந் திரங்கள் சில்ல
எழுவடிவா ளயிலாழி யெய்கணையின்
னனவுமிழ விலங்கு நொச்சி
வழுவில்படைக் குலமனைத்தும் வகுக்குமறு
முகன்கரத்து வளைய மானும்.

(இ - ள்.) குழுமிய பொறியாகிய சிங்கமும், யானையும், கொல்லும் புலியும், குரங்கும், பாம்பும் இவைகள் விளங்கிய தன்மையால் உயர்ந்த மலையின்கண் ணுள்ள சிகரக் கூட்டங்கள் என்று சொல்லும்படி பொருந்திய மதிலுறுப்பின்க ணுள்ள பொறிகள் சில, இருப்புலக்கையும், வடித்த வாளும், கூர்மையான சக்கரமும், எய்யத்தக்க அம்பும் ஆகிய இவைபோல்வன பிறவற்றை உமிழாநிற்க, விளங்குகின்ற மதில் குற்றமில்லாத படைக் கூட்டங்க ளனைத்தும் உண்டாக்கின அறுமுகக் கடவுள் திருக் கரத்தின்க ணுள்ள சக்கரத்தை யொக்கும்.

(வி - ம்.) மதிலை மலையாகவும், மதிலுறுப்பினைச் சிகரமாகவும் பொறியாகிய மடங்கல் முதலியவற்றை அம் மலையின்கண் வதியும் உயிர்த் தொகையாகவும் கொள்க. மதிலுறுப்பின்கண் ணுள்ளது இயந்திர மென்க. சில்ல உமிழ எனக் கூட்டுக. வளையம் - சக்கரம். இச் சக்கரம் பெருமான் திருக்கரத்தி னின்றும் போந்து பல ஆயுதங்களையும் ஆக்கினமையின் அறுமுகன் கரத்து வளையமென்றார். இதனைக் கந்த புராணக் கதையா னறிக. குழுமு பொறி மடங்கல், களிறு, அடுபுலி, வானரம், பாம்பு முதலிய இயந்திரங்களா மென்பதை "கரும்பொனியல் பன்றிகத நாகம்விடு சகடம், குரங்குபொரு தகரினொடு" என வரும் சிந்தாமணி (௭௩) செய்யு ளடியானு மிவைகளி னுரையானு முணர்க. களிறு - பன்றிப் பொறி. "மதிற்றலையி னேறினு ருடலைக் கோட்டாற் கிழிக்கும் பன்றிப் பொறியும்" என்றார். குரங்கு - குரங்கு

போலிருந்து சேர்ந்தாரைக் கடிக்கும் பொறியும். பாம்பு - விடவரவாகச் செய்த பொறி. (௧௬)

வேறு

வடாதுசார்க் கயிலைக் குன்றம் வளைத்தபோன் வீஞ்சி மானும்
கெடாதசீர் மதிற்பா லுட்டுங் கேதனத் திரள்கள் சூழ்ந்து
விடாதுமே லிவப்ப விண்ணின் வேந்திருக் கின்ற காட்சி
அடாதசீர் காழி வஞ்ச வடவியி லிருத்தல் காட்டும்.

(இ - ள்.) வடக்கண் பொருந்திய கைலை மலையானது (தணிகை நகரைச்) சுற்றிய அழகிய மதிலையொக்கும். கெடாத சிறப்பினையுடைய மதிற்கட் கட்டிய கொடிக் கூட்டங்கள் சுற்றி யிடைவிடாது மேலே யெழத் தேவருலகத்தி லிந்திர னிருக்கின்ற தோற்றமானது வேறொன்றற்கும் பொருந்தாத சிறப்பினையுடைய காழி மாநகரத்தின் கண்ணுள்ள மூங்கில் வனத்தி லொளித்திருந்தலை யொக்கும்.

(வி - ம்.) வேந்தன் - இந்திரன். "வேந்தன் மேய தீம்புன லுலகம்" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தானும் "வேந்தனும் வெந்து கெடும்" என்னும் திருக்குறளானு முணர்க. வஞ்சம் - மூங்கில், இதனை "வம்சம்" என்பதன் திரிபென்பர். வஞ்ச அடவியினிருந்த கதை சீகாழிப் புராணத்தா னறிக. (௧௭)

வில்லுமிழ் மணிப்பொற் கோடும் வெண்சுதை யெயிலும் பூப்பப்
புல்லிய வகழித் தெண்ணீர் புடைவளை பரிவே டங்கும்
எல்லுமிழ் மதிக்கு நாப்ப ணிலங்குவா னகரயின் பாங்கர்
ஒல்லும்வார் சோலை மற்றை யுடுக்குல நிரந்த வானம்.

(இ - ள்.) ஒளியைக் கக்குகின்ற மணிகளோ துங்கிக் கிடக்கும் கரையும் வெள்ளிய சுண்ணச் சாந்து தீற்றிய மதிலும் பொலிய அவற்றைத் தழுவிய அகழியின் கண்ணுள்ள நீரானது (மதியின்) பக்கத்தே சுற்றிய ஊர்கோளுக்கும் ஒளியை விடுகின்ற மதியினுக்கும் நடுவே விளங்குகின்ற ஆகாயமாகும். பெரிய அக்கரையின் பக்கத்தே பொருந்தும் பல மலர்களையுடைய சோலையானது அதனின் வேறுகிய தாரகைக் கூட்டங்கள் பொருந்திய ஆகாயமாகும்.

(வி - ம்.) கோடு - கரை. வெண்சுதை - சுண்ணச் சாந்து. பூப்ப - பொலிய. "பொருளற்றார் பூப்பர்" என்னும் பொய்யாமொழியும் இப் பொருட்டாதலை யறிக. தெண்ணீர் எழுவாய். பரிவேடம் - சந்திரனைச் சுற்றியிருக்கும் ஊர்கோள். நாப்பண் - நடுவிடம். சந்திரனுக்கும் ஊர் கோளுக்கும் நடுவிடமாகிய வானம் நீங்கிய ஏனைய வானிடம் கரையின் பக்கத்திலுள்ள சோலையாகு மென்பார், "மற்றை யுடுக்குலம் நிறைந்த வானம்" என்றார். தெண்ணீரானது வானாகு மெனவும் சோலை உடுக் குலம் நிரந்த வானாகு மெனவும் முடிவு கொள்க. (௧௮)

இடர்தபு மதிலுற் பாலு மெழுந்தகோ புரங்கள் மேருத்
தடவரை நான்கு மெல்லை தணந்துகந் திருந்த வாங்குக்

கோடிவரைத் தேத்து நீண்ட குளிர்மரங் கிடங்கு முற்றும்
தோடியுறக் கிடந்த சாம்பூ நதமெனுந் தொல்லை யாறு.

(இ - ள்.) இடர் நீங்கிய மதிலின் நாற்புறத்திலு மெழுந்துள்ள கோபுரங்கள் மேருமலைக் கடைகல்லா யடுத்த பெருமை பொருந்திய நான்கு மலைகளும் தம் மெல்லையிலின்று நீங்கி உயர்ந்திருந்தனவாகும். அம் மதிலின்கண் ணுள்ள கொடிகள் வரையிடத்து நீண்டுயர்ந்துள்ள குளிர்ச்சியைத் தருகின்ற மரங்களாகும். அகழியானது முழுதும் வளைந்து கிடந்த சாம்பூநத மென்கின்ற பழமையாகிய ஆறுகும்.

(வி - ம்.) நடவரை நான்கு - மேருக் கடைகல்லா யிருந்த நான்கு மலை யென்க. அவை நான்கும் உகந்திருந்தன வாகு மெனவும் ஆங்குக் கொடி மரமாகு மெனவும், கிடங்கு நதியாகு மெனவும் முடிக்க. ஆங்குக் கொடி - மதிலுள்ள கொடி. வரைத்தேத்து - வரையிடம். தொடி - வளைவு. மேருமலையின் ஒருபுறத் தோடுகின்ற சாம்பூநதமானது ஈண்டு நாற்புறத்திலும் சூழ்ந்தாற் போலிருக்கின்ற தென்க. (௬௬)

நவமணி குயிற்றி யிட்ட நான்குகோ புரமும் விண்ணிற்
சிவபுரத் தெல்லை காறுஞ் சிவனுவோர் வணங்க நிற்கும்
நிவமணிக் கிடங்கிற் ஜேற்று நீழலுங் கிழக்கி னெல்லைத்
தவவள ருலகோர் யாருந் தாழ்ந்தெழப் பொலிந்து நிற்கும்.

(இ - ள்.) ஒன்பான் வகை மணிகளைப் பதித்துச் செய்த நான்கு கோபுரங்களும் (பூமியிலிருந்து சிவபுரத் தெல்லை வரையிற் பொருந்து கின்ற மக்கள் தேவர் முதலிய யாரும் வணங்கும் வண்ணம் நிற்கும்). ஒளி மேலோங்குகின்ற முத்து முதலிய மணிகளையுடைய அகழியிற் றோன்றும் கோபுரங்களின் சாயைகளும் கீழுலகத்தி னெல்லையில் மிக வளருகின்ற உலகங்களிலுள்ள யாவரும் தாழ்ந்து வணங்கி யெழும்படி பொலிவுற்று நிற்கும்.

(வி - ம்.) நிழல் - கோபுரத்தின் நிழல். நிவத்தல் - மேலெழுதல்; ஈறு கெட்டது. (௭0)

கற்றையங் கதிர்கான் றெல்லி கடும்பக லாகச் செய்யும்
பொற்றபன் மணிகால்யாத்த பொற்பினு லுலகமெல்லாம்
தெற்றெனத் தம்பாற் காணத் திகழ்தலாற் செருச்செய் ஞாட்பின்
வெற்றிவே லிறைவன் கொண்ட விச்சுவ ரூபம் போலும்.

(இ - ள்.) கூட்டமாகிய ஒளியைக் கக்கி இரவைப் பகலாகச் செய்கின்ற பொன்மயமாகிய மணிகளாற் பதித்த அழகினால் எல்லா வுலகங்களும் தன்னிடத்துக் காணும்படி விளங்குவதால் (அம்மதில்) போரினைச் செய்கின்ற களத்தில் வெற்றியை யுடைய வேற் படையினைத் தாங்கிய தலைவனாகிய முருகப்பெருமா னெடுத்த விச்சுவருபத்தை யொக்கும்.

(வி - ம்.) எல்லி - இரவு. இனி எல்லி கடும் பகலாகச் செய்யு மென்பதற்கு - பகலை மிக்க பகலாகச் செய்யும் மணியெனப் பொருள் கொள்வாரு முளர். கால் யாத்தல் - ஈண்டுப் பதித்தல். 'தெற்றென -

தெளிவாக. ஞாட்பு - ஆகு பெயர். விச்சுவரூபம் - உலகமே வடிவமாகத் தோன்றுதல். கோபுரமானது பொறிபி னேதுவாலே அவ்வாறு நிகழ்தலாற் போலுமென்க. (௭௧)

மேனிலை மாடத் திட்ட விளக்குமிழ் தூமஞ் சென்று
வானிமி ரண்டப் பித்தி வைகலு மாசு செய்ய
வானிவர் கொடியின் வெண்டு கிலையென நீவி நீவி
நீனிறம் படைத்த வென்ப நெடியவ னுருவ மான.

(இ - ள்.) மேன் மாடங்களி லேற்றிய விளக்கு வெளியிட்ட புகையானது ஆகாயத்தி லெழுந்த அண்டச் சுவரினை நாடோறும் மாசாகச் செய்ய, அம் மாடங்களிற் கட்டுப்பட்டு மேலெழுந்துள்ள கொடிகளிலுள்ள வெள்ளிய சேலைகள் அழகாகத் தடவித் தடவி விண்டுவின் வடிவம்போல நீல நிறத்தைப் படைத்தன வென்று சொல்வார்கள்.

(வி - ம்.) ஆன் - அவ்விடம். ஐயென - அழகாக. நீவிநீவி - தடவித் தடவி. (௭௨)

அண்டமா ரளவைக் கற்ப வடங்கின வன்றி வீறின்
மண்டுநீர்க் கிடங்க ரண்ட மலிபுனற் பரப்போ டொன்றும்
மிண்டுபோர்ப் பொறியி னிஞ்சி விளங்குகோ புரங்க ளன்ன
கொண்டவார் கொடிக ளெண்ணி லண்டமுங் குறுக நீளும்.

(இ - ள்.) நீர் நிறைந்த அகழி அண்ட மமைந்த அளவினுக் கியைய அமைவுற்றன அல்லாமல் பெருக்கெடுக்கின் பெரும்புறக் கடலினோடொன்றும். போர் செய்யு மியந்திரங்களை யுடைய மதிலும், அம்மதிற்றலையிலுள்ள கோபுரங்களும் (அண்டமா ரளவைக் கேற்ப அடங்கும்) அத்தன்மையினவே யாம். (அம்மதிலும் கோபுரமும் தன்னிடத்திற்) கொண்ட நீண்ட துகிற் கொடிகளும் (அண்டமா ரளவைக் கேற்ப அடங்கின அன்றி வீறி யெழுந்தால்) அளவிட வியலாத அண்டங்களும் வடிவாற் சிறியன என்று சொல்லும் வண்ணம் நீளும்.

(வி - ம்.) புனற் பரப்பு - பெரும்புறக் கடல். வீறின்—எழுந்தால். கிடங்கு புனற் பரப்போடொன்று மெனவும், இஞ்சியும் கோபுரங்களும், அவை கொண்ட கொடிகளும் வீறி யெழின் அண்டங் குறுக நீளுமெனவும் வினை முடிவு செய்க. அன்ன - அண்டமா ரளவைக் கேற்ப அடங்குந் தன்மையன என்க. (௭௩)

பாயின வகழி மாண்பும் பந்நோடு பாவை தூங்கும்
வாயில்வண் புரிசை மாண்பும் வகுத்தன மற்று முந்தை
ஆயின பொருளு மைந்த ரளிந்துவந் தேவ லாற்ற
மேயின பரத்தை மாநர் வியந்தரு சேரி சொல்வாம்.

(இ - ள்.) பரவிய அகழியின் மாட்சியையும், பந்தினோடு பாவையும் தங்கும் வாயிலோடு கூடிய அழகமைந்த மதிலின் மாட்சியையும் வகுத்துச் சொல்லினும். தாமீட்டிய செல்வத்தையும் முன்னேயுள்ள பொருள்

கலையும் ஆடவர்கள் கொடுத்து மகிழ்ச்சியுடன் ஏவற்றொழில் செய்யப் பொருந்திய பரத்தையர்களின் கண்டார் வியக்கத் தக்க சேரியின் வளங் களை விரித்துச் சொல்வாம்.

(வி - ம்.) பாயின - விரவிய. பந்தொடு பாவை தூங்கும் வாயில்- பகைவரைக் கொணர்ந்து பெண் கோலஞ் செய்து அவர்கள் கையிற் பந்தும் பாவையும் கொடுத்துச் சிற்றிலிழைத்து விளையாடச் செய்வதற் குப் பந்தும் பாவையும் தூங்கும் வாயிலென்க. இதனைச் "செருப்புகன் றெடுத்த சேணுயர் நெடுங்கொடி வரிப்புனை பந்தொடு பாவை தூங்க" என்னும் திருமுருகாற்றுப் படையடி நச்சினார்க்கினியா ருரையான் நன்கு உணர்க. (௭௪)

பரத்தையர் தெரு

வேறு

இங்கணல னெய்துநர்க ளெவ்வுலகின் மாட்டும்
பொங்குகலை யிற்றணிவு பூண்டுவெரி நீயார்
தங்கிவைகள் போலெனவொர் சான்றுதெரிப் பார்போல்
அங்கணவிர் சித்திரம ளப்பிலபொ றித்தார்.

(இ - ள்.) இத் தணிகையின்கண் ணுள்ள பரத்தையர் சேரிக்கண் (அப் பரத்தையரோடு முயக்குற்று இன்பத்தினை யடைந்தவர்கள் உத் தர குருவாகிய) போக பூமி முதலிய எவ்விடங்களிலும் இன்ப மிகுதற் கேதுவாகிய காம நூலாராய்ச்சியின் றும்மை மேற்கொண்டு புறங் கொடார் இச் சேரிக்கண் ணுள்ள மாட வரிசையிற் றங்கிய சித்திரங் களைப் போலவென்று சான்று காட்டுவார் போல அச் சேரிக்கண் ணுள்ள சுவர்களில் விளங்குகின்ற ஓவியங்கள் கணக் கில்லனவற்றை வரைந் துள்ளனர்.

(வி - ம்.) கலை - ஈண்டு மார தந்திரம். எவ்வுலகின் மாட்டும் - உத் தர குருவாகிய போக பூமி முதலிய எவ்விடங்களிலும். உலகு - மாயோன் மேய காடுறை யுலக மென்றாற் போல இடத்தினை யுணர்த்தி நின்றது. வெரிந் + ஈதல் - புறங் கொடுத்தல். சுவரில் வரைந்த ஓவியம் புறங்கொடா திருத்த லியல்பாகலின் "இவைகள் போலென ஒரு சான்று தெரிப்பார்போ" லென்றார். (௭௫)

பற்குறிந கக்குறிகள் பாணிகொடு தட்டல்
நற்கமிழ்து துய்த்தல்களி நன்றெழு வணைத்தல்
அற்குகர ணங்களறி யாருமெளி தாகக்
கற்கும்வகை நின்றனக திர்த்தமணி யோவம்.

(இ - ள்.) ஒளி கதிர்த்தலைச் செய்கின்ற மணிக ளழுத்திய ஓவியங் கள் (கடிதடத்திலும் அதரத்திலும் செய்கின்ற) பற்குறிகளும் (கொங்கையினும் குறியினும் செய்கின்ற) நகக்குறிகளும் (குறியினும், அமிர்தம் நிற்கும் நிலையினும் தட்டுகின்ற) கரதாடனமும், அமிழ்தென இதழ் சுவைத்தலும் களிப்புப் பெரிது மெழா நிற்கத் தழுவுதலுமாகிய

(காமநூலின் நிலைபெற்ற) கலவிச் செயல்களை (இத்தன்மையன என அறியாத) இளங் காளையரும் எளிதாகக் கற்கும் வண்ணம் நின்றன.

(வி - ம்.) பற்குறி-பல்லாற் செய்யும் குறி; இவை கபோலத்திலும் இதழிலும் செய்யும் அடையாளங்கள்: "பவளவாய்ப் பரவை பல்குல் என்றிவை பருகும் வேலான்" என்னும் சிந்தாமணிச் செய்யுளா னறிக. நகக்குறி - உகிராற் செய்யு மடையாளங்கள்; இவை கொங்கையினும் குறியினும் செய்யப்படுவன வாகும்: "மதலைமீது கொழுநன்றன் நகமேவு குறியை" எனவரும் பரணிச் செய்யுளானும், "விற்கலைக்குழ மதிமுழு மதியென விளங்கப், பொற்கலைக் கடிதடங் குறி பொறித்தன போலும்" என வரும் இப்படலம் 23ஆம் செய்யுளா னு மறிக. அமிழ்து துய்த்தல் - இதழி னமிர் துண்ணல்; இதனைப் "பாலொடு தேன்கலந்தற்றே பணி மொழி, வாலெயி றூறிய நீர்" என்னும் பொதுமறையா னுணர்க. அணைத்தல் - தழுவுதல். இதனை "மாதர் வலிய அணைத்த சுகம்போல" என வரும் அருணகிரியார் திருவாக்கா னுணர்க. அற்குக் கரணங்கள் - காம தந்திரத்தில் நிலைபெற்ற கலவிச் செயல்கள். இவை 64 வகைப் படும். இதனை "இன்பக் கலவிக் கரணங்கள் யாவுமிழைத்து" என வரும் நைடதச் செய்யுளானும் அதனுரையானு முணர்க. மேல்விதந் தோதிய பற்குறி முதலியனவும் 64 உள் அமைந்தனவே யாமென்க. கரணம் - செயல், நல்கமிழ்து - நற்கமிழ்தாயிற் றெனவுமாம். (௪௬)

இவர்மனமொ ருக்குமிள மங்கையரில் வைகக்
கவர்மனம்வி டுத்திளையர் காழுயி ரோடும்
அவிர்பொருள்க வர்ந்துவிடு மாற்றலுடை நல்லார்க்
கிவர்மனமொ ருக்கலுறி னெங்ஙனுல கும்யும்.

(இ - ள்.) (நாயகர் பரத்தையிற் பிரிந்தமையால் அவர்பால்) விருப் பங்கொண் டெழுகின்ற மனத்தினை யொருக்குதலாற் (கற்பாற்றி யிருக் கும், இளமைப் பருவத்தை யுடைய) அந் நகரத்தின்கண் ணுள்ள இளம் பருவப் பெண்கள் இல்லிடத்தே தங்கும் வண்ணம் (பொருள் கருதிப் பொருளுடையார் பலர் மாட்டுஞ் சேறலான்) பிளவு படுதலாகிய (தங்கள்) மனத்தினைச் செலுத்தி (அந் நகரத்தின்கண் ணுள்ள இளங் காளையரது அறிவாகிய உள்ளீடில்லாத உயிருடனே முன்னைபோரா வீட் டப்பட்டு) விளங்குகின்ற பொருளினையும் (இன்பவிலையாக) கவர்ந்து கொண்டு (காலுற்ற சாற்று வேழக் கோதினைப் போலப் பயனின்றென) விடுகின்ற பேராற்றலை யுடைய இன்ப நலம் கனிந்தொழுகு பரத்தை யருக்கு (பொருள் கருதிப் பலர் மாட்டும்) செல்லுகின்ற மனத்தினை(ப் பலர் மாட்டும் கவர்படுத்தாது ஒராடவன்பால்) ஒருக்குதலுற்றால் உலகமான தெங்ஙன முய்யும்.

(வி - ம்.) இவர் மனம்-ஆசையோடு கூடிய மனம். இவர் மனத்தை ஒருக்குகின்ற நாயகிக ளென்க. இவர் மன மொருக்கலுறின் - பரத்தை யர் விரும்புகின்ற தங்கள் மனத்தைப் பிளவுபடச் செய்யாது ஓராட வன்பா லொருக்கலுறின் என்க. நல்லார்க்கு மனத்தை யொருக்கி ஓரிடத்துச் செலுத்தல் அருமை யென்பது தோன்ற "இவர் மன மொருக்க லுறின்" என்றார். இவர் மனத்தைத் தம் வசப்படுத்தி யொரு வர் மாட்டுச் செலுத்துவாராயின் ஆடவர்கள் தங்கள் நாயகிமார்களை யறவே மறந்து இவர்கள் மாயவலையிற் சிக்குண்டு இம்மை மறுமைப்

பயன்களை இழந்து எரிவாய் நிரயத்தைத் தமக்கிடமாகக் கொள்வ ரென்பது தோன்ற "எங்ஙனுலைகுய்யும்" என்றார். நல்லார்க் குற்று ரெனக் கூட்டுக. (௭௭)

அகப்பொருட மக்கருளு வார்க்கஃது நல்கி
உகப்புறுப ரத்தையர்க ளுண்மையுணர் கல்லார்
இகப்பறுசு கச்சமரி னெய்த்திறையி றுக்கும்
புகர்ப்பொருளை யின்பவிலை யென்றுபுகல் கிற்பார்.

(இ - ள்.) (தம்முன்னையோரால் ஈட்டப்பட்டுப் பாதுகாத்து) அகத்தின்கண் வைத்துள்ள பொருளை (உவகையோடு பணிந்து) தங்களுக்குக் கொடுக்கின்ற ஆடவருக்குத் தம்மகப் பொருளாகிய காம இன்பத்தினைக் கொடுத்து உயர்ச்சி பெற்ற பரத்தைமார்கள் (பெண்ணறி வென்பது பெரும் பேதைமைத்தே என்பதனால்) உண்மைத் தன்மையை யறியாராகி (ஒருவருடலி லொருவரொடுங்கி இருவரென்னும் தோற்றமின்றி மாசுணம் போலப் பின்னி) நீங்குதலற்ற இன்பப் போரின்கண் தோல்வியுற்று (ஆடவர்கள்) இறையாகக் கொடுக்கும் குற்றமுடைய பொருளை இன்ப விலை என்று சொல்வார்கள்.

(வி - ம்.) அகப்பொருள்-தம்மில்லிற் பாதுகாப்பிலுள்ள பொருள். அஃது - தம்முள்ளிற் சேர்த்து வைத்துள்ள காம வின்பப் பொருள். ஆடவர்கள் தம் மகத்திலுள்ள பொருளைக் கொடுத்து இம்மை மறுமைப் பயன்களை யிழத்தல் போலத் தம்மகப் பொருளாகிய காமவின்பத்தைக் கொடுத் தொன்று மிழவாதுயர்ந்து நிற்றலின் "உகப்புறு பரத்தைய" ரென்றார். உகப்பு - உயர்வு. "உகப்பே யுயர்வு" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தா னுணர்க. (௭௮)

இத்தகைய மாதரினி ணங்குசுக வாரி
தத்தையனை யார்தருத லின்மைதனை நாடி
மெத்துளம கிழ்ச்சியின்வி டுத்தருள்சி றப்பும்
ஒத்தவர் பாலிளைய ருய்த்தநிதி யீட்டம்.

(இ - ள்.) இங்ஙனமாய தகுதியினை யுடைய பரத்தையர் மாட்டுப் பொருந்துகின்ற இன்பப் பெருக்கினைக் கிளிமொழியன்ன மொழியினை யுடைய தங்கள் மனைவிமார் தருதலில்லாமையைக் கருதி அப் பரத்தையர் மாட்டுளவாகிய உள்ளத்தின்கண் அதிகரிக்கின்ற மகிழ்வினால் காளைப்பருவத்தை யுடைய ஆடவர் சேர்த்த பொருட் குவியல் (இவ்வாடவர்கள்) கொடுத்தருளிய பரிசினையும் ஒத்தது.

(வி - ம்.) தத்தை யனையார்; ஈண்டு மனைவிமார். மெத்து - அதிகரிக்கின்ற. நிதிக் குவியல் சிறப்பையு மொத்த தென்க. உம்மை யிறந்தது தழீஇயது; இறையிறுத்தலே யன்றிச் சிறப்புமா மென்பதைத் தழுவியது. (௭௯)

உடம்புபிணி யாலிறவு ளுற்றறமி கந்து
மடம்படவு ளம்பொருள்கண் மற்றுமுகு மாற்ருல்

விடம்புரையும்வேசையர்வி ழைச்சென்வு ணர்ந்தும்
உடம்படுவ ரென்னிலவ ருய்க்குநல னெற்றே.

(இ - ள்.) பரத்தையர் கூட்டமானது, உடலானது பிணியாற் கேடுறலாலும் செய்கின்ற அறச் செயல்க ளிங்கு புள்ளம் அறியாமை யின் வயத்ததாதலாலும் பொருள்களும் ஏனைய நற்சார்புகளும் கெடுதற் கேதுவாகும் தன்மை யுடைமையாலும் நஞ்சினை யொக்குமென்று (காண்டல் கருதலுரை முதலிய அளவைகளான்) அறிந்து வைத்தும், அக் கூட்டத்திறுக் குடன்படுவாராயின் அப்பரத்தையர் இவர்க்களிக்கும் இன்ப நல மெத்தன்மைத்தோ யாமறிந்திலோம்.

(வி - ம்.) உஞற்று - செய்கின்ற. உளம் மடம்பட எனவும், விழைச்சு விடம்புரையு மெனவும் மாற்றுக. விழைச்சு - புணர்ச்சி, கூட்டம். உணர்ந்தும்: உம்மை யிழிபு சிறப்பு. எற்றே - எத்தன்மைத்தே; ஏகாரம் வினா. (௮0)

நன்பொருளி னுக்கியைய நன்றுவிளை யாடி
இன்புதவும் வேசையரி றைஞ்சுமடி யாருக்
கன்பினள வைக்கியைய வாரருள்சு ரக்கும்
மின்புரைந திச்சடில வித்தகனி கர்த்தார்.

(இ - ள்.) ஆடவர்கள் தமக்கு அளித்த நல்ல பொருளளவுக்கேற்ப (எள்ளினுக் கெண்ணெய் போல வளர்ந்து) நன்றாக விளையாட்டயர்ந்து இன்பினை யுதவும் வரைவிலா மாதர்கள் தன்னை வழிபடு முண்மை யடியார்களுக் கன்பினளவைக் கியைய அருளினைக் கொடுக்கின்ற கங்கா நதியினை யுடைய மின்னலை யொத்த சடையினை யுடைய ஞானமே திருவுருவமான சிவபெருமானை யொத்தனர்.

(வி - ம்.) பொருளளவினுக் கேற்ப விளையாடுதலாவது - எள்ளினுக் கெண்ணெய் போலப் போகத்தைப் பொருளளவுக் கியைய விளையாடி யளித்தல். (௮௧)

பாடலிசை யாழ்பலப யிற்றுமிசை யோடும்
ஆடலர வம்புடைய கன்றுபுற னேகும்
பீடினர்த மக்குமொரு பீழைசெயு மென்றால்
கூடினவர் முன்புகுழை யாருமுள ரேயோ.

(இ - ள்.) பாடலினிசையும், பலவகைப்பட யாழைப் பயிற்றுமிசையுடனே ஆடுகின்ற ஓசையும் (வீசிதரங்க நியாயத்தால்) வெளியிற் பரவித் தெருவின் கண்ணே செல்லுகின்ற பெருமையினையுடைய பேரறிஞர்களுக்கும் ஒப்பற்ற துன்பத்தினைச் செய்யுமென்றால் அப் பரத்தையர் முன்பு பொருந்தினால் மனங் குழையாதவர்களு முளரோ? (இலர்.)

(வி - ம்.) பீழை - துன்பம். அரவம் - ஓசை. புடை அகன்று - வெளியிற் பரவி. புறனேகும் பீடினர் - வீதியிற் செல்லும் பெருமையுடையவர். அவர்முன் 'புறனேகும் பீடினர்' எனவே அகத்துட் சென்ற பீடிலார் அவர் என்க. கூடின் என மொழி மாற்றுக. (௮௨)

ஈங்கிவர்க ளோடுபுண ரின்பநுகர் பாக்குத்
தாங்குபரு வம்பெரிது சார்பொழுது காறும்
ஆங்கவர்க ளோடுநல ஞர்ந்துபயில் கின்ருர்
வீங்குபுகழ் மாயன்முதல் விண்ணவர்க ளெல்லாம்.

(இ - ள்.) மிக்க புகழினை யுடைய விண்டு முதலிய தேவர்கள் யாவரும் இத் தணிகைப் பதியின்கண் ணுள்ள இப் பரத்தையரோடு கூடி இன்பம் நுகரும் பொருட்டு அவர்கள் மேற்கொள்கின்ற புணர்ச்சிக் குரிய மங்கைப் பருவம் வருந்துணையும் அவ் வைகுந்த முதலிய உலகங் களில் தங்கி யிருக்கின்ற அத் திருமகள் முதலிய தெய்வப் பெண்களி னோடு இன்ப நுகர்ந்து தங்குகின்ருர்கள்.

(வி - ம்.) இம் மாதர் - இத் தணிகையின்கண் ணுள்ள பரத்தையர். பாக்கு - வினையெச்ச விகுதி. பருவம் பெரிதுசார் பொழுதுகாறும் - புணரும் பக்குவம் வருந்துணையும். ஆங்கு - வைகுந்த முதலிய உலகங் களில். அவர்கள் இலக்குமி முதலிய தேவ மாதர். (அரு)

கங்கையிறை வன்முடிக லப்பவிடம் வெற்பு
மங்கையுட னுதும லர்ப்பொனரி மார்பம்
தங்கியதும் வாணிதவி சாக்கியதும் வேதன்
பொங்குமறை நாவரைவில் பூவையர்பொ ருட்டே.

(இ - ள்.) இறைவன் முடியின் கண்ணே கங்கை கலத்தலைச் செய்ய இடப்பாகத்தின் மலையரையன் புதல்வியுடன் சேர்ந்ததும், தாமரை மலரின்கண் ணெழுந்தருளிய இலக்குமி விண்டுவின் மார்பிற் றங்கியதும் பிரமனது வேதத்தை யோதுகின்ற நாவினைச் சரசுவதி ஆசன மாக்கிக் கொண்டதும் தமக்கென ஒரு நாயகனை வரைந்து கொள்ளாத பரத்தையர் பொருட்டேயாம்.

(வி - ம்.) இவர் நிமித்தமே கங்கை கலப்ப வெற்புமங்கை இட னுடனுதும், வேதன் நா வாணி தவிசாக்கியதும், பொன் தங்கியது மென வினை முடிவு செய்க. பூவையர் - நாகணவாய்ப் பறவை போன்ற வர். (பரத்தையர்) (அச)

வெள்ளணிய ணிந்துபலர் மெய்முழுத ரத்த
ஒள்ளணிய ணிந்துபல ருத்தலையி றப்பார்
வெள்ளமெனு மாக்கமும்வி ளங்குகலை மாண்பும்
உள்ளிமலர் மாதர்பல ராயுறுவ தொப்ப.

(இ - ள்.) வெள்ள மென்னு மெண்ணையுடைய செல்வத்தினையும், விளங்குகின்ற அறுபத்து நான்கு கலைகளின் மாட்சியையும் (தாங்கள் அப் பரத்தையர் மாட்டுப் பெற) நினைந்து செந்தாமரையினும் வெண்டா மரையினும் வீற்றிருக்கின்ற இரு மாதர்களும் பல மாதரா யுருவம் கொண்டு பொருந்தலை யொப்ப (தலைவி புதல்வர்ப் பயந்தமையைப் பரத் தையர் சேரியின் கண் ணுள்ள தலைவர்களுக் கறிவிக்க) பல சேடியர்கள் வெள்ளணியை யணிந்தும், தலைவி பூப்படைந்தமையை அச் சேரியின்கண் ணுள்ள தலைவர்களுக்கு அறிவிக்கப் பல சேடியர்கள் உடன் முழுவதும்

செந்நிறத்தோடு கூடிய அணியப்படு பொருள்களாற் றங்களைப் புனைந்தும் ஆண்டுச் செல்வார்கள்.

(வி - ம்.) ஈரிடத்தும் என்னும்மைகள் தொக்கன. உத்தலை - உவ்விடம், பரத்தையர் சேரி. இறப்பார் - நடப்பார். ஆக்கம்-செல்வம். உறுவது - சேர்வது, இலக்குமியும் சரசுவதியும் செல்வத்தையும் கல்வியையும் பெற உள்ளிப் பலராகச் சேர்வதை பொப்ப வெள்ளணியும் செவ்வணியு மணிந்து பல மாதரச்சேரியின்கட் செல்வரென்க. (௮௫)

சிறப்பினவ கப்பொருள்செ றித்துவிலை யாக்கும்
மறப்படைக டந்தவிழி மாதரிட னிதால்
புறப்பொருள்செ றித்துவிலை போக்கியிட லின்றி
அறப்புகழ்வி ளைக்குநர்க ளாவணமு ரைப்பாம்.

(இ - ள்.) சிறப்பினை யுடையனவாகிய இன்பப் பொருளைத் (தம் மகத்) தடக்கி விற்றலைச் செய்கின்ற வீரத்தையுடைய வேற் படையினை (வடிவாலும் செயலாலும்) வென்ற கண்களையுடைய பரத்தையர் வதிதரும் இடமிங்ஙனம் கூறியதாகும். இனிப் புறப்பொருள்களை நிறைவித்து விலைப் பொருளுக்கு மாற்றி ஒருவகை இடையூறுமின்றி அறத்தால் வரும் புகழையே விளைவிக்கின்றவர்களாகிய வணிகர்களின் கடைவீதியின் சிறப்பைச் சொல்வாம்.

(வி - ம்.) அகப் பொருள் - அகத்தின்கண் நிகழ்வதாகிய இன்பப் பொருள். செறித்து - அடக்கி. படை - வேற்படை, வாட்படை யெனினுமாம். செறித்து - நிறைவித்து. விலைபோக்கி - விலைப் பொருளுக்கு மாற்றி யென்க. ஏகாரம் விகாரத்தாற் றொக்கது. (௮௬)

வேறு

கற்ப கங்களுங் கன்னி வாழையும்
பொற்ப நட்டெழீஇப் போகு சட்டமேல்
பற்பன் மாலைகள் பயிற்று மாவணம்
அற்பு மன்றல்செ யகங்கள் போன்றவே.

(இ - ள்.) கற்பக தருக்களும், இளமைத் தன்மை பொருந்திய வாழை மரங்களும் அழகைச் செய்யும் வண்ணம் நடப்பெற்று எழுந்து உயர்ந்த சட்டங்களின் மேலே பலப்பல மாலைகளைத் தொங்க விடப் பெற்ற கடைவீதியானது அன்பினால் மணவினை செய்கின்ற இல்லங்களை யொத்தன.

(வி - ம்.) கன்னி - இளமை. நட்டு - நடப்பெற்று. போகு - உயர்ந்த. பயிற்றுதல் - ஈண்டு நாலவிடுதல். மன்றல் - மணவினை. (௮௭)

மடுக்குங் காலையிற் குறைய வாங்கியும்
விடுக்குங் காலையின் மிதப்ப நல்கியும்

அடுக்குஞ் செல்வம்விண் ணரசு மேசற
எடுக்கும் பண்பினர் யாரு மென்பவே.

(இ - ள்.) பண்டங்கள் பண்டக சாலையிற் குறைந்த விலைக்குக் கொள்ளுதலைச் செய்தும், பண்டங்களை மாற்றும் காலத்து அதிக விலைக்கு மாற்றியும் அடுக்கப் பெறுகின்ற செல்வம் தங்களை விண்ணுலகினுக் கிறைவனாகிய இந்திரனும் வருந்தும் வண்ணம் எடுத்துச் செல்கின்ற தன்மையை யுடையவர் யாவருமென்று சொல்வார்கள்.

(வி - ம்.) மடுத்தல் - நிறைத்தல். குறைய வாங்கி - குறைந்த விலைக்கு வாங்கி என்க. குறைவு விலை மேனின்றது. மிதப்ப - அதிகமாக "வட்டியின் மிதப்பக் கூறி" என்னுந் திருவிளையாடற் செய்யுளானுணர்க. ஏசற - கவலையடைய. எடுக்கும் - எடுத்துச் செல்கின்ற. என்ப : அசை யெனினுமாம். (அஅ)

கலங்க ளூக்கியுங் கால்க ளூக்கியும்
அலங்கன் மார்பின ரமைத்த பல்பொருள்
விலங்கன் மாடமுன் றனதன் வீழ்நிதி
இலங்கி யிவ்வுழி யிருந்த தொத்ததே.

(இ - ள்.) மரக்கலன்களைக் (கடலின் வழியாகப் பல தீவுகளினும்) செலுத்தியும், பண்டிகளைத் தரை மார்க்கமாகப் பல தேயங்களினும் செலுத்தியும் சிரகத் தாரையணிந்த மார்பினையுடைய வணிகர்கள் முயற்சியா னீட்டிய பலவகைப் பொருட் குவியல், மலையை யொத்த இல் வரிசைகளின் முன்னர்க் குபேரனால் விரும்பப்படும் சங்கநிதி பதுமநிதி முதலிய நவநிதிகளும் விளங்கி இவ்விடத்து இருந்ததை யொத்தது.

(வி - ம்.) பொருள் மாடங்களின் முன் குவிக்கப்பட்டுள தென்க. பொருள் ஒத்தென முடிவு செய்க. கால் - வண்டி. விலங்கல் - மலை. இலங்கல் - விளங்கல். (அகூ)

துலாம ணிந்தவர் தூவி கைத்தலைத்
துலாமி வர்ந்தெழுஞ் சோம திக்கினன்
நிலாவி ரும்பொரு ணிறைந்த தாமெனா
நிலாவு மத்தலை யிவர்ந்து நீங்குமே.

(இ - ள்.) துலாக் கோலினைப் பொருந்தியவராகிய வணிகர் மேன் மாடங்களிடத்துத் துலா விராசி இவர்ந்து செல்லும். வட திசைக் கிறைவனாகிய குபேரன், பொருந்திய பெரிய நிதிகள் நிறைந்துள்ள தென்று கருதி எல்லா வளங்களும் பொருந்திய அம்மாடங்களிற் றங்கி நீங்குவான்.

(வி - ம்.) சோமதிக்கினன் - வடதிசைக் கிறைவனாகிய குபேரன். சோமன் - குபேரன். அவன் திசை வடக்காதலின் "சோம திக்கினன்" எனக் கூறினர். சோம னென்னும் பெயர் சந்திரனுக்கு முளவாகலின் அவனென மயங்காமைப் பொருட்டுக் கூறினா ரெனவுமாம். குபேரன் இவ்வில் வரிசைகளில் நிறைந்துள்ள செல்வப் பெருக்கினைக் கண்டு

விரும்பி இவ் வில்லின்கட் சிறிது தங்கிச் செல்வனென்க. இவர்தல் - மேனோக்கிச் செல்லல். அத்தலை - அவ்விடம். இவர்ந்து - தங்கி. (கo)

பொன்னும் வெள்ளியும் பூணு மாடையும்
மின்னு பன்மணி விராய கோவையும்
என்ன வேண்டினு மில்லை யென்னுமச்
சொன்னி கழ்த்திடாச் சோர்வங் குள்ளதே.

(இ - ள்.) பொற் கட்டிகளும், வெள்ளிகளும், அணிகலன்களும், ஆடைகளும் ஒளிர்கின்ற பல இரத்தினங்களைக் கலவை செய்து கோக்கப்பெற்ற மாலையும் (இவைகளையன்றி வேறு) எப்பொருளைக் (கோடல் செய்வார்) விரும்பினாலும் (அப் பொருளைத்) தம்பாலில்லை யென்று சொல்லும்படியான அச் சொல்லை (மறந்தும்) சொல்லுதலில்லாத சோரத்தன்மையே அவ்வாவண வீதியின்கண் உள்ளது.

(வி - ம்.) அவ்வாவண வீதியின்கட் கொள்வோர் எப்பொருளை வினவினும் வினைய பொருளுக்கினப்பொருளையோ அல்லது அப்பொருளையோ உள்ளதெனக் கூறுவார்களேயன்றி இல்லையெனக் கூறார். தம்பாலில்லாத பொருளை இல்லையென்னாது பிறிது பொருளுண்டெனக் கூறுதலே ஆண்டுள்ள களவாகும். அமைந்தொருபாற் கோடாத குணமுடையாராதலின் அவர்பாற் பிறர் பொருளைக் கள்ளுதல் செயும் குணம் சிறிது மின்றென்பது போதர "இல்லையென்னு மச்சொன் னிகழ்த்திடாச் சோர்வங்குள்ள தென்றார். சோர்வு - களவு. (கக)

இலைய வேற்படை யிறைவற் காணிய
மலையெ லாமடுத் தனைய மாடமுன்
குலவு பல்பொருட் குப்பை யம்மலை
நிலவு பல்வரை நிரைக ளொத்தவே.

(இ - ள்.) இலையின் தன்மை யமையப்பெற்ற வேற்படையினையுடைய (தங்கள்) தலைவனாகிய முருகப் பெருமானைக் காணும் பொருட்டு மலைகளெல்லாம் பொருந்தினாலொத்த மாடங்களின் முன்னர் விளங்குகின்ற பல பொருட் குவியல்கள் அம்மலைகளிடத்துப் பொருந்திய பல சிறுமலை வரிசைகளை யொத்தன.

(வி - ம்.) மலையும், அம் மலையிடத்துப் பொருந்திய அடுக்கலும், இல்லிற்கும் அவ்வில்லின் முன்னர்க் குவித்துள்ள பொருட் குவியலுக்கும் உவமையாம். வரை - ஈண்டுச் சிறுமலை; அஃதாவது அடுக்கலென்க. (கஉ)

முன்கு வித்தகண் மூடு முன்புபோய்
பின்கு வித்தவும் பெயரு மத்தலை
நன்கு செய்தமுன் னல்வி னைப்பயன்
தன்கண் வந்துபோந் தனுவொ டொத்ததே.

(இ - ள்.) (ஆவணங்களின் முன்றிலில்) முன்னர்க் குவித்த பொருள் கண்களை மூடு மத்துணைக் காலத்திலே விலைப்பொருளுக்கு

மாசற்ற பின்னர்க் கொளர்ந்து குலித்தனவாகிய பொருள்களும் அங்ஙனமே விலைப்பொருளுக்கு மாற்றப்படுதலால் அவ்வாவண வீதி நன்றுகச் செய்யப்பெற்ற முன்னைய நல்வினைப் பயனுனது தன்மாட்டு வந்து பின்னர் நீங்குகின்ற உடம்பினை யொத்தது.

(வி - ம்.) தன்னென்றது கண்டுடலையென்க. நன்கு - நன்றுக. முன் நல்வினைப்பயன் - முற்பிறப்பிற் செய்த நல்வினைப் பயனென்க. தனு - உடல். (கரு)

செம்பொற் சுண்ணமுஞ் செச்சைச் சாந்தமும்
வம்பு நானமும் வாச மாலையும்
நம்பி விழளி நல்கு மாதரார்
பம்பு யிர்ப்பினற் பாற வைகுவார்.

(இ - ள்.) சிவந்த பொற்பொடிகளும், சிவந்த சந்தனமும், வாசனையையுடைய கத்தூரியும், மணத்தையுடைய மாலைகளுமாகிய இவற்றின்கண் விரும்பி விழ்கின்ற வண்டுகள் அப்பொருள்களை விற்கின்ற பெண்கள் தங்கள் நிறைந்த மூக்கின்காற்ருேலோட ஆண்டுத் தங்குவார்.

(வி - ம்.) இப்பொருள்களை விலைசெய் மடவார் யாவரும் முதற்சாதிப் பெண்களாதலின் அவர்கள் மூக்கின்காற்று சண்பகப் பூ வாசனையுடைத்தாமென்பது நூன்மரபு. வண்டுகள் சண்பகப் பூ வாசனையையுட்கொள்ளின் இறந்துபடுதலியல்பாகலின் "பண்புயிர்ப்பினற் பாற வைகுவா" ரென்ருர். செச்சை - சிவப்பு. நம்பி - விரும்பி. "நம்பு மேவும் நசையாகும்மே" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தா னுணர்க. பம்புதல் - நிறைதல். பாற - நீங்க. காமதந்திரத்தில் இப் பெண்களை மூவகையாகப் பிரித்துளதாதலின் ஈண்டுக் கூறியவர்கள் முதற்சாதிப் பெண்கள் எனக் கொள்க. (கசு)

கனிவ ருக்கமுங் கமழ்சிற் றுண்டியும்
இனிய விற்குந ரிடஞ்சென் முன்னரே
நனிம ணம்புன லுவிற் றேற்றுமுன்
பனிம லர்க்கணை படர்கண் டோற்றுமே.

(இ - ள்.) பழவகைகளும், மணக்கின்ற சிற்றுணக்களும், இனியனவாகிய பல பொருள்களும் விற்றலைச் செய்கின்ற பெண்களிருக்கின்ற இடங்கட்குச் செல்லுமுன்னரே (அப்பொருள்களின் மிக்க வாசனையானது நாவின்கண்ணே நீரைத் தோற்றுவிக்கும். (அப்பொருளை விற்குமாதரார்) கண்கள் குளிர்ச்சிபொருந்திய நீலோற்பலமாகிய அம்பினுல் வருந்துன்ப நினைவையுள்ளே தோற்றுவிக்கும்.

(வி - ம்.) இனிய - இனியவாகிய பொருள்கள். நீலோற்பலம் கொல்லும் அம்பாகலின் அதனுல் வருந்துன்பினை அம்மாதரார் கண்களும் நீலோற்பலம் போறலின் உள்ளே தோற்றுவிக்கு மென்ருர். படர் - நினைவு. "படர்நனை நினைப்பு நோவாம்" என்னும் நிகண்டா னறிக. சிற்றுண்டி - பண்ணியவகை. (கஎ)

தாழ்ந்தி டாவளத் தருக்கினு லென்கோ
ஆர்ந்த பல்சன மடர்ச்சி யாலென்கோ
சோர்ந்து கைத்தலஞ் சுடர்பொற் காசுகள்
வீழ்ந்த நேடிலார் வீதி வாயினே.

(இ - ள்.) அந் நகரத்தின்கண்ணுள்ள மக்கள் வீதியினிடத்துக் கையின்கண் நின்றும் சோர்வடைதலினால் வீழ்ந்தனவாகிய ஒளிர்கின்ற பொற்காசுகளைத் தேடுவாரிலர். (இங்ஙனம் தேடாதிருத்தற்குக் காரணம்) எஞ்ஞான்றும் குறைவினையடையாத செல்வச் செருக்கா லென்று சொல்வேனோ, அல்லது அவ் வீதியின்கண்ணிறைந்த பல மக்களின் நெருக்கத்தாலென்று சொல்வேனோ யாதென அறியேன்.

(வி - ம்.) வீழ்ந்தன—வீழ்ந்தவற்றை. நேடுதல் - தேடுதல். தாழ்ந் திடாத - குறையாத. (௧௬)

பொருண்மை சுட்டிய புகலு மோசைகள்
பொருண்மை சுட்டிடாப் பொங்கு மோதைபோல்
மருவு மாட்சியான் மாண்ட கேள்வியார்
கருது மூங்கையிற் கையிற் பேசுவார்.

(இ - ள்.) பொருளின் தன்மையைக் குறிக்கும் பொருட்டு மிக் கெழுகின்ற ஒலிகள் (பொருளின் தன்மையைக் குறிக்காத மாயகாரிய ஒலிகள்போலப் பொருந்துகின்ற மாட்சியினால் மாட்சியுள்ள கல்வி கேள்வியினையுடைய பெரியோர்கள், (பொருள்களை மனத்தால்) எண்ணுகின்ற ஊமைகள்போலக் கரங்களினாலே பேசுவார்.

(வி - ம்.) பொருண்மை சுட்டிடாப் பொங்குமோதை-மாயகாரிய ஒலி. மூங்கை - ஊமை. கையிற்பேசுதல் - கரங்களினாற் குறித்த பொருளை யறிவித்தல். (௧௭)

ஐந்து மாமுக வாறு மாமுகன்
நந்தி யாதியோர் நாம வீரராய்
வந்த வாவட மாதி ரத்தவன்
அந்தில் வந்தம ரளகை போன்றதே.

(இ - ள்.) ஈசானம், தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்தி யோசாதம் என்னுமைந்து முகங்களையுடைய சிவபெருமானும், ஆறு முகங்களையுடைய முருகப்பெருமானும், அச்சத்தைத் தரத்தக்க வீரர்க ளாக நந்தியை முதலாகவுடைய கணத் தலைவர்களும் வந்தமர்ந்த தன்மை யால் வடதிசைக் கிறைவனாகிய குபேரன் வந்துதங்கும் அளகாபுரியை ஒத்தது. (அந்நகரம்)

(வி - ம்.) ஐந்துமாமுகனும் ஆறுமாமுகனும், நந்தியாதியோரும் வருதலை வீராட்டகாசப் படலம் செருத்தணிதலாலும், நந்தி யுபதேசப் படலத்தானு மறிக. வந்தவா - வந்தவாறு, விகாரம். வந்தவாற்றினால் என மூன்றனுருபும் விரித்துப் பொருள் கொள்க. (௧௮)

சொற்சு ருக்கியுஞ் சுட்டிக் கூறியும்
விற்கு மாவணம் விளம்பி னுமினிப்
பொற்ப யாவரும் புகன்று வாழ்தரும்
பற்பல் வீதியும் பகர லுற்றனம்.

(இ - ள்.) வினவியவற்றுக்கு விடை சொற் சுருங்குமாறு கூறியும் இன்ன பொருள் உண்டு என்று உள்ள பொருளைச் சுட்டிக்கூறியும் பொருள்களை விற்கும் வணிகர் கடைவீதியின் சிறப்பைக் கூறினோம். இனி, அழகாக எல்லாரும் விரும்பி வாழ்கின்ற பலவகைப்பட்ட தெருவின் சிறப்பினையும் கூறத்தொடங்குவோம்.

(வி - ம்.) சுருக்கல் - குறித்த பொருளை விளக்கவேண்டுஞ் சொற்களிற் சுருங்கச் சொல்லுதல். சுட்டிக் கூறுதல் - தம்பாலுள்ளனவாயின் இவ்வளவின தல்லதில் லெனக்கூறல். புகன்று - விரும்பி. (௯௯)

வேறு

கோளகர் வகுப்புங் குண்டகர் வகுப்புங்
குலாவுறும் விராத்தியர் வகுப்பும்
தாளுறு மந்த ராளர்தம் வகுப்புந்
தகும்பிரதி லோமர்கள் வகுப்பும்
ஆளுறு மனுலோ மர்கள்பெரு வகுப்பும்
அவ்வவ வினங்கள்வே றமைந்து
நாளுமின் புகப்பத் தத்தம தியல்பி
னண்ணிவாழ் வீதிக ளனந்தம்.

(இ - ள்.) (கைம்மை பெற்றோர்களாகிய) கோளகருடைய பகுதியும் (தன்னுயக னிருப்ப வேறுடவர்க்குப் பெற்ற பிள்ளைகளாகிய) குண்டகர்களுடைய பகுதியும் (அனுலோமப் பெண்ணும் பிரதிலோமத்தானும் கூடிப் பெற்ற பிள்ளைகளாகிய) விளங்குகின்ற விராத்தியர்களுடைய பகுதியும் (அனுலோமத்தானும் பிரதிலோமப் பெண்ணும் கூடிப்பெற்ற பிள்ளைகளாகிய) முயற்சியுள்ள அந்தராளருடைய பகுதியும், (உயர்குலப் பெண்ணும் இழிகுலத்தானும் கூடிப்பெற்ற பிள்ளைகளாகிய) தகுதியையுடைய பிரதிலோமர்களுடைய பகுதியும், (உயர்குலத்தானும், இழிகுலப்பெண்ணும் கூடிப்பெற்ற பிள்ளைகளாகிய) அடிமைகளாகப் பொருந்திய அனுலோமர்களுடைய பெரிய பகுதியுமாகிய அவ்வக் கூட்டங்கள் வெவ்வேறாகப் பொருந்தி யொவ்வொரு நாளு மின்பமதிகரிப்பத் தத்தமக்குரிய இயல்போடு கூடிப் பொருந்தி வாழ்கின்ற வீதிகள் பலவாம்.

(வி - ம்.) முன்னிய கைம்மை பெற்றோன்" "உயர்ந்தநாற் குலத்திலாண்பெண்" "பெருத்தஅல் வனுலோமன்னே" எனவரும் நிகண்டுச் செய்யுட்களான் இவற்றின் விரிவை யுணர்க. தாளுறு - முயற்சியுற்ற. ஆளுற - அடிமையாகப் பொருந்திய. உயர்குலப் பெண்ணும் இழிகுலத்தானுங் கூடிப் பிறந்தவன் பிரதிலோமன். (௧00)

ஆதியி றமைந்த பொருள்சிறந் தனவென்
றருமறை யினிதெடுத் தியம்பும்
நீதியான் முகத்திற் சிறந்துபூங் கமல
நிகர்த்தவிர் வேதனுர் பதத்தில்
கோதிலா தெழுந்து வரைதுலாக் கோலும்
குளிர்ந்தசெங் கோலும்வேய்ங் கோலும்
தீதிலா மூவர் செலுத்தவேர்ச் சிறுகோல்
செலுத்துநர் வீதிகள் பலவால்.

(இ - ள்.) முதற்கண் பொதுவிதியாகக் கூறும் பொருள்களைக் காட்டினும் இறுதியிற் சிறப்பு விதியாகக் கூறும் பொருள்கள் சிறப்புடையனவாகுமென்று அரிய வேதங்கள் இனிதாகக் கூறுகின்ற முறையான் நான்கு வேதங்களையும் உணர்ந்த பிரமாவின் (முன்னர்க் கூறப்படும்) முகத்தைக் காட்டினும் சிறப்புற்றுப் (பின்னர்க் கூறப்படும்) பொலிவுபெற்ற தாமரை மலரையொத்து விளங்குகின்ற திருவடியைத் தங்களுக்குப் பிறப்பிடமாகக் கொண்டு குற்றமிலவாகித் தோன்றித் (தன்கண் வைத்த பாரத்தைக்) (குறையாதும் மிகாதும்) வரையறுத்துக் காட்டுகின்ற துலாக்கோலையும் (உலகத்துயிர்கள் இன்புறுதற் கேதுவாகக்) குளிர் செய்கின்ற செங்கோலையும் (பொருட்டன்மையால் அரி, அயன், அரனென்னு முப்பொருளு மொன்றேயெனக் கோடற்பொருட்டுக் கொண்ட) மூங்கிற்கோலையும் குற்றமின்றிய மூவகைச் சாதியாரும் செலுத்த ஏரையோட்டுந் தாற்றுக்கோலைச் செலுத்துநர்களாகிய வேளாண்மாந்தர் வீதிகள் பலவாகும்.

(வி - ம்.) ஆதி என்பதில் இன்சாரியையோடு உம்மையுந் தொக்கதாகக் கொள்க. ஆதியினு மீறு சிறந்தன வென்க. அதுபோல முகத்தைக் காட்டிலும் சிறந்தவிர் பதத்திற் றேன்றிச் செலுத்துநரென முடிவுசெய்க. வேய்ங்கோல் - மூங்கிற்கோல். சிறுகோல் - தாற்றுக்கோல். இம் முக்கோலும் செல்லற்குக் காரணமாகிய ஏர்க்கோலினராகலின் அவர் தோன்றிய பதத்தை "முகத்திற் சிறந்தமை பத" மென்றூர். "ஒன்ருக நல்லது" என்னுந் திருக்குறளுரையில் மூற் கூறியதிற் பிற்கூறியது வலியுடைத்தாகலின் எனப் பரிமேலழகர் கூறியதும் உணர்க. (௧0௧)

குய்யமா யுயிர்க டோற்றுதற் குரிய
குறிதமக் கேபிறப் பிடமாய்
ஐயமுன் வேத னிடத்தவ தரித்திட்
டதற்கியை தரமறை பிறர்பால்
வையக மூன்று மொருங்குறு மேலும்
வழங்கிடா தருநிதி யாக்கி
உய்யநூல் வகுத்த வொழுக்கினிற் பிறழா
துழப்பவர் வீதிகள் பலவால்.

(இ - ள்.) மறைவாகி உயிர்கள் பிறத்தற்குரிய இடக்கரவயவமே தங்களுக்குத் தோன்றுமிடமாகி அழகிய முதன்மையுடைய பிரமாவினிடத்துத் தோன்றியதற்குப் பொருந்த வியாபார முறையான் வரும் இரகசியங்களை ஏனையோரிடத்து மூவகையுலகமும் ஒருசேரக் கிடைக்குமேனும் கூறாது அருமையாகிய செல்வத்தினையுளவாக்கி (ஆன்மாக்களுய்யும் வண்ணம்) உண்மை நூல்கள் வகுத்துச்சொல்லிய ஒழுக்கினின்றும் பிறழ்ச்சி யடையாமல் வாணிக முறையில் முயலுபவராகிய வணிகர் வீதிகள் பலவாகும்.

(வி - ம்.) குய்யமாய் - மறைவாய். குறி - பிரமன் இடக்கர் அவயவம். மறை - தாங்கொண்ட பொருளின் விலையைப் பிறர்க்குக் கூறாது மறைத்தல். உழத்தல் - முயன்று தொழில் செய்தல். (௧0உ)

பகைமுழு திரிக்கு மத்திரஞ் சுமந்த
பங்கயத் தொங்கருழ் புயத்துத்
தகையழு கெறிப்ப நான்மறைக் கிழவன்
றந்திட வந்தகா ரணத்தால்
புகையழற் பொறிக டும்முவான் படைகள்
புயத்தினி தேந்திமே வார்தம்
மிகைதணித் துலகிற் குடைநிழல் பரப்பும்
வேந்தர்வாழ் வீதிகள் பலவால்.

(இ - ள்.) பகைவர்களை யெல்லாம் கெடச்செய்யும் அம்புகளைத் தாங்கிய தாமரை மலர்களாலாகிய மாலை தாங்கிய புயத்தினின்றும் நான்கு வேதத்திற்குரிய பிரமன் உளவாக்க மிக்க அழகு வீசாநிற்கத் தோன்றிய காரணத்தினாலே தூமத்தோடு கூடிய தீப்பொறிகளைக் கக்குகின்ற பெருமைபொருந்திய ஆயுதங்களை இனிதாகப் புயத்திற்றாங்கிப் பகைவர்களுடைய செருக்கையடக்கி உலகத்தினிடையே வெண்கொற்றக் குடையினால் நிழலைப் பரவச்செய்யும் அரசர்கள் வாழும் வீதிகள் பலவாகும்.

(வி - ம்.) நான்மறைக் கிழவன் புயத்து அழகெறிப்பத் தந்திட வந்த காரணத்தாலென்க. தகையழகு - மிக்க அழகு. தும்மு - கக்குகின்ற. மிகை - செருக்கு. (௧0௩)

இருமையு மளிக்கு மொழுக்கெலாந் தெரிக்கு
மிருமறை யெழுந்தவாண் முகத்துப்
பொருவரு வேதக் குரிசின்முன் னுயிர்ப்பப்
போக்கறப் பொலிந்தகா ரணத்தால்
ஒருமையி னோத லாதியா வுரைத்த
வுயர்தொழி லாறினுஞ் சிறந்து
பெருமையின் மறையோ ரெனும்பெயர் தமக்கே
பெற்றவர் வீதிகள் பலவால்.

(இ - ள்.) இம்மை மறுமைப் பயன்களைக் கொடுக்கு மொழுக்கங் களை யெல்லாம் தெரிவிக்கும் பெரிய வேதங்கள் தோன்றிய ஒளி பொருந்திய முகத்தினிடத்து ஒப்பற்ற வேதத்தலைவனாகிய பிரமன் யாவரினு முற்பட உளவாக்கக் குற்றமின்றி விளங்கிய காரணத்தினால் ஒருமைப்பாட்டுடனே ஓதலை முதலாகக் கூறிய உயர்ந்த அறுவகைத் தொழிலினும் சிறப்புற்றுப் பெருமையினாலே மறையோரென்னும் பெயரைத் தங்களுக்கே யன்றி (வேறொருவர்க்கில்லாமல்) பெற்றவர்க ளாகிய மறையவர் வீதிகள் பலவாகும்.

(வி - ம்.) இருமை - இம்மை, மறுமை. பொருவரும் - ஒப்பற்ற. போக்கு - குற்றம். ''போக்கின்றென்ப வழக்கினுள்ளே'' எனும் தொல்காப்பியச் சூத்திரத்தா னறிக. (௪0௭)

அருள்வளங் கொழிக்கு மைந்தொழி லாக
வடங்கிய சிறப்பொடு பூசை
மருவுமெவ் வகையு மாகம வழியான்
மயரறத் தெளிந்தவர் வரையாச்
சுருதிகண் மிருதி புராணமெக் கலையுந்
துகளறத் தெரிந்தவ ரிறைவன்
தருதிரு மேனி தீண்டிடு மாதி
சைவர்வாழ் வீதிகள் பலவால்.

(இ - ள்.) அருளின் பெருக்கத்தைச் சொரிகின்ற ஆக்க லழித்த லருளல் காத்தல் மறைத்த லென்னும் ஐவகைத் தொழிலாக அடங்கிய விழாவொடு பூசைக்குப் பொருந்திய எவ்வகைப்பட்ட கிரியைகளையு மாகமசாத்திர வழியான் மயக்கமறத் தெளிந்தவர்கள், எழுதாத வேதங்கள் மிருதிகள் புராணங்கள் முதலிய எல்லாக் கலைகளையும் குற்ற மற அறிந்தவர்கள் சிவபெருமானுடைய இன்பினைத் தருகின்ற திரு மேனியை முப்பொழுதும் தீண்டுபவர்களாகிய ஆதி சைவர்கள் வாழ் கின்ற வீதிகள் பலவாகும்.

(வி - ம்.) சிறப்பு - விழா. எவ்வகையும் - எவ்வகைக் கிரியை களையும். மயல் - மயக்கம். துகள் - குற்றம். வரையாச்சுருதி-எழு தாத வேதம். (௪0௮)

கரிசறு கவிங்குக் கவிகம கனுக்குக்
கமகன்வா திக்கொரு வாதி
துரிசறு வாக்கி தனக்கொரு வாக்கி
யாயவர் தோன்றுதொட் டமைந்து
வரிசையின் வந்த கேள்வியர் பொருது
வருமிகல் கடந்தவெஃ குடையார்
பரிசினுற் பயிற்சி யின்பெனக் கலைதேர்
பட்டிமண் டபம்பல வயங்கும்.

(இ - ள்.) குற்றமற்ற (நால்வகைக் கவியை யாவரும் வியக்கப் பாடுவோனாகிய) கவிக்கு ஒரு கவியும், (நூலின்கட் செறிந்து கிடக்கு மரும்பெரும் பொருளினைச் செம்பொருளாக யாவருமறியும் வண்ணம் விரித்துச் சொல்லும்) கமகனுக்கு ஒருமகனும், (மேற்கோளும் ஏதுவும் உதாரணமும் உபநயமும் நிகமனமும் காட்டிப் பிறன் கூற்றை மறுப் பவனாகிய) வாதிக்கொரு வாதியும், குற்றமற்ற (அறம்பொருளின்பங் களைக் கேட்போர் விரும்பும் வண்ணம் கூறும்) வாக்கிக் கொருவாக்கியும் ஆகியவர்கள் பண்டைக்காலம் தொடங்கிப் பொருந்திச் சான்றோ ரிடத்து முறைப்பட்டுவந்த கல்வி கேள்விகளை யுடையவர் (பிறராக்கம் கண்ட வழிப்) பொறாது வருகின்ற பகையை வென்ற கூரிய புத்திநுட்ப முடையவராகிய இவர்கள் மேற்கூறிய தன்மையோடு நூலின் பயிற்சி இன்பெனக்கொண்டு நூல்களை யாராய்கின்ற கலைதெரி மண்டபங்கள் பல விளங்கும்.

(வி - ம்.) பட்டிமண்டபம் - கலைதெரி மண்டபம். "பட்டி மண்டபத்துப்பாங் கறிந்தேறுமின்" எனவரும் மணிமேகலையானும், "பட்டிமண்டப மேற்றினை" என்னும் திருவாசகத்தானு மறிக. (௧0௬)

அறிதரா தியற்றும் புண்ணிய நிரம்பி
யறிந்துபல் புண்ணியம் புரிவோர்
மறிதரா தகத்துச் சரியைமுன் னன்கும்
வழுத்தப வியக்குந ருண்மை
நெறியினு லந்த நான்கினுங் கருத்தை
நிறுத்துந ராயசீ ரடியார்
பிறிதரா தமர்ந்து தத்தம தியல்பு
பேணிவா ழிருக்கைக ளனந்தம்.

(இ - ள்.) அபுத்தி பூர்வபுண்யம் நிறையப்பெற்றுப் புத்தி பூர்வ மாகப் பல புண்ணியங்களைச் செய்கின்றவர்களும், மடங்காது அகத்தி னிடத்தே உபாயச்சரியை, உபாயக்கிரியை, உபாயயோகம், உபாய ஞானமாகிய நான்கினையும் குற்றம் நீங்கச் செய்கின்றவர்களும், உண்மை வழியான்வந்த உண்மைச்சரியை, உண்மைக்கிரியை, உண்மை யோகம், உண்மைஞான முதலிய நான்கினிடத்து நிறுத்துகின்றவ ராகிய சிறப்புப் பொருந்திய அடியார்களும் நீங்காதமர்ந்து தங்கடங்கள் ஒழுக்கங்களைப் போற்றி வாழ்கின்ற இருக்கைகள் பலவாம்.

(வி - ம்.) புத்தி பூர்வ அபுத்தி பூர்வபுண்யங்களும், உபாயச்சரியை முதலிய நான்கும், உண்மைச்சரியை முதலிய நான்குமாகிய பத்தும் சிவபுண்ணியமெனப் பெயர் பெறும். இப் பத்தினுள் முற்பட்ட ஒன் பதும் மலநிலையமாகும். பிற்பட்ட ஒன்று அருணிலையாகும். (௧0எ)

மும்மலச் செருக்கை முதலொடு முருக்கி
முழுத்தபே றறிவெனக் கினைத்த
விம்முயிர் கெடுத்து விங்கிய வருளை
வியங்கொளுந் திருக்கினை மிளிர்த்துச்

செம்மைமெய் யருளைக் கடந்தொளிர் சிவத்திற்
றினகர விழியெனக் கலக்கும்
இம்முறை யுண்மை ஞானமீ ரைந்து
மியங்குநர் மடங்களெண் ணிலவால்.

(இ - ள்.) ஆணவம், மாயை, கன்மமென்று மூவகை மலங்களின் தருக்கை வேரொடுங் கெடுத்து, முதிர்ந்த அறிவே வடிவானவன் யானென்றெழுந்த மிக்க உயிரின் தன்மையைக் கெடுத்து மிக்க அருளினை ஏவல்கொள்ளும் அறிவினை விளங்கச்செய்து செப்பமாகிய அருளைக் கடந்து விளங்குகின்ற சிவத்தினிடத்தில் கதிரொளியும் கண்ணொளியும் பேதமின்றி அத்துவிதமாகக் கலத்தல்போல அத்துவிதமாகக் கலக்கு மிம்முறையாகிய உண்மை ஞானம் பத்திலும் ஒழுகுகின்ற அடியார்கள் மடங்கள் பலவாம்.

(வி - ம்.) முற்செய்யுளிற் கூறப்பெற்ற பத்திலுள் ஈற்றினின்ற உண்மை ஞானமொன்றே, தத்துவரூபம், தத்துவதரிசனம், தத்துவ சுத்தி, ஆன்மரூபம், ஆன்மதரிசனம், ஆன்மசுத்தி, சிவரூபம், சிவதரிச னம், சிவயோகம், சிவபோகமெனப் பத்தாகும். இவை தசகாரிய மெனப் பெயர்பெறும். இவற்றுள் சிவபோகம் நீங்கிய ஒன்பதும், சுத்தசாக்கிர முதலிய நான்கவத்தையினடங்கும். சிவபோகம் துரியா தீதத்தினடங்கும். இச்செய்யுளில், "மும்மலச் செருக்கை முதலொடும் முருக்கி" யென்பதனாற் றத்துவரூப முதலிய மூன்றும். "முழுத்தபே ரறிவெனக் கிளைத்த விம்முயிர் கெடுத்து" என்பதனால் ஆன்மரூப முதலிய மூன்றும். "வீங்கிய அருளை வியங்கொளுந் திருக்கினை மிளிர்த்து" என்றதனால் சிவரூபம் சிவதரிசனம் ஆகிய இரண்டும். "செம்மை மெய்யருளைக் கடந்து" என்பதனால் சிவயோகமொன்றும், "ஒளிர்சிவத்திற் றினகரவிழியெனக் கலக்கும்" என்பதனால் சிவபோக மொன்றுந் தோன்ற நின்றமை காண்க.

அறிவெனக் கிளைத்தஉயிர் - இயல்பின் ஞானவடிவமாகிய உயிர். செருக்கு - தருக்கு. முதல் — வேர். முருக்கி — கெடுத்து. உயிர்கெடுத்து- ஆத்மபோதத்தைக் கெடுத்து. வியம் - ஏவல். திருக்கு — அறிவு. தின கரவிழி — கதிரொளியோடு அத்துவிதமாகக் கலந்த கண்ணொளி. (கo அ)

அலகில்பல் லுயிரு முயிர்த்ததம் மாமி
யருளிரு நாழிநெல் லேகொண்
டிலகறம் வளர்த்தா ளெனுமிழுக் ககல
விருநிதி வேண்டின வெல்லாம்
குலவரைக் கிழவன் கொடுத்திட வாங்கிக்
கோதைய ரிருவரும் வளர்ப்ப
நிலவிநிற் பனபோற் பலவறச் சாலை
நித்தலும் வயின்றொறுந் தழையும்.

(இ - ள்.) கணக்கிடப்படாத பல உயிர்களையுமீன்ற தங்கள் மாமியார் இறைவனளித்த இரண்டுபடி நெல்லையே ஆதாரமாகக்

தொன்று மாறுபாடில்லாத முப்பத்திருவகைக் கருமங்களையும் வளர்க்காமையென்கிற குற்றமானது நீங்க (மக்கள்) விரும்பின பெரிய செல்வங்களெல்லாவற்றையும் சிறந்த மலைகளுக்குத் தலைவனாகிய முருகப்பெருமான் கொடுக்க வள்ளியம்மையாருந் தெய்வயானையாரும் வளர்க்க மேம்பெற்று நிற்பனபோலப் பல அறச்சாலைகள் நாடோறு மிடங்கடோறுங் குறைவற்று நிற்கும்.

(வி - ம்.) தம் என்றது ஈண்டு வள்ளியம்மையார் தெய்வயானையாரை. அருள் - இறைவனளித்த. வரைக்கிழவன் - குறிஞ்சிநிலத் தலைவனாகிய முருகக்கடவுள், தணிகைக்கிறைவ னெனினுமாம். (௧0௯)

பெருநிதி முகப்பத் தானமாக் கொடுக்கும்
பெற்றியர் வாக்குநீர்த் தாரை
இருகர தலத்தும் பிழைத்துவிழ் மணியு
மிரணியக் குப்பையும் வரன்றிப்
பொருதிரை சுருட்டி யொழுகுத லானும்
போகுமா ளிகைநிரை கரைபோல்
மருவுத லானுங் குலநதி நதம்போல்
வயங்குவ பற்பல்வீ திகளும்.

(இ - ள்.) பெரிய செல்வங்களை முகந்துகொள்ளும் வண்ணம் மந்திர பூர்வகமாகக் கொடுக்கின்ற தன்மையை யுடையார் கொட்டுகின்ற நீரொழுங்கானது இருகரங்களினின்றும் பிழைத்து வீழ்கின்ற இரத்தினங்களையும், பொற்குவியலையும் வாரிக்கொண்டு மோதுகின்ற அலையை மடக்கி வீசிச்செல்லும் தன்மையாலும் உயர்ந்த மாடவரிசைகள் கரையைப்போலப் பொருந்துதலினாலும் பற்பல வீதிகளும் நதியைப்போலவும் நதத்தைப்போலவும் விளங்கும்.

(வி - ம்.) தாரை - ஒழுவாய். பிழைத்து - தப்பி. இரணியம் - பொன். போகு - உயர்ந்த. நதி - மேற்றிசையினின்று கீட்டிசைக்கட் செல்வது. நதம் - கீட்டிசையினின்று மேற்றிசைக்கட் செல்வது. (௧௧0)

மணிமலர்ப் பட்டின் விசித்திரம் பிறங்க
மல்லல்வீ திகடோறு மமைத்த
தணிவில்பூம் பந்த ராற்றினைக் கடப்பச்
சமைத்தவான் சிலைவழி போலும்
அணிதரு மகர தோரண மணித்தோ
ரணங்களாங் காங்குநீண் டவிர்தல்
துணிவுறு தகையோ ரியங்குதற் கமைத்த
தொடர்படு கொடிவழி போலும்.

(இ - ள்.) அழகிய பூத்தொழிலமைந்த பட்டினால் விம்மிதம் விளங்க வளம்பொருந்திய வீதிகடோறும் செய்யப்பெற்ற உயர்ந்த

பொலிவு பெற்ற பந்தர்கள் (விதியாகிய) நதியைக் கடக்க உண்டாக்கிய கல்லாலாகிய வழியையொக்கும். அழகைத் தருகின்ற மகரதோரணங்களும், மத்தளாலாகிய தோரணங்களும் ஆங்காங்கே கட்டியுற்று விளங்குதல் மனத்துணிவு பொருந்திய ஆடவர்கள் செல்லுதற்குச் செய்த கொடியாகிய வழியையு மொக்கும்.

(வி - ம்.) விசித்திரம் - விம்பிதம். பந்தர் - எழுவாய். சிலைவழி - கல்லாகிய வழி. துணிவுறுதகைபோர் - அக் கொடிவழியிற் செல்லும் மனவுறுதி பொருந்திய தகுதியுடைய ஆடவர்கள். ஆற்றினைக் கடப்பதற்குக் கற்பாலமும் கொடிவழியு மற்காலத்தும் இக்காலத்து முளவாதலின் இங்ஙனம் கூறினார். (கக௧)

நெருங்குதோ ரணத்திற் றூக்கிநித் திலங்க
ணிலாவொடு குளிர்தவக் கான்று
வருங்கதி ரிரவி விளர்ப்பவெப் பனுக்கி
மல்குவான் மீனெனத் தோன்றி
இருங்கலை மதியோ டுடுவினுக் கொளிமிக்
கிணக்கியந் தாரகைக் குலத்தோ
டொருங்கலிற் பொழுது தெரிப்பவே திங்கட்
குறுத்தினன் கறைகுறை யிறையோன்.

(இ - ள்.) நெருங்குகின்ற தோரணத்தின்கட் டூக்கிய முத்துக்கள் ஒளியோடு குளிர்ச்சியை மிகக் கக்கி நாடோறும் வருகின்ற கிரணங்களையுடைய சூரியன் நாணத்தால் வெண்ணிறமாக வெப்பத்தினைக் கெடுத்துப் பொருந்துகின்ற ஆகாயத்தின்கண்ணுள்ள மீன் கூட்டமென்று சொல்லும் வண்ணம் காணப்பட்டுப் பெரிய கிரணங்களையுடைய சந்திரனோடு கூடிய நட்சத்திரங்களைக் காட்டிலும் ஒளிமிகுந்து அவைகளைத் தன்னொளியாற் கலக்கச்செய்து நட்சத்திரக் கூட்டங்களுடனே யொடுங்குதலால் சூரியனிவனென்று பிறர்க்கறிவிக்கவே இறைவன் களங்கத்தையும் கலைக்குறையையும் சிவபெருமான் திங்களின்மாட்டுச் சேர்த்தான்.

(வி - ம்.) தவக்கான்று - மிகக்கக்கி. விளர்ப்ப - வெண்ணிறமடைய. அனுக்கி - கெடுத்து. ஒருங்கல் - ஒடுங்கல். கறை - களங்கம். குறை - கலைக்குறை. இறையோன் - சிவபெருமான். (கக௨)

சந்திர காந்தச் சிலைகளிற் குயின்ற
தமனிய மாடமா ளிகைகள்
இந்துவா னுலவ வுமிழ்ந்தநீ ரருவி
யிழிதர வெழுபெருங் கொடிகள்
அந்திலவ்வார்ந் தசையும் பாடெலாங் கதிர்க்கு
மவிருடுக் குலந்தவழ் காட்சி
சிந்துவேய் மணிகள் வரைவயிற் கிடந்து
திவளொளி காலுவ போன்ற.

(இ - ள்.) சந்திரகாந்தக் கற்கள் பதிக்கப்பெற்ற பொன்மயமாகிய மாடத்தோடு கூடிய மாடமாளிகைகள் சந்திரன் ஆகாயத்தின்கண் வந்து சஞ்சரிக்கச் செய்த சிறுநெறியானதொழுக, உயர்ந்த பெரிய கொடிகள் அவ்விடத்தில் நின்று அசையும் பக்கங்களிலெல்லாம் ஒளியைச் செய்யும் விண்மீன் கூட்டங்கள் ஊர்கின்ற தோற்றமானது சிந்துகின்ற மூங்கின் முத்துக்கள் மலையின்கட் கிடந்து விளங்குமொளியைக் கக்குவதை யொத்துத் தோன்றும்.

(வி - ம்.) மாடங்களை மலையாகவும் கொடியை மூங்கிலாகவும் அதன் பக்கத்தூர்கின்ற விண்மீன்களை வேய்சொரியு முத்துக்களாகவும் கொள்க. (௧௧௩)

வையக வரைப்பி னுயிரெலாங் கருமம்
　　வளர்ப்பதற் கேதுவாய் வழங்கும்
வெய்யவ னுதி கோளொடு நாளை
　　விந்தநேர் தகைப்பது தகாதென்
றையபொன் மணியிற் குயிற்றுநீண் மாடத்
　　தவையெலாஞ் செல்லிய வழிகள்
தெய்யநன் கமைத்த வுண்மைதேர் கல்லார்
　　சேறிந்தகா லதரென மொழிவார்.

(இ - ள்.) பூமியின்கண் உயிர்ப் பன்மைகளெல்லாம் காரியங்களைச் செய்தற்குக் காரணமாக இயங்கும் சூரியன் முதலாகிய கோள்களோடு விண்மீன்களையும் விந்தமலையை யொப்பத் தடுப்பது தகுதியுடையதன்றென்று கருதி அழகிய பொன்னாலும், மணியாலும் செய்யப்பெற்ற நீண்ட மாடங்களில் அக்கோள் முதலியவைகளெல்லாம் செல்ல வழிகள் நன்றாக அமைக்கப்பெற்ற உண்மையை யறியாதவர்கள் (அவைகளை) சாளரமென்று சொல்லுவார்கள்.

(வி - ம்.) அந்தில் - அவ்விடம்; அசையெனினுமாம். கதிர்க்கும் - ஒளிமிகும். காட்சி - எழுவாய். வெய்யவனுதி கோளொடுநாள் - சூரியன் முதலாகிய கோள்கள் மீன்கள். தகைப்பது - தடுப்பது. ஐய - அழகிய. செல்லிய - செல்ல. தெய்ய - இசைநிறை. காலதர் - சாளரம். ''மான்கட்காலதர்'' எனச் சிலப்பதிகாரத்தும், ''கால்போகு பெருவழி'' என மணிமேகலையிலும் வருவனவற்று லறிக. கோள்கள் செல்லும் வழியை யறியார் காற்றுச் செல்லும் வழியென்பார். (௧௧௪)

வேறு

பொன்ன ளாவிய மேனிலை மாடத்துப் புனைந்த
நன்னர் மாலைதாழ் சுருங்கையி னுகத்து நாகம்
புன்னு காலையி னெருங்குடன் மூடுரி கழற்றி
மன்னு மோகையிற் றுளும்புறு மதிதொறு மன்றே.

(இ - ள்.) பொன்னுற் கலந்து செய்யப்பெற்ற மேன்மாடங்களில் அலங்கரித்துச் செய்யப்பெற்ற நல்ல மாலைகள் தங்கப்பெற்ற சிறுவாயி

லில் ஆகாயத்தின் கண்ணியலும் இராகுகேதுக்கள் அடைகின்ற காலத்து நெருங்குதலால் உடலை மறைய தோலைக் கழற்றி மாதங்கடோறும் பிறை பெற்ற களிப்பினாற் றுள்ளும்.

(வி - ம்.) சுருங்கை - சிறுவாயில்; திட்டிவாயில் என்க. நாகம் - ஆகாயம்; இராகுகேதுக்கள். முன்றுகாலை - அடைகின்ற காலத்து. துளும்புறும் - துள்ளும். மதிதோறும் - மாதங்கடோறும். (௧௧௫)

செம்பொன் வார்கொடி சேணுற நிவந்துகற் பகத்தின்
வம்பு லாவிய பொன்னகர் மதிற்புறம் புடைப்ப
இம்பர் மேம்படு மிந்நகர் நிகர்க்கலாற் றுநீ
உம்பர் வாழ்தலொன் றெனெ வொறுப்பபோன் றனவால்.

(இ - ள்.) செம்பொன்னாலாகிய நீண்ட கொடிகள் ஆகாயத்தைப் பொருந்த எழுந்து கற்பகமரங்களின் வாசனை பொருந்திய தேவருலகத்தின் மதிலைப் புறத்திலே அடிப்பன. இவ்வுலகத்தின்கண் மேம்பட்ட இத் தணிகாசலத்திற்கு ஒப்பாகாத நீ தேவருலகத்தின்கண் வாழ்தல் தகாதென்று தண்டிப்பன போன்றனவாகும்.

(வி - ம்.) நிவந்து - எழுந்து. மதில் - இரண்டாவதன்றொகை. ஒறுத்தல் - தண்டித்தல். (௧௧௬)

வளியின் யாத்தபொன் னகர்கொடி வைகலுந் துளக்க
நெளியு நீர்மையா னிலத்திடை விழுமென வஞ்சி
ஒளிறு வாள்விழி யிரவினும் விழித்துளா ரொத்தார்
அளிவி ழாமலர்ப் பொலந்தொடை யந்தரத் திமையார்.

(இ - ள்.) வண்டு விழாத மலர்களாலாகிய மாலையை யணிந்த விண்ணுலகத்தின்கண்ணுள்ள தேவர்கள் வாயுமண்டலத்தால் யாக்கப்பட்ட பொன்னகரானது (தணிகைநகர் மாளிகையிற் கட்டிய) கொடிகள் நாடோறும் அசைக்க நெளிகின்ற தன்மையால் (அந்நகரானது) பூமியின்கண் விழுமென்று பயந்து விளங்குகின்ற ஒளிபொருந்திய விழிகள் இரவின்கண்ணும் விழித்துள்ளாரை யொத்தனர்.

(வி - ம்.) வளியாத்த பொன்னகர் - வாயுமண்டலத்தாலியாக்கப் பெற்ற பொன்னகரமானது. நெளியும் நீர்மையினாலே விழித்துளா ரொத்தா ரென்க. துளக்க - அசைக்க. (௧௧௭)

கன்னி கும்பங்க டாங்கிய வென்றெளி கதிர்க்குங்
கன்னி கும்பங்க டாழ்ந்துபோங் கனகவா னரங்கில்
துன்னி மாதரா ராடலிற் சுடர்மணி யுக்க
மின்னு மீன்விசும் பிகழ்ந்திறை கொண்டமை விழும்.

(இ - ள்.) பெண்களையும் பொற்குடங்களையும் (மேன்மாடங்கள் தாங்கியன) என்று கருதி கன்னிராசியும், கும்பராசியும் தங்கிச் செல்கின்றன. பொன்மயமாகிய பெரிய சபைகளில் பொருந்திப் பெண்கள் ஆடலினாலே சிந்தினவாகிய ஒளிபொருந்திய மணிகள் ஒளிர

நின்ற விண்மீன்கள் ஆகாயத்தினின்றும் நீங்கித் தங்கிய தன்மையை ஒக்கும்.

(வி - ர்.) கன்னி - பெண். கும்பம் - குடம். கன்னி - கன்னி என்ற இராசி. கும்பம் - கும்பம் என்ற இராசி. தாழ்ந்துபோம் தங்கிச்செல்லும். வான் - பெரிய. உக்க - சிந்தினவாகிய மணிகள்: விண்மீன்களையும் பொரும். மீன் - விண்மீன். இகழ்ந்து – நீங்கி. இறை கொண்டமை - தங்கினமை. விழும் - ஒக்கும். (௧௧௮)

நிகழு மின்னனார் மாடத்து மடுத்தனர் திறப்ப
அகின றும்புகை சுருங்கையி னிவந்தெழு மாக்கம்
முகிலுண் கூந்தலார் முகத்தினை மதியென முன்னிப்
புகுக ரும்பணி யன்மைதேர்ந் தெழுவது புரையும்.

(இ - ள்.) ஆகாயத்திலே விளங்குகின்ற மின்னலையொத்த இடையை யுடைய பெண்கள் மேன்மாடங்களில் அகிற்கட்டையின் நறிய புகையை நிறைத்தவர்களாகிப் பின் திறந்துவிட (அப்புகை) நுழைவாயிலின்கண் ஓங்கியெழுகின்ற உயர்ச்சியானது மேகத்தை யொத்த கூந்தலையுடைய மங்கையர் முகங்களைச் சந்திரனென் றடைந்து (உண்ணப்) புகுகின்ற இராகுவானது (மதியன்மை யறிந்து) எழுவதை யொக்கும்.

(வி - ர்.) மின்னனார் அகினறும்புகை மடுத்தனர் திறப்ப எனக் கூட்டுக. சுருங்கை – நுழைவாயில். முன்னி - அடைந்து. கரும்பணி - இராகு. அன்மை தேர்ந்து - மதியன்மையைத் தெளிந்து. ஆக்கம் எழுவது புரையுமென வினைமுடிவு செய்க. முகிலுண் கூந்தல் – மேகத்தை யொத்த கூந்தல். உண் - உவமையுருபு. 'சேலுண் கண்ணியர்' எனச் (2383) சிந்தாமணியில் வந்துள்ளது காண்க. (௧௧௯)

சீத ளத்தொடு வெம்மைய திதலைவெம் முலைக்குச்
சீத ளத்தொடு வெம்மைசெய் தக்கதென் பார்போற்
சீத ளப்பனி நீர்விராய்ச் சந்தனஞ் செறித்துச்
சீத ளப்புன லறவிரை புகைப்பராற் றிளைப்போர்.

(இ - ள்.) குளிர்ச்சியோடு வெப்பத்தை யுடையவாகிய தேமலோடு கூடிய தனங்களுக்குக் குளிர்ச்சியோடு வெப்பத்தைச் செய்யத் தக்கதென்பாரைப்போல குளிர்ச்சி பொருந்திய பனிநீரைக் கலந்து சந்தனச் சேற்றை யப்பிக் குளிர்ச்சியாகிய அந்நீர் புலரும்வண்ணம் அனுபவிப்பவராகிய ஆடவர்கள் வாசனைப் புகையை யுண்டாக்குவர்.

(வி - ர்.) வெம்மைய – முற்றெச்சம். செய்யத் தக்கதென்னும் வினையெச்சத்திறுதி விகாரத்தாற் றொக்கது. "செய்தக்க அல்ல செயக் கெடும்" என்னும் குறளானறிக. (௧௨௦)

சித்தி ரப்பல பயின்றுபைங் கிளிமொழி திகழ்ந்து
பெத்தி நஞ்சுவை யுறுநிரந் தரித்தெங்கும் விரைத்துத்
தத்து தென்றல்வந் துலாவுபு தையலார் பயில
வைத்த மாடமு மவரென வைம்பொறி வாங்கும்.

(இ - ள்.) பல சித்திரங்கள் பொருந்திய பரிய கின்றின்மொழுகள் விளங்கப்பெற்று, நிறைந்த பெரிய சுவையோடுகூடிய சிற்றுணுக்கள் கலக்கப்பெற்று, யாண்டும் வாசனையை யுடைந்தாகித் தாவுகின்ற தென்றற் காற்றினை யனுபவிப்பதற்காகச் சிற்றவாக் கொண்டு பெண்கள் தங்குவதற்குச் செய்யப்பெற்ற இல்வரிசைகளும் (தம்மைக் கண்ட ஆடவருடைய ஐம்பொறிகளைத் தம்மிடத்து வாங்கிக்கொள்ளும்) அப் பெண்களைப்போலத் (தம்மைக் கண்டோர்) ஐம்பொறிகளையும் தம் மாட்டிழுத்துக் கொள்ளும்.

(வி - ம்.) கிளி - அம்மாடங்களிலுள்ள பெண்கள் வளர்க்கும் கிளி. பெண்கள் ஐம்பொறி வாங்குதலை "கண்டுகேட் டுண்டுயிர்த்துற் றறியு மைம்புலனு மொண்டொடி கண்ணேயுள" என்னும் திருக்குறளா னுணர்க. கண்ணாற்கண்டும் செவியாற்கேட்டும் நாவாலுண்டும் மூக்கான் மோந்தும், மெய்யாற்றீண்டியும் அவ்வைம்புலனையு மனுபவிப் பன தொடியையுடையாள்கண்ணே யுளவாயினவாறு காண்க. (௫௨௧)

மானி னத்தொடு முயலின மருவும்வண் வடவை
மேனி புல்லுறு மிடபம்விழ் பிடிபரி யேறு
தானி வர்ந்தெழும் வார்கொடி மகரமேற் றுங்கி
வேனின் மன்னவ னிடமெனு விளங்குவைப் பெங்கும்.

(இ - ள்.) நீண்ட கொடிகளின் மகரராசியினைத் தாங்கி வசந்த காலத்துக்குரிய மன்மதனதிடமென்று சொல்லும்படி விளங்குகின்ற வைப்பினெவ்விடங்களிலும், மான்சாதிப் பெண்களோடு முயற்சாதி யாடவர்கள் சேருவார்கள். குதிரைச்சாதிப் பெண்களோடு இடபச் சாதி யாடவர்கள் சேருவார்கள். விரும்புகின்ற பெண்யானைச்சாதிப் பெண்களோடு குதிரைச்சாதி யாடவர்கள் விரும்பிச் சேருவார்கள்.

(வி - ம்.) இவற்றின் விரிவை யெல்லாம் மாரதந்திரத்துட் காண்க (௫௨௨)

கற்புக் காட்டிய கைவளர் பசுங்கொடிக் கமழ்ந்த
கற்புக் கூந்தலர் காவியஞ் செவியினர் கலப்போர்
பொற்பக் காமநூல் வாதினில் வென்றுபோர் மதன்பால்
எற்பக் கேவலை யிவையெனப் பறித்துளார் நிகர்த்தார்.

(இ - ள்.) (நாயகர்கள் பிரிந்த காலத்து மன்மத பாணமாகிய முல்லை மலராற் கிடையும், நீலமலரால் சாக்காட்டையு மெய்திட மகளிர் தலைவர்கள் வினைமுற்றி மீண்டபின்னர்) தங்கள் கற்பு நிலைமையைக் காட்டத் தங்கள் கையால் வளர்க்கப்பட்ட முல்லைக் கொடிக் கண்மலரை தோன்றி, வாசனையை வெளியிடுகின்ற முல்லைமலரைக் கூந்தலின்கண்ணே சூடி, நீலமலரை அழகிய காதின்கண்ணே செருகித் தங்கள் நாயகரோடு கூடுகின்ற பெண்கள் (முன்னர் நம்மைப்பார்த்துத் தம்மை வருத்திய மாரனைப்) பொலிவுபெறக் காமநூற்போரி லவனை வெற்றிகொண்டு அப்போர்த் தொழிலைத் தொடங்கிய மன்மதனிடத் துள்ள முல்லைமலரும் நீலமலருமாகிய இவற்றை இனி என்பக்கம் செலுத்தற்க என்றுகூறிக் கைப்பற்றிக் கொண்டவரை யொத்தார்.

(வி - ம்) காட்டிய - காட்ட வென்க. பெண்கள் முல்லைக் கொடியை வளர்த்தல் "மாதரன்பொடு வளர்த்தமுல்லை, மெல்லரும் பீன்றதென்ன" எனும் நைடதச் செய்யுளானும், "நல்லவர் கற்பை யுமித்து நடந்து" எனும் காஞ்சிப்புராணச் செய்யுளானு முணர்க. கற்புக் கூந்தலார் காவியஞ் செவியினர் என்பன தெரிநிலைப் பொருளுணர்த்தும் வினையெச்ச வினைக்குறிப்பு முற்றுதலின் முல்லை மலரைச் சூடி நீல மலரை யணிந்தெனச் செய்தெனெச்சப் பொருளையுணர்த்தி நின்றன. இங்ஙனம் வினையெச்ச வினைக்குறிப்பு முற்று செய்தெனெச்சப் பொருளுணர்த்தலை ஆசிரியர் நச்சினார்க்கினியர் "தொல்-சொல்" "முன்னத்தி னுணரும் கிளவியு முளவே, யின்ன வென்னும் சொன்முறை யான" என்னும் 459-ஆம் சூத்திர வுரையில் "கச்சினன் கழலினன் செச்சைக் கண்ணியன்; குழலன் கோட்டன் குறும்பல் லியத்தன், தகர மஞ்ஞையன் புகரில் சேவலங், கொடிய னெடியன் தொடியணி தோளன், நரம்பார்த் தன்ன இன்குரல் தொகுதியொடு, குறும்பொறிக் கொண்ட நறுந்தண் சாயல், மருங்கிற் கட்டிய நிலனேர்பு துகிலினன்; முழவுறழ் தடக் கையி னியல வேந்தி, மென்றோட் பல்பிணை தழீஇத் தலைத்தந்து, குன்றுதோ றாடலும் நின்றதன் பண்பே" என்புழிவந்த வினையெச்ச வினைக்குறிப்பு முற்றுக்கள் ஆக்கம் பெற்றுப் பொருளுணர்த்துங்கால், கச்சைக் கட்டிக் கழலையணிந்து கண்ணியைச் சூடிக் குழலையூதி கோட்டைக் குறித்துப் பல்லியங்களை யெழுப்பித் தகரைப் பின்னிட்டு மயிலையேறிக் கொடியை யுயர்த்து வளர்ந்து தோளிலே தொடியை யணிந்து துகிலை யுடுத்து ஏந்தித் தழீஇ தலைகொடுத்து ஆடலும் அவற்கு நிலைநின்ற பண்பு "எனச் செய்தெ னெச்சப் பொருளை யுணர்த்தி நின்றவாறு காண்க" என நச்சினார்க்கினியர் கூறியிருத்தலா னறிக.

துணையின்றித் தனியாக இருந்தகாலத் தற்றம்பார்த்துத் தங்களை வேறல் செய்த பகைவரைத் துணைவாய்க்கப் பெற்றகாலத்து வேறல் செய்து அவர்பாலுள்ள ஆயுத முதலியவற்றைக் கோடல் முறையாகலின்; இப்பெண்களும் துணைவரில்லாக் காலத்து அவனை வென்று முல்லையும் நீலமுமாகிய இப்பாணங்களை எங்கள் பக்கம் ஏவற்க வெனக் கூறிப் பறித்துள்ளாரை யொத்தாரென்க. இயல்பாக அணியும் முல்லையையும் நீலத்தையும் அவனை வென்று பறித்தலாகக் கருதலால் தற்குறிப்பேற்ற அணியென்க. கலப்போர் ஒவ்வொருவரும் என்பக்க மேவலையெனத் தனித்தனி கூறலால் என்னென்று மொருமை தனித்தனி சென்று கலப்போரென்னும் பன்மையோடு கூடுதலின் வழுவன்று. "ஆசிரியர் நச்சினார்க்கினியர் தொல் - சொல் - எச்சவியலில்", "ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி-பன்மைக் காகு மிடனுமா ருண்டே" எனும் சூத்திர வுரையில் "அஃதை தந்தை யண்ணல் யானை யடுபோர்ச் சோழர்" என்புழிச் சோழரெல்லாம் அஃதைக்குத் தந்தையரா முறையராய் நிற்றலின் தந்தையென்னு மொருமை சோழரென்னும் பன்மையோடு தனித்தனி சென்று கூடுதலின் வழுவின் றென்றதனானு மிதனை யறிக. எல்பக்கமெனப் பிரிப்பாருமுளர். என்பக்கம் எற்பக்கு என விகாரமாயிற்று. (கஉகூ)

எண்ணி லண்டத்துப் பிரமரு மொருநக ரிதுபோற்
பண்ண வன்னமாய்க் கரந்துபார்ப் பப்புகுந் தாங்குச்
சென்ன வஞ்சிலம் பரற்றிய தீங்குரல் கவர்வான்
வண்ண வன்னங்கள் புகப்படுங் கலவிசெய் மாடம்.

(இ-ள்) அளவிட முடியாத அண்டங்களிலுள்ள பிரமர்களும் ஒப்பற்ற நகரமாகிய இத் தனிநகரைப் போலச் செய்ய அன்ன வடிவமாகத் தம்முருவையொளித்துக் காணும்பொருட்டு வந்ததைப் போல ஒளியோடு கூடிய அழகிய காலணிகள் ஒலிக்கின்ற இனிய நடையைக் கவரும் பொருட்டு அழகிய அன்னப் பறவைகள் புணர்ச்சி செய்கின்ற மாடம் நுழையப்படும்.

(வி-ம்.) மாடம் புகப்படுமென வினை முடிவு செய்க. செண்ணம் - ஒளி, வடிவு. வண்ணம் - அழகு. (௪௨௮)

கலவி யாற்றிய காலையும் புலவிக்கா லத்தும்
குலவு தந்நடை குறைந்தமைக் கொக்குமா றொதுங்கும்
நிலவு வெண்கரி வணக்கிய நிகரில்யாழ் தழுவி
மலரு மின்னிசை யெழுப்புவர் மேனில மகளிர்.

(இ-ள்) அந்நகரத்தில் மேன் மாடங்களிலுள்ள பெண்கள் (தந் நாயகரோடு) கலவிசெய்த காலத்திலும் (அவரோடு) ஊடுதலைச் செய்த காலத்திலும், விளங்குகின்ற தங்கள் நடை குறைந்த தன்மைக் கொப்ப நடக்கின்ற (தெய்வ லோகத்திற்) பொருந்திய வெள்ளை யானையை வணக்க (இசையால்) ஒப்பற்ற யாழினைத் தழுவி விரிந்த இனிய கானத்தை யெழுப்புவார்.

(வி-ம்) ஒதுங்கும் - நடக்கும். வணக்கிய - வணக்க. மலரும் - விரிந்த. எழுப்புவர் - உண்டாக்குவர். யானை யாழிசைக்கு வயமாதற்கு "காழ்வரை நில்லாக் கடுங்களிற் றொருத்தல் - யாழ்வரைத் தங்கி யாங்கு" எனவரும் பாலைக்கலி 2ஆம் செய்யுளா னறிக. (௪௨௯)

தடவு மேனில மெழுக்கிடுந் தண்புன லாப்பி
கடவு ளாப்பியுங் கங்கையுங் கவினுறுத் துவபூ
மடல்வி ராவிய கற்பகத் திழையவண் வதிவார்
படரெ லாந்தப வுண்பது பனிவிசும் பமிழ்தம்.

(இ-ள்.) பெருமை பொருந்திய மேன்மாடங்களை மெழுக்கிடுகின்ற குளிர்ந்தநீரும், சாணமும், காமதேனுவின் சாணமும் ஆகாய கங்கையுமாகும். (அம்மேன்மாடத்துள்ள பெண்களுக்கு) அழகைச் செய்வன பூவிதழ்களோடு கூடிய கற்பக மரங்களினுளவாகிய அணிகலன்களேயாகும். அம்மேன்மாடத்தின் கண்ணே தங்குகின்றவர்களால் துன்பங்களெல்லாம் நீங்க வுண்ணப்படுவது குளிர்ச்சி பொருந்திய தேவலோகத்தின் கண்ணுள்ள அமிழ்தமேயாகும்.

(வி-ம்.) புனலாப்பி - உம்மைத்தொகை. ஆமென ஒரு சொல் வருவித்து முடிக்க. கவினுறுத்துவன கற்பகத்தருமாபரணங்களாம். படர் - துன்பம். தப - நீங்க. உண்பது - உண்ணப்படுவது. கவின்- அழகு. (௪௩௰)

முழவு வென்றதோ ளாடவர் மேனில முகத்துக்
கழகம் விண்ணவர் கலவினர் கலைபல தேர்வார்

மழலை மென்மொழி மாதரார் பண்ணையின் மருவி
விழவு மல்கியாட் டயர்வரால் விளங்கர மகளிர்.

(இ - ள்.) (அந்நகரத்து) மேன்மாடங்களிலுள்ள கல்விச் சங்கங்களில் மத்தளங்களை வென்ற தோளினையுடைய அந்நகரத் தாடவர்களோடு தேவருலகத்துள்ள தேவர்கள் கலந்து பலகலைகளையுமாராய்வார்கள். அன்றன்ன மழலைச்சொற்களையுடைய பெண்கள் விளையாடுமிடங்களிற் பொருந்தி அழகு விளங்குகின்ற தேவமகளிர் சிறப்பை நிறைவித்து விளையாடுதலைச் செய்வர்.

(வி - ம்.) முழவு - மத்தளம். முகம் - ஏழாவதனுருபு. கழகம்-சபை. மழலை - பொருள் விளங்காச்சொல். "ஒருகுதலைச் சின்மழலைக் கென்றொ வையவொவாதுவதே" என்னும் திருக்கோவையார் (104) கவியுரையானுணர்க. பண்ணை - விளையாடுமிடம். விழவு-சிறப்பு. விழவு மல்கி - தாங்கள் விளையாடுமிடத்திற்குச் சிறப்பை நிறைவித்தென்க.
(௧௨௭)

பொறித்த சீரெழுத் தொழுக்கெனப் பொற்றமா டங்கள்
செறித்த வார்நிரை வீதியிற் சிலவள மொழிந்தாம்
வெறுத்த வீதிதற் சூழ்தர வெற்றிவே லிறைவன்
குறித்த கோயில்கொண் டோங்கிய குன்றினி மொழிவாம்.

(இ - ள்.) எழுதிய சிறப்புப் பொருந்திய எழுத்துக்களின் வரிசையென்று சொல்லும்வண்ணம் பொலிவுபெற்ற இல்லங்கள் நெருங்கி ஒழுங்காக நிறைந்த வீதியின்கண்ணுள்ள சில வளங்களை மட்டும் கூறினோம். நெருங்கிய வீதிகள் தன்னைச்சூழ வெற்றியோடு கூடிய வேற்படையையுடைய முருகப்பெருமான் எழுந்தருளியிருக்கக் கருதிய கோவிலைத் தன்னிடத்தே கொண்ட தணிகைமலையின் சிறப்பை-யினிச் சொல்வாம்.

(வி - ம்.) பொறித்தல் - எழுதுதல். ஒழுக்கென - வரிசையென்று சொல்லும்படி. பொற்ற - பொலிவுபெற்ற. செறித்து - நெருங்கி. வார் - ஒழுங்கு. வெறுத்த - செறிந்த. குறித்த - இருக்கக் கருதிய.
(௧௨௮)

வேறு

நீல வுடைதண் கிடங்காக நீவி யிறுக்கு மரைப்பட்டம்
கோல மதிலா மாடநிரை குளிர்பூந் தொடையா விடைக்குவடு
வால முலையா நெடுந்தூவி மணிப்பொன் மோலி முடிசூடிச்
சீலநகர மகளிருந்து செங்கோல் செலுத்துஞ் செவ்வித்தே.

(இ - ள்.) ஒழுக்கத்தோடு கூடிய (முருகப்பெருமான் எழுந்தருளியிருக்கின்ற) திருக்கோவிலாகிய பெண் நீலநிறம் பொருந்திய வாடை குளிர்ச்சி பொருந்திய அகழியாகவும், கொய்சகத்தையிறுக்கும் ஒட்டியாணமானது குற்றமில்லாத மதிலாகவும் இவ்வரிசைகள் குளிர்ச்சி பொருந்திய பூமாலையாகவும் (அம்மலையின்) இடையேயுள்ள சிகரங்கள்

பரிசுத்தமாகிய தனங்களாகவும் கொண்டு நின்ற (கோவிலின்மே லுள்ள) சிகரங்களாகிய பொன்னாலாகிய முடியை யணிந்து செங்கோலைச் செலுத்துகின்ற அழகையுடையது தணிகைமலை.

(வி - ம்.) நீவி - கொய்சகம்: ஆடையுமாம். அரைப்பட்டம் - ஒட்டியாணம். மேகலை - மேகலாபரணம். தொடை-மாலை. வார் அர் முலை - பரிசுத்தமாகிய தனம்: இளமை பொருந்திய தனமுமாம். நகர் - கோவில். சீலம் - ஒழுக்கம். செயவெனெச்சங்கள் தொக்குநின்றன. (௧௨௯)

சிகரமலிர்பொற் குடங்கொடுஞ்சி செம்பொற் கோயில் பலமதிலும்
புகரில்கிடுகு மாடநிரை பூட்டி விடுத்த மணிவடமாம்
நிகரில் வரைத்தேரிவர்மால்பு நிரைசோ பானந் துணிநீரில்
தகுகற் சுனைக ளணியாடி நவழ்வெள் ளருவி மணிவடமே.

(இ - ள்.) மலையின் சிகரம் தேரின்கண்ணுள்ள அழகிய குடமாகும். தேரின் மேன்மொட்டு செம்பொன்னாலாகிய கோவிலாகும். கோவிலின் பல மதில்களும் குற்றமில்லாத தேரின் மரச்சுற்றாகும். இவ்வரிசைகள் தேரிற்பூட்டி விடுக்கப்பட்ட அழகிய தேரிழுக்கும் வடமாகும். அம்மலையிலேறுவதற்கு வரிசையாக அமைந்த படிகள் வரையாகிய தேரின்கணேறுதற்கு அமைத்த கண்ணேணியாகும். தெளிந்த நீரினாற் றகுதியுடைத்தாகிய நீர்ச்சுனைகள் தேரிற்கட்டிய அழகிய கண்ணாடியாகும். அம்மலையி லொழுகுகின்ற வெள்ளிய அருவிகள் தேரிற் நெருங்கவிடப்பட்டுள்ள முத்துவடங்களாகும்.

(வி - ம்.) ஆம் என்னும் சொல் எல்லாவற்றோடும் தனித்தனி சென்றியைந்தது. குடம் - தேரிலுள்ள கும்பம். கொடுஞ்சி - தேர் மொட்டு. கிடுகு - மரச்சுற்று; "கிடுகுதேர் மரச்சுற்றின் பேர்" என்னும் நிகண்டானறிக. மணிவடம் - தேரிற்கட்டிய கயிறு. மால்பு - ஏணி. இதனை "மால்பிழைத்தா" லென்னும் திருக்கோவையானறிக. துணி-தெளிவு. ஆடி - கண்ணாடி. மணி - முத்து. (௧௩௦)

பிறவி தொறும்வேட் டருந்தவங்கள் பேரிது மிழைத்த சூர்முதலை
நிறுவு கொடிமேன் மஞ்ஞையென நிறுத்த குமரன் றனதுவரை
உறைவ தரிய தவமாக்கி யுயர்த்த வுகந்தார்ப் பெடுப்பனபோற்
சிறைய மயிற்புள் ளினங்கோடி திரள்வேய்த் தலைநின் றகவுமால்.

(இ - ள்.) பல பிறப்புக்கடோறும் அரிய தவங்களைப் பெரிதும் விரும்பிச் செய்த சூரனாகிய முதல்வனைத் தனது வெற்றிக்கறிகுறியாக நிறுவுகின்ற கொடியின்கண்ணே மயிலென்று சொல்லும் வண்ணம் தங்கச்செய்த குமரநாயகனது வரையானது (மயில்கள்) தம்மிடத்துறைவதையே தவமாகச் செய்துயர்த்திவைக்க (அச்செயலுக்கு) விரும்பி முழக்கெடுப்பனபோலச் சிறகினையுடைய கோடிக்கணக்கான மயிற்பறவையின் கூட்டங்கள் மூங்கில் மரங்களினுனியினின்று ஆடுதலைச் செய்யும்.

(வி - ம்.) சூர்முதலை - சூரனாகிய முதல்வனை. முருகனதுவரை தன்னிடத்தும் மயில்கள் வாழ்தலையே தவமாகச் செய்துயர்த்திவைக்க வென்க. உகந்து - விரும்பி. ஆர்ப்பெடுப்பன - முழக்கெடுப்பன. அக

கா - கூடும். முருகன் சோரு மயிலென்பதனை "மணிமயி லுயரிய மாறா வென்றிப் பிணிமுக வூர்தி யொண்செய் யோனுமென" வரும் புறநானூற்றுச் செய்யுளானறிக. (௧௫௧)

செம்பொன் மேருக் கடையாகிச் சிறந்த கந்த மாதனமும்
அம்பொன் மேருக் குடாதுதிசை யொளிர்பொற் கந்த மாதனமும்
உம்ப ரிறைதன் னிடந்தனையா வூக்க மறிந்து படர்ந்தனைய,
பைம்பொன் வரைக ளிரண்டுமிரு பாலு மதிலா யுடைத்தரோ.

(இ - ள்.) சிவந்த பொன்மயமாகிய மேருமலையினுக் கடைகல்லாகச் சிறந்த (நான்கனு ளொன்றாகிய) கந்தமாதன மென்னுமலையும் அழகிய மேருமலைக்குக் குடதிசையின் கண்ணே விளங்குகின்ற கந்தமாதன மென்னுமலையும், தேவர்கட்கிறைவனாகிய குமரநாயகன் (தணிகையாகிய) தன்னிடத்தினின்று மொருகாலும் நீங்காத வுள்ளக்கிளர்ச்சியை யறிந்து வந்தாலொத்த பசிய பொன்மயமாகிய (ஆண்டுள்ள) மலைகளிரண்டையும் இரண்டு பக்கத்தினு மதிலாக வுடைத்து அத்தணிகை மலை.

(வி - ம்.) மேருக்கடையாகிச் சிறந்த கந்தமாதனம்-அடைகல்லாக வுள்ள நான்கனுளொன்றாகிய கந்தமாதனம். மேருக்குடாது திசைக் கந்தமாதனம்-மேருவின் மேற்கேயுள்ள ஒரு மலை. தன்னிடம் - தணிகையாகிய விடம். மதிலாயுடைத்து - தணிகை இவ்விரண்டு மலைகளையு மதிலாகவுடைத்தென்க. தணிகைமலையின் இரண்டு பக்கத்திலும் இரண்டு மலைகளுளவாகலின் இங்ஙனம் கூறினர். ஊக்கம் - உள்ளக்கிளர்ச்சி. (௧௫௨)

கனைவெள் ளருவி கலித்திழியுங் கனக வரைமுற் றும்வளையா
அனைய நதிபோற் றனைப்பாதி யவதி வளைந்து கடலகடும்
இனைய வகழ்ந்து புகுந்த்த மிரைக்கு நந்தி நந்தினியும்
நனைய வொருபால் வரைமதில்சூழ் நாம வகழி யெனவுடைத்தால்.

(இ - ள்) வேகத்தோடு கூடிய வெள்ளிய அருவியொலித் திரங்குகின்ற மேருமலையை முற்றிலும் சூழாத அத்தன்மைத்தாகிய சாம்பூநத யாறுபோலத் தன்னைப் பாதி யெல்லைக்கண் வளைந்து கடலின் வயிறும் வருந்தும் வண்ணம் இடித்துச் செல்கின்ற வெள்ளம் ஒலி செய்கின்ற நந்தி நந்தினியை (மேற்கூறிய இருகந்த மாதனமாம்) வரைகளாகிய மதில்கள் ஒருபக்கத்து நனையச் சுற்றிய அச்சத்தைத் தரத்தக்க அகழியாகவுடையது அத்தணிகைமலை.

(வி - ம்.) மேருமலையை முற்றும் வளையாத சாம்பூநத யாறு போலத் தணிகையானது தன்னை முற்றும் வளையாதிருக்கின்ற நந்தி நந்தினியென்னும் நதியை மதிலைச் சூழ்ந்த அகழியாக உடைத்தென்க. வரைமதில் - இருகந்தமாதனம் போன்ற இரண்டு மலையாகிய மதிலென்க. (௧௫௩)

வரங்கள் வேட்டுப் படர்விண்ணோர் மண்ணோர் நாகர் யாவர்க்கும்
இரங்கி யினிது கைதூவா தீத்தல் கருதி யெண்ணிறந்த

கரங்கள் படைத்தங் கிருந்ததுபோற் காமர் வளங்க ளனைத்தினுக்கும்
அரங்க மெனவோங் கியகுன்ற மழல்செய் காந்தள் மலர்ந்ததே.

(இ - ள்.) வரங்களை விரும்பிச் செல்கின்ற தேவருலகத்தின்க ணுள்ள தேவர்களும், பூமியின்கணுள்ள மக்களும், பாதாள வுலகத்தின்க ணுள்ள நாகர் முதலிய யாவர்களுக்கும் இனிதாக இரக்கமடைந்து கையொழியாது கொடுத்தலைக் கருதி அளவிட முடியாத கைகளைப் பெற்று அங்கிருந்ததைப்போல விருப்பம் வரத்தக்க வளப்பமெல்லாவற்றிற்கும் இருப்பிடமென்று சொல்லும் வண்ணமோங்கிய தணிகை மலையின்கண் செங்காந்தள் மலர்ந்துள்ளது.

(வி - ம்.) கரங்கள் படைத்ததுபோல மலர்ந்ததென வினைமுடிவு செய்க. கைதூவாது – கையொழியாமல். அழல்செய் காந்தள் – தீப்போன்ற செங்காந்தள். (௬௮)

காலந் தொறுநன் றியம்பலுறுங் கணங்கோ ளியப்பே ரொலிச்செறிவான்
மூலந் தொடங்கிப் பேரண்ட முகடு காறு நெக்குடைய
சூலந் தொடுத்துப் பலமதலை நாட்டிக் கொடுத்தா லெனவோங்கும்
கோலந் தழைத்துப் பலதிசையுங் குன்றத் தெழுந்த கோபுரமே.

(இ - ள்.) பல திசையின்கண்ணும் அழகு தழைக்கப்பெற்றுத் தணிகை மலையின்கண் எழுந்துள்ள கோபுரங்கள் காலந்தோறும் நன்றாக ஒலிக்கின்ற கூட்டத்தைத் தன்னிடத்தே கொண்ட வாத்தியங்களின் முழக்கத்தின் செறிவினாலே அண்டமுகடானது தன் அடி தொடுத் துச்சிவரையும் பிளந்துடைத்தலால் (அவ்வண்டங் கீழ்விழா வண்ணம்) பூமியினின்று தொடங்கிப் பல தூண்களையூன்றிக் கொடுத்ததுபோல உயர்ந்து தோன்றும்.

(வி - ம்.) அண்டமூலம் - அண்டத்தினடி. அண்டமானது தன் மூலந்தொடங்கித் தன் முகடுவரையும் நெக்குடைதலாலெனக் கொள்க. மதலை – தூண். (௬௯)

பிரம வுலகத் தயனுயர்த்த பிணைமென் சிறையோ திமக்கோடியும்
வரவை குந்தத் தரியுயர்த்த வகிர்நா வரவப் பகைக்கொடியும்
இரவும் பகலு மடிவருட வெழுந்து வானத் திலங்குகந்த
புரநன் குயர்த்த கொடியுமாய்ப் பொலியுந் திருமுற் றனிக்கொடியே.

(இ - ள்.) (குமரநாயகன்) சந்நிதியின் முன்னுள்ள ஒப்பற்ற மயிற்கொடியானது பிரமவுலகத்தின்கண் பிரமனுயர்த்திக் கட்டிய (ஒன்றோடொன்று பிணைந்த) மெல்லிய சிறகையுடைய அன்னக்கொடியும் மேலாகிய வைகுந்தத்தின்கண் அரியானுயர்த்திக் கட்டிய பிளந்த நாவினையுடைய அரவங்களுக்குப் பகையாகிய கருடக்கொடியும் இரவினும் பகலினும் அடியைத் தைவர உயர்ச்சியுற்று ஆகாயத்தின்கண் விளங்குகின்ற கந்தருலகத்தின்கண் நன்றாக உயர்த்திக் கட்டிய கொடியுமாகி விளங்கும்.

(வி - ம்.) வரம் - மேன்மை. வகிர்நா - பிளவுபட்டநா. அரவப் பகை - கலுழன். திருமுன் - சந்நிதி. (௭௰)

மன்றல் புரியு மண்டபமும் வயங்கு மூர்தி மண்டபமும்
பொன்றுஞ் சிரத மண்டபமும் பொற்ற விமான மண்டபமும்
துன்றும் யாக மண்டபமுந் தொக்க விறாமண் டபமெல்லாம்
குன்ற மிசைபன் மணிக்குவடு குலாய்வின் ணிவர்ந்த காட்சியவே.

(இ-ள்.) கலியாண மண்டபமும் விளங்குகின்ற வாகனங்கள் வைக்கு மண்டபமும், அழகு தங்கப்பெற்ற வெள்ளி மண்டபமும், பொலிவுபெற்ற விமானங்கள் வைக்கு மண்டபமும், பொருந்திய யாக மண்டபமும், மக்கடேவர் முதலிய யாவரும்வந்து கூடுதற் கேதுவாகிய திருவிழா மண்டபமுமாகிய இவையெல்லாம் அத்தணிகை மலையின்மீது பலமணிமயமாகிய சிகரங்கள் விளங்கி ஆகாயத்தின்க ணுயர்ந்த தோற்றத்தை ஒத்தன.

(வி-ம்.) பொன் - அழகு. துஞ்சுதல் - நிலை பெறுதல். "துஞ்சலே நிலைபெறுகும்" என்னும் நிகண்டா னறிக. இரசிதம் - வெள்ளி. தொக்க - கூடிய. பன்மணிக்குவடு - பலமணிவடிவமாகிய சிகரங்கள். (௧௬௭)

பொற்றவடுத்தோர் கொணர்ந் திறுக்கும் பொன்னங் கிழிக்குன் றுகளொரு
தோற்றும் வெள்ளி வரையொருபாற் றாசு மூடை யடுக்கொருபால் [பால்
விற்று மணியின் றிரளொருபால் விழுப்பல் பொருளின் பரப்பொருபால்
ஏற்று வளைவாய்ப் புள்ளொருபா லெண்ணி வரைத லரிதாமால்.

(இ-ள்.) முருகப்பெருமானைத் துதிக்கப் பொருந்தியோர் காணிக்கையாகக் கொணர்ந்து சேர்க்கும் அழகிய பொன்முடிப்பாகிய மலைகள் ஒருபக்கலில் உள்ளன. ஒளியை வெளிவிடுகின்ற வெள்ளிக் குவியலாகிய மலையொரு பக்கலில் உள்ளது. அறுவை மூடையின் அடுக்குகள் ஒருபக்கலில் உள்ளன. வெவ்வேறு வகையாகிய நிறங்களையுடைய மணிகளின் குவியல்கள் ஒருபக்கலில் உள்ளன. விழுமிய பலவாகிய பதினென் வகைக்கூல முதலிய பொருள்களின் மிகுதி யொருபக்கல் உள்ளது. வளைந்த வாயையுடைய ஏற்றுப்புள்ளாகிய சேவல் முதலிய பறவைகள் ஒருபக்கலில் உள்ளன. இவைகளைக் கணக்கிட்டு வரையறைப் படுத்தல் இயலாததாகும்.

(வி-ம்.) இறுக்கும் - சேர்க்கும் கிழி - முடிப்பு மூடை-மூட்டை என இக்காலத்து வழங்கப்படுகின்றது. இதனைக் "காலின் வந்த கருங்கறி மூடையும்" என்னும் சிலப்பதிகார அடியானறிக. பரப்பு, ஈண்டு மிகுதியை யுணர்த்தி நின்றது. ஏற்று வளைவாய்ப்புள் - ஆணாகிய வளைந்த வாயையுடைய பறவை; அவை முருகனைக் கருதிப் பராய் விடுத்த மயில் சேவல் முதலியன. (௧௬௮)

நகர்சூழ் வட்ட நீர்க்கோடு நகுபன் மணிமா ளிகைபல்லி
தருமா நகர மணிப்பொய்கை தனிச்சூழ் மதில்க ளிதழ்வரிசை
திகழ்சீ ருச்சி பொகுட்டாய தெய்வ வரைத்தா மரைக்கிழவன்
புகழ்சூழ் பொய்கை மலிருந்த பொற்பும் விளங்க வீற்றிருக்கும்.

(இ - ள்.) தணிகை நகரத்தைச் சூழ்ந்தமதில் சூளக்கரையாகும். விளங்குகின்ற பல இரத்தினங்கள் பதிக்கப்பட்ட மாளிகைகள் பல மலர்களாகப் பொருந்தும். பெருமையையுடைய அந்நகரம் முத்துக் கலையுடைய பொய்கையாகும். தணிகைவரையைச் சூழ்ந்த மதில்கள் பூவிதழின் ஒழுங்காகும். விளங்குகின்ற சீர்மையுடைய சிகரம் கொட்டையாம். இவ்வண்ணமாகிய தெய்வத் தன்மையையுடைய அம்மலையாகிய தாமரை மலரிடத்து அதற்குரிய முருகக்கடவுள் புகழ் சுற்றிய சரவணப் பொய்கையின்கண் தாமரைமலரில் எழுந்தருளி யிருந்த அழகும் என்றும் விளங்காநிற்க எழுந்தருளியிருக்கும்.

(வி - ம்.) ஆகுபெயராய்க் குளத்தின்மேற்று. கோடு - கரை. பல்வீ - என்றது தாமரையல்லாத ஏனைய பூக்கள். ஆய என்னும் உருவக முணர்த்தி நின்ற பெயரெச்சத்தை எல்லாவற்றோடும் கூட்டுக. வரைத்தாமரை - வரையாகிய தாமரை. பொற்பும் என்பதன் கண்ணுள்ள உம்மை இறந்ததுதழீஇய எச்சப்பொருட்டு. கிழவன் தாமரைக்கண் வீற்றிருக்குமென வினைமுடிவு செய்க. (௧௩௯)

மன்னு மிருமா யையுங்கடந்து வயங்கு மிறைவர்க் கம்மாயைத்
துன்னு மணிபொன் னமிழ்தாதி தொடுத்திட் டுவமை வழங்கியாங்
கென்னு நிகராப் பொருள்களே நன்மாட் டுவம மெடுத்தவெனக்
கொன்னு மதியிற் கூர்த்தவர்கள் குறிப்ப ரிதற்கோர் நிகரின்றே.

(இ - ள்.) நிலைபெற்ற தூயமாயை, தூயதல்மாயை என்னுமிரு வகை மாயைகளையும் இயல்பாகவே நீங்கி விளங்குகின்ற இறைவற்கு அம்மாயா காரியமாகப் பொருந்தும் மணிகளும், பொன்னும் அமிழ்தும் முதலாகிய பொருள்களைப் பாடலிற் றொடுத்து உவமையாக வழங்கி னாற்போலச் சிறிதும் ஒப்பாத பொருள்கள் இந்நகரத்திற்கு உவமமாக எடுத்துக் கொள்ளப்பட்டன என்று பெருமை பொருந்திய அறிவினால் நுனித்துணர்ந்த பெரியோர்கள் சிந்திப்பர். ஆதலின் இம்மலைக்கு ஒரு பொருளும் நிகரின்று.

(வி - ம்.) தூயமாயை - சுத்தமாயை. தூய்தல்மாயை - அசுத்த மாயை. என்னும் - சிறிதும். கொன்என் இடைச்சொல் பெருமை யுணர்த்திற்று. என்னை? "அச்சம் பயமிலி காலம் பெருமையென், றப்பா னான்கே கொன்னைச் சொல்லே" என்பதோத்தாகலின். (௧௪0)

வெள்வே லிறைவ னறைக்கமல விரைதூழ் பதந்தை வருமுள்ளத்
தள்ளு றின்பப் பெருவெள்ள மடங்கா தெழுந்து விறுதல்போல்
தள்ளா வளத்து நகரியல்பு சாற்றப் புகுத லொடுமன்றே
விள்ளா தெழுந்த பேராவ மிகையைத் தணிந்தாங் கறைகுவாம்.

(இ - ள்.) வெள்ளிய வேற்படையையுடைய முருகக் கடவுளது தேனுடன் கூடிய மணமுடைய தாமரைமலர் போன்ற திருவடியைத் தடவி வருகின்ற உள்ளத்தின்கண்ணே செறிந்து ஊறுகின்ற இன்ப மாகிய பெரிய வெள்ளமானது தடைபடா தெழுந்து மிகுமாறுபோல நீங்காத வளத்தையுடைய தணிகை நகரத்தின் இலக்கணத்தை விரித்துக்

உ ற்பொருட்டு ஐயோ நீங்காது எழுந்த பெரிய ஆசையினது வரம்பு கடந்த செலவைத் தடுத்தோம். இனிக் கதையைக் கூறுதும்.

(வி - ம்.) அள் - செறிவு. வீறுதல் - நிகரின்றிமிகுதல். இயல்பு - இலக்கணம். புகுதலொடும் - உடம்மீற்று வினையெச்சம். அன்றோ இரக்கத்தின்கண் வந்த குறிப்பு, மிகை - வரம்புகடந்த செலவு. (கசக)

திருநகரப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் கஉஎ,

# நைமிசப் படலம்

பூவி ருந்த நான்முகன் பொருக்கெ னக்க டாவிய
தாவி ருந்த பைம்புனேமி சார்ந்த சைந்த நைமிசம்
தேவி ருந்த செந்தழற்றி கழ்ந்து விண்ணு ளார்க்கெலாம்
மாவி ருந்து வைகலும் வழங்கி ருக்கை யாயதே.

(இ - ள்.) தாமரைப் பூவின்கணெழுந்தருளி யிருந்த நான்கு முகத்தையுடைய பிரமன் விரைவாகச் செலுத்திய தாவுதல் பொருந்திய பசிய தருப்பைப் புல்லாகிய சக்கரம் பொருந்தித் தங்கிய நைமிசவனமானது தெய்வத்தன்மை பொருந்திய செவ்வண்ணமாகிய அக்கினியானது விளங்கப்பெற்றுத் தேவருலகத்தின் கண்ணுள்ள தேவர்கட்கெல்லாம் பெரிய விருந்தினைக் கொடுக்கின்ற இருப்பிடமாயது.

(வி - ம்.) பொருக்கென - விரைவாக. தா - தாவுதல். அசைந்த - தங்கிய. தே - தெய்வத்தன்மை, மாவிருந்து - பெரிய விருந்து. நேமி சம்பந்தம் - நைமிசம் : தத்திதம். (௧)

படுப்ப வுய்த்த வான்குலம் பறப்பை கூர்ம மாதியும்
விடுப்ப வுய்த்த கோணமும் விறந்த நோக்கி நம்மையும்
அடர்ப்ப வென்று ளிப்பபோ லழன்று டற்று தீம்புகை
இடர்ப்ப டும்வி லங்குபுள்ளு ணர்வ சேணி றக்குமே.

(இ - ள்.) கொல்லக் கொணர்ந்த பசுக்கூட்டங்களும், கருடப் பறவையும், ஆமை முதலியவைகளும் (அசுவமேத யாகமியற்றும் பொருட்டுத் திசைமுகங்கடோறும்) செலுத்த ஆண்டுக் கொண்டுவந்துள்ள குதிரையும் செறிந்தனவற்றை நோக்கி (விலங்கு, பறவை, உணர்வன முதலிய உயிர்கள்) நந்தம்மையும் (இங்ஙனம்) கொல்வர்களென்று கருதி ஒளிப்பனபோல அழற்சியைச் செய்து வருத்துகின்ற இனிமையாகப் புகையால் துன்பினையடைகின்ற விலங்கும், பறவையும், ஊர்வனவுமாகிய உயிர்த்தொகுதிகள் நெடுந்தூரத்திற் செல்லும்.

(வி - ம்.) கருடயாகத்திற்கும், கூர்மயாகத்திற்குங் கொணர்ந்த கருடனும் யாமையுமாகும். பறப்பை - பறவை. "பறப்பைப் படுத்தெங்கும் பசுவேட் டெரியோம்பும்" என்னும் தேவாரத் திருவாக்கானறிக. ஆமையை யாககுண்டத்தின்கீழ்ப் புதைத்தல் மரபாதலின் அதற்குக் கொணர்ந்த எனினுமாம். விடுப்ப வுய்த்தகோணம் - அசுவமேத யாகத்தின் பொருட்டுத் திசைகடோறும் விடுக்க நைமிசத்திற் செலுத்திய குதிரை. விலங்கும் புள்ளும் ஊர்வனவும் சேணிறக்குமென முடிவுசெய்க. (௨)

கன்னி யந்த ராமினுன் கமழ்ந்த பங்க யத்தினுன்
மன்ன னாதி தேவர்கண் மகிழ்ந்து முற்று மாண்பினால்
நன்னர் நைமி சஞ்சிறந்த நாகம் வைகு நாடெலாம்
கொன்னு மண்ண ரைப்பிடைக் குழீஇக் கலந்த தொத்ததே.

கரத்தை நீண்ட நாவினுற்றுாகித்துத் திருவாடையின்கட் டங்கப்பெற்ற மேகலாபரணத்தை யணிந்த அல்குலையுடைய உமாதேவியாரைப் பாகத்திலேயுடைய சிவபெருமான் புகழை அதிகமாகத் தங்கச் செய்கின்ற செவியினை யுடையவர்களாவார்கள்.

(வி - ம்.) அழுத்து - தங்கிய. அழுத்தி - இருத்தி. புஞ்சு - ஆடை. சொல் - புகழ். விஞ்ச - மிக; ஈறுதொக்கது. அழுத்து - நிறைக்கின்ற. (அ)

இன்ன வாய மேன்மைசான் றியாணர் வண்மை நாடொறும்
மன்னு கின்ற நைமிச வனத்து வேறு மாதவர்
நன்னர் யூப மாமக நடாத்த லைக்கு றித்தரோ
துன்னும் வேலை யேழும்வந்து தொக்க தென்ன முற்றினர்.

(இ - ள்.) இத்தன்மையான மேன்மை மிகுந்து புதிதாகிய வள்ளற்றன்மை நிலைபெறுகின்ற நைமிசாரணியத்தின்கண் வேறிடத்துள்ள பெரிய தவத்தினர் நல்ல யாகத்தூணை நாட்டி மகஞ்செய்தலைக் கருதி ஒன்றோடொன்று பொருந்திய எழுகடலும் வந்து ஆண்டுக் கூடியதென்று சொல்லும்வண்ணம் கூடினர்.

(வி - ம்.) யாணர் வண்மை - புதிதாகிய வள்ளற்றன்மை, யூபம் யாகத்திறுட்டுந்தூண். முற்றினர் - அடைந்தார். (கூ)

வேறு

பிருகு வுக்கிர சீலன் போதா யனன்பி சிங்கிவி பாண்டகன்
துருவா னாரதன் சுப்பி ரன்புதன் சுமதி யத்திரி சங்கமன்
அரித கன்பவு லன்சு முந்தர னுபத் தம்பன கத்தியன்
கருண னங்கிர சன்ப ருப்பதன் காத்தி யாயனன் கண்ணுவன்.

(இ - ள்.) பிருகும், உக்கிரசீலனும், போதாயனனும், பிசங்கியும் பாண்டகனும், துருவாசனும், நாரதனும், சுப்பிரனும், புதனும், சுமதியும், அத்திரியும், சங்கமனும், அரிதகனும், பவுலனும், சுமுந்தரனும், ஆபத்தம்பனும், அகத்தியனும், கருணனும், அங்கிரசனும், பருப்பதனும், கார்த்தியாயனனும், கண்ணுவனும். (கய)

பவுமன் பாசத ரன்ப ராசரன் பங்கு பப்புரு பக்குவன்
கவுசி கன்கபி லன்க லாதரன் காணன் காலன்கை வல்லியன்
கவுத மன்சர பங்கன் முற்கலன் காலவன் பண்டி தோத்தமன்
சவுன கன்சதா னந்தன் வாரன்சா தாத பன்சம தக்கினி.

(இ - ள்.) பவுமனும், பாசதரனும், பராசரனும், பங்கென்பவனும், பப்புரு என்பவனும், பக்குவனும், கவுசிகனும், கபிலனும், கலாதரனும், காணனென்பவனும், காலனும், கைவல்லியனும், கவுதமனும், சரபங்கனும், முற்கலனும், காலவனும், பண்டிதோத்தமனும், சவுனகனும், சதானந்தனும், வாரனென்பவனும், சாதாதபனும், சமதக்கினியும். இதனை அன்னமினர் (கஉ) என்ற வினைமுற்றுடன் முடிக்க,

சாம தக்கினி சற்ச ரன்சயன் சனிப ரந்தபன் சத்தியன்
தூம பன்சுகன் சத்தி மாண்டலி யன்சு தீக்கண னிரதிதன்
வாம தேவன்ப ரத்து வாசன்வ சுசாபா லன்காண் டிப்பியன்
காமர் விண்டுவி ருத்தன் குண்டலன் காசி பன்புகழ் தேவலன்.

(இ - ள்.) சாமதக்கினியும், சற்சரனும், சயனும், சனியும், பரந்தபனும், சத்தியனும், தூமபனும், சுகனும், சத்தியும், மாண்டலியனும், சுதீக்கணனும், இரதிதனும், வாமதேவனும், பரத்துவாசனும், வசுவும், சாபாலனும், காண்டிப்பியனும், யாவரும் விரும்பத்தக்க விண்டுவென்பவனும், விருத்தனும், குண்டலனும், காசிபனும், யாவரும் புகழத்தக்க தேவலனென்பவனும். (௧௨)

வேறு

அசித னுதியர்க ளொன்றி ரண்டுபல வடியி னர்தலையி னர்பலர்
கசிவி னேடுதவம் வேறு வேறுபுரி காட்சி யாளரிவர் தம்முழைப்
பசையி னேடுபணி செய்து பிழைதபு பண்பு மிக்கவர்க ளன்னவர்
வசையி லேவல்புரி வோரு மண்மினர் மகிழ்ந்து வைகலுறு மேல்வையில்.

(இ - ள்.) அசிதனை முதலாகவுடையவர்களுமாகிய முனிவர்கள் ஒருதலையினையும் இரண்டு காலினையு முடையவரும், பல வடியினராய்ப் பல தலையினையுடையவருமாகிய பல முனிவர்கள் அன்பினோடு தவத்தை வெவ்வேறாகச் செய்கின்ற காட்சியினையுடையராவர். இவர்மாட்டு அன்பினோடு தொண்டாற்றிப் பிறவித்துன்பத்தை நீக்குகின்ற குண மிக்க மாணவர்களாய் அப்பெரியாரது குற்றமற்ற ஏவலைக் குறிக்கொண் டாற்றுவோரும் அண்மி யுவகையுற்றுத் தங்கியிருக்கின்ற காலத்து.

(வி - ம்.) ஒன்றிரண்டென்பதனை யடியினோடும் தலையோடும் கூட்டுக. பல அடியோடுகூடிப் பல தலையினரெனப் பல என்பதனைத் தலையோடும் கூட்டுக. ஒன்றிரண்டென்பதனை மூன்றாக்கி மூன்றுகாலு மொருதலையினையுமுடைய பிருங்கியெனக் கொள்வாரு முளர். கசிவு - அன்பு. பசை - அன்பு. பீழை - துன்பம். (௧௩)

இரவி செங்கதிர னைத்தும் வாங்கியினி தேய்த்து விட்டனைய வேணியும்
பரவு வெண்மதிபொ டித்தெ டுத்தனைய பாவ முற்றுமறு பூதியும்
விரவு முள்ளிருடி ரண்டு ருக்கொடு வெளிக்க திர்த்தனைய கண்டியும்
வரமி குத்தபதி னெண்பு ராணமும் வயங்கு சூதனு மடுத்தனன்.

(இ - ள்.) சூரியனது சிவந்த கிரணங்களையெல்லாம் வாங்கி இனிதாக இணைத்துவிட்டாலொத்துள்ள சடையும், ஆகாயத்திற் பரவுகின்ற வெண்மையையுடைய சந்திரனைப் பொடி செய்தெடுத்தாலொத்த பாவமுற்றிலும் போக்குகின்ற விபூதியும் (ஆன்மாவோடு அத்துவிதமாகிக்) கலந்த உள்ளிருளாகிய ஆணவந்திரண்டு வடிவங்கொண்டு வெளியிலே விளங்கினாலொத்த உருத்திராக்கக் கண்டிகையும், மேன்மை பொருந்திய பதினெண் புராணங்களும் விளங்கும் சூதமுனிவனும் ஆண்டுப் பொருந்தினன். (௧௪)

(வி-ம்.) எய்த்து - இளைத்து. உள்ளிருள்-ஆணவம்.

கற்ப கங்கட வுளானி தித்துணை கதிர்த்த மாமணி யடுத்தலும்
ஒற்க மிக்கவன்ம கிழ்ந்தெ திர்ந்தென வுயர்ந்த நைமிச வனத்திடை
அற்ற மாதவர்கள் யாவ ருந்தலை யடுத்த சூதமுனி வரவுகண்
டுற்ப வப்பய னடுத்து ளாமென வுவந்து வல்லையெதிர் கொண்டனர்.

(இ-ள்.) கற்பக விருக்கங்களும், தெய்வத்தன்மை பொருந்திய காமதேனுவும், சங்கநிதியும், பதுமநிதியும், விளங்கிய பெருமை பொருந்திய சிந்தாமணி முதலிய பொருள்களும் அடுக்கத் தரித்திரமிகுந்தவன் உவந்து எதிர்கொண்டாற்போல உயர்ச்சி பொருந்திய நைமிசவனத்தின்கண் தங்குமாதவர்கள் யாவரும், அவ்விடத்துப் பொருந்திய சூதமுனிவர் வருகையை யறிந்து பிறவியெடுத்ததனு லுண்டாகிய பயனை யடைந்துள்ளோமென்று மகிழ்ந்து விரைவாக எதிர்கொண்டனர்.

(வி-ம்.) ஒற்கம் - வறுமை; "இலம்பா டொற்க மாயிரண்டும் வறுமை" எனவருந் தொல்காப்பியச் சூத்திரத்தானறிக. எதிர்ந்தென - எதிர்ந்தாற்போல. நிதித்துணை - சங்கநிதி, பதுமநிதி. தலை-அத்தலை; அவ்விடம். உற்பவம் - பிறப்பு. (௧௫)

ஆத னத்திடையி ருத்தி நூன்முறை யருச்சனைத்தொழினி ரப்புபு
வேத மாகமம் விளங்க வோதிய விதிக்கி லக்கியமெ னப்படும்
ஏத நீவுபதி னெண்பு ராணமு மெனைத்து மோர்ந்துபொரு டெள்ளிய
சூத மாதவ வெனப்பு கழ்ந்துவகை துள்ள மெல்லவுரை யாடுவார்.

(இ-ள்.) (எதிர்கொண்ட காலத்து) ஆதனத்தின்கண் ணெழுந்தருளச்செய்து நூல்களிற் கூறிய முறைப்படி அருச்சனைத் தொழிலை முற்றுறச் செய்து வேதாகமங்கள் யாவரும் விளங்கும் வண்ணம் கூறப்பட்ட விதிகளாகிய இலக்கணங்கட்கு இலக்கியமென்று சொல்லப்படுகின்ற துன்பத்தை நீக்கும் பதினெண்புராணங்களையும், ஏனைய நூல்களையு மாராய்ந்து பொருள் தெளிந்தெடுத்த பெரிய தவத்தினையுடைய சூதமா முனிவரே யென்று புகழ்ந்து மகிழ்வு பொங்க மெல்ல விண்ணப்பஞ் செய்யத் தொடங்குவார்கள்.

(வி-ம்.) ஏதம்நீவு - துன்பத்தைத் துடைக்கின்ற. உரை ஆடுவார் - சொல்வார். (௧௬)

வாய்ந்த மூவறுபு ராண முன்பிவண் வகுத்து ரைத்தனைய வற்றினுள்
ஏய்ந்து மேதக விளங்கு காந்தம திணங்கு சங்கிதையோ ராறனுள்
ஆய்ந்து சங்கரர் பெயர்ப்பு ணர்த்தவ தனுட்சி றந்திடுபின் கூற்றினிற்
காய்ந்து டற்றுகதிர் வேற்ப டைக்குரிசில் காம ருந்தணிகை மான்மியம்.

(இ-ள்.) பொருந்திய பதினெண் புராணங்களையும், முன்னர் இவ்விடத்து வகுத்துச் சொல்லினை. அப்புராணங்களுள் (பொருணலங்கள்) பொருந்தி மேன்மையுற விளங்குகின்ற காந்தமென்னும் நூலின்கட் பொருந்திய ஆறு சங்கிதையினுள் (பெரியோர்கள்) ஆராய்ச்சி செய்து சங்கரர் பெயரைப் புணர்த்துக் கூறிய சங்கர சங்கிதையிற் சிறப்

புப்பொருந்திய பின்பகுதியில் (பகைவரை) தகித்து வருத்துகின்ற ஒளி பொருந்திய வேற்படையையுடைய முருகப்பெருமானுடைய யாவரும் விரும்பத்தக்க தணிகையம்பதியின் பெருமையை.

(வி - ம்.) காந்தம் ஆறு சங்கிதையுடையது. அவை, சனற்குமார சங்கிதை, சூதசங்கிதை, பிரமசங்கிதை, விட்டுணுசங்கிதை, சங்கரசங்கிதை, சூரசங்கிதையாம். (கஎ)

கன்ன லுங்கனியு மேத குஞ்சுவைய கண்டு மாரமுது மேசறாப்
பன்னி யெம்பரிவ றுத்தி முற்றுபரி பாகமின்மையி னயர்ந்துளோம்
இன்னு மன்னதனை யாங்க ளுய்ந்திட வெடுத்தி யம்பிதுவி யங்கொளல்
அன்மை தக்கவர்த காத வர்க்கருளி னறிவ ளிந்தருள விதியே.

(இ - ள்.) கன்னற்பாகும், கனியினிரதமும், மேன்மை பொருந்திய சுவையையுடைய கற்கண்டும், அரிய தேவாமிர்தமும் போல எங்கள் குறை நீங்குமாறு இனிமையாகச் சொல்லி எங்கள் வருத்தத்தை யறுத்தாய். நிறைந்த மலபரிபாகம் இன்மையாலே (தேவரீர் கூறிய பொருளை) மறந்துள்ளோம். (ஆதலால்) இனியு மொருமுறை அத்தணிகை மான்மியத்தினை யாங்களுய்ப்பும் பொருட்டுத் திருவாய் மலர்ந்தருளுவாய். (இங்ஙனம் யாங்கள் விண்ணப்பம் செய்பு) மிந்து (தேவரீரை) ஏவல்கொளும் தன்மையலவாம். (ஞான ஒழுக்கங்களால்) தகுதியுடையார் (அவைகளால்) தகுதியில்லார்க்கு அருளினாலே அறிவினைக் கொடுத்தருளுதல் முறையேயாகும்.

(வி - ம்.) ஏசற - கவலைநீங்க. அறுத்தி - அறுத்தாய். பரிபாகம் - பக்குவம்; பரி: உபசர்க்கம். இயம்பு - இயம்புவாய். வியங்கொளலன்மை - ஏவல்கொள்ளுந் தன்மையலவாகும். (கஅ)

என்று மாதவ ரிரந்து வேண்டலு மிலங்கு சூதமுனி மொழியுமால்
நன்று மாதவ நவிற்றி யாணவ நலிந்து மேதகைமை பூண்டுளீர்
இன்று யர்த்தன மெனக்கி ளந்தமை யெமக்கு மேதகைநி றுத்தலொன்
றன்றி வையக மளித்த லொன்றுள மமைந்தி டாவிழைவொன் றகுமே.

(இ - ள்.) இங்ஙனம் கூறிப் பெரிய தவத்தையுடைய முனிவர்கள் யாசித்து விரும்ப விளங்குகின்ற சூத முனிவன் சொல்வான். பெரிதுந் தவத்தைச்செய்து ஆணவமலத்தை நீக்கி மேன்மையை யடைந்துள்ள நீங்கள் இப்பொழுதயர்த்தோமெனக் கூறுதல் எனக்கு மேன்மையை நிறுவுதலொன்றும். அல்லாமல் உலகத்தை உய்யக்கோடலொன்றாகும். (அத்தணிகை மான்மியத்தை) உள்ளத்தின் கண்ணமையச் செய்யாத ஒரு விருப்பமாகாது.

(வி - ம்.) நவிற்றி - செய்து. நலிந்து - கெடுத்து. எனக்கும் மேன்மையை நிறுத்தலொன்றும், அல்லது உலகத்தையுய்யக் கோடலொன்றும். இது உள்ளத்தின்கண் ணமைத்திடா விழைவொன்றாகாது. உள்ளத்தினமைக்கும் விழைவேயாம் என்க. (கக)

இகன்மி குத்தகொடி மூட்கு டம்பையி லிருந்த கோகில மழப்பறழ்
தகுசி றைத்துணை முளைத்த லுஞ்சிறை தணந்து சேணெழியு மாறுபோற்

பெருகுபு டற்சிறை துறந்து விடனுகு சூழ்ச்சி பன்முறையும் வேட்டலின்
உகுபி றப்பினும தேபி றப்புமை யுயிர்த்து ளார்மக வுயிர்த்துளார்.

(இ - ள்.) மாறுபாட்டைத் தம்மிடத்தே மிகுதியுமுடைய காக்கையினது முன்னாற் செய்த கூட்டின் கண்ணிருந்த குயிலின் இளங்குஞ்சுகள், தகுதியாகிய இரண்டு இறகுகளும் முளைத்த அளவில் குடம்பையாகிய சிறையினீங்கி, நெடுந்தூரத்தே செல்லுதலைப்போலத் தூலசூக்குமமாகப் பொருந்திய உடலாகிய சிறையினின்று நீங்கி என்றும் ஒரு படித்தாகிய வீட்டினை அணுகுதற்கு ஏதுவாகிய ஆராய்ச்சிகளைப் பலர் பக்கலில் பன்முறையும் விரும்பிக்கேட்டலால் கெடுகின்ற பிறப்பினுள் ளைத்தும் இப்பிறப்பு நம்முடையனவேயாம். நுங்களைப் புதல்வர்களாகப் பெற்றோர்களே புதல்வர்களைப் பெற்றோராவார்கள்.

(வி - ம்.) பின்னுள்ள சிறை, கூடு. பறழ் - குஞ்சு. "பார்ப்பும் பறழும் பறப்பவற் றிளமை" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தானறிக. சூழ்ச்சி - உபாயம். உகுபிறப்பு - கெடுகின்ற பிறப்பு. பிறப்பின் - ஏழாவதனுருபு. கூட்டிப்பிரித்தற்கண் வந்தது. "குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே - உடம்போ டுயிரிடை நட்பு" என்ற அருமைத் திருக்குறளின் கருத்தும், "சேக்கை தனித்தொழியச் சேணீங்கு புட்போல, யாக்கை தமர்க்கொழிய நீத்து" என்னும் நாலடிச் செய்யுளின் கருத்தும் இச்செய்யுளிலமைந்து மிளிர்தலைக் காண்க. (௨௦)

வினைத்தி றுக்கினை மிளிர்ந்த செவ்விமிடை யுற்றலால் வினைகண் முற்றுதல்
அனைத்து நீத்தருள்கொ ழிக்குநற்குரவ னண்மி வாழ்தணிகை மான்மியம்
நினைத்த லுஞ்சிறிது முற்றா றுவென நிகழ்த்தி மேலது விளம்புவான்
முனைத்த வேற்கரனை முன்னி யன்னது மொழிந்து வந்தவழி தேற்றுமால்.

(இ - ள்.) வினையின் மாறுபாட்டைக் கெடுத்து, இருவினை யொப்பும், மலபரிபாகமும் பொருந்தும் காலம் உற்றாலல்லாமல், மேல்வந்தடையும் எல்லாவினைகளையும் கெடுத்து அருளைக்கொழிக்கும் நல்ல குரவனாகிய முருகப்பெருமான் அண்மி வாழ்கின்ற தணிகையின் பெருமையினை (வாயினாற் சொல்லுதலன்றி,) மனத்தால் நினைத்தலும் முற்றாப்பெறாதெனத் திருவாய்மலர்ந்தருளி, மேலும் அதனைச் சொல்லும் பொருட்டுக் கூர்மைபொருந்திய வேலைத் திருக்கரத்திலுடைய முருகப்பெருமானை நினைத்து அத்தணிகையின் பெருமையை மொழிந்து நூல் வந்த வழியைத் தேற்றுவான்.

(வி - ம்.) மிளிர்ந்த - கெடுத்த. உற்று அலால் - உற்றாலல்லாமல், நீத்துக்கொழிக்கும் குரவன் என்க. பின்வினை - ஆகாமியத்தின்மேற்று. முற்றுதல் - அடைதல். நினைத்தலும் முற்றாறு என்றதனால் சொல்லுதலும் இயலாதென்பது, தானே போதரும் என்க. அது மொழிந்து வந்தவழி - அதனை ஒருவர் மற்றொருவர்க்குச் சொல்லிவந்த வழியை. தேற்றும் - தெளிவிப்பான். ஆல் - அசை. முற்றாறு என்பதின் இறுதி தொக்கது. இனி முற்றாதெனவும் பாடமுண்டு. (௨௧)

நைமிசப்படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் ௫௨௮

# புராண வரலாற்றுப் படலம்

உலகம் யாங்கணு மிழியிரு குணமிக வுதுதேர்ந்
தலகில் சீர்முதற் குணமடர்த் தோங்குவா னிறையை
இலகு பேருரு வாய்ந்தரித் திருப்பதோத் துளதால்
விலகி வாலுமிழ் வெள்ளியம் பொருப்பெனுங் கயிலை.

(இ - ள்.) *இடைவிட்டு ஒளி விடுகின்ற வெள்ளிமலையெனும் கயிலை உலகத்தெவ்விடத்தும் இழிவாகிய இராசதம் தாமதமென்னும் இரண்டு குணங்கள் மிகாநிற்ப மிகுகின்ற அதனையறிந்து அளவிட முடியாத சிறப்பினையுடைய முதற்குணமாகிய சத்துவகுணம் (அவ்விரு குணத்தையும் கீழ்ப்படுத்தி உயரும் பொருட்டுச் சிவபெருமானை விளங்குகின்ற பெரிய வடிவினை யுடையதாகித் தாங்குவதை யொத்துளது.*

(வி - ம்.) *இருகுணம் - இராசதம், தாமதம். உது - மிகுகின்ற அதனை. அடர்த்து-அவ்விரு குணத்தையும் கீழ்ப்படுத்தி. வான் : வினையெச்ச விகுதி.* (௧)

எண்ணி றந்தபல் வரைகளு மெறுழ்வளி யிளிர்ப்ப
மண்ணும் விண்ணமு மறிகட லடர்க்குமவ் வேலை
அண்ண லாணையி னிவந்தண்ட முகட்டெல்லை காறும்
நண்ணி நிற்பது நகுகதிர் பரப்புமச் சயிலம்.

(இ - ள்.) *அளவிட முடியாத பல மலைகளையும் வலியோடு கூடிய காற்றானது (பெயர்த்துக்) கெடுப்ப மண்ணுலகத்தையும் விண்ணுலகத்தையும் அலையை மடக்கி வீசுகின்ற கடலானது கெடுக்கின்ற காலத்துச் சிவபெருமான் கட்டளையால் எழுந்து அண்டமுகட்டினெல்லையளவும் பொருந்தியிருப்பதாகும். விளங்குகின்ற ஒளிவிடுகின்ற அக்கயிலைமலை.*

(வி - ம்.) *எல்லாவுலகங்களும், மலைகளும் அழிகின்ற ஊழிக் காலத்தில் கைலைமலை வளர்ச்சியுறுமென்பதனை விளக்கிய "ஆணையி னிவந்து அண்டமுகட்டெல்லைகாறு நண்ணி நிற்பது" என்றார் இதனை "ஊழிதோ றோங்குமவ் வோங்கல்" என்னும் பரஞ்சோதியார் திருவிளையாடலானுணர்க.* (௨)

புரம்பொ டிப்பவா னவர்பிரான் பொலங்கிரி வாங்கிக்
கரம்பி டித்தஞான் றுலகெலாங் கவிழ்தராக் காட்சி
வரம்ப டைத்தபொன் வரையுமற் றேனைய வரையும்
உரம்ப டைத்ததா னூன்றியே நிற்றலிற் போலும்.

(இ - ள்.) *திரிபுரத்தைச் சுடும்பொருட்டுத் தேவர்கள் தலைவனாகிய மகாதேவன் மேருமலையை வளைத்துத் திருக்கரத்தின்கட் கொண்ட காலத்து எல்லாவுலகங்களும் கவிழாத தோற்றமானது மேன்மை பொருந்திய மேருமலையையும், ஏனைய மலையினையும் வலிமைபொருந்திய* **(வெள்ளிமலையாகிய) தான் ஊன்றி நிற்றலினாற் போலும்.**

(வி - ம்.) வாங்கி - வளைத்து "வாங்கலே வளைத்தல் கொள்ளல்" என்னும் நிகண்டானறிக. காட்சி - தோற்றம், எழுவாய். உரன்-வலி. தான் - ஈண்டு வெள்ளிமலை. (௩)

பொன்வ ரைக்குல மணிவரைக் குலம்புவி யிருப்பந்
தன்வ ரைப்பக லாதிறை தவிர்வரம் படைத்த
மின்வ ரைச்சுடர் விக்கநதன் பொன்மறு வீழ்த்தோர்
நன்வ ரைப்பலா திறைநய வாமையை நவிற்றும்.

(இ - ள்.) பொன்மயமாகிய மலையினங்களும், இரத்தின மலையினங்களும் இப்பூமியினிடத்திருப்பத் தன்னிடத்தினின்றும் நீங்காது இறைவன் தங்கும் மேன்மையைப் பொருந்திய ஒளியோடு கைலைமலையின் சுடரின் பெருக்கமானது தன்னைப்போல ஆணவமாகிய குற்றத்தை நீக்கினோரிடத்தையல்லாமல் வேறிடத்தை இறைவன் விரும்பாமையைக் காட்டும்.

(வி - ம்.) தன்னென்றது - ஈண்டு வெள்ளிமலையை. தவிர்தல் - தங்குதல். விக்கம் - பெருக்கம். மறு - குற்றம். வீழ்த்தோர் - ஆணவத்தை நீங்கிய பெரியோர். தன்வரைப்பு-அவரிடம். நவிற்றும்-காட்டும்.

வயக்க மாண்டவெள் ளருவிகள் வயின்வயின் வீழ்தல்
துயக்க மாணவன் றரக்கனைச் சுடர்விர லுதியால்
இயக்க மாற்றலு மிருந்தவச் சிலம்பெழு பாக்குத்
தயக்க மாண்டதன் கரங்களை யூன்றுத றகையும்.

(இ - ள்.) விளக்கம் பொருந்திய வெள்ளிய அருவியின் கூட்டங்கள் இடமிடங்கடோறும் விழ்தல், வருத்தமிக (கைலைமலையினை எடுத்த) அக்காலத்து இராவணனை ஒளி பொருந்திய பெருவிரனுதியினால் இயங்குதலை யொழித்தவளவில் தங்கிய அம்மலையானதெழும்பொருட்டு விளக்கம் பொருந்திய தன் கரங்களை யூன்றலை யொக்கும்.

(வி - ம்.) வயக்கம் - விளக்கம். துயக்கம்-வருத்தம். மாண-மிக. இயக்கம் மாற்றலும்-செல்லுதலை யொழித்தவளவில். தகையும்-ஒக்கும்.

பிரம னேமுதன் மாயனே முதலெனப் பிணங்கும்
விரகி லார்க்கெலாம் விடமிடற் றிறைவனே முதலென்
றுரனை யேய்ப்பவர் போன்றுளா ருவணமேக் குயர்த்தோர்
பரவு வேதர்க ளாவயிற் பற்பலர் பயில்வார்.

(இ - ள்.) பிரமனே முதற்கடவுளென்றும், மாயனே முதற்கடவுளென்றும் கூறி மாறுபடுகின்ற அறிவிறுட்பமில்லோர் யாவர்க்கும் கருடக்கொடியினை யுயர்த்திக் கட்டியோரும் பரவுகின்ற வேதத்தினையுடையோருமாகிய விண்டு பிரமர்கள் நீலகண்டத்தையுடைய சிவபெருமானே முழுமுதற் கடவுள் (செத்துப் பிறக்கின்ற) யாங்கள் முழுமுதற் கடவுளல்லேம் எனக் கூறி உண்மை ஞானத்தினை அறிவுறுத்துபவரைப்போல அக்கைலையினிடத்துப் பலப்பல பிரம விட்டுணுக்கள் தீர்வார்.

(வி - ம்.) விரகு - அறிவினுட்பம். உரன் - ஞானம். ஏய்ப்பவர் - ஈண்டறிவுறுத்துபவர். (௬)

அண்டர் யாவையு மரைக்கணத் தனைவையு மவித்துப்
பண்டு போலவை யுயிரொடும் படைத்தினி தளிக்க
மண்டு மாற்றல்பெற் றுள்ளபூ தங்கண்மா மலநோய்
விண்ட சாரதத் தலைவரும் விளம்பிலெண் ணிலரால்.

(இ - ள்.) எல்லா வுலகங்களையும் அரைக்கணப் பொழுதினிற் கெடுத்து முன்னர்ப் போலவே யவ்வுலகங்களை ஆன்மாக்களோடும் ஆக்கி யினிதாகக் காக்கும் வல்லமையைப் பெற்றுள்ள பூதக்கூட்டங்களையும், பெரிய ஆணவமலமாகிய நோயை (இறைவன் திருவருளால்) நீங்கிய பூதகணத் தலைவர்களையும் சொலப்புகின் அளவிலராவர்.

(வி - ம்.) அவித்து - கெடுத்து. சாரதம் - பூதம். (௭)

நலக்கு மாகம மறையெலா நவின்றுமெய் யுணர்ந்து
மலக்கு றும்பினைத் துமித்தின்ப வாரியிற் படியும்
அலக்க ணற்றவர் தமக்குமெய்ப் பணியலா தின்மை
துலக்கி நந்தியெம் பிரானமர் காவலுந் துதையும்.

(இ - ள்.) (ஓதினார்க்கு) நன்மையைத் தருகின்ற ஆகமங்களும், வேதங்களுமாகிய எல்லா நூலினையும் பயின்று மெய்ப்பொருளாகிய இறை நிலைமையினை யுணர்ந்து ஆணவமலமாகிய குறும்பினைக் கெடுத்து இன்பக் கடலின் மூழ்குந் துன்பமற்றவராகிய பெரியார்க்கெல்லாம் (இறைபணியாகிய) உண்மைப் பணியையன்றி வேறு பணியில்லாமையை விளக்கி நந்தியெம்பெருமான் விரும்பும் காவலோடும் பொருந்தும் அம் மலை.

(வி - ம்.) நலக்கும் - நன்மையைத் தருகின்ற. மெய் - சிவம். துமித்தல் - கெடுத்தல். அலக்கண் - துன்பம். மெய்ப்பணி - இறை பணி. துதையும் - நெருங்கும். (௮)

மதியொ ராயிரம் வகிர்ந்திரு பாங்கினும் வயக்கிவைத் தெனத்தோற்றும்
நுதியி ராயிர மணிச்செழு மருப்பினு நொறிலுளை யெழுமான்றேர்க்
கதிரி ராயிரங் கோத்தன கிம்புரிக் களிறுவாக் கியதானம்
நதியு ராய்த்தவழ்ந் தசும்புதோ யிசும்பிவர் நடையிமு டமாமால்.

(இ - ள்.) ஓராயிரம் சந்திரர்களைப் பிளந்து இருபக்கத்திலும் விளக்கமுறும்படி வைத்ததென்று சொல்லும்படி தோன்றுகின்ற கூர்மையோடு கூடிய முத்துக்களையுடைய செழித்த இரண்டாயிரம் கொம்புகளினும் வேகத்தோடு செல்கின்ற தலையாட்டமெழுந்த குதிரைகள் பூட்டிய தேரினையுடைய இரண்டாயிரஞ் சூரியர்களைக் கோத்தாலொத்த பூணினை யணிந்த அயிராவணமென்னும் யானைகொட்டிய மதநீராகிய நதியானது பெயர்ந்து செல்லுதலால் துளித்தல் பொருந்துகின்ற வழுக்குநிலத்துச் செல்லுகின்ற நடத்தலையுடைய சிங்கங்கள் (வழுக்கி வீழ்தலால்) முடத்தன்மையை யடையும்.

(வி - ம்.) வயக்கம் - விளக்கம். நொறில் - வேகம். கிம்புரி - தந்தப்பூண். உராய் - பெயர்ந்து. அசும்பு - துளி. இசும்பு - வழுக்கு நிலம். கடையாளி - சிங்கம். (௯)

வழுக்கி யஞ்சிறைத் தும்பிக ளவசமாய் மலர்த்தலை விழவிமற்
றொழுக்கி நற்பொழின் மதுப்புனற் றாரைக ளுடன்விராய்த் தவழ்ந்தேகிச்
செழுக்கு தம்பைநான் றெருத்தலைத் தரவரு திருப்பதி தனைக்காமம்
முழுக்க வென்றவன் புணர்ந்தெழு கண்டகை முதுநதி வளங்காட்டும்.

(இ - ள்.) அழகிய அகஞ்சிறையினையுடைய வண்டுகள் (கள்ளுண்டு) வழுக்குதலடைந்து பரவசமெய்தி மலர்களிடத்தே வீழாநிற்க, அம்மலர்கள் பெரிய சோலைகளொழுக்குகின்ற தேனாகிய நீர்த்தாரைகளுடன் கலந்து ஊர்ந்துசென்று, செழித்த குதம்பையென்னும் காதணி தொங்குதலுற்றுப் பிடரை வருத்தும்வண்ணம் வருகின்ற இலக்குமியின் கணவனாகிய திருமாலாகிய மோகினியைக் காமங்களனைத்தினையு மியல்பாக வென்றவனாகிய சிவபெருமான் கூடியெழுகின்ற கண்டகை யென்னும் பழைய நதியின் வளத்தைக் காட்டும்.

(வி - ம்.) தாரைகள் அம்மலரோடும் விராய்ச் சென்றென்க. மதுவைச் சிவந்த நீராகவும், வண்டை யந்நதியின் மிதந்து வருகின்ற சாளக்கிராமமாகவும் கொள்க. இதனுற்பத்தியினைக் கந்தபுராணம் சாளக்கிராமப் படலத்தானுணர்க. திருப்பதி - இலக்குமிநாயகன்; விண்டு. வண்டைமோகினிக்கும் பூவினை இறைவனுக்கும் உவமையாகக் கொள்வாருமுளர். (௧0)

வளியு ளர்த்தலுஞ் சந்தனங் கிளைகளை மணமலி யிணர்ப்பூந்தேந்
தளியு கக்கருப் பூரமா மரத்தொகை தரவிராய் நனிதேய்த்த
தெளிகொ டேய்வையுண் மூழ்கிய குவடுக டேவிவெம் முலைமான
வெளிறு துன்றுதந் நிறமருந் தவத்தினால் விளித்தொளிர் வனபோன்ற.

(இ - ள்.) காற்று வீசாநிற்க (அம்மலையின்கண்ணுள்ள) சந்தன மரங்கள் கிளைகளால் வாசனைமிகுந்த கொத்துக்களிலுள்ள மலர்கள் தேன்றுளியைக் கொட்டக்கருப்பூர வாசத்தினை (ஆண்டுள்ள) கருப்பூர மரக் கூட்டங்கள் தராநிற்க (இவைகளைக்) கலந்து மிகவும் தேய்க்கப் பெற்ற தெளிவு பொருந்திய (இங்ஙனமரைபட்ட) சந்தனத்தில் மூழ்கிய (அம்மலையின்) சிகரங்கள் உமையம்மையாரது விருப்பத்தைத் தரத்தக்க தனத்தினை யொக்கும்வண்ணம் வெண்மை பொருந்திய தன் வடிவத்தினை (ஆண்டுச்செய்த) அரிய தவத்தினாற் கெடுத்து விளங்குவன போன்றன.

(வி - ம்.) உளர்தல் - அசைதல். தளி - துளி. சந்தனம் - சந்தனமரங்கள். தேய்த்த - (கிளைகளாற்) றேய்த்த. தேய்வை - சந்தனம். தேய்த்த தேய்வை யென்க. குவடு - எழுவாய். வெளிறு - வெண்மை. விளித்து - கெடுத்து. (௧௧)

கற்றை வெங்கதி ருடற்றிய விருட்டுணி கதிரவன் மனையாமென்
றுற்று டற்றுவ தெனக்கனி வண்டின முழக்குபு மதுமாந்தும்.

பொற்ற வம்புய மலர்ந்தனத் தொழுதியிற் பொலிந்துநற் சுனையாவும்
அற்ற மெய்யினர்க் கற்றவன் றிருவரு ளாமெனக் குளிர்தாங்கும்.

(இ - ள்.) கூட்டமாகிய சுடுகின்ற கிரணங்களையுடைய சூரிய னால் வருத்தப்பெற்ற இருட்டுண்டங்கள் (தம்மை வருத்திய) சூரியனது (இம் மலர்கள்) இல்லையாமென்று பொருந்தி (அவைகளை) வருத்துவ தென்று சொல்லும்வண்ணம் (தேனையுண்டு) களிக்கின்ற வண்டின் கூட்டங்கள் மிதித்துழக்கி (மீண்டும்) தேனையுண்ணும் பொன்மயமாகிய தாமரைகள் மலரப்பெற்று அன்னக் கூட்டங்களாற் பொலிவுபெற்று அம் மலையின்கண்ணுள்ள சுனைகளெல்லாம் (தன்னை வழிபட்டு) அகப் பற்று புறப்பற்றாகிய இருவகைப் பற்றினையும் நீக்கிய உண்மையறிவை யுடையார்க்கு (இயல்பாகவே எல்லாப்பற்றையும்) விட்டவனாகிய சிவபெருமான் திருவருளடைந்து குளிர்வித்தல் போலக் குளிர்ச்சி தாங்கும்.

(வி - ம்.) உழக்குபு - கலக்கி. யாவும் - எல்லாம். அற்ற - இரு வகைப் பற்றுமற்ற. அற்றவன் - இயல்பாகவே பாசங்களினின்றும் நீங்கியவன். அற்றமெய்யினர்க் கற்றவன் என்பதற்குப் பற்றற்ற உண்மையுடையோர்க்கு முடிவு பட்டவனெனப் பொருள் கூறுவாரு முளர். தாங்கும் - தங்கும். (௧௨)

கொடைமை நல்குவ கற்பகப் பொழிற்கவட் குளிர்மரப் பொதும்பெல்லாம்
மிடைவி லங்கினந் தேனுவுக் கினமணி மிளிர்சிந்தா மணிக்கந்தேன்
மடையு டைந்தெழு மலர்க்குலந் தவழ்வன மலர்வளை நிதிக்கேய்ப
உடைதி ரைப்புனற் றீர்த்தங்க டிருத்தங்கட் குதவுவ மலந்தீர்த்தல்.

(இ - ள்.) அக் கைலாயத்தின்கண்ணுள்ள குளிர்ச்சி பொருந்திய மரங்களையுடைய சோலைகளெல்லாம் கற்பகச் சோலைக்குக் (பிறர்க்குக் கைம்மாறு கருதாது) கொடுக்குந் தன்மையைப் பழக்கஞ்செய்து கொடுப்பனவாம். (ஆண்டு) நெருங்கிய பசுக்கூட்டங்கள் (தேவ லோகத்தின்கண்ணுள்ள) காமதேனுவுக்கும், ஆண்டுள்ள மணியினம் சிந்தாமணியினுக்கும், தேனானது மடையினையுடைத்தெழுவதற் கேது வாகிய மலர்களும், தவழ்கின்ற சங்கினங்களும், பதுமநிதிக்கும், சங்க நிதிக்கும் கொடுக்கும் தன்மையைக் கற்பிப்பனவாகும் என்று சொல் வார்கள். கரையை மோதுகின்ற அலையோடுகூடிய தீர்த்தங்கள் (மூழ்கிய ஆன்மாக்களின்) ஆணவமலத்தைப் போக்கும் தன்மையை உலகிலுள்ள ஏனைய தீர்த்தங்கட்குக் கற்பிப்பனவாகும்.

(வி - ம்.) மலர்நிதி, வளைநிதி யெனக் கூட்டுக. திருத்தம் - தீர்த்தம். (௧௩)

வளங்க ளெண்ணில துவன்றிய வத்தகு மாதர்வெண் கயிலாயந்
திளங்க திர்ச்செழும் பிதிகள் பற்பல வெறுழ்கொளத் திரண்டாங்கு
விளங்கொ ளிச்சுடர்த் தூணங்க ளாயிரம் விறந்துபன் மணிமாலை
துளங்கு மின்னென நான்றசைந் திருங்கவின் றுளும்புமண் டபநாப்பண்.

(இ - ள்.) மேற்கூறிப் போந்த வளப்பங்கள் அளவில்லனவாகி நெருங்கிய அத்தகுதி பொருந்திய கண்டார்க்குக் காதலைத் தரத்தக்க

கைலையின்கண் இலங்கதிரோடுகூடிய பற்பல சூரியர்கள் வலிகொள்ளத் திரண்டாற்போல மிக்க ஒளியோடுகூடிய ஆயிரந் தூண்கள் நெருங்கப் பெற்று இரத்தினமாலைகள் அசைகின்ற மின்னலென்று சொல்லும்படி தூங்கி அசைதலுற்று மிக்க அழகுபொருந்திய மண்டபத்தின் நடுவே.

(வி - ம்.) மாதர் - காதல்: "மாதர்காதல்" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தானுணர்க. எறுழ் - வலி. "இஞ்சியே புரிசையிஞ்சி யெறுழென்ப வலிதண்டாமே" என்னும் நிகண்டானறிக. விறந்து - நெருங்கி. நாலல் - தொங்குதல். (கச)

ஒளிபி ழம்பிய வாரமும் போர்வையு முத்தரி யமுமான
களிபி ழம்புதங் கினமெனத் தாங்கலுங் கதிபெறக் குறிக்கொண்டாங்
களிபி ழம்பிய பாததா மரைநிழ லகத்தொடு புறம்போர்ப்பத்
தெளிபி ழம்பிரு நாகமு மடங்கலுஞ் செறிந்துதாங் கணைமேலால்.

(இ - ள்.) ஒளி திரட்சியுற்ற மாலையும், மீக்கோளும், மேலாடையு மாகிய களிப்புத் திரண்ட தங்க இனமாகிய பாம்பு, யானை, சிங்கமாகியவைகளைப்போலத் தாங்கலும் முத்தியடையக் குறிக்கொண்டு அவ்விடத்து அருள்திரண்ட பாதமாகிய தாமரையின் நிழல் (தியானித்தலால்) உள்ளத்திலும் (தாங்குதலாற்) புறத்திலும் போர்ப்பத் தெளிவு விளங்கிய பாம்பும், யானையும் சிங்கமும் நெருங்கித் தாங்கிய அணையின் மேல்.

(வி - ம்.) பிழம்பு மூன்றையும் திரண்டவெனப் பொருள்கொள்க. இருநாகம் - பாம்பு, யானை. (கரு)

இருந்த வம்பல வுழந்துதன் மாசினை யிகந்துபே ரொளிகூர்ந்து
திருந்து வெண்மதி விசும்பெழ வார்சடைச் சிவணிய வொருநாகம்
அருந்தின் மற்றிது பெருஞ்சுவைத் தாமென வாவிவெள வுபுமீண்டு
பொருந்தி னுலென வயங்குகாம் புயர்குடைப் பொழிகதிர் நிழல்பம்ப.

(இ - ள்.) பெருமையாகிய தவங்களை வருந்திச் செய்து தன் களங்கம் நீங்கப்பெற்றுப் பேரொளியிருந்து திருந்திய வெள்ளிய சந்திரன் ஆகாயத்தின்கண்ணே யெழாநிற்க நீண்ட சடையின்கண்ணே பொருந்திய ஒப்பற்ற ஒரு பாம்பானது அமிர்தினைப் பார்க்கினும் இது பெருஞ் சுவையினை யுடையதாகுமென்று தாவி வாயாற்கவ்வி மீண்டும் அச்சடை காட்டிற் பொருந்தினாற்போல விளங்குகின்ற காம்புயர்ந்த குடையானது சொரிகின்ற கிரணங்கள் நிழல்விரிய.

(வி - ம்.) உழந்து - செய்து. வாவி - தாவி. வௌவுபு - கௌவி. மீண்டு பொருந்தினுலென - சடையின் மீண்டு பொலிந்தாற்போல. பம்ப - விரிய. (கசு)

நாமி கப்புறு மளைப்பரித் துழலுமா னைந்துயிர் தனைமன்ற
தாமி கப்புறு தன்மைநா யகன்திருச் சந்நிதிக் குரித்தான
ஆமி தைக்குறித் தேமகிழ்ந் தெழுந்தெழுந் தாட்டயர் வனபோலக்
காமர் முற்றிழைக் கன்னிய ரிரட்டிய கவரிக ணனிதுள்ள.

(இ - ள்.) நாம் நீங்கின் நம்மைத் தாங்கிச் சுழலுகின்ற மானினங்கள் வருந்தி உயிரை நிச்சயமாகத் தாங்கள் நீக்கும் தன்மையானது எவ்வுலகங்கட்கும் நாயகனாகிய சிவபெருமான் அழகிய சந்நிதிக்குரித்தான வாகுபிதனைக் கருதியொன்று மகிழ்ச்சியுற் றொழுந்தொழுந்து விளையாட்டைச் செய்வனபோலக் கண்டார்க்கு விருப்பம் வரத்தக்க தொழின் முற்றிய அணிகலன்களை யணிந்த இளம்பெண்கள் அசைந்த கவரிகள் மிகத் துள்ளாநிற்க.

(வி - ம்.) நாமென்றது ஈண்டுக் கவரிமயிர். "மயிர் நீப்பின் வாழாக்கவரி மாவன்னார் - உயிர்நீப்பர் மானம் வரின்" என்னும் பொது மறையின் கருத்தமைந்திருத்தலை யுணர்க. ஆமிது - ஆகின்றவிதனை. காமர் - விருப்பம். ஆட்டு - விளையாட்டு. (௧௭)

கற்றை வார்சடை செஞ்செவி மணியுரங் கரங்கடி தடம்பூந்தாள்
முற்ற ராவணி முழுவதுந் தழைத்தொளி முதிர்ந்தெழில் வளம்பொங்கும்
பெற்றி சூழ்ந்தது முயன்றுளார் போன்மெனப் பிடிநடை மடமாதர்
பற்றி வீசுசாந் தாற்றிகள் வளியெழீஇப் பாங்கெலாங் குளிர்தூர்ப்ப.

(இ - ள்.) கூட்டமாகிய நீண்ட சடை, செவ்விய காது, அழகிய மார்பு, கை, அரை, அழகிய பாதம் ஆமிவைகளை யடைந்து அரவமாகிய ஆபரணங்களெல்லாம் செழித்து ஒளிமுதிர்ச்சியுற்று அழகின் வளம் பொங்கும் தன்மையை யாராய்ந்து அவ்வளம் பொங்குதலை முயன்று தாங்களுமடைந்து விளங்குகின்றனரென்று கண்டோர் சொல்லும் வண்ணம் பெண்யானையின் நடையை யன்ன நடையினையுடைய அழகிய பெண்கள் பிடித்து வீசிய விசிறிகளினின்று போந்த காற்றானது எழுந்து பக்கமெல்லாம் குளிர்ச்சியை நிறைக்க.

(வி - ம்.) கடிதடம் - அரை. முற்று - அடைந்து. முயன்றுளார்போன்ம் - முயற்சிசெய்து மேன்மை யடைந்துள்ளார் போலும்.

சாந்தாற்றி - விசிறி. "சாந்தாற்றி பேர்முரணித் தாமரைமுத் தன்னவெயர் - போந்தாற்றி ஞாங்கர்ப் பொலிவெய்த" என்னும் திருவெங்கையுலாவா னறிக. தூர்ப்ப - நிறைப்ப.

அந் நாகங்கள் இறைவனையண்மி வளம் பெற்றாற்போல இப்பெண்களும் இறைவனையண்மி வளம்பெற்றன ரென்று கண்டோர் சொல்லுதற் கேதுவான வனப்பு வாய்ந்த பெண்களென்பார் "பெற்றிசூழ்ந்தது முயன்றுளார் போன்மெனப் பிடிநடைமடமாதர்" என்றார். (௧௮)

குழலும் வீணையுந் தோற்பொலி முழவமுங் குரைகட லமிழ்தன்ன
மழலை கூர்மொழிப் பாடலு மயங்கவந் நாடலை மதித்தாங்கண்
அழலம் போருகக் கரமுகிழ்த் தஞ்சலி யளித்தவ ரவ்வாறே
விழவு கூர்திரு வனப்பட வுள்ளகம் விளிந் தனர் நலைநீப்ப.

(இ - ள்.) புல்லாங்குழலும் வீணையும் தோலினும் பொலிவுற்ற மத்தளமும் ஒலிக்கின்ற திருப்பாற் கடலிலுண்டாகிய அமுதத்தை யொத்த மழலைமிகுந்த மொழிப்பாட்டுங் கலந்து நிருத்தஞ் செய்தலைக் கருதி அவ்விடத்துச் செந்நிறம் பொருந்திய செந்தாமரை மலர்போன்ற

கரங்களைக் குவித்து வணக்கஞ் செய்தவர் அவ்வணக்கம் செய்த வண்ணமே சிறப்புமிகுந்த அழகானது தம்மை வருத்த மனநிலை வேறுபட்டவர்களாகி அவ்விடத்தே நிற்க.

(வி - ம்.) தோற் பொலிமுழவம் - தோலாற் பொலிந்த மத்தளம். கூர் - மிகுந்த. மயங்க - கலக்க. அழல் - செந்நிறம், அவ்வாறே - அஞ்சலி செய்தவண்ணமே. விழவு - சிறப்பு. திருவனப்பு - மிக்க வழகு. உள்ளகம் - ஈண்டு மனம். விளிதல் - நிலைகெடல். தலை - அவ்விடம். (௧௧)

மாய னாதிவின் ணவரெலாந் திருவுரு வனப்பினை யெதிர்நோக்கிச்
சாயன் மாதரார் பெண்ணவா யவ்வுருச் சத்தியிற் றழீஇக்கோடல்
மேய காலையின் மோகமிக் கெழுதலும் வினைமறந் தடிபோற்றும்
தூய வானர மகளிர்போற் கையறு தொழின்மையி னனிநீட.

(இ - ள்.) விண்டு முதலாகிய தேவர்களெல்லாம் (இறைவன்) திருவுருவின் அழகினை யெதிரே கண்டு மென்மைத் தன்மையையுடைய பெண்களிடத்துள்ள பெண்டன்மையை விரும்பி அப்பெண் வடிவைத் தங்கள் சத்தியினாலே தழுவிக் கொள்ளுதலைப் பொருந்திய காலத்தில் ஆசைமிக் கெழுதலினால் (தாங்கள் வந்த) தொழிலை மறந்து திருவடியை வணங்கும் பரிசுத்தம் பொருந்திய தெய்வமகளிரைப் போலச் செயலற்ற தொழிலின்றன்மையிலே மிக நீட்டிக்க.

(வி - ம்.) சாயல்-மென்மை. மாதரார் பெண்டன்மையை விரும்பி யென்க. அவ்வுரு - அப் பெண்வடிவு. தமது சத்தியில் - தங்கள் வல்லமையினாலே. தழீஇக்கோடல் - தழுவிக் கொள்ளுதலை. வினை மறந்து - தாங்கள் கருதிவந்த தொழிலை மறந்து. அடி - இறைவனடி. "மோகமிக் கெழுதலும் வினைமறந்தடி போற்றும் - தூய வானர மகளிர்" என்றது மேற்செய்யுளிற் கூறினாரை யென்க. (௨௦)

கொம்மை மென்முலைக் கொடியிடைக் கிடமருள் குழகன தடிநாடும்
செம்மை நெஞ்சினர்க் குறுவழி யண்மைய செவ்விய வெளிதுய்ப்பத்
தம்மை யல்லதில் லாமையைச் சாற்றுத றகையவா கமமெல்லாம்
விம்மி நுங்கதி ருருவுகொண் டண்மையின் விராயமர்ந் தினிதேத்த.

(இ - ள்.) வட்டமாகிய விருப்பினைத் தருகின்ற மென்மையாகிய தனங்களையுடைய கொடிபோன்ற இடையோடு கூடிய உமையம்மையாருக்கிடப்பாகத்தையருளிய இறைவன் திருவடியை ஆராய்கின்ற செம்மையான மன நிலையையுடைய அடியார்களுக்குச் செவ்வையுடையனவும், அண்மையவுமாகிய பொருந்துதற்குரிய நன்மார்க்கத்திற் செலுத்த (ஆகமமாகிய) தங்களை யல்லது வேறு நூலின்றன்மையைச் சாற்றுதலை யொப்ப ஆகமங்களெல்லாம் ஒளி மிகுந்த ஒளியுருவம் கொண்டு அண்மைக்கட் பொருந்தியிருந்தினிதாக ஏத்தாநிற்க.

(வி - ம்.) கொம்மை - வட்டம். அண்மையவும் செவ்வியனவுமாகிய வழியிலுய்க்கத் தம்மையல்ல தில்லாமையைச் சாற்றுதலை யொப்ப என்க. நெஞ்சினர்க்கு இல்லாமை என இயைக்க. ஆகமங்களெல்லாம் ஒளி வடிவாகு மென்பர். (௨௧)

போதவிழ்ந்துதே னுறைக்குமென் மலர்த்தொடை பொங்கிய விரைச்சாந்தம்
மாதர் வில்லுகு மிழைகளுஞ் சிந்திமெய் வளந்தப வுளமெல்லாங்
கோத னுங்கிமெய் யருள்வள மிகவிணோர் குழுக்களைத் தவவோச்சித்
தீத னுங்கிய நந்தியங் குருபரன் றிருமுன்பு பணிசெய்ய.

(இ - ள்.) பேரரும்பு விரிந்து தேனைத்துளிக்கும் மெல்லிய மலர் மாலையும், மிகுந்த வாசனையுடன் கூடிய சந்தனமும், அழகிய ஒளியை வெளியிடுகின்ற குண்டலங்களையும் சிந்தி யுடனலங்கெட உள்ளிடமெல்லாம் குற்றம் நீங்கி உண்மையாகிய அருளோடு கூடிய ஞானவளம் மிகாநிற்கத் தேவர் கூட்டங்களை மிக நீக்கிக் குற்றம் நீங்கிய அழகிய நந்தி யெம்பெருமானாகிய குருநாயர் சந்நிதியின் கண்ணே திருத் தொண்டு செய்யாநிற்க.

(வி - ம்.) உறைக்கும் - துளிக்கும். மாதர் - அழகு. அனுங்கி - கெட்டு. தவ - மிக. ஓச்சி - ஓட்டி. திருமுன்பு - சந்நிதி. (௨௨)

பரந்து நின்றொளிர் பராபரை யாதியாப் பன்னுமைம் பெயர்பூண்டு
நிரந்த வைந்தொழி றன்னொடும் பிரிவின்றி நிகழ்த்துசத் தியையன்றி
உரந்த ழைத்திடா வுண்மையி னுடன்றொழு துயிரெலாங் களிதூங்க
வரந்த ழைத்தவ னுமையொடும் பேரருள் வழங்கிவீற் றிருந்தானால்.

(இ - ள்.) பரவி நின்று ஒளிர்கின்ற பராபரை முதலாகச் சொல்லப்படுமைம் பெயர்களைப் பெற்று (உலகத்துக்) கலந்த ஆக்கல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருள லென்னு மைந்தொழிலையும் சிவமாகிய தன்னோடும் நீக்கமின்றி இயற்றுகின்ற சத்தியை யல்லாமல் (ஆன்மாக்கட்கு) அறிவுதியாத உண்மையினால் (அம்மையப்பரை) ஒருசேர வணங்கி ஆன்மாக்களெல்லாம் மகிழ்ச்சியிலே தங்கும் வண்ணம் மேன்மை பொருந்திய இறைவன் உமையம்மையாரோடு பெரிய அருளை வழங்கி வேறொருவர்க்கில்லாத சிறப்புடனெழுந்தருளியிருந்தனன்.

(வி - ம்.) தன் என்றது இறைவனை. நிகழ்த்தல் - செய்தல். உரம் - அறிவு. "உரனென்னும் தோட்டியான்" என்னுமிடத்து இப்பொருட்டாதலை யறிக. தழைத்தல் - தோன்றல். உண்மையின் - இன் என்பது ஐந்தாவது ஏதுப்பொருள். தூங்கல் - தங்கல். வரம் - மேன்மை. (௨௩)

வண்டுழாய்த்தொடை மார்பனும் பிரமனும் வானவர் முதற்கோவும்
மீண்டு மொன்பதிற் றிருவரும் பதினொரு மூவரும் வேறாய
தொண்டர் யாவருந் தொழுதுதங் குறைவினுய்த் துறுத்தமே வரப்பெற்றுக்
கொண்ட வோகையி னவரவ ருறைபதி குறுகின ரதுகாலை.

(இ - ள்.) வளப்பம் பொருந்திய திருத்துழாய் மாலையை யணிந்த மார்பையுடைய விண்டுவும், பிரமனும் தேவர்கட்கு முதல்வனாகிய இந்திரனும் நெருங்கிய பதினெண் கணத்தவரும், இருவர், எண்மர், பதினொருவர், பன்னிருவராகிய முப்பத்து மூவரும் இவர்களின் வேறாகிய மெய்யடியார்கள் யாவரும் தொழுது தங்கடங்கள் குறைகளை விண்ணப்

பித்து அடையத் தகுந்தவற்றை அடையப்பெற்றுத் தம்மிடத்துண் டாகிய உவகையினாலே அவரவர்கள் வசிக்கின்ற இடங்களை யடைந் தார்கள் அக்காலத்து.

(வி - ம்.) வினாய் - சொல்லி. துறுத்த - அடைந்தனவாகிய பொருள்கள். மேவரப்பெற்று - அடையப்பெற்று. அது காலை - அக்காலத்தில். (உச)

பக்கு வர்பல புண்ணிய மலபரி பாகஞ்சத் திநிபாதம்
தொக்க வல்வினை யொப்புநே ரடுத்தலிற் றொல்லுரி கழல்பாக்கு
மிக்கு நாடும்வா ளரவெனப் பிறவியை வெருவிய வுளத்தோடும்
தக்க மாதவ ரெழுவரு மறுவலுந் தாழ்ந்தெழுந் தெதிர்நின்றார்.

(இ - ள்.) வீடுபேறடைதற் கதிகாரமும், சிவபுண்ணியமும், மல முதிர்தலும், அருள் பதிதலும், இருவினை யொப்பும் காரணகாரிய முறைப்படி பொருந்துதலினாலே பழைய தோல் நீங்கும் பொருட்டு மிக்கு ஆராயும் ஒளி பொருந்திய அரவினைப்போலப் பிறப்பினுக்கஞ் சிய வுள்ளத்தோடு தகுதியையுடைய பெரிய தவத்தையுடைய முனி வர்கள் எழுவரும் பின்னரும் வணங்கி யெழுந்தெதிரே நின்றார்கள்.

(வி - ம்.) பக்குவம் - அதிகாரம். பல புண்ணியம் - ஈண்டுச் சிவ புண்ணியம். மலபரி பாகம் - மலமுதிர்தல். சத்திநிபாதம் - அருள் பதிதல். வினையொப்பு - இருவினை யொப்பு. நேரடுத்தல் - ஒன்றன் பின் ஒன்றாகவருதல். மாதவரெழுவர் - சனற்குமாரரிடத்திற் சித்தாந் தப்பொருள் கேட்டவர். இவர் சத்தியசேனன் முதலிய எழுவர்கள். இப்படலம் (அரு, அச) ஆகிய செய்யுள்களா னறிக. (உரு)

குடந்தம் பட்டெதிர் நிற்றலும் பசுங்கதிர்க் குரூஉமதி மிலிர்வேணி
மடந்தை பாகன்மற் றுயிர்க்குயி ராகிய வள்ளலன் னவர்நெஞ்சம்
கிடந்த வேட்கையைத் திருவுளத் தடைத்தருள் கெழுமுநந் தியின்பாங்கர்த்
தொடர்ந்த வன்பினா லுணர்சனற் குமரனுந் தொன்முனி முகநோக்கி.

(இ - ள்.) நால்விரல் முடக்கிப் பெருவிரலினுதி நெஞ்சிடை வைத்து எதிரே நிற்றலும் பசிய கிரணங்களோடு நிறம் விளங்குகின்ற பிறைச்சந்திரன் விளங்குகின்ற சடையையுடையவனும் அம்மையாரைப் பாகத்திலுடையவனும், உயிர்க்குயிராகிய வள்ளற்றன்மையுடையவனு மாகிய சிவபெருமான் அம்முனிவர்களுள்ளத்துத் தங்கிக்கிடந்த அவா வைத் திருவுள்ளத்திற்கொண்டு அருளோடு கூடிய நந்தி யெம்பெரு மான் பக்கலிற் றொடர்ச்சியுற்ற அன்பினாற் சித்தாந்த நுண்பொரு ளைக்களை (முறையாக) உணர்ந்த சனற்குமாரனாகிய பழைய முனிவரது முகத்தை நோக்கி.

(வி - ம்.) குடந்தம் - நால்விரல் முடக்கிப் பெருவிரனிறுத்தி நெஞ்சிடை வைத்தல்; இனி யொருசாரார், மெய்கோட்டிக் கைகுவித்து நிற்றலென்பார். வேறொரு சாரார் வணக்கமென்பார். திருவுளத் தடைத்தல் - திருவுளங் கொளல்; குரூஉ - நிறம். கெழுமு - பொருந்திய.

செயிர்பி றங்கிய பகைமையு முறவெனச் செறிந்தநம் மையும்பாரா
உயிர்பி றந்தவ ராதலின் முனிவரர்க் குண்மையை முறையானே.

மயர்த புத்தினி துரைமதி யொனவருள் வழங்கியா வயினின்றும்
வெயிற முழ்பியா வளாக வரைப்பினை மென்கொடி யொடும்போந்தான்.

(இ - ள்) குற்றம் விளங்குகின்ற ஆணவப் பகையையும், உறவாக அநாதியே பொருந்திய சிவமாகிய நம்மையும் அறிந்து உணர்வு தோன்றப் பெற்றவராதலினால் இம்முனிவர்களுக்கு மெய்ப்பொருளை வரலாற்று முறைப்படி மயக்கம் நீக்கி இனிதாக உபதேசிப்பாயாக என அருளிச்செய்து அவ்விடத்தினின்றும் ஒளி விளங்கிய அந்தப்புரத்தின்கண் மெல்லிய கொடிபோன்ற இடையினையுடைய உமையம்மையாரோடும் சென்றான்.

(வி - ம்.) செயிர் பிறங்கிய பகைமை - அநாதியே குற்றமாக விளங்கிய ஆணவம். உறவெனச் செறிந்த நம்மையும் - உறவாகக் கலந்த சிவமாகிய நம்மையும். பாரா : வினையெச்சம். உயிர் : ஈண்டறிவை யுணர்த்தி நின்றது. உவளகம் - அந்தப்புரம். "தவளைக் கிண்கிணித் தாமரைச் சீறடிக், குவளை யேயள வுள்ள கொழுங்கணாள், அவளை யேயமு தாகஅவ் வண்ணலும், உவள கம்தன தாக ஒடுங்கினான்" என்னும் சிந்தாமணி (உசங) செய்யுளா னறிக. (உஎ)

அண்ணலா ரருளிச் செய்த வருடலைக் கொண்டு போற்றிப்
புண்ணிய சனற்கு மாரன் புளகமோ டாங்கு வைக
எண்ணிய வெண்ண முற்ற வெம்பிரான் கருணை வெள்ளம்
நண்ணிய முனிவர் தாழ்ந்து நயந்தனர் கிளக்க லுற்றார்.

(இ - ள்.) பெருமையிற் சிறந்த சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளிய அருளைச் சிரமேற்கொண்டு துதித்துப் புண்ணிய வடிவாகிய சனற்குமார முனிவன் புளகாங்கிதத்தோடு அக் கைலையின்கண் வைகத் தாங்கள் எண்ணிய பொருள்களெல்லாம் எண்ணியவண்ணம் முடிவு பெற எங்கள் தலைவனாகிய சிவபிரானது கருணை வெள்ளம் பொருந்திய முனிவர்கள் வணங்கி விருப்பினராகிச் சொல்லத் தொடங்கினார். (உஅ)

முனிவர ரெனைத்துந் தேரு மொய்யரு ணிதியம் பெற்றுங்
கனிமொழி பாகன் பாதக் கலப்பெனுஞ் சேக்கை சேக்கும்
புனிதமெய்ச் சனற்கு மார புங்கவ நின்னைச் சேர்ந்தாம்
இனியடி யேங்கட் கெய்தா விரும்பொருள் யாங்க னுண்டே.

(இ - ள்) முனிவர்கள் சிறிதும் தெளியாத மிக்க அருளாகிய நிதியத்தைப் பெற்றுக் கனியினிரசம் போன்ற சொல்லையுடைய உமையம்மையாரைப் பாகத்திலுடைய இறைவனது திருவடியிற் கலத்தலாகிய தூய்மையான வடிவத்தோடுகூடிய சனற்குமார முனிவரென்னும் மேலானவரே! நின்னையடைந்தாம். இனி அடியேங்களாகிய எங்கட்கு அடையா முடியாத பெரிய பொருள் எங்ஙனமுள்ளது.

(வி - ம்.) எனைத்தும் - சிறிதும். பாதக்கலப்பெனுஞ் சேக்கை - திருவடியிற் கலத்தலாகிய பற்றிடம். சேக்கும் என்பது ஈண்டு அப்பற்றிடத்திற் புகுதலை யுணர்த்தி நின்றது. "பற்றுங்காலையற்றீர் பற்றும் பற்றுங்காலை பற்றி" என வருந் திருவாக்கா னறிக. (உகூ)

கூற்றமென் வல்லி பின்னித் தொக்கசத் தாதி வெண்டேர்
செற்றிய விந்திய மாமல்கிச் செனனமே மரண மென்ன
முற்றிய வழிக ணீண்டு முனிவினைத் தழல்கள் சூழ்ந்து
பற்றிய வாழ்க்கைக் காடு பாற்றுமெஃ கின்று பெற்றாம்.

(இ - ள்.) கூற்றுவனென்கின்ற மென்மையாகிய கொடியாற் றுவக்குண்டு கூடிய சத்த முதலிய புலன்களாகிய கானனீர் நெருங்கி ஞானேந்திரிய கன்மேந்திரியங்களாகிய மிருகங்கள் நிறைவுற்றுப் பிறப் பிறப்பென்று சொல்லும் மார்க்கங்கள் நீளப்பெற்று (யாவரையும்) வருத்துகின்ற வினைகளாகிய நெருப்பாற் சூழப்பெற்றுப் பொருந்திய இல்லற வாழ்வென்னும் காட்டைக் கெடுக்கும் ஆயுதத்தை இன்று அடியேங்கள் அடைந்தனம்.

(வி - ம்.) வல்லி - கொடி. வெண்டேர் - கானற்சலம். சத்தாதி வெண்டேர்-ஓசை, ஊறு, ஒளி, நாற்றம், சுவை யாகிய கானனீர் இவை புலன்கள். செற்றி - நெருங்கி. வினைத்தழல் - நல்வினை தீவினை யாகிய நெருப்பு; நல்வினையும் வீடடைதற்குத் தடையா மாதலின் "வினைத்தழல்" என்றார். இச்செய்யுள் உருவகவணி. (கூ0)

சுத்தமெய்ஞ் ஞான வின்பத் துறைபடி முத்திக் கேது
சத்தியந் தருமந் தானந் தவமக மக்கட் பேறென்
றித்திற மென்றுந் தத்த மியல்புளி யொழுக லென்றும்
வைத்தசொன் மறையிற் றேன்று மலைவுமின் றொழிக லானோம்.

(இ - ள்.) தூய்மையாகிய மெய்ஞ்ஞான வின்பத்துறையின் கண்ணே மூழ்குகின்ற வீட்டிற்கு வாயில்கள், சத்தியமும், அறமும், தானமும், தவமும், வேள்வியும் மக்கட்பேறும் என்று சொல்கின்ற இவைகளென்றும், தங்கடங்கள் வருணாச்சிரமத்திற்குத் தக்க முறைப் படி நடத்தலென்றும் (இறைவனாற்றிருவாய் மலர்ந்தருளி) வைத்த ஒலி வடிவமாகிய வேதத்திற் காணப் பெறும் மயக்கமும் இன்றொழியப் பெற்றோம்.

(வி - ம்.) படிமுத்தி : வினைத்தொகை. தத்தமியல்புளி யொழுகல்- தங்கள் தங்கள் வருணாச்சிரம தருமத்திற்குத்தக ஒழுகல். மலைவு - மயக்கம். (கூக)

என்றுளத் தெழுந்த வார்வ மெழுகட லென்னப் பொங்க
நின்றுவிண் ணப்பஞ் செய்யு நீத்தமா தவத்தி னோர்க்கு
நன்றருட் பார்வை நல்கி நவைதபு தீக்கை யாற்றி
ஒன்றுமுப் பொருளு மும்மை யுணர்வினுற் றெளித்திட் டானே.

(இ - ள்.) என்று கூறி உள்ளத்தின்கண் ணெழுந்த அன்பு எழு கடலென்று சொல்லும் வண்ணம் பெருக நின்று விண்ணப்பஞ் செய் கின்ற எல்லாப் பற்றையும் விட்ட தவத்தையுடைய ஏழு முனிவரர்க் கும் பெரிதும் அநுக்கிரகம் செய்து குற்றம் நீங்குதற் கேதுவாகிய திரு வாண தீட்சை செய்து ஒன்றியொன்று அத்துவிதமாகக் கலந்துள்ள பதி

பசுபாசமென்னும் மூன்று பொருளினைத் திரியக்காண்டல், இரட்டுறக் காண்டல் தெளியக்காண்டல் என்னும் மூவகை யுணர்விற்றோ தெளி வித்தான்.

(வி - ம்) நன்று - பெரிது. மும்மையுணர்வு - கூட்டவுணர்வு, பொதுவுணர்வு, தன்னியல்பென்னு மூவகையுணர்வு. (௨௨)

இங்கிது நந்தி யெங்கோ னிருந்தவப் பேறு வாய்ந்த
மங்கண னாதியான மாதவத் தோர்க்குப் பண்டு
சிங்கிய மலத்தி னுள்ளந் தெளிதரத் தெருட்டிற் றாகும்
நுங்களுக் குரைத்தா மென்று நுவன்றனன் மோன முற்றான்.

(இ - ள்.) நந்தியாகிய எங்கடலைவன் இதனைப் பெரிய தவப்பய னெய்ந்த மங்கணன் முதலாகிய பெரிய தவத்தினையுடைய முனிவர்க ளுக்கு முன்னர்க் குறைந்த மலத்தோடு கூடிய உள்ளந்தெளியும்படி தெளிவித்ததாகும். (அதனை) உங்களுக்கும் உரைத்தனமென்று சொல் லினவனாகி மௌன நிலையிலிருந்தனன்.

(வி - ம்.) மங்கணன்—ஓர் முனிவன். சிங்கிய - குறைந்த. நுவன் றனன் : முற்றெச்சம். (௨௩)

கேட்டனர் றமைதி பெற்றுக் கிளர்ந்துடன் சிந்தித் தங்கண்
வாட்டமின் றெழுவர் தாமு மயர்தபத் தெளிந்த பின்றைக்
காட்டரு நிட்டை கூடல் கலவும்வா தனையி னெய்தார்
மீட்டவுள் ளத்த ராகி மெலிந்துதங் குருவைச் சார்ந்து.

(இ - ள்.) (இம்முனிவர்கள்) கேட்டலானே பெரிதும் சாந்தி யடைந்து கிளர்ச்சியுற்று (அக்கேட்ட பொருளை) உடனே சிந்தனை செய்து அஞ்ஞான்றே வருத்தமின்றி யெழுவரும் மயக்கம் நீங்கத்தெளித லடைந்த பின்னர் உவமை காட்டற்கியலாத நிட்டையின்கட் பொருந் தலைத் (தம்முட்) கலந்துள்ள வாசனை ஞானத்தினை லடையாதவராகி நிட்டை கூடுதலினின்று நீங்கிய வுள்ளத்தை யுடையவராகி மெலிவுற் றுத் தங்கள் பரமாசாரியனாகிய நந்தியெம்பெருமானை யடைந்து.

(வி - ம்.) காட்சி மூவகையாகுமென முற்செய்யுளிற் கூறினார். இம்மூன்றும் அதிபரிபக்குவ முடையார்க்குக் கேட்ட மாத்திரையே யொருங்கு நிகழும். ஏனையோர்க்குச் சோபான முறையாற் கேட்டல், சிந்தித்தல், தெளிதல் என்னும் இம்மூன்றும் முறையே நிகழ்வன வாகலான் இக்கவியிற் கூறினார். நன்று - பெரிது. காட்டு - எடுத்துக் காட்டு. கூடல் - இரண்டாவதன் றொகை. வாசனை - அனுபவத்தின் காரியமாய் நினைவிற்குக் காரணமாயுள்ளது. மீட்ட - (நிட்டையினின் றும்) மீட்ட; (௨௪)

ஐயனே போற்றி யாண்ட வமலனே போற்றி மூவா
மெய்யனே போற்றி நின்னை மேவியு மேவார் போல
வையக மாட்டெம் முள்ளம் வழிக்கொள லாயிற் றெந்தாய்
உய்யநின் கருணை யின்னு முறுத்தெனக் குமரன் கூறும்.

(இ-ள்.) தலைவனே வணக்கம். எங்களை யடிமைகொண்ட மல ரற்றவனே வணக்கம். கெடாத தன்னியல்புடையவனே வணக்கம், நின்னை அடைந்திருந்தும் அடையாதவர்கள்போல உலகியலின்மாட் டெங்கள் மனஞ்செல்வதாயிற்று. எங்கடந்தையே உய்யும்வண்ணம் நினது கருணையை யெங்கண்மாட்டுச் சேர்த்தருளெனச் சனற்குமரா முனிவன் சொல்வான். (௧௫)

பொறுமையைம் பொறிய டக்கல் புரைதபு தவமா சார
முறைவழி யொழுகல் சீல முற்றிய வாய்மை யூக்கம்
அறிவரு ளருச்ச னாதி யடைந்தன்பு கடைப்பி டித்தல்
நெறியிவர் புத்தி கூர்த்த னடுநிலை நிலைத்தி ரேனும்.

(இ-ள்.) (தம்மை யிகழ்வாரைப் பொறுக்கும்) பொறையும், (புலன்களிற் செல்கின்ற) ஐம்பொறியினை (தத்த நெறியிற் செல்லாது) அடக்கலும், (தனக்கு வரும் நோயைப் பொறுத்தலும் பிறவுயிர்க் கூறு செய்யாமையும் முதலிய) குற்றம் நீங்கிய தவமும், (நீர்பலகால் மூழ்கல் முதலிய) ஆசாரமும், நான்முறை வழி நடத்தலும், நல்லொ ழுக்கமும், உண்மையும் உள்ளக் கிளர்ச்சியும், சிவஞானத்தைத் தருகின்ற சிவார்ச்சனை முதலிய தொழில்களை யடைதலும், அன்பே சிவமென உறுதியாகக் கோடலும், நன்னெறியிற் செல்கின்ற அறிவு மிகுதலும், நடுநிலையினிற்றலுமாகிய செயல்களில் நிலைபெற்றுள்ளீரேனும். (௧௬)

வாதனை மலநோய் தாக்க வாய்மையி னிலைத்த லின்றி
வேதனை யுலகி னுள்ளம் விரவமெய் லிதிர்ப்புக் கொண்டீர்
சாதகப் பாலிர் நீயி ராதலிற் சாத கத்தாற்
சாதலும் பிறப்பு மில்லாச் சாத்தியப் பாலி ராமின்.

(இ-ள்.) வாசனைமலமாகிய நோயானது தாக்கலான் (தன்னியல் பாகிய) உண்மையில் (மனம்) நிலைபெறுதலின்றித் துன்பமே வடிவ மாகிய உலகியலிடத்து மனங்கலக்க உடனடுக்கம் கொண்டீர்கள். சாதனங்களால் சாத்தியத்தினையடைய முயற்சியுடையீராதலின் (பசு கரணங்களெல்லாம் பதிகரணங்களாக) நிட்டை கூடலாகிய ஏதுவால் பிறத்தலு மிறத்தலுமிலவாகிய சாத்தியமாஞ் சிவத்தின் பகுதிய ராமின்கள்.

(வி-ம்.) வாய்மை, சிவம்; ஏனைய பொய்யாகலின். வேதனை - துன்பம். சாதகத்தால் - பசுகரணங்களெல்லாம் பதிகரணங்களாதல் நிட்டை கூடலா லாகலின் நிட்டை கூடலைச் "சாதக" மென்றார். (௧௭)

சாதக வழியும் பல்ல வவற்றினுட் டளர்வின் றுவ
ஏதமி றலந்தோ றெய்தி யிறைஞ்சுத லொன்றின் வைகல்
தீதறு தலமும் புத்தி செறிப்பவீ டுறுப்ப வேண்டின்
ஓதிய விரண்டு முய்ப்ப வுலப்பில வுலகின் மாதோ.

(இ-ள்.) (சாத்தியத்தினை அடைதற்குக் கருவியாகிய) சாதக வழிகளும் பலவாகும். அச்சாதனங்களுள் சோர்விலவாகிய சாதனங் கள் (யாவையெனின்) குற்றமிலவாகிய தலங்டோறும் பொருந்தி

வணங்கல், ஒரு தலத்திற் றங்குதலாம். ஆற்றமற்ற தலங்களிற் போகத்தை மிகச் சேர்ப்பனவும், வீட்டின்கட் சேர்ப்பனவும், விரும்பின் முற்கூறிய விடிரண்டினையுந் தருவனவாகியும் உலகத்தில் அளவிலாதன உளவாம்.

(வி - ம்.) ஆவ, ஆம்என ஒருசொல் வருவித்து முடிக்க. புத்தி - போகம். செறிப்ப, உறுப்ப, உய்ப்ப இவை அன்பெறாத பலவின் படர்க்கை. இரண்டு - புத்தி முத்தி. (௧௮)

அவற்றினுட் புத்தி முத்தி யருங்குரைத் தின்றி யார்க்கும்
தவற்றினைத் துமித்து நல்குந் தலங்களுஞ் சில்ல வாகும்
அவற்றுளு முக்கண் மூர்த்தி யமர்தலஞ் சில்ல சில்ல
துவற்றுதேங் கடப்பந் தாரான் சூழலப் பெயருங் கேண்மின்.

(இ - ள்.) அத் தலங்களுள் யாவர்க்கும் (மலமாகிய) குற்றத்தினைக்கெடுத்துப் போகத்தினையும் வீட்டினையும் (பெறுதற்கு) அருமையுடையதின்றிக் கொடுக்கின்ற தலங்கள் சிலவாகும். அத் தலங்களினுள்ளும் மூன்று கண்ணையுடைய சிவபெருமான் எழுந்தருளியிருக்கிற தலங்கள் சிலவாகும். தேனைத் துளிக்கின்ற கடப்பமாலையை யணிந்த முருகக் கடவுள் எழுந்தருளியிருக்கின்ற இடங்கள் சிலவாகும். அப் பெருமான் எழுந்தருளியிருக்கும் இடங்களின் பெயரையும் கேண்மின்கள்.

(வி - ம்.) அருங்குரைத்து - அருமைத்து, குரை அசைநிலை. துமித்து - கெடுத்து. சில்ல கடப்பந்தாரான் சூழலெனக் கூட்டுக. (௧௯)

வேறு

மாலைவெள் ளருவி தாழ்வரைக் கயிலை மதமலை யுரற்றுமந் தரமே
சாலநோ யனுக்குஞ் சம்புலா சியமே தண்பனிக் குவடுநீ ளிமயம்
ஏலமார் சோலைத் தருமநற் கான மெழில்குலா வியகுணத் தானம்
கோலம்வீற் றிருந்த வளமிகு நீல கண்டமே குலாசல வரைப்பு.

(இ - ள்.) மாலையினைப் போன்று வெள்ளிய அருவிநீ ரிழிகின்ற கைலாயமும், மதத்தை யொழுக்குகின்ற மலைபோன்ற யானைகள் ஒலிக்கின்ற மந்தரமும், நோயினைமிகக் கெடுக்கின்ற சம்புலாசியமும், குளிர்ச்சி பொருந்திய பனிக்கட்டிகள் நிறைந்த சிகரங்களோடுகூடிய இமயமலையும், ஏலச்செடிகள் பொருந்திய சோலைகளோடுகூடிய நல்ல தருமகானமும், அழகுபொருந்திய குணத்தானமும், அழகு தங்கியிருக்கின்ற வளமிகுந்த நீலகண்டமும், குலாசல மென்னுமிடமும். (௨௰)

வெறிகமழ் பொழில்சூழ் வில்வகங் கணமே வினைக்குறும் பகழ்தரு வராகம்
எறிதிரைக் கங்கை வட்டமேத் துநர்த மிடர்தபுத் தருள்சிலை வட்டம்
மறுவில்கந் தருவவனந்தெழித் தளிசேர் மலர்ச்சுனை வெறுத்தகே தாரம்
உறைமதுப் படப்பக் காமிகா ரணிய முதீசியுத் தாலக வைப்பு.

(இ - ள்.) வாசனை வீசுகின்ற சோலைகள் சூழ்ந்த வில்வகங்கணமும், தீவினையாகிய குறும்பினை வேரோடும் கல்லியெடுத்தற் கேதுவாகிய வராகமும், அலையை வீசுகின்ற கங்காவட்டமும், துதிக்கின்ற

வர்களுடைய துன்பத்தினை நீக்கி அருளினை யளிக்கின்ற சிலாவட்டமும், குற்றமில்லாத சுக்கிலவனமும், முழக்கி வண்டுகள் மொய்க்கின்ற மலர்களோடுகூடிய சுனைகள் நெருங்கிய கேதாரமும், தேனைத் துளிக்கின்ற தோட்டக் கூற்றினையுடைத்தாகிய காரிகாரணியமும் வடக்கே யுள்ள உத்தராலகமென்னு மிடமும்.

(வி - ம்.) தெழித்து-முழங்கி. வெறுத்த - செறிந்த. படப்பை- மருதநிலத் தோட்டக்கூறு. (சக)

கடவுளர் முதலோர் வணங்குசீ கோட்டங் காதரந் நபுங்குரு குல்லியம்
சுடர்மணி யிமைக்குங் கங்கைசூழ் காசி தொல்வினை யறுங்கபி லேசம்
மடவிய ராட லொருதமா காளம் வான்படர் புகழ்விரு பாக்கம்
தொடலைவன் மாயை விடைகொள்வன் மீகம் துலங்கிய தேசநீ வனமே.

(இ - ள்.) தேவர்கள் முதலியோர்கள் வணக்கம் செய்கின்ற ஸ்ரீகோட்டமும் துன்பத்தை நீக்குகின்ற குருகுல்லியமென்னும் வைப்பும், ஒளியோடுகூடிய முத்துக்க ளொளிர்கின்ற கங்கையாற்றினாற் சூழப்பட்ட காசியம்பதியும், பழவினை யறுதற்கேதுவாய கபிலேசமென்னும் வைப்பும், இளமைப் பருவத்தோடுகூடிய பெண்கள் நடனம் நீங்காத திருமாகாளமும், வான்சிறிதாகப் போர்க்கும் புகழினையுடைய விரு பாக்கமென்னும் வைப்பும், கூட்டமாகிய வலிய மாயைகள் விடைகொள்ளுதற் கேதுவாகிய திருவாரூரும், திருவீழிமிழலையும்.

(வி - ம்.) காதரம் - துன்பம். "தேங்கிய காதர ஆதரம் செப்பி" என்னும் தஞ்சை வாணன் கோவையானறிக. தொடலை - கூட்டம். வன்மீகம் - திருவாரூர். தேசினிவனம் - வீழிமிழலை. (சஉ)

திங்கள்சேர் மாடக் கீர்த்திவா சேசம் கங்கையா தாரசித் தியமே
துங்கமா தவர்தாழ் மந்தன காளம் துகளின்மா யாபுர மிபங்கள்
சிங்கநின் றுலம்ப வெருவுசீ சயிலம் தெகிழ்ந்தபூந் தண்டகா ரணியம்
பொங்குநீர்வைகை யாலவாய் பொருந்தம் பொருகரை யமர்புடைமருதூர்.

(இ - ள்.) சந்திரன் பொருந்துகின்ற இல்வரிசைகளை யுடைய கீர்த்திவாசேச மென்னும் வைப்பும், கங்கையாதாரசித்திய மென்னும் வைப்பும், உயர்வு பொருந்திய மாதவர்கள் வணங்குகின்ற மந்தனகாள மெனும் வைப்பும், குற்றமில்லாத மாயாபுரியும், யானைகள் கெடும்படி சிங்கங்கள் நின்று பிளிறுகின்ற ஸ்ரீ பருப்பதமும், மலர்ந்த பூக்களை யுடைய தண்டகாரணியமும், மிகுந்த நீரோடுகூடிய வையை நதியாற் சூழப்பட்ட மதுரையும், தாம்பிரவர்ணியின் கரையிலுள்ள திருப்புடை மருதூரும்.

(வி - ம்.) தெகிழ்ந்த - வாய்விண்ட; "தேங்கயத் துணிமலர் தெகிழ்ந்த நாற்றமும்" எனவரும் (கேமசரி, ௨௬) சிந்தாமணியா லுணர்க. (சங)

காவிரி வளத்த வுசீரமே தென்பாற் கவின்றவுத் தலிக நகரம்
பூவிரி பொதும்பர் மலயவெற் படுத்தோர் போக்கத விக்கிர மேசம்

நாவலர் துவன்றுஞ் சாலிவா டீசம் நற்கதி யருள்சம்பு வனமே
விரிகாந்தட் டிரிசிர வோங்கன் மேதக வளர்சுசப் பேசம்.

(இ - ள்.) காவிரியின் வளத்தையுடையனவாகிய உசிரமென்னும் வைப்பும், அக்காவிரியின் றென்றிசைக்கண்ணே அழகு விளங்குகின்ற உத்தாலக நகரமும், பூக்களை விரிக்கின்ற சோலைகளோடுகூடிய பொதியின் மலையைப் பொருந்தியவர்கள் நீங்குதற் கருமையாகிய விக்கிரம சிங்கபுரமும், நாவலர் குழுமிய திருநெல்வேலியும், நல்ல வீட்டினைத் தருகின்ற சம்புவனமும், பூக்களை விரிக்கின்ற காந்தட் செடிகளையுடைய திரிசிரா மலையும், மேன்மை பொருந்த வளர்கின்ற சுசப்பேசமென்னும் வைப்பும்.

(வி - ம்.) உசிரம் - காவிரிக் கரையிலுள்ளது. (சஉ)

பாட்டளி முரலும் பொய்கைசூழ் பஞ்ச நதம்பய னருள்புட்ப வனமே
கோட்டரி யுகளும் வாஞ்சியங் கோணை மதில்புடை குலவுசீ புரமெய்
வீட்டினர் வதியும் பசுபதித் தலமே வரும்பஞ்ச லோகமாத் தானம்
வாட்டமுற் றிரிக்கு மிடைமரு தென்றூழ் வழக்கறு மாடமா யூரம்.

(இ - ள்.) பாட்டுக்களை வண்டுகள் பாடுகின்ற தடாகங்களாற் சூழப்பெற்ற திருவையாறும், பயனைத் தருகின்ற புட்பக்காடும், மரக் கிளைகளிலே குரங்குகள் துள்ளிக் குதிக்கின்ற திருவாஞ்சியமும், அழியாத மதில்கள் பக்கத்தே விளங்குகின்ற ஸ்ரீபுரமும், உண்மையாகிய வீட்டினை யடைந்தவர்களாகிய தத்துவஞானிகள் தங்கும் பசுபதித் தானமும், பொருந்துகின்ற பஞ்சலோகமாத்தானமென்னுமிடமும், தன்னை யடைந்தோர்களுடைய தளர்ச்சி முற்றிலும் போக்கும் திருவிடைமருதூரும், சூரியன் செலவைத் தடைப்படுத்துகின்ற மாடங்களோடுகூடிய மாயூரமென்னும் திருப்பதியும்.

(வி - ம்.) கோணை - அழியாமை. ''கோணை வெம்மணிக்கொம்மை யெயிற்புரம்'' (நைடதம் - நகரப்படலம்). (சந)

சீர்த்தசித் திரவே திகமடி யார்க்குத் தேனிக்கு மாலிங்கே சுரமே
சூர்த்தவன் பிணிக டுமிசித்தா ரணியந் துயர்விடு சுநாகத வைப்பு
பார்த்தலத் தொளிகள் பரப்புகண் டீசம் பரவுசீர்ச் சிதம்பர நகரம்
ஓர்த்தவ ரலக்க ணறுத்திடுந் தால வனமத்தி யாபகே சுரமே.

(இ - ள்.) சிறப்பினையுடைய சித்திர வேதிகமென்னும் தலமும், அடியார்கட்கு இனிக்கின்ற மாலிங்கேசுவரமென்னும் வைப்பும் அச்சத்தைத் தருதற்கேதுவாகிய வலிய பிணிகளை நீக்குகின்ற திருவாவடுதுறையும், துயரைநீக்குதற் கேதுவாகும் சுநாகதமென்னுமிடமும், பூமியின்கண் ஒளிகளைப் பரப்புகின்ற திருக்கண்டீச்சுரமும், (யாவரும்) துதிக்கின்ற சிறப்பினையுடைய சிதம்பரநகரமும், (இறைவன் திருவருணிலையை) ஆராய்ந்தவர்களாகிய அடியார்களுடைய துன்பத்தினை நீக்குகின்ற திருப்பனந்தாளும், அத்தியாபகேசரமும்.

(வி - ம்.) தேனித்தல் - தியானித்தல். சித்தாரணியம் - திருவாவடுதுறை. (சச)

உடற்பய னளிக்கு மிருடிவிந் தியமே யும்பரார் தொழும்வராஞ் சலமே
நடப்பல நதிசூழ் காஞ்சிமா நகரந் நண்டலே யுடைவடா ரணியம்
மடப்படு மலந்தீர்க் கருடிருப் பாசூர் வயங்கிய வியாக்கிரே சுரமே
கடப்பருஞ் சீர்த்தி விரிஞ்சைமா நகரங் கரிசிரித் திடுந்திரு வல்லம்.

(இ - ள்.) உடலெடுத்ததன் பயனை யளிக்கின்ற இருடிவிந்திய மென்னுந் தலமும், தேவர்கள் வணங்கும் வராஞ்சல மென்னும் வைப்பும், பொருந்திய பலநதிகள் சூழப்பெற்ற காஞ்சிநகரமும், சோலைகளை யுடைய திருவாலங்கா டென்னும் தலமும், அறியாமையோடுகூடிய மலத்தினைப் போக்கித் திருவருளைப் பாலிக்கின்ற திருப்பாசூரும், விளங்குகின்ற திருப்பாதிரிப்புலியூ ரென்னும் வைப்பும், நீக்குதற்கரிய சிறப்புடனேகூடிய திருவிரிஞ்சைநகரமும், குற்றங்களை யெல்லாம் போக்கும் திருவல்லமென்னும் தலமுமாகிய.

(வி - ம்.) பலநதிகள் "கம்பை பம்பை மஞ்சினிபிச்சி - கலிச்சி பொன்னி மண்ணி வெஃகாவே" என்னும் பலநதிகள். மடப்படு: விகாரம். பாசூர் - மூங்கில்வனம். பாசு - மூங்கில். இத்தலப் பெயர் கள் "எட்டனை நாற்றியமுட்டிய இவை" என அடுத்த செய்யுளில் வரும் இவை யென்னும் சுட்டுப்பெயர் கொண்டது. (௪௭)

எட்டனை நாற்றி யிரட்டிய விவைமற் றெறிதிரைப் பெரும்புனற் கங்கை
வட்டவார் சடிலத் திளம்பிறை கதிர்க்கும் வள்ளலா ரமர்தல மாகும்
அட்டொளி விரிய வழற்பொறி தும்மு மரித்தலை வேல்வல னுயர்த்த
கட்டழு கெறிக்கு மறுமுகக் கடவுள் கதியநற் றலங்களுந் தெரிப்பாம்.

(இ - ள்.) எட்டினை நிலைமொழியாக நிறுவி (அவ்வெட்டனையே) இரட்டித்துக் கூடியதனாற் போந்த இவ் வறுபத்துநான்கு தலங்களும், எறிகின்ற அலைகளோடுகூடிய மிக்க நீரையுடைய கங்கை நதியுடனே வட்டமாகக் கட்டிய பிறைச்சந்திரன் ஒளியைச்செய்யும் வள்ளலாகிய சிவபிரானெழுந்தருளிய திப்பிய தலங்களாகும். செறிந்த ஒளிவிரியு மக்கினிப் பொறிகளை வெளியிடுகின்ற கூர்மைபொருந்திய தலையினை யுடைய வேற்படையை வலப்பக்கத்தினுயர்த்த மிக்க அழகினை வெளி யிடுகின்ற அறுமுகப்பெருமான் விரும்பிய நல்ல தலங்களையும் தெரிவிப்பாம்.

(வி - ம்.) எட்டனைநாற்றி யிரட்டுதல் - எட்டே எட்டே - அறு பத்துநான்கு தலம். அட்டு - செறிந்த. தும்மு - கக்குகின்ற. அரி - கூர்மை. கட்டழகு - மிக்கவழகு. (௪௮)

பிறங்கிய பவானி சங்கமஞ் சமணப் பிராணநா சனம்புயன் மேகம்
உறங்கெயி லுடுத்த பவானிசங் கரம்விண் ணுவகையிற் பணிசர வணமே
அறங்கிளர் குமார புரமணங் கலுற்றி யலர்விரி கதம்பகா ரணியம்
மறங்கடி வன்னித் தானதீ ரோடை மலிந்துவாங் கியசத்தி புரமே.

(இ - ள்.) விளங்கிய பவானி சங்கமமென்னும், தலமும், சமணப் பிராண நாசனமும் நீரோடுகூடிய மேகங்கள் தங்குகின்ற மதில்களாற்

ருமப்பெற்ற பவானிசங்கரமென்னும் தலமும், தேவலோகத்திலுள்ளவர் மகிழ்வுடன் வந்து வணங்குகின்ற சரவணமென்னும் தானமும், தருமம் விளங்குகின்ற குமாரபுரமும், வாசனையை வெளியிட்டு மலர்கள் விரியப்பெற்ற கடம்பமாவனமும், பாபத்தை நீக்குகின்ற வன்னித்தானமென்னும் தலமும், நீரோடைகள் நிறைந்து சுற்றிய சந்திபுரமும்.

(வி - ம்.) புனல் - நீர். விண் - ஆகுபெயர். மறம் - பாவம். வாங்கிய - வளைந்த. (௬௯)

வரம்பல வுதவுஞ் சண்முக புரஞ்சீர் மல்கிய கன்னபூ டணமேர்
பரந்தெழு கீர்த்தி பூடணம் வாகு லேயமா புரம்பவுந் திரமே
விரவுமா ரூட மேடக மோசை விரியுநற் பிரமத மோசம்
புரவுபூண் டருளுங் கந்தமா தனமே போகுயர் முடிக்கிர வுஞ்சம்.

(இ - ள்.) (அடியார்கள் விரும்பிய) பல வரங்களையு முதவுஞ் சண்முகபுரமும் சிறப்பு மலிந்த கன்னபூடணமென்னும் தலமும், அழகு பரந்தெழுகின்ற கீர்த்தி பூடணமென்னும் தலமும், வாகுலேய மாபுரமென்னும் தலமும், தூய்மையே பொருந்துகின்ற ஆரூடமென்னும் தலமும், திருவேடகமென்னும் தலமும், பலவித ஒலிகளு மலியப்பெற்ற நல்ல பிரமதமோசமெனுந் தலமும் காத்தலை மேற்கொண்டி யாவர்க்கு மருளினைச் செய்தற்கேதுவாகிய கந்தமாதன மென்னும் வைப்பும், மிகவுமுயர்ந்த சிகரங்களோடு கூடிய கிரவுஞ்சமென்னும் வைப்பும்.

(வி - ம்.) போகு - உயர்ந்த. (௭௦)

தவமலி வேத சயிலமின் புறுத்துஞ் சத்திய வாசகம் பிறவி
அவமறு குமர கோட்டமே ழுலகு மாதரித் துறுங்கவு மாரம்
துவர்வளம் படைத்த தாமிர சூடத் துவசமே வில்வகா னனமே
திவளொளி மயூர மதம்விடுந் தானத் தேவகும் பங்குகைத் தானம்.

(இ - ள்.) தவங்கள் முற்றுதற்கேதுவாகிய வேதசயிலமென்னும் தானமும், (தன்னை யடைந்தவர்களுக்கு) இன்பினைச் சேர்த்தற் கேதுவாகிய சத்தியவாசக மென்னும் தலமும், பிறவியினால் வருகின்ற குற்றங்களை நீக்குதற்கேதுவாகிய குமரகோட்டமும், எழுவகை யுலகின் கண்ணுள்ளவர்களும் விரும்பிப் பொருந்துகின்ற கௌமாரமென்னும் தலமும், பவளத்தின் வளப்பத்தினை யுடைத்தாகிய தாமிரசூடத்துவசமென்னும் தலமும், வில்வாரணியமும், மிக்க ஒளியோடு கூடிய மயில்கள் மதம் நீங்குதற்கேதுவாகிய விடத்தோடு கூடிய தேவகும்பக்குகைத் தானமென்னும் வைப்பும்.

(வி - ம்.) மயூரம் - மயில். (௭௧)

எழில்வளர் விசாக பவனமெய்ஞ் ஞான மீத்தருள் விந்தியா வனநல்
விழவுகொண் மார வந்தகா ரணமெய் விளைத்திடுஞ் சுவேதமா வனமேர்
தழைசுகு மார சிகாசலம் வளங்க டகுஞ்சுரா பயப்பிர தந்தேன்
வழிமுழை குவட்டு வள்ளிவெற் போங்கு மாவிசு புரமெனுந் தலமே.

(இ - ள்.) அழகு விளங்குகின்ற விசாக பவனமென்னும் தலமும், உண்மைஞானத்தைத் தருகின்ற வித்தியாரணியமும், நல்ல சிறப்பினைக் கொண்ட மானந்த காரணமும், உண்மையுளவாதற் கேதுவாகிய திருவெண்காடும், அழகு தழைக்கின்ற சுகுமார சிகாசலமென்னும் தலமும், பலவளங்களும் பொருந்திய சுராபயப்பிரத மென்னும் தலமும், தேனிறையும் குகையினையுடைய சிகரத்தோடு கூடிய வள்ளிமலையும், உயர்ந்த மாவிரபுரமென்னும் தலமும்.

(வி - ம்.) பவனம் - கோவில். விழவு - சிறப்பு. (௯௨)

வளமிகு சோமாக் கந்தமுர் மலந்தீர் வாகுலே யாசிர மந்தொல்
பளகறு கெந்த சயிலநீன் முகின்மீப் படிதருஞ் சித்திர கூடம்
தளிரிணர்ச் சோலைச் சம்பகே சரங்கோ முக்கியந் தறுகண்மா வேழம்
களகள முழங்குங் காளத்தி விலங்கல் கருணைசெய் பிரணவ புரமே.

(இ - ள்.) வளப்ப மிகுந்த சோமாக்கந்த மென்னும் தலமும், மும்மலர்களையும் நீக்கும் வாகுலேயாச்சிரம மென்னும் வைப்பும், பழமையாகிய குற்றம் நீக்குதற்கேதுவாகிய கெந்தமாதன மென்னும் தலமும், நீலநிறம் பொருந்திய மேகக்கூட்டங்கள் மேலே படிதருகின்ற சித்திரகூடமென்னும் வைப்பும், தளிரோடுகூடிய பூங்கொத்துக்களையுடைய சோலையைத் தன்னிடத்தே கொண்ட சம்பகேசர மென்னும் தலமும், கோமுகி என்னும் தலமும், அஞ்சாமையோடு கூடிய யானைகள் களகள என்னும் ஒலிக்குறிப்புடன் பிளிறும் திருக்காளத்தி யென்னும் மலையும், தன்னையடைந்தவர்க்குக் கருணையைச் செய்தற் கேதுவாகிய ஓங்கார மென்னும் தலமும்.

(வி - ம்.) இத்தலம் தணிகையின் பக்கலிலுள்ளது. நீல்முகில் - கடைக்குறை. களகள - ஒலிக்குறிப்பு. பளகு - குற்றம். (௯௩)

உரனிகழ் ஞான சனங்கதிக் கேணி யுளுற்றுறும் புத்திர காமம்
அரிறபு மிந்தி ராபயப் பிரத மலிர்சிவோ பாசிய நகரம்
பிரமநிக் கிரகம் பிடுசேர் பிரம வனுக்கிர கம்பிழை தபுத்தோர்
இரவுநன் பகலும் வழிபடும் வாத புரமில கியவராஞ் சலமே.

(இ - ள்.) தன்னையடைந்தவர்க்கு ஞானமுளவாதற்குக் காரணமாகிய ஞானசன மென்னும் தலமும், வீட்டிற் கேதுவாகிய சோபான முறைகளை யுளவாக்குகின்ற புத்திரகாம மென்னும் தலமும், தன்னையடைந்தோர் பிணக்கை நீக்குதற் கேதுவாகிய இந்திரா பயப்பிரத மென்னும் தலமும், விளங்குகின்ற சிவோபாசிய நகரமென்னும் தலமும், பிரமநிக்கிரக மென்னும் தலமும், பெருமை பொருந்திய பிரம அனுக்கிரகமென்னும் தலமும், பாவமாகிய குற்றத்தை நீக்கியவர்கள் இரவும் பகலும் வழிபடுகின்ற திருவாதவூரென்னும் தலமும், வராஞ்சலமென்னும் தலமும். (௯௪)

பொலிந்தசீர் வரத சயமபி டேக புரமலர்க் குழுஞ்சுனை படப்பை
மலிந்தகல் யானை காளம்விழ் வரங்கள் வழங்கிடுஞ் சுப்பிர மணியம்

ஒலிந்தபூர் பொதும்பர் விந்தியா தரமே மனங்கவர் மணிகண்டே சுரமே
சலந்தவிர் சமயத் தானபஞ் சகமென் றுரைந்திடுந் தலங்களோ ரைந்தே.

(இ-ள்.) பொலிவுபெற்ற சிறப்புடனே கூடிய வரதசயமென்றுந் தலமும் அபிடேகபுரமென்னும் தலமும், மலர்களோடு கூடிய குறிஞ்சுனைகளும், தோட்டக் கூறுகளும், நிறைந்த கலியாணகானமென்னும் தலமும், அடியார்கள் விரும்பிய வரங்களை வழங்குதற்கேதுவாகிய சுப்பிரமணியமென்றும் தலமும், தழைத்த பூக்களோடு கூடிய சோலையையுடைய வித்தியாதர மென்னும் தலமும், கண்டோருள்ளத்தைக் கவர்கின்ற மணிகண்டேசுரமென்றும் தலமும், கோபத்தை நீக்குகின்ற சமயத்தான பஞ்சகமென்று சொல்லப்படும் தலங்களோரைந்தும்.

(வி-ம்.) விழ் - விரும்புகின்ற. ஒலிந்த - தழைந்த; ஒலியைச் செய்கின்ற எனினுமாம். பஞ்சகமென்பது ஐந்து தலம். (௩௬)

தரைபுகழ் சயந்த புரமரு ளெவர்க்குந் தருங்குமா ராசல மணிகள்
வரைகிடந் திமைக்கும் வேங்கட முந்தி வழங்குசீ பூரண கிரியென்
றுரைதரு நாலெண் ணிருதல முருகற் குறுதல நுமக்கோத்த தலமும்
புரையிலித் தலத்து ளுயர்ந்தநான் கிற்றிற் புகன்றநாற் றலமவை யவற்றுள்.

(இ-ள்.) உலகத்திலுள்ளவர் புகழத்தக்க சயந்தபுரமும், அருளை யாவர்க்கும் கொடுத்தற்கேதுவாகிய குமாராசலமென்றும் மலையும், முத்துக்கள் மலையிடங்களிற் கிடந்து ஒளிர்கின்ற திருவேங்கடமலையும் முத்தியைக் கொடுக்கின்ற சீபூரண கிரியுமென்று சொல்லத்தக்க அறுபத்துநான்கு தலங்களும் முருகப்பெருமானுக் கன்புமிக்க தலமாகும். குற்றமில்லவாகிய இங்குக் கூறிய தலங்களுள் வைத்துயர்ந்தன இறுதியிற் கூறிய நான்கு தலங்களாகும். அவை (அத்தலங்கள்) நுங்கள் தகுதிக்கொத்த தலமாகும். அவற்றுள் சீபூரணகிரி நூற்றிருபத்தெட்டினு மேலாய் விளங்கும் என அடுத்த பாட்டுடன் கூட்டுக.

(வி-ம்.) சீபூரணகிரி - தணிகைமலை. (௩௭)

மதந்தவி ரடியார் வாதனை மலமும்
வாட்டுசீ பூரண கிரியாம்
விதந்தநூற் றிருபத் தெட்டினு மேலாய்
விளங்குமால்வி னைக்குறும் பொதுக்கிப்
பதந்தர வல்ல சத்திய விரத
பாற்கர கேந்திர மாகி
இதந்தரு மிறைவற் கருண்மொழி கொடுத்த
திதுவலா தின்மையின் மாதோ.

(இ-ள்.) ஆணவமலம் நீங்கிய மெய்யடியார்களின் வாசனைமலத்தினையும் கெடுக்கின்ற சீபூரணகிரி எம்மாற் சிறப்பித்துச் சொல்லப்

பெற்ற நாற்றிருப்பத்தெண் டளிகளினும் மேலாகி விளங்கும். வினையின் சேட்டைகளை நீக்கி வீடுபேற்றினைத் தர வன்மையையுடைய சத்திய விரத சூரியனுக்குரிய தானமாகி (மக்கண் முதலியோர்க்கு) இன்பினைத் தரவல்ல சிவபெருமானுக்குச் செவியறிவுறுத்தது இத்தலமல்லாமல் வேறு தலம் இல்லையாம்.

(வி - ம்.) உம்மை உயர்வு சிறப்பு. பாற்கரன் - சூரியன். க்ஷேத்திரம் - சேத்திரம் என்பதன்றிரிபு. இதம் - இன்பம். அருண்மொழி - செவியறிவுறுத்தல் ஆணவம் நீங்கியும் வாசனை நீங்காதாதலின் அவ்வாசனாமலத்தையும் என்றூர்மை கொடுத்தோதினர். (௫௭)

என்றுமோ ரியல்பி னின்றிடுஞ் சீபூ
ரணத்தினை யாயிடை வதிவோர்
மன்றுநன் றுறலா லப்பெயர்த் தாகும்
வானவர் திருவெலா நிரம்பி
நின்றிட லானு மப்பெய ரதற்கு
நிகழ்த்துவர் கணிகமாத் திரையின்
வென்றிகொள் வரங்கள் வழங்கலிற் கணிக
வெற்பென மிகுமொழி யுடைத்தால்.

(இ - ள்.) எக்காலத்திலுமொரு தன்மையதாக நிற்கின்ற சீபூரணத்தினை ஆண்டுத் தங்குகின்றவர்கட்கு நிச்சயமாக வீட்டினைத் தருதலால் அச்சீபூரணமென்னும் பெயரினையுடையதாகும். தேவர்கள் செல்வமெல்லாம் நிறைந்து நிற்றலான் அச்சீபூரணமென்னும் பெயரினையிட்டும் மலையை வழங்குவார்கள். கணநேரத்தில் மேன்மையைக்கொண்ட வரங்களை (விரும்பியவர்க்கு) வழங்குதலால் கணிக மலையென உயர்த்துச்சொல்லும் மொழியினையுமுடையது.

(வி - ம்.) ஸ்ரீ. திரு. பூரணத்தினை - முத்தியாகிய நிறைவை. நன்று - வீடு. கணிகம் - க்ஷணிகமென்பதன்றிரிபு. வென்றி - மேன்மை.

மூலமா யுலக முழுவதும் படைத்த
முதல்வனை முருகனைத் தனக்கு
மூலமாக் கொண்டு வணங்கலின் மூலாத்
திரிதின மொருமலர் மூன்று
கோலமார் காவி யுயிர்த்தலி னல்ல
காத்திரி குமைத்திடுங் கற்ப
காலமு மழியா திருத்தலிற் கற்ப
சித்தமர் தணிதலிற் றணிகை.

(இ - ள்.) காரணமா யுலகமுற்றிலு முளவாக்கிய சிவபெருமானை முருகக் கடவுளைத் தனக்கு மூலகாரணனாகக்கொண்டு வணங்குதலினால் மூலாத்திரியாம். நாடோறும் மூன்று மலர்களை அழகுபொருந்திய நீர்க்காவிக்கொடி பூத்தலின் இருணிரம்பிய காவியத்திரியாம். (இறை

வன்) சங்கரிக்கின்ற கற்ப முடிவிலும் அழியாதிருத்தலின் கற்பசித்தாம். அமர்தனிதலினாலே தனிகையாம்.

(வி - ம்.) மூலம் - காரணம். காவியத்திரி - காத்திரி என விகாரமாயிற்று. அத்திரி - மலை. சித்து - அழிவில்லாதது. ஒரு காவிக் கொடி மூன்று காவி மலரைப் பூக்கின்ற தென்க. (௯)

பிரணவப் பொருளை யுணர்த்தலிற் பிரண
வார்த்தமா நகரமிந் திரற்கு
வரமளித் திடலா லிந்திர நகரி
மகதியாழ் முனிக்குறு பிரியம்
விரவிய சிறப்பா னாரதப் பிரியம்
வீட்டினை யகோரனென் றுரைக்கும்
அரிறபு தவிர்ந்தோற் குய்த்தளித் திடலா
லகோரகை வல்லியப் பிரதம்.

(இ - ள்.) பிரணவமென்னும் மந்திரத்தின் பொருளை (இறைவனுக்கு) உணர்த்தினமையாலே பிரணவார்த்த மாநகரமாகும். இந்திரனுக்கு வேண்டிய வரங்களை யளித்தலினாலே இந்திர நகரியாம். மகதியென்னும் யாழினையுடைய நாரதமுனிவனுக்கு மிக்க பிரியங்கலந்த சிறப்பினாலே நாரதப் பிரியமென்னும் பெயரையுடையதாம். வீடுபேற்றினை அகோரனென்று சொல்லப்படும் குற்றம் நீங்கியோனுக்குக் கொடுத்துக் காத்தலின் அகோர கைவல்லியப் பிரதமென்னும் பெயரினையுடையதாம்.

(வி - ம்.) அரில் - குற்றம். அகோரன் - ஒரு முனிவன். (௧௦)

இறுதியிற் கிளந்த விந்நாற் பெயரு
மீண்டிய முதலுக நான்கும்
முறைமையி னெவ்வொன் றுரிமையி னொடுத்து
மொழிந்திடப் படுமெந்த வுகத்தும்
மறுமுத றுமிக்கும் வளங்கெழு சீபூ
ரணப்பெயர் வழங்கிடப் படுமால்
அறிமினோ குறிக ளந்திருக் குன்றந்
றனுக்கடை யாளமுங் கேண்மின்.

(இ - ள்.) இறுதியிற் கூறிய இந்நான்கு பெயரும் பொருந்திய முதலுக முதலிய நான்கு யுகங்களுக்கும் முறைமையினெவ்வொன்று உரிமையோடு வழங்கப்படும். எந்த யுகத்திலும் குற்றத்திற்குரிய காரணங்களைக் கெடுக்குஞ் சீபூரணப் பெயர் வழங்கப்படும். இத்திருமலைக்குரிய பெயர்களை அறிமின்கள். அத்திருமலைக்குரிய அடையாளமுஞ் சொல்லக் கேண்மின்கள்.

(வி - ம்.) மறு - குற்றம். முதல் - காரணம். குறி - பெயர். (௧௧)

தெண்டிரைக் கங்கைக் காசிமா நகர்க்குத்
தெனாதியோ சனையிரு நூற்றின்
வண்டமிழ்க் காஞ்சி வடாதிரண் டனிற்கீழ்
வளைகடன் மேற்றிசை யைந்தில்
தொண்டர்சூழ் விரிஞ்சை வடகிழக் கெல்லை
மூன்றினிற் றுலங்குகா ளத்தி
அண்டர்சூழ் வரைக்கு நிருதிமுன் றரையி
னரசுவீற் றிருப்பதக் குன்றம்.

(இ-ள்.) தெள்ளிய அலையோடு கூடிய கங்காநதியாற் சூழப் பெற்ற காசியாகிய பெரிய நகரினுக்குத் தெற்கே இருநூறு யோசனை தூரத்தின் கண்ணும், வளப்பம் பொருந்திய தமிழினையுடைய காஞ்சிமா நகர்க்கு வடக்கே இரண்டி யோசனை தூரத்தின் கண்ணும், கிழக்கே வளைந்துள்ள கடலுக்கு மேற்றிசை ஐந்தியோசனை தூரத்தின் கண்ணும், அடியார்கள் சுற்றி வணங்குகின்ற திருவிரிஞ்சை நகரத்தின் வடகிழக்கெல்லையினின்றும் மூன்றியோசனை தூரத்தின் கண்ணும், தேவர்கள் சூழப்பெற்ற விளங்குகின்ற திருக்காளத்தி மலைக்குத் தென் மேற்குத் திசையின் மூன்றரை யோசனை தூரத்தின் கண்ணும் அத் தணிகைமலை வேறொன்றற்கில்லாத சிறப்புடனிருப்பதாகும்.

(வி-ம்.) தெனாது - தெற்கில். வடாது - வடக்கில். வளைகடல் : வினைத்தொகை. (௬௨)

குழவிவெண் மதிய மிலைச்சிய வேணிக்
குருபரன் பிரணவப் பொருளை
விழைதகத் தவத்திற் பெற்றுவீ ராட்ட
காசஞ்செய் வீராட்ட காசம்
அழலவிர்ந் தனைய நெட்டிலைக் கதிர்வே
லவாயினி தமர்ந்தருள் குமரன்
சுழல்பவங் குமைக்குந் தன்பெயர் விளங்கத்
தொழுஞ்சிவக் குறியுமாங் குளவால்.

(இ-ள்.) இளமையாகிய வெள்ளிய பிறைச்சந்திரனைச் சூடிய சடாபாரத்தினையுடைய குருபரனாகிய சிவபெருமான் பிரணவார்த்தத் தினை விருப்பந்தகத் தவஞ்செய்து பெற்று வீரநகை செய்த வீராட்ட காசம். அக்கினி விரிந்தாலொத்த நீண்ட இலை வடிவினையுடைய ஒளி யோடுகூடிய வேற்படையை விரும்பி இனிதாக எழுந்தருளியுள்ள குமா ரக்கடவுள் (பிறப்பிறப்பிற்) சுழலுதற் கேதுவாகிய பாவங்களைக் கெடுக்கும் தன் பெயர் விளங்கும் வண்ணம் தொழுகின்ற குமரேசலிங்கம் அத் தணிகையின் கண்ணுள்ளன.

(வி-ம்.) வீராட்டகாசம் - வீரநகை செய்தல். சுழல்பவம்-(பிறப் பிறப்பிற்) சுழலுதற் கேதுவாகிய பாவம். தன், என்டுக் குமரக்கடவுள்,

குன்றவர் மடந்தை குவிமுலை மார்பிற்
கோட்டுமண் கொளப்புணர் வேலோன்
அன்றுமெய் யன்பிற் போற்றிய வாபச்
சகாயனென் றடற்களிற் றிறையும்
மன்றலங் கமலத் தயன்படைப் பினையோன்
வழங்குமா றருந்தவ முஞற்றி
ஒன்றிய வுளத்தான் வழிபடு மெண்டோ
ளுத்தமன் குறியுமற் றுளவால்.

(இ - ள்.) குன்றவாணர் புதல்வியாகிய வள்ளிநாயகியாருடைய குவிந்த கொங்கைகள் குத்திப் பெயர்க்குமாறு கூடுகின்ற மார்பினையுடைய முருகக் கடவுள் நன்மை யமைந்த மெய்யன்பினால் வழிபட்ட ஆபச்சகாயனென்று சொல்லப்படுந் திருப்பெயரினையுடைய வலிமை பொருந்திய யானைமுகப்பிரானும், வாசனை பொருந்திய தாமரை மலரினெழுந்தருளியிருக்கின்ற பிரமனுக்குதற் றொழிலைக் குமாரக்கடவுள் செய்யும் வண்ணம் அரிய தவத்தைச் செய்து ஒற்றுமைப்பட்ட திருவுள்ளத்தோடு வழிபாடு செய்த எண்டோள்களையுடைய உத்தமனாகிய குமாரலிங்கமும் அங்குள்ளனவாகும்.

(வி - ம்.) கோட்டுமண் கொளல்–குத்திப்பெயர்த்தல். வேலோன்-முருகன். குவிமுலை கோட்டுமண் கொளப் புணர்மார்பின் வேலோன் எனக் கூட்டுக.

இதனை,

''வாருயர் பெண்ணை வருகுரும்பை வாய்ந்தனபோல்
ஏரிய வாயினு மென்செய்யும்—சீரிய
கோட்டானைத் தென்னன் குளிர்சாந் தணியகலம்
கோட்டுமண் கொள்ளா முலை.''

என்னு முத்தொள்ளாயிரச் செய்யுளா னறிக. (௧௭)

குருமொழி வேட்டு நந்திமா தவங்கள்
குயிற்றிய குகையுமற் றவற்கு
மருமலர் கடப்பந் தாரினு னழைத்த
மணித்திரை நந்திநந் தினியும்
பொருவில்செந் தமிழ்க்கு முதற்குரு வாகப்
பொலிவரம் வரையுரங் கிழித்த
முருகனுய்த் தளிப்ப வகத்தியன் போற்று
மொய்யொளி யிலிங்கமு முளவால்.

(இ - ள்.) செவியறிவுறுதலை விரும்பி நந்தியெம்பெருமான் தவங்களைச் செய்த குகையும், அந் நந்தியெம்பெருமானுக்கு வாசனை விரியும் கடப்பமாலையை யணிந்த முருகப்பெருமா னழைத்தருளிய

முத்துக்களையுடைய அலைகளோடுகூடிய நந்திநந்தினி யென்னும் நதியும், ஒப்பில்லாத தமிழ்நூலுக்கு முதற்குரவனாகப் பொலிதற் கேதுவாகிய வரத்தினைக் கிரௌஞ்சகிரியின் மத்திய பாகத்தைப் பிளந்த முருகப்பெருமானருளிச் செய்ய, அகத்திய முனிவன் போற்றுகின்ற மிக்க ஒளியையுடைய இலிங்கமு மங்கணுள்ளனவாகும்.

(வி - ம்.) குருமொழி–உபதேசம். நந்திநந்தினி – ஓர் நதி. (௬௫)

இந்திரன் பிரமன் மாதவன் சேட
　　னிவர்வலிச் சூரன்கைக் கவர்ந்த
அந்தமி றங்கள் வளம்பெற வேண்டி
　　யருச்சித்த வருட்குறி பலவும்
சுந்தர மனையை யிழந்தமா லரன்பாற்
　　றுகளறு பெருந்தவ மாற்றி
மைந்துபெற் றெண்ண முற்றிமீண் டருளை
　　வழங்கவாழ் சேக்கையு முளவால்.

(இ - ள்). இந்திரனும், பிரமனும், விண்டுவும், ஆதிசேடனுமாகிய இவர்கள் நெறிகடந்து செல்கின்ற வலியையுடைய சூரன் கைப்பற்றிய அழிவில்லாத தங்கள் செல்வங்களைப்பெற விரும்பி அருச்சனை செய்த அருளோடுகூடிய இலிங்கங்கள் பலவும், அழகினையுடைய மனைவியாகிய சீதையை இழந்த இராமன் சிவபெருமானிடத்திற் குற்றமற்ற பெரிய தவத்தினைச்செய்து (பகையை வெல்லும்) வலிமையைப் பெற்று எண்ணிய எண்ணங்களு முற்றுப்பெற்று மறுபடியும் அருளை வழங்க வாழ்கின்ற இடங்களுமுள்ளன வாகும்.

(வி - ம்.) இவர்தல் - நெறிகடந்து சேறல். வளம் - செல்வம். சுந்தரம் - அழகு. சேக்கை - இடம். (௬௬)

பாடகம் பொலிந்த திவவியாழ் முனிவன் வந்தனை புரியருட் குறியும்
பீடகம் பொலிந்த வம்முனி மொழியப் பெருகிய வோகையி னிளையோன்
தோடகம் பொலிந்த வினைர்மலர்க் கூந்தற் சுந்தர வல்லியை மணந்து
பாடகம் பொலிந்த வடிப்பிடி யோடும் பயிலுமப் பருப்பத முடைத்தால்.

(இ - ள்.) மனத்துட் பெருமை பொலிவுபெற்ற அந் நாரத முனிவன் சொல்லப் பெருகிய மகிழ்ச்சியான் முருகக்கடவுள் சென்று இதழ்களைத் தன்னகத்தே கொண்டு விளங்கிய பூங்கொத்துக்களையுடைய கூந்தலோடுகூடிய சுந்தரவல்லியாகிய வள்ளியம்மையாரை மணந்து, பாடகமென்னும் மணி பொலியப்பெற்ற அடியினையுடைய தெய்வயானையாருடனும் தங்கும் அத்தணிகை மலையானது, முருக்காணிகளாற் பொலிந்த நரம்புக் கட்டினையுடைய யாழ் ஏந்திய நாரத முனிவன் வணக்கம்புரியும் சிவலிங்கத்தையும் உடையது.

(வி - ம்.) பாடகம் - மகளிர் காலிலணியும் ஒருவகையணி; ஆசிரியர் நச்சினார்க்கினியர் "ஒரு கம்பியாய், பல முடக்காலே போக்குவரவுமுண்டாமாற் போலத் தோன்றிக் காலைவிடாதே கிடக்கும்" என்றனர்.

சிந்தா - காந்தரு. 17. செய். உரை. மலரிணர்க் கந்தலெள மாற்றுக. சிவலிங்கத்தையு மப்பருப்பத முடைத்தெனக் கூட்டுக. (௬௭)

கடம்பணி குமர ஒன்முகன் றிருமால்
கதிர்மணிச் சேடனா ரதன்றார்த்
தடம்புயக் குலிசத் திந்திரன் செழுந்தீந்
தமிழ்முனி பெயரினால் விளங்கும்
இடம்படு தீர்த்தஞ் சிவகங்கை யெட்டு
மியம்பிய நந்திநந் தினியும்
மடந்தபு நும்மால் விளங்குமேழ் சுனையு
மணிவரை யண்மையி னுடைத்தால்.

(இ - ள்.) கடப்பமாலையை யணிந்த முருகப்பெருமானும் திருமாலும் ஒளியோடுகூடிய மணிபொருந்திய ஆதிசேடனும், நாரதமுனிவனும், மாலையை யணிந்த புயத்தோடுகூடிய வச்சிராயுதத்தையுடைய இந்திரனும், செழித்த இனிமையாகிய தமிழ் முனிவனாகிய அகத்தியனும் ஆகிய இவர்கள் பெயரினால் விளங்குகின்ற தீர்த்தமேழும் சிவகங்கை யொன்றும் ஆகிய எட்டும், மேற்கூறிய நந்திநந்தினி யென்னும் நதியும், நுங்கள் பெயரால் விளங்குகின்ற ஏழு சுனைகளுமாகிய இவற்றை அழகிய தணிகை மலையானது அண்மைக்கண் உடையதாம். (௬௮)

நறுமணங் கமழுந் தாமரை நிகர்த்த
நகைமுக மாறுமெல் லுமிழும்
மறுவறு மணிகள் வயின்வயி னிமைத்து
மல்கிருட் செறிவுகால் சீக்கும்
அறுமணிக் குவடா யறுமுகத் திறையே
யாயதா லடைந்தவ ருயிர்மேற்
கொறுகொறுத் துழலும் வல்வினைப் பகையைக்
கொலைபுரிந் தருளுமக் குன்றம்.

(இ - ள்.) நல்ல வாசனை வீசுகின்ற தாமரைமலரை யொத்த (முருகப் பெருமான்) விளங்குகின்ற திருமுகங்களாலும், ஒளியைக் கக்குகின்ற குற்றமற்ற இரத்தினங்கள் இடமிடங்கடோறும் பிரகாசித்து நிறைந்த செறிவைத் துடைக்கும் ஆறழகிய சிகரங்களாகி அறுமுகக் கடவுளே யானதனால் ஆண்டடைந்தவர்களுயிரிடத்துக் கோபித்துச் சுழலுகின்ற வல்வினையாகிய பகையைக் கொலைசெய்தருளும் அக்குன்றம்.

(வி - ம்.) ஆறுமுகங்களும் ஆறு சிகரமாகி யம்மலை அறுமுகப்பெருமான் திருவுருவாயிருந்தன வென்பார். "அறுமணிக் குவடாய் அறுமுகத் திறையே யாதலான்" என்றார். கொறு கொறுத்தல் - கோபித்தல்: குறிப்புச் சொல்லாகிய இரட்டைக்கிளவி. இதனை

"இனிச்சிறி தெழுந்து வீங்கி யிட்டிடை கோறும் நாங்க
ளெனக்கொறு கொறுப்ப போலு மிளமுலைப் பரவை யல்குல்"

எனவரும் சிந்தாமணி சுரமஞ்சரியாரிலம்பகம் சுகஆம் செய்யுளடியானு
முறை யானுமுணர்க. (சுக)

சேயிடை யிருந்து கேட்பினுந் தொழினுஞ்
செப்பினும் சிந்தனைத் திடினும்
ஆயிடை வந்த லாதிகள் செயினு
மலகில்பல் பவத்தினு மீட்டும்
மாயிரு வினையுஞ் சவட்டிமீ ளாத
வரம்பிலின் புறத்துவ தென்றல்
காயிலை வேலோன் றணிகையின் பெருமை
கட்டுரைக் கடங்குவ தன்றே.

(இ - ள்.) இத்தணிகை, சேய்மைக்கண்ணே ஒருவனிருந்து கேட்டாலும் வணங்கினும், சொல்லினும், மனதிற் றியானிப்பினும், அச்சேய்மைக்கண்ணே தங்குதல் முதலிய செய்யினும் கணக்கிட இயலாத பல பிறவியினின்று மீட்டும் பெரிய நல்வினை தீவினையாகிய இருவினைகளையும் கொன்று ஒரு ஞான்றும் திரும்பிவாரா நிலைமையாகிய வீட்டின்பத்தினைச் சேர்க்குமென்றால், பகைவரை வருத்துகின்ற தகட்டு வடிவத்தினையுடைய வேற்படையினையுடைய முருகக்கடவு ளெழுந்தருளியிருக்கின்ற தணிகைமலையின் பெருமை தொடுத்துச் சொல்லும் சொல்லளவிற் கடங்குவ தன்றே.

(வி - ம்.) சவட்டி - கொன்று; "பஞ்சாய்க் கோரை பல்லிற் சவட்டி" என்னும் பதிற்றுப் பத்தடியா லுணர்க. வரம்பிலின்பு - அளவிட முடியாத வின்பம்; வீட்டின்பம். (எ0)

இன்னணஞ் சிறந்த வுற்பல வரையை
யெய்தியாங் கினிதுவீற் றிருக்கும்
மின்னவிர் நுதிவேல் வீரனைப் பணிந்து
மேதக வதிந்தவ னருளால்
துன்னிய மலவா தனைவிடை கொள்ளத்
துலங்கிய சாக்கிரா தீத
மன்னியின் புருவா யாணவ நிலைபோன்
மருவுதி ரேனப்பணித் திட்டான்.

(இ - ள்.) இன்னணம் சிறப்புற்றனவாகிய காவியத்திரியையடைந்து அவண் இனிதெழுந்தருளி யிருக்கின்ற மின்னலைப்போல விளங்குகின்ற கூர்மைபொருந்திய வேற்படையையுடைய முருகக்கடவுளை வணங்கி மேன்மைபொருந்த ஆண்டுத் தங்கி அப்பெருமானருளால் அனுதியாகப் பொருந்திய மலங்களின் வாசனை விடைபெற்றுச் செல்லச் சிவத்துவம் விளங்கிய சாக்கிராவத்தையின் நின்மல

துரியாதீதத்தைப் பொருந்தி ஆநந்தமே வடிவமாய், ஆணவத்தோடத்து விதமானதுபோலச் (சிவத்துடனே) கலந்திருப்பீர்களெனத் திருவாய் மலர்ந்தருளினன்.

(வி - ம்.) உற்பலவரை - நீலியத்திரி. மலவாதனை - வாசனை மலம். இதனை "போதமே லாகப் பண்டே புல்லிய மலநோய் தீர்ந்தும், வாதனை தாக்கு மாபோல்" எனவரும் காஞ்சிப்புராணச் செய்யுளா னறிக. "ஞானத்தைப்பெற்று ஞேயத்தைக்கண்ட ஆன்மாவினுக்கு அக்காட்சி சலிப்படையும் வண்ணம் வாசனை தாக்கி வியாபக அறிவை ஏகதேசப்படுத்தலின் அதனையும் நீக்குதல் வேண்டுமென்பார் "மல வாதனை விடைகொள்ள" என்றார். சாக்கிராதீதம் - சாக்கிராவத்தையி லேயே நின்மல துரியாதீதத்தைப் பொருந்திநிற்றல். ஆணவமலத்தோ டான்மா இரண்டறக் கலந்து நின்றதுபோலச் சிவத்துட னத்துவிதமாக் கலந்து நிற்றல்வேண்டு மென்பார். "ஆணவ நிலைபோல் மருவுதிர்" எனக் கூறினர். இதனை "ஆணவத் தோடத்துவித மானபடி மெய்ஞ் ஞானத் தாணுவினோடத்துவிதம் சாருநா ளெந்நாளோ" என்னும் தாயுமானவர் திருவாக்கானும் "இருள்செய் கேவலம்போற் கலந்திருப் பதே முத்தி" என்னும் திருவானைக்காப் புராண அடியானும் உணர்க. (எக)

அருளிய குரவன் றிருவடிப் போதி
லருந்திறற் பெருந்தவ முனிவர்
இருவிழி பொழிநீர் மண்ணுதல் புரிய
வெழுந்தனர் பலமுறை வீழ்ந்து
திருவடை யாளங் கூறிய முகத்நாற்
றெரித்தனை மான்மியம் விரித்துக்
குருபர வருளென் றிரந்தவன் முழுதுங்
குறைவறத் தெருட்டிடத் தெளிந்து.

(இ - ள்.) திருவாய் மலர்ந்தருளிய பரமாசாரியன் திருவடித் தாமரைகளில் அரிய வல்லமையோடுகூடிய பெரிய தவத்தினையுடைய முனிவர்கள் இரண்டு விழிகளினின்றும் சொரிகின்ற நீரானது கழுவு தலைச் செய்ய எழுந்து பலமுறை வணங்கி அடையாளங் கூறிய முகத் தானே (அத்தலப் பெருமையினைத்) தெரித்தாய், அத்தலத்தின் பெரு மையினை யெல்லாம் ஆசாரியர் பெருமானே விரித்துத் திருவாய்மலர்ந் தருளென்று யாசிக்க அவன் குறைவில்லாமற் றெரிவிக்கத் தெளிந்து.

(வி - ம்.) மண்ணுதல் - கழுவுதல். "மண்ணுதல்சென்ற வொண் ணுதலரிவை" என்னும் குறுந்தொகைச் செய்யுளடியா னுணர்க. இரந்து தெளிந்து எனக் கூட்டுக. அவன் சனற்குமரன். (எஉ)

மறுவலும் வணங்கிப் புறவிடை கொண்டு
மடங்கனேக் கெனமனங் குரவன்
நறுமலர்ப் பதத்து நாமவே விறைவ
னளிர்வரைக் குன்றினும் படர

எரிகதிர் வெள்ளி வரைநனந் தாங்க
ணெய்திநா யகனடி பணிந்து
நிறையுள மகிழ்ச்சி தலைசிறந் தனராய்
நெடுவரைத் தெனுதுழிச் சார்ந்து.

(இ - ள்.) மறுபடியும் வணங்கி (மனமாண்டுத் தங்க)ப் புறத்தே விடைபெற்றுக்கொண்டு (முன்னும்பின்னும் நோக்கும்) சிங்கநோக்குப் போல மனமானது ஆசாரியனது வாசனை பொருந்திய தாமரைமலர் போன்ற பாதத்தினிடத்தும், அச்சத்தைத் தரும் வேற்படையையுடைய முருகக் கடவுளின் குளிர்ச்சி பொருந்திய மூங்கிலினையுடைய மலையினிடத்துஞ் செல்ல ஒளியை வீசுகின்ற வெள்ளியங்கிரியினை நீங்கித் தணிகையின்கண் வந்து பொருந்து முருகக்கடவுளின் பாதங்களை வணங்கி நிறைந்த வுள்ளத்தின்கண் உவகை தலைசிறக்கப் பெற்றவர்களாய் நீண்ட தணிகை வரையின் தென்றிக்கிற் பொருந்தி.

(வி - ம்.) மடங்கனோக்கு - சிங்க நோக்கு. நாமம்+வேல்=நாமவேல் என ஈறுகெட்டது. "மவ்வீறொற்றழிந்" என்னும் நன்னூற் சூத்திர விதிப்படி. தெனுது - மரூஉ. (எங)

தொழித்தளி முரலு நந்தன வனமுந்
துறுமலர்ப் பொதும்பரு மணிகள்
கொழித்தலை சுருட்டுஞ் சுனைகளும் படுத்த
கொள்கையின் விளங்கறை பலவும்
செழித்தவிண் ணமர ருள்ளமுங் கவர்க்குந்
திருக்குலாய் மும்மலச் செருக்கும்
அழித்தெழு மருட்கோ ராகர மான
வற்புதச் சூழல்கண் டமர்ந்து.

(இ - ள்.) ஆரவாரித்து வண்டுகள் முழங்குகின்ற நந்தன வனங்களும், துறுத்த மலர்களோடு கூடிய பூஞ்சோலைகளும், முத்துக்களை வீசி அலைகள் மறித்து வருகின்ற சுனைகளும், பதித்துவைத்த தன்மையின் விளங்குகின்ற பாறைகள் பலவும் (எல்லா வளங்களாலும்) செழிப்புற்ற தேவநலகத்தின்கண்ணுள்ள தேவர்கள் மனத்தையும் கவருதற் கேதுவாகிய செல்வங்களான் விளங்கி, மும்மலங்களின் செருக்கையும் கெடுத்து அருளினுக்கோரிருப்பிடமான வியப்பைத் தரத்தக்க விடத்தைக் கண்ணுற்றதன்கட் டங்கி.

(வி - ம்.) தொழித்து - ஆரவாரித்து. "கழித்த கடிப்பினையும் கைவளையும் மாலையும் களைந்து முத்துந் - தொழித்த நறுஞ்சாந்தும் சுண்ணமும் பன்மணியும் கலனுஞ் சிந்தி" எனவரும் சிந்தாமணி (முத்தி-371) செய்யுளடியானு முரையானு முணர்க. படுத்த - பதித்த. அறை - பாறை. "படுத்துவைத்தன்ன பாறைமருங்கின்" என்னும் மலைபடுகடாம் (15) அடியானும் உரையானு முணர்க. (எச)

வைகலும் விதியா னுட்கடன் கழிப்பி
மருவுயான் மார்த்தபூ சனையை

நைகர மில்லா வன்போடு நவிற்றி
நறைகமழ் கடம்பணி தாரான்
செய்கழற் சரண பங்கயம் போற்றித்
தேசிக னருளிய குறியால்
பொய்கழ லுள்ள நிட்டையைக் கூடும்
பொருவறு சூழ்ச்சியைக் கொண்டு.

(இ - ள்.) நாடோறும் விதிப்படி காலையிற் செய்யவேண்டிய கடன்களைச் செய்து பொருந்திய ஆன்மார்த்த பூசையை வருத்தம் சிறிது மில்லாத அன்புடனே செய்து வாசனை வீசுகின்ற கடப்பந்தாரினை யணிந்த முருகக்கடவுளின் சிவந்த வீரக் கழலோடு கூடிய பாதமாகிய தாமரைகளை வணங்கி ஆசிரியன் அருளிய அடையாளங்களால் பொய் நீங்கிய மனமானது நிட்டையினிடத்துப் பொருந்தும் ஒப்பில்லாத ஆராய்ச்சியை மேற்கொண்டு.

(வி - ம்.) கழிப்பி - செய்து. நைகரம் - துன்பம். நவிற்றி - செய்து. குறி - அடையாளம். செய்ய வென்பதன் ஈறுதொக்கது. சூழ்ச்சி - ஆராய்ச்சி. (௭௬)

ஆதியி றில்லா வைந்தெழுத் தைந்து நிலையினு மாம்வகை யுணர்ந்து
தீதுசே ரிரண்டு நிலையினு நீங்கித் திகழ்நிலை யிரண்டினும் பயின்று
பேதமே யபேதம் பேதமோ டபேத மெனப்படும் பெருநிலை யாய
ஞாதிரு ஞான ஞேயமுந் திகழா நன்மையிற் றொன்மைய ராஞர்.

(இ - ள்.) தோற்றமு மிறுதியும் இலவாகிய பஞ்சாக்கரத்தினை, சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதமென்னு மைந்தவத்தையின் கண்ணும் (நிற்கும் வகைக்கேற்ற) ஓதுமுறையை (ஆசிரியன்பாற்) கேட்டுணர்ந்து குற்றம்பொருந்திய சாக்கிரம் சொப்பனமென்னும் இரண்டவத்தையினின்றும் நீங்கி (சிவத்துவம்) விளங்குதற்குரிய துரியம் துரியாதீதமென்னும் மிரண்டவத்தையின் கண்ணும் பழகி, பேதம் அபேதம் பேதாபேதம் என்று சொல்லப்படும் மூன்றுந் தன்கட் டோன்ற நிற்கின்ற நின்மல துரியாதீதமாகிய காண்பானும் காட்சியும் காணப்படு பொருளுமாய்ப் பகுப்புற விளங்காத சிவானந்தப் பேற்றின் பண்டைப் பரிசினையுடைய ராயினரென்க.

(வி - ம்.) சுத்தாவத்தையைந்திலும் உயிரும் முதல்வனும் மாறி அக்கரங்கள் மாறி நிற்றன் முறைக்கு ஏற்ப மாறியோதல் வேண்டுமாதலின் ஐந்தெழுத்தினை ஐந்து நிலையினுக்கேற்ப ஆம்வகை யுணர்ந்தென்றார். இங்குக் கூறிய ஐந்தவத்தைகளும் சுத்தாவத்தையென்க. இனி யொருசாரார் இரு நிலையினும் நீங்கியென்பதற்குச் சாக்கிரம் சுழுத்தியாகிய இரண்டு நிலையினின்றும் நீங்கியெனவும், "திகழ்நிலையிரண்டினும் பயின்" றென்பதற்கு சொப்பனம் துரியமாகிய இரண்டு நிலையினும் பழகுதல் செய்தெனவும் கொள்வர். துரியாதீதத்திற் றொன்மை போலாஞரெனக் கூட்டுக. ஐந்தெழுத்தும் அவ்வைந்து நிலையினும் நிற்கு முறையாகிய ஓது முறை. "தீதுசேரிரண்டு நிலையாவன - நின்மல சொப்பனமும் நின்மல சுழுத்தியுமாம், "திகழ்நிலை யிரண்டாவன-

நின்மல துரியம் துரியாதீதமாம். இதனை "ஆவியும் கண்ணுத"லென்னும் இந்நாற் களவுப் படலம் 585 ஆம் செய்யுளானறிக. பேதம் அபேதம் பேதாபேதம் ஆகிய மூன்றும் தன்கட் டோன்ற நிற்றலே நிலையென்க. இங்ஙனம் கூறப்படும் பெரு நிலையாகிய நன்மை யென்க. பெரு நிலை-நின்மல துரியாதீதம். தொன்மை - பண்டைப் பரிசு. (எசு)

அத்தகு வரைப்பி னெழுசுனை யாடி
யருந்தவ மாதிக ளியற்றின்
சித்தமா சிரிய விழிஞரு மொல்லை
சிவத்தினைச் சிவனுவர் கண்டீர்
இத்தகுமுனிவ ரெழுவர்க்கு நந்தி
யெம்பிராற் குரியமா னுக்கன்
மெய்த்தவக் குமரன் விளக்கிய ததனை
வினைச்சம மிலார்க்குரைக் கொனுதால்.

(இ - ள்.) அத்தன்மைத்தாகிய தணிகையின் கண்ணுள்ள ஏழு சுனையின் கண்ணு மூழ்கி அரியதவ முதலியவற்றைச் செய்து மனத்தின் கண்ணுள்ள குற்றமானது நீங்கத் தாழ்ந்தவரும் விரைவாகச் சிவத்தினொ டிரண்டறக் கலப்பார்கள். இத்தகுதியையுடைய முனிவரெழுவர்க்கும் எம்பிரானுகிய நந்திக்குரிய உண்மையாகிய தவத்தினையுடைய சனற்குமரன் விளக்கியதாகிய அப்பொருளை இருவினையொப்பு வாராதார்க்குச் சொல்லுத லியலா தென்க.

(வி - ம்.) இழிஞர் - பிராகிருதர். வினைச்சமம்-இருவினையொப்பு.

என்றுமா தவத்துச் சூதமா முனிவ னியம்பலு மரும்பெரும் பொருளை
இன்றுநாங் கேட்ப முன்புநாம் புரிந்த விருந்தவ மிருந்தவா வென்னென்
றென்றுமா னந்தக் கண்கனீர் பாய வுருகிய வுளத்தொடு மெழுந்து
நின்றுவான் முனிவ ராங்கனே ரைய நீத்திடக் கடாவின ரன்றே.

(இ - ள்.) (வினைச்சம மிலார்க்குக் கூறொணு) என்று பெரிய தவத்தினையுடைய சூதமுனிவன் திருவாய்மலர்ந்தருள இவ்வரும்பெரும் பொருளை யாம் இன்று கேட்ப முன்னர் யாமியற்றிய பெருந்தவமிருந்தது என்ன ஆச்சரியமென்று சொல்லிப் பொருந்திய ஆனந்தக் கண்ணீரொழுக இளகிய உளத்தோடு மெழுந்து நின்று உயர்ச்சி பொருந்திய முனிவர்களப்பொழுதுளவாகிய ஓரையத்தினை நீக்க வினவுதலுற்றனர்.

(வி - ம்.) இருந்தது ஆ-இருந்ததென்ன ஆச்சரியம். வான்-உயர்வு.

முனிவ ரெழுவர் கேட்டுளந் தூய்மை
முற்றின ரெனமொழிந் தனையம்
முனிவரர் யாவ ரத்தகு காதை
மொழிந்தருள் காலமெக் காலம்

கனிவருந் தீஞ்சொற் கட்டுரை யென்னக்
கடாவுத லியமுனி வரர்க்குப்
புனிதவெண் ணீற்றுச் சூதமா முனிவன்
போக்கரு விடையெதிர் கொடுக்கும்.

(இ - ள்.) எழு முனிவர்கள் கேட்டு மனமாசு நீங்கிப் பரிசுத்த மெய்தினரென்று திருவாய்மலர்ந்தருளினும். அம்முனிவரர் யாவர். அத்தகு காதையினைத் திருவாய்மலர்ந்தருளிய கால மெக்காலம். கனி யின் இரதத்தை யொத்த தித்திப்பாகிய சொற்களாற் றெடுத்துத் திரு வாய் மலர்ந்தருளுவாயென வினவிய முனிவர்களுக்குப் பரிசுத்தமாகிய வெண்ணீற்றினை யணிந்த பெரிய தவத்தினையுடைய சூதமுனிவன் குற்றமிலவாகியவிடையினைத் திருவாய்மலர்ந் தருளுவான்.

(வி - ம்.) கனி - ஆகுபெயர். வரும் - உவமைச்சொல், இதனை "அரவரு நுண்ணிடைக் குரவரு கூந்தலென் - றுள்ளக்கருத்து விள்ளா ளென்றது" என்னும் திருக்கோவையார் அக ஆம் செய்யுட்கொளுவானு மதன் விசேடவுரையானு முணர்க. (எக)

வேறு

கறங்கு மணிவெண் டிரைமுகந்த கமஞ்சூற் கொண்ட லெனவரவின்
உறங்குங் கடவுண் மலர்க்கமல வுந்தி யெழுந்த நரைத்தலையோன்
பிறங்கிப் பகலிற் பதினல்வர் பிழை பெருக்கு மிடிகடியா
அறங்கள் கிளரத் தனிச்செங்கோ லளிக்கு மனுக்க ளுளரவருள்.

(இ - ள்.) ஒலிக்கின்ற முத்துக்களை வெள்ளிய அலைகளையுடைய கடலின்கண் ணீரை முகந்த நிறைந்த சூலினையுடைய மேகமென்று சொல்லும்வண்ணம் ஆதிசேடன்மீது யோகநித்திரை செய்கின்ற விண்டு திருவுந்தித் தாமரையின் கண்ணே தோன்றிய வெளுத்த தலையினை யுடைய பிரமன் விளங்குகின்ற பகற்காலத்திலே பதினல்வர்கள் துன் பினை மடுத்தற் கேதுவாகிய வறுமையை நீக்கித் தருமங்கள் விளங்க ஒப் பற்ற செங்கோலினைச் செலுத்தி உலகினைக் காக்கின்ற மனுக்களுள் ளார்கள், அவர்களுள்.

(வி - ம்.) கமம் - நிறைவு; "கம நிறைந் தியலும்" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தானறிக. நரைத்தலையோன்-பிரமன். பிழை- துன்பம். (அ0)

முந்து மரசன் சுவாயம்பு பிரிய வரதன் முதனல்வர்
மைந்தர் தேவர் யாமாதி மகவா னரியே யுரிசிமுனி
சந்த முலையா கிருதிதனைத் தழுவி யுயிர்த்த சுயக்கினன்மால்
புந்தி நுனித்த புலத்தியனை முதலோர் பொருவி லெழுமுனிவர்.

(இ - ள்.) இம்மனுக்களுள் முந்திய அரசன் சுவாயம்புமனுவாகும். அவன் புதல்வர்கள் பிரியவரதன் முதலாகிய நால்வர்கள் தேவர்கள் யா முதலிய ஏனைய தேவர்கள். இந்திரன் - அரியென்னும் பெயருடைய

வன். விண்டு, உருப்புமுனி சந்தனத்தையணிந்த ஆகிருதி என்பவளைக் கூடிப்பெற்ற சுயக்கினனென்னும் பெயரினையுடையான். முனிவர்கள் சூரிய மதியினையுடைய புலத்தியன் முதலாகக் கொண்ட எழுவரென்க.

(வி - ம்.) இவ்வெண்பத்தொன்றாஞ் செய்யுள் முதல் தொண்ணூறாஞ் செய்யுள்வரை, மனு அரையன், அவன் புத்திரர், தேவர், இந்திரன், திருமால், முனிவர் பெயர் முதலியன முறையே வருமாறுணர்ந்து கொள்க. (அக)

தோற்று மிரண்டா மனுவேந்தன் சுவாரோச் சிடனே யவன்மைந்தர்
ஆற்ற லுயுமத் தாதியர்க ளமரர் திவிடி தனைமுதலோர்
வீற்று மகவா னுரோச்சனன்மால் வேத சரசு திவிடிதைபெற்
றேற்ற விபுபு முனிவரர்க ளூர்ச்சசத் தம்பன் முதலெழுவர்.

(இ - ள்.) இரண்டாவது மனுவரையன் சுவரோச்சிடன், இவன் புதல்வர்கள், பிறர் வலியைக் கெடுக்கின்ற மத்தாதியர்கள். தேவர்கள் திவிடி முதலானவர்கள். வேறாகிய இந்திரன் உரோச்சனன். விண்டு வேதசரசென்பவன் திவிடிதை யென்பவளைக் கூடிப் பெற்றுத் தாங்கிய விபுபு என்பவனும். முனிவர்கள் ஊர்ச் சத்தம்பன் முதலாகிய எழுவர்களாவர்.

(வி - ம்.) இனித் திவிடிதன் ஐ எனப் பிரிப்பாருமுளர், திவிடி தன்னை யென்பதிற்றன் ஐ சாரியை. (அஉ)

மூன்று முறைவேந் துத்தமனே மூரிப் பவனன் முதலானோர்
ஆன்ற மைந்தர் சத்தியன்முன் னானோர் சுரர்சத் தியசித்து
வான்ற னிறைமால் சூனுருதைமறைதேர் தரும னெனுமுனிவற்
கீன்று வளர்சத் தியசேன னெழுவர் பிரம தாதிகளே.

(இ - ள்.) மூன்று முறைமையின் வந்த மனுவரையன் உத்தமனாகும். அவன் புதல்வர்கள் வலியையுடைய பவனன் முதலானவர்கள். தேவர்கள் சத்தியன் முதலானவர்கள். தேவருலகத் திறைவனாகிய இந்திரன் சத்தியசித்தென்பவனும். விண்டு வேதங்களை யாராய்ந்தறிந்த தருமனென்னு முனிவனைச் சூனுருதை யென்பவள் கூடி யீன்று வளர்த்த சத்தியசேனனென்பவனும். முனிவர்கள் பிரமது முதலிய எழுவர்களும் ஆவர்.

(வி - ம்.) மூரி - பெருமை. வான் - தேவலோகம். (அங)

பெருமை பிறங்குஞ் சனற்குமரன் பெருமை மலர்த்தாண் முடிசூடி
அருமை மறையந் தத்தெளிவா யமைந்த சைவ சித்தாந்தம்
ஒருமை யன்பிற் கேட்டுணர்ந்த வுயர்ந்த முனிவ ரிவர்கண்மீர்
இருமை வழங்கு மிதுகாறு மியைந்தோர் தமையு மினிக்கேண்மின்.

(இ - ள்.) பெருமை விளங்குகின்ற சனற்குமர முனிவனது தேன் பொருந்திய தாமரை மலர் போன்ற பாதங்களை முடியின் கண்ணே யணிந்து அருமையாகிய வேத முடிவின் தெளிவாகிப் பொருந்திய சைவ

*சித்தாந்தத்தினை ஒற்றுமையுடன் கூடிய அன்பினாற் கேட்டறிந்த உயர்ச்சி பொருந்திய முனிவர்களிவராவார். இம்மை மறுமைப் பயன் களை யளிக்கும் இறைவனை பொருந்தியவர்களையும் இனிக் கூறுவாங் கேண்மின்.*

(வி - ம்.) *பிறங்கும் - விளங்கும். பிரசம் - தேன். உணர்தற் கருமையான மறைப்பொருள்க. இருமை - இம்மை மறுமைகள். முற்றும்மை விகாரத்தாற் றொக்கது.* (௮௪)

நடலை யுலகத் துயர்துரக்கு நாலா மனுத்தா பதன்மைந்தர்
விடபன் முதலோர் சத்தியகன் முதலா னோர்வின் னவர்மகவான்
அடல்வல் வினைதீர் திரிசிகன்மா லரினி யரிமே த்சுபயந்த
படர்முற் றிரிக்கு மரிமுனிவர் பழிப்பில் சோதி முதலானோர்.

(இ - ள்.) *நடுக்கத்துடன் கூடிய துன்பத்தினை நீக்கும் நான்காவது மனுவரையன் தாபதனும். மைந்தர் விடபன் முதலானோர்கள். இந்திரன் மிக்க வல்லமையோடு கூடிய தீவினை நீங்கிய திரிசிகன். விண்டு, அரினியென்பவனும் அரிமேதசுவும் பெற்ற துன்பமுற்றிலும் நீக்குகின்ற அரியென்பவனாகும். முனிவர்கள் குற்றமில்லாத சோதி முதலாகிய எழுவர்களுமாவர்.*

(வி - ம்.) *நடலை - நடுக்கம். "நடலைவஞ்சனை பொய்யென்ப நடுங்கிய நுடக்க முப்பேர்" என்னும் நிகண்டானறிக.* (௮௫)

விரித்த விண்டை விண்ணவர்கள் விதுர்த னுயிர்த்தோ ரொழுக்கனைத்தும்
தெரித்த வேத நான்முழுதுந் தெவ்வா தோப்பி மடமூழ்கி
வரித்த கழற்கா லவுணர்நலி வருத்த வாழ்நாள் வல்லையவண்
இரித்து ளார்வை துருதேய ரென்னும் பெயரு மிவர்க்காகும்.

(இ - ள்) *இவ்விடத்து விரித்துக் கூறிய தேவர்கள் விதுர்தனனென்பவன் பெற்றோர்கள். ஒழுக்கமெல்லாவற்றையும் தெரிவித்த வேதநான் முற்றிலுங் கைக்கொள்ளாது ஓட்டி அறியாமையின் கண் மூழ்கிக் கட்டுற்ற வீரக்கழலினை யணிந்த காலோடு அவுணர்களை வருத்த வாழ்கின்ற காலத்து (அவ்வவுணர்களை) அவ்விடத்தினின்றும் கெடுத்துள்ளனர். வைதுருதேயரென்னும் பெயர் இவர்க்குப் பொருந்தும்.*

(வி - ம்.) *தெவ்வாது - கைக்கொள்ளாது. "தெவவுக் கொளற் பொருட்டே" யென்னும் தொல்காப்பியச் சூத்திரத்தானறிக. ஓப்பி - ஓட்டி. வல்லை - விரைவாக. இரித்தல் - கெடுத்தல். வைதுருதேயர் - பிதிரரில் ஒரு சாரார்.* (௮௬)

ஐந்தா மனுவேந் தரைவதக னுன்று மைந்த ருச்சுலனை
முந்தை யுடையோர் பூதரதன் முதலோ ரமரர் சதக்கிருது
மைந்து மிகுந்த விபுபுமால் வனைத்தோட் சுருபி சுப்பிரன்பால்
அந்தில் வரும்வை குண்டனிர ணியரோ மனையா தியர்முனிவர்.

(இ-ள்) ஐந்தாவது மனுவரையன் அரைவதகன். பெருமை பொருந்திய பிள்ளைகள் அருச்சுனனை முதலாக வுடையோராவர். இந்திரன் வலிமைமிக்க விபுபு என்பான். தேவர்கள் பூதரதனை முதலா வுடையோராவர். விண்டு வளையலையணிந்த தோளினையுடைய சுருபியென்பவள் சுப்பிரனென்பவனைக் கூடியதனாற்றோன்றிய வைகுண்டனென்பவனாகும். முனிவர்கள் இரணிய ரோமனை முதலாகவுடைய எழுவராவர்.

(வி-ம்.) சதக்கிருது - இந்திரன். மைந்து - வலி. (அஎ)

நதைசீ ராரு மனுச்சக்கு தந்தோன் சாக்கு தப்பெயரோன்
புதல்வர் புருடன் முதலானோர் புலவ ராப்பியர் கண்முதலோர்
மதவிந் திரன்மந் திரதுருமன் வயிரோ சனற்சம் பூதிபுணர்ந்
துதவு மசிதன் மான்முனிவ ரவியன் முதலா முறுவர்களே.

(இ-ள்.) நிறைந்த சிறப்பினையுடைய ஆறுவது மனுவரையன் சக்குவென்பவனாற் பெறப்பட்ட சாக்குதனென்னும் பெயரினையுடையோனாவன். இவன் மைந்தர்கள் புருடன் முதலாகியவர்கள். தேவர்கள் ஆப்பியர்கள் முதலானவர்கள். வலியினையுடைய இந்திரன் மந்திரதுருமன். விண்டு, வயிரோசன் சாம்பூதி யென்பவளைக் கூடிப் பெற்றவனாகிய அசிதனாகும். முனிவர்கள் அவியன் முதலாகிய எழுவரென்க.

(வி-ம்.) மதவென்னு முரிச்சொல் ஈறுதிரிந்து மத என நின்றது. மதவு - வலி. "பதவுமேய்ந்த மதவுநடை நல்லான்" என்புழிப்போலக் கொள்க. உறுவர் - முனிவரர். (அஅ)

ஈண்டை விளம்பு முனிவரரு மிருள்கால் சீத்து நிலவெறிக்கும்
மாண்ட திருநீற் றுக்கவயம் வயங்கு மணிமே னியிற்றிளைப்பப்
பூண்ட சிவமுள் ளகந்திளைப்பப் பொலிந்த குமரன் றனையடைந்து
மூண்ட விழைவி னடித்தொண்டு முறையிற் புரிந்த நெறியோரே.

(இ-ள்.) இவ்விடத்துக் கூறிய முனிவர்களும், இருளைத் துடைத்து ஒளி வீசுகின்ற பெருமை பொருந்திய திருநீற்றின் வடிவமாகிய கவசமானது விளங்கு முத்திராக்கத்தை யணிந்த மேனியின்கட் படிய எங்கும் வியாபகமாகிய சிவத்தினை அகத்திலனுபவிக்க விளங்குகின்ற சனற்குமர முனிவனையடைந்து முயன்ற விழைவினாற் றிருவடித் தொண்டினை முறையாகச் செய்த முறைமையினை யுடையவராவர்.

(வி-ம்.) முனிவரருமென்றவும்மை, இறந்தது தழீஇய எச்சவும்மை; மூன்றுமனுவந்தரத்திலுள்ளாரையேயன்றி யிவ்வாறுமனுவந்தரத்திலுள்ளாருமெனக் கூறலான். மணி - உருத்திராக்கம்; அழகிய மேனி யெனினுமாம். திளைப்ப - படிய. பூண்ட - வியாபித்த. சிவம் இரண்டாவதன்றொகை. உள்ளகம் - உள்ளிடம். திளைத்தல் - அனுபவித்தல். குமரன் - சனற்குமரன். மூண்ட - முயன்ற. (அகூ)

துரிசி லேழா மனுவைவச் சுதனுற் சாதத் தேவர்களே
பரனே சர்வ் வித்தமனே பயின்மா னுடரே கசேருவ்வே

தரும னிக்கு வாகுவே சையன் றிருட்ட நாபன்னே
மருவுங் விடபத் துவசனென மைந்தர் பதின்ம ரவன்றனக்கே.

(இ - ள்.) குற்றமில்லாத ஏழாவது மனுவரையன் வைவச்சுதனு கும். இவனுக்குப் பிள்ளைகள் சாதத்தேவர்கள்' பரன், சர்வவித்தமன் மானுடர், கசேரு, தருமன், இக்குவாகு, சையன், திருட்டநாபன் பொருந் திய விடபத்துவச னெனப் பதின்ம ராவரென்க.

(வி - ம்.) ஆல் - அசை. சாதம் - பிறத்தல். (௬0)

வெய்யோன் விசுவ தேவர்வசு விடப மருத்து வசுவனியான்
நையா வமரர் புரந்தரனு ஒக நகரஞ் செகிற்பரித்தோன்
எய்யா விறன்மால் காசிபனுக் கெழுந்து பரந்த களபமுலை
மையார் தடங்க ணதிதிமணி வயிறு வாய்த்த வாமனனே.

(இ - ள்.) கெடாத தேவர்கள், சூரியன், விசுவதேவர், வசு, விடப மருத்து அசுவனியாகும். இந்திரன் இஞ்ஞான்று தேவலோகத்தைத் தோளின்மேற் றுங்கினவனுவான். இளையாத விறலோடுகூடிய விண்டு காசிப முனிவனுக்கு உயர்ந்த பரந்தனவாகிய கலவைச் சந்தனத்தை யணிந்த முலையினையும், மைதிட்டிய கண்ணினையுமுடைய அதிதி யென்பவளுடைய அழகிய வயிற்றிற் பொருந்திய வாமனனுகும்.

(வி - ம்.) செகில் - தோள். அசுவனியால், புரந்தரனுல் என்பன வற்றில் ஆல் அசைகள். (௬௧)

வினையில் காசி பன்வசிட்டன் விசுவா மித்தி ரன்சமதக்
கினியத் திரியே கவுதமனே கேழில் பரத்து வாசனென
முனிவ ரெழுவ ரிதுகாறு முறைசெய் மனுவே ழனுண்மூன்றும்
மனுவந் தரத்து முனிவரென வகுத்தா மறிமோ வெனக்கினந்து.

(இ - ள்.) முனிவர்கள், வினைத்தொடர்பு சிறிதுமில்லாத காசிபன், வசிட்டன், விசுவாமித்திரன், சமதக்கினி, அத்திரி, கவுதமன், ஒப்பில் லாத பரத்துவாச னென்கின்ற வெழுவருமாவார். இற்றைமுறை செய்த ஏழு மனுவினுள் வைத்து மூன்று மனுவந்தரத்துக்கூறிய முனிவராவ ரென்று விரித்துக் கூறினும்; அறியுங்க ளெனச்சொல்லி.

(வி - ம்.) கேழ் - ஒப்பு. "கேழ்நிறமொளியொப் பாகும்" என் னும் நிகண்டா னறிக. அறி + மோ. மோ: முன்னிலையசை. "கொள் வாரும் கள்வரும் நேர்" என்புழிப்போல அறிவிரென்னும் முன்னிலைப் பன்மை யீறுகெட்டு நின்றது. இம் முனிவர்களே 77 ஆம் செய்யுளிற் கூறிய முனிவர்கள். (௬௨)

கூற்ற நடுங்கு மருஞ்சாபக் கோனை யாற்ற லிருந்தவத்தீர்
தோற்ற மரணங் கெடவின்பத் துறையு ளழுந்து மருவிரண்டில்
தேற்று மமல மொழிமயமாய்த் திகழு மருவிம் மான்மியமே
போற்றி யினிது கேண்மினெனப் பொருவில் சூதன் சொலப்புக்கான்.

(இ - ள்.) இயமனும் நடுங்குவதற் கேதுவாகிய சபிக்கப்பட்டோ ரைப் பொறுத்தற் கருமையாகி அழியாத சாபமாகிய ஆற்றலையுமுடைய பெரிய தவத்தினையுடையவர்களே! பிறப்பு மிறப்புங் கெட இன்பத் துறையிற் படிதற் கேதுவாகிய இருவகை யருளில் வைத்து (யாவ ராலும்) உயர்த்துச் சொல்லப்பெறும். மலநீங்கிய சொல் வடிவமாக விளங்குகின்ற அருள் இத்தணிகை மான்மியமாகும் முருகக் கடவுளை வணங்கி இனிதாகக் கேளுங்கோளென்று (கல்வியாற்றல் தவமொழுக்க முதலியவற்றான்) ஒப்பிலாத சூதமுனிவன் சொல்லத் தொடங்கினான்.

(வி - ம்.) அருள் இரண்டு - சொல் வடிவாகவுள்ளதும், பொருள் வடிவாகவுள்ளது மாகிய இரண்டாம். இனி, மந்திரகலை தந்திரகலை யென்ன இரண்டென்பாரும், புராண வடிவமாகவும் மந்திர வடிவமாக வும் உள்ளதென்பாரும் எனப் பலதிறத்தாற் பொருள் கூறுவர். (கூ௯)

புராண வரலாற்றுப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் ௪௪௧.

# வீராட்டகாசப் படலம்

பூமணமு முடலுயிரும் பொன்விழியு
மெனும்புணர்ப்பா ருயிர்கள் பண்டு
தோமடையப் பார்த்திருந்து மெண்குணத்திற்
றிரியாது துகடீர் பாகம்
தாமடைய வெவ்வுயிர்க்கு மொருங்குறுத்தா
திருந்துமொரு சலமு மில்லா
வீமலிபொற் கடுக்கையந்தார் வீராட்ட
காசன்விரை மலர்த்தாள் போற்றி.

(இ - ள்.) மலரும் மணமும், உடலுமுயிரும், கதிரொளியும் கண்ணொளியுமென்று சொல்லும்வண்ணம் (சிவமாகிய தன்னொடு) கலத்தலையுடைய ஆன்மாக்கள் அநாதி காலத்தே (ஆணவமலமாகிய) குற்றத்தின்கட் பொருந்துதலை யறிந்து வைத்தும் (தன்வயத்தனாதன் முதலிய) எண்வகைக் குணங்களினின்றும் சிறிதும் விகாரமடையாது (அவ் வான்மாக்கள்) குற்றம் நீங்கிய மலபரிபாகத்தினை யடையும் வண்ணம் அவைகட் கொருசேரப் பக்குவத்தினை அறிவிக்காதிருந்தும் (தன்னிறைமைக்) கொரு சிறிது மாறுபாடுமில்லாத கொன்றை மரத்தினது பொன்போன்ற மலர்களாலாகிய அழகிய மாலையையணிந்த வீராட்டகாசனாகிய சிவபெருமானது வாசனையோடுகூடிய தாமரை மலர்போன்ற திருவடிகளை வணங்குவாம்.

(வி - ம்.) பொன் - சூரியன்; ''பொன்னிற் பொலிந்த நிறத்தான் தோன்ற'' என்னு மணிமேகலை யடியானுணர்க. பூமணம் பொன்விழி உடலுயிர் இம்மூன்று மிறைவனு முயிரும் கலப்புற்று நிற்றற் குவமையாக் கொள்க. புணர்ப்பினை யுடைய ஆருயிரெனக் கூட்டுக. புணர்ப்பு - சம்பந்தம். பண்டு - அநாதியே. தோம் - (ஆணவமலமாகிய) குற்றம்; ''தோமுறக் கொண்டா ரெனச்சிறை யிடல்போல்'' என்னும் காஞ்சிப்புராணச் செய்யுளடியானுணர்க. ''முதல்வனாவான் முற்றுணர்வுடைமையின், உலகத்துயிர்கள் படும்துன்ப முழுவதும் உணர்ந்தோனாகியும், பேராற்றலுடைமையின் உயிர்களை யெல்லாம் ஒருங்கே வீடுபேறடையச் செய்யாமையின், வரம்பிலின்பமுடைமை, பேரருளுடைமை முதலிய குணங்கட்குக் குறைவரு மென்பாரை மறுத்து ''என் குணத்துத் திரியாதென்றும்; இவ்வான்மாக்கள் ஒருங்கே விடுபே றடைதற்கண் ஒருப்பாடு மிக்குடையனா யிருந்தும் இவ்வான்மாக்களால் அநாதியே யீட்டப்பெற்றுப் பல வேறு வகைப்பட்ட துன்பங்களையெல்லாம் விளைவிக்கும் வினைவலியினையும், கொடுமைக்கு மூலமாகிய சகசமலத்தினையும் கெடுத்து ஒருங்கே வீடுபேறடைவியாமைக்குக் காரணம் அம்முதல்வன் சிறப்பியல்பாகிய மெய்யுணர்வு ஒருங்கே நிகழாவண்ணம் தடுத்துநிற்பது மலசத்தி யென்பார் ''ஒருங்குறுத்தா திருந்துமொருசலமு மில்லா'' என்றார். சலம் - மாறுபாடு; கோட்டம். ''சார்ந்தாரைக் காத்தும் சலமிலனாய்'' என்னும் சிவஞானபோத வுதாரண வெண்பாவா னறிக. பாகம் - மலபரிபாகம். இல்லா: ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். இச்செய்யுளின் கருத்து சிவ

(வி - ம்.) வார்தல் - ஒழுகல்; ஈண்டு தாழ்தல். இழையார்ந் துளார் - அணிகலன்கள் நிறையப் பெற்ற பெண்கள். சார்ந்த மாதர் - ஆங்கண் பொருந்தி யுள்ளாராகிய பெண்கள். (௯௯)

ஆட லம்மனை யவ்வளைத் தோளியர்
பாட லம்பசுந் தேன்பெருக் குந்தொறும்
கோடமன்ற குழைத்தலைப் பொங்கரும்
பீட மன்றபைந் தேறல்பெ ருக்குமே.

(இ - ள்.) அம்மனை யாடுகின்ற அழகிய வளையணிந்த தோள்களை யுடைய அந்நகரத்துப் பெண்கள் இசைப் பாட்டாகிய அழகிய தேனைப் பெருக்குந் தோறும் கிளைகள் நெருங்கிய தளிர்த்தலை யுடைய சோலைகள் பெருமை பொருந்திய பசிய தேனைப் பெருக்கும்.

(வி - ம்.) பாடலாகிய தேன். அம்மனை யாடல்தோளிய ரென மாற்றுக. அமன்ற - நெருங்கிய. சோலையானது பெண்கள் பாட மலரு மரம் உடைத்தாதலான் தேறல் பெருக்கு மென்றார். குழைத்த - தளிர்த்த. பொங்கர் - சோலை. இசைத் தேன் பெருக்கு மங்கையர்க்கு மலர்த் தேன் பெருக்கி வழங்கும் சோலைகள் என்க. (௱0)

பொன்ன னார்புகுந் தாடவி ரிந்துபோம்
அன்ன மீட்டு மணைந்தன வேற்றுமை
மன்ன லாற்றம வாழ்க்கைம லர்க்கயம்
இன்ன வென்றறி யாவிடர் மூழ்குமே.

(இ - ள்.) இலக்குமி யொத்த (அந்நகரத்துப்) பெண்கள் சென்று மூழ்க (கயத்தினின்றும்) ஓடிப்போன அன்னப் பறவைகள் மறுபடியு மாண்டணைந் தனவாகித் தம்முடை யிருப்பிடமாகிய மலர்களை யுடைய தடாகங்கள் (தம்மியல்பினின்றும்) வேறுபாட்டைப் பொருந்தலால் யாம் வாழ்வது எத்தன்மை யுடையதென் றறியாமல் துன்பமாகிய கடலுண் மூழ்கும்.

(வி - ம்.) வேற்றுமை மன்னல் - (சந்தனம், கஸ்தூரி, பொற் சுண்ண முதலியவற்றாலும் மலர்கள் சிதைதல் முதலியவற்றாலும்) வேறுபா டடைதல். "இன்னவென்றறியா" என்புழி முற்றிறுதிய பெச்ச விறுதியுந் தொக்கன. (௱௧)

எக்கர் மீதுமி ழைத்தபொற் குன்றினும்
நக்க தேனலர் நங்கையர் சூடுவான்
தொக்கி ருப்பன தொல்வரைக் கோட்டகம்
புக்கு மஞ்ஞைதி ரண்டன போன்றன.

(இ - ள்.) மணற் குன்றுகளினும், பொன்னிறமுள்ள செய் குன்றுகளினும் அந் நகரத்துப் பெண்கள், விரிந்த தேனினையுடைய மலர்களைச் சூடும் பொருட்டுக் குழுமி யிருத்தலான் அவை பழமையான சிகரங்களின் மயிற் கூட்டங்கள் புகுந்து சேர்தலைப் போன்றன,

(வி - ம்.) இருப்பன - இருத்தலானவை. திரண்டன போன்றன - சேர்தலைப் போன்றன. அகரம் தொழிற் பன்மையான் வந்த தொழில் விகுதி. (சஉ)

தொண்டை வாய்மணித் தூநகை மாதரார்
வண்ட லாட்டயர் சூழல்கள் வந்தெதிர்
கண்ட காளையர் கண்ணொடு முள்ளகம்
விண்டி டாவகை மெய்ப்பய னல்குமே.

(இ - ள்.) கொவ்வைக் கனிபோன்ற அதரத்தினையும் முத்துப் போன்ற தூய பற்களையுமுடைய பெண்கள் விளையாட்டைச் செய்கின்ற இடங்கள் தம்பால் மருவி நேரிற் கண்ட இளையவர் கண்களோடு மனமும் நீங்கா வண்ணம் காமவின்பத்தை நல்கும்.

(வி - ம்.) சூழல்கள் நல்குமென முடிவு செய்க. மெய்ப்பயன்-காம இன்பம். விண்டிடா வகை - நீங்கா வண்ணம். (சங)

வடிவின் வென்றவ ளங்கொடி யிட்டமும்
மிடறு வென்றவி ரிதலைப் பூகமும்
மடந லார்திறை வாங்குவர் பாகடை
தடவு மாடமி ருந்தவை தாழவே.

(இ - ள்.) இளமை பொருந்திய அந்நகரத்து மாதரார் பெருமை பொருந்திய மேன் மாடங்களி லிருந்து வடிவினாலே (தாங்கள்) வெற்றி கொண்ட வளப்பம் பொருந்திய வெற்றிலைக் கொடிகளும் (தங்கள்) கண்டத்தால் வென்ற விரிந்த தலையினையுடைய கமுக மரங்களும் ஆகிய அவைகள் தாழும் வண்ணம் வெள்ளிலையும் பாக்குமாகிய திறையை வாங்குவார்.

(வி - ம்.) நல்லாரிருந்து கொடியும் கமுகுமாகிய அவைகள் தாழப் பாகடையாகிய திறையை வாங்குவாரென முடிவு செய்க. (சச)

ஊடி முன்னுமின் னுருடை மேகலை
வீட மைந்தர்கள் வெய்தென வீர்த்தலும்
ஆட கப்பொடி யான்விளக் கட்டுந்தம்
தோடு வில்லிடத் தூண்மறைந் துட்குவார்.

(இ - ள்.) (நாயகரோடு) சிறுகலாஞ்செய்து (போதற்கு) முற்படுகின்ற மின்னை யொத்த அந்நகரத்து மாதராருடையும், மேகலையும் நீங்க ஆடவர்கள் விரைவாக ஈர்க்க அப் பெண்கள், பொற்பொடியான் விளக்கினை யணைத்துந் தாங்களணிந்திருந்த காதணிகள் ஒளியை யுண்டாக்க (நாணி)த் தூணின்கண்ணே மறைந்து வருந்துவார்.

(வி - ம்.) முன்னும்-முற்படும். உடைமேகலை-உம்மைத்தொகை. வீட - நீங்க. வெய்தென - விரைவாக, ஈர்த்தல் - இழுத்தல். (சரு)

வீசு சுண்ணமு மென்மலர்ச் சுண்ணமும்
வாச மென்மலர் வார்மது வும்விரைஇத்

தேசு மிக்க திருநகர் கூட்டுமெய்ப்
பூசி நின்றபொற் பிற்றெனத் தோன்றுமே.

(இ - ள்.) அந்நகரத்து மாதரார் ஒருவர் மேலொருவர் வீசுகின்ற பொற் சுண்ணமும் மெல்லிய மலர்ப் பொடியும் மணத்தோடு கூடிய மலர்களினின்றும் ஒழுகுகின்ற தேனுங்கலந்து அழகினால் மிகுந்த அழகிய தணிகை நகரமானது கலவைச்சாந்தினை மெய்யின் கண்ணே அணிந்துநின்ற பொற்பினை யுடைத் தென்று சொல்லும் வண்ணம் தோன்றும்.

(வி - ம்.) விரவுதலாற் றேசுமிக்க நகரானது தோன்று மென்க. கூட்டு - கலவைச் சந்தனம். மெய்ப்பூசி - உடலிற்பூசி. (சசு)

சோலை வாயினுந் தோய்புனற் றேத்துமின்
மாலை மார்பினர் மாட்டுநன் காட்டயர்
வேலை மாதரின் வீழணி பம்புறல்
கோல மாநகர் கொண்டது போன்றதே.

(இ - ள்.) சோலையினிடத்தும், மூழ்குதற்குரிய புனலிடத்தும் ஒளியோடு கூடிய மாலையினையணிந்த மார்பினையுடைய ஆடவரிடத்தும், நன்றாக விளையாட்டைச் செய்கின்றகாலத்தில் பெண்கள்மாட் டிருந்து வீழ்கின்ற ஆபரணங்கள் நிறைதல் பெரிய நகரமானது அழகைக் கைக் கொண்டது போன்று தோன்றும்.

(வி - ம்.) தேத்து – இடம். ஆட்டயர்வேலை - விளையாடுகின்றகாலை. பம்புறல் – நிறைதல். கோலம் - அழகு. (சஎ)

தோட்டுக் காதினர் சூழ்கலை யின்சுவை
கேட்டுக் கற்றசு வாகதங் கேண்மையிற்
கூட்டுக் கண்ணிருந் தோதக்கு றித்தவை
கோட்டுக் கிள்ளைகள் கொண்டுந டாத்துமே.

(இ – ள்.) குழையையணிந்த காதினொடு கூடிய (அந்நகரத்து) மாதரார் ஆராய்கின்ற நூல்களின் சொன்னயம் பொருணயங்களாகிய சுவையினை (அம்மாதரார் இடையறுது சொல்ல முறையாகக்) கேட்டுப் பயின்ற கிளிகள் அச்சுவையினிடத்துத் தங்களுக்குளவாகிய நட்பினால் மாடங்களிற் கட்டிய கூட்டினிடத்திருந்து பலகாலும்சொல்லாநிற்க, அங்ஙனம் சொல்லா நிற்குஞ் சொற்களைக் கிளைகளில் வாழுங் கிளிகள் பலவிடங்களினும் கொண்டுசென்று பயிலும்.

(வி - ம்.) சூழ – ஆராய்கின்ற. சுவாகதம் – கிளி. கூடு – மாடங் களிற் கட்டிய கூடு. குறித்து - கருதி. கொண்டுநடாத்தும் - பல விடங் களிலும் கொண்டு சென்று பயிலும். (சஅ)

பூவை பைங்கிளி பூங்குயில் வண்டினம்
தாவு மந்தியும் யூகமுந் தத்தம

தாவி யந்துணை யோடும ளவளாய்
மேவி யும்பர்க்கும் வேட்கைபெ ருக்குமே.

(இ - ள்.) நாகணவாய்ப்புள்ளும், பசிய கிளிகளும், பொலிவு பெற்றகுயிலும், வண்டின் கூட்டங்களும், தாவுகின்ற செங்குரங்குகளும், கருங்குரங்குகளும் தத்தம் உயிரை யொத்த பெட்டைகளோடும் கலந்து பொருந்தித் தேவர்களுக்கும் மெய்யுறு புணர்ச்சிக்கண் விருப்பத்தினை மிகச்செய்யும்.'

(வி - ம்.) ஊகம் - கருங்குரங்கு. அளவளாய் - கலந்து. தேவருலக சத்து நோக்காற் புணர்தலின்றி இவ்வாறு மெய்யுறு புணர்ச்சியின்மையான், ''தேவர்க்கும் வேட்கை பெருக்கும்'' என்றார். (சக)

ஏர்மி குத்தவி டைநக ரீதினி
நீர்மி குத்தநி ழற்கிடங் கும்பொறிப்
போர்மி குத்தபொன் னிஞ்சியுஞ் சூழ்ந்துநற்
சீர்மி குத்தவ கநகர் செப்புவாம்.

(இ - ள்.) அழகு மிகுந்த இடை நகரத்தின் நிலைமை யீதாகும்' இனி நீர் நிறைந்த குளிர்ச்சியோடு கூடிய அகழும், இயந்திரங்களின் போர்த் தொழின் மிகுந்த அழகிய மதிலும் சூழ்ந்த நல்ல சிறப்பு மிகுந்த அக நகரின் நிலைமையைச் சொல்வாம்.

(வி - ம்.) நிழல் - குளிர்ச்சி. பொறிப் போர் - பொறிகள் செய்யும் போர். (ங0)

## அகநகர்

### வேறு

வேலவன்முன் விழுங்குகெனப் பணித்திடலும்
வீரமகேந் திரத்தை யுண்டு
சாலவத னிடத்தமர்ந்த தகுவர்குல
மேயழித்துத் தந்திட் டங்கு
நீலநெடுங் கடறனது நவையுமகல
வருட்டிறத்தா லீங்கிப் பண்டு
போலநகரைச் சூழ்கிடந்தாற் போன்றதுபொன்
மதிலுடுத்த கிடங்கு மாதோ.

(இ - ள்.) அழகிய மதிலாற் சூழப்பட்ட அகழியானது முருகப் பெருமான் (கடலை நோக்கி) முற்காலத்து வீரமகேந்திர மென்னும் பட்டினத்தை விழுங்குவாயாக வென்று கட்டளையிடக் கரிய கடலானது அந் நகரத்தினை யுட்கொண்டு மிகுதியாக அந் நகரத்தின்கட் டங்கும் அசுரர் குலத்தை மாத்திரம் அழித்து இத்தணிகைக்கலை அந் நகரத்தைக் கொணர்ந்து நிறுவி (ஆணை கடத்தலாகிய) குற்றத்தையும் அம் முருகப்

பெருமான் அருள்வகையா னீங்கி முன்னர்ப்போல அவ்வீர மகேந்திர மென்னும் நகரத்தினைச் சுற்றிக் கிடந்தாற் போன்றது.

(வி - ம்.) கடலானது தகுவர் குலத்தை மாத்திரம் அழித்து மீட்டும் அம் மகேந்திரத்தை யுண்டாக்கிச் சூழ்ந்து கிடந்தாற் போன்றதென முடிவு செய்க. வீரமகேந்திரம் - சூரன் பட்டினம். அதனை : அப் பட்டினத்தை. உண்டென்னும் செய்தெனெச்சம் "தந்தென்"னும் எச்சத்தோடு முடிந்தது. நவை - இறைவனுணை கடத்தலாகிய குற்றம்.

(கூ)

சூர்கவர்ந்த வளம்வேண்டிச் சுரரடுத்த
ஞான்றுதன்பாற் சூழ வைகும்
ஏர்கனிந்த திசைக்கிறைவ ருடன்மான
சோத்திரம்வந் திருந்தா லன்ன
போர்கடந்த மதிற்புறத்துப் பூங்கிடங்கம்
மலைவதிபுட் கரஞ்சூழ் சுத்த
நீர்கலந்த கடலுமுடங் கணைந்ததனைச்
சூழ்கிடந்த நிலையுங் காட்டும்.

(இ - ள்.) சூரன் (தேவர்கள்பால்) வௌவிய செல்வங்களை (மீட்டும் பெற) விரும்பித் தேவர்கள் (தணிகை மலையை வந்து) அண்மிய காலத்து மானசோத்திர மென்னும் மலையானது தன் பக்கத்துச் சூழத் தங்குந் திக்குப் பாலகருடன் வந்திருந்தாலொத்த (பகைவர் மேற் சென்றவரின்) போரினைச் செய்யும் மதிலின் பக்கத்தே யுள்ள பொலிவு பெற்ற அகழியானது அம்மானசோத்திர மலையின்கட் டங்கிய புட்கர மென்னுந் தீவைச் சூழ்ந்த நல்லநீர் கலக்கப்பெற்ற சுத்தநீர்க் கடலும் ஒரு சேரப் பொருந்தி அம்மானசோத்திர மலையைச் சுற்றிக் கிடக்கும் நிலையையும் காட்டா நிற்கும்.

(வி - ம்.) அடுத்த ஞான்று தானும் வந்திருந்தா லன்னவென முடிக்க. புட்கரத் தீவில் பெரும்புறக் கடல் சூழப் பெற்றிருக்கிற மானசோத்திர மலையின் எண்டிக்கிலும் அட்டபாலக ரிருத்தலால் "திசைக் கிறைவருடன்" என்றார். கிடங்கு காட்டு மென்க. புட்கரஞ் சூழ் - புட்கர மென்னும் தீவைச் சூழ்ந்த. அதனை - மானசோத்திர மலையை.

(உ0)

கோடுநெருங் கியதமது குலம்பணித்த
றனக்கன்றிக் குறிய தொண்டன்
பாடுமரு வியவிறைவற் பணிந்துவரம்
பெறநேமிப் பறம்பு மப்பால்
பீடுபிறங் கியகடலு மதில்கழிப்
பெயர்பூண்டு பெயர்ந்த வோவென்
றூடுகொடி மதிலுகப்பு மகழியகற்
சியுமெவரு மயிர்ப்ப மல்கும்.

(இ - ள்.) சிகரங்கள் (கரைகள்) பொருந்திய (மலையும் கடலு மாகிய) தங்கள் குலத்தினை யடக்கல் (குமரக் கடவுளாகிய) தனக்கே யல்லாமல் குறுமுனிவன் ஆகிய அடியான் மாட்டும் அத்தொழிலை வைத்த இறைவனாகிய முருகப் பெருமானை வணங்கி வேண்டும் வரங் களைப் பெறச் சக்கரவாளகிரியும், அதன் பக்கலிற் பெருமையோடு விளங்கிய பெரும்புறக் கடலும் மதிலென்னும் பெயரையும், அகழி யென்னும் பெயரையும் பூண்டு (இத்தனிகை வரையை) அடைந் தனவோ என்று யாவரும் கூறும் வண்ணம் அசைகின்ற கொடிகள் கட் டப்பெற்ற மதிலினுயர்ச்சியும் அகழியின் விரிவும் (கண்டோர் யாவரும்) ஐயங்கொள்ளும் வண்ணம் பொருந்தும்.

(வி - ம்.) கோடு நெருங்கிய - மலையைக் குறிக்கும் பொழுது சிக ரங்கள் நெருங்கிய எனவும், கடலைக் குறிக்கும் பொழுது கரைகள் நெருங்கிய எனவும் பொருள் கொள்க. குலம் என்றது கடலினத்தை யும் மலையினத்தையு மென்க. குறிய தொண்டன் - கண்டகத்தியன். மதிலகழிப் பெயர் - மதிலென்கிற பெயரும் அகழி என்கின்ற பெயரும். உகப்பு - உயர்ச்சி. "உகப்பே யுயர்வு" என்னும் தொல்காப்பியச் சூத் திரத்தா னுணர்க. (௬௬)

பாதலமுன் னுலகமெலாம் படிந்தாடிப்
பருகியுளப் பரிவு தீர
ஆதிகம டந்துளைந்து களிதூங்க
வழற்கால வரனுர் தங்கும்
சோதியழ றழலாமை யப்புவனத்
தினிதமர்வோர் தோய்ந்து மெய்யிற்
சீதமுற வவ்வளவுஞ் சென்றுழ்ந்து
கிடந்ததிந்தத் தெளிநீர்ச் சூழல்.

(இ - ள்.) கீழுலகினை முதலாக வுடைய ஏழுலகங்களி லுள்ளாரும் மூழ்கி விளையாடி யுண்டுள்ளத்தின்கண் ணுள்ள துன்பம் நீங்கவும், விண்டுவாகிய முதலாமை துளைந்து விளையாடி இன்பத்திலே தங்கவும், காலாக்கினி யுருத்திரனுர் வாசம் பண்ணுகின்ற ஒளியோடு கூடிய அக் கினியானது வெதுப்பாமல் அக்காலாக்கினி யுருத்திர புவனத்தின்கண் ணினிதாகத் தங்குபவர்கள் மூழ்கித் தங்கள் மெய்யின்கட் குளிர்ச்சியுறும் படி அக்காலாக்கினி புவனம் வரையும் சென்றுமுழுமுற்றுக் கிடந்தது இவ் வகழியாகிய தெளிந்த நீரையுடைய இடம்.

(வி - ம்.) பாதல முன்னுலகம் - கீழுலக முதலாகிய ஏழுலகம். உம்மைகள் எண்ணின்கண் வந்து தொக்கு நின்றன. தழலாமை-வெதுப் பாமல்; நீர்ச்சுழல் ஈண்டுக் கிடக்கும் என்க. (௬௭)

அந்தரத்தில் விண்ணவர்கட் கணிநகரம்
பற்பலவு மமைத்த வேதன்
இந்தநக ரனைத்துமொரு மதலையின்றே
லற்காவென் றெண்ணி வல்லே

மைந்துபெறு மொருமலையந் நகரனைத்துஞ்
செறிந்தோங்க வகுத்தல் போலும்
கொந்தொளிவிட் டெறிக்குமணி குயின்றுவெளி
யடைத்துகந்த கோணை நொச்சி.

(இ - ள்.) ஆகாயத்தின்கண்ணே தேவர்களுக் கழகிய நகரங்கள் பற்பலவற்றையும் செய்த பிரமன் (யானுளவாக்கிய) இந் நகரங்களெல் லாம் (தம்மைத் தாங்குவதொரு) தூணொன்றின்றாயின் ஆகாயத்தின்கட் டங்கமாட்டாவென்று கருதி வலிமையைப் பெறுகின்ற ஒருமலையை அந் நகரங்க ளெல்லாஞ் செறிந்து உயர்ச்சியை யடையச் செய்ததுபோ லாகும் கூட்டமாகிய ஒளியினை வீசி விளங்குகின்ற மணிகளழுத்திய ஆகாயத்தை மறைத்துயர்ந்த அழியாத மதில்.

(வி - ம்.) இந்த நகரம் - அந்தர நகரம். மதலை - தூண். "மத லையே கொன்றை பிள்ளை மரக்கலம் கொடுங்கை தூணும்" என்னும் நிகண்டா னறிக. அறகா - தங்கா. கொந்து - கொத்து. வெளி - ஆகாயம். உகந்த - உயர்ந்த. கோணை - அழியாத. (௯௬)

கிழக்கமர்ந்த வேழுலகுந் தமக்குமக
ழெனவுடுத்த கிடங்கும் விண்ணோர்
வழக்கமர்ந்த வேழுலகுந் தமக்குமதி
லெனவளைத்த மதிலும் வேத
முழக்கமர்ந்த தணிகைவரை முருகனிடர்
துமித்ததுமேன் மொய்யா தோம்ப
வழக்கமர்ந்த தனதருளை விடுப்பவது
போய்வளைந்த வுருவம் போலும்.

(இ - ள்.) கீழே தங்கிய ஏழுலகங்களும் தங்களுக்கும் அகழியாகப் பொருந்திய அகழியும், தேவர் வழங்குதல் பொருந்திய (ஆகாயத்தின் கட் டங்கிய) ஏழுலகங்களும் தங்களுக்கும் மதிலாகக் கொண்ட மதிலு மாகிய இவை யிரண்டும் வேத வொலி பொருந்திய தணிகை மலையின்க ணெழுந்தருளிய முருகப் பெருமான் இப் பதினன்குலகின்கணுள்ள (மூவகையான மக்களுக்குளவாகிய) பிறப் பிறப்பாகிய துன்பங்களைக் கெடுத்து அத்துன்பமானது மேலும் பொருந்தாது பாதுகாப்பதற்கு (தம்மை வழிபடும் அடியார்களுக்கு) வழங்குதல் பொருந்திய தனது (கைம்மாறில்லாத) நல்ல அருளினை(க் காக்கும் வண்ணம்) செலுத்த அவ்வருளானது சென்று விளைந்த வடிவத்தை யொக்கும்.

(வி - ம்.) முருகப் பெருமான் மேல் கீழுலகி னுள்ளாருடைய இட ரைத் துமித்து அவ்விடரானது மீண்டும் அவர்களைப் பற்றாவண்ணம் ஓம்பும்பொருட்டு விடுத்த அருளென்க. கிழக்கு - கீழ். "காணிற் கிழக் காந்தலை" எனும் பொய்யா மொழியா னுணர்க. வழக்கமர்ந்த - வழங் குதல் பொருந்திய, அடியார்கட்கு வழங்குதல் பொருந்திய எனக் கூட்டுக. அது - அவ்வருள். (௯௭)

களவொழுக்கி னைந்திணையு நானிலமு
மொருங்கடுத்த கலப்பி னுற்ற
உளமதித்த வேற்கடவு ளோங்கல்புற
வம்பணையின் றுறுத னோக்கி
அளவையிடற் கரிதாக வேறமைத்த
கடல்போலு மகழி வேனில்
தளர்வகல வாட்டயர்வார் சமைத்துறுத்த
பலமதலை தாங்கு மன்றே.

(இ - ள்.) *களவொழுக்கத்தின்கண் நிகழு மைந்திணைப் புணர்ச்சியையும் நால்வகை நிலமும் பொருந்திய கலப்பினிடத்துச் செய்யத் திருவுளத்திற் கொண்ட வேற்படையை யுடைய முருகக் கடவுள், குறிஞ்சியும், முல்லையும், மருதமுமாகிய மூவகை நிலங்களு மிவ்விடத்தே பொருந்தி யிருத்தலைக் கருதி (யாவராலும்) அளவிடற் கருமையாக வேறு செய்த கடலினை யொக்கும் அகழி.*

(வி - ம்.) *அவ்வகழி வேனிலா னுளவாகிய தளர்ச்சி நீங்கும் வண்ணம் (புனலாட்டைச் செய்யும் தலைவர்கள்) கரிமுக வடிவாகவும் பரிமுக வடிவாகவும் செய்த பல மரக்கலங்களைத் தாங்கு மென்க.*

*களவொழுக்கி னைந்திணை - களவொழுக்கினு ளுளவாகிய ஐந்திணைப் புணர்ச்சி; ஐந்திணை புணர்ச்சிக்கானமையின் ஆகுபெயர். ஒருங்கடுத்த கலப்பினுற்ற - ஒருங்கு சேர்ந்த கலப்பினிடத்துச் செய்ய. இன் ஏழாவத னுருபு. வேனிற்றளர்வு - வேனிலா னுளவாகிய சோர்வு. ஆட்டயர்வார் - (இருகாமத்திணை ஏரி முதலியவற்றி லாடுவார் போல) புனலில் விளையாட்டுச் செய்பவர். உறுத்த - சேர்ந்த. மதலை - மரக்கலம். "மதலையே கொன்றை பிள்ளை மரக்கலம் கொடுங்கை தூணும்" என்னும் நிகண்டா னறிக.* (௯௭)

முத்தனைய நகைமடவார் வீசியசுண்
ணமுமுலையிற் கழிந்த சாந்தும்
மைத்தகுழன் மலர்த்தாது மஞ்சளுமாட்
டயர்காலை மலிந்த யாவும்
தத்துதிரைப் பேரகழி யெறிந்தொதுக்கும்
வண்டலொளி தழைக்கு மாற்றுற்
சுத்தநறுங் கடல்சூழ்ந்த தமனியப்பார்
பொருமடுத்த சூழ லெல்லாம்.

(இ - ள்.) *முத்தினை யொத்த பல் வரிசையை யுடைய அந்நகரத்திளம் பெண்கள் (ஒருவர்மே லொருவர்) வீசியெறிந்த பொற்பொடியும், தங்கள் தனங்களினின்றும் கழித்த கலவைச் சந்தனமும், கரிய கூந்தலின் கண்ணுள்ள மலர்ப் பொடியும் மஞ்சளும், புனலாடுகின்ற காலத்து வீழ்ந்து மலிந்தனவாகிய எல்லாப் பொருள்களும், தாவுகின்ற அலைகளையுடைய பெரிய அகழி (அலையாகிய கையால்) எறிந்தொதுக்குகின்ற*

வண்டலாகும். அவ்வண்டல் (பொன்போல்) ஒளியை வீசும் தன்மை யால் (அவ்வகழியை) அடுத்துள்ள இடங்களெல்லாம் நறிய நன்னீரை யுடைய பெரும்புறக் கடலைச் சூழ்ந்த பொன்னிறத்தை யுடைய பூமி யினை யொக்கும்.

(வி - ம்.) மைத்த-கரிய. சுண்ணமும், சாந்தும், மஞ்சளும், மலிந்த யாவும் வண்டலென முடிக்க. அவ்வண்ட லொளிவிடுதலால் அகழி யைச் சுற்றிய இடமெல்லாம் புறவாழியை யடுத்த பொன்னிறப் பூமி யினை யொக்குமெனக் கூட்டுக. (௩௮)

விங்குபுனற் சரவணத்து வேற்கடவு
டனைவிரிபொற் றவிச தாகத்
தாங்குமல ரினமென்று தாமரையும்
வரைகிழித்த தடந்தோண் மாலைப்
பூங்குவளை மலரினமென் றிருகுவளைப்
பலமலரும் பூத்த தென்ப
ஒங்குமவ னருட்குரியார் தமக்கடுத்தா
ரையுட்போற்று முறுவர் மான.

(இ - ள்.) உயர்ந்த முருகப் பெருமா னடியார்க் கடியாரையும் போற்று முனிவரை யொப்ப மிக்க நீரையுடைய சரவணப் பொய்கை யில் வேற்படையை யுடைய முருகக் கடவுளை விரிந்த அழகிய ஆசன மாகத் தாங்கிய தாமரை மலருக்கினமாகு மென்று தாமரை மலரும், கிர வுஞ்ச மலையைப் பிளந்த பெருமை பொருந்திய தோளினிடத் துளவாகிய மாலையிற் பொருந்திய பொலிவு பெற்ற குவளைமலருக் கினமாகுமென்று கருங்குவளையுஞ் செங்குவளையுமாகிய இருவகை மலர்களும் மலர்ந்தன வென்று சொல்வார்கள்.

(வி - ம்.) இரு குவளை - கருங்குவளை, செங்குவளை. அருட்குரியார் தமக்கடுத்தார் - அடியார்க்கடியார். உறுவர் - முனிவர். இதனை "உறற் பால நீக்க லுறுவர்க்கு மாகா" என்ற நாலடிச் செய்யுளா னுணர்க. (௩௯)

இன்னுமறை பலகாலிங் கிகப்புறினுங்
கடலமுத மெடுக்க வேண்டி
மன்னமரர் துயவுறினு மிடர்நமக்கெய்
தாவெனமான் மகிழ்ச்சி கூரத்
துன்னுமக ரங்களுமோட் டாமையுமன்
னவன்கரத்துத் தூய வாழி
மின்னகுகூ ரிழந்தேனென் றல்லாக்கு
மிடங்கர்களும் விறக்கு மன்னே.

(இ - ள்.) (முன்னர் மறைகளைச் சோமகாசுரன் கொண்டு கடலி லொளித்தது போல) இனியும் வேதங்களானவை பன்முறை யிவ்வுலகை விட்டு நீங்கினாலும் பாற்கடலின்கண் ணமுதமெடுக்க விரும்பித் தேவர்

கள் வருந்தினும் (கொணர்தலும் தாங்கலுமாகிய) துன்பங்கள் நமக்குப் பொருந்தா வென்று விண்டு மகிழ்ச்சி மிக (அவ்வகழியின்கண்) பொருந்துகின்ற சுறா மீன்களும் பெரிய ஆமைகளும் அவ்விண்டுவின் கரத்தில் (ஆதிமூலமே யென்ன யானையைப் பிடித்த முதலைமே லேவப் பட்டு வெற்றி பெற்றுத்) தங்கிய பரிசுத்தமான சக்கரப் படையானது ஒளியோடு விளங்குகின்ற கூரிணையிழந்தோ மென்று மயங்குதற் கேதுவாகிய முதலைகளும் செறிந்து வதியும்.

(வி - ம்.) இகப்புறினும் - நீங்கினும். துயவு - வருத்தம். அல்லாக்கும் - மயங்கும். விறக்கும் - செறியும். (௧0)

நெடுங்கைவழிப் புழையகத்து நிறைகடலோ
டெமைமடுத்து நிலத்து மீளக்
கடுங்கொலைய களிற்றுமுகக் கடவுள்பல்கால்
விடுத்தெமது கரஞ்சேர் சங்கம்
அடுங்கணங்கொண் டகன்றிடினுங் கவலையிலே
மெனத்திருமா லயர்வு நீங்கப்
படுங்கதிர்வெண் மணிகொழிக்கும் பலவளைசூழ்
தலைப்பணிலம் பல்ல சூழும்.

(இ - ள்.) கடிய கொலைத் தொழிலையுடைய யானைமுகத்தை யுடைய மூத்த பிள்ளையார் நீண்ட துதிக்கையின்கணுள்ள துளையி னிடத்து நிறைந்த பாற்கடலோ டெம்மையு முட்கொண்டு இப் பூமி யின்கண் (திருவிளையாடலாக) இன்னும் பலதரம் மீள விடுதலைச் செய்து எமது கரத்திலுள்ள சங்கத்தை (இவ்வுலகத்தை யெல்லாம்) கொல்ல வல்ல (அப்பெருமான் பரிவாரமாகிய) பூதகணங்கள் கொண்டு செல்லினும் யாம் கவலையடையே மெனத் திருமால் வருத்தம் நீங்கும் வண்ணம் ஒளி பொருந்திய முத்துக்களைச் சொரியும் வலம்புரிச் சங்கம் ஆயிரம் சூழப்பெற்ற பாஞ்சசந்ய மென்னும் சங்கங்கள் பல மொய்க்கப்பெறும்.

(வி - ம்.) தலைப்பணிலம் - பாஞ்சசந்யம். பாஞ்சசந்ய மென்னும் சங்கினை ஆயிரம் வலம்புரிச் சங்கங்கள் சூழல் முறையாகலின் "மணி கொழிக்கும் பல்வளைசூழ் தலைப்பணில" மென்றார். இதனை "இப்பி யாயிரமே சூழ்ந்த" என்னும் நிகண்டா னறிக. (கக)

மந்தரநட் டரவநெடுங் கயிறியைத்துக்
கடைந்துலவா மருந்து காண
அந்தரரு மினிவருவர் போலுமென
முகிலினங்க ளாழி நோக்கா
திந்தமணி நெடுங்கிடங்கி னரும்புனல்வாய்
மடுத்தெழுந்தவ் விளைப்பு நீங்கச்
சந்தமணி மதிற்றலையிற் கிடந்துவெளி
பரந்தெங்குந் தளிக்கு மன்றே.

(இ - ள்.) மந்தர மென்னும் மலையை மத்தாக நட்டுப் பாம்பாகிய கயிற்றைப் பூட்டிக் கடைதலைச் செய்து சாவா மருந்தாகிய அமிர்தத்தை யுண்ணக் கருதியவராகிய தேவரும் இன்னும் வருவார்களென்று மேகக் கூட்டங்கள் (நீரை யுட்கொள்ளக்) கடலினை நோக்கிச் செல்லாது இத் தணிகையின்கண் ணுள்ள அழகிய நீண்ட அகழியின்கண் ணுள்ள நல்ல நீரை யுட்கொண்டெழுந்து (அங்ஙனமுண்ட அயர்வு நீங்க) அழகினை யுடைத்தாகிய அந்நகர் மதிலிடத்துத் தங்கி ஆகாயத்தின்கட் பரவி எங்கும் மழையைத் துளிக்கும்.

(வி - ம்.) உலவா மருந்து - என்றுஞ் சாவா மருந்தாகிய அமிர்தம். அந்தம் - அழகு. வெளி - ஆகாயம். தளிக்கும் - துளிக்கும்; "தளி யென்பதுளியே கோவில்" என்னும் நிகண்டா னறிக. (கூஉ)

ஒழுகுதிரைக் கிடங்கிடைநின் மதில்கடல்க
ளொருங்குவிரா யுறுநீர் நாப்பண்
விழுதுநிகர் சடைப்பெருமான் றழற்பிழம்பா
யெழுந்தவுரு விழையக் கங்கை
பழுதறுமால் பதந்துருவிப் புனல்கரப்பப்
பங்கயத்தோன் பறவை யாகி
எழுமளவி லோசனிக்கு முறைகாட்டி
யிடைமதிற்கட் டுளும்பு மன்றே.

(இ - ள்.) நீண்ட வலைகளோடு கூடிய அகழியினிடத்து நீண்ட மதிலானது எழுவகைக் கடலும் பெருகியொருசேர விரவிக்கலந்த மிக்க பிரளய வெள்ளத்தி னடுவில் விழுதினையொத்து நீண்ட சடையினை யுடைய சிவபெருமான் தீப்பிழம்பாக எழுந்தருளிய வடிவினை யொப்ப (பிரமனைப்போல் முடிகண்டாமெனக்) குற்றம்படுதலிலவாகிய விண்டு, அடியினைத் தேடி(ப் பன்றி வடிவாக) நீரின்கண் மறையத் தாமரை மலரின்கண் வதியும் பிரமன் அன்னப் பறவையாகி யெழுங் காலத்திற் சிறையடிக் கொள்ளும் முறைமையினைக் காணச்செய்து (ஆகாய) கங்கையானது மதிலிடையிலே துளிக்கும்.

(வி - ம்.) ஒழுகுதல் - நீளல்; 'வார்தல் போதலொழுகல் மூன்றும், நேர்பும் நெடுமையுஞ் செய்யும் பொருள' என்பதனு னறிக. மதில் எழுவாய். கடல்க ளொருங்குவிரா யுறுநீர் - பிரளய வெள்ளம். நாப்பண் - நடுவிடம். விழுது - ஆல்முதலியவற்றினின்று மிறங்கும் ஒருவகைக் கொடி. கங்கை துளும்புமெனக் கூட்டுக. ஓசனித்தல் - சிறையடிக் கோடல். இதனை "உடைதிரை முத்தஞ் சிந்த ஓசனிக்கின்ற வண்ணம்" என்னும் சிந்தாமணி (2652)ச் செய்யுளி னுரையா னுணர்க. (கூ௩)

கோளுறுவின் னரவமணி கொழிக்குமகன்
கிடங்குடுத்துக் குரூஉக்கல் வேய்ந்து
வாளுறுதின் மதிலிடைத்த னுடலுரிஞத்
தவழ்ந்தேகும் வளப்பு முந்நீர்த்

தாளுறுபன் னவர்நிறவுந் தடந்தீலம்பு
சூழ்ந்தவராத் தாம்பு நேரும்
நீளுறுவெண் கதிர்க்கற்றை நிலாத்தொடுதன்
மதலையென நிற்ற னேரும்.

(இ - ள்.) ஒன்பான் வகைக் கோள்களினுற்ற பாம்பு (சக்கினைக்கள்) முத்தினங்களைச் சொரிதற் கிடமாகிய அகழியா றுகைப் பெற்று நிறம் பொருந்திய அரதனக் கற்கள் பதித்திருத்தலான் ஒளி பொருந்திய மதிலின்கட் டன்றுடை மணிநுதலைச் செய்ய வணர்ந்தெறுகின்ற வழு கானது திருப்பாற் கடலின்கண் (சாவா மருந்தினை பெறுக்க) சூழ்ந்து கொண்ட தேவர்கள் திரட்டிய பெருமை பொருந்திய மந்தர மலையைச் சுற்றிய பாம்பாகிய தாம்புக் கயிற்றினை யொக்கும். நீளுகின்ற வெள்ளிய கதிர்த் திரட்சியை யுடைய சந்திரன் மதிலிற் பொருந்தல் கடைதற்கு) நாட்டுந் தறியென்று சொல்லும்படி நிற்றலை நாட்டும்.

(வி - ம்.) குருஉ - நிறம். "குருவும் கெழுவும் நிறனாகும்மே" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தா னுணர்க. வாள் - ஒளி. "வாள் ஒளியாகும்" என்னும் சூத்திரத்தா னுணர்க. கோளுறு விடவரா வம் - நவக்கிரகங்களிலுற்ற அரவமென்க. தன் என்பது அரவத்தை யென்க. தாள் - முயற்சி. நிறவும் - நிறுத்தும். அராத்தாம்பு - அரா வாகிய கயிறு. மதலை - கடைதற்கு நாட்டுந் தறி. கடல் கடைகின்ற காலத்து நிலவு தறியாயினமையை "தம்ப மாமதி யெனவரும்" பாரதச் செய்யுளா னறிக. (௩௪)

வெளிவிரவு வளிதன்பால் விரவநெடும்
புவிவிரவு விரிநீர் தன்னை
ஒளிவிரவி நின்றதுபோல் விரவுசெம்பொன்
மதிலும்ப ருயர்ந்த ஞாயில்
தெளிவிரவு தழற்கொழுந்து சிவணுமவற்
றெழுந்தூமத் திரட்சி யென்ன
வளிவிரவு கொடிதுவன்று மிம்முறையால்
வாணனகர் மதிலும் போலும்.

(இ - ள்.) ஆகாயத்தின்கட் கலந்த காற்றானது (அக்கினியாகிய) தன்னிடத்துக் கலக்க நீண்ட பூமியோடு கலந்த தண்ணீரை, அவ்வக்கினி யானது கலந்து நின்றது போல (ஆகாயத்தோடு கலந்த வாயு மண்டலத்தையும், நீரோடு கூடிய பூமண்டலத்தையும் உயர்வாலும் கீழ்ச் செல்லுதலாலும்) கலந்த செம்பொன் வடிவமாகிய மதிலின்மே லுயரிய வேலைப்பாடமையக் கட்டிய மதிலுறுப்பு ஒளி கலந்த தெளிதல் கலந்த அக்கினியினுடைய நுனியை யொக்கும். அந்நுனியி லிருந்தும் எழு கின்ற புகைக்கற்றை யென்று சொல்லும் வண்ணம் வாயு மண்டலத் தைக் கலந்த கொடிகள் நெருங்கா நிற்கும். இங்ஙனம் கூறிய முறை யால் வாணாசுரனது நகராகிய சோணிதபுரத்தின் மதிலை யொக்கும்.

(வி - ம்.) வெளி விரவு வளி - அகலிரு விசும்பின் அடங்கிய காற்று. தன்பால் விரவ - (அகலிரு விசும்பி லடங்கிய காற்று தன்னுளடங்கிய)

அக்கினி தன்னிற் கலக்க. ஒளி, நெடும்புவி விரவு விரிநீர்தன்னை விரவி நின்றதுபோல் - அவ்வக்கினியானது நீண்ட பூமியைத் தன்னுள் ளடக்கிய விரிந்த நீரைத் தன்னுள்ளடக்கி நின்றதுபோல என்க. இதனுல் ஆகாயத்திற் காற்றும், காற்றுள் நெருப்பும், நெருப்புள் நீரும், நீருட் பூமியும் அடங்கி நிற்கு முறை தெற்றெனப் புலனும். இவ் வைம்பெரும் பூதங்களி னடுநிற்றலாகிய நெருப்பு, மேலுள்ள இரு பூதங்களினும் கீழுள்ள இரு பூதங்களினும் கலந்து நின்று மிளிர்வதுபோல இம்மதில் பூமியைத் தன்னிடத்துக் கொண்ட அகழி நீரையும், ஆகாயத்தோடு கலந்த வாயு மண்டலத்தையும் அக்கினி பூதம்போலக் கலந்து நின்றமையால் "ஒளிவிரவி நின்றதுபோல் விரவு செம்பொன் மதி" லென்றார். ஞாயில் - ஏப்புழைக்கு நடுவே எய்து மறையும் கூட்டென்பர் நச்சினார்க்கினியர். குருவித்தலை யென்பர் அடியார்க்கு நல்லார். "ஞாயிலுஞ் சிறந்து நாட்கொடி நுடங்கும் வாயில்" என்னும் சிலப்பதிகாரத்து (217, 218) அடி அடைக்கலக் காதையா னுணர்க. இம்முறையால் - இத்தன்மையால். (௬௫)

குழுமுபொறி மடங்கல்களி றடுபுலிவா
னரம்பாந்தள் குலாய நீரால்
எழுவரையிற் குவட்டினங்க ளெனநிரந்த
ஞாயிலினெந் திரங்கள் சில்ல
எழுவடிவா ளயிலாழி யெய்கணையின்
னனவுமிழ விலங்கு நொச்சி
வழுவில்படைக் குலமனைத்தும் வகுக்குமறு
முகன்கரத்து வளைய மானும்.

(இ - ள்.) குழுமிய பொறியாகிய சிங்கமும், யானையும், கொல்லும் புலியும், குரங்கும், பாம்பும் இவைகள் விளங்கிய தன்மையால் உயர்ந்த மலையின்கண் ணுள்ள சிகரக் கூட்டங்கள் என்று சொல்லும்படி பொருந்திய மதிலுறுப்பின்க ணுள்ள பொறிகள் சில, இருப்புலக்கையும், அடித்த வாளும், கூர்மையான சக்கரமும், எய்யத்தக்க அம்பும் ஆகிய இவைபோல்வன பிறவற்றை உமிழாநிற்க, விளங்குகின்ற மதில் குற்றமில்லாத படைக் கூட்டங்க ளனைத்தும் உண்டாக்கின அறுமுகக் கடவுள் திருக் கரத்தின்க ணுள்ள சக்கரத்தை யொக்கும்.

(வி - ம்.) மதிலை மலையாகவும், மதிலுறுப்பினைச் சிகரமாகவும் பொறியாகிய மடங்கல் முதலியவற்றை அம் மலையின்கண் வதியும் உயிர்த் தொகையாகவும் கொள்க. மதிலுறுப்பின்கண் ணுள்ளது இயந்திர மென்க. சில்ல உமிழ எனக் கூட்டுக. வளையம் - சக்கரம். இச் சக்கரம் பெருமான் திருக்கரத்தி னின்றும் போந்து பல ஆயுதங்களையும் ஆக்கினமையின் அறுமுகன் கரத்து வளையமென்றார். இதனைக் கந்த புராணக் கதையா னறிக. குழுமு பொறி மடங்கல், களிறு, அடுபுலி, வானரம், பாம்பு முதலிய இயந்திரங்களா மென்பதை "கரும்பொனியல் பன்றிகத நாகம்விடு சகடம், குரங்குபொரு தகரினொடு" என வரும் சிந்தாமணி (௭௩) செய்யு ளடியானு மிவைகளி னுரையானு முணர்க. களிறு - பன்றிப் பொறி. "மதிற்றலையி னேறினரு டலைக் கோட்டாற் கிழிக்கும் பன்றிப் பொறியும்" என்றார். குரங்கு - குரங்கு

*போலிருந்து சேர்ந்தாரைக் கடிக்கும் பொறியும். பாம்பு - விடவர வாகச் செய்த பொறி.* (௧௬)

வேறு

வடாதுசார் கயிலைக் குன்றம் வளைந்தபொன் னிஞ்சி மாலும்
கெடாதசீர் மதிற்பா லொட்டுங் கேதனத் திரள்கள் சூழ்ந்து
விடாதுமே லிவப்ப விண்ணின் வேந்திருக் கின்ற காட்சி
அடாதசீர் காழி வஞ்ச வடவியி லிருத்தல் காட்டும்.

(இ - ள்.) *வடக்கண் பொருந்திய கைலை மலையானது (தணிகை நகரைச்) சுற்றிய அழகிய மதிலையொக்கும். கெடாத சிறப்பினை யுடைய மதிற்கட் கட்டிய கொடிக் கூட்டங்கள் சுற்றி யிடைவிடாது மேலே யெழத் தேவருலகத்தி லிந்திர னிருக்கின்ற தோற்றமானது வேறொன்றற்கும் பொருந்தாத சிறப்பினையுடைய காழி மாநகரத்தின் கண்ணுள்ள மூங்கில் வனத்தி லொளித்திருத்தலை யொக்கும்.*

(வி - ம்.) *வேந்தன் - இந்திரன். "வேந்தன் மேய தீம்புன லுலகம்" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தானும் "வேந்தனும் வெந்து கெடும்" என்னும் திருக்குறளானு முணர்க. வஞ்சம் - மூங்கில், இதனை "வம்சம்" என்பதன் திரிபென்பர். வஞ்ச அடவியினிருந்த கதை சீகாழிப் புராணத்தா னறிக.* (௧௭)

வில்லுமிழ் மணிப்பொற் கோடும் வெண்சுதை யெயிலும் பூப்பப்
புல்லிய வகழித் தெண்ணீர் புடைவளை பரிவே டங்கும்
எல்லுமிழ் மதிக்கு நாப்ப ணிலங்குவான் கரையின் பாங்கர்
ஒல்லும்வார் சோலை மற்றை யுடுக்குல நிரந்த வானம்.

(இ - ள்.) *ஒளியைக் கக்குகின்ற மணிக ளொதுங்கிக் கிடக்கும் கரையும் வெள்ளிய சுண்ணச் சாந்து தீற்றிய மதிலும் பொலிய அவற்றைத் தழுவிய அகழியின் கண்ணுள்ள நீரானது (மதியின்) பக்கத்தே சுற்றிய ஊர்கோளுக்கும் ஒளியை விடுகின்ற மதியினுக்கும் நடுவே விளங்குகின்ற ஆகாயமாகும். பெரிய அக்கரையின் பக்கத்தே பொருந்தும் பல மலர்களையுடைய சோலையானது அதனின் வேறாகிய தாரகைக் கூட்டங்கள் பொருந்திய ஆகாயமாகும்.*

(வி - ம்.) *கோடு - கரை. வெண்சுதை - சுண்ணச் சாந்து. பூப்ப - பொலிய. "பொருளற்றார் பூப்பர்" என்னும் பொய்யாமொழியும் இப் பொருட்டாதலை யறிக. தெண்ணீர் எழுவாய். பரிவேடம் - சந்திரனைச் சுற்றியிருக்கும் ஊர்கோள். நாப்பண் - நடுவிடம். சந்திரனுக்கும் ஊர்கோளுக்கும் நடுவிடமாகிய வானம் நீங்கிய ஏனைய வானிடம் கரையின் பக்கத்திலுள்ள சோலையாகு மென்பார், "மற்றை யுடுக்குலம் நிறைந்த வானம்" என்றார். தெண்ணீரானது வானாகு மெனவும் சோலை உடுக்குலம் நிரந்த வானாகு மெனவும் முடிவு கொள்க.* (௧௮)

இடர்தபு மதிலுற் பாலு மெழுந்தகோ புரங்கள் மேருத்
தடவரை நான்கு மெல்லை தணந்துகந் திருந்த வாங்குக்

கோடிவரைத் தேத்து நீண்ட குளிர்மரங் கிடங்கு முற்றும்
றோடியுறக் கிடந்த சாம்பூ நதமெனுந் தொல்லை யாறு.

(இ - ள்.) இடர் நீங்கிய மதிலின் நாற்புறத்திலு மெழுந்துள்ள கோபுரங்கள் மேருமலைக் கடைகல்லா யடுத்த பெருமை பொருந்திய நான்கு மலைகளும் தம் மெல்லையினின்று நீங்கி உயர்ந்திருந்தனவாகும். அம் மதிலின்கண் ணுள்ள கொடிகள் வரையிடத்து நீண்டுயர்ந்துள்ள குளிர்ச்சியைத் தருகின்ற மரங்களாகும். அகழியானது முழுதும் வளைந்து கிடந்த சாம்பூநத மென்கின்ற பழமையாகிய ஆறாகும்.

(வி - ம்.) தடவரை நான்கு - மேருக் கடைகல்லா யிருந்த நான்கு மலை யென்க. அவை நான்கும் உகந்திருந்தன வாகு மெனவும் ஆங்குக் கொடி மரமாகு மெனவும், கிடங்கு நதியாகு மெனவும் முடிக்க. ஆங்குக் கொடி - மதிலுள்ள கொடி. வரைத்தேத்து - வரையிடம். தொடி - வளைவு. மேருமலையின் ஒருபுறத் தோடுகின்ற சாம்பூநதமானது ஈண்டு நாற்புறத்திலும் சூழ்ந்தாற் போலிருக்கின்ற தென்க. (௬௯)

நவமணி குயிற்றி யிட்ட நான்குகோ புரமும் விண்ணிற்
சிவபுரத் தெல்லை காறுஞ் சிவனுவோர் வணங்க நிற்கும்
நிவமணிக் கிடங்கிற் றேற்று நீழலுங் கிழக்கி னெல்லைத்
தவவள ருலகோர் யாருந் தாழ்ந்தெழப் பொலிந்து நிற்கும்.

(இ - ள்.) ஒன்பான் வகை மணிகளைப் பதித்துச் செய்த நான்கு கோபுரங்களும் (பூமியிலிருந்து சிவபுரத் தெல்லை வரையிற் பொருந்துகின்ற மக்கள் தேவர் முதலிய யாரும் வணங்கும் வண்ணம் நிற்கும்). ஒளி மேலோங்குகின்ற முத்து முதலிய மணிகளையுடைய அகழியிற் றேன்றும் கோபுரங்களின் சாயைகளும் கீழுலகத்தி னெல்லையில் மிக வளருகின்ற உலகங்களிலுள்ள யாவரும் தாழ்ந்து வணங்கி யெழும்படி பொலிவுற்று நிற்கும்.

(வி - ம்.) நிழல் - கோபுரத்தின் நிழல். நிவத்தல் - மேலெழுதல்; ஈறு கெட்டது. (௭0)

கற்றையங் கதிர்கான் றெல்லி கடும்பக லாகச் செய்யும்
பொற்றபன் மணிகால்யாத்த பொற்பினு லுலகமெல்லாம்
தெற்றெனத் தம்பாற் காணத் திகழ்தலாற் செருச்செய் ஞாட்பின்
வெற்றிவே லிறைவன் கொண்ட விச்சுவ ரூபம் போலும்.

(இ - ள்.) கூட்டமாகிய ஒளியைக் கக்கி இரவைப் பகலாகச் செய்கின்ற பொன்மயமாகிய மணிகளாற் பதித்த அழகினுல் எல்லா வுலகங்களும் தன்னிடத்துக் காணும்படி விளங்குவதால் (அம்மதில்) போரினைச் செய்கின்ற களத்தில் வெற்றியை யுடைய வேற் படையினைத் தாங்கிய தலைவனுகிய முருகப்பெருமா னெடுத்த விச்சுவருபத்தை யொக்கும்.

(வி - ம்.) எல்லி - இரவு. இனி எல்லி கடும் பகலாகச் செய்யு மென்பதற்கு - பகலை மிக்க பகலாகச் செய்யும் மணியெனப் பொருள் கொள்வாருமுளர். கால் யாத்தல் - ஈண்டுப் பதித்தல். 'தெற்றென -

தெளிவாக. ஞாட்பு - ஆகு பெயர். விச்சுவரூபம் - உலகமே வடிவமாகத் தோன்றுதல். கோபுரமானது பொற்பினேதுவாலே அவ்வாறு திகழ்தலாற் போலுமென்க. (௭௧)

மேனிலை மாடத் திட்ட விளக்குமிழ் தூமஞ் சென்று
வானிமி ரண்டப் பித்தி வைகலு மாசு செய்ய
வானிவர் கொடியின் வெண்டு சையென நீவி நீவி
நீனிறம் படைத்த வென்ப நெடியவ னுருவ மான.

(இ - ள்.) மேன் மாடங்களி லேற்றிய விளக்கு வெளியிட்ட புகையானது ஆகாயத்தி லெழுந்த அண்டச் சுவரினை நாடோறும் மாசாகச் செய்ய, அம் மாடங்களிற் கட்டுப்பட்டு மேலெழுந்துள்ள கொடிகளிலுள்ள வெள்ளிய சேலைகள் அழகாகத் தடவித் தடவி விண்டுவின் வடிவம்போல நீல நிறத்தைப் படைத்தன வென்று சொல்வார்கள்.

(வி - ம்.) ஆன் - அவ்விடம். ஐயென - அழகாக. நீவிநீவி - தடவித் தடவி. (௭௨)

அண்டமா ரளவைக் கற்ப வடங்கின வன்றி வீறின்
மண்டுநீர்க் கிடங்க ரண்ட மலிபுனற் பரப்போ டொன்றும்
மிண்டுபோர்ப் பொறியி னிஞ்சி விளங்குகோ புரங்க ளன்ன
கொண்டவார் கொடிக ளெண்ணி லண்டமுங் குறுக நீளும்.

(இ - ள்.) நீர் நிறைந்த அகழி அண்ட மமைந்த அளவினுக் கியைய அமைவுற்றன அல்லாமல் பெருக்கெடுக்கின் பெரும்புறக் கடலினோ டொன்றும். போர் செய்யு மியந்திரங்களை யுடைய மதிலும், அம்மதிற் றலையிலுள்ள கோபுரங்களும் (அண்டமா ரளவைக் கேற்ப அடங்கும்) அத்தன்மையினவே யாம். (அம்மதிலும் கோபுரமும் தன்னிடத்திற்) கொண்ட நீண்ட துகிற் கொடிகளும் (அண்டமா ரளவைக் கேற்ப அடங்கின அன்றி வீறி யெழுந்தால்) அளவிட வியலாத அண்டங்களும் வடிவாற் சிறியன என்று சொல்லும் வண்ணம் நீளும்.

(வி - ம்.) புனற் பரப்பு - பெரும்புறக் கடல். வீறின் - எழுந்தால். கிடங்கு புனற் பரப்போடொன்று மெனவும், இஞ்சியும் கோபுரங்களும், அவை கொண்ட கொடிகளும் வீறி யெழின் அண்டங் குறுக நீளுமெனவும் வினை முடிவு செய்க. அன்ன - அண்டமா ரளவைக் கேற்ப அடங்குந் தன்மையன என்க. (௭௩)

பாயின வகழி மாண்பும் பந்தொடு பாவை தூங்கும்
வாயில்வண் புரிசை மாண்பும் வகுத்தன மற்று மூன்றை
ஆயின பொருளு மைந்த ரளிந்துவந் தேவ லாற்ற
மேயின பரத்தை மாதர் வியந்தரு சேரி சொல்வாம்.

(இ - ள்.) பரவிய அகழியின் மாட்சியையும், பந்தினோடு பாவையும் தங்கும் வாயிலோடு கூடிய அழகமைந்த மதிலின் மாட்சியையும் வகுத்துச் சொல்லினோம். தாமீட்டிய செல்வத்தையும் முன்னேயுள்ள பொருள்

களையும் ஆடவர்கள் கொடுத்து மகிழ்ச்சியுடன் ஏவற்றொழில் செய்யப் பொருந்திய பரத்தையர்களின் கண்டோர் வியக்கத் தக்க சேரியின் ளைங் களை விரித்துச் சொல்வாம்.

(வி - ம்.) பாயின - விரவிய. பந்தொடு பாவை தூங்கும் வாயில்- பகைவரைக் கொணர்ந்து பெண் கோலஞ் செய்து அவர்கள் கையிற் பந்தும் பாவையும் கொடுத்துச் சிற்றிலிழைத்து விளையாடச் செய்வதற் குப் பந்தும் பாவையும் தூங்கும் வாயிலென்க. இதனைச் "செருப்புகன் றெடுத்த சேணுயர் நெடுங்கொடி வரிப்புனை பந்தொடு பாவை தூங்க" என்னும் திருமுருகாற்றுப் படையடி நச்சினார்க்கினியா ருரையான் நன்கு உணர்க. (எச)

## பரத்தையர் தெரு

### வேறு

இங்கணல னெய்துநர்க ளெவ்வுலகின் மாட்டும்
பொங்குகலை யிற்றணிவு பூண்டுவெரி நீயார்
தங்கிவைகள் போலெனவொர் சான்றுதெரிப் பார்போல்
அங்கணவிர் சித்திரம ளப்பிலபொ றித்தார்.

(இ - ள்.) இத் தணிகையின்கண் ணுள்ள பரத்தையர் சேரிக்கண் (அப் பரத்தையரோடு முயக்குற்று இன்பத்தினை யடைந்தவர்கள் உத் தர குருவாகிய) போக பூமி முதலிய எவ்விடங்களிலும் இன்ப மிகுதற் கேதுவாகிய காம நூலாராய்ச்சியின் றும்மை மேற்கொண்டு புறங் கொடார் இச் சேரிக்கண் ணுள்ள மாட வரிசையிற் றங்கிய சித்திரங் களைப் போலவென்று சான்று காட்டுவார் போல அச் சேரிக்கண் ணுள்ள சுவர்களில் விளங்குகின்ற ஓவியங்கள் கணக் கில்லனவற்றை வரைந் துள்ளனர்.

(வி - ம்.) கலை - சண்டு மார தந்திரம். எவ்வுலகின் மாட்டும் - உத் தர குருவாகிய போக பூமி முதலிய எவ்விடங்களிலும். உலகு - மாயோன் மேய காடுறை யுலக மென்றுற் போல இடத்தினை யுணர்த்தி நின்றது. வெரிந் + ஈதல் - புறங் கொடுத்தல். சுவரில் வரைந்த ஓவியம் புறங்கொடா திருத்த லியல்பாகலின் "இவைகள் போலென ஒரு சான்று தெரிப்பார்போ" லென்றார். (எரு)

பற்குறிந கக்குறிகள் பாணிகொடு தட்டல்
நற்கமிழ்து துய்த்தல்களி நன்றெழு வணைத்தல்
அற்குகர ணங்களறி யாருமெளி தாகக்
கற்கும்வகை நின்றனக திர்த்தமணி யோவம்.

(இ - ள்.) ஒளி கதிர்த்தலைச் செய்கின்ற மணிக ளழுத்திய ஓவியங் கள் (கடிதடத்திலும் அதரத்திலும் செய்கின்ற) பற்குறிகளும் (கொங்கையினும் குறியினும் செய்கின்ற) நகக்குறிகளும் (குறியினும், அமிர்தம் நிற்கும் நிலையினும் தட்டுகின்ற) கரதாடனமும், அமிழ்தென இதழ் சுவைத்தலும் களிப்புப் பெரிது மெழா நிற்கத் தழுவுதலுமாகிய

(காமநூலின் நிலைபெற்ற) கலவிச் செயல்களை (இத்தன்மையன என அறியாத) இளங் காளையரும் எளிதாகக் கற்கும் வண்ணம் நின்றன.

(வி-ம்.) பற்குறி-பல்லாற் செய்யும் குறி; இவை கபோலத்தினும் இதழினும் செய்யும் அடையாளங்கள்: "பவளவாய் பரவை பல்குறி என்றிவை பருகும் வேலவன்" என்னும் சிந்தாமணிச் செய்யுளா னறிக. நகக்குறி - உகிராற் செய்யு மடையாளங்கள்; இவை கொங்கையினும் குறியினும் செய்யப்படுவன வாகும்: "முலைமீது கொழுநன்றன் நகமேவு குறியை" எனவரும் பரணிச் செய்யுளானும், "விற்கலைக்குழு மதிமுழு மதியென விளங்கப், பொற்கலைக் கடிதடங் குறி பொறித்தன போலும்" என வரும் இப்படலம் 23ஆம் செய்யுளானு மறிக. அமிழ்து துய்த்தல் - இதழி னமிர் துண்ணல்; இதனைப் "பாலொடு தேன்கலந்தற்றே பணி மொழி, வாலெயி றூறிய நீர்" என்னும் பொதுமறையா னுணர்க. அணைத்தல் - தழுவுதல். இதனை "மாதர் வலிய அணைத்த சுகம்போல" என வரும் அருணகிரியார் திருவாக்கா னுணர்க. அற்குக் கரணங்கள் - காம தந்திரத்தில் நிலைபெற்ற கலவிச் செயல்கள். இவை 64 வகைப் படும். இதனை "இன்பக் கலவிக் கரணங்கள் யாவும்பிழைத்து" என வரும் நைடதச் செய்யுளானும் அதனுரையானு முணர்க. மேல்விதந் தோதிய பற்குறி முதலியனவும் 64 உள் அமைந்தனவே யாமென்க. கரணம் - செயல், நல்கமிழ்து - நற்கமிழ்தாயிற் றெனலுமாம். (௭௯)

இவர்மனமொ ருக்குமிள மங்கையரில் வைகக்
கவர்மனம்வி டுத்திளையர் காழிலுயி ரோடும்
அவிர்பொருள்க வர்ந்துவிடு மாற்றலுடை நல்லார்க்
கிவர்மனமொ ருக்கலுறி னெங்ஙனுல குய்யும்.

(இ-ள்.) (நாயகர் பரத்தையிற் பிரிந்தமையால் அவர்பால்) விருப்பங்கொண் டெழுகின்ற மனத்தினை யொருக்குதலாற் (கற்பாற்றி யிருக்கும், இளமைப் பருவத்தை யுடைய) அந் நகரத்தின்கண் ணுள்ள இளம் பருவப் பெண்கள் இல்லிடத்தே தங்கும் வண்ணம் (பொருள் கருதிப் பொருளுடையார் பலர் மாட்டுஞ் சேறலான்) பிளவு படுதலாகிய (தங்கள்) மனத்தினைச் செலுத்தி (அந் நகரத்தின்கண் ணுள்ள இளங் காளையரது அறிவாகிய உள்ளீடில்லாத உயிருடனே முன்னையோரா லீட்டப்பட்டு) விளங்குகின்ற பொருளினையும் (இன்பவிலையாக) கவர்ந்து கொண்டு (காலுற்ற சாற்று வேழக் கோதினைப் போலப் பயனின்றென) விடுகின்ற பேராற்றலை யுடைய இன்ப நலம் கனிந்தொழுகு பரத்தையருக்கு (பொருள் கருதிப் பலர் மாட்டும்) செல்லுகின்ற மனத்தினை(ப் பலர் மாட்டும் கவர்படுத்தாது ஓராடவன்பால்) ஒருக்குதலுற்றால் உலகமான தெங்ஙன முய்யும்.

(வி-ம்.) இவர் மனம்-ஆசையோடு கூடிய மனம். இவர் மனத்தை ஒருக்குகின்ற நாயகிக ளென்க. இவர் மன மொருக்கலுறின் - பரத்தையர் விரும்புகின்ற தங்கள் மனத்தைப் பிளவுபடச் செய்யாது ஓராடவன்பா லொருக்கலுறின் என்க. நல்லார்க்கு மனத்தை யொருக்கி ஓரிடத்துச் செலுத்தல் அருமை யென்பது தோன்ற "இவர் மன மொருக்க லுறின்" என்றார். இவர் மனத்தைத் தம் வசப்படுத்தி யொருவர் மாட்டுச் செலுத்துவாராயின் ஆடவர்கள் தங்கள் நாயகிமார்களை யறவே மறந்து இவர்கள் மாயவலையிற் சிக்குண்டு இம்மை மறுமைப்

பயன்களை இழந்து எரிவாய் நிரயத்தைத் தமக்கிடமாகக் கொள்வரென் பது தோன்ற "எங்ஙனுலகுய்யும்" என்றார். நல்லார்க் குற்றுரெனக் கூட்டுக. (எஎ)

அகப்பொருட மக்கருளு வார்க்கஃது நல்கி
உகப்புறுப ரத்தையர்க ளுண்மையுணர் கல்லார்
இகப்பறுசு கச்சமரி னெய்த்திறையி றுக்கும்
புகர்ப்பொருளை யின்பவிலை யென்றுபுகல் கிற்பார்.

(இ-ள்.) (தம்முன்னையோரால் ஈட்டப்பட்டுப் பாதுகாத்து) அகத்தின்கண் வைத்துள்ள பொருளை (உவகையோடு பணிந்து) தங்களுக்குக் கொடுக்கின்ற ஆடவருக்குத் தம்மகப் பொருளாகிய காம இன்பத்தினைக் கொடுத்து உயர்ச்சி பெற்ற பரத்தைமார்கள் (பெண்ணறி வென்பது பெரும் பேதைமைத்தே என்பதனால்) உண்மைத் தன்மையை யறியாராகி (ஒருவருடலி லொருவரொடுங்கி இருவரென்னும் தோற்றமின்றி மாசுணம் போலப் பின்னி) நீங்குதலற்ற இன்பப் போரின்கண் தோல்வியுற்று (ஆடவர்கள்) இறையாகக் கொடுக்கும் குற்றமுடைய பொருளை இன்ப விலை என்று சொல்வார்கள்.

(வி-ம்.) அகப்பொருள்-தம்மில்லிற் பாதுகாப்பிலுள்ள பொருள். அஃது - தம்முள்ளிற் சேர்த்து வைத்துள்ள காம வின்பப் பொருள். ஆடவர்கள் தம் மகத்திலுள்ள பொருளைக் கொடுத்து இம்மை மறுமைப் பயன்களை யிழத்தல் போலத் தம்மகப் பொருளாகிய காமவின்பத்தைக் கொடுத்தொன்று மிழவாதுயர்ந்து நிற்றலின் "உகப்புறு பரத்தைய" ரென்றார். உகப்பு - உயர்வு. "உகப்பே யுயர்வு" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தா னுணர்க. (எஅ)

இத்தகைய மாதரினி ணங்குசுக வாரி
தத்தையனை யார்தருத லின்மைதனை நாடி
மெத்துளம கிழ்ச்சியின்வி டுத்தருள்சி றப்பும்
ஒத்ததவர் பாலிளைய ருய்த்தநிதி யீட்டம்.

(இ-ள்.) இங்ஙனமாய தகுதியினை யுடைய பரத்தையர் மாட்டுப் பொருந்துகின்ற இன்பப் பெருக்கினைக் கிளிமொழியன்ன மொழியினை யுடைய தங்கள் மனைவிமார் தருதலில்லாமையைக் கருதி அப் பரத்தையர் மாட்டுளவாகிய உள்ளத்தின்கண் அதிகரிக்கின்ற மகிழ்வினால் காளைப்பருவத்தை யுடைய ஆடவர் சேர்த்த பொருட் குவியல் (இவ்வாடவர்கள்) கொடுத்தருளிய பரிசினையும் ஒத்தது.

(வி-ம்.) தத்தை யனையார்; ஈண்டு மனைவிமார். மெத்து - அதிகரிக்கின்ற. நிதிக் குவியல் சிறப்பையு மொத்ததென்க. உம்மை யிறந்தது தழீஇயது; இறையிறுத்தலே யன்றிச் சிறப்புமா மென்பதைத் தழுவியது. (எகூ)

உடம்புபிணி யாலிறவு ளுற்றறமி கந்து
படம்படவு ளம்பொருள்கண் மற்றுமுகு மாற்றால்

விடம்புரையும்வேசையர்வி ழைச்சென வுணர்ந்தும்
உடம்படுவ ரென்னிலவ ருய்க்குநல னெற்றே.

(இ - ள்.) பரத்தையர் கூட்டமானது, உடலானது பிணியாற் கேடுறலானும் செய்கின்ற அறச் செயல்களீங்கி யுள்ளம் அறியாமையின் வயத்ததாதலானும் பொருள்களும் ஏனைய நற்சார்புகளும் கெடுதற் கேதுவாகும் தன்மை யுடைமையானும் நஞ்சினை யொக்குமென்று (காண்டல் கருதலுரை முதலிய அளவைகளான்) அறிந்து வைத்தும், அக் கூட்டத்தினுக் குடன்படுவாராயின் அப்பரத்தையர் இவர்க்களிக்கும் இன்ப நல மெத்தன்மைத்தோ யாமறிந்திலோம்.

(வி - ம்.) உருற்று - செய்கின்ற. உளம் மடம்பட எனவும், விழைச்சு விடம்புரையு மெனவும் மாற்றுக. விழைச்சு - புணர்ச்சி, கூட்டம். உணர்ந்தும் : உம்மை யிழிபு சிறப்பு. எற்றே - எத்தன்மைத்தே; ஏகாரம் வினா. (அ0)

நன்பொருளி னுக்கியைய நன்றுவிளை யாடி
இன்புதவும் வேசையரி றைஞ்சுமடி யாருக்
கன்பினள வைக்கியைய வாருள்சு ரக்கும்
மின்புரைந திச்சடில வித்தகனி கர்த்தார்.

(இ - ள்.) ஆடவர்கள் தமக்கு அளித்த நல்ல பொருளளவுக்கேற்ப (எள்ளினுக் கெண்ணெய் போல வளர்ந்து) நன்றாக விளையாட்டயர்ந்து இன்பினை யுதவும் வரைவிலா மாதர்கள் தன்னை வழிபடு முண்மை யடியார்களுக் கன்பினளவைக் கியைய அருளினைக் கொடுக்கின்ற கங்கா நதியினை யுடைய மின்னலை யொத்த சடையினை யுடைய ஞானமே திருவுருவமான சிவபெருமானை யொத்தனர்.

(வி - ம்.) பொருளளவினுக் கேற்ப விளையாடுதலாவது - எள்ளினுக் கெண்ணெய் போலப் போகத்தைப் பொருளளவுக் கியைய விளையாடி யளித்தல். (அக)

பாடலிசை யாழ்பலப யிற்றுமிசை யோடும்
ஆடலர வம்புடைய கன்றுபுற னேகும்
பீடினர்த மக்குமொரு பீழைசெயு மென்றால்
கூடினவர் முன்புகுழை யாருமுள ரேயோ.

(இ - ள்.) பாடலினிசையும், பலவகைப்பட யாழைப் பயிற்றுமிசையுடனே ஆடுகின்ற ஓசையும் (வீசிதரங்க நியாயத்தால்) வெளியிற் பரவித் தெருவின் கண்ணே செல்லுகின்ற பெருமையினையுடைய பேரறிஞர்களுக்கும் ஒப்பற்ற துன்பத்தினைச் செய்யுமென்றால் அப் பரத்தையர் முன்பு பொருந்தினால் மனங் குழையாதவர்களு முளரோ? (இலர்.)

(வி - ம்.) பீழை - துன்பம். அரவம் - ஓசை. புடை அகன்று - வெளியிற் பரவி. புறனேகும் பீடினர் - வீதியிற் செல்லும் பெருமையுடையவர். அவர்முன் 'புறனேகும் பீடினர்' எனவே அகத்துட் சென்ற பீடிலார் அவர் என்க. கூடின் என மொழி மாற்றுக. (அஉ)

ஈங்கிவர்க ளோடுபுண ரின்பநுகர் பாக்குத்
தாங்குபரு வம்பெரிது சார்பொழுது காறும்
ஆங்கவர்க ளோடுநல ஞர்ந்துபயில் கின்ருர்
வீங்குபுகழ் மாயன்முதல் விண்ணவர்க ளெல்லாம்.

(இ - ள்.) மிக்க புகழினை யுடைய விண்டு முதலிய தேவர்கள் யாவரும் இத் தணிகைப் பதியின்கண்ணுள்ள இப் பரத்தையரோடு கூடி இன்பம் நுகரும் பொருட்டு அவர்கள் மேற்கொள்கின்ற புணர்ச்சிக்குரிய மங்கைப் பருவம் வருந்துணையும் அவ் வைகுந்த முதலிய உலகங்களில் தங்கி யிருக்கின்ற அத் திருமகள் முதலிய தெய்வப் பெண்களினோடு இன்ப நுகர்ந்து தங்குகின்ருர்கள்.

(வி - ம்.) இம் மாதர் - இத் தணிகையின்கண்ணுள்ள பரத்தையர். பாக்கு - வினையெச்ச விகுதி. பருவம் பெரிதுசார் பொழுதுகாறும் - புணரும் பக்குவம் வருந்துணையும். ஆங்கு - வைகுந்த முதலிய உலகங்களில். அவர்கள் இலக்குமி முதலிய தேவ மாதர். (அரு)

கங்கையிறை வன்முடிக லப்பவிடம் வெற்பு
மங்கையுட னுதும லர்ப்பொனரி மார்பம்
தங்கியதும் வாணிதவி சாக்கியதும் வேதன்
பொங்குமறை நாவரைவில் பூவையர்பொ ருட்டே.

(இ - ள்.) இறைவன் முடியின் கண்ணே கங்கை கலத்தலைச் செய்ய இடப்பாகத்தின் மலையரையன் புதல்வியுடன் சேர்ந்ததும், தாமரை மலரின்கண் ணெழுந்தருளிய இலக்குமி விண்டுவின் மார்பிற் றங்கியதும் பிரமனது வேதத்தை யோதுகின்ற நாவினைச் சரசுவதி ஆசனமாக்கிக் கொண்டதும் தமக்கென ஒரு நாயகனை வரைந்து கொள்ளாத பரத்தையர் பொருட்டேயாம்.

(வி - ம்.) இவர் நிமித்தமே கங்கை கலப்ப வெற்புமங்கை இடனுடனுதும், வேதன் நா வாணி தவிசாக்கியதும், பொன் தங்கியதுமென வினை முடிவு செய்க. பூவையர் - நாகணவாய்ப் பறவை போன்றவர். (பரத்தையர்) (அசு)

வெள்ளணிய ணிந்துபலர் மெய்முழுத ரத்த
ஒள்ளணிய ணிந்துபல ருத்தலையி றப்பார்
வெள்ளமெனு மாக்கமும்வி ளங்குகலை மாண்பும்
உள்ளிமலர் மாதர்பல ராயுறுவ தொப்ப.

(இ - ள்.) வெள்ள மென்னு மெண்ணையுடைய செல்வத்தினையும், விளங்குகின்ற அறுபத்து நான்கு கலைகளின் மாட்சியையும் (தாங்கள் அப் பரத்தையர் மாட்டுப் பெற) நினைந்து செந்தாமரையினும் வெண்டாமரையினும் வீற்றிருக்கின்ற இரு மாதர்களும் பல மாதரா யுருவம் கொண்டு பொருந்தலை யொப்ப (தலைவி புதல்வர்ப் பயந்தமையைப் பரத்தையர் சேரியின் கண்ணுள்ள தலைவர்களுக் கறிவிக்க) பல சேடியர்கள் வெள்ளணியை யணிந்தும், தலைவி பூப்படைந்தமையை அச் சேரியின்கண்ணுள்ள தலைவர்களுக்கு அறிவிக்கப் பல சேடியர்கள் உடன் முழுவதும்

செந்நிறத்தோடு கூடிய அணியப்படு பொருள்களாற் றங்களைப் புனைந்தும் ஆண்டுச் செல்வார்கள்.

(வி - ம்.) ஈரிடத்தும் என்னும்மைகள் தொக்கன. உந்தலை - உவ்விடம், பரத்தையர் சேரி. இறப்பார் - நடப்பார். ஆக்கம்-செல்வம். உறுவது - சேர்வது, இலக்குமியும் சரசுவதியும் செல்வத்தையும் கல்வியையும் பெற உள்ளிப் பலராகச் சேர்வதை யொப்ப வெள்ளணியும் செவ்வணியு மணிந்து பல மாத ரச்சேரியின்கட் செல்வ ரென்க. (௮௫)

சிறப்பினவ கப்பொருள்செ றித்துவிலை யாக்கும்
மறப்படைக டந்தவிழி மாதரிட னிதால்
புறப்பொருள்செ றித்துவிலை போக்கியிட வின்றி
அறப்புகழ்வி ளைக்குநர்க ளாவணமு ரைப்பாம்.

(இ - ள்.) சிறப்பினை யுடையனவாகிய இன்பப் பொருளைத் (தம் மகத்) தடக்கி விற்றலைச் செய்கின்ற வீரத்தையுடைய வேற் படையினை (வடிவாலும் செயலாலும்) வென்ற கண்களையுடைய பரத்தையர் வதிதரும் இடமிங்ஙனம் கூறியதாகும். இனிப் புறப்பொருள்களை நிறைவித்து விலைப் பொருளுக்கு மாற்றி ஒருவகை இடையூறுமின்றி அறத்தால் வரும் புகழையே விளைவிக்கின்றவர்களாகிய வணிகர்களின் கடைவீதியின் சிறப்பைச் சொல்வாம்.

(வி - ம்.) அகப் பொருள் - அகத்தின்கண் நிகழ்வதாகிய இன்பப் பொருள். செறித்து - அடக்கி. படை - வேற்படை, வாட்படை யெனினுமாம். செறித்து - நிறைவித்து. விலைபோக்கி - விலைப் பொருளுக்கு மாற்றி யென்க. ஏகாரம் விகாரத்தாற் றொக்கது. (௮௬)

வேறு

கற்ப கங்களுங் கன்னி வாழையும்
பொற்ப நட்டெழீஇப் போகு சட்டமேல்
பற்பன் மாலைகள் பயிற்று மாவணம்
அற்பு மன்றல்செ யகங்கள் போன்றவே.

(இ - ள்.) கற்பக தருக்களும், இளமைத் தன்மை பொருந்திய வாழை மரங்களும் அழகைச் செய்யும் வண்ணம் நடப்பெற்று எழுந்து உயர்ந்த சட்டங்களின் மேலே பலப்பல மாலைகளைத் தொங்க விடப் பெற்ற கடைவீதியானது அன்பினால் மணவினை செய்கின்ற இல்லங்களை யொத்தன.

(வி - ம்.) கன்னி - இளமை. நட்டு - நடப்பெற்று. போகு - உயர்ந்த. பயிற்றுதல் - ஈண்டு நாலவிடுதல். மன்றல் - மணவினை. (௮௭)

மடுக்குங் காலையிற் குறைய வாங்கியும்
விடுக்குங் காலையின் மிதப்ப நல்கியும்

அடுக்குஞ் செல்வம்விண் ணரசு மேசற
எடுக்கும் பண்பினர் யாரு மென்பவே.

(இ - ள்.) பண்டங்கள் பண்டக சாலையிற் குறைந்த விலைக்குக் கொள்ளுதலைச் செய்தும், பண்டங்களை மாற்றும் காலத்து அதிக விலைக்கு மாற்றியும் அடுக்கப் பெறுகின்ற செல்வம் தங்களை விண்ணுலகினுக் கிறைவனாகிய இந்திரனும் வருந்தும் வண்ணம் எடுத்துச் செல்கின்ற தன்மையை யுடையவர் யாவருமென்று சொல்வார்கள்.

(வி - ம்.) மடுத்தல் - நிறைத்தல். குறைய வாங்கி - குறைந்த விலைக்கு வாங்கி என்க. குறைவு விலை மேனின்றது. மிதப்ப - அதிகமாக "வட்டியின் மிதப்பக் கூறி" என்னுந் திருவிளையாடற் செய்யுளானுணர்க. ஏசற - கவலையடைய. எடுக்கும் - எடுத்துச் செல்கின்ற. என்ப : அசை யெனினுமாம். (௮௮)

கலங்க ளூக்கியுங் கால்க ளூக்கியும்
அலங்கன் மார்பின ரமைத்த பல்பொருள்
விலங்கன் மாடமுன் றனதன் வீழ்நிதி
இலங்கி யிவ்வுழி யிருந்த தொத்ததே.

(இ - ள்.) மரக்கலன்களைக் (கடலின் வழியாகப் பல தீவுகளினும்) செலுத்தியும், பண்டிகளைத் தரை மார்க்கமாகப் பல தேயங்களினும் செலுத்தியும் சிரகத் தாரையணிந்த மார்பினையுடைய வணிகர்கள் முயற்சியா னீட்டிய பலவகைப் பொருட் குவியல், மலையை யொத்த இல்வரிசைகளின் முன்னர்க் குபேரனால் விரும்பப்படும் சங்கநிதி பதுமநிதி முதலிய நவநிதிகளும் விளங்கி இவ்விடத்து இருந்ததை யொத்தது.

(வி - ம்.) பொருள் மாடங்களின் முன் குவிக்கப்பட்டுள தென்க. பொருள் ஒத்தென முடிவு செய்க. கால் - வண்டி. விலங்கல் - மலை. இலங்கல் - விளங்கல். (௮௯)

துலாம ணிந்தவர் தூளி கைத்தலைத்
துலாமி வர்ந்தெழுஞ் சோம திக்கினன்
நிலாவி ரும்பொரு ணிறைந்த தாமென
நிலாவு மத்தலை யிவர்ந்து நீங்குமே.

(இ - ள்.) துலாக் கோலினைப் பொருந்தியவராகிய வணிகர் மேன்மாடங்களிடத்துத் துலா விராசி இவர்ந்து செல்லும். வட திசைக் கிறைவனாகிய குபேரன், பொருந்திய பெரிய நிதிகள் நிறைந்துள்ளதென்று கருதி எல்லா வளங்களும் பொருந்திய அம்மாடங்களிற் றங்கி நீங்குவான்.

(வி - ம்.) சோமதிக்கினன் - வடதிசைக் கிறைவனாகிய குபேரன். சோமன் - குபேரன். அவன் திசை வடக்காதலின் "சோம திக்கினன்" எனக் கூறினர். சோம னென்னும் பெயர் சந்திரனுக்கு முளவாகலின் அவனென மயங்காமைப் பொருட்டுக் கூறினா ரெனவுமாம். குபேரன் இல்லில் வரிசைகளில் நிறைந்துள்ள செல்வப் பெருக்கினைக் கண்டு

விரும்பி இவ் வில்லின்கட் சிறிது தங்கிச் செல்வனென்க. இவர்தல் - மேனோக்கிச் செல்லல். அத்தலை - அவ்விடம். இவர்ந்து - தங்கி. (கo)

பொன்னும் வெள்ளியும் பூணு மாடையும்
மின்னு பன்மணி விராய கோவையும்
என்ன வேண்டினு மில்லை யென்னுமச்
சொன்னி கழ்த்திடாச் சோர்வங் குள்ளதே.

(இ - ள்.) பொற் கட்டிகளும், வெள்ளிகளும், அணிகலன்களும், ஆடைகளும் ஒளிர்கின்ற பல இரத்தினங்களைக் கலவை செய்து கோக்கப்பெற்ற மாலையும் (இவைகளையன்றி வேறு) எப்பொருளைக் (கோடல் செய்வார்) விரும்பினாலும் (அப் பொருளைத்) தம்பாலில்லை யென்று சொல்லும்படியான அச் சொல்லை (மறந்தும்) சொல்லுதலில்லாத சோரத்தன்மையே அவ்வாவண வீதியின்கண் உள்ளது.

(வி - ம்.) அவ்வாவண வீதியின்கட் கொள்வோர் எப்பொருளை வினவினும் வினைய பொருளுக்கினப்பொருளையோ அல்லது அப்பொருளையோ உள்ளதெனக் கூறுவார்களேயன்றி இல்லையெனக் கூறார். தம்பாலில்லாத பொருளை இல்லையென்னாது பிறிது பொருளுண்டெனக் கூறுதலே ஆண்டுள்ள களவாகும். அமைந்தொருபாற் கோடாத குணமுடையாராதலின் அவர்பாற் பிறர் பொருளைக் கள்ளுதல் செயும் குணம் சிறிதுமின்றென்பது போதர "இல்லையென்னு மச்சொன் னிகழ்த்திடாச் சோர்வங்குள்ள தென்றார். சோர்வு - களவு. (கக)

இலைய வேற்படை யிறைவற் காணிய
மலையெ லாமடுத் தனைய மாடமுன்
குலவு பல்பொருட் குப்பை யம்மலை
நிலவு பல்வரை நிரைக ளொத்தவே.

(இ - ள்.) இலையின் தன்மை யமையப்பெற்ற வேற்படையினையுடைய (தங்கள்) தலைவனாகிய முருகப் பெருமானைக் காணும் பொருட்டு மலைகளெல்லாம் பொருந்தினாலொத்த மாடங்களின் முன்னர் விளங்குகின்ற பல பொருட் குவியல்கள் அம்மலைகளிடத்துப் பொருந்திய பல சிறுமலை வரிசைகளை யொத்தன.

(வி - ம்.) மலையும், அம் மலையிடத்துப் பொருந்திய அடுக்கலும், இல்லிற்கும் அவ்வில்லின் முன்னர்க் குவித்துள்ள பொருட் குவியலுக்கும் உவமையாம். வரை - ஈண்டுச் சிறுமலை; அஃதாவது அடுக்கலென்க. (கஉ)

முன்கு வித்தகண் மூடு முன்புபோய்
பின்கு வித்தவும் பெயரு மத்தலை
நன்கு செய்தமுன் னல்வி னைப்பயன்
தன்கண் வந்துபோந் தனுவொ டொத்ததே.

(இ - ள்.) (ஆவணங்களின் முன்றிலில்) முன்னர்க் குவித்த பொருள் கண்களை மூடு மத்துணைக் காலத்திலே விலைப்பொருளுக்கு

மாச்சாட் பின்னர்க் கொளர்ந்து குளித்தனவாகிய பொருள்களும் அங் ஙனமே விலைப்பொருளுக்கு மாற்றப்படுதலால் அவ்வாவண வீதி நன்று கச் செய்யப்பெற்ற முன்னைய நல்வினைப் பயனானது தன்மாட்டு வந்து பின்னர் நீங்குகின்ற உடம்பினை யொத்தது.

(வி - ம்.) தன்னென்றது கண்டுடலையென்க. நன்கு - நன்றாக. முன் நல்வினைப்பயன் - முற்பிறப்பிற் செய்த நல்வினைப் பயனென்க. தனு - உடல். (௧௩)

செம்பொற் சுண்ணமுஞ் செச்சைச் சாந்தமும்
வம்பு நானமும் வாச மாலையும்
நம்பி விழுவி நல்கு மாதரார்
பம்பு யிர்ப்பினுற் பாற வைகுவார்.

(இ - ள்.) சிவந்த பொற்பொடிகளும், சிவந்த சந்தனமும், வாசனையையுடைய கத்தூரியும், மணத்தையுடைய மாலைகளுமாகிய இவற்றின்கண் விரும்பி விழ்கின்ற வண்டுகள் அப்பொருள்களை விற் கின்ற பெண்கள் தங்கள் நிறைந்த மூக்கின்காற்றுே லோட ஆண்டுத் தங்குவார்.

(வி - ம்.) இப்பொருள்களை விலைசெய் மடவார் யாவரும் முதற் சாதிப் பெண்களாதலின் அவர்கள் மூக்கின்காற்று சண்பகப் பூ வாசனை யுடைத்தாமென்பது நூன்மரபு. வண்டுகள் சண்பகப் பூ வாசனையை யுட்கொள்ளின் இறந்துபடுத லியல்பாகலின் "பண்புயிர்ப்பினுற் பாற வைகுவா" ரென்றார். செச்சை - சிவப்பு. நம்பி - விரும்பி. "நம்பு மேவும் நசையாகும்மே" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தா னுணர்க. பம்புதல் - நிறைதல். பாற - நீங்க. காமதந்திரத்தில் இப் பெண்களை மூவகையாகப் பிரித்துளதாதலின் ஈண்டுக் கூறியவர்கள் முதற்சாதிப் பெண்கள் எனக் கொள்க. (௧௪)

கனிவ ருக்கமுங் கமழ்சிற் றுண்டியும்
இனிய விற்குந ரிடஞ்சென் முன்னரே
நனிம ணம்புன லுவிற் றேற்றுமுன்
பனிம லர்க்கணை படர்கண் டோற்றுமே.

(இ - ள்.) பழவகைகளும், மணக்கின்ற சிற்றுணாக்களும், இனி யனவாகிய பல பொருள்களும் விற்றலைச் செய்கின்ற பெண்களிருக் கின்ற இடங்கட்குச் செல்லுமுன்னரே (அப்பொருள்களின் மிக்க வாசனையானது நாவின்கண்ணே நீரைத் தோற்றுவிக்கும். (அப் பொருளை விற்குமாதரார்) கண்கள் குளிர்ச்சிபொருந்திய நீலோற்பல மாகிய அம்பினால் வருந்துன்ப நினைவையுள்ளே தோற்றுவிக்கும்.

(வி - ம்.) இனிய - இனியவாகிய பொருள்கள். நீலோற்பலம் கொல்லும் அம்பாகலின் அதனால் வருந்துன்பினை அம்மாதரார் கண்களும் நீலோற்பலம் போறலின் உள்ளே தோற்றுவிக்கு மென்றார். படர் - நினைவு. "படர்நடை நினைப்பு நோவாம்" என்னும் நிகண்டா னறிக. சிற்றுண்டி - பண்ணியவகை. (௧௫)

தாழ்ந்தி டாவளத் தருக்கினு லென்கோ
ஆர்ந்த பல்சன வடர்ச்சி யாலென்கோ
சோர்ந்து கைத்தலஞ் சுடர்பொற் காசுகள்
வீழ்ந்த நேடிலார் வீதி வாயினே.

(இ - ள்.) *அந் நகரத்தின்கண்ணுள்ள மக்கள் வீதியினிடத்துக் கையின்கண் நின்றும் சோர்வடைதலினால் விழ்ந்தனவாகிய ஒளிர்கின்ற பொற்காசுகளைத் தேடுவாரிலர். (இங்ஙனம் தேடாதிருத்தற்குக் காரணம்) எஞ்ஞான்றும் குறைவினையடையாத செல்வச் செருக்கா லென்று சொல்வேனோ, அல்லது அவ் வீதியின்கண்ணிறைந்த பல மக்களின் நெருக்கத்தாலென்று சொல்வேனோ யாதென அறியேன்.*

(வி - ம்.) *வீழ்ந்தன—விழ்ந்தவற்றை. நேடுதல் - தேடுதல். தாழ்ந்திடாத - குறையாத.* (கசு)

பொருண்மை சுட்டிய புகலு மோசைகள்
பொருண்மை சுட்டிடாப் பொங்கு மோதைபோல்
மருவு மாட்சியான் மாண்ட கேள்வியார்
கருது மூங்கையிற் கையிற் பேசுவார்.

(இ - ள்.) *பொருளின் தன்மையைக் குறிக்கும் பொருட்டு மிக் கெழுகின்ற ஒலிகள் (பொருளின் தன்மையைக் குறிக்காத மாயகாரிய ஒலிகள்போலப் பொருந்துகின்ற மாட்சியினால் மாட்சியுள்ள கல்வி கேள்வியினையுடைய பெரியோர்கள், (பொருள்களை மனத்தால்) எண்ணுகின்ற ஊமைகள்போலக் கரங்களினாலே பேசுவார்.*

(வி - ம்.) *பொருண்மை சுட்டிடாப் பொங்குமோதை-மாயகாரிய ஒலி. மூங்கை - ஊமை. கையிற்பேசுதல் - கரங்களினாற் குறித்த பொருளை யறிவித்தல்.* (கஎ)

ஐந்து மாமுக வாறு மாமுகன்
நந்தி யாதியோர் நாம வீரராய்
வந்த வாவட மாதி ரத்தவன்
அந்தில் வந்தம ரளகை போன்றதே.

(இ - ள்.) *ஈசானம், தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோசாதம் என்னுமைந்து முகங்களையுடைய சிவபெருமானும், ஆறு முகங்களையுடைய முருகப்பெருமானும், அச்சத்தைத் தரத்தக்க வீரர்களாக நந்தியை முதலாகவுடைய கணத் தலைவர்களும் வந்தமர்ந்த தன்மையால் வடதிசைக் கிறைவனாகிய குபேரன் வந்துதங்கும் அளகாபுரியை ஒத்தது. (அந்நகரம்)*

(வி - ம்.) *ஐந்துமாமுகனும் ஆறுமாமுகனும், நந்தியாதியோரும் வருதலை வீராட்டகாசப் படலம் செருத்தணிதலாலும், நந்தி யுபதேசப் படலத்தானு மறிக. வந்தவா - வந்தவாறு, விகாரம். வந்தவாற்றினால் என மூன்றனுருபும் விரித்துப் பொருள் கொள்க.* (கஅ)

சொற்சு ருக்கியுஞ் சுட்டிக் கூறியும்
விற்கு மாவணம் விளம்பி னுமினிப்
பொற்ப யாவரும் புகன்று வாழ்தரும்
பற்பல் வீதியும் பகர லுற்றனம்.

(இ - ள்.) வினவியவற்றுக்கு விடை சொற் சுருங்குமாறு கூறியும் இன்ன பொருள் உண்டு என்று உள்ள பொருளைச் சுட்டிக்கூறியும் பொருள்களை விற்கும் வணிகர் கடைவீதியின் சிறப்பைக் கூறினோம். இனி, அழகாக எல்லாரும் விரும்பி வாழ்கின்ற பலவகைப்பட்ட தெருவின் சிறப்பினையும் கூறத்தொடங்குவோம்.

(வி - ம்.) சுருக்கல் - குறித்த பொருளை விளக்கவேண்டுஞ் சொற்களிற் சுருங்கச் சொல்லுதல். சுட்டிக் கூறுதல் - தம்பாலுள்ளனவாயின் இவ்வளவின தல்லதில் லெனக்கூறல். புகன்று - விரும்பி. (கூகூ)

வேறு

கோளகர் வகுப்புங் குண்டகர் வகுப்புங்
குலாவுறும் விராத்தியர் வகுப்பும்
தாளுறு மந்த ராளர்தம் வகுப்புந்
தகும்பிரதி லோமர்கள் வகுப்பும்
ஆளுறு மனுலோ மர்கள்பெரு வகுப்பும்
அவ்வவ வினங்கள்வே றமைந்து
நாளுமின் புகப்பத் தத்தம தியல்பி
னண்ணிவாழ் வீதிக ளனந்தம்.

(இ - ள்.) (கைம்மை பெற்றோர்களாகிய) கோளகருடைய பகுதியும் (தன்னுயக னிருப்ப வேருடவர்க்குப் பெற்ற பிள்ளைகளாகிய) குண்டகர்களுடைய பகுதியும் (அனுலோமப் பெண்ணும் பிரதிலோமத் தானும் கூடிப் பெற்ற பிள்ளைகளாகிய) விளங்குகின்ற விராத்தியர்களுடைய பகுதியும் (அனுலோமத்தானும் பிரதிலோமப் பெண்ணும் கூடிப்பெற்ற பிள்ளைகளாகிய) முயற்சியுள்ள அந்தராளருடைய பகுதியும், (உயர்குலப் பெண்ணும் இழிகுலத்தானும் கூடிப்பெற்ற பிள்ளைகளாகிய) தகுதியையுடைய பிரதிலோமர்களுடைய பகுதியும், (உயர்குலத்தானும், இழிகுலப்பெண்ணும் கூடிப்பெற்ற பிள்ளைகளாகிய) அடிமைகளாகப் பொருந்திய அனுலோமர்களுடைய பெரிய பகுதியுமாகிய அவ்வக் கூட்டங்கள் வெவ்வேறாகப் பொருந்தி யொவ்வொரு நாளு மின்பமதிகரிப்பத் தத்தமக்குரிய இயல்போடு கூடிப் பொருந்தி வாழ்கின்ற வீதிகள் பலவாம்.

(வி - ம்.) முன்னிய கைம்மை பெற்றோன்" "உயர்ந்தநாற் குலத்திலாண்பெண்" "பெருத்தஅல் வனுலோமன்னே" எனவரும் நிகண்டுச் செய்யுட்களான் இவற்றின் விரிவை யுணர்க. தாளுறு - முயற்சியுற்ற. ஆளுறு - அடிமையாகப் பொருந்திய. உயர்குலப் பெண்ணும் இழிகுலத்தானுங் கூடிப் பிறந்தவன் பிரதிலோமன். (க00)

ஆதியி றமைந்த பொருள்சிறந் தனவென்
றருமறை யினிதெடுத் தியம்பும்
நீதியான் முகத்திற் சிறந்துபூங் கமல
நிகர்த்தவிர் வேதனூர் பதத்தில்
கோதிலா தெழுந்து வரைதுலாக் கோலும்
குளிர்ந்தசெங் கோலும்வேய்ங் கோலும்
தீதிலா மூவர் செலுத்தவேர்ச் சிறுகோல்
செலுத்துநர் வீதிகள் பலவால்.

(இ - ள்.) முதற்கண் பொதுவிதியாகக் கூறும் பொருள்களைக் காட்டினும் இறுதியிற் சிறப்பு விதியாகக் கூறும் பொருள்கள் சிறப்புடையனவாகுமென்று அரிய வேதங்கள் இனிதாகக் கூறுகின்ற முறையான் நான்கு வேதங்களையும் உணர்ந்த பிரமாவின் (முன்னர்க் கூறப்படும்) முகத்தைக் காட்டினும் சிறப்புற்றுப் (பின்னர்க் கூறப்படும்) பொலிவுபெற்ற தாமரை மலரையொத்து விளங்குகின்ற திருவடியைத் தங்களுக்குப் பிறப்பிடமாகக் கொண்டு குற்றமிலவாகித் தோன்றித் (தன்கண் வைத்த பாரத்தைக்) (குறையாதும் மிகாதும்) வரையறுத்துக் காட்டுகின்ற துலாக்கோலையும் (உலகத்துயிர்கள் இன்புறுதற் கேதுவாகக்) குளிர் செய்கின்ற செங்கோலையும் (பொருட்டன்மையால் அரி, அயன், அரனென்னு முப்பொருளு மொன்றேயெனக் கோடற்பொருட்டுக் கொண்ட) மூங்கிற்கோலையும் குற்றமின்றிய மூவகைச் சாதியாரும் செலுத்த ஏரையோட்டுந் தாற்றுக்கோலைச் செலுத்துநர்களாகிய வேளாண்மாந்தர் வீதிகள் பலவாகும்.

(வி - ம்.) ஆதி என்பதில் இன்சாரியையோடு உம்மையுந் தொக்கதாகக் கொள்க. ஆதியினு மீறு சிறந்தன வென்க. அதுபோல முகத்தைக் காட்டிலும் சிறந்தவிர் பதத்திற் றோன்றிச் செலுத்துந ரென முடிவுசெய்க. வேய்ங்கோல் - மூங்கிற்கோல். சிறுகோல் - தாற்றுக்கோல். இம் முக்கோலும் செலலற்குக் காரணமாகிய ஏர்க்கோலினாகலின் அவர் தோன்றிய பதத்தை "முகத்திற் சிறந்தமை பத" மென்றார். "ஒன்றாக நல்லது" என்னுந் திருக்குறளுரையில் மூற் கூறியதிற் பிற்கூறியது வலியுடைத்தாகலின் எனப் பரிமேலழகர் கூறியதும் உணர்க. (௬0௧)

குய்யமா யுயிர்க டோற்றுதற் குரிய
குறிதமக் கேபிறப் பிடமாய்
ஐயமுன் வேத னிடத்தவ தரித்திட்
டதற்கியை தரமறை பிறர்பால்
வையக மூன்று மொருங்குறு மேனும்
வழங்கிடா தந்நிதி யாக்கி
உய்யநூல் வகுத்த வொழுக்கினிற் பிறழா
துழப்பவர் வீதிகள் பலவால்.

(இ - ள்.) மறைவாகி உயிர்கள் பிறத்தற்குரிய இடக்கரவயவமே தங்களுக்குத் தோன்றுமிடமாகி அழகிய முதன்மையுடைய பிரமாவினிடத்துத் தோன்றியதற்குப் பொருந்த வியாபார முறையான் வரும் இரகசியங்களை ஏனையோரிடத்து மூவகையுலகமும் ஒருசேரக் கிடைக்குமேனும் கூறாது அருமையாகிய செல்வத்தினையுளவாக்கி (ஆன்மாக்களுய்யும் வண்ணம்) உண்மை நூல்கள் வகுத்துச்சொல்லிய ஒழுக்கினின்றும் பிறழ்ச்சி யடையாமல் வாணிக முறையில் முயலுபவராகிய வணிகர் வீதிகள் பலவாகும்.

(வி - ம்.) குய்யமாய் - மறைவாய். குறி - பிரமன் இடக்கர் அவயவம். மறை - தாங்கொண்ட பொருளின் விலையைப் பிறர்க்குக் கூறாது மறைத்தல். உழத்தல் - முயன்று தொழில் செய்தல். (௧0௨)

பகைமுழு திரிக்கு மத்திரஞ் சுமந்த
பங்கயத் தொங்கலுழ் புயத்துத்
தகையழ கெறிப்ப நான்மறைக் கிழவன்
றந்திட வந்தகா ரணத்தால்
புகையழற் பொறிக டும்முவான் படைகள்
புயத்தினி தேந்திமே வார்தம்
மிகைதணித் துலகிற் குடைநிழல் பரப்பும்
வேந்தர்வாழ் வீதிகள் பலவால்.

(இ - ள்.) பகைவர்களை யெல்லாம் கெடச்செய்யும் அம்புகளைத் தாங்கிய தாமரை மலர்களா லாகிய மாலை தாங்கிய புயத்தினின்றும் நான்கு வேதத்திற்குரிய பிரமன் உளவாக்க மிக்க அழகு வீசாநிற்கத் தோன்றிய காரணத்தினாலே தூமத்தோடு கூடிய தீப்பொறிகளைக் கக்குகின்ற பெருமைபொருந்திய ஆயுதங்களை இனிதாகப் புயத்திற்றாங்கிப் பகைவர்களுடைய செருக்கையடக்கி உலகத்தினிடையே வெண்கொற்றக் குடையினால் நிழலைப் பரவச்செய்யும் அரசர்கள் வாழும் வீதிகள் பலவாகும்.

(வி - ம்.) நான்மறைக் கிழவன் புயத்து அழகெறிப்பத் தந்திட வந்த காரணத்தா லென்க. தகையழகு - மிக்க அழகு. தும்மு - கக்குகின்ற. மிகை - செருக்கு. (௧0௩)

இருமையு மளிக்கு மொழுக்கெலாந் தெரிக்கு
மிருமறை யெழுந்தவாண் முகத்துப்
பொருவரு வேதக் குரிசின்முன் னுயிர்ப்பப்
போக்கறப் பொலிந்தகா ரணத்தால்
ஒருமையி னேத லாதியா வுரைத்த
வுயர்தொழி லாறினுஞ் சிறந்து
பெருமையின் மறையோ ரெனும்பெயர் தமக்கே
பெற்றவர் வீதிகள் பலவால்.

(இ - ள்.) இம்மை மறுமைப் பயன்களைக் கொடுக்கு மொழுக்கங்களை யெல்லாம் தெரிவிக்கும் பெரிய வேதங்கள் தோன்றிய ஒளி பொருந்திய முகத்தினிடத்து ஒப்பற்ற வேதத்தலைவனாகிய பிரமன் யாவரினு முற்பட உளவாக்கக் குற்றமின்றி விளங்கிய காரணத்தினால் ஒருமைப்பாட்டுடனே ஓதலை முதலாகக் கூறிய உயர்ந்த அறுவகைத் தொழிலினும் சிறப்புற்றுப் பெருமையினாலே மறையோரென்னும் பெயரைத் தங்களுக்கே யன்றி (வேறொருவர்க்கில்லாமல்) பெற்றவர்களாகிய மறையவர் வீதிகள் பலவாகும்.

(வி - ம்.) இருமை - இம்மை, மறுமை. பொருவரும் - ஒப்பற்ற. போக்கு - குற்றம். ''போக்கின்றென்ப வழக்கினுள்ளே'' எனும் தொல்காப்பியச் சூத்திரத்தா னறிக. (௧0௫)

அருள்வளங் கொழிக்கு மைந்தொழி லாக
வடங்கிய சிறப்பொடு பூசை
மருவுமெவ் வகையு மாகம வழியான்
மயரறத் தெளிந்தவர் வரையாச்
சுருதிகண் மிருதி புராணமெக் கலையுந்
துகளறத் தெரிந்தவ ரிறைவன்
தருதிரு மேனி தீண்டிடு மாதி
சைவர்வாழ் வீதிகள் பலவால்.

(இ - ள்.) அருளின் பெருக்கத்தைச் சொரிகின்ற ஆக்க லழித்தலருளல் காத்தல் மறைத்தலென்னும் ஐவகைத் தொழிலாக அடங்கிய விழாவொடு பூசைக்குப் பொருந்திய எவ்வகைப்பட்ட கிரியைகளையுமாகமசாத்திர வழியான் மயக்கமறத் தெளிந்தவர்கள், எழுதாத வேதங்கள் மிருதிகள் புராணங்கள் முதலிய எல்லாக் கலைகளையும் குற்றமற அறிந்தவர்கள் சிவபெருமானுடைய இன்பினைத் தருகின்ற திருமேனியை முப்பொழுதும் தீண்டுபவர்களாகிய ஆதி சைவர்கள் வாழ்கின்ற வீதிகள் பலவாகும்.

(வி - ம்.) சிறப்பு - விழா. எவ்வகையும் - எவ்வகைக் கிரியைகளையும். மயல் - மயக்கம். துகள் - குற்றம். வரையாச்சுருதி-எழுதாத வேதம். (௧0௬)

கரிசறு கவிங்குக் கவிகம கனுக்குக்
கமகன்வா திங்கொரு வாதி
துரிசறு வாக்கி தனக்கொரு வாக்கி
யாயவர் தோன்றுதொட் டமைந்து
வரிசையின் வந்த கேள்வியர் பொருது
வருமிகல் கடந்தவெஃ குடையார்
பரிசினாற் பயிற்சி யின்பெனக் கலைதேர்
பட்டிமண் டபம்பல வயங்கும்.

(இ - ள்.) குற்றமற்ற (நால்வகைக் கவியை யாவரும் வியக்கப் பாடுவோனாகிய) கவிக்கு ஒரு கவியும், (நூலின்கட் செறிந்து கிடக்கு மரும்பெரும் பொருளினைச் செம்பொருளாக யாவருமறியும் வண்ணம் விரித்துச் சொல்லும்) கமகனுக்கு ஒருமகனும், (மேற்கோளும் ஏதுவும் உதாரணமும் உபநயமும் நிகமனமும் காட்டிப் பிறன் கூற்றை மறுப் பவனாகிய) வாதிக்கொரு வாதியும், குற்றமற்ற (அறம்பொருளின்பங் களைக் கேட்போர் விரும்பும் வண்ணம் கூறும்) வாக்கிக் கொருவாக்கியும் ஆகியவர்கள் பண்டைக்காலம் தொடங்கிப் பொருந்திச் சான்றோ ரிடத்து முறைப்பட்டுவந்த கல்வி கேள்விகளை யுடையவர் (பிறராக்கம் கண்ட வழிப்) பொருது வருகின்ற பகையை வென்ற கூரிய புத்திநுட்ப முடையாராகிய இவர்கள் மேற்கூறிய தன்மையோடு நூலின் பயிற்சி இன்பெனக்கொண்டு நூல்களை யாராய்கின்ற கலைதெரி மண்டபங்கள் பல விளங்கும்.

(வி - ம்.) பட்டிமண்டபம் - கலைதெரி மண்டபம். "பட்டி மண்டபத்துப்பாங் கறிந்தேறுமின்" எனவரும் மணிமேகலையானும், "பட்டிமண்டப் மேற்றினை" என்னும் திருவாசகத்தானு மறிக. (௧0௬)

அறிதரா தியற்றும் புண்ணிய நிரம்பி
யறிந்துபல் புண்ணியம் புரிவோர்
மறிதரா தகத்துச் சரியைமுன் னான்கும்
வழுத்தப வியக்குந ருண்மை
நெறியினு லந்த நான்கினுங் கருத்தை
நிறுத்துந ராயசீ ரடியார்
பிறிதரா தமர்ந்து தத்தம தியல்பு
பேணிவா ழிருக்கைக ளனந்தம்.

(இ - ள்.) அபுத்தி பூர்வபுண்யம் நிறையப்பெற்றுப் புத்தி பூர்வ மாகப் பல புண்ணியங்களைச் செய்கின்றவர்களும், மடங்காது அகத்தி னிடத்தே உபாயச்சரியை, உபாயக்கிரியை, உபாயயோகம், உபாய ஞானமாகிய நான்கினையும் குற்றம் நீங்கச் செய்கின்றவர்களும், உண்மை வழியான்வந்த உண்மைச்சரியை, உண்மைக்கிரியை, உண்மை யோகம், உண்மைஞான முதலிய நான்கினிடத்து நிறுத்துகின்றவ ராகிய சிறப்புப் பொருந்திய அடியார்களும் நீங்காதமர்ந்து தங்கடங்கள் ஒழுக்கங்களைப் போற்றி வாழ்கின்ற இருக்கைகள் பலவாம்.

(வி - ம்.) புத்தி பூர்வ அபுத்தி பூர்வபுண்யங்களும், உபாயச்சரியை முதலிய நான்கும், உண்மைச்சரியை முதலிய நான்குமாகிய பத்தும் சிவபுண்ணியமெனப் பெயர் பெறும். இப் பத்தினுள் முற்பட்ட ஒன் பதும் மலநிலையமாகும். பிற்பட்ட ஒன்று அருணிலையாகும். (௧0௭)

மும்மலச் செருக்கை முதலொடு முருக்கி
முழுத்தபே ரறிவெனக் கிளைத்த
விம்முயிர் கெடுத்து விங்கிய வருளை
வியங்கொளுந் திருக்கினை மிளிர்த்துச்

செம்மைமெய் யருளைக் கடந்தொளிர் சிவத்திற்
றினகர விழியெனக் கலக்கும்
இம்முறை யுண்மை ஞானமீ ரைந்து
மியங்குநர் மடங்களெண் ணிலவால்.

(இ - ள்.) ஆணவம், மாயை, கன்மமென்று மூவகை மலங்களின் தருக்கை வேரொடுங் கெடுத்து, முதிர்ந்த அறிவே வடிவானவன் யானென்றெழுந்த மிக்க உயிரின் தன்மையைக் கெடுத்து மிக்க அருளினை ஏவல்கொள்ளும் அறிவினை விளங்கச்செய்து செப்பமாகிய அருளைக் கடந்து விளங்குகின்ற சிவத்தினிடத்தில் கதிரொளியும் கண்ணொளியும் பேதமின்றி அத்துவிதமாகக் கலத்தல்போல அத்துவிதமாகக் கலக்கு மிம்முறையாகிய உண்மை ஞானம் பத்தினும் ஒழுகுகின்ற அடியார்கள் மடங்கள் பலவாம்.

(வி - ம்.) முற்செய்யுளிற் கூறப்பெற்ற பத்தினுள் ஈற்றினின்ற உண்மை ஞானமொன்றே, தத்துவரூபம், தத்துவதரிசனம், தத்துவ சுத்தி, ஆன்மரூபம், ஆன்மதரிசனம், ஆன்மசுத்தி, சிவரூபம், சிவதரிச னம், சிவயோகம், சிவபோகமெனப் பத்தாகும். இவை தசகாரிய மெனப் பெயர்பெறும். இவற்றுள் சிவபோகம் நீங்கிய ஒன்பதும், சுத்தசாக்கிர முதலிய நான்கவத்தையினடங்கும். சிவபோகம் துரியா தீதத்தினடங்கும். இச்செய்யுளில், ''மும்மலச் செருக்கை முதலொடும் முருக்கி'' யென்பதனாற் றத்துவரூப முதலிய மூன்றும். ''முழுத்தபே ரறிவெனக் கிளைத்த விம்முயிர் கெடுத்து'' என்பதனால் ஆன்மரூப முதலிய மூன்றும். ''வீங்கிய அருளை வியங்கொளுந் திருக்கினை யிளிர்த்து'' என்றதனால் சிவரூபம் சிவதரிசனம் ஆகிய இரண்டும். ''செம்மை மெய்யருளைக் கடந்து'' என்பதனால் சிவயோகமொன்றும், ''ஒளிர்சிவத்திற் றினகரவிழியெனக் கலக்கும்'' என்பதனால் சிவபோக மொன்றுந் தோன்ற நின்றமை காண்க.

அறிவெனக் கிளைத்தஉயிர் - இயல்பின் ஞானவடிவமாகிய உயிர். செருக்கு - தருக்கு. முதல் - வேர். முருக்கி - கெடுத்து. உயிர்கெடுத்து- ஆத்மபோதத்தைக் கெடுத்து. வியம் - ஏவல். திருக்கு - அறிவு. தின கரவிழி - கதிரொளியோடு அத்துவிதமாகக் கலந்த கண்ணொளி. (௩0அ)

அலகில்பல் லுயிரு முயிர்த்ததம் மாமி
யருளிரு நாழிநெல் லேகொண்
டிலகறம் வளர்த்தா ளெனுமிழுக் ககல
விருநிதி வேண்டின வெல்லாம்
குலவரைக் கிழவன் கொடுத்திட வாங்கிக்
கோதைய ரிருவரும் வளர்ப்ப
நிலவிநிற் பனபோற் பலவறச் சாலை
நித்தலும் வயின்றொறுந் தழையும்.

(இ - ள்.) கணக்கிடப்படாத பல உயிர்களையுமீன்ற தங்கள் மாமியார் இறைவனளித்த இரண்டுபடி நெல்லையே ஆதாரமாகக்

கொண்டு மாறுபாடில்லாத முப்பத்திருவகைக் கருமங்களையும் வளர்க்கவில்லையென்கிற குற்றமானது நீங்க (மக்கள்) விரும்பின பெரிய செல்வங்களெல்லாவற்றையும் சிறந்த மலைகளுக்குத் தலைவனாகிய முருகப்பெருமான் கொடுக்க வள்ளியம்மையாருந் தெய்வயானையாரும் வளர்க்க நிலைபெற்று நிற்பனபோலப் பல அறச்சாலைகள் நாடோறு மிடங்கடோறுந் தழைவுற்று நிற்கும்.

(வி - ம்.) தம் என்றது ஈண்டு வள்ளியம்மையார் தெய்வயானையாரை. அருள் - இறைவனளித்த. வரைக்கிழவன் - குறிஞ்சிநிலத் தலைவனாகிய முருகக்கடவுள், தணிகைக்கிறைவனெனினுமாம். (௩0௧)

பெருநிதி முகப்பத் தானமாக் கொடுக்கும்
பெற்றியர் வாக்குநீர்த் தாரை
இருகர தலத்தும் பிழைத்துவீழ் மணியு
மிரணியக் குப்பையும் வரன்றிப்
பொருதிரை சுருட்டி யொழுகுத லானும்
போகுமா ளிகைநிரை கரைபோல்
மருவுத லானுங் குலநதி நதம்போல்
வயங்குவ பற்பல்வீ திகளும்.

(இ - ள்.) பெரிய செல்வங்களை முகந்துகொள்ளும் வண்ணம் மந்திர பூர்வகமாகக் கொடுக்கின்ற தன்மையை யுடையார் கொட்டுகின்ற நீரொழுங்கானது இருகரங்களினின்றும் பிழைத்து வீழ்கின்ற இரத்தினங்களையும், பொற்குவியலையும் வாரிக்கொண்டு மோதுகின்ற அலையை மடக்கி விசிச்செல்லும் தன்மையாலும் உயர்ந்த மாடவரிசைகள் கரையைப்போலப் பொருந்துதலினாலும் பற்பல வீதிகளும் நதியைப்போலவும் நதத்தைப்போலவும் விளங்கும்.

(வி - ம்.) தாரை - ஒழுங்கு. பிழைத்து - தப்பி. இரணியம் - பொன். போகு - உயர்ந்த. நதி - மேற்றிசையினின்று கீட்டிசைக்கட் செல்வது. நதம் - கீட்டிசையினின்று மேற்றிசைக்கட் செல்வது. (௩௧0)

மணிமலர்ப் பட்டின் விசித்திரம் பிறங்க
மல்லல்வீ திகடோறு மமைத்த
தணிவில்பூம் பந்த ராற்றினைக் கடப்பச்
சமைத்தவான் சிலைவழி போலும்
அணிதரு மகர தோரண மணித்தோ
ரணங்களாங் காங்குநீண் டணிர்தல்
துணிவுறு தகையோ ரியங்குதற் கமைத்த
தொடர்படு கொடிவழி போலும்.

(இ - ள்.) அழகிய பூத்தொழிலமைந்த பட்டினால் விம்மிதம் விளங்க வளம்பொருந்திய வீதிகடோறும் செய்யப்பெற்ற உயர்ந்த

பொலிவு பெற்ற பந்தர்கள் (விதானங்கள்) நதியைக் கடக்க உண்டாக்கிய கல்லாலாகிய வழியையொக்கும். அழகைத் தருகின்ற மகரதோரணங்களும், பத்தராலாகிய தோரணங்களும் ஆங்காங்கே கட்டியுற்று விளங்குதல் மனத்துணிவு பொருந்திய ஆடவர்கள் செல்லுதற்குச் செய்த கொடியாகிய வழியையு மொக்கும்.

(வி - ம்.) விசித்திரம் - விம்பிதம். பந்தர் - எழுவாய். சிலைவழி - கல்லாகிய வழி. துணிவுறுதகையோர் - அக் கொடிவழியிற் செல்லும் மனவுறுதி பொருந்திய தகுதியுடைய ஆடவர்கள். ஆற்றினைக் கடப்பதற்குக் கற்பாலமும் கொடிவழியு முற்காலத்தும் இக்காலத்து முளவாதலின் இங்ஙனம் கூறினார். (௧௧௧)

நெருங்குதோ ரணத்திற் றூக்கிநித் திலங்க
ளிலாவொடு குளிர்தவக் கான்று
வருங்கதி ரிரவி விளர்ப்பவெப் பனுக்கி
மல்குவான் மீனெனத் தோன்றி
இருங்கலை மதியோ டுடுவினுக் கொளிமிக்
கிணக்கியந் தாரகைக் குலத்தோ
டொருங்கலிற் பொழுது தெரிப்பவே திங்கட்
குறுத்தினன் கறைகுறை விறையோன்.

(இ - ள்.) நெருங்குகின்ற தோரணத்தின்கட் டூக்கிய முத்துக்கள் ஒளியோடு குளிர்ச்சியை மிகக் கக்கி நாடோறும் வருகின்ற கிரணங்களையுடைய சூரியன் நாணத்தால் வெண்ணிறமாக வெப்பத்தினைக் கெடுத்துப் பொருந்துகின்ற ஆகாயத்தின்கண்ணுள்ள மீன் கூட்டமென்று சொல்லும் வண்ணம் காணப்பட்டுப் பெரிய கிரணங்களையுடைய சந்திரனோடு கூடிய நட்சத்திரங்களைக் காட்டிலும் ஒளிமிகுந்து அவைகளைத் தன்னொளியாற் கலக்கச்செய்து நட்சத்திரக் கூட்டங்களுடனே யொடுங்குதலால் சூரியனிவனென்று பிறர்க்கறிவிக்கவே இறைவன் களங்கத்தையும் கலைக்குறைவையும் சிவபெருமான் திங்களின்மாட்டுச் சேர்த்தான்.

(வி - ம்.) தவக்கான்று - மிகக்கக்கி. விளர்ப்ப - வெண்ணிறமடைய. அனுக்கி - கெடுத்து. ஒருங்கல் - ஒடுங்கல். கறை - களங்கம். குறை - கலைக்குறை. இறையோன் - சிவபெருமான். (௧௧௨)

சந்திர காந்தச் சிலைகளிற் குயின்ற
தமனிய மாடமா ளிகைகள்
இந்துவா னுலவ வுமிழ்ந்தநீ ரருவி
யிழிதர வெழுபெருங் கொடிகள்
அந்திவார்ந் தசையும் பாடெலாங் கதிர்க்கு
மவிருடுக் குலந்தவழ் காட்சி
சிந்துவேய் மணிகள் வரைவயிற் கிடந்து
திவளொளி காலுவ போன்ற.

(இ - ள்.) சந்திரகாந்தக் கற்கள் பதிக்கப்பெற்ற பொன்மயமாகிய மாடத்தோடு கூடிய மாடமாளிகைகள் சந்திரன் ஆகாயத்தின்கண் வந்து சஞ்சரிக்கச் செய்த பிறவியானதொழுக, உயர்ந்த பெரிய கொடிகள் அவ்விடத்தில் நின்று அசையும் பக்கங்களிலெல்லாம் ஒளியைச் செய்யும் விண்மீன் கூட்டங்கள் ஊர்கின்ற தோற்றமானது சிந்துகின்ற மூங்கில் முத்துக்கள் மலையின்கட் கிடந்து விளங்குமொளியைக் கக்குவதை யொத்துத் தோன்றும்.

(வி - ம்.) மாடங்களை மலையாகவும் கொடியை மூங்கிலாகவும் அதன் பக்கத்தூர்கின்ற விண்மீன்களை வெய்சொரியு முத்துக்களாகவும் கொள்க. (௧௧௩)

வையக வரைப்பி னுயிரெலாங் கருமம்
வளர்ப்பதற் கேதுவாய் வழங்கும்
வெய்யவ னாதி கோளொடு நாளை
விந்தநேர் நகைப்பது தகாதென்
றையபொன் மணியிற் குயிற்றுநீண் மாடத்
தவையெலாஞ் செல்லிய வழிகள்
தெய்யநன் கமைத்த வுண்மைதேர் கல்லார்
செறிந்தகா லதரென மொழிவார்.

(இ - ள்.) பூமியின்கண் உயிர்ப் பன்மைகளெல்லாம் காரியங்களைச் செய்தற்குக் காரணமாக இயங்கும் சூரியன் முதலாகிய கோள்களோடு விண்மீன்களையும் விந்தமலையை யொப்பத் தடுப்பது தகுதியுடையதன்றென்று கருதி அழகிய பொன்னாலும், மணியாலும் செய்யப்பெற்ற நீண்ட மாடங்களில் அக்கோள் முதலியவைகளெல்லாம் செல்ல வழிகள் நன்றாக அமைக்கப்பெற்ற உண்மையை யறியாதவர்கள் (அவைகளை) சாளரமென்று சொல்லுவார்கள்.

(வி - ம்.) அந்தில் - அவ்விடம்; அசையெனினுமாம். கதிர்க்கும் - ஒளிமிகும். காட்சி - எழுவாய். வெய்யவனாதி கோளொடுநாள் - சூரியன் முதலாகிய கோள்கள் மீன்கள். தகைப்பது - தடுப்பது. ஐய - அழகிய. செல்லிய - செல்ல. தெய்ய - இசைநிறை. காலதர் - சாளரம். ''மான்கட்காலதர்'' எனச் சிலப்பதிகாரத்தும், ''கால்போகு பெருவழி'' என மணிமேகலையிலும் வருவனவற்று லறிக. கோள்கள் செல்லும் வழியை யறியார் காற்றுச் செல்லும் வழியென்பார். (௧௧௪)

வேறு

பொன்ன னாவிய மேனிலை மாடத்துப் புனைந்த
நன்னர் மாலைதாழ் சுருங்கையி னுகத்து நாகம்
புன்னு காலையி னெருங்குடன் மூடுரி கழற்றி
மன்னு யோகையிற் றுளும்புறு மதிதொறு மன்றே.

(இ - ள்.) பொன்னாற் கலந்து செய்யப்பெற்ற மேன்மாடங்களில் அலங்கரித்துச் செய்யப்பெற்ற நல்ல மாலைகள் தங்கப்பெற்ற சிறுவாயி

லில் ஆகாயத்தின் கண்ணியலும் இராகுகேதுக்கள் அடைகின்ற காலத்து நெருங்குதலால் உடலை மறைய தோலைக் கழற்றி மாதங்கடோறும் இதை பெற்ற களிப்பினைத் துள்ளும்.

(வி - ம்.) சுருங்கை - சிறுவாயில்; திட்டிவாயில் என்க. நாகம் - ஆகாயம்; இராகுகேதுக்கள். மன்றுகாலை - அடைகின்ற காலத்து. துளும்புறும் - துள்ளும். மதிதோறும் - மாதங்கடோறும். (௧௧௫)

செம்பொன் வார்கொடி சேணுற நிவந்துகற் பகத்தின்
வம்பு லாவிய பொன்னகர் மதிற்புறம் புடைப்ப
இம்பர் மேம்படு மிந்நகர் நிகர்க்கலாற் றுநீ
உம்பர் வாழ்தலொன் றெதென வொறுப்பபோன் றனவால்.

(இ - ள்.) செம்பொன்னாலாகிய நீண்ட கொடிகள் ஆகாயத்தைப் பொருந்த எழுந்து கற்பகமரங்களின் வாசனை பொருந்திய தேவருலகத்தின் மதிலைப் புறத்திலே அடிப்பன. இவ்வுலகத்தின்கண் மேம்பட்ட இத் தணிகாசலத்திறுக்கு ஒப்பாகாத நீ தேவருலகத்தின்கண் வாழ்தல் தகாதென்று தண்டிப்பன போன்றனவாகும்.

(வி - ம்.) நிவந்து - எழுந்து. மதில் - இரண்டாவதன்றொகை. ஒறுத்தல் - தண்டித்தல். (௧௧௬)

வளியின் யாத்தபொன் னகர்கொடி வைகலுந் துளக்க
நெளியு நீர்மையா னிலத்திடை விழுமென வஞ்சி
ஒளிறு வாள்விழி யிரவினும் விழித்துளா ரோத்தார்
அளிவி ழாமலர்ப் பொலந்தொடை யந்தரத் திமையார்.

(இ - ள்.) வண்டு விழாத மலர்களாலாகிய மாலையை யணிந்த விண்ணுலகத்தின்கண்ணுள்ள தேவர்கள் வாயுமண்டலத்தால் யாக்கப்பட்ட பொன்னகரானது (தணிகைநகர் மாளிகையிற் கட்டிய) கொடிகள் நாடோறும் அசைக்க நெளிகின்ற தன்மையால் (அந்நகரானது) பூமியின்கண் விழுமென்று பயந்து விளங்குகின்ற ஒளியோடு கூடிய விழிகள் இரவின்கண்ணும் விழித்துள்ளாரை யொத்தனர்.

(வி - ம்.) வளியாத்த பொன்னகர் - வாயுமண்டலத்தாலியாக்கப் பெற்ற பொன்னகரமானது. நெளியும் நீர்மையினாலே விழித்துளா ரோத்தா ரென்க. துளக்க - அசைக்க. (௧௧௭)

கன்னி கும்பங்க டாங்கிய வென்றெளி கதிர்க்குங்
கன்னி கும்பங்க டாழ்ந்துபோங் கனகவா னரங்கில்
துன்னி மாதரா ராடலிற் சுடர்மணி யுக்க
மின்னு மீன்விசும் பிகழ்ந்திறை கொண்டமை விழும்.

(இ - ள்.) பெண்களையும் பொற்குடங்களையும் (மேன்மாடங்கள் தாங்கியன) என்று கருதி கன்னிராசியும், கும்பராசியும் தங்கிச் செல்கின்றன. பொன்மயமாகிய பெரிய சபைகளில் பொருந்திப் பெண்கள் ஆடலினாலே சிந்தினவாகிய ஒளிபொருந்திய மணிகள் ஒளிர்

நின்ற விண்மீன்கள் ஆகாயத்தினின்றும் நீங்கித் தங்கிய தன்மையை ஒக்கும்.

(வி - ர்.) கன்னி - பெண். கும்பம் - குடம். கன்னி - கன்னி என்ற இராசி. கும்பம் - கும்பம் என்ற இராசி. தாழ்ந்துபோம். தங்கிச்செல்லும். வான் - பெரிய. உக்க - சிந்தினவாகிய மணிகள்: வினையாலணையும் பெயர். மீன் - விண்மீன். இகழ்ந்து - நீங்கி. இறை கொண்டமை - தங்கினமை. விழும் - ஒக்கும். (௧௧௮)

திகழு மின்னனார் மாடத்து மடுத்தனர் திறப்ப
அகின றும்புகை சுருங்கையி னிவர்ந்தெழு மாக்கம்
முகிலுண் கூந்தலார் முகத்தினை மதியென முன்னிப்
புகுக ரும்பணி யன்மைதேர்ந் தெழுவது புரையும்.

(இ - ள்.) ஆகாயத்திலே விளங்குகின்ற மின்னலையொத்த இடையை யுடைய பெண்கள் மேன்மாடங்களில் அகிற்கட்டையின் கரிய புகையை நிறைத்தவர்களாகிப் பின் திறந்துவிட (அப்புகை) நுழைவாயில்கள் ஓங்கியெழுகின்ற உயர்ச்சியானது மேகத்தை யொத்த கூந்தலையுடைய மங்கையர் முகங்களைச் சந்திரனென் றடைந்து (உண்ணப்) புகுகின்ற இராகுவானது (மதியன்மை யறிந்து) எழுவதை யொக்கும்

(வி - ர்.) மின்னனார் அகிலறும்புகை மடுத்தனர் திறப்ப எனக் கூட்டுக. சுருங்கை - நுழைவாயில். முன்னி - அடைந்து. கரும்பணி - இராகு. அன்மை தேர்ந்து - மதியன்மையைத் தெளிந்து. ஆக்கம் எழுவது புரையுமென வினைமுடிவு செய்க. முகிலுண் கூந்தல் - மேகத்தை யொத்த கூந்தல். உண் - உவமையுருபு. 'சேலுண் கண்ணியர்' எனச் (2383) சிந்தாமணியில் வந்துள்ளது காண்க. (௧௧௯)

சீத ளத்தொடு வெம்மைய திதலைவெம் முலைக்குச்
சீத ளத்தொடு வெம்மைசெய் தக்கதென் பார்போற்
சீத ளப்பனி நீர்விராய்ச் சந்தனஞ் செறித்துச்
சீத ளப்புன லறவிரை புகைப்பராற் றிளைப்போர்.

(இ - ள்.) குளிர்ச்சியோடு வெப்பத்தை யுடையவாகிய தேமலோடு கூடிய தனங்களுக்குக் குளிர்ச்சியோடு வெப்பத்தைச் செய்யத் தக்கதென்பாரைப்போல குளிர்ச்சி பொருந்திய பனிநீரைக் கலந்து சந்தனச் சேற்றை யப்பிக் குளிர்ச்சியாகிய அந்நீர் புலரும்வண்ணம் அனுபவிப்பவராகிய ஆடவர்கள் வாசனைப் புகையை யுண்டாக்குவர்.

(வி - ர்.) வெம்மை - முற்றெச்சம். செய்யத் தக்கதென்னும் வினையெச்சத்திறுதி விகாரத்தாற் றொக்கது. ''செய்தக்க அல்ல செயக் கெடும்'' என்னும் குறளா னறிக. (௧௨௦)

சித்தி ரப்பல பயின்றுபைங் கிளிமொழி திகழ்ந்து
பெத்தி நந்துவை யுறுநிரந் தரித்தெங்கும் விரைத்துத்
தத்து தென்றல்வந் துலாவுபு தையலார் பயில
வைத்த மாடமு மவரென வைம்பொறி வாங்கும்.

(இ - ள்.) பல சித்திரங்கள் பொருந்திப் பரிய கின்னரமிதுனங்கள் விளங்கப்பெற்று, நிறைந்த பெரிய சுவையோடுகூடிய சிற்றுணாக்கள் கலக்கப்பெற்று, யாண்டும் வாசனையையுடைத்தாகித் தாவுகின்ற தென்றற் காற்றினை யனுபவிப்பதற்காகச் சிற்றரைக் கொண்டு பெண்கள் தங்குவதற்குச் செய்யப்பெற்ற இவ்வரிசைகளும் (தம்மைக் கண்ட ஆடவருடைய ஐம்பொறிகளைத் தம்மிடத்து வாங்கிக்கொள்ளும்) அப் பெண்களைப்போலத் (தம்மைக் கண்டோர்) ஐம்பொறிகளையும் தம் மாட்டிழுத்துக் கொள்ளும்.

(வி - ம்.) கிளி - அம்மாடங்களிலுள்ள பெண்கள் வளர்க்கும் கிளி. பெண்கள் ஐம்பொறி வாங்குதலை "கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு மொண்டொடி கண்ணே யுள" என்னும் திருக்குறளா னுணர்க. கண்ணாற்கண்டும் செவியாற்கேட்டும் நாவாலுண்டும் மூக்கான் மோந்தும், மெய்யாற்றீண்டியும் அவ் வப்பாலை யனுபவிப்பன தொடியை யுடையாள்கண்ணே யுளவாயினவாறு காண்க. (௪௨௧)

மானி னத்தொடு முயலின மருவும்வண் வடவை
மேனி புல்லுறு மிடபம்விழ் பிடிபரி யேறு
தானி வர்ந்தெழும் வார்கொடி மகரமேற் றுங்கி
வேனின் மன்னவ னிடமென விளங்குவைப் பெங்கும்.

(இ - ள்.) நீண்ட கொடிகளின் மகரராசியினைத் தாங்கி வசந்த காலத்துக்குரிய மன்மதனதிடமென்று சொல்லும்படி விளங்குகின்ற வைப்பினெவ்விடங்களிலும், மான்சாதிப் பெண்களோடு முயற்சாதி யாடவர்கள் சேருவார்கள். குதிரைச்சாதிப் பெண்களோடு இடபச் சாதி யாடவர்கள் சேருவார்கள். விரும்புகின்ற பெண்யானைச்சாதிப் பெண்களோடு குதிரைச்சாதி யாடவர்கள் விரும்பிச் சேருவார்கள்.

(வி - ம்.) இவற்றின் விரிவை யெல்லாம் மாரதந்திரத்துட் காண்க (௪௨௨)

கற்புக் காட்டிய கைவளர் பசுங்கொடிக் கமழ்ந்த
கற்புக் கூந்தலர் காவியஞ் செவியினர் கலப்போர்
பொற்பக் காமநூல் வாதினில் வென்றுபோர் மதன்பால்
எற்பக் கேவலை யிவையெனப் பறித்துளார் நிகர்த்தார்.

(இ - ள்.) (நாயகர்கள் பிரிந்த காலத்து மன்மத பாணமாகிய முல்லை மலரால் கிடையும், நீலமலரால் சாக்காட்டையு மெய்திட மகளிர் தலைவர்கள் வினைமுற்றி மீண்டபின்னர்) தங்கள் கற்பு நிலைமையைக் காட்டத் தங்கள் கையால் வளர்க்கப்பட்ட முல்லைக் கொடிக் கண்ணே தோன்றி, வாசனையை வெளியிடுகின்ற முல்லைமலரைக் கூந்தலின்கண்ணே சூடி, நீலமலரை அழகிய காதின்கண்ணே செருகித் தங்கள் நாயகரோடு கூடுகின்ற பெண்கள் (முன்னர் தம்மைப்பார்த்துத் தம்மை வருத்திய மாரனைப்) பொலிவுபெறுக் காமநூற்போரிலவனை வெற்றிகொண்டு அப்போர்த் தொழிலைத் தொடங்கிய மன்மதனிடத்துள்ள முல்லைமலரும் நீலமலருமாகிய இவற்றை இனி எவ்பக்கம் செலுத்தற்க என்றுகூறிக் கைப்பற்றிக் கொண்டவரை யொத்தார்.

(வி - ர்) காட்டிய - காட்ட வென்க. பெண்கள் முல்லைக் கொடியை வளர்த்தல் "மாதரன்பொடு வளர்த்தமுல்லை, மெல்லரும் பீன்றதென்று" எனும் நைடதச் செய்யுளானும், "நல்லவர் கற்பை யுமிழ்ந்து நடந்து" எனும் காஞ்சிப்புராணச் செய்யுளானு முணர்க. கற்புக் கூந்தலார் காவியஞ் செவியினர் என்பன தெரிநிலைப் பொருளுணர்த்தும் வினையெச்ச வினைக்குறிப்பு முற்றுதலின் முல்லை மலரைச் சூடி நீல மலரை யணிந்தெனச் செய்தெனெச்சப் பொருளையுணர்த்தி நின்றன. இங்ஙனம் வினையெச்ச வினைக்குறிப்பு முற்று செய்தெனெச்சப் பொருளுணர்த்தலை ஆசிரியர் நச்சினார்க்கினியர் "தொல்-சொல்" "முன்னத்தினுணரும் கிளவியு முளவே, யின்ன வென்னும் சொன்முறை யான" என்னும் 459-ஆம் சூத்திர வுரையில் "கச்சினன் கழலினன் செச்சைக் கண்ணியன்; குழலன் கோட்டன் குறும்பல் லியத்தன், தகரமஞ்ஞையன் புகரில் சேவலங், கொடிய னெடியன் தொடியணி தோளன், நரம்பார்த்தன்ன இன்குரற் றொகுதியொடு, குறும்பொறிக் கொண்ட நறுந்தண் சாயல், மருங்கிற் கட்டிய நிலனேர்பு துகிலினன்; முழவுறழ் தடக்கையி னியல வேந்தி, மென்றோட் பல்பிணை தழீஇத் தலைத்தந்து, குன்றுதொறாடலும் நின்றதன் பண்பே" என்புழிவந்த வினையெச்ச வினைக்குறிப்பு முற்றுக்கள் ஆக்கம் பெற்றுப் பொருளுணர்த்துங்கால், கச்சைக் கட்டிக் கழலையணிந்து கண்ணியைச் சூடிக் குழலையூதி கோட்டைக் குறித்துப் பல்லியங்களை யெழுப்பித் தகரைப் பின்னிட்டு மயிலையேறிக் கொடியை யுயர்த்து வளர்ந்து தோளிலே தொடியை யணிந்து துகிலை யுடுத்து ஏந்தித் தழீஇ தலைகொடுத்து ஆடலும் அவற்கு நிலைநின்ற பண்பு "எனச் செய்தெனெச்சப் பொருளை யுணர்த்தி நின்றவாறு காண்க" என நச்சினார்க்கினியர் கூறியிருத்தலா னறிக.

துணையின்றித் தனியாக இருந்தகாலத் தற்றம்பார்த்துத் தங்களை வேறல் செய்த பகைவரைத் துணைவாய்க்கப் பெற்றகாலத்து வேறல் செய்து அவர்பாலுள்ள ஆயுத முதலியவற்றைக் கோடல் முறையாகலின்; இப்பெண்களும் துணைவரில்லாக் காலத்து அவனை வென்று முல்லையும் நீலமுமாகிய இப்பாணங்களை எங்கள் பக்கம் ஏவற்க வெனக் கூறிப் பறித்துள்ளாரை யொத்தா ரென்க. இயல்பாக அணியும் முல்லையையும் நீலத்தையும் அவனை வென்று பறித்தலாகக் கருதலால் தற்குறிப்பேற்ற அணியென்க. கலப்போர் ஒவ்வொருவரும் என்பக்க மேவலையெனத் தனித்தனி கூறலால் என்னென்று மொருமை தனித்தனி சென்று கலப்போ ரென்னும் பன்மையோடு கூடுதலின் வழுவன்று. "ஆசிரியர் நச்சினார்க்கினியர் தொல் - சொல் - எச்சவியலில்", "ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி-பன்மைக் காகு மிடனுமா ருண்டே" எனும் சூத்திர வுரையில் "அஃதை தந்தை யண்ணல் யானை யடுபோர்ச் சோழர்" என்புழிச் சோழரெல்லாம் அஃதைக்குத் தந்தையரா முறையராய் நிற்றலின் தந்தையென்னு மொருமை சோழரென்னும் பன்மையோடு தனித்தனி சென்று கூடுதலின் வழுவின் றென்றதனானு மிதனை யறிக. எல்பக்கமெனப் பிரிப்பாருமுளர். என்பக்கம் எற்பக்கு என விகாரமாயிற்று. (௧௨௩)

எண்ணணி லண்டத்துப் பிரமரு மொருநக ரிதுபோற்
பண்ணை வன்னமாய்க் கரந்துபார்ப் பப்புகுந் தாங்குச்
சேண்ண வஞ்சிலம் பரற்றிய தீங்குரல் கவர்வான்
வண்ண வன்னங்கள் புகப்படுங் கலவிசெய் மாடம்.

(இ - ள்) அலகிட முடியாத அண்டங்களிலுள்ள பிரமர்களும் ஒப்பற்ற நகரமாகிய இத்தணிகையைப் போலச் செய்ய அன்ன வடிவமாகத் தம்முருவையொளித்துக் காணும்பொருட்டு வந்ததைப் போல ஒளியோடு கூடிய அழகிய காலணிகள் ஒலிக்கின்ற இனிய நடையைக் கவரும் பொருட்டு அழகிய அன்னப் பறவைகள் புணர்ச்சி நிகழுகின்ற மாடம் நுழையப்படும்.

(வி - ம்.) மாடம் புகப்படுமென விகுதி பிரித்து செய்க. செண்ணம் - ஒளி, வடிவு. வண்ணம் - அழகு. (௩௨௮)

கலவி யாற்றிய காலையும் புலவிக்கா லத்தும்
குலவு தந்நடை குறைந்தமைக் கொக்குமா றொதுங்கும்
நிலவு வெண்கரி வணக்கிய நிகரில்யாழ் தழுவி
மலரு மின்னிசை யெழுப்புவர் மேனில மகளிர்.

(இ - ள்) அந்நகரத்தில் மேன் மாடங்களிலுள்ள பெண்கள் (தந் நாயகரோடு) கலவிசெய்த காலத்திலும் (அவரோடு) பிணக்கம் செய்த காலத்திலும், விளங்குகின்ற தங்கள் நடை குறைந்த தன்மைக் கொப்ப நடக்கின்ற (தெய்வ லோகத்திற்) பொருந்திய வெள்ளை யானையை வணக்க (இசையால்) ஒப்பற்ற யாழினைத் தழுவி விரிந்த இனிய கானத்தை யெழுப்புவார்.

(வி - ம்) ஒதுங்கும் - நடக்கும். வணக்கிய - வணக்க. மலரும் - விரிந்த. எழுப்புவர் - உண்டாக்குவர். யானை யாழிசைக்கு வயமாதலை "காழ்வரை நில்லாக் கடுங்களிற் றொருத்தல் - யாழ்வரைத் தங்கியாங்கு" எனவரும் பாலைக்கலி 2ஆம் செய்யுளானறிக. (௩௨௯)

தடவு மேனில மெழுக்கிடுந் தண்புன லாப்பி
கடவு ளாப்பியுங் கங்கையுங் கவினுறுத் துவபூ
மடல்வி ராவிய கற்பகத் திழையவண் வதிவார்
படரெ லாந்தப வுண்பது பனிவிசும் பமிழ்தம்.

(இ - ள்.) பெருமை பொருந்திய மேன்மாடங்களை மெழுக்கிடுகின்ற குளிர்ந்தநீரும், சாணமும், காமதேனுவின் சாணமும் ஆகாய கங்கையுமாகும். (அம்மேன்மாடத்துள்ள பெண்களுக்கு) அழகைச் செய்வன பூவிதழ்களோடு கூடிய கற்பக மரங்களினுளவாகிய அணிகலன்களேயாகும். அம்மேன்மாடத்தின் கண்ணே தங்குகின்றவர்களால் துன்பங்களெல்லாம் நீங்க வுண்ணப்படுவது குளிர்ச்சி பொருந்திய தேவலோகத்தின் கண்ணுள்ள அமிழ்தமேயாகும்.

(வி - ம்.) புனலாப்பி - உம்மைத்தொகை. ஆமென ஒரு சொல் வருவித்து முடிக்க. கவினுறுத்துவன கற்பகத்தருமாபரணங்களாம். படர் - துன்பம். தப - நீங்க. உண்பது - உண்ணப்படுவது. கவின் - அழகு. (௩௩௰)

முழவு வென்றதோ ளாடவர் மேனில முகத்துக்
கழகம் விண்ணவர் கலவினர் கலைபல தெரிவார்

மழலை மென்மொழி மாதரார் பண்ணையின் மருவி
விழவு மல்கியாட் டயர்வரால் விளங்கர மகளிர்.

(இ - ள்.) (அந்நகரத்து) மென்மாடங்களிலுள்ள கல்விச் சங்கங்களில் மத்தளங்களை வென்ற தொனியையுடைய அந்நகரத் தாடவர்களோடு தேவருலகத்துள்ள தேவர்கள் கலந்து பலகலைகளையுமாராய்வார்கள். அன்றி மழலைச்சொற்களையுடைய பெண்கள் விளையாடுமிடங்களிற் பொருந்தி அழகு விளங்குகின்ற தேவமகளிர் சிறப்பை நிறைவித்து விளையாடுதலைச் செய்வர்.

(வி - ம்.) முழவு - மத்தளம். முகம் - ஏழாவதனுருபு. கழகம்-சபை. மழலை - பொருள் விளங்காச்சொல். ''ஒருகுதலைச் சின்மழலைக் கென்னே வையவோதுவதே'' என்னும் திருக்கோவையார் (104) கவியுரையானுணர்க. பண்ணை - விளையாடுமிடம். விழவு-சிறப்பு. விழவு மல்கி - தாங்கள் விளையாடுமிடத்திற்குச் சிறப்பை நிறைவித்தென்க.
(கஉஎ)

பொறித்த சீரெழுத் தொழுக்கெனப் பொற்றமா டங்கள்
செறித்த வார்நிரை வீதியிற் சிலவள மொழிந்தாம்
வெறுத்த வித்தகர் சூழ்தர வெற்றிவே லிறைவன்
குறித்த கோயில்கொண் டோங்கிய குன்றினி மொழிவாம்.

(இ - ள்.) எழுதிய சிறப்புப் பொருந்திய எழுத்துக்களின் வரிசையென்று சொல்லும்வண்ணம் பொலிவுபெற்ற இல்லங்கள் நெருங்கி ஒழுங்காக நிறைந்த வீதியின்கண்ணுள்ள சில வளங்களை மட்டும் கூறினோம். நெருங்கிய வீதிகள் தன்னைச்சூழ வெற்றியோடு கூடிய வேற்படையையுடைய முருகப்பெருமான் எழுந்தருளியிருக்கக் கருதிய கோவிலைத் தன்னிடத்தே கொண்ட தணிகைமலையின் சிறப்பை-யினிச் சொல்வாம்.

(வி - ம்.) பொறித்தல் - எழுதுதல். ஒழுக்கென - வரிசையென்று சொல்லும்படி. பொற்ற - பொலிவுபெற்ற. செறித்து - நெருங்கி. வார் - ஒழுங்கு. வெறுத்த - செறிந்த. குறித்த - இருக்கக் கருதிய.
(கஉஅ)

வேறு

நீல வுடைதண் கிடங்காக நீவி யிறுக்கு மரைப்பட்டம்
கோல மதிலா மாடநிரை குளிர்பூந் தொடையா விடைக்குவடு
வாச முலையா நெடுந்தூவி மணிப்பொன் மௌலி முடிசூடிச்
சீலநகர மகளிருந்து செங்கோல் செலுத்துஞ் செவ்வித்தே.

(இ - ள்.) ஒழுக்கத்தோடு கூடிய (முருகப்பெருமான் எழுந்தருளியிருக்கின்ற) திருக்கோவிலாகிய பெண் நீலநிறம் பொருந்திய வாடை குளிர்ச்சி பொருந்திய அகழியாகவும், கொய்சகத்தையிறுக்கும் ஒட்டியாணமானது குற்றமில்லாத மதிலாகவும் இவ்வரிசைகள் குளிர்ச்சி பொருந்திய பூமாலையாகவும் (அம்மலையின்) இடையேயுள்ள சிகரங்கள்

பரிசுத்தமாகிய தனங்களாகவும் கொண்டு நின்ற (கோவிலின் மேலுள்ள) சிகரங்களாகிய பொன்னாலாகிய முடியை யணிந்து செங்கோலைச் செலுத்துகின்ற அழகையுடையது தணிகைமலை.

(வி - ம்.) நீவி - கொய்சகம்: ஆடையுமாம். அரைப்பட்டிகை - ஒட்டியாணம். மேகலை - மேகலாபரணம். தொடை - மாலை. வாய் அர் முலை - பரிசுத்தமாகிய தனம்; இளமை பொருந்திய தனமுமாம். நகரம் - கோவில். சீலம் - ஒழுக்கம். செயவெனெச்சங்கள் தொக்குநின்றன. (௧௨௯)

சிகரமவிர்பொற் குடங்கொடுஞ்சி செம்பொற் கோயில் பலமதிலும்
புகரில்கிடுகு மாடநிரை பூட்டி விடுத்த மணிவடமாம்
நிகரில் வரைத்தே ரிவர்மாற்பு நிரைசோ பானந் துணிநீரில்
தகுகற் சுனைக ளணியாடி நவழ்வெள் ளருவி மணிவடமே.

(இ - ள்.) மலையின் சிகரம் தேரின்கண்ணுள்ள அழகிய குடமாகும். தேரின் மேன்மொட்டு செம்பொன்னாலாகிய கோவிலாகும். கோவிலின் பல மதில்களும் குற்றமில்லாத தேரின் மரச்சுற்றாகும். இவ்வரிசைகள் தேரிற்பூட்டி விடுக்கப்பட்ட அழகிய தேரிழுக்கும் வடமாகும். அம்மலையிலேறுவதற்கு வரிசையாக அமைந்த படிகள் வரையாகிய தேரின்கணேறுதற்கு அமைந்த கண்ணேணியாகும். தெளிந்த நீரினாற் றகுதியுடைத்தாகிய நீர்ச்சுனைகள் தேரிற்கட்டிய அழகிய கண்ணாடியாகும். அம்மலையி லொழுகுகின்ற வெள்ளிய அருவிகள் தேரின் நெருங்கவிடப்பட்டுள்ள முத்துவடங்களாகும்.

(வி - ம்.) ஆம் என்னும் சொல் எல்லாவற்றோடும் தனித்தனி சென்றியைந்தது. குடம் - தேரிலுள்ள கும்பம். கொடிஞ்சி - தேர் மொட்டு. கிடுகு - மரச்சுற்று; "கிடுகுதேர் மரச்சுற்றின் பேர்" என்னும் நிகண்டானறிக. மணிவடம் - தேரிற்கட்டிய கயிறு. மால்பு - ஏணி. இதனை "மால்பிழைத்தா" ரென்னும் திருக்கோவையானறிக. துணி - தெளிவு. ஆடி - கண்ணாடி. மணி - முத்து. (௧௩௦)

பிறவி தொறும்வேட் டருந்தவங்கள் பேரிது மிழைத்த சூர்முதலை
நிறுவு கொடிமேன் மஞ்ஞையென நிறுத்த குமரன் றனதுவரை
உறைவ தரிய தவமாக்கி யுயர்த்த வுகந்தார்ப் பெடுப்பனபோற்
சிறைய மயிற்புள் ளினங்கோடி திரள்வேய்த் தலைநின் றகவுமால்.

(இ - ள்.) பல பிறப்புக்கடோறும் அரிய தவங்களைப் பெரிதும் விரும்பிச் செய்த சூரனாகிய முதல்வனைத் தனது வெற்றிக்கறிகுறியாக நிறுவுகின்ற கொடியின்கண்ணே மயிலென்று சொல்லும் வண்ணம் நிறுத்தச்செய்த குமரநாயகனது வரையானது (மயில்கள்) தம்மிடத்து வாழ்வதையே தவமாகச் செய்துயர்த்திவைக்க (அச்செயலுக்கு) விரும்பி முழக்கெடுப்பனபோலச் சிறகினையுடைய கோடிக்கணக்கான மயிற்பறவையின் கூட்டங்கள் மூங்கில் மரங்களினுளியிலின்று ஆடுதலைச் செய்யும்.

(வி - ம்.) சூர்முதலை - சூரனாகிய முதல்வனை. முருகனதுவரை தன்னிடத்தும் மயில்கள் வாழ்தலையே தவமாகச் செய்துயர்த்திவைக்க வென்க. உகந்து - விரும்பி. ஆர்ப்பெடுப்பன - முழக்கெடுப்பன. அக

கை - கூடல். முருகன் சொரு மயிலென்பதனை "மணிமயி லுயரிய மாறா வென்றிப் பிணிமுக வூர்தி யொண்செய் யோனுமென" வரும் புறம் [illegible] செய்யுளானறிக. (க௩க)

செம்பொன் மேருக் கடையாகிச் சிறந்த கந்த மாதனமும்
அம்பொன் மேருக் குடாதிசை யிளிர்பொற் கந்த மாதனமும்
உம்ப ரிறைதன் னிடந்தணவா வுவக்க மறிந்து படர்ந்தனைய
பைம்பொன் வரைக ளிரண்டுமிரு பாலு மதிலா யுடைத்தரோ.

(இ - ள்.) சிவந்த பொன்மயமாகிய மேருமலையினுக் கடைகல்லாகச் சிறந்த (நான்கனு ளொன்றாகிய) கந்தமாதன மென்னுமலையும் அழகிய மேருமலைக்குக் குடதிசையின் கண்ணே விளங்குகின்ற கந்தமாதன மென்னுமலையும், தேவர்கட்கிறைவனாகிய குமரநாயகன் (தணிகையாகிய) தன்னிடத்தினின்று மொருகாலும் நீங்காத வுள்ளக்கிளர்ச்சியை யறிந்து வந்தாலொத்த பசிய பொன்மயமாகிய (ஆண்டுள்ள) மலைக ளிரண்டையும் இரண்டு பக்கத்திலு மதிலாக வுடைத்து அத்தணிகை மலை.

(வி - ம்.) மேருக்கடையாகிச் சிறந்த கந்தமாதனம்-அடைகல்லாக வுள்ள நான்கனு ளொன்றாகிய கந்தமாதனம். மேருக்குடாது திசைக் கந்தமாதனம்-மேருவின் மேற்கேயுள்ள ஒரு மலை. தன்னிடம் - தணிகையாகிய விடம். மதிலாயுடைத்து - தணிகை இவ்விரண்டு மலைகளையு மதிலாகவுடைத்தென்க. தணிகைமலையின் இரண்டு பக்கத்திலும் இரண்டு மலைகளுளவாகலின் இங்ஙனம் கூறினார். உவக்கம் - உள்ளக் கிளர்ச்சி. (க௩உ)

கனைவெள் ளருவி கலித்திழியுங் கனக வரைமுற் றும்வளையா
அனைய நதிபோற் றனைப்பாதி யவதி வளைந்து கடலகடும்
இனைய வகழ்ந்து புகுநீத்த மிரைக்கு நந்தி நந்தினியும்
நனைய வொருபால் வரைமதில்சூழ் நாம வகழி யெனவுடைத்தால்.

(இ - ள்) ஓசையோடு கூடிய வெள்ளிய அருவியொலித் திரங்குகின்ற மேருமலையை முற்றிலும் சூழாத அத்தன்மைத்தாகிய சாம்பூநத யாறுபோலத் தன்னைப் பாதி யெல்லைக்கண் வளைந்து கடலின் வயிறும் வருந்தும் வண்ணம் இடித்துச் செல்கின்ற வெள்ளம் ஒலி செய்கின்ற நந்தி நந்தினியை (மேற்கூறிய இருகந்த மாதனமாம்) வரைகளாகிய மதில்கள் ஒருபக்கத்து நனையச் சுற்றிய அச்சத்தைத் தரத்தக்க அகழியாகவுடையது அத்தணிகைமலை.

(வி - ம்.) மேருமலையை முற்றும் வளையாத சாம்புநத யாறு போலத் தணிகையானது தன்னை முற்றும் வளையாதிருக்கின்ற நந்தி நந்தினியென்னும் நதியை மதிலைச் சூழ்ந்த அகழியாக உடைத்தென்க. வரைமதில் - இருகந்தமாதனம் போன்ற இரண்டு மலையாகிய மதிலென்க. (க௩௩)

வரங்கள் வேட்டுப் படர்விண்ணோர் மண்ணோர் நாகர் யாவர்க்கும்
இரங்கி யினிது கைதூவா தீத்தல் கருதி யெண்ணிறந்த

கரங்கள் படைத்தங் கிருந்ததுபோற் காமர் வளங்க ளனைத்தினுக்கும்
அரங்க மெனவோங் கியகுன்ற மழல்செய் காந்தள் மலர்ந்ததே.

(இ - ள்.) வரங்களை விரும்பிச் செல்கின்ற தேவருலகத்தின்கணுள்ள தேவர்களும், பூமியின்கணுள்ள மக்களும், பாதாள வுலகத்தின்கணுள்ள நாகர் முதலிய யாவர்களுக்கும் இனிதாக இரக்கமடைந்து கையொழியாது கொடுத்தலைக் கருதி அளவிட முடியாத கைகளைப் பெற்று அங்கிருந்ததைப்போல விருப்பம் வரத்தக்க வளப்பமெல்லாவற்றிற்கும் இருப்பிடமென்று சொல்லும் வண்ணமோங்கிய தணிகை மலையின்கண் செங்காந்தள் மலர்ந்துள்ளது.

(வி - ம்.) கரங்கள் படைத்ததுபோல மலர்ந்ததெனை வினைமுடிவு செய்க. கைதூவாது — கையொழியாமல். அழல்செய் காந்தள் — தீப்போன்ற செங்காந்தள். (௩௩௭)

காலந் தோறுநன் றியம்பலுறுங் கணங்கொ ளியப்பே ரொலிச்செறிவான்
மூலந் தொடங்கிப் பேரண்ட முகடு காறு நெக்குடைய
சூலந் தொடுத்துப் பலமதலை நாட்டிக் கொடுத்தா லெனவோங்கும்
கோலந் தழைத்துப் பலதிசையுங் குன்றத் தெழுந்த கோபுரமே.

(இ - ள்.) பல திசையின்கண்ணும் அழகு தழைக்கப்பெற்றுத் தணிகை மலையின்கண் எழுந்துள்ள கோபுரங்கள் காலங்கடோறும் நன்றாக ஒலிக்கின்ற கூட்டத்தைத் தன்னிடத்தே கொண்ட வாத்தியங்களின் முழக்கத்தின் செறிவினாலே அண்டமுகடானது தன் அடி தொடுத்துச்சிவரையும் பிளந்துடைத்தலால் (அவ்வண்டங் கிழ்விழா வண்ணம்) பூமியினின்று தொடங்கிப் பல தூண்களையூன்றிக் கொடுத்ததுபோல உயர்ந்து தோன்றும்.

(வி - ம்.) அண்டமூலம் - அண்டத்தினடி. அண்டமானது தன் மூலந்தொடங்கித் தன் முகடுவரையும் நெக்குடைதலாலெனக் கொள்க. மதலை — தூண். (௩௩௮)

பிரம வுலகத் தயனுயர்த்த பிணைமென் சிறையோ திமக்கோடியும்
வரவை குந்தத் தரியுயர்த்த வகிர்நா வரவப் பகைக்கோடியும்
இரவும் பகலு மடிவருட வெழுந்து வானத் திலங்குகந்த
புரநன் குயர்த்த கொடியுமாய்ப் பொலியுந் திருமுற் றனிக்கோடியே.

(இ - ள்.) (குமரநாயகன்) சந்நிதியின் முன்னுள்ள ஒப்பற்ற மயிற்கொடியானது பிரம வுலகத்தின்கண் பிரமனுயர்த்திக் கட்டிய (ஒன்றோடொன்று பிணைந்த) மெல்லிய சிறகையுடைய அன்னக்கொடியும் மேலாகிய வைகுந்தத்தின்கண் அரியானுயர்த்திக் கட்டிய பிளந்த நாவினையுடைய அரவங்களுக்குப் பகையாகிய கருடக்கொடியும் இரவினும் பகலினும் அடியைத் தைவர உயர்ச்சியுற்று ஆகாயத்தின்கண் விளங்குகின்ற கந்தருலகத்தின்கண் நன்றாக உயர்த்திக் கட்டிய கொடியுமாகி விளங்கும்.

(வி - ம்.) வரம் - மேன்மை. வகிர்நா - பிளவுபட்டநா. அரவப் பகை - கலுழன். திருமுன் - சந்நிதி. (௩௩௯)

மன்றல் புரியு மண்டபமும் வயங்கு மூர்த்தி மண்டபமும்
பொன்றுஞ் சிரத மண்டபமும் பொற்ற விமான மண்டபமும்
துன்றுர் யாக மண்டபமுந் தொக்க விழாமண் டபமெல்லாம்
குன்ற மிசைபன் மணிக்குவடு குலாய்விண் ணிவந்த காட்சியவே.

(இ - ள்.) கலியாண மண்டபமும் விளங்குகின்ற வாகனங்கள் வைக்கு மண்டபமும், அழகு தங்கப்பெற்ற வெள்ளி மண்டபமும், பொலிவுபெற்ற விமானங்கள் வைக்கு மண்டபமும், பொருந்திய யாக மண்டபமும், மக்கடேவர் முதலிய யாவரும்வந்து கூடுதற் கேதுவாகிய திருவிழா மண்டபமுமாகிய இவையெல்லாம் அத்தணிகை மலையின்மீது பலமணிமயமாகிய சிகரங்கள் விளங்கி ஆகாயத்தின்க ணுயர்ந்த தோற்றத்தை ஒத்தன.

(வி - ம்.) பொன் - அழகு. துஞ்சுதல் - நிலை பெறுதல். "துஞ்சலே நிலைபெருகும்" என்னும் நிகண்டா னறிக. இரசிதம் - வெள்ளி. தொக்க - கூடிய. பன்மணிக்குவடு - பலமணிவடிவமாகிய சிகரங்கள். (௧௩௭)

போற்றவடுத்தோர் கொணர்ந் திறுக்கும் பொன்னங் கிழிக்குன் றுகளொரு
தோற்றும் வெள்ளி வரையொருபாற் றாசு மூடை யடுக்கொருபால் [பால்
விற்று மணியின் றிரளொருபால் விழுப்பல் பொருளின் பரப்பொருபால்
ஏற்று வளைவாய்ப் புள்ளொருபா லெண்ணி வரைத லரிதாமால்.

(இ - ள்.) முருகப்பெருமானைத் துதிக்கப் பொருந்தியோர் காணிக்கையாகக் கொணர்ந்து சேர்க்கும் அழகிய பொன்முடிப்பாகிய மலைகள் ஒருபக்கலில் உள்ளன. ஒளியை வெளிவிடுகின்ற வெள்ளிக் குவியலாகிய மலையொரு பக்கலில் உள்ளது. அறுவை மூடையின் அடுக்குகள் ஒருபக்கலில் உள்ளன. வெவ்வேறு வகையாகிய நிறங்களையுடைய மணிகளின் குவியல்கள் ஒருபக்கலில் உள்ளன. விழுமிய பலவாகிய பதினெண் வகைக்கூல முதலிய பொருள்களின் மிகுதி யொருபக்கல் உள்ளது. வளைந்த வாயையுடைய ஏற்றுப்புள்ளாகிய சேவல் முதலிய பறவைகள் ஒருபக்கலில் உள்ளன. இவைகளைக் கணக்கிட்டு வரைபறைப் படுத்தல் இயலாததாகும்.

(வி - ம்.) இறுக்கும் - சேர்க்கும் கிழி - முடிப்பு மூடை-மூட்டை என இக்காலத்து வழங்கப்படுகின்றது. இதனைக் "காலின் வந்த கருங்கறி மூடையும்" என்னும் சிலப்பதிகார அடியானறிக. பரப்பு, ஈண்டு மிகுதியை யுணர்த்தி நின்றது. ஏற்று வளைவாய்ப்புள் - ஆணாகிய வளைந்த வாயையுடைய பறவை; அவை முருகனைக் கருதிப் பராய் விடுத்த மயில் சேவல் முதலியன. (௧௩௮)

நகர்சூழ் வட்ட நீர்க்கோடு நகுபன் மணிமா ளிகைபல்லி
தருமா நகர மணிப்பொய்கை தனிற்சூழ் மதில்க ளிதழ்வரிசை
திகழ்கீ ழூர்சி பொகுட்டாய தெய்வ வரைத்தா மரைக்கிழவன்
புகழ்சூழ் பொய்கை மலிருந்த பொற்பும் விளங்க விற்றிருக்கும்.

(இ - ள்.) தணிகை நகரத்தைச் சூழ்ந்தமதில் சூளக்கரையாகும். விளங்குகின்ற பல இரத்தினங்கள் பதிக்கப்பட்ட மாளிகைகள் பல மலர்களாகப் பொருந்தும். பெருமையையுடைய அந்நகரம் முத்துக் களையுடைய பொய்கையாகும். தணிகைவரையைச் சூழ்ந்த மதில்கள் பூவிதழின் ஒழுங்காகும். விளங்குகின்ற சிகரியுடைய சிகரம் கொட்டையாம். இவ்வண்ணமாகிய தெய்வத் தன்மையையுடைய அம்மலையாகிய தாமரை மலரிடத்து அதற்குரிய முருகக்கடவுள் புகழ் சுற்றிய சரவணப் பொய்கையின்கண் தாமரைமலரில் எழுந்தருளி யிருந்த அழகும் என்றும் விளங்காநிற்க எழுந்தருளியிருக்கும்.

(வி - ம்.) ஆகுபெயராய்க் குளத்தின்மேற்று. கோடு - கரை. பல்வீ - என்றது தாமரையல்லாத ஏனைய பூக்கள். ஆய என்னும் உருவக முணர்த்தி நின்ற பெயரெச்சத்தை எல்லாவற்றோடும் கூட்டுக. வரைத்தாமரை - வரையாகிய தாமரை. பொற்பும் என் பதன் கண்ணுள்ள உம்மை இறந்தது தழீஇய எச்சப்பொருட்டு. கிழவன் தாமரைக்கண் வீற்றிருக்குமென வினைமுடிவு செய்க. (௧௫௯)

மன்னு மிருமா யையுங்கடந்து வயங்கு மிறைவர்க் கம்மாயைத்
துன்னு மணிபொன் னமிழ்தாதி தொடுத்திட் டுவமை வழங்கியாங்
கென்னு நிகராப் பொருள்களே நன்மாட் டுவம மெடுத்தவெனக்
கொன்னு மதியிற் கூர்த்தவர்கள் குறிப்ப ரிதற்கோர் நிகரின்றே.

(இ - ள்.) நிலைபெற்ற தூயமாயை, தூயதல்மாயை என்னுமிரு வகை மாயைகளையும் இயல்பாகவே நீங்கி விளங்குகின்ற இறைவற்கு அம்மாயா காரியமாகப் பொருந்தும் மணிகளும், பொன்னும் அமிழ்தும் முதலாகிய பொருள்களைப் பாடலிற் றொடுத்து உவமையாக வழங்கி னாற்போலச் சிறிதும் ஒப்பாத பொருள்கள் இந்நகரத்திற்கு உவமமாக எடுத்துக் கொள்ளப்பட்டன என்று பெருமை பொருந்திய அறிவினால் நுனித்துணர்ந்த பெரியோர்கள் சிந்திப்பர். ஆதலின் இம்மலைக்கு ஒரு பொருளும் நிகரின்று.

(வி - ம்.) தூயமாயை - சுத்தமாயை. தூய்தல்மாயை - அசுத்த மாயை. என்னும் - சிறிதும். கொன்என் இடைச்சொல் பெருமை யுணர்த்திற்று. என்னை? "அச்சம் பயமிலி காலம் பெருமையென், றப்பா லான்கே கொன்னைச் சொல்லே" என்பதோத்தாகலின். (௧௬௦)

வெள்வே லிறைவ னறைக்கமல விரைநூழ் பதந்தை வருமுள்ளத்
தள்ளூ றின்பப் பெருவெள்ள மடங்கா தெழுந்து விறுதல்போல்
தள்ளா வளத்து நகரியல்பு சாற்றப் புகுந லோடுமன்னோ
விள்ளா தெழுந்த பேரார்வ மிகையைந் தணிந்தாங் கறைதுநல்லாம்.

(இ - ள்.) வெள்ளிய வேற்படையையுடைய முருகக் கடவுளது தேனுடன் கூடிய மணமுடைய தாமரைமலர் போன்ற திருவடியைத் தடவி வருகின்ற உள்ளத்தின்கண்ணே செறிந்து ஊறுகின்ற இன்ப மாகிய பெரிய வெள்ளமானது தடைபடா தெழுந்து மிகுமாறுபோல நீங்காத வளத்தையுடைய தணிகை நகரத்தின் இலக்கணத்தை விரித்துக்

உற்பொருட்டு ஐயோ நீங்காது எழுந்த பெரிய ஆசையினது வரம்பு கடந்த செலவைத் தடுத்தோம். இனிக் கதையைக் கூறுதும்.

(வி - ம்.) அள் - செறிவு. வீறுதல் - நிகரின்றிமிகுதல். இயல்பு- இலக்கணம். புகுதலொடும் - உம்மீற்று வினையெச்சம். அன்றோ இரக்கத்தின்கண் வந்த குறிப்பு, மிகை - வரம்புகடந்த செலவு. (௧௪௧)

திருநகரப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் ௩௨௭,

---

# நைமிசப் படலம்

பூவி ருந்த நான்முகன் பொருக்கெ னக்க டாவிய
தாவி ருந்த பைம்புனேமி சார்ந்த டைந்த நைமிசம்
தேவி ருந்த செந்தழற்றி கழ்ந்து விண்ணு ளார்க்கெலாம்
மாவி ருந்து நாளும் வழங்கி ருக்கை யாயதே.

(இ - ள்.) தாமரைப் பூவின்கணெழுந்தருளி யிருந்த நான்கு முகத்தையுடைய பிரமன் விரைவாகச் செலுத்திய தாவுதல் பொருந்திய பசிய தருப்பைப் புல்லாகிய சக்கரம் பொருந்தித் தங்கிய நைமிச வனமானது தெய்வத்தன்மை பொருந்திய செவ்வண்ணமாகிய அக்கினி யானது விளங்கப்பெற்றுத் தேவருலகத்தின் கண்ணுள்ள தேவர்கட் கெல்லாம் பெரிய விருந்தினைக் கொடுக்கின்ற இருப்பிடமாயது.

(வி - ம்.) பொருக்கென - விரைவாக. தா - தாவுதல். அடைந்த - தங்கிய. தே - தெய்வத்தன்மை, மாவிருந்து - பெரிய விருந்து. நேமி சம்பந்தம் - நைமிசம் : தத்திதம். (௧)

படுப்ப வுய்த்த வான்குலம் பறப்பை கூர்ம மாதியும்
விடுப்ப வுய்த்த கோணமும் விறந்த நோக்கி நம்மையும்
அடர்ப்ப வென்றொ ளிப்பபோ லழன்று டற்று தீம்புகை
இடர்ப்ப டும்வி லங்குபுள்ளு மூர்வ சேணி றக்குமே.

(இ - ள்.) கொல்லக் கொணர்ந்த பசுக்கூட்டங்களும், கருடப் பறவையும், ஆமை முதலியவைகளும் (அசுவமேத யாகமியற்றும் பொருட்டுத் திசைமுகங்கடோறும்) செலுத்த ஆண்டுக் கொண்டுவந் துள்ள குதிரையும் செறிந்தனவற்றை நோக்கி (விலங்கு, பறவை, ஊர்வன முதலிய உயிர்கள்) நந்தம்மையும் (இங்ஙனம்) கொல்வரெ னென்று கருதி ஒளிப்பனபோல அழற்சியைச் செய்து வருத்துகின்ற இனிமை யாகப் புகையால் துன்பினையடைகின்ற விலங்கும், பறவையும், ஊர்வனவுமாகிய உயிர்த்தொகுதிகள் நெடுந்தூரத்திற் செல்லும்.

(வி - ம்.) கருடயாகத்திற்கும், கூர்மயாகத்திற்குங் கொணர்ந்த கருடனும் யாமையுமாகும். பறப்பை - பறவை. "பறப்பைப் படுத் தெங்கும் பசுவேட் டெரியோம்பும்" என்னும் தேவாரத் திருவாக்கா னறிக. ஆமையை யாககுண்டத்தின்கீழ்ப் புதைத்தல் மரபாதலின் அதற்குக் கொணர்ந்த எனினுமாம். விடுப்ப வுய்த்தகோணம் - அசுவ மேத யாகத்தின் பொருட்டுத் திசைகடோறும் விடுக்க நைமிசத்திற் செலுத்திய குதிரை. விலங்கும் புள்ளும் ஊர்வனவும் சேணிறக்கு மென முடிவுசெய்க. (௨)

கன்லி யந்து மாயினுங் கமழ்ந்த பங்க யத்தினுன்
மன்ன னாதி தேவர்கண் மகிழ்ந்து முற்று மாண்பினுல்
நன்னர் நைமி சஞ்சிறந்த நாகம் வைகு நாடெலாம்
கொன்னு மண்ண ரைப்பிடைக் குழீஇக் கலந்த தொத்ததே.

கரத்தை நீண்ட நாவினூற்றுக்கித்துத் திருவாடையின்கட் டங்கப்பெற்ற மேகலாபரணத்தை யணிந்த அல்குலையுடைய உமாதேவியாரைப் பாகத்திலேயுடைய சிவபெருமான் புகழை அதிகமாகத் தங்கச் செய்கின்ற செவியினை யுடையவர்களாவார்கள்.

(வி - ம்.) அழுத்து - தங்கிய. அழுத்தி - இருத்தி. பஞ்சு - ஆடை. சொல் - புகழ். விஞ்ச - மிக; ஈறுதொக்கது. அழுத்து - நிறைக்கின்ற. (அ)

இன்ன வாய மேன்மைசான் றியாணர் வண்மை நாடொறும்
பன்னு கின்ற நைமிச வனத்து வேறு மாதவர்
நன்னர் யூப மாமக நடாத்த லைக்கு றித்தரோ
துன்னும் வேலை யேழும்வந்து தொக்க தென்ன முற்றினர்.

(இ - ள்.) இத்தன்மையான மேன்மை மிகுந்து புதிதாகிய வள்ளற்றன்மை நிலைபெறுகின்ற நைமிசாரணியத்தின்கண் வேறிடத்துள்ள பெரிய தவத்தினர் நல்ல யாகத்தூணை நாட்டி மகஞ்செய்தலைக் கருதி ஒன்றோடொன்று பொருந்திய எழுகடலும் வந்து ஆண்டுக் கூடியதென்று சொல்லும்வண்ணம் கூடினார்.

(வி - ம்.) யாணர் வண்மை - புதிதாகிய வள்ளற்றன்மை, யூபம் யாகத்தினூட்டுந்தாண். முற்றினர் - அடைந்தார். (கூ)

வேறு

பிருகு வுக்கிர சீலன் போதா யணன்பி சிங்கிவி பாண்டகன்
துருவா னாதன் சுப்பி ரன்புதன் சுமதி யத்திரி சங்கமன்
அரித கன்பவு லன்சு முந்தர னுபத் தம்பன கத்தியன்
கருண னங்கிர சன்ப ருப்பதன் காத்தி யாயனன் கண்ணுவன்.

(இ - ள்.) பிருகும், உக்கிரசீலனும், போதாயனனும், பிசுங்கியும் விபாண்டகனும், துருவாசனும், நாரதனும், சுப்பிரனும், புதனும், சுமதியும், அத்திரியும், சங்கமனும், அரிதகனும், பவுலனும், சுமுந்தரனும், ஆபத்தம்பனும், அகத்தியனும், கருணனும், அங்கிரசனும், பருப்பதனும், கார்த்தியாயனனும், கண்ணுவனும். (கo)

பவுமன் பாசத ரன்ப ராசரன் பங்கு பப்புரு பக்குவன்
கவுசி கன்கபி லன்க லாதரன் காணன் காலன்கை வல்லியன்
கவுத மன்சர பங்கன் முற்கலன் காலவன் பண்டி தோத்தமன்
சவுன கன்சதா னந்தன் வாரன்சா தாத பன்சம தக்கினி.

(இ - ள்.) பவுமனும், பாசதரனும், பராசரனும், பங்கென்பவனும், பப்புரு என்பவனும், பக்குவனும், கவுசிகனும், கபிலனும், கலாதரனும், காணனென்பவனும், காலனும், கைவல்லியனும், கவுதமனும், சரபங்கனும், முற்கலனும், காலவனும், பண்டிதோத்தமனும், சவுனகனும், சதானந்தனும், வாரனென்பவனும், சாதாதபனும், சமதக்கினியும். இதனை அன்பினர் (கூ) என்ற வினைமுற்றுடன் முடிக்க,

சாம தக்கினி சற்ச ரன்சயன் சனிப ரந்தபன் சத்தியன்
தூம பன்சுகன் சத்தி மாண்டவி யன்சு தீக்கண விரதிதன்
வாம தேவன்ப ரத்து வாசன்வ சுசாபா லன்காண் டிப்பியன்
காமர் விண்டுவி ருத்தன் குண்டலன் காசி பன்புகழ் தேவலன்.

(இ - ள்.) சாமதக்கினியும், சற்சரனும், சயனும், சனியும், பரந்தபனும், சத்தியனும், தூமபனும், சுகனும், சத்தியும், மாண்டவியனும், சுதீக்கணனும், இரதிதனும், வாமதேவனும், பரத்துவாசனும், வசுவும், சாபாலனும், காண்டிப்பியனும், யாவரும் விரும்பத்தக்க விண்டுவென்பவனும், விருத்தனும், குண்டலனும், காசிபனும், யாவரும் புகழத்தக்க தேவலனென்பவனும். (௧௨)

வேறு

அசித னுதியர்க ளொன்றி ரண்டுபல வடியி னர்தலையி னர்பலர்
கசிவி னேடுதவம் வேறு வேறுபுரி காட்சி யாளரிவர் தம்முழைப்
பசையி னேடுபணி செய்து பிழைதபு பண்பு மிக்கவர்க ளன்னவர்
வசையி லேவல்புரி வோரு மண்மினர் மகிழ்ந்து வைகலுறு மேல்வையில்.

(இ - ள்.) அசிதனை முதலாகவுடையவர்களுமாகிய முனிவர்கள் ஒருதலையினையும் இரண்டு காலினையு முடையவரும், பல வடியினராய்ப் பல தலையினையுடையவருமாகிய பல முனிவர்கள் அன்பினோடு தவத்தை வெவ்வேறாகச் செய்கின்ற காட்சியினையுடையராவர். இவர்மாட்டு அன்பினோடு தொண்டாற்றிப் பிறவித்துன்பத்தை நீக்குகின்ற குண மிக்க மாணவர்களாய் அப்பெரியாரது குற்றமற்ற ஏவலைக் குறிக்கொண் டாற்றுவோரும் அண்மி யுவகையுற்றுத் தங்கியிருக்கின்ற காலத்து.

(வி - ம்.) ஒன்றிரண்டென்பதனை யடியினோடும் தலையோடும் கூட்டுக. பல அடியோடுகூடிப் பல தலையினரெனப் பல என்பதனைத் தலையோடும் கூட்டுக. ஒன்றிரண்டென்பதனை மூன்றாக்கி மூன்றுகாலு மொருதலையினையுமுடைய பிருங்கியெனக் கொள்வாரு முளர். கசிவு - அன்பு. பசை - அன்பு. பிழை - துன்பம். (௧௩)

இரவி செங்கதிர னைத்தும் வாங்கியினி தேய்த்து விட்டனைய வேணியும்
பரவு வெண்மதிபொ டித்தெ டுத்தனைய பாவ முற்றுமறு பூதியும்
விரவு முள்ளிருடி ரண்டு ருக்கொடு வெளிக்க தித்தனைய கண்டியும்
வரமி குத்தபதி னெண்பு ராணமும் வயங்கு சூதனு மடுத்தனன்.

(இ - ள்.) சூரியனது சிவந்த கிரணங்களையெல்லாம் வாங்கி இனிதாக இணைத்துவிட்டா லொத்துள்ள சடையும், ஆகாயத்திற் பரவுகின்ற வெண்மையையுடைய சந்திரனைப் பொடி செய்தெடுத்தாலொத்த பாவமுற்றிலும் போக்குகின்ற விபூதியும் (ஆன்மாவோடு அத்துவிதமாகிக்) கலந்த உள்ளிருளாகிய ஆணவந்திரண்டு வடிவங்கொண்டு வெளியிலே விளங்கினாலொத்த உருத்திராக்கக் கண்டிகையும், மேன்மை பொருந்திய பதினெண் புராணங்களும் விளங்கும் சூதமுனிவனும் ஆண்டுப் பொருந்தினன். (௧௪)

(வி-ம்.) எய்த்து - இளைத்து. உள்ளிருள்-ஆணவம்.

கற்பகங் கடவு ளானி தித்துணை ததிர்த்த மாமணி யடுக்கலும்
ஒற்க மிக்கவன்ம கிழ்ந்தெ திர்ந்தென வுயர்ந்த நைமிச வனத்திடை
அத்த மாதவர்கள் யாவ ருந்தலை யடுத்த சூதமுனி வரவுகண்
டுற்ப வப்பய னடுத்து ளாமென வுவந்து வல்லையெதிர் கொண்டனர்.

(இ-ள்.) கற்பக விருக்ஷங்களும், தெய்வத்தன்மை பொருந்திய காமதேனுவும், சங்கநிதியும், பதுமநிதியும், விளங்கிய பெருமை பொருந்திய சிந்தாமணி முதலிய பொருள்களும் அடுக்கத் தரித்திரமிகுந்தவன் உவந்து எதிர்கொண்டாற்போல உயர்ச்சி பொருந்திய நைமிசவனத்தின்கண் தங்குமாதவர்கள் யாவரும், அவ்விடத்துப் பொருந்திய சூதமுனிவர் வருகையை யறிந்து பிறவியெடுத்ததனு லுண்டாகிய பயனை யடைந்துள்ளோமென்று மகிழ்ந்து விரைவாக எதிர்கொண்டனர்.

(வி-ம்.) ஒற்கம் - வறுமை; "இலம்பா டொற்க மாயிரண்டும் வறுமை" எனவருந் தொல்காப்பியச் சூத்திரத்தானறிக. எதிர்ந்தென - எதிர்ந்தாற்போல. நிதித்துணை - சங்கநிதி, பதுமநிதி. தலை-அத்தலை; அவ்விடம். உற்பவம் - பிறப்பு. (கரு)

ஆத னத்திடையி ருத்தி நூன்முறை யருச்சனைத்தொழினி ரப்புபு
வேத மாகமம் விளங்க வோதிய விதிக்கி லக்கியமெ னப்படும்
ஏத நீவுபதி னெண்பு ராணமு மெனைத்து மோர்ந்துபொரு டெள்ளிய
சூத மாதவ வெனப்பு கழ்ந்துவகை துள்ள மெல்லவுரை யாடுவார்.

(இ-ள்.) (எதிர்கொண்ட காலத்து) ஆதனத்தின்கண் ணெழுந்தருளச்செய்து நூல்களிற் கூறிய முறைப்படி அருச்சனைத் தொழிலை முற்றுறச் செய்து வேதாகமங்கள் யாவரும் விளங்கும் வண்ணம் கூறப்பட்ட விதிகளாகிய இலக்கணங்கட்கு இலக்கியமென்று சொல்லப்படுகின்ற துன்பத்தை நீக்கும் பதினெண்புராணங்களையும், ஏனைய நூல்களையு மாராய்ந்து பொருள் தெளிந்தெடுத்த பெரிய தவத்தினையுடைய சூதமா முனிவரே யென்று புகழ்ந்து மகிழ்வு பொங்க மெல்ல விண்ணப்பஞ் செய்யத் தொடங்குவார்கள்.

(வி-ம்.) ஏதம்நீவு - துன்பத்தைத் துடைக்கின்ற. உரை ஆடுவார் - சொல்வார். (கசு)

வாய்ந்த மூவறுபு ராண முன்பிவண் வகுத்து ரைத்தனைய வற்றினுள்
ஏய்ந்து மேதக விளங்கு காந்தம திணங்கு சங்கிதையோ ராறனுள்
ஆய்ந்து சங்கரர் பெயர்ப்பு ணர்த்தவ தனுட்சி றந்திடுபின் கூற்றினிற்
காய்ந்து டற்றுகதிர் வேற்ப டைக்குரிசில் காம ருந்தணிகை மான்மியம்.

(இ-ள்.) பொருந்திய பதினெண் புராணங்களையும், முன்னர் இவ்விடத்து வகுத்துச் சொல்லினை. அப்புராணங்களுள் (பொருணலங்கள்) பொருந்தி மேன்மையுற விளங்குகின்ற காந்தமென்னும் நூலின்கட் பொருந்திய ஆறு சங்கிதையினுள் (பெரியோர்கள்) ஆராய்ச்சி செய்து சங்கரர் பெயரைப் புணர்த்துக் கூறிய சங்கர சங்கிதையிற் சிறப்

புப்பொருந்திய பின்பகுதியில் (பகைவரை) தகித்து வருத்துகின்ற ஒளி பொருந்திய வேற்படையையுடைய முருகப்பெருமானுடைய யாவரும் விரும்பத்தக்க தணிகையம்பதியின் பெருமையை.

(வி - ம்.) காந்தம் ஆறு சங்கிதையுடையது. அவை, சனற்குமார சங்கிதை, சூதசங்கிதை, பிரமசங்கிதை, விட்டுணுசங்கிதை, சங்கரசங்கிதை, சூரசங்கிதையாம். (௧௭)

கன்ன லுங்கனியு மேத குஞ்சுவைய கண்டு மாரமுது மேசறப்
பன்னி யெம்பரிவ றுத்தி முற்றுபரி பாகமின்மையி னயர்த்துளோம்
இன்னு மன்னதனை யாங்க ளுய்ந்திட வெடுத்தியம்பிநுவி யங்கொளா
அன்மை தக்கவர்த காத வர்க்கருளி னறிவ ளித்தருள னீதியே.

(இ - ள்.) கன்னற்பாகும், கனியினிரதமும், மேன்மை பொருந்திய சுவையையுடைய கற்கண்டும், அரிய தேவாமிர்தமும் போல எங்கள் குறை நீங்குமாறு இனிமையாகச் சொல்லி எங்கள் வருத்தத்தை யறுத்தாய். நிறைந்த மலபரிபாகம் இன்மையாலே (தேவரீர் கூறிய பொருளை) மறந்துள்ளோம். (ஆதலால்) இனியு மொருமுறை அத்தணிகை மான்மியத்தினை யாங்களுய்யும் பொருட்டுத் திருவாய் மலர்ந்தருளுவாய். (இங்ஙனம் யாங்கள் விண்ணப்பம் செய்யு) மிந்து (தேவரீரை) ஏவல்கொளும் தன்மையலவாம். (ஞான ஒழுக்கங்களால்) தகுதியுடையார் (அவைகளால்) தகுதியில்லார்க்கு அருளினாலே அறிவினைக் கொடுத்தருளுதல் முறையேயாகும்.

(வி - ம்.) ஏசற - கவலைநீங்க. அறுத்தி - அறுத்தாய். பரிபாகம் - பக்குவம்; பரி: உபசர்க்கம். இயம்பு - இயம்புவாய். வியங்கொளலன்மை - ஏவல்கொள்ளுந் தன்மையலவாகும். (௧௮)

என்று மாதவ ரிரந்து வேண்டலு மிலங்கு சூதமுனி மொழியுமால்
நன்று மாதவ நவிற்றி யாணவ நலிந்து மேதகைமை பூண்டுளீர்
இன்று யர்த்தன மெனக்கி ளந்தமை யெமக்கு மேதகைநி றுத்தலொன்
றன்றி வையக மளித்த லொன்றுள மமைந்தி டாவிழைவொன் றாகுமே.

(இ - ள்.) இங்ஙனம் கூறிப் பெரிய தவத்தையுடைய முனிவர்கள் யாசித்து விரும்ப விளங்குகின்ற சூத முனிவன் சொல்வான். பெரிதுந் தவத்தைச்செய்து ஆணவமலத்தை நீக்கி மேன்மையை யடைந்துள்ள நீங்கள் இப்பொழுதயர்த்தோமெனக் கூறுதல் எனக்கு மேன்மையை நிறுவுதலொன்றும். அல்லாமல் உலகத்தை உய்யக்கோடலொன்றாகும். (அத்தணிகை மான்மியத்தை) உள்ளத்தின் கண்ணமையச் செய்யாத ஒரு விருப்பமாகாது.

(வி - ம்.) நவிற்றி - செய்து. நலிந்து - கெடுத்து. எனக்கும் மேன்மையை நிறுத்தலொன்றும், அல்லது உலகத்தையுய்யக் கோடலொன்றும். இது உள்ளத்தின்கண் ணமைத்திடா விழைவொன்றாகாது. உள்ளத்தினமைக்கும் விழைவேயாம் என்க. (௧௯)

இகன்மி குத்தகொடி முட்கு டம்பையி னிருந்த கோகில மழப்பறழ்
தகுசி றைத்துணை முளைத்த லுஞ்சிறை தணந்து சேணெழியு மாறுபோற்

றெருகுபு டற்சிறை நூந்து விடணுகு சூழ்ச்சி பன்முறையும் வேட்டலின்
உகுபி றப்பினு மதேபி றப்புமை யுயிர்த்து ளார்மக வுயிர்த்துளார்.

(இ - ள்.) மாறுபாட்டைத் தம்மிடத்தே மிகுதியுமுடைய காக்கையினது முன்னர்ச் செய்த கூட்டின்கண்ணிருந்த குயிலின் இளங்குஞ்சுகள், சிறகுகளாகிய இரண்டு இறகுகளும் முளைத்த அளவில் குடம்பையாகிய சிறையினீங்கி, நெடுந்தூரத்தே செல்லுதலைப்போலத் தூலசூக்குமமாகப் பொருந்திய உடலாகிய சிறையினின்று நீங்கி என்றும் ஒருபடித்தாகிய வீட்டினை அணுகுதற்கு ஏதுவாகிய ஆராய்ச்சிகளைப் பலர் பக்கலில் பன்முறையும் விரும்பிக்கேட்டலால் கெடுகின்ற பிறப்பினுள்ளைத்தும் இப்பிறப்பு நம்முடையனவேயாம். நுங்களைப் புதல்வர்களாகப் பெற்றோர்களே புதல்வர்களைப் பெற்றோராவார்கள்.

(வி - ம்.) பின்னுள்ள சிறை, கூடு. பறழ் - குஞ்சு. "பார்ப்பும் பறழும் பறப்பவற் றிளமை" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தாலறிக. சூழ்ச்சி - உபாயம். உகுபிறப்பு - கெடுகின்ற பிறப்பு. பிறப்பின் - ஏழாவதனுருபு. கூட்டிப்பிரித்தற்கண் வந்தது. "குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே - உடம்போ டுயிரிடை நட்பு" என்ற அருமைத் திருக்குறளின் கருத்தும், "சேக்கை தனித்தொழியச் சேணீங்கு புட்போல, யாக்கை தமர்க்கொழிய நீத்து" என்னும் நாலடிச் செய்யுளின் கருத்தும் இச்செய்யுளிலமைந்து மிளிர்தலைக் காண்க. (௨௦)

வினைத்தி ருக்கினை மிளிர்ந்த செவ்விமிடை யுற்றலால் வினைகண் முற்றுதல்
அனைத்து நீத்தருள்கொ ழிக்குநற்குரவ னண்மி வாழ்தணிகை மான்மியம்
நினைத்த லுஞ்சிறிது முற்று றுவென நிகழ்த்தி மேலது விளம்புவான்
முனைத்த வேற்கரனை முன்னி யன்னது மொழிந்து வந்தவழி தேற்றுமால்.

(இ - ள்.) வினையின் மாறுபாட்டைக் கெடுத்து, இருவினையொப்பும், மலபரிபாகமும் பொருந்தும் காலம் உற்றாலல்லாமல், மேல்வந்தடையும் எல்லாவினைகளையும் கெடுத்து அருளைக்கொழிக்கும் நல்ல குரவனாகிய முருகப்பெருமான் அண்மி வாழ்கின்ற தணிகையின் பெருமையினை (வாயினாற் சொல்லுதலன்றி,) மனத்தால் நினைத்தலும் முற்றுப்பெறாதெனத் திருவாய்மலர்ந்தருளி, மேலும் அதனைச் சொல்லும் பொருட்டுக் கூர்மைபொருந்திய வேலைத் திருக்கரத்திலுடைய முருகப்பெருமானை நினைத்து அத்தணிகையின் பெருமையை மொழிந்து நூல் வந்த வழியைத் தேற்றுவான்.

(வி - ம்.) மிளிர்ந்த - கெடுத்த. உற்று அலால்-உற்றாலல்லாமல், நீத்துக்கொழிக்கும் குரவன் என்க. பின்வினை - ஆகாமியத்தின்மேற்று. முற்றுதல் - அடைதல். நினைத்தலும் முற்றுறு என்றதனால் சொல்லுதலும் இயலாதென்பது, தானே போதரும் என்க. அது மொழிந்து வந்தவழி - அதனை ஒருவர் மற்றொருவர்க்குச் சொல்லிவந்த வழியை. தேற்றும் - தெளிவிப்பான். ஆல் - அசை. முற்றுறு என்பதின் இறுதி தொக்கது. இனி முற்றுறுதெனவும் பாடமுண்டு. (௨௧)

நைமிசப்படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் ௬௨௮

# புராண வரலாற்றுப் படலம்

உலகம் யாங்கணு மிழியிரு குணமிக வுதுதேர்ந்
தலகில் சீர்முதற் குணமடர்த் தோங்குவா னிறையை
இலகு பேருரு வாய்த்தரித் திருப்பதோத் துளதால்
விலகி வாளுமிழ் வெள்ளியம் பொருப்பெனுங் கயிலை.

(இ - ள்.) *இடைவிட்டு ஒளி விடுகின்ற வெள்ளிமலையெனும் கயிலை உலகத்தெவ்விடத்தும் இழிவாகிய இராசதம் தாமதமென்னும் இரண்டு குணங்கள் மிகாநிற்ப மிகுகின்ற அதனையறிந்து அளவிட முடியாத சிறப்பினையுடைய முதற்குணமாகிய சத்துவகுணம் (அவ்விரு குணத்தையும் கீழ்ப்படுத்தி உயரும் பொருட்டுச் சிவபெருமானை விளங்குகின்ற பெரிய வடிவினை யுடையதாகித் தாங்குவதை யொத்துளது.*

(வி - ம்.) *இருகுணம் - இராசதம், தாமதம். உது - மிகுகின்ற அதனை. அடர்த்து-அவ்விரு குணத்தையும் கீழ்ப்படுத்தி. வான் : வினையெச்ச விகுதி.* (௧)

எண்ணி றந்தபல் வரைகளு மெறுழ்வளி மிளிர்ப்ப
மண்ணும் விண்ணுமு மறிகட லடர்க்குமவ் வேலை
அண்ண லாணையி னிவந்தண்ட முகட்டெல்லை காறும்
நண்ணி நிற்பது நகுகதிர் பரப்புமச் சயிலம்.

(இ - ள்.) *அளவிட முடியாத பல மலைகளையும் வலியோடு கூடிய காற்றானது (பெயர்த்துக்) கெடுப்ப மண்ணுலகத்தையும் விண்ணுலகத்தையும் அலையை மடக்கி வீசுகின்ற கடலானது கெடுக்கின்ற காலத்துச் சிவபெருமான் கட்டளையால் எழுந்து அண்டமுகட்டினெல்லையளவும் பொருந்தியிருப்பதாகும். விளங்குகின்ற ஒளிவிடுகின்ற அக்கயிலைமலை.*

(வி - ம்.) *எல்லாவுலகங்களும், மலைகளும் அழிகின்ற ஊழிக் காலத்தில் கைலைமலை வளர்ச்சியுறுமென்பதனை விளக்கிய "ஆணையினிவந்து அண்டமுகட்டெல்லைகாறு நண்ணி நிற்பது" என்றார் இதனை "ஊழிதோ றோங்குமவ் வோங்கல்" என்னும் பரஞ்சோதியார் திருவிளையாடலானுணர்க.* (௨)

புரம்பொ டிப்பவா னவர்பிரான் பொலங்கிரி வாங்கிச்
சுரம்பி டித்தஞான் றுலகெலாங் கவிழ்தராக் காட்சி
வரம்ப டைத்தபொன் வரையுமற் றேனைய வரையும்
உரம்ப டைத்ததா னூன்றியே நிற்றலிற் போலும்.

(இ - ள்.) *திரிபுரத்தைச் சுடும்பொருட்டுத் தேவர்கள் தலைவனாகிய மகாதேவன் மேருமலையை வளைத்துத் திருக்கரத்தின்கட் கொண்ட காலத்து எல்லாவுலகங்களும் கவிழாத தோற்றமானது மேன்மை பொருந்திய மேருமலையையும், ஏனைய மலையினையும் வலிமைபொருந்திய (வெள்ளிமலையாகிய) தான் ஊன்றி நிற்றலினாற் போலும்.*

(வி - ம்.) வாங்கி - வளைத்து "வாங்கலே வளைத்தல் கொள்ளல்" என்னும் நிகண்டானறிக. காட்சி - தோற்றம், எழுவாய். உரன்-வலி. தான் - சுண்டு வெள்ளிமலை. (௫)

பொன்வ ரைக்குல மணிவரைக் குலம்புவி யிருப்பத்
தன்வ ரைப்பக லாதிறை தவிர்வரம் படைந்த
மின்வ ரைச்சுடர் விக்கந்தன் போன்மறு வீழ்த்தோர்
நன்வ ரைப்பலா திறைநய வாமையை நவிற்றும்.

(இ - ள்.) பொன்மயமாகிய மலையினங்களும், இரத்தின மலையினங்களும் இப்பூமியினிடத்திருப்பத் தன்னிடத்தினின்றும் நீங்காது இறைவன் தங்கும் மேன்மையைப் பொருந்திய ஒளியோடு கைலைமலையின் சுடரின் பெருக்கமானது தன்னைப்போல ஆணவமாகிய குற்றத்தை நீக்கினோரிடத்தையல்லாமல் வேறிடத்தை இறைவன் விரும்பாமையைக் காட்டும்.

(வி - ம்.) தன்னென்றது - சுண்டு வெள்ளிமலையை. தவிர்தல் - தங்குதல். வீக்கம் - பெருக்கம். மறு - குற்றம். வீழ்த்தோர் - ஆணவம் நீக்கிய பெரியோர். தன்வரைப்பு-அவரிடம். நவிற்றும்-காட்டும்.

வயக்க மாண்டவெள் ளருவிகள் வயின்வயின் வீழ்தல்
துயக்க மாணவன் றரக்கனைச் சுடர்விர லுதியால்
இயக்க மாற்றலு மிருந்தவச் சிலம்பெழு பாக்குத்
தயக்க மாண்டதன் கரங்களை யூன்றுத றகையும்.

(இ - ள்.) விளக்கம் பொருந்திய வெள்ளிய அருவியின் கூட்டங்கள் இடமிடங்கடோறும் வீழ்தல், வருத்தமிக (கைலைமலையினை எடுத்த) அக்காலத்து இராவணனை ஒளி பொருந்திய பெருவிரனுதியினால் இயங்குதலை யொழித்தவளவில் தங்கிய அம்மலையான தெழும்பொருட்டு விளக்கம் பொருந்திய தன் கரங்களை யூன்றலை யொக்கும்.

(வி - ம்.) வயக்கம் - விளக்கம். துயக்கம்-வருத்தம். மாண-மிக. இயக்கம் மாற்றலும்-செல்லுதலை யொழித்தவளவில். தகையும்-ஒக்கும்.

பிரம னேமுதன் மாயனே முதலெனப் பிணங்கும்
விரகி லார்க்கெலாம் விடமிடற் றிறைவனே முதலென்
றுரனை யேய்ப்பவர் போன்றுளா ருவணமேக் குயர்த்தோர்
பரவு வேதர்க ளாவயிற் பற்பலர் பயில்வார்.

(இ - ள்.) பிரமனே முதற் கடவுளென்றும், மாயனே முதற்கடவுளென்றும் கூறி மாறுபடுகின்ற அறிவினுட்பமில்லோர் யாவர்க்கும் கருடக்கொடியினை யுயர்த்திக் கட்டியோரும் பரவுகின்ற வேதத்தினை யுடையோருமாகிய விண்டு பிரமர்கள் நீலகண்டத்தையுடைய சிவபெருமானே முழுமுதற் கடவுள் (செத்துப் பிறக்கின்ற) யாங்கள் முழுமுதற் கடவுளல்லேம் எனக் கூறி உண்மை ஞானத்தினை அறிவுறுத்துபவரைப்போல அக்கைலையினிடத்துப் பலப்பல பிரம விட்டுணுக்கள் திரிவார்.

(வி - ம்.) விரகு - அறிவினுட்பம். உரன் - ஞானம். ஏப்பவர் - ஈண்டறிவுறுத்துபவர். (௬)

அண்டம் யாவையு மரைக்கணத் தளவையி னவித்துப்
பண்டு போலவை யுயிரொடும் படைத்தினி தளிக்க
வண்டு மாற்றல்பெற் றுள்ளபூ தங்கண்மா மலநோய்
விண்ட சாரதத் தலைவரும் விளம்பிலெண் ணிலரால்.

(இ - ள்.) எல்லா வுலகங்களையும் அரைக்கணப் பொழுதினிற் கெடுத்து முன்னர்ப் போலவே யவ்வுலகங்களை ஆன்மாக்களொடும் ஆக்கி யினிதாகக் காக்கும் வல்லமையைப் பெற்றுள்ள பூதக்கூட்டங்களையும், பெரிய ஆணவமலமாகிய நோயை (இறைவன் திருவருளால்) நீங்கிய பூதகணத் தலைவர்களையும் சொல்லப்புகின் அளவிலராவர்.

(வி - ம்.) அவித்து - கெடுத்து. சாரதம் - பூதம். (௭)

நலக்கு மாகம மறையெலா நவின்றுமெய் யுணர்ந்து
மலக்கு றும்பினைத் துமித்தின்ப வாரியிற் படியும்
அலக்க ணற்றவர் தமக்குமெய்ப் பணியலா தின்மை
துலக்கி நந்தியெம் பிரானமர் காவலுந் துதையும்.

(இ - ள்.) (ஓதினார்க்கு) நன்மையைத் தருகின்ற ஆகமங்களும், வேதங்களுமாகிய எல்லா நூலினையும் பயின்று மெய்ப்பொருளாகிய இறை நிலைமையினை யுணர்ந்து ஆணவமலமாகிய குறும்பினைக் கெடுத்து இன்பக் கடலின் மூழ்குந் துன்பமற்றவராகிய பெரியார்க்கெல்லாம் (இறைபணியாகிய) உண்மைப் பணியையன்றி வேறு பணியில்லாமையை விளக்கி நந்தியெம்பெருமான் விரும்பும் காவலோடும் பொருந்தும் அம் மலை.

(வி - ம்.) நலக்கும் - நன்மையைத் தருகின்ற. மெய் - சிவம். துமித்தல் - கெடுத்தல். அலக்கண் - துன்பம். மெய்ப்பணி - இறைபணி. துதையும் - நெருங்கும். (௮)

மதியொ ராயிரம் வகிர்ந்திரு பாங்கிலும் வயக்கிவைத் தெனத்தோற்றும்
துதியி ராயிர மணிச்செழு மருப்பினு நொறிலுளை யெழுமான்றேர்க்
கதிரி ராயிரங் கோத்தன கிம்புரிக் களிறுவாக் கியதானம்
நதியு ராய்த்தவழ்ந் தசும்புதோ யிசும்பிவர் நடையரி முடமாமால்.

(இ - ள்.) ஓராயிரம் சந்திரர்களைப் பிளந்து இருபக்கத்திலும் விளக்கமுறும்படி வைத்ததென்று சொல்லும்படி தோன்றுகின்ற கூர்மையோடு கூடிய முத்துக்களையுடைய செழித்த இரண்டாயிரம் கொம்புகளினும் வேகத்தோடு செல்கின்ற தலையாட்டமெழுந்த குதிரைகள் பூட்டிய தேரினையுடைய இரண்டாயிரஞ் சூரியர்களைக் கோத்தாலொத்த பூணினை யணிந்த அயிராவணமென்னும் யானைகொட்டிய மதநீராகிய நதியானது பெயர்ந்து செல்லுதலால் துளித்தல் பொருந்துகின்ற வழுக்குநிலத்துச் செல்லுகின்ற நடத்தலையுடைய சிங்கங்கள் (வழுக்கி வீழ்தலால்) முடத்தன்மையை யடையும்.

(வி - ம்.) வயக்கம் - விளக்கம். நொறில் - வேகம். கிம்புரி - தந்தப்பூண். உராய் - பெயர்ந்து. அசும்பு - துளி. இசும்பு - வழுக்கு நிலம். கடையல் - சிங்கம். (௯)

வழுக்கி யஞ்சிறைத் தும்பிக ளவசமாய் மலர்ந்தலை விழவிமற்
றொழுக்கி நற்பொழின் மதுப்புனற் றரைக ளுடன்விராய்த் தவழ்ந்தேகிச்
செழுக்கு தம்பைநான் றெருத்தலைத் தரவரு திருப்பதி தனைக்காமம்
முழுக்க வென்றவன் புணர்ந்தெழு கண்டகை முதுநதி வளங்காட்டும்.

(இ - ள்.) அழகிய அகஞ்சிறையினையுடைய வண்டுகள் (கள்ளுண்டு) வழுக்குதலடைந்து பரவசமெய்தி மலர்களிடத்தே வீழாநிற்க, அம்மலர்கள் பெரிய சோலைகளொழுக்குகின்ற தேனாகிய நீர்த்தாரைகளுடன் கலந்து ஊர்ந்துசென்று, செழித்த குதம்பையென்றும் காதணி தொங்குதலுற்றுப் பிடரை வருத்தும்வண்ணம் வருகின்ற இலக்குமியின் கணவனாகிய திருமாலாகிய மோகினியைக் காமங்களனைத்தினையு மியல்பாக வென்றவனாகிய சிவபெருமான் கூடியெழுகின்ற கண்டகை யென்னும் பழைய நதியின் வளத்தைக் காட்டும்.

(வி - ம்.) தாரைகள் அம்மலரோடும் விராய்ச் சென்றென்க. மதுவைச் சிவந்த நீராகவும், வண்டை யந்நதியின் மிதந்து வருகின்ற சாளக்கிராமமாகவும் கொள்க. இதனுற்பத்தியினைக் கந்தபுராணம் சாளக்கிராமப் படலத்தானுணர்க. திருப்பதி - இலக்குமிநாயகன்; விண்டு. வண்டைமோகினிக்கும் பூவினை இறைவனுக்கும் உவமையாகக் கொள்வாருமுளர். (௧௦)

வளியு ளர்த்தலுஞ் சந்தனங் கிளைகளை மணமலி யிணர்ப்பூந்தேந்
துளியு கக்கருப் பூரமம் மரத்தொகை தரவிராய் நனிதேய்த்த
தெளிகோ டேய்வையுன் முழுகிய குவடுக டேவிவெம் முலைமான
வெளிறு துன்றுதந் நிறமருந் தவத்தினுல் விளித்தொளிர் வனபோன்ற.

(இ - ள்.) காற்று வீசாநிற்க (அம்மலையின்கண்ணுள்ள) சந்தன மரங்கள் கிளைகளால் வாசனைமிகுந்த கொத்துக்களிலுள்ள மலர்கள் தேன்றுளியைக் கொட்டக்கருப்பூர வாசத்தினை (ஆண்டுள்ள) கருப்பூர மரக் கூட்டங்கள் தராநிற்க (இவைகளைக்) கலந்து மிகவும் தேய்க்கப் பெற்ற தெளிவு பொருந்திய (இங்ஙனமரைபட்ட) சந்தனத்தில் மூழ்கிய (அம்மலையின்) சிகரங்கள் உமையம்மையாரது விருப்பத்தைத் தரத்தக்க தனத்தினை யொக்கும்வண்ணம் வெண்மை பொருந்திய தன் வடிவத்தினை (ஆண்டுச்செய்த) அரிய தவத்தினுற் கெடுத்து விளங்குவன போன்றன.

(வி - ம்.) உளர்தல் - அசைதல். துளி - துளி. சந்தனம் - சந்தனமரங்கள். தேய்த்த - (கிளைகளாற்) றேய்த்த. தேய்வை - சந்தனம். தேய்த்த தேய்வை யென்க. குவடு - எழுவாய். வெளிறு - வெண்மை. விளித்து - கெடுத்து. (௧௧)

கற்றை வெங்கதி ருடற்றிய விருட்டுணி கதிரவன் மனையாமென்
றுற்று டற்றுவ தேனக்கனி வண்டின முழக்குபு மதுமாந்தும்.

பொற்ற வம்புய மலர்ந்தனத் தொழுதியிற் பொலிந்துநற் சுனையாவும்
அற்ற மெய்யினர்க் கற்றவன் றிருவரு ளாமெனக் குளிர்தூங்கும்.

(இ - ள்.) கூட்டமாகிய சுடுகின்ற கிரணங்களையுடைய சூரியனால் வருந்தப்பெற்ற இருட்டுண்டங்கள் (தம்மை வருத்திய) சூரியனது (இம் மலர்கள்) இல்லையாமென்று பொருந்தி (அவைகளை) வருந்துவதென்று சொல்லும்வண்ணம் (தேனையுண்டு) களிக்கின்ற வண்டின் கூட்டங்கள் மிதித்துழக்கி (மீண்டும்) தேனையுண்ணும் பொன்மயமாகிய தாமரைகள் மலரப்பெற்று அன்னக் கூட்டங்களாற் பொலிவுபெற்று அம் மலையின்கண்ணுள்ள சுனைகளெல்லாம் (தன்னை வழிபட்டு) அகப் பற்று புறப்பற்றாகிய இருவகைப் பற்றினையும் நீங்கிய உண்மையறிவையுடையார்க்கு (இயல்பாகவே எல்லாப்பற்றையும்) விட்டவனாகிய சிவபெருமான் திருவருளடைந்து குளிர்வித்தல் போலக் குளிர்ச்சி தாங்கும்.

(வி - ம்.) உழக்குபு - கலக்கி. யாவும் - எல்லாம். அற்ற - இருவகைப் பற்றுமற்ற. அற்றவன் - இயல்பாகவே பாசங்களினின்றும் நீங்கியவன். அற்றமெய்யினர்க் கற்றவன் என்பதற்குப் பற்றற்ற உண்மையுடையோர்க்கு முடிவு பட்டவனெனப் பொருள் கூறுவாருமுளர். தூங்கும் - தங்கும். (கஉ)

கொடைமை நல்குவ கற்பகப் பொழிற்கவட் குளிர்மரப் பொதும்பெல்லாம்
மிடைவி லங்கினந் தேனுவுக் கினமணி மிளிர்சிந்தா மணிக்கந்தேன்
மடையு டைந்தெழு மலர்க்குலந் தவழ்வன மலர்வளை நிதிக்கேய்ப
உடைதி ரைப்புனற் றீர்த்தங்க டிருத்தங்கட் குதவுவ மலந்தீர்த்தல்.

(இ - ள்.) அக் கைலாயத்தின்கண்ணுள்ள குளிர்ச்சி பொருந்திய மரங்களையுடைய சோலைகளெல்லாம் கற்பகச் சோலைக்குக் (பிறர்க்குக் கைம்மாறு கருதாது) கொடுக்குந் தன்மையைப் பழக்கஞ்செய்து கொடுப்பனவாம். (ஆண்டு) நெருங்கிய பசுக்கூட்டங்கள் (தேவலோகத்தின்கண்ணுள்ள) காமதேனுவுக்கும், ஆண்டுள்ள மணியினம் சிந்தாமணியினுக்கும், தேனானது மடையினையுடைந்தெழுவதற் கேதுவாகிய மலர்களும், தவழ்கின்ற சங்கினங்களும், பதுமநிதிக்கும், சங்கநிதிக்கும் கொடுக்கும் தன்மையைக் கற்பிப்பனவாகும் என்று சொல்வார்கள். கரையை மோதுகின்ற அலையோடுகூடிய தீர்த்தங்கள் (மூழ்கிய ஆன்மாக்களின்) ஆணவமலத்தைப் போக்கும் தன்மையை உலகிலுள்ள ஏனைய தீர்த்தங்கட்குக் கற்பிப்பனவாகும்.

(வி - ம்.) மலர்நிதி, வளைநிதி யெனக் கூட்டுக. திருத்தம் - தீர்த்தம். (கங)

வளங்க ளெண்ணில துவன்றிய வத்தகு மாநர்வெள் கயிலாயந்
திளங்க திர்ச்செழும் பரிதிகள் பற்பல வெறுழ்கொளத் திரண்டாங்கு
விளங்கொ ளிச்சுடர்த் தூணங்க ளாயிரம் விறந்துபன் மணிமாலை
துளங்கு மின்னென நான்றசைந் திருங்கவின் றுளும்புமண் டபநாப்பண்.

(இ - ள்.) மேற்கூறிப் போந்த வளப்பங்கள் அளவில்லனவாகி நெருங்கிய அத்தகுதி பொருந்திய கண்டார்க்குக் காதலைத் தரத்தக்க

கைகளையுடைய இளங்கதிரோடுகூடிய பற்பல சூரியர்கள் வலிகொள்ளத் திரண்டாற்போல மிக்க ஒளியோடுகூடிய ஆயிரந் தூண்கள் நெருங்கப் பெற்று இரத்தினமாலைகள் அசைகின்ற மின்னலென்று சொல்லும்படி தூங்கி அசைதலுற்று மிக்க அழகுபொருந்திய மண்டபத்தின் நடுவே.

(வி - ம்.) மாதர் - காதல் : "மாதர்காதல்" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தானுணர்க. எறுழ் - வலி. "இந்திரே புரிசையிஞ்சி யெறுழெனப் வலிதண்டாமே" என்னும் நிகண்டா னறிக. விறந்து - நெருங்கி. தூலல் - தொங்குதல். (கஎ)

ஒளிபி ழம்பிய வாரமுர் போர்வையு முத்தரி யமுமான
களிபி ழம்புதர் மினமெனத் தாங்கலுங் கதிபெறக் குறிக்கொண்டாங்
களிபி ழம்பிய பாததா மரைநிழ லகத்தொடு புறம்போர்ப்பத்
தெளிபி ழம்பிரு நாகமு மடங்கலுஞ் செறிந்துதாங் கணைமேலால்.

(இ - ள்.) ஒளி திரட்சியுற்ற மாலையும், மீக்கோளும், மேலாடையுமாகிய களிப்புத் திரண்ட தங்க ளினமாகிய பாம்பு, யானை, சிங்கமாகிய விலைகளைப்போலத் தாங்கலும் முத்தியடையக் குறிக்கொண்டு அவ்விடத்து அருள்திரண்ட பாதமாகிய தாமரையின் நீழல் (தியானித்தலால்) உள்ளத்தினும் (தாங்குதலாற்) புறத்தினும் போர்ப்பத் தெளிவு விளங்கிய பாம்பும், யானையும் சிங்கமும் நெருங்கித் தாங்கிய அணையின் மேல்.

(வி - ம்.) பிழம்பு மூன்றையும் திரண்டவெனப் பொருள்கொள்க. இருநாகம் - பாம்பு, யானை. (கஅ)

இருந்த வம்பல வுழந்துதன் மாசினை யிகந்துபே ரொளிகூர்ந்து
திருந்து வெண்மதி விசும்பெழ வார்சடைச் சிவணிய வொருநாகம்
அருந்தின் மற்றிது பெருஞ்சுவைத் தாமென வாவிவெள வுபுமீண்டு
பொருந்தி னுலென வயங்குகாம் புயர்குடைப் பொழிகதிர் நிழல்பம்ப.

(இ - ள்.) பெருமையாகிய தவங்களை வருந்திச் செய்து தன் களங்கம் நீங்கப்பெற்றுப் பேரொளிமிகுந்து திருந்திய வெள்ளிய சந்திரன் ஆகாயத்தின்கண்ணே யெழாநிற்க நீண்ட சடையின்கண்ணே பொருந்திய ஒப்பற்ற ஒரு பாம்பானது அமிர்தினைப் பார்க்கினும் இது பெருஞ் சுவையினை யுடைய தாகுமென்று தாவி வாயாற்கவ்வி மீண்டும் அச்சடை காட்டிற் பொருந்தினாற்போல விளங்குகின்ற காம்புயர்ந்த குடையானது சொரிகின்ற கிரணங்கள் நிழல்விரிய.

(வி - ம்,) உழந்து - செய்து. வாவி - தாவி. வெளவுபு - கௌவி' மீண்டு பொருந்தினுலென - சடையின் மீண்டு பொலிந்தாற்போல பம்ப - விரிய. (க௯)

நாமி கப்புறு வைைப்பரித் துழலுமா ளைந்துயிர் தனைமன்ற
தாமி கப்புறு தன்மைநா யகன்றிருச் சந்நிதிக் குரித்தான
ஆமி தைக்குறித் தேமகிழ்ந் தெழுந்தெழுந் தாட்டயர் வனபோலக்
காமர் முற்றிழைக் கன்னிய ரிரட்டிய கவரிக ணனிதுள்ள.

(இ - ள்.) நாம் நீங்கின் நம்மைத் தாங்கிச் சுழலுகின்ற மானினங்கள் வருந்தி உயிரை நிச்சயமாகத் தாங்கள் நீக்கும் தன்மையானது எவ்வுலகங்கட்கும் நாயகரான சிவபெருமான் அழகிய சந்நிதிக்குரித்தான வாகுமிதனைக் கருதியென்று மகிழ்ச்சியுற் றொழுந்தொழுந்து விளையாட்டைச் செய்வனபோலக் கண்டார்க்கு விருப்பம் வரத்தக்க தொழின் முற்றிய அணிகலன்களை யணிந்த இளம்பெண்கள் அசைத்த கவரிகள் மிகத் துள்ளாநிற்க.

(வி - ம்.) நாமென்றது ஈண்டுக் கவரிமயிர். "மயிர் நீப்பின் வாழாக்கவரி மாவன்னார் - உயிர்நீப்பர் மானம் வரின்" என்னும் பொது மறையின் கருத்தமைந்திருத்தலை யுணர்க. ஆமிது - ஆகின்றவிதனை. காமர் - விருப்பம். ஆட்டு - விளையாட்டு. (கஎ)

கற்றை வார்சடை செஞ்செவி மணியுரங் கரங்கடி தடம்பூந்தாள்
முற்ற ராவணி முழுவதுந் தழைத்தொளி முதிர்ந்தெழில் வளம்பொங்கும்
பெற்றி சூழ்ந்தது முயன்றுளார் போன்மெனப் பிடிநடை மடமாதர்
பற்றி வீசுசாந் தாற்றிகள் வளியெழீஇப் பாங்கெலாங் குளிர்தூர்ப்ப.

(இ - ள்.) கூட்டமாகிய நீண்ட சடை, செவ்விய காது, அழகிய மார்பு, கை, அரை, அழகிய பாதம் ஆமிவைகளை யடைந்து அரவமாகிய ஆபரணங்களெல்லாம் செழித்து ஒளிமுதிர்ச்சியுற்று அழகின் வளம் பொங்கும் தன்மையை யாராய்ந்து அவ்வளம் பொங்குதலை முயன்று தாங்களுமடைந்து விளங்குகின்றனரென்று கண்டோர் சொல்லும் வண்ணம் பெண்யானையின் நடையை யன்ன நடையினையுடைய அழகிய பெண்கள் பிடித்து வீசிய விசிறிகளினின்று போந்த காற்றானது எழுந்து பக்கமெல்லாம் குளிர்ச்சியை நிறைக்க.

(வி - ம்.) கடிதடம் - அரை. முற்று - அடைந்து. முயன்றுளார்போன்ம் - முயற்சிசெய்து மேன்மை யடைந்துள்ளார் போலும்.

சாந்தாற்றி - விசிறி. "சாந்தாற்றி பேர்முரணித் தாமரைபூத் தன்னவெயர் - போந்தாற்றி ஞாங்கர்ப் பொலிவெய்த" என்னும் திருவெங்கையுலாவா னறிக. தூர்ப்ப - நிறைப்ப.

அந் நாகங்கள் இறைவனையண்மி வளம் பெற்றாற்போல இப்பெண்களும் இறைவனையண்மி வளம்பெற்றனரென்று கண்டோர் சொல்லுதற் கேதுவான வனப்பு வாய்ந்த பெண்களென்பார் "பெற்றிசூழ்ந்ததுமுயன்றுளார் போன்மெனப் பிடிநடைமடமாதர்" என்றார். (கஅ)

குழலும் வீணையுந் தோற்பொலி முழவமுங் குரைகட லமிழ்தன்ன
மழலை கூர்மொழிப் பாடலு மயங்கவந் நாடலை மதித்தாங்கண்
அழலம் போருகக் கரமுகிழ்த் தஞ்சலி யளித்தவ ரவ்வாறே
விழவு கூர்திரு வனப்பட வுள்ளகம் விளிந் தனர் தலைநிற்ப.

(இ - ள்.) புல்லாங்குழலும் வீணையும் தோலினும் பொலிவுற்ற மத்தளமும் ஒலிக்கின்ற திருப்பாற் கடலிலுளதாகிய அமுதத்தையொத்த மழலைமிகுந்த மொழிப்பாட்டுங் கலந்து நிருத்தஞ் செய்தலைக் கருதி அவ்விடத்துச் செந்நிறம் பொருந்திய செந்தாமரை மலர்போன்ற

கரங்களைக் குவித்து வணக்கஞ் செய்தவர் அவ்வணக்கம் செய்த வண்ணமே சிறப்புமிகுந்த அழகானது தம்மை வருத்த மனநிலை வேறுபட்டவர்களாகி அவ்விடத்தே நிற்க.

(வி – ம்.) தோற் பொலிமுழவம் – தோலாற் பொலிந்த மத்தளம். கூர் – மிகுந்த. மயங்க – கலக்க. அழல் – செந்நிறம், அவ்வாறே – அஞ்சலி செய்தவண்ணமே. விழவு – சிறப்பு. திருவனப்பு – மிக்க அழகு. உள்ளகம் – சண்டு மனம். விளிதல் – நிலைகெடல். தலை – அவ்விடம். (கக)

மாய ஞதிவின் ணவரெலாந் திருவுரு வனப்பினை யெதிர்நோக்கிச்
சாயன் மாதரார் பெண்ணைவா யவ்வுருச் சத்தியிற் றழீஇக்கோடல்
மேய காலையின் மோகமிக் கெழுதலும் வினைமறந் தடிபோற்றும்
தூய வானர மகளிர்போற் கையறு தொழின்மையி னனிநீட.

(இ – ள்.) விண்டு முதலாகிய தேவர்களெல்லாம் (இறைவன்) திருவுருவின் அழகினை யெதிரே கண்டு மென்மைத் தன்மையையுடைய பெண்களிடத்துள்ள பெண்டன்மையை விரும்பி அப்பெண் வடிவைத் தங்கள் சத்தியினாலே தழுவிக் கொள்ளுதலைப் பொருந்திய காலத்தில் ஆசைமிக் கெழுதலினால் (தாங்கள் வந்த) தொழிலை மறந்து திருவடியை வணங்கும் பரிசுத்தம் பொருந்திய தெய்வமகளிரைப் போலச் செயலற்ற தொழிலின்றன்மையிலே மிக நீட்டிக்க.

(வி – ம்.) சாயல்-மென்மை. மாதரார் பெண்டன்மையை விரும்பி யென்க. அவ்வுரு – அப் பெண்வடிவு. தமது சத்தியில் – தங்கள் வல்லமையினாலே. தழீஇக்கோடல் – தழுவிக் கொள்ளுதலை. வினை மறந்து – தாங்கள் கருதிவந்த தொழிலை மறந்து. அடி – இறைவனடி "மோகமிக் கெழுதலும் வினைமறந்தடி போற்றும் – தூய வானர மகளிர்" என்றது மேற்செய்யுளிற் கூறினரை யென்க. (உ0)

கோண்மை மென்முலைக் கொடியிடைக் கிடமருள் குழகனை தடிநாடும்
செம்மை நெஞ்சினர்க் குறுவழி யண்மைய செவ்விய வெளிதுய்ப்பத்
தம்மை யல்லதில் லாமையைச் சாற்றுத றகையவா கமமெல்லாம்
விம்மி ருங்கதி ருருவுகொண் டண்மையின் விராயமர்ந் தினிதேத்த.

(இ – ள்.) வட்டமாகிய விருப்பினைத் தருகின்ற மென்மையாகிய தனங்களையுடைய கொடிபோன்ற இடையோடு கூடிய உமையம்மையாருக்கிடப்பாகத்தையருளிய இறைவன் திருவடியை ஆராய்கின்ற செம்மையான மனநிலையையுடைய அடியார்களுக்குச் செவ்வையுடையனவும், அண்மையவுமாகிய பொருந்துதற்குரிய நன்மார்க்கத்திற் செலுத்த (ஆகமமாகிய) தங்களை யல்லது வேறு நூலின்றன்மையைச் சாற்றுதலை யொப்ப ஆகமங்களெல்லாம் ஒளி மிகுந்த ஒளியுருவம் கொண்டு அண்மைக்கட் பொருந்தியிருந்தினிதாக வேத்தாநிற்க.

(வி – ம்.) கோண்மை - வட்டம். அண்மையவும் செவ்வியனவுமாகிய வழியிலுய்க்கத் தம்மையல்ல தில்லாமையைச் சாற்றுதலை யொப்ப என்க. நெஞ்சினர்க்கு இல்லாமை என இயைக்க. ஆகமங்களெல்லாம் ஒளி வடிவாகு மென்பர். (உக)

போத விழ்ந்துதே னுறைக்குமென் மலர்த்தொடை பொங்கிய விரைச்சாந்தம்
மாதர் வில்லுகு மிழைகளுஞ் சிந்திமெய் வளந்தப வுளமெல்லாங்
கோத னுங்கிமெய் யருள்வள மிகவிண்ணோர் குழுக்களைத் தவவோச்சித்
தீத னுங்கிய நந்தியங் குருபரன் றிருமுன்பு பணிசெய்ய.

(இ - ள்.) பேரரும்பு விரிந்து தேனைத்துளிக்கும் மெல்லிய மலர் மாலையும், மிகுந்த வாசனையுடன் கூடிய சந்தனமும், அழகிய ஒளியை வெளியிடுகின்ற குண்டலங்களையும் சிந்தி யுடலங்கெட உள்ளிடமெல்லாம் குற்றம் நீங்கி உண்மையாகிய அருளோடு கூடிய ஞானவளம் மிகாநிற்கத் தேவர் கூட்டங்களை மிக நீக்கிக் குற்றம் நீங்கிய அழகிய நந்தி யெம்பெருமானாகிய குருராயர் சந்நிதியின் கண்ணே திருத் தொண்டு செய்யாநிற்க.

(வி - ம்.) உறைக்கும் - துளிக்கும். மாதர் - அழகு. அனுங்கி - கெட்டு. தவ - மிக. ஓச்சி - ஓட்டி. திருமுன்பு-சந்நிதி. (உஉ)

பரந்து நின்றொளிர் பராபரை யாதியாப் பன்னுமைம் பெயர்பூண்டு
நிரந்த வைந்தொழி றன்னொடும் பிரிவின்றி நிகழ்த்துசத் தியையன்றி
உரந்த ழைத்திடா வுண்மையி னுடன்றொழு துயிரெலாங் களிதூங்க
வரந்த ழைத்தவ னுமையொடும் பேரருள் வழங்கிவீற் றிருந்தானால்.

(இ - ள்.) பரவி நின்று ஒளிர்கின்ற பராபரை முதலாகச் சொல்லப்படுமைம் பெயர்களைப் பெற்று (உலகத்துக்) கலந்த ஆக்கல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருள லென்னு மைந்தொழிலினையும் சிவமாகிய தன்னோடும் நீக்கமின்றி இயற்றுகின்ற சத்தியை யல்லாமல் (ஆன்மாக்கட்கு) அறிவுதியாத உண்மையினால் (அம்மையப்பரை) ஒருசேர வணங்கி ஆன்மாக்களெல்லாம் மகிழ்ச்சியிலே தங்கும் வண்ணம் மேன்மை பொருந்திய இறைவன் உமையம்மையாரோடு பெரிய அருளை வழங்கி வேறொருவர்க்கில்லாத சிறப்புடனெழுந்தருளியிருந்தனன்.

(வி - ம்.) தன் என்றது இறைவனை. நிகழ்த்தல் - செய்தல். உரம் - அறிவு. " உரனென்னும் தோட்டியான் " என்னுமிடத்து இப்பொருட்டாதலை யறிக. தழைத்தல் - தோன்றல். உண்மையின் - இன் என்பது ஐந்தாவது ஏதுப்பொருள். தூங்கல் - தங்கல். வரம் - மேன்மை. (உ௩)

வண்டு ழாய்த்தொடை மார்பனும் பிரமனும் வானவர் முதற்கோவும்
மிண்டு மொன்பதிற் றிருவரும் பதினொரு மூவரும் வேறாய
தொண்டர் யாவருந் தொழுதுதங் குறைவினுய்த் துறுத்தமே வரப்பெற்றுக்
கொண்ட வோகையி னவரவ ருறைபதி குறுகின ரதுகாலை.

(இ - ள்.) வளப்பம் பொருந்திய திருத்துழாய் மாலையை யணிந்த மார்பையுடைய விண்டுவும், பிரமனும் தேவர்கட்கு முதல்வனாகிய இந்திரனும் நெருங்கிய பதினெண் கணத்தவரும், இருவர், எண்மர், பதினொருவர், பன்னிருவராகிய முப்பத்து மூவரும் இவர்களின் வேறாகிய மெய்யடியார்கள் யாவரும் தொழுது தங்கடங்கள் குறைகளை விண்ணப்

பித்த அடையத் தகுந்தவற்றை அடையப்பெற்றுத் தம்மிடத்துண் டாகிய உவகையினாலே அவரவர்கள் வசிக்கின்ற இடங்களை யடைந் தார்கள் அக்காலத்து.

(வி - ம்.) விளம்பி - சொல்லி. துறுத்த - அடைந்தனவாகிய பொருள்கள். மேவரப்பெற்று - அடையப்பெற்று. அது காலை - அக்காலத்தில். (உ௪)

பக்கு வப்பல புண்ணிய மலபரி பாகஞ்சத் திநிபாதம்
தொக்க வல்வினை யொப்புநே ரடுத்தலிற் றொல்லுரி கழல்பாக்கு
மிக்கு நாடும்வா ளரவெனப் பிறவியை வெருவிய வுளத்தோடும்
தக்க மாதவ ரெழுவரு மறுவலுந் தாழ்ந்தெழுந் தெதிர்நின்றார்.

(இ - ள்.) வீடுபேறடைதற் கதிகாரமும், சிவபுண்ணியமும், மல முதிர்தலும், அருள் பதிதலும், இருவினை யொப்பும் காரணகாரிய முறைப்படி பொருந்துதலினாலே பழைய தோல் நீங்கும் பொருட்டு மிக்கு ஆராயும் ஒளி பொருந்திய அரவினைப்போலப் பிறப்பினுக்கஞ் சிய வுள்ளத்தோடு தகுதியையுடைய பெரிய தவத்தையுடைய முனி வர்கள் எழுவரும் பின்னரும் வணங்கி யெழுந்தெதிரே நின்றார்கள்.

(வி - ம்.) பக்குவம் - அதிகாரம். பல புண்ணியம் - ஈண்டுச் சிவ புண்ணியம். மலபரி பாகம் - மலமுதிர்தல். சத்திநிபாதம் - அருள் பதிதல். வினையொப்பு - இருவினை யொப்பு. நேரடுத்தல் - ஒன்றன் பின் ஒன்றாகவருதல். மாதவரெழுவர் - சனற்குமாரரிடத்திற் சித்தாந் தப்பொருள் கேட்டவர். இவர் சத்தியசேனன் முதலிய எழுவர்கள். இப்படலம் (அ௩, அ௪) ஆகிய செய்யுள்களா னறிக. (உ௫)

தொடக்கம் பட்டெதிர் நிற்றலும் பசுங்கதிர்க் குரூஉமதி மிளிர்வேணி
படத்தை பாகன்மற் றுயிர்க்குயி ராகிய வள்ளலன் னவர்நெஞ்சம்
கிடந்த வேட்கையைத் திருவுளத் தடைத்தருள் கெழுமுநந் தியின்பாங்கர்த்
தொடர்ந்த வன்பினு லுணர்சனற் குமரனுந் தொன்முனி முகநோக்கி.

(இ - ள்.) நால்விரன் முடக்கிப் பெருவிரலினுதி நெஞ்சிடை வைத்து எதிரே நிற்றலும் பசிய கிரணங்களோடு நிறம் விளங்குகின்ற பிறைச்சந்திரன் விளங்குகின்ற சடையையுடையவனும் அம்மையாரைப் பாகத்திலுடையவனும், உயிர்க்குயிராகிய வள்ளற்றன்மையுடையவனு மாகிய சிவபெருமான் அம்முனிவர்களுள்ளத்துத் தங்கிக்கிடந்த அவா வைத் திருவுள்ளத்திற்கொண்டு அருளோடு கூடிய நந்தி யெம்பெரு மான் பக்கலிற் றொடர்ச்சியுற்ற அன்பினாற் சித்தாந்த நுண்பொரு ளைங்களை (முறையாக) உணர்ந்த சனற்குமாரனாகிய பழைய முனிவரது முகத்தை நோக்கி.

(வி - ம்.) தொடக்கம் - நால்விரன் முடக்கிப் பெருவிரனிறுத்தி நெஞ்சிடை வைத்தல்; இனி யொருசாரார், மெய்கோட்டிக் கைகுவித்து நிற்றலென்பார். வேறொரு சாரார் வணக்கமென்பார். திருவுளத் தடைத்தல் - திருவுளங் கொளல்; குரூஉ உக்குறி. கெழுமு - பொருந்திய.

செயிர்பி றங்கிய பகைமையு முறவெனச் செறிந்தநம் மையும்பாரா
உயிர்பி றந்தவ ராதலின் முனிவரர்க் குண்மையை முறையானே.

மயர்த புத்தினி துரைமதி யெனவருள் வழங்கியா வயினின்றும்
வெயிறழும்பிய வுவளக வரைப்பினை மென்கொடி யொடும்போந்தான்.

(இ - ள்) குற்றம் விளங்குகின்ற ஆணவப் பகையையும், உறவாக அநாதியே பொருந்திய சிவமாகிய நம்மையும் அறிந்து உணர்வு தோன்றப் பெற்றவராதலினால் இம்முனிவர்களுக்கு மெய்ப்பொருளை வரலாற்று முறைப்படி மயக்கம் நீக்கி இனிதாக உபதேசிப்பாயாக என அருளிச்செய்து அவ்விடத்தினின்றும் ஒளி விளங்கிய அந்தப்புரத்தின்கண் மெல்லிய கொடிபோன்ற இடையினையுடைய உமையம்மையாரோடும் சென்றான்.

(வி - ம்.) செயிர் பிறங்கிய பகைமை - அநாதியே குற்றமாக விளங்கிய ஆணவம். உறவெனச் செறிந்த நம்மையும் - உறவாகக் கலந்த சிவமாகிய நம்மையும். பாரா : வினையெச்சம். உயிர் : ஈண்டறிவை யுணர்த்தி நின்றது. உவளகம் - அந்தப்புரம். "தவளைக் கிண்கிணித் தாமரைச் சீறடிக், குவளை யேயள வுள்ள கொழுங்கணாள், அவளை யேயமு தாகஅவ் வண்ணலும், உவள கம்தன தாக ஒடுங்கினான்" என்னும் சிந்தாமணி (உசஉ) செய்யுளா னறிக. (உஎ)

அண்ணலா ருளிச் செய்த வருடலைக் கொண்டு போற்றிப்
புண்ணிய சனற்கு மாரன் புளகமோ டாங்கு வைக
எண்ணிய வெண்ண முற்ற வெம்பிரான் கருணை வெள்ளம்
நண்ணிய முனிவர் தாழ்ந்து நயந்தனர் கிளக்க லுற்றார்.

(இ - ள்.) பெருமையிற் சிறந்த சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளிய அருளைச் சிரமேற்கொண்டு துதித்துப் புண்ணிய வடிவாகிய சனற்குமார முனிவன் புளகாங்கிதத்தோடு அக் கைலையின்கண் வைகத் தாங்கள் எண்ணிய பொருள்களெல்லாம் எண்ணியவண்ணம் முடிவு பெற எங்கள் தலைவனாகிய சிவபிரானது கருணை வெள்ளம் பொருந்திய முனிவர்கள் வணங்கி விருப்பினராகிச் சொல்லத் தொடங்கினார். (உஅ)

முனிவர ரெனைத்துந் தேரு மொய்யரு ணியம் பெற்றுங்
கனிமொழி பாகன் பாதக் கலப்பெனுஞ் சேக்கை சேக்கும்
புனிதமெய்ச் சனற்கு மார புங்கவ நின்னைச் சேர்ந்தாம்
இனியடி யேங்கட் கெய்தா விரும்பொருள் யாங்க னுண்டே.

(இ - ள்) முனிவர்கள் சிறிதும் தெளியாத மிக்க அருளாகிய நியதத்தைப் பெற்றுக் கனியினிரசம் போன்ற சொல்லையுடைய உமையம்மையாரைப் பாகத்திலுடைய இறைவனது திருவடியிற் கலத்தலாகிய தூய்மையான வடிவத்தோடுகூடிய சனற்குமார முனிவரென்னும் மேலானவரே! நின்னையடைந்தாம். இனி அடியேங்களாகிய எங்கட்கு அடையா முடியாத பெரிய பொருள் எங்ஙனமுள்ளது.

(வி - ம்.) எனைத்தும் - சிறிதும். பாதக்கலப்பெனுஞ் சேக்கை - திருவடியிற் கலத்தலாகிய பற்றிடம். சேக்கும் என்பது ஈண்டு அப்பற்றிடத்திற் புகுதலை யுணர்த்தி நின்றது. "பற்றுங்காலையற்றார் பற்றும் பற்றுங்காலை பற்றி" என வருந் திருவாக்கா னறிக. (உக)

சுற்றமென் வல்லி பின்னித் தொக்கசத் தாதி வெண்டேர்
செற்றியைந் தியமா மல்கிச் செனனமே மரண மென்ன
முற்றிய வழிக ணீண்டு முனிவினைத் தழல்கள் சூழ்ந்து
பற்றிய வாழ்க்கைக் காடு பாற்றுமெஃ கின்று பெற்றாம்.

(இ - ள்.) உறவினரென்கின்ற மென்மையாகிய கொடியாற் றுவக்குண்டு கூடிய சத்த முதலிய புலன்களாகிய கானனீர் நெருங்கி ஞானேந்திரிய கன்மேந்திரியங்களாகிய மிருகங்கள் நிறைவுற்றுப் பிறப் பிறப்பென்று சொல்லும் மார்க்கங்கள் நீளப்பெற்று (யாவரையும்) வருத்துகின்ற வினைகளாகிய நெருப்பாற் சூழப்பெற்றுப் பொருந்திய இல்லற வாழ்வென்னும் காட்டைக் கெடுக்கும் ஆயுதத்தை இன்று அடியேங்கள் அடைந்தனம்.

(வி - ம்.) வல்லி - கொடி. வெண்டேர் - கானற்சலம். சத்தாதி வெண்டேர்-ஓசை, ஊறு, ஒளி, நாற்றம், சுவை யாகிய கானனீர் இவை புலன்கள். செற்றி - நெருங்கி. வினைத்தழல் - நல்வினை தீவினை யாகிய நெருப்பு; நல்வினையும் வீடடைதற்குத் தடையா மாதலின் "வினைத்தழல்" என்றார். இச்செய்யுள் உருவகவணி. (௩0)

சுத்தமெய்ஞ் ஞான வின்பத் துறைபடி முத்திக் கேது
சத்தியந் தருமந் தானந் தவமக மக்கட் பேறென்
றித்திற மென்றுந் தத்த மியல்புளி யொழுக லென்றும்
வைத்தசொன் மறையிற் றோன்று மலைவுமின் றொழிக லானேம்.

(இ - ள்.) தூய்மையாகிய மெய்ஞ்ஞான வின்பத்துறையின் கண்ணே மூழ்குகின்ற வீட்டிற்கு வாயில்கள், சத்தியமும், அறமும், தானமும், தவமும், வேள்வியும் மக்கட்பேறும் என்று சொல்கின்ற இவைகளென்றும், தங்கடங்கள் வருணாச்சிரமத்திற்குத் தக்க முறைப் படி நடத்தலென்றும் (இறைவனுற்றிருவாய் மலர்ந்தருளி) வைத்த ஒலி வடிவமாகிய வேதத்திற் காணப் பெறும் மயக்கமும் இன்றொழியப் பெற்றோம்.

(வி - ம்.) படிமுத்தி : வினைத்தொகை. தத்தமியல்புளி யொழுகல்- தங்கள் தங்கள் வருணாச்சிரம தருமத்திற்குத்தக ஒழுகல். மலைவு - மயக்கம். (௩௧)

என்றுளத் தெழுந்த வார்வ மெழுகட லென்னப் பொங்க
நின்றுவிண் ணப்பஞ் செய்யு நீத்தமா தவத்தி னோர்க்கு
நன்றருட் பார்வை நல்கி நவைதபு தீக்கை யாற்றி
ஒன்றுமுப் பொருளு மும்மை யுணர்வினுற் றெளிந்திட் டானே.

(இ - ள்.) என்று கூறி உள்ளத்தின்கண் ணெழுந்த அன்பு எழு கடலென்று சொல்லும் வண்ணம் பெருக நின்று விண்ணப்பஞ் செய்கின்ற எல்லாப் பற்றையும் விட்ட தவத்தையுடைய ஏழு முனிவரர்க் கும் பெரிதும் அருணோக்கம் செய்து குற்றம் நீங்குதற் கேதுவாகிய திரு வாண தீட்சை செய்து ஒன்றியொன்று அத்துவிதமாகக் கலந்துள்ள பதி

பசுபாசமென்னும் மூன்று பொருளினைத் திரியக்காண்டல், இரட்டுறக் காண்டல் தெளியக்காண்டல் என்னும் மூவகை யுணர்விறைலே தெளிவித்தான்.

(வி - ம்.) நன்று - பெரிது. மும்மையுணர்வு - சுட்டுணர்வு, பொதுவுணர்வு, தன்னியல்பென்னு மூவகையுணர்வு. (௨௨)

இங்கிது நந்தி யெங்கோ னிருந்தவப் பேறு வாய்ந்த
மங்கண னாதியான மாதவத் தோர்க்குப் பண்டு
சிங்கிய மலத்தி னுள்ளந் தெளிதரத் தெருட்டிற் றாகும்
நுங்களுக் குரைத்தா மென்று நுவன்றனன் மோன முற்றான்.

(இ - ள்.) நந்தியாகிய எங்கடலைவன் இதனைப் பெரிய தவப்பயனெய்ந்த மங்கணன் முதலாகிய பெரிய தவத்தினையுடைய முனிவர்களுக்கு முன்னர்க் குறைந்த மலத்தோடு கூடிய உள்ளந்தெளியும்படி தெளிவித்ததாகும். (அதனை) உங்களுக்கும் உரைத்தனமென்று சொல்லினவனாகி மௌன நிலையிலிருந்தனன்.

(வி - ம்.) மங்கணன்—ஓர் முனிவன். சிங்கிய - குறைந்த. நுவன்றனன் : முற்றெச்சம். (௨௩)

கேட்டன னமைதி பெற்றுக் கிளர்ந்துடன் சிந்தித் தங்கண்
வாட்டமின் றெழுவர் தாமு மயர்தபத் தெளிந்த பின்றைக்
காட்டரு நிட்டை கூடல் கலவும்வா தனையி னெய்தார்
மீட்டவுள் ளத்த ராகி மெலிந்துதங் குருவைச் சார்ந்து.

(இ - ள்.) (இம்முனிவர்கள்) கேட்டலானே பெரிதும் சாந்தியடைந்து கிளர்ச்சியுற்று (அக்கேட்ட பொருளை) உடனே சிந்தனை செய்து அஞ்ஞான்றே வருத்தமின்றி யெழுவரும் மயக்கம் நீங்கத்தெளிதலடைந்த பின்னர் உவமை காட்டற்கியலாத நிட்டையின்கட் பொருந்தலைத் (தம்முட்) கலந்துள்ள வாசனை ஞானத்தினை லடையாதவராகி நிட்டை கூடுதலினின்று நீங்கிய வுள்ளத்தை யுடையவராகி மெலிவுற்றுத் தங்கள் பரமாசாரியனாகிய நந்தியெம்பெருமானை யடைந்து.

(வி - ம்.) காட்சி மூவகையாகுமென முற்செய்யுளிற் கூறினார். இம்மூன்றும் அதிபரிபக்குவ முடையார்க்குக் கேட்ட மாத்திரையே யொருங்கு நிகழும். ஏனையோர்க்குச் சோபான முறையாற் கேட்டல், சிந்தித்தல், தெளிதல் என்னும் இம்மூன்றனும் முறையே நிகழ்வனவாகலான் இக்கவியிற் கூறினார். நன்று - பெரிது. காட்டு - எடுத்துக் காட்டு. கூடல் - இரண்டாவதன் றொகை. வாசனை - அனுபவத்தின் காரியமாய் நினைவிற்குக் காரணமாயுள்ளது. மீட்ட - (நிட்டையினின்றும்) மீட்ட; (௨௪)

ஐயனே போற்றி யாண்ட வமலனே போற்றி மூவா
மெய்யனே போற்றி நின்னை மேவியு மேவார் போல
வையக மாட்டெம் முள்ளம் வழிக்கொள லாயிற் றெந்தாய்
உய்யநின் கருணை யின்னு முறுத்தெனக் குமரன் கூறும்.

(இ - ள்.) தலைவனே வணக்கம். எங்களை யடிமைகொண்ட நல முற்றவனே வணக்கம். கெடாத தன்னியல்புடையவனே வணக்கம், நின்னை அடைந்திருந்தும் அடையாதவர்கள்போல உலகியலின்மாட் டெங்கள் மனஞ்செல்வதாயிற்று. எங்கடந்தையே உய்யும்வண்ணம் நினது கருணையை யெங்கண்மாட்டுச் சேர்த்தருளெனச் சனற்குமரா முனிவன் சொல்வான். (௩௫)

பொறுமையைம் பொறிய டக்கல் புரைதபு தவமா சார
முறைவழி யொழுகல் சீல முற்றிய வாய்மை யூக்கம்
அறிவரு ளருச்ச னாதி யடைந்தன்பு கடைப்பி டித்தல்
நெறியிவர் புத்தி கூர்த்த னடுநிலை நிலைத்தி ரேனும்.

(இ - ள்.) (தம்மை யிகழ்வாரைப் பொறுக்கும்) பொறையும், (புலன்களிற் செல்கின்ற) ஐம்பொறியினை (தத்த நெறியிற் செல்லாது) அடக்கலும், (தனக்கு வரும் நோயைப் பொறுத்தலும் பிறவுயிர்க் கூறு செய்யாமையும் முதலிய) குற்றம் நீங்கிய தவமும், (நீர்பலகான் மூழ்கல் முதலிய) ஆசாரமும், நான்முறை வழி நடத்தலும், நல்லொ ழுக்கமும், உண்மையும் உள்ளக் கிளர்ச்சியும், சிவஞானத்தைத் தருகின்ற சிவார்ச்சனை முதலிய தொழில்களை யடைதலும், அன்பே சிவமென உறுதியாகக் கோடலும், நன்னெறியிற் செல்கின்ற அறிவு மிகுதலும், நடுநிலையினிற்றலுமாகிய செயல்களில் நிலைபெற்றுள்ளீரேனும். (௩௬)

வாதனை மலநோய் தாக்க வாய்மையி னிலைத்த லின்றி
வேதனை யுலகி னுள்ளம் விரவமெய் யிதிர்ப்புக் கொண்டீர்
சாதகப் பாலிர் நீயி ராதலிற் சாத கத்தாற்
சாதலும் பிறப்பு மில்லாச் சாத்தியப் பாலி ராமின்.

(இ - ள்.) வாசனைமலமாகிய நோயானது தாக்கலான் (தன்னியல் பாகிய) உண்மையில் (மனம்) நிலைபெறுதலின்றித் துன்பமே வடிவ மாகிய உலகியலிடத்து மனங்கலக்க உடனடுக்கம் கொண்டீர்கள். சாதனங்களால் சாத்தியத்தினையடைய முயற்சியுடையீராதலின் (பசு கரணங்களெல்லாம் பதிகரணங்களாக) நிட்டை கூடலாகிய ஏதுவால் பிறத்தலு மிறத்தலுமிலவாகிய சாத்தியமாஞ் சிவத்தின் பகுதிய ராமின்கள்.

(வி - ம்.) வாய்மை, சிவம்; ஏனைய பொய்யாகலின். வேதனை - துன்பம். சாதகத்தால் - பசுகரணங்களெல்லாம் பதிகரணங்களாதல் நிட்டை கூடலா லாகலின் நிட்டை கூடலைச் "சாதக" மென்றார். (௩௭)

சாதக வழியும் பல்ல வவற்றினுட் டளர்வின் றுவ
ஏதமி றலந்தோ றெய்தி யிறைஞ்சுத லொன்றின் வைகல்
தீதறு தலமுர் புந்தி செறிப்பவீ டுறுப்ப வேண்டின்
ஓதிய விரண்டு மெய்ப்ப வுலப்பில வுலகின் மாதோ.

(இ - ள்.) (சாத்தியத்தினை அடைதற்குக் கருவியாகிய) சாதக வழிகளும் பலவாகும். அச்சாதனங்களுள் சோர்விலவாகிய சாதனங் கள் (யாவையெனின்) குற்றமிலவாகிய தலங்டோறும் பொருந்தி

வணங்கல், ஒரு தலத்திற் றங்குதலாம். குற்றமற்ற தலங்களிற் போகத்தை மிகச் சேர்ப்பனவும், வீட்டின்கட் சேர்ப்பனவும், விரும்பின் முற்கூறிய விடிரண்டினையுந் தருவனவாயும் உலகத்தில் அளவிலாதன உளவாம்.

(வி - ம்.) ஆவை, ஆம்என ஒருசொல் வருவித்து முடிக்க. புத்தி - போகம். செறிப்ப, உறுப்ப, உய்ப்ப இவை அன்பெறாத பலவின் படர்க்கை. இரண்டு - புத்தி முத்தி. (௧௮)

அவற்றினுட் புத்தி முத்தி யருங்குரைத் தின்றி யார்க்கும்
தவற்றினைத் துமித்து நல்குந் தலங்களுஞ் சில்ல வாகும்
அவற்றுளு முக்கண் மூர்த்தி யமர்தலஞ் சில்ல சில்ல
துவற்றுதேங் கடப்பந் தாரான் றூழலப் பெயருங் கேண்மின்.

(இ - ள்.) அத் தலங்களுள் யாவர்க்கும் (மலமாகிய) குற்றத்தினைக்கெடுத்துப் போகத்தினையும் வீட்டினையும் (பெறுதற்கு) அருமையுடையதின்றிக் கொடுக்கின்ற தலங்கள் சிலவாகும். அத் தலங்களினுள்ளும் மூன்று கண்ணையுடைய சிவபெருமான் எழுந்தருளியிருக்கிற தலங்கள் சிலவாகும். தேனைத் துளிக்கின்ற கடப்பமாலையை யணிந்த முருகக் கடவுள் எழுந்தருளியிருக்கின்ற இடங்கள் சிலவாகும். அப் பெருமான் எழுந்தருளியிருக்கும் இடங்களின் பெயரையும் கேண்மின்கள்.

(வி - ம்.) அருங்குரைத்து - அருமைத்து, குரை அசைநிலை. துமித்து - கெடுத்து. சில்ல கடப்பந்தாரான் றூழலெனக் கூட்டுக. (௧௯)

வேறு

மாலைவெள் ளருவி தாழ்வரைக் கயிலை மதமலை யுரற்றுமந் தரமே
சாலநோ யனுக்குஞ் சம்புலா சியமே தண்பனிக் குவடுநீ டிமயம்
ஏலமார் சோலைத் தருமநற் கான மெழில்குலா வியகுணத் தானம்
கோலம்வீற் றிருந்த வளமிகு நீல கண்டமே குலாசல வரைப்பு.

(இ - ள்.) மாலையினைப் போன்று வெள்ளிய அருவிநீ ரிழிகின்ற கைலாயமும், மதத்தை யொழுக்குகின்ற மலைபோன்ற யானைகள் ஒலிக்கின்ற மந்தரமும், நோயினைமிகக் கெடுக்கின்ற சம்புலாசியமும், குளிர்ச்சி பொருந்திய பனிக்கட்டிகள் நிறைந்த சிகரங்களோடுகூடிய இமயமலையும், ஏலச்செடிகள் பொருந்திய சோலைகளோடுகூடிய நல்ல தருமகானமும், அழகுபொருந்திய குணத்தானமும், அழகு தங்கியிருக்கின்ற வளமிகுந்த நீலகண்டமும், குலாசல மென்னுமிடமும். (௨௦)

வெறிகமழ் பொழில்சூழ் வில்வகங் கனமே வினைக்குறும் பகழ்தரு வராகம்
எறிதிரைக் கங்கை வட்டமேத் துநர்த மிடர்தபுந் தருள்சிலை வட்டம்
மறுவில்கந் தருவவனந்நெறித் தலிசேர் மலர்ச்சுனை வெறுத்தகே தாரம்
உறைமதுப் படப்பைக் காமிகா ரணிய முதீசியுத் தாலக வைப்பு.

(இ - ள்.) வாசனை வீசுகின்ற சோலைகள் சூழ்ந்த வில்வகங்கனமும், தீவினையாகிய குறும்பினை வேரோடும் கல்லியெடுத்தற் கேதுவாகிய வராகமும், அலையை வீசுகின்ற கங்காவட்டமும், துதிக்கின்ற

வர்களுடைய துன்பத்தினை நீக்கி அருளினை யளிக்கின்ற சிலாவட்டமும், குற்றமில்லாத சுந்தருவனமும், முழக்கி வண்டுகள் மொய்க்கின்ற மலர்களோடுகூடிய சுனைகள் நெருங்கிய கேதாரமும், தேனைத் துளிக்கின்ற தொட்டைக் கூற்றினையுடைத்தாகிய காமிகாரணியமும் வடக்கே யுள்ள உத்தராலகமென்னு மிடமும்.

(வி - ம்.) தெழித்து-முழங்கி. வெறுத்த - செறிந்த. படப்பை - மருதநிலத் தொட்டக்கூறு. (௪௧)

கடவுளர் முதலோர் வணங்குசீ கோட்டங் காதரந் தபுங்குரு குல்லியம்
சுடர்மணி யிமைக்குங் கங்கைசூழ் காசி தொல்வினை யறுங்கபி லேசம்
மடவிய ராட லொருதமா காளம் வான்படர் புகழ்விரு பாக்கம்
தொடலைவன் மாயை விடைகொள்வன் மீகம் துலங்கிய தேசநீ வனமே.

(இ - ள்.) தேவர்கள் முதலியோர்கள் வணக்கம் செய்கின்ற ஸ்ரீகோட்டமும் துன்பத்தை நீக்குகின்ற குருகுல்லியமென்னும் வைப்பும், ஒளியோடுகூடிய முத்துக்க ளொளிர்கின்ற கங்கையாற்றினாற் சூழப் பட்ட காசியம்பதியும், பழவினை யறுதற்கேதுவாய கபிலேசமென்னும் வைப்பும், இளமைப் பருவத்தோடுகூடிய பெண்கள் நடனம் நீங்காத திருமாகாளமும், வான்சிறிதாகப் போர்க்கும் புகழினையுடைய விரு பாக்கமென்னும் வைப்பும், கூட்டமாகிய வலிய மாயைகள் விடை கொள்ளுதற் கேதுவாகிய திருவாரூரும், திருவீழிமிழலையும்.

(வி - ம்.) காதரம் - துன்பம். "தேங்கிய காதர ஆதரம் செப்பி" என்னும் தஞ்சை வாணன் கோவையானறிக. தொடலை - கூட்டம். வன்மீகம் - திருவாரூர். தேசினிவனம் - வீழிமிழலை. (௪௨)

திங்கள்சேர் மாடக் கீர்த்திவா சேசம் கங்கையா தாரசித் தியமே
துங்கமா தவர்தாழ் மந்தன காளம் துகளின்மா யாபுர மிபங்கள்
சிங்கநின் றுலம்ப வெருவுசீ சயிலம் தெகிழ்ந்தபூந் தண்டகா ரணியம்
பொங்குநீர்வைகை யாலவாய் பொருந்தம் பொருகரை யமர்புடைமருதூர்.

(இ - ள்.) சந்திரன் பொருந்துகின்ற இல்வரிசைகளை யுடைய கீர்த்திவாசேச மென்னும் வைப்பும், கங்கையாதாரசித்திய மென்னும் வைப்பும், உயர்வு பொருந்திய மாதவர்கள் வணங்குகின்ற மந்தனகாள மெனும் வைப்பும், குற்றமில்லாத மாயாபுரியும், யானைகள் கெடும்படி சிங்கங்கள் நின்று பிளிறுகின்ற ஸ்ரீ பருப்பதமும், மலர்ந்த பூக்களை யுடைய தண்டகாரணியமும், மிகுந்த நீரோடுகூடிய வையை நதியாற் சூழப்பட்ட மதுரையும், தாம்பிரவர்ணியின் கரையிலுள்ள திருப்புடை மருதூரும்.

(வி - ம்.) தெகிழ்ந்த - வாய்விண்ட; "தேங்கயத் துணிமலர் தெகிழ்ந்த நாற்றமும்" எனவரும் (கேமசரி, ௨௬) சிந்தாமணியா னுணர்க. (௪௩)

காவிரி வளத்த வுசீரமே தென்பாற் கவின்றவுத் தரலிக நகரம்
பூவிரி பொதும்பர் மலயவெற் படுத்தோர் போக்கத விக்கிர மேசம்

நாவலர் துவன்றுஞ் சாலிவா டீசம் நற்கதி யருள்சம்பு வனமே
விரி காந்தட் டிரிசிர வோங்கன் மேதக வளர்சுசப் பேசம்.

(இ - ள்.) காவிரியின் வளத்தையுடையனவாகிய உசிரமென்னும் வைப்பும், அக்காவிரியின் றென்றிசைக்கண்ணே அழகு விளங்குகின்ற உத்தாலக நகரமும், பூக்களை விரிக்கின்ற சோலைகளோடுகூடிய பொதியின் மலையைப் பொருந்தியவர்கள் நீங்குதற் கருமையாகிய விக்கிரமசிங்கபுரமும், நாவலர் குழுமிய திருநெல்வேலியும், நல்ல வீட்டினைத் தருகின்ற சம்புவனமும், பூக்களை விரிக்கின்ற காந்தட் செடிகளையுடைய திரிசிரா மலையும், மேன்மை பொருந்த வளர்கின்ற சுசப்பேசமென்னும் வைப்பும்.

(வி - ம்.) உசிரம் - காவிரிக் கரையிலுள்ளது. (உஉ)

பாட்டளி முரலும் பொய்கைசூழ் பஞ்ச நதம்பய னருள்புட்ப வினம்
கோட்டரி யுகளும் வாஞ்சியங் கோணை மதில்புடை குலவுசீ புரமெய்
வீட்டினர் வதியும் பசுபதித் தலமே வரும்பஞ்ச லோகமாத் தானம்
வாட்டமுற் றிரிக்கு மிடைமரு தென்றாழ் வழக்கறு மாடமா யூரம்.

(இ - ள்.) பாட்டுக்களை வண்டுகள் பாடுகின்ற தடாகங்களாற் சூழப்பெற்ற திருவையாறும், பயனைத் தருகின்ற புட்பக்காடும், மரக்கிளைகளிலே குரங்குகள் துள்ளிக் குதிக்கின்ற திருவாஞ்சியமும், அழியாத மதில்கள் பக்கத்தே விளங்குகின்ற ஸ்ரீபுரமும், உண்மையாகிய வீட்டினை யடைந்தவர்களாகிய தத்துவஞானிகள் தங்கும் பசுபதித் தானமும், பொருந்துகின்ற பஞ்சலோகமாத்தானமென்னுமிடமும், தன்னை யடைந்தோர்களுடைய தளர்ச்சி முற்றிலும் போக்கும் திருவிடைமருதூரும், சூரியன் செலவைத் தடைப்படுத்துகின்ற மாடங்களோடுகூடிய மாயூரமென்னும் திருப்பதியும்.

(வி - ம்) கோணை - அழியாமை. "கோணை வெம்மணிக்கொம்மை யெயிற்புரம்" (நைடதம் - நகரப்படலம்). (உங)

சீர்த்தசித் திரவே திகமடி யார்க்குத் தேனிக்கு மாலிங்கே சுரமே
சூர்த்தவன் பிணிக டுமிசித்தா ரணியந் துயர்விடு சுநாகத வைப்பு
பார்த்தலத் தொளிகள் பரப்புகண் டீசம் பரவுசீர்ச் சிதம்பர நகரம்
ஓர்த்தவ ரலக்க ணொறுத்திடுந் தால வனமத்தி யாபகே சுரமே.

(இ - ள்.) சிறப்பினையுடைய சித்திர வேதிகமென்னும் தலமும், அடியார்கட்கு இனிக்கின்ற மாலிங்கேசுவரமென்னும் வைப்பும் அச்சத்தைத் தருதற்கேதுவாகிய வலிய பிணிகளை நீக்குகின்ற திருவாவடுதுறையும், துயரைநீக்குதற் கேதுவாகும் சுநாகதமென்னுமிடமும், பூமியின்கண் ஒளிகளைப் பரப்புகின்ற திருக்கண்டீச்சுரமும், (யாவரும்) துதிக்கின்ற சிறப்பினையுடைய சிதம்பரநகரமும், (இறைவன் திருவருணிலையை) ஆராய்ந்தவர்களாகிய அடியார்களுடைய துன்பத்தினை நீக்குகின்ற திருப்பனந்தாளும், அத்தியாபகேசரமும்.

(வி - ம்.) தேனித்தல் - தியானித்தல். சித்தாரணியம் - திருவாவடுதுறை. (உச)

உடற்பய னளிக்கு மிருடிவிந் தியமே யும்பரார் தொழும்வராஞ் சலமே
நடப்பல நதிசூழ் காஞ்சிமா நகரந் நண்டலை யுடைவடா ரணியம்
மடப்படு மலந்தீர்க் கருடிருப் பாசூர் வயங்கிய வியாக்கிரே சுரமே
கடப்பருஞ் சீர்த்தி விரிஞ்சைமா நகரங் கரிசிரித் திடுந்திரு வல்லம்.

(இ - ள்.) உடலெடுத்ததன் பயனை யளிக்கின்ற இருடிவிந்திய மென்னுந் தலமும், தேவர்கள் வணங்கும் வராஞ்சல மென்னும் வைப்பும், பொருந்திய பலநதிகள் சூழப்பெற்ற காஞ்சிநகரமும், சோலைகளையுடைய திருவாலங்கா டென்னும் தலமும், அறியாமையோடுகூடிய மலத்தினைப் போக்கித் திருவருளைப் பாலிக்கின்ற திருப்பாசூரும், விளங்குகின்ற திருப்பாதிரிப்புலியூ ரென்னும் வைப்பும், நீக்குதற்கரிய சிறப்புடனேகூடிய திருவிரிஞ்சைநகரமும், குற்றங்களை யெல்லாம் போக்குந் திருவல்லமென்னுந் தலமுமாகிய.

(வி - ம்.) பலநதிகள் "கம்பை பம்பை மஞ்சினிபிச்சி - கலிச்சி பொன்னி மண்ணி வெஃகாவே" என்னும் பலநதிகள். மடப்படு: விகாரம். பாசூர் - மூங்கில்வனம். பாசு - மூங்கில். இத்தலப் பெயர்கள் "எட்டனை நாற்றியமுட்டிய இவை" என அடுத்த செய்யுளில் வரும் இவை யென்னும் சுட்டுப்பெயர் கொண்டது. (சஎ)

எட்டனை நாற்றி யிரட்டிய விவைமற் றெறிதிரைப் பெரும்புனற் கங்கை
வட்டவார் சடிலத் திளம்பிறை கதிர்க்கும் வள்ளலா ரமர்தல மாகும்
அட்டொளி விரிய வழற்பொறி தும்மு மரித்தலை வேல்வல னுயர்த்த
கட்டழ கெறிக்கு மறுமுகக் கடவுள் கதியநற் றலங்களுந் தெரிப்பாம்.

(இ - ள்.) எட்டினை நிலைமொழியாக நிறுவி (அவ்வெட்டனையே) இரட்டித்துக் கூடியதனாற் போந்த இவ் வறுபத்துநான்கு தலங்களும், எறிகின்ற அலைகளோடுகூடிய மிக்க நீரையுடைய கங்கை நதியுடனே வட்டமாகக் கட்டிய பிறைச்சந்திரன் ஒளியைச்செய்யும் வள்ளலாகிய சிவபிரானெழுந்தருளிய திப்பிய தலங்களாகும். செறிந்த ஒளிவிரியு மக்கினிப் பொறிகளை வெளியிடுகின்ற கூர்மைபொருந்திய தலையினையுடைய வேற்படையை வலப்பக்கத்திலுயர்த்த மிக்க அழகினை வெளியிடுகின்ற அறுமுகப்பெருமான் விரும்பிய நல்ல தலங்களையும் தெரிவிப்பாம்.

(வி - ம்.) எட்டனைநாற்றி யிரட்டுதல் - எட்டே எட்டே - அறுபத்துநான்கு தலம். அட்டு - செறிந்த. தும்மு - கக்குகின்ற. அரி - கூர்மை. கட்டழகு - மிக்கவழகு. (சஅ)

பிறங்கிய பவானி சங்கமஞ் சமணப் பிராணநா சனம்புயன் மேகம்
உறங்கெயி லுடுத்த பவானிசங் கரம்வின் னுவகையிற் பணிசுர வணமே
அறங்கிளர் குமார புரமணங் கஞற்றி யலர்விரி கதம்பகா ரணியம்
பறங்கடி வன்னித் தானநீ ரோடை மலிந்துவாங் கியசத்தி புரமே.

(இ - ள்.) விளங்கிய பவானி சங்கமமென்னும், தலமும், சமணப் பிராண நாசனமும் நீரோடுகூடிய மேகங்கள் தங்குகின்ற மதில்களாற்

ருழப்பெற்ற பவானிசங்கரமென்னும் தலமும், தேவலோகத்திலுள்ளவர் மகிழ்வுடன் வந்து வணங்குகின்ற சரவணமென்னும் தானமும், தருமம் விளங்குகின்ற குமாரபுரமும், வாசனையை வெளியிட்டு மலர்கள் விரியப்பெற்ற கடம்பமாவனமும், பாபத்தை நீக்குகின்ற வன்னித்தானமென்னும் தலமும், நீரோடைகள் நிறைந்து சுற்றிய சத்திபுரமும்.

(வி - ம்.) புயல் - நீர். விண் - ஆகுபெயர். மறம் - பாவம். வாங்கிய - வளைந்த. (௫௯)

வரம்பல வுதவுஞ் சண்முக புரஞ்சீர் மல்கிய கன்னபூ டணமேர்
பரந்தெழு கீர்த்தி பூடணம் வாகு லேயமா புரம்பவுத் திரமே
விரவுமா ரூட வேடக மோசை விரியுநப் பிரமத மோசம்
புரவுபூண் டருளுங் கந்தமா தனமே போகுயர் முடிக்கிர வுஞ்சம்.

(இ - ள்.) (அடியார்கள் விரும்பிய) பல வரங்களையு முதவுஞ் சண்முகபுரமும் சிறப்பு மலிந்த கன்னபூடணமென்னும் தலமும், அழகு பரந்தெழுகின்ற கீர்த்தி பூடணமென்னும் தலமும், வாகுலேய மாபுரமென்னும் தலமும், தூய்மையே பொருந்துகின்ற ஆரூடமென்னும் தலமும், திருவேடகமென்னும் தலமும், பலவித ஒலிகளு மலியப்பெற்ற நல்ல பிரமதமோசமெனுந் தலமும் காத்தலை மேற்கொண்டியாவர்க்கு மருளினைச் செய்தற்கேதுவாகிய கந்தமாதனமென்னும் வைப்பும், மிகவுமுயர்ந்த சிகரங்களோடு கூடிய கிரவுஞ்சமென்னும் வைப்பும்.

(வி - ம்.) போகு - உயர்ந்த. (௬௦)

தவமலி வேத சயிலமின் புறுத்துஞ் சத்திய வாசகம் பிறவி
அவமறு குமர கோட்டமே முலகு மாதரித் துறுங்கவு மாரம்
துவர்வளம் படைத்த தாமிர சூடத் துவசமே வில்வகா னனமே
திவளொளி மயூர மதம்விடுந் தானத் தேவகும் பக்குகைத் தானம்.

(இ - ள்.) தவங்கள் முற்றுதற்கேதுவாகிய வேதசயிலமென்னும் தானமும், (தன்னை யடைந்தவர்களுக்கு) இன்பினைச் சேர்த்தற் கேதுவாகிய சத்தியவாசக மென்னும் தலமும், பிறவியினால் வருகின்ற குற்றங்களை நீக்குதற்கேதுவாகிய குமரகோட்டமும், எழுவகை யுலகின் கண்ணுள்ளவர்களும் விரும்பிப் பொருந்துகின்ற கௌமாரமென்னும் தலமும், பவளத்தின் வளப்பத்தினை யுடைத்தாகிய தாமிரசூடத்துவசமென்னும் தலமும், வில்வாரணியமும், மிக்க ஒளியோடு கூடிய மயில்கள் மதம் நீங்குதற்கேதுவாகிய விடத்தோடு கூடிய தேவகும்பக்குகைத் தானமென்னும் வைப்பும்.

(வி - ம்.) மயூரம் - மயில். (௬௧)

எழில்வளர் விசாக பவனமெய்ஞ் ஞான மீத்தருள் வித்தியா வனநல்
விழவுகொண் மார வந்தகா ரணமெய் விளைத்திடுஞ் சுவேதமா வனமேர்
தழைசுகு மார சிகாசலம் வளங்க டகுஞ்சுரா பயப்பிர தந்தேன்
வழிமுழை குவட்டு வள்ளிவெற் போங்கு மாவிசு புரமெனுந் தலமே.

(இ - ள்.) அழகு விளங்குகின்ற விசாக பவனமென்னும் தலமும், உண்மைஞானத்தைத் தருகின்ற வித்தியாரணியமும், நல்ல சிறப்பினைக் கொண்ட மானந்த காரணமும், உண்மையுளவாதற் கேதுவாகிய திருவெண்காடும், அழகு தழைக்கின்ற சுகுமார சிகாசலமென்னும் தலமும், பலவளங்களும் பொருந்திய சுராபயப்பிரத மென்னும் தலமும், தெவிட்டும் குகையினையுடைய சிகரத்தோடு கூடிய வள்ளிமலையும், உயர்ந்த மாவிரபுரமென்னும் தலமும்.

(வி - ம்.) பவனம் - கோவில். விழவு - சிறப்பு. (௩௨)

**வளமிகு சோமாக் கந்தமும் மலந்தீர் வாகுலே யாசிர மந்தொல்**
**பளகறு கெந்த சயிலநீன் முகின்மீப் படிதருஞ் சித்திர கூடம்**
**தளிரிணர்ச் சோலைச் சம்பகே சுரங்கோ முக்கியந் தறுகண்மா வேழம்**
**களகள முழங்குங் காளத்தி விலங்கல் கருணைசெய் பிரணவ புரமே.**

(இ - ள்.) வளப்ப மிகுந்த சோமாக்கந்த மென்னும் தலமும், மும்மலங்களையும் நீக்கும் வாகுலேயாச்சிரம மென்னும் வைப்பும், பழமையாகிய குற்றம் நீக்குதற்கேதுவாகிய கெந்தமாதன மென்னும் தலமும், நீலநிறம் பொருந்திய மேகக்கூட்டங்கள் மேலே படிதருகின்ற சித்திரகூடமென்னும் வைப்பும், தளிரோடுகூடிய பூங்கொத்துக்களையுடைய சோலையைத் தன்னிடத்தே கொண்ட சம்பகேசர மென்னும் தலமும், கோமுகி என்னும் தலமும், அஞ்சாமையோடு கூடிய யானைகள் களகள என்னும் ஒலிக்குறிப்புடன் பிளிறும் திருக்காளத்தி யென்னும் மலையும், தன்னையடைந்தவர்க்குக் கருணையைச் செய்தற் கேதுவாகிய ஓங்கார மென்னும் தலமும்.

(வி - ம்.) இத்தலம் தணிகையின் பக்கலிலுள்ளது. நீல்முகில் - கடைக்குறை. களகள - ஒலிக்குறிப்பு. பளகு - குற்றம். (௩௩)

**உரனிகழ் ஞான சனங்கதிக் கேணி யுஞற்றுறும் புத்திர காமம்**
**அரிறபு மிந்தி ராபயப் பிரத மவிர்சிவோ பாசிய நகரம்**
**பிரமநிக் கிரகம் பீடுசேர் பிரம வனுக்கிர கம்பிழை தபுந்தோர்**
**இரவுநன் பகலும் வழிபடும் வாத புரமில கியவராஞ் சலமே.**

(இ - ள்.) தன்னையடைந்தவர்க்கு ஞானமுளவாதற்குக் காரணமாகிய ஞானசன மென்னும் தலமும், வீட்டிற் கேதுவாகிய சோபான முறைகளை யுளவாக்குகின்ற புத்திரகாம மென்னும் தலமும், தன்னையடைந்தோர் பிணக்கை நீக்குதற் கேதுவாகிய இந்திரா பயப்பிரத மென்னும் தலமும், விளங்குகின்ற சிவோபாசிய நகரமென்னும் தலமும், பிரமநிக்கிரக மென்னும் தலமும், பெருமை பொருந்திய பிரம அனுக்கிரகமென்னும் தலமும் ஊனமாகிய குற்றத்தை நீக்கியவர்கள் இரவும் பகலும் வழிபடுகின்ற திருவாதவூரென்னும் தலமும், வராஞ்சலமென்னும் தலமும். (௩௪)

**பொலிந்தசீர் வரத சயமபி டேக புரமலர்க் குறுஞ்சுனை படப்பை**
**மலிந்தகல் யாண காளம்வீழ் வரங்கள் வழங்கிடுஞ் சுப்பிர மணியம்**

ஒலிந்தபூம் பொதும்பர் வித்தியா தரமே யுளங்கவர் மணிகண்டே சுரமே
சலிந்தவிர் சமயத் தானபஞ் சகமென் றுரைத்திடுந் தலங்களோ ரைந்தே.

(இ - ள்.) பொலிவுபெற்ற சிறப்புடனே கூடிய வரதசயமென் றுந் தலமும் அபிடேகபுரமென்னும் தலமும், மலர்களோடு கூடிய குறிஞ்சுனைகளும், தோட்டக் கூறுகளும், நிறைந்த கலியாணகான மென்னும் தலமும், அடியார்கள் விரும்பிய வரங்களை வழங்குதற் கேதுவாகிய சுப்பிரமணியமென்னும் தலமும், தழைத்த பூக்களோடு கூடிய சோலையையுடைய வித்தியாதர மென்னும் தலமும், கண்டோருள் ளத்தைக் கவர்கின்ற மணிகண்டேசுரமென்னும் தலமும், கோபத்தை நீக்குகின்ற சமயத்தான பஞ்சகமென்று சொல்லப்படும் தலங்களோ ரைந்தும்.

(வி - ம்.) விழ் - விரும்புகின்ற. ஒலிந்த - தழைத்த; ஒலியைச் செய்கின்ற எனினுமாம். பஞ்சகமென்பது ஐந்து தலம். (௯௨)

தரைபுகழ் சயந்த புரமரு ளெவர்க்குந் தருங்குமா ராசல மணிகள்
வரைகிடந் திமைக்கும் வேங்கட முந்தி வழங்குசீ பூரண கிரியென்
றுரைதரு நாலெண் ணிருதல முருகற் குறுதல நுமக்கோத்த தலமும்
புரையிலித் தலத்து ளுயர்ந்தநான் கிற்றிற் புகன்றநாற் றலமவை யவற்றுள்.

(இ - ள்.) உலகத்திலுள்ளவர் புகழத்தக்க சயந்தபுரமும், அருளினை யாவர்க்கும் கொடுத்தற்கேதுவாகிய குமாராசலமென்னும் மலையும், முத்துக்கள் மலையிடங்களிற் கிடந்து ஒளிர்கின்ற திருவேங்கடமலையும் முத்தியைக் கொடுக்கின்ற சீபூரண கிரியுமென்று சொல்லத்தக்க அறு பத்துநான்கு தலங்களும் முருகப்பெருமானுக் கன்புமிக்க தலமாகும். குற்றமிலவாகிய இங்குக் கூறிய தலங்களுள் வைத்துயர்ந்தன இறுதி யிற் கூறிய நான்கு தலங்களாகும். அவை (அத்தலங்கள்) நுங்கள் தகு திக்கொத்த தலமாகும். அவற்றுள் சீபூரணகிரி நூற்றிருபத்தெட்டினு மேலாய் விளங்கும் என அடுத்த பாட்டுடன் கூட்டுக.

(வி - ம்.) சீபூரணகிரி - தணிகைமலை. (௯௩)

மதந்தவி ரடியார் வாதனை மலமும்
வாட்டுசீ பூரண கிரியாம்
விதந்தநூற் றிருபத் தெட்டினு மேலாய்
விளங்குமால் வினைக்குறும் பொதுக்கிப்
பதந்தர வல்ல சத்திய விரத
பாற்கர க்ஷேத்திர மாகி
இதந்தரு மிறைவற் கருண்மொழி கொடுத்த
திதுவலா தின்மையின் மாதோ.

(இ - ள்.) ஆணவமலம் நீங்கிய மெய்யடியார்களின் வாசனாமலத் தினையும் கெடுக்கின்ற சீபூரணகிரி எம்மாற் சிறப்பித்துச் சொல்லப்

பெற்ற நாற்றிருப்பத்தெண் டளிகளினும் மேலாகி விளங்கும். வினையின் சேட்டைகளை நீக்கி வீடுபேற்றினைத் தர வன்மையையுடைய சத்திய விரத சூரியனுக்குரிய தானமாகி (மக்கள் முதலியோர்க்கு) இன்பினைத் தரவல்ல சிவபெருமானுக்குச் செவியறிவுறுத்தது இத்தலமல்லாமல் வேறு தலம் இல்லையான்.

(வி - ம்.) உம்மை உயர்வு சிறப்பு. பாற்கரன் - சூரியன். சேத்திரம் - க்ஷேத்திரம் என்பதன்றிரிவு. இதம் - இன்பம். அருண்மொழி-செவியறிவுறுத்தல் ஆணவம் நீங்கியும் வாசனை நீங்காதாதலின் அவ்வாசனாமலத்தையும் என்றுரிமை கொடுத்தோதினர். (௫௭)

என்றுமோ ரியல்பி னின்றிடுஞ் சீபூ
ரணத்தினை யாயிடை வதிவோர்
மன்றநன் றுறலா லப்பெயர்த் தாகும்
வானவர் திருவெலா நிரம்பி
நின்றிட லானு மப்பெய ரதற்கு
நிகழ்த்துவர் கணிகமாத் திரையின்
வென்றிகொள் வரங்கள் வழங்கலிற் கணிக
வெற்பென மிகுமொழி யுடைத்தால்.

(இ - ள்.) எக்காலத்தினுமொரு தன்மையதாக நிற்கின்ற சீபூரணகிரி ஆண்டுத் தங்குகின்றவர்கட்கு நிச்சயமாக வீட்டினைத் தருதலால் அச்சீபூரணமென்னும் பெயரினையுடையதாகும். தேவர்கள் செல்வமெல்லாம் நிறைத்து நிற்றலான் அச்சீபூரணமென்னும் பெயரினையிட்டும் மலையை வழங்குவார்கள். கணநேரத்தில் மேன்மையைக்கொண்ட வரங்களை (விரும்பியவர்க்கு) வழங்குதலால் கணிகமலையென உயர்த்துச்சொல்லும் மொழியினையுமுடையது.

(வி - ம்.) ஸ்ரீ. திரு. பூரணத்தினை - முத்தியாகிய நிறைவை. நன்று - வீடு. கணிகம் - க்ஷணிகமென்பதன்றிரிவு. வென்றி - மேன்மை.

மூலமா யுலக முழுவதும் படைத்த
முதல்வனை முருகனைத் தனக்கு
மூலமாக் கொண்டு வணங்கலின் மூலாத்
திரிவைக ளுறுமலர் மூன்று
கோலமார் காவி யுயிர்த்தலி னல்ல
காத்திரி குமைத்திடுங் கற்ப
காலமு மழியா திருத்தலிற் கற்ப
சித்தமர் தணிதலிற் றணிகை.

(இ - ள்.) காரணமா யுலகமுற்றினு முளவாக்கிய சிவபெருமானை முருகக் கடவுளைத் தனக்கு மூலகாரணமாகக்கொண்டு வணங்குதலினால் மூலாத்திரியாம். நாடோறும் மூன்று மலர்களை அழகுபொருந்திய காவிக்கொடி பூத்தலின் இருளிரம்பிய காவியத்திரியாம். (இறை

வன்) சங்கரிக்கின்ற கற்ப முடிவிலும் அழியாதிருத்தலின் கற்பசித்தாம். அமர்தணிதலினாலே தணிகையாம்.

(வி - ம்.) மூலம் - காரணம். காவியத்திரி - காத்திரி என விகாரமாயிற்று. அத்திரி - மலை. சித்து-அழிவில்லாதது. ஒரு காவிக் கொடி மூன்று காவி மலரைப் பூக்கின்ற தென்க. (௯)

பிரணவப் பொருளை யுணர்த்தலிற் பிரண
வார்த்தமா நகரமிந் திரற்கும்
வரமளித் திடலா லிந்திர நகரி
மகதியாழ் முனிக்குறு பிரியம்
விரவிய சிறப்பா னாரதப் பிரியம்
வீட்டினை யகோரனென் றுரைக்கும்
அரிறபு தவந்தோற் குய்த்தளித் திடலா
லகோரகை வல்லியப் பிரதம்.

(இ - ள்.) பிரணவமென்னும் மந்திரத்தின் பொருளை (இறைவனுக்கு) உணர்த்தினமையாலே பிரணவார்த்த மாநகரமாகும். இந்திரனுக்கு வேண்டிய வரங்களை யளித்தலினாலே இந்திர நகரியாம். மகதியென்னும் யாழினையுடைய நாரதமுனிவனுக்கு மிக்க பிரியங்கலந்த சிறப்பினாலே நாரதப் பிரியமென்னும் பெயரையுடையதாம். வீடுபேற்றினை அகோரனென்று சொல்லப்படும் குற்றம் நீங்கியோனுக்குக் கொடுத்துக் காத்தலின் அகோர கைவல்லியப் பிரதமென்னும் பெயரினை யுடையதாம்.

(வி - ம்.) அரில் - குற்றம். அகோரன் - ஒரு முனிவன். (க௦)

இறுதியிற் கிளந்த விந்நாற் பெயரு
மீண்டிய முதலுக நான்கும்
முறைமையி னெவ்வொன் றுரிமையி னெடுத்து
மொழிந்திடப் படுமெந்த வுகத்தும்
மறுமுத றுமிக்கும் வளங்கெழு சீபூ
ரணப்பெயர் வழங்கிடப் படுமால்
அறிமினோ குறிக ளந்திருக் குன்றந்
றனுக்கடை யாளமுங் கேண்மின்.

(இ - ள்.) இறுதியிற் கூறிய இந்நான்கு பெயரும் பொருந்திய முதலுக முதலிய நான்கு யுகங்களுக்கும் முறைமையிலெவ்வொன்று உரிமையோடு வழங்கப்படும். எந்த யுகத்திலும் குற்றத்திற்குரிய காரணங்களைக் கெடுக்குஞ் சீபூரணப் பெயர் வழங்கப்படும். இத்திருமலைக்குரிய பெயர்களை அறிமின்கள். அத்திருமலைக்குரிய அடையாளமுஞ் சொல்லக் கேண்மின்கள்.

(வி - ம்.) மறு - குற்றம். முதல் - காரணம். குறி - பெயர். (கக)

தெண்டிரைக் கங்கைக் காசிமா நகர்க்குத்
தெனாதியோ சனையிரு நூற்றின்
வண்டமிழ்க் காஞ்சி வடாதிரண் டனிற்கீழ்
வளைகடன் மேற்றிசை யைந்தில்
தொண்டர்சூழ் விரிஞ்சை வடகிழக் கெல்லை
மூன்றினிற் றுலங்குகா ளத்தி
அண்டர்சூழ் வரைக்கு நிருதிமுன் றரையி
னரசுவீற் றிருப்பதக் குன்றம்.

(இ - ள்.) தெள்ளிய அலையோடு கூடிய கங்காநதியாற் சூழப்பெற்ற காசியாகிய பெரிய நகரினுக்குத் தெற்கே இருநூறு யோசனை தூரத்தின் கண்ணும், வளப்பம் பொருந்திய தமிழினையுடைய காஞ்சிமா நகர்க்கு வடக்கே இரண்டு யோசனை தூரத்தின் கண்ணும், கிழக்கே வளைந்துள்ள கடலுக்கு மேற்றிசை ஐந்தியோசனை தூரத்தின் கண்ணும், அடியார்கள் சுற்றி வணங்குகின்ற திருவிரிஞ்சை நகரத்தின் வடகிழக்கெல்லையினின்றும் மூன்றியோசனை தூரத்தின் கண்ணும், தேவர்கள் சூழப்பெற்ற விளங்குகின்ற திருக்காளத்தி மலைக்குத் தென்மேற்குத் திசையின் மூன்றரை யோசனை தூரத்தின் கண்ணும் அத்தணிகைமலை வேறொன்றற்கில்லாத சிறப்புடனிருப்பதாகும்.

(வி - ம்.) தெனாது - தெற்கில். வடாது - வடக்கில். வளைகடல் : வினைத்தொகை. (௬௨)

குழவிவெண் மதிய மிலைச்சிய வேணிக்
குருபரன் பிரணவப் பொருளை
விழைதகத் தவத்திற் பெற்றுவீ ராட்ட
காசஞ்செய் வீராட்ட காசம்
அழலவிர்ந் தனைய நெட்டிலைக் கதிர்வே
லவாயினி தமர்ந்தருள் குமரன்
சுழல்பவங் குமைக்குந் தன்பெயர் விளங்கத்
தொழுஞ்சிவக் குறியுமாங் குளவால்.

(இ - ள்.) இளமையாகிய வெள்ளிய பிறைச்சந்திரனைச் சூடிய சடாபாரத்தினையுடைய குருபரனாகிய சிவபெருமான் பிரணவார்த்தத்தினை விருப்பந்தகத் தவஞ்செய்து பெற்று வீரநகை செய்த வீராட்டகாசம். அக்கினி விரிந்தாலொத்த நீண்ட இலை வடிவினையுடைய ஒளியோடுகூடிய வேற்படையை விரும்பி இனிதாக எழுந்தருளியுள்ள குமாரக்கடவுள் (பிறப்பிறப்பிற்) சுழலுதற் கேதுவாகிய பாவங்களைக் கெடுக்கும் தன் பெயர் விளங்கும் வண்ணம் தொழுகின்ற குமரேசலிங்கம் அத் தணிகையின் கண்ணுள்ளன.

(வி - ம்.) வீராட்டகாசம் - வீரநகை செய்தல். சுழல்பவம்-(பிறப்பிறப்பிற்) சுழலுதற் கேதுவாகிய பாவம். தன், ஈண்டுக் குமரக்கடவுள்.

குன்றவர் மடந்தை குவிமுலை மார்பிற்
கோட்டுமண் கொளப்புணர் வேலோன்
அன்றுமெய் யன்பிற் போற்றிய வாபச்
சகாயனென் றடற்களிற் றிறையும்
மன்றலங் கமலத் தயன்படைப் பினையோன்
வழங்குமா றருந்தவ முஞற்றி
ஒன்றிய வுளத்தான் வழிபடு மெண்டோ
ளுத்தமன் குறியுமற் றுளவால்.

(இ - ள்.) குன்றவாணர் புதல்வியாகிய வள்ளிநாயகியாருடைய குவிந்த கொங்கைகள் குத்திப் பெயர்க்குமாறு கூடுகின்ற மார்பினையுடைய முருகக் கடவுள் நன்மை யமைந்த மெய்யன்பினால் வழிபட்ட ஆபச்சகாயனென்று சொல்லப்படுந் திருப்பெயரினையுடைய வலிமை பொருந்திய யானைமுகப்பிரானும், வாசனை பொருந்திய தாமரை மலரினெழுந்தருளியிருக்கின்ற பிரமனுக்குதற் றொழிலைக் குமாரக்கடவுள் செய்யும் வண்ணம் அரிய தவத்தைச் செய்து ஒற்றுமைப்பட்ட திருவுள்ளத்தோடு வழிபாடு செய்த எண்டோள்களையுடைய உத்தமனாகிய குமாரலிங்கமும் அங்குள்ளனவாகும்.

(வி - ம்.) கோட்டுமண் கொளல்—குத்திப்பெயர்த்தல். வேலோன்-முருகன். குவிமுலை கோட்டுமண் கொளப் புணர்மார்பின் வேலோன் எனக் கூட்டுக.

இதனை,

"வாருயர் பெண்ணை வருகுரும்பை வாய்ந்தனபோல்
ஏரிய வாயினு மென்செய்யும்—சீரிய
கோட்டானைத் தென்னன் குளிர்சாந் தணியகலம்
கோட்டுமண் கொள்ளா முலை."

என்னு முத்தொள்ளாயிரச் செய்யுளா னறிக. (௧௨)

குருமொழி வேட்டு நந்திமா தவங்கள்
குயிற்றிய குகையுமற் றவற்கு
மருமலர் கடப்பந் தாரினு னழைத்த
மணித்திரை நந்திநந் தினியும்
பொருவில்செந் தமிழ்க்கு முதற்குரு வாகப்
பொலிவரும் வரையுரங் கிழித்த
முருகனுய்த் தளிப்ப வகத்தியன் போற்று
மொய்யொளி யிலிங்கமு முளவால்.

(இ - ள்.) செவியறிவுறுதலை விரும்பி நந்தியெம்பெருமான் தவங்களைச் செய்த குகையும், அந் நந்தியெம்பெருமானுக்கு வாசனை விரியும் கடப்பமாலையை யணிந்த முருகப்பெருமா னழைத்தருளிய

முத்துக்களையுடைய அலைகளோடுகூடிய நந்திநந்தினி யென்னும் நதியும், ஒப்பில்லாத தம்மிற்றக்கு முதற்குரவனுகப் பொலிதற் கேதுவாகிய வரத்தினைச் கிரௌஞ்சகிரியின் மத்திய பாகத்தைப் பிளந்த முருகப் பெருமானருளிச் செய்ய, அகத்திய முனிவன் போற்றுகின்ற மிக்க ஒளியையுடைய இலிங்கமு மங்கணுள்ளனவாகும்.

(வி - ம்.) குருமொழி-உபதேசம். நந்திநந்தினி - ஓர் நதி. (சுரு)

இந்திரன் பிரமன் மாதவன் சேட
 னிவர்வலிச் சூரன்கைக் கவர்ந்த
அந்தமி றங்கள் வளம்பெற வேண்டி
 யருச்சித்த வருட்குறி பலவும்
சுந்தர மனையை யிழந்தமா லரன்பாற்
 றுகளறு பெருந்தவ மாற்றி
மைந்துபெற் றெண்ண முற்றிமீண் டருளை
 வழங்கவாழ் சேக்கையு முளவால்.

(இ - ள்). இந்திரனும், பிரமனும், விண்டுவும், ஆதிசேடனுமாகிய இவர்கள் நெறிகடந்து செல்கின்ற வலியையுடைய சூரன் கைப் பற்றிய அழிவில்லாத தங்கள் செல்வங்களைப்பெற விரும்பி அருச்சனை செய்த அருளோடுகூடிய இலிங்கங்கள் பலவும், அழகினையுடைய மனைவியாகிய சீதையை இழந்த இராமன் சிவபெருமானிடத்திற் குற்றமற்ற பெரிய தவத்தினைச்செய்து (பகையை வெல்லும்) வலிமையைப் பெற்று எண்ணிய எண்ணங்களு முற்றுப்பெற்று மறுபடியும் அருளை வழங்க வாழ்கின்ற இடங்களுமுள்ளன வாகும்.

(வி - ம்.) இவர்தல் - நெறிகடந்து சேறல். வளம் - செல்வம். சுந்தரம் - அழகு. சேக்கை - இடம். (சுசு)

பாடகம் பொலிந்த திவவியாழ் முனிவன் வந்தனை புரியருட் குறியும்
பீடகம் பொலிந்த வம்முனி மொழியப் பெருகிய வோகையி னிளையோன்
தோடகம் பொலிந்த வினர்மலர்க் கூந்தற் சுந்தர வல்லியை மணந்து
பாடகம் பொலிந்த வடிப்பிடி யோடும் பயிலுமப் பருப்பத முடைத்தால்.

(இ - ள்.) மனத்துட் பெருமை பொலிவுபெற்ற அந் நாரத முனிவன் சொல்லப் பெருகிய மகிழ்ச்சியான் முருகக்கடவுள் சென்று இதழ்களைத் தன்னகத்தே கொண்டு விளங்கிய பூங்கொத்துக்களையுடைய கூந்தலோடுகூடிய சுந்தரவல்லியாகிய வள்ளியம்மையாரை மணந்து, பாடகமென்னும் மணி பொலியப்பெற்ற அடியினையுடைய தெய்வயானையாருடனும் தங்கும் அத்தணிகை மலையானது, முருக்காணிகளாற் பொலிந்த நரம்புக் கட்டினையுடைய யாழ் ஏந்திய நாரத முனிவன் வணக்கம்புரியும் சிவலிங்கத்தையும் உடையது.

(வி - ம்.) பாடகம் - மகளிர் காலிலணியும் ஒருவகையணி; ஆசிரியர் நச்சினார்க்கினியர் "ஒரு கம்பியாய், பல முடக்காலே போக்குவரவுமுண்டாற்றாற் போலத் தோன்றிக் காலைவிடாதே கிடக்கும்" என்றனர்.

சிந்தா - காந்தரு. 17. செய். உரை. மலரிணர்க் கூந்தலெனா மாற்றுக. சிவலிங்கத்தையும் பருப்பத முடைத்தெனக் கூட்டுக. (௧௭)

கடம்பணி குமர னான்முகன் றிருமால்
கதிர்மணிச் சேடனா ரதனார்த்
தடம்புயக் குலிசத் திந்திரன் செழுந்தீந்
தமிழ்முனி பெயரினால் விளங்கும்
இடம்படு தீர்த்தஞ் சிவகங்கை யெட்டு
மியம்பிய நந்திநந் தினியும்
மடந்தபு நும்மால் விளங்குமேழ் சுனையும்
மணிவரை யண்மையி னுடைத்தால்.

(இ - ள்.) கடப்பமாலையை யணிந்த முருகப்பெருமானும் திருமாலும் ஒளியோடுகூடிய மணிபொருந்திய ஆதிசேடனும், நாரதமுனிவனும், மாலையை யணிந்த புயத்தோடுகூடிய வச்சிராயுதத்தையுடைய இந்திரனும், செழித்த இனிமையாகிய தமிழ் முனிவனாகிய அகத்தியனும் ஆகிய இவர்கள் பெயரினால் விளங்குகின்ற தீர்த்தமேழும் சிவகங்கையொன்றும் ஆகிய எட்டும், மேற்கூறிய நந்திநந்தினி யென்னும் நதியும், நுங்கள் பெயரால் விளங்குகின்ற ஏழு சுனைகளுமாகிய இவற்றை அழகிய தணிகை மலையானது அண்மைக்கண் உடையதாம். (௧௮)

நறுமணங் கமழுந் தாமரை நிகர்த்த
நகைமுக மாறுமெல் லுமிழும்
மறுவறு மணிகள் வயின்வயி னிமைத்து
மல்கிருட் செறிவுகால் சீக்கும்
அறுமணிக் குவடா யறுமுகத் திறையே
யாயதா லடைந்தவ ருயிர்மேற்
கொறுகொறுத் துழலும் வல்வினைப் பகையைக்
கொலைபுரிந் தருளுமக் குன்றம்.

(இ - ள்.) நல்ல வாசனை வீசுகின்ற தாமரைமலரை யொத்த (முருகப் பெருமான்) விளங்குகின்ற திருமுகங்களாலும், ஒளியைக் கக்குகின்ற குற்றமற்ற இரத்தினங்கள் இடமிடங்கடோறும் பிரகாசித்து நிறைந்த செறிவைத் துடைக்கும் ஆறழகிய சிகரங்களாகி அறுமுகக் கடவுளே யானதனால் ஆண்டடைந்தவர்களுயிரிடத்துக் கோபித்துச் சுழலுகின்ற வல்வினையாகிய பகையைக் கொலைசெய்தருளும் அக்குன்றம்.

(வி - ம்.) ஆறுமுகங்களும் ஆறு சிகரமாகி யம்மலை அறுமுகப்பெருமான் திருவுருவாயிருந்தன வென்பார். "அறுமணிக் குவடாய் அறுமுகத் திறையே யாதலான்" என்றார். கொறு கொறுத்தல் - கோபித்தல்: குறிப்புச் சொல்லாகிய இரட்டைக்கிளவி. இதனை

"இனிச்சிறி தெழுந்து வீங்கி யிட்டிடை கோறும் நாங்க
ளெனக்கொறு கொறுப்ப போலு மிளமுலைப் பரவை யல்குல்"

எனவரும் சிந்தாமணி சுரமஞ்சரியாரிலம்பகம் சுகூ ஆம் செய்யுளடியானு முறை யாறுமுணர்க. (சுக)

சேயிடை யிருந்து கேட்பினுந் தொழினுஞ்
செப்பினும் சிந்தர்வைத் திடினும்
ஆயிடை வதிந லாதிகள் செயினு
மலகில்பல் பவத்தினு மீட்டும்
மாயிரு வினையுஞ் சவட்டிமீ ளாத
வரம்பிலின் புறுத்துவ தென்றால்
காயிலை வேலோன் றணிகையின் பெருமை
கட்டுரைக் கடங்குவ தன்றே.

(இ - ள்.) இத்தணிகை, சேய்மைக்கண்ணே ஒருவனிருந்து கேட்டாலும் வணங்கினும், சொல்லினும், மனதிற் றியானிப்பினும், அச்சேய்மைக்கண்ணே தங்குதல் முதலிய செய்யினும் கணக்கிட இயலாத பல பிறவியினின்று மீட்டும் பெரிய நல்வினை தீவினையாகிய இருவினைகளையும் கொன்று ஒரு ஞான்றும் திரும்பிவாரா நிலைமையாகிய வீட்டின்பத்தினைச் சேர்க்குமென்றால், பகைவரை வருத்துகின்ற தகட்டு வடிவத்தினையுடைய வேற்படையினையுடைய முருகக்கடவு ளெழுந்தருளியிருக்கின்ற தணிகைமலையின் பெருமை தொடுத்துச் சொல்லும் சொல்லளவிற் கடங்குவ தன்றே.

(வி - ம்.) சவட்டி – கொன்று; "பஞ்சாய்க் கோரை பல்லிற் சவட்டி" என்னும் பதிற்றுப் பத்தடியா னுணர்க. வரம்பிலின்பு - அளவிட முடியாத வின்பம்; வீட்டின்பம். (எ0)

இன்னணஞ் சிறந்த வுற்பல வரையை
யெய்தியாங் கினிதுவீற் றிருக்கும்
மின்னவிர் நுதிவேல் வீரனைப் பணிந்து
மேதக வதிந்தவ னருளால்
துன்னிய மலவா தனைவிடை கொள்ளத்
துலங்கிய சாக்கிரா தீத
பன்னியின் புருவா யாணவ நிலைபோன்
மருவுதி ரெனப்பணித் திட்டான்.

(இ - ள்.) இன்னணம் சிறப்புற்றனவாகிய காவியத்திரியை யடைந்து அவண் இனிதெழுந்தருளி யிருக்கின்ற மின்னலைப்போல விளங்குகின்ற கூர்மைபொருந்திய வேற்படையையுடைய முருகக் கடவுளை வணங்கி மேன்மைபொருந்த ஆண்டுத் தங்கி அப்பெருமானருளால் அநாதியாகப் பொருந்திய மலங்களின் வாசனை விடைபெற்றுச் செல்லச் சிவத்துவம் விளங்கிய சாக்கிராவத்தையின் நின்மல

துரியாதீதத்தைப் பொருந்தி ஆநந்தமே வடிவமாய், ஆணவத்தோடத்து விதமானதுபோலச் (சிவத்துடனே) கலந்திருப்பீர்களெனத் திருவாய் மலர்ந்தருளினன்.

(வி - ம்.) உற்பலவரை - காளியத்திரி. மலவாதனை - வாசனா மலம். இதனை "போதமே லாகப் பண்டே புல்லிய மலநோய் தீர்ந்தும், வாதனை தாக்கு மாபோல்" எனவரும் காஞ்சிப்புராணச் செய்யுளா னறிக. "ஞானத்தைப்பெற்று ஞேயத்தைக்கண்ட ஆன்மாவிறுக்கு அக்காட்சி சலிப்படையும் வண்ணம் வாசனை தாக்கி வியாபக அறிவை ஏகதேசப்படுத்தலின் அதனையும் நீக்குதல் வேண்டுமென்பார் "மல வாதனை விடைகொள்ள" என்றார். சாக்கிராதீதம் - சாக்கிராவத்தையி லேயே நின்மல துரியாதீதத்தைப் பொருந்திநிற்றல். ஆணவமலத்தோ டான்மா இரண்டறக் கலந்து நின்றதுபோலச் சிவத்துடனத்துவிதமாக் கலந்து நிற்றல்வேண்டு மென்பார். "ஆணவ நிலைபோல் மருவுதிர்" எனக் கூறினர். இதனை "ஆணவத் தோடத்துவித மானபடி மெய்ஞ் ஞானத் தாணுவினோடத்துவிதம் சாருநா ளெந்நாளோ" என்னும் தாயுமானவர் திருவாக்கானும் "இருள்செய் கேவலம்போற் கலந்திருப் பதே முத்தி" என்னும் திருவானைக்காப் புராண அடியானும் உணர்க. (எக)

அருளிய குரவன் றிருவடிப் போதி
லருந்திறற் பெருந்தவ முனிவர்
இருவிழி பொழிநீர் மண்ணுதல் புரிய
வெழுந்தனர் பலமுறை வீழ்ந்து
திருவடை யாளங் கூறிய முகத்நாற்
றெரித்தனை மான்மியம் விரித்துக்
குருபர வருளென் றிரந்தவன் முழுதுங்
குறைவறத் தெருட்டிடத் தெளிந்து.

(இ - ள்.) திருவாய் மலர்ந்தருளிய பரமாசாரியன் திருவடித் தாமரைகளில் அரிய வல்லமையோடுகூடிய பெரிய தவத்தினையுடைய முனிவர்கள் இரண்டு விழிகளினின்றும் சொரிகின்ற நீரானது கழுவு தலைச் செய்ய எழுந்து பலமுறை வணங்கி அடையாளங் கூறிய முகத் தானே (அத்தலப் பெருமையினைத்) தெரித்தாய், அத்தலத்தின் பெரு மையினை யெல்லாம் ஆசாரியர் பெருமானே விரித்துத் திருவாய்மலர்ந் தருளென்று யாசிக்க அவன் குறைவில்லாமற் றெரிவிக்கத் தெளிந்து.

(வி - ம்.) மண்ணுதல் - கழுவுதல். "மண்ணுதல்சென்ற ஒண் ணுதலரிவை" என்னும் குறுந்தொகைச் செய்யுளடியா னுணர்க. இரந்து தெளிந்து எனக் கூட்டுக. அவன் சனற்குமரன். (எஉ)

மறுவலும் வணங்கிப் புறவிடை கொண்டு
மடங்கனேக் கெனமனங் குரவன்
நறுமலர்ப் பதத்து நாமவே லிறைவ
னளிர்வரைக் குன்றினும் படர

எறிகதிர் வெள்ளி வரைநணந் தாங்க
ணெய்திநா யகனடி பணிந்து
நிறையுள மகிழ்ச்சி தலைசிறந் தனராய்
நெடுவரைத் தெனுதுழிச் சார்ந்து.

(இ - ள்.) மறுபடியும் வணங்கி (மனமாண்டுத் தங்க)ப் புறத்தே விடைபெற்றுக்கொண்டு (முன்னும்பின்னும் நோக்கும்) சிங்கநோக்குப் போல மனமானது ஆசாரியனது வாசனை பொருந்திய தாமரைமலர் போன்ற பாதத்தினிடத்தும், அச்சத்தைத் தரும் வேற்படையையுடைய முருகக் கடவுளின் குளிர்ச்சி பொருந்திய மூங்கிலினையுடைய மலையினிடத்தும் செல்ல ஒளியை வீசுகின்ற வெள்ளியங்கிரியினை நீங்கித் தணிகையின்கண் வந்து பொருந்து முருகக்கடவுளின் பாதங்களை வணங்கி நிறைந்த வுள்ளத்தின்கண் உவகை தலைசிறக்கப் பெற்றவர்களாய் நீண்ட தணிகை வரையின் தென்றிக்கிற் பொருந்தி.

(வி - ம்.) மடங்கனோக்கு - சிங்க நோக்கு. நாமம்+வேல்=நாமவேல் என ஈறுகெட்டது. "மவ்வீறொற்றழிந்" என்னும் நன்னூற் சூத்திர விதிப்படி. தெனுது - மருஉ. (எங)

தொழித்தளி முரலு நந்தன வனமுந்
துறுமலர்ப் பொதும்பரு மணிகள்
கொழித்தலை சுருட்டுஞ் சுனைகளும் படுத்த
கொள்கையின் விளங்கறை பலவும்
செழித்தவிண் ணமர ருள்ளமுங் கவர்க்குந்
திருக்குலாய் மும்மலச் செருக்கும்
அழித்தெழு மருட்கோ ராகர மான
வற்புதச் சூழல்கண் டமர்ந்து.

(இ - ள்.) ஆரவாரித்து வண்டுகள் முழங்குகின்ற நந்தன வனங்களும், துறுத்த மலர்களோடு கூடிய பூஞ்சோலைகளும், முத்துக்களை வீசி அலைகள் மறித்து வருகின்ற சுனைகளும், பதித்துவைத்த தன்மையின் விளங்குகின்ற பாறைகள் பலவும் (எல்லா வளங்களாலும்) செழிப்புற்ற தேவருலகத்தின்கண்ணுள்ள தேவர்கள் மனத்தையும் கவருதற் கேதுவாகிய செல்வங்களான் விளங்கி, மும்மலங்களின் செருக்கையும் கெடுத்து அருளினுக்கோரிருப்பிடமான வியப்பைத் தரத்தக்க விடத்தைக் கண்ணுற்றதன்கட் டங்கி.

(வி - ம்.) தொழித்து - ஆரவாரித்து. "கழித்த கடிப்பினையும் கைவளையும் மாலையும் களைந்து முத்துந் - தொழித்த நறுஞ்சாந்தும் சுண்ணமும் பன்மணியும் கலனுஞ் சிந்தி" எனவரும் சிந்தாமணி (முத்தி-371) செய்யுளடியானு முரையானு முணர்க. படுத்த - பதித்த. அறை - பாறை. "படுத்துவைத்தன்ன பாறைமருங்கின்" என்னும் மலைபடுகடாம் (15) அடியானும் உரையானு முணர்க. (எச)

வைகலும் விதியா னுட்கடன் கழிப்பி
பருவுயான் மார்த்தபூ சனையை

நைகர மில்லா வன்பொடு நவிற்றி
நறைகமழ் கடம்பணி தாரான்
செய்கழற் சரண பங்கயம் போற்றித்
தேசிக னருளிய குறியாற்
பொய்கழ லுள்ள நிட்டையைக் கூடிப்
பொருவறு சூழ்ச்சியைக் கொண்டு.

(இ - ள்.) நாடோறும் விதிப்படி காலையிற் செய்யவேண்டிய கடன்களைச் செய்து பொருந்திய ஆன்மார்த்த பூசையை வருத்தம் சிறிது மில்லாத அன்புடனே செய்து வாசனை வீசுகின்ற கடப்பந்தாரினை யணிந்த முருகக்கடவுளின் சிவந்த வீரக் கழலோடுகூடிய பாதமாகிய தாமரைகளை வணங்கி ஆசிரியன் அருளிய அடையாளங்களால் பொய் நீங்கிய மனமானது நிட்டையினிடத்துப் பொருந்தும் ஒப்பில்லாத ஆராய்ச்சியை மேற்கொண்டு.

(வி - ம்.) கழிப்பி – செய்து. நைகரம் - துன்பம். நவிற்றி – செய்து. குறி - அடையாளம். செய்ய வென்பதன் ஈறுதொக்கது. சூழ்ச்சி – ஆராய்ச்சி. (௭௫)

ஆதியி றில்லா வைந்தெழுத் தைந்து நிலையினு மாம்வகை யுணர்ந்து
தீதுசே ரிரண்டு நிலையினு நீங்கித் திகழ்நிலை யிரண்டினும் பயின்று
பேதமே யபேதம் பேதமோ டபேத மெனப்படும் பெருநிலை யாய
ஞாதிரு ஞான ஞேயமுந் திகழா நன்மையிற் றொன்மைய ராவார்.

(இ - ள்.) தோற்றமு மிறுதியும் இலவாகிய பஞ்சாக்கரத்தினை, சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதமென்னு மைந்த வத்தையின் கண்ணும் (நிற்கும் வகைக்கேற்ற) ஓதுமுறையை (ஆசிரியன்பாற்) கேட்டுணர்ந்து குற்றம்பொருந்திய சாக்கிரம் சொப்பன மென்னும் இரண்டவத்தையினின்றும் நீங்கி (சிவத்துவம்) விளங்குதற் குரிய துரியம் துரியாதீதமென்னும் மிரண்டவத்தையின் கண்ணும் பழகி, பேதம் அபேதம் பேதாபேதம் என்று சொல்லப்படும் மூன்றுந் தன்கட் டோன்ற நிற்கின்ற நின்மல துரியாதீதமாகிய காண்பானும் காட்சியும் காணப்படு பொருளுமாய்ப் பகுப்புற விளங்காத சிவானந்தப் பேற்றின் பண்டைப் பரிசினையுடைய ராயினரென்க.

(வி - ம்.) சுத்தாவத்தையைந்திலும் உயிரும் முதல்வனும் மாறி அக்கரங்கள் மாறி நிற்றன் முறைக்கு ஏற்ப மாறியோதல் வேண்டுமாதலின் ஐந்தெழுத்தினை ஐந்து நிலையினுக்கேற்ப ஆம்வகை யுணர்ந்தென்றார். இங்குக் கூறிய ஐந்தவத்தைகளும் சுத்தாவத்தை யென்க. இனி யொரு சாரார் இரு நிலையினும் நீங்கியென்பதற்குச் சாக்கிரம் சுழுத்தி யாகிய இரண்டு நிலையினின்றும் நீங்கியெனவும், "திகழ்நிலையிரண்டி னும் பயின்" றென்பதற்கு சொப்பனம் துரியமாகிய இரண்டு நிலையி னும் பழகுதல் செய்தெனவும் கொள்வர். துரியாதீதத்துப் பெருன்மை போலாவரெனக் கூட்டுக. ஐந்தெழுத்தும் அவ்வைந்து நிலையினும் நிற்கு முறையாகிய ஓது முறை. "தீதுசேரிரண்டு நிலையாவன - நின் மல சொப்பனமும் நின்மல சுழுத்தியுமாம், "திகழ்நிலை யிரண்டாவன-

நின்மல துரியம் துரியாதீதமாம். இதனை ''ஆவியும் கண்ணுத''லென்னும் இந்நாற் களவுப் படலம் 585 ஆம் செய்யுளானறிக. பேதம் அபேதம் பேதாபேதம் ஆகிய மூன்றும் தன்கட் டோன்ற நிற்றலே நிலையென்க. இங்ஙனம் கூறப்படும் பெரு நிலையாகிய நன்மை யென்க. பெருநிலை-நின்மல துரியாதீதம். தொன்மை - பண்டைப் பரிசு. (எசு)

அத்தகு வரைப்பி னெழுசுனை யாடி
யருந்தவ மாதிக ளியற்றின்
சித்தமா சிரிய விழிஞரு மொல்லை
சிவத்தினைச் சிவனுவர் கண்டீர்
இத்தகுமுனிவ ரெழுவர்க்கு நந்தி
யெம்பிராற் குரியமா னுக்கன்
மெய்த்தவக் குமரன் விளக்கிய ததனை
வினைச்சம மிலார்க்குரைக் கொணுதால்.

(இ - ள்.) அத்தன்மைத்தாகிய தணிகையின் கண்ணுள்ள ஏழு சுனையின் கண்ணு மூழ்கி அரியதவ முதலியவற்றைச் செய்து மனத்தின் கண்ணுள்ள குற்றமானது நீங்கத் தாழ்ந்தவரும் விரைவாகச் சிவத்தினே டிரண்டறக் கலப்பார்கள். இத்தகுதியையுடைய முனிவர் ரெழுவர்க்கும் எம்பிரானுகிய நந்திக்குரிய உண்மையாகிய தவத்தினையுடைய சனற்குமரன் விளக்கியதாகிய அப்பொருளை இருவினையொப்பு வாராதார்க்குச் சொல்லுத லியலா தென்க.

(வி - ம்.) இழிஞர் - பிராகிருதர். வினைச்சமம்-இருவினையொப்பு.

என்றுமா தவத்துச் சூத்மா முனிவ னியம்பலு மரும்பெரும் பொருளை
இன்றுநாங் கேட்ப முன்புநாம் புரிந்த விருந்தவ மிருந்தவா வென்னென்
றென்றுமா னந்தக் கண்கனீர் பாய வுருகிய வுளத்தொடு மெழுந்து
நின்றுவான் முனிவ ராங்கனோ ரைய நீத்திடக் கடாவின ரன்றே.

(இ - ள்.) (வினைச்சம மிலார்க்குக் கூறொணு) என்று பெரிய தவத்தினையுடைய சூதமுனிவன் திருவாய்மலர்ந்தருள இவ்வரும்பெரும் பொருளை யாம் இன்று கேட்ப முன்னர் யாமியற்றிய பெருந்தவமிருந்தது என்ன ஆச்சரியமென்று சொல்லிப் பொருந்திய ஆனந்தக் கண்ணீரொழுக இளகிய உளத்தோடு மெழுந்து நின்று உயர்ச்சி பொருந்திய முனிவர்களப்பொழுதுளவாகிய ஓரையத்தினை நீக்க வினவுதலுற்றனர்.

(வி - ம்.) இருந்தது ஆ-இருந்ததென்ன ஆச்சரியம். வான்-உயர்வு.

முனிவர ரெழுவர் கேட்டுளந் தூய்மை
முற்றின ரெனமொழிந் தனையம்
முனிவரர் யாவ ரத்தகு காதை
மொழிந்தருள் காலமேக் காலம்

கனிவருந் தீஞ்சொற் கட்டுரை யென்னக்,
கடாவுத வியமுனி வரர்க்குப்
புனிதவெண் ணீற்றுச் சூதமா முனிவன்
போக்கரு விடையெதிர் கொடுக்கும்.

(இ - ள்.) எழு முனிவர்கள் கேட்டு மனமாசு நீங்கிப் பரிசுத்த மெய்தினரென்று திருவாய்மலர்ந்தருளினாய். அம்முனிவரர் யாவர். அத்தகு காதையினைத் திருவாய்மலர்ந்தருளிய கால மெக்காலம். கனியின் இரதத்தை யொத்த தித்திப்பாகிய சொற்களாற் றொடுத்துத் திருவாய் மலர்ந்தருளுவாயென வினவிய முனிவர்களுக்குப் பரிசுத்தமாகிய வெண்ணீற்றினை யணிந்த பெரிய தவத்தினையுடைய சூதமுனிவன் குற்றமிலவாகிய விடையினைத் திருவாய்மலர்ந் தருளுவான்.

(வி - ம்.) கனி - ஆகுபெயர். வரும் - உவமைச்சொல், இதனை "அரவரு நுண்ணிடைக் குரவரு கூந்தலென் - றுள்ளக்கருத்து விள்ளா ளென்றது" என்னும் திருக்கோவையார் அக ஆம் செய்யுட்கொளுவானு மதன் விசேடவுரையானு முணர்க. (எகூ)

வேறு

கறங்கு மணிவெண் டிரைமுகந்த கமஞ்சூற் கொண்ட லெனவரவின்
உறங்குங் கடவுண் மலர்க்கமல வுந்தி யெழுந்த நரைத்தலையோன்
பிறங்கிப் பகலிற் பதினால்வர் பிழை பெருக்கு மிடிகடியா
அறங்கள் கிளரத் தனிச்செங்கோ லளிக்கு மனுக்க ளுளரவருள்.

(இ - ள்.) ஒலிக்கின்ற முத்துக்களை வெள்ளிய அலைகளையுடைய கடலின்கண் ணீரை முகந்த நிறைந்த சூலினையுடைய மேகமென்று சொல்லும்வண்ணம் ஆதிசேடன்மீது யோகநித்திரை செய்கின்ற விண்டு திருவுந்தித் தாமரையின் கண்ணே தோன்றிய வெளுத்த தலையினையுடைய பிரமன் விளங்குகின்ற பகற்காலத்திலே பதினால்வர்கள் துன்பினை மடுத்தற் கேதுவாகிய வறுமையை நீக்கித் தருமங்கள் விளங்க ஒப்பற்ற செங்கோலினைச் செலுத்தி உலகினைக் காக்கின்ற மனுக்களுள்ளார்கள், அவர்களுள்.

(வி - ம்.) கமம் - நிறைவு; "கம நிறைந் தியலும்" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தானறிக. நரைத்தலையோன்-பிரமன். பிழை-துன்பம். (அ0)

முந்து மரசன் சுவாயம்பு பிரிய வரதன் முதனால்வர்
மைந்தர் தேவர் யாமாதி மகவா னரியே யுரிசிமுனி
சந்த முலையா கிருதிதனைத் தழுவி யுயிர்த்த சுயக்கினன்மால்
புந்தி நுனித்த புலத்தியனை முதலோர் பொருவி லெழுமுனிவர்.

(இ - ள்.) இம்மனுக்களுள் முந்திய அரசன் சுவாயம்புமனுவாகும். அவன் புதல்வர்கள் பிரியவரதன் முதலாகிய நால்வர்கள் தேவர்கள் யாமுதலிய ஏனைய தேவர்கள். இந்திரன் - அரியென்னும் பெயருடைய

வன். விண்டு, உருசிமுனி சந்தனத்தையணிந்த ஆகிருதி என்பவளைக் கூடிப்பெற்ற சுயக்கினனென்னும் பெயரினையுடையான். முனிவர்கள் கூரிய மதியினையுடைய புலத்தியன் முதலாகக் கொண்ட எழுவரென்க.

(வி - ம்.) இவ்வெண்பத்தொன்றாஞ் செய்யுள் முதல் தொண்ணூறாஞ் செய்யுள்வரை, மனு அரையன், அவன் புத்திரர், தேவர், இந்திரன், திருமால், முனிவர் பெயர் முதலியன முறையே வருமாறுணர்ந்து கொள்க. (அக)

தோற்று மிரண்டா மனுவேந்தன் சுவாரோச் சிடனே யவன்மைந்தர்
ஆற்ற லுயுமத் தாதியர்க ளமரர் திவிடி தனைமுதலோர்
வீற்று மகவா னுரோச்சனன்மால் வேத சரசு திவிடிதைபெற்
றேற்ற விபுபு முனிவர்க ளூர்ச்சத் தம்பன் முதலெழுவர்.

(இ - ள்.) இரண்டாவது மனுவரையன் சுவரோச்சிடன், இவன் புதல்வர்கள், பிறர் வலியைக் கெடுக்கின்ற மத்தாதியர்கள். தேவர்கள் திவிடி முதலானவர்கள். வேறாகிய இந்திரன் உரோச்சனன். விண்டு வேதசரசென்பவன் திவிடிதை யென்பவளைக் கூடிப் பெற்றுத் தாங்கிய விபு என்பவனும். முனிவர்கள் ஊர்ச் சத்தம்பன் முதலாகிய எழுவர்களாவர்.

(வி - ம்.) இனித் திவிடிதன் ஐ எனப் பிரிப்பாருமுளர், திவிடி தன்னை யென்பதிற்றன் ஐ சாரியை. (அஉ)

மூன்று முறைவேந் துத்தமனே மூரிப் பவனன் முதலானோர்
ஆன்ற மைந்தர் சத்தியன்முன் னானோர் சுரர்சத் தியசித்து
வான்ற னிறைமால் சூனுருதைமறைதேர் தரும னெனுமுனிவற்
கீன்று வளர்சத் தியசேன னெழுவர் பிரம தாதிகளே.

(இ - ள்.) மூன்று முறைமையின் வந்த மனுவரையன் உத்தமனாகும். அவன் புதல்வர்கள் வலியையுடைய பவனன் முதலானவர்கள். தேவர்கள் சத்தியன் முதலானவர்கள். தேவருலகத் திறைவனாகிய இந்திரன் சத்திய சித்தென்பவனும். விண்டு வேதங்களை யாராய்ந்தறிந்த தருமனென்னு முனிவனைச் சூனுருதை யென்பவள் கூடி யீன்று வளர்த்த சத்தியசேன னென்பவனும். முனிவர்கள் பிரமது முதலிய எழுவர்களும் ஆவர்.

(வி - ம்.) மூரி - பெருமை. வான் - தேவலோகம். (அங)

பெருமை பிறங்குஞ் சனற்குமரன் பெருமை மலர்த்தாண் முடிசூடி
அருமை மறையந் தத்தெளிவா யமைந்த சைவ சித்தாந்தம்
ஒருமை யன்பிற் கேட்டுணர்ந்த வுயர்ந்த முனிவ ரிவர்கண்டீர்
இருமை வழங்கு மிதுகாறு மியைந்தோர் தமையு மினிக்கேண்மின்.

(இ - ள்.) பெருமை விளங்குகின்ற சனற்குமர முனிவனது தேன் பொருந்திய தாமரை மலர் போன்ற பாதங்களை முடியின் கண்ணே யணிந்து அருமையாகிய வேத முடிவின் தெளிவாகிப் பொருந்திய சைவ

சித்தாந்தத்தினை ஒற்றுமையுடன் கூடிய அன்பினாற் கேட்டறிந்த உயர்ச்சி பொருந்திய முனிவர்களிவராவார். இம்மை மறுமைப் பயன்களை யளிக்கும் இறைவரை பொருந்தியவர்களையும் இனிக் கூறுவாங் கேண்மின்.

(வி - ம்.) பிறங்கும் - விளங்கும். பிரசம் - தேன். உணர்தற் கருமையான மறைப்பொருள். இருமை - இம்மை மறுமைகள். முற்றும்மை விகாரத்தாற் றொக்கது. (அ௪)

நடலை யுலகத் துயர்துரக்கு நாலா மனுத்தா பதன்மைந்தர்
விடபன் முதலோர் சத்தியகன் முதலா னோர்விண் ணவர்மகவான்
அடல்வல் வினைதீர் திரிசிகன்மா லரினி யரிமே தசுபயந்த
படர்முற் றிரிக்கு மரிமுனிவர் பழிப்பில் சோதி முதலானோர்.

(இ - ள்.) நடுக்கத்துடன் கூடிய துன்பத்தினை நீக்கும் நான்காவது மனுவரையன் தாபதனும். மைந்தர் விடபன் முதலானோர்கள். இந்திரன் மிக்க வல்லமையோடு கூடிய தீவினை நீங்கிய திரிசிகன். விண்டு, அரினியென்பவனும் அரிமேதசுவும் பெற்ற துன்பமுற்றிலும் நீக்குகின்ற அரியென்பவனாகும். முனிவர்கள் குற்றமில்லாத சோதி முதலாகிய எழுவர்களுமாவர்.

(வி - ம்.) நடலை - நடுக்கம். "நடலைவஞ்சனை பொய்யென்ப நடுங்கிய நுடக்க முப்பேர்" என்னும் நிகண்டானறிக. (அ௫)

விரித்த விண்டை விண்ணவர்கள் விதுர்த னுயிர்த்தோ ரொழுக்கனைத்தும்
தெரித்த வேத நான்முழுதுந் தெவ்வா தோப்பி மடமூழ்கி
வரித்த கழற்கா லவுணர்நனி வருத்த வாழ்நாள் வல்லையவண்
இரித்து ளார்வை துருதேய ரென்னும் பெயரு மிவர்க்காகும்.

(இ - ள்) இவ்விடத்து விரித்துக் கூறிய தேவர்கள் விதுர்தனனென்பவன் பெற்றோர்கள். ஒழுக்கமெல்லாவற்றையும் தெரிவித்த வேதநான் முற்றிலுங் கைக்கொள்ளாது ஓட்டி அறியாமையின் கண் மூழ்கிக் கட்டுற்ற வீரக்கழலினை யணிந்த காலோடு அவுணர்களை வருத்த வாழ்கின்ற காலத்து (அவ்வவுணர்களை) அவ்விடத்தினின்றும் கெடுத்துள்ளனர். வைதுருதேயரென்னும் பெயர் இவர்க்குப் பொருந்தும்.

(வி - ம்.) தெவ்வாது - கைக்கொள்ளாது. "தெவவுக் கொளற் பொருட்டே"யென்னும் தொல்காப்பியச் சூத்திரத்தானறிக. ஓப்பி - ஓட்டி. வல்லை - விரைவாக. இரித்தல் - கெடுத்தல். வைதுருதேயர் - பிதிரரில் ஒரு சாரார். (அ௬)

ஐந்தா மனுவேந் தரைவதக னுன்று மைந்த ருச்சுலனை
முந்தை யுடையோர் பூதரதன் முதலோ ரமரர் சதக்கிருது
மைந்து மிகுந்த விபுபுமால் வனைத்தோட் சுருபி சுப்பிரன்பால்
அந்தில் வரும்வை குண்டனிர ணியரோ மனையா தியர்முனிவர்.

(இ - ள்) ஐந்தாவது மனுவரையன் அரைவதகன். பெருமை பொருந்திய பிள்ளைகள் அருச்சுனனை முதலாக வுடையோராவர். இந்திரன் வலிமை மிக்க விபுபு என்பான். தேவர்கள் பூதரதனை முதலா வுடையோராவர். விண்டு வளையலையணிந்த தோளினையுடைய சுருபியென்பவள் சுப்பிரனென்பவனைக் கூடியதனாற்றோன்றிய வைகுண்டனென்பவனாகும். முனிவர்கள் இரணிய ரோமனை முதலாகவுடைய எழுவராவர்.

(வி - ம்.) சதக்கிருது - இந்திரன். மைந்து - வலி. (அஎ)

நவைதசீ ராரு மனுச்சக்கு தந்தோன் சாக்கு தப்பெயரோன்
புதல்வர் புருடன் முதலானோர் புலவ ராப்பியர் கண்முதலோர்
மதவிந் திரன்மந் திரதுருமன் வயிரோ சனற்சம் பூதிபுணர்ந்
துதவு மசிதன் மான்முனிவ ரவியன் முதலா முறுவர்களே.

(இ - ள்.) நிறைந்த சிறப்பினையுடைய ஆறாவது மனுவரையன் சக்குவென்பவனாற் பெறப்பட்ட சாக்குதனென்னும் பெயரினையுடையோனாவன். இவன் மைந்தர்கள் புருடன் முதலாகியவர்கள். தேவர்கள் ஆப்பியர்கள் முதலானவர்கள். வலியினையுடைய இந்திரன் மந்திரதுருமன். விண்டு, வயிரோசன் சாம்பூதி யென்பவளைக் கூடிப் பெற்றவனாகிய அசிதனாகும். முனிவர்கள் அவியன் முதலாகிய எழுவரென்க.

(வி - ம்.) மதவென்னு முரிச்சொல் ஈறுதிரிந்து மத என நின்றது. மதவு - வலி. "பதவுமேய்ந்த மதவுநடை நல்லான்" என்புழிப்போலக் கொள்க. உறுவர் - முனிவரர். (அஅ)

சண்டை விளம்பு முனிவரரு மிருள்கால் சீத்து நிலவெறிக்கும்
மாண்ட திருநீற் றுக்கவயம் வயங்கு மணிமே னியிற்றிளைப்பப்
பூண்ட சிவமுள் ளகந்திளைப்பப் பொலிந்த குமரன் றனையடைந்து
மூண்ட விழைவி னடித்தொண்டு முறையிற் புரிந்த நெறியோரே.

(இ - ள்.) இவ்விடத்துக் கூறிய முனிவர்களும், இருளைத் துடைத்து ஒளி வீசுகின்ற பெருமை பொருந்திய திருநீற்றின் வடிவமாகிய கவசமானது விளங்கு முத்திராக்கத்தை யணிந்த மேனியின்கட் படிய எங்கும் வியாபகமாகிய சிவத்தினை அகத்திலனுபவிக்க விளங்குகின்ற சனற்குமர முனிவனையடைந்து முயன்ற விழைவினாற் றிருவடித் தொண்டினை முறையாகச் செய்த முறைமையினை யுடையவராவர்.

(வி - ம்.) முனிவரருமென்றவும்மை, இறந்தது தழீஇய எச்சவும்மை; மூன்றுமனுவந்தரத்தினுள்ளாரையேயன்றி யிவ்வாறுமனுவந்தரத்தினுள்ளாருமெனக் கூறலான். மணி - உருத்திராக்கம்; அழகிய மேனி யெனினுமாம். திளைப்ப - படிய. பூண்ட - வியாபித்த. சிவம் இரண்டாவதன்றொகை. உள்ளகம் - உள்ளிடம். திளைத்தல் - அனுபவித்தல். குமரன் - சனற்குமரன். மூண்ட - முயன்ற. (அகூ)

துரிசி லேழா மனுவைவச் சுதனுற் சாதத் தேவர்களே
பரனே சர்வ வித்தமனே பயின்மா னுடரே கசேருவ்வே

தரும னிக்கு வாகுவே சையன் றிருட்ட நாபன்னே
மருவும் விடபத் துவசனெ மைந்தர் பதின்ம ரவன்றனக்கே.

(இ - ள்.) குற்றமில்லாத ஏழாவது மனுவரையன் வைவச்சுதனாகும். இவனுக்குப் பிள்ளைகள் சாதத்தேவர்கள்' பரன், சர்வவித்தமன் மானுடர், கசேரு, தருமன், இக்குவாகு, சையன், திருட்டநாபன் பொருந்திய விடபத்துவச னெனப் பதின்ம ராவரென்க.

(வி - ம்.) ஆல் - அசை. சாதம் - பிறத்தல். (௬0)

வெய்யோன் விசுவ தேவர்வசு விடப மருத்து வசுவனியான்
நையா வமரர் புரந்தரனு னுக நகரஞ் செகிற்பரித்தோன்
எய்யா விறன்மால் காசிபனுக் கெழுந்து பரந்த களபமுலை
மையார் தடங்க ணதிதிமணி வயிறு வாய்த்த வாமனனே.

(இ - ள்.) கெடாத தேவர்கள், சூரியன், விசுவதேவர், வசு, விடப மருத்து அசுவனியாகும். இந்திரன் இஞ்ஞான்று தேவலோகத்தைத் தோளின்மேற் றுங்கினவனுவான். இளையாத விறலோடுகூடிய விண்டு காசிப முனிவனுக்கு உயர்ந்த பரந்தனவாகிய கலவைச் சந்தனத்தை யணிந்த முலையினையும், மைதீட்டிய கண்ணினையுமுடைய அதிதி யென்பவளுடைய அழகிய வயிற்றிற் பொருந்திய வாமனனாகும்.

(வி - ம்.) செகில் - தோள். அசுவனியால், புரந்தரனுல் என்பன வற்றில் ஆல் அசைகள். (௬௧)

வினையில் காசி பன்வசிட்டன் விசுவா மித்தி ரன்சமதக்
கினியத் திரியே கவுதமனே கேழில் பரத்து வாசனென
முனிவ ரெழுவ ரிதுகாறு முறைசெய் மனுவே ழுனுண்மூன்றும்
மனுவந் தரத்து முனிவரென வகுத்தா மறிமோ வெனக்கிளந்து.

(இ - ள்.) முனிவர்கள், வினைத்தொடர்பு சிறிதுமில்லாத காசிபன், வசிட்டன், விசுவாமித்திரன், சமதக்கினி, அத்திரி, கவுதமன், ஒப்பில் லாத பரத்துவாச னென்கின்ற வெழுவருமாவார். இற்றைமுறை செய்த ஏழு மனுவினுள் வைத்து மூன்று மனுவந்தரத்துக்கூறிய முனிவராவ ரென்று விரித்துக் கூறினும்; அறியுங்க ளெனச்சொல்லி.

(வி - ம்.) கேழ் - ஒப்பு. "கேழ்கிற மொளியொப் பாகும்" என் னும் நிகண்டா னறிக. அறி+மோ. மோ: முன்னிலையசை. "கொள் வாரும் கள்வரும் நேர்" என்புழிப்போல அறிவிரென்னும் முன்னிலைப் பன்மை யீறுகெட்டு நின்றது. இம் முனிவர்களே 77 ஆம் செய்யுளிற் கூறிய முனிவர்கள். (௬௨)

கூற்ற நடுங்கு மருஞ்சாபக் கோனை யாற்ற விருந்தவத்தீர்
தோற்ற மரணங் கெடவின்பத் துறையு ளழுத்து மருவிரண்டில்
தேற்று மமல மொழிமயமாய்த் திகழு மருவிம் மான்மியமே
போற்றி யினிது கேண்மினெனப் பொருவில் சூதன் சொலப்புக்கான்.

(இ - ள்.) இயமனும் நடுங்குவதற் கேதுவாகிய சபிக்கப்பட்டோ ரால் பொறுத்தற் கருமையாகி அழியாத சாபமாகிய ஆற்றலையுமுடைய பெரிய தவத்தினையுடையவர்களே! பிறப்பு மிறப்புங் கெட இன்பத் துறையிற் படிதற் கேதுவாகிய இருவகை யருளில் வைத்து (யாவ ராலும்) உயர்த்துச் சொல்லப்பெறும். மலநீங்கிய சொல் வடிவமாக விளங்குகின்ற அருள் இத்தணிகை மான்மியமாகும் முருகக் கடவுளை வணங்கி இனிதாகக் கேளுங்கோளென்று (கல்வியாற்றல் தவமொழுக்க முதலியவற்றான்) ஒப்பிலாத சூதமுனிவன் சொல்லத் தொடங்கினான்.

(வி - ம்.) அருள் இரண்டு - சொல் வடிவாகவுள்ளதும், பொருள் வடிவாகவுள்ளது மாகிய இரண்டாம். இனி, மந்திரகலை தந்திரகலை யென இரண்டென்பாரும், புராண வடிவமாகவும் மந்திர வடிவமாக வும் உள்ளதென்பாரும் எனப் பலதிறத்தாற் பொருள் கூறுவர். (கூ)

புராண வரலாற்றுப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் உசக.

# வீராட்டகாசப் படலம்

பூமணமு முடலுயிரும் பொன்விழியு
மெனும்புணர்ப்பா ருயிர்கள் பண்டு
தோமடையப் பார்த்திருந்து மெண்குணத்திற்
றிரியாது துகடீர் பாகம்
தாமடைய வெவ்வுயிர்க்கு மொருங்குறுத்தா
திருந்துமொரு சலமு மில்லா
வீமலிபொற் கடுக்கையந்தார் வீராட்ட
காசன்விரை மலர்த்தாள் போற்றி.

(இ - ள்.) மலரும் மணமும், உடலுமுயிரும், கதிரொளியும் கண்ணொளியுமென்று சொல்லும்வண்ணம் (சிவமாகிய தன்னோடு) கலத்தலையுடைய ஆன்மாக்கள் அனாதி காலத்தே (ஆணவமலமாகிய) குற்றத்தின்கட் பொருந்துதலை யறிந்து வைத்தும் (தன்வயத்தனாதன் முதலிய) எண்வகைக் குணங்களினின்றும் சிறிதும் விகாரமடையாது (அவ் வான்மாக்கள்) குற்றம் நீங்கிய மலபரிபாகத்தினை யடையும் வண்ணம் அவைகட் கொருசேரப் பக்குவத்தினை அறிவிக்காதிருந்தும் (தன்னிறைமைக்) கொரு சிறிது மாறுபாடுமில்லாத கொன்றை மரத்தினது பொன்போன்ற மலர்களாலாகிய அழகிய மாலையையணிந்த வீராட்டகாசனாகிய சிவபெருமானது வாசனையோடுகூடிய தாமரை மலர்போன்ற திருவடிகளை வணங்குவாம்.

(வி - ம்.) பொன் - சூரியன்; "பொன்னிற் பொலிந்த நிறத்தான் தோன்ற" என்று மணிமேகலை யடியானுணர்க. பூமணம் பொன்விழி உடலுயிர் இம்மூன்று மிறைவனு முயிரும் கலப்புற்று நிற்றற் குவமையாக் கொள்க. புணர்ப்பினை யுடைய ஆருயிரெனக் கூட்டுக. புணர்ப்பு - சம்பந்தம். பண்டு - அனாதியே. தோம் - (ஆணவமலமாகிய) குற்றம்; "தோமுறக் கொண்டா ரெனச்சிறை யிடல்போல்" என்னும் காஞ்சிப்புராணச் செய்யுளடியானுணர்க. "முதல்வனாவான் முற்றுணர்வுடைமையின், உலகத்துயிர்கள் படும்துன்ப முழுவதும் உணர்ந்தோனாகியும், பேராற்றலுடைமையின் உயிர்களை யெல்லாம் ஒருங்கே வீடுபேறடையச் செய்யாமையின், வரம்பிலின்பமுடைமை, பேரருளுடைமை முதலிய குணங்கட்குக் குறைவரு மென்பாரை மறுத்து "எண் குணத்துத் திரியாதென்றும்; இவ்வான்மாக்கள் ஒருங்கே விடுபே றடைதற்கண் ஒருப்பாடு மிக்குடையனா யிருந்தும் இவ்வான்மாக்களால் அநாதியே யீட்டப்பெற்றுப் பல வேறு வகைப்பட்ட துன்பங்களையெல்லாம் விளைவிக்கும் வினைவலியினையும், கொடுமைக்கு மூலமாகிய சகசமலத்தினையும் கெடுத்து ஒருங்கே வீடுபேறடைவியாமைக்குக் காரணம் அம்முதல்வன் சிறப்பியல்பாகிய மெய்யுணர்வு ஒருங்கே நிகழாவண்ணம் தடுத்துநிற்பது மலசத்தி யென்பார் "ஒருங்குறுத்தா திருந்துமொருசலமு மில்லா" என்றார். சலம் - மாறுபாடு; கோட்டம். "சார்ந்தாரைக் காத்தும் சலமிலனாய்" என்னும் சிவஞானபோத வுதாரண வெண்பாவா னறிக. பாகம் - மலபரிபாகம். இல்லா: ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். இச்செய்யுளின் கருத்து சிவ

ஞானபோத இரண்டாஞ் சூத்திர பாடிய வசனங்களின் கருத்தா யமைந் திருத்தலை யுணர்க. வீ - பூ. என்குணமிலோய என்பதனை "கோளில் பொறியில்" என்னும் பொதுமறை யுரையா னுணர்க. அட்டகாசம் - சிரிப்பு. (௧)

வேறு

கன்மிசை மஞ்ஞையி ருந்துக லாபம்வி ரித்தாட
வின்மணி சிந்தரு வித்திர டாழ்ந்துவி ழுந்தோற்றம்
முன்னிய சேடனம் மஞ்ஞையை யஞ்சிமு ரன்றொல்லை
தன்னுல கெய்துறு தன்மைத குங்கயி லாயத்தில்.

(இ - ள்.) மலையின்மேலே மயிலானது தங்கித் தோகையினை விரித்தாடா நிற்க, ஒளியோடுகூடிய இரத்தினங்களைச் சிந்துகின்ற அருவியின் றிரட்சி இறங்கிவிழுகின்ற தோற்றமானது, கைலைக்கட் பொருந்திய ஆதிசேடன் அம்மயிலினுக் கச்சுற்றுச் சீறி விரைவாகத் தனது பாதாளவுலகினுக்குப் பொருந்துகின்ற தன்மை விளங்காநிற்கும் கைலைமலையின்கண்.

(வி - ம்.) கல் - மலை; "கன்மிசை மயிலாலக் கலங்கி யூரலர் தூற்ற" என்னும் (27) பாலைக் கலியானுணர்க. முரன்று - ஒலித்து; சண்டுச் சீறி யென்க. முன்னிய - அடைந்த. தன்னுலகு - பாதாள வுலகம். மஞ்ஞையஞ்சி - மஞ்ஞைக்கஞ்சி, வேற்றுமை மயக்கம். (உ)

மங்கல வெள்ளைவ ழித்தும லர்த்துகள் மேலட்டிக்
கொங்குயிர் தாமம ணிந்துகொ ழும்புகை மிக்கார்த்தி
வெங்களி நல்குவி தானம டுத்துவி ளக்கேந்திப்
பொங்கிவ ளங்கள்பொ லிந்தொளிர் மண்டப வுட்சூழல்.

(இ - ள்.) சந்தனத்தான் மெழுக்கிட்டு மலர்ப்பொடிகளை யதன் மேலெழுப்பி வாசனையை வெளியிடுகின்ற மாலைகளால் அலங்கரித்து மிக்க வாசனைப் புகையை நிறைவித்து விருப்பத்துடனே களிப்பைத் தருகின்ற மேற்கட்டியைக் கட்டித் திருவிளக்கினையேற்றிச் செல்வங் கண் மிகுந்து விளங்குகின்ற மண்டபத்தி னுள்ளிடத்தில்.

(வி - ம்.) மங்கல வெள்ளை - சந்தனம்; இதனை "மங்கலவெள்ளை வழித்துமுத் தீர்த்தபின், கொங்கலர் கோதையர் கொண்டகமெய்தி" என்னும் சிந்தாமணி (கேம : கக) செய்யுளடியானு முரையானு முணர்க. வழித்து - மெழுக்கிட்டு. அட்டி - அப்பி. கொங்கு - வாசனை. ஆர்த்தி - நிறைத்து. வெம்மை - விருப்பம். விதானம் - மேற்கட்டி. மடுத்தல் - சண்டுக்கட்டல். உட்சூழல் - உள்ளிடம். (௩)

தோற்றிய வாறிரு மூன்றுறு தத்துவ சோபானம்
பாற்றுதை யப்பயில் வித்தப சும்பொன ணைச்சேக்கைக்
கோற்றொடி மங்கையி டத்தில டைக்குமொ ரப்புத்தேன்
வீற்றிருப் பப்பரன் வீற்றிருந் தானொரு நாண்மேனாள்.

(இ - ள்.) ஆன்மதத்துவம், வித்தியாதத்துவம், சிவதத்துவமென்னும் முறையாகக் காணப்பெற்ற முப்பத்தறுவகைத் தத்துவங்களாகிய படிகள் பக்கத்தே பொருந்தச் செய்வித்த பசும்பொன்னினாகிய அணையாகிய விடத்தில் அழகிய வளையலை யணிந்த உமையம்மையாருக்குப் பக்கலில் குமரக்கடவுள் வேறொருவர்க்கில்லாத சிறப்புடனெழுந்தருளியிருப்பச் சிவபெருமானு மங்ஙனமே வீற்றிருந்தனன் முன்னொரு காலத்து.

(வி - ம்.) ஆறிரு மூன்று-ஆறாறு முப்பத்தாறென்க. சோபானம்-படி; "பெருகு தத்துவங்களென்னும் பெரிய சோபானமேறி" என்னும் பெரியபுராணச் செய்யுளா னறிக. பால்துதைய - பக்கத்தே பொருந்த. சுவாமிக்கு மம்பிகைக்கு மிடையில் குமரக்கடவு ளிருந்தன ரென்க. (௫)

அத்தகு செவ்விய றிந்துவி னைச்சம மாய்க்கன்மம்
ஒத்தத வத்தினன் முத்தியை வேட்டவு ளத்தானுப்
பித்தினன் சந்திர காசனெ னப்பெயர் பூண்டுள்ளோன்
மெய்த்தக ணங்களுண் மிக்கவ னங்கண்வி ரைந்துற்றான்.

(இ - ள்:) அத்தன்மைத்தாகிய காலத்தினை யறிந்து இருவினையின்கண்ணும் சமமாகிய அறிவுடைமையால் நல்வினை தீவினையாகிய இருகன்மங்களும் சமமாகப் பொருந்தப்பெற்ற தவத்தினை யுடையனும் முத்தியை விரும்பிய வுள்ளத்தின்கண் அமையாத பத்தியாய பித்தினை யுடையானாய்ச் சந்திரகாசனென்னும் பெயரை மேற்கொண்டுள்ளவன் உண்மையோடு கூடிய சிவகணங்களுள் மேலானவன் அவ்விடத்து விரைந்து சென்றான்.

(வி - ம்.) செவ்வி - காலம். வினைச்சமமாயெனவும் கன்மமொத்த எனவும் இருகாற் கூறுதலின் முன்னது உயரறிவின்கண் ணிகழ்வதெனவும் பின்னது கன்மத்தின்கண் நிகழ்வதெனவும் கொள்க. முத்தியை வேட்டவுளத்தானுப் பித்தினன் - முத்தியை விரும்பிய உள்ளமுடைமையாற் பித்தானவன். அவ்வன்பு பித்து போறலிற் பித்தென்றார். இதனை "பித்துப்பத் தரினத்தாய்" எனவரும் சிவஞான போத வுதாரண வெண்பாவடியானும் அதன் உரையானு முணர்க. (௬)

எட்டினு மைந்தினு மெய்தவ ணங்கியெ ழுந்தூறி
உட்டினை யார்வமு ருக்கவெ யிற்கணு றும்வெண்ணெய்
பட்டதை யென்னநெ கிழ்ந்துவி ழிப்பனி நீர்வார
மொட்டுறு கஞ்சமெ னக்கைசி ரத்துமு கிழ்த்தோதும்.

(இ - ள்.) எட்டங்கத்தானும் ஐந்தங்கத்தானும் பொருந்த வணக்கஞ்செய்து எழுந்துநின்று பெருகியுள்ளே யநுபவிக்கின்ற அன்பானதுருகச் செய்ய வெயிலின்கட்பட்ட வெண்ணெ யுருகியதைப்போல நெகிழ்ச்சியுற்றுக் கண்களிற் குளிர்ந்த ஆநந்தவெள்ள மொழுகக் குவித்த தாமரை மலரென்று சொல்லும்வண்ணம் கரங்களைச் சிரத்துக் கூப்பி விண்ணப்பஞ் செய்வான்.

(வி - ம்.) எட்டு - அட்டாங்கம். ஐந்து - பஞ்சாங்கம்: இவை முறையே சிரம், கரம், கன்னம், புயமிரண்டு, உதரம் இவை பூமியிற்

படியும்படி செய்வனவும், சிரம், கரம், புயம் முதலியன பூமியிற் படி-யும்படி செய்வனவுமாகும். மொட்டு - அரும்பு. பட்டடை என்பதில் ஐ : சாரியை. (௬)

வேறு

வெளியூ டுவிரா யவளிச் சலமல்
வெளிசற் றும்விரா வுதலின் றதுபோல்
விளியா துவிரா யவுயிர்த் தொகுதி
விரவும் வினையின் பயனே துமுறு
ஒளியே யுலகெங் குநிறைந் துணர்வுக்
குணர்வா கியவின் பநெடுங் கடலே
தெளிமா தவருள் ளகல்விள் ளரிய
தேக்கா ரமுதே சரணஞ் சரணம்.

(இ - ள்.) ஆகாயத்தோடு கலந்த காற்றினதியக்கத்தை யவ்வாகாயம் சிறிதும் கலத்தலின்று; அதுபோலக் கெடாது (சிவமாகிய தன்னோடு) கலந்த உயிர்க் கூட்டங்களின்மாட்டுக் கலந்த நல்வினை தீவினைப் பயன்கள் சிறிதும் தன்னைப் பற்றுத ஒளிவடிவாக வுள்ளவனே! உலகெங்கணும் வியாபித்து அறிவுக்கறிவாகிய பேரின்பக் கடல்போல்பவனே! (நித்திய மிஃது அநித்திய மிஃதென நான்முறையானே) தெளிந்த பெரிய தவத்தினையுடைய ஞானிகள் அகத்துணின்றும் நீங்குதலில்லாத நிறைந்த அரிய தேவாமுதம் போன்றவனே! நினதாள்கள் எளியேனுக் கரணமாகும்.

(வி - ம்.) வெளி - ஆகாயம். வளிச்சலம் - காற்றினியக்கம். சற்றும் - சிறிதும். விளியாது - கெடாது. தொகுதி - கூட்டம். வினையின்பயன் - நல்வினை தீவினைப்பயன்கள். ஏதும் - சிறிதும். விள்ளரிய - நீங்குதலரிய. தேக்குதல் - நிறைதல். சரண் - திருவடி. சரண் - புகலிடம். இதனை "பன்மாண்........சரண்சென்று தொக்க" என்னும் சிந்தாமணி, தன்மசரணம் சாதுசரணம் கூறிய செய்யுளானறிக. (௭)

அருவென் றுருவென் றருவோ டுருவென்
றறையும் மலபே தமுமா யவையாற்
றொருவும் பொருளா யபரா பரனே
யுடனின் றுயிரைத் தொழிலிற் புகுவித்
தீநுள் வினைமாய் விளைமுந் தொறுமெய்
கெய்பார மையருத் துமருட் செறிவே
தெருளும் புலனில் லவரெய் தரிய
தேக்கா ரமுதே சரணஞ் சரணம்.

(இ - ள்.) அருவமென்றும் உருவமென்றும் அருவுருவமென்றும் சொல்லப் பெறுகின்ற நவவித பேதமாகி அந்நவவித பேதங்களையும்

நீங்குகின்ற பொருளாயுள்ளோனவனே! உடனாகின்று ஆன்மாக்களைத் தொழிலிற் புகச்செய்து மயக்கவுறார்வுங் கெடுவாகிய வினைப்பய னுமை யறிவிக்கட் சலிப்புற்று எழுந்தொறு முயிர்களை எந்திய வினைப்பயன்களையும் அவ்வுயிர்கள் சலியாவண்ண முண்டாக்கின்ற அருளினிறைவே! தெளிவுப்படியான அறிவில்லாதவர் அடைதற் கருமையாகிய நிறைந்த தேவாமுதம் போன்றவனே! நின தாள்கள் எளியேனுக்குப் புகலிடமாகும்.

(வி - ம்.) பலபேதம்-நவவிதபேதம்; அவை, சிவம், சத்தி, விந்து, நாதம் என அருவம் நான்கும், பிரமன், விண்டு, உருத்திரன், மகேசுரன் என வுருவம் நான்கும் சதாசிவமாகிய அருவுருவமொன்றுமாக ஒன்பதாம். இவற்றுள், சத்தி விந்து என்றுமிரண்டும் சத்திபேதமென்க. உயிர்கள் மலத்தின் வழி நிற்குங்காலும் மாயை கன்மங்களும் இருளாய் நிற்குமென்னும் சுருதிபற்றி 'இருளும் வினை' என்றார். அது, "மாயை மாமாயை, மாயாவருமிருவினையின் வாய்மை, ஆயவாருயிரின் மேவுமருளெனின் – இருளா நிற்கும்" எனப்புடை நூலாசிரியரருளியவாற்றானுமறிக. உடனின்று - உடனாக நின்று. அங்கு - எந்திய வினையைத் துய்த்தலின்கண். எய்யாமை - சலியாமை. (௮)

காட்டா கியநின் னருளுண் மையினைக்
கருதா துபுசிப் புவினைத் திறமே
வேட்டா ழுமுயிர்க் கவையாய் மிடையா
மேன்மே லுமுயர்த் தருள்வித் தகனே
வாட்டா ணவம்வாட் டியுடற் பொறைவின்
மணிமுன் னர்விளக் கெனமாய்ப் பவனே
சேட்டா ரணமுந் தெரியா தயருந்
தேக்கா ரமுதே சரணஞ் சரணம்.

(இ - ள்.) காட்டுகின்ற பொருளாகிய நினது திருவருளுண்மைத் தன்மையினைச் சிந்தனை செய்யாது போகத்தை யநுபவிக்குந் தொழிலின் வகையே விரும்பி யப்போகத்தின் அழுந்துகின்ற உயிர்களுக்குப் போகமாகப் பொருந்தி (அவ்வுயிர்கள் போகத்தை நுகர்ந்து தொலைத்த பின்னர்ச் சோபான முறைப்படி மேன்மேலு முயரச்செய்கின்ற ஞானவடிவுடையவனே! (உயிர்களை) வருத்துகின்ற ஆணவமலத்தினைக் கெடுத்து உடற்பாரத்தினைச் சூரியன் முன்னருள்ள விளக்கென்று சொல்லும்வண்ணம் கெடுப்பவனே! பெருமை பொருந்திய வேதங்களும் (இயற்கை நிலையினை) யறிவது சோர்வடையுமாறு நிற்கும் தேவாமுதம் போன்றவனே! நின தாள்கள் எளியேனுக்குப் புகலிடமாகும்.

(வி - ம்) காட்டு: வினைமுதற்பொருள் விகுதி புணர்ந்து கெட்டது. பெத்தமுத்தி யிரண்டிலும் உயிரறிவை விளக்குவதாகலின், இறைவன் திருவருளைக் "காட்"டெனக் கூறினார். வினைத்திறம்-தொழிலின்வகை. வேட்டு - விரும்பி, ஆழும் - அழுந்தும். மிடையா-செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். "ஏகனாகி நின்றிணையடி யுணர்வார்க்குப், போகமாய் வினைதலோடு" புசிப்பு வினைத்திறமே வேட்டாழுமுயிர்களுக்கு அவ்வுயிர்கள் விரும்பிய போகமாயும் வினைவானென்பது

தோன்ற "அலையாய் மிடையா...உயர்த்தருள் வித்தகனே" என்றார். வாட்டு - (உயிர்களை) வருத்துகின்ற. உடற்பொறை - உடற் பாரம். விண்மணி - சூரியன். சேடு - பெருமை. "சேட்டிளங்கிளிக் குலங் களத்தெதிரிலை மாறோப்பும், பாட்டிசைத் திறமொளியிருந் தனுதினம் பயிலும்" என்னும் காஞ்சிப்புராணச் செய்யுளடியானுணர்க. (௯)

மட்டார் குழன்மங் கையிடம் பிரியா
வரதா மதனா சகரா சரணம்
ஒட்டா தபுலிக் கலையோ டுதிசை
யுடையாய் பலவும் முடையாய் சரணம்
தொட்டா தவர்வாட் கணுகுத் தெயிறு
தொலைவித் தபவித் திரனே சரணம்
கட்டார் தருகொன் றைமணங் கமழுங்
கயிலைக் கிரியாய் சரணஞ் சரணம்.

(இ - ள்) தேன் பொருந்திய மலர்களையுடைய கூந்தலோடு கூடிய உமையம்மையாரை இடப்பாகத்தினின்றும் நீங்காத மேலானவனே! மன்மதனை நாசஞ் செய்பவனே! தேவனே! எளியேற்குப் பற்றுக் கோடாம். நினது பெருமைக்குச் சிறிதும் ஏலாத புலியின் தோலாகிய ஆடையுடனே திசைகளையு மாடையாக வுடையவனே! (இயங்கியற் பொருள், நிலையியற் பொருளாகிய) பலவற்றையு முடைமைப் பொருளாக வுடையவனே! நீயே எளியேனுக்குப் பற்றுக்கோடு. பகன், பூஷன் என்னும் சூரியர்களின் கண்ணைத் தோண்டிப் பல்லை யுகச்செய்து தொலைவித்த பரிசுத்தமானவனே! நீயே எனக்குப் பற்றுக்கோடு. தேனோடு கூடிய கொன்றைமலர் வெளியிடுகின்ற வாசனை வீசுகின்ற கைலைமலையினையுடையாய்! நினதாள்களே எளியேனுக்குப் புகலிடமாகும்.

(வி - ம்.) மட்டு - தேன். "மட்டென்பதெல்லை கள்ளாம்" என் னும் நிகண்டானறிக. ஒட்டாத - பொருந்தாத. கலை - ஆடை. திசையுடை - திக்காடை. பலவும் - நிலையியற் பொருள், இயங்கியற்பொருள். தொட்டு - தோண்டி. "கண்டொட்டுண்டு கவையடிபெயர்த்து" என் னும் மணிமேகலை யடியானுணர்க. ஆதவர் - பகன், பூஷன். "உண்ணப் புகுந்த பகனொளித் தோடாமே, கண்ணைப் பறித்தவாறுந்தீபற" "சூரியனார்தொண்டைவாயினிற்பற்களை, வாரிநெறித்தவா றுந்தீபற." என்னும் திருவாசகச் செய்யுளானறிக. பவித்திரம் - புனிதம். தார் - பூ. "தாருவரிக் கடை பண்பாடும் வேதத் தலத்திறை" என்னும் மறைசையந்தாதியடியானுணர்க. தார் - மாலை யெனினுமாம். (௧0)

அந்திப் பிறைதா டியசெஞ் சடிலத்
தழகா குழகா சரணஞ் சரணம்
சந்தப் புரமூன் றுமொருங் கவியச்
சமரா டமரா சரணஞ் சரணம்

பந்தப் படுமென் னையொடுந் தருநும்
பவனே சிவனே சரணஞ் சரணம்
கந்தப் பொழில்சூழ்ந் துவளங் கதுவுங்
கயிலைக் கிரியாய் சரணஞ் சரணம்.

(இ - ள்.) மாலைக்காலத்தே தோற்றுகின்ற பிறைச்சந்திரனைத் தரித்த சிவந்த சடாபாரத்தினையுடைய பேரழகுடையவனே! குழகனென்னுந் திருநாமத்தை யுடையவனே! நினதாள்கள் எளியேனுக்குப் பற்றுக்கோடாம். அழகிய புரங்கள் மூன்றுமொருசேரக்கெடப் (நெற்றிக்கண்ணால்) போரினைச் செய்த மரணமில்லாதவனே! நினதாள்கள் எளியேனுக்குப் பற்றுக்கோடாகும். (அநாதியிலே யாணவ மலத்தால்) கட்டுப்பட்ட எளியேனை (கருணைக்கையால்) எடுத்து அருளினைச் செய்கின்ற எல்லாவற்றையு மூடுருவி நிற்பவனே! சிவனென்னுந் திருநாமத்தை யுடையவனே! நினதாள்கள் எளியேனுக்குப் புகலிடமாகும். வாசனையுடனே கூடிய சோலைகள் சூழப்பெற்ற கைலைமலையை இருப்பிடமாகக் கொண்டவனே! நினதாள்கள் எளியேனுக்குப் பற்றுக்கோடாகும்.

(வி - ம்.) பவன் - இஃதிறைவன் திருநாமங்கள் பலவற்றினும் சிறந்தது; எல்லாவற்றையு மூடுருவி நிற்பதென்பதிதன் பொருள்; இதனை "சிவனெனும் நாமந் தனக்கே யுடைய செம்மேனி.........பவனெனும் நாமம் பிடித்துத் திரிந்தால்" எனவரும் நாவரசர் திருவாக்கானறிக.

(௧௧)

சொல்லார் பொருளே சரணஞ் சரணஞ்
சுடருட் சுடரே சரணஞ் சரணம்
ஒல்லா ரிருளே சரணஞ் சரணம்
உற்றோ ரொளியே சரணஞ் சரணம்
வெல்லா வயவா சரணஞ் சரணம்
விடையா விடையா சரணஞ் சரணம்
கல்லா லமர்வாய் சரணஞ் சரணங்
கயிலைக் கிரியாய் சரணஞ் சரணம்.

(இ - ள்.) சொற்களினிடத்துப் பொருந்திய பொருள் வடிவானவனே! நினதாள்கள் எளியேனுக்குப் புகலிடம். ஒளிகளுள் வைத்தொளி வடிவமானவனே! நினதாள்கள் எளியேனுக்குப் புகலிடம். (தம்மன்பரல்லாத) ஏனையோர்க்கு இருள்வடிவமானவனே! நினதாள்கள் எளியேனுக்குப் புகலிடமாகும். (தம்மன்பராக) வந்தடைந்தோர்க்கு ஒளி வடிவமானவனே! நினதாள்கள் எளியேனுக்குப் புகலிடமாம். பகைவரால் வெல்ல முடியாத வீரனே! நினதாள்கள் எளியேனுக்குப் புகலிடம். விரோதமில்லாத இடபவாகனத்தை யுடையவனே! நினதாள்கள் எளியேனுக்குப் புகலிடம். கல்லாலமரத்தின் கீழ்த் தென்முகத் தெய்வமாகத் தங்கியவனே! நினதாள்கள் எளியேனுக்குப் புகலிடமாகும். கைலைமலையின்கணெழுந்தருளியிருப்பவனே! நினதாள்கள் எளியேனுக்குப் புகலிடம்.

(வி - ம்.) ஒவ்வார் - அன்பால்லாத ஏனையோர். உற்றுர் - அன்பர்கள். அன்பரல்லாத ஏனையோரால் இறைவ னிலையுணரப்படாமையின் "ஒவ்வாரிறை" என்றார். தம்மடியடைந்த அன்பினர் தன்னிலையுணர்ந் திட்டமையின் "உற்றுரொளியே" என்றார். இறைவனை யொப்பாரு மிக்காருமில்லாமையான் ஒருவரும் செருச்செய்து வெல்ல வியலாதென் பார் "வெல்லா வயவா" என்றார். வயவன் - வீரன். விடையா - விரோ தம் கொள்ளாத: ஈறுகெட்ட பெயரெச்சம். (கஉ)

வேறு

என்று தோத்திரமி யம்பிய விருந்த வன்முகம்
நன்று நோக்கிவிழை வென்னது நவிற்று கெனவும்
கொன்றை மாலிகை மிலைத்தசடி லக்கு முகனுர்
வென்ற பாதமலர் மீட்டுமுடி கோட்டி மொழிவான்.

(இ - ள்.) இங்ஙனம் துதிசெய்த பெரிய தவத்தினையுடைய சந்திர காசனென்னும் கணத்தலைவன் முகத்தைப் பெரிதும் பார்த்து (நின்) விருப்பம் யாது அதனைச் சொல்வாயென்று திருவாய்மலர்ந்தருளக் கொன்றை மாலையணிந்த சடையினையுடைய சிவபெருமானது மேம் பட்ட பாததாமரையினிடத்துப் பின்னரும் முடியை வணக்கி விண்ணப் பம் செய்வான்.

(வி - ம்.) நவிற்றுக - விகாரம். வென்ற - மேம்பட்ட. இனி, இயமன் முதலியோரை வென்ற எனினுமாம். ஆன்மாக்களின் ஆணவ மலத்தினைக் கடிந்து தன்பாற் கலக்கச் செய்தலின் "வென்ற பாதமலர்" என்றார். (கங)

வேத மாதிபல வும்பொருள் விளக்கி யிருளின்
ஏத மோதியெனை யின்னருளி னண்ட ருளினை
ஆத லாலடைவ தின்றுகுறை யாதி மறைமுன்
ஓது கின்றமொழி யின்பொருளு ருமை யலதே.

(இ - ள்.) வேத முதலாகிய பல நூல்களின் பொருளையும் விளக் குதலைச் செய்து, ஆணவ மலமாகிய இருளினுன் வரும் குற்ற மிற்றெ னத் திருவாய்மலர்ந்தருளி யெளியேனை இனிய (கைம்மாறில்லாத) கருணையான் ஆண்டருளினை. ஆகலான் முதன்மையாகிய வேதத்தி னுக்கு முன்னர் ஓதப்படுகின்ற பிரணவமென்னு மொழியின் பொரு ளினை யடையாமையாகிய குறையல்லது வேறு குறை யடைவதில்லை யாகும்.

(வி - ம்.) இருள் - ஆணவமலம். குறையடைவதின்று என மாற்றுக. (கச)

மூப்ப தக்கழுறி வண்டுதிரை கொள்ள முடுகுங்
கைப்ப லக்கடவுள் போலமகன் மைக்க ணிறுவிச்
செய்ய னக்கினையெ னக்கிதுதெ ளித்த ருளுதற்
கப்ப னையமிலை யென்றுவகு னால னவினேன்.

(இ - ள்.) தலைவனே! மும்மதங்களாகிய கான்யாறு வெள்ளங்கள் கப்பமாகக்கொள்ள விரைந்து செல்லுகின்ற கரத்தினையுடைய மலை போன்ற யானைமுகக் கடவுளைப்போல, எளியேனை மகனாகுந்தன்மைக்க ணிறுத்தி (வேத முதலிய கலைகளின் பொருளையெல்லாம்) கிருபை செய்தாய். இப்பிரணவப் பொருளையு மெளியேனுக்குத் தெரிவித்தருளுதற்குச் சிறிதும் சந்தேகமின்றெனத் தெளிந்து திருவருளானே தேவரீரை வந்தடைந்தனன்.

(வி - ம்.) கலுழி - கான்யாறு. மகன்மை-மகனாகுந்தன்மை. அம்ம: இடைச்சொல். இது - பிரணவப்பொருள். ''அவனருளாலே யவன்றாள் வணங்கி'' என்பது முறையாகலின் ''அருளாலணவினேன்'' என்றார் செம்மல்: அண்மைவிளி. அணவினேன் - அணுகினேன். (கரு)

திருவு ளக்கருணை செய்திதுதெ ளிந்த ருளென
இருண்ம லப்பகையி டிக்குமற வாழி யருளும்
பொருவி லாகமம றைத்திரள்பு ராண முழுதாய்
மருவு மக்கரமொ ரைந்தனொடு மானு மிதுவே.

(இ - ள்.) ஆணவமலப் பகையாகிய கரையினை (மோதி) இடிக்கின்ற தருமக்கடலாகிய சிவபெருமான் திருவுளக் கருணை செய்து இப் பிரணவப் பொருளைத் தெளிவாயென்று சொல்வான். ஒப்பிலவாகிய ஆகமங்களும், மறையின் கூட்டங்களும், புராண முற்றிலுமாகிப் பொருந்தும் ஐந்தக்கரங்களினோடு இப்பிரணவமொப்பாகும்.

(வி - ம்.) தெளிந்தருள் என்பது விகாரம். இருண்மலப் பகை-ஆணவமாகிய பகை. அறவாழி - தருமக்கடல்: ''அறவாழியந்தணன்'' என்னும் திருக்குறளானறிக. ஐந்தக்கரங்களும் எல்லாக் கலைகளுமாமென்பதனை ''அருணூ லுமாகமமு மல்லாது மைந்தின், பொருணூல் தெளியப்புகின்'' என்னும் திருவருட்பய னானுணர்க. மானும் - ஒக்கும். இஃதேகதேசவுருவகம். (கசு)

ஐந்தெ ழுத்துமொரு சார்மொழிக ளைந்தெ னவுமாம்
மைந்து பெற்றவெமை யேமுழுது ணர்த்தி வழுவா
தைந்தெ ழுத்துமொழி யொன்றெனவ ழங்கி வருமால்
மைந்த தேர்தியென வான்பொருடொ குத்த ருளினன்.

(இ - ள்.) மைந்தனே! ஐந்தக்கரங்களும் ஒரு பகுதிக்கண் ஐந்து மொழிகளென்று சொல்லத்தகும் (அவ்வக்கரங்கள்) வலிமை பெற்ற (சிவமாகிய) எம்மையே எஞ்சாதுணர்த்திக் குற்றமிலவாகி ஐந்தெழுத்தாலாகிய மொழியொன்றென்று சொல்லும் வண்ணம் வழங்கப்பட்டு வரும் தேர்வாயென்று மேலாகிய அப்பிரணவப் பொருளினைத் தொகுத்துச் சொல்லினன்.

(வி - ம்.) பஞ்சாக்கரங்களி னெவ்வோ ரெழுத்தும் தனித்தனி யொவ்வொரு பொருளை யுணர்த்தலின் ''மொழிகளைந்தெனவுமாம்'' எனக் கூறினார். இதனை ''அந்தியும் நண்பகலு மஞ்சுபதம் சொல்லி'' எனவரும் தேவாரத் திருவாக்கானறிக. இவ்வக்கரங்களைந்தும் சேர்ந்து ஒரு மொழியாக நின்று சிவமாகிய ஒரு பொருளை யுணர்த்தலின் ''ஐந்

செழுத்தை யொழிவொன்றெனை வழங்கி வருமால்'' என்றனர்.
தொகுத்த - உருக்கி. (கஎ)

எண்ணில் பல்பவ மிருந்தவரு முந்த பயனால்
நண்ணொ ணாதநவை யில்பொருளு ணர்ந்து பெரிதும்
உண்ணா யந்துகனா நாதனுவ கைக்க டலினுள்
அண்ணால் கூறினவ கஞ்செவியி னார்த லொடுமே.

(இ-ள்.) பெருமையிற் சிறந்த இறைவன் திருவாய் மலர்ந்தருளிய பொருள்கள் செவியகத்திற் சேர்ந்த அளவில் அளவிட முடியாத பல பிறவிகளினும் பெரிய தவங்களைச் செய்த பயனால் யாவருக்கு மறுசொலொன்றாத குற்றம் நீங்கிய செம்பொருளினை புணர்ந்து உன்னை விரும்பிக் கணநாதனாகிய சந்திரகாசன் என்பவன் ஆனந்தமாகிய கடலின்கண்ணே மூழ்கினான்.

(வி-ம்.) ஆர்தலோடும் - சார்ந்த அளவில். இதனைக் ''கானத்தினைதுகின்றான் கடிபொழிற் கவின்கண் டெய்தித், தானத்திலிருத்தலோடும்'' என்றும் சிந்தாமணிப் (சக) பாடலுரையின்கண் இவ்வாறு ஆசிரியர் நச்சினார்க்கினியர் பொருள் கோடலைக் காண்க. செவியகமென மாற்றுக. (கஅ)

ஞான சத்தியுரு வாதலி னலத்த குமரன்
ஆன லித்தபொரு ளன்றியத னுட்பொ ருளெலாம்
தான றிந்தறிக லானென விருந்த னனரோ
போன தப்பொழுது பின்னரொரு போது முருகன்.

(இ-ள்.) நன்மையே திருமேனியாகக்கொண்ட முருகப்பெருமான் ஞானசத்தி வடிவினனாதலின் அவ்விடத்திற் (பிரணவத்திற்குச்) சொல்லிய பொருளல்லாமலும் (அம்மந்திரத்தி)னுட் கிடையாகிய எல்லாப் பொருளையும் தானறிந்துவைத்து மறியாதவன்போல இருந்தனன். அக்காலம் சென்றது. பின்னரொரு காலத்து அம்முருகப்பெருமான்.

(வி-ம்.) ஆன் - அவ்விடம். (கக)

தந்தை தாய்புடைய கன்றுகயி லைத்த டவரை
அந்தில் வைகலுறு மந்திரமி ருந்த ருளுநாள்
எந்த வானவரு மிந்திரனு மாலு முமைசேர்
உந்தன் வார்கழலி றைஞ்சவவ ணெய்த லுறுவார்.

(இ-ள்.) தந்தை தாயர் பக்கலினின்றும் நீங்கிப் பெருமையோடு கூடிய கைலைமலையாகிய அவ்விடத்திற் பொருந்தும் திருக்கோவிலின்கண் எழுந்தருளியிருக்கும் காலத்து எவ்வகைப்பட்ட தகுதியையுடைய தேவர்களும், இந்திரனும், விண்டுவும், உமையம்மையார் பொருந்தப்பெற்ற சிவபெருமான் நீண்ட திருவடியை வணங்க அக்கயிலைக்கட் பொருந்துகின்றவர்கள்.

(வி-ம்.) மந்திரம் - கோவில். உந்தன் - இண்டுச்சிவம். உறுவார் - அண்டுப் பொருந்துகின்றவர்கள். (உ0)

வைத்த வேலிளவ ருட்டுணைவ ணங்கி யருளான்
மெய்த்த வன்பின்விகிர் தன்சரண மெய்தி னர்களால்
பைத்த வெண்டிரைநெ டுங்கடல்ப ரந்த வுலகின்
கொத்து யிர்த்தவனு மாங்கவரு டன்கு றுகுவான்.

(இ - ள்.) கூர்மை பொருந்திய வேற்படையினை யுடைய முருகப் பெருமான் றிருவடித் துணையினை வணக்கஞ்செய்து அவனருளினால் உண்மையாகிய அன்பு தங்களுள்ளத் தெழுதலினால் (செத்துப் பிறக்கின்ற ஏனைய தேவர்களினின்றும்) வேறுபட்டவனாகிய சிவ பெருமான் றிருவடியை யடைந்தார்கள். பரவிய வெள்ளிய அலையினை யுடைய நீண்ட கடலாற் சூழப்பெற்ற உலகங்களின் றொகுதியைப் படைத்தவனாகிய பிரமனுமத் தேவர்களுடன் அடைகின்றவன்.

(வி - ம்.) வை - கூர்மை. மெய்த்த - உண்மையாகிய. விகிர்தன் - வேறுபாடுடையவன். இனிப் பிறராற் றோற்றுவிக்கப் பெறாதவனெனக் கோடலுமாம். இன் - ஐந்தாவதேதுப் பொருட்டு. உலகின் கொத்து - உலகின் றொகுதி. குறுகுவான் என்பதில் வகர ஒற்று நிகழ் காலம் காட்டிற்று. இதனை, ஆசிரியர் நச்சினார்க்கினியர் "கடதற" என்னு முதற் குறிப்பினையுடைய வினையியற் சூத்திரத்துரையில் "இனிப் பகரவகரங்கள் நிகழ்காலத்தும் வரும். "கூடநீர் நின்ற பெற்றி கண்டிப்பானுக்கு வேற்கு" என்புழிப் பார்க்கின்றேற்கு எனப் பொருள் தந்தவாறு காண்க" என்பதனானும், "துணிகொண்டிலங்கு சுடர்வேலினோடு வருவானி தென்கொ றுணிவே" என்னும் சூளா மணிச் செய்யுளடியானு முணர்க. (௨௧)

கற்றல் கேட்டலொடு காழறுபெ ருந்த கைமையும்
முற்றி னருமட ரூழினைமு னிந்த மைவரே
அற்றை ஞான்றிளவ லென்றுளம கந்தை யெழலும்
உற்று வந்தனைபு ரிந்திலனொ துங்கி னனரோ.

(இ - ள்.) கல்வி கேள்விகளோடு குற்றமற்ற பெருந்தன்மை யையு மடைந்துள்ள பெரியார்களும் (தாம்) வருந்துதற்கேதுவாகிய தீயவூழினை நீக்கி யமைவரோ? அமையார். ஆதலால், (பிரமன்) அஞ் ஞான்று (முருகப்பெருமானை) இளமைப் பருவமுடையா னென் றுள்ளத்தின்கண் அகங்காரம் தோன்றப் (அவனை) பொருந்தி. வணக்கஞ் செய்யாது ஒருபுடை யொதுங்கிச் சென்றனன்.

(வி - ம்.) காழ் - குற்றம். அடரூழ் - தீயவூழ். எழலும்: உம் மீற்றுவினையெச்சம். ஒதுங்குதல் - நடத்தலெனினுமாம். (௨௨)

கோட்டி ளங்கதிர்ம திப்புனல்கு ளிக்கு முடியோன்
வேட்ட நல்வரம ளிப்பவவண் மீண்ட பொழுதும்
ஓட்டை நெஞ்சினனி றைஞ்சிலனொ ழிந்தி டலுமவ்
வேட்டை யூழினனி கந்தமையு ளத்தின் மதியா.

(இ - ள்.) வளைந்த இளமையாகிய கிரணங்களோடுகூடிய பிறைச்சந்திரன் கங்கை நதியின்கட் குளித்தற் கேதுவாகிய திருமுடி

பத்தையுடைய சிவபெருமான் (பிரமன்) விரும்பிய வரங்களையருள அவ் விடத்தினின்றும் நீங்கிய காலத்தும், அறிவறைபோகிய நெஞ்சினை யுடையனாகிய பிரமன் வணங்காதாகிச் செல்ல அவ்விளைத்த ஆழியினை யுடைய பிரமன் நீங்கிய தன்மையை யுள்ளத்தின்கண் மதித்து.

(வி - ம்.) ஓட்டை நெஞ்சு – அறிவறைபோகிய நெஞ்சம். ஓட்டை - இடைப்பு இளைத்தலுமெனவே ஆகூழில்லாதவ னென்பது தோற்றம். இகந்தல் – நீங்கல். (உரு)

அண்ட கோடிகளனைத்துமவை யாக்கி நிறுவும்
அண்ட ரோடெளித ழற்றுமெரி வாய்க்க ணுதவிப்
பண்டு போலெவையு மாக்கியளி பாய்ந்தும் விழிகள்
மண்டு கோபவெரி யானனிவ யங்கி மறல.

(இ - ள்.) பல கோடிக்கணக்கான அண்டங்களையும் அவ்வண்டங் களைப் படைத்தளிக்கின்ற தேவர்களுடன் எளிதாகக் கனற்றுமங்கி யின்கட்பெய்து முன்போலவே யாவற்றையும் படைத்துக் கருணை பரந்த விழிகள் பொருந்திய கோபாக்கினியான் மிக விளங்கி மாறுபட.

(வி - ம்.) நிறுவும் – நிலைபெறுத்தும். அழற்றும் – கனற்றும். பாய்த்தல் - பரவுதல். மறல – மாறுபட "பாளைவாய்க் கமுகி னெற்றிப் பழுபழ முதிர விண்டு, நிள்கழைக் கரும்பி னெற்றி நெய்ம்முதிர் தொடையல் கீறி,வாளைவா யுறைப்ப நக்கி வராலொடு மறலு மென்ப" என்னும் சிந்தாமணி (பதுமையா. 33) செய்யுளானு முரையானும் உணர்க. (உ௬)

தந்தை முந்திளவ றன்னுழிய லாது பிறர்பால்
மைந்தி றற்றணிவி லாதவிறல் வாகு வைவிளித்
திந்த நான்முகனி ரும்புவன மாக்கு மெறுழின்
சிந்தை வைத்திடுசெ ருக்கொடுத ருக்கி வருவான்.

(இ - ள்.) தன் றந்தையின்மாட்டும் மூத்தபிள்ளையார்மாட்டும் தன் மாட்டுமல்லது ஏனையோரிடத்து வலியிற்றாற் சிறிதும் தணித லில்லாத விரவாகுவை யழைத்து இந் நான்முகத்தோடுகூடிய பிரமன் பெரிய புவனங்களைப் படைக்கும் வலியின்கண் மனத்தைச் செலுத்திய களிப்பினோடு தருக்கடைந்து வருகின்றான்.

(வி - ம்.) தந்தை - சிவபெருமான். முந்திளவல் - விநாயகர். தன் - ஈண்டுமுருகன். வருவான் : வகரவொற்று நிகழ்கால முணர்த்து தல் முன்னர்க் கூறினும். ஆண்டுக் காண்க. (உ௭)

எம்மை யேதுமுணர் கின்றிலனி யற்பு மறையும்
மும்மை வையகமு முன்றெழுதல் கண்டு மறிவு
செம்மை பெற்றிலனு டற்றவரு தீவி னையினைக்
கோம்மை கொட்டினன்வி ரைந்தெதிர் கொணர்ந்து விடுதி.

(இ - ள்.) எம்மைச் சிறிது முணர்கின்றானிலன். (எமதிற மைக்குணங்களைப் பல்லாற்றானும் விரித்துக்) கூறும் வேதங்களும்

மூன்றுலகத்தின் கண்ணுறுள்ளவர்களும், முன் வணங்குதலைக் கண்டு வைத்தும் அறிவு செம்மை நிலையடையப் பெற்றானிலன். தன்னை வருத்த வருகின்ற தீயவினை வருதற்குக் கைதட்டியழைக்கின்றனன். விரைவாக அவனை எதிரே கொணர்ந்து விடுவாயாக.

(வி - ம்.) ஏதும் - சிறிதும். இயம்புமறை யென்பதற்கு அவன் நாடோறுமோதுகின்ற வேதமெனினுமாம். தீவினைபினை வேற்றுமை மயக்கம். பிணிக்குமருந் தென்றாற்போலக் கொள்க. கொம்மை கொட்டல் - தட்டி யழைத்தல். "நோற்றிலர் மகளி ரென்பார் நோங் கண்மார்தோள்க ளென்பார். கூற்றத்தைக் கொம்மை கொட்டிக் குலத் தொடு முடியு மென்பார்" என்றும் சிந்தாமணி (குணமாலை-259) செய் யுளாறு மதனுரையாறு முணர்க. (௨௬)

என்றி டிக்குலமு லம்பியதெ னக்க டவளும்
நன்று நன்றெனவ ணங்கினன டந்த லதுகண்
டன்று டங்குபடர் தேவர்முனி வோர னைவரும்
மன்ற நீத்துயிரை வெற்றுடல ராகி மருளா.

(இ - ள்.) என்றிவ்வா றிடிக்கூட்டங்கள் முழங்கினாற்போலத் திருவாய் மலர்ந்தருள வீரவாகுதேவர் நல்லது நல்லதென்று வணங்கி நடத்தலாகிய அதனைக் கண்ணுற்று அஞ்ஞான்று பிரமனுடன் செல் கின்ற தேவர்கள் முனிவர்கள் யாவரும் தங்களுயிரினைத் தேற்றமாக நீக்கி வெற்றுடம்பினராகி மயங்கி.

(வி - ம்.) உலம்பியதென - முழங்கினாற்போல. உடங்கு-கூட. படர் - செல்கின்ற. மன்ற - தேற்றமாக. (௨௭)

மைந்தன் றந்தையையி கந்துமுன மாய்ந்த னமெலாம்
தந்தை மைந்தனையி கந்துவரு நண்ட மொருவி
உய்ந்து போவதுள தாங்கொலென வாயி னுரையார்
சிந்தை யாலுணர நோக்கினர்சி தர்ந்து பெயர்வார்.

(இ - ள்.) முன்னர், இப் பிரமபுத்திரனாகிய தக்கன் (இம் முருகப் பெருமான்) றந்தையாகிய சிவபெருமானை (அவமதித்து) நீங்கலான் (நேர்ந்தனவாகிய துன்பங்கள்) எல்லாவற்றையும் யாமெல்லோரு மறிந்துள்ளோம். அத் தக்கன் றந்தையாகிய இப் பிரமன் (அச் சிவ பெருமான்) திருக்குமாரராகிய முருகக் கடவுளை (அவமதித்து) நீங்க லான் வருகின்ற தண்டத்தினின்றும் நீங்கிப் பிழைத்துப்போத லுள வாகும் கொல்லோ? என வாயினு னுரையாராகி மனத்தா னுணரும் வண்ணம் பிரமனை நோக்கினவராகிச் சிதறிப் பலதிக்கினும் சென்றனர்.

(வி - ம்.) மைந்தன் - பிரமபுத்திரனாகிய தக்கன். தந்தை - சிவ பெருமான். மைந்தன் - சிவபெருமான் புத்திரராகிய முருகக் கடவுள். இகந்தென்னும் செய்தெனெச்சங்கள் ஈரிடத்தும் காரணப் பொருளில் வந்தன. (௨௮)

அங்கி காலுமட லாழியிது போது மிகவின்
தங்கு மேயெனவ யர்ந்துதனி மாயன் மறையச்

செங்கை வச்சிர வாரிதிகழ் கோகி லவுரு
இங்குர் வந்திறகி றுங்கோலென மாழ்கி யிரிய.

(இ - ள்.) அக்கினியைக் கக்குகின்ற வலிமைபொருந்திய சக்கரப் படையானும் இக்காலத்தும் (நம்மைவிட்டு) நீக்கத்திற்கட் பொருந் துமென்று ஒப்பற்ற விண்டுவானவன் மறைந்துசெல்ல, சிவந்த கரத்தின்கண் வச்சிரப்படையை யுடைய இந்திரன் விளங்குகின்ற குயில் வடிவ மிக்கும் வரப்பெற்று இறகுகளானவை நாசமாகுமே யென்று வருந்தியோட.

(வி - ம்.) உம்மைகளிரண்டும் இறந்தது தழீஇயன. தக்கன் யாகத்தி லிகழ்ந்த பரிபவத்தினைக் குறித்தலின். இகவு - நீக்கம். இந்திரன் கோகில வுருக்கொண்டா னென்பதனை "புரந்தரனாரொரு பூங்குயி லாகி, மரந்தனி லேறினா ரந்தீபற" என்னும் மணிவாசகத்தா னறிக. (௨௯)

தெரித்த வாண்முகநெ ரித்திலுமி றக்க வருமே
தெரித்தி லேமெனம றிந்துமதி திக்கி னடைய
வரித்து வைத்தனவெ யிற்றுநிரை வாட்க ணுகுமேல்
தரித்தி லேமெனவ ருக்கர்தளர் வோடு சுழல.

(இ - ள்.) வீரபத்திரரால் நெரிக்கப்பெற்ற ஒளிபொருந்திய முகம் இப்பொழுது நெரிக்கப்பெற்றுச் செல்ல நேருமே தெரிந்திலேமென்று மடங்கிச் சந்திரனானவன் திசைகளிற் போய்ச்சேர நியமித்து வைத்தா லொத்த பற்களின் வரிசையும் ஒளிபொருந்திய கண்களும் சிந்துமே யானால் உயிர்தரித்திருக்க மாட்டோமெனச் சூரியர் சோர்வோடு சுழலா நிற்க.

(வி - ம்.) தெரித்திலேம் - தெரிந்திலே மென்பது வலிந்துநின்றது. மறிந்து - மடங்கி. வரித்து வைத்தனைய - நியமித்துவைத்தா லொத்த. (௩0)

அடர்ப்ப வண்மிடின ருந்துதியெ டுத்து நவின்மின்
சுடர்ப்ப தங்களில்வி ழுந்துதுணை சேர்ந்து நிமிர்மின்
விடுக்கு மென்றுவிரி நாவொடுக ரத்தி ரளினை
மடுத்த காதலினி யக்கியெரி வல்வி ரைவுற.

(இ - ள்.) அக்கினி யென்பவன் கொல்ல நெருங்கிவரின் அருமையான தோத்திரங்களைச் சொல்மின். ஒளிபொருந்திய பாதங்களின் விழுந்து வணங்கி இரண்டாகப் பொருந்தி நிமிர்ந்து அஞ்சலிசெய்து நில்லுங்கள் விடுப்பானென்று விரிந்த நாவினோடு கரங்களின் கூட்டத்தை நிறைந்த அன்பினால் இயக்குவித்து மிக விரைந்து செல்ல.

(வி - ம்.) நாவினையும் கரங்களையும் நோக்கி நீவிர் முன்பறுபட்டீ ராதலின் இன்னொன்றும் வாளாவிருப்பின் நுமக்குத் தீங்கு வருதலொரு தலை யென்பது தோன்ற முறையே "நவின்மின்" "நிமிர்மின்" எனக் கூறினர். தக்கன் யாகத்தில் அங்கி, கரமும் நாவும் இழந்தனன். (௩௧)

மற்றை வானவர்கண் மாதவர்கள் யாரு மறிவின்
முற்று நின்னடிமை யென்றுமுறை தாழ்ந்து யிரையாம்
பெற்று மீடுமென வோடவொளி பில்கு மவுலிக்
கொற்ற வீரனயன் முன்கைபிடி கொண்ட ணவிருன்.

(இ - ள்.) அயனை யொழிந்த ஏனைய தேவர்களும், மாதவர் முதலிய யாவரும் அறிவினுன் முதிர்ந்த தேவரீருடைய அடிமைகளென்று கூறி முறையாக வணங்கி உயிரினைப்பெற்றுப் (பெண்டு பிள்ளைகள் முகத்தில் விழிக்க) மீளுவோமென ஓடாநிற்க, ஒளிவீசுகின்ற முடியோடுகூடிய வெற்றி பொருந்திய வீரவாகுதேவர் பிரமனது முன் கையைப் பிடித்துக்கொண்டு குமரக்கடவுள் முன்னர்ப் பொருந்தினுன்.

(வி - ம்.) யாரும் - யாவரும். அறிவின் முற்றும் - அறிவா னிறைந்த. மீடுமென - மீள்வோமென்று. பில்குதல் - துளித்தல்; விசுதல் - இலக்கணை. (௬௨)

வேறு

வேத நான்முகன் மேவி நிற்றலும்
கோதை வேல்வலங் கொண்ட கொற்றவன்
போதின் மேயினேய் புவன மாக்குவோய்
யாதின் மிக்குளை யியம்பு கென்றனன்.

(இ - ள்.) வேதத்தினை யுணர்ந்த நான்முகத்தோடு கூடிய பிரமன் பொருந்தி நிற்க மாலையை யணிந்த வேற்படையினை வலப்பக்கத்துக் கொண்ட வெற்றியையுடைய முருகப்பெருமான் தாமரைப்பூவை யிடமாகக் கொண்டவனே! உலகங்களைப் படைப்போய்! எச்செய்கையி னுயர்ந்தாய் சொல்லுக வென்றனன்.

(வி - ம்.) "போதின்மேயினேய்" "புவனமாக்குவோய்" என்பன இழிவின்கண் வந்த குறிப்புமொழி. நிற்றலுமென்பது எச்சத்திரிபு. இயம்புக என்றனன் என்பது விகாரம். (௬௩)

முனிவ னின்னண முதல்வன் கூறலும்
தனிதி னின்றவச் சதுமு கத்தவன்
பனியு ளத்தினன் பகர்த லொன்றிலான்
புனிதன் மேலிது புகறன் மேயினன்.

(இ - ள்.) முதல்வன் சிற்றத்தாலிவ்வாறு கூறத் தனித்து நின்ற அந்நான்முகங்களோடு கூடிய பிரமன் நடுக்கங்கொண்ட வுள்ளத்தினை யுடையவனாய்ச் சொல்லுதற்கொரு மாற்றமுமிலனாயினன். தூய்மை பொருந்திய முருகப்பெருமான் மேலிதனைச் சொல்லத் தொடங்கினுன்.

(வி - ம்.) தனித்து என்பது தனிதின்னென விகாரப்பட்டு நின்றது. "இனிதி னிங்ஙன மேத்தி வலங்கொடு - முனிவர் சித்திர கூட முனுகித னுத்-தனிதினேகுபு தாபதர் வாழ்வதோர்-பனிகொள்பூம் பொழிற்பள்ளி கொண் டானரோ" என்னும் சிந்தாமணி (கேமசரி. 10) செய்யுளானும், தனித்து விகாரம், இன்: அசை எனவரு மதனுரையானுமுணர்க. (௬௪)

வாழ்வு மிக்குளை யென்னில் வைகலும்
வீழ்ம னக்குறை மெத்த வுன்னுபு
போழ்ம திச்சடைப் புனிதன் றந்தைமுன்
தாழ்தல் செய்திடச் சார்கு வாயலை.

(இ - ள்.) எல்லாத் தேவரினும் நீ வாழ்க்கை மிக்குள்ளனையாயின் விரும்புகின்ற மனக்குறையை நிறைக்க நினைத்து நாடோறும் பிறைச் சந்திரனை யணிந்த சடையினையுடைய தூயனாகிய என் தந்தையாரின் முன்னர் வணங்கச் செல்வாயல்லை.

(வி - ம்.) வீழ்-விருப்பம். மெத்த-நிறைக்க. போழ்தல் - பிளத்தல்

வலன்மி குத்தியே னென்னல் வந்தவன்
குலவு மெம்பியாற் கோட்பட் டங்குறீஇ
அலம ராவுள மலமந் துத்தரம்
சிலவு நல்கிடாச் செய்கை பெற்றிலாய்.

(இ - ள்.) வலியினும் மிக்குள்ளாயெனின் நென்னற் பிறந்தவனாக விளங்குகின்ற என்றம்பியாற் கொள்ளப்பட்டங்குப் பொருந்திச் சுழலுத லுற்று உள்ளம் சுழலப்பெற்றுச் சில மறுமொழியும் கூற வியலாச் செய்கையைப் பெற்றிருக்க மாட்டாய்.

(வி - ம்.) அலமரல் - சுழலல். வலன் - வலிமை. நென்னல் - நேற்று. நேற்று வந்தவன் என்றது மிகவும் இளைஞன் என்றவாறு. ( )

இன்ன நன்மையா லீடி லெண்குணம்
மன்னி யெங்கணு மலர்ம ணம்மெனத்
துன்னி யாருயிர்த் தொகுதிக் கைந்தொழில்
முன்னி யாற்றுமம் முதல்வ னீயலை.

(இ - ள்.) இங்ஙனமாய தன்மை நின்மாட்டிருத்தலான், ஒப்பில்லாத எண்குணங்கள் பொருந்தப்பெற்று மலர்மணம்போல யாங்கணும் கலந்து அரிய உயிர்த்தொகைகட்கு ஆக்கல், அழித்தல், அருளல், காத்தல், மறைத்தலாகிய ஐந்தொழிலையும், (உயிர்களின் பக்குவ நிலைக்கேற்றவாறு) கருதிச் செய்யும் தலைவனும் நீயலை.

(வி - ம்.) ஈடிலா - ஒப்பிலா, முன்னி-கருதி. (௩௭)

உலகு யிர்ப்பதி னுயர்ந்து ளேனெனில்
அலகி லண்டமு மாக்கு நின்னையும்
குலவு மாலையுங் கோனை வன்கணைத்
தலைவர் தம்மையுந் தந்த தில்லையே.

(இ - ள்.) உலகங்களைப் படைத்தலினானே யான் உயர்வு பெற்றுளேனென்பாயாயின் அளவிலா அண்டங்களையும் படைக்கின்ற வுன்

னையும், விளங்குகின்ற விந்துவினையும், அறியாத வகையோடு கூடிய கணத்தலைவர்களையும் நீ படைக்கவில்லை.

(வி - ம்.) கோளை - அறியாத. நந்தநில்லை - படைக்கவில்லை. ( )

தஞ்ச மின்றியுஞ் சமைக்க வல்லையேல்
எஞ்சு நின்றலை யிழைத்துக் கோடிமுன்
துஞ்சி னைகொலோ தோற்ற நின்னதேல்
விஞ்ச வின்னினிக் காண்டும் விறலை.

(இ - ள்.) பற்றுக்கோடின்றியும் படைக்கவல்லமை யுடைமை யானால் குறைந்த நின்றலையைப் படைத்துக் கொள். முன்னர் அதனை மறந்து விட்டனையோ? படைப்புத்தொழில் நின்னுடையதாயின் அத் தொழிலதிகரித்திருத்தலை இப்பொழுதே காண்போம். செருக்கினைக் கொள்ளற்க.

(வி - ம்.) தஞ்சம் - பற்றுக்கோடு. சமைக்க-படைக்க. இழைத்தல் - படைத்தல். துஞ்சினை கொல் - மறந்தனையோ, விறலை - தருக்குக் கொள்ளற்க. (௨௯)

சகல ரும்பலர் சத்து வக்குணம்
தொகுவர் நீயதிற் றேற்ற முற்றிலை
இகுமி ராசதத் திழிந்த மோகுணம்
புகுநர் நிற்புறங் கண்டு ளாருளார்.

(இ - ள்.) மும்மலத்தோடு கூடிய சகலநம்பலர் சத்துவகுணத்தினைக் கூடியுள்ளனர். (வேதங்களை யறிந்த) நீ அச் சத்துவ குணத்தின் கட் டோற்ற முற்று மில்லை, இராசத குணத்தினின்று மிழிந்த தமோ குணத்திற் புகுந்து நிற்கு மசுரர் முதலியோர் நின்னைப் பிறக்கிடச் செய்தாருமுளர்.

(வி - ம்.) கண்டுளாரு மென்றவும்மை விகாரத்தாற்றொக்கது. தமோகுணம் புகுநர் - அசுரர் முதலியோர். புறங்காணல் - பிறக்கிடச் செய்தல். இகும்: அசை. "காண்டிகுமல்லமோ கொண்க" என்புழிப் போலக் கொள்க. விண்டு தமோ குணத்திலும், உருத்திரன் சத்துவ குணத்திலும், பிரமன் இராஜத குணத்திலும் தோன்றியுள்ளனரென்பது நூற்றுணிபாகலின், நீயதிற்றேற்ற முற்றிலை யென்றார். இக்குணங்களை மாற்றியும் கூறுவர். (௩0)

எவற்றி னுமிங் கென்னை யாணவத்
தவற்றி னைத்தெறுந் தத்து வத்தினைத்
தவற்றி லின்றியே கண்டு வல்வினை
துவற்றன் மேலெனத் துணிந்து ளாயெனில்.

(இ - ள்.) (இங்ஙனம் கூறிய உயர்வு நீதாழ்வாகிய) எவைகளினு மிங்கியாது பயன்; ஒன்றுமின்று ஆகலான் ஆணவமலத்தாலாகிய தவற்றினைக் கெடுக்குந் தத்துவநிலையினை வருத்துதலின்றியே அறிந்து

உள்ளத்தை வருத்த வெம்மையுண்டாக அடித்துக் கெடுதலில்லாத வலிய சிறையிற் புகுத்துங்கள் என்று கொடும்பாடு என்று திருவாய்மலர்ந் தருளினான்.

(வி - ம்.) செறு - சாதல். "செறுமாகப் பலவும் பெற்றுச் சிந்தை கூர் மனத்தையாகி," என்னும் சிந்தாமணி (குண. 274) செய்யுளடியானு முணர்க. வெச்சென - வெம்மையுண்டாக. "அச்சமுறுத் தமுதுபுளித் தாங்குத்தா மிந்தசொல், வெச்சென்றிடச் சொல்லிவிரி கோதையவர் சூழ்ந்தார்" என்னும் சிந்தாமணி (சுரமஞ்சரி. 21) செய்யுளடியானு முணர்க. கொதுப்பு - அவிதல்: ஈண்டுக் கெடு தலையுணர்த்தி நின்றது; இதனை "உறுத்தலே கொதுத்தலோடு கவித்தலு மவித்தற் பேரே" என்னும் நிகண்டானறிக. தெழித்து - கோபித்து: "பொங்கு மாநிரை பொலியவும் பொலங்கடேர்ப லூறியவும், சிங்கம் போற்றெழித் தார்த்தவச் சிறுவர் தேர்மிசைத் தோன்றினான்" என்னும் சிந்தாமணி (மண்மக. 205) செய்யுளானு மதனுரையானு முணர்க. (௪௪)

குருதி கொப்பளித் தருவியாய்க் குவவுந்தோட் குதிப்பப்
பொருவில் பன்மணி மோலியிற் பொடிபட்டுப் பொழியத்
திருவு மற்றவன் றேசுநற் சிருட்டியுஞ் சிந்த
உருவ வன்கணம் விரன்மடித் தோச்சின சிரத்தில்.

(இ - ள்.) இரத்தமான அருவிபோற் கொப்பளித்துத் திரண்ட தோளின்மேற் பாய முடியின்கண்ணுள்ள ஒப்பில்லாத பல இரத்தினங்கள் தூளாகிச் சிந்த அப்பிரமன் செல்வமும், அழகும், படைத்தற்றொழிலும் கெடும்வண்ணம் கண்டார் நடுக்குறத்தக்க வலியகணங்கள் விரலினை மடக்கித் தலையின்கண் குட்டின.

(வி - ம்.) உரு - உட்குதல். "உருவுட்காகும்" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தானறிக. அகரஞ் சாரியை. (௪௫)

எருக்கி வன்கரம் பிறையெனப் பிடர்கொடுந் தெற்றி
மருக்கி ளர்ந்ததார் மணிவடம் வழிந்தலைச் சிந்தத்
தருக்க மிந்துநீர்ந் தாரையில் விழிச்சுடர் சாம்பப்
பொருக்கெ னக்கொடு போந்தருஞ் சிறைப்புகு வித்த.

(இ - ள்.) அடித்துக் கையின்கண்ணுள்ள விரலினைப் பிறைச்சந் திரனென்று சொல்லும் வண்ணம் வளைத்துப் பிடரின்கட் கொடுத்துத் தள்ளி வாசனையை வெளியிடுகின்ற மாலையும், அக்கமாலையு மறுந்து வழியிடங்களிற் சிந்தச் செருக்கு நீங்கி நீரொழுக்கினால் கண்ணொளி மழுங் கக்கொண்டு சென்று கணங்கள் ஒருவராலும் நீக்குதற்கரிய சிறையின் கட் புகுவித்தன.

(வி - ம்.) எருக்கி - அடித்து. மணிவடம் - உருத்திராக்க மாலை. தாரை - நீரொழுக்கு. சாம்பல் - கூம்புதல்; ஈண்டு மழுங்கல். பொருக் கென : விரைவுக் குறிப்பு. (௪௬)

உளைய வேற்றவ ரொறுத்துழி யஞ்சலென் றேம்பும்
கிளைக ளாகிய தந்தைதாய் கடிமழ வென்ன

விளைவு நோக்கிலா விரிஞ்சன்வே றொருதுணை யின்றி
அளைய ருஞ்சிறைப் பெருந்துயர்த் துணையொடு மாழ்ந்தான்.

(இ - ள்.) வருந்தும்படி அயலார் அடித்தகாலத்து அஞ்சற்க எனப் பாதுகாக்கும் ஆதாரமாகிய தந்தைதாயரால் விடப்பட்ட குழவியைப் போலப் பின்னர்த் தனக்கு வருவதாகிய துன்பினை ஆராயாதவனாகிய பிரமன் வேறொரு துணையுமில்லாமல் கலத்தற்கருமையாகிய சிறையின் கண்ணுள்ளவாகிய பெரிய துன்பமாகிய துணையோடு மகிழ்ந்தனன்.

(வி - ம்.) உளைய - வருந்த. களைகண் - ஆதாரம். விரிஞ்சன் - அன்னப்பறவையாற் றாங்கப்பெறுபவன். அளையருஞ்சிறை - கலத்தற் கருமையாகிய சிறையிடம். (௪௭)

பாம்பின் வாய்ப்பல நாட்படு பரிதியு மறிவங்
கோம்பு முள்ளமோ டுலைப்பினுட் கருப்படு மழவும்
கூம்பு றுதுயன் றுள்விரி கங்குலின் விழியும்
தேம்ப ருஞ்சிறைத் திசைமுகத் தவனிக ரானான்.

(இ - ள்.) வருத்தத்தைத் தருகின்ற அரிய சிறையின் கண்ணுள்ள பிரமன் கேதுவென்னும் பாம்பின் வாயின்கண்ணே பலநாட் பொருந்திய சூரியனையும், நல்லறிவைப் பாதுகாக்கு முள்ளத்தோடே அளவில்லாத காலம் கருக்குழியிற் பொருந்தும் குழவியையும், இதழ்குவியாமல் பல காலம் இரவின்கண் விழித்திருக்கின்ற விழியினையும் ஒப்பாயினன்.

(வி - ம்.) பாம்பு - ஈண்டுக் கேது. கருவின்கட் குழவியடங்கி யிருக்கும்போது பிறவித்துன்ப முதலியன தோன்றலின் ஆண்டிருந்தே இறைவனை நோக்கி யினிக்கருவாசம் ஒன்றுதெனக் கைகூப்பி வருந்துமாதலின் "அறிவங் கோம்பு முள்ளமோ டுலைப்பினுட் கருப்படு மழவும்" என்றார். ஓம்பும் - பாதுகாக்கும். உலைப்பில் - அளவில்லாத; கரு - கருப்பம். கூம்புறுது - குவியாது; ஈண்டுத் துயிலின்மை யென்க. விரி - ஈண்டு விழித்தல். தேம்பு - வருந்துகின்ற திசைமுகத்தவனிவைகளை யொத்தானென முடிக்க. (௪௮)

கணவ னூர்சிறைப் படுவது கருதினள் கொல்லோ
தணவு றுதவ னுவகந் தவிர்ந்தவொப் பனையாள்
இணர்கு லாந்தருத் தாமரை யிசையிவை மற்றும்
அணவி வாழ்தரு மகமென முன்னரே யமைத்தாள்.

(இ - ள்) அப்பிரமன் நாவாகிய விடத்தை இறைப்பொழுதும் நீங்காமற் றங்கிய அலங்காரமுடைய கலைமகள், பூங்கொத்துக்கள் பொருந்திய மரமும், தாமரை மலரும், கீதமுமாகிய இவை முதலிய பிறவற்றையும் பொருந்தி வாழ்தற் கேதுவாகிய இல்லமென முன்னரே அமைத்துக் கொண்டனள். ஆதலாற் றன்னாயகர் சிறையின்கட் படலை முன்னரே யறிந்து வைத்தாள்போலும்.

(வி - ம்.) தவிர்ந்த - தங்கிய. ஒப்பனையாள் - அலங்காரத்தை யுடையாள். தரு - மரம். இசை - கீதம். அகம் - இல்லம். இக் கதையைக் காஞ்சிப்புராணம் நான்முகப் படலத்தால் அறிக. (௪௯)

விரகு மேவரி னரகமுந் துறக்கமே வெதிர்க்குட்
நரக மேவிர கில்லுழி நயத்தகு மிடமும்
அரவ மாலையான் கயிலையு மலரவன் றனக்குப்
புரவி லாத்துயர்க் கவதியில் புவனமா கியதே.

(இ - ள்.) நுண்ணறிவு பொருந்திறைல் நரகானுபவமும் துறக்கானுடபவமாகும். நுண்ணறிவில்லுழி (யாவரும் விரும்பத்தக்க போகபூமி முதலிய இடங்களும்) செவிடு படுதற்குக் காரணமாகிய நரகானுபவமே யாகும். ஆதலால் தாமரையலரின்கண் வாழ்கின்ற பிரமனுக்குப் பாம்பலங்காரப் பரமன் வாழ்கின்ற கயிலைமலையும் காத்தலில்லாத துன்பினுக்கு முடிவில்லாத நரகபூமி யாகியது.

(வி - ம்.) நுண்ணுணர்வின்மை வறுமை யஃதுடைமை "பன்னைப் பணைத்த பெருஞ்செல்வ" மென்னும் நாலடிச் செய்யுளின் கருத்து முன்னிரண்டடியினுமமைந்திருத்தல் காண்க. விரகு - அறிவு. வெதிர்க்கும் நரகம் - செவிடுபடுதற் கேதுவாகிய நரகம். துயர்க்கு அவதியில் புவனம் - நரகம்; அலரவன் - ஈண்டுக்குறிப்புமொழி; பழிச்சொல் உடையவனெனப் பொருள்படுதலான். நிலங்கடந்தான் தா "அப தெல்லா மொருங்கு" (௬௧0) என்னும் பொய்யாமொழிபோல் வாளா பெயராய் நின்றது. (௩0)

தேவ ராயினு ரின்பமே நரகினிற் றிளைக்கும்
பாவ ராயினர் துன்பமே படரிரு பயனும்
பூவ ராயின ரேநுகர் வாரெனப் புகல்வார்
காவ லுன்முக விடும்பைநோய் கண்டிலர் போலும்.

(இ - ள்.) தேவராயினர் இன்பத்தினையே நுகர்வார். நரகினில் மூழ்கும் பாவமுடையார் துன்பத்தினையே நுகர்வார். பொருந்திய இவ்விருபயனையும் பூமியிலுள்ளாரே அனுபவிப்பாரென்று கூறுவோர்கள் சிறைக்காவலிலுள்ள பிரமன் அனுபவிக்கும் துன்பமாகிய நோயினைக் கண்டிலார் போலும்.

(வி - ம்.) பூவர் - பூமியிலுள்ளவர். காவல் - ஈண்டுச் சிறைக் காவல், "நுகர்வாரென்பதனை யேனைய இடத்தும் கூட்டுக. (௩௧)

மூவ ரென்றுட னெண்ணிடு முதன்மையு முனிவர்
தேவர் யாவரும் பணிபுரிந் துயர்தரு திருவும்
நாவி யங்குழன் மாதரார் கலவியி னயப்பும்
ஆவ விற்றவா றெனவிலா வித்துள மயர்வான்.

(இ - ள்.) மூவரென் றுடன்வைத் தெண்ணத்தக்க முதன்மையும், முனிவர்களும், தேவர்கள் யாவரும், பணிசெய்தலாலுயர்கின்ற செல்வமும், கத்தூரிக்குழம்பினை யணிந்த கூந்தலோடுகூடிய பெண்களின் கலவியான் வருகின்ற இன்பமும், ஐயோ கெட்டவிதமென்ன என்று அழுது மனம் வருந்துவான்.

(வி - ம்.) ஆவ - ஐயோ இரக்கக்குறிப்பு. விலாவித்து - அழுது. (௩௨)

கறுவு கொண்டிடி னுலகெலாங் கவிழ்த்தருள் கொளின்
நிறுவு மாற்றன்மா தவர்நெடுந் தேவர்யா வரையும்
பெறுதல் வல்லயான் பிழையிற் பிணையுமா செய்தோன்
சிறுவ னேயென நினைதொறுந் தெருமரா நின்றான்.

(இ - ள்.) சினங்கொள்ளின் உலகங்களை யெல்லாந் தலைகீழாம்படி செய்து அருளைக் கொள்ளின் அவ்வுலகங்களை (மீள நின்றநிலையில்) நிறுவவல்ல ஆற்றலையுடைய பெரிய தவத்தினரையும், தேவர்களையும் படைத்தலில் வன்மை பெற்ற யான் துன்பத்திற் கலக்குமாறு செய்தவன் சிறியோனே யாவனோ வென்று நினையுந்தோறும் சுழலாநின்றான்.

(வி - ம்.) கறுவு - கோபம். கவிழ்த்தல் - ஈண்டு அழித்தல். பிறுவம் - படைக்கும். பிழை - துன்பம். பிணையுமா - கலக்குமாறு; ஈறு தொக்கது. தெருமரல் - சுழலல். (௫௩)

தன்னின் மேற்படு மாற்றலர்ப் பிழைப்பது தகாதால்
அன்னர் தம்மின்மேற் பட்டவ ருண்மிகுந் துழியும்
கன்னி பாகனார் பேரருட் கடலினிற் றிளைத்து
முன்னி னேற்கிங்க ணிதுவந்து முடிதலி னென்பான்.

(இ - ள்.) உமையம்மையாரைப் பாதிப் பாகத்திலுடைய சிவபெருமானது பெரிய அருளாகிய கடலின்கண் மூழ்கி அடைந்த எனக்கு அவ்விடத்து இச் சிறைவாசம்வந்து பொருந்துதலினால் தன்னைக் காட்டிலும் அறிவாற்றல் செயல்களான் மேம்பாடுற்ற பகைவரை அவரைக் காட்டிலும் மேன்மையுற்றவர் அருள் ஒருவனுக்கு மிகுந்திருந்த காலத்தும் நொதுமலராய் விலகிச் செல்லுதல் அடாது எனச் சொல்வானாயினன்.

(வி - ம்.) முன்னுதல் - அடைதல். இது - இச்சிறை. (௫௪)

போது தவ்வெனக் கேண்மையர் தவ்வெனப் புல்லும்
மாதர் தவ்வென மைந்தர்க டவ்வென வானில்
கோதில் சத்திய வுலகந்தவ் வெனவென்றன் கொள்கை
யாதுந் தவ்வென விறுத்தவூழ் நன்றென இனைவான்.

(இ - ள்.) யான் தங்கியிருக்கும் தாமரைமலர் பொலிவழிய, என் சுற்றத்தார் பொலிவழிய, யான் புல்லுதற்குரிய பெண்கள் பொலிவழியப், புதல்வர்கள் பொலிவழிய, ஆகாயத்தின்கண்ணுள்ள குற்றமிலதாகிய சத்திய உலகம் பொலிவழிய, எனது கொள்கை யனைத்தும் பொலிவழியத் தங்கிய ஊழ் பெரிதாகுமென்று வருந்துவான்.

(வி - ம்.) தவ்வெனல் - பொலிவழிதல். "கவ்வையாற் கவ்விது காமமதின்றேற், றவ்வென்னுந் தன்மை யிழந்து" எனவரும் (1144) திருக்குறளானும், "நால்கால் யாத்த மாலை வெண்குடை, தவ்வென் றசைஇத் தாழ்துளி மறைப்ப" என்னும் நெடுநல்வாடை (184, 185) அடிகளானுமறிக. யாதும் - எதுவும். இறுத்த - தங்கிய. நன்று - பெரிது. (௫௫)

பெருமை தக்கரிற் சிறுமைவந் தடுப்பினப் பிறப்பை
யருபி றப்பினு ளொன்றென வைக்கவும் படுமே
ஒருசி ரம்பிரா னுண்கல னுக்குநாட் செல்லல்
முருக னுய்த்ததற் கிடும்பிரை பொனாமுன்னிக் கரைவான்.

(இ - ள்.) பெருமை தக்கிருக்கப் பின்னர் (தன் நிலைமைக்குச் சிறிது மேலாத) சிறுமை வந்துசேரின் அப்பிறப்பினை வந்த பிறவிகளுள் ஒரு பிறப்பாகவைத் தெண்ணப்படுமோ? படாதென்க. ஒருசிரத்தினை எம்பெருமா னுண்கலமாகக் கொண்ட நாளினுளவாகிய துன்பம், முருக னாற் றரப்பட்ட துன்பமாகிய பாலினுக்குப் பிரைத்துளியாகுமென நினைத்து உருகுவா னயினன்.

(வி - ம்.) செல்லல் - துன்பம், எழுவாய். இஃதேகதேச வுருவகம். தலைகிள்ளிய துன்பம் பிரை. முருகனுய்த்த துன்பம் - பால். (௬௧)

நெடிய மாயனுந் தலையொன்று நிலத்திடை வீழ்ந்து
முடிவு பெற்றனன் பன்முறை யிளிவர முயன்றன்
கொடிய பால்வினை போல்வதூஉ மெவர்தமைக் குறுகா
தொடிதல் பெற்றதென் றூழுடை வலியையு நினைப்பான்.

(இ - ள்.) நெடுமாலும், ஒருதலையானது நிலத்தின்கண் வீழப் பெற்று இறுதியெய்தினன். பலமுறை யாவரும் இளிக்கத்தக்க செயல்களுளவாக முயற்சி செய்துள்ளான். தீயவூழாகிய வினைகள் எவரையடையாது நீங்குதல் உற்றதென்று கருதி ஊழின் வல்லமையையும் நினைப்பா னயினான்.

(வி - ம்.) விண்டுவின்றலை நிலத்திடை விழ்ந்து முடிபெற்றதைக் காஞ்சிப்புராணம் வன்மீகநாதப் படலத்தானறிக. இனி தக்கன் யாகத்தின் மான் வடிவு கொண்டுசெல்ல அஞ்ஞான்று விண்டு தலையிழந்து வீழ்ந்தானெனவும் கூறுவர். போல்வதூஉம் என்பது போலி. இதனை "ஒப்பில் போலியு மப்பொருட் டாகும்" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தானு மதனுரையானும், "கெருப்பழற் சேர்ந்தக்கா னெய்போல் வதூஉம்" என்னும் நாலடி (௧௨௪) செய்யுளானுமறிக. பால் - ஊழ். (௬௭)

கற்றல் கேள்விநன் றுடையவர் தமக்குமூழ்க் கலக்க
முற்று மேல்வையி லதன்பய னறிவுமுற் ருமல்
செற்று றுத்துமீ சன்றெழிற் றிறத்தையுஞ் சிந்தித்
தற்ற முற்றவ னுற்றவே துவுஞ்சிறி தறிந்தான்.

(இ - ள்.) கல்வி, கேள்வி பெரிது முடையார்க்கும் ஊழானது வருத்துதலைச் செய்ய வந்தடைந்த காலத்தில் அவ்வூழின் பயனை அறிவான தடையாவண்ணம் அப்பயனைத் தடுத்து அவ்வூழை வலியுறுத்து நின்ற இறைவன் றெழில் வகையினையும் சிந்தனைசெய்து (தானடந்து கொள்ளுமியல்பினிற்) சோர்வுற்றவனாகிய பிரமன் தனக்கு நேர்ந்த துன்பினைத் தணிக்க ஏதுவினையும் (இறைவன் திருவருளால்) சிறிதறிந்தான்.

(வி - ம்.) கற்றல் - கல்வி. நன்று - பெரிது. முற்றுமெல்லை - ஒடுங்குங்காலம். அதன்பயன் - அவ்வூழின்பயன். செற்று - அப்பயனைத் தடுத்து. உறுத்தும் - ஊழினை வலியுறுத்தும். நான்முகன், நான் கற்றவனாயிருந்தும், அதன் பயனை ஊழ் அடையாவண்ணந் தடுத்ததென்றுணர்ந்தானென்பார் "ஆற்ற ஏதுவும் சிறிதறிந்தான்" என்றார்.

உலக மாக்கிடு முதற்றொழிற் குரியவ னிமைப்பின்
அலகில் காலங்க ளருந்துயர் படும்பிழைப் பிழைத்தால்
புலனி லாதெமைப் போல்பவர் பொழுதெலாம் பிழையே
பலவு மாற்றுவார் பருவருந் துயரென்று பரிவார்.

(இ - ள்.) உலகத்தைப் படைக்கின்ற முதற்றொழிற்குரியவனாகிய பிரமன் இமைப்பொழுதில் அளவிடப்படாத காலங்கள் அரிய துயரை யனுபவித்தற்குக் காரணமாகிய தவற்றினைச் செய்வானாயின் அறிவில்லாமல் எம்மைப்போல்பவர், காலமெல்லாம் குற்றங்கள் பலவுஞ் செய்வார்கள். அவர்கள் வருத்துகின்ற துன்பத்தினை யெக்காலத்து நீக்குவார்கள்.

(வி - ம்.) பருவருந்துயர் - வருத்துகின்ற துன்பம். பரிவார்—நீக்குவார். (௪௯)

தீய பாவங்க ளளற்றன்றித் தீர்வுகா ணுதால்
ஆய பல்வகை யளறென்ப வருந்துய ரப்பால்
மேய நான்முகன் வழிபடா வறன்கடை விளிக்கும்
தூய தண்டமுங் கருணையே யன்றுகொ றுறவீர்.

(இ - ள்.) கொடிய பாவங்களின் பயன் நரகத்துன்பத்தை யனுபவித்தாலன்றி நீங்காது. அங்ஙனமாய பலவகை நரகமென்று சொல்லப்படுவன அரிய துன்பங்களாம். அத்துன்பத்தின் பகுதியைப் பொருந்திய பிரமன் (முருகப்பெருமானை) வழிபடாத பாவத்தைக் கெடுக்கும் பரிசுத்தமான தண்டமும் துறவிகளே! (பிரமன் மாட்டு முருகப்பெருமான் வைத்த கைம்மாறில்லாத) கருணையே யல்லவா? (கருணையேயாம்)

(வி - ம்.) அளறு - துன்பமாகும். அப்பால் - அத்துன்பப் பகுதியை. வழிபடா - ஈறுகெட்ட பெயரெச்சம். அறன்கடை - பாவம். "அறன்கடை நின்றாருளெல்லாம்" என்னும் திருக்குறளடியானுணர்க. விளிக்கும் - கெடுக்கும். தண்டங் கருணையாவதை "தண்டமுங் கருணையென்றறிவாய்" என்னும் சித்தியார்ச் செய்யுளானறிக. (௫0)

ஆர ணன்றுயர்க் கவதியின் றதுநிற்க விப்பால்
பூர ணன்புகர் துமித்தருள் வழங்கிடும் புனித
கார ணன்புவ னங்களை யளிப்பது கருதிச்
சீர ணங்கிய வேங்கடச் சிலம்பினைச் சார்ந்தான்.

(இ - ள்.) வேதத்தை யோதி முற்று முணர்ந்தவனாகிய பிரமனது துன்பினுக்கு முடிவின்று அதுகிடக்க. பின்னர், எங்கும் நிறைந்தவனும், ஆன்மாக்களுக் காணவமலத்தினைப் போக்கித் திருவருள் சுரக்கும்

தூய்மையையுடைய மூலகாரணனாகிய முருகப்பெருமான் புவனங்களைப் படைக்கக் கருதிச் சிறப்புப் பொருந்திய வேங்கடமலையினை யடைந்தனன்.

(வி - ம்.) அவதி - முடிவு. புரை - குற்றம் ஆணவமலம். அணங்கிய - பொருந்திய. (௬௧)

வேறு

குளிர்மரம் பொருதாகக் கோட்டுமண் கொளும்வேழம்
தெளிபளிக் கறைநாப்பட் டிகழ்தன துருநோக்கிக்
களிறென வெதிர்பாய்ந்து கதிர்மருப் பிடையிறலும்
ஒளிர்மணி யிளமதியி னொழுகமிழ் தெனவுகுமால்.

(இ - ள்.) குளிர்ந்த மரங்கள் நுளையாம் வண்ணம் குத்திப் பெயர்த்த யானைகள் தெளிந்த பளிங்குப்பாறையின் நடுவண் விளங்குகின்ற தனதுருவினை வேறொரு யானையெனக் கருதி எதிரே பாய்தலான் ஒளியோடு கூடிய கொம்பிடையே யொடிய (அக்கொம்பின்கணுள்ள) ஒளியையுடைய முத்தங்கள் பிறைச்சந்திரனிடத்தினின்றும் ஒழுகுகின்ற அமிழ்தமென்று சொல்லும் வண்ணம் சிந்தும்.

(வி - ம்.) கோட்டுமண் கொளல் - குத்திப்பெயர்த்தல். இதனை, "தோட்டுவண் டொலியன் மாலைத் துடியிடை மகளி ராய்ந்த, மோட்டுவெண் முத்த மின்னு முகிழ்முலை யுழுத சாந்தம், கோட்டுமண் கொண்ட மார்பம் கோதைவாள் குளித்து மூழ்கிக், கோட்டுமண் கொள்ள நின்றான். குரிசின்மண் கொள்ள நின்றான்" என்னும் சிந்தாமணி - (மண் மக - ௩௩௫) செய்யுளானு மதனுரையானும், "வாருயர் பெண்ணை வருகுநம்பை வாய்ந்தனபோல் ஏரியவாயிறு மென்செய்யும் - கூரிய கோட்டியானைத் தென்னன் குளிர்சாந்தணியகலம் - கோட்டுமண் கொள்ளாமுலை" என்னும் முத்தொள்ளாயிரச் செய்யுளானும் "கூட்டுமைபோற் செறிந்த கூரிருளைக் கூன்கோட்டாற், கோட்டுமண் கொண்ட குளிர்திங்கள்" என்னும் நளவெண்பாச் செய்யுளானுமறிக. அறை - பாறை. தனதுருவைக் களிறென நோக்கி என மாற்றுக. இறல் - கெடுதல். (௬௨)

குரங்கிய மலர்ச்சாகைக் கோடம லதிங்கத்தின்
மரங்கொலு மதவேழ மதர்த்தெழு மயக்கத்தால்
உரங்கிள ரரசென்னு துடன்மடங் கலின்மார்பம்
அரங்கொலுங் கூர்ங்கோட்டி னழுத்துபு நிமிர்ந்தோச்சும்.

(இ - ள்.) வளைந்த மலர்களையுடைய சிறு கிளைகளோடு கூடிய கொம்புகள் நிறையப்பெற்ற திண்ணிய அதிமதுர மரத்தை யொடிக்கின்ற மதத்தையுடைய யானைகள் (அவ்வதிமதுர இலையாகிய குளகினை யுண்ணலால்) மதர்த்துண்டாகிய மயக்கங் காரணமாக வலிமை விளங்குகின்ற விலங் கரசனென்று கருதாது அப்பொழுதே சிங்கத்தின் மார்பத்தினிடத்துக் கொல்லன் அரத்தின் வலியையும் கெடுக்கின்ற வலி பொருந்திய கூர்மையோடுகூடிய கொம்பினாற் குத்தி நிமிர்ந்து வீசும்.

(வி - ம்.) குரங்குதல் - வளைதல். இதனை "இலைப்பொழில் குரங் கினவின்ற தூண்டளிர்" என்னும் சிந்தாமணி (காந். ௬௮) செய்யுளடியானுணர்க. அதிங்கம் - அதிமதுரம். இதனை "நாறும் மதத்தினுலே நாகத்தை யிரிக்கும் நாக, மாறிய சினத்ததன்றி யதிங்கத்தின் கவளங் கொண்டால்" எனவரும் சிந்தாமணி (காந். உ௯௨) செய்யுளடியானு மதனுரையானு முணர்க. அதிமதுரந் தழையாகிய குளகினை யானை யுட்கொள்ளுமாயின் மதத்தையக்குளகு மிகச் செய்யுமென்பதனை மேற்கூறிய செய்யுளடிகளானு முரையானு முணர்க. அதிமதுரக் குளகினையுண்ட மயக்கங் காரணமாக யானை விலங்கரசனாகிய சிங்கத்தினைக் கோட்டாற் குத்தி வீசியதென்பார் "மயக்கத்தாற் கோட்டி னழுத்துபு திமிர்ந்தோச்சு" மென்றார். அழுத்தல் - ஈண்டுக்குத்தல். ஓச்சல்-வீசல்.

தோற்றுதி வள்ளுகிரு மவைதுறு மியதாளும்
கூற்றெனக் கொளல்வாய்த்துக் கொம்மென வெழுவேங்கை
ஏற்றுவன் னுதிக்கோட்டி னிமில்விடைக் குலைப்பநினைப்
பாற்றுத லில்லையெனப் படர்தெரிப் பனபோலும்.

(இ - ள்.) தோல்வாயிற் பொருந்திய கூரிய நகங்களையும் அந்நகங்கள் பொருந்திய கால்களையும் இயமனென்று சொல்லும் வண்ணம் கொள்ளுதல் வாய்க்கப்பெற்று விரைவாகப் பகைமே லெழுகின்ற வேங்கைப் புலியினை இமிலையுடைய எருதுகளானவை வலியகூர்மை பொருந்திய கொம்பினுற் குத்தித்தூக்கி யசையாநிற்ப அசைதல் அப்புலியானது இனியுன்னையு முன்குலத்தையும் வருத்தேனென்று சொல்லும் வண்ணம் (அவ்விடைகள் அதற்குத்) துயர்செய்தலைத் தெரிவிப்பன போலும்.

(வி - ம்.) தோல்துதி - தோல்வாய். துதி - வாய்; இனிக் கூர்மை யென்பாருமுளர். கொம்மென - விரைவுக் குறிப்பு. வேங்கை யிரண்டாவதன்றொகை. இமில் - விடையின் முரிப்பு; இதனையீக் காலத்துக் கொண்டை யென்பர். விடை கோட்டினி லேற்றுக் குலைப்பவென மாற்றுக. பாற்றுதல் - வருத்துதல். படர் - துன்பம். (௬௮)

குடநிகர் செருத்தற்றிண் கோட்டிள வனமேதி
இடவிய வறைநின்று கன்றினை யினிதூட்டிப்
படர்தர வுகுதீம்பால் பசையறத் துவர்ந்ததனைக்
கடறமர் வாழ்க்கையினர் கணிச்சியின் வெளவுவரால்.

(இ - ள்.) குடத்தையொத்த மடியினையும், திண்ணிய கொம்பினையும் இளமையையுமுடைய காட்டெருமைகள் இடமகன்ற பாறையின் கணின்று தங்கன்றுகளை இனிதாக உண்பித்துச் செல்லச் சிந்தின பசையில்லாமற் காய்ந்த பாலினைக் காட்டில் வாழ்கின்ற வேடர்கள் கோடாரியால் வெட்டிக் கைக்கொள்வார்.

(வி - ம்.) செருத்தல் - மடி. இடவிய - இடமகன்ற. கணிச்சி - மழுப்படை. கடறு - காடு. (௬௯)

மானின முடல்சிந்த வால்வெடித் தெழுசிங்கம்
[illegible]னிவர் கும்பத்தி னூறுசெய் நெய்த்தோரும்

காணிவர் மதமூன்றுங் கதிர்மணி வரன்றெருகீந்
தேனிவர் வரையெல்லாஞ் சித்திரித் தனபோன்ற.

(இ - ள்.) யானைக் கூட்டங்களின் உடல்கெடும் வண்ணம் வாலி னாற் பல்காலும் விசி பொழுகின்ற சிங்கமானது தசை பொருந்திய மத்த கத்தினிடத்து உகிராற் பிளந்தலைச் செய்ததாலுண்டாகிய இரத்தமும் காட்டின்கண் ஓடுகின்ற மும்மதங்களும் ஒளி பொருந்திய முத்து முத லிய அரதனங்களையும் வாரிக்கொண்டு செல்லுதலான் தேன் பொருந் திய மலையிடமெல்லாம் சித்திரித்தாலொத்தன.

(வி - ம்.) மான் - ஈண்டு யானைகள். சிந்த - கெட. வால்வெடித் தல் - வாலினால் வீசுதல். இதனை, "கண்டபின்னினைக் காற்றேப கரை வரை யுலம்பிப் பல்கால் - விண்டுவு முடைய வாலின் வெடித்துராய் வெகுண்டு நோக்கா" என்னும் சிந்தாமணி (கனக - ௧௬௨) அடிகளாறு மதனுரையானுமறிக. நெய்த்தோர் - இரத்தம். (௬௬)

பாரித்த வெறுழெருத்துப் பாணிற வுளைவயமா
வாரித்த வயிற்குவவு மத்தகத் துகுமணியும்
சீரித்த மணிமருப்புஞ் செற்றுபு சுவையமிழ்தம்
பூரித்த மதிகோடி புணர்ந்தென வொளிவீசும்.

(இ - ள்.) பரந்த வலியோடு கூடிய பிடரின்கண் வெள்ளிய தலை யாட்டமமைந்த மயிரினையுடைய சிங்கங்கள் அகப்படுத்துக்கொண்ட இடங்களில் (யானைகளின்) திரண்ட மத்தகத்தைப் பிளத்தலான் அம் மத்தகத்தினின்று சிந்திய முத்துக்களும், சிறப்பினையுடைய அழகிய கொம்புகளும் நெருங்கி இன்சுவையினையுடைய அமிழ்தம் நிறைந்த கோடிமதிகள் விண்மீன்களோடு புணர்ந்ததென்று சொல்லும் வண்ணம் ஒளியை வீசாநிற்கும்.

(வி - ம்.) பாரித்த - பரவிய. இதனை "முருகுவிம்மு கோதையார் மொய்யலங்கல்வண்டுபோல்,பருகுவானிவளலம்பாரித்திட்ட இங்கர்" எனவரும் சிந்தாமணி (காந்த-௨௬௪) செய்யுளடிகளாறு மவைகளினுரை யானு முணர்க. வாரித்தவயின் - அகப்படுத்துமிடம். இதனை, "என்னை பட்ட வாறரோ எழுதிநங்கை யாட்கொள்வான், மன்னும்வந்து பட்ட னன் மணிசெய்வீணை வாரியே" என்னும் (சிந்தாமணி காந்த - ௨௬௬) செய்யுளடிகளாறு மவைகளினுரையானு முணர்க. முத்துங்கொம்புஞ் சேர்ந்தொளி விசுதல் தாரகையோடு சந்திரன் கூடி யொளிவீசல் போலக் கொள்க. "அதுவெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி" என் னும் தொல்காப்பியச் சூத்திர அடியின்கண் பெயரினடியாகப் பிறந்த பெயரிய என்னும் பெயரெச்சம் கிளவியென்னும் பெயர்கொண்டு முடிந்தாற்போல அகப்படுத்துமிடமெனப் பொருள்படும் வாரியென் னும் பெயரினடியாகப் பிறந்த வாரித்த என்னும் பெயரெச்சம் வயி னென்னும் இடப்பெயரோடு முடிந்தது. (௬௭)

ஆணடி நிழலோம்பி யமர்துயின் மகண்மாலை
ஏணமர் வரைச்சிறுவ ரெயிற்றிய ரெனவண்மிக்

காணுநர் காலுங்கிற் கல்லிய ரெனவியவாப்
பூணுறு பாசத்தாற் பூட்டினர் போதருவார்.

(இ - ள்.) துரோடு கூடிய ஆனென்று மரத்தினிழலால் பாது காக்கப்பெற்று நித்திரை செய்கின்ற மகண்மாவென்று மிருகங்களை வலிமை தங்கியவரையின் கண்ணுள்ள வேட்டுவச் சிறுர்கள் வேடப் பெண்களென்று நினைத்துப் பொருந்திக் கண்டவர்கள் (அவைகளை) நான்கு காலினையுடைய பெண்களாமென்று வியந்து கட்டத்தக்க கயிற் ருற் கட்டிச்செல்வார்கள்.

(வி - ம்.) ஆன்-ஒருவகை மரம்; இதனை "ஆன்மரக் கிளவியொடு மரவியற்றே" என்னும் தொல் எழுத்ததிகாரச் சூத்திரத்தானுணர்க. நிழல் - மூன்ருவதன்ெருகை. துயிலமர் என -மாற்றுக. மகண்மா - பெண்களின் முகம்போன்ற முகத்தையுடைய ஒருவகை விலங்கு; இதனை, "மைந்தரைப் பார்ப்பன மாமகன் மாக்குமாம்" எனும் சிந்தா மணி (விமலை-கச)ச் செய்யுளடியானு மதனுரையானு முணர்க. ஏம - வலிமை. நான்கு காலின் கன்னியரென மாற்றுக. போதருவார்-செல் வார். ஓம்பியென்றும் செய்வினை செயப்பாட்டு வினையில் வந்தது. (கஅ)

புழுகொடு கத்தூரி புள்ளுவர் பலர்கொண்மார்
ஒழுகிய வரையெங்கு முலம்பிய கரிநாடும்
முழுவலிச் சீயத்தின் முழக்கினுக் குளமஞ்சி
விழுமவை யெளிதாக வெஃகினர் பெயர்த்தெழுவார்.

(இ - ள்.) புழுகு பூனையுடனே கத்தூரி மிருகத்தினையும் பல வேடர்கள் கொள்ளச் சென்ற மலையிடமெங்கணு முழங்குகின்ற யானை களை இரையாக ஆராயும். மிக்க வலியினையுடைய சிங்கங்களின் முழக் கத்திறுக் குள்ள மஞ்சிக் கீழே விழுகின்ற புழுகு பூனையையும், கத்தூரி மிருகத்தினையும் எளிதாக விரும்பிப் பற்றினவராகிப் பெயர்ந்து செல்வார்.

(வி - ம்.) புள்ளுவர் - வேடர். கொண்மார் - கொள்ள. ஒழுகிய- சென்ற. உலம்பிய - முழங்கிய. அவை - புழுகு பூனை கத்தூரி மிருகங் கள். வெஃகினர் - வெஃகி, முற்றெச்சம். (கக)

ஏலமொ டிலவங்க மிளகுபச் சிலைமஞ்சள்
வாலிய கப்பூர மணத்தகுங் குமஞ்சாந்தம்
ஆலிய வகில்வாழை யாசினி முதலாகச்
சாலவிண் ணவர்விழையுந் தகையன வகையனவே.

(இ - ள்.) ஏலச்செடியுடனே, இலவங்கமரமும், தளிர்த்த பச்சிலை மரமும், மலைமஞ்சளும், வெள்ளிய கருப்பூரமரமும், மணத்தையுடைய குங்குமமரமும், சந்தனமரமும், அசைகின்ற அகின்மரங்களும், வாழை மரங்களும் பலா விசேடங்களுமாகிய மரங்கள் தேவர்களு மிகவிரும்பும் தகுதியை யுடையனவாகிய வகையுடையன.

(வி - ம்.) கருப்பூரம் - கருப்பூரமரம் ; "சாரலந் திமிசிடைச் சந் தனத் தழைவயின் நீரதிம் பூமரந் நீரந்தகக் கோலமும், ஏரில வங்கமும்

இன்கருப் பூரமு மோருநா வியுங்கலந் தோசனே கமழுமே" என்னும் சிந்தாமணி (விமலை கரு) செய்யுளானும் மதனுரையானு முணர்க.

ஆலிய - அசைநின்ற. தகையனவகையன - தகுதியுடையனவாகிய வகையை யுடையன வென்க. (எ௦)

கீற்றுவெண் மதிக்கோடு கெழுமலிற் றொடைகீறித்
தேற்றுளி யுகுவதனைத் தீம்புனற் சுனைக்கெண்டை
ஏற்றுண வாயணரி யிருப்பன மறைமொழிவாய்
தோற்றினர் புனலமுந்துந் தூத்தவர் நிலைகாட்டும்.

(இ - ள்.) பிளவுபட்ட வெள்ளிய பிறைச்சந்திரனது கொம்பு பொருந்துதலினால் தேன்கூடு சிதைந்து தேத்துளி சிந்துவதனை இனிய நீரோடுகூடிய சுனையின்கண்ணுள்ள கெண்டைமீன்கள் ஏற்றுண்ணுதற்கு வாயை மேனோக்கியிருப்பன மந்திரங்களைச் சொல்கின்ற வாயினை மேலே தோன்றச்செய்து நீரின்கண்ணே மூழ்கும் தூய்மையான தவத்தை யுடையாரது நிலையினைக் காட்டாநிற்கும்.

(வி - ம்.) கீற்று - பிளந்த, கெழுமல் - பொருந்தல். தொடை - தேன்கூடு. வாயணரி - வாயைப் பிளந்து. (எக)

சிலையென நனிவாங்கிச் செற்றிய நெல்மிசையாக்
கொலைபுரி மதவேழங் கொம்மென விடுவேழம்
அலைபுரி தூண்டிலென வையென நிமிர்ந்தோங்கி
நிலைபுரி வாளியெனச் செந்நிலை நின்றிடுமே.

(இ - ள்.) கொலைத்தொழிலைச் செய்கின்ற மதமயக்கத்தையுடைய யானைகள் விற்போல மிகவளைத்து அதன்கட் பொருந்திய நெல்லினை யுண்டு விரைவாக விடப்பட்ட மூங்கின்மரங்கள் மீனினத்திற்குத் துன்பினைச் செய்கின்ற தூண்டிலைப்போல விரைவாக நிமிர்ந்துயர்ந்து நடுதலைச்செய்த அம்புபோல நேராக நின்றிடும்.

(வி - ம்.) இச்செய்யுளின் கருத்து, "யானே யீண்டையேனே யென்னலனே, யேனல் காவலர் கவணொலி வெரீஇக் - கானயானை கைவிடு பசுங்கழை, மீனெறி தூண்டிலி னிவக்கும் - கானக நாடனொ டாண்டொழிந் தன்றே" (௫௪) என்னும் குறுந்தொகைச் செய்யுளி னமைந்திருத்தல் காண்க. என என்பன மூன்று முவமைகுறித்து நின்றன. நெல் - தோரை. அலைபுரி - வருத்தலைச் செய்கின்ற. ஐயென: விரைவுக் குறிப்பு. இனி "ஐவியப்பாகு" மென்னுஞ் சூத்திரம்பற்றி வியப்பென்பாரு முளர். (எஉ)

அடிவரைத் தடமார்ப மருவிக ளகழ்ந்தாங்குச்
சுடர்விடு வயிரங்கள் சுழித்தெழுந் திருபாலும்
வடிபெருங் குலையென்ன வார்த்திசை யெழுப்பிப்போய்
இடவிய பணைமருதத் திளம்பயிர் வளர்ப்பனவே.

(இ - ள்.) மலையடியின் நடுவிடத்தை யும்மலையினின்று மொழுகும் அருவிகள்தோண்டி யம்மலையடியிலுள்ள ஒளிவீசுகின்ற வயிரமணி

கலைச் சுழியைச் செய்து பொங்கி இரண்டு பக்கங்களிலும் ஒழுங்காகச் செய்த கரையென்று சொல்லும் வண்ணமொழுக்கி ஓசையை எழுப்பிச் சென்று இடமகன்ற வயல்களோடுகூடிய மருதநிலத்தின்கணுள்ள இளம் பயிரை வளர்ப்பனவாம்.

(வி - ம்.) ஆங்கு - அம்மலையடி. சுழித்து - சுழியைச்செய்து. பால் - பக்கம். வடி - செப்பஞ்செய்த. குலை - கரை. வார்த்து - ஒழுக்கி. இடவிய - இடமகன்ற. (எக)

மல்லிகை கோடிமுல்லை மாதவி கூதாளம்
பல்லிணர் மந்தாரம் பாதிரி புன்னைகம்
மெல்லிதழ் மலர்ப்பிண்டி வேங்கைசண் பகவாசத்
தல்லுறழ் குழலாரி னருவரை நிகராமால்.

(இ - ள்.) மல்லிகையும், கொடிமுல்லையும், மாதவியும், வெண்டாளியும், பல கொத்துக்களையுடைய மந்தாரமும், பாதிரியும், புன்னைகமும் மெல்லிய இதழ்களையுடைய மலர்களையுடைய அசோகமும் வேங்கையுமாகிய இவைகளின் வாசனையையுடைய இருளையொத்த கூந்தலையுடைய பெண்களை, அரியவரையு மிவைகளைத் தன் முடியினுடைமையால் ஒக்கும்.

(வி - ம்.) கூதாளம் - வெண்டாளி. இன்-தவிர்வழிவந்த சாரியை. இவைகளை மலையும் தன் முடியினுடைமையால் "அருவரை நிகராமா" லெனக் கூறினர். (எ௪)

நிறைநிகர் கோங்கங்காய் நெட்டணி லிலவங்காய்ப்
பறைதரு பஞ்சோடும் பன்மயி லுகுபீலி
உறைமது மலர்மயங்கி யொண்டுகள் விரவிமண
வறையென வறைபலவு மமரருள் ளமுமுடற்றும்.

(இ - ள்.) குடத்தையொத்த கோங்கின்காயும், நீண்ட அணில் போன்ற இலவங்காய்களுமாகிய இவைகளினின்றும் பறக்கின்ற பஞ்சினோடும், பல மயில்களுகுத்த தோகைகளும், துளிக்கின்ற தேனையுடைய மலர்களோடு கலந்து மகரந்தப் பொடிகளும் கலக்கப்பெற்று மண வறை யென்று சொல்லும் வண்ணம் பாறைகள் பலவும் தேவர்களுள்ளத்தையும் வருத்தும்.

(வி - ம்.) நிறை - குடம். கோங்கின்காய் குடம்போலிருக்குமென்பதை "மரவ நாக மணங்கமழ் சண்பகம், குரவம் கோங்கம் குடம்புரை காய்வரை" எனவரும் சிந்தாமணி (விமலை உகூ) செய்யுளா லறிக. இலவங்காய் விரிந்து பஞ்சு தோன்றினாற்போல அணில்களிருக்குமென்பதனை "இலவத் தலங்கு சினைபயந்த, பூளையம் பசுங்காய் புடைவிரிந்தன்ன, வரிப்புற அணிலொடு" எனவரும் (பெரும்பாண். அ௩-அ௪) அடிகளானுணர்க. பறை - பறத்தல்; இதனை "குறையணி கொண்டவாறே கோதைகா ரெடர வோடிச், சிறையழி செம்பொ னுந்தித் தேன் பொழிந் தொழுக வேந்திப், பறையிசை வண்டு பாட" எனவரும் சிந்தாமணி (இலக்கணை. ௧கூ0) செய்யுளானு முரையானு முணர்க. இனி, நிறை - மீட்சியின்மையும். பின்னைய அறை - பாறை. ()

குவட்டுமத் தகத்தோட்டி குளிர்பிறை கொளவாங்கண்
உவட்டெடுத் தொழுகருவி யொழுகுகை யறைபுளகங்
கவட்டணி கொடிநிரைநீள் கதலிநெட் டிலைசெவிபோர்
சவட்டர சிபமென்னத் தகுவதத் திருமலையே.

(இ - ள்.) அத் திருவேங்கடமலை சிகரமாகிய மத்தகத்தினிடத்துள்ள தோட்டியாகக் குளிர்ந்த பிறையையும், அம்மலையின்கட் பெருக்கெடுத் தொழுகுகின்ற அருவியை நீண்ட கையாகவும், பாறைகளை (யானையின் பருமத்திற்றைத்த) கண்ணாடியாகவும் (யானையின்) கழுத்திடு கயிற்று வரிசைகள் கொடிநிரையாகவும், (யானைச்) செவிகள் நீண்ட வாழையினிலையாகவும் கொள்ளுதலான் போர்க்களத்தின்கண்ணே பகைவரை யழிக்கின்ற அரசுவாவென்று சொல்லும் தகுதிவாய்ந்தது.

(வி - ம்.) பிறையைத் தோட்டியாகவும், அருவியைக் கையாகவும், பாறைகளைக் கண்ணாடியாகவும், கழுத்திடு கயிற்றைக் கொடிநிரையாகவும் கொள்ளலால் வரையியமெனத் தகுவதென்க. ஒழுகல் - நீளல். இதனை "வார்தல் போதல் ஒழுகல் மூன்றும்—நேர்பும் நெடுமையும் செய்யும் பொருள" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தா னுணர்க. அறை - பாறை. புளகம் - கண்ணாடி; யானைப்பருமத்தில் கண்ணாடி தைத்திருத்தலை "பைம்பொற் புளகப் பருமக்களி யானை யிட்டம்" என்னும் சிந்தாமணி (காந்தரு-நகஎ) செய்யுளடியா னுமுரையா னு முணர்க. சவட்டல்—அழித்தல், இதனை "தன்னையும் சவட்டிப் போகிச் சாமியைச் சார்து மென்றான்" என்னும் சிந்தாமணி (கனக-களஅ) செய்யுளடியானு முணர்க. இஃது உருவகவணி. (எசு)

வேறு

இத்தகு வளஞ்சால் வெற்பை யெய்திய குமரப் புத்தேள்
எத்தகு தொழிற்குந் தானே யிறையெனுந் தன்மை தேறிப்
பித்துறு முலக முய்யப் பெருகிய கருணை யோடும்
உத்தமச் சூழ னாடி யொளிர்மணிக் கோயில் கொண்டான்.

(இ - ள்.) இத் தன்மையான வளமிகுந்த மலையினையடைந்த குமரக்கடவுள் (படைத்தல் காத்தல் முதலிய) எவ்வகைத் தொழிலினுக்கும் தானே தலைவனென்னும் தன்மையைத் தெளிந்து (மூல ஆணவ மயக்கலின் முதல்வனைப் பின்விட்டு முனைத்தெழுகின்ற, பித்தினையெய்திய உயிர்களுய்யும் வண்ணம் (மேன்மேலு முவட்டெடுத்துப்) பெருகுகின்ற கருணையால் உத்தமமாகிய இடத்தினை யாராய்ந்து ஒளிர்மணிக் கோயிலின்கண் வீற்றிருந்தான்.

(வி - ம்.) உலகம் : ஆகுபெயர். ஓடு : உருபுமயக்கம். நாடி - ஆராய்ந்து தெரியுய்ய எனமுடிக்க. (எஎ)

கதிர்மணிக் குலங்கால் யாந்துக் கண்கவர் வனப்பு வாய்ந்த
பிதிரொளித் தவிசி னுச்சிப் பெருந்தவ முனிவர் தேவர்
அதிர்கழல் வேந்தர் மாயோ னடற்கணம் வீரர் போற்ற
முதிரொளி யெறிப்ப வைகி முதற்றொழி றொடங்கி னானே.

(இ - ள்.) ஒளிபொருந்திய மணிக்கூட்டங்களைப் பதித்துக் கண்டோர் கண்களை யிழுத்துக்கொள்ளுதற் கேதுவாகிய அழகுபொருந்திய ஒளியை வெளிவிடுகின்ற ஆசனத்தின் மத்தியிற் (செயற்கரிய) பெரிய சக்தியையுடைய முனிவர்கள், தேவர்கள், முழங்குகின்ற வீரக் கழலினையணிந்த இந்திரன், மாயன், வலிமை பொருந்திய வீரவாகு முதலிய வீரர்களும் போற்றுகிற்ப மிக்க ஒளிவீசத் தங்கிப் படைப்பாகிய தொழிலினைத் தொடங்கினான்.

(வி - ம்.) கால்யாத்தல் - கட்டல். வேந்தன் - இந்திரன், இதனை "வேந்தன்மேய தீம்புனலுலகமும்" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தானறிக. வீரர் - வீரபாகு முதலிய நவவீரர்கள். முதற்றொழில் - படைத்தற்றொழில். உம்மை இறந்ததுதழீஇயது. (எஅ)

ஆக்கிய படைப்புக் கேற்ப வளித்திட வல்லா னென்று
பூக்கமழ் துளவத் தாரான் புரத்தலுந் தந்தை செல்வம்
பாக்கிய மனைய மைந்தர் பாலதாய் முடியு.மாற்றல்
தாக்குருத் திரனார் செய்யுந் தனித்தொழி லோடுஞ் செய்தான்.

(இ - ள்.) உண்டாக்கிய படைத்தற் றொழிலினுக்கியையக் காத்தற் றொழிலினும் வல்லமை யுடையா னென்றுலகம் கருதும்வண்ணம் பூக்கள் மணம் வீசுகின்ற துளசிமாலையை யணிந்த விண்டுவின் றொழிலாகிய காத்தலையும், தந்தையர்க்குரிமையாகிய செல்வம் பாக்கியத்தை யொத்த மைந்தர் பகுதியாய் முடியுந்தன்மை யுளதாதலினானே எல்லாவுலகங்களையுமழிக்கு முருத்திரர் செய்யும் ஒப்பற்ற அழித்தற் றொழிலுடனே செய்தான்.

(வி - ம்.) பாக்கியம் - புண்ணியம், இதனை "பலர்காணார் பாக்கியத்தால்" என்னும் திருக்குறளானறிக; "பாக்கியம் புரிந்திலாப் பரத" வென்றார் கம்பநாடரும். என்றென்னும் வினையெச்சம் காரணப் பொருட்டு. (எக)

இந்திரற் கரசு மன்றே யிற்றதா லிவ்வா றெங்கோன்
முந்திய படைப்புக் காப்பு முருக்கலோ டுஞற்றி நீதி
தந்துயிர் மறைப்பி னீக்கித் தனியரு ளுறுத்தா நிற்ப
வந்துவந் தொழிந்த தேவர் வருடங்கள் பலவு மாதோ.

(இ - ள்.) இந்திரனுக்கு அரசாட்சியும் அக்காலத்தே யழிந்தது. இங்ஙனம் எங்கள் தலைவனாகிய முருகப்பிரான் எவ்வகைத் தொழிலுக்கும் முற்பட்ட ஆக்கலையும், அளித்தலையும், அழித்தலோடுஞ் செய்து உயிர்களுக்கு நீதியை யருளித் திரோபவத்தினின்றும் நீக்கி அநுக்கிரகம் செய்யாநிற்ப தேவ ஆண்டுகள்பலவும் வந்துவந்து நீங்கின.

(வி - ம்.) இந்திர னுலகத்தைக் காக்கின்ற னுதலின் அவனையும் உடன் கூறினார். இதனை "வேந்தனும் வெந்துகெடும்" என்னும் திருக்குற ளுரையானுணர்க. அருளுறுத்தல் - அநுக்கிரகம் செய்தல். (அ0)

எண்குணந் தனக்கே யன்றி யில்லாதா யெங்கு நின்ற
ஒண்குணப் பொருளே யான வுத்தமக் குமரப் புத்தேள்
நண்குணத் தவர்தங் கோளு நயக்குமே யென்ன லாங்கு
வண்குணத் தவனே பேற்றின் வயக்குமா லவர்க்கொன் றின்றே.

(இ - ள்.) *(தன்வயத்தனாதல் முதலிய) எண்வகைப்பட்ட குணங்களுந் தனக்கே யல்லாமல் (வேறொரு தலைவர்க்கு) மில்லாதாய் எங்கும் நிறைந்து நின்ற வெள்ளிய குணப்பொருளேயாகி நின்ற உத்தமத் தன்மையை யுடைய குமரக்கடவுள், நண்ணுகின்ற சத்துவ முதலிய குணங்களிற் றோன்றிய பிரமன்விண்டு உருத்திரர்களுடைய கொள்கையாகிய முத்தொழிலையும் விரும்புவாரோ என்று கருதற்க. அம்மூவரிடத்தும் வன்மைக் குணத்தையுடைய அம்முருகக் கடவுளே அம்மூவர்கள் தவப்பேற்றினால் விளக்கம் செய்வான் அம்மூவர்க்கு மம்முத்தொழிலி லொருசுதந்திரமு மின்று.*

(வி - ம்) *நண்குணம் : வினைத்தொகை. கோள் - கொள்கை. நயக்கும் : செய்யுமென் முற்று. ஏகாரம் : வினா. என்னல் - என்று கருதற்க; எதிர்மறை வியங்கோள் வினைமுற்று. ஆங்கு - அம்மூவரிடத்தும். குணத்தவன் : வேற்றுமைத்தொகை. பேற்றின் - அம்மூவர்கள் தவப் பேற்றினால்; இதனை "உரைத்தஇத் தொழில்கண் மூன்றும் மூவர்க்கென் றுலக மோத, வரைத்தொரு வனுக்கே யாக்கி வைத்ததிங் கென்னை யென்னின், விரைக்கம லத்தோன் மாலும் மேவலான் மேவி னார்கள், புரைத்ததி கார சத்திப் புண்ணியம் நண்ணலாலே" என்னும் சிவஞானசித்தித் திருவிருத்தத்தா னுணர்க. ஆல் : அசை.* (அக)

முற்றிய செல்வ நல்கு முதல்வர்பாற் றருக்கி னன்றே
சுற்றமு மினமுந் தானுந் துறப்பதற் கைய மில்லை
கற்றையஞ் சடிலத் தேவாங் கந்தனை யிகந்தவேதன்
மற்றவ ரோடுஞ் செய்கை மறுத்திளைந் திருந்த வாற்றால்.

(இ - ள்.) *கூட்டமாகிய அழகிய சடையையுடைய தெய்வமாகிய ஆறுமுகப்பெருமானை (வணக்கம் செய்யாது) நீங்கிய பிரமன் சுற்றத்தார், இனத்தார் முதலியோரோடு படைப்பாதி தொழிலுமில்லாமல் வருந்தியிருந்த தன்மையினாலே தவப்பேற்றினாலடைந்த செல்வத்தைப் பிறர்க்களிக்குந் தலைவர்களிடத்துத் தருக்கினை (ஒருவன்) மேற்கொள்வானாயின் அக்கணமே (தந்தைதாயர் மனைவி முதலிய) சுற்றத்தாரும், இனத்தவர்களும் தானும் (செல்வங்களைத்) துறப்பதற்கொரு சிறிதும் ஐயமின்று.*

(வி - ம்.) *முற்றிய - அடைந்த. முதல்வர் - தலைவர். அன்றே - அக்கணமே. அவரோடும் - சுற்றமினமாகிய அவர்களோடும், செய்கை - படைப்பு முதலிய தொழில். இளைந்து - வருந்தி. துறப்பதற்கு - (செல்வத்தைத்) துறப்பதற்கு; செல்வமென்றது இருட்டியாதியை யென்க.*

இது வேற்றுப் பொருள்வைப்பணி. (அஉ)

பற்றிக ழனக்கோன் றின்றிப் பணிபுரி யடியார்க் கான
பற்றிக ழுவி நீக்கும் பராபரக் கடவுட் செவ்வேள்
முற்றுயத் தொழிலிற் பட்ட மூதுயிர் பெற்ற பேற்றை
இற்றெனக் கிளக்க லாமோ பெஃகறி வுடையோர்க் கேனும்.

(இ - ள்.) வெறுப்பினையும் விருப்பினையு மியல்பாகத் தன்பா லொரு சிறிதுமில்லாமல், தன் திருவடித் தொண்டினையாற்று மடியார் கள் பாட்டௌவாகிய விருப்பு வெறுப்பினைத் தானேன்றுகொண்டு (அவர்கள் பாலொரு சிறிதுமவைக) ளிலவாம்வண்ணம் செய்த எல் லார்க்கு மேலாகிய முருகக்கடவுள் தொடங்கிய அப்படைப்புத் தொழி லின்கட் பொருந்திய பெருமையையுடைய உயிர்கள் அடைந்த பயனைக் கூரிய மதியான் வாய்ந்தவர்களாயினும் இத்தன்மையுடையதென்று சொல்ல முடியாது.

(வி - ம்.) பற்று இகல் - விருப்பு வெறுப்பு. முற்றுதல்-தொடங் குதல். முதுமை - ஈண்டு பெருமையை யுணர்த்தி நின்றது. இற்று - இத்தன்மைத்து. ஏகாரம்—எதிர்மறை. "எல்லா வுருபொடும் கொள்வோ னெழுமே" என்ற தொல்காப்பியச் சூத்திர விதிப்படி மூதறிவுடை யார்க்கு என்னும் கோடற்பொருள் எழுவாய்க்கண் வந்தது. (அங)

கண்டவர் பிறவி மாய்க்குங் கமண்டல மக்க மாலை
கொண்டிரு கரத்துச் சார்வோர் கொடும்பய மொதுக்கி நல்க
ஒண்டொடிக் கமலச் செங்கை யோரிரண் டமைத்தவ் வாற்றின்
விண்டலர் கடப்பந் தாரான் வீற்றிருந் தருளு நாளில்.

(இ - ள்.) தன்னைத் தரிசித்தவர் பிறவியைக் கெடுக்கின்ற கரக மும், உருத்திராக்கமாலையும், இரண்டு திருக்கரங்களிலும் கொண்டு தன்னை யடைந்தவர்களுடைய கொடிய பிறவித்துன்பினை நீக்கி அவர் கள் வேண்டும் வரங்களையளிக்க ஒள்ளிய வீரவளையினை யணிந்த தாமரை மலர்போன்ற சிவந்த இரண்டு திருக்கரங்களை யமைத்து அவ் வனுக்கிரகம் செய்யும் தன்மையிலே முகைநெகிழப் பெற்று மலர்ந்த கடப்பமாலையை யணிந்த முருகக்கடவுள் வேறொருவர்க்கில்லாத சிறப் புடனிருக்குங் காலத்தில்.

(வி - ம்.) கமண்டலம் - கரகம் "நீரறவறியாக் கரகத்து" என் றார் அகநானூற்றினும். நல்க - அநுக்கிரகம் செய்ய. தொடி-வீரவளை. இதனை "தொடியணி தோளன்" என்னுந் திருமுருகாற்றுப்படையடியா னுணர்க. அவ்வாறு - அவ்வனுக்கிரகம் செய்யுமுறை. (அச)

பொறிவரிச் சுரும்பு மூசாப் பொலந்தொடை யமரர் விண்ணின்
நெறியுளி செங்கோ லோச்சு நெடுந்தகை யுலக முண்ட
வெறிகமழ் துளபத் தொங்கல் விண்டுமா தவர்கள் யாரும்
செறிகதி ரிமைப்ப விசுந் தென்னொளிக் கயிலை சார்ந்தார்.

(இ - ள்.) பாட்டினைப் பாடுகின்ற பொறிகளையுடைய வண்டுகள் மொய்க்கப்பெறாத பொன்மலாகிய மாலையினையணிந்த தேவர்கள், தேவ

லோகத்தின்கண் முறையாகச் செங்கோலைச் செலுத்துகின்ற மிக்க தகுதியையுடைய இந்திரன், பிரளயகாலத்தில் உலகத்தினையுண்ட வாசனை வீசுகின்ற துளபமாலையை யணிந்த மாயவனும், பெரிய தவத்தினையுடைய முனிவர்களும், ஏனையோரும் செறிந்த கிரணங்கள் இமையா நிற்பத் தெளிந்த ஒளியை எல்லாத் திக்கிலும் வீசாநின்ற கயிலை மலையினை யடைந்தார்கள்.

(வி - ம்.) பொலம் - பொன். உளி - மூன்றுவதன் பொருள்பட வந்த இடைச்சொல்; இதனை "மந்திரவிதியின் மரபுளிவழா" என்னும் திருமுருகாற்றுப்படையாலுணர்க. தொங்கல் - மாலை. தெள்ளொளி வீசும் கயிலையென மாற்றுக. (அ௫)

வாயிலி னந்தி பாதம் வணங்கினர் விடைகொண் டேகிப்
பாயின பருமவல்குற் பைந்தொடி யோடு வைகும்
ஆயிர நாமத் தண்ண லடிமல ரன்பிற் ருழ்ந்து
மேயின துதிகள் செய்து விரிகரங் குவித்து நின்ருர்.

(இ - ள்.) முதற்றடையின் கண்ணுள்ள நந்தியெம்பெருமான் திருவடிகளை வணங்கி விடைபெற்றுச் சென்று பரவிய மேகலையினை யணிந்த கடிதடத்தினையும் பசிய வளையலினையுமணிந்த உமையம்மையாரோடு மெழுந்தருளியிருக்கின்ற பேராயிரமுடைய பெம்மானதடியாகிய மலரின்கண் அன்பினுல் வணங்கிப் பொருந்திய துதிகள் செய்து விரிந்த கைகளைக் குவித்து நின்றனர்.

(வி - ம்.) பாயின - பரந்த; பெயரெச்சம். பருமம் - மேகலை விசேடம். பைந்தொடி: அன்மொழித்தொகை. ஆயிரநாமத் தண்ணல்: சிவபெருமான். (அக)

கவலைநெஞ் சலைப்ப நின்ற கடவுளர் தம்மைச் செந்தேன்
துவலைசெய் கொன்றை மாலைச் சுந்தர னருளி னேக்கி
நவிலுதிர் வரவை யென்ன நவிற்றவஞ் சுதும்யா மென்ருர்
சவலையீ ரெம்மு னஞ்சல் சாற்றுதி ரென்னச் சொல்வார்.

(இ - ள்.) துன்பமானது மனத்தினை வருத்தாநிற்ப நின்ற தேவர்களைச் செவ்விய தேன்றுளித்தலைச் செய்கின்ற கொன்றை மலர் மாலையை யணிந்த பேரழகனுகிய சிவபெருமான் கருணை நோக்கஞ் செய்து நுங்கள் வரவைச் சொல்லுங்கோளென்று திருவாய்மலர்ந்தருள அத்தேவர்கள் சொல்லுதற்கு யாங்களஞ்சுகின்றேமென்றனர். துன்பத்தினுற்றுயக்கமுறுகின்றவர்களே! எம் முன்னர் (அஞ்சாது) சொல்லுங்களெனச் சொல்வார்கள்.

(வி - ம்.) துவலை - துளி. சுந்தரன் - பேரழகன். சவலை - துன்பத்தாலிளைத்தல். அல் : எதிர்மறை வியங்கோள் விகுதி. (அஎ)

இடும்பையாங் கடலுட் டாழ்ந்த வெங்களை யெடுக்கத் தோன்றும்
கடம்பனை யினைய ளுகக் கருதிமென் கமலத் தோன்றல்
மடம்படு பேதை நீரால் வணங்கில னீங்குப் போந்து
குடம்பையு ளலண்டு போலக் கோட்படும் வினையான் மீண்டான்.

(இ - ள்.) துன்பமாகிய கடலின்கண் மூழ்கிய (தீவினையின் பகுதியவர்களாகிய) எளியோங்களை (த் தங் கருணாக்கையினால்) எடுக்கும் வண்ணம் திருவவதாரஞ் செய்த கடப்பந்தாரினையணிந்த இளைய பிள்ளையாரைப் பாலனாக எண்ணித் தாமரை மலரின்கண் இருக்கும் பிரமன் தன் அறியாமை பொருந்திய பேதை நீர்மையால் வணங்காது இவண் வந்து (வாயினாலாற் றன்னுடல் உள்ளே யகப்படும் வண்ணம் கூட்டினை யுண்டாக்கி) அக்கூட்டின்கண் (போக்கு வழியறியாது உள்ளே யுயிரைப் போக்கும்) பட்டுப் புழுப்போல வினையினால் விழுங்கப்பட்டு மீண்டனன்.

(வி - ம்.) நீர்மை - தன்மை. ஈங்கு - இக்கயிலைக்கண். உலண்டு தன் வாயாற் றன்மீதே கூட்டினை வழியறியா தியற்றிக் கெடுமாறு போலக் கெட்டானென்பார் "குடம்பையு ளுலண்டு போலக் கோட்படு வினையின்" என்றார். இதனை "வரியுடல் சூழக் குடம்பை நூறெற்றிப் போக்குவழி யறியா துள்ளுயிர் விடுதலின், அறிவு புறம்போய உலண்டதுபோல" எனும் கல்லாடத்தானும்; "வீடுகட்டி மாடுகட்டி மெய்யிறுகக் கட்டும் வினைப், பூடுகட்டி விட்டுப் புறப்படமாட் டாதுலன்டு, கூடுகட்டி யாங்கேயென் கோட்டைகட்டி னேன்கடப்பங்; காடுகட்டி யாளுமுக்கட் கட்டித் திரவியமே" எனவரும் மதுரைப் பதிற்றுப் பத்தந்தாதியானும் உணர்க. (அஅ)

ஆன்வழிக் கொள்ளும் வேத னவன்றனைப் பற்றி வல்லே
ஈன்வரு கென்ன வீர னெதிருய்ப்ப மறையி னாதி
ஊன்வளர் பிரண வத்தி னுறுபொருள் வினவி மொத்தித்
தேன்வழி மழலைத் தீஞ்சொற் செம்மல்வன் சிறையி லிட்டு.

(இ - ள்.) தேனொழுகுகின்ற இனிமையாகிய மழலைச் சொல்லையுடைய தலைவனாகிய இளைய பிள்ளையார் அவ்விடத்து வழியே செல்லும் பிரமனாகிய அவனை வீரவாகுதேவர், விரைவிற் கைப்பற்றி இங்கு வருக என்று கூறிய (இளைய பிள்ளையார்) திருமுன்னர்ச் செலுத்த வேதத்தின் முதலாகிய அவ்விடத்துள்ள பிரணவமென்னும் மந்திரத்தின்கண்ணுற்ற பொருளினை வினவுதல்செய்து (அவன் அதனுண்மைப் பொருள்கூற இயலாமை கண்டு) அடித்துச் சிறையின்கண் வைத்து.

(வி - ம்.) ஆன், ஈன், ஊன் : இடப்பொருளுணர்த்தி நின்றன. வருக என்ன : விகாரம். வீரன்-வீரவாகுதேவர். மறையினாதி ஊன் - வேதத்தின் முதலாகிய அவ்விடம். மொத்தி - அடித்து. வேதனவன்றனை - வேதனாகிய அவனை. "வாளனகண் மடவாளவள்" என்றாற் போலக் கொள்க. (அகூ)

ஆங்கவன் படைப்பி னோடு மடிகளெம் பாங்கர் வைத்த
ஓங்கிய பணியுந் தானே யுளுற்றிவேங் கடத்தில் வைகும்
ஈங்கிதன் பொருட்டு நின்னை.யெய்தினே மென்று போற்றப்
பூங்குழ லுமையை நோக்கிப் பூரண னவர்க்குச் சாற்றும்.

(இ - ள்.) அப்பிரமனியற்றும் படைத்தற் றொழிலோடும் அடிகள் அடியேமாகிய எங்கள் பாலிறுவிய 'உயர்ந்த காத்தலழித்தன் முதலிய

பணிகளையுந் தானேசெய்து திருவேங்கடமலையின் கண்ணே தங்கியுள்ளான். இவண் இதன்பொருட்டுத் தேவரிரை யடைந்தோமென்று துதிக்கப் பூவையணிந்த கூந்தலோடுகூடிய உமையம்மையாரைப் பார்த்து எங்கும் நிறைந்தவனாகிய இறைவன் அவர்கட்குத் திருவாய் மலர்ந்தருளுவான்.

(வி - ம்.) ஓங்கிய - உயர்ந்த. அடிகள் - சுவாமிகள். (௯0)

செம்மைய ஞான சத்தித் திருவுருக் கொண்ட செம்மல்
எம்மின்வே றல்லன் யாரு மவனின்வே றல்லேங் கண்டீர்
அம்மழ வடிவினன்பா லன்புசெய் தவர்பி ழைத்தோர்
நம்மடித் தொண்டு செய்தோர் நவைபடப் பிழைத்தோ ராவர்.

(இ - ள்.) செவ்விய ஞானசத்தியின் திருவுருவத்தினைத் தனக்குத் திருவுருவமாகக்கொண்ட தலைவனாகிய முருகன் எம்மினின்றும் வேறானவனல்லன். யாருமவனினின்றும் வேறாக உள்ளோமல்லோம். அவ்விளமை பொருந்திய வடிவினையுடைய முருகனிடத்தில் அன்பு செய்தவரும், பிழையியற்றியவருமாகிய இவர்கள் நம்மடித்தொண்டு செய்தவரும் (நம்பாற்) பிழையியற்றியவருமாவர்.

(வி .- ம்.) அன்பு செய்தவர் நம்மடித்தொண்டு செய்தவரெனவும், அவன்பாற் பிழைத்தவர் நம்பாற் பிழைத்தவரெனவும் கூட்டுக. (௯௧)

மிக்கவப் பிழையுட் பட்ட வேதனுக் குறுத்த தண்டம்
தக்கதே யெவ்வா றன்னோன் றனைச்சிறை விடுவித் திட்டல்
தொக்குவந் தடுத்தீர் நீயிர் சொல்லுமி னென்னச் செந்தேன்
நக்கலர் கொன்றை யான்மு னடுங்கிய வுளத்திற் சொல்வார்.

(இ - ள்.) மிகுந்த அப்பிழையின்கட் பொருந்திய பிரமனுக்குச் சேர்ந்த தண்டமானது தகுதியுடையதேயாம். எங்ஙனம் அப்பிரமனைச் சிறையினின்றும் விடுவித்தலாகும். கூடிவந்து பொருந்திய நீவிர் சொல்லுங்களென்று (இறைவன்) திருவாய்மலர்ந்தருளச் செவ்விய தேன் துளிக்கும் வண்ணம் சிரித்தலர்கின்ற கொன்றை மலர்மாலையை யணிந்த சிவபெருமான் முன்னர் நடுக்கமுற்ற வுள்ளத்தோடும் சொல்வரென்க.

(வி - ம்.) உறுத்த - சேர்ந்த. விடுவித்திடல், விகாரம். நக்கல் - விகசித்தல். (௯௨)

பண்டிகந் திருவிற் பட்ட படர்பெரும் பிழையை நீயே
கண்டொரு செயலு மில்லாக் காலத்துக் கருணை வைத்துக்
கொண்டிடும் பருவ நோக்கிக் கோணைமெய் யருவிற் றந்த
அண்டனிப் பிழையுள் வையா தளிப்பதின் றரிது போலும்.

(இ - ள் ) அநாதிக் காலத்திலே (பூமணமும், உடலுயிரும்போல ஆன்மாக்களாகிய எங்களோடு கலந்திருக்கவும் அதனை யறியாது) நீங்கி, ஆணவத்தோடத்துவிதமான துன்பத்தைத் தருகின்ற குற்றத்தைக் கருணையே வடிவமாகிய பெருமானே! கண்ணுற்று அறிவிச்சை

முதலிய செயலொரு சிறிதுமில்லாத கேவல நிலையிலும், கருணைவைத்து அடியார்கொள்ளும் பக்குவத்தைக் கருதி அழியாத மெய்யருளால் தனு கரணபுவன போகங்களை யுதவிச் சகலாவத்தையிற் கொண்டுவந்த தேவாதிதேவனே இப்பிறவியினைத் திருவுளத்தடையாது காப்பது அருமையதாகுமோ? என்க.

(வி - ம்.) இருள் - ஆணவம். முன்னரே பெருமானை நீங்கியாணவத்திற்பட்ட குற்றமென்க. ஆணவத்திலாழ்ந்து செயலற்றுக் கிடக்குங் காலத்தும் பருவம் நோக்கித்தந்த வண்டனென்க. பருவம் - பக்குவம். கோளை - அழியாத. அண்டன் : அண்மைவிளி. அரிதுபோலும் - அரிய தாகுமோ என்க. (கூங)

அவ்வயிற் சேறு மாயி னடர்க்குமென் றஞ்சு கின்றோம்
இவ்வயிற் சார்வு மஞ்சி யிருந்தன மின்று காறும்
ஒவ்வரும் பொருளே நீப்பி னுயங்குவே மன்ற வன்றி
எவ்வயிற் சேறு மெந்தா யிரங்குகென் றிரந்து தாழ்ந்தார்.

(இ - ள்.) அத்திருவேங்கடமலைக்குச் செல்வோமாயின் (அம்முருகக் கடவுள்) வருத்துமென்று பயப்படுகின்றோம். இக்கயிலையிடத்திற் பொருந்துதற்கும் பயந்து இற்றைவரை வாளா இருந்தனம். உவமையிலாகிய பரம்பொருளே! பெருமான் இவ்வமையம் நீக்கின் நிச்சயமாக வருந்துவோம். அல்லாமலும் (புகலிடமாக வேறு) எவ்விடத்து (எளியேங்கள்) செல்வோம். எந்தந்தையே இரங்கவேண்டுமென இரப்புரை கூறி வணங்கினர்.

(வி - ம்.) ஒவ்வரும் - ஒப்பற்ற. மன்ற - தேற்றமாக. (கூச)

தாழ்ந்தவர் வறிய ராகாத் தன்மையன் கருணை கூர்ந்து
போழ்ந்தநுந் துயரந் தீர்மி னெனவருள் புரிந்து பொற்றூர்
ஊழ்ந்துக வமரர்த் தாக்கி யொளிர்ந்தவேத் திரத்திண் கையின்
வாழ்ந்திடுங் காவ லானை வருகென வழைத்துக் கூறும்.

(இ - ள்.) தன்னை வணங்கிய அடியார்கள் வறுமையுடையவர்களாகாதற் கேதுவாகிய (சென்றடையாத் திருவினையுடையனுகிய) தன்மையையுடைய சிவபெருமான் கருணைமிகுந்து நுங்களைப் பிளந்தனவாகிய துன்பத்தினின்றும் நீங்குமின் என்று கருணைசெய்து பொன்னுலாகிய மாலையானது பதனழிந்து சிந்தத் தேவர்களை யடித்து ஒளிர்கின்ற வலிமை பொருந்திய கையின்கண் பிரம்புடனே வாழ்கின்ற காவலையுடையனுகிய நந்திஎம்பெருமானை வரக்கடவா யென்றழைத்துச் சொல்லுவான்.

(வி - ம்.) ஊழ்த்து - விகாரம். காவலான் - நந்தியெம்பெருமான். போழ்ந்த - பிளந்தன : முற்றெச்சம். கூறும் - செய்யுமென்முற்று. ()

பொலங்குவட் டருவி தத்திப் பொன்மணி வரன்றி வீழ்ந்து
நிலங்கிழித் தொழுகி யோடி நிமிரும்வேங் கடத்தை யண்மி
அலங்கலங் கடப்பந் தாரா னடிமல ரன்பிற் றுழந்து
நலங்கிளர் குடந்த முற்று நயத்தகு துதிக ளார்த்தி.

(இ - ள்.) பொன்மயமாகிய குடுமியினின்றும் மருவியாளது தத்துற்றுப் பொற்கட்டிகளையும், மணிகளையும், வாரிக்கொண்டு கீழே வீழ்தலுற்று நிலத்தினைப் பிளந்து ஒழுகுதலுற்றுச் செல்லும் உயர்ந்த வேங்கடமலையினைப் பொருந்தி அழகிய கடப்பமாலையினை யணிந்த முருகனது பாதமாகிய மலரினை அன்போடு வணங்கி நன்மை மிகும் வண்ணம் கைகூப்பி மெய்கோட்டி நின்று நலமிகுந்த தோத்திரங்களைச் செய்து.

(வி - ம்.) தத்தி - தாவி. ஓடி - எச்சத்திரிபு; "வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய" என்றாராகலின். குடந்தம் - கைகூப்பி மெய்கோட்டி நிற்றல். (கக)

உருவம்வே றன்றி யைந்து முகனறு முகனென் றேதும்
திருவுரு விரண்டன் மாட்டுஞ் சிவமெனும் யாமே மன்ற
பொருவிலா ருயிராய் நிற்பேம் பொலிந்தவிவ் வுருவி னின்றும்
தருவர மவண தாங்குத் தருவர மிவண தாமே.

(இ - ள்.) வடிவம் வேறல்லாமல் ஐந்து முகத்தையுடையான், ஆறுமுகத்தை யுடையான் என்று (அடியார்கள் சிறப்பித்துப் புகழ்கின்ற) திருவுருவங்க ளிரண்டனிடத்தும் சிவமென்கின்ற யாமே நிச்சயமாக ஒப்பில்லாத அரிய உயிராகி நிற்பேம். பொலிவோடுகூடிய இவ்வைந்து முகத்தோடுகூடிய திருவுருவினின்று தந்தருளிய வரங்கள் அவ் வறுமுகத்தோடுகூடிய திருவுருவினின்று தந்தருளிய வரத்துக் கொத்ததாகும். அவ்வறுமுகத்தோடு கூடித்தந்த வரங்கள் இவ்வைந்து முகத்தோடு கூடித்தந்த வரத்திற் கொத்ததாகும்.

(வி - ம்.) உருவம் – வடிவம். மன்ற – நிச்சயம். இவ்வுரு – இவ்வைந்து முகத்தோடுகூடிய திருவுருவம். அவணதாகும் - ஆறுமுகத்தோடுகூடிய வடிவிற் கொத்ததாகும். ஆங்குத் தருவரம். ஆறுமுகத்தோடுகூடித் தந்த வரங்கள் ஐந்து முகத்தோடு தந்தருளிய வரத்திற் கொப்பாகும். இவ்விரண்டு திருவுருவின்மாட்டும் யாமே நிறைந்துள்ளேம். எம்மையன்றிக் குமரன் வேறல்லன் என்பார் "மன்ற பொருவிலாருயிராய் நிற்பே" மென்றார். (கஉ)

மாதவன் முதலோர் வேண்ட மலரவன் சிறையைச் சீக்கும்
ஏதமில் வரமீண் டாயிற் றிவ்வர மவண தன்றே
போதனைச் சிறையை நீக்கிப் புகுதக வீண்டேன் றெம்மால்
ஆதரு மின்றீஞ் சொல்லா வறைமதி மேன்மை யோடும்.

(இ - ள்.) இலக்குமிநாயகன் முதலிய தேவர்கள் வேண்டிக்கோடல் செய்யத் தாமரை மலரின்கண் ணுள்ள பிரமனைச் சிறையினின்று நீக்கும் குற்றமில்லாத இவ்வைந்து முகத்தோடுகூடிய இவ்வடிவத்தின்கண் ணுண்டாயிற்று. (ஆதலால் இங்ஙனம்தந்த) இவ்வரம், ஆறுமுகத்தோடுகூடிய திருவுருவத்தினின்றும் தந்ததேயாகும். ஆகையால் மலரின்கண் ணுள்ள பிரமனைச் சிறையினின்றும் நீக்கி இக்கயிலைக்கு வரக்கடவதென்று எம்மாலுளதாகுமினிய சொல்லாக மேன்மை பொருந்தச் சொல்வாய்.

(வி - ம்.) சிறையிரண்டும் வேற்றுமை மயக்கம். அவணது - அறுமுகத்தோடு தந்தவரம். ஆதரும் - உளதாகிய. சொல்லா - செய வெனெச்சம்பற் றொக்கது. (௯௮)

பைத்தபூஞ் சேக்கை மேலான் படர்பெருஞ் சிறையைச் சீத்து
வித்தக னிங்கு மேவு மவனொடு மேக வென்றான்
அத்தனவ் வருண்மேற் றாங்கி யருணந்தி தேவன் வல்லே
தொத்தலர் குளிர்பூஞ் சோலை சூழ்ந்தவேங் கடத்தைச் சார்ந்தான்.

(இ - ள்.) பரந்த பூஅணையின்கண்ணே யுள்ளவனாகிய பிரமன் மெலிவுக்கேதுவாகிய சிறையினை நீக்கி ஞானவடிவாகிய இளையபிள்ளை இவண்வருவான். அவனோடும் நீயிங்குப் பொருந்துக என்றான். தந்தை யாகிய சிவபெருமானது அவ்வருளைச் சிரமேற்கொண்டு கருணையை யுடைய நந்தியெங்குரவன் விரைவாகப் பூங்கொத்துக்களலாப் பெற்ற குளிர்ச்சி பொருந்திய சோலைகளாற் சூழப்பெற்ற வேங்கடமலையை யடைந்தான்.

(வி - ம்.) வித்தகன் - முருகக்கடவுள்- மேவும் - அடைவான்; செய்யும் என்முற்று. மேக என்றான் - பொருந்துக என்றான். மேவுக. என்பதிடைக் குறைந்து நின்றது. (௯௯)

எட்டுறுப் பானு மைந்த னுமங் கெதிரே வீழ்ந்து
மட்டலர்க் கமல மேய்க்கு மலரடி பழிச்சும் வாயான்
மொட்டுறு கமலம் வெல்ல முகிழ்துணைக் கரத்தாற் சேர்ந்து
நெட்டுட றனுவிற் கோட்டி நின்றிறை யருளீ தென்றான்.

(இ - ள்.) எட்டங்கங்களானும், ஐந்தங்கங்களானும் அம்முருகப் பெருமான் திருமுன்னர் வீழ்ந்து தேன் விரியப்பெற்ற தாமரைமலரை நிகர்க்கும் விரிந்த பாதங்களைத் துதிக்கும் வாயையுடையானாகித் தாமரை யரும்பை வெல்லக் குவிக்கின்ற கரத்தோடு பொருந்தி நீண்டவுடலினை விற்போல வளைத்துநின்று எம்பெருமானுடைய திருவருள் இஃதாகு மென்று சொன்னான்.

(வி - ம்.) ஏய்க்கும் - ஒக்கும். வாயான் - முற்றெச்சம். கமலம்: இரண்டனுருபுத் தொகை. இல் - ஐந்தாவதொப்புப் பொருள். கோட்டு தல் - வளைத்தல். (௫00)

அமலனா ரருளிற் றெல்லா மங்ஙனங் கிளத்த லோடும்
கமலநான் முகத்தி னானைக் காவலிற் பெயர்ப்ப வேவிக்
குமரவேள் கயிலை யண்மிக் கோயிலைக் குறுகா நின்றான்
விமலனார்க் குணர்த்தி னானல் விரைந்துமுன் சென்று நந்தி.

(இ - ள்.) மலமற்றவராகிய சிவபெருமான் திருவாய்மலர்ந் தருளிய எல்லாவற்றையும் அவ்வாறே விண்ணப்பித்த அளவில் தாமரை மலரின்கண்ணுள்ள நான்முகங்களையுடைய பிரமனைச் சிறையினின்று நீக்கும் வண்ணம் ஏவலாளரை யனுப்பிக் குமரக்கடவுள் கயிலைமலையை யணுகித் திருக்கோயிலைக் குறுகாநின்றனன். நந்தியெம்பெருமான் விரைவாகச் சென்று விமலராகிய சிவபெருமானுக்குத் தெரிவித்தான்.

(வி - ம்,) பெயர்ப்ப - நீப்ப. ஏவி - (ஏவலாளரைச்) செலுத்தி. அருளிற்றெல்லாம் என்பது - "வேண்டிற்றெல்லாந் தருமரிசந்தனம்" (நிகண்டு) "உள்ளியதெல்லாம்" (குறள்) என்றாற்போலக் கொள்க. ()

அங்ஙன மணுக நண்ணி யடியிணை வணங்க லோடும்
இங்ஙனம் வருத லென்று வெடுத்தணைத் துச்சி மோந்திட்
டுங்ஙன மிருவிப் பின்ன ருவனுடைப் பெருமை தன்னை
எங்ஙன முலகந் தெள்ளு மங்ஙனந் தெளிப்ப வெண்ணி.

(இ - ள்.) அச் சந்நிதிக்கட் குறுகி இரண்டு பாதங்களையும் வணங்கின அளவில் இவ்விடத்து வருக என்று கையாலெடுத்து மார்போடணைத்து உச்சியைமோந்து அவ்விடத்திருக்கச் செய்து பின்னரவனுடைய பெருமையினை யெவ்வண்ண முலகந்தெளியும் அவ்வண்ணந் தெளிவிக்கத் திருவுளங்கொண்டு.

(வி - ம்.) வருதல் - வருக: அல்லீற்றுவியங்கோள். உங்ஙனம் - உவ்விடம். இருவி - இருத்தி. தெள்ளும் - தெளியும். தெளிக்க - தெளிவிக்க; விவ்விகுதி தொக்குநின்றது. (௪0௨)

முரிதிரை சுருட்டுந் தெண்ணீர் முழங்கிவீழ் வழியக் கண்டு
புரிசடைக் கரந்த பெம்மான் புன்னகை முகத்தி னோடுஞ்
எரியகைந் திலங்கும் வைவே லிருளளை யடுக்கஞ் சூழ்ந்த
வரைபக விடுக்கும் வென்றி மைந்தனை நோக்கிக் கூறும்.

(இ - ள்.) அலைகளை மடக்கிவீசுகின்ற தெளிந்தகங்கை நதியானது முழக்கங்கொண்டு ஆகாயத்தினின்று மிழிதலைக் கண்ணுற்றுக் கட்டமைந்த சடையினிடத்துக் கரந்த பெருமையையுடைய சிவபெருமான் புன்சிரிப்புடன்கூடிய முகத்தினோடு அக்கினி யெழுந்தாற்போல விளங்கும் கூர்மைபொருந்திய வேற்படையை இருளோடு கூடிய குகைகள் பொருந்திய அரைமலைகள் சூழ்ந்த கிரௌஞ்சமலையானது பிளக்கும் வண்ணம் செலுத்தும் வெற்றியினையுடைய குமாரனைத் திருக்கடைக் கண் சாத்தித் திருவாய் மலர்ந்தருளுவான்.

(வி - ம்.) தெண்ணீர் - ஈண்டுக்கங்கை. அகைந்து - எழுந்து. அளை - குகை. (௪0௩)

அறிவினிற் பெரிய நீரா ரறிந்தரும் பிழைகள் செய்யார்
அறிவினிற் சிறிய நீரா ரறிந்தறி யாமை யானும்
செறிபிழை யிழைப்ப அவ்வத் திறத்தினை நுண்மை நாடிச்
சிறுமையி னீங்கினோர்கள் செயிர்த்துள வயிரங் கொள்ளார்.

(இ - ள்.) அறிவினாலே பெருந்தன்மை யுடையராகிய பெரியார் அறிந்து செய்தற் கருமையாகிய பிழைகளைச் செய்யமாட்டார்கள். சிற்றறிவினாலமைந்த தன்மையினை யுடையராகிய சிறியார் அறிந்தானும் அறியாமையானும் மிகுந்த பிழைகளைச் செய்வார்கள். குற்றங்களினின்றும் நீங்கிய பெரியோர்கள் அக்குற்ற வகைகளினுண்மைத்

தன்மையை (நான்மறையானும், அனுபவத்தானும்) ஆராய்ந்து கோபித்து உள்ளத்திற்கண் வயிரங் கொள்ளார்கள்.

(வி - ம்.) இழைப்ப - இழைப்பார்கள். சிறுமையினீங்கினோர் - பெரியோர். (௧0௭)

பேதைமைப் பாலி னுதல் பெருங்கிழ மையினு னுதல்
மேதக நட்டோர் மாட்டும் விரவிடும் பிழைக ளெல்லாம்
காதுதற் பால வல்ல காதிடிற் கண்ணி னோடி
நோதக வோச்சி மெல்ல நோன்றவே யெறிகு வாரால்.

(இ - ள்.) அறியாமைப் பகுதியினுளதல், பெரிய நட்பினுரிமை யினுளதல், மேன்மைபொருந்த நட்பினரிடத்துப் பொருந்தும் குற்றங்க ளெல்லாம் ஒறுக்குந் தரமுடையனவல்ல. அவற்றினுக்கொறுக்க வேண்டின் கண்ணோட்டஞ் செய்து வருந்தத்தக்கதாக ஓங்கி மெல்லப் பொறுக்கும் வண்ணம் அடித்தலைச் செய்வார்.

(வி - ம்.) காதுதற் பாலவல்ல - ஒறுக்கும் பகுதியுடையவல்ல. காதிடின் - தண்டிக்கப்புகின். கண்ணினோடி - கண்ணோட்டஞ்செய்து. நோதக - வருந்த. ஓச்சி - ஓங்கி. நோன்ற - பொறுக்க. "பேதைமை யொன்றோ" எனுந் திருக்குறளின் கருத்தும். "கடிதோச்சி மெல்ல எறிக" என்னும் திருக்குறளின் கருத்தும் "மண்ணோடியைந்த" என்னும் திருக்குறளின் கருத்தும் இச்செய்யுளி னமைந்திருத்தல் காண்க. (௧0௮)

பூவணைக் கிழவன் சான்ற புலனகத் தின்மை யாலே
யோவிய வணக்கத் தோடு மொய்யென நம்பா லுற்றான்
மேவிய பிழையு மொன்றே விளித்தனை யுணர்த்திப் பின்னும்
தாவிய வணக்க மன்றே தன்னமே பெரிதாக் கொண்டு.

(இ - ள்.) தாமரைமலராசனத்தை யுரிமையாகவுடைய பிரமன் உயர்ந்த அறிவு தன்னகத்தில்லாமையானே வணக்கமில்லாமையோடு நம் பக்கலுற்றான் (அவன் பக்கலிற்) பொருந்திய பிழையுமொன்றே யாம். அதனை அவனையழைத் துணர்த்தினுய் பின்னரும் ஒழிந்த வணக் கஞ் சிறிதை நீ பெரிதாகக்கொண்டு.

(வி - ம்.) சான்ற புலன் - உயர்ந்த அறிவு. ஓவிய வணக்கம் - ஒழிந்த வணக்கம்; வணக்கமின்மை. விளித்தல் - அழித்தல். தாவிய வணக்கம் - ஒழிந்த வணக்கம். தன்னம் - சிறிது. உணர்த்தி - உணர்த் தினுய். (௧0௯)

துண்டமும் வாயுங் காதுந் துணைக்கணுஞ் சோரி தூங்க
அண்டமும் பொடிக்கு மாற்ற லருங்கணம் புடைப்ப வேவிக்
கண்டக நீரைத்தா லன்ன கடும்பர னிரந்த கோட்டம்
முண்டகத் தவனைப் பன்னுண் முழுத்துய ருழப்ப வைத்தி.

(இ - ள்.) மூக்கும், வாயும், காதும், இரண்டாகிய கண்களுமாகிய இவற்றின்கண் இரத்தந் தங்க அண்டங்களையும் பொடியாகத்தக்க

வல்லமையையுடைய பூதகணங்களை அடிக்கும்வண்ணம் செலுத்தி முட்களை நிரைந்துவைத்தாலொத்த கூரிய பருக்கைக் கற்கள் நிரந்த சிறைச்சாலையின்கண் தாமரை மலரின்கண் எழுந்தருளிய பிரமனைப் பல காலம் மிக்க துன்பினை யநுபவிக்கும்வண்ணம் வைத்தாய்.

(வி - ம்.) நுண்டம் - மூக்கு. தூங்க - தங்க. கணம் : இரண்டாவதன் றொகை. கண்டகம் - முள். பரல் - பருக்கைக்கற்கள். கோட்டம் - சிறைச்சாலை. வைத்தி - வைத்தாய். ௧0௬, ௧0௭ ஆகிய இவ்விரு பாட்டுங்குளகம். (௧0௭)

பெருந்தவ முழந்து நம்பாற் பெற்றிடுந் தொழிலு நீயே
திருந்துறச் செய்தி நன்மை தீமைகண் டருளிக் காத
இருந்தனம் யாமே யன்றி யிடர்துமித் தின்ப மேய்ப்ப
வருந்திய தேவர்க் கென்றே வந்தனை நினக்கி தாமே.

(இ - ள்.) பெரிய தவத்தை வருந்திடச்செய்து நம்மாட்டுப்பெற்ற படைத்தற்றொழிலையும் நீயே திருத்தமாகச் செய்தாய். (ஆன்மாக்கள் செய்த) நன்மை தீமைகளையறிந்து (அவற்றிற்குத் தக்கவாறு) அருள் செய்யவும், வருத்தவும் யாம் இருந்தனம். நீ யங்ஙனமின்றி அசுரர்களால் வருத்தமுறுகின்ற தேவர்களுக்கு அவ்வருத்தத்தினைக் கெடுத்து இன்பத்தினைக் கொடுப்பத் திருவவதாரம் செய்தனை நினக்கு இச் செயலாகுமா? ஆகாது.

(வி - ம்.) செய்தி - செய்தாய். அருளிச் சங்கரிக்க யாமிருந்தனம் எனக் கூட்டுக. ஏய்ப்ப - சேர்ப்ப. ஏ - இரண்டில் முன்னையது தேற்றப் பொருளையும் பின்னையது எதிர்மறைப் பொருளையும் தந்து நின்றன. (௧0௮)

வேறு

என்றுளக் குய்யம்வைத் தெம்பிரா னருளலும்
நன்றெனக் குமரனு நகைமுகத் துரைசெய்வான்
அன்றினர்க் காலமா யண்மினர்க் கமுதமாம்
வென்றியங் கழலினுய் விரகிலா னென்றனை.

(இ - ள்.) நினக்கிச் செயலடாதென்று திருவுள்ளத்தின்கண் (தனதுட்கோளை) மறைவாக வைத்து எம்பெருமான் திருவாய் மலர்ந்தருள நல்லதென்று குமரக்கடவுளும் புன்னகைகொண்ட திருமுகத்தோடு சொல்லத் தொடங்குவான், திருவடியை நீங்கினவர்க்கு நஞ்சமாய் அதனை யடைந்தவர்களுக் கமுதம்போன் றின்பினைச் செய்யும் மேன்மை பொருந்திய வீரக்கழலினை யுடைய எந்தையே! (அப் பிரமனை) நுண்ணறிவில்லாதவ னென்றனை.

(வி - ம்.) குய்யம் - மறை; வஞ்சனையுமாம். அன்றினர்க்கு - நீங்கினவர்க்கு; விரோதித்தவ ரெனினுமாம். "நட்டார்க் கமிர்தொத்து நள்ளார்க்கு நஞ்சொக்குமிவன்" என்னும் சிவஞானபோதச் சிற்றுரை மாம்ரணச் செய்யுளின் கருத்து "அன்றினர்க் காலமா யண்மினர்க்கமுதமா வென்றியங்கழலினுய்" என்னுமடியி லமைந்திருத்தலைக் காண்க.

வென்றி - மேம்பாடு. இதனை "வண் டுறைசை வென்றுசீர் நமச்சிவாய மெய்க் குரவனை வணங்கி" என்னும் தருக்க சங்கிரகக் காப்புச் செய்யுளா னறிக. (௪0௯)

விரகிலான் பிரணவ மெய்ப்பொரு ளோர்கிலான்
பிரணவப் பொருளிலான் பிறழ்தரா துலகெலாம்
வரனுடைச் சிருட்டியின் வயக்குவா னலனரை
அரவினு யெங்ஙன மளித்தனை யென்றனன்.

(இ - ள்.) நுண்ணறிவிலாதவன். பிரணவமென்னும் மந்திரத்தின் உண்மைப் பொருளை ஆராயமாட்டான். பிரணவமென்னும் மந்திரத்தி னுண்மைப்பொருளை யுள்ளவாறுணராதவன். முறைமாறுபாடில்லாமல் உலகங்களையெல்லாம் மேன்மை பொருந்திய படைப்புத் தொழிலான் விளக்கும் வல்லமையை யுடையவனுகான். அரவினைத் திருவரையின் கண்ணணிந்தவனே! படைத்தற் றொழிலை யவனுக் கெவ்வாறு கொடுத்தனை.

(வி - ம்.) வயக்குவானலன் - விளக்குவானல்லன். எங்ஙனம் - எவ்வாறு. அளித்தனை - கொடுத்தாய். (௪௧0)

மைந்தநீ யதன்பொருள் வல்லையே லுரையென
முந்துமெப் பொருள்களு முறையன்றி யருள்செயா
எந்தையப் பொருள்பொழு திடமறிந் தியல்புளித்
தந்திடத் தக்கதன் றேயெனச் சாற்றினன்.

(இ - ள்.) மகனே! நீ அப் பிரணவப் பொருளைக்கூற வல்லமை யுடையையாயின் சொல்வாயென, முற்பட்ட எவ்வகைப் பொருளையும் திருவாய் மலர்ந்தருளு முறையா னன்றித் திருவாய் மலர்ந்தருளாத எனதருமைத் தந்தையே! அப்பிரணவப் பொருள் நல்லோரையும் வாலிதாகிய இடமு மறிந்து வரலாற்று முறைப்படி செவியறிவுறுக்கத் தக்கதல்லவா? என்று சொன்னான்.

(வி - ம்.) எந்தை - அண்மைவிளி. பொழுது - காலம். இடம் - வாலிதாகிய இடம். ஏகாரம் வினு. (௪௧௧)

வாய்மையே கூறினை மாசிமா மகமிதோ
மேயதா லீயுளம் விழைதகப் பயிலிடம்
ஆய்சீர்க் கணிகவெற் பமைந்துளந் தகப்பொருட்
கேயுமா றேற்குது மேகுது மவ்வயின்.

(இ - ள்.) உண்மையினையே கூறினாய். நீ செவியறிவுறுத்தற்கு இதோ மாசிமதியின்கண் மகநாளும் பொருந்தியது. உள்ளம் விரும்பும் வண்ணம் நீ பயிலுமிடமாகிய சிறப்பினை யுடைய தணிகைமலையின்கண் யாம் தங்கி உளத்தின்கட் பொருந்த அப்பிரணவப் பொருளை வரலாற்று முறைக் கேற்குமாறு யாம் ஏற்றுக் கொள்வோம். அவ்விடத்திற்குச் செல்வோம்.

(வி - ம்.) தக - பொருந்த. அமைந்து - (யாம்) தங்கி. வந்கு தும் - தன்மைப் பன்மைமுற்று. பொருட்கு - வேற்றுமை மயக்கம். (கசஉ)

வந்தனை யோதெனவானவ ரிந்திரன்
பைந்துழாய்த் தொடையினன் படர்கணந் தொடர்தர
இந்துவி ளிமிழ்கதி ரிரசதப் புரிபொரூஉம்
செந்துவர்ச் சடைமுடிச் செம்மலங் கண்மினன்.

(இ - ள்.) ஆண்டுவந்து செவியறிவுறுக்க வென்று திருவாய்மலர்ந் தருளித் தேவர்களும், இந்திரனும், திருத்துழாய் மாலையை யணிந்த திருமாலும் (சிவபெருமானையே) இடையறாது நினைக்கின்ற பூதகணங் களும் தொடர்ந்துவரச் சந்திரனிடத்து நின்று விரிகின்ற கிரணங்கள் வெள்ளியாலாகிய பழுதையை நிகர்க்கும் செவ்விய பவழம்போன்ற சடையினையுடைய தலைவனாகிய சிவபெருமான் அத்தனிகையை யடைந்தான்.

(வி - ம்.) வந்தனை : முற்றெச்சம். கதிர் - கிரணம். இரசதம் - வெள்ளி. புரி - பழுதை; கயிறு. துவர் - பவழம். செம்மல் - தலைவன். (கசந)

வளமலைச் சாரலின் வடகிழக் கெல்லையின்
இளமதிச் சடையவிழ்த் திம்பரிற் றழ்த்துபு
களமிகுப் போரெனக் கருதருந் தியானமோ
டுளமலி தவமொரு கணிகமுற் றனரோ.

(இ - ள்.) எல்லா வளங்களும் நிறைந்த அத்தனிகைமலையி னடி வாரத்தின் வடகிழக் கெல்லையின்கண் பிறைச்சந்திரனை யணிந்த சடையை விரித்துப் பூமியில் தாழச்செய்து குற்றத்தினை நீக்குபவரைப் போல நினைத்தற்கரிய நினைவோடு உளத்தின்க ணிறைந்த தவத்தினை யொருகணம் செய்தனன்.

(வி - ம்.) சடையவிழ்த்து - சடையை விரித்து. களம் - குற்றம். இகுப்போர் - நீக்குவோர். கணிகம் - கணம். தான்வழிபடுங் கட வுள் வேறில்லாதிருக்கவும். தியானித்தலால் "களமிகுப் போரெனக் கருதருந்தவமுற்றான்" என்றார். (கசச)

வழிபடுங் கடவுளோர் றின்மையின் வடநிழல்
வழிபடு வோரெலாம் வடதிசை முகமுற
வழிபடுங் கடவுளாய் மதிந்தவ னங்ஙனம்
வழிபடக் கந்தனை மதித்தவ னிருத்தலும்.

(இ - ள்.) தான் வழிபடுதற்குரிய கடவுளொன்றில்லாமையி னானே கல்லால் நிழலின்கண் தம்மை வழிபடுகின்ற மெய்யடியார்க ளெல்லாம் வடதிசை நோக்கிய முகத்தோடு பொருந்த வழிபாடு செய் தற்குரிய (தென்முகத் தெய்வப் பரமாசாரியனாக) எழுந்தருளி யிருந்த

வன் வடக்கு முகமாக இருந்து கந்தப்பெருமானை வழிபடும் பொருட்டுத் தியானித்து அவ்விடத் தெழுந்தருளி யிருக்க.

(வி - ம்.) அங்ஙனம் - வடக்கு முகமாக இருந்து. மதித்தல் - உன்றித் தியானித்தல். (கக௫)

என்றுமத் தாணியா வினிதுவீற் றிருக்குமத்
தன்றிடைப் பலரொடுங் கொம்மெனத் தோன்றுபு
மன்றலங் கொன்றையான் வதிந்தவச் சூழலில்
தென்றிசை யெல்லையைச் சேர்ந்தெதிர் வைகினன்.

(இ - ள்.) முருகக்கடவுள், எஞ்ஞான்று மரசிருப்பு மண்டபமாக இனிதாக வேறொருவர்க்கில்லாத சிறப்புடனெழுந்தருளி யிருக்கும் அத் தணிகை மலையின்கண் மெய்யடியார்கள் பலரோடு விரைவாகத் தோன்றி வாசனை பொருந்திய அழகிய கொன்றை மலர்மாலையை யணிந்த சிவபெருமான் எழுந்தருளியிருக்கின்ற அவ்விடத்தின் றெற்குத் திசை யெல்லையை யடைந்து அப்பெருமான் திருமுன்னர்த் தங்கினன்.

(வி - ம்.) அத்தாணி - அரசிருப்பு மண்டபம். கொம்மென - விரைவுக் குறிப்பிடைச் சொல். (ககசு)

எதிருறுங் குமரனை யிருந்தவி சேற்றியங்
கதிர்கழல் வந்தனை யதனொடுந் தாழ்வயின்
சதுர்பட வைகுபு தாவரும் பிரணவ
முதுபொருட் செறிவெலா மொழிதரக் கேட்டனன்.

(இ - ள்.) தனக்கெதிரே பொருந்திய குமரப்பெருமானைப் பெரிய ஆதனத்தின்கண் எழுந்தருளச்செய்து அப்பொழுது ஒலிக்கின்ற வீரக் கழலை யணிந்த பாதங்களை வணக்கம் செய்தலோடு தாழ்ந்தவிடத்தில் மேன்மைப் பாட்டுடன் தங்கிக் கெடுதலற்ற பிரணவ மந்திரத்தின் பழமையான பொருளின் செறிவெல்லாவற்றையும் (ஐயந்திரிபற) செவியறிவுறுக்கக் கேட்டனன்.

(வி - ம்.) தாழ்வயின் வைகுபு கேட்டனன் என்க. சதுர்பட - மேம்பாடுற. (ககஎ)

தனக்குத்தா னேமக னாகிய தத்துவன்
தனக்குத்தா னேபொரு தாவருங் குருவுமாய்த்
தனக்குத்தா னேயருட் டத்துவங் கேட்டலும்
தனக்குத்தா னிகரினன் றழங்கிநின் றாடினன்.

(இ - ள்.) தனக்கு மகனாகிய தத்துவ வடிவமாகிய முருகப்பெருமான், தனக்கு ஒப்பற்ற கெடுதலில்லாத பரமாசாரியனாகித் தனக்குச் செவியறிவுறுத்த உண்மை நிலையைக் கேட்டவளவில் தனக்குத்தானே சமானமானவனாகிய சிவபெருமான் முழக்கஞ்செய்து நின்று நடனம் செய்தனன்.

(வி - ம்.) தா - கெடுதல். தத்துவம் - உண்மை. தழங்கல் - முழங்கல். (௬௬௰)

வேறு

சாருமெவ் வுயிருந் தன்வய மாக்கித்
தளர்க்குமா ணவப்பகை யோடும்
சூரனை முதலாந் துளக்கரும் பகையுந்
துலங்குமிப் பிரணவப் பொருளாம்
வீரனி லின்றே விளிந்ததென் றுளத்து
விரைந்தெழும் வீரத்தின் குறிப்பின்
ஆரமர் முடியோ னார்த்தலி னாய
தவ்விடம் விராட்ட காசம்.

(இ - ள்.) தான் கலந்த எவ்வகைப்பட்ட ஆன்மாக்களையும் தன் வசமாகச்செய்து வருத்தும் ஆணவமலமாகிய பகையோடு சூரனை முதலாகவுடைய அசைவிலாத பகையும் விளங்குகின்ற பிரணவ வடிவமாகிய வீரனால் இக்கணமே கெட்டதென்று உள்ளத்தின்கண் விரைவாக எழுகின்ற வீரத்தின் குறிப்பால் ஆத்திமாலை தங்கப்பெற்ற முடியையுடைய சிவபெருமான் முழக்கம் செய்தலினாலே அவ்விடம் வீராட்டகாச மெனப் பெயராயது.

(வி - ம்.) தளர்க்கும் – தளரச்செய்யும். இல் - ஐந்தாவதேதுப் பொருள். ஆர் - ஆத்தி. (௬௬௧)

மரணமும் பிறப்புங் கடந்தபே ரின்பம்
வழங்குமப் பெரும்பெய ரிறைக்குப்
பிரணவப் பொருளைக் கொடுத்தகா ரணத்தாற்
பிரணவ வருத்தநன் னகராம்
இரணவல் லவுணக் கிளையெலா முருக்க
விலங்கருட் டிருவுருத் தாங்கி
அரணமா யமரர்ப் புரப்பவ னென்று
மமர்ந்தரு டணிகைமா நகரம்.

(இ - ள்.) போரின்கண் வலிய அவுணக் கூட்டங்களையெல்லாம் கெடுக்க விளங்குகின்ற அருளையே திருவுருவமாகக் கொண்டு பற்றுக் கோடாய் நின்று தேவர்களைக் காப்பவனாகிய குமரநாயகன் எழுந்தருளியிருக்கின்ற தணிகையம்பதியானது, பிறப்பிறப்பினை நீங்கிய பேரின்பத்தினைக் கொடுக்கும் பெரும் பெயராகிய பஞ்சாக்கர வடிவமாகிய முதல்வனுக்குப் பிரணவ மந்திரத்தின் பொருளைச் செவியறிவுறுத்த காரணத்தினாலே பிரணவவருத்த நகரென்னும் பெயரினையுடையதாகும்.

(வி - ம்.) பெரும் பெயர் – பஞ்சாக்கரம். இதனைப் "பெரும் பெயர்க் கடவுளிற் கண்டுகண் ணிருடீர்ந்து" என்னும் சிவஞான போதப் பாயிரச் செய்யுளடியா னுணர்க. பெரும்பெயர்-மகாவாக்கிய

[illegible] - [illegible]. இரணம் - போர். முருக்க - செறிக்க. [illegible] - பற்றுக்கோடு. (௧௨௰)

பணிகொ ளாரம் பண்ணவன் முருகற்
படர்ந்தருந் தவத்தினை யாங்குக்
கணிகமே புரிந்து கருத்துமுற் றுதலாற்
கணிகவெற் பெனப்பெயர் விளங்கும்
துணிகதி ரிமைக்கு நவமணி யடுக்கஞ்
சூழ்ந்தவச் சிலம்புமற் றின்றும்
அணிகிளர் தவங்க ளாதியோர் கணிக
மாற்றினு மரும்பய னடைவார்.

(இ - ள்.) படம் விளங்குகின்ற பாம்பினை மாலையாகக் கொண்ட சிவபெருமான் முருகனைத் தியானித்து அரிய தவத்தினை அவ்விடத்து ஒருகணம் செய்து தான் கருதிய எண்ணமெல்லாம் முற்றுப்பெறலால் கணிக வெற்பெனும் பெயரோடு விளங்கும். தெளிந்த கிரணங்கள் ஒளியை வீசுகின்ற ஒன்பான் வகையாகிய மணிச்சிறு குன்றுகள் சூழ்ந்த அத்தணிகை மலையின்கண் இன்றும் அழகு விளங்குகின்ற தவ முதலிய புண்ணிய காரியங்களை ஒருகணப்பொழுது செய்யினும் செய்தவர்கள் பெறுதற்கரும் பெரும்பயனை யடைவார்கள். (௧௨௧)

மூலமீ றிகந்து மூலமே லில்லா
மூலகா ரணப்பொரு டனக்கு
மூலமா யிருந்து நால்வகைப் பொருட்கு
மூலமா கியவரு மறையின்
மூலவான் மொழிக்குப் பொருட்செறி வெவர்க்கு
மூலமா னவன்விரித் தமையான்
மூலவே தண்ட மெனப்படுங் குறவர்
மூலந்தே ரருவரைப் பறம்பு.

(இ - ள்.) தோற்றமு மிறுதியும் நீங்கித் தனக்கு மேலான மூலப் பொருளில்லாத மூலகாரணப் பொருளாங் கடவுட்கு முதலாயிருந்து அறம்பொருளின்பம் வீடென்னும் நால்வகைப் பொருட்குங் காரணமாகிய அரிய வேதத்தின் முதலிலுள்ள மகாமந்திரத்தின்கண்ணுள்ள பொருட் செறிவை எல்லாத் தேவர்களுக்கு முதலானவனாகிய குமரப் பெருமான் திருவாய் மலர்ந்தருளினமையான் மூலமலை யென்று சொல்லப் படும். குறவர்கள் கிழங்கை யாராய்ந்தெடுக்கின்ற அரிய மூங்கில்களை யுடைய அத்தணிகைமலை.

(வி - ம்.) மூலமென்பதற்கு - முதல், காரணம், கிழங்கு எனப் பொருள் கொள்க. வான் - பெரிய. வரை - மூங்கில். பறம்பு - மலை. (௧௨௨)

ஒருகையி லக்க மணிவட மொன்றி
லொளிர்மணிக் கமண்ட லமற்றை
இருகர மபய வரதமா யங்க
ணிருந்ததே சிகனையன் றுடங்கு
மருவினர் போற்றி நல்வகைப் பொருளு
மல்கலி னுறுமப் பெயர்த்தாம்
பொருவிலச் சயில மின்றுநாற் பொருளின்
புணர்ச்சிக்கு மூலமாய்ப் பொலியும்.

(இ - ள்.) ஒரு திருக்கரத்தில் உருத்திராக்கமாலையும் ஒரு திருக்கரத்தில் ஒளியையுடைய இரத்தினங்களிழைத்த கமண்டலமும் ஏனைய இரண்டு திருக்கரங்கள் அபயமும் வரதமுமாக ஆண்டெழுந்தருளியிருந்த பரமாசாரியனை அப்பொழுது இறைவனுடன் பொருந்திய தேவர்கள் துதித்து உறுதிப்பொருணான்கையும் நிறைவடைதற்குக் காரணமாயிருத்தலினாலும் அப்பெயரினை யுடையதாம். ஒப்பில்லாத அத்தணிகைமலை இன்னும் உறுதிப்பொருணான்கையு மடைதற்குக் காரணமாக விளங்கும்.

(வி - ம்.) உடங்கு - கூட. மருவினர் : முற்றெச்சம். மல்கல் - நிறைதல். மூலம் - காரணம். (௧௨௧)

உருவினெஞ் ஞான்று மிளமையிற் றளரா
வுத்தம னிறைமையென் குணத்துப்
பொருளினஞ் ஞான்று முதுமையிற் றளராப்
பொலிவுகண் டிமையவர் திருமால்
தருநிழ லரசன் மாதவ ரெல்லாந்
சாமிநா தப்பெயர் கிளந்து
மருவிய மகிழ்ச்சி திளைத்தன ரப்பேர்
வழங்குமா லன்றுதொட் டென்றும்.

(இ - ள்.) திருவுருவத்தா லெஞ்ஞான்றும் இளமைப் பருவத்தினின்றுந் துயக்க மடையாத உத்தமனாகிய முருகப்பெருமான் எண்வகைக் குணங்களை யுடைமையான் இறைமைத் தன்மையோடுகூடிய பொருளா யிருத்தலின் அவ்விளமைப் பருவத்தும் பேரறிவுடைமையாந் தன்மையிற் சோர்வடையாத விளக்கத்தைக் கண்ணுற்றுத் தேவர்களும், திருமாலும் கற்பக நீழலின்கண்ணுள்ள இந்திரனும் பெரிய தவத்தினையுடைய முனிவர்கள் எல்லோரும் சுவாமிநாத னென்னும் பெயரைச் சொல்லுதலாற் பொருந்திய மகிழ்ச்சியின்கண்ணே மூழ்கினார்கள். அன்று தொடங்கி யின்றளவும் அப்பெயர் வழங்கும்.

(வி - ம்.) எண்குண முடைமையே இறைமையாதலின் "இறைமையெண்குண" மென்றார். எண்குணப் பொருளாயிருத்தலினாலே இளமைப் பருவத்தும் பேரறிவிற் றளர்ச்சியின் றென்பார் "முதுமையிற் றளராப்

பொலிவுகலன்றி" என்றார். முதுமை - ஈண்டுப் பேரறிவின்மேற்று. சாமி - முதல்வன்; ஈண்டிறைவனை யுணர்த்திற்று. (கஉ௪)

ஆர்ந்துநின் ருடும் வீராட்ட காசத்
தடிகள்பின் பாருயிர் புரப்பான்
சீர்த்தமெய் யுருவே சிவலிங்க வுருவாய்த்
திகழுவீற் றிருந்தனன் மாதோ
வார்த்தசெஞ் சடைதாழ் திருவடை யாளம்
வயங்குமச் சிவலிங்க வடிவைப்
பார்த்தவர் பணிந்தோர் பழிச்சின ரெய்தும்
பயனெவர் பகர்தரற் பாலார்.

(இ - ள்.) முழங்கிநின் ருடுதலைச் செய்யும் வீராட்டகாசத்தின் கண்ணுள்ள சுவாமி பின்னர் அரியவுயிர்களைப் புரக்கும் பொருட்டுச் சிறப்புப் பொருந்திய உண்மையாய திருவுருவமே சிவலிங்க வடிவமாகி விளங்க வேறொருவர்க்கில்லாத சிறப்புடன் எழுந்தருளியிருந்தனன். நீண்ட செவ்விய சடைகள் தொங்குகின்ற அழகிய அறிகுறி விளங்கும் அச்சிவலிங்க வடிவத்தினைத் தரிசித்தவர், வணங்கினவர், துதித்தவராகிய இவர்களுடையும் பயனை யாவர் சொல்ல வல்லவராவர்.

(வி - ம்.) வீராட்டகாசத்தடிகள் - சிவபெருமான். வார்த்த - நீண்ட : விகாரம். (கஉ௫)

அத்தகு வரைப்பின் வீராட்ட காசத்
தடிகளா சான்வழி பாட்டிற்
கொத்தநற் றீர்த்த மகழ்ந்துவார் சடிலத்
தொண்புனல் பாய்த்தினர் நிறைத்து
வைத்தன ரதனுற் சிவகங்கை நாமம்
வழங்குமத் திருத்தநீர் படிந்தோர்
போத்துநோய் தீரா தனவெலாந் தீர்ந்து
போகமும் விடுமெய் துவரால்.

(இ - ள்.) மேற்கூறிய அத்தகுதியினையுடைய தணிகையின்கண் வீராட்டகாசத்தின் கண்ணுள்ள சுவாமிகள் பரமாசாரியன்பால் வழிபாடு செய்தற்குப் பொருத்தமான நல்லதீர்த்த மொன்றினை யுண்டாக்கி நீண்ட சடையின்கண்ணுள்ள ஒளிபொருந்திய கங்கை நீரினைப் பாய்ச்சி நிறையச் செய்துவைத்தனர். ஆதலான் அத்தீர்த்தம் சிவகங்கை யென்னுந் திருப்பெயரைப் பொருந்தும். அச் சிவகங்கையின்கண் மூழ்கினோர் குற்றம் பொருந்திய பிணிகள் நீங்காதனவெல்லாம் நீங்கப் பெற்று இம்மையிற் போகமும் வறுமையில் வீட்டினையு மடைவார்கள்.

(வி - ம்.) தீர்த்தமென்பது திருத்தமென நின்றது. பொத்து - குற்றம். பொத்து நோய் ; வினைத்தொகையுமாம். (கஉசு)

அன்றுடங் கணைந்தோர் படிந்துவேற் கரத்தா
சாளெடு வீராட்ட காசத்
தோன்றுநா யகனைப் பணிந்தெவற் றானு
மொழிப்பரு முடலுயிர்ப் பிணிகள்
மன்றநீத் தெண்ணும் வரங்கள்பெற் றுய்ந்தார்
மதித்துறி னளவினிற் படாரால்
பின்றையு மதிற்றோய்ந் திற்றைநாள் காறும்
பெரும்பிணி யிரித்தவர் மாதோ.

(இ - ள்.) *அன்று இறைவனுடனே சேரச் சென்ற தேவர் முதலியோர் அச் சிவகங்கையின்கண் மூழ்கித் திருக்கரத்தில் வேற் படையை யுடைய பரமாசாரியனாகிய குமாரப் பெருமானோடு வீராட்ட காசத்தின்கட் பொருந்தியுள்ள தலைவராகிய சிவபெருமானை வணங்கி எவ்வாற்றானும் நீக்குதற்கரிய உடலுயிர்களைப் பிணித்துள்ள நோய்களை நிச்சயமாக நீக்கித் தாங்களெண்ணிய வரங்களை யெல்லாம் பெற்றுய்ந் தார்கள். பின்னரு மச் சிவகங்கையின்கண் மூழ்கி இற்றைநாள் வரை யும் பெரிய பிணிகளை நீக்கியவர்களை எண்ணப்புக்கால் அளவினிலகப் படுவாரல்லர்.*

(வி - ம்.) *பிணியிரித்தவர் அளவினிற் படாரெனக் கூட்டுக. மதித் துறின் எண்ணப்புகின்.* (௧௨௭)

உட்டுகண் முழுதும் பரிந்துமெய்ப் பொருளி னொருக்கிய வறிவினீர் நழங்கி
நட்டநின் றியற்றும் வீராட்ட காச நாதனுர் சிறப்பெடுத் துரைத்தாம்
சட்டமு வலகும் போற்றவிற் றிருக்குஞ் சாமிநா தனுமகிழ் சிறந்தாங்
கெட்டுரு வுடையோ னருட்குறி நிறுவி யியற்றுபூ சனைத்திறங் கிளப்பாம்.

(இ - ள்.) *அகத்தின்கண்ணுள்ள குற்றமுழுதும் நீங்கி உண்மைப் பொருளாகிய சிவத்தின்கண் ணடங்கின அறிவினையுடைய முனிவர் களே! நிலைபெற்றுத் திருநடனத்தைச் செய்கின்ற வீராட்டகாசத்தின் கண்ணுள்ள தலைவர் சிறப்பை எடுத்துச் சொல்லினும். விரைய மூவுல கத்தின்கண் உள்ளாரும் போற்றும்வண்ணம் வேறொருவர்க்கில்லாத சிறப்புடனெழுந்தருளியிருக்கும் சாமிநாத னென்னும் பெயரினை யுடைய பரமாசாரியனும் அட்டமூர்த்தங்களைத் தனக்குத் திருவுருவாக வுடையோனாகிய சிவபெருமான் திருவருளடையாளமாகிய சிவலிங் கத்தை நிறுவிச் செய்த பூசனை வகையைச் சொல்வாம்.*

(வி - ம்.) எட்டுரு - பூதமைந்து, ஆன்மா, சந்திரன், சூரியன். இம்மூன்றோடு உருவம் எட்டு. நட்டம் - நடனம். சட்ட - விரைய. இதனைச் "சட்ட விக்கதவந்திறப் பிம்மினே" என்ற தேவாரத்தா னறிக. அருட்குறி - சிவலிங்கம். உட்டுகள் - அகத்தின்கண் உள்ள குற்றம். (௧௨௮)

வீராட்டகாசப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் ௫௬௯

# குமரேசப் படலம்

யாவருக்கு மெப்பொருட்கு மின்பமெய்த நின்றவர்
மூவருக்கு மின்புறுத்து மூவிருதி றத்தரும்
தாவிலின்ப மெய்தநின்ற தத்துவத்த னென்பவால்
ஓவிலின்ப வுருவமான வொளிர்குமார வீசனை.

(இ - ள்.) ஒழிவில்லாத இன்பமே திருவுருவாகவுடைய விளங்குகின்ற குமரேசனை (அதிபாதகம், மாபாதகம் முதலிய பாவங்களைச் செய்த) யாவரும் (ஓரறிவு முதல் ஐயறிவீறாயுள்ள) எவ்வகைப் பொருள்களும், (இன்பமெய்த லொருகாலத்து மின்றாமாதலின்) அவர்களு மப்பொருள்களும் இன்பத்தினை யடையத் (துறவறத்தின்கண்ணே) நிலைபெற்ற பெரியோர்கள், பிரளயாகலர் முதலிய மூவருக்கும் இன்பத்தினைச் சேர்க்கின்ற அறுவகைச் சமயக் கடவுளரும் கெடுதலில்லாத சுத்த புவன போகங்களையடைய நிலைபெற்ற (தன்னியல்பில் நிற்றலாகிய) உண்மை வடிவின னென்று சொல்வார்கள்.

(வி - ம்.) மூவருக்கு மென்பதற்கு - பிரமா, விட்டுணு, உருத்திரன் என்ற மூவருக்குமெனவும், புறப்புறம், புறம், அகப்புறமாகிய மூன்று சமயத்தார்க்கு மெனவும் பொருள் கூறுவாருமுளர். குமரவீசன் - குமரனாலருச்சிக்கப்பட்ட ஈசன். "அறுவகைச் சமயத்தோர்க்கும் அவ்வப் பொருளாய் நிற்பவன் சிவபெருமானொருவனே யாதலின் "மூவருக்கு மின்புறுத்தும் மூவிருத ரத்தரும்" என்றார். "அறிவின் மிக்க அறுவகைச் சமயம் அவ்வவர்க்கங்கே" என்னுந் திருப்புன்கூர் தேவாரத்தானு மறிக. "யாவருக்கும் எப்பொருட்கும்" இதிலுள்ள நான்கா முருபுகள் "எல்லா வுருபொடுங் கொள்வோ னெழுமே" என்ற விதிப்படி எழுவாய்க்கண் வந்தன. (க)

வேறு

காய மல்கமர ராண்மைதபு காரி யுதரம்
போயி ருந்துபுற னேகுபுக ரென்ன முகிறேய்
வேயி னின்றமணி விண்டுவெளி வந்து திவளும்
மீயு யர்ந்தகணி காசலவி சாக னொருநாள்.

(இ - ள்.) ஆகாயத்தின்கண் நிறைந்த தேவர்கள் வலிமையை நீக்குகின்ற வயிரவக்கடவுள் வயிற்றின்கண்ணே போய்த் தங்கி வெளியே செல்கின்ற சுக்கிரனென்று சொல்லும் வெண்மேக மண்டலத்தை யளாவிய மூங்கின் மரங்களினுள்ளே நிலைபெற்ற முத்துக்கள் (அவ் வேய் வெடித்தலால்) வெளியில்வந்து விளங்குகின்ற மிகவும் மேலோங்கிய தணிகைமலையின்க ணெழுந்தருளி விசாகனாகிய முருகக் கடவுள் ஒருபகல்.

(வி - ம்) காயம் - ஆகாயம்; முதற்குறை. காரி - வயிரவன். புகர் - சுக்கிரன். விண்டு - வெடித்து. திவளும் - விளங்கும். வயிரவர் புகரினை விழுங்கி யமரரைக் காத்த கதை காசிகண்டத்தா னறிக. (உ)

கான றும்பியாக டுக்கையுமெ ருக்கு மலையா
வான வர்க்கரிய நாடகந விற்று வரதன்
ஞான சத்தியினை நல்கியகு றித்த விழைவின்
ஆன பத்திமைய கத்தெழவ ருச்சனைசெய்வான்.

(இ - ள்.) வாசனை தோன்றுகின்ற கொன்றைமலரையும், எருக்கமலரையும் அணிந்து தேவர்களுக்குங் காண்டற்கரிய நாடனத்தைச் செய்கின்ற மேலானவராகிய சிவபெருமான் ஞானசத்தியாகிய வேற்படையினைக் கொடுக்கக் கருதிய விருப்பானுளதாகிய பத்தியின் தன்மை உள்ளத்தின்கண் எழுதலால் அருச்சனை செய்யும் பொருட்டு.

(வி - ம்.) கான் - வாசனை; காடெனினுமாம். கடுக்கை, எருக்கு ஆகுபெயர். மலையா : வினையெச்சம். வானவர்க்கும் - உம்மைதொக்கது. ஞானசத்தி — வேற்படை. பத்திமை - பத்தியின்றன்மை; இதனைப் "பத்திமையு மடிமையுங் கைவிடுவான் பாவியேன்" எனுந் தேவாரத் திருவாக்கா னுணர்க. எழவென்னும் செயவெனெச்சம் காரணப்பொருட்டு. (௧)

வயிர வீட்டிக ணிரைத்தொழுக வைத்த துபோரப்
பயில்செ ழுங்கதிர் கொழுந்துகொடு பம்பி நிமிரும்
கயிலை வெற்பினமர் கங்கையைவ ரக்க ருதினன்
வியனெ டுங்கிரி யடிக்கணெதிர் மேய தநுவே.

(இ - ள்.) வயிரத்தினாலாகிய ஈட்டியென்னு மாயுதத்தினை வரிசையாக வைத்ததை யொப்பப் பொருந்திய செழித்த கிரணங்கள் கொழுந்து விடுதலால் நிறைந்து உயர்கின்ற கைலைமலையின்கட் டங்கிய கங்காநதியினை வரும்வண்ணம் திருவுளத்தில் நினைத்தனர். அக்கங்கை மிகப் பெரிய தணிகைமலையின் அடிவாரத்தில் எதிரேவந்து பொருந்தியது.

(வி - ம்.) ஈட்டி - ஒருவகை யாயுதம். ஒழுக - வரிசையாக. பம்பி - நிறைந்து. (௨)

வெள்ளி யங்கிரியின் மீதமர்தி ருந்த மணிகள்
தெள்ளொ ளிக்கதிர்பி லிற்றுதணி கச்சி லையடி
நள்ளு கின்றதுந லந்தகயி லைக்கி றைதொழூஉம்
வள்ளல் வெற்பெனம தித்தடிவ ணக்க நிகரும்.

(இ - ள்.) வெள்ளி வெற்பின்மீது தங்குகின்ற தீர்த்தமானது இரத்தினங்கள் தெள்ளிய ஒளியோடு கிரணங்களை வெளியிடுகின்ற தணிகைமலையடியின் பொருந்துதல் எல்லா நன்மையினையுமுடைய கைலைமலைக்குத் தலைவனாகிய சிவபெருமான் வணங்கும் (அடியார்கள் வேண்டுவனவற்றை வரையாது கொடுக்கும்) வள்ளலாகிய குமரநாயகர் (எழுந்தருளியிருக்கும்) மலையென்று நினைத்துப் பாதத்தை வணங்குதலை யொக்கும்.

(வி - ம்.) நள்ளுகின்றது : தொழிற்பெயர். மதித்து - நினைத்து. (௩)

பன்ம ணித்திரள்கோ ழித்துமலர் பம்பி யினவண்
டன்ன நேமியும கன்றிலும ணிந்தொ ளிர்தலான்
மன்ன டுக்கன்மகள் வண்கடித டத்த ணிதரும்
மின்ன லங்குமணி மேகலைவி ளைந்த ததுவே.

(இ - ள்.) பலவகை நிறம் பொருந்திய மணியின் கூட்டங்களைச் சொரிந்து மலர்கள் நிறையப்பெற்றுக் கூட்டமாகிய வண்டுகளும், அன்னப் பறவைகளும், சக்கரவாகப் புள்ளும், அன்றிலும் அழகுசெய்து விளக்குதலால் நிலைபெற்ற தணிகைமலையாகிய பெண்ணின் வளப்பம் பொருந்திய அரையின்க ணணிந்த மின்னலோடுகூடி யசைகின்ற மேகலாபரணத்தை யங்நதியொத்தது.

(வி - ம்.) மணியினையும், மலரையும் மேகலையாகவும்; வண்டு அன்ன முதலியவைகளி னொலியை மேகலை யொலியாகவும் கொள்க. நேமி - சக்கரவாகப் பறவை. மகன்றில் - நீரில்வாழும் ஒருவகைப்புள். இதனைப் "பூவிடைப்படினும் யாண்டுகழிந்தன்ன—நீருறை மகன்றிற் புணர்ச்சிபோல" என்னுங் குறுந்தொகைச் (௫௭) செய்யுளானும் "அன்னநேமியு மகன்றிலுமணிந்து" எனும் சிந்தாமணி (பதுமை அ௫) செய்யுளானு மறிக. அலங்குதல் - அசைதல். கடிதடம் - அரை; இடக்கர்மொழி, அது - ஈண்டு நதி. (௬)

ஆம்ப லுற்பலம டுக்கிதழ்ந றுங்க மலமும்
தாம்ப யின்றனத யங்கியிரு போது மலரா
யாம்பி றங்குவர ரீகெனவே ணைத்து லகமும்
ஓம்பி யாக்குமுரு கற்பணிய வுற்ற னபோலும்.

(இ - ள்.) அந்நதியின்கட் பொருந்தியனவாகிய அல்லியும் நீலோற்பலமும் அடுக்கிய இதழ்களோடுகூடிய வாசனையுள்ள தாமரை மலருமாகிய இவைகள் பகலிரவாகிய இருகாலத்தும் மலர்ந்து யாங்கள் விளங்குதற்கேதுவாகிய வரங்களைக் கொடுக்கக் கடவாயென்று எல்லா வுலகங்களையும் காத்துப் படைக்கும் குமரப்பெருமானை வணங்கவுற்ற தன்மையை யொக்கும்.

(வி - ம்.) மலரா - மலர்ந்து. ஈக+என-ஈகென. அகரங்குறைந்து நின்றது செய்யுள் விகாரம் தொகுத்தல். (எ)

இருசு டர்க்கிரண மெய்தலறி யாதி ரசதப்
பெருவ ரைக்கணொரு பெற்றியினி ருந்த மலர்கள்
இருதி றத்தனவி ருப்பனகள் கன்னி மைகழீஇ
மருவு மன்பரைம ணந்துபிரி மங்கை யர்போலும்.

(இ - ள்.) சூரிய சந்திரர்களின் கிரணங்கள் பொருந்துதலறியாமல் பெரிய வெள்ளிமலையின்கண் (தங்கட்கேற்பட்ட காலங்களில் மலர்தலும் குவிதலுமில்லாது) எக்காலத்துமொரு பெற்றித்தாக விருந்த மலர்கள் (இத்தணிகைக்கண் வந்து) தாமரை முதலியன பகற்காலத்தில் மலர்தலும், குவளை முதலியன கூம்பலும்; குவளை முதலியன இராக்

காலத்தில் மலர்தலும், தாமரை முதலியன கூம்பலுமாகிய இரண்டு தன்மையையுடையனவாகி யிருப்பனவைகள் கன்னிப்பருவம் நீங்கிபூழான் வந்து பொருந்திய அன்பரைக்கூடிப் பின் பிரிவையடைகின்ற மங்கையரை ஒக்கும்.

(வி - ம்.) இருதிறமாவன - பகற்காலத்தில் மலர்தல், இராக்காலத்தில் கூம்பல். இருப்பனகள் - விகுதிமேல் விகுதி: இதனைக் "கைப்பொருள் கொடுத்தும் கற்றல்கற்றபின் கண்ணுமாகும்-மெய்ப்பொருள் விளக்கும் நெஞ்சின் மெலிவிற்கோர் துணையுமாகும் - பொய்ப்பொருள் பிறகள்" எனும் சிந்தாமணிச் (கனக ௫௧) செய்யுளானறிக. கன்னிமை-ஒருவராலும் தீண்டப்படாமற் பூத்திருத்தல். இம்மலர்கள் கயிலைக்கண் ஒரு தன்மையாய்ப் பூத்திருத்தல் ஒருவராலும் தீண்டப்பெறாமல் பூப்பெய்தியிருந்த கன்னிமைப்பருவமாகவும், தணிகைக்கண் வந்து சூரிய சந்திரர்களைக் கண்டு மலர்தல் கன்னிமைத்தன்மை நீங்கி நாயகனைக் கூடுதலாகவும் இவர்கள் நீங்கக்குவிதல் நாயகனைப் பிரிதலாகவும் கொள்க. கயிலையிலிருத்தல் கன்னிமைப்பருவமாகவும் தணிகைக்கண் வந்து கன்னிமை கழிந்த மணப்பருவமாகவும் இவ்விருவர் பிரிவை நாயகர் பிரிந்த பருவமாகவும் கொள்க. இது உவமைச் சிலேடையணி. (௮)

ஓதி மம்புடையி ருப்பவொளிர் செங்க மலம்விழ்
மாதர் வண்டுபொடி மல்கியப ராச ரன்வளர்
வேத மந்திர விழுத்தழல்வி ரைந்து குமவன்
தாதை யர்க்கொலை புரிந்ததகு வோர்கி ளைபொரூஉம்.

(இ - ள்.) அன்னப்பறவை பக்கத்தின்கண்ணே தங்க ஒளிபொருந்திய செந்தாமரை மலரின்கண் (தேனுண்ண) மொய்க்கின்ற அழகிய வண்டுகள்; பராசரமுனிவன் வேதமந்திரங்களால் வளர்த்த நீறு நிறைந்த யாகாக்கினியின்கண் (வேதமந்திரங்களால்) விரைவாகக் கொண்டுவந்து சொரியும் அப்பராசரன் தந்தையர்களைக் கொலைசெய்த அசுரர்கள் கிளையினை ஒக்கும்.

(வி - ம்.) அன்னத்தை யாகத் தலைவனாகவும், கமலத்தை யாகாக்கினியாகவும் வண்டுகளை யசுரர்களாகவும் கொள்க. மாதர் - அழகு. உகும் என்னும் பெயரெச்சம் தகுவோர் என்னும் பெயர்கொண்டு முடிந்தது. இக் கதையினைத் திருவானைக்காப் புராணம் பராசரன் வழிபடு படலத்திற் காண்க. மல்கிய என்னும் பெயரெச்சம் தழலென்னும் பெயர்கொண்டு முடிந்தது. பராசரன்வளர் வேதமந்திரப் பொடிமல்கிய விழுத்தழலெனக் கூட்டுக. (௯)

மேல வாந்தலைய கீழ்த்தலைய கீழ்ந்த லையன
மேல வாகுநிழ ரேற்றுவிரி நீர்வி ளையிறல்
மேல வாம்பொருள்கி ழக்கனகி ழக்கி டுபொருள்
மேல் வாஞ்செய றெளிக்குமொரு சான்று விழையும்.

(இ - ள்.) மேலே தலையுள்ளனவாகிய பொருள்களெல்லாம் கீழே தலையுள்ளனவாகிய பொருள்களாகவும், தலைகீழாகக் காட்டியனவாகிய பொருள்களெல்லாம் மேலே தலையையுடையனவாகும் வல்

ணம் நிழலைச்செய்வார் மிக்க தண்ணீர் (மனமொழி மெய்களொன்று பட்டுச் செய்யும்) தொழிலான் மேன்மைபொருந்திய பொருள் கிழக் கிடும் பொருளாகவும், கிழக்கிடத்தக்க பொருள் மேலாந்தன்மையை யடையத்தக்க செய்கையையுடையனவாகவும் பிறர்க்கறிவிக்கும் ஒரு சான்றை யொக்கும்.

(வி - ம்.) தண்ணீரிடத்தொரு பொருளைக்காட்டின் தலைகீழாகத் தோன்றலும், தலைகீழாகக் காட்டின் தலைமேலாகத் தோற்றலு மியற்கை யாகலின், "மேலவாந்தலைய கீழ்த்தலைய கீழ்த்தலையன - மேலவாகு நிழ றோற்றுவிக்கீர்" என்றார். கிழக்கு - கீழ். இதனை முன்னர்க் கூறினும். ஆண்டுக் காண்க. வினை - மனமொழி மெய்யொன்றுபட்டுச் செய்யும் வினை; சான்று-கரி. விழையும்-ஒக்கும். நிழல்-சாயை; இதனை "நிழல் செல்வம் குளிர்ச்சி சாயை" என்னும் நிகண்டா னறிக.

பின் இரண்டடிக்கும் "புண்ணியம் பாதகமாகப் போற்றிய" என்னுஞ் செய்யுளின் கருத்தைக்கொள்க. இஃது உவமையணி. (௧௦)

காத ரந்தபவி ளங்குதணி காச லநிழல்
போத வுட்போதி திருத்தமொளி பொங்கு வரையை
மாத வத்துறுதி யானவழி யான்ம னமிசை
ஆத ரத்தமர வைத்தமைவு பெற்ற துறழும்.

(இ - ள்.) கண்டோர் பிறவித்துன்பம் நீங்க விளங்குகின்ற தணிகைவரையின் நிழலை மிகத் தன்னுட்கொண்ட தீர்த்தமானது ஞான ஒளி தழைக்கின்ற அத்தணிகைமலையைப் பெரிய தவத்தினிடத்துப் பொருந்துகின்ற தியானமுறையான் மனத்தின்கண் அன்பினுற்றங்கச் செய்து அமைதிபெற்றதை யொக்கும்.

(வி - ம்.) காதரம் - துன்பம். இதனைத் "தேங்கிய காதர வாதரஞ் செப்பித்தன்" என்னுந் தஞ்சைவாணன்கோவை (௫) செய்யுளா னறிக. ஆதரம் - அன்பு. உறழும் - ஒக்கும். (௧௧)

ஓங்கு தூவிகைய மாடநிழல் செய்ய வுதன்மேல்
பாங்கர் நீள்பொழின்ம துப்புனல்ப னிப்ப தவைசேர்
தீங்கு தீர்த்திடுப திட்டைதெளி யாடி யினிடைத்
தாங்கி வார்புனல்பொ ழிந்துபுரி தன்மை நிகரும்.

(இ - ள்.) உயர்ந்த தூவிகையை யுடையனவாகிய கோவில் (நீரி னிடத்து) நிழலைச்செய்ய அந்நிழலின்மேல் (அத்தடாகத்தின்) பக்கலி லுள்ள நீண்ட சோலைகள் தேனாகிய நீரைத்துளித்தல் அச்சோலைகள் பொருந்தும் பிறவித்துன்பத்தை நீக்குகின்ற (ஈசுரப்) பிரதிட்டை செய்த தெளிந்த கண்ணாடியிடத்து (கையால்) தாங்கி மிக்கபுனலை அபி டேகம் செய்து (வந்தனை) செய்கின்ற தன்மையை யொக்கும்.

(வி - ம்.) தூவிகை - கோபுரத்தின்மேலுள்ள கலசம். மாடம் - கோவில் இதனை "ஏறுயர்த்த செங்கணார்க் கெழுபது மாடஞ் செய்த லான்" என்னும் பெரிய திருமொழியா னுணர்க. நிழல் - சாயை; முன் னர்க் கூறினும். உதன்மேல் - அச்சாயைமேல், பனிப்பது-துளிப்பது;

தொழிற்பெயர். அவை - சோலை. பதிட்டை - பிரதிட்டை. புரி : வினைத் தொகை. தூவினையுடையனவாகிய மாடமிருக்கச் செய்ய அவைபுரி தன்மையென வினைமுடிவு செய்க. (௬உ)

நின்றி ருந்துகிடை யுற்றுநிகழ் வேள்வி பரிவினிடை
மன்ற பன்முறைய ருந்துவது நீர முழுகி
ஒன்றி ருந்தவமு ழுற்றுபல வங்கி யுறமும்
துன்று தூவிகளி னேற்றுசுடர் தோற்று வனவே.

(இ - ள்.) ஒன்றோடொன்று நெருங்கியுள்ள கோபுரத்தூவி களின் ஏற்றிய விளக்குகள் அந்நீருட்டோற்றுவன; நிற்றலையும், இருத் தலையும், கிடத்தலையும் பொருந்திச் செய்யத்தக்க வேள்வியினிடத்து நிச்சயமாகப் பன்முறை வருந்துதல் நீங்கும்வண்ணம் அந்நீரின் மூழ்கி மனமொருங்குதற் கேதுவாகிய பெரியதவத்தைச் செய்கின்றபல அக் கினியை யொக்கும்.

(வி - ம்.) அங்கியை - நின்ற பாவனையாகவும், இருந்த பாவனை யாகவும், கிடந்தபாவனையாகவும் வைத்து யாகஞ்செய்தல் வழக்காதலி லின் "நின்றிருந்து கிடையுற்று நிகழ்வேள்வி" என்றார். ஒன்றியவிருந் தவம் - விகாரம். சுடர் - விளக்கு. (௬௩)

தூவி வெண்குருகு தோற்றுகுர னூபு ரமென
மேவ வாளைநெடு மீனம்வெடி போய்வி ழுவன
காவி நேர்விழிய கூத்தியர்க தித்த சதியில்
தாவி யந்தரம றிந்துவரு தன்மை புரையும்.

(இ - ள்.) இறகினோடு கூடிய வெள்ளிய அன்னங்கள் தோற்று விக்கிற சத்தங்கள் (மாதர் காலின்கண்ணுள்ள) சிலம்பொலிபோலப் பொருந்த, வாளைமீனும் ஏனைய நீண்ட மீன்களும் மேலே துள்ளிப் போய்க் கீழே விழுவன நீலோற்பல மலரையொத்த கண்களையுடைய நடனமாதர் எழுந்த தாளவொற்றிற்கேற்ப ஆகாயத்திலே தாவி மடங்கி வருகின்ற தன்மையை ஒக்கும்.

(வி - ம்.) தூவி - இறகு. குருகு - அன்னம். அன்னத்தின் குரல் சிலம்பொலி போன்றிருக்குமென்பதனை "பொருந்துருதனம் பூஞ் சிலம் பார்ப்பறக் - கரந்து தம்முயிர்க் காதலர்பாற் செல்வார்" என்னும் நைடதச் செய்யுளாலறிக. வாளை நெடுமீனம் - உம்மைத்தொகை. வெடிபோதல் - மேலே துள்ளல். கதித்த - எழுந்த. சதி - தாளவொற்று. அந்தரம் - ஆகாயம். (௬௪)

வேறு

பெருகிய வித்தகு வளத்திற் பெட்புறீஇக்
கருவினை தபுங்கயி லாய கங்கையை
வருகென வழைத்தவன் மறுவின் மாயையின்
பொருவில்பல் பொருள்களும் பூத்திட் டானரோ.

(இ - ள்.) மிக்க இத்தகுதியோடுகூடிய வளப்பத்தினாற் பெருமைபெற்றுப் பிறவிக்கேதுவாகிய வினைகளை நீக்கும் கயிலாயத்தின்கண் ஞானகங்கையினை அழைத்தவனாகிய குமாரப்பெருமான் ஒப்பில்லாத (பூசைக்குரியனவாகிய) பல பொருள்களையும் உளவாக்கினான்.

(வி - ம்.) பெட்பு - பெருமை. கருவினை - பிறவிக்கேதுவாகிய வினை. மறுவின்மாயை - சுத்தமாயை, இதனைச் "சூருயிர் குடித்தவன் சுத்தமாயையின் - ஆரவிவ்வகையெலா" மமைத்தானெனப் பின்னர்க் கூறுதலானறிக. (௧௫)

இலக்கண முழுதமை யிலிங்கம் வேதிகை
அலக்கணந் தித்தவர் விழையு மாலயம்
மலக்கணர் விடைகொண்மண் டபங்கள் கோபுர
நலக்கண மணிகொடு நவம தாக்கினான்.

(இ - ள்.) (சிற்பநாலில் இலிங்கத்திற்குக்கூறிய) இலக்கணமுற்றும் அமைந்த இலிங்கமும், பீடமும், துன்பத்தின் முடிவைக் கண்டவரும் விரும்பத்தக்க கோவிலும், மலக்கூட்டங்கள் விடைகொள்ளுதற்கேதுவாகிய மண்டபங்களும், கோபுரங்களும் நல்ல கூட்டமாகிய அரதனங்களாற் புதிதாகச் செய்தான்.

(வி - ம்.) வேதிகை - பீடம்; பூசைத்திண்ணை யென்பாருமுளர். அலக்கண் - துன்பம். அந்தித்தவர் - முடிவைக்கண்டவர். உம்மை விகாரத்தாற்றொக்கது.' அலக்கணந்தித்தவரெனவே சிவன் முத்தரென் பதுபெறும். அவரும் ஆலயவழிபாடு செய்யவேண்டுமென்பார் "அலக்கணந்தித்தவர் விழையுமாலயம்" என்றார். இதனை "ஆலயந் தானுமரனெனத் தொழுமே" என்னும் சிவஞானபோதச் சூத்திரத்தா னுணர்க. மலக்கணம் - மலக்கூட்டம். நலக்கணமணி - நல்ல கூட்டமாகிய அரதனம். (௧௬)

பித்திகை யெங்கணும் பெருகு மான்மதம்
மெத்திய சந்தன விழுது கொட்டுபு
வைத்தெழு விரைப்புகை பாய்த்தி யோசனை
பொத்திய மணங்குலாம் பொற்பி யற்றினான்.

(இ - ள்.) சுவர்த்தலமெங்கணும், வாசனை மிகுகின்ற புழுகையும் நிறைந்த சந்தனச்சாந்தையும் மெழுகிப் பரவியெழுகின்ற வாசனைப் புகையையும் பரவச்செய்து நாற்காததூரம் பொதிந்த வாசனை விளங்கும் பொலிவோடு செய்தான்.

(வி - ம்.) பித்திகை - சுவர். விழுது - குழம்பு. கொட்டுபு - பூசி. வைத்து - பரவி. விரைப்புகை - வாசனைப்புகை. யோசனை - நாற்காத தூரம். இதனை "ஒரு நாவிகலந்தோசனை கமழுமே" என்னும் சிந்தாமணி (விமலை 13) செய்யுளானு முரையானு முணர்க. பொத்திய - பொதிந்த. (௧௭)

தூண்டோறும் வாருறை சேர்த்தித் தூங்குகாய்
மாண்டமென் கதலிவார் கரும்பு பூகதம்

ஆண்டுறத் தூம்பி னவிர்பொற் பட்டினுங்
காண்டகு விதானங்கள் கற்பித் திட்டனன்.

(இ - ள்.) தூண்கடோறும் நீண்ட உறைகளையிட்டுத் தொங்குகின்ற காய் மாட்சிமைப்பட்ட மெல்லியவாழையும், நீண்ட கரும்பும், கமுகமரங்களும் ஆகியவற்றை ஆண்டுச் சேர்த்து மேலே விளங்குகின்ற அழகிய பட்டினுல் யாவருங் காணத்தக்க மேற்கட்டியும் செய்தான்.

(வி - ம்.) உறை - மேற்போர்வை; இது தூணிலிழுக்கப்படுவதாம். "தூணுறை பொதிவாரும் தோரணம் நடுவாரும்" என்னும் காஞ்சிப் புராணம் அகத்தியப்படலச் செய்யுளானிதனை அறிக. (௧௮)

ஆடகத் தகடுக ளடுத்த கீழ்நிலம்
பாடமை மணித்துகட் பசும்பொற் சுண்ணநீர்
நாடரு விரைகலந் தொழுக்கி நன்மணி
தோடவிழ் மலரறு கரிசி தூவினன்.

(இ - ள்.) பொற்றகடுகளாற் பொருந்திய கீழிடத்தின்கண் பெருமை பொருந்திய அரதனப்பொடிகளும், பசியபொற்சுண்ணமும், ஆராய்தற்கரிய வாசனையும் நீர்கலந்து தெளித்து நல்ல முத்துக்களையும், மலரையும் அறுகையும் அரிசியையுந் தூவினன்.

(வி - ம்.) ஆடகம் - பொன். கீழ்நிலம் - கீழிடம். பாடமை - பெருமையமைந்த. தோடு - இதழ். (௧௯)

பொன்னரி மாலையும் போதிற் றொங்கலும்
மின்னகு பன்மணி விராய கோவையும்
துன்னிய கனிகளுந் துலங்கு மாடியும்
என்னவு மணிபெற வெங்குந் தூக்கினன்.

(இ - ள்) பொன்னுலரிந்து செய்யப்பெற்ற மாலையும், பூக்களாலாய மாலையும், ஒளி விளங்குகின்ற பலமணிகள் கலந்து செய்யப்பெற்ற மாலையும் விளங்குகின்ற கண்ணாடியுமாகிய எவையும் அலங்காரம்பெறச் செய்தான்.

(வி - ம்.) போது - பூ. தொங்கல்-மாலை. கோவை - மாலை. (௨௦)

தோரண மெங்கணுந் தொடரிப் பல்கொடி
காரண விசும்பெலாங் கஞற்றிப் பாலிகை
பூரண கும்பங்கள் பொலிந்த வேதிகை
ஏரண வியவிளக் கினமு மிட்டினன்.

(இ - ள்) மாவிலையாலாகிய தோரணங்களை எவ்விடத்தும் தொடுத்துப் பலவகைப்பட்ட நிறங்களையுடைய கொடிகளை மேகத்தையண்ம ஆகாயத்தி னிடமெல்லாம் நெருங்கக்கட்டி, முளைப்பாலிகையும், நிறைகுடங்களும் பொலிவுபெற்ற பூசைமேடையினிடத்து அழகு பொருந்திய தீபங்களையும் சேர்த்தினன்.

(வி - ம்.) தொடர்-தொடுத்து. காரணவு விகாரம். கார்-மேகம். மேகப் பூக்கட்குக் காரணமான விசும்புமாம். வேதிகை-பூசைமேடை. ஏர் - அழகு. (௨௧)

வட்டகை வலம்புரி வளைபொற் பாசனம்
கோட்டொளிப் படலிகை கொடிய கஞ்சுடர்
இட்டசைப் பனவெழி லாடி யாதியா
முட்டற யாவையு முறையு யிர்த்தனன்.

(இ - ள்.) அருக்கியம் கூட்டும் பாத்திரமும், வலம்புரிச்சங்கமும், விளைந்த பொன்னாலாகிய அபிடேக நீர் வைக்கும் பாத்திரமும், ஒளியை வெளியிடுகின்ற தட்டுக்களும், பூந்தட்டுக்களும், சுடரிட்டு அசைக்கப் படுவனவாகிய அழகு பொருந்திய கண்ணாடியும் முதலாகக் குறைவற (பூசைக்கு வேண்டும்உபகரணங்கள்) எல்லாவற்றையும் முறையே படைத்தனன்.

(வி - ம்.) வட்டகை - அருக்கியஞ்சேர்க்கும் பாத்திரம். வலம்புரி வளை - வலம்புரிச்சங்கம். பாசனம் - பாண்டம், இதனைப் "பாசன மென்ப சுற்றம் பாண்டமுண்கலமும் பன்னும்" என்னும் நிகண்டா னறிக. படலிகை - பூந்தட்டு; இதனை "மணியியற் பாலிகை யனைய மாச்சுனை - யணிமணி நீண்மல ரணிந்த தாயிடை - யிணைமலர்ப் படலிகை போலு மீர்ம்பொழில் - களையுமிழ் சிலையினுய் கண்டு சேறியே" என்னும் சிந்தாமணி (பதுமை 45) செய்யுளானு முரையானு முணர்க. கொடியகம் - தட்டு; கோடிகம் என்பதன் விகாரமெனினுமாம். (௨௨)

எண்ணெயா மலகமா மஞ்சள் பாறயிர்
தண்ணெய்தேன் வேழத்தின் சாறங் கைந்தென
நண்ணமிர் திரதங்க ளுளி கேரநீர்
அண்ணலங் கனியரு விரையு மார்த்தினன்.

(இ - ள்.) எண்ணெயும், நெல்லியும், தென்மாவும், மஞ்சளும், பாலும், தயிரும், குளிர்ந்த ஆனெய்யும், தேனும், கரும்பின் சாறும், பஞ்சாமிர்தமும், பழச்சாறுகளும், இளநீரும், அழகிய கனிகளும், அருமையான வாசனைப் பொருள்களும் பெருமை பொருந்திய முருகப்பெருமான் நிறைத்தனன்.

(வி - ம்.) ஆமலகம் - நெல்லி. மா - தென்மா. வேழம் - கரும்பு. ஐந்தென நண்ணமிர்து - பஞ்சாமிர்தம். இரதங்கள் - பழச்சாறுகள். (௨௩)

தேசவிர் கலைகளுந் தெய்வ மாலையும்
பூசமை சாந்தமும் புகையுஞ் சுண்ணமும்
காசவிர் கலன்களுங் கனிந்த பல்சுவை
தேசமு தமிர்தமு நிரைத்திட் டானரோ

(இ - ள்.) ஒளி விளங்குகின்ற பட்டுடைகளும், தெய்வ மணங் கமழ்கின்ற மாலைகளும், பூசுதற்கமைந்த சந்தனங்களும், நறும்புகை

*யும், பொற்சுண்ணமும், மணிகள் பதிக்கப்பெற்று விளங்குகின்ற அணி கலன்களும், பலவகைச்சுவை முதிர்ந்த தேவாமிர்தமும் வரிசையாகக் கொணர்ந்து வைத்தனன்.*

(வி - ம்.) *காசு—மணி. பல்சுவை கனிந்த அமிர்தமெனக் கூட்டுக.* (உஎ)

சூருயிர் குடிப்பவன் சுத்த மாயையின்
ஆரவிவ் வகையெலா மமைத்த பின்மணி
வீரரு மிலக்கரும் விழுமம் வீழ்த்துயர்
பாரிடத் தலைவரும் பரிப்ப வேவினன்.

(இ - ள்.) *சூரனுயிரையுண்டவனாகிய முருகப்பெருமான் சுத்த மாயையினின்றும் பொருந்த இவ்வாறெல்லாப் பொருள் வகைகளையும் படைத்த பின்னர், அழகிய நவவீரரும் (அவர்க்குப் பின்னர்த் தோன்றிய) இலக்கர்களும், (பிறவித்) துன்பத்தைக் கெடுத்தலாலுயர்ந்த பூத கணத் தலைவர்களும் தாங்கிச்செல்லக் கட்டளையிட்டனன்.*

(வி - ம்.) *சூர்—சூரன்; சொல்லாலஃறிணை, பொருளாலுயர்திணை. விழுமம் - துன்பம். வீழ்த்து : காரணப்பொருளில் வந்த வினையெச்சம். பாரிடம் - பூதம். பரித்தல் - தாங்கல்.* (உகூ)

வேறு

கள்ளவிழ்பல் மலர்கஞலுங் கயிலாய கங்கையெனும்
தெள்ளுதிரை மணிகொழிக்குந் திருந்தநீர் புகுந்தாடி
ஒள்ளியவே றுடையுடுத்திட் டொளிர்பூதி முழுதணிந்து
வள்ளல்விழிக் கதித்தமணி வ்டம்பலவுந் தாங்கினன்.

(இ - ள்.) *தேன் விரியப்பெற்ற பல மலர்களுஞ் செறிந்த கயி லாய கங்கையென்று சொல்லுந் தெள்ளிய அலைகள் முத்துக்களைச் சொரிதற்கிடமாகிய தீர்த்தத்தின்கண்ணே புகுந்து மூழ்கி ஒளிபொருந் திய வேறுடையை யணிந்து ஒளிபொருந்திய நீற்றினை யுடன்முற்றி லும் பூசி வரையாது கொடுக்குந் தலைவனாகிய இறைவன் கண்ணினின்றுந் தோன்றிய மணிமாலை பலவற்றையு மணிந்தான்.*

(வி - ம்) *கதித்த — தோன்றிய. கஞலும் - நெருங்கிய. விழிக் கதித்த மணிவடம் - கண்மணி மாலை (உருத்திராக்கமாலை.)* (உக)

பல்லியம்பல் கணமியம்பப் பண்ணவர்பல் லாண்டிசைப்ப
மெல்லியல்வின் னரமகளிர் மின்னினுடங் கினர்நடிப்பச்
சொல்லமிழ்த மிடற்றிசையுஞ் சுடர்மணியாழ் நரப்பிசையும்
கல்லிளகப் பரந்திசைப்பக் கதிர்மணிக்கோ யிலையடுத்தான்.

(இ - ள்.) *வாத்தியங்கள் பலவற்றையும் பலவகைப்பட்ட கணங்களொலிக்கவும், தேவர்கள் பல்லாண்டு பாடவும், மென்மைத் தன்மையுடைய தேவமங்கையர் மின்னலைப்போலத் துவண்டு நடனஞ் செய்யவும், சொல்லமிர்தமாகிய மிடற்றுப் பாடலும், யாழ் நரம்பி*

விசைபடுங் கற்களும் விளங்கும்வண்ணம் பரவி முழங்கவும், ஒளிபொருந்திய இராத்திரிகள் பதித்த கோவிலையமைக்கின்றன்.

(வி - ம்.) இயம் - வாத்தியம். நடங்கினர் - முற்றெச்சம். உம்மை விகாரத்தாற்றொக்கது. நரம்பு - நரப்பு என விகாரம் ஆயிற்று. (உஎ)

தானிருக்குந் திருவெல்லை தனக்குவட கீழ்ஞாங்கர்
ஆனிருக்கை கொளவாவச் சகாயனையன் பொடுமிருத்தி
வானிருக்கு மளப்பரிய வழிபாடு புரிந்தருவித்
தேனிருக்கு மலர்க்கடப்பந் தெரியலான் மகிழ்வித்தான்.

(இ - ள்.) தானெழுந்தருளி யிருக்குந் திருவெல்லையின் வடகிழக்குப் பக்கத்தில் அவ்விடத்தெழுந்தருளி யிருக்கும்படி ஆவச்சகாயனென்னும் விநாயகப்பெருமானை அன்போடு மெழுந்தருளச்செய்து மேலாகிய வேதங்களு மளத்தற்கரிய வழிபாட்டினைச் செய்து அருவிபோலத் தேனொழுகிக்கொண்டிருக்கும் கடப்பந்தாரினை யணிந்த முருகப் பெருமான் மகிழ்ச்சியை யுண்டாக்கினன்.

(வி - ம்.) ஞாங்கர் - பக்கம். ஆன் - அவ்விடம். வான் - மேன்மை. (உஅ)

பிணிகிழங்கி னொடும்பெயர்த்துப் பெயராத நிலையருளும்
கணிகைவரை யடிச்சாரற் கயிலாய கங்கைமுகந்
தணிகிளர்பன் னிறைநிரப்பி யல்லனவும் பலர்புரியத்
தணிவிறன திருக்கைவட சாரமைத்த வாலயத்துள்.

(இ - ள்.) ஆணவமலமாகிய நோயை மூலத்தோடும் நீக்கி என்றும், நீங்காத நிலைமையினைத் தரும் தணிகைமலையின் அடியின்கண்ணுள்ள கயிலாய கங்கையினை மொண்டு அழகு விளங்குகின்ற பல பாண்டங்களில் நிறையச்செய்து ஏனைய திருத்தொண்டுகளையும் பலர் செய்யாநிற்பக் குறைதலில்லாத தனதிருக்கையின் வடபக்கத்து அமைத்த ஆலயத்தின்கண்.

(வி - ம்.) பிணி - இரண்டாவதன் றொகை. பெயராதநிலை - முத்திநிலை. நிறை - பாண்டம். (உக)

கருவிகளு மறியாமை கதுவவரு கேவலமும்
ஒருவியெழு பரஞானத் துளச்செயலைத் தபத்தோற்றும்
பெருகுபர மானந்தப் பெருநிலைமைப் பொருளேயாம்
முருகனருட் குறிப்பதிட்டை முறையியற்றிப் பூசிப்பான்.

(இ - ள்.) கருவிகளோடுகூடிய சகலநிலையும், அறியாமைபொருந்த வருகின்ற கேவலநிலையும் நீக்கி, யெழுகின்ற பரஞானத்தினாலே ஆன்மாவின் செயலைக் கெடும்படி தோற்றுகின்ற பெருகுகின்ற பரமாநந்தப் பெருநிலைப் பொருளாகிய முருகப்பெருமான் சிவலிங்கப் பிரதிட்டையை ஆகம முறைப்படி செய்து பூசிப்பானாயினன்.

(வி - ம்.) கருவி - ஈண்டுக் கருவிகளோடுகூடிய சகலாவத்தை. பரஞானம் : மூன்றுவதன் றொகை. உளம் - ஈண்டு ஆன்மா ; இதனை, "நானிவனென் றெண்ணினர்க்கு நாடுமுள மூண்டாதல்" என்றும் சிவஞானபோதச் செய்யுளானறிக. பிரதிட்டை - விகாரம். (௬௦)

குருமணியி னொளிப்பிழம்பு கொழுந்தோடிப் பல்கணியாய்
மருவுகத வெனத்தோற்று மணிவாயி லிருபுடையும்
பொருவில்பர மபரமெனப் புகன்ஞான மிரண்டனையும்
அருணிலையுந் திருவெழுத்தி னருச்சனைசெய் தமைத்திட்டான்.

(இ - ள்.) நிறத்தோடுகூடிய அரதனங்களின் ஒளிப்பிழம்பானது கொழுந்துவிட்டோடிப் பல கண்களையுடையதாகிப் பொருந்துகின்ற கதவென்று சொல்லும்படி தோற்றுகின்ற அழகிய வாயிலி னிருபக்கங் களினும் ஒப்பில்லாத பரஞானம் அபரஞானமெனச் சொல்லுகின்ற ஞானமிரண்டினையும் அருணிலைத்தற் கேதுவாகிய திருவஞ்செழுத்தால் அருச்சனைசெய்து துவாரபாலகராக வமைத்தான்.

(வி - ம்.) பரஞானம் அபரஞான மிரண்டனையுந் துவாரபாலகராக அஞ்செழுத்தாலமைத்தா னென்க. (௬௧)

பூதமுதற் கரணமெலாம் புறமாக வகம்புறமற்
றுதரவி னிடைமூழ்கி யமைத்தபொரு ளவையனைத்தும்
வேதமுடி கடந்தொளிரும் விழுப்பொருளி னிறைவாக்கித்
தீதனுக்கு மஞ்செழுத்துஞ் செயிர்விரவா முறைமாறி.

(இ - ள்.) பிருதிவி தத்துவ முதலிய கரணங்களெல்லாம் புறத்த தாக அகப்பற்றும் புறப்பற்றும் நீங்க அன்பினிடத்தே மூழ்கிப் படைத்த பொரு ளெல்லாவற்றையும், வேதங்களின் முடிவையுங் கடந்து விளங்குகின்ற சிறந்த செம்பொருளிற்றானும் நிறைந்திருப்ப தாகப் பாவித்துப் பிறவித் துன்பத்தைப் போக்கும் திருவஞ்செழுத்தினை யும் குற்றங் கலவாத முறைப்படி மாறியுச்சரித்து.

(வி - ம்.) பூதமுதற் கரணமெலாம் புறமாக அகம்புறமற்—றுத ரவி னிடைமூழ்கி" என்றதனுல் பூதசுத்தியும், "அமைத்தபொரு ளவை யனைத்தும் நிறைவாக்கி" யென்றதனுற் றிரவியசுத்தியும், வேதமுடி கடந்தொளிரும் விழுப்பொருளி னிறைவாக்கி" யென்றதனுல் இலிங்க சுத்தியும் கூறினர். உடலைத் தகித்தவழி அகம்புற மென்பதின்றாகலின் "அகம்புறமற்" றென்றார். பூசைக் குபகரணங்களாக முன் சுத்தமாயை யாலமைத்த பொருள்களையெல்லாம் வேதமுடிவையுங் கடந்த மந்திரங் களினுலே நிறைவாக்கி யென்க. நிறைவு - ஈண்டுச் சுத்தமென்னும் பொருட்டு. செயிர் - குற்றம். ஈண்டுக் குற்றந் தருதற்குரிய நமக்களை யுணர்த்திற்று. (௬௨)

பாதமுக முடிக்குதவு பாத்தியமா திகளெல்லாம்
பேதமறு மருள்கடந்த பேரெழுத்தி னினிதமைத்தங்
காதனமு மூர்த்தியுமூ லமுமந்தத் திருவெழுத்தால்
ஏதமற வுயிரெல்லா மினர்மலர்கொண் டருச்சித்தான்.

(இ - ள்.) திருவடி, திருமுகம், திருமுடியாகிய மூன்றற்கு முறையே கொடுக்கின்ற பாத்தியம், ஆசமனம், அருக்கிய முதலியவை களை யெல்லாம்; அபேதமாகிய அருளையுங்கடந்த பெரிய மூலமந்திரத் திரு லமைத்து அவ்விடத்து ஆசனம் மூர்த்தி மூலமென்னு மூன்றினை யும் அத் திருவெழுத்தினாலே யமைத்து ஆன்மாக்களெல்லாம் ஆணவ மாகிய குற்றத்தினின்றும் நீங்கக் கொத்துக்களோடுகூடிய மலர்களால் அருச்சனை செய்தான்.

(வி - ம்.) பேரெழுத்து - மூலமந்திரம்: முத்திபஞ்சாக்கர மென் பாருமுளர். உயிரெல்லா மேதமற வருச்சித்தானெனக் கூட்டுக. இறைவன் செய்யுந் தொழில்களெல்லாந் தன்பொருட்டன்றி ஆன்மாக் களின் பொருட்டே யாகலின் "உயிரெல்லா மேதமற வருச்சித்தான்" என்றார். இணர் - பூங்கொத்து. (௯௩)

அளியாகி யொளியாகி வெளியாகி யளவாகும்
களியாத பொருட்கலப்பிற் கதித்தசுகத் தப்புறமாய்
விளியாத சுகம்பெருக்கி விளங்குதிரு வுருக்குளிர்ப்பத்
தெளியாமுந் தயிலமுதற் செறிவனைத்து மாட்டினான்.

(இ - ள்.) கருணையே திருவுருவமாகி, ஒளிவடிவமாகி, பரமாகாய சொரூபமாகி (உயிர்கள் காண்டற்கு) அளவாகிய மயங்காத பொருட் கலப்பின்கண் ணுளவாகு மின்பத்திற் கப்பாற்பட்டுள்ளதாய் எஞ் ஞான்றுங் கெடாத இன்பத்தினை மிகச்செய்து விளங்குகின்ற திருவுருவ மானது குளிர்ச்சியடையத் தெளிந்தநீரும் எண்ணெய் முதலியவாகச் செறிந்த அபிடேகப் பொருள்க ளெல்லாவற்றானும் அபிடேகஞ் செய்தான்.

(வி - ம்.) ஆகி, ஆய், பெருக்கி யென்னும் வினையெச்சங்கள் விளங் கென்னும் வினைத்தொகை முதனிலையோடு முடிந்தன. களியாத - மயங்காத. ஆம் - நீர். ஆகுமென்னும் பெயரெச்சமும், களியாத வென்னும் பெயரெச்சமும் பொருளென்னும் பெயரோடு தனித்தனி சென்றியைந்தது. உயிர்கள் காண்டற்குரிய பொருளாகலின் அளவா கும் பொருளென்றார். மாயாகாரியமாய போக்கியப் பொருளுக் கப்பாற்பட்ட சுகமென்பார், "பொருட்கலப்பிற் கதித்தசுகத் தப்புற மாய்" என்றார். கதித்த - தோன்றிய. (௯௪)

விழைதகுமென் கலிங்கத்தான் மெய்யீரந் தபப்புலர்த்தித்
தழையொளிநாண் கோவணம்விற் றதைகதிர்ப்பூம் பட்டணிந்து
குழைகலவைச் சேறெங்குங் கோட்டிமணத் துகளட்டி
மழைதவழ்வ தெனவிரைகண் மடுத்தபுகை தவழ்வித்தான்.

(இ - ள்.) யாவரும் விரும்புந் தகுதியமைந்த திருவொற் றுடை யாற் றிருமேனியி னீரத்தை உலரச்செய்து ஒளிதழைக்கின்ற அரை ஞாணும் கோவணமும், மிக்கவொளியோடுகூடிய பட்டினையுஞ்சாத்திக் குழைத்த கலவைச் சாந்தினைத் திருமேனியெங்குங் கொட்டி வாசனைப் பொடிகளையப்பி மேகந்தவழ்வதுபோல வாசனை நிறைத்த புகையினைத் தவழச்செய்தான்.

(வி - ம்.) கலிங்கம் - ஈண்டுத் திருவொற்றாடை. அட்டி - அப்பி. மடுத்தல் - நிறைத்தல். என வென்பது உவம வுருபு. நாண் - அரை ஞாண். (கஙி)

குண்டலமுங் கதிர்த்தோடுங் குருக்கிளர்பொன் மணிமுடியும்
கண்டசர மங்கதமுங் காழ்பணியு மலர்த்தொடையும்
ஒண்டொடியு மோதிரமு மொளிருதர பந்தனமும்
மண்டுகுர னூபுரமு மற்றுமெடுத் தலங்கரித்தான்.

(இ - ள்.) குண்டலமென்னு மணியும், ஒளிபொருந்திய தோடென்னு மணியும், நிறம் விளங்குகின்ற பொன்னாலாகிய அழகிய திருமுடியென்னு மணியும், கண்டமாலையும், தோளணியும், சரமாகிய அரதனுபரணங்களும், மலர்மாலையும், ஒள்ளிய விரவளையலும், விரலாழியும், விளங்குகின்ற வயிற்றிற்கட்டுங் கச்சும், நெருங்கிய ஒலியோடுகூடிய காலணியு மற்றுமுள்ளனவாகிய அணிகளையு மெடுத் தலங்காரஞ் செய்தான்.

(வி - ம்.) குரு - நிறம். கண்டசரம் - கழுத்திலிடுமாலை. அங்கதம் - தோளணி. காழ்பணி - சரமாகிய ஆபரணம். உதரபந்தனம் - இடையிற்கட்டும் பரிவட்டம். (கசு)

பாறயிர்நெய் புளிகடுகு பயறுசருக் கரைதிலகம்
வேறுவிர வியவல்சி வெற்றன்னங் குய்க்கருனை
ஊறுசுவைச் சிற்றுண்டி யொண்வறையல் கனிபுனலும்
தேறுமனு மொழிந்நமுது செய்தருள மகிழ்சிறந்தான்.

(இ - ள்.) பாலுந், தயிரும், நெய்யும், புளியும், கடுகும், பயறும், சருக்கரையும், எள்ளுமாகிய இவைகளை வெவ்வேறு கலந்து செய்த திருவமுதும் ஒன்றுங் கலவாத தூய அன்னமும், தாளிப்போடுகூடிய பொரிக்கறியும், சுவையூறுகின்ற பண்ணிய வகைகளும் ஒள்ளிய வறுவலும், தீங்கனிகளும், பானக முதலிய நீர்வகையும், (இவைகளை யுண்டாக்கும்) தெளிந்த மந்திரங்களைச் சொல்லுதலாற் றிருவமுது செய்தருள மகிழ்சிறந்தான்.

(வி - ம்.) வல்சி - உணவு. குய் - தாளிப்பு. கருனை - பொரிக்கறி. இதனை "வெருக்குக்கண் வெங்கருனை" யென்னும் நாலடிச் செய்யுளா னறிக. சிற்றுண்டி - பலகாரம். வறையல் - வறுவல். புனல் - பானகம், நீர்மோர் முதலியன. (கஎ)

வேறு

பூசுபுனல்கரத் தேந்திப் பாத்தியமா சமனமருக் கியம்பூ ரித்து
வாசமலி பாகடையின் சுருணீட்டி மணித்துபந் தீபம் வட்டித்
தாசறுபஃ றீபவா ராதனையும் புரிந்நாடி யாதி யுய்த்து
நேசமலி புகழ்பரப்பி வலம்வந்து நிலத்திறைஞ்சி நின்று ளுங்கு.

(இ - ள்.) கரசுத்தி முதலியன செய்கின்ற நீரினைக் கையின்கண் ணேந்திப் பாத்தியமும், ஆசமனமும், அருக்கியமும், நிறைத்து வாசனை

(இ - ள்.) திருவடி, திருமுகம், திருமுடியாகிய மூன்றற்கு முறையே கொடுக்கின்ற பாத்தியம், ஆசமனம், அருக்கிய முதலியவை களை யெல்லாம்; அபேதமாகிய அருளையுங்கடந்த பெரிய மூலமந்திரத் தினா லமைத்து அவ்விடத்து ஆசனம் மூர்த்தி மூலமென்னு மூன்றினை யும் அத் திருவெழுத்தினாலே யமைத்து ஆன்மாக்களெல்லாம் ஆணவ மாகிய குற்றத்தினின்றும் நீங்கக் கொத்துக்களோடுகூடிய மலர்களால் அருச்சனை செய்தான்.

(வி - ம்.) பேரெழுத்து - மூலமந்திரம்: முத்திபஞ்சாக்கர மென் பாருமுளர். உயிரெல்லா மேதமற வருச்சித்தானெனக் கூட்டுக. இறைவன் செய்யுந் தொழில்களெல்லாந் தன்பொருட்டன்றி ஆன்மாக் களின் பொருட்டே யாகலின் "உயிரெல்லா மேதமற வருச்சித்தான்" என்றார். இணர் - பூங்கொத்து. (௩௬)

அளியாகி யொளியாகி வெளியாகி யளவாகும்
களியாத பொருட்கலப்பிற் கதித்தசுகத் தப்புறமாய்
விளியாத சுகம்பெருக்கி விளங்குதிரு வுருக்குளிர்ப்பத்
தெளியாமுந் தயிலமுதற் செறிவனைத்து மாட்டினான்.

(இ - ள்.) கருணையே திருவுருவமாகி, ஒளிவடிவமாகி, பரமாகாய சொருபமாகி (உயிர்கள் காண்டற்கு) அளவாகிய மயங்காத பொருட் கலப்பின்கண் ணுளவாகு மின்பத்திற் கப்பாற்பட்டுள்ளதாய் எஞ் ஞான்றுங் கெடாத இன்பத்தினை மிகச்செய்து விளங்குகின்ற திருவுருவ மானது குளிர்ச்சியடையத் தெளிந்தநீரும் எண்ணெய் முதலியவாகச் செறிந்த அபிடேகப் பொருள்க ளெல்லாவற்றானும் அபிடேகஞ் செய்தான்.

(வி - ம்.) ஆகி, ஆய், பெருக்கி யென்னும் வினையெச்சங்கள் விளங் கென்னும் வினைத்தொகை முதனிலையோடு முடிந்தன. களியாத - மயங்காத. ஆம் - நீர். ஆகுமென்னும் பெயரெச்சமும், களியாத வென்னும் பெயரெச்சமும் பொருளென்னும் பெயரோடு தனித்தனி சென்றியைந்தது. உயிர்கள் காண்டற்குரிய பொருளாகலின் அளவா கும் பொருளென்றார். மாயாகாரியமாய போக்கியப் பொருளுக் கப்பாற்பட்ட சுகமென்பார், "பொருட்கலப்பிற் கதித்தசுகத் தப்புற மாய்" என்றார். கதித்த - தோன்றிய. (௩௭)

விழைதகுமென் கலிங்கத்தான் மெய்யீரந் தபப்புலர்த்தித்
தழையொளிநாண் கோவணம்விற் றதைகதிர்ப்பூம் பட்டணிந்து
குழைகலவைச் சேறெங்குங் கொட்டிமணத் துகளட்டி
மழைதவழ்வ தெனவிரைகண் மடுத்தபுகை தவழ்வித்தான்.

(இ - ள்.) யாவரும் விரும்புந் தகுதியமைந்த திருவொற் றுடை யாற் றிருமேனியி னீரத்தை உலரச்செய்து ஒளிதழைக்கின்ற அரை ஞாணும் கோவணமும், மிக்க வொளியோடுகூடிய பட்டினையுஞ்சாத்திக் குழைத்த கலவைச் சாந்தினைத் திருமேனியெங்குங் கொட்டி வாசனைப் பொடிகளையப்பி மேகந்தவழ்வதுபோல வாசனை நிறைத்த புகையினைத் தவழச்செய்தான்.

(வி - ம்.) கலிங்கம் - சண்டுத் திருவொற்றாடை. அட்டி - அப்பி. மடுத்தல் - நிறைத்தல். என வென்பது உவம வுருபு. நாண் - அரை ஞாண். (௧௫)

குண்டலமுங் கதிர்த்தோடுங் குருக்கிளர்பொன் மணிமுடியுங்
கண்டசர மங்கதமுங் காழ்பணியு மலர்த்தொடையுங்
ஒண்டொடியு மோதிரமு மொளிருதர பந்தனமும்
மண்டுகுர னூபுரமு மற்றுமெடுத் தலங்கரித்தான்.

(இ - ள்.) குண்டலமென்னு மணியும், ஒளிபொருந்திய தோடென்னு மணியும், நிறம் விளங்குகின்ற பொன்னாலாகிய அழகிய திருமுடியென்னு மணியும், கண்டமாலையும், தோளணியும், சரமாகிய அரதனாபரணங்களும், மலர்மாலையும், ஒள்ளிய வீரவளையலும், விரலாழியும், விளங்குகின்ற வயிற்றிற்கட்டுங் கச்சும், நெருங்கிய ஒலியோடுகூடிய காலணியு மற்றுமுள்ளனவாகிய அணிகளையு மெடுத்தலங்காரஞ் செய்தான்.

(வி - ம்.) குரு - நிறம். கண்டசரம் - கழுத்திலிடுமாலை. அங்கதம் - தோளணி. காழ்பணி - சரமாகிய ஆபரணம். உதரபந்தனம் - இடையிற்கட்டும் பரிவட்டம். (௧௬)

பாறயிர்நெய் புளிகடுகு பயறுசருக் கரைதிலகம்
வேறுவிர வியவல்சி வெற்றன்னங் குய்க்கருனை
ஊறுசுவைச் சிற்றுண்டி யொண்வறையல் கனிபுனலும்
தேறுமனு மொழிந்தமுது செய்தருள மகிழ்சிறந்தான்.

(இ - ள்.) பாலும், தயிரும், நெய்யும், புளியும், கடுகும், பயறும், சருக்கரையும், எள்ளுமாகிய இவைகளை வெவ்வேறு கலந்து செய்த திருவமுதும் ஒன்றுங் கலவாத தூய அன்னமும், தாளிப்போடுகூடிய பொரிக்கறியும், சுவையூறுகின்ற பண்ணிய வகைகளும் ஒள்ளிய வறுவலும், தீங்கனிகளும், பானக முதலிய நீர்வகையும், (இவைகளையுண்டாக்கும்) தெளிந்த மந்திரங்களைச் சொல்லுதலாற் றிருவமுது செய்தருள மகிழ்சிறந்தான்.

(வி - ம்.) வல்சி - உணவு. குய் - தாளிப்பு. கருனை - பொரிக்கறி. இதனை "வெருக்குக்கண் வெங்கருனை" யென்னும் நாலடிச் செய்யுளா னறிக. சிற்றுண்டி - பலகாரம். வறையல் - வறுவல். புனல் - பானகம், நீர்மோர் முதலியன. (௧௭)

வேறு

பூசுபுனல்கரத் தேந்திப் பாத்தியமா சமனமருக் கியம்பூ ரித்து
வாசமலி பாகடையின் சுருணீட்டி மணித்தூபந் தீபங் காட்டித்
தேசுறுபஃ றீபவா ராதனையும் புரிந்தாடி யாதி யுய்த்து
நேசமலி புகழ்பரப்பி வலம்வந்து நிலத்திறைஞ்சி நின்றொ ழுங்கு.

(இ - ள்.) கரசுத்தி முதலியன செய்கின்ற நீரினைக் கையின்கண் ணேந்திப் பாத்தியமும், ஆசமனமும், அருக்கியமும், நிறைத்து வாசனை

மிருந்த பாக்கு வெற்றிலையின் சுருளைக் கொடுத்து இரத்தின தீபத்தையும், தூபத்தினையும் பணிமாறிக் குற்றமற்ற பலவாகிய தீபவாராதனை புரிசெய்து, கண்ணாடி சாமரை முதலிய பதினாறுவகை யுபசாரங்களை புரிசெய்து, அன்புநிறைந்த (இறைவன் லீலையைக்கூறும் தேவார முதலிய பாக்களால்) புகழைப் பரவச்செய்து வலமாகவந்து பூமியின் கண் விழுந்து வணங்கி எழுந்துநின்றான் அப்பொழுது.

(வி - ம்.) பூசுபுனல் - கரசுத்தி முதலியன செய்கின்ற நீர், வட்டித்தல் : பணிமாறல்; வளைத்தல். ஆடியாதி - கண்ணாடி முதலிய சோடசவுபசாரம். புகழ் - ஆகுபெயர். (௩அ)

வாளாங்கு வைகுறினுந் தாமேவந் தருள்புரியும் வாய்மை மைந்தன்
தாளாண்மைத் தலைநின்ற வழிபாட்டிற் றரிப்பரே தனயன் காண
வேளாண்மை வித்தகனு ரவணணிந்த வணிமுழுதும் விளங்க விண்ணோர்
நாளார்ந்த மலர்தூவக் கணநெருங்க நயந்தெதிரே நண்ணி னுரால்.

(இ - ள்.) வாளா தங்கியிருப்பினுந் தாமே வந்தருள்செய்தற் கேதுவாகியிருக்கும் உண்மையை யுடைய குமாரன் முயற்சியினிடத்து முதன்மையாக நின்ற வழிபாட்டினைக் கண்டு தரியாராதலின் புத்திரன் காணும்பொருட்டு (கைம்மாறு கருதாது ஆன்மாக்களுக்குப்) பேருபகாரஞ்செய்யும் ஞானசொருபராகிய சிவபெருமான் அவ்விடத்தணிந்த ஆபரணங்கள் முழுதும் விளங்கும்படி தேவர்கள் அன்றலர்ந்த மலர்களைப் பொழியச் சிவகணங்கள் நெருங்க விரும்பி எதிரேவந்து பொருந்தினர்.

(வி - ம்.) வாளாங்கு - வறிதே; பட்டாங் கென்புழிப்போல ஒருசொல் விழுக்காடு. தாளாண்மை-முயற்சி. தலை-முதன்மை. நாளார்ந்த மலர் - அன்றலர்ந்த மலர். (௩௯)

மறுவலும்வீழ்ந் தெழுந்துநின்ற திருமகனை
முகநோக்கி வரமே தென்றூர்
முறுவனில வெழுக்கனிவாய் முகிழ்விரித்து
முடித்தலைவின் ணவர்மே லென்றும்
கொறுகொறுக்கு மவுணருயிர் குடித்திடுநுஞ்
ஞானசத்தி கொடுப்ப தென்றுன்
அறுகுமலி சடைமுடியா ரதனெடுபல்
வரமளித்தவ் விலிங்கத் தானர்.

(இ - ள்.) மறுபடியும் கீழேவிழுந்து வணங்கியெழுந்து நின்ற திருக்குமாரரது முகத்தைப் பார்த்து நீ விரும்பிய வரம் யாதென்றார். பற்களினின்றும் நிலவு வீச கொவ்வைக் கனிபோன்ற வாயாகிய அரும்பை விரியச்செய்து முடியினையணிந்த தேவர்கள்மேல் எப்பொழுதும் கோபிக்கும் அவுணர்களுடைய உயிரையுண்ணுந் தேவரீர் ஞானசத்தியினைக் கொடுத்தலாகு மென்றான். அறுகம்புல் னிறைந்த சடைமுடியையுடைய சிவபெருமான் அச்சத்தியை யளித்ததோடு பல வரங்களையுங் கொடுத்து அவ்வருட்குறியின் கண்ணுயினர்.

(வி - ம்.) திருமகனை - வேற்றுமை மயக்கம். சொறுகொறுக்கும் - கோபிக்கும். இதனை "இனிச்சிறி தொழிந்து நீங்கி யிட்டிடைதோறு நாங்கள், எனக்கொறு கொறுப்ப போலு மிளமுலைப் பரவை பல்குல், கனிப்பொறை மலிந்த காமர் கற்பக மணிக்கொம் பொப்பாள், பனிப் பிறைப் பூணி னன்றன் பாண்வலைச் சென்று பட்டாள்" சிந்தாமணி (சுரமஞ். 46) செய்யுளானு முரையானு முணர்க. (௫௦)

இருளனுக்கி யொளிபெருக்கு மவ்விலிங்கம்
குமாரலிங்க மெனும்பேர் பூணும்
மருளிரிக்கு ஞானசத்தி தரித்தலினாற்
கணிகவரை வாழ்க்கை பூண்ட
தருநிகர்த்த குரிசிலுக்கு ஞானசத்தி
தரனென்னச் சாற்று நாமம்
பொருண்மிகுத்த பலபெயரின் மிக்கபெய
ராயங்குப் பொலிந்த தன்றே.

(இ - ள்.) ஆணவமாகிய இருளினைக் கெடுத்து ஞானமாகிய வொளியினை மிகச்செய்யு மவ்விலிங்கமானது குமாரலிங்க மென்னும் பெயரைப் பொருந்தும். அஞ்ஞான காரியமாகிய மயக்கத்தைக் கெடுக்கும் ஞானசத்தியாகிய வேலினைத் தரித்திருத்தலான் தணிகைவரையின்கண் வாழ்தலை மேற்கொண்ட (தன்னடியார்க்கு வேண்டுவனவற்றைக் கைம்மாறு கருதா தளித்தலினால்) கற்பகதருவினை யொத்த தலைவனாகிய முருகப்பெருமானுக்கு ஞானசத்தியைத் தரித்திருப்பவன் என்று சொல்லப்பெற்ற திருப்பெயர் புகழ்மிகுந்த அப்பெருமானுடைய பல திருப்பெயர்களுள் மேலான திருப்பெயராகி ஆண்டு விளங்கியது.

(வி - ம்.) அனுக்கி - கெடுத்து. பொருள் - புகழ். (௫௧)

வெள்ளிவரை யிருந்தலினாற் கயிலாய கங்கையென விளங்குந் தீர்த்தம்
தெள்ளுபுகழ்க் கணிகவரைக் குமரனழைத் தாடிமகிழ் திளைத்து முக்கண்
வள்ளலுக்கு மாட்டுதலாற் குமாரதீர்த் தப்பெயரின் வயங்கு மப்பேர்
உள்ளினவ ரெழுபவந்திற் காதரமு மெழுந்திரிய வுருக்கு மாலோ.

(இ - ள்.) வெள்ளிமலையின்கட் டங்குதலினாற் கயிலாய கங்கை யென்னுந் திருப்பெயருடன் விளங்குகின்ற தீர்த்தமானது தெளிந்தபுகழோடுகூடிய தணிகைமலையின்க ணெழுந்தருளியிருக்கிற முருகப்பெருமான் அழைத்து மூழ்கி மகிழ்ச்சியுற்று மூன்று திருக்கண்களையுடைய வரையாது கொடுக்குந்தலைவனாகிய சிவபெருமானுக்கும் அபிடேகஞ் செய்தலான் குமார தீர்த்தமென்னுந் திருப்பெயருடன் விளங்கும். அத் திருப்பெயரை நினைத்தவர்களுடைய எழுவகைப் பிறப்பின்கண்ணு முளவாகிய துன்பங்களு மெழுந்தோடும் வண்ணம் வருத்தும். (௫௨)

கும்பமதி வருமகத்திற் குமரவே ளினிதாடிக் குழகக் காட்டும்
வம்பவிழ்பூங் கயிலாய கங்கையிடை யம்மதியின் மகத்திற் சென்று

கம்பமறப் படிந்தாடிக் குமாரலிங்கந் தொழுவோர்கள் கரிசி னீங்கி
உம்பருக்கு மறிவரிய சிவலோகத் தென்ஞான்று முறுவர் மாதோ.

(இ - ள்.) மாசிமதியின்கண்ணே வருகின்ற மகநாளில் குமாரக் கடவுள் இனிதாக மூழ்கிச் சிவபெருமானுக் கபிடேகஞ் செய்கின்ற வாசனையை, வெளியிடுகின்ற பூக்கணிறைந்த கயிலாய கங்கையி லடைந்து அம்மாசிமதியின்கண் வருகின்ற மகநாளிற் சென்று நடுக்க மறப் படிந்து மூழ்கிக் குமாரலிங்கத்தினை வணங்குவோர்கள் மலக்குற் றங்களினின்று நீங்கித்தேவர்கட்கும் அறிதற்கருமையாகிய சிவலோகத் தில் எக்காலத்தும் பொருந்துவோராவர்.

(வி - ம்.) கும்பமதி - மாசிமாதம். மகநாள்-மகநட்சத்திரம். கம் பம் - நடுக்கம். கரிசு - குற்றம். (௪௩)

எத்தினத்தா யினுமொருகான் முழுகினரெப் பிணியுமெழு காத மோப்பிப்
புத்தியறி வாயுள்சுசி புகழ்சூழ்ச்சி வீரம்வலி பொருண்மேம் பாடு
மித்திரர்புத் திரர்மனைவி முதலான வெறுக்கையெலா மேவி யீற்றில்
கோத்திறெடுங் கந்தலோ கத்தையவ னுருக்கொண்டு குறுகி வாழ்வார்.

(இ - ள்.) எந்நாளிலாயினு மொருதரம் (அத்தீர்த்தத்தில்) முழு கினவர்கள் எவ்வகை நோய்களையும் ஏழுகாத தூரமோட்டிப் போக மும், அறிவும், ஆயுளும், சுத்தமும், புகழும், விசாரமும், வீரமும், வலி யும், பொருளான் மேம்பாடுறுதலும், சிநேகரும், மகாரும், மனைவியு முதலாகிய செல்வங்களையெல்லா மிம்பரிலெய்தி முடிவிற் றம் சுற்றத்தா ரொடுங் கந்தலோகத்தினை யவன் சாருபம் பெற்று அடைவார்கள்.

(வி - ம்.) புத்தி - போகம். சூழ்ச்சி - ஆராய்ச்சி சுசி - சுத்தம். மித்திரர் - சிநேகர். வெறுக்கை - செல்வம். (௪௪)

செங்கமல மலரேய்க்கு மொருதிருக்கை
குறங்கமைத்துச் செம்பொன் மேருத்
துங்கவரிச் சிலைக்கடவு ளருண்ஞான
சத்தியொரு கைத்தொடிக்கை யேந்திப்
பொங்குமருட் கருணைவிழிக் கடையொழுக
மலர்ந்தமுகப் பொலிவி னோடும்
அங்கணமர் ஞானசத்தி தரனையகத்
துறநினைப்போ ரவனே யாவர்.

(இ - ள்.) செந்தாமரைமலரை நிகர்க்கும் ஒரு திருக்கையைத் துடையின்மேற் றங்கச்செய்து செம்பொன் வடிவமாகிய மேருமலை யாகிய உயர்ந்த வில்லையுடைய சிவபெருமானருளிய ஞானசத்தியாகிய வேற்படையினை ஒரு வீரவளையினை யணிந்த திருக்கையிலேந்தி மிகுந்த அருளாலுளதாகுங் கருணை திருக்கடைக்கண் வழி யொழுகாநிற்க விரிந்த திருமுக மண்டலப் பொலிவினோடும் அவ்விடத்தே யெழுந் தருளியிருக்கின்ற வேற்படையைத் தரித்த முருகக்கடவுளை உள்ளத்தின்

கண்ணே பொருந்தத் தியானஞ் செய்தோர் அக் கந்தப் பெருமானை யரவர்.

(வி - ம்.) ஏய்க்கும் - உவமவுருபு. குறங்கு - துடை. துங்கம் - உயர்வு. தொடி - வீரவளை. (௪௩)

ஐம்பொறியின் வழிபோகா தவற்றைவியங்
 கொண்டறிவின் மயமே யாக்கிக்
கொம்பனையா ளிடத்தரனை வழிபாட்டி
 னினிதேத்துங் கொள்கை மிக்கீர்
பம்புகதிர் மதிமோலிப் பரமர்மகிழ்
 குமாரலிங்கப் பரிசு சொற்றும்
வம்பவிழ்பூ வணைக்கிழவன் மாதவஞ்செய்
 தருள்பெற்ற மரபுஞ் சொல்வாம்.

(இ - ள்:) மெய், வாய், கண், மூக்கு, செவியென்னு மைம்பொறிகளின் வழியே செல்லாது அவ்வைம்பொறிகளை ஏவல்கொண்டு அறிவு வடிவமே யாகச்செய்து பூங்கொம்பினையொத்த விடையினையுடைய உமையம்மையா ரிடப்பக்கத்தே யெழுந்தருளியுள்ள சிவபெருமானை வழிபடுதலோடு இனிதாகத் துதிக்குங் குணத்தான் மேம்பட்ட முனிவர்களே! நிறைந்த கிரணங்களோடு கூடிய சந்திரனையுடைய முடியையுடைய மேலாகிய சிவபெருமான் குமாரலிங்கத்தின் றன்மையைச் சொன்னும். இனி, வாசனை விரியப்பெற்ற தாமரை யாசனத்தையுடைய பிரமன் பெரிய தவத்தினைச்செய்து அருளினைப் பெற்ற தன்மையுஞ் சொல்வாம்.

(வி - ம்.) வியங்கொளல் - ஏவல்கொளல். அறிவுமயமே யாக்கி - அறிவு வடிவமாகச் செய்து. பம்பு - நிறைந்த. (௪௪)

குமாரேசப்படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் ௬௪௫.

---

# பிரமன் சிருட்டிபெறு படலம்

ஒன்றாகிப் பலவாகி யுருவாகி யருவாகி
அன்றாகி யாருயிர்கட் காருயிராய் நிறைந்தானும்
பின்றாழுஞ் சடையானும் பிறங்குநுதல் விழியானும்
வென்றாலும் விடையானும் விருத்தபுரி வித்தகனே.

(இ - ள்.) ஒரு பொருளாகியும், பல பொருளாகியும், உருவப் பொருளாகியும், அருவப்பொருளாகியும் (மேற்கூறிய) இவைகளல்லவாகியும் (வியாபகமாக) நிறைந்த உயிர்களுக்கு (வியாபகமாக) அரிய உயிராய் வியாபித்தவனும், பின்னர்த் தொங்குகின்ற சடையையுடையவனும், நெற்றியில் விளங்குகின்ற விழியையுடையவனும், மேம்பட்டு முழங்கும் ஆனேற்றினையுடையானுமாகிய இவனே விருத்தபுரியென்னும் திருப்பெயரினையுடைய தணிகையின்கண்ணெழுந்தருளி யுள்ள ஞானவடிவினையுடையவன்.

(வி - ம்.) அன்றாகி - (மேற்கூறிய விவைகள்) அல்லவாகி. நிறைந்தான் - வியாபகமாகவுள்ளான். நுதல்பிறங்கு விழியானென மாற்றுக. ஆலும் - முழங்கும். விருத்தகிரி - மூலாத்திரி. பொருளோக்கி விரித்தகிரி யென்றார். (௧)

வேறு

முரலுஞ் சிறைவண் டினமொய்த் துளரும்
அரவிந் தமமர்ந் தவனா றுமுகன்
விரவுஞ் சிறைவிட் டபின்விண் ணுயர்தன்
பரவும் பதிசென் றுபதிந் தனனால்.

(இ - ள்) சிறையினையுடைய வண்டின் கூட்டங்கள் மொய்த்து மூக்காற் கிண்டுதல் செய்து பாட்டினைப் பாடுகின்ற தாமரைமலரின் கண்ணெழுந்தருளிய பிரமன், அறுமுகப்பெருமானாற் பொருந்து சிறையின்கணின்று நீங்கிய பின்னர் விண்ணுலகங்களுள் வைத்துயர்ந்த யாவரும் வணங்கத்தக்க தனது சத்தியலோகத்தின்கட் சென்று தங்கினான்.

(வி - ம்.) முரலும் - பாடும். அரவிந்த மமர்ந்தவன் - எழுவாய். ஆறுமுகன் - மூன்றாவது. பதிந்தனன் - தங்கினன். (௨)

காரா கிருகங் கழிவுற் றபினும்
ஆரா வமுதா யவருட் பரமன்
சீரா ரருளாற் செய்சிருட் டிசெய
வாரா மையினோ கைமனத் திலனே.

(இ - ள்.) சிறைச்சாலையினின்று நீங்கிய 'பின்னரும் உண்ணவமையாத தேவாமிர்தம் போன்ற அருளையுடைய சிவபெருமானது

சிறப்புப்பொருந்திய அருளினைச் செய்கின்ற படைத்தற் றொழிலைச் செய்யவாராமையினாலே மனத்தின்கண் உவகையிலனாயினன்.

(வி - ம்.) காராக்கிரகம் - சிறைச்சாலை. உம்மை - இறந்தது தழீஇயது. ஓகை - களிப்பு. (௫)

அந்தோ விதுநாஞ் செயலாம் வழிமற்
றெந்தோ வெனவெண் ணியசூழ்ச் சியினன்
முந்தா ரணமுந் தெரியா முதல்வன்
தந்தா னவனே தரவல் லவனே.

(இ - ள்.) ஐயோ இப்படைப்புத் தொழிலை (இனி) யாஞ் சுதந்தரமாகச் செய்யும் மார்க்கம் என்னையென்று பலகாலுமெண்ணிய சூழ்ச்சியையுடையவன், வேதங்களுங் கண்டறியாத முதல்வனாகிய சிவபெருமானே இப்படைப்புத் தொழிலை முன்னர்த் தந்தனர். அவனே இனியுந் தரவல்லவனாவான்.

(வி - ம்.) அந்தோ - ஐயோ, இரக்கக்குறிப்பு. வழி - மார்க்கம். எந்தோ வென்பது தெலுங்கச்சொல்; அது என்னையென்னும் பொருடந்து நின்றது. ''அதெந்துவே யென்றருளாயே'' எனத் திருவாசகத்தின் வருதலுங் காண்க. முந்துதந்தானெனக் கூட்டுக. இன்னுமவன் றருவானென்பது குறிப்பெச்சம். (௬)

தலைவன் சரணஞ் சரணம் புகினம்
உலமந் தபவத் துயரோ டுமிவண்
அலமந் தவருந் துயருந் தவிர
நிலவுந் தொழிலென் றுநினைந் தனனே.

(இ - ள்.) (செத்துப் பிறக்கின்ற வென்போன்ற தேவர்கட்கெல்லாந்) தலைவனாகிய சிவபெருமான் றிருவடிகளைப் பற்றுக்கோடாகப் புகின் நமது வருத்துகின்ற பிறவித்துன்பத்தோடும் இப்படைப்புத் தொழிலின்கட் சுழலுகின்ற அரியதுன்பமும் நீங்க இப்படைப்புத் தொழிலும் நிலைபெறுமென்று நினைந்தனன்.

(வி - ம்.) சரண் - பாதம், பற்றுக்கோடு. உலமந்த - வருந்துகின்ற. அலமந்த - சுழல்கின்ற. நிலவும் - நிலைபெறும். (௭)

உத்தா லகவா ரணியப் பெயருற்
றித்தா ரணிபோற் றவிருந் தபதி
வித்தா ணவமாய்க் கும்விழுத் தவரோ
டத்தா னமகன் றடைவுற் றனனே.

(இ - ள்.) உத்தாலக வனமென்னும் பெயரினைப்பெற்று, இவ்வுலகின்கணுள்ளவர்களெல்லாந் துதிக்கவிருந்த திருக்குற்றாலமென்னுந் திருப்பதியை ஆணவமாகிய விதையைக் கெடுக்குஞ் சிறந்த தவத்தையுடைய முனிவர்களுடன் அச் சத்தியலோகத்தைவிட்டு நீங்கி அடைந்தனன்.

(வி - ம்.) உத்தாலகவாரணியம்-குற்றாலம். பதியிரண்டாவதன் றொகை ஆனைவரித்தென மாற்றுக. அத்தானம் - ஈண்டுச் சத்திய வுலகம். (சு)

வேறு

காந்து வைகினுங் கற்றவர் தம்புகழ்
நிரந்து தோற்றப் படுவது நேர்மனுள்
பரந்த வேர்ப்பல வின்பழம் யாவர்க்கும்
சுரந்த வாசத்திற் றோற்றுமோர் பாலெல்லாம்.

(இ - ள்.) ஒருபாலெல்லாம் மண்ணுட்பரவிய வேர்ப்பலாவின் பழம் யாவர்க்கும் நிறைந்த வாசத்தினுற் றோன்றுநிற்கும். (அங்ஙனந் தோன்றுகின்ற லென்போலவெனின்) எல்லா நூல்களையுங் கற்றவர் மறைந்து தங்கினுலும் அவர் புகழ் யாண்டும் வியாபித்துத் தோற்றப் படுவதற்கு ஒப்பாகும்.

(வி - ம்.) நிரந்து - கலந்து; வியாபித்து. நேராகும் - விகாரம். பரந்த - பரவிய. சுரந்த - நிறைந்த. "நிரைத்த தீவினை" யென்னும் செய்யுளின் "தரைத்த லத்தக மார்ந்ததொர் பாலெலாம்" (சிந்தாமணி) என்றாற் போலக் கொள்க. (எ)

உறும்ப லாயிர வண்டமு டம்பெலாம்
பெறும்ப ராபரன் பெற்றிநி கர்ப்புற
நறும்ப லாயிர நன்கனி தூங்கிய
குறும்ப லாவின் குழாமொரு பாலெலாம்.

(இ - ள்.) மிக்க பல்லாயிரவண்டங்கள் தனது திருமேனி யெங்கணுந் தங்கப்பெறுகின்ற மேலாகிய இறைவன்றன்மையை யொப்ப நல்ல பல வாயிரக்கணக்கான முதிர்ந்த கனிகள் தூங்குகின்ற குறும்ப லாவின் கூட்டங்கள் ஒருபாலெல்லாம் உள்ளன.

(வி - ம்.) இஃது உவமையணி. உறும்-மிக்க. பெற்றி-தன்மை. (அ)

ஆண வப்பிணி நீங்கவ ரும்பயன்
மாண நல்கரன் மானமந் திக்குலம்
காணு மென்கறி யைக்கறித் தாழ்பறழ்க்
கூணி ருங்கனி யூட்டுமோர் பாலெலாம்.

(இ - ள்.) ஆணவமாகிய நோய் நீங்கலால் பெறுதற்கரிய வீட்டின்பமாகிய பயனை மிகவுண்பிக்கின்ற இறைவனை யொப்பக் குரங்கின் கூட்டங்கள் எதிரே காணப்பெறுகின்ற மிளகைக் கடித்துறைத்தலால் துன்பத்திலாழ்கின்ற குட்டிகளுக்கு (அவ்வுறைப்பு நீங்க) உண்ணத் தக்க சுவையின் மிகுந்த பழங்களை யொருபகுதியி னிடங்களிலெல்லாம் உண்பிக்கும்.

(வி - ம்.) நீங்க - செயவெனெச்சங் காரணப்பொருட்டு. நல்கு - ஊட்டுகின்ற. கறி - மிளகு. ஆழ்-(உறைப்பால்) துன்பத்திலாழ்கின்ற

பறழ் - குட்டி, பார்ப்பும். இறும் - சுமையின் மிகுந்த. இந்து உவமை யணி. (௯)

அருவி தொட்டவ றைக்குழி மாத்தன
கருவி முந்திரி கைப்பழ மீந்தன
வருவ லின்மது வோடுகக் கேடின்றிப்
பருவ மன்றிப்ப யப்பவோர் பாலெலாம்.

(இ - ள்.) அருவியாற் றோண்டப்பட்ட பாறையின்கண்ணுள்ள குழிகளில் மாமரங்களி னுள்ளனவாகிய பழங்களும், தொகுதியாகிய முந்திரிகைப் பழங்களும், ஈச்சமரங்களின்கண் ணுள்ளனவாகிய பழங்களும் நிறத்தோடுகூடிய இனிய தேனோடு வீழ்தலால் (அக்குழிகள் அழுகல் முதலிய) கேடின்றி (அவைகள் பலன் கொடுக்கவேண்டும்) காலங்களினல்லாமல் எக்காலத்தும் பழங்களைத் தரும் ஒருபகுதியிடங் களினெல்லாம்.

(வி - ம்.) அறை - பாறை. தொட்ட - தோண்டின. மாத்தன - மாவின்கண் ணுள்ளனவாகிய பழங்கள். "கழனிமாத்து விளைந்துகு தீம் பழம்—பழனவாளை கதூஉமூரன்" என்னும் குறுந்தொகைச் (௮) செய்யுளா னறிக. கருவி - தொகுதி, இதனைக் "கருவிதொகுதி" யென் னுந் தொல்காப்பியச் சூத்திரத்தா னறிக. அறைக்குழிகள் பயப்பன வென வினைமுடிவு செய்க. முப்பழங்களுந் தேனோடு அக்குழியில் வீழ்ந்து கெடுதலின்றிக் கிடத்தலால் "பருவமன்றிப் பயப்பவோர்பா லெலாம்" என்றார். (௧௦)

கால மன்றியுங் குற்றுக் கடவுளர்
பால ளிப்பப் படர்தவத் தாலளி
மேல டாதன போல்விரைச் சண்பகச்
சோலை விண்ணந்து மூரவுமோர் பாலெலாம்.

(இ - ள்.) காலமல்லாத காலத்திலும் பறித்துக் கடவுளர்மாட் டுய்ப்பச் செய்கின்ற தவத்தினாலே வண்டுகள் மேலே பொருந்தாதன போல வாசனையுடைய சண்பகச் சோலைகள் ஒருபாலெல்லாம் ஆகா யத்தை யளாவும்.

(வி - ம்.) காலையரும்பிப் பகலிற்போதாகி மாலையின் மலர்தலால் இரவின் வண்டுகள் மொய்க்கா. வைகறையின் அதனைக் குற்றுக் கடவுளர்பாற் சேர்த்தல் வழக்காகும். சண்பகமலர்களின் வண்டு மொய்க்காததாதலின் எக்காலத்தும் பரிசுத்தமாக இருக்குமென்பது தோன்ற "கால மன்றியுங் குற்றுக் கடவுளர்—பால ளிப்பப் படர்தவத் தாலளி—மேல டாதன போல்" என்றார். குற்று - பறித்து. இதனை "பற்றின் மிக்கதோர் பாவை யிவ்வரை, சுற்றி வந்துநீ சூடுங் கோடல் கள், குற்று வந்துநின் குழற்குநல்குவன், நிற்றி யீண்டென நிறுவிப் போயினான்" என்னுங் கந்தபுராணம் (வள்ளி. ௧௩௩) செய்யுளா லறிக. குற்றாலத்திற் செண்பகாடவி யென்னுமோ ரிடமுள்ளது; இதனை "செண்பகாடவியின் பண்பு சொல்லக்கேளாய்" என்னுங் குறவஞ்சி யடிகளா னுணர்க. இது தற்குறிப்பேற்றம். (௧௧)

சுனைம லர்க்கணந் துற்றுவ வென்றுதேன்
இனைய வாளையி டித்திறை கொள்வபோற்
றுனைய வும்பர்த்தொ டுத்தவி றால்கிழீஇ
நனையு குக்குந லத்ததொர் பாலெலாம்.

(இ - ள்.) வாளைமீன்கள், தாங்கள் வாழும் சுனையின்கண் (சோலையின்கண்ணுள்ள) வண்டுகள் மலர்க்கூட்டங்களை நிறைப்பனவென்று (அவ்வண்டுகள்) வருந்தும்படி வருத்தி (எளியவர் பொருளை வலியவன் வௌவித் துன்பஞ்செய்யின்) அரையன் (தண்டித்துக்) கொள்ளுமாறு போல ஆகாயத்தில் விரைவாகத் தாவி (அச்சோலைகளின்) கிளைகளிற் றொடுத்துள்ள தேன்கூட்டைக் கிழித்துத் தேனைச் சிந்தும்படியான நன்மையை யுடையது ஒருபகுதியினிடமெங்கணும்.

(வி - ம்.) கணம் - கூட்டம். தேன் - வண்டு. இனைய - வருந்த. இறை - அரையன். துனைய - விரைய. கிழீஇ - கிழித்து. நனை - தேன். (௧௨)

வண்டு போய்மலர்க் காந்தளின் மூசுதல்
கண்ட ழுற்குட்க விழ்ந்தன வென்றுநீர்
நொண்டு நுண்டுளி தூஉய்ப்பெயர்த் தோகையுட்
கொண்டு மந்திகு னிக்குமோர் பாலெலாம்.

(இ - ள்.) ஒருபாலெல்லாங் குரங்கினங்கள், வண்டுகளானவை காந்தண் மலர்களில் மொய்த்தலைப் பார்த்து இவ்வண்டுகள் தீயின்கண் மூழ்கினவென்று நினைத்துக் கையால் நீரை முகந்துகொண்டு நுண்ணிய துளிகளைத் தூவி அவைகளை நீக்குதலான் (அவைகள் பிழைத்தன வென்று கருதி) மகிழ்ச்சியை யகத்திற்கொண்டு குதிக்கும்.

(வி - ம்.) "குழலிசைய வண்டினங்கள் கோளிலைய செங்காந்தட் குலைமேற்பாய, அழலெரியின் மூழ்கினவா லந்தோ வளியவென் றயல் வாழ்மந்தி, கலுழ்வன போனெஞ்சயர்ந்து கல்லருவி தூஉம் நிழல் வரை நன்னாட னிப்பனோ வல்லன்" என்னும் செய்யுளின் கருத்தமைந் திருத்தல் காண்க. மூசுதல் - மொய்த்தல். "மூசன் மொய்த் திடல்சா வென்ப" என்னும் நிகண்டானறிக. நீர் நொண்டு - நீர் முகந்து. இதனை "நோக்கினு ணெடுங்க ணென்னுங் குடங்கையா னொண்டு கொண்டு, வாக்கமை யுருவின் மிக்கான் வனப்பினைப் பருக" என்னும் சிந்தாமணி (பதுமை ௬௩) செய்யுளானு முரையானு முணர்க. குனிக்கும் - குதிக்கும். இது மயக்கவணி. (௧௩)

இனிய செய்கையர் யாங்குள ரோவெனத்
துனியில் கேள்வியர் சூழ்ந்தவர் நேடல்போற்
புனித மென்கிழங் காதி புரைகிளைஇத்
தனிவில் வேடர்ச ரிப்பதொர் பாலெல்லாம்.

(இ - ள்.) இனிமையைத் தருகின்ற செய்கையையுடைய பெரியோர் எவ்விடத்துளரோ வென்று துன்பமற்ற செய்கையை யுடையார்

ஆராய்ந்து (அருமையாகத்) தேடல்போலப் பரிசுத்தம் பொருந்திய மென்மையான கிழங்கு பழ முதலிய பொருள்களை அருமையாகத் தேடி ஒப்பற்ற வில்லையுடைய வேடர்கள் திரியப்பெறுவது ஒருபகுதியினிடங்களிலெல்லாம்.

(வி - ம்.) துனி - துன்பம். சூழ்ந்தனர் - முற்றெச்சம். நேடல் - தேடல். புரைகிளைஇ - அருமையாகத் தேடி; இதனை "எழில்கெழு நம்முடை யுறுப்புநே றுறுப்புடை யேழையர் தமைக்காண, விழைபுங் காதலிற் புரைகிளைத் தாலென வியன்மலைத் தலைதோறும், வழியு மும் மதக் களிற்றொடு பிடிகளும் வயந்திக ழரிமாவு, முழையும் வைகலு நுழைவன பயில்வன வுழிதரு வனமன்றே" எனுங் காஞ்சிப்புராணம் (நகரேற்றுப் படலம் அ௩) செய்யுளா னறிக. (௧௭)

தூசு மின்கல னும்விரை யுந்நுதை
வேசி மாதரின் வேழக்க தலியில்
பூசல் வேழம் புணர்ந்துவி டுந்திறம்
ஆசு மில்பயம் பார்ந்ததோர் பாலெலாம்.

(இ - ள்,) நல்லுடையும், கண்டார்க் கினிமையைத் தருகின்ற ஆபரணங்களும், வாசனைப் பொருள்களும் பொருந்தப்பெற்று (தம்மை யடைந்த ஆடவரைக் கூடிவிடுந் தன்மை சிறிதுமில்லாத) பரத்தையரைப் போலக் கரும்பினாலும் வாழைகளினாலும் முழக்கத்தையுடைய யானைகளைக் கூடி மேலேற விடுந்தன்மை சிறிதுமில்லாத கொப்பங்கள் நிறைந்தன ஒருபகுதியினிடங்க ளெல்லாம்.

(வி - ம்.) கரும்பானும் வாழையானும் யானையைப் புணர்ந்துவிடுந் திறஞ் சிறிதுமில்லாத பயம்பென்க. "புணர்ந்துவிடுந்திற மாசுமில்" என்னும் பொருளடை உவமையினுஞ் சென்றியைந்தது. வேழக்கதலி - யானைக்கொம்பன் வாழையென்பாரு முளர். பயம்பு - யானைபிடிக்கும் பள்ளம்; இதனை "மாப்பயம் பின்பொறை போற்றுது" என்னும் புறப் பாட்டி னடியா னுணர்க. யானை வேட்டஞ் செய்வோர் பெரிய பள்ளந் தோண்டி நொய்தான மூங்கில் கொறுக்கச்சி முதலிய புறக்காழையுடையவைகளைப் பரப்பித் தரை போலச்செய்து அதன்மேற் கரும்பு வாழை முதலியவைகளை நாட்டிச் சோலைபோல வலங்கரித்து வைத்தல் முறை. அதனைச் சோலையென மயங்கி யானை பயம்பில் விழும். அதனைக் கைப்பற்றிக் கொள்வ ரென்க. இஃது உவமையணி. (௧௮)

வீங்கு தோட்குடை வேய்வியங் கோளுறீஇ
ஆங்க ணிற்ப தமரவ ணங்கனுர்
தாங்கு தீம்புனஞ் சார்புட்கு லந்நப
ஒங்கு முந்நெழ ஆழ்க்குமோர் பாலெலாம்.

(இ - ள்.) தெய்வப் பெண்களை யொத்த கொடிச்சியருடைய பருத்த தோள்களுக்குத் தோற்ற மூங்கில் அவர்கள் ஏவலைப் பெற்று ஆங்கணிற்பதை யொப்ப, அவர்களாற் காக்கும் இனிய தினைப்புனத் தின்கட் பொருந்தும் பறவையினங்கள் நீங்க உயரும். அவை, முத்தங்கள் புறத்தே தெறிக்கச் சிந்துமொரு பகுதியினிடமெல்லாம்.

(வி - ம்.) வீங்கு - பருத்த. ''நாகுவேயொடு நக்குவீங்குதோள்'' என்பதனுமறிக. வியங்கோளுற்றி - ஏவலைப்பெற்று. அமர - ஒப்ப. தாங்கும் - காக்கும். அமரவோங்கு மெனவும் முத்தெழூஉழக்கு மெனவும் முடிவுசெய்க. வேய் - எழுவாய். (கசு)

மென்மை யாரிடம் வாய்த்துமி குத்துறின்
வன்மை யார்வலி மாய்ப்பது காட்டுமென்
றன்மை யாரரு வித்திரள் சான்றுகல்
புன்மை யாகப்பொ லிந்தொரு பாலெலாம்.

(இ - ள்.) மெல்லிய தன்மைவாய்ந்த அருவியின் கூட்டம் வலியா லுயர்ந்த கற்கள் நொய்மையாம்படி பொள்ளல் செய்து (தம்பகை வரைக் காட்டிலும் பொருள் கருவி முதலியவற்றான்) மெலியார் பொருள் கருவி காலமிட முதலியன வாய்க்கப்பெற்று வலிமிகுமாயின் தம்மினும் வல்லமை யுடையாருடைய வன்மையுங் கெடுத்தலைக் காட்டும்.

(வி - ம்.) பொலிந்து காட்டுமென வினைமுடிவு செய்க. சான்று - (வலியான்) உயர்ந்த. பொலிந்து-பொள்ளல் செய்து துளைத்து. (கஎ)

கெழுமு பாவங்கிட் டாதுபெ யர்ப்பபோல்
விழும வெள்ளரு வித்திரள் வீழ்வன
இழுமெ னேதையு மந்தரத் தின்னியம்
குழுமு மோதையுங் கூர்க்குமோர் பாலெலாம்.

(இ - ள்.) தன்னுள் மூழ்கிய வான்மாக்களி னிடத்தும் பொருந் திய பாவ மீண்டும் வந்தணுகாமல் நீக்குவன போலப் பெருமை பொருந்திய வெள்ளிய அருவியின் கூட்டங்கள் விழ்தலினு லுண்டாகிய இழுமென்னும் ஓசையும் தேவலோகத்தின்கட் குழுமிய ஓசையும் ஒரு பகுதியினிடங்களிலெல்லாம் மிகும்.

(வி - ம்.) விழுமம் - பெருமை. வீழ்வனவற்று லுண்டாகிய ஓசையென்க. கூர்க்கும் - மிகும். (கஅ)

அரம்பு செய்பிணி தீர்வெறி யாட்டயர்
வரம்பிற் றொண்டக வங்கிய வோதையும்
நரம்பி னேழிசை நாவியற் பாடலும்
சுரம்பொற் கென்னத்து தையுமோர் பாலெலாம்.

(இ - ள்.) குறும்பைச் செய்கின்ற காமநோயை நீக்குகின்ற வெறி யாட்டைச் செய்கின்ற விடத்திலுண்டாகிய அளவிட வியலாத குறிஞ் சிப் பறையி னோதையும், ஊதுகொம்பினோதையும், நரம்புக் கருவியின் கண் ணுண்டாகிய சரிகம பதநி யென்னு மேழிசையும், நாவினிடத்துப் பொருந்து மியல்பமைந்த பாடலும் பாலைநிலமுந் தழைத்துப் பொலிவு பெற நெருங்குமொரு பகுதியினிட மெல்லாம்.

(வி - ம்.) அரம்பு-குறும்பு இதனை ''மெலியவர் பெற்ற செல்வம் வேரோடும் கீழ்ந்து வெளவி, வலியவர் கொண்டு மேலை வரம்பிகர்

தரம்பு செய்யும், கலியது பிறலிகண்டாம்'' எனும் (சிந்தாமணி முத்தி. 119) செய்யுளடிகளானு மரையானும் முணர்க. தொண்டகம் – குறிஞ்சிநிலப்பறை. வங்கியம் - ஊதுகொம்பு. சுரம் - பாலைநிலம். பொற்கென்ன - தழைத்துப் பொலிவுபெற. உம்மை - விகாரத்தாற் றொக்கது. (கக)

அற்ப நந்திமை யாரணிமிச் சிந்திய
கற்ப கக்கடிப் போதுங் கலன்களும்
பொற்ப கப்பொழில் கைசெய்தெ னப்பொலி
வெற்ப கத்துவி ளங்குமோர் பாலெலாம்.

(இ - ள்.) பொலிவைத் தன்னகத்தேயுடைய சோலையானது அலங்கரித்தாற்போல விளங்குகின்ற திரிகூடமலையி னொருபகுதியி னிடங்களிலெல்லாம், அகத்தே யன்பினையுடைய தேவர்கள் பொருந்திச் சிந்தப்பெற்ற வாசனை பொருந்திய கற்பகமலர்களும் ஆபரணங்களும் விளங்கும்.

(வி - ம்.) போதுங் கலன்களும் ஓர்பால் விளங்குமென்க. சோலையான தலங்கரித்தாற்போலப் பொலியும் வெற்பெனக் கூட்டுக. கடி – வாசனை. அகத்தன்பென மாற்றுக. (உ௦)

தென்றல் சந்தனஞ் செந்தமி ழென்றிவை
நன்ற ளிப்பந றும்பொதி யந்தழீஇ
நின்ற தாங்கொரு பாலென நீண்டவக்
குன்றெ லாமவை கூர்ந்தன மிக்கரோ.

(இ - ள்.) தென்றற் காற்று, சந்தனம், செவ்விய தமிழ் என்று சொல்லப்பட்ட இவை மூன்றினையும், உலகத்தார்க்குப் பெரிதுங் கொடுக்க நல்ல பொதியின்மலையை யாங்கொரு பக்கத்துத் தழுவி நின்ற தென்று சொல்லும்வண்ணம் நீண்ட திரிகூடமலையின் ஒருபகுதியினிட மெங்கணும் தென்றலுஞ் சந்தனமுந் தமிழுமாகிய இவை மூன்றும் மிகவும் அதிகரித்தன.

(வி - ம்.) ஒருபாலளிப்பப் பொதியந் தழீஇ அங்கு நின்றதென்று சொல்ல நீண்ட அத்திரிகூடத்தில் அம்மூன்றும் மிக்கனவென வினை முடிவு செய்க. நன்று - பெரிது. குன்று - திரிகூடம். (உக)

இருபு டைக்க ணிருபெருந் தேவரும்
மருவ நாப்பண்ம தலையிற் றுங்கிய
ஒருபெ ரும்பெய ருந்தமன் போன்மெனப்
பொருவின் முந்தலை பூத்தநக் குன்றமே.

(இ - ள்.) திரிகூடமலையானது இரண்டு பக்கலிலும் இரண்டு பெரிய கடவுளராகிய விண்டு பிரமர்கள் பொருந்த நடுவே தான் போலத் தாங்கிய ஒப்பற்ற பஞ்சாக்கரப் பொருளாகிய சிவபெருமானை யொக்குமென்று சொல்லும்வண்ணம் ஒப்பில்லாத மூன்று சிகரங்களை யுடையதா யிருந்தது.

(வி - ம்.) இருபொருண்மைத்தவர் - விண்டுபிரமர்கள். மதலை - தூண். பெரும் மெய்ப்பொருட்குமரன் - பஞ்சாக்கரப் பொருளாயுள்ள சிவபெருமான்; முன்னர்க் கூறினும். பூத்தது - படைத்தது. போன்ம் - மகரம் குறுக்கம். (உஉ)

இச்சை ஞானந்தொ ழிலிவை மூன்றனே
டச்ச னின்றனைத் தும்விளைத் தாலென
முச்சி ரத்தொடு நின்றுமு றைமுறை
பொச்ச மில்வளம் பூப்பதக் குன்றமே.

(இ - ள்.) அத் திரிகூட மலையானது தந்தையாகிய சிவபெருமான் அறிவிச்சை தொழிலாகிய மூன்றினால் எல்லாவற்றையும் படைத்தாற் போல மூன்று குவடுகளோடு நிலைபெற்று முறைப்படி பொய்யில்லாத வளங்களை விளைப்பது.

(வி - ம்.) அச்சன் – தந்தை; இது குடநாட்டுச்சொல், பொச்சம்-பொய். (உ௩)

முத்தொ ழிற்குரி யாரொரு மூவரும்
எய்த்து ருமையி னிதுறத் தாங்கியோர்
கத்த னுண்டெனக் காட்டுமா தாரமாய்
அத்தி ரிக்குவ டேந்தும டுக்கலே.

(இ – ள்.) ஆதாரமாகி நின்று அம்மூன்று சிகரங்களைத் தாங்கிய மலையானது படைத்தல், காத்தல், அழித்தலாகிய மூவகைத் தொழிற்கு முரியராகிய ஒப்பற்ற பிரமன் விண்டு உருத்திரனாகிய மூவரும், அத் தொழிலை யியற்றித் துயக்கமுறும வினிதாகத் தாங்க ஒப்பற்ற கருத்த னொருவனுளனென்று காட்டாநிற்கும்.

(வி – ம்.) எய்த்தல் – இளைத்தல். திரிக்குவடு - மூன்றுசிகரம். தாங்கியெனும் செய்தெனெச்சம் தாங்கவெனச் செயவெனெச்சமாய்த் திரிந்து நின்றது. (உ௪)

மூன்று மெய்ப்பொருண் மூன்றுமொற் றித்தலில்
தோன்று மொன்றென வென்றுது ணிப்பபோன்
மூன்றெ னச்சிக ரம்முகிழ்த் தொன்றெனத்
தோன்ற நிற்குமூ லத்தினத் தொல்வரை.

(இ • ள்.) உண்மைப் பொருள்கள் மூன்றாகும் அம்மூன்றுண்மைப் பொருள்களும் ஒன்றினொன்று வியாப்பியமாயிருத்தலின் ஒரு பொருளாகக் காணப்படுமென்று வரையறுத்துக் காட்டுவனபோல அப்பழமையான மலையானது சிகரங்கள் மூன்றென்று சொல்லும்வண்ணந் தோன்றச்செய்து அடிப்பாகத்தானொரு பொருளெனத் தோன்றாநிற்கும்.

(வி - ம்.) உண்மைப்பொருள் மூன்றாகு மென்க. மூன்று என்னும் எண்ணுப்பெயர் சொல்வான் குறிப்பான் அவனென்னுஞ் சுட்டுப்பெயர் மாத்திரை யாயிற்று: "நாணிநின்றோள்" (அகநா. 19) என்றும் "அணங்கருங் கடவுளன்னோள்" (அகநா. 16) என்றும் அகத்திற்

கூறிளுற்போல. இது பொருளொடு புணராச் சுட்டுப்பெயராயினும் (தொல். சொல். கிள. 37) என்றுஞ் சூத்திரவிதி. மெய்ப்பொருள் மூன்றுரும் அம்மூன்று மொற்றித்தலினுல் ஒன்றெனத் தோற்றுமென வினைமுடிவு செய்க. மெய்ப்பொருள் மூன்று - (அக்கரங்களிலேந்தில் இறுதியிரண்டொழிந்த ஏனைய) மூன்றக்கரங்களின் பொருள்கள். அம் மூன்றக்கரமும் பொருளிறு லொன்றிலொன் றடங்கும். மறையாவன, பாசம் பசுவிலும், பசு பதியிலும் பொருந்துமென்க. அங்ஙனம் பொருந்திய வழி பதியொன்றுமே மதிக்கப்படும். (உ௫)

ஈண்டுப் போந்தவ ரிம்மைம றுமையும்
மீண்டு றுதமெய் வீடுமு றுபவென்
ருண்டுத் தானரு ளும்பயன் காட்டலும்
மாண்ட தான்முும்ம ணித்தலை யோங்கலே.

(இ - ள்.) மூன்று சிகரங்களையுடைய மலையானது இம்மலையின் கண் வந்தவர்கள் இம்மைப் பயனையும், மறுமைப் பயனையும், எக் காலத்து மீடலல்லாத உண்மையாகிய வீட்டின்பத்தினையும் அடைவார்க ளென்று ஆண்டுத்தானளிக்கும் பேற்றைக் காட்ட மாட்சிமைப்பட்டது.

(வி - ம்.) போந்தவர் - வந்தவர். இம்மை மறுமை : ஆகுபெயர். உறுப - அடைவார்கள். பயன் – பிரயோசனம். காட்டலும் - உம் மீற்று வினையெச்சம்; செயவெனெச்சப் பொருளுணர்த்தி நின்றது. (உ௬)

மூவர் மும்மறை மூவகை யாருயிர்
மூவ கைச்சுடர் மூவுல குந்தொழும்
மூவ ருந்தலை வன்னுரு மூவகைத்
தாவ துந்தெரிக் கும்மவ்வி லங்கலே.

(இ - ள்.) அம்மலையானது, அயனரியர னென்று மூவரையும், இருக்கு, யசுர், சாமமென்னும் மூன்று வேதங்களையும், சகலர், பிரளயா கலர், விஞ்ஞானகலரென்று மூவகை யரியவுயிரினையும், சோமசூரியாக் கினி யென்று மூன்று சுடரினையும், சுவர்க்க மத்திய பாதலமென்னும் மூன்றுலகங்களையும், யாவரும் வணங்கத்தக்க இறைவன் றிருவுருவம், அருவம் உருவம் அருவுருவம் என மூன்றுவகைத் தாதலையும் தெரி விக்கும்.

(வி - ம்.) மூவரும், மும்மறையும், மூவகையுயிரும், மூவகைச் சுடரும், மூவுலகும் அம்மலை தெரிவிக்குமெனவும், அரு உரு அருவுரு வென்று மிறைவன் மூன்று திருவுருவங்களையும் தெரிவிக்குமெனவும் வினைமுடிவு செய்க. மூவர் முதலியவற்றிற்கு ஐயுருபு விரிக்க. மூ - மூப்பு. அருமை இன்மைமேற்று. உம்மை யிறந்தது தழீஇயது. (உ௭)

இலைமு கப்பசும் பூண்களி டையிடைத்
தலைய மைத்தத னிவரை மார்பகம்
நிலையு மாரநி கர்த்திடும் பல்சுனை
உலைய வீழ்ந்திழிந் தூரும ருவியே.

(இ - ள்.) பல நீர்ச்சுனைகள் வருந்த வீழ்ந்திழிந்து செல்கின்ற அருவியானது அவ்வொப்பற்ற மலையினது மார்பினிடத்து இலைவடிவாகச் செய்யப்பெற்ற ஆபரணங்களி னிடையிடையே முதன்மை தங்கச்செய்த முத்தாரத்தினை யொக்கும்.

(வி - ர.) சுனையின்கண் வீழ மருவியானது இலைமுகப்பூண்களி னிடையிடையே நிலையு மாரத நிகர்த்திடுமெனக் கூட்டுக. தலையமைத்த-முதன்மையாகத் தங்கச்செய்த. உலைய - வருந்த. ஊரும் - செல்லும். (உஅ)

ஆங்கு நாத னருளொ டாடுதல்
ஓங்கு மப்பதி யொண்மைவ ளத்தினுக்
கியாங்கு மொப்பிலை யென்றும தித்துளந்
தாங்கு மின்பத்த ருக்கெனத் தக்கதே.

(இ - ள்.) அவ்விடத்தின்கண் இறைவன் அருளோடுகூடி நடஞ் செய்தல் (எல்லாப் பதிகளினும்) உயர்ந்த அப்பதியின்கண்ணுள்ள ஒள்ளிய வளப்பத்திற்குக்கு எவ்வுலகத்தினு மொப்பில்லை யென்று கருதி உளத்தினிடத்துத் தங்கும் இருக்கின்றதென்று சொல்லத் தக்கதாகும்.

(வி - ர.) ஆடுதலான கருத்து இன்பந்தருக்கெனத் தக்கதென முடிக்க. மதித்து - கருதி. இங்குப் பஞ்ச சபைகளிலொன்றாகிய சித்திரசபை யுள்ளதென்க. (உகூ)

அனாதி யாகிய வண்ணல மர்ந்தவத்
தெனாத்த தாலகந் தேத்தினை யண்மினன்
மனாதி மம்மர்த்த ளர்ந்தும கிழ்கொள
இனாத தீர்க்குமி ருந்தவ மாற்றினன்.

(இ - ள்) அநாதிமுத்த சித்துருவாய தலைவனாகிய சிவபெருமான் எழுந்தருளியிருக்கின்ற தெக்கணுள்ள உத்தாலகவன மென்னுமிடத் தைக் குறுகி மனத்தின்கண்ணுள்ள மயக்கம் நீங்கி மகிழ்ச்சியடையத் துன்பத்தினை நீக்கும் பெரிய தவத்தினைப் பிரமன் செய்தனன்.

(வி - ம்.) சுஆவது செய்யுளில் அடைவுற்றவ னென்னும் எழுவாய் அண்மி ஆற்றின னென்னும் பயனிலை கொண்டது. (௩0)

வேறு

வருவைகலின் வாராதெழு வாமான்மணி யிரதத்
தொருசெங்கதி ரமரன்றனை யுறினும்வர வொழியா
அருவிப்புனன் முக்காலமு மாடிப்பொடி பூசித்
திருமல்கிய வருள்கண்மணி சிரமாதியி னணியா.

(இ - ள்) தாவிச் செல்கின்ற குதிரைகள் பூட்டிய அழகிய தேரினை யுடைய ஒப்பற்ற சிவந்த கிரணங்களையுடைய சூரியதேவன் (வீணாள் படாது) வருகின்ற நாடோறும் வாராமனிங்கினும், வருதலொழியாத தேனருவியின்கண் மூன்று காலமும் மூழ்குதல்செய்து விபூதியை

யணிந்து (அணிந்தார்க்கு) செல்வம் மிகும்வண்ணம் அருளும்படியான உருத்திராக்கமணியினைத் தலை முதலிய உறுப்புக்களின் அணிந்து.

(வி - ம்,) வைகல் - நாள். வாவும்மான் : விகாரம். அமரன் - தேவன். தணவுறினும் - நீங்கினும். ஒழியாவென்னும் பெயரெச்சம் அருவியென்னும் பெயர்கொண்டு முடிந்தது. (௧௧)

குழகன்றிரு வுருவாங்குறும் பலவுங்குழ கன்மெய்
நிழல்செய்தமர் குற்றாலமு நிமலந்தரு மிறைவன்
அழகொன்றிய சபையுந்தொழு தன்பாலருச் சனையும்
தழையச்சிவ லிங்கத்தினி யற்றிந்தவ முறுநாள்.

(இ - ள்.) இறைவன் திருவுருவடிவமாகிய குறும்பலாவினையும், அவ்விறைவனது திருமேனிக்கு நிழலைச்செய்து தங்குகின்ற குறுகிய ஆலமரத்தினையும், (ஆன்மாக்களுக்கு) மலநீக்கத்தினைச் செய்கின்ற சிவபெருமானது அழகுபொருந்திய சித்திரசபையினையும் வணங்கி அன்பினாலே சிவலிங்கத்தினிடத்து உயிர்களெல்லாம் செழிப்புற அருச்சனையுஞ்செய்து தவத்தைச் செய்கின்ற காலத்து.

(வி - ம்.) குறும்பலா - குறுகிய பலாமரம். குற்றாலம் - குறுகிய ஆலமரம். சபை - சித்திரசபை. சிவலிங்கத்தினிடத்து அருச்சனையு மியற்றி யென்க. (௧௨)

வட்டச்சடை யத்தாணியின் மலர்மேல்லணை மேலாக்
அட்டுத்தழ லரவங்குடை யாகக்குளிர் மதியம்
விட்டுக்கதிர் விரியப்பயில் வீறுய்த்தருள் விமலன்
மொட்டுக்குவி முலைமாதுடன் முன்னேயெதிர் நின்றான்.

(இ - ள்.) வட்டவடிவமாகக் கூட்டிக் கட்டிய சடையாகிய அரசிருப்பு மண்டபத்தின்கண்ணுள்ள கொன்றைப் பூக்களாலாகிய பஞ்சணையின்மீது விடமாகிய அக்கினியைக் கக்குகின்ற பாம்பானது குடையாகக் குளிர்ந்த சந்திரன் ஒளியை வெளியிட்டு வீசும்வண்ணந் தங்கும்படி பெருமையைத் தந்த மலமற்றவனாகிய சிவபெருமான் பூவரும்பைப் போலக் குவிந்த தனங்களையுடைய உமாதேவியாருடன் முன்னர்த் தோன்றி நின்றனன்.

(வி - ம்.) உருவகவணி. தழல்அட்டு அரவம் எனக் கூட்டுக. அட்டல் - சொரிதல். அத்தாணி - அரசிருப்பு மண்டபம். கதிர்விட்டு விரிய வெனக் கூட்டுக. பயில் - தங்கிய. வீறு - பெருமை. மொட்டு - பூவரும்பு. (௧௩)

கண்டானுடல் கவலைக்கட லுழக்கடி தெழுந்தான்
தண்டாமரை யுண்டாதுத யங்குந்தட மார்பம்
மண்டான்படி யத்தண்டென மலர்மெல்லடி வீழ்ந்தான்
கொண்டான்வல மெதிர்நின்றுகை குவியாத்துதி புகல்வான்.

(இ - ள்.) [illegible] செய்கின்ற கவலையாகிய கடல் [illegible] கண்டனன். விரைவாக எழுந்தனன். குளிர்ச்சி [illegible] மலர்களுள்ளுள்ள நுண்ணிய பொடிகள் விளங்கு[illegible] மண்ணின்கட் படியத் தண்டத்தைப்போல [illegible] மெல்லிய திருவடிகளில் வீழ்ந்து வணங்கினன். வலமாகச் சுற்றினன். சந்நிதியினின்று கை தலையிற்குவியத் தோத்திரஞ் [illegible]லானான்.

(வி - ம்.) உடல் கவலைக்கடலுழக் கண்டானென முடிக்க. உடலு[illegible] கவலை யென்க. உடலல் - விரோதித்தல். தான் : அசை. என : [illegible]. (௩௪)

> எண்ணுதிகழ் தக்கன்மக மியற்றக்குழு முற்ற
> விண்ணோருடல் சிதறுந்தனி வீரன்றனை யிகலி
> மண்ணூழ்தர விழிகங்கைம டுத்துத்திறல் சிந்தும்
> தண்ணார்மதி மிலைசெஞ்சடைத் தந்தாயடி போற்றி.

(இ - ள்.) இறைவனை மதியாது இகழ்ந்த தக்கன் யாகத்தைச் செய்ய ஆங்குக் கூடிய விண்டு முதலிய தேவர்களுடல் கெடும்படி வீசிய வீரபத்திரக் கடவுளை, பூமியிடங் குழியும்வண்ணம் மாறுபட்டு இறங்குகின்ற கங்கையினை யுட்கொண்டு அக்கங்கையின் வலியினைக் கெடுக்கும் குளிர்ச்சி பொருந்திய சந்திரனை யணிந்த சடையினிடத்தினின்றும் உண்டாக்கியவரே! தேவரீர் திருவடி காப்பதாக.

(வி - ம்) இகலியிழி கங்கை யென்க. சிந்தும் என்னும் பெயரெச்சமும் மிலையென்ற வினைத்தொகையும் சடையென்னும் பெயருடன் றனித்தனி சென்றியைந்தது. வீரனைச் சடையிற் றந்தவனே யெனக் கூட்டுக. வீரனைச் சடையிற்றருதல் மாயூரப் புராணத்திற் காண்க. போற்றி - பாதுகாப்பதாக : வியங்கோள். இதனை,

> நோக்கவே தளிர்த்து நோக்கா திமைப்பினு நுணுகு நல்லார்
> பூக்கம ழமளிச் சேக்கும் புதுமண வாள னூர்தா
> நீப்பிலார் நெஞ்சி னுள்ளா ராதலா னினைத்தல் செய்யேன்
> போக்குவல் பொழுதுந் தாந்தம் பொன்னடி போற்றி யென்றாள்.

என்னும் சிந்தாமணி (கனகமாலை-324) செய்யுளானு மதனுரையானு முணர்க. இக்கவி முதல் நாற்பத்தொன்றாவது கவிவரை இறைவன் நிக்கிரக முறையும் அநுக்கிரக முறையுங் கூறுவா ராயினர். (௩௫)

> கழைவார்சிலை குழையக்கடி மலர்வாளிக ணிமிர
> விழைபோர்புரி மதவேளுரு விளியத்தழல் வெந்தீ
> உழைநேர்விழி யுமையாள்கர மொளிர்கண்ணிணை கதுவத்
> தழைபேரிரு ளிரிகண்ணுமிழ் தலைவாவடி போற்றி.

(இ - ள்.) கரும்பாகிய நீண்ட வில்வளைய, வாசனை பொருந்திய பூவம்புகள் நிமிர்ந்துசெல்ல, விரும்பிய போரைச் செய்கின்ற மன்மதன் வடிவங்கெடத் தகிக்கின்ற கொடிய தீயினை, மானையொத்த மருண்ட

மூவுலகத்திலும் சுழன்று தங்கும் இரும்பு, வெள்ளி, பொன்னாலாகிய மூன்று ஊர்களையும் அக்கினியினிடத்து வீழ வீரத்தை நல்கிய தந்தையாரே! தேவரீர் திருவடியே பாதுகாப்பதாக.

(வி - ம்.) சுடும் ஆணவம் அஞர் ஆணவம் எனக் கூட்டுக. ஒருவுதல் காரணமாக உமைகாண முகிழ்க்கும் நகையென்க. நீங்கத் தீவாய்ப்பட்ட வீரத்தை நல்கிய தந்தையென்க. அஞர் - அறியாமை, "அஞரறிவிலரோ தூக்க"மென்னும் நிகண்டானறிக. உழலா - உழன்று. உலகொரு மூன்றினுமுறையும் புரமெனக் கூட்டுக. இச்செய்யுளின் கருத்தினை "புரத்துறு மவுணக் குழாமும்வன் டிசைகூர் பூங்கணை மதனுமுன் பெறுநின், சிரித்தவெண் ணகையும் நுதல்விழி நோக்கும் சிறியனே னிருண்மலம் பெறுமோ" எனும் சோணசைலமாலைச் செய்யுளோத் திருத்தல் காண்க. ஆணவ நீங்கல் அநுக்கிரகமும், புரமெரித்தல் நிக்கிரகமாகவும் கூறினர். (௧௮)

மருளாதுனை யறியும்வகை மாலாதியெல் லேமும்
ஒருவாதுணர் மறையாகம முதவுந்திரு வாயால்
தெருளாதுல கேழும்பொடி செய்யும்வளை யாளி
வெருளார்தர வுயிருண்டருள் விமலாவடி போற்றி.

(இ - ள்.) மயக்கமடையாது தேவரீர் உண்மை நிலையினையறியும் வண்ணம் விண்டு முதலாய யாங்களெல்லேமும், நீங்காமலுணரத்தக்க வேதங்களையும், ஆகமங்களையும் உபதேசித்தருளிய திருவாயினால் தெளியாமல் ஏழுலகத்தினையும் பொடியாகச் செய்யும் பாஞ்ச சன்னியமென்னுஞ் சங்கினையுடைய நரசிங்கம் அச்சமடைய உயிரைக் குடித்தருளிய மலமற்றவரே! தேவரீர் திருவடியே காப்பதாக.

(வி - ம்.) எல்லேமு முணர்கின்ற மறையாகமங்களை யுதவிய வாயால் நரசிங்கத்தி னுயிரையுண்டருளிய விமலனென்க. வளையையுடைய யாளியென்ற குறிப்பால் நரசிங்கமென்பது பெற்றாம். வளை - சங்கம்; சக்கரமெனினுமாம். வாயினாலுண்டல் - எண்காற்புள் வடிவாய்ச் சென்றுயிர்குடித்தல். வெருள் - அச்சம். மறையாகம மருளுதல் அநுக்கிரகமாகவும் உயிர்குடித்தல் நிக்கிரகமாகவும் கூறினர். (௧௯)

இரந்தாருல கோரேழினு மிவரேயிறை யென்ன
வரந்தானனி யெளிவந்துவ ழங்குங்கர மலரின்
உரந்தாவிய வெளியேன்சிர மொன்றெய்யென வாங்கிப்
புரந்தானுடல் சூலத்திடு புனிதாவடி போற்றி.

(இ - ள்.) இல்லங்கடோறுஞ் சென்றிரந்தவர்களை ஒப்பற்ற ஏழுலகத்தின்கண்ணும் இவர்களே தலைவர்களென்று சொல்லும்வண்ணம் வரத்தை மிகவும் எளிதாக வெழுந்தருளிக் கொடுக்குங் கரமலரால் அறிவு நீங்கிய எளியேனுடைய சிரமொன்றைத் திருக்கரத்தால் வாங்கியவரே! உலகத்தைக் காக்கின்றவனாகிய விண்டுவினுடலைச் சூலத்திட்ட பரிசுத்தமானவரே! தேவரீர் திருவடி பாதுகாப்பதாக.

(வி - ம்.) இரந்தாரை உலகேழிற்கு மிவரேயிறைவரென்ன வழங்குங் கரமலரெனக் கூட்டுக. உரம் - அறிவு. தாவிய - நீங்கிய. வாங்கி-

பெயர். இதனை "தோற்றிய திதியே யொடுங்கி" என்றாற்போலக் கொள்க; இஃது அன்மைவிளி. புரந்தரனுடலைச் சூலத்திட்ட கதை காஞ்சிப்புராணம் வயிரவேச்சுரப்படலத்திற் காண்க. இறைவன் வழங்குதல் அநுக்கிரகமாகவும், சூலத்திடுதல் நிக்கிரகமாகவும் கூறினர். (௪௰)

முத்திப்பத மொருமூன்ரெடு முழுதுங்கழு திரதர்
செத்துப்பணி யடியார்சிரஞ் சேர்த்தின்பருள் பாதத்
தெத்திக்கினும் விரையாக்கலி யிவர்வித்தம ரியமன்
மைத்துத்தினி யுடல்பொன்றிய வரதாவடி போற்றி.

(இ - ள்.) ஒப்பற்ற பதமுத்தி மூன்றினோடு எல்லாவற்றையும் கானல் நீர்போலத் (தோன்றல் மாத்திரையே நித்தியப் பொருள்களல்ல வென்று) அறிந்து தன்னை வணங்குகின்ற (சாயுச்சிய பதவியை விரும்புகின்ற) அடியார்களின் தலையிலே சேர்த்துத் (திருவடி திட்சை செய்து) வீட்டின்பத்தினைக் கொடுக்கின்ற பாதத்தால் எல்லாத் திக்குகளினும் ஆணையைச் செலுத்துவிக்கின்ற இயமனது கறுத்துத்திணிந்த உடலைப் பொன்றுவித்த மேலானவரே! தேவரீர் திருவடி பாதுகாப்பதாக.

(வி - ம்.) பதமுத்தியொரு மூன்றெனக் கூட்டுக. முத்திப்பத மூன்றுவன : சாலோகம், சாமீபம், சாரூப்பிய மென்க. இவை அவ்வக் காலாந்தரங்களி னழிதலின் 'கழுதிரதஞ்செத்'தென்றார். கழுதிரதம் - கானற்சலம். செத்து - அறிந்து. இதனைச் "செத்து நிற்றியா" லென இப்புராணத்தின் வருவதானும். "வெள்ளாங்குருகின் பிள்ளை செத்தென" எனவரும் ஐங்குறு நூற்றானுமறிக. விரையாக்கலி - மூவுலகினுஞ் செல்லுமாணை; இதனை "விரையாக்கலியெனுமாணையும்" எனவரும் பதினொன்ருந்திருமுறை. (கோயினான் மணிமாலை 4-வது) ஆசிரியப்பாவானுணர்க. மைத்து - கருத்து. பொன்றிய - பொன்றுவித்த. திருவைத்தல் அனுக்கிரகமாகவும் இயமனை யுதைத்தல் - நிக்கிரகமாகவும் கொள்க. (௪௧)

அருள்செய்பவன் புரிதண்டமு மருளேயெனு முண்மைத்
தெருளொன்றுமு ளத்தானருள் செயவந்தருண் முருகன்
வெருளொன்றிய புரிதண்டமு மருளாகிய மெய்ம்மைப்
பொருளொன்றிய வயனின்னன புகலுந்துதி கேளா.

(இ - ள்.) யாவர்க்குமருளினைச் செய்பவனாகிய தலைவன் ஆன்மாக்களுக்குச் செய்யுந் தண்டமும் அவ்வான்மாக்கண்மாட்டுக்கொண்ட அருளேயாகுமென்னு முண்மையோடு கூடிய தெளிவு பொருந்திய வுள்ளத்தினையுடைய சிவபெருமான் திருவாய்மலர்ந்தருள (தேவர் முதலியோர் துன்பினை நீக்கத்) திருவவதாரஞ்செய்த முருகப்பெருமான் மயக்கமடைய (என்மாட்டுப்) புரிந்த தண்டனையும் அருளாகிய மெய்ம்மைப் பொருளேயாகுமென்றுடம்பட்ட பிரமன் இத்தன்மையனவாகக் கூறுந் துதிகளைக் கேளா.

(வி - ம்.) உளத்தானருள் செயவந்த முருகனென்க. உளத்தான் - ஈண்டுச் சிவபெருமான். வெருள் - மயக்கம். ஒன்றிய - உடம்பட்ட, இச்செய்யுளுக்குப் பிறவாறு முரைப்ப. (௪௨)

எற்றுக்கிவ ணுற்றுத்தவ மினிதாற்றினை யென்னக்
கற்றைச்சடை முடியான்கரு ணையினோடருள் செயலும்
வற்றிக்கவி னழிமேனியன் மழைகண்டெழு மயிலின்
முற்றக்கிள ருவகைக்கடன் முழுகுற்றெதிர் மொழிவான்.

(இ-ள்.) இவ்விடத்திற் பொருந்தி எப்பயனடைதற்குத் தவத்தினை இனிதாகச் செய்தனையென்று கூட்டமாகிய சடைமுடியையுடைய சிவபெருமான் கருணையோடு கேட்க, வற்றியழகொழிந்த உடம்பினையுடைய பிரமன் மேகத்தினைக் கண்டெழுகின்ற மயிலைப்போல மிக விளங்குகின்ற மகிழ்ச்சியாகிய கடலின்கண் மூழ்குதலைச் செய்து விடை கூறுவான். இன் : ஐந்தாவதொப்புப் பொருள். (௬௩)

தவற்றிற்கதி நடைகண்டுத ருக்குக்கடன் முழுதும்
சுவற்றிக்கொடு நரகுந்துணை யாகாவிட ரேய்த்துக்
கவற்றிச்சிறை யிடுவித்தருள் கந்தப்பெரு மான்செய்
இவற்றுத்தொழில் யான்செய்கதி லென்றானெதிர் நின்றான்.

(இ-ள்.) குற்றம் புரிதலிலெழுந்த வெளியேன் ஒழுக்கத்தினையறிந்து எனது செருக்காகிய கடல் முழுவதையும் வற்றச்செய்து கொடுமை பொருந்திய நரகமும் ஒப்பாகாத துன்பத்தினைச் சேர்த்து வருந்திச் சிறையின்கண் என்னையிடுவித்த முருகப்பெருமான் செய்தருளிய ஆசையோடு கூடிய படைப்புத் தொழிலினை யான் செய்தலில் விருப்புடையேன் என்று கூறினவனாய் எதிரே நின்றனன்.

(வி-ம்.) தவறு - குற்றம். கதித்த - எழுகின்ற. நடை - ஒழுக்கம். கண்டு - அறிந்து. சுவற்றி - கெடுத்து. துணை - ஒப்பு. இவற்றுத்தொழில் - ஆசைத்தொழில்; படைப்புத்தொழில். தில் : விருப்பின்கண் வந்த இடைச்சொல், இதனை "அமிழ்துபொதி செந்நா வஞ்ச நிவந்த வார்ந்திலங்கு வையெயிற்றுச் சின்மொழி, அரிவையைப் பெறுகதில் அம்ம யானே" என்னுங் குறுந்தொகைச் (௧௪) செய்யுளானறிக. (௬௪)

அற்றேனின தார்வங்கம மூலரோயிது கேண்மோ
செற்றார்படை செற்றித்தெறு ஞாட்பிற்றிர ளேக்கிப்
பற்றாதென மற்றைப்படை பணிசெய்திட நிற்கும்
முற்றாரழல் வேலானல தருளன்முடி யாதால்.

(இ-ள்.) வாசனை வீசுகின்ற தாமரைமலரின் கண்ணுள்ள பிரமனே! நின்னுடைய தன்மைத்தாயின் இதனைக் கேட்பாயாக. நெருங்கிப் (பகைவர்களைக்) கொல்கின்ற போர்க்களத்தின்கண் பகைவர்கள் ஆயுதக்கூட்டங்கள் நோக்கி (இவ்வேற்படையின் முன்னிற்க நமக்கு வன்மை) போதாதென்று தொண்டினைச் செய்ய வாளாநிற்கும் நிறைந்த அக்கினி பொருந்திய வேற்படையையுடைய முருகனையல்லாமல் (இப்படைத்தற்றொழிலினை நினக்கு) அருளுதல் வேறொருவரான் முடியாது.

(வி-ம்.) செற்றித்தெறு ஞாட்பில் செற்றார் படைத்திரளேக்கிப் பற்றாதென அப்படை பணிசெய்ய நிற்கும் வேலென வினை முடிவு

செய்க. மோ - முன்னிலையசை. செற்றார் - பகைவர். ஞாட்பு-போர். முற்று - நிறைந்த. (௪0)

துறைமுற்றிய மறையாகம மங்கந்தொரு கலைகள்
இறைமுற்றிய விறைபோனுல கெல்லாம்பணி குரவன்
நறைமுற்றிய விதழித்தொடை நாமுந்தொழு மாசான்
பொறைமுற்றிய வுள்வார்கழல் புகலேபுக லாமே.

(இ - ள்.) பொருட்குறைகள் முற்றப்பெற்ற வேதங்களும், ஆகமங்களும் வேதாகமங்களும் கூடிய ஏனைய சாத்திரங்களும் இறைமைத் தன்மை முற்றுப்பெற்ற தலைவனும், உலகத்தி லுள்ளவர்களெல்லாம் வணங்கத்தகுந்த பரமாசாரியனும் தேன் பொருந்திய கொன்றை மாலையை யணிந்த நாமும் வணங்கத்தகுந்த ஆசானுமாகிய பொறுமை நிறைந்த அம் முருகக் கடவுளின் நீண்ட பாதங்களிடத்துச் செல்லுதலே சரணாகும்.

(வி - ம்.) துறைமுற்றிய - பொருட்டுறை முற்றுப்பெற்ற. அங்கம் - வேதாங்கம். இறைமுற்றிய-இறைமைத் தன்மையடைந்த. புகல்-செல்லுதல்; சரண். (௪௧)

எய்யாந்தவ றுடையார்க்கரு ளீயுந்திற நோற்பின்
கையாந்தவ றெருவிக்களி யருள்வாங்கழல் போற்றி
மெய்யாந்தவ முழந்தாய்பிழை வீத்தாய்நம தருளால்
மையாரந்தநின் விழைவுய்த்தருள் வான்பாலுறல் பெற்றாய்.

(இ - ள்.) குற்றமுடையவர்களுக்கு (அக்குற்றத்தை நீக்கி) அருள் செய்யும் வகையிலேயாம். அவர்கள் (அக்குற்றம் நீங்கத்) தவஞ்செய்யின் வெறுத்தல் செய்யேம். அவர் குற்றத்தினை நீக்கிக் களிப்பினைத் தருவோமாகிய எம் பாதங்களைத் துதித்து உண்மையாகிய தவத்தினை வருந்திச் செய்தாய். நின் குற்றங்களை நீக்கினாய். மருளினால் மயங்கிய நினது விருப்பத்தை முற்றுறச் செய்தருள்பவனாகிய முருகனிடத்தும் செல்லுந் தன்மையை (எம்மால்) பெற்றாய்.

(வி - ம்.) திறத்தில் இலேயா மென்க. எய்யாம் - இலேயாம். நோற்பிற் கையாம் - தவஞ்செய்யின் வெறுக்கமாட்டோம். எம்மருளால் நின் விழைவைக் கொடுத்தருளும் முருகனிடத்தும் செல்லுந் தன்மையைப் பெற்றாயென முடிக்க. உம்மை விகாரத்தாற் றொக்கது. மையார்ந்த - மயங்கிய. இதனை "மலர்காணின் மையாத்தி நெஞ்சே" என்னுந் திருக்குறளடியா னுணர்க. (௪௨)

இனியன்னவ னருளுக்கொரு வைப்பாயில குவையால்
துனிவின்றுயர் தவமாற்றிய தூவென்றனன் கேட்டான்
புனிதன்முக மெதிர்நோக்குபு புலவர்க்கமிழ் தன்னான்
நனிவந்தெவி தருளுந்தல நவிலாயென நவில்வான்.

(இ - ள.) இனிமேல் அத்தன்மையை யுடைய முருகனது கருணைக்கு இடமாக விளங்குவாய். துன்பமின்றி யுயர்ந்த தவத்தைச்

செய்ய முயல்வா யென்றனன். (இறைவன் றிருவாய்மலர்ந்தருளி யதனைக்) கேட்டுத் தாய்மையுடையவனாகிய சிவபெருமான் றிருமுகத்தை நோக்கித் தேவர்கட் கமுதையொத்த முருகப்பெருமான் மிக எளிதி னெழுந்தருளி அருள்செய்யுந் தலத்தினைத் திருவாய்மலர்ந்தருள்வான்.

(வி - ம்.) வைப்பு - இடம். ஆல் . அசை. ஆற்றிய - ஆற்ற கேட்டான் : முற்றெச்சம். புலவர் - தேவர். அமிழ்தன்னவன் : முருகன். முருகனைக் குறித்துத் தவமாற்றச் சூழ்வாயென்றனன். சூழ்க : வியங்கோ ளீறுகெட்டது. (௪௮)

குருதித்தசை மிசையுங்குடர் மாலைத்தலை வேலான்
சுருதித்தலை மொழியின்பொரு ளெம்மைத்துளக் குறுத்த
கருதிக்கதி யெவரும்புகு கணிகாசல முளதவ்
வொருதிக்கினு நிகரில்லதி னுறைகென்றும றைந்தான்.

(இ - ள்.) செந்நீரோடுகூடிய நிணத்தை யுண்ணுகின்ற குடரை மாலையாகவுடைய வேற்படையையுடைய முருகன் வேதங்களின் முடியின்கண்ணுள்ள பிரணவமென்னு மொழியின் பொருளை எமக்கு விளக்குதலைச் செய்த யாவரும் தியானித்தலால் மேற்கதியினிடத்துச் செல்லுதற் கேதுவாகிய கணிகாசல மென்னுந் திருப்பதி யுள்ளது. அத்தலம் ஒரு திசையினிடத்தும் தனக்கு ஒப்பில்லாததாகும். அத்திருப்பதியின் கட் டங்குவாயென்று திருவாய்மலர்ந்தருளித் திருவுருக்கரந்தனன்.

(வி - ம்.) முருகன் எமக்குப் பிரணவப் பொருளை விளக்கிய கணிகாசல மெனவும் புகுங்கணிகாசல மெனவுங் கூட்டுக. அது என்னுஞ் சுட்டுப்பெயர் றொகட்டுநின்றது. (௪௯)

சேட்டாரண மறியான்மறை சிவலிங்கம்வ ணங்கித்
தீட்டாமொழி யறிவான்றிகழ் மகிழ்வோடுமெ ழுந்தான்
தோட்டாரணி யஞ்சூழ்பதி தொழுதான்விடை கொண்டான்
கூட்டார்கிளி தமிழ்தேர்தரு கூடற்பதி சார்ந்தான்.

(இ - ள்.) பெருமை பொருந்திய வேதங்களும் அறியாதவனாகிய சிவபெருமான் றிருவுருக் கரந்தருளிய குமாரலிங்கத்தினை வணங்கி எழுதா மொழியாகிய வேதத்தினை யறிவானாகிய பிரமன் மகிழ்ச்சியோடு மெழுந்து பூவிதழ் பொருந்திய வனஞ்சூழ்ந்த குற்றாலத்தினைத் தொழுது விடைபெற்றுக் கூட்டின்கட் பொருந்திய கிள்ளைகள் தமிழினை யாராய்கின்ற கூடற்பதியினைச் சேர்ந்தான்.

(வி - ம்.) சேடு - பெருமை, இதனை "சேட்டி ளங்கிளிக் குலங்களத் தெரிவைமா ரோப்பும்" என்னுங் காஞ்சிப்புராணம் நாட்டுப் படலச் செய்யுளா னறிக. தீட்டாமொழி - எழுதாக்கிளவி. தோடு - இதழ். (௫௦)

எட்டெட்டருள் விளையாடல்செ யிறைவன்கழன் மலரின்
மட்டட்டிய குழலாளொடு வணங்கிப்புற னேகி

மொட்டொட்டள முலைபங்கினன் முருகார்மலர்க் குறையூர்
அட்டிட்டசி ராப்பள்ளியை யடைந்தான்றொழு தகன்றான்.

(இ - ள்.) தேனிறைந்த கூந்தலையுடைய நடாதகைப் பிராட்டியா ரோடு அருளால் அறுபத்துநான்கு திருவிளையாடல் செய்த இறைவ னுடைய பாதத்தை வணங்கிப் புறத்தேசென்று கோங்கமுகையை யொத்த முற்றுமுலையுமையை யொருபங்குடைய சிவபெருமான் வாசனை பொருந்திய மலருக்காக உறையூரை யழித்த சிராப்பள்ளியை அடைந் தவணிகித் தொழுது நீங்கினான்.

(வி - ம்.) மட்டு - தேன். அட்டிய - நிறைந்த. கடவுளானவர் மலருக்காக உறையூரை யழித்த சிராப்பள்ளி யென்க. சாரமாமுனிவர் வைத்த நந்தனவனத்தின் பொருட்டுமண்மாரி பெய்வித்த கதையையுட் கொண்டு "முருகார்மலர்க் குறையூ ரட்டிட்ட சிராப்பள்ளி" என்றார். இக்கதையினைச் செவ்வந்திப் புராணத்தா னறிக. ஒட்டு - உவமச் சொல். இதனை "தொழினிலை யொட்டு மொன்றலங் கடையே" என்னுந் தொல்காப்பியச் சொல்லதிகாரத்தா னறிக. அட்டிட்ட - அழித்த. ( )

எண்ணத்துய ரியமாதவ ரீண்டும்புலி யூர்போய்
விண்ணத்துய ரியகோபுர மேகம்பர னுருவின்
வண்ணத்துய ரியதோலின்வ யங்காலய மெய்திக்
கண்ணத்துய ரியலாதறு கதிர்மன்றுப ணிந்தான்.

(இ - ள்.) எண்ணங்களா லுயர்ந்த பெரிய தவத்தினையுடையார் பொருந்தும் புலியூரின்கட் சென்று விண்ணினிடத் துயர்ந்த கோபுரத்தி னிடத்துத் தங்கிய மேகமானது இறைவன் றிருமேனியின்கண் அழகினா லுயர்ந்த யானை யுரியைப்போல விளங்குகின்ற திருக்கோவிலையடைந்து கருதத் துன்பமானது பொருந்தாது நீங்குகின்ற ஒளியையுடைய பொன் னம்பலத்தை வணங்கினான்.

(வி - ம்.) கோபுரத்துத் தாங்கிய மேகம் இறைவன் றிருமேனியி லுள்ள யானையுரிபோல் விளங்குமாலய மென்க. வண்ணம் - அழகு. இதனை "வண்ணமேர் சந்தம் பண்பாம்" என்னும் நிகண்டா னறிக. அத்துக்கள் : சாரியை. கண்ண - நினைக்க. இயலாது - பொருந் தாது. ([illegible])

ஆங்குப்புற விடைகொண்டன னன்னத்திரள் சேக்கும்
பூங்கட்கம லக்குப்பைகள் பொழிதேன்மணம் விசத்
தேங்கும்புன லெழுவாளைக டெங்கம்பழஞ் சிந்தும்
வீங்கும்புகழ் திசைபோர்த்தவி யன்காஞ்சிய டுத்தான்.

(இ - ள்.) அவ்விடத்தினின்றும் புறவிடை கொண்டு அன்னக் கூட்டங்கள் தங்கும் தேனோடுகூடிய மலர்களையுடைய தாமரைக் காடுகள் சொரிகின்ற தேன் வாசனையை வீசாநிற்க, நிறைந்த நீர்நிலை களிலுள்ள வாளைமீன்கள் தெங்கம்பழத்தினைச் சிதறுகின்ற மிக்க புகழா னது திக்குக்களை மூடிய பெரிய காஞ்சிமாநகரை யடுத்தான்.

(வி - ம்.) புறவிடை - (மனம் இறைவன்பாற்றங்க) உடம்பு விடைபெற்றுச் சேறல். தெங்கம்பழம் - முற்றின தேங்காய். இதனைக் "கைம்மலர்ந்த தெங்கின்பழம் வீழக்கமுகி னெற்றி" என்னும் சிந்தாமணி (நாமக, 2) செய்யுளடியா னுணர்க. (௫௩)

உயங்கும்பவ மோரேழினு முறுவல்லினை நீவித்
தயங்கும்பர போகந்தரு தனிமாநிழ லென்றும்
வயங்குந்திரு வேகம்பனை வாழ்த்திப்பஃ றளியும்
நயங்கொண்டுப ணிந்தேத்தின னகரம்பிறக் கிட்டான்.

(இ - ள்.) வருந்துதற் கேதுவாகிய ஒப்பற்ற எழுவகைப் பிறப்பின்கண்ணும் பொருந்துகின்ற வலிய வினைகளைக் கெடுத்து (எக்காலமும் ஒரு பெற்றித்தாக) விளங்குகின்ற மேலாகிய வீட்டின்பத்தினை அருளுகின்ற ஒப்பற்ற மாமரத்தி னிழலின்கண்ணே என்றும் (நித்திய வாசஞ்செய்து) விளக்கமுறுகின்ற ஏகம்பநாதனை வணங்கி (ஆண்டுள்ள) பல கோவில்களையும் நன்மையை யுட்கொண்டு பணிந்து துதித்து அக்காஞ்சி நகரத்தைப் பின்னாகச் செய்தான்.

(வி - ம்.) உயங்குதல் - வருந்துதல். பவம் - பிறப்பு. பரபோகம் - மோட்சம். பிறக்கிட்டான்-பின்னாகச் செய்தான். தளி - கோயில். ஏத்தினன் - முற்றெச்சம். (௫௪)

எண்ணோங்கிய சீபூரண நகரெல்லைய கத்து
விண்ணோங்கிய புகழின்னகர் விளங்குங்குண திசையில்
தண்ணோங்கிய மதிதோய்வரை தனக்கோசனை யரையில்
பண்ணோங்கிய வாணிக்கொரு பதிநாவின னுற்றான்.

(இ - ள்.) ஆன்மாக்க ளெண்ணங்களையும் பெருமையாற் கடந்துயர்ச்சிபெற்ற தணிகைநக ரெல்லையினிடத்து ஆகாயத்தை யளாவிய புகழினையுடைய திருக்கோவில் விளங்குகின்ற கிழ்த்திசையில் குளிர்ச்சியாலுயர்ந்த சந்திரன் பொருந்தப்பெற்ற தணிகைமலைக்கு அரையோசனை தூரத்தின்கண் இசையாலுயர்ந்த சரசுவதிக் கொப்பற்ற இருப்பிடமாகிய நாவினையுடைய பிரமனடைந்தான்.

(வி - ம்.) நகர் - கோவில். குணதிசை - கீட்டிசை. பதி - இடம். (௫௫)

வேறு

அண்டர் போற்று மடுக்கனேர்
கண்டு தாழ்ந்து கசிந்தனன்
பண்டை வேதம் பழிச்சினன்
மண்டு கட்புனல் வாக்கினன்.

(இ - ள்.) தேவர்களெல்லாம் துதிக்கும் தணிகைமலையினை நேரே பார்த்து வணங்கி மனங்கசிந்து பழைய வேதங்களை யோதினவனாகிய பிரமன் நிறைந்த கண்ணீரைக் கொட்டினான்.

(வி - ம்.) அடுக்கல் - மலை. கசிந்தனர் - முற்றெச்சம். மண்டு - நிறைந்த. பழிச்சினன் வேதமுறைப்படி வழிபட்டான் எனுமாம். (௩௬)

ஆண்டி லிங்க மமைத்தனன்
மாண்ட பூசை வயக்கினன்
பூண்ட வேடப் பொலிவொடு
மூண்ட ருந்தவ முற்றினன்.

(இ - ள்.) அவ்விடத்தே சிவக்குறியை நிறீஇ மாட்சிமைப்பட்ட பூசனையைச் செய்து தான் மேற்கொண்ட வேடத்தின் அழகுடன் முயன்று செய்தற்கரிய தவத்தினை யியற்றினன்.

(வி - ம்.) அமைத்தனன், வயக்கினன் என்பன முற்றெச்சங்கள் மூண்டு - முயன்று. (௩௭)

முதுமை மாதவர் மூசுதேன்
மதுவி ராந்தொடை வானவர்
பதும னோடு படர்ந்துசெல்
நுதுபு லத்தரு நோற்றனர்.

(இ - ள்.) முதிய பெரிய தவத்தினையுடைய முனிவரும், மொய்க்கின்ற வண்டுகளோடு தேன் பொருந்தப்பெற்ற தேவர்கள் பிரமனொடு தொடர்ந்து செல்கின்ற அவித்த ஐம்புலன்களை யுடையாரும் தவஞ் செய்தனர்.

(வி - ம்.) நுதுபுலத்தர் - அவித்த ஐம்புலன்களை யுடையார். நுதுத்தல் - அவித்தல். இதனை "நெய்யா லெரிநுதுப்போ மென்றற்றால்" லெனும் திருக்குறளடியா னுணர்க. (௩௮)

விருத்த ராகிய மெய்த்தவர்
விருத்தந் தீர்தர மேவுமவ்
விருத்த வானகர் மேயதால்
விருத்த மாபுர மெய்ப்பெயர்..

(இ - ள்.) அறிவொழுக்கங்களின் முதிர்ந்தவராகிய உண்மைத் தவத்தினை யுடைய பெரியார்கள் தங்களுள்ளத்திற் றோன்றும் வேறுபாடுகள் நீங்கப் பொருந்தும் புதிய பெரியவந் நகரமானது விருத்தமாபுரமென்னும் உண்மைப் பெயரினைப் பொருந்தியது.

(வி - ம்.) விருத்தராகிய - அறிவொழுக்கங்களி னுயர்ந்தவராகிய. விருத்தம் - வேறுபாடு. விருந்து : விகாரம். "விருத்தராகிய மெய்த் தவர், விருத்தந்தீர்தரமேவும் நகரென வுடம்பொடு புணர்த்திக் கூறியதே விருத்தபுரமென்னும் பெயர்க்குக் காரண மென்க. (௩௯)

பொற்ற மாதவம் போற்றியே
ஒற்றை யாண்டொழி வெய்தலும்

பெற்று வெற்பிவர் பெற்றிமை
உற்ற னன்னுயர் மால்வரை.

(இ - ள்.) நல்ல பெரிய தவத்தினைப் பாதுகாத்து ஓராண்டு ஆண்டுத் தழியத் தணிகைமலையின்கண்ணேயுறுந் தன்மையினைப் பெற்று அம் மேகங்கள் தங்குகின்ற உயர்ந்த மலையினையடைந்தான்.

(வி - ம்.) பொற்ற - நல்ல இதனை "மற்றிம் மாநகர் மாந்தர்களி டாவரும், முற்று நாறியுங் கண்டு முணர்ந்திவை, பொற்ற சுண்ண மெனப்புகழ்ந் தார்நம்பி, கற்ற தும்மவர் தங்களொ டேகொலோ" என்னும் சிந்தாமணி (குணமாலை - கூ) செய்யுளானு முரையானு முணர்க. மால் - மேகம், இதனை "மாலமர் பெருஞ்சினை வாகை மன்ற மும்" என்னு மணிமேகலை யடியானுணர்க. (௬௦)

வேறு

நைகரமி லன்போடு நண்ணும் வேதன்
செய்கழற்காற் குமரனழைத் திருவுந் தீர்த்தம்
பொய்கடியும் விதியாற்றிற் புகுந்து தோய்ந்து
மெய்கதுவும் வினைமுழுதும் விழைந்து செய்தான்.

(இ - ள்.) வருத்தமில்லாத அன்பினோடு (ஆண்டுப்) பொருந்துகின்ற பிரமன் வேலைப்பாடு செய்யப்பெற்ற வீரக்கழலினை யணிந்த குமரக்கடவுள் அழைத்துத் தங்கச்செய்த தீர்த்தத்தின்கண் பொய்யை நீக்குகின்ற விதிப்படியே சென்று மூழ்கி உண்மைத் தன்மையைப் பொருந்துகின்ற எல்லா வினைகளையும் விரும்பிச் செய்தான்.

(வி - ம்.) நைகரம் - துன்பம். செய் - வினைத்தொகை. கடியும் - நீக்கும். (௬௧)

மட்டுவிரி பொழிற்குன்றம் வலம்வந் தேறிச்
சட்டவிடர் தபுமாவச் சகாயற் போற்றி
எட்டுருவாங் குமாரலிங்கத் திறைவன் பாதம்
அட்டுமது மலர்தூவி யஞ்சித் தானல்.

(இ - ள்.) தேன் விரியப்பெற்ற சோலை சூழப்பெற்ற மலையை வலமாக வந்து ஏறுதலைச் செய்து விரைவாகத் துன்பம் நீங்கப்பெற்ற ஆவச்சகாயனைத் துதித்து அட்டமூர்த்த வடிவமாகிய குமாரலிங்க வடிவ மாகிய சிவபெருமான் பாதத்தில் நிறைந்த தேனோடு கூடிய பூக்களைத் தூவி யருச்சித்தான்;

(வி - ம்.) மட்டு - தேன். சட்ட - விரைய. இதனைச் "சட்டவிக் கதவந் திறப்பிம்மினே" என்னுந் தேவாரத்தானறிக. எட்டுரு - முன் னர்க் கூறினும். அட்டு - நிறைந்த. அஞ்சித்தல் - வணங்கல். இதனை "அஞ்சலி வணங்கல் வாவற்பறவையு மாகுமென்ப" என்னும் நிகண்டா னறிக. (௬௨)

வானாதி பூதங்கள் வயக்கி மாற்றும்
ஆனாத பேரறிவா மடல்வே லண்ணல்
கானாரு மலர்ப்பாதங் கசிந்து தாழ்ந்தங்
கூனாதி யொருக்கியுணர் வயத்த னானான்.

(இ - ள்.) ஆகாய முதலிய பூதங்களைப் படைத்து அழிக்கும் அமையாத மிக்க ஞானமே திருவுருவமாகிய வலிமை பொருந்திய வேற்படையையுடைய தலைவனாகிய முருகக்கடவுளின் தெய்வமணம் பொருந்திய மலர்போன்ற திருவடிகளைக் கசிவுற்று வணங்கி உடம்பு முதலியவற்றை வருத்தி அறிவே வடிவமாயினான்.

(வி - ம்.) வயக்கல் - ஈண்டுப் படைத்தல். மாற்றும் - அழிக்கும், பேரறிவு – முற்றறிவு. ஊன் - ஆகுபெயர். ஒருக்கி-வருந்தி; ஒடுக்கி. உணர்வயத்த னானான் - அறிவு வடிவமாயினான். (௨௯)

அன்றுபோய் வழிநாளங் கடுத்த கீழ்சார்
ஒன்றுநீர்ச் சுனைநோக்கி யுதனிற் றோய்ந்து
மன்றல்சூழ் சுனைத்தலையின் வைகி நாளும்
நன்றுமா தவமாற்று நடைமே தக்கான்.

(இ - ள்.) அற்றைநாள் கழியப் பிற்றைநாள் அவ்விடத்தை யடுத்த கீழ்ப்பாகத்துப் பொருந்திய நீர்நிறைந்த சுனையினைக் கண்டு அச்சுனையின்கண் மூழ்கி வாசனை பொருந்திய சுனையினிடத்துத் தங்கி ஒவ்வொருநாளும் நல்ல மாதவத்தினைச் செய்யும் ஒழுக்கத்தினால் மேன்மையடைந்தான்.

(வி - ம.) உதனில் - அதனில். மன்றல் – வாசனை. இதனை "மன் றனாறு மதுமலர் வாளிகொண், டின்றெ றுருயிருந்த கைமையான்" என்னும் நைடதச் செய்யுளடியானுணர்க. நடை - ஒழுக்கம், இதனை "நடைவழி யொழுக்கஞ் செல்வம்" எனும் நிகண்டானறிக. (௩௰)

மறைகதித்த வாறெழுத்தின் வண்மை நாடி
முறைகணித்து முருகனருள் வடிவ முற்றப்
பொறைகதித்த வுளத்தமைத்துப் பொறிக ளோப்பி
நிறைகதித்த மாதவத்தி னிகழுங்காலை.

(இ - ள்.) வேதத்தில் (எல்லா மந்திரங்களினும்) உயர்வாகக் கூறிய ஆறக்கரத்தின் பொருள் வளப்பத்தினை யாராய்ந்து செபிக்க வேண்டிய முறைப்படி செபித்து முருகப்பெருமானது அருள்வடிவமாகிய திருவுரு முழுதும் பொறுமைதங்கிய உள்ளத்தின்கண் அமையச் செய்து ஐம்பொறிகளையும் (தத்தம் புலன்களிற் செல்லாமல்) ஓட்டிப் பூரணத் தன்மை தோன்றிய பெரிய தவத்தின் கண்ணே நிகழ்கின்ற காலத்தில்.

(வி - ம்.) கதித்தல் - உயர்தல். வண்மை – ஈண்டுப் பொருள் வளப்பம். கணித்தல்-உச்சரித்தல். பொறைகதித்த-ஈண்டுப் பொறுமை தங்கிய. நிறைகதித்த - பூர்ணத்தன்மை யெழுந்த. ஓப்பி - ஓட்டி. (௩௧)

தன்னருளைப் பிழைப்பதே தண்டாச் செல்லல்
என்னுமது முன்றெரித்த விறைவன் மீட்டும்
தன்னருளைப் பெறுவதே தக்க வின்பம்
என்னுமது தெரிப்பவாங் கெதிரே தோன்றும்.

(இ-ள்.) தன்னுடைய அருளைப் பிழைத்தொழுகுதலே நீங்குதலில்லாத துன்பமாகு மென்னுமதனை முன்னர்த் தெரிவித்த தலைவனாகிய முருகக் கடவுள் மீண்டுந் தனது திருவருளைப் பெறுவதே ஆன்மாக்களுக்குத் தகுதியுடைய இன்பமாகுமென்னு மதனைத் தெரிவிக்க அவ்விடத்துப் (பிரமனுக்கு) எதிரே தோன்றாநிற்கும்.

(வி-ம்.) செல்லல் - துன்பம், இதனை "செல்லலின்னலின்னாமையே" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தானறிக. தெரித்த - விவ் விகுதி தொக்குநின்றது. (௬௬)

வேறு

நலம்புரிந் தண்மி னோர்க ணண்ணிய வெம்மைப் போலக்
குலம்புரி தேவ தேவர் குருமணி முடிக டாழ
வலம்புரி முத்தம் போல வயங்குவ ரென்னு மாபோற்
சிலம்புகிண் கிணிகண் மற்றுஞ் சேவடித் துணையி னார்ப்ப.

(இ-ள்.) நன்மையைச் செய்து அணுகினவர்களுடைய பிறவித் துன்பத்தின் கொடுமை தாழ்வடைதல்போல மேன்மையைச் செய்கின்ற தேவர்களுக்குத் தலைவராகியோர் தலைவர் வணங்கலால் (அத்தேவர்கள்) வலம்புரிச்சங்கினுண்டாகிய முத்தினைப்போல (யாவரினும் மேம்பட்டு) விளங்குவார்களென்று கூறுதல்போலச் சிலம்பென்னும் அணியும், கிண்கிணியென்னும் காலணியும் பிறவும் இரண்டு சேவடிகளினிடத்து மொலிப்ப.

(வி-ம்.) இனிச் சிலம்பென்பதனை வினைத்தொகையாக்கி ஒலிக்கின்ற கிண்கிணி யெனினுமாம். (௬௭)

வலத்தினர் கொள்ப வென்னு மரபினைத் தெரித்திட் டாங்கு
வலத்தனித் தாள்சேர்ந் தாண்மை மாற்றலர் கழலு மாற்றால்
நலத்தகு கழலென் றேது நகைமணிக் கழல்கண் டோரைக்
கலத்தலென் றுணர்த்து மாபோற் கலகல கலவென் றார்ப்ப.

(இ-ள்.) வல்லமையுள்ளோரே கொள்வார்களென்னு முறையினைத் தெரித்தாற்போல ஒப்பற்றவல்லமையுள்ள வலப்பக்கத்துத் தாளிற்பொருந்திப் பகைவரது ஆண்டன்மை கழலுதற் கேதுவாகிய தன்மையினால் நன்மை பொருந்திய கழலென்னுங் காரணப் பெயராற் சொல்லப்பெறும் ஒளியோடு கூடிய மணிகள் பதித்த காலிலணியும் மணிவடம் தரிசித்தோரைத் (திருவடியிற்) கலக்கவென் றுணர்த்துதல் போலக் கலகலகலவென் றொலித்தலைச் செய்ய.

(வி - ம்.) வலத்தினர் - வல்லமையுள்ளோர். மரபு-முறை. வரைத் தனித்தாள் - வல்லமையுள்ள ஒப்பற்ற திருவடி எனினும் ஆம் ஆண்மை - வல்லமை, ஆண்டன்மை கழலுந்தன்மையாலேப் பெயர் பெற்ற கழலென்க. கலத்தல்-கலக்குக, தல்: வியங்கோள் விகுதி. மாறு போல: விகாரம். கலகல: ஒலிக்குறிப்பு. (௬௮)

வெங்கதிர் மணிகால் யாத்த மேகலை மூன்று தாங்கும்
அங்கியு மிவனே யென்ன வறிவுறுப் பனபோ னின்ற
செங்கதிர்ப் பட்டுஞ் சேர்த்த திருவரை நாணு மும்பர்
பொங்கொளிப் பட்டின் சுற்றும் புரைமல மூன்றுந் தீர்ப.

(இ - ள்.) வெவ்விய கிரணங்களோடு கூடிய அரதனங்களைப் பதித்த சுற்றுச்சுவர்கள் மூன்றினையுந் தாங்குகின்ற அங்கியங் கடவுளு மிம்முருகனே யாவானென்று அறிவுறுப்பனபோல, நிலைபெற்றன வாகிய சிவந்த ஒளியுடைய பட்டுடையும், திருவரையிற் பொருந்திய அரைஞாணும் அதன்மேலே மிகுந்த வொளியையுடைய பட்டின் சுற்று மாகிய மூன்றும் குற்றம் பொருந்திய மும்மலங்களையும் நீக்க.

(வி - ம்.) மேகலை - யாககுண்டத்தின் சுற்றுச்சுவர், அவை மூன்றுவன:—காருகபத்தியம், ஆகவனீயம், தென்றிசை யங்கியாகிய மூன்றும். இவை முறையே சதுரமாகவும், வட்டமாகவும். முக்கோணமாகவும் யாககுண்டங்களிற் செய்யப்படுவனவாம். கால்யாத்தல் - கால்ஒப் பதித்தல். (௬௯)

மூவரு மங்கத் தோர்பால் முகிழ்க்குமா செய்யு மாண்மை
மூவரை காட்டு மார்ப மொய்வரை யருவி யன்ன
மாவிரை பொங்கும் பூந்தார் மணிவடம் பொற்று ரெல்லாம்
நாவலர்க் கடங்காப் பொற்பி னகுகதிர் பிணைந்து துள்ள.

(இ - ள்.) அயனரியரனென்னு மூவரையும் திருவுருவினொரு பகுதியிற்றோன்றச் செய்யும் ஆண்மை மூன்றுத்தமவரைகள் காட்டாநிற்குந் திருமார்பின்கண் மூங்கில்கள் நெருங்கப்பெற்ற மலையினின்றிழியும் அருவியையொத்த வண்டுகளோடு வாசனையு மிகப்பெற்ற. பூக்களாலாகிய மாலையும், அரதனமாலையும், பொன்னரி மாலையுமாகிய இவையெல்லாம் நாவலர்களுக்கும் சொல்லுதற்கடங்காத அழகினோடு ஒளிர்கின்ற கதிர்கள் ஒன்றினோடொன்று பிணங்கித் துள்ள.

(வி - ம்.) முகிழ்க்குமாறு : விகாரம். ஆண்மை மூன்றுவரை காட்டுமார்பமென்க. மூவரை - மூன்றுவரி; ஆடவர்க்குரிய வுத்தம விலக்கணங்களிலொன்று; இதனை, "வரையகன் மார்பிடை வரியு மூன்றுள, புரைதபு பொன்புரை நாவு முள்ளுடைத், தருவரைத் தோள்களு மமரர் கோன்களிற், றுருவுகொ டடக்கையி னுருவு கொண்டவே" என்னுஞ் சிந்தாமணி (கேமசரி - ௩௪) செய்யுளானும் "ஆரந்தாழ்ந்த அம்பகட்டு மார்பிற், செம்பொறி வாங்கிய" என்னுந் திருமுருகாற்றுப் படையடியானுமுணர்க. மா - வண்டு. நாவலர்க்கும் உம்மை தொக்கது. வரை : ஆகுபெயர். (௭௦)

பூமுத லைந்தற் கீத்தல் புணர்ந்தமை தெரிக்கு மாபோல்
தாமரை மலர்ந்து கற்பந் தளிர்த்துத்தே னுவின்கா தாகிக்
காமுற வலம்பு ரிந்து கதிர்மணி முகிழ்த்த செங்கை
நாமற வஞ்ச லென்ற வமைத்தரு ணயப்புத் தோன்ற.

(இ - ள்.) கற்பகம், பதுமநிதி, சங்கநிதி, சிந்தாமணி, காமதேனு முதலிய வைந்தினுக்கும் கொடுக்குந் தொழிலை (கையாகியதாஞ்) சேர்த்த தன்மை தெரிவிக்குமாறுபோலத், தாமரை மலர்போல விரியப் பெற்று, கற்பகத் தளிரைப்போலத் தளிரைச் செய்து, பசுவின் காது போலாகி யாவரும் விரும்ப வலஞ்சுரித்த சங்கரேகையுடன் கூடி, ஒளி பொருந்திய மணிரேகையைத் தோற்றுவித்த சிவந்த திருக்கரம் அச்சமற அஞ்சற்கவென்று அமைத்தருளிய நயப்பானது தோன்றுவிற்க.

(வி - ம்.) குமரன் றிருக்கரம் தாமரை மலர்போல விரிந்து கற்பகத் தளிர்போன்ற நிறமுற்று அபயஸ்தங் கொடுக்குங்காலத்துக் கோகர்ன வடிவமாகிச் சங்கரேகையும், மணிரேகையுந் தங்கப்பெற் றிருத்தலின் "தாமரை மலர்ந்து...........காமுற வலம்புரிந்து கதிர்மணி முகிழ்த்த செங்கை" யென்றார். ஈதல் : விகாரம். தெளிக்குமாறு : விகாரம். நாமம் : உரிச்சொல் ஈறு திரிந்தது. அமைத்தல் - அபயாஸ் தங் கொடுத்தல். நயப்பு - விருப்பு. (எக)

ஆறிரு கோடி வெய்யோ ரனைவரு மொருங்கு கூடி
வீறினும் பரிதி முன்னர் வெண்கதி ரெனமை யாக்கும்
பேறிருங் கிரணக் கற்றைப் பெருவிலைச் சிறுக லாழி
மாறிரி யடியா ருள்ள முழுவதும் வளைத்துக் கொள்ள.

(இ - ள்.) பன்னிரண்டுகோடி சூரிய ரனைவரும் ஒருங்குசேர்ந்து (ஒளியான்) மிகினும், சூரியன் முன்னர்ச் சந்திரனொளி கெடல்போல ஒளியைக் கெடுக்கும்பெற்றி வாய்ந்த பெரிய கிரணக் கூட்டத்தையும் பெரிய விலையையுமுடைய சிறிய அரதனக்கற்கள் பதித்த மோதிரங்கள் மயக்கம் நீங்கிய அடியாருள்ள முழுவதையும் வளைத்துக்கொள்ள.

(வி - ம்.) சூரியர் வீறினும் அவ்வனைவரும் மையாக்கும் படியான கிரண மென்க. ஆறிருகோடி - பன்னிருகோடி சூரியர். மையாக்கும் - கெடும். பேறு - பெற்றி. மால்திரி - மயக்கம் நீங்கிய. விரலையே யன்றி உள்ளத்தையும் வளைத்துக்கொள்ளு மென்பார். "மாறிரி யடியா ருள்ள முழுவதும் வளைத்துக்கொள்ள" வென்றார். (எஉ)

பிரமர்நா ரணர்பல் லோரைப் பெற்றெடுத் தவர்க்கு நல்க
வரமலி பாச மாழி வகுத்துவைத் திருப்ப தேய்க்கும்
உரமலி முன்கைச் சூழ்ந்த வொளிர்ந்தபொற் றொடரி னோடு
கிரணவொண் கடக மெங்குங் கேழொளி மயமாத் தேக்க.

(இ - ள்.) பிரமர், நாரணர், பல்லோரை யீன்றெடுத்து அப்பிரமர் நாரணர்க்கு வழங்கும் மேன்மைபொருந்திய பாசமும், சக்கரமும் பிரித்துவைத்திருத்தலை யொக்கும், வலிமைபொருந்திய முன்கையிற்

சுற்றிய ஒளிர்கின்ற பொன்னாற் செய்த விரசங்கிலியுடனே கிரணத்தோடு கூடிய ஒளிபொருந்திய கடகமென்று மாபரணம் எவ்விடத்தும் ஒளி வடிவாக நிறைக்க.

(வி - ம்.) பாசம் - பிரமன் கையில் வைத்திருக்கும் படை; இது சங்கிலி வடிவாகவுள்ளது. பொற்றொடர் - விரசங்கிலி. கடகம் - காப்பு. கேழ் - ஒப்பு. தேக்க - நிறைக்க. (௭௩)

வரையரோ தோளன் றென்னும் வயிரவங் கதங்கண் முன்கைப்
புரைதபு கடக மிக்குப் பொலிபிர தாபங் காட்ட
நிரையிரா சதத்தின் மேலாய் நிகழுஞ்சாத் துவிகத் தாகும்
உரைதகு கீர்த்தி யும்ப ருற்றொளிர் முறைமை காட்ட.

(இ - ள்.) முன் கைகளிடத்துக் குற்றம் நீங்கிய கடகங்கள் செவ்வொளி மிகுந்து விளங்காநின்ற (முருகனது) இராசத குணத்தாலுண்டாகிய பிரதாபத்தைக் காட்டாநிற்க, தோளன்று மலையென்று சொல்லும்படியான வயிரத்தினாலாகிய தோளணிகளானவை முறைப்படச் சொல்கின்ற இராசத குணத்தின் மேலாகி நிகழாநின்ற சாத்துவிக குணத்தினாலுண்டாகும் யாவராலும் புகழத் தகுந்த கீர்த்தியானது (பிரதாபத்திற்கு) மேலாக ஒளிர்கின்ற முறைமையினைக் காட்டாநிற்க.

(வி - ம்.) தோளன்று வயிரமென்று கோடற் கேதுவாயுள்ள வயிரமென்க. வயிரம் வரையின்கண்ணுள்ளதாகலின், வாகுவலயத்தினும் வயிரமிருத்தல்பற்றி "வரை" யென்றார். தோளணிகளானவை முறைமை காட்டவென வினைமுடிவு செய்க. கடகத்திற்குமேலாயங்கதங்களிருத்தலின் "உம்பருற் றொளிர் முறைமை" என்றார், சாத்துவிக குணத்தாற் கீர்த்தியும் இராசத குணத்தாற் பிரதாபமுமுளவாதலின் செம்மணி யொளியைப் பிரதாபமாகவும் வயிரமணியைக் கீர்த்தியாகவுங் கூறினார். என்னை? கீர்த்திக்கு நிறம் வெண்மையெனவும், பிரதாபத்திற்கு நிறம் செம்மையாகவும் கூறலினென்க. (௭௪)

கடகமங் கதங்க ளேரே கதிர்மதி மண்டி லத்தின்
சுடர்தர வும்ப ரங்கித் தொகுகதிர் மண்டி லஞ்செய்
படர்கதிர்க் குண்ட லங்கள் பரிதிபன் னிரண்டும் வேறு
தடவரை பெற்றொ ருங்கு சார்ந்தெழு காட்சி தோற்ற.

(இ - ள்.) கடகமும், வாகுவலயமும், முறையாக சூரியமண்டிலம் போலவும் சந்திரமண்டிலம் போலவு மொளியினைச் செய்ய இவைகளுக்குமேல் (ஏழு நாவுடன்) கூடிய அக்கினி மண்டிலத்தைப்போல வெளியினைச் செய்கின்ற பன்னிரு குண்டலங்களும் சூரியர் பன்னிருவரும் வேறு பெருமைபொருந்திய உதயகிரியினை யடைந்து ஒருசேரப் பொருந்தியெழுகின்ற தோற்றம்போல விளங்க.

(வி - ம்.) மண்டில மென்பதனை கதிர்மதி யிரண்டிடத்துங் கூட்டுக. கடகமும் அங்கதமும் இரண்டு மண்டிலம்போலச் சுடர்தரவென்க. அங்கி மண்டிலத்தைப் போலொளி செய்யுங் குண்டலமென்க. இம்முறையால் சூரியமண்டிலத்திற்குமேல் மதிமண்டிலமு மதன்மேலங்கி மண்டிலமு மிருத்தல் காண்க. பன்னிரு குண்டலத்திற்கும்

மல்லிருபுயங்களை யுதயகிரியாகக் கொள்க. தடம் - பெருமை. முன்னர்க் கூறினும்: ஆண்டுக் காண்க. நேரே - முறையே. தோற்ற - விளங்க. ஒருங்கு - ஒருசேர. தொகுதல் - ஈண்டு நாவுடன்கூடல். (௭௫)

மண்டிலம் பிறழா தோங்க வயங்கித ழாயி ரஞ்சூழ்
முண்டக மேனின் றன்ன முகமதித் திலக மாதோ
கொண்டருந் தவர்கள் யோகிற் குறிக்கொடன் னுருவங் காட்டக்
கண்டரு கருணை வெள்ளங் கசிந்தொழு கமிழ்திற் பாய.

(இ - ள்.) மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்கினையென்னு மண்டிலங்களாறு மாறுபடாம லோங்கிநிற்ப அவைகளின்மேலே விளங்குகின்ற ஆயிரமிதழ்கள் சூழ்ந்த தாமரைமலர் நின்றாலொத்த திருமுகமாகிய மதியின்கண்ணுள்ள திலகம் அரிய தவத்தினையுடைய பெரியார் மனதிற்கொண்டு யோகத்தி லிலக்காகக் கொள்கின்ற தன்னுடைய திருவுருவத்தைக் காட்டாநிற்க (அம்முகத்தின்கண்ணுள்ள) கண் தருகின்ற கருணையாகிய வெள்ளமானது (யோகுசெய்யும் போழ்தத்து அத்தாமரையினிருந் தொழுகுகின்ற) அமிழ்தினைப்போலப் பாய.

(வி - ம்.) திலகம் காட்ட அம்முகத்திலுள்ள கண் தருகின்ற வெள்ளம் பாயவென வினைமுடிவு செய்க. ஆதார மாறு மோங்கிநிற்க அவைகளின்மேலே விளங்குகின்ற ஆயிரந்தோட்டு முண்டகமென்க; அதனையொத்த முகமென்க. அதனிற்றங்குந் தன்னுருவமென்க. தாமரையாகக் கூறிய முகத்தின்கண்ணுள்ள கண்ணெனன்க. அமிழ்து - தேன். தன் - சிவம். திலகம் - மேலாகக் கொள்ளுதல். இதனைத் "திலக நீண்முடித் தேவரும்" என்னும் சிந்தாமணியடியானு முரையானு முணர்க. (௭௬)

இருவரா யிருந்து தான்வே றெனவவர் தமக்கு மேலாம்
ஒருவனே யென்ன வென்றா மொளிர்மதி யாகி வேறாய்
இருசுடர் விழிக்கு மீப்பா லிலகெரி விழிகோ லென்னப்
பொருதிய திலக மேலாற் பொழிகதிர்ப் பட்ட மின்ன.

(இ - ள்.) பிரம விட்டுணுக்களாகிய இருவராகவிருந்து தான் அவர்களின் வேறென்று சொல்லும்படி அவ்விருவருக்கும் மேலான ஒருவனாகிய உருத்திரனையொப்பச் சூரியனும் ஒளியோடுகூடிய சந்திரனுமாகி இவர்களின்வேறாகிச் சூரியசந்திரர்களாகிய விழிகளுக்கு மேலிடத்தில் விளங்குகின்ற அக்கினிக் கண்ணென்று சொல்லும்படி யொத்த திலகத்தினுக்கு மேலிடத்தில் கதிரைப் பொழிகின்ற (நெற்றிப்) பட்டமானது ஒளிர.

(வி - ம்.) இருவராய்ப் பிரமவிட்டுணுக்களாய். ஒருவன் - ஒப்பற்ற உருத்திரன். என்றாம் மதியாகி வேறாகி யிலகெரி யென்க. ஒளியுடைப் பொருள்கள் யாவும் பேரொளிப் பொதுமையையுடைய தீயின் சம்பந்தமுடையன வாதலின் "என்றா மொளிமதி யாகிவேறாய் இலகெரி" என்றார். திலகத்தை நெற்றிவிழியாகக் கொள்க. என்

றாம் – சூரியன். இருசுடர்விழி – சூரியசந்திரர்களாகிய இறைவன் றிருவிழிகள். எரிவிழி – அக்கினியாகிய நெற்றிவிழி. பொருவிய – ஒத்த. (எஎ)

குவிதரு மாரு தாரக் குருமலர் மலர்த்து மாறு
சவிமுகப் பரிதி நாப்பட் டவிர்சிவ னுருவஞ் செங்கேழ்
அவிர்மணித் திலக மீக்க ணலங்கிய விதானம் பட்டம்
இவர்கதி ரிலம்ப கந்தோ ரணமென வெழின்மிக் கீட்ட.

(இ - ள்.) குவிகின்ற மூலாதார முதலிய ஆருதாரமாகிய நிறத்தோடுகூடிய தாமரைமலர்களை மலரச்செய்யு மொளியைத் தன்னிடத்தே யுடைய முகமாகிய ஆறு சூரியர்களின் நடுவட் டங்குகின்ற சதாசிவப் பெருமான் றிருவுருவம், செந்நிறத்தோடுகூடிய விளங்குகின்ற இரத்தின திலகமாகும். (திலகத்தினுக்கு) மேலாக நெற்றிக்கண் விளங்குகின்ற மேற்கட்டியாகும். நெற்றிப்பட்டமும் கதிரெழுகின்ற நெற்றிச் சூட்டும் தோரணமென்று சொல்லும்வண்ணம் அழகினை மிகுதமாக வளவாக்க.

(வி - ம்.) ஆருதாரமாகிய தாமரை மலர்களை விரியச் செய்யும் ஆறுமுகமாகிய பருதியென்க. ஆறுதிலகமும் அவ்வறுமுகப் பருதி நடுவட்டங்கிய ஆறு சதாசிவ வடிவமாகும். சூரியமண்டலத்திற் சிவபெருமானெழுந்தருளியிருத்தலை "அன்ன மண்டபத் தங்கணோர் பகல், மின்னுஞ் செங்கதிர் வேதிகை யொன்றின்மேன், மன்னு செங் கதிர் மண்டலத் துற்றன, னென்னவந்தங் கிருந்தனனென்பவே" என்னும் பிரபுலிங்கலீலைச் செய்யுளானறிக. இலம்பகம் - நெற்றிச்சூட்டு. இதனை, "கரும்பணி வளவயற் காமர் தாமரை, வரம்பணைந் ததனுதற் கிடந்த வார்செறி, லரங்கணி நாடக மகளி ராய்நுதற், சுரும்புசூ ழிலம்பகத் தோற்ற மொத்ததே" என்னுஞ் சிந்தாமணி (கேமசரி-௩௪) செய்யுளா னறிக. தலைக்கோல மென்பர் நச்சினார்க்கினியர். (எஅ)

உதரபந் தனவோ ராழி யொளியுரப் பலகைப் பல்கைப்
பிதிருறுப் பெறுழ்த்தோட் சேக்கைப் பிணைமுகப் பரிதி பொற்றேர்க்
கதிர்மணிக் கிடுகு கூம்பு கவினிய மேற்போக் கென்ன
முதிர்மணி தெரிந்து செய்த முயங்கொளி மோலி வாய்ப்ப.

(இ - ள்.) இடையிற்கட்டும் உடையாகிய சக்கரத்தினையும். ஒளியோடுகூடிய மார்பமாகிய பலகையினையும், பன்னிருகரங்களாகிய சுற்றுறுப்புக்களினையும் தோளாகிய ஆசனத்தினையும் ஒன்றினோடொன்று பின்னிய முகமாகிய சூரியனது அழகிய தேரின் ஒளிபொருந்திய அரதனங்க ளிழைத்துச் செய்யப்பெற்ற மரச்சுற்றும் மொட்டும் பொருந்திய மேற்போக்கென்று சொல்லும்வண்ணம் ஒளிமுதிர்ந்த அரதனங்களை யாராய்ந்தெடுத்துச் செய்த ஒளிகலந்த கிரீடம் பொருந்த.

(வி - ம்.) உதரபந்தனமாகிய ஒரு சக்கரத்தினையும், உரமாகிய பலகையினையும், கரங்களாகிய சுற்றுறுப்புக்களினையும் தோளாகிய இருப்பினையுமுடைய பொற்றேரென்க. சேக்கை - தண்டுத் தேரின் நடுவணிடுமாசனம். முகப்பரிதி - முகமாகிய சூரியன். கிடுகு-தேரின்

மரச்சுற்று : இதனை "கிடுகுதேர் மரச்சுற்றுரும்" என்னும் நிகண்டா னறிக. மௌலி - கிரீடம். கூம்பு - தேர்மொட்டு. (௭௯)

அணிபரித் தொழுகி வார்ந்த வயிர்மணிச் செவிகள் சுற்றில்
பிணிமணி வடங்க டுக்கிப் பிறக்கிய தெனக்க வித்த
மணிமுடித் தேர்மேற் போக்கின் வார்கொடிக் குழாங்க ளாங்குத்
தணிவற வெழுந்து துள்ளுந் தண்கதிர்க் கொழுந்து காட்ட.

(இ - ள்.) விளங்குகின்ற செவிகள் ஆபரணங்களைத் தாங்கிமிகத் தொங்குவன. தேரின் சுற்றுப் பக்கங்களிற் பிணிக்கப்பெற்ற அழகிய சுபிறுகளைக் கட்டி விளக்கியதென்று சொல்லச், சூட்டப்பெற்ற அரத னங்கள் பதித்த முடியாகிய தேரின் மேற்பாகத்துள்ள நீண்ட கொடிக் கூட்டங்களை அம்மேலிடத்தே ஒழிவில்லாமல் எழுந்து துள்ளுகின்ற குளிர்ச்சிபொருந்திய கிரணங்களினெழுச்சி காட்டாநிற்க.

(வி - ம்.) செவிகள் அணியைத் தாங்கிவார்ந்தனவென முடிக்க. சுற்றின் - தேரின் சுற்றுப்பக்கத்தில். குழாங்களைக் கதிர்காட்ட வென்க. அம்முடியிற் பரித்துள்ள மணியின் கிரணக் கூட்டமென்க. பரித்து - தாங்கி. ஒழுகிவார்தல் - மிகுதியும் நீடல்; இதனை "வார்தல் போகல் ஒழுகல் மூன்றும்—நேர்தலும் நெடுமையுஞ் செய்யும் பொருள" என்னும் தொல்காப்பியச் (சொல் உரி) சூத்திரத்தா னறிக. தூக்கி - கட்டி. கவித்த - சூடிய. (௮0)

கருங்கடல் வரைப்பிற் செய்ய கதிரவ னெழுந்த தென்ன
ஒருங்கரத் தோகைக ளூறு மொண்சிறைக் கலாவ மஞ்ஞை
நெருங்குபல் வன்னப் புள்ளி நிகழ்வெரிந் தலையிற் றோற்றி
மருங்குபல் கணமுஞ் சூழ மலரவ னெதிரே சென்றான்.

(இ - ள்.) கரிய கடலினிடத்துச் செம்மைநிறம் பொருந்திய சூரியன் றோன்றினாற்போல, ஒருசேரப் பாம்பின் கூட்டங்களைக் கொல் லும் ஒள்ளிய சிறையினையும், தோகையினையுமுடைய மயிலினது தோன்றினொடொன்று நெருங்குகின்ற பல நிறங்களோடுகூடிய புள்ளிகள் நிகழாநின்ற முதுகினிடத்துத் தோன்றிப் பலகணங்களும் பக்கத்தே சூழப் பிரமாவி னெதிரிற் சென்றான்.

(வி - ம்.) கடல் மயிலுக்கும், இரவி முருகனுக்கும் பண்புந் தொழிலும்பற்றிய உவமம். இதனை "உலக முவப்ப வலனேர்பு திரிதரு —பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாங்கு" என்னுந் திருமுருகாற்றுப் படை யடியானு மூரையானும், "நீல நெடுங்கொண்மூ நெற்றி நிமுறு றிக், காலை யிருள்சிக்கும் காய்கதிர்போற், கோல, மணித்தோகை மேற் றோன்றி மாக்கடற்சூர் வென்றோன்—அணிச் சேவடியெம் மரண்" எனும் இரும்பல்காஞ்சிச் செய்யுளானு மறிக. அராத்தொகை : விகாரம். ஊறும் - கொல்லும். வெரிந் - முதுகு. (௮௧)

விண்ணவர் சொரிபூ மாரி மெய்யெலா மினிமை யாக்கத்
தண்ணுமை பதலை தக்கை தகனிச்சங் குடமு ழாக்கள்

பண்ணிசை வீணை மற்றும் படர்செவிக் கினிமை யாக்க
உண்ணிறை தியான வேத னொளிர்விழி விடுத்துக் கண்டான்.

(இ - ள்.) தேவர்கள் சொரிகின்ற பூமழை திருமேனிமுழுது மினிய பரிசத்தை யுண்டாக்க, மத்தளமும், ஒருகட்பறையும், தக்கையும், தகுணிச்சமும், குடமுழாக்களும், பண்ணோடுகூடிய இசையை யுடைய வீணையு மேனைய பிறவும் விரிந்தசெவிகளுக் கினிமையைச் செய்ய உள்ளே நிறையினையுடைய தியானத்தோடுகூடிய பிரமன் ஒளிர்கின்ற விழிகளைத் திறந்து தரிசித்தான்.

(வி - ம்.) இனிமையாக்க - இனிமைப் பரிசத்தை யுண்டாக்க. தண்ணுமை - மத்தளம். பதலை - ஒருகட்பறை. தக்கையும் தகுணிச்சமும் ஒருவகை வாத்திய விசேடங்கள். விடுத்து - திறந்து. நிறை - மனதினைப் பொறியின்வழிச் செல்லாது நிறுத்தல். (அஉ)

கதுமென வெழுந்து தன்னுட் கருதிய வுருவிற் றோற்றும்
விதுவணி பெருமான் மைந்தன் விரைமலர்ப் போது தாழ்ந்து
குதுகலம் பொங்கக் கண்கள் கோட்டமெய் யிழுகு வெள்ளம்
முதுநில நனைப்பச் சூழ்ந்து முன்னின்று துதிகள் விண்டான்.

(இ - ள்.) விரைவாக வெழுந்து தன்னுள்ளத்தே தியானித்த திருவுருவத்தைப்போலத் தோற்றுகின்ற சந்திரனையணிந்த இறைவனது புத்திரனாகிய முருகக்கடவுளின் வாசனை பொருந்திய மலரையொத்த பாதங்களில் வணங்கி மகிழ்ச்சியுண்டாகக் கண்கள் நீரைக் கொட்டா நிற்க உடலினொழுகுகின்ற கண்ணீர் வெள்ளமானது முதிய நிலத்தினை நனையா நிற்பச் சந்நிதானத்தின்கண்ணே நின்று தோத்திரங்களைச் சொன்னான்.

(வி - ம்.) தன்னுட் கருதிய வுரு - தன்னகத்திற் றியானித்த திருவுருவம்போல. இன்:ஐந்தாவ தொப்புப்பொருள். குதூகலம் - மகிழ்ச்சி. (அ௩)

வேறு

வானுதி பூத முதலான யாவும் வருவித் தளித்தி யவைமற்
றூனுத வாவி தொழிலிற் கிளர்ப்ப வடைவிற் புணர்த்தி யவையாய்
ஊனுதி யூனி னுயிராதி யெண்ணி லுயிருக்கு ணின்ற வுணர்வும்
தானுதி நின்னை யருளாகி நின்ற தவரன்றி யாவ ரறிவார்.

(இ - ள்.) வானினை முதலாகக்கொண்ட பூதமுதலான எல்லாப் பொருள்களையும் படைத்துக் காக்கின்றாய். அப்பூத முதலிய பொருள்களை எண்ணிலமையாத வுயிர்கள் சகலாவத்தையிற் பொருந்தும் வண்ணம் முறைப்படி யுடலாகச் சேர்க்கின்றாய். அப்பூதங்களாகி, அப்பூதங்களாலாகிய உடம்புமாகின்றாய். அவ்வுடம்பின்கண்ணுள்ள உயிருமாகின்றாய். அளவிடப்படாத வுயிர்களினுள்ளே நின்ற அறிவுமாகின்றாய். நின்னை நின்மல துரியாதீதத்தின்கண் ஏகனாகி யிறைபணி நின்ற சிவன் முத்தரன்றி வேறியாவ ரறியவல்லுநர்.

(வி-ம்.) தொழிலிற்கிளர்ப்ப - சகலாவத்தையடைய. அவையாய் - அப்பூதங்களாய். ஊன்-ஆகுபெயர். அவையடைவிற்புணர்த்தி- அவ்வைம்பூதங்களை (சகலாவத்தையிற் கொணர) முறையாகவுடலைச் செய்கின்றாய். இகரம்: நிகழ்காலங் காட்டிற்று. இதனை, வருதி பெயர்தி வருந்துதி துஞ்சாய்,—பொருதி புலம்புதி நீயுங் கருதுங்கால், பண்டினையை யல்லையாற் பாழித்தோட் கோதையைக், கண்டனையோ வாழிகடல்" என்னு முத்தொள்ளாயிரச் செய்யுளானறிக. தான்:அசை. அருளாகி நின்ற தவர் - நின்மல துரியாதீதத்தின் கண்ணே நின்ற சீவன் முத்தர். (அ௬)

துறைநயத்து வாவும் வடிவென்ன மொய்த்தி துகடீரு மைந்து மனுவும்
வதிவுற்றி யக்கு முடலிற் பணித்தி வளரைந்தொ ழிற்கு முதலாய்க்
கதுவுற்ற வொன்ப துருவுங்க லத்தி கழலாத காய மறிவாத்
ததைகிற்றி நின்னை யருளாகி நின்ற தவரன்றி யாவ ரறிவார்.

(இ-ள்.) ஒன்றினோடொன்று முறையாகப் பொருந்திய மந்திரம், பதம், வர்ணம், புவனம், கலை, தத்துவமென்னும் ஆறத்துவாவினையும் திருவுருவென்று சொல்லும் வண்ணம் பொருந்துகின்றாய். ஆன்மாக்களிடத்துப் பொருந்திய குற்றம் நீங்குதற்கேதுவாய வஞ்சப்பிரம மந்திரங்களை எழுந்தருளியிருந்து (எவற்றையுமியக்கும்) திருமேனிபோலவமைந்தனை. வளர்கின்ற படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளலென்னு மைந்தொழிலுக்கு முதற்காரணமாய்ப் பொருந்துகின்ற ஒன்பது வடிவங்களினும் பொருந்துகின்றாய். நீங்காத திருவுருவும் அறிவாகப் பொருந்தி நிற்கின்றாய். நின்னை நின்மலதுரியாதீதத்தின்கண் ஏகனாகி யிறைபணிநின்றசீவன்முத்தரன்றி வேறி யாவரறிய வல்லுநர்.

(வி-ம்.) அத்துவா - வழி. "அத்துவா மார்க்கத்துள்ளா னலனிவனருமை தன்னை" என்னுஞ் சிவஞானசித்தித் திருவிருத்த வடியானுணர்க. ஐந்துமனு - பஞ்சப்பிரம மந்திரம், ஐந்து பிரம மந்திரங்கள்; இம்மந்திரங்களிறைவன் றிருவுருவாதலை "மந்திரமதனிற் பஞ்ச மந்திர வடிவமாகத் தந்திரஞ்சொன்ன" என்னுஞ் சிவஞானசித்தித் திருவிருத்தத்தி னடிகளா னுணர்க. ஒன்பதுரு-உருவத்திருமேனி நான்கு, அருவத்திருமேனி நான்கு, அருவுருவத்திருமேனியொன்று ஆக ஒன்பதுங் கண்டுகொள்க. கழலாத காயம் அறிவாகவென மாற்றுக. கில் ஆற்றலுணர்த்தும் இடைநிலை. "அவ்விடத்தவரையார் காண்கிற்பார்" எனும் சிலப்பதிகாரம் (கொலைக்களை) அடியானு முரையானு முணர்க. (அ௯)

கலைகற்றி லாமை யிளமைக்க ணிற்றி
கலைமுற்று ணர்த்து முதிய
நிலைமைக்க ணிற்றி நிகழ்வேத மங்க
முதலாக நீடு கலைகள்
மலைவற்று ணர்த்து பொருண்முற்று மாதி
யவையொன்று மன்றி வளர்மெய்த்
தலைநிற்றி நின்னை யருளாகி நின்ற
தவரன்றி யாவ ரறிவார்.

(இ - ள்.) கலைகளைக் கற்காத நிலைமையையுடைய இளமைப் பருவத்தின்கண்ணே நிற்கின்றாய். நால்கண் மூற்றிலும் செவிபறிவுறுத்தும் முதுமைப் பருவத்தின் கண்ணும் நிற்கின்றாய். உலகத்தில் இயங்குகின்ற வேதாங்கங்களும் முதலாக மிக்க நூல்கள் மலைவில்லாமலுணர்த்தும் பொருளெல்லாமாகின்றாய். இவைகளொன்றுமில்லாமல் வளர்கின்ற சத்துப்பொருளாகி நிற்கின்றாய். நின்னை நின்மலதுரியாதீதத்தின்கண் ஏகனாகி நின்ற சிவன் முத்தரையன்றி வேறியாவ ரறியவல்லுநர்.

(வி - ம்.) மெய் - சத்து. இளமைப்பருவமும் முதுமைப் பருவமுமுடையவனாகவு மிருக்கின்றாயென்பார் "இளமைக்கணிற்றி, முதியநிலைமைக்கணிற்றி" என்றார். (அசு)

இழிவுற்ற டுத்த மலகேவ லத்தி னிணர்வாய்ந்த லர்ந்த தருவின்
அழலொத்தி யாவி யுருவாதி யோடு மணைவுற்ற போது சிலையின்
நிழலக்க திர்க்கு மனலொத்தி யன்ன நிகழாத விட்டி னயமார்
தழலொத்தி நின்னை யருளாகி நின்ற தவரன்றி யாவ ரறிவார்.

(இ - ள்.) கீழாந்தன்மை யடைந்து பொருந்திய (உயிரானது உடலோடு கூடாமலிருக்கின்ற) நித்திய கேவலாவத்தையின்கண் பூங்கொத்துக்கள் பொருந்தப்பெற்று மலர்தலைச் செய்த மரத்தின் கண்ணுள்ள தீயினை யொத்திருக்கின்றாய். உயிர், தனு, கரணங்களோடு பொருந்திய சகலாவத்தையின்கண் கல்லின் ஒளியையுடையனவாகத் தோன்று தீயினையொத்திருக்கின்றாய். இக்கேவலமும் சகலமும் நிகழாத தன்னியல்பி னிற்றலாகிய வீட்டின்கண். இரும்பினிடத்துப் பொருந்திய தீயினையொத்திருக்கின்றாய். நின்னை நின்மல துரியாதீதத்தின்கண் ஏக னாகிநின்ற சிவன் முத்தரையன்றி வேறியாவரறிய வல்லுநர்.

(வி - ம்.) "விறகிற் றீயினன் பாலிற்படு நெய்போல், மறையநின்றுளன் மாமணிச் சோதியான், உறவு கோனட் டுணர்வு கயிற்றினால், முறுக வாங்கிக் கடையமுன் னிற்குமே" என்னும் அப்பர் திருவாக்கினுணரத்தக்கது. கேவலாவத்தையிற் றனுகரணங்களின்மையி னறிவிச்சை செயனிகழாமை நோக்கி இறைவன் கலப்புற்றிருந்தும் வெளிப்படாமை கருதி "தருவினழலொத்தி" எனவும், சகலாவத்தையில் அறிவிச்சை செயல்கள் நிகழ்தலின் இறைவன் விளக்கம் ஏகதேசமாகத் தோன்றலின் "சிலையினிழலக்கதிர்க்கு மழலொத்தி"எனவும், முத்தியின் கண்ணே பசுகரணங்களெல்லாம் பதிகரணங்களாக ஏகனாகி நிற்றலின் "அயமார்தழலொத்தி" எனவும் கூறினார். மலகேவலம் - நித்தியகேவலம். ஆவி - ஆன்மா. உருவாதி - தனுகரணங்கள். சிலை - கல். நிழல் - ஒளி. அன்ன - கேவல சகலாவத்தைகள். அயம் - இரும்பு. (அஎ)

இருளத்து லப்பி லுயிர்மூழ்கி நிற்ப வியல்விச்ச தேது மிலதாக்
கருணைத்தி றத்தி னலகற்ற வாவி கருவிப்ப டுத்தி கருவி
மருவுற்ற வற்று ளுயிர்சில்ல வாங்கி மயரற்ற சுத்த நிலையில்
தருகிற்றி நின்னை யருளாகி நின்ற தவரன்றி யாவ ரறிவார்.

(இ - ள்.) அநாதி கேவலத்தின்கண் கெடுதலில்லாத வுயிர்கள் தனுகரணங்களோடு கூடாது) மூழ்கி அறி வோர்சிறிது மிலவா

யிருக்க (அவ்வுயிர்கண் மாட்டுக்கொண்ட கைம்மாறில்லாத) கருணையின் றன்மையால் எண்ணினு லளவிட முடியாத உயிர்களைக் கருவிகரணங்களோடு (சகலாவத்தையிற்) சேர்க்கின்றாய். அங்ஙனம் தனுகரணங்களைப் பொருந்திச் சகலத்தில் வந்த உயிர்களுள் வைத்துச் (சத்திநிபாத முற்ற) சிலவுயிர்களைக் கருணைக்கையாலெடுத்து மயக்கமில்லாத சுத்தாவத்தையின்கட் கொடுவந்து சேர்க்கின்றாய். நின்னை நின்மல துரியாதீதத்தின்கண் ஏகனாகி நின்ற சிவன் முத்தரையன்றி வேறியாவரறிய வல்லுநர்.

(வி - ம்.) கேவலாவத்தையின்கண் ணுயிர்கள் கட்டுண்டிருக்கு ஞான்று இறைவனை வழிபடற்குரிய கருவிகரணங்களின்றாயிருக்க அந்நிலையிற் றனது கைம்மாறில்லாத பெருங்கருணைத் திறத்தினால் காரணமின்றி அவ்வான்மாக்களுக்குத் தனுகரணங்களைத்தந்து சகலாவத்தையிற் கொணர்ந்தானென்பார் "இயல்விச்ச தேதுமிலதாக் - கருணைத்திறத்தினாலேற்ற வாவி கருவிப்படுத்தி"யென்றார். அவ்வாறிறைவனீந்த தனுகரணங்களைப்பெற்றுத் தன்னையுந் தலைவனையுமறிந்து சத்திநிபாதமுற்ற வுயிர்களைச் சுத்தாவத்தையிற் கொணர்ந்தானென்பார் "கருவி மருவுற்ற வற்றானுயிர்சில்லவாங்கி மயரற்ற சுத்தநிலையிற் றருகிற்றி" என்றார். வித்து: விகாரம் விச்சு. விச்சு - ஞானம். அது காரணமென்பதுபட நின்றது. இருள் - கேவலாவத்தை. அத்து - சாரியை. கருவி - தனுகரணங்கள். சுத்தநிலை - சுத்தாவத்தை. (அஅ)

திளைமாயை மோக வினையிற்பி ணைந்த செறியாவி யின்ப நிலையில்
வளையாவி டுப்ப வுருமூன்றெ டுத்தி வழியூடு கைத்து நலனை
விளையாவ ளித்தி வினையொப்பு றுத்தி வினைமாயை மூல மலநோய்த்
தளைவிழ்த்தி நின்னை யருளாகி நின்ற தவரன்றி யாவ ரறிவார்.

(இ - ள்.) அநுபவிக்கின்ற மாயாமலத்தினும், மயக்கத்தைச் செய்கின்ற கன்மமலத்தினும் பின்னிக்கிடக்கின்ற (உடம்பிற்) செறிந்த உயிர்களைப் போக நிலையின்கண் வளைத்து விடுக்க அயனரியரனென்னு மூன்று திருவுருவங்களை யெடுக்கின்றாய். (அவ்வுயிர்களை) நன்னெறிக்கட் செலுத்தி இன்பத்தினை விளைத்து அளிக்கின்றாய். இருவினைச் சமஞ் செய்து, கன்மமலமும் மாயாமலமும் ஆணவமலமுமென்ற பிணியாகிய பந்தத்தினை நீக்குகின்றாய். நின்னை நின்மலதுரியாதீதத்தின்கண் ஏகனாகி யிறைபணி நின்ற சிவன் முத்தர்களையல்லாமல் வேறியாவரறிய வல்லுநர்.

(வி - ம்.) வழி - நன்னெறி. வினையொப்பு - இருவினைச்சமம். வினை - கன்மமலம். மூலமலம் - ஆணவமலம். (அகூ)

உயங்கப்பி ணிக்கும் வினையுங்க ரந்து ளுடனாய்மு டித்தி யதனை
வயங்கத்தெ ரித்தி மறுகத்த கர்த்தி வளராமை நூலின் முறையின்
இயங்கப்பு குத்தி யெரிகும்பி யூடு மினைவித்தி தோய்த லிலையாய்த்
தயங்குற்றி நின்னை யருளாகி நின்ற தவரன்றி யாவ ரறிவார்.

(இ - ள்.) (ஆன்மாக்கள்) வருந்தப் பந்தித்தற்கேதுவாகிய தொழிலினை அவ்வான்மாக்களினகத்தே மறைந்துடனாய் நின்று முடிக்கின்றாய்.

(அங்ஙன முடித்தும் அத்தொழிலைச் செய்தவன் இறைவனேயென அவ்வான்மாக்கள்) அறியும்படி யதனைத் தெரிவிக்கின்றாய். (அத்தொழிலின் பயனை யவ்வான்மாக்கள் நுகருமாறு செய்து வருந்தும்படி தண்டிக்கின்றாய். அவ்வினைப்பயன் மிகாவண்ணம் அவ்வான்மாக்களை (நீ திருவாய்மலர்ந்தருளிய வுண்மை நூலின்) வழியிற் செலுத்துகின்றாய். அங்ஙனம் நான்மார்க்கத்தின்கட் செல்லாத வான்மாக்களை (வினைக்குத் தக) நரகத்தினிடத்தும் வருத்துகின்றாய். (இவ்வாறுடனாய் நின்று யாவையும் செய்தும்) சகுடபத்திர வுதகம்போல அவையொன்றும் நின்னைச் சிறிதும் தாக்காதவண்ணம் விளங்குகின்றாய். நின்னை நின்மல துரியாதிதத்தின்கண் ஏக னாகி யிறைபணி நின்ற சிவன்முத்தரை யல்லாமல் வேறி யாவரறிய வல்லுநர்.

(வி - ம்.) வினை - தொழில். கும்பியூடும் என்றவும்மை இறந்தது தழீஇய வெச்சவும்மை. (௧0)

வழிநின்று நன்று புரிகால தன்றன் வழிபோலு டற்று பயனும்
குழிநிற்ப வுய்த்தி கொடுமைத்தி றங்கள் குயில்கால வற்றின் வழிபோற்
பழியற்று ணர்த்து பயனும்பு ணர்த்தி பயனென்று ருத திறமும்
தழிநிற்றி நின்னை யருளாகி நின்ற தவரன்றி யாவ ரறிவார்.

(இ - ள்.) நானெறியிலே நிலைபெற்றுப் புண்ணியங்களைச் செய்யும்போழ்து அப்புண்ணியப் பயன்போலவே வருத்துதற்கேதுவாகிய தீவினையின் பயன்களும் குழுமிநிற்கும் வண்ணம் சேர்க்கின்றாய். தீவினையின் வகைகளைச் செய்யும்போழ்து அத்தீவினையின் பயன்கள் போலவே, தன் மாட்டொரு பழியுமின்றாக நூல்களாலுணர்த்தப்படும் இன்பப் பயனையுஞ் சேர்க்கின்றாய். இன்பதுன்பமாகிய இருவகைப் பயனுமெய்தாத வினைக்கூறுகளையுந் தழுவுவித்து நிற்கின்றாய். நின்னை நின்மல துரியாதிதத்தின்கண் ஏகனாகி யிறைபணி நின்ற சிவன் முத்தரன்றி யாவரறிய வல்லுநர்.

(வி - ம்.) வழி - நானெறி. நன்று - புண்ணியம். அதன்றன் வழிபோல் - அப்புண்ணியப் பயன்போல. உடற்றுபயன் - துன்புறுத்துகின்ற தீவினைப்பயன். குழுவி நிற்பவென்பது விகாரம். கொடுமைத்திறங்கள் - தீவினையின் வகைகள், குயில்கால் - செய்யுமிடத்து. அவற்றின் வழிபோல் - அத்தீவினைகளின் பயன்போல. பழியற்று-தன்னிடத்துப் பழியின்றாக. பழியற்று எச்சத்திரிபு. உணர்த்துபயன்-நூல்களாலுணர்த்தப்படு மின்பப் பயன். பயனொன்றுறுத்திறம் - இன்பத்துன்பமாகிய இருவகைப்பயனு மெய்தாத வினைப்பகுதிகள். தழுவியென்பது விகாரம். இச்செய்யுளில் "புண்ணியம் பாதகமாகப் போற்றி" என்னுஞ் செய்யுளின் கருத்தமைந்திருத்தல் காண்க. (௧௧)

நாளுற்றெ ழுந்த மதிபோன்ம லங்க ணலியத்து ரந்து வருதி
வாளுற்ற செய்ய சுடர்போல முற்று மடியக்கி வர்ந்து நிமிர்தி
ஆளத்த விர்ந்த திருமேனி தன்னை யழலம்பி ழம்பி னறியத்
தாளுய்த்தி நின்னை யருளாகி நின்ற தவரன்றி யாவ ரறிவார்.

(இ - ள்.) முதனாண் முதலாகப் பொருந்தித் தோன்றுகின்ற மூற்பக்கத்துத் திங்கள்போல மலங்களை யவற்றின் சத்தி தேயும் வண்ணம்

நீக்கிவருகின்றாய். ஒளிபொருந்திய செம்மை நிறத்தினையுடைய கிரணங்களோடு கூடிய சூரியனைப்போல அச்சந்திரனால் நீங்காத மலவிருள் முழுதுங்கெட விளங்கித் தோன்றுகின்றாய். ஆன்மாக்களாகிய வெளியேங்களை யடிமைகொள்ள எழுந்தருளிய திருவுருவினை அங்கியின் றிரட்சிபோலச் சோதிவடிவாக அடியேங்கள் அறியும்வண்ணம் முயற்சியின்கட் செலுத்துகின்றாய். நின்னை நின்மல துரியாதீதத்தின்கண் ஏகனாகி யிறைபணிநின்ற சீவன் முத்தரையன்றி வேறி யாவரறிய வல்லுநர்.

(வி - ம்.) நாளூற்று - முதனாண்முதலாகப் பொருந்தி. மதி - வளர்பிறைப் பக்கத்துத் திங்கள். மதி யொவ்வொருநாளுங் கலைமிகப் பெற்று இருளினை நீக்குமாறுபோல திரோதானசத்தி வீழ்ச்சியுளவாகச் சிறிது சிறிதாக மலம் நீக்குகின்றாயென்பார். "நாளூற்றெழுந்த மதிபோன் மலங்கள் நலியத் துரத்தி" யென்றார். செஞ்சுடர் தோன்றிய பொழுதத்தே யிருண்முழுதும் நீங்கிப் பொருள் பொறிகளுக்கு விடயமாதல்போல திரோதான சத்தியருட் சத்தியாக மாறிநிற்கச் சிவத்துவம் விளங்கலின் "வாளூற்ற செய்யசுடர்போல முற்றுமடியக் கிளர்தி" யென்றார். இதனை "மதிவளம் படைத்து நாளும் வளரிருள் சீக்குமாபோல்—கதிவளம் படைக்குந் தூய கருணையெவ் வுயிர்கண் மாட்டும் —பதிவளம் படைத்துப் பாசம் பாற்றவெய் யவனிற் றோன்றிப்—பொதிவளம் படைக்கு மின்பப் பூரணப் பொருளைத் தாழ்வாம்" என்னுந் திருவானைக்காப் புராணச் செய்யுளா னறிக. தவிர்ந்த - ஈண்டெழுந்தருளிய. திருமேனி - ஆசிரியன் றிருவடிவம். தாள் - முயற்சி. (௩௨)

பகைசெய்து நிற்கு முலகேது முள்ளம் படராத வண்ண மொளியின்
மிகைசெய்தி ருத்தி யுடலூழெ னைத்தும் விரவாமை யேற்று நுகரா
வகைசெய்து நிற்கு மறிவுங்கெ டுத்து மறியாமை யின்ப நிலையில்
தகைசெய்தி நின்னை யருளாகி நின்ற தவரன்றி யாவ ரறிவார்.

(இ - ள்.) (ஏகனாகி யிறைபணிநின்ற சீவன்முத்தர்களுக்கு) விரோதத்தினைச் செய்துநிற்கின்ற உலகின்கண் மனமானது சிறிதுஞ் செல்லாதவண்ணம் ஞானத்தின் மேம்பாட்டினைச் செய்து, எழுந்தருளியிருக்கின்றாய். உடம்பு முகந்துகொண்ட பிரார்த்தவினை முழுவதும் (உலகியலின்கண் டோயாத வுயிர்கண்மாட்டுப்) பொருந்தாமல் நீயே ஏன்றுகொண்டு (அதனை யவ்வுயிர்கள்) அனுபவியாதவண்ணஞ் செய்து அருளான் முதலென்று நிற்குமறிவையுங் கெடுத்துச் சிவபோக நிலையின்கண் நின்று நழுவாமல் நிலைபெறுத்துகின்றாய். நின்னை நின்மல துரியாதீதத்தின்கண் ஏகனாகி யிறைபணிநின்ற சீவன்முத்தரையன்றி வேறியாவ ரறியவல்லுநர்.

(வி - ம்.) உலகு - ஏழாவதன் றொகை. ஏதும் - சிறிதும். படராத - செல்லாத. ஒளியின் மிகைசெய்தி - ஞானத்தின் மிகுதிப்பாட்டைச் செய்கின்றாய். உடலூழ் - உடம்பு முகந்துகொண்ட பிராரத்த வினை. ஏற்று - நீ யேன்றுகொண்டு. நுகராவகை - (அதனை யவ்வுயிர்கள்) அநுபவியாவண்ணம். நிற்கும் அறிவு - அருளான்முதலென்றுநிற்கு முணர்வு. மறியாமை - நழுவாமை. இச்செய்யுளின் கருத்தை "அறியாமை யறிவகற்றி யறிவினுள்ளே யறிவுதனை யருளி" என்னுஞ் சிவஞானசித்தித் திருவிருத்தத்தா னுணர்க. ஊழ் உண்டாவதற் குடலேதுவாகலின், "உடலூழ்" எனினுமாம். (௩௩)

கலங்காத நின்மெய் யருளிற் புகாத கலதிக்கு ணத்தி ழுதையேன்
விலங்கோடி ணைந்து மதியாத குற்றம் விரவாமை யன்று கயிலை
நிலங்காதி விட்டி யருள்செய்யும் வைப்பு நிமிர்பூர ணங்கி ரியெனுந்
தலங்கோடி நின்னை யருளாகி நின்ற தவரன்றி யாவ ரறிவார்.

(இ - ள்.) ஒன்றினுக்குங் கலங்குத லடையாத பெருமான் மெய் யருளின்கண்ணே செல்லாத கலககுணத்தையுடைய அறிவின்மையோடு கூடிய வடியேன் (செய்வதுந் தவிர்வது முறுவதுமறியாத) விலங்கினை யொத்து மதியாத குற்றத்தினைப் பொருந்தாமல் அக்காலத்தே கைலை மலைக்கண் அக்குற்றத்தினுக்குத்தக வொறுத்துவிட்டாய். எளியேனுக் கருள்செய்யு மிடமாக உயர்ந்த சிபூரணகிரி யென்னுந் தலத்தினை யிடமாகக் கொண்டாய். நின்னை நின்மல துரியாதீதத்தின்கண் ஏக னாகி யிறைபணி நின்ற சிவன்முத்தரையன்றி வேறியாவ ரறியவல்லுநர்.

(வி - ம்.) கலதி - கலகம். இழுதை - அறிவின்மை. காதி - தண்டஞ்செய்து. விலங்கோடிணைந்து - விலங்கை யொத்து. வைப்பாக வென்னுஞ் செயவெனெச்சத் திறுதொக்கது. (௯௯)

வேறு

வேத மத்தக மளைந்துகி டந்த விழுப்பெ ருந்துதியெ டுத்துந வின்று
பேதை மைக்குணமி குத்தக ருத்தாற் பீடி லாதசிறு நாயடி யேன்செய்
ஏத மத்தனையு மின்றுபொ றுத்திங் கின்ன ருட்கருணை நல்குதி யென்று
மாதர் பொற்கமல பீடிகை மேலான் மறுவ லுங்கழல்ப ணிந்துநி மிர்ந்தான்.

(இ - ள்.) வேதத்தினுச்சியிற் கலந்து கிடக்கப்பெற்ற மிகச் சிறந்த தோத்திரங்களை யெடுத்துக்கூறி அறியாமைக்குண மிகப்பெற்ற எண்ணத்தினால் பெருமை யில்லாத நாயினுங்கீழான அடியேனிழைத்த குற்றமனைத்தினையும் இன்றுபொறுத்து இனியருளோடுகூடிய கருணையைக் கொடுப்பாயென்று காதலைத் தருகின்ற பொன்மயமாகிய தாமரை யாசனத்தின்மேலுள்ள பிரமன் மறுபடியுந் திருவடியை வணங்கி யெழுந்தான்.

(வி - ம்.) மத்தகம் - உச்சி. அளைந்து - கலந்து. மறுவலும் - மறுபடியும். மாதர் - காதல். தொல்காப்பியச் சூத்திரத்தா னறிக. நிமிர்ந்தான் - எழுந்தான். (௱)

மரக தக்கதிர்த ழைத்தக லாப
மஞ்ஞை மீதுவரு மஞ்ஞையொ டொப்பான்
வரந விற்றுதிவ ழங்குது மென்னு
மகிழ்சி றந்துதிரு வாய்மலர் விண்டான்
பரவு வேதன்மகிழ் கூர்ந்துப டைக்கும்
பண்பெ னக்கருள்க வென்னவ வித்து
விரவு பண்புடையை யின்னும்வ ரங்கள்
வேண்டு கென்னவயன் வேண்டுத லுற்றான்.

(இ - ள்.) மரகதமணியின் கிரணங்கள் தழைத்தாற்போன்ற தோகையோடு கூடிய மயின்மீது எழுந்தருளி வருகின்ற தாயையொத்த வளுகிய முருகக்கடவுள் (நீ விரும்பிய) வரத்தினைச் சொல்லுதி கொடுப்போமென்று மகிழ்ச்சி மிகப்பெற்று அழகிய வாயாகிய மலரைத் திறந்து கூறினன். துதிக்கின்ற பிரமன் மகிழ்ச்சி மிகப்பெற்று உலகத்தை யுளவாக்குந் தன்மையை எளியேனுக் கருள்செய்யக் கடவாயென்ன அதனைக் கொடுத்து, எம்மாட்டுக் கலந்த தன்மையையுடையை இன்னும் வரங்களை வேண்டிக் கோடல் செய்வாயாக என்று திருவாய் மலர்ந்தருளப் பிரமன் வேண்டிக்கோடல் செய்தான்.

(வி - ம்,) வேண்டுக வென்பது விகாரம். அஞ்ஞை - தாய். வேதன் - பிரமன். (௬௬)

வேட்ட நல்வரம ளித்துவி டுக்கும்
விறி லார்கள்பலர் விண்ணவர் மாட்டும்
வேட்ட நல்வரம னைத்தும்வ ழங்கார்
வேட்ட மாத்திரைவி ளைப்பவர் சில்லோர்
வேட்ட நல்வரம ளித்ததன் மேலும்
வேறு நல்வரம்வி னவிய ளிப்ப
வேட்ட வண்ணல்கரு ணைத்திற நோக்கி
விம்மி தப்புணரி விம்முழு ளத்தான்.

(இ - ள்.) (தவத்தினைச் செய்வோர்) விரும்பிய நல்ல வரங்களைக் கொடுத்து விடுத்தலைச் செய்யுந் தலைமையிலர்களாகிய விண்ணவர்களுள் வைத்து விரும்பிய நல்லவரங்களனைத்துங் கொடாராகி விரும்பிய வளவிற் கொடுப்பவருஞ் சிலராவர். விரும்பிய வரங்களைக் கொடுத்து அதன்மேலும் வேறாக நல்லவரங்களைக் கொடுக்க வினவி யளிக்க விரும்பிய தலைவராகிய முருகக்கடவுளது கருணைத் திறத்தைக் கருதி வியப்பாகிய கடல் பெருகப்பெற்ற வுள்ளத்தையுடைய பிரமன்.

(வி - ம்.) தவஞ் செய்வோர் வேட்டவரங்களை அளித்தனுப்பும் பெருமை யில்லாதவர் எனவே அவர்க்கு வரமளிக்குந் தன்மையின் றென்பது போதரு மென்க. வழங்கார் - முற்றெச்சம். விம்மிதம் - வியப்பு. புணரி - கடல். (௬௭)

சிறந்த பத்தியடி யேனின தாளிற்
செல்வ நல்குரவி னும்புரி வாழ்வு
மறந்து நின்னடியார் மாட்டுமி கந்த
மதிப்பு ருமையும்வி ருத்தபு ரிக்கண்
உறந்து வாழுநர்வெ றுக்கைய ராகி
உன்னு கின்றகதி யெய்தலு மங்கண்
அறந்த ழைத்தசிவ லிங்கமி றைஞ்சும்
அன்ப ரென்னுலக மெய்தலும் வேண்டும்.

(இ - ள்.) நின்னுடைய திருவடிகளிற் சிறந்த அன்பைச் செல்வக் காலையிலும் அல்லற் காலையிலுஞ் செய்கின்ற வாழ்க்கையும், நின்னை அடியார்களிடத்தில் மறந்தேனும் நீங்கிய மதிப்புளவாகாமையும், தணிகைமலையின்கட்டங்கி வாழ்கின்றவர் பெருஞ்செல்வத்தினை யுடையராகி நினைக்கின்ற பேற்றை யடையவும் அவ்விடத்து அறத்தினையே திருமேனியாகக்கொண்டு தழைத்திருக்கின்ற சிவக்குறியினை இறைஞ்சுகின்ற அன்பினையுடையார் என்னுடைய சத்தியலோகத்தை யடையவும் வேண்டும்.

(வி - ம்.) இகந்த மதிப்பு-மதியாமை. இதனை 'விட்டவண்டியர்' போலக் கொள்க. தணிகையை மூலாத்திரி எனக் கூறலான் 'விருத்தகிரி' யென்றார். உறந்த - தங்கிய. வெறுக்கை - செல்வம். உலகு - சத்தியலோகம். (௯அ)

இத்த லைப்படுதி ருத்தமெ னும்ம
எய்த வுந்தலைவ வின்றுவை காசி
ஒத்த பூரணைவி சாகம டுத்த
வொண்மை யாலிவைய டுத்துறு காலைப்
பைத்த விப்புனல்ப டிந்தவர் மும்மைப்
பாத கங்கள்பல வுந்தப நூறி
மெத்து செல்வமலி யென்னுல கெய்தி
வீற வுங்கருணை நல்குதல் வேண்டும்.

(இ - ள்.) இவ்விடத்துப் பொருந்திய தீர்த்தம் அடியேன் பெயரினைப் பொருந்தவும், இந்நாள் வைகாசித் திங்களோடு பொருந்திய பூரணையில் விசாகநாள் பொருந்திய மேன்மையால் இவை யொன்று சேர்ந்த காலத்துப் பரவிய இத் தீர்த்தத்தில் ஆடினோர்கள் மூவகையான் வருகின்ற பாதகங்க ளெல்லாவற்றையும், மிகக்கெடுத்து நிறைந்த செல்வம் பொருந்திய அடியேன் வாழ்கின்ற சத்திய லோகத்தை யடைந்து வேறொருவர்க்கில்லாத பெருமையடையவுங் கருணை செய்தல் வேண்டும்.

(வி - ம்.) பாதகம் மூன்று - பாதகம், உபபாதகம், அதிபாதகமாம். பாதகமாவது விலக்கியன செய்தல். உபபாதகம் - பாதகஞ் செய்வோனுக்குத் துணையா யிருந்ததனால் வருவது. அதிபாதகம்-தாய்க்கொலை முதலிய மாபாதகம். இதனை அகத்தியப் படலத்திற் காண்க. பைத்த - பரவிய. மெத்திய - நிறைந்த. (௯௯)

அளிய னிங்குநவி ருேத்திர மோதும்
அன்பு ளார்கவிதை நான்குந டாத்தும்
களிமி குங்கவிக ளாகிவ ளங்கள்
கஞலி யெப்பிணியு முப்புடை கண்டாங்
கொளிசெய் நின்னுலக மெய்தலும் வேண்டு
மொருவ வென்னவர முற்றும வித்து

நளிய ருட்புணரி யாங்கும றைந்து
நலத்த கோயிலினை நண்ணின னன்றே.

(இ - ள்.) எளியேனாகிய வடியேன் இவ்விடத்துக் கூறிய தோத்திரங்களை யன்புடன் கூறுகின்ற அன்புடையார்கள் ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரமென்னும் நான்கு பாவினையும் நடாத்துகின்ற களிப்பு மிகுந்த புலவர்களாகி எல்லாச் செல்வங்களு மெய்தப்பெற்று எவ்வகை நோய்களையும் புறங்கண்டு அப்பொழுதே ஒளியைச் செய்கின்ற பெருமான் எழுந்தருளியிருக்கின்ற கந்தவுலகத்தினை யடைதல் வேண்டும். ஒப்பற்றவனே யென்று கூற வேண்டிய வரங்களையெல்லாம் அளித்துச் செறிந்த அருட்கடலாகிய முருகப்பெருமான் திருவுருக்கரந்து நன்மையையுடைய கோயிலை யடைந்தான்.

(வி - ம்.) உப்புடைகண்டு - புறங்கண்டு.          (கOO)

பவள வாய்ச்சிறக ரோதிம மூரும்
பண்ண வன்களித ழைத்தன னேகித்
துவளி டைக்கலைம ஞட்டியொ டண்மித்
தோன்று போலுலக ளித்திட லுற்றுன்
குவளை பூத்தொளிரு மத்தகு தீர்த்தங்
கோத ரும்பிரம தீர்த்தமெ னும்பேர்
திவளி ரும்புகழி னேடுவி ளங்கித்
தேவ ரும்படிய நின்றதை யன்றே.

(இ - ள்.) பவழம்போன்ற வாயினையும் சிறகினையுமுடைய அன்னப்பறவையினைச் செலுத்துகின்ற பிரமதேவன் உவகை தழைக்கப் பெற்றவனாகிச் சென்று தளர்கின்ற இடையினையுடைய கலைமாதோடு பொருந்தி முன்போலச் சத்தியலோகத்தைக் காக்குந்தொழிலிற் பொருந்தினன். நீலோற்பல மலர்கள் பூக்கப் பெற்றொளிர்கின்ற அத் தகுதியுடைய தீர்த்தம் குற்றமற்ற பிரமதீர்த்தமென்னும் பெயர்பெற்று மிக்க புகழோடு விளக்கமுற்றுத் தேவர்களும் வந்து மூழ்கும்வண்ணம் நிலைபெற்றது.

(வி - ம்.) தொன்றுபோல் - முன்போல். திவள் - விளங்குகின்ற ஐ - சாரியை.          (கOக)

எப்பெ ருங்கலையு ணர்ச்சிய ரேனும்
எப்பெ ருந்துயரு ழந்தவி டத்தும்
அப்பெ ருந்துயர மீட்டும்வி ளைக்கும்
அத்த குந்தொழின்மு யங்குவ தன்றி
ஒப்ப ருந்தலைவன் மெய்யரு ளின்ப
வுததி மூழ்கும்வகை தன்னமு முன்னுர்
பப்ப ருந்துயர்பல் காலுமு ழந்தும்
பங்க யன்றெழிலை மீட்டனன் மாதோ.

(இ - ள்.) எவ்வகைப்பட்ட பெரிய நாரணார்ச்சியையுடைய பெரியாராயினும் (ஒரு தொழின் முயற்சியின்கண்ணாது கைகூடாது) எவ்வகைப்பட்ட பெரிய துன்பினை யநுபவித்த காலத்தும் அவ்வகைப் பட்ட பெரிய துன்பினை மீட்டுமுளவாக்கும் அத்தன்மைத்தாகிய தொழி லின்கண் மனமொழி மெய்கள் கலத்தலல்லாமல் ஒப்பற்ற இறைவன் மெய்யருளாகிய இன்பக்கடலின்கண் மூழ்குகின்ற மார்க்கத்தைச் சிறிதும் நினையார். ஆதலால் தாமரை மலரின்கண்ணுள்ள பிரமன் ஒப்பற்ற துன்பத்தினைப் பலகாலம் அநுபவித்தும் (முன்னிருந்த) படைத்தற் றொழிலினையே மீட்டனன்.

(வி - ம்.) தன்னமும் – சிறிதும். பப்பு - ஒப்பு. இதனைப் 'பப் பென்ப பரப்போ டொப்பாம்' என்னும் நிகண்டானும், 'பப்பற வீட்டிளிலிருந்து நின்னடியார்' என்னும் மணிவாசகர் திருவாக்கானு மறிக. இது வேற்றுப்பொருள் வைப்பணி. (௪0௨)

விண்ண வர்க்கவியி னின்பம்வி ளைத்து
மேதி னிக்குமுறை யாவும்வி ளைத்தும்
கண்ணு தற்பர னடித்துணை நாளுங்
காத லன்புவளர் பூசைவி ளைத்தும்
எண்ண மிக்கமுனி வீரய னேற்றங்
கெய்த ருந்தொழின்மை பெற்றமை சொற்றும்
அண்ண னந்திதவ மாற்றுபு செவ்வே
ளருள்கி டைத்தவுயர் காதைதெ ரிப்பாம்.

(இ – ள்.) விண்ணுலகத்தின்கணுள்ள தேவர்களுக்கு (யாகத்தி லிடும்) அவியாகிய இன்பினையுளவாக்கிப் பூமியின்கணுள்ள ஆன் மாக்களுக்கு ஒழுக்கமெல்லாவற்றையு முளவாக்கி, நெற்றியிற் கண் ணினை யுடைய இறைவனடித் துணையின்கண் அயராவன்பு வளர்தற் கேதுவாகிய பூசனையைச் செய்து மக்களெண்ணங்களின் உயர்ந்து விளங்குகின்ற முனிவர்களே! பிரமன் தவத்தினைச் செய்து அவ்விடத் துப்பிற ரடைதற்கரிய படைப்புத் தொழிலின் றன்மையைப் பெற்றமை யைக் கூறினும். இனிப் பெருமை பொருந்திய நந்தியெம்பெருமான் தவத்தினைச் செய்து செவ்வேளின் அருளினை யடைந்த கதையினைச் சொல்வாம். (௪0௩)

பிரமன் சிருட்டிபெறு படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் ௭௧௮

# நந்தி யுபதேசப்படலம்

மண்ணவருக் கிரும்புனலாய்த் தோன்ற நின்றே
　　மண்ணமிர்தும் விண்ணமிர்தும் வழாமை யாக்கும்
விண்ணவருக் கிருந்தீர்த்த மாகித் தோன்றி
　　விண்ணமிர்துஞ் சிவவுலகும் விரவ வுய்க்கும்
பண்ணரிய மாதவத்தோர்க் கருளாய்த் தோன்றிப்
　　பரபோக வமிர்தமாய்ப் பலியா நிற்கும்
நண்ணரிய புகழ்க்கடம்ப னழைப்ப நந்தி
　　நந்தினியாந் தத்துவா மிருதந் தானே.

(இ - ள்.) பொருந்துதற்கரிய புகழினையுடைய கடப்பமாலையை யணிந்த முருகப்பெருமானழைக்க நந்திக்கு மகிழ்ச்சியினை யுளவாக்குத லான் நந்தி நந்தினியென்னுந் திருப்பெயரினையுடைய தத்துவாமிர்த மென்னுந் தீர்த்தமானது பூமியின்கண்ணுள்ளவர்க்குப் பெரிய நீராகித் தோன்றி மண்ணினுக்குணவாகிய அமிர்தத்தினையும், விண்ணினுக் கவி யாகிய உணவினையும் முறைதவறு துளவாக்கும். தேவர்களுக்குப் பெரிய தீர்த்தமாகித் தோன்றி விண்ணுலகத்திலுள்ள அமிர்தத்தினையும், சிவலோகத்தினையுங் கலக்கச் செலுத்தும். செய்தற்கரிய தவத்தினை யுடைய முனிவருக்கு அருள்வடிவாகத் தோன்றி மேலாகிய போகமாகிய அமிர்தமாகிப் பலித்து நிற்கும்.

(வி - ம்.) நந்திக்கு மகிழ்ச்சியை யுளவாக்கலின் நந்தி நந்தினி யென்னும் பெயர்த்தாயிற்று. நந்தம் - மகிழ்ச்சி, அதனைச் செய்வதனுல் நந்தினியென்றாயிற்று. இதனை 'வம்பணி முலையி னுரும் மாழையு மண்ணு மெல்லாம், வம்பெனக் கடந்த நந்தி யின்னண மகிழ்ந்த வாற்றால், வம் பவிழ் மலரும் பொன்னு மணிகளு மணிந்து செல்லும், வம்பெழு நதிப் பேர் நந்தி நந்தினி யென்ப மாதோ'' என்னும் இப்படலம் (80) செய் யுளானறிக. நீர்பாய்தலான் உலகின்கண் ணுணவுப் பொருள்கள் விளைய அப்பொருள்களை யுயிர்களுண் டுடம்போடு காணப்பட்டு மேற் கதியினையெய்த வேள்வி வாயிலாகத் தேவர்கட் கவி கொடுத்தலின் 'மண்ணமிர்தும் விண்ணமிர்தும் வழாமை யாக்கும்' என்றார். இதனை 'வானின் றுலகம் வழங்கி வருதலாற் றானமிழ்த மென்றுணரற் பாற்று' என்னுந் திருக்குறளானு முரையானுமுணர்க. இறைவன் ஆன்மாக்க ளுய்யும் பொருட்டு மூர்த்தி தலந்தீர்த்தமென்னும் மூவுருக்கொண் டெழுந்தருளியிருத்தலின் இத்தீர்த்தம் தேவர்கள் படியின் தேவருலகத் தில் நீடுழிகாலம் வதியப்பெற் றின்பினை யனுபவிக்க வமிர்தத்தினையும், அவ்வுலக முடிவின்கட் சிவலோகத்தினையுந் தருதலின் 'விண்ணமிர்துஞ் சிவவுலகும் விரவவுய்க்கு' மென்றார். இத்தீர்த்தம் இறைவனருள்வடி வாகலின் மூழ்கியவுடன் மலநீக்கப்பெற்று வீட்டின்பத்தினை ஆன்மாக்க ளெய்தலின் 'அருளாய்த் தோன்றிப் பரபோக வமிர்தமாய்ப் பலியா நிற்கும்' என்றார். இதனை 'மூர்த்தி தலந்தீர்த்தம் முறையாற் றொடங் கினர்க்கு – வார்த்தைசொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே' என் னுந் தாயுமானர் திருவாக்காலுணர்க. மண்ணமிர்து–உணவு. விண்ண மிர்து - ஈண்டு யாகத்திடு மவி. விண்ணமிர்து - பின்னையது தேவா

மிர்தம். பரபோகவமிர்தம் - மோட்சம், இதனை 'அமிர்தம் கேவலம் கைசித்தி மோக்கம்' என்றும் பிங்கலந்தையா றுணர்க. (க)

வேறு

மாங்குயின் மிழற்றுமொழி மங்கையுமை யாளோர்
பாங்குற மடங்கலணை மீதுபயில் வெள்ளி
யோங்கலி னுருத்தனுயி ரோம்பிய வெழுந்த
வீங்கருளி னேடினிதி ருந்தருளும் வேலை.

(இ - ள்.) மாமரங்களின் வதிகின்ற குயிலினிசைபோல இ கும் மொழியினையுடைய உமாதேவியா ரொருபக்கத்தே பொருந் சிங்காசனத்தின் மேற்றங்கிய வெள்ளிமலையின்கண் ணுள்ள ஒப்பற்றவ ளுகிய சிவபெருமான் ஆன்மாக்களைக் காத்தற்பொருட்டு இயல்பாகத் தோன்றிய மிக்க கருணையுடன் இனிதாக எழுந்தருளியுள்ள காலத்து,

(வி - ம்.) குயில் - ஆகுபெயர். பயில் - தங்கிய. ஓம்பிய - ஓம்ப. (உ)

நெற்றிவிழி யாளர்நிமி ருந்தலைமை பூண்டோர்
துற்றதலை மாலைதவழ் தோளினர்க ளெல்லாம்
பிற்றகைய முற்றவிர்பெ ருந்தகைமை நந்தி
உற்றடிவ ணங்கினனு ளக்குறைதெ ரிப்பான்.

(இ - ள்.) நுதலிற் கண்ணினையுடையவரும், முதன்மையாகத் தலைமைபெற்றவரும், தலைமாலை நெருங்கிய தோளினையுடையவருமாகிய கணங்கள் யாவரும் பின்னர்த்தங்க முன்னே தங்கிய பெரிய தகுதியினை யுடைய நந்தியெங்குரவன் (இறைவன்) திருவடியினைப் பொருந்தி வணங்கி உள்ளத்தின் கண்ணுள்ள குறையினைத் தெரிப்பானாயினன்.

(வி - ம்.) நெற்றிவிழியாளர்-சாரூபம் பெற்றவர். துற்ற-நெருங் கிய. பிற்றகைய - பின்னர்த்தங்க. முற்றவிர்-முன்னர்த்தங்கிய. (ங)

ஓதுமறை யாகமமு யர்ந்தகலை முற்றும்
ஏதமக லக்கருணை நோக்கினெனை வைத்துத்
தீதறந வின்றுபொரு டெள்ளிதின வித்தாய்
மேதகைய வாகம விழுப்பனுவன் மாட்டு·

(இ - ள்.) (அடியேன் மாட்டுள்ள) ஆணவ முதலிய மலக்குற்றங்க ணீங்கக் கருணைப்பார்வையான் நயனதீக்கை செய்து இருத்தி ஓதுகின்ற வேதங்களும், ஆகமங்களும், வேறுயர்ந்தனவாகிய பலகலைகள் முழுதும் குற்றம் நீங்கத் திருவாய்மலர்ந்தருளி அவற்றினுட் பொதிந்துகிடந்த நுண்பொரு ணலங்களையெல்லாம் தெளிவாகத் திருவாய்மலர்ந்தருளினை. மேன்மைபொருந்திய சிறந்த நூலாகிய ஆகமத்தினிடத்து.

(வி - ம்.) கருணைநோக்கினெனை வைத்து - நயனதீக்கை செய் திருத்தி. ஏதம் - ஈண்டு மலக்குற்றம். பனுவல்-நூல். இதனை 'விழுப் பத்து வேண்டும் பனுவற்றுணிபு' என்னுந் திருக்குறளானறிக. (ச)

முப்பொருளி லக்கணமு முப்பொருளி னொன்றுச்
செப்புநின தின்னருள்செ றிந்தடியி னொன்றும்
அப்பெரிய முத்தியெனு மாரமிர்த வாரி
எப்பொழுது மூழ்குவது மெய்தலில னெந்தாய்.

(இ - ள்.) எந்தந்தையே பதி, பசு, பாசமென்னு முப்பொருள்களின் இலக்கணத்தினையும் அம்முப்பொருள்களுள் வைத்தொன்றாக வேதாகமங்கள் கூறும். பெருமானின் இனிய அருள்செறிந்த திருவடியின்கண்ணிரண்டறக் கலக்கின்ற அப்பெரிய முத்தியென்னும் நிறைந்த அமிர்த வெள்ளத்தின்கண் மூழ்குவதுமாகிய இவ்விரண்டினையும் அடியே னடையவில்லை.

(வி - ம்.) இலக்கணமும், மூழ்குவதுமாகிய இரண்டினையு மடியேனடைய முடியவில்லையென முடிக்க. செப்புமென்னும் பெயரெச்சம் நின்னென்னும் பெயர்கொண்டு முடிந்தது. வாரி-வெள்ளம், கடலுமாம்.

அன்னவை தெரித்ததின முத்திவிடல் வேண்டும்
தன்னிகரி லாநிமல சங்கரச யம்பு
கன்னியொரு பாககரு ணைப்புணரி யென்னுப்
பின்னரும்வ ணங்கிமுழு வற்கடல்பெ ருத்தான்.

(இ - ள்.) தனக்கொப்பில்லாத மலமற்றவனே! ஆன்மாக்களுக்கின்பத்தைக் கொடுப்பவனே! சுயம்பாயுள்ளவனே! உமாதேவியையொருபாகத் துடையவனே! அருட்கடலே! அவைகளி னிலக்கணங்களைத் தெரிவித்து அவ்விரண்டனுள் முத்தியினிடத்து அடியேனை மூழ்கச்செய்ய வேண்டுமென்று கூறிப் பின்னரும் வணங்குதல் செய்து எழுமையுந்தொடர்ந்த அன்பாகிய கடல் பெருகப்பெற்றான்.

(வி - ம்.) உழுவல் - எழுமையுந்தொடர்ந்தவன்பு. உழுவக்கடலெனவும் பாடம். (சு)

திருகுமிரு வல்வினைதி ருந்துபரி பாகம்
மருவுதலு றுத்திமெய்வ ழங்குமொரு வள்ளல்
கருணைநனி பொங்கியதெ னக்கதிர்கி ளர்ப்பக்
குருநகையி னந்திமகிழ் கொள்ளவருள் விள்ளும்.

(இ - ள்.) ஒன்றினோடொன்று மாறுபடுகின்ற நல்வினை தீவினையாகிய வலியவினைகளின் சமமும், திருந்துதற்கேதுவாகிய மலபரிபாகமும் ஆன்மாக்களிடத்துப் பொருந்தும்வண்ணஞ் செய்து சொரூப நிலையை யளிக்கும் ஒப்பற்ற வள்ளலாகிய சிவபெருமான் உள்ளே நிலவிய கருணையானது பொங்கி (வெளிப்பட்டதென்று) சொல்ல ஒளி வெளிப்பட நிறத்தோடுகூடிய சிறு நகையினால் நந்தியெங்குரவன் மகிழ்வுற அருளோடு திருவாய்மலர்ந்தருளுவான்.

(வி - ம்.) தீவினையேயன்றி நல்வினையும் வீடெய்தற்குப் பொன் விலங்குபோலத் தடைசெய்து நிற்றலின் 'திருகுமிருவல்வினை' யென்றார். இதனை 'இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன் பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு' என்னுந் திருக்குறளானறிக. மெய்வழங்கல் -

(இறைவன்றடத்தம் சொரூபம் என்னுமிருவடிவங்களில்) சொரூப நிலையை யருளல். (எ)

ஐந்தொழிலி யற்றரசி ருக்கைகயி லாயம்
ஐந்தொழில்க டந்தவரு ளாகுமஃ திங்கண்
அந்தின்மிக வுந்தெரிவு றுக்குமடை வில்லை
அந்தவரு ளுக்குரிய தாங்கணிக வெற்பு.

(இ - ள்.) படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னுமைந்தொழிலினையுஞ் செய்கின்ற அரசிருக்கை கைலாயமாகும்; இவ்வைந்தொழிலினையும் நீங்கிய அருளாகிய நீ விரும்பிய முத்தி இக் கைலாயத்தின்கட் செவியறிவுறுக்கு முறைமையுடையதன்று, அந்த வருளினுக்குரியதாகுந் தணிகைவரை.

(வி - ம்.) அஃது: நீ விரும்பியமுத்தி. அந்தில் : அசை. ஆன்மாக்க ளனுக்கிரகித்தால் அடையப்படுவது முத்தியாகலின் அதனை (ஐந் தொழில் கடந்தவருள்) என்றார். (அ)

ஒருமறை நாடரிய வுண்மையெனு ஞானம்
ஆரவருள் பெற்றடிய முந்துமத னூற்சீ
பூரணகி ரிப்பெயர்பொ ருந்துமள வில்லா
ஏரணவு நம்முருவ மாயிலகு மன்றே.

(இ - ள்.) யாவரும் ஆராய்தற்கருமையான உண்மை யறிவினை அருளாற் பொருந்தப்பெற்று நமது திருவடியின்கண்ணே இரண்டறக் கலந்து நிறைந்து நிற்குந்தன்மையால் சீபூரணகிரியென்னுந் திருநாமத் தினைப் பொருந்தும். அளவிட முடியாத அழகு பொருந்திய நமது திருவாகி விளங்கும்.

(வி - ம்.) அடியிலழுந்தி நிறைவைப் பெறுதலால் சீபூரணகிரி யென்றும் பெயர்த்தாயதென்க. பூரணம் - நிறைவு. (௯)

எங்கணெவ ருஞ்சிறிது மேரருந மக்கும்
அங்கணுயிர் யாவுமடி சேரும்வகை நாடித்
தங்குமிளை யோனருட ருங்குரவ னுன்
புங்கவன வற்குநிகர் பூரியரும் விள்ளார்.

(இ - ள்.) நமது திருவுருவமாக விளங்குந் தணிகைமலையின்கண் ஆன்மாக்களெல்லாந் திருவடியின்கண் இரண்டறக்கலக்கும் வகையினை யாராய்ந்து எழுந்தருளியிருக்கும் முருகக்கடவுள் எவ்விடத்தும் எவருஞ் சிறிது மொப்பாகாத நமக்கும் அருளினைத் தருகின்ற பரமாசாரியனு னன். யாவரினு முயர்ந்தோனாகிய அவனுக்கு (மற்றொருவரை) ஒப்பா கக் கீழோருஞ் சொல்லார்.

(வி - ம்.) ஏர் - உவமவுருபு. நமக்குங் குரவனென முடிக்க. நாடித்தங்கிய வென்னும் பெயரெச்சம் இளையோன் என்னும் பெயர் கொண்டு முடிந்தது. புங்கவனாகிய அவனென்க. பூரியோர்-கீழோர். (௧0)

வெய்யமல வேர்துவர விட்டுநெறி யன்றிப்
பொய்யமல நின்றமதம் புக்கவரு நாளும்
ஐயனென வந்தடிப ணிந்தறமு ஞற்றி
உய்யும்வகை யுங்கருணை யுய்த்தவணி ருக்கும்.

(இ - ள்.) *கொடிய ஆணவமலத்தினது வேர்முற்றக்கெட வீட்டிற்கேதுவாகிய சைவசமய வழியிலன்றிப் பொய்ந்நிறைய நின்ற ஏனைய புறச்சமயத்தின்கண் புகுந்தவரும் ஒவ்வொருநாளுந் தலைவனென வந்து திருவடிகளில் வணங்கி அறத்தைச் செய்து பிழைக்கும் வகையுங் கருணைசெய்து அவ்விடத்திலெழுந்தருளியிருப்பான்.*

(வி - ம்.) *துவர-முற்ற, இதனை 'துவரமுடித்த துகளருமுச்சி' எனுந் திருமுருகாற்றுப்படையா னறிக. அன்றி - அல்லாமல். உய்யும் வகையும் - பிழைக்கும் வகையும்; உம்மை யிழிபுசிறப்பு.* (கக)

அன்னவனை யேசரண டைந்தவணி ருந்து
மன்னியபெ ருந்தவம்வ ழாதுபுரி கிற்பின்
துன்னுமறை நாடரிய தூத்தகைய வேளின்
நன்னருள மிக்குவகை நாறவெதிர் தோன்றி.

(இ - ள்.) *அம்முருகனையே புகலிடமாகவடைந்து அத்தணிகையின்கண் ணடைந்து நிலைபெற்ற பெருந்தவத்தினை வழுவாமற் செய்யின் பொருந்திய வேதங்களும் தேடுதற்கருமையாகிய பரிசுத்தம் பொருந்திய முருகக்கடவுள் உன்னுடைய நல்ல உள்ளத்தின்கண் களிப்புமிகுந்து தோன்ற எதிரே தோன்றுதல் செய்து,*

(வி - ம்.) *வேள்நின் எனப் பிரிக்க. நன்னர் - நன்மை.* (கஉ)

திரைத்துமணி சிந்திவரு தெய்வநதி யொன்று
விரைத்தவண டுத்துறவி ளித்ததின மூத்திப்
புரைத்தசிவ வாரியும்பு குத்திவிடு மம்ம
உரைத்தநதி மூலமுமு ரைப்பமறி மைந்த.

(இ - ள்.) *அலையைச் செய்து முத்துக்களைச் சிந்திவருகின்ற தெய்வத்தன்மை பொருந்திய நதியொன்று விரைவாக அவ்விடத்து அடுத்துப் பொருந்த அழைத்து அந்நதியின்கண் மூழ்கச்செய்து உயர்ந்த வீடாகிய கடலின்கண்ணுஞ் சேர்த்தி விடுவான். யாஞ்சொல்லிய நதியின் மூலத்தையுமுரைப்போம் மைந்தனே யறிவாயாக.*

(வி - ம்.) *விரைத்து - விரைவாக. சிவவாரி - மோட்சம். அம்ம: அசை. மூலம் - காரணம். மைந்த: விளி.* (கங)

*வேறு*

திருமகட் குரியதாய்ச் சிவனுந் தன்னியல்
இருநிலந் தெரிப்பவவ் வேழை கொங்கையின்

உருவன் கனிபடும் வில்வ மோங்கிய
பொருவில்சீர் வில்வமா புரமொன் றுள்ளதே.

(இ – ள்.) சீபத்திரமென்னுங் காரணப் பெயருக்குரிமையாப் பொருந்தும் தன்னிலக்கணத்தைப் பெரிய பூமியின்கண்ணுள்ளவர்களுக்குத் தெரிவிக்க அவ்விலக்குமியின் கொங்கைபோல உருவம் பொருந்திய வலிய கனிகள் பொருந்தும் வில்வமரங்க ளோங்கிய ஒப்பில்லாத சிறப்பினையுடைய வில்வமாபுரமென்னும் நகரமொன்றுள்ளது.

(வி - ம்.) வில்வத்திற்குச் சீபத்திரமென்று பெயர். சீ–இலக்குமி. இதனைத் 'செந்திருவை நேமியிறை சீயென வெறுத்தான்' என்னும் பிரபுலிங்கலீலைச் செய்யுளானறிக. இது நைலைக்கணுள்ளது. (கஎ)

இருடபு நமக்கர சிருக்கை யாகிய
திருவள ரத்தகு தேஎத்து நம்முடை
உருவமா யைங்குவட் டோங்க லுள்ளது
தருபெயர் வில்வமா சயில மென்பதே.

(இ – ள்.) ஆணவவிருளை யோட்டுகின்ற நமக்கரசிருக்குமிடமாகிய செல்வங்கள் வளர்தற்கேதுவாகிய அத் தகுதியையுடைய விடத்தில் நமது வடிவமாக ஐந்து சிகரங்களையுடைய மலையொன்றுள்ளது. அதற்கு உலகத்தா ரிட்டபெயர் வில்வமாசயில மென்பதாகும்.

(வி - ம்.) இறைவனுக்கும் ஐம்முகங்களுளவாதலின் அவ்வைம்முகங்களே ஐந்து குவடாமென்பார். "நம்முடை யுருவமா யைங்குவடோங்கலுள்ள" தென்றார். (கஅ)

கஞ்சவெற் பென்னவுங் கரைவர் யோசனை
அஞ்சத னுயரமவ் வளவும் பூமியுள்
துஞ்சுறச் சிகரமே தோன்ற நின்றெழில்
விஞ்சும்யோ சனையொன்று விரிவி னெல்லையே.

(இ - ள்.) பிரமன்மலை யென்றும் பெயர் கூறுவர். அதனுயரம் ஐந்து யோசனையாகும். அவ்வைந்து யோசனையளவு பூமியுள் மறைய அதன் குவடு தோன்றிநின்று அழகினால் மிகுதலைச் செய்யும். விரிவினளவு ஒருயோசனையாம்.

(வி - ம்.) கரைவர் - கூறுவர். அஞ்சு - மரூஉ. விஞ்சும் - மிகும். (கக)

தெய்வமே கமழுமச் சிலம்பி னுச்சியில்
சைவதத் துவமய தீர்த்தந் தானுள
துய்வகை யெம்மொடா மொருமை யெய்துவான்
கொய்வளம் புகழ்ச்சனற் குமர னன்னுபு.

(இ – ள்.) தெய்வத்தன்மை கமழுகின்ற அம்மலையின் குடுமியில் சிவதத்துவ தீர்த்தமுள்ளது. பிழைக்கும் வண்ணம் எம்மோடிரண்

டறச் சலக்குந் தன்மையை யடையும்பொருட்டுக் கொய்யத்தக்க அழகினையுடைய புகழோடுகூடிய சனற்குமரனெனவன் பொருந்தி.

(வி – ம்.) சைவதத்துவ மயதீர்த்தம் - சிவதத்துவ தீர்த்தம்; இங் ஙனம் வருவதனை வடநூலார் "சுவார்த்த பரவத்தத்திதப் பிரத்யயம்" என்பர். வளம் - அழகு. இதனை "இளவள நாகு புல்லி யினத்திடை யேறு நின்றால்" எனவருஞ் சிந்தாமணி (காந்த–உசுஉ) செய்யுளானு மத னுரையானு முணர்க. (கஎ)

தேங்கிய பெரும்புனற் றீர்த்த மாடுறீஇப்
பாங்கிருந் தருந்தவம் பயிற்றி நம்மடி
ஒங்கிய பூசனை யொழிவில் பத்திமை
தாங்கியாற் றுபுமகிழ் தழைப்ப வைகுமால்.

(இ - ள்.) நிறைந்த மிக்க நீரோடுகூடிய அத்தடாகத்தின்கண் மூழ்கி அதன் பக்கலிலே தங்கிப் பிறராற் செய்தற்கரிய தவங்களைச் செய்து நமது திருவடியின்கண் உயர்ந்த பூசையும், நீங்குதலில்லாத பத்திமையும் மேற்கொண்டு செய்து நித்திய மகிழ்வுண்டாகத் தங்கு வான்.

(வி - ம்.) தேங்கிய புனல்; பெரும்புனல் என இயைக்க. பெருமை சண்டு விரிவின்மேற்று. (கஅ)

அத்தகு திருத்தமங் காறு கொண்டெழ
உத்தம னுன்பொருட் டழைக்குமென்றுபின்
வித்தகன் விடைதர வணங்கி மெய்யருள்
பொத்திய வுளத்தினன் போதன் மேயினன்.

(இ - ள்.) அத்தன்மைத்தாகிய தீர்த்தம் ஆண்டைக்கு ஆறுக வெழும்வண்ணம் உத்தமனாகிய முருகன் உன்னிமித்தம் அழைப்பான் என்று திருவாய்மலர்ந்தருளிப் பின்னர் விடையளிக்க அருளால் மூடப் பட்ட வுளத்தையுடைய நந்தியெங் குரவன் செல்லுதலைத் தொடங் கினன்.

(வி - ம்.) ஆறுக வடிவங்கொண்டெழ என்க. உத்தமன் என்றது முருகன். வித்தகன் - சிவபெருமான். (கக)

வேறு

கயிலையங் கிரியை வணங்கின னீங்கிக்காமரு பேசுரம் பரவிப்
பயிலிய நாகே சுரஞ்சித்த விடமும் பணிந்துமா மகேசுரந் தாழ்ந்து
வெயின்மணித் தேனு சிலைநன்கே தாரம் வீமகோ டாரமு மிறைஞ்சிக்
குயினுழை சோலைக் கெண்டகை வளர்கூர் மாசலந் தொழுதன னகன்றான்.

(இ – ள்.) கயிலைமலையை வணங்கி நீங்கிக் கண்டார்க்கு விருப்பம் வருகின்ற பேசுரமென்னும் தலத்தை வணங்கிப் பொருந்திய நாகேசுர மும் சித்தவிடமுமாகிய தலங்களை வணங்கிப் பெருமைபொருந்திய

மகேசுரமென்றுந் தலத்தை வணங்கிச் சூரியகாந்தக் கற்களையுடைய தேனுசிலை, நல்லகேதாரம், விமகோடாரமென்றுந் தலங்களை வணங்கி இலைநெருக்கத்தாற் குயில்கள் நுழைந்து செல்கின்ற சோலைகளையுடைய கெண்டகை யென்னும் நதியின்கரையில் வளர்கின்ற கூர்மாசலமென்னுந் தலத்தையும் வணங்கி நீங்கினன்.

(வி - ம்.) காமம்வருபேசுரம்: விகாரம். இதனைச் சிலப்பதிகாரம் அந்திமாலைச் சிறப்புச்செய் காதை-௭௦ஆம் வரியினுரையா லறிக. வெயின்மணி - சூரியகாந்தக்கல். குயில் நுழைசோலை - இலைநெருக்கத்தால் குயில்கள் நுழைந்துசெல்லும் சோலை. இதனை "வெயினுழைபறியாக் குயினுழை பொதும்பர்" என்னும் மணிமேகலை யடியானுணர்க. உமாமகேசுரமுமாம். (௨௦)

பரவிய பிரம ராசலஞ் சித்த பங்கமே மனேபங்க மெத்தி
உரனரு ளிடப மால்வரை யுருரு பயிரவ மொளிர்விரு பாக்கம்
வரநனி யருளும் வில்வகஞ் சோம கேசுர மாரகங் காளம்
விரவிய சீர்த்திப் பிப்பிலா ரணியம் வாரணா சியும்வியந் தகன்றான்.

(இ - ள்.) பரந்தவிடத்தினை யுடைய பிரமராசலம், சித்தபங்கம், மனோபங்கம் அறிவை நிறைத்தருளுகின்ற இடபமலை, உருரு, பயிரவம், விளங்குகின்ற விருபாக்கம், வரத்தை மிகுதியாகத் தருகின்ற வில்வகம், சோமகேசுரம், மாரகங்காளம், யாண்டும் பொருந்திய கீர்த்தியினை யுடைய அரசவனம், காசியுமாகிய தலங்களை வணங்கி யர்ச்சரியமுற்றகன்றனன். (௨௧)

தெள்ளிய திரியம் பகந்தரு காளே சுரஞ்சங்க மேசுரந் தெரிசித்
தொள்ளொளி விரிக்கு மல்லிகார்ச் சுனமு மோங்குகா ளத்தியும் போற்றி
வள்ளவாய்க் கமல மிரவினும் விரிய வாளரா வுமிழ்ந்தசெம் மணிகள்
அள்ளொளி கதிர்க்கு மடுக்கல்சூழ் சீபூ ரணகிரி தொழுதுசென் றடுத்தான்.

(இ - ள்.) விளங்கிய திரியம்பகமும், தகுதிபொருந்திய காளேசுரமும் சங்கமேசுரமும் ஆகிய தலங்களை வணங்கி மிக்க வொளியை விரியச் செய்கின்ற சீபருப்பதமும், உயர்ச்சி பொருந்திய காளத்தியென்னுந் தலமுமாகிய இவற்றை வணங்கிக் கிண்ணம்போன்ற வாயினையுடைய தாமரைமலர்கள் இராக்காலத்திலும் மலரும்வண்ணம் ஒளி பொருந்திய பாம்புகள் கக்கிய செம்மைநிறம் பொருந்திய மணிகள் அள்ளிக்கொள்ளத்தக்க ஒளிமிக்குத் தோன்றும் அரைமலைகள் சூழ்ந்த தணிகைமலையை வணங்கிப் போயடைந்தான்.

(வி - ம்.) மல்லிகார்ச்சுனன் - சீசைலம், அர்ச்சுனம், மருதம், இவை மூன்று மல்லிகார்ச்சுனம், மத்தியார்ச்சுனம், புடார்ச்சுனம் என்க. மல்லிகார்ச்சுனம் - சீசைலம். மத்தியார்ச்சுனம் - திருவிடைமருதூர். புடார்ச்சுனம் - திருப்புடைமருதூர். இது பாண்டிநாட்டில் பொருநைநதிக்கரையிலுள்ளது. இது மயக்கவணி. (௨௨)

வெறிகமழ் கமல வோடையுந் தடமும்
வேறுசூழ் விராட்ட காசக்

குறிகுணங் கடந்த சச்சிதா னந்தன்
குரைகழற் றுமரை வணங்கி
நறியசெங் கடப்பந் தாரணி சாமி
நாதனை யாவயிற் பணிந்து
செறிபொழி லுடுத்து முகிற்படாம் போர்க்குஞ்
சிலம்பினை யிவர்தரச் செல்வான்.

(இ - ள்.) வாசனை நாறுகின்ற தாமரை மலர்களையுடைய நீர்நிலையும், தடாகங்களும், வெவ்வேறுகச் சூழ்ந்த வீராட்டகாசமென்னுந் திருப்பதியின்கண் ணெழுந்தருளியுள்ள ஒரு நாமமு மோருருவு மில்லாத உண்மை யறிவானந்தனுகிய வெம்பெருமானது ஒலிக்கின்ற வீரக்கழலையணிந்த பாத தாமரையை வணங்கி வாசனையோடுகூடிய செங்கடம்ப மாலையினை யணிந்த சாமிநாதனென்னுங் காரணப் பெயரினையுடைய முருகனை அவ்விடத்து வணங்கி, நெருங்கிய சோலையாகிய வுடையினையுடுத்து மேகமாகிய மேற்போர்வையினைக் கொண்ட தணிகைமலையின்கண் ஏறச் செல்கின்றுன்.

(வி - ம்.) ஓடை - நீர்நிலை. இதனை "ஓடை நீர்நிலை கிடங்காம்" என்னும் நிகண்டானறிக. குறி - பெயர். குணம் - உருவம். இதனை "ஒரு நாம மோருருவ மொன்று மில்லாற்கு" என்னும் திருவாசகத்தானறிக. சச்சிதானந்தமே இறைவனுக்குரிய சொரூபவிலக்கண மென்பார் 'குறிகுணங்கடந்த சச்சிதாநந்தன்' என்றுர். இதனை 'உண்மையறி வானந்தவுருவாகி' என்னுந் திருவிளையாடற் புராணத்தானறிக. சாமிநாதன் : நான்காவதன்றொகை. பண்புத்தொகை யெனினுமாம். செல்வான் : வகரவொற்று நிகழ்கால விடைநிலை. முன்னர்க் கூறினும். (௨௯)

வேயினை முகுத்த நித்திலக் குவையும் விரிபணப் பொறியரா வுமிழ்ந்த
பாயிருள் பருகுஞ் செம்மணிக் குவாலும் படரிருள் குப்பைகொண் டன்ன
மாயிரு மணியும் பளிக்கின மணியும் மாழையின் றிரளுமோ ராங்குச்
சாயிளந் திங்கட் கண்ணியான் முகத்திற் றயங்குவ கண்டுள மகிழ்ந்தான்.

(இ - ள்.) மூங்கிற் கூட்டங்கள் சிந்திய முத்துக்குவியலும், விரிந்த படத்தினையும் புள்ளிகளையுமுடைய பாம்புகள் கக்கிய பரவிய விருளை யுண்ணுகின்ற செம்மைநிறம் பொருந்திய மணிகளின் கூட்டங்களும் உலக முழுவதும் படர்ந்த இருள் குவிந்தாலொத்த மிகக்கரிய நீலமணிகளும் பளிங்குமணியும் பொற்குவியல்களும் ஒருதன்மையாகிக் கலைகுறைந்த திங்களாகிய மாலையினை யணிந்த எம்பெருமானது ஐந்து முகங்களைப்போல விளங்குவதைக் கண்ணுற்று உளமகிழ்ச்சி கொண்டான்.

(வி - ம்.) மாயிருமணி - நீலமணி. மாழை-பொன். ஓராங்கு - ஒரு தன்மை. சாயிளந் திங்கட்கண்ணியன் - கலைகுறைந்த பிறைமாலையையுடையவன். சாய்தல் - குறைதல், இதனைச் 'சாயு முகர நாலாறு மீறே' என்னும் நன்னூற் சூத்திரத்தானறிக. முகத்தின் : ஐந்தாவதொப்புப் பொருள். முகமைந்தன் பெயரும் நிறமும் வருமாறு. ஈசானம், தற்புருடம், அகோரம், வாமம், சத்தியோசாதமாம். இவைகட்கு நிறம்

முறையே பளிங்கு, கோங்கலர், கருமை, செம்மை, வெண்மையாம். இதனை 'வடாதுகுணக் கினைநோக்கு முச்சிமுகம் பளிங்கு வரைபெயரீசானங்கிழக் கெதிர்முகங்கோங் கலரே—நடாதபெயர்த் தற்புருடம் வலத்தோண்மேற்றென்பாற் றனைநோக்கும் மயிர்நிழ்ந்த முகங்கரிய தகோரம்—விடாதிடத்தோண் மிசையுதக்குத் திசைநோக்குந் தெரிவை மிளிர்முகஞ்செம் மணிநிறந்சொற் பெயர்வாம மெருத்திற்—குடா தெதிர்ந்த முகம்வெண்மை சத்தியோ சாதங்—கொண்டுரைக்கும் பெயரிந்த வைந்துமுகத் தோடும்' என்றும் இந்நாலகத்தியப் படலம்-௯௩.௮ செய்யுளானறிக. இஃதுவமையணி. (௨௪)

முழங்கிசை யருவி விழ்ந்தகழ் வரைப்பு
முடலையாக் கையினெறுழ்ப் பொருப்பர்
கிழங்ககழ் வரைப்பு மூடிக மகழூங்
கேழ்கிளர் வரைப்புமொள் வயிரம்
பழங்கணுற் றழுங்க விறைகடி வலாரி
பற்றிய வச்சிரஞ் சிதர்த்துத்
தழங்கிசைக் குன்றந் தன்மிசை விழ்த்திக்
கொண்டெனத் தயங்குவ கண்டான்.

(இ - ள்.) முழங்குகின்ற ஒலியோடுகூடிய விழ்ந்து தோண்டப் பெற்றவிடமும், திரண்ட வுடலினையுடைய வலியோடுகூடிய மலைவாழ்நர் கிழங்கினை யெடுத்தவிடமும், பெருச்சாளி தோண்டிய நிறம் விளங்குகின்றவிடமும் துன்பமுற்று வருந்தச் சிறையினைவெட்டிய இந்திரன பிடித்த வயிரப்படையினைத் தகர்த்து முழங்குகின்ற ஒலியினையுடைய மலையானது தன்மீது வீழச்செய்து கொண்டாற்போல விளங்குவதைக் கண்ணுற்றான்.

(வி - ம்) வரைப்பு - இடம். முடலை - திரட்சி; இதனை 'முடலை நோய் திரட்சி' என்னும் நிகண்டானறிக. எறுழ் - வலி. மூடிகம் - பெருச்சாளி. இறை - சிறை. தழங்கு - முழங்கு. வயிரம் - வச்சிரம். (௨௫)

களிற்றினந் தம்முட் கலாங்கொடு கறைவன்
கால்பொரக் கழைமணி சிதர்ந்த
ஒளிற்றுவெண் பூழி போர்த்துவெள் ளென்ன
வுருவெலாங் கதிர்ப்பமிக் கிகலிப்
பிளிற்றெடு பொருவ முருகனைத் தவத்தாற்
பிடர்த்தலைச் சுமத்துவா னடுத்த
வெளிற்றுட லிபங்கள் பொருதுபோ ருழக்கும்
வேற்றுமை தோற்றுவ கண்டான்.

(இ - ள்.) களிற்றியானை யினங்கள் தம்முள்ளே போரினை மேற்கொண்டு உரலினையொத்த காலான் மோதுதலான் மூங்கிலின் முத்தங்கள் பொடியாகி ஒளிருந்தன்மையினை யுடைய வொளிபொருந்திய

துசியானது பொர்த்தலான் வெண்மை நிறமென்று சொல்ல வடி வெல்லா மொளிர மிக மாறுபட்டு முழக்கத்தோடு போர்செய்தல் முருகக்கடவுளைத் (முன்னர்த் தாங்கள் செய்த) தவத்தினால், தாங்கள் பிடரியின்கட் சுமக்கும்பொருட்டுத் தோன்றிய வெண்மை நிறத்தோடு கூடிய யானைகள் (நான்சுமப்பேன் நீ சுமக்கலாகாதென்று) மாறுபட்டுப் போரினைச்செய்யும் வேறுபாடு தோன்றுவனவற்றைக் கண்ணுற்றான்.

(வி - ம்.) கறை - உரல். கழை - மூங்கில். பூழி - புழுதி. கதிர்ப்ப - தோன்ற. வெளிற்றுடலிபம் - வெள்ளையானை. பொருதல் தோற்றுவவென முடிக்க. (௨௬)

செழுங்கலை மதியங் காண்டொறு மதன்றன்
சிலைகளுந் தீம்புனற் பெருக்கால்
கொழுங்குளிர் பெருக்க விரவிகாண் டொறுமக்
கொற்றவன் சிலைகளுங் கனலால்
அழுங்குருப் புறுத்தும் வரைநலூ ழடுப்பி
னுருநன் றேசெயத் தீதின்
விழுங்குவெந் துயரம்யாவருஞ் செய்யும்
வினைத்திறங் காட்டுவ கண்டான்.

(இ - ள்.) தழைத்த கலையோடுகூடிய மதியத்தினைக் காணுந் தோறும் அச் சந்திரகாந்தக் கற்களும் (சந்திரனைக் கண்டு கால்கின்ற) இனிய நீர்ப்பெருக்கினால் மிக்க குளிர்ச்சியினைப் பெருக்காநிற்ப, சூரி யனைக் காணுந்தோறும் அச் சூரியகாந்தக் கற்களும் அழற்சியுற்று வெப்பத்தினை யுளவாக்கும் மலையானது ஆகூழடுப்பின் யாவரும் நன்மையே செய்யாநிற்கத் தீதினைத் தருகின்ற தீயவூழ் வந்துசேரின் வெப்பம் அதிகரித்தற் கேதுவாகிய துன்பத்தினை எத்தகைய பெரி யாருஞ் செய்யும் வினையின் பாகுபாட்டினைக் காட்டுவனவற்றைக் கண்டான்.

(வி – ம்.) சந்திரனைக் காண்டொறும் வன்சிலை, நீரைப் பெருக்கா நிற்ப சூரியகாந்தச்சிலை யுருப்புறுத்தும் வரையானது காட்டுவவென வினைமுடிபு செய்க. நல்லூழினை யடுத்தும் தியவூழினை யடுத்தும் நின்ற வொருவனாக வரையைக் கொள்க. நல்லூழிற்குச் சந்திரனையும் தீயவூழினுக்குச் சூரியனையு முவமையானமாகக் கொள்க. தீதின் ஊமெனக் கூட்டுக. உருப்பம் – வெப்பம். (௨௭)

விடரளைப் பூழைத் தூங்குவிங் கிருளும் வியன்றலை வாயிலிற் கிடந்த
சுடர்பளிக் கறையிற் றேற்றிய பரிதிச் சாயையிற் றூவொளி யிரித்திட்
டடர்மலந் துமியச் சிவப் பிரகாச மாகிய வடியரை யடுப்பின்
மடவருந் தூய ராவரேன் றுரைக்கும் வாய்மையைத் தெரிப்பன கண்டான்.

(இ – ள்.) மலைப்பிளவாகிய தன்மாட்டுத் தங்கிய மிக்க இருளினை யும் பெரிய அக்குகை வாயிலின்கட் கிடந்த ஒளியோடுகூடிய பளிக்குப் பாறையின்கட் டோற்றிய சூரியனது சாயையினிற் றோன்றிய தூய்மை

*யான ஒளியினாலே யோட்டி (ஆன்மாக்களை) வருத்துகின்ற ஆணவமலங் கெட சிவத்துவம் ஒளியாகி விளங்குகின்ற சிவஞானிகளை யடுத்தால் அறியாமையை யுடையோருந் தூயவராவரென்று சொல்லும் உண்மையினைத் தெரிப்பன கண்ணுற்றான்.*

(வி - ம்.) *பூழையானது தன்மாட்டுள்ள இருளினையோட்டித் தெரிப்பன. கண்டானென வினைமுடிவு செய்க. விடர்-மலைவெடிப்ப. இதனை 'விடர்வெற்புக் கமரே தூர்த்தர்' என்னும் நிகண்டானறிக. அளைப்பூழை : இருபெயரொட்டு. பளிக்கறையை யடியவராகவும், பரிதியைக் கடவுளராகவும், பூழையை மடவாராகவுங் கொள்க.* (உஅ)

இருவகை மாயை காரண மாக விலகுபல் புவனமு மிழைத்து
மருவுமப் புவனத் துயிர்களைப் புரப்ப வதிதரும் வள்ளல்போற் சிலம்பி
பொருவினூல் வலந்து தங்கிய வலயம் பொலிந்தபைம் பூவைகண் மாயன்
பரிதிமார் பணிந்த கருநிறத் தவுணப் பதகனிற் றோன்றுவ கண்டான்.

(இ - ள்.) *சுத்தமாயை யசுத்தமாயை யென்னு மிருதிறத்து மாயையினை யுபாதானமாகக்கொண்டு விளங்குகின்ற பல புவனங்களையும் படைத்து அங்ஙனம் படைத்த புவனங்களிற் பொருந்துமான்மாக்களைக் காக்க எழுந்தருளியிருக்கின்ற பரமோபகாரியாகிய சிவபெருமானைப்போலச் சிலந்திப் பூச்சியானது ஒப்பில்லாத தன்மாட்டுள்ள நூலினைச் சுற்றித் தங்கிய (நூல்) வட்டங்கள் பொருந்திய பசிய காயாமரங்கள் திருமாலினது சக்கரத்தினை மார்பின்கண் அணிந்துகொண்ட கரிய நிறத்தோடுகூடிய அவுணர்களுள் வைத்துப் பாதகனாகிய தாரகனைப்போலத் தோன்றுவனவற்றைக் கண்ணுற்றான்.*

(வி - ம்.) *இருவகை மாயை - சுத்தமாயை, அசுத்தமாயை. வதிதரும் - அவ்வப்புவனத்தி லெழுந்தருளியிருக்கும். வலந்து - சுற்றி. பரிதி - சக்கரம். பதகன் - தாரகன்; இவன் சூரன்றம்பி. இவன்றிருமால் விடுத்த சக்கரத்தினைத் தன்மார்பின் மாலையாகத் தங்கும்படி செய்தவன். இதனை 'ஓரிமை யொடுங்குமுன்ன ருலகெலாந் தொலைக்குந் தன்மைப் - போரயி னேமிதானும் புராரிதன் வரத்தாற் சென்று - தாரக வசுரன் கண்டந் தன்னைவந் தணுகிச் செம்பொன் - னாரம தாயிற் றம்மா தவத்தினு மாக்க முண்டோ' என்னுங் கந்தபுராணச் செய்யுளானறிக.* (உகூ)

தூயவிஞ் ஞான கலர்க்கரு டானே தோன்றுமா றெனமயிர்க் குட்டி
மேயவண் டுருவாய்த் தன்னுருக் கழிக்கும் விம்மித மொருபுறங் காட்ட
நாயக னெதிர்நின் றருண்மய மாக்கு நன்மையா ரெனப்புழுக் குளவி
யாயவற் புதமு மொருபுறங் காட்ட வானந்த முகிழ்த்தெழக் கண்டான்.

(இ - ள்.) *பரிசுத்தம் பொருந்திய விஞ்ஞானகலரென்று சொல்லும் பரிபக்குவமுடையார்க்குத் தன்மைக்கண் இறைவன் றிருவருடானே தோன்றுமாறுபோல மயிர்க்குட்டி என்னும் புழு பொருந்திய வண்டின் வடிவாகித் தன் வடிவினை நீக்கும் அதிசயத்தினை யோரிடங் காட்டவும், மற்றோரிடம் இறைவன்றானே எதிர்நின்று தன் திருவருள் மயமாக்கும் பிரளயாகலர் போன்று புழு குளவியாகின்ற வியப்பினைக் காட்டவும், இன்பந் தோன்றுமாறு கண்ணுற்றான்.*

(வி - ம்.) விஞ்ஞானகலர் - ஒருமலமுடையார். தானே தோற்றல்- இறைவனவரறியாமலே யுள்ளே நின்றுணர்த்தல். நன்மையார் - இரு மலமுடைய பிரளயாகலர். இவர்க்கிறைவன் முன்னிலைக்கணின்றருள் செய்வன். இக்கருத்தினை 'மெய்ஞ்ஞானந் தானே விளையும்விஞ் ஞான கலர்க் - கஞ்ஞான வச்சகலர்க் கக்குருவாய் - மெய்ஞ்ஞானம் - பின் னுணர்த்து மந்தப் பிரளயா கலர்க்கு - முன்னுணர்த்துந் தான்குருவாய் முன்' சிவஞானபோத வுதாரண வெண்பாவாற் காண்க. மயிர்க்குட்டி - முசுக்கட்டை அல்லது கம்பளிப்பூச்சி யென்பார். புழு-வேட்டுவாளியென் னும் பச்சைப்புழு. கம்பளிப்பூச்சி வண்டாதலையும், வேட்டுவாளி யென் னும் பச்சைப்புழு குளவியாதலையும் "வண்டுக ளாகி மாறு மயிர்க்குட்டி மற்றொர் சந்துப்-பண்டைய வுருவந் தானே வேட்டுவ னுப்பிறக்குங்- கண்டுகொள் யோனி யெல்லாங் கன்மத்தான் மாறு மென்றே, கொண் டன சமய மெல்லா மிச்சொன்னீ கொண்ட தெங்கே" என்னுஞ் சிவ ஞானசித்தித் திருவிருத்தத்தானறிக. (௧௦)

தாரெனப் பூக்கு மராமரந் தடைஇய தாமங்க டுக்குபொன் னிதழி
ஏரியற் பாவை யேந்துபைங் குரவ மீண்டுமா னுடம்பழு கிலுத்தம்
வேரியந் திமிசு மிரவிதே ராழி மெலியவாங் கதற்கெதி ருருளை
நேருவ போலத் தேத்திறல் சுமந்து நிமிர்வன விடந்தொறுங் கண்டான்.

(இ - ள்.) மாலையைப்போலப் பூத்தலைச்செய்யும் கடம்பமரமும், பெருமை பொருந்திய மாலைகளைத் தொங்கச் செய்கின்ற கொன்றை மரங்களும். பாவையைப்போலப் பூவைத் தாங்கு மராமரமும் நெருங்கிய மக்கள் வடிவாகப் பழுத்தலைச் செய்யும் இலுத்தமென்னு மரமும், வாசனையோடுகூடிய அழகிய திமிசென்னு மரங்களும், சூரியனது தேரின்கண்ணுள்ள சக்கரங்கெட அதற்கு மாற்றுருளை கொடுப்பன போலத் தேன்கூடுகளைச் சுமந்து உயர்வனவற்றை இடங்கடோறுங் கண்ணுற்றான்.

(வி - ம்.) தார் - மாலை. மராமரம் - கடம்பமரம், இது மாலை போலக் கொத்தாகப் பூத்தலின் 'தாரெனப் பூக்கு மராமர'மென்றார்; இதனை 'பராரை மராஅத்துருள் பூந்தண்டார் - புரளுமார்பினன்' - என வருந் திருமுருகாற்றுப்படை யடியானு முரையானு முணர்க. பாவை யேந்து குரவம் முன்னர்க் கூறினும், மானுடம் பழுகிலுத்தம் - மக்கள் வடிவாகப் பழுத்தலைச் செய்யும் இலுத்தமென்னு மொருவகை மரம்; இதனை 'மானிடம் பழுத்தன இலுத்தமற் றவற்றயல், பான்முரட் பயம் பிடைப் பனைமடிந் தனையன - கானிடைப் பாந்தள்கண் படுப்பன துயி லெழு வூனுடைப் பொன்முழை யாளிநின் றுலம்புமே' என்னும் சிந்தா மணி (விமலை - ௧௨) செய்யுளானு முரையானு முணர்க. திமிசு - ஒரு வகை வாசனை மரம். இதனைச் 'சாரலந் திமிசிடைச் சந்தனத் தழை வயின்' என்னுஞ் சிந்தாமணி ஷை யிலம்பகம் ௧௩ ஆம் செய்யுளானறிக. தேத்திறல் - தேன்கூடு. இதனிலக்கணம் முன்னர்க் கூறினும். (௧௧)

ஆயிரத் தோரேட் டண்டமும் பரிக்கு மவுணனை யஞ்சியாங் காங்கு
மேயின குலிசப் படையினை ரெல்லாம் வேற்றுருக் கொண்டன ரண்மிப்
பாயின புகழான் பதந்தொழப் பெற்றுப் பரிவுதீர்ந் தார்ப்பன போலக்
காயிலைப் பொழிற்கட் கண்படு முடலக் களிமயி லகவுவ கண்டான்.

(இ - ள்.) ஆயிரத்தெட்டண்டங்களையுந் தாங்குகின்ற சூரனுக்குப் பயந்து அவ்வப்புவனங்களிற்றங்கிய வச்சிரப்படையையுடைய இந்திரர்கள் யாவரும் வேற்று வடிவினையெடுத்து அடைந்து எல்லாவுலகங்களினும் பரந்தபுகழையுடைய முருகக்கடவுளின் பாதங்களை வணங்கித் துன்பநீங்கி ஒலிப்பனபோலக் காயினையும் இலையினையுமுடைய சோலையின்கண் உடலின்கட் கண் பொருந்திய களிப்பினையுடைய மயில்கள் ஆடுவனவற்றைக் கண்ணுற்றான்.

(வி - ம்.) அவுணனுக்கு : வேற்றுமை மயக்கம். குலிசம் - வயிரம். பாயின - பரந்த, இதனைப் 'பாயினமேகலை' என்னுந் திருக்கோவையானுணர்க. அகவுவ - ஆடுவன, 'கரைநின்றாலு மொருமயிறனக்கு' என்னும்' மணிமேகலை யடியானுணர்க. (௯உ)

கழிமதக் களிறு காருமென் றாலிய கனைகுர லருவிகூ திருந்தேன்
பொழிமலர் மாலை விரிவமுன் பனியும் வைகறைப் பூப்பபின் பனியும்
வழிவளர் வேள்வித் தீயிள வேனின் மாதவத் தீமுது வேனில்
ஒழிவுறு மிருது தொறுமொழி யாத விருதுவே றுஞற்றுவ கண்டான்.

(இ - ள்.) மிக்க மதத்தினையுடைய யானைகள் கார்காலமாகவும், ஒலிக்கின்ற குரலினையுடைய அருவிநீர் கூதிர்காலமெனவும், தேனைப் பொழிகின்ற மலர்கள் மாலைக்காலத்து மலர்வன முன்பனிக்காலமாகவும், விடியற்காலத்து மலர்வனவாகிய மலர்கள் பின்பனிக் காலமாகவும், வேதங்களிற் கூறிய முறைப்படி வளர்க்கின்ற வேள்வியின் கண்ணுள்ள தீ இளவேனிற் காலமாகவும் (தவஞ்செய்யுமிடத்துண்டாகிய) பெரிய தவத்தீயாகிய பஞ்சாக்கினி முதுவேனிற் காலமாகவும், நீங்கிய பருவங்கடோறும் நீங்காத வேறாகிய பருவத்தினை இவ்வாறு செய்வனவற்றைக் கண்டான்.

(வி - ம்.) வெண்மலர்கள் மாலையினும், வைகறையினும் விரிதலின் அக்காலங்களி னிகழ்பொருளின் குணங்களைக் காலத்தின் மேலேற்றி 'முன்பனி, பின்பனி' என்றார். தவாக்கினி வேள்வித் தீயினுமிக்கோங்கலின் 'முதுவேனி' லென்றார். அருவி வீழ்தலின் பிசிர்கள் பரந்து காற்றுடன் சென்று மாவும் மாக்களையும் குளிரும் வண்ணஞ் செய்தலின் 'கூதிர்க்கால'மென்றார். யானைகள் கருநிறத்தோடு கூட்டங் கூட்டமாய்ச் சேறலின் அச்செயல் மேகவெழுச்சி போறலின் 'கழிமதக்களிறு காரும்' என்றார். கழிமிகுதி. வைகறை-விடியற்காலம். இருது-பருவம். (௯௩)

தெங்கினெண் பாளை வானர மிதிப்பத்
தீங்கனி துடுமென வீழ்ந்த
பொங்குநீர்ச் சுனையின் புடையுளர் தோகை
பொள்ளென வெரீஇமுழைச் சேப்ப
அங்கண்வா ளரவங் கமுகின்மேற் றுவ
வதன்தலைத் தவழ்சுட ரஞ்சித்
துங்கவன் கோயிற் கொடித்தலை மஞ்ஞைத்
துணையடி தாழ்வது கண்டான்.

(இ - ள்.) சிதங்கின் ஒளிபொருந்திய பாளையினைக் குரங்குகள் மிதிக்க, இனிமை பொருந்திய தெங்கம் பழங்கள் துடுமென்னுமொலியுடன் வீழப்பெற்ற நீர்மிகுந்த நிர்ச்சுனையின் பக்கத்தே இறகை உளர்கிற மயில்கள் விரைவாக அச்சமுற்றுப் பக்கலிலுள்ள குகையின்கட் டங்க அக்குகையின்கண் வாழ்கின்ற பாம்பு கமுகமரத்தின்மேற் றுவக் கமுகினுச்சியி லூர்கின்ற சூரியன் பயமுற்று யாவரினு முயர்ந்தவனாகிய முருகப்பெருமான் திருக்கோவிலின் வாய்தலிலுள்ள கொடியின்கட்டடங்கிய மயிலினிரண்டடிகளினும் வணங்குவதைக் கண்டான்.

(வி - ம்.) உளர்தோகை - இறகை மூக்காற்கிண்டுமயில், இதனை 'பைந்துகின் மகளிர் தேன்சோர் பவளவாய் திகழ நாணிச் - சிந்தித்துக் கூந்தல் வாங்கிச் செவ்வணந் துடைப்ப தேபோல் - இந்திர கோபங் கௌவி யிறகுளர் கின்ற மஞ்ஞை - யந்தரத் திவர்ந்த பாய்மா வரும்பொற்று ரரவத் தாலே' என்னுஞ் சிந்தாமணி (கனகமா - உசுரு) செய்யுளா னறிக. (௩௪)

பொறிபடு துறுக லெனநினைந் துறங்கும் புலிவெரிந் தலைநெறு நெறென
எறிசுடர்க் குவட்டின் முசுவிலங் கித்திட் டெழுந்துயர் சோலையை வர்வக்
கறிவளர் சார லுழுவைகண் மலர்த்துக் கதுமென வெதிர்நிலைக் குவடு
முறிபடத் தாக்கி முதிர்சினங் கடவி முழங்குபு வெள்குவ கண்டான்.

(இ - ள்.) உறங்குகின்ற புலியின் முதுகினைப் புள்ளிகள் பொருந்திய குண்டுக்கல்லென நினைத்து (மிதித்தலால்) நெறுநெறென்று ஒலி செய்யக் குரங்கு (பயந்து) ஒளிவீசுகின்ற சிகரத்தினின்றும் விலகியெழுந்து உயர்ந்த சோலையினிடத்துத் தாவிச்செல்ல மிளகுக்கொடி வளர்கின்ற மலைச்சாரலின் கண்ணுள்ள புலி கண்ணைத்திறந்து விரைவாக எதிரே நிலைத்திருக்கின்ற சிகரத்தைத் (தன்னினமாகிய புலியெனக் கருதி) முறிபடாநிற்க மோதி மிக்க சினத்தைச் செலுத்தி முழக்கஞ் செய்து (அக்குவடு புலியன்மையறிந்து) நாணமடைவனவற்றைக் கண்ணுற்றான்.

(வி - ம்.) பொறி - புள்ளி. துறுகல்-குண்டுக்கல். வெரிந்-முதுகு. விலங்கித்திட்டு - விலகி. கறி-மிளகு. உழுவை - புலி. கண்மலர்த்து - கண்ணை விழித்து. எதிரே நிற்குங் குவட்டைத் தன்னினமான புலியெனக் கருதிப் புலியன்மை யறிந்ததனால் வெள்குவ வென்றார். (௩௫)

காலணி சிலம்பிற் காய்க்கும்வெட் பாலை சாலெனக் காய்படுங் கோங்கம்
வாலறு மணிலிற் காய்கஞு லிலவும் வேலியின் வாங்கடி வரைதக்
கோலமுந் தீம்பூ மரங்கருப் பூரங் குங்கும மிலவங்கங் கோட்டம்
ஏலமும் விடுக்கு முருகெதிர் கொள்ள வெழில்வளங் கண்டுகண் டடுத்தான்.

(இ - ள்.) காலின்கண் ணணிந்த சிலம்புபோலக் காய்க்கும் வெட்பாலை மரமும், மிடாப்போலக் காய்பொருந்துங் கோங்கமரமும், வாலற்ற அணில்போலக் காய்கள் பொருந்திய இலவமரமும் வேலிகளின்கண்ணே தாவிப்படர்கின்ற தக்கோலமரமும், தீம்பூமரமும். கருப்புரமரமும் குங்குமமரமும், இலவங்கமரமும், கோட்டமும், ஏலச்செடியுமாகிய இவைகள் விடுக்கின்ற வாசனைகள் எதிர்கொள்ளாநிற்க, அழகிய வளங்களைக் கண்ணுற்றுக் கண்ணுற்றடைந்தான்.

(வி - ம்.) சால் - மிடா, கோங்கங்காய்மிடாப் போன்றிருத்தலை முன்னர்க் கூறினும். இலவங்காய் அணில்போன்றிருத்தலை 'ஊன்றகர்த் தனைய போன்று மூடெரி முளைப்ப போன்றுந் - தோன்றுபூ விலவத் தங்கட் டொகையணி லனைய பைங்காய்-' என்னுஞ் சிந்தாமணி (கனக மாலையார் - கசரு) செய்யுளானறிக. தக்கோலம்: ஒருவகை மரம்; வால் மிளகென்பாருமுளர். (ருசு)

கரைத்தலை யண்ட மணைத்தடை கிடக்குங்
களிமயில் கயிலையந் தீர்த்தத்
திரைத்தலைச் சினையை நோக்கிய மீனஞ்
சிந்தைசெய் கூர்மமிம் மூன்றும்
விரைத்தபூங் கடம்ப னூற்றினு னோக்கான்
விழுத்தக வென்னலா னருளைத்
தரைத்தலை வழங்குந் திறத்தினைக் காட்டத்
தழைத்தநெஞ் சொடும்புனல் படிந்தான்.

(இ - ள்.) கரையினிடத்து முட்டைகளையணைத்து அவயங்காக்குங் களிப்பினையுடைய மயில்களும் கயிலையின் கண்ணுள்ள தீர்த்தத்தின் அலையினிடத்து முட்டைகளை நோக்கிய மீன்களும், அம்முட்டைகளை நீரின் கண்ணிருந்து சிந்தனை செய்கின்ற யாமையுமாகிய இவைகள் மூன்றும் வாசனையைச் செய்கின்ற கடப்பமாலையினையணிந்த முருகப் பெருமான் பரிசத்தானும், பார்வையானும், மேலாம் வண்ணம் நினைத்தலானும் அருளினைப் பூமியின்கண்ணுள்ள ஆன்மாக்களுக்கு அளிக்கும் பரிசம், நோக்கு, பாவனையாகிய மூவகைத் திக்கையின் வகையினைக் காட்டத் தழைத்த நெஞ்சினோடும் நீரின்கண் மூழ்கினான்.

(வி - ம்.) இத்திர்த்தம் கைலைக்கணின்றும் அழைக்கப்பட்டதாதலின் அதிலுள்ள மீனத்தை 'கைலையந் திர்த்தத் திரைத்தலைச் சினையை நோக்கியமீன' மென்றார். மூவகைத்திக்கை. நோக்கம்-பரிசம்—பாவனையென மூன்றாகும். இதனை 'அன்னதன் சிசுவை யைய னுமைமீன் பறவை போல' எனவருங் கைவல்லியச் செய்யுளானறிக. விரைத்த வாசனையையுடைய. அண்டம் - சினை. அடைகிடக்கும் - அவயங் காக்கும். (ருஎ)

வந்தடி பணிந்த மாதவர்க் கங்கை மலரெடுத் தெதிர்ந்தவர்த் தழுவி
அந்திலா தனத்தி லிருந்தமு தறிவோர்க் கஞ்சலி வணக்கமு மளித்துக்
கொந்தவிழ் சோலைக் குன்றுசூழ் போகிக் குருஉமணி குயின்றேவி யசும்பும்
சுந்தரச் சோபா னங்களி லிவர்ந்து சுடர்மணிக் கோயிலைச் சார்ந்தான்.

(இ - ள்.) வந்து பாதத்தின்கண் வணங்கிய மாதவத்தினர்க்கு அழகிய கையாகிய மலரினைத் தூக்கி யஞ்சலிசெய்து தன்னை வந்தெதிர் கொண்டவர்களைத் தழுவுதல்செய்து, சுகாசனம் பத்மாசனம் முதலிய ஆதனங்களிலிருந்து தவஞ்செய்கின்ற பேரறிவினையுடையார்க்கு வணக்கஞ்செய்து வாசனை விரிகின்ற சோலையாற் சூழப்பெற்ற தணிகைமலையினை வலம்வந்து நிறம் பொருந்திய மணிகள் பதிக்கப்பெற்று ஒளி

துளும்புகின்ற அழகிய படிகளின் மீதேறி ஒளியோடு கூடிய மணிகள் பதிக்கப்பெற்ற கோயிலை யடைந்தான்.

(வி - ம்.) அந்தில் - அவ்விடம். ஆதனம் - சுகாசனம், பத்மாசன முதலிய ஆசனங்கள்; இவை யோகவுறுப் பெட்டனுள் ஒன்று அஞ்சலி வணக்கம்: இருபெயரொட்டு. சூழ்போதல் - வலஞ்செய்தல். சுந்தரம்- அழகு. சோபானம்-படி. (௩௮)

மணிகுயின் றெடுத்த மாடநீண் மறுகு வலம்வந்து மயிலிருந் தகவும்
திணிநெடுங் கொடியு மூர்தியு நின்ற திருமுன்னர்த் தாழ்ந்தெழுந் தேகித்
தணிகுந ரிடுக்கண் டாழ்த்தரு ளாவச் சகாயனைத் தாண்மலர் பழிச்சித்
துணிமதி மலைத்த குமாரலிங் கத்துத் துவரொளி வண்ணனைத் தொழுதான்.

(இ - ள்.) மணிகள் பதிக்கப்பெற்றுச் செய்யப்பெற்ற திருமாளிகைப்பத்தியினை வலஞ்செய்து மயிலானது தங்கிக்கூவும் திண்ணிய நீண்டகொடியும், வாகனமும் நின்ற சந்நிதியின்கண்வணங்கி யெழுந்து சென்று வணங்குநரின் றுன்பங்களைத் தாழ்ந்தருளிய ஆவச்சகாயனது திருவடி மலர்களைத் துதித்துத் தெளிந்த கலைகளோடுகூடிய சந்திரனைச் சூடிய குமாரலிங்கத்தின்கண் பவளம்போன்ற நிறத்தினையுடைய சிவபெருமானை வணங்கினன்.

(வி - ம்.) மயிலிருந்தகவுங்கொடி. - மயிலைப்பொறித்த கொடி. ஊர்தி-மயில், யானையுமாம். துணி - தெளிந்த. (௩௯)

ஆவயி னகன்று புணர்தோறும் புதிதா யணித்துமா யருமறைச் சிரமும்
பாவனைத் திறமுங் கடந்தெழு மின்பப் படரொளிப் பிழம்புரு வான
ஆவியை யிச்சை யறிவொடு தொழிலென் றவையொரு மூன்றுமூ விலையாய்
மேவிய மணிவேல் வலனுயர்த் தருளும் வீரனை யணுக்கனுய்த் தொழுதான்.

(இ - ள்.) அவ்விடத்தினின்றும் நீங்கிக் கூடுந்தோறுங் கூடுந்தோறும் புதியதாகி அண்மைக்கண் ணுள்ளதுமாய், அரிய வேதங்களின் முடிவும் சிந்தனையின் வகையுங்கடந்து உளவாகின்ற இன்பமாகிய படர்கின்ற ஒளிவடிவாகிய உயிருக்குயிர் போன்றவனை அறிவிச்சை செயலென்று சொல்லப்பெற்ற ஒப்பற்ற அம்மூன்றும் மூன்றிலையாகப் பொருந்திய அழகிய வேற்படையினை வெற்றிக்கடையாளமாக வுயர்த்தி யருளும் முருகக்கடவுளை நீங்காதவனுகித் தொழுதான்.

(வி - ம்.) புணருந்தொறும் புதிதாய் - என்பதற்கு ''உணர்ந்தார்க் குணர்வறியோன்......புணர்ந்தாற் புணருந்தொறும் பெரும்போகம்'' என்னும் திருக்கோவையிற் பொருள் கொண்டாங்குக் கொள்க. பாவனை - சிந்தனை. உயிர் போறலின் 'ஆவி' என்றார். இச்சை ஞானக் கிரியை மூன்றும் மூவிலைவடிவமா மென்பார், 'இச்சையறிவொடு தொழிலென்றவை யொருமூன்று மூவிலையாய், மேவியமணிவே'லென்றார். வீரன் - முருகன். ஆவியை வீரனைத் தொழுதானென்க. (௪0)

வேறு

விழிகா லருவிக ளடியூ டிழிதர
விரிபூ வணையகை முடியேறப்

பொழிமா மறைமொழி விரியப் புலன்வழி
விரியுற் றலமரு பொறிகூம்ப
இழுதா யுருகுளம் வயிரத் தொடரென
விமிழ்கொண் டடிமல ரிறுகப்போய்த்
தொழுமா தரவின னுழுவற் றெடுகடன்
முழுகித் துளைபவன் வழிநாளான்.

(இ - ள்.) கண்கள் பொழிகின்ற அருவிகள் பாதங்களிடத் தொழுக விரிந்த மலரினை யொத்த கைகள் தலையின் கண்ணே பொருந்த, வாயினின்றுந் தோன்றுகின்ற பெரிய வேத வசனங்கள் பரவ சுவை யொளி யூறோசை நாற்றமென்னும் புலன்களிடத்துப் பரவிச் சுழல் கின்ற மெய்வாய் கண்மூக்குச் செவியென்னு மைம்பொறிகளுந் தடைப் பட நெய்யினைப்போல வுருகுகின்ற வுள்ளமானது வயிரச் சங்கிலிபோல இளகுதல்கொண்டு பாதமாகிய மலரினிடத்து இறுகும்படி சென்று வணங்குமாசையினனாகி எழுமையுந் தொடர்ந்த அன்பாகிய தோண்டப் பெற்ற கடலின்கண் மூழ்கி யனுபவிப்பவன் பின்நாளின்கண்.

(வி - ம்.) கூம்ப - தடைப்பட. வயிரத்தொடர் - வயிரச்சங்கிலி. இழுது - நெய். இமிழ்தல் - இளகுதல். ஆதரவு - ஆசை. நாளான் - நாளின்கண்; ஏழாவதன்றொகை. ஆன் - அசை. (௭௪)

திரையுந் திரைதவழ் நறுநீர் முழுகுபு
திருநீ றுடன்முறை யொளிர்வித்து
விரைதண் மலர்தளிர் கனிகாய் மதுமுதல்
வெற்பிற் பொதுளுவ தழுவிச்சென்
றுரைநெஞ் சுடலமு மதியா முருகன
தொளிர்தா ணறுமலர் வழிபட்டுக்
குரைபைம் புயறவழ் கிரிசூழ் பொழுதொரு
குகைமேற் றிசையெதிர் கண்ணுற்றான்.

(இ - ள்.) திரைத்தலைச் செய்கின்ற அலைகள் தவழ்கின்ற நல்ல தீர்த்தத்தின்கண் மூழ்கித் திருநீற்றினை யுடலின்கண் (ஆகமங்களிற் கூறிய) முறைப்படி அணிந்து வாசனையுடன்கூடிய குளிர்ந்த மலர்கள், தளிர்கள், கனிகள், காய்கள், தேன் முதலாக மலையின்கட் பொருந்து வனவற்றைக் கையின்கட்கொண்டு சென்று வாக்கு, மனம், காயமாகிய மூன்றானு மதித்து முருகப்பெருமானது ஒளிர்கின்ற தாளாகிய நல்ல மலரை வழிபாடுசெய்து ஒலிக்கின்ற பசிய மேகங்களூர்கின்ற மலையை வலம் வரும்பொழுது ஒரு குகையினை மேற்றிசைக்கண்ணே யெதிரே கண்டனன்.

(வி - ம்.) திரையும்-திரைக்கின்ற. மதியா-மதித்து. சூழ்பொழுது-வரும்பொழுது : முழுகுபு - வினையெச்சம்; முழுகி என்பது பொருள்.

கோலத் திணிவரை வாய்விண் டனவொளிர்
குருமா மணிஞெமிர் குகையண்மி

ஞாலத் துயர்கெட வருவா னுயர்தவ
நன்ருற் றியவிது தகுமென்னுச்
சாலத் தனதுள நினைகின் றுழியுயிர்
தணிவுற் றுழியல தடிசேராச்
சீலத் தினையவ னருளா லொருமொழி
திகழ்வுற் றதுவிரி வெளியூடே.

(இ - ள்.) *அழகு பொருந்திய திண்ணியமலையானது வாய்பிளந் தாற்போன்ற ஒளிர்கின்ற நிறம் பொருந்திய பெரிய மணிகள் ஒளியினைப் பரவச்செய்கின்ற குகையை யடைந்து பூமியின்கண்ணுள்ள ஆன்மாக்களின் றுன்பங்கெட வருபவனாகிய நந்தியெம்பெருமான் தவத்தினைப் பெரிதுஞ் செய்ய இது தகுதியாகுமென்று மிக மிகத் தன் னெஞ்சமானது நினைகின்ற காலத்து ஆன்மபோதங் கெட்ட விடத் தல்லது (அவ்வான்மாக்களை) திருவடியின்கட் கலப்புறு வண்ணஞ் செய்யா ஒழுக்கத்தினையுடைய முருகப்பெருமானது திருவருளினாலே ஆகாயத்தினிடத்து ஒரு திருவார்த்தை வெளிப்பட்டது.*

(வி - ம்.) *ஞெமிர்தல்-பரத்தல்; இதனை "ஞெமிர்தலும் பாய்தலும் பரத்தற் பொருள"வென்னும் (தொல் - சொல்) சூத்திரத்தானறிக. உயிர்தணிவுறுதல் - ஆன்மபோதங் கெடல். வெளி - ஆகாயம்.* (௪௩)

வற்று மதம்விளை பஞ்சேந் தியவரு மலைவென் றவர்பலர் தவமுக்கிப்
பெற்று குயரிய சித்தித் திறமிவ ணதனுற் பிழைதபு குகைநாமம்
கற்று சொருவினர் சித்திக் குகையென மொழிவார் கழிதவ மிதினீயும்
உற்று தரியினி நந்திக் குகையென வுரைதிக் கெழுமெனு மொழிகேளா.

(இ - ள்.) *நீங்காத மதத்தை யுண்டாக்குகின்ற பஞ்சேந்திரியங்களாகிய (நாளுக்கு நாள்) வளருகின்ற யானைகளை வென்றவர்கள் பலர் தவத்தை மேற்கொண்டு உயரிய சித்தியின் வகைகளை இக்குகையின் கட் பெற்றார்கள். ஆதலால் மலக்குற்றத்தினைப் போக்குகின்ற குகையின்றிருநாமம் பதிநூலை யறிந்து மலக்குற்றம் நீங்கிய பெரியோர்கள் சித்திக்குகையென்று இதனைச் சொல்வார்கள். இக்குகையின்கண் மிக்க தவத்தினை நீயுஞ்செய்து ஆதரிப்பாய். இனி நந்திக்குகை யென்னுஞ் சொல் திக்குக்களிலெல்லாம் உண்டாகும் என்னும் திருமொழியைக் கேட்டு.*

(வி - ம்.) *பஞ்சேந்திய வருமலை - பஞ்சேந்திரியங்களாகிய யானை கழி - மிக்க.* (௪௪)

விடையம் பொறிவழி மறவிக் கனவினும் வெஃகா தவைவிய வித்தட்கும்
நடைவிஞ் சியவுள மகிழ்மிக் கெழுதர நந்திக் குரிசிற விர்ந்தியோகின்
இடையும் வளிநடு வழியூ டினிதெழ வெழுதோ வியமென வசைவற்றுள்
அடையுஞ் சுடர்விழி யிருமுந் நிலைகளி னடைவிற் படர்வன படர்வுற்றுன்.

(இ - ள்.) *சுவை யொளியூறோசை நாற்றமென்னும் பொருள்களை மெய்வாய் கண்மூக்குச் செவியென்னும் பொறிகளின் வழியே சென்று*

மறந்தாயினும் விரும்பாது அவ்வைம்பொறிகளை யேவல்கொண்டு தடைப்படுத்தும் நெறியிலே மிகுந்த வுள்ளத்தின்கண் மகிழ்ச்சி மிக வெழாநிற்க நந்தியெங்குரவனாகிய தலைவன் யோகத்தின்கண்ணே பொருந்தி, இடைவிக்கும் (இடைகலை பிங்கலை வழியே செல்லும்)வாயுவானது சுழுமுனை நாடியின் வழியே இனிதாக இயங்காநிற்க எழுதிய சித்திரம்போன்று சிறிது மசைதலில்லாமல் (இங்ஙனம் செய்யும் யோகினால்) உள்ளத்தின்கண்ணுளவாகிய ஞானக்கண்ணானவை ஆருதாரங்களின் முறைப்படி பொருந்துவனவாகச் சென்றான்.

(வி - ம்.) மறவி - மறந்து. வியவி - ஏவல்கொண்டு, தட்கு நடை விஞ்சியவுள்ளம் - தடைசெய்யும் வழியிலே அதிகரித்தவுள்ளம். நடை-வழி. தவிர்தல்-தங்குதல். இடையும்வளி-இடைவிக்குங் காற்று. இடைவித்தல் - அடக்கல். நடுவழியூடினிதெழ-(இடைகலை பிங்கலையிலியங்குங் காற்று) சுழுமுனையிலினிதாக வியங்க, உள்ளடையுஞ் சுடர் விழி - யோகப்பயிற்சியானுள்ளே யுளவாகும் ஞானநோக்கு: இருமுந்நிலை - ஆருதாரங்கள். அடைவிற்படர்வன - முறையிற் படர்வனவாக. படர்வுற்றான் - சென்றான். இனி அடைவிற் படர்வன படர்வுற்றானென்பதற்கு - ஆருதாரங்களினிடத்து முறையாகப் பொருந்துவனவாகிய ஆருதாரப் பொருள்களை (ஞானக்கண்ணாற்) கண்டானென்பர். பொறியின்வழி விடயத்தை வெஃகாதவுள்ள மென்க. (௪௩)

ஆரு தாரமு முறையிற் கழிதலு மவிழா யிரவித ழரவிந்தத்
தேரு ரூடம தெனவைத் தருளிய விறைபார்ப் பதியிரு புடைவைக
வீரர் பலபரி சனமுங் கஞலுற வினைவென் றவர்பலர் தொழுதேத்தக்
கூரு வருமறை யோதப் பயில்வகை குமரன் றிருவுரு நினைகின்றான்.

(இ - ள்.) மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம் விசுத்தி, ஆக்ஞை என்னும் ஆருதாரங்களும் முறையாகக் கண்டு நீங்கப் பின்னர் விரிகின்ற ஆயிரமிதழ்களோடு கூடிய தாமரைமலரின் கண் இடபத்தை யேறும் வாகனமாகக்கொண்ட இறைவனும் மலையரையன் மகளாகிய உமாதேவியாரும் இரண்டு பக்கங்களிலுந் தங்கப் பெருமை பொருந்திய பல பரிசனங்கள் நெருங்க இருவினையும் வென்றவராகிய தவத்தினையுடையார் பலர் தொழுது துதிக்க நான்கு பகுதியவாகி வருகின்ற வேதங்களை யோதத் தங்குந்தன்மையினையுடைய பிள்ளையார் திருவுருவினைத் தியானிக்கின்றான்.

(வி - ம்.) தாமரை மலரின்கண் பிள்ளையார் திருவுரு நடுவட்டங்க, வைக, கஞலுற, ஏத்த, ஓதப்பொருந்துவகை சிந்தித்தானெனக் கூட்டுக. ஏறு - இடபம். ஆருடம் - ஏறுதல். வீறு - பெருமை. கஞலுற - நெருங்க. பயில்வகை - தங்கும்வகை. அம்மையப்பருக் கிடையிற் பிள்ளையாரெழுந்தருளியிருத்தல் சோமாஸ்கந்தராயிருத்த லென்பர். (௪௪)

வேதத் துயரிய வாறக் கரமனு விரிநா வகமலர் பயில்கிற்ப
ஏதத் தனிமல வலிசிந் தியவுள மெழிலா ரிறைவன தடிமூழ்க
நாதத் தலைவளர் போதத் திருவிரு நாளும் வழிபடு நலனேடும்
போதுற் றனனவன் வினையின் றிரிவொடு போதுற் றனசது ருகநான்கு.

(இ - ள்.) வேதங்களாலுயர்த்துக் கூறப்பட்ட ஆறெழுத்தாகிய மந்திரம் விரிந்த நாவாகிய மலரினுள்ளிடத்திற் பயில, குற்றத்தோடு கூடிய ஒப்பற்ற ஆணவமலத்தின் சத்தியைக் கெடுத்த மனமானது அழகு பொருந்திய பிள்ளையாரினது அடியின்கண்ணே மூழ்க பிரணவத்தினிடத்து வளர்கின்ற ஞானமாகிய திருவுருவினை ஒவ்வொருநாளும் வழிபாடு செய்யும் நலனோடு போந்தனன். அவன் வினைமாறுபாட்டினோடு நான்கு சதுர்யுகங்கள் கழிந்தன.

(வி - ம்.) ஆறக்கரம் - சடாட்சரம். ஏதம் - குற்றம். நாதம் - ஈண்டு பிரணவம். போதம் - ஞானம். வினையின்றிரவு - வினைநீக்கம். (௪எ)

விண்ணோ ரவுணர்கண் முதலா வனைவரும்
விற்றுன் றியவிவன் விழைவென் னெனென்
றெண்ணு வலமர வினைமா தவனிடை
யெதிரின் றெழுதரு மருளோடும்
தண்ணார் மதிமுடி யிறைவர்க் கருளிய
தலைவன் மயின்மிசை யெதிர்நின்றான்
மண்ணு வொளிவிடு மணிபோல் பவனடி
மலர்வீழ்ந் தருமறை மொழிகிற்பான்.

(இ - ள்.) தேவர்களும் அவுணர்கள் முதலாகிய யாவரும் தவவொளி மிகுந்த இவன் விருப்ப மென்னவென்றெண்ணிச் சுழலப்பெரிய தவத்தினைச் செய்கின்ற நந்தியெம்பெருமான் முன்னர் ஒப்பிலா தெழுகின்ற அருளினோடு குளிர்ச்சி பொருந்திய மதியினைக் குறுங்கண்ணியாக முடித்தலைச் செய்த சிவபெருமானுக்குப் பிரணவத்தின் பொருளைச் செவியறிவுறுத்தருளிய பிள்ளையார் மயின்மீதெழுந்தருளி நின்றனன். கழுவாது ஒளியினை வெளியிடுகின்ற மணிபோல்பவனாகிய முருகக்கடவுளின் அடியாகிய மலரின்மீது வீழ்ந்து அரிய வேதமாகிய தோத்திரங்களைச் சொல்வானாயினன்.

(வி - ம்.) வில் - ஈண்டுத் தவவொளி. மண்ணு-கழுவாது "மண்ணியறிப மணிநலம்" என்றார் நான்மணிக்கடிகையினும். (௪அ)

வேறு

தடவிய வுளத்துச் சேக்காத் தற்பரா னந்த போற்றி
இடவிய செய்ய நெஞ்சத் திறைகொளு மிறைவ போற்றி
மடவிய மலஞ்சே தித்து வரமருள் வள்ளல் போற்றி
நடவிய மஞ்ஞை யூர்தி நாயக போற்றி போற்றி.

(இ - ள்.) கோட்டம் பொருந்திய மனத்தின்கண்ணே தங்காத அந்த மேலான இன்புருவானவனே வணக்கம். இடமகன்ற செவ்விய நெஞ்சத்தின்கண்ணே யெழுந்தருளியிருக்கும் தலைவனே வணக்கம். அறியாமை கலந்த ஆணவமலத்தினைக் கெடுத்து அடியார்கள் விரும்பிய வரங்களை யருள்கின்ற வள்ளற்றன்மை யுடையவனே வணக்கம். நடத்துகின்ற மயில்வாகனத்தையுடைய நாயகனே வணக்கம்,

(வி - ம்.) தடம் - கோட்டம்; "தடவென் கிளவி கோட்டமுஞ் செய்யும்" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தானறிக. இடவிய - இடமகன்ற. மடவிய - மடங்கலந்த. நடவிய - நடத்துகின்ற. (௬௯)

வேதனு யுலகந் தோற்றி வேதனென் ணரியாய் போற்றி
மாதவ னுகிக் காத்து மாதவற் கெய்தாய் போற்றி
போதனுய்த் துடைத்துப் பூத்து வேறுமாய்ப் பொலிந்தாய் போற்றி
ஆதியீ றிடையு மாகி யவையொன்று மனுகாய் போற்றி.

(இ - ள்.) பிரமனுகி யுலகத்தினைப் படைத்து அப்பிரமனும் நினைத் தற்கருமையானவனே வணக்கம். திருமாலாகி உலகினைக் காத்து அம் மாலினுக்கும் அறியமுடியாதவனே வணக்கம். ஞானவடிவினனுகி யழித் தலைச் செய்து (ஆண்டொடுங்கிய பிரபஞ்சத்தை) தோற்றுவித்து அவ் வுலகின் வேருகி விளங்கியவனே வணக்கம். முதலுமீறு மிடையுமாகி அவைமூன்றுந் தன்பாலணுகாதவனே வணக்கம்.

(வி - ம்.) போதனுய் - ஞானவடிவினனுகி. துடைத்தல் - அழித் தல். பூத்தல் - (சகசமல நீங்காமையின் ஒடுங்கியவாறே) தோற்றுவித் தல். வேறுமாய் - அங்ஙனந்தோன்றிய பிரபஞ்சத்தின் வேருய். ஆதி யீறிடை - தோற்றம் நிலை ஒடுக்கம். (௭0)

ஐம்படை சுமந்த வாளி யண்ணற்கு மண்ணல் போற்றி
நம்பன்மெய் பாதி செய்த நாமவே னம்பி போற்றி
வெம்படை வீரர் தாழும் வீரர்க்கும் வீர போற்றி
உம்பரி னும்பர் போற்று மும்பர்க்கு மும்ப போற்றி.

(இ - ள்.) ஐம்படைகளைத் தாங்கிய (இறைவன்) அம்பாகிய தலை வனுந் திருமாலுக்கும் தலைவனே வணக்கம். சிவபெருமான் உருவத்தைப் பாகஞ்செய்தலாலுளவாகிய அச்சத்தைத் தரும்படியான வேற்படையை யுடைய ஆடவரிற் சிறந்தவனே வணக்கம். கொடிய படைகளையுடைய வீரர்கள் யாவரும் வணங்கத்தக்க வீரருள்வைத்து வீரனே வணக்கம். தேவருலகின்கண் ணுள்ள தேவர்கள் வணங்குந் தலைமைத் தேவர்களுக் குந் தேவனே வணக்கம்.

(வி - ம்.) ஐம்படை - சங்கு, ஆழி, தண்டம், வாள், வில். ஐம் படைசுமந்த வாளியண்ணல் - திருமால். இறைவனுக்கு விண்டு அம் பாதலை "போக மீன்ற புண்ணிய னெய்த கணையேபோல்-மாக விசும்பின் மாமதி யன்னுன் வளர்கின்ருன்" என்னுஞ் சிந்தாமணியடிகளானுணர்க. வாளியண்ணல் - பண்புத்தொகை. இறைவன்றன்னெடு கலந்துநின்ற சத்தியினை வேற்படையாகத் தந்தானுதலின் 'நம்பன்மெய் பாதிசெய்த நாமவே னம்பி' என்ருர். வீரர்க்கும் வீர என்பதனை "மள்ளர் மள்ள மறவர் மறவ" என்னும் பாணுற்றுப்படை யடிகளைப்போலப் பொருள் கொள்க. (௭௧)

வெளியிடை யொன்ருய் நின்ற வெளிமுதல் வெளியே போற்றி
வளியிடை யிரண்டாய் நின்ற வளிமுதல் வளியே போற்றி

ஒளியிடை மூன்றாய் நின்ற வொளிமுத லொளியே போற்றி
தெளிபுன னான்காய் நின்ற தெளிபுனன் முதலே போற்றி.

(இ - ள்.) ஆகாயத்தினிடத்துச் சத்தமாகிய குணவடிவமா யெழுந்தருளிய அவ்வாகாயத்திற்கு முதற்காரணமாகிய பரவெளியே வணக்கம். காற்றினிடத்து ஓசையுமூறுமாகிய இரண்டு குணவடிவமா யெழுந்தருளிய அக்காற்றினுக்கு முதற்காரணமாகிய மேலாகிய காற்று வடிவாயுள்ளோனே வணக்கம். தீயினிடத்து ஓசையூறுருவென்னும் மூன்று குணவடிவாயெழுந்தருளிய அவ்வத்தீயினுக்கு முதற்காரண மாகிய மேலான தீயின்வடிவமாயுள்ளவனே வணக்கம். தெளிந்த நீரின்கண் சுவையொளியூறோசை யென்னும் நான்கு குணவடிவமாக வெழுந்தருளியுள்ள தெளிந்த நீரினுக்கு முதற்காரணமாயுள்ள மேலான நீர்வடிவாயுள்ளவனே வணக்கம். (௨௨)

படியிடை யைந்தாய் நின்ற படிமுதற் படியே போற்றி
சுடரிரண் டாகி நின்ற சுடரினுட் சுடரே போற்றி
உடலுயி ராகி நின்ற வுயிரினு ளுயிரே போற்றி
தொடர்செயெண் பொருளு மெய்யாத் துன்னிய புராண போற்றி.

(இ - ள்.) மண்ணின்கண் சுவையொளியூறோசை நாற்றமென்னு மைங்குண வடிவமாக எழுந்தருளிய அம்மண்ணிற்கு முதற்காரணமாய மேலாகிய மண்வடிவாக வெழுந்தருளியவனே வணக்கம். ஞாயிறு திங்களென்னு மிரண்டு சுடர்களாகி யெழுந்தருளிய அச்சுடர்களுள்ளே விளக்கமுற்று (அவைகளுக்கு ஒளியை யளிக்கும்) மேலான சுடர்வடிவா யுள்ளவனே வணக்கம். உடலுமுயிருமாக வெழுந்தருளியிருந்து உயிர்களினுள்ளே (இருந்தியக்கும்) உயிர்க்குயிராகிய உயிரே வணக்கம். முறையாகக் கூறிவந்த எண்வகைப் பொருள்களுமறியாது இவைகளில் நிறைந்து நின்ற பழமையானவனே வணக்கம்.

(வி - ம்.) ''வெளியிடை''யென்பது முதலாக 'உயிரே போற்றி' என்பதிறுக அட்டமூர்த்த வடிவங் கூறியவாறு காண்க. தொடர்செய் - முறைப்படக்கூறிய. எய்யாதென்பது விகாரம். எய்யாது-அறியாமல். துன்னிய - (இவ்வெண் பொருள்களிலும்) நிறைந்த. (௨௩)

முந்திய பொருள்க ளெல்லாம் பிந்தமுந் துள்ளாய் போற்றி
பிந்துறு பொருள்க ளெல்லா முந்தப்பிந் துறுவாய் போற்றி
மந்திரப் பொருள்க ளெல்லாம் வழுத்துமந் திரத்தாய் போற்றி
வெந்திறற் படைக ளெல்லாம் வியத்தகும் படையாய் போற்றி.

(இ - ள்.) முன்னர்த் தோன்றிய பொருள்கள் யாவும் பிற்பட அநாதிக்காலத்தே யுள்ளவனே வணக்கம். பின்னர்த் தோன்றிய பொருள்கள் யாவும் முன்னரறிய பின்னரீறிலாதிருப்பவனே வணக்கம். (ஏனைய தேவர்களைக் குறிக்கும்) மந்திரத்தின் பொருள்கள் யாவும், துதிக்கும் மந்திரவடிவமாகவுள்ளவனே வணக்கம். வெவ்விய வலியோடுகூடிய படைகள் யாவும் அடக்கி நிற்கும் வேற்படையை யுடையவனே வணக்கம்.

(வி - ம்.) மந்திரப்பொருள் - தேவர்கள். அவர்களைக் குறிக்கும் மந்திரங்களன்றித் தன்னைக்குறிக்கும் மந்திரவடிவமாயிருப்பவன் என்க. வியத்தகும் - அடங்கிநிற்கும்; ஆச்சரியப்படுமெனினுமாம். (௫௪)

பொருள்வளர் குணங்கண் மூன்றும் புரட்டுமெண் குணத்தாய் போற்றி
வெருள்வளர் தொழில்க ளெல்லாம் விளிக்குமைந் தொழிலாய் போற்றி
மருள்வள ரறிவு முற்று மாய்க்குமொள் ளறிவாய் போற்றி
இருள்வள ரிச்சை சிந்து மிச்சைமிக் குடையாய் போற்றி.

(இ - ள்.) படைத்தல், காத்தல் முதலிய பொருள் வளர்தற்கேதுவாகிய சத்துவம், இராசதம், தாமத முதலிய முக்குணங்களையும் நீக்குகின்ற - தன்வயத்தனுதல் முதலிய எண்குணங்களையுடையவனே வணக்கம். அச்சம் வளர்தற் கேதுவாகிய செயல்களெல்லாவற்றினையும் கெடுக்கும் படைத்தல் காத்தல் முதலிய ஐந்தொழிலையுடையவனே வணக்கம். அஞ்ஞானத்தை வளர்த்தற்கேதுவாய அவாவினைக் கெடுக்கும் ஞானவிச்சை மிகுதியுடையவனே வணக்கம்.

(வி - ம்.) பொருள் வளர்குணம் - (படைத்தற்றொழில் முதலிய தொழில்களால்) பொருள் வளர்தற்கேதுவாகிய இராசதம், தாமதம், சத்துவம் என்னும் குணங்கள். (௫௫)

ஆணவ மூல மைந்து மலமெனு மிருளோ ராறும்
ஏணறத் துமிப்ப வில்லிட் டிலகறு முகத்தாய் போற்றி
பேணுறு திசைமேல் கீழும் பெருகிரு ஞான முய்ப்ப
மாணுறு வதனந் தோறு மலரிரு விழியாய் போற்றி.

(இ - ள்.) ஆணவமலமும், ஆணவம், மாயை, கன்மம், மாயேயம், திரோதாயியென்னும் ஐந்து மலமுமாகிய ஒப்பற்ற அறுவகை யிருளினைச் சத்தி குன்றக்கெடுக்க ஒளியினை வெளியிட்டு விளங்குகின்ற ஆறு முகங்களையுடையவனே வணக்கம். யாவரும் விரும்பத்தக்க நான்கு திசையும், மேலும் கீழுமாகிய ஆறிடங்களிலும் அதிகரிக்க பரஞானம் அபரஞானமாகிய இருவகை ஞானங்களைச் செலுத்த மாட்சி பொருந்திய முகங்கடோறும் விரிந்த இரண்டு திருக்கண்களையுடையவனே வணக்கம்.

(வி - ம்.) ஆணவ மூல மென்பதனைப் பண்புத் தொகையாக்கி 'பூதாதி' யென்பதுபோல அன்மொழித் தொகையாகக் கொள்க. ஏண் - வலி, ஈண்டுச் சத்தியின்மேற்று. வில் - ஒளி. இருஞானம் - பரஞானம் அபரஞானம். ஒவ்வொரு திக்கினுக்கும் இருஞானத்தையளிக்கும் பொருட்டே திருக்கண்கள் பன்னிரண்டாயின வெனக்கொள்க. ஆணவ மூலம் - ஆணவத்தை மூலமாகவுடையது. இஃதன்மொழித்தொகை. 'பூதாதி'யென்னுஞ் சிவஞானபோத வுதாரணவெண்பாவானு முறையானுமுணர்க. ஆணவத்தை மூலமாகவுடைய ஆணவமலமும், ஆணவமும், மாயையும், கன்மமும், மாயேயமும், திரோதாயியும் என அறுவகை மலங்களென்பார் 'ஆணவ மூலமைந்து மலமெனு மிருளோராறும்' என்றார். (௫௬)

மலர்முகப் பரிதி யஞ்சி வான்கதி ரிராறுந் தாழ்வுற்
றிலகுவ தென்னக் காதி னெரிமணிக் குழையாய் போற்றி
அலர்கதிர் வதன வென்றாழ்க் கலர்ந்ததா மரைக ளென்னக்
குலவிய தளிர்க்கை யுந்தி குரைகழற் பதத்தாய் போற்றி.

(இ - ள்.) தாமரை மலர்போன்ற திருமுகங்களாகிய சூரியனுக்கு அச்சமுற்று ஆகாயத்தின்கண் இயங்குகின்ற பன்னிரு சூரியருந் தாழ்வுற்று விளங்குவதைப்போலச் திருச்செவிகளில் ஒளிர்கின்ற மணிகள் பதித்த குண்டலத்தை யணிந்தவனே வணக்கம். கதிர்விரிந்த திருமுகமாகிய சூரியனுக்கு விரிந்த தாமரை மலர்களைப்போல விளங்குகின்ற திருக்கரங்களையும், திருவுந்தியையும், ஒலிக்கின்ற கழலணிந்த திருவடிகளையுமுடையவனே வணக்கம்.

(வி - ம்.) என்றாழ் - சூரியன். உந்தி - கொப்பூழ். (கஎ)

தெறுதழற் பிணிகண் மண்ணுஞ் சிவகங்கை யாறுய் போற்றி
வெறிகமழ் கயிலைக் கங்கைத் தீர்த்தமாய் விரிந்தாய் போற்றி
பிறவிதீர் ஞான சக்தி தரனெனும் பெயராய் போற்றி
அறிஞர்சூழ்ந் தேத்துஞ் சீபூ ரணகிரிக் கதிப போற்றி.

(இ - ள்.) வருந்துகின்ற தீயினைப்போன்ற (மூழ்கினவர்) நோய்களைக் கழுவும் சிவகங்கை வடிவாக வெழுந்தருளியுள்ளவனே வணக்கம். வாசனையை வெளியிடுகின்ற கயிலையின்கண்ணுள்ள கங்கையின்வடிவாய் எங்கணும் நிறைந்துள்ளவனே வணக்கம். (ஆன்மாக்களுக்கு) பிறப்பை நீக்குகின்ற வேலைத் திருக்கரத்தில் தாங்கியுள்ளவனென்னும் திருப்பெயரினையுடையவனே வணக்கம். பேரறிவுடையார் பலருஞ் சுற்றித் துதிக்கும் தணிகைமலைக்குத் தலைவனே வணக்கம்.

(வி - ம்.) தெறும் - வருத்துகின்ற. மண்ணுதல் - கழுவுதல். இதனை 'மண்ணிய' சென்ற வொண்ணுத லரிவை (உகஉ) என்னுங் குறுந்தொகைச் செய்யுளானறிக. ஞானசத்தி - வேல். வெறி-வாசனை. சீபூரணகிரி - தணிகைமலை. (கஅ)

நயந்தெதிர் பழிச்சி நின்ற நந்தியை யுடலந் தைவந்
துயங்கினை போலுஞ் சால வுயர்தவ முழந்தென் றையன்
வியந்துநீ வேட்ட தென்னே விளம்புதி தருது மென்றான்
முயங்கிய தவத்தான் மீட்டு முன்பணிந் திதனை வேண்டும்.

(இ - ள்.) விரும்பித் திருமுன்னர்த் தோத்திரஞ்செய்து நின்ற நந்தியெங்குரவனது உடம்பினைத்தடவி யுயர்ந்த தவத்தினையியற்றி மிக வருந்தினையெனத் திருவாய்மலர்ந்தருளி ஐயன் வியப்புற்று நீ விரும்பியது யாது சொல்வாய் தருவோமென்றான். ஒற்றுமைப்பட்ட தவத்தையுடையான் மீண்டும் வணங்கி இதனை வேண்டுவானாயினன்.

(வி - ம்.) நந்தியது - வேற்றுமை மயக்கம். போலும் : அசை; இதனை 'நெருப்பழல் சேர்ந்தக்கா னெய்போல் வதூஉம்' என்னும் நாலடிச் செய்யுளானறிக. முயங்குதல் - ஒற்றுமைப்படல். (கக)

வேறு

சிவதத்துவ வமிர்தப்பெயர் சிவனுங்குளிர் தீர்த்தம்
இவணுந்தியின் வருவித்ததி லெனைமுக்கியெ டுத்துப்
பவமுற்றிய பாசம்பசு பதியின்றிற மருளிச்
சிவதத்துவ வமிர்தக்கட றிகழ்வித்திடு கென்றான்.

(இ - ள்.) சிவதத்துவ வமிர்தமென்னும் திருப்பெயரினைப்பொருந் துங் குளிர்ந்ததீர்த்தத்தினை இவ்விடத்து நதியைப்போல வரும் வண்ணஞ் செய்து அதனிடத்தடியேனை மூழ்குவித்து எடுத்துப் பிறவி மல்குவதற் கேதுவாய பாசம் பசு பதியாகிய முப்பொருள்களின் றன்மையைச் செவியறிவுறுத்துச் சிவதத்துவ வமிர்தமாகிய கடலின்கண் மூழ்கி விளங் கும்படி செய்வாயாக வென்றனன்.

(வி - ம்.) பவமுற்றியபாசம்—பிறவி மல்குதற்கேதுவாகிய பாசம். திறம் — தன்மை. சிவதத்துவ வமிர்தக்கடல் - வீடு. (௬0)

தெருளொன்றிய வரநல்கிய சீபூரண கிரியான்
நிருதித்திசை முகனாயின னிகழ்தத்துவ வமிர்தம்
வருகென்றுகை மலரின்றலை வளைவித்தலு முக்கால்
வெருவிச்சன முளையும்படி விரைவுற்றது வருமால்.

(இ - ள்.) தெளிவு பொருந்திய (நந்தியெம்பெருமான் விழைந்த) வரத்தினை நல்கும்பொருட்டுத் தணிகைமலைக் குரியவனாகிய முருகக்கட வுள் மேற்கு முகமாக நின்றவனாகி விளங்குகின்ற தத்துவமிர்தமென் னும் தீர்த்தம் வரக்கடவதென்று கையாகிய மலரால் மூன்று முறை சுற்றலும் அச்சமுற்று மக்கள் வருந்தும் வண்ணம் அத்தீர்த்தம் விரை வாகி வந்தது.

(வி - ம்.) நிருதித்திசை - மேற்குத்திசை. முக்கால் வளைவித்தலு மெனக் கூட்டுக. வரும்+ஆல் : அசை. வரும் : கால வழுவமைதி. (௬௧)

மங்கைக்கிட மிடமாகிய வரதன்முடி மடுவில்
கங்கைப்புனல் பொங்கிப்புடை கவிழ்கின்றது நிகரத்
துங்கக்கிரி முடியிற்றவிர் தோயங்கடி திழியா
அங்கட்புவி கிழியப்பட ராருயெழு தருமே.

(இ - ள்.) உமையம்மையாருக்கு எழுந்தருளியிருக்குமிடம் இடப் பாகமாகப் பொருந்தப்பெற்ற மேலானவனாகிய சிவபெருமான் திரு முடியாகிய தடாகத்தின் கண்ணுள்ள கங்கையாகிய நீர்பொங்குதலுற் றுச் சிந்துகின்றதையொப்ப உயர்வாகிய வில்வமா சயிலத்தின்கட்டங் கிய தீர்த்தம் விரைவாக இழிந்து ஆண்டுள்ள மண்பிளக்க நதியாக எழுந்து வந்தது.

(வி - ம்.) இடம் இடமாகிய வரதன் - இடம் இடப்பாகமாகப் பொருந்தப்பெற்ற வரதனென்க. துங்கக்கிரி - வில்வமாசயிலம். தோயம் - நீர். எழுதரும் : காலவழுவமைதி. (௬௨)

சந்தக்குற டகிலின்றுணி தரளக்குவை பெயரா
உந்திக்கன வயிரங்களொ துக்கிப்புடை யெதிரும்
கோந்துற்றலர் தருவுங்குவ டுகளுந்தலை மறியப்
பந்தப்படு சிறையும்பல பறையக்கடு கியதே.

(இ - ள்.) சந்தனக்கட்டையும், அகில்மரங்களின்றுண்டங்களையும் முத்துக்குவாலையும் பெயர்த்து, திண்ணிய வயிரக்கற்களைச் செலுத்தி யொதுக்கிப் பக்கங்களிலெதிர்ந்த கொத்துக்கள் பொருந்தி அலர்ந்த மரங்களும் மலைச்சிகரங்களும் தலைமடங்கக் கட்டப்பட்ட கல்லணை பலவுங்கெட விரைந்து சென்றது.

(வி - ம்.) குறடு - கட்டை. துணி - துண்டம். பறைய - கெட. சிறை - கல்லணை. கடுகியது - விரைந்தது. (௬௩)

ஒளிர்பொன்னணி மலைமாதுள முளையப்புவி வீழா
நெளியப்புடை தவழாவுட னிமிராநடை கொள்ளா
வளிபிற்பட வோடாமலி மழலைக்குரல் பயிலும்
அளிமுற்றிய சிவதத்துவ வமிர்தப்புனன் மகவே.

(இ - ள்.) கருணை முதிர்ந்த சிவதத்துவ வமிர்தம் என்ற பெயர் பெற்ற ஆற்றுநீர் ஆகிய மகவானது ஒளிர்கின்ற பொற்கட்டிகள் அழகைத் தருகின்ற மலையாகிய பெண்ணின் உள்ளமானது வருந்தப் பூமியின் கண் வீழ்ந்து பூமிநெளியப் பக்கங்களிற் றவழ்தலுற்று உடனிமிர்ந்து நடத்தலையுற்று (வேகத்தாற்) காற்றும் பிற்பட ஓடி மழலைச்சொற் போல ஒலிபெருகச் சென்றது.

(வி - ம்.) மலைமாது - இருபெயரொட்டுப் பண்புத்தொகை. நதியைக் குழவியாக வுருவகஞ்செய்தலின் மலையை மாதாகக்கொள்க. இமவான் மகளன்று. மாது - தாய். மகப்பயிலுமெனமுடிக்க. வீழா, தவழா, நிமிரா, நடைகொள்ளா, ஓடா என்ற வினையெச்சங்கள் பயிலும் என்ற முற்றைக் கொண்டன. (௬௪)

மலதத்துவ விருள்கண்டெதிர் மருவத்தவ வெருவி
அலறிப்புடை யிரிவுற்றென வருவிக்கட கரிகள்
பலவன்றிக ளுளியங்கலை பதறிக்குளி றொலியின்
விலகும்படி விரிவுற்றது சிவதத்துவ வமிர்தம்.

(இ - ள்.) சிவதத்துவ வமிர்தமென்னும் நதியானது மாயா காரியங்களாகிய முப்பத்தொரு தத்துவங்களும் மாயேயமுமாகிய தத்துவமாகிய இருள் எதிரே பொருந்த மிக அச்சமுற்று அலறுதல் செய்து பக்கத்தே ஓடினாற்போல மதத்தை யருவிபோலக் கொட்டுகின்ற யானைகளும் பல பன்றிகளும் கரடிகளும் மான்களும் நடுக்கமுற்று ஒலிக்கின்ற முழக்கத்தால் விலகிச்செல்லும்படி ஓடியது.

(வி - ம்.) 31 தத்துவமாவன - ஆன்மதத்துவம் 24 வித்யாதத்வம் 7 ஆக முப்பத்தொன்று. மாயேயம் - மாயாகாரியங்கள். (௬௫)

நஞ்சேந்திரு ளரவந்தபுத் தரவங்கொடு நவியும்
பஞ்சேந்திய விபமாதபுத் திபமாபல தழுவி
மஞ்சேந்திய காயந்தொக வருகாயம கற்றி
அஞ்சேலென வுலவுற்றது சிவதத்துவ வமிர்தம்.

(இ - ள்.) சிவதத்துவ வமிர்தமானது நஞ்சினைத் தாங்கிய ஆணவ மலமாகிய பாம்பினைக் கெடுத்து ஒலிகொண்டு ஆன்மாக்களை வருத்துகின்ற பஞ்சேந்திரியங்களாகிய யானைகளைக் கெடுத்து பல யானைகளைத் தழுவி அழகு பொருந்திய உடம்புகள் தன்மாட்டு வந்து மூழ்குதலான் இனி வருகின்றவுடம்பினை நீக்கி அஞ்சற்கவென வந்துலாவியது.

(வி - ம்.) இருளரவம் - ஆணவமாகிய பாம்பு. அரவம் - ஒலி. இதனை 'அரவநாபுரம் பாம்போசை' எனும் நிகண்டானறிக. இபமா - யானை. தபுத்து - கெடுத்து. மஞ்சு - அழகு, இதனை 'மஞ்சு பூண்வலி வனப்பு' என்னும் நிகண்டானறிக. வருகாயமகற்றல் - மூழ்கினவர்க்கு இனியுளவாகுங் காயத்தை நீக்கல். (சுசு)

இரண்டற்றொளிர் சிவதத்துவ மினிதுய்த்தருள் புகழ்போல்
வரண்டித்திரை தருநித்தில மணியும்பன்ம ருப்புக்
குரண்டத்தொகை யன்னத்திரள் குருகின்கணம் வளைகள்
திரண்டொத்தது நுரைபொங்கிய சிவதத்துவ வமிர்தம்.

(இ - ள்) நுரைகள் பெருகிவரும் சிவதத்துவ வமிர்தமானது அத்துவிதமாகக் கலப்புற்று விளங்குகின்ற சிவதத்துவத்தை இனிதாகத் தொண்டர்கட்கு அளித்தலாலுண்டாகிய புகழ் திரண்டிருப்பதுபோல, அலைகள் வாரித்தருகின்ற முத்துக்களாகிய மணியும், பலயானைக்கொம்புகளும், கொக்குகளின் கூட்டங்களும், அன்னங்களின் கூட்டங்களும், வெள்ளிய பறவைகளின் கூட்டங்களும், சங்குக் கூட்டங்களும் திரண்டு பொருந்தியது.

(வி - ம்.) திரண்டொத்தது - இடத்திற்றொழில் இடத்து நிகழ் பொருளின்மேலேற்றிக் கூறப்பெற்ற உபசாரம். உய்த்தருள் புகழ் போல் - உய்த்தலாலுண்டாகிய புகழ்திரண்டிருப்பதுபோல். திரண்டொத்தது - திரண்டு பொருந்தியது. (சுஎ)

கலவும்பொறி விடயம்படை காமாதிக ளாக்கி
நிலவிஞ்சியி னரையற்றப நிகழுந்தனி யொளிபோல்
அலர்குங்கும மருதந்தவி ரவிரிங்குலி கங்கொண்
டுலவுற்றது சிவதத்துவ வமிர்தப்புன லுந்தி.

(இ - ள்.) சிவதத்துவ வமிர்தமென்னும் நீரோடுகூடிய நதியானது. பொருந்துகின்ற இயந்திரங்கள் ஐந்து விடயங்களாகவும், காமக் குரோத முதலிய குணங்கள் படைகளாகவும், அமைத்துக்கொண்டு பொருந்துகின்ற உடலாகிய மதிலின்கணுள்ள உயிராகிய அரையனைக் கெடுத்தலானுளதாகிய ஒப்பற்ற பிரதாபத்தினைப்போல விரிந்த குங்குமமும், மருதமரத்தின் றளிரும், விளங்குகின்ற சாதிலிங்கமுமாகிய இவைகளை வாரிச் செந்நிறங்கொடு செல்லுதலுற்றது.

(வி - ம்.) இனியொரு சாரார் பொருந்துகின்ற ஐம்பொறிகளையும் விடயங்களையும், காமாதிகளையும் படையாகவமைத்து உடலை மதிலாகவும், உடலின்கண்ணுள்ள உயிரை அரசனாகவுங் கொள்வர். பிரதாபத்திற்கு நிறஞ் செம்மையாகலின் 'அலர்குங்கும மருதந்தளி ரவிரிங்குலிகங் கொண்டிலவுற்றது' என்றார். (௬௮)

வேறு

சிலம்படி சிலம்பச் சூழ்ந்து தீங்குழற் கானந் தோற்றி
அலந்தவிர் பண்ணை முற்றி யாழிகைக் கொள்ளு நீத்தக்
குலம்புரி நங்கை செவ்வேள் குன்றினை வலமாய்ச் சூழ்ந்து
நலம்புரிந் தருள்வீ ராட்ட காசத்தை நண்ணிற் றலோ.

(இ - ள்.) மலையின் (சிலம்பினையுடைய) அடி ஒலிக்கச்சுற்றி இனிய புல்லாங்குழலினிசையையுடைய (இனிய கூந்தலாக) முல்லை நிலத்தைப் பொருந்தி, கலப்பைப்படைகள் பொருந்திய மருதநிலத்தை (துன்ப நீங்கிய விளையாட்டிடத்தை) யடைந்து, கடலாகிய கணவனைக் கைப்பிடித்து (கணையாழியைக் கைக்கொள்ளும்) வெள்ளமாகிய மேன்மையைச் செய்கின்ற பெண் கண்டார்க்கு விருப்பினைத் தருகின்ற முருகக்கடவுள் தணிகைமலையினை வலமாகச் சுற்றி (ஆன்மாக்கட்கு) நன்மையைச் செய்கின்ற வீராட்டகாசமென்னுஞ் சிறந்த திருப்பதியை யடைந்தது.

(வி - ம்.) சிலம்பல் - ஒலித்தல். குழல் - புல்லாங்குழல், கூந்தல். அலம் - கலப்பைப்படை, துன்பம். தவிர்தல் - தங்குதல், நீங்குதல். பண்ணை - மருதநிலம், விளையாட்டிடம். ஆழி - கடல், கணையாழி இது சிலேடையுருவகம். நலம் - ஈண்டு வீட்டின்பம். குலம் - மேன்மை. (௬௯)

அங்கண்வீற் றருளு முக்க ணமலனைக் குமர வேளைச்
செங்கழற் போது போற்றிச் சிவகங்கை மருங்கு தாழ்ந்து
வங்கமொன் றொன்றின் முட்டி மறிதரச் சேர்ப்ப ரார்ப்பப்
பொங்குவெண் டரங்கத் தெண்ணீர்ப் பொருகடல் கிழித்த தன்றே.

(இ - ள்.) அவ்விடத்து வேறொருவர்க்கில்லாத அழகுடனிருந்து (ஆன்மாக்களுக்கு) அருளினைச் செய்யும் மூன்று கண்களையுடைய மலமற்றவனை, முருகப்பெருமானைச் செந்நிறம் பொருந்திய வீரக்கழலையணிந்த பாதங்களை வணங்கி சிவகங்கையென்னுந் தீர்த்தத்தின் பக்கலில் தாழ்வுற்று மரக்கலங்களொன்றினோடொன்று மோதி மடங்கா நிற்க நெய்தனிலமாக்கள் முழங்க மேன்மேலு மதிகரிக்கின்ற வெள்ளிய அலையினையுடைய தெளிந்த நீர் கரையை மோதுகின்ற கடலினைக் கிழித்துச்சென்றது.

(வி - ம்.) வீற்றருளும் - வேறொருவர்க்கில்லாத சிறப்புடனிருந்தருளும். வங்கம் - மரக்கலம். சேர்ப்பர் - நெய்தனிலமக்கள். (௭0)

சுரும்புகண் டுளித்த தேறற் றுய்த்திசை முரன்று மூசும்
கரும்பொடு மசோகஞ் சூதங் கமலமுற் பலமே முல்லை

பெரும்புன றழுவும் பெற்றி பெட்டுவி டாடு வோர்பால்
பொரும்பரி சறவேள் செங்கைப் போர்ப்படை பறித்த தொக்கும்.

(இ - ள்.) வண்டுகள் கணுக்களினின்றும் சிந்திய தேனையுண்டு ஒலித்து மொய்க்கும் கரும்புகளினோடும், அசோகமலரையும், மாமலரையும், தாமரைமலரையும், நீலோற்பல மலரையும், முல்லைமலரையும், மிக்க இந்நீர் தழுவிச் செல்லுந்தன்மையானது விட்டுவிடா விரும்பித் தன்னிடத்து மூழ்குவோர்மாட்டு மன்மதன் போர்செய்யுந்தன்மை நீங்க அவ்வேளின் செங்கையின்கண்ணுள்ள போருக்குரிய பாணங்களைப் பறித்ததை யொக்கும்.

(வி - ம்.) கண் - கணு. பெற்றி - தன்மை. விடு பெட்டு என மாற்றுக. ஆடுவோர் - (தன்மாட்டு) மூழ்குவோர். பெற்றி ஒக்கும் எனக் கூட்டுக. (௭௧)

தத்துவ வமிர்த மென்னுந் தற்பரந் தீர்த்த மாயும்
தத்துவ வமிர்த நாமந் தரித்தெனக் கொன்றை தும்பை
மத்தம்வெள் ளெருக்கடம்பு வன்னிபா சறுகு கோடென்
றித்திற வணியு முன்போ லிசைந்துருக் கவினத் தோன்றும்.

(இ - ள்.) உண்மையாகிய மோட்ச வடிவமென்று சொல்லும் அச் சிவந் தீர்த்த வடிவாகியும், தத்துவ வமிர்தமென்னுந் திருநாமத்தினைத் தரித்துள்ளதென்று சொல்லும்வண்ணம், கொன்றைமலரும், தும்பை மலரும், ஊமத்தமலரும், வெள்ளெருக்கமலரும், அடம்பமலரும், வன்னியிலையும், பசியவறுகம்புல்லும், பன்றிக்கொம்புமென்று சொல்லத்தக்க இத்தகைய வணியினை முன்போலணிந்து திருவுருவழகினை யுடைத்தாகத் தோன்றுகிற்கும்.

(வி - ம்.) அடம்பு - நெய்தனிலக்கருப்பொருள்களு ளொன்று. கோடு - பன்றிக்கொம்பு. தற்பரம் – சிவம். (௭௨)

காத்தலை மருவ லானுங் கடிதடந் தோற்ற லானும்
பூத்தலை மலைத லானும் போகமும் புணர்த்த லானும்
ஏத்துவிண் ணவருந் தாழ வின்னிசை யெழுப்ப லானும்
கூத்தொடு மியற லானுங் கூத்தியர் புரையும் வாரி.

(இ - ள்.) (இருபொருள் சிலேடை) நதி, காத்தற்றொழிலைப் பொருந்துதலானும், வாசனையுடைய தடாகங்களிற்றுன் பொருந்துதலானும், அலைகடோன்றி யொன்றினோடொன்று மோதுதலானும் அனுபவிக்கப்படும் பொருள்களைச் சேர்த்தலானும், யாவருந்துதிக்கின்ற தேவர்களும் தாழும்வண்ணம் இனியவோசை யெழுப்புதலானும் நடித்தலோடு செல்லுதலானும், நாடகமாதரை யொக்கும்.

(வி - ம்.) சோலைபோன்ற கூந்தல் பொருந்தி நிதம்பத்தினைத் தோன்றச்செய்து பூக்களைத் தலையிற்சூடி (விரும்பினோர்க்கு) இன்பத்தினைச் சேர்த்து யாவருந் துதிக்கும் தேவர்களும் வணங்க இனிய இசைப் பாட்டினைப் பாடிக் கூத்தினோடு பொருந்துதல் கூத்தியர் தொழிலென்க.

கூத்தியரை நோக்கத் தலை ஆகுபெயராய்க் கூந்தலையுணர்த்திற்று. பூத்தூஅலை எனப் பிரிக்க. இயறல் - செல்லல். (எக)

கோக்கின மிறுத்த லானுந் தோலொடு குலாவ லானும்
அக்கரை வளைத்த லானு மாடுறு மரவத் தானும்
முக்கணெம் பெருமான் செவ்வேள் முருகனென் றிருவர் போலும்
தொக்கபன் மணியுஞ் சாந்துந் துறைதுறை கஞற்றும் வாரி.

(இ - ள்.) கூடிய பல அரதனங்களையும், சந்தனக்கட்டைகளையும், நீர்த்துறைதோறும் நெருக்கஞ் செய்யும் நதியானது, கொக்கின் கூட்டங் கடங்குதலானும், யானைகளோடு விளங்குதலானும், அக்கரைகளை (அலையாகிய கரங்களால்) வளைத்துக் கொள்ளுதலினாலும் அசைகின்ற குங்குமமரத்தானும் சிவபெருமானையு முருகனையு மொக்கும்.

(வி - ம்.) பகாசுரனென்னுங் கொக்கினமுகைக் கெடுத்தலானும் மான்றோல், புலித்தோல், யானைத்தோல் முதலியவற்றோடு பொருந்துதலானும், சங்குமணிக்கோவையை அரையிற் சுற்றிக்கட்டினதாலும் ஆடுகின்ற பாம்பை யணிந்துள்ளமையானும் எனச் சிவபெருமானுக்குப் பொருள் கூறுக.

சூரனாகியமாவையும் அதனினத்தையுங் கெடுத்தலானும் பிணிமுகமென்னும் யானையோடு விளங்கினமையானும், உருத்திராக்க மாலையை யணிந்த சிவபெருமானை வணங்கச்செய்தலானும், சென்ற போர் தோறும் வெற்றி பொருந்திய முழக்கத்தினையுடைமையானும் என முருகக்கடவுளுக்குப் பொருள் கூறுக. கொக்கின் + அம் - கொக்கின் அழகு. இறுத்தல் - கெடுத்தல். (எச)

தானங்கைக் கோட லானுந் தகுவரை யடக்க லானும்
கானங்கோ டருவின் மாதர் களிதழைப் பித்த லானும்
வானங்கோ ளிறைமால் வேழ மூவரு மானு மென்ப
பேனங்கொண் டார்த்துப் பைத்துப் பெருங்கடன் மடுக்கும் வெள்ளம்.

(இ - ள்.) நுரையைத் தன்னிடத்தே கொண்டு முழக்கஞ்செய்து விரிதலுற்றுப் பெரிய கடலினை நிறைக்கும் வெள்ளமானது, குறிஞ்சி நில முதலிய விடங்களைக் கைக்கொள்ளுதலானும், தகுதியையுடைய மலைகளைத் தன்னுள்ளேயடக்கிக்கொள்ளுதலானும் காட்டின்கட் டங்குதல்கொண்ட மரங்களின் அழகையும் களிப்பைத் தருகின்ற தழைகளைப் பறித்தலானும், தேவருலகையாண்ட இந்திரனையும் உபேந்திரனையும் யானையையு மொத்தது.

(வி - ம்.) பேனம் - நுரை. தானம் - இடம். மாதர் - அழகு. கானம் - காடு. தேவருலகைக்கொண்டு (சிறைகளுடன் பொருந்திப் பறக்கும்) தகுதியுடைய மலைகளை அடக்கி இசைப் பாட்டினைக் கொண்ட கற்பகச்சோலையின் கண்ணுள்ள அரம்பை முதலிய பெண்களுக்குக் களிப்பினை மிக்குளவாக்கி என இந்திரனுக்குப் பொருந்துக.

தானம் - சுவர்க்கலோகம், வரை - மலை. கானம் - இசைப்பாட்டு. தருவின்மாதர் - அரம்பை முதலிய தேவமாதர்கள். களி தழைப்பித்தல் - மகிழ்ச்சியினை மிக்குளவாக்கல்.

மாவலியென்பானீந்த தானத்தினைக் கையின்கணேற்று, அரக்கர்களடக்கி இசையைக்கொண்ட புல்லாங்குழலினால் இடைப்பெண்களுக்கு மகிழ்ச்சி தழைக்கச்செய்து நிற்றலான் என மாண்டுவுக்குப் பொருத்துக.

தானம் மாவலிபால் வாங்கியதானம். தகுவர் அரக்கர். ஐ : சாரியை. இனியொருசாரார் கோவர்த்தனகிரியாகிய குடையின்கண் அடங்கி நின்றெனப் பொருள்கூறுவர். கானம் - இசை. தரு - சுண்டுப் புல்லாங்குழல்.

மதநீரைக் கைக்கொண்டு மூங்கிலாலாகிய குத்துக் கோலுக்கடங்கிக் காட்டின்கண்ணுள்ள காதலிக்கத்தக்க களிப்பினையுடைய இலைகளைப் பியத்தெறிந்து செல்லுதலால் என யானைக்குப் பொருத்துக.

தானம் - மதநீர். வரை - குத்துக்கோல். பியத்தல் - பித்தல், பறித்தெறிதல். இனியொரு சாரார் தகுவரை யென்பதற்குத் தாங்கள் வசித்தற்குத்தகுந்த மலையிடங்களில் அடங்கியிருத்தலெனப் பொருள் கூறுவர். (எ௭)

கடம்படு தோற்றத் தானுங் கடலகம் புகுத லானும்
இடம்படு கோட்டி னானு மிபமுக னேர்த லானும்
தடம்படு துளைக்கைச் செம்மல் சண்முகன் பொதியத் தோன்றல்
குடம்படு மாலிந் நால்வர் போன்றது குரைநீர் வெள்ளம்.

(இ - ள்.) ஒலிக்கின்ற நீரினையுடைய நதியானது அரியநெறியின் கட் பொருந்துங் காட்சியானும் கடலினுள்ளே சேறலானும் விரிவாகிய கரைகளினும் யானையின் முகங்கள் தன்னுள்ளே பொருந்துதலானும், பெருமை பொருந்திய துவாரத்தினையுடைய கையோடுகூடிய விநாயகக் கடவுளையும் ஆறுமுகத்தினையுடைய முருகப்பெருமானையும், பொதிய மலையின்கண் ணெழுந்தருளியிருக்கின்ற குறுமுனியையும் குடக்கூத்துப் பொருந்திய திருமாலினையுமொத்தது.

கடம் - (காட்டின்கணுள்ள) அருநெறி. இடம்படு - விரிவான. கோடு - கரை. இபமுகம் - யானைமுகம். னகரம் - இறுதிப்போலி. தடம் - பெருமை.

விநாயகர்:—மதநீரொழுகுகின்ற வடிவினோடு குழவிப்பருவத்திற் கடலின்கட் பொருந்தித் திருவிளையாட்டுச் செய்து இடப்பக்கத்துப் பொருந்திய தந்தத்தினோடு யானைமுகந் தங்கப்பெற்று எனப் பொருள் கொள்க.

தோற்றம் - வடிவம். கடலகம் புகுதல் - குழவிப்பருவத்தில் கடலின்கட் சென்று திருவிளையாடல் செய்தல், காஞ்சிப்புராணத்திற் காண்க. கோடு - ஒற்றைக்கொம்பு. இபமுகம் - யானைமுகம். நேர்தல் - பொருந்துதல்.

ஆறுமுகன்:—கடப்பமாலை பொருந்துகின்ற வடிவத்தோடு (சூரனாகிய மாமரத்தைக்கோறல் செய்ய) கடலின்கட் சென்று இடமகன்றமலைகளின்கட்டங்கி வள்ளிநாயகியாரைத் திருமணஞ் செய்ய யானைமுகப் பிரானை யெதிர்ந்தற்று எனப்பொருள் கொள்க.

கடம்பு - கடப்பமாலை : ஆகுபெயர். கடலகம்புகுதல் - சூரனைக் கோறல் செய்யக்கடலின்கட் சேறல். இடம்படுகோடு - இடமகன்ற குன்றுதோறாடல் செய்யுமிடங்கள். இபமுகன்-யானை வடிவங்கொண்ட மூத்த பிள்ளையார்.

குறுமுனி:—கடத்தினைத் தனக்குப் பிறப்பிடமாகக்கொண்டு கடலினைத் தன்னுள்ளே செல்ல இடமகன்ற பொதியின் கட்டங்கி (காவிரியாறாகக் கமண்டலத்திலுள்ள நீரைக் கவிழ்த்த) யானைமுகத்தையுடைய விநாயகரைப் பொருந்தித் தவம்பெற்றதால் எனப் பொருள் கொள்க.

கடம் - கலசம், இதனைக் கலசயோனியென்னும் வடமொழிப்பெயராலுமறிக. கடலகம் புகுதல் – (இந்திரன் வேண்டுகோட்கிணங்கி விருத்திரனைக் கோறல் செய்ய) கடலினையுண்ணல். கோடு - ஈண்டுப் பொதியமலை. இபமுகனேர்தல் – விநாயகரை எதிர்ப்படுதல்.

திருமால்:—முல்லைநிலத்தின்கட் டோன்றுதல் செய்து மச்சம் கூர்மம் முதலிய வடிவங்கொண்டு கடலின்கட் சென்றுமுக்கி இடப்பக்கலிற் பாஞ்சசந்யமென்னுஞ் சங்கினைத்தாங்கி கசேந்திரனுக் கருள்செய்தலால் எனப்பொருள் கொள்க.

கடம் - ஈண்டு முல்லைநிலம். கோடு-சங்கு. இபமுகன் – கஜேந்திரன். (எசு)

கலைவளங் கோட லானுங் கரமலை யிருத்த லானும்
நிலைவிலை யாகுந் தோற்ற நிகழ்தரு புணர்ப்பி னானும்
அலர்புக ழீசன் மாயோ னகத்தியன் மாதர்வெற்பென்
றிலகுமிவ் வைவ ரோடு மிணைவது பொருநீர் நீத்தம்.

(இ - ள்.) கரையை மோதுகின்ற நீரோடுகூடிய வெள்ளமானது தன்னாற் கலக்கப்பட்ட வளங்களைக் கொள்ளுதலானும், கையோடு கூடிய மலையினையொத்த நதிசரமென்னும் யானைகள் தங்குதலானும், பூமியிலுள்ள உயிர்கள் நிலைத்தலையுடையதாகுங் காட்சியை உளவாக்குஞ் சம்பத்தானும், விரிந்த புகழினையுடைய இறைவனும், திருமாலும், அகத்தியனும், பெண்களும், மலையும் ஆகிய ஐவரையும் ஒத்தது.

(வி - ம்.) மலையினையுஞ்சேர்த்து ஐவரென்று முயர்திணை முடிபாற் கூறியது மிகுதிபற்றிய முடிபென்க. கலைவளம்-தன்னாற் கலக்கப்பட்ட வளம். கரமலை - யானை. (கிரிசரம், வனசரம், நதிசரமென்று மூவகை யானைகளில் நதியிலுற்பத்தியாகும் யானைக்கு நதிசரமென்று பெயர்.) உலகின்கணுள்ள ஆன்மாக்கள் உடம்போடு காணப்பட்டு நிலைபெறுந் தன்மை நீரானுளவாதலான் 'நிலனிலையாகுந் தோற்ற நிகழ்தரு புணர்ப்பினானு' மென்றார். நிலன் : ஆகுபெயர். நிலையாகுந்தோற்றம்-உடம்பினொடு நிலைபெறுங்காட்சி. புணர்ப்பு-சம்பந்தம்.

இறைவன்:—சந்திரன் கலைகள் நாளுக்குநாள் வளருமழகைத் தன்னிடத்துக்கொண்டு திருக்கரத்தில் மேருமலையாகிய வில்லினை யேந்திப் புவனங்களெல்லாம் இல்லையாம்படி செய்யுஞ் சங்காரத்தொழிலைப் பொருந்தியதால் எனப்பொருள் கொள்க.

கலை - சந்திரகலை. மலை - மேருமலை. நிலன் இலையாகுந் தோற்றம் - சங்காரத்தொழிலின் விளக்கம்.

திருமால்:—கலைமான் போன்ற மருண்ட பார்வையையுடைய இலக்குமியின் அழகின் வளத்தைத் தன்பாற்கொண்டு ஒளியோடுகூடிய பாற்கடலிற்றங்கி உலகம் நிலைபெறும்படியான காத்தற்றொழில் பொருந்தி நின்றமையால் எனப்பொருள் கொள்க.

கலை - ஆகுபெயர். வளம் - அழகு. கரம்-ஒளி-ஈண்டுப் பாற்கடல். கரமலையிருத்தலென்பதற்குக் கையின்கட் கோவர்த்தனகிரியைக் குடையாகக்கொண்டெனப் பொருள் கொள்ளினும் பொருந்தும்.

அகத்தியன்:—நூல்களின் பொருள் வளங்களையெல்லாம் தன்னகத்துக்கொண்டு கையினால் விந்தமலையைக் கீழிருக்கச்செய்து உலகஞ் சமனிலையடையுந்தன்மை பொருந்தியுள்ள சம்பத்தோடுகூடியதால் எனப் பொருள் கொள்க.

கலை - கல்லை, இடைக்குறை. கரமலை - யானை. நிலன் நிலையாகுந் தோற்றம் - நிலைபெறும்படியான கூட்டம். (எஎ)

இனையபல் வளத்தி னோடு மியங்குநீர் நதியை நோக்கி
வனைபுகழ்க் கடப்பந் தாரான் மலரவிழ் கடைக்கண் வெள்ளம்
நனைதர வெதிர்நின் றனை நனைநதி யாடு கென்றான்
வினையிகு நந்திப் புத்தேள் விதியுளி யதன்கட் டோய்ந்தான்.

(இ – ள்.) இத்தன்மைத்தாகிய பற்பல வளத்தினோடு செல்லுகின்ற நதியினைப்பார்த்து யாவருமலங்கரித்துக் கூறும் புகழினையுடைய கடப்பமாலையை யணிந்த முருகக்கடவுள், தாமரை மலர்போல விரிந்த கண்ணின் கடைவழி யொழுகுகின்ற ஆநந்த வெள்ளத்தால் உடல் நனைய வெதிர்நின்றருளுகிய நந்தியினை மலர்களோடுகூடிய நதியின் கண்ணே மூழ்குகவென்று திருவாய் மலர்ந்தருளினான். வினை நீங்கிய நந்திதேவன் விதியோடு அந்நதியின்கண் மூழ்கினான்.

(வி - ம்.) நனை-மலர். இகும் - நீங்கும். உளி : மூன்றுவது கருவிப் பொருள். (எஅ)

கொடுங்குழை மகளிர் கொங்கைக் குங்கும வளறு போல
இடுங்கழி பாங்கர்த் துன்ன வெழுநதி தோய்ந்த நந்தி
அடங்கரும் பிறவிப் பௌவ மதினின்று மேறு கின்றான்
தடங்கரை யேறி யுள்ளந் தழைத்தெழு மகிழ்ச்சி கொண்டான்.

(இ - ள்.) வளைந்த காதணியையுடைய பெண்களின் கொங்கைக் கட்டிமிர்ந்த குங்குமச் சேறுபோல இடப்பட்ட எக்கர் பக்கத்திலே பொருந்த எழுகின்ற நதியின்கண்ணே மூழ்கிய நந்தியெம்பெருமான்

அளவிலடங்குதற் கருமையாகிய பிறவிக்கடலினின்று மேறுகின்றவனைப்போலப் பெருமை பொருந்திய கரையின்கணேறி உள்ளத்தின்கட் டழைத்தெழுகின்ற மகிழ்ச்சியினை மேற்கொண்டான்.

(வி-ம்.) கனி-எக்கர். ஏறுகின்றான் - ஏறுகின்றவனைப் போன்று, முற்றெச்சம். ஏறுகின்றானென்பதை ஏறுகின்றவன் மகிழ்ச்சிகொண்டானென முடிப்பினுமமையும். (எக)

வம்பணி முலையி னாரு மாழையு மண்ணு மெல்லாம்
வம்பெனக் கடந்த நந்தி யின்னண மகிழ்ந்த வாற்றால்
வம்பவிழ் மலரும் பொன்னு மணிகளு மணிந்து செல்லும்
வம்பெரு நதிப்பேர் நந்தி நந்தினி யென்ப மாதோ.

(இ-ள்.) கச்சினையணிந்த தனங்களையுடைய பெண்களும், பொன்னும் மண்ணுமாகிய மூன்றும் நிலையுடையனவல்லவென்று அவைகளை நீக்கிய நந்தியங்கடவுள் இவ்வாறு மகிழ்ச்சியுற்ற காரணத்தான் வாசனை விரியப்பெற்ற மலரினையும், பொன்னையும், இரத்தினங்களையும் வாரியலங்கரித்துச் செல்லும் புதிதாகத்தோன்றும் நதியின் பெயர் நந்தி நந்தினியாமென் றுயர்ந்தோர் சொல்லுவர்.

(வி-ம்.) வம்பு - கச்சு, நிலையின்மை, வாசனை, புதுமை. மாழை-பொன். (அ௦)

வேறு

நெஞ்சந் தூய நிறைதவ நந்திபின்
மஞ்ச னைத்தணி கைப்பதி வள்ளலைக்
கஞ்சம் வென்ற கழலிணை தாழ்ந்தெழீஇ
விஞ்சு மன்பின் விளம்புதன் மேயினன்.

(இ-ள்.) நிறைந்த தவத்தினோடு தூய்தாகிய அழகிய மனத்தினையுடைய நந்தியெங்குரவன் பின்னர்ச் சிவகுமாரராகிய தணிகைப்பதியின்கணுள்ள வரையாது கொடுக்கும் வள்ளற்றன்மையுடைய முருகக் கடவுளது தாமரை மலரினைவென்ற இரண்டு திருவடிகளிற் றாழ்ந்தெழுந்து மிக்கெழுமன்பினோடு சிலமொழிகள் சொல்லத்தொடங்கினான்.

(வி-ம்.) வள்ளலது, கழலிணைகளில் வேற்றுமை மயக்கம். (அக)

மூவ ருக்கரி யாயருண் மொய்ம்பினால்
தேவ ருக்கரி தாந்திருப் பெற்றுளேன்
ஓவி லின்பவு ததிய ழுந்திய
தாவி லுண்மையி னித்தரத் தாங்குவல்.

(இ-ள்.) அயனரியரனென்னு மூவருக்கு மருமையானவனே பெருமான் திருவருளின் வலியான் தேவர்களுக்கும் எய்தற்கருமையாகிய செல்வமடைந்துள்ளேன். ஒழிவில்லாத இன்பக்கடலின்கண் மூழ்கக் கெடுதலில்லாத உண்மைப் பொருளினுபதேசத்தை இனிப் பெருமான் என் செவியறிவுறுக்கப் பெறுவேன்.

(வி. - ம்.) உண்மைப் பொருளின்றன்மை செவியறிவுறுத்தலின் மேனின்றது. (அஉ)

அன்ன வூர்திய கந்தைய கழ்ந்தொரீஇத்
துன்ன ரும்பயன் றுய்ப்பவ ழங்கிய
முன்ன ருந்தணி கைக்கொரு முன்னவ
இன்னு மோர்வர மீகென வேண்டுவான்.

இ-ள்.) அன்னத்தை வாகனமாகக்கொண்டு செலுத்தும் பிரமனது அகங்காரத்தை வேரோடுங்கல்லி நீக்கி யாவருமெய்துதற்கரிய பெரிய பேற்றினை யனுபவிக்க வழங்கியருளிய நினைத்தற்கருமையாகிய தணிகாசலத்தின் கண்ணுள்ள ஒப்பற்ற முன்னவனே! வேறுமொரு வரமருளிச் செய்வாயென வேண்டுகின்றான்.

(வி – ம்.) அன்னவூர்தி - பிரமன். முன்னவ - விளி. ஈகென விகாரம். (அங)

வேறு

விமலமா ரனந்த ரூபமா தேவ
விச்சுவ நாதமா போக
சமன்வித சர்வா பின்னவென் றுரைத்துத்
தைமதிப் பூசநாட் புலரிக்
கமலமும் வளையு மப்பெயர் நிதிதற்
கண்டவர் தமக்கெலா முதவ
இமிழ்திரைக் கரத்தி னேந்திய தெனமிக்
கிணங்குமிந் நதிப்புனல் படிந்தோர்.

(இ - ள்.) மலமற்ற பலவகைப்பட்ட வடிவுடையவனே! மகாதேவனே! உலகிற்குத் தலைவனாயுள்ளவனே! வரம்பிலின்புடையவனே! எல்லாவற்றிலுஞ் சமமாக வபின்னமாகக் கலந்துள்ளவனே! என்று சொல்லித் தைத்திங்கள் பூசநாளின் வைகறையின்கண் தாமரை மலரையும், சங்கினையும், அப் பதுமநிதியினையும், சங்கநிதியினையும் தம்மைப் பார்த்தவர்க்கெல்லாமளிக்க (அந்நதி) ஒலிக்கின்ற அலையாகிய கரங்களி னேந்தினாற்போலப் பொருந்தும். இந்நதியின்கண் மூழ்கினவர்.

(வி - ம்.) விமலம் - மலமின்மை. விசுவம்-உலகம். அபின்னம் - பின்னமில்லாமை; பின்னம் – வேறுபாடு. மதி - மாசம். நாள் - நட்சத்திரம். நிதியை யுதவக் கமலமும் வளையு மிணங்கும் புனலெனக் கூட்டுக. (அச)

கேவல சகலங் கடந்தவைந் தவத்தைக்
கிளரொளி முத்தியை யுறுக
தேவசின் மயவிக் கிரகவத் துவய
சிவசச்சி தானந்த நிரிக

மேவரு சங்க பூரண நிமல
வேனமுக்கால் விளம்பிமு வருடம்
தாவருங் கண்ண பக்கத்து மூன்று
மிருத்தைதொ ருடுநர் தாமும்.

(இ - ள்.) நித்திய கேவலத்தையும், சகல கேவலத்தையுங் கடந்த சுத்தாவத்தை ஐந்தனிடத்தில் விளங்குகின்ற வீட்டின்பினையடைக. ஒளியுடையவனே! ஞானமயமாகிய வடிவுடையவனே! (ஆன்மாக்களிடத்து) இரண்டறக் கலந்துள்ளவனே! மங்களப்பொருளா யுள்ளவனே! உண்மையறிவானந்த வடிவாயுள்ளவனே! துன்பமில்லாதவனே! பொருந்துகின்ற எங்குங்கலந்து நிறைவுற்றிருப்பவனே! மலமற்றவனே! என்று மூன்று முறை கூறி மூவாண்டுகள் கெடுதலற்ற கிருட்டிணபக்கத்துச் சதுர்த்தசியின்கண் அப்புனலில் மூழ்குகின்றவர்களும்.

(வி - ம்.) கேவலம் - நித்யகேவலம். சகலம் - சகலகேவலம். கேவலமென்பதனைப் பின்னுங்கூட்டுக. ஐந்தவித்தை - சுத்தாவத்தை. நிரிக - துன்பமில்லாதவனே! கண்ணபக்கம் - கிருட்டிணபக்கம், கண்ணன் - கரியவன், இதனைக் 'கருங்கண்ணனை யறியாமை நின்றோன்' என்னுந் திருக்கோவையடியானு முரையானு முணர்க. முதற்பக்கந் தொடங்கி மூன்று வட்டமாக வருகிற ஐந்து பக்கங்களின் பெயர் நந்தை, பத்திரை, சயை, இருத்தை, பூரணையாம். க, சா, கக நந்தை. உ, எ, கஉ பத்திரை. ங, அ, கங சயை. ச, கூ, கச இருத்தை. ரு. ௰. கரு பூரணை. இவ்வாறிருத்தலின் கண்ணபக்கத்து மூன்றுமிருத்தை சதுர்த்தசியென்க. இதன் விரிவை - 'நந்தைபத் திரையி னோடு நாட்டிய சயையி ருத்தை - முந்துபூ ரணையாம் பக்க முதற்றொட்டு மூன்று வட்டம்' எனவரும் நிகண்டானறிக. (அரு)

பெருகுநின் கருணைத் திறத்தினு லடியேன்
பெற்றவிப் பேறெலாம் பெறுக
தெருளிலர் பாவத் திறத்தின ரேனுஞ்
செப்புமந் திரத்தொடெந் நாளில்
பொருவிலிந் நதியிற் படியினு மவரும்
புகர்மலப் பிறவியை யொழிக
குருபர விவையும் வழங்கிமெய்ஞ் ஞானங்
கொடுமதி யெனமுறை துதித்தான்.

(இ - ள்.) மிகுகின்ற நின்கருணையின் றிறத்தாலடியேன் அடைந்த இப்பய னெல்லாவற்றையு மடைக. அருளிலராகிப் பாவவகையினையுடையரா யிருந்தாலும் முன்னர்ச் சொல்லிய மந்திரங்களை யுச்சரித்தலுடனே எக்காலத்திலும் ஒப்பில்லாத இந்நதியின் மூழ்கினாலும் அவர்களும் குற்றத்தோடு கூடிய மலங் காரணமாக வருகின்ற பிறப்பை நீக்குக. பரமாசாரியனே இவையுங் கொடுத்துச் சிவஞானத்தையுங் கொடுப்பாயாக வென்று நான்முறைப்படி வழுத்தினன்,

(வி - ம்.) முற்செய்யுளில் ஆடுந ரென்னுஞ்சொல் இச்செய்யுளி லுள்ள பெறுகவென்னுஞ் சொல்லொடு முடிந்தது. தெருள் - அருள். (௮௬)

வேட்டநல் வரங்க ளளித்துவேற் றடக்கை
விண்ணவன் மீட்டுமீ தருளும்
வாட்டுமா ணவத்து மாதவ சேய்க்கண்
வதிந்திந்த நதியைநின் குகையைச்
சேட்டொளி மோலித் தேவர்சூழ் நமையுஞ்
சிந்தையி னினைந்துபோற் றுநரும்
நாட்டவர் பணியுந் தலைமைபெற் றீற்றி
னலத்தகு முத்தியை யுறுக.

(இ - ள்.) நந்திப்புத்தேள் விரும்பிய வரங்களைக் கொடுத்து வேலாயுதத்தைத் தாங்கிய முருகக்கடவுள் மறுபடியுந் திருவாய்மலர்ந் தருள்வான். கெடுத்த ஆணவத்தினையுடைய பெரிய தவத்தினையுடைய வனே! சேய்மைக்கட்டங்கி இந்நதியினையும் நீ தவஞ்செய்த குகையினை யும் பெருமை பொருந்திய ஒளியோடு கூடிய முடியினையுடைய தேவர் கள் சுற்றிவணங்கும் நம்மையும் மனத்தின்கண் நினைந்து துதிக்கின்ற வர்கள் உலகின்கண் உள்ளார் வணங்கும் தலைமைப் பாட்டினையடைந்து முடிவில் நன்மை பொருந்திய வீட்டினையு மடையக்கடவார்கள்.

(வி - ம்.) சேடு – பெருமை. மோலி-கிரீடம். வாட்டுமாணவத்து மாதவவென்பதனை - 'விட்டவுண்டியர்'போலக் கொள்க. (௮௭)

வேறு

இழிஞரே யாக விலங்குபுள் ளாக விணர்மலர்த் தருமுத லாக
வழிமதுக் கமழுங் கணிகவெற் பகத்து வதியினும் வாழுநா ளிறினும்
கழிசிறப் பளிக்கு நம்முடை யுலகங் கலந்தனர் வாழ்கவென் றருளி
விழிபொழி யருளி னெழுத்திவே றிருந்து மெய்யரு டெளிப்பவ னுனன்.

(இ - ள்.) தாழ்ந்தோராயினுமாகுக. விலங்கு பறவையாயினு மாகுக. கொத்துக்களோடுகூடிய மலர்களையுடைய மரங்களாயினு மாகுக. இழிகின்ற தேன்மணம் நாறு தணிகைமலையிடத்து வாசஞ் செய்யினும், இறப்பினும், மிக்க சிறப்பினைத் தரும் நமது கந்த வுலகத் தைக் கலந்தவராகி யாண்டுவாழ்க வென்றருளிச்செய்து தனியிடத் தெழுந்தருளியிருந்து அருளினால் மெய்ப்பொருளாகிய முப்பொருள்களி னிலக்கணத்தைச் செவியறிவுறுப்பவ னாயினன்.

(வி - ம்.) ஆக மூன்றும் விகற்பப்பொருளில் வந்தன. வாழுநாளி றுதல் – இறத்தல். சிறப்பு – மேன்மை. நம்முடையயுலகு-கந்தவுலகு. விலங்கு பறவைதரு முதலியன அஃறிணையாக இழிஞர் என்பதொன் றுயர்திணையாகவும் கலந்தனரென உயர்திணை முடிபுபெற்றது சிறப் பினுலெனக் கொள்க. (௮௮)

இறுத நூலின ரியம்புவ பலதிற மெண்ணில்
கறுவே னத்தலை மயங்குவ கழிகசை வத்த
மறுதி யாலறி வரியன நிறைவின வலிய
அறுதி சத்திநித் தியத்தன வைந்துமெய்ப் பொருளே.

(இ - ள்.) நந்தியே! துன்பினைத் தருவனவாய (முக்கூற்றுப்புறச் சமயத்தவராலும், தங்கள் தங்கள் மதநூலறிவு கொண்டு) சொல்லப் படுவனவாகிய பெத்தமுத்தியி னிலக்கணங்கள் பலவகையாம். (காட்சி, கருதல், சத்த முதலிய அளவைகளான் அவற்றை) ஆராயின் கனவுக் காட்சியினைப்போல முன்னொடுபின் மயங்க மொழிவனவாம். ஆக லான் அவைகிடக்க (காமிக முதல் வாதுள மீறுகக்கிடந்த 28 சிவாகமங் களிற் கூறப்படுவனவாய், பாசஞான பசுஞானங்களா லறிதற்கரியன வும், செறிந்த வியாபகத்தையுடையனவும், வன்மையையுடையனவும் அறுதியாகிய சத்தியோடு நிலைபேறுள்ளனவுமாகிய இந்நான்கிலக்க ணங்களையுடைய ஐந்து பொருள்களும் உண்மைப் பொருள்களேயாம்.

(வி - ம்.) இறுதநூல் - புறச்சமயநூல். மறுதி - பசுஞானம், பாசஞானம். இதனை 'மாற்ற மனங்கழிய நின்றமறையோனே' என்னுந் திருவாசகத்தானறிக. அரியன, நிறைவின, வலியன, நித்தியத்தன வாகிய நால்வகை யிலக்கணம். மெய்ப்பொருள்-உள்பொருள். (அகூ)

பதியு மப்பதிக் கடிமையாம் பசுவுமப் பசுவின்
முதிரு மாணவப் பகையுமம் முழுப்பகை துமிப்பக்
கதிய மாயையுங் கருமமு மெனப்படு மவைதாம்
மதியு ளோர்கள்பின் னிரண்டையு மலத்தொடு மொழிவார்.

(இ - ள்.) அம்மெய்ப்பொருளாகிய அவைகள் பதிப்பொருளும், அப்பதிப் பொருளுக்கென்று மீளாவடிமையாகிய பசுப்பொருளும், அப் பசுப்பொருளிடத்து (செம்பிற் களிம்புபோல நாளுக்குநாள் அறிவை மறைத்து) முதிர்கின்ற ஆணவமலமாகிய பகைப்பொருளும் (அநாதி பாகத்தொடர்ந்த) ஆணவமாகிய வயிரமுற்ற பகையினை நீக்கவடைந்த மாயாமல மாகிய பொருளும் கருமப்பொருள்களுமென்று சொல்லப்படு வனவாம். பதிநாலுணர்விற் கூர்த்துச்சென்ற நுண்ணறிவினையுடைய பெரியார் (ஆகந்துகமாகிய) மாயை கன்மமென்னு மிரண்டனையு மாணவ மலத்தோடகப்படுத்துக் கூறுவார்கள்.

(வி - ம்.) ஆணவமலம் முதிர்ந்து நீங்குமாறு மாயாமலத்தையும் கன்ம மலத்தையு மிறைவன் இயைவித்தலின் 'அம்முழுப்பகை துமிப்பக் கதியமாயையுங் கருமமு' மென்றார். மாயா மலத்தையுங் கன்ம மலத் தையு மலமென வொன்றாக்கி ஆணவமலமொன்றே யென்பா ரொரு சாராரென்பது தோன்ற 'மதியுளார்கள் பின்னிரண்டையு மலத்தொடு மொழிவா' ரென்றார். (கூ0)

அறிந்து பிர்க்கறி விப்பது பதியறி வித்தால்
அறிந்து நிற்பது பசுவது சிவத்தடை யாமைச்
செறிந்து வையகத் துய்ப்பதா ணவந்திரள் கருவித்
துறந்த மாயைமற் றூணது பசுநிறக் கருமம்.

(இ - ள்.) அவ்வைந்தனுள்ளே பதிப்பொருள் இயற்கையுணர்வான் முற்றுமுணர்ந்து உயிர்களின் பரிபாக நிலையினுக்கியையச் செவியறிவுறுத்துவதாகிய மிக நுட்பமாகிய அநாதிமுத்த சித்துருவாகும். உயிர்கள், அப்பதிப்பொரு ளறிவித்தால் அறிந்து நிற்பதாகிய தூலமாகிய அநாதி பெத்த சித்துருவாம். ஆணவமலம் அவ்வுயிர்கள் (தமக்கென்ஞான்று முறவாகிய) பதிப்பொருளினோடு (அவனுக்கடிமை யென்றுணர்ந்து) கலவாவண்ணம் அத்துவிதமாகக் கலந்து (புவனங்களிற்) பிறவியிற் செலுத்துவதாம். (அவ்வாணமலத்தினை நீக்குவதற் கவ்வாணவமலத்தின் பின்னர் வந்து) பொருந்துகின்ற அத்தன்மைத்தாகிய மாயை பிரபஞ்ச வடிவமாகிய தொகுதியையுடையது. பல்வேறு வகையாகக் காரியப்பட்டுவரும் கன்மம் அப்பிரபஞ்சத்தின் கண் இன்பதுன்பமாகிய வுணவாயுள்ளது.

(வி - ம்.) செறிந்து - நிறைந்து. வையகம் . ஆகுபெயர். கருவித்து - தொகுதியையுடையது. உறு அந்த மாயை எனப் பிரிக்க. (௧௧)

உணர்வெ ழாச்செயிர் வலியினு லுறவினை யிழந்து
தணவு றுதவா ணவத்தினைத் தலைப்படு முயிர்கட்
கணவு தாயென விரங்கியா ரருளினுற் பருவப்
புணர்வு தேர்ந்துடல் கரணமும் புவனமும் பொருத்தி.

(இ - ள்.) அறிவு தோன்று (வண்ணந் தடைசெய்து நின்ற) ஆணவமல சத்தியினுல் (தன்னோடு கலந்து நின்றறிவினைத் தோற்றுவிக்கும்) சிற்சத்தியினுபகாரத்தை யயர்த்து (தன்னொடு) நீங்காது அத்துவிதமாகக் கலந்துள்ள ஆணவமலத்தினுற் கட்டுண்டு கேவலாவத்தையிற்றங்கிய வுயிர்கட்கு உற்றுழி யுதவுந்தாய்போல (அவ்வுயிர்களோடத்துவிதமாக் கலந்துள்ள திரோதானசத்தி) இரக்கங்கொண்டு (கைம்மாறு கருதாத) நிறைந்த கருணைப் பெருக்கினுல் அவ்வப்பருவ வியல்பு பொருந்துதலை யறிந்து (அவ்வுயிர்கள் அக்கேவல நிலையினீங்கி அறிவிச்சை செயல்கள் நிகழ்தற்கேதுவாகிய) மூவகையுடலினையும், அவைகட்குரிய கரணங்களையும், புவனங்களையும் இயையும் வண்ணஞ் செய்து.

(வி - ம்.) எழாவென்னு மீறுகெட்ட பெயரெச்சம் செயிரென்னும் பெயரொடு முடிந்தது. மூவகை யுடலாவன - காரணசரீரம், கஞ்சுகசரீரம், குணசரீரமென்பனவாம். இவற்றுட் காரணசரீரம் - அசுத்தமாயையிற் கலக்குண்டபாகம். கஞ்சுகசரீரம் - காலம், நியதி கலை, வித்தை, அராகமென்னு மைந்து தத்துவங்கள். குணசரீரம் - சத்துவம், இராசதம், தாமதமென்னு முக்குணங்களும் வெளிப்படாமலிருப்பது. இவை மூன்றையும் பரசரீரமென்பர். (௧௨)

உற்ற மாயையோ டாணவ மொழிந்தொவி ரறிவே
முற்றும் வானுரு வெனக்கொளு முதலிலா முதல்வன்
பற்று மாயையிற் படர்வினைப் பாலவா முயிர்கட்
கிற்று ருவுட லொடுமிறு முடன்முத லியைத்து.

(இ - ள்.) (எங்கும் நிறைந்த அறிவினைத் தடை செய்யும்படி) பொருந்திய மாயாமலமும் ஆணவமலமும் இயல்பாகவே நீங்கி விளங்

கும் அறிவினையே உயர்வாகிய திருமேனி முழுவதுமாகத் தாங்கித் தனக்கொரு தலைவனையன்றி யளவிலாற்றலையுடைய ஆன்மநாயகர் போகங்களை நுகருமாறு தமக்காதாரமாகக்கொள்ளு மாயேயத்தை யடைந்து போக்குவரவு செய்தநுபவிக்கின்ற வினைப்பகுதியுடைய உயிர்களுக்கு (கொள்ளிவட்டமுங் காற்றாடியும்போலக் கீழுமேலும் போக்குவரவு செய்தற்கேதுவாகிய) (மகாசங்கார காலம்வரையில் நிலைபெறுடைய) நுண்ணுடம்புடனே (போகநுகர்தற்குரிய) தூலவுடலினை ஆதிக்கண்ணே சேர்த்து.

(வி - ம்.) மாயை - மாயாமலம். அறிவே வான் உருமுற்றும் எனக்கொரும் முதல்வனெனக் கூட்டுக. மாயை - ஈண்டு மாயேயம். படர்தல் - போக்குவரவு செயல். 'எல்லைமூவைந்து நாள்களுளவென இமைக்குங் கண்ணையுடையராகிய தேவர்களை அமரர்களென்று உபசரித்துக் கூறுதல்போல மகாசங்கார காலம்வரை அழியாது நிலைபெற்றுப் பின்னரழியுஞ் சூட்சுமவுடலை 'இறுமுடலென்றது உபசார வழக்கமென்க. சூட்சுமவுடல் - தன்மாத்திரை யைந்தும் மனம்புத்தி சித்தமுமாகிய வெட்டுமாம். இறுமுடல் - தூலவுடல். (௬௩)

அருவு ருத்திறத் துடலுயி ருலகமாய் வேருய்
மருவு மற்றவற் றுடனுமாய் வல்வினைக் கேற்பக்
கருவி முற்றவுந் தொழிற்படுத் துணவினைக் காட்டிப்
பொருவி னற்பதம் புகுத்துவான் புகர்மலங் கழிக்கும்.

(இ - ள்.) தூலசூக்குமமென்னு மிருவகையுடலோடுகூடிய உயிர்களாகிய உலகமாயும், பொருட்டன்மையினாலே வேருய சிவமாயும், (அவ்விருதன்மைக்கும் பொதுவாய் இருவினைக்கியைய்த் தொழின் முயற்சியில் முனைத்துப்) பொருந்தும் அவ்வுயிர்களோடுடனாயும் (இரண்டறக் கலந்துநின்று) (அருவுருவென்னு மிருகூறுகிய) வலிய இருவினைக்கு இயைய (தமது ஆணையினாலே) தத்துவத்தொகுதி யாவையும் (போக்குவரவாகிய) தொழிலின்கண்ணியக்கிப் போகத்தினைப்புசிப்பித்து ஒப்பில்லாத வீட்டின்பத்தின்கண் நிலைபெறுத்தும் பொருட்டு (உயிர்க்குற்றமாகிய) ஆணவமலத்தினை நீக்குவான்.

(வி - ம்.) அருவுருத்திறத்துடலுயிர் - அருவும் உருவுமாகிய உடலோடுகூடிய உயிர்களாகிய வுலகம். வல்வினை - அருவுமுருவுமாகிய இருவினை. கருவி - தத்துவத்தொகுதி. உணவினைக்காட்டி-போகத்தை யுண்பித்து. புகர்மலம் - உயிர்க்குற்றமாகிய ஆணவமலம். இப்பாட்டினுக்குப் பிறவாறுமுரைப்பர். (௬௪)

இரும்பு சேர்ந்தெரி யழற்றினு மெரியுடைத் தொழிலே
இரும்பி னுக்கழற் றுவதிலை யிரும்படைப் பாதி
விரும்பு நான்முக னதியோ ரிடைவிளைத் துழியும்
அரும்பி யாங்குமீட்டொடுக்குமவ் வரனுடைத் தொழிலே.

(இ - ள்.) தீயினைக்கூடி யிரும்பு சுடுதற்றொழிலைச் செய்யினும், (அச்சுடுதற்றொழில்) இரும்பினுக்கியல்பானில்லையாகும். (அச்சுடுதற்றொழில்) தீயின் றொழிலேயாகும். (அதுபோல) (குருடர்கோலினை

யும், குழவிகள் பாலினையும் விரும்புமாறு) பெரிய படைத்தல், காத்தல், அழித்தல் முதலிய தொழில்களை விரும்பும் பிரமன் முதலிய தேவர்களை நிலைக்களமாகக்கொண்டு இறைவன் செய்தவழியும் தோற்றியவாறே யொடுக்கு மகாசங்கார காரணனாகிய இறைவன் றொழிலேயன்றி வேறொருவர் தொழிலன்று.

(வி - ம்.) அரும்பியாங்கு மீட்டொடுக்கல் - (சகசமலம் நீங்காமையால்) தோன்றியவாறே யொடுங்குமாறு செய்தல், இதனை, 'தோற்றிய திதியே யொடுங்கி மலத்துளதாமென்றும், 'சிவஞானபோதச் சூத்திர வடியானுணர்க. (கூ௰)

அனுதி பந்தமோ டனுபந்த மாவது மலமே
அனுதி பந்தமோ டனுபந்த முறுவது முயிரே
அனுதி பந்தமோ டனுபந்த மிரண்டுமில் லாதான்
அனுதி முத்தனு யனுதியே கலந்தரு ளமலன்.

(இ - ள்.) அனுதிக்காலத்தே விடுபட்டவனுய் அனுதிக்காலத்தே அவ்வான்மாக்களோ டிரண்டறக் கலந்திருக்கின்ற மலமற்ற சிவபெருமான் அனுதிபந்தமாகிய ஆணவமலத்தினுடனே அனுதிபந்தமாகிய மாயை கன்மமாகிய இரண்டினையும் இயல்பினீங்கியவனே யாவன். அநாதிபந்தமாகிய ஆணவமலத்தினையும் அதனைத் துமித்தற்குப் பின்னர் வந்தடைந்த மாயைகன்ம மலங்களையுமுறுவது உயிரேயாம். அவ்வனுதி பந்தமாவதும், அனுபந்தமாவதும் மலமேயாம்.

(வி - ம்) அனுதிபந்தம்-ஆணவமலம். அனுபந்தம் - மாயைகன்மங்கள். அனுதிபந்தமாகிய ஆணவத்தினைத் துமித்தற்குப் பின்னர் வந்தடைந்த மலத்திற்கு அனுபந்தமெனப் பெயர். அனு-பின். (கூ௧)

விதந்த யாவையும் புரிந்துமோர் விகாரமின் மையினுல்
சுதந்த ரத்தினு லொருவழி குணங்கலப் பதனுல்
இதந்தொ லாருயிர்க் கேற்றுசீர்த் திறமுத லானும்
முதிர்ந்த பேரொளி முதல்வனை யொப்பதொன் றிலையால்.

(இ - ள்.) மேலே சிறப்பித்துக் கூறிய படைத்தல் காத்தல் முதலிய தொழில்கள் யாவையும் செய்தும் வேறுபாடின்மையானும், தன் வயத்தனுதலுடைமையானும், ஒரு பெற்றித்தாய் சிற்சத்தி கலந்திருத்தலானும், அநாதிபெற்ற சித்துருவாய உயிர்களுக்கு இன்பத்தினைக் கொடுத்தருளும் சிறப்பினையுடைய தன்மையைப் பொருந்துதலானும் சிற்சத்திவடிவுடைய சிவனுகிய முதல்வனை யொக்கும் வேறு பொருளொன்றும் இன்று.

(வி - ம்.) குணம் - எண்டுச் சிற்சத்தி. முதிர்ந்த பேரொளி - சிற்சத்தி. இதனுல் எண்குணத்தானுதல் கூறினுரெனக் கொள்வாருளர். (கூ௨)

பரவு மிப்பொரு ளொன்றலாற் பதியில்லை வேறு
விரவு மாருயிர் சிற்றறி விற்பல விதத்த

இருண்ம லத்தின வீண்டுறு சகலத்த வசிப்ப
வருள்வி யாபகத் தனமலந் தபமுத்தி யடைவ.

(இ-ள்.) (வேதாகமங்களாற் புனைந்து) தோத்திரஞ் செய்யப் பெறும் (எடுப்புமிணையுமில்லா) இப்பதிப்பொருளொன்றேயல்லாமல் வேறுபதிப்பொருளில்லை. (அப்பதிப்பொருளின் வேருய் அதனெடு கலந்த) அரிய உயிர்கள் மூவகைப் பாகுபாட்டையுடையன. கண்ணொளியை மறைத்தலைச் செய்யுமிருளைப்போல, தமது சொரூபத்தினை மறைத்தலைச்செய்யு மாணவ மலத்தினையுடையன. செறிந்த மாயா கலைகளோடு கூடின. தம்மை விளக்கும் வியஞ்சகம் விளக்குமளவு விளங்கும் வியாபகத்தையுடையன. மலம் நீங்க முத்தியினை யடைவனவாம்.

(வி-ம்.) பலவிதத்த - பிரளயகலர், விஞ்ஞானகலர், சகலர் என மூவகையன. ஈண்டுறு சகலம் - மாயா கலைகளோடுகூடிய சகலம். வசிப்பவரும் வியாபகத்தன - வியஞ்சகம் விளங்குமளவு விளங்கும் வியாபகமுடைய. வியஞ்சகம் - விளக்குங்கருவி. உணர்வெழா வென்பது முதல் பரவுமிப்பொருளென்பதுவரை பதியிலக்கணங்கூறி, விரவுமாருயிரென்பது முதல் உயிரிலக்கணங் கூறுகின்றார். (கஅ)

தொகையி றந்தன வாயினுந் தொல்லையா ணவநோய்
தகைய நின்றன வதனெடு கருமமுந் தகையும்
வகையி னின்றன வவற்றெடு மாயையு மருவும்
மிகையி னின்றன வென்னமூ வகையின விதப்பின்.

(இ-ள்.) இவ்விலக்கணங்களையுடைய வுயிர்கள் எண்ணினெல்லையினைக் கடந்த அநேகமாயினும், சிறப்புவகையா னெடுத்துச்சொல்லப் புகின் பழமையாகிய ஆணவமலமாகிய நோயானுளதாகிய மயக்க மாத்திரமே பந்திக்க நின்ற விஞ்ஞானகலரெனவும் அம்மலபந்தத்துடனே (அதனை நீக்குதற்குப் பொருந்திய) கரும மலமும் பந்திக்கும் வகையி னின்ற பிரளயாகலரெனவும் அவ்விருமலங்களுடன் மாயாமலமும் பந்திக்கு மிகைப்பாட்டினின்ற சகலரெனவும் மூன்று வேறுபாட்டினையுடையனவாம்.

(வி-ம்.) விஞ்ஞானகலர் - ஒருமலமுடையார். பிரளயாகலர் - இருமலமுடையார். சகலர் - மும்மலமுடையார். இறைவனை ஏகனென்றும், உயிர்களை அநேகனென்றுங் கூறியிருத்தலின் தொகையிறந்தன வென்றார். (ககூ)

சத்து நேர்தனக் கெனவறி விலாதன தணவா
மெத்த சத்தென வறிவுமே வாதவு மல்ல
ஒத்த றிந்தவுங் கனவத்திற் கலங்குமுக் கத்த
சத்த சத்தையு மறிதலிற் சதசத்தா வனவே.

(இ-ள்.) இயல்பானறியுஞ் சிவமாகிய உண்மைப்பொருள்போல (வியஞ்சகத்தானறிதலின்) இயல்பானறியுமறிவு தனக்கென இல்லாதனவும்) உலகியலனுபவமுண்மையான்) நீங்காத நிறைந்த உலகத்தி

னைப்போல அறிவினைப் பொருந்தாதனவுமல்ல. பொருந்தியறிந்தன வாகிய இருவகை யறிவினையும் கனவு கண்டாற்போல மாறியுணருந் தொழின் முயற்சியுடையன. (ஆகையால்) சிவமாகிய உண்மைப் பொருளின்றன்மையும் (உலகமாகிய அசத்தும் பொருளின்றன்மையு மின்றி) அவ்விரண்டனோடுங் கலந்து நின்று) (அதுவதுவாய்) யறிதலின் (அவ்விரண்டினும் வேறாய) சதசத்தென்று மியல்பினையுடையனவாம்.

(வி - ம்.) ஆன்மா சத்துடன் கூடிச் சத்தினையும், அசத்துடன் கூடியசத்தினையும் அதுவதுவாய் நின்றறியுந் தன்மையுடையதென்பது தோன்ற 'சத்தசத்தையு மறிதலிற் சதசத்தாவனவே' யென்றார். நேர் : உவம உருபு. இன் : ஐந்தாவதொப்புப் பொருள். இருவகையறிவு-சத்தப்பிரபஞ்சத்தினையும் அர்த்தப் பிரபஞ்சத்தினையுமறியு மறிவு. (௪௦௦)

மூல வாணவ மயக்கலின் முதல்வனைப் பின்னிட்
டேலும் வான்றரை நரகத்தி லின்பதுன் பருந்தும்
வேலை நோய்முத லடுத்துழி வெறுப்பன வெறுக்கை
கோல மாதர்மற் றடுத்துழிக் குளிர்வன நாளும்.

(இ - ள்.) (செம்பிற்களிம்புபோல) அநாதிக்காலத்தே (தன்னறிவைத் தடைப்படுத்திய) ஆணவமல மத்துவிதமாகக் கலந்து மயக்குதலினாலே தமக்கென்றும் நீங்காத உறவாகிய சிவமாகிய முதல்வனை அறியாமல் (பிறவியிலகப்பட்டு) தாங்கள் பொருந்துதற்குரிய மேல் கீழ் நடுவென்னும் மூவகை யுலகங்களினும் போக்குவரவு செய்து (தத்தம் தொழின் முயற்சிக்கியைந்தவாறு இன்பினையும், இன்பதுன்பங்களையும், துன்பினையும் நுகராநிற்கும். (அங்ஙனம் நுகருதல் எற்றாற்பெறுது மெனின்) தொழின் முயற்சி நோய் முதலியவை வந்தவிடத்துத் துன்புறுவனவும் பொன், அழகிய பெண் முதலியவை பொருந்தியவிடத்து இன்புறுவனவுமாகிய செயலுண்மையான் விளங்கும்.

(வி - ம்.) இன்பதுன்பு என்பதனை இரட்டுற மொழிந்து கொள்க. வேலை - தொழில், கோலம் - அழகு. (௪௦௧)

தனைநி கர்ப்பருஞ் சத்தசத் துருதசத் தறியா
தனைய தாகலி னதற்கொன்றும் வேண்டுவ தில்லை
வினையும் பல்வகைக் கரணமும் வேறுவே றுடலும்
வனையு மண்டமும் யாவையு முயிர்க்கென மதியாய்.

(இ - ள்.) தன்னையொப்பது மிக்கது மில்லாத சிவமாகிய உண்மைப்பொருள் அறிவில்லாத உலகத்தினை நுகர்ந்தறியாது, உலகமாகிய அசத்துப்பொருள் அறிவில்லாத சடப்பொருளாம். அங்ஙனம் அறியாத தன்மையுடையதாதலினாலே (தொழில் கரணம், உடல், புவனம் முதலிய யாவும் அதனால் விரும்பப்படுவதில்லை. ஆகலிற் பாரிசேட அளவையான்) இருவினையும், (அவ்விருவகைப் பயனை நுகர்தற்குரிய) பலவேறு வகைப்பட்ட கருவிகளும், (அக்கருவியின் தொகுதியாகிய) பலவேறுவகை வினையினை யுடையனவாகிய உடல்களும், அவைகட்கு நிலைக்களனாகப் படைக்கப்பெற்ற புவனங்களும், அவையிற்றினுக் கங்கமாகிய ஏனையவும், அதுவதுவா யுணர்ந்தனுபவிக்கு முயிர்களுக் கென்றே யறிந்துகொள்வாயாக.

(வி - ம்.) ௯௯ஆவது செய்யுள் மூன்ருவதடி முதல் ௧௦௨ஆவது செய்யுள் முடிய சூன்மவிலக்கணங் கூறிஞர். இனி ௧௦௩ஆவது செய்யுள் முதல் பசுத்தன்மை செய்யும் ஆணவமலத்தினிலக்கணங் கூறுகின்ருர். பாரிசேடம் - கூட்டிப் பிரித்தல். (௧௦௨)

கலாதி யிச்சையா திகள்வந்து கலாவுமா றன்றே
நிலாவி நெல்லுறு முளையென வாணவ முயிரிற்
குலாவு மிச்சையா திகளொரீஇக் குளிர்பதி மாட்டுச்
சுலாவு மிச்சையா திகளையுந் தோற்றுரு தணவும்.

(இ - ள்.) நெல்லின்மாட்டுப் பொருந்திய முளைத்தற்சத்தி வெளிப் படுவதற் கேதுவாகவிருந்த உமியினைப்போன்று ஆணவமலமானது ஆன்மாவின் அறிவிச்சை செயல்களைக் கலை, வித்தை, அராகம் என்னும் தத்துவங்கள் (மாயையினின்றுந் தோன்றி) வந்து, போகத்தை நுகர் விக்குமாறு கலந்து தனது சத்தியினை நிறுவுதல் செய்து, ஆன்மாக்க ளிடத்திற் பொருந்திய அறிவிச்சை செயல்களை ஒருவுவித்து (பிறவி யாகிய கோடையின் வாடிய உயிர்களுக்குத்) தண்ணிய நிழலாம் பதிப் பொருளிடத்துப் பொருந்துகின்ற அறிவிச்சை செயல்களையும் விளங்க வொட்டாது அநாதியே அவ்வான்மாக்களைப் பொருந்தி நிற்கும்.

(வி - ம்.) தோற்ருது அன்றே அணவுமெனக் கூட்டுக. ஆணவ மலமானது ஆன்மாவின் அறிவிச்சை செயல்களை கலை, வித்தை, அராக மென்னுந் தத்துவங்கள் கலந்து போகந் துய்ப்பிக்குமாறு தனது சத் தியை நிறுவி ஆன்மாக்களின் அறிவிச்சை செயல்களை நீக்கிப் பதியிடத் துப் பொருந்தும் அறிவிச்சை செயல்களை விளங்கவொட்டாது அன்றே அணவுமென வினை முடிபு செய்க.

முளையெனவும் பாடம். அன்றே - அநாதியே. (௧௦௩)

விழிப்பு ணர்ப்புறு மிருளென விராவிய தன்னை
அழிப்ப முற்றிய சத்தியுந் தன்வழி யாக்கி
ஒழிப்பின் மூன்றிடத் திருதிறத் தவத்தையோ ரைந்தும்
கழிப்பி லாதுயி ருறப்பல சத்தியிற் கதுவும்.

(இ - ள்.) கண்ணினிடத்துக் கலந்து நிற்கும் புறவிருளைப் போன்று, ஆன்ம சிற்சத்தியினைக் கலந்து தடைப்படுத்திய ஆணவ மல மாகிய தன்னை அழிக்கும்பொருட்டு விளைந்த திரோதான சத்தியையும் மலமென்னும் பெயருடையதாகச் செய்து (அத்திரோதானசத்தி தன்னை பொருவாற்ருன்) நீக்கும்வேலை, கேவல, சகல, சுத்தமென்னும், மூன்றிடமாகிய காரணவவத்தைகளினும், மேலாலவத்தை, கீழால வத்தையென இருவகையாகி நிகழ்கின்ற சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதிதமென்னும் ஐந்தவத்தையினையும் நீங்கா துயிர்கள் பொருந்தும் வண்ணம் பல்வேறு வகைப்பட்ட சத்திகளினுலே பொருந்தாநிற்கும்.

(வி - ம்.) ஒளியுடன் கூடின் ஒளியாயும், இருளுடன் கூடின் இரு ளாயும் நிற்றல் கண்ணிற்கியல்பாகலின், விழிப்புணர்ப்புறுமிருளென் ருர். மூன்றிடம் - (கேவல சகல சுத்தமென்னும் காரண வவத்தை

யாகிய) மூன்றிடங்கள் - இருநிறத்து அவத்தையோரைந்து - கீழால வத்தை, மேலாலவத்தையாகிய இவ்விருவகை பற்றிவரும் சாக்கிர சொப்பன சுழுத்தி, துரிய, துரியாதிதம் என்னும் ஐந்தவத்தைகள். (கoஎ)

வேறு

உறுதி பயக்குங் காரியங்க ளொருகா லத்துஞ் செயவொட்டா
திறுதி பயக்குங் காரியமே யெக்கா லத்து நிகழ்விக்கும்
செறியு முயிரி னல்லறிவை யெக்கா லத்துஞ் சிதைத்துவரு
மறிய வுயிர்க்குப் புகரறிவை யெக்கா லத்தும் வளர்ப்பிக்கும்.

(இ – ள்.) (அவ்வாணவமலம்) மேற்கூறியாங் கைந்தவத்தையின் கட் பொருந்தும் ஆன்மாக்களின் ஞானசத்தியின் றொழிலைக் கெடுத்துக் கிழீர்த்துக் கொணருமாகலின், அவ்வான்மாக்கள் நல்ல பயனுடைய காரியங்கள் ஒன்றினை ஒருகாலத்துந் தோன்றச் செய்யாது, (அவ்வளவோ) அவ்வான்மாக்கள் பிறவியிற் சுழல அவ்வான்மாக்களுக்கு அஞ்ஞானத்தை எக்காலத்திலும் வளர்த்துவரும் (ஆகையால்) கேட்டினைத் தருவதாகிய காரியத்தினையே எக்காலத்துஞ் செய்விக்கும். (கoகூ)

தூய நினைவைத் தூமொழியைத் தூய தொழிலைத் தோற்றுது
தீய நினைவைத் தீமொழியைத் தீய தொழிலைத் தவத்தோற்றும்
ஆய தனியா ணவப்பகையி னரட்டைத் தணிப்ப வுயிரடுக்கும்
மாயை யிரண்டு திறனுகுஞ் சுத்த மசுத்த மெனமாதோ.

(இ - ள்) நல்லெண்ணத்தையும், நல்லமொழியினையும், நல்ல தொழிலினையும் தோன்றவிடாமல் (அவைகளின் மறுதலையாகிய) தீய வெண்ணத்தையும், தீயமொழியினையும், தீச்செயலையும் மிகத் தோற்றுவிக்கும். (இங்ஙனம் விகாரப்பட்ட செயலுடன்) பொருந்திய ஒப்பற்ற ஆணவமாகிய பகையினுலுளதாகும் கேட்டினை நீக்கும் பொருட்டு அவ்வான்மாக்கள் துணையாகச் சம்பந்திக்கும் மாயாமலமும் சுத்தமாயை, அசுத்தமாயையென விரண்டு வகைப்படும்.

(வி - ம்.) சுஅ ஆவது செய்யுள் மூன்ருவது அடி தொடங்கி கoகூ-ஆவது செய்யுள் மூன்ருவது வரிவரை ஆணவத்தினிலக்கணங் கூறி அதன்மேல் அவ்வாணவத்தினை நீக்கப்போந்த மாயாமலத்தினிலக்கணங் கூறுகின்ருர். (கoகூ)

வேறு

சுத்ததத் துவமோ ரைந்துநால் வாக்குந்
தொக்கவைம் பத்தொரக் கரமும்
கொத்துறு மெண்பத் தொருபதஞ் சத்த
கோடிமா மந்திரப் பகுப்பும்
மெய்த்தநா லேழா கமமிரு நூற்றே
முபாகமம் விரிந்தநால் வேதம்

பொய்த்தழு வாறு புராணமூ விருசாத்
திரமறு பத்துநாற் கலையும்.

(இ - ள்) சுத்த தத்துவமாகிய சிவம், சத்தி, சதாசிவம், ஈசுரம், சுத்தவித்தை யென்று மைந்து தத்துவங்களையும், பரை, பைசந்தி, மத்திமை, வைகரியென்னும் நான்கு வாக்குக்களையும், அவ்வாக்கின் காரியமாகக்கூடிய அகரமுதல் க்ஷகரமீறாகிய ஐம்பத்தொரு அக்கரங்களையும், நம, சுதா, சுவகா, வஷட், வௌஷட், பட், உம்பட் என்னும் இறுதிகளினாலே ஏழு கோடியாகச் சொல்லப்படும் மகா மந்திர வேறுபாடுகளையும், உண்மைப் பொருளினைக் கூறுகின்ற நாலாகிய காமிக முதல் வாதுள மீறாகிய இருபத்தெட்டு மூலாகமங்களையும் அவைகளின் வழித்தாய்த் தோன்றிய நாரதீய முதல் விசுவான்மகமீறாய இருநூற்றேழு உபாகமங்களையும், பல சாகைகளாகவிரிந்த இருக்கு, யசுர், சாமம், அதர்வணமென்னும் நான்கு வேதங்களையும், அவ்வவ் வேத சாகைகளின் பொருள்களை எடுத்து விளக்கும் உபபிருங்கணங்களாயுள்ள பிரமமுதல் பிரமாண்ட மீறாகிய பதினெண் புராணங்களையும், சிக்ஷை, வியாகரணம், சந்தசு, நிருத்தம், சோதிடம், கற்பமென்னும் ஆறு சாத்திரங்களையும், எழுத்திலக்கண முதல் அவத்தைப் பிரயோகமீறாகிய அறுபத்து நான்கு கலைகளையும். (௧0௭)

மேதகு சிவமே சத்தியே நாதம் விந்துவே சதாசிவ மகேச
பேதமே யரனென் றிவர்க்கும்விஞ் ஞான கலரொடு பிரளயா கலர்க்கும்
தீதறு சரியை கிரியையோ கத்திற் செறிந்தவர் தமக்குநற் றனுக்கள்
ஒதுறு கரண புவனபோ கமுமைங் கலையுமற் றுயிர்ப்பது சுத்தம்.

(இ - ள்.) மேன்மை பொருந்திய சிவம், சத்தி, நாதம், விந்து, சதாசிவம், மகேசபேத மிருபத்தைந்து, அரன் என்று கூறும் எழுவகைச் சிவபேத வடிவங்களைத் தியானித்து அச்சிவபேத வடிவங்களுடனே எழுந்தருளியிருக்கும், அபரமுத்தர்களுக்கும், விஞ்ஞானகலருடனே பிரளயாகலர்களுக்கும், குற்றமற்ற உண்மைச்சரியை, உண்மைக் கிரியை, உண்மையோகம் என்னும் நெறிகளில் வழுவாது நின்றவர்களுக்கும், நல்ல திருமேனிகளையும், அவற்றிற்குச் சொல்லப்பட்ட கருவி கரணங்களையும், புவனங்களையும் போகங்களையும், அப்போக நுகர்விற் செலுத்துகின்ற சிவசத்தி நிற்றற்குரிய தானங்களாகிய சாந்தியாதீதை, சாந்தி, வித்தை, பிரதிட்டை, நிவர்த்தியென்னும் ஐந்து கலைகளையும் பிறவற்றையும் தோற்றுவிப்பது சுத்தமாயையாம். (௧0௮)

காலமே நியதி கலையொடு வித்தை கதித்தெழு மராகமே புருடன்
சாலநா லாறு தத்துவந் தன்பாற் றரும்பிர கிருதியோ ரேழும்
மாலயன் வலாரி தேவர்கண் முதலா மன்னிய சகலருக் கெல்லாம்
கோலநற் றனுக்க ளாதிய நான்குங் கொடுப்பதா லசுத்தமா மாயை.

(இ - ள்.) இனி அசுத்தமாயையானது, காலம், நியதி, கலையொடு வித்தை. இச்சை யெழுதற்குக் காரணமாகிய அராகம், புருடனென்னுந் தத்துவங்களுடனே இருபத்துநான்கு தத்துவங்களையுந் தன்னிடத்து நின்று தோற்றுவிக்கும் பிரகிருதி தத்துவமாகிய ஏழினையும் திருமால்,

*பிரமன், இந்திரன் ஏனைய தேவர்கள் முதலாக நிலைபெற்ற சகலவர்க்கத் தவர்களுக்கெல்லாம் அழகிய நல்ல தநுகரண புவன போகமாகிய நான்கையுந் தோற்றுவிப்பதாம்.*

(வி - ம்.) *காலமுதற் பிரகிருதி வரையுள்ள ஏழனையும், மால் முதலிய தேவர்களுக்குத் தநுவாதிய நான்கனையும் கொடுப்பது அசுத்த மாயை என வினைமுடிவு செய்க. ஆன்மதத்துவ மிருபத்து நான்கையுந் தரும் பிரகிருதியென ஆன்மதத்துவத்தைப் பிரகிருதிக் கடையாக்குக.* (௧0௯)

மயக்கிடு மாயா காரிய மிலையேல்
வல்வினை நுகர்ச்சியு மில்லை
துயக்குமவ் வினையின் கழிவுமாங் கெய்தா
தொல்லையே சூழ்ந்தவா ணவத்தின்
முயக்குமற் றெழித லரிதரி தாகு
முதுயிர் மாயகா ரியத்தின்
இயக்குற லன்றி யிருவினை யிட்டா
திவையின்றி யவையுமெய் தாவால்.

(இ - ள்.) *மயக்கத்தைச் செய்கின்ற மாயையின் காரியமாகிய தநுகரணபுவன போகங்கள் இல்லையாயின் வலிய இருவினைப்பயன்களை ஆன்மாக்களுக்கு நுகருந் தொழிலின்றாம். அஃதின்றாக ஆன்மாக்களைத் துவளச் செய்யும் இவ்விருவினையின் நீக்குமாண்டெய்தாவாம். (அநாதியே செம்பிற் களிம்புபோலப்) பற்றிய ஆணவமலத்தின் கலப்பும் நீங்குதல் அதினுமரிதேயாம். ஆகலான் ஆன்மாக்களுக்கு மாயை கன்மங்களினியைபு இன்றியமையாது வேண்டப்படுவதாயிற்று. அநாதி பெத்த சித்துருவாகிய ஆன்மாக்கள் மாயா காரியமாகிய தநுகரணபுவனங்களுடனியைந்தாலன்றி நல்வினை, தீவினையாகிய, இருவினைகளையும் செய்யமாட்டாது. இவ்விரு வினையுமில்லாமல் அத்தநுகரண புவன போகங்களு மெய்தமாட்டாவாம்.*

(வி - ம்.) *மாயாகாரியம் - தநுகரண புவனபோகங்கள். இவை - இருவினைகள். அவை : தநுகரண புவனபோகங்கள். இயங்குறலென் பது விகாரம். இங்ஙனம் கூறியவாற்றால் ஆணவமல நீக்கத்திற்கு மாயைகன்மங்களின் இயைபு வேண்டப்படுவதாயிற்று. ஆகவே மூல மூன்றுமுள் பொருளாதலறிக. இம்மலமுள் பொருளாதலை, "உள்ள மலமூன்று மாய வுகுபெருந்தேன் வெள்ளம் தரும்பரியின் மேல்வந்த வள்ளல், மருவும் பெருந்துறையை வாழ்த்துமின்கள் வாழ்த்தக், கரு வும் கெடும்பிறவிக் காடு" என வருந் திருவாசகத்தானறிக.* (௧௧0)

இருவினை யென்ப மனமுதன் மூன்றி னியற்று மிதமகி தங்கள்
பெருவினைப் பயன்கள் புண்ணிய பாவம் பேசுமிக் கருமத்தின் பயன்கள்
மருவிடு மின்ப துன்பமா மவைதா மாய்வினவ் விருவினை தோற்றும்
ஒருதனு விளைப்ப மற்றொரு தனுவி னுணப்படுங் கேட்டுங்கே டிலவாய்.

(இ - ள்.) *ஆன்மாக்கள் மனவாக்குக் காயமென்னும் மூன்றினு லும் செய்யப்படும் இதம் அகிதமென்பனவே இருவினை என்று சொல்*

வார்கள். (நூல்களான் விதந்து) சொல்லப்படுவனவாகிய புண்ணிய பாவங்கள் பெரிய இருவினையின் பயனுக்குக் காரணமும் காரியமுமாய் இருக்கும். இப்புண்ணிய பாவங்களின் பயன்கள் (ஆன்மாக்களிடத்து) இன்பமும் துன்பமுமாகப் பொருந்தும். அவ்வின்ப துன்பங்களை ஆன்மாக்கள் நுகர்ந்து நீக்குங்காலத்துப் பின்னரும் அவ்விருவினையுள வாகும். ஓருடல் வினைகளைச் செய்ய வேறோருடலின்கண் வினைகள்கெட்டும். (பயன்கெடுதலின்றி) வேறோருடம்பில் நுகரப்படும்.

(வி - ம்.) வினை செய்த பொழுதே யழியுமாலேத்தாதலின் அதன் பயன் அழியாது நுண்ணிதாய் நின்று தன்னைச் செய்தான் மாட்டுச்சேற லியல் பென்பார், "ஒருதனு வினைப்ப மற்றொரு தனு வினுணப்படுங் கெட்டுங் கெடிலவா" மென்றார். இதனை "பல்லாவு ளுய்த்து விடினுங் குழக்கன்று, வல்லதாந் தாய்நாடிக் கோடலைத் தொல்லைப், பழவினையு மன்ன தகைத்தேதற் செய்த, கிழவனை நாடிக் கொளற்கு" என்னும் நாலடியாருணர்க. (கககூ)

மனமுதன் மூன்று மசைவற நின்று வந்திடு நல்வினை பலவே
மனமுதன் மூன்று மசைவறு நின்று வந்திடுந் தீவினை பலவே
மனமுதன் மூன்றும் புடைபெயர் வுற்று வந்திடு நல்வினை பலவே
மனமுதன் மூன்றும் புடைபெயர் வுற்று வந்திடுந் தீவினை பலவே.

(இ - ள்.) மனம், வாக்கு, காயமென்னும் மூன்று கருவிகளும் (நூல்களால் விலக்கிய காரிய காரியங்களில்) செல்லாம னிற்றலால் வருகின்ற நல்வினைகள் பலவாகும். அம்முக்கருவிகளும் (நூல்களில் விலக்கிய கருமங்களில் சென்று) சலனமின்றி நிற்றலால் வரக்கடவன வாகிய தீவினைகள் பலவாம். அம்முக்கரணங்களும் (நூல்களாலறிவித்த புண்ணிய காரியங்களிற்) புடைபெயர்ச்சி யுறலால் வரக்கடவன வாகிய நல்வினைகள் பலவேயாம். அம்முக்கருவிகளும் (நூல்களில் விதித்த புண்ணிய காரியங்களில் நிலைபெறாது) புடை பெயர்தலானே வரக்கடவனவாகிய தீவினைகளும் பலவாம். (ககஉ)

தூயவா யமைக்கப் படும்வினை யெவர்க்குந் தூயவா யிருப்பன பலவே
தீயவாய் விலக்கப் படுவன வெவர்க்குந் தீயவா யிருப்பன பலவே.
தூயவா யொருவர்க் கொருவருக் கொழியுந் தீயவா யிருப்பவும் பலவே
தீயவா யொருவர்க் கொருவருக் கடுக்குந் தூயவா யிருப்பவும் பலவே.

(இ - ள்.) (நூல்களான்) தூயனவாக நியமிக்கப்படும் நல்வினைகள் யாவர்க்கும் நன்மையுடையனவாக விருப்பன பலவாம். (நூல்களான்) தீயனவென்று விலக்கப்படும் தீவினைகள் யாவர்க்குந் தீயனவாக விருப்பன பலவாம். (நூல்களான் விதித்த நல்வினைகள்) பெரியாரொருவர்க்கு நல்லனவாய் (நூனெறி யொழுகாத பிறோர்க்கு) விதியொழிந்து தீயனவாயிருப்பவும் பலவேயாம். (நூல்களான் விலக்கப்பட்ட) வினைகள் ஒருவர்க்குக் கருத்துவகையான் பொருந்துந் தூயனவாயிருப்பனவும் பலவேயாம். (ககங)

நல்வினை திறம்பித் தீயவாய்த் தீய நல்லவாய் வருபவு முளவே
வல்வினை மெலிய வினைகளாய் மெலிய வலியவாய் வருபவு முளவே

நல்வினை செயும்போ ததன்பயன் போலத் தீயவு நணுகலு முளவே
புல்வினை செயும்போ ததன்பயன் போல நல்லவும் புணர்தலு முளவே.

(இ - ள்.) *நல்வினையென் றியற்றப்படும் வினைகள் மாறுபட்டுத் தீயனவாகவும், தீவினையென் றியற்றப்படுவன நல்வினையாக மாறி வருவனவும் பலவுள்ளனவாம். (செயற்கரிய யாகம் முதலிய) வலிய வினைகள் செயற்கெளிய மெலிய வினைகளாக மாறிவருவனவும், பலவுள்ளன. நல்வினைகளை யியற்றும்போது அந்நல்வினைப் பயன்போலத் தீவினைப் பயன்கள் வந்து சேறலும் பலவுள்ளனவாம். மெல்லிய தீவினைகளைச் செய்யும்போது அவ்வினைப் பயன்போல நல்வினைப் பயன்வந்து சேர்தலும் பலவுள்ளனவாம்.*

(வி - ம்.) *வல்வினை, மெல்வினை — சிவபுண்ணியம், பசு புண்ணிய மென்க. வல்வினை : அசுவமேத முதலிய யாகஞ்செய்தவர் இவற்றால் வீடடையாமல் உலக பதவியடைதலால் "வல்வினை மெல்வினைகளா மென்றார். மெலியமெல்வினை - திருவலகிடுதல் வணங்கல் முதலியன. இவற்றான் வீடடைதலின் - "வலிய" வென்றார். முதலிரண்டடிக்கும் "புண்ணியம் பாதக"மென்னும் செய்யுளின் கருத்தைக் கொள்க. (௧௧௪)*

புரிதரு முறையிற் பிறழ்ந்துயிர் தெய்வம்
பூதமென் றிவற்றினு ளொன்றால்
மருவுழி விழைந்த விழைந்தில விழைந்த
வன்றிவே றுவன வென்னத்
தரிவிதப் படுவ பயனிழி வினைக
டீர்வுசெய் யினுநுகர்ந் தன்றி
இரிதரா முழுது மிதுவிலை யானு
மியையும்பண் ணுமையும் பலிக்கும்.

(இ - ள்.) *இனி, அவ்விருவினைப் பயன்களும் செய்த முறை வருத லன்றி, முன்செய்த வினை பின்னும் பின் செய்தவினை முன்னுமாக, மாறு பட்டுத்தான், தெய்வம் பிறவுயிராகிய மூன்றனுளொன்றதுவாகப் பொருந்துமிடத்து, அவ்வான்மாக்கள் விரும்பினவும், விரும்பாதனவும், விரும்பினவன்றி வேறுவனவுமாக, மூவகைப்பட்டு வருவனவாகும். தாழ்ந்த அதிபாதக முதலியவற்றின் பயன்கள் கழுவாய் செய்யினும் அநுபவித்ததன்றி முற்றிலும் நீங்காவாம். இப்பிராயச்சித்தம் விலை கொடுத்துப் பிறராலும் செய்யப்படும். ஒரோவழி இவ்விருவகையும் செய்யாதிருக்கவும் நீங்குவதும் உண்டு.*

(வி - ம்.) *மருவுழிப் பயன்கள் திரிவிதப்படுவனவென முடிக்க.*

*தீர்வு - பிராயச்சித்தம். முழுதுமிரிதராவென மாற்றுக. இது வென்றது நல்வினை தீவினைகளாகிய இருவினையை யென்க. (௧௧௫)*

இன்பமே பயக்கும் புண்ணிய மெல்லா மிழிதரு பாவங்க ளெல்லாம்
துன்பமே பயக்கும் புண்ணிய பாவந் தொக்கதம் பயன்றரா தொழியா

கோள்படு வினைக ளொழியிரு வினையுங் குலாவுறு புண்ணிய பாவ
வன்புறு பயனை யப்பயன் போல வழங்குறு தொழிவகை யிலையே.

(இ-ள்.) புண்ணியச் செயல்கள் யாவும் இன்பினையே தரும் இழிக்கத்தக்க பாவங்கள் யாவுந் துன்பினையே தருவனவாம். புண்ணிய பாவமெல்லா மிருசெயலும் தமக்கெனத் தொகை செய்யப்பட்ட பயனை இன்பதுன்பினைத் தாராதொழியாவாம். (நீரடித்தல் அழுக்குத் திரட்டல் முதலிய) விளைகிய வெறுவினைகள், ஒழிக்கின்ற சிவ நல்வினை தீவினைகளும், தம் பயனைப் பொருந்தும் புண்ணிய பாவங்களின் வலிய பயனாகிய இன்பதுன்பினை அப்பசுக்களின் இருவினைப் பயன்கள்போலத் தாமளிக்கும் வகையும் இல்லையாம்.

(வி-ம்.) கோள்படுவினை யொழிவினை யென்பதற்கு - அச்சத்தைத் தருகின்ற நல்வினை தீவினையை யொழிக்கின்ற சிவநல்வினை யென் பாருமுளர். (௧௧௬)

ஈண்டுநாற் பிறப்பி னெழுவகைத் தோற்றத்
தெண்பத்து நான்கெனு மிலக்கம்
மாண்டபல் பவத்திற் பன்முறை வினையான்
மறிதரு முயிர்களை யெடுப்ப
ஆண்டரு ளமல னறுதியி னுலக
மாக்குழி யருந்தலந் தீர்த்தம்
காண்டகு மூர்த்தி யென்னமூன் றுருவாய்க்
கண்ணக னுலகெலாங் கதித்து.

(இ-ள்.) இப்புவனத்தின்கண் (முட்டையிற் பிறப்பனவும், கருப்பையிற் றோன்றுவனவும், வேர்வைநீரிற் பிறப்பனவும், வித்துவேர் கிழங்கு முதலியவைகளைப் பிளந்து தோன்றுவனவுமாகிய) நால்வகைப் பிறப்பினால் மனிதர் தேவர் விலங்கு பறவை ஊர்வன நீர்வாழ்வன தாவரமென்னும் எழுவகை வடிவ வேறுபாட்டினையுடைய எண்பத்து நான்கிலக்கமென்னுந் தொகை மிகுந்த பிறவிகளிலே பலமுறை இருவினைக்கீடாகக் (கொள்ளிவட்டமும் காற்றாடியும்போல) மேலுங்கீழுஞ் சுழன்று போக்கு வரவு புரியு முயிர்களை அநாதிமல முத்தராகிய அருள் வடிவான சிவபெருமான் அச்சுழற்சியினின்று (கைம்மாறில்லாத பெருங் கருணைத் திறமாகிய, கையினாலெடுத்தற்பொருட்டு அநாதிக்காலத்தே இவ்வுலகைப் படைக்குஞான்று அருமையாகிய தலம், தீர்த்தம், யாவரும் காணத்தக்க மூர்த்தி என்று மூன்று வடிவங்களாகத் தனது சத்தியினாலே வெளி வந்து தோன்றி.

(வி-ம்.) மறிதரும் - சுழலும். ஆக்குழி - படைக்கும் பொழுது. கண் - இடம். (௧௧௭)

அறிதரா வகையிற் புண்ணிய முற்ற வடுத்தறி தரப்பணித் ததற்பின்
செறிதரு மகத்துச் சரியைமுன் னான்குந் திகழ்தர மென்மேலச் செலுத்தி

நெறிதரு முண்மைச் சரியைமுன் மூன்று நிரப்பியே தன்வலி தேய்ந்து
பறிமல பாகம் பயிற்றுபு சத்தி பதித்திரு வினைச்சம மாக்கி.

(இ - ள்.) இருவினை காரணமாகப் போக்கு வரவு செய்யு மான்மாக்கள் அறியாத வகையினாலே சிவபுண்ணியங்களைச் சேர்ப்பித்து அதன் பின்னர் அச்சிவபுண்ணியத்தை அறிந்து இயற்றும் வண்ணம் செய்வித்து அதன் பின்னர் அப்புண்ணியத்தான் வருதற்குரிய (அகச்சமய மாறினுக்கும் பொதுவாகிய) உபாயச்சரியை கிரியை யோகம் ஞான மென்னும் நாற்பாதங்களையுந் தெரிந்தொழுகுமாறு மெல்ல மெல்ல வியக்குவித்து, வீட்டினை நேரேயளிக்கின்ற (சித்தாந்த சைவத்துட் கூறிய) (சிறப்பாகிய) உண்மைச் சரியை, கிரியை, யோகம் முறையே நிறைவித்து (அச்சிறப்பியல்பு பொருந்திய தவத்தானே) தன்வலி கெட்டு நீங்குவதாகிய ஆணவமல பரிபாகம் வரச்செய்து, அதனுளதாகத் தக்க சத்திநி பாதத்தை விளக்கி (அவ்விளக்கத்தினாலே) இருவினையுஞ் சமமாகக் காணுமாறு செய்து.

அபுத்தி பூர்வபுண்ணிய முதிர்தலாற் புத்தி பூர்வபுண்ணியஞ் செய்யத் தன்வலி தேய்ந்து பறிந்த மலமெனக் கூட்டுக. சிவபுண்ணியம் பத்தனுள் இச்செய்யுளில் உபாயச்சரியை முதலொன்பதனையுங் கூறி அடுத்த செய்யுளில் உண்மை ஞானத்தைத் தசகாரியமாக வுணர்த்துவா னெடுத்துக்கொண்டார்.

(வி - ம்.) தன் - என்றது ஆணவத்தை. (கசஅ)

பாசமும் பசுவுங் கீழுற மேலாம் பசுபதி நீருறு கூர்ப்புத்
தேசுறத் திரண்டா லெனவருட் குருவாய்த் திருவுரு வெடுத்தெழுந்தருளி
மாசறு மனுக்கள் பதங்களக் கரங்கள் வதிபுவ னங்கடத் துவங்கள்
ஆசறு கலைகளென்னுமோ ராறு மிறபத் தூய்மைசெய் தருளி.

(இ - ள்.) பாசஞானமும் பசுஞானமும் (வியாப்பியமாய்க்) கீழாகப்பொருந்த (அவற்றின்) மேம்பட்டு வியாபகமாய் விளங்குகின்ற ஆன்மநாயகர், நீரின்கட்டோன்றுது பொருந்திய உவர்ப்பென்னுஞ் சுவை (வியஞ்சகமுள்வழி) பிரகாசம் பொருந்தத் திரண்டு தோன்றினாற்போல, அருளே திருமேனியாகப் பரமாசாரியராகத் திருவுருக்கொண்டெழுந்தருளி (ஆணவமலத்தின்) அழுக்கையறுத்தற்குப் பொருந்திய மந்திராத்துவா, பதாத்துவா, வர்ணாத்துவா, தங்குதற்கிடனாகிய புவனாத்துவா, குற்றமற்ற கலாத்துவா வென்னும், ஆறத்துவாக்களையும், (அவற்றுள் அவ்வான்மாக்கள் நுகரக்கடவனவாய்க் கிடந்த) வினைக்குற்ற மனைத்தும் நீங்கும்படி சுத்தி செய்தலாகிய நிருவாண தீக்கையினைச் செய்து. (ககக)

கூட்டமே பொதுவே தன்னியல் பென்னக்
குறித்திடு முத்திற வுணர்வால்
நாட்டுமுப் பொருளு மொன்பது தரமா
நாடிடப் படுமவை யெல்லாம்
காட்டுபு காட்டுந் தானுங்கா ணறிவுங்
கதிர்வழி யெனக்கலப் பாகும்

ஈட்டரும் பயனுந் தெரித்ததி னழுத்து
மிவற்றையுங் கிளக்குதுங் கேட்டி.

(இ - ள்.) (அத்தகைய நிருவாண தீக்கையுற்ற ஆன்மாக்கள்) தொகையாகப் பெயர்சாதி முதலியவற்றைப் பிரித்தறியாது பொது வகையானுணரும் நிருவிகற்பக்காட்சியும், பொதுவியல்பா னங்ஙன முணர்ந்தவற்றைச் சிறப்புவகையா னறிதற்கட் டுணிவு பிறவாது இதுவோ அதுவோவென் றையுற்றுணரும் இரட்டுறு காட்சியும், சிறப்பு வகையான் பெயர் சாதி முதலியவைந்தனையு முணருந் தெளிவுக் காட்சியென்று கருதப்படுகின்ற, ஞானசிற்சத்தியின் றொழிற்பாட்டினாலே (சித்தாந்த நூலுணர்வால்) நிலைபெறும்படி செய்யும் முப்பொருள்களையும் தனித்தனி ஒவ்வொன்றும் மும்முறையாக ஒன்பதுதரமாராய்ந்துணரப்படும். அம்மூத்திற உணர்வின் வகைகளை (உணர்ந்து உணர்த்தும் சிவஞானமும்) காட்டவுணரும் ஆன்மஞானமும் கதிரொளியுங் கண்ணொளியும் போலக் கலந்த அத்துவிதமாயிருக்கும் (பல பிறவிகளினும் தேடுதற்கரிய பெரும் பயனாகிய சிவப்பேற்றினையுமுணர்த்தி அதனிடத்தழுத்தி யனுபவிப்பதாகிய சிவபோகமென்னும் இப்பத்துக் காரியங்களையும் தெளிவுறச் செவியறிவுறுப்பாங் கேட்பாயாக.

(வி - ம்.) கூட்டவுணர்வு, பொதுவுணர்வு, சிறப்புணர்வு ஆகிய மூன்றும் முப்பொருளுக்கும் உளவாகலின் ஒன்பதாயின. கூட்டவுணர்வு - பொது வகையானுணரும் நிருவிகற்பக்காட்சி, பொதுவுணர்வு - பொதுவகையா னறியப்பட்டுச் சிறப்புவகையா னறியப்படாத ஐயக்காட்சி. தன்னியல்பு - சிறப்பியலானுணரு மறிவென்க. நிருவிகற்பக்காண்டல், இரட்டுறக் காண்டல், சிறப்புறக் காண்டலென்னும் மூவகையுணர்வான் முப்பொருளும் ஒன்பது வகைப்படுமென்க. காட்டுகின்றதானும், அதனைக் காண்கின்ற அறிவும் கதிரொளியும் கண்ணொளியும் அத்துவிதமாகக் கலப்பாகின்ற ஈட்டுதற்கரிய பேரின்பப் பயனையுந்தெரித்து, அப்பயனில் அழுத்துவானென்க. அழுத்தும் என்னும் பயனிலைக்கு எழுவாய், அமலனென ௯௯௭-ஆம் பாட்டிலுள்ளது காண்க. (௯௨0)

மண்முத லாகச் சிவமுடி வாக
மலிதரு தத்துவ மெல்லாம்
நண்ணிய தொழிலைத் தனித்தனி காண்டல்
நவைதரு மதனுரு வாகும்
திண்ணிய வவைதாஞ் சடமெனக் காண்ட
றெரிசன மிடையிவை நீங்கும்
உண்மையைக் காண்டல் சுத்தியா மூன்று
மூற்றன பாசத்தின் மாட்டு.

(இ - ள்.) பிருதுவி தத்துவ முதலாகச் சிவதத்துவ மிறுதியாகத் தொக்க முப்பத்தாறு தத்துவங்களும் (ஆன்மாவாகிய தன்னொடு மியைந்த விடத்துப் பொருந்திய செயல்களை ஒவ்வொரு தத்துவமும் இதனை இதனைச் செய்கிறதென வேறு வேறாகவைத் தான்ம சிற்சத்தியுணர்தல் குற்றத்தைச் செய்யுந் தத்துவரூபமாகும். வலியமைந்த அத்

தத்துவக் கூட்டங்கள் (இயக்குவானையின்றி யியங்குதலின்மையால்) அறிவில் பொருளென்றுன்ம சிற்சத்தி யுணர்தல் தத்துவ தரிசனமாகும். இத்தத்துவக் கூட்டங்கள் (ஒரு பொருள்போற் காணப்பட்டு நின்று) இடையில் இறைவனருளால் நீங்குமென்று முண்மையை (ஆன்ம சிற்சத்தி யுணர்தல்) தத்துவ சுத்தியாம் - பாசமாகிய பொருளின்கண்ணே (இங்குக்கூறிய) உருவந்தரிசனமென்றும் மூன்றும் பொருந்தியனவாம். (௧௨௧)

இன்னணம் பாச மகறலு முறவும்
இகலுறு பகையுநா டாது
மன்னிய தானே முதலென நிற்றன்
மாசுயிர்க் குருவிது காறும்
அன்னியத் தழுங்கு நினக்குயி ருருளென்
றகற்றவவ் வருளினுன் முதலென்
றுன்னுதல் காட்சி யுதுகொடு செயநேர்ந்
தொழிந்தரு ளாய்விடல் சுத்தி.

(இ - ள்.) இங்ஙனம் தத்துவ சுத்தியாதலும், உடனின்றுணர்த்துஞ் சிவமாகிய வுறவினையும் (தன்னுற்றலானே பொல்லாங்கென்பன வெல்லாமியற்றிய) மாறுபாடுற்ற மலமாகிய பகையினையும், அறிய மாட்டாது (கேவல சகலங்களிற்) பொருந்திய ஆன்மாவே (தத்துவக் கூட்டங்களினின்று நீங்கியவளவில்) தன்னை முதற்பொருளென்றறிந்து நிற்றல் (மலக்) குற்றத்தையுடைய ஆன்மாவுக்கு வடிவாகும். இச்சுத்தாவத்தையைத் தலைப்படுமளவும், நின்னியல்பின் வேறுபட்ட பாசக் கூட்டத்தினிடையே அதுவதுவா யழுந்தியிருந்த நினக்கு உயிராவது அருளாகுமென்று (பரமாசாரியர் திருவாய்மலர்ந்தருளி நான்முதலென்றலை) நீக்க (அங்ஙனந் தெரித்துக்காட்டிய) அருளினுலே (அதனோடு) கலந்து நானுஞ் சிவசமமேயென்று முனைத்து நிற்றல் ஆன்மதரிசனமாகும். அந்த அருளைக்கொண்டு எத்தொழிலையுஞ் செய்யப்பொருந்திய பின் (பின்னரு மவ்வருள் கருணையினு னிமித்துணர்த்த) அம்முனைப்பைவிட்டுத் துயக்குற்று அவ்வருளிலே யழுந்திவிடுதல் ஆன்ம சுத்தியாம்.

(வி - ம்.) அருளுஞ் சிவமு மபேதமாகலான் அருளைச் சிவமாகக் கொள்க. உது - அது. (௧௨௨)

மேதகு மருளால் முதலென நினைத்தல்
விழுத்தகு மருவினு லதுசெய்
தீதறு தொழில்கள் செய்வலென் றெண்ணுஞ்
செயலற நிகழருண் மயமாய்ப்
போதமுற் றெடுக்க லென்னமுன் கிளந்து
போந்தவற் றடங்கிய மூன்றும்
ஆதித னுருவந் தெரிசனம் யோகம்
ஆமினிப் போகமு மருள்வாம்.

(இ - ள்.) மேன்மை பொருந்திய அருளினுனே (ஆன்மா) தன்னைச் சிவமாகக் கருதுகின்ற காலத்து (அந்நிலை) மாறும் வண்ணம் உணரச், சிறந்த அவ்வருளினுலே அவ்வருள் செய்யுங் குற்றமற்ற செயல்களை யானே செய்வலென்றுன்னுஞ் செயலற்று நிற்குமிடத்துணர நிற்றலும், விளங்குகின்ற அவ்வருளின் மயமேயாகி (தற்போத முற்றிலும்) சிவ போதமாய் அடங்கி அந்நிலையிலுணர நிற்பதும் என முன்னே கூறிப் போந்த ஆன்மரூபம், ஆன்மதரிசனம், ஆன்மசுத்தி என்பவற்றோடு உடனிகழ்வாய் விளங்கிய மூவகையுணர்வும் சிவரூபமும், சிவதரிசனமும், சிவயோகமுமாகும். இது நிற்க இனிச் சிவபோக வியல்பினையு முனக்குபதேசிப்பாம்.

(வி - ம்.) அருளானினைத்தலற வுணர நிற்பதும், தொழில்கள் செய்வலென்றெண்ணுஞ் செயலற்று நிற்குமிடத்துணர நிற்றலும், அருண்மயமாய்ப் போதமுற்றொடுக்குமிடத்துணர நிற்பதும், எனக் கூறிப் போந்த ஆன்மரூப முதலியவற்றுடன் நிகழ்கின்றன ஆதியுருவ முதலியனவாகு முடிக்க. அறவென்பதனை அருளான் முதலென நினைத்த லென்பதனோடுங் கூட்டுக. (௬௨௩)

ஒன்றுறு மதனு லொருபொரு ளாகா
திரண்டினுல் வேறுமா காது
தொன்றுறு நிலையே நிலையதாய்ச் சேர்ந்து
துன்னலுந் துன்னுரு மையுமற்
றன்றுமா ணவத்தி னழுந்தியாங் கறிவா
யறிவினு ளழுந்தியங் கறிவு
பொன்றியும் பொன்ரு தவசமா யின்பப்
புணரிவாய் மடுப்பது போகம்.

(இ - ள்.) அவ்வுயிர் இறைவனோடொன்ருய்க் கலப்புற்றதனுலே (நீரும் நீருங்கலந்தாற்போல) பொருளொன்ருகவு மாட்டாது, (பொருட்டன்மையால்) வேறுவே றிலக்கணமுற்றிருத்தலான் (இருளு மொளியும்போல்) வேருகவுமாட்டாது, பண்டைப்பரிசே நிலைமை யாகப் பொருந்தியதனுன் வந்தொன்றோ டொன்றியைதலும் இயை யாமையுமின்றி, அநாதி கேவலத்தும் ஆணவமலத்தின் அம்மலவடிவா யியைந்தாற்போல (இம்முத்திக் காலத்தும்) அறிவே வடிவாய் அச்சிவ ஞானத்துள்ளே அழுந்தி (அங்ஙன மழுந்துகையினுலே) ஆன்மபோத மாகிய சுட்டுணர்வு நீங்கப்பெற்றும், (பதிஞானத்தானே பதியை யுணரும் உண்மையுணர்வு) நிலைபெற்றும் அவ்வுண்மை (யுணர்வும்) பதியின் வயத்ததாய் இன்பமாகிய கடலினைத் தனதனுபவமாகவே அனுபவிப்பது போகமாகும். (௬௨௪)

இந்நிலை தனக்கு மேலொரு நிலையு
மில்லையி தொழிதரா தென்றும்
மன்னுயிர் மற்றை யொன்பதுங் கண்டு
மாற்றுமால் வருத்தவி ரைந்தும்

துன்னிய வுண்மை ஞானமென் றுரைப்ப
சுத்தவைந் தவத்தையு ளடங்கும்
பின்னிலை நான்கி னென்பது மடங்கும்
பெருநிலை போகமே யடங்கும்.

(இ - ள்.) இச்சிவபோக நிலையினுக்கு மேலே உயிர்களுடையத் தக்க வேறொரு நிலையுமின்றாகும். (எக்காலத்தும் இச்சிவபோகத்தினிலை பெற்ற உயிர் இந்நிலையினின்று மொருகாலத்து நீங்காது. (தசகாரியத்துள்) சிவபோகம் ஒன்றினை யொழிய ஏனைய ஒன்பது காரியத்தையு முணர்ந்த உயிர்கள் ஒரோவழிக் கீழுமேலுமாக மாறி யுணர்தலு முண்டு. (இங்ஙனம்) வகுத்துக் கூறிய தசகாரியத்தினை உண்மைஞான மென்று (அத்துறையிற் கைபோய) ஆசிரியன்மார் கூறுவார்கள். இவ் வீரைந்து காரியங்களும் ஒரைந்து சுத்தாவத்தை யுள்ளுமடங்கும். (அடங்குதல் யாங்ஙனமெனில்) பிற்பட்ட சுத்தசாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம் என்னும் நான்கு நிலைகளினும் தத்துவரூப முதலிய ஒன்பது காரியங்களும் அடங்கும். முற்பட்ட பெரு நிலையாகிய துரியா தீதத்திலே போகமொன்றுமே யடங்கும்.

(வி - ம்.) இந்நிலை - போகநிலை. ஒழிந்த நான்கு சுத்த சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியமென்க. இவற்றிலடங்கு முறையாமாறு. நின்மல சாக்கிரத்தில் தத்துவரூபம், சுத்தி, தத்துவதரிசனமாகிய மூன்றும், சொப்பனத்தில் ஆன்மரூபம், ஆன்மசுத்தி, சிவரூபமாகிய மூன்றும், சுழுத்தியில் ஆன்மதரிசனம், சிவதரிசனமாகிய விரண்டும், துரியத்தில், சிவயோகமு மடங்குமென்க.

துரியாதீதத்தில் சிவபோக மடங்குமென்க. (௩௨௫)

இரிதரா வுடலின் வினைவரும் வருங்கா
லிலகிய சாக்கிரா தீதம்
துரியமென் றிரண்டி னின்றிடி னேரு
சுழுத்திசொப் பனத்திற்சாக் கிரத்தில்
மருவினும் வளருஞ் சகலத்தின் விரவின்
வளர்திறங் கிளப்பதென் மீட்டும்
பெருநிலை யழுந்த வவையெலா மழியும்
பின்புபே துறுத்துவ தின்றே.

(இ - ள்.) இவ்வுண்மை ஞானத்தினையடைந்தோருக்கும் நீங்காத வுடம்பினளவாய் (முகந்துகொண்ட) பிராரத்தவினை அநுபவத்திற்கு வரும். (அங்ஙன மநுபவத்திற்கு வருங்கால்) நிறைந்த அறிவு விளங்குகின்ற துரியாதீதம், துரியமென்னு மிருநிலைகளின் நிற்பின் (அவ்வநுபவத்தானுளவாகும்) ஆகாமியவினைகள் ஏறமாட்டாவாம். நின்மல சுழுத்தி, சொப்பனம் சாக்கிர மென்னும் நிலைகளைப் பொருந்தினும் அவ் வாகாமியவினை யேறாநிற்கும். சகலத்தின்கண் ணிகழும் சாக்கிரம் முதலிய நிலைகளிற் பொருந்தின், அவ்வாகாமிய மேறு மென்பதனைச் சொல்லவும் வேண்டுமோ? பின்னரும் (தன்னிலையினின்றுந் தவறியதை

புணர்ந்து) அந்நிலைகளினின்றும் நீங்கித் துரியாதீதத்திற்றமுவி யமுந்தப்பெறின் (அவ்வவத்தைகளினிழைத்த) அவ்வினைகளெல்லாம் (காட்டுத்தீ முன் பஞ்சின் றுய்ப்போல) அழிந்தொழியும். பின்னர் வருந்த வருத்தலுசாகிய வாசனுமலமு மில்லையாம். (௧௨௬)

மருண்மல மொழிய மாயையும் வினையும்
வயங்கரு ளாகியே நிற்கும்
இருண்மல முலகோர்க் கிரித்திட வவற்றை
யெம்பிரா னேன்றுகொண் டருளும்
சுருதியான் மொழியாற் சுவானுபூ திகத்தைத்
தோற்றிய வமலனை யாங்கும்
இருபகுப் பிறநின் றேத்தியின் புறுப
வினையசன் மார்க்கமுற் றவரே.

(இ - ள்.) மயக்கந் தருவதாகிய ஆணவமலம் நீங்கவே, மாயாமலமுங் கன்மமலமும் (உண்மை ஞானிகட்கு) விளங்குகின்ற அருள்வடிவாகவே நிலைபெறும். அம்மாயை கன்மங்களை உலகத்தின் கண்ணுள்ள பெத்தான்மாக்களின் ஆணவமலத்தை நீக்கும் பொருட்டுச் சிவபெருமான் ஏற்றுக்கொண்டருளுவர். உபதேச கலையானும் திருவாய் மொழியானும், சிவானுபவந் தமதனுபவமாக அனுபவிக்கும் சிவயோகத்தினை விளக்கியருளிய மலமற்றவராகிய சிவகுருவினை இத்தன்மையாகிய ஞானத்தைப் பெற்றுச் சீவன்முத்தி பரமுத்தி யெய்தினுர், அகம்புறமென்னுது யாண்டுஞ் சிவத்தின் விளக்கமொன்றை யுளதாகக்கொண்டு துதித்து வழிபட்டு நின்று இன்பமிக்கடைவார்கள். (௧௨௭)

என்றுவேற் றடக்கைச் செம்மலார் பெத்த
முத்தியென் றிரண்டினுந் தன்மை
ஒன்றலா தின்மை பொருடொறுங் காட்டி
யுரைத்தரு ளறிவெலாங் கேட்டு
நன்றுசிந் தித்துத் தெளிந்துட னிட்டை
நண்ணிய நந்திமாத வத்தோன்
துன்றிய மகிழ்ச்சி மீக்கொள வாண்ட
தோன்றருள் பழிச்சுத லுற்றுன்.

(இ - ள்.) இங்ஙனமாமென்று வேற்படையைத் திருக்கரத்திலுடைய தலைமையினையுடைய குமரக்கடவுள் பெத்த நிலையின்கண்ணும் முத்திநிலையின்கண்ணும் தன்னியற்கை நிலையில்தான் அநந்நியமாயிருக்குந் தன்மையை இயங்கியற் பொருள் நிலையியற் பொருள்களின் வைத்துச் செவியறிவுறுத்தருளிய நிலைமையையெல்லாம் கேட்கலுற்றுச் சிந்தித்துத் தெளிதலுற்று மனவொருக்கங்கொண்டு பொருந்திய நந்தியென்னும் பெரிய தவத்தினையுடையான் தன்னினீங்குதலின்றி மகிழ்ச்சி பெருக அடிமைகொண்ட தலைவன் றிருவடிகளைப் பழிச்சலுற்றனன்.

(வி - ம்.) கேட்டல், சிந்தித்தல் தெளிதலை வடநூலார் சிரவணம் மனனம், நிதித்தியாசனமென்பர். இவற்றைக் கேள்வி, விமரிசம் பாவனை யாமெனவுங் கூறுவர். நிட்டைகூடல் - மனவொடுக்கம். தெளிந்த பின் நிட்டைக் கிடையீடின்மையால் "உடனிட்டை நண்ணிய" வென்றார். (௧௨௮)

வேறு

இயல்புவே றுடைமை கற்றோ ரெண்ணிய பலவே ருகப்
பயில்வுறு முலக மெல்லாம் பாற்றியு மீட்டு மாயோன்
அயனெடுந் தோற்றிப் போற்றி யடர்மல வாற்றல் காற்றுஞ்
செயறலை நின்ற வின்பத் திருவுரு முதன்மை போற்றி.

(இ - ள்.) சிவஞானச் செல்வர்கள் இயற்கை நிலையினை வேறாக எண்ணப் பலவேறு அவயவப்பகுப்புடைத்தாகத் தங்குகின்ற உலகங்களை யெல்லாம் துடைத்தும், மீளவும் விண்டு, பிரமன் முதலிய தேவர்களை யுளவாக்கிக் காத்தும் அவர்களை நீங்காமனின்று வருத்துகின்ற ஆணவ மலத்தின் வன்மையை நீக்குஞ் செயலின்கண் தலைமைபெற்று எழுந்தருளிய இன்பமே திருவுருவாகக்கொண்ட முதன்மை அடியேங்களால் வணங்கப்படுவதாகும்.

(வி - ம்.) எண்ணிய - எண்ண; வினையெச்சம். இயல்பு வேறுடைமை - அறிஞரால் அறியப்பட்ட சொரூபநிலை. தோற்றல்-படைத்தல். போற்றி-காத்து. மலவாற்றல் காற்றல் செயல்-அருள் பண்ணுந் தொழில்; அஃது அநுக்கிரகஞ் செய்தல். போற்றி இகரவீற்று வியங்கோள். இயல்பு வேறுடைமை எண்ணிய, என்றதனுல் சொரூப நிலையாகிய சிறப்பிலக்கணமும், உலகமெல்லாம் பாற்றி, தோற்றி, போற்றி என்றதனுல் தடத்த விலக்கணமாகிய பொது விலக்கணமுங் கூறியது காண்க. (௧௨௯)

ஒண்குண மில்லா நாயே னுறுமட மன்றி யில்லாத்
திண்குண மலத்திற் பண்டு சிவனுற வாளா நின்ற
எண்குணத் தலைவன் மற்றுங் கிரும்பரு வத்தை யேய்த்து
வண்கலை யாதி தந்த வரம்பில்வள் ளன்மை போற்றி.

(இ - ள்.) ஒள்ளிய (அமைதிக்குண முதலிய) குணங்களில்லாத நாயினுங் கடைப்பட்டவனாகிய அடியேன் மிக்க அறியாமையை யன்றி வேறு (அறிவு முதலிய) நற்குணங்கள் சிறிதுமின்றிச் செறிந்த திண்ணிய குணமாகிய ஆணவமலத்தோடு கேவல நிலையில் அநாதியே பொருந்தாநிற்ப அஞ்ஞான்றும் இவ்வாணவ முதலிய வொரு தொடக்குமின்றி வாளாநிற்றலைச் செய்த எண்குணங்களையுடைய தலைவன் அக் கேவல நிலையின்கண்ணே பரிபாகம்வரும் வண்ணஞ் செய்து அறிவு முதலிய விளங்குதற்குக் காரணமாகிய கலாதத்துவ முதலிய தத்துவக் கூட்டங்களைக் கொடுத்தருளிய அளவிட வொண்ணாத வள்ளற்றன்மை வணங்கப்படுவதாம்.

(வி - ம்.) உயிர்கள் அறிவிச்சை செயலின்றி ஆணவமலத்திற் கட்டுண்ட அநாதிக் காலத்தே இறைவன் ஒரு தொடக்குமின்றி நின்று

உயிர்களுக்குப் பாகத்தை வருவித்து அறிவிச்சை செயல்கள் விளங்குதற்குக் கலை முதலிய தத்துவக் கூட்டங்களை இயைவிப்பான் என்பது தோன்ற "இரும் பருவத்தை யெய்த்து வண்கலை யாதிதந்த வள்ளன்மை" என்றார். (௪௩௦)

இருண்மல மொன்றே பற்று மிருவினை யுடையேற் கந்தோ
மருண்மலி மாயை கன்மந் திரோதான கரியை மல்கும்
பொருண்மலி தருமா மாயைப் புகர்மல நான்குந் தந்தும்
அருண்மலி யருளிற் றீரா வற்புதத் தொழின்மை போற்றி.

(இ - ள்.) இருள்போல மறைக்கின்ற ஆணவமல மொன்றனையே பற்றியதனால் விருப்பு வெறுப்பென்னு மூலகன்ம மிரண்டையுமுடைய எளியேனுக்கு ஐயகோ! மயக்கத்தைச் செய்கின்ற மாயாமலத்தினையும் கன்ம மலங்களோடு மறைக்குந் தொழிலைச் செய்யும் திரோதான சத்தியையும் தம்மைக்காட்டினும் பருப்பொருட்டாகக் காரியப்படும் மிகுந்த தாத்துவிகமாகிய பொருளைத் தருகின்ற மாமாயை யென்னும் குற்றம் பொருந்திய நான்கு மலங்களையுந் தந்து அருணிறைந்த அருட்டன்மையில் இறையு நீங்காத வியப்பினைத்தருகின்ற ஐந்தொழிற்றன்மை வணங்கப்படுவது.

(வி - ம்.) திரோதானகரியை - ஐ : சாரியை. இருவினை - விருப்பு வெறுப்பு. மாமாயை - மாயேயம். இதனை உடலென்பர். இதனை "மாயாதநு விளக்காய்" என்னும் சிவஞானபோதத்தா னுணர்க. தொழின்மை - தொழிலின்றன்மை. (௪௩௧)

நெருப்பிடை யழற்றி வாளி னிமிருடல் பிளந்து கண்வாய்
குருப்பொலி சோரி தூங்கக் குடைந்தடு நரகத் திட்டும்
கருப்பொலி புவியி னுய்த்துங் காமரு துறக்கத் தேய்த்தும்
விருப்பொடு வெறுப்பு மின்றி மிளிரவி காரம் போற்றி.

(இ - ள்.) உயிர்களாகிய எம்மைவினையினுக்கேற்ற வண்ணம் அழலின்கண்ணே வாட்டியும், வாட்படையானீண்ட உடலினைப் பிளந்தும் கண்ணும் வாயும் செந்நீரோடக் குடைந்தும் இங்ஙனம் வருத்தலைச் செய்யும் வெறுப்பைத் தருகின்ற நகரத்தின்கட் செலுத்தியும், விருப்பம் வருவதற்கேதுவாகிய விண்ணுலகின்கட் செலுத்தியும், விருப்பும் வெறுப்புமின்றி விளங்குகின்ற தலைவரது விகாரமின்றி விளங்குந் தன்மை வணங்கத்தக்கது. (௪௩௨)

பூதமோ பூதத் தான பொறையுடல் பொறிக ளாமோ
மேதகு கரணந் தானோ விரிதரு மாயை கொல்லோ
யாதுதா னுணர்வ தென்றென் றினைதரா வண்ண நீதாழ்
போதம்வே றென்று வந்த பொங்கொளிப் போதம் போற்றி.

(இ - ள்.) மண்முதலாகிய ஐம்பெரும் பூதங்களோ, அப்பூதங்களாலாகிய சுமையையுடைய உடலின்கண்ணே தங்கும் ஐம்பொறிகளோ? அன்றி அவைகளின் மேன்மையுற்று விளங்குகின்ற அகக்கருவியாகிய

கரணங்களோ? மாயையின் விரிவாய காரியங்களின் கூட்டமோ இவை களுள் வைத்து எது உணர்தலைச் செய்வதாகிய உயிரென்று வருந்தா வண்ணம் நீ அவைகளின் வேருய் அதுவதுவாய்த் தங்கியுணரும் பருப் பொருட்டாகிய அறிவு வடிவமென் றுணர்த்தியருளிய மிக நுண்ணி தாகிய எல்லாவறிவுமாய் விளங்குந்தன்மை வணங்கத் தக்கது.

(வி - ம்.) தாழ்தல் - அதுவதுவாகக் கலத்தல். போதம் - அறிவு. (கஙங)

கேவல சகல சுத்த முயிரெலாங் கெழுமு மென்றும்
தாவரு மாயை யில்லா ரிருதிறத் தார்க ளென்றும்
ஆவயின் மாயை யின்றி யடாவிரு கரும மென்றும்
மேவர விதித்து மாலா விழுத்தகு வாய்மை போற்றி.

(இ - ள்.) உயிர்வருக்கங்களெல்லாம் கேவலநிலை, சகலநிலை சுத்த நிலை என்னுங் காரணநிலை மூன்றினையு மடையுமென்றும், அவ்வுயிர் வருக்கத்தினுள்வைத்து குற்றமிலவாகிய மாயாமல மிலராவர் விஞ் ஞானகலர், பிரளயாகலரென்னும் இருபகுப்பினரென்றும், அவ்விடத்து அன்னோர்க்கும் மாயாமலமின்மையால் அதுகாரணமாகத் தோன்றும் இரு வினைகளும் வந்து பொருந்தமாட்டாவென்றும் (அளவைகளானும், பொருந்து மாற்ருனு மாராய) பொருந்துமாறு திருவாய்மலர்ந்தருளிய முன்னொடுபின் மயங்கவிடாத உயரிய முற்றறிவாகிய உண்மைத் தன்மை வணங்கத்தக்கது.

(வி - ம்.) இவ்விருதிறத்தார்க்கும் மாயையிலவாதற்கும் உளவா தற்கும் காரணம் அது காரணமாக வருகின்ற மயக்கமும், அம்மயக்க நிகழ்தற்கேதுவாய உடம்பு முண்மை விளக்கிய "மாலா விழுத்தகும் வாய்மை போற்றி" என்ருர். மாலா - மயங்காத. (கஙச)

சாக்கிர வவத்தைக் குள்ளாஞ் சகலத்தி லென்னை யன்னே
ஆக்கிடுந் தோறு நீங்கி யடரிருட் கேவ லத்தின்
வீக்குறும் பிழையுட் கொண்டு விடாதுளஞ் சலியா மீட்டும்
காக்குமத் தோலாச் சூழ்ச்சி கைக்கொளுங் காதல் போற்றி.

(இ - ள்.) கருவிகளுடனின்றுணருஞ் சாக்கிரநிலையின்கட் பொருந் திய சகலநிலையில் ஐயோ! அடியேனை இயைவிக்குந்தோறும் அந்நிலையி னீங்கி, பம்பிய இருள்வடிவமாகிய கேவல நிலையின்கட் கட்டுண்ணும் பெரும்பிழையினை அறிந்தும் கைவிடாது. திருவுள்ளம் இரக்கத்தி னின்றும் வேறுபாட்டினையடையாது மென்மேலும் அச்சகலநிலை, சாக் கிரநிலைகளிற் பொருந்திக் காத்தலைச் செய்யும் அத்தகைய குறைவற்ற உபாயத்தைத் தனதிச்சையாகக் கொண்ட நிறைவெனப்படும் விருப்பம் வணங்கத் தக்கது. (கஙரு)

வினைத்திற மூனு மாறு மெலியுமென் மெலிவை யாற்றி
அனைத்துக ளனுங்கு மாற்ரு னறிவுறுத் தனைத்து மாற்றிக்
கனைத்துவண் டிமிருந் தேந்தார் கமழ்மலர்க் கமல பாதம்
நினைத்துறும் வாழ்வு தந்த நின்மலக் கொழுந்து போற்றி.

(இ - ள்.) இருவினைகளும் மீட்டுமுளவாமாறு (பிராரத்தவினை) வருத்த வருத்துகின்ற. அடியேனது இன்னலை நீக்கி, மும்மலங்களாறு முளைக்கின்ற வாசனமலம் நீங்கும் வகையிலே மேலுந் தன்னை யறியச் செய்த மலமும் வாசனையுமாகிய எல்லாவற்றினையும் நீக்கி இடையறுப் பேரன்பால் அடியவர்கள் வழுத்தி அருச்சித்தலால் இன்னிசை செய்து வண்டுகள் மொய்க்கின்ற தேனொழுகும் மலர்கள் கமழும் தாமரை மலரென்று உபசரித்துக்கூறும் திருவடிகளை இடையறுது நினைத்துப் பொருந்தும் பெரியதொரு இன்பவாழ்வை அடியேனுக்குத் தந்தருளிய தூயவுடம்பாகிய சிவக்கொழுந்து வணங்கத்தக்கது.

(வி - ம்-) அனைத்துகள்; விகாரம், அஃதனைத்தாலாகிய துகள் என விரியும். துகள் - மலம். (௧௩௬)

**கேவல சகல முத்திச் சகலமுங் கிளர வுய்த்தக்**
**கேவல சகல நீக்கக் கெழுமுறு சுத்தந் தன்னில்**
**கேவல மாயி னேனைக் கேவலந் தணித்து மேலாம்**
**கேவல முறுத்த நாடுங் கேவலப் பொருண்மை போற்றி.**

(இ - ள்.) கேவல சகலம், சகல சகலம், முத்திச் சகலம் என்னும் மூவகைச் சகலாவத்தையினையும் பொருந்துமாறு செலுத்தி, நுகர்வன வற்றை நுகர்வித்து அம்மூவகைச் சகலாவத்தையும் நீங்குமாறு சிவத் தோடுங் கூடும்படி பொருந்துஞ் சுத்தாவத்தையிலே கருவிகளினீங்கி வியாபகத்தைத் தலைப்பட்டுத் தனிமையின் முனைத்த அடியேனை (தன் னருளுபகாரத்தை யுணர்த்தி) அத்தனிமையினின்றுங் (முளைக்கும் மூனைப்பைத்) துவளுமாறு செய்து உயர்வாகிய சிவவியாபகத்தைப் பெற்றழுந்தி (அவ்வியாபக உணர்வையன்றி பிறிதியாதனையு நாடாத்) தனிமையாகிய சுத்த கேவலத்தைப் பொருந்துமாறு ஆராயும் ஒப்புயர் வற்ற அநாதி முத்தத் தன்மையாய பொருட்டன்மை வணங்கத்தக்கது. (௧௩௭)

**ஆணவத் தன்றே பட்டா யடுத்துறு மாயை பெட்டாய்**
**பூணுறு வினைக்கோட் பட்டாய் போக்கொடு வரவும் பட்டாய்**
**ஏணுற வறிந்தாய் நீயே போலுமென் றிழித்து மேலாம்**
**மாணுருத் தோற்றி யென்னைக் காட்டிய வடிவம் போற்றி.**

(இ - ள்.) (சுத்தஞ்சுகம் நித்தியமாகிய தானே) உயர்வாகிய குரு வடிவங்கொண்டு அநாதிக்கண்ணே ஆணவமலத்தோடுங் கலந்தாய், அம்மட்டோ, பின்ஆதியாய மாயாமலத்தினையும் விரும்பிப்புணர்ந்தாய், (அம்மாயாமலங் காரணமாக) பொருந்தும் வினைகளிலுள்ளும் அகப் பட்டனை, அவ்வினையின் காரணமாகப் பிறப்பிறப்பினையுமடைந்துழன் ருய், இக்கட்டினையெல்லா முற்றுமுன்ற நீதானே வலிபொருந்தப் பெரி தும் உணருமறிவுடைப் பொருளாளுய் போலும் என்றிகழ்ந்து, அடி யேனை உள்ளவாறுணரும் வண்ணம் அக்கட்டுக்களையெல்லாம் நீக்கி உண்மை நிலையை உணர்த்தியருளிய அந்தச் சிவகுரு வடிவம் வணங்கத் தக்கது. (௧௩௮)

**ஒன்றுகே வலத்தி னையைத் துறழைந்து சகலத் தொன்று**
**மூன்றவிர் சகலத் தைந்து முதிரொளிச் சுத்தந் தன்னில்**

என்றரு ளெழுத்தின் பேத மிசைத்துறு முறையுங் காட்டி
நன்றெனக் கருளி யாண்ட நலத்தகு பெருமை போற்றி.

(இ - ள்) (தன்னுண்மை யெனப்படும்) பொருந்துகின்ற கேவல நிலையிலே வருந்துதற்குக் காரணமாகிய ஐந்தெழுத்தெனவும், சகல நிலையிலே திரோதானம், மலம் என்னுமிரண்டு மாறிப் பின்னிடத் தமைந்த ஐந்தெழுத்தெனவும், சிவஞானமுதிர்கின்ற சுத்தநிலையிலே கேவலத்தின்கண் முன்னின்ற திரோதம், மலம் இரண்டும் நீங்கச் சகல நிலைக்குக் கூறிய ஐந்தெழுத்தெனவும் (இங்ஙனம்) அதன் விளங்கும் (குறிவடிவாகிய) ஐந்தெழுத்தின் வேறுபாட்டினையும் (அவற்றை அவ்வந்நிலைகளில் நிற்கு நிலைமையினுக்கேற்ப) மாறி மாறி ஒலிக்கு முறைமையினையு முணர்த்தி நன்றாக எளியேனுக்கு அருளினைச் செய்து அடிமைகொண்ட நன்மை பொருந்திய பெருந்தன்மை வணங்கப்படுவது. (கஙக)

யானெனை தென்ன நின்ற விருண்முழு திரித்திட் டெல்லாம்
தானெனை வென்னை வல்லே தன்னடி யிருத்திப் பொன்முன்
மீனென விளக்கே யென்ன விரவிய மாயை மாய்த்தங்
கூனுறு நுகர்ச்சி யெல்லா மேற்றரு ளுரிமை போற்றி.

(இ - ள்.) சிவஞானத்தினால் ஞேயத்தைக் கண்ணுற்ற எளியேனை விரைவாகத் தமது அறிவோடுங் கலங்கச்செய்து ஏகனாக்கித், தானல்லாத தொன்றைத் தானெனவும், தனதல்லாத வொன்றைத் தனதெனவும் கருதி நிற்கச்செய்த ஆணவமல காரிய முழுவதினையும் போக்கி, எப்பணியுந் தன்பணியே என்று இறைபணியினிற்கக் கதிரோனின் முற்பட்ட நாண்மீன்களும், விளக்கும் அதனொளியா யடங்கியவாறுபோல் மாயாமலத்தினையும் போக்கி அவ்விடத்து உடலளவாய் நுகரக்கடவ வினைகளையெல்லாம் தானே ஏன்றுகொண்டு அருள்செய்யும் உரிமைத் தன்மை வணங்கத்தக்கது. (கசO)

என்வழி யின்று காறு மிருந்தரு டன்னைப் போலத்
தன்வழி யெற்றை ஞான்றுந் தங்குமந் நிலைமை தோன்றத்
தன்னையு மெனையுந் தந்து தனதென தறமுப் பாழ்மேல்
பின்னிய முழுப்பா ழான பெருகுபே ரின்பம் போற்றி.

(இ - ள்.) முத்தியினைப் பெறும் இக்காலமளவும் (அடியேன் சென்ற கருமத்துறை வழியே அடியேனைவிட்டு அடியேனொடும் கலந்திருந்தும் வெளிவராது நின்ற தன்றன்மையைப்போலத் தன் செயலின் வழியே எஞ்ஞான்றும் மீளாதடியேன் வியாப்பியமா யடங்கி நிற்கும் அந்நிலைமை விளங்கும்படி தன்னொடு கூடுதலாகிய சிவப்பேற்றையும் தன் ஞானத்தினாலே தன்னை யுணருமுறையின் வைத்துத் தமியேனை யுணரும் ஆன்மலாபத்தையும் தந்து தனது அருட்செயலும் அடியேனது ஞாதுரு ஞானஞேயப் பகுப்புணர்வும் நீங்கும் வண்ணம் (அசுத்தம், மிச்சிரம், சுத்தம், என்னும் மூவகைப் பிரபஞ்சத்தினின்று நீங்குமிடத்து) ஆன்மவியாபகத்தைத் தலைப்பட்டு மூன்றடங்கலும், அருளிற்றலைப்பட்டு ஐந்தொழில் செயக் கருதித்துவளலும், அவ்வருளில்

விடாப்பிடமாக அடங்கலுமாகிய மூவகைப் பாழின் மேலே அத்துவித சம்பந்தமாகிய முழுப் பாழாயுள்ள மிக்க பேரின்பம் வணங்கத் தக்கது.

(வி - ர.) ஞாதுரு, ஞானம், ஞேயம் - காண்பான், காட்சி, காட்சிப் பொருள், முப்பாழ் - இன்பினைக் கடந்து நிற்றல். (கசாக)

அருள்பொழி விழியீ ராறு மலர்தரு முகமோ ராறும்
திருவரு ளினிது தந்த செங்கனி வாயுங் கையும்
மருமலர்ப் பதமும் வாய்ந்த வள்ளற லுருவ மெல்லாம்
பெருகிய சுகத்துக் கப்பாற் பிறங்குமப் பிறக்கம் போற்றி.

(இ - ள்.) கைம்மாறு கருதாது, அருளினைக் கொட்டுகின்ற திருக் கண்கள் பன்னிரண்டும் (பிறவி வெப்பம் நீங்கும்வண்ணம் தண்ணளி புரிந்து) மலரும் திருமுகங்கள் ஓராறும், சிவஞானத் தெளிவுப தேசத்தை அடியேனுக்கினிமையாகத் தந்தருளிய சிவந்த கனிபோன்ற திருவாயும், அவ்வுபதேசப் பொருளைச் சின்முத்திரையா லுணர்த்துந் திருக்கரமும், (அடியேன் தலைமேற் சூட்டுதலினால் உணர்த்தும்) வாசனை தங்கிய மலர்போன்ற திருவடிகளும் வாய்க்கப்பெற்ற திருவுரு வினை யுடைய பெருவள்ளலாகிய பரமாசிரியன் வடிவமனைத்தும், மிக்க சிவ போகத்திினுக்கு மேலும் மேலாக விளங்குகின்ற அவ்விளக்கம் போற் றப்படுவது. (கசாஉ)

என்றிருந் துதிகள் சால வியம்பியாட் டயர்ந்து முன்னே
நின்றமெய்க் குரிசி றன்னை நின்மலக் குமர னேக்கி
இன்றுநின் கருத்து முற்றிற் றினிக்கயி லாயத் தெந்தை
மன்றலங் கழற்ருள் போற்றி வதியென வருண்மேல் கொண்டு.

(இ - ள்.) என்றிங்ஙனம் அரும்பெருந் தோத்திரங்களை மிகவுஞ் சொல்லித் துதித்து (இன்பமேலீட்டினாலே வணங்கி)த் தண்டமிட்டுக் கூத்தாடித் தமது திருமுன்னர் நின்ற உண்மையறிவு விளங்கிய திருநந்தி தேவரை, மலமிலனாகிய குமரனென்னும் பரமாசிரியன் திருவருட் பார்வைசெய்து, பன்னாட்டவமிழைத்த நின்னுள்ளக் கருத்து இற்றை ஞான்று நிறைவேறிற்று. இனித் திருக்கைலாயத்திலே எம்பரமாசிரிய னாகிய சிவனாருடைய மணங்கமழும் மலர்போலும் வீரக்கழலணிந்த திருவடிகளை வழிபட்டு (ஆண்டே) அக்குரவன் பணியினிற்பாயென்று கட்டளையிட்டருள, திருநந்திதேவர், அக்கட்டளையைச் சிரமேற் கொண்டு. (கசாங)

பன்முறை வணங்கி மீட்டும் பஃறுதி நிரப்பி மெய்யில்
புன்மயிர் பொடிப்பக் கண்கள் பொழிமழைத் தாரை வாக்கச்
சின்மயன் றளிற் றூழ்ந்த சிந்தையைப் புய்க்க லாற்றான்
மென்மேலப் பிந்திப் பிந்தி விண்ணெறி முன்னு கின்றான்.

(இ - ள்.) பன்முறையும் வீழ்ந்து வணங்கி பலப்பல தோத் திரங்களைச் செய்து திருமேனியின்கண் மயிர் பொடிப்ப கண்கள் பொழி யும் நீர்த்தாரையை ஒழுக்க, அறிவே திருவுருவான கந்தபரமாசாரியன்

திருவடிகளிலே பதிந்த சிந்தையினை மீட்டுக்கொள்ளமாட்டாதவராய் மெல்ல மெல்லப் பிந்திப் பிந்தி ஆகாயவழியிற் செல்கின்றார். (௧௭௪)

கோயிலை வணங்கி யப்பாற் குன்றினை வணங்கித் தாள்தோய்
பாயிருந் தீர்த்த மான படர்நதி வணங்கி யவ்வூர்
மேயின வெல்லை தாழ்ந்து வெற்பது மறையுங் காறும்
சேயொளி விழிநே ராகச் சென்றுபின் றிரும்பிச் சென்றான்.

(இ - ள்.) திருக்கோயிலினை வணங்கி அதன்மேற் றிருத்தணிகாசலத்தை வணங்கித் தாம் மூழ்கிச் சுத்தமடைந்த பரவிய பெரிய தீர்த்தமாகிய நந்தி நந்தினியென்னும் நதியினை வணங்கி அத்தலத்தின் திருவெல்லையை வணங்கி, திருத்தணிகைமலை கண்ணறிவுக் கெட்டாது மறையும் வரையும் செந்நிறத்தோடு கூடிய விழியினுக்கு நேராகும் வண்ணஞ் சென்று அதன் பின்னர்த் திருக்கைலாயத்தை நோக்கி நேராகச் சென்றார். (௧௭௫)

விலங்கலுந் தலமு மாண்ட வித்தக னுருவு மெல்லாம்
நலங்கிள ரறிவிற் றோய்த்து நயத்தகப் பொறித்து வைத்த
அலங்குபொற் கிழியே யான வகத்தினன் கயிலை சார்ந்தங்
கிலங்கருட் குரவற் போற்றி யேவலி னிருக்கின் றானால்.

(இ - ள்.) தணிகைமலையும் அத்தலமும், நம்மை யடிமைகொண்ட பரமாசாரியனாகிய குமரக்கடவுளின் றிருவுருவமாகிய எல்லாவற்றையும் நன்மைமிக்க தமது அறிவாகிய மையினிடத்துத் தோய்த்து ஆன்மலாபமுறும்படி சிந்திக்கும் சிந்தையாகிய கோலினாலே எழுதிவைத்த விளங்குகின்ற பொற்படமேயாகிய திருவுளத்தினையுடைய திருநந்திதேவர் திருக்கைலைமலையை யடைந்து அவ்விடத்தே அரும்பிரகாசத்தோடும் எழுந்தருளியிருக்கின்ற பரமாசாரியனாகிய சிவபெருமானை வழிபட்டு அருளிறைபணி வழுவாது இயற்றுதல் செய்து ஆண்டே வதிதலாயினர். (௧௭௬)

இன்னணஞ் சகச நிட்டை யெய்திய நந்திப் புத்தேள்
தன்னருட் குரவ னேவற் றலைநிற்கு மியல்புந் தேரார்
அன்னவ னூலை யாய்ந்து மாக்கைநின் றுளதேன் முத்தி
மன்னல ரென்ப ரன்னோர் மம்மர்நோய்க் கொழிவு முண்டே.

(இ - ள்.) இவ்வாறு சகசநிட்டையினை அடைந்த திருநந்திதேவர் தமது ஞானாசாரியர் பணித்தருளிய வண்ணம் பரமாசாரியராகிய சிவபெருமானுக்குத் திருத்தொண்டு செய்து ஒழுகுந்தன்மையையும் உணரமாட்டாதார் அத்திருநந்திதேவர் தாம் கேட்டவண்ணம் தமது சந்தானவழியாய் உலகினுக்குதவிய சிவஞானபோதத்தை யாராய்ந்துகொண்டும், உடம்போடிருக்கின் அவர் முத்தியடைந்தவ ராகமாட்டாரென்று சொல்வார். அத்தகைய மந்தமதியுடையோரின் மயக்கமாகிய பித்து நோயினுக்கு நீக்கமும் உண்டு கொல்லோ? இல்லை. (௧௭௭)

நூலினை யறிந்தார் போன்று நுண்ணறி வுடையார் போன்றும்
மாலினைத் தவிர்ந்தார் போன்றும் வழியறிந் தடைந்தார் போன்றும்

மேலெனத் தத்தங் கோளே விதந்தலை கின்றார் நந்தி
சாலவன் றருளு நூலிற் றலைப்படா வுள்ளத் தாரே.

(இ - ள்.) திருநந்தியாகிய ஆசிரியர் பரமாசிரியரிடத்துக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து நிட்டை மேவிய அக்காலத்தே நல்ல மாணவர்க்குச் செவியறிவுறுத்தி நற்சந்தான முறையி னுலகினுக்கருளிய சிவஞானபோத நூலின் வழியே அறிவு சாலும் வண்ணம் உண்மை நெறியைத் தலைப்படாத கற்பித நூல்களைப் படைத்திட்டு மொழியும் மந்தவறிவினர் அந்நூலானே நுண்ணுணர் வடைந்தார் போன்றும், அதனுனே மயக்கந்தரும் மும்மலங்களின் நீங்கினவர் போன்றும், அதனுனே உண்மை நெறியை யறிந்து வீடுகைவரப் பெற்றவர் போன்றும் தங்கடங்கள் மதக்கோட்பாடுகளையே உயர்ந்தனவென்றும் கூறி உழிதருகின்றார்கள். இவரறியாமை இருந்தபடி யென்னே! இரங்கத்தக்கது. (கசஅ)

சத்திய நிருவா ணத்தாற் றனுகர ணாதி தம்பால்
பொத்திய வோட்டி னொட்டாப் புளிம்பழம் போற றேற்றார்
அத்தினு லுடல்போ மென்ப ரதுபுரி முறையுந் தேற்றார்
பித்தென மயங்கி நிற்பார் பெரிதிவ ருணர்ந்தார் போலும்.

(இ - ள்.) சத்திய நிருவாணமென்னுந் தீக்கையினாலே உடல் கரண முதலியவைகள் தம்மிடத்தே மூடிய ஓட்டிலே யொட்டாத புளிம்பழம்போலக் கூடியுங் கூடாதிருத்தலை யுணருமதுகையில்லாதார் அத்தீக்கையினாலேயே உடனேயே உடம்பொழிந்து விடுமென்பர். அதனைச் செய்யும் முறையினையு மறியாதவராய்ப் பித்துண்டாயினுரைப் போல மயங்கி நிற்பர் இவர் மிக்குணர்ந்தவர் போலும். (கசகூ)

பிறவுயிர்க் கருள நிற்கும் பெற்றிமை யோரார் தேகத்
துறும்வினை யுடல்போங் காறு முயிருண்ணு மென்பா ரென்னின்
அறிவோடு கலத்த லின்று யாம்வினை வளரத் தேகம்
மறுவலு மெடுப்ப தோரா ரிவர்களு மலமற் றாரே.

(இ - ள்.) (அச்சத்திய நிருவாண தீக்கைய முத்தராகிய அப்பரமாசாரியர்கள் பரிபாகமுடைய உயிர்களுக்கு அனுக்கிரகஞ் செய்யும் பொருட்டு) அவ்வுடம்போடும் அங்ஙனம் நிற்கு மதுகையில்லாதவர்கள், உடம்பிற்பொருந்திய பிராரத்த கன்மவினையை அவ்வுடம்பு நீங்குமளவும் அவ்வுயிரே உண்ணுமென்றுரைப்பாரைப்போல, சிவஞானத்தோடும் பிரிப்பின்றிக் கலத்தலின்றாகி, அவ்வினை நுகர்ச்சியாற் பிறர் செய்வினை வளர்ந்துவர, அவ்வான்மா அவ்வினை தலைக்கீடாகப் பின்னரும் பிறப்பிற் சென்றுழிதருவதன்றி அஃதொழியுமாறில்லை யென்பதை உணரமாட்டார்கள். இத்தகுதியுடையவர்களும் மும்மலங்களின் நீங்கினவராவரோ ஆகார். (கரு௦)

ஆங்கவன் போல யானு மறுகுண முடையே னென்பார்
ஒங்கவன் றேழில்க ளெல்லா முஞற்றுவல் யானே யென்பார்
தேங்கிய பிரமம் யானே தெளிவுறின் வேறின் றென்பார்
ஈங்கிவ்வா றுரைப்போ ரெல்லா முயிரியல் புணரா தோரே.

(இ - ள்.) (சைவருளொருசாரார் முத்தியின்கண்ணே) அப்பரமனார்போல (உயிராகிய) யானும் மங்கலகுணமானும் உடையேனென்பர், மற்றொரு பகுதியினர் ஒப்புயர்வற்ற அப்பரமனார் இயற்றுமைந் தொழிலையும் சிவசாமியம் அடைந்த உயிராகிய யானே செய்வேனென்பர்; (புறச்சமயத்தொரு சாரார் மயக்கத்தினீங்கித்) தெளியப்பெறின் உயிராகிய யானே எங்கும் நிறைந்த பிரமப்பொருள்; என்னையன்றி ஏனையவாகக் காண்பனவெல்லாம் முக்காலத்து மில்பொருளே யென்பர், இங்கு இவ்வாறு தத்தம் முத்தியிலக்கணங்களைக் கூறுமிவ்வெல்லாம் ஒருகுடியிற் கொண்டாரைப்போல் உயிரிலக்கண முணராமையின் ஒத்தமயக்கினரே யாவர். (கஙக)

வரிகழற் குமர னல்க மாதவ நந்தி பெற்றுங்
கரிறப விளக்கு நூலி னமைதராப் பொருள்க ளில்லை
கரிசிலந் நூலி னுண்மை கேட்டிலர் கல்வி சான்றும்
விரியுமுப் பொருளின் றன்மை தன்னமும் விளங்கக் காணர்.

(இ - ள்.) கட்டும் கழலிணையுடைய கந்தபரமாசாரியன் அருள் செய்யப் பெரிய தவத்தினை மருவிய நந்திதேவர் தாம் பெற்றாற்போல (சந்தேக விபரீதக்குற்ற நீங்கத் தம் சந்தானத்து அடியவர்களுக்குபதேசித்து உலகினுக்குதவிய முதன்மையாகிய சிவஞானபோத நூலிலே அடங்காத மதப்பொருள்களில்லை. குற்றமில்லாத அத்தகைய சிவஞானபோத நூலின்கட் கூறப்படும் உண்மைப் பொருளாகிய முப்பொருள்களின் பொதுவியல்பு, சிறப்பியல்புகளை அகச்சந்தான முறையிலே நல்லாசிரியரிடத்தே கேட்கப்பெறாதவர்கள், பிறநூற் கல்விகளான் மிகுந்தும் விரிந்த முப்பொருள்களின் உண்மையை ஒரு சிறிதுந் தெளிவு பெற உணராதவரேயாவர். (கஙஉ)

மந்திர கலைகண் மற்றைத் தந்திர கலைவான் வேதம்
அந்தமி லேனை யெண்ணெண் கலைமுத றுவர வாய்ந்த
நந்தியுந் தணிகைச் செவ்வே ணல்கிடப் பெற்றா னென்றால்
முந்துநூன் மாத்தி ரத்தான் முப்பொரு டெளிய லாமே.

(இ - ள்.) (கர்மகாண்டப் பொருளை விளக்குந்) தந்திரகலையையும் (ஏனைய உபாசனாகாண்டப் பொருளை விளக்கு) மந்திரகலையையும், உயர்ந்த வேதங்களையும், அளவில்லாத ஏனைய அறுபானான்கு கலைகள் முதலியவற்றையும், முற்றவாய்ந்துணர்ந்த திருநந்தி தேவரும், தணிகைமலையின் கண்ணுள்ள கந்தபரமாசாரியர் (உபதேச கலையை) உபதேசிக்கப்பெற்றாரே உண்மை நெறியைத் தலைப்பட்டாரென்னில் (மும்மல வசப்பட்டு முறைமறந்துழலும் நம்மனோர்கள் முதன்மையாய நூல்களை ஓதியதனான் மாத்திரம் தம்மின் வேறல்லாத எண் குணமுடைய முதல்வனியல்பையும், தம்மின் வேறாய மலத்தொடுபட்ட தம்மியல்பையும், அம்மல வியல்பையும் தேர்ந்துணர்ந்து கோடல் பொருந்துமோ?

(வி - ம்.) இன்னணஞ் சகசநிட்டையென்பது முதல் இதுகாறுங் குரவன் சிறப்பும், நூற்சிறப்பும், அதுகேட்கு முறையும் எதிர்மறை முகத்தான் விளக்கியவாற்றையறிக. (கஙங)

வேறு

ஞானநூ லோத லோதுவித் திடுத
நற்பொருள் கேட்டல் கேட் பித்தல்
ஆனவப் பொருளைச் சிந்தனை செய்த
லைந்துஞா னத்துறு பூசை
தானெனி லந்நூன் முப்பொரு டெளிக்குந்
தலைப்பொரு ளாகிய தணிகை
வானவன் மலர்த்தாள் வணங்குந ரெய்தும்
வரத்தினை யென்னென மொழிகேன்.

(இ - ள்.) அறிவினை வளர்க்கின்ற அறிவு நூல்களைப் பயிறலும், அந்நூலினைப் பிறர்க்கறிவுறுத்தலும் (அறிவொழுக்க முடையார் பக்கலிற்றாழ்ந்து) அவர் கூறுமுண்மைப் பொருளைக் கேட்டலும், அப்பொருளைப் பிறரைக் கேட்கச்செய்தலும், அங்ஙனமாய பொருளைச் சிந்தனை செய்தலுமாகிய ஐந்தும் ஞானபூசையெனின் அந்நூலின்கண்ணுள்ள முப்பொருளினையும் தெளிவிக்கும் தலைமைப் பொருளாகிய தணிகை மலையின்கண் எழுந்தருளியிருக்கின்ற பரமாசாரியன் மலர்போன்ற பாதங்களை வணங்குகின்றவர்களடையும் மேன்மையை எத்தன்மையதெனச் சொல்வாம். (கஉச)

இருவினைச் சமத்தி னெய்திய முனிவீ
ரெறிதிரை நந்திநந் தினியை
வரவழைத் தயில்வேல் வள்ளன்மா தவத்து
நந்தியை யாடுறப் பணித்துப்
பொருவிலா கமத்தி னுயருப தேச
கலையினைப் புகன்றவா புகன்றும்
விரவிய புகழா னகத்திய னண்மி
மெய்யருள் பெற்றது மொழிவாம்.

(இ - ள்.) (வாளாற் போழினும் வாசனையைப் பூசினும்) இவ்விருவினையுமொப்ப நோக்குங் குணங்களானமைந்த முற்றத்துறந்தவர்களே, திரையை வீசுகின்ற நந்தி நந்தினியென்னும் நதியினை அழைப்பித்துக் கூரிய வேற்படையினையும் வள்ளற் றன்மையையுமுடைய பரமாசிரிய பெரிய தவத்தினையுடைய நந்தியெம்பெருமானை மூழ்கும் வண்ணங் கட்டளையிட்டு ஒப்பின்றாகிய ஆகமநூலின்கட் கூறிய உயரிய உபதேச கலையினைச் செவியறிவுறுத்திய முறையினை இதுகாறுங் கூறினும். இனி உலகெங்கினுங் கலந்த புகழினையுடையானாகிய குறுமுனிவன் பொருந்தி உண்மையருளினைப்பெற்ற முறையினைச் சொல்வாம். (கஉரு)

நந்தி உபதேசப்படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் அஎரு.

---

## அகத்தியன் அருள்பெறு படலம்

மகத்தீ சனெனப் படவைப் பனவும்
சகத்தீ சனெனப் படச்சார் வனவும்
உகத்தீ சனெனப் படவுள் ளனவும்
அகத்தீ சனடித் துணையன் றிலையே.

(இ - ள்.) பேரின்பத்துக் குரிய இறைவன் என்னும்படி உயர் வாகக் கொள்ளத் தக்கனவும், எல்லா உலகங்கட்கும் தலைவனாகக் கொண்டு யாவரும் சேர்தற்குரியனவும், ஊழிக்கால முடிவானும் அழியாதிருக்கும் இறைவனென்னுமாறு நிலைத்திருப்பனவும் ஆகிய நம் உள்ளத்தின்கண் தங்கியிருக்கின்ற இறைவனுடைய இரண்டு திருவடிக ளன்றி வேறில்லை; (ஆகவே, அவைகளை வாழ்த்தி வணங்குவோமாக.)

(வி - ம்.) மகம் - இன்பம்; அருள்வடிவான இறைவனிடத் திருந்தே, இன்ப முதலிய நலங்கள் தோன்றுவவாயின. இதனை, மணி மொழிப் பெருமான் இறைவனைப் பாடி மகிழுங்கால், 'ஈறிலாப்பதங்கள் யாவையுங் கடந்த இன்பமே என்னுடை அன்பே' என்றருளினர். எனவே, முழுமுதல் ஒருவனை மகத்திசன்' என்றூர். வைப்பனவும் சார் வனவும் உள்ளனவும் அடித்துணை அன்றியில்லை எனக்கூட்டுக.

அகத்து ஈசன் - உள்ளத்தின்கண் எழுந்தருளியிருக்கின்ற இறை வன், 'மலர்மிசை யேகினான்' என்னுந் திருக்குறட்பாவின் இத்தொட ருக்கு, அன்பான் நினைவாரது உள்ளக் கமலத்தின்கண் அவர் நினைந்த வடிவோடு விரைந்து சேறலின், ஏகினானென இறந்த காலத்தாற் கூறி னார்' எனப் பரிமேலழகியார் உரை விரித்ததும் இக்கருத்ததாதல் அறிக. அகத்தீசன் அடித்துணை அன்றிலையே என்பதற்கு, இது, அகத்தியன் அருள்பெறு படலமாகலான் அகத்தியனாகிய ஈசனின் திருவடிகளன்றிப் பிறிதில்லையெனப் பொருள் கூறலுமாம். உம்மைகள் எண்ணுப்பொரு ளில் வந்தன. என்னை?

[1] 'எச்சம் சிறப்பே ஐயம் எதிர்மறை
முற்றே எண்ணே தெரிநிலை ஆக்கமென்
றப்பால் எட்டே உம்மைச் சொல்லே'

என்ப தோத்தாகலான் என்க. ஏகாரம்: பிரிநிலை. 'அன்றி இலையே' யென்பதில், வினையெச்சத் திறுதியில் நின்ற இகரவுயிர் செய்யுள் விகா ரத்தால் தொக்குப் புணர்ந்தது. (க)

திருக்கிளர் தாமரை செற்றிய பண்ணை
மருக்கிளர் காசிவ ரைப்பிடை மேனாள்
ஒருக்கிய வைம்பொறி யானுப தேசம்
அருக்கிய சிந்தைய கத்திய னென்பான்.

(இ - ள்.) அழகால் விளங்குகின்ற தாமரைகள் அடர்ந்த வயல் கள் சூழ்ந்து விளங்குகின்ற காசி நகரினிடத்து முற்காலத்தில் அடக்கிய

1. தொல். சொல்: எ.

ஐம்புலன்களையுடையானும், இறைவன்பால் அருளுபதேசம் பெறுவதில் வேட்கையையுடைய மனத்தினையுடையவனுமாகிய அகத்திய னென்பவன்:

(வி - ம்.) திரு-அழகு. அன்றித் திருமகள் விளங்குகின்ற தாமரை என்றலுமாம். திருமகள் தாமரைப் போதில் உறைதலால், 'திருக் கிளர் தாமரை' என்றார் எனக்கொள்க. செற்றுதல் - மிகுதல், ஈண்டு அடர்தல், நெருங்குதல் என்னும் பொருளது. பண்ணை - வயல். அன்றி, மருதநிலப்பரப்பு, மருவு எனற்பாலது, மருஎனக் கடைக்குறைந்து நின்றது. காசிவரைப்பு - காசிநகரின் எல்லை, காசிநகரில் என்றபடி. இதில் நகருக்குச் சிறப்புக் கூறியவாறு. 'திருக்கிளர்' செற்றிய பிள்ளை கள் சூழ்ந்த காசி என்றமையால், அந்நகர் பொருட் செல்வத்தானும் கல்வி கேள்விகளால் மிக்க அருட் செல்வத்தானும் உணர்ந்தது என் பதை உணர்த்தி நின்றது. பிறரும்,

[1] 'நற்றவஞ்செய் வார்க்கிடம் தவஞ்செய்வார்க்கு மஃதிடம்
நற்பொருள்செய் வார்க்கிடம் பொருள்செய்வார்க்கு மஃதிடம்.'

என, நாட்டுக்குச் சிறப்புக் கூறுதலறிக.

ஒருக்குதல் - கெடுத்தல், அடக்குதல். அகத்தியமாமுனிவர் மெய் வாய் கண் மூக்கு செவி யென்னும் ஐம்பொறிகளின் வழியே உயிர்த்து உண்டு கண்டு முகர்ந்து கேட்டு அதன் வழியே சென்று விடுதலறியா விருப்பை யொழித்த மேதகையோர் என்பதை விளக்குதற்கு 'ஒருக்கிய ஐம்பொறியான்' என்றார். அவர்மாட்டுப் புலன்கள் கெடப் பொறிகள் தாம் உளவாயின என்பதைக் குறிக்கப் புலனென்று கூறாது, 'ஐம் பொறி' எனக் கூறினார். அருக்குதல் - அன்பு கொள்ளுதல். 'அருக்கு மங்கையர் மலரடி வருடியும்' என்னும் திருப்புகழடியில் அஃதிப் பொருட்டாதல் அறிக. இறைவன்பால் என்பது, அவாய் நிலையான் வருவித்துரைக்கப்பட்டது. இதனால் அகத்தியரது பெருமையாக புல னழுக்கற்ற அந்தணாளர் எனக் குறித்தவாறும். (௨)

இந்திர னாதிய ரேத்திவ ணங்கப்
பந்தணை மெல்விர லாளொரு பாலாம்
அந்தணன் மெல்லணை மேலமர் வேலை
வந்தெதிர் தாழ்ந்தும கிழ்ந்திது சொற்றான்.

(இ - ள்.) இந்திரன் முதலிய தேவர்கள், வாழ்த்தி வணங்கி நிற்பந்தைத் தாங்கிய மெல்லிய விரல்களையுடைய உமையம்மையைத் தம் ஒப்பற்ற இடப்பாகத்திற் கொண்டருளிய அழகிய அருளாளரான சிவபெருமான், மென்மை பொருந்திய அரியணைமீது எழுந்தருளி வீற்றிருந்தபோது வந்து நேரில் வணங்கி மகிழ்ச்சிகூர்ந்து கீழ்க்காணப் பெறும் இதனைக் கூறலானான்.

(வி - ம்.) இந்திரன் ஆதியர் என்பது, வானுலகத் திறைவனான இந்திரன் முப்பத்துமுக்கோடி தேவர் நாற்பத்தெண்ணாயிரம் முனிவர் உள்ளிட்டாரை. பந்தணை மெல்விரலாள் என்றது, ஈண்டு உமையம்மை யாரை. 'பந்தணை விரலியும் நீயும்நின் அடியார் பழங்குடில் தொறு

1. சீவகசிந், நாமகள்: ௪௮.

மெழுந்தருளிய பரனே' என, மணிமொழிப் பெருமாறும் அம்மை யாரைக் குறித்தல் காண்க. அருள்வடிவான ஆண்டவன் என்பதைச் சுட்டுதற்கு 'அந்தணன்' என்றார். அந்தணன் - அழகிய தண்ணளி யுடையோன். இறைவன் தமக்கென வொன்றுற்றது, உயிர்களின் பொருட்டு ஆக்கல் அளித்தல் அழித்தல் தொழில்களையும், அவைகள் வாழ்தற்கு ஏற்ற பல்வகை அண்டத் தொகுதிகளையும் படைத்து, அவைகட்கு இன்பந்தரத்தக்க பல்வகை நிலையியற் பொருள்களையும் இயங்கியற் பொருள்களையும் படைத்தருளியோன் ஆகலான் 'அந்த ணன்' என்னும் பெயராற் குறித்தார். ஆளுடைய நம்பியும் 'அந்தண னுள் அடைக்கலம் புகுத அவனை' என்றருளியதாம் அறிக. மெல் அணை - மென்மையான இருக்கை, ஈண்டு அரியணை. அதுகாலை அகத்தி யர்வந்து வணங்கி இது சொற்றான்-மேல் வருவதாகிய இதனைச் சொல்ல லானார் என்றபடி.

வணங்க என்னும் செயவெனெச்சம் காரணப்பொருட்டாக நிகழ் காலங் காட்டிற்று. அமர்வேலை: வினைத்தொகை. ஈண்டு இறந்த காலம். வந்து தாழ்ந்து மகிழ்ந்து என்னும் இறந்தகால வினையெச்ச அடுக்குகள், சொற்றான் என்னும் வினைப்பெயர்கொண்டு முடிந்தன. (௩)

சுந்தர மங்கையர் சொல்விழை காம
மைந்தரின் யாரும கிழ்ச்சிதி ளைக்கும்
செந்தமி ழென்னுந்தி ருத்தகு பாடை
தந்தருண் ஞானமுந் தந்தரு ளென்றான்.

(இ - ள்.) அழகுள்ள இளமங்கையரின் சொற்களை விரும்புகின்ற காமத்தையுடைய ஆடவர்களைப்போல, எல்லோரும் மகிழ்ச்சிகொள்ளு கின்ற செந்தமிழ்மொழி யென்னும் சிறப்புப் பொருந்திய மொழியினைக் கொடுத்தருளி, அருளுக்குக் காரணமான மெய்யறிவையும் தந்தருள் வாயாக என்று கேட்டுக்கொண்டார்.

(வி - ம்.) செந்தமிழ் மொழியானது கற்கக் கற்கக் கற்போரைத் தன்வயப்படுத்தி இன்புறுத்துந் தன்மையது. இச்சிறப்பால் தமிழ்விடு தூது என்னும் நூலில் அவ்வாசிரியர் 'இருந்தமிழே உன்னால் இருந் தேன் இமையோர், விருந்தமிழ்தம் என்றாலும் வேண்டேன்' என்று கூறு கின்றார், அதன் இனிமையாலென்க. இத்தமிழ்மொழியைப் பயின் றார்க்கு அஃது இன்பமூட்டலை, அழகு மிக்க மங்கையர்பால் இன்ப அன்பால் அவர்தம் சொல்லை விழைந்து செல்லும்' காமமிக்க ஆடவர், அவரைவிடாது தொடரும் தன்மைபோலப் பயின்றாரைத் தன்வழி பற்றச் செய்தலால் 'காமமைந்தரின் யாரும் மகிழ்ச்சி திளைக்கும் செந் தமிழ்' என்றார். பாடை - மொழி, பாடுதல் - படித்த தொன்றும் பொருளுடையது. அஃதாவது நூல்வழக்கால் படித்தற்கும் சொல் வழக்கால் பேசுதற்கும் உரியது. பாஷை என்னும் வடசொல் திரி பன்று. திருத்தகு - அருட்செல்வத்திற் சிறந்த என்னும் பொருளது. மைந்தரின் திளைக்கும் பாடை தந்து அருள் ஞானமும் தந்தருள் எனக் கூட்டிப் பொருள் கொள்க. உம்மை இறந்தது தழீஇய எச்சம். (௪)

மொழிந்தெதிர் நின்றமு னிவனை நோக்கிச்
செழுந்தமி ழுஞ்சிவ ஞானமும் வேட்பின்

எழுந்துயர் காவியி ருங்கிரி யண்மின்
தழுந்தர முண்டதன் றன்மையுங் கேண்மோ.

(இ - ள்.) இவ்வாறு கூறித் தம் முன்னிலையில் நின்ற அகத்திய முனிவரைச் சிவபெருமான் பார்த்தருளிப் பொருள் வளமுள்ள தமிழ் மொழியினையும் சிவஞானத்தையும் நீ விரும்பினை யாயின் மேலெழுந் துயர்ந்துள்ள காவியங்கிரியென்னும் பெயருடைய திருத்தணிகை மலையைச் சேர்வாயானால் அவைகளை அடையுந்தன்மை உண்டாகும். அதன் இயல்பையும் கூறுவேன் கேட்பாயாக (என்று சிவபெருமான் கூறியருள லுற்பட்டார்.)

(வி - ம்.) நோக்கி, வேட்பின், அண்மின், உண்டு, கேண்மோ எனக்கூட்டி வினை முடிவு செய்து பொருள் கொள்க.

இறைவன், தம்மை வேண்டிய அகத்திய முனிவரை நோக்கி நீ செழுந்தமிழும் சிவஞானமும் பெறவிரும்பின் காவியிருங்கிரி சேரின் அவை பெறுந்தரம் உண்டாகும். அதன் தன்மையைக் கேள்; சொல்வேன் என்றார் என்க. காவி இருங்கிரி – குவளை மலர்கள் மிக்க பெரியமலை; ஈண்டு திருத்தணிகைமலை, தழுவும் என்னும் எதிர்காலப் பெயரெச்சம் இடை உகரந்தொக்கு வந்தது. தரம் - தகுதி; தன்மை. கேண்மோ என்பதில் மோ : முன்னிலை அசைச்சொல். (௬)

எவ்வரம் வேண்டியி ருப்பினும் வல்லே
அவ்வர மவ்வயி னல்லது முற்றுச்
செவ்விய தியாம்பணி யத்திகழ் வேலோன்
தெவ்வுப தேசமுஞ் செப்பிய தாமால்.

(இ – ள்.) ஒருவன் எந்த வரத்தை வேண்டித் தங்கினாலும் விரைவாக அந்த வரம் அந்த இடத்திலல்லாமல் வேறெவ்விடத்தும் முடியா; அது, யாம் பணிந்து கேட்ப, விளங்குகின்ற வேற்படையையுடைய முருகன், கொள்ளத்தக்க பிரணவப்பொருளை உபதேசம் செய்தற்கும் இடனாக அமைந்த தகுதிப்பாடுடையது.

(வி - ம்.) எவ்வரம் - எந்தவரமும், அஃதாவது பெறற்கரிய வரம். இறுத்தல் - தங்குதல். இறு என்னும் பகுதியடியாகப் பிறந்த எதிர் கால வினையெச்சம். செவ்வியது - தகுதியுடையது, சமயமுடையது என்னும் பொருட்டு.

நான்முகன் பிரணவப் பொருளறியாதபோது, அவனை முருகப்பெருமான், அகந்தையை அடக்கக் குட்டிச் சிறை செய்தார். அதுகாலை, தேவர்கள் யாவருங் கண்டு வருந்திச் சிவபெருமானிடஞ் சென்று முறையிட்டனர். சிவபெருமான் நந்தியை விடுத்து நான்முகனைச் சிறையினின்றும் விடுதலை செய்யுமாறு கூற அவ்வாறே சிறைவீடு செய்து, பின்னர் இறைவன் 'உனக்குப் பிரணவப் பொருள் தெரியுமா? சொல்' எனக் கேட்ப, முருகவேள், 'ஆசிரிய மாணவ முறைப்படியிருந்து கேட்பின் கூறுவல்' என்று கூற, இறைவன் மாணவ முறையில் கீழிருந்து கேட்ப, முருகப்பெருமான் உயர்ந்த பீடத்திருந்து இறைவன் காதில் பிரணவத்

தின் உட்பொருளைக் கூறியருளினர்; அது நிகழ்ந்தது, இத்திருத்தணிகை மலை. ஆதலால், 'வேலோன் தெவ்வுபதேசமும் செப்பிய தாமால்' என்றார். தெவ்-கொள்ளுதல், அஃதாவது பெறுதல் என்றும் பொருளது. [1] 'தெவுக்கொளற் பொருட்டே' என்பது தொல்காப்பியம். உபதேசமும் செப்பியதென்பது, இடத்து நிகழ்பொருளின் தொழில் இடத்தின்மேல் ஏற்றிக் கூறப்பட்டது. ஆல்: அசைநிலை. (௬)

நம்மரு ளாணையி னந்திசி றந்த
அம்மலை நண்ணிய ருந்தவ மாற்றிச்
செம்மற ருஞ்சிவ ஞானமு ணர்ந்தான்
எம்மரு கெய்தியி ருந்தனன் மீட்டும்.

(இ - ள்.) நம்முடைய அருட் கட்டளைப்படி நந்தீசுரனைவன், சிறந்ததாகிய அத்தணிகைமலையைச் சேர்ந்து அங்கே முருகனை நோக்கி அரிய தவத்தைச்செய்து சிறந்தோனாகிய முருகனால் உணர்த்தப்பட்ட சிவஞானத்தை அறிந்து, அதன் பின்னரே மீண்டு நம்பக்க லெய்தி இருந்து வரலானன்.

(வி - ம்.) அருள் ஆணை - அருளையுடைய கட்டளை உருபும் பயனும் தொக்கதொகை. செம்மல் - தலைவன்; அறிவாற் சிறந்த முருகவேள். சிவஞானம் 'சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம். அஃதாவது பதியின் இலக்கணத்தை உணரும் உயரிய அறிவு. பதி பசு பாசம் என்னும் மூவகைப்பட்ட பொருள்களின் உண்மையை உணருகின்ற தன்மையுடையது. உணர்ந்தான்: முற்றெச்சம்.

நந்தி ஆற்றி உணர்ந்தான் இருந்தனன் என வினைகூட்டிப் பொருள் முடிபு காண்க. (௭)

ஒருட லட்டொளி பெற்றதிக் காசி
பாரிடை வந்துப ணிந்தவர்க் கெல்லாம்
ஈருட லீட்டிருண் மாயைகள் மங்கள்
வேரொடு மாய்த்தலிற் காசியின் மேலாம்.

(இ - ள்.) எல்லா இடங்களிலிருந்தும், ஆங்கு வந்து சேர்ந்து, தன்னை வழிபட்ட யாவருக்கும், அவர் தம் பருவுடல் ஒன்றையும், அழித்தலினால், இக்காசி நகரம், புகழ்பெற்றதாகும், பருவுடல் நுண்ணுடல்களால் உண்டாக்கப்பட்ட, அறியாமையாகிய மயக்கத்தையுடைய இருவினைகளையும், அடியுடன் கெடுத்தலினாலே, அக்காசியைக் காட்டினும் இத்திருத்தணி உயர்ந்ததாகும்.

(வி - ம்.) காசி நகரம், அத்தலத்தில் இறந்தோர்க்கு வீடுபேறு தருமென்பது ஆன்றோர் கண்டறிந்த உண்மையாகும். இவற்றை [2] 'துவக்கற அறிந்து பிறக்கும் ஆரூரும் தொடர்ந்திடா தடைந்துகாண் மன்றும், உவப்புடன் நிலைத்து மறிக்குமோர் பதியும் ஒக்குமோ நின்திரு

1. தொல். பொருள். உரியியல் : ௪௭.
2. சோணசைலமாலை ;

நகரை' என வருஉம் சோணசைலமாலைச் செய்யுளான் அறிக. அதனுல் "ஈருடல் சுட்டொளிபெற்ற திக்காசி' என்ருர். ஒளி - புகழ்; 'ஒளிகெழு' என்புழி இப்பொருள் தருதலை அறிக. ஈருடல் - நுண்ணுடம்பு பருவுடம்புகளாகிய இருவுடம்புகள். இவ்வுடம்புகளுள் நுண்ணுடம்பு உட்கருவிகள்: அவை, மனம் புத்தி சித்தம் அகங்காரங்களை இடனுகக் கொண்டு நிற்கும். பருவுடம்பு தோல் எலும்பு முதலிய எழுவகை மூலப்பொருள்களைக்கொண்டு கட்டப்பட்டு இயங்குவது. இவ்விரண்டுங்கூடிய வழியன்றிக் கன்மங்கள் இயற்றப்படாமையின் 'ஈருடல் சுட்டு இருண்மாயை கன்மங்கள்' என்ருர். இத்திருத்தணியைச் சார்ந்து முருகன்பால் அன்பு பூண்டு தவமுஞற்றுவார்க்கு அப்பாவங்கள் ஒருங்கே தொலைதல் ஒருதலையென்பார், 'வேரொடு மாய்த்தலிற் காசியின் மேலாம்' என்ருர். (அ)

பெற்றுப தேசம் பிறங்கிய வஞ்ஞான்
றிற்றது சூர்முத லென்றெழுந் தாடல்
உற்றிடு நம்மொரு சூழலுங் குண்டால்
கற்றவர் காசியெ னக்கரை வாரால்.

(இ - ள்.) நாம் அம் முருகன்பால் உபதேசம் பெற்று விளங்கிய அந்நாளில் இனிச் சூரபன்மாவாகிய தலைவன் முடிந்தான் என்னும் மகிழ்ச்சியால் கிளர்ந்தாடுதல் கொண்டதால் சார்ந்த நம்முடைய அவை பீடமும் அங்கே உளது; கற்றுணர்ந்தோர் அத்திருத்தணியைக் காசியென்றே கூறுவர்.

(வி - ம்.) உபதேசம் பெற்றது, சிவபெருமான் நான்முகனைச் சிறைவீடு செய்யுமாறு கூறியபோது எனக்கொள்க. முன்னரே இதனை எ-ஆம் பாடலில் விளக்கியுள்ளேம். சூர்முதல் - சூரபன்மாவாகிய தலைவன்; சிவபிரான் முருகன்பால் பிரணவப் பொருளைக் கேட்டுத் தெளிந்தபோது, மிக்க மகிழ்ச்சி பொங்க இனி, இம்முருகனுல் சூரபன்மா இறந்தானெனத் திருக்கூத்தாடினுர். எனவே, அதைக் குறிக்கும் ஓர் இடமும் அங்கே உள்ளது என்பார், 'நம்மொரு சூழலுங்குண்டு' என்ருர். இற்றது - அழியும். அஃறிணை வாய்பாடாகக் கூறிய சூர்முதல் என்பதற்கேற்ற பயனிலையாக ஒன்றன்பால் விகுதிபெற இற்றது என்ருர். இற்றதென்பது தெளிவுபற்றி எதிர்காலம் சிறந்த காலமாகக் கூறப்பட்டது. என்னை?

[1] 'வாராக் காலத்தும் வருஉங் காலத்தும்
ஓராங்கு வருஉம் வினைச்சொற் கிளவி
இறந்த காலத்துக் குறிப்பொடு கிளத்தல்
விரைந்த பொருள என்மனுர் புலவர்'

என்ப தோத்தாகலான் என்க.

சூர்முதல் - சூரபன்மாவாகிய தலைவன் [2] 'சூர்முதல் தடிந்த சுடரிலை வடிவேல்' என்னும் திருமுருகாற்றுப்படை இவ்வடிக்கு இவ்வாறு நச்சினுர்க்கினியர் பொருளுரைத்தமை அறிந்தின்புறுக. (கூ)

1. தொல். சொல்: சசு. 2. திருமுருகாற்றுப்படை: சசு.

இத்தகு காசியி றும்பொழு தெம்மான்
மெய்த்தொளிர் தாரகம் விள்ளுவ தாகும்
அத்தகு காசிய னைத்தினு மேலாம்
உத்தம வுண்மையு ரைப்பதெஞ் ஞான்றும்.

(இ-ள்.) இத்தகைய காசிப்பதியானது மக்கள் உயிர்மாயும்போது எம்மால் உண்மையுடையதாய் விளங்கும் தாரக மந்திரம் உபதேசிக்கப் படும் பெருமை யுடையதாம். அத்தகைய திருத்தளியாகிய காசி எல்லா வற்றினும் மேலானதாம். ஏனெனில் முதன்மையான மெய்ப் பொருளாகிய மந்திரங்களை எப்போதும் உபதேசிக்கப்படும் பெருமையுடையது ஆதலின்.

(வி-ம்.) இறும்பொழுது - இறக்குங்காலம். தாரகம் - பிரணவ மந்திரம். விள்ளுவது - ஓதுவது. இறக்கும்பொழுது காசியில் ஒவ்வொருவருக்கும் சிவபெருமாற்கு உரித்தாகிய பிரணவ மந்திரத்தை ஓதுவர். இங்கே இடத்து நிகழ் பொருளின் தொழில் இடத்தின்மேல் ஏற்றிக் கூறப்பட்டது. உத்தம உண்மை - சிறந்த உண்மைப்பொருள். அஃதாவது வீடுபேறு நல்கும் உண்மையறிவு. மெய்த்து - மெய்ம் மையையுடையது; ஒன்றன்பாற் குறிப்பு வினையாலணையும் பெயர். (௩0)

ஈண்டிறும் போதிலி யம்புப தேசத்
தீண்டுப யன்னம தின்னுரு வாகும்
ஆண்டரு ளுண்மையி னைம்மல மாங்கே
மாண்டொளிர் முத்திவ ரும்பய னுமே.

(இ-ள்.) இக்காசித்தலத்தில் இறக்குங்காலை ஓதுகின்ற பிரணவத்தாற் பொருந்திய பயனாவது நமது இனிய வடிவம் காண்டலே யாகும்; அவ்விடத்தே அருளான திருத்தலினால் ஐவகைப்பட்ட மலங் களும் கெட விளங்குகின்ற வீடுபேறானது கிட்டுகின்ற பயனாகும்.

(வி-ம்.) ஈண்டு - இவ்விடம்; அண்மைச்சுட்டு முதனின்டது. இறுதல் - முடிதல், இறத்தல். உரு - வடிவம். அது, அதனைக் காணு தல் பொருள் தந்து நின்றது. பிரணவப் பொருளாக விளங்குவோன் இறைவனாகும். அதை ஓதுவோர்க்கு இறைவன் நினைந்த வடிவோடு விரைந்து வந்து காட்சி தந்தருள்வது மறைநான் முடிபாகலான் இறை வன் 'நம்து இன்னுருவாகும்' என்றருளினார். ஐம்மலம் - ஐவகைப் பட்ட மலங்கள், அவை: ஆணவம், கன்மம், மாயை, மாயாகாரியம் திரோதாயி என்பன. இவைகளின் குணவியல்புகளைச் சித்தாந்த முத லிய தத்துவ நூல்களிற் காண்க. அத்தலத்தில் இறைவன் திருமந்தி ரத்தை ஓதுவார்க்கு மலங்களற்று வீடுபேறு கிட்டும் என அதன் பெருமை கூறியவாறறிக. (௩௧)

ஞானமெ வற்றினு மேலது நல்கும்
தானமு மேலெத்த லத்தினு ஞானம்

ஆனத லத்தினு மத்தல மேலாம்
வானருள் யாமும தற்கிவர் மாண்பால்'

(இ - ள்.) ஞானங்கள் யாவற்றினும் மேலானதாகிய சிவஞானத்தைத் தருகின்ற திருத்தலமும் அது. மேன்மையான எல்லாத் தலத்தினும் பிற ஞானத்தைத் தருவதாகிய தலங்களினும் அத்தலமானது தேவருட் சிறந்த யாமும் அதன்கண் தங்கியிருக்கின்ற பெருமையால் மேலாம்.

(வி - ம்.) ஞானமென்பது தொகையால் ஒன்றுகும். வகையால் பரம் அபரம் என இரண்டாம். இவ்விரண்டும் கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை கூடல் என்பனவாக விரியும். இவை ஞான சாதனங்கள் எனப்படும். இவற்றுள் கேட்டல், சிந்தித்தல் இரண்டும் அபரஞானத்திலும், தெளிதல், நிட்டைகூடல் இரண்டும் பரஞானத்திலும் சேர்த்தோதுவர். இதனைச் சிவஞான சித்தியார் எட்டாவது நூற்பா விளக்கப் பகுதிக்கண், அருணந்தி சிவாச்சாரியார்,

[1] 'கேட்டலுடன் சிந்தித்தல் தெளிதல் நிட்டை
கிளத்தலென ஈரிரண்டாம் கிளக்கின் ஞானம்'

என, விளக்குதலான் அறியப்பெறும். இவ்விருவகை ஞானங்களுள் பரஞானமாகிய மெய்ஞ்ஞானத்தைத் தந்து பந்தபாசங் களைந்து பதியொடு கூட்டி வீடுபேறு நல்கும் சிறப்புடையது இத்தலம் என்பது தோன்ற 'ஞானம் எவற்றினும்.........தானம்' என்றுர். இத்திருஞானத்தைத் திருஞானசம்பந்தர் வரலாறுரைக்கப் போந்த சேக்கிழார் பெருமான், ''சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம், பவமதனை அற மாற்றும், பாங்கினிலோங்கிய ஞானம், உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம், தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தார் அந்நிலையில்'' என்றருளுமாற்று லறிந்தின்புறுக. வானர் - வானவராகிய தேவர்கள். அவருள், தாம் தேவர் தேவனுக விளங்குதலான சிவபெருமான் தாம் ஆங்கு எழுந்தருளியிருக்கும் சிறப்புக்கொண்டது அத்தலம் என்பதைக் குறித்துணர்த்த 'யாமும்' என உணர்வு சிறப்பும்மை கொடுத்துரைத்தார். இவர்தல் - தங்குதல்; விரும்புதல் என்னும் பொருளது. மாண்பு - சிறப்புடையது: பண்பாகு பெயர். (கஉ)

ஆங்குப தேசம றுமுக னல்கத்
தாங்கிய ஞான்றுத டமொன்ற கழ்ந்து
வீங்கிய வேணிவி ழுப்புன ருழ்த்தாம்
தேங்கிய வச்சிவ கங்கையு முண்டால்.

(இ - ள்.) அத்திருத்தலத்தினிடத்தே எமக்கு ஆறுமுகங்களையுடைய முருகன் பிரணவப் பொருளை உணர்த்த நாம் அதனை ஏற்றுக்கொண்ட அந்நாளில் தடாகமொன்றை வெட்டி அதன்கண் உயர்ந்த எம் சடைக்கண்ணுள்ள தூய கங்கைநீரை வீழ்த்தி விழச்செய்தோம்; அவ்வாறு வீழ்ந்து பெருகிய அந்தச் சிவகங்கைத் தீர்த்தமும் உடையதாகும்.

(வி - ம்.) ஆங்கு - சுட்டு நீண்டது. உபதேசம் - பிரணவப் பொருளை இறைவற்கு அருளிச்செய்தமை. ஞான்று - நாள். வீங்குதல்-

1. சிவஞானசித்தியார்: அ: கஉ.

மிகுதல், அஃது ஈண்டு உயர்வு குறித்தது. விங்கிய: இறந்தகாலப்பெயரெச்சம். இறைவன் திருச்சடையாகிய வேணிக்கு அடையாக வந்தது. 'வீங்கு நீரருவி வேங்கடம்' என்புழிப்போல. விழு - சிறப்பு; விழுமம் என்பதில் உள்ள ஈறு குறைந்து வந்தது. தாழ்த்தல் - சாய்த்தல்; கீழே பெருகவிடுத்தல். தாழ்த்தாம் : தன்மைப்பன்மை இறந்தகால வினைமுற்று. தேங்குதல் - நிறைதல். தேங்கிய - நிறைந்த; பெருகிய. சிவகங்கை - சிவகங்கையென்னும் பெயரையுடைய தீர்த்தத் தடாகம். ஆல்: அசைநிலை. (சுடு)

இவணுறு கங்கையெ ரிசடை யுய்ப்பத்
தவழ்வதொன் றேனுந்த வமுனி வாயின்
உவளக முற்றுலந் தாரென்பி னூர்ந்த
தவணுறு கங்கைக்க ழுக்கொன்று மின்றே.

(இ - ள்.) இவ்விடத்துள்ள கங்கையானது, எனது நெருப்புப் போன்ற சடை முடியில் யான் நிறுத்தத் தவழும் பெருமை யுடையது ஒன்றெனினும், முன்னர்த் தவம் புரிந்த சன்று என்னும் முனிவர் வாயிற் புகுந்தது; அன்றியும் மறைவிடத்துப் (பாதலத்து) பொருந்தி மடிந்து கிடந்தவர் (சகரர் அறுபதினாயிரவர்) எலும்பினும் படிந்தது ஆதலால் அழுக்குடையது ஆம். அத்தணிகைப் பதிக்கண்ணுள்ள சிவகங்கைத் தீர்த்தத்திற்கு அத்தகைய அழுக்கொன்றும் இல்லை.

(வி - ம்.) சிவபெருமான் தன் சடைமேலிருக்குங் கங்கையினும் தூய்மையுடையது தணிகைப்பதிக் கண்ணுள்ள சிவகங்கை யென்று அதன் பெருமை கூறினர். பகீரதன் முன்னர் தம் முன்னோராகிய அறுபதினாயிரம் சகரரும் கபில முனிவர் சாபத்தால் வெந்திறந்த செய்தி அறிந்து அவர் நற்கதி யடையும் பொருட்டுக் கங்கையைப் பூவுலகத்திற்குக் கொண்டுவர முயன்றான் என்பதும், கங்கையின் வேகத்தைச் சிவபெருமான் சடையிற்றாங்கித் தணித்து விடுத்தனர் என்பதும், கங்கை பாதலம் நோக்கிச் செல்லும்போது சன்னு முனிவர் தவத்தைக் கலைத்ததென்று வெகுண்டு வாயைத் திறந்து பருகினர் என்பதும், பகீரதன் அறிந்து வேண்ட அவனுக்கிரங்கிச் செவி வழியாக விடுத்தனர் என்பதும், பின்பு சென்று சகரர் அறுபதினாயிரவர் வெந்து கிடந்த என்புச் சாம்பலிற் படிந்தது என்பதும், சகரர் நற்கதி பெற்றனர் என்பதும் வரலாறாகும். இதனை யுட்கொண்டு தவமுனிவாயின், உலந்தார் என்பின் ஆர்ந்தது என்றார். ஆர்ந்தது - பொருந்தியது. இவணுறு கங்கை அழுக்குடையது என ஒரு சொல் வருவித்து முடிக்க; அவணுறு கங்கைக்கு அழுக்கொன்றும் இன்றே என்ற குறிப்பினால். உவளகம் - அந்தப்புரம். இது ஈண்டு அதுபோன்ற மறைவிடம் ஆகிய பாதலத்தை யுணர்த்தியது. சகரர் தந்தை, அசுவமேதம் புரிய விடுத்த பரியை இந்திரன் ஒருவரும் அறியாமல் பிடித்துக்கொண்டு போய்க் கபில முனிவர் குடிலின்பின் பாதலத்திற் கட்டி வைத்துச் சென்றான். அதனை யறியாது சகரர் அம் முனிவர் தாம் கட்டினர் என்று சினந்து வைது போர் புரியத் தொடங்கியதால் கபில முனிவர் சினந்து சாபத்தியால் அவர்களை எரித்தனர் என்பதும் அறிக. (சஎ)

பகீரதன் மாதவ னுலிது பாரில்
உகாவவர் பேரொடு மோங்கிய தாங்கண்

முகேரெனத் தோய்சிவ கங்கைமுன் யாமே
புகாயென வைத்த லினப்பெயர் பூணும்.

(இ - ள்.) பகீரதன் என்னும் பெயருடைய பெரிய தவத்தை யுடையோனால் கீழிறங்கிவந்து அப்பகீரதன் பெயரோடு சார்ந்து பாகீரதி என்னும் பெயரால் இக்கங்கை இங்கே விளங்குவதாயிற்று; அவ்விடத்தே 'முகே' ரென்னும் ஒலிதோன்ற யாவரும் மூழ்குகின்ற சிவ கங்கையானது முன்னொருகால் நாமே 'செல்க' வென்று கூறி நிறுவிய தால் 'சிவகங்கை' யென்னும் பெயர் தாங்கி விளங்கும்.

(வி - ம்.) உகா - உகுத்து: செய்யா என்னும் வாய்பாட்டு வினை யெச்சம். உகுத்தல் - சிந்துதல். கங்கைநீரைச் சுரந்து கீழிறங்குத லான் 'உகா' என்றார். அவர்: சுட்டுப் பெயர்; பகீரதன், இக்கங்கை யானது அப்பெயரால் 'பாகீரதி' யென்று வழங்கும். 'முகேர்' என்பது, நீரில் மூழ்கும்போது உண்டாகும் ஒலியைக்காட்டும் ஒலிக்குறிப்புச் சொல். இதனை மணிமொழிப் பெருமான் அருளிய திருவாசகத்தில் திரு வெம்பாவை மகளிர் நீராடலைக் குறித்துக் கூறுவதாக அமைந்த திருப் பாடலில்,

[1] 'மொய்யார் தடம்பொய்கை புக்கு முகேர்என்னக்
கையாற் குடைந்து'

என்றதில் இவ்வொலிக் குறிப்பை உணர்த்துதலறிக. புகாய் - புகுக: முன்னிலையேவ லொருமை வினைமுற்று. வைத்தல் - நிறுவுதல்; உண் டாக்குதல். பூணும் - தாங்கும்: செய்யுமென் வினைமுற்று. (கஇ)

ஈங்குறு கங்கையி னெய்துப யத்தின்
ஆங்குறு கங்கையி னுயிர மேலாம்
ஈங்குவ சிப்பவே முந்தப யத்தின்
ஆங்குவ சிப்பதொ ராயிர மேலாம்.

(இ - ள்.) இங்குள்ள கங்கையிலாடியதனால் கிடைத்த பயனைக் காட்டினும், அங்குள்ள சிவகங்கையில் ஆடியதனால் கிட்டும்பயன், ஆயி ரம் பங்கு மேலானதாகும்; இக்காசி நகர்க்கண் வாழ்தலால் உண்டாம் பயனைக் காட்டினும் அத்திருத்தணிக்கண் வாழ்தலால் உண்டாம் பயன் ஆயிரம்பங்கு மேலானதாகும்.

(வி - ம்.) ஈங்கு: அண்மைச்சுட்டு, முதனீண்டது இங்கே சுட்டி டப் பெயராகக் காசிநகரைக் குறித்தது. பயம் - பயன்; நன்மை. ஆங்கு, அவ்வாறே திருத்தணியைச் சுட்டிநின்றது. இன்; ஐந்தனுருபு. ஏதுப்பொருட்டாக வந்தது. ஆயிரம் என்னும் எண்ணுப் பெயர் மிகு திப்பொருள் தருவதோர் குறிப்பு மொழியாய் அதனால்வரும் பயனைக் குறித்து நின்றது. வசிப்ப - வாழ; இருக்க என்னும் பொருளது. கார ணப் பொருட்டாக வந்த செயவெனெச்சம். (கஉ)

மலக்கமு றுத்திய வன்பிணி யாதி
கலக்கமு றுத்துக ரிசுக ளெல்லாம்

1. திருவாசகம், திருவெம்பாவை.

அலக்கணு றுத்திய வாணவத் தாமஃ
துலக்குவ தேலுல வாப்படர் யாதே.

(இ - ள்.) துன்பத்தில் ஆழ்த்திய, கொடிய நோய் முதலாகவுள்ள கலக்கத்தைச் செய்கின்ற குற்றமுடையன யாவும் துன்பத்தைத் தருகின்ற ஆணவமல மயக்கத்தால் உண்டாவதாகும்; அந்த ஆணவமலமும் கெட்டொழிவதாயின், கெடாத துன்பம் எது? ஒன்றுமில்லை.

(வி - ம்.) மலக்கம் - துன்பம். பிணி - நோய். எவரையும் எதையும் செய்ய இயலாவாறு கூட்டுவது என்பது பொருள். அதன் கொடுமை தோன்ற வண்மையென்னும் அடைமொழி கொடுத்தோதினர். ஆதியென்றமையால் வஞ்சம் பொறாமை கொலை களவு முதலிய பிறவும் கொள்க. கரிசு - குற்றம். அலக்கண் - துன்பம். இன்பம் வரினும் துன்பம் வரினும் முதற்கண் வெளிக்குக் கொணர்ந்து காட்டுவன கண்களேயாதலின், கண்ணின் மேலேற்றி அலக்கண் என வழங்குவது நம் செந்தமிழ் ஆசிரியன்மார் மரபு. ஆகலான், அவ்வழிக்கண் தோன்றிய ஆசிரியரும் 'அலக்கண்' என்றோதினர். அலக்கண் – அல்லாதகண்; அஃதாவது நன்றல்லாத கண்; எனவே துன்பத்தைத் தரும் கண்ணென்பது பெற்றாம். கண்ணைக் கலங்கவைக்கும் தன்மையினால் துன்பத்துக்குப் பெயராக வந்தது. இன்னும் புன்கண், இடுக்கண் முதலிய வழக்குகளானும் அறிக. இவைகளெல்லாம் மூலமலமாகிய ஆணவமலத்தால் தோன்றி மக்களைத் துன்புறுத்துவதாகலான், 'ஆணவத்தாம்' என்றார். அதன் கொடியதன்மை தோன்ற, துன்புறுத்துமென்ன எதிர்காலத்தால் கூறாது, இறந்த காலத்தால் விடாது துன்பு செய்யும் என்னுந் தெளிவு பற்றிக் கூறினார். அத்தகைய ஆணவமலமும் இத்தீர்த்தத்தில் மூழ்கினரைவிட்டு விலகி யோடுமென்பார் 'உலக்குவதேல்' என வியப்புச் சுவை தோன்ற உரைத்தார். இக்கொடிய ஆணவமும் விலகப் பெருந் தன்மையை விலகச்செய்யுமென்றால் பிற எவற்றானும் துன்பமுற்று வருந்த வேண்டுவதில்லை யென்பார் 'உலவாப்படர் யாதே?' என வினாக் கொடுத்துரைத்தார். யாது: சாதியொருமைபற்றி வந்த ஒன்றன்பாற் படர்க்கை வினாப்பெயர். (௧௭)

முத்தியின் மேற்பய னின்றது மூழ்கின்
அத்தலை நல்குவ தத்தட மென்றான்
மெத்திய வேனைவி ழுப்பொருள் யாதே
பத்தியி னுடுநர் பாற்பலி யாதே.

(இ - ள்.) வீடுபேற்றைக் காட்டினும் மக்கள் அடையவேண்டும் மேலான பயன்வேறில்லை; மூழ்கினால் அம்முத்திப் பேற்றினை நல்குவது அச் சிவகங்கையெனின், அதினும் மேலான மற்ற சிறந்த பொருள் யாதுளது? அன்போடு இக்கங்கையில் மூழ்குவோரிடம் தீயூழ் எதுவும் சாராது.

(வி - ம்.) வீடுபேற்றுக்கு மேலான எய்தவேண்டும் பொருள் ஏதுவுமில்லை. அதுவும் இக்கங்கையில் மூழ்குவோர்க்கு எளிமையிற் கைவரப்பெறும் என்பார் 'அத்தலை நல்குவது' என்றார். தலை - இடமென்னும் பொருளது. அது : ஆகுபெயராகக் கங்கையைக் குறித்தது. மெத்துதல் - மிகுதல்; சிறத்தல் என்னும் பொருளது. விழுப்பொருள்-

சிறந்த பொருள். யாது – எது: இல்லையென்னும் எதிர்மறைப் பொருள் தந்தது. இவ்விரு வினைப் படர்க்கை ஒருமைச்சொல். பால் – ஊழ்; முறை, இயற்கை, தெய்வம் என்பன ஒரு பொருள் குறித்த சொற்கள். இத் தடாகத்தில் அன்போடு மூழ்குவார்க்கு தீமைசெய்யும் ஊழ்வினையும் தன் பயனை ஊட்டாது நீங்குமென்பார் 'ஆடுநர்பாற் பலியாதே' என்றார். பலித்தல் – நடத்தல்; செய்தல். பால் என்பதின் லகரம் அல்வழியினும் இசையின்பம் நோக்கி வலிந்தது. (௧௮)

விலங்குப றப்பைவி ரைத்தரு வாக
அலங்கிய வத்தட நீருட லண்மின்
இலங்கிய தெய்வத மாயிடர் வீழ்த்துப்
புலங்கெழு போகம்பொ ருந்தவி டுக்கும்.

(இ - ள்.) விலங்காக பறவையாக மணம் பொருந்திய மலர்தரும் மரங்களாக எதுவாயினும் அசைகின்ற அத்தடாகத்தின் நீரானது அவ்வவைகளின் உடலிற்படுமானால், அவை விளங்குகின்ற தெய்வத் தன்மையுடையவாய்த் தம் துன்பத்தை நீக்கி அறிவு பொருந்திய இன்பத்தின்கண் சேரும்படி செய்யும்.

(வி - ம்.) பறப்பை - பறவை. பறத்தலையுடையதைப் பறப்பை யென்றார். பறப்பு என்னும் சொல்லின்மேல் ஐ விகுதி விகுதிமேல் விகுதியாக வந்தது. பறவை என்பதே வழக்காயினும் தமிழிற் புதுச் சொற்கள் தோன்றி மிளிர்ந்து வளரப் படைத்துக் காட்டி மொழிவளத்தைப் பெருக்க வழி கோலிக் காட்டுகின்றார் ஆசிரியர். விரை-மணம்; அதனையுடைய மலருக்கு ஆகுபெயர். அலங்குதல் - அசைதல். இக்காரணத்தால் மாலைக்கு அலங்கல் எனப்பெயரிட்டு வழங்கினர். நீர் உடல் - நீரின்கண் உடலானது என்று விரியும்: ஏழன்தொகை. அன்றி எழுவாயாக நீரினைக் கொளலுமாம். தெய்வதம் – தெய்வம். புலம் – அறிவு. கெழு - பொருந்திய. அன்றி இடமிக்க என்றலுமாம். விடுக்கும் - விடும். (௧௯)

திரைத்தவிர் பன்மணி சிந்தியி ரைத்து
நுரைத்தலை யத்தட நுண்புன லேய்ந்த
விரைத்தம ருத்துவி ராவிய புல்லும்
நிரைத்தது றக்கநி லத்தர செய்தும்.

(இ - ள்.) அலைகளால் சுருட்டி விளங்குகின்ற பலவகை மணிகளைச் சிதறி இரைச்சலிட்டு நுரைகளையுடைய நீர்ப்பரப்பினதாய அக் கங்கையின் தெளிந்த நீரில் படிந்த விரைந்து செல்லுதலையுடைய காற்றினால் அசைக்கப்பெற்ற புல்களும் வரிசையாகக் கூறப்படுகின்ற வானுலகத்தின் கண்ணுள்ள இந்திரபதவியைப் பெற்று விளங்கும்.

(வி - ம்.) திரைத்தல் - சுருட்டல். திரைத்து - சுருட்டி; வினையெச்சம். பல்மணி – ஒன்பதுவகை மணிகள். சிந்தி – சிதறி. அலைகளால் மோதி அடித்து என்றபடி. நுரைத்தலை – நுரைகளைக்கொண்ட நீரின் மேலிடம். தலை; இடப்பொருள்தரும் ஏழன் உருபு. நீர்க்கு நுண்மையாவது கலங்கலின்றித் தெளிவுடைமையாக இருத்தல்.

விரைத்த-விரைவினையுடைய; ஒன்றன்பாற் படர்க்கைப் பெயரெச்சம். மருத்து – காற்று. இத்தீர்த்தத்திற் படிந்த காற்றுப் புல்லின்மேல் வீசப் பெறுமாயின், அப்புல்லும் தன் ஓரறிவுயிர்ப் பண்புமாறி பேரறிவு பெற்று அதனால் தேவருலகம் புக்கு அவ்வுலக இன்பங்கள் யாவற்றையும் பெற்றின்ப நுகர்ந்து இறுதியில் வீடுபேறுற்று இன்புறும் என்றமையால் அத்தீர்த்தத்தின் சிறப்பை மிகுத்துக் கூறியவாறும். நிரைத்த - வரிசையாகக் கூறப்படுகின்ற என்னும் பொருளது, துறக்கநிலம்-ஈண்டு எல்லா உலகங்களினும் சிறந்த வீட்டுநிலம். 'நிலமிசை நீடுவாழ் வார்' என்றும் வள்ளுவர் கூறும் உலகமும் இஃதே எனக்கொள்க. உம்மை: உயர்வு சிறப்பு. (௨0)

அவ்வயின் வாழ்தரு வாதியு மாங்கண்
செவ்விய நந்திரு மேனியி னூர்த்த
எவ்வமி லாமல ராதிக ளீவ
எவ்வெவை யுஞ்சிவ லோகம தேறும்.

(இ - ள்.) அத்தடாகக் கரையோரத்தே இருக்கின்ற மரங்கள் முதலியனவும், அவ்விடத்தே சிறந்த நம் திருமேனியின்மீது நிறைக்கப் படுகின்ற குற்றமற்ற மலர்கள் முதலியவற்றைத் தருவனவாகிய எப் பொருள்களும் நம் சிவவுலகத்தை அடையும்.

(வி - ம்.) தரு ஆதியும் என்பது, மரம் செடி கொடி முதலிய வற்றை. இறைவற்கு அணியப்படுவனவாகிய மலர்களையும் இலை முத லியவற்றையும் தருகின்ற பாதிரி கொன்றை ஆத்தி முதலிய மரங்களும், முல்லை இருவாட்சி பிச்சி பச்சை மாசிப் பச்சை மருக்கொழுந்து மரு முதலிய செடி கொடிகளும் பிறவுமாய நிலையியற் பொருள்களும் பிறவு மாம். எப்பொருள்களும் எமக்குச் சூட்டற்குரிய இலை, பூ முதலியவற் றைத் தருதலான், அப் பெரும்பயனால் அவை, அறிவால் அஃறிணை யாயினும் அறிவிற் சிறந்தார் செய்யும் அரிய தொண்டாகிய மலர் முத லியவற்றைத் தந்த பயனால் வீட்டுநெறி யடைந்து இன்புறும் என இறைவன், அத்தடாகத்தின் பெருஞ்சிறப்பை விளக்கிக் கூறினார்.

வயின் - இடம். விட்டுவிடாத இலக்கணைப் பொருட்டாகத் தடா கக்கரையை உணர்த்திற்று. கங்கைக்கண் வீடு என்பதுபோல. தரு- மரம். மேனி – இறைவன் திருவுருவ அடையாளக்குறி. இறைவற்கு அணியப்பெறும் தன்மையால் எவ்வமில்லாமை வேண்டப்பட்டது. 'குடங்கை நீரும் பச்சிலையும் இடுவார்க்கு இமையாக் குஞ்சரமும், படங் கொள் பாயும் பூவணையும்' தரும் பரமனுதலால் தமக்கு வழிபாடாற்றப் பூவும் இலையும் கொடுத்துதவும் தன்மையால் அவைகளும் வீட்டின்பம் எய்துவதாயிற்றென்க. (௨௧)

பாங்கரி னந்திப டிந்தருள் கூடும்
வீங்கிய யாறும்வி முத்தக வெய்தும்
ஓங்கிய வச்சிவ கங்கையொ டொக்கும்
தேங்குகு மாரதி ருத்தமு முண்டால்.

(இ - ள்.) அதன் பக்கத்தில் நந்தியானவன் மூழ்கி அருள்பெற்ற சிறந்த ஆறும் மிக்க சிறப்புடையதாய அந்தச் சிவகங்கையை யொத்

திருக்கின்ற நீர்நிறைந்த குமாரதீர்த்தம் என்னும் தடாகமும் உள்ளன வாம்.

(வி - ம்.) பாங்கர் - பக்கம்; அஃதாவது சிவகங்கையை அடுத்த பக்கம். நந்தி - நந்திசுரர். அருள்கூடும் - அருள்பெற்ற: இயல்பாக வந்த காலவழுவமைதி, வீங்குதல் - பெருகுதல்; சிறத்தல். விழுத்தகவு - மிகச்சிறப்பு. தெருங்கு - நீர்நிறைந்த. திருத்தம் - தீர்த்தம்: தீர்த்தம், தீர்த்தல் என்னும் பொருள்தரும் தொழிற்பெயர். அது துன்பத்தைத் தீர்த்தல்; களைப்பைத் தீர்த்தல்; அழுக்கைத் தீர்த்த (போக்க)ல்; தாகத்தைத் தீர்த்தல் என்னும் பொருளவாய்த் தீர்த்தம் என வழங்கிற்று. இது, வடமொழியிற் சென்று வழங்கியமையால், வடசொல்லென மயங்கினர். அதைத் தமிழ்ச்சொல்லாக்கவே தீர்த்தம் திருத்தமென் றனரென்க. குமாரதிருத்தம், குமாரக் கடவுளராகிய முருகப்பெருமான் பெயரால் வழங்கப்படும் தீர்த்தம் என்க. (உஉ)

முழங்குறு விண்ணதி மூன்றவை யெம்மால்
வழங்கிடப் பட்டன மாலயன் மன்னற்
கழுங்கிய வேதற்க ருளிய கங்கை
பழங்கண றுக்கும்ப கீரதி யிது.

(இ - ள்.) ஒலிக்கின்ற வானயாறுகள் கங்கை யமுனை சரசுவதி என்னும் பெயருடைய மூன்று; அவைகள் திருமாலும் நான்முகனும் மூழ்கி ஆடுதற்காக எம்மால் தரப்பட்டவையாகும்; துன்பத்தால் வருந்திய நான்முகனுக்காக அருளிய கங்கையானது துன்பத்தை ஒழிக்கின்ற பகீரதி என்பதே இக்குமார தீர்த்தம் ஆகும்.

(வி - ம்.) விண்நதி - வானயாறு. வானத்தின்கண் உள்ள தூய யாறு மூன்று. அவை தமிழ்ப் பெயர்களாகக் கங்கை, தொழுனை, வாணி என்னும் பெயரால் குறிக்கப்பெறுவனவாம். சிவபெருமான், திருமாலும், நான்முகனும் மூழ்குதற்காக அருளப்பட்டவை இம்மூன்று மென்றும், துன்பத்தால் அலைக்கப்பட்ட பிரமனுக்காக அருளப்பெற்றதே இக்குமார தீர்த்தமென அகத்தியர்க்கு இத்தீர்த்தத்தின் பெருமையை இறைவன் உணர்த்தியருளினார். பிரமன் துன்பத்தையும் மாற்றும் சிறப்புடைமையால் ஏனைய மக்கள் துன்பத்தை அறுப்பது கூறவேண்டாதாயிற்று. எனவே, 'கங்கை பழங்கண் அறுக்கும் பகீரதி ஈது' என்றார். (உ௩)

மற்றையி ரண்டுமவ் வானின கத்தே
உற்றன தங்கயி லாயமு றுத்த
அற்றமில் கங்கையொன் றள்ளிலை வெள்வேற்
கொற்றவன் முன்னக்கு றுகிய தாங்கு.

(இ - ள்.) யாறுகள் மூன்றனுள் யமுனை சரசுவதி என்னும் ஏனைய இரண்டும் அவ்வானத்தினிடத்தே தங்கலாயின, தூயதான கங்கை யொன்றும் நம் கைலாய மலையிடத்தே விடுக்கப்பட்டது; அது, கூர்மை பொருந்திய இலைவடிவமைந்த ஒளிபொருந்திய வேற்படையை யுடைய வெற்றியுடைய முருகனுைவர் அங்கே வருமாறு கருதச் சென்றதாகும்.

(வி - ம்.) மற்றை என்பது வினைமாற்றாகச் சுட்டியதற்கு இனமாய யமுனை சரசுவதி ஆகிய இரண்டையும் சுட்டிற்று. உறுத்தல் - செலுத்துவித்தல், உறுத்தது எனற்பாலது கடை (விகுதி) குறைந்து நின்றது. தம்மால் ஏவப்பட்டுப் போக்குவித்தலின் 'உறுத்த' என்றார். அற்றம் – கெடுதல்; குற்றம், அழியாமை என்றலுமாம். அள் - கூர்மை. இலை – இலைபோன்ற வடிவு. இவை வேலுக்கு அடைமொழிகள். கொற்றவன் - வெற்றியுடையோன் என்னும் பொருளது. முன்ன - நினைக்க. முருகப்பெருமான் நினைத்தலால் கங்கை அங்கே குமார தீர்த்தமாக அமைந்தது என்க. (௨௭)

ஆதலி னற்கும ரன்பெய ரான்ற
தீதறு நங்கயி லாயதி ருத்தம்
ஓதிய வச்சிவ கங்கையொன் றொக்கும்
ஈதல தொன்றும தற்கெதி ரின்றே.

(இ - ள்.) ஆதலால் குமரன் பெயரால் மாண்புற்ற குற்றமற்ற நமது கைலாயமலைத் தீர்த்தமே சொல்லப்பட்ட அந்தச் சிவகங்கை ஒன்றினை ஒத்திருப்பது வேறுஎந்தத் தீர்த்தமும் இதற்கு ஒப்பாக இல்லாததாகும்.

(வி - ம்.) ஆன்ற - மாண்புற்ற; சிறந்த. 'ஆன்றவிந் தடங்கிய கொள்கைச் சான்றோர்' என்பது காண்க. குமரன் பெயர் ஆன்ற திருத்தம். குமாரதீர்த்தம், இடைப்பிறவரலாக வந்தது. முன் கூறப்பட்ட சிவகங்கை என்னும் தீர்த்தத்துக்கு ஒப்பானது இஃதொன்றே வேறொன்றுமில்லை யென்பார். 'கங்கை யொன்றொக்கும்......இன்றே' என்றார். எதிர் - நேர் என்னும்பொருட்டு. இன்று - இல்லை; ஒன்றன் பாற் குறிப்பு வினைமுற்று. ஏகாரம்: ஈற்றசை. (௨௮)

வேறு

குட்டநோய் பெரும்பிணி குருதி கால்பிணி
முட்டிய முயலகன் முருக்கும் வாதநோய்
தொட்டுயிர் விழுங்குறுஞ் சூலை யாதியும்
அட்டெழி றருவதக் குமார தீர்த்தமே.

(இ - ள்.) அந்தக் குமார தீர்த்தமானது, குட்டநோயையும் பெருநோயையும் இரத்தகாச நோயையும் தாக்குகின்ற வலிப்பு நோயையும் துன்புறுத்தும் வாதநோயையும் சார்ந்து உயிரைக் கொல்லும் வயிற்று வலி முதலிய நோய்களையும் கெடுத்து உடம்புக்கு அழகு செய்வதாகும்.

(வி - ம்.) அக்குமார தீர்த்தம் பல்வகை நோய்களைப் போக்க வல்லது; எனவே அத்தீர்த்தத்தில் மூழ்குவது சிறந்ததாகும். பெரும்பிணி - பெருவயிற்று நோய். குருதி - செந்நீர். கால் - கக்கச் செய்கின்ற. எனவே, இரத்தகாசம்; சயநோய். முயலகன் - வலிப்பு நோய்; முயல்வலிப்பு. அஃதாவது வாயின் இதழ்களை ஒருபக்கம் கோணச்செய்து வாய்திறக்காவாறு துன்புறுத்திவரும் நோய். கொல்லி

மழுவனுகிய மன்னன் மகளுக்கிந்நோய் இருந்தது. அதனை ஆங்கெழுந் தருளிய சம்பந்தர் தேவாரம் பாடித் தீர்த்தருளினர். வாதநோய் எத்தகைய வன்மையுடையாரையும் இந்நோய் வந்துறின்; கை கால்களை முடக்கி நடக்கவொட்டாதும் எவ்வேலையும் ஆற்றவொட்டா தும் மூலையிற் கிடத்துவிக்குமாகலின், இவ்வடை புணர்த்துரைத்தார். சூலை - வயிற்றுவலி நோய். இஃதே தருமசேனர் என்னும் பெயரின ராய்ச் சமணசமயக் குருவாக இருந்த திருநாவுக்கரசரைப் பற்றி ஈர்த்துத் துன்புறுத்தியது. பின்னர், அரசரின் தமக்கையார் திலகவதியம்மையா ரால் திருவாளன் திருநீறு வழங்கி அந்நோய் அகற்றப்பட்ட தென்ப, ஆதி, என்றமையால் நீரிழிவு, காமாலை, கண்டமாலை, தலைவலி முதலிய பல்வகை நோய்களும் தீர்க்குஞ் சிறப்பு மிக்க தென்பதாம். அடுதல் – தீர்த்தல்; கெடுத்தல் என்னும் பொருட்டு. அகரம் : பண்டறிசுட்டு. (உசு)

**கதிரொளி யிருளெனக் கலங்குங் கண்களும்**
**முதிரிரு ளொளியென முகிழ்க்கும் பேரொளி**
**போதிநலந் தருவது புக்குத் தோய்ந்தவர்க்**
**கதிரொலித் திரைசெயக் குமார தீர்த்தமே.**

(இ - ள்.) மிகுந்த ஒலியையுடைய அலைகளைத் தருகின்ற அக் குமார தீர்த்தமானது தன்னிடம் சார்ந்து முழுகுவார்க்கு ஞாயிற்றினது ஒளியையும் இருளெனக் கொண்டு கலக்கமடைகின்ற கண்களும் மிக்க இருளின்கண் தோன்றும் விளக்கொளி யென்னும்படி குருட்டுத்தன்மை நீங்கி ஒளிபெற்றுத் தோன்றும்; அக்கண்களிடத்துப் பெரிய ஒளி நிறைகின்ற சிறப்பையும் தருவதாகும்.

(வி - ம்.) கதிர் – ஞாயிறு. குருட்டுக் கண்ணர்க்குப் பகலும் இருளும் ஒன்றே. எப்போதும் அவர்கண்கள் ஒளியிழந்தமையால் பகலும் இருளாகத் தோன்றும் எனவே, 'கதிரொளி......... கண்களும்' என்றார். பிற எவ்வகை நோயினுங்காட்டில் கண்ணின் ஒளியின்மை. ஐம்பொறி உணர்வில் ஒன்று குறையாதலோடு உறுப்பறைத் தன்மை யும் ஒருவற்கு இல்லாத தாக்கி நல்வழிக்கண் உய்க்கும் சிறப்பினால் கண்ணொளி கதுவ வைக்கும் தன்மையுடைய அதன் பெருமையை 'பேரொளி போதிநலம்' தருவது என்றார்.

முதிர் - முதிர்ச்சிபெற்ற; முக்கால வினைத்தொகை. முகிழ்த்தல் - மேலெழுந்து தோன்றுதல். போதி - நிறைந்த. தோய்தல் - மூழ்கு தல்; குளித்தல். தோய்ந்தவர்: இறந்தகால வினையாலணையும் பெயர். அதிரொலி - மிக்க ஒலி; ஒருபொருட் பன்மொழி. (உஎ)

**புண்ணிடைப் புழுக்குலம் பொழிவ தாயினும்**
**விண்ணெனும் புண்கறை வீழ்ப்ப தாயினும்**
**துண்ணென வுறுப்பிறத் துணிப்ப தாயினும்**
**பண்ணுறி னப்பிணி வல்லை மாய்க்குமே.**

(இ - ள்.) புண்களிலிருந்து புழுக்கூட்டங்கள் உதிர்வதானாலும், விண்ணென்னும் ஓசையுடன் புண்களின் இரத்தங்கள் கீழே வீழ்வதானா லும், திடுமென்று கைகால் முதலிய உறுப்புக்கள் கெடும்படி ஒழிப்ப

தானாலும் இத்தீர்த்தத்தில் கழுவப்பெற்றால் அத்தீர்த்தம் அந்நோயெவற்றையும் விரைவில் நீக்குவதாகும்.

(வி – ம்.) புழுக்குலம்-புழுக்களின் இனம். ஒருவற்குப் புண்ணுண்டாயவழி அது, ஆறாமல் பன்னிறமும் பல்வடிவங்கொண்ட புழுக்கள் மேலும் மேலும் உண்டாக்குவதியற்கை. இதனை, 'இவ்வுடம்பை, 'பொல்லாப் புழுமலிநோய்ப் புன்குரம்பை' என்றும், 'மொய்த்து வெங்கிருமி தத்து கும்பியை' என்றும் ஆன்றோர்கள் கூறுமாற்றால் இவ்வுடம்பின் நோய்களும் இழிவும் புலனாம். இத்தகைய புழுக்கூட்டங்கள் பெருகிவாழும் புண் என்பது. 'விண்' என்பது ஒலிக்குறிப்பை உணர்த்தும் அனுகரண ஒலி. புண்கறை-புண்ணினின்று வெளிவரும் செந்நீர். 'துண்' விரைவுக் குறிப்புணர்த்தும் சொல். இற - ஒடிந்த. விழ - கெட. மண்ணுதல் – கழுவுதல். மண்ணுறின்–அத்தீர்த்தத்தில் கழுவினால்; எதிர்கால வினையெச்சம். தீர்த்தம் என்னும் தோன்றா எழுவாய் மண்ணுறின் என்னும் பயனிலைநோக்கி வருவிக்கப்பட்டது. வல்லை - விரைவு. மாய்க்கும்-நீக்கும்; பிறவினை. புழுக்கள் வீழ்க்கும் புண்ணாயினும், இரத்தத்தை வடிக்கும் புண்ணாயினும், உறுப்புக்கள் புண்ணால் அழுகிக் கீழே விழும் தன்மையனவாக அழுகிப்போன கை கால் விரல்களில் ஏதாயினும் இக்குமார தீர்த்தத்தில் அவற்றைக் கழுவினால் அந்நோய்கள் யாவும் உடனே தீர்ந்துவிடும். எனவே, அக்குமாரதீர்த்தம் மிக்க பெருமை வாய்ந்ததாகும் என்றபடி. (உஅ)

கொலைப்பழி யாலுயிர் குமைக்குஞ் சாயையும்
அலைப்புறு பூதமு மலகைப் பேதமும்
மலைப்புற வருத்துமந் திரத்தின் சூழ்ச்சியும்
உலைப்புறு வனவதி னுவந்து தோய்நர்க்கே.

(இ – ள்.) அக்குமார தீர்த்தத்தில் மனமகிழ்ந்து மூழ்குவோர்க்கு, அது கொலைப் பாவத்தால் உயிரை வருத்துகின்ற பிரமகத்தி தோடத்தையும், துன்புறுத்துகின்ற பூதத்தையும், பல்வேறுபட்ட பேய்களையும், தாக்கி வருத்துகின்ற மந்திரத்தின் வஞ்சகத்தையும், தொலைத்து ஒழிப்பதாகும்.

(வி - ம்.) அக்குமார தீர்த்தம் பூதம் பேய் முதலியவற்றால் உண்டாகும் துன்பங்கள் எல்லாவற்றையும் நீக்கும் என்பதாம்.

கொலைப்பழி - கொலையாலுண்டான பாவம். சாயை - நிழல். நிழல்போல் விடாது பற்றப்படுவதாகிய பிரமகத்தி தோடம். இது, தாய்க்கொலை, பெண்கொலை முதலிய கொடிய கொலை முதலியவற்றைச் செய்தோர்க்குத் தொடருவது. பூதம், அலகைப் பேதம் - பேய்களின் வெவ்வேறுவகை. அவை, கரும்பேய், குறளிப்பேய் முதலிய பல்வகைப் பேய்கள் உள்ளனவாதலால் 'அலகைப் பேதமும்' என்றார். உலகிற் கொலை களவு குடி இணைவிழைச்சு முதலிய தீத்தொழில்களின் கன்றித் திரிந்த தீயோர், இறந்தபின் ஆவி வடிவில் கரிய பெரிய உருவெடுத்துத் தோன்றித் தாம் பயின்ற பொருட்களின்மேல் நுகர ஆசைகொண்டு ஆடு மாடு அறுத்து விற்கும் கொலைக்கூடங்களிலும், கூத்திகள் மன்றங்களிலும், கள்விற்கும் இடங்களிலும் திரிதருவனவாம். அவை தாமாக நுகர இயலாமையால், உயிருடன் உலகில் வாழ்பவர் உடற்கண் புகுந்து

நசர என்ணி அவரை வருத்துவனவாம். இத்தகைய கொடிய பேய்களின் பிடிப்பை யெல்லாம் இக்குமார தீர்த்தத்தில் ஒருகால் மூழ்குவார்பால் நில்லாது தொலையும் என்பார்', அதில் உவந்துதோய்நர்க்கே உலைப்புறலவ என்றார். மந்திரவாதிகள் தம் மந்திரச் சூழ்ச்சி வன்மையால் தமக்குப் பகைவரைத் துன்புறுத்துதலும், இளமகளிரைவயப் படுத்தி அவர்தம் கற்புநெறியைக் குலைத்துக் கெடுத்தலும் ஆகிய மந்திர வாதிகளின் அம்மந்திரவலியும், இதிற்படிவோர்க்குத் துன்பந்தாராது விலகுமென, இத்தீர்த்தத்தின் பெருமை தோன்றக் கூறினர். (உ௯)

கருக்கொலை தந்தைதாய் கன்னி யந்தணர்
உருக்கிளர் வீரரா னுதவி கொல்கொலை
குருக்கொலை யாயினுங் குழைந்து ளாருயிர்
வெருக்கொளத் தோய்ந்துறின் விளிக்கு மத்தடம்.

(இ - ள்.) மகளிர் கருவைச் சிதைத்தல், தந்தை தாய் இளமங்கையர் பெரியோர் வடிவமுகுமிக்க போர்வீரர், பசு நன்றி ஆகியவற்றைக் கொன்ற கொலைப்பாவம், குருவினைக் கொன்ற பாவம் ஆனாலும் இவற்றுக்காக மனம் வருந்தித் தம் நிறைந்த உயிர் அச்சங்கொள்ள அக்குமார தீர்த்தத்தில் மூழ்குவாராயின் அத்தடாகம் அப் பாவங்கள் யாவற்றையும் தீர்க்கும்.

(வி - ம்.) கருக்கொலை - பெண்கள் கருவைச் சிதைத் தழித்தல். கன்னி - இளம் பெண் ; அந்தணர் - நல்லொழுக்கம் அறிவு முதலியவற்றால் சிறந்த பெரியோர். வீரர் - போர்செய்யும் வீரர்கள். ஆன் - பசு. உதவி - ஒருவர் மற்றொருவர்க்குப் பயன் கருதாது செய்யும் நன்மை. குரு - கல்வி கற்பித்த ஆசிரியன். கொல்கொலை - கொன்ற கொலைப்பாவம். முக்கால வினைத்தொகை. ஆயினும், இவைகளில் எப்பாவமானாலும் அதற்காக மனம்வாடி இத்தீர்த்தத்தில் மூழ்குவாராயின் அவைகளை இத்தீர்த்தம் தீர்த்து அவரைத் தூய்மையாக்கும் தன்மையது.

இப்பாவங்கள் யாவற்றையும் காட்டில் ஒருவன் செய்தநன்றியை மறப்பது கொடும்பாவமென்பது, திருவள்ளுவர் துணிபு. அவரருளிய அறத்தில்,

[1] "எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு"

என்றார் ; எந்நன்றி யென்பதற்கு விளக்கமாகப் புறநானூற்றுப் பாடலொன்றிலும், கம்பர் காவியத்தும் விளக்கி விரித்துக் கூறப்பெற்றுள்ளன.

[2] "ஆன்முலை அறுத்த அறனி லோர்க்கும்
மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
குரவர்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
வழுவாய் மருங்கிற் கழுவாயும் உளவென

1. திருக்குறள். 2. புறம் : ௩௪.

நிலம்புடை பெயர்வ தாயினும் ஒருவன்
செய்தி கொன்றோர்க் குய்தி இல்லென
அறம்பா டிற்றே."

என்றும்,

[1] "சிதைவகல் காதல் தாயைத் தந்தையைக் குருவைத் தெய்வப்
பதவிஅந் தணரை ஆவைப் பாலரைப் பாவை மாரை
வதைபுரி குநர்க்கும் உண்டாம் மாற்றலாம் ஆற்றல் மாயா
உதவிகொன் றார்க்கென் றேனும் ஒழிக்கலாம் உபாயம்
உண்டோ"

என்றும் வருதலால் இப்பாவங்கள் யாவும் இத்தீர்த்தத்தில் மூழ்குவோர்க்கு ஒழிதலோடு செய்ந்நன்றி மறந்த பாவமும் ஒழியும் என்று இத்தீர்த்தத்தின் சிறப்புக் கூறிய தறிக. (௩௦)

பகைஞரைப் போரிடைப் பணிக்க வேண்டினும்
அகையுறு நட்பினை யாக்க வேண்டினும்
மிகைநல மொக்கலின் விளைக்க வேண்டினும்
தகைபெற முற்றுமத் தடத்துத் தோயினே.

(இ - ள்.) அக்குமார தீர்த்தத்தில் மூழ்கினால் தம் பகைவரைப் போர்க்களத்தில் பணியவைக்க வேண்டினாலும், கிளைக்கின்ற நட்பைப் பெருக்க வேண்டினாலும், மிக நல்லவற்றைத் தம் சுற்றத்தார்க்குச் செய்ய வேண்டினாலும் தகுதி பெற அவைகள் யாவற்றையும் முற்றுவிக்கும்.

(வி - ம்.) அகைத்தல் – கிளைத்தல், அஃதாவது மேலுமேலும் பெருகுதல். அகையுறு நட்பு, மேலும்மேலும் கிளைக்கின்ற நட்பு. ஒக்கலின் - சுற்றத்தார்க்கு. இன் என்னும் ஐந்தனுருபு நான்கனுருபோடு மயங்கிற்று ; வேற்றுமை மயக்கம். தகை - தகுதி. தோயின் - மூழ்கினால் ; குளித்தல். (௩௧)

புதல்வரை வேண்டினும் புலமை வேண்டினும்
கதமலை வேண்டினுங் கவிகை வேண்டினும்
சுதைநிகர் மொழியினர்த் தோய வேண்டினும்
பதவிகள் வேண்டினும் படியி னல்குமே.

(இ - ள்.) நற்புதல்வரைப் பெற விரும்பினாலும், நல்லறிவினைப் பெற விரும்பினாலும், சினம் பொருந்திய யானையைப் பெற விரும்பினாலும், அரசராக வெண்கொற்றக் குடைக்கீழ் இருக்க விரும்பினாலும், பால்போன்ற இன்சொற்களை யுடைய இளமங்கையர் இன்பம்பெற விரும்பினாலும் இத்தீர்த்தத்தில் மூழ்கினால் அவர் விருப்பப்படி அவற்றை அது தரும்.

(வி - ம்.) கதம்மலை – சினமுள்ள மலை. மலைபோல்வதாகிய யானைக்கு ஆகுபெயர். பிறரும் [2]'கைவரை எனத் தகையகாளை உரை' என்றார். கதம் - சினம். யானைக்குச் சினம் இயற்கையாகலான்,

---

1. கம்பரா. கிட்கிந்தை : ௬௨. 2. கம்பராமா, பால, தாடகை.

26

'கதமலே' என்று கூறினர். கவிகை - குடை. ஈண்டுச்சிறப்புப்பற்றி வெண்கொற்றக் குடைக்கிழிருந்து அரசுபுரியும் உரிமைக்கு வந்தது: ஆகுபெயர். சுதை - பால். நிகர்: உவமவுருபு. தோய - சேர; புணர; இன்பம்நுகர என்னும் பொருட்டு. பதவிகள், இந்திரவுலகு, வைகுந்த வுலகுபோன்ற இன்பவுலகத்துப் பதவிகள்; அஃதாவது அவ்வவ் வுல கங்களில் தலைமையேற்று இன்பந் திளைத்தல். இதனைக் [1]'குடங்கை நீரும் பச்சிலையும் இடுவார்க் கிமையாக் குஞ்சரமும், படங்கொள் பாயும் பூவனையும் தருவாய் மதுரைப் பரமேட்டி' என்றார் பரஞ்சோதி முனிவரும். ஆகலான், 'பதவிகள்' என்றார். படியின் - மூழ்கின்; குளிப்பின். மூழ்குதல் - நீரின் ஆடுதல். (௩௨)

சித்திநா லிரண்டையுஞ் செறிய வேண்டினும்
முத்திற வுலகெலா முகிழ்க்க வேண்டினும்
பொத்திமற் றவற்றினைப் புரக்க வேண்டினும்
எத்திறம் வேண்டினும் ஈவ தன்னதே.

(இ - ள்.) எட்டுச் சித்திகளும் தம்பால் உண்டாக விரும்பினாலும், மூவகையான உலகம் யாவற்றையும் ஒடுக்க விரும்பினாலும், அவற்றில் நல்லனவற்றை நிறைத்து அவற்றைப் பாதுகாக்க விரும்பினாலும், வேறு எந்த வல்லமையைப் பெற விரும்பினாலும் அத்தீர்த்தம் தரவல்ல தாகும்.

(வி - ம்.) சித்தி நாலிரண்டு - அட்டசித்தி: இவை தமிழில் எண் வகை ஆற்றல் அல்லது எட்டுப் பேறு எனப்படும்; இவற்றை எண் பொருட்பேறு எனவும் கூறுப. அவை: அணிமா, மகிமா, கரிமா, இலகிமா பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என, வட மொழிப்பெயரால் வழங்குவர். தமிழ்ப் பெயர்கள் முறையே: நுண்மை, பருமை, விண்தன்மை, மென்மை, விரும்பியதெய்தல், நிறைவுண்மை, தன் ஆட்சி செலுத்துதல், கவர்ச்சி என்பன. இவற்றுள் முன் கூறுவன மூன்றும் உடலாற்றலான பொருட்பேறுகளாம். அணிமா ஆவது, அணுவைப்போல் மிக நுண்மையாக இருத்தல், மகிமா என்பது, மலை யைப்போல் மிகப் பருமையாகவும் மண் முதல் விண்ணளவும், பாரமாக வும் இருத்தல், இலகிமா என்பது, மிக நொய்தாகப் பாரமில்லாதிருத் தல். இவ்வுடலால் எங்கும் விரைந்து செல்லுந் தன்மையும் சேற்றினும் நீரினும் காலடிகள் பதியாது செல்லுந்தன்மையும் வாய்க்கும். கரிமா ஆவது மலையினும் பருமையாய்ப் பெருவேகமுடைய சூருவளியானும் அசைக்கப்படாதிருத்தல். பிராத்தியாவது, மனத்தால் நினைத்தவற் றைத் தம்முள் வரச் செய்தல். பிரகாமியமாவது, பேரழகு மிக்க இள மங்கையர் பலரைத் தம் எண்ணத்தின் வலியினால் படைத்து அவர் யாவ ரோடும் ஓரே காலத்தில் அவர்கட்கேற்ற உருவும் திருவும் குணனும் அன்புங் கொண்டு அவருடன் புணர்தல். ஈசத்துவம் ஆவது - இந்திரன் பிரமன் முதலிய தேவர்களிடத்தும் தம்முடைய ஆணையைச் செலுத்து தல். வசித்துவம் ஆவது - மக்கள் யாவரையும் இயற்கைப் பொருள்களை யும் கவர்ச்சி செய்தல். இவற்றின் செயல்களைப் பன்னூல்களும் பற் பலவாறாகக் கூறும். அவைகளில் அவ்வவற்றின் தன்மை ஆங்காங்கே கண்டு கொள்க; விரிப்பின் மிக நீண்டு செல்லுமாகலான், இப்பேறுகள்

1. திருவிளை. இரசவாதப்.

யாவும் கைவரப் பெற்றாலும் வீடும் வேண்டா விறலினராய் ஓடும் செம்பொன்னும் ஒப்ப நோக்கும் உள்ளப் பாங்கினராய் உள்ளமுற்றத் துறந்த முனிவர் விரும்பார்.

[1] 'இந்திரச் செல்வமும் எட்டுச் சித்தியும்
வந்துழி வந்துழி மறுத்தனர் ஒதுங்கிச்
சின்னச் சீரை துன்னற் கோவணம்
அறுதற் கிளொடு பெறுவது புணர்ந்து
சிதவ லோடொன் றுதவுழி யெடுத்தாங்
கிடுவோர் உளரெனின் நிலையினின் றயின்று
படுதரைப் பாயலிற் பள்ளிமேவி ஓவாத்
தகவெனும் அரிவையைத் தழீஇ மகவெனப்
பல்லுயிர் அனைத்தையும் ஒக்கப் பார்க்குநின்
செல்வக் கடவுள் தொண்டர் வாழ்வு'

எனப் பேசி மகிழ்வர்.

ஈண்டு, உலகில் வாழும் பொதுமக்கள், இக்குமார தீர்த்தத்தின் மூழ்கின், இச்சித்திகளோடு யாவும் எய்தப்பெறுவர் எனத் தீர்த்தத்தின் சிறப்பை, அதனாற் கிட்டற்கரும் பேற்றை விளக்கினார் என்க.

முத்திற உலகு, மண் விண் கீழ் என்பன. இவற்றை வடமொழியில் சொர்க்கம் மத்தியம் பாதாளம் என்பர். முகிழ்க்க - ஒடுக்க. பொத்தி - நிறைத்து. புரக்க - பாதுகாக்க. ஈவது - தருவது. (௧௬)

கமழ்புனன் முடித்தலை கலந்து தாழ்தொறும்
இமிழ்தரு பாவங்க ளிறங்கிக் கீழிடும்
நிமிர்தொறு நல்வினை நிமிர்ந்து மேலிடும்
அமிழ்தென வளிக்குமத் தடத்தி னென்பவே.

(இ - ள்.) அமிழ்தென்னுமாறு எவ்வுயிர்களையும் பாதுகாக்கும் அக் குமார தீர்த்தத்தின் மணங்கமழ்கின்ற நீரானது மூழ்குவோரின் தலைமுடியின்மேல் கலந்து கீழே வடியும்போதெல்லாம் கட்டுற்றிருந்த பாவங்கள் யாவும் அவரை விட்டிறங்கிக் கீழ்ப் போகுமாறு செய்யும்; தலையின்மேல் படிந்து நிற்குந் தோறும் நல்வினையானது நிமிர்ந்து மேலோங்கி நிற்குமென்று அத்தீர்த்தத்தின் தன்மை யுணர்ந்தோர் கூறுவர்.

(வி - ம்.) குமார தீர்த்தமானது, உண்போர்க்கும் மூழ்குவோர்க்கும் அமிழ்துபோல் உறுதோறுயிர்தளிர்ப்ப நன்மைதந்து பாவங்களை யெல்லாம் தீர்த்தலின் 'அமிழ் தென அளிக்கும் அத்தடம்' என்றார். இமிழ்தரு - கட்டுற்று நின்ற. பாவமானது, ஒருவனைத் தன்கீழ்க் கட்டுப் படுத்தித் துன்பந் தருதலால் 'இமிழ்தரு பாவங்கள்' என்றார். இத் தீர்த்தத்தின் மூழ்கி நிமிர்ந்து நிற்கும்போது தலையிலிருந்து இழிறங்கி அதன் நீர் போகும்போதெல்லாம், உச்சியில் தேய்த்துள்ள எண்ணெய் தான் நீரோடு கலந்து கீழே செல்லுங்கால், உடல்கண் ணுள்ள சூட்டைத் தன்

1. திருவிடைமரு, மும்மணி ; ௭.

னுடன் சேர்த்துக்கொண்டு போதல் போலப் பாவங்களை யெல்லாம் இழுத்துக் கொண்டே செல்லுமெனவும், அது, தலையிலிருக்குங்கால் றலையிற் சூட்டிய நறுமலர் மணம் தலையெங்கும் பக்கத்திலும் கமழுதல்போல நன்மையைத் தந்து கொண்டிருக்கு மெனவும் தீர்த்தத்தின் சிறந்த தன்மையை விளக்கமுறக் கூறினர். (௩௪)

உண்ணினு மழுக்கொடா சூச மோப்பமெய்
மண்ணினுஞ் செல்வுழி வழுக்கி வீழினும்
கண்ணுறக் காணினுங் கரையக் கேட்பினும்
தண்ணிய தடம்பலன் றருவ தென்பவே.

(இ - ள்.) உண்டாலும் உடலின் அழுக்குகளோடு தீண்டலான வற்றைப் போக்குதற்கு உடம்பைக் கழுவினாலும், போகும்போது வழுக்கி விழுந்தாலும், கண்ணுற் பார்த்தாலும் சொல்லக் கேட்டாலும் குளிர்ச்சி பொருந்திய குமார தீர்த்தமானது பயன் கொடுப்பதாகும் என்பார், அறிந்தோர்.

(வி - ம்.) அக்குமார தீர்த்தம், அதில் அழுக்கைக் கழுவுவோர்க்கும், தீட்டைக் கழிப்போர்க்குங் கூட நற்பயன் தரும் என்பதால் தீர்த்தத்தின் பெருமை கூறியவாறு. ஆசூசம் - தீண்டல்; அன்றிக் காலலம்புதல் முதலிய தீச் செயல்களுமாம். ஒப்ப - போக்க. ஒப்புதல் - போக்குதல், கழித்தல் என்னும் பொருட்டு. ஒரு பொருள் அதில் தோய்ந்தோர்க்கே நன்மை தருவதாகும். இஃது, அதில் வழுக்கி வீழ்ந்தோர்க்கும், கண்ணுற் பார்த்தவர்க்கும், காதால் அதன் பெருமையைச் சொல்லக் கேட்டோர்க்கும் நற்பயன் தரும் என்றமையால், அதனிற் சிறந்ததொரு தீர்த்தமும் வேறெங்கும் இல்லையென்றபடியாம். எனவே, இறைவன் பண்புடைய தென்பது பெற்றும்.

[1] 'காணினும் கேட்பினும் கருதினும் களிதரும்
சேணுயர் மருத மாணிக்கத் தீங்கனி'

என்றமையால் இறைவனைக் காணினும் கேட்பினும் இன்பந் தருதல் போல, இத்தீர்த்தமும் அவ்வாறு காணினும் கேட்பினும் பயன்தருவதாம் என்க. அதன் பெருமையை உணரவல்லார்க்கே தெரியுமன்றிப் பிறர்க்குப் புலனாகாமை தோன்ற, 'பலன் தருவ தென்பவே' என்றார். (௩௫)

விண்ணிட முயிர்த்தொகை மிடைய மெல்குமே
மண்ணிடம் விண்ணினும் வாழ்வு முற்றுமே
தண்ணறு நரகெலாந் தவ்வென் றேங்குமே
அண்ணலத் தடத்திடை யருளு மாண்பினே.

(இ - ள்.) பெருமை பொருந்திய அக்குமார தீர்த்தத்தினிடத்தே அருள் செய்கின்ற சிறப்பினாலே, வானுலகத்தின் இடப் பரப்பெல்லாம் உயிர்க் கூட்டங்கள் மிக நெருங்குதலாலே தன் இடம் குறைவுபட்டு நிற்கும்; இம் மண்ணுலகத்தினிடம் இன்பம் மிகுதலால் வானுலகத்தி

1. திருவிடை மருதூர், மும்மணி;

றும் சிறந்த வாழ்க்கை மிகுந்திருக்கும்; வெப்ப மிக்க நரகங்கள் யாவும் தம் கொடுமை சுருங்கி வருந்தும்.

(வி - ம்.) இத் தீர்த்தத்தில் மூழ்குவோர்க் கெல்லாம் நினைந்தவை நினைந்தவாறே முற்றுப் பெறுதலான், வீடுபேறும் வானுலகத்தின்பமும் பெற விழைந்தார்க்கு அவை கிட்டும் என்பது. அவரும், தம்மை யறியாது அத் தடாகத்தின் நீர்மேலுறப் பெற்ற உயிர்களும் சிவபிரானைப் பொருளாயின. புற் பூண்டு மரம் செடி கொடி முதலியன மீது, அத் தடாகத்தளாவிய காற்று மேல் விசிறலானே அவை யாவும் வானுலகிற் சென்றிருத்தலான், வானிடமெங்கும் இவ்வுயிர்த் தொகை நெருங்கி இடமெல்லாம் வெற்றிடமின்றி இருத்தலான், உயிர்த் தொகை மிடைய மெல்குமே' என்றும், இம்மண்ணுலகோர் அத் தீர்த்தத்துக் குளித்து, அக்குளித்தற் பயனால் எண்ணிய எண்ணியயாங்கு எய்தப் பெற்றுக் களிக்கின்று ரன்றிக் கவல்கின்றார் ஒருவரும் இல்லையெனும்படி ஆக்குதலான், அவ்வின்பச் சிறப்பு நோக்கி 'விண்ணினும் வாழ்வு மூற்றுமே' என்றும், வெப்பம் பொருந்திய இரௌரவம் முதலிய நரகங்கள் யாவும் அத் தடாகத்தின்கண் மூழ்குதலால் பெரும்பான்மையான மக்கள் தம் பாவங்கள் யாவும் நீங்கப் பெற்று யாவருமே இந்திரன் முதலிய இறையவர் பதங்கள் பெற்றும், இறவாப் பிறவா ஏற்றமிக்க வீடு பேறுற்றும் செல்லலானே, நரகஞ் சேர்வார் எவருமின்மையின், 'தவ்வென் றேங்குமே' என்றும் கூறினார்.

மிடைய - நெருங்க. மெல்குதல் - சுருங்குதல். மெல்கும் – சுருங்கும். விண்ணினும் என்பதில், உம்மை சிறப்பு. தண் - குளிர்ச்சி. நரகம் நெருப்பு மயமாய் வாட்டுதலின்றிக் குளிர்மை இன்மையால் 'தண்ணறு' என அடை கொடுத்தார். நரகம் - நரகு என்றுமது, கடைக்குறை விகாரம். நரகம், இருபத்தெட்டு வகையென்ப. அவற்றின் விரிவை, விரிந்த நூல்களுட் காண்க. அவை, பொய்க்கரி கூறுவோர், பிறர்மனை நயப்போர், கொலை களவுகளிற் கன்றினோரைத் தன்னகப்படுத்து மென்ப. இதன் கொடுமைகளை,

> [1]"தெறுசொ லாளர் உறுசினந் திருகி
> எற்றியும் ஈர்த்தும் குற்றம் கொளீஇ
> ஈர்ந்தும் போழ்ந்தும் எற்றுபு குடைந்தும்
> வார்ந்தும் குறைத்தும் மதநாய்க் கீந்தும்
> செக்குரற் பெய்தும் தீநீர் வாக்கியும்
> புழுக்குடை அழுவத் தழுக்கியல் சேற்றுப்
> பன்னெடுங் காலம் அழுத்தி இன்னு
> வரையில் தண்டத்து மாறுக் கடுந்துயர்
> நிரயம்"

எனப் பட்டினத்தடிகள் கூறலால் அறியப்பெறும். இவ்வாறுய கொடிய நரகமும் தன் இடஞ் சுருங்கி நிற்பதால் 'தவ்வென்றேங்குமே' என்றார். தவ்வென்பது இடஞ் சுருங்குதற்கு விரைவுக் குறிப்பு மொழியாய் வந்தது.

---

1. கோயில் நான்மணிமாலை : கூ.

[1]'நாற்கால் யாத்த மாலை வெண்குடை
தவ்வென் றசைஇத் தாதுளி மறைப்ப'

என்றும்,

[2]'கவ்வையாற் கவ்விது காமம் அதுவின்றேல்
தவ்வென்னும் தன்மை இழந்து'

என்றும் வருவனவற்றில் தவ்வென்ப திக்குறிப்புணர்த்தல் கண்டு கொள்க. இப்பாட்டினால் சொர்க்கம் மத்தியம் பாதாளம் என்னும் மூவுலகத்தின் தன்மைகளும், இத் தீர்த்தத்தில் மூழ்குவார்க்கு இம் மூன் றுலகத்துள் விண்ணுலகிற் கிட்டும் இன்பமும், மண்ணுலகின் இன்பப் பெருவாழ்வு வாழும் சிறப்பும் நரக வுலகில் வரும் துன்பங்கள் தீரப் பெற்று வாழும் வகையும் நிரலே உரைத்தவா றறிக. (௩௬)

அத்தலந் தன்னையா மடைகு வாமெனப்
புத்தியி னினைப்பினும் புறத்திற் செல்லினும்
பத்தடி நடப்பினும் பரிந்த நோயெலாம்
கொத்தொடு மவர்புறம் வழிக்கொண் டோடுமே.

(இ - ள்.) நாம் அந்தத் தலத்திற்குச் செல்வோமென்று மனத்தில் நினைத்தாலும், தாம் இருந்த இடம் விட்டுப் புறத்தில் போனாலும், அதற்காகத் தம் கால்களில் பத்தடி தூர வளவு நடந்து சென்றாலும், வருத்தந் தந்த நோய்கள் யாவும் தம் கூட்டத்தோடும் அவரிடம் விட்டு வெளிப் போந்து வழிக்கொண்டு ஓடிப்போகும்.

(வி - ம்.) ஒருவர் அத் தலத்துக்குப் போக நினைப்பினும், அதற் காகப் புறப்படினும், பத்தடி தூரம், போனாலுங் கூடத் துன்பந் தந்த நோயெல்லாம் ஓடு மென்றமையால் அத் தலம் எந் நாட்டினும் சிறந்த தொன்றென்பதாம். புறத்திற் செல்லல் - இருந்த இடத்தை விட்டு வெளிச் செல்லல். பத்தடி - காலின் அளவால் பத்து அடி அளவு. பரித்தல் - வருத்தல்; பரிந்த - வருந்திய : தன்வினை, பிறவினைப் பொருட்டு. கொத்து - திரள்; கூட்டம். வழிக்கொள்ளல் - புறப் படுதல். (௩௭)

பரிதிமேற் கெழுந்தொறும் பனிமு ருங்குமா
றொருதிருத் தணிகையை யுன்னிச் சார்தொறும்
அருகிநோ யத்தட மாடத் தீர்வுறும்
முருகனைத் தொழுதெழ முகிழ்க்கு மின்பமே.

(இ - ள்.) ஞாயிறானது கீழ்த்திசையில் தோன்றி மேல்நோக்கி யெழுந்து செல்லுங்காலெல்லாம் பனிப்படலமானது கெட்டுவிலகுதல் போல, ஒப்பற்ற திருத்தணிகையை நினைந்து செல்லுந்தோறும் தமக் குற்ற நோய்கள் குறைந்து அக்குமார தீர்த்தத்தில் மூழ்கியெழத் தீரும்; அங்கு முருகப்பெருமானை வணங்கியெழ இன்பம் உண்டாகும்.

1. நெடுநல்: ௧௮௪ - ௫. 2. திருக்குறள்: ௧௧௪௪.

(வி - ம்.) பரிதி - ஞாயிறு; கீழ்த்திசையில் தோன்றிய மேனே நோக்கியெழுந்து வானவீதிக்கட் செல்லுந்தோறும் திசையெங்கும் மூடி நடுக்கஞ் செய்துகொண்டிருந்த பனிக்கூட்டம் விலகியோடுதல்போல் நோய் குறைந்து தீர்த்தத்தில் ஆட முழுதுந்தீரும். முருகவேளைத் தொழு தெழுதலால் பேரின்பம் உண்டாம். மேற்கு - மேலே என்னும் பொருளது; அல்லது, மேல்திசை நோக்கிப் போகுந்தோறும் என்றலுமாம். முருங்குதல் - கெடுதல்; ஒழிதல். ஒரு - ஒப்பற்ற. முகிழ்க்கும் - தோன்றும்; உண்டாகும். அருகிநோய், நோய் அருகி என மாற்றுக. (௯௮)

அஞ்சிறைப் பூவைபைங் கிள்ளை யாதியைத்
தஞ்சிறைப் படுப்பராற் றக்க வூணினல்
மஞ்சனு முத்தியை வழங்குஞ் சூழ்ச்சியால்
நெஞ்சுறு நினைவெலா நிரப்பி யாவர்க்கும்.

(இ - ள்.) அழகிய சிறகுகளையுடைய நாகணவாய்ப் புட்களைப் பச்சைநிறக் கிளிகள் முதலிய பறவைகளை அவைகள் உண்ணத்தக்க இரைகளினால் பறவை பிடிப்போர் தம் வலைகளால் பிடிப்பர்; அது போல, மக்கள் யாவரையும் தன் சூழ்ச்சியினால் தன்னை மனத்திலுற்ற நினைப்பினால் நிறைவுசெய்து நம் புதல்வனாகிய முருகனும் வீடுபேற்றைக் கொடுப்போனவன்.

(வி - ம்.) பறவை பிடிப்போர், வலைவிரித்து அவ்வலை சூழ்ந்த நடுவிடத்தே பறவைகள் உண்பதற்கேற்ற இரைகளைத் தூவிவைப்பர்; அவை அவ்விரை தின்னவந்து இறங்கியவுடன் தாம் வலைகளினால் அவற்றைப் பிடித்துச் சிறைப்படுத்திக் கொண்டு செல்வர்; அதுபோல, முருகவேளும் தன் அருளென்னுஞ் சூழ்ச்சியால் மக்களின் நெஞ்சின்கண் இத்தலத்தை நினைக்குமாறு செய்து அந்நினைப்பையே நிரப்பி, அந்நினைவுற்ற அன்பர்கள் யாவர்க்கும் வீட்டுலகை அருளுவன்; இஃது, அத்தலத்தின் சிறப்பென, அத்தலத்தின் பெருமையை விளங்க உரைத்தார். பூவை - நாகணவாய்ப்புள். கிள்ளை - கிளி. ஆதியென்றமையால் புறு, கவுதாரி, பல்வகைக் குருவிகளும் கொள்க. சிறை - சிறைப்படுத்துவதாகிய வலை; அல்லது கண்ணிகள்: ஆகுபெயர். ஊண் - உணவு; இரை. அதுபோல என்று உவமம் எடுத்துக் கூறுமையால் இது, எடுத்துக்காட்டு உவமையணி. மஞ்சன்: மைந்தன் என்னுஞ் சொல்லின் போலி. சிவபெருமான் கூற்றாதலின், முருகன் தம் புதல்வனெனக் கொண்டு இவ்வாறு மஞ்சன் என்றார். ஆல் இரண்டும் இசை நிறைக்கவந்த அசைநிலைகள். 'சூழ்ச்சியால் நெஞ்சுறுநினைவெலாம் நிரப்பி யாவர்க்கும் மஞ்சனும் முத்தியை வழங்கும்' எனக் கொண்டு கூட்டிப் பொருள் முடிபு கொள்க. (௯௯)

கணிகமழ் தடவரைக் கலைகள் குப்புறும்
கணிகவெற் பதனிடைக் கருத்து முற்றுறும்
கணிகமுற் றிருப்பினேர் கங்குல் வைகுறின்
கணிதமில் பெரும்பயன் கைக்க ணெல்லியே.

(இ - ள்.) வேங்கைப் பூவின் மணங் கமழ்கின்ற விசாலம் பொருந்திய முகட்டினின்று ஆண் குரங்குகள் தாவுகின்ற திருத்தணி மலையி

விடத்துத் தாம் எண்ணியன முடிதற்குத் தற்கால வழிபாட்டுக்குரியதாய் மண் முதலியவற்றால் அமைக்கப்பட்ட கடவுள் உருவில் மனம்பொருந்தி யோகநிலையில் ஓர் இரவு தங்கப் பெற்றால், அளவற்ற பெரும்பய னனைத்து உள்ளங்கைக்கண்ணுள்ள நெல்லிக்கனிபோல் ஐயமறக் கிடைப்பதாகும்.

(வி - ள்.) கணி - வேங்கைமரம்: அதன் பூவுக்கு ஆதலால் முத லாகுபெயர். வரை - மலையின்மேலிடம். கலை - ஆண்குரங்கு. இதை முசுக்கலை என்பர். குப்புறும் - தாவுகின்ற. கணிக வெற்பு - திருத் தணிகைமலை. கணிகம் - தற்கால வழிபாட்டுக் குரியதாய் மண்முதலிய வற்றால் ஆக்கப்பட்ட இலிங்கம் போன்ற கடவுள் உருவங்கள். இருப்பு - இருக்கை. யோகஞ் செய்தற்கு பதுமாசனம் முதலியன கொண்டிருந்து மனத்தை ஒருவழிப்படுத்தி மூச்சொடுக்கி இருக்கும் மனம் ஒன்றுபட்ட நிலை. கணிதம் - கணக்கு, அளவு. கைக்கண் நெல்லி - உள்ளங் கைக் கண் கொண்ட நெல்லிக்கனி. அது தன் உள்ளிடத்துள்ள தன் மையை விளக்கித் தெளிவாக்குதல் போல இத்தலத்தில் துன்பந்தரும் பாவங்கள் யாவும் ஒருங்கே கெடுதலும், அளவற்ற நற்பயன் எய்து தலும் தெளிவாகக் காட்டும் என, உவமத்துக் கேற்பக் கூறுக.

அன்றி நெல்லிக்கனியைப் பிற்காலத் தெழுந்த நூல்கள் யாவும் அங்கையின் நெல்லிபோல என்று சுட்டிச் சொல்வதை நோக்கின் நெல் லிக்கனி கிட்டற்கரிய தொன்றாகக் கொள்ளக்கிடக்கின்றது. நெல்லிக் கனி கிட்டுதல் அருமைப் பாடாக இருத்தல்போல, மிக அரியபொருள் கிடைத்ததாயின் நெல்லிக்கனி கிடைத்தல் போன்ற தன்மையாகக் கருது தல் வேண்டுமெனக் கொள்ளவைத்ததாகவும் அறியக்கிடக்கின்றது. இச்சிறப்பானே, நெல்லிக்கனி கிடைப்பதரிதென்பது புலனாகின்றது. பிறவேறு மரங்களில் காயும் பழமும் உள்ளன. நெல்லிமரம், காய் மட்டும் தருதலைக் காண்கின்றோம். நெல்லிக்காய் விற்றலன்றி பழம் விற்பனைக்கு வருதலை யாண்டும் காண்கிலேம். ஒரோவொருகால் எங்கே னும் அரிதாகப் பழுக்கும் போலும். அதன் நிறம் கருமையாக இருக்கு மெனக் கருத இடனுண்டு. ஒருகால் அதிகமா னெடுமானஞ்சிக்கு அரிதிற்கிடைத்த கருநெல்லிக் கனியைத் தான் உண்ணாது, ஔவையா ருக்கு ஈந்தனன் என்ப. அதை உண்டு ஔவை மூதாட்டியார் நோயின் றியன்ற யாக்கையராய்ப் பன்னெடுங்காலம் வாழ்ந்திருந்தனர் என்ப. அரிய நெல்லிக்கனியைத் தமக்கு ஈந்த அஞ்சியைப் பாராட்டி அதுகாலை ஔவையார் கூறியதாக,

[1] "போரடு திருவிற் பொலந்தார் அஞ்சி
பால்புரை பிறைநுதற் பொலிந்த சென்னி
நீல மணிமிடற் றொருவன் போல
மன்னுக பெரும நீயே தொன்னிலைப்
பெருமலை விடரகத் தருமிசைக் கொண்ட
சிறியிலை நெல்லித் தீங்கனி குறியா
தாதல் நின்னகத் தடக்கிச்
சாதல் நீங்க எமக்கீத் தனையே"

1. புறம்: ௯௧.

என்னும் பாவினான் இவ்வரலாறு துணியப் பெறுகின்றது. ஆகலான், நெல்லிக்கனி கிட்டற் கரிய பொருளாக இருந்தமை புலனாகின்றது. (௪0)

காழ்படு முளத்தினன் றணிகை வெற்பென
ஊழ்பட வொருமுறை யுரைப்ப னாயினும்
பாழ்படும் பஃறிறப் பாவக் குப்பையும்
விழ்பதம் யாவையும் விரைவிற் சூழுமே.

(இ - ள்.) கருமை பொருந்திய மனத்தையுடைய ஒருவன், திருத்தணிகை மலையென்று முறைமைபெற ஒருகால் சொல்வான் ஆனாலும், பாழாக்குகின்ற பலவகையான பாவக்கூட்டங்களும், நீங்குகின்ற பக்குவம் வாய்ந்த துன்பங்கள் எல்லாமும் விரைவில் சுற்றியோடும்.

(வி - ம்.) காழ் - கருமை. கருமை நிறம்பொருந்திய அறியாமைக்கு ஆகுபெயர். அத்தகைய உள்ளத்தை யுடையான் ஒருமுறை திருத்தணிகை மலையென உரைத்தால் பாவங்களும் துன்பங்களும் ஒழிதல் ஒருதலை எனக் கூறினார். பாழ்படும் - கெடுக்கும் என்பது. இங்கே தன்வினை பிறவினைப் பொருள். விழ்பதம் - கெடுகின்ற செவ்வி. சூழும்.- சுற்றியோடும் என்பது, தெரியாமலே ஓடிவிடும். (௪௧)

கற்பம்வந் தழிக்கொணாக் கற்ப சித்தெனும்
பொற்புறு மத்தகு பொருப்பைப் போற்றுறின்
எற்பட வெழுமுணர் விடைய ழித்துறும்
அற்பட வறுமுக னருள்க லக்குமே

(இ - ள்.) ஊழிக்காலம் வந்தும் அழிக்க இயலாத கற்பசித்து என்னும் பெயரையுடைய அழகு பொருந்திய அந்தச் சிறப்புப் பொருந்திய திருத்தணிகை மலையை வணங்கப் பெற்றால், விளக்கம்பெற உண்டாகின்ற உணர்வினை இடையே வந்து அழிக்கின்ற தான அறியாமையாகிய இருள் நீங்க, ஆறுமுகங்களையுடைய முருகப்பெருமானின் அருள் வந்து சேரும்.

(வி - ம்.) கற்பம் - ஊழிக்காலம். பிரமனுக்கு ஒருநாள் என்றும் உலகம் முடிவுகாலம் என்றும், நானூற்று முப்பத்திரண்டு கோடி ஆண்டுகளென்றும், ஆயிரங்கோடி யாண்டுகளென்றும் கூறுப. உலக முடிவு காலத்தினும் அழியாதது, அத்திருத்தணிகைமலை. அது, கற்ப காலத்தும் அழியாத பேறு முருகன் அருளால் பெற்றமையால் 'கற்ப சித்து' எனப் பெயர் பெறுவதாயிற்று. இத்தகையது திருத்தணிகை மலை. இக்கருத்தை,

"வான்கெட்டு மாருத மாய்ந்தழல்நீர் மண்கெடினும்
தான்கெட்டல் இன்றிச் சலிப்பறியாத் தன்மையனுக்கு"

என, அருணமலையாகிய ஆண்டவனுக்கு ஏற்றி உரைத்தருளுவர், மணிமொழி வேந்தர். இம்மலையும் முழுமுதற் பொருளான இளங் கோலத் திறைவன் எழுந்தருளியிருத்தலால் சார்ந்ததன் வண்ணமாய் நிலைபெறலாயிற்று. இம்மலையைத் தொழுவாரும் இறைவனைத் தொழு தெழும் பேறுபெற்றவராவர். ஆகலின், அறுமுகத் தொருவனாகிய

அண்ணல். தணிகைமலையை வணங்குவார்க்கு நல்லுணர்வைக் கெடுக்கும் அறியாமை இருளைக் கெடுத்து அருளுவன். இதனை, ஈண்டு, 'உணர்வு இடை அழித்துறாம். எற்பட அறுமுகன் அருள் கலக்குமே' என்றார். எல் - ஒளி; நல்லறிவைக் கெடுப்பதாகிய அறியாமையை அல் என்றது நல்வழியிற் செல்லவிடாத, தன்மைநோக்கி. வள்ளுவர் பெருமானும் அறியாமையைக் 'காரறிவு' என்பார். (சஉ)

நால்வகைப் பயனையு நாடி னூர்பெற
மூலமாய் நின்றவம் மூல வெற்பினைச்
சீலரா யுள்ளகஞ் சிந்தை செய்யினும்
பாலுறீஇப் பயனெலாஞ் செவ்வி பார்க்குமே.

(இ - ள்.) மக்கட் பிறப்பால் அடையவேண்டிய நான்கு வகைப்பட்ட பயன்களையும் அடைய நாடினவர் பெறுதற்கு முதன்மையாக நிற்பதாகிய அந்தப் பழமையாகிய தணிகைமலையை ஒழுக்கமுடையராய் மனத்திடத்து நினைந்தாலும் அவரை நல்லூழ்சார்ந்து நற்பயன் யாவும் அவரைச் சார்தற்குரிய காலவாய்ப்பை எதிர்பார்த்து நிற்கும்.

(வி - ம்.) நால்வகைப் பயன்: அறம் பொருள் இன்பம் வீடுபேறு. இவை மக்கட் பேறெய்தினோர் யாவரும் பெறற் குரியனவாம். இவற்றைப் பெறப் பழமைக் காலந்தொட்டு நிலை பெற்றுள்ளது அத்திருத் தணிகை மலை. இதை நினைப்பினும் அவர் பால் நல்லனயாவும் காலம் பார்த்திருக்கும் என்றமையால் அதைச்சார்ந்து வணங்குவோர் மங்கல வினைகள், பிணிவாராமை, நீண்ட வாழ் நாள் பெற்று, இறுதியில் வீடு பேறுற்று இன்பந் துய்ப்பர் என்ற வாறுயிற் றென்க.

மூலம் - முதன்மை; பழமை என்னும் பொருளது, சீலம் - ஒழுக்கம்; அஃதாவது சரியை கிரியை யோகம் ஞானமாகியன நிலைபெற நடப்பது. உள் அகம் - உள்ளேயுள்ள இடம், அஃதாவது, மனம். சிந்தை செய்தல் - நினைத்தல். பால் - ஊழ்; நல்லூழ். செவ்வி - தருணம்; காலத்தின் அற்றம் பார்த்தல்; சமயம் நோக்கி யிருத்தல். பயன் - நல்லூழ்; இயற்கைப் பொருள்; அறிவில்லாதது அது, நற்பயன் தருவது குறித்துக் காலம் பார்த்திருப்பதாகக் குறித்தார். இவ்வியற்கைத் தன்மையை ஆசிரியர் தொல்காப்பியனார்.

[1] "உறுப்புடை யதுபோல் உணர்வுடை யதுபோல்
மறுத்துரைப் பதுபோல்"

எனக் கூறிய பகுதிக்கண் 'உணர்வுடையது போல்' என்ற விதியில் அடக்குக. வள்ளுவரும் தம் அறநூற்கண்,

[2] "கதங்காத்துக் கற்றடங்க லாற்றுவான் செவ்வி
அறம்பார்க்கும் ஆற்றின் நுழைந்து"

என்றும்,

[3] "அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும்"

என்றும் கூறுவன, இக்கருத்துக்கு அரண் செய்தல் காண்க. (சங)

1. தொல். பொருள். பொருளியல்: 2. 2, 3, திருக்குறள்.

சீபரி பூரண கிரியைச் சேர்ந்தவண்
வீபவ ரிழிஞரே யானும் வீழிவாய்
மாபயின் மார்பனுஞ் சமழ்ப்பின் மாழ்குற
ஆபவான் மலமொரீஇ யருளி னெல்லையே.

(இ - ள்.) அருட்செல்வம் நிறைந்த மலையாகிய அத்திருத் தணிகை மலையைச் சேர்ந்து ஆங்கு இறப்பவர், கீழ்க்குலத்தினராயினும் வீழிக்கனியைப் போன்ற செந்நிற வாயையுடைய திருமகள் தங்கியிருக்கின்ற திருமாலும் நாணத்தால் அறிவு மயக்கங் கொள்ளப் பண்டு தொடர்ந்த ஆணவமலம் முதலிய மலங்கள் யாவும் நீங்கப்பெற்று முருகப்பெருமான் அருளினது வரம்பாகிய வீட்டுலகத்தை அடைவர்.

(வி - ம்.) சீபரிபூரணம் ஸ்ரீபரிபூர்ணம் என்னும், சொல்திரிபு ஸ்ரீ-திரு. செல்வம் எல்லாச் செல்வத்தினும் முதற்கண் நிற்கும் செல்வம் அருட்செல்வமாகலான் அருட்செல்வ மெனப் பொருள் கூறப்பட்டது.

[1] "அருட்செல்வம் செல்வத்துட் செல்வம்"

என்னும் தேவர் மறைக் கருத்தும் ஈண்டு நோக்கத் தக்கது. பரிபூரணம் நிறைவு. பொருட் செல்வமல்லாத செல்வமாகலான் கொளக் கொளக் குறையாமையால் நிறைவதாயிற்று. எனவே திருநிறை மலை யென்பது திருத்தணிகை மலைக்குப் பெயராயிற்று. வீதல் - இறத்தல். வீபவர்- இறப்பவர், [2] 'காதலன் தன் வீவும்' என்புழி அஃதிப்பொருட்டாதல் காண்க. இழிஞர் - தாழ்ந்த குலத்தினர்; அன்றி அறிவால் இழிந்தவர் என்றலுமாம். வீழி - அதன் கனிக்கு ஆகுபெயர், வீழிவாய் உவமத் தொகை. மா - திருமகள், திருமால் திருமகளை மார்பில் கொண்டனர் என்பது புராணமரபு. இதனால் 'திருமறு மார்பன்' என்னும் பெயர் வழங்கும். சமழ்ப்பு - நாணம், வெட்கம். மாழ்கல் - மயங்குதல். ஆப - ஆவர். பலர்பாற் படர்க்கை. திருமால் தன் வைகுந்தத்தினும் சிறந்த தில்லை யெனக் கொண்டிருந்த தன்மையால், இவர்கள் எவ்வுலகத் தினும் சிறந்த வீட்டுலக நெறியடைந்தமையால் நாண முற்றனர். மலம் - ஆணவம், மாயை காமியம் என்னும் மும்மலத் துன்பம். இவை நீங்கவே வீட்டுலகம் கிட்டுமாகலான் 'மலமொரீஇ' என்றார். இதனை மணிமொழிப் பெருமானும் [3] சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனை யாண்ட அத்தன்' என்பர். ஒரீஇ: சொல்லிசையளபெடை. (சச)

அல்லகாத் திரியென வரற்றி னோர்முறை
நல்லகாத் திரிவன விரித்து நாடமர்
வல்லகாத் திரத்தினுஞ் சவட்டு மான்கடாய்
எல்லகாத் திருப்பதிக் கிறைமை பூண்பரே.

(இ - ள்.) தீமைகளினின்றும் பாதுகாத்து அவைகளை ஓட்டியருள்க வென்று ஒருமுறை கூறி முறையிட்டழுதால், நல்லனவற்றை யீந்து, நீக்கவேண்டும் தீமைகளைக் கெடுத்து, விரும்பும் போரில் வல்லமையுள்ள முன் கால்களினாலும் கொல்லுகின்ற வெள்ளையானையின்

1. திருக்குறள்: கஉ0, ககஎ, உசக. 2. சிலப்,
3. திருவாசகம், அச்சோ. க.

மேலிருந்து செலுத்தி ஒளியெறிக்கின்ற பஞ்சதருக்களாகிய சோலையை யுடைய அழகிய வானுலகத்திற்கு அரசுத் தன்மையை எய்துவர்.

(வி - ம்.) அல்ல - நன்மையல்லாதன; அஃதாவது, தீவினைகள். இரித்தல் - ஓட்டல்; கெடுத்தல். இரியென - கெடுத்தருள்க என்று. அரற்றின் - அழுதால். அத்திருத்தணிகை மலையை நோக்கி ஒருகால் தீமையைக் கடிந்தருள்க வென்று கூறி அழுதால் என்றபடி. நல்ல - நன்மைகள். கர்த்து - தந்து. அமர் - போர். நல்ல, அல்ல என்பன குறிப்பு வினையாலணையும் பெயர்கள்; பன்மை. காத்திரம் - யானையின் முன்கால்கள். உம்மை இறந்தது தழீஇய எச்சம்; அன்றி எதிரது தழீஇயதுமாம். அதற்குத் தன் கொம்புகளாலும் என்று வருவித் துரைக்க. சவட்டு - கொல்லுகின்ற; அழிக்கின்ற. இஃதிப் பொருட் டாதலை, [1]'மூதூர், தன்னையுஞ் சவட்டிப் போதிச் சாமியைச் சார்தும் என்றான்' என்புழிக் காண்க. எல்ல-ஒளியையுடைய; எல் இப்பொருள் தருதலை, [2]'எல்லே இலக்கம்' என்னும் தொல்காப்பிய நூற்பாவா லறிக. திருப்பதி, அடைமொழிகளால் ஈண்டு வானுலகைக் குறித்தது. இறைமை - தலைமை; அரசு. (௬௫)

பிறப்பவ ரருள்பிறப் பெல்லை யாகுவர்
சிறப்பவத் தணிகையந் தேத்து வாழுநர்
மறப்பருங் கந்தலோ கத்து வாழ்குவர்
இறப்பவர் மலமிறந் திறப்பர் முத்தியின்.

(இ - ள்.) இத்தணிகைக்கண் பிறப்பவர் அருளுடைய பிறப்புக்கு எல்லையாக இருப்பர்; சிறப்புடன் அத்திருத்தணிகை யிடத்தே வாழ் வோர், என்றும் மறத்தற்கரிதாகிய கந்த உலகத்தின் கண்ணே வாழ் வார்கள்; அங்கு இறப்போர் தம் ஆணவம் மாயை காமியம் என்னும் மும்மலங்களும் அவிந்து வீட்டுலகத்துக்குச் செல்வோராவார்.

பிறப்பவர், இத்திருத்தணிகைக்கண் பிறந்தவர் என்னும் பொரு ளது. திருத்தணிகையென்பது அவாய் நிலையான் வந்தது. இங்குப் பிறப்பவர் இறைவன் திருவருள் பெற்று இன்புறுவர் ஆகலான், பிறவி களில் அருட்பிறப்பு மருட்பிறப்பு என, இருவகைத்து. இறைவனாகிய குமாரப் பெருமான் திருவருளைப்பெறும் நல்வாய்ப்பைப் பெறுவர். அதற்கு எடுத்துக்காட்டிக் கூறற்கு இத்தலத்தில் பிறந்தாரே சான்றாக அமைவராகலின் அருள் பிறப்பெல்லை ஆகுவர்.' என்றார். தேம் - இடம். கந்தலோகம் - இன்பமிக்க கந்தப்பெருமான் வாழும் உலகம். இறப்பவர் - மாண்டுபோவோர். மலம், மேற்கூறப்பட்ட மும்மலங் கள். இறந்து - கெட்டு. இறப்பர் - செல்வர், அஃதிப்பொருட்டாதலை, 'இறந்தார் இறந்தார் அனையர்' (திருக். ௩௧) என்புழிக் காண்க. (௬௬)

இருண்மல மிரித்தலி னிரவி யொக்குமால்
மருள்பிணி துமித்தலின் மருந்து போலுமால்
பொருள்பல விளைத்தலிற் புகழ்ச்சிந் தாமணி
தருநிதி தேனுவுந் தலமோப் பாகுமே.

---

1. சீவக, கனக, ௩௭௮. 2. தொல். சொல். இடையியல்: ௨௧.

(இ - ள்.) மலங்களாகிய இருளைப் போக்குதலால் அத்திருத்தணிகை ஞாயிற்றை ஒத்ததாகும்; அறிவு மயக்கத்தைத் தரும் நோய்களைக் கெடுத் தொழித்தலால் மருந்தினை ஒத்ததாகும்; வேண்டிய வேண்டியாங்குப் பல்வகைப் பொருள்களையும் போகங்களையும் உண்டாக்கித் தருதலால், புகழையுடைய சிந்தாமணியும் கேட்டவற்றையெல்லாம் தருகின்ற ஐந்து தருக்களையும் இருவகை நிதிகளையும் காமதேனுவையும் உடைய இந்திரனுலகை ஒத்ததாகும்.

(வி - ம்.) இரவி - ஞாயிறு. மருள்பிணி - மயக்கத்தைத் தரும் பிணி; துமித்தல் - துணித்தல்; கெடுத்தல். பொருள் - விரும்பிய பொருள்கள். சிந்தாமணி, ஒருவனுக்கு விரும்பியவற்றையெல்லாம் தரும் ஒருவகைக் கல். தரு - அரிசந்தானம், கற்பகம், சந்தானம், பாரி சாதம், மந்தாரம் என்னும் ஐந்து மரங்கள். நிதி - சங்கநிதி, பதுமநிதி என்னும் சங்கு வடிவத்தினும் தாமரை வடிவத்தினும் அமைந்த இரு வகைப் பொருள்தரும் கருவிகள். தேனு - பசு. இதுவும் மேற்குறித்த பொருள்களும் எவரெவர் எதையெதை விரும்புகின்றனரோ அதை அதைத் தவறாது கொடுக்கவல்லன வென்பர். இக்கருத்தை,

[1] 'சிந்தா மணிதெண் கடலமிர்தம் தில்லை யானருளால்
வந்தால் இகழப் படுமே'

என, மணிமொழிப் பெருமானும்,

[2] 'சங்கநிதி பதுமநிதி இரண்டும்தந்து தரணியொடு வானாளத்
தருவரேனும், மங்குவார் அவர்செல்வம் மதிப்போம் அல்லோம்'

எனத், திருநாவுக்கரசரும்,

[3] 'மதுமழை பிலிற்றிப் புதுமணம் விரித்துப்
பற்பல உதவும் கற்பக தருவும்
நந்தா வளனருட் சிந்தா மணியும்
வாமமா மேனிய காம தேனுவும்
அருளிய ஏவல் வரன்முறை கேட்பக்
கின்னரர் விபஞ்சி நன்னரம் புளரா
இசையமு திருசெவி மிசையெடுத் தூற்ற
இந்தி ராணி வந்தரு கிருப்ப
கருமுகில் ஆயிரம் திருமலர் பூத்துச்
செங்கதிர்ச் சேகரம் தங்கவீற் றிருக்கும்
பெருந்திறன் கடுப்ப இருந்துவின் புரக்கும்
அண்ணல் புரந்தரப் பண்ணவன் அரசு'

எனப், பட்டினத்தாரும் அருளுமாற்றால் தெளிக.

உம்மை: செவ்வெண்ணுகை வந்தது. பெயர்களோடு கூட்டிப் பொருள் கொள்க. ஆலும், ஏயும் அசை நிலைகள். (சஎ)

1. திருக்கோவையார்: 2. திருநாவுக்கரசர், 3. திருக்கழுமல.

குணங்கரும் விருச்சிகங் குலாவு மாரனுள்
குணங்குறி கடந்தவக் குமரன் ருட்டுணை
வணங்குநி னெழுபவ மல்லற் செல்வமோ
டிணங்குமந் தணர்களாய் முத்தி யெய்துவார்.

(இ - ள்.) மனத்தடுமாற்றத்தைத் தவிர்க்கின்ற கார்த்திகைத் திங்களில் விளங்குகின்ற கார்த்திகை நட்சத்திரத்தன்று அங்க அடையாளங்களைக் கடந்த முருகப்பெருமானின் திருவடிகளை வணங்கப்பெற்றால், மேல் வருகின்ற பிறவியில் வளப்பம் பொருந்திய செல்வத்தோடு பொருந்திய அந்தணர்களாக இருந்து இறுதியில் வீடுபேறெய்துவர்.

(வி - ம்.) குணங்குதல் - மனத்தடுமாற்றம். குணங்கு என, கடைக்குறைந்து நின்றது, முதனிலைத் தொழிற்பெயர். மனத்தடுமாற்றத்தைக் கெடுக்கின்றதான கார்த்திகை மாதத்துக் கார்த்திகை நட்சத்திரத்தில் முருகப்பெருமானை வணங்கலுறுவார் மறுபிறப்பில் எல்லாச் செல்வமும் பெற்று அந்தணத்தன்மை பெற்று வீடுபேறடைவார் என, அத்திருநாள் மேன்மையை யெடுத்து விளக்கியவாறு. விருச்சிகம் - தேள்; அதற்குரிய கார்த்திகைத் திங்களை உணர்த்திற்று. ஆரல் நாள் - கார்த்திகை நட்சத்திரம். ஆரல் - அழல்; தீக்குரிய நாள் என்ப. ஆண்டவன் முழுமுதலொருவனுகலான் 'குணங்குறி கடந்த அக் குமரன்' என்றார். (௫௮)

அருடரு மாறெழுத் தாங்க ணோதுவோர்
முருகன துருக்கொடு முன்னி வாழ்வரால்
இருவகை யயனத்திற் பதமி றைஞ்சுநர்
மருமலர்க் கடப்பினன் மருங்கி ருப்பரால்.

(இ - ள்.) முருகப்பெருமான் திருவருளைத் தருகின்ற ஆறெழுத்தாகிய அருமறையை அத்திருத்தணிகைக்கண் ஓதுகின்ற அன்பர்கள், முருகப்பெருமானது உருவத்தையே நினைந்துகொண்டு வாழ்கின்ற தன்மை வரப்பெறுவோராவர்; வடக்குவழி தெற்கு வழியாகவுள்ள இருவகை வழிகளினும் தனித்தனியே ஞாயிறுபோல் வாழ்கின்ற ஆண்டிற்பாதி துவங்குங் காலத்தில் முருகப்பெருமான் திருவடிகளை வணங்குவோர், மணங்கமழ்கின்ற கடப்பமலர் மாலையை யணிந்த முருகப்பெருமானது பக்கத்திலே இருந்து வாழும் பேறு பெறுவோராவர்.

(வி - ம்.) ஆறெழுத்து - முருகப்பெருமானின் ஆறெழுத்தாகிய மந்திரம் அது, 'சரவணபவ', அல்லது 'முருகா போற்றி' என்னும் ஆறெழுத்து. இவ்வெழுத்துத் தொடர் இரண்டில் ஒன்றை விடாது பற்றி முருகப்பெருமான் திருவடி மறவாச் சிந்தையராய் ஓதுவார்க்கு அவர் நினைந்த துணையானே மணங்கமழ் தெய்வத் திளநலங் காட்டி முன்னின் றருளுவன். அவ்வுரு கரவாது மனத்தில் நிலைக்க அதையே நினைந்து வாழ்வராகலின், 'உருக்கொடு முன்னி வாழ்வர்' என்றார். இவ்வாறெழுத்தை வடமொழியாளர் 'சடாச்சரம்' என்ப. நம் தமிழ் மொழிகள் புலவர் பெருமகனுகிய நக்கீரர் 'ஆறெழுத் தடக்கிய அருமறைக்கேள்வி' யெனக் கூறுவர். அயனம் - ஆண்டிற்பாதி. இதனை உத்தராயணம், தட்சணுயனம் என வடநூல்களில் கூறப்படும்.

இதனைப் பெரும் பொழுதில் அடக்கிக் கூறுவர். ஆசிரியர் தொல்காப்பியனார். ஆடித்திங்கள் தொடங்கி மார்கழித் திங்கள்வரை ஞாயிறு கீழ்த்திசையின் தென்கோடியில் தோன்றுதலால் தட்சணாயன மென்றும் தைத் திங்கள்முதல் ஆனித்திங்கள்வரை ஞாயிறு கீழ்த்திசையின் வட கோடியில் தோன்றுதலால் உத்தராயண மென்றும் வழங்குவர். இவை தொடக்க முறுங்காலத்தில் முருகப்பெருமான் திருவடிகளை வணங்கப் பெற்றால் முருகப்பெருமான் பக்கத்திருந்து அவனை வழிபடும் பெறற் கரும்பேறு பெறுவார் என்பார். 'இருவகை அயனத்தில்.........மருங் கிருப்பர்' என்றார். இதனால் ஆறெழுத் தோதுவோர்க்கும், அயனத்தில் தொழுவோர்க்கும் வரும்பயன் கூறப்பட்டது. (சக)

கணிகையர் விழைவினுற் காரி யத்தினால்
தணிகையை யடைந்தவன் சரணந் தாழ்நரும்
மணிமரு ளுருக்கொடு மறுபி றப்பினில்
அணிமிகு கந்தலோ கத்தை யண்முவார்.

(இ - ள்) விலைமகளிரின் மேற்கொண்ட ஆசையினாலும், வேறு பல தொழில் முறைகளாலும், திருத்தணிகையைச் சார்ந்து அந்த முருகப்பெருமானின் திருவடிகளை வணங்குவோருங்கூட, அடுத்த பிறவியில் ஒளியுள்ள வைரமணியை யொத்த ஒளியுடம்பு பெற்று அழகு மிக்க கந்தவுலகைச் சார்ந்தின்புறுவர்.

(வி - ம்.) கணிகையர் - தம் போகத்தை ஆடவர்க்கு விலைக்குக் கொடுத்து வாழும் வரைவில்மகளிர். காரியம் - செய்கின்ற தொழில்கள். அவை வணிகத்தாலும், பல்வகை அலுவல்களாலும் செல்லும் தன்மை. சரணம் - திருவடிகள். தாழ்நர் - வணங்குவோர். முருகப் பெருமான்பால் பத்தியின்றி வணங்குவோர். உம்மை: உயர்வு சிறப் பின்கண் வந்தது. மருள்: உவமவுருபு. மணி, ஈண்டுக் களங்கமற்ற வெள்ளிய ஒளியினால் சிறப்புப்பற்றி வைரமணியை உணர்த்திற்று. அண்முதல் - சேர்தல். அண்முவர் – சேர்ந்தின்புறுவர். (௩0)

வேறு

மறைக ளாகமம் வண்கலை யவ்வயின்
நிறைய நல்குநர் நீடிரும் போகமும்
அறிவு மாயுளு மற்கிய செல்வராய்ப்
பறைய மும்மலம் பாயரு ளாபவே.

(இ - ள்.) நான்குமறைப் பொருள்களையும் ஆகமப் பொருள்களையும் வளப்பம் பொருந்திய கலைகளின் உட்பொருளையும் விரும்புவார்க்கு அத்திருத்தணிகைக்கண் நிறைய எடுத்து விளக்கிச் சொல்வோர், நீண்ட பெரிய இன்பமும் பேரறிவும் நீண்டஆயுளும் நிலை பெற்ற செல்வமுமுடையராய், மூன்றுமலங்களும் தேயப்பெற்றுப் பரந்த முருகப்பெருமான் திருவருளைப் பெறுவர்.

(வி - ம்.) மறைகள், ஆகமம், வார்கலை என்பன, அவற்றின் பொருள்களுக்கு ஆகுபெயர். வயின் - இடம், அ: பண்டறிசுட்டு. திருத்தணிகையைக் குறித்தது. நல்குநர் - நூற்களின் பொருட்களை விரித்துரைக்கும் பேரறிஞர். நீடிரும் என்னும் அடையை, போகம்,

அறிவு, ஆயுள் எனும் மூன்றுக்கும் ஒட்டுக. பறைய - கெட, தேய என்னும் பொருளது. மும்மலம், முற்கூறிய ஆணவம் மாயை காமியம் என்பன. பாய - பரந்த, விரிந்த என்னும் பொருள்தரும் பெயரெச்சம். இஃதிப் பொருளில் [1]"பாய வாரியுண் டுயர்கெடுத் துலகெலாம் பருக' என்புழி வருதலால் தெளிக. ஆப - ஆவார். பகர வீற்றுப் பலர்பாற்சொல். என்னை?

[2] "அர்ஆர் பஎன வரூஉ மூன்றும்
பல்லோர் மருங்கிற் படர்க்கைச் சொல்லே"

என்றலின். (௰௧)

கூவி ரத்தடந் தேர்மத குஞ்சரம்
வாவு கொய்யுளை மாசிவி கைக்குலம்
மேவி யுய்ப்பவ ரன்னவை மேல்கொடு
தாவி லாத்துறக் கந்தனைச் சார்வரால்.

(இ - ள்.) மேல் தட்டினையுடைய பெரிய தேரினும் மதம் பொருந்திய யானையின்மீதினும் தாவி யோடுகின்ற கொய்த புறமயிரினையுடைய குதிரையின் மீதினும் பெருமைபொருந்திய பல்லக்குக் கூட்டங்களினும் பொருந்தியிருந்து அவற்றைச் செலுத்துவோர் மறுமையில் அவ்வவ் வூர்திகளின் மேலேறியிருந்து குற்றமற்ற வானுலகத்தைச் சார்ந்து இன்புறுவர்.

(வி - ம்.) கூவிரம் - தேரினது மேல்தட்டு. குஞ்சரம் - யானை. வாவு - தாவியோடுகின்ற. கொய்உளை - களையப்பட்ட புறமயிர், பிடரி மயிர். உளை என்பது, குதிரையின் பிடரிமயிரினை உணர்த்தி, அதனையுடைய குதிரைக்காய், அதன் முதுகுப் புறத்துக்காதலால் இருமடியாகு பெயர். சிவிகை - பல்லக்கு. குலம் - இனம், கூட்டம். பல்லக்கு பல்வகை வடிவிற் செய்யப்பட்டு ஊர்ந்து செல்வதாகலின், 'குலம்' என்றார். மறுமையில் தேவருலகத்திருந்து இவைகள் வந்து தாங்கிச் செல்வதாகலின் 'அன்னவை மேல்கொடு......சார்வர்' என்றார். ஆல்: அசை. இத்தலத்தில் பல்வகை ஊர்தியில் ஊர்ந்து செல்வோர் தேவருலகத்தினும் அவ்வூர்தியினிவர்ந்து செல்வர் என்றமையால் இத்தலம், வாளா இறைவன்பாற் பத்தியில்லார்க்கும் அத்தலத்தில் இருப்போர்க்கும் துறக்க வின்பம் முதலியவற்றைத் தரும் பெருமைமிக்க தென்பதைத் தெளிவுறுத்தியபடியாம் என்க. (௰௨)

நீர்சொ ரிந்துநி லத்தைய ளிப்பவர்
சீர்சொ ரிந்தசெல் வத்தின்மி குந்துவாழ்ந்
தேர்சொ ரிந்தமெய் யெய்தியி ருவளம்
பார்சொ ரிந்திடப் பார்த்திப ராகுவார்.

(இ - ள்.) (தம்பால் வந்திரந்தார்க்குத் தமக்குரிய) விளைநிலத்தைத் தாரைவார்த்துக் கொடுப்போர், சிறப்பால் மேம்பட்ட செல்வத்தால் சிறந்து வாழ்ந்து அழகுமிக்க நல்லுடல்பெற்றுப் பெருத்த செல்வத்தை உலகம் தமக்கு மிகுதிபெறக் கொடுக்க மன்னராக விளங்குவர்.

---

1. திருவிளை, பாயிரம்: 2. தொல், சொல், வினையியல்: ௬.

(வி - ம்.) நீர் சொரிதல் - தாரைவார்த்துக் கொடுத்தல் தம்பால், இல்லென ஒன்றைக் கேட்டு இரந்த இரவலர்க்குப் பெரும் பொருளையோ நிலம்போன்ற கொடுக்க இயலாத நிலையிற் பொருளையோ அவர்க்கு வழங்குங்கால் கையில் நீர்கொண்டு அவர் கையில் வார்த்து உனக்கே இஃதுரிமையெனக் கூறிக் கொடுத்தல் பண்டு தொட்டு நம் நாட்டிடை இருந்துவரும் வழக்காகும். அத்தலத்து ஒருவர்க்கு வேண்டிய விளை நிலத்தைத் தாரைவார்த்துக் கொடுப்பவர், எல்லாச் செல்வமும் பெற்று உடலில் நோய் முதலிய துன்பங்களின்றியும் வாழ்வதோடு, உலகங் காவல்புரியும் மன்னராகவும் விளங்குவர். சொரிந்த என்னும் பெயரெச்சம் மிகுதிப் பொருளில் வந்தது. நிலம் - ஈண்டு விளைநிலம். தண்ணடையென வழங்குவர். இருவளம் - பெருஞ் செல்வம். பார் - உலகமக்கள். பார்த்திபர் - மன்னர்; அரசர். (௩௧)

அன்ன நல்கினு மாடையு தவினும்
பொன்ன ளிப்பினும் பூணணி வீசினும்
கொன்னும் வேறுத லத்திற்கொ டுப்பதின்
அன்ன வைப்பின ரும்பயன் கோடியே.

(இ - ள்.) ஏழைமக்களுக்குச் சோறு வழங்கினும் ஆடைகள் ஈந்தாலும் பொருட்கொடை கொடுத்தாலும் அணிகின்ற அணிவகைகளை வழங்கினும் பயனில்லாத வேறு தலங்களிற் கொடுப்பதைக் காட்டினும் அத்திருத்தணிகைத் தலத்தில் கிட்டற்கரிய பயன் அவைகளிலும் காட்டில் கோடி மடங்கு ஆகும்.

(வி - ம்) அன்ன - அத்தன்மைத்தான; பண்டறி சுட்டாய்த் தலத்தின் பெருமை யாவற்றையும் குறித்தது. கொன் - பயனின்மை. இப்பொருள் தருதலை,

[1] "அச்சம் பயமிலி காலம் பெருமையென்
றப்பால் நான்கே கொன்னைச் சொல்லே"

என்னும் நூற்பாவான் அறிக. வைப்பு - வைப்பிடம், தலம். கோடி - கோடி மடங்கு பெருமையுடையது. (௩௨)

ஆயு நான்மறை யந்தணர்க் கவ்வயின்
ஈயு நற்பயன் கோடியி லக்கமாம்
பாய தொல்புகழ்ப் பார்முதல் யாவையும்
காயி லைக்கதிர் வேலவற் கீயினே.

(இ - ள்.) பரந்த பழமையான புகழையுடைய நிலமுதலாக எல்லாப் பொருள்களையும் வருத்துகின்ற இலைவடிவும் ஒளியும் பொருந்திய வேற்படையையுடைய முருகப்பெருமான் திருமுன் கொடுக்கப்படின், நான்கு மறைகளையும் ஆய்ந்தறிகின்ற அந்தணர்கட்கு அத்திருத்தணிகைக்கண் பொருள்களை ஈகின்ற நல்ல பயனானது ஒன்றுக்குக் கோடி இலட்சம் பங்கு மிகுதியாகப் பயன்தருவதாகும்.

1. தொல். சொல். இடையியல்: ௬.

(வி - ம்.) தொல்புகழ் - பழமையான புகழ். காய் - வருத்து கின்ற. இலை - இலையொத்த தகட்டு வடிவம். கதிர் - ஒளி. ஈயின் - கொடுத்தால்; செயினென்னும் வாய்பாட்டு வினையெச்சம். நான்மறை- நான்கு வகைப்பட்ட தமிழ்மறைகள். ஆயும் - கற்று ஆராய்ச்சி செய் கின்ற. அந்தணர் - அழகிய தண்ணளியுடைய பெரியோர். இவர்கட்கு அத்தலத்தில் ஒன்று கொடுப்பதைக் காட்டினும் முருகப்பெருமானின் திருமுன் கொடுப்பின் அவ்வொன்றுக்குரிய பயன், கோடி இலட்சம் பங்கு மிகுதிப்பட்டு ஒருவர்க்குப் பயன்தரும்; அவ்வளவு மேன்மை, முருகப்பெருமானது திருமுன்னென ஏற்றங் கூறியவாறு. பார் முதல் என்றமையால் அதனோடு தொடர்புடைய பொன்னையும் பொருள்களை யும் கொள்க. (௬௭)

அருப்பி ளம்பொழி லாக்குநர் நந்தனம்
மருப்பொ லிந்தவ னங்கள்பு துக்குநர்
திருப்பொ லிந்ததி ருத்தந் தொடுநரும்
இருப்பர் கந்தவு லகத்தெஞ் ஞான்றுமே.

(இ - ள்.) மலரரும்புகளையுடைய, இளஞ்சோலையை உண்டாக்கி யோரும் நந்தவனங்களையும் மணம்நிறைந்த மரக்காடுகளையும் புதிதாக உண்டாக்கியோரும் அழகு பொலிகின்ற தீர்த்தத்தடாகங்களை வெட்டி உண்டாக்கியோரும், ஆகிய இவர்கள் கந்தருலகத்து எக்காலத்தும் வாழ்பவராவர்.

(வி - ம்.) அருப்பு - அரும்பு. இளம் பொழில் - இளமரங்களை யுடைய சோலை. வனம் - காடு; பல்வகை மரங்கள் நெருங்கிய காடு. தொடுநர் - தோண்டினவர், வெட்டி உண்டாக்கியோர். கந்த உலகம் - முருகப்பெருமானுக்குரிய உயர்ந்த இன்பவுலகம். (௬௮)

தூம மெங்குங்க மழத்தொ குக்குநர்
காம ரும்பல தீபங்க ளேற்றுநர்
தாம நாற்றுநர் தாமும றுமுகன்
சேம வானுல கத்தன்றிச் செல்லுறார்.

(இ - ள்.) இத்திருத்தணிகைக்கண் நறும்புகை யெவ்விடத்தும் கம ழும்படி கூட்டுகின்றோரும், விரும்புகின்ற அரிய பல்வகை விளக்குகளை மிகுதியாக ஏற்றுவோரும், மாலைகளைத் தொங்கும்படி செய்வோரும் ஆகிய இத்தகைய அறம்பல செய்வோர் ஆறு திருமுகங்களையுடைய முருகப்பெருமானுக்குரிய பாதுகாப்பு வாய்ந்த கந்தவுலகத்தே சார்ந் திருக்கும் தன்மையராவர்.

(வி - ம்.) தூமம் - நறும்புகை. 'நறும்புகை யெடுத்துக் குறிஞ்சி பாடி' என்பர் ஆசிரியர் நக்கீரனர். தொகுத்தல் - நிறைவித்தல். காமம் அரும் - காமரும் என நிலைமொழி கடைக்குறைந்து புணர்ந்தது. தீபம்- விளக்கு. இறைவன் திருக்கோயிலுக்கு நறும்புகை புகைத்தலும் விளக்குகள் பல ஏற்றுவித்தலும், மாலைகளை நாற்புறங்களிலும் கட்டித் தொங்கவிடுதலும் இறைவனுக்கு உவப்புறச் செய்யும் அருந்தொண்டு களாகும். ஆகலான், அவர் ஆறுமுகக் கடவுளின் திருவுலகத்தன்றி

வேறுலகத்துக்குச் செல்லுவர் எனவே, கந்தருலகம் பிற எல்லா வுல கங்களினும் சிறந்த இன்பவுலகம் என்பதைச் சுட்டி உணர்த்தினர். இவற்றைத் தவறாது செய்யவேண்டுமென்பதைக் குறிப்பால் உணர்த்தினர் (௫௭)

கோயில் கோபுரங் கூடம்பன் மண்டபம்
வாயின் மாமதின் மற்றுமி ழைக்குநர்
தீய தீர்ந்துவிண் செல்வமெ லாந்தழீஇ
ஆய பின்னிளை யோனுல கண்முவார்.

(இ - ள்.) திருக்கோவிலும், திருக்கோவிலின் முகப்புவாயிலும், தேவகோட்ட மன்றமும், வாசல்களும், பெரிய கோட்டைகளும், ஏனைய பலவற்றையும், செய்வோர், தம்முடைய பழவினைகள் நீங்கப்பெற்று, வானுலகத்து இன்பங்கள் யாவும் பெற்று, அவை முடிந்தபின்பு, இளையோனான முருகப்பெருமானது, கந்தருலகத்தின் இன்பத்தைப் பெறுவர்.

(வி - ம்.) வாயில் - கோயிலின் வாசல்கள். மற்றும் என்றமையால் தேர், முருகப்பெருமான் ஊர்தியாகிய மயில்கள் யானை ஆட்டுக் கடா முதலிய உருவங்கள் மரத்தானும் செம்பு வெள்ளி பொன் போன்ற உலோகங்களானும் செய்வித்தல். தீய - தீமை தருவனவாகிய பழவினைகள்: ஆகுபெயர். விண் செல்வம் - இந்திரன் முதலிய இறையவர் பதங்கள். தழீஇ - தழுவி; பெற்று: சொல்லிசை யளபெடை. இளையோன் - மணங்கமழ் தெய்வத்தின் நலம்வாய்ந்த முருகவேள். உலகு - உலகம்; அஃதாவது கந்தருலகம். (௫௮)

புதுவ தாக்கும்பு கரில்ப யத்தினும்
கதுவுந் தூர்ந்தகண் ணர்தடந் தீர்த்தமும்
செதுவ தானதி ருப்பணி யாவையும்
முதுவ தோர்ந்துமு றையினி யற்றினே.

(இ - ள்.) புதியதாக உண்டாக்குகின்ற குற்றமற்ற நீர்த்தடாகத்தினும் அழிகின்றதாய்த் தூர்ந்து மேடாகிப்போன இடம் மிக்க விரிந்த தீர்த்தத் தடாகமும் சிதைந்து போனதான திருக்கோயில்கள் யாவற்றையும் முதன்மைய தென்பதை அறிந்து முறையாக அவைகளைச் சீர்திருத்தி மேலும்.

(வி - ம்.) பயம் - நீர். அதனையுடைய தடாகத்துக்கு ஆகுபெயர். கதுவுதல் - அழிதல்; கதுவும் - அழிகின்ற: பெயரெச்சம். தூர்ந்த - பள்ளமாக இருந்து மேடாகிப் போன. தீர்த்தம்-தடாகம்: ஆகுபெயர். செதுவது - சிதைந்தது; இடிந்தது. திருப்பணி - திருக்கோயில். மற்ற தொண்டுகள் யாவற்றினும் சிறந்தமைபற்றித் திருப்பணியெனப் பெயர் கூறப்பட்டது. முதுவது - முதிர்ந்தது; பழமையானது, தொன்றுதொட்டது. கோயில்கள் பலவாயினும் சாதி யொருமைபற்றி ஒருமையாகக் கூறப்பட்டது. பழங்காலத்து உண்டாய வென்பதை உணர்ந்து செய்தற்கு முதுவதோர்ந்து என்றார். இனே - இன்னும். கடைக்குறை. இது முதல் வருவன வினைமுடியாத குளகப் பாட்டாக அமைவனவாம். (௫௯)

மங்க லத்தின்ம லிசிவ கங்கையும்
கொங்கு லாவுங்கு மாரதி ருத்தமும்
அங்க ணந்திக்க ழைத்தரு ளுந்தியும்
பொங்கு நீர்விதி யாற்புகுந் தாடுபு.

(இ - ள்.) நன்மையினால் மிக்க சிவகங்கை யென்னும் தீர்த்தமும், மணம் பரவுகின்ற குமாரதீர்த்தமும், அவ்விடத்தே நந்திதேவருக்காக வரவழைத்தருளிய நந்தி தீர்த்தமும் ஆகிய இவற்றில் மிக்க தீர்த்த மாடும் முறைப்படி சார்ந்து மூழ்கி.

(வி - ம்.) கொங்கு – நன்மணம். [1]'கொங்குதேர் வாழ்க்கை' என்பது அஃறிப் பொருட்டாதல் அறிக. அங்கண் – அவ்விடம்; அன்றி அழகிய கண்ணையுடைய எனப் பொருளுரைத்து நந்திக்கு அடையாக் கலுமாம். உந்தி – நீர்; உந்திக்கொண்டு செல்வது என்னும் பொரு ளது. ஈண்டுத் தீர்த்தத்தைக் குறித்தது. நீர்விதி – தீர்த்தமாடும் முறை. அவை இவ்விதத் தீர்த்தத்தில் இன்னின்ன மந்திரஞ்சொல்லி ஆடுக எனவும், இவ்விடத்து நின்றாடுக எனவும் குறித்த செயல்கள். ஆடுபு – ஆடி: செய்பு என்னும் வாய்பாட்டு வினையெச்சம். (௩0)

வீடு நல்கிய வீராட்ட காசத்தின்
ஆடு மெம்மையு மவ்வயி னன்பர்நோய்
சாட வைகிய சாமிநா தப்பெயர்
நீடு மேந்தனி லையும்ப ணிந்துபோய்.

(இ - ள்.) வீடுபேற்றைத் தருவதாகிய வீராட்டகாசத் தீர்த்தத்தில் மூழ்குகின்ற எந்தப் பிறப்பினும் அவ்விடத்திலேயே அன்பர்களின் நோயானது தீர்க்க எழுந்தருளியிருக்கின்ற சாமிநாதன் என்னும் பெயரையுடைய அழியாத முதல்வனாகிய முருகப்பெருமான் திருவடி வத்தையும் வணங்கிச் சென்று.

(வி - ம்.) வீராட்டகாசம் – வீராட்டகாசத் தீர்த்தம். ஆடும் – மூழ்குகின்ற. எம்மையும் - எந்தப் பிறப்பினும், அம்மை, மறுமை யென்பனபோல. வயின் - இடம். சாட - தீர்க்க; கெடுக்க. ஆண்டு முருகப்பெருமான் சாமிநாதன் என்னும் பெயர் கொண்டிருந்தனன் என்ப. ஏந்தல் - உயர்ந்தோன்; ஈண்டு முருகப்பெருமான். நிலை - நிற்கின்ற இறைவன் வடிவம். பணிந்து - வணங்கி. (௩௧)

வான ளாவிய மல்லல்வ ரையிவர்ந்
தானி ருந்தரு ளாவச்ச காயனோ
டின மீருங்கு மாரலிங் கந்தொழா
ஞான சத்தித ரனையு நண்ணுவோர்.

(இ - ள்.) வானத்தைத் தொடும்படி உயர்ந்த வளப்பம் பொருந் திய திருத்தணிகை மலைமீதேறி அவ்விடத் தெழுந்தருளியிருக்கின்ற அந்த 'ஆபத்துச் சகாய' னென்னும் திருப்பெயருடைய விநாயகக் கடவு ளுடன் துன்பங்களையெல்லாம் கெடுக்கின்ற குமாரலிங்கப் பெருமானை

யும் தொழுது உண்மையுணர்வு வலியுடையனாகிய முருகப்பெருமானை யும் சார்ந்து வழிபடுவோர்.

(வி - ம்.) வான் - வானிடம். வரை - மலை. மேகமண்டிலம் வரை உயர்ந்திருப்பதாகலான் அச்சிறப்பு நோக்கி, வானளாவிய மல்லல் வரை யென்றார். அருளா, தொழா என்பன செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். அச் சகாயன் - அந்தச் சகாயன். பண்டறி சுட்டாக அத்தல விநாயகராகிய ஆபத்துச் சகாய விநாயகரைச் சுட்டிநின்றது. ஓடு: மூன்றனுருபு; உடனிகழ்ச்சி. ஈனம் - துன்பம்; நோய் வறுமை முதலியவற்றான் வரும் துன்பங்களும் பிறவித் துன்பமுமாம். குமார லிங்கம்; அத்தலத்து இறைவன் திருவுருவாகிய இலிங்கம். ஞானசத்தி தரன் - ஞானசத்தியைத் தரித்தோன். அஃதாவது உண்மையுணர்வு, மெய்யறிவுடையோன் என்பதாம். பிறர்விளக்க விளங்கா இயற்கை யறிவினனாதலால் இவ்வாறு கூறப்பட்டது. நண்ணுவோர் - சென்று வணங்குவோர் என்று பொருள் கொள்க. (௬௨)

எண்ணில் புண்ணிய மெண்ணில்பல் லூழிகள்
பண்ணு மப்பயன் பற்றுவர் வேதனை
அண்ணன் மாலைய ளித்துநி றுவுதற்
கெண்ணின் மற்றஃ தெண்மைய வர்க்கரோ.

(இ - ள்.) அளவுகடந்த அறங்களையெல்லாம் கணக்கிலடங்காத பல ஊழிக் காலங்களில் செய்த அவ்வறப்பயனால் வரும் பயன் யாவும் எய்தப் பெறுவர்; அஃதன்றியும் நான்முகனைப் பெருமைமிக்க திருமாலை இறவாது பாதுகாத்து நிலை நிறுத்திவைக்க நினைந்தாலும் அத்தகைய யோர்க்கு அச் செயல் மிக எளிமையானதாகும்.

(வி - ம்.) மற்றும்; அரோவும் அசை நிலைகள். புண்ணியம் - நல் லறம். ஊழி - உகமுடிவு. வேதன் - நான்முகன். மால் - திருமால். அளித்து - பாதுகாத்து, ஒருவர் மற்றொருவரைப் பாதுகாப்பதாயின், காப்போர் காக்கப்படுவோரின் மேனிலையரா யமைதல் வேண்டுவதால், மக்களைக் காத்தான் என்றால் தாய் தன் மகார்களினும் அகவையாலும் அறிவு ஆற்றல் முதலியவற்றானும் சிறந்திருந்தமையாலன்றோ? அது தொப்ப நான்முகனையும் திருமாலையும் காக்கும் ஆற்றல் முருகப்பெரு மான் திருவருள் பெற்றோர்க்கு அரிதன்று; மிக எளிமையாகும் என்ற படி. இப்பாட்டுடன் குளகம் நிறைவுறுகின்றது. இக்கருத்தை யொப்ப,

"ஐயன தருளைப் பெற்றோர்க் கதிசயம் இதென்கொல் மூன்று
வையமுத் தொழிலுஞ் செய்ய வல்லவ ரவரேயன்றோ?"

எனப் பரஞ்சோதியார் (திருவிளை, இந்திரன்பழி.) ஓதுதல் காண்க. (௬௩)

வேறு

இச்சா ஞானக் கிரியையெனு மிவைமுன் றிலையாய்க் கிளைத்தெழுந்திட்
டச்சா ஞழி யறச்சுவற்று மயில்வே லொருகை வலத்தமைத்து
நச்சா தவரைத் தெறுமொருகை நளினங் குறங்கி னமைத்திமையோ
ரிச்சா தரர்சூழ் ஞானசத்தி தரன துருவம் விதிப்போரும்.

(இ - ள்.) விருப்பு அறிவு வினையென்னும் இவைகள் மூன்றனை யும் தன் தகட்டுவடிவாய்க் கவடுவிட்டுச் செழித்து மேலெழுந்துள்ள வடிவின் இயல்பால் கடலின் நீரறச் சுண்டச் செய்த கூரிய வேற் படையை ஒப்பற்ற தன் வலக்கைக்கண் அமைத்துத், தன்னை விரும்பாத பகைவரை ஒறுக்கின்ற மற்றொருகைத் தாமரை மலரைத் தம் தொடைக் கண் அமைத்துத் தேவர்களும் வித்தியாதரர்களும் சூழ்ந்திருக்கின்ற தன்மையையுடைய உணர்வுவலியைக் கொண்ட முருகப்பெருமானது திருவுருவத்தை ஆக்குவோர்களும்.

(வி - ம்.) இச்சா - இச்சை; விருப்பு. ஞானம் - அறிவு. ஈண்டு மயக்கமில்லா உண்மையுணர்வு. கிரியை-வினை, தொழில். முழுமுதற் கடவுளாகிய முருகப்பெருமான் தன் விருப்பால் ஒன்றை எண்ணி அதனைத் தொழிற்படுத்து முடிக்கின்றான். அவனால் இயற்றப்படும் ஐவகைத் தொழில் முறைகளையும் அவன்றன் அளப்பரும் ஆற்றலையும் வேற்படையின்மேல் வைத்துக் கூறியவாறு. வேலை ஞானசத்தியாக வும் வள்ளிநாயகியாரை இச்சாசத்தியாகவும், தெய்வயானையம்மை யாரை கிரியாசத்தியாகவும் கொள்ளலுமுண்டு.

இக்கருத்தை,

[1] "ஈறிலாதவள் ஒருத்தியே ஐந்தொழில் இயற்ற
வேறு வேறுபேர் பெற்ற'என'

என்றும்,

[2] "பரையாதி விருப்பறிவு தொழிலாகி உலகமெலாம்
படைத்துக் காத்து
வரையாது துடைத்துமறைத் தருளியவை நின்றுந்தன்
வடிவு வேறாய்
உரையாதி மறைகடந்த ஒருமுதல்வி"

என்றும் ஆன்றோர் விரித்துக் கூறலான் அறியப்பெறும்.

வேற்படை ஏனைய படைகள்போலாது அடிப்பகுதி நீண்டும் மேற் பகுதி கூர்ந்தும் உட்பகுதி விரிந்தும் இருத்தலான் அஃது உணர்வுதரும் குறியாக அமைத்துக் காட்டினர். அதை வலப்புறக் கையொன்றில் கொண்டும் மற்றொருகையைத் தொடையின்மேல் வைத்தும் இருக்கும் திருக்கோலம், தம் அடியவர் துயர்களைந்து இன்பப் பேறுக்கும் தன்மைத் தாக இருத்தலின், அக்கோலத் திருவுருவத்தை அமைத்தலும் வழிபட லும் முதன்மையாகும்; ஆகலான், 'உருவம் விதிப்போரும்' என்றார்.

இப்பாட்டுக் குளகமாய்ப் பிற்பாட்டுக்களின்மேல் வினைமுடிவு பெற நிற்றலால், எச்சப் பொருளில்நின்று தொடர்வதாக அமைந் துளது. (௯௪)

**வைவாய்க் கணிச்சிப் படையென்ன வதிவித் திடுங்கோ வணத்தண்டு**
**கைவாய் வலத்தி னமைத்தருளிக் கடியி லிடக்கை பதித்தருளி**
**ஐவாய் வழங்கும் பொறிபுலனை யவித்த வுருவ ரிமையவர்கள்**
**உய்வா னிறைஞ்ச வருள் வழங்குங் கந்த னுருவ முஞற்றுநரும்.**

---

1, 2. திருவிளை, திருநாட்டுப் : ௪௪; தடாதகைப் : ௨௪.

(இ - ள்.) கூர்மை பொருந்திய இடத்தையுடைய மழுப்படை, யென்னும் படியாகத் தங்கவைத்துள்ள வேலின் வடிவாகிய தண்டினைத் தன் வலக்கையின்கண் அமைத்துக்கொண்டு, திருஅரையின்கண் தம் இடக்கையை ஊன்றிக்கொண்டு நிற்கின்ற ஐந்திடங்களைப்பற்றி நடக்கின்றவான ஐம்பொறிக் கண்ணுள்ள அறிவுகளின் அவாவைக் கெடுத்த முனிவர்கள், தேவர்கள் யாவரும் கடைத்தேறும் பொருட்டு வணங்க அவர்கட்குத் தன் அருளை வழங்குகின்ற கந்தனை முருகப்பெருமான் திருவுருவை ஆக்குவோர்களும்.

வை - கூர்மை. வாய் - இடம். கணிச்சி - மழு; இதனைக் கண்டர கோடரி என வழங்குவர். வதிவித்திடுதல் - தங்கவைத்தல். கோ - வேல். வணம் - வண்ணம் என்பதன் இடைக்குறை; வடிவம். தண்டு - தடி. கூர்மை பொருந்திய வேற்படை தன் அடிப்பாகம் தண்டுபோல் இருத்தலின் தண்டென்றார். கடி - அரை; இடுப்பு. முருகப்பெருமான் பழனிமலையிலெழுந்தருளியிருக்கும் திருக்கோலம், கோவணமாகிய கௌபீன உடையும் உருத்திராக்க மணிகளை அணியும், முண்டிதத் தலையும் கொண்டு வலக்கைப் பக்கலில் வேற்படையைத் தாங்கி நின்ற கோலத்தோ டமைந்த அழகிய துறவறக் கோலத் திருவுரு, இங்குச் சித்திரிக்கும் திருவுருவத்தைக் காட்டுவதாகும். எனவே, அத்தகைய திருவுருவத்தை அமைப்போர்களும் என்க.

ஐவாய் - ஐந்திடம். உடம்பு, வாய், கண், மூக்கு, செவி இவை ஐம்பொறி (இயந்திரங்)கள்; இவ்வைம் பொறிகளினிடத்தே முறையே தொடுதல், சுவைத்தல், பார்த்தல், முகர்தல், கேட்டல் ஆகிய ஐந்து புலன் (அறிவு)களும் நிற்கின்றன; ஒன்றில் மற்றொன்றின் அறிவு தோன்றாது. சுவைக்கப்படும் பொருளும் சுவைக்கும் கருவியும் ஒன்று பட்ட வழியே அவை புலனாவனவாம். இப்புலன்கள், ஈர்க்க அவ்வழியே மனஞ்சுழன்று அறிவைக் கெடுக்கின்றன. ஆகலான் இவ்வாசைகளை அறுத்த மேலோ ரென்பதைக் குறிக்க 'பொறிபுலனை அவித்த உறுவர்' என்றார். உறுவர் - மிகுந்தோர்; சிறந்தோர்; மற்ற எல்லோரினும் ஐந்தாசைகளையும் அவித்தோர் சிறப்பால் மிக்கோராயினர். (சுகூ)

ஒருகை தனது வலக்குறங்கி னணங்கைத் தழுவி யுகளமுலை
மருவ வபய மொன்ருக வளர்தோல் வாள் சூலங்குலிசம்
பொருவேல் வாள்வில் கதைபுள்ளம் புயங்கோல் பத்துங் கரம்பத்தின்
இருவு மாறு முகத்தேவ சேனு பதிசீ ரிழைப்போரும்

(இ - ள்.) தனது ஒருகையானது வலப்பக்கத் தொடையினிடத்திருக்கின்ற வள்ளிநாயகியாரைத் தழுவி இரண்டு நகில்களைப் பொருந்தவும், மற்றொருகை அன்பர்கள் அச்சத்தை ஒழிக்க அமைவுறவும், வளர்கின்ற கேடகம் அரிவாள், சூலம், வச்சிரம், போர் செய்கின்ற வேல், வாள், வில், தண்டு, வளைந்தவாள், தோளோடு சார்ந்த அம்பு ஆகிய பத்துப் படைகளையும், ஏனைய தம் பத்துக் கைகளினும் கொண்டருளியிருக்கின்ற ஆறு முகங்களையுடைய, தேவர்படைத் தலைவனாகிய முருகப் பெருமானுடைய, சிறந்த திருவுருவத்தை அமைப்போர்களும்.

(வி - ம்.) இதில், முருகப்பெருமான் பன்னிரு கைகளும் ஆறு திருமுகங்களுங் கொண்டு வள்ளிநாயகியாரோடும் எழுந்தருளியிருக்கின்ற திருவுருவச் சிறப்புக் கூறப்பட்டுள்ளது.

வலக்குறங்கு - தம் வலப்புறத்துத் தொடை. அணங்கு - தெய்வப் பெண், ஈண்டு வள்ளிநாயகியார். உகளம் - இரண்டு, வடசொல். அபயம் - தன் அன்பர்கட்கு அச்சந்தீர்த்தருளக் கைவிரித்துயர மேல் தூக்கி விரித்திருக்கும் அபயக்கை; இதனை அபயாஸ்தம் என்பர்; வடசொல்லால். தமிழ்மொழிக்கண் பல தூய சொற்கள் நிலைபெயரக் குறித்தனர். அதனால் நறுந்தூய தமிழ்ச்சொற்கள் வழக்காறற்று மாண்டுபோயின; மீண்டும் உயிர்கொடுத்து உலகில் ஆட்சிபெற நிலவச் செய்யவேண்டும் கடப்பாடு தமிழ்மொழி நலம்பெறுவார் கடப் பாடாகும். அபயம் - அச்சமின்மை. அச்சம் அறுக்கும் கை எனக் கூறலாம். பன்னிருகைகளும் பாங்குற அமைந்த திறத்தை,

"விண்செலன் மரபின் ஐயர்க் கேந்திய தொருகை"

எனத் தொடங்கிக் காட்டும் பன்னிரு கைகளின் பண்பு நலங்களை நக்கீரனார் சித்திரித்திருக்கும் காட்சிகளையும்,

"தேவர்க் குதவும் திருக்கரமும் சூர்மகளிர்
மேவிக் குழைந்தணைந்த மென்கரமும்"

எனத் தொடங்கிக் காட்டும் குமரகுருபர அடிகளின் அரிய கைத்திறங் காட்டும் காட்சிகளையும் ஒப்பக்கண்டு மகிழ்க. இருவும் - இருத்தும் என்னும் பொருளது. சீர் - சிறப்பு; அழகு; அதனாலாய உருவத்துக்கு ஆகுபெயர். (௬௬)

இருள்கால் சீக்கு மணிக்கடக
விடக்கை கடியிற் கொளவிருவி
வெருள்கா லுளத்தோர்க் கஞ்சலென
விரவும் பயஞ்சா டபயமெனத்
தெருள்கா லொருகை வலத்தமைத்துத்
திகழ்ந்து பணிவோர் தமக்கெல்லாம்
அருள்கால் விழிச்சுப் பிரமணிய
வண்ண லுருவ மமைப்போரும்.

(இ - ள்.) இருட்டினை அடியோடு போக்கி ஒளியெறிக்கின்றதான மணிக்கற்களையுடைய காப்புக்களை அணிந்த தன் இடப்பக்கக் கையினைத் தன் திருவரைக்கண் பொருந்த அமைத்து, தீவினை, நோய் முதலியவற்றால் அச்சமிக்குடைய நெஞ்சினையுடையவர்க்கு அஞ்சாதொழிக என்று மிக்க அச்சத்தை ஒழிக்கின்ற அபயக்கை யென்னும் பெயருடைய தெளிவுமிக்க ஒருகையை வலப்பக்கத்தில் அமைத்து விளங்கித் தன்னை வணங்குகின்றோர் யாவர்க்கும் திருவருள் பொலிகின்ற திருக்கண்களையுடைய சுப்பிரமணிய னென்னும் திருப்பெயரையுடைய பெருமை பொருந்திய முருகப்பெருமானது திருவுருவத்தை உண்டாக்குவோரும்.

(வி - ம்.) கால்சீத்தல் - அடியோடு போக்குதல். மணி - ஒன்பது வகை இரத்தினக்கற்கள். கடகம் - கைவளை; அல்லது தோள்வலயமுமாம். இருவி - இருத்தி. வெருள் - அச்சம். கால் - கக்குதல்; ஈண்டு மிகுதலென்னும் பொருளில் வந்தது. அருள்கால் - அருண்மழை பொழிகின்ற. விழி - கண்கள். அண்ணல் - பெருமை பொருந்தியவன். (௬௭)

ஒற்றை முகமு மிணைவிழியு மும்மைப் பயனு மொருங்களிக்கும்
கொற்ற வரதவூன்றலைக்குக் குடமோ ரிரண்டு மிடங்கதிர்ப்ப
மற்றை வலப்பான் மணிவேலும் வாளுங் கதிர்ப்பக் கரநான்கும்
பெற்ற மதவெங் களிற்றூர்திப் பெருமா னுருவஞ் சமைப்போரும்.

(இ - ள்.) ஒற்றைத் திருமுகமும் இரண்டு கண்களும் வருகின்ற பிறவிகளின் பயனும் ஒருங்கே தந்தருளுகின்ற வெற்றிபொருந்திய கொடையும் தசைபோன்ற பூவினையுடைய தலையையுடைய கோழிக் கொடிகள் இரண்டும் இடப்பக்கத்தில் இறுமாந்துநிற்ப, அதன் பின்னர் வலப்பக்கத்து அழகுபொருந்திய வேலும் வாளும் ஒளிவிட்டுத் தோன்றத் திருக்கைகள் நான்குங் கொண்ட மதம்பொருந்திய கொடிய ஆண் யானையை ஊர்தியாகவுடைய முருகப்பெருமானது திருவுருவத்தை ஆக்குவோர்களும்.

(வி - ம்.) இணை—இரண்டு. உம்மை—வருகின்ற பிறப்பு. வரதம்—வரங் கொடுத்தல். ஊன்தலை - புலால் போன்ற உச்சிக்கொண்டை. குக்குடம் — கோழி; அதன் உருவெழுதிய கொடி: ஆகுபெயர். கதிர்ப்ப - இறுமாந்து; வீறுகொண்டு மேலோங்க. முருகப்பெருமானுக்குரிய ஊர்திகளில் ஒன்றாக இலகுவது யானை. அதனை ஈண்டுக் கூறினார். இதனை 'ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி' என்று வரும் திருமுருகாற்றுப்படை அடியானும் அறிக.

இதில், முருகப்பெருமானுக்கு ஒரு திருமுகமும், நான்கு கைகளும், இடப்பக்கக் கைகளிரண்டில் இரண்டுருவெழுதிய கோழிக் கொடிகளும். வலப்பக்கக் கைகளிரண்டில் வேலும் வாளும் கொண்டு யானை ஊர்திமீதிவர்ந் திருக்கும் திருவுருவச் சிறப்புக் கூறப்பட்டுள்ளது. (௬௮)

ஞாங்கர்ப் படைகே டகங்கண்டை நளினஞ் சேவல் கதையிடங்கம்
ஓங்கும் பகழி வாள்வரத மொளிரு மபயஞ் சிலையவைதாம்
தாங்குங் கரங்க ளீராறுந் தயங்கும் வதன மோராறும்
ஆங்க விளங்க வருட்சரவ ணபவ னுருவ மாக்குநரும்.

(இ - ள்.) வேற்படையும் கேடகமும் வீரகண்டாமணியும் தாமரை மலரும் சேவலும் தண்டும் கல்லுளியும் உயர்ந்து செல்கின்ற அம்பும் வாட்படையும் கொடைத்தன்மையும் விளங்குகின்ற அபயமும் வில்லும் ஆகியவைகளைத் தாங்குகின்ற திருக்கைகள் பன்னிரண்டும், விளங்குகின்ற திருமுகங்கள் ஆறும் விளங்குமாறு அருளுடைய நாணற்புல் அடர்ந்த பொய்கைக்கண் பிறந்தோனாகிய முருகப்பெருமானது திருவுருவத்தை உண்டாக்குவோரும்.

(வி - ம்.) ஞாங்கர் - வேற்படை. கண்டை - வீரகண்டாமணி. நளினம் - தாமரைமலர்: ஆகுபெயர். இடங்கம் - கல்லடிக்கும் உளி. பகழி — அம்பு. வரதம் — கொடுத்தல். அபயம் - பயந்தீர்த்தல். சிலை - வில். ஆங்க: உரையசைச் சொல். [1]'ஆங்க உரையசை' என்பது தொல்காப்பிய நூற்பா. இந்நூற்பாவுக்கு உரையாசிரியர் சேனாவரையர் 'ஆங்கக்குயிலு மயிலுங்காட்டி' என எடுத்துக்காட்டுரைப்பர்.

1. தொல். சொல்; ௨௧.

அன்றியும், உரை விளக்கத்திற்கண், 'ஆங்கவும் ஒப்பில் போலியும் உரைத் தொடங்குதற் கண்ணும் ஆதரமில் வழியும் வருதலின் வேறு கூறினர்' என்றுரைப்பதும் கருதத் தக்கதாம். வரதம் அபயமென்பன; முருகப் பெருமான் வேண்டுவவேண்டியார்க்கு வரையாது வழங்கும் திருக்கை; பகையாலும் பிணியாலும் அச்சந்தரும் ஏனையவிலங்கு பேய் முதலியவற்றாலும் எய்திய துன்பங்களைக் கண்டு அஞ்சன்மின் எனத் தன் அடியரைக் காக்க அமைந்த திருக்கை. இவ்விரு கைகளும் இடப்புறத் தமைந்த கைகளாகும்.

இதில், முருகப்பெருமானுக்குப் பன்னிருகைகளும் ஆறு திருமுகங்களும் பொருந்திய திருவுருவம் கூறப்பட்ட தறிக. (௬௯)

சீர்த்த குலிசங் கேடகமே செழித்த வரத மிடப்பாலும்
கூர்த்த மணிவேல் வாளபயங் குலாவு வலப்பா லுங்கவின
ஏர்த்த வாறு மலர்க்கரமு மிலங்கும் வதன மோராறும்
சூர்த்த பிணிக டபுங்கார்த்தி கேய னுருவந் தொகுப்போரும்.

(இ - ள்.) சிறப்புப் பொருந்திய வச்சிரப்படை கேடகம் வளப்பம் பொருந்திய கொடைத்தன்மை இடப்பக்கத்தும், கூர்மை பொருந்திய அழகிய வேற்படை வாட்படைகள் விளங்குகின்ற வலப்பக்கத்தும் பொருந்தக் கொண்டு விளங்குகின்ற அழகுமிக்க மலர்போன்ற திருக்கைகள் ஆறும், அச்சந்தருகின்ற நோய்களைக் கெடுக்கின்ற கார்த்திகேயனை முருகப்பெருமானது திருவுருவத்தை அமைப்போர்களும்.

(வி - ம்.) ஏர்த்த - அழகு பொருந்திய. சூர்த்த - அச்சந்தருகின்ற 'சுழல்விழிப் பசுங்கட் சூர்த்த நோக்கின்' என்னும் திருமுருகாற்றுப்படை அடிகளில் வந்தமை இப்பொருட் டாதலறிக. தபும் - கெடுக்கின்ற. கார்த்திகேயன் - கார்த்திகைப் பெண்களால் வளர்க்கப்பட்டோன். (௭௦)

வைத்த சுடர்வேல் வாளிரண்டும் வலப்பா லிடப்பால் வாரணப்புள்
பைத்த மணித்தோ ளோரிரண்டும் பயில வலர்ந்த நாற்கரமும்
முத்த முறுவற் குறமாது விளங்க முன்வந் தடுத்துமலக்
கொத்து விளியக் கடைக்கணிக்குங் குமார னுருவங் குயிற்றுநரும்.

(இ - ள்.) கொண்டுள்ள ஒளிபொருந்திய வேலும் வாளுமாகிய இரண்டும் வலப்பக்கத்தும், கோழிப் பறவையும், பசுமையையுடைய மணியழுத்திய கேடகங்கள் இரண்டும், இடப்பக்கத்தும் தங்க மலர்ந்துள்ள நான்கு கைகளும், முத்துப்போன்ற வெள்ளிய பற்களையுடைய வள்ளிநாயகியார் விளங்கியிருப்ப முன்வந்து சேர்ந்து மலத்தொகுதிகள் கெடக் கடைக்கண் பார்வை யருள்கின்ற குமாரப்பெருமானது திருவுருவத்தை ஆக்குவோர்களும்.

(வி - ம்.) வலப்பால் திருக்கைகளில் வேலும் வாளும் படைகளாகவும், இடப்பால் திருக்கைகளில் கோழியுருவெழுதிய கொடிகள் ஆகவும் கொண்டு விளங்கும் நான்கு கைகளும், ஒரு திருமுகமும் வள்ளிநாயகியாருடன் விளங்குகின்ற குமாரப்பெருமான் திருவுருவம் எனக்கொள்க.

பைத்த - பசுமையையுடைய; அஃதாவது சிறந்த என்னும் பொருளது. முத்தம் - முத்து: அம் சாரியை பெற்றது. முறுவல் - பற்கள். மலக்கொத்து - மலக்கூட்டம்; அவை, ஆணவம், மாயை, காமியம் முதலியன. இவைகள் ஒன்றற்கொன்று தொடர்புடையவாய், உயிர்களைத் தொடர்ந்து பிணித்துத் துன்புறுத்தலின் 'கொத்து' என்றார். விளிய - கெட; தொலைய. கடைக்கணித்தல்-கடைக்கண்ணால் பார்த்து அருள் செய்தல். என்றும் இளையராய் இறவாப் பிறவா இயற்கையராய் 'மணங்கமழ் தெய்வத் திளநலத்தோடிருப்பவராதலான், 'குமாரர்' என்றார்- உருவம் - வடிவம். குயிற்றுநர் - செய்வோர்: ஆகுபெயர். குயிற்றுநர் என்பதில் நகரம் பெயரிடைநிலை. (௭௧)

படைவேல் பகழி வாடிகிரி பாச மபயம் வலத்திடத்துச்
சுடர்வார் குலிசஞ் சிலைதோல்புட் டோட்டி வரத மிவைபரித்த
தடவான் கரமு முகமாறுந் தனிமா மயிலு மிருமாதர்
உடனு மெழிலுந் தருமாறு முகவ னுருவ முஞற்றுநரும்.

(இ - ள்.) வேற்படை அம்பு வாள் சக்கரம் கயிறு அஞ்சுதல் தீர்த்தல் இவைகளை வலப்பக்கத்தும், சுடர்மிக்க வச்சிரப்படை வில் கேடகம் கோழிக்கொடி அங்குசம் கொடைத்தன்மை ஆகிய இவைகளை இடப்புறத்துமாக இவைகளைத் தாங்கிய பெரியவாய் உயர்ந்த பன்னிரண்டு கைகளும் ஆறுமுகங்களும் ஒப்பற்ற கரியநிற மயிலும் தெய்வயானை வள்ளிநாயகியார் ஆகிய இரு மனைவியரும் ஒன்று சார்ந்திருக்கின்ற அழகும் காட்டுகின்ற ஆறுமுகத்தையுடைய முருகப்பெருமானது திருவுருவை உண்டாக்குவோரும்.

(வி - ம்.) இதில், படைகள் பிடித்த பன்னிரண்டு திருக்கைகளும், ஆறு திருமுகங்களும் மயிலும் தெய்வயானை வள்ளிநாச்சியார் ஆகிய இரு மனைவியர்களும் சேர்ந்த முருகப்பெருமானது திருவுருவம் கூறப்பட்டுள்ளது.

படை வேல் என்பதை, வேற்படை எனமாறுக. பாசம் - கயிறு. சிலை - வில். தோல் - கேடகம். புள் - கோழி: அதன் உருவெழுதிய கொடிக்கு ஆகுபெயர். தோட்டி - குறடு; அங்குசம். [1]'உரனென்னும் தோட்டி' என்புழி அஃதிப் பொருட்டாதலறிக. பரித்த - சுமந்த; கொண்ட. பரித்தல் - சுமத்தல், பரி என்னும் பகுதியடியாகப் பிறந்த இறந்தகாலப் பெயரெச்சம். இஃதிப் பொருட்டாதலைப் 'பரிபரி சுமத்தல் வேகம் பாதுகாத்திடல் வருத்தம்' என்னும் சூடாமணி நிகண்டானும் அறிக. உஞற்றுநர் - செய்வோர். (௭௨)

வரதங் கொடிகே டகந்தோட்டி வார்ந்த வெறுழ்ப்பா சங்குலிசம்
பரவு மபயம் வாள்சூலம் பரிதி முசலம் வேன்முந்நாழ்
கரமும் விளங்க வறுமுகமுங் கதிர்ப்ப விழிகள் கருணைமழை
தரவென் றருளுந் தாரகாந் தகன்சீ ருருவஞ் சமைப்போரும்.

(இ - ள்.) கொடைத்தன்மை கொடி கேடகம் அங்குசம் நீண்ட வலிமையையுடைய கயிறு வச்சிரப்படை யாவராலும் போற்றப்படுகின்ற அபயம் வாள் சூலம் சக்கரம் உலக்கை வேற்படை ஆகியவற்

றைக்கொண்டு பன்னிரு கைகளும் விளங்க ஆறு திருமுகங்களும் ஒளிவிட்டு விளங்க, பன்னிரு திருக்கண்களும் அருண்மழை பொழிய என்றைக்கும் அருள்புரிகின்ற தாரகாசுரனுக்குக் காலன் போன்றவராகிய முருகப்பெருமானது அழகிய திருவுருவத்தை அமைப்போர்களும்.

(வி - ம்.) கதிர்ப்ப - ஒளிவிட: செயவெனெச்சம். தர: செயவெனெச்சம். என்று, என்றும் எனற்பாலதின் முற்றும்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது. தாரகன் - தாரகாசுரன். அந்தகன் - அந்தத்தைச் செய்தோன்; அன்றித் தாரகனுக்குக் காலன் போன்றவன் என்றலுமாம். சீர் - சிறப்பு, அழகுமாம். (௭௬)

அபய முசலம் வாள்சூல மயில்வே ரேட்டி வலம்வரதம்
தபுதீர் குலிசஞ் சிலைபதுமந் தண்டங் கதைமற் றிடமாக
உபய விராறு கரதலமு மொளிர்வித் தாறு முகந்தோற்றிச்
சுபநன் கருளி யிடர்துமிக்குஞ் சேனு பதிசீர் தொகுப்போரும்.

(இ - ள்.) அபயம் உலக்கை வாள் சூலம் கூர்மை பொருந்திய வேல் அங்குசம் இவற்றை வலப்பக்கத்தும், கொடுத்தல் தீவழிச் செல்லாத வச்சிரப்படை வில் தாமரைமலர் கைச்சிறுகோல் தண்டாயுதம் இடப்பக்கமாகவும் இருகூறுக அமைந்த பன்னிரண்டு கைகளும் விளங்கச் செய்து, ஆறுமுகங்களையும் தோற்றுவித்து, நலங்களைச் சிறப்புற அருளித் துன்பங்களை நீக்குகின்ற தேவர்படைத் தலைவனை முருகப்பெருமானது அழகுருவத்தை ஆக்குவோர்களும்.

அயில் - கூர்மை. தண்டம் - தண்டு; சிறுகோல். கதை - தண்டாயுதம். மற்று: வினைமாற்றுப் பொருளில் வந்தது. உபயம் - இரண்டு. ஒளிர்வித்தல் - தோன்றச் செய்தல்: பிறவினை. சுபம் - நன்மை; அஃதாவது, தம் அடியார் வேண்டும் பொருள்கள். சேனுபதி-படைத்தலைவன், முருகப்பெருமான், தேவர்படைத் தலைவன் ஆகலின், சேனுபதி என்றார். சீர் - அழகுடன்கூடிய திருவுரு. (௭௭)

வரத மணிக்குண் டிகையிரண்டும் வாமத் திருக்கைத் தலமாக்கிப்
புரவு புரியு மபயமொடு புரைதீ ரக்க வடம்வலப்பால்
இரவை யிரிக்கும் வலத்தமைத்திட் டெல்லா வுலகு மினிதளித்துப்
பிரம சாத்த னெனப்பொலிந்த பெருமா னுருவம் பிறக்குநரும்

(இ - ள்.) கொடுத்தல் அழகிய கமண்டலம் இரண்டும் இடப்பக்கத் திருக்கைகளின்மீது வைத்துக்கொண்டு பாதுகாத்தருள்கின்ற அபயத்தோடு குற்றமற்ற உருத்திராக்க மாலையை வலப்புறத்தே இருளையோட்டுகின்ற வலக்கையின்கண் அமைத்து, எல்லா உலகங்களையும் இன்பமாகப் பாதுகாத்து பிரமசாத்தன் (பிரமனை ஒறுத்தவன்) என்னும் திருப்பெயர் கொண்டு விளங்குகின்ற முருகப்பெருமானது திருவுருவத்தை அமைப்போர்களும்.

(வி - ம்.) கொடையும் மணிக்கமண்டலமுங் கொண்ட இடத் திருக்கைகளும், அபயமும், உருத்திராக்க வடமும்கொண்ட வலப்பக்கத் திருக்கைகளை அமைத்திட்டு எல்லா வுலகங்களையும் காத்தருளிய முருகப் பெருமான் திருவுருவம் குறிக்கப்படுகின்றது.

குண்டிகை - நீர்க்கமண்டலம். வாமம் - இடப்பக்கம். புரவு - புரத்தல்; காத்தல். உகரவிகுதிபெற்ற தொழிற்பெயர். அக்கவடம்- உருத்திராக்கமாலை. எல்லா-உலகும் என்றது, மேல் நடு கீழ் என்னும் மூவகை உலகங்களை. பிரமனைக் குட்டிச் சிறைசெய்தாராகலின் 'பிரமசாத்தன்' எனப்பட்டார். பிறக்குநர் - பிறங்கச் செய்வோர், அல்லது பிறக்கச் செய்வோர்; உண்டாக்குவோர். (எ௰)

அல்யாப் பவிழ்க்கும் வலக்கரங்க ளபய மக்க வடந்தாங்க
வெல்யாப் புறுத்த மணிக்கடகமுங் கடியு மிடக்கைத் தலஞ்சேரச்
சொல்யா ழனைய வள்ளிவலந் துன்ன மணிநீ ரரிவாக்கக்
கல்யா ணத்தி னெழில்வாய்ந்த கடவு ளுருவங் காண்போரும்.

(இ - ள்.) இன்பத் துன்பங்களாகிய கட்டுக்களை அவிழ்த்தருளு கின்ற வலப்புறக் கைகளில் அபயமும் உருத்திராக்கக் கோவைகளையும் கொள்ள, ஒளி அடங்கியுள்ள மணியழுத்திய கைக்காப்புகளும் திருவரை யும் இடக்கை பொருந்த, யாழினது இன்னிசையை யொத்த மென் சொற்களையுடைய வள்ளிநாயகியாரை வலப்பக்கத்துப் பொருந்த திருமால் தெளிந்தநீரால் தாரைவார்த்துக் கொடுக்கத் திருமணத் திருக் கோலத்தின் அழகுவாய்ந்த கடவுளரான முருகப்பெருமானது, திரு வுருவைச் செய்வோரும்.

(வி - ம்.) இதில், அபயமும் திருவுருத்திராக்க மணிக்கோவையும், வலக்கைகள் ஏந்தவும், மணியழுத்திய காப்புகளும், திருவரையும் இடக் கைத்தலம் சேரவும், வள்ளிநாயகியார் வலப்புறம் சேரவும், திருமால் தாரைவார்த்துக் கொடுக்காநிற்பத் திருமணக் கோலத்தோ டிருந்த திருவுருவம் இதிற் குறிக்கப் பெறுகின்றது.

அல் - இருள். ஈண்டு இன்பத் துன்பங்கள்; இவையிருக்கையில் துன்பத்தில் ஆழ்த்தி அறிவை மறைத்தலின் அல் எனப்பட்டது. யாப்பு - கட்டு; தளை. எல் - ஒளி. கடகம் - கைக்காப்பு. யாழ். அதன் இசைக்கு ஆகுபெயர். மணிநீர் - தெளிந்தநீர். 'மாசறத் தெளிந்த மணிநீர் இலஞ்சி' என்றும், 'மணிநீரும் மண்ணும்' என்றும் வரும் ஆன்றோர் வழக்கான் அறிக. அரி - திருமால். அன்றி அரச ராவோர் திருமால் சாயலென ஆன்றோரால் கூறப்படுதலின், வள்ளி நாயகியார் தந்தை வேடர்கட்கு வேந்தனுகலான், அரியெனக் கூறினு ரென்றலுமாம். (எக)

கடியி லிடக்கைத் தலமிருவிக் கமலம் வலக்கைத் தலமேந்தி
அடியின் மணிக்கிண் கிணிகவைஇ யமரும் பால வுருத்தோற்றி
முடிக ளுரிஞ வெதிர்வணங்கு முகுந்தன் முதலோர்க் கருள்சுரக்கும்
படியி லெழிற்சுப் பிரமணிய பகவ னுருவம் பயிற்றுநரும்.

(இ - ள்.) திருவரையின்மீது இடக்கையை இருத்தித், தாமரை மலரை வலக்கையிற் கொண்டு திருவடியின்மீது மணிகளழுத்திச் சதங்கை பூண்டு பொருந்திய இளந் திருக்கோலத்தைக் காட்டித், தர தலையிலணிந்த திருமுடிகள் தேய நேரில் கீழ்வீழ்ந்து வணங்குகின்ற திருமால் முதலானோர்க் கருள்சுரந்தருளுகின்ற ஒப்பற்ற அழகுபொருந் திய முருகப்பெருமானது திருவுருவத்தை ஆக்குவோர்களும்.

(வி - ம்.) இதில், திருவரையின்மீது தம் இடக்கையை ஊன்றிக் கொண்டு, வலக்கையில் தாமரை மலரையேந்தி, திருவடிகளில் சதங்கை யணிபூண்டு திருமால் முதலியோர் வணங்க நிற்கின்ற இளந்திருக்கோலத் திருவுருவம் குறிக்கப்பெறுகின்றது.

கடி - அரை; இடுப்பு. இருவி - இருத்தி: இ விகுதிபெற்ற வினையெச்சம். கமலம்: ஆகுபெயர். கிண்கிணி - கிண்கிணென்னும் ஒலியுடைய சதங்கை. கவைஇ - அணிந்து: சொல்லிசை யளபெடை. பாலஉரு - இளந்திருக்கோல வடிவம். உரிஞு - உரிஞ்ச, பட்டுத்தேய! படி - ஒப்பு, உவமம். பகவன் – எப்பொருள்களினும் பங்குகொண்டு உறைவோன். (எஎ)

அழலு நெடுவேல் வாள்பகழி யபயம் வலநாற் கரத் தமைத்துத்
தழல்வச் சிரங்கே டகம்வரதஞ் சாபமிடநாற் கரத்தாக்கி
எழின்மிக் கொழுகு முகமாறு மிலங்கத் தோற்றிக் கிரவுஞ்சம்
புழைபட் டழியப் படைவிடுத்த புத்தே ளுருவம் பொறிப்போரும்.

(இ - ள்.) வருத்துகின்ற நீண்ட வேற்படை வாள் அம்பு அபயம் வலப்பக்கம் அமைந்த நான்கு கைகளினுங்கொண்டு, நெருப்பைப் போன்ற கொடிய வச்சிரப்படை கேடகம் கொடை வில் ஆகியவற்றை இடப்பக்கம் அமைந்த நான்கு கைகளினுங்கொண்டு அழகுமிக்கனவாய் அழகொழுகுகின்ற ஆறுமுகங்களும் விளங்கித் தோன்ற அன்றிற் பறவை வடிவான மலையானது துளைபட்டு அழிந்தொழிய வேற் படையை விடுத்த கடவுளான முருகப்பெருமானது திருவுருவை அமைக் கின்றோர்களும்.

(வி - ம்.) இதில், வேல் வாள் அம்பு அபயம் இவற்றை வலப்புறக் கை நான்கினும், வச்சிரப்படை, கேடகம் கொடை வில் இவற்றை இடப்புறக் கை நான்கிலும் அமைத்து, ஆறுமுகங்களும் பொருந்த அமைத்த அன்றிற்பறவை (கிரவுஞ்சம்) உருவ மலையைத் துளைத்துத் தாளாக்கிய முருகப்பெருமானது திருவுருவம் குறிக்கப் பெறுகின்றது.

அழலும் - நெருப்புப்போல் சுட்டுவருத்துகின்ற. பகழி - அம்பு. சாபம் - வில். புழை - தொளை. படை - வேல். புத்தேள் – கடவுள், பொறிப்போர் - செய்வோர். பொறித்தல் - பதித்தல்; எழுதுதல். கல்லில் உருவைத் தோண்டிச் சமைத்தலும், துணியில், அல்லது தாளில் உருவத்தை எழுதுதலும் ஆம். (எஅ)

புலிங்கங் கதிப்பத் தீத்துய்மும் பொருவே லபயம் வலத்திருகைத்
தலங்கொண் டிடப்பா லிருகரத்துந் தக்க வரதம் வச்சிரமும்
இலங்க வணிந்து திரைக்கடலு மெழுபல் வரையு முலகனைத்தும்
குலுங்கக் கடவு மயிலூர்திக் கோமா னுருவ மியற்றுநரும்.

(இ - ள்.) நெருப்புப் பொறிபறக்கத் தீயைக் கக்குகின்ற போர் செய்கின்ற வேற்படை அபயம் ஆகியவற்றை வலப்பக்கத்து இரண்டு கைகளினுங் கொண்டு இடப்பக்கத்து இரண்டு கைகளிடத்தும் சிறந்த கொடை வச்சிரப்படை, இவைகளை விளங்குமாறு அணிந்து அலைகளை யுடைய கடலும் மேலெழுந்துயர்ந்த பலமலைகளும் உலகங்கள் முழுதும்

நடுங்க ஏறிச் செலுத்துகின்ற மயிலூர்தியையுடைய தலைவனாகிய முருகப்பெருமானது திருவுருவத்தைச் சமைக்கின்றோர்களும்.

(வி - ம்.) இதில், வேற்படை அபயம் ஆகியவற்றை வலப்பால் திருக்கைகள் இரண்டினும், கொடை, வச்சிரப்படை ஆகியவற்றை இடப்பால் திருக்கைகள் இரண்டினும் அணிந்துகொண்டு கடலும் மலைகளும் உலகங்கள் யாவும் ஏறிச் செலுத்துகின்ற மயிலூர்தியைக் கொண்ட முருகப்பெருமானது திருவுருவம் குறிக்கப் பெறுகின்றது.

புலிங்கம் - நெருப்புப்பொறி. கதித்தல் - மிகுதல்; ஈண்டு நெருப்புப் பொறி மிகுதலைக் குறித்தது. உம்முதல் - வெளிவிடுதல். இங்கு நெருப்புக் கக்குதல்: வேற்படைக்கு அடைமொழி. திரை - அலை. எழு: முதனிலைத் தொழிற்பெயர். மேலேயெழுதல், உயர்ந்திருத்தல் என்னும் பொருளது. அனைத்தும் - எல்லாம். உலகம் மேல் நடு கீழ் என முத்திறத்ததாகலின். அவ்வெல்லா உலகமும் என்றபடி. குலுங்க - நடுங்க; அசைய. கடவும் - செலுத்துகின்ற. எதிர்காலம் பெயரெச்சம். கோமான் - தலைவன். முருகப்பெருமான் எல்லாக் கடவுளர்களினும் உயர்ந்தோனாகலான் கோமான் என்றனர். என்னை?

[1] "பாம்புபடப் புடைக்கும் பல்வரிக் கொடுஞ்சிறைப்
புள்ளணி நீள்கொடிச் செல்வனும் வெள்ளேறு
வலவயின் உயரிய பலர்புகழ் திணிதோள்
உமையமர்ந்து விளங்கும் இமையா முக்கண்
மூவெயில் முருக்கிய முரண்மிகு செல்வனும்
நூற்றுப்பத் தடுக்கிய நாட்டத்து நூறுபல்
வேள்வி முற்றிய வென்றடு கொற்றத்
தீரிண் டேந்திய மருப்பின் எழில்நடைத்
தாழ்பெருந் தடக்கை உயர்த்த யானை
எருத்தம் ஏறிய திருக்கிளர் செல்வனும்
...............................................
உறுகுறை மருங்கில்தம் பெறுமுறை கொண்மார்
அந்தரக் கொட்பினர் வந்துடன் காண"

எனவும்,

[2] "செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள் மணவாள"

எனவும் பிற சான்றோர்களும் முருகப்பெருமானைச் சுட்டிக் கூறுதலானும் உணரப்படும். (எக)

ஈண்டு விளங்க வெடுத்துரைத்த வீரெண் ணுருவ மேயன்றி
வேண்டி முருக னெடுத்தருளும் வெவ்வே றுருவ மலைமப்போரும்
மாண்ட வள்ளி தெய்வமட மாதருருவம் வகுப்போரும்
ஆண்ட வீரர் முதலான வமர ருருவ மாக்குநரும்.

(இ - ள்.) இச் செய்யுள்களிடத்தே விளங்குமாறு எடுத்துக்கூறிய பதினாறு திருவுருவேயன்றி விரும்பி முருகப்பெருமான் எடுத்தருளு

1. திருமுரு. கரு0-கஎசு. 2. திருச்செந்தூர்ப்பிள். செங்கீ.

கின்ற இன்னும் வேறுவேறான திருவுருவங்களை ஆக்குவோரும், (யாவர்க்கும் அருளைச் செய்ய) விரும்புகின்ற தெய்வயானையம்மை வள்ளிநாயகியார் திருவுருவங்களை ஆக்குவோர்களும் என்னை ஆட்கொண்டருளிய ஒன்பது வீரர் முதலான தேவர்களின் திருவுருவங்களைப் படைப்போர்களும்.

(வி - ம்.) வீரர் - ஒன்பது வீரர்கள். உமையம்மையாரின் காலடிச் சிலம்பு மணிகளில் தோன்றிய ஒன்பது சத்திகளின்பால் தோன்றியவர்: வீரவாகு, வீரகேசரி, வீரமகேச்சுரர், வீரபுரந்தரர், வீரராக்கதர், வீரமார்த்தாண்டர், வீராந்தகர், வீரதீரர் என்போர். இவர் பிறப்பு முதலியவற்றைக் கந்தபுராணம் துணைவர்வரு படலத்து விரிவுறக் காண்க.

இவ்வரலாற்றை,

[1] "மங்கை சிலம்பின் மணியொன் பதில்தோன்றும்
துங்க மடவார் துயர்தீர்ந்து—தங்கள்
விருப்பால் அளித்தநவ வீரருக்குள் முன்னோன்
மருப்பாயும் தார்வீர வாகு"

எனவரும் கந்தர்கலி வெண்பாக் கண்ணிகளானும் அறியலாம். (௪0)

இம்மைப் பிறப்பிற் பிணிதுமிய வெதிரில் செல்வத் திடைமூழ்கி
மம்ம ருறுக்கும் பகைநீங்கி வைய முழுதும் பணிகேட்பக்
கொம்மை முலையா ரின்பநலங் கூட்டுண் டான்ற மகவுயிர்த்துச்
செம்மற் குணத்துத் தலைநின்று திகழ வாழ்ந்து கடைநாளில்.

(இ - ள்.) எடுத்த பிறப்பில் பிணிகள் தொலைய ஒப்பற்ற செல்வத்தில் திளைத்து மயக்கத்தைத் தருகின்ற பகை நீங்கப்பெற்று உலகம் முழுதும் தம்பணி கேட்டுநிற்ப, இளமை பொருந்திய கொங்கையராகிய இளமகளிரின் இன்பநலந் துய்த்து அறிவறிந்த இருபால் மக்களைப் பெற்றுச் சிறந்த குணத்தின் முதன்மைபெற்று நின்று சிறப்புற வாழ்ந்து பின்னாளிலே.

(வி - ம்.) இம்மை - இப்பிறப்பு; எடுத்தபிறவி. துமிய - கெட. எதிர் - நேர், ஒப்பு. மம்மர் - மயக்கம். கொம்மை - இளமை. கூட்டுண்ணல் - கொள்ளைகொண்டுண்ணல்; மிகத் துய்த்தல். ஆன்ற - நிறைந்த. மக - மக்கள்; குழந்தை. செம்மல் - முதன்மை; சிறப்பு. (௪௧)

திமிரப் படலங் கிழித்தொதுக்குஞ் செறிவெங் கிரண வுருவாய்ந்த
அமர ராகி யொளி பிழம்ப வடுத்த விமான மேல்கொண்டு
திமிரும் புகழெண் டிசைபோர்ப்ப நெடுவான் மலர்மா ரிகடூர்ப்பத்
தமர மிருந்துந் துமிமுழங்கச் சங்கும் வயிரு நனிநரல.

(இ - ள்.) இருட் கூட்டங்களைக் கிழித்து ஓடச்செய்கின்ற திரண்ட விரும்பத் தக்க ஒளிக்கதிர்களை உடைய உருவம் பொருந்திய தேவர் வடிவுபெற்று ஒளிகள் ஒன்றுபடப் பொருந்திய வானூர்தியின் மேலேறி

1. கந்தர் கலி : ௮௭—௮௮.

யிருந்து, உயருகின்ற புகழானது எட்டுத்திசைகளினும் சென்றுசேர நீண்ட வானகத்து அமரர் மலர்மழை பொழிய ஒலிமிக்க துந்துபி (பேரிகை, முரசு) பேரொலி செய்யச் சங்குகளும் கொம்புகளும் மிக முழங்க.

(வி - ம்.) திமிரம் - இருள். படலம் - கூட்டம்; திரள். அமரர்- தேவர். பிழம்ப - கூட்டத்தையுடைய: பன்மை. விமானம்-வானூர்தி. 'வலவன் ஏவா வானவூர்தி' எனப் பிறருங்கூறுப. போர்ப்ப - மூட; நிறைய. வான்: ஆகுபெயராக வானுலகத்துள்ளாரைக் குறித்துநின் றது. மலர்மாரி - மலராகிய மாரி: இருபெயரொட்டு. தமரம் - ஒலி. துந்துபி - பேரிகை. இதனை இக்காலத்தவர் நகரா' எனக் கூறுவர். வயிர் . ஊதுகொம்பு; பெருவங்கியம், சிறுவங்கியம் என வழங்கும் இயங்கள். சங்கும் கொம்பும் பேரிகையுங் கொண்டு, தலைவர் களையோ பண்பாலும் அன்பாலும் ஒழுக்க முதலிய உயர்வு மிக்காரையோ வரவேற்குங்கால் முழக்குவது மரபு. அம்முறையில் இறைவன் முருகப் பெருமான் திருவுருவைப் பல்வகை உருவில் தீட்டி வணங்கலுறுவார்க்கு வரும் சிறப்பு இஃதென இதில் குறித்தவாறு. (௮௨)

களிவண் டெனநின் றிறுமாக்குங் கண்ணின் வழியே மனஞ்செல்ல
ஒளிவண் டணிந்த செம்பதும முறழ்கை வழியே விழிநடப்பத்
தெளிமின் னனைய வரமகளிர் தெய்வ நடன மெதிர்குயில
நளிதண் கடலி னமிழ்தென்ன நரம்புங் குரலு மிடைமயங்க.

(இ-ள்.) கள்ளுண்டு களிக்கும் வண்டென்று கூறுமாறு நிலைபெற் றுச் செருக்குக் கொள்கின்ற கண்களின்வழியே மனம் போகாநிற்ப, ஒளி பொருந்திய வளையல்களணிந்த செந்தாமரை மலரையொத்த கைகள் செல்லும் வழிக்கண், கண்கள் செல்ல, தோன்றிய மின்னற்கொடி போன்ற அரமங்கையர்களின் தெய்வத்தன்மை பொருந்திய நடனம் எதிரே நடைபெறப் பெருமைபொருந்திய குளிர்ச்சியையுடைய கடலில் தோன்றிய அமிழ்தென்னும்படி யாழின் இசையும் மிடற்றுப்பாடல் இசையும் நடனத்தின் இடையிடையே தோன்றி ஒன்றுபட.

(வி - ம்.) களி - களிப்பு; கள்ளுண்டலால் உண்டாகும் நிலை யில்லா மகிழ்ச்சி. இறுமாத்தல் - செருக்குறல். வானரமங்கையர் நடனங் குறித்துரைக்கின்றார்; நடமிடும் மகளிர், கண்களின் குறிப்பு வழியே மனமும், கைகளின் அபிநய வழியே கண்களும் செல்லுத லால், அதனையே ஈண்டு விளக்கியுரைத்தார். தெளி - தெளிந்த, வெளித் தோன்றிய. மின் - மின்னற்கொடி. குயில - நடக்க. நளி - பெருமை. [1]"தடவும் கயவும் நளியும் பெருமை" என்பது தொல்காப் பியம். நரம்பு, குரல் என்பன ஆகுபெயராக அவ்வவ் விசையைக் குறித்து நின்றன. (௮௩)

முற்ற வுணர்ந்தோர் முதுக்குறைவு முரியு மகளிர் கரத்தேந்திக்
கற்றைக் கவரி புடையிரட்டக் கதிர்வெண் கவிகை மேனிழற்ற
ஒற்றி மணிவேத் திரக்கரத்தோ ருறுமா சனத்தின் றிரள்விலக்க
வெற்றி யிமையோ ரெதிர்கொள்ள வெய்து விசும்பின் வழிநீந்தி.

(இ - ள்.) உலகியலும் அறிவியலும் முழுதும் அறிந்துணர்ந்தோரின் பேரறிவையும் கெடுக்கின்ற மங்கையர்களின் கைகளில் கொண்டு திரளாகிய வெண்சாமரையை இருபக்கங்களினும் வீசிக்கொண்டுவர, ஒளிபொருந்திய வெண்கொற்றக் குடைமேலே நிழல்செய்ய அழகிய பிரம்பைக் கைக்கொண்டோராகியவழி விலக்குவோர் பிரம்பால் அடித்து மிக்க சனத்தின் கூட்டத்தை வழிவிலக்கிக் கொண்டுவர, வெற்றிபொருந்திய தேவர்கள் எதிர்கொண்டு நிற்ப, விரைவில் வானுலகுழியைக் கடந்து சென்று.

(வி - ம்.) மிக்க அழகும் இளமையுமுடைய மகளிர் என்பதைக் குறிக்க. 'முற்ற......... முரியும் மகளிர்' என்றார். முரியும் என்னும் நல்வினை, ஈண்டுப் பிறவினைப் பொருளில் வந்தது. முதுக்குறைவு - பேரறிவு. உம்மை : உயர்வு சிறப்புக் குறித்துவந்தது. கற்றை - திரள் ; சேர்க்கை. பல வெண்மயிர்கள் ஒன்றாகத் திரண்டது. கவரி - வெண்சாமரை. கவரிமானின் வால் மயிர் : முதலாகு பெயர். கவிகை - குடை. நிழற்ற - நிழல்தர. ஒற்றி - அடித்து, புடைத்து. வேத்திரம் - பிரம்பு. மாசனத்திரள் - மிக்க சனக்கூட்டம். எதிர்கொள்ள - வருகையை எதிர்பார்த்து நிற்ப. வெய்து - விரைவு. (அச)

துளிக்கும் பசுந்தேங் கற்பகப்பூஞ் சோலை வதிந்து குங்குமத்திற்
குளிக்குங் களப முலைமடவார் கொழுந்தீங் கலவி யமிழ்தளைந்து
களிக்குங் களியான் வருவைகல் கழித்து நாக மழிகாலை
அளிக்கும் பிரம னுலகெய்தி யரிய போக நனிநுகர்ந்து.

(இ - ள்.) சிதறுகின்ற பசிய தேனையுடைய கற்பகத் தருக்களையுடைய அழகிய பொழிற்கண் பன்னாள் இருந்து, குங்குமத்தில் கலந்த கலவைச் சாந்து பூசப்பட்ட கொங்கைகளையுடைய இளமங்கையர்களின் கொழுத்த இனிமை பொருந்திய புணர்ச்சியின்பமாகிய அமிழ்தில் மூழ்கி, மகிழ்கின்ற மகிழ்ச்சியினால் வருகின்ற நாள்களைப் போக்கி, வானுலகம் அழிவெய்துகின்ற காலத்தில் கிட்டுகின்ற பிரமன் உலகாகிய சத்தியவுலகத்தை யடைந்து அரிய இன்பத்தை ஆங்கே மிக நுகர்வு செய்து.

(வி - ம்.) துளிக்கும் - சிதறுகின்ற ; பிலிற்றுகின்ற. பசுந்தேன் - செவ்வி கெடாத தேன். குங்குமத்தில் குளிக்கும் களபம் - குங்குமத்துடன் புழுகும் கத்தூரி முதலியனவும் கலந்துள்ள கலவைச் சந்தனச் சேறு. மடவார் - இளமங்கையர். கலவி - கலத்தல் ; புணர்தல். அமிழ்து - அமிழ்தையொத்த இன்பம். நாகம் - வானுலகம். அளிக்கும் - தருகின்ற ; கிட்டுகின்ற. பிரமன் உலகு - நான்முகன் உலகம். நனி - மிக : உரிச்சொல். மிகுதிப் பொருள் குறித்துவந்தது. [1]'சால உறுதவ நனிகூர் கழிமிகல்' என்பது நன்னூல் நூற்பா. (அரு)

அந்த வுலக மழிகாலை யரவப் பள்ளி நெடுமால்வை
குந்த நிலவிப் பெரும்போகங் கொள்ளை கொண்டங் கவ்வுலகும்
சிந்து மளவிற் றிப்பியமாய்த் திகழ்ந்த கந்த வுலகணைந்திட்
டெந்த வளமு மெதிர்நிற்ப வினிது வாழ்ந்து வீடுறுவார்.

(இ - ள்.) அப்பிரமலோகமும் அழிவுற்ற காலத்து பாம்பணைப் பள்ளியையுடைய நீண்ட திருமாலின் வைகுந்த வுலகத்தைச் சேர்ந்து வாழ்ந்து மிக்க இன்பத்தை அங்கும் நுகர்ந்து அந்தவுலகமும் அழிந்த காலத்தில் மேன்மையாக விளங்குகின்ற கந்தவுலகத்தைச் சேர்ந்து எல்லாவகை இன்பமும் ஒருங்கே கிட்ட இன்பத்துடன் வாழ்ந்து பின்னர் வீடுபேறடைவார்.

(வி - ம்.) அரவப்பள்ளி-ஆதிசேடன் என்னும் பெரும்பாம்பையே படுக்கைப் பாயலாகக்கொண்டு பாற்கடலிலே அறிதுயில் செய்தருளுவர் என்று திருமால் வரலாறு கூறும் பாகவதம் முதலிய நூல்கள் உரைக்கும். திருமால், நிலங்கடந்த நெடுமுடியண்ணல் ஆதலால் 'நெடுமால்' எனப்பட்டார். சிந்துதல் - அழிதல். திப்பியம் - திவ்விய மென்னும் வடசொற் சிதைவு. கந்தவுலகு - கந்தப்பெருமானது திருவுலகம். எதிர்நிற்ப - நேரே எளிதில் தேடாதுகிடைப்ப என்னும் பொருளது.

'இச்சாஞானம்' எனத் தொடங்கும் இப்படல (கூசு)ச் செய்யுள் முதல் இதுவரை ஒரே பொருள்மேல் அடுக்கி முற்றுறாது தொடர்ந்து வந்த குளகச் செய்யுட்கள், இதனோடு முற்றுப்பெற்றது. (அசு)

மல்கும் பொருளின் றிரட்கேற்ப மாசைக் குவையா லிரசதத்தால்
புல்கு மேனைத் தாதுவாற் பொற்ப வுருவங் குயிற்றுநர்பால்
அல்கும் பயனெவ் வளவாமவ் வளவும் பொருளா லல்கூர்ந்து
மெல்கு மவர்சித் திரித்தேனும் விரும்பிற் பயப்ப துண்மையே.

(இ - ள்.) தம்பால் நிறைவுற்ற பொருளின் தொகுப்புக்கேற்பப் பொன்னினாலும் வெள்ளியாலும் சேர்ந்த செம்பு முதலிய மற்றை உலோகங்களாலும் அழகுபொருந்த முருகப்பெருமானது திருவுருவத்தை ஆக்குவோரிடத்துக் கிட்டுகின்ற அறப்பயன் எவ்வளவாகுமோ அவ்வளவு பொருளினால் வறுமையுற்று மெலிவடைவோர் தம் மனத்திடத்து உருவப்படுத்தியாவது விருப்பங்கொண்டால் பயன்கிடைப்பது உண்மையாகும்.

(வி - ம்.) மாசை - பொன். குவை - கட்டி. இரசதம் - வெள்ளி. தாது - உலோகங்கள். அல்கும் - சேருகின்ற. மெல்குமவர் - மெலிவடைவோர். சித்திரித்தில் - மனத்தில் உருவமாகக் கொள்ளுதல். வறுமைப்பட்டோர் இறைவன் திருவுருவத்தை எந்த உலோகங்களானும் அமைத்தல் ஒல்லாது. அத்தகையோர் மனத்தால் இடைவிடாது அவ்வுருவமைத்ததாகக் கருதி வரின், முருகப் பெருமானுக்குப் பொன் வெள்ளி முதலியவற்றால் உருவஞ் சமைத்தோர்க்குக் கிட்டும் பயன் யாவும், கிட்டுமென, திருவுருவமைத்து வழிபடும் பேறு குறித்துக் கூறினார்.

இக்கருத்தை அறுபான் மும்மைத் தொண்டருள் ஒருவராய பூசலார் நாயனார் என்பார் திருநின்றவூர்க்கண் தம் மனத்தில் திருக்கோயில் எடுப்பதாகக் கருதிக் கருதி முற்றுவித்ததாகக்கொண்டு அதில் இறைவன் எழுந்தருளுதற்குக் குடமுழுக்கு நாளொன்றையுங் குறித்திருந்தனர். அதுகாலை ஆட்சிசெலுத்திய பல்லவ வேந்தன் காஞ்சிபுரத் திறைவற்குக் கற்றளி யெடுப்பித்து முற்றுவித்து, அவனும் அக்கோயிலுக்குப் பூசலார்கொண்ட நாளில் குடமுழுக்குச் செய்ய ஏற்பாடு செய்

திருந்தான். அன்றைக்கு முதனாள் இரவு வேந்தன் கனவில் இறைவன் காட்சி கொடுத்து 'மன்னவ! எமக்காகத் திருநின்றவூரில் பூசலார் அமைத்த திருக்கோவிலில் நாளை யாம் குடிபுகுவேம்; 'நீ வேறொரு நாளில் குடமுழுக்குச் செய்க' என்றருளினர். பின்னர் அரசன் திடுக்கிட்டெழுந்து, இறையருளுக்கு வியந்து தன் பரிவாரங்களோடு திருநின்றவூர் சென்று பார்க்குங்கால், புதிதாக அமைத்த கோயிலொன்றுங் கண்டிலன்; மன்னன் அங்குள்ளார் பலரை வினவியும் அறியானாய்ப் பூசலாரைக் கண்டுகொண்டான்; அவர் நாம்தாம் உள்ளத்தில் கோயிலையெழுப்பினேம்; அதற்கு இன்று குடமுழுக்கு விழா என்பதையும் விளக்கிக் கூறினர். பின் அரசன் வணங்கிச் சென்றனன். இதனை இறைவன் கூற்றாகவரும் பெரியபுராணச் செய்யுள் இனிதுணர்த்துவதாகும்.

[1] "நின்றவூர்ப் பூசல் அன்பன் நெடிதுநாள் நினைந்து செய்த
நன்றுநீ டால யத்து நாளைநாம் புகுவோம் நீயிங்
கொன்றிய செயலை நாளை ஒழிந்துபின் கொள்வாய்"

என முழுமுதற் பொருளான இறைவனே கூறினானெனின்? அகத்திற் கொள்ளும் உண்மையன்பே இறைவற்கு உகந்ததென்பது பெறப்படும். அதனால் ஈண்டும் முருகப்பெருமானுக்குச் சித்திரித்தேனும் திருவுருவமைக்க மனத்திற் கருதுவோர்க்கு உருவமைத்தோர்க்கு எய்தும் பயன் யாவும் பயப்பது உண்மையே என்றார். (அஎ)

சரியை கிரியை யோகத்துத் தலைநின் றவர்கள் வேலுயர்த்தோற்
குரிய வுருவி னொன்றாக வுஞற்றிற் றியானித் தேத்தெடுப்பின்
அரிய பூசை விழாவாதி யாற்றி னவர்கள் பெறும்பேற்றைத்
தெரிய வுரைத்த லரிதாகுந் தெள்ளித் தெளிந்த முனிவரனே.

(இ - ள்.) சரியை கிரியை யோகமாகியவற்றில் மேலோங்கி நின்றோர்கள் வேற்படையை மேலாகக்கொண்ட முருகப்பெருமானுக்குரிய திருவுருவங்களில் ஒன்றேனும் செய்தாலும், அவற்றுள் ஒன்றைக் கருதிவந்தாலும் தொழுது போற்றினாலும் அருமையான வழிபாடு திருவிழா முதலியன செய்தாலும் அவர்கள் அடைகின்ற பெறலருஞ் சிறப்பை விளங்குமாறு எடுத்துரைப்பது அருமையதாகும்; மிகத் தெளிவுபெற்ற முனிவர்களுட் சிறந்தோனே.

(வி - ம்.) சரியை - புறத்தொழில் மாத்திரையால் உருவத் திருமேனியை வழிபடுதல். கிரியை - சிவாகமங்களில் விதித்தவாறு சிவபெருமானை அகத்தும் புறத்தும் வழிபடுதல். யோகம்-ஐம்புலன்களைத் தன் வயப்படுத்திக் கொண்டு மனத்தை இறைவன்பால் நிறுத்துதல். இம் மூவகை நெறிக்கண் நின்றாரும் திருமுருகப்பெருமான் திருவுருவமைத்து வழிபடின், அதனால் அவர்கட்கு வரும் அரும்பயன்களை அளவிட்டுரைத்தல் ஒல்லாது; அவர் நினைந்த நல்லனயாவும் ஒருங்கே கிட்டும் என்றபடி. தெளிந்த முனிவரன் - அறிவுத் தெளிவுபெற்ற அகத்திய முனிவன். (அஅ)

பலகூ றுவதே னருள்புரிந்து பணிக்குந் தேவர் பலருள்ளும்
இலைவேற் படைகைத் தலத்தமைத்த விறையே நனிமிக் குயர்தேவன்

நிலனுர் தலம்பல் லவற்றுள்ளு நிகழ்நாற் பொருளு மெளிதளிக்கும்
தலமா வெமக்கு மருள்புரியத் தக்க வதுவே தலமதனுல்.

(இ - ள்.) இன்னும் பலவாறுகச் சொல்லுவதென்ன? நாம் அருள் செய்து பணியவைக்கின்ற தேவர்கள் பலரினும் இலைவடிவமைந்த வேற்படையைத் திருக்கையிடத்துக் கொண்ட முதல்வனாகிய முருகப்பெருமானே மிகமிக உயர்ந்த தேவனுவன்; உலகத்தின்கட் சிறந்த தலங்கள் பலவற்றினும் யாவரும் கொள்ளப்படுகின்ற அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கு அரும்பொருளையும் எளிதிற்கொளத் தருகின்ற திருத்தலமாக எமக்குங்கூடத் திருவருள் புரியத் தகுதிவாய்ந்ததான அத் திருத்தணிகைத் தலமே தலமாகும் ஆதலால்.

(வி - ம்.) பணிக்கும் - பணியவைக்கும்: பிறவினை. பணிக்கும் என்பதற்குப் பணிகொள்ளச் செய்யு மென்றலுமாம். இலைவேல் - இலை போன்ற வடிவமைந்த வேற்படை: உவமத் தொகை. நனிமிக-மிகுதி யென்னும் பொருட்டு. உயர்ந்தோங்கு நெடுவரை யென்பதுபோல. ஒருபொருட் பன்மொழி. நிலன் - நிலம்; ஈண்டுத் திருத்தலம். நாற் பொருள் - நால்வகைப் பொருள். அவை, அறம் பொருள் இன்பம் வீடு என்பன. இறைவனுகிய சிவபெருமானுக்குப் பிரணவப் பொருளை உணர்த்தியது இத்திருத்தணித் தலத்திலாதலால், தமக்கு எளிமையின் முருகப்பெருமான் பிரணவப் பொருளை அருளிய சிறப்புத் தோன்ற அப் பெருமானே, 'எமக்கும் அருள்புரியத் தக்க அதுவே தலம்' என்றனர். (அக)

ஆங்குப் படர்ந்து ஞானசத்தி தரனை யகத்தா மரையிருவி
ஓங்குந் தவத்தான் முனிவரநி னுள்ளம் விழைந்த விழைவெல்லாம்
பாங்கு பெறத்தெவ் வுதியென்று பணித்த காசி நகரிறைவன்
பூங்கட் கமல பதமிறைஞ்சி விடைகொண் டினிது புறம்போந்தான்.

(இ - ள்.) அகத்திய முனிவனே! நீ அத்திருத்தணிகைத் தலத்துக்குச் சென்று உண்மையறிவைக் கொண்டிருப்பவனுகிய முருகப்பெருமானை உனது உள்ளத் தாமரைமலர்க்கண் இருக்கச்செய்து, மிக்க தவத்தினனே நின்மனம் விரும்பிய விருப்பம் யாவும் சிறப்பாக அமையுற நீ கொள்வாயாக வென்று மொழிந்த காசிநகர்க் கிறைவனுகிய சிவ பெருமானுடைய பொலிவுபெற்ற இதழ்களையுடைய செந்தாமரை போன்ற திருவடிகளை வணங்கி விடைபெற்றுக் கொண்டு இன்பமாகப் புறப்பட்டு வெளியேறினுர் அகத்தியர்.

(வி - ம்.) படர்ந்து - சென்று. ஞானசத்திதரன் - ஞானசத்தியைக் கொண்டவன்; உண்மையறிவுடையோன். அகத்தாமரை - மனமாகிய தாமரைமலர்: இருபெயரொட்டுப் பண்புத்தொகை. தாமரை, மலருக்கு ஆகுபெயர். பாங்கு, உரிமையென்னும் பொருட்டு. 'பாங்குழ குரிமை பக்க மாகும்' என்பது, சேந்தன் திவாகரம். தெவ்வுதி - கொள்வாயாக: முன்னிலை யேவலொருமை வினைமுற்று. தெவ் - கொள்ளுதல். 'தெவுக் கொளற் பொருட்டே' என்பது தொல்காப்பியம். பணித்த - சொல்லியருளிய. காசிநகர் இறைவன் - ஈண்டுச் சிவபெருமான்: இடத்தால் வந்த பெயர். பூ - பொலிவு. கண் - இடம். மலருக்கு இடமாக இருப்பது அதன் இதழ்; ஆதலால் இடமெனப் பொருள்

கூறப்பட்டது. கமலபதம்: உவமத் தொகை. உவமவுருபும் பொதுத் தன்மையும் தொக்குநின்றன. புறம் போந்தான் - வெளிவந்தான். (௯௦)

அரங்கும் வினைகள் வழிக்கொள்ளு மாற்றன் முனிவன் வழிக்கொண்டு
குரங்குந் துணர்ப்பல் லவச்சாகைக் குளிர்பூஞ் சோலை வானிழன்ற
புரங்கோ லிறைவன் பஃறலமும் போற்றி முழவ மெனக்குயில்கள்
இரங்கும் பொதும்பர்ப் பருப்பதத்தை யெய்தி வணங்கி யியங்கினான்.

(இ - ள்.) கெடுகின்ற தீவினைகள் வழிக்கொண்டு ஓடுகின்ற தவ ஆற்றல் பெற்ற அகத்திய முனிவர் நடந்துசென்று, சூழ்ந்திருக்கின்ற பூங்கொத்துக்களையுடைய தளிர்களையுடைய கிளைகளையுடைய குளிர்ந்த அழகிய சோலைகள் வானத்தளவு நிழல்தரும் முப்புரமெரித்த சிவபெருமான் எழுந்தருளியிருக்கின்ற பல தலங்களையும் வணங்கி வாத்திய இசை யென்னும்படி குயில்கள் கூவுகின்ற சோலைகளையுடைய திருப்பருப்பதத்தை அடைந்து வணங்கி வழிச் செல்வாரானார்.

(வி - ம்.) அரங்கும் - கெடுகின்ற. வினை - நல்வினை, தீவினைகள். வழிக்கொள்ளல் - ஓடிப்போதல். ஆற்றல் - தவத்தான்வரும் வல்லமை. குரங்குதல் - வளைதல்; சூழ்ந்திருத்தல். துணர்-பூங்கொத்து. சாகை-கிளை. நிழன்ற - நிழல்தந்த: ஈண்டு நிகழ்காலம். சிறப்புப்பற்றி இறந்தகாலமாயிற்று. புரம் - திரிபுரம். முழவம் - முழவோசை, பொதும்பர் - சோலை. பருப்பதம் - சீபருப்பதம். (௯௧)

பூங்காவ கத்துப் பசுங்கோட்டுப் புதன்மென் மயிரின் வாலணில்கள்
மூங்கா வரற்றக் குறுந்தாள மோட்டா மைகடாழ் புனலழுந்தி
நீங்கா மகிழ்ச்சித் தலைநிற்கு நெடுவெண் டரங்க முகலிதழீஇ
ஓங்கா நின்ற தென்கயிலை யுற்றுப் பணிந்து நெறிச்சென்றான்.

(இ - ள்.) பூஞ்சோலைக்கண் பசிய கிளையிடத்துப் புதர்போன்ற மெல்லிய மயிரமைந்த வாலையுடைய அணில்களும் கீரிகளும் கீச்சிட்டுக் கத்தக் குறுகிய கால்களையுடைய வயிற்றினையுடைய ஆமைகள் ஆழமுள்ள நீர்நிலைக்கண் அமிழ்ந்து இடையறாத மகிழ்ச்சி மேற்கொண்டு நிற்கும் தன்மைத்தாய நீண்ட வெள்ளிய அலைகளையுடைய பொன்முகரியாற்றில் மூழ்கி வந்து உயர்ந்துள்ள தென்கயிலையாகிய திருக்காளத்தி மலையைச் சார்ந்து அங்கு எழுந்தருளியிருக்கின்ற காளத்திநாதரை வணங்கி மீண்டு வழிநடந்து செல்லலானார்.

(வி - ம்.) பூங்கா - மலர்களையுடைய சோலை. புதல் - புதர்; அணில்களின் வால்மயிர்கள் புதல்போற் கிளைத்து அடர்ந்திருத்தலான், 'புதல் மென்மயிரின் வாலணில்கள்' என்றார். மூங்கா-கீரி. அரற்ற - கத்த. குறுந்தாள - குறுகிய கால்களையுடைய. மோடு - வயிறு தரங்கம் - அலை. முகலி - பொன்முகரி ஆறு. தழீஇ - தழுவி; மூழ்கி, நீராடி யென்னும் பொருளது. தென்கயிலை - திருக்காளத்தி மலை; அதிலுள்ள காளத்திநாதரை உணர்த்தலால் இடவாகு பெயர். நெறிச் சென்றான் - வழிநடந்து செல்லலானார். (௯௨)

போதா வினம்பூ ணிகள்கம்புள் புளற்பால் பிரிக்கும் புண்ணேமி
தேதா வெனப்பண் முரன்றெறிந்து சிறைவண் டினஞ்சூழ் மலர்ப்பிறங்கல்

மீதார் தரச்சென் றகன்வயல்கள் விளைத்துத் தவழ வெதிர்நோக்கி
ஈதா நந்தி நந்தினியென் றெழுந்த களிப்பி னதிற்றோய்ந்தான்.

(இ - ள்.) பெருநாரைகள், இனிய மேக நீரை உண்கின்ற வானம் பாடிப் பறவைகள், சம்பங்கோழிகள், நீரையும் பாலையும் வெவ்வேறு கப் பிரித்தெடுக்கும் அன்னப் பறவைகள், சக்கரவாகப் பறவைகள், சிறகினையுடைய வண்டுக் கூட்டங்கள் தேதா என்று பண்ணிசைத்துப் பாடி ஒன்றோடொன்று போர்செய்து சுற்றித்திரிகின்றதாய பூக்களை யுடைய திருத்தணிகை மலையின்மேல் நீர் பெருக்கெடுத்துப்போய் அகன்ற வயல்களில் நெற்களை விளைவித்து மேற்செல்லுதலை நேரே கண்டு, நந்தி நந்தினியென்னும் பெயரையுடைய பொய்கை இதுவா மெனக் கருதி அதனால் தோன்றிய மகிழ்ச்சியால் அதில் மூழ்கினார்.

(வி - ம்.) போதா - பெருநாரை. போதா இப்பொருட்டாதலை 'அன்னம் போதா நன்னிறக் கம்புள்' என்னும் அகப்பொருள் விளக்க நூற்பாவான் அறிக. இன் + அம்பு + ஊணிகள்—இனம்பூணிகள் எனப் புணர்ந்தது. இன் - இனிய; அம்பு - நீர்; ஊணிகள்—உண்பவை. இக் காரணத்தால் வானம்பாடிப் பறவைகளை உணர்த்திற்று. வானம்பாடி யென்னும் சிறுபறவை மேகமண்டலம்வரை பறந்து சென்று பாடிக் கொண்டு மேகத்தினின்று கசிந்து சொட்டுகின்ற நீரினை உண்ணு மென்பது, பண்டைக்காலத்துச் சான்றோர் கண்டறிந்த உண்மையாகும். இவ்வுண்மையை,

1 ''தற்பாடிய தளியுணவின்
புட் டேம்பப் புயல்மாறி
வான்பொய்ப்பினும் தான்பொய்யா,''

என்றும்,

2 ''துளிநசை வேட்கையான் மிசைபாடும்புள்''

என்றும்,

3 ''வானம்பாடி மேகத்துப் பிறந்த துளியை
நோக்கிப் பாடுமாறுபோல''

என்றும்,

4 ''நீரிடும்பை புள்ளினுள் ஓங்க லறியும்''

என்றும் கூறுதலின் அறியப்பெறும். அதனால் 'இனம்பூணிகள்' என்றார். புனல்பால் பிரிக்கும்புள் - அன்னப்பறவை. நேமி-சக்கரவாளப் பறவைகள். இவை காதலிற் சிறந்தன; பெடையும் சேவலும் இணை பிரியாது வாழுமென்ப. தேதா: இசையொலிக் குறிப்பு. எறிந்து - அடித்து; மோதிக்கொண்டு. பிறங்கல் - மலை. மீதுஆர்தர என்னும் வினையால் வினைக்கு முதன்மையாகிய நீர் அவாய் நிலையால் வருவித் துரைக்கப்பட்டது. நந்தி நந்தினி யென்பது, ஆங்குள்ள தடாகத்தின் பெயராகும். இத்தடாகம் இப்பெயராதலை கடலகடும், இனைய அகழ்ந்து புகுதீர்த்தம் இரைக்கும் நந்தி நந்தினியும் (திருநகர: கஉஉ) என இங்

1. பட்டினப்பாலை: ௩-௬.    2. கலித்தொகை: சக.
3. சிவகசிந்: உஅகஎ. நச், உரை.    4. நான்மணிக்கடிகை: கஎ.

நாலகத்து முற்கூறப்பட்டமையானும் அறியப்பெறும். தோய்ந்தான்-மூழ்கினான்; குளித்தான். (௬௩)

திரையும் புனலேய்ந் தெழுந்தாங்குச் செய்யுங் கடன்க ணிரப்பியபின்
கரையி னிவர்ந்தா னவ்வேலைக் கதித்த வழியின் கீழ்பாங்கர்
வரையென் றயிர்க்கு மாடநிரை வயங்கி வெளியி னிடைதூர்த்த
விரைசென் றெதிரும் வீரட்ட காச நகரங் கண்ணுற்றான்.

(இ - ள்.) மடங்குகின்ற நீரில் மூழ்கி மேலெழுந்து வந்து அவ்விடத்தே செய்கின்ற கடமைகள் யாவற்றையும் முடித்துக்கொண்டபின், கரைமீது ஏறினான். அதுகாலை நீண்ட வழியின் கிழக்குப் பக்கத்தில் மலையென்று ஐயங்கொள்ளுமாறு மாட வரிசைகள் விளங்கி மேல் வெளியிடத்தை அடைத்துள்ள பலவகை மணங்களும் எதிர் நோக்கி வருவதாய வீராட்டகாச மென்னும் நகரைக் கண்டனர்.

(வி - ம்.) திரைதல் - மடங்குதல். மடங்கி மடங்கிச் செல்லுதலால் அலைக்குத் திரை யென்னும் பெயர் வந்தது. செய்யுங்கடன்கள். நீராடியபின் செய்யத்தக்கவை; தோய்த்துலர்ந்த ஆடை உடுத்தல்; கடவுளை வழிபடல் முதலியன. இவர்ந்தான் - ஏறினான். கதித்தவழி-நீண்டவழி; நேரானபாதை. வரை - மலை. அயிர்க்கும்-ஐயங்கொளச் செய்கின்ற. இடை தூர்த்த - இடைவெளியில்லாமல் அடைத்துள்ள. விரை - மணம்; தொழிற்பெயர். வீராட்டகாசம் - சிவபெருமானுக்கு முருகப்பெருமான் பிரணவப் பொருளை உபதேசித்த திருத்தணிகை நகரிலுளதாகிய இடம். அதனால் திருத்தணிகைக்கு வீராட்டகாசம் என்னும் பெயருண்டு. (௬௪)

வேறு

கோடுகொண்டு லாவுறுங் குலாவுமாறு கான்மரீஇ
ஆடுநீடு சிறைபடு மணங்குவேங்கை மாறுகொண்
டோடும்வார்ந்த பட்டநெற்றி யுற்றுநிற்கு மின்னவாம்
தோடுகொண்ட விருதிறத்த தும்பிச்சூழ லெங்குமே.

(இ - ள்.) இரண்டு கொம்புகளுடன் செல்லும் (மரக்கிளைகளில் வாழும்); மாறிமாறி நடக்கின்ற கால்களைக்கொண்டு உலாவாநிற்கும் (ஆறுகால்கள் கொண்டு பறந்து திரியும்); அசைந்து செல்லும் (ஆடிநிற்கும்); நீண்ட சங்கிலிகளால் கட்டப் பெற்றிருக்கும் (நீண்ட சிறகுகளுடையவாயிருக்கும்); வருத்துகின்ற புலியுடன் பகைகொண்டு ஓடும் (அழகிய வேங்கைப் பூவைக்கண்டு மாறுபாடுற்று ஓடாநிற்கும்); நீண்ட முகபடாத்தை நெற்றிக்கண் கொண்டிருக்கும் (நீண்ட தடாகத்தின் மேலிடத்தில் சார்ந்திருக்கும்); ஆகலான் இனமாகக்கூடிய இருவேறு வகைப்பட்ட யானைக்கூட்டம் (வண்டுக் கூட்டம்); எல்லா இடங்களிலும் இத்தன்மையுடையனவாக இருக்கும்.

(வி - ம்.) கோடு - யானைத்தந்தம்; மரக்கொம்பு. மாறுகால். ஆறுகால் எனப் பிரிக்க. ஆடும்-அசையும்; ஆடிநிற்கும். சிறைபடும் - சங்கிலிகளால் கட்டப்பெற்றிருக்கும்; சிறகுகள் உடையவாயிருக்கும், வேங்கை மாறுகொண்டோடும் - புலியுடன் பகைகொண்டு ஓடும்;

வேங்கைப் பூவைப் பார்த்து மாறுபட்டுச் செல்லும். பட்டம் நெற்றி உற்று இருக்கும் - முகப்பட்டத்தை நெற்றிக்கண் கட்டப்பெற்று விளங்கும்; தடாகத்தின் மேலிடத்தைப் பொருந்தி நிற்கும். இருதிறத்த தும்பி - இரண்டு வெவ்வேறான தும்பிகள். தும்பியென்பது யானைக்கும், வண்டுக்கும் பெயராதலால், சிலேடையணி நயந்தோன்ற 'தும்பிச் சூழல் எங்குமே' என்றார். இது செம்மொழிச் சிலேடையாக அமைந்திருத்தலை அறிக. (௰)

நித்திலங்கொ ழித்தலு நிரந்துவண்ட லாடலும்
ஒத்துநீர்ப டிதலு மொண்மலர ணிதலும்
தொத்தலர்ந்த பைம்பொதும்பர் சூழ்தலும்பொ ருந்திய
பைத்தெழுந்த விருதிறத்த பண்ணையிட்ட மெங்குமே.

வயல்கள் :

(இ - ள்.) முத்துக்களை ஓரங்களில் ஒதுக்குதலும், பரந்து வண்டல் மண்ணாக ஆக்குதலும், ஒன்றுபட்டு நீர் ஓரிடத்தே தங்குதலும், ஒளி பொருந்திய மலர்களை மேலிடத்துக் கொண்டிருத்தலும், பூங்கொத்துக்கள் மலர்ந்த பசிய சோலைகளைச் சூழ்ந்து கிடத்தலும் ஆகிய பொருந்திய பசிய பயிர்கள் வளருகின்ற மிக்க மேன்மையான வயல் தொகுதிகள் யாண்டும் பரந்துள்ளன.

மகளிர் கூட்டம் :

முத்துக்களைச் சிறு சுளகுகளால் கொழித்தலும், பரவிச் சிற்றிலிழைத்துச் சிறுசோறாக்கி விளையாடுதலும், ஒன்றுகூடி நீரிற் குளித்து விளையாடலும், சிறந்த மலர்களைப் பறித்துத் தலையிற் சூடிக் கொள்ளுதலும், பூங்கொத்துக்கள் மலர்ந்துள்ள பசிய சோலைக்கண் சுற்றி இன்ப நுகர்தலும் ஆகிய பொருத்தமுள்ள இளம்பருவ வளர்ச்சியுள்ள சிறந்த இயற்கை வாய்ந்த மகளிர் கூட்டம் எவ்விடங்களினும் உள்ளன.

(வி - ம்.) நித்திலம் கொழித்தல் முதலிய வினைகள் வயல்கட்கும், இளமகளிர்க்கும் ஒத்துள்ள தன்மையினால் செம்மொழிச் சிலேடையணி நயந்தோன்ற, 'இருதிறத்த பண்ணையிட்டம் எங்குமே' என்றார். இருதிறத்த - இரண்டு வகையான என்றும், சிறந்த என்றும் இருபொருள் நயம் கொள்க. பண்ணை - வயல்; மகளிர்கூட்டம். (கக)

வயங்குசித்தி ரத்தன மாதர்தங்கு ழாத்தன
தயங்கிவிண்ணி னேங்குவ தண்ணெனன்பாட லீண்டுவ
முயங்குகண்கள் வாங்குவ முதிர்ந்தவின்ப மாக்குவ
இயங்குகின்ற விருதிறத்த வம்மனைக ளெங்குமே.

(இ - ள்.) விளங்குகின்ற சித்திரங்களையுடையனவும் இளமகளிர் கூட்டங்களையுடையனவும் ஒளியெறிந்து வானந்தொட வுயர்ந்தனவும் இன்பந்தரும் பாடல்கள் மிக்கனவும், முயங்குகின்ற கண்களைத் தம்பால் இழுப்பனவும் மிக்க இன்பத்தை உண்டாக்குவனவும் ஆகிய நடக்கின்ற தெருக்களின் இருபக்கங்களினும் உள்ளனவாகிய அழகிய மாடங்களே எல்லாவிடத்தும் உள்ளன.

(வி - ம்.) சித்திரம் இழைத்தனவும் மகளிர்கூட்ட மிக்கனவும் முதலிய தன்மைகளன்றி வறுமனை யெங்குமே இல்லையென்றபடி. இயங்குகின்ற - நடப்பதான. இருதிறம் - இருபகுதி. அஃதாவது தெருக்களின் இருபக்கங்களினும். அம்மனை - அழகிய மனை. (௧௭)

மண்சுருங்க வார்ந்தன வளாயமாம திற்குலம்
விண்சுருங்க வோங்கின விளங்குகோபு ரத்தொகை
எண்சுருங்க வன்னவற் றெழுந்தவார்கொ டித்திரள்
கண்சுருங்க மல்கின கதித்தபல்வ ளங்களே.

(இ - ள்.) சுற்றுமுள்ள பெரிய மதிற்கூட்டங்கள் மண்ணிடம் சிறிதென்னும்படி நிறைந்துள்ளன; விளங்குகின்ற கோவிற் கோபுரங்கள் விண்ணிடம் சிறிதென்னுமாறு வளர்ந்துள்ளன; அம்மதில்மீதும் கோபுரத்தின்மீதும் கட்டப்பட்ட நீண்ட கொடிக்கூட்டங்கள் எண்ணிக்கைக்கு அடங்காவாய்க் காண்பவர் கண்கள் கூசும்படி மிக்க பலவகைப் பட்ட வளப்பங்கள் நிறைந்துள்ளனவாகும்.

(வி - ம்.) சுருங்க என்பது, அவ்விடங்கள் சிறிதென்னும்படி, அதிலுள்ள பொருள்களின் மிகுதித்தன்மையைக் குறித்துநின்றது. வளாவுதல் - சுற்றுதல்; வளாய - சுற்றிய; இறந்தகாலப் பெயரெச்சம். எண்சுருங்க - எண்ண இயலாத; இத்துணை அளவெனக் கணக்கிட இயலாத என்னும் பொருட்டு. கண்சுருங்க - கண்ணாற் பார்க்குமளவின்றி விரிந்துகிடத்தலால் கண்ணொளி கதுவாது தம் ஒளி மழுங்குவதாயிற்று. கதித்த - மிகுதியான. பல்வளங்கள் - பலவகைப்பட்ட வளப்பங்கள். (௧௮)

சுரும்புமூசு தேந்தொடை சுடர்ந்தபன்ம ணிவடம்
விரும்பநாற்றி யெங்கணும் விசித்ததோர ணங்களும்
கரும்பரம்பை பூகதங் கலந்துபொன்ன ணிந்தெழில்
அரும்புபந்த ரீட்டமு மழற்றுவேனின் மாற்றுமே.

(இ - ள்.) வண்டுகள் மொய்க்கின்ற தேன்பொருந்திய மாலையும், ஒளிவிட்டெறிக்கின்ற ஒன்பதுவகை மணிகளழுத்திய ஆரங்களும், யாவரும் விரும்பும்படி தொங்கவிட்டு எங்கும் கட்டப்பட்டுள்ள தோரணங்களும், கரும்பும் வாழையும் கமுகும் கலந்து பொற்றகடுகளால் வேய்ந்து அழகு தோன்றுகின்ற பந்தல்களின் கூட்டங்களும் வருத்துகின்ற வேனிலின் வெப்பத்தை மாற்றுவதாகும்.

(வி - ம்.) தேம் - தேன். பல்மணி - ஒன்பதுவகை மணிக்கற்கள். வடம் - ஆரம்; இரத்தினமாலை. நாற்றி - தொங்கவிட்டு. விசித்த - கட்டிய. அரம்பை - வாழை. பூகதம் - கமுகு, பூகமென்பது, காதமென்பது காவதமென வந்தாற்போல பூகதமென வந்தது. பொன்னணிந்து என்பதற்குப் பொற்றகடுகள் வேய்ந்து எனப் பொருள் கொள்ளலன்றி அழகுறப் புனைந்து என்று கூறலுமாம். அரும்பு-தோற்ற மளிக்கின்ற. பந்தர் - பந்தல்: இறுதிப்போலி. ஈட்டம் - கூட்டம். தோரணங்களும், பந்தல்களும் வேனிலால் வருத்துகின்ற வெப்பத்தை மாற்றுதலால், அங்கு எக்காலத்தும் வெப்பமின்மையைக் குறித்துரைத்தார் எனக் கொள்க. (௧௯)

உடுநிரந்த மண்டிலம் வேறுண்டாய தோவென
விடுசுடர்வி ளக்கமு மெழிலிவானம் வேறெனப்
படும்விரைப்பு கைகளும் பனியினோடு கூதிரை
முடுகிவாய்ம டுத்துணு மொய்ம்பினுன்ற மாடமே.

(இ - ள்.) வலிமைபெற அமைந்த மாளிகைகள், வான்மீன் கூட்டங்கள் வரிசையாகப் பரந்துள்ள வானமண்டிலம் மற்றொன்றுமுளதோ வென்னும்படி ஒளிவிட்டெறிக்கின்ற விளக்குகளும், மேகங்கள் படர்ந்த வானம் மற்றொன்றுமுண்டோ வென்னும்படி மணம்பொருந்திய புகைகளும் பனியோடு கூதலையும் நெருங்கி அவைகளைப் போக்குந் தன்மையனவாய் அமைந்துள்ளன.

(வி - ம்.) உடு - வான்மீன்; நட்சத்திரம். எழிலி - மேகம். விரைப்புகை - மணப்புகை. அங்குள்ள மாளிகைகள் விளக்குகளில் வரிசைபடப் பரந்திருத்தலால் நட்சத்திரக் கூட்டங்கள் மின்விட்டு ஒளிவீசுகின்ற வானகம் ஒன்றுண்டோ அஃதன்றி மற்றொன்று முண்டோ வெனவும், இல்லங்கள்தோறும் மைந்தரும் மகளிரும் மாடத்தின்கண் எடுத்த அந்திம்புகை எங்கும் பரந்து திசைக்களிற்றின் மூக்குப்புழைகள் தோய மிகுதியாக மேகப்படலம்போல் பரந்து நிரந்து போர்த்திருத்தலால் மேகந் தோய்ந்த வான்மண்டிலமன்றி வேறு மண்டிலமும் உண்டோவெனவும் கண்டோர் மருண்டு ஐயுறவு கொள்ள இருந்தன வென, மாலைப்பொழுதில் முல்லையும் நெல்லும் கலந்து முற்றங்களில் தூவி விளக்கேற்றி மணப்புகை யெடுக்கும் மங்கலமகளிர்தம் சிறப்பை மாடத்தின்மேல் ஏற்றிக் கூறியவாறும். இதனால் முற்பாட்டில் வேனில் வெப்பத்தைத் துரத்தியமைக்கேற்ப, பனியையும் அதனால் உண்டாம் கூதலையும் துரத்தும் தன்மையை 'முடுகுவாய் மடுத்துணும்' என நயம் பெறப் பொருள் முரண் அழகு தோன்றக் கூறினர். மொய்ம்பு - வலிமை. நிலநடுக்கத்தானும் அசையாது வலிமைகொள்ள மாடம் எழுப்பிய தொழிலாளர்தம் கைவினைத்திறத்தைக் காட்டியவாறு. (௬00)

இவறிமாதர் குங்கும மீர்ம்பனிப்பு னல்விராய்ச்
சிவிறியின்மு றுக்குபு சிந்துகின்ற சேதகம்
தவறிலந்ந லார்கள்வீசு தமனியப்பொ டிகலாய்ச்
சுவறநின்று பூமியின் றொன்னிறமி தென்னுமே.

(இ - ள்.) இளமகளிர் மேன்மாடத்தின்மீதேறிக் குங்குமத்தைக் குளிர்ச்சி பொருந்திய நீரில் கலந்து கலக்கி, நீர்த்துருத்தியின் உள்ளடைத்துச் சிதறுகின்ற அச்சேறானது குற்றமற்ற அந்நங்கையர்கள் தூவுகின்ற பொன்பொடி கலந்து வற்றிப் பூமியினது பழையநிறம் இது வென்பதுபோல் காட்டாநிற்கும்.

(வி - ம்.) மாதர் இவறி எனமாறுக. இவறி மேன்மாடத்தின் மேலேறி. ஈர்ம்பனி - மிக்க குளிர்ச்சி: ஒருபொருட் பன்மொழி. சிவிறி – நீர்த்துருத்தி, நீரை அடைத்துவைத்துப் பீச்சுகின்ற குழல். சேதகம் - குங்குமக்குழம்பு. தமனியப்பொடி - பொன்பொடி. கலாய் - கலந்து. சுவறநின்று - சுவறஎன ஒருசொன்னீர்மைப்பட்டு நின்றது; நீர்வற்றி என்னும் பொருளது. குங்குமச் சேறும் பொன்பொடியும்

கலந்த நீர் வற்றிக்கிடக்கின்ற மண்ணினது தோற்றம்பொன்மை கலந்த செந்நிறம் ஆம். இது பூமியின் பழைய நிறத்தைக் காட்டுவதாகக் குறித்தார். அதற்குக் கீழ்க்கண்டவாறு புராண வரலாறு காண்க.

ஓர் ஊழிக்காலத்தில் திருமால் செவியிலிருந்து மது, கைடவன் என்னும் இருவர் அசுரர் தோன்றினர். அவர் உடனே திருமாலைப் போருக்கழைத்துத் திருமாலோடு போர்புரிந்தனர். திருமாலால் அவ்விருவரையும் வெல்ல ஏலாதாயிற்று; களைத்துநின்றனர். அவ்விருவரும் திருமாலை நோக்கி, "நுமக்கு எங்களுடன் போர்செய்யும் வன்மையில்லை; ஆதலால் போர் செய்தலிற் பயனில்லை. யாம் உமக்கு வேண்டும் வரங்களைத் தருகின்றோம்; கேளுமென்றனர். உடனே திருமால் சூழ்ச்சியாக எண்ணி 'உங்களை நான் கொன்று வெற்றிபெறும் வரம் தருக' என்றனர். அவ்விருவரும் அவ்வாறே வரம் ஈந்தனர். பின் இருவரையும் திருமால் தம் தண்டினால் அடித்துக் கொன்றனர். அவ்விருவர் தசைகளும் உலகெங்கும், மிகப் பரந்து செந்நிறக் காட்சியாக இருந்தது. அவர்தம் புலால் சிதறிக்கிடந்ததால் அதுமுதல் பூமிக்கு 'மேதினி' என்னும் பெயர் வந்தது. செம்மைகலந்த வெண்மையாகிய கொழுப்புடன் கூடியிருக்கும் புலாலின் நிறத்துக்கு இச் செந்நிறக் குங்குமச் சேறு பொற்பொடியோடு கலந்து சுவறிய தன்மை உவமமாதலின் 'பூமியின் தொன்னிற மிதென்னுமே' என்றார். (௧0௧)

புழுகுமிக்க ளாவலிற் புளகவெம்மு லைத்தலை
இழுகிவிழ்ந்த சாந்தமங் கியங்குதாளி ழுக்குவ
மூழுகுகட் பசுந்தொடை மொய்த்தகுப்பை யிடறுவ
ஒழுகொளிக்க லன்களிற்று வீழ்ந்தகாலு டற்றுமே.

(இ - ள்.) அங்குள்ள இளமங்கையர் புழுகினை மிகப் பூசுதலால் மயிர்க்கூச் செறிகின்ற விரும்பத்தக்க கொங்கைகளினின்றும் பரவிக் கீழ் வீழ்ந்த சந்தனக்குழம்புகள் அங்குச் செல்வோரின் கால்களை வழுக்கா நிற்பன; (மைந்தரும் மகளிரும் அணிந்து கழித்துப் போகட்ட) இடத்தை மறைக்கின்ற செவ்விய பூமாலைகளாகிய நிறைந்த குப்பைகள் (செல்வோர் கால்களை) இடறுவனவாகும்; இடைவிடாத ஒளியையுடைய அணிகள் கீழ்வீழ்ந்து கிடப்பன, செல்லும் கடாயானைகளின் கால்களை உறுத்தி வருத்தாநிற்கும்.

(வி - ம்.) நகரச் செல்வத்தின் சிறப்புத் தோன்ற வீறுகோளணி நயமமைத்து இப்பாட்டில் கூறுகின்றார். புழுகு - புனுகு. மங்கையர்தம் கொங்கை முற்றத்து மணங்கமழப் புழுகையணிதலால், முன்னர்ப்பூசிய கலவைச் சந்தனச்சேறு கீழே தெருவெங்கும் இழுகி வீழ்கின்றன; அதனால் நிலம் சேறுபடுகின்றது; அங்குச் செல்வார்தம் கால்கள் அச்சேற்றால் வழுக்கலுறுகின்றன; அம் மகளிரும் மைந்தரும் அணிந்து வாடியபின் கீழே கழற்றியெறிந்த மாலைகள் குப்பை மேடுபோல் குவிந்து கிடந்தலால் அவை நடப்போர் கால்கள் நெறிச் செல்லாவாறு தடுத்து இடறிவிடுகின்றன; மகளிர் தம் ஊடற்காலத்து வெறுத்தெறிந்த இரத்தின மணிமாலைகள் தெருவெங்குங் கிடந்து நெறிச் செல்லும் களிற்றியானைகளின் அடிகளை உறுத்தி அவற்றுக்குத் துன்பஞ் செய்வனவாயின. எனவே, வழிவிலங்கு பகையல்லது கலங்குபகை வேறின்மையும் செல்வச் செழிப்பும் இதனால் உணர்த்தப்பட்டதறிக. இக் கருத்தொப்ப,

[1] "நேரிழை மகளிர் உணங்குணாக் கவரும்
கோழி யெறிந்த கொடுங்காற் கனங்குழை
பொற்காற் புதல்வர் புரவியின் றுருட்டும்
முக்காற் சிறுதேர் முன்வழி விலக்கும்"

என்பதும்,

[2] "கோதை மடவார்தம் கொங்கை மிசைத்திமிர்ந்த
சீதக் களபச் செழுஞ்சேற்றால்—வீதிவாய்
மானக் கரிவழுக்கும் மாவிந்தம் என்பதோர்
ஞானக் கலைவாழ் நகர்"

என்பதும் நினைவுகூர்ந்து மகிழற் பாலனவாம். (௬0௨)

வயலின்மள்ள ரார்ப்பொலி வரையின்மாமு ழக்கொலி
புயறவழ்ந்து லம்பொலி போகுநந்தி நந்தினி
பயிலுகின்ற பேரொலி பலவுமுள்ள டங்குற
இயமியம்பு பேரொலி யெழுந்துமிக்கொ லிக்குமே.

(இ - ள்.) வயலின்கண் மள்ளர்கள் ஆரவாரிக்கின்ற ஒலியும், மலைக்கண் வாழும் விலங்குகளின் முழக்கத்தின் ஒலியும், மேகங்கள் தவழ்ந்துசென்று முழங்குகின்ற ஒலியும், பலவிடங்கட்கும் செல்லுகின்ற நந்தி நந்தினித் தடாகத்தின் அலைகள் மேல்மேல் நெருங்குதலால் உண்டாம் மிக்க ஒலியும் ஆகிய பல்வகை ஒலிகளும் தமக்குள் அடங்கும்படி பல்வகை வாத்தியங்கள் மேலோங்கி மிகுதியாக ஒலியாநிற்கும்.

(வி - ம்.) மள்ளர், இவர் இக்காலத்துப் பள்ளரென வழங்கப் படுவர். அவர்களால் வயல்களில் உழுதல், பிரம்படித்தல், விதைத்தல் முதலிய வேளாண்மைத் தொழில் செய்தற்கு உண்டாக்கும் பேரொலி. வரையின்மா, மலையில் வாழ்கின்ற சிங்கம் புலி கரடி யானை முதலிய விலங்குகள் முழக்கஞ்செய்யும் பேரொலி; இவ்வெல்லா வகை ஒலிகளும் அத் திருத்தணிகைக்கண், பல இல்லங்களினும் முழங்குகின்ற மங்கலவாத்திய ஒலியானும், தணிகைப் பெருமான் திருக்கோயிலின்கண் இடையறாது முழங்குகின்ற வாத்தியங்களின் பெருமுழக்கத்தானும், விழவுகாணும் பல்வகை ஒலிமிக்க வாத்திய முழக்கங்களானும் உள்ளடங்கி ஒன்று கலந்து மிக்கொலிக்கும் எனக் கொள்க. (௬0௩)

பிறக்கமல்கு தேவர்கள் பெட்டிறைஞ்ச வுற்றவர்
இறக்கநெஞ்சே ராமையா லிருப்பநோக்கி யன்னவர்
துறக்கமுற்று மவ்வயிற் றொடர்ந்திருந்து வாழ்ந்தெனச்
சிறக்குமந்த நகரினைத் திசைவணங்கி யன்மினுள்.

(இ - ள்.) ஒளிமிக்க தேவர்கள் விரும்பி முருகப்பெருமானை வணங்குதற்குப் போந்தவர் அதைவிட்டுச் செல்லற்கு நெஞ்சொழாமல் இருத்தலினால்; அதைக் கண்டு அவர்களின் வானுலகம் முழுதும்

1. பட்டினப்பாலை: ௨௨-௫. 2. நளவெண்பா, சுயம்வர: ௧௫.

அவ்விடத்துத் தொடர்ந்து தங்கியிருந்த தென்னும்படி சிறந்திருக்கின்ற அந்தத் திருத்தணி நகரத்தைத் திசைநோக்கிப் பணிந்து அதைச் சேர்ந்தார், அகத்திய முனிவர்.

(வி - ம்.) பிறக்கம் மல்கு - ஒலிமிக்க; தேவர்கள், ஒளிவடிவினராதலால் பிறக்கமல்கு என்னும் அடை கொடுத்தனர். பெட்டு - விரும்பி. இறைஞ்ச என்னும் வினையால் வினைக்கு முதலாகிய முருகப்பெருமான் என்பது அவாய்நிலையால் வந்தது. இறக்க - கடக்க; அதைவிட்டு நீங்க என்னும் பொருளது. இறத்தல் இப்பொருட்டாதல் 'இறந்தார் இறந்தா ரனையர்' என்புழிக் காண்க. இருப்ப: செயவெனெச்சம். காரணப் பொருட்டாக நிகழ்காலம் காட்டிற்று. துறக்க முற்றும் - வானுலகம் முழுதும். இறுத்து - தங்கி. முனிவராகிய அகத்தியர் அந்நகர்ச் சிறப்பைக் கண்டு திக்குநோக்கி வணக்கஞ் செலுத்தினர் எனக் கொள்க. (௪௦௭)

**பூமிநாத மாதியீ ருயவெப்பு ணர்ப்பும்வீழ்**
**சாமிநாதன் வைகிய தென்கரைத்தண் கோயிலும்**
**நேமிநாத னுதன்வாழ் வடகரைக்க ணிலயமும்**
**தோமினுத லில்லவன் கண்டெழுந்து துள்ளினுன்.**

(இ - ள்.) மண்முதல் நாதம் ஈருகவுள்ள எவ்வகைப்பட்ட புணர்ப்புக்களையும் கெடுத்தருளுகின்ற சாமிநாதனுகிய முருகப்பெருமான் எழுந்தருளியிருக்கின்ற தென்பக்கக் கரையிடத்துள்ள திருக்கோயிலும் உருளைப்படையைக் கொண்ட திருமாலுக்கும் தலைவனுகிய சிவபெருமான் எழுந்தருளியிருக்கின்ற வடக்குக் கரையிடத்துள்ள திருக்கோயிலும் மின்னல் தோற்றத்தினளவு கூடக் குற்றமற்றவராகிய அகத்திய முனிவர்கண்டு மேலெழுந்து மகிழ்ச்சியாற் குதிக்கலாயினுர்.

(வி - ம்.) பூமி - நிலம், இதனை வடமொழியில் பிருதிவி என்பர். தன்மாத்திரைக ளெனப்படும் சுவை ஒளி ஊறு ஓசை நாற்றங்களினிருந்து தோன்றியன. நிலம் தீ நீர் கால் வான் எனப்பட்ட ஐம்பூதங்களாகும். நாததத்துவம் எனப்படுவது பிரணவவொலி; அவ்வொலியே சுத்த வித்தியாதத்துவம் எனப்பெறுவது.

இவற்றை விரித்துக் கூறுங்கால் பூதம் ஐந்து, தன்மாத்திரை ஐந்து, அறிகருவி ஐந்து, தொழிற்கருவி ஐந்து, மனம் புத்தி அகங்காரம் குணம் மாயை (பிரகிருதி) இவை ஐந்து ஆகத் தத்துவங்கள் இருபத்தைந்தும் தூலாவுழி (அசுத்தாத்துவா) இருபத்தாறுந் தத்துவம் அராக முதல் காலதத்துவம் ஈருக ஐந்தும் மிச்சிராத்துவா. ஆக முப்பதும் ஆன்மாக்களுக்குத் தனித்தனியே நுண்ணிய நாடுகளாம். அதற்குமேல் மாயா தத்துவம், அதற்குமேல் சுத்தவித்தியா தத்துவம், அதற்குமேல் ஈசுர தத்துவம், அதற்குமேல் சதாசிவ தத்துவம், அதற்குமேல் சத்தி தத்துவம், அதற்குமேல் சிவதத்துவம், இவைகளே முப்பத்தாறு தத்துவங்கள் எனப்பெறும். இவற்றுள் சிவதத்துவம் நாதம் எனவும் சத்திதத்துவம் விந்து எனவும் கூறப்படும். இவைகளையெல்லாம் கடந்து நிற்போன் முழுமுதல் இறைவனுகலின், 'பூமி நாதம் ஆதி..........சாமிநாதன்' என்றனர்.

இக்கருத்தை,

> "தத்துவமென் ருருறும் தாம்கடந்து போயறத்தில்
> எய்த்தவர்க்குக் காட்டும் இயல்பினன்"

எனச் சிவப்பிரகாசர் அருளியதும் காண்க.

இவற்றின் விரிவெல்லாம் ஈண்டெடுத்துக் கிளப்பின் மிக விரியுமாதலான் சிவஞானபாடியம், சிவஞான சித்தியார் போன்ற ஞான நூல்களில் தெளிவுபடக் காண்க. தோம் - குற்றம். மின் - மின்னல் தோன்றி மறையும் காலவெல்லை; அந்த அளவுள்ள சிறிது காலத்துக்குங்கூட அவர் குற்றமின்றி இருக்கும்நிலை ஈண்டுக் குறிக்கப்பட்டது.

> "குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி
> கணமேயும் காத்தல் அரிது"

என்னும் தேவர் குறளறமுங் காண்க. (௧௦௮)

> தாளதாம ரைகளுந் ததைந்தவோதி மங்களும்
> வாளையாரல் கெண்டைமீன் வரான்மலங்கு நித்தலும்
> ஆளுமன்ன நீரதா யாடினாரி ருண்மலக்
> காளநீவு றுஞ்சிவ கங்கைகண்ட டுத்தனன்.

(இ - ள்.) நாளங்களையுடைய தாமரைகளும், கூட்டமான அன்னப் பறவைகளும், வாளை ஆரல் கெண்டை வரால் மலங்கு ஆகிய மீன்களும், நாள்தோறும் குடிகொண்டிருக்கின்ற அத்தன்மையுடைய தாய், அதில் மூழ்கினாருடைய இருளுடைய மலமாகிய நஞ்சைக் கெடுத்தலையுடைத்தாகிய சிவகங்கை யென்னும் தடாகத்தைக் கண்டு சார்ந்தான்.

(வி - ம்.) தாள - தாள்களையுடைய; ஈண்டுப் பலவின் படர்க்கை அஃதாவது தாமரைகளின் அடித்தண்டு. இது, நாளமெனவும் வழங்கும். ஓதிமம் - அன்னப்பறவை. மலங்கு - பாம்புபோன்ற தலையும் உடலுங்கொண்டு மீன்வால்போல் வாலும் உள்ள நீண்ட வடிவமைந்த ஒருவகை மீன். நித்தல் - நித்தம்; நாள்தோறும்: இறுதிப்போலி. இருள்மலம் - மயக்கத்தைத் தரும் ஆணவமலம். காளம் - நஞ்சு. பாம்புக் கடியினால் நஞ்சேறி ஒருவன் உடலை மாய்த்தொழித்தல்போல, மலமும் ஓர் ஆன்மாவின் தன்னிலையை மறக்கச்செய்து கெடுத்தலின் இருள்மலக் காளம் என்றனர். சிவகங்கைக்கண் மூழ்கினார்க்கு அம் மலப்பிணிப்பை ஒழித்தலால் 'காளநீவுறுஞ் சிவகங்கை' என்றார். (௧௦௯)

வேறு

> சிலைபிளந்து தெவ்வியாறு சென்றுறேதுக்கும் வச்சிரம்
> தலைசுருங்கு சங்குளைந்து தந்தநித்தி லங்களுல்
> குலைகளங்க கழ்ந்தெறிந்து கோலமல்க மாமதி
> வலையமாகி யங்கண்மாத வங்குயிற்றன் மானுமே.

(இ - ள்.) மலையைப் பிளந்துகொண்டு யாவரும் கொள்ளப்படு கின்ற ஆற்று நீரானது உட்சென்று ஒதுக்கப்படுகின்ற வைரமணிகளும் முன் நுனிப்பாகம் சுருங்கியுள்ள சங்குகள் கருவில் வருந்தி ஈன்ற முத்துக்களும் நிறைந்திருத்தல், தன் சிறப்பைக் கெடுக்கின்ற களங்க மாகிய மறுவை அடியோடு பேர்த்தெறிந்துவிட்டு அழகு நிறையும்படி பெருமை மிக்க நிலாவானது வட்டவடிவம் பெற வளர்ந்து அவ் விடத்தே பெருந்தவஞ் செய்தலைப் போன்று சிவகங்கையானது காட்சி யளிக்கும்.

(வி - ம்.) வைரமணியானது கல்முற்றி அதன் முதிர்வால் முதிராத கல்லைப் பிளந்துகொண்டு உண்டாவதாகலான் 'சென்றொதுக்கும் வச்சி ரம்' என்றார். வச்சிரம் - வைரம். 'கல்லிற் பிறக்கும் கதிர்மணி' என் னும் ஆன்றோர் உரையும் ஓர்க. அன்றி அருவிநீர் கல்லைப் பிளந்து கொண்டு அதன்கண் விளைந்துள்ள வைரமணிகளை அரித்துக்கொண்டு வந்து ஒதுக்கு மென்றலுமாம். சங்குகள் சுரிந்த மூக்குடையதாகலின் 'தலைசுருங்கு சங்கு' என்றார். உளைந்து - வருந்தி என்னும் பொருட்டு, ஈண்டுக் கருவுயிர்த்தலுக்காக வருந்தி என்னும் பொருள்தந்து நின்றது. இக்கருத்தை 'குடவளைக்குலம் வயிறுளைந் தினமணி கொழிக்கும்' என்றார் பிறரும். மேற்கூறிய சிவகங்கைக்குள் வைர மணிகளும் முத் துக்களும் ஆற்றுநீரால் கொணர்ந்து ஒதுக்கப்பட்டு வட்டவடிவாகக் கிடத்தல், நிலாவானது தன் களங்கத்தை நீக்குதற் பொருட்டு முருகப் பெருமானை நோக்கித் தவங்கிடத்தல்போல் காட்சியளித்த தெனத் தற்குறிப்பேற்ற உவமையணி தோன்றக் கூறினர். (௪0௭)

அன்னகோட்ட கம்பிரான லங்கல்வேணி மீதுடன்
மன்னுகங்கை தன்னின்மல்லல் வெளவவுன்னி யாடுவான்
முன்னுதான வர்த்துரப்ப மொய்யொளிக் கலைக்கொழுந்
துன்னியங்கண் வட்டமாய்வ ளைந்துகொண்ட தொக்குமே.

(இ - ள்.) சிவபெருமானது கொன்றை மலர்மாலை யணிந்த திருச் சடையின்மேல் தன்னுடன் சார்ந்திருக்கின்ற கங்கையின் வளப்பத்தைக் கொள்ள எண்ணியும், பகைவராகக் கருதத்தக்க அசுரர்களை வெருட் டக் கருதியும் நிறைந்த ஒளியையுடைய கலைநிரம்பிய நிலவானது அந்தப் பொய்கையில் மூழ்கி, அவ்விடத்தே வட்டமாக வளைந்திருப் பதைப் போன்று சிவகங்கையானது காட்சியளிப்பதாகும்.

(வி - ம்.) அலங்கல் - மாலை; ஈண்டுக் கொன்றைமாலை; அப் பொய்கையிடத்து அருவிகளால் கொணர்ந்து ஒதுக்கி வட்டவடிவமாகக் கிடக்கின்ற வைரமணி, முத்துக்களின் குவைகள், மேற்கூறியவாறு நிலவானது தவஞ்செய்வதை ஒப்பதாக இருந்ததெனக் கூறியவர்; அந் நிலவையே கொண்டு அப்பொய்கைக்கு மற்றொரு புனைவு கூறுகின்றார். வளைந்துகிடக்கின்ற அத்தடாகக் காட்சி, நிலவானது கங்கையின் புனிதத்தை முழுதும் பெறநினைந்தும், தன் பகைவராகிய அசுரரை வெருட்டுதற்கு உன்னியும் மூழ்கி வட்டவடிவாகச் சூழ்ந்துகொண்டு கிடப்பதாகத் தற்குறிப்பு ஏற்றமாக்கிக் கூறினர். பொய்கையுள் முத்தும் வைரமும் சேர்ந்து வட்டமாகக் கிடப்பது நிலவுக் காட்சிபோல் தோன் றியது என்க. (௪0௮)

பளிங்கரிந்து சுற்றெலாம் பதித்துமுற்று வித்தவவ்
வொளிர்ந்தகற்ற லத்தின்மொட்டு டைந்தபங்க யங்களும்
மிளிர்ந்தவோதி மங்களு மிடைந்தநீர்நி ழற்றலின்
குளிர்ந்தநீரு நீருறுத கோடுநாடொ ணாதகே.

(இ - ள்.) பளிங்குக் கற்களை அறுத்து சுற்றுப்புறக் கரையெங்கும் பதித்து முடித்த அந்த ஒளி யெறிக்கின்ற கல் தலத்தினிடத்தே அரும்புகள் வாய்விண்ட தாமரை மலர்களும், அதன்கண் இருந்து தோசற்ற மளிக்கின்ற அன்னப்பறவைகளும் நிறைந்த நீருடன் அவ்வுருவ நிழலைக் காட்டுதலினால் குளிர்ச்சியுள்ள நீரும், நீரில்லாத கரையிடமும் இன்னதென அறிய இயலாத தன்மையுடையதாகும்.

(வி - ம்.) அரிதல் - அறுத்து ஒழுங்குபடுத்தல். முற்றுவித்தல் - முடியச் செய்தல். கல்தலம் - பளிங்கரிந் தியற்றிய இடம். மொட்டு - அரும்பு. உடைந்த - விரிந்த, மலர்ந்த, விண்ட. பங்கயம் - தாமரை. பங்கம்+அயம்-சேற்றின்கண் உண்டாவது என்பது பொருள். பங்கம் - சேறு. அயம் - நீருக்குஆய் அதனால் உண்டாம் தாமரையைக் குறித்தது; அரும்பு, ஆகுபெயர். நிழற்றல் - நிழல் செய்தல்; அந்நிழலின் தோற்றம் பளிங்குத் தலத்தின்மீது பாய்ந்து காட்சியளித்தலினாலே, இதுதான் பொய்கை, இதுதான் கரையென வேற்றுமை அறிதற் கியலாததாக அமைந்துள்ளது. இது பொய்கைக்கும் கரைக்கும் வேற்றுமை தோன்றாதிருக்கும் மயக்கத்தைக் கற்பித்துக் கூறுதலால் மயக்கவணி. (௪0௯)

வாளையொன்றெ ழுந்துவீழ வாளைநோக்கி னொெலாம்
வாளையொன்றெ ழுந்ததென்று வாய்மைசொல்ல வவ்வயின்
வாளைநீழ னோக்கினோர் மதத்தரின்ம றுத்துநீள்
வாளைபல்ல வென்னவின் மணிக்குலங்க ளெங்குமே.

(இ - ள்.) அப் பொய்கையில் ஒருவாளைமீனானது மேலே துள்ளியெழுந்து வீழ அதைப் பார்த்தவர் யாவரும் ஒரு வாளைமீனானது மேலே வீழ்ந்ததென்று உண்மையையே கூறுநிற்ப, அவ்விடத்து வாளைமீனின் நிழலைப் பார்த்தோர் பித்துப் பிடித்தவர்போல, அவ்வுண்மையை மறுத்துரைத்து நீண்ட வாளைமீன்கள் (பல மேலெழுந்து துள்ளின) என்று கூறும் வண்ணம் ஒளிவிடும் மணிக்கூட்டங்கள் அப்பொய்கைக் கரைக்கண் எவ்விடத்தும் மிக்குள்ளனவாம்.

(வி - ம்.) வாளைமீன் ஒன்று துள்ளி வீழினும் கண்டோர் பலவெனக் கூறுமாறு மணிகள் பரவி மிகுதியாக எங்கும் கிடந்தன. (௪௧0)

திங்கள்வெண்ணி லாவெனச் செறிந்தநித்தி லக்கதிர்
தங்கலோடு வெய்யவன் றழற்பிழம்பு துன்னலால்
பங்கயங்கு விப்பருத ல்ர்ந்தகூடு பாணிநேர்ந்
தங்கணன்பர் செவ்விநாடு மந்நலார்கள் காதலின்.

(இ - ள்.) தம்மிடத்து அன்புபூண்ட காதலர்களின் கூடுகின்ற காலத்தையறிந்து அதற்காம் செவ்வியை நோக்கியிருக்கின்ற அழகிய

இளமங்கையரின் காதல் தன்மையை யொப்ப, அப்பொய்கைகளிடத்துத் திங்களின் வெண்ணிற நிலவென்னும்படியான நிறைந்த முத்துக்களின் கதிரொளி நிறைந்திருத்தலுடன் ஞாயிற்றினது வெப்பக் கதிரொளித் திரள் நிறைந்திருத்தலால் தாமரை மலர்கள் குவியாது மலர்ந்தபடியே யிருக்கலாயின.

(வி - ம்) பொய்கைக்கண் நிறைந்த முத்துத் திரள்களின் கதிரொளி இரவும் பகலும் பரந்திருத்தலானும், ஞாயிற்றொளி பகற்கண் தன் கதிர்களைச் சொரிதலானும் இது பகற்பொழுது இது இராப்பொழுதென உணரலாகாதனவாய்த் தாமரைமலர்கள் கூம்புதலின்றி மலர்ந்தபடியே இருக்கலாயின. தாமரை அரும்புகள் ஞாயிற்றின் ஒளியால் மலர்வன; ஞாயிறு மறைந்து இரவுப் போது வரின் குவிவன; ஆனால் முத்துக்களின் கதிரொளியால் இரவுப்பொழுதும் பகற்போதுபோல் வெளிச்சமாக இருத்தலால் குவியாதிருந்தன வென அத்தடாகத்தின் ஏற்றமும், அதன்கண் குடவளைக்குலம் ஈன்ற முத்துக்களின் பெருக்கமும் வியப்புறக் குறித்தவாறும். இது தாமரைக்கட்கு மயக்கமும் காண்போர்க்கு வியப்பும் தோன்றக் கூறுதலால் அவ்விரண்டுங் கலந்த கலவையணி.

ஓடு: மூன்றனுருபு. ஈண்டுத் திங்கட்கதிரோடு ஞாயிற்றின் வெங்கழற் பிழம்பும் ஒன்றுறக் கூறுதலால் உடனிகழ்ச்சிப் பொருள், கூடு பாணி - கூடுகின்ற காலம். வினைத்தொகை. செவ்வி - வாய்த்தநேரம்: அம் நல்லார் - அழகிய மாதரார். காதலின் - காதல் தன்மைபோல. இன் என்னும் ஐந்தனுருபு ஒப்புப் பொருளில் வந்தது. இது தொழிலுவமம். (கக்க)

மாதரார்க ழுத்தெனும் வளைத்தலைக்கண் வாண்முகப்
போதலர்ந்த பங்கயம் பொலிந்திருத்தல் கண்டுநேர்
ஊர்திரைத்த டத்திவற்றி னுற்றிருத்த றக்கதென்
றுதனம்ப டுத்தவம்பு யத்தையான்ற சங்கமே.

(இ - ள்.) பெண்கள் கழுத்தென்னும் சங்கினது மேலிடத்தில் ஒளிபொருந்திய முகமாகிய தாமரைமலர், மலர்ந்து விளங்கிக்கொண்டிருத்தலை அறிந்து, நேராக ஓடுகின்ற அலைகளையுடைய தடாகத்தின்கண்ணுள்ள இவற்றின்மீது பொருந்தியிருத்தல் சிறந்ததென்று தாமரைமலர்களைத் தவிசாகக்கொண்டு நிறைந்த சங்குகளானவை இருக்கலாயின.

(வி - ம்.) பெண்களின் கழுத்துக்குச் சங்குகளையும், முகத்துக்குத் தாமரை மலர்களையும் உவமமாகக் கூறுவது புலவர் மரபு. அம்முறையில் பெண்கள் கழுத்தாகிய சங்கின்மேலிடத்தில், அதைத் தவிசாகக் கொண்டு அவர்தம் முகமாகிய தாமரைமலர் மலர்ந்து வீற்றிருந்தன. அதைக் கண்ட சங்கினங்கள், நம் இனத்தின்மேல் ஏறியிருந்தமைக்கு நாமும் இத்தடாகத்துள்ள தாமரைமலர்களைத் தவிசாகக்கொண்டு மேலேறியிருக்க வேண்டுமெனக் கருதி, அதில் தங்கியிருப்பதுபோல் காட்சியளிப்பதாகத் தாமரை மலர்மேல் தங்கியிருக்கின்ற சங்கினங்களைக் குறித்தார். இதனால் தம் இனத்தைத் தாழ்மைப்படுத்துவோர்க்கு, அத் தாழ்மைப்படுத்தியோர் இனத்தைத் தாழ்மைப்படுத்தும் அவ்வினத்தார் பண்பு விளங்குவது காண்க. இது தற்குறிப்பேற்றவணி.

கழுத்தென்னும் வளை என்பது, இருபெயரொட்டுப்பண்புத் தொகை நிலைத்தொடர். வாண்முகப்போது, இருபெயரொட்டுப் பண்புத் தொகை. பங்கயம், அதன் மலருக்கு ஆகுபெயர். ஊர் - ஊர்தல். ஆதனம் - ஆசனம். தவிசு, இருக்கை. த, ச, போலி. ஆன்ற - நிறைந்த; ஈண்டு மிகுதி என்னும் பொருட்டு. சங்கம், இறுதி அம் முச்சாரியை பெற்றது. (௧௩௨)

முன்னநேடி நாடொணாத முன்னவன்மு டிப்புனல்
இன்னதீதின் வைகினெண்ண மெண்ணியாங்கு முற்றுமென்
றன்னமாகி யெண்ணில்வேத ராதனத்தி னேடுறீஇ
மன்னுகின்ற தெர்க்குமான் மலர்த்தலைக்க ணன்னமே.

(இ - ள்.) முன்னொரு காலத்தில் தேடி அறிதற்கியலாத முதல்வனை சிவபெருமான் திருமுடிக்கண்ணுள்ள கங்கைத் தீர்த்தம் இது; இதனிடத்துத் தங்கினுல் நினைத்தவை நினைத்தவாறு கைகூடுமெனக் கருதி, அன்னவுருக்கொண்டு கணக்கற்ற பிரமதேவர்கள் இருக்கையான தாமரை மலர்மீது பொருந்தி நிலைத்திருக்கின்ற தன்மையைத் தாமரை மலர்மேலிருக்கின்ற அன்னங்களின் காட்சி ஒத்திருப்பதாகும்.

(வி - ம்.) அப்பொய்கையின் படர்ந்துள்ள தாமரை கொடிகளில் பூத்திருக்கிற மலர்களின்மீது அன்னங்கள் பல தங்கியிருக்கின்ற காட்சி, அன்னவுருக்கொண்டு முன்னொருகாலத்தில் சிவபெருமான் முடியைக் கண்டறிய வெழுந்த பிரமதேவர் பலர் இருப்பதாகச் சித்திரித்தார்.

அடி முடி தேடிய வரலாறு: ஒருகாலத்தில் திருமால் பிரமன் இருவருக்கும் நான் பெரியன், நான் பெரியன் என்னும் வாதமெழப் பெரிதும் கலாம் விளைத்து நின்றனர். அதுகாலை அவர்தம் கலாத்தை ஒடுக்கக் கருதி சிவபெருமான் அவ்விருவர் முன் காட்சி கொடுத்து நான் இதோ நும் முன் நெருப்புப்பிழம்பாய் நிற்பேன்; என் அடி முடிகளைக் கண்டறிவோர் பெரியராவர் எனக் கூறி நெருப்பு மலையாய் நிற்க. திருமால் இறைவன் திருவடி காணப் பன்றி உருக்கொடு கீழுலகம் முழுதும் கீண்டுசென்று சென்று காணுது திகைத்துநின்றனர். பிரமன் அன்னப் பறவை உருவெடுத்துப் பலகாலும் பறந்து மேன்மேற் சென்றும் காணுது அலமந்தார் எனப் புராணங்கள் கூறும். அந்நிகழ்ச்சியைக் கொண்டே ஈண்டு இவ்வாறு புனைந்துரைத்தார்.

இவ் வரலாற்றை,

[1] "............ ........தனிமுதல் வானவன்
கேழல் திருவுரு ஆகி ஆழத்
தடுக்கிய ஏழும் எடுத்தனன் எடுத்தெடுத்
தாழி ஊழி கீழுறக் கிளைத்தும்
காண்பதற் கரியநின் கழலும் வேண்டு
...........................................
பொன்னிறக் கடவுள் அன்னம் ஆகிக்
கண்டி லாதநின் கதிர்நெடு முடியும்"

1. கோயில் நான்மணிமாலை: ௩௨.

எனப் பட்டினத்து அடிகளாராலும் வியந்துரைக்கப்பட்டுள்ளது. (௧௧௩)

தண்முகத்து டற்றுமாதர் காமர்சிந்த வேள்சிலைத்
திண்முகத்து நாணெனச் செறிந்துநம்மை யேவுறும்
வண்ணமுள்ள தீதெனு மகிழ்ந்துநன்று செய்வன
தண்ணறுவ ளிக்கருத்தி நீலமோடு தாமரை.

(இ - ள்.) குவளை மலர்களோடு தாமரை மலர்களானவை தம் கண்களாலும் முகத்தாலும் தம்மை வருத்துகின்ற இள மங்கையர்தம் அழகைக் காமவுணர்வாகச் சிதைக்க மன்மதவேளின் கரும்பு வில்லினது வலிமைபெற்ற முன்னிடத்து நாணகச் செறிந்து நம்மை அவர்பால் செலுத்துகின்ற தன்மையுள்ளது இவையென மகிழ்வு கொண்டு தம்மிடமுள்ள குளிர்ந்த தேனை வண்டுகட்கு ஊட்டி நன்மையைக் கைம்மாறுகச் செய்யுந் தன்மையனவாம்.

(வி - ம்.) அத் தடாகத்துப் பூத்துள்ள கருங்குவளை மலர்களிலும் தாமரை மலர்களிலும் நிறைந்துள்ள தேனை வண்டுகள் வந்து குடித்துச் செல்கின்றன. அந்நிலையை இளமங்கையர்கண்ணும் முகமும் தம் அழகினுல் வென்று மலர்கட்கு வருத்த முண்டாக்க அம்மலர்கள் வண்டுகளை, மன்மதன் கரும்புவில்லுக்கு நாணக அமைந்து சென்று அம் மங்கையரை வருத்துமாறு தேனூட்டி விடுப்பதாகக் கற்பித்தார். மலர்களே மன்மதன் தொடுக்கும் அம்பு; அவைகளைக்கொண்டு காதலர்களை மன்மதன் வருத்துவான் என்பது கவிகள் மரபு. ஆகலான், வண்டுகள் நாணக இருந்து மலர்களை அம்பாகக்கொண்டு அதில் தொடுத்து எய்தற்குத் துணைபுரிந்தமையால் தம் பகையை முடிக்க உதவி செய்தமையால் அந்நன்றிக்குக் கைம்மாருக அவை தேனினை அவைகட்கு ஊட்டுவதாகக் கற்பனைசெய்து கூறினுர். இத்துடன் முன்னைப்பாட்டும் இவ் வணிபே. மன்மதனுக்கு வில், கரும்பு; நாண் (கயிறு) வண்டுகள்; அம்பு, தாமரை, குவளை, மா, முல்லை, அசோக மலர்கள்; இவைகளை வண்டுகளாகிய நாணிலேற்றி மன்மதன் இம்மலர் எய்வோனுவன். அந் நன்றியை நினைவுகூர்ந்த குவளை தாமரைகள் தம் அகத்துள்ள தேனினை ஊட்டி விருந்தாற்றுவவாயின. இவ்வாறு கவியின்பம் அமையத் தற் குறிப்பேற்றம் தந்துரைத்தார். (௧௧௪)

கொங்குவிம்மு தாமரைக் குலத்திடுேடு சங்கினம்
தங்குகின்ற பெற்றிவான் றயங்குமாநி தித்துணை
அங்கணங்க ணின்றுவேட் டடுத்திறைஞ்சு வோர்க்கெலாம்
செங்கையுய்ப்ப வண்ணலார் செறித்தசூழல் போன்றதே.

(இ - ள்.) தேன் பொங்காநின்ற தாமரை மலரினத்தோடு சங்கினங்கள் உறைகின்ற தன்மை, வானவர் நாட்டிலே விளங்காநின்ற பெருநிதியாகிய பதுமநிதி சங்கநிதியாகிய இரண்டனையும் இத்தலத்திலே அங்கங்கே நின்று நிதிவேட்டு வழிபடும் அன்பர்களுக்கு அவ்வப்போதே அவரவர் கையில் வழங்குதற் பொருட்டு எம்பெருமான் அச்சூழலிலே தொகுத்து வைத்திருத்தலை ஒத்தது.

(வி - ம்.) கொங்கு - தேன்; மணமுமாம். துணை - இரண்டு. அங்கணங்கண் - அவ்வவ்விடத்தே. நிதிவேட்டிறைஞ்சுவோர்க்கு என்க. அண்ணலார் - இறைவனுர். (௧௧௫)

விந்தமொப்ப வங்கைவில் விளங்குதேரி னுள்ளிரீஇ
உந்துதேரி னுழியொன் றெழிந்துருமை நல்கென
முந்தனுரை நோக்கிமாத வங்குயிற்ற முள்ளியாங்
கந்தயங்கு நேமியம்பு ளெண்ணிலாத வற்குமே.

(இ-ள்.) இறைவன் தன் அழகிய கையிற்கொண்டுள்ள மலையாகிய வில்லினை விளங்காநின்ற தேரின் அகத்தே வைத்தலாலே, அவ்விறைவன் ஏறிச் செலுத்தாநின்ற அத்தேர்களின் சக்கரங்கள் தம்முள் ஒன்றும் (அகத்தியனால் அழுத்தப்பட்ட) விந்தமலைபோன்று நிலத்தினுள் அழுந்தி ஒழியாமைப் பொருட்டு அம்முதல்வன்பால் வரங்கோடற்கு அவனை நோக்கி அச்சக்கரங்கள் எல்லாம் ஓரிடத்தே குழுமித் தவஞ் செய்திருந்தாற் போன்று அழகு விளங்கும் எண்ணிறந்த சக்கரவாகப் புட்கள் ஆண்டு உறையாநிற்கும்.

(வி-ம்.) அகத்தியனால் அழுத்தப்பட்ட விந்தமலை நிலத்தே அழுந்திற்போன்றெனை விரித்துரைக்க. இரீஇ - இருத்துதலானே என்று ஏதுப் பொருட்டாக்குக. ஒன்றும் - எனல்வேண்டிய உம்மை விகாரத்தால் தொக்கது. தம்முள் ஒன்றும் ஒழிந்துருமைப் பொருட்டு என்க. முந்தன் - முதல்வன். நேமியம்புள் - சக்கரவாகம். அற்கும் - உறையும். (௧௧௧)

வேறு

அன்ன பொய்கை யருங்கவின்
மன்னு மோகை மலிந்தெழ
முன்னர் நோக்கு முனிவரன்
துன்னி யன்பிற் றுளைந்தனன்.

(இ-ள்.) அத்தகைய தடாகத்தின் அரிய அழகினை நிலைபெற்ற மகிழ்ச்சி மிக்கெழும்படி தன்முன்னே கண்ட அகத்தியன், அத்தடாகத்தை எய்தி அன்போடு ஆடாநின்றனன்.

(வி-ம்.) தீர்த்தமாகலின் அன்போடு துளைந்தனன் என்க. ஓகை - உவகை. (௧௧௨)

தவள நீறுசண் ணித்துமெய்ப்
புவனம் போற்றுமுப் புண்டரம்
திவள வெங்குஞ் செறித்தனன்
இவறு கண்மணி யேய்ந்தனன்.

(இ-ள்.) வெண்ணீற்றினை முன்னர்க் குழையாதே பூசிப் பின்னர்ச் சான்றோராற் போற்றப்படும் முக்குறியை இடவேண்டுமிடமெங்கும் விளங்கும்படி இட்டனன். பின்னர், அவாவுதற்குக் காரணமான கண்மணி வடத்தையும் அணிந்துகொண்டான்.

(வி-ம்.) தவளம் - வெண்மை. சண்ணித்தல் - பூசுதல், ஈண்டு நீரிற் குழையாதே பூசுதலைக் குறித்தவாறு. புவனம் - ஆகுபெயர். திவள - விளங்க; அசைய என்றுமாம். இவறுகண்மணி - வினைத்தொகை. கண்மணி - அக்கமணி. (௧௧௩)

கோயி லைக்குறு குற்றனன்
வாயின் முன்னர் வணங்கினுன்
போய கத்தொளிர் பூரணன்
தூய பாதந் தொழுதனன்.

(இ - ள்.) பின்னர்த் திருக்கோயிலை எய்தித் திருவாயிலின்முன்னர் நின்று வணங்கி உட்புகுந்து ஆண்டு வீற்றிருக்கும் மெய்யடியார் உளத்தே ஒளிருகின்ற முழுமுதலின் தூய திருவடிகளைத் தொழுதான்.

(வி - ம்.) குறுகுற்றனன், ஒருசொல். வணங்கினுன், முற்றெச்சம். பூரணன் - முழுமுதல்வன். (கககூ)

ஆண்டு வேண்டு மரும்பொருள்
காண்ட கக்கதிப் பித்தனன்
மூண்ட வன்பு முகிழ்த்தெழப்
பூண்டு பூசை புரிந்தனன்.

(இ - ள்.) அவ்விடத்து வேண்டற்பாலனவாகிய அரிய வழிபாட்டுப் பொருள்களை எல்லாம் நெஞ்சகத்தே தோற்றுவித்துக் கொண்டனுய் இயல்பாகவே தன்னகத்தே தோன்றிய அன்புபெருகி எழாநிற்ப வழிபாட்டை மேற்கொண்டு இயற்றினன்.

(வி - ம்.) மனத்திலே தோற்றுவித்துக் கொண்டென்பது தோன்றக் கதிப்பித்தனன் என்ருர். பூசைபூண்டு - என மாறுக. (கஉ0)

ஐந்து சுத்தி யமைத்தருள்
ஐந்தொ ழிற்படு மர்ச்சனை
ஐந்த டக்கி யமைத்தபின்
ஐந்தி னுந்துதி யார்த்தினுன்.

(இ - ள்.) பூதசுத்தி முதலிய ஐவகைச் சுத்திகளையும் செய்து கொண்டு வழங்கும் ஐவகை உபசாரத்தொழிலும் நிகழ்தற்கிடமான வழிபாட்டினை மனம் பொறிகளின்பாற் செல்லாமற் றடுத்து இறைவன் திருவடியிலேயே அதனை நிறுத்திச் செய்தபின்னர்த் திருவைந்தெழுத்தாலாகிய வாழ்த்தினை ஓதினன்.

(வி - ம்.) ஐந்து சுத்தியாவன - பூதசுத்தி, தானசுத்தி, திரவியசுத்தி, மந்திரசுத்தி, இலிங்கசுத்தி என்பன. அருள் அர்ச்சனை ஐந்தொழிற்படு அர்ச்சனை எனத் தனித்தனி கூட்டுக. ஐந்தொழில் - ஐம்பெரும் பூதங்கள் சம்பந்தமான பொருள்களாற் றனித்தனி உபசரித்தல். இவை பார்த்திவோபசாரம், ஆப்பியோபசாரம், வைசசசோபசாரம், வாய்வோபசாரம், வைகாயசோபசாரம் என்று கூறப்படும். (கஉக)

வேறு

ஒருபாலின் மலைமடந்தை யொழியாமை வீற்றிருந்தும்
இருபாலு மிருடியர்க ளிறைஞ்சேத்துந் தனிமுதலே

தருவானத் திறையவனுஞ் சதுமறைநான் முகத்தவனும்
திருமாலு மறியாநின் றிருவடியென் சிரத்தினவே.

(இ - ள்.) ஒருபகுதியிலே மலையரையன் மகளார் என்றென்றும் பிரியாதே இருக்கவும், இரு பக்கத்தும் வந்து நெருங்கித் துறவோர் வணங்கி வாழ்த்துதற்குக் காரணமான ஒப்பற்ற முதல்வனே! கற்பகப் பொழிலையுடைய வானுலகத்து இறைவனாகிய இந்திரனும் நான்குமறைகளை யுணர்ந்த பிரமனும் திருமாலும் காணமாட்டாதனவாகிய நின் திருவடிகள், என்புன்றலைமேற் கொள்ளப்பட்டன.

(வி - ம்.) இல்லறத்தாரைத் துறவறத்தார் வழிபடுதல் மரபன்றாயிருந்தும் மலைமகளோடிருக்கு நின்னை இருடியர் இறைஞ்சுவது இறும்பூதென்று வியந்தவாறு. (௧௨௨)

புவியிருந்தேர்த் தவிசனைய பொருப்புநெடுஞ் சிலைகுழைத்தும்
குவிமுலைசற் றேபொருதக் குழைந்தருளும் பெருந்தகையே
சவிமணிநூ புரத்தொலியுந் தழங்கியகைப் பறையொலியும்
அவிர்சடைநீர் முழக்கொலியு மடங்கலுமென் செவியனவே.

(இ - ள்.) பூமியாகிய நினது தேரின் இருக்கைபோன்ற இமயமென்னும் நெடியமலையை வளைத்த பேராற்றலுடையையா யிருந்தும், எம்பிராட்டியின் குவிந்த மென்முலை ஒருசிறிது தாக்கிய அளவிலே பெரிதும் குழைந்தருளிய பெருந்தன்மையுடையோனே! ஒளிமணி பதித்த நினது திருவடிக்கண் அணிந்த நூபுரத்தின் ஒலியும் நினது திருக்கையகத்திருந்து முழங்கிய பறையொலியும் விளங்கும் நினது சடைக்கண் உறையும் கங்கையினுண்டாகும் முழக்கவொலியும் ஆகிய இவ்வொலிகள் அனைத்தும் எளியேன் புன்செவியிடத்தன காண்.

(வி - ம்.) இறைவனுக்குப் பூமி தேர் ஆதலின், அப்பூமிமேல் உயர்ந்து நிற்கும் இமயத்தைத் தவிசனைய பொருப்பு என்றார். மலைகுழைத்த நீ முலைபொருதக் குழைவது எமக்கு இறும்பூதாயிற்று என்றவாறு. முலைக்கு நீ குழைதற்குக் காரணம் அன்புக்குருகும் நின்பெருந்தன்மையே என்பார், பெருந்தகையே என்று விளித்தார். சவி - ஒளி. இறைவன் திருவடிகளில் ஒன்று இறைவியுடையதாகலின் நூபுரத்தொலி என்றார். நூபுரம் மகளிர் காலணி, இதனை,

"வலக்கால் புனைகழல் கட்டினும் இடக்கால்
தனிச்சிலம் பரற்றுந் தகைமையள்"

எனவரும் இளங்கோவடிகள் (சி. ௨௩ : ௯-௧௦) மொழியானும் உணர்க. (௧௨௩)

முறைமுழுதும் பகுத்தமைத்து முறைதிறம்ப மூவருக்கும்
உறைமலர்வா ணியைத்திருவை யுமையையரு ளறக்கடலே
பிறைமுடியு நகைமுகமும் பெருந்தோளும் வரைமார்பும்
நிறையுதர பந்தனமு நிலாக்கச்சும் விழியனவே.

(இ - ள்.) படைப்பு முதலிய தொழின் முறைகளையெல்லாம் நன்கு வகுத்துக் கொடுத்துப் பின்னர் நடுவுநிலை பிறழும்படி பிரமன்

முதலிய மூவருக்கும் நிரலே, மலருறையும் கலைமகளையும் திருமகளையும் உமையையும் வழங்கியருளிய அறக்கடல் போன்றவனே! நின்னுடைய பிறையணிந்த சடைமுடியும் புன்முறுவலுடைய திருமுகமும் பரிய தோள்களும் மலையனைய மார்பும் நிறைவுடைய உதரபந்தனமும் ஒளியுடைய கச்சும் எளியேனுடைய விழியின்கண் நிலைபெற்றன.

(வி - ம்.) முறை - தொழில்முறை. இன்னோர்க்கின்ன தொழிலென்று பகுத்தமைத்து என்றவாறு. முறைதிறம்ப அருளலாவது யாவர்க்கும் ஒப்பக்கொடாது ஒருவனுக்குக் கலையும் ஒருவனுக்குத் திருவும், ஒருவனுக்குச் சத்தியும் கொடுத்தல். அங்ஙனம் முறைதிறம்பியதற்குக் காரணமும் நினது அறமே என்பார் அறக்கடலே என்று விளித்தார். உதரபந்தனம் - வயிற்றிற் கட்டும் ஓர் அணி. கச்சு - ஆடை. (௧௨௨)

வேறு

குறுமுனி பழிச்சி நிற்பக் குருஉமதி மிலைத்த வேணி
அறவனு ரெதிரே தோன்றி யலர்முகத் தருளிச் செய்வார்
மறைவழி யெம்மை யாதி வராகநல் வழிபா டாற்றி
உறைதரு மிடம தாகு மவ்வுழி நீயும் வைகி.

(இ - ள்.) இவ்வாறு அகத்தியமுனிவன் வாழ்த்தி நிற்குங்கால் நிறமிக்க பிறையைச் சூடிய சடையினையுடைய அறவாழி அந்தணன் அவன் எதிரே திருவருளுருக்கொண்டு எழுந்தருளி மலர்ந்த முகத்தோடு திருவாய் மலர்ந்தருள்பவர், அகத்திய! ஆதிவராகமாகிய திருமால் மறைமுறைப்படி எம்மை வழிபாடுசெய்திருந்த இடம் அதோ தோன்றுமிடமே யாகும் அவ்விடத்திலேயே நீயுமிருந்து.

(வி - ம்.) குறுமுனி-அகத்தியன், குருஉமதி-நிறமுடைய பிறை. வேணி - சடை. ஆதிவராகமாகிய திருமால் என்க. (௧௨௩)

எம்மையோ ராண்டு காறு மியற்றுதி பூசை யப்பால்
கைம்மலை யுலம்பு மோதை கடிப்பிடு முரசி னேடும்
விம்மிய கணிக வெற்பின் மீமிசை யிவர்ந்து நோற்றுச்
செம்மலைப் பெறுக வென்னுத் திகழ்தரு மிலிங்கத் தானர்.

(இ – ள்.) எம்மை ஓராண்டு முடியுந் துணையும் நித்தலும் வழிபாடு செய்க! பின்னர் யானைகள் பிளிற்றொலி கானவர் கடிப்பால் அறையும் குறிஞ்சிப்பறை யொலியோடு முழங்குதற் கிடமான திருத்தணிகைமலைமிசை ஏறி ஆண்டு நோன்புசெய்து தலைமைத்தன்மையினைப் பெறுவாயாக! என்று அருளிச்செய்து அம்முனிவனால் நிறுவப்பட்ட திருவருட் குறியிற் கலந்து மறைந்தருளினார்.

(வி - ம்.) கைம்மலை - யானை. ஓதை - ஒலி. முரசு ஈண்டுக் குறிஞ்சிப்பறை. கணிக வெற்பு - தணிகைமலை. செம்மல் - முருகனுமாம். (௧௨௪)

அருமறை முறையிட் டின்னு மளப்பருஞ் சோதி யென்று
மருவுவி ராட்ட காச வள்ளலங் கருள லோடும்

பெருகிய வுவகை துள்ளப் பிணைபொரு ளன்றே பெற்றுங்
குருகிய வுளத்த னுடல் பாடல்க ளுளுற்று நின்றுன்.

(இ - ள்.) உணர்தற்கரிய வேதங்கள்தாமும் ஓர் வரம்பிட்டு இன்றுகாறும் அளந்து காண்டற்கரிய ஒளிப்பிழம்பானவனும் வீரட்டகாசத்திலே எஞ்ஞான்றும் உறையும் வள்ளலுமாகிய எம்பிரான் அவ்வாறு திருவருள் செய்தவுடனே! மிக்க மகிழ்ச்சி உள்ளத்துள்ளே எழுந்து துள்ளாநிற்றலால் விரும்பிய பொருளினைப் பெற்றுற்போன்று உருகிய நெஞ்சத்தையுடையனுய் ஆடுதலும் பாடுதலும் செய்யாநின்றுன்.

(வி - ம்.) சோதியாகிய வள்ளல் என்க. பிணை - விருப்பம்; "பிணையும் பேணும் பெட்பின் பொருள" (தொல். சொல். உரி - ௫0) (௩உ௨)

கருணையந் திறத்துத் தாழ்ந்த கருத்தினை யரிது மீட்டுப்
பொருவில்வீ ராட்ட காசப் புனிதனை வணங்கிப் போந்து
திருவளர் வராக வைப்பைச் சேர்ந்திருந் தங்கும் பொய்தீர்
ஒருசிவ லிங்கந் தாபித் துளுற்றினன் வழிபா டெல்லாம்.

(இ - ள்.) இறைவனுடைய கருணைப் பெருக்கின் பெற்றிமை கருதி அத்திறத்தே ஆழ்ந்துவிட்ட தன் கருத்தினை அம்முனிவன் அரிதாக மீட்டுக்கொண்டு ஒப்பற்ற வீராட்டகாசப் பெருமானை மீண்டும் வணங்கி அவணின்றும் போய்ச் செல்வம் வளர்தற்குக் காரணமான வராகப்பதியை அடைந்து அத்திருப்பதியிலே உறைந்து அவ்விடத்தேயும் பிறப்பறுதற்குக் காரணமானதொரு திருவருட்குறியை நிறுவி நூன் முறைப்படி வழிபாடெல்லாம் இயற்றுநின்றுன்.

(வி - ம்.) இறைவன் திருக்கருணையை நினைந்து நினைந்து விம்மிதமுற்று அதன்கண் அழுந்திய கருத்தினை என்றவாறு. வைப்பு - பதி. பொய் - பிறப்பு. தாபித்தல் - நிறுத்துதல். (௩உ௩)

நித்தலு நதியிற் ருேய்ந்து நிறைசிவ கங்கை யாடிப்
பத்தியிற் சாமி நாதன் பாதபங் கயங்கள் போற்றி
அத்தன்வீ ராட்ட காசத் தடிகள்பூ சனையுஞ் செய்தான்
உத்தமன் வரைந்த வாண்டு மின்னனா மொழித லோடும்.

(இ - ள்.) நாடொறும் யாற்றிலே நீராடிப் பின்னர் கடவுட்டன்மை நிறைந்த சிவகங்கையினும் நீராடித் தலையாய அன்போடு முருகப்பெருமானுடைய திருவடித்தாமரைகளை வணங்கிப் பின்னர்த் தலைவனுகிய வீராட்டகாசப் பெருமானடிகளையும் வழிபாடு செய்துவந்தான். அவ்விறைவன் குறிப்பிட்ட ஓராண்டும் இவ்வாறே கழிந்தது, பின்னர்.

(வி - ம்.) நித்தலும் - நாடோறும். நீர்நிறை - சிவகங்கையுமாம். சாமிநாதன் - முருகப்பெருமான். உத்தமன் - இறைவன். (௩உ௪)

வழிவரு நாளு முன்போல் வராகமா புரத்துத் தேவைத்
தொழுதுவீ ராட்ட காசத் தோன்றலைச் சாமி நாத

முழுவலி யிளவற் போற்றி முன்னிமென் மலரின் வண்டு
குழுமிய குமார தீர்த்தக் குருமணிக் கரையைச் சார்ந்தான்.

(இ - ள்.) அவ்வாண்டு முடிவுற்ற நாளின் மறுநாளினும் முன் போலவே வராகபுரத்தே எழுந்தருளியிருக்கின்ற இறைவனை வணங்கிப் பின்னர் வீராட்டகாசத்துப் பெருமானையும் பேராற்றலுடைய முருகப் பெருமானையும் வணங்கி வாழ்த்திப் பின்னர் மெல்லிய மலரின்கண் வண்டுகள் சென்று மொய்த்தற்கிடமான குமாரதீர்த்தத்தினது நிறமிக்க மணிகள் கிடக்கும் கரையை எய்தினன்.

(வி - ம்.) வழிவருநாள் - முடிந்தநாளைத் தொடர்ந்து வருநாள். இளவலை - முருகனை. வண்டுமுன்னி மொய்த்த என ஒட்டுக. குரு - நிறம். மணி - அழகுமாம். (௬௯0)

நிரைதவழ் தீர்த்த மாடிச் செய்கட னினிது முற்றி
வரைபுறஞ் சூழ்ந்து வெய்யோன் மணிநெடுந் தேரிற் பூண்ட
விரைசெலற் கலினப் பாய்மா விறற்குரந் தவழப் பொங்கும்
புரைமணித் தூளிப் போர்வைப் பொருப்பினை யிவர்ந்து சென்றான்.

(இ - ள்.) அலையெறியாநின்ற அத்தீர்த்தத்திலே ஆடி ஆண்டுச் செய்க்கடவன வெல்லாம் இனிதே செய்துமுடித்த பின்னர், திருத் தணிகைமலையை வலமாக வந்து ஞாயிற்றுத் தேவனின் அழகிய நெடிய தேரிற் பூட்டப்பட்ட விரைந்த செலவினையும் கடிவாளத்தையும் உடைய குதிரைகளினுடைய ஆற்றன்மிக்க குளம்புகள் கிண்டுதலானே மிக்கு எழுகின்ற உயரிய மணிகளாகிய தூளிகளைப் போர்வையாக வுடைய அம்மலையினை ஏறிச் சென்றான்.

(வி - ம்.) தீர்த்தம் - குமாரதீர்த்தம். வெய்யோன் - ஞாயிறு. கலினம் - கடிவாளம். புரை - உயர்வு. இவர்ந்து - ஏறி. (௬௯௧)

வண்டோடு ஞிமிறு மூசும் வார்மதக் கலுழி யேயன்
றெண்டிசை யுயிர்க்கு நல்க வெழுபெருங் கருணை நீரும்
கொண்டலென் றியம்பு மாவச் சகாயனைக் குறுகிப் போற்றி
அண்டர்சூழ் குமார லிங்கத் தமலனை வணங்கிப் புக்கான்.

(இ - ள்.) வண்டும் ஞிமிறும் வீழாநின்ற நெடிய மதவெள்ளத் தையே யன்றியும் பெரிய திருவருள் வெள்ளத்தையும் எட்டுத்திசை களினும் வாழும் உயிரினங்கட்கு வழங்குதற்கு எழாநின்ற கடவுள் முகில் என்று ஆன்றோர் கூறுகின்ற ஆவச்சகாய னென்னும் மூத்த பிள்ளையாரை அணுகி வணங்கிப் பின்னர் வழிபடுதற் பொருட்டு வானவர் சூழாநின்ற குமாரலிங்கத்தே எழுந்தருளி இறைவனையும் வணங்கிச் சென்றனன்.

(வி - ம்.) ஞிமிறு - ஒருவகை வண்டு. அன்றி என்னும் வினை யெஞ்சிகரம் செய்யுளாகலின் அன்று என உகரமாயிற்று. நல்கவெழும் என்பதனைப் பிரித்து நீரும் என்பதன் பின்னே ஒட்டுக. ஆவச்சகாயன் ஒரு திருநாமம். (௬௯௨)

புக்கன னெழுத்தோ ராறும் புகன்றிடு வாயன் சென்னித்
தொக்கெழு கையன் சிந்தை துற்றெழு முழுவ லன்பன்

நக்கலர் கமல பாத நாடுபு திளைக்குங் கண்ணன்
மிக்கவி பொறிய ஞகி விழுப்பொரு ளெதிரே தாழ்ந்தான்.

(இ - ள்.) அங்ஙனம் செல்லாநின்ற முனிவன் முருகப்பெருமான் திருமந்திரமாகிய ஆறு எழுத்துக்களையும் விடாது கணிக்கும் வாயினை யுடையனாய், தலையின்மேலெழுந்து சேர்ந்த கைகளையுடையனாய், நெஞ்சத்தின்கண்ணே விம்மி எழாநின்ற உழுவலன்புடையனாய் இறைவனுடைய சிரித்து மலர்ந்த செந்தாமரை போன்ற திருவடிகளை நாடி அவற்றின்பால் அழுந்திய கண்களையுடையனாய்ப் பெரிதும் அவித்த பொறிகளையுடையனாய்ச் சிறந்த மெய்ப்பொருளாகிய முருகன் திருமுன்னர் வீழ்ந்து வணங்கினான்.

(வி - ம்.) புக்கனன் : வினையாலணையும் பெயர். ஆறெழுத்து - 'சரவணபவ ;' 'குமாராய நம' என்பதுமாம். துற்றெழுதல் - செறிந்தெழுதல், ஈண்டு விம்முதல்மேனின்றது. உழுவலன்பு பிறவிதோறும் தொடர்ந்தடிப்பட்டு வந்த அன்பு. அவிபொறி : வினைத்தொகை. விழுப்பொருள் - செம்பொருள் ; முருகப்பெருமான். (௧௩௩)

புளகமெய் யரும்பிப் போர்ப்பப் பொங்குநீர் வழிகள் கால
இளகிய வுளத்தி னேடு மெழுந்தருந் துதிக ளார்த்தி
அளவிடற் கரிய வைவே லடிகளைப் பூசை யாற்றி
வளமலி யுணவு விட்டு வருந்துயி லிரவு நீத்தான்.

(இ - ள்.) உடலின்கண் மயிர்பொடித்துப் போர்ப்பவும், விழிகள் இன்பக் கண்ணீரைப் பொழியவும், நெகிழ்ந்த நெஞ்சத்தோடும் எழுந்திருந்து அரியபல வாழ்த்துப் பாடல்களை ஓதி அளவைகளான் அளத்தற்கியலாதவனும் கூர்த்த வேற்படையை உடையவனும் ஆகிய முருகப்பெருமானை வழிபாடுசெய்து சுவைமிக்க உணவினையும் உண்ணாது விட்டு இயல்பாகவே வருகின்ற உறக்கத்தினையும் அவ்விராப்பொழுதில் அகற்றி இருந்தனன்.

(வி - ம்.) வை - கூர்மை. வேலடிகள் - முருகப்பெருமான். வளம் - சுவைமேனின்றது. இயல்பாகவே வருந்துயிலென்க. (௧௩௪)

வைகறை யெழுந்து தூநீர் மனுமுறை யினிது தோய்ந்து
செய்கடன் முடித்த பின்னர்த் திருநந்தி குகையுங் கண்டு
நைகர மில்லா வன்பி னுதலனைப் பணிந்து போற்றிப்
பெய்கழ னிருதி திக்கிற் பிறங்கவோர் தீர்த்தஞ் செய்தான்.

(இ - ள்.) அவ்விரவு விடியும் வைகறைப் பொழுதிலேயே சென்று தூய நீரின்கண் நான்முறைப்படி இனிதே ஆடி ஆண்டுச் செய்யக்கடவன எல்லாம் செய்து முடித்த பின்னர் திருநந்தி குகையினையும் கண்டு வணங்கிப் பின்னர்ப் பழுதிலாத அன்பினோடு முதல்வனாகிய முருகப்பெருமானை வணங்கி வாழ்த்திப் பின்னர் அத்திருமலையின் கழல் கட்டிய நிருதிக்குரிய திசையிலே விளங்கும்படி ஒரு தீர்த்தத்தினையும் உண்டாக்கினன்.

(வி - ம்.) மனு - நால். நைகரம் - பழுது. பிறங்குதல் - விளங்குதல். (கஙு)

தோலடிப் பவளச் செவ்வாய்த் தொகுசிறை யன்னங் கம்புட்
பீலியிற் பிளிறு நாரைப் பிரமரத் துழனி பொங்க
நீலமு மரையும் பூப்ப நிருமித்த தீர்த்தப் பாங்கர்ச்
சாலைவந் தடக்கி மேலாந் தவமலி யோக முற்றான்.

(இ - ள்.) தோலாலிணைக்கப்பட்ட அடியினையும் பவளம்போன்ற சிவந்த அலகினையும் தொகுக்கப்பட்ட சிறகுகளையும் உடைய அன்னமும், சம்பங்கோழியும், சிறுசின்னம் போன்று கத்துகின்ற நாரையும் வண்டும் ஆகிய இவற்றின் ஆரவாரம் மிகாநிற்பவும், கழுநீர்மலரும் தாமரைமலரும் பூவாநிற்பவும் மனத்தானே படைத்த அத்தீர்த்தத்தின் அயலிலே ஓரிடத்தே இருந்து ஐம்பொறிகளையும் அடக்கி உயரிய தவம் மிகுதற்குக் காரணமான யோகத்தினை எய்தியிருந்தனன்.

(வி - ம்.) தொகுசிறை - வினைத்தொகை. கம்புள் - சம்பங்கோழி. பீலி - சிறுசின்னம் என்னுமொரு ஊதுகுழல். பிரமரம் - வண்டு. ஐந்து சால அடக்கி என்க. ஐந்து பொறிகள். யோகம் - அகத்தொழின் மாத்திரையானே அருவத்திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு. (கஙசு)

ஒவ்வொரு திங்க ளாக வுறுசுவைக் கனிகண் மூலம்
எவ்வமில் சருகு தூநீ ரேற்வளி முறையி னுண்டு
பவ்வமுண் டமைந்தான் பின்னர்ப் பாற்றிய வுணவ னாகித்
தெவ்விய தவநா ருண்டு செல்லுற முயன்ற காலை.

(இ - ள்.) ஒருதிங்கள் மிக்க சுவையுடைய கனிகளை மட்டும் உண்டும், அடுத்தொரு திங்கள் கிழங்குகளை மட்டும், உண்டும் அடுத்தொரு திங்கள் குற்றமற்ற சருகுகளை மட்டுமே உண்டும் அடுத்தொரு திங்கள் தூய நீரைமட்டுமே பருகியும், அடுத்தொரு திங்கள் வீசாநின்ற காற்றை மட்டுமே உண்டும் இவ்வாறாக அக்கடல்குடித்திருந்த அகத்திய முனிவன் உண்டிருந்து பின்னர் யாதும் உண்ணுமே தான் மேற்கொண்ட தவத்தினை நாருண்டு கடைபோக முயன்றிருந்த பொழுது.

(வி - ம்.) உறு - மிகுதி. மூலம் - கிழங்கு, வேருமாம். எவ்வம் - குற்றம். வளி - காற்று. பாற்றிய உணவன் - உணவை விட்டவன். தெவ்வுதல் - கொள்ளுதல், மேற்கொண்ட என்க. (கஙஎ)

வளைவகிர்ப் பேழ்வாய்ச் சூட்டு வன்றலைக் கருங்கட் டோகை
விளைசமர்ப் பூட்கை மஞ்ஞை வெரிந்தலை யிவர்ந்து செவ்வேள்
துளையிசை நரம்பின் பாட றுந்துமி யெழுந்து விம்மக்
கிளைஞருங் கணமுஞ் சூழக் கெழுதவச் சூழல் சார்ந்தான்.

(இ - ள்.) முருகப்பெருமான், வளைவோடு பிளவுபட்ட பெரிய வாயினையும் உச்சிக்கொண்டையினையும் வலிய தலையினையும் கரிய புள்ளிகள் அமைந்த தோகையினையும் விளைக்கின்ற போர்த்தொழில்

வலிமையினையும்கொண்ட மயிலின் முதுகிடத்தே ஏறி ஊர்ந்து குழலும் யாழும் தேவதுந்துமியும் ஆகிய இசைக்கருவிகளின் இசைகள் எழுந்து ஆரவாரியாநிற்பவும் சுற்றமும் கணமும் சூழ்ந்து வாராநிற்பவும் அகத்தியமுனிவன் தவத்திற் பொருந்தியிருந்த அவ்விடத்தே எழுந்தருளினான்.

(வி - ம்.) வளைவும் வகிரும் என உம்மை விரிக்க. வகிர் - பிளவு. சூட்டு - கொண்டை. கண் - புள்ளி. சமர்வினைபூட்கை என மாறுக. பூட்கை - வலிமை, நரம்பு : யாழ்க்கு ஆகுபெயர். (சகஅ)

கண்டெழுந் தாடிப் பாடிக் கழலிணைப் போதின் வீழ்ந்து
மண்டலிற் புரண்டு சூழ்ந்து மறைபல வெடுத்துப் போற்றும்
தொண்டனை மகிழ்ந்து நோக்கித் தோகையை யடுப்ப வுந்தி
ஒண்டளிர்க் கரத்தா லன்னு னுடலந்தை வந்து கூறும்.

(இ - ள்.) அப்பெருமான் தனது வருகையைக் கண்டமையாலே அளவிலா மகிழ்ச்சிகொண்டு கூத்தாடியும் பாடியும் வீரக்கழல் கட்டிய தன் திருவடிமலரிலே வீழ்ந்து வணங்கியும் நிலத்திலே புரண்டும் வலமாக வந்தும் மறைபல மொழிந்தும் வாழ்த்தாநின்ற மெய்யடியவனாகிய அம்முனிவனை மகிழ்ந்துநோக்கித் தன் மயிலூர்தியை அவனை அணுகச் செலுத்தித் தன் ஒள்ளிய தளிர்போன்ற திருக்கைகளானே அவனுடைய உடலைத் தடவிக்கொடுத்து (பின்வருமாறு) திருவாய் மலர்ந்தருளும்.

(வி - ம்.) தொண்டன் - அடியவன். தோகை - ஆகுபெயர். அடுப்ப - அணுக. உந்தி - செலுத்தி. அன்னுன் - அகத்தியன். தைவந்து - தடவி. (சகக)

எண்ணில்பல் கோடி யாக்கை யீட்டிய பாவ மெல்லாம்
நுண்ணிய திரண மாக நுங்குறுங் காட்டுத் தீயாம்
தண்ணிய சோலை சூழ்ந்த தணிகையித் தலத்தை நீசெய்
புண்ணிய மிகுதி யாற்குறப் போந்தனை புலவ ரேறே.

(இ - ள்.) நல்லிசைப் புலவர்களுள் ஏறுபோன்றவனே! குளிர்ந்த பொழிலாற் சூழப்பட்ட இத்தணிகைத் திருத்தலம், உயிர்கள் எண்ணிறந்த பிறவிகளிலே பிறந்து ஈட்டிக்கொண்ட தீவினைகள் அனைத்தும் சிறியதொரு துரும்பாகக்கொண்டு அழித்தொழிக்குமொரு காட்டுத் தீயேயாகும் என்றறிக! இத்தகைய மாண்புடைய இத்தலத்தினை நீ எண்ணிலாத பிறவிகளிலே செய்த மிக்கபுண்ணியமே வழியாக வந்தெய்தாநின்றனை.

(வி - ம்.) யாக்கைகொண் டீட்டிய என்க. திரணம் - துரும்பு. தணிகை பாவமாகிய துரும்பை நுங்கும் காட்டுத்தீ என்க. புண்ணியம் மேல்நோக்குவிக்குமாதலின் நீ செய்த புண்ணியமே நின்னை ஈண்டுச் சேர்த்த தென்பான் புண்ணிய ஆற்றால் போந்தனை என்றான். (சகo)

மாதவ மிகுதி யில்லா மாண்பினர்க் கீண்டைச் சேர்வும்
தீதறு குமார தீர்த்தஞ் சிவகங்கை நதியிற் றேய்வும்

கோதில்வீ ராட்ட காசக் குமாரலிங் கத்தி ேனாடும்
போதக முகத்தி னுவச் சகாயனைப் போற்றும் பேறும்.

(இ - ள்.) பெரிய தவத்தினைப் பெரிதும் இயற்றியிலாத தன்மை யினையுடைய எளியவர்க்கு இத்தணிகைத் தலத்தை அடைதலும், பிறவி யறுதற்குக் காரணமான குமாரதீர்த்தத்தும் சிவகங்கையாகிய அவ்வி யாற்றினும் ஆடுதலும் குற்றமற்ற திருவீராட்டகாசத் தெழுந்தருளி யுள்ள குமாரலிங்கப் பெருமானையும் ஆனைமுகத்தினையுடைய ஆவச் சகாயப் பெருமானையும் வணங்கும் பேறும்.

(வி - ம்.) மாண்பினர் என்புழி, மாண்பு, இயல்பு என்னு மாத் திரை. இனி இகழ்ச்சிக் குறிப்பெனினுமாம். போதகமுகம் - யானை முகம். (௧௭௧)

இத்தலந் தன்னிற் றோற்ற மிருக்கையந் திக்கும் பேறும்
மெய்த்தவ நந்திச் சூழல் விழியெதிர் காணும் பேறும்
உத்தம முனிவ வெய்தா வோங்குமித் தலத்திற் போந்த
அத்தகு போதே நின்பான் மங்கல மனைத்துஞ் சார்ந்த.

(இ - ள்.) மேலும் இத்தணிகைத் தலத்திலே பிறத்தலும், ஈண் டிருந்து வாழ்தலும், ஈண்டே இறத்தலும் ஆகிய பேறுகளும், மெய்யாய தவத்தை யுடையோனே! திருநந்திப் பொழிலைத் தங்கண்களாலே காணும் பேறும் எய்தமாட்டாவாம். சிறந்த முனிவனே! நீ உயர்ந்த இத் திருத்தலத்திற் புகுந்த அந்தத் தகுதியடைந்த பொழுதிலேயே நின் னிடத்தே ஆக்கங்கள் அனைத்தும் ஒருசேர வந்தெய்தின காண்.

(வி - ம்.) தோற்றம் - பிறத்தல். அந்தித்தல் - இறத்தல். மெய்த் தவஞ் செய்தற்கேற்ற நந்திச் சூழல் எனினுமாம். விழிபெறும் பேறன்றே என்பான் விழியெதிர் என்று விதந்தான். உத்தம முனிவ னைகவின் நினக்கிப் பேறு கிடைத்ததென்பான் அங்ஙனம் விளித்தான். மங்கலம் - ஆக்கம். (௧௭௨)

ஈட்டிய தவத்தாற் சால வெய்த்தனை யாக்கை முற்றும்
வேட்டதெ னுவறி யென்றான் மீட்டும்வந் தனைகள் செய்து
கோட்டிய மெய்யி னோடுங் குடங்கைவாய் புதைத்துக் கட்டித்
தீட்டிய புகழ்சால் வேதத் திருமுனி யிதனைச் சொற்றான்.

(இ - ள்.) முனிவனே! நீ செய்த தவமுயற்சியாலே மிகவும் உடல் முழுதும் மெலிந்து போயினை. நன்று நீதான் விரும்பியதியாது? அதனைக் கூறிக்காண்! என்று அருள்செய்தனன். அதுகேட்டவுடன் நிலைநிறுத்தப்பட்ட மிக்க புகழையும் வேதமாகிய செல்வத்தையும் உடைய அவ் வகத்தியமுனிவன் மீண்டும் வழிபாடுகள் பல வியற்றி வணங்கிய உடலோடும் அங்கையாலே வாய்பொத்திக் கைகட்டி நின்று (பின்வரும்) இதனைக் கூறுகின்றான்.

(வி - ம்.) சால - மிக. எய்த்தல் - மெலிதல். யாக்கைமுற்றும் எய்த்தனை எனமாறுக. கோட்டிய - வளைத்த. குடங்கை - உள்ளங்கை. சொற்றான் - சொன்னான். (௧௭௩)

கணிப்பறு பவங்க ளீட்டுங் காழ்மலச் செருக்கை நூறித்
தணிப்பற வெண்ணெய் போலத் தவிர்ந்தநின் பாத நாயேன்
மணப்பமெய்ஞ் ஞான மின்னே வழங்குபு தமிழின் பாடைப்
புணர்ப்பினி தருளு கென்னுப் புகன்றுபின் னிதுவும் வேண்டும்.

(இ - ள்.) எண்ணிறந்த பிறப்புக்களைத் தேடித்தருகின்ற காழ்த்த மலத்தாலாகிய செருக்கை அழித்து எள்ளில் நெய் போன்று எப்பொருளிடத்தும் பிரிவின்றிக் கலந்துறைந்த நின் திருவடிகளை அடியேன் பொருந்தும்படி மெய்யாகிய ஞானத்தை இப்பொழுதே வழங்கியருளி மேலும் தமிழாகிய இனிய மொழியறிவும் இனிதே தந்தருள்க! என்று வேண்டிப் பின்னர் (பின்வரும்) இதனையும் வேண்டுவான்.

(வி - ம்.) கணித்தல் - எண்ணுதல். பவம் - பிறப்பு. காழ்மலம், வினைத்தொகை. செருக்கு - யான் எனது என்னும் இருவகைப் பற்றுகள். தவிர்ந்த - தங்கிய. எள் + நெய் = எண்ணெய். (௧௪௪)

வராகமா புரத்து நாயேன் வணங்கருட் குறியின் வைகும்
அராவணி சடையி னானை யமர்ந்துதைப் பூசந் தன்னில்
விராவிய வன்பி னோடும் விதிவழி பூசை செய்வோர்
தராதலம் வியப்பப் பாவந் தணந்தருங் கதியிற் சேர்க.

(இ - ள்.) வராகபுரம் என்னும் திருப்பதியின்கண் அடியேன் நிறுத்தித் தொழுத திருவருட்குறியின்கண் வீற்றிருந் தருள்கின்ற பாம் பணிந்த திருச்சடையையுடைய எம்பெருமானை விரும்பித் தைத்திங்களிலே நிகழும் பூசநாளிலே கலந்த அன்பினோடும் சிவாகமவிதிப்படி பூசனை செய்பவர் உலகம் வியக்கும்படி தமது தீவினையெல்லாம் கழியப் பெற்று வீடுபெறுவாராக.

(வி - ம்.) அருட்குறி - சிவலிங்கம். அராவணி சடையினான் - சிவபெருமான். அமர்தல் - விரும்புதல். செயலில் விராவிய அன்பென்க. அன்பு ஈண்டு இறைவன்பால் நிகழும் அன்பு ; பக்தி. தராதலம் - ஆகுபெயர், உலகிலுள்ள சான்றோர் என்க. அருங்கதி - வீடுபேறு, (௧௪௫)

கன்னியி லடுத்த வோணங் காட்சிநீ கொடுத்த விந்நாள்
அன்னதா லிந்த நாள்வந் தடுத்துழி யிங்கென் பேரால்
மன்னுமித் தீர்த்தந் தன்னில் வந்துதோய்ந் துன்னைக் கண்டோர்
துன்னிய மலங்க ளெல்லாந் துமித்துநின் னருளிற் சேர்க.

(இ - ள்.) எம்பெருமானே! எளியேனுக்கு நீ காட்சி நல்கியருளிய இந்த நன்னாள் புரட்டாசித் திங்களிலே திருவோணம் மருவிய மாண்புடையதாகும். அத்தகைய இந்நன்னாள் ஆண்டுதோறும் வந்தெய்தும்பொழுது இத்திருப்பதியின்கண் எளியேன் பெயராலே நிலைபெற்றுள்ள இவ்வகத்திய தீர்த்தத்திலே எய்தி நீராடி நின்னையும் கண்டு தொழுபவர் அநாதியாய்த் தம்பாற் செறிந்த மலங்கள் அனைத்தும் கழியப் பெற்று நின்னுடைய திருவருள் நீழலிலே சேர்ந்தின்புறுவாராக.

(வி - ம்.) கன்னி - புரட்டாசித் திங்கள். ஓணம் - திருவோணம். நீ காட்சி கொடுத்த இந்நாள் அன்னதால் என இயைக்க. தீர்த்தம் - ஈண்டு அகத்தியனாலாகழப்பட்ட தீர்த்தம். மலங்கள் - ஆணவ முதலி யன. அருள் - வீடு. (௧௪௬)

ஆதிரை நாளிற் சோம வாரத்தி னாடி னோரும்
மேதினி மீது வேண்டு மேதகு செல்வந் துய்த்துக்
காதியெவ் வினையு நின்றன் காமரு முலகில் வாழ்ந்து
சோதியுட் சோதி யாநின் சுடர்க்கழற் பாதஞ் சேர்க.

(இ - ள்.) எம்பெருமானே! இத்தீர்த்தத்தின்கண் திருவாதிரை நாளினுதல் திங்கட்கிழமையினுதல் நீராடியவர்களும் இவ்வுலகத்தினும் தாம் தாம் விரும்பிய மேம்பாடுடைய செல்வங்களைக் குறைவறப் பெற்று நுகர்ந்து எத்தகைய தீவினையையும் கெடுத்துப் பின்னர் நின்னுடைய விரும்புதற்குக் காரணமான வீட்டுலகினும் வாழ்ந்து ஒளியினுள் ஒளி யாய் நின்ற நின்னுடைய ஒளிபொருந்திய வீரக்கழல் யாத்த திருவடி நீழலிலேயும் எய்துவாராக.

(வி - ம்.) ஆதிரை - திருவாதிரை. சோமவாரம் - திங்கட்கிழமை. ஆடினோரும் என்புழி உம்மை இறந்தது தழீஇயது. எவ்வினையும் காதி எனமாறுக. காதுதல் - கெடுத்தல்; கொல்லுதல். காமருமுலகு என்றது பதமுத்தியை. பாதஞ்சேர்க என்புழி பாதம் - பரமுத்தி. (௧௪௭)

இன்னபல் வரமு நல்கென் றிரந்தனன் முனிவர் கோமான்
அன்னணம் வரங்க ணல்கி யறுமுகக் கடவு ளன்னோன்
தன்னைநற் றமிழின் பாடை தனக்குமுன் குரவ னாக்கிப்
பொன்னிவர் கோயி லுள்ளாற் போதந்து ஞானங் கூறும்.

(இ - ள்.) துறவோர் வேந்தனாகிய அகத்திய முனிவன் மேலே கூறப்பட்ட (வரங்களும்) இன்னோரன்ன வேறுபல வரங்களும் அடி யேற் கருளுக! என்று வேண்டிநின்றானாக; ஆறு திருமுகங்களையுடைய முருகப்பெருமானும், அம்முனிவன் நல்ல தமிழ்மொழிக்கு முதற்குரவனா கும் பேற்றினையளித்து மேலும் அவன் இரந்த வரங்களையும் வழாது வழங்கியருளிப் பின்னர் அழகு தவழாநின்ற தன் திருக்கோயிலுள்ளே (அம்முனிவனோடும்) புகுந்து வீற்றிருந்தருளி அம்முனிவனுக்கு ஞானந் திருவாய்மலர்ந் தருளாநிற்பன.

(வி - ம்.) இன்னபல் வரமும் என்றது, முன்னர் ௧௪௪ முதல் ௧௪௭ வரையுள்ள செய்யுளிற் குறித்த வரங்களை யுணர்த்தியது. முனிவர் கோமான் - அகத்தியன். அன்னணம் - அவ்வாறே; அவன் வேண் டியவாறே என்றவாறு. நல்லதமிழ் என்றது அழியாமை முதலிய நன்மைகளைக் குறித்தபடியாம். முன்குரவன் - முதன்மையுடைய ஆசிரி யன். பொன் - அழகு. போதந்து - புகுந்து. (௧௪௮)

வேறு

மேதகு மறமா யறமற மாக விளைப்பதாய்ப் பசுபதி பாசம்
கோதற வறிந்து சிவத்தினை யடையக் குறுகிய நெறியதாய்ப் பயிலும்
ஆதர வுடன்வே தாகம வழியா லமலனு ரடிவழி பாடு
தீதற வுஞற்றல் பரமமாந் தருமஞ் சிவனுரை வேதமா கமங்கள்.

(இ - ள்.) இறைவன், உயிர், கட்டு என்னும் முப்பொருள்களின் இயல்பையும் குற்றமற உணர்ந்துகொண்டு அவனை அடைய நயவோர்க்கு அண்ணிதாகிய வழியாகவும், அறங்களுள் வைத்துத் தலைசிறந்த அறந்தானேயாகவும், ஏனைய அறங்கள் அனைத்தும் மெய்யறமாகும்படி செய்வதாகவும் அமைந்த பிறவிதோறும் பயின்றடிப்பட்டு வரும் உழுவலன்புடனே வேதமும் ஆகமமும் கூறிய நெறியானே வாலறிவனுகிய இறைவன் திருவடிகளைக் குற்றமற வழிபாடு செய்தல் மேலான அறமாகும். அவ்வேதங்களும் ஆகமங்களும் இறைவனுரையே யாம்.

(வி - ம்.) சிவத்தினையடையக் குறுகிய நெறியதாய் (தானே) மேதகும் அறமாய் (ஏனைய) அறங்களை மெய்யறமாக்குவதாய் அமைந்த ஆதரவு, பயிலும் ஆதரவு எனத் தனித்தனி கூட்டுக. பண்டும் பண்டும் பிறவிதோறும் பயின்றடிப்பட்டு வரும் அன்பென்பார், பயிலும் ஆதரவு என்றார். ஆதரவு - ஈண்டு இறைவன்பாற் செல்லும் மெய்யன்பு. அவ்வன்பில்வழி வழிபாட்டால் யாதும் பயனில்லை என்பார் அன்பினை இங்ஙனம் விதந்து ஓதினர்.

"அன்பேயென் அன்பேயென் றன்பால் அழுதரற்றி
அன்பே யன்பாக அறிவழியும்—அன்பன்றித்
தீர்த்தந் தியானம் சிவார்ச்சனைகள் செய்யுமவை
சாற்றும் பழமன்றே தான்" (திருக்களிற் - ௯௭.)

என்றெழுந்த திருமொழியுங் காண்க. இறைவ வழிபாடு, வேதம் ஆகமங்களிற் கூறிய முறைப்படியும் ஆதரவுடனும் இயற்றுவதே மேலான அறம் எனக் கொள்க:

பரமதருமமாம் என மாறுக. பரமதருமம் - உயர்ந்த அறம். வேதமாகமங்கள்: உம்மைத்தொகை. வேதங்களும் ஆகமங்களும் சிவனுரையே யெனவும், அவை கூறுமுறை இதுவெனவும் பொருள் கொள்க. (௧௪௧)

பிரணவ முதலாய்ச் சிவாயவென் பதுபின்
பிணைந்துறக் கிளக்குமா றெழுத்தும்
விரவுமந் நாலி னெவ்வகை மனுக்கு
மேலதா மவைதரு பொருள்கள்
பரனொடு பஞ்ச சத்திக ளிரண்டு
பயனுமாம் பயின்றவர்க் காதி
மருவிய பதத்தின் வித்தினு லென்ன
மறைமுத லனைத்துந்தோன் றினவால்.

(இ - ள்.) பிரணவம் முதலிலே நிற்ப, ஈற்றிலே சி - வ - ய என்னும் மூன்றெழுத்தும் சேர்ந்து நிற்பவும் ஓதாநின்ற 'ஓ நமசிவாய' என்னும் இவ்வாறெழுத்தாணைய திருமந்திரம் அவ்வேதாகம நூல்களினூடே விரவி ஆங்காங்கு வரும் எவ்வகை மந்திரங்களினுங் காட்டிற் றலைசிறந்த தொன்றாம். அம்மந்திரத்தின்கண் அமைந்த ஆறெழுத்துக்களும் தம்மை ஆதரவுடன் பயில்வோர்க்கு நல்கும் பொருள்கள், இறைவனும் ஐந்து வகைப்பட்ட இறைவியும், இரண்டுவகையான பயன்களும் ஆகும். அவ்வாறனுள் முதற்கண்ணின்ற பிரணவச் சொல்லினின்றே சிறியதொரு விதையினின்று பெரியதொரு ஆலமரம் தோன்றுமாறு போல வேத முதலிய அனைத்து நூல்களுந் தோன்றலாயின.

(வி - ம்.) இது முருகன் கூற்று. தம் திருமந்திரத்திற்கும் இதற்கும் வேற்றுமை ஒருசிறிது மின்றென்ப துணர்த்தற்கு ஐந்தெழுத்தென்றது ஆறெழுத்தென்றும் சிவாய என்றும் இரண்டு மந்திரத்தின் பண்புகளும் தோன்றக் கூறினர். இவ்வுண்மையை, "தாரகப் பிரமமாகி, முன்மொழி நின்ற நந்தம் மூவிரண் டெழுத்தும் ஒன்றாய், உன் மகன் நாமத்தோரெ ழுத்தென உற்ற வன்றே" எனவரும் கந்தபுராணச் செய்யுளானும் உணர்க. அந்நூலின் விரவும் எனமாறுக. ஆறெழுத்தும் என்றது மந்திரம் என்பது படநிற்றலால் மேலது என ஒருமையாற் கூறினர். அவை என்னுஞ் சுட்டு அவ்வெழுத்தும் எனச் சுட்டி நிற்றலின் ஒருமை பன்மை மயக்க மன்மை யுணர்க. மனு – மந்திரம். பயின்றவர்க்கு அவைதரும் பொருள்கள் எனமாறுக. பஞ்சசத்திகள் என்றது இறைவி என்னும் மாத்திரையாய் நின்றது. இறைவனை இறைவியைத் தருதலாவது ஓதுவோருளத்தே இறைவன் அம்மையப்பனாய் விரைந்து புக்கிருத்தல். இதனை,

"ஏது மொன்றும் அறிந்தில ராயினும்
ஓதி யஞ்செழுத் துள்ளுணர் வார்கட்குப்
பேத மின்றி அவரவர் உள்ளத்தே
மாதுந் தாமும் மகிழுமாற் பேறரே"

எனவரும் பெரியார் மொழியானும் உணர்க. "அஞ்செழுத்தை விதிப்படிஉச் சரிக்கமதி யருக்கன் அனையரவம் போற்றோன்றும் ஆன்மாவில் அரனே" என்னும் சித்தியாரும் அது. இரண்டு பயன் என்றது. பற்றறுதியும், சிவாநுபவமும் என்க. பஞ்சசத்திகளாவன : பராசத்தி, ஆதிசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி என்பன. (க௫0)

ஓமெனு மந்தப் பதந்தனை யுரைத்தோர்
வேதமா திகளெலா முரைத்தோர்
தோமறு மந்தப் பதப்பொரு ளுணர்ந்தோர்
தொக்கநூற் பொருளெலா முணர்ந்தோர்
ஏமுறு மந்தப் பதப்பொரு ளின்றே
லிரவியில் வழிவிழி யென்னக்
காமரு பொறிமற் றிருப்பினுஞ் சற்றுங்
கதிப்பரி தாகுமா தவனே.

(இ - ள்.) பெரிய தவத்தை யுடையோனே! ஓம் என்றும் ஒலி யுடைய அப்பிரணவ மொழியை ஓதியவர் வேதம் ஆகமம் முதலிய எல்லா நூல்களையும் ஓதியவர் எய்தும் பயனை எய்தாநிற்பர். மலமறு தற்குக் காரணமான அம்மொழியினது பொருளையுணர்ந்தவர், தொகுக் கப்பட்ட எல்லா மெய்ந்நூற் பொருளையும் உணர்ந்தவரே யாவர். இன்பமுறுதற்குக் காரணமான அம்மொழி யுணர்த்தும் பொருள் உணர்வு இலதாய்விடின், ஞாயிறு தோன்றுதபொழுது முகத்தில் உள்ள இருவிழிகளும் இருந்தும் பயன் இல்லையானாற்போன்று காமம் வருதற்கு வாயிலான ஐந்து பொறிகளையும் உயிர்கள் பெற்றவிடத்தும் அவற்றால் பயன் கோடல் இல்லையாய்விடும்.

(வி - ம்.) தோம்-அழுக்கு. ஈண்டு-ஆணவமலம். பதப்பொருள். அச்சொல்லின் பொருளாகிய, செம்பொருள், இறைவன். நாலனைத் தாலும் உணரற்பாலது மெய்ப்பொருள் ஒன்றே ஆதல்பற்றி அப்பதப் பொருள் உணர்ந்தோர் நூற்பொருளெலாம் உணர்ந்தோர் என்றார். இரவி - ஞாயிறு. இறைவன் திருவருள் உணர்த்தினாலன்றி உயிர்கள் உணராமையின் அப்பொருளின்றேல் பொறிகளிருப்பினும் கதிப்பரிது ஆகும் என்றார். அரிது ஈண்டு இன்மைமேனின்றது. காமம்வரும் என் பது காமரு எனமருவிற்று. காமரு - அழகிய; அழகிய பொறிகள் என வும் பொருள் கூறலாம். கதித்தல் ஈண்டு உணர்தல் மேனின்றது. (க௬௪)

ஆர்த்தவோங் காரப் பொருளெனத் தோன்று
மாரியன் சைவதன் மங்கள்
பார்த்திபர்க் கருளல் பாங்கவர் தீயர்
பகுதிகொண் டளற்றினிற் படாமை
ஓர்த்துயிர் பலவு முறையினு லோம்பித்
தீநெறி யுருவகை யொதுக்கிச்
சேர்த்திரு பயனுந் தாங்களு மடைவர்
செருக்கினுந் தெருட்டலுங் கடனே.

(இ - ள்.) இசைத்த ஓங்காரமாகிய பிரணவ மந்திரத்தின் உட் பொருள் என்னும்படி அதிலிருந்து விரிந்து தோன்றிய சிவபெருமானாற் கூறப்பட்ட சைவாகம அறங்களைச் சிறப்பாக அரசர்களுக்கு உணர்த் துக. அஃதெற்றுக்கெனின் அவர்தாமும், நல்லோரும் தீயோருமாகிய பகுதியைப் பகுத்துணர்ந்துகொண்டு மன்னுயிர்கள் நரகம் புகாதபடி ஆராய்ந்து தீதொரீஇ நன்றின்பாற் புகுதும்படி செலுத்தி மேற்கூறிய இருவகைப் பயனையும் மன்னுயிர்க்கெல்லாம் எய்துவித்தலோடு தாமும் எய்துந் தகுதியுடையர் ஆகலான். மன்னர்க்கு அறமுணர்த்துங்கால் அவர்தமக்கியல்பான செருக்கினை யுடையராயவிடத்தும் செவ்விநோக்கி அவரைத் தெருட்டுதலும் நல்லாசிரியர்க்குக் கடனாம்.

(வி - ம்.) ஆரியன் - இறைவன்; பரமன் என்றபடி. தன்மம் - தருமம்; அறம். மன்னுயிரெல்லாம் அரசன் வழிப்படுமியல்பினவாக லின் அரசற்குணர்த்திய அறம் மன்னுயிர்க் கெல்லாம் உணர்த்தியவா றாகலின். பாங்கவர் - நல்லோர் என்னும் பொருட்டு, அளறு - நரகம். முறை - செங்கோன்மை, ஏதங்கொண்டு ஊதியம் போகவிடுதல்

பேதைமை என்பதுபற்றிச் செருக்கினும் தெருட்டல் கடன் ஆகும் என்றார். பார்த்திபர் - அரசர். அருளல்: அல் விகுதிபெற்ற வியங்கோள்; அருள்க என்பது பொருள். தெருட்டல் - தெளிவித்தல். (௧௯௨)

ஆணவ மாயை காமிய முயிர்க
ளமலனு மனுதிமெய்ப் பொருளே
மாணவ காவிப் பொருள்களை யிவற்றை
வயக்குறும் வாக்கியந் தம்மைப்
பேணுறு பருவ மடுத்தவர்க் கல்லாற்
பெறும்பயன் புகழ்முத லொன்று
காணிய கொடுப்போ ரவரொடு நரகங்
காணியாக் கைக்கொள்வர் விரைந்தே.

(இ - ள்.) மாணவகனே! ஆணவம் மாயை கன்மம் உயிர்கள் இறைவன் என்னும் இப்பொருள்கள் அனாதியாயுள்ள உள்பொருள்களாகும். இந்தப் பொருள்களையாதல் இவற்றை விளக்கும் மொழிகளையாதல் பரிபக்குவம் வந்தெய்தப் பெற்றவர்களுக்கு உணர்த்துவதன்றிப் புகழ் பொருள் முதலியவற்றைப் பெறுதல் கருதிப் பக்குவம் இல்லாதவர்கட்கு உணர்த்துவோர், தம்மால் உணர்த்தப்பட்டவரோடு நரகத்தை விரைந்து எய்தாநிற்பர்.

(வி - ம்) சுத்தமாயை அசுத்தமாயை என மாயையை இரண்டாக்கி,

''ஏகன் அநேகன் இருள்கருமம் மாயையிரண்(டு)
ஆகஇவை ஆறுஆதி யில்''

என்றும் கூறுவதுண்டு. இரண்டனையும் மாயை என்பதனுள் அடக்கி இவ்வாசிரியர் உள்பொருள் ஐந்து என்றனர். அனாதி - ஆதியற்றது. மெய்ப்பொருள்-உள்பொருள். பேணுறுபருவம் என்றது, தீதொரீஇ நன்றின்பா னின்றொழுகி மனந்தூயராய் நித்தியாநித்திய உணர்வு தோன்றிப் பிறவிக்கு அஞ்சி வீடுபேற்றின் அவா மிக்குண்டாகியதொரு செவ்வி என்க. காணிய - செய்யிய என்னும் வாய்பாட்டெச்சம், பெற என்பது கருத்து. புகழ் முதலியவற்றைப் பெற விரும்பிப் பக்குவமில்லாதவர்கட்கு மெய்ந்நூலை ஓதுவிக்கும் ஆசிரியனும் ஓதுவிக்கப்பட்ட மாணவரும் நரகில் வீழ்வர் என்பதாம். மெய்ந்நூல்களை நன்மாணவர்க்கே ஓதுவித்தல் வேண்டும் என்பது குறிப்பு. மாணவகன் என்பது ஈறுகெட்டு மாணவக என விளியாயிற்று. இப் பொருள்களை என்றது, ஆணவம் மாயை முதலாகக் கூறப்பட்ட ஐந்து பொருள்களை. (௧௯௩)

கரிசறு தான முதலற முணர்த்திக்
காமரு போகமு மும்மைப்
பொருளுநன் குணர்த்திப் போக்கரு வீடும்
புகுத்துமிவ் விறைவன்வாக் கியநேர்

தருபய னுளதோர் நூலினை முன்னைத்
தவத்தினுற் பயிலுநர் சிலரே
துரிசுறு புறநூல் பயிலுநர் பலரே
சூழ்ந்திடு மிருண்மலச் செருக்கால்.

(இ - ள்.) குற்றமற்ற தானம் முதலிய அறங்களை புணர்த்தி விரும்புதற்குக் காரணமான மெய்யின்ப நுகர்ச்சியையும், உயிர் இறை கட்டு என்னும் முப்பொருள்களின் இயல்பையும் ஐயந்திரிபற உணர்த்திக் குற்றமற்ற விட்டுலகத்தினுங் குடியேற்றுஞ் சிறப்புடைய இறைவன் நூலை ஒத்த பயன்தரும் நூல் பிறிதொன்றில்லை. இத்தகைய நூலை முற்பிறப்பிற் றவஞ்செய்துயர்ந்த ஒருசிலரே பயில்பவராவார். ஏனையோர் தம்மைப் பொதிந்துள்ள மலச் செருக்குண்மையால் மயக்கந்தரும் பிற நூல்களையே விரும்பிப் பயிலாநிற்பர்.

(வி - ம்.) கரிசு - குற்றம்; அஃதாவது மனமாசு. தானம் - சிவஞானச் செயலுடையோர்க்கீதல். போகம் - இம்மை மறுமை வீடு என்னும் மூவிடத்தும் உளவாகிய இன்ப நுகர்ச்சிகள். மும்மைப் பொருள் - உயிர், இறை, கட்டு என்பன. போக்கு - குற்றம். "புறச் சமய நெறிநின்றும் அகச்சமயம் புக்கும் புகல்மிருதி வழியுழன்றும் புகலும் ஆச்சிரம, அறத்துறைகள் அவையடைந்தும் அருந்தவங்கள் புரிந்தும்..................சிறப்புடைய புராணங்கள் உணர்ந்தும் வேத சிரப் பொருளை மிகத்தெளிந்து சென்றால் சைவத், திறத்தடைவர்" என்பது பற்றி முன்னைத் தவத்தினுற் சிலரே பயில்வர் என்றார். துரிசு - மயக்கம். புறநூல் - புறச்சமய நூல் முதலியன. இருண்மலம் - ஆணவ மலம். (௧௨௪)

வார்சடைக் கடவுள் வாக்கிய மினைத்தால்
வழிபடற் குரிப்பொருள் கேட்டி
ஆர்திரைப் புணரி கடைந்தஞான் றெழுங்கோ
வைந்தினும் பயமுத லாறும்
சீர்தக வுதித்த வவற்றினுண் மயத்திற்
சிறிலை வில்வமுன் னுய
தேர்திகழ் கமலை விழைந்திருத் தலினுற்
சீபல மெனப்பெயர் விளங்கும்.

(இ - ள்.) நெடிய சடையினையுடைய இறைவன் மொழியாகிய இதனால் இறைவனை வழிபாடு செய்தற்குரிய பொருள்களை இனிக் கூறுவேன் கேட்பாயாக! (பண்டு) முழங்காநின்ற அலைகளையுடைய திருப்பாற் கடலைக் கடைந்தபொழுது அதன்கணின்றும் தோன்றிய கடவுள் ஆன்களிடத்தே பால் முதலிய ஆன்பயன்கள் ஆறும் தோன்றின. புகழத்தக்க அவ்வாறனுள் வைத்துக் (கோமயத்தில்) சாணகத்தில் சிறிய இலையையுடைய வில்வம் முன்னர்த் தோன்றியது. அழகு விளங்காநின்ற திருமகள் அதன்கண் விரும்பி வீற்றிருத்தலாலே அது 'சீபலம்' என்னும் பெயரோடு திகழ்வதாயிற்று.

(வி - ம்.) வார்சடைக் கடவுள் - சிவபெருமான். உரிப்பொருள் - உரிய பொருள். கேட்டி - கேட்பாயாக. புணரி - கடல்; திருப்பாற்

கடல். திருப்பாற் கடலினின்றும் தோன்றிய கடவுள் ஆன்கள்: நந்தை, பத்திரை, சுரபி, சுசீலை, சுமனை என்பனவாம். ஆப்பயன் ஆறுவன: பால், தயிர், வெண்ணெய், சாணகம், நீர், உரோசனை (கோரோசனை) என்பன. மயம் - சாணகம். சிபலம் - வில்வம் (காரணப்பெயர்). (கஙிரு)

கமலவுற் பலமும் பின்பதி னெழுந்த
கமழ்ந்தகுங் குலியநீ ருயிர்த்த
தமிழ்துறழ் பாலிற் கதிரொடுஞ் செந்நெ
லாயது சந்தன மாதி
இமிழுமங் கலத்த பொருளெலாந் ததியி
னீன்டிய வின்றதால் வெண்ணெய்
உமிழ்சுவை யமிழ்த முரோசனை யீன்ற
துளத்துறு சித்திபே தங்கள்.

(இ - ள்.) அவ் வில்வத்தின் பின்னாக அச்சாணகத்தினின்றே தாமரையும் நீலோற்பலமும் தோன்றின. நீர் (கோசலம்) நறுமணங் கமழும் குங்குலியத்தை நல்கிற்று, அமிழ்தம் போன்ற பாலினின்றும் கதிரோடும் கூடிய சிவந்த நெல் தோன்றிற்று. தயிரினின்றும் சந்தன முதலிய மணங்கமழு மங்கலப் பொருள்கள் தோன்றலாயின. வெண்ணெய் சுவைதரும் அமிழ்தத்தை ஈன்றது. உரோசனை, உள்ளத்தே நிகழும் எண்வகைச் சித்திகளையும் ஈன்றது.

(வி - ம்.) கமலவுற்பலம் - உம்மைத்தொகை. கமலம் - தாமரை. உற்பலம் - நீலமலர். நீர் - கோமூத்திரம். இமிழ்தல் - வீசுதல். ததி- தயிர். வெண்ணெய் - அமிழ்தம் ஈன்றது எனமாறுக. ஆல் - அசை. சித்தி - அணிமா முதலியன. (கஙிசு)

ஆதலா லானி னறுமவ் வாறு
மருளிய பொருள்களுந் தழுவிச்
சோதிநிட் களமாய் நின்றிடி னுயிரின்
றுரிசறு தெனக்கரு ணையினல்
மாதர்சேர் சகள வடிவுகொண் டிருந்த
வரதனை வழிப்டப் பெற்றோர்
கோதுறு வினைகண் முழுவதுந் துமித்துக்
குறுகுவர் சிவபுரத் தவன்பால்.

(இ - ள்) இங்ஙனமாகலின் சிறந்த அவ்வாப்பயன் ஆறும் அவை நல்கிய வில்வ முதலிய பொருள்களும் இறைவழிபாட்டிற்குச் சிறந்தன. இவையிற்றைக்கொண்டு, தனக்கியல்பான அறிவாகிய அருவநிலையி லேயே தான் அமைந்துவிடின் உயிர்களைப் பற்றியுள்ள மலமறாது எனக் கருதித் தனக்கியல்பான பேரருளுடைமை காரணமாக அம்மையப்பனாந் திருவுருக்கொண்டிருந்த வரதனாகிய விரிசடைக் கடவுளை ஆகமவழி யாலே வழிபாடு செய்வோர் பிறப்புறுதற்குக் காரணமான இருவினை

கையயுங் கெடுத்து சிவபுரத்திலே அவ்விறைவன் திருவடிநீழலிலே எய்தி இன்புறுநிற்பர்.

(வி - ம்.) சோதி - அறிவாகிய ஒளி. நிட்களம் - உருவமற்றது; அருவம். உயிரின் துரிசு - ஆணவமலம். கருணை - பேரருள். மாதர் - இறைவி. மாதர் சேர் - அழகு சேர்ந்த; எனப் பொருள் கொள்ளினும் இழுக்கின்று. வரதன் — வரந்தருபவன். கோது - பிறப்பு, ஆகுபெயர். அவாவுமாம். அவன் - அவ்வரதன். (௧௩௭)

ஈட்டும்பூ சனைசெ யன்பர்த மூவேழ்
சுற்றமு மேவல்செய் தவரும்
கேட்டவர் மகிழ்ந்தோர் வேட்டவர் முகமன்
கிளந்தவர் கண்டவ ரிவரும்
பாட்டளி மூசு மலர்முத லளித்த
பாதவ முதலிய வுயிரும்
சேட்டொளி திளைக்குஞ் சிவபுரம் வாழ்ந்து
பிறந்துழிச் செல்வரா யுயர்வார்.

(இ — ள்.) இறையறத்தை ஈட்டுதற்குக் காரணமான இத்தகைய இறைவழிபா டியற்றுவோருடைய இருபத்தொரு தலைமுறைச் சுற்றத்தார்களும், இவ் வழிபாட்டின்பொழுது இவர்க்கேவல் செய்தவரும் இவ் வழிபாட்டுச் சிறப்பைக் கேட்டவரும், கேட்டுழி மகிழ்ந்தவரும், இவரை விரும்பியவரும், இவர்க்குப் பாராட்டுரை மொழிந்தவரும், இவ் வழிபாட்டுவிழவினைக் கண்டு களித்தவரும், வழிபாடியற்றிய இவரும், இசைமுரலும் வண்டுகள் வீழும் மலர் முதலியவற்றை இவ்வழிபாட்டிற் குதவிய மரமுதலிய உயிர்களும் பேரொளி தவழும் சிவபுரத்திலே சேணெடுங்காலம் இன்புற்றமர்ந்திருந்து பின்னர்ப் பிறவியிலுறும் பொழுதும் கருவிலே திருவுடையராய்ப் பிறந்து மேலும் சிவநெறிக்கட் சென்று உயர்வர்.

(வி - ம்.) அறமீட்டும் பூசனை என்க. மூவேழ் சுற்றம் என்றது அவர்தம் பிதிரர்களை. பாதவம் - மரமுதலியன. ஓரறிவுயிர், ஈரறி வுயிர், மூவறிவுயிர், நான்கறிவுயிர், ஐயறிவுயிர் என்ற பாகுபாடு தோன்ற "பாதவ முதலிய வுயிரும்" என்றார். சேடு - பெருமை. பின்னும் சிவநெறியிலே சென்றுயர்வர் என்க. ஏவல் செய்வோர் என்றது சரியை நெறியி னின்றோரை. வழிபடுவோர் என்றது கிரியை நெறியி னிற்போரை என்க. (௧௩௮)

இத்தகு பூசை யிறைவனை நாளு
மியற்றியோ கத்திலும் பணியும்
உத்தம குணத்தார்க் குணர்வெழு நீக்க
முண்மைகண் டொவிர்சிவ ஞானம்
கைத்தலக் கனிபோற் கொடுக்குமா ரியனுங்
கசிந்துநின் றேற்பவர் தாமும்

அத்தனே டிரண்டற் ருெற்றுமை யாகி
யானந்தத் தவசராய்த் திளைப்பார்.

(இ - ள்.) இத்தகைய புற வழிபாட்டினை நித்தலும் இறைவனுக்கு ஆற்றி மேலும் மூன்ருவதாகிய யோகநெறியாலும் இறைவனை அகத்தே கண்டு வணங்கும் சிறந்த பண்புடையோர்க்கு உணர்ச்சி எழுதற்குக் காரணமான மலநீக்கம் உளதாஞ் செவ்விதேர்ந்து ஒளிருகின்ற மெய்ஞ்ஞானச் செல்வத்தை உள்ளங்கை நெல்லிக்கனியே போல் ஐயந்திரிபற நன்குணரும்படி ஓதுவிக்கின்ற நல்லாசிரியனும், அவன்பால் உடையார் முன்னில்லார் போன்று ஏக்கற்றுநின்று ஓதுகின்ற மாணவகரும், அவ்விறைவனோடு இரண்டறக் கலந்து இறையின்பத்திலே முனைப்பற்று மூழ்கித் திளைப்பர்.

(வி - ம்.) இறைவனை - வேற்றுமை மயக்கம். யோகம் - அகத்தொழில் மாத்திரையானே இறைவன் அருவத் திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு; உணர்வெழுதற்குக் காரணமான மலநீக்கம் என்க. சிவஞானம் - சிவத்தை உணரும் மெய்யுணர்வு. அத்தன் - இறைவன். ஆனந்தம் - சிவாநுபவம். அவசம் - முனைப்பறுநிலை. (சருக)

உடங்குகேட் பவர்கட் கூறுகள் விளைப்பார்
வாதமே யுஞற்றுநர் பொச்சாப்
படங்கலு முடையா ரோதிவே தாதி
யகற்றினர் சாதியி னிழிந்தோர்
தொடங்கிய நூலிற் பயன்கொளார் மொழிகள்
சோர்வுறச் சொல்லுநர் களிப்பு
மடங்கிலார் தம்மின் மேதகு சாதி
வருதவர்க் குரைத்திடா ரறிந்தோர்.

(இ - ள்.) ஒருசாலை மாணவராகித் தம்மோடு பயிலுபவர்க்கு இடையூறு விளைப்போர்க்கும், சொற்போர் புரியுமியல்புடையோர்க்கும், பொச்சாப்பு முதலிய தீய பண்புடையோர்க்கும் ஓதியிருந்தும் ஓதியாங்கொழுகாதவர்க்கும், இழிந்த சாதியிற் பிறந்தோர்க்கும் நூலின் பயன் கோடல் தேற்ருதவர்க்கும், மொழிகளைச் சோர்வுறப் பேசுவோர்க்கும், செருக்கடங்கிலாதவர்க்கும், தம்மினும் உயர்ந்த சாதியிற் பிறந்தவர்க்கும் அறிஞர் நூல் ஓதுவித்தல் செய்யார்.

(வி - ம்.) உடங்கு - கூட. ஊறு - இடையூறு. வாதம் - சொற்போர். வேதாதிகளிற் கூறப்படும் ஒழுக்கங்களை அகற்றினர் என்க. நூலிற் பயன்கொளார் என்றது. தொன்னூற்கஞ்சித் தடுமாறுளத்தர் என்றவாறு. மொழிகள் சோர்வுறச் சொல்லுவோர், குழறுவாயர். மேதகுசாதி - வேளாளர்க்குத் தம்மின் மேற்பட்ட சாதியினர் மூவருமாவர்; ஏனையோர்க்கும் நிரலே இருவரும் ஒருவரும் ஆவர் என்க. களிப்பு - செருக்கு. இத்தகையோர்க்கு ஓதுவித்தல் கூடாது என்றவாறு.
(சகூ0)

மேதகு ஞானந் தங்குலத் தளிக்கு மெய்த்தவ னில்லெனி லடுத்த
சாதியி னமைந்த குரவர்பாற் கேட்ட றகும்பிற கேட்பது தகாதால்
மாதவ ஞான மருண்முறை கிளந்தா மாசறு ஞான நூ றன்னைத்
தீதறு பூசை யுஞற்றுநர் கொடுக்குந் திறமினிச் செப்புதுந் தெளிதி.

(இ - ள்.) தங்குலத்திலே தோன்றிய நல்லாசிரியனைக் காணாப் பெருதவழி மேலான ஞான நூலைத் தங்குலத்திற் கடுத்தகுலத்திற் றோன்றிய நல்லாசிரியர்பாற் கேட்டல் தகுவதாம். ஏனைய குலத்திற் றோன்றிய ஆசிரியர்பாற் கேட்டல் தகாதாம். பெரிய தவத்தையுடைய அகத்தியனே! இதுகாறும் ஞான நூல் ஓதுவிக்கும் (ஓதும்) முறை கூறினும். இனிக் குற்றமற்ற ஞான நூலுக்கு வழிபாடு செய்பவர் திறமும் நூல் வழங்கும் முறையும் கூறுவேம். கேட்டுத் தெளிந்து கொள்க.

(வி - ம்.) சரியை கிரியை யோகம் என்னும் மூன்று நெறிகளினும் சிறந்து உயர்வற உயர்ந்து நிற்றலின் மேதகுஞானம் என்றார். ஆசிரியன் கற்றுணர்ந்ததனோடு பொறியடக்கமும் உடையவன் ஆதல் வேண்டும் என்பார். ஆசிரியன் என்னாது 'மெய்த்தவன்' என்றார். அடுத்த சாதி என்பது, அந்தணர் குலத்தில் குரவர் இலரெனில் அரசர் குலத்தி லுள்ள குரவர்பாற் கேட்டல் தகும்; அரசர் குலத்தில் உள்ளோர்க்கு வணிகரும், வணிகர் குலத்திலுள்ளோர்க்கு வேளாளரும் தகும் என்பது. பிற என்றது பிறசாதியினர் என்றவாறு. மாதவ : விளி. உஞற்றுநர் திறமும் அவர் கொடுக்குந்திறமும் என்க. (௧௬௧)

வேறு

பரமனைப் பரஞா னத்தைக் குரவனைப் பணிந்து பின்னர்
விரவுமெண் முழத்தி னுன்கின் விளங்குமண் டபமொன் றுக்கித்
தரளநாற் றூண்க ணட்டித் தகையொளிப் பட்டான் வேய்ந்து
கிரணவொண் மணிபூ வாடி கேழ்கனி கவரி நாற்றி.

(இ - ள்.) முன்னர் இறைவனையும் மேலான ஞான நூலையும் ஆசிரியனையும் வணங்கிப் பின்னர் எட்டுமுழத்தினுதல் நான்குமுழத்தி னுதல் விளங்கா நின்றதொரு மண்டபத்தைச் செய்து அதன்கண் முத்துப் பதித்த நான்கு தூண்களை நாட்டி அழகிய ஒளியுடைய பட்டாலே வேய்ந்து சுடருடைய ஒளி மணிமாலைகளையும் மலர்மாலைகளையும் கண்ணடியையும் நிறமிக்க சாமரைகளையும் நாலவிட்டு.

(வி - ம்.) பரமன் - இறைவன். பரஞானம் - ஆகுபெயர்; ஞான நூல். குரவன் - ஆசிரியன். எண்முழத்தினுதல் நான்கு முழத்தினுதல் என்க. தரளத்தூண் நான்கு என்க. தரளம் - முத்து. முத்தழுத்திய தூண் என்றவாறு. தகை - அழகு. கிரணம் - ஒளிச்சுடர். ஆடி - கண்ணாடி. கேழ் - நிறம். (௧௬௨)

அம்புயஞ் சுதையா னுப்ப னணிந்தய லலங்கா ரித்து
வம்பலர் பரப்பி மேலால் வானிறப் புதுப்பட் டேய்த்துக்

கும்பநாற் றிசையும் வைத்துக் கமலம்வாய்க் கொள்ளப் பெய்து
பம்புமங் குரங்கால் வார்த்துப் பன்மணித் தவிசாங் கிட்டு.

(இ - ள்.) அம்மண்டபத்தின் நடுவே வெள்ளிய மாவினாலே தாமரை மலர் வடிவமிட்டு அழகுபடுத்தி அதன் மருங்கினும் நன்கு அணிசெய்து அதன்மேற் புதிய நறுமண மலர்களைப் பரப்பி அதன்மேல் தூயவெண்ணிறப் புதுப்பட்டினை விரித்து நான்குதிசையினும் நிறை குடம் வைத்து அவற்றின் வாயில் தாமரைமலரிட்டுமூடி பொங்கி முளைக்கும் முளைப்பாலிகை வைத்து நீர்கால் வார்த்துப் பன்னிற மணிக ளிழைத்த இருக்கையை அவ்விடத்தே யிட்டு.

(வி - ம்.) அம்புயம் - தாமரை. நாப்பண் - நடு. அலங்காரித்து- அலங்கரித்து ; அணிசெய்து. வம்பு என்பதற்குப் புதுமை, மணம் என்னும் இருபொருளுங்கொள்க. வால் நிறம் - தூயநிறம் ; என்றது வெண்ணிறத்தை. கும்பம் - நிறைகுடம். கமலம் - தாமரைப்பூ. பம்பு தல் - அடர்ந்தெழுதல். அங்குரம் - முளைப்பாலிகை, ஆகுபெயர். நீர்கால் வார்த்தென்க. கால் முளை யெனினுமாம். தவிசு - ஈண்டு அரியணை. (௧௬௩)

அரியணை மீது வெண்புத் தகத்தினை யமைத்து மேலால்
வரியிவர் புத்த கத்தை வைத்துரோ சனைகப் பூரப்
பரிமளக் கலவை கொட்டிப் பன்மணித் தொடலை தூசு
விரிமணத் தொங்க லாதி விசித்திரம் பிறங்கச் சாத்தி.

(இ - ள்.) அவ்வரியணைமிசை (எழுதாத) வெள்ளேட்டுச் சுவடியை வைத்து அதன்மேல் ஞானநூலை வைத்துக் கோரோசனை கருப்பூரம் முதலிய மணப்பொருட் கலவைச் சாந்தைத் தெளித்து மேலும் பல வாகிய மணிமாலைகளையும் ஆடைகளையும் நறுமணங்கமழும் மலர்மாலை களையும் அழகுதிகழச் சாத்தி.

(வி - ம்.) வெண்புத்தகம் என்றது, பின்னர் எழுதிக்கோடற்குரிய வெள்ளோலைச் சுவடி. வரியிவர் புத்தகம் என்றது, எழுதப்பட்டுள்ள சுவடியை. உரோசனை - கோரோசனை. கப்பூரம் - கருப்பூரம். பரி மளம் - நறுமணம். கலவை - கலவைச் சாந்து. தொடலை - மாலை. தொங்கல் - மாலை. விசித்திரம் - ஈண்டு அழகின்மேனின்றது. பிறங்கு தல் - விளங்குதல். (௧௬௪)

அருச்சனை யாதி முற்றி யறுசுவை யுணவு மார்த்திக்
கருப்புரங் கமழுஞ் சந்து காழகில் குந்தி ருக்கம்
மருக்கொள்குக் குலுவோ ரைந்தின் மண்டுதீம் புகைக ளேய்த்துக்
குருப்பொலி கபிலை நெய்யாற் கொழுஞ்சுடர் பரப்பிப் போற்றி.

(இ - ள்.) அருச்சனை முதலியன செய்து முடித்து அறுவகைச் சுவையும் கெழுமிய உணவாகிய மடைகொடுத்துக் கருப்பூரம், சாந்து, அகில், குந்திருக்கம், குங்குலியம் என்னும் ஐவகைப் பொருளுமிட் டெழுப்பிய நறுமணப் புகைகாட்டி நிறத்தாற் பொலிவுடைத்தாகிய ஆனெய்யாலே கொழுவிய சுடரையுடைய விளக்குகளை ஏற்றியாண்டும் பரப்பிவைத்து வாழ்த்துக் கூறித்தொழுது.

(வி - ம்.) அருச்சனை - வழிபாடு. உணவு - உண்டு கடவுட்பலி யாகிய பாற்சோறு முதலியன. ஆர்த்துதல் - மறைமொழியா லூட்டுதல். சாந்து - சந்தனம். காழ் - வயிரம். குந்துருக்கம் - ஒருவகை மணப்பொருள். குக்குலு - குங்குலியம். நிம்புகை - மணத்தாலினிய புகை. கபிலை - ஒருவகை ஆன். (கசுசு)

சென்னிதா ளிருகன் னங்க டிருமுக வாய்பு யங்கள்
என்னுமோ ரெட்டுஞ் சென்னி யிருகர முழந்தா ளைந்து
நன்னிலந் தோயத் தாழ்ந்து நயந்தபி னதற்குப் பாங்கர்
மன்னுபூங் கோயி லாக்கிக் குரவனை வழிபா டாற்றி.

(இ - ள்.) தலையும், கால்களிரண்டும் செவியிரண்டும் அழகிய முகவாயும் கைகளிரண்டும் ஆகிய எட்டுறுப்பும், தலையும் கைகளிரண்டும் முழந்தாளிரண்டும் ஆகிய ஐந்துறுப்புக்களும், நல்ல நிலத்திலே தோயும்படி வீழ்ந்து வணங்கிய பின்னர் அதற்குப் பக்கத்தே மணம் நிலைபெற்ற மலரானே ஒரு கோயில் சமைத்து அதன்கண் நல்லாசிரியனை அமர்த்தி வழிபாடு செய்து.

(வி - ம்.) முகவாய் - மோவாய். நெற்றி, இரு தாள், இரு கை, இரு தோள், வாய் எட்டுறுப்பென்பர் சிலர். எட்டும் - எட்டுறுப்பும். ஐந்தும் - ஐந்துறுப்பும். நயத்தல் - அன்பாலே விரும்புதல். குரவன் - நல்லாசிரியன். (கசுகூ)

இரந்துமா ணுக்க னுசா வீந்திடப் பெற்றுப் பின்னர்ப்
பரந்தநூல் காப்பு நீக்கிப் பயின்றவைங் கவிதை யேட்டின்
வரிந்துடன் காப்புச் செய்து வயங்குமா ரியன்முன் னோர்
சுரந்தவான் சுவைநா லுண்டி துய்த்தபி னினத்தோ டுண்டு.

(இ - ள்.) மாணுக்கன் பின்னர் இரந்து நிற்றலாலே அவ்வாசான் ஓதுவிப்ப ஓதி இங்ஙனம் ஓதியபின்னர்ப் பொருள் விரிந்த அந்த மெய்ஞ் ஞான நூலினது திருக்காப்பினை அவிழ்த்துத் தான் கேட்ட ஐந்து செய்யுள்களையும் வெள்ளேட்டின்கண் வரைந்துகொண்டு பின்னர் அந் நூலினைத் திருக்காப்பிட்டு வைத்த பின்னர் ஞானத்தாலே விளங்கா நின்ற அந்நல்லாசிரியனை உள்ளிட்ட குரவரும் பிறரும் சுவை பழுகிய தூய நால்வகை யுணவும் உண்டபின்னர் அம்மாணுக்கன் தன் இனத்தோடு உண்டு.

(வி - ம்.) ஈதல், பெறுதல் இரண்டும் நிரலே ஓதுவித்தல், ஓதல் என்பவற்றை உணர்த்தும். பரந்தநூல் - விரிந்த நூல். காப்பு-கட்டு. ஐங்கவிதை என்றது. இறைவன் இறைவி கணபதி முருகன் ஆசிரியன் என்னும் இவ்வைவரையும் வாழ்த்தும் கடவுள் வாழ்த்துச் செய்யுள் ஐந்துமாம் என்று கொள்க. ஆசிரியனும் இவற்றையே முதன்முதல் ஓதுவிப்பன் என்பதுபட பயின்ற வைங் கவிதை என்றார். நாலுண்டி : உண்பன தின்பன பருகுவன நக்குவன. இனம் - உடன்பயிலும் மாணவர்; உறவினருமாம். (கசுஎ)

இரவினும் பலிக ளோம்பி யிணைவிழைச் சொழிக வில்லோன்
வரவிரு முழத்திற் பின்னுண் மண்டபம் விளைத்து முன்போல்

பரவுபூ சனைக ளாற்றிப் பயில்வுற வரைக வந்நூல்
தெரிவுறப் பயிலுங் காலு மிம்முறை பூசை செய்க.

(இ - ள்.) இராக்காலத்தும் பலிகொடுத்து வழிபாடுசெய்து மகளிரை மருவாது இருக்கக்கடவன், அவன் இல்லறத் தலைவனுடைய விடத்து, இரண்டு முழத்தில் அமையும்படி மறுநாள் ஒருசிறு மண்டபம் இயற்றி அதன்கண் முன்போல் அந்நூல்களை அமைத்து வழிபாடு செய்து பயில்வானாக. விளக்கமாகப் பயிலும்பொழுதே அவற்றை வெண்சுவடியிலும் வரைந்து கொள்வானாக. அந்நூலைப் பயில்கின்ற ஒவ்வொரு நாளும் இம்முறையில் வழிபாடு செய்தே பயின்று வருக.

(வி - ம்.) உம்மை இறந்தது தழீஇயது. இணைவிழைச்சு - ஆண் பெண் கூடல். இருமுழத்தில்வர எனமாறுக. பரவு பூசனை - வினைத் தொகை. பயில்வுற - வியங்கோள். (கசு௮)

முடிவுநாள் பசித்து முக்கண் மூர்த்தியைப் புத்த கத்தைப்
படியிலாக் குரவன் றன்னைப் பூசனை பயிற்றி யெல்லிக்
கடிகொண்மங் கலத்தால் வேத வொலியினுற் றுயிலைக் காதி
விடிவுகண் டருச்ச னாதி வினைத்திர தத்தி னேற்றி.

(இ - ள்.) பயிற்சி முற்றியமுடிவு நாளிலே உண்ணாதிருந்து முக்கட் கடவுளையும் அந்நூலையும் ஒப்பற்ற தனது நல்லாசிரியனையும் வாழ்த்தி வழிபாடியற்றி அன்றிரவில் பூசனையின் பொருட்டுக்கொண்ட மங்கல விசை முழக்கத்தானும் மறைமுழக்கத்தானும் துயிலகற்றி விழிப்புடனிருந்து விடிந்தபின்னர் முன்போல வழிபாடு முதலியன செய்து அந்நூல்களைத் தேரின்கண் எழுந்தருள்வித்து.

(வி - ம்.) முடிவுநாள் - ஓதி முடிந்தநாள். பசித்து — உண்ணாதிருந்து. முக்கண்மூர்த்தி - சிவபெருமான். புத்தகம் - நூல். படி - ஒப்பு. எல்லி - இரவு. கடி - பூசனை. மங்கலம் - ஆகுபெயர், மங்கல இசை. காதி - அகற்றி. இரதம் - தேர். (கசுகூ)

அறமனை தோறு மாக்கி யவரவ ருடங்கு நண்ண
மறலினர் நிகளஞ் சீத்து வண்பலி பலவு மோக்கித்
திறன்மிகு மிறையும் போதச் செறிந்தியம் பலவு நல்க
நிறைவளர் நகர்சூழ் போந்து நின்மலன் கோயி லுய்த்து.

(இ - ள்.) அறவோர் வாழும் இல்லந்தோறும் எழுந்தருளச் செய்து அவ்வவ் வில்லத்துள்ள அறவோரும் ஒருங்கே குழுமி வாரா நிற்பவும், ஆற்றல்மிக்க அரசனும் இவ்விழாவின் பொருட்டுத் தன் பகைவரைச் சிறைவீடு செய்து ஏனைத் தெய்வங்கட்கும் பூசனை செய்வித்து இத்திருக் கூட்டத்திலே சேர்ந்து வாராநிற்பவும், இன்னிசைக் கருவிகள் பலவும் ஒருங்கே குழுமி முழங்காநிற்பவும், வளநிறைந்த நகரத்தினை வலம்வந்து இறைவன் திருக்கோயிலிற் கொண்டு போந்து.

(வி - ம்.) அறமனை - அறவோரில்லம். எனவே அறவோரல்லாதாரில்லத்தின்முன் கொடுபோதல் கூடாதென்றுராயிற்று. உடங்கு - ஒருங்கே. மறலினர் - பகைவர். நிகளஞ் சீத்து — சிறைவிடு செய்து.

இவ்விழவின் பொருட்டுச் சிறைவீடு செய்து என்றவாறு. பலி ஏனைக் கடவுளர்க்குக் கூறியபடியாம். சித்துப் போக்கி இறையும் போத என்க. உம்மை - உயர்வு சிறப்பு. நின்மலன் - மலமற்றவன். இறைவன் - ஈண்டுச் சிவபெருமான். (கஎ0)

மீட்டுநற் பூசை யாற்றி வேந்தனை யுள்ளிட் டோர்க்குத்
தீட்டுபுத் தகத்திற் சில்ல வாக்கியந் தெரித்துச் செம்பொன்
கோட்டமில் குரவற் கீத்துக் கொழும்பொனுந் தூசு மற்றும்
வாட்டமின் மறையோ ராதி வௌவுற வழங்கல் வேண்டும்.

(இ - ள்.) இறைவன் கோயிலுள்ளே அந்நூல்களை வைத்த பின்னரும் முன்போல வழிபாடு செய்து, பின்னர் அரசனை உள்ளிட்ட அக்குழுவினர் கேட்கும்படி அம்மாணவன் தான் வரைந்துகொண்ட சுவடியினின்றும் ஒருசில அறவுரைகளை எடுத்துக்கூறிப் பின்னர் மனக்கோட்டமில்லாத தன் நல்லாசிரியனுக்குச் செம்பொன் முதலியன வழங்கி மேலும் தம் மொழுக்கத்தே மடியில்லாத அந்தணர் முதலியோர் தாம்தாம் வேண்டியாங்கு முகந்து கொள்ளும்படி கொழுவிய பொன்னும் ஆடையும் பிறவும் இறப்பவழங்குதல் வேண்டும்.

(வி - ம்.) தீட்டுபுத்தகம் - வினைத்தொகை. சில்ல - சில. கோட்டம் - மனக்கோட்டம். ஈத்து - ஈந்து. தூசு - ஆடை. வாட்டம் - மடி. தந்தொழிலில் மடியுறாத மறையோர் என்க. (கஎக)

இன்னணம் பூசை யாற்றி னிடரெலா முலகிற் றேம்பும்
மன்னுறு நன்மை யெல்லா மதிகண்மும் மாரி நல்கும்
சொன்னவர் நீந்து ளாருந் தொகுமெழுத் தொரோவோன் றற்கங்
குன்னருஞ் சிவலோ கத்து ளோராயிரங் கற்பம் வாழ்வார்.

(இ - ள்.) ஞானநூலுக்கு இவ்வாறு வழிபாடு செய்யப்படின் உலகில் உற்ற இடர்கள் அனைத்தும் நிலைபெறுவாய்த் தாமே இடர்ப்பட்டழியும். நல்லனஎல்லாம் உலகின்கண் நிலைபெறுநிற்கும், ஒவ்வொரு திங்களும் மும்மூன்று மழை பொழியாநிற்கும். யாம் இங்குக் கூறியபடி நூல் ஓதுவித்த நல்லாசிரியன்மாரும் தாம் ஓதுவித்த ஒவ்வோரெழுத்திற்கும் ஒவ்வோராயிரங் கற்பம் எண்ணற்கரிய சிவலோகத்திலே சென்று இனிதே வாழ்ந்திருப்பர்.

(வி - ம்.) உலகில் இடர் எல்லாம் இடர்ப்பட்டுத் தேம்பும் என்க. நன்மை எல்லாம் மன்னுறும் எனமாறுக. நன்மை - அறம்பொருள் இன்ப முதலியன. மதி - திங்கள் (மாதம்). நல்குதற்கு வினைமுதல் மதி. ஆங்கு - அசை. கற்பம் - ஊழி. ஒரோ ஒன்றற்கு அங்கு உன்ன அரும் சிவலோகம் எனப் பிரித்துப் பொருள் கொள்க. அங்கு - சிவலோகம் ஆகிய அவ்விடம். (கஎஉ)

ஆடிவை காசித் திங்க ளடுத்தபூ ரணையிற் பூசை
நாடினர் தாமு முன்னை நற்பயன் பற்று வார்கள்
ஏடெழு தூசி பாச மீந்தவ ரெழுதி வைப்போர்
பீடுறப் பயில்வோர் சொல்வோர் பெரிதரும் பயன்க ளாய்வோர்.

(இ - ள்.) ஆடித்திங்களினும் வைகாசித் திங்களினும் வருகின்ற பூரணை நாள்களிலே கண்டுக் கூறியமுறையாலே ஞான நூல் வழிபாடு செய்தோர் முற்கூறிய நற்பயன் அனைத்தும் ஒருங்கே எய்தாநிற்பர். மேலும் ஞான நூல் வரைதற்கு வேண்டிய ஏடும் எழுத்தாணியும் காப்பிடுதற்குக் கயிறும் வழங்கியவரும், ஞான நூல்களைப் பிறர்க்குதவியாக எழுதிவைத்தவரும், அவற்றை ஓதுதலான் உண்டாகும் பெருமையுறும்பொருட்டு ஓதுவாரும் ஓதுவிப்போரும் மிகவும் அந்நூற் பயன்களை ஆராய்பவரும்.

(வி - ம்.) பூரணை - நிறைமதிநாள். ஏடு - பனையேடு. ஊசி - எழுத்தாணி. பாசம் - காப்புநூல். பீடு - பெருமை. அரும்பயன்களைப் பெரிதும் ஆராய்ந்துணர்வோர் என்க. (௧௭௫)

ஆய்ந்தவர்க் கன்னமாதி யளிப்பவர் முதலா னோரும்
ஏய்ந்தநற் சுற்றத் தோடுஞ் சிவபுரத் தெல்லை சேர்வார்
வீந்திடி னேடு வேறு வரைந்தது வோமஞ் செய்க
வாய்ந்தநூல் வழங்க லீதா லயம்புரி மரபுங் கேண்மோ.

(இ - ள்.) அங்ஙனம் ஞான நூலை ஆராய்ந்து அரும்பொருள் காண்போர்க்கு உண்டி உடை உறையுள் முதலிய வழங்கினோர் முதலியோர் தம் பொருந்திய சுற்றத்தாரோடும் சிவபுரத்தை அடைந்தின்புறுகிற்பர். ஞான நூலின்கண் உள்ள ஏடு பழுதாகிவிடின் அதற்கு மாற்றேடு வரைந்துகொண்டு பழுதுபட்ட அவ்வேட்டினை வேள்வித்தீயில் இடுக. ஆராய்ந்த ஞான நூல் வழங்குமுறை இஃதாம். இனி இறைவனுக்குத் திருக்கோயில் எடுக்கும் முறைமையினையுங் கூறுவாம் கேட்பாயாக.

(வி - ம்.) அன்னமாதி என்புழி ஆதி என்றதற்கு உடை உறையுள் பொருள் நன்னிலம் முதலியனவுங் கொள்க. ஏய்ந்த - இயைந்த. ஏடு வீந்திடின் எனமாறுக. அது அவ்வீந்தவேடு. ஓமம் - வேள்வித்தீ. ஆலயம் - திருக்கோயில். மோ - முன்னிலையசை. ஈது + ஆல் = ஈதால். ஆல் : அசை. இது, ஈது என நீண்டது. (௧௭௬)

மதிதவழ்கோ புரநிமிரப் புரிசைபுறஞ்
சூழ்போக்கி மணிநீர்ப் பொய்கை
பொதியவிழ்பூம் பொழிலாக்கி யைவகையா
வரணமுறை பொற்பச் செய்து
விதிபயினூ றெரிகழக மடைப்பள்ளி
முதற்பலவும் விதியி னுக்கிக்
கதியருளு மிறைவனம ரிடமாதி
வரைகளெனக் காண்க மாதோ.

(இ - ள்.) திங்கள் மண்டிலம் தவழுமாறு கோபுரங்களை உயர்த்துத் திருக்கோயிலைச் சூழ மதிலெடுத்துத் தெளிந்த நீரையுடைய திருக்குளமும், கட்டவிழும் மலர்களையுடைய பூம்பொழிலும், உண்டாக்கித்

திருக்கோயில் அகத்தே பஞ்சப்பிரம சடங்கதேவரை யுள்ளிட்ட ஐவகைப் பரிவார தேவதைகட்கும் இடமுதலியன முறையே பொலி வுறும்படி அமைத்து மேலும் விதிப்படி பயிலுதற்குரிய நால்களை ஓதும் மண்டபமும், மடைப்பள்ளியும், பிறவும் நால் கூறியமுறையானே அமைத்து, உயிர்கட்கு விடையளிக்கும் இறைவன், இறைவி எழுந்தருளுதற் குரிய கோயில்களும் மலைபோன்றுயர்ந்த கோபுரங்களோடு எடுத்தல் வேண்டும்.

(வி - ம்.) மிகவுயர்ந்த கோபுரங்கள் என்பார் மதிதவழ் கோபுரம், என்றார். நிமிர - உயர. புரிசை - மதில். மணிநீர் - நீலமணிபோலு நிறமுடைய தெளிந்தநீர். பொய்கை - திருக்குளம். பொழில் - மலர்க்கா. ஐவகை - ஆவரணம் என்றது ஐந்துவகையான பரிவார தேவதைகளை. அவரை வழிபடுமண்டப முதலியன என்க. ஐவகைப் பரிவார தேவதைகள், பஞ்சப் பிரமசடங்க தேவர் பன்னொருவரும், வித்தியேசுரர் எண்மரும் கணேசுரர் எண்மரும், உலோகபாலர் பதின் மரும், அவர்தம் படைக்கலங்கள் பத்துமாம். படைக்கலங்கள் : வச்சி ரம், சத்தி, தண்டம், கட்கம், பாசம், அங்குசம், கதை, சூலம், பதுமம், சக்கரம் என்பனவாம். (௧௭௩)

பழனமிரு நிதிநடன மடமாதர்
　　பணைக்கைமத யானை பாய்மா
உழலுருளின் மணிநெடுந்தே ரூர்தியணி
　　யிவைபலவு முவந்து நல்கி
விழவொடுபூ சனைபெரிதும் விளைக்கவிளைத்
　　தவர்மீட்டும் பிறப்பின் மேவார்
குழவிமதி மிலைத்தபிரான் சிவபுரம்வாழ்ந்
　　தவனடிக்கீழ்க் குறுகு வாரால்.

(இ - ள்.) இறைவன் திருக்கோயிற்கு நன்னிலமும் பெரும் பொரு ளும் கூத்தாடும் விறலியரும் பருத்த கையினையுடைய யானையும் குதிரை யும் உருள்கின்ற சக்கரத்தையுடைய அழகிய நெடிய தேரும் இறைவன் எழுந்தருள் தற்குரிய எருது முதலிய ஊர்தி(வாகனம்)களும் அணிகலன் களும் இன்னோரன்ன மனமகிழ்ந்து வழங்கி மேலும் சிறப்பும் பூசனையும் நன்கு நிகழ்த்தும்படி செய்தவர் மீண்டும் பிறவியின்கண் புகுதமாட்டா ராய் இளம்பிறை மிலைந்த எம்பிரானுடைய சிவபுரத்திலே எய்திப் பின்னர் அப்பெருமானுடைய திருவடிநீழலாகிய வீடுபேற்றையும் எய்துவர்.

(வி - ம்.) பழனம் - விளைவயல். முதலிற் கூறியவை யானை குதிரைகள் உயிருடையன எனக்கொள்க. ஊர்தி என்பதன்கண் விடை யானை குதிரை உருவங்களை அடக்கிக் கொள்க. என்னை? திருக் கோயில்கட்கு யானை குதிரை முதலியனவும் வழங்குதல் உண்மையான். விழவு - நாள்வழிபாட்டின் குறைவுதீரச் செய்யுஞ் சிறப்பு. பூசனை - நாள்வழிபாடு. குழவிமதி - இளம்பிறை. சிவபுரம் - சாலோக முத லிய பதமுத்திகள். அவனடி என்றது பரமுத்தியினை. ஆல் - அசை. (௧௭௪)

சிவநகர்செய் தபதியரே வலினிருந்தோர்
கூலிவினை செய்தோர் பூணி
சிவநகரிற் பிறந்தவர்களொழுக்கமுட
னுறைந்தவர்நாள் செல்ல மாய்ந்தோர்
சிவநகரி னிறப்பமென வெண்ணினர்சென்
றிறைஞ்சினர்சிந் தித்தோர் செல்லச்
சிவநகர்செல் பவருடனே துணைச்செல்வோர்
களுஞ்சிவலோ கத்தைச் சேர்வார்.

(இ - ள்.) *சிவன்றிருக்கோயிலியற்றுந் தச்சரும் அவர்க்குக் குற்றேவல் செய்தவரும், ஆண்டுக் கூலித்தொழில் செய்தவரும் சிவன்கோயிற் றிருப்பணி செய்யுங்கால் அப்பணிக்கு உதவிய எருது முதலியனவும் அப்பணியாளர்க்குப் பிறந்த மக்களும், நல்லொழுக்கத்தோடு திருக்கோயிலிலே வதிந்தவர்களும் அகவை முதிர்ந்து ஆண்டே இறந்தவரும் அக்கோயில் எல்லையிலேயே இருந்து இறப்பேம் என விரதம் பூண்டவரும், நாடொறும் திருக்கோயிற்குச் சென்று வணங்கியவரும் சென்று வழிபடக் கருதினவரும் திருக்கோயிற்குச் செல்வோர்க்குத் துணை சென்றோரும் சிவலோகத்தை எய்தி இன்புற்றிருப்பர்.*

(வி - ம்.) *தபதியர் - தச்சர். ஏவலின் இருந்தோர் - அத்தச்சர்க்குக் குற்றேவலாளராக இருந்தவர். பூணி - ஊர்திகளிற் பூட்டப்படும் எருது முதலியன.* (சஎஎ)

சிவபணிசொற் றனமினியைம் மகஞ்சோறுந்
தெளிமுனிவ கருமஞ் சீர்சால்
தவமுரைமந் திரம்வருபா வனைபரம
ஞானமெனத் தகுமவ் வைந்தும்
அவமறுபூ சனையங்கி யோம்பன்முதல்
கருமநனி யாக்கை வாட
உவகையுடன் விரதமுஞற் றுதலாதி
தவங்களென வுரைப்பர் சான்றோர்.

(இ - ள்.) *முனிவனே! இதுகாறும் சிவன்கோயிற் றிருப்பணி கூறினும். இனி ஐவகை வேள்வியினியல்பும் கூறுவாம் கேட்டுணர்ந்து கொள்வாயாக! கருமமும் சிறப்புமிக்க தவமும் கணியாநின்ற மந்திரமும் பாவனையும், மேலான ஞானமும் எனத் தகுதியுடைய வேள்விகள் ஐந்துவகைப்படும். அவற்றுள் கருமவேள்வியாவது குற்றமற்ற இறைவழிபாடும் தீயோம்பலும் முதலியனவாம். உடல் மிகவும் வாடும்படி மகிழ்ச்சியோடு விரதங்களை மேற்கோடல் முதலியன தவவேள்வியாகும், என்று பெரியோர் கூறுவர்.*

(வி - ம்.) *சொற்றனம் சொன்னேம். சோறும் - சொல்லுதும். தெளி - தெளிவாயாக. முனிவ - விளி. வேள்வி, கருமவேள்வி, தவ*

வேள்வி, மந்திரவேள்வி, பாவனைவேள்வி, ஞானவேள்வி என ஐந்து வகைப்படும் என்பதாம். (கஎஅ)

மானதமு மந்தமும்பா டிதமுமென
மந்திரந்தான் மூன்று மூன்றும்
மோனமுற மனத்தகத்தே வாயகத்தே
பிறர்கேட்க மொழித லாகும்
ஆனவிவை யொன்றற்கொன் றிழிந்தனநே
ரனுமிகைமுன் விரல்கண் மூன்றின்
மேனிறுத்தல் வடமுறையா முள்ளிடுதல்
போகிபுறம் விடுத்தல் யோகி.

(இ - ள்.) இனி மந்திரவேள்வி கணிக்கு முறையானே மானதமும் மந்தமும் பாடிதமும் என மூன்று வகைப்படும். அவைநிரலே மௌனமாக நெஞ்சினுள்ளே கணித்தலும், பிறர் செவியிற்படாது வாயினுள்ளே கணித்தலும், பிறர் கேட்கும்படி கணித்தலும் ஆகும். இவை நிரலே ஒன்றற்கொன்று இழிந்தனவாகும். இவற்றை மானதமாகக் கணிக்குங்கால் ஆழிவிரல் மேலும் மந்தமாகக் கணிக்குங்கால் நடுவிரல் மேலும் பாடிதமாகக் கணிக்கும்பொழுது சுட்டுவிரலின் மேலும் கணிக்கும் மணிவடத்தை இட்டுக் கணிக்க. இது வடமிடும் முறையாகும். இனிப் போகத்தை விரும்புவோர் மணிகளைக் கீழே தள்ளிக் கணிக்க. போகத்தை விரும்புவோர் மேனோக்கி அவற்றைத் தள்ளிக் கணிக்க.

(வி - ம்.) மானதம் – நெஞ்சினுள்ளே கணித்தல். மந்தம் – பிறர் செவியிற்படாதபடி மெல்ல வாயகத்தே கணித்தல். பாடிதம் - உரக்கக் கூறுதல். பாடிதத்தினும் மந்தம் சிறந்தது அதனினும் மானதமே மிகச் சிறந்ததாம் என்பதாம். உள்புறம் என்பன கீழ்மேல் என்பது பட நின்றன. (கஎகூ)

வளியிடைபிங் கலைநடுநா டியினியங்க
மந்திரிக்கின் முறையே போகக்
களிசிவனும் வீடனுகு மிரண்டுமுறுங்
கைவிரலி னிறையே சங்கின்
ஒளிவடம்புத் திரதீவி படிகமணி
புண்டரிக மணியோண் கஞ்சம்
அளிமணிநற் குசைமுடிகண் மணியிவைநே
ரொன்றற்கொன் றதிக மாமால்.

(இ - ள்.) கணிக்கும்பொழுது உயிர்க்காற்றினை இடைக்கலை நாடியில் இயங்கும்படி செய்யின் கணிப்பார்க்குப் போக மகிழ்ச்சியுண்டாகும், பிங்கலையாயின் வீடுபேறுண்டாம், நடுநாடியாயின் இரண்டும் உளவாம். கணித்தற்குக் கைவிர லிறையும் சங்குவடமும் புத்திரதீவி மணியும் தாமரைமணியும் துளசிமணியும் நல்ல தருப்பை முடிச்சுமாலை

யும் உருத்திராக்க மணியுமாகிய இவை நிரலே ஒன்றற்கொன்று உயர்வுடையன வாகும்.

(வி - ம்.) வளி - உயிர்க்காற்று. இடைநாடி பிங்கலைநாடி (சுழிமுனை நாடி) நடுநாடிகள் என்க. நிரனிறையாகக் கொள்க. (௧௮௰)

பரமனருட் டிருவுருவை யுளத்திருத்தல்
பாவனையப் பரமன் மெய்ந்நூல்
உரிமையினே துதலோது வித்தல்பொருள்
கேட்டல்கேட் பித்த லுள்ளம்
விரைவுறநன் கிருத்தலென வைந்தாகு
ஞானமகம் விரித்த வீண்டைக்
கருமமுத லொன்றற்கொன் றதிகமிவற்
றிருபயனுங் கலப்பர் தக்கோர்.

(இ - ள்.) இறைவன் திருவுருவத்தை நெஞ்சத்தே பதிய நினைத்தலே பாவனைவேள்வி எனப்படும். இனி அவ்விறைவன் அருளிய மெய்ந்நூலை ஓதுமுரிமைபெற்று ஓதுதல், தகுதியுடையார்க்கு ஓதுவித்தல், தம்மின் மிக்கார்பால் அவற்றின் நுண்பொருளைக் கேட்டல், தாமும் பிறரைக் கேட்பித்தல், அப்பொருள் தமதுள்ளத்தே இரண்டறக் கலந்து பரஞானமாம்படி உள்ளத்திலே நிறுத்துதல் என ஞானவேள்வி ஐந்துவகைப்படும். ஈண்டு விரித்துக் கூறப்பட்ட கருமவேள்வி முதலியன ஒன்றற்கொன்று நிரலே உயர்வுடையன. இவ்வேள்வி தலைப்பட்ட சான்றோரும் இவற்றால் போகமும் வீடுமாகிய இரண்டு பயனையும் எய்துவர்.

(வி - ம்.) பரமன்-இறைவன். மெய்ந்நூல்-ஞானநூல். உரிமை-ஓதுதற்குரிய பருவம் சாதிநலம் முதலியன. ஞானமகம்-ஞானவேள்வி. இருபயன் - போகமும் வீடும். (௧௮௧)

கருமமுதன் மகமைந்துங் கரைந்தனமா
லிவைமுறையாற் கழிப்பி மேலாம்
அருடலைப்பட் டவர்பெருமை யறைதுநெடுங்
கடன்முகந்த வறவ கேண்மோ
ஒருமுதலைத் தழலிடையந் தணர்சரியை
கிரியையின ருருவின் யோகர்
திருகறுதம் மகமலரிற் காண்பர்மெய்ஞ்ஞா
னியரெங்குந் தெரியக் காண்பார்.

(இ - ள்.) நெடிய கடலைக் கையான் முகந்துண்ட அறச் செல்வனே! இதுகாறும் ஐவகை வேள்விகளினியல்பும் கூறினும். இனி இவ்வேள்விகளை முறையாலே செய்துமுடித்து இவற்றிற்கு மேலாகிய திருவருளைத் தலைப்பட்ட பெரியோர் மாண்பு கூறுதும் கேட்பாயாக! ஒப்பற்ற முதல்வனாகிய இறைவனை அந்தணர்கள் வேள்வித்தீயினும்,

சரியை கிரியை என்னும் இருநெறியினும் நிற்போர் படிமத்தினும், யோக நெறியினர் குற்றமற்ற தூய தமது மனமலரினும் காண்பர். மெய்ஞ் ஞானியராகிய அருட்செல்வர் அவ்விறைவனை அங்கிங் கெனாதபடி யாண்டும் காண்பவராவார்.

(வி - ம்.) கரைந்தனம் - கூறினேம். கழிப்பி - இயற்றிமுடித்து. அருள்நிலைப் பட்டவர் என்றது சிவாநுபூதியுடையாரை. அறவ - விளி. மோ - முன்னிலையசை. ஒருமுதல் - ஏகனாகிய இறைவன். அந்தணர் வேள்வித்தீயிற் காண்பர் என்க. திருகு - மனமாசு. (கஅஉ)

இறைவனமர் புரிதனக்கு விற்கிடைமூன்
றயுதநிலத் திரியும் பாவம்
உறைகளுற்றுங் கங்கைதனக் கதற்கிரட்டி
யெல்லையிடை யோட்டந் துட்கும்
மிறைபுரியு மும்மலமும் வேரோடு
மகழ்ந்தெறிந்து மெய்ஞ்ஞா னத்தின்
முறைபுரியுஞ் சிவயோகி யிடந்தனக்குக்
கோடியிடை முடுகி யோடும்.

(இ - ள்.) இறைவன் எழுந்தருளியிருக்கின்ற திருக்கோயிலினின் றும் முப்பதினாயிரம் விற்கிடை தூரத்திற்கப்பாலே தீவினைகள் கெட் டோடாநிற்கும், துளிநிறைத்த சிவகங்கையினின்றும் அறுபதினாயிரம் விற்கிடை தூரத்திலே ஓடிக் கெடுவனவாம். மனத்தைக் கோட்டஞ் செய்யாநின்ற ஆணவம் மாயை கன்மம் என்னும் மூன்று மலங்களையும் வேரோடும் அகழ்ந்து அகற்றி மேலும் மெய்ஞ்ஞான நான்முறைப்படி இறைபணிநிற்கும் சிவயோகி இருக்குமிடத்தினின்றும் அத்தீவினை கோடி விற்கிடைதூரம் விரைந்தோடிக் கெடும்.

(வி - ம்.) திருக்கோயில் வழிபாட்டினும் சிவகங்கையில் ஆடுதலி னும் ஒரு சிவயோகியைக் காண்டல் பன்மடங்கு சிறந்ததாம்.

விற்கிடை - ஓர்அளவு. இரிதில் - கெட்டோடுதல். உறை-நீர்த் துளி. களுற்றுதல் - நிறைத்தல். ஓட்டந்து - ஓடி. ஒருசொல், மிறை- கோட்டம். மும்மலம் - ஆணவம், மாயை, கன்மம் என்பன. துவரக் களைந் தென்பார் - வேரோடும் அகழ்ந்தெறிந்து என்றார். (கஅங)

வேறு

சரியைமுன் மூன்றும் புரிநர்சா லோக
முதலிய மூன்றுமே சார்வர்
துரிசறு ஞான முழப்பவ ரிறைவன்
றெனல முழுவதும் பெறுவர்
விரியொளி மணிகைப் பெற்றவர் பொலிகல்
விற்றுண விழைவுரு ரதுபோற்
பிரிவரு ஞானம் பெற்றவர் கருமம்
பிணைந்ததன் பயன்கொளக் கருதார்.

(இ - ள்.) சரியை கிரியை யோகம் என்னும் மூன்று நெறிகளினும் நிற்போர் நிரலே சாலோகம் சாமீபம் சாரூபம் என்னும் பதமுத்திகளையே எய்தாநிற்பர். மலம்முழுதும் அறுதற்குக் காரணமான ஞான நெறியிலே நின்று ஒழுகுஞ் சான்றோர் இறைவனுடைய பழமையான நலம் முழுவதும் எஞ்சாது பெற்று நுகர்வர். ஒளிவிரிகின்ற நன்மணி கைவரப் பெற்றோர் பொளிந்த அம்மிக் கல் வாணிகஞ் செய்துண்ணக் கருதுவரோ? கருதார் அன்றோ! அங்ஙனமே பெரும்பயனுடைய ஞானங் கைகூடப் பெற்றவர் சிறுபயனுடைய கீழ்ப்படியாயுள்ள கருமம் யோக முதலியவற்றை மேற்கொண்டு அவற்றால் பயன்பெறுதலைக் குறிக் கொள்ளுதலிலர்.

(வி - ம்.) ஒளிமணி பெற்றோர் குறைந்த முயற்சியில் நிறைந்த பயன்பெறுவர். ஆகலின் நிறைந்த முயற்சியும் குறைந்த பயனும் உடைய அம்மிவிற்றுண்ணுதலைச் செய்யார் என்பது உவமை.

புரிநர் - புரிபவர். சாலோகம் சாமீபம் சாரூபம் என்னும் மூன்றும் என்க. பொளிகல் - அம்மிக்கல். துரிசு - ஆணவமலம். (கஅச)

வளியுளர் காலும் வெளியினைத் தணவா
மாட்சியி னுடலிரு வினையால்
நெளிதரு காலுஞ் சாக்கிரா தீத
நிலையினிற் பெயர் தரார்க் கவற்றான்
விளைவன சற்று மிலையவை யிரண்டும்
விமலனே யேற்றவர் தம்பால்
உளைவன விழைவ வுஞற்றுநர்க் கடைய
வுறுத்துவ னுலுறு தவனே.

(இ - ள்.) மிக்க தவத்தையுடையோனே! காற்றுச் சுழன்று வீசும்பொழுதும் தனக்காதாரமான வெளியினைக் கடவாதே அதனுள்ளேயே அடங்கினாற் போன்று சாக்கிரத்தே அதீதத்தைப் புரிந்த சிவயோகியர் தம்முடல் தாம் முகந்துகொண்டுள்ள இருவகைப்பட்ட பிராரத்த வினைகளாலே மோதப்பட்டு நலிவுறநேர்ந்த காலத்தும் தாம் நிற்கும் அந்நிலையினின்றும் பெயராது நிலைபெறுவர். அத்தகையோர்க்கு அவ்விருவினையானும் நிகழக்கூடிய இன்பதுன்பங்கள் ஒருசிறிதும் இல்லையாகும். அப்பயனிரண்டனையும் இறைவனே ஏற்றுக்கொண்டு அவற்றை அச்சிவயோகியர்பால் துன்புறுதகுநவும் இன்புறுதகுநவும் இயற்றியோர்பால் முறையே எய்துவித்துத் தீர்ப்பன்.

(வி - ம்.) வளி - காற்று. வெளி - வானவெளி. தணத்தல் - கடந்துபோதல். உடலும் அவர்க்கு மிகை என்பது தோன்ற அவர் என்னாது உடல் நெளிதருங்காலும் என்றார். சாக்கிராதீதம் என்றது. கருவிகளோடும் தொழிற்பட்டு நிற்பதாகிய சகல சாக்கிரத்திற்றானே கருவி ஒன்றனோடும் கூடாது தொழிலிறந்து நிற்கும் நின்மல துரியாதீத நிலை என்க. உளைவன - துன்புறுவதற்கு ஏதுவாவன. விழைவ - விரும்புதற்கு ஏதுவாவன. (கஅரு)

உடங்குறை கமலப் பாசடை நீரோ
டொற்றியா மருந்துமந் திரத்தார்
விடங்கனன் றுடற்றப் படார்வினை யுடற்ற
விடைப்புற வுயங்குறார் சிவத்தின்
அடங்கிய வன்ப ரறிவவிவ் விதிகொண்
டறிவினை யறிவிடை யடக்கார்
தொடங்குறின் வினைமெய்ந் நூல்பயின் றவருந்
தொன்றுபோ லதன்பயன் றுழ்வார்.

(இ - ள்.) *நீரிலே தோன்றி நீரோடு உறைகின்ற தாமரையினது பசிய இலை அந்த நீரோடு பொருந்தமாட்டா: மருந்தும் மந்திரமும் உடையோர் நஞ்சு சினந்து நலியப்படார்; இறையருளில் அடங்கிய சிவயோகியர், இருவினைகளும் தம்மை மோதுங்கால் முனைப்புடையராய் அவற்றால் இன்பமும் துன்பமும் உறுதலிலர். அறிவனே! மெய்ந் நூல்களைப் பயின்றவர் தாமும் இம்முறையை மேற்கொண்டு தஞ்சிற் றறிவினைப் பேரறிவினுள் அடக்காதவராயின் தன் முனைப்போடு வினைகள் மோதுங்கால் பண்டுபோன்றே அவற்றால் மோதுண்டு இருவகை நுகர்ச்சியினையும் உடையராவர்.*

(வி - ம்.) *கமலப் பாசடை - தாமரையினது பசிய இலை. ஒற்றித்தல் - நனைந்து ஒன்றுபடுதல். மருந்தும் மந்திரமும் என உம்மை விரிக்க. விடைப்புறுதல் - முனைப்புறுதல். அறிவ - விளி. அறிவினை - தஞ்சிற்றறிவினை. அறிவிடை - பேரறிவினுள். நூல் பயின்றவரும் இவ்விதிகொண்டு அறிவினை அறிவினுள் அடக்காராயின் வினை தொடங்குறின் தொன்றுபோல் அதன் பயனாற் சூழப்படுவர் என இயைபு காண்க.* (௧௮௬)

காவலன் சிறையோர் மண்ணைகோட் பட்டோர்
கதியெலா மவர்வழி யன்றி
மேவரி தனுபோ லுடறனக் குள்ள
வினையெலாம் விமலனால் விரவச்
சாவதும் பிறப்புங் கடந்தபே ரின்பந்
தணப்புறு திருப்பதே யல்லால்
ஆவதா னமக்கென் றென்றையும் புரியா
ரருள்வழிப் பட்டமா தவரும்.

(இ - ள்.) *வேந்தனுடைய சிறைக்கோட்டம் புக்கவரும் பேயாற் பற்றப்பட்டவரும் செய்யுஞ் செயலனைத்தும் அவ்வேந்தன் வழியும் பேய் வழியும் நின்று செய்யப்படுவனவே ஆதலன்றி தம்வழியே செய்யப் படுவனவல்ல. அங்ஙனமே சிவயோகியர் உடலினின்று தாம் செய்யும் வினையெல்லாம் இறைவன் விதிவழியே நிகழ்வனவே தம்வழியில் நிகழ்வன அல்ல என்று நன்குணர்ந்துகொண்டு ஏது நிகழினும் தாம் தலைப்பட்ட இறப்பும் பிறப்புங் கடந்த பேரின்பநிலையினின்றும்*

வழுவாமல் விளக்கு நிற்பதேயன்றி இதனால் நமக்கு இன்னாகும் என்று விழைந்து யாதொன்றையும் முனைப்போடு செய்யார்.

(வி - ம்.) சிறையோர் - சிறைகோட் பட்டோர். மன்பேய் - பேய்த்தி - செயல். அவர் அவ்வேந்தனும் பேயுமாகிய அவர்.

"உலகினில் என்செயலெல்லாம் உன்விதியே நீயே
உள்நின்றும் செய்வித்தும் செய்கின்றாய் என்றும்
நிலவுவதோர் செயல் எனக்கின் றுன்செயலே"

என்றும் தாமே யாதொன்றையும் முனைப்புடன் செய்யாதடங்கி யிருப்பர் என்றவாறு. (கஅஎ)

ஆதலா லவர்பா னிகழ்செய லனைத்து
மமலனு ரருட்செய லாகும்
காதலா லவர்க்கே பூசனை புரிக
கரிசறப் பூசனை புரிந்தோர்
மேதகு மிறைவ னுலகுபெற் றிருந்து
விரிசத நியுதகற் பங்கள்
போதலும் பின்றை மாயவன் முதலோர்
போகபூ மிகளெலாம் வாழ்ந்து.

(இ - ள்.) அங்ஙனமாகலின் அச்சிவயோகியர்பால் நிகழாநின்ற செயல்கள் எல்லாம் அவர் செயலாகாமல் இறைவனுடைய அருட்செயலே ஆகும் என்றறிக. அச்சிவயோகியர்க்குப் பேரன்போடும் வழிபாடு இயற்றுக. குற்றமற அவர்க்கு வழிபாடியற்றியவர் மேலான தகுதியையுடைய இறைவனுடைய உலகிலே சென்று ஆண்டின்புற்றமர்ந்திருப்பர். அவ்வுலகிலே கோடியூழிகளிருந்து கழிந்த பின்னர் திருமால் முதலியோருடைய இன்பவுலகங்களினும் சென்று வாழ்ந்திருந்து.

(வி - ம்.) அவர் - அச்சிவயோகியர். அவர்க்கே என்புழி ஏகாரம் தேற்றப்பொருளது. கரிசு - தீவினை. மேதகுமிறைவன் - பரமசிவன். சதநியுதம் - ஒருகோடி. கற்பம் - ஊழி. மாயவன் - திருமால். (கஅஅ)

தவம்புரி குலத்து மண்ணிடைத் தோன்றித்
தம்பிரான் பூசையா தரவால்
அவந்தெறப் புரிந்து ஞானமுற் றின்பத்
தழுந்துவ ரமலனுர் பதத்தில்
நிவந்தவா தரவு கடைமுதன் மூன்று
நிகழ்கடை யாதர வுடையோர்
துவந்துவ மூன்று பிறப்படைந் தொழித்துச்
சோதியு ளிரண்டறக் கலப்பார்.

(இ - ள்.) பின்னர்த் தவம்புரிதற்குரிய உயர்ந்த குலத்திலே இந்த மண்ணுலகத்தே பிறந்து பேரன்புடனே இறைவனைச் சரியை கிரியை யோக நெறிகளிலே நின்று தீவினை கழியும்படி வழிபாடுசெய்து மெய்ஞ் ஞானம் கைவரப்பெற்று ஈற்றில் இறைவனோடு இரண்டறக் கலப்ப தாகிய வீட்டின்பத்தே அழுந்துவர். இறைவனுடைய திருவடிகளிலே செலுத்தும் உயரிய அன்பு கடை யிடை தலை என முத்திறப்படும். அவற்றுட் கடையன்புடையோர் தொடர்ந்து இம்மண்ணுலகிலே மூன்று பிறப்பினை அடைந்து மலமொழித்து இறைவனோடு இரண்டறக் கலவாநிற்பர்.

(வி - ம்.) தவம்புரி குலமென்றது, அந்தணர் அரசர் வணிகர் வேளாளர் முதலிய நால்வகைச் சாதியுள் மேதகும் ஒழுக்கநெறி நிற்கும் உயர்குடி, என்க. தம்பிரான் - இறைவன். ஆதரவு - அன்பு. துவந் துவம் - தொடர்பாக. தீவினைகளை ஒழித்தென்க. (கஅக)

இடையினு தரவு பெற்றவர் சிவலோ
கத்திடை வாழ்ந்திரு பிறப்புப்
படிமிசை யெடுத்துத் தேசிக னருளாற்
பயின்றுஞா னத்தைவீ டுறுவார்
மடமறு முதன்மை யாதர வுடையார்
வள்ளலா ருலகுவாழ்ந் தொற்றை
உடலிலத் தெடுத்து முப்பொரு ளியல்பு
முணர்ந்தின்பத் துணர்விறந் திருப்பார்.

(இ - ள்.) இறையடிகளிலே இடையன்புடையே சிவலோகத் திலே நீண்டகாலம் வாழ்ந்திருந்து பின்னர் இந்நிலவுலகத்திலே தொடர்ந்து இரண்டு பிறப்பினை எய்தி நல்லாசிரியனைத் தலைப்பட்டு அவனருளால் மெய்ஞ்ஞான நூலைப் பயின்று மெய்யுணர்ந்து வீட்டினை யும் எய்துவர். அறியாமையகன்ற தலையன்புடையோர் சிவபெருமான் உலகத்திலே வாழ்ந்திருந்து இவ்வுலகில் ஒருபிறப்புற்று அப்பிறப்பி லேயே முப்பொருள் இயல்பும் உணர்ந்து சீவன்முத்தராய் வீடு பேறடையா நிற்பர்.

(வி - ம்.) படி - மண்ணுலகம். தேசிகன் - ஆசிரியன். மடம் - அறியாமை. முதன்மையாதரவு—தலையன்பு. வள்ளலார் - இறைவன். இன்பத்துணர் விறந்திருத்தல் ஞானநிட்டை எய்தியிருத்தல்; வீடுமாம்.

வேறு

முனிவ ஞானயோ கத்தினர் பெருமையை மொழிந்தன முலகத்தோர்
துனிவு தீர்தரப் புரிதரு தருமமுஞ் சொல்லுது மறிதன்மம்
கனிவி னீதலே யெரியினை யோம்பலே கடவுளா லயஞ்செய்தல்
புனிதன் பூசனை நான்குமா மிவற்றினும் புகுதரும் பலமெல்லாம்.

(இ - ள்.) முனிவனே! இதுகாறும் ஞானநிட்டையையுடைய சிவ யோகியர் பெருமையைத் தெரியக்கூறினும். இனி, இந்நிலவுலகத்தில்

வாழ்வோர் துன்பமகலும்படி இயற்றும் இறையறத்தின் பண்பினையும் கூறுவாம் கேட்பாயாக! அறமாவன — அன்புடனே ஈதலும், தீயோம்பலும், இறைவன் திருக்கோயிலெடுத்தலும் இறைவன் வழிபாடியற்றலும் என்னும் இந்நான்குமேயாம். இவ்வறங்களைச் செய்தோர்க்கு நற்பயன்கள் அனைத்தும் ஒருசேர வந்தெய்தும்.

(வி - ம்.) முனிவ - விளி. துனிவு - துன்பம், பசி முதலியன. சொல்லுதும் — கூறுவோம். அறி — அறிக. கனிவு - இரக்கமுமாம். ஈதல் - உண்டி முதலியன வழங்குதல். எரி - வேள்வித்தீ. ஆலயம் - திருக்கோயில். பலமெல்லாம் புகுதரும் என்க. பலம் - பயன். (௧௯௧)

ஈத லாவது பாத்திர மென்பவர்க் கிடம்பொழு துறநூலின்
நீதி யாதர வடைந்துதா தாவெனு நீர்மையர் பொருணல்கல்
ஓது பாவெனல் பாவமற் றதினெடுத் துறுத்துத றிரமென்ப
தாத லாற்கரி சறுத்துநற் கதியினும் பவர்கள்பாத் திரமாவார்.

(இ - ள்.) அந்நான்கனுள் ஈதல் என்பது அறநாலுணர்ச்சியோடு இயற்கையாகவே அன்புமுடைய வள்ளன்மையுடையோர் தகுதியுடைய விருந்தினர்க்குச் செவ்வியுடைய இடத்தானும் பொழுதானும் உண்டி முதலிய பொருள்களை வழங்குதலேயாகும். தகுதியுடைய விருந்தினரைப் பாத்திரம் என்று கூறுப. இதன்கண் பா என்றதற்குப் பாவம் என்பது பொருள். திரம் என்றதற்கு (அப்பாவத்தினின்றும்) எடுத்து நிறுத்துதல் என்பது பொருள். எனவே தீவினையை அகல்வித்து வீட்டிலே செலுத்தும் தகுதியுடையோரே ஈதற்கேற்ற பாத்திரம் ஆவர் என்றுணர்க.

(வி - ம்.) காலமும் இடமும் செவ்வியனவாகும் பொழுது ஈதலே அறம் என்றது அறிக. நூலின் நீதி திருக்குறள் முதலிய நூலில் விருந்தோம்பற்குக் கூறும் முறை யென்க.

"காலத்தினாற் செய்த வுதவி" எனவும், "உதவி செயப்பட்டார் சால்பின் வரைத்து" எனவும் வரும் வள்ளுவர் மெய்ம்மொழிகளையும் கண்டு நினைக. (௧௯௨)

கரும முற்றவர் கற்றறி மேதையர் காழின்மந் திரஞ்சான்றோர்
பெருமை யோகினர் ஞானிய ரிவர்க்குளம் பெட்டுத விடினேதும்
ஒருபி றப்புநா றுயிர மூழிபே ரூழியும் பயனிற்கும்
பொருவி லாச்சிவ ஞானயோ கத்தரே பொருவில்பாத் திரமாவார்.

(இ - ள்.) சரியை கிரியை நெறிகளிலே நிற்போரும் மெய்ந்நூல்களை ஓதியுணர்ந்த சான்றோரும் கீழ்மையில்லாத மந்திர வேள்வியினிற்போரும் யோகியரும் ஞானவேள்வியிற் பயில்வோரும் ஆகிய இவர்க்கு விருப்பத்தோடு பொருள்களை ஈயின் சிரலே ஒருபிறப்பும் நூறுபிறப்பும் ஆயிரவூழியும் பேரூழியும் அதன் பயன் ஈவார்கண் நிலைபெறுவதாம். எனவே ஒப்பற்ற சிவஞான யோகமுடையரே ஒப்பற்ற பாத்திரமுமாவார் என உணர்க.

(வி - ம்.) கருமமுற்றவர் - சரியை கிரியையினிற்போர். மந்திரஞ் சான்றோர் - மந்திர வேள்வி செய்வோர். யோகினர் - அகவழிபாடு

செய்வோர். ஞானியர் - ஞானவேள்விகள் புரிவோர். ஞானயோகத்தர் சாக்கிராதீத நிலையில் நிற்போர் சிவன்முத்தர். (கக௬)

திரைசெய் நீர்விழுஞ் சிலையினைப் புணையன்றிச்
சிலைகரை யேற்றாதால்
புரைசெய் பாவத்தி னழுந்தினர் தமைப்புரை
யொழிந்தவர் தாமன்றி
நிரைசெய் மேற்கதி செலுத்தவல் லாரலர்
நிகழ்கரி சினாற்றால்
உரைசெய் பாத்திர மபாத்திர மறிந்தளித்
தொழிக்கநற் பயன்வேட்டோர்.

(இ - ள்.) கடலின்கண் விழுந்த கல்லைத்தெப்பமே கரையேற்றுவதன்றி மற்றொரு கல் கரையேற்றுதல் கூடாது. குற்றம் செய்தலினாலே உண்டாகின்ற பாவத்திலே முழுகியிருப்போரைக் குற்றந்தீர்ந்த மேலோரல்லது பாவச் செயலுடைய ஏனையோர் அப்பாவத்தினின்றகற்றி வீட்டுநெறிக்கட் செலுத்துதல் வல்லராகமாட்டார். அங்ஙனமாகலின் அறத்தால் வரும் பயனை விரும்பியவர், ஈண்டுக் கூறிய நற்பாத்திரமும் தியபாத்திரமும் ஆராய்ந்தறிந்து நற்பாத்திரங்கட்கு வழங்கி ஏனையோர்க்கு வழங்குதல் ஒழிக.

(வி - ம்.) திரைசெய்நீர் - கடல். சிலை - கல். புணை - தெப்பம். ஆல் - அசை. புரை - குற்றம். மேற்கதி - வீடு. கரிசு - குற்றம். அற்றால் - அங்ஙனமாகலின்.

பாத்திரமல்லாதார்க்கு ஈவோர் நரகம் எய்துவர் என்பதுபற்றி அறிந்து ஒழிக்க என்றார். இதனை,

"அடங்கலர்க் கீந்த தானப் பயத்தினால் அலறு முந்நீர்த்
தடங்கட னடுவண் தீவு பலவுள அவற்றுட் டோன்றி
உடம்பொடு முகங்கள் ஒவ்வார் ஊழ்கனி மாந்தி வாழ்வர்
மடங்கலஞ் சீற்றத் துப்பின் மானவேல் மன்ன ரேறே.

எனவரும் சீவகசிந்தாமணியானும் (உ௮௩௧) தெளிக. (கக௭)

அந்த ணாளர்கள் கோடியோர்க் கருத்திய வரும்பயன் வறிதென்ன
வந்து மல்குறும் பிச்சைஞா னியர்கரம் வழங்குவார்க் கேனிலன் பால்
வெந்த பல்வகை யுணவுதா சருங்கலன் வேண்டிய கோடையெல்லாம்
எந்தை யோடொரு மித்தவன் னவர்க்கலா லெண்ணுரு றறிந்தோரே.

(இ - ள்.) ஒருகோடி அந்தணர்க்கு முறைப்படி உணவு வழங்கிய தனால் உண்டாகும் பெறற்கரிய பயனும் சிறிதென்னும்படி பிச்சைக்கு வந்த ஒரு சிவயோகியார் கையில் அன்போடு உணவு வழங்கினவர்க்கு பெரும்பயன் வந்து மேலும் பெருகாநிற்கும் என்று நூல் கூறுவதனால், எம்பெருமானோடு இம்மையிலே இரண்டறக் கலந்துவிட்ட அத்தகைய சிவயோகியார்க்கன்றி அறிந்தோர் வெந்த பலவகைப்பட்ட

உண்மைக் ஆடையும் அரிய கலங்களும் முதலிய அவர் வேண்டிய பொருளெல்லாம் வழங்கக் கருதமாட்டார்.

(வி - ம்.) அறிந்தோர் சிவயோகியர்க்கே வழங்குவர் என்றவாறு. அந்தணாளர் - பார்ப்பனர். பிச்சைக்கு வந்துற்ற ஞானியர் என்க. தூசு - ஆடை. அருங்கலன் - உருத்திராக்கமணி முதலியன. ஒருமித்தவர் - கலந்தவர். (கசுரு)

தென்பு லத்தவர்க் குரியநாண் ஞானியர்க் கருத்துநர் சிவலோகத்
தின்ப ருந்துற மூவெழு சுற்றமு மிருப்பரூட் டினர்நம்பால்
அன்பின் வந்தனை புரிந்துதம் மனையிடை யடுத்தஞா னியர்க்கூட்டின்
துன்ப மல்கள மெரீஇயவர் குலமெலாந் துன்னுவர் சிவலோகம்.

(இ - ள்.) தென்புலத்தவர்க்குக் கடன்செய்யும் நாளிலே சிவ ஞானியர்க்கு உணவூட்டினோர் சிவலோகத்தே சென்று இன்புற்றமர்ந்து வாழாநிற்பர். மேலும் அவர்தம் இருபத்தொரு தலைமுறை முன்னோரும் சிவலோக மெய்தாநிற்பர். நம்மிடத்தே மெய்யன்போடு வழிபாடியற்றித் தம்மில்லத்தே வந்தெய்திய சிவஞானியர்க்கு உணவு முகனமர்ந்து அருத்தியவர் குலத்திற் றோன்றிய முன்னோர் அனைவரும் துயரஞ் செறிந்த நகரத்தினின்றும் விலகிச் சிவலோக வாழ்க்கை எய்துவர்.

(வி - ம்.) தென்புலத்தவர் - படைப்புக்காலத்து அயனாற் படைக்கப்பட்டதோர் கடவுட் சாதி. மூவெழு சுற்றம் - இருபத்தொரு தலைமுறை மூதாதையர். நம்பால் (முருகன்பால்). அமலுதல் - செறிதல். (கசுசு)

கொண்டு விற்றல்கூ லித்தொழி லுழுதல்பொய் கூறுதல் வெகுளித்தீ
மண்ட லென்றவற் றலகிடன் மெழுகறி வளர்த்தனீ ரரிசிக்கண்
உண்டு பாவமீ தொழிவுறு மைம்முகத் தொருவனை யெரிதன்னைக்
கண்ட ஞானியைக் குரவனை நித்தலும் பூசனை காண்பார்க்கே.

(இ - ள்.) சந்தைகளிற் பொருள்களைக் கொண்டு விற்றலும் கூலித் தொழில் செய்தலும் உழுதலும் இவற்றின் பொருட்டுப் பொய்கூறுதலும் சினத்தலும் என்ற இவற்றோடு அலகிடலும் மெழுகலும் தீவளர்த்தலும் நீர் எடுத்தலும் அரிசி குற்றுதலும் ஆகிய இவற்றால் பாவம் உண்டாதலும் உண்டு; இத்தகைய பாவங்கள் சிவபெருமானையும் வேள்வித் தீயினையும் தம் மெதிர்கண்ட சிவயோகியையும் ஆசிரியனையும் வழிபடுவார்க்குத் தீர்ந் தொழிவனவாம்.

(வி - ம்.) அலகிடல் மெழுகல் முதலியவற்றால் சிற்றுயிர்கள் இறத்தலுண்மையின் பாவம் உண்டாம் என்றார். இல்லறத்தோர் இப் பாவங்களைச் செய்யாதிருத்தல் இயல்வதன்று. எனவே இதற்குங் கழுவாய் கூறியபடியாம். (கசுஎ)

எடுத்த வையிரு தொழிலையு மியம்பிய விறைவனு தியர்க்கென்றே
தொடுப்பிற் பாவங்க ளிலைதமக் கென்றிடிற் சூழுமவ் வொருபானுல்
அடுக்கும் பாவமும் விதித்தன விலக்கின வகற்றியாற் றலின்வேறு
படுக்கும் பாவமுந் தபவெணிற் செய்கமுன் வகுத்தவர் தமைப்பூசை.

(இ - ள்.) இங்கு யாம் எடுத்துரைத்த பத்துத் தொழிலையும் இறைவன் முதலியோர் வழிபாட்டின் பொருட்டே இயற்றுமிடத்தே பாவங்கள் உண்டாகமாட்டா. தம் பொருட்டே செய்யுமிடத்தே அப்பத்துத் தொழிலானும் உண்டாகும் பாவங்களும், அறநூல் விதித்தவற்றைச் செய்யாமையானும் விலக்கியவற்றைச் செய்தலானும் இன்னோரன்ன பிறவழிகளானும் உண்டாகும் பாவங்களும் தீர்தல் வேண்டின் யாம் முற்கூறிய இறைவன் சிவயோகியர் முதலியவர்க்கு வழிபாடியற்றுக.

(வி - ம்.) ஐயிரு தொழில் என்றது முற்செய்யுளில் கொண்டு விற்றல் முதலாக அரிசிகுற்றல் ஈறாக எடுத்தோதப்பட்ட பத்துத் தொழில்களையும். ஒருபான் - ஒருபத்து. விதித்தன விலக்கின என்று மிவற்றோடு அகற்றி ஆற்றலின் என்பவற்றை நிரனிரையாக ஒட்டுக. தப - கெட. வகுத்தவர் - வகுக்கப்பட்டவர். (கஅ)

ஈச னதியர்க் களித்தவூ ணவிழொன் றற் கீரைஞ்ஞூ றெனுமாண்டு
தேசூ லாஞ்சிவ புரத்திருப் பர்செழுங் கருனைநெய் ததிகூடில்
பேசும் வான்பயன் றசமடங் காம்பெருஞ் சுவையசொன் றியின்பேதம்
வாச நோலையா திகட்குநா ருயிர வரிசையி னுயர்கிற்கும்.

(இ - ள்.) இறைவன் முதலியோர்க்கு வழங்கிய உணவின்கண் அமைந்த வெண்பருக்கை ஒன்றனுக்கு, வழங்கியவர் ஆயிரம் யாண்டு ஒளிவுலவும் சிவலோகத்து வாழும் பேற்றினை எய்துவர்; செழிப்புடைய பொரிக்கறியும் நெய்யும் தயிரும் அவ் வெண்சோற்றோடு கூட்டி வழங்கின் கூறப்படும் பயன் பத்துமடங்காக மிகும். மிக்க சுவையுடைய சித்திரான்ன வகை, மணமுடைய எள்ளுண்டை முதலியவற்றிற்கு நாறுயிரமடங்கு வரைநிரலே பயன் உயராநிற்கும்.

(வி - ம்.) அவிழ் - பருக்கை. ஐஞ்ஞூறு - நகரத்திற்கு ஞகரம் போலி. தேசூ - ஒளி. கருனை - பொரிக்கறி. ததி - தயிர். தசம் - பத்து. நோலை - எள்ளுண்டை. சொன்றி - சோறு. பேதம் - வகை. அக்காரவடிசில் முதலியன. செங்நெற்சோறு சம்பாச்சோறு முதலியனவுமாம். (கக)

சிறந்த வேடத்தி னடுப்பினு மஃதின்றிச்
சேரினு மொழுக்கெல்லாம்
அறிந்து ளாரெனச் சாரினு முள்ளவ
ரெனவரு வாரேனும்
அறிந்த மெய்யடி யார்களைப் பரமென்றே
யயிர்ப்பறத் தெளிந்தன்பால்
பிறந்த வான்பயன் பெறவுளம் விழைந்துளார்
பெரிதும்பூ சனைசெய்வார்.

(இ - ள்.) மக்களாற் பிறந்ததற் கேற்ற பெரும்பயனாகிய வீடுபேற்றை விரும்பும் அன்பர் தம்மில்லத்திற்குச் சிவனடியார் திருநீற்றுக்காப்பு உருத்திராக்கம் முதலிய பூண்ட சிறந்த வேடத்தோடு வந்தாலும், அவ் வேடமின்றியே வந்தாலும், ஞானவொழுக்கம் அனைத்தும் அறிந்

தோர் என்றாலும் ஞானவொழுக்கமே மேற்கொண்டொழுகுவோர் என்றாலும் மெய்யுணர்ந்த அவ் அடியார்களை இறைவனேயாகக் கருதி ஐயமறத் தெளிந்து மெய்யன்போடு நன்கு வழிபாடு செய்வர்.

(வி - ம்.) வேடம் - ஞானவொழுக்கத்திற்கேற்ற வடிவம்.

"செம்மலர் நோன்றாள் சேறல் ஒட்டா
அம்மலங் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேயமும் மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானும் அரன்எனத் தொழுமே"

என்பது சிவஞானபோதம் (சூ. கஉ) (௨00)

**அடியர் தங்களை யாசுரைத் தவரது கேட்டவர் கேட்பித்தோர்**
**உடன்விராவினர் மூட்டினருடன்பட லுற்றவ ரிவரெல்லாம்**
**விடிவில் வெந்நர கழுந்துவ ராதலான் விமலமெய்ப் பொருளென்றே**
**கடிகொள் பூசனை புரிவத லாற்கரி சடியர்பா லுரையற்க.**

(இ - ள்.) அகத்தியனே! சிவனடியாரைக் குற்றங் கூறினோரும், அது கேட்டுநின்றோரும் கேட்கும்படி செய்தவரும் கூடிநின்றோரும், குற்றங் கூறும்படி செய்தவரும் அதற் குடன்பட்டிருந்தோரும் ஆகிய இவரெல்லாம் மீளாத கொடிய நரகத்திலே அழுந்துவர். ஆதலான், மெய்யடியார்களைக் கண்டவிடத்தே இறைவன் என்றே கருதிச் சிறந்த வழிபாடியற்றுதலே செய்க. அவர்பாற் குற்றங் கூறுதொழிக.

(வி - ம்.) ஆசு - குற்றம். அது - அவ்வசை மொழியை. குற்றங் கூறுவோருடன் கூடியவர் என்க. மூட்டுதல் - குற்றங்கூறுதற் கேற்ற செவ்வியை உண்டாக்குதல். விமலம் - தூய்மை. மெய்ப்பொருள் - இறைவன். கரிசு - குற்றம். உரையற்க - உரைக்கவேண்டா. (௨0க)

**மனத்தி னுல்வடி வாலவ மதிக்கினும் வாய்பிள வாக்கும்பி**
**இனத்தி னோடுவீழ்ந் தழுந்துவ ரவற்றினு மியல்பலா தனசெய்யல்**
**நுனித்த வாலறி வுடையவ பாத்திர நுவன்றும்பாத் திரமல்லான்**
**தனக்கி யாவதும் புரியலென் றுமவன் றன்மையுங் கிளப்பாமால்.**

(இ - ள்.) சிவனடியவரை மனத்தானும் உடலானும் அவமதித்தாலும் அங்ஙனஞ் செய்தோர் தம்மை விழுங்கிய பின்னர் ஒருபொழுதும் வாயைத் திறந்திடாத கொடிய நரகத்திலே தம்முடைய சுற்றத்தாரோடு வீழ்ந்து அழுந்தாநிற்பர். அவமதியாமையோடும் அவர்பால் தீயசெயல்களைச் செய்யாதொழிதல் வேண்டும். கூர்த்த தூய அறிவுடையோயே! ஈண்டு ஈதற்குரிய நற்பாத்திரத்தை விளக்கினோம். மேலும் பாத்திரமல்லாதானுக்குச் சிறிதும் வழங்குதல் வேண்டா என்றும் கூறினோம். பாத்திரமல்லாதான் தன்மையும் இனிக் கூறுவாம் கேட்பாயாக!

(வி - ம்.) வடிவம் - ஈண்டு உடன்மேனின்றது. உடலால் அவமதித்தலாவது, கண்டுழி எழாமையும் எதிர்கொள்ளாமையும் முதலிய செயலால் அவமதித்தல். கும்பி - நரகம்; வாய்·- என்றது

''அன்ணுத்தல் செய்யா அளறு'' என்றெழுந்த திருக்குறள் நினைவிற் ரோன்றிய தென்க. நுமென்றும் : தன்மையொருமை வினைமுற்று. எம்மும் - என்று கூறினேம். அவன் - பாத்திரமல்லான். விளப்பாம் - கூறுவாம். நுனித்த வாலறிவுடையவ என்றது, விளி. (உ0உ)

வேறு

அமலனடிக் கன்பிலார் பிறப்பை யஞ்சா
　　ரருந்தவரென் றுலகுதமை மதித்துப் பேண
விமலனடி யவர்கோலத் தொளித்தோ ரன்னோர்
　　விதியினவர்க் களிப்பினுமவ் வீகை வித்தும்
சமமறுநெல் லுவர்நிலத்து மனுவிற் றாவுந்
　　தக்கவரா குதிசாம்ப ரிடத்தும் வாட்கண்
கமலமனர் விழைவலியின் மாட்டு மென்னுய்க்
　　கழியுமது போல்வாளா கழியு மன்றே.

(இ - ள்.) இறைவன் திருவடிகட்கு அன்பில்லாதாரும், பிறப்பை அஞ்சாதவரும், செயற்கரிய தவவொழுக்கமுடைய பெரியோர் இவர் என்று உலகத்தோர் தம்மை மதித்துத் தமக்குவேண்டிய பொருள் முதலியன கொடுத்துப் பேணும் பொருட்டு இறைவன் அடியாருடைய வேடத்தினுள்ளே மறைந்து திரியும் படிற்றொழுக்க முடையோரும், இன்னோரன்ன பிறரும் பாத்திரம் அல்லாதார். இவர்க்கு நான்முறைப் படி உணவு முதலியன வழங்கினும் அவ்வீகையானது, நன்னிலத்திலே விதைத்தற்குரிய நெல் சமனில்லாத உவர் நிலத்தினும், தக்கவர் மந்திரத்தோடே வேள்வித் தீயின்கண் வழங்கும் அவி சாம்பரிடத்தும், வாளும் தாமரைமலரும் போன்ற கண்ணையுடைய இளமகளிரின் காமவிருப்பம் பேடியின்மாட்டும் யாதாய் முடியும் அதுபோன்று பயனிலவாய் ஒழியும்.

(வி - ம்.) அவ்வீகை உவர்நிலத்து வித்திய நெல்லும் சாம்பரினிட்ட அவியும் அலியை விழையும் மகளிர் காம விருப்பமும் போன்று பயனிலதாய் முடியும் என்க.சமமறு நிலத்து வித்தும் நெல்லும் என மாறுக. சாம்பரின் இடப்படும், கொள்ளும் விழைவும், என ஏற்ற பெற்றி வருவித்துக்கொள்க. என்னுய்க் கழியும் என்ற விஞ பயனில் வாதல்போல் என்னும் பொருளை வற்புறுத்து நின்றது. (உ0௩)

பாத்திரமு மபாத்திரமு முயிரே யொன்று
　　பயனுக்க வொன்றுக்காப் பண்பென் னுவேன்
ருத்தனுரை யிடத்தேது மயிர்த்த வீரி
　　னழுந்நாத மரத்தொடியைந் தயமேற் றெக்க
மூத்தகனங் கரைசேர்க்கு மரத்தொன் றுதேன்
　　முழுகுமது நானுமிந்த முறைமை யன்றே
காத்தருளு மிறைவனொடு கலந்தார் நன்மை
　　காட்டுவதுங் கலவார்காட் டாத வாறும்.

(இ - ள்.) இருவகைப் பாத்திரமும் உயிர்களேயாக அவற்றுள் ஒருயிர் பயன் உண்டாக்க மற்றொன்று பயன் உண்டாக்கமாட்டாமைக்குக் காரணம் யாதோ என்று இறைவன் மொழிக்கண் சிறிதும் ஐயங்கொள்ளல் வேண்டா. நீரின்கண் அழுந்தாத புனைமரத்தின்மேலே பொருத்தப்பட்ட இரும்பு தன்மேற் குவிக்கப்பட்ட பெருஞ்சுமையை அக்கரைக்குக் கொண்டுபோய்ச் சேர்க்கும். அந்தமரத்தினன்றி அழுந்து மரத்திலே பொருந்திய இரும்பு தன் சுமையோடு தானும் முழுகியொழியும் அன்றே உயிர்களைக் காத்தருளும் இறைவனோடு கலந்த சிவயோகியர் நன்மை யுண்டாக்கலும் ஏனையோர் உண்டாக்காததுமாகிய இந்த முறைமையையும் அத்தன்மைத்தே என்று கொள்க.

(வி - ம்.) ஆத்தன் - இறைவன். அயிர்த்தல் என்பதன்கண் அல் விகுதி எதிர்மறைப் பொருளது ''மகனெனல்'' எனவரும் திருக்குறளிற் போல. அழுந்தாத மரம் என்றமையால் அழுந்தும் மரத்து ஒன்றினால் எனக் கொள்க. அயம் - இரும்பு. கனம் - சுமை. இந்த முறைமையும் அது என இயைக்க. (உ0ச)

குருடர்முட வர்கள்விருத்தர் நோயி னோர்நல்
குரவுடையோர் பாலகரா தியரு மீவோர்க்
குருகலுறு மிரக்கமிகி னளிக்கத் தக்கா
ரொற்றையங்காற் கொடிஞ்சிமணிப் பொலந்தே ரூரும்
பரிதிநடு வானெழுங்கால் வந்தோ ரெல்லாம்
பாத்திரமென் றவர்தமக்கும் பரிந்து பூசை
புரிகவினி யருந்தவதா தாவென் பாரைப்
புகன்றுபின்பா தரவுமற்றும் புகல்வா மன்றே.

(இ - ள்.) ஈண்டுக் கூறப்பட்ட பாத்திரமாவாரேயன்றிக் குருடரும் முடவரும் முதியோரும் பிணியாளரும் வறுமையுடையோரும் சிறாரும் இன்னோரன்னோரும் வள்ளன்மை யுடையோர்க்கு மனமுருகுதற்குக் காரணமான இரக்கம் மிக்க விடத்தே ஈதற்கேற்ற நல்ல பாத்திரங்களே ஆவர். அரிய தவத்தை யுடையோனே! இனி ஒற்றைச் சக்கரத்தையும் கொடிஞ்சியையும் உடைய அழகிய பொன் தேரினை ஊராநின்ற ஞாயிற்று மண்டிலம் வானத்தின் நடுவில் வரும்பொழுது இரக்க வருவோரெல்லாம் நல்ல பாத்திரங்களே அவருள் பாத்திரம் அபாத்திரம் ஆராயாது வேடமுடையோர் அனைவருக்கும் அன்புற்று வழிபாட்டோடு வழங்குக. இனி வள்ளன்மையுடையோர் பண்புணர்த்திப் பின்பு அன்பின் தன்மையையும் பிறவும் கூறுவாம்.

(வி - ம்.) கொடிஞ்சி - ஒருவகைத் தேருறுப்பு. பொலம்-பொன். பரிதி - ஞாயிறு. உச்சிப் பொழுதில் பசித்து வருவோரெல்லாம் நற்பாத்திரமே அப்பொழுதுற்ற சிவவேடமுடையாரை ஆராயாது வழிபட்டு வணங்குக என்றவாறு. தாதா - வள்ளல். ஆதரவு - அன்பு. (உ0ரு)

வணக்கம்வரை யாதளித்த லுறவு கோப
மாற்றலிரக் கமுமுடையார் தாதா வென்பார்

இணக்கமுறு மிருப்பெழுகை விரைந்து போத
லெதிர்கொள்கை தவிசினிடை யிருத்தல் பூசை
பிணக்கமற வுளுற்றலின்சொ லாதி தம்மாற்
பெட்டுவப்புச் செயல்பிரியி னுடங்கு சேறல்
கணித்தவிவை யேழானும் பயன்கள் கொள்வார்
கரிசிலர்க ணல்கூர்ந்த காலு மாதோ.

(இ - ள்.) விருந்தினர்பால் வணக்கமுடையராதலும், வரையாது வழங்கும் பண்பும், விருந்தினர்பாற் கேண்மையுடையராதலும், சின மில்லாதவரும் இரக்கமுடையோரும் ஆகிய வள்ளல்கள் விருந்தினரைக் கண்டுழி இருக்கையினின் றெழுதலும், விரைந்து செல்லுதலும், எதிர் கொள்ளுதலும், இருக்கையினமர்த்தலும், மாறுபாடின்றி வழிபா டியற்றலும், இன்சொற் கூறலு முதலிய செயல்களால் விரும்பி விருந் தினர்க்கு உவப்புச் செய்தலும் பிரியுங்காற் உடன்போய் வழிவிடுதலும் என்று நூல் வகுத்துக்கூறிய இவ்வேழு செயலானும் குற்றமற்ற வள்ளலாவோர் நல்கூர்ந்த விடத்தும் விருந்தோம்பிப் பயன்களை எய்தா நிற்பர்.

(வி - ம்.) வள்ளன்மை யுடையார் பண்புகள். வணக்கமுடைமை, வரையாதளித்தல். உறவாந்தன்மையுடைமை, சினமின்மை, இரக்க முடைமை முதலியன. அவர் செயல், இருக்கை எழுதல், விரைந்து எதிர் போதல், வரவேற்றல், தவிசிலிருத்தல், வழிபாடுசெய்தல், உவப்புச் செயல், உடன்சேறல் ஆகிய ஏழும் என்க.

"இருக்கை எழலும் எதிர்செலவு மேனை
விடுப்ப வொழிதலோ டின்ன குடிப்பிறந்தார்
குன்ரு வொழுக்கமாக் கொண்டார் கயவரோ
டொன்ரு வுணரற்பாற் றன்று" (நாலடி - கசுக)

என்ருர் பிறரும். (உ0ச)

பாத்திரத்தின் மிக்கபாத் திரமெய்ஞ் ஞானி
படர்ந்திரவா னவனிருக்கும் பாங்க ரண்மி
ஈந்திடுக வவனென்றும் வேண்டா னேனு
மீகுநர்க்குப் பயன்கருதி யேற்றுக் கொள்வான்
வாய்த்திடுமா தரவிரக்கத் தோடு மீவான்
வாங்கினரோ டரனுலக மருவி வாழ்வன்
வீத்திடுமா தரவிரக்கத் தீந்தோ ரெல்லாம்
வெந்நிரயத் தழுந்துவரேற் றவர்க ளோடும்.

(இ - ள்.) பாத்திரங்களுள் வைத்துத் தலைசிறந்த பாத்திரம் சிவயோகியே, அவன் பிறர்போன்று இல்லந்தோறுஞ் சென்று இரப்பா னல்லன், ஆதலால் அச்சிவயோகி இருக்குமிடத்தே சென்று ஈயக்கடவர். அத்தகைய சிவயோகி யாதொன்றனையும் விரும்புவது இல்லை எனினும்

ஈவோர்க்குப் பயன் உண்டாகுக என்று கருதி ஏற்றுக்கொள்ளும் இயல்புடையன் ஆவன். அத்தகைய சிவஞானியர்க்கு அன்பளாவிய இரக்கத்தோடு வழங்கியவன் அச்சிவஞானியரோடு சிவலோக மெய்தி இன்புற்று வாழ்வன். அன்போடளாவிய இரக்கமின்றி புகழ் முதலி யன கருதி ஈந்தோரெல்லாம் கொடிய நரகத்தே தம்பால் ஏற்றவ ரோடும் சேர்ந்து வீழ்ந்தழுந்துவர்.

(வி - ம்.) பாங்கர் - இடம். அண்மி - சென்று. அவன் - மெய்ஞ் ஞானி. ஈத்திடுக - வீத்திடும் என்பன இரண்டும் எதுகை நோக்கி வலித்தன. வீத்திடும் - வீந்திடும், இல்லையான. வீத்திடு மாதரவிரக் கம் என்றது ஆதரவிறந்த இரக்கம் என்றவாறு 'அருங்கேடன்' என் புழிப் போன்று கொள்க. (உ0எ)

தருகவெனு மிடியர்தமை யொருவி யன்னே
தக்கபெரி யவர்யாங்க ளுள்ளா ரென்று
துருவுநர்கள் சிறத்தவர்க ளல்ல ரில்லாத்
துப்பினரில் லாயினற மின்றே யன்றே
மருவியுளத் தெழுங்காதல் பத்தி யற்ருன்
வழாதுகடைப் பிடித்திடுதல் சிரத்தை யிந்த
இருதிறத்தி னின்சொன்முதல் கொண்டு செய்யு
மினிமையா தரவுவிதி வழிபா டாதி.

(இ - ள்.) தம்பால் வந்து யாம் வறுமையால் நலியாநின்றேம் யாதேனும் ஈந்தருள்க என்றிரக்கும் வறியோரைக் கடிந்தகற்றிவிட்டு அந்தோ! ஈதற்குச் சிறந்த பாத்திரமாம் பெரியோர் யாண்டுளர் என்று தேடித் திரிவது பேதைமை; இத்தகையோர் சிறந்த வள்ளல்களல்லர். வறியவர் இருத்தலானன்றே உலகில் அறம் என்பதொன்றுளதாயிற்று. இவரில்லரேல் அறமுமில்லை. இனி இது கிடக்க. ஆதரவு முதலியன கூறுதும். இயல்பாகவே உள்ளத்திருந்து எழாநின்ற அன்பே பத்தி எனப்படும். அவ்வன்பின் செயல்களை வழுவாது கடைப்பிடித் தொழுகல் சிரத்தை எனப்படும். இந்த அன்பானும் சிரத்தையானும் இன்சொல் முதலியவற்ருல் விருந்தினர்க்குச் செய்யும் இனிமையே ஆதரவு எனப்படும். இனி இவ்வாதரவாற் செய்யும் வழிபாடு முதலி யவற்றிற்கு.

(வி - ம்.) ஒருவுதல் - கடிந்தகற்றுதல். அன்ரே - குறிப்புமொழி அவர்தம் பேதைமைக்கு நூலாசிரியர் இரங்குகின்ருர். துருவுதல்-தேடித் திரிதல். சிறந்தவர் - சிறப்புடைய வள்ளல்கள். இல்லாத்துப்பினர் - துப்பில்லாதார்; வறியவர். இல்லாத் துப்பினர் இல்லாயினறமு மின்றே என்றது.

"இரப்பாரை யில்லாயின் ஈர்ங்கண்மா ஞால
மரப்பாவை சென்றுவந் தற்று" (குறள். ௧உ௫௮)

என்னும் அருமைத் திருக்குறட் கருத்தை இவ்வாசிரியர் பொன்போற் போற்றிக் கொண்டவாறும். வழிபாடாதி என்பது அடுத்த செய்யு ளிற் சென்று முடியும். (உ0அ)

காசிகுருக் கேத்திரங்கா ளத்தி காஞ்சி
கனகசபை சேதுமுத லிறைவன் வைப்பும்
தேசுதிகழ் சீபரிபூ ரணவிவ் வோங்கல்
செந்தில்பரங் குன்ருதி யெமது வைப்பும்
வீசுதிரைக் கங்கைநதி முதலாந் தீர்த்த
வியன்கரையும் விரிகடலின் கரையுங் கண்டை
ஓசையெழு மானினஞ்சே ரிடமு முண்மை
யுணர்ந்தவர்வா ழிடமுமிட மாகு மன்றே.

(இ - ள்.) காசியும் குருக்கேத்திரமும் காளத்தியும் காஞ்சியும் தில்லையும் சேதுவும் உள்ளிட்ட எந்தையார் திருத்தலங்களும், ஒளி திகழாநின்ற சீபரிபூரணமலை என்னும் இத்திருத்தணிகையும் திருச்செந் திலும் திருப்பரங்குன்றமும் உள்ளிட்ட எம்முடைய திருத்தலங்களும் அலையெறியும் கங்கை முதலிய கடவுட்டன்மையுடைய பேரியாற்றங் கரைகளும் மணியொலித்தற்குக் காரணமான ஆநிரைகள் வதியும் இடங்களும் ஞானநிட்டை யுடையோர் வாழும் இடங்களும் தலைசிறந்த இடங்களாகும்.

(வி - ம்.) கண்டை - மணி. ஆனினம் - பசுநிரை. சிறந்த இட மாகும் என்க. அன்றும் ஏயும் அசைகள். (௨0௧)

இரவியைவெண் மதியையர வடுக்குங் காலம்
ஈரயன முதற்பலவாங் கால மீதற்
குரியவெலா முரைத்தனமீண் டுரைத்தா முன்னே
யும்பனு லயமியற்ற லீண்டை யீத்தல்
எரிவளர்த்த லொடுபொதுவி னுரைத்துப் போந்த
வீசன்பூ சனைமுன்னுந் தொகுத்தா மேனும்
அரியயனுக் கரியபிரான் பூசையாற்றும்
அத்தருமஞ் சிறப்பினுமற் றறைகிற் பாமால்.

(இ - ள்.) ஞாயிற்றையாதல் திங்களையாதல் இராகு கேதுக்கள் மறைக்குங்காலமும் ஞாயிறு வடதிசைச் செலவு தொடங்குங் காலமும் தென்றிசைச் செலவு தொடங்குங் காலமும் உள்ளிட்ட சிறந்த காலங் கள் எல்லாம் ஈதற்குச் சிறந்த காலங்களாம். அகத்திய! ஈண்டு ஈதற் குரிய பாத்திர முதலிய எல்லாம் கூறினேம். இறைவனுக்குக் கோயி லெடுக்கு முறைமையும் முன்னே கூறினேம். ஈண்டை ஈதலும் எரி வளர்த்தலும் ஆகிய இவற்றோடு பொதுவிற் கூறிய இறைவன் வழிபாடு தொகைவகையாற் கூறினேம் எனினும் திருமாலும் பிரமனுந் தேடியுங் காண்டற் கரிய இறைவனுக்கு வழிபாடியற்றும் அவ்வறத்தினை இனிச் சிறப்பு வகையானும் கூறுவாம்.

(வி - ம்.) இரவியை வெண்மதியை என்புழி உம்மைதொக்கன. ஈரயனம் - உத்தராயணம் தக்கணாயனங்கள். உம்பன் - பரமன்.

சொருத்தாம் - சொருத்துரைத்தேம். அரி-உருபும் உம்மையும் விரிக்க. அறைகிற்பாம். (௨௧௰)

அடருயிர்கொ லாமைபொறை வாய்மை நாணே
யாதரவே யடக்கமே யீகை தீமை
உடறவம்பா வனையிறைவன் பூசை பத்தும்
ஒண்டரும மிறைவன்பூ சனைக்கு மற்றைத்
தொடர்தருமொன் பதுமுறுப்பா முறுப்பு முற்றுஞ்
சூழ்ந்திறைவன் பூசனையை யுஞற்றி னரும்
படருமவற் றுட்சிலகொண் டிறைவன் பூசை
பண்ணினருஞ் சிவலோகம் பற்றி வாழ்வார்.

(இ - ள்.) உலகிற் செறிந்துள்ள உயிரினங்களைக் கொல்லாமையும், பொறை யுடைமையும், நாணமுடைமையும், அன்புடைமையும், அடக்கமுடைமையும், ஈகையும், தீவினையை அழித்தற்குக் காரணமான தவமுடைமையும், பாவனையும் இறைவன் வழிபாடும் ஆகிய பத்தும் சிறந்த அறங்களாம். இவற்றுள் இறுதியினின்ற இறைவன் வழிபாட்டிற்கு அதனைத் தொடர்ந்த நின்ற ஒன்பதும் உறுப்புக்களாம். இவ்வுறுப்புக்கள் முழுவதுமுடையராய் இறைவழிபாடு செய்தோரும் விரிந்த இவையிற்றுட் சிற்சிலவே கொண்டு இறைவழிபாடு செய்தோரும், சிவலோக மெய்துவர்.

(வி - ம்.) அடர் உயிர் - வினைத்தொகை. நாண் - உயர்ந்தோர் தமக்கொவ்வாத கருமங்களில் நாணுதல். ''கருமத்தால் நாணுதல் நாணுத் திருநுதல், நல்லவர் நாணுப் பிற'' என்பது (திருக்குறள் ௧0௧௧) ஆதரவு - அன்பு. அடக்கம் - மெய்மொழிமனங்கள் தீநெறிச் செல்லாது அடங்குதல். உடல்தவம் - வினைத்தொகை. உடலுதல்-அழித்தல். இறைவழிபாடு உறுப்பி ஏனைய ஒன்பதும் உறுப்பு என்றவாறு. (௨௧௧)

அத்தகைய சிவபுரிவாழ் வாரின் பொன்றே
யல்லாது துன்பமறி யாரவ் வாழ்வும்
கைத்தலமன் பூசனைபெட் டவரே யெல்லாங்
கழன்றுமுழுப் பாழ்வெளியிற் கலந்து வாழ்வார்
வைத்தவினை பறிக்குமுறுப் பவற்று ளியாதும்
பற்ருது சிவபூசை பரித்து ளாரும்
மெய்த்தபயன் பெறுவரந்தப் பயனுந் தேற
விரித்துரைத்தும் வினைத்திருக்கை மிளிர்த்து ளாயே.

(இ - ள்.) இருவினையாகிய குற்றங்களைப் பிறழ்ந்தொழியச் செய்த துறவியே! அத்தகைய சிவலோகத்திலே வாழும் பேறுபெற்றோர் என்றுமன்றும் இன்பம் நுகர்ந்திருத்தலே அன்றி ஒருசிறிதும் துன்பத்தை நுகர்வதிலர். மேலும் மேலான வீட்டின்பமும் அவர்தம் கையகத்துள்ளதே போன்று நாளடைவில் அவர்க்குரியதாம். இறை

வன் பூசனையாகிய சரியை முதலிய வழிபாட்டு நெறியிலே நிற்பவரே இறுதியாக மெய்யுணர்வும் கைவரப்பெற்று ஆணவ முதலிய மலங்களெல்லாம் துவர நீங்கப்பெற்று முழுப்பாழாகிய அறிவு வெளியிலே இரண்டறக் கலந்து வாழ்பவரும் ஆவர். சினந்த தீவினைகளோ அகழ்தற்குரிய வழிபாட்டுறுப்புகளில் யாதொன்றும் மேற்கொள்ளாமல் வழிபாடுமட்டும் இயற்றினோரும் உண்மையான பயனை எய்துவர். அந்தப் பயனையும் இனி விரித்துக் கூறுவேம் கேட்பாயாக.

(வி - ம்.) கைத்து - கையகத்துள்ளது. அமலன் - இறைவன். பெட்டவர் - விரும்பியவர். எல்லாம் - மலமனைத்தும். பாழ்வெளி என்றது பற்றற்ற அறிவுவெளியை. பைத்த - சினந்த. (௨௧௨)

வேறு

அழுக் குளத்தினு முடலினு மருதொரு நாளருச் சனைசெய்தோர்
வழுக்கு வன்றடி விழைந்துணுங் குய்யக வுலகினை மரீஇவாழ்வர்
ஒழுக்கு வெஞ்சினக் கண்ணரா யிருதின மும்பனுக் கலரிட்டோர்
விழுக்க ளுண்டுதேக் கெறிதரு மரக்கர்வாழ் வியனுல கமர்கிற்பார்.

(இ - ள்.) நெஞ்சினும் உடலினும் அழுக்கறுமல் ஒருநாள் இறைவனை வழிபட்டோர் வழுக்குடைய வலிய தசையை விரும்பித் தின்னும் குய்யகர் உலகத்தை எய்தி வாழாநிற்பர். தீக்காலும் வெவ்விய சினத்தையுடைய கண்ணையுடையராய் இரண்டுநாள் இறைவனை வழிபட்டோர் சிறந்த கள்ளையுண்டு தெவிட்டற்குக் காரணமான அரக்கர் வாழ்கின்ற அகன்ற உலகத்திலே சென்று வாழாநிற்பர்.

(வி - ம்.) உளத்திற்கு அழுக்குக் காம முதலியன. உளத்தினும் உடலினும் அழுக்கறுது என ஒட்டுக. வழுக்கு - வழும்பு. குய்யகர் - பேய்கள் தீயொழுக்கு வெஞ்சினம் என்க. உம்பன் - இறைவன். விழு - விழுமமுமாம். தேக்கெறிதல் - தெவிட்டல். வியன் - அகலம். அமர்கிற்பார் - அமர்வார். (௨௧௩)

நயக்க மூன்றுநா ணம்பன்பூ சனைநனி நடவிய வூன்றின்போர்
இயக்கர் வாழுல கத்தினை யெய்துவ ரின்னிசை பாத்தன்மை
வியக்கு மெய்ப்பொரு ளறிகிலர் நான்குபா விமலன்மு னுரைத்தாடின்
உயக்க மோப்புகாந் தருவத்தை யேய்ந்தின்ப வுததியிற் படிவாரால்.

(இ - ள்.) அன்புடைமையால் இறைவனும் விரும்பும்படி அவ்விறைவனை மூன்றுநாள் வழிபாடு மிகவும்செய்த ஊனுண் உடையோர் இயக்கர் வாழும் உலகினை எய்தாநிற்பர். இனிய இசையின்றன்மை பாட்டின் தன்மை வியத்தற்குரிய பொருளின் தன்மை முதலியவற்றை அறிகிலார் எனினும், நான்குநாள் இறைவனைப் பாட்டினுலே வழிபட்டு அன்பாலே ஆடியவர் வருத்தத்தை ஓட்டாநின்ற கந்தருவ வுலகத்தை எய்தி ஆண்டு இன்பக் கடலிலே மூழ்காநிற்பர்.

(வி - ம்.) நான்கு - நான்குநாள். நயக்க - விரும்ப. நடவிய - நடத்திய. இசைத் தன்மை, பொருட் டன்மை எனவும் தன்மையை இவற்றோடும் ஒட்டுக. ஆடுதல் - அன்பின் மெய்ப்பாடென்க. உயக்கம் - வருத்தம். ஓப்புதல் - வெருட்டுதல். ஆல் - அசை. (௨௧௪

உலகுளார் தமைப் புகழவேட் டைந்தின முப்பன்பூ சனைசெய்தோர்
இலகு வானிறை யுலகுறு பல்வகை யின்பமுந் திளைப்பாரால்
திலக வாணுத லார்விழை வொலறு தினம்பரிந் தனர்செய்தோர்
நிலவு வான்மதி யுலகில்வேட் டாங்கின்ப நித்தலு நுகர்வாரால்.

(இ - ள்.) உலகமக்கள் தம்மைப் புகழவேண்டி ஐந்துநாள் இறைவனை வழிபட்டோர் விளங்காநின்ற இந்திரன் உலகிலுள்ள பல்வேறு வகைப்பட்ட இன்பத்தையும் நுகராநிற்பர். திலகமிட்ட ஒளிநெற்றியை உடைய மகளிர்பால் விருப்பத்தாலே, ஆறுநாள் அன்புடையராய் இறைவனை வழிபட்டோர் நிலாவினையுடைய வெண்டிங்கள் உலகிலே சென்று தாம் விரும்பியபடி சிறந்த மகளிரைக் கூடி நாடோறும் இன்புறுநிற்பர்.

(வி - ம்.) வானிறை - இந்திரன். திலகம்-பொட்டு. மதியுலகு-திங்கள்மண்டிலம். நித்தலும் - நாடொறும். (௨௧௫)

வேறு வேறுள விழைவினு லெழுதினம் விளங்குபூ சனைசெய்தோர்
ஈறு சேருறும் வளம்பதிப் பிரமலோ கத்திலின் பினிதார்வார்
கூறி வேதகா யத்திரி யெட்டுநா ளருச்சனை குயின்றோரும்
ஊறு போகங்கண் முழுவது மப்பதி யுண்டுளப் பரிவீர்ப்பார்.

(இ - ள்.) மகளிர் விழைவேயன்றிப் பொன் நில முதலிய பல்வேறு விழைவின்பொருட்டு இறைவற்கு ஏழுநாள் விளங்காநின்ற வழிபாட்டினைச் செய்தோர் இறுதி எய்துதல் இல்லாத வளமுடைய உலகமாகிய பிரமலோகத்தை எய்தி இன்புற்றமர்வர். எட்டுநாட்கள் மறையின் கண்ணதாகிய சிவகாயத்திரி மந்திரமோதி வழிபட்டோரும் ஊறுகின்ற போகங்கள் அனைத்தும் நுகர்ந்து அப்பிரமலோகத்தே சென்று துன்பந் தீர்ப்பர்.

(வி - ம்.) மகளிர் காமவிழைவன்றி வேறுவேறுள விழைவு என்க. இன்பு - இன்பம். காயத்திரி கூறி எனமாறுக. குயிலுதல் - செய்தல். ஊறுபோகம் - வினைத்தொகை. (௨௧௬)

ஒருவ னேயொரு மூவரென் றென்பது தினமருச் சனையுய்த்தோர்
பெருகு போகங்கள் வைகுந்த வெல்லையிற் பெட்டபெட் டாங்கேய்வார்
பொருளி றலொழுக் காலிழந் தோர்களும் பொருவிலன் புளதாமேல்
இருநி லாவியா னவர்க்குமுன் னுரைத்தவச் சிவநக ரடைவாரால்.

(இ - ள்.) பிரமன் விண்டு உருத்திரன் என்னும் முத்தேவரும் மூவரு முதலாகிய ஓரிறைவனுடைய பேதங்களே என்றுணர்ந்து ஒன்பது நாள் வழிபாடு செலுத்தினோர் மிகாநின்ற இன்பநுகர்ச்சிகளைத் தாந்தாம் விரும்பியவாற்றை விரும்பியபடியே வைகுந்தத்திலே சென்று நுகராநிற்பர். பொருளானுதல் ஒழுக்கத்தானுதல் இழிந்தவர் தாமும், ஒப்பற்ற அன்புமட்டும் உளதாயின் அவ்வன்பால் வழிபட்டோர் இவ்வுலகத்தும் செல்வத்தே நிலைபெற்றுப் பின்னரும் சான்றோர்க்குரியதென முன்னர் யாங்கூறிய சிவபுரத்தேயும் சென்று இன்புறுநிற்பர்.

(வி - ம்.) ஒருமூவரும் ஒருவனே என்று தெளிந்தென்க. பெருந்போகம் - வினைத்தொகை. வைகுந்தம் - திருமால்நகரம். பெட்ட - விரும்பியன. பொருவிலன்பு - இறையன்பு. இம்மையில் திருவிளையாடல் என்க. (உகஎ)

ஏன்ற வன்பினற் பொருளினு லொழுக்கினு லீசனைப் பணிந்தோர்நம்
ஆன்ற வவ்வவற் பயன்றனக் கேன்றவா னுலகினைந் தலைப்பட்டுங்
கான்ற பேரெழி லரம்பையர்க் கலவியங் களிதினைந் தொரீஇமண்ணில்
தோன்றி யெவ்வகை யுறுப்பொடும் பூசித்துத் துன்னுவர் சிவலோகம்.

(இ - ள்.) இயல்பினுலாய அன்பினுலாதல், பொருளினுலாதல் தவம் முதலிய ஒழுக்கத்தினுலாதல் இறைவனை வழிபட்டோர் நம்பிய அவ்வவற்றின் நல்ல பயன்களை நுகர்தற்கேற்ற வானுலகங்களைத் தலைப்பட்டு, ஆங்காங்கே பேரழகொழுகும் வானவர் மகளிரோடுகூடி அழகிய இன்பத்திலே மூழ்கியிருந்து அவ்வுலகங்களினின்றும் நீங்கி மீண்டும் இந்நிலவுலகிலே வந்து பிறந்து எல்லா வுறுப்புக்களோடும் இறைவனை வணங்குதற்குரிய செவ்வியெலாம் பெற்று வழிபட்டுச் சிவலோகத்தை எய்தாநிற்பர்.

(வி - ம்.) ஏன்ற - இயன்ற என்பதன் மரூஉ. ஆன்ற - நிறைந்த. ஏன்ற - ஏற்ற. தலைப்படுதல் - அடைதல். எழில்கான்ற எனமாறுக. எவ்வகை வுறுப்பொடும் பூசிக்கும் செவ்விபெற்றுப் பூசித்து என்பது கருத்து. (உகஅ)

விளங்க வோதுமிவ் வுலகங்கண் மேலுமூன்
றுலகங்கள் விராய்நிற்கும்
வளங்கு லாவுநம் முலகொன்று நிலையுமவ்
வைப்பின்மேன் முலைக்கோட்டில்
துளங்கு நூலிடை யுமையவ ளுலகுறுந்
துலங்குமப் பதிமேலால்
களங்கு லாவிய கண்டர்வா முலகுறுங்
காழ்வினைக் குறும்பட்டோய்.

(இ - ள்.) காழ்த்த இருவினைகளாகிய பகையினைக் கொன்ற அகத்தியனே! ஈண்டு விளங்கும்படி விரித்தோதிய குப்பகவுலக முதலிய உலகங்கட்கு மேலே மூன்றுலகங்கள் ஒன்றனோடொன்று தொடர்புடையனவாய் நிலைபெறும். அம்மூன்றனுள் ஒன்றாக வளமிக்க நம்முடைய உலகம் நிலைபெறும். அவ்வுலகின்மேல் முலையாகிய கோட்டினையும் அசைகின்ற நூல்போன்ற இடையினையும் உடைய எம்பிராட்டி உமையம்மையாரின் உலகம் நிலைபெறாநிற்கும்; விளங்காநின்ற அவ்வுலகின்மேலே நஞ்சாகிய மறுவிளங்கிய கண்டத்தையுடைய எம்பிரானாகிய இறைவன் வதியும் உலகம் நிலைபெறாநிற்கும்.

(வி - ம்.) நம்முலகென்றது - கந்தலோகத்தை. வைப்பு - உலகம். முலைக்கோட்டினையும் இடையையும் உடைய உமை என்க. கோடு -

செம்பு, செம்மையுமாம். களம் - கறுப்பு, களங்கம். காழ்வினை : வினைத்தொகை. (௨௧௯)

எம்மை யன்பொடு பூசனை புரிந்தவ ரெம்முடை யுலகத்தார்
அம்மை மென்மலர்ப் பாதபூ சனைசெய்தோ ரவளுடை யுலகத்தார்
மம்ம ரின்றியெந் தையைவழி பட்டவர் வயங்கவ னுலகத்தார்
செம்ம னல்குமச் சிவபுர மடைந்தவர் திருமுருர் பதஞ்சேர்வார்.

(இ - ள்) அகத்திய கேள்! எம்மை அன்புடனே வழிபாடு செய்தோர் எம்முடைய உலகத்தை எய்தியின்புறுவர். எம்மன்னையாகிய இறைவியுடைய மெல்லிய மலர்போன்ற திருவடிகளை வழிபட்டோர் அவளுடைய உலகத்தை அடைந்தின்புறுவர். எந்தையாகிய இறைவனை மயக்கமின்றி வழிபட்டோர் அவனுடைய உலகத்தை எய்தி இன்புறுவர். தலைமைத்தன்மையை அளிக்கும் அந்தச் சிவலோகத்தை அடைந்தவர் மீண்டும் பிறவியில் வரமாட்டார் ஆங்கிருந்தே வீடு பெறுவர்.

(வி - ம்.) எம்மை என்றது முருகக்கடவுள் தம்மைக் குறித்த வாறும், அம்மை - இறைவி. அவள் - இறைவி. மம்மர் - மயக்கம். வயங்குதல் - விளங்குதல். அவன் - இறைவன். திருமுருர் - மீளார். பதம் - வீடு. (௨௨௦)

அலகை யாதியாச் சிவபுர மிறுதியா வடைவின்முற் றுபுநிற்கும்
உலவு சித்திக ளெட்டுநற் குணங்களு மிம்முறை கொண்டேறும்
நிலம்வ ளங்கநல் வளிவெளி மனமகங் காரமே விரிபுந்தி
நலிவி லோண்குண மூலமு முராரித னல்லக விளக்காகும்.

(இ - ள்.) பைசாசவுலகம் முதல் சிவலோகம் இறுதியாகக் கூறப்பட்ட இவற்றை முறையே எய்தும் உயிர்கட்கு அணிமா முதலிய எட்டுச்சித்திகளும் அவற்றோடு கூடிய நற்குணங்களும் இம்முறையிலேயே படிப்படியாக ஏறுநிற்கும். இனி, நிலம் நீர் தீ வளி வெளி மனம் அகங்காரம் விரியுமியல்புடைய புத்தி குறைதலில்லாத ஒள்ளிய குணங்களுக்கு முதலாகிய மாயையும் என்னும் இவ்வொன்பது தத்துவங்களும் திருமாலுடைய நல்ல நெஞ்சகத்துள்ளே நின்று எரியும் விளக்குப் போன்று அவனுடைய அறிவை விளக்காநிற்கும்.

(வி - ம்.) பைசாசருலகினர்க்கு எண்குணமும், இராக்கதர்க்குப் பதினாறு குணமும் இம்முறையே குணங்கள் மிகுமென்க. (௨௨௧)

புந்தி நீங்கிய வெட்டும்வண் கமலத்தோன் புந்தியைத் தெருள்விக்கும்
இந்த வாறுகீ ழுள்ளவர்க் கோரோவொன் றங்கிகப்புறு மிழிந்தோரும்
அந்தி வானிறத் தமலன்பூ சனையினு லடைவினி லுயர்ந்தேறி
முந்து பார்மு தலொன்பதும் விளக்குறு முதன்மையுள் ளவராவார்.

(இ - ள்.) முற்கூறிய இவ்வொன்பது தத்துவங்களிற் புத்தி தத்துவமொழிந்த எட்டும் பிரமதேவனுடைய அறிவினை விளக்காநிற்கும், இம்முறையாலேயே கீழ்க்கீழ் உலகங்களில் உறைவோர்க்கும் ஒவ்வொரு தத்துவம் குறையும் என்று கொள்க. இனிச் செக்கர் வான்

போன்ற திருமேனியுடைய இறைவனை மேன்மேலும் வழிபாடு செய்வதன் வாயிலாய்ப். பேயுலக மெய்தியவரும் படிப்படியாக உயர்ந்த உலகங்களிலே சென்று சென்று இறுதியில் திருமால்போன்று முற்கூறப்பட்ட நில முதலிய அவ்வொன்பது தத்துவங்களாலும் அறிவு விளக்கமுறுகின்ற தலைமைத் தன்மையுடையராகுவர்.

(வி - ம்) புந்தி - புத்தி. தெருள்விக்கும்-விளக்கும். இகப்புறம்-குறையும். இழிந்தோர் - பைசாசவுலக மெய்தியவர். அடைவு - படிமுறை. முதன்மை - தலைமைத்தன்மை. (௨௨௨)

இலக்கம் வண்டரை யாகவிட் டெறிந்தக லிடைப்பிழை யாதற்றே
நலக்க நம்பிராற் குளுற்றிய வினைகளு நன்மையிற் பிழையாதால்
குலக்க ணந்தொழு மமலனும் வினைதொறுங் குருலகு வெனும்பேதத்
துலக்க ரும்பயன் றருமினிப் பாதகத் துண்மையு முரைப்பாமால்.

(இ - ள்.) நிலமே இலக்காக விட்டெறியப்பட்ட கல் இடையிலே தவறுமல் அந்நிலத்தையே அடைவதுபோன்று நலமெய்தற்பொருட்டு நம் பெருமானுகிய சிவபிரானுக்குச் செய்த வழிபாடுகளும் தத்தம் பயனுகிய நலத்தைப் பிழைபடாமல் நல்குவனவாம். கூட்டமாகிய சிவகணம் தொழாநின்ற இறைவனும் தன்னை நோக்கிச் செய்த வழிபாடுகளின் பெருமை சிறுமைகட்கேற்ப உலத்தலில்லாத பயனை ஈந்தருளுவன். இனி தீவினைகளின் தன்மையையும் கூறுவேங் கேட்பாயாக.

(வி - ம்.) அற்று - அத்தன்மைத்து. வினை - வழிபாடு முதலியன. குரு - பெருமை. லகு - சிறுமை. உண்மை - இயல்பு. (௨௨௩)

வேறு

முன்ன ருளுற்றும் பாதகரே முதிர்வா தனையான் மறுவலுந்தாம்
துன்னி வினைப்பா ரவையெல்லாந் தூலந் சூக்க மதிசூக்கம்
என்ன மூன்றுந் தூலமீங் கியம்பப் படுமா லதுமூன்றும்
உன்னு மனவாக் குக்காயத் தொன்று நான்கு வகைப்படுமால்.

(இ - ள்.) பிறப்புத்தொறும் தீவினையே செய்துவரும் தீவினையோரே காழ்ப்பேறிய பழக்கங் காரணமாக மீண்டும் மீண்டும் அந்நெறியிலேயே சென்று அத்தீவினையையே செய்பவராகின்றார். அத்தீவினைகள் அனைத்தும் பருமை யுடையனவும் நுண்மையுடையனவும் நனி நுண்மையுடையனவும் எனப் பண்பான் மூன்று வகைப்படும். அவற்றுள் பருமையுடையன இப்பொழுது கூறப்படும். அவைதாமும் மீண்டும் நினைக்கும் மனமும், பேசும் மொழியும், செய்யும் உடலும் எனக் கருவிவகையானும் மூன்று வகைப்படும். அவற்றுள் ஒவ்வொன்றும் வினைவகையால் நான்கு வகைப்படும்.

(வி - ம்.) பாதகர் - தீவினைமாக்கள். வாதனை - பழக்கம். மறுவலும் - மீண்டும். தாம் : அசை. அது - அப்பருமையுடைய தீவினை. உன்னுமனம் என்றதனுல் பேசும் வாக்குச் செய்யும் காயம் எனவும் விரித்தாம். (௨௨௪)

பிறனில் விழைதல் பொருள்விழைதல்
பிறர்தம் பொருட்கே டெணலுயிர்கட்
கிறுதி யெண்ணல் மனத்தனவா
மேங்கு மழுகை கோளுரைபொய்
அறைதல் புறங்கூ றுதல்வாக்கின்
ஆவ பிறனில் புணர்ச்சியுயிர்
தெறுதல் பழியூ னுணல்பிறர்சீர்
தெவ்வ லுங்கும் வடிவினவே.

(இ - ள்.) பிறன்மனைவியை விரும்புதல், பிறர்பொருளை விழைதல், பிறர்பொருட்குக் கேடு நினைத்தல், உயிர்களைக் கொல்லக் கருதுதல் என்னுமிந்த நான்கும் மனத்தால் விளையும் தீவினைகள். ஏங்குதற்குக் காரணமான அழுகையும், கோட்சொல்லுதலும், பொய் கூறலும், புறங்கூறலும் ஆகிய இந்நான்கும் மொழியிற் றோன்றுந் தீவினைகள். பிறன் மனையாளைச் சேர்தல், உயிர்கொல்லுதல், பழிக்கப்பட்ட ஊனை உண்ணுதல், பிறர்பொருளைக் கவர்ந்து கோடல் என்னுமிந் நான்கும் உடலால் செய்யப்படுந் தீவினைகள்.

(வி - ம்.) ஆவ : பலவறிசொல். தெறுதல் - கொல்லுதல், தெவ்வல் - கொள்ளுதல். சீர் ஆகுபெயராய்ப் பொருளைக் குறித்து நின்றது. (உஉரு)

அளந்த வவைதா மொன்றுபல வாக விரியு மவையெல்லாம்
கிளந்த வதிபா தகமாதி மூன்றுட் கெழும வடங்கியிடும்
தளர்ந்த வதிபா தகமாபா தகமே யுபபா தகமென்ன
விளங்கு மவையோன் றற்கோன்று வீறு தணிந்த நிலையினவே.

(இ - ள்.) எண்டுப் பகுத்தோதிய அத்திவினைகள் தாமே ஒவ்வொன்றும் பற்பலவாக விரியும். அவ்விரிவெல்லாம் கூறப்பட்ட மிகைத்திவினை முதலிய மூன்றனுட் பொருந்தி அடங்குவனவாம். பிணிக்கப்பட்ட மிகைத்திவினையும் பெருந்திவினையும் இனத்திவினையும் என்று விளங்காநின்ற அவைகள்தாம் தம்முள் ஒன்றற்கொன்று முறையே கொடுமை குறைந்த தன்மையனவாம்.

(வி - ம்.) அளத்தல் - ஏதுவாற் பகுத்தல். கெழும - பொருந்த. உபபாதகம் - திவினைகட்கினம். வீறு - வேறொன்றற் கில்லாத சிறப்பு ஈண்டுக் கொடுமைப் பண்பு குறித்து நின்றது. (உஉசு)

புரையி லிறைக்கு மவன்மொழிக்கும் பொருவு முயர்வு முன்னினரும்
உரைசெய் தவரு நிந்தையவ ரோடுங் குரவர்க் குரைத்தோறும்
கரைசெ யிறைவன் வாக்கியபுத் தகமக் கடவு டிரவியங்கள்
வரைசெய் குரவன் பொருளிவைவெள வினரு மதிபா தகரென்பார்.

(இ - ள்.) ஒப்பற்ற இறைவனுக்காதல், அவன் செவியறிவுறுத்த வேதாகம மொழிகட்காதல், உவமையும் உயர்வுங் கருதியவரும், உரைத்

தவரும் ஆகிய இவரோடு, அம்மொழியை ஓதுவிக்கும் நல்லாசிரியன் முதலிய குரவர்களை நிந்தனை செய்தோரும் இறைவன் செவியறிவுறுத்த ஓதுதற்குரிய மெய்ந்நூலையும், அவ்விறைவன் திருக்கோயிற்குரிய பொருள்களையும், நூல்களை வரம்பிட்டுக் கூறும் நல்லாசிரியனுடைய பொருளையும் களவு செய்தோரும், மிகைத்தீவினை செய்தோர் என்று ஆன்றோர் கூறுவர்.

(வி - ம்.) புரை - உவமம். மொழி - வேதாகமமொழி. கரை செய்தல் — ஓதல். வரைசெய்தல் - வரையறை செய்தல். வெளவுதல்- களவு முதலியவற்றாற் கவர்தல். (உஉஎ)

கடவுள் பொருளைக் கவர்ந்தோரைக் கனகங் கொடுத்து மடர்ப்பரிதேல்
விடுக வுறைந்த தேசத்தை விடாது பயிலின் மற்றவரும்
அடரு மதிபா தகம்புரிந்தோ ராவ ரதிபா தகக்கணித்தாய்த்
தொடரும் வினையு முளததுவுந் தொகுத்த வதிபா தகந்தடங்கும்.

(இ - ள்.) இறைவனுக்குரிய பொருளைக் கவர்ந்து கொண்டவரை இயலுமேற் கொன்றொழித்திடுக. இயலாவிடின் ஆற்றலுடையார்க்குப் பொன் கொடுத்தேனும் அத்தியவரைக் கொல்லுக. அதுவும் இயலாதாயின் அவ்வூரைவிட்டு அகன்று போய்விடுக. போகாமல் அவர்க்கிடங் கொடுத்து அவ்விடத்திலேயே வாழ்வாராயின், அத்தகையோரும் மிகைத்தீவினை செய்தவரேயாவர். இனி அம் மிகைத்தீவினைக்கு இனமாய் வருகின்ற தீவினைகளும் பற்பல வுள்ளன; அவையும் முன் தொகுத்த அம் மிகைத்தீவினையிலேயே அடங்கும்.

(வி - ம்.) கனகம் - பொன். அடர்த்தல் — கொல்லுதல். அடர்தல் - செறிதல். அணித்து - நெருங்கியது; இனமாயது என்றவாறு. உளது - சாதியொருமை. (உஉஅ)

பொருவி லிறையா சாற்கன்பு புரியார் பூசை புகழ்ந்துவவார்
இருவர் தமக்கும் வறங்கூர்கா லேது முதவார் பொருளிழப்பின்
மருவும் பணியேன் றனவிளையார் வேளாவு நியதி தனைவிடுப்பார்
பெரிய தவத்தோர் தமையிகழ்வார் பிரானை யிகழ்ந்தோ ரிவர்நிகர்ப்பார்.

(இ - ள்.) ஒப்பற்ற இறைவன்பாலும் ஆசிரியன்பாலும் அன்பு புரியாதவரும், வழிபாடு செய்யாதவரும், வற்கடம் வந்துற்றபொழுது அவ்விருவர்க்கும் சிறிதும் வழங்காதவரும், தமக்கும் வறுமைக்காலமாயினும் அவர்பாற் சென்று தம்மாலியன்ற உடற்பணியேனும் செய்யாதவரும் நியதியாக மேற்கொள்ளும் வழிபாடு முதலியவற்றை விட்டவரும் பெரிய தவத்தின்மேற் கொண்ட துறவோரை இகழ்வோரும், இறைவனை இகழ்ந்தோரும் இன்னோரன்னவரும்.

(வி - ம்.) பொருவு - உவமை. இருவர் — இறைவனும் ஆசானும். ஏதும் - சிறிதும் என்பதுபட நின்றது. பொருளிழப்பு என்றது வறுமை நிலையினை. பிரான் — இறைவன். (உஉகூ)

புனித முடலோ டடம்பயிற்குப் பூசை புரியா தரனூலை
துனிஇ பயில்வார் பயில்விப்பா ரேற்பார் பொருளாய் வார்வரைவார்

துனினின் விடுத்துப் புறநூலைச் சூழ்வா ரதுசேர் புத்தகந்தை
நனிவிற் றிடுவா ரிவர்நம்பன் வாக்கை யிகழ்ந்தார் நல்லினமே.

(இ - ள்.) உடலையும் இடத்தையும் தூய்மை செய்யாமலும் வழிபாடியற்றாமலும் இறைவனருளிய மெய்ந்நூலை இனிதே ஓதுபவரும், ஓதுவிப்பவரும் கேட்போரும் அவற்றின் பொருளை ஆராய்பவரும், வரைவோரும், வெறுப்பாலே அம் மெய்ந்நூலை இகழ்ந்துவிட்டுப் புறநூல்களை விரும்புவோர், இறைவன் மொழி சேர்ந்த நூலை விற்றுண்போர் என்னும் இவரெல்லாம் இறைவன் மொழியை இகழ்ந்தோரை ஒத்து அவர்க்கினமாகிய மிகைத்தீவினையாளர் ஆவர்.

(வி - ம்.) புனிதம் - தூய்மை. அரன் - சிவபெருமான். ஏற்றல் - கேட்டல். புறநூல் - புறச் சமய நூல் உலகநூல் முதலியன. அது அவ்விறைவன் மொழி. நம்பன் - பெருமையுடையோன்; இறைவன். (உ௯௦)

வேறு

ஆரியற் பணியா தறம்பயி னூலை யாதரிப் பார்பணி புரியார்
ஆரியன் பணிசெய் பவர்தமை யொழிப்பா ரடுமிடர் மூப்புவந் துறுங்கால்
ஆரியற் றணப்பா ரவன்மனை புதல்வ ராதியை யவமதித் துழல்வார்
ஆரியற் கிகலி யெதிருரை கொடுப்பா ராரியற் பழித்தவர்க் கினமே.

(இ - ள்.) நல்லாசிரியனை வழிபடாமல் இறையறம் பயிலும் மெய்ந்நூலை விரும்புவோரும், ஆசிரியனுக்குப் பணிபுரியாதவரும், பணிசெய்வோரை விலக்குவோரும், வருத்துகின்ற இடுக்கண் மூப்புப் பிணி முதலிய ஆசிரியனுக்கு வந்தெய்திய பொழுது அவனைப் பிரிந்துபோவாரும், அவன் மனைவி மக்கள் முதலியோரைப் பழிதூற்றித் திரிவாரும், ஆசிரியனுக்கு மாறுபட்டு அவனோடு எதிர்மொழி பேசுபவரும் ஆசிரியனைப் பழித்தவர்க்கினமான மிகைத்தீவினையாளர் ஆவர்.

(வி - ம்.) ஆரியன் - ஆசிரியன். இடர் - வறுமை முதலியன. தணத்தல் - பிரிந்துபோதல். இகலி - மாறுபட்டு. (உ௯௧)

ஐந்தெனப் படுமா பாதக மவைதா
மருமறை யாய்ந்தவந் தணனைச்
சிந்துற வடர்த்த றேறல்வாய் மடுத்தல்
செம்பொனைக் கரந்தனர் வௌவல்
கொந்தெழிற் குரவன் மனைவியைக் கலத்தல்
கோடுமிவ் வினைஞரைக் கூடல்
இந்தவல் வினையின் மருங்கியல் வினையு
மிவற்றினு ளடங்குவ மாதோ.

(இ - ள்.) இனி, பெருந்தீவினைகள் ஐந்தென்று கூறப்படும், அவையாவன:—அரிய மறைகளை ஓதியுணர்ந்த அந்தணனை உயிர் ஒழியக் கொல்லுதலும், கள்ளுண்ணலும், அந்தணருடைய பொன் முதலியவற்றை வஞ்சித்துக் கவர்ந்து கோடலும், திரண்ட அழகையுடைய ஆசிரியன் மனைவியைச் சேர்தலும் கொடிய இத்தீவினையாள

ரோடு நட்புக்கோடலும் என்னுமிவையாம். இந்தப் பெருந்திவினைக் கினமான வினைகளும் உள; அவையும் இவற்றுள் அடங்கும் திவினைகளேயாம்.

(வி - ம்.) மாபாதகம் ஐந்தெனப்படும் என்க. தேறல் - கள். கொந்து - கொத்து. அழகெல்லாம் ஒருவழித்திரண்ட என்றவாறு. கோடுதல் - வளைதல். மாதும், ஓவும்: அசைகள். (௨௩௨)

வெகுளியா தியின்வே தியர் தமைவைதல்
சபையிடை மேதையர்ப் பழித்தல்
அகனுறத் தன்னை மதித்தலா ரியனோ
டிகறனீர் நுகர்ச்சியிற் படரான்
பகவிடை விலக்கல் பகர்ந்துபின் கொடாமை
பார்த்திபன் செவிபிறர் குறையைப்
புகறன்முக் கணனு தியர்நிலம் பறித்தல்
ஆதிபூ சுரர்க்கொலைக் கினமே.

(இ - ள்.) சின முதலிய காரணங்களால் அந்தணரை வைதலும், அவையிடத்தே பேரறிவுடையோரைப் பழித்தலும், செருக்குமிகும்படி தன்னைத் தானே மதித்துப் புகழ்ந்து கோடலும், நல்லாசிரியனோடு பகை கோடலும் காம நுகர்ச்சியிற் செல்லும் ஆன் விலகும்படி விடையை விலக்கலும், தருவேன் எனக் கூறிப் பின்கொடாமையும், பிறர் குற்றங்களை அரசன்பாற் சென்று கூறுதலும், சிவன் முதலிய இறைவர்க்குரிய நிலங்களைக் கைப்பற்றிக் கோடலும், இன்னோரன்ன பிறவும் அந்தணனைக் கொன்ற பெருந்திவினைக் கினமாகும்.

(வி - ம்.) வெகுளியாதி என்புழி - ஆதி என்றது வெறுப்பு அவா அச்சம் முதலியன கொள்க. அகம் - ஈண்டுச் செருக்கு. (௨௩௩)

மறைபயின் றொழித்தல் வளரெரி விடுத்தல்
இருமுது குரவர்சொல் மறுத்தல்
அறவரே தோழ ரிவர்க்கலு றுறுத்தல்
அறம்விலக் கியபொரு ளுகர்தல்
நெறிபதி தொழுவ நெடிபடு கானில்
நெருப்பிடன் மிருகங்கள் வருத்தல்
பறைதரா விழிசொல் பறைந்ததாத் தெளியப்
பறைதல்கண் ணுகர்வினைக் கினமே.

(இ - ள்.) வேதாகமங்களை ஓதிப் பின்னர் ஓதாது விடுத்தலும், வளர்த்தற்குரிய தீயினை ஓம்பாது விடுதலும், தாய்தந்தையர் சொல்லை மறுத்தலும், அறவோரையும் நண்பரையும் துன்புறுத்தலும், அறநூல்கள் விலக்கிய ஊன் முதலியன உண்ணலும், வழிகளினும் ஆன் தொழுவத்தினும் சிள்வீடு கறங்கும் காட்டினும் தீக்கொளுவுதலும்,

விலங்குகளைத் துன்புறுத்தலும், சொல்லப்படாத சொல்லை ஒருவன் கூறினான் என்று அறமேவார் அவையிடைச் சான்று கூறுதலும் கள்ளுண்டற்கு இனமான பெருந்திவினைகளாம்.

(வி-ம்.) இருமுது குரவர் - தாய்தந்தையர். அறவோர் - எவ்வுயிர்க்குஞ் செந்தண்மை பூண்டொழுகுவோர். அருர் - துன்பம். அறம்: ஆகுபெயர். பறைதல் - கூறுதல். (உ௬௫)

வறியவ ருறையுள் வளநிதி கரிதேர்
வாம்பரி களமர்பன் மணியும்
செறியிலைத் தெங்கு கமுகுநாற் றரம்பை
தீங்கழை செந்நெலா திகளும்
வெறிகமழ் சந்தங் குங்கும மாதி
விரைகளு முடையணி பிறவும்
முறிவில்பல் பண்டங் கலன்களுங் கவர்தன்
முந்துபொன் கவர்வினைக் கினமே.

(இ-ள்.) நல்கூர்ந்தார் முதலியோருடைய இல்லமும், வளமுடைய பொருளும், யானை, தேர், தாவுகின்ற குதிரை, வினையாளர், பலவாகிய மணிகள் முதலியவற்றையும், செறிந்த ஓலையினையுடைய தென்னை, கமுகு, குலைவாழை, இனிய கரும்பு, சிவந்த நெல் முதலியவற்றையும். மணங்கமழும் சந்தனம், குங்கும முதலிய மணப்பொருள்களையும், ஆடை அணிகலன்களையும், கேடில்லாத பிற உடைமைகளையும், கவர்ந்து கோடல் முற்கூறப்பட்ட பொன்கவர் பெருந்தீவினைக்கு இனமாகிய தீவினைகளாம்.

(வி-ம்.) வளநிதி கரிதேர் முதலியனவுங் கூறிய குறிப்பால் வறியவர் முதலியோர் என்க. தெங்கு - தென்னை. வெறி - மணம். விரை - மணப்பொருள்; ஆகுபெயர். பண்டக்கலன் என்றது. பாண்டம் முதலியன. (உ௬௬)

கோடைக்குரி யவரைப் பெற்றுமீ யாது
குமரியை இல்வயிற் செறித்தல்
படைக்கணில் லவடன் துரிசறிந் தோர்ந்து
பயிறனீத் தவர்மனை புதல்வன்
தொடைக்குரி மருகி யுடன்பிறந் தவளைத்
தூமொழிப் புதல்வியை முயங்கல்
கடைப்புலை மகளைக் கலத்தலுங் குரவன்
காதலாட் புணர்வினைக் கினமே.

(இ-ள்.) மணஞ்செய்து கொடுத்தற்குத் தகுதியுடைய மணமகனைப் பெற்றிருந்தும் கன்னியை அவனுக்குக் கொடாதே வாளாவீட்டினுள் அடைத்து வைத்தலும், வாள்போலும் கண்ணையுடைய தன் மனைவியின் தீயொழுக்கத்தை அறிந்து தெளிந்திருந்தும் பின்னும்

அவளோடு வாழ்தலும், துறந்து போய்விட்டவர் மனைவியையும், தன் புதல்வன் தொடுதற் குரியவளான மருகியையும், உடன்பிறந்தாளையும் தூய மொழியையுடைய தன்மகளையும் புணர்தலும் கிழான புலைச்சியைக் கூடுதலும் ஆகிய இத்தீவினைகள் ஆசிரியன் மனைவியையும் புணர்தலாகிய பெருந்தீவினைக் கினமாம்.

(வி - ம்.) கொடைக் குரியவர் என்றது உருவானும் திருவானும் குலத்தானும் அகவையானும் தகுதியுடைய மணமகனை. குமரி-கன்னி. படை-வாள்; வேலுமாம். துரிசு - அயலானைச் சேர்தல். நீத்தவர் மனை என்றது. கணவன் துறவியாய் விட்டமையால் தனித்திருப்பவளை. தொடை - தொடுதல். மாலைசூட்டுதற்குரிய எனினுமாம். மருகி - மகன்மனைவி. (உ௯௬)

மிறைதரு மூபபா தகம்பல வவையும்
விளம்புது மெய்த்தவ வறிக
மறையவர்க் கமைத்த பொருள்பெரி யவர்த
மாண்பொருள் கவர்தலன் னவற்றைப்
பறைதரப் பிறராற் கெடுத்தனற் குலத்தாற்
பயிலறி வருளினாற் றருக்கல்
நிறைதவத் தினரை வெகுளுத லெள்ளல்
நீத்திடல் செய்ந்நன்றி கோறல்.

(இ - ள்.) மெய்யான தவவொழுக்கமுடைய அகத்தியனே! இனி மூன்றாவதாகிய இனத்தீவினைகள் தாமும் பற்பலவாம்; அவற்றையும் கூறுதும் உணர்ந்து கொள்க! அந்தணர்க்கென்று அமைத்த பொருளும், சான்றோர் தம் மாட்சிமையுடைய பொருளும் ஆகிய இவற்றைக் கவர்ந்து கோடலும், அந்தப் பொருள்களை ஏதிலாரைக்கொண்டு அழியும்படி கெடுக்குந்தலும், குலம் பெரியேம்! கற்ற அறிவு பெரியேம்! அருளினிற் பெரியேம்! என்று தம்மைத்தாமே மதித்துச் செருக்குறுதலும், நிறைந்த தவவொழுக்கமுடையோரைச் சினத்தலும், இகழ்தலும், அவர் நட்பைவிடலும் செய்ந்நன்றி கொல்லுதலும்.

(வி - ம்.) மிறை - குற்றம்; துன்பமுமாம். பறைதருதல் - அழிதல். துறவோர் கேண்மையை நீத்தல் என்க. கோறல் - கொன்று மறத்தல் என்க. (உ௯எ)

இறப்பவுங் காமப் புணர்ப்புறல் வறிது
மீந்துறு தீட்டலே வேட்டல்
சிறப்பறு வஞ்சம் வயிரமுங் கோட
றீமுனர் மணந்தவ ளிருப்ப
நறக்குழன் மகளிர் நன்னல முண்டு
நாணறல் கற்புடை யவளைப்
பெறத்தகு மெலிய ளென்றெண லவடோள்
பிணைதர வலித்தல்கட் புணர்ச்சி,

(இ - ள்.) மிகையாகக் காமநுகர்ச்சியில் ஈடுபடுதலும், ஒருசிறிதும் வறியவர்க்கு ஈயாதே பொருளீட்டிக் குவித்தலும் பேராசைப் படுதலும் சிறப்பில்லாத வஞ்சனையையும் செற்றத்தையும் மேற்கோடலும், தீயின் முன்னிருந்து திருமணஞ் செய்துகொண்ட இல்லாளிருக்கவே, ஏனைய பிறன்மனைக்கும் கூந்தலுடைய மகளிரைக் கூடி நாணமற்றுப் போதலும், கற்புடைய குலமகளைப் பொன் முதலியன கொடுத்துப் பெறுதற்குரிய எளியளாகக் கருதுதலும் அவளுடைய தோளைத் தழுவ முயலுதலும் புணர்வான் போன்று கருதிக் கண்ணால் கூர்ந்து நோக்குதலும்.

(வி - ம்.) இறத்தல் - மிகுதி. வறிது - சிறிது. வேட்டல்-ஈண்டு பேராசைப்படுதல். வயிரம் - பகைவர்பாற் கொள்ளும் இகல். வரையின் மகளிர் என்பார் நறக்குழன் மகளிர் என்றார். கட்புணர்ச்சி - கண்ணாலே மகளிர் அழகை நுகர்தல். (௨௩௮)

பழியறு கன்னிக் கிழிவெடுத் துரைத்தல்
பருவநல் லறிவுடை யவளைக்
கழியமெய் யுணர்ந்தாற் கன்றிமற் றொருவர்
களித்தல்கண் டிடுமண மெட்டின்
இழிவறு பிரம மாதியைந் தன்றி
யேனைய மன்றலிற் புணர்தல்
அழிதன்மா லையவென் றறத்துறந் தவரை
யாடக மாதிசென் றிரத்தல்.

(இ - ள்.) குற்றமற்ற கன்னிக்குப் பழிச்சொல்லைப் படைத்துக் கூறுதலும் பருவமும் அதற்கேற்ற வுணர்ச்சியும் உடைய கன்னியை நன்கு மெய்யுணர்ச்சி கைவரப்பெற்ற அந்தணனுக்கன்றி ஏனையோர்க்குத் தானஞ் செய்தலும், உலகிலே காணப்படும் எண்வகை மணங்களுள் வைத்து குற்றமற்ற பிரமமண முதலிய ஐந்துவகை மணத்தாலன்றி ஏனைய இழிந்த மூன்றுவகை மணமுறையாலும் மகளிரைக் கூடுதலும் யாக்கை முதலியன நிலையுதலில்லாதன என்றுணர்ந்து துறந்துவிட்ட பெரியோர்பாற் சென்று பொன் முதலிய இரத்தலும்.

(வி - ம்.) பிரமமாதி ஐந்து - பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தருவம் என்பன. ஏனைய மூன்று - ஆசுரம் இராக்கதம் பைசாசம் என்பன. (௨௩௯)

தளர்விடை யூற்றிற் பதியினை நீங்கல்
சகியினைத் தணத்தனற் குணரைக்
கிளைஞரைத் தரும முடையரைப் பதியைக்
கேழில்வி ரரைவசி யர்களை
அளிதரு பசுவைத் தனக்கெனத் தருவை
யாலயத் தருக்களைக் கோறல்

துளிமது மலரைத் தனக்கெனக் குற்றல்
துரிசினர் கைப்பொரு ளிரத்தல்.

(இ - ள்.) நெஞ்சந் தளர்தலுக்குக் காரணமான அல்லல் வந்துற்றபொழுது தலைவனை விட்டுப்போதலும், நண்பனைப் பிரிதலும், நற்குணமுடையோரையும், உறவினரையும், அறப்பண்புடையோரையும், தலைவனையும், ஒப்பில்லாத வீரரையும், வணிகரையும், பாதுகாத்தற்குரிய ஆன்களையும், தமக்காகப் பழுமரங்களையும் கோயில் மரங்களையும் கொல்லுதலும், தேன் துளிக்குமலர்களைத் தமக்காகப் பறித்தலும், தீவினையாளர்பாற் பொருள் இரத்தலும்.

(வி - ம்.) தளர்வு - வறுமைக்கு ஆகுபெயர் எனினுமாம். பதி - தலைவன். சகி - நண்பன். கேழ் - உவமை. கேழில் பரம்பொருள் என்புழியும் இப்பொருட்டாதல் உணர்க. தனது நலங்கருதித் தருக்களைக் கோறலும் மலரைப் பறித்தலும் என்க. (௨௭0)

கண்ணுதற் பரமன் றிருப்பணிக் குரியார்
கவையடி யான்முதல் கவர்தல்
அண்ணல்பூ சனையின் பயின்றனைத் தான்செய்
அருந்தடா கத்தினைப் பொழிலை
நண்ணிய மனையைப் புதல்வரை விற்றல்
நல்லன தீயன பயத்தல்
புண்ணிய பாவ மெனத்தெரி கல்லாப்
பொத்தினைப் பூசுரன் படுதல்.

(இ - ள்.) நெற்றிக்கண்ணுடைய இறைவன் திருப்பணி செய்யும் அடியவரையும், அவன் கோயிற்குரிய கவர்த்த குளப்படியினையுடைய ஆன் முதலியவற்றையும், கவர்ந்துகோடலும், இறைவன் வழிபாட்டால் எய்திய பயனையும், தான் அகழ்ந்த அரிய குளத்தினையும், வளர்த்த பூம்பொழிலையும் தன்னைச் சேர்ந்த மனைவியையும் மக்களையும் விற்றலும், அந்தணன் நன்மையும் தீமையும் நிரலே ஒருவனுக்கு எய்துவித்தல் அவன் முற்செய்த அறமும் மறமுமே என்றுணரமாட்டா மடமையை உடையனுதலும்.

(வி - ம்.) கண்ணுதற் பரமன் என்றாரேனும் தெய்வத்திருப்பணி எனப் பொதுவிற் கொள்க. அண்ணல் - இறைவன். பூசனைப்பயனைப் பிறர்பாற் பொருள்பெற்று நீரோடு வழங்குதல் என்க. அந்தணன் கல்லாமை தீவினை என்றவாறு. (௨௭௧)

தருவலென் றேற்ற பொருள்கொடா தொழிதல்
தருகுவல் பாகமென் றுருவர்
இருநிலம் விளைத்து முழுவதுங் கோட
லில்லவ ளணிகல மழித்தல்

பிறர்பொருளை நயந்தனர் கோடல்
வினைதபத் தருள்பொருள் வாங்கல்
பரவுறு வசிய மாதியிற் செம்பொன்
பற்றல்வில் லாதன விற்றல்.

(இ - ள்.) பின்னர்த் தருவேன் என்று கூறி ஏற்றுக்கொண்ட கடனைக் கொடாது விடுதலும், பிறர்க்குரிய நிலத்தினை வாரங்கொடுப்பல் என்று விளைவித்து வாரங்கொடாமல் விளைபயன் முழுதையும் எடுத்துக் கொள்ளுதலும், மனைவியின் அணிகலன்களை அழித்துவிடுதலும். கொல்பினர் பொருளை விரும்பிக் கவர்ந்து கொள்ளுதலும், தீவினைக்குக் கழுவாயாக ஒருவன்தரும் தானப்பொருளை ஏற்றலும், பிறரால் புகழப்படுகின்ற வசியமந்திர முதலியன செய்து பொருளீட்டலும், விற்கத் தகாத சோறு முதலியன விற்றலும்.

(வி - ம்.) பாகம் - பகுதிப்பொருள். இல்லவள் - மனைவி. வினை - தீவினை. தப - கெட. வசியமாதி எனக் கூறியதனால் ஏனை ஆகருடணம், மோகனம், தம்பனம், உச்சாடனம், மாரணம் என்பனவும் கொள்க. வில்லாதன - சோறு முதலியன; அரிசி விற்றிடும் அந்தணர்க்கோர் மழை என்பதுங் காண்க. (௨௪௨)

புகழினைக் குறித்து நியதிகைக் கோடல்
பொருள்களான் மறைமுதல் கொள்ளல்
திகழ்நடம் விநோத மாதிய மதித்துத்
திரிதனற் சமயநின் றவர்கள்
இகழ்பசு நூலை வழியெனப் பயிற
லிரும்பொரு ளேற்றுநூல் பயிற்றல்
நிகழ்தரு மவலத் தருக்கமே யறைதல்
படிமத்தைப் பரித்துநீத் திடுதல்.

(இ - ள்.) அன்பானன்றிப் பிறர் தம்மைப் புகழவேண்டுமென்று கருதியே நியதியை மேற்கொள்ளுதலும், பொருள் கொடுத்து மறை முதலியவற்றைக் கொள்ளுதலும் அழகு திகழும் கூத்தும் வேடிக்கையு மாகியவற்றை நன்குமதித்துக் காண்டலும், சைவசமயநெறி நிற்போர் பசுநூல் என்றிகழாநின்ற புறச் சமயநூல்களை வழிநூல் என்று பிதற்றிப் பயிலுதலும். பெரும்பொருள் பெற்றுக்கொண்டு ஞானநூலை ஓதுவித்தலும் துன்பமே நிகழ்தற்கிடமான வீண் தருக்கம் பேசுதலும், மேற்கொண்ட நோன்பினை இடையிலே விட்டுவிடுதலும்.

(வி - ம்.) நியதி - நாட்கடன். விநோதம் - வேடிக்கை. நற்சமயம் என்றது சுத்த சைவசித்தாந்த சமயத்தை. பசுநூல் - உலோகாயத நூல்; பிற உலகவியல் நூல்களுமாம். படிமம் - நோன்பு, "படிம வுண்டிப் பார்ப்பன மகனே" என்புழியுங் காண்க. (௨௪௩)

வானவ ரேறிமந் திரமது கொடுத்த வரதரை யோம்புரு திகத்தல்
ஆனரு மறையோ ரறவரைப் பிழைத்த லரசனுக் கிழிப்புரை கிளத்தல்

ஈனமில் பிதிரர் செய்கடன் றவிர்த லிருவினை நரகொடு துறக்கம்
ஊனமி லிறையு மில்லையென் றுரைத்த லுண்மது மகளிர்தோள் கலத்தல்.

(இ - ள்.) தேவவழிபாடும் தீயோம்பலும் மந்திரமோதலும் ஆகிய இவற்றைக் கற்பித்த சான்றோரைப் பாதுகாவாது புறக்கணித்தலும்; ஆன் பார்ப்பனர் அறவோர் இவர்கட்குக் கேடு சூழ்தலும்; அரசனைப் பழித்தலும், குற்றமற்ற பிதிரர் கடன்களைத் தவிர்தலும், நல்வினை, தீவினை, நரகம் துறக்கம் குற்றமற்ற கடவுள் என்னும் இவை இல்லை என்று நாத்திகம் பேசுதலும், கள்ளுண்ணும் மகளிர் தோளைத் தழுவுதலும்,

(வி - ம்.) வானவரை வழிபடவும் எரியை ஓம்பவும் இவற்றிற் குரிய மந்திரத்தையும் கற்பித்த வரதர் என்க. மதுவுண்மகளிர் என மாறுக. (உசஅ)

பூரணை யிருது மதிபகல் பிதிரர்ப்
போற்றுநா ளாதியின் மகளிர்
வாரணி கொங்கை மணத்தனீர்க் கலத்தல்
வண்பசுப் புணர்தனட் புடைத்தல்
ஈரமில் கொடுஞ்சொற் கிளத்தனீர்க் கோட்டை
யிறுத்தல்கூ பத்தடந் தூர்த்தல்
வீரமுற் றமர்தன் சமயங்கால் கோறல்
விண்ணவர் விமானங்கள் சிதர்த்தல்.

(இ - ள்.) நிறை மதிநாளினும் மகளிர்பூப்புக் காலத்தும் பகற் பொழுதினும் பிதிர்க் கடனியற்று நாளினும் இன்னோரன்ன நூல் விலக்கிய காலத்தே மகளிரைப் புணர்தலும், தண்ணீருட் புணர்தலும் வளவிய ஆன்களைப் புணர்தலும், நட்பினைப் பிரித்தலும் இரக்கமற்ற கொடுஞ்சொற்களைப் பேசுதலும் நீர்நிலைகளின் கரைகளை உடைத்த லும், கிணற்றைக் குளத்தைத் தூர்த்தலும், தன் சமயத்தை அழித்தலும் தேவர் உறையும் மண்டபங்களை இடித்தலும்;

(வி - ம்.) பூரணைமதி எனமாறுக. இருது - மகளிர்பூப்பு. நீர்க் கோடு - நீர்நிலையின் கரை. விமானம் - மண்டபம். (உசகு)

அமிழ்தமே யாகப் பகாதுண லன்றி யனைத்துமா மருஞ்சுவை கொழிக்குந்
தமிழ்முனி யுபபா தகமத வினமுஞ் சழக்கறக் கிளக்குதுந் தெரிக
இமிழ்மறை யாளர் தாபதர் சகிக்க னியர்பசு விவர்வினைக் கூறும்
நிமிர்தர விழைத்த னெஞ்சழுக் காற்றி னிறுவலிபா வையர்பழி நாட்டல்.

(இ - ள்.) தாமுண்பது பெறற்கரிய அமிழ்தமே யாயவிடத்தும் விருந்தினர்க்குப் பகுத்துக் கொடாமற் றமியராயுண்பதும், என்னும் இவைகளேயன்றி இவை போல்வனவும் தீவினைகளேயாம். பெறற்கரிய சுவை நிரம்பிய தமிழ் முனிவனே! இனி அத்தீவினைக்கு இனமாய வினைகளையும் குற்றமற மொழிவேம் அறிந்துகொள்க! ஓதும் வேதத்தை

புடைய பார்ப்பனர், துறவோர், நட்டோர், கன்னியர், ஆன் என்னு மிவர்க்கும் இவர் தொழிலுக்கும் இடையூறு மிகச் செய்தலும் நெஞ்சத்தைப் பொறாமையிலே அழுத்தி நிறுத்துதலும் மகளிர்க்குப் பழியுண்டாக்கி நிலைநிறுத்துதலும்,

(வி - ம்.) "விருந்துபுறத்தாத் தானுண்டல் சாவா மருந்தெனினும் வேண்டற் பாற்றன்று" என்னும் அருமைத் திருக்குறளையும் ஈண்டு நினைக. தமிழ்முனி - அகத்தியன். பசுவினை : மேய்தல், நீருண்ணல். (௨௪௬)

எரிவளர் சாலை கோயிலா னிலைநீ ரெறிகுளம் வீதிவெற் பீமம்
விரிமலர் நந்த வனந்தரு நீழன் மேடவல் சிலைவிளை நிலமெய்
தெரிதவர் வளாக முவர்நில முறையு டிருநதி யறுகுபைந் தும்பை
நெரிநிலம் வழிவன் மீகமற் றிவற்றி னிருவகை யியக்கமு நீத்தல்.

(இ - ள்.) வேள்வி மண்டபம், திருக்கோயில், ஆன்தொழுவம், நீரலை எறியும் குளம், வீதி, மலை, நன்காடு (சுடுகாடு), மலர்விரியும் பூம்பொழில், மரநிழல், மேடு, பள்ளம், கல், விளைந்துள்ள வயல், துறவோர் உறையுள், உவர்நிலம், இல்லம், அழகிய யாறு, அறுகம்புல், பசிய தும்பை முதலியன நெருங்கிய நிலம், நடைவழி, புற்று என்னு மிவற்றில் மலமூத்திரம் விடுதலும்,

(வி - ம்.) நந்தவனம் - பூம்பொழில். தவர் - துறவோர். நெரிநிலம் - வினைத்தொகை. வன்மீகம் - புற்று. (௨௪௭)

பிறர்நிதி வேந்தன் றனக்குறக் காட்டல்
பேனநீர் தனில்விளை யாடல்
உறவிகல் கடந்தோர்க் குறுகுல மாதி
யாய்தலொண் வழியிடை தடுத்தல்
மறலிய வழக்கிற் றெளிந்தசொல் சொலாமை
யாற்றல னுயிர்கரந் திறுத்தல்
தெறல்வினைத் தூண்டி லாதிய செய்தல்
செயுமவை கோடல்பொய் கிளத்தல்.

(இ - ள்.) மறைவாகப் பிறர் வைத்திருக்கும் பெரும்பொருளை அரசனுக்கு நன்கு காட்டுதலும், நுரையுடைய நீரின்கண் விளையாடுதலும், உறவும் பகைமையும் கடந்த துறவோருடைய குலமுதலியவற்றை ஆராய்தலும் ஒள்ளிய வழியை இடையிலே அடைத்தலும், இருவர் மாறுபட்ட வழக்கின்கண் தான்தெளிந்த சொல்லைச் சொல்லாமையும், பகைவன் உயிரை மறைந்திருந்து கொல்லுதல் கொலைத்தொழிற்குரிய தூண்டில் வலை முதலியன செய்தலும், பிறர் செய்துள்ள அவற்றை வாங்கிக் கோடலும் பொய் கூறலும்,

(வி - ம்.) பேனம் - நுரை. மறலுதல் - மாறுபடுதல். தெளிந்த சொல் என்றது சான்றுச் சொல்லை. தெறல் - கொல்லுதல். (௨௪௮)

ஆருயிர் மயங்க மருந்திட லதிதி யாதியோர் பசிமுத லொருமை
வாரமற் றடியர் பாலிரங் காமை மற்றுமத் தொழும்பரை யொறுத்தல்
பேருறு வருண நிலையினை சிதைத்தல் பெருநிலத் துயிர்தப நடத்தல்
சீரிய சுற்றம் வேந்தனு தியர்க்குஞ் செயிர்வினை முடித்திடக் கருதல்.

(இ - ள்.) உயிரினங்கள் மயங்கும்படி நச்சு மருந்திடுதலும் விருந்தினர் முதலியோர் பசியகற்ருமையும், அன்பற்று அடியவர்க் கிரங்காமையும், மேலும் அடியவரை வருத்துதலும், புகழ் உறுதற்கிடமான வருணநிலையினை அழித்தலும், நடக்கும்பொழுது எறும்பு முதலிய சிற்றுயிர் அழியும்படி நடத்தலும், சிறந்த உறவினர்க்கும் அரசன் முதலியோர்க்கும் கேடுதரும் தொழிலைச் செய்துமுடிக்க நினைதலும்,

(வி - ம்.) மருந்து - நஞ்சுகலந்த மருந்து. ஒருமை - அகற்ருமை. வாரம் - அன்பு. தொழும்பர் - பணியாளர். வருணம் - அந்தணர் முதலிய வகுப்புகள். செயிர்வினை - தீவினை. (உசக)

ஆவினை யினத்தி னீக்கலா னிணியை
யகற்றுதல் செயாமையா னேறு
நோவவன் பீச முடைத்தலவ் விரண்டி
னேன்சுமை யுறுத்தல்வே தியர்க்குத்
தாவினை யுஞற்றன் மதுமண மோத்தல்
தரணிகா வலனெனப் பிறந்தும்
தேவர்கட் கவியூண் கொடாமைமூத் தவர்நோய்
செறிநரா தியர்க்கிரங் காமை.

(இ - ள்.) ஆவை அதன் இனத்தினின்று பிரித்தலும், ஆவிற்குற்ற பிணியை மருந்து முதலியவற்ருல் அகற்ருமையும், எருது நோவும்படி அதன் விதையை நெரித்தலும் அந்த ஆன் எருது இரண்டினும் வலிய சுமையை ஏற்றுதலும் பார்ப்பனர்க்குக் கேடு சூழ்தலும், கள்ளின் நாற்றத்தை விரும்பி நுகர்தலும், அரசர்குடியிற் பிறந்து வைத்தும் தேவர்க்கு அவியுணவுநல்கும் அறக்கள வேள்வி செய்யாமையும், முதியோர் நோய்வாய்ப்பட்டோர் முதலியோர்க்கு இரங்காமையும்,

(வி – ம்.) இனம் - விடை நிரையுமாம். ஆனேறு - விடை, காளை - பீசம் - விதை, இரண்டும் - ஆனும் ஏறும். தா - தீமை. (உசு0)

ஊனுண வெண்ணல் கொலையநற் கிரக்க
முருமைமற் றிடைவிலக் காமை
ஏனைய விழிவுஞ் செய்யவஞ் சாமை
யிறுத்திடப் பிறவுயிர் வளர்த்தல்
ஆனவர்ச் சனையி சன்பணி சிறிது
மாற்றிலே மெனவிரங் காமை

பேனநீர்க் கடலிற் கலங்கொடு சேறல்
பெட்டுவே சையர்நலந் திளைத்தல்.

(இ - ள்.) ஊன்கின்றற்கு விரும்புதலும், கொலைத் தொழில் கண்டவிடத்தே இரக்க முறாமையும், அக்கொலைச் செயலை இடைநின்று விலக்காமையும், ஏனைய களவு பொய் முதலிய இழிதொழில்களைச் செய்ய அஞ்சாமையும்; கொன்று தின்னும்பொருட்டு ஆடு கோழி முதலியவற்றை வளர்த்தலும், நம்மாலான வழிபாடு இறைவன் பணி யாகிய இவற்றை யாம் ஒருசிறிதும் செய்திலேமே என்று இரக்கங் கொள்ளாமையும், நுரைமிக்க நீரையுடைய கடலின்கண் மரக்கல மூர்ந்து செல்லுதலும், வேசைமகளிரை விரும்பி அவரின்பத்தை நுகர் தலும்,

(வி - ம்.) ஏனைய இழிவு - கள்ளல், வஞ்சித்தல் முதலியன. இறத்திட - கொன்றுண்ண என்க. பேனம் - நுரை. கலம் - மரக்கலம். (உ௯௧)

வினைபுரி யாளர்க் குள்ளதீ யாமை
வெய்யகோ னடத்தல்வெங் கோலின்
முனைவர்பா லேற்றல் கள்ளனை யறிந்து
நல்லனென் றேமொழிந் தகற்றல்
இனைதரக் கள்ள னென்றுநல் லவனை
யெண்ணல்கள் ளற்குடன் படுதல்
புனைதரு கள்ளத் தொழில்சொலல் பயிற்றல்
புரையறக் கள்ளனைச் சார்தல்.

(இ - ள்.) தொழிலாளர்க்குரிய கூலி கொடாமையும், கொடுங்கோல் நடத்தலும் கொடுங்கோல் காரணமாகத் துறவியரிடத்தே அரசன் இரந்து பொருள் கோடலும் கள்ளனை அறிந்திருந்தும் நல்லவன் என்றுகூறி விட்டுவிடுதலும் நல்லவனை வருந்தும்படி கள்ளன் என்றே நினைத்தலும், களவு செய்தற்கு உடன்பட்டிருத்தலும் பொய் பேசுதற்குரிய களவுத்தொழிலைச் செய்தற்கு வழிகூறுதலும் அத்தொழிலைக் கற்பித்தலும் உயர்ச்சி கெடும்படி கள்ளனைச் சேர்ந்திருத்தலும்,

(வி - ம்.) வினைபுரியாளர்-தொழிலாளர். உள்ளது - கூலி. வெய்யகோல் - என்றது அரசன் செங்கோன் முறை பிறழ்ந்து கொடியனுய்த் தீமை செய்தலை. இனைதல் - வருந்துதல். கொடாவிடின் நும்மை வருத்துவல் என்று குறிப்பானுணர்த்திச் சொல்லான் மட்டும் இரப்பார் போன்று பொருள் வெளவலை வெங்கோலின் ஏற்றல் என்றார். "வேலொடு நின்றான் இடுவென்றது போலும் கோலொடு நின்றான் இரவு" எனவரும் திருக்குறளையும் நினைக. (உ௯௨)

பாறயி ரூது தயிலநீர் கூலம் பட்டுவார் கவரிதண் கவிகை
தாறுமுன் றசைசங் கிதைவிரி மதலை நகைமணி யிரும்புசெம் பாதி
வீதிலி திரண யாயிறும் பிறர்பால் வெறுத்தன கரவினுற் கோடல்
தேறுக வுபபா தகக்கின மென்று தெள்ளிய வொள்ளறி வுடையோய்,

(இ - ள்.) தெளிந்த ஒள்ளிய அறிவுடையோனே! பால், தயிர், வெண்ணெய், எண்ணெய், நீர், கூலம், பட்டு, நெடியதாமரை, குளிர்ந்த குடை, மணக்கும் ஊனுகிய தசை, சங்கு, பாய்விரித்தாரும் ஓடம், ஒளிமணி, இரும்பு, செம்பு முதலிய உலோகங்கள் என்னும் சிறப்பில்லாதனவாகிய இவற்றைச் சிறிதேனும் பிறர்பாற் கொள்ளக்கூடாதன எனச் சான்றோரால் வெறுக்கப்பட்டன இவற்றையும் வஞ்சத்தாலே கொள்ளுதலும் தீவினைக்கின மென்றே கொள்ளுக.

(வி - ம்.) இவை எளிய பொருளாயினும் இவற்றையும் களவிற்ற் கொள்ளுதலும் தீவினையே என்றவாறு. (௨௯௫)

ஆடவர் மகடூஉ மானிடர் தேவ ராகவிவ் வியற்றுறி னவ்வ
பாடழி பயனைப் பயந்தலா தொழியா பார்த்திப னொறுத்திடப் பட்டோர்
பீடுறு குரவன் மெய்யடி யவராற் பிரிந்திடப் பட்டவர்க் கெல்லாம்
நீடுறு பயனெய் தாவினி யறம்பா வப்பய விலைமுறை கிளப்பாம்.

(இ - ள்.) அகத்தியனே கேள்! ஆடவராக, மகளிராக, மனிதராகத், தேவராக, ஈண்டுக் கூறப்பட்ட தீவினைகளைச் செய்தவிடத்து அத்தீவினைகள் தத்தம் தீயபயனைப் பயந்தே விடுவதல்லது பயவா தொழியமாட்டா. இனி அரசனால் ஆராய்ந்து ஒறுக்கப்பட்டோர்க்ட். நல்லாசிரியனாலாதல் மெய்யடியாராலாதல் கழுவாய் செய்யப்பட்டவர்கட்கு அவ்வத் தீவினைப்பயன் எய்தமாட்டா. இனி அறமறங்களின் பயன்களுடைய இயல்பினை முறையே கூறுவாம்.

(வி - ம்.) அவ்வ - அவ்வவற்றின். பிரித்திடல் - கழுவாய்செய்தல். (௨௯௬)

வேறு

அன்னநீர் செருத்தலா டையாதி பல்லவும்
நன்னர்நெஞ் சுவப்புற நயந்தளித்து ளோர்களும்
மன்னுமீச னுதியோரை வணக்கமுற்றி னோர்களும்
என்னருந் தெனுதுதிக்கி னெய்திமே லியங்குவார்.

(இ - ள்.) அன்னம் நீர் பாற்பசு ஆடை முதலிய பல பொருள்களையும் சிறந்த பாத்திரமானவர்கள் தமது நன்மையுடைய நெஞ்சமகிழும் படி விரும்பி வழங்கியவரும், நிலைபெற்ற இறைவன் சிவயோகி முதலியோரை வழிபட்டு முதிர்ந்தோரும் அவர் போன்ற எத்தன்மையுடையவரும் மறலியினுடைய தென்றிசைக்கு எய்தி மேற்செல்லுவார்.

(வி - ம்.) செருத்தல் - மடி. என்னரும் - எத்தன்மை யுடையவரும்.. (௨௯௭)

இரதமாதி யூர்ந்துபல் லியமியம்ப வியவர்கள்
விரசமந்த மாருதம் விராயியங்க நெறியெலாம்
பரவுபல் வளத்தபோகம் பண்பினுர்ந்து செல்லுறும்
வரதர்தம்மை நடுவனு மகிழ்ந்தெதிர்ந்து நவிசுறீஇ.

(இ - ள்.) அன்ன முதலிய வழங்கிய அறவோர் தேர் முதலியவற்றை ஊர்ந்து பல்வேறிசைக் கருவிகளும் முழங்கவும், பணியாளர்

சூழவும், மென்காற்று வீசாநிற்பவும் வழியெங்கணும் பரவிய பலவாகிய வரசரும் கனி முதலிய நுகர்ச்சிகளை இனிதுண்டும் செல்லாநிற்பர். இங்ஙனம் செல்லும் அறவோரைக் கூற்றுவன்றானும் மகிழ்ந்து எதிர்கொண்டழைத்துச் சென்று சிறந்த இருக்கையில் இருத்தி.

(வி - ம்.) இயம் - இசைக்கருவி. விரச - சூழ. மந்தமாருதம் மென்காற்று. போகம் - நுகர்பொருள். வரதர் - வரந்தருதற்குரிய சிறப்புடையோர். உறிஇ - இருத்தி. (உ௬௬)

காதலோடு பூசனை கனூற்றிநீயி ரெம்பிரான்
வேதநீதி யாற்றிவீர் விண்ணிலின்ப மெய்ந்துமுன்
பாதகத்தி னெஞ்சிய பயனருந்த விவ்வயிற்
போதுகென்ன நன்றெனப் போகபூமி யெய்துவார்.

(இ - ள்.) அன்போடு வழிபாடுசெய்து பெரியீர்! நீயிர் எம்பெருமானாகிய இறைவன் கூறிய வேதாகம முறைப்படி ஒழுகியுயர்ந்துளிர். ஆதலால் அந்நல்வினைப் பயனாகிய துறக்க வின்பத்தே பொருந்திப் பின்னர் நீயிர் பண்டு செய்து எஞ்சிக்கிடக்கும் (சஞ்சிதமாகிய) தீவினைப் பயனை நுகர்தற் பொருட்டு ஈண்டெய்துக என்றுகூற அவரும் நன்று நன்றென்று மகிழ்ந்து துறக்கவுலகம் புகாநிற்பர்.

(வி - ம்.) கனூற்றி - செய்து. விண் - துறக்கம். முன்பாதகத்தெஞ்சிய என்றது. முன்செய்து அத்துவாவிலே கட்டுப்பட்டுக் கிடக்கும் வினையின் பயன்களை. (உ௬௭)

என்றவேல்லை முனிவர னிறைஞ்சிவே லிறைவனை
ஒன்றுதான்வி னவுவா னுதவினுரை யோதுழி
முன்றலைக்க ணன்னநீர் மொழிந்ததென்னை யென்றலும்
குன்றிறுக்கு மிளவலுங் குறுமுனிக்கி தருளுமே.

(இ - ள்.) என்று திருவாய் மலர்ந்தருளிய அளவிலே அகத்திய முனிவன் வேலேந்தும் அக்கடவுளை வணங்கி ஒன்று வினவாநிற்பவன், எந்தாய்! ஈவோரைக் கூறத் தொடங்கியபொழுது முற்படச் சோறும் நீரும் கூறியருளியதன் கருத்தென்னையோ என்று வினவுதலும் குருகு பெயர்க் குன்றெறிந்த முருகப்பெருமானும் அவ்வகத்தியனுக்குப் பின் வருமாறு திருவாய் மலர்ந்தருளுவன்.

(வி - ம்.) முனிவரன் - முனிவர்கட்கு மேலானவன்; அகத்தியன். வேலிறைவன் - முருகன். குன்று - கிரௌஞ்சமலை. (உ௬அ)

வேறு

பொருண்மிகு மூர்த்தி யாதி போக்கருங் கொடைகட் கெல்லாம்
பொருண்மிகா வன்னந் தெண்ணீர்ப் போக்கருங் கொடையே மேலாம்
பொருண்மிகு மூர்த்தி யாதி பூத்திடும் பயத்தி னுங்குப்
பொருண்மிகா வன்னந் தெண்ணீர் பூத்திடும் பயன்மேம் பாட்டால்.

(இ - ள்.) விலைமிக்க தேர் முதலியன வழங்கும் குற்றமற்ற கொடையினுங் காட்டில் விலைமிகாத சோறும் தெளிந்த நீரும் வழங்குத

லாகிய குற்றமற்ற கொடையே சிறந்ததாம் என்றலெனின், விலைபிக்க தேர் முதலியன நல்கும் பயனையும் காட்டில் உவ்விடத்தே விலையிகாத சோறும் தெண்ணீரும் நல்கும் பயன் மேம்பாடுடையதாதலானும்,

(வி - ம்.) பொருள்-விலைப்பொருள். சோறும்நீரும் என்பொருளே யாயினும் பயனுற் சிறந்தன என்றவாறு. போக்கு - குற்றம். ஊங்கு- இவ்வுலகில். பூத்தல் - வழங்குதல் மேற்று. (௨௧௯)

பிணிபல வவற்றுண் மேலாம் பிணிபசி யதன்பா லான
பிணிநறுந் தெண்ணீர் வேட்கை பிணியிவை யுயிர்கட் கெல்லாம்
தணிமருந் தன்னந் தெண்ணீர் சார்பசி யொழிவி னுண்டாம்
தணிவில்பல் வேட்கை நீக்கு மவையெலாந் தமக்குப் பின்றும்.

(இ - ள்.) மானிடர் முதலிய சிற்றுயிர்களைப் பற்றும் நோய்கள் சாலப்பலவாம். அவையிற்றுள் தலைசிறந்த நோய் பசிநோயே யாகும். அந்நோயை அடுத்துத் தோன்றும் நோய் நறிய தெளிந்த நீரினை வேட்கும் வேட்கையே யாகும். இவ் விரண்டு நோயும் உடலோடுள்ளனவாம் எல்லாவுயிர்கட்கும் பொதுவும் ஆகும். இத்தலையாய நோய்களைத் தீர்க்கும் மருந்தாவன நிரலே சோறும் நீருமேயாம். உயிர்கட்குத் தம்மைச் சார்ந்த பசிநோய் தீர்ந்தவிடத்தே குறையாத பலவாகிய அவாக்கள் தோன்றுநிற்கும். அவ்வவாவானுற்ற நோய்களைத் தீர்க்கும் மருந்தாகிய பிறபொருட் கொடைகள் அனைத்தும் அக்கொடைக்குத் தாழ்ந்தனவே யாம்.

(வி - ம்.) பசிநோய் உற்றபொழுது ஏனைய ஆசையாகிய நோய்கள் தோன்றமாட்டா. இதனானும் பசிநோயே தலைசிறந்தது என்றவாறு. (௨௨௦)

உடலினை வளர்த்த லானு முடலினற் கிளர்ந்த வேனை
மடனிகு மறங்க ளெல்லாம் வளர்த்திட லானு நீத்தோர்
கடவுள ராதி யோரு முணவினைக் கருத லானும்
தொடர்தரு பல்லாற் றானுந் துப்பளிந் திடுதன் மேலாம்.

(இ - ள்.) சோறும் நீரும் உடலை வளர்க்குமியல்புடையன ஆகலானும், அவ்வுடல் கொண்டே அறியாமை நீங்குதற்குக் காரணமான அறங்களை எல்லாம் வளர்த்திட வேண்டும் ஆகலானும், துவரத் துறந்தோரும் தேவருங்கூட உணவினை விரும்புதலானும் யாம் தொடர்பாக ஈண்டுக்கூறிய பல வழிகளானும் ஆராயுமிடத்தே உண்டி கொடுத்தலே உயர்வுடையதாகும் என்பதுணரலாம்.

(வி - ம்.) மடன் - அறியாமை. இகுதல் - கெடுதல். நீத்தோர்- துவரத்துறந்த துறவோர். கடவுளர் - அமரர். துப்பு - உணவு. (௨௨௧)

ஆதலா லன்னந் தெண்ணீ ரவற்றினை முன்னர்ச் சொற்றும்
பூதவன் பரிணு மத்தைப் போட்டுநற் பூத சாரத்
தோதரு துறக்கஞ் செல்வோ ருறுமுறை தொகுத்தா மிப்பால்
பாதகர் பூத தேகம் படர்ந்துறு முறையுஞ் சொல்வாம்.

(இ-ள்.) இங்ஙனமாகலின் சோற்றையும் நீரையும் முற்படச் சொன்னோம். ஐம்பூதங்களின் வலிய பரிணாமமாகிய இவ்வுடலை இறப்புழி ஈண்டே போகட்டுவிட்டு நல்ல பூதசார சரீரத்தோடு சொல்லுதற்கரிய துறக்கஞ் செல்லும் அறவோர் ஆண்டுச் செல்லுமியல்பினைத் தொகுத்துக் கூறினேம். இனித் தீவினையாளர் இறந்த பின்னர்ப் பூத வுடலொடு செல்லும் முறைமையும் சொல்லுவேம்.

(வி-ம்.) சொற்றும் - சொன்னோம், பூதபரிணாமம் என்றது இவ்வுலகத்திற்குரிய பருவுடலை. பூதசாரம் - பூதசாரத்தாலியன்ற நுண்ணுடல். பூததேகம் என்றது நரகத்தை நுகர்தற்குரிய பூதசாரவுடலை. படர்ந்துறுதல் - ஒருசொல். (௨௬௨)

கருவிளங் குழவி பாலர் காளையர் விருத்த ராக
மருவுட லுகற்சி யற்ற மாத்திரை யறிந்து தென்பால்
தருமன தேவ லாளர் சார்ந்தனர் கொண்டு போத
வெருவுற நெறியின் முற்றும் வேதனை யனந்த கோடி.

(இ-ள்.) கருவாகவாதல் பச்சிளங் குழவியாகவாதல் பாலகராக வாதல் காளையராகவாதல் முதியரேயாகவாதல் எப்பருவத்தினராயினும் அவரவர் எடுத்துள்ள இப்பருவுடல் நுகர்ச்சிக்கென முகந்துகொண்ட பிராரர்த்த வினைப்பயன்களின் நுகர்ச்சி தீர்ந்தபொழுதினை ஒருதலையாக உணர்ந்து கொண்டு தென்றிசைக்கண்ணுள்ள கூற்றுவனுடைய ஏவலர் வந்தெய்திப் பற்றிக்கொடு போம்பொழுது அவ்வுயிர்கள் அஞ்சும்படி அக்கொடு நெறியில் நுகர்ந்து தீர்க்கும் துன்பங்கள் எண்ணத்தொலை யாத கோடியாம்.

(வி-ம்.) கரு - கருப்பத்திலுள்ள மகவு. விருத்தர் - முதியோர். நுகர்ச்சி - பிராரர்த்தவினை நுகர்ச்சி. சார்ந்தனர் - முற்றெச்சம். (௨௬௩)

சுழல்விழி யங்கி காலச் சுடர்ந்தெரி குஞ்சி பொங்கத்
தழனிமிர் திறலின் முற்றுந் தறுகண்வன் றூதர் கையில்
மழலைமென் கிள்ளை பூசை வாயகப் பட்டாங் கல்லாந்
துழலைபாய் மனத்தர் பாசப் பிணிப்பொடு முறுவர் சில்லோர்.

(இ-ள்.) தீவினையாளரிற் சிலர், சுழலாநின்ற கண்கள் தீக்காலவும் சுடர்விட்டெரிவது போன்ற தலைமயிர் பொங்காநிற்பவும் தீயினை ஒத்து ஓங்கிய ஆற்றலின்மிக்க வன்கண்மையுடைய வலிய கூற்றன் பணியாளர் கையில், மழலைச்சொற் பேசும் மெல்லிய கிளி பூனை வாயி லகப்பட்டாற் போன்று மயங்கிச் சுழலாநின்ற நெஞ்சத்தை யுடையராய் அவராற் கட்டப்பட்ட பிணிப்போடும் செல்லாநிற்பர்.

(வி-ம்.) சிலர் மனத்தராய்ப் பிணிப்போடுஞ் செல்லாநிற்பர் என்க. (௨௬௪)

கோடிற்றினைத் துளைத்துக் கோத்த கொடுந்தொடர்ப் பட்டுச் செல்வோர்
மிடற்றினை யிறுக்கி யாத்த விசுபா சத்திற் செல்வோர்

உடற்றுபு நாசி யண்ண மோட்டம்வார் குய்யங் கோத்துப்
பிடித்தனர் பாச மீர்ப்பப் பெயர்குவர் சிற்சி லோரே.

(இ - ள்.) சிலர் கூற்றன் ஏவலராற் கவுளைத்துளைத்துக் கோக்கப்பட்ட கொடிய சங்கிலிப் பிணிப்பிலகப்பட்டுச் செல்லாநிற்பர். வேறு சிலர் கழுத்தை யிறுக்கிக் கட்டப்பட்ட விசுதற்குரிய கயிற்றோடு செல்லாநிற்பர். வேறுசிலர் அத்தூதராலே துன்புறுத்தப்பட்டு மூக்கு மேல்வாய் நெடிய உதடு குய்யம் முதலிய உறுப்புக்களிலே கோத்துப் பிடித்து கயிற்றாலே வலிந்திழுக்கப்பட்டுச் செல்லுவர்.

(வி - ம்.) கொடிறு - கவுள். தொடர் - சங்கிலி. மிடறு - கழுத்து. உடற்றுபு - உடற்றி, துன்புறுத்தி. ஓட்டம் - உதடு. வார் ஓட்டம் எனமாறுக. பிடித்தனர் - முற்றெச்சம். (௨௬௫)

கடகரி யொறுப்ப வேங்கை கதழ்ந்துதாய்த் துமிப்பச் சீயம்
அடல்சினங் கடவ யாளி யதிர்த்துவாய்ச் சுவைத்துக் காலை
இடிபடை மழைதீ மாரி யெறுழ்ச்சிலை மாரி யாதி
உடறுணி படுப்ப மாழாந் துறுவதி கடப்பர் சில்லோர்.

(இ - ள்.) வேறுசிலர், செல்லுங் கொடுநெறிக்கண் உள்ள மதயானை தாக்கவும், புலிகள் விரைந்து பாய்ந்து துன்புறுத்தவும், அரிமான் கொல்சினஞ் செலுத்தப் பாய்ந்து தாக்கவும், யாளி முழங்கித் தம்மை வாயிற் பற்றி மென்று கக்காநிற்பவும், இடியேறும் கொல் படையும், மழையும் நெருப்பு மழையும் வலியகன் மழையும் முதலியன உடலைத் துணியாநிற்பவும் மயங்கி அவ்வழியைக் கடந்து செல்லாநிற்பர்.

(வி - ம்.) கடம் - மதம். கதழ்ந்து - விரைந்து. எறுழ்-வன்மை. சிலைமாரி - கன்மழை. வதி - வழி. (௨௬௬)

அயினுதிப் பரல்கா றின்ன வழற்கொழுந் தளாவிச் சூறை
வெயின்முகத் துருகும் யாக்கை மென்றுமென் றுமிழ்ந்து சூழ
உயிரினை முழுதுந் தூத ரொறுத்திடுஞ் செல்லன் மாந்தப்
பயிலிட மின்றி நீண்ட பாழ்நெறி யிறப்பர் சில்லோர்.

(இ - ள்.) வேலின் நுனிபோன்று கூர்த்த பரற்கற்கள் காலைப் பெரிதும் உறுத்தாநிற்ப, தீக்கொழுந்தினுல் அளாவப்பட்டும் சூறைக் காற்றான் மோதுண்டும், கொடிய வெயிலால் உருகாநிற்கும் தமது உடலை யமதூதர் வேறு மென்று மென்று உமிழ்ந்தும் தம்மைச் சூழ்ந்து வாராநிற்பவும் இவ்வாறாக அத்தூதரால் தம்முயிரை ஒறுத்திடப்படும் துன்பத்தை நுகர்ந்து மேலும் இவற்றிற்குத் தப்பி ஒதுங்குமிடங்களும் இன்றி நெடிய அப்பாழ் நெறியைக் கடவாநிற்பர்.

(வி - ம்.) அயில் - வேல். சூறை - சுழற்காற்று. செல்லல் - துன்பம். பயிலிடமும் எனல் வேண்டிய உம்மை விகாரத்தாற் றொக்கது. (௨௬௭)

நெறிகளோ கொடிய வந்த நெறியயில் பொருள்க ளெல்லாம்
தெறுவன வவற்றின் மேலுஞ் சிக்கயாப் புறுந்த காலர்
குறியபேரி லங்க நான்குங் கொடியன வென்று லென்னே
உறுதுயர்க் கவதி யுண்டோ தென்றிசை யுறுநர்க் கம்மா.

(இ - ள்.) செல்லும் வழிகளோ சாலவும் தீயன. அந்த வழிகளில் வழங்கும் அரிமான் முதலிய பொருள்களும் கொல்வன. அவற்றின் மேலும் தம்மை அகப்படக் கட்டிக்கொடுபோகும் காலதூதருடைய நால்வகைப் படைகளும் மிகமிகக் கொடுமை செய்வன. இங்ஙனமாயின் அவர்நிலை என்னாம்? தென்றிசை எய்தும் அவர்படும் துயரத்திற்கு எல்லைதான் உளதாமோ!

(வி - ம்.) பொருள், கடகரி – அரிமான் முதலாக முற்கூறப்பட்டன. அங்கம் நான்கும் - படை நான்கும். என்னே என்றது இரக்கக் குறிப்பு. அம்மா – அசை. (உசுஅ)

பஃறுயர்ப் படுத்தி யுய்த்துப் படர்பெருங் கால தூதர்
அஃறவழ் மெய்யர் வெய்ய வடன்முனைப் படைய ராகி
விஃறவழ் கழற்கால் வீரர் மிடைந்தனர் சூழ வைகும்
கஃறலை வணங்குந் திண்டோட் காவலற் கிதனைச் சொல்வார்.

(இ - ள்.) இவ்வாறு பல்லாற்றானும் பற்பல துன்பங்களை நுகர்வித்துச் செலுத்தி வருகின்ற அக்காலன் பணியாளர், இருள் தவழுமாறு போலக் கறுத்த உடலுடையோரும் கொடிய கொல்லுங் கூர்நுனிப் படைக்கலன்களை யுடையரும் ஆகிய வில் தவழும் தோளையும் வீரக் கழல் கட்டிய காலையும் உடைய மறவர் பலர் நெருங்கித் தன்னைச் சூழா நிற்ப வீற்றிருக்கும் தம் அரசனாகிய, மலையை ஒத்த திரண்ட தோளையுடைய கூற்றுவனுக்கு(ப் பின்வரும்) இம்மொழிகளைக் கூறுகிற்பர்.

(வி - ம்.) பஃறுயர் முதலிய நான்கன்கண்ணும் குறிலின் பின்னின்ற லகரவீறு தகர முதன்மொழி வந்தமையால் ஆய்தமாகத் திரிந்து முடிந்த புணர்ச்சி விகாரம். காலதூதர் காவலற்குச் சொல்வார் என இயைக்க. (உசுகூ)

இறைவநின் வியங்கோ ளாற்றி னிழுதையர் தம்மை யெல்லாம்
முறையுளி யியவைத் தண்ட முற்றுவித் தீங்குத் தந்தாம்
மிறைவளர் தண்டமின்னும் விளைப்பன வருண்மோ வென்ன
நிறைகுணத் தரும வேந்த னிகழ்த்திய மாற்றங் கேட்டு.

(இ - ள்.) எம்பெருமானே! நின்னுடைய ஏவல் வழிச்சென்று தீயோரை எல்லாம் பற்றி முறைப்படியே செய்யவேண்டிய வழித்துயர் பலவும் நுகர்வித்து நின் திருமுன்னர்க் கொணர்ந்துள்ளேம். துயரம் வளர்தற்குக் காரணமான தண்டனைகள் இத்தீயோர்க்கு யாம் செய்யக் கடவவற்றைத் திருவாய்மலர்ந்தருள்க என்றுகூற நிறைந்த பண்புடைய அவ்வறக் கடவுளாகிய கூற்றுவன் அத்தூதர் மொழியைக் கேட்டுக் கொண்டு,

(வி - ம்.) வியங்கோள் - ஏவல். இழுதையர் - அறிவிலாதார்கள். முறைமுறை என்புழி, உளி மூன்றுருவதன் கருவிப் பொருள்படவந்ததோர் இடைச்சொல். மிறை - துயர். மோ - முன்னிலையசை. மாற்றம் - மொழி. (உஎ௦)

சித்திரக் குத்தற் கூவித் தீங்கெலாஞ் செப்பென் றேவிக்
கைத்தல நெல்லி போலக் கருத்தினு ளவர்க்குந் தோன்ற
மெத்திய பாவ மன்னுன் விரித்தபின் கலுழற் கண்டு
பைத்தவி யரவ மென்னப் பதைப்புறு வாரை நோக்கி.

(இ - ள்.) சித்திரக் குத்தன் என்னுந் தன் கணக்கனை அழைத்து இவர்கள் செய்த தீவினைகள் அனைத்தையும் சொல்வாயாக என ஏவிய தனுலே அவனும் அத்தூதரும் அத்தீயோரும் கேட்கும்படி கையின்கண் ணுள்ள நெல்லிக்கனி போல நன்கு அவர்க்குத் தோன்றும்படி அவ்வுயிர் செய்த தீவினைகளை நன்கு விரித்துக் கூறுவானுக அவன் கூறியபின்னர் கருடனைக் கண்டுழிப் படத்தையுடைய நாகப்பாம்பு அதனைச் சுருக்கிக் கொண்டு பதைப்பதுபோன்று பதைக்கும் அத்தீவினையாளரை அக் கூற்றுவன் பார்த்து,

(வி - ம்.) சித்திரக்குத்தன் - கூற்றனுடைய கணிவன். ஏவி-ஏவ என்க. அவர்க்கும் என்புழி உம்மை அத்தூதற்கேயன்றி அத்தீவினை யோர்க்கும் என்பதுபட வந்தது. கலுழன் - கருடன். பைத்து - பைமை யுடையது. (உஎக)

பொய்யெனப் போகு மாதர் போகமும் பொருளு மற்றும்
மெய்யெனக் கருதி வேத விதிதபப் பலவுஞ் செய்தீர்
மையவிர் மிடற்றெம் மண்ணன் மறைவழி யேது மில்லீர்
நையவிண் டணைந்தீர் பன்னு ணரகினுக் கிரையு மாவிர்.

(இ - ள்.) பொய்யே என்று கூறும்படி இல்லையாய்ப் போகின்ற மகளிரின்பமும் அதற்கேதுவான பொன் முதலிய பொருளும் இன்னோ ரன்ன பிறவுமே உண்மையான உறுதிப் பொருள் என்று கருதிக் கொண்டு வேதாகம விதியினின்றும் விலகிப் பலபல தீவினைகளையும் அஞ்சாது செய்தொழிந்தீர். கருமை விளங்கும் மிடற்றினையுடைய எம்மிறைவனுகிய சிவபெருமான் ஓதிய வேத நெறிப்படி ஒருசிறிதும் ஒழுகியறியீர், அந்தோ! வருந்துதற்கே இந்நரகத்தை எட்டியுள்ளீர்! பற்பல காலமெல்லாம் இத்திநரகினுக்கு நீயிர் இரையாகிவிட்டீர்!

(வி - ம்.) போகம் - நுகர்ச்சி. பொருள் - செல்வம். தப - கெடும்படி. பல - பலவாகிய தீவினை. ஏதும் - சிறிதும். (உஎஉ)

கோட்டிப மிவுளி பொற்றேர் கொழுநிதி மனைவி மைந்தர்
ஈட்டிய பொருள்க ளெங்கே யெங்ஙன மிகந்து போந்தீர்
ஒட்டைநெஞ் சுடையி ரொன்று முடன்வரக் கானீர் வாளா
நாட்டுளார்க் கவற்றை யீட்டி நரகெலா மீட்டிக் கொண்டீர்.

(இ - ள்.) [illegible] கொம்புடைய யானை எங்கே! குதிரை எங்கே! [illegible] தேர் எங்கே! கொழுவிய நாற்படை முதலிய [illegible] எங்கே! எம் மனைவி மக்கள் எங்கே! நீயிர் தேடிய பிறர் [illegible] எங்கே! அவற்றையெல்லாம் யாண்டுப் போகட்டு வந்தீர் [illegible] நெஞ்சுடையீரே! அவற்றுள் ஒன்றேனும் நாம் பின்னர் [illegible]! வீணே அவற்றை எல்லாம் தீவினை பலசெய்து [illegible] ஏதிலார்க்கே ஈட்டி அதன் பயனாக இந்த நரகமனைத்தை [illegible] கொண்டுவிட்டீர்.

(வி - ம்.) கோடு - கொம்பு. இபம் - யானை. கொழுநிதி என்[illegible] முதலியவற்றை. மனம் சென்ற வழியெல்லாம் போகவிட்டு [illegible] கட்டை நெஞ்சு என்றார். (௨௭௩)

என்றுரு மேற்றிற் பொங்கி யிதழ்மடித் தெயிற்றிற் றின்று
வன்றிறற் சண்ட னாதி வயப்படைத் தலைவர்ப் பாரா
நின்றவிக் கொடியோர்க் கெல்லா நிகழ்த்துக தண்ட மென்ன
நன்றெனப் பணிந்து போந்து நவையறிந் தொறுத்தல் செய்வார்.

(இ - ள்.) என்று பேரிடி இடித்தாற் போன்று வெகுண்டு பேசி உதட்டை மடித்துப் பல்லான் மென்று வலிய சண்டன் முதலிய வலிமையுடைய தன் படைத்தலைவரை நோக்கி ஈண்டு நின்ற இத்தீவினையாளரை எல்லாம் அவரவர் வினைக்குத் தக ஒறுக்கக் கடவீர் என்று கட்டளையிட அப்படைத்தலைவரும் நன்றுநன்று அங்ஙனமே செய்வோம் எனா அக்கூற்றுவனை வணங்கி விடைபெற்றுப் போய் அத்தீவினையாளர் தம் தீவினைகளின் மென்மை வன்மையுணர்ந்து அவற்றிற்கேற்ப ஒறுத்தல் செய்வர். (௨௭௪)

வெவ்வினைப் பிலநா லேழு விளம்புமிவ் விருபத் தெட்டும்
ஒவ்வொரு கோடி யாக வுறுமுறு நாலே ழுள்ளும்
தெவ்வினை முதன்மை யெய்தி யைவ்வைந்து செறிந்து நிற்கும்
இவ்வெலாம் பலகா லண்மி யினைபவ லொழிவு காறும்.

(இ - ள்.) தீவினைப்பயன் நுகர்தற்கிடமான நரகக்குழிகள் தொகையினால் இருபத்தெட்டாம். அவ்விருபத்தெட்டும் தனித்தனி ஒவ்வொரு கோடி வகையினவாம். இவ்விருபத்தெட்டு நரகத்துள்ளும் உயிர்கள் ஈட்டிக்கொள்ளும் தீவினைகளில் தலைமையுடைய தீவினைகளை நுகர்தற்குரிய தலைமைத்தன்மையுடைய நரகங்கள் தனித்தனியாக ஒவ்வொன்றினும் ஐயைந்து நெருங்கி இருக்கும். இந்நரகங்களிலெல்லாம் பலகாலும் அணுகித் தீவினையாளர் அவ்வினை முடியுங்காறும் துன்புறுநிற்பர்.

(வி - ம்.) நரகங்கள் இருபத்தெட்டாவன:—கோரம், கவின்கோரம், அதிகோரம், கோரதரம், கோரரூபம், தரளதரம், பயாநகம், காளராத்திரி, பயோற்கடம், சண்டம், மகாசண்டம், சண்டகோலாலம், சண்டதரம், சரோருகம், சலசவதி, வீமம், வீடணம், கரளம், விகராளம், குலிசம், முக்கோணம், சூர்நுகோணம், தீர்க்கதரம், பரிவர்த்துளம், ஏழாநரகம், எட்டாநரகம், தீர்க்கவோளி, மாயாநரகம் என்பன. (௨௭௫)

வேறு

பிறைபொ ரெயிற்றினர் பிடித்தடி திரித்து வயிர
அறையி னெற்றமுடி மூளைக டெறிப்ப வயர்வார்
கறைம டுத்துமுச லம்பலர் கரங்க ளினெரீஇ
முறைசெ யக்கடிதி னென்புகண் முரிந்து குழைவார்.

(இ - ள்.) பிறைபோன்று வளைந்த பற்களையுடைய காலன் மற வருட் சிலர் தீவினையாளருடைய கால்களைப் பிடித்துச் சுழற்றி வயிரப் பாறைகள் மேலே புடைத்தலானே தலையும் மூளையும் சிதற அயரா நிற்பர். வேறுசிலர் சினமுடையராய் முசலப்படையைக் கைகளாற் பற்றித் தூக்கி மோதுகையினாலே விரைவின் எலும்புகள் முறிந்து அழுங்காநிற்பர்.

(வி - ம். அடிபிடித்து எனமாறுக. கறை - கறுப்பு, சண்டுச் சினம். முசலம் - இருப்புலக்கை. (௨௭௯)

உண்ண லாகுமிது சொன்றியுறு நீரி துவெனு
நண்ண லோடுமவை மென்கிருமி நாறு திரமாய்
எண்ண மாறவிவை யேநுகர்தி ரென்று முடுகித்
துண்ணெனக் கொடிய தூதுவர் தெழிப்ப வழிவார்.

(இ - ள்.) தீவினையாளர் தமக்களிக்கும் உணவினைப் பெற்றுழி அவை உண்ணத்தகுந்த சோறும் பொருந்திய நீரும் எனக் காணப்பட்டு உண்ணத் தொடங்கிய மாத்திரையின், மெல்லிய கிருமிகளும் நாற்ற முடைய குருதியுமாக மாறுநிற்பக் கொடிய அக்கால தூதர் இவற்றையே உண்ணுமின் என்று கடிந்து முடுகி அவர் நெஞ்சம் நடுங்கும்படி உரப் புதலானே பெரிதும் துன்புறுநிற்பர்.

(வி - ம்.) சொன்றி - சோறு. தெழிப்ப - உரப்ப. (௨௮௦)

சிவிறி வாங்கினர் முறுக்கிவிடு செப்பின் விதலைத்
துவலை காலதரெ னத்துளைது றுப்ப மடிவார்
இவறு மாதரினி னர்க்கனல் கொழுந்து ருவினைத்
தவவ ணைந்துடல நைந்துகவி ழ்ந்து தளர்வார்.

(இ - ள்.) வேறுசிலர் காலதூதர் துருத்தியைக் கொண்டு விசைத்து வீசாநின்ற செப்புருக்கின் நடுக்கந்தரும் துளிகள் பலகணி போன்று உடலைத் துளைத்திடுதலானே துன்புறுவர். வேறுசிலர் அவா வுறுதற்குக் காரணமான மகளிர் உருவம்போன்று சமைத்த பல சுடரை யுடைய பெருநெருப்பின் கொழுந்துருவினை நன்கு தழுவி உடல்நைந்து வீழ வருந்தித் தளராநிற்பர்.

(வி - ம்.) விதலை - நடுக்கம். துவலை - துளி. காலதர் - பலகணி. தவ - மிக. (௨௮௧)

வாழி வாளரம்வ லிந்திருபு றந்து நடவிப்
போழும் வாருடல்பொ ருந்திநுதி வாய்ச்சு ரிகையால்

கோழி ளத்தசைகள் கொய்துபகு வாயி னுதவிக்
கேழி ரத்தமுமா டுப்பாதி கெட்டு விளிவார்.

(இ - ள்.) காலதூதர் அத்தீவினையாளர்மேல் ஈர்வாளை இழுத்து இருபுறமும் செலுத்திப் பிளக்கும் நெடிய உடலை மீண்டும் பொருந்தச் செய்து கூர்த்தவாயையுடைய உடைவாளானே கொழுவிய தசைகளை அரிந்து அரிந்து பிளந்த வாயிலூட்டி மேலும் நிறமிக்க குருதியையும் ஊட்டுதலானே சிற்சிலர் சிந்தை கெட்டு வருந்தாநிற்பார்.

(வி - ம்.) வாழி - அசைச்சொல். வாளரம் - ஈர்வாள். நடவி - செலுத்தி. சுரிகை - உடைவாள். கேழ் - நிறம். (உ௭௯)

அண்ண மூடெழ முடக்கினை யழுத்தி யதுசேர்
திண்ணை றூழ்த்தொடரி னூற்றினர்தெ றக்க வலுவார்
வண்ண வார்தழல்வ ளர்த்துமுடி கீழு றமறித்
தெண்ணி லாதகொடு மைத்தொழிலி யற்ற வழுவார்.

(இ - ள்.) வேறுசிலர் தம் மேல் வாயினுள்ளே செலுத்தி மேலெழும்படி முடக்கினை அழுத்தி அம்முடக்கைச் சேர்ந்த திண்ணிய வலிய சங்கிலியிலே தூங்கவிட்டு வருத்துதலானே கதறி வருந்துவார். நிறமுடைய நெடிய தீயை வளர்த்துத் தலைகீழாம்படி திருப்பி எண்ணிறந்த கொடிய செயல்களைக் காலதூதர் செய்தலானே பலர் அழாநிற்பர்.

(வி - ம்.) அண்ணம் - மேல்வாய். முடக்கி - கொக்கி. தொடர் - சங்கிலி. (உ௮0)

உள்ள டித்துணை பெயர்ச்சியற வூசி நிமிர
முள்ளு டைக்கதையின் முன்னுகென மொத்த விழுவார்
வள்ள யிற்கணநி ரைத்தநில மீது மறுகத்
தள்ளி யோச்சியுடல் பொள்ளல்செய நோத றகுவார்.

(இ - ள்.) தீவினையோர் நடக்கும் பொழுது உள்ளங்காலிரண்டிடம் பெயர்த்தலியலாதபடி ஊசி பாயாநிற்பவும் காலதூதர் செல்க என்று முட்டடியாலே மோதுதலானே சிலர் வீழாநிற்பர். வேறுசிலரைக் கூர்வேலினைத் திரளாக நட்ட நிக்குழியின்மேல் வீழும்படி தள்ளிச் செலுத்தலானே அவர் உடல் துளைபடுதலால் நோகுந் தகுதியையுடையராவர்.

(வி - ம்.) கதை - தடி. முன்னுக - செல்லுக. வள் - கூர்மை. ஒச்சி - ஓச்ச. பொள்ளல் - துளை. (உ௮௧)

கூறு செய்துடல்கு டங்கரின டைத்தி முதுபெய்
தேறு வன்னியினி டத்தசைக ரைந்தி றுகுவார்
ஊறு செம்புனலொ ழுக்கெழ வரிந்து கழுகு
பாறு நாய்நரிமு கத்திடலி டும்பை படுவார்.

(இ - ள்.) வேறுசிலர் உடலைக் கூறு கூறாக அரிந்து குடங்களில் அடைத்து நெய் பெய்து தீயின்கண் இடுதலாலே தசைகள் கரைந்து பின் இறுகவும் வருந்தாநிற்பர். வேறுசிலர் ஊற்றெடாநின்ற குருதி ஒழுகும்படி உடலை அரிந்து கழுகு பருந்து நாய் நரி முதலியவற்றின் முன்பு இடுதலானே வருந்தாநிற்பர்.

(வி - ம்.) குடங்கர் - குடம். இழுது - நெய். வன்னி - நெருப்பு. பாறு - பருந்து. (௨௮௨)

உறுப்பி றுப்பவொரு பாலுருகு செம்பொ னொருபால்
வெறுப்ப வொன்பதுது ளைக்கணும்வி டுப்ப வொருபால்
கறுப்பொ டும்வயிறு கீழ்ந்துகுடர் காற்றி நுதிமுள்
நிறைப்ப வோவெனநெ டுந்துய ருழத்த லுறுவார்.

(இ - ள்.) ஒருசார் உடலுறுப்பினை அறுப்பவும் மற்றொருசார் உருகிய செம்பொற் குழம்பினை வெறுக்கும்படி ஒன்பது துளைகளிலும் விடவும், மற்றொருசார் சினத்தோடும் வயிற்றைக் கிழித்துக் குடரைத் தொங்கவிட்டுக் கூரிய முட்களைச் செறிக்கும் ஓவென்று கதறி நெடிய துயரத்தினை எய்தாநிற்பர்.

(வி - ம்.) கறுப்பு - சினம். காற்றுதல் - தூங்கவிடுதல். (௨௮௩)

வண்டு வாருடறு ளைப்பமத வேழ முலவை
கொண்ட லைத்தெறிய வேங்கைகுரல் கவ்வி நலிய
மிண்டி நாயடவி முங்கவர வங்கொ டிவளாய்க்
கண்டொ டக்கிருமி கெண்டிநெளி யக்க தறுவார்.

(இ - ள்.) வண்டுகள் நெடிய உடலைத் துளைத்தலானும், மத யானை கொம்பாற் குத்தி எறிதலாலும், புலி குரல்வளையைக் கவ்வி வருத்தலானும், நாய்கள் நெருங்கிக் கடித்தலானும், பாம்புகள் பற்றி விழுங்குதலானும், காக்கைகள் சூழ்ந்துகொண்டு கண்களை அகழ்த லானும், புழுக்கள் உடலைக் கிண்டி நெளிதலானும் துன்புற்றுக் கதறி யழுவார்.

(வி - ம்.) உலவை - கொம்பு. குரல் - குரல்வளை. மிண்டுதல் - நெருங்குதல். கொடி - காக்கை. வளாய் - சூழ்ந்து. கெண்டி - கிண்டி. (௨௮௪)

கலைவ லார்மகளிர் பூண்முலை கலப்பொ ழிவுகா
றுலைவி லாதுவள ரின்பமல தொன்றும் விரவா
தலைசெ யள்ளலகல் காறுமடர் துன்ப மலது
நிலைவ தின்றெனின தன்றிறநி கழ்த்த வெளிதே.

(இ - ள்.) காப்பியக் கலைவல்லோர், மகளிருடைய அணிகலனுடைய முலைப்போகம் முடியுந் துணையும் மேன்மேலும் வளராநின்ற இன்பமன்றித் துன்பம் கலவாது என்பவேனும், அதனால் விளையும் தீவினையால் வருத்துகின்ற நரகக்குழியை விட்டு அகலுந்துணையும்

நெருங்கிய துன்பமின்றி இன்பமோ சிறிதும் நிலைபெறுவதன்றே; இங்ஙன மாதலின் அத்தீவினையின் இயல்பினை யாரே இயம்ப வல்லார்.

(வி - ம்.) என்பவேனும் அதனால் வினையும் தீவினையால் என வருவித்து முடிக்க. அள்ளல் - நரகம். நிலைவது - நிலைபெறுவது. (உஅ௫)

வேறு

எழுநான்கு கோடி யளறும்வி ழுங்க வெறிவெண்ட ரங்க விரிநீர்
முழுவான்ப தங்க ளவையுஞ்ச வட்டு முடிவுங்க வற்சி யுறுவோர்
கழியாத நோன்மை யதிபா தகங்கள் கருதாது ஞற்றி னர்களும்
வழியாய வற்றி னினமான பாவ மதியாமை யாற்றி னருமே.

(இ - ள்.) எளிதில் கழிதலில்லாத வன்மையையுடைய மிகைத் தீவினைகளைச் சிந்தியாமற் செய்தவர்களும், அவற்றிற்கு வழியாய் இனமுமான தீவினைகளையும் ஆராயாமற் செய்தவரும் இவ்வாறு இருபத்தெட்டுக் கோடி நரகங்களும் தம்மை விழுங்காநிற்ப, எறியாநின்ற வெள்ளிய அலைகளையுடைய விரிந்த கடல் வானவர் நாடுகள் அனைத்தையும் விழுங்கும் பிரமப் பிரளயங்காறும் அவற்றிலழுந்தி வருந்தாநிற்பர்.

(வி - ம்.) கடல் வானுலகமனைத்தையும் அழிக்கும் பிரமப் பிரளயம் காறும் இருபத்தெட்டுக் கோடி நரகத்திலும் கிடந்து வருந்துவர் என்பதாம். (உஅ௬)

இருவான் சுடர்க்கு முடிவெய்து காறு மெழுநான்கு கோடி நரகும்
ஒருவாது மூப்பர் கொலையாதி யைந்து முணர்வற்றி ழைத்த கொடியோர்
மருவாரி சத்த னுருமுன்ப கற்குள் வருபாதி கால மவைசேர்
பரிபாத கங்கள் புரிவோர்தி ளைப்பர் பதினன்கு கோடி யளறு.

(இ - ள்.) கொலை முதலிய பெருந்தீவினைகள் ஐந்தனையும் உணர்ச்சியில்லாமையானே இயற்றிய தீயோர் அவ்விருபத்தெட்டுக் கோடி நரகினும் அகலாது கிடந்து, ஞாயிறுந்திங்களும் அழியுங்காலம் வரையில் வருந்தாநிற்பர். இனி, வருந்துதற்கிடமான தீவினைகளைச் செய்வோர் பிரமனுடைய முன்பகற் பொழுதின் பாதிக்காலமாகிய ஐந்நூறு சதுர்யுகங்காறும் பதினன்குகோடி நரகங்களிலே கிடந்து வருந்துவர்.

(வி - ம்.) பெருந்தீவினை செய்தோர் ஞாயிறுந்திங்களும் கெடுந்துணையும் இருபத்தெட்டுக் கோடி நரகினும் கிடந்துழல்வர். தீவினை செய்தோர் ஐந்நூறு சதுர்யுகங்கள் பதினன்குகோடி நரகத்திலே கிடந்துழல்வர் என்க. வாரிசத்தன் - பிரமன். பரிபாதகங்கள் - வினைத் தொகை. (உஅ௭)

அயனுர்ப கற்க ஜனோ[illegible]பாத வந்த மளறேழு கோடி யுறுவர்
பயமேது மின்றி யுபபாத கங்கள் பரிவுற்றி ழைத்த பதகர்
வயபாரி வற்றின் வருகால மள்ள லொருபாதி யாக மருவச்
சயமாரி வற்றின் வழிபாத கங்க ளுடையார்ச முங்க லுறுவார்.

(இ - ள்.) அச்சமின்றி இனத்தீவினைகளை ஆதரவோடு இயற்றிய தீயோர் பிரமனுடைய பகற்பொழுதின் ஒருகூறாகிய இருநாற்றைம்பது சதுர்யுகம் முடியுங்காறும் ஏழுகோடி நரகங்களினும் கிடந்துழலுவர். வெற்றியுடைய இத்தீவினைகட்கினமான தீவினைகளைச் செய்தோரும் அத்துணைக்காலம் மூன்றரைக்கோடி நரகங்களிலே கிடந்து வருந்துவர்.

(வி - ம்.) பாதவந்தம் - பாதி முடியுங்காறும். வயம் - வலி. சயமாவது தன்னைச் செய்தோரைத் துன்புறுத்துவதிலே உண்டாகும் வெற்றி என்க. சழங்கல் - வருந்தல். (௨அ௮)

எரிவாயு றுத்த வொளிரும்ப சும்பொ னெனவள்ள லின்ன லுறலும்
உரைபாத கங்க ளொழிவுற்றி யாரு முறுதூய்மை யெய்தி விரைவில்
நரையேறு வார்க ணிரயந்த காத கரிசான வெஞ்சு வினையும்
தரைமீதி ழிந்த பிறவிக்கண் வந்து நெடிதிற்ற ணந்த லுறுவார்.

(இ - ள்.) இவ்வாறு நரகங்களிலே கிடந்து வருந்திமுடிந்த அளவிலே தீவினையாளர்கள் தீயிடைப்பெய்த ஒளிவிடுகின்ற பசிய பொன் மாசுநீங்கினாற் போன்று தந்தீவினை யகலப்பெற்று மிக்க தூய்மை எய்தி விரைந்து அந்நரகங்களினின்றும் விடுதலை பெறுவர். சிறுமையாலே நரகத்திலே கிடந்து நுகர்தற் குரியவல்லாதனவாய் எஞ்சிய தீவினைப் பயன்களையும் இந்நிலவுலகத்திலே ஓரறிவுயிர் முதலிய கீழான பிறப்புக்களிலே தோன்றி நெடிய கால எல்லையிலே நுகர்ந்து தீர்ப்பர்.

(வி - ம்.) எரி - தீ, நரகத்திற்குவமை. பொன் - உயிர்க்குவமை. அள்ளலின்னல் - நரகதுன்பம். நிரயத்திற் கிடக்குமளவு கொடுமையின்மையான் எஞ்சிய தீவினை என்க. நெடிது - காலத்தின்மேற்று. (௨அ௯)

தருவாகி யென்பில் புழுவாய்ப்ப றப்பை தானுய்வி லங்கி னுருவாய்
ஒருவாத செல்ல லுடரேற ருந்தி யுறுவார்க ளாவி னுருவம்
வெருளான்பி றப்பு விழமுற்ற வத்தின் வியன்மா னிடத்தி லணைவார்
அரிதாமி தன்க ணணைவுற்று முய்தி யறியாரி தென்கொ லறிவே.

(இ - ள்.) அங்ஙனம் கீழ்ப்பிறப்பின் வருங்கால் மரமாகியும் எலும்பில்லாப் புழுவாகியும் பறவையாகியும் விலங்குகளாகியும் பிறப்புற்று அகலாத துன்பங்களையே தாமெடுக்கும் ஒவ்வோருடற்கண்ணும் நுகர்ந்து இறுதியாக ஆன் பிறப்பினை எய்துவர். வெருட்சியுடைய அவ்வான்பிறப்பு முடிந்த வளவிலே முன்செய் தவப்பயனுகப் பெரிய மானிடப் பிறப்பிலே எய்தியும் தாம் உய்ந்துபோதற்குரிய நெறியினை அறியமாட்டாராயிருந்தனர். இவரறிவுதான் எத்தன்மைத்தோ யாமறிகிலேம்.

(வி - ம்.) பறப்பை - பறவை. செல்லல் - துன்பம். வெருளான்- வினைத்தொகை. உய்தி - உய்யும்நெறி. கொல் - அசை. (௨௯௦)

அரிதாம்பி றப்பு ளுயர்மானி டத்தி னடைவுற்று வைக லதனின்
அரிதாகு நல்ல குலனிற்பி றந்த லறவாள ராத லதனில்

**அரிதாகுர் வேத முதலாய்ந்து முக்க ணாமலற்க லத்த லதனின்**
**அரிதாமு யர்ந்த குலனுற்றும் வீணி லழிவாரி தென்கொ லறிவே.**

(இ - ள்.) *இவ்வாற்றான், பிறப்பினுள் வைத்து உயர்ந்த மக்கட் பிறப்பினை எய்தி நிறைந்த அகவையுடையராய் இருத்தல் மிக அரிதே யாகும். மக்களாயினும் நல்ல குலத்திற் பிறத்தல் பின்னுமரிதே யாகும். நற்குலத்திற் பிறந்தாலும் அறவோராக இருத்தல் மிகவும் அரிதாகும். அறவோராயவிடத்தும் வேதாகமங்களை ஓதி ஆராய்ந்துணர்ந்து முக்கட் கடவுளை வழிபட்டு அவன் திருவடிநீழலிலே கலத்தல் மிகமிக அரிய செயலாகும். அதற்கேற்ற சிறந்த குலத்திலே பிறந்திருந்தும் வீணாக மாந்தர் இறந்துபடுகின்றனர். என்னே! இவர்தம் அறிவிருந்தவாறு!*

(வி - ம்.) *வைகல் என்றது நிறைந்த ஆயுளுடையராயிருத்தல் என்றவாறு. அறவாளர் - எவ்வுயிர்க்குஞ் செந்தண்மை பூண்டொழுகு மியல்புடையோர். அந்நெறிப் படராமல் என்பார் வீணில் அழிவார் என்றார்.* (௨௯௧)

**நிலையாமை கண்டு நிலையாத காய நிதியாதி கொண்டு சிலர்தாம்**
**உலையாத வூக்க முலகத்தி லிட்ட வுதுகண்டி ருந்து முகிழ்மென்**
**முலையாத ராதி பொருண்மீது வேத முறையிற்பி றழ்ந்து படரும்**
**அலையான வார்வ மறவீசி யுய்தி யறியாரி தென்கொ லறிவே.**

(இ - ள்.) *"பாங்கருஞ் சிறப்பின் பல்லாற்றானும் நில்லாவுலகம்" என்னும் மெய்ம்மையை ஐயந்திரிபற வுணர்ந்து ஒருசிலரே ஊழானே தமக்கெய்திய உடல் பொருள் முதலியவற்றைக் கொண்டு கெடாத மெய்ப்பொருளாகிய திருவருளை இவ்வுலகத்திலே தேடாநிற்பப் பற்பலர், அதனைக் கண்டிருந்தும், அரும்பனைய மென்முலை மடவார் முதலிய பொய்ப்பொருள்கண் மேல் வேதநெறியினின்றும் மாறுபட்டுச் செல்லாநின்ற அலைபோன்ற தம் அவாவினைத் துவரக் கெடுத்து உய்ந்து போதலை நினைகின்றிலர். என்னே இவர்தம் அறிவிருந்தவாறு.*

(வி - ம்.) *நிலையாமை காட்சியளவைக்கே நன்கு புலப்படுவதாயிருந்தும் என்பார் 'கண்டு' என்றார். ஊக்கத்தாற் றிருவருளை ஈட்ட என்க. முகிழ்முலை - வினைத்தொகையுமாம். ஒன்றன்பின் ஒன்றாக வருதலின் அலையான ஆர்வம் என்றார்.* (௨௯௨.)

**முத்தேவ ராதி புலவோரும் விண்ணின் முழுதின்ப கற்றி யருளின்**
**பித்தேறி நின்ற முனைவன்ப தங்கள் பெருகன்பி னோடு பணியும்**
**அத்தேய மான வுயர்பார தத்தி னரிதின்றி வாழ்வ ணவியும்**
**செத்தாரின் வேறு மலராகி யுய்தி தெளியாரி தென்கொ லறிவே.**

(இ - ள்.) *பிரமனும் திருமாலும் உருத்திரனும் ஆகிய முத்தேவரை யுள்ளிட்ட தேவர்களும் தமக்கெய்திய வானுலகுதரும் பேரின்பத்தை வெறுத்து உயிர்கட்கருளுஞ் செயலிலே பித்தேறிநின்ற முழுமுதலின் திருவடிகளைப் பெருகிய அன்போடு பணிதற்கிடமான அத்தகைய மாண் புடைய இப்பாரத நாட்டின்கண் முற்செய்தவமுண்மையால் எளிமை யாகவே மக்கள் வாழ்வு தம்மை எய்தியிருப்பவும் அந்தோ மாந்தர்பலர்*

செத்தாருமின்றி வாழ்ந்தாருமின்றி அவமே வாழ்நாளைப் போக்கா நிற்பர். தமக்கு உய்திறமை உணர்கின்றிலர். என்னே இவர்தம் அறிவிருந்தவாறு.

(வி - ம்.) இறைவனைப் பித்தன் என்றற்கு ஒருவிளக்கம் கூறுவார் அருளின் பித்தேறி நின்ற முனைவன் என்றார். அணவியும் - எய்தியிருப்பவும். இருந்து நிவினையிட்டலின் செத்தாருமல்லர் என்றும் இருந்தும் பயனின்மையால் வாழ்ந்தாரும் அலர் என்றார். (௨கக)

வருணங்க டோறு நிலைதோறு மாற்றல் வகைமைக்கி யன்ற வினைகள்
தருகின்ற வேத முதனூலு நாளுந் தவிர்கின்ற பாரு மியைய
மருவொன்று போது புனலெங்கு மன்ன வளர்பூசை கொள்ள விறைவன்
உருவொன்றி நிற்ப நிரயத்து மீள வுறுவாரி தென்கொ லறிவே.

(இ - ள்.) அந்தணர் முதலிய சாதிகட் கேற்பவும் பிரமசரிய முதலிய நிலைகளுக்கேற்பவும் அறிவு முதலிய வலிமைகட்குத் தகவும் பொருந்திய நல்வினைகளை வகுத்துணர்த்துகின்ற வேத முதலிய மெய் நூல்களும் அவற்றை மேற்கோடற்குரிய ஆயுள்நாளும், தீவினை அகல்தற்குக் காரணமான புண்ணிய பூமியும் முற்செய்த தவமுண்மையால் தமக்குக் கிடைத்திருப்பவும், இறைவனை வழிபடற்குரிய மணமலரும் நன்னீரும் யாண்டும் எண்மையிற் கிடப்பனவாக நிலைபெற்றிருப்பவும், அன்பு வளர்தற்குக் காரணமான வழிபாட்டினை ஏற்றுக் கோடற்கு இறைவன் திருக்கோயில் தொறுந் திருவுருவங்களிலே கலந்து எழுந்தருளியிருப்பவும், அந்தோ இறைவனை வழிபட்டு வீடுபெறற்கரியாராய் மீண்டும் நரகத்திற்கே செல்வர். இவர் அறிவிருந்தவாறென்னே!

(வி - ம்.) வருணம் - அந்தணர் முதலிய சாதி. நிலை - பிரமசரிய முதலியன. ஆற்றல் வகைமை - அறிவு வளர்ச்சியின் படிமுறை. வருணத்திற் கேற்பன, வேள்வி முதலியன. நிலைக்கேற்பன வழிபாடு முதலியன. ஆற்றல்வகைக் கேற்பன, சரியை முதலியன. (௨கச)

மறைநீதி கொண்டு புரிவோர்கள் விண்ணின் மகிழ்போக முண்டு விமலம்
நிறைஞான வாரி படிவுற்ற பாவ நிலைமன்னி நிற்பர் மறைநூல்
முறைகோடி னார்க ணிரயத்து மீள முழுகித்தி ளைப்ப ரடியார்
அறைபாத கங்கள் செயினும்வி ழார்க ளிமையார்வ ணங்க வமர்வார்.

(இ - ள்.) நூல்நெறியை மேற்கொண்டு ஒழுகுவோர் துறக்கம் புகுந்து ஆண்டு மகிழ்தற்குக் காரணமான இன்பங்களை நுகர்ந்து மேலும் தூய்மை நிறைந்த பேரறிவுக் கடலிலே அழுந்தி யான் எனதென்னும் செருக்கொன்று மில்லாததொரு நிலையிலே நிலைபெற்றிருப்பர். நான்முறை பிறழ்ந்து ஒழுகினோர் மீண்டும் முற்கூறப்பட்ட எரிவாய் நிரயமே புக்கழுந்தி வருந்துவர். இறைவன் அடியார் முற்கூறப்பட்ட தீவினைகளை, ஓரோவழி செய்யநேரினும் நிரயம் புகுதலிலர். துறக்கம் புகுந்து ஆண்டுத் தேவரும் தம்மை வணங்க வீற்றிருப்பர்.

(வி - ம்.) விமலம் - தூய்மை. அபாவநிலை - யான் எனதற்றநிலை. "ஞானத்தால் தனையடைந்தார் தம்மைத் தானாக்கித் தலைவன் அவர்தாந்

செய்வினை தன்னால் நலமுடனே பிறர் செய்வினை யூட்டி யொழிப்பான்" என்பதுபற்றி அடியார் நரகில் வீழார் என்றார். (உ-கூ)

அள்ளற் பரப்பி னலைவோரும் விண்ணி னடர்போக வின்ப வுததி
வெள்ளத் தழுந்து மிமையாரு மண்ணின் மிளிர்மானி டாதி யுருவம்
கொள்ளப் படுக்கு முயிரும்பி றத்தல் குறைவுற் றிறத்தல் பலவும்
தெள்ளித் தெளிந்த கலைமாத வத்த தெரியக் கிளத்து மறிதி.

(இ - ள்.) நரகநிலத்தே வருந்துவோரும் துறக்கத்தே செறிந்த நுகர்ச்சியின்பக் கடலாகிய வெள்ளத்திலே அழுந்தி இன்புறும் அமரரும் இம்மண்ணுலகத்தே விளங்குகின்ற மக்கட்பிறப்பு முதலிய பிறவிகளை மேற்கொள்ளும்படி புகுத்தப்படும் உயிரும் ஆகிய உயிரினங்கள் கருவிலே பதிந்து பிறத்தலும் பின் வருந்தி இறத்தலுமாகிய இன்னோரன்ன பலவற்றையும் நன்கு தெளிந்த கலைகளையுடைய அகத்தியனே! விளங்கக் கூறுவாம். அவற்றையும் கேட்டுணர்ந்து கொள்வாயாக.

(வி - ம்.) உததி - கடல். இமையார் - அமரர். பிறப்பித்தல் இறைவன் செயலாதல் தோன்ற உருவம் கொள்ளப் படுக்கும் என்றார். (உகசு)

வேறு

பாவகா ரணத்தாற் பூதத்தி னிமைக்கும் பாணியி னரகருற் பவிப்பார்
மேவுபுண் ணியத்தாற் பூதசா ரத்தின் விண்ணவ ரொருகணத் துதிப்பார்
ஓவுறும் பூதத் திண்பரி ணமத் தோதிரு வினையின்மண் ணுயிர்கள்
ஆவன பையுண் மானிடம் விலங்கா மண்டத்தா மரவம்புள் ளாதி.

(இ - ள்.) தீவினை காரணமாகப் பூதங்களின்று தீவினையாளர் ஒரு நொடிப்பொழுதில் நரகநிலத்திலே யாக்கை பெற்றுத் தோன்றுகிற்பர். பொருந்திய நல்வினை காரணமாக நல்லோர் ஒருநொடிப் பொழுதிலே துறக்கத்தில் பூதசாரத்தாலாய யாக்கையுடையராய்த் தோன்றுகிற்பர். அழியுமியல்புடைய பூதபரிணாமமாகிய பருவுடல்களிலே நல்வினை தீவினை யிரண்டும் காரணமாக இவ்வுலகத்தே மானிடம் முதலிய உயிர்கள் தோன்றுகிற்கும். மானிடரும் விலங்குகளும் கருப்பையுட் டோன்றும், பாம்பு பறவை முதலியன முட்டையுள் தோற்றுவனவாம்.

(வி - ம்.) பாணி - காலம். நரகர் பூதவுடலினும் அமரர் பூதசார உடலினும் மன்னுயிர்கள் கருப்பை முதலியவற்றுள் பருவுடல் கொண்டு பிறக்கும் என்க. (உகஎ)

கிருமிகீ டாதி கசிவினிற் றோன்றுங்
கேழினர்த் தருமுதற் பலவும்
உருவவித் திடத்து நிலப்புனல் வெயில்கா
லுறவெழூஉ வித்துயிர்த் தவற்றுள்
அரியன பலவுஞ் செந்நெலீ றாக
வறைவன வெண்ணிரண் டவைதாம்

உரியதாம் பலந்தி னசிக்குமப் பலந்தா
றுணவதாய் மனிதரை வளர்க்கும்.

(இ-ள்.) பேன் புழு முதலியன வியர்வையிற் றோன்றும் நிற முடைய பூங்கொத்துக்களையுடைய மரம் முதலிய ஓன்றறிவுயிர்கள் பலவும் அழகிய விதையிலிருந்து நிலம் நீர் வெயில் காற்று முதலியன பொருந்தும்பொழுது தோன்றுவனவாம். வித்தினின்றும் தோன்றிய வற்றுள் யவைமுதற் செந்நெல் ஈறாகக் கூறப்படுவனவாகிய பதினாறு வகைக் கூலங்களும் அருமையுடையனவாம். அக்கூலங்கள் தம்பாற் பொருந்திய பயன் காரணமாகவே உணவாக அடப்பட்டு அழியும். அவற்றின் பயனே உணவாக மானிடரை வளர்க்கும்.

(வி-ம்.) கிருமி கிடம் என்பன புழுவின் வகை. கசிவு-வியர்வை. யவை - ஒருகூலம். ஏனைய கூலம் சிறந்தன அல்ல என்பது கருத்து. (உகஅ)

அகத்திடு முணவு நீர்விராய்ப் பருவ
மடைதலு முணவுமே லறல்கீழ்த்
தகப்பகுத் திடுமாற் பிராணன்பின் வளிதீச்
சாரங்கோ தெனவிரண் டாகப்
பகுத்நலுஞ் சார மிதயநின் றெல்லா
நாடியுஞ் சமானனுற் பயிலும்
இகத்தருந் துரால்பன் னிரண்டென வெளியாஞ்
சாரமு மெண்ணுமத் துணைத்தாம்.

(இ-ள்.) வயிற்றினுள்ளே செலுத்தப்பட்ட சோற்றோடு நீருங் கலத்தலானே அவை பக்குவம் எய்தும். எய்தியவுடன் பிராணன் என்னும் காற்று அவற்றைப் பொருந்தி நீர் கீழும் சோறு மேலுமாகப் பிரித்துவிடும். பின்னர் வயிற்றுத்தீயும் காற்றுங்கூடி அவற்றைச் சாரமும் கோதுமாகப் பகுக்கும். அவற்றுட் சாரம் இதயத்தினின்று எல்லா நாடிகளிலும் சமானன் என்னும் காற்றைத் துணைகொண்டு புகாநிற்கும். தள்ளப்பட்ட கோது பன்னிரண்டாகி வெளிப்படும். சாரமும் அப் பன்னிரண்டேயாம்.

(வி-ம்.) பருவம் - செவ்வி. அறல் - நீர். தீ - வயிற்றுத்தீ. இகத்தரும்-இகுத்த; தள்ளிய. அத்துணைத்து-அவ்வளவிற்று. (உகக)

இயக்கமோ ரிரண்டாய் மிடற்றினில் வழுக்காய்
நாசியி னிளங்களிப் புனலாய்
வியக்கமாண் விழியிற் பீளையாய்ச் செவிநா
மணியெயி றுகிர்குதங் குய்யம்
முயக்குறு மழுக்காய் மயிர்த்துளை தோறு
முகிழ்க்கும்வே ராய்த்துரால் வழங்கும்

உயக்கிளர் சாரந் தனிற்றுவக் கதனி
லுதிரமற் றதினிணத் துடனூன்.

(இ - ள்.) குதங் குய்யங்கள் வழியாய் இயங்கும் மலமாகவும், நீராகவும், மிடற்றினின்றும் கோழையாகவும் நாசியினின்றும் இளகிய சளி நீராகவும், ஒளிமாட்சிமையுடைய கண்ணின்றும் பீளையாகவும் செவி நா முத்துப்போன்ற பல் நகம் குதம் குய்யம் என்னுமிவற்றினின்றும் பொருந்திய அழுக்காகவும் மயிர்த்துளைதோறும் தோன்றுகின்ற வியர்வையாயும் அப்பன்னிருவகைத் துரால்களும் வெளிப்படும். இனி, உடல் உய்தற்பொருட்டுக் கிளர்ச்சியுறுகின்ற சாரத்தினின்று தோலும் அதனினின்று குருதியும் அதனின் நிணமும், ஊனும்.

(வி - ம்.) குதங் குய்யங்களில் இருவகை யியக்கமாகவும் மேலும் அழுக்குமாய் வெளிப்படும் என்றவாறு. வேர் - வியர்வை. உய - உய்ய. துவக்கு - தோல். ஊன் - தசை. (௬௦௦)

தசையிடை நரம்பு முரோமமு நரம்பி
னுடிநா டியிற்றயங் கத்தி
அசைவறு மென்பின் மூளையு நகமு
மூளையிற் சுக்கில மதனில்
பசையுறு கருவா மிம்முறை சாரம்
பன்னிரண் டுறுப்பதாய்ப் பயிலும்
விசைகொள்சுக் கிலஞ்செம் புனலின்மிக் குதரம்
விரவுறி னுண்மக வாகும்.

(இ - ள்.) தசையினின்று நரம்பும், மயிரும், நரம்பினின்று நாடியும் நாடியினின்று எலும்பும், அசைதலில்லாத அவ் வெலும்பினின்றும் மூளையும் நகமும், மூளையினின்றும் சுக்கிலமும் (அல்லது சுரோணிதமும்) சுக்கில சுரோணிதங்களினின்றும் கருவும் தோன்றும். இங்ஙனம் சாரமும் பன்னிரண்டு உறுப்பாய் வளரும். வேகமுடைய சுக்கிலம் சுரோணிதத்தினும் மிகுந்து தாய்வயிற்றிற் கலக்குமிடத்தே அக்கரு ஆண்மகவாகத் தோன்றும்.

(வி - ம்.) நாடி என்றது நுண்ணரம்புகளை. அத்தி - எலும்பு. பசை - நெய்ப்பு, அவாவுமாம். புணர்ச்சியின்போது விரைந்து பாயும் சுக்கிலம் என்றவாறு. தலைமைபற்றிச் சுக்கில மென்றாரேனும் சுரோணிதமும் கொள்க. செம்புனல் - சுரோணிதம். (௬௦௧)

செம்புனல் வெண்ணீர் தனின்மிகிற் பெண்ணுஞ்
செம்புனல் வெண்புன லிகர்ப்பின்
அம்புவி யிழிக்கு மலியுரு வாகு
மளிப்பவர் குணமகக் கெய்தும்
வம்பிவட் டகத்தோ டுயிர்பிதா நுகரும்
வண்சுவை பற்றியுண் ணுழைந்து

வெம்புவென் புனற்பட் டன்னைதன் கருவிற்
சட்டக மாய்ப்புவி வீழும்.

(இ - ள்.) சுரோணிதம் சுக்கிலத்திலும் காட்டில் அளவின் மிகு மாயின் பெண்மகவாய்த் தோன்றும் அவ்விரண்டும் சம அளவாமிடத்தே உபயினர் இறிந்துக் கூறுதற்குக் காரணமான அலியாகத் தோன்றும். தாய் தந்தையர் குணம் மகவிற்கும் உண்டாகும். உயிர் தனது பழை தாகிய புரியட்டகவுடலோடு தந்தையாவான் உண்ணும் வளப்பமுடைய சுவையைப் பற்றுக் கோடாகக்கொண்டு அவனுடலிற் புகுந்து ஆங்குச் சுக்கிலத்தைக் கலந்து தாயாவாள் கருப்பையின்கண் உருப்பெற்று முதிர்ந்துபின் இவ்வுலகிலே வீழாநிற்கும்.

(வி - ம்.) அம்புவி - ஆகுபெயர். மகக்கு - மகவிற்கு. "தந்தை யறிவே மகனறி" வென்றார், நாலடியினும். சட்டகம்-உடம்பு. (கூ0உ)

உயிர்படு கருவோர் வைகலிற் குன்றி
யுறுமைந்திற் புற்புத மொக்கும்
பயிலின வூறு மேழிலி ரேழிற்
பரந்துசெம் புனறிர ளூறும்
வயமுறு பிச மையைந்திற் சிறிது
வருஞ்சிரங் களஞ்சிறு புறமே
வியன்முது கென்பென் றுரைத்திடு நான்கும்
விளங்குறு முப்பது நாளில்.

(இ - ள்.) உயிர் கலந்த கரு ஒருநாளிலே குன்றியளவாத்திரளும். ஐந்து நாளிலே நீர்க்குமிழியனைத்தாம். ஏழுநாளில் இளவூறும், பதினான்குநாளில் பரவிக் குருதித்திரள் ஊறும். இருபத்தைந்து நாளில் வலியுடைய பீசஞ் சிறிது தோன்றும் முப்பது நாளகவையின் தலை கழுத்து முதுகு அகன்ற முதுகெலும்பு என்பன விளக்கமாகத் தோன்றும்.

(வி - ம்.) வைகல் - நாள். . புற்புதம் - நீர்க்குமிழி. வயம் - வலிமை. பீசம் - அண்டம், பிடுக்கு(விதை). களம்-கழுத்து. (கூ0ங)

தாளடி நிதம்பந் தடங்கர மருங்கு
சார்நரு மிருமதி வரையில்
கோளுறு வடிவிற் சந்திகண் மூன்றிற்
கொழுவிர லுன்கிலம் மதியில்
வாளுகிர் நாசி முகங்குய்யங் கன்னம்
வாலெயிற் றுறெழுங் காறின்
நீளுறு கன்னத் துளையெழு மதியி
னிகழ்குறி விளங்குறத் தோன்றும்.

(இ - ள்.) இரண்டுதிங்கள் அகலையின் கால் அடிகள் கடிதடம் (அரை) பெரியகை இடை என்னும் இவ்வுறுப்புக்கள் உருவாகும். கொண்ட அவ்வடிவிலே மூன்றாந்திங்களில் மூட்டுக்கள் உண்டாகும். நான்காந்திங்களிலே கொழுவிய விரல்களும் ஐந்தாந்திங்களிலே, கூர்த்த நகமும் முகமும் மூக்கும் குய்யமும் செவியும் பற்களின் அடித் துளை யொழுங்கும் உண்டாகும். ஆறாந்திங்களிலே நெடிய செவித் துளைகளும் ஏழாந்திங்களிலே (ஆண் அல்லது பெண்) குறி விளக்கமாக வுண்டாகும்.

(வி - ம்.) கோளுறு - கொண்ட. குறி - ஆண் பெண் அறிகுறி யுறுப்புகள். (கூ0ச)

திங்களோ ரெட்டிற் குதமுந்தி யேனைச்
செறிதரு மங்கமா திகளும்
தங்குறும் பிராணன் முதல்வளி யைந்துந்
ததையுமுந் தியின்வழி யன்னை
நுங்குண விரதம் வயிற்றுறு மின்ப
துன்பமு மனுதியா னுகரும்
அங்கண்முன் னிகழ்ச்சி கனவெனத் தோன்ற
வளாவிய மோகம்விட் டகலும்.

(இ - ள்.) எட்டாந்திங்களில் குதமும் கொப்பூழும் பிற உறுப்புக் களும், உடலிலே தங்காநிற்கும் பிராணன் முதலிய காற்றுக்களும் பொருந்தும். தாய் உண்ணும் உணவின் சாறு கொப்பூழ் வழியாக அக் கருவின் வயிற்றில் வந்துசேரும். அக்கரு மனமுதலிய கருவிகளானே இன்பதுன்ப நுகர்ச்சியும் உடையதாயிருக்கும். அப்பொழுது முற் பிறப்பின்கண் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் அதற்குக் கனவுபோலத் தோன்றா நிற்கும். அவ்வழி உயிரை அளாவிய மோகஞ்சிறிது அகலாநிற்கும்.

(வி - ம்.) ஐந்து வளி என்றது, பிராணன், அபானன், உதானன், சமானன், வியானன் என்பவற்றை. (கூ0ரு)

இறப்பொடு பிறப்பிற் பன்முறை யிதுகா
றிடருழந் தனமினிப் பிறந்தாங்
கறப்பெருங் கடவுள் பூசனைப் பேற்று
லவற்றினை யறுத்துமென் றெண்ணிச்
சிறப்புற விருக்கு முயிர்கருப் பையுஞ்
செறிவழுக் குதகமு மற்றும்
உறப்பெரி தழிந்து மோகக்கான் மிளிர்ப்ப
வுணர்விழுந் தரிதின்மண் சாரும்.

(இ - ள்.) முன்பு இறப்பானும் பிறப்பானும் பலமுறை இது வரையில் துன்புற்றுழலாநின்றேம். இனி இப்பிறப்பிற் பிறந்து அங்கு அறவாழி அந்தணனாகிய முழுமுதற் கடவுளை வழிபட்டு அதன்

...னாலே அவ்விறப்புப் பிறப்புக்களை ஒருதலையாக அறுத்தொழிக்கக் கடவேம் என்று எண்ணிச் சிறப்பாக இருக்கும் அவ்வுயிர், கருப்பையும் அதனுட் செறிந்த வழுநீரும் பிறவும் தன்னை வருத்தப் பெரிதும் வருந்தி மோகம் மீளவும் வந்து பொருந்தவும் வியானன் என்னும் காற்று உந்தித் தள்ள உணர்வு மயங்கி அரிதாக இவ்வுலகத்திலே பிறவாநிற்கும்.

(வி - ம்.) உயிர் அழிந்து கால் மிளிர்ப்ப மண்சாரும் என்க. (ரு0கூ)

சூக்கும வுடலைப் பற்றியே யெழுந்த
தூலதே கத்தினுண் முன்னர்
ஆக்கிய வறம்பா வங்களின் பயனை
யவ்வினை யெனப்பின்பு பயக்கும்
நீக்கரும் வினைகள் வளாவியா னென்னுஞ்
செருக்கினு னித்தலு மருந்திப்
போக்கொடு வரவிற் படுமுயி ரிறைவன்
பொருவில்பா தம்புகு காறும்.

(இ - ள்.) இவ்வாறு நுண்ணுடலைப்பற்றிக் கொண்டு தோன்றிய பருவுடலிலே யிருந்து முற்பிறப்பிலே செய்த நல்வினை தீவினைப் பயன்களை அவ்வினைகளைப் போன்றே பின்னர் விளைக்கும் விலக்குதற்கரிய ஊழ்வினைகள் கலக்கப் பெற்று யான் எனது என்னும் செருக்குடைமையாலே நாடோறும் இன்பதுன்பமாக நுகர்ந்து இறப்புப் பிறப்புக்களிலே உயிர்கள் புக்குழலாநிற்கும் இறைவனுடைய ஒப்பற்ற திருவடி நிழலிலே புகுமளவும்.

(வி - ம்) சூக்கும வுடல் - புரியட்டகம். வினைகள் : ஆகூழ் போகூழ்கள். யான் என்றமையால் இனம்பற்றி எனது என்பதும் கொள்க. இவைகளே நுகர்ச்சிக்கு ஏதுவாகலின் செருக்கினுல் என்றார். போக்குவரவு - இறப்புப் பிறப்புக்கள். (ரு0அ)

மூன்றரைக் கோடி நாடியவ் வளவே
முற்றிய மயிரெயி றெண்ணான்
கான்றகை யடியி னுகிரிரு பதுவீ
ரியமழாக் குடற்பித்த முழக்கு
மான்றுறு மிடற்றுக் கபமுரி யுடனு
ழுிவண் ணிணத்தொடி யைந்நான்
கேன்றமே தைக்குத் தொடிகளோ ரைஞ்ஞூ
றீண்டுமுன் றொடியொரு நாறே.

(இ - ள்.) நாடியின் அளவு மூன்றரைக் கோடியாகும்; முதிர்ந்த மயிரின் அளவும் மூன்றரைக் கோடியாம்; பற்கள் முப்பத்திரண்டாம்; அமைந்த கைகால்களிடத்தேயுள்ள நகங்கள் இருபது. சுக்கிலம் (அல்லது சுரோணிதம்) ஓராழாக்கு. குடற்குரிய பித்தம் உழக்காம். மயங்

துங்கால் உண்டாகும் கபம் ஒருரியே நாழுரி. வளவிய நிணம் இருபது பலம். உண்டாகிய இறைச்சியின் அளவு ஐந்நாறு பலமாம். செறிந்த ஊன் நூறுபலம் என்ப.

(வி - ம்.) ஆன்ற - அமைந்த. உகிர் - நகம். அழாக்கு-விகாரம். மான்று - மயங்கிப் பொருந்தும். தொடி - பலம். மேதை-இறைச்சி. (௱0௮)

இளகுநெய்த் தோரு மிறுகுநெய்த் தோரு
மியம்புறிற் றொடியொரு மூன்றும்
வளமலி மூளை பன்னிரு தொடியா
மயிர்முதலனைத்தையுந் தொகுத்திட்
டளவிடி லாக்கை யாயிரந் தொடியா
மருவருப் புறுமியக் கங்கட்
களவிலை யிந்தப் புலையுடற் பொறையைப்
பொருளென மதிப்பரோ வறிந்தோர்.

(இ - ள்.) இளகிய குருதியும் இறுகிய குருதியும் இவ்வளவெனக் கூறின் தனித்தனி மூன்றுபலம் என்ப. வளமிகுதற்குக் காரணமான மூளை பன்னிரண்டு பலமாம். இனி, மயிர் முதலிய அனைத்தையும் கூட்டிக் கணக்கிட்டால் உடலின் அளவு ஆயிரம் பலமாகும். அருவருத்தற்குக் காரணமான மல முதலியவற்றிற்கு அளவில்லை. இத்தகைய புலாலாலியன்ற உடற்சுமையை மெய்யறிவாளர் ஒருபொருளாக மதிப்பரோ!

(வி - ம்.) நெய்த்தோர் - குருதி வளம் - அறிவுவளம், மதியார் என்றபடி. (௱0௧)

தமனியக் கடமே யாயினும் பவ்வித்
தங்குறின் விழைஞரும் பற்றர்
அமிழ்தமே யானுந் துய்ப்புறிற் பவ்வி
யாக்குமிவ் வுடற்புக ழறிந்தும்
இமிழ்தரப் பற்று மடவருக் குரைத்து
மென்பயன் றீர்த்தமா டிடினும்
உமிழ்முடை யாக்கை சுசியுறு திறைவ
னுண்மைதேர்ந் துயிர்சுத்தி யுறுமே.

(இ - ள்.) பொன்னாற் செய்த குடமாகவிருப்பினும் அதனகத்தே மலம் நிரப்பப்பட்டிருப்பின் பேராசையுடையோரும் அதனைத் தொட மாட்டார். தான் உண்பது அமிழ்தமேயாக விருப்பினும் மறுகணம் மலமாக்கிவிடும் இவ்வுடலின் இழிதகவினை உணர்ந்திருந்தேயும் அவா வுண்டாக அதனைப்பற்றிக் கொண்டொழுலும் மடமையுடையோர்க்கு இவற்றை விளக்கிக் கூறியும் பயன் என்னை? இதுநிற்க. இனி நாடோறும் நன்னீரிற் குளிப்பினும் முடைநாற்றம் வீசும் உடல்

தூய்மையுறுதல் எஞ்ஞான்றும் இல்லை. அதன்கண் வாழும் உயிர்மட்டும் மெய்ப்பொருள் உண்மையை உணர்ந்துகொண்ட வளவிலே தூய்மை யெய்தாநிற்கும்.

(வி - ம்.) தமனியக்கடம் - பொற்குடம். பவ்வீ - இடக்கரடக்கு. புகர் - குற்றம். இமிழ் - இனிமை. சுசி - தூய்மை. சுத்தி-தூய்மை. (கூ௧௦)

முப்பொரு ளியல்பு முள்ளவா றுணர்ந்து
முழுத்தபே ரறிவினுள் விழித்தோர்
இப்புவி யவர்போல் வினைபல குயிற்றி
யிருப்பினும் வினைப்பய னெய்தார்
கைப்பட மனையைப் புதல்வியைத் தழூஉங்காற்
கருத்துவேற் றுமையுங்கை வருடச்
செப்பிள முலையார் மகன்பதிக் களிக்கும்
பயத்தின்வேற் றுமையுநேர் தெரிதி.

(இ - ள்.) இறை உயிர் பற்று என்னும் மூன்று பொருள்களின் இயல்புகளையும் ஆராய்ந்து ஐயந்திரிபற உள்ளவாறே உணர்ந்து முழுமையுடைய பேரறிவினிடத்தே விழிப்படைந்த மெய்ஞ்ஞானியர், இந்த வுலகத்தினர் போன்றே பற்பல செயல்களையுஞ் செய்துகொண் டிருந்தாராயினும் அவ்வினைகளின் பயனை எய்தமாட்டார். அஃதெங் ஙனமெனின், ஒருவன் தன் மனைவியைத் தன் கையினுற் றழுவுமிடத்தே யும், தன் மகளைத் தழுவு மிடத்தேயும் செயல் ஒன்றாயிருந்தும் கருத்தின் கண் வேற்றுமை யிருத்தலும், செப்புப்போன்ற முலையினையுடைய மடந்தையர் தம்முலையைக் கொழுநன் வருடுங்காலும் தன் குழவி வருடுங்காலும் செயல் ஒன்றேயாயிருந்தும் அவள் அவ்விருவருக்கும் அவ்வப்போது நல்கும் பயன்மட்டும் வேற்றுமையுடையன வாதல் கண்டாமன்றே ; இவ்வுவமைகளைக் கொண்டு தெளிந்துகொள்வாயாக.

(வி - ம்.) முழுத்த பேரறிவில் விழித்தலாவது - தனக்கென ஒன்று மின்றித் தன் செயலெல்லாம் இறைசெயலாக உணர்ந்து கொண்டிருத் தல். தஞ்செயல் இறைசெயலாகவே கொண்டு செய்தலின், வினைப் பயன் அவர்க்கில்லையாயின என்க. (கூ௧௧)

இருவகை யியக்கங் கழிப்புழி யுண்டா
மின்பமெவ் வளவையத் துணைத்தே
கருவிழிச் செவ்வாய் மகளிரைக் கலந்து
கழிப்புறு மின்பமு மதற்கே
அருவருப் பெவரு மெய்துறும் பவ்விக்
கடர்ந்தெழும் வன்றிநாய் போலத்
தெருள்கிலா ரெல்லா மிவர்ந்திரு பயனுஞ்
சிதைத்தரும் பழிச்சுமை தரிப்பார்.

(இ - ள்.) மலங்கழிக்குங்காலும் நீர்விடுங்காலும் ஓரளவு இன்பமுண்டாதல் கண்டாம் அன்றே! அவ்வளவிற்றே கரிய விழியையும் சிவந்த வாயையுமுடைய மகளிரைப் புணர்ந்து வெண்ணீரை விடுங்காலத்துண்டாகும் இன்பமுமாம். இவ்வெளிய இன்பத்தின் பொருட்டே, யாரும் அருவருப்புறுதற் கிடமான மலத்தைத் தின்றற்கு ஒன்றனோடொன்று கலாய்த்துக்கொண்டு ஓடாநின்ற பன்றியும் நாயும் போல மெய் உணராத மடவோரெல்லாம் ஓடி இருவகைப் பயனையும் சிதைத்துப் பழியாகிய சுமையையே சுமவாநிற்பர்.

(வி - ம்.) சுக்கிலங் கழிப்புறுமின்பம் என்க. பவ்வீ - இடக்கரடக்கு. அடர்த்து - கலாய்த்துக்கொண்டு. வன்றி - பன்றி. (௩௧௨)

வேறு

உருத்திரன் மன்ற லுளி னுமையிடுஞ் சாபந் தாங்கி
மருத்தநா மரைப்பூ வாழ்க்கை வானவ னிடும்பை கூர்ந்தான்
திருத்தபு மார்பன் வேற்றுத் தேமொழி மனையை வெஃகிக்
கருத்தழி மம்மர் கூர்ந்து கலங்குநர் பெரிதுந் துய்த்தான்.

(இ - ள்.) உருத்திரன் உமையை மணஞ் செய்தநாளிலே மணங் கமழும் தாமரை மலரிலிருப்போனாகிய பிரமதேவன் அவ்வுமையைக் காமுற்றமையானே அவ் வுமையன்னையார் இட்ட சாபத்தை ஏற்று மிகவும் வருந்தினான். திருமகள் தங்கிய மார்பையுடைய திருமாலும் பிறனுடைய இனிய மொழியினையுடைய மனைவியை விரும்பிக் கருத்தழிதற்குக் காரணமான மயக்கமிகுந்து கலங்குந் துன்பத்தைப் பெரிதும் நுகர்ந்தான்.

(வி - ம்.) மருத்த - மணங்கமழ்ந்த. திருத்தபு-திருத்தங்கிய என்க. (௩௧௩)

இந்திரன் பிறனில் காமுற் றிழிகுறி முழுதும் பெற்றான்
சந்திரன் குரவ னில்லாட் டழீஇவெந் துயரத் தாழ்ந்தான்
அந்தரத் தவரு மண்மே லவருமிவ் வாறு பட்ட
வெந்துயர்க் களவின் றுக்கை நோய்க்கும்வே றவதி யின்றே.

(இ - ள்.) அமரர்கோமானாகிய இந்திரன் பிறன்மனையாளாகிய அகலிகையை விரும்பி இழிந்த பெண்குறிகளை உடன்முழுதும் உடையனாயினன். மற்றுச் சந்திரனும் ஆசிரியன் மனைவியைத் தழுவியதனாலே வெவ்விய துன்பத்திலே அழுந்தினான். இவ்வாறு அமரர்களும் மண்ணுலகத்தோரும் காமத்தாலே எய்திய வெவ்விய துயரங்கட்கு எல்லையின்று. இனி இத்துயரமேயன்றி இவற்றின் வேறாய் உடலைப்பற்றி வருத்தும் பிணிகளுக்கும் எல்லையில்லையே.

(வி - ம்.) பிறன் என்றது கௌதமனை. குரவன் - ஆசிரியன். அவதி - எல்லை. (௩௧௪)

வலாரிதோள் வாத நோயன் வண்மதி கயநோ யாளன்
சுலாவுறும் வெப்பு நோயிற் றொடக்குண்டான் றக்க னென்பான்

உலாவுறு காலி லாத முடவனே யுரங்கொண் மந்தன்
சலோதர நோய்க்கோட் பட்டான் றண்புனற் கரையன் மாதோ.

(இ - ள்.) இந்திரன் (வலது) தோளிலே வாதநோயுடையன். ஒளிவிய திங்கட்டேவன் குட்டநோயுடையான். சுழல்தற்குக் காரணமான வெப்புநோயானே தக்கன் பிணிக்கப்பட்டான். வலிமையையுடைய சனிக்கடவுளும் உலாவுதற்குரிய கால்களில்லாத முடவன். தண்ணிய கடற் கரசனாகிய வருணன் நீர்க்கோவை நோயுடையான்.

(வி - ம்.) வலாரி - இந்திரன். கயம் - க்ஷயம். மந்தன் - சனி. சலோதரம் - நீரிழிவுமாம். மாது, ஓ: அசைகள். (௧௪௫)

துளவினன் றலைநோ யாளன் சுடரவன் பழுதார் மெய்யன்
வளமுடி யிழந்தான் போதன் வாணிதன் னாசி தோற்றாள்
அளமர மாரன் வெந்தா னடல்வலிக் காலன் பட்டான்
உளரவிக் களத்தில் யாருந் தக்கனோ டுறுப்புத் தீர்ந்தார்.

(இ - ள்.) திருமால் தலைநோயுடையன், ஞாயிற்றுத்தேவன் பழுதுபட்ட தோலையுடையன் ஆயினன். பிரமதேவன் வளவிய தலையொன்றனை இழந்தனன். கலைமகள் மூக்கரியுண்டாள்; உளஞ்சுழலும்படி காமன் உடல்வெந்து போயினன். கொல்லும் வலிமிக்க கூற்றுவன்றானும் கொல்லப்பட்டான். தக்கனுடைய வேள்விக்களத்திலே உளரான அமரரெல்லாம் அத்தக்கனோடு உறுப்புக்களை இழந்தனர்.

(வி - ம்.) துளவினன் - திருமால். போதன் - பிரமன். அளமரல் - அலமரல்; சுழலல். அவிக்களத்தில் உளர் யாரும் எனமாறுக. (௧௪௬)

காண்டகு விண்டு கண்டங் கண்டமுற் றவனி வீழ்ந்தான்
மாண்டமுப் புரமோ ரம்பின் மாய்ந்தன காளி சீற
நீண்டதா ருகன்மெய் விட்டா னிகரிலாச் சூர னென்போன்
றூண்டிய நமது வேலாற் றோல்வியி னுடல நீத்தான்.

(இ - ள்.) காண்டற் கினிய தகுதியையுடைய திருமாலும் கழுத்துத் துணிபட்டு நிலத்திலே வீழ்ந்தான். முப்புரங்களிலே வாழ்ந்த அசுரர் அனைவரும் ஒரே கணையில் மாண்டனர். இறைவி சினத்தலானே நெடிய தாருகன் இறந்துபட்டான். ஒப்பற்ற சூரபதுமனும் யாம் எறிந்த எமது வேற்படையானே தோற்று உடல் நீத்தனன்.

(வி - ம்.) விண்டு - திருமால். முப்புரம் - ஆகுபெயர். சூரன் - சூரபதுமன். யாம் தூண்டிய எமது வேலால் என்க. (௧௪௭)

மலரவன் றன்னை மாயோன் வழங்கிடப் பட்டுத் தாழ்வன்
அலரவன் மாயன் றன்னை யளித்திட வவனிற் றாழ்வன்
புலவர்க ளாக்கப் பட்டுப் போர்த்திற லவுணர் தாழ்வர்
குலதிவா ளவுணர் தாக்கக் கடவுளர் தாமுந் தாழ்வர்.

(இ - ள்.) பிரமதேவனைத் திருமால் ஈனுதலானே அத்திருமாலின் றாழ்ந்தவனுவன். அப்பிரமதேவனே அத்திருமாலை உலகிலே பத்துப் பிறப்புக்களிலே படைக்குமாற்றானே அப்பிரமனின் றாழ்ந்தவனுவான். தேவர்களால் தாக்கப்பட்டு ஒருகாலத்தே போராற்றலிழக்க அசுரர் தாழ்வர். மற்றொரு காலத்தே கலகஞ் செய்யுமியல்புடைய அவ்வசுரரானே தாக்கப்பட்டுத் தேவரும் தாழ்வர்.

(வி - ம்.) உயிர்கட்கு உயர்வும் தாழ்வும் மாறிமாறி வரும் என்றவாறு. (௩௯௮)

ஒருவன்பால் வெற்றி கொண்டோ னொருவன்பாற் றோல்வி கொள்ளும்
ஒருவன்பாற் சீர்த்தி கொண்டோ னொருவன்பா லிளிவுந் துட்கும்
ஒருவன்பா னட்புக் கொண்டோ னொருவன்பாற் பகைமை கொள்ளும்
ஒருவனே நட்பா வுள்ளோன் பகையுமா யுடற்று மன்றே.

(இ - ள்.) ஒருவனிடத்தே வெற்றி கொண்டவன் மற்றொருவனிடத்தே தோல்வியடைவன். ஒருவனால் மிகவும் புகழப்பட்டவன் மற்றொருவனால் இகழப்பட்டு நாணுநிற்பன். ஒருவன்பால் நட்புக் கொண்டவனே மற்றொருவன்பாற் பகைகொள்வன். ஒருவனுக்கு முன்னர் நண்பனுயிருந்தவனே மீண்டும் பகைவனுகித் துன்புறுத்தலும் உண்டு.

(வி - ம்.) எனவே வெற்றி தோல்வி முதலியனவும் நிலையுதலுடையனவல்ல. மாறி மாறி வந்து இன்பமும் துன்பமும் செய்வனவே யாம் என்றவாறு. (௩௯௯)

வினையிலி விழியிற் றோற்றி விளங்கிய வெம்பின் வந்த
முனைகெழு வீர ரண்ட முழுவதும் பொடிக்கு மாற்றல்
வனைகழற் கணமுஞ் சூரன் வன்சமர்ப் பட்ட செல்லல்
தனைநிக ரில்லை யென்றாற் பிறர்துயர் சாற்று மாறென்.

(இ - ள்.) இறைவனுடைய திருவிழியிற் பிறந்து விளங்காநின்ற எமது பின்னர்த் தோன்றிய போர்முனையிற் பொருந்திய வீரர்களும் அண்டங்கள் அனைத்தையும் நுறுக்கும் பேராற்றல் படைத்த வீரக்கழற் கட்டிய நமது படைஞரும் சூரபதுமனுடைய வலிய போரின்கண் பட்ட துன்பத்திற்கு ஒப்பேயில்லை எனில் இனி இவ்வுலகத்தே ஏனையுயிர்கள் படுந்துன்பத்தை எவ்வாறு அளவிட்டுக் கூறவியலும்.

(வி - ம்.) வீரர் - வீரவாகு முதலியோர். கணம் - படைஞர். செல்லல் - துன்பம். (௪௦௦)

எற்றைக்கு முறவா யுள்ள திருண்மல மனுகாச் சோதி
எற்றைக்கும் பகையா யுள்ள திருண்மல மதன்றன் சார்பால்
எற்றைக்கும் வினைக ளீட்டி யிருப்பது காய மென்றால்
எற்றைக்கு மெச்சீர் வாய்ந்த காயமும் பகைமை யன்றே.

(இ - ள்.) இருளாகிய ஆணவமலத்தானே அணுகுதற்கியலாத ஒளிப்பிழம்பாகிய இறைவனே உயிர்க்கு எக்காலத்தும் உறவாயிருப்பவன். இருளாகிய அவ்வாணவமலமே எக்காலத்தும் உயிர்க்குப் பகையாயிருப்பதாம். அம்மலச் சார்பினாலே உயிர் இருவினைகளையும் எப்பொழுதும் ஈட்டிக் கோடற்குக் கருவியாக அமைந்திருப்பது உடலேயாகும். எனவே தேவர்முதல் ஓரறிவுயிர் ஈறாக உள்ள எத்தகைய பிறப்பினும் உடல் உயிர்கட்குப் பகையே யாம்.

(வி - ம்) இருண் மலம் - பண்புத்தொகை. சோதி - இறைவன் உயிர் என்பது வருவித் தோதுக. நல்வினையும் பிறப்பிற் கேதுவாகலான் வினைகள் என்றார். (௯௨௧)

ஆதலாற் றேவர் தேவர்க் கருள்புரி தேவ ரேனும்
ஓதுறு முடலுக் கேன்ற வூழ்வினை யுடலுற் றன்றிப்
போதரா தற்றே லேனைப் புலவரைப் புவியி னோரை
மாதுயர்ப் படுத்துச் சேறல் வல்வினைக் கரிய தன்றே.

(இ - ள்.) இங்ஙனமாதலின் தேவரேயாக, அத்தேவர்க்கு வரந்தருந் தேவதேவரேயாக அவரவர் மேற்கொண்டுள்ள உடல் பற்றி வந்து கொண்ட ஊழ்வினைகளின் பயனை அவ்வவ்வுடல் நுகர்ந்தன்றித் தீர்தலில்லை. அங்ஙனமாயின் மற்றைய தேவரையும் மண்ணுலகத்தோரைப் பெருந்துயரத்திற் காளாக்கிப் போதல் வன்மையுடைய அவ்வினைகட்கு அருமையாகுமோ.

(வி - ம்.) ஓதுறுமுடல் - முற்கூறப்பட்ட உடல். அற்றேல் - அங்ஙனமாயின். புலவர் தேவர். (௯௨௨)

கருவினின் மழவிற் கற்குங் காலையிற் பருவ மாறில்
பெருகிய பொழுதி னோயிற் பிரிவினிற் பகையி னீட்டும்
பொருள்வயின் வேட்ட தெய்தாப் புன்மையின் முதுமை தன்னில்
மருவிய திழப்பிற் சாவின் வன்றுயர் மனித்தர்க் குண்டே.

(இ - ள்.) தாயின் கருப்பையிலிருக்கும் பொழுதும், இளங் குழவிப் பருவத்தினும், கற்கும் பருவத்தினும், கார் முதலிய ஆறு பருவ காலங்களினும், காலைமுதலாகப் பெருகிய சிறுபொழுதுகளினும், நோய்வாய்ப்பட்டுழியும், அன்பரைப் பிரியுங்காலத்தும், பகைமையிலும், பொருளீட்டுங் காலத்தும், விரும்பியபொருளைப் பெறமாட்டாத வறுமைக்காலத்தும், முதுமைக்காலத்தும், பெற்றபொருளை இறக்க நேர்ந்தபொழுதும், சாக்காட்டினும் மனிதராய்ப் பிறந்தோர்க்குக் கொடிய துன்பங்கள் உளவாதல் கண்கூடு.

(வி - ம்.) மழவு - இளங்குழவிப்பருவம். பருவம் - கார் முதலியன. பொழுது - விடியல் முதலியன. புன்மை - வறுமை. (௯௨௩)

விதித்தன வொன்று நூறு மேவரி நான்கு நில்ல
கதித்திடு மிளமை நின்றுங் காமநோய் நில்ல நின்றும்

உதிக்கினல் லுணர்வு மேலே யுறுபிணி நாட வொட்டா
மதித்தன ரொழுக லாறு மழிவிக்கு மூப்பு நண்ணில்.

(இ - ள்.) மனிதற்கு அகவை ஆண்டு நூறு என்று கூறப்படினும், நூறாண்டின் கடைபோக வாழ்தல் மிக அரியதாகும். அந்நூறாண் டுளவாகும் ஆண்டுகளினும், சிலயாண்டுகளைத் தோன்றுகின்ற இளமை பாழ்படுத்தும். சிலயாண்டுகளைக் காமநோய் பாழ்செய்யும். காளைப்பருவம் நீர்த்து ஓரோவழி நல்லுணர்வு தோன்றியவிடத்தும் நோய்கள் அவ்வுணர்வினை நாடுதற்கு இடங்கொடா. நல்லொழுக்கினை மதித்து ஒழுகும் நெறியினையும் முதுமைப் பருவம் வந்தவிடத்தே கெடுத்தொழிவதாம்.

(வி - ம்.) நூறும் என்புழி - உம்மை முற்றும்மை. தின்னும் என்றது பயன்படாதபடி செய்யும் என்றவாறு. நல்லுணர்வு - மெய்யுணர்வு. மதித்தனர் - முற்றெச்சம். (௩௨௪)

இந்திறத் தினர்கண் மாந்த ரேனைய வுயிர்க ளெல்லாந்
தந்தமக் கனந்த கோடிப் பகைவிராய்த் தாக்கப் பட்டும்
பொத்திய பசியிற் பட்டும் பொழுதிரு துடற்றப் பட்டும்
மெத்திய துயரத் தாழ்ந்து விளிவன பல்லாற் றானும்.

(இ - ள்.) மக்களாய்ப் பிறந்தோர் இத்தன்மையர். இனி மற்றை அஃறிணை உயிர்கள் எல்லாம் தத்தமக்கு எண்ணிறந்த பகையுயிர்கள் உண்டாகி அவற்றால் தாக்கப்பட்டும் அறிவைமூடிய பசிப்பிணியிலே அகப்பட்டும் சிறுபொழுது பெரும்பொழுதுகளால் துன்புறுத்தப்பட்டும், மிகுந்த துயரத்திலே அழுந்திப் பலவழிகளானும் இறந்தொழியும்.

(வி - ம்.) அனந்தம் - முடிவற்ற. பகை - பகையாமுயிர். பொத்துதல் - மூடுதல். மெத்திய - மிகுத்த. (௩௨௫)

இருவகைத் தாகு நோயோன் றடைவிடு மருந்தே யோமம்
உரைமனு வன்ன மாதி யுதவலித் திறனு லொன்று
பிரிவுறு முடலைக் கொண்டே பெருகிய சுற்ற மெல்லாம்
கருவிழி முத்தங் கான்று கவலையுற் றரற்ற மாதோ.

(இ - ள்.) உயிர்கட்கு வரும் நோய்தானும் இருவகைப்படும் அவற்றுள் ஒருவகை நோய், மருந்தானும், ஓமஞ் செய்தலானும் மந்திரங் கணித்தலானும் சோறு முதலியன வறியோர்க்கு வழங்குதலானும் இன்னோரன்ன செயல்களாலே இடையிலே தீர்வனவாகும். மற்றொரு வகை நோயோ மிகுந்த கேளிரெல்லாம் கரிய கண்கலங்கி நீருகுத்துக் கவலைகொண்டு அழும்படி உடலையே தனதாக்கிக்கொண்டே கழிவதாம்.

(வி - ம்.) நோய் உடற்கு வாத முதலியவற்றால் வருவனவும், சாவும் என இருவகைப்படும். முன்னது மருந்து முதலியவற்றாற் றீரும் பின்னது இறப்போடு கழியும் என்றவாறு. சாவிற்கு மருந்தில்லை என்றவாறு. (௩௨௬)

மாதரை மைந்தர் தம்மை வளநிதித் திரளை விட்டுப்
போதுமே யென்றென் றேங்கிப் புழுங்கிநெஞ் சழிவ தல்லால்
சாதலை யுறுமஞ் ஞான்றுந் தருமமொன் றுற்ற றெந்தை
பாததா மரையை முன்னர் வறியராய்ப் பதித ராவார்.

(இ - ள்.) உய்தியில்லாத அந்தச் சாக்காடுதான் நெருங்கி வந்துற்ற பொழுதும் "ஐயகோ! நம் மனையாளை மக்களை வளவிய பெருஞ் செல்வங்களை விட்டுப் போகின்றேமே" என்று என்று ஏங்கிப் புழுங்கிக் கையறவானே நெஞ்சம் அழிவதன்றி எஞ்சிய அச்சிறு பொழுதிலேனும் யாதேனும் ஓர் அறத்தினை ஆற்றுவேம் என்று எண்ணார். எம்பிரானுடைய திருவடித் தாமரையையும் சிந்தியார் அளியரோ! அளியர்!! அச் சாவினுலே அனைத்துமிழந்து வறியராதலேயன்றித் தீவினையாளரும் ஆகாநிற்பர்.

(வி - ம்.) போதும் - தன்மைப்பன்மை. ஒன்றும் எனல் வேண்டிய உம்மை விகாரத்தாற் றொக்கது. முன்னர் - நினையார். பதிதர் - தீவினையாளர். (௬௨௭)

தருக்குறுஞ் செல்வ மெய்தற் றிருக்கினுற் பிழைக ளெல்லாம்
பெருக்குநல் கூரி னந்தோ பிறருழை யிரந்து சேறல்
மரித்தலிற் றுயர மீண்டும் வந்தவர்க் கிரக்க மற்றுக்
கரத்தன்மற் றதனி னுங்குக் கடுந்துய ரறிவி லார்க்கே.

(இ - ள்.) அறிவிலான் ஒருவன் செருக்குறுதற்குக் காரணமான செல்வம் தன்னை வந்தெய்தியவிடத்தே செருக்குற்றுத் தீவினைகள் பலவற்றையும் செய்து பெருக்கிக் கொள்வன். இனி வறுமை வந்தவிடத்தே ஐயகோ! பிறர்பால் இரந்துபோதல் அவனுக்குச் சாத்துன்பத்திலும் காட்டிற் பெருந்துயரமாகும். பின்னரும் தன்பாலிரந்து வந்தோர்க்கு இரக்கமின்மையால் காத்தலும் அதனினும் காட்டிய கடிய துன்பமாம்.

(வி - ம்) தருக்கு - செருக்கு. நல்கூர்தல் - வறுமையுறுதல். மரித்தல் - சாதல். இச்செய்யுள் விற்பூட்டுப் பொருள்கோள். (௬௨௮)

மன்னிய செல்வ ராகி வாழினும் வளமிக் கீண்டித்
தன்னின்மேம் பட்டார்க் கண்டு தழைத்தவர் போறல் வேட்டுப்
பின்னரு மீட்டி யீட்டிப் பேதுற லன்றிப் பெற்ற
நன்னிதி கொண்டு நீதி நடத்துத லேவர் வல்லார்.

(இ - ள்.) மாந்தர் நிலைபெற்ற செல்வப் பேறுடையராகி வாழுமிடத்தும், செல்வம் மிகுதியாகத் திரண்டமையானே தம்மினும் சிறந்தோரைக் கண்டு, தாமும் செல்வத்தாலே பெருகி அவர்போன்று ஆதலை விரும்பி மேலும் பொருளைத் தேடித்தேடி வருந்துதலன்றி, தாம் பெற்றுள்ள நல்ல பொருள் போதுமென்று மன அமைதிகொண்டு அறஞ் செய்தற்கு யாவரே வல்லுநர் ஆவர்.

(வி - ம்.) எனவே, ஆசை ஆராவியல்பிற்று அதனால் மேலும் மேலும் துன்பமே வளரும் என்றாராயிற்று. தன்னின் என்பது ஒருமை பன்மை மயக்கம். நீதி - அறம். (௩௨௯)

மனைக்குரி மனையா டன்னை வாய்த்தநன் மைந்தர் தம்மைக்
கனைத்தலை சுருட்டும் வேலைக் கடனிகர் செல்வந் தன்னை
எனைத்தையு மிலம்பா டென்றே யிம்மெனத் துறந்து பெம்மான்
தனைச்சர ணடைந்து ளாரே தனைநிக ரில்லாச் செல்வர்.

(இ - ள்.) மனைவாழ்க்கைக்குரிய மனையாளையும், ஊழானே வாய்த்துள்ள அறிவறிந்த நன்மக்களையும், ஆரவாரித்து அலையெறியும் கரையையுடைய கடல்போன்ற பெரிய செல்வத்தையும், இன்னோரன்ன எல்லாவற்றையும் வறுமையையொத்த துன்பப்பொருள் என்றே மனதி லுணர்ந்துகொண்டு ஒருநொடிப் பொழுதிலே இவற்றையெல்லாம் துறந்துபோய் எம்பெருமான் திருவருளின்பால் தஞ்சம் புகுந்த சான்றோர்களே ஒப்பற்ற செல்வமுடையோராவர்.

(வி - ம்.) உரி - உரிய. இலம்பாடும் செல்வமும் பயனால் ஒத்தலின் செல்வநிலையும் இலம்பாட்டு நிலையே என்றுணர்ந்துகொண்டு என்றபடி. இம் : குறிப்புமொழி. இம்மென்னும் ஒருநொடிப் பொழுதில் என்பது. (௩௩௦)

எந்தையை விழைந்த பத்த ரிருதிறத் தோர்க ளாவர்
முந்துநூல் வழியான் மும்மைப் பொருளுணர்ந் திறைவன் பாங்கர்ச்
சிந்தையை யொருக்கி நின்றோ ரொருவர்மற் றொருவர் தேரா
தந்தில்வந் துதித்த வாறே யறிவுமிக் கன்பு செய்வோர்.

(இ - ள்.) எம்பெருமானாகிய இறைவன் திருவருளை விரும்புகின்ற மெய்யன்பர் இருவகைப்படுவர். அவருள் வேதாகம முதலிய முதன்மையுடைய நூல்களை ஓதி முப்பொருளியல்புணர்ந்து அவற்றுள் நிலையுதலில்லாத பற்றினை அறுத்து மெய்ப்பொருளாகிய இறைவன் திருவடியிலே நெஞ்சத்தை ஒருங்கே நிறுத்தி நின்றோர் ஒருவகையினராவார். இனி மற்றொரு வகையினர் பண்டை நற்றவத்தாலே இறையன்போடு பிறந்து நானெறியானன்றி இயல்பாகவே அறிவுமிக்கு இறைவன்பாலன்பு செய்வோர் ஆவர்.

(வி - ம்.) இவருள் முன்னையோர் வைநயிகர் என்றும் பின்னையோர் சாமுசித்தர் என்றும் கூறப்படுவர். (௩௩௧)

பொருந்திய வேக தேச வுடலினைப் பொதியுந் தோறும்
வருந்தியங் கறிவு மேக தேசமாய் வசித்துக் காணும்
இருந்திட வேக தேச வுடலெழுந் தொன்றிக் காணில்
திருந்திய வறிவு மெங்குஞ் செறிந்தபூ ரணத்தி னுமே.

(இ - ள்.) ஊழானே தனக்கு வந்தெய்திய ஏகதேசமாகிய உடலினை உயிர்பற்றி யிருக்குங் காலமெல்லாம் வருத்தமுற்று அதன்-

அறிவும் அவ்வுடலளவாய் வசிப்புண்டு ஏகதேசமாகவே காணப்படும். அவ் வேகதேசமாகிய உடல் இருப்பவே தான் மட்டும் அதன்பாற் பற்றொழிந்து எழுந்து வியாபகமாகிய இறைப்பொருளில் கலந்து காணும்பொழுது இருத்தமுற்ற அவ்வறிவுதானும் எங்குஞ்செறிந்த அம் முழுமுதற் பொருள் போன்றே வியாபகமாதல் காணப்படும்.

(வி - ம்.) ஏகதேசம் - ஓரிடத்திருத்தல். வியாபகம்-எங்கு நிறைதல். உயிர் அறிவு உடலைப் பற்றியபொழுது ஏகதேசமாகவும் இறைவனைப் பற்றியபோது வியாபகமாகவுமிருக்கும் என்றவாறு. (௧௩௨)

அறம்பா வங்கள் பெரிதாற்றி யலங்குந் துறக்க மளறெய்தித்
திறம்பா வின்பம் பெருந்துன்பந் திளைத்தோர்க் கங்கட் பயவாமைப்
புறம்பாய் நின்ற வினையெச்சம் புணரி வயல்கான் மலைவளங்கள்
பறம்பா நின்ற மண்ணுலகிற் பற்றுந் திறமும் பகர்வாமால்.

(இ - ள்.) அறங்களையும் தீவினைகளையும் மிகவும் செய்து அவற்றின் பயனாகிய பிறழாத இன்பத்தையும் பெருந்துன்பத்தையும் நிரலே ஒளியுடைய துறக்கத்தினும் நிரயத்தினும் புகுந்து நுகர்ந்தவர்கட்கு அவ்விரண்டிடத்தும் தத்தம் பயனைக் கொடாமல் வேறாக எஞ்சிநின்ற வினைகள், கடலும் வயலும் காடும் மலையுமாகிய இவற்றின் வளங்கள் பரவிய இம்மண்ணுலகத்தே வந்து அவ் வுயிர்களைப்பற்றி நுகர்விக்கு மியல்பும் இனிக் கூறுவாம்.

(வி - ம்.) அலங்குதல் - ஒளிவிடுதல். "அலங்கு வெண்மதி" என்னுஞ் சிந்தாமணி (௧௩௧-௨௧௪) யினும் அஃதப் பொருட்டாதலறிக, பறம்புதல் - பரவுதல். (௧௩௩)

துறக்க மாண்ட வறவோர்க டுய்ப்பங் கறவு மண்ணுலகில்
பிறக்க மாண்ட மறையோராய்ப் பிறந்து வளங்க ளினிதீண்டச்
சிறக்கு மொழுக்கந் தலைநின்று தேவர் பிரானை வழிபட்டாங்
குறக்கம் விழிப்பென் றிரண்டற்ற வோவா வின்பத் துறைபடிவார்.

(இ - ள்.) அறம் பெரிதும் ஆற்றினமையால் துறக்கத்தே புக்கு இன்புற்றிருந்த சான்றோர் அந்நல்வினைப் பயன் முழுதும் அவ்விடத்தே நுகர்ந்து முடிந்தபின்னர், இந்நிலவுலகிலே ஒளிமாட்சிமைப்பட்ட அந்தணராகப் பிறந்து செல்வமுடையராய் நல்லொழுக்கத்தின்கண் நன்கு நிலைத்துத் தேவதேவனாகிய இறைவனை வழிபட்டு அவ்விறைவன் திருவடியிலே இரண்டறக் கலந்து உறக்கமும் விழிப்புமில்லாத முடிவற்ற வீட்டின்பத்திலே அழுந்தாநிற்பர்.

(வி - ம்.) துய்ப்பு - நுகர்ச்சி. பிறக்கம் - ஒளி. தேவர்பிரான் - இறைவன். ஓவா - ஒழியாத. (௧௩௪)

அள்ள லழுந்தும் பாதகத்தோ ரருந்த லவணற் றிடவொழிந்து
பள்ள விரிநீர்க் கடலுலகிற் பயிலுந் தருவா திகளாகி
மெள்ள வுயர்ந்து மாலிடத்தின் மேவுங் காலுங் குணமுறுப்பு
நள்ளும் வெறுக்கை யிவையின்றி நவையே யுழப்பர் மாதவனே.

(இ - ள்.) அகத்தியனே! தீவினைசெய்து நிரயத்தில் அழுந்தியுழன்ற தீவினையாளர் உயிர் அவ்வினைப்பயன் நுகர்ச்சி முடிந்தவளவில் அவ்விடத்தினின்று மகன்று ஆழ்ந்த விரிந்த நீரையுடைய கடல் சூழ்ந்த இம்மண்ணுலகத்தின்கண் வாழும் மர முதலிய பிறப்பிலுற்றுக் கால அடைவிலே மெல்ல உயர்ந்து மானிடப் பிறப்பைப் பொருந்தும். அங்ஙனம் மானிடராங்காலும் குணநலம் உறுப்பு நலம் பொருந்துஞ் செல்வநலம் முதலிய நலங்கள் பெருமல் ஈண்டுந் துன்பமே யுழக்கும் காண்.

(வி - ம்.) அள்ளல் - நரகம். அருந்தல் - நுகர்தல். பள்ளக் கடல், விரிநீர்க் கடல் எனத் தனித்தனி கூட்டுக. ஓரறிவுயிரினின்றும் ஓரறிவுயிர் வரை மெல்ல வுயர்ந்தென்க. கவை - துன்பம். (௩௩௫)

பரனைக் குருவை யவமதித்தோர் பவ்வீக் கிருமி யுருக்கொள்வர்
ஒருவற் கரிய முயலகநோ யுழப்ப ரவரை யிழித்துரைத்தோர்
குரவன் பணியை யன்பன்றிக் குயின்றேர் மந்த ராய்த்தளர்வர்
குரவன் பணிசெய் குநர்க்கலைப்போர் கோம்பி யுருவாய்ப் பகைக்கழி
[வார்.

(இ - ள்.) இறைவனையாதல், ஆசிரியனையாதல் இகழ்ந்தோர் மலப் புழுவாகப் பிறப்பர். அவ்விருவரையும் வைதவர் நீக்கற்கரிய முயலக நோயுற்று வருந்துவர். ஆசிரியன் பணியை அன்பில்லாமற் செய்தவர் மந்தராகப் பிறந்து தளர்வர். ஆசிரியன் பணியாளரைக் கலைப்பவர் கோம்பியாய்ப் பிறந்து பகையினுல் வருந்துவர்.

(வி - ம்.) பவ்வீ - இடக்கரடக்கு. குயின்றேர் - செய்தோர். மந்தர் - அறிவுக் கூர்மையில்லாதோர். கோம்பி - ஓந்தி. (௩௩௬)

வேறு

சினந்தகுர வற்சினந்தோன் சிரநோய
னந்தணனைச் செகுத்த பாவி
இனைந்தழியுங் கயநோய னரியலரர்ந்
தவன்பழுதா ரெயிற்றன் குந்தி
தனங்களவிற் கவர்ந்தவனு ரியன்மனையைத்
தழீஇனேன் குட்ட நோயன்
மனங்களிப்பத் தெய்வதிர வியங்கவர்ந்தோ
னச்சரவ வடிவ னுவன்.

(இ - ள்.) தன்னை வெகுண்ட ஆசிரியனை வெகுண்டவன் தலை நோயுடையனுவன். அந்தணனைக் கொன்ற தீவினையாளன் வருந்தி அழிதற்குக் காரணமான கயநோயாளன் ஆவன். கள்ளுண்டோன் பழுதுபட்ட பல்லுடையோன் ஆவன். பொன்னைக் களவு கொண்டோன் சொத்தை நகமுடையோன் ஆவன். ஆசிரியன் மனைவியைத் தழுவினேன் குட்டநோயுடையவன் ஆவன். தன் நெஞ்சங் களிக்கும்படி இறைவன் பொருளைக் கவர்ந்துகொண்டோன் நச்சுப்பாம்பாகப் பிறப்பன்.

(வி - ம்.) செகுத்த - கொன்ற. அரியல் - கள். குநங்கி-சொத்தை நகமுடையோன். (௯௯௭)

மாயனையெள் ளினன்கோம்பி யறமறந்தான்
பூத்தமட மாதோ டார்வம்
நேயமொடு முரைபகர்ந்தா னுய்ப்புலைய
னுருக்கொள்வர் நேர்ந்த செம்பொன்
தூயவர்க்குக் கொடானிகை பகர்ந்துதவான்
வலையனிவர் சூலின் மாய்வர்
மேயவிள மையின் மாய்வர் காளையிற்பல்
விழைவுடற்ற விளிந்து போவர்.

(இ - ள்.) திருமாலை இகழ்ந்தவனும் அறச்செயலை மறந்தவனும், பூப்புப்பொழுதிலே மகளிரொடு விருப்பத்தோடும் அன்போடும் உரையாடியவனும் நாயாகவாதல் புலையனாகவாதல் பிறப்பர். எதிர்ப்பட்ட தூயவர்க்குச் செம்பொன் கொடாதவனும், தருவதாகக் கூறிப்பின்னர்க் கொடாதவனும் வலையாலுயிர் கொன்றோனும் ஆகிய இவர் நிரலே தாயின் கருவிலும், பொருந்திய குழவிப்பருவத்திலும், காளைப்பருவத்திலும் பல்வேறு அவாக்கள் வருத்த இறந்தொழிவர்.

(வி - ம்.) மாயன் - திருமால். ஈகை பகர்ந்து – ஈவதாகக்கூறி. வலையன் – வலையாலுயிர் கொன்றோன். (௯௯௮)

பொழிறடிந்தோர் தடந்தூர்த்தோர் புலானுகர்ந்தோ
ருறுப்பழுகும் புரைநோ யாளர்
கழிசிறப்பி னைவகையா கத்தொன்று
முஞற்றார்கற் புனடயா ளுள்ளம்
அழியவரை வின்மகளிர்ப் புணர்வாருந்
தெய்வமெனு மன்பி லில்லைத்
தழியினருங் கேழலொரு குடிப்பிறந்தாட்
டழீஇயினர்புண் டலைநா யென்ப.

(இ - ள்.) பூம்பொழில்களை அழித்தவரும் குளத்தைத் தூர்த்தவரும் புலாலுண்டவரும் உறுப்புக்கள் அழுகுதற்குக் காரணமான குட்டநோயுடையராவர். மிக்க மாண்புடைய கருமவேள்வி முதலிய ஐவகை வேள்வியில் ஒரு வேள்வியேனும் செய்திலாதாரும், கற்புடைய மனையாள் நெஞ்சழியும்படி விலைமகளிரைப் புணர்வோரும், கணவனே தெய்வமென்னும் பேரன்பில்லாத மனைவியைப் புணர்ந்தவரும் பன்றியாய்ப் பிறப்பர். தம் குடியிலேயே பிறந்த தையலைப் புணர்ந்தவர் புண்பட்ட தலையினையுடைய நாயாகப் பிறப்பர்.

(வி - ம்.) கழி - மிகுதி. ஐவகை யாகம் - முற்கூறப்பட்ட கருமவேள்வி முதலியன. கணவலே தெய்வம் எனும் அன்பு என்க. ஒரு குடி - தாயத்தார்குடி. (௯௯௧)

தருமர்வரல் கருதாது பொருண்மதித்துப் பிறரறச் சாலைகள்காப்போரும்
நீர்தருமிர் மைப்பயனை மதித்திறையா லயப்பூசை செய்வித் தோரும்
பருவருநா யொடுர்புலைய வுடலெடுப்பர் தமக்கன்றிப் பரர்க்கு நல்கும்
குருபரனை யிழித்தோரும் பங்குகுரு டாவர்செவி டாவர் கேட்டோர்.

(இ - ள்.) அறப்பயன் வருதல் கருதாமல் தமக்குப் பொருள் வருதலையே கருதிப் பிறருடைய அறக்கோட்டங்களைக் காவல் செய்வோரும், உழலாநின்ற இப் பிறப்பின்கண் பயன் வருதலையே கருதி இறைவன் திருக்கோயிலில் வழிபாடும் விழவும் செய்விப்போரும் நாய்பூத்றுழலும் நாயாகப் பிறந்து பின்னர்ப் புலையராகவும் பிறப்பர். தமக்கன்றிப் பிறர்க்கு அறிவு வழங்கும் நல்லாசிரியனை இகழ்ந்துரைத்தோர் முடவரும் குருடரும் ஆகப் பிறப்பர். ஆசிரியனை இகழ்ந்துரைத்தலைக் கேட்டு வாளாவிருந்தோர் செவிடராய்ப் பிறப்பார்.

(வி - ம்.) காத்தல் - அறக்கோட்ட வினைகளைக் கண்காணித்தல். இம்மைப் பயன் - பொருட்பேறு புகழ் முதலியன. பருவருதல் - துன்புறல். பரர் - பிறர். பங்கு - முடம். (௩௬௦)

ஆரியனை யெளியனென வெண்ணினவ னற்றவிழிக் கிருமி யாவன்
சேருநர வுருவினிற்புண் ணுறுகுறியு முளனெண்மை செப்பி னேன்கை
தீருமுறுப் பிலியாவன் சிவனேவற் றேவர்களைப் பூசை செய்யான்
வாரமறு மலியாவ னொக்கறழான் வறங்கூர்ந்து கண்ணோ யாள்வன்.

(இ - ள்.) நல்லாசிரியனை அறிவில் ஏழை என நினைத்தவன் கண்ணில்லாத புன்புழுவாகப் பிறப்பன். அவனே பின்பு சேராநின்ற மனிதப் பிறப்பின்கண் புண்ணுடைய ஆண்குறியையும் உடையனுவான். ஆசிரியன் ஏழ்மையுடையன் எனக் கூறியவன் கையில்லாதவனுவன், சிவபெருமானுடைய பரிவார தெய்வங்களை வழிபடாதவன் காதலற்ற அலியாகப் பிறப்பன், சுற்றத்தாரைப் பேணுதவன் வறுமை மிக்குக் கண்ணோயு முடையவன் ஆவன்.

(வி - ம்.) விழியற்ற கிருமி என்க. அவன்பின் சேருநரவுருவினில் என்க. ஏவற்றேவர் - பரிவாரதேவதைகள். வாரம் - அன்பு; காதலென்க. ஒக்கல் - சுற்றத்தார். தழான் - தழுவாதவன், வறம் - வறுமை. (௩௬௧)

அருந்தவரைத் தானுண்ட பின்னூட்டி
னேனெஞ்சி னடர்வெந் நோயன்
விருந்தினரைப் புறந்தரான் கபோலத்தின்
வெய்துயிர்க்கு நோய னுண்டி
கரந்துநுகர்ந் தானுதரக் கனன்மந்த
னடுப்பிழைத்துக் கரந்தான் வாயின்
அரந்தைபடு புண்ணுடையன் கற்புடையா
டனைவெறுத்தா னரலைக் கண்டன்.

(இ - ள்.) செயற்கரிய தவவொழுக்கமுடையோரைத் தானுண்ட பின்னர் ஊட்டியவன் நெஞ்சின்கண் வருத்தும் நோயுடையனுவான். விருந்தினரைப் பேணுதவன் கவுளின்கண் வெய்தாக வுயிர்த்தற்குக் காரணமான நோயுடையன் ஆவன். உணவினைப் பிறர்காணுமே மறைந்திருந்துண்டவன் வயிற்றுத் தீயவிந்தவனுவான். நடுவுநிலைதவறிச் சான்று கூறமறுத்து ஒளித்தவன் வாயின்கண் வருத்தந்தரும் புண்ணுடையன் ஆவன். கற்புடைய மனையாளை வெறுத்தவன் கழலை கட்டிய கழுத்துடையன் ஆவன்.

(வி - ம்.) கபோலம் - கவுள். உணவினை விருந்தினர்க்குத் தெரியாமற் கரந்து நுகர்ந்தான் என்க. உதரக்கனல் - வயிற்றுத்தீ. அரலை - கழலை. (௩௪௨)

நோயலைப்பத் தனையடைந்த பெரியோரைப்
புறந்தரா னெய்மைச் சுற்றம்
தாயுயிர்த்தான் குடிவருதொன் மையரிவரைத்
தாங்காதான் றசையூன் கோடற்
காயபெருஞ் சூழ்ச்சியினன் கள்வனவன்
றனக்கியைந்தா னனைவர் தாமும்
மேயவிழி நோயினரா யடித்துணையில்
விண்ணெனும்புண்ணுடைய ராவர்.

(இ - ள்:) நோய் வருத்துகையானே தன்பால் வந்து புகல்புக்க சான்றோரைப் பேணுது புறக்கணித்தவனும், வறியசுற்றத்தார், தாய் தந்தை தன்குடியிற் றோன்றிய பாட்டன் முதலிய முதியோர் என்னு மிவரைப் பாதுகாவாதவனும், பிற வுயிரின் தசை ஊன் முதலியவற்றைக் கொள்ளற்குரிய சூழ்ச்சியினை யுடையோனும், கள்வனும், அவனோடு இணங்கியவனும் ஆகிய இவரெல்லாம் பொருந்திய கண்ணோயுடையராகவும் கால்களிரண்டினும் விண்ணெனத் தெறிக்கும் கொடிய புண்ணுடையராகவும் ஆவர்.

(வி - ம்.) நொய்மை - ஈண்டு வறுமை. தாயையும் உயிர்த்தவனையும் என்க. உயிர்த்தான் - தந்தை. (௩௪௩)

தீம்புனற்பந் தரைச்சிதைத்தா னுதரநீர்க்
கோவையனுன் செகுத்தான் றேற்றம்
ஆம்பொழுதே விழியிலா னுன்வருத்தி
னன்கோண னுசி யாவன்
ஓம்பலுறு மூனுதி யூனுகர்ந்தா
னுறுகண்ட மாலி யாவன்
தேம்புகலாம் விளைத்திடுவா னழுகல்வா
யினன்புலையன் சினமீக் கொண்டான்.

(இ - ள்.) இனிய தண்ணீர்ப்பந்தரைச் சிதைத்தவன், வயிற்றின் கண் நீர்க்கோவை என்னும் நோயுடையன் ஆவன். ஆவினைக் கொன்றவன் பிறக்கும்போதே குருடனாய்ப் பிறப்பன். ஆக்களைத் துன்புறுத்தியவன், கோணியமூக்குடையன் ஆவன். பாதுகாத்தற்குரிய பிற வுயிர்களின் ஊன் முதலிய உணவினையுண்டவன், பொருந்திய கண்டமாலை என்னும் நோயுடையன் ஆவன். நெஞ்சம் தேம்புதற்குக் காரணமான கலகம் விளைப்பவன் அழுகிய வாயுடையன் ஆவன். வெகுளியை மேற்கொண்டவன் புலையனாய்ப் பிறப்பன்.

(வி - ம்.) தோற்றம் ஆம்பொழுது - பிறக்கும்பொழுதே. (௩௪௪)

வேறு

வெள்ளி பட்டிவை கள்ளினேன்
குட்டநோய் விரவினன் சாந்தாற்றி
கொள்ளு மேழைவா மனன்பெரு
மஞ்சிகன் கோளன்றூ சினைவிற்போன்
எள்ளும் வேட்டுவ னீயஞ்சா
மரைமுதல் விலைசெய்தா னிருங்கானம்
நள்ளு மாசுணங் கூலிநல்
காதவன் பிறர்பணி நயப்போனும்.

(இ - ள்.) வெள்ளி பட்டு முதலியவற்றைக் களவு கொண்டோன் குட்டநோய் கலக்கப்பட்டவன் ஆவன். ஆலவட்டங் களவு கொண்டோன், குறளனாய்ப் பிறப்பன். கோட் சொல்லுபவன் பெரியநாவிதனுவன், ஆடையினை விற்போன் இகழ்தற்குரிய வேடனுவன். ஈயம் சாமரை முதலியவற்றை விற்போன் பெரிய காட்டையடையும் பாம்பாகப் பிறப்பன், கூலிகொடாதவன் பிறர்பால் கூலிபெறும் அடிமையாகப் பிறப்பன்.

(வி - ம்.) கள்ளுதல் - திருடுதல். வாமனன் - குறளன். மஞ்சிகன் - நாவிதன். மாசுணம் - பாம்பு. (௩௪௫)

வேறு

கற்புளார் செயலை யிழித்தவன் காக்கைக்
கண்ணனவ் வானவர்சிவ யோகர்க்
கற்பிலார் கோடும் வாயின ரீவார்க்
கரும்பழு துரைப்பவர் புழுக்கள்
பற்படு நோயர் சமயமாய்த் தவர்பா
தகர்த்தெறுங் கொலைவிலக் கினர்கள்
பொற்பறக் கோடும் வழக்குரைத் தோரும்
பொருஞ்சல வாதரா யிழிவார்.

(இ - ள்.) கற்புடைய குலமகளிரை இகழ்ந்தவன் மாறுகண்ணன் ஆவன். வானவர்பாலும் சிவயோகியரிடத்தும் அன்பில்லாதவர்

கோணல் வாயுடையராவார். ஈவார்களுக்கு இல்லாத பழிகளை உரைப்பவர் புழுக்களாவர். சமயநெறிகளை அழித்தவர் பல்லிற் புழுவுடையர் ஆவர். தீவினையாளரை அரசன் முதலியோர் கொல்லும்போது பொய்ச் சான்றுகூறி விலக்கிவிட்டவரும் பொலிவறப் பொய்வழக்குக் கூறி னோரும் வருத்துகின்ற சலவாதராய்ப் பிறந்து இழிவடைவர்.

(வி - ம்.) காக்கைக்கண் - மாறுகண், ஒற்றைக்கண் எனினுமாம். அற்பு - அன்பு. சலவாதர் - முருடர். (௬௪௬)

எளியரை வதைத்தான் கால்கர மில்லா
னெனைத்துமுட் கரவிலா வடியார்
உளைதர வொறுத்தான் கால்கரந் தளர
வுடலுறு குட்டநோ யாளன்
அளியுறு மனையோ டலதுசூ தாதி
யயன்மட மாதர்வே சையரில்
களிதர முயன்முன் மெய்ம்மயி ரில்லான்
கழிமிடி யுற்றிரந் தழிவான்.

(இ - ள்.) ஏழைமாந்தரைக் கொன்றோன், காலும் கையுமில்லாதவனாவான். சிறிதும் நெஞ்சத்தே வஞ்சனையில்லாத மெய்யடிமையாளரை வருந்தும்படி தண்டித்தவன் கால்கைகள் தளரும்படி குட்டநோயாளனாகப் பிறப்பன். பாதுகாத்தற்குரிய மனைவியோடல்லது சூது முதலியவற்றானும் பிறன்மனைவி, வரைவின்மகளிர் முதலியோரிடத்தும் இன்புற முயன்றவன் உடலில் மயிரற்றவன் ஆவன். மேலும் மிகவறுமையுற்று ஏற்றுண்டும் வருந்துவன்.

(வி - ம்.) எனைத்தும் - சிறிதும். கழி - மிகுதி. மிடி - வறுமை. (௬௪௭)

கொண்டநோன் பிழந்தா னுறையுளை யிழப்பான்
குறுகினோர் மாலையம் பொழுது
விண்டிட விடநல் கான்மனை யவளை
விடுத்துள மழுங்குவன் பெரியோர்க்
கண்டெழுந் தெதிரான் பொருளினை யிழப்ப
னிருமுது குரவர்பாற் கருத்துள்
மண்டுமன் பில்லான் வறியனு யொன்றும்
வந்துகை கூடிடா தலைவன்.

(இ - ள்.) மேற்கொண்ட நோன்பினை விட்டுவிட்டவன் இல்லத்தை இழந்துவிடுவன். அந்தி மாலைப்பொழுதில் தன்னில்லத்திற் கெய்திய விருந்தினர் தங்குதற்கு இடங்கொடாதவன் மனைவியை இழந்து நெஞ்சுபுண்ணுவன். சான்றோரைக் கண்டுழி எழுந்துசென்று எதிர்கொள்ளாதவன் பொருளை யிழப்பன். தாய் தந்தையர்பால் மிகு

மன்பில்லாதவன் வறுமையுடையோனுய்க் கருதிய தொன்றும் கைகூடப்பெறாது திரிவன்.

(வி - ம்.) உறையுள் - வீடு. விட்டிட என்பது விண்டிட என மெலிதல் விகாரமுற்றது. விட்டிடல் - தங்குதல். இருமுதுகுரவர் - அன்னையும் அப்பனும். (௲௪௮)

வேதநுண் பொருளை யிழித்தவன் வேடன்
வேதநூ லிழந்தவன் புலையன்
வேதமெய் யினரை யிழித்தவன் மந்தன்
வேதியர் பொருள்கொண்டோன் விட்டில்
வேதநல் வழிவிட் டிச்சையா றெல்லாம்
விளைத்தவ னுருவினு மனத்தும்
வேதனை யென்றுந் தணப்புருன் முழுதும்
விதப்புறி னும்பர்நா ளுலக்கும்.

(இ - ள்.) வேதங்கூறும் நுண்பொருளை இகழ்ந்தவன் வேடனவன். வேதநூலைப் புறக்கணித்தவன் புலையனவான். வேதியரை இகழ்ந்தவன் மந்தனவன். வேதியர் பொருளைக் கவர்ந்துகொண்டவன் விட்டிலாய்ப் பிறப்பன். வேதங்கூறிய நன்னெறியை விடுத்துத் தன் அவாச் சென்றவழி எல்லாச் செயலையுஞ் செய்தவன் உடலானும் நெஞ்சானும் எப்பொழுதும் துன்பத்தினின்றும் பிரியான். அகத்தியனே இவற்றை விதந்து கூறின் அமரர் ஆயுளும் கழிந்தொழியும்.

(வி - ம்.) வேதநுண் பொருள் - இறை உயிர் கட்டு முதலியன. நூலிழத்தல் - நூலோதாது புறக்கணித்திடுதல். விட்டில் - ஒளியில் வீழ்ந்து மாயும் ஒரு பூச்சி. இச்சை - அவா. தேவராயுள் - நெடிதாகலின் உம்பர்நாள் என்றார். நாளும் எனல்வேண்டிய உயர்வு சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. (௲௪௯)

பற்பல வதிபா தகமிழைத் தோர்பவ்
வீப்புழுப் பற்பல்கா லாவர்
பற்பல மாபா தகம்புரிந் தோர்கள்
பற்பல்காற் பன்றிமெய் யெடுப்பார்
பற்பல மாபா தகக்கினங் குயின்றோர்
பற்பல்கா லுயுட றரிப்பார்
பற்பல வுபபா தகம்விளைத் தோர்கள்
பற்பல்கா லிழிஞரா யுதிப்பார்.

(இ - ள்.) மிகப்பலவாகிய மிகைத்தீவினைகளைச் செய்தோர் பற்பலமுறை மலப்புழுவாவர். மிகப்பல பெருந்தீவினைகளைச் செய்தோர் பன்முறையும் பன்றியாகப் பிறப்பர். மிகப்பலவாகிய பெருந்தீவினைக்கின வினைகளைச் செய்தோர் பலமுறையும் நாயாகப் பிறப்பர்.

மிகப்பலவாகிய தீவினைகளைச் செய்தோர் மிகப்பலவாகியமுறை புலைரு ராய்ப் பிறவாநிற்பர்.

(வி - ம்.) பள்ளிப்புழு - மலப்புழு. பாதகக்கு - பாதகத்திற்கு. இழிஞர் - புலையர். (௩௩௦)

ஒங்குபா தகமூன் றவற்றின மூன்றென் றுரைத்தமூ விருதிறத் தொன்று
தாங்குமுன் னுடலிற் புரிந்தவ னதுவே சார்ந்தமற் றுடலினும் புரிவான்
தீங்கிது கழுவாய் நூன்முறை யாற்றிற் றீருந்தீ ராதுஞற் றுனேல்
வீங்கிய செல்ல னரகுழந் துரைத்த விறிலாப் பவமெடுத் துழல்வான்.

(இ - ள்) கொடுமையாலே உயர்ந்த தீவினைகள் மூன்றுவகைப் படும்; அவற்றிற்கு இனமான தீவினையும் மூன்றுவகைப்படும் என்று யாம் ஈண்டுக்கூறிய இருவகைத் தீவினைகளில் வைத்து ஒருவன் தான் எடுத்திருந்த முற்பிறப்புடலின்கண் யாதேனும் ஒன்றைச் செய்தவன் இறந்து மீண்டும் எடுத்த மறுப்பிறப்புடலினும் அதனையே மேற் கொண்டு செய்யாநிற்பன். இத்தகைய பாதகனைப் பழக்கமான நிலை நூல்கள் விதித்த முறைப்படி கழுவாய் செய்யின் தீர்ந்தொழியும். செய்யானெனின், நிரயம் புகுந்து மிக்க துன்பத்தையே நுகர்ந்து யாம் ஈண்டுரைத்த முடிவிலாப் பிறப்புக்களை எடுத்து எடுத்து வருந்தாநிற்பன்.

(வி - ம்.) முன்னுடல் - முற்பிறப்பிலிருந்த வுடல். நீங்காகிய இஃதென்க. செல்லல் - துன்பம். பவம் - பிறப்பு. (௩௩௧)

புண்ணியம் பாவ மிதுவிது வென்றும்
புரிந்தவர்க் கிப்பய னென்றும்
வண்மையி னிதுகா றும்பகுத் துரைத்தாம்
வார்சடைக் கடவுள்பூ சனையால்
நண்ணிய ஞானத் திரண்டையு மறுத்து
நரகுமண் டுறக்கமு விடத்தும்
அண்முறு தைந்து மலங்களுந் துமிய
வமர்சிவ யோகமற் றருள்வாம்.

(இ - ள்.) அறம் இத்தன்மைத் தென்றும் தீவினை இத்தன்மைத் தென்றும் இவற்றைச் செய்தோர்க் கெய்தும் பயன்கள் இவை இவை என்றும் வழங்குமுறைமையானே இதுகாறும் கூறுபடுத்திக் கூறினோம். நெடிய சடையினையுடைய இறைவன் வழிபாட்டினாலே வந்தெய்திய மெய்யறிவாகிய வாளினாலே நல்வினை தீவினைகளாகிய இரண்டு தளை களையும் அறுத்து வீசி இவற்றால் எய்தும் நிரயமும் நிலவுலகும் துறக்க மும் என்னும் மூன்றிடங்களையும் அணுகாமலே இவற்றிற்குக் காரண மான ஆணவ முதலிய ஐந்து மலங்களும் அழியும்படி அமராநின்ற சிவ யோக நிலையினை இனி அருளிச் செய்வாம் கேட்கக் கடவை.

(வி - ம்.) புண்ணியமிது என்றும் பாவமிது வென்றும் என ஓட்டுக. வண்மை - அறிவு வழங்கும் முறைமை. (௩௩௨)

மேவரு ஞான மிரண்டவற் றொன்று
விமலனார் பாதநா மரையே
ஓவறு மன்பி னுணர்திரு வளிக்கு
மொப்பிலா வுயர்கலை ஞானம்
தாவருர் பவத்தை வேரொடுங் களையுந்
தக்கமெய்ஞ் ஞானமொன் றிவற்றால்
சாவதும் பிறப்புந் தணப்புறச் சிவத்தைச்
சார்ந்தது வாய்நிற்றல் யோகம்.

(இ - ள்.) எய்துதற் கரிய ஞானம் இரண்டு வகைப்படும். அவற்றுள் ஒன்று இறைவனுடைய திருவடித்தாமரைகளையே ஒழிவில்லாத மெய்யன்போடு உணர்வதாகிய செல்வத்தைத் தருகின்ற ஒப்பில்லாத மிக உயர்ந்த கலைகளாகிய சிவாகமங்களை ஓதியுணர்ந்த ஞானமாகும். மற்றொன்று குற்றம் வருதற்கிடமான பிறப்பினை வேரோடுங் களைந்துவிடுந் தகுதியுடைய திருவருள் ஞானமாகும். இவ்விருவகைப்பட்ட ஞானங்களுள் யாதானுமொன்றால் இறப்பும் பிறப்பும் இல்லையாம்படி இறைவன் திருவருளைச் சார்ந்து தான் அத்திருவருளாகவே நிற்பது யோகம் எனப்படும்.

(வி - ம்.) விமலனார் - இறைவன். ஓவறும் - ஒழிதலில்லாத. கலையை ஓதியுணர்ந்த ஞானம் என்க. ஒன்று கலைஞானம் மற்றொன்று திருவருள் ஞானம். அஃதாவது "பண்டைநற்றவத்தாலே பிறப்போடே தோன்றிப் பரமனைப் பத்திப் பண்ணற் குரிய ஞானம். (௩௫௩)

இரண்டறப் பண்டே கலந்திடு மறுதி
முத்தனு லிருண்மல மாயை
திரண்டவன் கருமந் தீர்தர வவனைத்
தெரிசித்துத் தன்னையுங் கண்டு
மரண்டகு முலகிற் றுயின்றுல குறங்கு
முழுத்தவப் பொருள்வயின் விழித்தோன்
அரண்டக வாண்ட வமலனே ஞேய
மாகிய வருஞ்சிவ யோகி.

(இ - ள்.) தான் என அவனென இரண்டு தன்மையும் அறத் தானே என்னும்படி பண்டே உயிரொடுங் கலந்துநின்ற அநாதிமுத்தனாகிய இறைவன் திருவருளானே ஆணவமும் மாயையும் திரண்ட வலிய கன்மமும் என்னும் இம்மூன்றும் கழிய மெய்ப்பொருளாகிய அவ்விறைவனைக் கண்டு மேலும் அவ்வாற்றானே உயிராகிய தன்னையுங் கண்டு மாறுபடுந் தகுதியுடைய நிலையுதலில்லாத உலகப் பொருள்களிடத்தே உறக்கத்தை மேற்கொண்டும் பெத்தநிலையினராகிய உலகோர் துயின்றிருத்தற் கிடமான முழுமுதலாகிய அம் மெய்ப்பொருளிடத்தே தனது அறிவுக்கண்ணை விழித்துப் பார்த்திருப்பவனே, பர்து

காவல் அமையும்படி ஆள்கின்ற அவ்விறைவனே தனக்குக் காட்சிப் பொருளாகப்பெற்ற சிவயோகி எனப்படுவான்.

(வி - ம்.) அநாதிமுத்தன் - கடவுள். இருண்மலம் - ஆணவமலம். கருமம் - இருவினை. உயிர்தான் இறைவனைக் காணுமாற்றானன்றித் தன்னைக் காணமாட்டாமை தோன்ற அவனைத் தரிசித்துத் தன்னையுங் கண்டு என்றார். உலகோர் ஒழுக்கத்தே தான் துயின்று உலகோர் துயிலும் ஞானவொழுக்கத்தாலாகிய மெய்க்காட்சியில் தான் விழித்து என்க. (௫௯௪)

காட்சியே கருத லுரையளா வையினுற்
  காணுறு மெவ்வகைப் பொருளும்
மாட்சியி னையந் திரிபறத் தெரித்து
  மயங்குயிர்க் கறிவினை யாக்கும்
ஆட்சியி னமைந்தோ னநாதியே முத்த
  னரும்பொருள் விளக்குமவ் வுரையும்
மீட்சியில் கருணை யுடையவவ் வாத்தன்
  விதித்தருள் வேதமா கமமே.

(இ - ள்.) காட்சியளவை, கருதலளவை, உரையளவை என்னும் மூவகை அளவைகளானும் காணப்படுகின்ற காட்சிப் பொருள் கருத்துப் பொருள் முதலிய பலவகைப் பொருள்களின் இயல்பையும் மாட்சிமையுண்டாக ஐயமும் திரியும் இல்லாதபடி அறிவித்து இவற்றால் மயங்காநின்ற உயிரினங்கட்கு மெய்யுணர்வினை உண்டாக்குமொரு திருவருளாட்சிக்கண் எஞ்ஞான்றும் நிலைபெற்றுள்ள இறைவன் அநாதியே மலங்களாற் கட்டுண்ணாத முத்தன் ஆவான். இப்பொருளியல்பினை விளக்குங் கருவியாகிய அவ்வுரைத் தொகுதியே அவ்விறைவன் வகுத்தருளிய வேதமும் ஆகமங்களுமாம்.

(வி - ம்.) இறைவன் அநாதிமுத்தன் அவன் உரை வேதமும் ஆகமமுமாம் என்றவாறு. ஏனைய அளவைகளும் இம்மூன்றனுள் அடங்கும். எனவே, சிவபெருமானே முழுமுதற்கடவுள், வேதாகமங்களே மெய்ந்நூல்கள் ஏனைய கடவுளர் உயிரினங்களே ஏனைய நூல் பசு நூல்களே என்றவாறாயிற்று. (௫௯௫)

பரமதக் கடலுட் டுளைகுநர் தாமும் பைப்பய வுயர்ந்துமே லில்லா
வரமலி சைவ மருவுவ ரிதன்கண் மரபினு லொழுக லாற்றி
விரவுவ ரிறைவன் பாததா மரையை மேவருஞ் சைவமே சார்ந்தும்
உரமறு புறநூ லொழுகுந ரமிழ்த மொரீஇவிடம் பருகுநர் புரைவார்.

(இ - ள்.) இனிப் புறச்சமயங்களாகிய கடல்களிலே வீழ்ந்து தத்தளிப்பவர் தாமும் ஒருகாலத்து உண்மையுணர்ந்து மெல்லமெல்ல ஒப்புயர்வில்லாததும் பேறுகள் மிகுதற்கிடமானதுமாகிய இச் சைவ சமயத்தே புகுவர். புக்கவழி இச் சமயங்காட்டும் அறவொழுக்கங்களை

மேற்கொண்டியற்றி எம்பெருமானுடைய திருவடிமலரிற் கலந்துய்வர். இங்ஙனமாகவும் எய்துதற்கரிய சைவசமயத்தார் குடியிலே பிறந்து வைத்தும் அறிவு கெடுதற்குக் காரணமான புறச்சமய நூல் காட்டும் புன்னெறியிலே ஒழுகாநின்ற மடவோர், எளிதே கிடைத்த அமிழ்தத்தை உகுத்துவிட்டு நஞ்சினைப் பருகுகின்ற மடவோரையே ஒப்பாரல்லரோ!

(வி - ம்.) பரமதம் - புறச்சமயம். அவை உலோகாயத முதலியன என்க. அறம் - வழிபாடு முதலியன. அவ்வச் சமயத்தினின்று செய்யும் அறமுண்மை காரணமாகச் சைவம் மருவுவர் என்றவாறு. உரம் - அறிவு; வலிமையுமாம். (௫௯௬)

பரிதியின் மதியின் வேறுபல் பொருளிற்
பயின்றிருள் பாற்றியொள் ளொளியைத்
தருவதோ ரழலே யதுவென வயனு
தியருழைத் தவிர்ந்துதன் றொழிலைப்
பொருவரு மிறையே புரியுமீ துணரார்
புகர்படு மோரோவொரு நூல்கொண்
டொருபர மயனை மாயனை மற்றை
யும்பரை யுயிரினைக் கிளப்பார்.

(இ - ள்.) ஞாயிற்றின்கண்ணும் திங்களின்கண்ணும் விண்மீன் விளக்கு முதலிய பிறபொருள்களிடத்தும் பொருந்திப் புறவிருளை யகற்றிப் பேரொளியை வழங்காநிற்பது தீ என்னும் அவ்வொரு பொருளே யன்றே; அங்ஙனமே மலரோன் முதலிய தேவரிடத்தே ஒப்பற்ற இறைவன் தன் ஆணையை நிறுத்தி அவர் வாயிலாய்த் தனக்குரிய படைப்பு முதலிய தொழில்களை இயற்றாநிற்பன். இவ்வுண்மையுணரும் மதுகையில்லாதோர், குற்றமுடைய ஒவ்வொரு நூலையே ஓதி மலரோன் மாயோன் பிறதேவர் தம்முயிர் என்னுமிவரையே ஒப்பற்ற முழுமுதற் கடவுளர் என்று மயங்கிக் கூறாநிற்பர்.

(வி - ம்.) பாற்றி - அகற்றி. ஒள்ளொளி - பேரொளி. தவிர்ந்து - தங்கி. பொருவருமிறை - ஒப்பற்ற சிவபெருமான். புகர் - குற்றம். உயிரினைப் பரமென்போர் மாயாவாதிகள். (௫௯௭)

விரவிய மாயா வுருவினைக் கடந்து
விளங்குமா யாவுரு வுடையோன்
பரசிவன் மாயா வுருவினை யுடையோர்
பரமல ருயிரெனப் படுவார்
புரவியன் மாயா வுருவுரு தொழியிற்
போக்குயிர்க் கறிவுற லின்றும்
வரமரு ளரனுன் மற்றிரு வர்களும்
வயங்குமுத் தொழிலினைப் படுவார்.

(இ - ள்.) உயிரோடு கலந்த மாயைதரும் உடலினைக் கடந்து திகழுகின்ற இறவாத அருட்டிருமேனியுடையவன் பரமசிவன் ஒருவனே. மாயைதரும் உருவத்தையுடைய பிரமன் முதலிய தேவர்களும் உயிரினமே என்று கூறப்படுவர்; இறைவர் ஆகார். இவர் முதலிய உயிரினங்கட்குப் புறத்ததற்றன்மையுடைய மாயையுடல் பொருந்தாதொழியின் மெய்யறிவும் பொருந்துதலின்றும். வரந்தருமாண்புடையபரமசிவனேலே பிரமதேவனும் திருமாலுமாகிய இருபெருந்தேவரும் விளங்குகின்ற படைப்பு முதலிய முத்தொழிலின்கட்பட் டடங்காகிற்பர்.

(வி - ம்.) மாயாவுரு - இறவாத அருட்டிருமேனி. பிரமனையும் திருமாலையும் பரமசிவனே படைத்துக் காத்து அழிப்பன் என்றவாறு. (௩௰௮)

அனாதியே யமலன் சச்சிதா னந்த
 னரன்பதி யனாதியே மலத்தில்
தனாதியன் மறைய விரவிய தான்மாச்
 சாற்றிய மலத்தொடு மாயை
மனாதிநின் றுயிர்க்குங் கருமமு மனாதி
 மாயையுங் கருமமு மானால்
பினாதியிற் பந்தம் பந்தமோ ரிரண்டும்
 பேர்க்குவன் பதியெனப் படுவான்.

(இ - ள்.) பரமசிவன் அனாதியாகவே மலமற்றவன்; உண்மை அறிவு இன்பம் என்னும் முப்பண்புகளையும் இயல்பாகவே யுடையன்; அவனே இறைவன் ஆவன். இனி, உயிர் அனாதியாகவே ஆணவ மலத்தோடு தனது உண்மை அறிவு இன்பம் என்னும் மூன்றியல்பும் மறையும்படி கலந்துளது. இனி ஈண்டுக் கூறப்பட்ட சகசமலத்தோடு மாயையும் மனமுதலியவற்றைப்பற்றி உயிர்க்கும் கருமமாகிய மலங்களும் அனாதியேயாம். அங்ஙனமாயினும் மாயையும் கருமமும் படைப்புக் காலத்தே கூட்டப்பட்ட ஆதியையுடைய கட்டுகளாம். எனவே இத்தொடக்கமுடைய கட்டும் தொடக்கமேயில்லாத ஆணவமலக் கட்டும் ஆகிய இருவேறுவகைக் கட்டுகளையும் உயிரினின்றும் விடுவிப்பவன் ஆகிய அப்பர மசிவனே இறைவன் என்று கூறப்படுவான்.

(வி - ம்.) ஆனால் - ஆனாலும் எனல் வேண்டிய உம்மை செய்யுள் விகாரத்தாற் றொக்கது. அங்ஙனமாயினும் என்க. ஆதியிற் பந்தம் என்றது படைப்புத் தொடக்கத்தே பந்தமாகிய என்றவாறு. இதனால் ஆணவமலத்தைச் சகசமலம் என்றும் ஏனையிரண்டனையும் ஆகந்துக மலம் என்றும் கூறுப. (௩௰௯)

செம்புதன் களிம்பு பற்றறி யாது
 களிம்புதான் றீர்வது மில்லை
பைம்பொனாக் குவதோர் மருந்துமம் மருந்தின்
 பாங்கறி புலவனு முளரால்

வெம்பிய மலத்தை யுயிர்விட வறியா
விடுவது மலந்தனக் கில்லை
நம்பிய மாயை யுருவினைக் கொடுத்தே
நாயகன் புகர்மலங் கழிக்கும்.

(இ - ள்.) செம்பானது தன்பாலமைந்த களிம்பினைத் தானே போக்கிக்கொள்ள அறியமாட்டாது. அக்களிம்பும் தானே அகலு மியல்புடையதன்று. அச்செம்பிற் களிம்பினை அகற்றிப் பசிய பொன் னாகச் செய்யும் ஒருமருந்தும், அம்மருந்தியல்பறிந்த அறிஞரும் உளர் அல்லரோ. அங்ஙனமே, தாம் வெம்புதற்குக் காரணமான ஆணவ மலத்தை உயிர்கள் தாமே விடவும் அறியா. அம்மலமும் தானே விடு மியல்புடையதின்று. உயிர்களால் விரும்பும் மாயையாலான உடலை இறைவன் அவற்றினுக்குக் கொடுத்தே குற்றமாகிய சகசமலத்தைக் கெடுத்தருளுவன்.

(வி - ம்.) செம்பு - உயிர்க்குவமை. களிம்பு - ஆணவமலத்திற் குவமை. மருந்து - மாயைக்குவமை. மருத்துவப்புலவர், இறைவனுக் குவமை. (௩௬0)

விளக்கது தானே தோன்றுத லில்லை
விழிவிளக் காக்குமா றறியா
துளக்கிரு ளரிய விளக்கினை யொருவன்
றேற்றியங் களித்தென வாக்கை
அளக்கரும் பரம னளித்தலும் விளக்கி
னலர்விழி பொருளினுற் றுங்குக்
களக்குறும் வினையிற் கதித்துட லீட்டிக்
கறங்கெனச் சுழல்வன வுயிரே.

(இ - ள்.) விளக்குத் தானே தோன்றமாட்டாது. விழிகளும் தமக்கின்றியமையாத விளக்கினைப் படைத்துக்கொள்ளும் வழியறிய மாட்டா. அவ்வுயிரினை வருத்தும் இருள்கெடும்படி ஒருவன் விளக் கினை யுண்டாக்கி அவ்விழிகட்கு வழங்கினாற் போன்று, உயிரால் அளத்தற்கரிய பரமசிவன் கருணையாலே மாயையினின்றும் உடலைப் படைத்து உயிர்கட்குக் கொடுத்த வளவிலே, அவ்விளக்கின் துணையால் மலர்ந்த அவ்விழிகள் பொருள்களிலே படர்ந்தாற்போன்று, உயிர்கள் உடல் பெற்றவுடனே குற்றமுடைய வினையிலே இயங்கி மேலும் மேலும் அவ்வினைகட் கேற்ற உடலினை (இறைவன்தர)ப் பெற்றுத் துறக்கம்நிலம் நிரயமாகிய மேலுங்கீழும் காற்றாடிபோன்று பிறப்பிறப் பிலே பட்டுச் சுழலாநிற்கும்.

(வி - ம்.) விளக்கு - உடலுக்குவமை. விழி - உயிர்க்குவமை. ஒருவன் - இறைவனுக்குவமை. களக்கு - குற்றம். (௩௬௧)

வேறு

உடலினைக் கரணந் தன்னைப் பொறியினை யுயிரேன் பாரவ்
வுடல்பொறி கரண மெல்லா ... றோரார்

சடமுடல் கரண மாவி சார்ந்தலா லியங்கா வற்றே
மடனுயிர் தானும் வள்ள றனையன்றி றியக்க மின்றே.

(இ - ள்.) இனி உடலே உயிரென்பாரும், மனமுதலிய உட்கருவிகளை உயிரென்பாரும், கண் முதலிய புறக்கருவிகளை உயிரென்பாரும் உளர். இவரெல்லாம் அவ்வுடலும் உட்கருவியும் புறக்கருவியுமாகிய இவற்றையெல்லாம் தனக்குடைமையாகப் பெற்ற பொருளே உயிர் என்பதனை உணராதவரே யாவர். உடலும் கருவிகளும் உயிரில் பொருள்; இவை உயிர் தம்மைப் பொருந்துழி இயங்குவனவன்றித் தாமே இயங்குவன வல்ல. இங்ஙனமே இவையிற்றை இயக்கும் அவ்வுயிர்தானும் தானே அறியும் இயல்புடைத்தன்று இறைவன் அறிவிக்க அறியுமியல்புடைத்தாம்.

(வி - ம்.) உடலினை உயிரென்போர், உலோகாயதர். இவருள் ஒருசாரார் கரணங்களை உயிரென்பர்; பொறியையுயிரென்போர் புத்தர். ஈற்றில் நின்ற இய்க்கம் அறிவியக்கம். தானே அறியும் தன்மையில்லாமல் மடம்பட்ட உயிர் என்க. (௧௩௨)

தெருளுயி ரணுவே யென்பர் தேகத்தி னொருபா லென்பர்
உருவினின் முழுது மென்ப ரோங்குபூ ரணமே யென்பர்
பெருமுறை யுடன்முற் றோர்ந்து பின்னத்திற் பின்ன மின்றிப்
பொருடோறும் பற்றி நீங்குந் தன்மையிற் புலன்கொளாதார்.

(இ - ள்.) இனி ஒருசாரார் உயிரின் உருவம் அணு என்பார் இவர், உடல் பல துளையுடையதாதலைக் கருதிற்றிலர். ஒருசாரார் உயிர் உடலில் ஓரிடத்தே இருக்குமென்பர்; இவர் உடல் முழுதும் உணருமியல்புடைத்தாதலை ஓர்ந்திலர். வேறுசிலர் உயிர் உடல் முழுதும் வியாபித்திருக்கும் என்பர், இவர் உடலின்கண் உறுப்புத் துண்டிக்கப் பட்டவிடத்து உயிர் துண்டுபடாமையை நோக்கிற்றிலர். வேறுசிலர் உயிர் யாண்டும் வியாபகமாயிருக்கும் என்பர். இவர் உயிர் தான் பற்றினதே பற்று யழுந்திப் பின் வேறு பொருளிற் சென்றழுந்துதலை உணர்ந்திலர்.

(வி - ம்.) அணு முதலியவற்றிற்கு முறை முதலியவற்றை நிரனிறையாகக் கொள்க. அணுவென்போர் நையாயிகரும் பாஞ்சராத்திரியரும்; ஒருபால் என்போர் கருமயோகியர். உருமுழுதுமென்போர் அருகர். பூரணமென்போர் மாயாவாதியர். இச்செய்யுளில் அவர் அவர் கொள்கைகட்கும் பொருந்தாமை மிக நுணுக்கமாகக் கூறப்பட்டமை உணர்க. (௧௩௩)

நிறைசிவத் தடக்கஞ் சத்தி நிருமலிக் கடக்க மான்மா
மறைமல மவற்ற டக்க மன்னிய வவற்றின் சத்தி
அறையுயிர்ச் சத்தி தன்பா லடக்கமே மாயை மாயை
பொறையுயிர் காரி யங்க ளதனிடை யடக்கம் பூணும்.

(இ - ள்.) யாண்டும் நிறைந்துள்ள இறைவன்பால் இறைவியாகிய சத்தி அடங்கும், மலமற்ற அச்சத்தியின்பால் உயிர்கள் அடங்குவன

வாம். உயிர்நிலை மறைக்கும் மலம் அவ்வுயிரின்பாலடங்கும். அம் மலசத்திகள் மன்றிக் கூறப்பட்ட உயிரினது சத்தியின்பால் அடங்கும். இனி மாயையும் கன்மங்களும் அவ் வுயிர்ச்சத்தியின் பாலே அடங்கு வனவாம்.

(வி - ம்.) இது மலத்தினும் உயிர் வியாபகமானது; உயிரினும் சத்தி வியாபகம்; சத்தியினும் இறைவன் வியாபகமுடையான் என்றவாறு மாம். (௫௯௪)

வியாபக வியாத்தி யான்மா வினின்விளங் கமலன் சத்தி
வியாப்பிய வியாத்தி யான்ம சத்தியின் விரவு மாயை
வியாபக வியாப்பி யங்க ளின்றியே சமத்தின் மேவும்
வியாத்தியே யுயிரு மொன்றாய் விரவிருண் மலமு மாதோ.

(இ - ள்.) உயிரினில் விளங்காநின்ற இறைவன் சத்தி அதற்கு வியாபகமாய்நின்றே அதனோடு சமமாகவும் நிறைந்துநிற்கும். இனி உயிர்ச்சத்தியிற் கலந்த மாயை அதற்கு அடங்கிநின்றே அதனோடு சமனாகவும் நிறைந்து நிற்கும். இனி உயிரும் அதனோடு இரண்டறக் கலந்த ஆணவமலமும் தம்முள் மிகையும் குறையும் இல்லாத சமமான தொரு நிலையினையுடையனவே யாகும்.

(வி - ம்.) வியாபகம் - யாண்டுமிருத்தல். வியாப்பியம் ஒன்றன் அகத்தே அடங்கி நிறைதல். வியாத்தி - சமனிறைவு. (௫௯௫)

வியாபக மலமான் மாவுக் கென்றிடின் வீடு சேரா
வியாப்பிய மலமான் மாவுக் கென்றிடின் விரவா பந்தம்
விபாபக வியாப்பி யங்க ளின்றியே சமத்தின் மேவு
வியாத்தியே நீக்க நீங்கி விமலனி லடங்கு மாற்றால்.

(இ - ள்.) ஆணவமலம் உயிரினும் மிக்க நிறைவுடையதென்னின் உயிர்கள் எக்காலத்தும் விடுதலை பெறமாட்டாது. இனி ஆணவமலம் உயிர்க்கு அடங்கியதொரு நிறைவுடைத் தென்றாலோ உயிர் அதனாற் கட்டுண்டிரா. இவை இரண்டும் இறைவனால் விலக்குண்டு அவன் பாலே அடங்குதலாலே இவையிரண்டும் தம்முள் மிகையும் குறையும் இல்லாத சமனிறைவாகிய வியாத்தியே என்றுணரலாம்.

(வி - ம்.) மலம் - ஆணவமலம். வீடு - விடுதலை. பந்தம்-கட்டு. (௫௯௬)

நீக்கற விராவி நின்ற நிமலனு ளிருக்குங் காலும்
தாக்கிய மலமேவ் வாறு தணக்குமென் றையங் கொள்ளல்
பூக்கஞு றருவி னீரம் புல்பரு வத்துண் மேய
தீக்கடை பவனு லோங்கிச் செறிந்தெலாந் தானே யாகும்.

(இ - ள்.) அங்கிங் கெனாதபடி யாண்டும் நிறைந்துநின்ற இறைவன் உள்ளே இருக்கவேயும், உயிரைக் கட்டிய ஆணவமலம் பின்னர்

எவ்வாறு உயிரினின்றும் அகலும்? என்றொரு ஐயத்தைக் கொள்ளாதே. மலர் செறிந்த மரத்தினுள்ளே அது பசுமையா யிருக்குந் துணையும் வாளாவிருந்த நெருப்புப்பின் அம்மரம் ஈரம் புலர்ந்துழித் தீக்கடைவோனாற் றூண்டப்பட்டு வளர்ந்து அம்மரமுழுதும் பற்றி அனைத்தையும் தன்மயமேயாக்கிவிடுதல் கண்டாயல்லையோ; அங்ஙனமே இதனையும் கொள்க.

(வி - ம்.) மலத்தாற் கட்டுண்ட உயிரின்கண் அது பக்குவமெய் துங்காறும் வாளாவிருந்து அம்மலம் பரிபக்குவமுற்றவுடன் இறைவன் அதனைக் கெடச் செய்வன் என்றவாறு. (௧௬௭)

கதிரவ னெழுத லோடுங் கஞலிரு ளென்ன மாயும்
முதிர்மலம் விளக்கி னுக்கை முகந்ததன் வினைபோங் காறும்
வதியும்வாள் விழியி னுவி வாங்கிய வருளி னின்றும்
பதிவயிற் பண்டே நின்ற பான்மையி னுணர்ந்தே நிற்கும்.

(இ - ள்.) ஞாயிற்று மண்டிலம் தோன்றியபொழுதே நிரம்பிய இருள் (தான் கெடாதே) தனது சத்திகெட்டுப் போதல் போன்று ஆணவமலம் உயிரின்கண் அருள் மிக்கபொழுது சத்திகெட்டொழியும். உயிர் தான் எடுத்துக்கொண்ட உடல் முகந்துகொண்ட பிராரத்தவினை முடியுந் துணையும் விளக்கின் முன்னின்ற விழி இருளினை உணர்ந்தும் உணராமலும் இருத்தல் போன்று தன்னை விழுங்கிக்கொண்ட அருளி னூடே யிருக்கவேயும் பண்டுபெத்த நிலையிலே இறைவன்பாலிருந்தும் உலகினை உணர்ந்து நின்றாற்போன்றே உலகினை உணர்ந்தே யிருக்கும்.

(வி - ம்.) கஞலுதல் - செறிதல். முதிர்மலம் - ஆணவமலம் வினை - பிராரத்தம். (௧௬௮)

நுண்ணியன் சத்திக் கண்ண னுண்ணிய ளுயிர்க்குச் சத்தி
நுண்ணிய துயிர்தன் சத்திக் கதுவுநுண் ணியது நோய்க்குத்
திண்ணிய விந்த நோயைத் தீர்மருந் துடலே தீர்ப்பான்
அண்ணலே யவனே யா்ள னலன்மருத் துவன்வே றில்லை.

(இ - ள்.) இறைவன் இறைவியினுங்காட்டில் நுண்ணியன். அச் சத்தி உயிரினுங் காட்டில் நுண்மையுடையள். அவ்வுயிர்தானும் அதன் சத்தியினுங்காட்டில் நுண்மையுடையது. அவ்வுயிர்ச்சத்தி மலத்தினுங் காட்டில் நுண்ணிது. திண்ணிதான இந்த மலமாகிய நோயைத் தீர்க்கும் மருந்தே உடல். மருத்துவன் இறைவனே. அவன் அந்நோயாற் பற்றப்படாதவன். அவனையன்றி மருத்துவன் வேறுயாருமில்லை.

(வி - ம்.) நோய் - மலம். தீர்மருந்து - வினைத்தொகை. மலத்தாற் பற்றப்படாதார் பிறரிலர் ஆகலின் மருத்துவரும் பிறர்இலர் என்றவாறு. (௧௬௯)

உருத்திரன் சத்து வத்தி னிராசதத் துவன வூர்தி
உருத்தமோ குணத்தின் வேதன் றனையுயிர்த் துவரா லாக்கி

**இருத்திமாய்த் தவரோ டெல்லா மிறுக்குமவ் விறையை யுந்தக்**
**கருத்தரு ளொருவ னைக் கருதுறிற் கழுவா யின்றே.**

(இ - ள்.) பரமசிவன் சத்துவகுணத்தினின்றும் உருத்திரனையும் இராசதகுணத்தினின்றுந் திருமாலையும் தமோகுணத்தினின்றும் உருவ முடைய பிரமதேவனையும் தோற்றுவித்து இம்மூத்தேவர்களாலும் படைப்பித்து நிறுத்தி அழித்துப் பின்னர் அத்தேவரோடும் அனைத்தையும் அழித்தருளுவன். அத்தகைய முழுமுதல்வனை இக்கடவுளருள் ஒருவனாகக் கருதுவாரெனின் அத்தீவினைக்குக் கழுவாயொன்று யாம் நூலிற் கண்டிலேம்.

(வி - ம்.) உருத்திரன் - சீகண்டபரமன். உவணம் - கருடன். உருவேதன் என இயைக்க. வேதன் - பிரமதேவன். உவர் - இவர். உந்த - இந்த. (௬௭0)

**பருவமிக் குடையோ ரெல்லாம் பண்டைவல் வினையி னோடும்**
**இருண்மல மாதி மூன்று மிரிதர வீண்டே முத்தி**
**மருவுவர் பருவத் தாழ்வான் மலரடி கலக்க மாட்டா**
**தொருவிலன் புஞற்றி னோர்க ளூர்த்துவ புவன நண்ணி.**

(இ - ள்.) மலபரிபாகமும் இருவினை யொப்பும் கைவரப்பெற்ற சான்றோர் எல்லாம் பண்டைப் பிறப்புக்களிலே ஈட்டி வலிய வினைகளோடு ஆணவ முதலிய மூன்று மலமும் தஞ்சத்திகெட்டொழிய இம்மையிலேயே இவ்வுலகத்திலேயே பரமுத்தியிற்றலைப்படுவர். இனிப் பருவக் குறைவு காரணமாக இங்ஙனம் இறைவன் திருவடிகளை எய்தமாட்டாமல் நீங்காத அன்பினாலே சரியை முதலிய நெறிகளில் நின்றொழுகினோரும் சுத்தவித்தியா புவனங்களை எய்தி.

(வி - ம்.) பருவம் - மலபரிபாகம். இருண்மலம் ஆதிமூன்று - ஆணவம், மாயை, கன்மங்கள். பருவத்தாழ்வு - போதிய பரிபக்குவமின்மை. ஊர்த்துவ புவனம் என்றது சுத்தவித்தியாபுவனத்தை. (௬௭௧)

**அளப்பரும் போகந் துய்த்திட் டகிலமு மொடுங்கும் போது**
**வளப்படு மிறைவன் பாத மருவுவர் சில்லோர் சில்லோர்**
**திளைப்புறு திதியா தாரஞ் சேர்ந்துவீ டுறுவர் சேர்ந்த**
**தளைப்புறு திதிவீழ் காலைச் சிவத்தினைச் சார்வர் சில்லோர்.**

(இ - ள்.) அவ்விடத்தே எல்லையற்ற இன்பத்தை நுகர்ந்திருந்து முழுவதும் ஒடுங்கவரும் பேரழிப்புக் காலத்தே வளம்படுதற்கிடமான இறைவனுடைய திருவடிகளை இவருட் சிலர் எய்தாநிற்பர்; ஏனையோர் நுகர்தற்கிடமான நிறுத்தற் காலத்திலே இறைவன் ஆசிரியனை அதிட்டித்துச் செய்யும் சாதரா தீக்கைபெற்றுப் பரமுத்தியினை எய்துவர். வேறு சிலர் பந்தமுறுத்தும் நிறுத்தற் காலந் தீர்ந்த அழிப்புக் காலத்தே நிராதார தீக்கைபெற்றுப் பரமுத்தியினை எய்துவர்.

(வி - ம்.) திதி - நிலைப்புக்காலம். ஆதாரம் ஆதார தீக்கை என்க. (௬௭௨)

படைப்புறும் போது சில்லோர் படைப்பவ ராவர் சில்லோர்
விடைப்புறு பாச நீங்கிச் சிவத்தினை விரவு வார்கள்
உடைப்பெருஞ் செல்வ மான யோகமீ துறுதல் வல்லார்
கடைப்பிடித் தொழுகு மற்றைக் கருமயோ கமும்விள் வாமால்.

(இ - ள்.) வேறுசிலர் படைத்தற் காலத்தே படைத்தல் முதலிய ஐந்தொழில்களையும் இயற்றும் அதிகாரிகளாவர். வேறுசிலர் ஆன்டிருந்தவாறே மூனைப்புடைய மலங்கள் அகலப்பெற்றுப் பரமுத்தியிற் கலப்பர். இனி, தாம்பெற்றுள்ள பெருஞ்செல்வமே போன்று கரும யோகத்தைப் பேணி அந்நெறியிற் செல்லுதல் வல்லார் கடைப்பிடியாகக் கொண்டொழுகாநின்ற கருமயோகத்தின் இயல்பினையும் கூறுவேம் கேட்பாயாக.

(வி - ம்.) விடைப்புறுதல் - மூனைப்புறுதல். மான - போல. (௧௭௩)

செய்பவன் கருமஞ் சேரும் பயனது கொடுப்பா னுண்டென்
றெய்திய வுளத்த னாகி யிருண்மல வலிதேய்ந் துட்கப்
பொய்படு புலனை வென்று பொருந்துமுட் பொருள்க ளெல்லாம்
கைபடு நெல்லி யென்னக் காண்பவன் யோகி யாவான்.

(இ - ள்.) செயலைச் செய்பவனாகிய உயிரும் அவ்வுயிராற் செய்யப்படும் வினையும் அவ்வினையாலுண்டாகும் பயனும் அப்பயனைக் கொடுக்கும் இறைவனும் உண்டென்று ஆராய்ந்து தெளிந்த நெஞ்சமுடையவனாகி ஆணவமலத்தின் வலிமைகெட்டொழியப் பொய்ப்பொருளிலே சென்று வீழாநின்ற ஐம்பொறிகளையும் அடக்கித் தன்னோடு பொருந்தாநின்ற உடல் முதலிய பொருள்களின் இயல்பெல்லாம் உள்ளங்கை நெல்லிக்கனிபோன்று ஐயந்திரிபற உணர்ந்துகொண்டவனே யோகியாந் தகுதியுடையன்.

(வி - ம்.) செய்பவன் என்றது உயிரை. கொடுப்போனென்றது இறைவனை. புலன் : ஆகுபெயர்; பொறி என்க. உட்பொருள்; நாடிவளி முதலியனவுமாம். (௧௭௪)

வேறு

விலங்கு வாளர வாதியா னச்சமே வாமை
அலங்கு பூந்தரு நிரந்தழ கார்ந்துராய் மாந்தர்
குலங்க ளண்முரு விடத்திலிற் கொழுஞ்சுட ருறுத்தி
இலங்க வாக்கிய குகையிருந் தியோகுசெய் யிடமாம்.

(இ - ள்.) விலங்கு வாள்போலுங் கொடிய பாம்பு முதலியவற்றால் அச்சம் உண்டாதற்கு ஏதுவாகாததும் அசையாநின்ற மலர்மரங்கள் நிரம்பி அழகுடைத்தாயதும், மாந்தர்கூட்டம் நெருக்கமாக அணுகி வரப்படாததுமாகிய தோரிடத்தே, விளக்கு முதலியவற்றாற் றிகழும்படி அமைத்த குகையே இருக்கையினமர்ந்து யோகஞ் செய்தற்கேற்ற இடமாகும்.

(வி - ம்.) மாந்தர் உராய் அன்முரு இடம் என்க. கொழுஞ் சுடர் - விளக்கு. குகை - மலைக்குகை; குடில் முதலியவற்றைப் பொது வாகக் குறித்து நின்றது. (௩௭௫)

பிணியி னூரகத் தாதர விலார்பொருள் பெட்கும்
தணிவி னெஞ்சினர் சாலவுங் கருமஞ்செய் தக்கோர்
பணிக ளாரியற் குஞற்றுநர் பசிப்பிணி மிக்கோர்
திணிகோ ளித்தகை யார்க்கிந்த யோகஞ்சேட் படுமே.

(இ - ள்.) பிணியாளரும், உள்ளத்திலே இறையன்பிலாதவரும், பொருளை விரும்பும் அமைதி யில்லாத நெஞ்சமுடையோரும், வினை யிடத்தே பற்றுடையோரும், ஆசிரியனுக்குத் தொண்டியற்றுவோரும், பசிபொறுக்கு மதுகையில்லாதோரும், இத்தகைய பண்புகள் செறிந்த பிறரும் ஆகிய இவர்க்கெல்லாம் இக்கரும யோகம் மிகவும் சேணிடத் துள்ளதாகும் (கை கூடாதாம்).

(வி - ம்.) ஆதரவு - இறையன்பு. பெட்கும் - விரும்பும். தணிவு - அமைதி. செய்தக்கோர் - செய்யுந் தகுதியுடையோர். சேட்படும் என்றது பொருந்தாது என்றவாறு. (௩௭௬)

உச்சிப் பின்னொரு கால்வறி தூணுண்டு பாலெனய்
நச்சு நல்லுண விழித்தகு மூனொடு நயவா
திச்சை தோன்றுறி னஞ்சியங் கடக்குமித் தகையில்
பொச்ச மில்லவர்க் கண்மையிற் புகுதரு மதுவே.

(இ - ள்.) அவ்வியோகநிலை, உச்சிப் பொழுதின் பின் ஓரேமுறை எளிய உணவினை உட்கொண்டும், பால் நெய் முதலிய விரும்புதற்குக் காரணமான நல்லுணவுகளையும் இழிக்கத்தக்க ஊன் உணவினையும் விரும்பாமலும் காம முதலியன தோன்றுங்கால் அவற்றை அஞ்சி அடக்கிவிடுதலும் ஆகிய இத்தகைய மாண்போடு பொய்ம்மையும் இல்லாதவர்கட்கே கைகூடு மியல்பிற்று.

(வி - ம்.) யோகம் உண்டு நயவாது அஞ்சி அடக்கும் இத்தகைமை யோடு பொச்சம் இல்லவர்க்கே அண்மையிற் புகுதரும் என்க. (௩௭௭)

பதும மாதிய வாதனத் தொன்றுறப் பயின்று
விதுவி ராஞ்சடை விமலனை விமலையை விமலம்
கதுவு மாரியன் றனைவழி பட்டனர் காண்பார்
புதுவ தாய்ப்பயில் வான்புகு வாருப யோகம்.

(இ - ள்.) தாமரையிருக்கை முதலிய இருக்கைகளுள் வைத்துத் தமக்குப் பொருந்தியதொரு இருக்கையிலமர்ந்து, பிறைசூடிய பெருமா னாகிய இறைவனையாதல், இறைவியையாதல், தூய்மையை மேற் கொண்ட தக்கிணாமூர்த்தியையாதல் வழிபாடுசெய்த உள்ளத்துள்ளே காண்பார். இனி, புதுவதாக யோகஞ் செய்தற்குப் புகுவோரியற்றும் செய்கைகள் வருமாறு.

(வி - ம்.) ஆதனம் எட்டு; அறுபத்துநான்குமாம். தமக்குப் பொருந்தியதொரு ஆதனத்திருந்தென்க. விது - திங்கள். விமலம் கதுவுமாரியன் என்றது தக்கிணாமூர்த்தியை. உபயோகம் - இட்ட சித்தியை முடித்தற்குரிய துணைச் செயல்கள் என்க. (௯௭௮)

குறங்கி னிற்கரந் திரியக்காய்க் குலாவமுன் மார்பம்
பிறங்க மேற்கள நிமிரநா சியின்விழி பிணைய
உறந்த பன்னிரை நடுவணு வோட்டற நிற்பச்
சிறந்தி ரேசக பூரக மறச்சிலை யொத்து.

(இ - ள்.) கைகளைத் தொடையின்மேற் குறுக்காகப் பொருந்த வைத்து மார்பை முன்னே தள்ளிக் கழுத்தினை நிமிர்த்தி, மூக்கின் நுனியில் இரண்டு பார்வைகளையும் நிறுத்தி, மிகுந்த இரு பல்வரிசைகளினிடையே நாநுனியை அசைவற நிறுத்தி இவ்வாற்றானே சிறப்புற்றுப் பின் மூச்சினை விடுதலும் வாங்குதலுமின்றிக் கல்லைப் போன்றிருந்து.

(வி - ம்.) குறங்கு - தொடை. திரியக்கு - குறுக்கு. மார்பம் முன்னே பிறங்க என்றது, முன்தள்ளி என்றவாறு. உறந்த - மிக்க. உறு என்னும் உரியடியாகப் பிறந்த பெயரெச்சம் என்க. இரேசகம் மூச்சுவிடுதல். பூரகம் - மூச்சிழுத்தல். சிலை - உருவச்சிலையுமாம். (௯௭௯)

மன்னு நாயக னுருவினை மனநிலை யடங்க
முன்ன ரார்தர நினைந்துபின் முயங்குரு வறுதி
நன்ன ராரிய னவில்வழிப் பெற்றதி னலப்பார்
அன்ன வாய்மைநீங் குறினுரு மடுத்துமீட் டடுப்பார்.

(இ - ள்.) மனமடங்கி நிலைத்தற் பொருட்டுத் தொடக்கத்தே நிலைபெற்ற இறைவனுடைய திருவுருவத்தைத் தேனித்துப் பின்னர், ஆசாரியன் கற்பித்தபடி நிட்களமான அருவநிலையிலே அந்நினைப்புமறப் பொருந்தா நிற்பர். இவ்வுண்மைநிலை இடையே கலைந்தவிடத்தே மீண்டும் தேனித்து மீண்டும் அவ்வுண்மைநிலையிற் பொருந்தாநிற்பர்.

(வி - ம்.) நாயகன் உரு - இறைவன் திருவுரு, திருமந்திரமுமாம். உருவறுதி - நிட்களம். அதின் - அவ்வருவத்திலே. தேனித்து - தியானஞ்செய்து. (௯௮௦)

இதய நாண்மல ரிடத்திலிற் பெருவிர லளவில்
வதியு நாதனை யோகினில் வழிபடு வார்க்குப்
புதிய போகமெ லாமுறும் புகரொன்று மடாது
கதிய யோகத்தி னங்கமு மாறவை காண்டி.

(இ - ள்.) இதயமாகிய புதிய தாமரை மலரிடத்திலே பெருவிரல் அளவில் உறைகின்ற இறைவனை இவ்வியோக முறையாலே வழிபடும் அடியவர்களுக்குப் புதுமையுடைய நுகர்ச்சிகள் எல்லாம் வந்துபொருந்தும். தீமையொன்றும் வரமாட்டாது. பற்றியுள்ள இந்த யோகத்தின் உறுப்புக்களும் ஆறு ஆகும். அவற்றையும் கூறுதும் உணர்க.

(வி - ம்.) யோகு - யோகம். இதயத்தை நான்மலராகவும், அம் மலரிடத்தே பெருவிரலளவிற்றாக ஒரு சிவலிங்கமுளதாகவும், அச் சிவலிங்கத்தைப் பூசைப் பொருள்களெல்லாம் மனத்தானே படைத்துக் கொண்டு வழிபடுவார் என்றவாறு. கதிய - கதுவிய. இயமமும் நியமமும் இதனுள் அடக்கி யோகவுறுப்பு (எட்டென்னாது) ஆறென்றார். (௩௮௧)

வேறு

திருத்தகு பிராணு யாமமே பிரத்தி
யாகாரந் தாரணை தியானம்
உரைத்தமந் திரமே சமாதியவ் வாறு
முன்றிநா சியின்வல மிடத்தான்
மருத்துமிழ்ந் திடப்பான் மறித்துளே வலத்தால்
வாங்கியவ் விரண்டையுஞ் சிறைத்து
விருத்தமொன் றின்றிக் கும்பித்தல் பிராணு
யாமமென் றுரைப்பர்மே தக்கோர்.

(இ - ள்.) யோகத்திற்குச் செல்வமாந் தகுதியையுடைய பிராணு யாமமும், பிரத்தியாகாரமும், தாரணையும், தியானமும், முற்கூறப் பட்ட மந்திரமும் சமாதியும் என்பனவே முற்கூறப்பட்ட ஆறு உறுப்புக் களுமாம். இவற்றுள் முன்னின்ற பிராணுயாமமாவது - நாசியின் வலப் பகுதித்தொளையை விரலானூன்றி அடைத்து இடப்பால் தொளையினுலே மூச்சுக்காற்றினை வெளியேற்றிப் பின்னர் இடப்பகுதியை அடைத்து வலத் தொளையானே மூச்சினை உள்ளே இழுத்துப் பின் இரண்டையும் அடைத்து முரணின்றி வயிற்றகத்தே காற்றினை நிறுத்துதலேயாகும் என்று சான்றோர் கூறுவர்.

(வி - ம்.) திரு - செல்வம். விருத்தம் - முரண். (௩௮௨)

இதுமுறை பிறழின் வருத்தமிக் கடுக்கு
மெய்திய வருத்தந்தீர் பாக்குக்
கதுவிய வாதப் பிணிக்கழ றன்னைக்
கனற்பிணிக் கறலினை யறலின்
முதிர்பிணிக் கனலை யுடலிடைத் தியான
முற்றுறப் புரிவது செய்வர்]
பேரதிபசி புனலின் வேட்கையுந் தணிப்பர்
பொறிதரு மமிழ்தபா வனையால்.

(இ - ள்.) இப்பிராணுயாமஞ் செய்யுமிடத்தே அதற்கு விதித்த முறை பிறழச் செய்யப்படின் மிகுதியாக நோயுண்டாகும். அங்ஙனம் உண்டாய நோய் தீர்வதற்கு, அந்நோய் வாதநோயாயின் தீயினையும், தீயான் உற்ற நோயாயின் நீரினையும், நீரான் உற்ற நோயாயின் நெருப் பினையும், அந்நோயுற்ற உறுப்புக்களிலே நின்று மிகுவதாகத் தியானஞ்

செய்யாநிற்பர். அறிவை மூடு மியல்புடைய பசிப்பிணியையும் நீர் வேட்கையையும் அமிழ்தத்தைத் தியானஞ் செய்தல் வாயிலாய்த் தணித்துக் கொள்ளுவர்.

(வி - ம்.) இது - இப்பிராணயாமம். தீர்பாக்கு - பாக்கு : வினையெச்ச விகுதி. கனற் பிணி - பித்தநோய். அறலின் முதிர்பிணி - சிலேத்துமநோய். தியானித்தல் - பாவித்தல். (௬௮௩)

முள்ளெயிற் றரவ மாதிய விடங்கண்
முகப்பினு முடலெலா மமிழ்த
வெள்ளமிக் கொழுக்கி நனைத்திடின் விளியும்
விடைப்புறு வளியினை வென்றோர்க்
குள்ளமுந் தூய்தாய்ப் பொறிகளு மடங்கு
முருவினிற் பிணியின்மை யாதி
நள்ளுறும் பவ்வி முதலிய முன்போ
னண்ணுரு நொய்தெனக் கழியும்.

(இ - ள்.) முட்போன்று கூர்த்த பல்லையுடைய பாம்பு முதலிய நச்சுயிர்களின் நஞ்சினை உடல் ஏற்றுக்கொள்ள நேர்ந்த விடத்து உடலெங்கும் அமிழ்தம் வெள்ளமாகிப் பெருகி மயிர்த்தொளைதோறும் ஒழுகுவதாகத் தியானஞ் செய்யின் அந்நஞ்சு கெட்டொழியும். முனைப்புற்று நின்ற உயிர்ப்புக் காற்றினை அடக்கி ஆள்பவர்க்கு நெஞ்சமும் தூயதாகி, அதன் கருவிகளாகிய மெய் முதலிய ஐம்பொறிகளும் அடங்கும். உடலின் நோயின்மை முதலிய நலங்களும் தோன்றும். மலம் நீர் முதலிய துரால்கள் பண்டுபோலாது நொய்யவாகக் கழியாநிற்கும்.

(வி - ம்.) நினைத்தல், ஈண்டுப் பாவனையாலே என்க. வளி - உயிர்க்காற்று. நொய்து - ஒருமை பன்மை மயக்கம். (௬௮௪)

மலர்க்கரத் திரெண் முறைமுழந் தாளை
வலம்புரிந் திடுவதொன் றுக
நலத்தகு நாற்பத் தெட்டுமாத் திரைக
ணயப்புறு முதலறு நான்கென்
றிலக்கமுற் றிடுத லிடைகடை யீரா
றெய்துத லின்னவல் லுநர்க்குத்
துலக்குறு நெஞ்சத் தவர்க்குமாத் திரைகள்
சொல்லுறிற் கைநொடி யளவே.

(இ - ள்.) மலர்போன்ற கையாலே பதினறுமுறை முழங்காலை வலம்படச் சுற்றுதற்குற்ற காலம் ஒரு மாத்திரையாகக் கொண்டு, இம் மாத்திரையளவின் நாற்பத்தெட்டு மாத்திரைப் பொழுது செய்வது விரும்பப்படும் தலையாய பிராணயாமமாம். இருபத்துநான்கு மாத்திரையியற்றுதல் இடையாய பிராணயாமமாம். பன்னிரு மாத்திரை யியற்று

நல் கடையாய பிராணுயாமம். இவ்வளவு வலியுடையார்க்காம். வலியின்மையால் நடுங்கும் மனமுடையோர்க்கு ஏற்ற மாத்திரைகூறு மிடத்து ஒருமுறை கையை நொடிக்கும் பொழுதாகிய ஒருமாத்திரை என்க.

(வி - ம்.) மலர்க்கரம் என்புழி உவமை வாளாநின்றது. துலக் குறுதல் - நடுங்குதல் எனவே மாட்டாமையுடையார் என்றவாறுயிற்று. (௩௮௫)

பிரத்தியா கார மனம்பொறி வழியிற்
பெயர்தரா தசைவற நிறுத்தல்
உரத்தொடு மிதயத் துறுத்திய பொருளி
னுய்த்தது நிறுத்தரு ரணையவ்
வரத்தொடை யிறையை யிடைவிடா தறிவி
னறிவது தியானமந் திரமுன்
உரைத்தனஞ் சமாதி யுருவிறந் துண்மைப்
பொருளினே டிரண்டறக் கலத்தல்.

(இ - ள்.) நெஞ்சத்தை மெய் வாய் கண் மூக்குச் செவியென்னும் ஐம்பொறிகள் வாயிலாய் ஊறு முதலிய புலன்களில் செல்லாமல் அசை வின்றி நிறுத்துதல் பிரத்தியாகாரம் எனப்படும். அந்நெஞ்சத்தை வலிமையோடும் இதயத்திலே நிலைநிறுத்தப்பட்ட பெருவிரலளவிற்று கிய அருட்குறியின்கட் செலுத்தி அதன்கண் நிலையுறச் செய்தல் தாரணை யெனப்படும். பாம்பாகிய மாலையையுடைய அவ்விறைவனை இடையறு மல் நெஞ்சத்தே உணர்ந்திருத்தல் தியானம் எனப்படும். மந்திரத் தியல்பு முன்னரே கூறியுள்ளேம். இனி நெஞ்சம் தனக்குருவங் கொடுக் கும் தான் என்னும் செருக்கினுநீங்கி மெய்ப்பொருள் தானேயாய் இரண் டறக் கலந்து விடுதலே சமாதி என்பதாம்.

(வி - ம்.) உரம் - வலி. உறுத்திய பொருள் பாவனையான் நிலை நிறுத்தப்பட்ட அருட்குறி. அரத்தொடை - பண்புத்தொகை, பாம்பா கிய மாலை என்க. அரா என்பது ஈற்றுகாரம் குறுகியது. (௩௮௬)

வளிநடு நாடி யியங்குறிற் சமாதி வாய்க்குமாற் கிளந்திடு முறையே
தெளிதரு மாறு மொன்றினென் றுயருஞ் சிறப்புறு மிந்தயோ கத்தில்
களிதரு முளத்தர் கணிப்பறு மறையா திகளெல்லாங் கரையவும் வல்லார்
ஒளிதரு மிருநாற் சித்தியு மவர்க்கே யுள்ளங்கை நெல்லியங் கனியே.

(இ - ள்.) உயிர்க்காற்று (இடைகலை பிங்கலை யிரண்டினும் இயங் காமல்) நடுநாடியாகிய சுழிமுனையிலே இயங்குங்கால் சமாதிநிலை கை கூடுவதாம். ஈண்டுக் கூறப்பட்ட முறையிலேயே தெளியப்பட்ட பிராணுயாம முதலிய ஆறுறுப்புக்களும் ஒன்றற்கொன்று சிறப்புறும். இந்தக் கருமயோகத்திலே பொருந்தி மகிழும் நெஞ்சம் வாய்க்கப் பெற் றோர் வேத முதலிய எண்ணிறந்த மெய்ந்நூல்களனைத்தையும் எளிதி னுணர்ந்து ஓதவும் வல்லவராவார். புத்தொளி தருதற்கிடமான எட்டுச் சித்திகளும் அப்பெரியோர்க்கு உள்ளங்கை நெல்லிக்கனி போன்று எண்மையவாகும்.

(வி - ம்.) *வளி - உயிர்க்காற்று. நடுநாடி - சுழிமுனை. ஒளி - புகழுமாம்.* (௧௮௭)

அணுவினு நுழைநுண் ணுருக்கொள லாழ்ந்த
வளற்றிடை யஃதொட்டா தியங்கல்
மணிநெடு வரையிற் பெருத்தல்வேட் டனவெவ்
வளங்களுஞ் செறிதலா யிரவர்
திணிமுலை திளைத்தல் பெருவலி யினருஞ்
சென்றடி பேணல்யா வர்களும்
தணிவற விழைதல் வலியருந் தடாமை
சாற்றிய விவைகளெண் சித்தி.

(இ - ள்.) *நுண்ணணுக்களினும், நுழைதற்கேற்ற நனிநுணுகிய உருவத்தைக் கொள்ளுதலாகிய அணிமாவும், ஆழ்ந்துள்ள சேற்றினுள் அச்சேறு ஒட்டாமல் (பிள்ளைப்பூச்சிப்போல்) இயங்குதலாகிய இலகிமாவும், அழகிய நெடிய மலைபோன்று பெருத்த உருவங்கொள்ளலாகிய மகிமாவும், தாம் வேண்டிய உருவங்கொண்டு விரும்பியவற்றை நுகர்தலாகிய பிராத்தியும், ஆயிரமகளிரை ஒரே காலத்துப் புணர்தலாகிய பிராகாமியமும், மிக்க வலிமையுடைய கூற்றுவன் முதலிய தேவர்களும் தம்மை வந்து வணங்கும்படி செய்தலாகிய ஈசத்துவமும், எல்லோரும் தம்மைப் பெரிதும் விரும்பும்படி செய்தலாகிய வசித்துவமும், மிக்க வலிமையுடைய கூற்றுவன் முதலியோரானும் வெல்லப்படாமையாகிய வசிதையும் என ஈண்டுக் கூறப்பட்டவைகளே எண்வகைச் சித்திகளுமாம்.*

(வி - ம்.) *அளறு - சேறு. வரையில் - வரைபோன்று. வலியினர் கூற்றுவன் முதலிய தேவர் என்க.* (௧௮௮)

மறுமையி லிறைவ னுலகினி லவன்றன்
மானுரு வெடுத்தமர்ந் திருப்பர்
கொறுகொறுத் துழலு மலக்குறும் பனுக்குங்
கோணைமெய்ஞ் ஞானமாம் வெறுக்கை
பெறுவதற் கடுத்த நிமித்தமீ தல்லாற்
பேருல கத்தில்வே றில்லை
உறுதவ முறையி னுறழ்ந்தவர் கழுவா
யுஞற்றுமத் திறமினி யுரைப்பாம்.

(இ - ள்.) *சிவயோகச் செயலுடையோர் மறுமையினுஞ் சிவலோகத்தே சென்று அவ்விறைவன் உருவமே தாமுமுடையராய் அமர்ந்திருப்பர். உயிர்கள் நெஞ்சங் கொறுகொறுத்துத் துன்பத்திலே உழலுதற்குக் காரணமான மலப்பகையை அழிக்கும் அழிவில்லாத மெய்யுணர்வாகிய செல்வத்தைப் பெறுதற்கு ஏற்ற கருவி இக்கருமயோகமன்றி இவ்வுலகத்திற் பிறிதில்லை. இனி மிக்க தவவொழுக்கத்தே பிறழ்ந்தவர் அத்தீவினை தீரக் கழுவாய் செய்யும் அவ்வியல்பினையும் கூறுவேம்.*

(வி - ம்.) இறைவனுலகில் அவனுருவெடுத்தல் என்றது சாருபம் என்னும் பதமுத்தியை. கோணை - அழிவின்மை. மலக்குறும்புக் கோணை என மாற்றிக் கொடுமையை எனினுமாம். கொடுமையை அறுக்கும் என்க. (௲௮௯)

வேறு

விணையிரண்டா மகாமமொடு காமமென வகாமம்
விமலனுரை துணியாத நைவிகம்பே ரார்வந்
துணையவறி வழிமோகம் பொச்சாப்புக் கள்வர்
துளக்கரையர் பயமுதலா லிழுக்குறுதல் காமம்
இணைதலவ ணறிகின்று மென்றவையொன் றின்றி
யியற்றுதலாங் கழுவாயிங் ககாமவிணைக் கதற்கு
நணிவெருவி லிருகுணிதம் புரிதன்மனை யோரி
னூற்றிநயிட் டிகனிரட்டி பவுதிகன்மற் றையர்க்கில்.

(இ - ள்.) தீவினை அகாமம், காமம் என இருவகைப்படும். இவற்றுள் அகாமமாவது, இறைவனூலை யுணர்ந்திருந்தும் அறிவினைப் பேதைப்படுக்கும் ஊழ்வினையும், பேராசை வருத்துதலானே அறிவழிதற்குக் காரணமான மோகமும், பொச்சாப்பும், கள்வரானுண்டாகும் அச்சமும், நடுங்கச்செய்யும் அரசனல் உண்டாகும் அச்சமும், இன்னோரன்ன காரணங்களானே செய்யப்படும் தீவினைகளாம். தீவினை செய்வதனுல் வருந்துதலும், நிரயத்தே (துன்பத்தை) உணர்வேம் என்பன போன்ற வுணர்ச்சிகள் இன்றி, விரும்பி நெஞ்சாரச் செய்யும் தீவினைகள் காமம் எனப்படும். ஈண்டு அகாமமாகிய தீவினைக்கே கழுவாய் கூறப்படும். காமத்தீவினைகளுக்கு மிகவும் அஞ்சுமிடத்தே அகாமத்திற்குக் கூறிய கழுவாயை இருமடங்காகச் செய்க. இல்வாழ்வானுக்கே இங்குக் கழுவாய் கூறப்படுதலான், பவுதிகப் பிரமசாரி இல்வாழ்வானுக்குக் கூறிய கழுவாயை இருமடங்காகவும், நயிட்டிகப் பிரமசாரி நான்குமடங்காகவும் இயற்றுக. ஏனைய வானப்பிரத்தனுக்கும் சந்நியாசிக்கும் கழுவாயில்லை என்க.

(வி - ம்.) அகாமம் - தான் விரும்பாமலே காரணங்களால் செய்யப்பட்ட தீவினைகள் என்றும், காமம் - தானே விரும்பிச் செய்வன என்றுமறிக. மற்றையர் என்றது வானப்பிரத்த சந்நியாசிகளை. இவர்கள் எவ்வாற்றானும் தீவினை செய்தல் தகாது என்பது கருத்து. குணிதம் - மடங்கு. இல்லறத்தான் அகாமவினைக்குரிய கழுவாயின் இருமடங்கு காமவினைக்கும் பவுதிகன் அவனின் இருமடங்கு அகாமத்திற்கும் அதின் இருமடங்கு காமத்திற்கும் செய்தல் வேண்டும் என்றிப்படிக் கொள்க. (௲௯௰)

பொருவிலியைப் பிரமமுகுர்த் தத்தெணு லிரட்டி
பூணலிரு நூறுமு லம்புகற லிறு
தரியாது புறம்போந்தான் பசித்தன்று ணைந்துந்
தான்பருகிக் கோரமிரு நூறுபசுப் பார்ப்பார்

பரிதிமுத லிரண்டியக்கந் தனிற்பார்க்கி னூறு
பரன்முன்றின் முதனிலத்திற் கழிப்புரின்மா திரங்கள்
ஒருவினூ றறைதல்பிர மம்பசித்து நன்காட்
டுயர்புரிக்க ணேவைஞ்னூ றீசான முரைத்தல்.

(இ - ள்.) வைகறைப் பொழுதிலே எழுந்து ஒப்பற்ற இறைவனைத் தியானம் செய்யத் தவறியவன் இருமடங்கு தியானம் பூண்க. செய்யத் தவறின மூலமந்திரத்தை இருநூறு முறை கணித்திடுக. திருநீறு தரியாது புறத்தே போந்தவன் அன்று உண்ணாதிருந்து ஆனைந்துமுண்டு அகோரமந்திரம் இருநூறுமுறை கணித்திடுக. மலம்நீர் கழிக்கும்பொழுது பசு பார்ப்பனர் ஞாயிறு முதலியோரைப் பார்த்தவன் நூறுமுறை அகோர மந்திரத்தைக் கணித்திடுக. இறைவன் திருக்கோயில் முன்றின் முதலிய மாண்புடைய இடங்களிலே மலமூத்திரம் விட்டாலும் திசைகள் தவறி மலமூத்திரம் விடினும் உண்ணாதிருந்து பஞ்சப்பிரம மந்திரங்களை நூறுமுறை கணித்திடுக. சுடுகாட்டிலாதல் திருக்கோயில் வீதிகளிலாதல் மலமூத்திரம் விட்டவன் ஐந்நூறுமுறை ஈசானமந்திரங் கணித்திடுக.

(வி - ம்.) பொருவிலி-ஒப்பற்ற இறைவன். எனுன்-என்னுன். பூணல் - வியங்கோள். மூலம் - மூலமந்திரம். ஆனைந்து - பஞ்சகௌவியம். பரன் - இறைவன். நிலம் - சிறந்தநிலம். மாதிரம் - மலமூத்திரம் விடற்கு நூல்கூறிய திசைகள். புரி - நகரம். (௩௩௧)

இரண்டியக்க முதலான வழுக்காடை யெய்தி
னெரியுறுநீர் கோசலமண் ணேய்த்தொலித்திட் டுணக்கல்
திரண்டபதி னொருமனுவு முக்காலே யாளி
செப்பலழ னீராடி னேயிலியு மாடின்
அரண்டகுமம் மனுநூறுஞ் சாதமிரு நூறு
மறைதனூற் றெட்டுனவின் றகோரமுடை யின்றி
யரண்டுதிரைப் புனலாடிற் பதிதரைப்பார்த் திடினும்
வழங்குகநூற் றெட்டுற்றுத் தழல்படிந்தும் வழங்கல்.

(இ - ள்.) மலமூத்திர முதலிய அழுக்குகள் படிந்த ஆடையுடையானுயின் அவ்வழுக்காடையை வெந்நீரில் ஆவீரும் புற்றுமண்ணுங் கூட்டி நனைத்து ஒலித்து வெயிலிலுலர்த்துக. நால்கள் கூடாதெனக்கூறி விலக்கிய வெந்நீரில் நோயாளன் ஆடினுல் பஞ்சப்பிரம சடங்கமொன்று கூடிய பதினொரு மந்திரங்களையும் மும்முறை கணிக்க. நோயில்லாதவன் வெந்நீராடின் பாதுகாப்புத் தரும் அப்பதினொரு மந்திரங்களையும் நூறுமுறையும், சத்தியோசாத மந்திரத்தை இருநூறு முறையுங் கணித்திடுக. ஆடையின்றி வரலாறிவரும் அலைகளையுடைய நீரிற் குளித்தவன் உண்ணாதிருந்து நூற்றெட்டுமுறை அகோரமந்திரத்தைக் கணித்திடுக. தீவினையாக்களைக் காணநேரின் ஊக்கத்தோடு நீராடி அம்மந்திரத்தை நூற்றெட்டு முறை கணித்திடுக.

(வி - ம்.) எரியுறுநீர் - வெந்நீர். மண் - புற்றுமண். ஏய்த்து - இயைத்து. உரைக்கல் - வியங்கோள். பதிஞெருமனு - பஞ்சசடங்கங்கள். அரண் - பாதுகாவல். அழனீர் - வெந்நீர். வரண்டுதல் - வரன்றுதல். பதிசர் - தீவினையாளர். அறல் - நீர். வழங்குக; வழங்குங்கால் அறல் படிந்தும் வழங்குக என்க. (௩௬௨)

ஒருவரொரு தெருவினிறின் முகடொன்றில் வழுக்குண்
டோரைம்ப திடையறின்விற் கிடைமுப்ப திடையே
தெருவிலங்கி னப்பாலின் றெருபதிற்றென் றேனைத்
தெருக்களுக்கு முப்பதுதண் டாலயத்துக் குண்டால்
அருமறையா திகடொடங்க லுடலெடுக்கு முன்ன
ரந்தணர்முன் னல்வர்க்கும் பிறப்பிறப்பின் வழுநான்
ஒருபதுபன் னிரண்டுபதி னறுபதி னைந்தா
மொழுக்கமிலாச் சூத்திரர்க்கு முப்பதிற்று நாளே.

(இ - ள்.) ஒருவர் ஒரு தெருவின்கண் இறந்துவிட்டால் இறந்த வீட்டின் முகடு பொருந்தியிருந்தால் ஐம்பது தண்டுதொலை வழுக்குண்டாகும். முகடொன்று திடையற்றிருப்பின் முப்பதுதண்டு தொலை வழுக்காம். பக்கத்துத் தெருவாயின் வழுக்கில்லை. திருக்கோயிலுக்குப் பக்கத்துத் தெருவாயின் முப்பதுதண்டு தொலை வழுக்காம். வழுக்குண்டாயின் பிணமெடுக்குமுன் வேதமோதுதல் முதலிய தொடங்கற்க. இனி, பார்ப்பனர்க்கு இறந்துழியும் பிறந்துழியும் பத்துநாள் வழுக்காம். அரசர்க்குப் பன்னிரண்டுநாள், வணிகர்க்குப் பதினறுநாள், ஆகமவொழுக்கமுடைய வேளாளர்க்குப் பதினைந்துநாள், ஆகமவொழுக்கமில்லாத வேளாளர்க்கு முப்பதுநாள் வழுக்குண்டாம்.

(வி - ம்.) வழுக்கு - வாலாமை; தீட்டு. தண்டு - ஓரளவு, நான்குமுழம். முகடு - வீட்டின்முகடு. தொடங்கல் - வியங்கோள். (௩௬௩)

புதல்வியுடன் பிறந்தாடா யுடன்பிறந்தான் முதலோர்
பொன்றின்முந்நா ளொழிந்தோர்க்குப் புனலாட லிறைவன்
பதம்விரவு ஞானியர்க்கின் றுலகதரு மணியிற்
பரவுசிவ தருமணியிற் பயின்றவர்க்கு முந்நாள்
அதனுடையார்க் குரியகணி கையர்தமக்குப் பதினைந்
தாகுமருச் சனையாதி பிறர்தம்மான் முடித்தல்
மதியமையா தெனிலீர வுடைதரித்துப் புரிதன்
மகவிழந்தார் பசித்தன்று னைந்துண்டல் வருநாள்.

(இ - ள்.) தன் புதல்வி, தன்னுடன் பிறந்தாள், தாய், தாயுடன் பிறந்த மாமன் முதலியவர் இறந்துழியும், மூன்றுநாள் வழுக்காம். மற்றையோர் இறந்துழி நீராடுந்துணையும் வழுக்காம். இறைவன் திருவடியிற் கலக்குந் தகுதியுடைய ஞானியர் மறைந்துழி வழுக்கில்லை.

உலகதருமணியும் வழிபடற்குரிய சிவதருமணியும் ஆகிய இருவகைத் தீக்கைகளுள் ஒன்றுபெற்று அவ்வழி ஒழுகினவர் இறந்துழி மூன்றுநாள் வழக்காம். தோலுடையுடைய இறைவனுக்குரிய உருத்திரகணிகையர் இறந்துழிப் பதினைந்துநாள் வழக்குண்டு. இனி வழக்குண்டாய காலத்தே இறைவழிபாடு முதலியவற்றைப் பிறரைக்கொண்டு செய்வித்தல் வேண்டும். அங்ஙனம் செய்வித்தற்கு நெஞ்சொருப்படாத விடத்தே ஈர ஆடையுடனே வழிபாடு முதலியன செய்க. மகவிறக்கப்பட்டோர் அன்று உண்ணாதிருந்து மறுநாள் ஆனைந்துண்க.

(வி - ம்.) பொன்றின் - இறந்தால். ஒழிந்தோர் - இவரல்லா உறவினர். புனலாடல் - புனலாடுக. உலகதருமணி - சபீசதீக்கையி லொன்று; இல்லறத்தானுக்குச் செய்வது. சிவதருமணி - சபீசதீக்கை யிலொன்று; நைட்டிகருக்குச் செய்வது. அதனுடையான் - சிவன். (௱௧௪)

கணவனிறிற் றலைமழித்துச் சாந்திரா யணமுன்
கடுவிரத முஞற்றியபின் னுடலியங்கச் சிறிதூண்
உணன்மகளி ரறிவுண்டேற் குருவருளான் முக்க
ணெருவனடிப் பூசைமுறை யுஞற்றியிடன் மரபாம்
மணமகன்றன் பணியன்றி யிறையடிப்பூ சனையும்
வாஞ்சிப்பி னவனருள்பெற் றியற்றன்மதி தோறும்பூப்
பணவியமுந் நாளுமருச் சனைபிறரா லாற்றி
யறலாடிக் கவ்வியமுண் டருச்சித்தல் வழிநாள்.

(இ - ள்.) மகளிர் தங்கணவன் இறந்துழித் தலையை மழித்துக் கொண்டு சாந்திராயண முதலிய கடிய விரதங்களைச் செய்து முடித்த பின்னர் உடலியங்குதற் பொருட்டுச் சிறிதுணவு உட்கொண்டிருப்பாராக. மெய்யறிவுபெறும் விருப்பமும், தகுதியுமுண்டாயின் நல்லாசிரியன் அருள்பெற்று முக்கட்பெருமான் திருவடியை நான்முறை பிறழாது வழிபட்டு வருதல் சிறந்த முறையாகும். இனி, இல்லறத்துள்ள மகளிர் தம் கணவரையே தெய்வமாகக் கருதி அவன் பணிகளை இயற்றுதலோடு இறைவன் வழிபாட்டினையும் விரும்புவதுண்டேல் கணவன் உடன்பாடுபெற்று இயற்றுக. திங்கள்தொறும் பூப்புநேர்ந்த மூன்று நாளும் பிறரால் வழிபாடியற்றுவிக்க வேண்டும். நான்காநாள் நீராடி ஆனைந்துண்டபின் தாமே வழிபாடுசெய்க.

(வி - ம்.) சாந்திராயணம் - ஒருவிரதம். அறிவு - மெய்யறிவு. வாஞ்சித்தல் - விரும்புதல். அறல் - நீர். (௱௧௫)

வைகறையா மத்திருது நிகழினுமந் நாட்கு
வருமைந்தா நாண்மறையோ ரேனையர்நான் காதீ
நைகரமில் கிழத்திமுலை புணர்தல்விர தத்தோ
னின்மறையோ னெனிலைந்நா நாவினுங்கூ டாது
பொய்கழியா குதிபுரிதன் மூன்ருபெட் டிராறு
புணர்பதினன் கிரண்டுவா மதியாதி வரினும்

கைகலவல் யாவர்களும் விலக்காநா ளாகிற்
கல்லாளேற் கருவொன்று சிதைத்தகரி சுறுவான்.

(இ - ள்.) மகளிர்க்கு வைகறைப்பொழுதிலே பூப்பு நிகழுமாயினும் அந்த நாளையே முதனாளாகக்கொண்டு மேல் வருகின்ற ஐந்தாநாள் முதலாகப் பார்ப்பனரும் ஏனையோர் நான்காநாள் முதலாகவும் துன்பமில்லாத மனைவியைக் கூடுக. பார்ப்பனர் விரதமுடையனாயின் ஐந்தாநாளிலும் கூடாதிருந்தே பொய் நீங்குதற்குக் காரணமான ஆகுதியையுஞ் செய்க. இனி எவ்வகுப்பினரும் மூன்றும், ஆறும், எட்டும், பன்னிரண்டும், பொருந்திய பதினொன்கும், அமாவாசியும் பூரணையுமாகிய திதிகளிலேயும் இன்னோரன்ன நாள்களிலேயும் கூடாதொழிக. விலக்கப்படாமல் விதித்த நாள்களிலே ஒருவன் தன் மனைவியைப் புணரானாயின் அவன் கருவொன்றனைச் சிதைத்த தீவினையை எய்தாநிற்பன்.

(வி - ம்.) இருது - பூப்பு. நைககரம் - துன்பம். பொய் - மலம். இரண்டுவா - அமாவாசியும் பூரணையும். கைகலவல் - எதிர்மறை வியங்கோள். (௩௬௬)

பிரணவமோ ரயுதம்விலக் கியநாளிற் புணரிற்
பிரணவமில் லார்மூலம் புகறல்பகற் புணர்ச்சி
விரவினுமற் றும்பகலி னுறங்கலரி வையர்தம்
வீழ்புணர்ச்சி கேட்டல்பசுப் புணர்ச்சிமுத லேக்கல்
பரவிவற்றி னகோரநூற் றெட்டாகும் பிறனில்
பரத்தையர்தோள் விடலியர்தோள் வீழ்ந்துபரி சித்தான்
கரிசறநூற் றைம்பதினா யிரமவற்றி னிரட்டி
கன்னிகைமென் முலைத்தடத்துக் கலந்துவிடிற் கணித்தல்.

(இ - ள்.) அந்தணர் அரசர் வணிகர் என்னும் மூன்று வகுப்பினரும் மகளிரைக் கூடற்கு விலக்கிய நாளிலே ஓரோவழிக் கூடநேரின் அத்தீவினை தீரப் பிரணவமந்திரத்தைப் பதினாயிரமுறை கணிக்க. பிரணவமோதும் உரிமையில்லாத வேளாளர் அத்தனைமுறை திருவைந்தெழுத்தைக் கணிக்க, பகற்காலத்தே புணர்தற்கும் இவ்விதியே யாம். இனிப் பகற்பொழுதிலே உறங்குதலும் மகளிருடைய விரும்பிய புணர்ச்சியைக் கேட்கினும், ஆன் புணர்ச்சி முதலியவற்றை நோக்கினும், விரிந்த இன்னோரன்ன தீவினைகட்கு அகோரமந்திரத்தை நூற்றெட்டுமுறை கணித்தல் கழுவாயாம். இனி, பிறன்மனைவி, வரைவின் மகளிர், தூர்த்தமகளிர் என்னும் இவரை விரும்பித் தொட்டவன் இத்தீவினைதீர அகோரமந்திரத்தை நூற்றைம்பதினாயிரம் முறை கணித்திடுக. கன்னிகையைக் கூடினவன் முந்நூறாயிரம் முறை அம்மந்திரத்தைக் கணித்தல் வேண்டும்.

(வி - ம்.) அயுதம் - பதினாயிரம். பிரணவமில்லார் - வேளாளர். விடலியர் - தூர்த்தமகளிர். கன்னிகை - மணமாகாதவள். (௩௬௭)

இணங்கவின மல்லாரை யிச்சையிற்பார்த் தானு
றெழிற்குரவன் மனைவியைப்பார்த் தான்சாத நூறு
வணங்கிடையைக் கனவின்முயக் குறின்விரதி முழுகி
மாற்றியுண வொருநூறத் திரநினைந்து கனவின்
அணங்கறநா னூறிரவி னினைந்துவெண்ணீ ரிறக்கி
னைம்பதிற்று நாற்றிவா மந்தாழ்ந்தோர்ப் புணரின்
உணங்கவினை யயுதம்விழை வுறினூலான் விரத
மொழிந்துவரைந் தணைதலிலாற் கொழிவிலள றொழிவில்.

(இ - ள்.) *புணர்தற்பொருட்டு ஏதின் மகளிரை அவாவுடன் நோக்கினவன் அகோரமந்திரத்தை நூறுமுறை கணித்திடுக. ஆசிரியனுடைய மனைவி அழகினைக் காமத்தானோக்கியவன் சத்தியோசாத மந்திரம் நூறுமுறை கணித்திடுக. பிரமசாரி மகளிரைக் கனவின்கட் கூடியதாகக் கண்டவிடத்தே நீராடி உண்ணாதிருந்து அத்திரமந்திரத்தை நூறுமுறை கணித்து அக்கனவாலுண்டான தீவினையைக் கழுவுக. இரவின்கண் மகளிரை நினைதல் வாயிலாய்ச் சுக்கிலம் விட்டவன் இருநூறுமுறை வாமதேவ மந்திரம் கணித்திடுக. சாதியிற்றாழ்ந்த மகளிரைப் புணரின் அத்தீவினைகெட, அம்மந்திரத்தைப் பதினாயிர முறை கணித்திடுக. பிரமசாரி மகளிர்போகத்தை விரும்புமிடத்தே நூல்கள் கூறியமுறைப்படி அவ்விரதத்தை விட்டுவிட்டுத் திருமணஞ் செய்து கொள்வானாக. இவ்வாறு செய்யாமல் மகளிரைப் புணரும் பிரமசாரிக்கு அண்ணுத்தல் செய்யாத நிரயமுண்டாம். அத்தீவினைக்குக் கழுவாயுமில்லை.*

(வி - ம்.) *இனமல்லாரை இணங்க இச்சையிற் பார்த்தான் என மாறுக. குரவன் எழில்மனைவியை என்க. வணங்கிடை : அன்மொழித் தொகை. அளறு - நிரயம். ஒழிவில் - கழுவாயில்லை.* (௩௧௮)

வீழ்ந்துபவு திகன்பிறனில் பரிசிக்கிற் பசித்து
விளம்பல்பிர ணவமிலக்கம் புணரிலொழி வில்லை
தாழ்ந்தபுலை மனைபுகின்மண் கலமோப்பித் தூய்மை
சமைத்தையா யிரம்புருடஞ் சாற்றல்கிருச் சிரந்தோ
டாழ்ந்தவள்கை யூணொருநா ளுணிற்கோர மயுத
மறைந்தமலற் கைந்தாட்டித் தத்தகிருச் சிரந்தின்
வொழுந்திடுக வறிந்தேலைங் கிருச்சிரத்தி னயுதம்
வாமமிரு நாண்முந்நாட் கேற்றுகமே லொழிவில்.

(இ - ள்.) *பவுதிகப் பிரமசாரி பிறன்மனைவியை விரும்பித் தொட்ட தீவினைக்குப் பிரணவமந்திரத்தை நாலாயிரமுறை கணித்திடுக. புணர்ந்துவிட்டால் கழுவாயில்லை. தாழ்ந்த புலைச்சி இல்லத்தே புகுந்துவிட்டால் மண்கலங்களை அகற்றிவிட்டு ஆப்பிமெழுகித் தூய்மை செய்து தற்புருடமந்திரத்தை ஐயாயிரமுறை கணித்திடுக. அப்புலைச்சி கையில் ஒருநாள் அறிவிற்றாழ்ந்து ஊண் உண்டுவிடின் கிருச்சிர விரதத்*

தோடு அகோரமந்திரத்தைப் பதினாயிரமுறை கணித்து இறைவனுக்கு ஆனைந்தாட்டி உண்டிடுக. அறிந்தும் உண்டானாயின் தத்தகிருச்சிர விரதமியற்றி உண்டிடுக. இருநாள் உண்ணின் பஞ்சகிருச்சிர விரதத்தோடு வாமதேவமந்திரம் பதினாயிரமுறை கணித்திடுக. மூன்றுநாளாயின் பின்னும் ஒருமடங்கு ஏற்றுக. அதற்கு மேற்படின் கழுவாயில்லை.

(வி - ம்.) பவுதிகன் - பிரமசாரியில் ஒருவகை. பசித்து-உண்ணுதிருந்து. புலை - புலைச்சி. ஓம்பி - அகற்றி. புருடம் - தற்புருடமந்திரம். கிருச்சிரம் - ஒரு கழுவாய் விரதம். அது பலவகைப்படும். (௬௯௯)

இழிகுலவண் ணாத்திமுத லோர்புகினுஞ் சுத்தி
யியற்றிமுந்நா ளயுதவையா யிரமியம்ப லவர்கைத்
தழுமுணவோர் கானுகரிற் பதினையா யிரநா
டாமூன்று புகன்றனைந் துண்டனு ளிரண்டேல்
விழைவினிரு குணிதமறிந் தேலொருநாட் கிரட்டி
மிசைந்ததுபன் னளாகிற் சாந்திரா யணத்தைக்
கெழுமன்மற்றை நவையுணவிற் கினைப்பினுமெந் தைக்குக்
கெவ்வியங்கொண் டாட்டிநிசி யுண்ணின்வினை கெடுமே.

(இ - ள்.) இனி இழிகுலத்தோராகிய வண்ணாத்தி முதலியோர் இல்லத்தே புகுந்தக்கால் முற்கூறியவாறே இல்லத்தைத் தூய்தாக்கி மூன்றுநாள் பதினையாயிரமுறை வாமதேவ மந்திரத்தை ஓதுக. அவர் கையாற் றொடப்பட்ட உணவினை ஒருமுறை உண்ணின் அங்ஙனமே பதினையாயிரமுறை அம்மந்திரத்தை ஓதி ஆனைந்துண்ணுக. இரண்டு நாள் உண்ணின் விரும்பி அம்மந்திரத்தை இருமடங்கு ஓதுக. அறிந்துண்ணின் ஒருநாளுக்கு இருமடங்கோதுக. பன்னாள் உண்டிருப்பின் சாந்திராயண நோன்புமியற்றுக. ஏனைய தீயவுணவுண்டதற்கு வருந்தினும் எம்பெருமானுக்கு ஆனைந்தாட்டிப் பகல் உண்ணாது இரவின் உண்ணின் அத்தீவினை கெடும்.

(வி - ம்.) அயுதவையாயிரம் - பதினையாயிரம். குணிதம்-மடங்கு. கெழுமல் - பொருந்துக. நவை - தீமை. (௭00)

வைகறேறு மொருவலக்கை நீர்மிகமுன் பக்கம்
வாய்மடுத்துப் பின்பக்க மம்முறையிற் கழித்தல்
போய்கழுவு சாந்திரா யணம்பதநீர் யாதும்
புசியாது பன்னிருநாள் போக்கினது பராகம்
மேய்கலவும் பிரசாபத் தியம்பகன்மூன் றிடையே
விரவுமோவ்வோர் நாள்விடுத்துண் டிரவுமவ்வா றுண்டல்
பெய்கனனீர் பானெய்பகன் மும்மூன்றுண் டியாதும்
பேணுமை முப்பகருன் றத்தகிருச் சிரமே.

(இ - ள்.) வளர்பிறைப் பக்கத்துப் பதினைந்து நாள்களினும் முதனாள் தொடங்கி நாடோறும் வலக்கையான் ஒவ்வொரு கை நீர் மிகும்படி ஏற்றி உண்டு தேய்பிறைப் பக்கத்தே நாடோறும் ஒவ்வொரு கைநீர் குறைய உண்ணலே மாசுகாழவுதற் குரிய சாந்திராயண நோன் பாகும், சோறு நீர் முதலிய எவ்வகை யுணவுமின்றிப் பன்னிரண்டுநாள் பட்டினி விட்டிருப்பது பராக நோன்பாகும். இனி மெய்ப்பொருளைக் கலத்தற்குக் காரணமான பிரசாபத்திய நோன்பென்பது மூன்றுநாட் பகலுணவினையும் இடையேவரும் ஒரு முழுநாளுணவினையும் விடுத்து இவ்வாறு இரவினும் உண்ணலாம். இனி தத்தகிருச்சிரம் என்பது வெந்நீர் மட்டும் ஒருநாள் ஒருமுறை உண்டும் மறுநாள் காய்ச்சியபாலை மட்டும் உண்டும் மறுநாள் உருக்கிய நெய்யைமட்டும் உண்டும் அடுத்து வரும் மூன்றுநாள் உண்ணாதிருந்தும் இங்ஙனமே பன்னிரண்டுநாள் நோற்பதாம்.

(வி - ம்.) வைகல் - நாள். முன்பக்கம் - வளர்பிறைப் பகுதி நாள். பொய் - மலம். பதம் - சோறு. கலவும் - கலக்கும். பெய் கனல் என்பதனை பாலுக்கும் நெய்யிற்கும் கூட்டுக. (௪0௧)

முக்கனிபா லுண்டன்மூ வைந்தாறு வைகன்
மொழிபவதி தபனமென முக்கணனுர் விழவில்
தொக்குநெடு வீதியிடை யிழிஞருறத் தொடினுந்
துன்னுது கரிசிறைவற் ருெழப்போகுங் காலும்
மிக்கமகத் தினும்வரைவி னுந்தொடினீ றணிதல்
வெய்யவதி பாதகத்தோ ரன்னமொரு திங்கள்
பொக்கமிகு மாபாத கத்தவர்க ளன்னம்
புணர்திங்க ளேனையரு ணுண்டுணிற்பா தகரே.

(இ - ள்.) வாழை பலா மா என்னும் மூன்றின் கனிகளோடு பாலு மாகிய உணவினைமட்டும் இருபத்தொருநாள் உண்டு நோன்பிருத்தல் பவதிதவன நோன்பென்று கூறுக. இறைவன் விழாக்காலத்தே நெடிய திருவீதியின்கண் இழிகுலத்தோர் கூடி நன்கு தொட்டாலும் தீவினை யில்லை. இறைவனை வழிபடப்போகும் பொழுதும் வேள்வி முதலி யன செய்யுங்காலத்தும் திருமணக்காலத்தும் இழிஞர் தொடின் திருநீ றணியுமாத்திரையே கழுவாயாம். இனி கொடிய மிகைத்தீவினையோர் சோற்றினை ஒருதிங்களுண்டோரும், பொய்மிகுந்த பெருந்தீவினையோர் சோற்றினை இரண்டு திங்களுண்டோரும், தீவினையோர் சோற்றினை ஓராண்டு உண்டோரும் அவ்வத்தீவினையாளராகி விடுவர்.

(வி - ம்.) முக்கனி - வாழைக்கனி, பலாக்கனி, மாங்கனி என்பன. மூவைந்தாறுவைகல்-இருபத்தொருநாள். இழிஞர்தொக்கென்க. கரிசு- தீவினை. மகம் - வேள்வி, மாமகமுமாம். (௪0௨)

இழிக்கினரு ணிழிகுலத்தா ருணுதி யழுக்கி
னேய்க்குமுளத் தினையதனு லிழிவினையே புரிவர்
வழுக்கிலரு ணுளந்தூய்மை யாக்கியிடு மதனுல்
வாய்மைவினை யேபுரிவ ராதலினு லிழியூண்

கழிக்கவரை வினினூறு நாலாநா டன்னிற்
காமருசீ மந்தத்தி னாமகர ணத்தில்
செழிக்கவூ ணூட்டுநாள் சபிண்டியிலா யிரமாற்
சிரார்த்தத்தி லயுதமப்பா லுண்ணிலொரு நூறே.

(இ - ள்.) நன்னெறியினின்றும் வழுவினோர் அளிக்கும் உணவும் இழிகுலத்தோர் தரும் உணவும் இன்னோரன்ன பிறவுணவும் உண்போர் நெஞ்சினை மாசுபடுத்திவிடும். இக்காரணத்தால் அவ்வுணவினை உண்டோரும் தீவினையே புரியும் தன்மையுடையராவர். இனி மாசில்லாதவருடைய உணவு உள்ளத்தைத் தூய்தாக்கும். எனவே அவ்வுணவுண்டோர் மெய்யாய நல்வினையே நயந்து செய்வார். இங்ஙனமாதலின் நல்லோர் இழிதகையுணவினைக் கடைப்பிடியாக உண்ணுதொழிக. இனி, ஏதிலார் உணவினை அவர் இல்லத்துநிகழும் திருமணத்தில் உண்ணநேரின் அகோரமந்திரத்தை நூறுமுறையும், நாலாநீர்ச் சடங்கிலும் விரும்புதற்குக் காரணமான சீமந்தச் சடங்கிலும் பெயர்சூட்டுச் சடங்கிலும் சோறாட்டுச் சடங்கிலும் சபிண்டிச் சடங்கிலும் உண்ணநேரின் அம்மந்திரத்தைத் தனித்தனி ஆயிரமுறையும் சிரார்த்தநாளில் உண்ணின் பதினாயிரமுறையும் அப்பானிகழும் திவசங்களில் உண்ணின் நூறுமுறையும் கணித்திடுக.

(வி - ம்.) இழிந்தோர் உணவினை உண்ணலாகாமைக்குக் காரணம் கூறியவாறு. வரைவு - திருமணவிழா. நாமகரணம் - பெயர்சூட்டு விழவு. சபிண்டி - இறந்தோர் திறத்தே செய்யுமொரு கருமம். (௪0௫)

இயக்கமிரண் டிழிந்தவெண்ணீ ருண்டவன்கீழ்ச் சாதி
யில்லகத்தி னுண்டவன்புன் புலைச்சியிணைத் தோனு
முயக்கமுற வெண்ணினவ னிவரயுத மியம்பி
முக்கணற்கா னைந்தாட்டித் தாங்களுமுண் ணுகர்தல்
வயக்கியபொற் கலமாதி மரப்பலகை யந்தம்
வன்னிநீ ராற்புனிதம் வழுக்குறிற்கோ சலமண்
நயக்குமற லாற்புனிதங் களிற்றுலவை சங்க
நன்றுகடைந் ததற்பினா டோறுமயநீர்க் கழுவல்.

(இ - ள்.) பித்து முதலிய காரணங்களானே மலம் நீர் சுக்கிலம் இவற்றை உண்டவனும், கீழ்ச்சாதியோர் இல்லத்தே உண்டவனும், புல்லிய புலைச்சியைக் கூடிணைத்தவனும் என்னும் இவரெல்லாம் அகோர மந்திரத்தைப் பதினாயிரமுறை கணித்துப் பின்னர் இறைவனுக்கு ஆனைந்தாட்டித் தாங்களும் பருகியுய்தி பெறுக. விளக்கமுடைய பொன் முதலியவற்றால் இயன்ற கலங்கள் முதலாக மரப்பலகை ஈறாகவுள்ள கருவிப் பண்டங்கள் வெந்நீரால் கழுவத் தூய்மைபெறும். இவற்றில் வழுக்குண்டாய விடத்து ஆநீரும் புற்றுமண்ணுங்கொண்டு விரும்புகின்ற நன்னீரிற் கழுவத் தூயவாம். யானைத்தந்தம் சங்கு முதலியன நன்கு கடைந்ததற்பின் தூயவாம். பின்னர் இவற்றை நாடோறும் சாணகத்தாலும் ஆநீராலும் கழுவுக.

(வி - ம்.) பித்துடைமையால் மலம் நீர் முதலியன உண்டவன் என்க. வன்னிநீர் - வெந்நீர். உலவை - கொம்பு; ஈண்டுத்தந்தம். நன்று - பெரிதும். (௪0௪)

வளைகரிக்கோ டிழுக்குறின்வெந் நீர்மண்ணுற் செம்பு
வண்புளியாற் கஞ்சமுதல் சாம்பரா லிவைதோம்
அளைவுறினெய் பூசியெரி யழுத்துதலாற் புளித
மாங்கவுசி கங்கடுகாற் சாமரைதா னரிட்டம்
திளைபுனலாற் றேலாதி தடந்திரைநீர் நன்றுற்
றிகழுமத னிழுக்குறிற்கோ சலமண்ணீ ரகற்றும்
விளைகலத்துச் சொன்றிநாய் பன்றிகரங் காகம்
வெய்யவாய்ப் பூஞைவா யிடிற்கலத்தோ டகற்றல்.

(இ - ள்.) வளைந்த யானைத்தந்தம் மாசுற்றவிடத்தே வெந்நீரானும், புற்றுமண்ணாலும் செம்பு மாசுறின் வளவிய புளியானும், வெண்கல முதலியன சாம்பரானும் தூய்மையுறும். இவை வாலாமையுடையன. ஆயின் நெய்பூசி நெருப்பினுள் இடுதலானே தூயவாம். பட்டு, கடுகரைத்துக் கலந்த நீரானும், சாமரை மோர்கலந்த நீரானும், புலித்தோல் முதலியன அலை வீசும் பெரிய நீர்நிலைகளானும் தூய்மையுறும். இவை வழுக்குப்படின் ஆநீர் புற்றுமண் முதலியன தூய்மைப்படுத்தும். சமைக்கும் கலத்தில் உள்ள சோற்றின்கண் நாய் பன்றி கழுதை காகம் வெவ்விய வாயையுடைய பூனை முதலியன வாயிட்டுவிடின் அக்கலத்தோடு அச்சோற்றை அகற்றி விடுக.

(வி - ம்.) கஞ்சம் - வெண்கலம். தோம் - குற்றம். கவுசிகம் - கடுகு; வெண்கடுகு. அரிட்டம் - மோர். சொன்றி - சோறு. கரம் - கழுதை. பூஞை - பூனை. அகற்றல் - வியங்கோள். (௪0௫)

குவித்தபதத் தொருபாங்கர் வௌவினங்க ணகற்றிக்
கொழும்பூதி தூய்க்கவ்வி யந்தெளித்த லுணுங்கால்
நவைத்தமயிர் கோசுகாதி படினுமங்க ணகற்றி
நன்னீறு தூவபேன் வடித்தழலிற் காய்த்தல்
அவித்தநீர் பெய்துப்புச் செருத்தல்கழீஇக் கறந்திட்
டாவின்பால் வெண்ணெயழ லழற்றல்புன றயிலம்
சவித்தகருப் புரம்புழுகு சாந்துபல விரையுந்
தக்கநிவே தனம்பிறவு மருக்கியநீர் தெளித்தல்.

(இ - ள்.) சமைத்துப் பாவாடைமேற் குவிக்கப்பட்ட பெரிய சோற்றுக் குவியலில் ஒருபக்கத்தே முற்கூறப்பட்ட நாய் முதலியன வாய் வைப்பின் அவ்விடத்துள்ள சோற்றைமட்டும் அகற்றிவிட்டுக் கொழுவிய திருநீற்றைத் தூவி ஆலைந்தும் தெளிக்கத் தூய்மையாம். உண்ணும்பொழுது உணவின்கண் இயமயிர் கொசு முதலியன வீழினும் அப்பகுதியை அகற்றி நல்ல திருநீற்றைத் தூவித் தூய்மை செய்க.

தேனை வடித்துச் செருப்பிலிட்டுக் காய்ச்சத் தூயதாம். உப்பினை நீர் விட்டுச் காய்ச்சத் தூய்தாம். ஆவின்முலையினைக் கழுவிக் கறத்தலானே பால் தூய்தாம். வெண்ணெயை அழலில் உருக்கத் தூயதாம். திருமஞ்சனநீரும் எண்ணெயும் ஒளியுடைய கருப்பூரம் புழுகு சந்தன முதலிய பல நறுமணப் பொருள்களும் தகுதியுடைய நிவேதனப் பொருள்களும் வழிபாட்டு நீர் தெளித்த மாத்திரையானே தூயவாம்.

(வி - ம்.) பாவாடையின்மேற் குவித்த என்க. நாய் முதலியன வெளவில் என்க. நவைத்த - தீமையுடைய. உப்புநீர் பெய்தவித்தல் எனமாறுக. சவி - ஒளி. (௬0௬)

புற்றுமண்கோ சலமயநீ றறலிவற்றி லிங்கம்
புனிதங்கூ விளமுறிப்பைஞ் சாற்றின்மிக்க புனிதம்
அற்றவருக் கற்றபரம் பொருணிறைவுள் ளகத்தே
யறியினுயிர் புனிதந்தத் துவங்களினெற் றித்த
பெற்றிதெரி கிற்பினவை யும்புனித மாகும்
பிழைக்கினெரு சந்திசா தஞ்சதநான் மடங்கு
முற்றுகநான் கெனுஞ்சந்தி பிழைக்கினிறை பூசை
முடியாதேற் கோரமா யிரங்கணித்து முடிக்க.

(இ - ள்.) சிவலிங்கம், புற்றுமண் ஆப்பி ஆநீர் திருநீறு நீர் என்னும் இவற்றால் தூய்மையுறும். இனி வில்வந்தளிர்ச் சாற்றாலே திருமுழுக்காட்டுதலே சிறப்பான தூய்மை என்ப. இறைப்பொருள் தன்னிடத்திலே நிறைந்துள்ளதனை உணரின் உயிர் தூய்மையுடையதாம். அவ்விறைப் பொருள் நாதமுதல் மண்ணிறுதி எல்லாத் தத்துவங்களினும் கலந்திருக்குந் தன்மையை உணர்ந்தவிடத்தே அத்தத்துவமும் தூயவாம். முதற்சந்தி வழிபாடு தவறின் சத்தியோசாத மந்திரம் நூறுமுறை கணிக்க. நான்காஞ்சந்தி வழிபாடு தவறின் அம்மந்திரத்தை நானூறுமுறை ஓதுக. இறைவன் வழிபாடு தவறின் அகோரமந்திரத்தை ஆயிரமுறை கணித்துப் பின் வழிபாடு செய்து முடித்திடுக.

(வி - ம்.) கூவிளமுறி - வில்வந்தளிர். தத்துவங்கள் நாதமுதல் மண்ணீறாக உள்ளவை. சாதம் - சத்தியோசாதமந்திரம், கோரம் - அகோரமந்திரம் இவையிரண்டும் முதற்குறை. (௬0௭)

அற்றந்திறைவன் பூசைபுரி யாதொழியி னிரட்டி
யறைந்துபசித் தழல்வளர்க்க பன்னுளுந் தவறில்
சிறந்திடவிம் முறையேற்றிச் செய்தல்கட காதி
திரிமதியிற் பவித்திரஞ்சாத் தாதயர்ந்தான் பசித்துப்
பறைந்திடுக விருநியுத மறிந்தொழியி னிரட்டி
பன்னுகதீ யொழியினியற் றுநாள்க ளோம்பிப்
பிறங்கநியு தம்வருடத் தின்மதிக்கீ ரயுதம்
பிழைக்கினிவே தனங்காயத் திரிநூறு பேசல்.

(இ - ள்.) அறிந்திருந்தே இறைவனை வழிபாடு ஒருநாள் செய்யாதுவிடின் இரண்டாயிரமுறை அகோரத்தைக் கணித்துத் தீயோம்புதலும் செய்க. பலநாள் வழிபாடு தவறிவிடின் இம்முறையை இரட்டிப்பாக்கி நாளுக்குநாள் ஏற்றிக் கணித்திடுக. ஆடி ஆவணி புரட்டாசி ஆகிய மூன்று திங்களினும் பவித்திரம் செய்து இறைவன் திருமுடியிலே சாத்தற்கு அறியாமல் தவறியவன் உண்ணுதிருந்து இருநூறாயிரமுறை கணித்திடுக. அறிந்தே பவித்திரஞ் சாத்தாதவன் நானூறாயிரமுறை கணித்திடுக. தீயோம்பத் தவறின் வழிபாடியற்று நாள்களுக்குக் கூறிய கழுவாயே போன்று செய்க. ஓராண்டு தீயோம்பாதொழியின் நாறாயிரமுறை அகோரமந்திரம் கணித்திடுக. ஒரு திங்கட்குத் தீயோம்பாது விடின் இருபதினாயிரம்முறை அம்மந்திரத்தையே கணித்திடுக. இறைவனுக்குத் திருவமுதூட்டத் தவறின் காயத்திரி மந்திரத்தை நூறுமுறை ஓதுக.

(வி - ம்.) அறிந்து தவறுதலாவது அறிந்திருந்தே பிறகாரணங்களால் தவறிவிடல். கடகம் - ஆடித்திங்கள். பறைந்திடுக - கணித்திடுக. (௯0அ)

செந்தழலாற் கள்வராற் சிவலிங்கஞ் சிதையிற்
செப்பிநியு தங்குருவால் வேறிலிங்கங் கோடல்
வெந்தழற்பட் டழியாதேன் மூன்றயுதம் விளம்பல்
விமலவுரு வூறுபடிற் பரார்த்தத்து மொழித்தல்
எந்தையுருச் சுயம்பாகி லொருவற்க வுருவி
னெய்தினடி யிரயுதங் கடக்கினுருத் தூளி
பந்தமுறி னேரயுத நிழல்கடக்கிற் பீடப்
பரப்பினிற்சாய்ந் துறின்முந்நூ றறைகவுளம் பதைத்தே.

(இ - ள்.) செந்நெருப்பினுதல் கள்வரானுதல் சிவலிங்கம் சிதைவுபடின் அகோரமந்திரத்தை நூறாயிரமுறை கணித்து மேலும் நல்லாசிரியனாலே வேறு சிவலிங்கம் அமைத்துக்கொள்க. வெவ்விய தீப்பட்டமாத்திரையேயன்றிச் சிதைவிலாதிருப்பின் முப்பதினாயிரம் முறை அகோரமந்திரத்தைக் கணித்திடுக. இறைவன் திருவுருச் சிதைந்தவிடத்தே அது செயற்கைத் திருவுருவாயவிடத்து அதனையும் அகற்றிடுக (வேறு உருவங் கொள்க) எம்பிரானுடைய திருவுருவம். தான் தோன்றியாய விடத்து அதனை அகற்றமுயலற்க. திருவுருவத்திற் கால்பட்டுவிடின் இருபதினாயிரமுறை அகோரம் ஓதுக. திருவுருவத்தே காலின் தூசிபடியின் பதினாயிரமுறை கணித்திடுக. திருவுருவ நிழலைக் கடந்தாலும், பீடத்தே இலிங்கம் சாய்ந்த விடத்தும் நெஞ்சுகலங்கி முந்நூறுமுறை அகோரமறைக.

(வி - ம்.) பரார்த்தம் - மானிடர் செய்த உருவம். சுயம்பு - இயற்கையிலிருக்கின்ற உருவம். அடி உருவின் எய்தின் என்க. தூளி - காற்றூசி. (௯0௯)

சற்றுருவி னுயிரம்பின் னுஞ்சற்றே யிரட்டி
சாலவுரு வினுமுழுந்தா ளுயர்வினு தாரம்

பெற்றுகினு மயுதமா தாரமின்றி விழினும்
பேழ்வாய்நீர் நெறிப்பினுமீ ரயுதமுன் றாயுதம்
உற்றிடினே கோழைநியு தந்தாழ்ந்த புனலி
னுறினுநிரு மாலியநீர்ந் தாழினுநன் றுரைக்கப்
பற்றியா ளுயர்வினிருந் துக்கிலிங்கம் வின்னிற்
பக்கொழியிற் பீடமிவற் றிற்குவிதி யின்றே.

(இ - ள்.) *இட்டலிங்கம் கைப்பிழையானே சிறிதுருண்டவிடத்தே ஆயிரமுறை அகோரமந்திரத்தை ஓதுக. மேலும் சிறிதுருளின் இரண்டாயிரம்முறை அகோரத்தைக் கணித்திடுக. மிகவுருளினும் முழந்தாளுயரத்திருந்து ஆதாரமாகிய பெட்டகக் கோயிலோடு விழினும் பதினாயிரம் அகோரம் கணித்திடுக. ஆதாரமின்றி இலிங்கமட்டும் வீழினும் பெரிய வாய்நீர் இலிங்கத்தே தெறிப்பினும், இருபதினாயிரமுறை அகோரமோதுக. கோழை இலிங்கத்தே படின் முப்பதினாயிரமுறை கணிக்க. நீரின்கண் கைதவறி வீழினும் நிருமாலிய நீரில்வீழினும் நூறாயிரமுறை கணித்திடுக. இலிங்கம் ஓராள் உயரத்திருந்து வீழ்ந்து உடையினும் பீடம் பிளந்த விடத்தும் இவற்றிற்குக் கழுவாயில்லை. (வேறுலிங்கம் ஆசிரியன்பாற் கோடல் வேண்டும்)*

(வி - ம்.) *சற்று - சிறிது. சால - மிகுதியாக. ஆதாரம் - பெட்டகக் கோயில். பேழ் - பெரிய. நிருமாலியநீர் - திருமுழுக்காட்டிய நீர். நன்று - பெரிதும் உக்கு - வீழ்ந்து. பக்கொழிதல் - பிளவுண்ணல்.* (௪௧௦)

குருநீழ லடியர்நிழற் கடந்திடின்முந் நூறு
கோமறையோர் விளக்கினிழல் கடக்கினொரு நூறுல்
இருநாழி யரிசியிழி வறுகுறுணி யுயர்வெம்
மிறைவனிவே தனத்துக்குக் கிருமிமயிர் விரவின்
மருவாதேன் றொருவனிவே திக்கினொரு நூறு
மறையோர்முன் னல்வர்வளர் தீக்கையிலா ரிலிங்கத்
திருமேனி தொடிற்பூசை சிறப்பித்து முறையாற்
செப்பல்சத மிருசதமுச் சதநான்கு சதமே.

(இ - ள்.) *நல்லாசிரியர் நிழலையாதல் இறைவனடியார் நிழலையாதல் கடந்துபோக நேர்ந்துவிட்ட இடத்தே முந்நூறுமுறையும் ஆன் பார்ப்பனர் திருவிளக்கு இவற்றின் நிழலைக்கடக்கின் ஒரு நூறுமுறையும் அகோரமந்திரத்தைக் கணித்திடுக. இனி இறைவனைத் திருவமுதூட்டுதற்கு அரிசியின் குறைந்த அளவு இருநாழியாகும். உயர்ந்த அளவு அறுகுறுணி என்க. இவ்வரிசி கிருமி மயிர் முதலியன விரவியதாதல் கூடாது. இவற்றோடு ஒருவன் திருவமுது செய்தூட்டின் இத்தீவினை தீர நூறுமுறை அகோரங் கணித்திடுக. அந்தணர் முதலிய நால்வருள் வைத்துத் தீக்கைப் பேறில்லாதார் சிவலிங்கத்தைத் தொடின் வழிபாட்டைச் சிறப்பவியற்றி நிரலே அந்தணர் முதலியோர்க்கு நூறுமுறை முதல் நானூறுமுறை ஈறாக அகோரமந்திரத்தைக் கணித்தல் வேண்டும்*

(வி - ம்.) குரு - நல்லாசிரியன். அடியர் - சிவனடியார். தோர் - ஆன். (௪௧௧)

வாமசம யத்தோர்கள் வனசரரா தியர்கை
மருவினயு தங்காக நாய்தொடின்மு வயுதம்
தோமுறுநாய்க் கடுவான்பார்த் திடினயுத மைந்து
தொடினியுதங் கிளந்துபூ சனைசிறப்பச் செய்க
ஆமிறைவற் கறைந்தவிதிப் பாதிசெப மாலை
யருநூலா திகட்கதனிற் பாதிகண்டைக் காரும்
காமருக் கியம்வீழி னுருளினுருச் சிதையிற்
கசிந்திருநா றைஞ்ஞூரு யிரமுறையே கணித்தல்.

(இ - ள்.) வாம சமயத்தினரும் வேடர் முதலியோரும் சிவலிங்கத்தைத் தீண்டியவழி, பதினாயிரமுறை அகோரங் கணித்திடுக. இலிங்கத்தைக் காகம் நாய் முதலியன தீண்டின் முப்பதினாயிரமுறை கணித்திடுக. குற்றம் பொருந்திய நாய்க்கடுவான் சிவலிங்கத்தைப் பார்த்துவிடின் ஐம்பதினாயிரமுறையும், அவன் தீண்டிவிடின் நூறாயிரமுறையும் கணித்து வழிபாடுஞ் சிறப்ப இயற்றுக. இலிங்கத்திற்குக் கூறப்பட்ட இக்கழுவாய்களுள் பாதி சபமாலைகட்கும் அரிய மெய்ந்நூல்கட்கும் கொள்க. அதிற்பாதி மணி முதலியவற்றிற்குக் கொள்க. விரும்புதற்குரிய வழிபாட்டுக்குரிய திருவமுது முதலியன வீழ்ந்துவிடின் மனம் வருந்தி இருநூறுமுறையும், உருளின் ஐந்நூறுமுறையும் உருச்சிதைந்தொழின் ஆயிரமுறையும் அகோரமந்திரத்தைக் கணித்திடல் வேண்டும்.

(வி - ம்.) வாமசமயம் - அகச்சமயமாறனுள் ஒன்று. உரையிற் கோடல் என்னும் உத்தியால் புறச்சமயத்தாரையுங் கொள்க. தோம் - குற்றம். நாய்க்கடுவான் - புலையனுக்கும் பார்ப்பனிக்கும் பிறந்தவன். (௪௧௨)

ஆட்டுகல சந்தவறித் திருமுடிதீண் டிடினி
ரயுதமெனல் சிவலிங்க ஞானமுரு விற்போர்க்
கீட்டுகழு வாயில்லை யுணற்கிறைவன் பூசை
யியற்றினேவ ரேனும்பா தகரவிற் புகுந்தால்
நீட்டுகரம் பட்டகல னொழிக்கவுமை யைங்கை
நின்மலனு தியர்பூசை யியற்றினுநற் பயனை
விட்டினரே யவரொடுஞ்சாக் கியராதி யரோடு
மேவற்க மேவுறினீ றணிந்துசிவம் விளம்பல்.

(இ - ள்.) திருமஞ்சனமாட்டுதற்குரிய குடம் தவறி இறையுருவத் திருமுடியிலே பட்டுவிடின் இருபதினாயிரமுறை அகோரமந்திர மோதுக. இனி, சிவலிங்கத்தையாதல் ஞானநூலினையாதல் ஏனைத் தெய்வத் திருவுருவங்களையாதல் விற்றுவிட்டவர்க்கு நூல்கள் தொகுத்தவற்றுள் கழுவாய் கூறப்படவில்லை. இனி அன்பானன்றி உணவின்

பொருட்டு இறைவனை வழிபாடுசெய்வோர் எத்தகையரேனும் தீவினை யாளரே என்றுணர்க. அவர் இல்லத்திற் புக்குழி அவர் நீட்டுங் கை பட்ட மண்கல முதலியவற்றை அகற்றிவிடுக. இனி இறைவி ஐந்து கை யிறைவன் முதலிய தெய்வங்களுக்குங் கூலியின்பொருட்டு வழிபாடு செய்யினும் அவரும் தீவினையோரே. அத்தகையவரோடும் சாக்கியர் முதலிய புறச்சமயிகளோடும் கூடாதொழிக. கூடநேரின் அத்தீவினை நீங்கத் திருநீறு அணிந்து திருவைந்தெழுத்தைக் கணித்திடுக.

(வி - ம்.) கலசம் - குடம். எணல் - வியங்கோள். ஞானம் : ஆகுபெயர். உருவென்றது - பிள்ளையார் முதலிய திருவுருவங்களை. ஒழிக்க வென்றமையால் கலம் மட்கலம் என்பதாயிற்று. ஐங்கைநிய லன் - விநாயகன். சிவம் என்றது திருவைந்தெழுத்தை. (௪௧௩)

கண்ணுதலா லயத்ததேது கவரினுமுண் ணடுங்கிக்
கவர்ந்தபொரு ளற்றியறிந் தேலைந்து நல்கிப்
பண்ணிடுக சாந்திரா யணங்குரவன் பார்ப்பார்
பண்ணியத்தே தெடுப்பினுமம் முறையுதவி நியுதம்
எண்ணிடுக விணங்கினவ னதன்பாத மிவனை
யிணங்கினவ னிதன்பாதி யீந்துமனுக் கணித்தல்
அண்ணலுருப் பதிட்டைசெயிற் குருப்பசித்தீர் நியுத
மைந்திலக்க நூலறியான் றீக்கைசெயி னறைக.

(இ - ள்.) இறைவன் திருக்கோயிற்குரிய பொருள்களுள் எப் பொருளையேனும் ஒருவன் அறிவின்றிக் கவர்ந்து கொண்டக்கால் அத் தீவினைதீர மனநடுங்கி அப்பொருள் போன்று நான்குமடங்கு திருக் கோயிலுக்கு வழங்குதல் வேண்டும். அறிந்தே கவர்ந்திருப்பின் ஐந்து மடங்கு வழங்குக. மேலும் சாந்திராயண நோன்பும் நோற்றிடுக. நல்லாசிரியன் அந்தணன் என்னுமிவர் பொருளைக் கவர்ந்துழியும் இம் முறையே வழங்கி அகோரமந்திரம் நூறாயிரமுறை கணித்திடுக. கவர்ந்தவனோடு கூடினவன் அதிற் பாதி வழங்குக. கூடினவனைக் கூடினவனும் அதிற்பாதி வழங்குக. அம்மந்திரத்தையும் அம்முறை யிலே கணித்திடுக. பிறர்பொருட்டு சிவலிங்கத் திருவுருவும் நிறுத்தின நல்லாசிரியன் உண்ணாதிருந்து நூறாயிரமுறை அகோரங் கணித்திடுக. மெய்ந்நூல் ஓதாத ஆசிரியன் தீக்கை செய்தால் அவ்வாசிரியன் ஐந்நூறாயிரமுறை கணித்திடுக.

(வி - ம்.) கண்ணுதல் - சிவபெருமான். நாற்றி - நான்மடங்கு. ஐந்து - ஐம்மடங்கு. பண்ணியம் - பொருள். பாதம் - பாதி. மனு - மந்திரம். பதிட்டை - பிரதிட்டை ; நிறுத்துதல். (௪௧௪)

போதகனைச் சோதகனை முத்திதனைக் கடுஞ்சொற்
புகலினூ றிலக்கமதிற் பாதியதிற் பாதி
ஓதியடி தாழ்ந்திரத்தல் கையவர்மேற் றூக்கி
னுரைத்தலா றிலக்கமா யுதத்தெறியி னிரட்டி.

தீதிலிபூ சனைசாந்தி ராயணமுஞ் செய்து
தீர்வின்டி யடைந்துபொருண் முழுதுமளித் திரந்து
காதலினன் னவர்கருணைக் கிலக்கமுற லறிவிற்
கலந்தவரைப் பிழைத்திடினு மிம்முறைகைப் பிடித்தல்.

(இ - ள்.) போதகன் சோதகன் முத்திதன் என்னும் மூன்றுவகை ஆசிரியர்களை கடுஞ்சொற் கூறின் நிரலே நூறாயிரமுறையும், ஐம்பதினாயிரமுறையும், இருபத்தையாயிர முறையும் அகோரமந்திரத்தைக் கணித்து அவ்வாசிரியர் அடிகளிலே வணங்கிப் பொறைசெய்யுமாறு இரத்தலும் வேண்டும். அவர்மேற் கையாற் புடைப்பின் அறுநூறாயிர முறை கணித்தல் வேண்டும். படைக்கலங்களாற் புண்படுத்தியக்கால் பன்னிரு நூறாயிரமுறை கணித்திடுக. மேலும் இறைவன் வழிபாடும் சாந்திராயண விரதமுமியற்றி முடித்துப் பின்னர் அவ்வாசிரியரை அடைந்து தம் பொருள்முழுதும் அவர்க்கு வழங்கி இரந்துநின்று அன்போடு அவரருட்கு இலக்கமாகுக. பேரறிவினுட் கலந்த சீவன் முத்தர்க்கு இவ்வகைப் பிழைபுரியினும் இக்கழுவாய்களையே செய்க.

(வி - ம்.) போதகன் - மெய்ந்நூலை ஓதுவிக்கும் ஆசிரியன். சோதகன் - மெய்ப்பொருளை யுணர்த்துமாசிரியன். முத்திதன் - நிருவாண தீக்கையளிக்கு மாசிரியன். அறிவிற் கலந்தவர் - சீவன்முத்தர். (சகஉ)

பாறுயிர்நெய் பழம்விரைநீ ராட்டிநறுங் குவளை
பலவணிந்து சுவையாறும் பழுத்தநா லுண்டி
கூறிமனுக் கொடுத்தானெய் விளக்கிட்டா குதிதீக்
கூர்த்திரண்டா யிரஞ்செபம்பத் திற்கொன்ரு குதியும்
வீறுபெறப் புரிந்துநிசி யுண்டுநிலத் துறங்கி
விளம்பிவா யிணைவிழைச்சு விடுத்துடனெய் பூசா
தேறுயர்த்தாற் காட்டியா னைந்துநித்தம் பருகி
லிறுங்குரவற் பிழைத்தபிழை யடியரரு ளினும்போம்.

(இ - ள்.) நல்லாசிரியர் திறத்துச் செய்த தீவினை, பால் தயிர் நெய் பழம் நறுமணப்பொருள் நன்னீர் என்னும் இவற்றால் மஞ்சனமாட்டிப் பற்பல குவளை விளக்குகளிட்டு அறுசுவையும் முதிர்ந்த நால்வகை உண்டியும் மந்திரமோதி ஆனெய் விளக்கிட்டு வேள்வியின்கண் ஆகுதி கொடுத்து இரண்டாயிரமுறை கணித்தற் கொருமுறையாகுதியும் சிறப்புறக் கொடுத்து இரவின்மட்டும் உண்டு வறுநிலத்திலே படுத்துறங்கி மெய்யே பேசி இணைவிழைச்சினை ஒழித்து உடலிலே எண்ணெயிடாமல் ஏற்றுக் கொடியுடைய எம்பெருமானுக்கு நாடோறும் ஆனைந்தான் திருமுழுக்காட்டி அவ்வானைந்தைப் பருகிவரிற் போகும் ஓரோவழி. மெய்யடியார் திருவருள் புரிந்தவிடத்தும் போகும்.

(வி - ம்.) குரவற் பிழைத்த பிழை ஆட்டி அணிந்து கொடுத்துப் புரிந்து உண்டு உறங்கி விளம்பி விடுத்துப் பூசாது ஆட்டிப் பருகின் இறும்; அடியர் அருளினும் போம் என்றுமுடிக்க. வாய்விளம்பி என மாறுக. வாய் - வாய்மை. (சகஙு)

மறையவனைச் செகுத்தானு யிரம்பசுவி னுப்பண்
மண்டபஞ்செய் தீசான நியுதமெணல் பொருளான்
முறையின்மக மாங்கியற்றல் சாந்திரா யணம்பின்
முடித்தலல தொருமதிநீற் றறையினுருத் திரத்தைப்
பொறியடக்கி யறைந்துறைதன் மதுவுண்டான் கோயிற்
புருடமெணல் பொருளன்மகம் புரிதலவர் பராகம்
நிறுவுதல்வாய்க் கோசலநெய் கஞ்சமொன்றை யழற்றி
நிறைத்தலுமாம் பூதியறை யிருத்தலுமா மவர்க்கே.

(இ - ள்.) பார்ப்பனனைக் கொன்றவன் ஆயிரம் ஆன்கள்நிற்கிற நிரையின் நடுவிடத்தே மண்டபமெடுத்து ஈசானமந்திரத்தை நாருயிர முறை கணித்திடுக. பொருளுடையானாயின் நான்முறையானே அவ்விடத்தே அறவேள்வி யியற்றுக. பின்னர்ச் சாந்திராயண நோன்பும் புரிந்திடுக. இன்றேல், ஒருதிங்கள் திருநீற்றறையுள் இருந்து பொறிகளை அடக்கிக்கொண்டு உருத்திரமந்திரத்தை நாருயிரமுறை கணித்திடுக. கள்ளுண்டோன் திருக்கோயிலின்கண் இருந்து தற்புருடமந்திரத்தை நாருயிரமுறை கணித்திடுக. பொருளுடையோனாயின் வேள்வி செய்க. மேலும் அவன் பராக நோன்பு மியற்றுக. அல்லது கள்ளுண்டான் வாயின்கண் ஆமூத்திரம் ஆனெய் வெண்கலம் என்னும் இவற்றுள் ஒன்றைத் தீயிலிட்டு விடுதலும் கழுவாயாகும். திருநீற்றறையில் கள்ளுண்டோரை வைத்தலும் கழுவாயாகும்.

(வி - ம்.) மறையவன் - பார்ப்பனன். பொருளன்-பொருளுடையோன். நீற்றறை - திருநீற்றறை. கஞ்சம் - வெண்கலம். பூதி - விபூதி. (சகஎ)

ஆடகங்கொண் டான்கோர நியுதநன்காட் டறைக
வாக்கமுளான் மகம்புரிக பிரசாபத் தியத்தால்
வாடலவ ரிருப்புமுச லத்தான்மன் னவனுன்
மாய்தலுமா நீற்றறையு மாமறியா தொருநாள்
கூடினவன் குருமனையை யழற்சாலை வாமங்
கூறுகவுள் ளவன்வேட்க தத்தகிருச் சிரத்தை
நாடலவர் குறிபீசம் பனைமடலால் விழ்த்து
நடந்துதென்றிக் கிறுதலுமா நீற்றறையு மாமே.

(இ - ள்.) பொன்னைக் களவுகொண்டவன் அகோரமந்திரத்தை நாருயிரமுறை சுடுகாட்டின்கண் இருந்து கணித்திடுக. செல்வமுடையோன் வேள்வியும் புரிக. பிரசாபத்திய நோன்பால் உடல் வாடுதலுமாம். அவர் மன்னன்பாற் சென்று தங்குற்றங்கூறி அவனால் இருப்புலக்கையால் அடியுண்டு இறத்தலுங் கழுவாயாம். நீற்றறையிலிருந்து மாய்தலுமாம். ஆசிரியன்மனைவியை அறிவின்றி ஒருநாட் கூடினவன் வேள்விச் சாலையருகிருந்து வாமதேவமந்திரத்தை நாருயிரமுறை கணித்து வேள்விசெய்து தத்தகிருச்சிர நோன்பு மாற்றுக. இனி அவர்

தம்முடைய ஆண்குறியைப் பீசத்தோடு சேர்த்துப் பனைமடலாலே தாமே அரிந்து வீழ்த்திவிட்டுத் தென்றிசை நோக்கி நடந்துசென்று இறந்து போதலும் கழுவாயாகும். அல்லது நீற்றறையிலிருந்து மாய்தலுமாம்.

(வி - ம்.) ஆடகம் - பொன். நன்காடு - சுடுகாடு. வாடல் - வாடுக. அமற்சாலை - வேள்விமண்டபம். நாடல் - நாடுக. இறுதல் - சாதல். (சகஅ)

உரைத்தவவ ரோடிணைந்தா ரோரிலக்கஞ் சாத
மோங்கன்முடிக் கணிக்கநிதி யானங்கண் வேட்க
கிருச்சிரமா மதிதபனங் கெழுமுகவான் வதைத்தான்
கிளக்கநியு தங்கோர மறிந்தேன்மற் றிரட்டித்
திரைத்சுர நதியாடி விச்சுவநா தனைமுன்
சென்றிறைஞ்சி யுணவாதி தீர்ந்தொருநாட் காசி
வரைப்பமரி னறியாமா பாதகமொன் றகலு
மதிதவிரி னறிந்தமா பாதகமொன் றறுமே.

(இ - ள்.) ஈண்டுக் கூறப்பட்ட தீவினையாளரோடு கூடினவர் மலையுச்சியிலிருந்து நூறாயிரமுறை சத்தியோசாதமந்திரத்தைக் கணித்திடுக. பொருளுடையோனாயின் அவ்விடத்தே வேள்விசெய்க. மேலும் அதிதபனம் என்னும் கிருச்சிரநோன்பையும் மேற்கொள்ளுக. அறியாமல் ஆனைக் கொன்றவன் அகோரமந்திரத்தை நூறாயிரமுறை கணித்திடுக. அறிந்தே ஆனினைக் கொன்றோன் அம்மந்திரத்தை இருநூறாயிரமுறை இயம்புக. இனி அலைவீசும் கடவுணதியாகிய கங்கையாற்றில் நீராடி விசுவநாதன் திருமுன்சென்று வணங்கி உணவு முதலியன ஒழித்து ஒருநாள் அக்காசிப்பதியில் உறைந்தோர்க்கு அறியாமற் செய்த பெருந்தீவினை ஒன்று ஒழியும்; ஒருதிங்கள் இம்முறையே அப்பதியிலிருந்து நோன்பு செய்தோர்க்கு அறிந்தியற்றிய பெருந்தீவினை ஒன்று கெடும்.

(வி - ம்.) ஓங்கல்முடி - மலையுச்சி. கோரம் - அகோரமந்திரம். சுரநதி - கங்கையாறு. மதி - திங்கள். தவிரின் - உறைந்திடின். (சகக)

கேதார முதலான வெந்தைதலங் கணிக
கிரியாதி நந்தலத்து மலமைந்துங் கீழ்ந்திட்
டாதார முயிர்க்கிறையென் றறிந்தவடி யவர்த
மடிப்பூசை யொருநாளோர் திங்களுற வியற்றின்
ஏதாகு மியங்குநெறி யென்றியா தறிந்து
மீட்டியமா பாதகங்க ளோட்டந்து விடியும்
தீதான பலவினையு மூட்டாதங் கவர்தஞ்
சேவடிபூ சித்திறைஞ்சி னுேவுவதென் கிளத்தல்.

(இ - ள்.) திருக்கேதாரம் முதலிய எந்தையார் திருத்தலங்களிலுதல், திருத்தணிகை முதலிய எம்முடைய திருத்தலங்களிலுதல் எய்தி ஆண்டுறையும் உயிர்க்கு ஐந்து மலங்களையுங் கெடுத்து ஆதாரமாயிருப்போன் இறைவனே என்று மெய்யுணர்ந்த அடியாரின் திருவடி வழிபட்டு ஒருநாள் முதல் ஒருதிங்கள் அளவும் இயற்றியோர் மக்கள் ஒழுகுதற்குரிய நன்னெறியாதென எல்லாவற்றையும் அறிந்தும் செய்த பெருந்தீவினைகள் ஓடியொழியும் எனில், தீவினையான ஏனை வினைகள் முட்டின்றி அப்பெரியோர் சிவந்த திருவடிகளை வழிபட்டோரை விட்டு அகல்வதனைக் கூறவும் வேண்டுமோ.

(வி - ம்.) கேதாரம் - ஒரு சிவதலம். கணிகவெற்பு - தணிகைமலை. முட்டாது - முட்டுப்பாடின்றி. (௬௨௦)

சண்ணித்த நீற்றினரா யக்கவடஞ் செறித்துச்
சங்கரன்மெய் யடியார்தம் பணிபுரியிற் பாவம்
மண்ணித்தங் கருத்தெல்லாம் வாய்ப்பருல காளு
மன்னனிளங் குமரர்குணங் குணமின்மை தெரியா
தண்ணித்தம் பண்பினெடும் வணங்குதல்போ லமல
னருள்வேடத் தவரையென்று மாயாதங் கவர்பால்
நண்ணித்தம் பரிவினிறைஞ் சுநரேவிண் ணுள்வர்
நலமின்மை தேர்ந்தனரே னரகமெலாந் துளைவார்.

(இ - ள்.) திருநீறு தரித்த மேனியையுடையராகவும் திருவக்கமணியணிந்துகொண்டும் எம்பெருமானுடைய மெய்யடியாராகிய சிவயோகியர்க்குப் பணிபுரிவோர் தந்தீவினையெல்லாம் கழுவப்பட்டு மேலும் தாம் வேண்டுவனவெல்லாம் வேண்டியாங் கெய்தாநிற்பர். உலகத்தை ஆளாநின்ற வேந்தனுடைய இளமைந்தருடைய நற்குணந் தீக்குணங்களை ஆராயாமலே குடிமக்கள் அவர்பாற் சென்று அடக்கத்தோடும் வணங்குமாறு போன்றே இறைவன் திருவருட்குரிய வேடத்தோடு வருவோரைக் குற்றம் குணம் ஆராயாமலே அவர்பால் சென்று அன்போடு வணங்குபவர்களே துறக்கம் புகாநிற்பார். அவர்பால் நலமுண்மை இன்மைகளை ஆராய்வாரெனின் அத்தகையோர் நிரயத்துயரனைத்தும் நுகர்பவராவர்.

(வி - ம்.) சண்ணித்தல் - பூசுதல். அக்கவடம் - கண்மணிமாலை. மண்ணித்தல் - கழுவப்படுதல். அண்ணி - அணுகி. (௬௨௧)

பணத்திபன வன்சிவவே டந்தரித்தோர் பிழைப்பிற்
பார்த்திபன்கொன் றுனிரயம் படுவனவர் தம்மை
மணத்தருக்குத் தபக்குரவ னடக்கிநிலை நிறுத்தன்
மரபிரவிற் பிறர்பொருள்கள் வௌவியியங் குழியும்
துணித்தமரி லெதிர்ந்துபடை வழங்குழியு மறையோர்த்
துணிப்பினவன் பால்வழுக்குந் துன்னுது கொடுத்த

தனத்தையிழந் துறுபாகந் தணந்திழக்கப் பட்டுச்
சாதலுறிற் றடாதிருந்தான் றனேகொன் றவனும்.

(இ - ள்.) அரசன் பார்ப்பனியாதல் பார்ப்பனனாதல் சிவனடியாராதல் தவறு செய்துழிக் கொன்றால் நரகத்தே வீழ்வன். அப்பார்ப்பனி முதலியோருடைய மனமாசு கெடும்படி ஆசிரியன் ஒறுத்தடக்கி நன்னெறி நிறுத்துதலே முறைமையாம். இனி, பார்ப்பனர் பிறர்பொருளைக் களவு செய்துகொண்டு இரவிற் செல்லுங்கால் பிடித்துக் கொன்றாலும் அல்லது பார்ப்பனரேயாயினும் பகைத்துவந்து படைவிட்ட காலத்துக் கொன்றாலும் அரசன்பால் தீவினை சேரமாட்டாது. ஒருவன் ஒருவனுக்குத் தான் கொடுத்த பொருளை இழந்தாதல் தனக்குரிய தாயப்பொருளை இழந்தாதல், இகழப்பட்டாதல் சாவத் தொடங்கினவிடத்தே அச்சாவிற்குக் காரணமானவன் அச்சாவைத் தடைசெய்யக் கடவன். தடாதிருந்தால் தானே கொன்றவனுய் விடுவன்.

(வி - ம்.) பனத்தி, பனவன் - பார்ப்பனி, பார்ப்பனன். பார்த்திபன் - அரசன். தருக்கு - ஈண்டு மாசின்மேனின்றது. துனிந்து - பகைத்து. ஒருவன் செய்த தீவினையால் மற்றையோர் இறப்பின் அவனுங் கொலைத் தீவினையைச் செய்தவனே என்பதாம். (௬௨௨)

வீடாத பிணிவெகுளி மற்றுளவே துயினுல்
வெறுத்துடலைத் தான்றனே விடுத்தல்விடுத் திடினே
ஓடாநின் றருநிரயம் பதினுரு யிரமாண்
டுறுவனு லயத்தீங்கி னுழிப்பின் வின்ஹு ளுவனுல்
ஆடுஉவை மகடுஉவைக் குழவியைமன் குலத்தி
லடர்த்தவன்மு வயுதம்வணி கக்குலத்தீ ரயுதம்
பீடாரும் பின்வருணத் தோரயுதம் பேசல்
பேசலா யிரஞ்சாதம் பூசையுயிர் தொலைத்தான்.

(இ - ள்.) தீராத நோயானுதல் சினத்தானுதல் பிறகாரணங்களானுதல் ஒருவன் தன்னை வெறுத்துத் தன்னுடலை விடாதொழிக. விட்டானுயின் தான் செல்லாநின்ற நரகத்தே பதினுருயிரம் ஆண்டு கிடந்துழலாநிற்பன். திருக்கோயிற் றிருப்பணியின் பொருட்டு நிறைவேருமை முதலிய காரணம்பற்றித் தற்கொலை செய்துகொண்டவன் சிவலோக மெய்துவன். அரசகுலத்தில் ஆடவரையாதல் மகளிரையாதல் குழவியையாதல் கொன்றவன் அகோரமந்திரத்தை முப்பதினுயிரமுறை கணித்திடுக. வணிக குலத்தினுயின் இருபதினுயிரமுறையும் வேளாளர் குலத்திலாயின் பதினுயிரமுறையும் கணித்திடுக. பூனையைக் கொன்றவன் ஆயிரமுறை சத்தியோசாதமந்திரம் கணித்திடுக.

(வி - ம்.) வீடாத - தீராத. ஆடுஉ - ஆடவர். மகடுஉ-மகளிர். மன்குலம் - அரசகுலம். பின்வருணம் - வேளாளர்குலம். பூசை - பூனை. (௬௨௩)

வானரமன் னந்தோகை வாரணம்பாம் பாதி
மாய்க்கினிரல் டாயிரங்கா ரமனரமான் மேடம்

ஊனிலுயிர் பிரிக்கிலஞ்ஞூ றேனமற்றும் வனத்தி
லுறுமிருகங் கெடுப்பினூ றுரைக்கநாய் நரியைத்
தானழிப்பிற் சாதமா யிரமெலிமூ டிகத்தைத்
தாக்கினூ றென்பிலுயிர் சவட்டுறினைம் பஃதால்
ஈனமுறு கிருமிபல வொருவைக லிறுப்பி
னென்னுதன்மூன் றயுதமுற வேறும்வினை பாறும்.

(இ - ள்.) குரங்கு அன்னம் மயில் கோழி பாம்பு முதலியவற்றைக் கொன்றால் இரண்டாயிரமுறையும், காரா, மரை மான் ஆடு முதலியவற்றைக் கொன்றால் ஐந்நூறுமுறையும், பன்றி முதலிய காட்டு விலங்குகளைக் கொன்றால் நூறுமுறையும், சத்தியோசாத மந்திரத்தைக் கணித்திடுக. நாய் நரியைக் கொன்றால் ஆயிரமுறையும், எலி பெருச்சாளி முதலியவற்றைக் கொன்றால் நூறுமுறையும், என்பில்லாத புழுக்களைக் கொன்றால் ஐம்பதுமுறையும், கீழான கிருமிகள் பலவற்றை ஒருநாளிற் கொன்றால் முப்பதினாயிரமுறையும் அம்மந்திரத்தைக் கணித்தால் ஏறுகின்ற தீவினை கெடும்.

(வி - ம்.) வாரணம் - கோழி. காரா - காராம்பசு. மேடம் - ஆடு. ஏனம் - பன்றி. மூடிகம் - பெருச்சாளி. பாறும் - அகலும். (௪௨௪)

குரங்குநரி நாயுரக மூறுசெயிற் றெறுக்கால்
கொட்டினுங்கண் டத்தளவு குளிர்புனலி னின்று
தரங்கமலி புனற்சடையிற் றலைமாலை மயிர்சூழ்
தண்கமல வதனமொளி ததைந்துசுழல் விழிமூன்
றுரங்கலவு சருப்பவிருச் சிகமாலை வலநா
லொண்கரத்துச் சூலமழுத் தண்டுவா ளிடநால்
கரங்கதுவு கட்டங்கந் தலைபலகை பாசங்
கருமேனி யிறையைநினைந் தயுதமெண்ணிற் றீரும்.

(இ - ள்.) குரங்கு நரி நாய் பாம்பு முதலியன கடித்தாலும், நண்டுத்தெறுக்கால் (தேள்) கொட்டினும், கழுத்தளவு குளிர்ந்த நீரின்கண் நின்று எம்பிரானுடைய அலைமிக்க கங்கையையுடைய திருச்சடையினையும் தலைமாலையினையும் மயிர்சூழ்ந்த குளிர்ந்த தாமரை மலர் போன்ற திருமுகத்தினையும் ஒளிநிரம்பச் சுழலாநின்ற மூன்று விழியினையும் கலந்தபாம்பு தோள்மாலைகளையும் வலப்பக்கத்து நான்கு கைகளிடத்தும் சூலமும் மழுவும் தண்டும் வாளுமாகிய நாற்படையினையும், இடப்பக்கத்துக் கைகள் நான்கினும் பொருந்திய கட்டங்கமும் தலையும் பலகையும் பாசமும் ஆகிய நாற்படையினையும் கரிய திருமேனியையும் உடைய அகோரத் திருவுருவத்தைத் தேனித்து அகோரமந்திரத்தைப் பதினாயிரமுறை கணிக்க அந்நஞ்சுகள் தீரும்.

(வி - ம்.) உரகம் - பாம்பு. தெறுக்கால் - நண்டுத்தெறுக்கால். தரங்கம் - அலை. மயிர் - தாடி. சருப்பம் - பாம்பு. விருச்சிகம் - தேள். கட்டங்கம் - கட்டுவாங்கம் என்றும் ஒரு மழுப்படை. (௪௨௫)

பரிவிடைதா னியந்தரணி யரிதாரஞ் செம்பொன்
பரிந்தேற்பி னாலயத்துப் பதிந்தயுதங் கணித்தல்
விரிதருகம் பளம்பஞ்சு தயிலம்பா றயிர்நெய்
வெஃகின்முந்நூ றுறைதன்மட மேற்பிறொரு நியுதம்
கரைதல்வினை தீரவொரு வன்கொடுக்கு மூண்டி
கடைபோக வேலாது சின்றளேற் றதனை
அரனருளா ரியனடியார்க் கூட்டியுண லவர்கட்
களித்தலொரு நாட்டவறி னறைந்திடனூற் றெட்டே.

(இ - ள்.) குதிரை எருது கூலம் நிலம் அரிதாரம் செவ்விய பொன் என்னும் இவற்றை விரும்பித் தானமாக ஏற்றவன் திருக்கோயிலி லிருந்து பதினாயிரமுறை அகோரங் கணித்திடுக. விரித்தல் செய்யும் கம்பளம் பஞ்சு எண்ணெய் பால் தயிர் நெய் என்னுமிவற்றை விரும்பித் தானமேற்பின் முந்நூறுமுறை கணித்திடுக. திருமடத்தைத் தான மேற்பின் நூறாயிரமுறை அகோரங் கணித்திடுக. தீவினை தீர்தற் பொருட்டு ஒருவன் வழங்குஞ் சோற்றினை ஒருவன் தன் வாழ்நாள் முழுதும் ஏற்றல் ஒழிக. சிலநாள் மட்டும் ஏற்றுக்கொள்க. சோறேற் கும் பொழுது அதனையும் சிவனடியார் ஆசிரியன் முதலியோரைக் கூட்டிக்கொண்டு உண்ணுக. அவர்களைக் கூட்டி உண்ணலில் ஒருநாள் தப்பின் நூற்றெட்டுமுறை அகோரம் கணித்திடுக.

(வி - ம்.) பரி - குதிரை. விடை - எருது. வெஃகின் - விரும்பிக் கொள்ளின். கரைதல் - கரைக. கடைபோக - ஆயுள்முடியுங் காறும். அரனடியார் என ஒட்டுக. (௪௨௧)

பிணியினமூப் பினகன்று பெறுதகரு வயிற்ற
பீண்முதிர்ந்த புனிற்றவிளங் கன்றினசாங் கன்ற
உணவெனப்பவ் வியுண்ப விவையொழிந்த குடஞ்சுட்
டும்பர்பிராற் காட்டுறுமைந் துதவுவன வாகும்
அணவுபுகை நிறநீல நிறஞ்செம்மை வெண்மை
யருங்கபிலை நிறப்பசுவின் மயநீர்பா றயிர்நெய்
நணுமளவு பெருவிரலிற் பாதிபல மொன்று
நான்கொடுமூன் றெருமூன்று பலமிரண்டு கோடல்.

(இ - ள்.) நோயுடையனவும், கிழம்பட்டனவும், சினைதனவும் கருக்கொண்டுள்ளனவும், கருமுதிரப்பெற்றனவும், இளங்கன்றுடைய னவும், கன்று சாகப்பட்டனவும், மலமுண்ணும் இயல்புடையனவும் என்னும் இவை ஒழிந்த ஏனைய ஆக்கள் தேவதேவனாகிய இறைவனுக்கு ஆட்டுதற்குரிய ஆனைந்தும் அளிப்பதற்குத் தகுதியுடையனவாகும். சூழாநின்ற புகைபோன்ற நிறமும், நீலநிறமும், செந்நிறமும், வெண் ணிறமும், அரிய கபிலநிறமும் என்னும் இந்த நிறமுடைய ஆன்க ளுடைய சாணகம் நீர் பால் தயிர் நெய் என்னும் இவ்வைந்தனுள்

*நிரலே பெருவிரலிற் பாதியும் ஒருபலமும் ஏழுபலமும், மூன்றுபலமும் இரண்டுபலமும் கொள்க.*

(வி - ர.) *அஃதாவது புகைநிறப் பசுவின் சாணகத்தில் பெருவிரலளவிற் பாதியும் நீலநிறப் பசுவின் நீரில் ஒருபலமும், செந்நிறப் பசுவின்பால் ஏழுபலமும் வெண்ணிறப் பசுவின் தயிர் மூன்றுபலமும் கபிலநிறப் பசுவின் நெய்யில் இரண்டுபலமும் கூட்டியது ஆனைந்து என்றவாறு.* (௬௨௭)

**உரைத்தநிறத் தனவிலையேற் கபிலைநிறத் தைந்து**
**முறவேற்க வஃதுமரி தேனேர்ந்த துதவக்**
**கருத்தமைக மண்விழுமுன் கமலத்தில் வானிற்**
**கண்டித்து நடுமயத்தைக் கைக்கொள்க கன்று**
**பசித்தபசி யிரித்தபின்றைப் பால்கொள்க வறையொன்**
**பதுமரிசி யாறுத றருப்பையிறு றுதல்**
**வரைத்துமுக விறமைந்து நடுக்கிழக்குத் தெற்கு**
**வடக்குமேற் கிட்டீசா னத்தைந்து மிடுதல்.**

(இ - ள்.) *ஈண்டுக் கூறப்பட்ட நிறமுடைய ஆன்கள் இல்லையாயின் கபிலநிற ஆனிலேயே சாணக முதலிய ஐந்தனையும் கொள்க. அக்கபிலநிறவாறும் இல்லையாயவிடத்து வேறுன்களிடத்துக் கொள்ளுதற்குக் கருதுக. இனிச் சாணகம் நிலத்திலே வீழுமுன்னரே இடைவெளியிலேயே முற்பகுதியையும் பிற்பகுதியையும் விடுத்து நடுச் சாணகத்தைத் தாமரையிலையிலே ஏற்றுக்கொள்க. கன்றின் பசிபோய பின்னர்ப் பால் கறந்திடுக. இனி ஒன்பது கோட்டங்களையும் அரிசியாறுதல் தருப்பையிறுறுதல் வரையறுத்து முகத்திலே ஐந்து நிறங்களையும் பொதுமையினிட்டு நடுவும் கிழக்கும் தெற்கும் வடக்கும் மேற்கும் ஈசானத்திலும் ஐந்து நிறங்களையும் தனித்தனியே இடுக.*

(வி - ம்.) *நிறத்தன: குறிப்பு வினையாலணையும் பெயர். ஐந்தும் - சாணக முதலிய ஐந்தும். இட்டு : செய்து என்ற வாய்பாட்டெச்சம்.* (௬௨௮)

**வீறுசிவ தத்துவமே சதாசிவதத் துவமே**
**வித்தியா தத்துவந்தற் புருடதத் துவமே**
**கூறுதரு காலதத் துவமவ்வி யத்த**
**கோட்டஞ்சுப் பிரதிட்டை சுசந்தைதே சடுத்தங்**
**கேறுகல் மரதனபாத் திரமமிர்த கலமே**
**யிலங்குசத்தி தத்துவபாத் திரமுறையர்ச் சித்துப்**
**பாறயிர்நெய் நீர்மயந்தெண் புனல்பெய்தொன் ருதி**
**பாலாதிக் கேறவீ சானமுதல் பகர்ந்து.**

(இ - ள்.) *சிறப்புடைய சிவதத்துவ கோட்டாயநம என்றும், சதாசிவ தத்துவ கோட்டாயநம என்றும், வித்தியாதத்துவ கோட்டாயநமவென்றும், தற்புருடதத்துவ கோட்டாய நமவென்றும், கூறு*

படுத்தாநின்ற காலதத்துவ கோட்டாய நமவென்றும், அவ்வியத்த கோட்டாய நமவென்றும், தத்துவ கோட்டங்களையும் அவற்றில் வைக்கப்பட்ட கலங்களை நிரலே சுப்பிரதிட்டை சுசந்தை தேசோவற் பாத்திரம் மணிப்பாத்திரம் அமிர்தம் பாத்திரம் சத்திதத்துவ பாத்திரம் என்று அவற்றின் பெயரை அறிந்து முறையாக அவற்றையும் வழிபாடு செய்து அவற்றுள் பால் தயிர் நெய் ஆநீர் சாணகம் தெள்ளியநீர் இவற்றைநிரலே பெய்து பால் முதலியவற்றிற்கு ஒன்றுமுதலாக ஏற்றி ஈசான முதலிய மந்திரத்தைக் கணித்தல் செய்து.

(வி - ம்.) வீறு - வேறொன்றற்கில்லாத சிறப்பு. அரதனம்-மணி. தேசடுத்தங் கேறுகலம் என்றது, தேசோவற் பாத்திரம் என்றவாறு. (௬௨௯)

வெற்றபுனற் கறுகுகுசை சந்தனமிட் டறுகால்
விமலகா யத்திரியை விளம்பிமய மாதி
உற்றநீ ராதியிடை மூலத்தா லொடுக்கி
யுதகமும்வே றதிற்காயத் திரியினு லொடுக்கி
மற்றதனைப் பிரமாங்கஞ் சிவகாயத் திரியு
மனுமூல நூற்றெட்ட னேடுமந் திரித்து
நற்றிசைபந் தனமாதி புரிதலிக்கவ் வியந்தை
நயந்திறைவற் காட்டிநுகர்ந் திடின்வினைக ணலிமே.

(இ - ள்.) வெறுநீர் உடைய பாத்திரத்தின்கண் அறுகும் தருப்பையும் சந்தனமுமிட்டு ஆறுமுறை சிவகாயத்திரியைக் கணித்துச் சாணக முதலியவற்றை நீர் முதலியவற்றோடு மூலமந்திரமோதிக் கூட்டி, அதனோடு சிவகாயத்திரியை ஓதித் தூயநீரையும் கூட்டி அக் கூட்டரவிற்குச் சங்கிதையையும் சிவகாயத்திரியையும் நூற்றெட்டு மூலமந்திரத்தோடே கணித்து நல்ல திசைப்பந்தனமும், அவகுண்டனமும், தேனுமுத்திரையும், பிறவும் இயற்றுக. இங்ஙனம் வழிபாடு செய்து கூட்டிய ஆனைந்தினை விரும்பி இறைவனுக்கு ஆட்டித் தாமு நுகர்ந்திடின் தீவினைகள் கெடும்.

(வி - ம்.) வெற்ற - வறிது. மயம் - கோமயம். சாணகத்தை ஆநீரினும் ஆநீரை நெய்யினும் இவ்வாறு கூட்டி என்க. பிரமாங்கம் - சங்கிதா மந்திரம். நலிம் - நலியும். (௬௩௦)

வறும்புனலுக் களவுதொடி யொன்றும்பாத் திரந்தான்
மாசையிர சதமுமாம் பலாசுசெம்பு மாகும்
உறும்பரிவின் வினைதீர்ப்பான் குடாதுமுக மான
வம்பர்பிராற் காட்டியது பகலுண்டு துயிலின்
குறும்பிரவு மொரீஇக்குறு தானனத்த னுகிக்
கோலம்வளர் திருமேனி விழியிரண்டு மழுத்தப்
பெறும்பிரண வங்கலந்த மூலமென்னன் முறையாம்
பேசியைந்து மிதயமெலி தாட்டிநுகர் தலுமாம்.

(இ - ள்.) வெறுந்தண்ணீர்க்கு அளவு ஒரு தொடியாகும். பாத்திரங்கள் பொற்பாத்திரமும் வெள்ளிப் பாத்திரமுமாம். பலாசுப் பாத்திரமும், செப்புப் பாத்திரமும் ஒரோவழிப் பொருந்தும். மிகுகின்ற இரக்கத்தானே தீவினைகளைக் கழுவக் கருதுபவன் மேற்குமுகமாக வீற்றிருக்கின்ற தேவதேவனாகிய இறைவனுக்கு இவ்வானைந்தும் ஆட்டிப் பகலிலே உணவருந்தி, இரவிலே துயிலின் குறும்பினை அகற்றி விழித்திருந்து கிழக்கு நோக்கிய முகமுடையனாய் அழகு மிகாநின்ற இறைவனுடைய திருமேனியின்கண் இருவிழிகளும் அழுந்தும்படி நோக்கி ஆசிரியன்பாற் பெற்ற பிரணவமந்திரங் கலந்த மூலமந்திரத்தைக் கணித்தல் முறையாகும். இனி, பிரணவமோது முரிமையில்லார் இதயமந்திரமும் திருவைந்தெழுத்துங் கணித்து எளிதாக இறைவனுக்கு ஆட்டித் தாமும் பருகுதலும் ஆகும் என்க.

(வி - ம்.) முன்னர் ஆனைந்திற்கும் அளவு கூறப்பட்டது. எஞ்சிய வறுநீர்க்கு அளவு ஒரு தொடியாம் என்றவாறு. மாசை - பொன். இரசதம் - வெள்ளி. திர்ப்பான் : வினையாலணையும் பெயர். ஆனனத்தன் - முகமுடையோன். (௫௩௧)

பிழைதணப்பத் தனையொருவ னடுப்பினு சிரியன்
பின்பக்கத் தட்டமியி னிசியானைந் தாட்டி
விழைதருநல் லுணவூட்டிப் பதினன்கு காறும்
வினைப்பினறுந் தீவினைகள் விளியநலம் பெருக
மழைதவழ்கண் டத்தனரு ளாற்பயோ ததியின்
வந்தபயோ தரியேதா யேபற்று கென்னுத்
தழைதருபுல் லருத்தியருக் கியந்தெளித்தர்ச் சித்துத்
தாழ்ந்துபால் கறந்திறைவற் காட்டின்வினை சாயும்.

(இ - ள்.) ஒருவன் தான் செய்த தீவினையைக் கழுவுதற்பொருட்டு ஆசிரியனை அடுத்த பொழுது அவ்வாசிரியன் தேய்பிறைப் பக்கத்து எட்டாநாளிரவு அவன் பொருட்டு இறைவனுக்கு ஆனைந்தாட்டித் திருவமுதூட்டிப் பதினன்காநாள் முடியுங்காறும் வழிபாடு செய்யின் அவன் செய்த தீவினைகள் கெட்டொழியும். இனி ஐந்துமுதவும் நல்லாவை நீலகண்டத்து இறைவன் திருவருளாலே உலகின்கண் நலம் பெருகும் பொருட்டுத் திருப்பாற் கடலிலே பிறந்த பான்மடியுடையோய்! கடவுளன்னாய்! திருவாயேற்றருளுக என்று இரந்து அதற்குத் தழைத்த புல்லூட்டி வழிபாட்டுநீர் தெளித்துப் பரவி வணங்கிப் பாலைக் கரந்து எம்மையாளுடைய இறைவனுக்கு அப்பாலைமட்டும் ஆட்டினும் எத்தகைய தீவினையும் கெட்டொழியும்.

(வி - ம்.) பிழை - தீவினை. நிசி - இரவு. பதினன்காநாள், தீவினைகள் அறும் என மாறுக. பயோததி - பாற்கடல். (௫௩௨)

புனலிடையாழ்ந் திருந்துவளி தடுத்திறையை நினைந்து
புகல்சிவகா யத்திரிநூற் றெட்டுளத்தி லெண்ணில்

மனமிறைந்த வொருகுற்ற மறுமோன முற்று
வழங்குபொறி தடுத்தமலன் மலரடியர்ச் சிப்பின்
கனல்படுபஞ் சாம்வாக்கி னெருகுற்ற முணவு
கடுகமுந்நா ளொழிந்துசந்தி தோறுந்தெண் ணீர் பருகி
அனகனுரு நினைப்பினுடற் குற்றமொன்று விளியு
மஞ்செழுத்தா யிரந்தும்ம லாதியெழிற் பயிற்றல்.

(இ - ள்.) நீரினுள் முழுகியிருந்து உயிர்க்காற்றினைத் தடுத்தடக்கி இறைவனைத் தேனித்துக் கூறப்படும் சிவகாயத்திரி மந்திரத்தை நாற்றெட்டுமுறை நெஞ்சினுள்ளே கணித்தால் நெஞ்சத்தாலே செய்த தொரு தீவினை கெடும். இனி, புலன்களிலே சென்று விழாநின்ற ஐம் பொறிகளையும் அடக்கி மௌனியாயிருந்து இறைவன் திருவடிமலரை வழிபட்டால் சொல்லா லியற்றியதொரு தீவினை தீயிற்பட்ட பஞ் சேனக் கெட்டொழியும், மூன்றுநாள் உணவினைக் கடிதாகத் துறந்து சந்திக் காலந்தொறும் தண்ணீர்மட்டும் பருகி இறைவனுடைய திரு வுருவத்தைப் பாவனைசெய்தால் உடலானிகழ்ந்ததொரு தீவினை கெடும். தும்மல் முதலியன தோன்றின் திருவைந்தெழுத்தை ஆயிரமுறை கணித் திடுக.

(வி - ம்.) புனல் - நீர். வளி - பிராணன். (௫௩௩)

வடாதுகுணக் கினைநோக்கு முச்சிமுகம் பளிங்கு
வரைபெயரீ சானங்கிழக் கெதிர்முகங்கோங் கலரே.
தடாதபெயர் தற்புருடம் வலத்தோண்மேற் றென்பா
றனைநோக்கு மயிர்சூழ்ந்த முகங்கரிய தகோரம்
விடாதிடத்தோண் மிசையுதக்குத் திசைநோக்குந் தெரிவை
மிளிர்முகஞ்செம் மணிநிறஞ்சொற் பெயர்வாம மெருத்தில்
குடாதெதிர்ந்த முகம்வெண்மை சத்தியோ சாதங்
கொண்டுரைக்கும் பெயரிந்த வைந்துமுகத் தோடும்.

(இ - ள்.) உச்சியிலுள்ள முகம் வடகிழக்கை நோக்கியிருக்கும். அதன் நிறம் படிகமலையின் நிறம். அதன் பெயர் ஈசானம். இனிக் கிழக்குத் திசை நோக்கியிருக்குமுகம் கோங்கமலர் போன்ற நிறமுடையது; அதன் பெயர் தற்புருடம் எனப்படும். இனி வலத்தோள் மேற் பொருந்திய முகம் தென்றிசையை நோக்கியிருக்கும். தாடி மயிர் சூழப் பட்ட இம்முகம் கருநிறமுடைத்து; இதன் பெயர் அகோரம் என்க. இடத்தோண் மிசை இடையறாது வடதிசையை நோக்கியிருக்குமுகம், உமையன்னையின் முகம்போன்றிருக்கும்; அதனிறம் செம்மணி நிறம்; சொல்லப்படும் அதன்பெயர் வாமம் என்ப. பிடரின்கண் மேற் றிசையை நோக்கியிருக்குமுகம் வெண்ணிறமுடைத்து; இதற்கு அறிஞர் கொண்டு கூறும் பெயர் சத்தியோசாதம் என்பதாம். இந்த ஐந்து திருமுகங்களோடும்,

(வி - ம்.) பளிங்குவரை - படிகமலை. மயிர் - தாடிமயிர். உதக்குத் திசை - வடதிசை. தெரிவை - உமை. (௪௯௨)

கடுக்கைமதிச் சடிலமூ வைந்துவிழி வலப்பாற்
கரமைந்தின் வேலபயஞ் சூலங்கட் டங்கம்
முடுக்குமிசைத் துடியிடப்பாற் கரமைந்தின் வரத
முதிர்சுவைத்தா டிமம்பாம்பு செபவடமுற் பலமும்
தொடுக்குமிலக் கணத்தமைந்த முப்பதிற்றீ ருறுப்புந்
துன்னுவய தீரெட்டும் பளிக்குருவுந் திகழும்
அடுக்குமொளிச் சதாசிவதத் துவதவிசிற் பதுமத்
தடிகளிணை யடிகடொழ நெடுவினையும் விடுமே.

(இ - ள்.) கொன்றை மலரும், பிறையும், சடையும், பதினைந்து திருவிழிகளும், வலக்கைகள் ஐந்தினும் வேலும், அபயமும், சூலமும், கட்டங்கமும், இசையை முடுக்காநின்ற துடியும், இடக்கைகள் ஐந்தினும் வரதமும், சுவைமிக்க மாதுளமும், பாம்பும், செபமாலையும், நீலமலரும் உடையராய், இங்ஙனம் அறிஞரால் தொடர்புபடுத்துக் கூறப்பட்ட இலக்கணமமைந்த முப்பத்திரண்டு உறுப்பும், பதினாறுண்டகவையும், பளிங்குபோன்ற திருமேனியும் உடையராய்த் திகழாநின்றவரும், ஒளி பொருந்திய சதாசிவ தத்துவமாகிய இருக்கையின்கண் எழுந்தருளியிருப்பவருமாகிய எம்பெருமானுடைய தாமரை மலர்போன்ற திருவடிகளைப் பாவனைசெய்து தொழ மிகப்பழைய வினைகளும் கெட்டொழியும்.

(வி - ம்.) கடுக்கை - கொன்றை. சடிலம் - சடை. தாடிமம் - மாதுளை. உற்பலம் - நீலோற்பலம். (௪௯௩)

ஐவருக்குந் திருமேனி யலர்முகத்தி னிறமே
யவிர்விழியு மறைந்தனவே யைவருக்கும் வலப்பால்
கைவயங்கு திரிசூலம் வரதமிடக் கரத்திற்
கண்மணிமா லிகையபயந் திலகமும்வண் டோடு
மைவகுத்த வளகமுங்கொண் டுமைமுகம்போ லிருந்த
வாமதே வரையொழிந்த நால்வருக்குஞ் சடிலப்
பைவளரு மரவுமதி யுளபகரெண் கையும்
பற்றிடுவர் கோரரைவர்ப் படர்ந்தவர்க்கென் பிழையே.

(இ - ள்.) ஐந்து மூர்த்திகட்கும் திருமேனி அவ்வம் மூர்த்தியின் மலர்ந்த முகத்தின் நிறமேயாம். விழியும் மும்மூன்றே. ஐந்து மூர்த்திக்கும் வலப்பகுதிக் கையில் விளங்கும் முத்தலைச் சூலமும், வரதமும் இடப்பக்கத்துக் கையில் கண்மணிமாலையும், அபயமும் உள. திலகமும், வளவிய தோடும் முகிலொத்த கூந்தலும் உடையராய் உமையம்மையார் திருமுகம் போன்று முகமுடையராயிருந்த வாமதேவரை ஒழிந்த ஏனை நால்வருக்கும் சடையும், அரவமும், பிறையும் உள. முற்கூறிய படைக்கலன்களை அகோரமூர்த்தி தம் மெட்டுக் கைகளினும் பற்றியிருப்பர். அம்மூர்த்தியை நினைப்பவர்க்குத் தீவினை ஒரு சிறிதும் உளதாகாது.

(வி - ம்.) கண்மணிமாலிகை - உருத்திராக்கமாலை. தோடு - குழை. கோரர் - அகோரமூர்த்தி. (௬௯௬)

தவளநிறங் கனகநிறஞ் சிந்தூர நீலந்
தனுவிதய தேவர்முத னல்வர்க்கு மேனே
அவிருறுப்புப் பகர்ந்தனவே நேத்திரங்கட் கிரவி
யலங்குமதி கனலுருவ மபயவர தங்கை
இவர்முகமொவ் வொன்றுவிழி யிவ்விரண்டத் திரருக்
கெதிரறுசெவ் வரத்தவுருக் கரதலமீ ரைந்து
சிவனயன மொருமூன்றுஞ் சினத்திடித்த குரலுந்
திகழுமிவ்வா றறுவரையுந் தேரின்வினை தீரும்.

(இ - ள்.) இதயதேவர் சிரதேவர் சிகைத்தேவர் கவசதேவர் என்னும் நால்வருக்கும் உடலின் நிறம் நிரலே வெண்ணிறமும், பொன்னிறமும், சிந்தூரநிறமும், நீலநிறமுமாம். விளங்குகின்ற ஏனைய வுறுப்புக்கள் முற்கூறப்பட்டனவேயாம். நேத்திரதேவர் மூவர்க்கு முகம் ஓவ்வொன்றேயாம். நிறம் நிரலே ஞாயிறு, இயங்குந் திங்கள், தீ என்னு மிவற்றின் நிறமாம். கையிரண்டே; அவற்றில் அபயமும் வரதமும் உள. விழியும் இவ்விரண்டே. அத்திரதேவர்க்கு ஒப்பற்ற செவ்வரத்த மலர் நிறமும், பத்துக் கைகளும், கண்கள் மூன்றும், வெகுண்டொரப்பிய குரலும் உள்ளனவாம். விளங்கும் இத்தேவர் அறுவரையும் இப்படிப் பாவனைசெய்து வழிபடின் தீவினைகள் அனைத்தும் தீர்ந்தொழியும்.

(வி - ம்.) தவளம் - வெள்ளை. தனு - உடல். சிவனயனம் - சதாசிவத்திற்குரிய கண்கள் என்க. (௬௯௭)

வாக்காதி கடந்துமறை கடந்தொளிரு மிறைவன்
மன்னுயிர்கட் குடலாதி வழுக்கின்வழுக் கறுத்து
நோக்காமைத் தனைநோக்கு மியல்பருளும் பொருட்டு
நுவன்றவா றருண்மேனி யருளினு தரித்தான்
தீக்கான்மண் புனல்வான மிருசுடரான் மாவுந்
திலத்தினுறு நெய்யென்னச் செறிந்துயிரி னில்லான்
தாக்காமை யெத்தொழிலும் புரிந்திடுமெண் குணத்தான்
றனுதியலை யறிவாரார் தாளடையி னல்லால்.

(இ - ள்.) வாக்கு முதலியவற்றையுங் கடந்து வேதாகமங்களையுங் கடந்து அப்பாலாய் விளங்காநின்ற இறைவன் நிலைபெற்ற உயிர்களுக்கு (உடல் முதலியவற்றை அருளி) உடல் முதலியவற்றால் தீவினை செய்த விடத்தே அத்தீவினைகளைக் கழுவாய்செய்து நன்னை அறியாமே அறிந்துகொண்டுய்யுமொரு நன்மையினை உண்டாக்கத் திருவுளங்கொண்டு யாம் ஈண்டுக் கூறியவாறு இந்த அருட்டிருமேனிகளை மேற்கொண்டருளினன். இங்ஙனம் அவனருளாலே காட்டாக்கால், தீயும் காற்றும் நிலனும் நீரும் வெளியும் ஞாயிறுந் திங்களும் உயிரும் என்

லும் இவ்வெண் பொருளினும் எள்ளில் நெய்போன்று அகமும் புறமுஞ் செறிந்து எக்காலத்தும் பிரியாது உறைபவனும், பற்றின்றியே தொழில் பலவும் செய்பவனும், எண்குணமுடையோனுமாகிய அவ் விறைவனுடைய இயல்பினை அவனருளாலே அவன்றாள் அடைந்த சான்றோரையல்லது யாரே உணர்ந்துகொள்ள வல்லுநராவார்.

(வி - ம்.) வாக்காதி - வாக்கும் மனமும். மறை - வேதம்; மறை யாதி என்க. உடலாதி ஈந்து அவற்றால் வழுக்கின் என்க.

நோக்காமைத் தனைநோக்கு மியல்பாவது – "அறியாமை அறி வகற்றி அறிவினுள்ளே அறிவுதனை அருளினன் அறியாதேஅறிந்" திருத் தல் என்க.

"காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக் காலே" என்றெழுந்த திருநாவுக்கரையர் திருவாக்கு முணர்க. (௬௩. அ)

கண்ணிகுத்தி வலைதொடுத்துக் கருதுறுபுள் ளுவர்போற்
கருணையா லுயிர்திருந்தக் கருதியந்த விறைவன்
நண்ணியநற் றலங்களினை யடுத்தடிப்பூ சனையு
நயந்தடியர் பணியுமுறின் வினைகளெல்லா நலியும்
விண்ணிவர்பல் போகமெல்லாம் வேட்டாங்கங் குதவும்
வெய்யமல மூன்றுமழற் றுய்யெனவெந் தவிய
எண்ணரிய முத்தியுமா ரியனாகி ஞான
மீத்தருளு மிதுவல்லார் தமைப்பிறப்பி னிழிக்கும்.

(இ – ள்.) பறவைபிடிக்கக் கண்ணிகுத்தியும் வலைகட்டியும் அவற்றைப் பிடிக்கக் கருதும் வேடர்போன்று அந்த இறைவன் தனக் கியல்பாயுள்ள பேரருள் காரணமாக உயிர்களைத் தன்னெறிப்படுத்த எழுந்தருளியிராநின்ற சிறந்த தலங்களை அடைந்து ஆங்கு அவ்விறை வன் திருவடி வழிபாடும் விரும்பிச்செய்து அவன் மெய்யடியார்க்குக் குற்றேவலும் புரிந்தவிடத்தே தீவினைகள் அனைத்தும் கெடும். மேலும் துறக்கங்களிலே சென்று நுகருகின்ற பல்வேறு இன்ப நுகர்ச்சிகளையும் விரும்பியபடியே அளிக்கும். பிறப்பிற்குக் காரணமான கொடிய மல மூன்றும் தீயிற் பஞ்செனு வெந்தகலாநிற்பக் கருதுதற்கு மியலாத பேரின்ப வீட்டினையும் நல்லாசிரியனாகி மெய்ஞ்ஞானமருளி எய்துவித்து உய்விக்கும். இவ்வழிபாடுவல்ல அன்பரை இங்ஙனமாக அவ்வழிபாடே படிமுறையானே பிறப்பினின்றும் அகற்றிக் கரைசேர்க்கும் என அறிக.

(வி - ம்.) வேடர் பறவைகளைத் தம் வயப்படுத்துக்கொள்ளக் கண்ணி முதலியன குத்துதல்போன்று, இறைவன் உயிர்களைத் தன்னடி நீழலிற் சேர்த்துக்கோடற்கு அருட்டிருமேனி கொண்டு தலந் தோறும் உறைகின்றான் என்று உவமையை நன்கு விரித்துக் காண்க. (௬௩௧)

வினைதீருங் கழுவாய்கள் பலமொழிந்தா மேனு
மேலான கழுவாய்மெய்ஞ் ஞானமே யாகும்

கனைவானத் திருளனுக்கு மொளிபலவற் றுள்ளுங்
கதிரவனே ரொன்றில்லை யதற்குநிக ரில்லை
தனையாதுங் காட்டாதா ருயிரினைக்காட் டாது
தற்பரத்தைக் காட்டாதத் தனிமலமும் பண்டை
வினையோடு விளித்திறையைத் தருவதெனி லேனை
வினைகெடுத்து வேட்டகதி தருமென்னல் வியப்போ.

(இ - ள்.) தீவினை தீர்தற்குரிய கழுவாய்கள் ஈண்டுப் பற்பல கூறினேமாயினும் அவற்றுள் ஒன்றாக உயர்ந்த கழுவாயாவது மெய்ஞ் ஞானமே யாகும். வானத்திற் செறிந்த பூத இருளை அகற்றும் ஒளிகள் பலவுளவாயினும் அவற்றுள் வைத்து ஞாயிற்றை ஒக்குமொளி பிறி தொன்றில்லை யன்றோ? அங்ஙனமே அம்மெய்ஞ்ஞானத்திற்கு ஒப்பான கழுவாய் பிறிதொன்றில்லை என்க. இனிப் பொருள்களை மறைக்கும் பூதவிருள் தன்னுருவையேனும் காட்டும்; ஆணவமலமாகிய இருளோ தன்னையுங் காட்டாது; உயிரினையும் காட்டாது; இறைவனையும் காட்டாது எனவே அதுவும் ஒப்பற்றதே யாகின்றது. இவ்வொப்பற்ற ஆணவமலத்தைப் பழவினைத் திரளோடே ஒருசேர அழித்து இறைவன் திருவடிகளையே உயிர்கட்கு வழங்குவது மெய்ஞ்ஞானமே எனின், அது எளிய தீவினைகளைக் கெடுத்து விரும்பிய பேற்றை யளிக்கும் என்பதன் கண் வியப்பேது மில்லையே.

(வி - ம்.) கனை யிருள், வானத்திருள் எனத் தனித்தனி கூட்டுக. ஒளி - திங்கள் முதலியன. அதற்கும் - அம்மெய்ஞ்ஞானத்திற்கும். அத் தனிமலமும் என்புழி உம்மை இழிவு சிறப்பு. அதுவும் ஒப்பற்றதென் பார் தனிமலம் என்றார்.

> "ஒருபொருளும் காட்டா திருள் உருவங் காட்டும்
> இருபொருளும் காட்டாது இது." (திருவருட்பயன்-உ௩)

(௪௭0)

கழுவாய்மற் றிதுமொழிந்தா மெனக்கதிர்வேற் படைஞன்
கருணையினு லருளுதலுங் குறுமுனியு மகிழ்ந்து
வழுவாய வினைநலிய விழுமியது வளர
வந்துநறும் பாலாதி தருமென்ற பசுவின்
குழுவாழு மெல்லையுமற் றதன்மரபுந் தெரியக்
கூறுகென வாறுமுக னதன்சிறப்புத் தோன்ற
முழுதாய வண்டத்தி னுலகமெலாம் பகுத்து
மொழிந்தருளத் தொடங்கினன் விழுந்துவினை யோட.

(இ - ள்.) கழுவாயாகிய இம் மெய்ஞ்ஞானத்தியல்பு யாம் முன்னரே கூறினேமல்லமோ? என்று ஒளிவேற் படையினையுடைய முருகப்பெருமான் கருணையாலே திருவாய்மலர்ந்தருளிய அளவிலே, அகத்தியமுனிவரும் மிகமகிழ்ந்து எம்பெருமானே! தீவினைகள் அழி தற்கும் நன்மை வளர்தற்குமாகப் பாற்கடலிலே தோன்றி இவ்வுலகிலே

வைந்து பால் முதலியன வழங்கும் என்று அருளிச்செய்த அவ்வளக்களின் கூட்டம் வரயாகின்ற எல்லையையும், அவற்றின் மரபும் அடியேன் தெரிந்துகொள்ளும்படி திருவாய் மலர்ந்தருள்க!" என்று வேண்ட அதுகேட்ட அவ்வறுமுகப் பெருமானும், அவ்வளவின் மாண்பு தோன்றும்படி பேரண்டத்தின்கண் அமைந்த உலகவியல்பெல்லாம் கூறு செய்து கேட்போர் தீவினை கெட்டோடும்படி திருவாய் மலர்ந்தருளத் தொடங்கினன்.

(வி - ம்) இது - மெய்ஞ்ஞானம். படைஞன் - முருகன். விழுமியது - நல்வினை. பாலாதி - ஆனைந்தும். மரபு - ஆன்போற்று மரபு. வினை விழுந்து ஓடக் கழுவாய் மொழிந்தாம் என விற்பூட்டுப் பொருள் கொள்ளக்கிடுமாம். (௪௪௧)

வேறு

இன்னுழை கதிர்வ னணுவிரு நான்கெட் டிணைங்குறல் கசாக்கிர கந்தான்
மன்னுத லிருநான் கிலிக்கையெட் டஃது மருவுதல் யூகையெட் டஃது
துன்னுத லியவை யஃதிரு நான்கு துறுமுத லங்குல மறுநான்
கன்னது சேரின் முழமது நான்கு தனுவத லிரட்டியோர் தண்டே.

(இ - ள்.) பலகணி வழியாய் வீட்டினுள் நுழையும் வெயிலின் கண் பறக்கும் அணு பதினாறு கொண்டது ஒரு கசாக்கிரகம். அக்கசாக்கிரகம் எட்டுக்கொண்டது ஓர் இலீக்கை. இலிக்கை எட்டுக்கொண்டது ஒரு யூகை. யூகை எட்டுக்கொண்டது, ஓர் இயவை, அஃது எட்டுக்கொண்டது ஓர் அங்குலம். இருபத்துநான்கங்குலம் கொண்டது ஒரு முழம். நான்குமுழம் ஒரு வில் .இரண்டு வில் ஒரு தண்டு. (௪௪௨)

இராயிரந் தண்டங் குரோசமே குரோச
மிரட்டிசேர்ந் ததுகெவி யூதி
குரோசநான் குறல்யோ சனையது நூறு
கோடிமண் ணண்டத்தி னளவை
தராதல முதலாந் தத்துவக் கண்டந்
தனித்தனி யாயிர கோடி
விராவுமண் முதலா வொன்றனுக் கொன்று
விளம்பிய வளவைமிக் குறுமால்.

(இ - ள்.) இரண்டாயிரந் தண்டங்கொண்டது ஒரு குரோசம். இரண்டு குரோசங் கொண்டது ஒரு கெவியூதி. நான்கு குரோசங் கொண்டது ஒருயோசனை. மண்ணண்டத்தின் அளவு நூறுகோடி யோசனையாம். தராதல முதலிய அம்மண்ணண்டத்திற்குத் தத்துவக் கண்டங்கள் தனித்தனியே ஆயிரகோடி யுள. மண்முதலாக அமைந்த அக்கண்டங்கள் ஒன்றனுக்கொன்று அளவையாலும் மிகும். (௪௪௩)

பகுதிய வளவும் பதின்மடங் கென்றும் பகுதியிற் சதமடங் கராகம்
நிகழரா கத்தின் வித்தைதனித் தையினு நியதியந் நியதியிற் காலம்
தொகுநியு தத்தோ டயுதங்கா லத்திற் சூழ்தருங் கலைகலை தன்னில்
தகுமொரு கோடி மாயையேல் வித்தை தானதிற் கோடிமே லயுதம்.

(இ - ள்.) பிரகிருதியின் அளவும் பதின்மடங்கு மிகும். அதனினும் அராகதத்துவம் நூறுமடங்கு அளவில் மிகும். மிகழ்கின்ற அராகதத்துவத்தினும் நூறுமடங்கு வித்தைதத்துவமும் அவ்வித்தை தத்துவத்தினும் நூறுமடங்கு நியதியும் அந்நியதியினும் நூறுமடங்கு காலதத்துவமும் அளவான் மிகும். அக் காலதத்துவத்தினுங் காட்டிற் கலை ஒரு நூற்றுப்பதினாயிரமடங்கு மிகும். அக் கலையினும் ஒருகோடி மடங்கு மாயை அளவில் மிகும். அம்மாயையினுங் காட்டிற் சுத்த வித்தை ஒருகோடியே பதினாயிரமடங்கு மிகும் (என்றுமுணர்க.) (௩௩௩)

சுத்தவித் தையினவ் வளவுநா தாந்தஞ்
சொன்முறை யேறுமிவ் வனைத்தும்
வித்தகன் விளையாட் டாகவாக் கியதான்
மெத்திய வுயிர்த்தொகை யோடும்
அத்திற நிற்க மண்ணிலே ரண்டத்
தமைந்தபல் லுலகத்தி னளவும்
கைத்தலக் கனிபோற் காட்டுது மெனத்திங்
கலைமுனி மகிழவே ளியம்பும்.

(இ - ள்.) சுத்த வித்தையினின்றும் நாததத்துவ மீறாகவுள்ள தத்துவந்தோறும் இவ்வளவு படிப்படியாக வுயரும். இவ்வனைத்துலகங்களையும் எம்மையாளுடைய இறைவன் அவற்றின்கண் வாழும் உயிர்களோடு விளையாட்டுப் போன்று மிகமிக எளிதாகவே படைத்தருளினன். இதுநிற்க; இனி இம்மண்ணண்டத்தின்கண் அமைந்த பலவாகிய உலகங்களின் அளவும் நினக்குக் கையின்கண்ணுள்ள நெல்லிக்கனி போன்று ஐயந்திரிபற உணர்த்துதும் என்று அவ்வகத்திய முனிவன் மன மகிழும்படி முருகவேள் கூறுநிற்பன்.

(வி - ம்.) கனி-நெல்லிக்கனி. திங்கலைமுனி-அகத்தியன். வேள்-முருகவேள். (௩௩௪)

ஐம்பது கோடி கீழண்டச் சுவரோ டவனியின் காறுமே லற்றே
ஐம்பது கோடி புடைச்சுவ ரோடு மாடகக் கிரிவரை கடாகம்
தன்புறத் திசையிற் புவனநா றவற்றுட் டங்குவர் நூற்றுவ ருள்ளால்
தென்படு புவன மாறுமேக் கிரண்டு சிவனுவ தெளிகமா தவனே.

(இ - ள்.) மாதவனே! கீழண்டவோடு தொடங்கி மண்ணுலகங் காறும் ஐம்பதுகோடி யோசனையாகும். இனி மண்ணுலகத்தினின்றும் மேலண்டவோடு காறும் ஐம்பது கோடி யோசனையுயரம் என்றே யுணர்க. இனி அண்டப்புறவோடு தொடங்கிப் பொன்மலை வரையில் நான்குதிசையும் ஐம்பது கோடி யோசனைதூரம் என்றறிக. இவ்வண்ட கடாகத்தின்புறத்தே நூறுபுவனங்கள் உள. அவற்றில் உருத்திரர் நூற்றுவரும் உறையாநிற்பர். அவற்றிற்குமேல் காலாக்கினிருத்திரர் முதலியோர் உறையும் புவனம் ஆறுள்ளன. அவற்றின் மேலும் இரண்டு புவனங்கள் உள என்றுணர்க.

(வி - ம்.) அற்று - அத்தன்மைத்து. ஆடகக்கிரி - பொன்மலை; மேரு. (௨௨௬)

பித்திகைக் கனமோர் கோடிமேற் கோடி
யோசனை பொன்மனை பிறங்கும்
நோத்தமுற் கொழுந்தீ ரைந்தெனுங் கோடி
துதைந்தெழும் புகையுமைங் கோடி
பைத்தவம் மனையி லாயிர நீண்டீ
ராயிரம் பரந்தது தவிசங்
குத்தமன் காலத் தீயிறை யயுத
யோசனை யளவின்வீற் றிருக்கும்.

(இ - ள்.) அண்டபித்திகையின் கனம் ஒருகோடி யோசனை. அதற்குமேல் கோடியோசனை தூரம் காலாக்கினிருத்திரருடைய பொன் மனை விளங்கும். அவருடைய திருமேனியிலுண்டாகும் தீக்கொழுந்து பத்துக்கோடி யோசனையுயரம் செறிந்தெழாநிற்கும். அதனுலுண்டா கும் புகை அதற்குமேல் ஐந்துகோடி யோசனையுயரம் எழாநிற்கும். காலாக்கினிருத்திரருடைய பசிய அப்பொன்மனையின் நாப்பண் ஆயிர யோசனை நீளமும் ஆயிரயோசனை அகலமுமுடைத்தாய் விரிந்துள்ள அரியணை ஒன்றுளது. அவ்வணையின்மேல் காலாக்கினிருத்திரன் பதி னாயிர யோசனை உயரமுடையனாய் வீற்றிருப்பன். (௨௨௭)

வலக்கைவாள் பகழி யிடக்கரம் பலகை
வார்சிலை தழுவுமவ் விறைபால்
நலக்குமவ் வுருவி னுருத்திரர் பதின்மர்
நயந்தன ரிருப்பரோவ் வொருவர்க்
கலக்கணிற் றவிர்ந்த பரிசனர் கோடி
யண்முவ ரவ்வயின் மேலால்
கலக்கஞ் சுறுத்து மளறெழு நான்கு
கோடியுங் கதுவுறு மெல்லை.

(இ - ள்.) வலக்கையின்கண் வாளும், கணையும் இடக்கையின்கண் கேடகும், நெடிய வில்லும் தாங்கிய அக்காலாக்கினியுருத்திரனைச் சூழ்ந்து நலமுடைய அவ்வுருவத்துடனே உருத்திரர் பதின்மர் விரும்பி வீற்றிருப் பர். அப்பதின்மர் தம்முள் ஒவ்வொருவர்க்கும் துன்பத்திலிருந்து விடு பட்ட ஒவ்வொரு கோடியுருத்திரர் பரிவாரமாகச் சூழ்ந்திருப்பர். அவ் விடத்திற்கு மேலே நெஞ்சத்தைக் கலக்குந் துயரத்தை யளிக்கும் இருபத்தெட்டுக் கோடி நிரயமும் பொருந்தியிருக்கும். இவற்றின் எல்லை எவ்வளவோ எனின்? (௨௨௮)

முப்பது கோடி மேலிரண் டிலக்க
யொழிந்தமுன் னெல்லையி னுயரம்

பப்பெனி லண்டப் பித்தியின் காறும்
பயிலுமவ் வயின்மிசை வெளிதான்
செப்புமுப் பதிறு யிரமத னுச்சி
தீர்ந்தவோ ரிலக்கத்தின் கோடி
ஒப்பிலோர் புவன முடைத்தத னடுமேற்
கொண்பொன்கீழ் பாலிருப் புருவம்.

(இ - ள்.) *முப்பது கோடியே இரண்டு நூறாயிரம் யோசனையாகும் முன் கூறப்பட்ட உயரத்தின் எல்லை. இனிப் பரப்பு எவ்வளவெனின்? அண்டபித்திகை வரையிலும் நாற்புறமும் விரிந்திருக்கும். இந்நரகலோகத்தின்மேலே இடைவெளி முப்பதினாயிர யோசனையுண்டு. அவ்வெளிக்குமேலே நூறாயிரங் குறைபட்ட ஒருகோடி யோசனை யுயரமுடைய ஒப்பற்ற கூர்மாண்டர் புவனமுளது. அதன் கீழ்ப்பகுதி இரும்பாகவும் நடுப்பகுதி மண்ணாகவும் மேற்பகுதி பொன்னாகவு மிருக்கும்.*

(வி - ம்.) *நடுமேல் மண் பொன்: முறைநிரல் நிறை.* (௩௪௯)

மழுப்படை யூழித் தீயுருக் கராள
வதனவட் டித்தொளிர் விழியின்
விழுப்பொலந் தவிசின் விளம்புமேல் பாங்கர்
வீற்றிருந் தருள்வர்கூர் மாண்டர்
முழுப்பவன் னவர்நே ருருத்திரர் பல்லோர்
மொய்ப்பராங் கிளிமொழி யவரும்
குழுப்பயின் றேத்த வுறுவரக் கூர்மாண்
டரையளற் றினுக்கிறை யென்பார்.

(இ - ள்.) *மழுப்படையேந்திய கையும் ஊழித்தீயை யொத்த உருவமும் கரியமுகமும் வட்டமாகத் திகழும் விழிகளும் உடையராய்ச் சிறந்த பொன்னிருக்கையின்கண் மேலேயுளதாகக் கூறப்பட்ட பொன்மயமாகிய பகுதியிலே வீற்றிருந்தருளுவர் கூர்மாண்டர். முழுதும் அவரையே ஒத்த எண்ணிறந்த உருத்திரர் அவரைச் சூழ்ந்திருப்பர். ஆங்கு இளிபோலும் இனிய மொழிபேசும் இளமகளிர் கூட்டமாகக் கூடி இனிது பாராட்டாநிற்ப இருந்தருள்வர். அக் கூர்மாண்டரை அந் நிரயலோகத்துக்கு வேந்தன் என்று அறிஞர் கூறுவர்.*

(வி - ம்.) *கராளம் - கறுப்பு. பொலம் - பொன். முழுப்ப - முழுதும். இளி - ஒரு பண்.* (௩௫0)

சொற்றவான் புரிமே லொன்பதிற் றிலக்கந்
தூவெளி யதன்முடிக் கீழேன்
றுற்றபா தலம்பத் திலக்கம்பொன் மயமே
யொருபதி னாயிர மகற்சி

முற்றிடை வெளியு மன்னதே யிதற்கு
மொழிந்தவே யேனைப்பா தலக்கு
மற்றிதற் கீழ்பா லவுணர்நள் ளிடையி
னுரகர்வா ளரக்கர்மேற் கமர்வார்.

(இ - ள்.) ஈண்டுக் கூறப்பட்ட கூர்மாண்ட புவனத்திற்கு மேலே இடைவெளி ஒன்பது நாறுயிர யோசனை யுயரமாம். அதன் முடியின் மேல் ஆபாத பாதாளமென்று கூறப்பட்ட பாதாளலோகம் பத்து நாறுயிர யோசனையுயரம் என்ப. அது பொன்மயமாயிருக்கும். அதன் அகலம் பதினுயிரயோசனையாம். அதற்கு மேலுள்ள இடைவெளியும் பதினுயிர யோசனையேயாம். இப் பாதாளலோகத்திற்குக் கூறப்பட்ட அளவே ஏனைய பாதாளலோகங்கட்கும் என்ப. இப் பாதாளலோகங்கள் ஒவ்வொன்றும் மூன்று பகுதியாயிருக்கும். கீழ்ப்பகுதியில் அவுணர்களும், இடைப்பகுதியில் உரகர்களும், மேற்பகுதியில் அரக்கர்களும் உறைவார். (௪௩௧)

இந்தவான் பிலத்தின் மிசையபா தாள
முதலிரு மூன்றுங்கற் பதுமம்
இந்திர நீலம் புட்ப ராகந்திண்
ணிரசத நித்தில நிறமும்
கொந்தொளி யொன்பான் மணிநிறங் களுநேர்
கொள்ளுமேற் பிலமுடி விடத்துச்
சுந்தரம் பழுத்த மகளிரெட் டிலக்கத்
தொகையினர் குழுமுவர் மாதோ.

(இ - ள்.) இந்தச் சிறந்த பாதாளலோகத்தின் மேலுள்ள பாதாள முதலாகவுள்ள ஆறு பாதாளலோகங்களும் நிரலே பதுமராகநிறமும், இந்திரநீலநிறமும், புட்பராகநிறமும், திண்ணிய வெள்ளிநிறமும், முத்துநிறமும் ஒன்பது மணிநிறமும் கலந்தநிறமும் உடையனவாயிருக்கும். இப்பாதாளலோக முடியுமிடத்தே அழகுமிகுந்த எண்பதுநாறுயிரம் மகளிர்கள் கூடியிருப்பர். (௪௩௨)

எழுபிலத் தெல்லை மிசையிடை வெளிபத்
தொன்பதிற் றிலக்கமே லயுதம்
முழுதுண ராட கேசர்வாழ் புவன
முற்றுமா யிரம்பொலங் கோயில்
ஒழுகுவா ளரக்கர் தயித்தியர் சூழ்வ
ருதன்மிசை மட்கன்ங் கோடி
எழுபில மவற்றின் வழிக்குமா தார
மிவரளற் றெல்லையும் வழிபோம்.

(இ - ள்.) இந்தப் பாதாளலோக மேழினுக்கு மேலுள்ள இடைவெளி பத்து நாறுயிரயோசனை யுயரமாம். முற்றுணர்வுடைய பதினுயிரம் ஆடகேசர் உறைகின்ற புவனம் ஒன்பது நாறுயிர யோசனையாம். ஆடகேசர் உறையும் பொற்கோயிலுயரம் ஆயிரயோசனை என்ப. அக்கோயிலைக் குருதி யொழுகுதற்குக் காரணமான வாளேந்திய அரக்கரும் தயித்தியருஞ் சூழ்ந்திருப்பார். இப்புவனத்திற்குமேல் உள்ள இம்மண்ணுலகத்தின் கனம் கோடியோசனை என்ப. ஏழு பாதாளலோகங்களுக்கும் அவற்றின் வழிகட்கும் ஆதாரமாயிருப்பவர் இவ்வாடகேசுரரே. இனி இப்பிலவழிகள் நரகலோகத் தெல்லைவரையிற் செல்லும். (சகூ)

மண்ணடி யுரைத்தா மேருவோ ரிலக்க
மண்ணுளெண் ணுயிரத் திரட்டி
நண்ணிய தேனை யளவுமேற் றேற்று
நளினமென் பொகுட்டுற மதன்றன்
திண்ணிய பரரரை யீரெண்ணு யிரஞ்சென்
னியின்விரி விரட்டிமே கலைமுன்
றண்ணுறு மேக்கு மேகலைப் பரப்பி
னவிர்சிக ரம்பல வுளவே.

(இ - ள்.) நிலத்தின் கனம் முன்னே கூறினேம். இனி இம்மண்ணுலகின் நடுவே மேருமலை நாறுயிரம் யோசனை யுயரமுடையதாயிருக்கும். மண்ணுக்குள் பதினுறுயிரயோசனை ஆழ்ந்திருக்கும். எஞ்சிய எண்பத்து நாலாயிரயோசனை மண்ணுக்கு மேலே காணப்படும். தாமரைப் பொகுட்டையொத்த அம்மேருவின் பராரை பதினுறுயிர யோசனை விரிந்திருக்கும். அதன் உச்சியின் விரிவு முப்பத்திராயிரம் யோசனையாம். இம்மலையின்கண் மூன்று மேகலைகள் பொருந்தியிருக்கும். இம்மேகலையின் மேலுள்ள மேகலையின்கண் விளங்குகின்ற சிகரங்கள் பற்பலவுள.

(வி - ம்.) நளினம் - தாமரை. பராரை - பருத்த அடிப்பகுதி. பரு + அரை - பராரை எனப் புணர்ந்தவாறு. (சசு)

மாதிரத் தலைவர் தத்தம திசையின் மருவிய குவட்டிடை வதிவர்
ஓதிய சிரத்தி னுப்பணுங் குடாது முதீசியின் குணக்குமுச் சிகரம்
மேதக விளங்கு மயனரி யீசன் விளம்பிய முறையின்வீற் றிருப்பார்
ஏதமி லவற்றின் பெயர்மனே வதிவை குண்டமே சோதிவெற் பென்ப.

(இ - ள்.) இந்தச் சிகரங்களிலே திக்குப்பாலகர் தத்தம் திசையிலுள்ள சிகரத்திலே உறைவர். கூறப்பட்ட அம்மலையுச்சியின் நடுவிடத்தும் மேற்குத் திசையினும் வடகிழக்கினும் மூன்று சிகரங்கள் மேம்பட்ட தகுதியுடையனவாய்த் திகழாநிற்கும். இவற்றின்கண் பிரமதேவனும், திருமாலும், சிவபெருமானும் வீற்றிருப்பர். இவற்றின் பெயர் நிரலே மனேவதி, வைகுண்டம், சோதிமலை என்பனவாம் என்று கூறுவர்,

(வி - ம்.) அயன் அரி ஈசன் என்று விளம்பிய முறையின் அவற்றின் பெயர் என்க. (௬௫௪)

மந்தரங் கந்த மாதனம் விபுலம்
வயங்குபா ருசுவமென் றியம்பும்
இந்தநான் மலையுங் கீழ்த்திசை முதனாற்
றிசையினு மெறுழ்படக் கிடக்கு
பைந்துணர்க் கடம்பு சம்புதண் போதி
பரந்தவா லென்கினு நிற்கும்
முந்துநாற் றிசையு மருணமா னதந்தண்
ணசிதோத மாமடு முயங்கும்.

(இ - ள்.) மகாமேருவின் கிழக்கு முதலிய நான்குதிசையினும் அதற்கு வலிமையுண்டாகும் பொருட்டு மந்தரமலை, கந்தமாதனமலை, விபுலமலை, விளங்காநின்ற பாருசுவமலை என்று கூறப்படும் இந்த நான்கு மலைகளும் கிடக்கும். அம்மலையினுச்சியின்கண் பசிய பூங்கொத்துக்களையுடைய கடம்பும், நாவலும், குளிர்ந்த அரசும், பரவிய ஆலும் என்னும் நான்கும் நாற்றிசையினும் நிற்கும். முந்திய கிழக்கு முதலிய அந்நாற்றிசையினும் அருணம், மானதம், குளிர்ந்த சிதோதம், மகாமடு என்னும் நான்கு நீர்நிலைகளும் பொருந்தியிருக்கும்.

(வி - ம்.) எறும் - வலிமை. நிலத்திற்கு வலிமையுண்டாக எனினுமாம். அசிதோதம் - சிதோதம். (௬௫௫)

நாற்றிசை மருங்கி னடிவரைச் சயித்தி
ரதப்பொழி னந்தன வனந்தண்
டேற்றுளி துளிக்கும் வைப்பிர சந்தண்
செறிதிரு தாக்கியம் பொதுளும்
தோற்றிய நாவற் கனியுணிற் பதின்மூ
வாயிர மாண்டுதுன் னுவர்கள்
ஊற்றுமக் கனிநீர் மேருவைச் சூழு
மோங்குசாம் பூநதப் பெயரின்.

(இ - ள்.) இம் மேருமலையின் நான்கு திசையினும் அடிவாரத்திலே நிரலே சயித்திரதப் பொழிலும், நந்தனவனமும், குளிர்ந்த தேன் துளிக்கும் வைப்பிரசமும், குளிர்ந்து அடர்ந்த திருதாக்கியமும் என்னும் நான்கு நந்தனவனம் செறிந்திருக்கும். அம்மலைக்கண் தென்றிசையில் நிற்கும் நாவன் மரத்திலேயுண்டான கனியை உண்டோர் பதின்மூவாயிரம் ஆண்டு உயிர்வாழ்வர் என்ப. அக்கனியினின்றும் ஊறிய நீர் அம்மேருவைச் சூழ்ந்து உயர்ந்த 'சாம்பூநதம்' என்னும் பெயருடைய ஆறாகப் பாயாநிற்கும்.

(வி - ம்.) நந்தனவனம் என்றதற்கு விசித்திரை என்று பெயர் கூறுதலுமுண்டு. (௬௫௬)

பொற்றவந் நாவற் சிறப்பினு லுவர்நீர் போர்த்தமண் ணாவலந் தீவென்
றுற்றது மேருத் தெனுதுயர் நிசத மேமகூ டம்பனி யோங்கல்
செற்றெழில் வடாது நீலமே சுவேதஞ் சிருங்கமேல் கீழ்கட னிமிரும்
மற்றைமேல் கீழ்பால் விலங்குவ கந்த மாதன மாலிய வானும்.

(இ - ள்.) *பொன்மயமான அந்த நாவல் மரத்தின் சிறப்புப்பற்றி உப்பு நீர்க்கடல் சூழ்ந்த இந்நிலப்பகுதி 'நாவலந் தீவு' என்று பெயர் பெற்றது. இம்மகா மேருவிற்குத் தென்றிசையிலே உயரிய நிடதமலையும், ஏமகூடமலையும், இமயமலையும், நெருங்கி நிற்கும் வடதிசையிலே அழகிய நீலமலையும், சுவேதமலையும், சிருங்கமலையும், மேல் கடல் கீழ் கடல் இரண்டையும் பொருந்துவனவாய்க் கிடக்கும் மேற்குத் திசையினும் கிழக்குத் திசையினும் கந்தமாதனமலையும், மாலியவான்மலையும் நிரலே அதனை மறித்துக் கிடக்கும்.*

(வி - ம்.) *பொற்ற - பொன்மயமான. தெனுது - தெற்கின்கண். பனியோங்கல் - இமயமலை. செற்று - நெருங்க என்க. விலங்குவ - குறுக்கிடுவன.* (௬௫அ)

நடுவண்மே ருவுக்கு நாலிரு வரைக்கு நாற்றிசைக் கடற்குநள் வினையே
இடமுடை நவகண் டப்புவி யென்ப ரிவற்றது தன்மையுங் கேட்டி
வடவரை சூழு நிலமிளா விரதம் வடாதிர மியமிர ணியநீர்க்
கடல்வளை குருவே பத்திரங் குணுது கண்ணகன் கேதுமால் குடாது.

(இ - ள்.) *நடுவணுள்ள மேருமலைக்கும் ஈண்டுக் கூறப்பட்ட எட்டு மலைகட்கும் நாற்றிசையிலும் உள்ள கடற்கும் இடையிடையே உள்ள நிலப்பகுதிகளையே ஒன்பது கண்டங்கள் என்று கூறுநிற்பர். இக்கண்டங்களின் இயல்பையும் இனிக் கூறுவேம் கேட்பாயாக! மேரு மலையைச் சூழ்ந்துள்ள நிலம் இளாவிரத கண்டமாம். வடதிசைக்கண் இரமியகண்டம் இரணியகண்டம் என்பனவுள. கடனீரால் வளைக்கப் பட்ட குருகண்டம் பத்திராசுவகண்டம் என்பன கிழக்கில் உள்ளன. இடமகன்ற கேதுமாலகண்டம் மேற்றிசையில் உளது.*

(வி - ம்.) *நிலவண்டத்தின் நடுவேயுள்ள மேரு என்க. நள் - நடுவிடம். கேதுமால் - கேதுமாலகண்டம்.* (௬௫௯)

தெனுதரி வருடங் கிம்புரு டம்பா
ரதமெனச் செப்பிடப் படுமால்
மனுதியைக் கவர்க்கு மிளாவிர தத்தோர்
மாணுருப் பொன்மையூ னுயுள்
முனுதுரைத் தனவே பத்திரத் தவருண்
முழுநெறிக் குவளைமெய் திங்கள்
தனுதெழில் கவர்ந்தாங் களையரா யுகந்தான்
சார்ந்திடு மயுதமற் றவர்க்கே.

(இ - ள்.) மேருவுக்குத் தென்றிசைக்கண் உள்ள பகுதிகள் அரிவருடகண்டம், கிம்புருடகண்டம் பாரதகண்டம் என்று கூறப்படும், மன முதலியவற்றைக் கவர்கின்ற இளாவிரத கண்டத்திலே உறைபவர் மாட்சிமையுடைய உருவம் பொன்னிறம். உணவும் அகவையும் முற்கூறப்பட்டனவே யாம். பத்திரகண்டத்திலுறைபவர் முழுதும் நெறிப்பினையுடைய குவளைமலரையே உண்பர். திங்கள் அழகினைக் கவர்ந்து கொண்டாற்போன்ற வெண்ணிற உடலுடையர், அவர்க்கு அகவை பதினாயிரம் யாண்டென்பர்.

(வி - ம்.) மறுதி - மனங் கண் முதலிய என்க. நெறி - நெறிப்பு. ஆயு - அகவை. (௬௯௦)

கேதுமா லத்தோ ருணவுகண் டகியின்
கேழ்கனி நிறங்கருங் குவளை
ஒதுறு மாயு ளயுதமே குருவி
னுறைபவ ருணவுபல் கனிகள்
மாதர்மெய் யுருவம் பசுமையாம் பதின்மூ
வாயிர வருடம்வாழ் வைகல்
காதல்சேர் மக்க ளாங்கவர்க் குளரோர்
கணத்தகட் டமர்ந்துதோன் றுவரால்.

(இ - ள்.) கேதுமாலகண்டத்தி லுறைபவர்க்கு உணவு வருக்கைப் பலாவினது நிறமிக்க கனியாகும். அவர்நிறம் கருங்குவளைமலர் நிறமாம். அவர்க்குக் கூறப்படும் வாழ்நாள் பதினாயிரமாண்டென்ப. இனிக் குருகண்டத்திலுறைபவர் உணவு பல்வேறு கனிகளாம். விரும்புதற்குக் காரணமான அவருடல் பச்சைநிறமாம். அவர்க்கு வாழ்நாள் பதின்மூவாயிரம் ஆண்டாம். குருகண்டத்தோர்க்கு அன்புசேர்தற்குரிய மக்கள் உளர். அம்மக்கள் கருவிலெய்திய ஒருநொடிப் பொழுதிலே முதிர்ந்து ஆணும் பெண்ணுமாகிய இரட்டைகளாய்ப் பிறவாநிற்பர்.

(வி - ம்.) கண்டகி - வருக்கைப் பலாப்பழம். முள்ளுடைமையாற் பெற்ற பெயர். மாதர் - காதல். வைகல் - நாள். மக்கள் என்னும் பன்மையால் இரட்டை யென்பது பெறவைத்தார். ஆணும் பெண்ணுமாய் என்பது சிவதருமோத்தரத்துக் கண்டது. (௬௯௧)

செப்பிய வருடந் தனில்வட ஞாங்கர்ச்
சந்திர தீவெனும் பெயர்த்தோர்
வைப்பும்வா யுவின்கட் பத்திரா கரப்பேர்
வைப்புமுள் ளனவவற் றமர்வார்
துப்புடை முனிவர் சாரணர் சித்தர்
சோமதீ வினர்மதி நிறத்தார்
பப்புறு மற்றை வைப்பினர் செய்ய
பதுமநே ருருவின ரன்றே.

(இ - ள்.) ஈண்டுக் கூறப்பட்ட குருகண்டத்தில் வடபக்கத்தே திங்கட்டீவு என்னும் பெயருடைத்தாகிய ஒருதீவும், வாயுத்திக்கின்கண் பத்திராகரம் என்னும் ஒருதீவும் உள்ளன. அத்தீவுகளிலே அறிவு வன்மையுடைய முனிவரும் சாரணரும் சித்தரும் வாழாநிற்பர். திங்கட்டீவினர் திங்கள்போன்ற வெண்ணிறமுடையோர், பரப்புடைய ஏனைப் பத்திராகரத் தீவிலுறைவோர் செந்தாமரை மலர் போன்ற நிறமுடையர் என்ப.

(வி - ம்.) அன்று, ஏ : அசைகள். வருடம் எனினும் கண்டம் எனினும் ஒக்கும். ஞாங்கர் - பக்கம். வைப்பு - இடம். துப்பு - வலிமை. பப்பு - பரப்பு. (௪௬௨)

இரணியத் தவரு ணிருசநற் கனிமெய்
யெழின்மதி யனையர்வை குறுமவ்
வருடமைஞ் ஞூற்றைத் தலைப்பெயு மிரண்டா
யிரம்வயங் கிரமியத் தவரூண்
பெரியவா லத்துச் சிறுகனி குவளை
பெறுநிற மயுதவாண் டாயுள்
அரிவரு டத்தோ ரூண்கரும் பாயுள்
பன்னிரா யிரநிறம் வெள்ளி.

(இ - ள்.) இனி இரணிய கண்டத்திலுறைபவர்க்கு உணவு, எலுமிச்சம்பழமாகும். மேனிநிறத்தாற் றிங்களைப்போல்வர். அவர் வாழ்நாள் இரண்டாயிரத்தைந்நூறாண்டென்ப. இனி இரமியகண்டத்திலுறைபவர் உணவு பெரிய ஆலமரத்திற் கனிகின்ற சிறிய கனிகள் என்ப. நிறம் குவளைமலர் நிறமாம். அகவை பதினாயிரமாண்டென்ப. இனி அரிகண்டத்திலுறைபவர் ஊண் கரும்பு என்ப. ஆயுள் பன்னீராயிரம் ஆண்டென்ப. அவர் வெள்ளிபோன்ற நிறமுடையர் என்ப.

(வி - ம்.) இதன்கண் இரணிய கண்டத்தோர்க்கு ஆயுள் இரண்டாயிரத்தைந்நூறாண்டென்றே பெறரும். சிவதருமோத்தரத்தில் இவர்க்கு ஆயுள் பன்னீராயிரத்தைந்நூறாண்டென்று கூறப்படுகின்றது. இவ்வேற்றுமைக்குக் காரணம் ஆராய்ந்து காண்க.

இனி, எழில்மதி, அம்மதிபோன்ற மேனியராகிய சந்திரத்தீவினர் வாழும் அவ்வருடமாகிய பதினாயிரத்தோடு ஐஞ்ஞூற்றைத் தலைப்பெயும் இரண்டாயிரம் வாழ்நாளாம் என வலிந்தும் வருவித்தும் ஒருவாறு முடிப்பினுமாம். (௪௬௩)

கிம்புரு டத்தோ ருணவிற லியின்வண் கேழ்கனி நிறந்தம னியச்சீர்
பம்புறு மாயு ளயுதமே யுரைத்த பண்புறு மெண்வகை வரைப்புந்
நம்பிவாழ் குநர்க்கு நரைதிரை மூப்பு நலியுநோ யாதிக ளில்லை
கம்பமற் றில்லர் முதலுகம் போலெக் காலமு நன்மையே கலவும்.

(இ - ள்.) கிம்புருட கண்டத்தில் உறைபவர் உணவு இற்றியினது வளவிய நிறமமைந்த கனியாகும், அவர் உடலினிறம் பொன்னிறம்

என்ப. சிறந்தபுகழ் பெருகுதற்குக் காரணமான வாழ்நாள் பதினாயிர மாண்டு என்ப. ஈண்டுக் கூறப்பட்ட எட்டுவகைக் கண்டத்திலும் விரும்பி வாழ்பவருக்கு நரை திரை மூப்புத் துன்புறுத்தும் பிணி முதலி யன இல்லை. ஆதலால் அவர் வாழ்க்கையில் நடுங்குதல் இலர். அத் தீவினின் கிருதயுகத்திற் போன்று எல்லாயுகத்திலும் இன்பமே நிரம்பி யிருக்கும்.

(வி - ம்.) இறலி - இற்றி; (இத்தி). சீர் - புகழ். நம்பி - நம்பு என்னும் உரிச்சொல்லடியாய்ப் பிறந்த வினையெச்சம். நம்பு - நசை; விருப்பம். கம்பம் - நடுக்கம். கலவும் - கலக்கும். (௪௬௪)

பாரத வரைப்போர் தோரையே முதலாம் பல்வகை யுண்டியு மழைபெய்
தேருழுன் முதலாம் பற்பல தொழிலு மீண்டிய வேறுவே றுருவும்
சீரிய தெய்வ மாதிமுன் றுனுந் தீவினை நல்வினைப் பயனை
ஆருமத் திறமு முகத்தின்வேற் றுமையு மடுபிணி யாதியு முளரால்.

(இ - ள்.) இனி எஞ்சிய இப்பாரத கண்டத்திலுறைபவர் தோரை நெல் முதலிய பற்பல வகையான உணவும், மழைபெய்த காலத்தே ஏர் உழுதல் முதலிய பலப்பல தொழில்களும், செறிந்த வேறுவேறான நிறங்களும், சிறப்புடைய ஆதிதைவிகம் ஆதிபௌதிகம் அத்தியாத்மிகம் என்னும் முத்திறத்தானும் வரும் தீவினை நல்வினைகளின் பயன்களை நுகரும் தன்மையும், ஒருவர்க்கொருவர் முகத்தினுல் வேற்றுமையும் துன்புறுத்தும் (கொல்லும்) நோய் முதலியனவும் உளராவர்.

(வி - ம்.) தோரை - குளநெல் மூங்கிலரிசியுமாம். மழைபெய்து - பெய்ய என்க. ஆரும் - நுகரும். பிணியாதி - பிணிமூப்புச் சாக்காடுகள். (௪௬௫)

இற்றி.: தேனு முரைத்தபா தலத்து மேனையெண் வருடத்து முரையா
மற்றைய தீவு வானத்து மருவி வரம்பிலின் பாருந ரெல்லாம்
செற்றிமுற் பவத்து நல்வினை புரிந்த திறத்தினர் குறைபிழை முடிப்ப
நற்றவ ரிமையார் யாவரு மென்று நண்ணிநல் வினைசெயப் படுமால்.

(இ - ள்.) இப்பாரத கண்டத்தின் தன்மை இங்ஙனமாயினும், முற் கூறப்பட்ட பாதாளலோகத்தினும், இப்பாரத மொழிந்த ஏனைய எட்டுக் கண்டங்களினும், ஈண்டுரைக்கப்படாத ஏனைத் தீவுகளினும், வானுலகங்களினும், எய்தி எல்லையில்லாத இன்பம் நுகர்ந்துறைவோர் அனைவரும், இப்பாரத கண்டத்திலே முற்பிறப்பிலே பிறந்து செறிந்து நல்வினை புரிந்தவர்களே வேறிலர். இனி அவர்செய்த நல்வினையின் குறைகளையும் அவற்றின் நிகழ்ந்த குறைபாடுகளையும் முடித்துக் கோடற்பொருட்டு அம்முனிவரும் தேவரும் பிறரும் என்றென்றும் வந்து நல்வினை தன்கட் செய்யப்படும் பெருமை யுடையது.

(வி - ம்.) இற்றிஃதேனும் முனிவர் இமையார் யாவரும் நண்ணி நல்வினை செய்யப்படும் என்க. (௪௬௬)

இப்பெரு வருடந் தானுமோன் பதுகூ றெனப்படு மோரோவொரு கூறு
செப்புமா யிரயோ சனையிவற் றினையிந் திரங்கசே ருகந்தாம் பிரமே
தப்பறு கபத்தி நாகமே வளத்த சவுமியங் காந்தரு வம்மே
வைப்பெனும் வாரு ணந்திகழ் குமரி யென்மர்வண் குமரிமா றுவதில்.

(இ - ள்.) இந்தப் பெரிய பரதகண்டந்தானும் தன்னுள் ஒன்பது பகுதிகளையுடைத்தென்று கூறப்படும். அப்பகுதிகள் தனித்தனி ஆயிர யோசனை அகலநீள முடைத்தாம். இவற்றினை இந்திரத்தீவு, கசேருகத் தீவு, நல்லதாமிரத்தீவு, பிழையற்ற கபத்தித்தீவு, நாகத்தீவு, வளத்தை யுடைய சவுமியத்தீவு, காந்தருவத்தீவு, வாருணவைப்பெனுந்தீவு, விளங்கும் குமரித்தீவு என்று கூறாநிற்பர். இவற்றுள் வளமுடைய குமரித்தீவினை ஒப்பான தீவு பிறிதொன்றில்லை.

(வி - ம்.) என்மர் என்றும் பாடம். அதற்குக் கருதுவர் எனப் பொருள் கோடல் பொருந்துமேற் கொள்க. கசேருகத்தைச் சேருகம் என்றுங் கூறுவர். கசேருகம் - நாரத்தை. சேருகம் - நாகணவாய்ப் புள். (௪௧௭)

விந்தமே யருவிப் பாரியாத் திரமே விந்தியஞ் சுத்திகஞ் சையம்
கந்தமார்மலய மயேந்திர மென்னுங் கடிவரை யேழுமேழ் நகரும்
அந்தமி லேனைத் தலங்களுங் கங்கை யாதிய பற்பல நதியும்
மந்திர வேத முறைமையு முடைத்தீ தேனைய மிலேச்சர்வாழ் வனவே.

(இ - ள்.) இக்குமரிக்கண்டம் விந்தம், அருவிமிக்க பாரியாத்திரம் விந்தியம், சுத்திகம், சையம், மணநிறைந்த மலயம், மயேந்திரம் என்னும் விளக்கமுடைய ஏழுமலைகளையும், ஏழுநகரங்களையும் எண்ணிறந்த பிறதிருத் தலங்களையும், கங்கை முதலிய பற்பல பேரியாறுகளையும் மந்திரம் வேதமுதலிய மரபுகளையும் உடைத்து. இஃதொழிந்த ஏனைத் தீவுகள் மிலேச்சர் வாழுமிடங்களாம்.

(வி - ம்.) ஏழுநகரம் - அயோத்தி, மதுரை, மாயை, காசி, காஞ்சி, அவந்திகை, துவாரகை என்பன. மிலேச்சர் வாழ்வன ஆதலின் அவை இதுபோலச் சிறப்புடையவல்ல என்றவாறு. (௪௧௮)

மலயமால் வரைத்தென் சாரலி லிலங்கை மற்றைய வரையடிச் சாரல்
நிலையுமா லங்கஞ் சமாக்கிய மழகு நீடுறு மணிமலை சங்கம்
உலைவறு குமுதம் வராகமு மிமய வோங்கலின் வடகிழக் கெல்லைப்
பலர்தொழ வுமையோ டெந்தைவீற் றிருக்கும் பருப்பத முளது கயிலை.

(இ - ள்.) மலயமலையின் தெற்குச் சாரலிலே இலங்கைத் தீவுளது. ஏனைய மலையின் அடிவரைச் சாரலிலே, அங்கநாடும், சாமாக்கிய நாடும், அழகுமிக்க அணிமலை யென்னும் நாடும், சங்கநாடும், துன்ப மற்ற குமுதநாடும், வராகநாடும் உள்ளன. இமயமலையில் வடகிழக்கின்கண், அமரர் முதலிய பலரும் தொழும்படி இறைவியோடு பிறவா யாக்கைப் பெரியோன் எழுந்தருளியிருக்கும் மலையுளது. அது கயிலை மலை எனப்படும்.

(வி - ம்.) மலயமால்வரை - பொதியமலை. பருப்பதம் - மலை. (௪௬௯)

எழுதருர் பனுவ லாகம மேனைக் கலைகளு மிருடிகண் முதலாம்
உழுவலன் புடையார்க் கருளவுந் திருமா லொற்றுதேந் தாமரைக் கிழவன்
முழுதுடல் விழிக்குங் கடவுளா தியர்க்கு முன்னிய வரங்கொடுத் திடவுஞ்
செழுமணிக் களத்துத் தெய்வதக் குரிசி லேவியோ டாங்கிருந் ததுவே.

(இ - ள்.) மாந்தரால் எழுதுதற்கரிய வேதம் ஆகமம் முதலிய வற்றையும் ஏனைக் கலைகளையும் முனிவர் முதலிய வழியன்புடைய மெய்யடியார்க்கு அருளிச் செய்தற் பொருட்டும் திருமாலும் தேன்றுளிக்குந் தாமரை மலர்மேலிருக்கும் பிரமனும் உடல்முழுதுங் கண்பெற்று விழியாகின்ற இந்திரன் முதலிய கடவுளர்க்கும் வேண்டிய வரங்களை அருளிச்செய்தற் பொருட்டும், செழிப்புடைய நீலமணிபோன்ற மிடற்றினையுடைய தேவர் முதல்வனாகிய சிவபெருமான் உமையம்மையாரோடு அக்கயிலையிலே எழுந்தருளி யிருந்தனர் என்றுணர்க.

(வி - ம்.) குரிசில் ஆங்கிருந்தது அருளவும் கொடுத்திடவுமே யாகும் என்க. செழுமணி - ஈண்டு நீலமணி. குரிசில் - தலைவன். (௪௭௦)

இத்தகு தீவின் யோசனை யிலக்க மிதுவளை யுவரியற் றப்பால்
பைத்துறு சாகம் பாற்கடல் குசைப்பார் பரவையாந் தயிர்கிர வுஞ்சம்
நெய்த்திரைக் கடல்சான் மலிகழை நீர்கோ மேதந்தே னிலயம்புட் கரணி
சுத்தநீர் முறையா னொன்றற்கோன் றிரட்டி சொற்றதீ வலைகட லளவை.

(இ - ள்.) இத்தகைய இப் பாரதகண்டத்தின் அளவு நூறாயிர யோசனையாம். இதனை வளைந்து கிடக்கும் உப்புக்கடலும் அத்துணை யளவிற்று. அவ்வுப்புக் கடலுக்கும் அப்பால் சாகத்தீவுளது; அதற்கப்பால் பாற்கடல் உளது; அதற்கப்பால் குசைத்தீவுளது; அதற்கு அப்பால் தயிர்க்கடல் உளது; அதற்கப்பால் கிரவுஞ்சத்தீவுளது; அதற்கப்பால் நெய்யாகிய அலைகடல் உளது; அப்பால் சான்மலித்தீவுளது; அதற்கப்பால் கருப்பஞ்சாற்றுக் கடல் உளது; அதற்கப்பால் கோமேதத் தீவுளது; அதற்கப்பால் தேன்கடல்; அதற்கப்பால் புட்கரணித் தீவுளது. அதற்கப்பால் தூநீர்க்கடல் உளது. இத்தீவுகளும் கடல்களும் நிரலே ஒன்றற்கொன்று இருமடங்கு அளவான் மிகும்.

(வி - ம்.) பைத்துறு - பசுமையுற்ற. உப்புக்கடல் என்பது தோன்ற உவரி என்றார். பரவை - கடல். கழைநீர் - கருப்பஞ்சாறு, சொற்ற - கூறப்பட்ட. (௪௭௧)

சாகமு னைந்து தீவுமெவ் வேழு
 தடவரை யுடையபுட் கரணி
போகுயர் நேமி வரையென முழுதும்
 போந்துசூழ் பொருப்புடைத் ததன்மேல்

மாகர்சூ ழெண்மர் தத்தம திசையின்
வதிவரவ் வறுநிலத் தவரும்
ஏகிய பிணிமூப் பினர்களா யென்று
மின்பமுற் றிருப்பரோ ரயுதம்.

(இ - ள்.) சாகத்தீவு முதலிய ஐந்து தீவுகளும் ஒவ்வொன்றும் ஏழேழ் பெரிய மலைகளையுடையனவாம். இனி, புட்கரத்தீவு தன்பால் மிகவுயர்ந்த சக்கரவாளகிரி போன்று இடைவிடாமல் வளைவாகச் சூழ்ந்திருக்கும் மானதகிரி என்னும் மலையையும் உடைத்தாம். சென்று திரியும் அம்மலையின்மேல் திக்குப்பாலகர் எண்மரும் சூழ்ந்து தத்தமக்குரிய திசைகளிலே வீற்றிருப்பர். சாகத்தீவு முதலிய அந்த ஆறிடங்களினும் வாழ்பவர் பிணி மூப்பு இல்லாதவர்களாய் எக்காலத்தும் இன்பமுற்றிருப்பர் இவர்க்கு வாழ்நாள் பதினாயிரமாண்டென்ப.

(வி - ம்.) போகுயர் - மிகவுயர்ந்த என்க. மாகர்-திக்குப்பாலகர். வதிவர் - உறைவர். பிணி மூப்பு ஏகியவர் என்க. (சஎஉ)

எழுகடற் கப்பாற் பொன்னில மீரைங்
கோடியின் டுவர்சுர ரப்பால்
முழுவதும் வளைந்த செம்மணி நிறஞ்சான்
முதுவரை யயுதமப் புறத்துப்
பழுதிரு ளுலக முப்பத்தைங் கோடிப்
பத்தொன்ப திலக்கநா லயுதம்
கொழுமணிப் பெருநீர்க் கடலப்பா லளவை
கோடிமே லிருபத்தே ழிலக்கம்.

(இ - ள்.) இந்த ஏழுகடல்களுக்கும் அப்பால் பத்துக்கோடி யோசனை யளவிற்றாகப் பொன்னிலமிருக்கும் என்ப. இப்பொன்னிலத்தே தேவர்கள் உறைவர். அதற்கப்பால் நிலவுலகமனைத்தையும் வளைந்துள்ள சிவந்த மணிநிறமுடைய சக்கரவாளகிரி பதினாயிரம் யோசனை அளவுடைத்து. அதற்கப்பால் இருளுலகம் முப்பத்தைந்து கோடியே பத்தொன்பது நூறாயிரத்து நாற்பதினாயிரம் யோசனை அளவிற்றென்ப. அதற்கப்பால் கொழுவிய மணிபோன்ற நீரையுடைய பெரும்புறக் கடல் உளது. அதன் அளவு, ஒருகோடியே இருபத்தேழு நூறாயிர யோசனை என்ப.

(வி - ம்.) முதுவரை - அண்டுச் சக்கர வாளம். (சஎ௩)

மொய்யொளி தயங்கு நேமிமால் வரையின்
முற்புற மியக்கர்க ளரக்கர்
வெய்யபேய்க் கணங்க ளமர்வரெண் டிசையின்
விண்ணவ ரெண்மரு மமர்வர்

மையிருள் பொதிந்த வவ்வரைப் புறத்து
வதிவர்தம் முடலினைத் தாமே
வையுறச் செகுத்தோர் புல்லியர் முதலாங்
காழக மனத்தவர் பலரும்.

(இ - ள்.) மொய்த்த பேரொளி திகழும் சக்கரவாளகிரியின் முன்புறத்தில் இயக்கரும் அரக்கரும் வெவ்விய பிசாசர்கணமும் உறையாநிற்பர். எட்டுத்திசைகளினும் திக்குப்பாலகர் எண்மரும் உறைவர். மைபோன்ற காரிருள் மூடப்பட்ட அந்த மலையின் மற்றொருபுறத்தே தம்மைத் தாமே கொலை செய்துகொண்டோரும் புன்மைக் குணமுடைய தீவினையாளரும் இன்னோரன்ன பலரும் உறையாநிற்பர்.

(வி - ம்.) மொய்யொளி : வினைத்தொகை. மையிருள் - உவமத்தொகை. காழகம் - கறுப்பு; வெகுளி. (சஎச)

பெரும்புற வேலை யப்புறத் தண்டப்
பித்தியோ டாடக வரைகா
றிரும்புவிக் கைம்ப தேன்றகோ டியும்பாத்
தறைந்தன மிண்ணும்பாத் தறைவாம்
இரும்புவ லோகந் தரைக்குமேற் பதினைந்
திலக்கமென் றூழுல கிலக்கம்
வரும்பனிக் கதிர்மே லிலக்கமே லிலக்கம்
வானமீன் புதன்மிசை யிரட்டி.

(இ - ள்.) பெரும்புறக் கடலுக்கு அப்பாலமைந்த அண்டச் சுவரோடு முதல் பொன்மலை வரையில் பெரிய நிலவுலகிற்கியன்ற ஐம்பதுகோடி யோசனை தூரத்தினையும், ஈண்டு வகுத்துக் கூறினேம். இனி வானத்தின் உயரத்தையும் வகுத்துக் கூறுவேம் கேட்பாயாக. இந்நிலவுலகத்திற்குமேல் பெரிய புவலோகம் பதினைந்து நூறாயிர யோசனை யென்ப. அப்பால் ஞாயிற்றுலகம் நூறாயிர யோசனை என்ப. அப்பால் திங்கள் உலகம் நூறாயிர யோசனை என்ப. அப்பால், விண்மீன் உலகம் நூறாயிர யோசனை; அப்பால் புதனுலகம், இருநூறாயிர யோசனையில் உளதென்ப.

(வி - ம்.) என்றூழ் - ஞாயிறு. பனிக்கதிர் - திங்கள். (சஎ[illegible])

இவ்விரண் டிலக்க மும்பரின் வெள்ளி யிலகுசேய் சுரர்குரு சனியும்
கௌவிவா னூலக மப்புறத் திலக்கங் காழிலேழ் மாதவ ருலகம்
செவ்விய துருவ னுலகமே லிலக்கந் திகழ்புவ லோகமுற் றமைந்த
ஒவ்விய மனுக்கிந் திரனர சாளுஞ் சுவலோக மெண்பத்தைந் திலக்கம்.

(இ - ள்.) இனி அப்பால் மேலே வெள்ளியுலகமும் விளங்குகின்ற செவ்வாயுலகமும், வியாழனுலகமும், சனியுலகமும் தனித்தனி இருநூறாயிரம் இருநூறாயிரம் யோசனை தூரத்தே உளவாம்; காழ்ப்

பில்லாத எழுமுனிவர் உலகம் அதற்கப்பால் நூறாயிர யோசனை தூரத்தே யுளது. அதற்குமேல் செம்மையுடைய துருவலோகம் நூறாயிரயோசனை தூரத்தேயுளது. அதற்குமேல் திகழாநின்ற புவலோகம் பொருந்தியுளது. அழுக்காற்றைக் கெடுக்கும் இந்திரன் அரசாளும் சுவலோகம் அதற்குமேல் எண்பத்தைந்து நூறாயிரயோசனை தூரத்தே யுளதென்ப.

(வி - ம்.) சேய் - செவ்வாய். ஔவியம் - அழுக்காறு. அறுக்குதல் - கெடுத்தல். (௬௭௩)

மாதவர் மரீசி முதலியோர் பயிலு மாலோக மேலிரு கோடி
மேதகு பிதிரர் வதிசன லோக மேலிரு நான்குமே லீரா
றேதமில் சனக ராதியர் தவிரு மிருந்தவ லோகமே லீரெட்
டோதயற் கரிக்கு நான்குமே லிறைக்கா றாங்குறுஞ் சத்திய வுலகில்.

(இ - ள்.) அதற்குமேல் மரீசி முதலிய பெரிய முனிவர் வாழும் மகாலோகம் இரண்டுகோடி யோசனை யுயரத்தேயுளது. மேன்மை தக்கிருக்கும் பிதிரர் வாழும் சனலோகம் அதற்குமேல் எட்டுக்கோடி யோசனை யுயரத்திலிருக்கும். அதற்குமேல் குற்றமற்ற சனகர் முதலியோர் உறையும் தவலோகம் பன்னிருகோடி யோசனை யுயரத்தேயுளது. அதற்குமேல் பதினாறுகோடி யோசனை யுயரத்தே சத்தியலோகமுளது. அதற்குமேல் பிரமலோகமும் அதற்குமேல் நான்குகோடி யோசனை யுயரத்தே திருமாலுலகமும் அதற்கு ஆறுகோடி யோசனையுயரத்தே இறைவன் வதியும் சிவலோகமுமுள்ளன.

(வி - ம்) மரீசி முதலிய மாதவர் என்க. தவிர்தல் - தங்குதல். இறை - சிவன். ஊங்கு - இவ்விடத்தே. (௬௭௪)

உம்பரி னண்டப் பித்திகை யொடுமண் ணுலகுகா றைம்பது கோடி
கும்பமா முனிவ குறிக்கொள்வெவ் வேறு கூறுமெய் வுலகினு மேலாய்
நம்பிரான் வதியப் படுஞ்சிவ லோக நண்ணெழில் சொல்லினுக் கடங்கா
தம்பர்வாழ் குநர்தந் தன்மையிற் றன்ன மிறபத் தெரிக்குது மறிமோ.

(இ - ள்.) மேலுள்ள அண்டவோடு தொடங்கி மண்ணுலகம் வரையில் ஐம்பதுகோடி யோசனையளவு என்று அகத்தியனே தெரிந்து கொள். இனி வேறுவேறாகக் கூறப்பட்ட எல்லா வுலகினுக்கு மேலாகி எம்பெருமான் சிவன் உறையப்பட்ட சிவலோகம் பொருந்தியுள்ள அழகு சொல்லினுக்கு அடங்கமாட்டாது. அச்சிவலோகத்தே வாழ்பவர் இயல்பினில் ஒருசிறிது குற்றமறக் கூறுவேம் அறிந்துகொள்.

(வி - ம்.) நம்பிரான் - சிவபிரான். அம்பர் - அங்கு. தன்னம் - சிறிது. அரில் - குற்றம். மோ : முன்னிலையசை. (௬௭௫)

வேறு

பல்வேறு விலங்குபற வையிலுருக்கொள்
பல்வேறு கணமொவ் வோர்பால்

சில்வேறு கணமொருவாண் முகத்தபல
முகத்தவவை செறிவெவ் வோர்பால்
நல்வேறு திருவுருவந் தனவொருபா
லகுமுருவத் திறத்த வோர்பால்
அல்வேறு படுமுளத்துக் குறைவின்றிங்
ஙனஞெமிர்ந்த வனந்த கோடி.

(இ - ள்.) பல வேறுவகையான விலங்குகள் பறவைகள் உருவங் களைக் கொண்டுள்ள பலவேறு கூட்டத்தினர் ஒவ்வொரு பகுதியிலே, வாழ்வர். சிலவாகிய வேறுவகைக் கணம் ஒன்றுபோன்ற ஒளிமுகம் உடைத்தனவாம். பலவேறு வகை முகம்படைத்த கணம் பல. இவை ஒவ்வொரு பகுதியிலே தனித்தனி வாழும். நல்ல வேறுவேறு வகை யான அழகுடையன ஒரு பகுதியிலிருக்கும். விளங்கும் அழகுடையன ஒருபாலுறையும். இவையல்லாத வேறுபட்ட உளமுடையோர்க்கு அச்சிவலோகத்தே உறையுளில்லை. இவ்வாறு செறிந்த சிவகணங்கள் முடிவற்றகோடி கோடியாம்.

(வி - ம்.) உறைவு - உறையுள். ஞெமிர்ந்த - செறிந்த. (௬௭௯)

செம்பவள வொளிவிரிக்குந் திருவுருவுஞ்
சடைமுடியுந் திகழ்வெண் ணீறும்
வெம்புலித்தோ லுடையுநுதல் விழியுமழு
வேலிவற்றின் விளங்குங் கையும்
அம்புயமோ ரீரிரண்டு மமலன்டி
தைவருமுள் ளகமுஞ் சீர்ப்பப்
பம்புகண நாயகராய்த் தொழுதேத்து
மடியர்களும் பலரே யாங்கண்.

(இ - ள்.) அந்தச் சிவலோகத்தின்கண்; சிவந்த பவளம்போன்று ஒளிவிசாநின்ற அழகிய திருமேனியும், சடைமுடியும், விளங்காநின்ற திருநீறு சண்ணித்த திருமேனியும், வெவ்விய புலித்தோல் ஆடையும் நெற்றிக்கண்ணும், மழு முத்தலைச்சூலம் என்னும் இவற்றோடு திகழ் கின்ற கைகளும் அழகிய நான்கு தோள்களும் இறைவன் திருவடியை வருடாநின்ற நன்னர் நெஞ்சகமும் என்னும் இவை மாண்புறுநிற்பப் பரவிய சிவகணத் தலைவராக இறைவனைத் தொழுதேத்தாநின்ற மெய் யடியாரும் பற்பலர் உளராவர்.

(வி - ம்.) நுதல்விழி - நெற்றிக்கண். வேல் - ஈண்டு முத்தலை வேல்; சூலம். அம்புயம் - அழகிய தோள். தைவருதல் - தடவுதல். ஆங்கண் - அவ்விடத்தே. (௬௮௦)

காலையிளஞ் சுடர்கோடி யுதித்தனைய
கதிர்மணித்தேர் கடவிச் சென்று
சோலைகமழ் புறநகரு மகநகரு
மங்கலங்க டுவன்ற மின்னூர்

வேலையிகழ் விழிக்கணையால் விரைக்கணைகண்
மாற்றியின்ப வேலை மூழ்கும்
மாலையர்தா மரையாம்பல் சங்கம்வளர்
வெள்ளமென வயின்றோ றுள்ளார்.

(இ - ள்.) காலைப் பொழுதிலே கோடி இளஞாயிறு தோன்றினாற் போன்று ஒளியுடைய மணிகள் இழைத்த தேரிலேறிச் செலுத்திப் போய்ப் பூம்பொழில்கள் நறுமணம் பரப்பாநின்ற புறநகரத்தும் அக நகரத்தும் மங்கலப் பொருள்கள் சூழ்ந்துவர மின்போன்ற மகளிருடைய வேலைப்பழித்த விழிகளாலே காமனுடைய மலர்க்கணையின் கொடுமையை அகற்றி, இன்பக்கடலிலே மூழ்கும் தன்மையுடைய சிவ கணத்தோர், தாமரையும், ஆம்பலும், சங்கமும், மிக்க வெள்ளமும் என்னும் அளவினராய் இடந்தோறும் உறையாநிற்பர்.

(வி - ம்.) விழிக்கணையால் அவர் உடம்பாடுபெற்ற அளவிலே, காமத்துயரம் தீர்தலின் விழிக்கணையால் விரைக்கணைகள் மாற்றி என்றார்.

"கண்களவு கொள்ளுஞ் சிறுநோக்கம் காமத்திற்
செம்பாக மன்று பெரிது." (குறள் ௧0௯௨)

எனவரும் திருக்குறளுங் காண்க. தாமரைமலர் ஆம்பல்மலர் சங்கு முதலியன வளரும் நீர்நிலை என்றும் ஒருபொருள் தோன்றிற்று. (௪௮௧)

விளங்குசிவ புரிநாப்பண் பளிங்கொளிரா
லயக்குணபால் விரைத்த கொன்றைக்
களங்கில் பறைச் சடைமுடிமுக் கண்மழுவுந்
திரிசிகையுங் கதையும் வாளும்
துளங்குகரக் கணநாதர் வதிவருயர்
பாசுபதர் தூய சைவர்
வளங்கதுவு காபாலர் விரதியர்மெய்த்
தவருமவ ருருவின் வாழ்வார்.

(இ - ள்.) விளங்காநின்ற அச்சிவலோகத்தின் நடுவேயுள்ள பளிங்கென ஒளிரும் திருக்கோயிலின் கீழ்த்திசையிலே, மணக்குங் கொன்றைமலரும் மறுவற்ற இளம்பிறை யணிந்த சடைமுடியும் முக்கண்ணும், மழு, முத்தலைச் சூலம், தண்டு, வாள் என்னுமிவை விளங்கும் திருக்கைகளும் உடைய சிவகணத் தலைவர் உறையாநிற்பர். ஆண்டே உயர்ந்த பாசுபதரும், தூயசைவரும், வளம்பொருந்திய காபாலரும், மாவிரதியரும், மெய்யாய தவத்தினையுடைய மெய்க்காட்சியாளரும் அச் சிவகணநாதர் உருவத்தோடு உறையாநிற்பர்.

(வி - ம்.) களங்கு - மறு. இளம்பிறையிற் களங்கமின்மை யுணர்க. (௪௮௨)

தென்றிசையி லயன்வாணி யங்கிராக்
கபிலர்சித்தர் சனகர் முன்னோர்
ஒன்றுவர்மேற் றிசைவினையை யொழித்தபூ
தேசர்முன்னோ ருலவாச் சீர்த்தி
துன்றுபிரா மியைமுதலோ ரெழுமாதர்
பத்திரைமுன் றொடர்ந்த வெண்மர்
அன்றினரா ருயிர்குடிக்கும் பல்வேறு
வயிரவரு மமர்ந்து வாழ்வார்.

(இ - ள்.) அத்திருக்கோயிலின் தென்றிசையில் மலரோனும், கலைமகளும், அங்கிராவும், கபிலர் முதலிய சித்தர்களும், சனகர் முதலியோரும் சிவப்பணியிலே பொருந்துவர். இனி அதன் மேற்றிசையிலே, தீவினைகளையும் கெடுத்த பூதத்தலைவர் முதலியோரும், அழியாத பெரும்புகழ் பொருந்திய பிராமி முதலிய ஏழு தாய்மார்களும், பத்திரை முதலிய எட்டுக் கன்னியரும், பகைவருடைய பெறற்கருமுயிரைக் குடிக்கும் பல்வேறு வகைப்பட்ட வயிரவரும் இறைவன் திருப்பணியை விரும்பி வாழாநிற்பர்.

(வி - ம்.) வாணி - கலைமகள். பூதேசர் - பூதத்தலைவர். அன்றினர் - பகைவர். அமர்ந்து - விரும்பி. (௪௮௫)

வடதிசையிற் றிருமார்ப னுருத்திரர்வா
னருக்கரட்ட வசுக்கள் வில்லின்
தடவுநுத லரமகளிர் கந்தருவ
ரியக்கர்விச்சா தரர்கள் சித்தர்
சுடர்மணிய சேடர்குய்ய ரிறைவனடி
யுளத்திருத்தித் தொடர்ந்த வேட்கைப்
படரொழிய விடுத்தவரும் பாததா
மரையினுளம் பதித்து வாழ்வார்.

(இ - ள்.) இனி வடதிசைக்கண் திருமகள் உறையும் மார்பனாகிய திருமாலும், பதினொருகோடி யுருத்திரரும், வானத்திலியங்கும் அருக்கர் பன்னிருவரும், வசுக்கள் எண்மரும், விற்போன்று வளைந்த நெற்றியையுடைய அரமகளிரும், கந்தருவரும், இயக்கரும், விச்சாதரரும், சித்தரும், சுடருடைய முடிமணியுடைய உரகரும், பிசாசரும், எம்பெருமானுடைய திருவடிகளை நெஞ்சகத்தே வைத்துத் தம்மைத் தொடர்ந்த அவாத் துன்பம் கெட ஒழித்த சீவன்முத்தரும் இறைவன் திருவடிக்கண் தம் நெஞ்சத்தை அழுத்தி இன்புற்று வாழாநிற்பர்.

(வி - ம்.) திருமார்பன் - திருமால். தடவு - வளைவு. சேடர் - உரகர். குய்யர் - பிசாசர். படர் - துன்பம். (௪௮௬)

இத்தகையோர் புறஞ்சூழ வாயிரங்கான் மண்டபத்தி லெறுழ்சால் சிங்கப்
பைத்தமணிப் பீடத்துப் பரசிநெடு மானிருகைப் பரித்துச் சார்வோர்
மெய்த்துயரந் துரந்துவர மளிப்பவிரு கரமமைத்து விழிச் செவ்வாய்
முத்தநகை யுமையோடும் வீற்றிருந்த முதல்வனார் திருமுன் னர்.

(இ - ள்.) *இத்தகைய மாண்புடையோர் புறமெலாம் சூழாநிற்ப ஆயிரக்கால்மண்டபத்தில் வலிமைமிக்க அரிமாவுருவமைந்த பசியமணி யழுத்திய அணையின்கண், பரசும் மானும் இருகையினுந் தாங்கித் தம்மைச் சார்கின்ற மெய்யடியாருடைய மிக்க அச்சத்தை அகற்றி வரமளிப்பனவாக இரண்டு திருக்கைகளை யமைத்து, விழிக்கனி போன்று சிவந்த திருவாயும் முத்துப்போன்ற பற்களும் உடைய உமையம்மையாரோடு வீற்றிருந்த முழுமுதல்வனாராகிய சிவபெருமான் திருமுன்னர்.*

(வி - ம்.) *எறுழ் - வலிமை. விழி - ஒருசெடி. அதன்கனிக்கு ஆகுபெயர்.* (௪௮௦)

சுந்தரத்து விடையமரு மதன்பாங்கர்ச் செய்யநிறச் சுமனை வெள்ளை
அந்தநிறச் சுரபிகா பிலநந்தை கரியசுபத் திரைபார் தூமம்
நந்துநிறச் சுசீலையெனு மைந்துமினி திருக்குமிங்க ணவின்ற வானின்
முந்தெழுகோட் டடித்தலத்து மலரவனுந் திருமாலு முற்று வாழ்வார்.

(இ - ள்.) *அழகினையுடைய விடை அமர்ந்திருக்கும். அவ்விடையின் பக்கத்தே செந்நிறமுடைய சுமனையும், வெள்ளையாகிய அழகிய நிறமுடைய சுரபியும், கபிலநிறமுடைய நந்தையும், கரியநிறமுடைய சுபத்திரையும், பொருந்திய புகைபோன்ற நிறமுடைய சுசீலையும், என்னும் ஐந்து கடவுளான்களும் இனிதே அமர்ந்திருக்கும். ஈண்டுக் கூறப்பட்ட ஆன்களின் முகத்திலே தோன்றும் கொம்பின் அடிப்பகுதியிலே மலரோனும் திருமாலும் பொருந்தி உறையாநிற்பர்.*

(வி - ம்.) *சுந்தரம் - அழகு. விடை - எருது; ஈண்டு நந்திதேவர். கபிலம் - ஒருநிறம். தூமம் - புகை. நந்தும் - உவமவுருபு.* (௪௮௧)

கோட்டினுதிச் சராசரமும் பல்வகைத்தீர்த் தமுஞ்சிரத்துங் குழக னேற்றி
மாட்டமலை மேனுசி வையிலைவே லேமகநா சியினு கேசர்
ஓட்டமதி லுதயவத்த மனசந்தி பல்லின்வளி யோசை கண்ணில்
காட்டுமிரு சுடர்களன்ன மிரண்டினசு விளிதேவர் கடலோ னுவில்.

(இ - ள்.) *அக்கொம்பின் நுனிப் பகுதியில் இயங்கியற் பொருளும் நிலையியற் பொருளும் ஆகிய உலகமும், பல்வேறுவகைத் தீர்த்தங்களும் பொருந்தியிருக்கும், தலையிற் சிவபெருமானும், நெற்றியின்கண் இறைவியும், நாசியின்மேல் கூர்த்த வேற்படையை ஏந்தும் இளைய பிள்ளையாரும், நாசியினுள் வானவர் தலைவரும், உதடுகளில் உதய அத்தமனங்கட்குரிய தெய்வங்களும், பல்லின்கண் ஓசையுடைய காற்றும், கண்களில் ஞாயிறுந்திங்களும், செவியிரண்டினும் அசுவினி தேவரும், நாவில் வருணனும்.*

(வி - ம்.) ஓசைவளி எனமாறுக. ஒட்டம் - உதடு. வையிலை வேல் ஏம் மக எனக் கண்ணழித்து முருகன் என்க. ஏம் - ஏவும். மக - குமரி. (சஅஎ)

கலைமகளுங் காரத்திற் கண்டத்திந் திரனியமன் கருத்திற் கெண்டைத்
தலையியக்க ரிமிலருக்கர் சாத்தியர்மார் பினிலனில வாயுந் தாளில்
நிலவுமருத் துவர்முழந்தாண் மேற்குரத்து நுதிநிகழ்பன் னகர்க ளுப்பண்
குலவுறுகந் தருவர்கண்டி னரமகளி ருட்குரத்தி னெழுவர் மாதர்.

(இ - ள்.) உங்காரத்தில் கலைமகளும், கழுத்திலிந்திரனும், நெஞ்சிலியமனும், மணிகளிடத்து இயக்கரும், இமிலில் அருக்கரும், மார்பிற் சாத்தியரும், கால்களில் அனிலனாகிய காற்றும், முழந்தாளில் நிலைபெற்ற மருத்துவரும், குளம்பு நுனியில் உரகர்களும், அக் குளம்பின் நடுவில் அளவளாவுதலையுடைய கந்தருவரும், அக்குளம்பின் கண்டத்தே அரமகளிரும், உட்குளம்பிற் பிராமி முதலிய ஏழு தாய்மாரும்.

(வி - ம்.) கருத்து : நெஞ்சகம், ஆகுபெயர். கெண்டைத்தலம் - மணிகட்டுமிடம். குரம் - குளம்பு. கண்டு - கரடு. (சஅஅ)

வாலடியி னுகேசர் வான்மயிரி னிரவியொளி யபான மாமா
தேலவரைப் பலகைதனிற் பிதிரர்வசு தேவர்சந்தி தொறுமேர் வாய்ந்த
கோலவுருத் திரர்முதுகின் மாதவர்மெய்ம் மயிரினும்பர் குடிஞை நீரில்
சாலுமயத் தெமுனைதரை மாதுதரத் துததிபயோ தரத்தி னெல்லை.

(இ - ள்.) வாலின் அடிப்பகுதியில் நாகாதிபரும், வால்மயிரின்கண் ஒளி ஞாயிறும், குதத்தின்கண் திருமகளும் பொருந்தாநிற்ப; அரைப்பலகையில் பிதிரரும், சந்துதொறும் வசுதேவரும், முதுகின்கண் அழகு பொருந்திய உருத்திரரும், உடல்மயிர்தொறும் முனிவரும், மூத்திரத்தில் வான்கங்கையும், மிக்க சாணகத்தின்கண் யமுனையும், வயிற்றின்கண் நிலமகளும், மடியில் கடல்களும்.

(வி - ம்.) மாமாது - திருமகள். ஏல - பொருந்த. ஏர் - அழகு. குடிஞை - யாறு. தரைமாது - நிலமடந்தை. உதரம் - வயிறு. பயோதரம் - மடி, முலை. (சஅகூ)

காருகபத் தியமாதி மூன்றழலு முறைவயிற்றிற் காமர் நெஞ்சில்
சீருமிழும் வதனத்தி லென்பொடுசுக் கிலந்தனிற்செய் மகங்க ளெல்லாம்
சாருமுறுப் பனைத்தினுங்கற் புடைமகளிர் தங்குவரிச் சாதி யாகிப்
பாருலவு மானிடத்து மிவ்வாறு தேவரெலாம் பயில்வர் மாதோ.

(இ - ள்.) காருகபத்தியம், ஆகவனீயம், தக்கணாக்கினீயம் என்னும் மூன்று வேள்வித்தீயும், நிரலே வயிற்றினும், அழகிய நெஞ்சினும், அழகொழுகும் முகத்தினும், என்பினும், கருநீரினும், இயற்றுகின்ற வேள்விகள் அனைத்தும் பொருந்தும். உறுப்புக்கள்தோறும் கற்புடைமகளிர் உறையாநிற்பர். இந்தக் கடவுளான்களின் சாதியாகி இந்நில

வுலகத்திலே வாழ்கின்ற ஆன்களிடத்தும் இவ்வாறே இத்தேவரெல்லாம் உறையாநிற்பர் என்றுணர்க.

(வி - ம்.) மாதும் ஒவும் அசைகள். (௬௧0)

இத்தகையா வினையியக்கிற் பலாசுறுகோ
லான்மெல்ல வெறிந்து செல்கென்
றத்தகையோ ரதனுருவ மறிகின்றோ
ரரிந்திடுபுல் லருத்திச் சூழ்வோர்
பத்தியினில் வழிபடுவோர் பாலரனுக்
காட்டுவோ ரிவர்க ளெல்லாம்
கொத்துபடு மறன்கடைகண் முழுதிரித்துச்
சிவலோகங் குறுகி வாழ்வார்.

(இ - ள்.) இத்தகைய சிறப்புடைய ஆவை இயக்குங்கால் பலாசங் கோலால் மெல்லப் புடைத்துச் செல்க! செல்க என்று செலுத்தும் அத்தகைய அன்புடையோரும், அதன் திருவுருவச் சிறப்பினை அறிவோரும், தாமே அரிந்த புல்லினை ஊட்டி அதனை வலம்வருவோரும், அன்போடு வழிபாடு செய்வோரும், அதன் பாலினால் இறைவனுக்குத் திருமுழுக்கு இயற்றுவோரும் என்னும் இவரெல்லாம், கூட்டமான தீவினைகள் அனைத்தையும் கெடுத்துச் சிவலோகத்தை அடைந்து இன்புற்று வாழாநிற்பர்.

(வி - ம்.) செல்கென்ற அத்தகையோர் என்க. கொத்து-கூட்டம். அறன்கடை - தீவினை. (௬௧௧)

தீண்டினுங்கா ணினுங்கரிசு சேணகற்றி
நல்வினையே செறிப்ப தாகி
ஈண்டுமரும் பயனுதவி மறுமையினும்
வேண்டுபய னெளிதி னுய்க்கும்
காண்டகைய வாவினக்கண் ணின்றியொறுத்
துரையுரப்பிக் கலக்கங் காண்போர்
மாண்டகபி லையினறும்பால் வரதனுக்காட்
டாதுண்போர் வதிவார் கும்பி.

(இ - ள்.) இத்தகைய ஆன்கள் தம்மைத் தீண்டினும் கண்டாலும் அவர் செய்த தீவினைகளைத் தூரத்தே அகலும்படி செய்து நல்வினையையே நிரப்புவனவாய் இம்மையினும் பெறற்கரும் பயன்களை அளித்து மறுமையினும் வேண்டும் பயனெல்லாம் எளிதாகவே தரும். காணுந் தகுதியையுடைய ஆவை அன்பின்றி அடித்து வைது துன்பப்படச் செய்வோரும், மாட்சிமையுடைய அவ்வாவினது நறியபாலை இறைவனுக்கு ஆட்டாமற் றுமேயுண்போரும் நரகத்தே வீழ்ந்து கிடப்பர்.

(வி - ம்.) கரிசு - தீவினை. ஈண்டும் - இம்மையினும். கண் - கண்ணோட்டம். உரப்புதல் - அதட்டுதல். வரநன் - இறைவன். கும்பி - நரகம். (சகஉ)

இட்டிமுதன் மகவினையிற் சாலைநிரு மித்தியங்கு வாய்தல் கீழ்சார்
விட்டுவளர் கிழக்காதி நாற்றிசையும் விசையைவிளம் பைங்கோ தானம்
பட்டகவுட் கடவுணந்தி யொடுசோமன் பயில்கோட்டம் பயிற்றி நந்தி
அட்டமுன்மா காளரைவாய் தலினிருபான் மிசைவயினே றதனை யாக்கி.

(இ - ள்.) செங்கல் முதலியவற்றால் வேள்விச்சாலை யியற்றி, ஆன் இயங்குதற்குரிய வாயில் கிழக்குப் பக்கத்தே விட்டு, வளராநின்ற அக்கிழக்கு முதலிய நான்கு திசைகளினும் நிரலே, கொற்றவைக்கும், சமனை முதலிய ஐந்து ஆக்களுக்கும், மதமொழுகுங் கவுளையுடைய ஆனை முகக் கடவுளுக்கும் நந்திக்கும், திங்களுக்கும் திருக்கோயில்கள் அமைத்து நந்தியும் அடும்அழலேந்திய மாகாளரும் ஆகிய வாயில்காவற் றெய்வத்தை வாயிலீரண்டு பக்கத்தும் அமைத்து மதிலின்மேல் விடையுருவம் அமைத்து.

(வி - ம்.) இட்டி - செங்கல். சாலை - கோசாலை. விசயை-கொற்றவை. ஐங்கோ - சமனை முதலிய பசுக்கள். தானம்பட்ட கவுளையுடைய கடவுள் - விநாயகன். தானம் - மதம். (சகந)

கறவையின முதிர்கன்று புனிற்றிளங்கன்
றுகணோயிற் கன்றும் பால
உறையுமிடம் வேறுவே றமைத்தொளிருங்
கண்ணிவாய் தலுநாற் பாலும்
பெறவியற்றிக் கூவிளம்போ தியினடிமண்
பெருகுநதி யோடை சேர்மண்
சேறிதருவன் மீகமுமாங் கேய்த்துள்ளா
லயனரியைச் சிவனைப் போற்றி.

(இ - ள்.) கறக்கும் ஆக்களுக்கும், முதிர்ந்த கன்றுகளுக்கும், ஈன்றணிமையவாகிய இளங்கன்றுகட்கும், நோயால் வருந்துபவற்றிற்கும், கட்டுமிடம் வேறுவேறாக இயற்றி, நான்குதிசையினும் வாயில்களும் கருதியியற்றி, வில்வமரத்தடிமண், அரசமரத்தடிமண், நீர்பெருகும் ஆற்றடிமண், ஓடைமண், செறிந்த புற்றுமண் இவற்றை (ஆனாந்தொடுங்) கூட்டி ஆன்கொட்டிலினகத்தே தூய்மை செய்து, பிரமனும் திருமாலும் சிவபெருமானுமாகிய மும்மூர்த்தியையும் வழிபாடு செய்து.

(வி - ம்.) நோயிற் கன்றும்பால - பிணியால் வருந்துந்தன்மையன. கூவிளம் - வில்வம். போதி - அரசமரம். வன்மீகம் - புற்று. (சகச)

விரைபுகைத்து மலர்மாலை நாற்றிமெல்லச்
சுவத்தியெனு முரையை விண்டு

நிரைபுகுத்திப் புல்லருத்தி நித்தனுநீர்
மயம்புறத்து நீக்கி யேதம்
வரைவுசெய்தட் டமிதொறுநீ ராட்டிமலர்
சூட்டியன்னம் வனமு மூட்டிப்
புரைதபுபூ சனைபுரிவோர் புராரியுல
கத்தினிது புகுந்து வாழ்வார்.

(இ - ள்.) நறுமணப் புகைகாட்டி மலர்மாலை தூங்கவிட்டு, மெல்லச் 'சுவத்தி' என்கிற மங்கலமொழியைக்கூறி ஆனிரையை அக் கொட்டிலில் புகுத்தி அவற்றிற்குப் புல்லிட்டு நாடோறும் மூத்திரஞ் சாணகம் இவற்றை அகற்றிக் குற்றமுண்டாகாமல் பாதுகாத்து அட்டமிதோறும் அவற்றை நீராட்டி மலர்சூட்டி மடைச்சோறும் நீரும் ஊட்டிக் குற்றந்தீர்ந்த வழிபாடுஞ் செய்வோர் சிவலோகத்தின்கண் எய்தி இன்புற்று நெடிது வாழ்ந்திருப்பர்.

(வி - ம்.) விரை - நறுமணப் பொருள். ஈண்டு - அகில் முதலி யன. சுவத்தி : ஒருமங்கலச் சொல். அன்னம் - ஈண்டு மடைச்சோறு. வனம் - நீர். புராரி - சிவபெருமான். (௪௯௫)

சிவபுரத்திற் பெரும்போகந் துய்த்தறலு
முராரிமற்றோர் சூழ லெல்லாம்
இவர்வளத்த போகமுண்டுண் டெழுந்தவட
கிரியெய்திக் குருவென் றோதும்
அவமறுகண் டத்தமர்ந்து பாரதம்பி
னடுத்துமுன்வா தனையான் மீட்டும்
நவமுறவான் சாலைபுரிந் தரற்கானை
தாட்டிமுத்தி நண்ணு வாரால்.

(இ - ள்.) இவர் அச்சிவலோகத்தின்கண் பேரின்பந் துய்த்து முடிந்த வளவிலே திருமால் முதலிய தேவர் உலகமெல்லாம் வள முடைய இன்பநுகர்ச்சி எய்தி எய்திப் பின் வடமேருவை யடைந்து ஆண்டுக் குருகண்டம் என்று கூறப்படும் குற்றமற்ற கண்டத்தே பிறந்தின்புற்றிருந்து, பின்னர்ப் பாரதகண்டத்திலே வந்து பிறந்து பண்டைய வாதனைக் காரணமாக மீட்டும் புதுமையுறும்படி அவ்வான் சாலையே இயற்றி இறைவனுக்கு ஆனைந்துமாட்டிக் கால அடைவிலே பரமுத்தியையும் தலைப்படுவர்.

(வி - ம்.) முராரி-திருமால். வடகிரி-மேரு. வாதனை - பழக்கம்.

வேறு

வேனிலிற் பொதும்பர் நீழல்சே ரிடத்தும்
வீங்குநீர் மழைமலைச் சாரல்
கானினு மிமத்திற் கதிர்வெயில் விரிக்கும்
வெளியினுங் காழிடர் கடிந்திட்

டானினர் பரிப்போ ருரிஞுகன் னடுவோ
ராலனுக் காரியற் காணைத்
தானமுய்த் தளிப்போ ரிருமதி கன்று
தழைத்தபின் கறந்திறைக் கேய்ப்போர்.

(இ - ள்.) வேனிற் பருவத்தே சோலைநிழலுடைய இடங்களினும், மிக்க நீரையுடைய கார்ப்பருவத்தே மலைச்சாரல் காடு என்னும் இவ்விடத்தும், பனிப்பருவத்தே ஞாயிறு வெயில் விரித்தற்கேதுவான வெளியிடங்களினும் செலுத்தி முதிர்ந்த துன்பங்களை அகற்றி ஆனினத்தை ஓம்புபவரும், ஆவுரிஞ்சுதறி நடுவோரும், இறைவனுக் காதலாசிரியனுக்காதல் ஆவினைத் தானங்கொடுத்தோரும், கன்றுகள் இரண்டு திங்கள் வளர்ந்த பின்னர் ஆவிற் பால் கறந்து இறைவனுக்கு வழங்குவோரும்.

(வி - ர.) வேனில் மழை - இமம் என்னும் மூன்றினும் ஆறு பருவமும் அடங்கும். இமம் - பனி. காழிடர் : வினைத்தொகை. (௬௪௭)

செருத்தலான் முறையிற் காத்துரு தவரைச்
செகுக்கும்வேந் தாதியோர் விடையைப்
பொருத்திநற் கலன்க ளிறைவனுக் களிப்போர்
பொலிவறப் பிறருழை நோயால்
வருத்தமுற் றதனை வாங்கினர் காப்போர்
வாழ்த்தினர் வணங்குந ரெல்லாம்
உருத்திகழ் சிவலோ கத்தவ ரவர்கட்
கொத்தபோ கங்களுண் டிருப்பார்.

(இ - ள்.) மடியினையுடைய ஆக்களை இம்முறையிலே பாதுகாவாதாரைச் செங்கோல்வேந்தன் முதலியோர் கொல்வர், நல்ல பொன்னணிகலன்களாலே விடையை அணிசெய்து இறைவனுக்கு அளிப்பவரும், பொலிவிழந்து நோய்வாய்ப்பட்டுப் பிறரிடத்தே துன்புற்ற ஆவை வாங்கிப் பிணிபோக்கிப் பாதுகாப்பவரும், ஆக்களை வாழ்த்தி வணங்குபவரும் ஆகிய இவரெல்லாம், அழகு விளங்காநின்ற சிவலோகத்தை எய்தி அவ்வுலகோர்க் கமைந்த இன்பங்களை நுகர்ந்திருப்பர்.

(வி - ப்.) செருத்தல் - ஆன்முலை; மடி. வேந்தன் செகுக்கும் என்றது செங்கோல் வேந்தன் செகுத்தல்வேண்டும் என்றவாறு. (௬௪௮)

வேறு

விடையானைக் காவுவித்தோர் வெறுத்தோரே
ரார்ந்தோரிவ் வினைஞர்க் காதாக்
கடையோர்கள் கன்றிளைப்பக் கறந்துபால்
பருகுநர்கள் காவா தோர்கள்

அடையார்தெவ் வுறக்காப்ப தரிதாயி
னாருயிர்நீ வாரின் றோரை
இடைமீள விடலறியா தமக்கழிவெய்
துறுங்காறு மெரிவாய்க் கும்பி.

(இ - ள்.) காளை ஆ இவற்றைப் பாரஞ்சுமக்கச் செய்தோரும் இவற்றை வெறுத்தோரும், அவற்றின்மிசை ஏறிச் செலுத்தினோரும் இத்தகைய தீவினையாளரைக் கொல்லாத கடையராகிய மன்னர் முதலியோரும், கன்று நலியும்படி பாலைக்கறந்துண்டவரும், அவற்றைப் பகைவர் பற்றாதவாறு பாதுகாவாதோரும், பகைவர் கவர்ந்துழிக் காப்பதியலாவிடத்தே தமது அரிய உயிரை விடாதவரும் ஆகிய இவரை எல்லாம் எரிகின்ற தீவாய்நிரயம் தான் கெடுந்துணையும் விழுங்கிய தன் வாய்திறந்து இடையே மீளவிட மாட்டாது.

(வி - ம்.) காவுதல் - சுமத்தல். காதா - கொல்லாத. அடையார் - பகைவர். தெவ்வுற - கவர. (௩௯௯)

ஏற்றின்மிசை சுமையேற்றும் வினையிறைக்கு
விடைபதினொன் றீத்தோ ராண்டு
போற்றினிரை கழியுநிரைச் சாலையிடை
நீசர்புகிற் போக்க நூலின்
ஆற்றுகழு வாயில்லை பலமொழிந்தென்
றருமமிரண் டாகு மொன்று
நீற்றனடிப் பூசனையொன் றுமையவ
னடியாரை நிகழ்த்தும் பூசை.

(இ - ள்.) விடையின்மேல் சுமையேற்றிய தீவினை, சிவபெருமானுக்குப் பதினொரு விடைகளை வழங்கி மேலும் ஓராண்டு ஆனிரையை மேய்த்தலாற் கழியும். ஆன்கொட்டிலில் புலையர் புகுந்தால் அவர்க்கு எய்தும் தீவினைக்கு நூல்களில் கழுவாய் கூறப்படவில்லை. பலபடப் பாரித்துப் பேசுவானேன். இறை அறம் இரண்டு வகைப்படும். அவற்றுள் ஒன்று இறைவன் திருவடிவழிபாடாம். மற்றொன்று மெய்யடியாரையும் ஆன்களையும் வழிபடுதலாம் என்றுணர்க.

(வி - ம்.) ஓராண்டுநிரை போற்றின் கழியும் எனமாறுக. (௪௱)

ஆதலினால் வழியோரு மாவையவ னடியாரை யமைந்த கொண்டு
தீதறுபூ சனைவிளைக்க வினைநீறுங் கதிவீறுந் தீண்டா ரேனும்
நாதனடிக் கன்பினரே லவரைவழி படன்முறையந் நலமி லாரேல்
மேதகுசா தியரேனும் விடல்விளைத்த பூசைநலன் விளைப்பார் யாரே.

(இ - ள்.) இங்ஙனமாதலின் நல்குரவாளரும் ஆன்களையும் அவ் விறைவன் மெய்யடியாரையும் தம்பாலமைந்த பொருள்கொண்டு தீவினையறுதற்குக் காரணமான வழிபாடு செய்க. இங்ஙனம் வழிபட்

டுழித் திவினை செட்டொழியும்; வீடுபேறுமுண்டாம். இண்டத்தகாத புலையரேனும் இறைவனடிக்கு அன்புடையோர் எனின் அவரையும் வழிபடல் முறைமையாம். இறையன்பாகிய அந்நலமில்லாதோர் மேலான பார்ப்பனரேனும் வழிபாடு செய்யாது விடுக. அவர்க்கு வழிபாடு செய்யின் அதற்குரியன பயன்தருவோர் யாருமிலராகலான் அவ்வழிபாடு வீணாம் என்றுணர்க.

(வி - ம்.) அமைந்த - பெயர். வழிபடற்குரியவற்றை வழிபட்டக்கால் அவ்வழிபாட்டினை இறைவனே ஏன்றுகொண்டு அதற்குரிய பயனுமீவான். தகாதவிடத்துச் செய்யும் வழிபாட்டிற்குப் பயன் அளிப்பார் யாருமில்லையாகலான். பூசைநலன் அளிப்பார் யாரே என்றனர். (கூ0க)

தேவயாத் திரைதீர்த்த யாத்திரைசெய்
சிவனேசர் பிரம சாரி
மேவவறம் வளர்கிரகி வனத்துறைவோ
ரறத்துறந்த மெய்ம்மை யாளர்
மாவிரதர் பாசுபதர் சிவதலம்வாழ்
வோரிறைவன் மலர்த்தாண் மீது
பாவமைப்போ ரியமியம்ப லாதிபல
தொழில்வகையிற் பட்டோர்க் கம்மா.

(இ - ள்.) தலயாத்திரையும், தீர்த்த யாத்திரையும் செய்கின்ற சிவனடியார்க்கும், பிரமசாரிகட்கும், அறம்மிகும்படி வளர்க்கும் இல்லறத்தார்க்கும், வானப்பிரத்தர்க்கும், துவரத்துறந்த மெய்க்காட்சியாளர்க்கும், மாவிரதர்க்கும், பாசுபதர்க்கும், சிவதலங்களில் வாழும் வறியோர்க்கும், இறைவன் மலரடிமேல் பாவியற்றும் நல்லிசைப் புலவர்க்கும் இறைவன் கோயிலில் இசைக் கருவிகளை வாசிக்கும் கலைஞர்க்கும் இன்னோரன்ன பல்வேறு இறைவன் பணியிலே ஈடுபட்டிருப்போர்க்கும்.

(வி - ம்.) கிரகி - இல்லறத்தான். இயம் - இசைக்கருவி. அம்மா : அசை. (கூ0உ)

அறுசுவையூண் விசிறிகுடை கழலறுவை
கனகம்வெள்ளி யாதி வெந்நோய்
தெறுமருந்து கடங்கரக மாபரண
முதற்பலவுந் தெரிந்து நல்கும்
உறுகொடையோ ரவ்வகொடைப் பயன்சிவலோ
கத்தினுகர்ந் துய்ப்ப ரானோர்
நறுமுறுப்ப விறல்வேந்தாய்ப் பாரதமாண்
டிறைவனடி நண்ணு வாரால்.

(இ - ள்.) அறுசுவை யுணவு, விசிறி, குடை, செருப்பு, ஆடை, பொன், வெள்ளி முதலிய பொருள், வெவ்விய பிணிதீர்க்கும் மருந்து, குடம், நீர்க்கரகம், அக்கமணி முதலிய அணிகலன், என்றும் இன்னோ ரன்ன பொருள்களைச் செவ்வியும் இடனுமறிந்து வழங்கும் மிக்க வண்மையினை யுடையோர் அந்த அந்தப் பொருட்குரிய கொடைப் பயனைச் சிவலோகத்தினும் நுகர்ந்து, அமரரும் அழுக்காறெய்தும்படி இப் பாரதக் கண்டத்து மன்னராய்ப் பிறந்து வெற்றியோடு ஆண் டிருந்து இறுதியிற் பரமுத்தியும் பெறுவர்.

(வி - ம்.) கழல் - பாதக்குறடுமாம். தெரிந்து, என்றது காலமு மிடனும் தகுதியும் தெரிந்து என்றவாறு. நறுமுறுத்தல் - குறிப்பு மொழி, அழுக்காறு கொள்ளல். (கூ0௩)

புகலான்ம தத்துவத்தி னைம்பூத மகங்காரம் புந்தி மூலத்
தகலாநின் றிடுமண்ட மெட்டவற்றுட் பகுதியண்ட முகட்டி னீசன்
பகலாத வுமையாம்பன் னகப்பள்ளி மலர்ப்பள்ளி பயிலுந் தேவர்
தகலாநின் றமருலகந் திப்பியமா யோரைந்து தவிரு மன்றே.

(இ - ள்.) கூறப்படும் ஆன்மதத்துவத்தின்கண், ஐம்பூதத்திலும், அதற்கு மேலாகிய அகங்கார தத்துவத்திலும், புத்திதத்துவத்திலும், பிரகிருதிதத்துவத்திலும் ஒன்றற்கொன்று விரிவுடைய எட்டு அண்டங் கள் உள. அவையிற்றுள் வைத்துப் பிரகிருதியண்டத்துச்சியில், தாமரைப் பள்ளியிலும் பாம்புப்பள்ளியிலும் உறைகின்ற பிரமதேவன் உலகமும் திருமால் உலகமும் யாம் உறைகின்ற கந்தலோகமும், இறைவனைவிட்டு நீங்காத உமையவ்னையாருலகமும், சிவலோகமும் ஆகிய ஐந்தும் நிரலே ஒன்றன்மே லொன்றாக யிருக்கும்.

(வி - ம்.) ஆன்மதத்துவம் - பூதங்களைந்தும், தன்மாத்திரையைந் தும் அறிகருவிகள் ஐந்தும், தொழிற் கருவிகள் ஐந்தும் உட்கருவிகள் நான்குமாகிய உயிரோடு தொடர்புடைய இருபத்துநான்குமாம். மூலம், பகுதி என்பன பிரகிருதி. பகல் - வேறுபடல், பகலில்லாத உமை என்க. யாம் என்றது முருகப்பெருமான் தன்னைக் குறித்தவாறு. யாம் பயிலும் உலகம் என்க, அஃதாவது - கந்தலோகம். தவிர்தல் - தங்கு தல். (கூ0௪)

வேதனுக்குக் கடாகநெடு முகட்டினதன் மேற்றுளப விரிபூந் தாராற்
கோததன்மே னமக்கதன்மே லுமைக்கதன்மே லீசற்கு மூழின் வைகும்
சோதிவளர் சிவலோகம் புகுந்தோர்மீ ளுவதில்லை சோதி செய்ய
பாதமலர் தனின்முடிவிற் கலந்துபரா னந்தவெள்ளம் படிவர் மாதோ.

(இ - ள்.) அண்டகடாக முகட்டின்கண் பிரமதேவன் உலகமும்; அதற்குமேல் துளபமாகிய விரிந்த மலர்மாலையுடைய திருமாலுலகமும், அதற்குமேல் எம்முடைய உலகமும், அதற்குமேல் உமையுலகமும், அதற்குமேல் சிவலோகமும் முறையே உள. ஒளிமிகும் சிவலோகத்தே புகுந்தோர் பிறப்பின்கண் மீள்வதில்லை. ஒளிப்பிழம்பாகிய இறைவ னுடைய சிவந்த திருவடிமலரின்கண் இறுதியிற் கலந்து உயரிய பேரானந்தப் பெருங்கடலிலே முழுகாகிற்பர்.

(வி - ம்.) வேதன் - பிரமன். ஊழின் - முறையாக. சோதி - இறை. பரானந்தம் - உயர்ந்த இன்பம். மாது, ஓ : அசைகள். (௫0௫)

வேறு

இல்லறந் துறந்தேற் றுண்டமெய்த் துறவோ
ரீசனு கமப்பொரு ளுணர்ந்தோர்
சொல்லிறந் தவனைச் சித்திரைத் திங்க
டோற்றுநா ணெய்யொடு பிறவும்
புல்லுற வாட்டிப் பாளித முதலாம்
போனக மன்பரா யிரவர்க்
கொல்லுவித் துபய முகத்தன விடையோ
டாயிர மொருமுதற் களித்தோர்.

(இ - ள்.) இல்லறத்தைத் துறந்து ஊராரொருநாள் கையுறை ஏற்றுண்ட மெய்யான துறவோரும், இறைவனருளிய ஆகமப் பொருளை ஓதியுணர்ந்தோரும், சொல்லைக் கடந்துநின்ற இறைவனைச் சித்திரைத் திங்கள் பிறக்குநாளிலே நெய் முதலிய ஆனைந்துங் கூட்டி ஆட்டி மேலும் அப்புத்தாண்டுப் பிறப்பு நாளிலே அக்கார வடிசில் முதலிய உணவுகளை சிவனடியார் ஆயிரவர்க்கு ஊட்டி, ஈனுநிலையிலுள்ள ஆன்களை விடையோடு இறைவனுக்கு வழங்கினோரும்.

(வி - ம்.) சொல்லிறந்தவன் - இறைவன். புல்லுற - கூட. பாளிதம் - கண்டசருக்கரைச் சோறு; சோறுமாம். போனகம் - உணவு ஒல்லுவித்தல் - ஈண்டு ஊட்டுதல். உபயமுகத்தன என்றது - முதிர்ந்த கருவுடைய பசுக்கட்குக் குறிப்பு வினையாலணையும் பெயர், ஆனுக்கும் அதன் கருப்பத்துள்ள கன்றுக்குமுரிய முகம் இரண்டாகலின். உபய முகத்தன எனப்பட்டது. ஒருமுதல் - தனிமுதல்வன்; சிவன். (௫0௬)

மெய்யுணர்ந் ததற்குத் தகநட வாது
மிடைந்தெழும் போகத்தின் கருத்தால்
கையிழந் தவரென் றிவரெலாங் கலப்பர்
கவின்றவச் சிவபுரத் தெல்லை
பொய்யற வொருநா ளுண்மையுன் னினரும்
பூரணி புரங்கற்ப வயுதம்
ஐயென வாழ்ந்து நம்முல காதி
யவனிகா றிழிந்தடி யடைவார்.

(இ - ள்.) மெய்ப்பொருளை ஓதியுணர்ந்திருந்தும் அவ்வுணர்ச்சிக்குப் பொருந்த நடவாது உள்ளத்தின்கண் செறிந்து எழுகின்ற இனைவிழைச்சு முதலிய நுகர்ச்சி நினைவான் நல்லொழுக்கத்தினின்றும் ஓரோவழி பிறழ்ந்த அடியாரும், என்று கூறப்பட்ட இவரெல்லாம் அழகிய அச்சிவலோகத்தை எய்தாநிற்பர். காமவெகுளி மயக்கங்களாகிய பொய்கள் ஓரோவழிச் சிறிது மடங்கியமையாலே ஒருபொழுது மெய் புணர்ச்சியை எய்தியவரும், உமையுலகத்தை யடைந்து அங்குப்

பதினாயிரமுழி இனிதே இன்புற்றிருந்து பின்னர்ப் படிப்படியாக நம் முலகமுதல் மண்ணுலகம் ஈருகக் கீழ்க்கீழ் இறங்கி இறுதியில் பரமுத் தியை எய்தாநிற்பர்.

(வி - ம்.) கை - ஒழுக்கம். கவின்ற - அழகிய. பூரணி - முதல்வி. ஐயென : குறிப்புமொழி, இனிதாகவென்க. (௧0௭)

நூனக்கிவண் மொழிந்த முறையினைக் கற்றோர்
நுண்பொரு ளாய்ந்தவர் பிறர்க்கு
மனக்கொளத் தெரிப்போ ரம்முறை நீதி
வழிநடப் போர்நடப் பிப்போர்
தனக்கணஞ் செறித்துப் படிப்பித்தோர் முடிவிற்
றகுமுறை தனக்கரும் பூசை
கனக்கரி சிரிய வாற்றினோர் தாமுங்
கரைந்தவச் சிவபுரங் கலப்பார்.

(இ - ள்.) அகத்தியனே ! யாம் உனக்கு அருளிச்செய்த இத் திருமுறையை (நூலினை)க் கற்றவரும். இதன்கட் பொதிந்துள்ள பொருள் நுணுக்கங்களை ஆராய்ந்தோரும், இந்நூலினைப் பிறர் மனங் கொள்ளும்படி விளக்கிக் கூறினோரும், இந்நூலிற் கூறப்பட்ட நீதியை மேற்கொண் டொழுகுவோரும், பிறரை ஒழுகச் செய்வோரும், ஓது பவர்க்குப் பொருள்களை நிரம்ப வழங்கி ஓதுவித்தோரும், இந்நூல் ஓதிமுடியும் நாளிலே தகுதியுடைய இத்திருமுறைக்கு அரிய வழிபாட் டினைத் தமக்குச் சுமையாகிய தீவினைகெட்டோடும்படி இயற்றினோரும், ஆகிய இவரெல்லாம் ஈண்டுக் கூறப்பட்ட அந்தச் சிவலோகத்தை அடைவர்..

(வி - ம்.) முறை : நூலுக்கு ஆகுபெயர். தனக்கணம் - பொருட் குவை. கனக்கரிசு-பாரமாகிய தீவினை. கரைந்த - கூறிய. தெய்வத் திரு வருள் நூல்களை அத்தெய்வமேபோன்று நாளும் வழிபாடியற்றி நலங் கொள்ளுதல் நம் தலைக்கடனாகும். வழிபாடென்பது அதனை யாண்டும் இனிதுறப் பரப்பிப் போற்றுதலேயாம். (௧0௮)

விங்கிய செருத்த லாவிட மியல்பும்
விளம்பினம் விளம்பின யாவும்
ஓங்கிய சிவதன் மோத்தரத் தனகா
ஹேரோவொரு வயின்மற்றுகமங்கள்
தாங்கிய முறையொவ் வரமையு முடைத்து
தகையுயிர்ப் பக்குவக் கியையப்
பாங்குறு சிருட்டி தொறும்பரன் வேறுய்ப்
பயிற்றுமா தலினதி னயிர்த்தல்.

(இ - ள்.) பருத்த மடியினையுடைய ஆன்கள் இடமும் அவற்றின் தன்மையும் கூறினோம். என்று யாம் நினக்குக் கூறியன எல்லாம் உயர்ந்த 'சிவதருமோத்தரம்' என்னும் நூலிடத்துக் கூறப்பட்டனவே யாம் என்றிக் கூறப்பட்ட பொருள் ஒவ்வோரிடத்தே ஏனை ஆகமங்கள் கூறுவனவற்றோடு முரணுதலும் உண்டு. அங்ஙனம் முரணுதற்குக் காரணம் செறிந்த உயிரினங்களின் பரிபக்குவத்திற்கியையக் கூறுபாடுடைய படைப்புத்தோறும் இறைவன் வேறு வேறாகவும் படைத்த உடைமையே ஆதலின் அம்முரண்களாலே இந்நூலை நீ ஐயுறாதே கொள்.

(வி - ரை.) சிவதருமோத்தரம் - முருகப்பெருமான் அகத்தியனுக் கருளிய ஒரு மெய்ந்நூல். இதனை மறைஞான சம்பந்த நாயனார் தமிழில் இயற்றியுள்ளார். அயிர்த்தல் : வியங்கோள், அல்லீறு எதிர்மறை. (௫0௧)

அறிவு நூலைத் தெரிக்குமா ரியற்கக் கரமொன்றற் காடகக் காசொன்
றுரிமையி னளித்த லுள்ளவ னில்லா னுதவுக செம்புறு காசு
தருபயன் கருதா தாரியன் றெரிக்க தருங்குறி யெதிர்ப்பையி தென்னக்
கருதுரு தளிக்க வாரியற் கடிமை யலதுகைம் மாறென்று மிலதே.

(இ - ள்.) குற்றமற்ற இந்நூலை ஓதுவிக்கும் நல்லாசிரியனுக்கு மாணவன் பொருள்மிக்குடையனாயவழி எழுத்தொன்றற்கு ஒரு பொற் காசு விழுக்காடு அன்புரிமையோடு வழங்கக்கடவன். மாணவன் பொருளில்லானாயவிடத்து எழுத்தொன்றற்கு ஒரு செப்புக்காசேனும் வழங்குக. இனி இந்நூலை நன்மாணாக்கர்க்கு அறிவுறுத்தும் ஆசிரியன் அம்மாணவர் தரும் பொருள் முதலிய பயன்களைக் குறிக்கொள்ளாமல் அன்பே தலைக்கீடாக அறிவுறுத்தக்கடவன். நல்லாசிரியனுக்குத் தன் மாணாக்கர் அன்படியார் ஆதலே கைம்மாறாகும். வேறு கைம்மாறில்லை. ஆகவே ஆசிரியன் மாணவர்பால் எமக்குத் தகுதியான கைம்மாறு இஃதெனப் பிறிதொன்றனையும் கருதாமல், அறிவுறுத்தல் வேண்டும் என்றும். (௫௧0)

அன்னமு மோரோரெழுத் தோரோ ரெழுத்தோரோ வொன்றற்
கான்றவர்க் கூட்டுதல் கடனல்
மன்னுபுத் தகத்தை யீசனைக் குருவை
மரபினுற் பூசைசெய் யாரேல்
துன்னுறு பயனை யிழப்பது மன்றித்
தொக்கவெந் நிரயமுந் துளைவார்
நன்னர்நெஞ் சுவப்பப் பூசனை புரியி
னுடிய பொருளெலாம் பெறுவார்.

(இ - ள்.) இனி, இந்நூல் ஓதுவிக்கும் நல்லாசிரியனுக்கு எழுத் தொன்றற்கு ஒருசோறு விழுக்காடு ஊட்டுதல் நன்மாணவன் கடமை யாம். இனி, மாணவர் அறிவு நிலைபெற்ற இந்நூலினையும் இதனைல்

அறிவுறுத்தப்படும் இறைவனையும் இதனை ஓதுவிக்கும் நல்லாசிரியனையும் வழிபாடியற்றுக. இங்ஙனம் வழிபடமாட்டாரெனின் அவர் இந் நாலாலெய்தும் பயனை இழப்பதோடல்லாது தொகைபட்ட கொடிய நரகத்திலும் வீழ்ந்தழுந்தாநிற்பர். நலமுடைய தம் மனம் மகிழும்படி வழிபாடு செய்வோர் தாம்தாம் விரும்பிய பொருளெல்லாம் விரும்பியாங்குப் பெற்று மகிழ்வர்.

(வி - ம்.) அன்னம் - சோறு. ஆன்றவர் - ஆசிரியர். (௯௧௧)

என்றுசூ ருயிரைக் குடிக்கும்வே லிறைவ
னியம்பிய ஞானமுற் றுணர்ந்து
நன்றுவீ றன்பிற் பன்முறை தாழ்ந்து
நளினமொத் தலர்ந்ததா ளிழல்
ஒன்றியாங் கடித்தொண் டுஞற்றினன் பன்னா
ளுறைந்துபின் னாரிய னருளால்
மன்றல்சூழ் பொதிய மடுத்துமுத் தமிழை
வளர்த்துவாழ்ந் திருந்தனன் முனிவன்.

(இ - ள்.) என்றிவ்வாறு சூரபதுமன் முதலியோர் உயிரைக் குடித்த ஆற்றல் சால் வேற்படையை ஏந்திய முருகப்பெருமான் திருவாய்மலர்ந்தருளிய ஞான முதலியவற்றை ஐயந்திரிபற நன்குணர்ந்து கொண்டவனாய் அகத்தியமுனிவன், அப்பெருமான் திருவடியின்பால் பெரிதும் மிக்குச் செல்லாநின்ற அன்பு காரணமாகப் பலகாலும் வீழ்ந்து வணங்கித் தாமரைமலர்போன்று மலர்ந்த அத்திருவடியின் அருள்நீழலிலே பொருந்தி அத்திருத்தலத்திலேயே பற்பலநாள் உறைந்து அடித்தொண்டு இயற்றுகின்றனன். பின்னர், அப்பெருமான் திருவருள் பெற்று நறுமணங்கமழ்தற்கிடமான பொதியமாமலையினை எய்தி, ஆண்டு 'இயல் இசை நாடகம்' என்னும் மூன்று கூறுடைய செந்தமிழ் மொழியினை வளர்த்து இவ்வுலகமுய்யும்பொருட்டு இனிதே வாழ்ந்திருப்பானாயினன்.

(வி - ம்.) சூர் - சூரபதுமன். நன்று - பெரிது, வீறு - வேறொன்றற்கில்லாத சிறப்பு. உஞற்றினன் - முற்றெச்சம். ஆரியன் - ஆசிரியன், ஈண்டு முருகன். மன்றல் - நறுமணம். முனிவன் - அகத்தியன். (௯௧௨)

மும்மல மிரித்து நன்மையை வேட்ட
முனிவிர்காண் முனிவரற் கிலைவேற்
செம்மலன் றளித்த திருத்தகு ஞானஞ்
செயிர்தபத் தெருட்டினங் கண்டீர்
விம்மமெய்ஞ் ஞானத் திருநிறை தவினல்
விளங்குசீ பூரண நாமம்
அம்மலைக் கான தன்றியுஞ் செல்வத்
தாயதுங் கேட்கவென் றறைவான்.

(இ - ள்.) ஆணவ முதலிய மூன்று மலங்களையும் கெடுத்துச் செம்பொருளாகிய நலத்தை விரும்பிய முனிவர்களே. அகத்தியனாகிய முனிப்பெரியோனுக்கு அக்காலத்தே இலையுடைய வேற்படையினை யுடைய இறைவன் திருவாய்மலர்ந்தருளிய, செல்வமாந் தகுதியுடைய ஞானத்தினை நம்மலக்குற்றந் தீரும்பொருட்டு இதுகாறும் உணர்த்தினேம். அத்திருத்தணிகைமலையின்கண் அம்முருகன் செவியறிவுறுத்த மெய்ஞ்ஞானமாகிய செல்வம் பெரிதும் நிறைந்துள்ளமையால் அம்மலைக்கு விளங்காநின்ற 'சீபரிபூரணமலை' என்னும் திருப்பெயர் வழங்குவதாயிற்று. இனி ஞானச்செல்வமே யன்றியும் அம்மலைக்கு உலகப்பொருள் முதலியவற்றானும் அப்பெயர் தக்கதே ஆதலையும் கூறுவேம் கேண்மின் என்று, சூதமுனிவன் திருவாய்மலர்ந்தருளத் தொடங்கினன்.

(வி - ம்.) மும்மலம் - ஆணவம், மாயை, கன்மங்கள். செம்மல் - முருகன். (௬௧௫)

## அகத்தியன் அருள்பெறு படலம் முற்றிற்று.

(ஆகத் திருவிருத்தம்—௧௫௮௬.)

# சீபரிபூரண நாமப் படலம்

வளங்கு லாவிய போகங்கண் மதிப்பினு மாவி
துளங்க மேவிய வினையொரீஇத் தொலைவில்வான் பதத்தின்
உளங்கு லாவுற வேண்டினு மொல்லையுய்த் தருளும்
விளங்கு சீபரி பூரண விலங்கலைப் பணிவாம்.

(இ - ள்.) (ஆன்மாக்கள்) வளப்பமிக்க போகங்களைக் கருதி னும் தாங்கள் வருந்துதற் கேதுவாகப் பொருந்திய வினைத்தொகையி னின்றும் நீங்கி எஞ்ஞான்றும் ஈறில்லாத உயரிய வீட்டின்பத்தின்கண் மனமானது பொருந்தவிழையினும் இவ்விரண்டினையும் விரைவிற் றரு கின்ற விளக்கமுற்ற சீபரிபூரண மென்னும் பெயரையுடைய திருமலை யினை வணங்குவாம்.

(வி - ம்.) சீ - செல்வம், வீடென்னு மிருபொருட்கு மொருசொல். பூரணம் - நிறைவு. வளங்குலாவிய போகங்கள். இம்மை மறுமை யின்பங்கள். ஆவிமதிப்பினும் வேண்டினும் அருளும் விலங்கல் என வினைமுடிவு செய்க. ஆவி துளங்க மேவியவினை யென்க. தொலைவில் வான்பதம் - ஈறில்லாத வீட்டின்பம். பதம் : ஆகுபெயர். துளங்கல் - வருந்தல், சீ பரிபூரணம். பக்திமுத்திகளின் நிறைவைக் கொடுத்தல். (௧)

### வேறு

முன்னரொரு கற்பகத்தின் மொழிசாக மெனுந்தீவின்
மன்னன்பிர பாகரன்சேர் மனைவிசுகு மாரிபால்
நன்னரிரு மகவுடங்கு நண்ணினவெவ் வேறிரண்டு
பின்னருதித் தனவிந்தப் பெருந்திறனுன் மகவுக்கும்.

(இ - ள்.) முன்னொரு கற்பத்தின்கண் யாவராலும் புகழ்ந்து சொல்லப்படுகின்ற சாகமென்னுந் தீவின்கண் (செங் கோலோச்சிய) பிரபாகர னென்னும் அரையன் (வேதவிதிப்படி) மணந்த சுகுமாரி யென்பவள்மாட்டு நன்மை பொருந்திய இரு குழவிகள் ஒருசேரத் தோன்றின. பின்னர் இரு குழவிகள் வெவ்வேருக வுதித்தன. இங் ஙனந் தோன்றிய மிக்க வலிமையினையுடைய நான்கு குழவிகளுக்கும்.

(வி - ம்.) கற்பம்-ஊழி. சேர்மனைவி : வினைத்தொகை. (௨)

தந்தைசூ ரன்பன்மன் சிங்கன்று ரகனெனும்பேர்
பந்தமுறச் செய்துலகம் பரேரெழுழ்த்தோட் பரிப்பித்துக்
கந்தமலி குழலியொடுங் கானடைந்து தவமுயன்றுன்
அந்திலவர் முறைசெலுத்தி யரசுபுரி யவ்வெல்லை.

(இ - ள்.) பிரபாகர னென்னுந் தந்தை அக்குழவிகளுக்குச் சூரன், பன்மன், சிங்கன், தாரகன் என்னும் பெயரினை முறையே அன்புடனிட்டு (தன்னுட்சியிலுள்ள) உலகினை மிக்கவழகிபேருடு கூடிய அவர்கள் பருத்த அழகினையும் வலியினையும் உடைய புயத்தின்கட் சுமப்பித்து

மணமிக்க குழலினை யுடையாளாகிய சுகுமாரி யென்னும் மனைவியோடுங் காட்டின்கட் சென்று (அவள் வழிபாடியற்ற) தவத்தின்கட் பொருந்தினன். (அப்பிரபாகரன் வானப்பிரத்தம் புக்கபின்னர்) அந்நான்கு புதல்வரும் (யாண்டும்) நீதி நிலைபெற ஆணை செலுத்தி அரசாட்சி செய்யும் அக்காலத்து.

(வி - ம்.) பரேரெறுழ்த்தோள் - பருத்த அழகினையும் வலியினையு முடைய தோள் ''படலைக்கண்ணிப் பரேரெறுழ்த்திணி தோள்'' நெடுநல்வாடை 31ஆவது வரி. கந்தம் - மணம். (௩)

குறுமுனிமுன் னிருவர்க்குங் குமரன்மான் மியங்கிளந்தான்
உறுகிரணா விந்திடப யோகிபின்னோர்க் குயர்கன்னி
தெறுவினைச்சாத் தன்காதை தெரித்தனரராங் கெறுழ்ப்பன்மன்
கறுவுகொள்வா ரணக்கொடியாங் காதலினைக் கருத்தமைத்தான்.

(இ - ள்) அகத்திய முனிவர் சூரன் பன்மன் என்னும் இருவர்க்கும் என்று மினையோனாகிய முருகக் கடவுளின் பெருமையை யெடுத்துச் செவியறிவுறுத்தினன். தவத்தின்மிக்க கிரண விந்து வென்னும் முனிவனும் இடபயோனியும் சூரன் பன்மன் ஆகிய இவர்களின் பின் தோன்றினவர்களாகிய சிங்கன் தாரகனாகிய இவ்விருவர்களுக்கும் யாவரினும் விரத்தானுயர்ந்த துர்க்கையும், பகைவரைக் கொல்லுந் தொழிலமைந்த சாத்தனுமாகிய இவர்களின் கதையினைச் செவியறிவுறுத்தினன். அஞ்ஞான்று அவருள் வலியினையுடைய பன்மனென்பவன் சிற்றத்தினைத் தன்னகத்தே கொண்ட கோழிக் கொடியாகத் தாறுகும் அன்பினை மனத்தின்கண் அமைத்தனன்.

(வி - ம்.) உறு - மிக்க. கன்னி - துர்க்கை. தெறுவினை-கொல்லும்வினை. சாத்தன் - ஐயனார். கறுவுகொள் - சீற்றத்தினைக்கொண்ட. (௪)

இதுவரை மூன்று செய்யுளுங் குளகம்.

சூரனுமற் றிருவரும்வேல் சுடர்கரத்தான் முதன்மூவர்க்
கேருறும்வா கனமாத லிவறினு ரக்கணமே
பாரளிப்ப மைந்தர்தமைப் பணித்தேகிக் கயிலைவரைச்
சாரலினுன் குறழ்பதினு யிரமாண்டு தவம்புரிந்தார்.

(இ - ள்.) சூரன், சிங்கன், தாரகன் என்று மூவரும் ஒளியினோடு கூடிய வேற்படையினைத் திருக்கரத்திற் கொண்ட முருகக் கடவுளை முதலாகக் கொண்ட துர்க்கை, சாத்தன் ஆகிய மூவருக்கும் அழகு பொருந்திய (மயில், சிங்கம், யானையாகிய) ஊர்தியாதற்கு விருப்பங் கொண்டனர். அக்கணமே தங்கள் புதல்வர்களை உலகத்தைக் காக்கும் வண்ணம் பணித்துக் கயிலாயமலையின் பக்கலிலே சென்று நாற்பதினாயிரமாண்டுகள் தவமியற்றினர்.

(வி - ம்.) சூரன் முதலிய மூவரும் மயிலுஞ் சிங்கமும் யானையுமாம் வண்ணங் கருதின ரென்க. உறழ்தல் - பெருக்கல். ஏர் - அழகு. 'ஏரழகுமுபெற்றப் பேர்' - நிகண்டு. இவறுதல் - விரும்புதல். (௫)

முக்கணிறை பதம்பணிய முன்னியவேண் முதலானோர்
அக்கணிறு வியமயில்குக் குடமரிதோ லியிர்தவம்
எக்கருத்தி னிழைக்கின்றீ ரெனவினவிச் சபித்திடலும்
தக்கவற் றெழின்முகத்த சாரதங்க ளாயினர்.

(இ - ள்.) முக்கணிறைவன் அடியினை வணங்க அடைந்த முருகக் கடவுள் முதலிய மூவர்களும் அங்கண் நிறுத்திய மயிலும், சேவலும், சிங்கமும், யானையுமாகிய நான்கும் (சூரன் முதலிய நால்வருந்தவ மியற்றக் கண்ணுற்று) நீங்கள் எவ்வெண்ணத்திற்றோ தவமிழைக்கின்றீரென்று வினவி (தமக்கு அவரால் பின்னர் இடையூறு நிகழுமென்றெண்ணிச் சபிக்க (அக்கணமே யவர்கள்) தகுதிப்பாட்டினையுடைய (மயில், சேவல், சிங்கம், யானையாகிய) அவைகளின் அழகுபொருந்திய முகத்தையுடைய பூதங்களாயினர்.

(வி - ம்.) முன்னிய-நினைத்த. அங்கண்-விகாரம். முக்கணிறை-சிவன். வேள் - முருகன். குக்குடம் - கோழிச்சேவல். அரி - சிங்கம். தோல் - யானை. சாரதம் - பூதம். (௬)

பாரிடராய் விறலண்டா பரணர்பணி புரிகாலைப்
போரிடைந்து தேவரடைக் கலம்புகுதப் பொருமவுணர்
வேரறுத்தா ரதுகேட்டு வெய்யவவு ணக்குலத்துச்
சாருகென வத்தலைவர் தருஞ்சாபந் தாங்கினர்.

(இ - ள்:) (இந்நால்வரும் உடம்பொடு முகங்களோவ்வாத) பூதர்களாய்த் தவத்தின் வலியினையுடைய அண்டாபரண ரென்னும் முனிவர் பக்கலிற் சென்று, குற்றேவல் செய்கின்ற காலத்துப் போரின் கட் டோல்வியுற்றுத் தேவர்கள் யாவரும் சரண்புகுதற் கேதுவாகப் போர்செய்யும் அவுணர்களை வேரறக் களைந்தனர். இச் செயலினைக் கேட்டு அவுணக்குலத் தலைவர் (நீயிர் அவுணராயிருந்தும் அவுணக் குலத்தையே வேரறுக்க முற்பட்டீராதலின்) கொடிய அவுணக் குலத் தின்கண்ணே பொருந்துக வென்று கொடுத்த சாபத்தினை யேற்றனர்.

(வி - ம்.) சாபமாவது நீங்களும் எங்குலத்திற் பிறந்து தேவர் கட்குப் பகையாகக் கடவீர் என்றது.

அண்டாபரணர் - அண்டங்களை யெல்லாம் ஆபரணமாகக்கொண்ட ஒரு முனிவர். சாருக, என : விகாரம். (௭)

மற்றுமொரு நாட்செவ்வேண் மதிமிலைத்த பொலஞ்சடிலக்
கொற்றவனைத் தொழவூர்தி கொடிப்பறவை புறநிறீஇ
உற்றனன்மான் முதலோரு மூர்திநிறுத் துள்ளடைந்தார்
வெற்றிமயிற் சேவலைத்தாழ்ந் திலவின்னோர் விறலூர்தி.

(இ - ள்.) வேறொருநாள் முருகக் கடவுள் மதியினை யணிந்த பொன்மயமான சடையினையுடைய வென்றியுடையவனாகிய சிவபெருமானை வணங்க ஊர்தியாகிய மயிலினையும், கொடியாகிய கோழிச்

சேவலினையும், வாயிலின்கண்ணே நிறுத்திக் கோவிலினுள்ளே சென்றனன். மாயன் முதலிய தேவர்களும் தத்தம் ஊர்திகளைப் புறத்தே நிறுவிக் கோவிலினுள்ளே சென்றனர். ஏனைய தேவர்கள் வலியினையுடைய ஊர்திகள் வெற்றியினையுடைய மயிற்சேவலை வணங்கில வென்க.

(வி - ம்.) பொன் என்பது பொலமென ஈறு திரிந்துநின்றது. இதனை "பொன்னென் கிளவி யீறுகெட முறையின், முன்னர்த் தோன்றும் லகார மகாரஞ், செய்யுண் மருங்கிற் றொடரியலான" என்னுஞ் சூத்திரத்தா னுணர்க. "சேவற் பெயர்க்கொடை சிறகொடு சிவணு, மாயிருந் தூவி மயிலலங் கடையே" என்னுஞ் சூத்திரத்து, ஆசிரியர் தொல்காப்பியனார் சேவற் பெயர்க் கொடை மயிலினுக்கு நேராராயினும் உரையாசிரியர், செவ்வேளூர்ந்த மயிற்காயின் அதுவும் நேரவும்படும் என்று கூறலின் வெற்றிமயிற் சேவலென்றார். இவ்வுரையாசிரியர்க்கு முன்னரே இம்மரபு எழுந்து" முன்னுறு மஞ்ஞையஞ்சேவன்மேலேறி" எனக் கந்தபுராண முதலிய நூல்களிற் காணப்படுதலின் உரையாசிரியர் இங்ஙனம் அமைதி கூறினரென் றுணர்க. (அ)

**கூளியர்கள் சினங்கொளுத்தக் கொதித்தெழுந்து மயில்சேவல்**
**வாளிமைக்கும் வைகுண்ட முதல்வரைப்பெ லாமழித்து**
**நீளரவப் பகைமுதலா யூர்தியுயிர் நீத்தமைந்த**
**மீளுமறு முகனேக்கி விளைத்ததிவ ரெனக்கேட்டு.**

(இ - ள்.) (சூரன் முதல் நால்வராகிய) பூதர்கள் (நீவிர் செவ்வேளூரும் வாகனமாகவும் உயரிய கொடியாகவு மிருக்க நுங்களைக் கருடன் முதலிய ஊர்திகள் வணங்கவில்லையே என்று கூறிச்) சிற்றத்தினை மூளவாக்க மயிலுஞ் சேவலும், ஒளிவிட்டு விளங்குகின்ற வைகுண்ட முதலிய பதவிகளை யெல்லாங் கெடுத்து நீண்ட பாம்பின் பகையாகிய கருடன் முதலிய வாகனங்களை யெல்லாங் கோறல் செய்தமைந்தன. (இறைவனை வணங்கி) மீடலுறுகின்ற அறுமுகப் பெருமான் திருக்கண் சாத்தி இச் செயலினைச் செய்தது (இப்பூதர்களாகிய) இவர்களே யாவரெனக் கேள்வியுற்று.

(வி - ம்.) வாள் - ஒளி. "வாளொளியாகும்" தொல்காப்பியம். அரவப்பகை - கருடன். அமைந்த : அன்கெட்ட அஃறிணைப் பன்மைமுற்று. (கூ)

**நறுகணவு ணக்குலத்துச் சாருதிரென் றவர்க்கருளி**
**இறுமுலகோ டூர்திகளை யினிதெழுப்பிச் சுரர்க்களித்தான்**
**மறுவறுகா சிபமுனிக்கு மாயைபான் முதலிருவர்**
**எறுபுடலோன் றினிற்பிறந்தா ரேனையர்வெவ் வேறுதித்தார்.**

(இ - ள்.) அஞ்சாமையோடுங் கூடிய அவுணக் குலத்தின்கண்ணே சென்று பிறக்கக் கடவிரென்றருளிச் செய்து அழிந்த வைகுண்ட முதலிய உலகங்களுடனே கருடன் முதலிய ஊர்திகளையும் இனிதாக எழுப்புதலைச் செய்து தேவர்களுக்குக் கொடுத்தனன். (காமம் வெகுளி மயக்கமாகிய) குற்றமற்ற காசிபரென்னு முனிவர்க்கு மாயை யென்பவ

ளிடத்திற் சூரன் பதுமனென்னும் மூன்னைய ரிருவரும் வலிபொருந்திய ஒருடலிற் றோற்ற முற்றனர். ஏனைய சிங்கன், தாரகன் என்னுமிரு வரும் வெவ்வேறாகத் தோன்றினர்.

(வி - ம்.) தறுகண் - அஞ்சாமை. எறும் - வலி, இதனை 'எறும் வலியாகும்' தொல்காப்பியச் சூத்திரத்தானுணர்க. (௧௦)

தாதையரு டவம்விலக்கித் தாயருளு மாசிவறி
மேதகுதங் குலத்தாசான் விளம்பியசூழ்ச் சியினிறைவன்
பாதநினைந் தனர்வேள்வி பன்னெடுநா டவம்புரிந்து
மாதொருபா லுடையபிரான் வரவேண்டும் வரம்பெற்று.

(இ - ள்.) தந்தையாகிய காசிப முனிவர் அருளிச்செய்த தவத்தினை யொழித்துத் தாயாகிய மாயை யென்பாள் அருளிச்செய்த குற்றங்களை விரும்பி மேன்மை பொருந்திய தங்கள் குலகுருவாகிய சுக்கிரன் அருளிச்செய்த சூழ்ச்சியினால் இறைவனாகிய சிவபெருமான் திருவடிகளை நினைந்து வேள்வியினையும் தவத்தினையும் நீண்ட பலகாலஞ் செய்தலான் உமையம்மையாரை ஒருபங்கிலுடைய சிவபெருமான் (தவத்திற்கிரங்கி) யெழுந்தருள (தாங்கள்) விரும்பிய வரங்கள் பெற்று.

(வி - ம்.) நினைந்தனர் : முற்றெச்சம். வேள்வியுந் தவமும் பன்னெடுநாட் புரிந்து, எனக் கூட்டுக. புரிந்து - செய்தென்னெச்சங் காரணப் பொருட்டு. (௧௧)

மாதிரத்தெண் மரைவணக்கி வளஞ்சூறை யாட்டயர்ந்து
காதியுவ ணத்திறையைக் கடற்பாயல் வளந்தெவ்விப்
போதனம ருலகமும்வை குந்தமும்புல் லெனக்கவர்ந்து
பாதலமும் பணித்தெல்லாப் பாக்கியமுங் கைக்கொண்டார்.

(இ - ள்.) எண்டிசையினுமுள்ள இந்திரன் முதலிய காவலர்களை வணங்கச்செய்து அத்திசையின்கண்ணுள்ள வளங்களைக் கொள்ளை கொண்டு கருடனை வாகனமாகவுடைய திருமாலை மோதி அவன் கடற் படுக்கையின்கண்ணுள்ள வளங்களைக் கைக்கொண்டு பிரமன் தங்குஞ் சத்திய லோகமும், வைகுந்தமும் பொலிவழிந்து தோன்ற (ஆண்டுள்ள பொருள்களைக்) கைக்கொண்டு பாதலத்தினையுந் தன்னடிப்படுத்து எல்லாச் செல்வங்களையுங் கைப்பற்றின ரென்க.

(வி - ம்.) தெவ்வி - கைக்கொண்டு தோன்ற. புல்லென - பொலிவழிந்து. மாதிரம் - திசை. சூறையாட்டயரல் - கொள்ளையிடல். இதனை ''அணிநிலா வீசுமாலை யரங்கு புல்லெனப் போகி, துணிநிலா வீசுமாலைப் பிறைநுதற் றோழிசேர்ந்து'' எனவரும் சிந்தாமணி இலக்கணையாரிலம்பகம் ௧௨௨ ஆம் செய்யுளடியானும் உரையானு முணர்க. (௧௨)

தானவர்கள் களிதூங்கத் தடங்கடலி னகரியமைத்
தானிருந்து முடிசூடி யணங்கனையார் தமைமணந்து

வேனவிறோண் மைந்தர்பலர் வீறுயிர்த் தேவல்புரி
வானவரை வலாரிமக னொடுஞ்சிறைவைத் தமர்நாளில்.

(இ - ள்.) அசுரர்கள் மகிழ்ச்சியிற்றங்கப் பெருமை பொருந்திய கடற்கண்ணே நகரினை அமையச்செய்து ஆண்டிருந்து முடியினை யணிந்த செல்வப் பெண்களை யொத்த பெண்களை மணஞ்செய்து, வேற் படை பொருந்திய கைகளையுடைய பல மைந்தர்களை வேறொருவர்க் கில்லாத சிறப்புறப் பெற்றுக் குற்றேவல் செய்கின்ற தேவர்களை இந்திரன் மகனாகிய சயந்தனுடன் சிறையின்கண் வைத்து இருக்கின்ற காலத்து.

(வி - ம்.) தாங்க - தங்க. ஆன் - அவ்விடம். மன்னும், சின்னும் என்ற சூத்திரத்தானுணர்க. வேல்நவில் தோள் - வேற்படை பொருந் திய கை. (௧௫)

வேறு

ஏவ லிற்றணந் தோடி மேருவை யெய்தி மாதவ மாற்றுறும்
காவல் விண்முழு துற்ற வன்கதிர் வென்ற வன்கடி பொன்னகர்
மேவ ழற்குண வாக்கி மைந்தனை வெஞ்சி றைக்கிடல் கேட்டலும்
ஆவ வென்றுபு லம்பி யேத்தவ டுத்த னன்கயி லைக்கிரி.

(இ - ள்.) ஏவற்றொழிலினின்றும் நீங்கிச் சென்று மேருமலையினை அடைந்து பெரிய தவத்தினையியற்றும் தேவலோகம் எல்லாவற்றையுங் காத்தற்றொழில் புரியும் இந்திரன், சூரியனை வென்றவனாகிய பானு கோபன் காவலோடுகூடிய அமராவதியென்னும் நகரைப் பொருந்திய தீயிற்குணவாகச் செய்து சயந்தனை வெவ்விய சிறைச்சாலையிலிட்ட தைக் கேட்டவளவில், ஐயோ வென்று புலம்புதலைச் செய்து துதிக்கக் கைலையங்கிரியை யண்மினான் என்க.

(வி - ம்.) இந்திரன் தனது நகரத்தை அழற்குணவாக்கி மைந் தனைச் சிறைக்கிடல் கேட்டலும் என்க. விண்முழுதுங் காவலுற்றவ னெனக் கூட்டுக. கதிர் வென்றவன் - பானுகோபன்; சூரன்மகன். ஆவ - ஐயோ, இரக்கக் குறிப்பு. (௧௬)

தக்கன் வேள்வியி லன்று டங்குத விர்ந்தி கந்தபெ ரும்பிழை
புக்கு டற்றிய வீர னனி போக்கி யெச்சமு நீக்கிய
மிக்க சூரனை யுய்த்த நாயகன் மெல்லி யலிம யம்புகத்
தொக்க நால்வர்த மக்கு ணர்த்துபு தூய யோகினி ருத்தலின்.

(இ - ள்.) அக்காலத்துத் தக்கன் செய்த யாகத்தின்கண் அவ னுடன் தங்கி இகழ்ந்த பெரிய (உய்தியில்) குற்றத்தை (அவ் யாகசாலை யின்கட் புகுந்து (ஆண்டுள்ளாரை) வருத்திய வீரபத்திரக் கடவுளால் (அக்குற்றத்திற்குத் தக்கவாறு ஒறுத்து அக்குற்றத்தை) நீக்கி, எஞ்சிய குற்றங்களையும் நீக்க, வீரம் செல்வம் முதலியவற்றால் மிகுந்த சூரனைச் செலுத்திய இறைவன், மென்மைத் தன்மையை இலக்கணமாகவுடைய உமையம்மையார் இமயமலையின்கண்ணே செல்ல (ஐயமுற்றுத் தன் பக்கலிலே வந்து) கூடிய சனகர் முதலிய நால்வர்க்கும் (ஐய முதலிய

வற்றை நீக்கி) உண்மைப்பொருளை உணர்த்தித் தூய்மையைத் தருதற் கேதுவாய யோகத்தின்கண்ணே தங்கலினால்.

(வி - ம்) உடங்கு - ஒருசேர. தவிர்ந்து - தங்கி. இறந்த-இகழ்ந்த. நீக்கிய - நீங்க. (௧௫)

செவ்வி பெற்றிலன் மீண்டு மன்னசி லம்பை யண்மினை னேற்றுமி
அவ்வி யந்தபு மன்ப ருக்கருள் செய்ய வாங்கனெ ழுந்தருள்
ஒவ்வ ரும்பர னும்ப ரோடு முனக்கு நன்மை பெருக்கிநும்
மெவ்வ மோட்டுமொ ரேந்த லைத்தரு கென்று போக மகிழ்ந்தனன்.

(இ - ள்.) இறைவனைக் காண்டற்குக் காலம் பெற்றிலனாய் மீளவும் அம்மேருமலை அண்மித் தவஞ்செய்யும் ஞான்று பிறராக்கங் கண்டுழியெழும் பொறாமையாகிய குணம் நீங்கிய அடியார்க்கருளும் வண்ணம் எழுந்தருளும் ஒப்பிலனாகிய சிவபெருமான் தேவர்களோடு கூட உனக்கு நன்மையை மிகச்செய்து நுங்களுடைய துன்பினை யோட்டும் ஒப்பற்ற தலைவனைத் தருவேன் என்று திருவாய்மலர்ந்தருளி யெழுந்தருள இந்திரன் மகிழ்ச்சியுற்றனன்.

(வி - ம்.) செவ்வி - காலம். அன்ன சிலம்பை - அத்தன்மைத்தாகிய மேருமலையை. அவ்வியம் - பொறாமை. எவ்வம் - துன்பம். தருகு - தருவேன் : தன்மை யொருமை வினைமுற்று. என்று சொல்லிச் செல்ல இந்திரன் மகிழ்ச்சியுற்றனன். (௧௬)

எந்தை யோகினி ருந்த னனிம யத்தி லன்னை யிருந்தனள்
மைந்த னைத்தர லென்றெ னக்கம லத்தன் மாட்டிந றைந்தனன்
தந்தை தாய்பிரி யத்த ணந்தபு ணர்ச்சி யாற்றளர் வேதனும்
அந்தின் மாயனை யண்மி யாய்ந்தலர் வாளி யான்றனை யேவினான்.

(இ - ள்.) எந் தந்தையாகிய சிவபெருமான் யோகத்தின்கண்ணே தங்கினான்; இமயமலையின்கண்ணே அன்னையாகிய உமையம்மை இருந்தனள்; (என்றுன்பினை யோட்ட) புத்திரனைத் தருதலெக்கால மென்று தாமரைப் பூவின்கணெழுந்தருளியிருக்கும் பிரமனிடத்தில் இதனைச் சொன்னான். அம்மையப்பர் (இணைவிழைச்சின்றிப்) பிரிதலால் நீங்கிய விழைச்சினால் வருந்துகின்ற வேதத்தையுணர்ந்த பிரமனும் திருமாலினை யண்மி (இணைவிழைச்சு நிகழ்தற்குரிய காரணங்களை) ஆராய்ந்து பூவம்பினையுடைய மன்மதனை (இறைவன்மாட்டுச்) செலுத்தினான்.

(வி - ம்.) அம்மையப்பர் இணைவிழைச்சின்றி யிருப்பின் உலகின்கண் இணைவிழைச்சு நிகழாதென்பார். "தணந்த புணர்ச்சியாற்றளர் வேதனும்" என்றார். இதனைத் "தென்பா லுகந்தாடுந் தில்லைச்சிற் றம்பலவன், பெண்பா லுகந்தான் பெரும்பித்தன் காணேடி, பெண்பா லுகந்திலனேல் பேதாய் இருநிலத்தோர், விண்பாலி யோகெய்தி வீடுவர் காண்சாழலோ" என்னுந் திருவாசகத்தா லுணர்க. தணந்த புணர்ச்சி - நீங்கிய புணர்ச்சி. அஃதாவது புணர்ச்சியில்லாமை. (௧௭)

வாளி தூண்டிநு தற்க ணுக்கிரை யார னுதலுங் கால்பொரும்
பூளை வீபோல வோடி நாள்பல போன பின்புல வோர்குழாம்
மீள வண்மியி றைஞ்ச நாதன்வி றற்க ணங்கண நாதர்கள்
மூளு மன்பினர் யாரு முற்றுற முன்னி னனிம யந்நலை.

(இ - ள்.) மன்மதன் (இறைவன் மாட்டு) அம்பினைச் செலுத்தி நெற்றிக்கண்ணிற் கிரையாகத் தேவர் குழாங்கள் காற்றுன் மோதுண்ட பூளைப்பூவினைப் போல (அஞ்சி) ஓடிப் பலநாட் சென்றபின்னர் மீளவும் அணுகி வணங்க இறைவன் வலியோடு கணங்களும் கணத்தலைவர்களும் மிகும் அன்பினையுடைய யாவருஞ் சூழ இமயமலையின்கட் சென்றான்.

(வி - ம்.) முற்றுற - சூழ. மூளும் - மிகுகின்ற. மாரன் தூண்டி கண்ணுக்கு இரையாதலும் என்க. புலவோர் - தேவர். நாதன் - சிவன். (௧௮)

மலிச னங்கள்பொ ருது தாழ்ந்தவ டாது பார்சம மாக்குவான்
ஒலித மிழ்க்குர வற்றெ னுதுயர் மலய வெற்பினு றுத்தபின்
கலிகெ ழும்வரை வாற்றி யாவருங் கைய கன்றுதம் வைப்புறக்
குலவு மாதினை வெள்ளி மால்வரை கொண்ட ணைந்துபன் னாள்செல.

(இ - ள்.) மிக்க மாந்தர்களைப் பொறுக்கமாட்டாமல் தாழ்வுற்ற வடாது பாரினைச் சமமாக்கும் பொருட்டு, நாளுக்குநாள் தழைக்கின்ற தமிழாசிரியனாகிய அகத்தியனைத் தெற்கின்கண்ணுள்ள பொதியிலின் கண்ணே சேர்த்தபின்னர் முழக்கம் பொருந்திய திருமணத்தை முடித்து யாவரும் நீங்கித் தங்கள்தங்கள் இடத்தினைக் குறுக, விளங்குகின்ற உமையம்மையாரை வெள்ளிமலையின்கட் கொண்டுசென்று பலநாட் செல்லாநிற்க.

(வி - ம்.) ஒலி - தழைத்த, கலி - முழக்கம். கை - உபசர்க்கம். வரைவு - மணம். (௧௯)

வலாரி யாதிவிண் ணோரி ரப்பம ரீஇய தொன்முக மாறொடும்
நிலாவி நெற்றிவி ழிக்க ணெவ்வொரு நீடி ரும்பொறி காற்றினன்
கலாவி யந்தர மெங்கு மப்பொறி கண்ணி மைப்பின்ஞெ மிர்ந்தன
சுலாவு நெஞ்சின ராகி யஞ்சினர் தொக்க மான்முத லோரெலாம்.

(இ - ள்.) இந்திரன் முதலிய தேவர்கள் குறையிரப்ப அதோமுகத்தோடுகூடிய ஆறுமுகங்களுடன் பொருந்தி (அவ்வாறுமுகத்தின் கண்ணுள்ள) நெற்றி விழிகளினின்றும் ஒவ்வொரு மிக்கபெரிய அழற்பொறி சிந்தும்படி செய்தனன். அவ்வழற்பொறிகள் ஆகாயமெங்குஞ் சுலவுற்று இடைப்பொழுதின்கட் பரந்தன. கூடிய மான் முதலாகிய தேவர்கள் யாவரும் சுழலு நெஞ்சினராகி யச்ச முற்றனர்.

(வி - ம்.) தொன் முகம் - அதோமுகம். அஃதாவது கீழ்நோக்கிய முகம். இதனை "ஐந்து முகத்தோ டதோமுகமுந் தந்து" என்னுங்

*கந்தர்கலி வெண்பாவா னுணர்க. இதனாற் சிவபெருமானுக்கும் அறுமுகமுளவாதல் காண்க. ஞெமிர்ந்தன - பரந்தன. இதனை, 'பாய்தலும் ஞெமிர்தலும் பரத்தற் பொருள' என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தா னுணர்க. சுலாவல் - சுழலல்.* (உ0)

முன்ன ரண்மநி னைந்த டுத்தபின் முக்க ணுபாக னல்கலும்
அன்ன வொண்சுடர் கால்சு மந்தழ லுய்ப்ப வத்தழல் கங்கைநீர்
தன்னி லுய்ப்பவி ரைந்து கங்கைத குஞ்ச ரவண மூய்த்தலும்
என்னை யாள்கும ரன்ம கிழ்ந்தறு மாதர் பாலுண்டி ருந்தனன்.

(இ - ள்.) *மூன்று கண்களையுடைய சிவபெருமான் (அச்சுடர்கள்) தன் முன்னர்வரும் வண்ணம் நினைக்க வந்தபின்னர் அவ்வொள்ளிய தீப்பொறிகளைக் கொடுத்த வளவில் காற்றுத்தேவன் சுமந்து அக்கினியின்கட் கொடுப்ப அவ்வங்கியங் கடவுள் கங்கையின்கட் செலுத்தக் கங்கை நதியானது தகுதியமைந்த சரவணப் பொய்கையிற் சேர்க்க என்னை யடிமைகொண்ட முருகப்பெருமான் மகிழ்ச்சியுற்றுக் கார்த்திகைப் பெண்கள்மாட்டுப் பாலுண்டு எழுந்தருளியிருந்தனன்.*

(வி - ம்.) *நினைந்து - நினைக்க: எச்சத்திரிபு. கால் - காற்று. அறு மாதர் - கார்த்திகை மகளிர்.* (உக)

சிலம்ப ரொன்றனொ டொன்று தாக்குபு சேர்ம ணித்திரள் சிந்துற
அலம்பு மேகலை யன்னை யக்கன லஞ்சி யோடிய றிந்துபின்
நலம்ப டுங்கருத் தேவர் மாதர்நண் ணற்கவென்றுந வின்றுசென்
றிலம்ப கங்கழ லொன்ற வீழ்ந்திறை பாக மொன்றியி ருந்தனள்.

(இ - ள்.) *ஒலிக்கின்ற மேகலையையணிந்த உமையம்மையார் அவ்வங்கிக்குப் பயந்து காலணி யொன்றோடொன்று மோதுதலால் (அம் மேகலையின்கட்) சேர்ந்த இரத்தினக் கற்கள் சிந்துவண்ணம் ஓடி நம்பாற் குமரன் றோன்றுவண்ணம் தேவர்கள் செய்த சூழ்ச்சியால் இங்ஙனமாயதெனத் தேவர்கள் மாட்டுச் சீற்றங்கொண்டு நன்மையுண்டாவதற் கேதுவாகிய கருப்பத்தைத் தெய்வமங்கையர் அடையற்க வென்று சாபமிட்டுச்சென்று தலைக்கோலமானது திருவடியின்கண்ணே பொருந்த வணங்கி இறைவன் பாகத்தின்கண்ணே பொருந்தி யிருந்தனளென்க.*

(வி - ம்.) *இலம்பகம் - தலைக்கோலம். இதனை "அரங்கணி நாடக மகளி ராய்நுதற், சுரும்புசூ ழிலம்பகத் தோற்றம் ஒத்ததே" என்னும் சிந்தாமணி - கேமசரி இலம்பகம் 31ஆவது செய்யுளடியானு முரையானு முணர்க.* (உஉ)

ஆங்க சைந்தொளி ருங்க லொன்பது மன்னை தன்னுருத் தோற்றின
ஈங்கு வம்மினெ னும்பி ரானெதி ரேந்து கொங்கைய ராய்விழைந்
தோங்கி ருங்கரு வெய்த நோக்கியு றுங்க ருப்பெற லென்றுமை
தாங்கு வெப்பினு ரைப்ப வத்தகு தைய லார்வெயர்த் தாரரோ.

(இ - ள்.) அசைவுற்று ஒளிர்கின்ற கற்க ளொன்பதின்மட்டும் உமையம்மையார் திருவுருவந் தோன்றின. இங்கு வம்மின் என்றும் இறைவன் எதிரே கொங்கையினைத் தாங்கிய பெண்களாகி விருப்புற்று (நோக்கி) உயர்ந்த பெருஞ் சூலினைக்கொள்ள உமையம்மையார் (அதுபற்றமையை) நோக்கிப் பொருந்திய கருவுயிராதிருக்க வென்று தாங்கொண்ட சீற்றத்தா னுரைப்ப அப்பெண்கள் ஒன்பதின்மரும் வெயர்த்தா ரென்க.

(வி - ம்.) வம்மின் என்னும் பிரானெதிர் கொங்கையராய் ஒன்பதின்மரும் விழைந்து பார்த்தலாற் கருவுற்று ரென்க. உமையம்மையார் நோக்கி கருப்பெறலென்று வெப்பினுரைக்க வென்க. பெறல் - அல் லீற்று வியங்கோள். வெப்பு - சீற்றம். ஆங்கு : அசை. (உரு)

இலக்கர் வேரினு தித்த னர்சில வைக லேகலு மன்னவர்
நலக்க வந்தனை செய்தி ரப்பந யந்த பார்ப்பதி யேவலால்
குலக்க ணர்புக ழொன்ப தின்மருங் குக்கி நீங்கின ரீசனர்
இலக்க ரோடிளை யோனை நீங்கலி ரென்ற வர்க்கரு ளேய்த்தபின்.

(இ - ள்.) அவ் வொன்பதின்மரின் வேர்நீரின் இலக்கரென்பார் தோன்றினர். சின்னாட்கள் சென்ற அளவின் அவ் வொன்பதின்மரும் நன்மை பொருந்த உமையம்மையாருக்கு வழிபாடுசெய்து இரவாநிற்ப (அவ் வழிபாட்டில்) விழைவு கொண்ட அம்மலையரசன் மகளின் கட்டளையான் சிறந்த சிவகணங்களாற் புகழப்பெற்ற வீரவாகுவை முதலாகக்கொண்ட ஒன்பதின்மராகிய வீரரும் வயிற்றினின்றும் நீங்கினர்கள். அவ்வொன்பதின்மருக்கும் இலக்கரோடு இளையோனாகிய முருகனை நீவிர் நீங்காதிருக்கக் கடவீரென்று அருள் செய்தபின்னர்.

(வி - ம்.) குலக்கணம் - சிறந்த சிவகணம். குக்கி - வயிறு. குக்ஷி என்ற வடமொழித் திரிவு. ஏவலான் ஒன்பதின்மருங் குக்கி நீங்கின ரென்க. (உசு)

பல்லி யங்களி யம்ப யாரும்ப டர்ந்து சூழ்தர மாதொடும்
அல்லி மென்மலர் செற்று பொய்கைய டுத்து மைந்தரை யிவ்வயின்
வல்லை நீகொணர் கென்ற னர்மலை யரன்ம டந்தைம கிழ்ந்துறீஇப்
புல்லி யோருருச் செய்து கொங்கைபொ ழிந்த தீம்பய மூட்டினள்.

(இ - ள்.) பல வாத்தியங்களும் முழங்கப் பிரமன் முதலிய யாவரும் பரந்துசூழ உமையம்மையாரோடு அகவிதழோடு கூடிய மெல்லியமலர்கள் செறிந்த சரவணப்பொய்கையை யண்மிக் குழவிகளை இவ்வயின் நீ விரைவிற் கொண்டுவருக என்று திருவாய்மலர்ந்தருளினார். மலையரையன் புதல்வி மகிழ்வுற்றுப் பொருந்தி (அக்குழவிகளை)த் தழுவி ஓருருவாகச் செய்து கொங்கையினின்றும் சொரிந்த இனிய பாலினை யூட்டினா ளென்க.

(வி - ம்.) செற்று - செறிந்த. ஓருருச் செய்தல் - (ஆறு வடிவாக விருந்த குழவிகளை) ஓருருவாகச் செய்தல். நீயென்றது அம்மையாரை. பயம் - பால். (உஎ)

ஆறு மாமுக மாறி ரட்டிய வங்கை யோடொளிர் கந்தனை
ஏறி வந்தரு ளேற்றின் வாங்கியி ருத்தி மாதுமப் பாலுற
நீறு சேர்திரு மேனி யானொடு வெள்ளி யங்கிரி யெய்துபு
வீறு சேரணை யிற்றி ருந்தனன் விண்ணு ளார்துயர் மன்னவே.

(இ - ள்.) ஆறு முகத்தோடும் பன்னிரண்டு அழகிய கைகளோடும் விளங்குகின்ற கந்தக் கடவுளைத் தான் ஏறிவந்த அருளோடுகூடிய இடபத்தின் வாங்கி இருக்கச்செய்து உமையம்மையாரும் இடப்பக்கத்தே பொருந்தியிருப்ப நீற்றினை யணிந்த திருமேனியினையுடைய சிவபெருமான் நீண்ட வெள்ளிமலையினைப் பொருந்தி வேறொன்றற் கில்லாத சிறப்பினையுடைய சிங்கவணையின்கண்ணே தேவலோகத்தின்கண்ணுள்ள தேவர்கள் துன்பினைக் கழுவும்பொருட்டு எழுந்தருளியிருந்தனனென்க.

(வி - ம்.) ஏறிவந்தருளேறு : பெயரெச்சத் தகரம் தொகுத்தல் விகாரம். அப்பால் - ஈண்டு இடப்பக்கம். மன்னுதல் - கழுவுதல். (௨௬)

ஆய காலையில் விம்மி தம்பல வாக வாடலு டங்கினன்
பாய மேகலை யன்னை பார்ப்பதி பார்த்து நாதர்ப தந்தொழு
தேயெ னும்முன மெண்ணி லற்புத மீண்ட வாடல்வி ளைத்திடும்
சேயி வன்றிற மோது கென்னம கிழ்ந்து செப்புதன் மேயினன்.

(இ - ள்.) இங்ஙனமாய காலத்துப் பல விம்மிதமுளவாகத் திருவிளையாடலைத் தொடங்கினன். பரவிய மேகலையை யணிந்த தாயாராகிய மலைமகளார் இறைவன் பாதங்களை வணங்கி ஏயெனுமொலி யெழுவதற்கு முன்னம் இங்ஙனம் அளவிலவாகிய திருவிளையாடல்களைச் செய்யும் குழவியாகிய இவன் தன்மையினைத் திருவாய்மலர்ந்தருளுக வென்று வேண்டப் பெருமான் மகிழ்ச்சியுற்றுச் சொல்லுதலைச் செய்தார் என்க.

(வி - ம்.) விம்மிதம் - மருட்கை. பாய - பரவிய. ஏயெனுமுன் : விரைவுக் குறிப்பு. ஓதுக என்ன : தொகுத்தல் விகாரம். (௨௭)

வேறு

திகழுநம் விழியிற் றோன்றுஞ் சேயெனுங் குமரன் கங்கை
அகமுற வடுத்த லாற்காங் கேயனாகன் சரவ ணத்துத்
தகவமர்ந் திருந்த வாற்றாற் சரவண பவன்வா னூரல்
நகிலமிழ் தளிப்ப வுண்ட நலத்தினாற் கார்த்தி கேயன்.

(இ - ள்.) விளங்கா நின்ற நங் கண்ணினின்றுந் தோன்றிய சேயென்னுங் குமரன் கங்கையினகத்துப் பொருந்த வடுத்தலினாலே காங்கேயன் என்னுந் திருப்பெயரினை யடைவான். சரவணப்பொய்கையில் தகுதியாகத் தங்கியிருத்தலாற் சரவணபவனென்னுந் திருப்பெயரினைப் பெறுவன். ஆகாயத்தில் இயலுகின்ற கார்த்திகைப்பெண்கள் பாலினையூட்ட உண்ட நன்மையாற் கார்த்திகேயனென்னுந் திருப்பெயரினைப் பெறுவான்.

(வி - ம்.) ஆரல் - கார்த்திகை மீன்கள். நகில் - முலை. (௨௮)

ஆறுமோ ருருவ தாக வாக்கலிற் கந்த னானான்
ஆறுமா முகஞ்சீர்த் துள்ள நமக்கவை யவன்மு கங்கள்
ஆறுமா யிருந்த வேத மறையுந்தா ரகவெ ழுத்தோர்
ஆறுமாங் கவனா மந்தா றெழுத்துமா யிருந்த வன்றே.

(இ-ள்.) ஆறுருவங்களையு மோருருவாக்கலாற் கந்தனென்னுஞ் சிறப்புப்பெயரினைப் பெற்றான். நமக்குப் பெருமை பொருந்திய ஆறு முகங்களுள்ளன. அவைகளே அவன் ஆறுமுகங்களாகவுள்ளன. வேதஞ் சொல்கின்ற தாரக வெழுத் தாறும் அக்குமரன் றிருநாமத்து ஆறெழுத்துக்களுமா யிருந்தன வென்க.

(வி-ம்.) நமக்கு ஆறுமா முகங்களுள்ளன அவை அவன் முகங்க ளென முடிக்க. இருந்த : அன்சாரியை பெறாத பலவறிசொல். கந்தம்- சேர்க்கை. (௨௯)

ஆங்கவ னமது சத்தி யாதலி னம்மைப் போல
ஓங்குவன் சிறுவ னாவ னுலப்பில்பல் லுருவங் கொள்வன்
நீங்குவன் பணிந்தோர் வேட்ட நிரப்புவ னடியா ரின்பம்
தாங்கவீ டளிப்ப னன்னான் றன்மையா ரறிதற் பாலார்.

(இ-ள்.) அம்முருகன் நமது சத்தியாதலினானே நம்மைப்போல உயர்வான். சிறியவனுமாவன். கெடுதலில்லாத பல வடிவங்களுங் கொள்வான். (அங்ஙனம் வடிவங் கொள்ளுதலினின்றும்) நீங்குவான் வணங்கியோர் விருப்பத்தை நிரப்புவான். அடியார்கள் இன்பமடைய வீட்டுலகத்தினையுங் கொடுப்பான். அன்னவன் றன்மையை யாவர் அளவிட்டறியற் பாலார்.

(வி-ம்.) வேட்டம் - விருப்பம். நீங்கல் - உருவங் கொள்ளுதலி னின்றும் நீங்கல். (௩௦)

வேதமுன் மொழியி னுண்மை வினாய்ச்சிறை புகுத வேதற்
காதியெவ் வுலகு மாக்கிக் கருநிறத் தவுணர்ச் சாடும்
மாதுநீ காண்டி யென்ன மகிழ்ந்தவண் மைந்த னாடும்
தீதறு விளையாட் டின்கட் செலுத்திய மனத்த ளானாள்.

(இ-ள்.) வேதத்தின் முன்னருள்ள சொல்லாகிய பிரணவத்தின் உண்மைப் பொருளை வினாவிச் சிறையின்கட் செல்லப் பிரமனைவருத்தி எல்லா வுலகங்களையும் படைத்துக் கரியவுருவத்தோடுகூடிய அவுணரைக் கொல்வான், பெண்ணே! நீ காண்பாயாக வென்று திருவாய் மலர்ந்தருள மகிழ்வுற்று அவ்விடத்துக் குமரக் கடவுள் ஆடுகின்ற குற்றமற்ற திருவிளையாட்டின்கண் மனத்தைச் செலுத்தினாள்.

(வி-ம்.) வேதமுன் மொழி - பிரணவம். சாடும் - கொல்வன். மாது : விளி. உண்மை - ஈண்டு உண்மைப் பொருண் மேனின்றது. (௩௧)

சிலையினைக் கடலைத் தேஎத்தைச் செறிகதி யுயிர்க டம்மைத்
தலைதடு மாறச் செய்த தன்மையை நோக்கி விண்ணோர்
உலைவுறு மனத்த ராகி யுயர்வட கிரியை யண்மிக்
கொலைபுரி வயிர வேலா னொடுங்குழீஇ யாய்ந்து நின்றார்.

(இ - ள்.) மலையினையுங் கடலினையும் நிலத்தினையும் பொருந்த நாற்கதியுள் பிறக்கின்ற உயிர்களையும் முறைபிறழும்படி புடைத்த தன்மையினைத் தேவர்கள் கண்டு நடுங்குகின்ற மனத்தையுடையராய்க் கொலைத் தொழிலைச் செய்கின்ற வயிரப்படையையுடைய இந்திரனோடு உயர்ந்த வடக்கின்கண்ணுள்ள கயிலைமலையை அணுகிக் குழுமி ஆராய்ந்து நின்றனர்.

(வி - ம்.) சிலை – மலை. தேஎம் - இடம். கதி - நாற்கதி - அவை: விலங்குகதி, தேவகதி, மக்கள்கதி, நரகர்கதி என்பனவாம். விண்ணோர் நோக்கி அடைந்து கூடிநின்று ஆய்ந்தனர் என்க. (௯௨)

ஆவயிற் குழவி போற்சென் றடுக்கலைத் துளக்கி மீச்சூழ்
தாவில்பல் குவடு விண்டு தரையிடை யுகுத்திட் டார்த்து
மேவல னிவனே யென்ன வெய்யபோ ராடல் செய்த
தேவரைக் கொன்று வீழ்த்துச் செங்களந் தமிய னின்றான்.

(இ - ள்.) பகைவன் இவனேயாகு மென்று கொடிய வலிய போரைச் செய்த தேவர்களை அவ்விடத்துக் குழவிபோலச் சென்று மலைகளையசைத்து அம்மலைகளின்மீது பொருந்திய கெடுதலில்லாத பல கொடுமுடிகளைப் பிளந்து பூமியின்கண்ணே சிந்தி விரமுழக்கஞ் செய்து கொன்று கீழேதள்ளிப் போர்க்களத்தின்கண் தனியாக நின்றனன்.

(வி - ம்.) விண்டு - பிளந்து. இது செய்வதன் றொழிற்கும் செய்விப்பதன் றொழிற்கும் பொது. இதனை "கொடுங் கால் குலவரை விண்டு" என்னுந் திருக்கோவை அடியின் உரையான் உணர்க. செங்களம் - போர்க்களம். இதனைச் "செங்களம் படக்கொன்று" என்னுங் குறுந்தொகை யடியானுணர்க. (௯௩)

பொன்பெய ரமரன் றாழ்ந்து போற்றலு மெழுப்பி யன்னோர்
இன்புற வுலக மெல்லா மிலங்குபே ருருவந் தோற்றித்
தென்பொலி தேவ சேனா பதியெனத் திகழ்பேர் தாங்கி
மின்பொலி கந்த வெற்பின் விண்ணவர் பூசை கொண்டு.

(இ - ள்.) இங்ஙனம் முருகப்பெருமான் தனியாகநின்ற காலத்துத் தேவ குரவனாகிய வியாழப்புத்தேள் வணங்கித் துதிக்க (முருகப்பெருமான் இறந்துபட்ட தேவர்களை) உயிர்த்தெழச் செய்து அத்தேவர்கள் இன்பினையடைய எல்லா வுலகின்கண்ணும் இலங்காநின்ற தனது பெரிய வடிவத்தினைத் தோற்றுவித்து அழகு விளங்குகின்ற அமரர் படைத்தலைவனெனக் கண்டோர்கூற விளங்காநின்ற சிறப்புப் பெயரினைப் பூண்டு ஒளிவிளங்குகின்ற கந்தமலையின்கண் தேவர்கள் செய்த வழிபாட்டினை ஏற்றுக்கொண்டு.

(வி - ம்.) பொன்பெயரமரன் - வியாழப் புத்தேள். பேருருவம் - பெரியவடிவம். இதனை வடநூலார் விச்சுவரூப மென்பர். தென் - அழகு. (௩௪)

நாரதன் வேள்வி வந்த நாமவான் றகரை யூர்ந்து
வீரரோ டமரு நாளில் வேதனைச் சிறைவைத் தெண்டோள்
ஆரியன் முதலி னோர்கட் காரிய னாகி நோற்ற
வாரணி முலையி னார்க்கு மணாளனும் வரமு முய்த்தான்.

(இ - ள்.) நாரத முனிவன் இயற்றிய வேள்வியின்கட் டோன்றிய உலகினுக்கு அச்சத்தைத் தருகின்ற பெரிய ஆட்டுக்கிடாயினை ஊர்தியாகக்கொண்டு செலுத்தி இலக்கத் தொன்பதின்மராகிய வீரர்களோடு வைகியநாளின்கண் (தான் வினவிய வினாக்களுக்கு விடையிறுக்காத) பிரமனைச் சிறைப்படுத்தி எண்டோளினையுடைய பரமாசாரியனாகிய சிவபெருமான் முதலிய தலைவர்கட்கும் பரமாசாரியனாகித் தன்னை மணாளனாம்படி தவத்தினைச் செய்த கச்சினையணிந்த தனங்களையுடைய அமுதவல்லி சுந்தரி யென்கின்ற பெண்களுக்கு மணமகனாகும் வரத்தையுங் கொடுத்தான்.

(வி - ம்.) தகர் - ஆட்டுக்கிடாய். அமுதவல்லி - சுந்தரி. இவர் திருமாலின் புதல்விகள் இவர் பின்னர் தெய்வயானை யென்னும் பெயரும் வள்ளி யென்னும் பெயரும்பெற்று முருகக்கடவுளை மணந்தனர். (௩௫)

இன்னன நிகழ்ந்த பின்றை யெம்பிரா னுமைக்கு நாப்பண்
மன்னிவீற் றிருக்கு மேல்வை மான்முத லிமையோர் வேண்ட
முன்னவன் கருணை கூர்ந்து மொய்யெறுழ்ப் பூத வெள்ளம்
தன்னையு மளித்துப் போக்கத் தாழ்ந்தனன் விடைகொண் டானல்.

(இ - ள்.) இத்தன்மையனவாகிய செயல்கள் நிகழ்ந்த பின்றை எம்மிறைவனாகிய சிவனுக்கும் உமையம்மையாருக்கும் நடுவட்பொருந்தி வேறொருவர்க்கும் இல்லாத சிறப்புடன் எழுந்தருளியிருக்கு ஞான்று திருமால் முதலாய தேவர்கள் வேண்டுகோட் கிணங்கி (முன்னைப்பழம் பொருட்கு முன்னவனாகிய இறைவன்) கருணைமிகுந்து மிக்க வலியினையுடைய வெள்ளமென்னும் அளவினையுடைய பூதக் கூட்டங்களையுங் கொடுத்துச் செலுத்த (முருகப்பெருமான்) வணங்கி விடைகொண்டனனென்க.

(வி - ம்.) ஏல்வையின் வேண்டவளித்துப்போக்க விடைகொண்டனன் முருகன் என வினைமுடிவு செய்க. (௩௬)

வேறு

இரண்டா யிரவெள் ளமெனும் படையுந்
திரண்டார் தருதே வருமொன் பதின்மர்
முரண்டா வுமிலக் கருமுற் றுமரீஇ
அரண்டா னெனும்வை யமடுத் தனனே.

(இ - ள்.) இரண்டாயிரம் வெள்ளம் என்னும் அளவினையுடைய படைகளும் தொக்குப் பொருந்திய தேவர்களும் வீரவாகுவை முத

மாகக்கொண்ட ஒன்பதின்மரும், வன்மைபொருந்திய வீரரிலக்கரும், ஏனையோரும் பொருந்த மதிற்கோட்டையா மென்று சொல்லும் வண்ணம் கனந்துப் பருத்த தேரின்கட் பொருந்தினரென்க.

(வி - ம்.) தான் : அசை. மரீஇ - என்னும் செய்தென் னெச்சத்தைச் செயவென் னெச்சமாகத் திரிக்க. ஒன்பதின்மரும் - உம்மை விகாரத்தாற் றொக்கது. (௩எ)

தங்கட் கிறைவன் றுயருந் தவிர
இங்குற் றனனென் றெழுமோ கையினுற்
பொங்கிக் கடலார்ப் பொடுபுக் கதெனா
அங்கட் டிரள்பல் லியமார்த் தனவே.

(இ - ள்.) கடல் தங்கட்கிறைவனாகிய வருணன் (மாட்டுள்ள துன்பமு நீங்க) பெருமான் இங்குப் பொருந்தினு னென்று கருதியதனு லுளவாகிய களிப்பால் பெருக்கெடுத்து ஒலியோடு புகுந்ததென்று சொல்லும்படி அழகிய கண்ணிடத்தையுடைய பல வாத்தியங்கள் ஒலித்தன வென்க.

(வி - ம்.) இனி அங்கண் திரள் பல்லியம் - அவ்விடத்துப் பல வாச்சியங்கள் எனவும் பொருள் கொள்க. இறைவன் - கடற்றலைவனுகிய வருணன். (௩அ)

வறங்கூர்ந் துமையாந் தவிர்வண் மைநழ்இத்
திறங்கூ ருதிரென் றுகையாற் செறிவிண்
நிறங்கூ ருலகின் வெரிநீ வுதல்போல்
அறங்கூர் கொடியெங் குமசைந் தனவே.

(இ - ள்.) விண்ணுலகத்தாரே! நீவிர் வற்கடம் அடைந்து மயங்கினீர் : இனி வளப்பமெய்தி முன்னை நிலையினும் மிக்கிராவீர். எம் பெருமான் அமரர் படைத்தலைவனுனான் ஆதலால் என்று கூறி நெருங்கிய ஒளி மிக்க விண்ணுலகத்தின் முதுகினைத் தடவுதல் போல உலகினுக்கு அறத்தினை அறிவிக்கும் தேரிற் கட்டிய கொடிகள் மேல் எங்கும் அசைந்தன வென்க.

(வி - ம்.) வறம் - வற்கடம். மையாத்தல் - மயங்கல். வெரிந் - முதுகு. (௩௯)

மண்டே ருருளா கியநா மனமாம்
திண்டே ருருள்வல் லமெனத் திகழூர்
கொண்டேர் மதியங் குடையா னதெனு
ஒண்டேர்க் குடையோங் கிநிழற் றியதே.

(இ - ள்.) பரிவேடங் கொண்டு அழகுவாய்ந்த மதியமானது முப்புரமெரித்த காலத்து நிலமாகிய தேரினுக்கு உருளாகிய நாம் முருகப்பெருமான் ஏறும் மனோரதம் என்னும் பெயரினையுடைய வலிய இத்தேரின் உருளாதற்கு வல்லமை யுடையோமல்லேம் எனக் கருதிக்

குடையானதென்று சொல்லும்படி ஒளிபொருந்திய தேரின்கண் வெண்கொற்றக் குடையுயர்ந்து நிழலைச் செய்தது என்க.

(வி - ம்.) மண்டேர் - நிலமாகிய தேர். உருள் - சக்கரம். ஊர் - பரிவேடம். (௫0)

அக்கங் கைசுமந் தருள்பெற் றதுகேட்
டுக்கண் விசும்போ ரிருகங் கையுமுன்
புக்குத் தொழுகின் றதுபோ லுமெனத்
தோக்குத் திவள்சா மரைதுள் ளினவே.

(இ - ள்.) நிலத்தின் கண்ணிருந்த அக்கங்கையாறு (முருகனைச்) சுமந்து அவன் அருளினை யடைந்ததைக் கேள்வியுற்று வானுலகிய உவ்விடத்திலுள்ள ஒப்பற்ற இரண்டு கங்கையாறும் (அவனுக்கு) முன்னர் புகுந்து தொழுவதை யொக்குமென்று சொல்லும்படி நெருங்கி விளங்குகின்ற சாமரங்கள் (அவன் இருபக்கத்திலும்) அசைந்தன வென்க.

(வி - ம்.) உங்கன் - எதுகை நோக்கி வலித்து நின்றது. இந்திரலோகம் பிரமலோகம், சிவலோகமாகிய மூன்றினுள்ளும் மூன்று கங்கையுண்டு. அவற்றுளொன்று நிலத்தின் கண்ணிழிந்தது, அக்கங்கையென்றது நிலத்தினிழிந்த கங்கையை யென்க. (௫க)

இளையோ னலனென் றுதெரிப் பனபோல்
முளையா முதல்வன் குரவன் பிரமற்
றளையார்த் தவன்சண் முகனென் றிசைகா
களமோ டுசின்னங் கள்கறங் கினவே.

(இ - ள்.) பிறவாயாக்கைப் பெரியோனுக்கு ஆசாரியன் எனவும், பிரமனைச் சிறையிற் கட்டுண்ணச் செய்தவன் எனவும், அறுமுகத்தை யுடையான் எனவும் சொல்லப்படுகின்ற இவன் தானவர்களே நீங்கள் எந்தும் வண்ணம் இளமைத்தன்மை யுடையோனல்லன் என்று தெரிவிப்பனபோன்று ஒலித்தலைச் செய்கின்ற காகளம் என்னும் வாத்தியத்தினொடு வெற்றிக்குறி குறிக்குஞ் சின்னமென்னும் வாச்சிய முழங்கின வென்க.

(வி - ம்.) முளையாமுதல்வன் - பிறவாயாக்கைப் பெரியோன், சிவன். குரவன் - ஆசிரியன். சின்னம் - ஒரு துளைக்கருவி. (௫உ)

விழையத் தகுவீ ரலிரென் றுவிணோர்
உழைநற் புகழைத் திரள்செய் துணவாய்
மூழைவைப் பமுயன் றவையோ லிடல்போற்
றழையப் பலசங் கமுரன் றனவே.

(இ - ள்.) (தேவர்களே) நீங்கள் புகழை விரும்புந்தகைமை யுடையீரல்லீர் என்றுகூறி அத்தேவர்கள் மாட்டுள்ள நல்லபுகழைத் திரட்டியுண்ணா வாயாகிய குகையில் வைக்க முயறலால் (அங்ஙன முயறலைக் கருதிய அப்புகழ்கள் ஓலமிடுதல்போலப் பேரொலியுண்டாகப் பல சங்கங்கள் முழங்கின வென்க,

(வி - ம்.) விஞ்ஞர் - வின்ஞேர். துவீடல்-முழுங்குதல். முயன்று என்னும் செய்தென்னெச்சங் காரணப் பொருட்டு. (சந.)

காலா தியின்வன் பகைகாய்ந் துசமர்
ஏலா மைதமக் கருளி சன்மகன்
கோலா தியிறு டல்குறித் தமைதேர்ந்
தாலா நடமா டினபா ரிடமே.

(இ - ள்.) காலன் முதலியவர்களால் (பூதர்களாகிய தங்களுக்குளவாகிய) வலிய பகையினைக் கெடுத்துப் போரினை (அக்காலன் முதலியோரோடு) பொருந்தாமையைச் செய்த இறைவன் திருமகன் அம்பு முதலியவைகளால் போர் குறித்தலை ஆய்ந்தறிந்து பூதங்கள் முழங்கி நடமாடின வென்க.

(வி - ம்.) கால் - இயமன். "கனமயில் கால்மறல் மடங்கல் காலன் பாசத்தானும்பேர்" என்னும் நிகண்டானறிக. கோல் - அம்பு. ஆலா - முழங்கி. இதனை 'ஆலலாட லொலிப்பேர்' என்னும் நிகண்டானறிக.

பூதர்கள் முன்னைச் செய்த தவப் பேற்றான் இறைவன் பக்கலானுகியவன் பொருள் சேர்புகழை யெப்பொழுதும் புரிதலின் அவர்களுக்குத் தென்றிசைக் கிறைவனுலுளதாந் துன்பின்றி யென்றும் ஒருபெற்றித்தாகிய இன்பினை இறைவனருளினமையின் அவ்வியமனோடு அவர்க்குப் போரின் றென்பார்,

"காலாதி யின்வன்பகை காய்ந்துசம
ரேலாமை தமக்கரு ளிசன்" என்றார் என்க. (சச)

இக்கா ளையையேந் தெறுழ்முன் பெறலால்
தக்கா னெனமான் மொழியத் தழையாக்
கைக்கால் வடிகோல் கொடுகா மருதேர்
அக்கா லிறையை யெனவூர்ந் தனனே.

(இ - ள்.) திருமால், இக்காளைப் பருவத்தையுடைய முருகனைச் சுமக்கும் வன்மையை முன்னரே பெற்றிருத்தலான் (இக்காற்றுத் தேவனே) தகுதியுள்ளானென்று கூற உள்ளந்தழைத்து அக்காலிறைவன் கையின்கண் தாற்றுக் கோலினைக் கொண்டு தேரினை அழகாகச் செலுத்தினு னென்க.

(வி - ம்.) முன்னர்க் காற்று இவனைத் தாங்கிச் சரவணத்தின்கண் ணுய்த்தனன். கைக்கால் - கையிடம். வடிகோல் - தாற்றுக்கோல். காலிறை - காற்றாகிய கடவுள். கா - அழகு. (சரு)

கடலும் புவியுங் கதிர்வா னகமும்
படர்வா யிடவே றுபௌவங் கிளரா
வடவா முகத்தின் வழிக்கொண் டதென
மிடைபூ தரினுப் பண்விரைந் ததுதேர்.

(இ - ள்.) கடலும் நிலனும் விளக்கமுடைய செங்கதிர்க் கடவுளும் தண்கதிர் மதியமும் பொன்னுலகமும் தம்பதம் நழுவி நிலைகுலைந்து செல்ல செல்லுங் கடலானது எழுச்சியுற்று வடவைத் தீயோடு நெறிக்கட் செல்றல்தனைக் கூறும்வண்ணம் பூதர்கணமுடுவன் தேர்விரைந்து சென்றதென்க.

(வி - ம்.) கதிர் : செங்கதிர் மண்டிலத்தினையும் தண்கதிர் மதியத்தினை உணர்த்தலான் ஆகுபெயர். படர்தல் - நடத்தல். இதனைப் "படர்கலை நினைப்பு நோவாம்" என்னும் நிகண்டா னறிக. வடவாமுகத்தில் : வேற்றுமை மயக்கம். பூதரைக் கடலாகவும் தேரை வடவைத் தீயாகவுங் கொள்க. (௬௬)

வேறு

தங்குலத் தரசற் றபுமார் செலும்
இங்கி வர்க்கிடை யூறுசெய் வாமென
அங்கண் மாநில னுமவு ணன்புரி
பொங்கு மாயையிற் போர்த்தது தூளியே.

(இ - ள்.) கண்ணகன் புவியாங் கடுங்கொலை யவுணனாகிய மேதை யென்பவன் தங்குலத்திறைவனாகிய சூரனைக் கோறல் செய்யும்பொருட்டுச் செல்லும் முருகன் முதலியோர்க்கு இஞ்ஞான்று இடையூற்றினைச் செய்வா மென்றுள்ளி மிக்க தனது மாயையான் வன்மையினாற் றூளி வடிவாய்ச் சென்று போர்த்ததுபோலத் தூளிவானினை மூடிய தென்க.

(வி - ம்.) அவுணன் - மேதை யென்பவன். இதனைக் "கண்ணகன் புவிமுழுது மாங்கடுங் கொலையவுணன்" என்னுங் காஞ்சிபுராணத்தான் அறிக. அரசன் - சண்டுச் சூரன். இன் - ஐந்தாவதன் ஒப்புப் பொருள். (௬௭)

ஞான நாயக னல்லருட் பார்வையின்
ஆன மாயைய கன்றது போன்மென
வானு ளார்நனி தூவுதண் மாமலர்த்
தேனை மாரியிற் றீர்ந்தது தூளியே.

(இ - ள்.) அறிவைத் திருவுருவாகக் கொண்ட முருகப்பெருமானது நல்லநோக்கத்தால் (சூரன் முதலாகியோரால்) உளதாகிய மாயையானது நீங்கியதுபோலும் என்று சொல்லும் வண்ணம் வானுலகின் கண்ணுள்ளார் (முருகன்மேல்) மிக்குத் தூவுகின்ற தேனோடுகூடிய மலர் மழையினாலே தூளிநீங்கிய தென்க.

(வி - ம்.) இனி - 'பரமாசிரியனது நல்லருட் பார்வையினாலே (மாணாக்க நக்குளவாகிய) அஞ்ஞானம் நீங்கியதுபோல' எனவுமாம். தேனைமாரி : ஐ, சாரியை. போன்ம் : மகரக் குறுக்கம். (௬௮)

முத்தி னூர்தியும் பிச்சமு மொய்குடைக்
கொத்தும் வார்கொடி யுங்குளிர் பாரெலாம்
பொத்தி நின்றன பூண்கொடுங் கோலமுல்
மெத்தி நின்ற மெலிவுதி றம்பவே.

(இ - ள்.) உலகின்கண் நிறைந்துநின்ற சூரன் கொடுங்கோலா கிய அறன் நிறைந்து நின்றதறைலுளவாகிய வாட்ட மாறும்வண்ணம் முத்துச் சிவிகையும் பீலிக்குடையும்செறிந்த எனைக்குடைக் கூட்டங் களும் நீண்ட துகிற்கொடிகளும் உலகெலாங் குளிரும்வண்ணம் சூழ நின்றன வென்க.

(வி - ம்.) பிச்சம் - பீலிக்குடை, 'பிச்சமாண் மயிரும் பீலிக்குடை யும் வெண்குடையுமாகும்' என்றும் நிகண்டானறிக. மெத்தல் - நிறை தல். திறம்பல் - மாறல். கொத்து-கூட்டம். (௫௯)

இன்ன வாறிய வைக்க ணியங்குபு
பன்ன ருங்கிர வுஞ்சப் பறம்பயல்
துன்ன லுஞ்சுரர் யாருந் துளங்கினர்
நன்னர் நாரத னுயகற் கோதினன்.

(இ - ள்.) மேற் கூறியாங்கு நெறிக்கட் செல்லுங்கால் கூறுதற் கரிய கொடும்பாட்டினையடைய கிரவுஞ்சமென்று மலையின் பக்கலிற் சேறலுந் தேவர்கள் யாவரும் நடுக்குற்றனர். (உலகினுக்கு நன்மை யைப் புரிகின்ற) நாரதமுனிவன் சேனைத்தலைவனாகிய முருகப்பெருமா னுக்குச் சொன்னான்.

(வி - ம்.) இயவை - வழி. பறம்பு - மலை. நன்னர் - நன்மை. நாயகன் - ஈண்டு படைத்தலைவனாகிய முருகன். (௬0)

பட்டி மைக்கிரி யீதுபன் மாதவர்
அட்ட தீங்கொரு பாலணி மாநகர்
இட்டு வல்லவு ணற்கிளை யோனுளன்
விட்ட மால்படை மின்னிய மார்பினன்.

(இ - ள்.) வஞ்சத் தன்மையுடைய மலை யிதுவாகும். இதனொரு பக்கலில் திருமால் போக்கிய சக்கரப்படை (மாலையாகக் கிடக்கப் பெற்று) விளங்குகின்ற மார்பினை யுடையவனும், சூரனுக்கிளையோனு மாகிய தாரக னென்பான் பல தவத்தினரையுங் கொன்ற தீமைகளை யெல்லாந் திரட்டி அழகிய நகரமாகச் செய்து அதன்கண்ணுள்ளா னென்க.

(வி - ம்.) பட்டிமை - வஞ்சகத்தன்மை. இடுதல் - ஈண்டு ஆக்க லின் மேற்று. திருமால் தாரகன் மேலேவிய சக்கரப்படை மீளாதவன் மார்பிற் கிடந்தழகு செய்தலின், விட்டமால் படை மின்னிய மார்பின னென்றார். (௬௧)

இன்ன தானவ னின்னுயி ருண்டலால்
அன்ன தானவ ளுருயிர்க் கேகலை
அன்னை தந்தை யழற்கணை லநங்கும்
முன்ன வென்றுயர் மாதவன் கூறலும்.

(இ - ள்.) மிக்க தவத்தினையுடைய நாரதன், ஈன்ற தாய் வொன்றவருமின்றித் தந்தையின் அழற்கண்ணே யாகுமென்று கூறத்தகுந் தலைவனே! மேற்கூறிய கொடுந்தன்மை இயைந்த தாரகன் இனிய உயிரைக் குடித்தல்லாமல் தேவர் முதலியோருக்கு இடுக்கண் செய்யும் தன்மை வாய்ந்த சூரன் அரிய உயிரினைக் குடித்தற்குச் சேறற்க வென்று கூற.

(வி - ம்.) இம் முருகன் அன்னை கருப்பத்தூறிப் பிறவானென் பார், "அன்னை தந்தை அழற்கண் எனத்தகும்" என்றார். இதனால் அழற்கண்ணினுள்ளவாகிய பொறியே முருகனாதல் தெளிக. (௬௨)

தார கத்துரு வாகிய தத்துவன்
பார கத்துயிர் வாட்டும் பதகனித்
தார கப்பெயர் தாங்கற காதெனப்
போர கத்துமு டிப்பது பூண்டனன்.

(இ - ள்.) தாரகமென்னும் மந்திரத்தினையே திருவுருவாகக் கொண்ட என்றும் உண்மைப் பொருளாகிய முருகன், நிலவுலகின்கண்ணுள்ள உயிர்களை (இரக்கஞ் சிறிதுமின்றி) வருத்துகின்ற பதகனாகிய இவன், தாரகன் என்னும் பெயரினை மேற்கோடல் (சிறிதும்) அடாதென்று கருதி போரின்கண் அவனைக் கோறலை மேற்கொண்டனன்.

(வி - ம்.) தாரகம் - ஒரு மந்திரம். அனுபவமுடைய தேசிகர்பாற் கேட்டுத் தெளிக. தத்துவம் - உண்மை. (௬௩)

வேறு

வீர வாகுவை நோக்கி யாயிர வெள்ள மாகிய பூதரும்
போர வாவுமி லக்க ரும்புக ழெண்ம ரும்புடை கொண்டுபோய்
ஆர வாடமர் செய்க வென்றருள் செய்து வான்யவ னன்றனைத்
தேரனேர்க்குத வப்ப ணித்தனன் செய்த ளித்தன னெல்லையில்.

(இ - ள்.) வீரவாகு தேவரை, (முருகப்பெருமான்) திருக்கடைக் கண்சாத்தி, ஆயிரம் வெள்ளம் பூதப்படைகளையும், (எஞ்ஞான்றும்) போரெனிற் புகலும் இலக்க வீரரையும், (வீரவாகுவை ஒழித்த) ஏனை எண்மருமாகிய இவர்களையும் அந்நகரின் பக்கலிற் கொண்டுசென்று வென்றியுளவாகப் போரினைச் செய்க என்றருளிச்செய்து, தெய்வத் தச்சனை அழைத்து, அவ்வீரர்க்குத் தேரினை யியற்றித் தருகவெனக் கட்டளை யிட்டனன்; அத்தச்சன் விரைவிற் றேரினை இயற்றிக் கொடுத்தனன்.

(வி - ம்.) ஆடல் - வென்றி. வான்யவனன் - அந்தரத்தார்மயன். ஒல்லை - விரைவு. நகர் - மாயாபுரி. (௬௪)

இறகெ ழுந்துப றக்கு மோங்க லெனச்செலீ றோர்பல சூழ்தரப்
பொறைநி லக்கரி தாமெ ழுழ்ப்பொரு பூதர் தேர்ப்படை சூழமண்
டெறுநெ றென்றுதெ ளிக்க நீளிர தங்க டாய்விறல் வாகுவும்
முறைதி றம்பிய தறுக ணன்றவிர் மூரி மாநகர் முற்றினன்.

(இ - ள்.) சிறை தோன்றிப் பறக்கும் மலையெனும்படி செல்கின்ற பல தேர்கள் சூழ, நிலத்திற்கும் பொறுத்தலருமையாகும் வன்மையோடு பொருகின்ற பூதர்கள் தேர்ப்படையுஞ் சூழ, வென்றியுடைய வீரராகு, நிலமும் "நெறு நெறு"வென்று நிலைகுலைந்து நெளிய, உயர்ந்த தேரினைச் செலுத்தி நீதியினின்று மாறுபட்ட அஞ்சாமையினையுடைய, தாரகன் தங்கிய அரண்வலி யுடைய பெரிய மாயை என்னும் நகரினை முற்றுகை செய்தனன் என்க.

(வி - ம்.) நிலக்கு - விகாரம். தவிர்தல் - தங்குதல். (௩௰)

உருகி நெஞ்சழி யத்த மக்கிறை யோனை முன்பணி சீற்றமிக்
குருவ வன்கட லேழு மோங்கியோ ருங்க டப்புவி முற்றியாங்
குருளு மாழிய வங்க மாகவொ லித்து முற்றிய சேனையின்
உருமு முட்கவெ ழுந்த வார்ப்புல கேழு முட்டிநி மிர்ந்ததே.

(இ - ள்.) கண்டார்க்கு அச்சத்தை உளவாக்கும் ஏழு கடலும் பெருக்கெடுத்து நெஞ்சமுருகி வருந்தத் தமக்கு இறைவனாகிய வருணனை முன்னர் ஏவல் கோடலாலுளவாகிய சிற்ற மிகுதலால், நிலவுஞ்சமூலை முதலியவற்றை ஒருசேர வருத்த, நிலவுலகின்கண் வளைந்ததையொப்ப உருளுகின்ற சக்கரங்களையுடைய தேர்கள் மரக்கலங்களாகப் போர் முழக்கஞ்செய்து சூழ்ந்த படையாகிய கடலின்கண் இடியேறு வருந்த எழுந்த அரவம் உலகேழினும் நிறைந்து வானளவும் நிமிர்ந்த தென்க.

(வி - ம்.) 'உரும்' என்னும் உரிச்சொல் திரிந்து நின்றது. அ: சாரியை. ஆழிய - அன்பெறுத பலவறி சொல். உரும் - இடி. (௩௧)

இன்று வையக மூன்றும் வச்சிர மேந்தி னுற்கரு ளாழியான்
நன்ற லித்தன னென்று தேவர் நயப்ப முற்றிய சேனைகள்
ஒன்று தண்டையும் வேண்டு மேயென வொய்யெ னப்பிறக் கிட்டுமேல்
துன்றி யும்புரி சைக்கண் வீரர்கள் சோடை யாற்படை தொட்டிலார்.

(இ - ள்.) அருட்கடலாகிய முருகன் இற்றைப் பொழுதின்கண்ணே, மூன்றுலகினையும், வச்சிரப்படை யுடைய இந்திரனுக்கு நன்மையுளதாகக் கொடுத்தனனென்று, தேவர்கள் விரும்ப வளைந்த படைகள் (தங்களைப் பாதுகாத்தற்கரணாக) பொருந்திய பச்சை சோடு போர்த்த பரிசைப்படையும், வேண்டுமோ வேண்டுவதின்றென்று கண்டோர் கழறுமாறு விரைவாகப் பின்னிட்டு, மதிற்கண்ணே பாய் தலைக் கண்டு வைத்தும் அகத்தோர் அயர்வினாற்படை தொட்டிலரென்க.

(வி - ம்.) திணை-உழிஞை. முன்னைய அடிகளிரண்டும் 'தோல்லெயிற்கிவர்த' லென்னும் துறைக்கினம். தோல் - கேடகம். இப்படையின்மேற் றோலைப் போர்த்துத் தைத்தலின், தோல் என்னும் பெயர்பெற்றது. பச்சை - தோல். தண்டை - தோல், இதனை, "இருசுடரியங்காப் பெருமூ திலங்கை, நெடுந்தேரிராமன் கடந்த ஞான்றை, வென்குடை மிடைந்த பைங்கட் சேனையில், பச்சை போர்த்த பல்புறத் தண்டை, எச்சார் மருங்கினும் எயிற்புறத் திறுத்தலிற், கடல்சூ முரணம் போன்ற, துடல்சின வேந்தன் முற்றிய ஊரே" என்னும் ஆசிரிய

மாலையா லணைக. பிறக்கிட்டு-பின்னிட்டு, மேற்றுன்றுதல்-மதில்மேற் றெய்தல். சோடை - மனச்சோர்வு. வீரர்கட்குச் சோர்வுளதாதற்குக் காரணமென்னையெனின், பகைவர் முற்றுகை செய்தலையறிந்து முன் னரே போர்க்கோலங் கொள்ளாது வாளாவிருந்தமையே யாமென்க. 'துன்னடை' என்பதை வழி எனக் கூறுவாருமுளர். அவர் துறையோடு பொருத்த மின்மை நோக்கார். உழிஞைத்திணையாவது:—"முழுமுத லரண முற்றலுங் கோடலு, மனைநெறி மரபிற்றாகு மென்ப" என்பர் தொல்காப்பியர்.

> "முடிமிசை யுழிஞை சூடி ஒன்னார்
> கொடிநுடங்கா ரெயில் கொளக்கரு தின்று"

என்பர் ஐயனாரிதனார். தோலின் பெருக்கம் - மதிலகத்தோர் எய்யும் அம்புமாரியை விலக்குதற்கு மதிற்மேற் சென்றுழிக் கிடுகும், கேடகமும், கொண்டு சேறல். (௬எ)

வேறு

**பந்தும் பாவையும் பசுவரிப் புட்டிலும் பலவுஞ்சென் றெறிகிற்கும்**
**முந்தை மாதரை யியற்றுபு பின்றைமொய்ப் பகழிவா யிலிற்றூக்கி**
**எந்தி ரம்பல வுஞ்செறித் தவுணர்தம் யவனன்செ யெயில்வாய்ந்தும்**
**அந்தில் வீரர்கள் பூக்கொடண் ணுமைநனி யதிர்தொறு மயிர்க்கின்றார்.**

(இ - ள்.) வலியினையுடைய வீரர் ஏறவிடனின்றிப் பந்தும், பாவையும் அழகிய கோலத்தினையுடைய சுளகுமாகிய பலவகை விளை யாட்டுக் கருவிகளையும், ஆடல், புடைத்தல் முதலிய தொழிலியற்றும் படி முதற் றடையின்கண் பகை மன்னரை மகளிர் கோலங்கொள நிறுத்திப் புறவாயிலின்கண் மிகுந்த அம்புகளை நாலும்படிவிட்டு, நூற்றுவரைக் கொல்லி முதலிய இயந்திரங்கள் பலவுஞ் செறிய அசுரத் தச்சன் செய்த மதில் (நிலைகுலையாமல்) பொருந்தி யிருக்கப்பெற்று, அம்மதிலின்கண் பூதவீரர்கள் அரணினைமுற்றி உழிஞைப்பூவைச் சூடுங் கால், மிக்கு முழங்கு மத்தளவோசையைக் கேட்குந்தோறும் பந்து பகழி முதலியன விருந்தாங்கிருப்ப நொச்சியின்க ணிவர்ந்து உழிஞை சூடுதல் யாங்ஙன மியையுமென ஐயங்கொள்ளலாயினர்.

(வி - ம்.) பாவை - பதுமை. வரி - கோலம். புட்டில் - சுளகு. மாதர் அரையரை மாதர் கோலங் கொள்ளும்வண்ணஞ் செய்து வைத் தல். எறிதல் - பந்தையடித்தல். பாவையைக் கொண்டாடல், சுளகைப் புடைத்தலாகக் கொள்க. முந்தைவாயில் - முன்வாயில், பின்றை வாயில்-பின்வாயில், அவுணர்யவனன் - அசுரத்தச்சன். யந்திரம் - ஈண்டு மதிற்கணுள்ள பொறி. அந்தில் - அவ்விடம். உழிஞையார் முற்றுகை யிட்டு முதல் வாயிலுள்ள பந்து முதலியவற்றை அறுத்துப் பின்றை வாயிலினுள்ள அம்பு முதலியவற்றையுங் கைக்கொண்டு மதிற்பொறி களை நூறிய பின்னரே பூச்சூடுந் தண்ணுமை யொலித்தல் வழக்காருக வின் அங்ஙனமின்றிப் பூதவீரர்கள் நொச்சியிற்றாவி, உழிஞைப் பூச்சூடுந் தண்ணுமை யொலிகேட்டு இறும்பூது கொண்டு ஐயமுறலால் எயில் வாய்ந்தும், "அந்தில் வீரர்பூக்கொ டண்ணுமை நனியதிர்தோறும் அயிர்க்கின்றார்" என்றார். இதனை,

"மறனுடை மறவர்க் கேற விடனின்றி
நெய்யோ டையவி யப்பி யெஃகுயும்
எந்திரப் பாவைபி னியற்றின நிறீஇக்
கல்லுங் கவணுங் கடுவிசைப் பொறியும்
வில்லுங் கணையும் பலபடப் பரப்பிப்
பந்தும் பாவையும் பசுவரிப் புட்டிலும்
என்றிவை பலவுஞ் சென்று சென்றெறியு
முந்தை மாதரை யியற்றிப் பின்றை
யெய்பெ ரும்பகழி வாயிற் றூக்கிச்
சுட்டல் போயின் றுயிலும் வட்டத்
தீப்பாய் மகளிர் திகழ்நலம் பேர
நோக்குநர் நோக்குநர் நொந்துகை விதிர்க்கும்
தாக்கருந் தானை யிரும்பொறை
பூக்கோட் டண்ணுமை கேட்டொறுங் கலுழ்ந்தே"

என்னும் பொன்முடியார் பாட்டா னறிக. இதுவும், தொல்லெயிற் கிவர்தல். இதனைப் பூச்சூடுதலுங் கூறினர். (கூ)

குருகு சுட்டிய குன்றெனக் கைதவங் குயிற்றரு மிளைகானம்
அருகு முற்றிய கிடங்குயர் மதிலழித் தவுணரா விகண்முற்றும்
பருகி னல்லது குமரவே டிருமுன்னர்ப் படர்கல மெனச்சீறி
ஒருக ணத்திலா ழகழிதூர்த் தெயிற்பொறி யுதைத்துருட் டினர்சூழ்ந்தோர்.

(இ - ள்.) கிரவுஞ்சமென்னும் பறவையின் பெயரினைக் கருதிய மலையென்று கூற வஞ்சனை பலவும் வாய்க்கக் குயிற்றிய அரணாகிய காடானது பக்கலிற் பொருந்திய அகழியினையும் உயரிய மதிலினையுங் கெடுத்து அவுணர் களாவி முற்றிலுங் குடித்தல்லாமல் குமரவேளின் றிருமுன்னர் யாங்கள் செல்லேமென வெகுண்டு ஒரு கணத்தின்கண் ஆழ்ந்த அகழியைத் தூர்த்து மதிற்கண்ணுள்ள பொறிகளைக் காலா லுதைத்து முற்றிய வீரர் உருட்டினரென்க.

(வி - ம்.) குருகு சுட்டிய குன்றம் - கிரவுஞ்சமென்னும் பெயரினை யுடைய மலை. இதனைக் "குருகு பெயரிய குன்றெறிந்தானும்" என்னும் வெண்பாமாலை யடியா னுணர்க. மிளைகானம் - இருபெயரொட்டு. திணை - உழிஞை. துறை - தொல்லெயிற் கிவர்தல். இவர்தலாவது ஒரு காலத்தும் அழிவில்லாத மதிலை இற்றைப் பகலுள் அழித்து மென்று கூறி அஃது அழித்தற்கு விருப்பஞ் செய்தல். (கக)

வேறு

அழுவப்புன லமரேற்றவ ரகழோடற மதிலில்
குழுமிப்பெரி தமராடினர் பொறியோடுயிர் குலைய
எழுமுற்றிய கதவட்டன ரெயில்கைக்கொட கத்தில்
கழுமிப்பயில் கருவிக்கடி மதின்முற்றினர் கடிதின்.

(இ - ள்.) நீர்ப்பரப்பிற் போர் செய்தவர் (அந்நீர்ப் பரப்பினை யுடைய கிடங்கொடு கெட) மதிலின்கட் குழுமி மிக்குப் போர்செய்தவர் இலக்கிலக்கினொடு உயிர்கெடக் கணையமரஞ் சேர்ந்த கதவை யுடைத்தாய் புறமதிலைச் சார்மகப்படுத்தி அகத்தின்கண்ணுள்ள காவலோடு கூடிய பொறிகளையுடைய மதிலை விரைவில் வளைத்தன ரென்க.

(வி - ம்.) அழுவம் - பரப்பு. எழு - கணையமரம். இது கதவிற்கு வலியாக விட்டுவைப்பது. அகத்திற் கருவிக் கடிமதில் எனக்கூட்டுக. கழுமுதல் - நெருங்குதல். திணை - உழிஞை. துறை - கடைஇய சுற்றமர் ஒழியவென்று கைக்கொண்டு முற்றிய முதிர்வு. புறத்தோன் தன் படையைச் செலுத்தி புறமதிலிற் செய்யும் போரின்றாக அகத்தோன் படையை வென்று அப்புறமதிலைக் கைக்கொண்டுள மதிலை வளைத்த வினைமுதிர்ச்சி. ஏறு தோட்டி கதவு முதலிய கோடல், அகமிசைக் கிவர்ந்தோன் பக்கத்தின்பாற் படும். (கூ0)

**உழிஞைப்படை யெதிர்நோக்கிய வொற்றோடி வணங்கி**
**அழிவுற்றொழி யமரர்க்குல கருளப்பரன் மதலை**
**வழிவந்தனன் கொடிவெம்படை வல்லைப்புரி சையைவென்**
**றொழிவின்றுய ரகன்மாமதி லொடுநேர்ந்ததை யெனலும்.**

(இ - ள்.) உழிஞைப் படையினைத் தம்மெதிரே நோக்கிய தூதுவர் ஓடிச்சென்று (தாரகனை) வணங்கி முன்னர் நம் போரின்கண் அழிந்து வெந்நிட்ட தேவர்களுக்கு உலகினைக் கொடுக்க இறைவன் திருமகன் பின்னர் வருகின்றான். அவன் தூசிப்படை விரைவாக மதிலை வென்று எக்காலத்துங் கெடுதலின்றி யுயர்ந்த உண்மதிலின்கண்ணுள்ளாரோடு போர் தொடங்கியது என்றுகூற.

(வி - ம்.) ஒற்று - தூதுவர். வழிவருதல் - பின்வருதல். வந்தனன் காலமயக்கம். இதனை "வாராக்காலத்தும் நிகழும் காலத்துமோராங்கு வரும்வினைச் சொற்கிளவி, இறந்த காலத்துக் குறிப்பொடு கிளத்தல், விரைந்தபொருள வென்மனார் புலவர்" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தா னறிக. கொடிப்படை - தூசிப்படை. இது முன்னர்ச் செல்லும்படை. நேர்ந்ததை - ஐ சாரியை. திணை - உழிஞை. துறை - அகத்துழிஞை யோன்கண் தூதன் அவன் சிறப்பு எடுத்துரைத்தல். (கூக)

**பொன்னும்பிற பொருளும்புக ழுலகுஞ்சர ணடைவோர்**
**மன்னுங்கொள நல்கிக்களி மல்கத்தவி சமரும்**
**மின்னுங்கதிர் முடியான்விரை செலலுற்றன னறியாக்**
**கொன்னும்படை புடைமுற்றின குரமான்வைய முற்றான்.**

(இ - ள்.) பொன்னினையும் ஏனைய பொருளினையும் யாவரும் புகழத்தக்க உலகினையும் தனதடியினை யடைவோர் கொள்ள வளித்தலால் இன்பம் பொருக ஆசனத்தின்கண்ணே தங்கும் ஒளிவிடுகின்ற முடியினையுடைய தாரகன் விரைந்து செல்லுதலுற்றனன். (கண்டார்க்கு) அச்சத்தை யுளவாக்கும் படைகள் அறிந்து அவன்பக்கலிற் சூழ்ந்தன. அவன் குளம்பினையுடைய குதிரைபூட்டிய தேரின்மே லேறினான்.

(வி - ம்.) கொள்-அச்சம். குரமான்-குளம்பினையுடைய குதிரை. மன், உம் : அசை. இனி மிகுதியுங்கொள வெனினுமாம். (௧௨)

குடைநாட்கொளல் வாளுட்கொளல் குறியாவர சவுணன்
உடைநாளழி வறியாதவ னுரனென்றிய வாழிப்
படைநாரணன் மகன்வெண்குடை பற்றக்குடை யேயாய்
அடையாவமர் வெற்றுலன முடிமீக்குடை நிழல.

(இ - ள்.) (மன்னர்கள் போர்குறித்துச் செல்லுங்காலக் கொள்ளும்) குடைநாட் கோடலையும் வாளுட் கோடலையும் (ஆராய்ந்து) கருதாத அரசனாகிய அவுணனும் தனக்குடைமையாகிய வாழுளி நுவதை யறியாதவனுமாகிய தாரகன்(போரின்கட் டன்) மார்பிற் பொருந்திய ஆழிப் படையினையுடைய திருமாலின் மகனாகிய காமனுடைய வெண்குடைதான் பற்றக்குடையாக அடைந்து பொருந்திநலன்ன குடை முடியின்மீது நிழலைச் செய்யாநிற்க.

(வி - ம்.) அரசவுணன் - பண்புத்தொகை. குறியா - ஈறுகெட்ட பெயரெச்சம். உடைநாள் - வாழ்நாள். உரன் - மார்பு. நாரணன் மகன் வெண்குடை - திங்கள். நாட்கொளலாவது நாளும் ஓரையும் தனக்கேற்பக் கொண்டு செல்வுழி அக்காலத்திற்கு ஓர் இடையூறு தோன்றியவழித் தனக்கு இன்றியமையாதனவற்றை அத்திசை நோக்கி அக்காலத்தே முன்னே செல்லவிடுதல். இதனைக் 'குடையும் வாளும்' என்னும் தொல். 97, 98ஆம் சூத்திரத்தானும் உரையானு மறிக. (௧௩)

கற்றைக்கதி ரங்கைத்துணை கலைவெண்மதி யாழி
பற்றிச்செல நீட்டிப்பத மின்றிச்சுருக் குவபோற்
கொற்றக்குடை நிழலிற்குரு மல்குமிணைக் கவரி
எற்றத்துய ரியதாரகன் புடைதாழ்ந்தெழுந் துளர.

(இ - ள்.) கலைவெண்மதியம் தொகுதியுடைய கதிராகிய இணைக் கரங்களை (தாரகன் மார்பின்கல்லுள) சக்கரப்படையினைப் பற்றிக் கொண்டு செல்ல நீட்டிக் காலம் வாய்க்கப் பெறுமையால் சுருக்குவ போல வெண்கொற்றக் குடை நிழலின்கண் வெண்ணிறம் பொருந்திய இரண்டு சாமரங்கள் (பகைவரை) வெல்லுந் துணிவோடுகூடிய உயர்ச்சியுற்ற தாரகன் இருபக்கலிலும் தாழ்ந்துயர்ந்து துள்ள.

(வி - ம்.) பதம் - காலம். குரு - நிறம். ஏற்றம் - எற்றமென விகாரமெய்தி நின்றது. ஏற்றம் - துணிவு. இதனை ''ஏற்றம் நினைவுந் துணிவுமாகும்'' தொல்-சொல். சூத்திரத்தா னறிக. உளர - துள்ள. (௧௪)

கண்வைத்தம ரரையோம்பிய கந்தன்றம நரலச
மண்வைப்பொடு மடவந்தமை கேளாமடமூளா
விண்வைத்துயர் பலவைப்பையும் வெய்தெற்றுவ துறழ
எண்வைத்துயர் பலவார்கொடி யெண்டிக்கினு மசைய.

(இ - ள்.) திருக்கடைக்கண் சாத்தித் தேவர்களைக் காத்த குமர வேள் சங்கரிக்குமாறு இப்பூமியோடுங் கோறல் செயவருந்தன்மை செட்டிற் றாமூன்று வானத்தின்கண் பொருந்திய பலவுலகங்களையும் சேர்த்துக்கொண்டு கெடுத்தலை யொப்ப அளவைகளுள் வைத்து அளக்க லாகாத மிக்க கொடிகள் எண்டிசைக்கணும் அசையா நிற்க.

(வி - ம்.) கண் - கண்ணேட்டமுமாம். வெய்து - கோபங்கொண்டு. எண் - அளவை. தமதென்றது - ஈண்டு கொடிகள். (௬௫)

சிறக்கும்வகை தமையோம்பிய செல்வத்துயர் குரிசில்
இறக்கும்பரி செய்த்துள்ளக மேங்கிக்கத றுவபோற்
பிறக்கம்படு வள்வார்ப்பணை பெரிதுங்குளி றத்திண்
இறக்கட்டிகி ரித்தானவ னிமிர்தீயினி றந்தான்.

(இ - ள்.) சிறக்கும் வகை தங்களைக் காத்த எல்லாச் செல்வங் களாலு முயரிய தாரகன் முருகனேடு போர்செய்து இறக்குந் தன்மையை யறிந்து அகத்தினுள்ளே ஏக்கமுற்று அலறுவனபோல ஒலி பொருந்திய வாராலிறுக்கிக் கட்டிய மிக்க வாத்தியங்கள் மிக்கு முழங்க வலிய மார்பின்கண் திருமாலின் ஆழிப் படையையுடைய தாரகன் மிக்க நெருப்பினைப்போல இறந்தா னென்க.

(வி - ம்.) எய்த்து - அறிந்து. பிறக்கம் - ஒலி, விளக்கமுமாம். இறம் - மார்பு. இறந்தான் - சென்றான். (௬௬)

மன்னுமவு ணன்கண்ணிணை வட்டித்தழ லுமிழ்வ
தென்னுய்முடி யாதின்னினி யெனமண்மகள் விண்ணில்
பொன்னுகிய தன்மாற்றவ ளொடுபோய்மறைந் தொழுகத்
தன்னுருவு வேருயெழுந் தனதூள்விழி தகையும்.

(இ - ள்.) அரசனுகிய தாரகன் இருகண்களுஞ் சுழன்று நெருப் பைக் காலுதலான் இனி யாதாய் முடியுமோவென்று நிலமகள் விண்ணின் கண்ணுள்ள பொன்னுலகமாகிய மாற்றவளோடுஞ் சேர்ந்து கரந்து வைகத் தனக்குப் பொருந்திய வடிவம் வேருய்க்கொண்டு எழுந்தா லொத்த தூளி விழிகளைத் தடுக்கும்.

(வி - ம்.) வட்டித்து - சுழன்று. உமிழ்வது தொழிற்பெயர். முடியாதோ என்பதன்கண் வினுவின்கண் வந்த ஏகாரந் தொக்கது. மாற்றவள் - எதிரான பொன்னுலகமாகிய மகள். மறைந்தொழுகல் - அவுணனுக்கஞ்சி அவன் கட்புலன் கதுவாவண்ணம் விண்ணிலிருத்தல். மண்ணுலகமாகிய மகளும் அவன் கட்புலன் கதுவாமல் தன்னுருவை மாற்றித் தூளி வடிவுகொண்டு விண்ணுலகிற் செல்லுவதை யொப்பத் தூளி யெழுந்த தென்க. (௬௭)

கச்சுச்சேறி யிடையார்கழல் கல்வுங்கழ லுடையார்
வெச்சென்றடு படையாவுமி ளிர்க்கும்புய வலியார்
அச்சுற்றுல கீரேழும டங்கப்பொரு மிகையார்
நோச்சிப்படை யினர்முற்றிய நொறில்வெய்யபரி னேர்ந்தார்.

(இ - ள்.) கச்சினைக்கட்டிய இடையாரும் வீரக்கழல் பொருந்திய காலினையுடையாரும் மாற்றார் வெய்தாக் கொல்லுகின்ற படைக்கலங்கள் யாவையுங் கெடுக்கின்ற தோள்வலி யுடையாரும் பதினென்குலகமும் அஞ்சியடங்கப் போரியற்றும் தருக்கினை யுடையாருமாகிய நொச்சிப் பூவினையணிந்த படையாளர் வேகத்தோடு மதிலை முற்றிய பூதர்களோடு பொருதா ரென்க.

(வி - ம்.) கழலிரண்டுள் முன்னையது வீரத்தைப் பொறித்திடு மணிவடம். இதனை "ஓடாப் பூட்கை யொண்பொறிக் கழற்கால்" என்னும் பதிற்றுப்பத்து அடியானு முரையானு முணர்க. பின்னையது கால். வெச்சு - வெப்பம். மிளிர்தல் - கெடுத்தல். மிகை - தருக்கு. இதனை "மிகுதியான் மிக்கவை செய்தாரை" என்னும் குறளடியானு முரையானு முணர்க. நொறில் - வேகம். வெய்யரில் வேற்றுமை மயக்கம். திணை - உழிஞை. துறை - அன்றிமுற்றிய அகத்தோன் வீழ்ந்த நொச்சி. நொச்சி - காத்தல். (௧௮)

கணிப்பில்பல நாளுங்கருல் கண்டுதியை முற்றும்
மணிப்பொற்புய மொருவுற்றெளி மல்கப்புகு மிந்நாள்
தணிப்பில்புகழ் பேரூழிக டறுகட்கரி வதனத்
தணிப்பொன்முடி யிறையோடுத லைக்கென்றமர் செய்தார்.

(இ - ள்.) அளவிட முடியாத பலநாள்களினும் செறிந்த தினவைத் தோளுக்குரிய இலக்கணங்களெல்லாம் முற்றுப்பெற்ற அழகிய பொன்போன்ற நிறத்தினையுடைய தோள்கள் நீங்கி ஒளிநிறையப் போர்க்குச் செல்லு மிக்காலத்துளவாகிய கேடில்லாத புகழ்பெரிய ஊழிக்காலம் வரை அஞ்சாமையுடைய யானை முகத்தையுடைய அழகிய பொன்னாற் செய்த முடியையுடைய தலைவனாகிய தாரகனோடு தலைக்கக் கடவது என்றுகூறிப் போரினைச் செய்தா ரென்க.

(வி - ம்.) கணித்தல் - அளவிடுதல். கண்டுதி - தினவு. இது நீண்டகாலம் போரின்மையா லுளவாகுமொரு வகை எழுச்சி. கருலல் - செறிதல். (௧௯)

சிலையோடெதிர் சிலையுஞ்செறி வாளோடுவை வாளும்
இலைவாரயில் வேலோடிலை வேலுஞ்சுள குறழ்கா
தலைதோலொடு தோலும்பரி யோடன்னது மிரத
மலையோடுருண் மலையும்பொரு மறவெங்கனல் சிதற.

(இ - ள்.) கோபத்தால் நெருப்பைக் கக்கி வில்லினெதிரே வில்லும் செறிந்த வாளினெதிரே கூரியவாளும் போரிற்குரிய வேலெதிர் இலை வடிவினையுடைய வேலும் முறத்தினை யொத்த செவியினையுடைய யானையினெதிர் யானையும் குதிரையினெதிர் குதிரையும் தேராகிய மலையினெதிர் உருளுகின்ற மலையாகிய தேரும் போர்செய்யு மென்க.

(வி - ம்.) எதிர் என்ற சொல்லை யாண்டுங் கூட்டுக. தோல் - யானை. சிதறிப்பொரும் என வினைமுடிவு செய்க. (௨௦)

வேறு

மனமு டிந்தவர் மகவு யிர்த்திலர் மயிர்கு லைந்தவர் மாதர்பேர்
தனைய டுத்தவர் புறம ளித்தவர் தக்க வெம்படை கையெடார்
சினமு டிந்தடி பின்பெ யர்த்தவர் செருவி னைந்தவ ரிவரைவிட்
டினமு றிந்துகி ளந்த போர்களி ழைத்து ளாரிரு வோர்களும்.

(இ - ள்.) இருபக்கலிலுமுள்ள வீரர்கள் மனக்கவலை யோடிருப்பவரும் மக்களைப் பெறாதவரும் மயிர் சிதைந்தவரும் பெண் பெயரினையிடப் பெற்றவரும் புறமுதுகு காட்டினவரும் ஒத்தபடையெடாதவரும் சீற்றம் நீங்கிப் பிறக்கடி யிட்டவரும் போரில் வருந்தினவருமாகி இவர்களை நீக்கி (யானைமறவரோடு யானைமறவரும், இவுளி வீரரோடு இவுளி வீரரும் போர் செய்தலாகிய சிறப்புடைய அரசியலாற் கூறிய) முறையை யறிந்து போர்செய்தன ரென்க.

(வி - ம்.) சிறப்புடை அரசியலாவன:—மடிந்த வுள்ளத்தோனையும் மகப்பெறாதோனையும் மயிர் குலைந்தோனையும் அடிபிறக்கிட்டோனையும் பெண்பெயரோனையும் படையிழந்தோனையும் ஒத்தபடை யெடாதோனையும் பிறவும் இத்தன்மை யுடையோரையும் கொல்லாது விடுதலுங் கூறிப் பொருதலு முதலியவாகும். இதனை "ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்" என்னும் முதலடியையுடைய புறநானூற்றுச் செய்யுளடிகளானு மவற்றினுரையானுங் காண்க. (௭௧)

தேரி றக்கினர் வேழம் வீழ்த்தினர் தேசி கப்பரி தாழ்த்தினர்
வாரி றுத்தனர் கச்ச றுத்தனர் வார்கொ டித்திர ளறினர்
தாரி றுத்துடற்றோ ளடர்த்தனர் தாடு ணித்தனர் தலையொடும்
போரி ரித்தன ரின்ன வாறு பொலிந்த வூரகப் பாசியே.

(இ - ள்.) (இருபெரும் படையின்கண்ணுமுள்ளவர்களும் தத்தமோடு எதிர்த்த தேர்மறவரைத் தேரையுடைத்து அத்தேரின்கணின்று மிறக்கினர்; யானைகளைக் கொன்று வீழ்த்தினர்; அழகினையுடைய குதிரையினையும் வீழ்த்தினர்; தோலினையுங் கெடுத்தனர். இடைக் கச்சினையு மறுத்தனர்; நீண்ட கொடித்திரளையு மறுத்தனர்; மார்பின் மாலைகளையு மறுத்தனர்; பகைவரை வருத்துகின்ற தோளினையும் வெட்டித் தலையினோடு கால்களையும் வெட்டிப் போரினை விட்டனர்; இவ்வண்ணமாக ஊர்ச்செரு வீழ்ந்த பாசி மறனென்னுந்துறை நிகழ்ந்ததென்க.

(வி - ம்.) தேசிகம் - அழகு. வார் - தோல்; இது பரிசைப்படை. தார் - போர்ப்பூ. உடல் - வருத்துகின்ற. இறக்கினர், இரித்தனர் என்பது விகாரம். இது திணை - உழிஞை. துறை, ஊர்ச்செரு வீழ்ந்த மற்றதன் மறன். பாசியென்றார், நீரிற் பாசிபோல இருவரும் ஒதுங்கியுந் தூர்ந்தும் பொருதலின். (௭௨)

கோயி னீள்பத ணங்கள் விண்டொடு கோபு ரக்குரு மேனிலை
வாயி லாதியி வர்ந்து டற்றிவ ழங்கி னர்படை வீதிகள்

பாய சோரியி னுறு போன்றன பம்பி யூடறத் தேங்கலின்
ஆய மாளிகை மேடை மேனிலே யாழி வாய்ப்பலி லங்கையே.

(இ - ள்.) கோவிற் புரிசைகளின்மேலும், மதிலுண் மேடைகளின் மீதும் வானளவோங்கிய கோபுரத்தின்கண்ணுள்ள நிறம் பொருந்திய மேனிலைவாயின் முதலியவற்றின் கண்ணும் ஏறிப் பகைவரை வருத்திப் படைகளைத் தொட்டனர். புறஞ்சேரி வீதியும் ஊர்வீதியும் பரவிய செந்நீரால் யாற்றினை யொத்தன. அவ்வீதிகளில் (செந்நீர் பெருகி மிகத் தேங்கலால் அழகிய மாடவரிசைகளும் மேடைகளும் மேனிலை களும் கடலின் நடுவணுள்ள பல இலங்காநகரை யொத்தன வென்க.

(வி - ம்.) பதணம் - மதிலுண் மேடை. குரு - நிறம். படை வழங்கினரெனக் கூட்டுக. பம்புதல் - நிறைதல். ஆய் - அழகு. இது திணை - உழிஞை. துறை - அகமிசைக் கிவர்ந்தோன் பக்கம். புறஞ்சேரி மதிலிலும் ஊர் மதிலிலும் அல்லாத கோயிற் புரிசைகண்மேலும் போர் செய்தற்குப் பரந்து செல்லுங் கூறுபாடு. (எக)

வேறு

மண்டு நொச்சியினர் சாலமறம் வாடி விழலும்
மீண்டுழிஞ்ஞையினர் வெய்யவவு ணத்த லைவர்பின்
கண்டு நிற்பவது கண்டுவயி ரங்க டவுறக்
கொண்ட தேரினைவி டுத்துமண் குலுங்க விழியா.

(இ - ள்.) போரின்கட் செறிந்த உழிஞை வீரர்கள் தம்மோடு எதிர்த்துப் பொருந்திய நொச்சி வீரர்கள் வீரங்குறைந்து விழக்கொடிய அவுணத்தலைவர்களை வென்றிடச் செய்துநிற்க அதனைக் கண்டு செற்ற மானது செலுத்தத் தாரகன் தான் கைக்கொண்டுள்ள தேரினை விட்டு நிலமசைய இறங்கி.

(வி - ம்.) தலைவர் இரண்டாவதன் தொகை. விகாரத்தியல்பு. வயிரம் - நெடுங்கால நிகழும் செற்றம். இழியா - இழிந்து. (எச)

தார கப்பெயரி னுனெடிய தண்டு திரியாப்
பாரி டத்தொகைக ளோச்சியுயிர் பாற்றி நிமிரச்
சார தத்தலைவ ராற்றலர்த ளர்ந்தொ ழிவுகண்
டோரும் வீரர்க விலக்கருமொ ருங்கு பொருதார்.

(இ - ள்.) தாரகனென்னும் பெயரினை யுடையான் நெடிய தண்டு ஒன்றினைச் சுழற்றி யத் தண்டால் பூதக் கூட்டங்களை யடித்து உயிரைப் போக்கிக் கிளர்ச்சியுறப் பூதத்தலைவர்கள் (தாரகனோடு) பொருதற் காற்றலராகித் தளர்ந்தொழிதலைக் கண்ட போர்த்தொழிலின் ஆராய்ச்சி யுடைய இலக்கரென்னும் குழுவினர் ஒருசேரப் பொருதன ரென்க.

(வி - ம்.) பாரிடம் - பூதம். ஓச்சல் - அடித்தல். பாற்றுதல் - கெடுத்தல். நிமிர்தல் - கிளர்ச்சியுறல். சாரதர் - பூதர். ஒழிவு : தொழிற்பெயர். ஓர்தல் - ஆராய்தல். (எரு)

ஆர டுத்தமணி யாழிகள்சி தைந்து விழவெஃ
றோ ரேனைத்தையு மெறிந்துதிரள் வீர ரையெலாம்
கார ளர்க்கடல்க டாயினனு லம்ப வெதிர்செல்
வீரசிங்கன்விடு வாளிமுடி வீழ்த்த நவனி.

(இ - ள்.) தாரகனென்பான் ஆரக்கால் செறிந்த அழகிய உருளை கள் சிதறிவிழப் பகைவரை வெல்லுதற் கேதுவாகிய தேர்களையெல் லாம் உடைத்துப் போரின்கண் திரட்சியுற்ற வீரர்கள் யாவரையும் உப்பினையுடைய கரிய கடலின்கட் போய்விழ எறிந்தனன். இதனைக் கண்டு தாரகன் வருந்த அவனெதிரிற் சென்ற நவவீரர்களிலொருவ னாகிய வீரசிங்கனென்பான் விடுத்த அம்புகள் தாரகன் முடியினை நிலத் தின்கட் டள்ளிய தென்க.

(வி - ம்.) ஆர் - ஆரக்கால். ஆழி - உருள். கார் - கரிய. உலம்ப - வருந்த. (எசு)

உட்கி யோர்கதைம டங்கலுயிர் சோர வுகையா
வட்கி லானிரத மெய்திமணி மோலி கவியூஉத்
தட்கும் வார்சிலைத டிந்துபொரு தீர னயரக்
கட்கு லாந்தொடையன் மார்பிலொரு சூல்க டவினன்.

(இ - ள்.) தாரகன் வருந்தி ஒப்பற்ற தண்டமொன்றினை வீரசிங்க னுயிர் தளர்ச்சியுறச் செலுத்தி நாணில்லாத அவன் தேரின்கட் பொருந்தி அழகிய வேறு முடியினை அணிந்து பகைவரைப் போரின்கண் தடைசெய்யும் வீரதீரன் நீண்ட வில்லினை வெட்டி வீழ்த்திப் போர் செய்கின்ற அவன் சோர்வடையத் தேன் பொருந்திய மாலையை யணிந்த அவன் மார்பின்கண்ணே ஒரு சூலத்தைச் செலுத்தினு னென்க.

(வி - ம்.) உட்கல் - வருந்தல். மடங்கல் - ஈண்டு வீரசிங்கன். வட்குதல் - நாணுதல். இதனை "வட்கிவெண் மதியஞ் செவிகெட வொளிரு மாடமார் குண்டின புரமே" என்னும் நளன் கதையானு மறிக. மோலி - முடி. தட்கும் - தடுக்கும். இதனை "ஒக்கல் வாட்கை தட்கு மாகாலே" என்னும் புறநானூற் றடியானு முணர்க. தீரன்—வீர தீரன். இவனும் நவவீரர்களிலொருவன். (எஎ)

ஆடு போர்க்கொருவ னைவிறல் வாகு சமரம்
நீட வேனையினை யோர்களுநி கழ்த்தி யுடையும்
பாடு கண்டுழல்ப கட்டிரத மூர்ந்து சினவிச்
சோடை நெஞ்சினன்ஞெ ரேலெனவெ திர்ந்து துனையா.

(இ - ள்.) வெற்றியைத் தருதற்கேதுவாகிய போரினுக் கொருவ னாகிய வீரவாகு என்பவன் போர் நீட்டியா நிற்க (வீரசிங்கன் வீரதீர னாகிய இருவரை யொழிய) ஏனைய இளவல்களும் போரினைச் செய்து (தாரகனுக்குத் தோற்று) வெந்நிடுந் தன்மையைக் கண்டு போரிலிட சாரி வலசாரியாகச் சுழல்கின்ற தேரினைச் செலுத்திச் சீற்றங்கொண்டு

இளையோர் வெங்கிட்டதனுற் சடைவுகொண்ட நெஞ்சினை யுடையனும் விரைவாகத் தாரகனை டெதிர்த்து விரைந்து.

(வி - ம்.) ஆடு - வெற்றி. சமரம் - போர். பாடு - நன்மை. பகடு - பெருமை. "பகடிபம் பெருமை யேறு பஃறியாண் மேதி யைம் பேர்" என்னும் நிகண்டா னறிக. சினவி-சினந்து. சோடை-சடைவு. ஞெரேலென - விரைவுக் குறிப்பு. துனைதல் - விரைதல். இதனை "உராத்துனைத் தேர்த்தெனப் பாசமொருவ" என்னும் சிவஞான போதச் சூத்திர வடிவானும் அதனுரையானு மறிக. (எஅ)

சிலைவ ளைத்தவுணர் தேவர்திசை யானை பிறவும்
குலைய நாகரிடி யென்றுகுழை வுற்ற மிதர
உலைவி னுனொலியெ டுத்தனனெ ராயி ரமெனும்
அலைசெய் வாளிகடு ரந்தனன மூன்ற வுணன்மேல்.

(இ - ள்.) அவுணர்களுந் தேவர்களும் திசையானைகளும் பிறவும் நடுங்க வில்லினை வளைத்து நாகர்கள் இடியென்று மனங்குலைவுற்று வருந்தச் சிற்றமுற்றுக் கெடுதலில்லாத நாணொலியை யுளவாக்கித் தாரகன்மேல் வருத்துகின்ற ஆயிரம் வாளிகளைச் செலுத்தினனென்க.

(வி - ம்.) துளையா வளைத்து அழிதர ஒலி யுளவாக்கிய அவுணன் மேல் வாளிகள் துரந்தன னென முடிக்க. (எகூ)

ஆயி ரங்கணைவி டுத்தவுண னக்கணை யொரீஇக்
காயி ரும்பகழி நூறுகட வக்க டிதவை
மாயி ரும்பகழி நூறுகொடு மாற்ற வரதன்
சேய டுஞ்சிலையின் வல்லனிவ னென்று தெளியா.

(இ - ள்.) தாரகன் ஆயிரம் வாளிகளை விடுத்து வீரவாகுவிட்ட அக்கணையை நீக்கி வருத்தத்தக்க பெரிய நூறு அம்புகளைச் செலுத்த வீரவாகு விரைவில் பெரிய நூறு அம்புகளைத் தொடுத்து அவன் விட்ட நூறு அம்பினையு மாற்றத் தாரகன்மேலானுகிய இறைவன் மகன் கோறல் செய்யும் விற்றொழில் வன்மையுடையான் என்று தெளிந்து.

(வி - ம்.) ஒரீஇ - ஒருவி. காயிரும்பகழி-வினைத்தொகை. வரதன் சேய் என்றது வீரவாகுவை. தெளியா - தெளிந்து. (அ௦)

தெய்வ மாப்படைசெ லுத்தவவு ணன்றி றலினுன்
வெய்ய வப்படைவி டுந்தொறும்வி டுத்தொ ருவினுன்
உய்வ தொன்றுமறி யாதவன்ம ருட்கை யுளனும்
ஐய மாயையின டர்ப்பவத னைக்க டவினுன்.

(இ - ள்.) தாரகன் பெரிய தெய்வப் படையினைக் கடவினுன். வீரவாகு என்பான் கொடிய அத்தெய்வப் படைகளைத் தாரகன் கடவுந் தோறும் அத்தெய்வப் படைகளைக் கடவி நீக்கினுன். பிழைக்கும்வழி சிறிதும் அறியாதவனுகிய தாரகன் மருட்கை யென்னும் மெய்ப்பாடுடையனுகி அழகிய வஞ்சனையால் வருத்த அந்த வஞ்சனை செய்யும் அம்பினை விட்டனன்.

(வி - ர்.) விறலினன் - வீரவாகு. ஒன்றும் - சிறிதும். மருட்கைச்-சுவை மெய்ப்பாடு. ஏர் - அழகு. அதனை - மாயை செய்யும் பாணத்தை. (அக)

அங்க ணப்படைய வன்வடிவ னந்த மொடுசென்
றெங்கு நின்றுபொர வீரரிமை யாரி னைவுற
மங்கும் வல்லவுணர் துள்ளவது கண்டு மனிதச்
சிங்கம் வென்றபடை செம்மல்கையெ டுத்த னனரோ.

(இ - ள்.) அவ்விடத்து அவ்வஞ்சனை செய்யும் வாளி தாரகன் வடிவம் பலகொண்டு சென்று எவ்விடங்களிலும் நின்று போரினைச் செய்ய வீரர்கள் கண்ணிமையாராகி வருந்தக் கெடுந்தன்மையுடைய வலிய அவுணர்கள் துள்ளிக்குதிக்க, அங்ஙன மோகையாற் றுள்ளுவ தனைக் கண்டு வீரவாகுதேவர் நரசிங்கத்தை வென்ற சிம்புட்படையினைக் கையின்கண் எடுத்தன ரென்க.

(வி - ர்.) செம்மல் - ஈண்டு வீரவாகு. மனிதச்சிங்கம் வென்ற படை - சிம்புட்படை. (அஉ)

சிம்புள் வெம்படையை நோக்கிவிளை மாயை சிதற
உம்பன் மாமுகவன் கைதவமு ஞற்ற விரிய
நம்பி தேர்கில்ன லத்தபடை தூணி நிறுவி
இம்ப ரோடினன்பி டித்துவர வெண்ணி விரைவின்.

(இ - ள்.) கொடிய சிம்புட்படையைக் கண்டு மாயவாளிகள் உளவாக்கிய வஞ்சனைகள் நீங்க, தாரகன் வஞ்சனையைச் செய்ய வெந்நிட் டோட ஆடவரிற் சிறந்த வீரவாகுவென்பான் (தாரகன்) வஞ்சனையை ஆராய்ச்சியிலனாய்த் தனக்கு நன்மையைத் தருகின்ற படைகளை அம்பறுக் கூட்டின்கட் டங்கச்செய்து விரைவிற் பிடித்துக்கொண்டுவர நினைத்து அவன் பின்னரோடின னென்க.

(வி - ம்.) உம்பல் - யானை. கைதவம் - வஞ்சனை. இம்பர் - ஈண் டுப் பின்னர் என்னும் இடத்தினை யுணர்த்திற்று. தூணி - அம்பறுக் கூடு. (அங)

வேறு

குறுமுனி விளைத்த சாபக் குருகுசூட் டியபே ரோங்கல்
இறுவரை முழையோன் றண்மி யிபமுக னிறந்து தோற்றுன்
கறுவொடு தொடர்ந்து போந்த காளையுட் சேற லோடும்
பெறுமுணர் வழியக் குன்றம் பேதுசெய் திட்ட தன்றே.

(இ - ள்.) அகத்தியன் இட்ட சாபத்தினால் கிரவுஞ்ச மென்னும் பறவையின் பெயரினைப்பெற்ற கெடுதற் கேதுவாகிய மலையின்கண் ணுள்ள ஒரு குகையின்கட் சென்று தாரகன் ஒளித்தனன். சீற்றத்தோடு பின்பற்றிச் சென்ற வீரவாகு அக்குகையுட் சேர இயல்பாகத் தான் பெற்றிருந்த அறிவுகெட அக்குன்றம் மயக்கஞ் செய்தது.

(வி - ம்.) குறுமுனியிட்ட சாபமாவது தமிழ் முனிவர் தென்றிசைக்கட் போதுகின்றவர் இம்மலைக் குகையினுட் சென்றனர். செல்லச் செல்ல நெறிதோன்றாது மயக்கஞ் செய்வதனை நுனித்துணர்ந்து இஃதியற்கையன் றென்று கருதி அம்மாயையை வென்று முருகன்கை வேலால் அழியக்கடவ தென்று கூறினார் என்பது.

(வி - ம்.) இறந்தல்-கடத்தல். தோற்றான் - காணப்படாதவனாகி யொழித்தான். பேது - மயக்கம். (அச)

சென்றவன் றிரும்பக் காணுச் சேனைகா வலரோண் வீரர்
துன்றிய விலக்க ரெல்லாந் தொடர்ந்தவந் நெறியே போந்து
நன்றெனத் தோற்றி யாங்கே நவைவிளை பிறனில் கூட்டம்
வென்றவம் முழையிற் புக்கு விளிந்தன ரவரு மாண்மை.

(இ - ள்.) சென்றவனாகிய வீரவாகுவைத் திரும்பக் காணாத சேனைத் தலைவராகிய ஏனைய புகழையுடைய வீரரும் வீரம் பொருந்திய இலக்கரும் ஏனையோரும் (தாரகனை) தொடர்ந்து சென்றவழியே சென்று (முன்னர்) நல்லதெனத் தோன்றி யக்கணத்தே உய்தற்கரிய குற்றத்தினை விளைக்கின்ற பிறனில் விழைதலையொக்கும். குகைக்கட் புகுந்து அவர்களும் ஆண்மையைப் போக்கின ரென்க.

(வி - ம்.) பிறனில் விழைதல், முன்னர் இன்பெனத் தோற்றிப் பின்னர் விழுங்கி யண்ணுத்தல் செய்கலா இன்னல் மிகுந்த நரகத் துன்பினைத் தருதல்போல இம்முழையுஞ் சென்றார்க்கின்பினை முன்னர் விளைத்துப் பின்னர் என்றும் நீங்கற் கியலாத துன்பினை யுளவாக்கி உயிரைச் செகுத்தலால் ''பிறனில் கூட்டம் வென்ற வம்முழை'' என்றார். வென்ற: உவமவுருபு. இதனை ''போலப்புரைய'' என்னும் தொல். பொரு. 22ஆம் சூத்திரத்தா னறிக. நவை - குற்றம். பிறனில் கூட்டம் - பிறன்மனை விழைதல். (அரு)

வஞ்சனை வாய்த்த தென்று வரைமிசை யிவர்ந்து தீயோன்
விஞ்சிய வவுண ரார்ப்ப வில்வளைத் தனந்த கோடி
செஞ்சரந் தூண்டிப் பூதர் சேனையைச் சிதர்ப்ப நோக்கி
அஞ்சின ரமரர் வீணை யறவன்போ யடிகட் கோதும்.

(இ - ள்.) வஞ்சனை வாய்க்கப்பெற்ற தென்று கொடியவனாகிய தாரகன் கிரவுஞ்சமலையின்மீது ஏறி வீரமிக்க அவுணர்கள் வீரமுழக்கஞ் செய்ய வில்லினை வளைத்துப் பலகோடி செவ்விய பாணங்களைச் செலுத்திப் பூதர்களாகிய படையினைச் சிதரச்செய்ய அதனை நோக்கித் தேவர்கள் அஞ்சினார்கள். வீணையில் வல்லவனாகிய நாரதன் குமாரப் பெருமானுக்குச் சொல்வான்.

(வி - ம்.) இவர்ந்து - ஏறி. தீயோன் - தாரகன். அடிகள் - முருகன். வீணையறவன் - நாரதன். (அசு)

எயிற்குல முன்று மொன்று யிருந்தன வெயிலை முற்றிக்
கயிற்கழ லவுண ராற்றல் காற்றிமா முகவ னெய்ப்ப

அயிற்குலப் படைக டுண்டி யவன்வினை புணர்ப்பிற் பட்டு
வெயிற்குரு மோலி வீரர் வெற்பக மயங்கி னரால்.

(இ - ள்.) ஐம்முகத்தின் கூட்டமு மொன்று யிருந்தாலொத்த மதிலின் முற்றுகைசெய்து கொக்குவாயை யுடைய மணிவடத்தை யணிந்த அவுணர்களின் வன்மையைப் போக்கித் தாரகன் இளைக்கக் கூட்டமாகிய கூர்மை பொருந்திய வேற்படை முதலியவற்றைச் செலுத்தி அந்தாரகன் செய்த மாயையிற் கட்டுப்பட்டு ஒளிபொருந்திய நிறத்தை யுடைய முடியினை யணிந்த வீரர்கள் கிரவுஞ்சமலையினுள்ளால் மயங்கினரென்க.

(வி - ம்.) வீரர் முன்னர் வெற்றியெய்திப் பின்னர்த் தாரகன் செய்த மாயையாற் கட்டுண்டு தோல்வியுற்றன ரென்பார் "மாமுகவன் எய்ப்ப அயிற்குலப் படைகடுண்டி யவன்வினை புணர்ப்பிற்பட்டு, வெயிற்குரு மோலி வேந்தர் வெற்பக மயங்கினர்" என்று ரென்க. (௮௭)

நஞ்செனக் கோதித்துத் தீயோ னம்படை யெஞ்சிற் றெல்லாம்
பஞ்சியிற் பறப்பக் காலாய்ப் படர்ந்தன னென்ன மஞ்சன்
அஞ்சலிர் தேவ ரென்னா வணிமணிக் கொடிஞ்சித் திண்டேர்
வெஞ்சினத் தடுபோர் ஞாட்பின் விரைசெல வுந்திச் சென்றான்.

(இ - ள்.) கொடியவனாகிய தாரகன் கண்டோர் நஞ்சென்று கூறும் வண்ணம் சீற்றமிக்கு எஞ்சியதாகிய நம் படை யாவும் பஞ்சினைப்போலப் பறக்கும்வண்ணம் காற்றாகிச் சென்றானென்று நாரதன் சொல்லக் குமரன் தேவர்களை அஞ்சல்மின் என்று, திருவாய் மலர்ந்தருளி அழகிய மணிகள் பதித்த கொடுஞ்சியினை யுடைய வலிய தேரினை வெய்ய சீற்றத்தோடு கோறல் செய்கின்ற போரின்கண் விரைவாகச் செல்லும்படி செலுத்திச் சென்றனனென்க.

(வி - ம்.) கால் - காற்று. மஞ்சள் : போலி. கொடிஞ்சி - தாமரைப்பூ வடிவாகச் செய்து தேர் நடுவண் நடுவது. தேர் மொட்டுமாம். ஞாட்பு - அமர். போர் ஞாட்பு - இருபெயரொட்டு. (௮௮)

ஆர்த்தன பூதவெள்ள மடைத்தன பதாகை வானம்
போர்த்தன திசைக ளோதை பொலிந்தன சமர்செய் சூழல்
தூர்த்தனர் மலர்கள் விண்ணோர் துளும்பின கடலு மண்ணும்
வேர்த்தன ரமர்த்த வீரர் வேறிருந் தவுணர் தொக்கார்.

(இ - ள்.) பூதவெள்ளம் முழங்கின; கொடிகள் வானினை மூடின; அமர் செய்கின்ற பறந்தலை (வீரர்களாற்) பொலிவுற்றன. தேவர்கள் மலர்களைச் சொரிந்தனர்; கடலும் நிலனும் துளும்பின. தேவர்கள் வெயர்வினை அடைந்தார்கள். போர்செய்த வீரர்கள் அவுணர்கள் வேறாக இருந்து தொக்கா ரென்க. (௮௯)

நெடுமொழி கிளந்து சூழ்வார் வஞ்சின நிகழ்த்தி நேர்வார்
விடுகணை பாய்ந்து பாய்ந்து மெய்யெலாந் தூணி போல்வார்

படுபிண மிடறிச் சென்று பறந்தலை யுழக்கி வீழ்வார்
இடுகிய வீரம் வேண்டா ரிருதிறத் தவரு மாதோ.

(இ - ள்.) இருபக்கத்திலுமுள்ள வீரர்களும் அரசர்களுள் வைத்து மேம்பாடுற்ற மதிக்குடையை யுடையார்க்குத் தன் மேம்பாட்டுரையைக் கூறிப் பொருந்துவார். பகைவர் படையினிற் சென்று தன் றுண்மையினை எடுத்துக்கூறி எதிர்ப்பார். விட்ட கணைகள் பாயப்பெற்றுப் பாயப்பெற்று, மெய்யெலாந் தூணிபோலப்பார். இறந்த பிணங்களைக் காலால் இடறிப்போய்ப் போர்க்களத்தைக் கலக்கிக் கீழே வீழ்வார்கள். சுருங்கிய வீரத்தை விரும்பார்க ளென்க.

(வி - ம்.) நெடுமொழி - தன் மேம்பாட்டுரை. இதனை,

"மன் மேம்பட்ட மதிக்குடை யோர்க்குத்
தன் மேம்பாட்டுரை தானெடுத்துரைத் தன்று"

என்னும் வெண்பாமாலைக் கொளுவா னுணர்க. வஞ்சினம் - தன்றுண்மையைச் சொல்லுதல். இதனை,

"ஒன்றுதார் படை கெழுமித்
தன்றுண்மை யெடுத்து ரைத்தன்று"

என்னும் வெண்பாமாலைக் கொளுவா னுணர்க. மெய்யெலாந் தூணியொப்பார் என்பது "கண்ணுந் தோளும் முலையுஞ் சுட்டி" என்னுஞ் சூத்திரத்தில் "தம் வினைக்கியலா எழுத்தலங் கடையே" என்றதனுன் முடிந்தது. பலரும் ஒருவனை அணுகிப் பொருதற்கஞ்சி அகலநின்று அம்பாலெய்து அவ்வம்பு முதலியன ஒன்றொடொன்று துணையாகத் தீண்டுமாறு செறிதலின் மெய்யெலாந் தூணிபோல்வார் என்றார். இதனைத் தும்பைத்திணை என்பார் தொல்காப்பியர். தொல். பொருள். புறம் 71-வது சூத்திரத்தா னறிக. இடுகுதல் - சுருங்குதல். இதனை

"இடுகுமிடை யென்படும் ஏகலென
பிடிமென்னடை மங்கையர் பேச"

எனும் நளன்கதை யடிகளா னுணர்க. தன் வீரத்திற் குறைந்த வீரர்களைக் கொன்று அதனுற் பெறும் வீரப்புகழை ஏற்றல் தன்றுண்மைக்குச் சாலாதென்னுங் கருத்தான் "இடுகிய வீரம்வேண்டார் இருதிறத் தவரு மென்" றுர். எனவே, ஒத்த வீரமுடையார்மாட்டே போர்செய்வர் என்பது பெற்றும். இதனை,

"வீறின்மையின் விலங்காமென மதவேழமு மெறியான்
மாறின்மையின் மறம்வாடுமென் றெறியானயி லுழவன்"

என்னும் சிந்தாமணிச் செய்யுளா னறிக. (௧௦)

மடித்திதழ் தின்னுர் பூதர் வாலெயி றழுந்தி மாதர்
துடித்திடு மதர நேரிற் சூழ்ந்தவர் படைக ணம்மேல்
எடுத்திடா ரென்று தீயோ ரிமைமுழு தொழியக் காய்ந்த
தடுத்தகண் வெகுளிச் செந்தீ யழித்திமைப் புளதா மென்றே.

(இ - ள்.) பூதவீரர்கள் வெள்ளிய பற்கள் பதித்தலால் தம்மதரங்கள் செந்நிறமுற்றுப் பெண்கள் துடிக்கின்ற இதழினை யொப்பின், எதிர்த்தவர் (பெண்டன்மை யுடையானென்று கருதி) நம்மீது படை தொடாமையின் அற்றத்தால் இதழினை மடித்துத் நின்றார். கொடியவர்களாகிய வீரர்கள் வெற்றமாகிய நெருப்புமீள விமைத்தலுளதா மெனக் கருதித் தம் முகத்திற் பொருந்திய மேலிமை முற்றிலும் நீங்க எரித்த தென்க.

(வி - ம்.) அழித்திமைதல் - மீள விமைத்தல் அழித்திமைத்தலால் ஆண்டன்மைக் கழிவாமெனக் கருதிக் கோபாக்கினியே மேலிமையை எரித்த தென்பார் வெகுளிச் செந்தீ இமை முழுதொழியக் காய்த்தது என்றார். இதனை,

> "விழித்தகண் வேல்கொண் டெறிய அழித்திமைப்பின்
> ஓட்டன்றோ வன்கண வர்க்கு"

என்னும் திருக்குறளா னறிக. (கக)

**தார்த்தடந் திணிதோட் பூதத் தலைவர்பல் கவந்த மாட**
**ஆர்த்தழன் முளிபுன் மேய்ந்தாங் கையென நூழிலாடித்**
**தேர்த்திரண் மிதப்ப நெய்த்தோர் தேங்கியும் போரி னீங்கார்**
**நீர்ச்செரு விழைந்த பாசி நிலையினைத் தெரித்து நின்றார்.**

(இ - ள்.) மாலையை யணிந்த பெருமையோடு கூடிய திண்ணிய தோளினை யுடைய பூதத் தலைவருடைய பல மெய்களுமாட வீரமுழக்கஞ் செய்து, அழல் காய்ந்த புல்லினைத் தின்றாற்போல விரைவாகக் கொன்று ஆடித், தேர்க்கூட்டங்கள் மிதக்கப் புண்ணீர் பெருகியும், போர்த் தொழிலினீங்காராய் நீர்ச்செரு விழைந்த பாசிநிலை யென்னுந் துறையினைத் தெரிவித்து நின்றாரென்க.

(வி - ம்.) கவந்தமாடல் - மெய்யாடல். இதனை, இருநிலந் தீண்டா வருநிலை என்பர் தொல்காப்பியர். தொல். பொருள். புறம் கஎ-ஆம் சூத்திரம். திணை: தும்பை. பதிற்றுப்பத்து நான்காம் பத்து மெய்யாடல் என்பர். மெய்யாடலாவது ஒரு பெயருடையார் பலர் பட்டக்கால் உடல் எழுந்தாடுவ தென்பர் உரையாசிரியர். அப்பாட்டிற்கு மெய்யாறு பறந்தலை யெனப்பாட் டுடையார் பேரிட்டார். நூழில் - கொன்று ஆடல். இதனை,

> "கழல் வேந்தர் படை விலக்கி
> அழல் வேறிரித்து ஆட்டமர்ந் தன்று"

என்னும் வெண்பாமாலையா னுணர்க. நீர்ச்செரு வீழ்ந்த பாசிநிலை கொண்ட மதிலகத்தை விட்டுப்போகாத புறத்தோரும், அவரைக் கழியத்தாக்கலாற்றாத அகத்தோரும் எயிற்புறத் தகழியினிருகரையும் பற்றி நீரிடைப் படர்ந்த நீர்ப்பாசி போன்று அக்கிடங்கின்கண் போரை விரும்பல். இவ்விரு சேனையும் இந்நிலையாற் போர்புரிதலால் 'பாசிநிலையினைத் தெரித்து நின்றார்' என்றார். (கஉ)

கால்பொரக் கனிந்து நைந்த கனித்திர ளுகுவ தென்ன
மால்பொர நோக்கித் தன்னை மதியகத் திழிக்கும் பூதர்
கோல்பொர லவுணர் சென்னி குருமுடி யோடும் வீழச்
சால்பொரு வற்றுத் தீயோர் தலைவர்க ளுடைந்து போந்தார்.

(இ - ள்.) காற்றுனது மோத முதிர்ந்து நைவுற்ற கனிக் கூட்டங்கள் சிந்துவதை யொப்பத் திருமாலால் பூதவீரர்கள் போர் செய்தலை நோக்கித் தம்மை மனத்தின்கணிழித்தற் கேதுவாகிய பூதர்கள் பாணங்கள் பொருதலால் அவுணர்கள் தலைகள் சிறந்தோடுகூடிய முடிகளுடன் வீழப் போரில் அமைதித் தன்மை நீங்கிப் படைத்தலைவர்கள் வெந்நிட்டுச் சென்றன ரென்க.

(வி - ம்.) கால் - காற்று. அவுணர்களோடு பல்காலும் போர் செய்து ஆழிப்படையையும் இழந்த விண்டுவானவன் பூதர்கள் அவுணரோடு போர் செய்தலைக் கண்டு "நமக்கு இத்துணை யாற்றலில்லையே" எனத் தம்மைத் தாம் இழித்துக் கூறலின், மால்பொர நோக்கித் தம் மதியகத்திழிக்கும் பூதர் என்றார்" போரிலமைதித் தன்மை. (௧௯)

உடைதல்கண் டார்த்த பூத ரோகையுந் தன்பாற் றோல்வி
அடைதலு நோக்கி வல்லே யந்தநா ளங்கி யென்னத்
தடைஇய சிலைகை வாங்கிச் சரமழை தூர்த்துப் பூதர்
மிடைதரு தலைவர் தம்மை விழிக்குமு னிரித்துச் சென்றான்.

(இ - ள்.) தோல்வி யுறுதலைக் கண்டு வீரமுழக்கஞ் செய்யும் பூதப் படையின் மனக்களிப்பையும் தம் பக்கலில் தோல்வியுறுதலைக் கண்டு விரைவில் ஊழிக்காலத்துத் தோன்றும் நெருப்பென வளைந்த வில்லினைக் கையிலெடுத்து அம்பு மழையைச் சிந்திப் பூதப்படையிற் பொருந்திய தலைவர்களை இமைக்கு முன்னர்க்கெடுத்துச் சென்றான் என்க.

(வி - ம்.) தடைஇய - வளைந்த. இதனை, "தடவென் கிளவி கோட்டமுஞ் செய்யும்" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தா லுணர்க. அந்தநாளங்கி - முடிவுகாலத்துளதாங் தீ. (௨௦)

பண்டைநற் றவத்தி னூற்றாற் பாயொளி முகமோ ராறும்
குண்டலங் குலாய காதுங் கொழும்படைக் கரமீ ராறும்
தண்டைகின் கிணிகள் சூழ்ந்த தாள்களும் பொலியத் தேரின்
அண்டர்கள் சூழ நின்ற வமலனை யெதிரே கண்டான்.

(இ - ள்.) முன்னரியற்றிய நற்றவப் பயனால் பரவிய ஒளியையுடைய அறுமுகமும், குண்டலங்கள் பொருந்திய திருச்செவியும், நல்ல படைக்கலங்களையுடைய பன்னிரு திருக்கரங்களும், தண்டையும், சதங்கையும் பொருந்திய திருவடிகளும், விளக்கமுறத் தேரின்கண் தேவர்கள் சூழநின்ற மலமற்றவனாகிய இளையோனை எதிரே கண்டன னென்க. (௨௧)

**தன்னையு மறியா துள்ளந் தழைத்தெழு மன்பு பொங்க**
**இன்னவ னேயோ வீசன் மகனென வியம்புந் தோன்றல்**
**என்னலு மன்ன னேயா மிவனென வமைச்சர் கூற**
**முன்னவன் முன்னர்த் தேரின் முன்னினன் மொழித லுற்றான்.**

(இ - ள்.) *தன்னையுமறியாமல் உள்ளத்தின்கண் தழைத்தெழு கின்ற அன்பானது மிக இவ்விளையான்றோ இறைவன் திருக்குமர னென்றியம்புகின்ற தலைவனென்றுகூற, அமைச்சர்கள் அவனே இவன் என்றுகூறத் தலைவனாகிய முருகன் முன்னர்த் தேரின்கண்ணே பொருந் திச் சொல்லத் தொடங்கினான்.*

(வி - ம்.) *முன்னவன் – முதல்வனாகிய குமரன். முன்னுதல் - பொருந்துதல். அன்னன் - அவன்.* (கசு)

**நாரணன் முதலா யுள்ளோர்க் கல்லது நம்மேற் போர்க்குக்**
**காரணி மிடற்றாற் குன்னுங் கடனிலை மைந்த வீங்குத்**
**தாரணி படையி னோடுஞ் சார்ந்ததென் னுரைக்க வென்றான்**
**பூரணப் பொருளா யுள்ள புண்ணிய னிதனைக் கூறும்.**

(இ - ள்.) *இளையோனே! நம்மீது போர்க்கு வருதல் நாரணன் முதலிய வலிகுன்றிய தேவர்களுக்கல்லாமல் கரிய கண்டமுடைய இறை வன் நினைத்தல் முறையின்றாகும். இப்பொழுது, மாலையை யணிந்த படையினோடு போர்க்குப் பொருந்திய காரணமென்னை கழறுக என்றார். எங்கும் நிறைந்த பொருளாயுள்ள அறவோனாகிய முருகப்பெருமான் கீழ்வருவனவற்றைக் கூறுவா னென்க.*

(வி - ம்.) *மிடற்றோற்கு எனும் நான்காம் வேற்றுமை எழுவாய்ப் பொருட்டாய் நின்றது.*

*"இன்னென வரும் வேற்றுமை யுருபிற்கு*
*இன்னென் சாரியை இன்மை வேண்டும்"*

*என்றார்போல. தார் - மாலை.* (கஎ)

**முறைபுரிந் தவரை யோம்பி முறைமையிற் றிறம்பி மன்னோ**
**மிறைபுரிந் தோரைக் காதும் வேந்திலா வேந்த னெந்தை**
**அறைகழல் வீர விண்ணோர்க் கருஞ்சிறை யிட்ட வாற்றால்**
**இறையினு முயிரைக் காற்ற வேயினன் போந்தா மென்றான்.**

(இ - ள்.) *ஒலிக்கின்ற வீரக்கழலை யணிந்த வீரனே. முறையுளிக் கோலோச்சியவரைப் பாதுகாத்துச் செங்கோன்மையினின்று மாறுபட்டு நடுக்கந்தருஞ் செயல்களைச் செய்தோரை அக்குற்றத்துக்குத்தக வொறுக் கும், தனக்கு ஒப்பாரும், மிக்காரு மிலனாகிய தலைவனாவான் என்தந்தை. நீ தேவர்களை மீட்டற்கரிய சிறையின்க ணிட்ட தன்மையால் இறைப் பொழுதின்கண் நுங்களுயிரைப் போக்க ஏவினான் வந்தனன் என்க.*

(வி - ம்.) மிறை - குற்றம். காதும் - சொல்லும். மறை - செங்கோன் முறை. அறைகழல் - வினைத்தொகை. காற்ற - போக்க. (௯௮)

வரம்பிலா வாற்றற் செம்மல் வரவினைக் கிளத்த லோடும்
வரம்பிலா வின்ப முக்கண் வள்ளலார் தமக்குத் தந்த
வரம்பிலா வரமு மற்று மதித்துமா முகத்துத் தோன்றல்
வரம்பிலாச் சீற்றம் பொங்க மற்றெதிர் கழறு கின்றான்.

(இ - ள்.) அளவில்லாத வல்லமையை யுடைய தலைவனாகிய முருகன் தன் வருதலைச்சொன்ன அளவில் வரம்பில்லாத இன்பத்தினை யுடைய மூன்றுகண்ணினை யுடைய வள்ளலாகிய சிவபெருமான் தமக்குக் கொடுத்த அளவில்லாத வரத்தினையும் மதித்துத் தாரகன் அளவில்லாத சீற்றமிக எதிர்சொல்லலுற்றனன்.

(வி - ம்.) செம்மல் - முருகன். முக்கண்வள்ளல் - சிவபெருமான். தோன்றல் - கயமுகாசுரன். (௯௯)

மாயனார் திகிரி யீது மார்பிடைக் காண்டி வீந்து
போயினா ரன்றி யென்னைப் பொருதவ ருலகி னில்லை
ஆயினார் பலருண் வெற்புக் கடுபடை தமக்கு நீவந்
தேயினா மிளையைநீயு மேகென விறைவன் சொல்லும்.

(இ - ள்.) மார்பின்கண்ணுள்ள இத்திகிரி மாயவன் திகிரியாம் காண்பாய்; இறந்தொழிந்தாரேயன்றி என்னொடு போர்செய்தவர் உலகத்தில் ஒருவருமிலராயினர். கிரவுஞ்சமலைக்கும், கொல்கின்ற என் படைக்கும், நீவந்து ஏவப்பட்டார் பலரும் ஊணாயினர். முருகனே! நீயும் இளையை; நீ செல்வாயாக என்று சொல்ல இறைவன் சொல்வான்.

(வி - ம்) வெற்புக்கு எண்ணும்மை தொக்கது. என்னைப் பொருதவர் : வேற்றுமை மயக்கம். (௧௦௦)

உடுவொளிக் குயர்ந்த திங்க ளுருகெழு பரிதிப் புத்தேள்
விடுமொளிக் குயருங் கொல்லோ விண்டுகைத் திகிரி வென்றான்
முடுகுபு நுமைய னாளு மண்டங்க ளன்றி முற்றும்
நொடிவரை யடுநங் கைவே லுன்வயத் தாமே பேதாய்.

(இ - ள்.) விண்மீன்களின் ஒளியுள் வைத்துயர்ந்த வொளியை யுடையன் வெண்கதிர்க் கடவுள். நிறம் பொருந்திய செங்கதிர்க் கடவுள் வெளியிடுகின்ற ஒளியினுக்கும், உயர்ந்து விளங்கு மொளி யுடையன் ஆவனோ? ஆகான், ஆதலான், விரைந்து நுமது தமையனாகிய சூரன் ஆளுகின்ற அண்டங்களன்றி ஏனைய அண்டங்க ளெல்லாவற்றை யும், நொடிப்பொழுதிற் கொல்லும், வேற்படை நங்கையிலுள்ள அப் படை, பேதையே! உன் வயத்ததாகுமோ!

(வி - ம்.) திருமாலினை உடுவாகவும், தாரகனை வெண்கதிர்க் கடவுளாகவும், முருகனைச் செங்கதிர்க் கடவுளாகவுங் கொள்க, ஐயன்-சண்டுச் சூரல். ஏகாரம் எதிர்மறை. முருகனே! நீ இளமையையாதலின் படைக்கலப் பயிற்சியில் தேர்ச்சியுற்றிலை யாதலின் உன் படையையுங் கவர்வே னென்பான். மாயனார் திகிரியீது மார்பிடைக் காண்டி யென்று கூறியதற்கு முருகப்பெருமான் விடையாக பேதையே! எல்லா அண்டங்களையும் அடும்வேல் ''நும் வயத்தாமே'' என விடை கூறினு னென்க. (௧0௧)

பொய்தகு வரையும் புக்கெக் கழுத்தத்திற் புகலு நீயும்
செய்தவ ரிடும்பைக் குன்றுந் திகழ்ந்திடு நும்மார் தேசும்
வெய்திவ ணழியக் காண்டும் வாயினுல் விளம்ப லென்னும்
கைதனில் விளம்ப லன்றே வீரர்தங் கடப்பா டென்றான்.

(இ - ள்.) பொய்ம்மையினையே தகுதிக் குணமாக வாய்க்கப்பெற்ற கிரவுஞ்சமலையும் என்பால் வந்து இறுமாப்போடு தன் மேம்பாட்டுரை கூறும் நீயும் செய்கின்ற தவத்தினையுடைய முனிவர்க ளடைகின்ற துன்பமாகிய மலையும், விளங்குகின்ற நும்மவர்கள் செல்வமும், விரைவி லழியச் செய்வோம். வாயினாற் கூறலாலென்பயன் கையாற் கூறுத லன்றோ வீரர்கள் முறையென்றான்.

(வி - ம்.) எக்கழுத்தம் - இறுமாப்பு. தலையெடுப் பெனவுங் கூறுவர். நும்மார் – நும்மவர். தேசு - ஈண்டுச் செல்வம். காரியத் தைக் காரணமாகக் கோடும் உபசார வழக்கு. கையினால் விளம்பல் இலக்கணை. கடப்பாடு - முறை. ''கைம்மாறு வேண்டா கடப்பாடு'' என்னுந் திருக்குற ளுரையா னுணர்க. வெய்து - விரைவு. (௧0௨)

இன்னண மிறைவன் கூற விபமுகன் மானமுந்தப்
பொன்னிவர் தோளை நோக்கிப் பொருசிலை நோக்கிக் கையால்
மன்னிய முகத்து ரோமம் வருடினன் றிரித்துக் கொண்டு
தன்னெடுஞ் சிலையைக் கோட்டி நாணினைத் தழக்கங் கண்டான்.

(இ - ள்.) இங்ஙனமாக இறைவனாகிய முருகன் சொல்லத் தாரகன் மானஞ் செலுத்த வீரத் திருவும் விரும்புகின்ற தன்தோளினை நோக்கிப் போர்க்குரிய வில்லினையும் நோக்கிக் கைகளான் முகத்திற் பொருந்திய உரோமங்களைத் தடவிக்கொண்டு தனது நெடிய வில்லை வளைத்து, நாணினை, முழங்கும் வண்ணம் விரலாற் றெறித்தான்.

(வி - ம்.) பொன் - வீரத்திரு. முகத்து ரோமம் - மீசை. தழக்கம் - முழக்கம். (௧0௩)

வன்றிற லினையோன் றனும் வார்சிலை வாங்கி நாணில்
துன்றொலி யெழுப்பி விட்டான் றுளங்கின வண்ட மெல்லாம்
வென்றில மேனும் போரின் விளிகுவ மேனும் வென்றி
இன்றுள மென்று தீயோ னெரிகனை தெரிந்து கொண்டான்.

(இ - ள்.) மிக்க வலியினையுடைய இளையோனாகிய முருகனும், நீண்ட சிலையை வளைத்து நாரியின்கட் பொருந்திய ஒலியை எழுப்பி விட்டனன். அண்டங்களெல்லாம் நடுங்கின. யாம் வேறல் செய்யே மெனினும் இப்போரின்கண் இறப்பேமெனினும் வீரனாகிய முருகனோடு போர் செய்தனன் தாரகன் என்று வீரர்கள் பலரும் கூறுவாராகலின் அங்ஙனம் கூறலாகிய வென்றியை இன்று உடையேமாயினே மென்று தாரகன், எடுக்கின்ற அம்புகள் பலவற்றை ஆராய்ந்து கொண்டா னென்க.

(வி - ம்.) இளையோன் - முருகன். சிறந்த வீரனோடு போர்புரிந்து இறந்தாலும் வென்றியே என்று கருதியபடியாம். (௪0௬)

**மிக்கவ ரில்லா வண்ணம் வென்றசீ ரிவன்முன் னோரைப்**
**புக்கடல் புகழே யாகப் புகலும்வை யகங்க ளென்றே**
**தொக்கபே ரண்ட மெல்லாந் தூள்படுத் துருவிற் பூசும்**
**முக்கணை நுதற்கண் வாய்த்த முதல்வனுங் கணைகைக் கொண்டான்.**

(இ - ள்.) போர்த் தொழிலில் தம்மினு மிக்காரில்லையாம் வகை பகைவரை வென்றிகொண்ட சிறப்பினையுடைய இத்தாரகன் முதவி யோரை இறைவடிவத்தோடு சென்று வேறல் செய்யாது வீரர் வடி வுடனேசென்று கோறல் செய்தலே புகழாக உலகிலுள்ளார் கூறுவார்க ளென்று தொக்க பெரிய அண்டங்களையெல்லாம் துகளாகச் செய்து திருவுருவிலணிந்து கொள்ளும் மூன்று கண்களில் வைத்து நெற்றிக் கண்ணை மறைத்த முதல்வனாகிய முருகன் அம்புகளைக் கையிற் கொண் டன னென்க.

(வி - ம்.) சிவபெருமான் தனக்கியல்பா னமைந்த முக்கண்ணோடு தோன்றிக் கோறலை உலகம் புகழாதென்னும் கருத்தான் உலகம் புகழ் தற் கேதுவாக நுதற்கண்ணை மறைத்து முருகனாகவந்து போர்த் தொழிலே வெல்லும் பொருட்டு அம்பைக் கொண்டா னென்பார். "புக்கடல் புகழே யாகப் புகலும்வை யகங்க ளென்று, முக்கணை நுதற் கண் மாய்த்த முதல்வனுங் கணைகைக் கொண்டான்" என்று கூறினார். முக்கணை - ஐ : சாரியை. (௪0௭)

வேறு

**எண்ணில் பல்கணை தான வன்றொட வேவொ ராயிரந் தொட்டவை**
**மண்ணி றுத்தவன் மீட்டோ ராயிரம் வாளி தூண்டவ வற்றையும்**
**அண்ண லையிரு வாளி யேவிய றுத்தொ ரம்பினி வன்சிலைத்**
**திண்மை சிந்திவில் வேறெ டுக்குமுன் செல்ல வாயிர முந்தினன்.**

(இ - ள்.) அளப்பிலவாகிய கணைகளைத் தாரகன் ஏவ அம்புகள் ஆயிரத்தைவிட்டு அவற்றை நிலத்தில் வீழும்வண்ணம் ஒடித்து, அவன் மீண்டும் ஆயிரம் அம்புகளைச் செலுத்த அவ்வம்புகளையும் தலைவனாகிய முருகன் பத்தம்புகளைத் தூண்டிப் பாழ்படுத்தி ஓரம்பினால் அத்தாரகன் வில்லின் வலியைக் கெடுத்து வேறுவில்லினை யெடுக்குமுன்னர் அவன் பாற் செல்ல ஆயிரம் அம்புகளைச் செலுத்தினன் என்க.

(வி - ம்.) காளை - கயமுகாசுரன். அவன் - அவ்வசுரன். அண்ணல் - முருகன். (க0சு)

வல்லை வாங்கிய வில்லி னுயிரம் வாளி தூவிம டித்தவை
அல்லை முத்திய வாக்கை யாளன னந்த வாளிது ரந்தனன்
எல்லை முத்திய மேனி யண்ணலி லக்க வாளியி னட்டவை
சொல்லை முத்திய கோடி வாளிது றுத்த னன்றனு வெங்கனும்.

(இ - ள்.) விரைவாக வளைத்த வில்லினின்றும் ஆயிரம் அம்புகளைச் செலுத்தி அவ்வாயிர மம்புகளையுங் கெடுத்து இருளினைப் பதித்தாலொத்த உடம்பினையுடைய தாரகன் அநேக அம்புகளைச் செலுத்தினன். விளக்கம் பொருந்திய திருவுருவுடைய தலைவன், நூறுயிரம் அம்புகளால் அவற்றைக் கெடுத்து, நிறைமொழி மாந்தர் வாயினின்றும் தோன்றி அவர் அருளினும், வெகுளினும், அவ்வப்பயனைத் தவறாதுறுவிக்குஞ் சொற்கள் போன்ற கோடி அம்புகளை உலகெங்கணும் நெருங்கும்படி செலுத்தினன்.

(வி - ம்.) எல் - விளக்கம். "எல்லே விளக்கம்" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தா னறிக. சொல் - நிறைமாந்தர் வாய்ச்சொல். இனி, பெயர் பொறித்தவாளி எனினுமாம். (க0எ)

வாளி கோடியி ரட்டி யுந்தினன் மாயை மைந்தன ரன்மகன்
தூளி கண்டவை கோலி ரண்டுது ளைக்கை கோடிற விட்டனன்
நீளு றுப்பற வாயி ரங்கணை யானெ டுங்கொடி நூறினன்
ஆள வந்தவ னெட்டின் வில்லிறுத் தாயி ரத்தடர்த் தான் வையம்.

(இ - ள்.) மாயையின் மகனாகிய தாரகன் இருகோடி வாளிகளைச் செலுத்தினன் இறைவன் திருக்குமரன் அவ்விரு கோடி யம்புகளையும் பொடியாகச் செய்து இரண்டம்பினைத் தாரகன் ஊட்டுளை பொருந்திய கையும், கொம்பும், கெடும்வண்ணம் விட்டான். இவ்வுலகத்தை அடிமை கொள்ளத் திருவுருக் கொண்டவனாகிய முருகன் ஆயிர மம்புகளால் நீண்ட உறுப்புக்கள் கெட, நீண்ட கொடியையுங் கெடுத்து, எட்டம்பால் வில்லினை யொடித்து, ஆயிர மம்புகளான் தேரினையுமுடைத்தா னென்க.

(வி - ம்.) துளைக்கை கோடு - உம்மைத் தொகை. விட்டனன் நூறினு னென்பன எச்சமுற்று. (க0அ)

பாய்ந்து வேறொரு வையம் வார்சிலை பற்றி வெங்கணை யாயிரம்
வாய்ந்த கால்வல வன்பு யத்தின்வ ருந்த வெய்த்திளை யோன்கணை
ஆய்ந்தோ ராயிர நெற்றி யேற்றவ யர்ந்து சோரிநி லத்துகச்
சாய்ந்த னன்றடந் தேரின் மாமுகன் சாய்ந்த வானவ ரோங்கவே.

(இ - ள்.) தாரகன் வேறொரு தேரின்கட் பாய்ந்து நெடியவில்லைக் கையிற்பற்றிக் கொடிய வாயிர மம்பினை வலவனாக வாய்ந்த காற்றுத்

தேவனுடைய தோளின்கண் வருந்தும்படி செலுத்தி இளையோனாகி முருகன் ஆராய்ந்து ஆயிரமம்புகளை நெற்றியின்கண் எய்ய அயர்ச்சியுற்றுச் செந்நீர் நிலத்தின்கட் சிந்த முன்னர் போரிற்கிடைந்த வானவர்கள் உயர்ச்சியடையப் பெரிய தேரின்கண் சாய்ந்தானென்க.

(வி - ம்.) சாய்ந்த-தளர்ந்த. தாரகன் உய்ந்து இளையோன் ஏற்ற அயர்ந்து உகத்தேரிற் சாய்ந்தனனென வினைமுடிபு செய்க. (கசஎ)

வேறு

கண்டவ வன்படை காவலர் மானம லைப்பவொ ருங்குகலாய்
மண்டிய முற்படை யாவும்வ ழுங்கவ ளங்குல வுங்குமரன்
கொண்ட சிலைக்கணி ருங்கணை பௌவமுண் கொண்டலெ னச்சொரியத்
திண்டலை தோள்கழல் சிந்தம டிந்தனர் செந்தில ரோடினரால்.

(இ - ள்.) இந் நிகழ்ச்சியைக் கண்ட சேனைத் தலைவர்கள் மானந் தங்களை வருத்த ஒருங்கு கலாய்த்து நெருங்கித் தீயினையொத்த அம்புகள் எல்லாவற்றையுஞ் சிந்த அழகுபொருந்திய முருகக்கடவுள் தன் திருக்கையிற்கொண்ட சிலைக்கணின்று பெரிய அம்புகளைக் கடலை யுண்கின்ற மேகம்போலச் சொரிந்து வலிய தலையும், தோளும், காலும், சிந்தாநிற்க இறந்தவர் பலர்; இறவாதவர் ஓடினரென்க.

(வி - ம்.) கலாய் - கலாய்த்து. பௌவம் - கடல். செந்திலர் - பெயர். (கசு0)

அழிந்தவு ணர்ச்சியெ ழுந்தெழு தாரக
னுவினை யென்கொலெனா
இழிந்தவு ளத்தின னிப்படை யாலிவ
னெய்ப்பில னென்றுகனல்
பொழிந்தடர் தெய்வத மாப்படை யாவும்பு
குத்தின னன்னவைபோய்த்
தொழுந்தகை யைத்தொழு தண்மையி னின்றதோ
லைத்தவ னெண்ணமெலாம்.

(இ - ள்.) மடிந்த வுணர்ச்சி தோன்றி எழுகின்ற தாரகன் இங்கு நிகழ்ந்தது என்னை கொலோவென்று மடிந்த உள்ளத்தையுடையவனாய் இப்படைகளால் இவன் இளையானென்று கருதி நெருப்பைக் கான்று கொல்லுகின்ற பெரிய தெய்வப் படைகளை ஏவினான். அப்படைகள் சென்று யாவரும் வணங்கத்தக்க பெருமையை யுடையனாகிய முருகனை வணங்கித் தாரகன் எண்ணங்களை யெல்லாங் கெடுத்து அவன் பக்கலின் நின்றவென்க.

(வி - ம்.) ஆ : ஆச்சரியக் குறிப்பில் வந்தது. தகை : ஆகுபெயர். படைகள் அவன் எண்ணங்களைத் தொலைத்து நின்றன என வினைமுடிவு செய்க. (கசக)

புராரித ரும்படை போக்கின னூர்ந்தது போதவு ளத்திறையைப்
பராவிய கங்கையி னேற்றலு நொந்துப றைந்தன நந்திருவென்
றுராவுற னத்தினன் மாயைவ லானிவ னெய்யென வாற்றியது
விராவுவல் வெற்றியெ னக்கிர வுஞ்சவி லங்கலொ டும்வருவான்.

(இ - ள்.) திரிபுரத்தை யெரித்த இறைவன் தனக்குத்தந்த பாசுபத மென்னும் படையைச் செலுத்தினன், முழுங்கி அப்படை வர முருகன் தன் தந்தையை உள்ளத்தின்கட் குறித்து அழகிய கையாற்றாங்க (அதனைக் கண்ட தாரகன்) வருந்தி நமது செல்வம் இன்றோடொழிந்த தென்று நிலை பெயர்ந்த மனத்தினையுடையவனாகிய தாரகன் இம்முருகன் மாயையில் வல்லமையில்லாதவனாகையால் அம்மாயை விரைவிற்செய்து வென்றியொடு பொருந்திக் கலப்பேனென்று கிரவுஞ்சம் என்னும் மலையோடு வருவா னென்க.

(வி - ம்.) புராரி தரும்படை - பாசுபதப்படை. பறைதல் - நீங்கல். உராவுதல் - நிலைபெயரல். வலான் - வல்லமை யில்லான். அது - அம்மாயை. விராவுதல் - கலத்தல். (௧௧௨)

முப்புர மெண்ணில வாகவி லங்கன்மு னைத்தெழு சூரிளவல்
அப்புர வாழ்நர்க ளாயொரு சார்வரு மாழிக ளாகவரை
துப்பின னர்வட வைக்கன லாம்புன றூங்குமு கிற்படலம்
மைப்படி நீள்சிலை யாகவி டிக்குல மாமுக னுய்வருவான்.

(இ - ள்) கிரவுஞ்சமலை அளவில்லனவாகிய முப்புரங்களாகப் போர்க்கு விரைந்தெழுகின்ற சூரனிளவலாகிய தாரகன் அப்புரத்தின் கண் வாழ்கின்றவராக ஒரு பக்கத்து வருவான் அம்மலை கடல்களாக வலியையுடையனாகிய அவன் அக்கடலின்கண்ணுள்ள வடவைத் தீயாகி வருவான் மேகந்தங்கும் அம்மலை நீர்தங்கு முகிற்கூட்டமாக அத்தாரகன் அம்முகிற் படலத்துட் டோன்றும் இடிக்கூட்டமாகி வருவான்.

(வி - ம்.) தூங்கும் - தங்கும். மை - மேகம். சிலை - மலை. (௧௧௩)

நேமிவ ரைப்புடை சூழிரு ளாகநெ டுங்கிரி யாங்குஞெமிர்
நாமிகு பாரிட ரெண்ணில ராவன லத்ததி சைக்களிறு
பேமுறு வெற்புற வன்னவை சூழ்பெரு மால்வரை யாய்த்தழைவான்
தோமுறு காலுரு வாகவ டுக்கறு ளக்கெரி யாயெழுவான்.

(இ - ள்.) நீண்ட கிரவுஞ்சம் சக்கரவாளகிரியைச் சூழ்ந்த பேரிருளாக அவன் அப்பேரிருளிடத்துப் பரந்த அச்சத்தை மிகுவிக்கின்ற சக்கரவாளமாக, கிரவுஞ்சம் நன்மை தருகின்ற திக்குயானைகளாக அத்திசை யானைகள் சூழ்ந்த சக்கரவாளகிரியாக அவன் தோன்றுவான். அம்மலையானது குற்றம் பொருந்திய காற்றாக அவன் அடைகின்ற நெருப்பாகத் தோன்றுவான்.

(வி - ம்.) "நாம்", "பேம்" என்பன அச்சப் பொருளுணர்த்தின

"பே நா முருமென வரூஉ மூன்றும் அச்சப்பொருள" என்னும் தொல்காப்பியத்தா னறிக. அடுக்கல் - ஈண்டுக் கிரவுஞ்சம். (௧௧௭)

பொங்கழல் கான்ஞெகி ழித்திர ளாய்ப்புவி மாதிரம் வான்மிடையத்
துங்கமி குந்தகல் சூரிய ரெண்ணில ராய்ச்சுல வுற்றழல்வான்
இங்கன னந்தமெ ழுங்கிரி யோடுமி ழைத்தமை கண்டிளையோன்
செங்கைய யிற்படை தூண்டின னேக்கிய தோன்முகன் சீற்றமுறீஇ.

(இ - ள்.) உயர்ச்சிமிக்க கிரவுஞ்சம், கொதிக்கும் நெருப்பைக் காலுகின்ற பொறிகளாய் நிலத்தின்கண்ணும், திசைகளின்கண்ணும், வானின்கண்ணும் பொருந்த, அளவில்லாத செங்கதிர்க் கடவுளராகிச் சுற்றித் தாரகன் சுடுதலைச் செய்வான் இவ்விடத்துப் பலதிறப்பட்ட மாயைகளைக் கிரவுஞ்ச மலையோடுகூடிச் செய்தமையை இளையோன் கண்டு, சிவந்த கையின்கண்ணுள்ள வேற்படையைச் செலுத்தினன். (அங்ஙனம் செலுத்தியதை) யானைமுகத்தை யுடைய தாரகன் கண்டு சினமுற்று என்க.

(வி - ம்.) ஞெகிழி - தீப்பொறி. மாதிரம் - திசை. கல் - மலை. அனந்தம் - பல மாயைகள். இழைத்தல் - செய்தல். தோல் - யானை. (௧௧௮)

இருதுணி செய்குவ லின்னதை யென்றெதி ரெய்தலு மார்புதுளைத்
தருவரை யட்டடல் வீரர்ம யக்கம கற்றியெ ழுந்துயர்வான்
பொருதிரை யுந்திது ளைந்திமை யார்பொழி பூமழை யுண்முழுகித்
திருவளர் கைக்கணி ருந்ததெ ழுந்தது தேவர ருந்துதியே.

(இ - ள்.) இவ் வயிற்படையை இரண்டு துண்டமாகச் செய்வே னென்று எதிரேவரத் தாரகன் மார்பைத் துளைசெய்து யாவரும் கிட்டற்கரிய கிரவுஞ்சமலையைக் கொன்று (அம்மலைக் குகைக்கண் மயங்கிக் கிடந்த) வீரர்கள் மயக்கினை நீக்கி எழுந்துயர்ந்த வானத்தினை மோதுகின்ற வான்யாற்றில் படிந்து தேவர்கள் சொரிகின்ற மலர்மழையில் மூழ்கி அழகு வளர்கின்ற திருக்கரத்தின்கட் டங்கியது. இதனைக் கண்ணுற்றுத் தேவர்கள் செய்த அரிய துதி எங்கு நிறைந்தெழுந்த தென்க.

(வி - ம்.) உந்தி - நதி. கொடுமையே வடிவாகிய தாரகனையும், கிரவுஞ்சத்தையும், கொன்ற குற்றத்தை வான்யாற்றில் மூழ்கி வேல் நீக்கிய தென்பார். "வான் பொருதிரை யுந்தி துளைந்து" என்று கூறினார். (௧௧௯)

வேறு

குன்றொடு மவுணற் சாடிக் குடுமிகைக் கொண்ட செவ்வேள்
முன்றிறல் வீர வாகு முதலியோ ரெவருந் தொக்கார்க்
கொன்றிய கருணை நோக்க முதவியா டமரிற் றுஞ்சும்
வன்றிற லாளர் தம்மை வருகென வெழுப்பிக் கொண்டான்.

(இ - ள்.) கிரவுஞ்ச மலையினோடு தாரகனைக் கொன்று வெற்றியைக் கொண்ட முருகப்பெருமான் முன்னர்க் கூடினாராகிய வலியினை,

யுடைய வீரவாகு முதலிய வீரர்கட்கு (அவரவர் தகுதிக்குப் பொருந்திய) கருணை நோக்கஞ்செய்து வெற்றியைக்கொண்ட போரிலிறந்த வன்மையையுடைய வீரர்களை எழச்செய்து வாருங்கோளென ஏற்றுக்கொண்டன னென்க.

(வி - ம்.) குடுமி - வெற்றி. இதனை "குடுமியே வெற்றியுச்சி..." என்னும் நிகண்டானறிக. துஞ்சல் - இறத்தல். (௧௧௭)

தாரகன் விடுத்த தெய்வத் தறுகண்மாப் படைக ளோடும்
கூரிய மாய னேமிக் கொழும்படை நின்ற வெல்லாம்
வீரவா குவின்கை யுய்த்துப் போற்றென விளம்பிப் போர்செய்
பாரினை யெவருஞ் சூழப் பணையெழ நீத்துச் சென்றான்.

(இ - ள்.) தாரக னென்பான் செலுத்திய அஞ்சாமையை யுடைய பெரிய தெய்வப் படைகளோடும் (தாரகன் கழுத்தின்கட் கிடந்த) திருமாலின் கொழுவிய கூர்த்த சக்கரப்படையும், நின்றனவாகிய எல்லாப் படைகளையும், வீரவாகுவின் கையின்கட் கொடுத்துக் காப்பாயாக எனத் திருவாய்மலர்ந்து யாவருந் தன்னைச் சூழ்ந்துவர வெற்றி முரசு மொலிக்கத் தன்னைத் தேவர்கள் முதலிய யாவரும் சூழப் போர்க்களத்தினை நீங்கிச் சென்றன னென்க.

(வி - ம்) பணை - ஈண்டு வீரமுரசம். (௧௧௮)

போரிடை விழ்ந்தோர் மெய்யிற் பொங்கிமேற் றுளித்த நெய்த்தோர்
ஆரவேற் றுமைப்பட் டென்ன வலரிமெய்ம் முழுதுஞ் சேந்தச்
சோரியை மண்ணு வான்போற் றுடுகடற் குளித்தான் விழ்ந்த
தாரகன் வீரச் செங்கேழ் தரணிவீழ்ந் ததுவும் போன்றான்.

(இ - ள்.) போரின்கண் வீழ்ந்த வீரர்கள் மெய்யினின்றும் பொங்குதலுற்று, வானின்கட் குளித்த செந்நீரானது பொருந்துதலால் வேறுபட்டை யடைந்தாற்போலச் சூரியனுடல் முழுதுஞ் செந்நிறமடைய அச்செந்நீரைக் கழுவுவானைப்போலத் தோண்டப்பட்ட கடலின்கண் மூழ்கினான். அன்றியும், தாரகன் செந்நிறத்தோடு கூடிய வீரம் நிலத்தின்கண் வீழ்ந்ததனையும் ஒத்துளா னென்க.

(வி - ம்.) நெய்த்தோர் - செந்நீர். அலரி - சூரியன். 'சேந்து' என்பது எச்சத்திரிபு. கீர்த்தியை வெண்ணிறமாகவும், வீரத்தைச் செந்நிறமாகவும் கூறல் உபசார வழக்கு. (௧௧௯)

வெய்யவ னொளிமை யாப்ப விளங்குருக் குமரன் வீரச்
செய்யொளிப் பிழம்பு தோற்றிச் செறிந்தென மாலைச் செவ்வான்
ஐயெனத் தோன்றிற் றங்க ணவன்பெரும் புகழ்சீர்த் தென்னப்
பெய்யொளி முழுவெண் டிங்கள் பிறக்கம்வாய்ந் தெழுந்த தன்றே.

(இ - ள்.) வெங்கதிர்க் கடவுளின் ஒளிமயங்க விளங்கும் நிறத்தினையுடைய முருகனது வீரமாகிய செந்நிறத்திரட்சி வெளிப்பட்டுச்

செறிந்தாற்போல மாலைக்காலத்துச் செவ்வான மழகாகத் தோன்றியது அஞ்ஞான்று (அத்தாரகனைக் கொன்ற) குமரனது பெரிய புகழ் சிறப்புற்றதுபோல ஒளியைக் காலுகின்ற நிறைமதியின் விளக்கம் வாய்க்கப் பெற்றுத் தோன்றிய தென்க.

(வி - ம்.) குமரன் வீரப்பிழம்பு தோன்றிச் செறிந்தாற்போல மாலைக்காலத்துச் செவ்வான் தோன்றிற்றெனா வினைமுடிபு செய்க. ஐ - அழகு. சீர்த்தி - மிக்கபுகழ். இதனை "சீர்த்தி மிகுபுகழ்..." என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தா னறிக. அன்று, ஏ : அசை, மையாப்ப - மயங்க. வீரம் - தாரகன் முதலியோரைக் கொன்றதனாலுளவாகிய வீர மென்க. புகழ் வீரபாகு முதலியோரை எழுப்பியதா லுண்டாய புக ழென்க. (கஉ0)

மூவுல குய்ய வந்த முன்னவன் சீர்த்தி யோடும்
தேவர்கள் புகழும் பாங்கர்ச் சீர்த்தென நெடுவா னெங்கும்
தாவில்பல் லுடுவின் கூட்டந் தழைந்தன வாய காலைக்
காவன்மூ வர்களும் வேண்டக் கடவுளர் சிலம்பைச் சார்ந்தான்.

(இ - ள்.) மூன்றுலகங்களு முய்யும்பொருட்டுத் தோன்றிய முன்னவனாகிய முருகன் மிகுபுகழோடு தேவர்கள் கீர்த்தியும், பக்கலிலே செறிந்தாற்போல அகன்ற வானமெங்கணும் கேடில்லாத விண்மீனின் கூட்டமும் செறிந்தன ; அக்காலத்து உலகங்களை மூவரும் விரும்பத் தேவமலையை யடைந்தன னென்க.

(வி - ம்.) முன்னவன் - முருகன். சீர்த்தென - சிறந்தாற்போல. கூட்டமும் எனும் உம்மை விகாரத்தாற் றொக்கது. ஆயகாலை - அக் காலை. (கஉக)

முந்துறத் தேவத் தச்சன் முறைமையி னுங்கட் செய்த
கொந்தொளி நகரிற் சேனைக் குழாத்தொடு மசைந்தா னுகப்
பைந்துழா யலங்கன் மார்பிற் பண்ணவன் முதலோ ரெல்லாம்
வெந்திற லவுணன் புன்கோற் குட்படு வினைக டீர்ப்பான்.

(இ - ள்.) அக்கடவுளர் சிலம்பின்கண் தேவதச்ச னென்பான் முற்படச் சிற்ப நூல்முறையானே இயற்றிய செறிந்த ஒளியினை யுடைய கோவிலின்கண் படைக் குழாங்களுடன் தங்கினான். பசிய துழாய் மாலையை யணிந்த மார்பினையுடைய திருமால் முதலிய தேவர்க ளெல்லாம் வெவ்விய வலியினையுடைய சூரன் கொடுங்கோலுக்குட் பட்ட வினைகளை நீக்குபவனாகிய முருகன்.

(வி - ம்.) 'கொத்து', 'கொந்தெ'ன விகாரமாயிற்று. நகர் - ஈண் டுத் திருக்கோயில். அசைதல் - தங்கல். ஆக என்பது இடைச்சொல் இசைநிறை. புன்மை - ஈண்டுக் கொடுமை மேனின்றது. தீர்ப்பான் அசைந்தன னென்க. (கஉஉ)

விசும்பமர் கங்கை தேனு விரைநறு மலர்ப்பூந் தாருத்
தசும்பம ரமிழ்த மாதி தழைதர வருத்திக் கொண்டே.

அசும்புருக் குமரற் காட்டி யணிந்தருச் சித்த யிற்றி
இசும்பெனும் பவங்க ளேங்க வேத்தினர் தொழுது சூழ்ந்தார்.

(இ - ள்.) வானின்கட் டங்கிய கங்கை நீரும் தேனும், நல்ல மலர்ந்த மலர்களானுய மாலையும், குடங்களிற் றங்கிய அமிழ்தமு முதலாகிய வழிபாட்டிற்குரிய பொருள்கள் தமையும் பொருட்டு வர வழைத்துச் சொட்டுகின்ற அழகினையுடைய குமரனுக்கு மண்ணிப் புனைந்து, அருச்சித்து உண்பித்து, வழுக்கென்று சொல்லும்படியான பாவங்கள் ஏங்குதலுறத் தொழுது பழிச்சிச் சூழ்ந்தன ரென்க.

(வி - ம்.) தசும்பு - குடம். அசும்புதல் - சொட்டல். இசும்புதல் - வழுக்குதல். (௧௨௩)

வேறு

குடுமிகைக் கொண்ட மண்ணுமங் கலமுங்
கூர்த்தவாண் மண்ணுமங் கலமும்
அடுதிற லவுண னகர்வயிற் புரித
லடாதென வகற்சியிற் றூய்மை
படுமிட னறிந்து செய்தது நிகர்க்கும்
படையொடு பண்ணவ ரெல்லாம்
விடுசுட ரிமைக்கு முருவனை யாட்டி
வியத்தகப் பூசனை புரிதல்.

(இ - ள்.) தேவர்கள் யாவரும் சுடர்விட்டு வீசும் வடிவினை யுடைய முருகனை வேற்படையோடு மண்ணுதல் செய்து பூசனை செய்தல், மதிற்கண் ஒருவன் ஒருவனைக்கொன்று அவன் முடிக்கல முதலிய கொண்டு பட்டவேந்தன் பெயரானே முடிபுனைந்து நீராடும் மங்கலமும், இருபெரு வேந்தருள் ஒருவன் ஒருவனை வென்றுழி அங்ஙனம் வென்ற கூரிய வாளினை (கொற்றவை மேனிறுத்தி) நீராட்டும் மங்கலமும் கொல்லுந் திறலினையுடைய தாரகன்நகரிற் செய்தல் பொருந்தாதெனச் சேய்மைக்கண்ணே தூயதாகிய இடனையறிந்து செய்ததை நிகர்க்கு மென்க.

(வி - ம்.) குடுமிகொண் மண்ணு மங்கலம்—போர்செய்த மதிற்கண் ஒருவனை யொருவன் கொன்று அவன் முடிக்கல முதலிய கொண்டு பட்டவேந்தன் பெயரானே முடிபுனைந்து நீராடுதல், வாண்மண்ணு மங்கலம்—இருபெரு வேந்தருள் ஒருவன் ஒருவனை வென்றுழி அங்ஙனம் வென்ற கொற்ற வாளினைக் கொற்றவை மேனிறுத்தி நீராட்டுதல். மண்ணுதல் - கழுவுதல். உருவன் - அழகுடையவன். (௧௨௪)

கடவுளர் வழிபா டறிந்துமற் றியாமுங் கழன்மலர் வந்தனை புரியப்
படர்குது மெனவந் தணைந்தவன் போலப் பாற்கரன் றிரைக்கட லெழலும்
நடவிய கடிநாட் புடவிதாழ்ந் தமைதேர் நம்பிரா னேவலிற் றென்பால்
வடதலைக் கிரிகள் பெயர்வன புரைய வயவர்தேர் புடைவர நடந்தான்.

(இ - ள்.) கதிர்க் கடவுள் தேவர்கள் வழிபடுதலை யறிந்து யாமும் முருகனடிமலரை வணங்கப் போதுவோமென்று சேர்ந்தவன்போல அலையையுடைய கடலின்கட் டோன்ற இறைவன் நடத்திய திருமணக் காலத்து தேவர் முதலியோர் தொகலின் தென்றிசை நொய்ம்மையுற்றதை யறிந்து ஏவுதலால் தென்றிசைக்கண் வடக்கின்கண்ணுள்ள மலைகள் பெயர்வனவற்றை யொப்ப வீரர்கள் தேர் பக்கலில்வர நடந்தன னென்க

(வி - ம்.) படர்குதும் : தன்மைப் பன்மை வினைமுற்று. இஃது இல்பொரு ளுவமையணி. பாற்கரன் - ஞாயிறு. புடவி - நிலம். நம்பிரான் - சிவபிரான். வடதலை - வடநாடு. புரைய - உவமவுருபு. வயவர் - வீரர். (சஉ௦)

மண்ணிடை யாங்காங் கிறையமர் தலங்கள்
வழியினேர் பட்டன பாரா
மண்ணியாற் றருகி லிறுத்துழி மணித்தேர்
வார்கொடி புடைத்தலுந் துருவன்
நண்ணிய பிணிப்பிற் றீர்ந்துவிழ்ந் தென்ன
நரலைவீழ்ந் ததுகதி ரதுகண்
டுண்ணிறை களிப்பி னெழுந்தென மாரு
முடுபதி யொளிர்ந்தது விசும்பில்.

(இ - ள்.) நிலவுலகின்கண் இறைவ னெழுந்தருளிய வழிக்க ணெதிர்ப்பட்டனவாகிய இடங்களைத் தரிசித்துத் திருமண்ணி யாற்றங் கரையின் பக்கலிற் றங்கிய காலத்து, அழகிய தேரிற்கட்டிய நீண்ட கொடி தாக்க, துருவனென்னும் விண்மீன்றன் பொருந்திய கட்டினின் றும் நீங்கி விழ்ந்தாற்போல வெங்கதிர் கடலுள் வீழ்ந்தது. அங்ஙனம் வீழ்தலைக் கண்ணுற்று வானின்கண் அவ் வெங்கதிர்க்கு மாறுகி வெண் கதிர் உள்ளே நிறைந்த களிப்பினோடு விளங்கிய தென்க.

(வி - ம்.) நரலை - கடல். முருகன் தங்கிய ஊர் இக்காலத்து திருச்சேய்ஞலூர் என்று பெயர்பெற்றது. துருவன் - ஒருவிண்மீன். (சஉக)

இரவவ ணிருந்து காலையி லீசன் பூசனை யியற்றியவ் விசன்
பரவுபல் படைக்கு நாயக மான படைக்கலங் கொடுத்திடப் பெற்று
விரவிய சேனை யொடும்வழிக் கொண்டு வெஞ்சுரங் குளிர்தகக் கடந்து
வரமலி செந்தி லடுத்தவ ணினிது வதிந்தன னென்னையா ளுடையான்.

(இ - ள்.) இரவின்கண் ஆண்டிருந்து நாட்காலையில், இறை பூசனையைச் செய்து அவ்விறைவன், பலருந் துதிக்கும் பல படைக்கலங்கட்குத் தலைமையான பாசுபதம் கொடுக்கப்பெற்றுக் கலந்த படையொடு வழிக்கொண்டு, வெவ்விய காடு குளிர்ச்சியடைய நீங்கி என்னை அடிமை கொண்டவனாகிய முருகன் உயர்ச்சிமிக்க திருச்சீரலைவாயைப் பொருந்தி ஆண்டிருந்தன னென்க.

(வி - ம்.) நாயகமான படைக்கலம் - பாசுபதப் படை. செந்தில் - திருச்செந்தூர். (௬௪௭).

முந்துதா னளித்த வரமும்பின் றந்தை
யருளுநா ளிறுதியு முழுதும்
புந்திகோண் டிருந்தும் புறப்பொருண் மரபு
புவித்தலை வழங்கிலக் கியமாச்
சிந்தைசெய் தவுணர் தோற்றமும் வலியுஞ்
செய்கையு முழுவதுங் கடாவி
அந்திலொற் றுக வாகுவை யைய
னகற்றின னவனுந் தாழ்ந் தெழுந்தான்.

(இ - ள்.) முருகப்பெருமான் முன்னர்த் தான் வழங்கிய வரத்தினையும், அதன் பின்னர்த் தன் தந்தையாகிய இறைவனருளிய வாணாளின் முடிவையும் தானறிந்து வைத்தும், புறப்பொருளிலக்கணம் புவியின்கண் வழங்குதற் கிலக்கியமாக நினைந்து அவுணர்கள் பிறப்பும், அவர்கள் வலியினையுஞ் செய்கையினையும், பிறவற்றினையும் வினவி அவ்விடத்துத் தூதுவனாக வீரவாகு என்பானைப் போக்கினன், அவ்வீரவாகுவும் தாழ்ந்து எழுந்தனன் என்க.

(வி - ம்) முருகன் - தானளித்த வரம், இப்படலம் பத்தாம் செய்யுளில் "தறுகண் ணவுணக் குலத்துச் சாருதிர்" என்றது. புறப்பொருண் மரபு, புறப்பொருளிலக்கணம், இலக்கியங் கண்டிலக்கண மியம்பல் முறையாகலின், பின்னர்ப் புறப்பொரு ளிலக்கணஞ் செய்தற் கேதுவாக முருகன் முன்னர்த் தூதரை யனுப்பிப் பின்னர் போர்க்குச் செல்லுதற்குத் துணிந்தா னென்பார், "புறப் பொருண்மரபு புவித்தலை வழக்கிலக்கியமாச் சிந்தை செய்து" என்றார். அந்தில் - அவ்விடம். (௬௪௮)

அளைதோறு மவுண ரரக்கர்நோற் றிருந்தா ரழிதகப் பிலமது புகுத
வளைமலி கந்த மாதன மிவர்ந்து வயங்குபே ருருக்கொடே ழுலகும்
களிமிரு சூர னகரமு நோக்கிக் காயமே வழியெனச் செல்வான்
தளைவுறும் வீர சிங்கனை அழித்துத் தடவிய விலங்கைகுப் புற்றான்.

(இ - ள்.) கந்த மலையின் குகைகள் தோறும் தவஞ்செய்து கொண்டிருந்தாராகிய, அவுணரும், அரக்கரும், வருந்த, அம்மலை பாதலத்தின் கட் செல்லவும், எல்லாவளனு மலிந்த முகந்தமாதன மலையின் மீது ஏறி விளங்குகின்ற பெரிய வடிவினைக்கொண்டு ஏழுலகங்களையும், களிப்பு மிகுந்த சூரனது நகரத்தினையும் பார்த்து வானமே வழியாகச் செல்பவனாகிய வீரவாகு தன்னைத் தடுத்த வீரசிங்க னென்பவனை யழித்துப் பெருமை பொருந்திய இலங்கைத் தீவினிடத்துக் குதித்தான்.

(வி - ம்.) பேருரு - விச்சுவரூபம். காயம் - வான். தளைவுறுதல் - தடுத்தல். குப்புறல் - குதித்தல். (௬௪௯).

ஆழியு ளிலங்கை யழுந்தவாங் கெதிர்ந்த
வதிவீர னுயிர்குடித் தேகி
வாழிய வீர மகேந்திரம் புக்கு
வாயில்காத் தமர்கய முகத்துப்
பாழியந் தடந்தோட் பதகனைச் சவட்டிப்
பட்டினம் படர்ந்தருஞ் சிறையில்
தாழுறுஞ் சயந்த னுளத்தினைத் தெருட்டிச்
சார்ந்தனன் சூர்முத லவைக்கண்.

(இ - ள்.) கடலின்கண்ணே இலங்கைத்தீவான தழுந்த அப்பொழு தெழுந்த அதிவீர னென்பானுயிரை யுண்டு சென்று, சூரன் நகரமாகிய வீரமகேந்திரத்தின்கட் சென்று அங்நகர் வாயிலைக் காவல்செய்து தங்கிய வலியுடைய பருத்த தோளினையும், யானைமுகத்தினையுமுடைய பாதகனைக் கொன்று அப்பட்டினத்துச் சென்று நீங்குதற்கரிய சிறையின்கண் தங்கும் இந்திரன் மகனாகிய சயந்த னென்பான் மனத்தினைத் தெருளுறச் செய்து சூரனாகிய முதல்வ னவைக்கட் சென்றன னென்க.

(வி - ம்.) அதிவீரன் - ஓர் அசுரன். வாழிய : அசை. பதகன் - தீவினையாளன். சயந்தன் - இந்திரன்மகன். (௧௧௦)

எவ்வெவ வையுந் தவ்வெனப் பொலிந்த வீடிலாச் சூரன்வீற் றிருந்த
அவ்வவைக் களமு மவன்றவி சொளியு மாங்கவன் றேசுமை யாப்பச்
செவ்விய குமர னருளினோர் தவிசு சிவணலுஞ் சென்றவ ணிருந்தான்
தெவ்விய சூர னெரியெழ விழித்துச் சிறுவநீ யாரென மொழிவான்.

(இ - ள்.) எவ் வெத்தன்மை யுடையாராகிய பெரியாரவைக் களனும் பொலிவழியப் பொலிவுற்ற தனக்கிணையில்லாச் சூரன் வேறொருவர்க்கில்லாத சிறப்புடன் எழுந்தருளியிருந்த அந்த அவைக் களமும் அவன் தவிசினொளியு மவனழகும் மழுங்க நீதியினையுடைய குமரனருளின் ஓர் தவிசானது பொருந்தச் சென்று அவ்விடத்திருந் தனன். எல்லா வன்மையுங் கொண்ட சூரன் தீயுண்டாக விழித்துச் சிறுவனே நீயார் என்று கேட்கச் சொல்வான் என்க.

(வி - ம்.) தவ்வென - பொலிவழியா. தெவ்விய-கைக் கொண்ட. (௧௧௧)

முக்கண னுயிர்த்த முருகவேள் விடுப்ப
முன்னிய தூதன்யா னீங்குப்
புக்கதென் னெனிற்கேள் பொன்னுல கழித்துப்
புலவரைச் சயந்தனோ டழியத்
தொக்கபல் லூழி வருத்துதி யன்றே
துயருமச் சிறைதுமித் தொழிப்பின்

ஒக்கலோ டின்னும் வாழ்குவை யன்றே
லூர்பிபோ லொருகணத் திறப்பை.

(இ - ள்.) மூன்று கண்ணினையுடைய இறைவன் பெற்ற முருக வேள் செலுத்த அடைந்த தூதுவன்யான். இவண் புகுந்ததற்குக் காரணம் என்னையெனிற் கூறுவல் கேட்பாயாக: பொன்னுலகத்தினைக் கெடுத்துத் தேவர்களைச் சயந்தனோடு வருந்தக்கூடிய பல ஊழிக் காலமாக வருத்துகின்றாய் அல்லையோ? தேவர்கள் துன்பினையடையும் சிறையினைக் கெடுத்து, நீக்கின் நின் சுற்றத்தோடென்று மின்புற்று வாழ்வாய். அங்ஙனஞ் சிறைவீடு செய்யாயாயின் உன் தம்பியாகிய தாரகனைப்போல ஒருகணப் பொழுதின்கண் இறந்தொழிவை, என்க.
(௧௯௨)

சலந்தரன் முதலா நுன்குலத் தலைவர் தருக்கினுற் றேவரை யின்புக்
கலந்தன ராழியக் கவற்றிமாய்ந் ததுநன் றறிதியே யன்றியுந் தளரா
வலந்திரு வீரம் வரமிக வுடையார் வல்லுத லில்லவர்க் கவற்றின்
நலந்தரு மேசோ லவரழு நீரே நலனழி படையென வறியாய்.

(இ - ள்.) சலந்தர னென்பவனை முதலாகக் கொண்ட உன் குலத்துத் தோன்றிய தலைவர்கள் மனச்செருக்கால் தேவர் இன்புறுதற்கு அலந்தாராகி வருந்தக் கவலச்செய்து மறைந்ததைப் பெரிது மறிவாய். அன்றியும், என்றுந் தளர்வுறாத வெற்றியினையும், வீரத்தினையும், வரத்தினையும் மிகுதியாகப் பெற்றவர் இவைகளில் வன்மையில்லாரை வருத்தின் அங்ஙனம் வருத்தினார்க்கு நன்மையினைத் தரவற்றோ, தர வல்லதன்று; அவ் வன்மையில்லார் அல்லற்பட்டாற்றா தழுத கண்ணீரே அவ்வலியார் செல்வத்தினை யழிக்கும் படையாமென்று நீ அறிவா யென்க.

(வி - ம்.) வன்மையில்லார் ஈண்டுத் தேவராகவும், அவர் அழுத கண்ணீரைப் படையாகவுங் கொள்க. "இதனை,

"அல்லற்பட் டாற்றா தழுதகண்ணீ ரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை"

என்னுங் குறளா னறிக. (௧௯௩)

ஆதலாற் றேவ ருருஞ்சிறை சீத்தின்
பார்பதி யென்றுரைத் தீங்குப்
போதென விடுத்தா னென்னலு முளத்துப்
பொங்கிய வெகுளிமீக் கிளைப்ப
ஆதநி வெனக்குக் கிளத்தலா னுமைய
னறிவினு முருகனே போலும்
வேதனை யிரிந்தோர் தமக்குநன் றுறுப்பன்
விடுவனோ சிறையகத் தோரை.

(இ - ள்.) ஆதலானே தேவர்களை நீங்குதற்கரிய சிறையினின்றும் நீக்கி இன்பினை அடையக் கடவையென்று சொல்லி ஈங்கு வருக, என்று செலுத்தினனென்று சொல்ல, ஞானுளத்தின்கட் பொங்கிய சிற்ற மானது, மேலே தோன்ற மிக்க அறிவினை! ஆயிரத்தெட் டண்டங் களையுமாளும் எனக்குச் செவியறிவுறுத்தலான் நுந்தலைவன் வடிவானே யன்றி அறிவானும் இளையான்போலும். இங்குநின்றுந் தப்பியோடிய தேவர்கட்கும், துன்பினைப் பெரிதும் சேர்ப்பவனாகிய யான் சிறையகத் துள்ளோரை விடுவனோ என்றான்.

(வி - ம்.) சித்து - கெடுத்து. மதி - முன்னிலையசை. உம்மை - எச்ச வும்மை. (கசுச)

எம்பிபோ லெனையு நினைந்துனை விடுத்த
விளையவன் யானென வுயங்கத்
தம்பியை யெம்பி யாக்குவன் றரும
மன்றெனத் தாழ்த்தனன் வேற்கை
நம்பியை யெம்பி செல்விட நென்ன
னடத்துவன் வீரமன் றேயென்
றம்புவி வியப்பச் சிறுவரால் வேற
லமர்ந்துளே னேகுதி யென்றான்.

(இ - ள்.) என் றம்பியாகிய தாரகனைப்போல என்னையும் வலியில னென்று கருதி உன்னைத் தூதுவனாக விடுத்த இளையோனாகிய அம் முருகன், தம்பியை இழந்த என்னைப்போல வருந்த அவன் தம்பியாகிய உன்னை எம்பி இறந்தாற்போல இறக்கும்வண்ணஞ் செய்வேன். தூது வனைக் கோறல் தரும மல்லவென்று தாழ்த்திருந்தேன். வேலினைக் கையிலுடைய முருகனை என் தம்பியாகிய தாரகன் சென்ற வீரசுவர்க் கத்திற்கு நென்னலே செலுத்தி யிருப்பேன். (இளைஞரைக் கோறல்) வீரர்களுக்கு வீரமல்ல வென்று கருதி அழகிய உலகின்கண் ணுள்ளார் வியப்ப எனக்கிளைய சிறுவர்களால் வெல்லுதலை விரும்பியுள்ளேன். நீ செல்வாயாக என்று கூறினான்.

(வி - ம்.) இளையவன் - முருகன். உயங்க - வருந்த. என் தம்பி யைப்போல இறக்கும்படி செய்வேன் என்றவாறு. வேற்கைநம்பி - முருகன். தம்பியை : முன்னிலைப் படர்க்கை. (கசுகு)

இகந்துரை கேட்ட வீரனுஞ் சினத்தி
லியம்புவன் மான்முத லோர்தம்
அகந்தையைத் தணித்த வகந்தையா யுண்மை
யறைந்தனை தத்துவந் தோறும்
திகழ்ந்திடு மண்ட மனப்பில வவற்று
ணின்னுறு மண்டத்தா யிரத்தெட்
டுகந்துளன் யானவ் வனைத்துநின் றனிக்கு
மொருமுத லுனைவிடு முருகன்.

(இ - ள்.) இகழ்ந்துரைத்த சொல்லினைக் கேட்ட வீரவாகுவும் சீற்றத்தால் சொல்வான்; திருமால் முதலியோர் மனச்செருக்கைத் தணித்த மனச்செருக்கினை யுடையவனே உண்மையையே கூறினாய். தத்துவக் கூட்டங்கள்தோறும் பொருந்துகின்ற அண்டங்கள் எண்ணில வாம். அவ் வண்டங்களுள் வைத்து நிலத்தினிடத்துப் பொருந்திய அண்டங்களுள் ஆயிரத் தெட்டண்டங்களை உயர்வாகக் கொண்டிருக் கின்றாய் யான்; அத் தத்துவக் கூட்டங்கள் எல்லாவற்றிலுமுள்ள அண்டங்களைக் காக்கும் ஒப்பற்ற தனிமுதல் உன்னைச் செலுத்திய முருகன்.

(வி - ம்.) இம் முப்பத்தாறுங் கவிமுதல் ருகஆம் கவிவரை (134, 135) கவியில் சூரன் கூறிய வீரமொழிகளுக்கு வீரவாகு தேவர் உரை செய்கின்றார். இப்பாட்டால் சூரன் மூதறிவெனக்குக் கிளத்தலான் என்ற பகுதியிலுள்ள "எனக்கு" என்னுஞ் சொல்லுக்குரை கூறுகின்றார். அகந்தை - செருக்கு. தத்துவங்கடோறும் அண்டங்க ளுளவென்பதை,

"தராதல முதலாந் தத்துவ கண்டந்
தனித்தனி யாயிர கோடி"

என்னும் நந்தி உபதேசப் படலத்தா னறிக. (கஙசு)

என்றுமோ ரியல்பி னின்றதன் னிலைமை
யிருந்தவர்க் கறிவுறுப் பான்போல்
என்றுமவ் விளமை தணத்தலின் மையினல்
யாவரு முருகனென் றிசைப்பர்
நன்றவன் கொளுந்து முதுக்குறை வென்று
நலனெனு மிளமையிற் றணவா
தோன்றலி னறிவி னுனுமந் நாம
முள்ளதெக் காலமு மவற்கே.

(இ - ள்.) எஞ்ஞான்றும் ஒரு பெற்றித்தாய் நின்ற தன்னியற்கை நிலையினைப் பெரிய தவத்தினர்க்குச் செவியறி வுறுப்பவன்போல எக் காலத்தும் அவ்விளமை நீங்குதலின்மையால், யாவரும் இளையோ னெனப் பொருள்கொள்ளும் முருகனென்னுந் திருப்பெயருடையா னென்று கூறுவர். அவன் பெரிதுந் தன்னடியவர்க்குப் பேரறிவு எஞ்ஞான்று நன்மையினின்று மிளமையினின்று நீங்காது பொருந்தலின், திருவுருவானே யன்றி அறிவினானும் அம்முருகனென்னுந் திருப்பெயர் இளையோனுக்கு எக்காலத்து முளதாமென்னும் பொருள்படக் கூறினா ரென்க.

(வி - ம்.) சூரன் அறிவிலா முருகனே யென்று கூறிய தொடர் மொழிக்குரை யுரைத்தன னென்க. முன்னிரண்டடியால் வடிவானிளை யவ னென்று சூரன் கூறியதற்கு ஏதுக்காட்டி முருகன் யாவருக்குஞ் செவியறிவுறுக்கு முதுக்குறைவானது நலனென்று மிளமையின் நீங் காது பொருந்துதலான் அறிவினாலு முருகனுவா னென்று வற்புறுத் தினார். முதுக்குறைவு - பேரறிவு. (கஙஎ)

ஆரடு திகிரிக் கூவிரத் தடந்தே
ரடுதிறற் களிற்றினம் பரிமா
வீரரைப் பல்கா லிடமறக் கஞற்றி
வெஞ்சம ருழப்புழி யுயிர்க்கு
வாரமுற் றிரிந்த வெமர்க்குவே தனையை
மண்டிய வெமரொடு மிறந்தியான்
பாரகத் துறுப்ப னிதுவரும் பொருட்டும்
பண்ணவர் படுசிறை விட்டேன்.

(இ - ள்.) ஆர்கள் பொருந்திய உருளைகளோடுகூடிய மொட்டோடு சேர்ந்த பெருமை பொருந்திய தேரினோடு வலியினையுடைய யானையும் செலவினையுடைய குதிரையும், காலாளுமாகிய படையினைப் பலமுறைப் போர்க்களத்தி லிடமின்றாகச் செறித்துக் கொடிய போரினைச் செய்யுங்காலத்து உயிரின்கண் அன்புகொண் டோடிய எம்மவராகிய அவுணர்க்குத் துன்பினைப் பூமியின்கண் (உயிர்மாட்டின்பு கொள்ளாது) என்னொடு பொருந்திப் போரினைச்செய்த எம்மவரோடு யான் இறந்து சேர்ப்பன்; உயிரின்கண் அன்புகொண்டு ஓடிய அவுணர்க்கும், என்னொடு பொருந்திய அவுணர்க்கும் இத்துன்பம் உளவாம் வண்ணம் தேவர்களைப் பொருந்திய சிறையின்கணின்றும் நீக்கென்றும் பொருள்கொளச் சொல்கின்றாய் என்க. சூரனிருப்பினன்றே முருகனை வென்று நமக்கின்பினை யளிப்பன். அவனிறத்தல் துணிபாகலின், நாம் முன் முருகனொடு பொருது இறக்கவேண்டுமென்றோடிய அவுணர்கள் சூரன் பிறக்கிட்டோடாத வீரர்களுடனே போர் செய்திறந்த பின்னர் அந்தோ சூரனிருப்பின் நாம் இவ்வின்பினை யடைவோமே யென்று நினைக்கும்வண்ணம் வேதனையைச் செய்வேன் என்னும் பொருள்படச் சொல்கின்றாயென்று வீரவாகு தேவர் கூறினார்.

(வி - ம்.) சூரன் "வேதனை இரிந்தோர் தமக்குநன் றுறுப்பன் விடுவனோ சிறையகத் தோரை" என்று கூறிய தொடர்மொழிகளுக்குப் பொருள் கூறினார். (௧௨௮)

உம்பரைத் தாங்க வருமுரு கனையே நானென வும்பர்க ளுயங்கத்
தம்பியா நினையு மெம்பியாக் கொள்வ னனக்கது தருமமன் மையினும்
நம்பிமற் றிசையா னருள்வழிச் சிறையை நலியஞா தியவென வுளத்துப்
பம்பிய மான முலப்பில தகனுற் பணிந்தது செய்கிலன் றுழ்ந்தேன்.

(இ - ள்.) தேவர்களைத் தாங்கும் பொருட்டுத் திருவுருக்கொண்டெழுந்தருளிய முருகக்கடவுளை யானாகவும், தேவர்கள் வருந்த அம்முருக னிளவலாகிய நின்னையும் என் தம்பியாகிய தாரகனாகவுங் கொள்வேன்; பதிப்பொருளாகிய தனக்கு பசுத்தன்மையாற் செருக்குற்ற எமரோடு கலத்தலாகிய தொழில் அறமிலையாகாதாதலான் நம்பியாகிய முருகன் உடன்படான் (அவ்விறைவன்) அருள்வழியே தேவர்கள் சுற்றத்தாரன்றோ (அவரை இறைவன் கட்டளையில் சிறைவீடு செய்யின் நகைசெய்வரே) யென்று உளத்தின்கண்ணே நிறைந்த மானமானது

கெடாத நிலைபெற்றவனது. அங்ஙனம் நிலைபெற்றிருத்தலான் அவனைப் பணிந்து அங்ஙனஞ் சிறைவீடு செய்யாது தாழ்த்தேனென்று பொருள் கொள்ளும் வண்ணங் கூறுகின்றுயென்றுரென்க.

(வி - ம்.) இறைவனோடு சூரன் கலந்து வாழ்தல் தேவர்கட்கு உடன்பாடன்மை தோன்ற "உம்பர் களுயங்க வெம்பியாக் கொல்வ னென்றுர்" தேவரைக் காக்கவந்த இறைவன் அத்தேவர்க்குப் பகைவ ராகிய அவுணரை அடிமையாகக் கோடல் அவனிறைமைக் குணத்திற் குச் சாலா தென்பான் "தனக்கது தருமமன்மையினல் நம்பிமற் றிசை யான்" என்றுர். 135ஆம் செய்யுளில் முன்னிரண் டடியிலுமுள்ள தொடர்மொழிகட்குப் பொருள் கூறினுர். உது - அது. ஞாதியர் - சுற்றத்தார். (௧௩௯)

நெருநலே பணிந்து முற்றவப் பயனு
லெம்பிசெ னீள்கயி லாயம்
முருகனை விடுப்பன் மொய்யம ரிகந்து
முரிதிரு விழைவது வீரர்
தருமமன் மையினல் வீரமன் றெனப்போர்
தனிற்படுந் தகைமையே வேட்டிங்
கொருசிறு மீனு நீயொளி வேற
லுவந்தன னெனக்கொள வுரைத்தாய்.

(இ - ள்.) முருகனை நென்னலே வணங்கி அவனருள் வழிபட்டுத் தேவர்களைச் (சிறைவீடு செய்து) முன்னர்ச்செய்த தவப்பேற்றினுல் என்றம்பியாகிய தாரகன் சென்ற கைலைக்கு எழுந்தருளச் செய்திருப் பன். மண்டிய போரின்கண் ணின்றும் நீங்கிக் கெடுதற்கரிய பெருமை பொருந்திய செல்வத்தினை விழைவது போர்வீரர் தருமமல்ல வாகலான், வீரமல்ல வென்று போரிலிறக்கு மியல்பினையே விரும்பி இங்குள்ள ஒரு சிறிய விண்மீன்போன்ற யான் பேரொளிப் பொதுமையினையுடைய சூரியன் முதலிய ஒளிப் பொருள்களை வெல்லுதலைக் கருதினேனென் னும் பொருள் கொள்ளும் வண்ண முரைத்தா யென்று வீரவாகு தேவர் கூறினுர்.

(வி - ம்.) போர்செய்து போரிலிறப்பதே வீரர்களுக்குச் செல்வ மாதலின் யான் இறைவன்பால் அடிமையாகாது போர்செய்து இறப்பே னென்பான் "முரிதிரு விழைவது வீரர்தரும மன்றெனப் போர்தனிற் படுந் தகைமை வேட்டு" என்றுர். மீனென்றமையால் சிறு வரால் மீனென்றுங் கூறுவர். முரி யெனபது விகாரம். (௧௪௦)

இன்னதுன் கருத்தே லிங்ஙன மாக
வென்றனன் வீரர்கள் வீரன்
அன்னது செவியிற் புகுந்தெனக் கண்க
ளங்கிகான் றுடன்மயிர் பொடிப்ப
மன்னுயிர் கோறல் பழியிவற் பற்றி
வன்சிறை யிடுமினென் றுருத்துத்

தன்னாகு குன்னோ ராயிரர் தம்மை
யேயினன் றறுகண்டா ளவுணன்.

(இ - ள்.) வீரர்களுள் வைத்து வீரனாகிய வீரவாகுதேவர், சூரனே! உன்னெண்ணம் இதுவேயாயி னிங்ஙனமேயாக என்று கூறினர். அஞ்சாமையோடு கூடிய வாட்படையை யுடைய சூரன் வீரவாகுதேவர் சொல்லியது செவியின்கண்ணே செல்லக் கனக னெருப்பைக்கான்று உடலில் மயிர்சிலிர்ப்ப (தூதனாக வந்தவன்) நிலைபெற்ற உயிரினைக் கோறல் செய்தல் பழியாகும்; இவனைப் பிடித்து வலிய சிறையின்கண் ணிடுமின்க ளென்று கோபித்துத் தன் பக்கலிலுள்ள ஆயிரம் வீரர்களை ஏவினு னென்க.

(வி - ம்.) அங்கி - தீ. கோறல் - கொல்லுதல். உருத்து-சினந்து.
(கருக)

முற்றின ரவரை முடிச்சிகை பற்றி மோதிமுன் விட்டுநீ யழிவை
பற்றுள வெவையு மின்னினி நுகர்தி படர்குவல் யானென வெழுந்தான்
வெற்றிகொள் வீரற் பற்றினை தம்மோ வெனவிறற் சூரனையர் தலைவன்
நற்றிற லுடைய சதமுகற் குரைப்ப நன்றெனப் படையினே டெதிர்ந்தான்.

(இ - ள்.) அவ் வாயிரம் வீரரும் வீரவாகுதேவரைச் சூழ்ந்தனர். அங்ஙனஞ் சூழ்ந்த வீரர்கள் குடுமியைப்பற்றி முடியோடு முடி மோதச் செய்து சூரன் முன்னர்ப் போகட்டு, நீ விரைவில் அழியக்கடவாய், ஆதலால் உனக்கு விருப்புள்ள எல்லாப் பொருள்களையும், இப்பொழுதே நுகர்வாய், யான் இறைவன்பாற் செல்வேன் என்று சொல்லி எழுந்தனன். (அதனைக் கண்ட சூரன்) வெற்றியைக் கொண்ட இவ் வீரனைப் பற்றித் தருவாயாக! என்று படைத் தலைவனாகிய நல்ல வலியினையுடைய சதமுகனென்னும் அவுணனுக்குச் சொல்ல அவனும் நல்லதென்று படையோடு சென்றா னென்க.

(வி - ம்.) இன்னினி - இப்பொழுது. மோ : அசை. சதமுகன் - படைத்தலைவன்.
(கருஉ)

வேறு

இலக்க வீரர்கள் படைவிடச் சூலிகை
யிடந்தொன்று மேலோச்சித்
தொலைக்க நேர்ந்துடல் சதமுகத் தவனுயிர்
துரந்துபே ருருக்கொண்டான்
நிலக்கட் டாட்டுணை பெயர்தொறுஞ் சுவட்டின்வா
ரிதிப்புன லிமிர்ந்துரை
அலைக்க வைம்பது வெள்ளங்கா வலர்பொர
வவையகத் துயிர்மாய்த்தான்.

(இ - ள்.) இலக்கம் வீரர்கள் படையினைச் செலுத்தா நிற்க (அவையின்கண்ணுள்ள ஒரு) மேன்மாடத்தினைப் பறித்து அவர்கள் மேலே எறிந்து தன்னைக் கெடுக்க எதிர்ந்து மாறுபடுகின்ற சதமுக னுயிரை நீக்கிப் பேருருக் கொண்டனனாகி நிலத்தின்கண் இணையடிகளைப் பெயர்த்து வைக்குந்தோறும் அடிச்சுவடுகளில் கடனீரெழும்பி அவைகள் வருத்த ஐம்பது வெள்ளமென்னும் எண்ணையுடைய வீரர் போர் செய்ய அவையின்கண்ணே அவருயிரை மாய்த்தன னென்க.

(வி - ம்.) சூளிகை - மேன்மாடம். இடந்து ஓச்சி பேருருக் கொண்டன னென்க. (கசஅ)

மேரு மால்வரை பொருமொரு தூவிகை விரைந்தகழ்ந் தெடுத்தோச்சிச்
சூரன் பேரர சவையழித் தோங்கிய சூளிகைக் குலந்தம்மால்
வீரர் மாளிகை மேனிலை மண்டபம் விற்பயி லெடுஞ்சாலை
கார ளாவிய கடிமதின் முழுவதுங் கனன்றுயி ரொடுஞ்சாய்த்தான்.

(இ - ள்.) மேகந் தங்கிய மேருமலையை யொத்த தூவியினைக் கையால விரைந்து தோண்டி யெடுத்து எறிந்து சூரன் பெரிய அரசவை யைக் கெடுத்து அவ் வரசவையின்கண்ணுள்ள உயர்ந்த சிகரங்களால் வீரர் இல்லவரிசையும், மேன்மாடங்களும் விற்றொழில் கற்கும் சாலைகளும், மேகமண்டலத்தைப் பொருந்திய மதின்முழுவதுஞ் சீற்றங் கொண்டு அவற்றிலுள்ள உயிரோடுங் கெடுத்தன னென்க.

(வி - ம்.) தூவி - சிகரம். ஸ்தூவி யென்னும் வடசொற் றிரிந்து நின்றது. சூளிகை - மேன்மாடம். (கசகூ)

ஆயி ரங்கர மைந்துநூ றெனுமுடி யவுணரா யிரர்சூழ்ந்து
மாயி ரும்படை வழங்கினர் தண்டென மராமர முரித்தேந்திச்
சேயி ளந்தசை மூளைநெய்த் தோர்கரஞ் சிரமடி நிலம்விழத்
தாய டர்ந்தவர்ப் புடைத்துயிர் முழுவதுந் தனிவிசும் புறவுய்த்தான்.

(இ - ள்.) ஆயிரம் கைகள் அமையப்பெற்று ஐந்நூறென்னுந் தலைப்பையுடைய அவுணர்கள் ஆயிரவர்கள் சுற்றி மிகப்பெரிய படைகளைத் தொடுத்தனர். தண்டமென்று சொல்லும்வண்ணம் கடப்பமர மொன்றினை முரித்துக் கையிற் பிடித்துச் சிவந்த இளந்தசையும், மூளையும், செந்நீரும், கையும், தலையுமுடியுமாகிய இவை நிலத்தின் கண் வீழத் தாவிப் பொருந்தியவர்களை அடித்து அவர்களுயிர்களை வீர சுவர்க்கத்தின்கட் செலுத்தினன் வீரவாகு என்க.

(வி - ம்.) மராமரம் - கடப்பமரம். நெய்த்தோர் - செந்நீர். தாய் - தாவி. விசும்பு - ஈண்டு வீரசுவர்க்கம். (கஎ)

வீரர் வெள்ளமீ ராயிரம் பரிவெள்ள மொராயிரம் வேழந்திண்
தேரி ரண்டுமா யிரவெள்ளஞ் சேனைகாப் பாளருந் தற்சூழச்
சூரு யிர்த்தவன் வச்சிர வாகுநூ றுவனெங்க ளுளனென்றே
யேரி யற்றிய வடுகனங் குறித்துநேர் போந்தனன் புகுமெல்லை.

(இ - ள்.) இரண்டாயிர வெள்ளமென்னும் வீரர்களும், ஓராயிரம் வெள்ளம் குதிரைகளும், ஆயிரம் வெள்ளம் யானைகளும், ஆயிரம் வெள்ளந் தேர்களும், படைத்தலைவருந் தன்னைச் சூழ்ந்துவரச் சூரன் பெற்றவனாகிய வச்சிரவாகு வென்பவன் தூதுவன் யாங்குளா னென்று போரினைச் செய்யப் போர்க்களத்தை நீங்காது வீரவாகு தேவருக்கெதிரே போந்தனன். அங்ஙனம் போந்தகாலை என்க.

(வி - ம்.) வெள்ளம் - ஒருபேரெண். சூர் - சூரபதுமன். (௧௪௩)

அண்டம் விண்டெனத் தோள்புடைத் தார்த்தன
னடமர் விழைவீரன்
மண்டு தானைகள் வெயர்த்தன வயிர்த்தனன்
மறமிகு சூர்மைந்தன்
கொண்ட தானையைச் செலுத்தினன் ஞனைபுங்
குலாய்ப்படை யொருங்குய்த்த
மிண்டன் மெய்யவை யழுந்திநெய்த் தோருக
வெகுண்டனன் மேற்கொண்டான்.

(இ - ள்.) வெற்றியைத் தருகின்ற போரை விரும்புகின்ற வீரவாகு அண்டம் பிளந்ததென்று சொல்லும்வண்ணம் தோள்களைத் தட்டி முழக்கஞ் செய்தான்; அங்ஙனம் முழக்கஞ் செய்ததைக் கேட்ட நெருங்கிய படைகள், வியர்வையடைந்தன. வீரமிகுந்த சூரன் மகன் ஐயுற்றனனாகித் தன்வசத்தில் கொண்டுள்ள படையைச் செலுத்தினான். படைகளும் போரிற் பொருந்தி, ஒருசேரப் படைக்கலங்களைச் செலுத்தின. வலியினையுடையானாகிய வீரவாகு மெய்க்கணப் படைகளழுந்தலாற் செந்நீர் உகாநிற்கச் சினமுற்றுப் போரினை மேற்கொண்டா னென்க.

(வி - ம்.) அயிர்த்தல் - ஐயுறல். மிண்டன் - ஈண்டு வீரவாகு.
(௧௪௪)

வேறு

இரத மாயிரத் திரதமா யிரம்புடைத் திறுத்தான்
கரிக ளாயிரத் தாயிரங் கரிகடாய்க் கவிழ்த்தான்
பரிக ளாயிரத் தாயிரம் பரிவிட்டுப் படுத்தான்
சரிய வீரரா யிரரையா யிரவராற் றகர்த்தான்.

(இ - ள்.) ஆயிரந் தேர்களை யெடுத்து அத்தேர்களால் ஆயிரந் தேர்களை யடித்துக் கெடுத்தான்; ஆயிரம் யானைகளை விட்டெறிந்து ஆயிரம் யானைகளை முகங் கவிழும்படி செய்தான். ஆயிரங் குதிரைகளை விட்டெறிந்து ஆயிரங் குதிரைகளைக் கொன்றனன். ஓடும்படி ஆயிரம் வீரர்களை ஆயிரம் வீரர்களாற் சிதறும்படி செய்தான்.

(வி - ம்.) சரிதல் - ஓடல். (௧௪௫)

தாளி னற்சில தடங்காத் தாற்சில தடவுந்
தோளி னற்சில சுலாவலிற் சிலமுறு வலிக்கும்
கோளி னற்சில கூர்ந்தெழு முயிர்ப்பினுற் சில்ல
வாளி மொய்ம்பினன் விழிப்பினுற் சிலபடை யவிந்த.

(இ - ள்.) படைகள் வீரவாகுவின் தாளினுற் சில்லவும், பெருமை பொருந்திய கைகளாற் சில்லவும், பகையொடு மாறுபட்ட தோளினுற் சில்லவும், இடசாரி, வலசாரிய சஞ்சாரவுறலாற் சில்லவும், வீரத்தாற் புன்சிரிப்புச் செய்யுங் குணத்தினுற் சில்லவும், மிக்கெழுகின்ற பெருமூச்சினுற் சில்லவும், ஆளிபோன்ற வலியுடைய வீரவாகுவின் கட்பார்வையாற் சில்லவும் கெட்டன வென்க.

(வி - ம்.) தடவு - மாறுபாடு. "தடவென்கிளவி கோட்டமுஞ் செய்யும்" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தா னறிக. மொய்ம்பு - வலி. (க௮௯)

இன்ன வாறுநா லாயிர வெள்ளமு மிகலி
முன்னு றும்படைத் தலைவரு முறைமுறை விளிய
மன்னர் மன்னவன் மதலைவெஞ் சினந்தலைக் கொண்டு
கொன்னும் வண்சிலை குனித்தொ ராயிரங்கணை விடுத்தான்.

(இ - ள்.) இவ்வண்ணம் நாலாயிரவெள்ளப்படையுமாறுபட்டுப், போரில் முற்படுஞ் சேனைத்தலைவரும் முறை முறையாக இறக்க, மன்னர்களுள் வைத்து மன்னனாகிய சூரன்மகன் வெவ்விய சீற்றமீக்கொள்ளுதலால் அச்சத்தைச் செய்யும் வளைந்த வில்லினை வளைத்து, ஆயிரங் கணைகளைச் செலுத்தினன்.

(வி - ம்.) இகலி - மாறுபட்டு. விளிய - இறப்ப. மன்னவன் - சூரபதுமன். (க௯௦)

விடுத்த கோலொரு கையினுற் பிடித்துமென் றுகளாப்
படுத்த னன்பதி னுயிரம் பகழிக டொடுத்தான்
அடுத்த தண்டினுற் சிதர்த்தன னயுதம்விட் டெறுழ்த்தண்
டொடித்தொ ராயிர மவயவந் தோறும்புக வுகைத்தான்.

(இ - ள்) சூரன்மகன் விடுத்த அம்புகளை ஒருகையினுற் பற்றி மெல்லிய துகளாம்படி வீரவாகுதேவர் கெடுத்தார். அவன் பதினுயிரம் பகழிகளைத் தொடுத்து வலியினையுடைய தண்டத்தினை யொடித்து வீரவாகுதேவர் உறுப்புக்கடோறும் ஆயிரம் அம்புகள் செல்லும்வண்ணஞ் செலுத்தினன் என்க.

(வி - ம்.) அயுதம் - பதினுயிரம். (க௯க)

வருந்தி வாளிபாய் வீரன்வாம் பரியொடு பாகு
நெரிந்து நீறவொண் டேரினை யுதைத்தன னேரான்
விரைந்து வேறுதேர்ப் பாய்ந்தொரா யிரங்கணை நுதலில்
தெரிந்த முத்தினன் சென்றதே ரெடுத்துவிண் ணெறிந்தான்.

(இ - ள்.) சூரன்மைந்தன் அம்பைச் செலுத்தலால் வருத்தமுற்று வானில் பாயப்பெற்ற வீரவாகுதேவர் தாவிச்செல்லுங் குதிரையோடு பாகனும், நெரிந்து தூளியாக ஒள்ளிய தேரினை உதைத்தனர். பகைவனாகிய அவ்வசுரன் வேறு தேரின்கண் விரைந்து பாய்ந்து வீரவாகுதேவர் நெற்றியில் ஆயிரம் அம்புகளை ஆராய்ந்து செலுத்தினன். வீரவாகுதேவர் அத்தேரினைக் கையாலெடுத்து வானின்கண் வீசினரென்க.

(வி - ம்.) நேரான் - பகைவன். (கஉ)

வீழு முன்னவண் வேறுள சேமத்தே ரனைத்தும்
பூழி செய்தனன் விழுந்துதேர் கெடநின்றோன் பொருவில்
வாழி வாங்கினன் றொடுக்குமுன் வார்சிலை யிறுத்தான்
ஊழி யன்னநாந் தகமுரீஇ யினரிரு வோரும்.

(இ - ள்.) அத்தேர் நிலத்தின்கண் விழுமுன்னர் அவ்விடத்துப் பாதுகாவலிலுள்ள எல்லாத் தேரினையும், நீறும்படி செய்தனன். (வானின்கண் ணெறிந்த) தேர் கீழே விழுந்துகெட நின்றோனாகிய அசுரன் போரிற்சிறிய வில்லினை வளைத்துத் தொடுக்குமுன்னர் வீரவாகு தேவர் நீண்ட வில்லினை பொடித்தார். செய்வினைப் பயனைச் செய்தான் மாட்டுக்கொண் டுய்த்தலிற் றவறாத ஊழினையொத்த வாளினை இருவரும் உறையினின்று முருவினார்களென்க.

(வி - ம்.) தன்பயனைத் தப்பாது செய்துவிடு மூழினைப்போலத் தன்றொழிலைத் தப்பாது செய்தலில் "ஊழையொத்த நாந்தகம்" என நாந்தகத்திற்கு ஊழை யுவமையாக்கிக் கூறினார். வாழி : அசை. (கஙஉ)

பொருது மேல்வையிற் பூரிய னேச்சுநாந் தகக்கை
இருநி லத்திழித் தனனவ னேந்தொரு தண்டம்
மரும மோச்சினன் வருமுனர்த் துணித்திடங் கழிகொண்
டருவி செய்புனல் கொளமுடி யறுத்தனன் வீரன்.

(இ - ள்.) இருவரும் போரினைச் செய்யும் எல்லைக்கண் கீழோனாகிய சூர்மகன் வீசிய வாளினையுடைய கையைப் பெரிய பூமியின்கண் விழும்படி வெட்டினன். அவன் மற்றொரு கையின்கணேந்திய தண்டத்தினை வீரவாகுவின் மார்பின்கணெறிந்தான். அத்தண்டம் வருமுன்னர் அதனை வீரவாகு துணிசெய்து நெருங்கி மலையினின்றிழியும் அருவிப் புனல்போலச் செந்நீரொழுக்கங் கொள்ளத் தலையினை அறுத்தானென்க.

(வி - ம்.) இடங்கழிகொண்டு - நெருங்கி. (கஙா)

ஒழிந்த வச்சிர வாகுதன் னுடலினைப் பொதிந்திட்
டழுங்கப் போதுவ னேயென வஞ்சினன் போலச்
செழுங்க திர்த்தின கரன்கடற் கரந்தனன் செருக்கொண்
டெழுந்து ளார்களு மில்லையா தலின்விறல் வாகு.

(இ - ள்.) இறந்த சூரர்மகனாகிய வச்சிரவாகு வென்பான் என்னுடலினைப் பிளந்துகொண்டு யான் வருத்தமுற வீரசுவர்க்கத்திற்குச் செல்லானே என்று அஞ்சினன்போலச் செழித்த கதிர்களையுடைய செங்கதிர்க்கடவுள் கடலின்கண்ணே ஒளித்தான்; போரினை மேற்கொண்டெழுந்தவர்களில் ஒருவரும் இல்லாதிறத்தலான் வீரவாகு தேவர்.

(வி - ம்.) போரிலிறந்தார் செங்கதிர் மண்டிலத்தைப் பிளந்து, அரம்பை முதலியோர் எதிர்கொள்ள வீரசுவர்க்கம் புகுதல் முறையாகலின் இவ்வச்சிரவாகுவுந் தன்னைப் பிளந்து செல்வானென்று மச்சத்தால் ஒளித்தானென்பார். தன்னுடலினைப் பொதித்திட்டு அழுங்கப் போதுவனென அஞ்சினன்போலக் கடற்கரந்தன னென்றார். பொதிர்த்தல் - துளைத்தல். (க௨௫)

முந்து மண்ணலை யிகழ்ந்தவ னூர்முழு தழித்தாம்
வந்த வந்தபல் வீரர்க ளுயிர்விசும் புறுத்தாம்
மைந்த னுக்கைமண் படுத்தன மறலுந ரில்லை
அந்தி பட்டது போதுமென் றவனேகி மீண்டான்.

(இ - ள்.) யாவரினு முதன்மையான தலைவனாகிய முருகனை இகழ்ந்துரைத்தவனாகிய சூரன் நகர முழுவதையும், அழித்தேம். போர்க்கு வந்த சுத்த வீரர்களுயிரினை வானின்கட் சேர்த்தேம். சூரன் மகனுக்கையை மண்ணின்கண் வீழும்படி செய்தேம். இனிப் போரில் நம்மோடு மாறுபடுபவ ரொருவருமிலர். மாலைக்காலமும் வந்தது. இனிநாம் போவேமென்று அவ்விடத்தினின்று திரும்பினான் வீரவாகு.

(வி - ம்.) மறலுதல் - மாறுபடுதல். (க௨௬)

இலங்கை புக்கனன் புகுதலு மென்மகன் படைஞர்
குலங்கெ டப்பொரு தாய்நினைக் கொல்வலென் றியாளி
விலங்கு மாமுக மாயிரங் கொண்டவன் விடைப்பத்
துலங்கு போரினு லவனையுந் தொலைச்சிவிண் ணெழுந்தான்.

(இ - ள்.) அங்ஙன மீண்ட வீரவாகு இலங்கையென்னும் நகரின்கட் புகுந்தான். அங்ஙனம் புக்கவளவில் யாளிமுக மாயிரங்கொண்டவோரவுணன் என் மகனையும் கூட்டமாகிய படையினரையும் பொருது கொன்றாய்; நின்னைக் கோறல் செய்வேனென்று மாறுபாடுகொள்ள விளங்குகின்ற போரின்கண் அவ்வியாளிமுகனையுங் கெடுத்து வானின்கண் ணெழுந்தன னென்க.

(வி - ம்.) சிங்கமுகத்தையுடையவோர் அவுணன், இவன் சூரிளவலாகிய சிங்கமுகனலன். (க௨௭)

செந்தி லான்றிருச் சேவடி தாழ்ந்துசென் றுரைத்து
வந்தவா றெலா நுவன்றனன் வதிந்தன்ன் வீரன்
மைந்தன் பட்டது கேட்டழிந் தாற்றுமன் னவன்முன்
முந்து போயவொற் றொற்றிவந் துரைத்தன முழுதும்.

(இ - ள்.) திருச்சீரலைவாயின்கண் ணுள்ள முருகன்செய்ய அடியின் கண்ணே வணங்கி இவனின்றுப்போய்ச் சூரன் முன்னர்த் தான் சொல்ல வேண்டுவனவற்றைச் சொல்லித் திரும்பின வகையெல்லாம் விண்ணப் பஞ் செய்தாண்டுத் தங்கினனென்க. தன்மகன் இறந்ததைக் கேள்வி யுற்றுப் புலம்பும் அச்சூரன் முன்னர், முன்னரே சென்ற ஒற்றர்கள் அறிந்து வந்து ஆண்டுநிகழ்ந்த எல்லாச் செயலையும் சொல்லின ரென்க.

(வி - ம்.) வீரவாகுதேவர் சூரன்பால் தூதுவனைச் சேறற்கு முன் னரே சூரன் தன்னொற்றரை முருகன்பா லனுப்பி ஆண்டு நிகழும் நிகழ்ச்சியை அறியக் கருதி இருந்தனனென்பார், "மன்னவன் முன் முந்துபோய வொற்றொற்றி வந்துரைத்தன முழுதும்" என்றார். ஒற்று தல் - அறிதல். (௧௩௮)

சீர மைச்சர்கண் மைந்தர்க ளிளவரேர்ந் தவர்கள்
யாரும் வம்மினென் றுரைத்தெரிப் பொலஞ்சடைக் கடவுள்
வார மைந்தன்கு ரகனொடு மலைதொலைத் தமரர்
பார வன்சிறை பாற்றெனத் தூதிவண் விடுத்தான்.

(இ - ள்.) சிறப்பினையுடைய அமைச்சர்கள், தன்மக்கள் தன்றம்பி யாகிய சிங்கமுகன் ஆராய்ச்சி முறையிற் றேர்ச்சியுற்ற சான்றோர் யாவ ரும் வாருங்கோள் என்றுரைத்து, ஒளிர்கின்ற பொன்னிறமான சடை யினையுடைய இறைவன் அன்பிற்சிறிய புதல்வன் நம்மிளவலாகிய தாரக னுடனே கிரவுஞ்சத்தையுந் தொலைத்துத் தேவர்களைப் பெரிய வலிய சிறையினின்றும் நீக்கென இவண் தூதுவனை அனுப்பினனென்க.

(வி - ம்.) இளவல் - சிங்கமுகன். வாரம் - அன்பு. பாரம் - பெரிய. பாற்றல் - நீக்கல். (௧௩௯)

தூது வந்தது மிருந்தது மொழிந்ததுந் துளக்கிப்
போத லுற்றதுங் கண்டுகேட் டறிதிரே பொறிகால்
கோதை வேலவன் செந்திலான் கூவிவெம் படைகள்
ஒதி ராயிரம் வெள்ளமோ டிவணுறு நாளை.

(இ - ள்.) தூதுவன் வந்ததனையும் (வானினின்றும் ஆசனமிழிய) அதன்கணத்தூதுவனிருந்ததனையும், அவன் வீருடனுரைத்த மாற்றங் களையும் இந்நகரையும், அவையையும், கலக்கிப் போதலுற்றதனையும் கண்கூடாகக் கண்டும் அறிந்தார் சொல்லக்கேட்டும் அறிந்திருப்பீர்கள். தீப்பொறியினைக்காலும் மாலையை யணிந்த வேற்படையை யுடையனா கிய திருச்சீரலைவாயான் யாவரும் போற்றத்தக்க இரண்டாயிர வெள்ளங் கூளிப்படையுடனே நாளை இவண் வந்து பொருந்துவன் என்க.

(வி - ம்.) இராயிரம் - இரண்டாயிரம். செந்திலான் இவணுறு மென முடிக்க. (௧௪௰)

புனித்த கேள்விய ரேனுநா லாளரை யன்றித்
தனித்தொ ரெண்ணமு மெண்ணலர் தரணிகாப் பாளர்
இனித்த ழுஉம்வகை யிதுவென வுரைமின்க ளென்றுன்
பனித்து விண்ணவர் கேட்டொறும் பருவருந் திறலோன்.

(இ - ள்.) தேவர்கள் தன் பெயரைக் கேட்குந்தொறும் கேட்குந் தொறும் நடுங்கித் துன்புறுதற் கேதுவாகிய திறலினையுடையனாகிய சூரன் உலகபாலருருவாய் நின்றுலகம் காக்கும் இறைவர்கள் பல நூல் களையும் நுனித்துச் சென்ற கல்வி கேள்வியுடையாரேனும் தனியாக விருந்து ஓரெண்ணமு மெண்ணுதல் செய்யார். (ஆதலான் இப் பகைவை முடிக்கற்கு) இனித் தமுவும்முறை இற்றெனை உரைமின்கள் என்றனை னென்க.

(வி - ம்.) திறலோன், தரணி காப்பாளர் எண்ணலர் ஆதலான் உரைமின்கள் என உரைத்தானென வினைமுடிபு செய்க. (௧௧௧)

மதுக்கு டித்தவர் குழாமென வரதனம் படையை
நுதுக்கு மென்மரு நொறிலிலா னவனைநம் படைசென்
றதுக்கு மென்மரு நீபொர லிழிவியா னழல்காய்
பதுக்கை மேய்ந்தெனப் படுப்பல்சென் றென்மரு மானுர்.

(இ - ள்.) கள்ளினை யுண்டார் கூட்டம் (வரன்முறையின்றிப்) பிதற்றல்போல மேலானவனாகிய முருகன் அழகிய படையை நம் படைகள் சென்றழிக்குமென்று மொழிவாரும், விரைவில் அவ்விடத்து அம்முருகனை நம் படைகள் சென்றடிக்குமென்று சொல்வாரும், நீ சென்று போரினைச் செய்தலிழிவாகும், நான், தீயானது காய்ந்த சிறு தூறுகளை யுண்டாற்போலச் சென்று கொல்வேன் என்று சொல்வாரு மாயின ரென்க.

(வி - ம்.) நுதுத்தல்-அழித்தல். இதனை "நெய்யாலெரி நுதுப்பே மென்றற்றால்" என்னும் திருக்குறளடியா னுணர்க. நொறில்-விரைவு. ஆல் - அவ்விடம். அதுக்கல் - அடித்தல், இதனைக் "கையால் வயி றதுக்குவார்" என்னும் சிந்தாமணியா னறிக. பதுக்கை - சிறு தூறு; காய்ந்தது றென்க. (௧௧௨)

தந்த நெஞ்சினுட் டோற்றியாங் குரைப்பவர் தம்மைக்
கைத்த லத்திறு லடக்குபு காழ்படு சினத்தான்
ஒத்த வாறெலா முரைப்பதி னுறுபய னெவன்கொல்
அத்த கேளெனக் கரைவனு லரிமுகத் தினவன்.

(இ - ள்) தன்வலியும், மாற்றான்வலியும் ஓராது தத்தம் நெஞ்சி னுட்டோற்றியவாறே தம் மேம்பாட்டுரை கூறுகின்றவர்களைக் கையினு லடக்கி வயிரம் பொருந்திய செற்றத்தா னெஞ்சினுட் டோன்றிய விதமெல்லாமுரைப்பதனு லடையத்தக்க பயனென்றுமில்லை. தலைவனே கேட்பாயாக வென்று சிங்கமுகன் சொல்வான்.

(வி - ம்.) 'எவன்' என்னும் வினாப்பெயர் ஈண்டின்மை குறித்து நின்றது. கொல் : அசை. (௧௪௬)

வேட்ட தாறுமா முகன்சிறை விடலது செயினெம்
மாட்டு வந்துறு மிடரெவன் வச்சிர னவுணர்
ஈட்ட முன்னொ மலைத்ததற் கெதிரின்று காறும்
மூட்டி வெந்துயர் சிறையின்முன் காந்தன னவன்சேய்.

(இ - ள்.) அறுமுகத்தொருவன் நம்பால் விரும்பியது தேவர்களைச் சிறைவிடு செய்தலே யாம். அத் தேவர்களைச் சிறைவிடு செய்யின் நம்மாட்டுப் பொருந்தும் குற்றமொன்று மில்லையாம்; வச்சிராயுதத்தை யுடைய இந்திரன் அவுணர் கூட்டங்களையெல்லாம் முன்னாள் கொன்ற தற்கெதிராக இன்றளவும் அவன் மகனாகிய சயந்தன் வெவ்விய துன்ப மூட்டப்பெற்றுச் சிறையின்கண்ணே தலைகுனிந்திருந்தன னாதலா லென்க.

(வி - ம்.) முன்காந்திருந்தனன் - தலைகுனிந்திருந்தனன். இதனை "பகைப்போல்வார் முற்பட்டாற் பாற்பட்ட சான்றோர், முகைப்போல முன் காத்திருப்பர்" என்னும் தனிச் செய்யுளா னறிக. எவன் என்றது இன்மை குறித்து நின்றது. (௧௪௭)

குமைக்கு மாற்றலி னமக்குமே லிலையுயிர்க் குழுவின்
அமர்க்கட் டோல்வியுண் டாகுமேற் றுணைவர மளித்த
உமைக்கு நாயக னேயல தில்லையுவன் றானே
நமக்கு மாற்றல னெனச்சிறு குழவியாய் நயந்தான்.

(இ - ள்.) மக்கட்டொகுதியின்கண் வைத்துக் கோறல் செய்யுந் தன்மையில் நமக்கு மேம்பட்டவ ரொருவருமின்றாம். போரின்கண்ணும் நமக்கு மேம்பட்டவ ரொருவருமின்றாம். போரின்கண் நமக்குத் தோல்வியுளவாமேல், ஏனையோரால் வெல்லப்படாமையும், தன் சத்தியாலழிதலுமாகிய இருவரத்தையும் முன்னருளின உமையம்மை யாருக்குத் தலைவனாகிய இறைவனே யல்லாமல் வேறொருவருமில்லை யாம். அவ்விறைவனே நமக்கு மாற்றானென்று சொல்லும்படி சிறு மகவாகிப் போரை விரும்பினானென்க.

(வி - ம்.) பசுக் கூட்டங்களில் கோறல் செய்யுந் தொழிலில் நம்மினும் மேம்பட்டவரின்றென்பது தெளிவென்பான் உயிர்க்குழுவில் நமக்கு மேம்பட்டவரில்லை என்றான். இஞ்ஞான்று நமக்குத் தோல்வி காணப்பட்டமையால் இருவரங்களை நமக்களித்த பதிப்பொருளே, இவ் வடிவங்கொண்டு தெவ்வாய் வந்ததென்பான், "உமைக்கு நாயகனே நமக்கு மாற்றலனெனச் சிறுகுழவியாய் நயந்தா" னென்றான். உவன் - சிவன். துணைவரம் - இரண்டுவரம். அவையாவன : பிறரால் வெல்லாமை, சத்தியாலழிதலென்க. (௧௪௮)

அளித்த நல்வர மழிக்குமே யீசனென் றயிர்த்தல்
தெளித்த வாயுளீ ரெட்டனா லிலையென்றுஞ் சிவனாந்

களித்து நல்கினன் மார்க்கண்டற் கவனுளங் கைத்து
விளிக்க வேண்டுமே லரிதுகொ னம்முடை வீறு.

(இ - ள்.) இறைவன்றானளித்த நல்லவரத்தினை அழிப்பனோ என்றையங் கொள்ளற்க. மார்க்கண்டனென்பானுக்குத் தெளிவித்த வாழ்நாள் பதினாறன்றே யன்றி வேறில்லையாம். அங்ஙனமிருக்க அவன் தன்னை வழிபட்டமையான் அப்பதினாறுட்டைப் பருவம் எக்காலத்தும் பொருந்தக் களிப்பினோடு அருளினன். ஆகலால் நமக்கு வேறொருவர்க்கில்லாத சிறப்பை அவன் வெறுத்து அழிக்கத் திருவுளங் கொள்வானாயின் அவனுக்கிஃதருமையான செயலாகுமோ, ஆகாதென்க.

(வி - ம்.) அயிர்த்தல் : எதிர்மறை வியங்கோள். வீறு - வேறொருவர்க்கில்லாத பெருமை. (௬௬௬)

அல்லி தூஉம்வர மலிக்குஞான் றமலநா யகனம்
வல்ல சத்தியி னல்லது மற்றெவ ரானும்
கொல்லு நீரரல் லீரெனக் கூறின னிளவல்
வல்லை மாய்தலிற் சத்தியே யவன்கையில் வடிவேல்.

(இ - ள்.) அல்லாமலும் இயல்பாக மல நீங்கினவனாகிய இறைவன் வரத்தினை நமக்குக் கொடுக்குங்காலத்து நமது வலிபசத்தியானன்றி வேறெவரானும் கோறல் செய்யுந் தன்மையுடையீரல்லீர் என்று திருவாய் மலர்ந்தருளினன். நம்மிளவலாகிய தாரகன் இறந்தமையான் அவன் கையிலுள்ள வேற்படை இறைவன் சத்தியே என்பதிலொரு சிறிது மையமின்றாமென்க.

(வி - ம்) அமலநாயகன் - சிவன். நீரர் - தன்மையுடையீர். இளவல் - தாரகன். அவன் - முருகன். (௬௬௭)

தத்து வந்தொறு முலப்பில தரணியண் டத்தில்
பொத்து நீர்முத லொன்றற்கொன் றளவுபூண் டுயரும்
அத்த கும்பல வண்டமும் படைத்தளித் தழிக்கும்
சத்தி நம்முயி ருண்பது தாழ்க்குமே சமர்க்கண்.

(இ - ள்.) தத்துவங்கடோறு முளவாகிய அண்டங்கள் அளவில்லாதனவாகும். அத்தத்துவ அண்டங்களுள் மண்ணண்டத்தினும் விரிந்த நீரண்ட முதலிய வண்டங்களுள் ஒன்றினுக் கொன்று பதின்மடங்குயர்ந்திருக்கும். அத்தன்மையவாய பல அண்டங்களையும் படைத்தல், காத்தல், அழித்தலாகிய செயலைச் செய்யும் அச்சத்தி போரின்கண் நம்முயிரைக் குடித்தற்கண் தாழ்க்குமோ? தாழாதென்க.

(வி - ம்.) உலத்தல் - எண்ணிமுடிதல். பொத்தல் - மூடுதல். ஒன்றற்கொன்றளவு பூண்டுயர்தல் - மண்ணண்டத்திற் பதின்மடங்கு நீரண்டம். நீரண்டத்திற் பன்மடங்கதிகம் நெருப்பண்டம். ஏனையவுமிவ்வாறே கொள்க. இதனைத் தத்துவக் கட்டளைகளா னறியலாம். தாழ்த்தல் - தடைப்படல். (௬௬அ)

நார ணன்றொழ வாரணற் றருநல னளித்தான்
ஆர ணன்றொழ நாரணற் றரும்வர மளித்தான்
சார நாமிமை யார்த்தெறு தலைமைமுன் னளித்தான்
வார முற்றவர் தொழுநமைத் தெறமழ வானான்.

(இ - ள்.) திருமால் தொழாநிற்க வேதத்தினை யுணர்ந்த பிரமனைப் படைக்குமன்பினைக் கொடுத்தான். பிரமன் தொழாநிற்கத் திருமாலினைப் படைக்கும் முதன்மையை யவனார்க்குக் கொடுத்தனன். முன்னர் நாம் தவஞ்செய் தவனையன்றித் தேவர்களை வருத்தும் முதன்மையை நமக்குக் கொடுத்தனன். நமக்குப் பிறக்கிட்ட தேவர்கள் அவன்பாலன்புகொண்டு வணங்க அவனே நம்மைக் கோறல் செய்ய இளவலாகினா னென்க.

(வி - ம்.) நாம் சாரத் தலைமை முன்னளித்தானென மாற்றுக. (கசுகூ)

தவத்தி னாலய னுதற்கணோர் சேயுமாய்ச் சார்ந்தான்
தவற்றி னாலொரு சிறுவனா யவன்றலை தடிந்தான்
தவத்தி னாலொரு மருகனுந் தக்கன்பா லானான்
தவற்றி னாலொரு சிறுவனா யவன்றலை தடிந்தான்.

(இ - ள்.) அயன் படைப்புத்தொழில் முற்றுறும் பொருட்டுத் தவத்தினைச் செய்ய அவன் நெற்றிக்கண்ணின் ஒப்பற்ற நீலலோகித னென்னும் மகவாய்ப் பொருந்தினான். அவன் தவறு செய்ய, வயிரவனாகி அவன் தலையைத் தடிந்தான். தக்கன் தவத்தினைச்செய்ய அத்தவம் காரணமாக அவன் மக்களில் ஒப்பற்ற மருமகனாகத் தோன்றினான். அத் தக்கன் செய்த தவறு காரணமாக ஒப்பற்ற வீரபத்திரனாகி அத் தக்கன் தலையை வெட்டினா னென்க.

(வி - ம்.) இப்பாட்டால் அன்பு கண்டுழி யருளலும், அஃதில் வழி வெகுளலுமாகிய குணங்கள் கூறப்பட்டன வென்க. (கஎ0)

வளமும் வீரமு மைந்தரும் வாழ்க்கையும் வேண்டில்
தளையி னீக்குதி விண்ணவர் தங்களை யன்றேல்
ஒளிறு கைப்படை யோடுநே ருதியொல்லை யென்றான்
விளியு மூழினன் கேட்டிலன் வேறெதிர் கிளப்பான்.

(இ - ள்.) செல்வத்தினையும், வீரத்தினையும், மக்களினையும், உயிர் வாழ்வையும், விரும்பின் தேவர்களைச் சிறையினின்றும் நீக்குவாய் அங்ஙனம் செய்யாதொழியின் விரைவாக விளங்குகின்ற கையின்கண்ணுள்ள படைக்கலங்களோடு போர் செய்தியென்று கூறினான். இறு மூழினனாகிய சூரன் கேட்டிலனாகிச் சிங்கமுகனுக் கெதிராகச் சில மொழிகளைச் சொல்வான்.

(வி - ம்.) வளம் - செல்வம். வாழ்க்கை : உயிர்வாழ்தல். விளியு மூழும் - போகூழ். (கஎக)

வேறு

ஏயே நினதென் னமெனக் கினிதே
ஆயே யிவன்கா லழலப் பினலீந்
தோயே லனைமீன் முலையூட் டநுகர்
சேயே பரமென் றுதெளிந் தனையே.

(இ - ள்.) தாய் என்பவள் ஒருத்தியில்லாதவன். காற்றின்கண்ணும், நெருப்பின்கண்ணும், நீரின்கண்ணு மலைவுற்று நீ தளர்வடையற்க வென்று இன்மொழி கூறிக் கார்த்திகை மீன்கள் முலையுண்பிக்க நுகர்ந்த சேயினையோ! பரமென்று துணிவு கொண்டனை. "ஏஏ" யின்னுடைய கருத்து எனக்கினிதாக விருந்தது என்று மெனக.

(வி - ம்.) 'ஏஏ' என்பது இகழ்ச்சிக் குறிப்பு. காலழலப்பினலை தனை "வளிதொடர்த் தொள்ளொளி படர்ந்து தெளிநீர்புக்கு" என்னும் ஈன்காம் பாட்டா லுணர்க. (௧௭௨)

படைபல் கலைநோற் றல்வரம் பயிலான்
சடைசுற் றியதந் தைதருங் கதிர்வேல்
விடல்கற் றொருத்த் ஞறுவெற் பினொடு
மடல்கற் றனனுண் மையிலா தவனை.

(இ - ள்.) படைக்கலப் பயிற்சியும் பல்கலைப் பயிற்சியும் தவஞ் செய்தலையும், தன்னையடைந்தார்க்கு வரம் கொடுத்தலையும் பயிலாதவன் சடையினைச் சுட்டிக் கட்டிய தந்தையாகிய இறைவன் தந்த ஒளியினையுடைய வேற்படையை விடுதலொன்றையே கற்று ஒரு முனிவன் சாபத்தினையேற்ற கிரவுஞ்சமென்னும் மலையினோடு ஆண்மை சிறிதுமில்லாதவனாகிய தாரகனைக் கொல்லப் பயின்றுள்ளான்.

(வி - ம்.) படை முதலியன ஆகுபெயர். முனிவன் - அகத்தியன். (௧௭௩)

நெற்றிக் கணிருந் தநெருப் புவிழி
தெற்றென் றறியத் தருசெவ் வியினுல்
கற்றைச் சடையாற் கொருகான் முளையே
பற்றற் றுயரப் பரன்று னலனே.

(இ - ள்.) நெற்றியின்கண்ணுள்ள நெருப்புக்கண் தெளிவாக யாவரும் அறியத்தந்த அழகினுல் கூட்டமாகிய சடையினையுடைய இறைவனுக் கொருமகனே யாவன். எல்லாப் பற்றுக்களையும் இயல்பாக நீங்கினமையா லுயர்ந்த அவ்விறைவ னிவனல னென்க.

(வி - ம்.) ௧௯-ஆவது செய்யுளில் "உவன்றனே சிறுகுழவியாய் நயந்தான்" என்ற சிங்கமுகன் கூற்றுக்கு இப்பாட்டால் இறைவனுக்குக் கான்முளையே அல்லாமல் அவ்விறைவன் இவனலனென்று மென்க. (௧௭௪)

மாயைக் கொருவைப் பெனுமா யையனை
ஆயுந் தனைணற் றவமாற் றியெலாம்

ஈயப் பெறுமென் னைவெல்வா ரெவர்யான்
காயப் படுவான் கதிர்வே லவனே.

(இ - ள்.) சிங்கமுக! நமக்கு வஞ்சனைகளுக் கெல்லாம் இருப்பிட மென்று சொல்லத்தகு மாயையென்பவள் நற்றாயாகப் பொருந்தியுள் ளாள் (இறைவனை நோக்கி நல்ல தவங்களைச் செய்து அவன் எல்லா வரங்களையும் கொடுக்கப்பெற்ற என்னை வெல்பவர் யாவர்; ஒளியோடு கூடிய வேற்படை யுடையா னென்றால் ஒறுக்கப்படுவா னென்க.

(வி - ம்.) வைப்பு - இருப்பிடம். அனை - அன்னை. எலாம் - எல்லாம். (௧௭௬)

என்று நிகல்சூர் முதலோ னெனலும்
பொன்று வவுணப் பொருவில் குலமின்
றென்று தினிநல் வினையென் றுணராப்
பின்றே ரரிமா முகன்பே சுவனால்.

(இ - ள்.) சூரனாகிய முதல்வன் இங்ஙனம் கூறினன்; அங்ஙனம் கூறக் கேடுறாமையும், ஒப்பின்மையும் பொருந்திய அவுணர் கூட்டம் ஒழிந்தது. இனி நல்வினைப்பயன் சிறிதும் பொருந்தாதென்று கருதிப் பின்னர் நீதிநூலினை யாய்ந்த சிங்கமுகன் சொல்லத் தொடங்கினன்.

(வி - ம்.) சூர்முதலோன் - சூரபதுமன். பொன்று - பொன்றாத; அழியாத. தேர் - ஆராய்ந்த. அரிமா - சிங்கம். (௧௭௭)

வேறு

கருவயிற் றுறாமை யானுங் ககனங்கா லழனீர் மண்ணோர்
மருவுத லானு நோற்ற மாதர்பா லுண்ட லானும்
பொருபடை கலைகல் லாது புலவரைக் கொன்று வேதற்
கொருசிறை யமைத்துப் பௌவ முண்டவற் கருள லானும்.

(இ - ள்) இறைவனல்லன் இறைவன் றிருமகனென்று நீ கூறிய முருகன (இறைவன் நெற்றிக்கண்ணின் றோன்றியதன்றி) கருவாக ஒருவர் வயிற்றின்கண் பொருந்தாமையானும், (அந் நெற்றிக்கண்ணிற் றோன்றிய பொறிகள்) வான், வளி, அனல், நீர், மண் முதலிய பூதக் கூட்டங்களிற் கலந்திருத்தலானும் (நோலாத ஏனைய மாதர் முலையூட்ட நுகராது) தங்கள் பாலுண்ண வேண்டுமென்று நோற்ற கார்த்திகைப் பெண்கள் பாலையுண்ணலானும், பொருதற்கரிய படைக்கலப் பயிற்சி யும் நூல்களையும், ஒருவர்பாற் பயிலாது தேவர்களைத் (தான் பிறந்த ஞான்றே விளையாட்டாகக்) கோறல்செய்து வேதத்தினை யுணர்ந்த பிரமனை ஒப்பற்ற சிறையினிலிட்டுக் கடலையுண்டருளிய தமிழ் முனிவ னுக்குத் தமிழினைச் செவியறிவுறுத்தினமையானும் என்க.

(வி - ம்.) படைத்தொழில் கல்லாது புலவரைக் கோறலும், கலை கல்லாது பிரமனைச் சிறையிடலும், செய்தா னென்க. இவை விரவிறை. (௧௭௮)

நோற்றலொன் றானு மின்றி நுழிலாட் டயரும் வெள்வேல்
ஏற்றிட லானு மொன்ப தெனுமுருப் பேரல விச்சை

ஆற்றினிற் றோற்ற லாறு மறுமுகன் பரமே மாயை
தோற்றிய நம்மை மாயை தோய்விலா வவனே வெல்லும்.

(இ - ள்.) தவஞ்செயல் சிறிதுமின்றிக் கொன்று குவித்தலைச் செய்யும் வெள்ளிய வேலினை இறைவன் பக்கலிற் கோடலானும், இறைவன் அருவத்திருமேனி, உருவத்திருமேனி, அருவுருவத்திருமேனி யாகிய ஒன்பான் திருமேனியைத் தன்னிச்சையின்படி கோடல்போல இம்மூன்றனுள் தன்னிச்சையின்படி பல வடிவங்களைத் தோற்றுவித்தலா னும் அறுமுகன் அப்பரம்பொருளேயாவன். மாயையின்கட் டோற்ற முற்ற நம்மை அம்மாயையின்கட் டோய்விலாதவனாகிய அவனே வெல்வனென்க.

(வி - ம்.) இவனிச்சையான் வடிவங்கோடலை அகத்தியன் அருள் பெறுபடலம் ௬௭ஆவது செய்யுளின் முதலிற் காண்க. (௧௭௮)

ஆங்கவ னெனவின் னோரை யட்டுயி ரெழுப்ப வல்லேம்
ஓங்குல காக்க வல்லே முறுவரக் குணர்த்த வல்லேம்
பூங்கழ லீசன் முழப் புகன்றுவீற் றிருக்க வல்லேம்
பாங்குமை யிறைவ னுப்பண் மகவெனப் பயில வல்லேம்.

(இ - ள்.) அம்முருகனைப்போல இமையவருயிரைப் போக்கி மீண்டு மெழச்செய்ய யாம் வல்லமையுடையே மல்லேம். உயர்ந்த உலகங்களைப் படைக்க யாம் வல்லமையுடையே மல்லேம். முனிவர்களுக்கு உண்மைப் பொருளை யாம் செவியறிவுறுக்க வன்மையுடையே மல்லேம். பொலிவுற்ற வீரக்கழலினை யணிந்த இறைவன் வணங்க அவனுக்குப் பிரணவப் பொருளைச் செவியறவுறுத்தி வேறொருவர்க் கில்லாத சிறப்புடன் யாம் வீற்றிருக்க வல்லமை யுடையே மல்லேம். இறைவன் பககலிலுள்ள உமையம்மையார்க்கும், இறைவனுக்கும் நடுவண் மகனெனத் தங்குதற்கும் யாம் வல்லமை யுடையே மல்லேம்.

(வி - ம்.) உமையிறை வனுப்பண்மகவு - சோமாஸ் கந்தர். (௧௭௯)

பரமனும் வேறே வந்த பாலனும் வேறே யாக
பரமவல் கருளி னன்றே பாரளிப் பவர்முன் னுமெச்
சுரரையு மடக்கி னுமத் துரிசிலாப் பரமன் றோன்றல்
வரமுடை நம்மைப் போரின் மாட்டுதல் வியப்போ தேரின்.

(இ - ள்.) நீ கூறியாங்கு இறைவனும் வேறேயாகுக; நம்பால் போர்க்கு வந்த பாலகனும் வேறேயாகுக. நீ சிறப்பித்துக் கூறிய அவ்விறைவன் நமக்களித்த அருளினாலன்றோ உலகினைக் காப்பவனாகிய திருமாலினை முதலாகக் கொண்ட எல்லாத் தேவர்களையும் யாம் அடக்கி யாண்டாடம். அக்குற்ற மிலவாகிய இறைவன்சேய் அவன்றந்தைபால் பெற்ற வரத்தினையுடைய நம்மைப் போரின்கட் கோறல் புரிதல் ஆராயின் வியப்பாகுமோ! என்க.

(வி - ம்.) மாட்டுதல் - கொல்லுதல். (௧௮0)

பன்னெடு மூழி கால முந்துறப் பயிலு மாயன்
அன்னமேக் குயர்த்தோ னாதி யவர்க்கெலாம் பின்பு தோன்றி
முன்னவ னருள்பெற் றன்றே யவர்க்கெலா முதல்வ ராரேனும்
தன்னருண் மகனைப் பால னென்றெள்ள றகைமைப் பாற்றே.

(இ - ள்.) பலவூழிகளுக்கு முன்னரே பொருந்திய திருமால், அன்னப் பறவையை மேலுயர்த்துக் கட்டியவனாகிய பிரமன் முதலாகிய தேவர்க்கெல்லாம் யாம் பின்னர்த் தோற்றமுற்றும் யாவரினும் முற்பட்டவனாகிய அவ்விறைவன் அருளினைப் பெற்றதனாலல்லவா அப் பிரமன் முதலிய தேவர்கட்கெல்லாம் முதன்மையுடையவராயினேம். அவ்விறைவ னருளிய முருகனைப் பாலனென் றிகழ்தல் தகுதியின் பகுதி யாமோ? ஆகாதென்க.

(வி - ம்.) ஊழிக்காலம் : பண்புத்தொகை. மேக்கு - உயர. முன்னவன் – சிவன். (௧௮௧)

மகனென வுருவே றாகி மறைவழி யொழுகார் தம்மை
அகநெகத் தாக்கு மங்கத் தவயவத் தொன்றான் மாய்க்கும்
தகவுறு மடியர் தம்மாற் சாடுஞ்சூழ்ச் சியினும் வெல்லும்
உகலுறு வரத்தோர் யாரே யுமையொரு பாகன் சீறில்.

(இ - ள்.) உமையம்மையாரை யொருபாகத்திலுடைய இறைவன் சீற்றங்கொள்ளின் கெடாத வரத்தினை யுடையவரெவருளர். ஆதலால் வேத நெறியின்கண் ணொழுகாதவரை மகனென வடிவு வேறுகொண்டு மனம் வருந்த மோதுவான் உடம்பின்கண்ணுள்ள அவயவங்களுள் வைத்தொன்றினானுங் கோறல் செய்வான் தம்மையொத்த தகுதியினை யுடைய அடியார் வாயிலாகவும், கோறல் செய்வான்; விரகினானும் வெல்வான்.

(வி - ம்.) மறைவழி - வேதநெறி. அவயவம் - விரன் முதலியன. சாடும் - கொல்வான். சூழ்ச்சி - விரகு. (௧௮௨)

முகம்விழி மலர்க்கை மூன்று முப்பது முன்பு நாஞ்செய்
மகவினைக் கருள வந்த வள்ளலுக் கீண்டுச் சாடப்
புகுமிறைக் கவைகண் மூன்று முப்பதே பொலிவு மற்றே
திகழுரு வானுஞ் சேயைச் சிவனெனத் தெளிய லாமே.

(இ - ள்.) முன்னர் நாம்செய்த யாக தளவாடத்தின்கண், அருள வந்த வள்ளற்றன்மையை யுடைய இறைவனுக்குத் திருமுகம், கண்ணும், கையுமாகிய இவைகள் முப்பதென்னும் அளவைக் கொண்டனவாகும். இஞ்ஞான்று நம்மைக் கோறல்செய்யப் புகுந்த இறைவனுக்கவைகள் மூன்று முப்பதென்னு மளவினைக் கொண்டனவே யாம். இவனிறப் பொலிவும், அவனிறப் பொலிவின்றன்மையுடையதே. விளங்குகின்ற வடிவத்தானும், சேயைச் சிவபெருமானென்று தெளியலா மென்க.

(வி - ம்.) இறைவனுக்கு, முகம் ஐந்து, விழி பதினைந்து, கைகள் பத்து ஆக முப்பதா மென்க. (௧௮௩)

நாரணன் முதலோர் போற்றச் செந்திலி னயந்த நம்பி
ஆரண முழக்கர் விர்ம வடியவர் துழனி பொங்கத்
தேரணி படைகள் சூழச் சென்றவ னகர்க்க ணித்தின்
ஏரணி யேம கூட மியற்றிப்பா சறைய னானான்.

(இ - ள்.) நாரணன் முதலிய தேவர்கள் துதிக்கத் திருச்சீரலைவாயின்கண் விரும்பி யெழுந்தருளியிருந்த முருகக்கடவுள் வேதமுழக்க மிக்க அடியார்குழாங்களின் முழக்க மதிகரிக்கத் தேரும், அழகிய ஏனைய படைகளும், சூழ எழுந்தருளி அச்சூரன் நகரி னணித்தாயுள்ள வனப்புற்ற ஏமகூடமென்னும் மலையின்கண் (பாடி வீடுசெய்து) அப்பாசறையின்கண்ணுள னாயினன் என்க.

(வி - ம்.) நம்பி - முருகன். ஆரணம் - வேதம். துழனி - முழக்கம். (௧௧௦)

நாரத னட்டான் போல நண்ணியாங் கிறைவ னுற்ற
சீரினை விளம்பிப் போத வொற்றருஞ் சென்று செப்பப்
போரணி கொடித்தேர்ச் சூரன் பொள்ளெனப் பானு கோப
வீரனை விடுக்க வன்னான் விறற்படை யெழுக வென்றான்.

(இ - ள்.) நாரதனென்னு முனிவன் சூரனுக்கு நட்பாளன்போல அவன்மாட்டுப் பொருந்தி அவ்விடத்து இறைவனெழுந்தருளிய சிறப்பினைச் சொல்லிவரத் தூதுவர்களுஞ் சென்று சொல்லப் போர் குறித்து அழகிய கொடியினை எடுத்துக்கட்டிய தேரினையுடைய சூரன் விரைவாகப் பானுகோப னென்னும் வீரனைச் செலுத்த அப்பானுகோபன் வலியோடுகூடிய படையினை எழுகவென்றனன் என்க. (௧௧௧)

அடிகழ னரல வீக்கி யணிவிரல் புட்டில் சேர்த்தி
இடைநெடுங் கச்சிற் சுற்றி யெறுழ்கொள்சா லிகைமெய் யிட்டு
வடிநெடும் படைக ளேந்தி வார்நிறை தூணி தூக்கிப்
படுமணி யிரதம் புக்கான் பல்லியத் தொழுதி யார்ப்ப.

(இ - ள்.) பானுகோபனென்பான் அடியின்கண்ணே வீரக்கழலை முழங்க யாத்து அழகிய விரலின்கண்ணே விரற்சட்டை யணிந்து இடையினை நீண்ட பட்டிகையா னிறுக்கிச் சுற்றுதல்செய்து, வலியினையுடைய உடம்புக்கிடுகளை உடம்பின்கண்ணிட்டுக் கூரிய நீண்ட படைக்கலங்களைத் தாங்கி நீண்ட அம்புகள் நிறைந்த அம்பறாக் கூட்டைத் தொங்கக்கட்டிப் பல இசைக் கருவிகளின் கூட்டங்கள் முழங்க ஒலியுண்டாவதற் கேதுவாகிய மணிகள்கட்டிய தேரின்கண் ணேறினான் என்க.

(வி - ம்.) நரலல் - ஒலித்தல். புட்டில் - விரற்கட்டி. சாலிகை - மெய்ப்பை. 'திரைத்த சாலிகை, நிரைத்தபோன் நிறைந்திரைப்ப தேன் களே, விரைக்கொள் மாலையாய்' என்னும் சூளாமணிச் செய்யுளா னறிக. நிறைதூணி - அம்புநிறைந்த கூடு. படு - ஒலித்தல். (௧௧௨)

வேறு

தேர்களிறு பரிவயவ ரிருபதினு யிரம்வெள்ளஞ் செறியத் தன்பால்
தார்கதுவும் படைத்தலைவர் தும்பைமிலைச் சினர்சூழத் தறுகட் டெய்வப்
போர்கலவும் படைநிரைத்த சேமத்தே ரொருகோடி புடையே நண்ண
வார்கலவு முரசுலப்பக் கொடி துவன்ற மதிக்கவிகை நிழற்றச் சென்றான்.

(இ - ள்.) தேரும், யானையும், குதிரையும், காலாளுமாகிய நால்வகைப் படையும் இருபதினாயிரம் வெள்ளம் பொருந்தத், தன்பக்கல் பல போரினும் வென்றி கோடலான் அவ்வெற்றிக் கடையாளமாக வணிந்த மாலையினையுடைய சேனைத் தலைவர்கள் தும்பைமாலை யணிந் தனராகிச் சூழ, அஞ்சாமையையுடைய தெய்வங்களா னருளப்பட்ட போரின்கட் பொருந்து படைக்கலங்களை நிறைத்து வைத்து ஒருகோடி சேமத் தேர்கள் பக்கத்தே பொருந்த, வார் கலக்கப்பெற்ற முரசங்கள் ஒலிக்கக், கொடிகள் நெருங்கச், சந்திரவட்டக் குடை நிழலைச் செய்யச் சென்றனனென்க.

(வி - ம்.) தார் - மாலை. தும்பை - வெற்றிமாலை. சேமத்தேர் - ஏறிய தேருடைந்த காலத்து ஏறுதற்குக் கொணர்ந்து வைத்திருக்கும் தேர். (ககஉ)

தன்பெயர்ப்புத் தேட்கின்னுந் தளைசெயினுஞ்
செய்யுமெனத் தரணி வல்லே
அன்பினெடுங் கரந்ததெனப் பெரும்பூழி
கதிரொளிகா லுறுப்ப நந்தம்
மன்பகைஞற் குதவிசெய்த லென்னையென
மாற்றுதல்போன் மதம்வி லாழி
கொன்பகடும் வயப்பரியுங் கூர்த்தொழுக்கக்
கோபுரவா யிலைநீத் திட்டான்.

(இ - ள்.) மண்ணுலகம் தரணியென்னும் தன் பெயரினையுடைய செங்கதிர்க் கடவுட்கு முன்னர் பானுகோபன் தளை செய்ததேயன்றி, இன்னும் தளை செயினும் செய்வானென்று கருதி விரைவாக அன்பினாலே அச்செங்கதிர்க் கடவுளை மறைத்ததென்று சொல்லும்படி செங்கதிரின் கதிரொளியை மண்ணுலகினின்று மெழுந்த தூளி தடைசெய்ய, இங்ஙனந் தடைசெய்தலை யறிந்த பானுகோபன் படையின்கணுள்ள அச்சத்தைத் தருகின்ற யானைகளும், வெற்றியையுடைய குதிரையும், நம் அரசன் பகைவனாகிய வெங்கதிர்க் கடவுளுக்கு உதவிசெய்தல் என்ன காரணமென்று அம் மறைத்தலைச் செய்த உதவியைத் தடுத்தல் போல (யானை) மதத்தினையும், (குதிரை) பல்லடிநுரையையும் அப் பூமியடங்க ஒழுக்குதலைச் செய்யக் கோபுரவாயிலைக் கடந்தானென்க.

(வி - ம்.) 'தன்' என்றது பூமி. 'தரணி' சூரியனையும், பூமியையும் உணர்த்தும் பலபொருளொருசொல். நிலம் சூரியனை மறைத்தாற் போலத் தூளிமறைக்க வென்க. யானையும், பரியும் தம் இறைவனாகிய

பானுகோபனுக்குப் பகைவனாகிய சூரியனுக்கு உதவிசெய்தல் தகத் தெனக் கருதி மதத்தினையும், நுரையினையும் ஒழுக்கிப் பூமியை அடா தினவாகக் குறித்தலால் தற்குறிப்பேற்றம். (கசு௪)

மாயன்முத லோர்பனிப்ப மகதியாழ்
 முனியடுத்து மாயை வல்லான்
காயிரும்போர் பலகடந்தான் கமலன்முத
 லோர்படையுங் கைக்கொண் டாண்மை
மேயினன்பொன் னுலகழித்தான் வெங்கதிர்க்குப்
 பகைஞன்வரு கின்றான் போர்க்கு
நீயலது பிறர்வேற லரிதென்ன
 வரைகிழித்த நெடுவே னம்பி.

(இ - ள்.) விண்டு முதலிய தேவர்கள் அஞ்சி நடுங்காநிற்ப மகதி யென்னும் வீணையினையுடைய நாரதன் மாயையில் வல்லவன் வருத்தத் தக்க பல போரின்கட் பகைவரை வெற்றி கொண்டவன்; பிரமன் முதலியோர் படைக்கலங்களையும் கைப்பற்றி ஆண்மைத் தன்மையைப் பொருந்தியவன்; பொன்னுலகத்தை யழித்தவன்; வெங்கதிர்க் கடவு ளுக்குப் பகைவனென்னும் பெயரினை யுடையான். அத்தகையோன் போரினுக்கு வருகின்றனன், அடிகளல்லது அவனை வெல்லுதல் பிறர்க் கரிதாகும் என்று விண்ணப்பஞ் செய்யக் கிரவுஞ்சத்தைப் பிளந்த வேற் படையையுடைய முருகன்.

(வி - ம்.) பனிப்ப – நடுங்க. கமலன் - பிரமன். வேறல் – வெல் லுதல். நம்பி - முருகன். (கசு௫)

வறிதுநகை யொடும்வீர வாகுமுக
 நோக்கிவரு வானை யெண்மர்
செறிகழற்கா லிலக்கர்படைத் தலைவரா
 யிரவெள்ளஞ் சேனை யோடு
முறையினிடங் கழிகோடி யெனவிடுப்ப
 வவன்மொழிந்த சேனை மொய்ப்பப்
பறையியம்பக் குடைகவிப்பக் கொடிநுடங்கத்
 தேரிவர்ந்து படர்த லுற்றான்.

(இ - ள்.) புன்சிரிப்பினோடும் வீரவாகுதேவர் முகத்தினை நோக்கி வருகின்றவனை எண்மரும் செறித்த கழலினையுடைய இலக்கரும் படைத் தலைவருமாகிய ஆயிரவெள்ளம் படையுடன் போர்க்குரிய நெறிப்படி எதிர்கொள்வாயெனச் செலுத்த அங்ஙனமே முருகன் திருவாய்மொழிந்த சேனைகள் சூழ இயமியம்பக் குடைநீழலைச் செய்யக் கொடிகள் அசை யத் தேரின்மீதேறிச் சென்றான்.

(வி - ம்.) வறிதுநகை - புன்னகை. கோடி - கொள்ளுதி. இவர்ந்து - ஏறி. இடங்கழி - நெருங்கல். (கசு௬)

போர்பூத்த மைந்தினுக்குந் தானெருவ னுதலிற்பொற் புறவெஞ் ஞான்றும்
சீர்பூத்த தந்தைமுடிக் கணியுமலர்த் தும்பையினை திறலோன் சேனை
ஏர்பூத்த வடிதோய வவுணரடித் தவிர்ந்தவினை யிரித்து வல்லே
பார்பூத்த துறக்கமுற வெழுந்த துபோ லெழுந்ததெங்கும் படர்ந்த தூளி.

(இ - ள்.) *போரின்கட் பொலிந்த ஏனைய செயல்களுக்கே யன்றி வலியினுக்குந் தானொருவனே யாதலினாலே அழகுற எக்காலத்தும் சிறப்பு விளங்கிய தன் தந்தையாகிய இறைவன் திருமுடிக்கணியும் தும்பைப் பூமாலையினைச் சூடிய வலியுடையனாகிய இளவல் சேனைகளின் புகழ்பொலிந்த அடிகள் நிலத்திற் றோய்தலினான் (அந்நிலம்) அவுணர்கள் அடியின்கட் டங்கியதானுளவாகிய தீவினையைக் கெடுத்து (அத்தீவினை நீக்கத்தால்) விரைவாக நிலம் எஞ்ஞான்றும் விளக்கமுற்ற துறக்கத்தினையடைய எழுந்ததைப்போலப் பரவிய தூளிகள் எங்கும் எழுந்தன வென்க.*

(வி - ம்.) *மைந்து - வலி. உம்மை இறந்ததுதழீஇயது ஏகாரம் பிரிநிலை. தவிர்தல் — தங்குதல். திணை - தும்பை. துறை - தானைநிலை புறத்திணை 72ஆம் சூத்திரம், மேற்கோள் காண்க.* (௧௧௭)

இந்திரன்வா கனமிதுவென் றெறுப்பனபோன்
முகில்புடைக்கு மெழிற்ப தாகை
அந்தரமெங் கணுமிடையு மவுணர்நெடும்
படைக்கடலை யமர்க்குங் காலை
வெந்திறல்வா ளிகடுமிக்குஞ் சேட்சென்மி
னெனவெறிந்து விசும்பு ளோரை
உந்துதல்போற் கொடிநுடங்கும் வீரர்படைக்
குறுமுனிவ னுணநேர்ந் தன்றே.

(இ - ள்.) *இந்திரன் ஊர்தி யிஃதாகு மென்றதனை யொறுப்பன போல மேகத்தினையடிக்கும் கொடிகள் வெளியிடை யெங்கணும் நெருங்கிய மிக்க அவுணர் சேனையாகிய கடலினை, வானின்கண்ணுள்ள தேவரை வெவ்விய வலியினையுடைய பாணங்கள் நுங்களைக் கெடுக்குஞ் சேய்மைக்கண் செல்லுங்கோ ளென்று அடித்துப் பிடர்பிடித்துந்துதல் போலக் கொடிகள் அசைகின்ற வீரர்படையாகிய குறுமுனிவன் உண்ண நேர்ந்ததாகுமென்க.*

(வி - ம்.) *கொடிகள் அந்தர மெங்கணு மிடையும்அவுணர் சேனை யென்க. "விசும்புளோரை துமிக்கும் சென்மின்" என உந்துதல் போலக் கொடி நுடங்கும் வீரர் படை என்க. இவ்விருபடையும் அமர் செய்யுங்கால் அவுணர் நெடும்படைக் கடலை வீரர் படையாகிய குறுமுனிவனுண்ண நேர்ந்ததாகு மென்க. படைக்குறுவன் எனப் பாடங் கொண்டு பிறவாறு முரைப்பாருளர். அவுணர் சேனை கடல்போலப் பெருக்கமாகவும், வீரர் சேனை குறைவாகவும் தோன்றலின் அமர்க்குங் காலை அவுணர் நெடும்படைக் கடலை வீரர்படைக் குறுமுனிவனுண்ண நேர்ந்தன்றே என்று கூறினர். படைகுறுமுனி யெனவும் பாடம்.* (௧௧௮)

வெய்த்தோடிச் சிலர்விர வாகுபோர்
 பெயினனெனல் றுரைப்பத் தீயோன்
றாய்த்தாக்கு மடங்கலென வுயிர்குடிப்ப
 லெனச்சீறிச் சார்ந்தான் முன்போர்
தேய்த்தார்ந்த புகழவுணர் தெழித்தடுத்து
 நேர்ந்தனர்வன் சிலம்பி னுண்மை
மாய்த்தானைத் தொழுதுவிறற் பூதருமார்த்
 தனர்வெகுண்டு மலைக்க லுற்றார்.

(இ - ள்.) இங்ஙனம் இருபடையும் நேர்ந்ததை அறிந்துசென்று சில வொற்றர்கள் வீரவாகு என்பான் போரிற்கட் பொருந்தினனென்று சொல்ல, தீயோனாகிய பானுகோபன் தாவி மோதுகின்ற சிங்கம்போல உயிரை யுண்ணுவே னென்று சீறுதல்செய்து பொருந்தினன். முன்னர்ப் போரின்கட் பகைவரை அழித்தலா னிறைந்த புகழை யுடைய அவுணர்கள் விரமுழக்கஞ் செய்து பொருந்தினர். வலிய கிரவுஞ்சமலையின் ஆண்மையைக் கெடுத்தவனாகிய முருகனைத் தொழுது வலிமையுடைய பூதர்களும் ஆர்த்தனராகிச் சீற்றமுற்றுப் போர்செய் யத் தொடங்கினா ரென்க.

(வி - ம்.) வெய்த்தல் - ஒற்றியறிதல். தாய் - தாவி. தெழித்து - முழக்கி. (௧௧௧)

வேறு

குழாக்க ளிற்றவுணர் கோனை யாற்றல்வளர்
 பூதர் கோனெதிர்கோ ளைக்களம்
விழாக்க ளம்புரைய மெய்ம்ம லிந்துவகை
 மேவி யாண்மையுளங் கேண்மையின்
வழாக்க டுப்பொடுது ரப்ப வட்டமொடு
 வார்ந்தி லங்குவடி வாள்கரந்
தழாக்கி ளர்ந்துவரு சாரி கைத்தொழிற
 லைப்ப வாடலொரு பாலெலாம்.

(இ - ள்.) கூட்டமாகிய யானைப் படையினையுடைய அவுணர் தலைவனாகிய பானுகோபனை வன்மைபொருந்திய பூதர் தலைவனாகிய வீரர் எதிர்ந்த போர்க்களமானது விழவெடுக்குங் களத்தினையொப்ப மெய்ம்மகிழுவகை மேவப்பெற்று உள்ளமானது ஆண்டன்மையை நட்பின் வழுவாதவாறு வேகத்துடன் செலுத்தப் பலகையுடன் நீண்டு விளங்குகின்ற கூரிய வாளைக் கையிற்றழுவிக் கிளர்ச்சியுற்றுப் பொருந்துகின்ற சாரிகைத் தொழில் மிகப்போர் செய்த லொருபக்க மெல்லா விடங்களிலு முள்ள தென்க.

(வி - ம்.) வார்தல் - நெடுமை. "வார்தல் போகல் ஒழுகல் மூன்று நேர்தலும் நெடுமையுஞ் செய்யும் பொருள" (தொல். சொல்.)

விழாக்களத்தில் யாவரும் மெய்ம்மலி யுவகைபொங்க இன்புற்றிருத்தல்போல வீரர்கள் யாவரும் இன்புற்றுப் போர் செய்தலின் போர்க்களம் விழாக்களம்புரைய என்றார். உளம் ஆண்மை, கேண்மை வழாக்கடுப்பொடு 'துரப்பவெனக் கூட்டுக. குழாக்களிறு : விகாரம். 'தழா: செய்யா' என்னும் வாய்பாட்டு வினையெச்சம். வட்டம், பரிசைப்படை. (௨௦௦)

நீக்க மின்றென வழுந்து றத்தழுவி நீணி லம்விழுந ரோர்புறம்
தேக்கு நீர்ப்பெயலின் மொக்கு ளோரடி விசைப்பி னிற்சிதர்ந ரோர்புறம்
தாக்கி ருந்தகரி னென னம்பிதிர்த ழைப்ப முட்டுநர்க ளோர்புறம்
ஒக்கு முட்டியினு டற்றி வன்கொடிறு டைப்ப விழுநர்க ளோர்புறம்.

(இ - ள்.) போர்க்களத்தில் கண்டோர் இடைவெளியின்றென்று சொல்லும்படி மெய்யழுந்தும்படி ஒருவரை யொருவர் தழுவிப் பெரிய நிலத்தின்கண் வீழ்கின்றவ ரொருபக்கலிலுளர். நீர்நிறைதற் கேதுவாகிய மழைபெய்கின்ற காலத்துளவாகும் புற்புதத்தை யொப்பக்கால் விசையினால் சிதர்கின்றவர் ஒருபக்கலிலுளர். ஒன்றினோடொன்று தாக்குகின்ற ஆட்டுக்கிடாக்கள்போல முகம் தூளியுளவாம்படி முட்டுகின்றவர்க ளொருபக்கலுளர். ஓச்சிய கைமுடக்கினால் வருத்தி வலிய கபோலங்களை உடைக்க நிலத்தின் விழுகின்றவ ரொருபக்கலிலுளர்.

(வி - ம்.) பிதிர் - தூள். ஒக்குதல் - ஓச்சுதல். முஷ்டி என்ற வடசொல் முட்டியெனத் திரிந்து நின்றது. அஃதாவது கைவிரல்களைக் குவித்து மடக்கல். கொடிறு - கதுப்பு. (௨௦௧)

கட்டு கையினொடு காற டுக்குநர்க ளோர்பு றங்கதழ் புகட்டினர்
ஒட்டி நிற்குநர்க ளோர்பு றங்கருதி யுய்த்த வெம்படை யுலப்புற
விட்ட ழிக்குநர்க ளோர்பு றந்திகிரி வீழ வெள்வளையும் விசுபு
பட்டு நின்றவுட லெஃகு கண்டனர்ப றித்து நக்கெதிர்ந ரோர்புறம்.

(இ - ள்.) ஒருவரை ஒருவர் தழுவிய கையினோடு காலையிடறி வீழச் செய்கின்றவ ரொருபக்கலுளர். விரைந்து ஒருவரையொருவர் கட்டி வஞ்சினங் கூறுகின்றவ ரொருபக்கலுளர், பகைவர் தம்மைக் கொல்லக் கருதிச் செலுத்திய வெவ்விய படைக்கலங்கெட அதனைச் செலுத்திக் கெடுக்கின்றவ ரொருபக்கலிலுள்ளார். சக்கரப்படை கீழே வீழ வெள்ளிய சங்கினையும் எறிந்து இறந்துநின்ற உடம்பின்கண்ணுள்ள வேலைக் கண்டு பறித்து நகுதலைச் செய்பவரொருபக்கலிலுள்ளார் என்க.

(வி - ம்.) கதழ்பு - விரைந்து. திகிரி - சக்கரப்படை. விசுபு - வீசி. எஃகு - வேல். (௨௦௨)

மல்லி னாற்பிடிப டுத்துங் வார்சிலையி னெற்றி யும்மறல ழுக்கியும்
செல்லெ னக்கடிது ரப்பி யுங்கனலி சிந்து றத்திருகி நோக்கியும்
சொல்லி யும்புடைய கற்றி யுங்கயிறு துட்கெ னப்பெரிது வீசியும்
எல்லெ யிற்றினுடல் பீறி யும்பொருந ரெல்லை யில்லவர்க ளோர்புறம்.

(இ - ள்.) மற்சொருசிலர் வில்லை பிடித்து நீண்ட வில்லாண்டித்துஞ் சுழலும்படி சுற்றிச் செலுத்தியும், மேகம்போல விரைவாக முழக்கம் செய்தும், சிச்சிக மாறுபாடுண்டாக நோக்கியும், நெடுமொழியும் வஞ்சினமுமாகிய இவற்றைக் கூறியும், தம்பக்கலில் அணமினுரைச் செய்மைக்கண்ணே நீக்கியும் அரிகயிற்றினை அச்சந் தோன்றும்படி மிக வீசியும், ஒளிபொருந்திய பற்களால் உடலைக்கிழித்தும் அளவில்லாதவ ராய்ப் போர்செய்வார் ஒவ்வொருபக்கலிலுள ரென்க.

(வி - ம்.) உ00ஆம் பாட்டு முதல்உ0௪ஆம் பாட்டு வரையுள்ள நான்கு பாட்டும் தும்பைத்திணை. துறை: தானை யானை குதிரை யென்ற நோனாருட்கும் மூவகை நிலையில் தானை நிலையாகும். "குழாக்களிற் றரசர் குறித்தெழு கொலைக்களம், விழாக்களம்போல மெய்ம் மலியுவகைய, ராண்மையுள்ளம் கேண்மையிற்றூரத்தலின், அழுந்து படப் புல்லி விழுந்து களம்படுநரும், நீர்ப் பெயற் பிறந்த மொக்குள்போலத், தாக்கிய விசையிற் சிதர்ந்து நிலம் படுநரும், தகருந் தகரும் தாக்கிய தாக்கின், முகமுகஞ் சிதர முட்டுவோரும், முட்டியின் முறைமுறை குத்துவோரும், கட்டிய கையொடு காறட்குநரும், கிட்டி னர் கைபறத்தொட்டு நிற்குநரும், சுட்டிய படையை விட்டழிப்போரும் சக்கரம்போலச் சங்குவிட்டெறிநரும், சிலைப்புடை முரசிற்றலைப்புடைக் குநரும், மல்லிற் பிடித்தும் வில்லினெற்றியும், ஊக்கியும் உரப்பியும் நோக்கியும் நுவன்றும், போக்கியும்புழுங்கியும் நாக்கடைகவ்வியும், எயிறுடன் றிருகியும் கயிறுபல விசியும், இனைய செய்தியின் முனை மலைந்நுநரும்," என்று நச்சினார்க்கினியர் தானை நிலைக்கு எடுத்துக் காட்டிய செய்யுளின் பொருள் இந்நான்கு செய்யுளி னமைந்திருத்தலும், "கைவேல் களிற்றொடு போக்கி வருபவன் மெய்வேல் பறியா நகும்" என்னும் திருக்குறளின் பொருளமைந்திருந்தலுங் காண்க.

(வி - ம்.) படுத்தல் - கொல்லுதல். எற்றுதல் - அடித்தல். செல் - மேகம். திருகுதல் - மாறுபடுதல். கயிறு - அரிகயிறு. இதனை வட நூலார் பாசமென்பர். (உ0௫)

**வேறு நீடமரின் மீண்டு தம்மிறைவி ழாது டற்றுநர்க ளோர்புறம்**
**தேறு மவ்வகையெ திர்த்து ளாரிருதி றத்த ருந்தபுத லோர்புறம்**
**பாற மாக்களிறெ றிந்து டற்றுநர்க ளோர்பு றம்பகடு தாழவீழ்ந்**
**தீறு பட்டவரை யட்டு ளார்படைஞ ரேய்ந்து சூழுமலை யோர்புறம்.**

(இ - ள்.) வேறொரு போர்க்களத்தின்கண்ணே யுளவாம் மிகப் போரின்கண் முனைபோர் செய்யும் தானைத் தலைவர்கள் தந்தலைவர்கள் தோல்வியுறுதலைக் கண்ணுற்று அப்போரினின்றும் நீங்கித் தலைவர்கள் தோல்வியுறு வண்ணம் பகைவரை வருத்துபவர்களா யொருபுறமுள்ளன ரென்க. அங்ஙனம் தந்தலைவர்கள் தோல்வி யுறுமையைத் தெளிந்த இருதானைத் தலைவரு மிறந்தவொரு பக்கமுள்ள தென்க. மதமயக் கத்தையுடைய களிறுகளோடு அடித்து வருத்துகின்றவர்க ளொருபுற மென்க. யானைகள் சாயக் கீழேவிழ்ந்து அழிந்தவரை அழிந்தவர் படை வீரர்கள் பொருந்திச் சுற்றுகின்ற ஆரவார மொருபுறமுள்ள தென்க.

(வி - ம்.) இப்பாட்டின் முதலடி திணை; தும்பை; துறை வேன் மிகுவேந்தனை மொய்த்தவழி ஒருவன்றான் மீண்டெறிந்ததார் நிலை, 'தார்' என்பது முந்துற்றுப் பொரும்படையாதலின், இதனைத் தார்நிலை என்

றூர். இரண்டாவதடி திணை : தும்பை. துறை : இருவர் தலைவர் தபுதி பக்கம். மூன்றாவதடி திணை தும்பை, துறை: களிறெறிந்தோர்பாடு. ஈண்டுப் பாடு பெருமை. நான்காவதடி திணை : தும்பை துறை: களிற்றொடுபட்ட வேந்தனை அட்டவேந்தன் வாளோடு ஆடும் அமலை: அமலுதல் - நெருங்குதல். தொல். புறம் எ-ஆவது சூத்திரம் உரை பார்க்க.
(௨௦௮)

படைய றுத்துநனி பாழி கொள்ளுநர்க
ளோர்பு றம்படைவ ழக்குமிக்
குடைப டைக்கணுறு கூழை தாங்கெருமை
யோர்பு றங்கணையும் வேலுமொய்த்
தடுமு டப்புதிற லிங்க லின்றமர்த
லோர்பு றந்தலைக ளற்றுயிர்
விடுமு டம்புகளெ ழுந்து துள்ளுபுவி
யப்ப வாடுவன வோர்புறம்.

(இ - ள்.) கையின்கண்ணுள்ள படையைப் போக்கி மெய்யாற் போர் செய்யும் மயக்கமுடையா ரொரு புறமுள ரென்க. பகைவர் படை வழங்குதல் மிகுதலானே ஆற்றாதுடைந்ததம் படைக்கண்ணே படைத்தலைவர் சென்று அங்ஙனம் கெடுத்த மாற்று வேந்தன் படைத் தலைவரை அவர் எதிர்கொண்டு நின்ற பின்னணியோடே தாங்கின கடாப்போலச் சிறக்கணித்து நிற்குநிலையினையுடையா ரொருபுறமுள ரென்க. கணையும் வேலும் மொய்த்தலான் சென்ற வுயிரொடுகூடிய யாக்கை வன்மை நீங்கலின்றித் தங்குதலொரு புறமுளதென்க. தலைக ளறுபட்டு உயிர் நீங்கிய யாக்கைகள் மேலெழுந்து துள்ளி யாவரும் வியக்கும் வண்ணம் ஆடுவன ஒருபுறமுள வென்க.

(வி - ம்.) திணை: தும்பை. முதலடிதுறை படையறுத்துப் பாழி கொள்ளுமேமம். இரண்டாவதடி துறை: உடை படை யொருவல்புக்கு ஒருவன் கூழைதாங்கிய எருமை. கணையும் வேலும் துணையுற மொய்த்தலின் சென்ற வுயிரின்நின்ற யாக்கை. சென்ற வுயிரின் நின்ற யாக்கையாவது: சிறிதொழியத் தேய்ந்த உயிரானே துளங்காது நின்றவுடம்பு. இது கணையும் வேலும் நிலந் தீண்டாதவாறு செய்ய உடல் நிலைபெற்று நிற்றல். உயிர்விடு முடம்புகளெழுந்து துள்ளுதல், இருநிலந்திண்டா வருநிலைவகை, படைகளால் எறுண்ட தலையேயாயினும், உடம்பேயாயினும், நிலத்தைத் திண்டா தெழுந்தாடுதல். இதனை அட்டையாடலெனவுங் கூறுவர். அட்டை அற்றுழியும் ஊருமாறுபோல தலையிற்ற காலத்தும் உடம் பாடுதலின் இப்பெயர் பெற்றது.பாழி - வலி. இஃதாகுபெயரா யுடம்பை யுணர்த்திற்று. ஏமம் - மயக்கம். அறுத்தல் - ஈண்டு இன்றுதல், இலக்கணை. வழக்கு - வழங்குதல். கூழை-பின்னணி. பின்னிரண்டடியும் திணைக்கெல்லாம் பொதுவன்மையிற் றிணை யெனவும் படாது. திணைக்கே சிறப்பிலக்கணை யாதலிற் றுறையெனவும் படாது. ஆதலால் தும்பைத் திணைக்குச் சிறப்பாய்த் துறைப்பொருள் நிகழ்ந்து கழிந்தபிற் கூறியதாமென்க. மெய்யாடு பறந்தலை யென்பர் பதிற்றுப்பத்தாசிரியர். இதனை

முன்னர்க் கூறினும் ஆண்டுக் காண்க. இக்கருத்தினைக் கணையும் வேலும் துணையுற மொய்த்தலி னென்னும் தொல்காப்பியச் சூத்திரத்தானு முரையானு முணர்க. (௨௦௫)

**இன்ன தானையிரு மாவு மேவியுமஃ தின்றி யுந்தமதி னத்தினை**
**மன்னர் போர்த்தலைவ ரேனை யோரினைம தக்க யங்கரிக டேரினை**
**வன்ன வண்டுரகம் வைய மால்கரியை வைய முந்தலை யடுத்துநின்**
**றென்ன வார்தலைப னிப்ப வாடமரு ழற்றி நின்றனவி டந்தொறும்.**

(இ - ள்.) இத்தன்மைத்தாகிய தானையானது யானையும் குதிரையு மாகிய இருமாவின் மேலுள்ள வீரர்கள் பொருந்தியும், இவ்விரு மாவின்மேற் பொருந்தாத வீரர்கள் நிலத்தின்கண்ணின்றும் யானை வீரர் யானைவீரரோடும் இவுளி மறவர் இவுளி மறவரோடும் அரசர்கள் சேனைத்தலைவரையும், ஏனைய வீரரை யானைப்படையும், யானைகள் தேரினையும், பலநிறத்தையுடைய வளப்பமிக்க குதிரைகள் தேரினையும் மதமயக்கம் பொருந்திய யானைகளைத் தேரும் பலவகையாகப் பொருந்தி நின்று பகைவர் தலைநடுங்க இடங்கடோறும் வெற்றியினையுடைய போரைச்செய்து நின்றன வென்க.

(வி - ம்.) அடுத்து என்னுஞ் சொல்லை ஏற்புழிக் கூட்டி முடிக்க. வன்னம் - நிறம். இஃது திணை: தும்பை, துறை, இனி யானை நிலைக் கும், குதிரை நிலைக்கும் துறைப்பகுதி. அஃது அரசர் மேலும், படைத் தலைவர் மேலும் ஏனையோர் மேலும் யானை சேறலும், களிற்றின் மேலும், தேரின்மேலும், குதிரை சேறலும் தன்மேலிருந்து பட்டோரை மோந்து நிற்றலும் பிறவுமாம். தொல். புறம் எ௨-ஆம் சூத்திர வுரை யானுணர்க. (௨௦௬)

**மேக மூர்ந்துபுரு கூதர் தம்மின்விளை யாடு கின்றதென வேழமும்**
**மாகம் வாங்கலைக ளூர்ந்து காலிறைவர் மாறு கொண்டதென மாக்களும்**
**வேக வண்சிறைமு ளைத்த நீள்சிலைகண் மேல்கொ டச்சிலையின் மன்னவர்**
**ஓகை யாலெதிர்வ தென்ன வையமுமு டற்று வெஞ்சமர்கை மிக்கதே.**

(இ - ள்.) மேகங்களைச் செலுத்தி இந்திரரிருவர் தங்களுக்குள் விளையாடல் செய்வதை யேய்ப்ப யானையு மியானையும், வானின்கண்ணே வாவிச்செல்லும் கலைமானாகிய ஊர்தியைச் செலுத்திக் காற்றாகிய தலைவர்கள் பகைமை கொண்டதனை யொப்பக் குதிரையுங் குதிரையும், வளப்பமிக்க வேகத்தினையுடைய சிறைமுளைத்த நீண்ட மலைகள் மேலிருந்துகொண்டு அம்மலையின்கண்ணுள்ள இறைவர்கள் உவப்பாலொருவரோ டொருவர் எதிர்ப்பதை யொப்பத் தேரொடு தேருஞ் செய்கின்ற வெவ்விய போர் மிகுதியாக யாங்கணு முள்ளன வென்க.

(வி - ம்.) திணை - தும்பை. துறை: எ௨-ஆவது சூத்திரத்தில் "நோனாருட்கும் ஆறுவகை நிலையென்னுது வகையென்றதனால்.........இப் பகுதி யெல்லாம் கொள்க. இம்மூன்றுந் தாமே கொண்டு பொருவுழித் தானைமறம், யானைமறம், குதிரைமறம் என்றும் பெயர்பெறு மென்ற லில் இது தானைமறம். தேர்தானை செல்லாமையான் அதற்கு மறமின்

றென்று விலக்கினான். புருகூதர் - இந்திரர். மாகம் - வான். கலைமான் - காற்றின் வாகனம். சிலை - மலை. ஓகை - உவகை. கைமிகுதல் - அதிகரித்தல். இப்பாட்டு திணை : தும்பை. துறை : யானைநிலை, குதிரைநிலை. 'தானை, யானை குதிரை யென்ற, நோனாருட்கும் மூவகை நிலை' என்ற தொல். புறம் ௧௨-ஆம் சூத்திரத்தானு முரையானு முணர்க. (௨௦௭)

மேக்கு ளான்புடைபு குத்து மாறெனவெ
குண்டெ திர்ந்தவரு ரம்புகக்
கோக்கும் வல்லெயிறு யர்த்தும் வாருடல்கு
ழைக்கு மண்ணடியு ளர்த்தியிட்
டோக்கி நீள்கையுறு தண்டி னேரிரத
மூரு மாவினம்வி ளிக்கும்வால்
தாக்கி யும்படைய ழித்து லம்புவத
மாது நீழல்சுளி வேழமே.

(இ - ள்.) தம்முடைய நிழலினை மதமயக்கத்தாற் பிறிதொரு யானையைக் கருதிச் சீற்றங்கொள்கின்ற யானைகள், தங்கள்மேலுள்ள பாகர்களிடத்துச் சேர்க்குந் தன்மைபோலச் சீற்றமுற்று எதிர்த்தவருடைய மார்பின்கண்ணே கோத்த கொம்பினை மேலேயுயர்த்தும்; நீண்ட வுடம்பினைக் குழைக்கும்; அடியால் மண்ணைத் தேய்த்து நீண்ட கையினிடத்துப் பொருந்திய தண்டைவீசி எதிர்த்த தேர்களை இழுத்துச் செல்லும்; குதிரைகளைக் கொல்லும்; வாலாற்றாக்கிப் படைகளை யழித்தும் முழங்கும் என்க.

(வி - ம்.) வேழம் உயர்த்தும், குழைக்கும், விளிக்கும் உலம்புவ என வினை முடிபு செய்க. தம்+ஆது=தமாது. (௨௦௮)

கந்து கப்பெயர டுக்கு மென்னவொளிர் கந்து கப்பெயர்வி னெய்யனைச்
சிந்து ரத்தநுத லோடை யானைமணி சேர்ந்த மத்தகமி தித்திடும்
முந்து கிள்ளை யென லொத்த தென்னமுடு கிப்பறந்திரத மேலடி
தந்தி டுந்தலைவர் வாசி தீரவெதிர் தானை வாசிநகு வாசியே

(இ - ள்.) எதிர்த்த தலைவர்கள் பெருமைநீங்க எதிர்த்த தானையைக் (கோறற்கு) பெருமை தக்கிருக்கின்ற குதிரைகள் கந்துகமென்னும் பெயர் தங்களுக்குப் பொருந்துமென்று கண்டோர் கழறப் பந்து புடைபெயர்தல்போல விரைவாகச் சிந்துரத்தினை யணி நெற்றியின்கண் முகபடாத்தினையுடைய யானையின் மத்தகம் பொருந்திய தலையின்கண் மிதிக்கும். வாவிச் செல்லுதலின் யாரும் முதன்மையாகச் சொல்கின்ற கிள்ளையென்னும் பெயர் இக்குதிரைக்கு ஒத்ததாகுமென்று கண்டோர் சொல்ல விரைந்து பறந்து தேர்க்காலின்மீது கால்களை வைக்குமென்க.

(வி - ம்.) வாசி - பெருமை, குதிரை. கந்துகம் - குதிரை, பந்து. கிள்ளை - கிளி, குதிரை. முன்னைய இரண்டு வாசிகளும் பெருமை,

பின்னையவாகி குதிரை. முன்னைய கந்துகம் குதிரை. பின்னையது பந்து, இன்னே முன்னையது கிளி. பின்னையது குதிரை. (உ0௯)

**இரத மென்றபெய ரேற்கு மென்னவெழி லார்ப டைச்சுவைகொ ழித்தெழ**
**விரவு தானைபல பாகு செய்துவிறல் வாசி யைத்துவைய லாக்குபு**
**கரா தக்களிறு கூறு செய்துகரு னைக்கு வால்பலநி றுத்துவிண்**
**பரவு தேர்த்தொகுதி வல்சி செய்வபடர் சூறை போன்றுதிரி வையமே.**

(இ - ள்.) யாங்கணும் பரந்து செல்கின்ற சுழல்காற்றுப் போன்று செங்களமெங்கணுந் திரிகின்ற தேர்கள் இரதமென்று கண்டோர் சொல்லும் பெயர் இத்தேர்களுக்குப் பொருந்துமென்னும் படி அழகினையார்ந்த படைக்கலங்களாகிய சுவை கொழித்தெழாநிற்க, பலவாகக் கலக்கின்ற தானையைக் குழம்பாகச் செய்து விறலினையுடைய குதிரைகளைத் துவையலாகச் செய்து, கையையுடைய மதத்தோடு கூடிய யானையைக் கூறிட்டுப் பலபொரிக் கறிகளாக்கி நிலவச்செய்து வானின்கட் பரவிச் செல்கின்ற பகைவர் தேர்க்கூட்டத்தினை உணவாகச் செய்வன வென்க.

(வி - ம்.) இரதம் - தேர், இரசம், சுவை. பாகு - குழம்பு. இதனை "பாகு பால் குழம்பு பாக்காம்........." என்னும் நிகண்டா னறிக. கருனை - பொரிக்கறி. வல்சி - உணவு. வையம் - தேர். (உ௧0)

**வெளில்பி ணித்ததொட ரென்ன வீரர்குடர் சுற்று காலின்விரை குஞ்சரம்**
**ஒளிமி குத்தவரு ரத்த முத்துலவை வயிர்பொ ரத்துணிய வாலிகால்**
**அளிமி குத்தமுகி லொத்த சிந்துமணி யாற்பு யத்தவிறு கோட்டிணைக்**
**களிமு லைச்சுவடு பூத்த மார்பிறைக டுத்து ளார்களிறெ திர்த்துளார்.**

(இ - ள்.) கட்டுத் தறியாற் பிணித்த சங்கிலியென்னக் கண்டோர் சொல்லும்படி எதிர்ந்த வீரர்கள் குடர்சுற்றிய காலொடு விரைந்து செல்கின்ற யானைகள் ஒளிமிக்க அவ்வீரர்கள் மார்பிற் குத்திய கொம்பு கள் ஊதுகொம்பை யொப்ப ஒடிய அவ்வொடிந்த கொம்பிணைகளால் களிப்பைத் தருகின்ற முலைத்தழும்பால் பொலிவுற்ற மார்பினையுடைய இறைவனை நிகர்த்தா ரென்க.

(வி - ம்.) இஃது பண்புந் தொழிலும்பற்றிச் சினையுமுதலும் பற்றிவந்த உவமம். வெளில் - கட்டுத்தறி. தொடர் - சங்கிலி. உலவை - கொம்பு. வயிர் - ஊதுகொம்பு. புய்த்தல் - பிடுங்குதல். இதுதிணை : தும்பை. துறை - களிறெதிர்பாடு. பாடு - பெருமை. களிறெதிர்ந் தான் பெருமை கூறலின் யானை நிலையுளடங்காதாயிற்று. (உ௧௧)

**நெடுபோ ழித்திறமும் வஞ்சி னங்களுநி கழ்த்த லோடுதலை யற்றுமண்**
**படிவ வாடிகிரி சுற்ற லோடுவளர் பாணி யற்றுகுவ சாரிகை**
**அடைவி னுடுவம ருங்கு லற்றுடலம் வீழ்ந்த தாளடிக ளற்றுவீழ்**
**உடலம் வாயிதழ்ம டித்து வாலெயிற முந்த வூன்றுவன வெங்கணும்.**

(இ - ள்.) போர்நிகழும் எல்லாவிடங்களிலும் தம் மேம்பாட் டுரைகளையும், சூளுரைகளையும் நிகழ்த்தலுடனே தலைகளறுபட்டுத்

கீழே பொருந்துவன, வாட்படையையும், ஆழியினையும் சுற்றுத லுடனே வளர்கின்ற கைகளறுபட்டுக் கீழே சிந்துவன. இடையறுபட்டு வீழ்ந்த உடல் சாரிகைத் தொழிலை அம்முறைப்படி யாடுவன. காலின்க ணுள்ள அடிகளற்றுக் கீழே விழ்ந்த உடல் வாயின்கணுள்ள இதழினை மடித்து வெள்ளிய பற்கள் அவற்றிலாழந்தும்படி அழுத்துவன வென்க.

(வி - ம்.) இப்பாட்டு முதலடி திணை : தும்பை. துறை : ஒருவ ரொருவர் நிலைகூறல். இதனைத் தொல். புறம் எஉஆம் சூத்திரவுரையிற் காண்க. சாரிகை - மண்டிலம். வால் - வெண்மை. (உசஉ)

**ஒருவ னுக்குரிமை பூண்ட பார்மகளு ரந்த மூாமைநல னென்பபோல்**
**உருவி நின்றகணை வேல்க டாங்கமனு ருது றங்குருட லெண்ணில**
**பொருத நின்றவர்க ளென்றெதிர்ந்தெதிர்பொ ராமையாற்சிலர் சமழ்ப்புற**
**மருவு மண்டிலவ கைக்க ணின்றபடி நின்ற மாண்டவுட லெண்ணில.**

(இ - ள்.) திருமாலாகிய ஓராடவனுக்குக் கற்புரிமை பூண்டவ ளாகிய நிலமகள் மார்பினைத் தழுவாதிருத்தல் நிறையுடையாராகிய நமக்கு இன்ப மென்பார்போல மார்பின்கண்ணே பட்டுவெரிந் போந்த கணையும் வேலுந்தாங்க இருநிலந் தீண்டாது பேருறக்கங்கொண்ட வுடலங்கள் அளவில்லன. அங்ஙனம் நின்றநிலையிற் பெரும் பிறிதுற்ற வர்களைப் போர்செய்ய நின்றவர்களென்று எதிர்ந்த சில வீரர்கள் அங்ஙனம் பேருறக்கங் கொண்டவர் போர் செய்யாமையால் நாண மடையாநிற்க, மண்டில வகையின்படி மாண்டு நிலைபெற்ற உடலம் எண்ணிலவென்க.

(வி - ம்.) மண்டில வகையாவன : ஆலிடம், பிரத்தியாலீடம், பைசாசம், மண்டிலம் என்ப. சமழ்ப்பு - நாணம். திணை - தும்பை. துறை - ஒருவரொருநிலை கூறல் சென்ற வுயிரின்நின்ற யாக்கை இரு நிலந் தீண்டாமை கண்டு போர்க்கெதிர்ந்துளா ரெனல் போர்வீரர் எதிர்ப்போர் செய்யாமைகண்டு நாணலின் ''பொராமையாற் சிலர் சமழ்ப்புற'' என்றார். (உசுங)

**இத்தி றத்தமர்வி ளைந்த காலையெறும் மிக்க பூதரினு டைந்தன**
**தொத்த ழற்கணவு ணக்கு லந்தொலைவி லாத வாற்றலன லன்முனைஇப்**
**பைத்த பூதருலை யச்சி லைத்தொழில்ப யிற்றி னுன்படைபு ரத்தலேள்**
**வைத்த சிங்கனெரு தண்டி லீவிரத வாம்ப ரித்திரள்கள் சாடுபு.**

(இ - ள்.) இவ்வகையாகப் போர்நிகழ்ந்த காலத்து வலிமிக்க பூதர்களாற் கூட்டமாக அழலைச் சிந்துகின்ற கண்களையுடைய அவுணக் கூட்டம் வெந்நிட்டோடின. கெடுதலில்லாத வலியினையுடைய அனல னென்னும் தானைத்தலைவன் முனைந்து போர்க்கள மெங்கணும் பரவிய பூதர்கள் வருந்தும்வண்ணம் விற்றொழிலைச் செய்தனன். சேனைகாத் தற் றொழிலைத் தன் தோளிற்றாங்கிய சிங்கனென்பவன் ஒரு தண்டத்தால் நீண்டதேர் வாவும் குதிரைக் கூட்டங்களையடித்து.

(வி - ம்.) 'இன்' ஐந்தாவது ஏதுப்பொருட்டு. பைத்த - பரத்தல். படைபுரத்தல் தோள்வைத்த சிங்கன் - தானைத்தலைவன். (உசச)

மெய்யெ லாங்கணை குளிப்ப வையம்விரை
வுற்றி வர்ந்துவில்ப றித்தெறிஇ
ஐயெ னத்தலைபு டைத்த தண்டுறும
வன்கை பற்றியுர மங்கையால்
நைய வெற்றியுய ரத்தி ரித்துயிர்ந
டப்ப மண்டலைய றைந்தனன்
வெய்ய சண்டனினி யுய்தி யேயெனவெ
குண்டெ திர்ப்பவெதிர் மேயினன்.

*(இ - ள்.) தன்னுடல மெங்கணும் அம்புகள் மூழ்க அனலன் தேரின்கண் விரைவுற்றேறி அவன் கையின்கண்ணுள்ள வில்லினைப் பறித்து வீசி விரைவாக அனலன் தன் தலையின்கண் ணடித்த தண்டம் பொருந்திய கைகளைப் பிடித்து மார்பை அகங்கையால் வருந்தும்படி அடித்து உயர்த்துச்சுற்றி உயிர்செல்ல நிலத்தின்கண் டலையை மோதினன். கொடிய சண்டனென்பான் இனி பிழைக்கக் கடவாயா வென்று சீற்றங்கொண் டெதிர்க்க அவனெதிரே சென்றன னென்க.*

*(வி - ம்.) ஐ : விரைவுக் குறிப்பு.* (௨௧௫)

சண்டன் சண்டனக ரெய்து கென்னவொரு
தண்ட முய்த்தனன வன்கரம்
கொண்ட தண்டமெதி ருய்த்த னன்பொறிகு
லைந்து ளாரிருவ ருஞ்சினை இ
மண்டு மாயனய ரக்க ணத்தலைவ
னீலன் வார்கதைவ ழங்கினன்
உண்டி யாவியென மாயன் முத்தலைய
சூல நீலனுர முய்த்தனன்.

*(இ - ள்.) சண்டனே! நீ இயமனுலகஞ் செல்வாயாக வென்று ஒரு தண்டினைச் செலுத்தினன். அச்சண்டன் தன் கையின்கட்கொண்ட தண்டினைச் செலுத்தினன். போரான் அறிவு கலக்கமுற்றார்கள். இருவரும் இதனைக் கண்டு சீற்றமுறீஇப் பொருந்திய மாயனென்பவன் சோர்வடையப் பூதகணத் தலைவனாகிய நீலனென்பான் தண்டத்தைச் செலுத்தினன். மாயனென்பான் இவன் அவியை உண்ணுவாயாக வென்று முத்தலைய சூலமொன்றினை நீலனென்பான் மார்பின்கட் செலுத்தினு னென்க.*

*(வி - ம்.) சண்டன் - இயமன். இதனைச் "சண்டன் கூற்றலி வெய்யோனும்" என்னும் நிகண்டா னறிக.* (௨௧௬)

உயங்கி நீலனவன் வார்மி டற்றெயிறு றுத்தி ரத்தமுயி ருண்டனன்
மயங்கு சிங்கனெடு சண்ட னுந்தெளிபு வார்ந்த தண்டமொடு நேர்ந்தனர்

தயங்கு சண்டனெறி தண்டி றப்பவிற றங்கு மல்லினம ராடினுன்
புயங்கெ ழூஉம்பலிய சிங்க னத்தொழில்பு துக்கி யாருயிர்கு டித்தனன்.

(இ - ள்.) வருத்தமுற்று நீலனென்பான் மாயனென்பானுடைய நீண்ட மிடற்றின்கண் பற்களைப் பதித்து உயிரையுஞ் செந்நீரையு முண்டனன். முன்னர்ப் பேரறிவு மயங்கிய சிங்கனென்பானோடு சண்டனென்பவனுந் தெளிவுற்று நீண்ட தண்டங்களோடு போரிற் பொருந்தினர்கள். போரிற்றயங்குதலுற்ற சண்டனென்பான் எறிந்த தண்டமொடிய வன்மைபொருந்திய மற்றொழிலிற் போர்செய்தனன். வீரமாதர் தங்கிய புயத்தினையும், வன்மையையுமுடைய சிங்க னென் பான் அம்மற்றொழிலைப் புதிதாகச் செய்தவ னுயிரை யுண்டன னென்க.

(வி - ம்.) பலிய - வலிய. அத்தொழில் முன்னரியற்றிய மற் றொழில். இனிக்கெழு வென்பதனைச் சாரியையாக்கியும், வலியை யுடைய சிங்கனெனக் கொள்ளினுமாம். (உகஎ)

வேறு

சிங்கனொ டமராடச் செல்லச முகன்றன்னை
இங்குறு கெனநாப்ப ணெதிர்ந்தனன் மதுவென்போன்
அங்கவன் பொழிவாளிக் கஞ்சல னவன்வையம்
பொங்கிய சினத்தேறிப் புயலுரு மெனவார்த்தான்.

(இ - ள்.) சிங்கனென்பவனோடு போர் தொடங்கச் செல்கின்ற அசமுகனென்பவனை இங்கே பொருந்துவாயாக வென்று நடுவே மது வென்பவன் எதிர்ந்தனன். அவ்விடத்து அசமுகன் சொரிகின்ற அம்பு களுக் கஞ்சாதவனாகி அவ்வசமுகன் தேரின்கண்ணே மிகுந்த சிற்றத் தோடிவர்ந்து இடியோடுகூடிய மேகம்போல முழங்கினு னென்க.

(வி - ம்.) உரும் - இடி. அசம் - ஆடு. வையம் - தேர். (உகஅ)

வேர்த்தன னவனேக்கி வீரரிற் பதரொத்தாய்
போர்த்தொழிற் கிவணெங்குப் போந்தனை யெனமீண்டான்
வார்த்தையுள் சுடமான முந்தமை வதனத்தான்
ஆர்த்தடல் கெழுவாளி யலகில தொடுத்தெய்தான்.

(இ - ள்.) மதுவென்பவன் முழக்கஞ் செய்தலைக்கண்ட அசமுகன் வேர்த்தனன். அங்ஙனம் வெயர்வுற்ற அசமுகனை மதுவென்பவன் நோக்கி வீரர்களுள் வைத்து உள்ளீடில்லாதவனே! போர்த்தொழிலுக் கிவண் எப்படிப் போந்தாயென்று சொல்லத் தேரினின்று மீண்டனன். அசமுகனென்பான் மதுவென்பவன் கூறிய சொற்கள் உள்ளத்தை வருத்த, மானம் பிடர்பிடித்துத் தள்ள முழங்கி வலிபொருந்திய அம்பு கள் அளவில்லனவற்றை வில்லிற் கோத்து எய்தனனென்க.

(வி - ம்.) எங்கு - எவ் வண்ணமுமென்னும் பொருளுணர்த்தி நின்றது. மை வதனத்தான் - ஆட்டுமுக முடையவன் (அசமுகன்). (உகக)

வருபக ழிகள்பற்றி மதுவெறிந் தனனவுணன்
பொருபடை வகையெல்லாம் பொள்ளென மிசையுய்த்தான்.
விரைசெல லவனிரதம் வேலையில் விழவோச்ச
உருமென நிலன்குப்புற் றுடற்றுமற் றெழிலேற்றான்.

(இ - ள்.) தன்னை நோக்கி வருகின்ற பகழிகளைப்பற்றி மது வென்பவன் ஒடித்தான். அசமுகன் போர்க்குரிய படைக்கலங்களை யெல்லாம் விரைவாக மதுவென்பான்மேற் செலுத்தினான். அசமுகனது விரைந்த செலவினையுடைய தேரைக் கடலின்கண் விழ மதுவென்பவன் எடுத்து எறிய அசமுகன் இடியினைப்போல நிலத்தின்கட் குதித்து உடனே மற்போரினை மேற்கொண்டா னென்க.

(வி - ம்.) பொள்ளென : விரைவுக் குறிப்பு. வேலை - கடல். குப்புற்று - குதித்து. (௨௨௦)

அடிகொடு மதுவுந்த வந்தர நிமிர்ந்துக்காங்
கிடியென வுரமேற்றி யிம்மென மறைந்தரிதந்
திடுதிகி ரியைவிட்டா னெய்திய படையின்னான்
படையில னெனமீண்டு பரிவுசெய் திடமாண்டான்.

(இ - ள்.) அடியால் மதுவென்பவன் தள்ள அசமுகன் வானின் கண்ணெழுந்து கீழிறங்கி அப்பொழுதே இடியைப்போல மதுவென் பவன் உரத்தின்கண்ணே அடித்து விரைவாக மறைந்துநின்று திருமா லருளிய ஆழிப்படையை விட்டனன். அங்ஙன மெய்திய ஆழிப்படை இம் மதுவென்பவன் படைக்கல மில்லானென்று கருதிப்போய் அசமுக னுக்குத் துன்பினை யளிக்க அவன் மாண்டா னென்க.

(வி - ம்.) திருமால் பக்கலின் வரங்கிடந்து ஆழிப்படையினை அசமுகன் பெறுஞான்று திருமால் படைக்கல மில்லான்மேற் செலுத் தின் அவ்வாழிப்படை நின்னையே கோறல் செய்யுமென அருளினான் ஆகலின், "படையில னெனமீண்டு பரிவுசெய்திட மாண்டான்" என்றார். நிமிர்ந்து - உயர்ந்து. உக்கு - கீழிழிந்து. இன்னான் - மதுவென் பவன்.

௨௧௪ஆம் பாட்டு முதல் இவ்விருநூற்று ஒருபத்தாறும் பாட்டுவரை திணை தும்பை. துறை "தானை மறஞ்சிறப்பப் பொருது வீழ்தல்" தொல். பொருள். புறம் ௭௨ஆம் சூத்திரமுரை பார்க்க. (௨௨௧)

தானவர் படைகாவற் றலைவர்க ளொருங்கெய்தி
மானவெம் போராட மறந்தணிந் தனர்பூதர்
ஆனதிந் தெறுழிலக்க ரவரினு ளொருவீரன்
கானழு லுணநேர்ந்த காட்சியி னெதிர்சென்றான்.

(இ - ள்.) அவுணர் படையினைக் காக்கும் படைத்தலைவர்க ளொருசேரப் பொருந்திப் பொருந்திய போரினைச் செய்யப் பூதர்கள் வீரங் குறைந்தவரானார். அவ்விடத்து மெழுந்ததனை யறிந்த வலியினை

யுடைய இலக்கரின் வைந்து ஒருவீரன் காட்டை அழலுண்ண நேர்ந்த தோற்றத்தினைப்போல் எதிரே சென்றானென்க.

(வி - ம்.) ஒருவீரன் தண்டகன். ஆன் - அவ்விடம். காட்சி - தோற்றம். (௨௨௨)

வேறு

தண்ட கப்பெய ரன்னவன் வார்சிலை தலைவணக் கினன்வல்லே
மண்டு தீக்கணை சிதறின னொருமுறை வயக்களஞ் சூழ்தந்தான்
கொண்ட துஞ்சிலை தொடுத்தது மறிகிலர் குறையுட லெழுந்தாட்டும்
கண்ட துண்டங்க ளிமிர்ந்ததுங் கறைநதி பலவுங்கண் டனர்விண்ணோர்.

(இ - ள்.) தண்டகனென்னும் பெயரினையுடைய அவன் நீண்ட வில்லினை வணக்கி விரைவாக நெருங்கிய நெருப்புக் கணைகளைச் சிதறி ஒருமுறை போர்க்களத்தைச் சுற்றிவந்தான். அவன் வில்லைக் கையிற் கொண்டதனையும், அம்புகளைத் தொடுத்தலையும் அறியாராகி, இருநிலம் தீண்டாமெய்கள் எழுந்தாடுவதையும் உடற்கண்டங்கள் குவிந்ததையும் அவ்விடத்துப் பெருக்கெடுத்தாகிய குருதிநதி பலவற்றையும் விண்ணோர் கண்டன ரென்க.

(வி - ம்.) ஆட்டம் - ஆடுதல் : தொழிற்பெயர். வயக்களம் - ஈண்டுப் போர்க்களம். குறையுடல் முன்னர்க் கூறினும் ஆண்டுக் காண்க. கறை - குருதி. விண்ணோர் அறிகிலர் கண்டதுண்டங் கண்டன ரென வினைமுடிபு செய்க. (௨௨௩)

ஒளிம றைத்தது திறந்தென மொய்யிரு ளுடைந்தது போன்ஞாலம்
நெளிபெ ரும்படை யிறுதலு நெடுங்களம் வெளிபட நேர்நோக்கி
விளிவ டுத்ததோ நம்படைக் கெனநகைத் தெஞ்சோரா யிரவெள்ளம்
வளையப் போரளப் பான்கதிர் மாற்றலன் வஞ்சினத் தொடும்போந்தான்.

(இ - ள்.) சூரியனாகிய வொளியை மறைத்ததாகிய வொரு பொருள் நீங்க இருளுடைந்தாற்போல நிலனெளியத்தக்க பெரிய சேனை கெடுதலும், நெடிய போர்க்களம் வெளியாக் கண்கூடாகக் கண்டு நம் படையினுக்கு அழிவு வந்ததோ என்று வீரநகை செய்து இறவாது எஞ்சிய ஓராயிரம் வெள்ளம்படை தன்னைச்சுற்றப் போரினை அளவிடு பவனைப்போலப் பானுகோபன் சூளுரை செய்தலோடு வந்தனனென்க.

(வி - ம்.) போர்க்களத்தை ஒளியாகவும், அவுணர் படையினை இருளாகவும் கொள்க. (௨௨௪)

வீற்று வீற்றுவெஞ் சரந்தொடுத் தாடமர் விளைத்தபூ தர்கடாளை
நாற்று செங்கையை யுரத்தினைக் களத்திலை நானிலம் படத்தாழ்த்தான்
ஆற்று நீரெனச் சோரிவார்ந் துடற்குறை யலைத்தன வலியில்லார்
காற்று ளைக்கொரு காற்றெழில் புதுக்கின ருக்கிரன் கனன்றேற்றான்.

(இ - ள்.) வேறுவே றிடங்களில் கொடிய அம்புகளைத் தொடுத்து வென்றி யெய்துதற் கேதுவாகிய போரினைச்செய்யப் பூதர்கள் தாளினை

யும், தொங்கவிட்ட செவ்விய கையினையும், மார்பினையும், கண்டத்தினையும் நிலத்தின்கட் பொருந்தும்படி வீழ்த்தினன். யாற்று நீர் போலக் குருதியொழுகி உடற் குறைகளை யலைத்தலைச் செய்தன. எதிர்த்துப் போர்செய்யும் வன்மையில்லார் இரண்டடிகளுக்கும் ஒப்பற்ற காற்சிறுமிலாகிய சேறலைப் புதிதாக வுளவாக்கினுறரென்க. இதனைக் கண்ட உக்கிரனென்பான் அழற்சியுற் றெதிர்த்தன னென்க.

(வி - ம்.) வீற்றுவீற்று - வேறுவேறு. கால் - அடி. காற்சிறுமில் புதுக்கல் - கண்டு ஓடல். (௨௨௫)

**நெடிய தண்டொடு நேர்ந்தவுக் கிரனுட லிரைத்தனன் கணைமாரி**
**அடிகொள் பந்தெனப் பட்டுமீண் டனவது கண்டெழு விடுத்தான்கைப்**
**பிடிகொ டண்டினு லதுசிதர்த் தாயிரம் பெருக்குமுப் பதுமான்றேர்**
**நடைய றுத்தெழுந் தார்த்தனன் வேறுதேர் நண்ணியக் கதையெய்தான்.**

(இ - ள்.) நெடிய தண்டினோடு எதிர்ந்த உக்கிரனென்பவனுடைய உடலின்கண்ணே கணைமழையை நிரைத்தனன். அப்பாணங்கள் சுவர் முதலியவற்றில் அடித்துத் திரும்புதலைக்கொண்ட பந்தினைப் போல அவன்மேற்பட்டு மீண்டன. அங்ஙனம் மீண்டதனைக் கண்டு எழுவென்னும் படைக்கலத்தினை விடுத்தான். உக்கிரனென்பான் கையிற் பிடித்துள்ள தண்டத்தால் அவ்வெழுவைப் பொடிசெய்து ஆயிரமென்னும் எண்ணால் முப்பதென்னு மெண்ணைப் பெருக்கினுற் போதரும் குதிரைகள் பூட்டிய தேர்கள் செல்லுதலைக் கெடுத்து ஆரவாரஞ் செய்தனன். பானுகோபன் வேறு தேரின்கட் பொருந்தி அவ்வுக்கிரன் கையின்கண்ணுள்ள தண்டினை யெய்தன னென்க. (௨௨௬)

(வி - ம்.) எழு - தூண் போன்ற ஒருவகை ஆயுதம்.

**அம்பி னக்கதை பொடித்தலு முக்கிர னழன்றுதே ரொடும்பற்றி**
**உம்ப ரோக்கினன் விழுந்தவ னுக்கிரன் றன்னையும் பரினேச்சி**
**வெம்பு தேரொன்றி னிவர்ந்துவே தன்றரு வேலினை யெதிர்விட்டான்**
**நம்பி சோர்ந்தனன் குன்றொடு தண்டிநேர் நடந்தெறிந் தனனார்த்தான்.**

(இ - ள்.) பானுகோபன் அம்புகளா னக்கதையைப் பொடிசெய்ய உக்கிரன் அழற்சியுற்றுத் தேரினோடும் பிடித்து வானின்கண் வீசினுன். அங்ஙனம் வீச வீழ்ந்தவனுகிய பானுகோபன் உக்கிரனையும் வானின்கண்ணே வீசுதல்செய்து வெய்ய தேரொன்றினில் ஏறிப் பிரமன் றனக்களித்த வேற்படையை அவனெதிரே விட்டனன். நிறைந்த குணங்களையுடையனுகிய உக்கிரன் சோர்வடைந்தனன். ஒரு மலையினோடு தண்டி யென்பவன் அப்பானுகோப னெதிரே சென்று மலையினைப் பானுகோபன் மேலே யெறிந்து முழக்கஞ் செய்தா னென்க.

(வி - ம்.) ஓக்கினன் - வீசினன். நம்பி - உக்கிரன். (௨௨௭)

**குன்றி றுத்தலு மெழுக்கொடு குரகதங் குமைத்தன னவனெற்றி**
**வன்றி றற்கணை யயுதமுய்த் தமர்த்திற மாற்றின னதுகண்டு**
**நின்ற குன்றமொன் றகழ்ந்தரு பிறகியு நின்றனன் கணைமூழ்கி**
**று சாரதத் தலைவரெல் லாமம ருசூற்றின ருலைவுற்றார்.**

(இ - ள்.) தண்டி யென்பவன் எறிந்த குன்றத்தினைப் பானு கோபன் கெடுக்க எழுவென்னும் படையினைத் தண்டி யென்பவன் கைக்கொடு அக்கோபன் தேரிற்கட்டிய குதிரைகளைக் கெடுத்தான். அத்தண்டி யென்பவன் நெற்றியின்கண் மிக்க வலியினையுடைய பாணங்கள் பதினாயிரத்தைச் செலுத்திப் போரின் வகையை நீக்கினன். அங்ஙனம் நீக்குதலைக் கண்ணுற்று அங்குநின்ற மலையொன்றினைத் தோண்டிக் கையிற்கொண்ட பிருங்கி யென்பவனும், பானுகோபன் எய்த கணைமழையான் மூழ்கி நின்றனன். பொருந்திய பூதத்தலைவர்களியாவரும் போரினைச் செய்தாராகி வருந்தினரென்க.

(வி - ம்.) குரகதம் - குதிரை. அயுதம் - பதினாயிரம். சாரதர் - பூதர். (உஉஅ)

**ஆய தோல்விகண் டிலக்கரும் பெரிதம ராடினர் வருகாலைத்**
**தீய னுய்த்தகோன் மாற்றினர் மேற்செலச் செலுத்தின ரதுநோனான்**
**பாய வாளிக ளெண்ணில தொடுத்தவர் பரப்பிய கணைநூறி**
**ஏயெ னச்சிலை யிலக்கமு மறுத்தன னெறுழ்ச்சிலை யறவோடும்.**

(இ - ள்.) இங்ஙனம் பூதத்தலைவர்கள் வெந்நிடலாகிய தோல்வியினைக் கண்டு இலக்கவீரரும் பெரிதும் போர்புரிந்து வருகின்ற காலத்துத் தீமையுடையோனாகிய பானுகோபன் செலுத்திய கணைகளை நீக்கி அவன்மேற் பாணங்கள் செல்ல உய்த்தார்கள். அங்ஙன முய்த்தலைப் பொறுதவனாகிய பானுகோபன் அளவில்லனவாகிய பரவிய கணைகளைத் தொடுத்தல் செய்து அவ்விலக்கர்கள் தன்மேற் பரவச்செய்த கணைகளைக் கெடுத்து யாவரும் ஏயென்று இகழ்ச்சிசெய்ய இலக்கம் வில்லினையு மறுத்தனன். அங்ஙனம் வலியவிற்கள் ஒடிய.

(வி - ம்.) ஏ - இகழ்ச்சிக்குறிப்பு. நோனான் - பொறான். பாய - பரவிய. (உஉகூ)

**வேறு வான்சிலை வளைத்தவு னன்விடு விசிகநுண் டுகளாக்கி**
**ஏறு தேர்பரி பாகினைச் சிதைத்தன ரிரதமொன் றவன்பாய்ந்து**
**சீறி நூறுநூ றுயிரஞ் சிலீமுகஞ் செலுத்திவார் சிலைதேரும்**
**கூறு செய்தகன் மருமத்து மழுத்தினன் கூர்ங்கணை சமர்நீத்தார்.**

(இ - ள்.) வேறு பெரிய வில்லினை வணக்கி பானுகோபன் விட்ட பாணங்களை நுண்ணிய துகளாகச் செய்து ஏறிவந்த தேரினையும் அத்தேரிற் பூட்டிய குதிரையினையும், அத்தேரினையூர்ந்த பாகனையும் கெடுத்தார்கள். அக்கோபன் ஒரு தேரின்கட் பாய்ந்து சிற்றமூற்று நூறு நூறுயிரங் கணைகளைச் செலுத்தி அவ் விலக்கர் பிடித்த நீண்ட வில்லினையும், ஏறிய தேரினையும் வெவ்வேறும்படி கூறுபடுத்திப் பலகூரிய கணைகளை உரத்தின்கண்ணும் அழுந்தச் செய்தான். அவர்கள் போரைத் துறந்தாரென்க.

(வி - ம்.) விசிகம் - பாணம். பாகு - பாகன். (உகூ0)

வீர கோளரி நேர்ந்திரும் கணைமழை விடாதுமேற் சொரிகிற்பச்
சூரன் மாமக னூறுநூ றுயிர கோடிவா ளிகடுண்டி
நேரும் வாளிக ணீறுசெய் தாயிர நெடுங்கணை புயத்துய்த்தான்
ஒரும் வீரனு மவனுரம் போழ்ந்துற வுறுத்தினன் கணையன்னுன்.

(இ-ள்.) வீரகோளரி யென்பவன் எதிர்ந்து பெரிய அம்பு மழையை விடாமல் மேலே சொரியாநிற்ப, சூரன் மகனுகிய பானு கோபனென்பான் நூறு நூறுயிரங்கோடி கணைகளைச் செலுத்தி மேல் வந்து பொருந்திய கணைகளைப் பொடிசெய்து நீண்ட கணை ஆயிரத்தை வீரகோளரி புயத்தின்கட் செலுத்தினுன். இதனை ஆராய்ந்த வீரகோளரி யென்பான் அக்கோபன் நெஞ்சம் பிளக்குமாறு கணைகளைச் செலுத்தி னன் அக்கோபன். (௨௯௧)

வில்லி னலிவன் ரேல்விகாண் பரிதென விண்டுமாப் படைதொட்டான்
ஒல்லை மேற்படர் பகழிவாய் மடுத்தஃ துறுதலு மெதிரேவ
வல்ல வீரனு மெடுக்குமுன் மார்பிடங் கொண்டவன் மதிதன்னைச்
செல்லு லாய்க்கதிர் மறைத்தென மறைத்தது தினகரன் போர்வேட்டான்.

(இ-ள்.) விற்றெழிலான் இவ்வீர கோளரியின் தோல்வியைக் காண்டற் கரிதாகுமென்று ஆழிப்படையினைத் தொடுத்தான். அவ வாழிப்படை தன்மேல் வருகின்ற கணைகளை வாய்ப்பெய்து அவ்வாழிப் படை பொருந்த வலிய வீரசிங்கன் எதி ரேவப் படையெடுக்கு முன்னர் அவன் மார்பைத் தனக்கிடமாகக் கொண்டு அவ் வீரகோளரியின் மதி யினை மேகம்பொருந்திச் சூரியனை மறைத்தாற்போல மறைத்தது. இதனைக் கண்ட தினகரனென்பவன் போரினை வேட்டெழுந்தனன் என்க.

(வி-ம்.) செல் - மேகம். கதிர் - சூரியன். (௨௯௨)

போர்தொ டங்குமுன் வீரமார்த் தாண்டன்கைப்
பொருசிலை துணித்தொட்டான்
வார்து தற்கணு யிரங்கணை வரித்தனன்
மற்றெரு சிலைவாங்கி
நேர்தொ டுக்குமு னதனையுந் தேரையு
நீறுசெய் தெழுநூறு
தார்ம ணிப்புயத் தேயினன் றுயவன்
றடங்கையின் முரித்திட்டான்.

(இ-ள்.) போரினைத் தொடங்குவதற்கு முன்னரே வீரமார்த் தாண்டனென்பவன் பானுகோபன் கையின்கண்ணுள்ள போரினுக்குரிய வில்லினைத் துண்டஞ்செய்து அக்கோபன் நீண்ட நுதலின்கண் ஆயிரங் கணைகளை எய்தனன். பானுகோபன் வேறொரு சிலையினை வளைத்து எதிரே தொடுத்தற்கு முன்னரே அவ்வில்லினையும் தேரினையும் பொடி

செய்து எழுநூறு கணைகளை மாலையினை அணிந்த அழகிய புயத்தினிடத்துச் செலுத்தித் தாவி அவன் பெரிய கையின்கண்ணுள்ள வில்லினை முரித்தா னென்க.

(வி - ம்.) வீரமார்த்தாண்டன் - முற்கூறிய தினகரன். நீறு - பொடி. தார் - மாலை. தாய் - தாவி. (௨௧௩)

முரித்த வீரன்மார் பத்திடை நாந்தக முடுக்கினன் முனிவீரன்
பரித்த நாந்தகத் தழுத்தினன் பதகன்குப் பாயம்பா ரிடத்தீயோன்
உரத்தி னுந்தக முரிஇக்குளத் தழுத்தின னுதிரமோ டுயிர்சோர்ந்தான்
தெரித்து வீரராக் கதனெதிர்த் தாயிரஞ் சிலீமுக மேல்விட்டான்.

(இ - ள்.) அங்ஙனம் வில்லினை முறித்த வீரமார்த்தாண்டன் நெஞ்சிடத்து வாளினை யழுத்தினன். அங்ஙனமழுந்த முனிவுற்ற வீரமார்த்தாண்டன் தன் மார்பிலமுந்திய அவ்வாளினைப் பறித்துப் பாதகனாகிய பானுகோபன் மெய்ப்பை கிழிய மார்பின்கணழுத்தினான். அப்பானுகோபன் தன் மார்பின்கணுள்ள அவ்வாளினை யுருவி வீரமார்த்தாண்டன் நெற்றியின்க ணழுத்தினான். செந்நீரொழுகலோடு வீரமார்த்தாண்டனுயிர் சோர்வுற்றான். இங்ஙனமுயிர் சோர்தலை யறிந்து வீரராக்கதனென்பான் எதிர்த்தாயிரங் கணைகளைப் பானுகோபன் மேல்விட்டானென்க.

(வி - ம்.) நாந்தகம் - வாள். முடுக்கல் - செலுத்தல். குப்பாயம் - உடம்புக்கிடு. பள்ளிக் குப்பாயத்தர் என்னும் திருவாசகத்தா னிதனை யறிக. குளம் - நெற்றி. தெரிந்தென்பது விகாரம். சிலீமுகம் - அம்பு. (௨௧௪)

விட்ட வாளிகள் சூர்மகன் விலக்கிவெங் கணைகனூற் றிவிற்பாகை
அட்ட னன்கடி தொருவனை யமைத்தொரா யிரங்கணை யான்மோலிக்
கட்ட ழித்தனன் வீரராக் கதன்கருந் தானவ ரிறைமைந்தன்
முட்டு நாணினன் மோலிவே றணிந்தவன் மொய்சிலை தொடுத்தீர்ந்தான்.

(இ - ள்.) சூரன் மகனாகிய பானுகோபன் வீரராக்கத னென்பான் விட்ட கணைகளை நீக்கி நூறு கொடிய கணைகளால் பாகனை யழித்தனன். வீரராக்கதன் விரைவில் வேறொரு பாகனை அமைத்து ஆயிரங் கணைகளால் முடியின் வலியினையழித்தனன். கரிய அவுணர்கள் தலைவனாகிய சூரன் மகன் நிறைந்த நாணினையுடையனாய் வேறு முடியினைக் கவித்து அவ் வீரராக்கதன் செறிந்த சிலையினைக் கணைகளைத் தொடுத்துப் பிளந்தன னென்க.

(வி - ம்.) பாகு - பாகன். மோலி - முடி. (௨௧௫)

மற்றொர் வார்சிலை பற்றுமுன் றேர்ப்பரி மாய்த்தனன் மற்றோர்தேர்
உற்ற காலையிற் ஸ்கச்சிலை துமித்தன னுருத்திராக் கதனோர்வேல்
பற்றி யோச்கின னதனையும் பொடித்தனன் பானுகோ பனையண்மிப்
பொற்ற தேரொடு மந்தரத் தோச்சினன் புழுங்கிவின் னெழுமன்னுன்.

(இ - ள்.) வீரராக்கதன் வேறொரு நீண்ட வில்லினைப் பிடித்தற்கு முன்னர்த் தேரிற் கட்டிய குதிரையைப் பானுகோபன் கெடுத்தனன். வீரராக்கதன் வேறொரு தேரின்கட் பொருந்திய காலையில், கையின்கண் ணுள்ள வில்லினைப் பானுகோபன் றுண்டஞ்செய்தனன். கோபித்து வீரராக்கதன் ஒரு வேலைப்பற்றி வீசினான். பானுகோபன் அவ்வேலினை யும் பொடி செய்தான். அப் பானுகோபனை வீரராக்கத னெருங்கிப் பொலிவுற்ற தேருடனே அவனை வானின்கண் ணெறிந்தான். அங்ஙன மெறிதலால் புழுக்கமுற்று வானின்கட் செல்கின்ற அவன்.

(வி - ம்.) பொற்ற - பொலிவுற்ற. (உஙசு)

வேதன் முன்றரும் வேலினை விடுத்தனன் வீரராக் கதன்சோர்ந்தான்
பூத லம்விழு தானவன் வேறொரு பொற்றதே ரிவர்ந்துற்ருன்
கோதில் வீரக னைவரும் பெருஞ்சமர் குயிற்றினர் வலிதேய்ந்தார் [பன்.
ஈது கண்டன னன்றுநன் றெனநகைத் தெதிர்த்தனன் விறன்மொய்ம்

(இ - ள்.) பானுகோபன் பிரமன் முன்றனக்களித்த வேற்படை யினை விட்டனன். வீரராக்கத னென்பவன் சோர்வுற்றுக் கீழே விழ்ந் தனன். மேலே சென்று நிலத்தின்கண் விழுகின்ற தானவனாகிய பானு கோபன் மற்றொரு பொலிவுற்ற தேரின்கண்ணே யேறினான். குற்ற மில்லாத (வீரகேஸரி) வீரமார்த்தாண்டன் வீரராக்கதனீங்கிய வீரவாகுதேவரை யொழித்து ஐவரும் பெரிய போரினைச்செய்து வலி கெட்டனர். இதனைக் கண்டனனாகி "நன்று நன்று" என்று வீர நகைசெய்து வீரவாகுதேவன் எதிர்த்தா னென்க.

(வி - ம்.) வேதன் - பிரமன். பொற்ற - பொலிவுற்ற. விறல் - வெற்றி. (உஙஎ)

கண்டு தானவன் வெகுண்டுநீ தூதனுங் கள்வனு தலினின்னை
மண்டி யாருயி ருண்பது பழியலால் வருவதொன் றிலையானும்
உண்டு ளருயி ரெஞ்சினுர் தமையெலா முறுத்துவன் சிறையென்ருன்
அண்டர் நாயக னிளவலு முறுவலித் தருளிலிக் கிதுகூறும்.

(இ - ள்.) பானுகோபன் வீரவாகுவைப் பார்த்துச் சீற்றமுற்றி முன்னர் வந்த தூதனாகிய கள்ளனாதலின் நின்னை நெருங்கி அரிய உயி ரைக் குடிப்பதால் எனக்குறுவது பழியன்றி வேறொன்றில்லையாயினும் முன்னர் உன்னரிய உயிரையுண்டு இறவா தெஞ்சியவர்களை யெல்லாம் சிறையின்கட் சேர்ப்பல் என்றனன். தேவர்கட்குத் தலைவனாகிய முரு கனுக்கிளவலாகிய வீரவாகு அருளில்லாதவனாகிய பானு கோபனுக்கு இதனைச் சொல்வான்.

(வி - ம்.) உயிரை உண்பதால் வருவது பழியலால் ஒன்றிலையா யினும் எனக்கூட்டுக. (உஙஅ)

துங்க னாருயிர் மேலெழுந் தூதன்யா னன்றியு நுமரெல்லாம்
பொங்கு மன்பினு லடிதொழு மிறைதரு புதல்வனு தலினென்னை

இங்க ணையென மதித்திட தெதிர்தலே யிறிஞி யிவனேடும்
அங்க வன்சம ராடின னெனும்புக ழாக்குவ னினைந்தென்றான்.

(இ - ள்.) பானுகோபனே! அவுணர்களாகிய நுங்கள் அரிய உயிர் மாட்டுக் கறுவுகொண்டு கொள்ள எழுகின்ற இயம தூதுவன் யான் அன்றியும், நம்மவராகிய அவுணர்களியாவரும் பிருந்த அன் பினுல் அடியை வணங்கும் இறைவ னருளிய மகனுகலின் என்னை இவ் விடத்துத் தலைவனென்று மதியாது என்னெடு போர் செய்தலே எனக் கிழிவாகும். இனி பானுகோபனுடனும் வலிய போரினை அவ்வீரவாகு செய்தான் என்னும் புகழினை நினக்குள தாக்குவனென்றான் என்க.

(வி - ம்.) தூதன் - இயமதூதன். அவன் - விரவாகு. (உகக)

வேறு

என்ற லுங்கதிர் மாற்றல னிகல்பெ ருஞ்சிலை வாங்குபு
கொன்றி றற்கணை பத்தனைக் கோத்து விட்டனன் வாகுவும்
வென்றி விண்ணவர் தளையற வெய்ய தானவர் நாளற
மன்ற வையகங் கோளற வாளி பத்துறுந் தறுத்தனன்.

(இ - ள்.) இங்ஙனம் விரவாகு கூறப் பானுகோபன் போரினுக் குரிய சிலையினை வளைத்து அச்சத்தையும், வலியினையுஞ் செய்கின்ற பத்துக்கணைகளை வில்லிற் கோத்துச் செலுத்தினன். விரவாகு வென்பான், வெற்றியையுடைய தேவர்கள் கட்டு நீங்கக் கொடிய அவுணர்கள் வாழ் நாள் கெடத் தெளிவாக இவ்வுலகம் இடையூறு நீங்கப் பத்துக் கணை களைச் செலுத்தி அறுத்தானென்க.

(வி - ம்.) கொன் - அச்சம் நாள் - வாழ்நாள். கோள் - இடை யூறு. மன்ற - தெளிவாக. (உ௬0)

அறுத்து நூறுகோல் கோபன்மே லண்ண லேயின னூறுதொட்
டிறுத்தொ ராயிரந் தானவ னேயி னனவை யாயிரத்
தொறுத்து நம்மவ னயுதமே லுறுத்தி னனவை நேர்கணை
தெறித்தி றுந்தபி னிலக்கமேற் சேர்த்தி னன்கதிர் மாற்றலன்.

(இ - ள்.) தலைவனுகிய வீரவாகு அப்பானுகோபன் செலுத்திய பத்துக் கணைகளையும், அறுத்து அப்பானுகோபன் மேல் நூறு கணை களைச் செலுத்தினன் தானவனுகிய பானுகோபன் நூறு கணைகளைத் தொடுத்து, அந்நூறு கணைகளையு மொடித்து ஆயிரங் கணைகளை வீர வாகு மேற்றொடுத்தனன். நம்மவனுகிய வீரவாகு அவற்றை ஆயிரம் பாணங்களாற் கெடுத்துப் பதினுயிரங் கணைகளைப் பானுகோபன் மேற் செலுத்தினன். பானுகோபன் அப்பதினுயிரங் கணைகளை யொத்த கணைகளைச் செலுத்தி அப்பதினுயிரங் கணைகளையும் கெடுத்த பின்னர் வீரவாகு மேல் இலக்கங் கணைகளை எய்தனன் என்க.

(வி - ம்.) அயுதம் - பதினுயிரம். தெறித்து - விடுத்து. கதிர் மாற்றலன் - பானுகோபன். (உ௬௪)

**சேர்ம லக்கணை சிந்துபு சிதறி னொருகோடிமேல்**
**இம்மு றைத்தொகை யின்றியு மெய்து போர்விளை யாடினர்**
**அம்ம வாளியின் மாய்குவ ரறுத்து மெய்யுருத் தோற்றுவர்**
**மும்மை வையக முஞ்சர மூரித் தூணிய தாக்கினர்.**

(இ - ள்.) தலைவனாகிய வீரவாகு அவ்விலக்க மென்னு மளவினை யுடைய கணையைச் செலுத்தி ஒரு கோடி கணையை மேலுஞ் சிதறினா னென்க. இம்முறையான் அளவின்றியும் கணைகளைச் செலுத்திப் போர் விளையாடலைச் செய்தனர். என்ன ஆச்சரியம் இருவரும் கணைகளின் மறைவார்கள். அங்ஙனம் மறைத்த கணை நீக்கி வெளிப்படுவார்கள். மூன்றுலகினையும் வலியினையுடைய அம்பறாக் கூடாகச் செய்தனர் என்க.

(வி - ம்.) மெய்யுருத் தோற்றல் - வெளிப்படுதல். மூரி - வலிமை. அம்ம : வியப்பிடைச் சொல். மாய்தல் - மறைதல். (உசஉ)

**ஆடு மெல்லையில் வாகுவி னங்கை வில்லிறுத் தானவன்**
**பீடி லான்சிலை குரிசிலும் பேசு முன்னறுத் தானவன்**
**நாடி யாயிரங் கணையுர நடவி னானிவ னவன்முடி**
**ஓட வேழ்சர முய்த்தன னுட்கி வேறுக வித்தனன்.**

(இ - ள்.) இங்ஙனம் போர் செய்யுங் காலத்துப் பானுகோபன் வீரவாகுவின் அகங்கையிலுள்ள வில்லினை யறுத்தனன். தலைவனாகிய வீரவாகு பெருமையிலனாகிய பானுகோபன் வில்லினைச் சொல் வெளிப்படு முன்னர் அறுத்தனன். அப்பானு கோபன் ஆராய்ந்து ஆயிரங் கணைகளை உரத்தின் கண்ணே செலுத்தினான். இவ்வீரவாகு அப்பானு கோபன் முடிசெல்ல ஏழு கணைகளைச் செலுத்தினான். பானுகோபன் வெட்க முற்று வேறு முடிகளை யணிந்தான் என்க.

(வி - ம்.) உட்கல் - நாணல். (உசங)

**கவித்த வன்கவ யங்கெடக் கடவு ளாயிரத் தீர்ந்தனன்**
**அவித்த நன்மைய னுயிர மழுத்தி னுன்குளத் தலைநிலம்**
**குவித்தோ ராயிர மாயிரங் குவவுத் தோளுர மானனம்**
**பவித்தி ரன்கோளத் தொடுத்தனன் பானு கோபனங் கயர்ந்தனன்.**

(இ - ள்.) முடிகவித்தவனாகிய பானுகோபன் உடம்புக்கீடு கெட வீரவாகு தேவன் ஆயிரங் கணைகளால் பிளந்தனன். நன்மையிலனாகிய பானுகோபன் வீரவாகுவின் நெற்றியின் கண்ணே ஆயிரங் கணைகளைச் செலுத்தினான். அவ்வாயிரங் கணைகளையும் நிலத்தின் கண்ணே பொடியாகக் குவியச் செய்து புனிதனாகிய வீரவாகு இரண்டாயிரங் கணைகளைத் திரண்ட தோளும் உரமும் முகமுமாகிய இடங்களிற் படும்படி தொடுத்தான். அதனாற் பானுகோபன் அயர்ச்சியுற்றானென்க.

(வி - ம்.) அவித்த நன்மையன் - நன்மையில்லாதவன். இதனை விட்ட வேட்கையரென்றாற் போலக் கொள்க. குளம் - நெற்றி. ஆனனம் - முகம். (உசச)

## வேறு

நாயக னயர்த்தலு நயந்தவிற லாளர்
மேயினர் தெழித்தனர் வெகுண்டமர் விளைந்தார்
காயிரு மழுத்திகிரி காதுகதை யாதி
ஏயின வனைத்துமுற வேந்தலது நோக்கி.

(இ - ள்.) படைத்தலைவனாகிய பானுகோபன் சோர அவன் பால் நயப்புற்ற வெற்றியை யாளும் வீரர்கள் போரிற் பொருந்தி முழக்கச் சீற்றங்கொண்டு போர் செய்தனர். எரிக்கின்ற பெரிய மழுப்படையும் மோதுகின்ற தண்ட முதலிய படைக்கலங்களும் செலுத்த அப்படைக் கலங்கள் யாவும் வந்து சேரத் தலைவனாகிய வீரவாகு அங்ஙனம் வருதலை நோக்கி யென்க.

(வி - ம்.) மேயினன் தெழித்தனன்; எச்சமுற்று. காதுதல் - மோதுதல். ஏய்தல் - பொருந்துதல். (உ௭௩)

கார்முகம் வளைத்துவிடு கால்லிகர் வாளி
போர்முக மிறுத்தவர் புயங்கைமுடி வார்தாள்
பார்முகம் விசும்புமுகம் பாய்திசைமு கஞ்சூர்
ஊர்முகம் விழுத்தின வுலைந்தபடை முற்றும்.

(இ - ள்.) வில்லினை வளைத்துச் செலுத்திய இயமனை யொத்த வாளிகள் போரின் கண்ணே தங்கினோர் புயம், கை, முடி, தாளாகிய இவைகளைப் பூமியின் கண்ணும் வானின் கண்ணும் பரவிய பல திசை யின் கண்ணும் சூரனது ஊரின் கண்ணும் விழும்படி செய்தன. படை யெல்லாம் குலைந்தன வென்க.

(வி - ம்.) கார்முகம் - வில். வார் - நெடிய. சூர் - சூரன். (உ௭௪)

நொந்தவிறல் வீரரு நொறிற்கணமும் யாரும்
வந்துபொரு வாகுவுழை மல்கினர்க ளாங்கே
புந்திதளர் சூர்மதலை பொன்றுமுணர் வெய்திச்
சிந்துபடை நோக்கியெரி சிந்தியெதிர் சென்று.

(இ - ள்.) வருந்திய வலியினையுடைய வீரரும் வேகத்தினை யுடைய பூதகணமும் ஏனைய யாவரும் வந்து போர் செய்கின்ற வீர வாகு தேவரின் பக்கத்தே நெருங்கினார்கள். அப்பொழுது மனந்தளர் வுற்ற சூரன் மகனாகிய பானுகோபன் சோர்ந்த அறிவு தெளியப் பெற் றுச் சிதறிய படையினைப் பார்த்து நெருப்பைச் சிந்தி யெதிரே சென்று என்க.

(வி - ம்.) நொறில் - வேகம். வாகு - வீரவாகு. (உ௭௫)

தோன்றன்மிசை வாளிக டுறுத்தின னறுத்தாங்
கான்றவ னவன்மிசை யடைச்சிலை யகற்றி
மான்றவன் மணிப்பொளிர தந்தபவொர் வையம்
சான்றவ னிவர்ந்துதவழ் தேர்சிலை தகர்த்தான்.

(இ - ள்.) தலைவனாகிய வீரவாகுவின்மீது கணைகளைச் செலுத்தினான். அவ்வாறு செலுத்திய கணைகளை உயர்ந்தோனாகிய வீரவாகு அறுத்து அப்பானுகோபன் மீது கணைகளைச் செலுத்தினான். பானுகோபன் கணைகளை நீக்கிப் பெருமை பொருந்திய வீரவாகுவின் மணிகள் குயிற்றிய அழகிய தேரினைக் கெடுக்க, வேறொரு ஒப்பற்ற தேரின்கண் சான்றோனாகிய வீரவாகு ஏறிப் பானுகோபனது தேரையும், சிலையையும் பொடி செய்தனனென்க.

(வி - ம்.) அடைச்சல் - சண்டுடைதல். வையம் - தேர். தவழ் - ஊர்கின்ற. தகர்த்தல் - கெடுத்தல். (உ௬அ)

வேறிரத மேறியெழு நூறுவிசி கந்தேர்ந்
தூறுபட வீரனுர முய்ப்பவுவ னம்பால்
தேறுசிலை தேர்பரிசி தர்த்தவுணன் மார்பம்
ஆறுதிர மாகவழி யாக்கினன வன்றுன்.

(இ - ள்.) பானுகோபன் வேறொரு தேரின்கண்ணேறி எழுநூறு கணைகளை ஆராய்ந்து கெடும்படி வீரவாகு மார்பின்கண்ணே செலுத்த வீரவாகு கணையால் பானுகோபன் போரில் தெளிவுற்ற சிலையையும், தேரையும் கெடுத்துப் பானுகோபன் மார்பத்தைக் குருதியாறு செல்லும் வழியாகச் செய்தான். அப்பானுகோபன்.

(வி - ம்.) விசிகம் - கணை. உவன் - இவன். (உ௬௯)

மற்றுமொரு வையமிசை வாவுதலும் வீரன்
பிற்றலையி ருந்தகணை பெய்தபெருந் தூணி
அற்றுவிழ வற்றமரு மப்புழையி னூடு
பொற்றகணை யேயினன்பொ ருதவன்வி யந்தான்.

(இ - ள்.) வேறொரு தேரின்கண்ணே தாவ வீரவாகு பானுகோபன் பின் பக்கத்தே தங்கிய அம்புக் கூடானது அற்று விழும் வண்ணம் முன்னர்க் கணை கடைத்த மார்பின்கண்ணுள்ள புழை நடுவே பொலிவு பெற்ற கணைகளைச் செலுத்தினான். ஆச்சரியந் தாங்க முடியாதவனாகி வியப்புற்றானென்க.

(வி - ம்.) வீரர் யாவரும் குறியினை எதிரே வைத்தெய்தல் வழக்காறும். வீரவாகு தேவர் கோபன் பின் புறத்திலுள்ள அம்புக்கூட்டை அவன் மார்பின் புழை வழியே கணை சென்று அற்று விழும் வண்ணம் எய்தமை கண்டு வீரவாகுவின் விற்றொழிலினை வியந்தானென்பார், "பெருந்தூணி யற்றுவிழ வற்ற மருப்புழையினூடு பொற்றகணையேயினன் பொருதவன் வியந்தான்" என்றார். (உ௭0)

இன்னவனை வானியினி றுத்தலரி தாமென்
றன்னையொரு பாலமரு மன்னறரு மோகம்
மன்னுபடை தூண்டவிறல் வாகுவர னேக்கித்
துன்னுபடை யாலதுவு தோன்றுமென நின்றுன்.

(இ - ள்.) இங்ஙனம் வியப்புற்ற பானுகோபன் இத்தன்மையான வில்வீரனைக் கணைகளாற் கோறல் அருமையாகுமென்று எல்லா உலகிற்கும் அன்னையாகிய உமையம்மையார் ஒருபாகத்தே தங்கும் இறைவன் தந்த மோகனக் கணையைச் செலுத்த வெற்றியினையுடைய வீரவாகு அம் மோகனக்கணை வருதலைப் பார்த்துப் பொருந்தும் இக்கணையால் நமக்கு அறிவுளதாகுமென்று வாளாநின்றனன்.

(வி - ம்.) நமது தந்தையாகிய இறைவன் கணையாதலின் நமக்கு அறிவினையே தரும். மோகந்தராதெனத் துணிவு கொண்டு நின்றனனென்பார். துன்னுபடை யாலறிவு தோன்றுமென நின்றார் என்றார். (உகள)

தந்தைபடை யாயினுந்த வத்தினுறல் பெற்றோர்
சிந்தையினி னைந்தபடி செய்திடுவ தன்றே
அந்திலுயர் வீரன்முத லோரறிவு மாய்ந்து
மைந்தினொடு நிற்பவது கண்டுமகிழ் தீயோன்.

(இ - ள்.) தனது தந்தையாகிய இறைவன் படையேயாயினும் அரிய தவத்தினைச் செய்து, அத்தவப்பயனால் அப்படையினை அடையப் பெற்றவர்கள் தங்கள் மனத்தின்கண் ணினைத்த வண்ணம் செய்து விடுவதல்லவா? ஆதலால் அப்படை அவ்விடத்துள்ள உயர்ந்த வீரவாகு முதலியோர் அறிவினை மறைத்து வலியோடு நிற்க. அதனைக் கண்ணுற்று உவப்பெய்திய தீயோனாகிய பானுகோபன்.

(வி - ம்.) தந்தை - சிவன். அந்தில் - அவ்விடத்தே. மைந்து - வலிமை. (உகஉ)

வென்றிநம தென்றுவில்வ ளைத்தனிக மீது
துன்றுசரம் விட்டுடறு ளைத்தல்வினை மிக்கான்
அன்றைவிளை வோர்ந்துகுக னுடலய ரமோகம்
ஒன்றுபடை யூக்கினனு டைந்ததஃ தன்றே.

(இ - ள்.) வெற்றி நம்பக்கலேயாமென்று வில்லினை வளைத்துப் படையின்மீது செறிந்த கணைகளைச் செலுத்தி உடல்களைத் துளைத்தலாகிய தொழிலின் கண்ணே மிக்கான். அன்றைப் பொழுதின்கண் விளைவினை யாராய்ந்து குகன் வெற்றியைத் தருகின்ற ஞானம் பொருந்திய கணையினைச் செலுத்தினன். அம்மோகனக் கணை அப்பொழுதே தோற்றோடியதென்க.

(வி - ம்.) மோகனக்கணை - மயக்கத்தையுளவாக்கும் கணை. அமோகக் கணை - அறிவை யுளவாக்குங் கணை. (உகங)

இரித்தபடை மீண்டுகுக னெந்தையை யடுத்த
துருத்துவிறல் வாகுவிவ னுவ்வுயிரை யின்னே
பிரிப்பலென முக்கணுடை யான்படைபி டித்தான்
தெரித்தவுணன் வானிடைம றைந்துநகர் சென்றான்.

(இ - ள்.) ஓட்டிய ஞானக்கணை மீண்டு தந்தையாகிய குகனையண் மியது. வலி பொருந்திய வீரவாகு இக்கோபனுள்ளேயுள்ள உயிரினை இப்பொழுதே நீக்குவல் என்று மூன்று கண்ணினையுடைய இறைவன் படையினைப் பிடித்தனன். இதனை யறிந்த அவுணனாகிய பானுகோபன் வானின்கண் மறைந்து நகர் சென்றானென்க.

(வ - ம்.) தெரித்து : விகாரம். முக்கணுடையான் படை - பாசுபதாஸ்திரம். (உ௫௪)

கரந்தவுண னேகியது கண்டுவிறல் வாகு
பரந்தபடை யோடுவளர் பாசறைய டுத்தான்
அரந்தையொடு தன்பகைய கன்றதறி வெய்யோன்
சுரந்தகளி யாற்கடறு ளைந்திடவ டுத்தான்.

(இ - ள்.) ஒளிந்து அவுணனாகிய பானுகோபன் சென்றதைக் கண்ட வெற்றியினையுடைய வீரவாகு பரவிய தானையோடு வீரம் வளர் தற் கேதுவாகிய மாடிவீட்டினை யண்மினான். துன்பத்தினோடு தன் பகைவனாகிய அவுணன் மறைந்தோடியதை யறிந்த வெங்கதிர்க் கடவுள் பெருகிய களிப்பாற் கடலின்கண்ணே மூழ்க அடுத்தன னென்க.

(வி - ம்.) கரந்து - ஒளிந்து. அரந்தை - துன்பம். வெய்யோன் - ஞாயிறு. தன்பகை - கதிர்ப்பகை : பானுகோபன். (உ௫௫)

மண்ணிடை யிறுந்தகுவர் வான்புலனி றந்தார்
நண்ணுமுனு ணர்ச்சியினம் மாரிவரென் றுது
விண்ணவரொ டும்பொருத வீழ்குருதி யெங்குந்
துன்னெனவி ரிந்ததுற முஞ்சுடர்செவ் வானம்.

(இ - ள்.) அந்திக்காலத்தே தோன்றும் ஒளியுடைய செவ்வானமானது நிலத்தின்கண்ணே இறந்த அவுணர் வானுலகின்கட் சென்றவர் பொருந்திய முற்பிறவியின் அறிவினால் தேவர்களை நம்மவராவாரென்று கருதாது தேவர்களோடும் போர்செய்த காரணத்தால் வீழ்ந்த குருதி எல்லாவிடங்களிலும் விரைவாகப் பரவியதை யொக்கு மென்க.

(வி - ம்.) இவ்வுலகின்கட் போரிலிறந்த அவுணர்கள் போரிலிறத்தலான் தேவராகி வீரசுவர்க்கத்தின்கட் சென்றும் முற்பிறவிப் பயிற்சி வயத்தால் ஆண்டுள்ள தேவரோடுடற்றுமை கொள்ளா தாண்டும் போர்செய்து வீழ்ந்த குருதியே செவ்வானமாகு மென்பார். "விண்ணவரொடும் பொருதுவீழ் குருதியெங்கும்—துண்ணென விரிந்துற முஞ்சுடர்செவ் வானம்" என்றார். முன்னுணர்ச்சி - முற்பிறவி வாசனை. உறழும் - ஒக்கும். (உ௫௬)

வாங்குபரி வேடமதின் மாமதிய நாப்பண்
ஓங்கிருடு மிப்பவொளிர் வித்தவெண்வி ளக்கம்
பாங்கருடுச் சேனையொளி பற்றலர்கண் முற்றும்
நீங்கியமு னைப்புலம்வி ளைந்தகல் வானம்,

(இ - ள்.) வெண்கதிர்க் கடவுளைச் சுற்றிய ஊர்கோள் போர்க் களத்தின் மதிலாகப் பெருமை பொருந்திய அவ்வெண்கதிர்க் கடவுள் அமர்க்களத்தின் நடுவண் மிகுந்த இருளைக் கெடுக்க ஒளியுண்டாக வைத்த வெள்ளிய விளக்கமாகும், வெண்கதிர்க் கடவுளின் பக்கலி லுள்ள விண்மீன்கள் படைகளின் ஒளியாகப் பகைவர்கள் செறிந்த உயர்ந்த போர்க்களம் அகன்ற வானினை யொத்த தென்க.

(வி - ம்.) புலம் வானத்தை யொக்குமென முடிக்க. பற்றலர் முதலியன புலத்திற் கடை. விழைதல் - ஒத்தல். (உ௬எ)

வேறு

அரும்பிய மாலையி லடுத்த வீரனும்
பொருந்திறன் முருகனைப் போற்றி யேவலால்
இருந்தனன் றனதிடத் தேவருஞ் சென்றுதம்
திருந்திய விடங்களிற் சிவணி வைகினர்.

(இ - ள்.) இங்ஙனம் தோன்றிய மாலைப்பொழுதின்கண் பாடி வீட்டையண்மிய வீரவாகுவும் போர்க்குரிய வலியினை இயல்பாகவுடைய முருகனைத் துதித்து அவன் கட்டளையின்வண்ணம் தனது கட்டூர்க்கட் சென்று தங்கினான். ஏனைய வீரர் யாவரும் விடைகொடு சென்று தங்களுக்காகத் திருத்தமுறச் செய்த கட்டூர்க்கட் பொருந்தி வைகினர் என்க.

(வி - ம்.) வீரன் - வீரவாகு. சிவணி – பொருந்தி. (உ௬அ)

தொன்றறி யாததோர் தோல்வித் தீஞ்சுவை
நன்றுகைப் படுத்தவந் நாம வேலினன்
தன்றனி யுவளகஞ் சார்ந்து மத்தரின்
கன்றிய கவலையங் கடலிற் றாழ்ந்தனன்.

(இ - ள்.) இதன் முன்னர் நிகழ்ந்த போரின்கண் அறியாததாகிய தோல்வியாகிய இனிய சுவையினைப் பெரிதுந் தன்கைப்படுத்திய அச்சந் தரும் வேற்படை யுடையனாகிய பானுகோபன் தனது ஒப்பற்ற அந்தப் புரத்தை அணுகி உன்மத்தரைப்போல அடிப்பட்ட கவலையாகிய கடலின்கண்ணே மூழ்கினானென்க.

(வி - ம்.) இவன் சென்ற போர்தொறும் வென்றியே புனைவ தன்றித் தோல்வி யென்பதைக் கனவிலுங் கண்டறியாத வீரனென்பார், "தொன்றறியாததோர் தோல்வித் தீஞ்சுவை-நன்றுகைப்படுத்த வந்நாம வேலினன்" என்றார். உவளகம் - அந்தப்புரம். இதனை, 'அவளையே யமு தாகவவ் வண்ணலும், உவள கந்தன தாக வொடுங்கினன்' என் னுஞ் சிந்தாமணி யடியானு முரையானு முணர்க. (உ௬௯)

மதலைதன் மனத்தொடு வராமை தேர்தலும்
கதமிகச் சூர்மகன் கனன்று நாளையான்
விதலையுற் றனைவரும் விளிய முக்கணன்
புதல்வனை வேறெனப் புழுங்கி வைகினன்.

(இ - ள்.) மகனாகிய பானுகோபன் தன் மனத்தின்கட் கருதிய வெற்றியோடு வாராமையை யறிந்தவளவிற் சீற்றமிகுஞ் சூரனாகியவன் அழற்சியுற்று நாளையே யான் யாவரும் நடுக்கமுற்று இறக்க மூன்று கண்களையுடைய இறைவன் மகனை வெல்வேனென்று புழுக்கமுற்றிருந்தன னென்க.

(வி - ம்.) மதலை - மகன். கதம் - சினம். விதலை - துன்பம். வேறு- வெல்வேன். வேறு - தன்மை யொருமைமுற்று. விதலை - நடுக்கம். (உகூ0)

அதுதெரிந் தாண்டகைச் சூரன் றேல்வியும்
விதுவணி பிரான்மகன் வெற்றி வீக்கமும்
புதுவது காணிய புகன்று வெய்யவன்
கதுமெனத் தேர்கடாய்க் கடலிற் றேன்றினன்.

(இ - ள்.) வெங்கதிர்க்கடவுள், இங்ஙனம் சூரன் எண்ணியதை யறிந்து ஆண்டன்மையையுடைய சூரன் றேல்வியையும், வெண்கதிர்க் கடவுளைத் தரித்த இறைவன் றிருமதலையாகிய முருகனது வெற்றியின் பெருக்கத்தையும் புதுவதாகக் காணவிரும்பி விரைவாகத் தேரினைச் செலுத்திக் கடலின்கண்ணே தோன்றின னென்க.

(வி - ம்.) விது - சந்திரன். புகற்சி - விருப்பம். (உகூக)

புலரியிற் செய்கடன் புரிந்து சூர்முதல்
உலவிறன் படைஞரை யொற்றிற் கூயினன்
விலகரு மிலக்கவெள் ளத்து வீரர்கள்
கலவின ரெழுகடன் முழக்கங் காட்டினர்.

(இ - ள்.) நாட்காலையில் செய்ய வேண்டியவைகளைச் செய்து சூரனாகிய முதல்வன் என்றுங் கெடுதலில்லாத தன் படையாளரைத் தூதர்களா லழைத்தனன். ஒருகாலத்தும் நீங்குதலில்லாத வெள்ள மென்னு மளவினையுடைய வீரர்களும் கலந்தவராகி கடல்போல முழக்கங் காட்டின ரென்க.

(வி - ம்.) புலரி - விடியற்காலம். உலவில் - கெடாத. கலவினர் - முற்றெச்சம். (உகூஉ)

மந்திரத் தலைவரு மற்று ளோர்களும்
தந்தியும் புரவியுந் ததைய வெவ்வகை
வெந்திறற் படைகளுந் தேரின் மேவுற
இந்திர ஞாலத்தே றிவர்ந்து சென்றனன்.

(இ - ள்.) அமைச்சர்களும் ஏனையோர்களும் யானையுங் குதிரையும் நெருங்க எவ்விதப்பட்ட கொடிய வலிமையுள்ள படைகளும் தேரின் கண்ணே பொருந்தச் சூரனென்பான் இந்திரஞாலத் தேரின்மேலேறிச் சென்றன னென்க.

(வி - ம்.) தந்தி - யானை. இந்திரஞாலம் - சூரன் தேர். (உகூங)

வெளிறிலா யின்றுநீ வெளிறு தங்குவை
தெளிகென வுற்பனஞ் செய்திட் டாலென
ஒளிவிரா யுடலெல்லாம் வெளிற வொண்மணிக்
களிகுலா மொருகுடை கவிந்த தென்பவே.

(இ - ள்.) வெளிற்றுத் தன்மையில்லாதவனே? இன்றுநீ வெளிற்றுத் தன்மையைப் பொருந்துவாய் தெளியக்கடவாய் என்று உற்பாதங் காணப்பட்டாற்போல உடல் முழுதும் ஒளிகலந்து வெண்மை உளவாக ஒளியோடுகூடிய முத்தினாலாகிய களிப்புப் பொருந்திய ஒருகுடையானது கவிந்திருந்த தென்க.

(வி - ம்.) என்பதே, ஏ: அசைகள். உற்பனம் - உற்பாதம்; பின் வரும் தீமையை அறிவிக்கும் அடையாளம். (௨௬௪)

மானமா தமையிழப் பெய்தின் வாழ்தரா
மானவேல் வீரரு நீங்க வாழ்கலார்
ஆனசீ ராலின மென்ற டுத்தெனப்
பானிலாக் கவரிகள் பாங்கிற் றுள்ளின.

(இ - ள்.) கவரிமா, தம்மை இழத்தலைப் பொருந்தின் உயிர் வாழ மாட்டா. அதுபோல வேற்படையுடைய வீரரும் மானம்நீங்க உயிர்வாழ மாட்டார்கள். இங்ஙன மொத்த சிறப்பால் இவர் தமக்கு இனம் என்று அடுத்தாற்போல வெண்சாமரங்கள் சூரன் பக்கலில் வந்து துள்ளின வென்க.

(வி - ம்.) கவரி - சாமரை. சாமரை, நம்மை யிழப்பின் உயிர் வாழாத மானமாப்போன்று இவ்வீரர் வீரத்தை யிழப்பின் உயிர்விடுவர். ஆதலால் நமக்கு இனமென்று கருதின என்க. (௨௬௫)

வீரர்போ ரிடையுயிர் விளிந்த தானவர்
வாரமா யமரரின் மருவக் கண்டிது
சீரிதோ வெனச்சிர மசைத்தல் போன்றன
ஒரும்வார் கொடிநிரை யுகந்த சைந்தவே.

(இ - ள்.) பூதவீரர் செய்த அமரின்கண்ணே உயிர்நீங்கப் பெற்ற அவுணர்கள் அன்புகொண்டு தேவர்களோடு பொருந்துதலைக் கண்ணுற்றுப் பகைவராகிய அவுணர் உறவு கொளுமிது சிறப்பாகுமா? வெனத் தலையை யசைத்தலைப் போல நீண்ட கொடி நிரைகள் உயர்ச்சியுற் றசைந்தன.

(வி - ம்.) ஒரும் : அசைநிலை. விளிந்த - இறந்த. வாரம்-அன்பு. (௨௬௬)

எழுகட லோதையு மேழு மேகமும்
குழுமுறு மோதையுங் கூர்ந்த சேனையின்
விழுமிய வோதையும் வேறுந் தன்னெதிர்
கெழுமுவ தரிதெனக் கிளர்ந்த தின்னியம்.

(இ - ள்.) எழுகடலின் ஒலியும் எழுவகை மேகங்களும் குமுறுகின்ற ஒலியும் மிக்க சேனையின் சிறந்த வொலியும் வேறோசைகளுந் தன்னிடத்தே பொருந்துவ தருமையாகுமென்று சொல்லும் வண்ணம் இனிய வாச்சியம் கிளர்ச்சியுற்ற தென்க.

(வி - ம்.) எழுவகை மேகம் - புட்கலாவர்த்த முதலியன. இன்னியம் - இசைக் கருவி. (௨௬௭)

படைத்திற நோக்கிமெய் பனிப்ப ரென்றுத
னுடைப்பெருங் கருணையா லும்பர் கண்களை
அடைப்பது கருதிமண் ணணுவிற் சென்றெனத்
துடைப்பருந் தூளிவிண் முழுதுந் தூர்த்ததே.

(இ - ள்.) படையின் வகையினைக் கண்ணுற்று உடனடுக்கமுறுவரென்று தனது பெரிய கருணையா லும்பர்கள் கண்களை மூடுவது கருதி நிலமானது அணுவடிவாகச் சென்றாற்போல நீக்குதற்கரிய பூழி வான்முழுதையும் மறைத்த தென்க.

(வி - ம்.) மண் - பூமி. திறம் - கூறு. (௨௬௮)

இன்னணம் படையெழுந் தேகுஞ் சூர்முதல்
மன்னரி முகன்மகன் மரித்த பின்னவன்
தன்னொரு மகனிவர் தம்மைச் சேனைகட்
கின்னுயிர்க் காவல ராக்கி யெய்தினான்.

(இ - ள்.) இங்ஙனம் படையெழா நிற்கப் போர்க்குச் செல்கின்ற சூரனாகிய முதல்வன் நிலைபெறப் படைத்தலைவனாகிய சிங்கமுகன் மகனாகிய அதிசூரனும், இறந்ததன் பின்னவனாகிய தாரகன் கான்முளையாகிய ஒப்பற்ற அசுரேந்திரனும் ஆகிய இவர்களைப் படைகளுக்கு இனிய உயிர்க் காவலராகச்செய்து பொருந்தினா னென்க.

(வி - ம்.) சூர் - சூரன். அரிமுகன் - சிங்கமுகன். பின்னவன் - தாரகன். (௨௬௯)

இடங்கழி கொண்டுயி ரிறுப்ப லென்றுசூர்
அடங்கருஞ் சீற்றமொ டண்மு செய்திபோய்த்
தடங்கடல் விடநுகர் சதுரன் சேய்முனர்
முடங்கிய கையினன் முனிவன் கூறினான்.

(இ - ள்.) போரின்கட் பொருந்தி உயிரைக் கெடுப்பேனென்று சூரன் அடக்குதற்கரிய சீற்றத்தோடு போருக்குப் பொருந்துகின்ற செயலினைப் பெரிய கடலின்கணுண்டாகிய, நஞ்சினையுண்ட மேம்பாட்டினையுடைய இறைவன் மகனாகிய முருகன் முன்னர்ச்சென்று நாரதமுனிவன் வாயிற்பொத்திய கையுடையனாக நின்று சொல்லினா னென்க.

(வி - ம்.) இடங்கழிகோடல் - நெருங்கல். சதுரம் - மேம்பாடு. இதனைச் 'சதுரனெழிற் சோணா சைலற்றுதிப்பன்' என்னும் சிவப்பிரகாசர் வாக்கானறிக. (௨௭௦)

தனைநுக ரொருவனைத் தருக்க ழித்தவவ்
வனைகழல் வலவனை வருத்தி தேரென
நினையுமு னவன்றர நிமல னேறினன்
அனைவரு மவரவ ரியல்பி னண்மினர்.

(இ - ள்.) தன்னை நிகர்த்த ஒப்பற்றவனாகிய ஆதிசேடனை மனத்தின்கணுள்ள செருக்கினைக் கெடுத்த அந்த அலங்கரித்தாலொத்த வீரக்கழலினை யணிந்த பாகனாகிய வாயுவினைத் தேரோடு வருத்துவாய் என்று சொல்ல நினைத்தற்கு முன்னர் வாயுவென்பான் தேரினைக் கொணர மலமற்றவனாகிய முருகன் ஏறினான் ஏனைய வீரரனைவரும் அவரவர் இயல்பினுக்குரிய ஊர்திகளிலேறிப் பொருந்தினாரென்க.

(வி - ம்.) தன்என்றது, ஈண்டு வாயுவை. வருத்தி : முன்னிலைப் பிறவினைமுற்று. வருவிப்பாய் என்பது பொருள், (உஎஎ)

திருமுகப் பரிதியந் தெய்வப் பேரொளி
பருகுபு பெருகொளி படைத்து மைதவிர்ந்
துருகெழு முழுமதி யும்பர் நின்றெனக்
குருமணிக் கவிகைமேற் குலாய தென்பவே.

(இ - ள்.) திருமுகமாகிய செங்கதிர்க் கடவுளின் தெய்வத்தன்மை பொருந்திய மிக்க வொளியையுண்டு மிக்க வொளியை யுடையவாகிக் குற்றம்நீங்கி நிறம்பொருந்திய உவாமதி மேலே நின்றாற்போல நிறம் பொருந்திய முத்துக் குடைமேலே விளங்கிய தென்க.

(வி - ம்.) என்ப : அசை. மை, ஈண்டு களங்கம். குரு - நிறம். மணி - முத்து. (உஎஅ)

மானமின் றழிதரு மாயை மைந்தனைத்
தானினி யகலெனத் தம்மி னத்தினை
ஆனதோ ரொற்றுவிட் டகற்றச் சோடைகொண்
டானுழி தருவபோ லலைந்த சாமரை.

(இ - ள்.) இறைவன் பக்கலிசைகின்ற சாமரைகள் பெருமையின்றிக் கெடுகின்ற மாயை என்பவள் மகனாகிய சூரன் பக்கலில் அசைகின்ற தம்மினமாகிய சாமரைகளை இனியாண்டுத் தங்காது நீங்குங்கள் என்று பொருத்தமானதொரு தூதினைச் செலுத்தி நீக்க அச்சாமரைகள் சடைவினைக் கொண்டு அவ்விடத்துச் சுழலுதலைப்போல அசைந்தன வென்க.

(வி - ம்.) தான் : அசை. மானம் - பெருமை. தம் என்றது இறைவன் சாமரைகள். சோடை - கவலை. ஆன் - அவ்விடம். (உஎகூ)

கோவினை நாவினைக் குயின்கு ழாத்தினை
ஆளுநங் கடவுடே ரணுக லுற்றது

நீனிடை யோகுரி னென்று நீக்கல்போற்
றுளுயர் நெடுங்கொடி தகைந்த சைந்தவே.

(இ - ள்.) கோளையும் நாளையும் குயின்குழாங்களையும் நோக்கி "நம்மை யுடைமையாகக் கொள்ளும் இறைவன் தேர் பொருந்தியது செம்மைக்கண்ணே செல்லுங்கோள்" என்று கூறி நீக்குதலைப்போல அத்தேரின்கட் கட்டிய காம்பாலுயர்ந்த நீண்ட கொடிகள் நெருங்கி அசைவுற்றன வென்க.

(வி - ம்.) கோள் : சூரியன் முதல் கேதுவி னிறுதியாகவுள்ள ஒன்பான் கோள்கள். நாள்கள் : அசுபதி முதலாக இரேவதி யிறுதியாக வந்த மீன்கள். குயின்குழாம் - மேகக்கூட்டம். தாள் - அடி. (௨௭௬)

வல்லிசை கேட்டோறு மாழ்கு மாவென
ஒல்லலன் முரசங்கேட் டுயங்குந் தேவர்கள்
மெல்லிசை கேட்டென வுவகை விக்குறப்
பல்லிய மெங்கணும் பரந்தி யம்பின.

(இ - ள்.) வலிய பறையினிசையைக் கேட்ட துணையானே வருந்தும் அசுணமாப்போலப் பகைவனாகிய சூரன் முரசினொலியைக்கேட்டு வருந்துந் தேவர்கள் அவ்வசுணமா மெல்லிய இனிய இசையினைக் கேட்டாற்போல மகிழ்ச்சி பெருக எல்லாவிடங்களிலும் பலவாச்சியங்கள் பரவி யொலித்தன வென்க.

(வி - ம்.) ஒல்லலன் - பகைவன். வல்லிசை - பறையோசை. மெல்லிசை - இன்னோசை. இதனைப் 'பறைபட வாழாவசுணமா' என்னும் நான்மணிக்கடிகையானும்; "பொன்விளைத்த புணர்முலை யாள் சொல, இன்ன ளிக்குரல் கேட்ட வசுணமா, அன்னதாய்மகி ழெய்துவித் தாளரோ, மின்வளைத்தன மேகலை யல்குலாள்," என்னும் சிந்தாமணி பதுமையாரிலம்பகம் ௨௬௭ஆம் செய்யுளாலு மறிக. இதனைப் பறவை யென்பாருமுளர். இவைகளுள்ள விடங்களில் வேட்டஞ் செய்பவர் சென்று இன்னிசையைப் பாட இவைகள் இசையி லீடுபட்டு மெய்ம்மறந்திருக்கு ஞான்று வல்லோசையினை யுடைய பறையினை அடித்தலால் இவை துண்ணெனத் திடுக்கிட்டுக் கீழ்வீழ்தலைச் செய்யப் பற்றிக் கொள்வார்கள் என்ப. (௨௭௭)

ஏழுல கெனத்தனே டெண்ணப் பட்டுவிண்
வாழுல கிருதுவற் புறுத்த வள்ளறன்
பாழிகண் டிடும்புவி படர்ந்திட் டாலெனப்
பூழிவிண் ணிவந்தது புகையிற் சூழ்ந்தரோ.

(இ - ள்.) வரையாது கொடுப்போனாகிய முருகனது வலியினைத் தான் பலகாலுங் கண்டு வைத்துள்ள நிலவுலகானது ஏழுலகமென்று தன்னோடெண்ணப்பட்டு வானின்கண் வாழு முலகமானது கெடாது நிலைபெற வானின்கட் சென்றாற் போலப்பூழி புகைபோலச் சூழ்ந்து விண்ணின்க ணெழுந்த தென்க.

(வி - ம்.) வற்புறுத்தல் – நிலைபெறச் செய்தல். பாழி - வலிமை. படர்தல் - செல்லுதல். முருகன் என்பான் வந்துள்ளான் அவுணரைக் கொல்ல, தேவர்களே நீங்கள் அஞ்ச வேண்டாமென்று படர்ந்தாற் போலச் சூழ்ந்த தென வினை முடிபு செய்க. (உஎசு)

புகையிடை நெருப்பெனப் பொங்கிப் பூதரும்
தகைவளர் வீரருந் தழங்கி முன்செலப்
பகைவலி மெலிதரப் பகவ னின்னணம்
அகைமணித் தேர்கடாய்க் களத்தை யண்மினன்.

(இ - ள்.) படையினெழுந்த பூழியாற் போக்கப்பெற்ற பூதர்கள் புகையான் மூடப்பெற்ற நெருப்பென்று சொல்லும்படி சீற்றம் பொங்குதலுற்றுப் பெருமை வளர்தற்கேதுவாகிய வீரர்களும் வீர முழக்கஞ் செய்து முன்னர்ச்செல்லாநிற்கப் பகைவர் வலிகடப்பவனாகிய முருகன் இவ்வண்ணமாக உயர்ந்த மணிகள் பதித்த தேரினைச் செலுத்திப் போர்க்களத்தை யணுகினா னென்க.

(வி - ம்.) பூதர்கள் செந்நிற உடலில் பூழி படிந்திருத்தல் நெருப்பினை மூடிய புகைபோற் றோன்றலின், புகையிடை நெருப்பெனப் பொங்கிப் பூதரும் என்றார். தகை - பெருமை. அகைத்தல் - உயர்த்தல். பகைவன், ஈண்டு முருகன். (உஎஎ)

விண்ணவர் பொழிமலர் விரையிற் செங்கள
நண்ணிய புலான்முடை நலியக் கூழையின்
அண்ணல்வை கினனணி வகுத்துத் தூசியில்
திண்ணிய வீரர்கள் சென்று கிட்டினர்.

(இ - ள்.) போர்க்களத்திற் பொருந்திய புலாலானுளவாகிய முடை நாற்றம் தேவர்கள் சொரிகின்ற மலரிலுளவாகிய வாசனையாற் கெடாநிற்கப் பின்னணியிற் றலைவனாகிய முருகன் றங்கினன் படைகளை அணி வகுத்து முற்படையில் வலிபொருந்திய வீரர்கள் போய்ப் பொருந்தினா ரென்க.

(வி - ம்.) தூசிபோல முந்துற்றுச் சேறலின் முன்னுள்ள படையினைத் தூசியென்றார். கூழை - பின்னணி. (உஎஅ)

எலிப்பெருந் தொழுதிக விறுப்ப மன்சில
வலிப்பெரு நாகங்கண் மறலிச் சென்றெனக்
கலிப்பெருஞ் சேனையங் கடல்கி ழித்ததால்
சலிப்பறுங் குமரவே டானைக் கங்கையே.

(இ - ள்.) எலியின் பெருங் கூட்டத்தினைக் கெடுக்க நிலைபெற்ற சில வலியையுடைய பெரிய பாம்புகள் மாறுபாடு கொண்டு சென்றாற் போல நடுக்கமில்லாத முருகன் றானையாகிய கங்கையாறு முழக்கத்தையுடைய பெரிய சூரர் தானையாகிய கடலை யூடறுத்துச் சென்ற தென்க.

(வி - ம்.) அவுணர் சேனை தொகையான் மிக்கு வலிகுன்றி யிருத்தலின், "எலிப்பெருந் தொழுதி" என்றார். இறைவன் படை அன்றி

ளுக் குறைந்தசாயினும் வலியான் மிக்கன வென்பார் ''மன் சில வலிப் பொருநாகங்கள்'' என்றார். அவுணர் சேனையாகிய கடலை இறைவன் சேனையாகிய வாளுகி கிழித்த தென்க. இஃது உருவக உவமையணி. தொழுதி - கூட்டம். மன் - இடைச்சொல். (உஎகூ)

இருவரு நேர்ந்தம ரியற்ற வீழ்ந்தன
கரிபல பரிபல காமர் தேர்பல
சரிகுட ரொடும்பல தானை பொன்றின
எருவைபேய் கொடிபல விறுத்த வெங்கணும்.

(இ - ள்.) இருபக்கலிலுள்ள இரு வீரரும் எதிர்ந்து போர் செய்யப் பல கரிகளும் பல குதிரைகளும் கண்டார்க்கு விருப்பம் வரும் பல தேர்களும் சரிந்த குடரோடு பல தானைகளும் இறந்தன. போர்க்கள மெங்கணும் உடல் செந்நிற முற்றிருக்கும் பருந்தும் பேயும் காக்கையும் தங்கின வென்க.

(வி - ம்.) கொடி-காக்கை. இதனைச் 'சேட்டைக் குலக்கொடியே' என்னுந்திருக்கோவை யுரையானுணர்க. (உஅ0)

தேங்குநெய்த் தோர்கட றிரியு மாதிரை.
ஓங்குதேர் கலங்கரி யுழக்கும் யானைமீன்
வாங்கிய குடர்கள்சை வலங்கள் வீரர்கள்
தாங்கரு வடவையந் தழலொத் தாரரோ.

(இ - ள்.) அப்போர்க்களத்தின்கண் நிறைந்த குருதி கடலை யொத்தது. அக்களத்திற்றிரிகின்ற குதிரைகள் அலையை யொத்தன. அக்களத்திலுள்ள உயர்ந்த தேர்கள் மரக்கலங்களை யொத்தன. ஆண் டுள்ள யானைகள் கடலைக் கலக்கும் யானைமீனை யொத்தன. அக்களத் தில் சூரர்கள் கையின் வாங்கிய குடர்கள் கடலிலுள்ள கொடிப் பாசியை யொத்தன. அக்களத்திலுள்ள செந்நிறத்தோடு கூடிய வீரர் கள் பிறரால் தாங்கற்கரிய அழற்சியினையுடைய அழகிய வடவைத் தீயினை யொத்தன ரென்க.

(வி - ம்.) உவமைச்சொல்லை யாண்டுங் கூட்டிப்பொருள் கொள்க. மா - குதிரை. நெய்த்தோர் - குருதி. சைவலம் - கொடிப்பாசி. (உஅக)

கதைதொடை தண்டம்வார் கண்ணி சக்கரம்
துதிதரு மிண்டைகோ ளுடர்செய் தார்களா
முதிருமிங் குலிகநீர் முகத்தி னுட்டயர்
மதலையர் போன்றன சூர்தி மள்ளரே.

(இ - ள்.) வாகனத்தைச் செலுத்துகின்ற வீரர்கள் கதை யென் னும் படை மாலையாகவும், தண்டம் நீண்ட கண்ணியாகவும் ஆழிப் படை யாவரும் புகழ்தற் கேதுவாகிய இண்டை மாலையாகவும் கணைகள் ஒன்றோடொன்று தொடர்தலைச் செய்த மாலையாகவும் முதிர்ந்த சாதி லிங்கமளாவிய நீரினிடத்து வேனிற்காலத்து நீர்விளையாடலைச் செய் கின்ற மரக்கலங்களையுடைய ஆடவர்களை யொத்தன ரென்க.

(வி - ம்.) ஊர்தியை மரக்கலமாகக் கொள்க. முகத்தை எழா ததனுருபாகக் கொள்ளாது பெயராகக்கொண்டு நீர் விளையாட்டின் கண் மரக்கலங்களிலேறி முகத்தில் நீரைப் பொழிந்து விளையாடு பவரை யொத்தா ரெனினுமாம். கதை - கதாயுதம், தண்டாயுதம். இண்டை - ஒருவகைமாலை. இங்குலிகம் - சாதிலிங்கம். மள்ளர் - வீரர். கோல் - கணை. (௨௮௨)

கருவிபோ மூர்தியர் கறைகள் சோர்வன
பெருமழை விழுகுடை பிறங்கு மாம்பிகள்
குருதிதோய் முடிமணி சிதர்ந்த கோபங்கள்
இருநில ஞெமிர்ந்தபன் முல்லை யேய்த்தவே.

(இ - ள்.) பெரிய பறந்தலையானது படைகளாற் போழப்பட்ட வாகனங்களையுடைய வீரர் மெய்யினின்றும் ஒழுகுவனவாகிய செந்நீர் பெருமழையாகவும் கீழே விழுகின்ற குடைகள் அக்காலத்துத் தோன் றும் காளான்களாகவும் குருதி தோய்ந்த முடியின் கண்ணின்று சிந்திய அரதனங்கள் இந்திர கோபங்களாகவும் நெருங்கிய பற்கள் முல்லை பரும் பாகவுந் தோன்ற முல்லை நிலத்தினை யொத்தன வென்க.

(வி - ம்.) கருவியைக் கவசமென்று கொண்டு கவசம் பிளந்து சொரிகின்ற குருதி பெருமழை யெனக் கோடலுமாம். ஞெமிர்ந்த - நெருங்கிய. கோபம் - இந்திர கோபம். பல் - பற்கள். (௨௮௩)

கண்களு முகங்களுங் கரமுங் கால்களும்
மண்ணிட மெங்கணு மலிந்த நீர்மையால்
தண்ணிய தாமரை ததைந்த லர்ந்தொளிர்
பண்ணையிற் றோற்றின் பறந்த லைப்புறம்.

(இ - ள்.) கண்களும் முகங்களும் கைகளும் கால்களும் நிலத்தி யாங்கணும் மலிந்து கிடக்கின்ற தன்மையால் குளிர்ந்த தாமரைகள் நெருங்கி விரிந்தொளிர்கின்ற மருதநிலம் போலத் தோன்றின வென்க.

(வி - ம்.) பண்ணை - மருதநிலம். பறந்தலை - போர்க்களம். தாம ரைப் போதுகட் குவமேயப் பொருள்களாய கண் கால் முதலியன மிக்குக் கிடத்தலால், "பண்ணையிற்றோன்றின பறந்தலைப்புறம்" என்றார். (௨௮௪)

கோடிமே லுட்குறை குலிப்பப் பாடெலாம்
ஆடுமங் கூத்திவர்ந் தமர்ந்து ளாரெனப்
பாடுறு பிணமலை யாகப் பட்டுவீழ்ந்
தீட்டறு பிணங்கள்சார்ந் திருப்ப வெங்கணும்.

(இ - ள்.) கோடி யென்னு மளவைக்குமேல் மெய்களாட்டைச் செய்ய அவ்வாடும் பக்கலிலெல்லாம் ஆடுகின்ற அழகிய கூத்தினை விரும்பிக் (காணும் பொருட்டுத்) தங்கியுள்ள செல்வரைப்போலப் பக்கலிலுள்ள பிணங்கள் தலையணையாக இறந்து வீழ்ந்து இழிவான பிணங்கள் பறந்தலை யெங்கணும் பொருந்தி யிருந்தன வென்க.

(வி - ம்.) இவர்தல் - விரும்பல். பாடு - பக்கம். அளை - தலையளை ஈடு - பெருமை. அறுதல் - இன்றுதல். (உ௮௫)

எதிரெதிர் வாளொடு மேந்து தோலொடும்
அதிர்கழல் வயவர்த மாக்கை வைகலின்
வதியுயி ரினரென மருண்ட பேய்கணை
நுதிசித றுறுப்பினை நோண்ட ருந்துமே.

(இ - ள்.) எதிரெதிரே வாளினோடும் ஏந்துகின்ற பரிசைப் படையுடனே அதிர்கின்ற வீரக்கழலினை யணிந்த வீரர்களின் யாக்கைகள் தங்குதலான் அங்ஙனந் தங்கு மியாக்கையினைத் தங்கிய உயிரினை உடையாரென்று மயக்க மெய்திய பேய்கள் கணைகளின் நுதியாற் சிந்திய உறுப்பினைத் தோண்டி யுண்ணுமென்க.

(வி - ம்.) தோல் - பரிசைப்படை. நோண்டுதல் - தோண்டுதல். (உ௮௬)

இன்னணம் போர்க்கள மிலங்கு மேல்வையில்
துன்னிய பூதராற் றொலையத் தானவர்
அன்னது கண்டதி சூர னென்பவன்
முன்னினன் மறக்கனன் மூளப் பூதர்மேல்.

(இ - ள்.) இங்ஙனமாகப் போர்க்களம் விளங்குகின்ற போழ்தத்து நெருங்கிய பூதர்களால் தானவர்கள் கெட அங்ஙனங் கெடுதலைக் கண்டு சேனாதிபதியாகிய சிங்கமுகன் புதல்வனாகிய அதிசூர னென்பவன் வீரநெருப்பு அதிகரிக்கப் பூதப்படையின் மேன் முன்னினானென்க.

(வி - ம்.) எல்லை - பொழுது. முன்னினன் - வந்தனன். (உ௮௭)

வேறு

சிக்கரி மாமுகன் கான்முளை வெஞ்சமர் விஞ்சவி ளைத்தலும்
உக்கிர னேர்ந்தொரு தண்டுரத் தோச்சினன் சாலிகை சிந்திய
தக்கொடி யோனிலக் கங்கணை யேயினன் மெய்யவை மூழ்கலும்
புக்கவிர் தேரொரு குன்றினுற் பொன்றின னுக்கிரன் மாற்றலன்.

(இ - ள்.) சிங்கமுகன் என்பவன் மகனாகிய அதிசூரன்போரின் கண் மிக்குக் கொடிய இகலினை மிகவிளைக்க உக்கிரனென்பவன் எதிர்ந்து ஒரு தண்டத்தினை மார்பின்கண் வீசினான் மெய்புகு கருவி கெட்டது. அவ்வதி சூரனாகிய கொடியவன் இலக்கங் கணைகளைப் பாயச் செலுத்தினன். உடம்பின் கண் அவை புகுதலும் உக்கிரனென்பவன் சென்று விளங்குகின்ற தேரினை ஒரு மலையாற் பொன்றுவித்தனன் பகைவனாகிய அதிசூரன்.

(வி - ம்.) சாலிகை - மெய்புகு கருவி. பொன்றினன் - விவ்விகுதி தொக்கு நின்றது. (உ௮௮)

சேமநெ டுஞ்சக டண்மிறுன் சென்றிவன் மாவுதைத் தட்டனன்
நாமவி லானெரு நூறுகோ ளடாயின னுக்கிரன் றண்டுகொண்
டேமறி வித்தனன் வேறுதே ரெய்தியங் கிப்படை யேயினன்
பூமியும் விண்ணுந டுங்குறப் போந்தது பற்றிவி ழுங்கினன்.

(இ ள்.) நீண்ட வைப்புத் தேரினைப் பொருந்தினன். உக்கிரன் சென்று அதிசூரன் றேரிற் பூட்டிய குதிரைகளை யுதைத்துக் கொன்றனன். அதிசூரன் அச்சத்தைத் தரும் வில்லான் நூறு கணைகளைச் செலுத்தினன். உக்கிரனென்பவன் தண்டினைக்கொண்டு கணைகளை யொடித்தனன். அதிசூரன் வேறொரு தேரின்கட் பொருந்தி நெருப்புப் படையினை விட்டனன். அது நிலனும் வானும் நடுக்கமுற வந்தது அதனை யுக்கிரனென்பான் பிடித்து விழுங்கினனென்க.

(வி - ம்,) சேமம் - வைப்பு. கோல் - கணை. (௨௩௯)

வாரிப்ப டைசண்ட மாப்படை வாயுப்ப டையயன் வான்படை
வீரிய மாயன்ப டையும்வெவ் வேறுசெ லுத்தின னுலதி
சூரன வற்றையு முக்கிரன் சொன்றியெ ன்வயிற் றுக்கினன்
ஆரிய னுமம லன்படை யன்பொடு போற்றிவி டுத்தனன்.

(இ - ள்.) வருணன் படைக்கலம் இயமன் படைக்கலம் வாயுவின் படைக்கலம் பெரியபிரமன் படைக்கலம் வீரம் பொருந்திய திருமாலின் படைக்கலம் ஆகிய இவைகளை அதிசூரன் வேறு வேறாகச் செலுத்தினன். அப்படைக் கலங்களை உக்கிரன் சோற்றைப்போல வயிற்றினுட் பெய்தனன். வணங்கத் தக்கவனாகிய குற்றமற்ற இறைவன் படைக்கலத்தினை அன்பினாலே துதித்து விடுத்தான்.

(வி - ம்.) மாயன்படை - ஆழிப்படை. ஆரியனுமமலன் படை - பாசுபதப்படை. சொன்றி - சோறு. (௨௪௦)

கைக்கதை நீக்கிவ ழுத்தினன் கண்ணுத லான்படை கண்ணுதல்
பக்கம டுத்தது சூர்மகன் பாரிழிந் தோர்கதை கொண்டுநேர்
உக்கிரன் றிண்புயத் தெற்றின னுக்கிர னக்கதை வாங்குபு
மிக்கவன் மார்பின டித்துமண் வீழ்த்தினன் கண்டசு ரேந்திரன்.

(இ - ள்.) உக்கிரனென்பவன் இறைவன் படைவருதலைக் கண்டு தன் கையின்கணுள்ள கதையினை நிலத்தின்கணெறிந்துவிட்டு வழுத்தினன். அங்ஙனம் வழுத்துதலைக் கண்ட இறைவன்படை இறைவன் பக்கலிற் சென்றது. சிங்கமுகாசூரன் மகனாகிய அதிசூரன் நிலத்தின் கண் இழிந்து ஓர் தண்டத்தைக் கொண்டு எதிர்த்து உக்கிரனென்பவன் வலியபுயத்தினெற்றினன். உக்கிரனென்பவன் அக்கதையினை வாங்கி அதிசூரன் மார்பின்கண் மிகுதியாக அடித்து நிலத்தின்கண் வீழ்த்தினன். அதிசூரன் பூமியின் வீழ்தலைக்கண்ட தாரகன் மகனாகிய அசுரேந்திரனென்பவன்.

(வி - ம்.) கண்ணுதலான்படை - பாசுபதம். வாங்குபு - வாங்கி. (௨௪௧)

பாரிடர் பாரிடம் வீழ்தரப் பத்துநா ருயிர மோர்தொடை
சேரவ யிற்கணை தூண்டுபு செங்குரு திக்கட றேக்கினன்
காரென வார்த்தெதி ருங்கன கன்கணை பாய்ந்துரு வத்திழி
சோரியி னேடவன் றேரினைத் துன்னிவின் னாணறுத் தேகினன்.

(இ-ள்.) பூதர்கள் நிலத்தின்கண்ணே வீழப் பத்துநூறுயிரமென்னு மளவினைக்கொண்ட கூர்மைபொருந்திய அம்புகளை ஒருதொடுப்பிற் செலுத்திச் செந்நீர்க்கடலை நிறையச் செய்தான். மேகம்போல முழங்கி எதிர்க்கின்ற முருகன் சேனையிலுள்ள கனகன் கணைபாய்தலான் மேனியின்க ணொழுகுகின்ற குருதியோடு அசுரேந்திரன் கனகன் றேரினைப் பொருந்தி அவன் கையின்கணுள்ள வில்லின் நாணியினை அறுத்துச் சென்றானென்க.

(வி-ம்.) பாரிடர் - பூதர். ஓர்தொடை - ஓர்முறை தொடுத்தல். (உகஉ)

ஓர்சிலை வேறுகொண் டாடக னுய்த்தவி லங்கலு திர்த்தவன்
வார்புய மாயிர வாளிகள் வாங்கிவி டுத்தனன் றனவன்
போர்கழி யக்கன கன்பரி பொன்றவ துக்குமுன் மத்தனைச்
சேர்கணை யாற்றிறல் சிந்தினன் சென்றெதி ரேற்றனன் மந்தனே.

(இ-ள்.) கனகனென்பான் வேறுசிலை யொன்றினைக்கொண்டு அசுரேந்திரன் விடுத்த மலையினைச் சிதறும்படிசெய்து அவனது அகன்ற புயத்தின்கண் ஆயிரங்கணைகளை வில்லை வளைத்து விடுத்தான். அசுரேந்திரன் போரினின்றும் நீங்கக் கனகனென்பான் றன்றேரிற்கட்டிய குதிரை இறக்க வருத்துகின்ற உன்மத்தனென்பவனைத் திரண்ட கணைகளால் வலியைக் கெடுத்தான். மந்தனென்பவன் எதிர்த்தனனென்க.

(வி-ம்.) ஆடகம் - பொன், கனகம். பொன்பெயரோன்-கனகன். கழிய - நீங்க. சேர் - திரட்சி. இதனை, சேரே திரட்சி என்னும் தொல்காப்பியச் சூத்திரங்கொண் டுணர்க. (உகங)

ஐயிரு வாளிதன் மெய்யுற வார்த்தொரு வெற்புவி டுத்தனன்
மையனை யானுர மேற்றனன் வண்டுக ளாயது பத்துநூ
றெய்தவ னுடல டக்கினு னேற்றுடல் சிங்கன்வி டுங்கதை
ஒய்யென மாற்றியொ ராயிர வொண்கணை யாலெறுழ் நீக்கினன்.

(இ-ள்.) மந்த னென்பவன் பத்துக்கணைகள் தன்னுடலின் கண்ணே பொருந்த வீரமுழக்கஞ்செய்து ஒரு மலையினை விடுத்தனன். உன்மத்தனென்பான் அம்மலையினை மார்பின்கண்ணே யேற்றனன். அம்மலை அவன் மார்பிற்பட்டுப் பூழியானது. ஆயிரங் கணைகளைத் தொடுத்து எய்து அவ்வுன்மத்தன் வலியை யடக்கினன். இங்ஙனம் உன்மத்த னடங்கலைக் கண்டு எதிர்த்து மாறுபடுகின்ற சிங்கனென் பான் விட்ட கதையினை விரைவாக நீக்கி ஓராயிர மொளிபொருந்திய கணைகளால் இவன் வலியினைக் கெடுத்தன னென்க.

(வி-ம்.) மையனையான் - உன்மத்தன். எதிர்த்துமாறு படுகின்ற. (உகச)

காவல ரிம்முறை நீங்கலுங் காழிலி லக்கரு ளுள்ளவன்
மேவரு தண்டக னுயிர வெங்கணை தாரகன் கான்முளை
பாவுறு தற்கண முத்தினன் பரிந்தவ னெண்கணை நெற்றியிற்
கோவைப டப்புகு வித்தலுங் குன்றினன் றண்டக னுற்றலில்.

(இ - ள்.) படைகாவல ரிம்முறைபோரினின்றும் நீங்க லொப்பில்லாத இலக்க வீரர்களிலுள்ளா னொருவன் போரின்கட் பொருந்துகின்ற தண்டகனென்பான், கொடிய ஆயிரங்கணைகளைத் தாரகன் கான்முளையாகிய அசுரேந்திரன் பரந்த நெற்றியின்க ணெய்தனன். அசுரேந்திரன் வருந்தி எட்டுக் கணைகள் தண்டகன் நெற்றியின்கண் வரிசைபடத் தொடுத்தவளவில் அவன் வலிகுன்றின னென்க.

(வி - ம்.) காழில் - ஒப்பில்லாத. கான்முளை - மகன். பரிதல் - வருந்துதல். கோவை - வரிசை. (உகந)

தண்டகன் பின்வரு சோமுகன் றனவ னெய்கணை மெய்புக
உண்டனன் வாளியிற் பாகனோ டோடிர தப்பரி யைச்சினம்
கொண்டவன் வேறொரு தேருறீஇக் கூரயி லொன்றுவி டுத்தனன்
விண்டது மார்பங்க லங்கினன் விசயன வற்கிளை யான்விரைஇ.

(இ - ள்.) தண்டகனென்பவன் பின்னர் வந்த சோமுகனென்பான் அசுரேந்திரனாகிய தானவன் செலுத்திய கணை உடலிற்செல்லக் கணைகளால் பாகனொடு தேரின்கணுள்ள குதிரையினையுங் கொன்றனன். அசுரேந்திரன் சினங்கொண்டு வேறொரு தேரின்கட் பொருந்திக்கூரிய வேலொன்றினை விடுத்தனன். அவ்வேல் சென்று சோமுகன் மார்பைப் பிளந்தது; அவன் கலக்கமுற்றான். அச்சோமுகனுக் கிளையானாகிய விசையன் என்பான் விரைந்து, என்க.

(வி - ம்.) உண்டல் - ஈண்டுக் கோறல், இலக்கணை. விரைஇ - விரைந்து. (உகச)

பகழியொ ராயிரந் தூயவன் பாகொடு கைச்சிலை பாற்றினன்
தகுவனோர் தண்டம்வி டுத்தொரு சகடம டுத்தனன் மற்றது
புகழ்விச யனகணை தூளுறப் போந்தவ னைக்கண்ப டுப்பிய
தகலுந ராயினர் நேர்ந்துபோ ராடிய வேனையி லக்கரும்.

(இ - ள்.) ஆயிரங் கணைகளைச் செலுத்திப் பாகனொடு கையின்கணுள்ள வில்லினையுங் கெடுத்தனன். இதனையறிந்த அசுரேந்திரன் தண்டத்தினை விடுத்து வேறொரு தேரினையடைந்தனன். அத்தண்டம் யாவரும் புகழ்கின்ற விசயன் கணைகளால் தூளாகச்சென்று அவனைக் கண்படை கொள்ளச் செய்தது. அவன் கண்படை கொண்டதனை யறிந்து போரினைச்செய்த இலக்க வீரரும் போர்க்களத்தினின்றும் நீங்குவாராயின ரென்க.

(வி - ம்.) பாகு - பாகன். சகடம் - தேர். கண்படை - உறக்கம். (உகரு)

பூதர்க டல்கடை மத்தெனப் போந்தசு ரேந்திர னுடலும்
கோதைவி றற்புய னேக்கினன் கூர்ங்கணை கொண்டுட றூர்த்தனன்
ஆதவ னெத்தவு ணன்கணை யாயிரம் வீரன்மொய்ம் புய்த்துவில்
காதின னேழ்கணை யாலொரு கார்முகம் வாங்குபு வீரனும்.

(இ - ள்.) பூதர்கள் படையாகிய கடலைக் கடைகின்ற மத்தினைப் போலவந்த சுரேந்திரனது வெற்றியினையும் மாலையையணிந்த வீரவாகு நோக்கினவனாகிக் கூரிய கணைகளைக்கொண்டு அவன் உடலினை மறைத்தனன். வெங்கதிர்க் கடவுளையொத்து அவுணனாகிய சுரேந்திரன் ஆயிரங் கணைகளை வீரவாகு புயத்தின்கட் செலுத்தி ஏழுபாணங்களால் அவன் வில்லை முறித்தனன். ஒருவில்லை வளைத்து வீரவாகுவும் என்க.

(வி - ம்.) மத்து - மந்தரமலை. கோதை - மாலை. விறல்-வெற்றி. கார்முகம் - வில். (உகக)

ஆயிரம் வாளியிற் பாகய மங்கைவ ரிச்சிலை மாய்த்தனன்
தாயொரு தேர்சிலை கொண்டுவெஞ் சரஞ்சதம் விட்டிர தந்தபக்
காயமெ ழுந்தவன் றேரிடைக் கடிதுகுப் புற்றவன் கையிலொன்
றேயவ றுத்தனன் றண்டமொன் றேச்சினன் றுனவன் வீரன்மேல்.

(இ - ள்.) ஆயிரங் கணைகளால் பாகனையுங் குதிரையினையும் அழகிய கையின்கணுள்ள கட்டமைந்த வில்லினையுங் கெடுத்தான். அசுரேந்திரன் தாவி வேறொரு தேரிலேறி வில்லினைக்கொண்டு நூறு கொடிய கணைகளைச் செலுத்தித் தேரினைக் கெடுக்காநிற்ப வீரவாகு ஆகாயத்திலெழுந்து அசுரேந்திரன் றேரின்கண் விரைந்து குதித்து அவன்கையி லோர்கை ஒய்வடையும்படி அறுத்தான். வீரவாகுவின் மேல் தண்டமொன்றினை அசுரேந்திரன் செலுத்தினன்.

(வி - ம்.) அயம் - குதிரை. தப - கெடுக்க. காயம் - வான். (உகக)

வானிலெ ழுந்துவி றற்புயன் வந்தவன் சென்னியு தைத்தரோ
வானிலெ ழுந்தனன் மீட்டுமவ் வல்லவு ணன்சுடர் வாள்கொடு
தானும்வி சும்பிலெ ழுந்தனன் றூர்மலி வாகுத னுந்தகத்
தானவன் சென்னிய றுத்தன னஞ்சியி ரிந்தனர் தானவர்.

(இ - ள்.) வீரவாகு வானின்கண் ணெழுந்து போர்க்கு வந்தவனாகிய அசுரேந்திரன் தலையின்க ணுதைத்து மீண்டும் வானின்கண் ணெழுந்தனன். வலியினையுடைய அவுணனாகிய அசுரேந்திரன் ஒளி பொருந்திய வாளினைக்கொடு தானும் வானின்க ணெழுந்தனன். மாலையையணிந்த வீரவாகு தன் வாளினால் அவ்விடத்து அவன்தலையினை அறுத்தான். அவுணர் அச்சமுற் றோடினரென்க.

(வி - ம்.) ஆங்கு - அவ்விடம். வாகு - வீரவாகு. நாகம் - வான். (௩௦௦)

இருபெரு மைந்தரும் வீழ்ந்தது மெண்ணில ரும்படை பட்டதும்
வெருவுமு ளத்தொடு மெஞ்சினோர் மீண்டது நோக்கிவெ குண்டுசூர்
ஒருநொடி யிற்படை நூழில்செய் தூர்புகு வேனென வண்மிஞன்
பொருசிலை நாணொலி கொண்டனன் புலவரு ளஞ்சுழல் கொண்டனர்.

(இ - ள்.) அதிசூரனும் அசுரேந்திரனுமாகிய இரண்டு மகார்கள் இறந்ததையும், அளவற்ற அரிய படைகள் மடிந்ததையும், அச்சமுற்ற வுள்ளத்தினோடு இறவாமல் எஞ்சினவர் வெந்கிட்டதையும் சூரன் நோக்கிச் சீற்றமுற்று ஒரு நொடிப்பொழுதின்கண் படைகளைக் கொன்று குவித்து ஊரின்கட் செல்வேனென்று நெருங்கினன். ஒப்பில்லாத சிலையை நாணொலி செய்து கையின்கட் கொண்டான். அந்ஞான்றே தேவர்கள் மனஞ்சுழலுதலைக் கொண்டார்கள் என்க.

(வி - ம்.) நூழில் - கொன்று குவித்தல். புலவர் - தேவர். (௧௦௪)

வேறு

ஒருதொடை யினிலள விலகணை யுகுமழை யெனவிரவ
வருமவு ணர்கவிறை பெரிதமர் மலைதலு நிமிர்கணையால்
குருதியி னலகில நதிவளை குரைகட லொடுபொருத
எருவையி னொடுகழு குகள்பொர விறுவன பலபூதம்.

(இ - ள்.) ஒரு முறை தொடுத்தலின் அளவில்லனவாகிய கணைகள் வானின் கண்ணிருந்து உகுகின்ற மழையினைப் போலக் கலக்கப் போரினுக்கு வருகின்ற தானவர் தலைவனாகிய சூரன் பெரிதும் போரினைச் செய்ய உயரிய கணைகளால் குருதி நதிகள் பல ஒலி செய்கின்ற உலகினை வளைந்த கடலினோடு பொருதன. புலாலுணவு கோடற்கு ஆண்டுப் போந்த எருவை யென்னும் பருந்தினோடு கழுகென்னும் பறவைகள் போர் செய்யப் பல பூதங்கள் இறப்பன வென்க.

(வி - ம்.) தொடை - தொடுத்தல். அஃதாவது ஒரு முறை கணை விடுதலி னென்க. அலகில - எண்ணிறந்தன. (௧௦௫)

கழலினொ டடிதுமி வனவணி கலையொடு தொடைதுமிவ
நிழலுமிழ் சுரிகையி னொடுமரை துமிவன நிலனுகுவ
அழலுமிழ் படையொடு கரதல மறுவன திசைபெயர்வ
சுழல்விழி யொடுதலை யிறுவன தொடுகட லிடைவிழுவ.

(இ - ள்.) கட்டிய கழலினோடு துமிவனவாகிய அடிகளும், யாத்த கலையினோடு துமிவனவாகிய தொடைகளும், ஒளியைக் காலுகின்ற செருகிய வாளினோடு துமிவனவாகிய அரைகளும், நிலத்தின்கட் சிந்துவன வென்க. திசையின்கட் செல்வனவாய் நெருப்பினைக் காலுகின்ற படையினோடு அறுவனவாகிய கைகளும் சுழல்கின்ற கண்களோடு அறுபடுவனவாகிய தலைகள் தொட்ட கடலின் நடுவண் விழுவன வென்க.

(வி - ம்.) தும்தல் - அறுத்தல். சுரிகை - ஒருவகைவாள். அரை-இடை. தொடுகடல்: வினைத்தொகை. (௩௦௧.)

நொந்தனர் சிலரஞ் சினர்சிலர் நுவலறி விலர்சிலர்போர்
மைந்திலர் சிலர்மற மிலர்சிலர் வஞ்சின மிலர்சிலர்மெய்
சைந்தனர் சிலர்நடை யிலர்சிலர் நந்துயி ரினர்சிலர்கள்
முந்திய வடிபிந் தினர்சிலர் முனைபடை யடுதலைவர்.

(இ - ள்.) போரின்கண் படைகளைக் கொல்கின்ற படைத்தலைவர் களுள் வைத்துச் சிலர் வருந்தினர்; சிலர் அச்சமுற்றனர். யாவரும் வியந்து சொல்லும் போர்க்குரிய அறிவிலர் சிலர்; போரினுக்குரிய வன்மையிலர் சிலர்; வீரமிலர் சிலர். வஞ்சினமிலர் சிலராவர்; போரினைக்கண்ணுற் றுடலிளைத்தனர் சிலர்; போர்க்குரிய வொழுக்க மிலர் சிலர்; கெடுதலுற்ற வுயிர்ப்பினை யுடையர் சிலர்; போர்வீர்களி யாவருங் கருத முற்பட வைத்த வடியினைப் பின்வாங்கி வைத்துத் தோல்வியுறுவார் சிலராவரென்க.

(வி - ம்.) மைந்து - வலி. உயிர் - காற்று. போர்க்குரிய வொழுக்க மில்லாமை - அடிபிறக்கிடுதல்; அழியுநர் புறக்கொடை அயில் வாளோச்சல்'' முதலிய. (௩௦௨)

தலைவர்க ளொடுபூ தர்கணனி தளர்வுற வதுகாணுக்
குலமட வியர்வேர் வையின்வரு குமரர்கள் கணையேவ
நிலனவை விழநீ றுவல்பட நிரைவிடு புகைவார்வில்
கலவுமு னவர்தேர் விழவுரங் கடவினன் பலவாளி.

(இ - ள்.) இறைவன் படைத்த தலைவர்களோடு பூதர்களும் போரின்கண் மிகத்தளர்ச்சியுற அதனைக்கண்டு மேலாகிய பெண்களின் வேர்வையிற் றோன்றிய இலக்க வீரர்கள் கணையைச் செலுத்த அக் கணைகள் நிலத்தின்கண் விழ, வில் பூழியாகச் சூரன் கணைகளை வரிசை யாகத் தொடுத்து அவர்கள் வேறொரு நீண்ட வில்லினைக் கையின்கட் கொள்ளுதற்கு முன்னர்த் தேர்விழ மார்பின்கண் பல வாளிகளைச் செலுத்தினன், என்க.

(வி - ம்.) நீறு - பூழி, விடுபு - விட்டு, கலவுதல் - கண்டுக் கைக் கொள்ளுதல். (௩௦௩)

நிபுதவெண் மர்களொழி யவிணெறி நிகழிர வியின்பெயர்கொள்
வயவன்முன் விடுகணை யிருமுறை வருதலு மவைதொலையாப்
பயில்சிலை யொடுதூ ணியுமறப் பலகணை நுதலுரமும்
உயிருலை வுறநட வினனவு ணர்களுறு குலவிறைவன்.

(இ - ள்.) இலக்கத் தெண்மர்களும் போர்க்களத்தினின்றும் நீங்க வானெறியிற் செல்கின்ற வெங்கதிர்க்கடவுளின் பெயரினைக் கொண்ட வீரன் முன்னர்ச் செலுத்திய கணைகள் இருமுறை வர அக்கணைகளை த் தொடுத்துப் பயில்கின்ற வில்லும் அம்பறாக் கூடும் நீங்கப் பல கணை

கிளை நெற்றியின் கண்ணும் மார்பின் கண்ணும் அவுணர்கள் பெரிய குலத்திற்குத் தலைவனாகிய சூரன் உயிர் கெடும்படி செலுத்தினனென்க.

(வி - ம்.) நியுதம் - இலக்கம். இரவியின் பெயர் கொள்வயவன் - வீரமார்த்தாண்டன். உறு - மிகுதி. அவுணர்கள் குலஇறைவன் ஒழியா தொலையா நடவினனென்க. (௩௦௬)

**வேறு**

வீரராக் கதனெதிர்ந்து கணைபொழிய
வவைவிலக்கி வில்லை மாய்த்தான்
கோரனு மவுணனவன் கொடிஞ்சியந்தே
ரிடைப்பாய்ந்து கோதித்து வாளால்
பாரவார் சிலையெறிந்து பயனின்றி
வாளொடியப் பாணி கொண்டு
நேரவூக் கினனவுண னடியேற்றி
யெற்றநெடுந் தூரத் தானுன்.

(இ - ள்.) வீரராக்கதனென்பான் எதிர்ந்து கணைகளைச் செலுத்த அக்கணைகளை விலக்கி அவ்வீரராக்கதன் கொடிஞ்சியினையுடைய சூரன் தேரின்கண்ணே பாய்ந்து நெஞ்சங் கொதிப்புற்று வாளினால் பெரிய நீண்ட சூரன் வில்லை வெட்டுதலான் வில்லினை அனுப்ப பயனின்றி வாளொடியாமிற்பக் கையினால் வீரராக்கதன் அடித்தனன். சூரன் காலை யுயர்த்து எற்றுதலைச் செய்ய வீரராக்கதன் நெடுந்தூரத்திற் சென்று வீழ்ந்தனன்.

(வி - ம்.) எறிந்து - செய்தெனெச்சங் காரணப்பொருட்டு. ஊக்குதல் - ஈண்டடித்தல். ஏற்றுதல் - உயர்த்தல். எற்றல் - உதைத்தல். (௩௦௭)

அட்டுமழை யெனவீர மகேந்திரனெய்
கணைவிலக்கி யவுண னெய்ய
வட்டணைசெய் தவைவிலக்கி யெய்வீரன்
சூரனும் வட்டணையிற் றேரை
விட்டுவரு கணைவிலக்கி முப்பதுதா
ளினுந்தோளின் விளம்பு மம்பும்
கட்டழகன் மார்பிடைநாற் பதுமேவி
வலிதொலைத்தான் கலங்கி மீண்டான்.

(இ - ள்.) சொரிகின்ற மழையினைப்போல வீரமகேந்திர னென்பவன் விடுகின்ற கணைகளை விலக்கிச் சூரன் கணைகளைத் தொடுக்க வீரமகேந்திர னென்பவன் சுற்றுதலைச் செய்து அக்கணைகளை விலக்கி மீளக் கணைகளைத் தொடுக்கச் சூரனென்பவன் வட்டமாகத் தன்றேரைச் சுற்றுதல் செய்து தன்மேல் வருகின்ற கணைகளை விலக்கி முப்பது கணைகளைக் கால்களினும் தோளின்கண் அம்முப்பதெனச் சொல்கின்ற கணை

கணையும் செறிந்த அழகினையுடையான் மார்பின்கண் நாற்பது கணை களையுஞ் செலுத்தி அவன் வன்மையைக் கெடுத்தனன். வீரமகேந்திரன் கலக்கமுற்று மீண்டன னென்க.

(வி - ம்.) அட்டுதல் - சொரிதல். வட்டணை வட்டமாகச் சுற் றல் இதனைச் சாரியென்பர், கட்டழகன் - செறிந்த வனப்புடையான், பேரழகுடையவன். (௯௦௮)

சொரிமழையிற் கணைபரப்பு வீரதீ
ரப்பெயரோன் றுன்ன வெங்கும்
நெரிபகழி விலக்கிநெடு வில்லொடுதேர்
துரட்படுத்தா னேரான்றன்மேல்
பெரியவொரு கதைகொண்டு நடந்தனனெய்
கணையினதன் பீடுமாற்றி
விரியுரத்தும் புயத்துமெவ்வேழ் விசிகமுகைத்
தான்சூரன் மீண்டான் றீரன்.

(இ - ள்.) வானினின்று மிழிகின்ற மழையினைப்போல எங்கும் கணைகளைப் பரவச்செய்து வீரதீரனென்னும் பெயரினை யுடையான் போர்க்களத்தினைக் குறுகப் பகைவனாகிய சூரன் வீரதீர னெய்தலா னெரிதலைச் செய்த கணைகளை விலக்கி அவ்வீரதீரன் வில்லினோடு தேரை யுந் துகளாகச் செய்தான். அச் சூரன்மேற் பெரியவொரு கதையினைக் கொண்டு போர்க்குச் சென்றான். சூரன் எய்யுங் கணையால் அக்கதை யின் பெருமையை நீக்கி, விரிந்த மார்பின்கண்ணும், புயத்தின்கண்ணும் முறையே எவ்வேழு கணைகளைச் செலுத்தினான், வீரதீரன் போரினின்று நீங்கின னென்க.

(வி - ம்.) நெரிபகழி: வினைத்தொகை. நேரான் - பகைவன். பரிய - பெரிய. பீடு - பெருமை. விசிகம் – கணை. (௯௦௧)

தெய்வதவே லாலடுவ லெனவீர
மகேசன்விடச் சென்று சூரன்
எய்வடிகோ லாயிரந்தூட் படுத்துரப்பட்
டுதிராக வெய்த்து வீரன்
கைவயினோர் தண்டெடுக்கு முன்கணையேழ்
புயம்விடுத்துக் கழலச் செய்தான்
மெய்வளர்கோ ளரியெதிர்ந்து சிலைவணக்கி
நாணெறிந்தான் வெகுண்டு சூரன்.

(இ - ள்.) தெய்வத்தன்மை பொருந்திய வேற்படையாற் கொல் வேன் என்று வீரமகேசனென்பான் செலுத்த அவ்வேற்படை போய், சூரன் விடுத்த கூர்மைபொருந்திய ஆயிரங் கணைகளைத் தூளாகச்செய்து அவன் மார்பின்கட் பட்டுப் பொடியாக அங்ஙனம் பொடியான தன்மையை அறிந்து கையின்கண் அவ்வீரமகேசன் தண்டத்தை

யெடுக்கு முன்னர் அவன் தோளின்கண் ஏழுகணைகளைச் செலுத்தி யத்தண்டம் நீங்கும்படி செய்தான். உலகின்கண் உண்மை நிலவுதற்குக் காரணமாகிய வீரகேசரி, எதிர்ந்து வில்லினை வளைத்து நாணொலி செய்தான், சூரன் சீற்றமுற்று.

(வி - ம்.) உதிர் - தூள். கழலச் செய்தான் – நீங்கச் செய்தான்.
(௧௪௦)

சிலையறுத்துத் தேர்பொடித்து நுதலினு
யிரவாளி செறிப்ப வீரன்
மலைபெயர்த்து மேல்விடுத்தான் வார்கணையோன்
முலறுத்து வாளி நூறும்
நில்வுரத்தி னுறவிடுப்ப நேர்போந்து
நிறத்தெறிந்தா னிமலன் மைந்தன்
அலர்கரம்வின் டதுபற்றி யாழிமிசைச்
செலவுகைத்தா னவுணர் கோமான்.

(இ - ள்.) வில்லினை யறுத்து அவன் றேரினைப் பொடிசெய்து நெற்றியின்கண் ஆயிரங் கணைகளை அழுத்த வீரகோளரி யென்பான் ஒரு மலையினைப் பெயர்த்துச் சூரன்மேல் விடுத்தனன். சூரன் நீண்டவொரு கணையினான் அம்மலையினை யறுத்து நூறு கணைகளை வீரத்திருப் பொருந்திய மார்பின்கட் பொருந்தச் செலுத்த மலமற்ற இறைவன் றிருமகன் சூரன் நேரிற்சென்று அவன் மார்பின்க ணறைந்தனன். வீரகோளரி மலரையொத்த கையானது பிளவுற்றது. அவுணர்கள் தலைவனாகிய சூரன் வீரகோளரியைக் கடலின்கட் செல்லுமாறு செலுத்தினா னென்க.
(௧௪௧)

புரந்தரநா மக்குரிசி லியமனெடும்
படைவிடுத்தான் போந்து சூரன்
உரந்தலைப்பட்டுதிரவயன் படைவிடுக்கு
முனங்கணையெய் துவனைச் சாய்த்தான்
சரந்தொடுத்துத் தொடுகணைக டுடுத்தமர்க்கும்
வீரராந் தகனைச் சீறி
வரந்தழைத்தோன் சிலைமுரித்துத் தேர்நெரித்து
வலியிரித்து வறுமை செய்தான்.

(இ - ள்.) வீரபுரந்தர னென்னுந் தலைவன் தண்டத்தினை விடுத்தனன். அத்தண்டம் வந்து சூரன் மார்பின்கட்பட்டுத் தூளாக வீர புரந்தரன் அயன்படையினை விடுப்பதற்கு முன்னர்க் கணையினைச் சொரிந்து அவ் வீரபுரந்தரனைச் சாயும்படி செய்தனன். கணையைத் தொடுத்துப் பகைவன் தொடுக்கும் கணைகளைத் தடுத்தலைச் செய்து போர் நிகழ்த்தும் வீரராக்கதனைச் சீற்றங்கொண்டு வரத்தின் மிக்கவனாகிய சூரன் அவன் சிலை முரியச்செய்து தேரினை நெரியச்செய்து வலியைக் கெடுத்து வறுமையுறச் செய்தன னென்க.

(வி - ம்.) புரந்தர நாமக்குரிசில் - வீரபுரந்தரன். வரந்தழைத் தோள் - சூரன். வீரபுரந்தரன் பொருதற்குரிய கருவிகள் சிறிதுமின்றி யழித்தன னென்பார், வறுமை செய்தான் என்றார். (௧௧௨)

வேறு

வாகுப்பெய ரமரன்சிலை வளையக்கடி தெதிரா
வேகக்கடு வனையானிவன் விறல்சிந்துவ னென்று
ஏகக்கணை பலகோடிக ளெய்யுந்தொறும் விலக்கிச்
சாகத்திடு கணைநூறவ னுதல்சாரவி டுத்தான்.

(இ - ள்.) வீரவாகென்னுந் தேவன் வில்லானது வளையாநிற்க, சூரன் விரைவாக எதிர்ந்து வேகத்தினையுடைய நஞ்சினை யொப்பா னாகிய இவ்வாகுவின் வலியைக் கெடுப்பேனென்று அவன்மேற் செல்லு மாறு பல கோடி கணைகளை எய்யுந்தோறும், வீரவாகு அக்கணைகளை விலக்கிச் சாகமென்னுந் தீபத்திற் கொண்ட, நூறு கணைகளைச் சூரன் நெற்றியிற் பொருந்தச் செலுத்தினான்.

(வி - ம்.) சாகம் - ஒருதீவு. ஏகல் - செல்லல். (௧௧௩)

நுதலிற்படு கணைநீறுற நுதலிக்கும ரன்கை
வதிசத்தியை யேலுங்கணை மழைபோலெழு வித்தான்
பதகன்கணை யவைசிந்துபு பரமன்மகன் மொய்ம்பில்
உதிரம்பொழி தரவெண்கணை யுறுவித்தன னுருவ.

(இ - ள்.) சூரன் நெற்றியின்கட் பட்ட நூறு கணைகளும் பொடி யானதை வீரவாகு கருதிக் குமரப்பெருமான் றிருக்கையிற் றங்கிய வேற்படையினை யொத்த கணைகளை மழையைப்போலச் சொரிந்தான்; பதகனாகிய சூரன் அக்கணைகளைக் கெடுத்து இறைவன் றிருமகனாகிய வாகுவினுடற்கண் செந்நீரோட எண்கணைகளைச் சேர்த்தான் அக்கணை கள் உருவிச்செல்ல.

(வி - ம்.) நீறு - பொடி. நுதலி - கருதி. சத்தி - வேற்படை. ஏலும் : உவமை உருபு. (௧௧௪)

வருந்துந்தனி வீரன்வடிக் கணையாயிர கோடி
சொரிந்தங்கவன் வலவத்தொகை துயரத்துறு வித்தான்
இருந்தானவன் வீரன்சக டிறுத்தானிவன் வேறோர்
பெருந்தேர்கொடு கனல்காற்படை பெயர்வித்தன னவன்மேல்.

(இ - ள்.) கணை யுடலுருவிச் சென்றமையான் வருத்தமுறும் ஒப்பற்ற வீரவாகு கூரிய ஆயிரங்கோடி கணைகளைச் சொரிந்து அப் பொழுதே அச்சூரன் தேர்ப்பாகர்குழாம் வருந்த அவர்களை விண்ணுலகி லடைவித்தனன், கரிய தானவனாகிய சூரன் வாகுவின்றேரைக் கெடுத் தான். வாகு வேறொரு பெரிய தேரினைக் கைக்கொண்டு சூரன்மேல் அழற்படையையும் வாயுப் படையையும் சொரிந்தன னென்க.

(வி - ம்.) வலவத் தொகை - பாகர் கூட்டம். இருமை - கருமை. சகடு - தேர். காற்படை - காற்றுப்படை. (௩௪௫)

அறிந்தானெதிர் படைதொட்டில னவைபட்டுதி ராக
எறிந்தானிவன் கூற்றுப்படை யென்றாழ்ப்படை யவையும்
மறிந்தேவிழ நிருதிச்சத மகனீரிறை படையும்
சிறந்தேவின னவையுஞ்சித ராகத்திகழ் வீரன்.

(இ - ள்.) அழற்படையுங் காற்றுப்படையும் ஏவியதை யறிந்தவனாகிச் சூரன் எதிராகப் படைக்கலங்களை வழங்கினா னல்லன். அப்படைகள் அவன்மேற்பட்டுத் தூளாக இவ்வாகுவென்பான் கூற்றுவன் படையாகிய தண்டினையும் கதிரவன் படைக்கலத்தினையும் எறிந்தனன். அப்படைக்கலங்களும் மடங்கிவிழ நிருதியென்பவன் படையினையும் இந்திரன் படையினையும் கடற்றலைவனாகிய வருணன் படையினையும் சிறப்புற ஏவினான். அப்படைக்கலங்களும் பொடியாகப் போரில் விளக்கமுறுகின்ற வீரவாகு.

(வி - ம்.) உதிராக - தூளாக. கூற்று - இயமன். சிறந்து - சிறக்க என்ற எச்சந் திரிந்துநின்றது. சிதர் - தூள். (௩௪௬)

மாயப்படை யவுணப்படை விட்டானவை மாய்ந்த
ஆயன்படை வேதன்படை தொட்டானவை யழிந்த
வியப்புர நகைகோட்டிய விமலன்படை யுகைத்தான்
காயப்படை கண்டப்படை கடிதேவின னவனும்.

(இ - ள்.) மயக்கத்தினைச் செய்யும் படைக்கலத்தினையும், அவுணப் படைக்கலங்களையும் வீரவாகு விட்டனன். அப்படைக்கலங்களும் மறைவுற்றன. திருமாலின் படையாகிய ஆழியினையும் பிரமன் படையினையும் தொடுத்தான். அப்படைக்கலங்களு மழிந்தன. புரங்கள் கெடப் புன்முறுவலை வளையும்படி செய்த மலமற்றவனாகிய இறைவன் படையைச் செலுத்தினான். உலகினையெல்லாம் வருத்துகின்ற அவ்விறைவன் படையினைக் கண்டு அவ்விறைவன் படையினையே சூரனும் விரைவாகச் செலுத்தினனென்க.

(வி - ம்.) மாயப்படை - மயக்கஞ் செய்யும் படை. ஆயன்படை - ஆழி. விமலன்படை - பாசுபதப்படை. அப்படை - பாசுபதப்படை. (௩௪௭)

ஆலங்கனல் கூவிக்குல மசனித்திர டிமிரம்
சாலுங்கதிர் கூற்றுச்சிலை சரமாழிவை யிலைவேல்
சூலம்பல புடைசுற்றின துன்னிச்சம ராடி
மாலும்படை விட்டோருழி மருவுற்றன மாதோ.

(இ - ள்.) நஞ்சும், அழலும் கூவியின் கூட்டங்களும் இடிக்கூட்டமும் இருளும் வெம்மையமைந்த கதிரும், இயமனும், மலையும், கணையும், ஆழியும், நுனியையுடைய தகட்டுவடிவை யுடைய வேலும் முத்தலை

வேலுமாகிய இலைகள் சுற்ற இவ்விருபடையும் நெருங்கி யொன்றினே டொன்று போர்செய்து கலத்தலையுடைய அவ்விரு படையும் விட்டவர் மாட்டுப் பொருந்தின வென்க.

(வி - ம்.) அசனி - இடி. திமிரம் - இருள். சாலுங்கதிர்-வெப்ப மமைந்த வெங்கதிர்க் கடவுள். கூற்று - இயமன். (௩௧௮)

சூரன்சினம் வளரச்சுடு கணைமாரிக டூர்த்தான்
வீரன்றடை செய்தெய்தமர் விளையாடுழி வீரன்
வாரச்சிலை முரிவித்தனன் மணிவேலிவன் விட்டான்
சாரப்பொடி யாயிற்றவ னொருதண்டமு கைத்தான்.

(இ - ள்.) சூரனென்பான் சீற்றம் வளராநிற்பச் சுடுகின்ற அப்பு மழையைப் பெய்தான் வீரவாகு. அவ்வப்பு மழையைத் தடுத்து மீண்டும் அம்புகளைத் தொடுத்து விளையாடு ஞான்று, வாகுவின் நீண்ட அச்சிலையினை முரிவித்தான். வாகு அழகிய வேற்படையைச் சூரன்மேல் விட்டான். அவ்வேல் சூரன்மாட்டுப் பொருந்தித் தூளாயிற்று. அச்சூரன் ஒரு தண்டத்தினைச் செலுத்தினு னென்க.

(வி - ம்.) சுடுகணை : வினைத்தொகை. வீரன் - வீரவாகு. உகைத்தான் - செலுத்தினன். (௩௧௯)

எதிர்விட்டவல் லெழுவொன்றனை யெற்றித்துக ளாக்கி
அதிரத்தட மார்பத்துற வருவிக்குரு தியனுய்
முதிர்மூர்ச்சனை யுற்றான்விறன் மொய்ம்பன்மறந் திருகிப்
பிதிராக்கிய பூதப்படை பெட்டான்கணை தொட்டான்.

(இ - ள்.) வீரவாகு சூரனுக்கு எதிராகச் செலுத்திய வலிய வெழுவைச் சூரன்றண்டம் எற்றுதலைச்செய்து பொடியாக்கி அதிர்ச்சியுறும்படி பெருமை பொருந்திய மார்பின்கண்ணே பொருந்த, அருவிபோற் சொரியும் குருதியை யுடையவனாய் வீரவாகுமிக்க இயக்கமில் மயக்க முற்றனன். வீரத்தான் மாறுபாடுகொண்டு பூதப்படையினைப் பொடியாக்க விரும்பினவனாகிய சூரன் கணையைத் தொடுத்தா னென்க.

(வி - ம்.) மூர்ச்சனை - இயக்கமிலுறக்கம். திருகி - மாறுபட்டு. பிதிர் - தூள். பெட்பு - விருப்பம். தண்டமானது ஆக்கி மார்பிலுற வென்க. (௩௨௦)

அம்மைத்தவ மாற்றும்பய னருளப்பொழு திதுவென்
றிம்மைச்சம ராடப்புகு மிறவாவறு முகவன்
மும்மைச்சக மேத்தும்விறன் மொய்ம்பன்முத லெவரும்
கம்மக்கழ லவுணர்க்குடை செய்கண்டெதி ருற்றான்.

(இ - ள்.) முற்பிறப்பிற் செய்த தவத்தின் பயனையருளக் காலம் இதுவே யாகுமென்று இப்பிறப்பிலே போராடச் செல்லும் எஞ்ஞான்றும் பொன்றுதலிலனாகிய அறுமுகவன் மூன்றுலகமுந் துதிக்கும்

வீரவாகு முதலிய யாவரும் கம்மியர் தொழிலாற் சிறந்த வீரக்கழலை யணிந்த அவுணனாகிய சூரனுக்குத் தோற்றோடுதலைக் கண்ணுற்று எதிருற்றன னென்க.

(வி - ம்.) அம்மை - ஈண்டு முற்பிறப்பு. கம் - கம்மியரது தொழில். (கூஉக)

நட்புப்பகை நொதுமற்றிற மொருமூன்றினு நாதன்
பெட்புற்றெதி ருறலூழிகள் பெயரத்தவ மாற்றும்
ஒட்பத்தினர் தம்பாலல திலையென்பது ணர்த்தும்
திட்பத்தவ மிகையானெதிர் தெவ்வுக்கொடு புகலால்.

(இ - ள்.) ஒப்பின்றாகிய நட்பு பகை நொதுமல் ஆகிய மூன்று வகையினும், திட்பமாகிய தவத்தின் மிக்கானாகிய சூரன்முன் பகைமை கொண்டு எழுந்தருளுதல் ஒப்பின்றாகிய நட்புப்பகை நொதுமலாகிய மூன்று வகையினும் இறைவன் விருப்புற்றுக் காட்சி கொடுத்தல் பல ஊழிகள் ஒழிய நிலைபெற்றுத் தவத்தினைச் செய்யும் ஒட்பமுடையார் தம்பக்க லில்லாமல் தவத்தினைச் செய்யாதார் பக்கலில் எழுந்தருளுத லில்லை என்பதை உணர்த்தா நிற்கும்.

இறைவன் பகை நொதுமல் நட்பென்னும் மூவகையினருள், தவஞ் செய்யு மொட்பத்தினை யுடையான்மாட்டே யெழுந்தருளிக் காட்சி கொடுப்பானாதலின் சூரன் பகைவனாயினும் திட்பமாகிய தவத்தை மிகுதியாக இயற்றி இருத்தலின் அவன்பக்கலில் எழுந்தருளிக் காட்சி கொடுத்தன னென்க.

(வி - ம்.) ஒட்பம் - தூய்மை. இதனை, "உலகந்தழீஇய தொட்ப மலர்தலுங், கூம்பலு மில்ல தறிவு" என்னுந் திருக்குறளானும் அத னுரையானு முணர்க. நொதுமல் - பற்றிகலின்மை. (கூஉஉ)

பயன்முற்றிய சூரன்புகு படர்பேரொளி முருகன்
இயன்முற்றிய வுருவத்தெழி லெதிர்நோக்குபு மொழிவான்
வியன்முற்றிய களனிற்படை வீயத்தமி நின்றாய்
புயன்முற்றிய சிலையேனொடு பொரவல்லைகொ லென்றான்.

(இ - ள்.) இறைவன் திருமகனைக் காணும் பயனிறைந்த சூரன் தன் முன்னர்க் கைம்மாறில்லாத கருணையா னெழுந்தருளிய முருகப் பெருமானது எல்லா இலக்கணங்களும் நிறைந்த திருவுருவத்தின் அழகை யெதிரே கண்ணுற்றுச் சொல்வான். பெரிய இப்போர்க்களத் தின்கண் படைகளெல்லா மிறக்கத் தனியாக நின்றவனே! இக்களத் தின்கண் வந்து பொருதோரையெல்லாம் வென்று மேற்பொருவா ரின்மையாற் புயத்திலே பொருந்திய சிலையையுடைய என்னோடு போர் செய்தற்கு வல்லமை யுடையாய் கொல்லோ என்றனன் என்க.

(வி - ம்.) இறைவன் திருமகனை நேரே காண்டலாற் பயன்முற் றிய சூரன் என்றார். வீரவாகுதேவர் முதலியோரை வென்று மேற் பொருவாரின்மையின் நிற்கின்றேனென்பான், புயன்முற்றிய சிலையேன் 'என்றார்' புயன்முற்றிய சிலைமேகம்போற் பொழியும் சிலையெனினு மொக்கும். (கூஉக)

யானைத்திரள் குதிரைத்திர ளெறும்வெம்புலி கேழல்
கானத்திரண் மிருகக்கண மெளிதட்டுழல் சிங்கம்
கூனற்பிறை யனவள்ளுகி ரெண்காற்குரு கண்மின்
மானத்திர ளென்றுநினை மதியேலென விறைவன்.

(இ - ள்.) யானையின் கூட்டம், குதிரையின் கூட்டம், வலிய கொடியபுலி, பன்றி, காட்டின்கணுள்ள திரண்ட விலங்கின் கூட்டங்கள் ஆகியவற்றை எளிதாகக்கொன்று சுற்றுகின்ற சிங்கம் வளைந்த பிறைபோன்ற கூரிய நகத்தினையுடைய எண்காற்பறவையாகிய சிம்புள் பொருந்தில் அச்சிங்கத்தின் வலிமையின் கூட்டம் யாதாய் முடியும் என்பதைக் கருதுவாய், சூரனே உன்னைப் பெரியோனென்று கருதாதே கொள் என்று இறைவன் திருவாய் மலர்ந்தருள.

(வி - ம்.) கேழல் - பன்றி. எண்காற்குருகு - சரபம். மானம் - வலிமை. (௯௨௪)

மிக்கட்டுயர் சிலைவெய்யவன் விண்ணோர்செவி பொத்தக்
கைக்கண்வளை வித்தேற்றிய கடிநாணொலி கொண்டான்
திக்கேண்கரி திரிவுற்றன சேடன்றெரு மந்தான்
நெக்குத்தளர் வொடுநின்றன நிலையெண்குல கிரிகள்.

(இ - ள்.) போரின்கண் பல வீரரையுங் கோறலாற் பலருமுயர்த்துச் சொல்கின்ற சிலையினைக் கொடியவனாகிய சூரன் தேவர்கள் செவியைப் பொத்தக் கையின்கண் வளையும்படி செய்து ஏற்றுதலைச் செய்த நாண் ஒலிசெய்யும்படி கொண்டனன். திசையின்கணுள்ள யானைகளெல்லா மோட்டெடுத்தன. சேடனும் இவ்வொலி யாதென்று சுழன்றான். சிறந்த எட்டுமலைகளும் இவ்வொலியாற் பிளந்து தளர்வொடு நின்றன வென்க.

(வி - ம்.) சிலையை வளைத்து ஏற்றி ஒலிக்கும்படி கைக்கட் கொண்டானென முடிபு செய்க. (௯௨௫)

புத்தேளிரு மறியாவொரு பொருளேயென நின்ற
அத்தேவனு மொருவார்சிலை யடுநாணொலி கொண்டான்
மொய்த்தாயிர மேலெட்டென மொழியண்டமு மற்றும்
கொத்தோடுலை வுறநீண்டது குமுறுற்றவவ் வொலியே.

(இ - ள்.) தேவர்களு மறிய வொண்ணாத வொப்பற்ற பொருளென்று சொல்லும்படி நின்றவனாகிய அம்முருகனும் ஒப்பற்ற நீண்ட சிலையினை யடுத்த நாணினை ஒலிசெய்து கையிற்கொண்டனன். அங்ஙனம் கோடலாற் குமுறுதலுற்ற வொலியானது ஆயிரமென்னும் எண்ணின் மேலே யொத்த எட்டென்று சொல்லும்படியான அண்டங்களும் ஏனையவும் கூட்டத்தோடு உலையும்படி நீண்ட தென்க.

(வி - ம்.) உம்மை இறந்தது தழீயதோடு உயர்வு சிறப்புமாம். ஆயிரத்தெட்டண்டமும் என்றவாறு. கொத்து - கூட்டம். (௯௨௬)

## வேறு

கூர்த்த வாளியாற் றேரையு முலகையுங் கொடியோன்
போர்ப்ப வீழ்த்தவை புண்ணியன் பொலன்சக டகல்வான்
வார்த்த வாளியின் மறைத்தனன் மறுத்தவை தொடுத்தான்
மூர்த்தி மேலுறப் பத்துநூ றுயிர முனைக்கோல்.

(இ - ள்.) கூரிய வாளியால் முருகப்பெருமான் தேரினையும், உலகத்தினையும் கொடியவனாகிய சூரன் மறைத்தலைச் செய்யப் புண்ணியமே வடிவாகிய முருகன் அக்கணைகளை விழச்செய்து அவன் அழகிய தேரை மேகம்போலச் சொரிந்த கணைகளால் மறைத்தனன். சூரன் அவற்றைத் தடுத்து இறைவன்மேலே பொருந்தக் கூர்மையினையுடைய கோடி கணைகளைத் தொடுத்தன னென்க.

(வி - ம்.) வான்-மேகம். வாளியின்-ஐந்தாவது ஏதுப்பொருட்டு. (௩௨௭)

ஞான நாயக னலிந்தவை நாமவான் கணையேழ்
தேனு லாந்தொடை யவன்புயத் தேயினன் றிணிதோட்
கூன மேதுமின் றவன்விடு முறுகணை விலக்கி
மான வேலவ னுயிரத் தவன்சிலை மடித்தான்.

(இ - ள்.) ஞானமே திருவுருவாக வுடைய முருகன் அவற்றைக் கெடுத்து அச்சந்தரும் பெரிய ஏழம்புகளைத் தேன் பொருந்திய மாலையையணிந்த சூரன் றோளின்கண் ஏவினன். தோளினுக்குக் குறைவு சிறிது மில்லையாயிற்று. அச்சூரன் விடுகின்ற மிக்க கணைகளை விலக்கிப் பெருமை பொருந்திய வேற்படையுடைய முருகன் ஆயிரங் கணைகளால் அவன் சிலையை மடித்தன னென்க.

(வி - ம்.) ஊனம் - குறைவு. இன்று - இன்றி. உறு - மிகுதி. மானம் – பெருமை. (௩௨௮)

பிரமன் றந்தவேல் விடுத்தனன் பெருமித வவுணன்
பரமன் றந்தவ னதுபடுத் துகைத்தபல் சரமும்
உரன்ம லிந்தவே றொருசிலை கொடுதொடுத் தொழித்திட்
டரன்ம கன்புயத் தெழுகணை செலுத்திநின் றார்த்தான்.

(இ - ள்.) பிரமனருளிய வேற்படையினை மனச் செருக்கினையுடைய அவுணனாகிய சூரன் விட்டனன். மேலாகிய இறைவன் தந்தவனாகிய முருகன் அவ்வேற்படையினைக் கெடுத்துச் செலுத்திய பல அம்புகளையும் வலிமிக்க வேறொரு சிலையின்கட் பாணங்களைத் தொடுத்து நீக்கி இறைவன் றிருமகனாகிய முருகன் றோளின்கண் ஏழு பாணங்களைச் செலுத்தி நின்று வீரமுழக்கஞ் செய்தா னென்க.

(வி - ம்.) உரன் - வலி. சிலைகொடு - உருபு மயக்கம். (௩௨௯)

பட்ட வாளிகள் பூழியா யினபர னுயிர்த்தோன்
எட்ட னோடிரு கணைதொடுத் தெறுழ்ச்சிலை துமித்து
முட்டு மாயிர வாளியாற் றேரினை முருக்கி
ஒட்ட லான்படைச் சேமத்தே ரனைத்தையு மொழித்தான்.

(இ - ள்.) இறைவன் றிருமகன் றேருளிற்றைத்த அம்புகள் தூளியாயின. இறைவன் பெற்றருளிய முருகன் பத்துக்கணைகளைத் தொடுத்தலைச்செய்து வலியினையுடைய அச்சூரன் சிலையினைக் கெடுத்து ஒன்றினோடொன்று செறிந்த ஆயிரங்கணைகளால் தேரைக்கெடுத்துப் பகைவனாகிய சூரன் படையின்கண் வைத்துள்ள இருப்பிலுள்ள தேர் எல்லாவற்றையுங் கெடுத்தன னென்க.

(வி - ம்.) முட்டுதல் - செறிதல். முருக்குதல் - கெடுத்தல். ஒட்டலான் - பகைவன். சேமத்தேர் - இருப்பிலுள்ள தேர். (௩௩௦)

முத்த லைப்பெருஞ் சூலமொன் றேயினன் மூர்க்கன்
அத்த னற்கணை தொடுத்தது துணித்தெழு கணையால்
நித்தி லக்குடை துமித்தொரு கணையினின் மோலி
மெய்த்த நல்வரத் தோடுமண் வீழ்த்தினன் விரைவின்.

(இ - ள்.) மூன்று தலையினையுடைய ஒரு சூலத்தினை மூர்க்கனாகிய சூரன் ஏவினன். தலைவனாகிய முருகன் நான்கு கணைகளைத் தொடுத்து அம்முத்தலைச் சூலத்தினைக் கெடுத்து, ஏழுகணைகளால் அவன் முத்துக் குடையினைக் கெடுத்து, ஒருகணையால் அவன்முடியினை உண்மையாகிய வரத்தினோடும் விரைவில் வீழ்த்தின னென்க.

(வி - ம்) மூர்க்கன் - தீயோன். அத்தன் - முருகன். நித்திலக் குடை - முத்துக்குடை. துமித்து - அழித்து. மோலி - முடி. வரம் பயன்படாமையின் வரத்தினோடு வீழ்த்தினன் என்றார். (௩௩௧)

காமர் மோலிமண் விழுமுனங் கணைபல போக்கித்
தாம மாரணி யாவையு மறுத்தனன் றலைவன்
தோம னாவிய வுளத்தவன் றேல்விகண் டவுணன்
நாம வான்படைத் தலைவர்க ணரலையின் வளைத்தார்.

(இ - ள்.) கண்டார்க்கு விருப்பம் வரத்தக்க முடிநிலத்தின்கண் வீழுமுன்னர்ப் பல்கணைகளைச் செலுத்தி மாலையாகப் பொருந்திய அணிகலன்கள் யாவையும் தலைவனாகிய முருகன் அறுத்தனன். குற்றம் பொருந்திய உள்ளத்தவனாகிய சூரனது தோல்வியைக்கண்ட அவுணர்களாகிய அச்சத்தைத் தரும் பெரிய படைத்தலைவர்கள் கடலினைப்போல வளைந்தன ரென்க.

(வி - ம்.) காமர் - கண்டார்க்கு விருப்பம் வருதற்குக் காரணமான என்க. காமர் சேவடி என்றாற்போலக் கொள்க. தாமம் - மாலை. தோம் - குற்றம். நாமம் - அச்சம். நரலை - கடல். (௩௩௨)

செங்கை யேந்திய திகிரியைத் தூண்டினா னமலன்
பொங்கு தானையம் புணரியைப் பொள்ளெனச் சுவற்றிற்
றெங்க ளையனன் கைப்படை யுருத்திரரென்றால்
அங்கண் மாநிலத் தழிதராப் படைகளு முளவோ.

(இ - ள்.) *செங்கைகளின்கண் ஏந்திய ஆழியினை மாசமற்றவனாகிய முருகன் செலுத்தினான். மிகுகின்ற படையாகிய கடலினை விரைவாக வற்றும்படி செய்தது. எங்கள் தலைவனாகிய முருகன் கையின்கணுள்ள படை உருத்திர கணங்களானால் அழிகிய இடமகன்ற நிலவுலகின்கண் அவற்றினுக்கு அழியாத படைக்கலங்களு முண்டோ? என்க.*

(வி - ம்.) *முருகன் பன்னிரு கையிலுமுள்ள படைகளில் வைத்து வேற்படை சத்தியும், ஏனைய பதினொன்றும் உருத்திர கணங்களும் ஆகலான் "எங்களையன் கைப்படை யுருத்திரர்" என்றார். (௩௩௩)*

பிணத்தின் குப்பையும் பெருகுநெய்த் தோர்ப்பெரு நதியும்
கணக்கி லாதன கண்டனன் கருமுருட் டவுணன்
துணித்த பாலகன் சேவக நன்றெனத் துனைந்து
மணத்த தாமரை மனையினன் படைவழங் கினனால்.

(இ - ள்.) *கரிய கட்டை போன்றவனாகிய அவுணன் பிணத்தின் குவியலும், செந்நீராகிய பெரிய யாறும் அளவில்லவற்றைக் கண்டனன். இங்ஙனம் துணித்தலைச் செய்த இளையோன் வீரம் நன்றாகுமென்று அவுணன் விரைந்து வாசனையையுடைய தாமரை மலரின்கண்ணுள்ள பிரமன் படைக்கலத்தினைத் தொடுத்தனனென்க.*

(வி - ம்.) *குப்பை - குவியல். நெய்த்தோர் - குருதி. பாலகன் - முருகன். சேவகம் - வீரம். துனைதல் - விரைதல். தாமரைமனையினன் - பிரமன். ஆல் : அசை. (௩௩௪)*

ஏந்த லேந்திலை வேலது விழுங்கவீர்ந் துளவன்
காந்தி ரும்படை கடவினன் கவ்விய ததுவும்
சாந்த நீறெனத் தரித்தவன் றனிப்படை தொடுத்தான்
போந்த தப்படை புவனமோ டுயிரெலாந் துளங்க.

(இ - ள்.) *தலைவனாகிய முருகன் தாங்கிய வேற்படை அப்பிரமன் படையினை விழுங்கக் குளிர்ச்சியினையுடைய துளவமாலையினை அணிந்த திருமாலின் வருத்துகின்ற பெரிய ஆழியினைச் செலுத்தினன். அதனையும் வேற்படை கவ்வியது. சந்தனமாக திருநீற்றினைத் தரித்தவனாகிய இறைவனது ஒப்பற்ற படையினைத் தொடுத்தனன். உலகங்களோடு உயிர்கள் எல்லாம் நடுங்குதலைச் செய்ய அப்படை வந்ததென்க.*

(வி - ம்.) *ஏந்தல் - ஈண்டுத்தலைவனாகிய முருகன். சாந்தம் - சந்தனம். நீறு - திருவெண்ணீறு. தனிப்படை - பாசுபதக்கணை. (௩௩௫)*

அடுந்த காலையிற் றந்தையை நினைந்தகங் கையில்
மடுத்து நின்றனன் மாயைதன் மகனது காணுப்
படைத்தி றத்திலிப் பாலன்யா னலதுவே றில்லென்
றெடுத்த விம்மிதத் தினையன சூழ்ந்தன னிருப்ப.

(இ - ள்.) இறைவன் படைக்கலம் தன்பால் வந்து அணுகிய காலத்துத் தன் தந்தையை நினைந்து உள்ளங்கையில் அதுவந்து தங்கும் வண்ணம் நின்றனன். மாயையின் மகனாகிய சூரன் அதனைக் கண்ணுற்றுப் படைக்கலங்களைப் பகைவர்மேற் செலுத்துங் கூறுபாட்டில், இச்சிறுவனுக்கொப்பப் பிரமன் முதலிய தேவர்களைப் புறங்கண்ட யானல்லாமல் தேவர் குழுவுள்ளும் அவுணர் குழுவுள்ளும் வேறொருவரு மில்லையாகுமென்று தோன்றிய ஆச்சரியத்தால் இத்தன்மையான சிலசில நினைவுகளை நினைந்தனனாகி இருப்ப, என்க.

(வி - ம்) மடுத்தல் - ஈண்டுக் கையிலேற்றல். பாலன் : நான்காவதன் தொகை. எடுத்தல் - ஈண்டுளதாதல். விம்மிதம் - வியப்பு. (௩௩௬)

கருணை நாயக னவன்முக நோக்குபு கழறும்
வெருவு வன்சிறை விண்ணவர்க் கொழியெனத் தூது
மருவ வுய்த்தன மிசைந்திலை யினிவழி வரினும்
பொருவி லாத்தனி யரசொடும் பொலிதிவா ராயேல்.

(இ - ள்.) கருணையினையே திருவுருவாகக் கொண்டெழுந்தருளிய தலைவனாகிய முருகன் அச்சூரன் முகத்தினை நோக்கித் திருவாய் மலர்ந்தருளுவான், யாவரும் அஞ்சுதற் கேதுவாகிய சிறைக்கோட்டத்தினின்றும் தேவர்களை நீக்குவாய் என்று தூதுவனை யுன்பாற்பொருந்த விடுத்தாம். நீயதற்கு முடன்பட்டிலை; இனியாயினும் யாங்கூறு நெறியின்கண் ஒழுகுவாயாயின்; நுங்கள் வழிவழி வந்த ஒப்பின்றாகிய அரசியலோடும் பொலிவுற்று வாழ்வாய்; அங்ஙனம் வாராதிருப்பின்.

(வி - ம்.) சிறை ஐந்தாவது நீக்கப் பொருட்டு. விண்ணவர்க்கு, வேற்றுமை மயக்கம். (௩௩௭)

அழன்று நின்னுயிர் குடிப்பதிங் கருங்குரைத் தன்றால்
தழன்றி தோதடங் கரத்துவெள் வேறவிர்ந் ததுபார்
கழன்ற கைப்படை யார்தம தாருயிர் காற்றல்
நிழன்ற தண்குடை யார்நிலை யன்றெனத் தாழ்த்தேம்.

(இ - ள்.) அழற்சியுற்று நின்னுயிரைக் குடிப்பது எமக்கு அருமையான செயலொன்றன்று. தழலுதலைச் செய்து இதோ பெரிய என் கையின்கண் வெள்ளிய வேற்படை தங்கியிருப்பதனைக் காண்பாய். கையின்கணின்றும் படைக்கலம் நீங்கியவருடைய உயிரினைப் போக்குதல் செங்கோன் முறைமையின் உலகினுக்கு நிழலைச் செய்த குளிர்ந்த குடையையுடைய இறைவர் அறமன்று என்று கருதி நின்னைக் கோறல் செய்யாது தாழ்ந்திருந்தேமென்க.

(வி - ம்.) தழலுதல் - சினத்தல். கழன்ற கைப்படையார் என்றது கைப்படையிழந்தவர் என்றவாறு. கைப்படையில்லார்மேற் படைக்கல மெடுத்துப் போர்புரிதல் சிறப்புடைய அரசிய லறமன்றுகலின் "கழன்ற தண்குடையார் கிலையன்றெனத் தாழ்த்தேம்" என்றார் கிழலுதல் - நிழல்செய்தல். (௧௫௮)

நின்னு ளக்கருத் தெவன்கொலா நிகழ்த்தெனச் சூரன்
தன்னு ளத்தெணும் பாலனைச் சாடநான் மாட்டேன்
என்னை வேலனு மிறப்பவல் லானெறும் வரத்தால்
துன்னும் வான்பழி முடிவில்வெல் லினுந்தொலைந் திசையாம்.

(இ - ள்.) சூரனே நின்மனக் கருத்தியாது? சொல்வாயாக என்று இறைவன் திருவாய் மலர்ந்தருளச் சூரன் தன் மனத்தின் எண்ணுவான். இச்சிறுவனை யான் கோறல் செய்யேன் யான் பெற்றுள்ள வலிய வரங்களினால் வேற்படையினையுடைய இச்சிறுவன் என்னைக் கொல்லும் வல்லமை யில்லாதவனாவான். யானிப் போர் இறுதிக்கண் வெல்வி கோடுவே னென்றாலும் இப்பொழுது யான் தோல்வியுற்றமையாற் பொருந்திய இப்பழிச்சொல் தொலைந்து பின்னர்ச் சீர்த்தியாம் என்க.

(வி - ம்.) எணும் - எண்ணுவான். பாலன் - சிறுவன். சாட - கொல்ல. இறப்ப - கொல்ல. வல்லான் - எதிர்மறை வினைமுற்று. எறும் - வலிமை. (௧௫௯)

நின்ற சேனையோ டடுத்தின்னு நெடுஞ்சம ரியற்றி
வென்றி கோடென விண்மறைந் தகன்றனன் விமலன்
அன்றி னன்றிற மறிந்தன னமரர்க ளடுத்துப்
பொன்றல் வல்லையாக் கெனக்குறிப் பாற்பல புகழ்ந்தார்.

(இ - ள்.) போர்க்களத்து இறவாது எஞ்சி நின்ற படையினோடு பொருந்திப் பெரும்போரினைச் செய்து வெல்வி கொள்வேனென்று கூறி வானின்கண்ணே சூரன் மறைவுற்று நீங்கினான். மலமற்றவனாகிய முருகன் பகைவனாகிய சூரன் தன்மையை யறிந்தனன். தேவர்கள் முருகன்பாலணுகிச் சூரன் சாக்காட்டினை விரைவுபடுத்துவாயென்று குறிப்பாகக் கூறிப் பலவாறாகப் புகழ்ந்தனர்.

(வி - ம்.) கோடு - கொள். விமலன் - முருகன். அன்றினன் - பகைவன். திறம் - தன்மை வல்லை - விரைவு. (௧௬௦)

அமல நாயக னங்ஙனம் புரிதுமென் றளித்தான்
சமரின் மாய்ந்துடை சாரதர் குழாங்கொடு சார்ந்து
குமர வேளடி பணிந்துபோய்க் கொடியவ னெச்சி
உமிழ்சி னத்தினர் முற்றின ருலைப்பவ ரானார்.

(இ - ள்.) இயல்பாகவே மலநீங்கிய தலைவனாகிய முருகன் அங்ஙனமே செய்வேமென்றருளிச் செய்தான். போரின்கண் மறைந்தோடிய பூதர், கூட்டங்களைத் தன்னுடன் அழைத்துக்கொண்டு பொருந்

றிக் குமரவேளின் அடிகளின் வணங்கிச்சென்று கொடியவனாகிய சூரன் மதிலைக் காலுகின்ற சீற்றத்தினை யுடையராய் வளைந்து கெடுப்பவ ராயின ரென்க.

(வி - ம்.) இப்பாட்டு திணை: தும்பை. துறை: புறத்தோன் முற் றிய முதிர்வு. மாய்தல் - மறைதல். சினத்தர், முற்றினர் இரண்டும் முற்றெச்சம். (௩௪௧)

நொச்சி காத்ததி கோரனேன் மையினவ ணிருந்தான்
வெச்செ னப்பல படைகொடு விளைத்தனன் பூசல்
மெச்ச விண்ணவர் பூதரப் படையெலா மிதித்துச்
செச்சை செய்துகோ புரத்தொடு திண்மதி லழித்தார்.

(இ - ள்.) மதிலினைக் காவல்செய்து அதிகோரன் என்பான் வன்மையோடு அந்நொச்சியின்கண் தங்கினவன் ஊழிக்காலத்து, உள வாகும் வெப்பமெனக் கண்டோர் சொல்லும்வண்ணம் பல படைக் கலங்களைக்கொண்டு போர்செய்தான். தேவர்கள் யாவரும் புகழப் பூதர்கள் நொச்சி வீரரையெல்லாம் மிதித்தலைச் செய்து சேருக்கிக் கோபுரங்களோடு மதிலையும் அழித்தன ரென்க.

(வி - ம்.) முதலிரண்டடியும் திணை: தும்பை. துறை: அகத் தோன் முற்றிய முதிர்வு. நோன்மையினோன் - அதிகோரன். வெச்சு - வெப்பம். (௩௪௨)

அகத்துப் புக்கன ரட்டனர் மாளிகை நிரைகள்
உகத்து மோவிலா வவுணர்க ளாவியு முண்டார்
சகத்துக் கீசனைத் தணப்பதே யென்றுமீண் டனர்சண்
முகத்த னருள் புரிந்துபா சறையின்முன் னினனால்.

(இ - ள்.) நொச்சியினை யழித்து நகரத்துச் சென்றவர் இவ்வரிசை களை யழித்துப் பலவூழிகள் செல்லினும் நீங்காத அவுணர்களின் உயிரை யும் குடித்தனர். அங்ஙனம் குடித்த வீரர்கள் உலகினுக்குத் தலைவ னாகிய அறுமுகத்தவனைத் தனித்துவிட்டு நாம் நீங்குவது தகுதியாகுமா? என்று திரும்பினார்கள். அறுமுகத்தவன் அவர்கட்கு அருள்செய்து படைவீட்டின்கண் அடைந்தன னென்க.

(வி - ம்.) ஓவிலா வுயி ரென்க. அட்டனர், அழித்தனர். ஏகாரம்- எதிர்மறை. (௩௪௩)

பொருது வீழ்ந்தவர் தன்னுடல் பொதிர்த்துவிண் ணேகக்
குருதி தோய்ந்துமெய் குலைந்துவெய் யவன்பெருங் குன்றத்
தொருபு றத்திடை யொளிப்பவன் போன்றெழுந் தனனால்
மருவு சேனையோ டமலனும் பாசறை வதிந்தான்.

(இ - ள்.) போரின்கண் இறந்த வீரர்கள் தன்னுடலைப் பிளந்து வானுலகினுக்குச் சேறலால் அவ்வீரர் உடலின்கண்ணுள்ள செந்நீர் தோயப்பட்டு உடனடுக்கமுற்று வெங்கதிர்க்கடவுள் அத்தமனக்

குன்றின் ஒருபக்கலிலே ஒளிப்பவனைப்போலச் சென்று மறைந்தான். இயல்பாக மலநீங்கிய இறைவனும் பொருந்திய படைகளுடன் பாடி வீட்டின்கண்ணே தங்கினனென்க.

(வி - ம்.) போரின்கண்ணிறந்த வீரர் வெங்கதிர்க் கடவுளைப் பொதிர்த்து வானுலகஞ் சேர்வர் என்பது வழக்கு. ஆகலான் "தன்னுடல் பொதிர்த்து விண்ணோக" என்றார். மாலைக்காலத்து வெங்கதிர் மண்டிலஞ் செம்மை நிறமுற்றுத் தோன்றி அடி அத்தமனக்குன்றில் மறைதல் இயல்பாகலின் அதனைத் தன்பாற் புக்குச் சென்ற வீரர் செந்நீர் தோய்தலால் மெய்ந்நடுக்கமுற்றுச் சேந்து மலையிலொளித்த தாகக் கருதியதனுல் இது தற்குறிப்பேற்ற வணியாம். (கூசச)

### வேறு

வறியனுய்த் தந்தை மீண்ட வரவறிந் தென்றூழ்க் காதும்
சிறுவனுங் கெய்தி யில்லாச் சேவகம் பலவுஞ் செப்ப
முறையிலாச் சூரன் கேட்டு முருகனே டமர்த்தல் யானே
உறுமொரு தூத னுவி யுண்கென விடுப்ப மீண்டான்.

(இ - ள்.) தந்தையாகிய சூரன் போர்க்களத்திற்றன் படையெலாமாள மெய்க்காப்பாளருமின்றி வறியனுகி மீண்டுவருதலைப் பார்த்துப் பானுகோபனுகிய சிறுவன் அவன் பக்கலிலே சென்று தனக்குச் சிறிதும் இயல்பில்லாத பல மறவுரைகளை மேற்கொண்டுரையாநிற்பச் சிறிதும் அற நான்முறையில்லாச் சூரன் அப்பயனில் சொற்களைக்கேட்டு அம் முருகனோடு யாமே போர் செய்வேம் நீ சென்று பொருந்திய ஒரு தூதுவன் ஆவியைக் குடிப்பாய் என்று ஏவுதலானே மீளாநின்றனன்.

(வி - ம்.) வறியன் - படையின்மையால் நல்கூர்ந்தோன் என்றவாறு என்றூழ்க் காதுஞ்சிறுவன் என்றது பானுகோபன் என்றவாறு. சேவகம் - மறம். (கூசரு)

அற்றைநாள் வடசார் நொச்சி யவுணரோ டழிதல் கேட்டாங்
கொற்றரின் யவனற் கூவி யுளுற்றென வேவிப் பின்னர்ப்
பற்றுமா காய னென்னு மவுணனு யிரப்பத் தென்ன
முற்றுவெள் ளத்தி னேடு முன்னினன் காக்க வுய்த்தான்.

(இ - ள்.) அந்நாள் வடாதுள்ள மதிலவுணர்களோடு அழிந்ததனை ஒற்றர்களாற் கேள்வியுற்றுத் தச்சனையழைத்து அழிந்த மதிலினை மீளச் செய்கவென ஏவிப் பின்பு பகைவர் நகரங்களை அகப்படுக்கும் மாகாயனென்னு மவுணன் பதினுயிர வெள்ளமென்னும் அளவினையுடைய படையோடு வந்தனன். அவனை நொச்சியினைக் காக்கும் பொருட்டுச் செலுத்தினன்.

(வி - ம்.) நொச்சியழித்தமை முந்நூற்று நாற்பத் தொன்ருஞ் செய்யுளான் அறிக. யவனன் - தச்சன். (கூசக)

தன்மனை யடுத்து வைகித் தழங்குமா மலையி னுற்ருல்
முன்னிய காலைத் தூநீ ராடுதன் மான வெய்யோன்

பன்மணிக் கடனீ ராடி யெழுப்பயில் கரும முற்றி
முன்னிய மாயை நல்கு மூரிவெம் படைகைக் கொண்டான்.

(இ - ள்.) தன்னில்லின்கட் பொருந்தித் தங்கி முழங்கும் வேதங்களிற் கூறிய முறையானே பொருந்திய நாட்காலையில் நீரில் மூழ்குதலை யொப்ப வெங்கதிர்க் கடவுள் பலமணிகளின் கூட்டங்களையுடைய கடலின்கண் நீராடுதல் செய்து தோன்றுநிற்கத் தான் நாட்காலையிற் செய்யவேண்டிய கடன்களைச்செய்து தான் தொழுகுலமாகக் கருதத்தக்க மாயையென்பவள் அளித்த வலியினையும் கொடுமையினையுமுடைய படைக்கலங்களைக் கைக்கொண்டன னென்க.

(வி - ம்.) தழங்கும் - முழங்கும். மான - ஒப்ப. பயில்கருமம் - நாட்கடன். மூரி - வலி. (௯௬௭)

மதலைபோர்க் கெழுவ தோர்ந்து வயின்வயின் விறந்த சேனை
விதலையுற் றகில மேங்க வொருங்குடன் வெறுத்துச் சூழக்
கதிர்மணித் தேரி னேறிக் கடிநகர் கடந்து செல்வான்
துதிவளர் தூதன் போர்க்கு வருகெனச் சொல்லி விட்டான்.

(இ - ள்.) தங்கள் தலைவன் மகன் போரினுக் கெழுவதனையறிந்து இடமிடங்க டோறுஞ் செறிந்த படை எல்லாவுலகும் நடுக்கமுற்று ஏங்குதலைச்செய்ய ஒருசேர நெருக்கிச் சூழ ஒளிபொருந்திய மணிகள், பதித்த தேரின்கண்ணேயேறிக் காவலையுடைய பட்டினத்தைக் கடந்து செல்பவன், புகழ்வளர்தற் கேதுவாகிய தூதுவன் போரினுக்கு வருவானாக வென்று சொல்லிவிட்டன னென்க.

(வி - ம்.) மதலை - மகன். விறந்த - செறிந்த. விதலை - நடுக்கம். வெறுத்தல் - செறிதல். (௯௬௮)

ஆண்டகை வீரன் செவ்வே ளடியிணை குறுக வையன்
மூண்டுபோர் விளைத்தி குய்ய முடித்தன னுயின் வேலைத்
தூண்டுது மென்னப் போற்றித் தொக்கவா யிரவெள் ளத்தின்
மாண்டசெங் களத்திற் சென்றான் மறங்கிடந் திமைக்குங் கண்ணன்.

(இ - ள்.) ஆண்டகைமையினை யுடைய வீரவாகுதேவர், செவ்வேள் அடியிணையை யடைய களத்தின்கட் பொருந்தி போரினைச் செய்வாய்; பானுகோபன் வஞ்சனை செய்வானாயின் வேற்படையினைச் செலுத்துவோம் என்று திருவாய்மலர்ந்தருள வீரந்தங்கி இமைத்தலைச் செய்யுங் கண்ணையுடையவனாகிய வீரவாகு தன்பால்கூடிய ஆயிரவெள்ளம் படையோடு பெருமை பொருந்திய போர்க்களத்தின்கட் சென்றன னென்க.

(வி - ம்.) குய்யம் - வஞ்சனை. தும் - தன்மைப்பன்மை விகுதி. (௯௬௯)

இடந்தலைப் பாட்டி னுற்றகாட் சிபோ லிருவர் சேனை
அடங்கரும் போரின் மூண்ட வற்றன கரந்தாள் சென்னி

படர்ந்தன வுயிர்கள் வானம் பாடினர் நினைந்தின் பெண்டிர்
உடைந்தன வவுணர் சேனை யுருத்தனன் பானு கோபன்.

(இ - ள்.) களவுங்காழுங் குறிஞ்சிக்கண் பால்வகையா னெய்தி கூடிய தலைவனுந் தலைவியும் அக்குறியிடத்தே வந்து பின்றை நாளுந் தலைப்படுங் காட்சியினைப்போல, முன்னர்ப் போர்க்களத்தின்கண் உற்றுப் பிரிந்த வீரவாகு பானுகோபனுமாகிய இருவர் படைகளும் இன்றும் பிறரால் அடர்த்தற்கரிய போர்க்களத்தின்கண் எதிர்த்தன. அஞ்ஞான்று, கையும், கால்களும், தலைகளும் அற்றன. வானின்கிடந்து உயிர்கள் சென்றன. நினைந்தின்றும் பெய்மகளிர் வீரர்கள் புகழைப் பாடினர். அவுணர்கள் படை புறங்கொடுத்தன. பானுகோபன் சீற்ற முற்றனன்.

(வி - ம்.) இடந்தலைப்பாடு - பால்வரை தெய்வத்தினாயால் முதனாட் கூடிய தலைவனுந் தலைவியும் அக்குறியிடத்தே பின்றைநாளும் எதிர்ப்படுதல். (௯௰)

பூதர்மே லுருமை வீர வாகுமுன் போந்து நேர்ந்தான்
காதுபோ ரிருவர் தேருங் கணைகடற் பரப்பிற் றேன்றும்
மாதிரந் தோறுஞ் சுற்றும் வானுல கனைத்துஞ் செல்லும்
மேதினி வரைப்பின் மீளும் வெஞ்சரத் தொழுதி காண்றே.

(இ - ள்.) வீரவாகுதேவர், பானுகோபன்; வீரர்களாகிய பூதர் கள்மேல் பானுகோபன் போர்க்குருவண்ணம் (அவ்வீரர்க்கு மெய்புகு கருவிபோல) முன்னர்ச்சென்று எதிர்த்தனன். மோதுகின்ற வீரர்க ளிருவர் தேர்களும் கொடிய கணைகளின் கூட்டத்திலைக் காலுதல்செய்து ஒலியையுடைய கடற்பரப்பின்கண்ணே தோன்றுகிற்கும்; திசைக டோறுஞ் செல்லாநிற்கும்; வானின்கண்ணுள்ள உலகின்கண்ணெல்லாஞ் செல்லாநிற்கும் இந்நிலவுலகினிடமெல்லாம் மீடலைச் செய்யு மென்க.

(வி - ம்.) இங்ஙனம் போர்வீரர்க்கு முன்னர்ச்சென்று படைத் தலைவர் போர்செய்தலை, பதிற்றுப்பத்தில் "சான்றோர் மெய்ம்மறை" யென்பர். சான்றோர் ஈண்டுப்போரி லமைதியுடைய வீரர். மெய்புகு கருவி - வீரர் உடம்புக்கிடுபோல. அவரவர் மெய்யிற் கணை வேல் முதலிய தாக்காவண்ணம் படைத்தலைவர் முன்போந்து போர்தொடங்கி மறைத்தலின் மெய்ம்மறை யென்றார். (௯௧)

புயல்வளர் பருவத் தாழ்ந்த புற்றெழு மீயல் போல
அயில்வளர் கணைகள் செல்ல வாடமர் விளைக்குங் காலைப்
பயனிலி வீர வாகு பகட்டுரத் தம்பு விட்டான்
கயவனீ விரதம் பாகு கந்துகம் படுத்தான் வீரன்.

(இ - ள்.) மேகம்பெய லொழிந்து தங்குகின்ற காலத்து ஆழமா கிய புற்றினின்று மெழுகின்ற ஈயலைப்போலக், கூர்மைதங்கிய கணைகள் செல்லாநிற்ப, வென்றியுளதாதற் கேதுவாகிய போரினைச்செய்யுங் காலத்து உலகினுக்கொரு பயனுமிலனாகிய பானுகோபன், வீரவாகு பெருமை பொருந்திய மார்பின்கண் கணைகளைச் செலுத்தினன்.

வீரவாகு சிம்மகனாகிய பானுகோபன் தேர்ப்பாகன் குதிரைகள் ஆகிய இவைகளைக் கொன்றனனென்க.

(வி - ம்.) பாகு : அஃறிணைச்சொல். வளர்தல் - தங்குதல். "நீர் வளர் வார்சடை" என்ற ஆவடுதுறைக் கோவையானு மதனுரையானு முணர்க. பகடு - பெருமை. (௫௰௨)

சேமத்தேர் பாய்ந்து வாளி செலுத்துமு னவுணன் மார்பத்
தேமற்றோள் வீர னுய்ப்ப வினைந்துவெங் கதிர்க்கு மாற்றான்
வாமத்தேர் வீரன் மீது வாருணப் படையைத் தொட்டான்
காமுற்றோர் நெஞ்ச மென்னக் கதழ்ந்தது நீரா யெங்கும்.

(இ - ள்.) இருப்பிலுள்ள தேரொன்றினிற் குப்புற்றுக் கணைகளைப் பானுகோபன் செலுத்தற்கு முன்னர்க் கணைகளை மற்போரிற் பயிற்சியுள்ள தோளினை வீரவாகு செலுத்த வருந்தி வெங்கதிர்ப் பகைவனாகிய பானுகோபன் அழகிய தேரினையுடைய வீரவாகுவின்மீது வருணன் படையினைத் தொட்டனன். பெண்கள்பால் விருப்பமுற்றோர் மனம் அப்பெண்கள் நிமித்தம் நீராயுருகுதல்போல. அவ்வருணன் படைக்கலம் யாண்டு நீராக விரைந்து சென்றதென்க.

(வி - ம்) ஏ - பாணம். வாமம் - அழகு. காமமுற்றோர் நெஞ்சேனவும் பிரித்துப் பொருள் கூறுவாருமுளர். கதழ்வு - வேகம். வாம் அத்தேர்வீரன் எனப் பிரித்து வாவும் பொருள் கொள்வாருமுளர். (௫௰௩)

அங்கிமாப் படையை வீர னடைச்சினன் பருகிச் செல்ல
நுங்குகாற் படையைத் தீயோ னூக்கின னெதுத்துத் தாவாச்
சிங்கவா ளரவம் வீரன் செலுத்தினன் றெவுட்டிச் சீற
மங்குவான் கருட னேவ மடித்துமேற் சென்ற தன்றே.

(இ - ள்.) பெரிய அழற்படையினை வீரவாகு செலுத்தினன். எல்லாப் பொருள்களையும் குடித்துண்ணுதலைச் செய்து செல்லுகின்ற வாயுக் கணையைப் பானுகோபன் செலுத்தினான். அப்படை, அழற் படைக்கலத்தினைக் கெடுத்துத் தாவாநிற்ப, அக்காலின் படைக்கலங் கெட பாம்புக்கணையினை வீரவாகு செலுத்தினன். அப்பாம்புக்கணை, காற்படையினை யுண்டு சீற்றமுறாநிற்க, கெடுபவனாகிய பானுகோபன் கலுழக் கணையைச் செலுத்த அப்பாம்புக்கணையைக் கெடுத்து வீரவாகுவின்மேற் சென்றதென்க.

(வி - ம்.) அடைச்சல் - ஈண்டிச் செல்லுதல். நுங்குதல் - உண்ணல். நூக்குதல் - ஈண்டுச் செலுத்தல். நொதுத்தல் - கெடுத்தல். சிங்கல் - கெடல். தெவிட்டல் - உண்ணல். (௫௰௪)

நந்தியம் படையை வீர னடத்தின னுலக மஞ்ச
வெந்திற லோடுஞ் சென்று கலுழனை விழுங்கி மேவ
அந்தகன் படையைத் தொட்டா னவுணனங் கதுவும் பொன்ற
உந்தினன் செல்ல வேத னுறுபடை வணங்கிற் றன்றே.

(இ - ள்.) நந்தியம் படைக்கலத்தினை வீரவாகு செலுத்தினன். எல்லாவுலகங்களும் அச்சுறக் கொடிய வன்மையுடன் சென்று கருடப் படையை விழுங்குதலைச்செய்து பொருந்த, பானுகோபன் இயமன் படைக்கலத்தினைத் தொடுத்தனன். அப்பொழுது அக்காலன் படையுங் கெட நந்தியம் படைக்கலத்தின்மீது பிரமனது மிக்க படைக்கலத்தினைப் பானுகோபன் செலுத்தினான். அப்பிரமன் படைக்கலம் நந்தியம் படைக்கலத்தினை வணங்கியது.

(வி - ம்.) அன்று, ஏ : அசைகள். (கஉ௦)

நாரணன் படையை விட்டா னரசிங்க மாயேற் றோடு
போரினை விளைத்து நிற்பப் புங்கவன் சிம்பு ளான
வீரபத் திரனை யேவ விளித்துமே லடர்ந்த தன்னுன்
பூரணன் படையைத் தொட்டான் புனிதனு மதனைத் தொட்டான்.

(இ - ள்.) நாரணன் படைக்கலத்தினைப் பானுகோபன் விட்டனன். அந்நாரணன் படைக்கலம் நரசிங்க வடிவினைக்கொண்டு நந்தியம் படைக்கலத்தினோடு போரை விளையாநிற்க, உயர்ந்தோனாகிய வீரவாகு எண்காற் புள்வடிவான வீரபத்திரப் படைக்கலத்தினை விட, நரசிங்கப் படையினைக் கெடுத்துப் பானுகோபன்மேற் பொருந்தியது. அப்பானுகோபன் எங்குநிறைந்த இறைவன் படைக்கலத்தினைத் தொடுத்தனன், புனிதமுடையானாகிய வீரவாகுவும் அப்பூரணன் படையினைத் தொடுத்தன னென்க.

(வி - ம்.) விளித்து - கெடுத்து. பூரணன்படை - பாசுபதாத்திரம். (கஉக)

உருத்திரர் வடிவந் தாங்கி யோரிரு படையுங் காவற்
கருத்தனை யயனை யேனைக் கடவுளர் தம்மை யன்னோர்
திருத்தகு படையைப் பூதத் திரளினை விடத்தை மற்றும்
விரித்தரன் சிருட்டி தோற்றி மிக்கமர் விளைத்த மாதோ.

(இ - ள்.) இருவருந்தொடுத்த ஒப்பற்ற இறைவன் படைக்கலங்கள் இரண்டும் காத்தற் றொழிலினை யுடைய விண்டுவினையும் பிரமனையும் ஏனைய தேவர்களையும் அத்தேவர்களருளிய படைக்கலங்களையும் பூதர் கூட்டத்தினையும் நஞ்சினையும் ஏனைய பிறவற்றையும் விரியும்வண்ணஞ் செய்து இறைவன் ஆக்கற்றொழிலினை யுலகினுக்குத் தோன்றச் செய்து மிக்க போரினை உளதாக்கின வென்க.

(வி - ம்.) இறைவன் படைக்கலத்தினின்றும் எல்லாப் படைக்கலங்களும் பிறவுந்தோன்றிப் போர்புரிதலின் அரன் சிருட்டிதோற்றி யென்றார். (கஉஉ)

இரிந்தனர் பூதர்வீர ரேங்கினர் பொடிந்த வெற்புக்
கரிந்தன நாள்கள் கோள்கள் கவிழ்ந்தன வும்பர் நாடு
சரிந்தன வண்டப் பித்தி தளர்ந்தன பூதம் யாவும்
மரிந்தன விறைவ னெல்லா மாற்றுமவ் வைக லென்ன.

(இ - ள்.) (இவ்விரு படைக்கலங்களும் இயற்றும் போரினைக் கண்ணுற்றுப்) பூதரும் வீரரும் ஓட்டெடுத்தனராகி ஏக்கமுற்றனர். மலைகளெல்லாம் பொடிந்தன. ஒன்பான் கோள்களும், இருபானேழ் விண்மீன்களும் கரிந்தன. தேவர் நாடுகள் யாவும் கவிழ்தலுற்றன. அண்டத்தின் சுவர்கள் சரிதலுற்றன. ஐம்பெரும் பூதங்களும் தளர்தலுற்றன. முழுமுதலாகிய இறைவன், நிலைத்திணையும் இயங்குதிணையும் பிறவுமாகிய எல்லாப் பொருள்களையும் துடைத்தலைச் செய்யும் அப்பேரூழியாகிய பகலென்று கண்டோர் கருதும்வண்ணம் இறந்தன வென்க.

(வி - ம்.) இயங்குதிணையும் நிலைத்திணையும் பிறவுமாகிய பொருள்களை யெல்லாம் மகாசங்காரம் செய்துநிற்கும் பேரூழிபோல இக்களத்தின்கண் நால்வகைப் படையும் பொன்றி வறுங்களமாய்த் தோன்றலின் "இறைவன் எல்லாமாற்றும் வைகலென்ன மரிந்தன வென்றார். பித்திசவர். (௲௬௮)

**என்னென வயிர்த்துச் சூர னிரிந்தவர் விளம்பத் தேறி**
**அன்னவ னிதனை விட்டு மழிந்தில னேயோ வன்னுன்**
**தன்னையு மெளிய னென்றேன் றகைமையே தகாமை காண்டல்**
**உன்னருந் தொழிலி னல்லா துருவத்தி னெண்ணு தென்றான்.**

(இ - ள்.) இங்ஙனம் பெருமுழக்க முளதாவதற்குக் காரணம் யாதாங்கொல்லோ வென்று மேன்மாடத்திருந்த வீரன் ஐயுற்றுப் போரில் வெல்வியுறாது தோல்வியுற்றோடிவந்த வீரர்கள் நிகழ்ந்த நிலையினைச் சொல்ல அவ்வையத்தினின்றுந் தெளிதலுற்று அத்தூதன் இறைவன் படைக்கலத்தினைச் செலுத்தியும் அழிந்தானல்லனோ அத்தூதுவனாகிய அவனையும் போரில் எளிமை யுடையானென்று கருதிய எனது தகுதிப்பாடே தகாத தன்மையாகும். ஒருபொருளை அளவிட்டறிதல் கருதுதற் கருமையாகிய செயலினல்லாமல் வடிவத்தான் இயலாதென்று சொல்லினன்.

(வி - ம்.) ஓகாரம் - வினா. உம்மை - உயர்வு சிறப்போடு இறந்தது தழீஇயதுமாம். (௲௬௯)

**இன்னண மாகப் பூசலிருபெரும் படையுமாற்றித்**
**துன்னிய வவுண சேனை தொலைந்தவா தொலைய வேனை**
**பன்னுல கத்தில் விந்த வளமெல்லாம் பூதர் சேனை**
**தன்னுட னெழுப்பி மீண்டு சார்ந்தன விடுத்தார் மாட்டு.**

(இ - ள்.) பெரிய இறைவன் படைக்கல மிரண்டும் இங்ஙனமாகப் போரினைச் செய்தலால் நெருங்கிய அவுணர்படை தொலைந்தவாறே தொலையாநிற்க, அவ்விரு படைக்கலங்களும் மற்றயவுலகின்கண் தங்கள் போராற்கெட்ட வளங்களை யெல்லாம் பூதர் சேனைகளுடன் எழும்படி செய்து விடுத்தவர் பக்கலின் மீண்டும் பொருந்தின வென்க. (௲௭௦)

**தன்படைச் சேனைநீறத் தமியனாய்த் தளருந் தீயோன்**
**முன்பெனத் தோல்வி யோடு முதுநகர் முன்னி னம்மேல்**
**அன்புறு ரெவருந் தந்தை யாற்றலு மிறக்கு மாயைக்**
**கொன்படை விடுவ லென்றுக் குறித்துவிண் மறைந்து நின்றான்.**

(இ - ள்.) *தன்படையின்கண்ணுள்ள சேனைகளெல்லாந் தூளியாகத் தனிமையாகத் தளர்ச்சி யுறுகின்ற தியவனாகிய பானுகோபன் முன்னர்த் தோல்வியுற்றதுபோல இந்நாளின்றுந் தோல்வியோடு பழைய நகரின்கட் செல்லின் யாவரும் நம்மாட்டு அன்புகொள்ளார். அஃதேயு மன்றி நந்தோல்வியால் நந் தந்தையாகிய சூரன் ஆயிரத்தெட் டண்டத் தினையு மாட்சி செய்கின்ற வல்லமையுங் கெடாநிற்கும். ஆதலால் கண்டார்க்கு அச்சத்தைச் செய்கின்ற மாயைப் படையினை விடுவே னென்று குறித்தலைச் செய்து வானின்கண் மறைந்துநின்றன னென்க.*

(வி - ம்.) *நீறுதல் - துகளாதல். கொன் - அச்சம்.* (௧௪௧)

**இருந்தன மாயி னின்னு மிவர்சமர் புரிவ ரற்றான்**
**வருந்துது மென்றான் போல மறைந்தனன் கதிரோன் வீரம்**
**திருந்திய வாகு வின்று தீயவன் பிழைத்துச் சென்றான்**
**பொருந்துது மிறைவன் சார்பி லெனப்புகுங் கருத்துக் கொண்டான்.**

(இ - ள்.) *வெங்கதிர்க்கடவுள் ஈண்டுயாம் இருப்போமாயின் இவ் வீரர்கள் போரினைச் செய்வார்கள். அங்ஙனம் போர்புரிதலால் (இறந்த வீரர் எம்முடம்பைப் போழ்ந்து சேறலான்) யாம் வருத்தமடைவேம் என்றஞ்சியவனைப் போன்று அத்தமனக்குன்றின் மறைந்தனன். ஏனைய வீரர்களெல்லாம் திருந்துதற் கேதுவாகிய வீரத்தினையுடைய வீரவாகு வென்பான் கொடியோனாகிய பானுகோபன் உயிர்பிழைத்துச் சென்றனன். ஆதலான் யாம் இறைவன் பக்கலில் பொருந்துவோமென்று ஆண்டுச்செல்லு மெண்ணத்தினைக் கொண்டன னென்க.*

(வி - ம்.) *அற்றால் - அதனால்.* (௧௪௨)

**இதுபொழு தென்று தீயோ னெய்த்துரு துடங்கு பற்றி**
**முதிரறி வழித்துச் சுத்த மூரிநீர்க் கடலி னிட்டு**
**வதியெனப் படையை விட்டான் வன்படை யதுசெய் தன்றால்**
**புதிதுளங் களிப்ப நீங்கிப் போந்தனன் றந்தை கோயில்.**

(இ - ள்.) *செயலான் அழலினையொத்த பானுகோபன் இவ் வீரவாகுவினைக் கோறற்கு இஃதேயேற்ற அமையமென்று வீரவாகு தேவர் முதலியோர் அறியாவண்ணம் அவர்களைப் பிடித்து நாலுணர் வான் முதிர்ச்சியுற்ற அவர்கள் அறிவினைக்கெடுத்து வலியினையுடைய சுத்தநீர்க்கடலின்கண் அவர்களைப் போகட்டுத் தங்குவாயாக வெனக் கூறி மாயையென்னும் படையை ஏவினன். அவ்வலிய மாயப்படை அவன் கூறியாங்குச் செய்தது. அவனுள்ளம் புதிதாகிய களிப்பினை யடைய அப்போர்க்களத்தினின்றும் நீங்கி அவன் தன்றந்தையாகிய சூரன் வதிந்திருக்கும் கோயிற்கண்ணே சென்றன னென்க.*

(வி - ம்.) எய்தாது - வீரவாகுதேவர் முதலியோர் அறியாமல். எய்த்தல் - அறிதல்; இதனை "எய்யாமையே அறியாமையே என்னுந் தொல்காப்பியச் சொல். உரி. சூத்திரத்தானுணர்க. செய்தன்று - செய்தது. புக்கன்று என்றாற்போலக் கொள்க. அன் - சாரியை. பின் வருவது பெருங்கேடென்றுணராமல் இதுபொழுது வென்றியுளதாயிற் றென்று மகிழ்ந்தா னென்பார், "புதிதுளங் களிப்ப" என்றார் என்க. (௩௬௩)

உலைபடு மிளவெந் நீரி னுளமகிழ் கமட மொத்தான்
கொலைமுகத் தூண்டில் காணுக்கொழுநிணம் விழுங்கு மீன்போற்
தலைவனு மகிழ்ச்சி கொள்ளச் சாற்றிநன் கருளப் பெற்று
விலைவரம் பில்லா மாடமேயினன் வீரர் போற்ற.

(இ - ள்.) உலையின்கண் பொருந்திய சிறுசூட்டினை யுடைய நீரின் கட் பின்வரும் ஏதத்தையோராது திளைத்துமகிழ்ந்து விளையாட்டினைச் செய்யும் யாமையினை யொத்தவனாகிய பானுகோபன் கோறற் றொழிலைத் தன்னிடத்துக்கொண்ட தூண்டிலைக் கண்டு அத்தூண்டிலின் கட் பொதிந்துள்ள நிணத்தினை இரையாக இன்புற்று விழுங்கும் மீனினைப்போன்று தன்றலைவனாகிய சூரனும் அகமகிழ்வு பூப்பத் தான் செய்த வீரச்செயலினைச் சொல்லி அவனருள்செய்தலைப் பெற்று மதி நுட்பமுடையோரானும் விலையளவு செய்யவொண்ணாத தனது மாளிகையின்கண் வீரர் புகழப்பொருந்தின னென்க.

(வி - ம்.) இளவெந்நீரானது பின்னர்க் சூடேறித் தன்னைக் கொல்லுத லறியாத ஆமையென்க. இதனைக் "கொலைஞ ருலையேற்றித் தீமடுப்பவாமை, நிலையறியா தந்நீர்ப்படிந்தாடி யற்றே" என்னும் நாலடிச் செய்யுளா னறிக. தூண்டிற் பொன்னின்கண்ணுள்ள இரையைக் கண்டின்புற்று விழுங்கிப் பின்னர் உயிரிறுதியாகிய துன்பத்தின் கட்பட்டுத் துயருறும் மீன்போல வீரவாகு முதலியோரை மாயைக் கணையாற் கட்டிக் கடலிலிட்டதற்கு முன்னரின்புற்றுப் பின்னரவரான் அளவிடற்கரிய ஏதம் எய்துவா னென்பார். "கொலைமுகத் தூண்டில் காணுக் கொழுநிணம் விழுங்குமீன்போல்" என்றார். இதனைத் "தூண்டிற்பொன் மீன்விழுங்கியற்றே" என்னுந் திருக்குறளா னறிக. (௩௬௪)

ஆயிர வெள்ளஞ்சேனை யருந்திற லிலக்க ரெண்மர்
பாயிரும் புகழானேடு படைதழீ இக்கடற்க ணிட்ட
தாயிடை யறிந்த வீணை யமைவர னுரைத்தா னேடிப்
போயிமை யவரு நெஞ்சம் புலர்ந்தனர் கிளந்து தாழ்ந்தார்.

(இ - ள்.) ஆயிரவெள்ளம் படையினையும், பெறற்கரிய வலியினை யுமுடைய இலக்கத் தெண்மர்களையும், உலகெங்கணும் பரவிய புகழா னாகிய வீரவாகுதேவரோடு ஏனைய படைகளையும் தழுவிச் சுத்தநீர்க் கடலின்கட் சேர்த்தது. இந்நிகழ்ச்சியை யறிந்த மகதனென்னும் வீணை தன் கையிலமையப்பெற்ற மேன்மையுடைய நாரதன் குமரப்பெருமான் எழுந்தருளியிருக்கும் அவ்விடத்திற் கோடியுரைத்தனன். தேவர்களும் மனமுலர்ந்தாராகி முருகன் பக்கலிற்சென்று இங்கு நிகழ்ந்த நிகழ்ச்சி யினை விண்ணப்பித்து வணங்கினா ரென்க. (௩௬௫)

செங்கடம் பணிந்த தோளான் சேயிலே வேலை நோக்கி
அங்கணுற் றழுந்துந் தானை யனைத்தையு மம்மர் நீவி
இங்கணுய்த் திடுதி நீயென் றேயின னெழுந்து சென்ற
தெங்கணு மிரவி கோடி யெழுந்தென வொளிகால் விச.

(இ - ள்.) செந்நிறம் பொருந்திய கடப்பமாலையை யணிந்த தோளினையுடைய பிள்ளையார் செந்நிறம் பொருந்திய இலைவடிவின தாகிய வேற்படையினைத் திருக்கண் சாத்திச் சுத்தநீர்க்கடலாகிய ஆண்டுப் பொருந்தியதனுள் மூழ்கிக்கிடக்கும் நஞ்சேனை யனைத்தையும் மயக்கத்தினின்றும் நீக்கி இங்கு நம்பாற் கொணர்ந்து சேர்ப்பாயென்று கட்டளையிட்டனன். உலகெங்கணும் வெவ்விய கோடி வெங்கதிர் மண்டிலம் தோன்றினாற்போல ஒளிவீச அவ்வேற்படை எழுந்துசென்ற தென்க.

(வி - ம்.) மம்மர் - மயக்கம். நீவி - துடைத்து. (௯௯௬)

கடவுளர் படைக ளெல்லாங் கையிணை குவித்துச் சேவித்
துடனுற வங்கி தூம முருப்பவிர் விடமுங் கான்று
தொடர்கணம் போற்ற வைவே றூரத்தே வரவு நோக்கி
மிடன்முழு தழிந்து மாயை விறற்படை வீந்த தன்றே.

(இ - ள்.) ஏனைய தேவர் படைக்கலங்களெல்லாம் இரண்டு கையினையுங் குவித்து வணங்கித் தன்னுடன் போத அழலினையும், புகையினையும், வெப்பம் விளங்குகின்ற நஞ்சினையுங் கானுதலைச்செய்து தன் பின்னர் வருகின்ற பூதகணங்கள் துதித்தலைச் செய்யக் கூரியவேற்படை சேய்மைக்கண் வருதலைநோக்கி வலிமுழுதுங் கெட்டு மாயையாகிய வீரப்படைக்கலம் அழிந்ததப்பொழுதே யென்க.

(வி - ம்.) கடவுளர் - தேவர். அங்கி - நெருப்பு. தூமம்-புகை. வை - கூர்மை. வீந்தது - மறைந்தது. (௯௯௭)

கடலிறை யெதிர்ந்து கசிந்துபோற் றெடுப்ப வன்னுற்
குடலுயி ரளித்துச் சார வுணர்வுவந் தெழுந்தெல் லோரும்
படையெதிர் சென்று தாழ்ந்து பழிச்சினர் வம்மி னென்னு
முடிவிலக் குமரன் செங்கை முன்னிவீற் றிருந்த தொள்வேல்.

(இ - ள்.) கடற்கிறைவனாகிய வருணனென்பான் வேற்படையினை எதிரேசென்று வணங்கி ஏத்தெடுப்ப அப்படை யக்கடலிறைக்கு உடலினையும் உயிரினையுங் கொடுத்துப் பொருந்த மாயப்படையால் மயக்கமுற்றுக் கிடந்த வாகுப்பெய ரமலன் முதலிய யாவரும் உணர்ச்சி பெற்று எழுந்து அவ்வேற்படையின் எதிரே சென்று வணங்கி வாழ்த்தெடுத்தலர். ஒள்ளிய அப்படை யாவரும் இறைவன் பக்கலில் இனிது வாருங்கோள் எனக் கட்டளையிட்டு என்றுஞான்று மழிதலில்லாத குமரக் கடவுளின் செவ்விய கையின்கட் சென்று வேறொன்றிற்கு மில்லாத சிறப்புடன் இருந்த தென்க.

(வி - ம்.) கடலிறை - வருணன். அன்னோன் - வருணன். வடம் மின் - வாருங்கோள். (௩௯௮)

மீண்டவ ரடுக்குங் காலை வெய்யவ னகரந் தோன்ற
ஆண்டகை வீரவாகு வழலென வெகுளி துள்ள
மாண்டமெய் வலியில் லாமை வன்படை மறைந்து நின்று
தூண்டினேற் செகுப்பி னல்லாற்றேன்றல்பா லேகே னென்றான்.

(இ - ள்.) சுத்தநீர்க் கடலினின்று மீண்டு போர்க்களத்தினை யடுக்கும் போழ்தத்துக் கொடியோனாகிய சூரன் பட்டினந்தோன்ற ஆண்டன்மையினையுடைய வீரவாகுதேவர் அழலினைப்போலச் சினந் துள்ளிவீழப் போரியற்றற்குரிய மாட்சிமையுற்ற உடலின்கண் வன்மை யின்மையான் பேடியர்போல வலிய படைக்கலத்தினை மறைவாகநின்று தொடுத்தவனாகிய பானுகோபனைக் கோறல் செய்த பின்னலன்றித் தலைவ னாகிய குமார தெய்வத்தின் பக்கலிற் செல்லே னென்றான்.

(வி - ம்.) வெய்யவன் - சூரன். தூண்டினோன் - வினையாலணையும் பெயர். தோன்றல் - முருகன். (௩௯௯)

ஏனைய வீரர் தாமு மிறுத்தலா லேகி னேமேல்
மானமின் றென்ன யாரு மண்டினர் குடாது வாயில்
மேனிவர் வாயில் காப்பான் வெல்புலி முகத்தான் கண்டு
சேனையோ டெதிர்த்தான் பூதத் திரள்களு முழங்கி யேற்ற.

(இ - ள்.) வாகுப்பெய ரமலனை யொழிந்த ஏனைவீரர்களும் இக் கொடியோனைக் கோறல் செய்யாமல் நாம் இறைவன்பால் செல்வே மாயின் நமக்குப்பெருமை யின்றெனமேம்பாட்டுரைகூறி நெருங்கினர். குடக்கின் வானளவுமுயர்ந்த வாயிலினைக் காவல் செய்பவனாகிய கொடிய புலிமுகனென்பவன் இவர்கள் முற்றுகையிடுதலைக் கண்ணுற் றுத் தம் படையினோடு எதிரேற்றான். பூதக்கூட்டங்களும் வீரமுழக் கஞ் செய்து எதிர்ந்தன வென்க.

(வி - ம்.) குடாது வாயில் - மேற்றிசைவாயில். (௪௦௦)

வேறு

கரிவ யப்பரி முழுவது மிறந்த
கதிர்ம ணிப்பொலந் தேர்களு முரிந்த
எரிப டர்ந்தென வமர்த்தத னவர்க
ளிறந்து ளார்பல ரெஞ்சின ரிரிந்தார்
வரிகி டந்தொளிர் புலிமுக னேக்கி
வலிய சூலமொன் றெடுத்தன னடுத்தான்
பெரிய தலமொன் றெடுத்தெதிர் சிங்கப்
பெருந்த கைக்கணத் தலைவனு நேர்ந்தான்.

(இ - ள்.) யானைகளும், வெற்றியினையுடைய குதிரைகளுமாகிய யாவையு மிறந்தன. ஒளிபொருந்திய மணிகள்பதித்த தேர்த்தொகைகளு முரிந்தன. தீப் படர்ந்ததுபோலப் படர்ந்து வந்து எதிர்த்துப் போர் செய்த அவுணர்பலர் இறந்தனர். இறவாது பிழைத்த சிலர் ஓடி உய்ந்தனர். கீற்றுக்கள் தங்கப்பெற்று விளங்குகின்ற புலிமுக னென்பான் கண்ணூற்று வலியமைந்த சூலமொன்றினைக் கையாற் கொண்டவனாகிப் பொருந்தினன். பெரிய தருதிப்பாட்டினையுடைய பூதகணங்கட்குத் தலைவனாகிய சிங்கனென்பவன் பெரிய சூலப்படை யொன்றினைக் கையின்கட்பற்றி அப்புலிமுக னென்பானோடு எதிர்த்தன னென்க.

(வி - ம்.) வரி - கீற்று. சிங்கன் - வீரர்சேனைத் தலைவன். (௯௭௧)

குத்தி னுரெதி ரெதிருட லுருவக்
குருதி தாரையிற் பாய்ந்துகப் புய்த்தார்
வைத்த சூலங்க ளிறுதலு முழங்கி
மல்லுப் போரினை வயக்கின ராங்குப்
பைத்த பாரிடைப் புலிமுகன் வீழ்ந்தான்
பதத்தி னுலிறச் சவட்டினன் சிங்கன்
மொய்த்த பூதர்கண் மதின்முழு தழித்து
முந்து கோபுரம் பெயர்த்தகத் தெறிந்தார்.

(இ - ள்.) உடலின்கண் ணூடுருவிச் செல்ல எதிரெதிர் நின்று ஒருவரையொருவர் குத்தினர். செந்நீர் மழைத் தாரைபோலப் பாய்தலைச்செய்து சிந்தச் சூலப்படையினைப் பிடுங்கினர். தாங்கள் கையின்கண் வைத்திருந்த சூலப்படைகள் ஒடிய இருவரும் வீரமுழக்கஞ்செய்து மற்போரினைச் செய்தனர். அஞ்ஞான்று படைவீரர்கள் பரவிநின்ற பறந்தலைக்கண் புலிமுகனென்பான் வீழ்ந்தனன். சிங்கனென்னுந் தலைவன் காலால்மிதித்து அவனைக் கொன்றனன். அப்போர்க்களத்தின் கண் செறிந்த பூதவீரர்கள் மதின்முற்றிலு மழித்து முதற்றலையின்கண்ணுள்ள கோபுரத்தைப் பெயர்த்தலைச் செய்து நகரினகத் தெறிந்தன ரென்க.

(வி - ம்.) புய்த்தல் - பிடுங்கல். இதனைக் "கோடுபுய்க்கல்லா துழக்கும் நாடகேள்" என்னும் கலியடியா னுணர்க. (௯௭௨)

மாளி கைக்குலந் துகைத்துநீ றுக்கி
மறுகி னேர்ந்திடுந் தானவர்ச் செகுத்துச்
தூளி கைக்குல மகழ்ந்தெறிந் தட்டுத்
துளங்கப் பூதர்கள் பேரொலி யெழுப்ப
வேளி ருங்கழற் பணிபுரி வீர
வாகு காலமுற் படையொருங் கெடுத்து
நீளு மிந்நக ருண்கென விடுத்தா
னிமிர்ந்த வப்படை நெவிந்தன வுலகம்.

(இ - ள்.) பூதவீரர்கள் இவ்வரிசைகளைக் கெடுத்துப் பூழியாக்கி அவ்வீதியின்கண்ணே எதிர்ந்த தானவர்களைக் கோறல் செய்து மேன் மாடங்களின் கூடங்களைத் தோண்டியெறிந்து எதிர்ந்தவரை வருத்தி நடுங்க, மிக்க வீர முழக்கத்தை உளவாகக் கண்டார்க்கு விருப்பம் உண்டாகும் பேரழகினையுடைய பிள்ளையார் திருவடித் தொழும்பு செய்யும் வீரவாகு என்பான் காற்றின் கணையையும், அழற்படையினையும் ஒருசேர எடுத்து நீண்ட இந்நகரத்தை உண்க வெனக்கூறி விடுத்தனன். அவ்விரு படைக்கலங்களு மெழுந்தன. உலகங்களெல்லாம் நெளிவுற்றன வென்க.

(வி - ம்.) சூளிகை - மேன்மாடம். காலழற்படை - உம்மைத் தொகை. நிமிர்தல் - எழுதல். (௬௭௩)

உருகி மாழையும் வெள்ளியும் பிறவு
　　மொழுகி வீதிக ளாறெனக் கிடப்பப்
பெருகு பைங்கதிர்க் குலமணி நீருய்ப்
　　பெயர்ந்து வானகம் போர்வையின் மறைப்பப்
பொருமு தானவ ரிறந்தவெள் ளென்பும்
　　பூழியாயல மரநக ரிங்குத்
திருவ ழிந்திடு செய்திகண் டோடிச்
　　சென்ற தூதுவர் முழுவதுஞ் சொற்றார்.

(இ - ள்.) செம்பொன்னும், வெண்பொன்னும் பிறபொருள்களும் உருகி ஓடுதலுற்று வீதிகளெல்லாம் யாற்றினைப்போலக் கிடப்ப, ஒளி மிக்கபசிய கதிர்க்கூட்டங்களையுடைய சிறந்த அரதனங்கள் சாம்பராகிச் சென்று போர்வையைப்போலவானிடத்தை மறையாநிற்ப, வருந்துகின்ற அசுரர்கள் இறந்தமையா னுடம்பினின்றும் நீங்கிய வெள்ளென்புகள் தூளியாகிச் சுழலாநிற்ப, நகர் அழகு கெடுகின்ற செயலினைப்பார்த்து ஓடிச்சென்ற ஒற்றர் இங்கு நிகழ்ந்த நிகழ்ச்சி முழுவதையும் சொற்றன ரென்க.

(வி - ம்.) கிடப்ப, மறைப்ப, அலமர, கண்டு ஓடிச்சொற்றன ரென வினைமுடிபு செய்க. மாழை - பொன். பொருமுதல் - வருந்துதல். திரு - அழகு. (௬௭௪)

ஊழி நாட்பெயு மேகங்க ளனைத்து
　　மொருங்கு கூயவு ணர்க்கிறை யேவ
ஆழி யேழும்வந் திறுத்தென மேக
　　மடர்ந்து தாரைக ளிரைப்பவங் கவற்றைப்
பாழி வீரனு மூழிநா ளங்கிப்
　　படையி னீக்கின னதுதெரி சூரன்
கேழி லாதநந் தேரினைக் கொணர்திர்
　　கெடுத்து மாற்றல ருக்கமென் றுரைத்தான்.

(இ - ள்.) அவுணர்களுந் திறைவனுமாய சூரன் ஊழிக்காலத்தின் கண்ணே நீரைப் பொழிகின்ற மேகங்களனைத்தையு மொருசேர வழைத் தேவாகிற்க, எழுகடலும் வந்து தங்கினாற்போல மேகங்கள் நெருங்கி மழைத் தாரையை நிரையாகிற்க, வலியினை யுடைய வீரவாகுவும் ஊழிக்காலத்தின்கண் ஞுளவாகும் அழற்படையினால் அப்பொழுதே அவற்றினை நீக்கினான். அங்ஙனம் நீக்கியதையறிந்த சூரன் ஒப்பில்லாத நமது தேரினைக்கொண்டு வாருங்கோள் பகைவருள்ளக் கிளர்ச்சியைக் கெடுப்போமென்று சினங்கொண்டன னென்க.

(வி - ம்.) கேழ் - ஒப்பு, இதனைக் "கேழ் நிற மொளியொப்பாகு" மென்னும் நிகண்டா னறிக. கெடுத்தும் தன்மைப்பன்மை வினைமுற்று. (கூளி)

ஆங்கு டங்கம ரிரணியன் றந்தை
யடிவ ணங்கின னுற்றல ராயின்
ஓங்கு போர்புரிந் தகற்றலாம் வரந்தந்
தூக்க நல்கிய விறைவனைப் பணிந்து
நீங்கல் காணுவ தல்லது போரா
லிக்கங் காணுதல் யாவரே வல்லார்
பாங்க லாதன புரிதியென் றுரைத்தான்
பதகன் சீறினன் போர்விடை கொண்டான்.

(இ - ள்.) அவ்விடத்துச் சூரனுடன் தங்கிய அவன் மைந்தனாகிய இரணியனென்பவன் தந்தையாகிய சூரனடியினை வணங்கித் (தந்தையே) பகைவர்கள் நம்மினும் வன்மையிலராயிருப்பின் நாம் பெரும் போரினை இயற்றி இவனின்றும் நீங்கலாகும். நாம் விரும்பிய வரங்களையெல்லாம் வேண்டிய வேண்டியாங் கருளித் (தேவர் முதலியோர்களையும் ஏவல் கொள்ளும்) உள்ளக்கிளர்ச்சியினையும் அளித்த இறைமைக்குண முடையானை வணங்கி இவணின்றும் எழுந்தருளச் செய்வதல்லாமல் (அவ்விறைவனோடு போரினைச் செய்து) அப்போர்த் தொழிலால் நீங்குதலைச் செய்தலில் வன்மையுடையார் ஒருவருமிலர். ஆதலாற் றகுதியற்றனவாகிய செயல்களைச் செய்கின்றனை என்றிடித்துரைத்தனன். பதகனாகிய சூரனும் சினமுற்றனன். அவன்பால் இரணியனென்பான் போரினுக்குச் செல்ல விடைபெற்றனன்.

(வி - ம்.) இரணியன் - சூரன்மைந்தன். பதகன் - சூரன். (கூகை)

துணைவ ராயிரர் தலைவரா யிரர்தற்
சூழ நான்குநூற் றிரட்டிவெள் ளந்தேர்
பணைம ருப்பெறுழ் வேழமத் தொகைய
பாய்ப ரித்திர ளாயிரத் திருநூ
றணைவு மவ்வளு மத்தொகை யினர்க
ளணையுவெள்ளநா லாயிர நெரிய
இணையில் பற்பல படைக்கலந் தழுவி
யிரத மூர்ந்தெழு கடலெனப் படர்ந்தான்.

(இ - ள்.) தலைவராயிரவரும், படைத்தலைவராயிரவரும், தன் பக்கலிற் சூழவும் என்றூறுவெள்ளந் தேரும், மேற்கூறிய என்றூறு வெள்ளமென்னும் அளவினை யுடையனவாகிய பருத்த கொம்பினையும், வலியினையு முடைய யானைகளும், ஆயிரத் திருநூறுவெள்ள மென்னும் அளவினையுடைய தாவிச் செல்கின்ற குதிரைகளும், அவ்வளவினராகப் பொருந்துகின்ற வீரருமாகிய அந்த நாலாயிர வெள்ளமென்னும் அளவினையுடைய படைநெரியவும், ஒப்பில்லனவாகிய பல படைக் கலங்களைக் கைக்கொண்டு தேரினைச் செலுத்தி ஊழிக்காலத் தெழு கின்ற கடலினைப்போலச் சென்றன னென்க.

(வி - ம்.) எழுகடல் : வினைத்தொகை. பெயரெனக் கொள்ளினு மிழுக்காது. சூழ, நெரியவும் என்னும் எண்ணும்மைகள் விகாரத்தாற் றொக்கன. தொகைய : அகர வீற்றன்பெருத பலவறிசொல். (௬௭௭)

பாரி டத்தொகை நகரழிக் கின்ற
 பான்மை நோக்கினன் வெஞ்சினங் கொண்டான்
சேர ரும்படை நால்வகைப் பிரிவாய்ச்
 செல்ல வுந்தின னல்வகைப் பிரிவாய்ச்
சார தப்பெரும் படையுநேர் செல்லச்
 சமர்வி ளைந்தன விரணியன் பாலாம்
விர வன்படை படர்வன நோக்கி
 வீர வாகுபோர் ளெனவெதிர்த் தமர்த்தான்.

(இ - ள்.) இரணிய னென்பான் கூட்டமாகிய பூதங்கள் நகரழிக் கின்ற தன்மையினைக் கண்ணுற்றவனாகி வெவ்விய சினங்கொண் டனன். திரண்ட அரிய தம்படையினை நால்வகைப் பிரிவாகிச் செல்லச் செலுத்தினன். இதனையறிந்த பூதப்பெரும்படையும் நால்வகைப் பிரிவினவாகி நேரே செல்லப் போர்நிகழ்ந்தன. இரணியன் பக்கலி லுள்ள வீரத்தினை யுடைய வலிய படைகள் வருவனவற்றை நோக்கி வீரவாகு பொருக்கென வெழுந்து எதிர்த்துப் போரினைச் செய்தான்.

(வி - ம்.) இரணியனுனவன் தன் சேனையை நான்கு கூறுசெய்து ஏனைய மூன்று கூறுகளையும் ஏனைய இடங்களிற் செலுத்தி ஒரு கூற் றினைத் தம் பக்கலில் நிறுவித்தானதற்குத் தலைவனுகச் சேறலின் "இரணியன் வீரவன்படை யெனுது" "இரணியன் பாலாம் வீரவன் படை" என்ருர். சேர் - திரட்சி, இதனை "சேரேதிரட்சி" (தொல். உரி.) என்பதால் அறிக. (௬௭௮)

வேறு

வார்சிலை வளைத்துநிமிர் வாளிபல கோடிமழை
 போல்விடுவ வெங்கும் விரவி
ஆர்சில வெடுத்தவிர தங்களை யழித்தன
 வழித்தன பணைக்கை மதமா

போர்சிதர் வயப்பரி யழித்தன வழித்தன
பொலங்கழலின் மன்னர் பெருநாள்
பார்சிதறு டற்றுணிம றைத்தது மறைத்தது
பரந்தகடல் வார்ந்த குருதி.

(இ - ள்.) நீண்ட வில்லினை வளைத்து மழையினைப்போல விடப்படுவனவாகிய பலகோடிக்கணக்கான நிமிர்ந்தகணைகள் போர்க்களமெங்கணும் விரவி சில ஆரக்கால் எடுத்தன, சில தேர்களை யழித்தன, பருத்தகை யினையும் மதத்தையுமுடைய யானைகளை அழித்தன. வெற்றியினையுடைய குதிரைகளை யழித்தன. பொன்னுலாகிய வீரக்கழலினை யணிந்த போர்வீரர்கள் வாழ்நாளை யழித்தன. உடலினின்றும் சிதறுகின்ற தசைத்துண்டங்களை மறைத்தது ஒழுகிய செந்நீர்; அது பரந்த கடலினையும் மறைத்த தென்க.

(வி - ம்.) ஆர் - ஆரைக்கால். பொலன் - பொன், "பொலனென் கிளவியீறுகெட" தொல். எழு - புள்ளி, சூத்திரத்தா னறிக. விடுவ - விடப்படுவனவாகிய கணைகள். (கஅக)

சேனைபெரி துந்தபுதல் கண்டுகன கன்வளை
சிலைத்தொழில் பயிற்று விசிகம்
சோனைமழை போன்மெனநி ரத்தலுமு லைந்தனர்
துவன்றுகண வீர ரதுபோ
தியானையெதிர் சிங்கமென நீலனுரு மிற்பிளிறி
யேற்றனன்வெ குண்டி ரணியன்
ஊனைவடி வேலுரம்வி டுத்தனன வன்கதையி
னேச்சியிர தந்த புதனன்.

(இ - ள்.) படைபெரிதுங் கெடுதலைக் கன்றுற்று இரணியனென்பான் வில்லினை வளைத்தல் செய்து விற்றொழிலிற் முன்பயின்ற பயிற்சியால் கணைகளை விடாமழை போலுமென்று கண்டார் சொல்லும் வண்ணம் நிரைக்க நெருங்கிய பூதகணத் தலைவர்கள் கெட்டார்கள்: அஞ்ஞான்று நீலனென்பான் இடியினைப்போல முழக்கஞ்செய்து யானையினை எதிர்க்கின்ற சிங்கமென்று கண்டார்கழற எதிர்ந்தனன். இரணியனென்பவன் சினங்கொண்டு ஊனினை வடிக்கின்ற வேற்படையினை மார்பின்கண் விடுத்தான். நீலனென்பவன் தண்டினாலறைந்து கனகன் றேரினையும் புடைத்தன னென்க.

(வி - ம்.) தபுத்தல் - கெடுத்தல். உருமில் ஐந்தாவது ஒப்புப் பொருள். அவன் - நீலன். ஊன் - தசை. வடிவேல் : வினைத்தொகை. சந்நோக்கித் தபுத்தன னென்பது தபுதன னென்றாயது விகாரம். (கஅ0)

வாவியொரு தேரைவடி வாளிபொழி யக்கனகன்
வார்குருதி சோர வுடலின்
மேவினனெ டுத்திரதம் விண்ணிடையு கைத்தனன்
விளங்குதிற லீல னவுணன்

தாவியொரு தேர்புகவ ரக்கடிநெ ருந்துநட
மார்பிறவெ ருக்கி வரதன்
பாவிநில னிற்படமி தித்தனனு ருட்டுபு
பழங்கண்மிகு வித்த னனரோ.

(இ - ள்.) இரணியனென்பான் ஒரு தேரின்கண் தாவிக் கூரியவாளி கனைப் பெயர்ப்ப, எல்லாத்திசையினும் விளங்குதற் கேதுவாகிய வலியினையுடைய நீலனென்பவன் உடலின்கண் செந்நீர் வார்ந்து சோரா நிற்கப் பொருந்தி இரணியன் றேரினையெடுத்து வானின்கண் வீசினன். பாவியாகிய இரணியன் தாவியொரு தேரின்கண் ஏறச்சிறந்தவனாகிய நீலன் அவன் நிலத்தின்கட் பொருந்த மிதித்து மிகுதியுந்துன்படையச் செய்தனன்.

(வி - ம்.) தேரை : வேற்றுமை மயக்கம். எருக்குதல் - அடித்தல். பழங்கண் - துன்பம். மேவினன், மிதித்தன னென்பன எச்சமுற்றுக்கள். அரோ, ஓ, அசைகள். (௩௮௧)

ஆற்றலில னுய்த்தளரு முத்தலையி னன்மனுவ
கத்துறநி னைந்து தொழலும்
தோற்றியவ னென்னவொரு மாயையுரு வன்சமர்
தொடங்கவிவ னுயி விரைவில்
காற்றுவலெ னக்கடிது நீலனொரு தண்டுகொடு
காதமறை வுற்ற ததுமெய்
தேற்றிலன்வெ குட்சியொடு நிற்பவது சேயிடைவி
ளங்கியனு கும்பெ யர்தரும்.

(இ - ள்.) போரியற்றும் வன்மையிலனாகிச் சோர்வினையுறும் முத்தலையினையுடையவனாகிய இரணியன் ஒருமந்திரத்தினை மனத்தின்கண்ணே பொருந்தச் சிந்தனை செய்து வணங்க, அவனைப்போல ஒரு மாயைவடிவந் தோற்றிப் போரினைத் தொடங்க இவனுயிரை விரைவாக நீக்குவேனென்று நீலனென்பான் ஒரு தண்டினைக்கொண்டு சாட அவ்வடிவம் மறைவுற்றது. அங்ஙனம் மறைந்தமை கண்டு நீலன் உண்மையைத் தெரியானாய்ச் சினத்தினோடுநிற்ப, அவ்வடிவம் சேய்மைக்கண்ணே விளக்கமுற் றண்மைக்கண்ணே யணுகும். மீண்டும் சேய்மைக்கண்ணே நீங்குமென்க.

(வி - ம்.) முத்தலையினன் - மூன்றுதலையினையுடைய இரணியன். வெகுட்சி - கோபம். ஒருசாரார் முத்தலையினன் என்பதனை உத்தலையினன் எனப்பிரித்து அப்போர்க்களரியிலுள்ள இரணியனெனப் பொருள் கூறுவர். (௩௮௨)

விண்ணினிடையெ ழுங்கனக வெற்பினையு றும்பரிதி
விழுவிர தத்தி லணவும்
மண்ணினிடைவி ரைந்துதிரி யுங்கடல டுக்கும்வட
வைக்கனலொ டும்வி ரவுறும்

எண்ணிபமு மஞ்சவெளி திற்றிசைதோ றும்படரு
மின்னவுரு வோடு மலையா
அண்ணல்விற னீலனயர் வுற்றிஃதெ னுமென
கத்தினனி யாயு மளவில்.

(இ - ள்.) அவ்வடிவம் வானின்கண் ணுறாநிற்கும்; பொன்மலையினைப் பொருந்தாநிற்கும். செங்கதிர்ச்செல்வன் விரும்பியேறுந் தேரின்கட் பொருந்தாநிற்கும். நிலத்தின்கண்ணே விரைவுற்றுச் சுழலாநிற்கும். கடலினைப் பொருந்தாநிற்கும். வடவைத் தீயினோடு விரவுற்றுநிற்கும். எண்டிக்கினுமுள்ள யானைகளஞ்ச எளிதாக அத்திசைகடோறுஞ் செல்லாநிற்கும். இத்தன்மைத்தாகிய வடிவினோடு மலைந்து வீரத்தாற் றலைமைபெற்ற நீலன் அயர்வுற்று இஃது யாதாகுமென்று மிக ஆராய்கின்ற காலத்து.

(வி - ம்.) வீழ்தல் - விரும்பல், "தாம்வீழ்வார் மென்றோட்டுயிலி னினிதுகொல், தாமரைக்கண்ணா னுலகு" என்னுங் குறளானறிக. (௧௮௨)

ஒன்றெனவி ருந்துபல மாயைபுரி யும்வடி
வுலப்பிலுரு வாயு லகெலாம்
துன்றவிது மாயையென நீலனுண ரத்தகுவன்
சோகமொழி வுற்றெ ழுதரா
மன்றவினி வெல்வலென மாயையுரு வோடுற
மரீஇயமர்தொ டங்க வொருபால்
நின்றவிறல் வாகுமுன டுத்துவளர் சேதன
நெடும்படைதொ டுத்து விடலும்.

(இ - ள்.) ஒன்றாகவிருந்து பலமாயையைச் செய்கின்ற வடிவம் அளவில்லனவாகிய வடிவாய் உலகெங்கணும் பொருந்த (அதனைக் கண்ணுற்ற நீலன்) இதுமாயை வடிவாகுமென்றறிய அசுரனாகிய இரணியன் மயக்கம் நீங்கி எழுந்து துணிவாக யான் வெல்வேனென்று தானுள வாக்கிய மாயை வடிவங்களோடு மிகப் பொருந்திப் போரினைச்செய்ய அப்பறந்தலையினொரு பகுதிக்கணின்ற வீரவாகுதேவர் அவன் முன்னர்ச் சென்று அறிவு வடிவாகிய நீண்ட படையினைத் தொடுத்து.

(வி - ம்.) உலப்பில்லுரு - அளவில்லாத வடிவம். மன்ற - துணிவாக. சேதனம் - அறிவு. விடலும், செயவெனெச்சப் பொருடரும் உம்மீற்று வினையெச்சம். (௧௮௩)

நீங்கியது மாயையது கண்டிரணி யன்கன
னெருப்பெழவெ குண்டு சிலைகை
வாங்கிவிடு வெங்கணைக ளாயிரமு ரத்திடை
மரீஇப்பொடிக ளாக விறலோன்
வீங்குகணை நூறுபடர் வித்தவவெ டுங்கொடிகை
வில்லரண நூற வொருவில்

தாங்கியவு ணன்கணையெ டுப்பவிறல் வாகுகணை
சார்த்தினனொ ராயி ரமெதிர்.

(இ - ள்.) (சேதனப் படையைத் தொடுத்த வளவின்) மாயை வடிவம் நீங்கிற்று: அதனைக் கண்ணுற்ற இரணியன் றன்கண்ணிலழ லெழச் சினந்து வில்லினைக் கையிலெடுத்துச் செலுத்திய ஆயிரங் கொடிய கணைகள் வீரவாகுவின் மார்பின்கண்ணேபட்டுப் பொடியாக அவ்வாகுப் பெயருடையான் உயர்ந்த நூறு கணைகளைப் படர்வித்து அவ்விரணியனது நீண்ட கொடியினையும், கையின்கண்ணுள்ள வில்லினையும் உடம்புக்கிட்டையுங் கெடுக்க இரணியன் வேறொரு வில்லினையேந்திக் கணைகளை யெடுக்க வீரவாகுவென்பான் எதிராக ஆயிரங்கணைகளை விடுத்தனன்.

(வி - ம்.) அரணம் - உடம்புக்கீடு, கவசம். சார்த்தல் - விடுத்தல், இலக்கணை. (௩௮௫)

கைத்தலமெ டுத்தசிலை வாளிவளர் தூணிகலி
னப்பரிக டேர்வ லவனை
மொத்தினவி டுத்தகணை வேறுமொரு தேர்விரைவின்
முன்னவது வும்பொ டிசெய்தான்
எய்த்திரணி யன்பலரு மாய்வரவர் நீர்க்கடனி
யற்றவமை வாமெ னநினைந்
தத்தியின்ம றைந்தனன றிந்துவிறல் வாகுசய
மார்வளைபி டித்த னனரோ.

(இ - ள்.) வீரவாகு எதிர் செலுத்திய ஆயிரங்கணைகள் கையின்கணெடுத்த வில்லினையும், தங்குகின்ற அம்பறாக் கூட்டினையும், கடிவாளத்தையுடைய குதிரைகளையும், தேரினையும், தேர்ப்பாகனையும், மோதின. இரணியன் வேறொரு தேரின்கண் விரைவிற்செல்ல அடைய அத்தேரினையும் பொடியாக்கினன். இரணியனென்பான் இளைத்து நஞ் சுற்றத்தவர் பலருமிப் போரின்கண் ணிறப்பர். அவர்கட்கு நீர்க்கடன் செய்யலாம் உயிர்பிழைத்திருப்பாம் என்று கருதிக் கடலின்கண் மறைந்தனன். இரணியன் போர்க்கு வெந்கிட்டு மறைந்ததனை யறிந்து வீரவாகு வெற்றியைக் குறிக்குஞ் சங்கினை யூதினனென்க.

(வி - ம்.) கலினம் - கடிவாளம். முன்னுதல் - அடைதல். நீர்க்கடன் - பிண்டோதகக்கிரியை. அத்தி - கடல், 'அத்தியினரசு பேரவாலமூர் தெரிக்கி லேங்க" என்னுங் கந்தபுராண வடியானுணர்க. பிடித்தல் - ஊதுதல், இலக்கணை. (௩௮௬)

நாற்றிசையி னுஞ்சமர்பு ரிந்தகண வீரரு
நலிந்தவுண ராயுண் முழுதும்
யாற்றினர்வ னப்புரமி றக்குமெழி றேக்கிய
வயங்குகதிர் தோற்றி யதுவேய்

ஆற்றினர்தி கழ்ந்ததுரை யாடலையர் சூரனெதி
ரங்கிமுக னென்னு மதலை
சாற்றுகதி ரின்பகைத னக்குநிக ராற்றல்பெறு
தானவன்வ ணங்கி யெழுவான்.

(இ - ள்.) நான்கு திசையின்கண்ணும் போரினைச்செய்த பூதகண வீரர்கள் வருத்தி அவுணர்கள் வாறினைப் போக்கினர். வளத்தினை யுடைய சூரன் நகரத்தினைப் பூதர்கள் அழிக்கும் அழகினைக் காணச் செங்கதிர்மண்டிலந் தோன்றியது. ஒற்றியறியுந் தொழிலின் வழியி லமைந்தோர் ஈண்டு நிகழ்ந்த நிகழ்ச்சியினைச் சொல்ல அயர்ச்சியுறு கின்ற சூரன் முன்னர் அழன்முகனென்னும் அச்சூரன் மகன் யாவரா னும் புகழப்படுகின்ற பானுகோபனுக்கு நிகரான வன்மைபெற்ற அசுரன் றந்தையினை வணங்கிப் போர்க்கு எழுவானாயினன்.

(வி - ம்.) வேய் - ஒற்று. இதனைப் "புடைகெடப் போகிய வேயே" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தா னறிக. (உஅஎ)

ஆயிரவெள் ளம்பகடு தேர்த்தொகையு மன்னதடு
மாவதனி ரட்டி வயவர்
மேயினரு லப்பிலர்க ளாகவிர தங்கடவி
வேகமொடு சென்ற ணவினன்
ஏயினன்மு ரட்படையை யிண்டுகண வீரு
மெதிர்ந்தமர்வி ளைத்த னர்பலர்
மாயிருநி லத்திடைவி ழுந்தனரு டைந்தவுணர்
மாதிரமி டைந்த னர்களால்.

(இ - ள்.) யானைகள் ஆயிரவெள்ள மென்னும் அளவினையுடை யன. தேரும் அவ்வளவின. பகைவரைக் கொல்கின்ற குதிரைகள் இரண்டாயிர வெள்ளமென்னும் அளவினையுடைய படைவீரர்கள் அளவிலராகத் தன் பின்னர்வரத் தேரினையூர்ந்து விரைவாகச்சென்று பொருந்தினனாய் வலிமைமிக்க படைக்கலங்களைச் செலுத்தினான். அப் போர்க்களத்தின்கட் செறிந்த பூதவீரர்களும் எதிர்த்துப் போரினைச் செய்தனர். அவுணர்களிற் பலர் பெரிய நிலத்தின்கண் வீழ்ந்திறந்த னர். போரிற்றோற்றுடைந் தோடினவர்கள் திசைகடோறுஞ் சென்று செறிந்தன ரென்க.

(வி - ம்.) அணவினன் - எச்சமுற்று. உடைந்த அவுணரென் பதிற் பெயரெச்சத்தீறு தொக்கது, "புகழ்புரிந் தில்லிலோர்க்கில்லை" என்பது போல. (உஅஅ)

வேறு

சோம கண்டகன் சோமன் மேகன்முன் னான தோல்படை காவலர்
நாம வேல்வ னுந்த மண்டி நலிந்த பூதரோ டாடினார்
காமர் வீரபு ரந்த ரன்கடு கச்சி லைத்தொழி லாற்றுபு
சோம கண்டக னைப்ப டுத்தவர் தூண்டு தேர்கவி ழுத்தனன்,

(இ - ள்.) சோமகண்டகன், சோமன், மேகன் என்னும் பழமையான பெயரினையுடைய படைத்தலைவர்கள் மூவரும் கண்டார்க்கு அச்சத்தினைச் செய்யும் வேற்படையினையுடைய குமாரப் புத்திரர்கள் அனுப்ப நெருங்கித் தங்களை வருத்திய பூதப்படையினோடு போரினைச் செய்தனர். போர்த்தொழிலிலீடுபட்டுக் கண்டார் யாவருக்கும் விருப்பம் சாத்தக்க வீரபுரந்தர னென்பவன் விரைவாக விற்றொழிலினைச் செய்து சோமகண்டகனென்னும் படைத்தலைவனைக் கெடுத்து அவர்கள் செலுத்தி வந்த தேர்களையும் அழித்தன னென்க.

(வி - ம்.) நாம் - அச்சம். வீரபுரந்தரனென்பவன் சூரன் படைத்தலைவர்களி லொருவன். (௲௮௯)

வேறு தேர்கொடு சூழ்ந்தெ லோரும்வெ குண்டு வாளிசொ ரிந்தனர்
ஊறு செம்புனல் வார வீரனு குத்து நீள்சிலை தேரெலாம்
நூறி நெற்றியு ரம்பு யத்தினு ளித்த பொத்திர மேற்றினன்
மாறி னர்வலி யாரு மெய்ப்பிடை மண்ட வைகிய மேகனும்.

(இ - ள்.) யாவரும் வேறு தேர்களின் மேற்கொண்டு சுற்றிச் சினமுற்றுக் கணைகளைச் சொரிந்தார்கள். அவர்கள் சொரிந்த கணைகளால் செம்புனலூறுதலுற்றொழுக வீரவாகு கணைகளைச் சிந்தி நீண்ட வில், தேர், எல்லாவற்றையுங் கெடுத்து நுதலின்கண்ணும், மார்பின் கண்ணும், புயத்தின்கண்ணும் கூரிய கணைகள் ஏறும்வண்ணம் செய்தனன். யாவரும் வன்மை நீங்கினார்கள். இளைப்பிடையே வந்து பொருந்தப்பெற்ற மேகனென்பவன்.

(வி - ம்.) பொத்திரம் - கணை. ஏற்றல் - ஏறச்செய்தல். (௲௯௦)

வார்ந்த தண்டினெ திர்ந்து தேர்ப்பரி மாவ துக்கினன் வீரனும்
நேர்ந்து ஞாங்கர்வி டுத்து மேகனி றங்கி ழித்துயி ரோம்பினன்
தீர்ந்து ளார்படை வேந்த ரென்றுசி னந்து தீமுகன் வாளிகள்
ஆர்ந்த பூதரி னுய்த்து மிக்கலை செய்ய வேற்றன னிந்திரன்.

(இ - ள்.) நேரிய தண்டினோ டெதிர்த்து வீரவாகு தேரிற்கட்டிய வேகமாகச் செல்கின்ற குதிரையினைக் கொன்றனன். வீரவாகுவும் எதிர்த்து வேற்படை யொன்றினை விடுத்து மேகனென்னும் படைத்தலைவன் மார்பைக் கிழித்து உயிரினை நீக்கினான். படைகாவலர்கள் நம்மாட்டுப் பற்றுவிட்டன ரென்று சினங்கொண்டு அழன்முகன் கணைகளை நிறைந்த பூதகணங்களின்மேற் செலுத்தி மிகவருத்து தலைச் செய்ய வீரபுரந்தரன் வந்தெதிர்த்தன னென்க.

(வி - ம்.) வார்தல் - நேர்தல், இதனை "வார்தல் போத லொழுகன் மூன்றும் நேர்தலும் நெடுமையுஞ் செய்யும்பொருள" (தொல். சொல். உரி.) சூத்திரத்தா னுணர்க. ஓம்பல் - ஒழித்தல். (௲௯௧)

விண்ணோ ளாய்பக ழிக்கு லங்கள்வி ராவவெஞ்சம ராடுழித்
திண்ணி ருஞ்சிலை தேர்த டிந்துசி லீமு கம்பல மார்பிடை
நண்ண வங்கிழு கன்செ லுத்தந லிந்த னன்மக வானவன்
துண்ணெ னத்துணை யான நால்வரு மூவ ருங்கணை தூண்டினர்.

(இ - ள்.) வீரபுரந்தரனும் அழன்முகனுமாகிய அவ்விருவரும் விண்ணிடமெல்லாம் கணையின் குப்பைகள் கலக்க வெவ்விய போரினைச் செய்யுஞான்று, வன்மையையுடைய பெரிய வில்லினை வெட்டிப் பல அம்புகளை மார்பின்கண்ணே செல்லும்படி அழன்முகன் செலுத்தா நிற்ப, வீரபுரந்தரன் வருத்தமுற்றனன். இங்ஙனம் வருத்தமுற்றதனைக் கண்ணுற்று ஒன்பான் வீரரில் வாகுப்பெய ரமலனை ஒழிந்த இவனுக்குத் துணைவரான எழுவரும் விரைவாகக் கணைகளைச் செலுத்தின ரென்க. (௧௧௨)

விட்ட வாளிவி லக்கி வீரர்பு யத்தின் வெஞ்சர மேற்றினன்
பட்ட யர்ந்தவர் தீமு கன்படர் தேரும் வில்லும்ப டுத்துரம்
நெட்டி ருங்கள நெற்றி கால்கர நீள்ச ரம்பல கோத்தனர்
வட்ட வாழிய தொன்று வரவினன் மாய்த்து மார்புந்தி றந்தனர்.

(இ - ள்.) எழுவரும் விட்ட வாளிகளை அழன்முகன் விலக்கி அவ்வீரர் தோள்களிற் பாணங்கள் ஏறும்படி செய்தனன். அவன் கணைகள் படுதலா னயர்ந்தவராகிய எழுவரும் அழன்முகன் ஏறிச் செல்லுந் தேரினையும் வில்லினையுங் கெடுத்து அவன் மார்பின்கண்ணும், நீண்ட பெரிய கண்டத்தின்கண்ணும், நுதலின்கண்ணும், தாளின்கண்ணும், கையின்கண்ணும் பல கணைகள் கோக்கும்படி செலுத்தினார்கள். வட்டமாகிய உருளினை யுடையதாகிய வேறொரு தேரின்கட் டாவினன். அத்தேரினையுங் கெடுத்து அவன் மார்பத்தையும் பிளந்தன ரென்க.

(வி - ம்.) பட்டு, செய்தெனெச்சங் காரணப் பொருளில் வந்தது. ஆழியது - உருளையுடையது. (௧௧௩)

ஓடும் வேறிர தம்பு குந்துமை பாகன் மாப்படை தொட்டனன்
நீடு செங்கனல் கான்ற டுப்பநெ ருப்பி ரும்படை யிதென
ஆடு வெஞ்சமர் வீரர் நீர்ப்படை யாங்கெ திர்ப்பவி டுத்தனர்
வீட நீர்ப்படை யுண்டு வீரர்க ளாவி யுண்டது மீண்டதே.

(இ - ள்.) அழன்முகன் விரைவாகச் செல்கின்ற வேறொரு தேரின் கட் சென்று உமையம்மையாரை ஒருபக்கமிலுடைய இறைவன் படைக் கலத்தினைத் தொடுத்தனன். அப்படைமிக்க செந்நிறத்தையுடைய அழலினைக் கான்று பொர, ஈது பெரிய அழற்படை யென்று கருதி வெவ்விய போரினைப் புரிகின்ற எழுவீரர்கள் அப்பொழுது இறைவன் படையை எதிர்க்கும்வண்ணம் நீர்ப்படையினை விட்டார்கள். அவ்விறைவன்படை நீர்ப்படைகெட அதனையுமுண்டு வீரர்கள் ஆவியினையுங் குடித்து மீண்டதென்க.

(வி - ம்.) உமைபாகன் மாப்படை - பாசுபதாஸ்திரம். (௧௧௪)

பூத ரஞ்சின ரஞ்ச லென்றுபொ ருக்கெ ணக்கைய மைத்தவர்க்
கோர்ந்த வார்புய வீர வாகுகொ தித்தெ திர்ப்பவ ழன்முகன்
நீத னிச்சம ரென்னொ டிங்கணி கழ்த்த வுய்த்தது தெய்வதம்
ஆத லானினை வெல்வ லேனைய ராக வென்னலை யென்றனன்.

(இ - ள்.) (இறைவன் படைவீரர்க ளாவியினையுமுண்டு மீட்டலைக் கன்றூற்ற) பூதப்படைக ளஞ்சினூர்கள். அஞ்சாதே கொண்மின்க ளென்று கைத்தலங் காட்டி மலர்களாலாகிய மாலையினையணிந்த நீண்ட தோளினையுடைய வாகுப் பெயரோன் மனங்கொதிப்புற் றெதிர்க்க அழுன்முகன், தெய்வமானது நீ என்னோடு ஒப்பற்ற போரினை யியற்றச் செலுத்தியது ஆகையால் நின்னை வேறல்செய்வேன் ஏனைய வீரராக என்னை எண்ணூதேகொள் என்றனனென்க.

(வி - ம்.) பொருக்கென - குறிப்புமொழி. தனி - ஒப்பற்ற. தெய் வதம்-தெய்வம். எண்ணலை — நினையாதே. (௩௯௭)

**கரந்து தன்னுரு நீங்க வல்லக திர்ப்ப கைக்கிளை யானுநீ**
**அரந்தை யுற்றலை வாரி புக்கமர் வாற்க டுத்தமுன் னேனுநீ**
**பரந்த தோல்வியி னுனு மத்தகு பாலை யாகிய நின்னையான்**
**விரிந்த மண்ணிடை யேனை யோரென வெண்ண லேன்விர காளனே.**

(இ - ள்.) (இங்ஙனம் அழுன்முகன் பிதற்றியதைச் செவியேற்ற வாகுப்பெயரமலன் தன் வடிவை மாயையான் மறைத்துப் போரினுக்கு அஞ்சிப் பிறக்கிட்டோடும் பானுகோபனுக்கு இளையோனும் நீ, போரி னுக் கஞ்சித் துன்புற்று அலையினையுடைய கடலின்கண் மறைந்து தங்கு வானுகிய இரணியனுக்குப் பொருந்திய தமையனும் நீ, விரிந்த தோல்வி யினூம் அத்தன்மைத்தாகிய பகுதியினையுடைய நின்னை யான் விரிந்த நிலவுலகின்கண் போர்செய்யும் விரகினையுடையானே! ஏனைய வீர கதியா · வீரர்களைப்போல நின்னை யான் கருதுவே னல்லேனென்க. (வஞ்சகப் புகழ்ச்சி)

(வி - ம்.) அரந்தை-துன்பம். விரகு - சூழ்ச்சி. கதிர்ப்பகை - பானுகோபன். வாரி - கடல். முன்னோன் - தமையன். (௩௯௮)

**நும்பி பின்வரு நும்பி தம்பியு மாக நீநுமை யன்றனை**
**அம்பு வேலொடு நுந்தை காப்பினு நும்பி யாக்குவ னென்றனன்**
**வெம்பு கின்றவி றற்பு யன்கனல் வெய்ய மாமுக னெய்யென**
**உம்ப ரஞ்சவ ணக்கு வார்சிலை நாணி னேதைபு ரப்பினன்.**

(இ - ள்.) கொதிக்கின்ற வாகுப்பெய ரமலன் அழுன்முகனே! நுந் தம்பியாகிய இரணியனுக்குப் பின்னர்த் தோன்றிய நுந்தம்பியாகிய வச்சிரவாகு வென்பானுக்கு இறுமுறையான் நீ அவனுக்கு இளையோ னுக, நும் முன்னேனுகிய பானுகோபனை கணையினேடும் வேலியினே டும் நும் தந்தையாகிய சூரனே காவல்புரியினும் இறுமுறையின் நுந் தம்பியாகச் செய்வேனென்று கூறினன். கொடிய அழுன்முகன் விரை வாக தேவர்களு மச்சுற வணக்கத்தக்க நீண்ட வில்லினின்றும் நாணி னெலியை யுண்டாக்கினு னென்க.

(வி - ம்.) சூரன் மக்களாவார் பானுகோபன், அழுன்முகன், இரணி யன், வச்சிரவாகு வென்பவர் இவர் முறையே ஒருவருக்கொருவர் இளையோராவர், அழுன்முகனே பிறப்பு முறையே முன்னேனுயினும் இறக்குமுறையான் உன்றம்பியாகிய இரணியனுக்கு இளவலாகிய வச்சிரவாகுவுக்கு இளவலாகச் செய்வேனென்பார், "நும்பிபின்வரு

நும்பிதம்பியுமாகதி" என்றார். பிறப்புமுறையான் உனக்கு முன்னோனாகிய பானுகோபனை இறப்புமுறையான் நினக்கு இளவலாக்குவேனென்பார், "நுமையன்றனை நும்பியாக்குவ னென்றனன்" என்றார். பானுகோபனும் அழன்முகனும் முன்னர்த்தோன்றி இறத்தல்பின் நிகழ்தலின் பிறப்புமுறையான் ஒருவருக்கொருவர் நீவிர் இளையவராக விளீர்கள் யான் இறப்புமுறையான் முன்பிறந்த வுங்களை இளையோர்களாக்குவேனென வீரவாகுதேவர் கூறினரென்க. (௬௪௭)

கோளத வார்சிலை நம்பி யுங்குனி வித்து நாணொலி கொண்டனன்
மாதி ரத்தொடு மண்ணும் விண்ணும றைத்து ளார்விசி கத்தினப்
போது பொத்திர மாயி ரம்புனி தன்கு ளத்தில முத்திறின்
றேத நீர்வளை வாயில் வைத்தவ னூதி னுனுரு மேறென.

(இ - ள்.) குணங்களா னிறைந்தவனாகிய வீரவாகுவும் மாலையினை யணிந்த வில்லைவளைத்து நாணொலி செய்தனன். இருவருந் திசையினோடு நிலனையும் வானையும் கணைகளால் மறைத்தார்கள். அஞ்ஞான்று அழன்முகன் ஆயிரங்கணைகளை வாகுப்பெயரமலன் நுதலின்கண் செலுத்தி நின்று ஒலியினையுடைய கடலின்கட் டோன்றிய சங்கத்தினை இடியேற்றினைப்போல நின்று வாயின்கண் வைத்து ஊதினனென்க.

(வி - ம்.) குளம் - நெற்றி. பொத்திரம் - கணை. (௬௪௮)

வேறு

ஒருங்காயிர வம்பாலவ னுறுதேர்பரி வில்லும்
மருங்கேவிழ வித்தான்வய வீரன்கனன் முகவன்
பொருங்கார்சக டொன்றேறினன் புகவிட்டன னொருதண்
டிருங்காசினி விழவோர்கணை யெய்தானெறுழ் வீரன்.

(இ - ள்.) வெற்றியினையுடைய வீரவாகு ஒருசேர ஆயிரங் கணையான் அவன் பொருந்திய தேர், அத்தேரிற்பூட்டிய குதிரை, வில் என்னுமிவற்றைப் பக்கத்தே விழும்வண்ணம் செய்தான்; அழன்முகன் போர் செய்தற்குரிய காலினையுடைய ஒருதேரின்கண்ணேறி ஒருதண்டத்தினை வீரவாகுவின்மேற் செல்லும்படி விட்டனன். வலியினையுடைய வாகுப்பெயரமலன் அத்தண்டம் பெரிய பூமியின்கண் விழும்படி ஒரு கணையைத் தொடுத்தனனென்க.

(வி - ம்.) மருங்கு - பக்கம். சகடு - தேர். காசினி - நிலம். எறுழ் - வலிமை. (௬௪௯)

சிலையொன்றனை வாங்கித்தழல் சிந்தும்வத னத்தோன்
உலவைப்படை கூற்றுப்படை யென்றாமுறு படையும்
பலவும்வரி சையினேவின னவைகொண்டவை பாற்றிக்
கொலைமுற்றிய கணையாயிரங் கோத்தானுரத் தமரன்.

(இ - ள்.) அழன்முகன் ஒருவில்லினை வளைத்துக் காற்றின் படையும், கூற்றின் படையும், ஞாயிற்றுப் படையுமாகிய பலவற்றையும்

வரிசையாகப் போக்கினன். கெடாத தேவனாகிய வீரவாகு அப்படைகளைக் கொல்லும் அப் படைகளைக்கெடுத்து அழன்முகன் மார்பின்கண் தோள்களுந்தோறும் முதிர்ந்த ஆயிரங்கணைகளைச் செலுத்தினனென்க.

உ (வி - ம்.) உலவை - காற்று. கூற்று - தென்றிசைக்கோன். என்றூழ் - செங்கதிர்க் கடவுள். (௨௦௦)

படிந்தானென வீழ்ந்தானவன் சற்றேமயர் நீங்கி
மிடைந்தாடமர் புரிகாலையின் மெலிவெய்திடின் வருகென்
றடைந்தேபல நாளும்வழி படுகாளியை யகத்தால்
தொடர்ந்தானவள் படைப்பற்பல சூழத்தொடர் வுற்றாள்.

(இ - ள்.) அழன்முகனென்பான் வாகுப்பெயரமலன் போக்கிய ஆயிரங்கணையால் இறந்தானென்று யாவரும் கருதும்வண்ணம் நிலத்தின்கண் வீழ்ந்தனன். சிறிதுநேரஞ் சென்றபின்னர் மயக்கம் நீங்கி நெருங்கிய வென்றியைத் தரத்தக்க போரினைச் செய்யுங்காலத்து யான் பகைவனோடு பொருங்காலத்து மெலிவுறுவேனாயின் அஞ்ஞான்று எம்பக்கலில் துணையாக வரக்கடவாயென்று அடியினையடைந்து பல நாளும் வழிபாடு செய்கின்ற காளியை மனத்தின்கண் நினைத்தனன். அக்காளியும் இவன் வேண்டுகோட்கிணங்கி பலப்பல படைகள்சூழ எழுந்தனள்.

(வி - ம்.) அவன் - ஈண்டுத்தழன்முகன். ஆடு - வென்றி. தொடர்தல் - நினைத்தல் (இலக்கணை). தொடர்வுறுதல் - எழுந்தருளுதல். இஃதும் இலக்கணையேயாம். ஆல் : வேற்றுமை மயக்கம். (௨௦௧)

பார்த்தாளவன் மெலிவைப்படை பலவுந்தெறு வேனென்
றார்த்தாளுடன் வருகாளிய ரவரைச்செல வுய்த்தாள்
வேர்த்தார்பலர் கணவீரர்கள் வெகுண்டார்சில ரேற்றார்
தீர்த்தார்சில ருயிரைக்கனல் சிதர்கண்ணினள் கண்டாள்.

(இ - ள்.) அத்தழன்முகன் போர்க்கு மெலிவுற்றமையைக் காளி கண்கூடாகக் கண்டனள்; பகைவர்படை பலவற்றினும் இன்னே கொல்வேனென்று ஆரவாரஞ் செய்தனள். தனக்குத் துணையாக வந்த காளி கணங்களாகிய அவரைப் போரின்கண் செல்லும்படி உய்த்தாள். பல பூதகண வீரர்கள் வேர்த்தனராகி வெகுடலுற்றனர். சிலர் போரினையேற்றார். காளிப் படைகளினுயிரை நீக்கினர். அக்கினியைச் சிந்துகின்ற கண்ணினையுடையவளாகிய காளி இதனைக் கண்ணுற்றனள் என்க.

(வி - ம்.) தெறுவேன் - கொல்வேன். காளியரவரை என்புழி அவரை : பகுதிப் பொருளது. (௨௦௨)

வெருவப்படை முழுதுண்கென விட்டாளொரு சூலம்
ஒருவக்கணை பல்விரனு கைத்தானஃ திறலும்
பெருவன்றிறன் மற்றென்றது பெயர்வித்தன ளதுவும்
தரையிற்பட வெய்தான்பல சரமாரிக ணிரையின்.

(இ - ள்.) அக்காளியானவள் ஒப்பற்ற சூலப்படையினைப் பகைமுற்றிலுமஞ்ச நீசென்று பகைவருயிரை உண்ணக் கடவாயெனக்கூறி உய்த்தனள். வாகுப்பெயரமலன் பலகணைகளை அச்சூலப்படை நீங்கச் செலுத்தினன். அங்ஙனஞ் செலுத்திய கணையால் அச்சூலப்படை கெட பெரிய வலிய திறலினையுடைய வேறொரு சூலப்படையினை மீளவுஞ் செலுத்தினள். அச்சூலப்படையும் தரையின்கண் விழ்ந்து கெடும்வண்ணம் வரிசையாகப் பல சரங்களை மாரியினைப்போல் எய்தனன்.

(வி - ம்.) வெருவ - அஞ்சும்படி. உண்கென - விகாரம். (௪0௩)

வாளங்கொடு வீரன்மணி யிரதம்புக வயவன்
தாளங்கற மார்பந்தள ரக்கையினெ றிந்தான்
நீளுங்கரு முகிலாமென நேய்த்தோருக விழ்ந்தாள்
மீளுந்தொழி லினள்வீரனை வியந்தாள்பிறக் கிட்டாள்.

(இ - ள்.) அக்காளியானவள் ஒரு வாளினைக் கைக்கொண்டு வாகுப்பெயரோன் அழகிய தேரின்கண்ணே புகாநிற்ப வெற்றியினையுடையவனாகிய அவ்வாகுவென்பான் அப்பொழுதே காளியின் தாளறவும், நெஞ்சு தளர்ச்சியுறவும் கையினாலெறிந்தனன். அக்காளி நீண்ட கரிய மேகமென்று கண்டோர் சொல்லும்வண்ணம் செந்நீரொழுகக் கீழேவிழுந்தனள். போர்க்கு ஆற்றாது மீளுந்தொழிலினளாகிய அக்காளி வீரனைச் சிறப்பித்துக் கூறினளாகிப் பின்னிட்டனள் என்க.

(வி - ம்.) பிறக்கிடல் - பின்னிடல். வயவன் - ஈண்டு வீரவாகு. எறிதல் - ஈண்டடித்தல். (௪0௪)

என்னேயிவ னண்மைத்திற மெனவீதறி யவுணன்
கொன்னேசிலை வளைவித்தெதிர் குறுகிச்சர முய்த்தான்
இன்னேயிவ னிறவந்தன னெனவேந்தல்வி லக்கி
ஒன்னன்மிசை யப்புத்திர ளுறுவித்தனன் மாதோ.

(இ - ள்.) காளி பிறக்கிட்டமையறிந்த அவுணனாகிய தழன்முகன் இவ்வாகுப் பெயரமலனது ஆண்மைத்திறமானது என்னே என்றுகூறிச் சிலையினை வளைத்து வாகுப்பெயரோன் முன்னனாகி வீணே கணைகளைச் சிந்தினன். தலைவனாகிய வாகுப்பெயரோன் இப்பொழுதே இத்தழன்முகன் இறக்க வந்தானென்று இரக்கமுற்று அவன் எய்த பாணங்களை விலக்கி அப்பகைவன்மீது கணைத்திரள்களைச் சேர்ப்பித்தனன்.

(வி - ம்.) கொன் - வாளா. இற - இறக்க. ஏந்தல் - வீரவாகு. ஒன்னன் - பகைவன். மாது, ஓ: அசைகள். (௪0௫)

வருவாளிக ளறிக்கனல் வதனன்கணை தூண்டித்
திருவாளன திரதஞ்சிதர் செய்தான்றிரு வாளன்
பொருவார்சிலை மாய்த்தான்புக ராளன்கம லத்தோன்
தருவான்படை தொட்டானது தலைநோக்கிய வீரன்.

(இ - ள்.) அழன்முகனென்பான் பகைவன் தன் மேலெய்ய வருகின்ற வாளிகளைக் கெடுத்து வேறு கணைகளைச் செலுத்தி எல்லீச்

செல்வங்களையு முடையவனாகிய வாகுப்பெயரோனது தேரினைப் பொடி செய்தனன். செல்வமுடையானாகிய வீரவாகு அழன்முகனது போர் செய்யத்தக்க நீண்டவில்லினைக் கெடுத்தனன். குற்றமுடையவனாகிய அழன்முகன் பிரமன் றனக்களித்த பெரிய படைக்கலத்தினைத் தொட்டான். அதனைக் கல்கூடாகக் கண்ட வாகுப்பெயரோன்.

(வி - ம்.) கனல்வதனன் - அழன்முகன். திருவாளன் - வீரவாகு. புகராளன் - அழன்முகன். வீரன் - வீரவாகு. (௨0௬)

தக்கன்மக நுங்குந்தனி வீரன்படை தொட்டான்
தீக்கேட்டினு மழல்சிந்துபு சென்றப்படை தாழப்
புக்கட்டழன் முகனைப்புய வலியானுழி மீண்ட
தொக்கச்சம ருடலுற்றனர் மூவாயிரர் தலைவர்.

(இ - ள்.) தக்கனென்பவன் இயற்றிய யாகத்தினைக் கெடுத்த ஒப்பற்ற வீரபத்திரப் படையைச் செலுத்தினன். அப்படை எண்டிக்கிலும் அழலினைச் சிந்திப்போய் அப்பிரமன் படை தன்னை வணங்கப் புகுந்து அழன்முகனைக் கொன்று புயவலியுடைய வாகுப்பெயரோனிடத்து மீண்டது. அழன்முகனுடன் வந்த தலைவராகிய மூவாயிரவரும் ஒருசேரக் கூடிப் போரினைச் செய்தனர்.

(வி - ம்.) மகம் - வேள்வி. தனிவீரன் என்றது வீரபத்திரனை. சிந்துபு - சிந்தி. அட்டு - கொன்று. (௨0௭)

வளைந்தார்மிசை வீரன்றழல் வாளித்திரள் சொரிய
உளைந்தார்சில ரிறந்தார்சில ருருவம்பல துணியாய்
விளைந்தார்சிலர் விழுந்தார்சிலர் வெருவுற்றனர் சிலர்மெய்
நெளிந்தார்சில ரவுணப்படை நீறுகிய தன்றே.

(இ - ள்.) வாகுப்பெயரோன் தன் பக்கல்வந்து வளைந்தார்மீது தீயைக் கக்குகின்ற கணைக்கூட்டங்களைச் சொரியச் சிலர் வருந்தினர்; சிலரிறந்தார். தங்கள் வடிவம் பல துண்டங்களாய்ச் சிலர் காணப்பட்டனர். சிலர் கீழே விழுந்தனர். சிலர் அச்சுற்றனர். சிலர் உடம்பு நெளிவுற்றனர். அவுணர் படை சாம்பராயது.

(வி - ம்.) உளைந்தார் - வருந்தினர். இவ்வாறு படை நீறுகிய தென்க. (௨0௮)

வேறு

பம்பிய விலக்கர் கணங்கண நாதர் வீரமா புரந்தரன் பலரும்
நம்பிபா லடுத்தா ரெழுவரைக் காணு னவர்திறம் வினையுளை நண்ணி
உம்பர்வா ழியமற் கோலையோன் றேவி யொய்யென வவன்கயி லாய
நம்பிவிற் றிருந்த வீரரை விடுப்ப நயந்துபோர்க் கமர்ந்தனன் வாகு.

(இ - ள்.) நிறைந்த இலக்கரும், பூதகணங்களும், அக்கணத் தலைவர்களும், வீரமாபுரந்தரனும், ஏனைய பலரும் குணநிறைவினனாகிய வாகுப்பெயரோன்மாட்டுப் பொருந்தினர்கள். அவ்வீரவாகு தன்னை

யும், வீரபுரந்தரனையு மொழிந்த எழுவரையுங் காணுறுகி அவர்கள் தன்மையை வினவி அப்பறந்தலைக்கட்டடங்கி மேவிடத்தில் வாழ்கின்ற தென்றிசைக்கோனுக்கு விரைவாக வேலை யொன்றினை ஏவுதலான் அத்தென்றிசைக்கோன் கயிலாயத்தினையே தங்களுக்குப் பற்றுக் கோடாக விரும்பி வேறொருவர்க்கில்லாத சிறப்புடனிருந்த வீரர்களை யனுப்ப விரும்பிப் போர்க்குப் பொருந்தின னென்க.

(வி - ம்.) எழுவராவர் வாகுப்பெயரோனையும், வீரபுரந்தரனையும் ஒழிந்த எழுவர். இவர்களை ௩௬௨-ஆம் செய்யுளில் நால்வரு மூவரு மென்றுராண்டுக் காண்க. முன்னைய நம்பி வீரவாகு, பின்னைய நம்பி விரும்பியெனப் பொருள்படும்; இதனை "நம்பு மேவு நசையு மாகும்" என்னுந் தொல். சொல். உரி. சூத்திரத்தா னுணர்க. உழைநண்ணி - தானவ்விடத்தும் பொருந்தி. அவன் - ஈண்டுத் தென்றிசைக்கோன். ஏவி அவன் விடுப்பப் போர்க்களத் திருந்தனன் வாகு என வினைமுடிவு செய்க. (௪0௧)

ஒற்றர்போ யங்கி மரமுகன் றபுதி
யுரைப்பமிக் கழுங்கிய சூர்முன்
வெற்றிசேர் மூவா யிரரவன் மைந்தர்
விரசினர் தாழ்ந்துபோர்க் கேவப்
பெற்றன ரளவில் சேனைகள் சூழப்
பெயர்ந்தமர்க் களத்தினை யடுத்தார்
உற்றது பெரும்போ ருலைந்தனர் பல்லோ
ருடற்றினர் சிலைகொடு மைந்தர்.

(இ - ள்.) தூதுவர் சென்று அழன்முகன் இறந்ததைச் சூரன் முன்னர்ச் சொல்லுதலான் மிகவும் வருந்திய சூரன்முன்னர் அவன் காமக் கிழத்தியின் புதல்வராகிய வெற்றி பொருந்திய மூவாயிரவர் தாழ்ந்து வணங்கிக் கலந்தனர். அதனைக் கண்ணுற்ற சூரன் போர்க்கு ஏவாநிற்க அவர்கள் அளவிலாத சேனைகள் சூழப்பெற்றனராகி ஆண்டு நின்றும் பெயர்ந்து அமர்க்களத்தினை யடுத்தனர். அஞ்ஞான்று பெரும் போர் பொருந்தியது. அம் மைந்தர்கள் சிலையால் பல்லோரை வருத்த வுலைவுற்றனர்.

(வி - ம்.) விரசுதல் - கலத்தல். தாழ்ந்து விரசினர் எனவும், அளவில் சேனைசூழப் பெற்றனரெனவும் கூட்டுக. சிலையொடு - சிலையால், "வாள்கொடு வெட்டினான்" என்றாற்போலக் கொள்க. (௪௧0)

எதிர்பொரும் பூத ரவுணர்தூஞ் சரத்தி
னெய்த்தலு மிலக்கர்க டம்மில்
அதிர்கழல் வீர ராயிர ரெதிர்ந்தா
ராயிரர் தேரையு மன்னர்
உதிர்செய வவுண ரொலிசிலை முரித்திட்
டொருமு வாயிரந் தேரும்
பிதிர்படுத் தொழித்துச் சேமத்தே ரிவர்ந்து
பிறங்கவர் சேமத்தேர் தகர்த்தார்.

(இ - ள்.) எதிர்த்துப் பொருகின்ற பூதகணங்கள் அவுணர்கள் சிந்தும் கணைகளான் இலக்க இலக்க வீரருள் வைத்து ஒலிக்கின்ற வீரக்கழலினை யணிந்த ஆயிரம் வீரர்கள் எதிர்ந்தனர். அவர் தேர் ஆயிரத்தினையும் அவுணர்கள் பொடிசெய்ய, அங்ஙனம் பொடிசெய்த அவுணரது ஒலியினைச் செய்கின்ற வில்லினைமுரித்து அவர்கள் ஊர்ந்து வந்த மூவாயிரந் தேரினையும் பொடிபடுத்து நீக்கிச் சேமத்தேரின்கண் சோதி விளக்கமுறுகின்ற அவ்வவுணர்கள் வைப்புத்தேர் பலவற்றையும் உடைத்தனரென்க.

(வி - ம்.) தாம் - என்னும் பெயரெச்சத்திடையில் நின்ற உயிர் மெய்கெட்டது. உதிர்தல், பிதிர்தல், என்பன பொடிபடுத லென்னும் பொருட்டு. (௬௪௪)

மலையொடு மரங்கள் வீசினர் கணையான்
மாற்றினர் வீரரா யிரரும்
கோலமுகக் கூற்றிற் பாய்ந்துசூர் மைந்தர்
கொடுமர மெறிந்துந்தேர் சிதைத்தும்
சிலையுறழ் மார்பி னெற்றியும் பொருதார்
திண்வலி யாவரு மிழந்தார்
உலைவில ஞகி யிருந்தவில் விசயன்
வஞ்சின முரைத்தம ரேற்றான்.

(இ - ள்.) அங்ஙனந் தேர் உடைபட்ட அவுணர்கள் மலையினொடு மரங்களைப் பறித்து வீசினார்கள். அதனையறிந்த ஆயிரம் வீரரும் கணையால் நீக்கினர். சூரன் புதல்வர்கள் கொலைத்தொழிலைத் தன்னிடத்தே கொண்ட கூற்றினைப் போலப் பாய்ந்து வில்லினை வெட்டியும் தேரினை யுடைத்தும் மலையினையொத்த அவ்வீரர் மார்பின்கண் அடித்தும் போரினைச் செய்தனர். அவ்வீரர்கள் யாவரும் மிக்க வலியினை யிழந்தனர். பகைவராற் சிறிதும் கெடுத லற்றவனாயிருந்த சென்ற போர் தோறும் வில்லால் வென்றியைக் கொள்கின்ற வாகுப்பெயரோன் வஞ்சினங்கூறிப் போரின்கண் எதிர்ந்தனன்.

(வி - ம்.) விசையன் - ஈண்டு வீரவாகு. சூர் - சூரன். கொடுமரம் - ஒரு படைக்கலன். சிலை - மலை. உறழ்: உவமவுருபு. (௬௪௫)

நேட்டயில் வாளி முறைமுறை தொடுத்து
நேர்ந்தமூ வாயிரர் சிரமும்
மட்டலர் மாலைத் தோள்களுந் தாளு
மார்பமும் வேறுவே றறுத்தான்
ஒட்டினி ருறுப்பு மாவியு மெழுந்தர்
ரோறுத்தோறுத் துறுப்புவீழ் தோறும்
பட்டன ரெழுதல் பார்த்துள நினைந்தான்
பரனருள் குமரனை விசயன்.

(இ - ள்.) வீரவாகுப் பெயரோன் நீண்டகூரிய கணைகளை வரிசை வரிசையாகத் தொடுத்து மூவாயிரம் வீரர்களின் தலைகளினையும், தேன் விரிந்த மாலையினையுடைய தோள்களினையும், தாள்களையும், மார்பங்களினையும், வெவ்வேருகும் வண்ணம் அறுத்தனன். அவன் அறுத்தலால் நிலத்தின்கண் வீழ்ந்த உறுப்புக்களும் உயிர்களும் பின்னர்ச் சேர்தலான் விழ்ந்த அவுணர்கள் எழுந்தனர். தடிந்து தடிந்து அவயவங்கள் வீழுந்தோறும் பட்டவர்கள் பின்னரும் உயிர்பெற்றெழுந்தார். இங்ஙன மிவர்கள் மடிந்து உயிர்பெற் றெழுதலினைக் கண்ணுற்று இறைவன் நந்துயர் நீங்க அளித்த குமரப்புத்தேளை நினைந்தன னென்க.

(வி - ம்.) ஆவியும் உறுப்பும் ஒட்டி எழுந்தனரெனவும், ஒறுத் தொறுத்துறுப்பு வீழ்தோறும் பட்டனரெழுந்தன ரெனவுங் கூட்டுக. ஒறுத்தல் - தடிதல். (௪௯௫)

முன்னெழுந் தருளி யயன்வரம் பெற்ருேர்
 முருக்கொரு படைதொடி னல்லால்
அன்னவர் விளியா ரெனவயன் றலையோன்
 றரிந்தவன் படைகொடுத் திறைனை்
முன்னின னெடுத்தா னதுதெரி மூவா
 யிரவரு ளொருவன்முன் மாயை
தன்னுறு படையை விடுத்தனன் விசயன்
 ருங்கிய படையெதிர் விடுத்தான்.

(இ - ள்.) வாகுப்பெயரவன் நினைத்த வளவின்கண் குமரப்புத்தேள் அவன்முன் னெழுந்தருளி அன்பனே! இம்மூவாயிரவரும் பிரமன் பக்கலிற் சென்று (யாங்கள் மூவாயிரவரும் ஒரு கணையான் முடியவேண்டும். இன்றேல் யாங்கள் ஒருவராலும் இறவாது உயிர்பெற்றெழ வேண்டுமென்னும்) வரத்தினைப் பெற்றவராவர். ஆதலான் இம் மூவாயிரவரு மொருசேரக் கோறல் செய்யுமொரு படைக்கலத்தினை விடினல்லது இவர் இறவார்கள் என்றுகூறிப் பிரமன்றலை யோன்றினை யரிந்தவனுகிய வைரவன் படைக்கலத்தினைக் கொடுத்து இறைவன் பாசறையடைந்தனன். வீரவாகு இறைவனைச் சிந்தித்து அப்படையினைக் கையிலெடுத்தான். இங்ஙனம் எடுத்தலையறிந்த மூவாயிரவருள் வைத்தொருவன் முன்னர் மாயைப் படையினை விடுத்தான். வாகுப் பெயரோன் கையின்கண் வைத்துள்ள வைரவன் படைக்கலத்தினை அம் மாயைப்படைக் கெதிராக விடுத்தன னென்க.

(வி - ம்.) அயன்றலை யரிந்தவன் படை - வைரவன் படை. மாயை தன்னுறுபடை - மாயைப் படை. ([illegible])

நேர்வரு மவுணப் படையினை விழுங்கி
 நேர்ந்தமூ வாயிர ருயிரும்
ஒருமுண் டடுத்த தொளிர்படை விசய
 னெண்கர மமரர்கள் வியந்தார்
சூரனு மைந்த ரழிந்தது கேட்டுத்
 துயர்க்கட லழுந்தின னதுகண்

டாருயி ரழிந்தோர் ஞாதிய றெனவிண்
ணலரியு மலைகடல் படிந்தான்·

(இ - ள்.) விளங்குகின்ற வைரவன் படைக்கலம் தனக்கெதிரே வருகின்ற அவுணப் படைக்கலத்தினை விழுங்கி மூவாயிரவ ருயிரினையுங் குடித்த வாகுப்பெயரவன் ஒளிபொருந்திய கையின்கட் பொருந்தியது. இச் செயலினைக் கண்ணுற்ற தேவர்கள் இறும்பூதெய்தினர். சூரன் என்பவன் தன்மக்கள் அழிந்ததை ஒற்றரால் கேள்வியுற்றுத் துன்பமாகிய கடலின்கண் ணமிழ்ந்தனன். அதனைக் கண்ணுற்றுச் செங்கதிர்க்கடவுள் நந்தாயத்தவருயிர் நீங்கினரெனக் கருதி அவ்வாலாமை நீங்கும்பொருட்டு அலையினையுடைய கடலின்கண் மூழ்கினனென்க.

(வி - ம்.) ஒரும்: அசை. தாயத்தவரிறப்பின் அவ்வாலாமை நீங்கற்பொருட்டு நீராடல் வழக்காருகலின் செங்கதிர் மண்டிலந் தன்னியல்பிற் கடலின் மூழ்குதலை அம்முறைபற்றி மூழ்குதலாகக் குறித்தலான் இது தற்குறிப்பேற்றவணி. (௪௧௦)

வேறு

பொருது மீளுவ லென்றுசூர் பொருக்கென வெழுந்தான்
தரும கோபனன் ருற்றினேன் ருளிணை பணிந்தின்
திருபெ ருஞ்சம ராற்றிவென் றெம்பிரான் முன்னர்
வருவ லென்றனன் விடைகொடு வல்விரைந் தெழுந்தான்.

(இ - ள்.) வீரன் இவ்வீரர்களோடு போரினைச் செய்து, மீள்வேனென்று விரைவாக வெழுந்தனன். சூரனைப் பெரிதும் நல்வழியிற் செலுத்து மமைச்சனாகிய தருமகோபனென்பவன் சூரனடியை வணங்கி இன்னெமிக்க பெரிய போரினைச்செய்து வென்றியினை மேற்கொண்டு எம்பிரானே வருவேன் என்று விடைபெற்று மிகவும் விரைந்தெழுந்தனனென்க.

(வி - ம்.) நன்ருற்றினன் - நல்வழியிற் செலுத்துபவன்; அமைச்சன். (௪௧௧)

காதி ரத்தமர் புண்டரீ கப்பெயர் வயமா
மீதி வர்ந்தனன் விறந்தியல் சேனைக ளூப்பண்
போத லுற்றனன் பொருகள மடுத்தனன் புகைந்தான்
காது பூதரு மவுணருங் கைகலந் தமர்த்தார்.

(இ - ள்.) திசையின்கண் காவலாகத் தங்கிய புண்டரீகமென்னும் பெயரினையுடைய வெற்றியினையுடைய யானையின் மீதேறிச் செறிந்தியல்கின்ற படையின் நடுவட்போதலுற்றுப் போர்க்களத்தினை யண்மிப் புகைதலுற்றனன். பகைவரைத் தாக்குகின்ற பூதர்களும் அவுணர்களும் கலப்புற்றுப் போரினைச் செய்தனரென்க.

(வி - ம்.) இவர்ந்தனன், போதலுற்றனன், அடுத்தனன் என்பன எச்சமுற்றுக்கள். இத் தருமகோபன் என்பான் புண்டரீகமென்னும்

திசை யானையின்பாற் சென்று யான் போர்க்குச் செல்லுங்காலத்து வாகனமாக வேண்டுமெனக் குறையிரந்து கேட்டனன். அத்திசை யானை யவன் வேண்டுகோட் கிணங்கி வாகனமாக வந்ததென்க. (சகஎ)

இலக்க விரரு மமைச்சர்தங் குழாங்களு மெதிர்ந்தார்
நிலக்கட் பூதரு மவுணரு நிரைநிரை விழ்ந்தார்
அலக்க ணுற்றன ரிலக்கரு மமைச்சர்கை மிக்கார்
நலக்கும் விரமார்த் தாண்டனச் செனவழன் றெதிர்த்தான்.

(இ - ள்.) இலக்க விரர்களும், அமைச்சர் குழாங்களு மெதிர்ந்தார்கள். வரிசை வரிசையாக நிலத்தின்கட் பூதர்களும், அவுணர்களும் விழுந்தார்கள். இலக்கர் போரினுக் காற்றாது துன்பமெய்தினர். அமைச்சர்கள் வெற்றியின்கண் மிக்கார்கள். நன்மையைச் செய்யும் நவ விரர்களுள் வைத்தொருவனாகிய விரமார்த்தாண்டன் என்பான் நஞ்சினைப்போல வழற்சியுற்றதிர்த்தன னென்க.

(வி - ம்.) அமைச்சர்தங் குழாம் - அரசருக்குரிய ஐம்பெருங் குழுவுள் ஒரு சாரார். அலக்கண் - துன்பம். (சகஅ)

சிலைவ ளைந்தது நிமிர்ந்தன தீயுமிழ் சரங்கள்
தலைவி முந்தன தாட்டுணை விழுந்தன தடந்தோள்
மலைவி முந்தன வாம்பரி விழுந்தன வேழக்
குலம்வி முந்தன கொடிஞ்சிமான் றேர்களும் விழுந்த.

(இ - ள்.) வில்வளைந்தது; அவ்வில்லினின்றும் வெளிப்போந்து நிமிர்ந்தனவாகிய கணைகளான் தலைகள் விழுந்தன; காற்றுணைகளும் விழுந்தன; தாவிச்செல்லும் பரித்திரள்களும் விழுந்தன; யானையின் கூட்டங்களும் விழுந்தன. மொட்டினையுடைய குதிரைகள் பூட்டிய தேர்களும் விழுந்தன வென்க.

(வி - ம்.) தோளாகிய மலையென்க. வாம்பரி: வினைத்தொகை. மான் - குதிரை. (சகக)

கண்ட றத்தினை முனிந்தவன் கார்முகம் வணக்கி
மண்டு வெஞ்சரஞ் சொரியவாய் மருப்புவால் காலில்
புண்ட ரீகமு முழக்கலிற் பூதர்க டளர்ந்தார்
மீண்டு வெய்யவன் றேன்முகத் தொருகணை விடுத்தான்.

(இ - ள்.) இங்ஙனம் விழ்தலைக் கண்ணுற்றுத் தருமகோப னென்பான் வில்லினை வளைத்து நெருங்கிய கொடிய கணைகளைச் சிந்த வாயாலும், மருப்பாலும், வாலாலும், காலாலும், புண்டரிகமென்னும் யானையும் கலக்கலான் பூதர்கள் தளர்ச்சி யுற்றனர். வலியினையுடைய விரமார்த்தாண்டன் யானையின் முகத்தின்கண் ணொருகணையைச் செலுத்தினனென்க.

(வி - ம்.) அறத்தினை முனிந்தவன் - தருமகோபன். கார்முகம் - வில். தோல் - ஈண்டுப் புண்டரிகமென்னும் யானை. (சஅ0)

அயர்ந்து நின்றது வேழமங் கதுதெரி யமைச்சன்
வயந்த வாதமார்த் தாண்டன்வார் நுதற்கணை யழுத்திச்
சயந்த வாதவெள் வேலுமொன் றுறுத்தெறும் தடிந்தான்
வியந்த வீரமா புரந்தரன் மெலிவுகண் டெதிர்ந்தான்.

(இ - ள்.) தன் நுதலின்கட் கணை பாய்தலான் யானை அயர்வுற்று நின்றது. அங்ஙன மயர்வுற்று நின்றதனை யறிந்த தருமகோபன் சென்ற போர்கடோறும் வெற்றி நீங்குதலிலாத வீரமார்த்தாண்டன் நீண்ட நுதலின்கட் கணையினைச் செலுத்தி வென்றி பெற்றதன்றி மீடலிலாத வெள்ளிய வேற்படை யொன்றினையு முறுவித்து அவன் வலியினை நீக்கினன். பகைவர்கள் வீரத்தினை வியத்தற் கேதுவாகிய வீரமாபுரந்தரன் வீரமார்த்தாண்டன் மெலிவினைக் கண்ணுற்று எதிர்ந்தன னென்க.

(வி - ம்.) வயம் - வெற்றி. தவாத - நீங்காத. சயம் - வெற்றி. எறும் - வலி. (சஉக)

புக்க வாசவன் மேற்கணை பொழிந்தன னமைச்சன்
தொக்க வாளியி னறுத்தவ னமைச்சன்மேற் றொடுத்தான்
மிக்க போர்களிங் குஞற்றுழி வீரன்மே லமைச்சன்
தக்க தண்டமொன் றேயினன் றளர்ந்தனன் மகவான்.

(இ - ள்.) இங்ஙனங் கண்ணுற்றுப் புகுந்த வீரபுரந்தரன்மேல் அமைச்சன் கணைகளைச் சொரிந்தனன். அவ்வீரபுரந்தரன் அக்கணைகளைத் தொகுதலைக் கொண்ட கணைகளான் அறுத்து அமைச்சன்மீதும் பல கணைகளைச் சொரிந்தனன். இவ்விடத்துப் பெரும்போர்களைச் செய்யுங்காலத்து வீரன்மீது அமைச்சன் கோறல் செய்யுந் தகுதியினையுடைய தண்டமொன்றினைச் செலுத்தினன். வீரபுரந்தரன் தளர்ச்சியுற்றன னென்க.

(வி - ம்.) வாசவன், மகவான், என்பன வீரபுரந்தரனைக் குறிப்பன. உஞற்றுழி - செய்யுங்கால். (சஉஉ)

ஆர்த்து வீரவா குப்பெய ரண்ணன்மு னடுத்தான்
பார்த்த மைச்சர்கோன் பற்பல நெடுமொழி கூறித்
தூர்த்த னன்பக ழித்திர டூயவன் மெய்யில்
போர்த்து நுண்டுக ளாயின பொருப்பெறி கலன்போல்.

(இ - ள்.) இதனைக் கண்ணுற்று வாகுப்பெயரினையுடைய தலைவன் முழக்கி அமைச்சன் முன்னர்ப் பொருந்தினன். அமைச்சர்கள் தலைவனாகிய தருமகோபன் வீரவாகுவைக் கண்ணுற்றுப் பலப்பல வஞ்சின மொழிகளை எடுத்துக்கூறிக் கணைத்திரள்களைத் தூர்த்தனன். அங்ஙனம் தூர்த்த கணைகள் தூய்மையையுடைய வாகுப்பெயரோனுடலினைப் போர்த்து மலையின்மீது மோதிய மரக்கலன் துகளாவது போல நுண்ணிய துகள்களாயின வென்க.

(வி - ம்.) நெடுமொழி - வஞ்சினம். பகழி - கணை. தூயவன் - வீரவாகு. கலன் - மரக்கலம். (சஉ௩)

வாகு வேர்அயில் விடுத்தன னவன்விடு வாளி
போக விழ்த்துரம் புகுந்துசெந் நீருண்டு புறத்தில்
ஏக வீழ்ந்தன னெதிர்ந்திபந் தேரினைத் தாக்க
வேக நீங்கவன் கவுட்புடைத் தெறிந்தனன் விசும்பில்.

(இ - ள்.) வீரவாகு ஒப்பற்ற வேற்படை யொன்றினை விடுத்தனன். (அவ்வேற்படை) அவ்வமைச்சன் விடுத்தகணை நீங்க நிலத்தின்கண் வீழ்த்தி அவன் மார்பின்கட் புகுந்து செந்நீரைப் பருகிப் புறத்தே செல்லக் கீழே வீழ்ந்தனன். இதனைக் கண்ட யானை எதிர்ந்து வாகுப் பெயரோன் றேரினைத் தாக்க அவ்வியானையின் வேகங்கெட வலிய கன்னத்தின்கண் அடித்து வானின்கண் வீசி யெறிந்தன னென்க.

(வி - ம்.) அயில் - வேல். உரம் - மார்பு. இபம் - யானை. கவுள் - கன்னம். (௪௨௪)

மறிந்து வெங்கரி வீழ்தலு மதிவலா னுயிர்த்தங்
கெறிந்து னாறெரு தண்டமற் றதன்வலி யிறுத்தான்
அறிந்து வச்சிரம் விடுத்தன னதுகரம் பற்றிச்
செறிந்த மைந்தினன் சென்றவன் மார்பிற வெறிந்தான்.

(இ - ள்.) கொடிய அவ்வியானை மடங்கி நிலத்தின்கண்ணே விழ, மதிவல்லானாகிய தருமகோபன் உயிர்ப்புற்றெழுந்து ஒருதண்டத்தினை அப்பொழுது எறிந்தனன். அங்ஙன மெறிந்த தண்டத்தின் வலியினையுங் கெடுத்தனன். அங்ஙனங் கெடுத்தலை யறிந்து வச்சிரப்படையொன்றினை விடுத்தனன். அவன் விட்ட வச்சிரப்படையினைக் கையாற் பற்றிச் செறிந்த வலியினை யுடையானாகிய வாகுப்பெயரோன் சென்று அவன் மார்புந் தகரும்வண்ண மெறிந்தன னென்க.

(வி - ம்.) மதிவல்லான் என்றது தருமகோபனை. மைந்தினன் - வீரவாகு. (௪௨௫)

அறமு னிந்தவன் விழுந்தன னடியினுற் சவட்டி
மறமி குந்தனன் வீரவா குப்பெயர் வள்ளல்
திறம ழிந்தெழு வேழமுஞ் சேவகற் றுதித்துக்
குறைமு டிந்ததென் றடுத்தது குறுகுதன் றிசையை.

(இ - ள்.) தருமகோப னென்பான் நிலத்தின்கண் வீழ்ந்தனன். வீரவாகென்னும் பெயரினையுடைய வள்ளல் அவனை அடியினாற் கொன்று வீரத்தின்மிகுந்து விளங்கினன். கீழ்வீழ்ந்தகனறும் றன்வலி யழிந்த புண்டரீகமென்னும் யானையும் சேவகனாகிய வீரவாகுவைத் துதிசெய்து தானணுகுந் திசையைத் தன்குறை இவ்வளவோடு முடிவடைந்ததென்று கருதி அண்மிய தென்க.

(வி - ம்.) வேழம் - புண்டரீகம். சேவகன் - வீரவாகு. (௪௨௬)

தன்க்கு மாற்றல னழிவினை யறிந்துதான் காண
நினைந்து வந்தென நெடுங்கட லெழுந்தனன் கதிரோன்

**வினைத்தி றத்தில்வி ழமைச்சன்பா டறிந்துவெஞ் சூரன்**
**மனத்து நீடிய துயரொடு மருண்டன னிருந்தான்.**

(இ - ள்.) வெங்கதிர்க்கடவுள் தனக்குப் பகைவனாகிய தருமகோபன் அழிதலினைத் தெரிந்து தானதனைக் கண்ணுற நினைத்து வந்தாற்போல் நீண்ட கடலின்கட் டோன்றினன். தீவினை வகையான் வீழ்ந்த அமைச்சனாகிய தருமகோபன் இறந்தலையறிந்து வெய்யசூரன் மனத்தின்கண் மிக்க துன்பினோடு மயக்கமுற்றிருந்தன னென்க.

(வி - ம்.) மாற்றலன் - பகைவன். அமைச்சன் - தருமகோபன். மருண்டனன் : முற்றெச்சம். (சஉஎ)

**ஆவி போன்றின னெனவொளி யழிந்தவெற் பகைஞன்**
**மேவி வந்தனை புரிந்துதன் றுதைக்கு வேறல்**
**யாவ தும்படா திறைஞ்சுதுங் கந்தனை யென்றான்**
**பாவி போன்றினுங் கொண்டகோள் விடேனெனப் பகர்ந்தான்.**

(இ - ள்.) தருமகோபன் உயிர் நீங்கப்பெற்றா னென்று ஒற்றர்கூற ஒளியிழக்கப்பெற்ற பானுகோபன் றந்தையாகிய வீரனுக்குப் பகைவரை வேறல் சிறிதும் நமக்குளவாகாது. ஆதலான் கந்தப்பெருமானை யடைந்து வழிபாடுசெய்து வணங்குவோமென்று கூறினான். அதற்குப் பாவியாகிய சூரன் இறப்பினும் யான்கொண்ட கோட்பாட்டினை விடேனெனக் கூறினான்.

(வி - ம்.) ஆவி - உயிர். எல் - ஞாயிறு. எற்பகைவன் - பானுகோபன். தாதைக்குக் கூறினானென்க. யாவதும் - சிறிதும். கோள் - கொள்கை. போன்றினான் என்பதற்கு உயிர் நீங்கப்பெற்ற பானுகோபனெனப் பொருள் கொள்வாருமுளர். எல் - வெங்கதிர். (சஉஅ)

**விடைபெற் றுவயி னீங்கினன் விலக்கருந் தெய்வப்**
**படைக ளேந்தினன் பன்னருஞ் சேனைகள் சூழ**
**இடிபோ ரும்பணை யியம்பவேழ் கடல்களும் வளைந்தாங்**
**கடல்செய் போர்க்கள மடுத்தன னழிவுகண் டயர்ந்தான்.**

(இ - ள்.) பானுகோபன் தந்தையின்பால் விடையினைப் பெற்று அவ்விடத்தினின்றும் நீங்கி பகைவரான் விலக்குதற்கரிய தெய்வப் படைகளைத் தாங்கிச் சொலற்கரிய சேனைகள்சூழ முழக்கத்தால் இடியேற்றினை ஒத்த இயங்கள் ஒலிக்க எழுகடலும் முற்றினாற்போலக் கொலைத்தொழிலைச் செய்கின்ற போர்க்களத்தினைக் குறுகி படைகளழிந்து கிடக்கையைக் கண்டு சோர்வுற்றன னென்க.

(வி - ம்.) நீங்கினன், ஏந்தினன், அடைந்தனன்: எச்சமுற்றுக்கள். உவயின் - அவ்விடத்தினின்றும். பணை - முரசம். அடல் - கொல்லுதல். (சஉக)

**தேற்றி நெஞ்சினை வஞ்சினம் புகன்றுதெவ் வர்கண்மேல்**
**ஆற்றல் வீரரை யேயினன் பூதரு மமர்த்தார்**

ஏற்ற தானவர் பூதர்க ளெண்ணில ரிறந்தார்
காற்றெ னக்கடைக் கூழையிற் பூதர்கள் கலந்தார்.

(இ - ள்.) படைகளழிவினைக் கண்ணுற்றுச் சோர்வடைந்த பானு கோபன் ஒருவாறு நெஞ்சினைத் தெளிவித்து வஞ்சினங் கூறிப் பகைவர் மேல் வன்மையையுடைய வீரர்களை யேவினன். பூதவீரர்களு மெதிர்த் துப் போரினைச் செய்தனர். எதிர்த்த தானவர்களுள்ளும், பூதர்களுள் ளும் இறந்தன ரளவிலாதார் காற்றினைப்போலப் பின்படையிற் பூத வீரர்கள் பொருந்தினு ரென்க.

(வி - ம்.) அமர்த்தார் - போர் செய்தனர். கூழை - பின்படை. (௪௯௦)

அவுண வன்படை மெலிந்தன வதுகண்டு மணித்தேர்
பவன வேகத்தி னூர்ந்துராய்ப் பானுவை முனிந்தோன்
உவண னுகங்க ளுடற்றியாங் குடற்றினன் சிலையால்
புவன மஞ்சின பூதர்கள் பெரிதுலைந் தனரால்.

(இ - ள்.) பூதவீரர் கூழைப் படையிற் கலந்தபோழ்து வலிய அவுணப்படை மெலிவுற்றன. அதனைக் கண்ணுற்றுப் பானுகோபன் அழகிய தேரினைக் காற்றின் வேகத்தினைக் காட்டினும் வேகமாகச் செலுத்திப் பெயர்ந்து கலுழன் பாம்பினங்களை வருத்தியாங்கு வில் லான் வருத்தினன். உலகெலாமஞ்சின. பூதர்கள் பெரிதும் வருந்தி னார்கள்.

(வி - ம்.) மணி - அழகு. பானுவை முனிந்தோன் - பானுகோபன். உவணன் - கருடன். (௪௯௧)

இரிந்த சேனையுங் கோபன்பா லெய்தின விதனைத்
தெரிந்து முந்தினன் வீரவா குப்பெயர்ச் செம்மல்
சொரிந்து சூழ்ந்தன ரவுணர்கள் சொரிந்தபல் படையும்
வரிந்த வார்சிலைக் கணையினுன் மாற்றின னொடியில்.

(இ - ள்.) முன்னர்ப் பூதவீரர்கட்குத் தோல்வியுற்றிரிந்த படை கள் பானுகோபன் பக்கலி லெய்தின. வீரவாகென்னும் பெயரினை யுடைய தலைவன் இங்ஙனஞ் சேறலையறிந்து போரினுக்கு முற்பட்டான். அவுணர்கள் அவன்மீது கணைகளைச் சொரிந்து சுற்றினர். வாகுப்பெய ரோன் ஒரு நொடிப்பொழுதில் அவர் சொரிந்த பல படைக்கலங்களை யும் நீண்டகட்டமைந்த வில்லினின்று விடுங்கணைகளால் நீக்கின னென்க.

(வி - ம்.) கோபன் - பானுகோபன். கணைகளைச் சொறிந்து என்க. வரிந்த - கட்டிய. (௪௯௨)

எண்ணில் வாளிக டொடுத்தட ரவுணர்மே லேவிப்
புண்ணுஞ் சோரியு முனையும் பொழிநெடுங் குடரும்

வினைத்தி றத்தில்வீ ழமைச்சன்பா டறிந்துவெஞ் சூரன்
மனத்து நீடிய துயரொடு மருண்டன னிருந்தான்.

(இ - ள்.) வெங்கதிர்க்கடவுள் தனக்குப் பகைவனாகிய தரும கோபன் அழிதலினைத் தெரிந்து தானதனைக் கண்ணுற நினைத்து வந்தாற் போல் நீண்ட கடலின்கட் டோன்றினன். தீவினை வகையான் வீழ்ந்த அமைச்சனாகிய தருமகோபன் இறத்தலையறிந்து வெய்யசூரன் மனத்தின் கண் மிக்க துன்பினோடு மயக்கமுற்றிருந்தன னென்க.

(வி - ம்.) மாற்றலன் - பகைவன். அமைச்சன் - தருமகோபன். மருண்டனன் : முற்றெச்சம். (௪௨௭)

ஆவி பொன்றின னெனவொளி யழிந்தவெற் பகைஞன்
மேவி வந்தனை புரிந்துதன் றாதைக்கு வேறல்
யாவ தும்படா திறைஞ்சுதுங் கந்தனை யென்றான்
பாவி பொன்றினுங் கொண்டகோள் விடேனெனப் பகர்ந்தான்.

(இ - ள்.) தருமகோபன் உயிர் நீங்கப்பெற்றா னென்று ஒற்றர் கூற ஒளியிழக்கப்பெற்ற பானுகோபன் றந்தையாகிய வீரனுக்குப் பகைவரை வேறல் சிறிதும் நமக்குளவாகாது. ஆதலான் கந்தப்பெரு மானை யடைந்து வழிபாடுசெய்து வணங்குவோமென்று கூறினான். அதற்குப் பாவியாகிய சூரன் இறப்பினும் யான்கொண்ட கோட்பாட் டினை விடேனெனக் கூறினான்.

(வி - ம்.) ஆவி - உயிர். எல் - ஞாயிறு. எற்பகைவன் - பானு கோபன். தாதைக்குக் கூறினானென்க. யாவதும் - சிறிதும். கோள் - கொள்கை. பொன்றினன் என்பதற்கு உயிர் நீங்கப்பெற்ற பானு கோபனெனப் பொருள் கொள்வாருமுளர். எல் - வெங்கதிர். (௪௨௮)

விடைபெற் றுவயி னீங்கினன் விலக்கருந் தெய்வப்
படைக ளேந்தினன் பன்னருஞ் சேனைகள் சூழ
இடிபோ ரும்பணை யியம்பவேழ் கடல்களும் வளைந்தாங்
கடல்செய் போர்க்கள மடுத்தன னழிவுகண் டயர்ந்தான்.

(இ - ள்.) பானுகோபன் தந்தையின்பால் விடையினைப் பெற்று அவ்விடத்தினின்றும் நீங்கி பகைவரான் விலக்குதற்கரிய தெய்வப் படைகளைத் தாங்கிச் சொலற்கரிய சேனைகள்சூழ முழக்கத்தால் இடி யேற்றினை ஒத்த இயங்கள் ஒலிக்க எழுகடலும் முற்றினாற்போலக் கொலைத்தொழிலைச் செய்கின்ற போர்க்களத்தினைக் குறுகி படைக ளழிந்து கிடக்கையைக் கண்டு சோர்வுற்றன னென்க.

(வி - ம்.) நீங்கினன், ஏந்தினன், அடைந்தனன்: எச்சமுற்றுக்கள். உவயின் - அவ்விடத்தினின்றும். பணை - முரசம். அடல் - கொல்லுதல். (௪௨௯)

தேற்றி நெஞ்சினை வஞ்சினம் புகன்றுதெவ் வர்கண்மேல்
ஆற்றல் வீரரை யேயினன் பூதரு மமர்த்தார்

ஏற்ற தானவர் பூதர்க ளெண்ணில ரிறந்தார்
காற்றெ னக்கடைக் கூழையிற் பூதர்கள் கலந்தார்.

(இ - ள்.) படைகளழிவினைக் கண்ணுற்றுச் சோர்வடைந்த பானு கோபன் ஒருவாறு நெஞ்சினைத் தெளிவித்து வஞ்சினங் கூறிப் பகைவர் மேல் வன்மையையுடைய வீரர்களை யேவினன். பூதவீரர்களு மெதிர்த் துப் போரினைச் செய்தனர். எதிர்த்த தானவர்களுள்ளும், பூதர்களுள் ளும் இறந்தன ரளவிலாதார் காற்றினைப்போலப் பின்படையிற் பூத வீரர்கள் பொருந்தினு ரென்க.

(வி - ம்.) அமர்த்தார் - போர் செய்தனர். கூழை - பின்படை. (௪௯௦)

அவுண வன்படை மெலிந்தன வதுகண்டு மணித்தேர்
பவன வேகத்தி னூர்ந்துராய்ப் பானுவை முனிந்தோன்
உவண னுகங்க ளுடற்றியாங் குடற்றினன் சிலையால்
புவன மஞ்சின பூதர்கள் பெரிதுலைந் தனரால்.

(இ - ள்.) பூதவீரர் கூழைப் படையிற் கலந்தபோழ்து வலிய அவுணப்படை மெலிவுற்றன. அதனைக் கண்ணுற்றுப் பானுகோபன் அழகிய தேரினைக் காற்றின் வேகத்தினைக் காட்டினும் வேகமாகச் செலுத்திப் பெயர்ந்து கலுழன் பாம்பினங்களை வருத்தியாங்கு வில் லான் வருத்தினன். உலகெலாமஞ்சின. பூதர்கள் பெரிதும் வருந்தி னார்கள்.

(வி - ம்.) மணி - அழகு. பானுவை முனிந்தோன் - பானுகோபன். உவணன் - கருடன். (௪௯௧)

இரிந்த சேனையுங் கோபன்பா லெய்தின விதனைத்
தெரிந்து முந்தினன் வீரவா குப்பெயர்ச் செம்மல்
சொரிந்து சூழ்ந்தன ரவுணர்கள் சொரிந்தபல் படையும்
வரிந்த வார்சிலைக் கணையினுன் மாற்றின னொடியில்.

(இ - ள்.) முன்னர்ப் பூதவீரர்கட்குத் தோல்வியுற்றிரிந்த படை கள் பானுகோபன் பக்கலி லெய்தின. வீரவாகென்னும் பெயரினை யுடைய தலைவன் இங்ஙனஞ் சேறலையறிந்து போரினுக்கு முற்பட்டான். அவுணர்கள் அவன்மீது கணைகளைச் சொரிந்து சுற்றினர். வாகுப்பெய ரோன் ஒரு நொடிப்பொழுதில் அவர் சொரிந்த பல படைக்கலங்களை யும் நீண்டகட்டமைந்த வில்லினின்று விடுங்கணைகளான் நீக்கின னென்க.

(வி - ம்.) கோபன் - பானுகோபன். கணைகளைச் சொரிந்து என்க. வரிந்த - கட்டிய. (௪௯௨)

எண்ணில் வாளிக டொடுத்தட ரவுணர்மே லேவிப்
புண்ணுஞ் சோரியு மூளையும் பொழிநெடுங் குடரும்

நண்ணு மீரலு நாடியும் வழும்புமற் றுறுப்பும்
மண்ணி மெங்கணும் வீழ்த்திவண் சயத்தினை விளைத்தான்.

(இ - ள்.) வாகுப் பெயரவன் அவர்கள்மீது அளவில்லனவாகிய கணைகளைத் தொடுத்துச் செலுத்திப் புண்ணும், செந்நீரும், மூளையும் ஒழுகுகின்ற நீண்ட குடரும், பொருந்தும் ஈரலும், நாடிகளும், வழும்பும், ஏனை உறுப்புகளும் மண்ணிட மெங்கணும் விழும்படி செய்து வெற்றியினை விளைத்தனனென்க.

(வி - ம்.) "குடருங் கொழுவுங் குருதியு மென்புந் தொடரு நரம்பொடு தோலும்" என்னும் நாலடிச் செய்யுளும் "நாடியோ என்போ நரம்ப சிக்கோழையோ" சிவஞான போதவுதாரண வெண்பாவும் ஈண்டு நோக்கத்தக்கன. (௪௧௧)

இற்ற தோநம திரும்படை முழுதுமென் றிரங்கிக்
கற்றை வெங்கதிர்ப் பகைஞன்முன் சென்றுகார் முக்த்துப்
பொற்ற வாயிரங் கணைதொடுத் துரம்புகு வித்தான்
கற்ற வீரனு மாயிரம் புயங்கலப் பித்தான்.

(இ - ள்.) கூட்டமாகிய கதிர்களையுடைய வெங்கதிர்ப் பகைவன் வாகுப் பெயரோன் முன்னர்ச் சென்று நம் பெரிய படைமுழுதும் இறந்ததோவென் றிரக்கமுற்று வில்லினிடத்துப் பொலிவினையுடைய ஆயிரங்கணை தொடுத்து அவன் மார்பின்கட் புகும்படி செய்தான். விற்றொழிலினை முற்றக்கற்ற வாகுப்பெயரவனும் ஆயிரங்கணைகளைப் பானுகோபன் புயத்தின்கட் கலங்கும்படி செய்தனனென்க.

(வி - ம்.) கற்றை வெங்கதிர் என்புழி அடைமொழி வாளாநின்றன. பொற்ற - பொலிவுற்ற. உரம் - மார்பு. வீரன் - வீரவாகு. (௪௧௨)

வில்லி றுத்தனன் சூர்மகன் வீரனே ரயில்வேல்
வல்லை யுய்த்தன னெதிர்வரு வாளிக டுமித்துக்
கல்ல டுத்தவோ டைத்தட நுதற்கதி யதுமான்
றல்ல பூத்திய மேனியா னறிவுவந் தெழுந்தான்.

(இ - ள்.) சூர்மகனாகிய பானுகோபன் வாகுப் பெயரோன் வில்லினை யறுத்தனன். வீரனாகிய வாகுப் பெயரோன் கூர்மை பொருந்திய வேற்படை யொன்றினை விரைவாக அவன்மேற் போக்கினன். அவ் வேற்படை தனக்கெதிர்வரும் அம்புகளைக் கெடுத்துச் செந்நிறக்கற்கள் பதித்த பட்டத்தினையுடைய பெரிய நெற்றியின்கட் பற்றியது. அங்ஙனம் பற்றியவுடன் மயக்கமுற்று இருளைப்பதித்தாற்போன்ற மேனியையுடைய பானுகோபன் மீண்டும் அறிவுவரப் பெற்றெழுந்தனனென்க.

(வி - ம்.) அயில் - கூர்மை. வல்லை - விரைந்து. கல் - மணி. ஓடை - நெற்றிப்பட்டம். மான்று - மயங்கி. (௪௧௩)

காற்றின் வெம்படை கனற்படை கதிரவன் படைதேன்
ஊற்று தேமல ரவன்படை மால்படை யுகைத்து

மாற்றி னரவ்வப் படைகளின் மறுப்பதுண் மையாற்றல்
ஏற்ற மின்றென விறைபடை தொடுத்தில னவுணன்.

(இ - ள்.) பகைவர்கள் விடும் அவ்வப் படைகளை அவ்வப் படைகளை விடுத்து மறுத்தலுளதாகையால் அவ்விடமாகும் வெவ்விய காற்றின் படையும், அழற்படையும், வெங்கதிர்க் கடவுள் படையும், தேனை யூற்றுகின்ற மணத்தினையுடைய மலரின் கண்ணுள்ள பிரமன் படையும் விண்டுவின் படையுமாகிய இவைகளைச் செலுத்தி நீக்கினார். அவுணனாகிய பானுகோபன் உயர்வின்றென்று இறைவன் படைக்கலத்தினைத் தொடுத்திலனென்க.

(வி - ம்.) இப்பானுகோபன் முன்பொருமுறை வாகுப்பெயரோன் மேல் இறைவன் படையைச் செலுத்த அப்படை அவனை இறுதிசெய்யாமை கண்டறிந்துளனாதலால் "ஏற்றமின்றென இறைபடை தொடுத்திலன்" என்றார். இனி, அவ்வப்படையான் அவ்வப்படையை மாற்றுதலுளதாகையான் உயர்வின்றென்று இறைவன் படை தொட்டிலனெனினுமாம். தேம் - வாசனை. (௬௰௬)

மாயை யால்வெல்ல மதித்துவிண் மறைந்துவெஞ் சரங்கள்
தூய வீரன்மேற் றொடுத்தனன் சேதனப் படையைத்
தீயன் மேலவன் விடுத்தனன் றீர்ந்தது மாயை
காய நின்றனன் றேரொடுங் கரந்தவக் கள்வன்.

(இ - ள்.) பானுகோபன் மாயையில் வெல்லக் கருதி வானின்கண் மறைந்து கொடிய கணைகளைத் தூய்மையுடைய வீரவாகுமீது தொட்டனன். அவ்வீரவாகு அறிவுருவாகிய படையைத் தீயவனாகிய பானுகோபன்மீது விட்டனன். மாயை நீங்கியது. தேரினொடு மறைந்த அக்கள்வனாகிய பானுகோபன் விண்ணின்கண் ணின்றனனென்க.

(வி - ம்.) காயம் - ஆகாயம். சேதனம் - அறிவு. தீயன் - பானுகோபன். (௬௰௭)

விடுவ லோவினி நினையென வெகுண்டுவிண் ணெழுந்து
தொடுச ரங்கண்மே னிரைத்தனன் றூயவ னவனும்
விடுச ரங்கண்மே னிரைத்தனன் விலக்கினர் திரிந்தார்
கடுவி சைக்கொடு சூறையின் மாதிரங் ககனம்.

(இ - ள்.) வாகுப் பெயரமலன் இனி நின்னை உயிருடன் விட்டு விடுவனோ வென்றுகூறிச் சினந்து வானின்கண் ணெழுந்து தொடுக்கத் தக்க கணைகளை நிரைத்தனன். அப்பானுகோபனும் விடத்தக்க கணைகளை அவ்வமலன்மே னிரைத்தனன். மிக்க வேகத்தினாற் சூறைக்காற்றைப் போல இருவரும் திசையின்கண்ணும் வானின்கண்ணும் சுற்றித் திரிந்தனரென்க.

(வி - ம்.) விடுவலோ - வினா: எதிர்மறை. தொடுசரம் - வினைத் தொகை. விலக்கினர் - முற்றெச்சம். சூறை - சுழற்காற்று. ககனம் - வானம். (௬௰௮)

கொள்ளி வட்டமும் பிற்படக் கொட்புறுந் திறலோர்
அள்ளி விட்டபல் சரங்களு நிமிருமிவ் வகிலம்
முள்ளெ யிற்றரா வினமொன்று நாடுபு முடுகித்
தெள்ளி திற்றிரி வுறினந்தப் பணிப்பதி சிவணும்.

(இ - ள்.) *கொள்ளிக் கட்டையினைச் சுற்றுதலானுளதாகும் வடிவமும் பின்னிடச் சுழலுந் தன்மையுடையாரிருவரும் அம்புக் கூட்டினின்றும் அள்ளிவிட்ட பலகணைகளும் நிமிர்ந்துள்ள வில்வகிலமானது முள்ளினைப் போன்ற கூரிய பற்களையுடைய பாப்பினங்கள் ஒரு பொருளைநாடி விரைந்து தெளிவாகத் திரிதரினத்தன்மையாகிய நாகலோகத்தினை யொக்குமென்க.*

(வி - ம்.) *இவ்விருவருந் தோன்றி மறைதலொருவரானுமுணர்த அருமையென்பார், 'கொள்ளி வட்டமும் பிற்படக் கொட்புறுந்திறலோர்' என்றார். பலசரங்களு நிறைந்த இவ்வுலகமானது பல பாப்பினங்கள் விரைந்து ஒரு பொருளை நாடித் தெளிவாகத் திரிவுறினத்தன்மையாகிய பணிப் பகுதியை யொக்குமென வினைமுடிவு செய்க.* (௪௩௯)

கட்பு லன்கது வாக்கடு விசைகொடு கறங்கின்
விட்பு லத்தல மருமமை யத்துவெந் திறலோன்
ஒட்ப மிக்கவன் றேரினை யுடைத்தன னுகுமுன்
மட்பு லத்தவன் றேருக மறித்தன்ன் வீரன்.

(இ - ள்.) *கண்ணறிவினுற் பற்றப்படாத மிக்க வேகத்தான் காற்றாடியினைப்போல விண்ணிடத்து இருவரும் சுழலுகின்ற காலத்துக் கொடிய வலியினையுடைய பானுகோபன் அறிவின் மிக்கோனாகிய வாகுவின்றேரினையுடைத்தனன். அத்தேருடைந்து கீழ் வீழ்வதன் முன்னர் வீரவாகு மண்ணினிடத்து அவன்றேருகும்படி மடித்தனனென்க.*

(வி - ம்.) *கட்புலன் - கண்ணறிவு. கறங்கு-காற்றாடி. மட்புலம் - நிலம். ஒட்பம் - அறிவு. "உலகந்தழீஇய தொட்பம்" என்னும் திருக்குறளானறிக.* (௪௪0)

உரத்திற் பல்சர மழுத்தின னும்பர்தம் பகைஞன்
சிரத்து மோலியைச் சிதர்த்தனன் றேவர்நட் பாளன்
புரத்துச் சாலிகை கீழ்ந்தனன் புலவரை யலைத்தோன்
கரத்துக் கார்முகந் துமித்தனன் கடவுளர்க் காத்தோன்.

(இ - ள்.) *வாகுப் பெயரோன் மார்பின்கண் தேவர் பகைவனாகிய பானுகோபன் பலகணைகளைச் செலுத்தினன். தேவர்கள் நட்பாளனாகிய வாகுப் பெயரோன் தலையின்கண்ணுள்ள முடியினைத் தகர்த்தான். அறிவின்மிக்க தேவர்களை வருத்தினவனாகிய பானுகோபன் வாகுவின் உடம்பின்கண்ணுள்ள கவசத்தைப் பிளந்தனனென்க. தேவர்களைக் காத்தல் செய்தோனாகிய வாகு பானுகோபன் கையின்கண்ணுள்ள வில்லினை யொடித்தனனென்க.*

(வி - ம்.) *உரம் - மார்பு. மோலி - முடிக்கலன். தேவர் நட்பாளன் - வீரவாகு. புலவர் - தேவர். கடவுளர் - தேவர்.* (௪௪௧)

வாணி கேள்வன்மு ன்ருளிய வேலினை வல்லே
ஏணி லாதவன் விடுத்தன னெய்கணை துமித்துத்
தூணி லாவிய தோளெதி ரடுத்தலுந் தோன்றல்
கோணை நாந்தக முரீஇயிரு துணிபடக் குறைந்தான்.

(இ - ள்.) பெருமையிலனாகிய பானுகோபன் வாணிதேவியின் நாயகனாகிய பிரமன் முன்னர்த் தனக்கருளிய வேற்படையினை விரைவாக விடுத்தனன். அவ்வேற்படை வீரவாகு எய்கின்ற கணைகளைக் கெடுத்துத் தூணியினையொத்ததோளினெதிரே யடுத்தபொழுது வீரவாகு பகைவரான் அழிதலில்லாத வாளினை யுருவி இருதுண்டாம் வண்ணம் வெட்டினனென்க.

(வி - ம்.) ஏண் - பெருமை. கோணை - அழியாமை. (௪௪௨)

நாந்த கங்கர முரீஇயெதிர் நடந்துபோய் நம்பி
சேந்த கைத்தலச் சிலைதுணித் தெழுந்துவா டிரித்துக்
காந்து கண்ணினன் பெயர்ந்தனன் கடுகவா ளுருவி
ஏந்த லெந்தினிப் போவதென் றெதிர்த்தன னமர்த்தார்.

(இ - ள்.) வாளினைக் கையானுருவி எதிராக நடந்து சென்று குணநிறைவினனாகிய வாகுவினது செந்நிறம் பொருந்திய கையின்கண்ணுள்ள வில்லினை வெட்டி, மேலெழுந்து வாளினைச்சுற்றி அழல்கின்ற கண்ணினையுடைய பானுகோபன் சென்றனன். தலைவனாகிய வீரவாகு விரைவாக வாளினையுருவி இனிப் போவதெங்கேயென்று எதிர்த்தனன். இருவரும் போரினைச் செய்தனர்.

(வி - ம்.) எந்து-தெலுங்கச்சொல்; இஃது ஈண்டு எவ்விடமென்னும் பொருட்டு. (௪௪௩)

சாரி கைத்தொழில் புரிந்தனர் தாளினைக் குறிப்பார்
வாரி ருங்கர நோக்குவர் மணிமுடி மதிப்பார்
வீர வாளெறி விலக்குவ ராகிய வேலைத்
தாரை வாளினை வீரன்றோள் சார்த்தின னவுணன்.

(இ - ள்.) இருவருஞ் சுற்றுந் தொழிலினைச் செய்தனர்; இருதாள்களை இலக்காகக் கருதுவார்கள்; நீண்ட பெரிய கைகளை வெட்டுதல் செய்யப்பார்ப்பார்கள். அழகியதலையினை வெட்டுதல் செய்யவெண்ணுவார்கள். வீரத்தால் வாள்வெட்டினை விலக்குவாராகிய காலத்து மாலையினையணிந்த அழகிய வாட்படையை வீரவாகுவின் தோளின்கண் பானுகோபன் பொருந்தச் செய்தனனென்க.

(வி - ம்.) தாரைவாள் - மாலையினையணிந்த அழகியவாள். இதனை "வீரவே ருரைவேல்" என்னுந் திருமுருகாற்றுப் படையின் கண்ணுள்ள தனிப்பாடலானறிக. இனித் தாரை ஒழுங்கெனப் பொருள்கொண்டு "தாரைகண் மழை நேரோடல்" என்னும் நிகண்டினைக் காட்டு வாருமுளர், (௪௪௪)

எறிந்த நாந்தகம் வாங்குமு னெரியெனக் கொதித்துச்
சிறந்த வீரியன் முனைவன் றேளுகச் செகுத்தான்
பிறந்த சீற்றமோ டொருகையி னுந்தகம் பெயர்த்து
மறிந்தெ திர்ந்தனன் மாற்றினன் மற்றிடக் கரமும்.

(இ - ள்.) வெட்டியவாளை வாங்குவதற்கு முன்னர் அழலெனக் கொதிப்பேற்றுச் சிறப்புற்ற வீரத்தினையுடைய வீரவாகு பானுகோபன் தோள்வீழும் வண்ணம் வெட்டினான். அஞ்ஞான்றுளவாகிய சினத்துடன் மற்றொரு கையால் வாளினை எடுத்து மடக்கி வெட்டினான். அங்ஙன மெதிர்த்த மற்றைய இடக்கரத்தினையும் வெட்டினனென்க. (௪௪௫)

மாலைய வன்படை தொடுக்கிய தானவன் மதித்தான்
ஆய சிந்தையுஞ் சென்னியு மமரர்க டுயரும்
மேய சூரனெக் கழுத்தமும் விரதியர் குறையும்
பாய பார்மக விடும்பையு மொருங்குகப் படுத்தான்.

(இ - ள்.) இருகையு மற்றபொழுது பானுகோபன் வலிய மாலைப்படையினைத் தொடுக்கக் கருதினான். அங்ஙனங் கருதுதலுளதாகிய மனத்தினையும், தலையினையும், தேவர்கடுன்பினையும், ஆயிரத்தெட்டண்டங்களுக்குந் தலைவனாகப் பொருந்திய சூரனிறுமாப்பும் விரதத்தினையுடைய தாபதப் பக்கத்தாரின் றுயரும் பரந்த நிலமகளின்பும் ஒருசேர நீங்கக் கொன்றனனென்க.

(வி - ம்.) தொடுக்கிய - தொடுக்க. எக்கழுத்தம் - இறுமாப்பு. பாய - பரந்த. இடும்பை - துன்பம். (௪௪௬)

அமரர் கற்பக மலர்பொழிந் தாடவாங் கலையின்
குமரி யாடமெய்க் குறைபல கோடிநின் றுடும்
சமர்செய் ஞாட்பிடைத் தழங்கிவீ ரர்களொடுந் தேரின்
விமல னுடினன் வியனிலம் வியத்குங் குரவை.

(இ - ள்.) தேவர்கள் கற்பகமரத்தின் மலர்களைச் சொரிந்தாட, வாவிச்செல்லுகின்ற கலைமானை வாகனமாகக்கொண்ட துர்க்கையாட, பலகோடி மெய்கள் நின்றுடுகின்ற பறந்தலையின்கண் முழங்கி வீரர்களோடு தேரின்கணின்று யாவரும் வியக்கத்தக்க குரவைக்கூத்தினை மலமற்றவனாகிய வாகுப் பெயரோனு மாடினனென்க.

(வி - ம்.) வாங்கலை - வினைத்தொகை. மெய்க்குறை - குறைப்பிணம். இப்பாட்டு திணை : தும்பை. துறை - முன்றேர்க்குரவை. ஞாட்பு - போர்க்களம். விமலன் - வீரவாகு. (௪௪௭)

வீழ்ந்த வீரனைப் பூதர்க ணெருங்கினர் விமலை
வாழ்ந்த தாழ்கர நோக்கினர் மருட்கையின் வியந்தார்
போழ்ந்த வான்கரம் வீசியா டினர்சமர் புகழ்ந்தார்
ஆழ்ந்த வேழ்கட லுடைந்தென வார்த்தன ரம்மா.

(இ - ள்.) இங்ஙனம் நிலத்தின்கண் வீழ்ந்த வீரனாகிய பானு கோபனைப் பூதவீரர்கள் நெருங்கி வீரத்திருவாழ்ந்திருந்த, மறமுந்தாளளவு தாழ்ந்த கையினைக்கண் ணுற்று மருட்கையென்னும் மெய்ப்பாட்டுடனே வியந்து பானுகோபனைப் பிளந்த வாளினைக் கையிற்கொண்டு வீசியாடி அவன்செய்த போரினைப் புகழ்ந்து ஆழமாகிய ஏழுகடலுமுடைந்தாற் போல முழக்கஞ் செய்தனரென்க.

(வி - ம்.) மூன்றுமடி. திணை: தும்பை. துறை: ஒள்வாளமலை. (முன்னடி புறத்திணை இயல் பார்க்க) நெருங்கினர், நோக்கினர், வியந்தார், ஆடினர்: எச்சமுற்றுக்கள். (௪௪௮)

வாகை பன்முறை சூடிய வயவர்க டலைவன்
ஓகை கொண்டன னுரைத்தவஞ் சினமின்று முடித்தாம்
ஏகு வாமினி யிறைவன்மாட் டென்றன னன்றே
ஆக லென்றன ரனைவருந் திரண்டனர் பெயர்ந்தார்.

(இ - ள்.) சென்ற போர்களிற் பன்முறையும் வாகைமாலையைச் சூடிய வீரர்கள் தலைவனாகிய வாகுப் பெயரவன் உவகைகொண்டு சொற்றவஞ்சினத்தை யாமின்று முடித்தோம். இனி இறைவன்பக்கலிற் செல்வாமென்றனன். ஆண்டுள்ளவரனைவரும் அவ்வாறே ஆகுகவென்றனர்; யாவரும் அப்பறந்தலையினின்றும் பெயர்ந்தனரென்க.

(வி - ம்.) வாகை - வெற்றிமாலை. ஓகை - உவகை. (௪௪௯)

அழுக்கில் வீரர்தே ரகறலு மாவயி னெங்கும்
வழுக்கு வெண்ணிணம் வாய்மடுத் திரத்தநீர் பருகி
ஒழுக்கு வார்குடர் மாலைவேய்ந் துலப்பில்பேய்ப் பெண்டிர்
முழுக்க வண்புகழ் பாடினர் முயன்றனர் குரவை.

(இ - ள்.) குற்றமில்லாத வீரர்கள் தேர் அவ்விடத்தினின்று நீங்கப் பறந்தலையெங்கணும் பரந்துகிடந்த வழுக்குதலையுடைய வெண்டடியினையுண்டு, புண்ணீரைப் பருகிக் கீழே சரிந்துவிழ்ந்த நீண்ட குடராகிய மாலையினை யணிந்து, அளவிலராகிய பேய்மகளிர் வாகுப் பெயரவன் புகழ்முழுவதும்பாடிக் குரவைக் கூத்தையாடினரென்க.

(வி - ம்.) வேய்ந்து - சூடி. பேய்ப்பெண்டிர் - பெண்பேய். இது திணை, தும்பை; துறை: பேய்க்குரவை. (௪௫௦)

இருந்த பூமக டவ்வையைக் காட்டியே குதல்போல்
வருந்த மாநகர் பெயர்ந்தருள் வாகுபோய் முருகன்
திருந்து சேவடி பணிந்தனன் சேயுள மகிழ்ந்து
பொருந்து நல்வரங் கொள்கெனப் புகழ்ந்துபோர் வீரன்.

(இ - ள்.) ஆண்டு நிலைபெற்றிருந்த திருமகள் தன்மூத்தாளுக்கு அவ்விடத்தைக் காட்டி நீங்கல்போலப் பெரிய நகரம் வருந்த ஆண்டு நின்றும் நீங்கிய வாகுப் பெயரவன் சென்று யாவரும் வழிபட்டுத் திருந்துதற்கேதுவாகிய குமரப்புத்தேள் சேவடியினை வணங்கினன்.

அவன் மனம் உவப்புற்று உனக்குத் தகும் நல்லவரங்களைக் கொள்வா யாக வெனப் பணித்தருளைப் புகழ்ந்து வாகுப்பெயரோன்.

(வி - ம்.) பூமகள் - திருமகள். தவ்வை - முகடி. உயிர்கள் இருந்ததற்குக் காரணமான சேவடி என்க. சேய் - முருகன். (௪௫௧)

ஆர ணத்தனு நகரமே லடுத்தவா ரணனும்
வார ணத்தனு மற்றுள கணங்களும் மணியும்
ஏர ணத்தகு முதன்மையி லிருத்தினை யினிநின்
பூர ணத்திரண் டறக்கலப் பதுதரப் புகறி.

(இ - ள்.) வேதத்தையறிந்தவனாகிய பிரமனும், நகரவொற்றின் மேற் பொருந்திய ஆரணனாகிய நாரணனும், வெள்ளையானையுடைய இந்திரனும், வேறுள்ளனவாகிய கணங்களும் வணங்கும் பெருமை அணமத்தக்க முதன்மையிலிருக்கச் செய்துள்ளனை. இனி உனது நிறைவில் அத்துவிதமாகக் கலத்தலைச் செவியறிவுறுப்ப விரும்புவாய்.

(வி - ம்.) ஆரணம் - மறை; நகரமெய்யின் மேலடுத்த ஆரணன் ந்+ஆரணன் - நாரணன்; திருமால். (௪௫௨)

என்று வேண்டின னளித்தன மெனவிறை நவின்று
நின்ற வீரர்க டமக்கெலா நெடிதரு ளுதவி
ஒன்ற வவ்வவ ரிடங்களிற் செல்கென வுறுத்தான்
வென்றி வீரர்க ளனைவரும் மெலிவொரீஇ யிருந்தார்.

(இ - ள்.) என்று குறையிரந்து வேண்டினன். அங்ஙனம் வேண்ட இறைவன் அளித்தோம் என்று திருவாய்மலர்ந்தருளி ஆண்டுநின்ற ஏனைய வீரர்களுக்கெல்லாம் மிக்கவருளினைச் செய்து அவ்வவர் தங்கும் பாடிவீட்டின்கட் செல்லக்கடவீர்களெனக் கட்டளையிட்டனன். வென்றியினையுடைய வீரர்கள்யாவரும் போரானுளவாகிய மெலிவுநீங்கி யிருந்தனரென்க.

(வி - ம்.) இறை - முருகன். ஓரீஇ - ஒருவி; நீங்கி. (௪௫௩)

வேறு

நந்தாத வாண்மைக்கு நாயகமா மைந்தனுருச்
சிந்தாக் கிடந்தா னெனச்சிலர்போய்ச் செப்புதலும்
அந்தோ வெனச்சூர னாவி முழுதழிந்து
நொந்தா னழுதா னுவன்றுன் பலநினைந்தான்.

(இ - ள்.) சண்டிவ்வாறாகச் சூரன்கெடாத வாண்டகைமைக்கு நாயகமாகிய மகன்வடிவஞ் சிதறுற்றுக் கிடந்தனனென்று அறிந்த சிலர் போய்ச் சொல்ல ஐயோவென்று உயிர்முழுது மழிந்து நொந்து அழு தனன். பலப்பல வார்த்தைகளைச் சொல்லி எண்ணாத வெண்ணமெல் லாம் எண்ணினனென்க.

(வி - ம்.) நந்தாத - கெடாத. சிந்தா - சிந்தி. நொந்தான், அழுதான், நுவன்றுள் – எச்சமுற்றுக்கள். (௪௩௪)

கோயில் விலாவம் பணையா லொளிகுறையப்
பாய நகருந்தன் பாடழிய வெவ்வயினும்
பேயு நரியும் பிணமு முடற்குறையும்
தாய குருகின் றமரிப்பு மிக்கதே.

(இ – ள்.) சூரனுறையுள் அழுகையாகிய வாத்தியத்தால் ஒளி குன்ற எண்டிக்கினுந் தன் புகழ் பரந்த நகரமுந் தன் பெருமைகெட, எல்லாவிடங்களிலும் பேய்களும், நரிகளும், பிணங்களும், உடற்குறையும் பிணங்களை யுண்ணத் தாவிய புட்களின் முழக்கமு மிக்க தென்க.

(வி - ம்.) மிக்கதென்னுஞ்சொல் பேய்முதல் தமரிப்பு என்னுஞ் சொல்லிறுதியாகிய சொல்லோடு தனித்தனி சென்றியைந்துநின்றது. விலாவம் - அழுகை. இதனை "மிகைநலத் தேவிதானே விலாவணை நீக்கினுளே" என்னுஞ் சிந்தாமணி மண்மகளிலம்பகச் செய்யுளடியானுணர்க. (௪௩௫)

தேவர்சிறை செய்த திறலோன்ம னிந்திரன்முன்
மூவரு மஞ்சு முதல்வன்மன் வெள்ளணிநாள்
மேவிக் கதிரை வெகுண்டயனூர் வந்திரந்த
காவலன்ம னென்றவுணர் காவலன்மா ழாந்தளவில்.

(இ - ள்.) இப் பானுகோபன் இந்திரனுக்கு முன்னர்த் தேவர்களைச் சிறைப்படுத்திய வலியினையுடையான்; அவ்வலி யிதுபொழுது கழிந்தது. பிரமன், விண்டு, உருத்திரன் ஆகிய மூவரும் அஞ்சுதற்கேதுவாகிய முதல்வன்: அம்முதன்மை யிதுபொழுது கழிந்தது. வெள்ளணிநாளின் வெங்கதிர்க் கடவுளைப்பொருந்திச் சினந்து அச்சினம் நீங்கிப் பிரமன்வந்து இரத்தற்கேதுவாகிய தலைவனுவான்; அத்தலைமை யிதுபொழுது கழிந்ததென்று அவுணர்கள் தலைவனுகிய சூரன் மயங்கியபொழுது என்க.

(வி - ம்.) இதுதிணை : காஞ்சி. துறை : மன்னைக்காஞ்சி. வெள்ளணி - பிறந்தநாளிற் செய்யுமொப்பனை; இதனை "வெள்ளணி யணிந்த ஞான்றே வேந்தர்தம் முடியிற் கொண்ட" சீவகசிந்தாமணி காந்தருவதத்தையா ரிலம்பகச் செய்யுளடியானு முரையானுமுணர்க. (௪௩௬)

துண்டப் படுமுறுப்புச் சோரா தெடுத்திரதம்
கொண்டங் குறுப்பக் குமரன் றனைக்குறுகிப்
புண்டங் குடலுமரப் பொந்தனைய நெஞ்சகமும்
கண்டங் கினைந்திதனைக் காமி னெனக்கிளந்தான்.

(இ – ள்.) பானுகோபனது துண்டமாகிப் பொருந்திய உறுப்பினைச் சோர்வில்லாமற் போர்க்களத்தினின்று மெடுத்துத் தேரிற் கொண்டுவந்து சேர்ப்ப, குமரனைச்சூரன் அணுகிப் புண்டங்கிய வுடலினை

யும் கண்கள் பார்க்கலான் மரப்பொந்தினையொத்த நெஞ்சினையுங் கண்ணற்ற இதயமென்னெனயிலிட்டுக் காமின்கோள் எனக் கரைந்தனனென்க.

(வி - ம்.) சோராது - எஞ்சாது. குமரன் - மகன். இனைந்து - வருந்தி. (சஙஎ)

ஆருப் பெருந்துயர மாறிச் சினம்விறி
மாருக வந்தார் வளமுழுது மோரிமைப்பில்
பாருடு வெங்களத்தின் றெம்பியாற் பார்வியப்ப
நீருக்கு வேனென்று விட்டா னெடுந்தூது.

(இ - ள்.) சூரன் ஒருகாலத்துங் தணியாத மிக்கதுயரந் தணிந்து சினம்விஞ்சி எனக்குப் பகையாகவந்தவர் செல்வமுழுது மோரிமைப் பொழுதத்துப் பருந்தினங்கள் பொருந்துகின்ற பறந்தலையின்கண் இன்று என்றம்பியாகிய சிங்கமுகனால் இந்நிலவுலகம் வியப்பினையடையப் பூழி யாக்குவேனென்று சொல்லிப் பெரிய தூதுவரை அவன்பா லேவினனென்க.

(வி - ம்.) விறி - மிக்கு. வளம் - செல்வம். பாறு - பருந்து. எம்பி - சிங்கமுகன். பார் - ஆகுபெயர். (சஙஅ)

கேட்டா னரிமுகத்தோன் கிட்டியதூ தாற்கேடு
வாட்டா முகமு மனமு நனிவாட்டிக்
கோட்டானை வாட்டானைக் கொய்யுளைமாப் பன்மணித்தேர்ச்
சேட்டா ரிலக்கவெள்ளச் சேனை யொடுமடுத்தான்.

(இ - ள்.) சூரன் பானின்றும்போந்த ஒற்றர்களால் ஆண்டு நிகழ்ச்சியுற்ற கேட்டினைக்கேட்டுப் பகைவரா னொருகாலத்தும் வாட்டஞ்செய்ய வொண்ணாத முகத்தினையும், மனத்தினையும்வருத்தி மருப்பினையுடைய யானையும், வாளினையுடைய தானையும், கொய்து கட்டிய தலையாட்டமைந்த பிடரிமயிரினையுமுடைய பரிகளும், பலமணிகள் பதித்ததேரும், பெருமைபொருந்திய இலக்கவெள்ளஞ் சேனையுமாகிய இவற்றிேனாடு பொருந்தினனென்க.

(வி - ம்.) வாட்டா - ஈறுகெட்டபெயரெச்சம். நனி - மிகவும். வாள் + தானை = வாட்டானை என்க. சேடு - பெருமை. (சஙகூ)

பூமகட்குத் தன்னகரும் பொன்னகரந் தவ்வைக்கு
மாமுறைமுன் வைத்த வடைவிற் பிறழ்வித்த
கோமகனைத் தாழ்ந்தான் குறையுரைப்பக் கேட்டினைந்தான்
ஈமணந்துய் யுங்கொ லெரிசிறிய தென்றென்ருன்.

(இ - ள்.) மலர்மகட்குத் தன்னகரமும், பொன்னுலகமும் அவள் தமக்கைக்கு மாகுமுறைமையை முன்னரமைத்த அடைவினின்றும் பிறழச்செய்த கோமகனாகிய சூரனைவணங்கினன். அவன்குறைபாட்டினைச் சொல்லக்கேட்டு வருந்தினன். எரிசிறியதென்றுகருதி ஈயானது அவ்வெரியைப் பொருந்தின் இறவாது பிழைக்குமோ வென்றனனென்க.

(வி - ம்.) தேவர்கள்பா லியற்கையா யமைந்த நிலைபெற்ற திருவினைத் தனக்காக்கி அத்தேவர்க்கு வறுமையினை முன்னர் அளித்த சூரன் இந்நாள் முருகனோடு மாறுற்றுத் திருவிழந்து வறுமை எய்தற்பாலன் என்பார் "அடைவிற் பிறழ்வித்த கோமகன்" என்றார். (௬௯0)

இருதற் கியைந்த விறுமாப் புரையமிழ்நாய்
மிகுதற் கியைந்தவுரை மெய்ம்மைவிட மாயிற்றே
நகுதற் கிடமாய் நயந்தவிறன் மைந்தரும்போய்த்
தகுதற் கமைந்த படைபலவுஞ் சாம்பினவே.

(இ - ள்.) அண்ணலே! நீகேடடைதற்கேதுவாகப் பொருந்திய அறிவிலிகள் செம்மாந்துகூறிய பயனில்சொற்கள் அந்நாளுனக் கமுதாக, யாவரினும் மேம்பாடடைதற்கேதுவாகப் பொருந்திய யான் கூறிய அறிவுரைகள் உண்மையாகப் பொருந்திய நஞ்சுபோலாயிற்றே என்செய்யலாம். இவையன்றியும் பகைவர்யாவரும் நம்மைக்கண்ணுற்று அவமதித்துச் சிரித்தற்குக் காரணமாக வீர முதலிய செயலினைக் கண்ணுற்று யாவரும் விரும்பத்தக்க மக்களுங்கெட்டுப் போர்க்குத் தகுதியென்று கண்ணுற்றோர் கூறுதற்குப் பொருந்திய படைகள்யாவுங் கெட்டனவன்றோ.

(வி - ம்.) இடுதல் - தாழ்தல்; கேடடைதல். மிகுதல் - மேம்பாடுறல். சாம்பின - அழிந்தன. (௬௯௧)

பல்ல நினைந்தென் படைகொண் டிடங்கழிப்பல்
வெல்ல வலனேல் விளங்கெ னுருக்காண்பை
கல்லினுங் காண்ட லரிதாங் கடந்திலனேல்
வல்லவ வென்று வலித்தான் விடைகொண்டான்.

(இ - ள்.) அண்ணலே! இனிப்பலவாறுகச் சிந்தனைசெய்வதனாற் பயனொன்றுமில்லை; படையொடு சென்று பகைவரை யனுகுவேன் இறைவன்றிருவருட் செயலான் போரின்கண் வெற்றியுறுவேனாயின் விளக்கமுறுகின்ற என்வடிவினை இனிக்காணக்கடவை. யான்பகைவரை வெல்ல வல்லமையிலேனாயின் என்னுருவினை (பீடும்பெயரும் வரைந்து வீரர்க்கு நாட்டுங்)கல்லினிடத்துங்காண்டற் கருமையாகும். வன்மையையுடையவனே யென்றுகூறிப் போரினுக்கு விடைபெற்றன னென்க.

(வி - ம்.) கன்னடுதலாவது பட்டவீரன் பீடும்பெயரும் கல்லின் வரைந்து கோவில் எடுப்பித்து அவன் சுற்றத்தார் முதலியோர் வழிபாடு செய்தல். நமக்கு எல்லா முதன்மையும் செல்வமும் பிறவும் வழங்கிய இறைவன்றிருக் குமரனைப் பகையாகக்கருதிப் போர் தொடங்கினமையால் நல்வழியிலுள்ளார் யாவரும் பொன்றுதலிற் சிறிதும் ஐயமின்றும். ஆதலால் நம் பீடும்பெயரும் வரைந்து கன்னாட்டற்கு ஒருவருமிலராகி இறப்பது சரதமாகலான் என்னை அண்ணலே "கல்லினுங் காண்டலரிதாகும்" என்று கூறினானென்க. (௬௯௨)

வேறு

பாக்கிய மினியின் றென்னுப் பயில்பெரு மனையுட் புக்குப்
போக்கியப் பொருள்க ளெல்லாம் பொலியக்கை தொட்டு மோடு

விக்கிவர் பணிகள் சால மெய்ப்படுத் திணர்த்த தும்பைப்
பூக்குரு முடிக்கண் வேய்ந்து போர்த்திருக் கோலங் கொண்டான்.

(இ - ள்.) இனி யாம் இவ்வுலகின்கண் ணிருக்கும் பாக்கியமில்லை யென்றுகருதி எல்லாப்பொருள்களுந் தங்கிய தன் பெரியமனையின்கட் சென்று உணவுக்குரிய பொருள்களையெல்லாம் பொலிவுறவுண்டு வயிற்றினை நிறையச்செய்து புதிய அணிகலன்களை உடலின்கண் அணிந்து கொத்தினையுடைத்தாகிய நிறம்பொருந்திய தும்பைமலரினை வெற்றிகருதி முடியின்கட்சூடிப் போரினுக்குரிய அழகிய கோலத்தினைக் கொண்டனனென்க.

(வி - ம்.) பாக்கியம் - தெய்வம். "பலர்கொள்வர் பாக்கியத்தால்" என்னுந் திருக்குறளா னுணர்க. அலரறிவுறுத்தல் (க). கைதொடல்- உண்ணல். மோடு - வயிறு. "மோடு மேடுதரம்" என்னும் நிகண்டா னறிக. விக்கல் - ஈண்டு நிறையச் செய்தல். வம்பு - புதுமை. மெய்ப் படுத்தல் - மெய்யின்கண்ணணிதல். குரு - நிறம். "குருவுங்கெழுவு நிறனா கும்மே" என்பது ஒத்தாகலின் (தொல்-உரி-இயல்.) (௪௬௩)

பற்பல படைகைக் கொண்டு படர்பெரு மணித்தே ரூர்ந்து
விற்பயில் கவிகைக் காடும் விண்டுழாம் பதாகைக் காடும்
எற்பயில் கவரிக் காடு மீண்டபப்பல் லியமி யம்பச்
சொற்படு சேனை வெள்ளஞ் சூழ்தரப் பெயர்ந்து போந்தான்.

(இ - ள்.) பலப்பல படைக்கலங்களையும் கையின்கட் பற்றி விரைந்த செலவினையுடைய பெரியமணிகள் கட்டிய தேரினைச் செலுத்தி, ஒளிதங்கிய குடைகளின் கூட்டமும், வானைத்துழாவுகின்ற கொடிகளின் கூட்டமும், ஒளிதங்கிய கவரியின் கூட்டங்களும் நெருங்கப் பலவாத்தியங்களும் ஒலிக்கப் போர்தோறும் வென்றியைப் பெறுதலான் புகழமைந்த எண்ணிறந்த படைகள் சுற்றத் தன்னகரினின்றும் நீங்கிச் சென்றனன்.

(வி - ம்.) வில்-ஒளி. காடு ஈண்டுக்கூட்டம். எல்-ஒளி. "எல்லே விளக்கம்" என்பது ஒத்தாகலின் (தொல்-சொ. இடை-சூ. 7) வெள் ளம் - மிகுதி; இனி வெள்ளமென்னும் ஓரெண்ணுமாம். இதனை 'ஐயம் பல்லென வரூஉம்' என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தா னுணர்க. (தொல் - எழுத்து. சூ.) (௪௬௪)

பாடகத் திவவு நல்யாழ் மாமுனி குமரற் றுழா
ஆடக வரைபோ னீண்ட வரிமுகன் போர்க்குப் போந்தான்
நாடக மவன்போ ராக்கி நலிதரு மமரர் தாளில்
பாடக நீகளஞ் சீத்துப் பாணியா தருள்க வென்றான்.

(இ - ள்.) யாழுறுப்பினோடியைந்த நரம்பினையுடைய நல்ல யாழினைத் தவத்தாற் பெரிய நாரதமுனிவன் குமரப்பெருமானை வணங்கி, அடிகேள்! பொன்மலை போன்று நீண்ட மெய்யினையுடைய சிங்கமுகன் போருக்குப் போந்தனன். அவனியற்றும் போரினை அடிகள் நாடகமாகச் செய்து (அவனும் அவன் முன்னோனும் பல்லூழி

காலம் சிறையின்கட்பட்டு) வருந்துகின்ற வானவர்கள் காலின்கண்ணுள்ள பாடகம்போன்ற தளையைத் தறித்துக் காலநீட்டியாது அருள் செய்யக் கடவை யென்றான்.

(வி - ம்.) மாடகம் - முறுக்காணி. திவவு - நரம்பு. பாடகம் - பெண்களணியும் ஒருவகைக் காலணி. இவ்வணி காலைவிடாது சூழ்ந்து விலங்குபோன்று கிடத்தலின் 'பாடக நிகளஞ்சித்து' என்றார். இதனை "பாடகம் போலச்சூழ்ந்த பழவினைப் பயத்தினாலே" என்னும் சிந்தாமணிச் செய்யுளா னறிக. (நாமகள்இலம்.) பாணித்தல் - காலம் நீட்டித்தல். நிகளம் - தளை. (சஎ0)

தேரினைக் கொணர்தி ரென்று செம்மலா ரருளிச் செய்ய
வீரரில் வீர னப்போர் வேண்டினன் விடைபெற் றேகப்
பாரிட ரிலக்கர் வீரர் பலருமாங் குடங்கு சென்றார்
போரடு களத்தை யுற்றார் புவனங்க ளேங்க வார்த்தார்.

(இ - ள்.) இங்ஙனம் நாரதமுனிவன் விண்ணப்பஞ் செய்ததனைத் திருச்செவி மடுத்துத் தலைவனாகிய முருகக்கடவுள் உழையரை நோக்கித் தேரினைக் கொண்டுவாருங்கோள் என்று திருவாய்மலர்ந்தருள, அஞ்ஞான்று வீரருள் வைத்து வீரனாகிய விரவாகு என்பான், சிங்கமுகனோடு செய்யும் அப்போரினைத் தான் பொர விரும்பினனாகிய பிரியாவிடை பெற்றுச் செல்லப் பூதகணங்களும் இலக்க வீரரும் ஏனைய வீரர் பலரும் அவனோடு ஒருசேரச் சென்று போர்க்களத்தைப் பொருந்தினராகி உலகங்களெல்லாம் ஏக்கமடைய வீரமுழக்கஞ் செய்தனர்.

(வி - ம்.) செம்மல் - தலைவனாகிய முருகன்; உடங்கு - ஒருசேர. பாரிடர் - பூதர். (சஎக)

கைவகுத் திருவர் தாமுங் கலந்தனர் படைக ளுய்த்தார்
ஐவகை முடியுங் குஞ்சி முடிகளு மற்று வீழ்ந்தார்
மெய்வகை யுறுப்புத் தீர்ந்தார் வீரமும் வரமு மற்றார்
உய்வகை யுறக்கங் கொண்டா ருலப்பில ரிருவர் மாட்டும்.

(இ - ள்.) இருபக்கலிலுமுள்ள படைத்தலைவர்கள் படையினைப் போர்க்குரிய நிலையில் அணிவகுத்து ஒருவரோடொருவர் கலப்புற்றுப் படைக்கலங்களைச் செலுத்தினர். அங்ஙனஞ் செலுத்திய வளவில் ஐவகையாகிய முடியுறுப்புக்களும், மயிர்முடியு மறுதலான் நிலத்தின் கண் வீழ்ந்தனர் சிலர். இருபக்கலிலுமுள்ள அளவில்லாத வீரர்கள் தங்களுடலின்கண் உள்ள பலவகைப்பட்ட உறுப்புக்கள் நீங்கப்பெற்றவராய் இயற்கையானமைந்த வீரத்தினையும், செயற்கையாற் பெற்ற வரத்தினையுமிழந்து பிழைக்கும் வகை யுறங்கிப்போதலைக் கொண்டாரென்க.

(வி - ம்.) முடியுறுப்பைந்தாவன தாமம், மகுடம், பதுமம், கிம்புரி, கோடரம் என்பனவாம். தங்களுக்கு உண்டியு முடையு முறையுளு முதவிப் பாதுகாத்த தந்தலைவர்கட்கு வென்றிதரும் பொருட்டு உயிர் பிழைத்திருத்தல் கருதாது உயிர்துறந்தன ரென்பார். "உய்வகை யுறக்கங் கொண்டார்" எனறார். உய்வகை யுறக்கங் கொண்டா

ரெனவே—உய்யாதிறத்தலைக் கொண்டாரென்பது போதரும். இனி யொருசாரார் "உய்வகை யுறக்கங் கொண்டா" ரென்பதற்கு உய்தற் குப் பொய்யுறக்கங் கொண்டாரெனவுங் கூறுவர். அங்ஙனங் கூறல் லார் இலக்கணத்திற்கு மாறுகோடலான் பொருத்த மின்றெனவிடுக்க. கை-படை. இதனை "கைபடை" யென்னும் நிகண்டானுணர்க. குஞ்சி-ஆண் மயிர். (௪௬௭)

பூதர்க ளிரியத் தாக்கிப் பொங்கிய வவுணர் சேனை
மீதுறக் கண்ட சிங்கன் வெய்தொரு தண்ட மேந்தி
மோதுபு சிரங்க டோள்கண் முரிந்துக வுழக்குங் காலைச்
சாதனிற் களித்தே னென்று தசமுகத் தவுண னேற்றான்.

(இ-ள்.) பூதப்படைகள் வெங்கிட்டோடும்வண்ணம் மோதிக் கிளர்ச்சியுற்ற தானவர் படை தன்மீது வரக்கண்ட சிங்கனென்பவன் விரைந்து ஒரு தண்டத்தினைத் தாங்கி மோதித் தலைகளும், தோள்களும் கெட்டு கீழே விழும்வண்ணம் கலக்குஞான்று சாதற்றொழிலை நினக்கிப் பொழுதே தந்தேனென்று பத்து முகங்களையுடைய தானவனொருவன் உந்தெதிர்ந்தான்.

(வி-ம்.) வெய்து-விரைந்து. சாதல் இரண்டாவதன் றொகை. நிற்கு-உனக்கு. தசம்-பத்து. (௪௬௮)

வேறு

விடுசரந் தண்டினல் விலக்கிப் பாய்ந்தவன்
தொடுகவ யந்தபத் துளங்க வோச்சினன்
நெடுமொழிச் சிங்கனந் நேர லானொரு
கடுமுரட் டண்டமேற் கடவி யார்த்தனன்.

(இ-ள்.) பகைவர்மாட்டு அஞ்சாது கூறும்தன் மேம்பாட் டுரையையுடைய சிங்கனென்பவன் தசமுகன்விட்ட கணைகளைத் தண் டத்தினால் விலக்கி அவன்மேற் பாய்ந்து அணிந்திருந்த மெய்ப்பை கெட நடுங்கும்படி யடித்தனன். பகைவனாகிய தசமுகன் ஒப்பற்ற மிக்கவலி யினையுடைய தண்டமொன்றினைச் சிங்கன்மேற் செலுத்தி வீரமுழக்கஞ் செய்தானென்க.

(வி-ம்.) கவயம்-உடம்புக்கிடு. தப-கெட. ஓச்சல்-அடித் தல். கடுமுரண்-மிக்கவலி. (௪௬௯)

மருமமுற் றக்கதை மறிந்து விழ்ந்தது
குருதியுண் கணிச்சியைக் கொள்ள வேயினன்
கரதலத் தண்டினுற் கணிச்சி சிந்திப்போய்ப்
பொருசிலை தகர்த்தனன் பூத நாயகன்.

(இ-ள்.) அவன் கடவிய அத்தண்டம் சிங்கன் நெஞ்சின்கட் பட்டுக் கெட்டுக் கீழே விழ்ந்தது. அக்கணமே தசமுகன் குருதியை

யுண்ணும் மழுப்படையைச் சிங்கனுயிரைக் கொள்ளும்வண்ணம் செலுத்தினன். பூதநாயகனாகிய சிங்கன் தன் கையின்கண்ணிருந்த தண்டத்தினால் மழுப்படையைக் கெடுத்து அவனையணிமிப் போர் செய்தற்குரிய வில்லினையும் ஒடித்தனன்.

(வி - ம்.) கணிச்சி - மழுப்படை. பூதநாயகன் சிந்தித் தகர்த்தனனென்க. (௪௭௦)

தானவன் வேல்விடச் சக்க ரத்தினன்
மானவ னழித்தனன் வார்ந்த தண்டவன்
கானுரத் திட்டனன் கலங்கிச் சிங்கன்கை
யானிறத் தெற்றின னவுணன் றுஞ்சினன்.

(இ - ள்.) சிங்கன் வில்லைத் தகர்த்தவுடன் தசமுகனென்பான் வேற்படையைச் செலுத்தப் பெருமைபொருந்திய சிங்கன் ஆழிப்படையான் அவ்வேற்படையைக் கெடுத்தனன். நேரிய தண்ட மொன்றினைச் சிங்கன் வாசனையோடு கூடிய மாலையணிந்த மார்பின்கண்ணே விடுத்தனன். அங்ஙனம்விடச் சிங்கனென்பான் கலக்கமுற்றுத் தன் கைகளால் தசமுகன் மார்பின்கண் அறைந்தனன். அவுணனாகிய தசமுகனிறந்தான்.

(வி - ம்.) உரம் - மார்பு. கான் - வாசனை. அஃதாகுபெயராய் மாலைக்காயிற்று. நிறம் - மார்பு. சிங்கன் கலங்கிக் கையாலெறிந்தனன் அவுணன்றுஞ்சினனென வினைமுடிபு செய்க. (௪௭௧)

வேறு

படைக்கு நாயகன் வீழ்தலு
மவுணர்கள் பாரிடர் தனிவீரம்
உடைக்க நேர்ந்தன ரிலக்கரு
ளனகனென் றுரைப்பவன் சிலைவாங்கித்
தொடைக்க னந்தவா ளிகள்படுத்
துழக்கினன் சோரிவெண் ணிணம்வெளவி
நடக்க லுற்றது துன்முக
னென்பவ னச்சர வெனக்கண்டான்.

(இ - ள்.) படைத்தலைவர்கள் வீழ அவுணர்களைப் பூதர்கள் ஒப்பற்ற வீரத்தினைக் கெடுக்கப் பொருந்தினர். அஞ்ஞான்று இலக்க வீரருள் வைத்து அனகனென்று எல்லாராலுஞ் சிறப்பித்துச் சொல்லப்படுமவன் வில்லினை வளைத்து ஒவ்வொரு தொடுப்புக்குப் பலவாளிகளைக் கோத்துக் கலக்கினான். அங்ஙனங் கலக்கியதா லுளவாகிய புண்ணீரானது வெள்ளிய தசைகளை ஈர்த்துக்கொண்டு செல்லத் தொடங்கியது. அங்ஙனம் நடத்தலை நஞ்சினையுடைய அரவினையொத்த துன்முகனென்னும் அவுணர் தலைவன் கண்ணுற்றனன்.

(வி - ம்.) தொடை - தொடுத்தல். அனந்தம் - எண்ணிறந்த. (௪௭௨)

நூறு நூறுரு வொவ்வொரு
　　பூதர்க்கு நொடிக்குமு னெடுத்துற்றுப்
பாறு தாழ்சிலை வணக்கினன்
　　சிலைத்தொழில் பயிற்றின னதுகண்டு
சீறும் வீரமார்த் தாண்டன்சே
　　தனப்படை செலுத்தினன் றனிநின்று
கூறு துன்முகன் சரமழை
　　பொழிந்தனன் கோணையா னவைமாற்றி.

(இ - ள்.) அங்ஙனங் கண்ட துன்முகனென்பான் (இறைவன் படையாகிய) ஒல்வொரு பூதர்களுக்கு முன்னர் (தன் மாயையால்) நொடித்தற் பொழுதளவிற்கு முன்னர் நூறு நூறு வடிவினைக்கொண்டு பொருந்திப் (புலால் நாற்றங்கருதி) பருந்துவந்து தங்குஞ் சிலையினை வளைத்தானாகி (வில்லில் அம்புகளைத் தொடுக்குஞ்) செயலைச் செய்தனன். அங்ஙனமவன் அம்பு தொடுத்தலைக் கண்டு சீறுதலைக்கொண்ட வீர மார்த்தாண்ட னென்பான் பேரறிவை யுளவாக்கும் படையொன்றினைச் செலுத்தினன். (யாவரும் புகழ்ந்துகூறுந் துன்முகனென்பான் அம்பு மழையைச் சொரிந்தனன். வலியுடையனாகிய வீரமார்த்தாண்டன் அவ் வம்பு மழையை நீக்கி.

(வி - ம்.) பாறு - பருந்து. சேதனம் - அறிவு. கோணையான் - வலியுடையான். (௪௭௩)

வேறு

வாளி யேழனுல் வார்சிலை துணித்துவான் கவயம்
வாளி யொன்றனுன் மாற்றிமாற் றலனுட லெல்லாம்
வாளி யெண்ணில துறுத்தனன் மயங்கிவீழ்ந் தெழுந்து
வாளி லாதவன் மாயையா னுருமறைந் தகன்றான்.

(இ - ள்.) வீரமார்த்தாண்டன் ஏழ் அம்புகளான் துன்முகன் வில்லினைத் தடிந்து ஓரம்பினால் மேலாகிய அவனுடம்புக் கீட்டினை நீக்கி அப்பகைவன் உடலெங்கணும் அளவில்லாத அம்புகளைச் செறித்தனன். அங்ஙனஞ் செறித்தவளவில் ஒளியிலனாகிய துன்முகன் மயங்குதலுற்றுக் கீழே வீழ்ந்தெழுந்து மாயையின் வடிவைக் கரந்து நீங்கினன்.

(வி - ம்.) கவயம்-உடம்புக்கீடு. வாள்-ஒளி. இதனை "வாளொளி யாகும்" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தா னறிக. (௪௭௪)

தலைவர் பட்டதுந் தன்படைக் கேட்டையுங் காணுக்
கோலைமு கத்தவெங் கூற்றெனு வரிமுகன் குறுகி
மலைம ரப்படை பூதர்கள் வழங்கின நாசி
உலைவை பட்டுமிக் குடைவன திரிவன வுயிர்த்தான்.

(இ - ள்.) சிங்கமுக னென்பான் தன் சேனைத்தலைவர்க ளிறந்ததனையும், படையழிந்ததனையுங் கண்டு கொல்லுந் தொழிலைத் தன்னிடத்தே யுடைய (உடலையும் உயிரையும்) கூறுசெய்பவனாகிய தென்றிசைக்கோனைப் போல அணுகிப் பூதர்கள் விட்டனவாகிய, மலை, மரம், அம்பு முதலியவைகள் தன் மூக்கினின்றும் புறப்படுங் காற்றான் மோதப்பட்டு மிகவு முடைவுற்றுச் சுழலும்படி பெருமூச் செறிந்தான்.

(வி - ம்.) சிங்கனொருவன் பூதர்களால் மலை, மரம் முதலாக வழங்கப்பட்டன யாவும் தன் மூக்கின் காற்றுப்பட் டுடைவனவாகவும், திரிவனவாகவும் உயிர்த்தா னென்க. உலவை - காற்று. (௨௪௯)

விம்மி தத்தராய் மேலும்போர் மலைத்தெழு பூதர்
தம்மை வன்கையாற் சேர்த்தனன் றகர்த்தனன் றுகைத்தான்
அம்ம வோவென வமரர்க ளிரிதர வோக்கி
மும்மை வையமும் பூதர்தம் பிணமுகப் பித்தான்.

(இ - ள்.) மேலும் மேலும் ஆச்சரியத்துடன் போரினைச் செய்தெழுகின்ற பூதப்படையினைத் தன் கையாற்சேர்த்துத் தகர்த்தனனாகித் துவைத்தனன். தேவர்கள் அம்மவோ வென்று மொழிக் குறிப்புடனோட அம்புகளைச் செலுத்தி மும்மை வையகமும் பூதர்கள் பிணம் உயரும்படி செய்தன னென்க.

(வி - ம்.) மூன்று வையகமும் பூதர்கள் பிணமுயரச் செய்தன னென்க. துகைத்தல் - துவைத்தல். ஓக்கி - செலுத்தி. (௨௫௰)

சார தக்குழா முலைதலுந் தனதுபொற் றேரைச்
சார வாளரி முகத்தவன் றன்னெதிர் சார்ந்து
சார ருந்திறற் கண்ணனென் றுரைத்திடுந் தலைவன்
சார வார்கழு முள்ளினைத் தடவுரத் திட்டான்.

(இ - ள்.) பூதக்கூட்டங்கள் வருந்த (அப்போர்க்களத்தினிற்) பொருந்திய அந்தச் சிங்கமுகன் முன்னர்ப் பிறரா லடைதற்கரிய வலியினையுடைய கண்ணனென்று யாவரும் போற்றத்தக்க தலைவன் தன்னழகிய தேரினொடு பொருந்தி அச்சிங்கன் பெருமை பொருந்திய மார்பின்கண் நீண்ட மழுப்படை பொருந்தச் செலுத்தின னென்க.

(வி - ம்.) பூதர்கள் உலைய சார் அவ் வாளரிமுகத் தவனெதிர் தேரொடு சார்ந்து உரத்துக் கழுமுள்சார இட்டனனென விளைமுடிவு செய்க. கழுமுள் - மழுப்படை. தேரை வேற்றுமை மயக்கம். (௨௫௧)

கழுமு னுண்டுக ளாயது கைக்கதை யோச்சி
விழுவ தாக்கினன் வலவனை வெகுண்டரி முகவன்
பழுதி லாக்கதை யொன்றனுற் கண்ணனைப் பாற்றி
முழும ணிப்பொலந் தேர்க்கொரு பாகுமுன் விட்டான்.

(இ - ள்.) அவன் மார்பிற்பட்ட மழுப்படை நுண்ணியதுகளாயது. (அதனைக் கண்ணுற்று) கையின்கண்ணிருந்த கதையை வீசிச்

சிங்கன் சிறகையொலி விழுவதாம்படி செய்தனன். சிங்கமுகன் சீற்ற மாற்றாச் சிறிதுங் குற்றமிலதாகிய ஒரு தண்டத்தால் கண்ணனைக் கெடுத் தட் டொன்றோர்செய்து பருத்த மணிகள் அழுத்திய தேரினுக்கொரு பாகனை முன்னர் நிறுவினன் என்க.

(வி - ம்.) ஒச்சி - வீசி. அரிமுகன் - சிங்கமுகன். பாகு-பாகன். (௨௭௮)

குன்றெ டுத்துமேல் விடுத்தனன் சுமாலியக் குன்றம்
நன்று பற்றிமீட் டுய்த்தன னலிந்தனன் சுமாலி
ஒன்று தண்டினன் றண்டியென் றுரைப்பவ னோடிச்
சென்று சிங்கனை யெருக்கினன் சிதர்ந்தது தண்டம்.

(இ - ள்.) இந்நிகழ்ச்சியைக் கண்ணுற்ற சுமாலி யென்பவன் ஒரு மலையினை எடுத்துச் சிங்கன்மேல் விடுத்தனன். சிங்கன் அக்குன்றினை நன்றாகப்பற்றி அதனையே மீளச் சுமாலியின்மீது செலுத்தினன். சுமாலி வருந்தினன். பொருந்தும் தண்டமுடைமையாற் றண்டியென்று யாவரினும் மீப்படச் சொல்லும் தகுதியுடையான் ஓடிச்சென்று சிங்கனை யடித்தான். அச்சிங்கன்மேற் பட்டுத் தண்டஞ் சிதைவுற்றது.

(வி - ம்.) ஒன்று தண்டினன்: வினைத்தொகை. எருக்கினன் - புடைத்தான். (௨௭௯)

தாக்கி னன்கரத் தானுமார் பத்திடைத் தண்டி
ஊக்கி னனவன் றுளினு லுகந்துபின் றணிவான்
மேக்கு யர்ந்ததிண் புயந்தொறுஞ் சிரந்தொறு மிதித்தான்
போக்கி னன்கரத் தீயெனத் தண்டியும் புரண்டான்.

(இ - ள்.) (தண்டி யென்பவன் தண்டந்தகர்தலும்) அச்சிங்க னுரத்திடைக் கையாலடித்தனன். அச்சிங்கன் தன் தாளால் (வானின் கட் செல்லும்வண்ணம்) செலுத்தினன். அங்ஙனம் காலால் வானின் கண்ணுயர்ந்துசென்று கீழிறங்குபவனாகிய தண்டியென்பான் சிங்க முகன்மேலுயர்ந்த தோள்களிலும், தலைகளிலும், மிதித்தலைச் செய்தான். சிங்கன் தண்டா லடித்ததன்றிக் கையாலும்பற்றி ஈயென்னும் பறவை யென்று (கண்டோர் சொல்லும்வண்ணம்) வீசினான். தண்டியென் பவன் புரண்டு வீழ்ந்தன னென்க.

(வி - ம்.) ஊக்கல் - செலுத்தல். ஐயசிறிதென்னையூக்கி யென் பதனு ணுணர்க. உகந்து - உயர்ந்து. "உகப்பே யுயர்வே" யென்னும் தொல்காப்பியச் சூத்திரத்தா னறிக. மேக்கு - மேல். "மேக்கு மேற் றிசை மேலும்பேர்" என்னும் நிகண்டானறிக. (௨௮௦)

அலைக்க முற்றிய தலைவர்க ளின்னண மகல
இலக்கர் முற்றிவண் கணைகைதூ வாமைநின் றெய்தார்
நிலக்கட் குப்புரு நேர்புகுந் துதைத்துகைத் தொடித்துச்
சிலைக்குந் தேர்களைச் சேமத்தே ரொடுமுற்றுஞ் சிதைத்தான்.

(இ - ள்.) சிங்கனைக்கோறற்கு வளைந்த படைத்தலைவர்கள் இங்ஙனமாக நீங்க இலக்கவீரரும் வளைந்து வளவிய கணைகள் ஒழிவில்லாமல் நின்றெய்தனர். சிங்கன் நிலைக்கட்டாவி இலக்கருக்கு நேர்ந்சென்று அவர்களை புதைத்துத்துவைத்து (அவர்கள் விற்படைகளையும்) ஒடித்து ஒலிக்கின்ற சேமத்தேரொடு ஏனைய தேர்களையும், ஏனைய துணைக்கருவிகள் எல்லாவற்றையும் கெடுத்தனனென்க.

(வி - ம்.) முற்றி - அடைந்து. கைதூவாமல் - ஒழிவில்லாமல். உகைத்தல்—துவைத்தல், சிலைத்தல் - ஒலித்தல்; இதனைச் "சிலைத்தார் முரசங்கறங்க, மலைத்தனையென்பது நாணுத்தகவுடைத்தே" என்னும் புறப்பாட்டடியானுணர்க. (உஅக)

மலைத்த வீரர்கள் வலியிகந் தோருமருங் ககல
உலைத்த தானவன் றனதொரு நேரிடை யுகந்தான்
மிலைத்த தும்பையஞ் சிகழிகை வீரரில் வீரன்
அலைத்து மேல்வரு மவுணர்மே லையென வடுத்தான்.

(இ - ள்.) போரினைச் செய்த வீரர்கள் வன்மைநீங்கி யொருபக்கலிலொதுங்கிச்செல்ல அவர்களைவருத்திய சிங்கனென்பான் தனதொப்பற்ற தேரின்கண் உயர்ச்சியற்று விளங்கினன். தன்குஞ்சியில் வெற்றிகருதித் தும்பைமாலை யணிந்தவீரரில்வைத்து வீரனாகிய வாகுவென்பான் வருத்தித் தங்கண் மேல்வருகின்ற அவுணர்கள்மீது விரைவாகப் பொருதினனென்க.

(வி - ம்.) உலைத்தல் - வருத்தல். உகத்தல் - உயர்தல். சிகழி-மயிர்முடி. ஐ : விரைவு. (உஅஉ)

வேறு

வாங்கிய சிலையினன் விடுசர மழையினன்
மண்டில வகைமையி னமர்செய்தான்
தூங்குகை மதமலை யிறுவன விறுவன
துரகத நிரையுடை வனபொற்றேர்
ஓங்கிய வவுணர்க ளுடல்பல துணிபட
வுகுவன வுகுகறை நதியாகி
வீங்கிய பிணநிரை தழுவுபு முடுகுபு
வேலையி லிடுவன திசைதோறும்.

(இ - ள்.) வாகுப் பெயரான் சிலையினைவளைத்து, மழைபோலப் பெரிய அம்புகளைவிட்டு விற்போருக்குக்கூறிய மண்டிலவிலக்கணப்படி போரினைச் செய்தனன். அங்ஙனம் போர் செய்தலான்று மதத்தினையுடைய யானைகள் இறப்பனவாம், குதிரையணிகள் இறப்பனவாம், அழகிய தேர்கள் உடைவனவாம், உயர்ந்த அவுணர்களின் உடல் பல துண்டங்களாகச் சிந்துவன. இந்நிலையில் அப்போர்க்களத்தின் கண்ணின்றும் புறப்பட்ட புண்ணீர் பலநதியாகிப் பருத்த பிணவரிசைகளைத் தழுவி விரைந்து திசைகளிலுள்ள கடலின்கண் அப்பிணங்களை இடுமென்க.

(வி - ம்.) சிலையினன், மழையினன், வகையினன் என்பன எச்ச முற்று. இவைகளைக் "குழலன்கோட்டன் குறும்பல்லியத்தன்" என்றாற் போலக்கொள்க. கறை - புண்ணீர். (௪௮௩)

தூத்தகு மரைமலர் பலதொட ரியதொட
லைகளென வடிகர முடிபல்ல
கோத்தெழு கணைபல வவுணர்கள் குலமக
ளிர்கள்குலை வுறமனை தொறுஞ்செல்லும்
மீத்தழை யுலகவு ணர்கள்வெரு வரவவண்
விரவுறும் பாதல முறைவோர்கள்
பார்த்தல மரநெடு நிலன்கிழித் தெழுங்கொடு
படர்வுறு மரன்மகன் விடுந்தோறும்.

(இ - ள்.) இறைவன் திருக்குமாரனாகிய வாகுப்பெயரான் அம்புகளைச் செலுத்துந்தொறும் அவ்வம்புகள் தூய்மைமிக்க பலதாமரை மலர்களாற்றொடுத்த மாலைகளென்று கண்டோர்சொல்லும் வண்ணம் பலவாகிய அடிகளையும், முடிகளையும், கரங்களையும் கோத்துக்கொண்டு பல அவுணர்கள் சிறந்த மகளிர்கள்வருந்த இல்லங்கடோறுஞ் செல்லாநிற்கும், செழித்த மேலுலகின் கண்ணுள்ள அவுணர்கள் அச்சங்கொள்ளும் வண்ணங் கலக்கும். கீழுலகின்கட் டங்குவோராகிய தானவர்கள் கண்டு மனஞ்சுழல நீண்டநிலத்தினைப் பிளந்து வலிகொண்டு செல்லாநிற்கும்.

(வி - ம்.) தொடரிய என்னும் பெயரெச்சம் தொடலைகளென்னும் பெயரோடு முடிந்தது. அலமரல் - சுழலுதல். (௪௮௪)

கூற்றுற மவுணர்த மிறையவன் குலனெடு
முடிவது குறிக்கொளுற் பனமாகத்
தோற்றிய குருதியின் மழையென விடுகணை
துணியுடல் கொடுநெடு வெளியேக
வூற்றிய வுதிரமெங் கணுமுகு மழையெதிர்
கோடலி னுகுகர மொளிர்புற்ற
நூற்றுவ ரரிமுகன் மதலையர் விரன்செய்
நூழில்கண் டனர்சிலை வளைவித்தார்.

(இ - ள்.) தென்றிசைக்கோனை யொத்த தானவர்கள் தலைவன்தன் குலத்தொடுங் கெடுவதைக் குறித்துக் கொள்ளும் உற்பாதமாகக் காணப்படும் குருதிமழையைப்போல வாகுப் பெயரோன் விடுகின்ற அம்புகள் துண்டஞ்செய்த உடற்குறையினைக் கொண்டு நீண்டவானின்கட்செல்ல அவ்வுடற்றுண்டத்தினின்றுஞ் சொரிந்தபுண்ணீர் எங்கணும் பொழியும் மழையாகும். அம்மழையை எதிர்நோக்கின்ற செங்காந்தளினைப் போலக் கீழ்வீழ்ந்த கரங்களொளிர்தலுற்றன. இங்ஙனம் வாகுப்பெயரான் கொன்றுகுவித்தல் செய்தலைக் கண்ணுற்றுச் சிங்கமுகன்குமாரர்கள் நூற்றுவர் வில்லினை வளைத்தனரென்க.

(வி - ம்.) ஒருதலைவனுக்குப் பின்னர்க் கேட்டினை பறிவித்தற்கு அவன்னாட்டுச் சோரிமழை முதலிய கேட்டின்குறிகள் காணப்படுதல் போல வாகுப் பெயரான் அம்புகள் உடற்றுணியை வானின்கட் கொண்டுசெல்ல அவ்வுடற்றுணியினின்றும் சொரியும் சோரியை மழையாகவும், அவ்வுடற்குறைகளினின்றும் அறுபட்டுகுவனவாகிய கரங்கள் சோரியோ டொளிர்தலை தலைப்பெயலை எதிரேற்ற காந்தளாகவும் உருவகங்கள் செய்தனர். கோடல் - காந்தள். ஒளிர்ப்பு - ஒளிர்தல், தொழிற் பெயர். உதிரம் என்பது மழையென்றும் பெயர்ப்பயனிலை கொண்டது. வளைதல் சிலையின்றொழில். (௪௨௬)

நிரைநிரை யவர்விடு கணைவில குபுசிலை
நெடுகிய விரதமு மொழிவித்தான்
பரைமக னவரிவன் சிலைவேல லரிதெனப்
படர்மதி யினரிது வலையாகில்
வருகென வுடைவளர் சுரிகையை யுரியினர்
வயவர்கள் வயவனு மதுகைக்கொண்
டரவென வெழுதலு மனைவரு மிகலின
ரவருடன் முழுவது நிலன்வீழ்த்தான்.

(இ - ள்.) இறைவியின் திருமகனாகிய வாகுப்பெயரோன் வில்லான் அந்நூற்றுவர் நிரைநிரையாகச் செலுத்திய கணைகளை நீக்கி அவர்கள் நெடியதேரினையும் கெடுத்தனன். அந்நூற்றுவர் இவனைவிற்றொழிலால் வேற லரிதென்று நினைத்த மதியுடையராகி இவ்வாட்டொழிலில் வல்லமையுடையையாயின் வரக்கடவாயென்று இடையின்கண் ணுள்ள வாட்படையினை உருவினர். வீரர்களுள்வைத்து வீரனாகிய வாகுப்பெயரோனும் அவ்வாட்படையைக் கையின்கட்கொண்டு அரவினைப்போலச் சீற்றமுற்று எழ அந்நூற்றுவரும் போர்செய்தனர். அந்நூற்றுவர் உடலினையும் நிலத்தின்கண் வீழ்த்தினனென்க.

(வி - ம்.) விடுகணை: வினைத்தொகை. நெடுகிய - நீண்ட. பரை- இறைவி. வலை - வல்லை. சுரிகை - வாள். வயவர்வயவன் - வீரவாகு. (௪௨௭)

எதிர்வயி னிளையர்த முயிரொரு வனிவிறு
மிதுவிட விழிவினி யெவனேயென்
றதிர்கழ லரிமுக னடவிய தேரொடு
மணுகின னழலுமிழ் விழியோனும்
முதிர்சின மொடுமெதிர் குறுகினன் றாதுறு
முனைமக னிவனல திலையென்று
விதிர்குரல் படவிறன் மொழிகட வினனரி
வியன்முகன் கடவின னிவன்வாளி.

(இ - ள்.) என்முன்னரே என்புதல்வர்கள் உயிர்ஒருவனால் அழியு மிதனைக்காட்டிலும் இழிவு இனிவேறென்னையென்று கூறி ஒலிக்கின்ற

வீரக்கழலினை யணிந்த சிங்கமுகன் செலுத்திய தேருடனே குறுகினுன். அழலினை வெளியிடுகின்ற விழியினையுடைய வாகுப் பெயரினையுடைய வனும் முதிர்ந்த சீற்றத்தோடு மெதிரேசென்ருன். சிங்கமுகன் தூதாக முன்னர்வந்த மனிதன் இவனையன்றி வேறெவருமில்லையென்று நடுங்கும் வண்ணம் ஒலியுளவாக வலிபொருந்திய மொழிகளைக் கூறினுன். வாகுப் பெயரமலன்கணைகளைச் செலுத்தினனென்க.

(வி - ம்.) விதிர் - நடுக்கம். அச்சமுமாம். (௬௮௭)

தடவுர மருவிய வாளிகள் பழுதொடு
தரைவிழ வரிமுக னொருதண்டம்
விடவது துகள்புரி கணைசில வேவுபு
வெங்கணை யாயிர முடியுய்த்தான்
கடவுள ரிடர்தப வருபவ னக்கணை
கரிதலு மரிமுக னொருசூலம்
நடவினன் பலமுறை விடுகணை துமியமு
னணுகிய திவன்சுரி கையினட்டான்.

(இ - ள்.) பெருமைபொருந்திய மார்பின்கட்பொருந்திய கணைகள் பழுதுபட்டுக் கீழ்வீழச் சிங்கமுகன் ஒருதண்டத்தினைச் செலுத்த அத் தண்டத்தினைத் துகளாம்படி செய்யும் கணைகள் சிலவற்றைச்செலுத்தி ஆயிரங்கொடிய கணைகளை முடியின்கண்ணே செலுத்தினன். தேவர்கள் துன்பினைநீக்க வருபவனுகிய வாகுப்பெயரோன் அக்கணைகள் (சிங்க முகன் மேற்பட்டுக்) கரிந்துவிழ அச்சிங்கமுகன் ஒரு சூலப்படையினைச் செலுத்தினன். அச்சூலப்படை பன்முறைவிட்டகணைகள் கெடமுன்னர் குறுகியது. வாகுப் பெயரோன் வாளினு லச்சூலப்படையினை வெட்டி வீழ்த்தினன்.

(வி - ம்.) தடம் - பெருமை. ஏவுபு - ஏவி. தப - நீங்கும்படி. நடவினன் - செலுத்தினன். (௬௮௮)

அட்டவன் வெகுளிமிக் கெழுதலு மிவனுயி
ரடுகுவ லெனவிறை படைதொட்டான்
ஒட்டல னதுவரல் காணலு மப்படை
யொருகையி னிருந்தது தனைவிட்டான்
முட்டின திரிந்தன மீண்டன வீரனு
முருகனி லலதிவ னுயிர்மன்றப்
பட்டிட லிரிதிவன் வார்சிலை தேர்முதல்
படவமர் புரிகுவ லெனமூண்டான்.

(இ - ள்.) அட்டவனுகிய வாகுப்பெயரோன் சீற்றமிக்கெழ இவனுயிரைக் கோறல் செய்வேனென்று இறைவன் படையினைச் செலுத்தினன். பகைவனுகிய சிங்கமுகன் அவ்விறைபடை வருதலைக் கண்டளவில் (தன் கைக்கண்ணிருந்த) இறைபடை யொன்றினை

விட்டனன். அவ்விறைபடைக ளிரண்டும் (ஒன்றுடனொன்று) முட்டித் திரிந்து மீண்டன. வீரவாகுவாளவன் முருகனுலல்லது உறுதியாக வேறெவராலும் இச்சிங்கமுகனுயிர் படுதலின்றுகுமென்று கருதி அச்சிங்கமுகன் நீண்ட வில் தேர் முதலியவைகள் கெடப் போரினைச் செய்வேனென்று எதிர்ந்தனன்.

(வி - ம்.) இறைபடை - பாசுபதாஸ்திரம்; ஒட்டலன் - பகைவன். மன்ற - தேற்றமாக. (௪௮௯)

வேறு

வலவ னுயிரைச் சிலகணையான் மடித்தான் வீர னொருதண்டம்
கலதி யவுணன் விடமார்பங் கலந்து துகள்பட் டதுவீரன்
பலவெங் கணையா லவன்றேரைப் படுத்தா னந்தப் பதநோக்கி
அலகில் பூத வீரர்களு மார்த்துச் சமரின் மேலடர்ந்தார்.

(இ - ள்.) வீரவாகு தேரைச் செலுத்துபவனுயிரினைச் சிலகணைகளாற் போக்கினுன். கேட்டினைச்செய்கின்ற அவுணனாகிய சிங்கமுகன் ஒருதண்டத்தினைச் செலுத்த அத்தண்டம் வீரவாகுவின் மார்பிற்பட்டுத் துகளாயது. வீரவாகு பலகடுங்கணையால் சிங்கமுகன்றேரினைப் போக்கினுன். அச்செவ்வியை நோக்கி அளவில்லாத் பூதவீரர்களும் ஆரவாரஞ் செய்து மேலும் போரின்கண் ணணவினுரென்க.

(வி - ம்.) வலவன் - பாகன். கலதி - கேடு. பதம் - காலம். ஆர்த்து - ஆரவாரித்து. (௪௯௦)

நெருப்பிற் கனன்று சிங்கமுக
னெடியம் மணித்தே ரொன்றிவர்ந்து
பொருப்புக் குலங்க ளெனச்சிலைகள்
போகு கரமா யிரத்தேந்தி
அருப்பு முலையார் வாள்விழியி
னெவ்வொன் றலகி லுயிர்மாய்க்கும்
செருப்போற் கணைகள் பலகோடி
செறியத் தொடையோன் றினிலெய்தான்.

(இ - ள்.) சிங்கமுகனென்பான் அழலைப்போலக் கனலுதல்செய்து நீண்டஅழகிய தேரொன்றின்மே லிவர்ந்து மலைகளின் கூட்டம்போல விற்களை நீண்ட ஆயிரங்கைகளினுந்தாங்கி அரும்புபோன்ற தனங்களையுடைய பெண்கள் ஒளிபொருந்திய கண்கள்போன்று ஒவ்வொரு கணையும் பலஉயிர்களைப் போக்கும் போரினுக்குரிய பலகோடிக்கணைக் கான் கணைகள்நெருங்கும் வண்ணம் ஒருதொடுப்பினெய்தன னென்க.

(வி - ம்.) குறித்தகுறியிற் றப்பாது வருதலின் பெண்களின் கண்களை உவமையாகக் கூறினுர். (௪௯௧)

தவக்கூ வியர்க டொகைசாய்க்குந்
 தருக்கள் சாய்க்கு மலைபொதிர்க்கும்
நவக்கோ ளறுக்கு நாலறுக்கு
 நட்டா ருயிரும் வாய்மடுக்கும்
துவக்கோ டுதிரச் சேறளையுஞ்
 சுரருக் கலக்க ணனிபெருக்கும்
பவக்கூ டெனுமாக் கையர்க்கெல்லாம்
 பரிவு புரியு மவன்வாளி.

(இ - ள்.) சிங்கமுகன் விடுத்தகணைகள் மிகுதியாகப் பூதர்கள் கூட்டங்களைக் குறைக்கும். மலைகளைத்துளைத்தல் செய்யும். ஒன்பான் வகைக்கோள்களையும் கெடுக்கும், இருபானெழுநாண் மீன்களையும் கெடுக்கும், (எதிர்ந்துவரின்) நட்பாயினாருயிரினையும் உண்ணும். தோலினோடுசெந்நீ ரோடுகூடிய சேற்றின்கண்ணேமூழ்கும். தேவர் களுக்குந் துன்பினைச்செய்யும். பாவங்கட்குறைவிடமென்று சொல்லத் தகுமுடலினையுடைய ரெவர்க்குந் துன்பினைச் செய்யுமென்க.

(வி - ம்.) தவ-உரிச்சொல். பொதிர்த்தல்-துளைசெய்தல். துவக்கு-தோல். அலக்கண்-துன்பம், பாவம் குறுக்கல்விகாரம். பரிவு-துன்பம். (சகஉ)

திசையும் வானும் படைகடவாச்
 செறியத் திரக்கூ டுறுத்தாங்கு
விசையிற் றிரியுங் கணைமயமே
 விரிமூ வுலகுந் தோற்றுதலும்
வசையில் வீர னொருநொடியில்
 வயின்றோ றுலப்பில் கணைதூண்டிப்
பசையி லவுணர் நறுமோறுப்பப்
 பல்வு மறுத்து வெளிசெய்தான்.

(இ - ள்.) திசைகளினிடத்தும், வானினிடத்துங் கணைகளைச் செலுத்திச்செறிந்த அம்புக்கூட்டினை அமைத்தாற்போல விரைவாக இயங்குகின்ற கணை வடிவமேவிரிந்த மூன்றுலகின் கண்ணுந்தோற்று தலான் வீரராற்பழித்தலொரு சிறிதுமிலவாகிய வீரவாகு நொடிப் பொழுதின்கண் இடமிடங்கடோறு மளவிலவாகிய கணைகளைச்செலுத்தி (உள்ளத்தேசிறிதும்) அன்பிலராகிய அவுணர்கள் அழுக்காறுகொள்ளப் பல கணைகளையுமறுத்து வெளிசெய்தன னென்க.

(வி - ம்.) அத்திரக்கூடு - அம்புக்கூடு. பசை - அன்பு. நறு மொறுப்ப - அழுக்காறுகொள்ள. (சகங)

அமரர் வியந்தா ரதுவியப்பே
 யரிமா முகனு நனிவியந்து

சமரச் சிலைநின் பொருட்டெடுத்தேன்
சாய்த்தே னினைவே ளொடுமென்றான்
றுமர்போ லியும் புனைந்துரைக்கும்
வென்றி யலது நுதலியாங்
கெமர்போன் முடிக்கும் பொருள்வென்றி
யெய்தா யென்றான் றனிவீரன்.

(இ - ள்.) இங்ஙனம் வீரவாகு போர்செய்தலைக் கண்ணுற்றுத் தேவர்களும்வியந்தனர். (அங்ஙனம்) அவர்கள்வியந்தது வியப்பாகுமா? (பகைவனாகிய) சிங்கமுகனும் மிகவும் வியப்புற்றுப் போரினுக்குரிய வில்லினை நின்பொருட்டே எடுத்துளேன். (உன்தலைவனாகிய) முருகனோடு நின்னையும் இப்பொழுதேகொன்றேன் என்றுகூறினான். நுந்தானவர்குலத்து வீரர்களைப்போலப் புனைந்துகூறும் சொல்வென்றியல்லாமல் சொல்லியவண்ணஞ் செயலில்முடித்துக் காட்டும்எம்மவர்களாகிய தேவர்களைப்போன்று பொருள்வென்றியை யடையமாட்டாய் என்று கூறினான் ஒப்பற்ற வாகுப்பெயரோன் என்க.

(வி - ம்.) நனி – மிகவும். சமரம் - போர். துணிவுபற்றிச்சாய்த்தேன் என்றிறந்தகாலத்தாற் கூறினான். வேள் – முருகன். (௭௯௪)

சீற்றங் கிளரச் சிங்கமுகன் சிலையா யிரமும் வளைவித்து
வீற்று வீற்று விடுசரங்கள் விலக்கி வீரன் மேல்விடுத்தான்
பாற்றி யவற்றைச் சிங்கமுகன் பாணிச் சிலையை யிறுத்தமரன்
மாற்றோர் சிலைகைக் கோடுமுன்ன மருமத் துளப்பில் கணைசெறித்தான்.

(இ - ள்.) சிங்கமுகன்சீற்றம் மேன்மேலெழ ஆயிரம்வில்லினையும் வளைத்தல்செய்து வெவ்வேறாகவிட்ட கணைகளை வீரவாகு விலக்குதல் செய்து அச்சிங்கமுகன் மேற்கணைகளை விடுத்தனன். சிங்கமுகன் அக்கணைகளைக்கெடுத்து வீரவாகுவின்கைக்கண்ணுள்ள வில்லினைக்கெடுத்து அவன்வேறு வில்லினைக் கோடற்குமுன் மார்பின்கண் பலகணைகளை விடுத்தனனென்க.

(வி - ம்.) வீற்றுவீற்று-வேறுவேறு. பாற்றி – கெடுத்து. (௭௯௫)

ஆறு கொளச்செங் குருதியுக வமரர் களைக ணானநின்றோன்
சீறி விசிக மாயிரத்தாற் சில்லி யிரதஞ் சிதர்செய்து
வேறு மணித்தே ரிவர்முன்னம் விடுக்கும் வாளி யாயிரத்தால்
மாறில் சிலையா யிரமுமவன் மதிப்போ டொருங்கு விழவறுத்தான்.

(இ - ள்.) யாறுபோன்றொழுகுதலைக் கொள்ளும்வண்ணம் செந்நீரானதுஇழிய தேவர்களுக்குப் பற்றுக்கோடாகநின்ற வீரவாகு சீற்றங்கொண்டு ஆயிரங்கணைகளான் உருளினையுடைய தேரினைப்பொடியாக்கி அழகியவேறொரு தேரின்கண் அவன் இவர்தற்குமுன்னஞ் செலுத்துகின்ற ஆயிரங்கணைகளான் ஒப்பின்றாகியவிற்கள் ஆயிரத்தினையும் அச்சிங்கன் தன்மதிப்போடு ஒருசேரவீழும் வண்ணம் அறுத்தனனென்க.

(வி - ம்.) விசிகம் - அம்பு. சில்லி - தேருருள். மாறு - ஒப்பு. மணி - அழகு. (௬௪௩)

அண்டர் பூத ரனைவோரு மங்கை யெறிந்தங் கசித்தார்த்தார்
கண்டு மடங்கன் மாமுகத்தோன் கனன்று மாயா பாசத்தை
மீண்டு மிவரைப் பிணித்துதய வெற்பிற் போதந் திருத்தியெனக்
கொண்டு விடுத்தா னனைவரையுங் கொடுபோந் திருந்த தப்படையே.

(இ - ள்.) தேவர்கள் பூதர்கள்யாவரும் அழகியகைகளைத்தட்டி அமைதித்துச் சிரித்தனர். (இங்ஙனஞ் சிரித்ததனைக்) கண்ணுற்றுச் சிங்கமுகத்தோன் சிற்றங்கொண்டு வஞ்சனைசெய்யுங் கயிற்றைநெருங்கிய இவர்களைக்கட்டி உதயமலையின்கண்ணே சென்றிருப்பாயாகவென கைக்கொண்டு விடுத்தனன். அங்ஙனஞ் செலுத்திய அப்படை யாவரையுங்கொண்டுசென் றிருந்ததென்க.

(வி - ம்.) அண்டர் - தேவர். அசித்தல் - சிரித்தல், பரிகசித்தலுமாம். வஞ்சகக்கயிறு - மாயாபாசம். (௬௪௪)

சேந்தன் யாங்க ணுளனென்றே திரிந்தான் காணுன் வெருண்டிரிந்து
போந்தான் கொல்லோ வெனத்தூதர் பூத ரொடும்பா சறையிருந்தான்
ஏந்தா லென்று ரமர்க்கஞ்சி யிருந்தான் கொல்லோ வெனப்பதகன்
காந்தா நின்று ஙங்கேகிக் கடப்பா மென்று பெயர்குற்றுன்.

(இ - ள்.) முருகப்பெருமான் யாண்டுளனென்று தேடியலைதலைச் செய்துங்காணுனுய் எனக்கஞ்சி ஓட்டெடுத்துச்சென்றுனே என்றுகூற, அவன் தூதுவர்கள் தலைவனே! பூதப்படைகளுடன் பாடிவீட்டின்கண் ணிருந்தனன் எனக்கூறினர். பதகனுகிய சிங்கமுகன் போர்த்தொழில் செய்யவெருவி இருந்தனனேவென்றுகூறி அழற்சியுடையனுய் ஆண்டுச் சென்று அவனைவெல்வாமென்று பெயர்ந்தனனென்க.

(வி - ம்.) சேந்தன் - முருகன். கடத்தல் - வேறல். (௬௪௫)

காலி னிறைவன் கண்டனைத்துங் கரைய வறிதே நகைகொண்டு
வேலி னிறைவன் றேரிவர்ந்து விண்ணுேர் தத்தம் பணிபுரியக்
கோல முரசக் குலங்குளிறக் கொடிவான் றுவன்றப் பூதர்படை
ஆல மெனவெங் கணுமிடைய வடுத்தா னமர்செய் பறந்தலையில்.

(இ - ள்.) காற்றுருகியதேவன் இங்ஙனம் நிகழ்ந்தநிகழ்ச்சி யனைத்தினையுமறிந்து முருகன்பால் விண்ணப்பஞ்செய்யப் புன்சிரிப்புக் கொண்டு வேற்படையினையுடைய தலைவனுகியமுருகன் தேரின்மீதேறித் தேவர்கள் தத்தமக்குரிய தொண்டினைச்செய்ய, அழகிய வீரமுரசக் கூட்டங்கள்முழக்க, கொடிகள்வானின்கண்ணெருங்க, பூதர்களாகிய படைகள் நஞ்சென்று சொல்லும்வண்ணம் யாங்கணுநெருங்க அமரினைச் செய்யும் பரந்தவிடத்தினை அடுத்தனனென்க.

(வி - ம்.) கறைதல் - கூறல். கோலம் - அழகு. குளிறல் - ஒலித்தல். பறந்தலை - போர்க்களரி. (௬௪௬)

வேறு

கிட்டிய வவுணருங் கேடில் பூதரும்
முட்டின ரதுக்கினர் முறையிற் பல்படை
விட்டன ரழித்தனர் விரவி யாடினர்
பட்டனர் பலரிரு திறத்தர் பாங்கினும்.

(இ - ள்.) (போர்க்களரியில்) அண்மியஅவுணர்களும், (ஒரு காலத்தும்) கேடில்லாதபூதப்படைகளும், ஒருவரோடொருவர் முட்டுதல் செய்தனர். (ஒருவரையொருவர்) அடித்தனர். முறையாகப் பலபடைக் கலங்களையும்விட்டு அழித்து ஒருவரோடொருவர்கலந்து போரினைச் செய்தார்கள். இருபகுதியினர்பக்கலினும் பலர் பட்டனரென்க.

(வி - ம்.) அதுக்கல் - அடித்தல். இதனைக் "கையான்வயிறதுக்குவா" ரென்னுஞ் சிந்தாமணிச் செய்யுளானறிக. (௩00)

கண்டன னரிமுகன் கணங்கொள் பூதரை
உண்டலா லென்சின மொழிவ தின்றெனுக்
கொண்டனன் பேருருக் குறுகி யாரையும்
விண்டுவாய் மடுத்தகட் டிடுதன் மேயினன்.

(இ - ள்.) சிங்கமுகன் (இந்நிகழ்ச்சியினைக்) கண்ணுற்றுக்கூட்டத்தினைக்கொண்ட பூதர்களை உண்டாலல்லது என்சிற்றம் நீங்குவதில்லையென்று பெரியவடிவினையெடுத்து அண்மி வாயினைத்திறந்து யாவரையுமுண்டு வயிற்றின்கண்ணிடுதலைச் செய்தனனென்க.

(வி - ம்.) எனு - என்று. பேருரு - விச்சுவரூபம். விண்டு - திறந்து. அகடு - வயிறு. (௩0௧)

மாயைவண் கயிற்றினற் பாதி மாய்ந்ததும்
ஆயிர வெள்ளமு மகட்டி னுக்கலும்
போயொரு தூதுவன் புகலச் சூர்களி
மேயின னொருவனை விளித்துக் கூறுவான்.

(இ - ள்.) வளம்பொருந்திய மாயையாகிய கயிற்றினாற் பாதிப் படைகள் கெட்டதனையும், ஆயிரம்வெள்ளம் படையினையும் வயிற்றின்கண் ணுக்கியதனையும் ஒருதூதுவன்சென்று செப்பச் சூரனுனவன் களிப்பு மிகுந்தவனாகி ஒருவனையழைத்துச் சொல்லத்தொடங்கினன்.

(வி - ம்.) மாயைக்கயிறு - மாயாபாசம், சூர் - சூரன். (௩0௨)

கந்தனேற் றிடும்படை காழ்ப்பி னின்றிடா
அந்திலிங் குளபடை யனைத்து மேவென
உந்தின னிளவல்போ ருஞற்ற வேக்கிய
அந்தரத் துயர்ந்தவத் தானை யேகினன்.

(இ - ள்.) கந்தனை எதிர்த்து (அமரினைச்செய்கின்ற) நம்பகை சிறிது ஆதலால் (சிங்கமுகனொடு) வலிமையுடன் நிலைபெறுது. இங் குள்ளவாகிய படையனைத்தினையுஞ் செலுத்துகவென்று கட்டளையிட்டுத் தன்னினவலாகிய சிங்கமுகன் போர்செய்தலை நோக்க வானின்கண் ணுயர்ந்த அத்தாணிமண்டபத்தின் கண்ணேறினனென்க.

(வி - ம்.) காழ்ப்பு - மனத்திட்பம். உந்தினன் - செலுத்தினன். அத்தாணி - திருவோலக்கமண்டபம். (௫௦௩)

வியவரின் முரசறை விப்ப முன்னினேன்
கயமுத லுற்படைக் கடலு மாநகர்ப்
பயிலிட மொரீஇப்பறந் தலையின் முற்றின
இயலிட மிறந்தன வீண்டு சேனையால்.

(இ - ள்.) (சூரனாற் கட்டளையிடப்பெற்று) அடைந்தவனாகிய தலைவன் ஏவலாளர்களாலே (சூரன்கருத்திஃதென) முரசினை அறைவித் தலைச்செய்ய யானையை முதலாகக்கொண்ட நால்வகைப்படையாகிய கடல் பெரிய அத்தலை நகரின்கட் டாங்கள் தங்கிய இடத்தினின்றும் நீங்கிப் போர்க்களத்தையடைந்தன. அங்ஙனம்நிறைந்த படைப் பெருக்கால் பெரியநிலவெல்லை சிறிதுமிடமின்றும்படி சென்றனவென்க.

(வி - ம்.) முன்னினேன் வியவரின் முரசறிவிப்பவெனக் கூட்டுக. (௫௦௪)

முப்புர மட்டநாண் முதன்மை பின்னெனும்
அப்பெருந் தேவர்த ளுற்ற றெள்ளுறத்
துப்புடை வீரர்பாற் றோல்வி பன்முறை
வைப்பவ னாகிய வள்ள லேர்ந்தனன்.

(இ - ள்.) புரமெரித்தற்குப் பொருந்திய தேவர்கள் நாந்துணை செய்யாதுவிடின் புறமெரித்தலிலங்ஙன மியையுமெனக்கருதித் தருக் குற்றதனையறிந்து இறைவன் இத்தேவர்கள் துணைவேண்டாது (சிரித்து) முப்புரத்தினையட்டகாலத்து (செத்துப்பிறக்கின்ற மற்றைத்தேவர்கள் தங்களை முதல்வனெனக்கோடுந்) தலைமை (இவ்விறைவன்முதன்மைக்கு) பின்னாகத் தக்கதெனக் கருதுகின்ற அப்பெரியதேவர்கள் (இஞ்ஞான்றுந்) தெளியவலியினையுடைய நவவீரர் இலக்கர்முதலியோர் இடத்துத் தோல்வியினைப் பலமுறையும் சேர்ப்பவனாகிய வள்ளல்போரிலெதிர்ந் தனனென்க.

(வி - ம்.) துப்பு - வலி. வள்ளல் - முருகன். (௫௦௫)

வேறு

கண்டவுண ரெங்கணும்வ ளைந்துபடை கொண்டுகதழ்
வுற்றமரி யற்ற வடிகள்
கொண்டொருசி லைக்கணுறு நாணொலியெ டுத்தனர்கு
லைந்துபல வண்ட முழுதும்

விண்டனநெ டுங்கிரியு மண்டலமு முக்கநெமிர்
மீன்கடறு ளும்பி னபரிட
ஒண்டரைவி ழுந்தனவு லம்பினக ரிப்பரியு
டைந்தனதி ரண்ட விரதம்.

(இ - ள்.) (இங்ஙனம் போரிநுக்கெதிர்ந்தவனைக்) கண்ணுற்ற அவுணர்கள் (பறந்தலை) யாண்டும் வளைதலுற்று படைக்கலங்களைக் கையிற்கொண்டு விரைந்து போரினைச்செய்யத் தலைவராகிய பிள்ளையார் ஒருசிலையினிடத்துப் பொருந்திய நாணின்கண்ணின்றும் ஒலியெழும் வண்ணஞ் செய்தனர். (அங்ஙனஞ்செய்தவளவில்) எல்லாவண்டங்களும் நிலைகுலைந்தன. உயர்ந்த மலைகளெல்லாம் பிளந்தன, மண்ணுலகிடமெல்லாம் தூளியாயின; (வானின்கட்) பரந்தமீன் குலங்களெல்லாம் நிலைகலங்கின, வீரர்களெல்லாம் நிலத்தின்கண் வீழ்ந்தனர்; யானைப் படையும், குதிரைப்படையும் சுழன்றன; திரண்டுநின்ற தேர்கள் யாவும் சிதர்ந்தனவென்க.

(வி - ம்.) அடிகள் - சுவாமிகள். நெமிர்தல் - பரத்தல். உலம்பல் - சுழலல். இதனை "ஓடுந்திரிவட்டமென வொய்யெனவுலம்பி" என்னும் சிந்தாமணியடிகளானுணர்க. (௯௦௯)

ஈதுபுரி வன்மைய னெனக்கிளவ லாருயிரி
றுத்தவினை யோனி வனுயிர்
காதுவலெ னக்கடிது முந்திமொழி வான்கருத
லார்தமைய டக்க லரையர்
நீதியது செய்தனமெ மக்கறவை யெண்ணலனு
மல்லைநிகழ் போர்க ருதிவே
றுதியிது வென்னையுரை யென்றறிமு கத்தவனை
றைந்திடவு ரைப்ப னமலன்.

(இ - ள்.) இங்ஙனமாய செயலினைச்செய்யும் வன்மையுடையான் என்இளவலாகிய தாரகனுயிரினைக் கொன்றவனாகிய குமரனுவான். இவ்வுயிரினை யிப்பொழுதே கொல்வேனென்று விரைவின் முற்பட்டுச் சொல்லத்தொடங்குவான். பகைவர்களை அடக்குதல் அரையர்கள் அறமாம். அதனைச்செய்தோம். அங்ஙனஞ்செய்தல் அரையராகிய எங்களறமாகும். நீஎமக்குப் பகைவனுமில்லை. இங்கு நிகழ்கின்ற போரினைக்கருதி (அன்புடைமைகாட்டாது) வேறுபாடுடையவனாக விருக்கின்றாய். இந்நிகழ்ச்சிக்கு ஏது என்னையென்று சிங்கமுகன்கூற மலமற்றவனாகிய முருகன் திருவாய்மலர்ந்தருளுவன்.

(வி - ம்.) அறவை - அறம். "அறவையாயிற் போரொடுதிறத்தல்" என்னும் புறத்தானறிக. (௯௧௦)

தஞ்சமுள ரைத்தறுக ஞர்கள லைப்பினவர்
தங்களைமு றைக்க ணிறுவி

விஞ்சுமகி லாண்டமுமொ ருங்கரசி யற்றுமொரு
வேத்தியல்ப டைத்த விறையான்
அஞ்சலிரு ருங்கடவு ளார்திரளை வெஞ்சிறையி
னுக்குதலி னுங்க ளுயிரை
எஞ்சுதலி லாதுணவி றுத்தமரி னின்றனனெ
னச்சுளிவி னேட ரிமுகன்.

(இ - ள்.) எளியார்களை அஞ்சாமையுடையார் வருத்தின் (அத்தறு கணாளரைஒப்ப நாடி ஒறுத்து) நீதியின் கணிலவச்செய்து மிக்க பல வுலகங்களையும் ஒருசேர அரசு செலுத்தும் அரசினைப் பொருந்திய தலைவன்யான் (நீவிர்) சிறிது மஞ்சுதலிலராய்அரிய தேவர்கூட்டங்களை வெவ்விய சிறைக்கணுக்குதலினுன் நுங்களுயிரைக்கொன்று குறைவின்றி யுண்ணுதலைச் செய்யப் போரின்கண்ணே நின்றனனென்று முருகன் சொல்லச் சீற்றத்துடன் சிங்கமுகன்.

(வி - ம்.) தஞ்சம் - எளிமை. "தஞ்சக்கிளவி யெண்மைப்பொருட்டே" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தானறிக. (௯0அ)

யாங்களெளி யோம்வலியை நீயெமைமு றைக்கணிறை
விப்பதுமெய் பாதி படையை
ஒங்குதய மால்வரையு றுத்தினனி னக்கெதிரொ
ழிந்தபடை முற்று மகடு
தாங்கினனெ ருத்தர்குறை மாற்றலுறு வார்குறைத
மக்குறுதல் செய்கு வர்கொலோ
தேங்கொளிய வேற்படையி னாற்றலும றிந்துளனெ
னச்சிறிய பேசி னனரோ.

(இ - ள்.) (ஐய) யாங்கள் எளிமையையுடையேம். நீ வன்மையையுடையாய் எங்களை முறைமைக்கண்ணே நிறுவச்செய்வது உண்மையேயாகும். நும்படையிற்பாதியை உயர்ந்த உதயமலையின் கட்சேர்த்தேன். உனக்கெதிராக நின்ற ஏனைப்படையாவையும் வயிற்றின் கட்டாங்கியுள்ளேன். ஒருவருக்குற்ற குறையினை நீக்கும்வன்மையினையுடையார் தமக்குக் குறையுறும்படியாகச் செய்வார்களோ. நிறைந்த ஒளியினையுடைய வேற்படையின் வன்மையும் நானறிந்துளேன் என்று சிறிய புன்மொழிகள் கூறினனென்க.

(வி - ம்.) அகடு - வயிறு. (௯0கூ)

நன்றிவன கந்தையென நாயகன கைத்தழலு
நஞ்சுகனி யோர்க ணைவிடக்
குன்றுறழு ரந்துளைப டுத்துவெரி நேகவது
கூவியர்வெ ளிக்கொள் வழியாய்

நின்றதவ னேக்கியொரு செங்கையி னடைத்துநேடி
தோச்சியொரு வார்க் தைவிட
வென்றியினை யோனெதிர்வி டுத்தகணை நான்கதுவி
லக்கிநுதன் மூழ்கி யனவே.

(இ - ள்.) இச்சிங்கமுகன் அக்ந்தை நல்லதாகுமென்று இறைவன் சிரித்து அழற்சியைச் செய்கின்ற நஞ்சுதோய்த்து முதிர்ந்த ஒருகணையினைச் செலுத்த (அக்கணை) அவன் மலையினையொத்த மார்பத்தைத்துளை செய்து முதுகின்புறத்தேசெல்ல (அக்கணை சென்றவழியே) கூரியபடைகள் வெளிச்செல்லும் வழியாக நிலைபெற்றது. அதனைச் சிங்கமுகன் பார்த்துத் தன் செம்மைநிறமுள்ள கையினாலப்புழையை அடைத்து நீண்ட தண்டமொன்றினை வீசிச்செலுத்த வென்றியினையுடைய முருகன் (அத்தண்டத்திற்கு) எதிராகச் செலுத்திய நான்கு கணைகள் அத்தண்டத்தினையுண்டு அவன்நெற்றியின்கண் மூழ்கினவென்க. (௪௰)

மம்மர்மிக நின்றனன டைத்தகை வழுக்கவழி
கண்டுமிடை பூதர் களெலாம்
இம்மெனுமு னம்வெளியி னேகியிறை வன்புடையி
லெய்தினர்க ளாங்கொ ருகணை
செம்மல்விட வேகியவன் யாத்தபடை சிந்தியொரு
தேரெனவி ளங்கி யவரை
அம்மகொடு போந்துமுன்வி டுத்துநுழை தூணியின
மர்ந்ததுவி டுத்த பகழி.

(இ - ள்.) (சிங்கமுகன் நெற்றியின்கட் கணைகள் மூழ்கியதனால் மயக்கம்மிக நின்றனன். (அம்மயக்கத்தான் மார்பிற்புழையை) அடைத்தகையானது வழுக்குதல் செய்ய (அவன் வயிற்றின்கட்டங்கிய) பூதப்படையினர் யாவரும் (நாம் வெளிச்செல்வதற்குரிய) நெறியிதேயெனக்கண்ணுற்று இம்மென்னும் ஒலிக்குறிப்பு நிகழும் காலஅளவைக்குள் வெளிப்போந்து இறைவன் பக்கலிற்சேர்ந்தனர். அஞ்ஞான்று ஒருகணையினைத்தலைவனாகிய முருகன் செலுத்த அக்கணை உதயவெற்பிற் சென்று அச்சிங்கமுகன் கட்டிவைத்திருந்த மாயைக்கயிற்றைக் கெடுத்துத் தேரினைப்போலத் தோற்றி அம்மாயைக்கயிற்றாற் கட்டுண்டவரைக் கொண்டுவந்து இறைவன்முன்னர் விட்டுத் தான் நுழைதற்குரிய அம்புக் கூட்டில் தங்கியதென்க.

(வி - ம்): மம்மர் - மயக்கம். இம்மெனும் : விரைவுக்குறிப்பு. செம்மல் - முருகன். அம்ம : அசைச்சொல். (௪௧)

நாலெலியின் முந்துவிழு தானவர்தெ விந்துநனி
போர்புரிய நாதன் விசிகம்
ஏனுடைய வார்சிலைவ ணங்கவள வில்லவெழு
வித்தனனெ ரம்பு பலவாய்க்

காணுறும ரப்பணைகி ளைத்தொகைவ ளார்விரிவு
காட்டியெழுமிர் சேனை முழுதும்
கோணைவலி சிந்தவடல் செய்தனக றைக்குடிஞை
கூர்ந்துகட லோடு பொருத.

(இ - ள்.) நான்கயிற்றிறேனுசையான் முன்னர் இயக்கமில்மயக்க முற்று வீழ்ந்த தானவர்கள் தெளிவுற்றுமிகவும் பேரரினைச்செய்யஇறைவன் கணைகள் வலியினையுடைய நீண்டவில்வளைய அளவிட முடியாத கணைகளை எழச் செய்தனன். (அங்ஙனம் எழுந்த கணைகள்) ஒரு கணை பலவாகக் காணப்பெறுகின்ற மரப்பணை, கிளைகளின்றொகை, வளார் முதலியன ஒன்றினொன்று தொடர்புற்று விரிந்தாற்போல (ஒன்றினொன்று தோற்றித் தொடர்புற்று) விரிதலைச்செய்து பரந்த படைகள் யாவும் மிக்கவலிகெடக்கோறல் செய்தன. இரத்தயாறு மிகுந்து பெருக்கெடுத்துக் கடலினோடு மோதினவென்க.

(வி - ம்.) ஏண் - வலி. கோணை - வலி. குடிஞை - நதி. குடிஞை யிரட்டுங் கோடுயர் நெடுவரை" என்பதனுனுணர்க. (ருகூ)

சோகமுமி ளங்குமர னெய்தகணை மூழ்கவுறு
தூலவுரு வுந்த விர்தர
ஏகனென நின்றவவு ணன்றனதி ரும்படையி
றந்ததுமி றந்த படைகள்
மாகர்பணி வேலிறைம ருங்குமிடை வுற்றதும
தித்துவில்வ ளைத்து விசிகம்
ஏகமென வுந்தினன றுத்தெதிர்ச ரம்பலவி
டுத்தனன கைத்தி ளையவன்.

(இ - ள்.) சோர்வும் இளையனுகிய குமரப்பெருமான் செலுத்திய கணைகள் பாய்தலாற்றான் (மாயையாற் கொண்ட) பேருருவும் நீங்கத் தனியாக நின்றவனாகிய சிங்கமுகன்றனது பெரியபடை இறப்புற்றதனையும் இறப்புற்ற (இறைவன்) படைகள் தேவர்கள் வணங்கத்தகும் வேற்படையினையுடைய அவ்விறைவன் பாலுற்றதனையும்கருதி வில்லினை வளைத்துக் கணைகளை மேகம்போலச் சொரிந்தனன். இளையோனாகிய முருகன் சிரித்து அவன் செலுத்திய கணைகளை யெல்லா மறுத்து அவனெதிரிற் பலகணைகளைச் செலுத்தினனென்க.

(வி - ம்.) இவன் சோகமெய்தியது, இப்படலம் 511 வது செய்யுளானும், பேருருக்கொண்டது, இப்படலம் 506 வது செயயுளானுமறிக. (ருகூ)

விலக்கிவரு வெங்கணைபல் வாளியின்ம டங்கன்முகன்
வேளிரத மூர்ப வன்வலி
கலக்கவிளை யோனவுணன் வையமழி விப்பவவன்
காசினியி னின்று பகழி

இலக்கமிசை யேயினனி றுத்தலைவயோ ராயிரவெ
றுழ்ச்சிலையும் வீழ்த்த முருகன்
குலக்கழுமு வொன்றவுணன் விட்டனனி ருங்கணைகொ
டுத்திறைவ னட்டன னரோ.

(இ - ள்.) (முருகன் செலுத்திய கொடியகணைகளை) சிங்கமுகன் பலகணைகளான் விலக்குதல் செய்து முருகன்றேரினைச் செலுத்துபவன் வலியினைக் கலங்கச்செய்ய இளையவனாகிய முருகன் சிங்கமுகன்றேரினை யழித்தல் செய்ய (தேரின்மையான்) அவன் நிலத்தின்கணின்று இலக்கமென்னுந் தொகையினையுடைய கணைகளை முருகன்மீது செலுத்தினன். முருகன் அங்ஙனம் செலுத்திய இலக்கங் கணைகளையுங்கெடுத்து ஆயிரங் கணைகளான் அவன் வில்லினையும் கீழ்வீழும்வண்ணம் செய்தனன். அவுணனாகிய சிங்கமுகன் சிறந்த சூலமொன்றினை யுவினன். இறைவனாகிய முருகன் பெரிய கணையொன்றினை விட்டு அச்சூலத்தினைக் கெடுத்தனனென்க.

(வி - ம்.) கழுமுள் - சூலம். முருகன்றேர் செலுத்துபவன் - வாயு. வையம் - தேர். காசினி - நிலம். ([illegible])

வேறு

சூல மட்டபி னோராயிரங் கணைமிசை தொடுத்தான்
பால னங்கவன் றண்டினப் பகழிகள் சிதர்த்து
மேல டர்ந்தனன் விசாகனக் கரந்தொடுத் தறுத்தான்
ஞாலம் வீழ்கதை யெடுத்துமே னடத்தின னண்ணான்.

(இ - ள்.) சூலப்படையினை அறுத்தபின்னரும் முருகன் அவன் மேல் ஓராயிரம் அம்புகளை எய்தனன். அப்பொழுது அவ்வவுணன் ஒரு தண்டினாலே அவ்வம்புகளைச் சிதறும்படிசெய்து பின்னரும் அத்தண்டு கொண்டே போர் தொடங்கினன். அதுகண்ட முருகப்பெருமான் தண்டேந்திய அக்கையினை ஒருகணையாற்றுணித்தனன். துணித்தலும் நிலத்தின்மேல் வீழ்ந்த அத்தண்டினை மற்றொருகையானெடுத்துக் கொண்டு அவ்வவுணன் போர் செய்யலானான்.

பாலன் - முருகன். சிதர்த்து - சிதறச்செய்து. விசாகன் - முருகன். கணைதொடுத்தென்க. ஞாலம் - நிலம். நண்ணான் - பகைவன். ([illegible])

தண்ட முந்தகர் வித்தனன் சாமிமுன் சமன்பால்
கொண்ட பாசத்தை விடுத்தனன் கோளரி முகத்தோன்
கண்ட மாக்கினன் காங்கெயன் கரங்கொடு பற்ற
மண்டி னனவன் வார்கர முழுதுஞ்சே யறுத்தான்.

(இ - ள்.) எம்பெருமான் அத்தண்டையும் கணைகளாலே தகர்த்தனன். அதுகண்ட அச்சிங்கமுகாசுரன் தான்முன்னர் மறலியிடத்தினின்றும் கவர்ந்து கொண்டிருந்த கயிற்றை எறிந்தனன், இறைவன்

அக்கயிற்றையும் அறுத்தொழித்தனன். கயிறற்றதுகண்ட அவ்வசுரன் தன் கைகளாலே எம்பெருமானைப் பற்றிக்கோடற்கு விரைந்துவந்தனன் அதுகண்ட வேள் அவனுடைய கைகள் அனைத்தையும் கணைகளானே அறுத்து வீழ்த்தினன்.

(வி - ம்.) சாமி - இறைவன். சமன் - மறலி. பாசம் - கயிறு. கோள் - கொலைத்தொழில். காங்கெயன் - முருகன். முருகனைப்பற்ற வென்க. வார் - நெடிய. (ககூ)

அற்ற பாணிமண் விழுமுறு மிரத்திரு புயமும்
செற்ற நின்றனன் சேந்தன்மூ வாயிரங் கணைதொட்
டுற்ற தோள்களு முடிகளு மொருங்குமண் வீழ்த்தான்
எற்ற முள்ளவ னவைபினு மெழுவிது மொழிவான்.

(இ - ள்.) அறுபட்டகைகள் நிலத்திலே விழுமுன்னர் இரண்டாயிரங்கைகளும் முளைத்துச்செறியாநிற்பச் சிங்கமுகன் ஊறுபடாமல் நின்றனன். அதுகண்ட செவ்வேள் மூவாயிரம்அம்புகளைத் தொடுத்தேவி முளைத்துப் பொருந்திய அக்கைகளோடு தலைகளும் ஒருசேர நிலத்திலே வீழும்படி செய்தனன். அக்கைகளும் தலைகளும் மீண்டும் முளைத்தெழாநிற்ப, இத்தகைய வரமாண்புடைய அவ்வவுணன் முருகனை நோக்கிக் கூறுவான்.

(வி - ம்.) பாணி - கை. ஆயிரம் இரட்டைப்புயம் என்றவாறு. சேந்தன் - முருகன். செற்ற - செறிய. புதிதாக முளைத்துச் செறியாநிற்ப என்றவாறு. செற்றல் - செறிதல். முடி : ஆகுபெயர், தலை. எற்றம் : விகாரம், ஏற்றமென்க. (கூஎ)

எண்ணில் காலநின் றறுப்பினு மென்றலை கிளைக்கும்
அண்ண றந்தருள் வரத்தினை யறிகலா தமர்க்கு
நண்ணி னுய்ந்தினை விடுத்தன னடமதி யென்றான்
பண்ணும் வேள்வியின் பயனிதென் றறிந்தருள் பகவன்.

(இ - ள்.) இளைஞனே! நீ எண்ணிறந்த காலங்கள் ஈண்டுநின்று அறுத்துவீழ்த்தினும் என்றலைகள் மீண்டும் மீண்டும் முளைத்தெழும். இங்ஙனம்எழுக என்று இறைவனே எனக்கு வரந்தந்தருளினன். இத்தகைய வரமுண்மையை நீ உணர்ந்து கொள்ளாமையால் என்பால் போரிடற்கு வந்தனை. நீ இளைஞன். ஆதலின் நின்னை யான் இப்பொழுது கொல்லாமல் விடுகின்றேன். நீ செல்க என்றான். இங்ஙனம் அற்ற உறுப்புகள் முளைப்பது இவனியற்றிய அறக்களவேள்வியின் பயனாகும். என்று உணர்ந்தருளிய எம்பெருமான்.

(வி - ம்.) அண்ணல் - சிவபெருமான். நீ சிறுவனாகலின் விடுத்தேன் உய்ந்துபோ என்றவாறு. மதி : முன்னிலையசை. பகவன் - முருகன். (கூஅ)

நன்று கூறினை பின்றையே கூற்றநண் ணியதால்
இன்று நின்னுயிர்க் கிறைத்தநா ளென்றனு மவுணன்

குன்ற மாயிரம் பெயர்த்துமேற் கொம்மென வுகைத்தான்
துன்று வாளியிற் சிதர்த்தவன் சிரங்கரந் துணித்தான்.

(இ - ள்.) அவுணனே! நீ நன்றே சொன்னாய்! உதோ நின் பின்னரே கூற்றுவனும் வந்துளன். இன்றே நின்னுயிர்க்கு இறுதியைச் செய்த நாளுமாகும் என்று கூறியவளவின், அதுபொறாத அவ்வவுணன் ஓராயிரம் மலைகளை (இரண்டாயிரங் கைகளானும்) பெயர்த்து விரைந்து எறிந்தனன். எம்பெருமான் தனது செறிந்த அம்புகளானே அம்மலைகளைத் துகள்படச் சிதறுவித்து மேலும் அவனுடைய தலைகளையும் கைகளையும் அறுத்து வீழ்த்தினன்.

(வி - ம்.) நன்றுகூறினை என்பது, இகழ்ச்சிக்குறிப்பு. ஊழ்நின்றுயிர்க்கிறுதியை இழைத்தநாள் இன்றேயாகும் என்றவாறு. கொம்மென - விரைவுக்குறிப்பு. (௫௪௯)

எட்டி னைத்தலைப் பெய்தநூற் றொருபதின் காறும்
விட்டு வாளிகள் சிரங்கரந் திருவிளை யாட்டால்
அட்ட னன்பரன் மதலைகாண் டொறுமஞ்சி விண்ணோர்
ஒட்ட லன்படு மாறெவ னெனவுல மந்தார்.

(இ - ள்.) இறைவன் திருமகன் விளையாட்டின் பொருட்டு இங்ஙனமே நூற்றுப்பதினெட்டுமுறை சிங்கமுகனுடைய தலைகளையும் கைகளையும் மீண்டுமீண்டும் கொய்து வீழ்த்தாநின்றனன். இந்நிகழ்ச்சியினைக் கண்ட தேவர்கள் தம்பகைவனாகிய அச்சிங்கமுகாசுரன் இங்ஙனமாயின் இனி இவன்சாகும் வழிதான் யாதுகொலோ? என்றையுற்று மனஞ்சுழன்றனர்.

(வி - ம்.) எட்டனைத் தலைப்பெய்த நூற்றொருபது - நூற்றுப்பதினெட்டு. ஒட்டலன் - பகைவன். உலமரல் - சுழலுதல். (௫௫௦)

இன்ன வாறெண் ராறுழி யிருகையோர் முடியும்
மன்ன மற்றன வறுத்தனன் மறுவலுங் கிளைப்ப
முன்னு மேல்வையி லுரப்பினன் முளைத்தில வகத்தோர்க்
கன்ன வாய்நுழை வான்கண்டு பிந்திய கடுப்பின்.

(இ - ள்.) இவ்வாறாகப் போர்நிகழுங்காலத்தே அவ்வவுணனுடைய தலைகளினும் கைகளினும் வைத்து ஓரோவொருதலையும் இரண்டு கைகளும் நிற்ப ஏனைய தலைகளையும் கைகளையும் அறுத்துத் தள்ளினன். அவை மீண்டும் முளைப்பத் தொடங்குழி தன்னைநினைப்போர் நெஞ்சத்தே அசபாமந்திரத்தின் வாயிலாய் நுழையும் எம்பெருமான் அந்நிலைமையினைக் கண்டு விரைந்து உங்காரஞ் செய்தருளினன், அவ்வளவில் அவை முளைத்தில.

(வி - ம்.) அன்னம் - அசபாமந்திரம். இலிச் செவிவழியாகப் புகுவோன் எனினுமாம். (௫௫௧)

சிரமுந் திண்கையும் பொய்த்தலுந் திகழ்சமழ்ப் பினனுய்
இருக ரத்தினுல் வெல்வலென் றெடுத்தொரு கிரியை
விரைய விட்டனன் வேலவ ஞெருகணை விடுத்துத்
தரையி னுக்கின னவனெரு தண்டெடுத் துரைப்பான்.

(இ - ள்.) தலைகளும் திண்ணிய கைகளும் மீண்டும் வளராது பொய்த்துப் போயபின்னர், வெளிப்பட்டுவிளங்கும் நாணமுடையனுய். "இனி இம்முருகனை எஞ்சிய இந்த இரண்டு கைகளைக்கொண்டே வென்றொழிப்பேன்." என்னுமுட்கோளுடையனுய், ஒருமலையைப் பெயர்த்து விரைய வீசினன். அதுகண்ட இறைவன் ஒருகணையை ஏவி அம்மலையினைத் தடுத்து நிலத்திலே வீழ்த்தினன். அதுகண்ட அவுணன் தன் கையிலே ஒரு தண்டினை எடுத்துக்கொண்டு எம்பெருமானை நோக்கிக் கூறுவான்.

(வி - ம்.) சமழ்ப்பு - நாணம். அது மெய்ப்பாடாகிப் புறத்தார்க்குத் தோன்றவென்பார் திகழ்சமழ்ப்பு என்ருர். (௨௨௨)

ஞாங்க ரேவவும் வாளிக ணடாவவு மன்றி
ஈங்கு வேருென்றும் பயின்றிலாய் போலுமென் றெடுத்த
ஓங்கு தண்டமே லுமைத்தன் னுமைமக னெருகைத்
தாங்கு வச்சிரத் தண்டினை யெதிர்செல விடுத்தான்.

(இ - ள்.) "சிறுவனே! நீ நின் கைவேற்படையினை ஏவவும் அம்புகளை எய்யவும் பயின்றதன்றி இப்போர்க்களத்திலே பிறிதோர் வித்தையும் கற்ருயிலைபோலும் என்றிகழ்ந்து அத்தண்டினை எம்பெருமான்மீது எறிந்தனன். அப்பொழுது இறைவியின்றிருமகன் தனதொரு கையின்கண் தாங்கியருளிய வச்சிரத் தண்டினை அத்தண்டின் எதிரே செல்லுமாறு ஏவியருளினன்.

(வி - ம்.) ஞாங்கர் - வேல். நடவா - செலுத்த. ஈங்கு - இப் போர்க்களத்தில். போலும் - ஒப்பில்போலி. உமை மகன் - முருகன். (௨௨௩)

எதிர்கொ டண்டினைப் பராகமாய் விழத்தள்ளி யேகி
அதிர மார்புகீண் டந்தரக் கங்கைதோய்ந் தங்கை
வதிந் துற்றது வச்சிர மடங்கன்மா முகத்தோன்
உதிர மூற்றெழ மறிந்துவிழ்ந் தாருயி ருலந்தான்.

(இ - ள்.) அவ்வச்சிரத்தண்டு தனக்கெதிரேவந்த அவ்வவுணன் தண்டினைத் துகளாகி நிலத்தில் வீழும்படி வீழ்த்துப் பின்னுஞ்சென்று உலகெலாம் அதிரும்படி அவ்வவுணனுடைய மார்பிற்ருக்கிக் கிழித்துப் பின்னர் வானகங்கையிலே சென்று நீராடி மீண்டுவந்து எம்பெருமானுடைய அழகிய கையிலே பொருந்தியது. அச்சிங்கமுகாசுரன் மார்பினின்றும் குருதியூற்ருகப் பொங்கும்படி மறிந்து வீழ்ந்து உயிர் நீத்தனன்.

(வி - ம்.) பர்ாகம் - துகள். வதிதலுற்றது - ஒருசொல்; வதிந்தது. மடங்கல் - சிங்கம். (௪௯௪)

தேவ ரந்தணர் பாடின ராடினர் தெய்வக்
காவ லர்ந்தபன் மலர்மழை சொரிந்தனர் நனாமும்
யாவ ருங்களி திளைத்தன ரெம்பிரான் றணந்து
மேவ ருந்திறற் பாசறை யடுத்துவீற் றிருந்தான்.

(இ - ள்.) அவ்வெற்றியினை யுணர்ந்த அமரரும் அந்தணரும் மகிழ்ச்சியாலே ஆடிப்பாடிக் கற்பகப்பூம்பொழிலுள்ள பல்வேறு மலர்களையும் கொணர்ந்து மழைபோன்று பொழியாநின்றனர். எம்பெருமானுடைய குழுவினரும் ஏனையோரும் மகிழ்ச்சியுடையராயினர். எம்பெருமான் அவ்விடத்தினின்றும் புறப்பட்டுப் பகைவர் புகுதற்கியலாத வலிமையுடைய தனது பாசறையின்கண் எய்தி வீற்றிருந்தருளினன்.

(வி - ம்.) தெய்வக்கா-கற்பகப் பூம்பொழில். தணந்து-அகன்று திறல் - வலிமை. (௪௯௫)

தூளி கைத்தலை யிருந்தமர் நோக்கிய சூரன்
ஆளி மாமுகன் விழுதல்கண் டயர்த்துளான் கொல்லோ
தாவி ழந்துளா னேவென னயிர்த்த னவில்
மீளும் வேயினர் பணிந்துவீந் தானென்று விரித்தார்.

(இ - ள்.) உப்பரிகையின் மேலிருந்து இப்போர் நிகழ்ச்சியினைக் கூர்ந்து நோக்கியிருந்த சூரபதுமன், சிங்கமுகாசுரன் எம்பெருமான் தண்டாலே தாக்குற்று விழுதலைப்பார்த்து இவன் உணர்விழந்து வீழ்ந்திருக்கின்றனனோ? அல்லது வாணாளையிழந்தனனோ? என்று பெரிதும் ஐயுறும் பொழுதில் போர்க்கள நிகழ்ச்சிகளை ஒற்றி மீண்ட ஒருசில ஒற்றர் சூரபதுமன் அடிகளிலே பணிந்து சிங்கமுகன் இறந்தான் என்று விளம்பினர்.

(வி - ம்.) சூளிகை - அரமியம்; உப்பரிகை. ஆளி - சிங்கம். அயர்த்தல் - உணர்விழத்தல். அயிர்த்தல் - ஐயுறுதல். வேயினர் - ஒற்றர். (௪௯௬)

வெற்று டம்பினன் மிக்குயிர்த் தவலித்துக் கவன்றங்
கற்ற நீங்கியுள் ளேதுய ராறுபு சினந்து
பற்று மண்டங்க டோறும்பயில் படையெலா மீண்டு
முற்றத் தம்மினென் றெண்ணிலர் தமைமுடுக் கினனால்.

(இ - ள்.) ஒற்றர் மொழிகேட்ட சூரபதுமன் உணர்ச்சியற்ற உடலையுடையனாய் நெடுமூச்செறிந்து அழுது வருந்தி ஒருவாறு அத்துன்பத்தினின்றும் தேறித் தணிந்தவனாய் வெகுண்டு தூதரைநோக்கி ஓடுமின்! நம்மாற்பற்றப்பட்டுள்ள பல்வேறு அண்டங்களினும் உறைகின்ற நம்முடைய படைமுழுதும் அழைத்து வாருங்கோள் என்று கட்டளையிட்டு எண்ணிறந்த தூதுவரை விரையச் செலுத்தினன்.

(வி - ம்.) வெற்றுடம்பு - உணர்ச்சியற்றவுடல். ஆறுபு - ஆறி; ஆறென்க. பற்றும் - நான்கைப்பற்றியுள்ள. முற்ற - முழுதும். (௩௨எ)

மனமும் பிற்பட வேகிய தூதுவர் மாற்றம்
தனையு ணர்ந்துப லண்டமுந் தவிர்ந்தபல் படையும்
துனைய வெய்துவா னெழுந்தன முந்துறுந் தூசி
கனைக டற்புவி நிறைந்துமே லுலகெலாங் கஞன்ற.

(இ - ள்.) மனோவேகமும் பிற்படும்படி விரைந்துபோன தூதுவர் கூறிய கட்டளை மொழியினைக் கேட்டுணர்ந்து அண்டம் பலவற்றினும் உறைந்த பல்வேறு படையும் விரைந்து புறப்பட்டன. அவற்றுள் முற்பட்ட தூசிப்படை ஆரவாரிக்கும் கடல்சூழ்ந்த நிலவுலகமெங்கும் நிரம்பி இடம் இன்மையால் வானுலகத்தினும் சென்று செறிந்தன.

(வி - ம்.) மனம் - மனத்தின்செலவு. மாற்றம் - மொழி. தவிர்ந்த- உறைந்த. தூசி - முற்செல்லும்படை. கஞன்ற - செறிந்தன. (௩௨அ)

ஆடிப் பூசியுண் டணிந்தருங் கலன்றுகின் மற்றும்
நாடிச் சேனைகட் களித்தெவ்வே ழயுதநற் பரிமா
பாடற் பேயரி மாவிவை பண்ணமை பொற்றேர்
கூடிப் பல்லிய மியம்பவா ளவுணர்கோ னிவர்ந்தான்.

(இ - ள்.) அவ்வாறு வந்துற்ற படைகளைக் களியாடச்செய்தும், நறுமணச்சாந்தம் முதலியன பூசுவித்தும், மலர்மாலை முதலியன அணிவித்தும்; மேலும் வரிசையறிந்து அரியஅணிகலன் ஆடை முதலியனவும் பரிசிலாக வழங்கியபின்னர், எழுபதினாயிரம் சிறந்த குதிரைகள், எழுபதினாயிரம் பாடாநின்ற பேய்கள், எழுபதினாயிரம் அரிமான்கள் என்னும் இவற்றோடு பண்ணுறுத்தப்பட்ட பொன்னாலியன்ற தேரின் மேலேறித் தன்னைச் சூழ்ந்து குழுமி பல்வேறுவகை இசைக்கருவிகள் முழங்காநிற்ப, வாளேந்தும் அவ்வவுணர்வேந்தன் செலுத்திச்சென்றான்.

(வி - ம்.) ஆடி - ஆடுவித்து. பூசி - பூசுவித்து. அணிந்து - அணிவித்து என்க. நாடி - வரிசையான் ஆராய்ந்து. ஆயுதம் - பதினாயிரம். (௩௨௯)

இறைவ னல்கிய விந்திர ஞாலமு மூரும்
விறன்ம டங்கலு முழையவ ருடன்கொண்டு மேவ
நிறைது கிற்கொடி நுடங்கவெண் ணிலாக்குடை நிழற்றச்
செறிவு கொண்டசா மரைபுடை யல்மரச் சென்றான்.

(இ - ள்.) ஏவலர் அவ்வவுணனுக்குப் பரமசிவன் வரமாகவழங்கிய இந்திரவிமானத்தையும் அவன் ஊராநின்ற வெற்றியுடைய சிங்கத்தையும் கூடவேகொணராநிற்பவும், வானமெங்குநிறைந்த துகிற்கொடிகள் ஆடவும், வெள்ளிய நிலவுவிரிக்கும் திங்கட்குடை நீழலைச் செய்யவும், நெருங்கிய வெண்சாமரைகள் இருமருங்கும் அசையாநிற்பவும் சென்றனன்.

(வி - ம்.) இறைவன் - சிவபெருமான். இந்திரஞாலம் - விமானம். விறல் - வெற்றி. உழையவர்-பக்கத்துள்ள அமைச்சர்முதலியோருமாம். நுடங்க - அசைய. (௩௯௦)

முந்து தூசிபோய்ப் பாசறை முற்றின கண்டு
பைந்து ழாயினன் முதலியோர் பதைபதைத் தழிந்து
வந்து ளானமர்க் கவுணர்கோ னென்றடி வணங்கக்
கந்த வேணகைத் தெழுந்தனன் கடைத்தலைச் சென்றான்.

(இ - ள்) அவுணனுடைய படைகளுள் வைத்து முற்படவந்த தூசிப்படை சென்று எம்பெருமானுடைய பாசறையினை வளைத்துக் கொண்டவற்றைப் பசிய துளசிமாலையணிந்த திருமான்முதலிய தேவர்கள் கண்டு நெஞ்சம் பதைத்து அழிந்து கந்தவேளின் திருமுன்னர்ச் சென்று திருவடிகளிலேவிழ்ந்து வணங்கி எம்பெருமானே ! சூரபதுமன் போரிடற்கு வந்துள்ளான் என்று விண்ணப்பிக்க அதுகேட்ட அப்பெருமான் நகைத்தருளி எழுந்து பாசறைவாயிலை எய்தினன்.

(வி - ம்.) துழாயினன் - திருமால். கடைத்தலை - வாயில். (௩௯௧)

மான தப்பெருந் தேரினை வளியிறை யுய்ப்ப
வான துந்துமி முழங்கவா னவர்பணி புரிய
ஞான நாயக னிவர்ந்தெதிர் நடந்தனன் மகவான்
சேனை கண்டுள மழுங்கினன் மாயவன் றெளித்தான்.

(இ - ள்.) வாயிலை எய்தித் தனது மானதத்தேரின்கண் ஏறி அதனைக் காற்றுத்தேவன் செலுத்தாநிற்ப, தேவதுந்துமி முழங்கவும், தேவர்கள் குற்றேவல் செய்து சூழவும், ஞானநாயகனாகிய முருகப்பெருமான் ஊர்ந்து அவ்வவுணர்கோமான் முன்னர்ப் போயினன். அப்பொழுது தேவேந்திரன் அவ்வவுணனுடைய சேனைப் பெருக்கத்தைக்கண்டு மயங்கினன்; அவனைத் திருமால் தேற்றினன்.

ஞானநாயகன் - முருகன். மகவான் - இந்திரன். மாயவன் - திருமால். (௩௯௨)

சலந்த ரன்கயா சுரன்முத லானதா னவரின்
வலந்த ழைத்தவர் மலிவுகாண் பூதர்நம் முடலம்
நிலங்கி டக்குமல் லானிலை யாதென நினைந்தக்
குலந்த ழைத்ததா னவரொடு மமர்த்தனர் குலைந்தார்.

(இ - ள்.) சலந்தராசுரன் கயமுகாசுரன் முதலிய அசுரர்களிலேயும் ஆற்றன்மிக்க மறவருடைய மிகுதியைக்கண்ட பூதர்கள் இனி நம் முடல் இவ்ராற்றுணிக்கப்பட்டுப் பிணமாய் நிலத்திலே கிடப்பதன்றி உயிரோடு நிலைபெறுவன ஆகமாட்டா என்று தம் நெஞ்சினுள்ளே நினைந்து, குலத்தானே பெருகிய அவ்வவுணப் படையோடு போர் தொடங்கிய மாத்திரையிற் குலைந்து போயினர்.

(வி - ம்.) வலம் - வெற்றி; வலிமையுமாம். பூதர் - முருகன் படைஞர். தானவர் - அசுரர். அமர்த்தனர் - போரிட்டனர். (ககரு)

தலைவ ரேற்றனர் தளர்ந்தன ரிலக்கருந் தாக்கி
உலைவு முற்றினர் வீரரெண் மரும்பொரு துடைந்தார்
சிலைவ லாளனுஞ் சிலர்விழக் கலக்குழி யொருங்கே
மலைதன் முற்றலின் வலியறச் சலித்தனன் மாதோ.

(இ - ள்.) நிலைகுலைந்த பூதப்படைத்தலைவரும் போர் ஆற்றித் தளர்ச்சியடைந்தனர். இலக்கவீரரும் போர்செய்து குலைந்தனர். நவ வீரர்களுள் வைத்து எண்மரும்போராற்றிப் புறங்கொடுத்தனர். எஞ்சிய வில்வல்லுநனாகிய வீரவாகுவும், அவ்வவுணர் ஒருசிலர் மாளும்படி போர்செய்யுங்கால் அவ்வவுணர் ஒருசேரத்தன்மேல் போர் ஆற்றுதலானே வலிமைகுன்றி நெஞ்சந் தளர்வாளுயினன்.

(வி - ம்.) தலைவர் - பூதகணத்தலைவர். இலக்கர், இலக்கம் என் னும் எண்ணளவினராகிய ஒரு மறவர்குழு. சிலைவலாளன் – வீரவாகு. (ககச)

கண்டு நாயகன் கார்முகம் வணக்கிநா ணோதை
கொண்ட னன்மத குஞ்சரம் புரண்டன மணித்தேர்
விண்டு டைந்தன விளிந்தன பரித்தொகை பல்லோர்
எண்ட விர்ந்தன ரிறந்தனர் சிலரிடந் தோறும்.

(இ - ள்.) இங்ஙனம் நிகழ்ந்த போர்நிலையினைக் கண்டருளிய எம்பெருமான் தனது வில்லைவளைத்து நாணொலி எழீஇயினன். அவ் வொலி கேட்டதுணையே மதயானைகள் புரண்டுவீழ்ந்தன. அழகிய தேர்கள் பிளவுபட்டுடைந்தன. குதிரைப்படை இறந்தொழிந்தன. பற்பல அசுரர் நினைவிழந்து வீழ்ந்தனர். இடந்தோறும் சிற்சிலர் இறந் தொழிந்தனர்.

(வி – ம்.) நாயகன் - முருகன். நாணோதை - நாணைத்தெறித் தெழுப்பும்ஒலி. குஞ்சரம் – யானை. (ககஞ)

வேறு

சத்திபோ டும்புணர் தற்பர னுக்கிய தானுள முன்னுதலும்
எத்தனை யுங்கணி கத்தில்வி ரிந்திட லென்னவி ளங்குமரன்
வைத்தனன் றூணியில் வார்கைய முற்சரம் வையநி றைந்தவையவ்
வுத்தம னட்டிடல் போலவு ணப்படை யொல்லைய ழித்தனவே.

(இ - ள்.) இறைவியோடுகலந்த இறைவன் உலகத்தைப் படைத் தற்குத் தனது திருவுளத்தே நினைத்தருளிய துணையானே எண்ணிறந்த அண்டங்கள் கொடிப்பொழுதிற்குள் தோன்றி விரிதல்போன்று முருகப் பெருமான் தனது நெடிய கையினை அம்பறாத் தூணியின்கண் வைத் தருளிய மாத்திரையின், திக்கணைகள் உலகமுழுதையும் மறைத்தன. அத்திக்கணைகள், அச்சிவபெருமான் அழிக்குங்காலத்தே ஒருநொடிப்

பொழுதிலே அனைத்தையும் அழித்திடுதல் போன்று அவுணப்படைகளை விரைந்து அழித்தொழித்தன.

(வி - ம்.) தற்பரன் - சிவன். கணிகம் - நொடிப்பொழுது. இளங் குமரன் - முருகன். வார் - நெடிய. நிறைந்தவை - வினையாலணையும் பெயர். (௩௬௬)

சுடர்கொழு வென்புவ ழுக்குவ ழும்புகொ ழுங்குறை மூளைதடி
தொடருந ரம்பிவை வேறுபி ரிந்துது வன்றுவ தன்றிமுழு
துடல்களை நாடரி தென்னவொ றுத்தன வும்பர்பி ரான்கணைகள்
இடமுள தண்மவெ னப்பிற வண்டமி ருந்தவு முற்றினவே.

(இ - ள்.) தேவதேவனாகிய முருகப்பெருமானுடைய அம்புகள் அச்சூரபதுமன் படைஞரையெல்லாம் அப்போர்க்களத்தே சுடரும் கொழுவும் என்பும் வழுக்குதலுடைய நிணமும், கொழுவியகுருதியும் மூளையும் தசையும் பின்னிய நரம்பும் ஆகிய இவை வெவ்வேறு பிரிந்து குவிந்த குவைகளையன்றி முழுமையான உடல்களை ஆராய்ந்துங் காண்டல் அரிதென்று கூறும்படி அழித்தன. இவ்வமயத்தே யாம் இனிப் போர்க்களத்தே புகுதற்கு இடமுளதாயிற்று என்று மகிழ்ந்து வேறு அண்டங்களிலே இருந்த அவுணப்படைகள் விரைந்துவந்து வளைத்துக் கொண்டன.

(வி - ம்.) கொழு - கொழுப்பு. வழுக்குவழும்பு : வினைத்தொகை. வழும்பு - நிணம். முன்னர் இடம்பெறுமல் பிற அண்டங்களிலே சென்றன ஆகலின் இடமுளதண்ம என அவை வந்தன என்றவாறு. (௩௬௭)

முந்தினு மிக்கபெ ரும்படை கண்டுமுன் னோன்வல வாவிரதம்
அந்தர மாதிர மெங்கணு முந்தென வையென வெண்ணிலுரு
மைந்தனெ டுத்தும லைந்தன னென்னவ விக்கிறை யேவல்செயச்
சிந்தினன் வார்கணை சிந்தின வெங்கணுஞ் சேனையு டற்றுணியே.

(இ - ள்.) முற்படவந்த படையினுங்காட்டில் மிக்கனவாகிய பெரும்படை வரவினை எம்பெருமான் கண்டருளி, "வலவனே! இனி நந்தேரினை வானத்திலும் எட்டுத்திசைகளினுமாக எவ்விடத்துஞ் செலுத்துவாயாக" என்று பணித்தருள, அங்ஙனமே செய்குவல் என்று அத்தேர்வலவனாகிய காற்றுக்கடவுள் "முருகப்பெருமான் எண்ணற்ற திருவுருவங்களைப் படைத்துக்கொண்டு யாங்கணும் நின்று போர் செய்தனன்" என்று கண்டோர் கருதும்படி இறைவன்பணியை இயற்றினன். எம்பெருமானும் நெடிய அம்புகளை அங்கிங்கெனாதபடி யாண்டுமெய்தனன். எங்கெங்கும் அவ்வசுரருடைய உடற்றுண்டங்கள் வீழ்ந்தன.

(வி - ம்.) முன்னோன் - முருகன். வலவா : விளி. மாதிரம்-திசை. என்று கண்டோர்கருத என்க. (௩௬௮)

மீட்டுமி ரும்படை மேவநெ டுங்கணை விட்டுவி யன்வழியில்
மாட்டிவ முக்கம றுத்துல கெங்குமி லிந்தவு டற்குறையின்

**கட்டமர் திண்டிறல் வென்றாளி ழிப்பவெ ரிந்தவு டற்றெருகுதி**
**ஒட்டறு சோரிவ றந்தது சூரனெ ருத்தனு நின்றனனே.**

(இ - ள்.) மீண்டும் பெரியபடை வாராநிற்ப அதுகண்ட பெருமான் சேமப்படைகளை யேவி அப்படைகளையும் இடைவழியிலே அழித்துப் பின்னரும் அவ்வழியையும் அழித்து வரவினைமாற்றி இவ்வாறு சென்றும் மிக்குக்கிடக்கும் குறைப்பிணங்களின் குவியல்களைப்பார்த்துச் சினந்த விழித்தவளவானே அவ்வுடற்றொகுதிகள் வெந்துசாம்பராயின ஓடிய குருதியும் வற்றி உலர்ந்தது. அப்போர்க்களத்தின்கண் சூரபதுமன் ஒருவன்மட்டுமே எஞ்சி நின்றான்.

(வி - ம்.) வியன் - அகன்ற. மாட்டி - கொன்று. ஓட்டறு-ஓடிய. சோரி - குருதி. (௩௩௯)

**என்னைமு டிக்குநர் யாவரு மில்லையெஞ் ஞான்றுமிவ் வாறுடலில்**
**மன்னுவ னீயத றிந்திலை புல்லியர் மாற்றம்வி ழைய்ப்பொருத**
**முன்னினை பிள்ளைமை யான்முது கீயினு மோதுவ லென்னவவன்**
**பன்னிரு தோளிறை செப்பென தம்புப கர்ந்திடு மென்றனனால்.**

(இ - ள்.) அவ்வாறு தமியனாய் நின்ற அசுரன் இறைவனைநோக்கி "இறைவனே! இவரெல்லாம் நின்னால் அழிக்கப்பட்டனர் எனினும், என்னை அழிப்பவர் எவ்வுலகத்தும் யாரும் இலர்கண்டாய். ஆதலின் யான் எப்பொழுதும் இப்படியே இவ்வுடலிலே நிலைபெறுவன். இஃதறியாது அறிவில்லாதோருடைய மொழியைக்கேட்டு நீ என்னோடு நினது பிள்ளைமதிப் பேதைமையாலே போராற்றத் துணிந்தனை. நீ என்பால் தோல்வியுற்று முதுகுகொடுத்தோடுதல், ஒருதலையேயாயினும் இவ்வுண்மையை யான் நினக்குணர்த்துவேன்," என்றுகூற அதுகேட்ட பன்னிரு தோட்பரமன்" அசுரனே! நினக்கு என் அம்பே விடையளிக்குங்காண்" என்றனன்.

(வி - ம்.) எஞ்ஞான்றும் - எப்பொழுதும். புல்லியர் - அறிவிலார். பிள்ளைமை - பிள்ளைத்தன்மை. (௩௪௦)

**என்றலும் வெஞ்சினம் விறவி ருஞ்சிலை யேற்றிய நாணொலிசெய்**
**நின்றிய சூரனெ திர்ந்தன னேர்ந்தழி வுற்றனர் பூதரெலாம்**
**நின்றுழி லக்கரும் வீரரு நேர்ந்துதொ டுத்தனர் வான்பகழி**
**நின்றவை மாற்றிநெ டுஞ்சிலை தேருநெ ரித்துமெ யுய்த்தனனே.**

(இ - ள்.) என்று பெருமான் திருவாய்மலர்ந்தருளியதுகேட்ட அளவிலே வெவ்விய வெகுளி மிக்கெழத் தனது பெரிய வில்லின்கண் ஏற்றிய நாணை ஒலிசெய்து பகைத்த அவ்வவுணன் போர் ஆற்றலுற்றனன். பூதப்படைஞர் ஒருசேர அவனை எதிர்ந்து ஆற்றாதுபுறமிட்டனர். நெருங்கிய இலக்கமறவரும் எண்மறவரும் அச்சூரன்மிசைச் சிறந்த அம்புகளை எய்தனர். சூரன் ஆண்மையொடு நின்று அவ்வம்புகளைத் தடுத்துமேலும் அவருடைய நெடியவிற்களையும் தேர்களையும் நுறுக்கி அவருடல்தோறும் அம்புகளைச் செலுத்தினன்.

(வி - ம்.) விற் - மிக. அன்றுதல் - பகைத்தல். விரன் - சிறந்த. (௩௧)

உய்த்தச ரம்புய நெற்றியு ரங்களு ரீஇப்பெய ரத்தளரா
மொய்த்தவி லக்கரு மெண்மரு நீங்கினர் மொய்ம்பினன் வாளியவன்
பைத்தவிர் வையமி வர்ந்துப ரன்றரு நாந்தகம் வாங்கிவளை
ந்தகத்தல் வில்லையி றுத்தனன் கையினெ றிந்தவ னேச்சினனே.

(இ - ள்.) ஏவிய கணைகள் தோளினும் நெற்றியினும் மார்பினும் புக்கு ஊடுருவிப் போதலானே தளர்ச்சியுற்றுச் சூரனை நெரித்துப் போர்செய்த இலக்கமறவரும் எண்மறவரும் புறமிட்டனர். அதுகண்ட விரவாகு பரந்தொளிராநின்ற அவ்வசுரன் தேரிலே தாவிச்சென்று அவனுக்கு இறைவன் அருளிய வாட்படையையும் கவர்ந்துகொண்டு மேலும் அவனுடைய கையின்கண்ணதாகிய வளைந்த வில்லையும் முறித்தனன். அவ்வசுரன் விரவாகுவைக் கையாற்புடைத்து வானத்தே தூக்கி எறிந்தனன்.

(வி - ம்.) உரீஇ - உருவி. தளரா - தளர்ந்து. மொய்ம்பினன் - விரவாகு. அவன் - ஆச்சூரன். பைத்து - பரவி. வையம் - தேர். நாந்தகம் - வாள். (௩௨)

வானெறி மொய்ம்பனை யர்ச்சித விர்ந்துதன் வள்ளலை யண்மினனால்
தானவன் வேறொரு வார்சிலை கொண்டுச ரம்பல கோடிவிட
மேனிலை யும்பர்கள் வைப்பும்வி றந்தகி ரித்தொகை யும்விரிநீர்ப்
பேனநெ டுங்கட லும்புவி யும்பிற வுந்தப மூடினவால்.

(இ - ள்.) வானிலே எறியப்பட்ட விரவாகு இளைப்பொழிந்து தன் வள்ளலாகிய முருகப் பெருமானை அணுகினன். இனிச் சூரபன்மன், மற்றொரு நெடியவில்லை எடுத்து வளைத்துப் பற்பல கோடி அம்புகளை எய்தனன். அவ்வம்புகள் மேலே நிலையுதலுடைய தேவருலகங்களையும், மிகுந்த மலைத்தொகுதிகளையும் நுரையுடைய நெடிய கடல்களையும் நிலவுலகத்தையும் பிறவற்றையும் கெடும்படி மறைத்தன.

(வி - ம்.) எறி - எறியப்பட்ட. அயர்ச்சி வானில் எறியப்பட்டமையாலே தவிர்ந்தது என்றவாறு. தானவன் - அசுரன். விறந்த - மிகுந்த. பேனம் - நுரை. தப - கெட. ஆல் : அசை. (௩௩)

கோற்றொடி கொன்றைமி லைத்தவர் வாள்விழி கொம்மென மூடுமிருள்
தோற்றுநு தற்கணி ரித்தென வாளிது ரந்தவ னெய்தகணை
மாற்றிய வன்மிசை யெண்ணில வேலினன் வள்ளலு ருந்தவைமேல்
வீற்றுநெ டுங்கணை விட்டனன் சூரன்வி ளைந்தன விம்முறையால்.

(இ - ள்.) உமாதேவியார் கொன்றைமாலை சூடிய சிவபெருமானுடைய ஒளிமிக்க திருக்கண்களைப் பொத்தி மறைத்தவாறுண்டான இருளை அப்பெருமான் படைத்துக்கொண்டு விழித்த நெற்றிக்கண்

பெருங் கொடிப்பொறியில் அழித்தொழித்தாற்போன்று முருகப்பெருமான் கொடிப்பொறியிலே கணைகளை ஏவி அச்சூரபதுமன் ஏவிய கணைகளை மாற்றியழித்து அச்சூரன்மேலும் எண்ணிறந்த அம்புகளை ஏவினன். அச்சூரபதுமனும் அக்கணைகளை அறுத்துப் பெருமான்மேலும் பல்வேறு கொடுங்கணைகளை ஏவினன். இம்முறையாகவே இருவரும் போர் செய்யாநின்றனர்.

(வி - ம்.) கோற்றொடி : அன்மொழித்தொகை. கொம்மென : விரைவுக்குறிப்பு. வீற்று - வேறுபாடு. (௯௪௪)

**அறுத்துவீ ழுஞ்சர மார்கலி வெற்பகன் மண்ணிட மெவ்விடனும்**
**மறைத்துநி மிர்ந்தன வாவயி னேர்வரு வாளிய றுத்தவுணன்**
**குறித்திறை வன்கொடி யைத்துகள் கண்டுகு றித்தொலி சங்கம்விரைந்**
**துரத்தினன் மீட்டுமு லப்பில்ச ரங்களொ ராறுமு கத்திறைமேல்.**

(இ - ள்.) இருவர்களானும் அறுபட்டு வீழ்கின்ற கணைகள், கடலும் மலையும் அகன்றநிலனும் ஆகிய எல்லாவிடங்களையும் மறைத்துயர்ந்தன. அப்பொழுது சூரபதுமன் தன்மேல் வருகின்ற கணைகளை மாற்றி, மேலும் குறிக்கொண்டு முருகப் பெருமானுடைய கொடியைத் தூள்படச்செய்து தனது மறச்சங்கினையும் முழக்கி விரைந்து மீண்டும் எண்ணத் தொலையாத அம்புகளை ஆறுமுகப் பெருமான்மேல் எய்தனன்.

(வி - ம்.) ஆர்கலி - கடல். வெற்பு - மலை. குறித்து - குறிக்கொண்டு. சங்கம்குறித்து - சங்கைமுழக்கி. ஒலிசங்கம் - வினைத்தொகை. (௯௪௫)

**நேர்ந்தச ரங்களி றுத்தவன் வையதி றுத்தநெ டுங்கொடியை**
**ஈர்ந்துக டற்கணி டக்கணை சிந்தின னெம்பெரு மானதனை**
**ஓர்ந்துபர் பானுகம் பன்வளை யாயிர மூதினன் மால்வளையும்**
**சேர்ந்துமு ழங்கிய தண்டமெ லாமொலி தேங்கிய தேங்கவுயிர்.**

(இ - ள்.) எம்பெருமான் தன்னெதிரே வந்த கணைகளை முறித்து மாற்றி அச்சூரபதுமன் தேரின்மேல் நிறுத்திய நெடியகொடியை அரிந்து கடலிலே கொடுபோய் வீழ்த்தும்படி ஒருகணையை ஏவினன். அதனை உணர்ந்து பானுகம்பன் தனது ஆயிரம் வாய்களினும் ஆயிரஞ்சங்குகளை வைத்து ஒருசேர முழக்கினன். அவற்றோடு திருமாலுடைய சங்கும் சேர்ந்து முழங்கிற்று. இம்முழக்கத்தானே உயிரினமெல்லாம் அஞ்சி ஏங்கும்படி எல்லா அண்டங்களினும் ஒலியே நிரம்பிற்று.

(வி - ம்.) வையம் - தேர். பானுகம்பன் - சிவபெருமான் திருவோலக்கமண்டபத்தே சங்குமுழக்குமொருவன். இவனுக்கு ஆயிரந்தலையுள என்ப. (௯௪௬)

**புங்கவர் நம்மிறை தேரினி ருங்கொடி யாதியெ னப்புகல**
**அங்கிபு றஞ்சிறை வாரண மாய்நனி யார்த்தனன் றேவரெலாம்**

தங்கும கிழ்ச்சியி னார்த்தனர் கண்டுத முன்றிவ ராருயிரை
நுங்குவ லென்றவன் விண்ணிலெ ழுந்துநொ றிற்பகை தூண்டினனே.

(இ - ள்.) அமரர் நந் தலைவனுடைய தேரின்கண் பெரியகொடி யாவாயாக என்று இரத்தலாலே தீக்கடவுள் இருபக்கத்துஞ் சிறகுகளை யுடைய கோழிச் சேவலுருவங்கொண்டு மிகவும் ஆரவாரித்தனன். அக்கோழிக் கொடியின் கூக்குரல்முழக்கங்கேட்ட தேவரெல்லாம் தம் நெஞ்சத்தே தங்கிய மகிழ்ச்சியாலே ஆரவாரித்தனர். இந்நிகழ்ச்சியைக் கண்ட சூரபதுமன் வெருண்டு இவ்வெளிய தேவர்களின் அரிய உயிரை இப்பொழுதேகுடிப்பன் என்றுகருதி வானத்திலேஎழுந்து விரைவுடைய அம்புகளை ஏவினன்.

(வி - ம்.) புங்கவர் - தேவர். ஆதி - ஆகுதி. அங்கி - தீ. புறஞ் சிறை. வாரணம் - கோழிச்சேவல்; வெளிப்படை. தழன்று வெகுண்டு. நொறில் - விரைவு. (௩௪௭)

ஓலமி டும்புல வோர்தமை யஞ்சலி ரென்றொரு கையினமைத்
தாலம்வி லக்கிய வண்ணலெ னக்கணை யாலவன் வாளியெலாம்
சால்வ றுத்தனன் வேலிறை தானவர் தந்தலை வன்றிருமி
மேலவ ரோடினர் பாலன்கொ லாஞ்சமர் மேவுவ னென்றழிவார்.

(இ - ள்.) அஞ்சி ஓலமிட்டழைக்கின்ற அமரரை, ஆறுமுகப் பெருமான் அருளோடுநோக்கி அஞ்சவேண்டா! அஞ்சவேண்டா! அமைதிகொண்மின்! என ஒருகைகவித்தமைத்த பின்னர் திருப்பாற் கடலில் தோன்றிய நஞ்சினை அகற்றி அமரரைப் பாதுகாத்தருளிய பரமசிவனைப்போன்று அம்புகளாலே அச்சூரபதுமன் அம்புகள் அனைத் தையும் மாற்றியருளினன். அவ்வளவின் அவ்வவுணத்தலைவனாகிய சூர பதுமன் போர்செய்தற்கு மீளவுந்தொடங்க. அமரர்கள் இச்சிறுவனோ இவனோடு போர்த்தொழில் ஆற்றவல்லுநன் என்று ஐயுற்று அழிவா ராய் ஓடாநின்றனர்.

(வி - ம்.) ஓலம் - அஞ்சினோர் துணைவேட்டழைக்குமொருசொல். ஆலம் - நஞ்சு. அண்ணல் - சிவன். திருமி - திரும என்க, திரும-மீள. (௩௪௮)

கோன்மழை சிந்துபு தேர்சுழ லக்குறு குற்றனன் வேல்வனும்
பான்மையி னுலிர தந்திரி யப்பக ழித்திரள் சிந்தினனால்
மீன்மறி யுங்கட லீவுவி லங்கல்வி யன்புவி விண்ணுமெலாம்
நீன்முகின் மின்னின்வி ளங்கிம றைந்திடும் நெற்றிமி குந்தவர்தேர்.

(இ - ள்.) அச்சூரபதுமன் அம்புமழை பொழிந்து தன்தேர்சுழலச் செலுத்தி அணுகினன். வேற்படைவிமலனும், தன்தேரினையும் வானத்தே சுழலும்படி செலுத்தி நான்குதிசையிலும் கணைக்கூட்டங் கூட்டமாகச் செலுத்தினன். முன்னணிக்கண்ணராகிய அவ்விருவர் தேர்களும் மீன்கள்மிளிரும் கடலும் தீவும் மலையும் அகன்றநிலமும் வானமும் ஆகிய எவ்விடத்தும் நீலநிறமுடைய முகிலின்கட்டோன்றி மறைகின்ற மின்னல்போன்று தோன்றி மறைவனவாயின.

(வி - ம்.) கோல் - அம்பு. நீல் - நீலநிறம். நெற்றி - முன்னணி.
(௪௮௯)

உலகுறு காரிய முண்மையி னுலத னுக்கொரு காரணனும்
மலமுள தென்று மதித்திடல் போல்விடு வாளிதி ரிந்திடலால்
நிலவியி ருஞ்சம ராடுந ரென்றுநி னைப்பத லாலவர்தம்
இலகுரு வுஞ்சம ராடுறு செய்கையும் யாரும றிந்திலரால்.

(இ - ள்.) உலகம் இடையறுது இயங்குதலான், இவ்வியக்கத்தைச் செய்யுங் காரணன் ஒருவனும் மலமுதலியனவும் இருத்தல் ஒருதலை என்று கருதலளவையாற் றுணிதல்போன்று, சூரபதுமனும் ஆறுமுகப் பெருமானுமாகிய இருவரும் விடுகின்ற கணைகள் யாண்டும் திரிவதனாலே பொருந்திநின்று பெரிய போரினை விளைப்போர் உளரென்று கருதலளவையாற் றெளிதலன்றி அவ்விருவருடைய விளக்கமுடைய உருவத்தையும் அவர் ஆற்றும் போர்ச் செயலையும் அமரர் முதலிய யாவரும் காட்சியளவையாற் கண்டிலர்.

(வி - ம்.) உலகுறுகாரியம் - உலகம் எய்துகின்ற தொழிற்பாடு. உதனுக்கு - இதற்கு. மதித்திடல் - கருதித்தெளிதல். சமர் - போர்.
(௪௯0)

மழுப்படை கப்பண நேமிகொ முப்படை வச்சிரம் வேல்கதைவாள்
எழுப்படை சூலமு மற்றும னந்தமி டைக்கண்வி ராய்க்கடவ
விழுப்பக ழித்திர ளாலவை சிந்திவி ரைந்துழ றேரொடுமா
குழுப்புவி வீழம டித்தனன் முன்னவன் மூவுல கும்புகழ.

(இ - ள்.) மழு, கப்பணம், சக்கரம், கொழு, வச்சிரம், வேல், தண்டு, கொடிய எழு, சூலம் என்னும் இவையும் இன்னோரன்ன பிறவுமாகிய படைக்கலங்கள். எண்ணிறந்தவற்றை இடையிடையே கலந்து அச்சூரபதுமன் செலுத்திக் கடவ இப்படைக்கலங்கள் அனைத்தையும் முதல்வனாகிய பெருமான், சிறந்த கணைகளாலேயே அழித்து மேலும் விரைந்து சுழலாநின்ற அந்தச் சூரபதுமன் தேரோடு குதிரைகளும் பெரிய நிலத்திலே வீழும்படி அழித்து மூன்றுலகோரும் புகழும்படி விழ்த்தியருளினன்.

(வி - ம்.) அனந்தம் - எண்ணிறந்த; முழுமையுடையபுவி என்க. முன்னவன் - முருகன்.
(௪௯௧)

தேரழி யச்சிலை யோடவு ணர்க்கிறை திண்புவி நின்றுகணை
ஆரவி டுத்தன னண்ணலு நண்ணிய றுத்தவன் வார்புயமேல்
வீரநெ டுங்கணை யாயிர மேவினன் விடின பட்டவைகோல்
ஆரணி ராயிர மேவினன் வேனெடுந் தோளுற நீறினவே.

(இ - ள்.) தேர் இங்ஙனம் அழிதலானே அவுணர் வேந்தன் வில்லோடு வறுநிலத்தே நின்று கணைகளை நிரம்பத் தொடுத்தேவினன். எம்பெருமானும் அவனெதிர்சென்று அவையிற்றை அழித்து மேலும் அச்

சூரபதுமன் நெடிய தோளின்மேல் மறமுடைய நெடிய ஆயிரங்கணைகளை எய்தனன். அவை அவன் தோளில்பட்டு மறைந்தன. அச்சூரபதுமனும் முருகவேள் நெடிய தோள்மேல் இரண்டாயிரம் கணைவிட்டான். அவை பெருமானுடைய தோளிற் பட்டதுணையானே நீறுபொழிந்தன.

(வி - ம்.) ஆர - நிரம்ப. அண்ணல் - முருகன். வீடின - மறைந்தன. வேள் - முருகவேள். நீறின - நீறுயின. (௩௫௧)

மருங்கமை பூதர்கள் வீரர்கண் மீதுவ டிக்கணை தானவர்கோன்
முருங்கவு கைத்தனன் வேளவன் வில்லைமு ரித்தனன் மற்றொருவில்
இருங்கையெ டுத்தும றைந்துறு மாயையி னிம்மென வானிடையுற்
றொருங்கிய சிந்தையி னின்றன னுற்றம ராடின னும்பர்பிரான்.

(இ - ள்.) சூரபதுமன் பக்கத்தேநின்ற பூதர்கண்மிசையும் வீரர் மேலும் வடித்த அம்புகளை அவர் அழியுமாறு செலுத்தினன். அது கண்ட முருகவேள் அவ்வசுரனுடைய வில்லை முறித்தனன். அவ்வளவில் அவன் மற்றொருவில்லைத் தனதுபெரிய கையிலெடுத்துக்கொண்டு தனது மாயவித்தையாலே சடுதியில் வானத்தேசென்று போர்செய்தற்கு ஒருப்பட்ட மனதோடு நின்றனன். தேவதேவன் அங்குஞ்சென்று அவனோடு போர்செய்தனன்.

(வி - ம்.) மருங்கு - சுற்றமுமாம். வடிக்கணை : வினைத்தொகை. முருங்க - அழிய. இம்மென : விரைவுக்குறிப்பு. உம்பர்பிரான்-முருகன். (௩௫௨)

ஓதநெ டுங்கடல் பாதல மாதிர மோங்கிய மேருமுடி
மாதவன் வைப்பும றைந்தவ னேகநம் வள்ளலு மங்கணைவாம்
போதல்பு ரிந்தம ராடின னவ்வபு லன்களி னீங்கியவன்
மீதுய ரண்டக டாகமு கட்டினை மேவின னுங்கிறைபோய்.

(இ - ள்.) பெருக்குடைய நெடிய கடல்களிடத்தும் பாதாள லோகங்களினும் திசைகளிடத்தேயும் மேருமலையுச்சியினும் அம்மையப்பன் எழுந்தருளியிருக்கும் கைலாயமலையினும் சென்று சென்று மறைந்து அவ்வசுரன் நின்றனனாக, அவ்வவ்விடந்தோறும் நம்பெருமானுந் தொடர்ந்துபோய்ப் போர்செய்தனன். அவ்வசுரன் அவ்வவ்விடங்களை அகன்று அகன்றுபோய் அண்டகடாகமுகட்டினையும் எய்தினன் அங்கும் எம்பெருமான் சென்று.

(வி - ம்.) ஓதம் - கடற்பெருக்கு. மாதிரம் - திசை. மாதவன் வைப்பு - திருமாலுலகமுமாம். வள்ளல் - முருகன். புலன் - இடம். (௩௫௩)

மூதம ராடிவை யந்துக ளரக்கினன் மூர்க்கனி வைந்தனையும்
மேதகு மிந்திர ஞாலமி வர்ந்துவெ குண்டம ராடல்செய்வான்
வாய்தலை டைத்துறு சேனைக ளப்புற மல்கிய தீர்த்தெரியாக்
காதிநெ டுங்கலை யுள்வழி கண்டுவிளித்தன னப்படையை.

(இ - ள்.) பெரிய போரினைச்செய்து அவனுடைய தேரைத் துகள் படுத்தினன். அக்கொடியோனும், தான் நினைந்தமையாலே அங்கு வந்த மேன்மையான தகுதியையுடைய இந்திரவிமானத்தில் ஏறி அதனை ஊர்ந்து சென்று போர்செய்தற் பொருட்டு அண்டகடாகத்திற்கு அப்பால் வாயிலை அடைத்துத் தங்கியுள்ள தன் படைகளின் மிகுதியை உணர்ந்து அண்டகடாகத்தினை இடித்துத் தனது நெடிய கணையாலே வழியுண்டாக்கி அப்படைகளை அழைத்தனன்.

(வி - ம்.) வையம் - தேர். மூர்க்கன் - கொடியவன். நீர் - தன்மை தெரியா - தெரிந்து. (௯௯௫)

குடங்கரின் வேறுகு டங்கரி ரும்பொருள் கோட்டிய கொள்கையென்
இடங்கெட வல்லையி றுத்தன வெம்பெரு மான்மு லின்விழியா
உடங்குற நீற்றிம ழுப்படை நேமியோண் சூலமெ ழுக்கதையும்
தடங்கைவி டுப்பவெ ழுந்தவை யெண்ணிலு ருக்கொடு சார்ந்தனவே.

(இ - ள்.) ஒரு குடத்தின்கண் மற்றோர் குடத்திலுள்ள பெரிய பொருள்களைக் கொட்டினாற்போன்று அப்புற அண்டத்தேயிருந்த படை இவ்வண்டம் இடமிலதாம்படி விரைந்து வந்துசேர்ந்தன. அதுகண்ட எம்பெருமான் அப்படைகளை நெருப்பெழவிழித்து ஒருசேர நீறுபடுத்தி யருளிப் பின்னர் மழு, சக்கரம் ஒள்ளியசூலம், எழு, தண்டு என்னும் இப்படைகளைத் தனது பெரிய கைகளினின்றும் ஏவாநிற்ப, அப்படைகள் ஒவ்வொன்றும் எண்ணிறந்த உருவமுடையனவாய்ச் சென்றன.

(வி - ம்.) குடங்கர் - குடம். வல்லை - விரைந்து. உடங்குற - ஒருசேர. (௯௯௬)

சூர்ந்தலை யிட்டவோ ராயிர வண்டமு மெய்திய வப்படைகள்
ஊர்ந்தலை பற்றன ரேயென மங்கைய ருள்ளுயிர் கண்டழிய
வார்ந்தலை நீப்பவி ருந்தவ மாற்றமண் ணைத்திர ளோம்பவினம்
தீர்ந்தலை யுற்றவ ரென்றல கைக்கண மோம்பவி ளித்திடுமால்.

(இ - ள்.) ஏழாயிர அண்டங்களினும் சென்ற எம்பெருமானுடைய அப்படைக்கலன்கள், தம்மைக் கண்டமாத்திரையிலே அசுரமகளிர் தங்கணவர் ஆகூழ் அற்றவராயினரே என்று ஏங்கி உள்ளம் அழியவும் உயிர்அழியவும் உயிரைவிடவும் பெரிய தாபத நிலையினை மேற்கொள்ளவும் பேய்க்கணங்கள் இறந்து வீழ்ந்தோர் தமக்கினமாயவர் என்று இரங்கி ஓம்பவும் அப்படைஞரைக் கொன்று குவித்தன.

(வி - ம்) மங்கையர்கண்டு உள்ளமும் உயிரும் அழியவும், வாழ்தலை நீப்பவும், தவமாற்றவும், ஓம்பவும், விளித்திடும் (கொன்றிடும்) என்க. அலகை - பேய். (௯௯௭)

ஐயிரு நூற்றிரு நான்கெனு மண்டமு மாடுப றந்தலையாய்
ஐயவி ருந்தன வென்னில வன்படை யார்தொகை காணவலார்
ஐயிரு கையொடி ரண்டுகை பெற்றம ராட்லகு றித்துவருஉம்
ஐயன ளவவு ணர்க்கிறை யாருயிர் யாவர றிக்கவலார்,

(இ - ள்.) ஆயிரத்தெட்டு என்று கூறப்படுகின்ற அண்டமெல்லாம் போர் செய்யும் களமாகச் அச்சூரபதுமனுடைய படைகள் நிறைந்திருந்தன என்னில் அம்மம்ம! அப்படையின் தொகையை யாரே கணித்தற்கு வல்லுநராவர். அவ்வவுணரோடு போர்செய்து அவரை அழித்தற்குக் கருதிப் பன்னிரண்டு திருக்கைகளையுடையனுய்வந்த செவ்வேளையன்றிப் பிறர் யாரே சூரபதுமனுடைய அரிய உயிரைப்பறித்தற்கு வல்லுநர் ஆவர்.

(வி - ம்.) பறந்தலை - போர்க்களம். ஐய-வியப்பு. ஐயன் - முருகப் பெருமான். அவுணர்க்கிறை - சூரபதுமன். (திகஅ)

ஆங்கது கண்டவு ணர்க்கிறை யீசன ளித்தத ழற்றிகிரி
ஏங்கவிண் ணோர்கள்வி டுத்தன னீட்டியி ருங்கையி னேற்றனன்வேள்
ஓங்கிய சூரனு லப்பிலு ருக்கொடு ருத்தம ராடினனால்
காங்கெயன் சேதன மாப்படை யாலவன் மாயைக ரந்தனனால்.

(இ - ள்.) பெருமானுடைய படைக்கலன்கள் இவ்வாறு தன் படையை நாழிலாட்டியதனைக் கண்ட சூரபதுமன் பரமசிவன் தனக்கு வழங்கிய நெருப்புச் சக்கரப்படையினைத் தேவர்கள் ஏங்கும்படி ஏவினன். அச்சக்கரப்படையை எம்பெருமான் தன்றிருக்கையினை நீட்டி ஏற்றருளினன். அதுகண்டு சினத்தாலோங்கிய அச்சூரபதுமன் தன் மாயையாலே எண்ணிறந்த உருவங்கொண்டு சினந்து (எப்பக்கத்துஞ் சூழ்ந்துகொண்டு) போர் செய்யலானுன். காங்கேயனுகிய எம்பெருமான் அறிவுப்படையாலே அவனுடைய மாயையை அழித்தொழித்தனன்.

(வி - ம்.) தழற்றிகிரி - தீயாலானதொரு தெய்வச்சக்கரப்படை. விண்ணோர்கள் ஏங்கத் திகிரி விடுத்தனன் என்க. உருத்து - சினந்து. சேதனம் - ஈண்டு அறிவு. ஆல் : அசை. (திகக)

அலைத்திடு நாண்கொடு சூரன்ம றைந்துய ரண்டமு கட்டுவழித்
தலைத்தலை நின்றறை கூவியப் பாற்றவி ரண்டம டுத்தனனால்
இலைத்தலை வேல்வல னேந்தியு முற்றெதி ராடவொ ழிந்தவுணன்
மலைத்தலை விழ்ந்துப லண்டமும் வாவினன் வாவின னம்மிறையும்.

(இ - ள்.) மாயை அழிந்தமையாலே சூரபதுமன் தன்னெஞ்சினை வருத்தாநின்ற நாணத்தை மேற்கொண்டு அவ்விடத்தினின்று மறைந்து உயர்ந்த அண்டமுகட்டின் வழியே ஓடுபவன், இடந்தோறும் இடந்தோறும் நின்று எம்பெருமானை அறைகூவி யழைத்தழைத்துச் சென்று, இவ்வண்டமுகட்டின் அப்பாலுள்ள புறவண்டத்தை எய்தினன். இலையமைந்த தலையையுடைய வேற்படையை ஏந்துபவனுகிய எம்பெருமானும் அங்கங்கே சென்று அவனோடு போரெதிர்ந்து ஆற்றுதலானே, அவ்வவுணன் மேலும் அவனோடு போராடுதலைவிரும்பிப் பற்பல அண்டங்களினும் தாவிச் சென்றனன். எம்பெருமானும் அவனைத் தொடர்ந்து தாவிச் சென்றருளினன்.

(வி - ம்.) நாண் - நாணம். அறைகூவல் - போர்க்கு வலிந்தழைத்தல். வேல்வலனேந்தி - பெயர். மலைத்தலை - போர்செய்தலை. வீழ்ந்து - விரும்பி. (உஎ0)

**அஞ்ஞையை யிழந்தசி றாரென நொந்தய னாதியின் னோர்களெலாம்**
**கைஞ்ஞெரி கொண்டுக வன்றனர் மால்கறை கண்டம்வி டுத்துவரும்**
**மஞ்ஞையு னுற்றவ னிந்நிலி ரின்னும்வ ருங்கடி தென்றமரர்**
**மொய்ஞ்ஞும வித்தொகை சூழ்ந்தம கேந்திரஞ் சூரொடு முன்னினனால்.**

(இ - ள்.) தாயை இழந்துவிட்ட சிறுவர்போன்று பிரமன்முதலிய தேவரெல்லாம் மனம்நொந்து கைகளை நெரித்து வருந்தாநின்றனர். அது கண்ட திருமால் அத்தேவர்களை நோக்கி முழுமுதல்வனாகிய சிவபெருமானே தனக்குரிய நீலகண்டத்தை மறைத்தருளி மயில்வாகனப் பெருமானாகி நம்மைப் பாதுகாத்தற்பொருட்டு எழுந்தருளினன், இவ்வுண்மை யறியாமையான் அப்பெருமானுடைய வரம்பிலாற்றலை நீயிரெல்லாம் இன்னும் அறிகிலீராய் இங்ஙனம் வருந்துகின்றீர். அஞ்சாதே கொண்மின்! எம்பெருமான் விரைந்து வெற்றியோடு மீண்டு வருகுவன் என்று தேற்றாநின்றனன். மொய்த்த மயிற்றிரள் சூழ்ந்துள்ள சூரபதுமனுடைய மகேந்திர நகரத்திற்குச் சூரபதுமனைத் தொடர்ந்து நம்பிறைவனும் சென்றனன்.

(வி - ம்.) கடிதுஎன்ற அமரைத் தேற்றினன் என ஒரு சொல் வருவித்து முடிக்க. ஞமலி - நாயுமாம். ஆல் : அசை. (௯௬௧)

**ஆனவு ணப்படை யுள்ளன யாவும டர்ந்தெதி ரக்குமரன்**
**ஈனதி கென்றுந கைத்தனன் வெண்பொடி யின்றிட ராயினவே**
**ஊனர சான்பவ னேக்கியு ளந்தளர் வுற்றொரு சூழ்ச்சியனாய்**
**வானவ ரஞ்சிய மாயையை முன்னினன் மற்றவண் முன்னினளால்.**

(இ - ள்.) அம்மகேந்திர நகரத்தேயுள்ள அசுரப்படைகள் அனைத்தும் ஒருசேரச் செறிந்து போர்க்கெழா நிற்பக் குமரக்கடவுள் அவற்றை இவ்விடத்திலேயே அழிக என்று திருவுளத்தேகருதி நகைத்தருளினன். அவ்வளவிலே அப்படைகள் அனைத்தும் வெந்து சாம்பர்த் திடலாயின. இந்த நகரத்திருந்து அரசாட்சி செய்பவனாகிய சூரபதுமன் இந்நிகழ்ச்சியினைக் கண்டு நெஞ்சந் தளர்ந்து ஒரு சூழ்ச்சி செய்ய நினைத்தவனாய் அமரர்தம் அஞ்சுதற்குக் காரணமான மாயையை மனதினுட் சிந்தித்தனன். சிந்தித்தலும் அம்மாயையும் அவன் முன்னர் வந்து நின்றனள்.

(வி - ம்.) ஆன் - அவ்விடம். ஈண் - இவ்விடம். ஊன்-உவ்விடம்; மகேந்திரநகரம். (௯௬௨)

**எமையையி ருந்தர சான்வது கண்டவென் கண்களி னைந்தழியத்**
**தமியையி ருந்தனை பின்னும மர்த்தற விர்ந்திலை யாவர்கொலாம்**
**இமிழுறு பாலவிழ் கிற்பினி றுக்குந ரீங்கெனை முன்னுமஃ** [வான்.
**துமிழ்மதி யென்றனன் மாய்படை யாருக தில்லென வொன்றுசொல்**

(இ - ள்.) அங்ஙனம் வந்த மாயை சூரபதுமனை நோக்கி அந்தோ! எம்மையுடைய வேந்தனே! நீ நின்சுற்றத்தோடு ஈண்டிருந்து அரசாள் வதனைக் கண்டுகளித்த என் கண்கள் வருந்தியழும்படி நீ இங்ஙனம்

தனித்திருந்தாய், இவ்வாறு தனித்தபின்னரும் போர் ஆற்றுதலையும் விட்டிலே. உலகத்தின்கண் யாரே, ஆக்கத்தைச் சேர்க்கும் ஊழ்உலந்த பின் ஆக்கமுறவல்லார்! என்னை நீ நினைந்த கருத்து யாது? அதனைக் கூறுவாயாக! என்றனள். இறந்துபோன என் படைகள் மீண்டும் எழுக! என்றனன். அதுகேட்ட மாயை அதற்கு ஒருபாயங்கூறு கின்றவள்.

(வி - ம்.) எமியை - எம்மையுடையை. தமியை-ஒருவனாய். அமர்த்தல் - போராற்றுதல். மதி ; முன்னிலையசை. தில் ; அசை. விழைவுப் பொருளது. (இசுக)

வேறு

திமிதி மிங்கில கிலந்திரி புறக்கட லொருபால்
அமிழ்த சீதமந் தரவரை யுளதஃ தடுப்பின்
நிமிரு நின்பெருஞ் சேனையென் றகன்றன ளுயிர்கள்
துமிம டங்கன்மேல் கொண்டனன் றூண்டினன் மணித்தேர்.

(இ - ள்.) திமி, திமிங்கிலகிலம் என்னும் பெரிய மீன்கள் வாழுதற் கிடமான பெரும்புறக்கடலின்கண் ஒருசார் அமிழ்தசிதமந்தரம் என்னும் பெயரையுடைய மலையொன்றுளது. அம்மலை ஈண்டு வந்துறின் இறந்தொழிந்த நின் பெரியபடைகள் அனைத்தும் உயிர்த்தெழும் என்று கூறிச் சென்றனள். உயிர்களை அழிக்குமியல்புடைய சிங்கத்தின் பிடரி லேறிக்கொண்டு அச்சூரபதுமன் அம்மலையைக்கொணர்தற்கு அழகிய தொரு தேரைச் செலுத்தினன்.

(வி - ம்) திமி - பெருமீன். திமிங்கிலம் - கடலுள்வாழும் மீன் களில் மிகப் பெரிய மீன். நிமிரும் - உயிர்பெற்றெழும் என்க. துமிமடங்கல் : வினைத்தொகை. (இசுஉ)

ஞாலந் தன்னுறுப் பாக்கிய நாமத்தேர் குறுகி
மூலந் தன்னொடு மகழ்ந்துமுன் னனுமுந்து கால்பட்
டால முண்டவன் குருகத் தாடலி னயர்ந்தோர்
பால ணங்குற வெழுந்தென் வெழுந்தநாற் படையும்.

(இ - ள்.) இந்திரஞாலம் என்னும் பெயரையுடைய அத்தேர் சென்று அவ்வமிழ்தசித மந்தரமலையை வேரோடும் அகழ்ந்து கொண ரலும் அம்மலையுந்திய காற்றுப்பட்டவளவிலே, இறைவன் தாருகாசுர னோடு போர்செய்த காலத்தே இறந்துபோன படைகள் விதியும்வருந் தும்படி உயிர்பெற்று எழுந்தாற்போன்று நால்வகைப் படையும் உயிர் பெற்று எழாநின்றன.

(வி - ம்.) ஞாலந்தன்னுறுப்பாகிய நாமம் - இந்திரஞாலம் என்ப தாம். மூலம் - வேர். கால் - காற்று. தாருகம் - தாருகாசுரன். பால் - ஊழ். (இசுங)

மற்றை யண்டநின் றிறுத்தவிவ் வண்டத்தின் மலிந்த
முற்று முய்ந்தன குச்சென மொழியுல கேழும்

**செற்றி நின்றன முடுதெண் கடலினுட் காஞ்சி**
**உற்ற வாறெனப் பூதர்வீ ரர்களுமுள் ளானர்.**

(இ - ள்.) பிற அண்டங்களினின்று வந்தனவும் இவ்வண்டத்திலேயே மிக்குள்ளவும் ஆகிய எல்லாப் படையும் உயிர்பெற்றெழுந்தன. ஏழுலகும் தமக்குறைதற்குப் போதாத குடில்களே என்று கண்டோர் கூறும்படி யாண்டும் செறிந்துநின்றன. ஊழிக்காலத்தே உலகைமூடும் தெள்ளிய கடலினூடே காஞ்சிமாநகரம் இருந்தாற்போன்று பூதர்களும் வீரர்களும் அப்படையகத்தே அகப்பட்டிருந்தனர்.

(வி - ம்.) குச்சு - சிறுகுடில். செற்றி - செறிந்து. (௯௬௬)

**முந்து வாழ்க்கையின் விழைவினி யொழிந்தனம் வேண்டா**
**இந்த யாக்கைதப் புதறவப் பேறென விமையார்**
**நொந்து வண்டுதே னுண்கொசு கெனவுரு மாறி**
**அந்தி னீங்கின ரிரிந்தனர் மலைமுழை யடைந்தார்.**

(இ - ள்.) தேவர்கள் இனியாம் முன்பு நிகழ்த்திய வாழ்க்கையின் பாலுள்ள அவாவினை விட்டொழித்தேம். அவ்வாழ்க்கை எங்கட்கு வேண்டுவதின்று. யாம் இதுபோழ்து கொண்டுள்ள இவ்வுடல்தப்புதலே முன்செய்த தவப்பயன் ஆகும் போலும் என்று மனம்வருந்தி வண்டும் தேனும் நுண்ணிய கொசுவும் ஆக உருவம்கொண்டு அவ்விடத்து நின்றும் அகன்றுபோய் மலைக்குகைகளினூடே புகுந்தனர்.

(வி - ம்.) இமையார் - தேவர். அந்தில் - அவ்விடத்தில் அசைச் சொல்லுமாம். தேன் : வண்டுகளில் ஒருவகை. (௯௬௭)

**அரிமு கத்தவன் கதிர்ப்பகை யங்கிமா முகவன்**
**பரிவின் மைந்தர்மு வாயிரர் பின்னவன் பலரும்**
**பெரிது மோகைகொள் சூரனை வணங்கினர் பெரும**
**புரிதும் போரினை யாமெனப் போர்த்தன ரொருங்கு.**

(இ – ள்.) சிங்கமுகன், கதிர்ப்பகைவன், தீமுகன் அன்புடைய மக்கள் மூவாயிரர் என்னுமிவரும் ஏனையோர் பலரும் ஒருங்கேவந்து மிகவும் மகிழ்ச்சியுடையோனாய் வீற்றிருந்த சூரபதுமனை வணங்கிப் பெருமானே. யாங்கள் மீண்டும் சென்று போராற்றுவேம் என்று கூறி விடைகொண்டு முழுதும் வளைத்துக் கொண்டனர்.

(வி - ம்.) பெரிதும் - மிகவும். ஓகை - உவகை. பெரும - விளி. (௯௬௮)

**படையெ டுத்திடு முணர்வின்றிப் பாரிடர் நின்றார்**
**இடையும் பாரிடத் தலைவர்கள் வீரமுற் றழிந்தார்**
**தொடையி லக்கருந் தொலையுங்கொ லோவென வயிர்த்தார்**
**உடையு நெஞ்சினை வலியுறத் தூக்கினர் வீரர்.**

(இ-ள்.) படைக்கலன்களைத் தாங்கிப் போர்செய்யும் உணர்ச்சியையே இழந்து பூதர்கள் வாளாநின்றனர். செறிந்த அப்பூதத்தலைவர்கள் தமது மறப்பண்பு முழுதும் அழியப்பெற்றார். மாலையணிந்த இலக்கமறவரும் இப்படை மீண்டும் முருகப்பெருமானால் அழிக்கப்படுமோ? என்று ஐயுறுநின்றனர். இவ்வாறு உடைந்த நெஞ்சத்தை ஊக்குவித்துக்கொண்டனர் வீரர்யாவரும்.

(வி-ம்.) பாரிடர் - பூதர். முற்றும் எனல் வேண்டிய முற்றும்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது. தொடை-மாலை. தொலையுங்கொல் - தொலைக்கப்படுங்கொல். (௯௪௯)

வாழி காங்கெய னனைத்தையு மனத்திடைக் குறித்தான்
ஊழி நாயகன் படையினைத் துரந்தன னேங்கிப்
பூழி யாக்கிமீண் டதுபுரத் தெஞ்சினர் போலச்
சூழி யானையந் தொகையுடைச் சூரனை விடுத்து.

(இ-ள்.) வாழ்க! எம்பெருமான் இந்நிகழ்ச்சிகளை எல்லாம் திருவுளத்திடைக் குறிக்கொண்டனன்; உருத்திரப்படையை அப்படையின்மேலேவியருளினன். அப்படை உயர்ந்துபோய் முகபடாமுடைய யானைப்படையையுடைய சூரபதுமன் ஒருவனைமட்டும் விட்டு ஏனைப் படைகள் அனைத்தையும் திரிபுரத்தே மாண்ட அசுரர்களைப் போன்று சாம்பராக அழித்தொழித்து மீண்டது.

(வி-ம்.) வாழி - நூலாசிரியர் இறைவனை வாழ்த்துகின்றனர். இனி - அசையெனினுமாம். (௯௫௦)

தேரி ருந்தமந் தரமுமரங் கேசிதர் பட்ட
தோரு நாயக னிழந்தவ ளுவன்வரக் கனவி
ஆரு மின்பிடை விழித்தென வவலமிக் கெய்திச்
சூரன் வேலையுந் தனிமைசெய் வாமெனத் துணிந்தான்.

(இ-ள்.) இந்திரஞாலத் தேரின்கண் இருந்த அமிழ்த சிதமந்தரமலையும் அவ்விறைவன் படைக்கலத்தானே சிதறிப்போயிற்று. சூரபதுமன், கணவனை இழந்தாளொருத்தி அக்கணவன் மீண்டுவருவதாகத் தன் கனவிலே கண்டு அக்கணவனோடு நுகர்கின்ற இன்பப் பொழுதிலே விழிப்புற்று அஃது கனவெனவுணர்ந்து வருந்தினாற்போன்று மிகமிக வருத்தமெய்தி, என்னை இவ்வாறு தனிமைசெய்த அம்முருகவேலை யானும் தனிமையுறச் செய்வேன் என்று துணிந்தான்.

(வி-ம்.) சிதர் - துகள். உவன் - அவன். கனவி - கனவு கண்டு. (௯௫௧)

வேறு

இந்திர ஞாலம்வி டுத்தன னெண்மியி ராயிரம் வெள்ளமோ டேனோர்தம்
சிந்தைம யக்குபு தெவ்வியெ முந்துதி ணிந்துய ரண்டமு கட்டேய்தி
அந்திலி ருந்தது வேலவ னேக்கியோ ரம்புவி டுப்பவ டுத்தீர்த்து
வந்தது குப்புற வுற்றனர் மண்ணிடை வன்னமி கும்வய வோர்யாரும்.

(இ - ள்.) சூரபதுமன் இந்திரஞாலத் தேரினைச் செலுத்திச்சென்று இரண்டாயிரம் வெள்ளம் படைகளை மற்றையோர் நெஞ்சத்தை மயங்கச் செய்து யாரும் அறியாமல் ஏற்றிக்கொண்டு திணிந்துயர்ந்துள்ள அண்ட முகட்டினை அடைந்து ஆங்கிருந்ததனை எம்பெருமான் நோக்கி ஒரு கணையினை ஏவ அஃது ஆங்குச் சென்று அத்தேரோடு இழுத்துவந்தது. அதன்கண் இருந்த திறமிக்க வீரர்கள் எல்லாம் மண்ணிலே குதித்தனர்.

(வி - ம்.) விடுத்தனன்-முற்றெச்சம். மயக்குபு - மயக்கி. அந்தில்- அசை; அவ்விடமுமாம். தெவ்வி - கொண்டு. குப்புறல் - குதித்தல். (௩௭௨)

**ஏகலை நிற்றியெ னச்சுழ லிந்திர**
**ஞாலநி றுத்தின னெங்கோமான்**
**ஆகிய வண்ணம றிந்தவு ணர்க்கிறை**
**யாடுசி லைத்தொழில் கைக்கொண்டு**
**பாகனு யங்கமெய் யெங்கு மிருங்கணை**
**பாய்த்தின னெம்பெரு மானன்னுன்**
**வேகநெ டுஞ்சிலை சிந்தினன் வாளரி**
**மீதுந டத்திம றச்சூரன்.**

(இ - ள்.) எம்மையாளுடைய இறைவன் சுழலாநின்ற அவ் விந்திர ஞாலத்தேரினை நோக்கி நீ இனி இயங்காதே கொள்! என்று கையானமர்த்தினன். இந்திரஞால மியங்காத அத்தன்மையை யுணர்ந்த சூரபதுமன் கொல்லும் விற்றொழிலை மேற்கொண்டு எம்பெருமானுடைய தேர்வலவன் வருந்தும்படி அவனுடைய உடலெங்கும் பெரியகணைகளைச் செருகினான். அதுகண்ட எம்பெருமான் அச்சூரபதுமனுடைய விரை வுடைய நெடிய விற்படையினை ஒடித்தொழித்தனன். அதுகண்ட மறப் பண்புமிக்க அவ்வவுணன், ஒளியுடைய சிங்கத்தின்மேலேறி நடத்தி,

(வி - ம்.) ஏகலை - இயங்காதேகொள். ஆகியவண்ணம் - அதனால் உண்டான தன்மை. பாகன் - காற்றுக்கடவுள். வாள் - ஒளி; வாள் போலும் சிங்கமுமாம். (௩௭௩)

**ஈசன ளித்தருண் முச்சிகை வேல்கொண்**
**டெறிந்தனன் மாற்றவெ றிற்செவ்வேள்**
**ஆசுக மாயிர முய்த்தன தின்றட**
**ரக்கர வச்சிர மேலேவி**
**வீசொளி முச்சிகை வெளவிவி டாதது**
**மீளவு டங்குக ரத்திட்டுக்**
**கேசரி மாயவி ராயிர வாளிகள்**
**கீழ்ந்தெழ நெற்றியு றுத்தானல்.**

(இ - ள்.) சிவபெருமான் வழங்கியருளிய முத்தலைவேலை எடுத்து எறிந்தனன். அம்முத்தலை வேலினை மாற்றுதற்கு, அழகுமிக்க எம்பெரு

மான் ஆயிரம் அம்புகளைச் செலுத்தினன். மேலும், பெரிதும் கொல்லுத லுடையதும் அழிவற்றதுமாகிய வச்சிரப்படையையும் ஏவாநிற்ப அவ் வச்சிரம் ஒளிவீசும் அம் முத்தலைவேலினை விடாமல் கவர்ந்துகொண்டு மீள அவ்விரண்டனையும் ஒருசேரத் தனது திருக்கரத்திலே ஏற்றருளி, சூரன் ஊர்தியாகிய சிங்கம் மாளும்பொருட்டு அதனைக் கிழித்தெழும் படி அதன் நெற்றியிலே இரண்டாயிரம் அம்புகளைச் செலுத்தினன்.

(வி - ம்.) ஈசன் - சிவபெருமான். முச்சிகைவேல் - சூலம். ஆசுகம் - அம்பு. அக்கரம் - அழிவற்றது. உடங்கு - ஒருங்கே. கேசரி - சிங்கம். (௩௱௪)

மடங்கலி றத்தலு மாயையின் வெல்லுவ
லென்றும தித்தும றச்சூரன்
தடஞ்சிறை துன்றிய சக்கர வாகவு
ருக்கொடு சாகர நீர்பொங்க
நெடுங்கிரி யின்சிக ரம்புடை சிந்தநி
ரைத்தரு நுண்டுக ளாய்ப்போத
அடங்கரு வெப்பினெ ழுந்தன னார்த்தன
னண்டக டாகமு டைந்தென்ன.

(இ - ள்.) தனது சிங்கவூர்தி மாண்டுபோயவுடன், மறமிக்க அச் சூரபதுமன் இனி இவனை யான் என் மாயையாலே வெல்லுவேன் என்று துணிந்து, பெரியசிறகுகள் பொருந்தியதொரு சக்கரவாகப்புள் வடிவங் கொண்டு, கடலின்நீர் பொங்கவும், நெடியமலைகளின் குவடுகள்பக்கத்தே சரிந்துவீழவும் நிரல்பட்டமரங்கள் துகள்பட்டுப் பறப்பவும் அடங்கு தலில்லாத சினத்தோடு வானத்தே பரந்தெழுந்து அண்டமுகடு உடைத் தது என்று கூறும்படி பேராரவாரஞ் செய்தனன்.

(வி - ம்.) மடங்கல் - சிங்கம். சக்கரவாகம் - ஒருபறவை. வெப்பு - சினம். எழுந்தனன் - முற்றெச்சம். (௩௱௫)

வீரர்கள் கைப்படை மூக்கின்மு ரிப்பன்வி
ழுத்தகு பூதர்த மைக்கொத்தி
ஆரவி ழுங்குவ னேடுவன் மீள்வன
லைப்பனெ டுஞ்சிற கான்மான்றேர்
போரவ னின்னணை மாற்றுதல் கண்டபு
ராந்தகன் மைந்தன்கு றிப்பால்வெவ்
வாரண வேந்தனை நோக்கின னுய்ந்தன
னென்றவன் மாமயி லாய்நின்றான்.

(இ - ள்.) ஆரவாரித்த சூரபதுமன் தனது மூக்கினாலே வீரர்களு டைய கையின் கண்ணுள்ள படைக்கலன்களை முறிப்பான். சிறப்பாற் றகுதிபெற்ற பூதர்களைக்கொத்தி வயிறுரவிழுங்குவான். திசைதோறும் ஓடாநிற்பன், மீண்டு வருகுவன். நெடிய தன் சிறகுகளாலே குதிரை

பூட்டிய தேர்களைச் சிதறச்செய்வன். அவ்வசுரன் இவ்வாறு போராற்று தலைக் கண்ட சிவபெருமான்திருமகன் குறிப்பால் வெள்ளானையுடைய இந்திரனை நோக்கினன்; எம்பெருமானுடைய திருக்குறிப்பினையுணர்ந்து கொண்ட அவ்விந்திரன் யான்உய்ந்தேன் என்று மகிழ்ந்து பெரியதொரு மயிலாகி நின்றனன்.

(வி - ம்.) விழு - சிறப்பு. மான் - குதிரை. புராந்தகன் - சிவ பெருமான். வெள்வாரணம்-வெள்ளானை. வேந்தன்-இந்திரன். (௫௭௬)

தன்னொரு வாகன மென்னவி ளங்குச
　　தக்கிரு தென்னு மயிற்போத்து
மன்னிய தன்கொடி வாயினி றுத்துவ
　　ழுங்குவ தென்னமு ழங்கிக்கண்
துன்னிய வார்சிறை முக்கினு ளர்ந்துசு
　　ழன்றுந டித்தெதி ரேநிற்ப
முன்னவ னூர்ந்துமு டுக்கின னத்திற
　　மூர்க்கன றிந்தெதிர் கொண்டானால்.

(இ - ள்) தனது ஒப்பற்ற ஊர்தியாகிய மயில்போன்று திகழ் கின்ற இந்திரன் என்னும் அவ்வாண்மயில் நிலைபெற்ற தனதுகொடியின் கண் நிறுத்தப்பட்ட இடிபோன்று ஆரவாரித்துக் கண்(புள்ளி)கள் பொருந்திய நெடியதன் தோகையை அலகானே கோதிச் சுழன்று கூத்தாடி எதிரேவந்து நிற்ப, அதன்மேலேறி எம்பெருமான் அதனை விரையச் செலுத்தினன். அதுகண்ட அத்தீயோன் எம்பெருமான் முன் வந்து எதிர்த்தனன்.

(வி - ம்.) சதக்கிருது - இந்திரன். தன் கொடி....வழங்குவது-இடி. முன்னவன் - முருகன், மூர்க்கன் - சூரபதுமன். (௫௭௭)

காலினு ளர்ந்துவள் வாயினெ றிந்துக
　　றித்திற கூடுதி ரஞ்சோரச்
சாலவி ரண்டும மர்த்துழி நேமித
　　லைச்சிறு தோகைப றித்தெற்ற
நீலநி றக்குரு கெய்த்தது கண்டுநெ
　　டுங்கணை பல்லவு டம்பெங்கும்
வேலவனேவமெ லிந்துகு லைத்தவை
　　வீழ்த்துவி ரைந்தது விண்ணெங்கும்.

(இ - ள்.) முருகனூர்தியாகிய மயிலும் சூரபதுமனாகிய சக்கர வாகமும்; ஒன்றனை ஒன்று அலகானே புடைத்தும் கறித்தும் சிறகுகளின் ஊடே குருதிகொப்பளிக்கப் போராற்றுங்கால் சக்கரவாகப்புள்மயிலின் உச்சிக் கொண்டையின் கண்ணுள்ள தோகையைப் பறித்துப் புடைத் தலானே நீலநிறமுடைய அம்மயில் இளைப்புற்றது. அதுகண்ட முருகப் பெருமான் நெடியகணை பலவற்றை அச்சக்கரவாகத்தின் உடம்பெங்கும்

செருக, அச்சக்கரவாகம் மெலிந்து அக்கணைகளைக் குலைத்து வீழ்த்து விரைந்து வானமெங்கும் பறந்து திரிந்தது.

(வி - ம்) கறித்து — கடித்து. அமர்த்துழி - போர்செய்யுங்கால். நேமி — சக்கரவாகம். நீலநிறக்குருகு என்றது மயிலை. குருகு - பறவைப் பொது. (திஎஅ)

ஏகுழி யேகியி ருஞ்சம ராற்றவி
ஊத்திறை கைச்சிலை யைக்கீழ
வேகமொ டண்மவி ளங்கொளி நாந்தகம்
வீசியி றுப்பவி ழுந்தன்றால்
போகுயர் புள்ளுரு மண்ணுரு வாய்ப்புரை
யோனுல கெங்கும்வி ரிந்திட்டான்
வாகையி னன்கணை யேழ்விட நீர்வடி
வாயது மாற்றநீ ராயுற்றான்.

(இ - ள்.) எம்பெருமான் அச்சக்கரவாகம் சென்றவிடந்தோறுஞ் சென்று பெரிய போரினைச் செய்தலானே அஃது இளைப்புற்றுப் பெருமானுடைய வில்லினை முறித்தற்கு விரைந்து அணுகாநிற்ப; எம்பெருமான் விளங்கும் ஒளியுடைய வாளைவீசி வெட்ட அப்பறவை நிலத்தின் மேல் வீழ்ந்தது. வீழ்ந்தவளவிலே நீண்டுயர்ந்த சக்கரவாகப்பறவை உருவம் மண்ணுருவாக மாற அக்கீழோன் உலகெங்கும் விரியலானான். வெற்றிவேற் கடவுள் ஏழுகணைகளை ஏவ அவை நீர்வடிவமாகி அம் மண்ணை மறைத்தன. அந்நீரை மாற்றுதற்குச் சூரபதுமன் நீர்வடிவமாக மாறினன்.

(வி - ம்.) ஆய் என்னும் எச்சத்தை ஆக எனச் செயவெனெச்சமாக்குக. இருஞ்சமர் — பெரியபோர். அண்ம — அணுக. நாந்தகம் - வாள். போகு - நீண்ட. புரை - குற்றம். வாகையினன் — முருகன். (இஎக)

வாளிக ணூறுவி டக்கன லாயது
மாற்றவ யங்கெரி யாய்மொய்த்தான்
ஆள்கணை யாயிர மேவம ருத்துரு
வாயது மாற்றம ருத்தானான்
நீள்கணை யாயிர நூறுது ரப்பதெ
டும்பணி யின்குல மாயுண்டு
மீள்வது செய்தன வின்னண மீரு
நாள்விளி யாதுடல் வோன்பின்னும்.

(இ - ள்.) அந்நீரினை மாற்றுதற்குப் பெருமான் நூறுகணைகளை ஏவ அவைகள் நெருப்பாயின. அந்நெருப்பினை மாற்ற அசுரன் விளங்கா நின்ற நெருப்புருவாகிப் படர்ந்தான். பெருமான் அதனைமாற்றத் தான் ஆளாநின்ற ஆயிரம் அம்புகளை ஏவ அவை காற்றுருவாயின. அக்காற்றை

மாற்றுதற்கு அவ்வசுரன் தானும் காற்றுருயினன். இறைவன் அக்காற்றினை மாற்ற நெடிய கணைகள் நூருயிரம் செலுத்த அவை நீண்ட பாம்புகளாகி அக்காற்றினையுண்டு மீள்வனவாயின. இவ்வாறு நான்குநாள் இடையாமே போர் ஆற்றும் அவ்வவுணன் பின்னரும்.

(வி - ம்.) கனலாய், மருத்துருவாய், சூலமாய் என்பவற்றுள் ஆய் என்னும் எச்சங்களைச் செயவெனெச்சமாக்குக. (௯௮0)

### வேறு

மூவர் தேவர் யாரு மாக மொய்க்கு மோர்பு றத்தினில்
மேவு தன்னி னத்த ராய்வி ராவு மோர்பு றத்தினில்
பாவு கோள்க ளுள்க ளாய்ப்ப றம்பு போர்பு றத்தினில்
தூவு கின்ற மேக மாய்த்தொ டங்கு மோர்பு றத்தினில்.

(இ - ள்.) பிரமன் திருமால் உருத்திரன் என்னும் மூன்று கடவுளரும் இந்திரன் முதலிய தேவர்களும் ஆக உருவங்கொண்டு ஒரு பக்கத்திலே வந்து மொய்ப்பான். மற்றொருபுறத்தே எண்ணிலாத அசுரராய் உருவங்கொண்டுவந்து கலப்பான். மற்றொரு பக்கத்தே பரவுகின்ற ஞாயிறுமுதலிய கோள்களாகவும் அசுவினி முதலிய மீன்களாகவும் உருக்கொண்டு படராநிற்பன். மற்றொருபக்கத்தே நீர்துளிக்கும் முகில்களாய் வரத்தொடங்குவன்.

(வி - ம்.) மூவர் - பிரமன் முதலிய கடவுளர். தன்னினம் - அசுரவினம். கோள் - ஞாயிறுமுதலியன. நாள் - மீன். (௯௮௧)

சார தங்கள் பேயி னங்கள் சார்வி டங்கண் மாதிர
வார ணங்கள் வாள ராவி னங்கள் வாள ரிக்குலம்
வீர மல்கு சிம்பு ளாகி வேறு வேறி டந்தொறும்
ஆர வெண்ணின் மாயை கொண்ட மர்த்தொ ழிற்க ணின்றனன்.

(இ - ள்.) பின்னரும் பூதங்களும் பேயினங்களும், சேராநின்ற நஞ்சுகளும் திசையானைகளும் வாள்போலும் கொடிய பாம்பினங்களும் வாள்போலும் கொடிய சிங்கக்கூட்டமும் மறமிக்க சிம்புட்பறவைகளும் ஆக உருவங்கொண்டு வெவ்வேறிடங்களிலே நிரம்ப எண்ணற்ற மாயச்செயலை மேற்கொண்டு போர்த்தொழிலிலே நிலைபெற்றனன்.

(வி - ம்.) சாரதம் - பூதம். மாதிரவாரணம் - திசையானை. வாளரா வாளரி இரண்டும் உவமைத்தொகை. (௯௮௨)

இலக்க வாளி யெம்பி ரானெ டுத்து விற்றொ டுத்தனன்
இலக்க மாகி யவ்வொ ரம்பெ ழுந்து சென்று வேற்படைக்
கிலக்க மான சூரன் மாயை யாவு மட்டு மீண்டன
இலக்கர் வீரர் பூதர் தேவர் யாவ ரும்வி யப்பவே.

(இ - ள்.) அதுகண்ட எம்பிரான் நூருயிரம் அம்புகளை எடுத்து வில்லிலே தொடுத்தேவினன். அவை ஒவ்வொன்றும் தனித்தனி

*நாறுயிரம் நாறுயிரம் அம்புகளாகப் பெற்று இலக்கமறவரும் எட்டு மறவரும் பூதரும் தேவரும் இன்னோரன்ன பிறரும் வியக்கும்படி எம் பெருமானுடைய வேற்படைக்கு இலக்காகவிருக்கின்ற சூரபதுமனியற்றிய மாயைச் செயலனைத்தையும் மாய்த்து மீளாநின்றன.*

(வி - ம்.) *இலக்கம் - நாறுயிரம். அட்டு - அழித்து.* (௫௮௩)

**தனித்து நின்ற சூர னைத்த டங்கை பன்னி ரண்டுளான்**
**அனித்த யாக்கை நித்த மென்ற னந்த மாயை செய்கினும்**
**துனித்து நிற்றி நின்றன் மாயை முற்று றத்து ரந்தனம்**
**இனித்தெ ரிக்கு மெம்மி யற்கை காண்டி யென்று வீறினன்.**

(இ - ள்.) *மாயை அழிதலானே தமியனாய் நின்ற சூரபதுமனைப் பன்னிருகைப் பெருமான் நோக்கி "ஏடா! நீ நிலையுதலில்லாத உடலை நிலையுதலுடையதாக மயங்கி அதனை ஓம்புதற்கு எல்லையற்ற மாயச் செயலைச் செய்தாலும் அவை அழிந்துபோம்படி அகற்றினேம். மீண்டும் பகைத்தே நிற்கின்றனை; அளியை நின்பாற் கருணையானே இனியாம் நினக்குணர்த்துகின்ற எம்முடைய இயல்பினையும் காண்பாயாக என்று திருவாய்மலர்ந்தருளித் தன்னியல்பின்கண் மேம்படாநின்றனன்.*

(வி - ம்.) *அனித்தம்-நிலையுதலில்லாதது. நித்தம்-நிலையுடையது. அனந்தம் - முடிவற்ற. துணித்து - பகைத்து. தெரிக்கும் - உணர்த்தும். வீறினன் - மேம்பட்டான்.* (௫௮௪)

**மாய னாதி தேவ ரும்ம யங்கு மற்று லோகமும்**
**ஆய வெண்ணி லண்ட மும்ம னைத்து மங்க மாயுற**
**மேய வெம்பி ரானி யற்கை மெய்யை யஞ்ச விண்ணவர்**
**தூய னஞ்ச லஞ்ச லென்று தூம லர்க்கை காட்டினன்.**

(இ - ள்.) *திருமால் முதலிய தேவர்களும் சிவலோக முதலிய உலகங்களும் இவற்றிற்கு இடமான எண்ணிறந்த அண்டங்களும் பிறவுமாகிய எல்லாப்பொருளும் தனக்கு உறுப்பாகப் பொருந்தப் பெருருக்கொண்ட எம்மையாளுடையானது இயற்கை உருவத்தினைக் கண்ட தேவர்கள் பெரிதும் அஞ்சாநிற்ப, அவர் நிலைமைகண்ட பெருமான் தனது தூயமலர்போன்ற அபயக்கையினைக் காட்டி, அஞ்சற்க! அஞ்சற்க! என்று அபயமளித்தருளினன்.*

(வி - ம்) *மாயன் - முதலியோர் உயிரினம். உலகம் உயிரில்லன. எனவே இருவகைப் பொருளும் அங்கம் என்றவாறுயிற்று. இறைவன் அங்கி என்க.* (௫௮௫)

**விம்மி தத்த னாகி வெய்ய சூர னிற்ப மெய்யருள்**
**செம்மல் சற்ற ளிப்ப வுண்மை கண்டு செப்பு மம்மவோ**
**அம்மை யெத்த வங்க ளாற்றி னேன்கொல் மாயை யாமுரு**
**மும்மை யுங்க டந்த வன்மு முத்த மெய்தெ ரிப்பவே.**

(இ - ள்.) சூரபதுமன் மருட்கையுடையனாய் ஒன்றுந்தோன்றாமல் நிற்ப உயிர்கட்கு மெய்யுணர்ச்சியை அருளிக்காக்கும் முழுமுதல்வனாகிய எம்பெருமான் அவ்வசுரனுக்கு ஒருசிறிது மெய்யுணர்ச்சியை வழங்கியருள, அவ்வளவில் அவன் சிறிது மெய்யுணர்ந்து கூறுநிற்பவன், "அம்மா! எளியேன் முற்பிறப்பிலே எத்தகைய தவத்தைச் செய்தேனோ இறப்பெதிர்வு நிகழ்வு என்னும் முக்காலத்தும் மாயையாலாய உடம்பினைக் கடந்துநின்ற எம்பெருமான் தனது எல்லாந்தானேயாகிய பேரருட்டிருமேனியை எளியேனுக்கு இங்ஙனம் காட்டியருளுதற்கு.

(வி - ம்.) விம்மிதம் - மருட்கை. மெய்யுணர்ச்சியை அருள் செம்மல் என்க. மும்மை - காலமூன்று. முழுத்த - முழுமையான. (௫௮௬)

பால னென்றி கழ்ந்த தும்ப டுப்ப மிக்கி ரும்படை
மேல டர்ப்ப வுய்த்த தும்மெ லாம்வி ளங்கு தோத்திரம்
சால நல்கு பூசை யாத்த ழீஇயி னன்வி டைப்பனேல்
கோல மேனி காட்ட வல்ல னல்ல னென்கண் கொள்ளவே.

(இ - ள்.) ஐயகோ! எளியோன் இத்தகைய பெருமானென்றறியாது கெட்டேன் ஆயினும் அப்பெருமான், யான் சிறுவன் என்று இகழ்ந்ததனை வாழ்த்தாகவும், கொல்லுதற்பொருட்டு மிகப்பெரிய படைகளை ஏவிப் போர் செய்வித்ததனை, அன்போடு மிகவும் தனக்கியல்பான பேரருள் காரணமாக ஏற்றருளி எனக்கிப்பேற்றை அளித்தருளினான். இன்னும் யான் இவனைப் பகைப்பேனாயின் இத்தகைய எழிலுடைய அருட்டிருமேனியை என்கண்நிரம்ப எனக்குக் காட்டியருள்வான் அல்லன்.

(வி - ம்.) பாலன்-சிறுன். இகழ்ந்து தோத்திரமாகவும் அடர்ப்ப உய்த்தது பூசையாகவும் தழீஇயினன் எனநிரனிறையாகக் கொள்க. விடைத்தல் - பகைத்தல். (௫௮௭)

ஒருக ணத்தி லட்டு மீள வல்ல வும்பர் தம்பிரான்
பொருக ளத்து நேர லானெ னப்பு குந்த மர்த்ததென்
திருகு யிர்ச்செ ருக்க டர்த்த தல்ல தில்லை யிதுசேர்
முருகு கொப்ப ளித்த தார்மு குந்த னுக்கு மெய்துமோ.

(இ - ள்.) ஒருநொடிப் பொழுதிலே அனைத்தையும் அழித்துமீளும் வரம்பிலாற்றலுடைய தேவதேவன், எளியேனை ஒருபகைவனெனக் கருதி இப்போர்க்களத்திலே புகுந்து போர் ஆற்றியது, எளியேனுடைய மாறுபாடு பொருந்திய உயிரினது செருக்கினை அழித்தற்பொருட்டன்றி வேறு காரணமில்லை. இத்தகையபேறு, தன்பாலூறிய தேனைக் கொப்பளித்து வண்டுகட்கு வழங்கிய துளவமாலையணிந்த திருமாலுக்கும் வாய்த்தலரிதே.

(வி - ம்.) உம்பர் - தேவர். நேரலான் - பகைவன். திருகு - மாறுபாடு. சேர்முருகு : வினைத்தொகை. முருகு - தேன். முகுந்தன் - திருமால். (௫௮௮)

உளங்கொ ளாத விம்மி தத்தி னின்ன வோதி நின்றிடும்
வளங்கு லாவு சூரன் போத மாற்றி முன்னு ருக்கொடு
விளங்கி னுன்வி சாகன் போர்க்கு டைந்தி ழைத்த மாயையால்
துளங்கு வேன லேனெ னத்து ணிந்தொர் சூழ்ச்சி முன்னினன்.

(இ - ள்.) இவ்வாறெல்லாம் கூறி அறிவுவளம் வந்துற்ற சூரபதுமன் நெஞ்சங்கொள்ளாத மருட்கையோடு நின்றனனாக. அப்பொழுது எம்பெருமான் தானளித்தருளிய மெய்யுணர்வினை (மலபரிபாகமின்மையால்) மாற்றித் தான்கொண்ட பேருருவினையும் மறைத்துப் பண்டைய வடிவோடு திகழ்ந்தனன். மீண்டும் தனதியற்கையறிவு வந்தெய்தப் பெற்ற சூரபதுமன், ஓகோ! இம்முருகன் எனது போர்க்குடைந்தமையானே இத்தகையதொரு மாயையான் என்னை மயக்கினன் போலும். நன்றுநன்று இம்மாயையானே யான் அசையேன் என்று துணிந்து மீண்டும் ஒரு சூழ்ச்சி கருதினன்.

(வி - ம்.) வளம் - அறிவு வளம். போதம் - அறிவு. விசாகன் - முருகன். முன்னினன் - கருதினன். (௫௪௯)

பால னைக்கொ ணர்ந்த தேவர் தங்க ளைப்ப டுத்துமுன்
பால னைப்ப டுப்ப லென்று மந்தி ரம்ப டர்ந்தனன்
ஞால மாதி ரங்கள் வானு நள்ளி ருட்பி ழம்புற
ஆல மென்ன வெண்ணில் வாய்கை கொண்ட வாக்கை யாவனும்.

(இ - ள்.) என்னை அழித்தற்கு இச்சிறுவனை அழைத்துவந்த தேவர்களை முன்னர்க் கொன்றொழித்துப் பின்னர், இச்சிறுவனைக் கொல்லுவேன் என்று கருதி மந்திரங்கணித்தனன். மந்திரம் கணித்ததுணையானே நிலம் திசைகள் வானம் ஆகிய யாண்டும் செறிந்த இருள்திணியா நிற்ப, நஞ்சுபோன்ற எண்ணிறந்த வாய்களும் கைகளும் உடைய பேருடலையுடையனுய்.

(வி - ம்.) பாலன் - முருகன். படுத்து - கொன்று. படர்தல் - நினைதல். ஆலம் - நஞ்சு. (௫௫௦)

இருட்பி ழம்பி னூடு போந்தி றுப்ப முன்னு கின்றனன்
மருட்சி மிழ்ப்ப னுக்கு மாய னாதி யோர்க ளோதியால்
தெருட்சி கொண்ட றிந்த னர்தி கைத்து ளார்பெ யர்ந்திலார்
வெருட்சி கொண்டு விம்மி னர்வி சாக வென்று கூவுவார்.

(இ - ள்.) தன் மந்திரத்தானே தோன்றி உலகை மறைத்த அப் பேரிருட் பிழம்பினூடேசென்று தேவர்களைக் கொல்லக் கருதினன். ஆணவமலத்தின் கட்டினைக் குறைத்துக்கொண்ட திருமால்முதலிய தேவர்கள் தம்முடைய ஓதியாலே தெளிவடைந்து சூரபதுமன் கருதியதனை உணர்ந்து திகைத்தனர். அவ்விருட்பிழம்பினூடு இயக்கமிலராய் நின்று அச்சங்கொண்டு நெஞ்சம் விம்மி முருகா! முருகா! என்று ஓலமிடுவாராயினர்.

(வி - ம்.) மருள் - மலத்திற்கு ஆகுபெயர். அனுக்குதல் - தேய்த்தல். ஓதி - மூன்றுகால நிகழ்ச்சிகளையும் உணரும் அறிவு. (௲௬க)

பண்ட ணைப்ப டுத்த வர்மை பால வோல மாலமுண்
கண்ட னெற்றி யங்கி தந்த கந்த வோல மாமுகச்
சண்ட னைத்த டிந்த பிள்ளை தம்பி யோலம் வெய்யசூர்
மிண்டி னைத்த கர்க்க நின்ற வேல வோல மோலமே.

(இ - ள்.) பண்களைக் கீழ்ப்படுத்திய இனிய மொழியையுடைய உமையன்னையாரின் திருமகனே ஓலம்! நஞ்சுண்டகண்டன் நெற்றிக்கண்ணாகிய தீயருளிய கந்தவேளே! ஓலம். கயமுகாசுரனாகிய கொடியவனைக் கொன்றருளிய விநாயகப் பெருமானுடைய அருமைத்தம்பியே ஓலம். கொடிய இச்சூரபதுமனுடைய கொடுமையை அழிக்க வந்து நின்ற வேலனே! ஓலம், ஓலம்.

(வி - ம்.) ஓலம் - அஞ்சினோர் துணைவேண்டிக் கூவுமொருசொல். அங்கி - நெருப்பு மாமுகச்சண்டன் - கயமுகாசுரன். சூர் - சூரபதுமன். (௲௬உ)

மூல மாய வனைத்து மான மூல வோல மோலமே
கால மாய்க்க டந்து நின்ற கால வோல மோலமே
பால னுய்மு துக்கு றைந்த பால வோல மோலமே
வேல வோல மோல மென்ன யாவ ரும்வி ளித்தனர்.

(இ - ள்.) எல்லாப் பொருட்கும் வேராக எல்லாப் பொருளுமான முதல்வனே! ஓலம். ஓலம். காலமாகி அக்காலத்தையும் கடந்துநின்ற காலகாலனே! ஓலம், ஓலம். இளையனாயிருந்தே பேரறிவுப் பிழம்பாநிற்கின்ற முருகனே! ஓலம். ஓலம். வேற்படையோனே ஓலம், ஓலம் என்று அமரர் எல்லோரும் கூவினர்.

(வி - ம்.) மூலம்-வேர். கால-காலகாலனேஎன்க. முதுக்குறைவு-அறிவு. (௲௬௩)

ஊர்தி மஞ்ஞை யான வும்பர் கோன்ப ணிந்து காரிருள்
சார்தல் செய்து தேவ ராவி தான்ம டிப்ப வூடுசெல்
சூர்த டிந்தி டும்பை யாந்து ரப்ப நல்கு கென்றனன்
வார்த டக்கை வேற்ப டைம கிழ்ந்து நம்பி விட்டனன்,

(இ - ள்.) அப்பொழுது மயிலூர்தியாயிருக்கின்ற தேவேந்திரன் முருகப்பெருமானை வணங்கி "எம்பெருமானே! கரியஇருள் படரும்படி செய்து தேவர் உயிரை மாய்த்தற் பொருட்டு அவ்விருளூடே செல்லாநின்ற சூரபதுமனை இப்பொழுது கொன்று அடியேங்கள் துன்பத்தை விடும்படி திருவருள்புரிந்தருள்க என்றிரந்தனன். அதுகேட்ட எம்பெருமான் மகிழ்ந்து நெடிய பெரிய தன் திருக்கையிடத்தேயுள்ள வேற்படையை ஏவினன்,

(வி - ம்.) மஞ்ஞை - மயில். உம்பர்கோன் - இந்திரன். தான்: அசை. சூர் - சூரபதுமன். நம்பி - முருகன். (௩௬௯)

விடுக்கு முன்னர் மாயை நீவ வெய்ய சூரன் மாவடி
வெடுத்து நீர்க்க டற்கண் வேர்க ளீண்டு சாகை கீழ்மிசை
அடுத்த வைப்பெ லாம டர்த்த மூன்று தேவர் தங்களைப்
புடைத்து நிற்ப வங்கி கான்று போந்த வேற டிந்ததே.

(இ - ள்.) வேற்படையை விட்டவளவிலே மாயை விலக, கொடிய சூரபதுமன் மாமரத்தின் வடிவமெடுத்து நீரையுடைய கடலின்கண் வேர்களும் நெருங்கியகிளைகளும் ஆகிய உறுப்புக்களாலே கீழும்மேலும் உள்ள உலகங்களையெல்லாம் அழித்துச் சினந்து தேவர்களைப்புடைத்து நிற்புழி, தீக்கான்று சென்றவேற்படை அம்மாமரமாகிய சூரபதுமனைக் கொன்றது.

(வி - ம்.) நீவ - விலக. சாகை - கிளை. வைப்பு - இடம். அழன்று: சினந்து. (௩௭௦)

கொக்கு ருச்செ குத்த லுங்கு லாய தன்னு ருக்கொடு
தக்க தன்னு டைக்கி டந்த தாரை வாளு ரீஇயடப்
புக்க னன்பொ ருக்கெ னக்கி ழித்தி ரண்டு கூறதா
மைக்க டற்க ணிட்டு மீண்டு வள்ளல் கைத்த லத்ததே.

(இ - ள்.) மாமர்வுருவத்தை வேற்படை யழித்தவளவிலே சூர பதுமன் தன் இயற்கை வடிவத்தைக்கொண்டு தகுதியுடைய தனது உடைமேற்கிடந்த கூரியவாளினை உருவிப் போராற்றத் தொடங்கினன். அதுகண்ட வேற்படை ஞெரேலென அவனுடலிற் பாய்ந்து அதனை இரண்டு கூறுகப் பிளந்து கரியகடலிலே போகட்டுவிட்டு மீண்டுவந்து எம்பெருமானுடைய திருக்கையின்கண் எய்தியது.

(வி - ம்.) கொக்கு - மாமரம். செகுத்தல் - அழித்தல். உடை ஆடை. தாரை - கூர்மை. வள்ளல் - முருகன். (௩௭௧)

வேறு

அம்மையி லெண்ணில் கால மாற்றிய தவப்பே றெய்த
இம்மையி லிரண்டு கூறு மெழுந்துகுக் குடம யூர
விம்மித வுருவங் கொண்டு விண்ணவர் மருள வையம்
மும்மையுஞ் சிதர்ப்ப தென்ன முழங்கிமே லெழுந்த வன்றே.

(இ - ள்.) முற்பிறப்பிலே எண்ணிறந்தகாலம் நோற்ற நோன் பின் பயன்வந்து கைகூடுதலானே இப்பிறப்பின்கண் எடுத்த உடலின் இரண்டுகூறும் தனித்தனி எழுந்து வியத்தகு கோழிச்சேவலும் மயிலு மாக உருவங்கொண்டு தேவர்கள் வியப்பெய்த மூன்றுலகங்களையும் துகள்படச் சிதறுவனபோன்று ஆரவாரித்து அக்கடலினின்றும் மேலே எழுந்தன.

(வி - ம்.) அம்மை - மறுபிறப்பு. இம்மை - இப்பிறப்பு. குக்குடம் - கோழிச்சேவல். மயூரம் - மயில். மும்மைவையம் என்க. (ருகூஎ)

அருள்விழி சேர்த்த லோடு மாணவ மாதி மூன்றும்
ஒருவியுள் ளுருகி நிற்ப வூன்றலைப் பொடித்த புள்ளை
மருவுதி கொடியாய் நந்தம் வாம்பரித் தேர்மே லென்றுந்
திருவியூர் மஞ்ஞை நீத்தங் கெதிர்ந்தமா மயின்மேல் கொண்டு.

(இ - ள்.) அங்ஙனம் எழுந்த அப்பறவைகளின்மேல் திருவருள் விழி சாத்தியருளிய அளவிலே அவை தம்முடைய ஆணவம் மாயை கன்மம் என்னும் மூன்றுமலங்களையும் அகன்று நெஞ்சமுருகிநிற்ப எம்பெருமான் அவற்றுள் தலையின்கண் ஊனே கொண்டையாகவமைந்த கோழிச்சேவலை நோக்கி, 'நீ நம்முடைய தாவுகின்ற குதிரைபூட்டிய தேர்க்கண் நமது கொடியாக' என்றும் அமைவாயாக என்று இருத்தியருளிய பின்னர்த் தான் எழுந்தருளியிருக்கின்ற இந்திரனாகிய மயிலூர்தியை விடுத்து அங்கேநின்ற மயின்மேல் எழுந்தருளி.

(வி - ம்.) அருள்விழிசேர்த்தல் என்றது நயனதீக்கையை இருவி - இருத்தி. (ருகூஅ)

திரைக்கட லேழு மொன்றாய்ச் சென்றளாய்க் கலவிப் பொங்க
வரைத்திரள் பொடிக ளாக வானமீன் முகில்கள்சிந்த
நிரைத்தபல் லுலக மெல்லா நிலைதடு மாற வையன்
புரைத்தப லண்ட மெல்லாம் பொள்ளெனக் கடவி மீண்டான்.

(இ - ள்.) அலையையுடைய கடல்கள் ஏழும் ஒன்றாய்க் கரை கடந்து ஒன்றனோடொன்று அளாவிக் கலந்து பொங்காநிற்பவும், மலைக் கூட்டங்கள் துகள்படவும், விண்மீன்களும் முகில்களும் வீழவும், நிரல் பட்ட பல்வேறு உலகங்கள் அனைத்தும் தத்தம் நிலைதடுமாறாநிற்பவும் எம்பெருமான் உயரிய அண்டங்கள் பலவற்றினும் விரைந்து செலுத்தி மீண்டருளினன்.

(வி - ம்.) திரைக்கடல் : இரண்டாவதும் பயனும் உடன்தொக்க தொகை. கலவி - கலந்து. ஐயன் - முதல்வன். புரைத்த - உயர்ந்த. பொள்ளென - விரைவுக் குறிப்பு. (ருகூகூ)

இருதிறத் தேங்கள் யாமென் றிருவரு மறியா வண்ணம்
ஒருதிறத் துடலி னூற்றெட் டுகம்பெரும் போகந் துய்த்தல்
கருதுதன் மறத்த லாதிக் கடனெலா மொருங்கு கூட்டிப்
பிரிவுசெய் தாண்ட வள்ளல் பெருமையார் கணிக்கற் பாலார்.

(இ - ள்.) யாங்கள் இருவரும் இரண்டுயிர்கள் என்னுமுண்மையை அவ்விருவருமே அறியாதபடி, ஓரோவோர் உடலின்கண் அமைந்து நூற்றெட்டு ஊழிகள் பெரிய இன்பத்தை நுகர்தலும் நினைத்தலும் மறத்தலும் முதலிய உயிர்க் கடமையெல்லாம் இருவர்க்கும் ஒன்றாகப் பொருத்தி ஊழற்றபொழுது இருவராகப் பிரித்து ஆண்டருளிய எம் பெருமானுடைய பெருமையை அளவிட யாரே வல்லுநர்,

(வி - ம்.) ஒருவரும் கணித்தற் கியலாது என்றவாறு. (௧௦௦)

சூரனே பன்ம னென்னச் சொலத்தகு மிருவர் பன்னுள்
ஒருட லத்தி யாரு மொருவனே யென்ன வாழ்ந்தோர்
ஈருட லிருவ ரென்ன விருப்பரேல் விரிந்த வையத்
தாருடங் கிருந்தோ ரூழ்வந் தடுப்புறிற் பிரியா ரம்மா.

(இ - ள்) சூரன் என்றும் பதுமன் என்றும் இருவராகக் கூறத் தகுந்த இருவர் ஒரோவோர் உடலின்கணிருந்து எத்தகையோரும் ஒருவனே என்று கருதும்படி பல்லூழிவாழ்ந்தவர் அவ்வூழ்அற்ற பொழுதிலேயே இரண்டுடலையுடைய இருவரே என்று யாவரும் உணரும்படி பிரிந்து இருப்பராயின் உலகின்கண் பிரிவுசெய்தற்குரிய ஊழ்வந்துற்ற காலத்துப் பிரியாமல் யாவரே கூடிவாழ்ந்தோர்? ஒருவருமிலர்.

(வி - ம்.) வாழ்ந்தோர் : வினையாலணையும் பெயர். ஒருவருமிலர் என்பது குறிப்பெச்சம். அம்மா : ஈற்றசை. (௧௦௧)

தேவரை யளித்துத் தீய வவுணரைச் செகுப்பச் சாபம்
மேவிய தன்று பின்னர் விரவிய வவுணர்க் காத்துத்
தேவரை யலைப்ப வாழ்க்கை தேகமோ டொழிந்த தென்றால்
யாவர்கண் மாட்டு மின்னுங் கியற்றுதன் முறைமைத் தன்றே.

(இ - ள்.) சூரனும் பதுமனும் பண்டு தேவரைப் பாதுகாத்துக் கொடிய அவுணரைக் கோறலானே சாபத்திற்கு ஆளாயினர். பின்னர் தம்மோடு கூடிய அசுரரைக் காத்துத் தேவர்களைத் துன்புறுத்தலானே தாம் பெற்றுள்ள வாழ்க்கையோடு உடலும் அழிந்தது; என்னுமிடத்தே எத்திறத்தாரிடத்தும் இங்கிழைத்தல் முறையன்றென்பது உணரலாம்.

(வி - ம்.) செகுப்ப - கொல்ல. அன்று - பண்டைக்காலத்து. யாவர் - யார். இன்னுங்கு - தீமை. (௧௦௨)

அடைக்கலம் புகுவின் னோரை யாதரித் தவுணர்க் காதக்
கடப்பருஞ் சாபம் பெற்றார் கடவுளர்க் கிடும்பை யேய்த்துப்
படைக்கல மிறைமேற் றூண்டிப் பழித்துமெய் வாழ்வு பெற்றார்
விடைப்பரு வினையி னுக்கம் யாவரே விளங்கக் காண்பார்.

(இ - ள்.) தம்பால் தஞ்சம்புகுந்த தேவர்களைப் பாதுகாத்து அசுரரைக் கொல்லக் கடத்தற்கியலாத சாபம்பெற்றனர். தேவர்கட்குத் துன்பம் விளைத்து மேலும் இறைவன்மேல் படைக்கலங்களைச் செலுத்தியும் அவனை இகழ்ந்தும் மெய்வாழ்வினை எய்தினர். இங்ஙனமாகலின் அகற்றலரிய ஊழ்வினையின் செயற்கு யார்தான் விளக்கங்கூற வல்லுநர்.

(வி - ம்.) ஊழ்க்கு "நல்லவையெல்லாஅந் தீயவாம் தீயவும் நல்லவாம்" என்னுந் திருக்குறட் கருத்தை இச்செய்யுள் தழுவி நிற்றல் உணர்க. நல்லதற்கு நலனும் தீயதற்குத் தீமையும் என்னும் வரையறையும் ஊழின்பாலிலதாகலின் அதற்கு விளக்கங்காண்டல் இயலாதென்பதாம். (௧௦௩)

மண்டிய சிறகர்ப் புள்ளாய் வயங்கிய புலவர் தம்மைப்
பண்டைய வுருவங் கொள்ளப் பணித்தனன் பறப்பை யாகி
விண்டன ரமரர் யாரும் விரைமலர் மாரி தூர்த்துப்
புண்டரீ கத்தாள் போற்றிப் பணிந்துபே ருவகை பூத்தார்.

(இ - ள்.) *அச்சத்தானே சிறகுகளடர்ந்த பறவைகளாய் மாறி விளங்கிய அமரர்களை எம்பெருமான் முன்னைய உருவங்கொள்ளும்படி அருள்புரிந்தனன். முன்னர்ப் பறவைகளாகி ஓடிஒளித்த தேவரனைவரும் தம்முருவுடன் வெளிப்பட்டு மணமுடைய மலர்மாரி பொழிந்து எம்பெருமானுடைய செந்தாமரைமலர் போன்ற திருவடிகளை வாழ்த்தி வணங்கிப் பெருமகிழ்ச்சிகொண்டு பொலிவுற்றனர்.*

(வி - ம்.) *மண்டிய - அடர்ந்த. புலவர் - தேவர். பறப்பை - பறவை. விண்டனர் - முற்றெச்சம். விரை - மணம். புண்டரீகம் - தாமரை.* (கூ0ச)

போரிடை விழுந்த பூதர் தங்களை யெழுப்பிப் பொல்லாச்
சூரன்முன் கவர்ந்த தேவர் தொல்வள முழுதுந் தன்பால்
சாருற வழைத்து வீர வாகுவாற் சயந்த னேடும்
ஆரும்விண் ணவர்தங் காவ லகற்றிநீ ரிறையை நோக்கி.

(இ - ள்.) *சூரபதுமனேடு ஆற்றியபோரின்கண் மாண்டபூதர்களை உயிர்ப்பித்தருளித் தீமையுடைய சூரபதுமன் பண்டுகவர்ந்துகொண்ட தேவருடைய பழமையான செல்வங்களைத் தனது திருமுன்னர்க் கொணர்வித்துப் பின்னர் வீரவாகுவினலே சிறைக்கோட்டத்தே வதிந்த சயந்தன் முதலியோரை விடுவித்துப் பின்னர் வருணனைநோக்கி.*

(வி - ம்.) *சூரன் - சூரபதுமன். சயந்தன்-இந்திரன்மகன். காவல் - சிறை. நீரிறை - வருணன்.* (கூ0ரு)

அவுணர்கோ னகர மான மகேந்திர மழிக்க வேவி
உவணமேக் குயர்த்தோ னுதி யும்பரோ டாங்குத் தீர்ந்து
பவனவே கத்தின் முந்தும் படர்சிறை மஞ்ஞை யூர்ந்து
புவனமேத் தெடுக்குஞ் செவ்வேள் பொருவருஞ் செந்தில் புக்கான்.

(இ - ள்.) *சூரபதுமனுடைய நகரமான மகேந்திரத்தை அழிக்கும்படி பணித்துக் கருடக்கொடியை மிகவும் உயர்த்திய திருமால் முதலிய தேவரோடு அவணின்றும் புறப்பட்டுக் காற்றினும் விரைந்துசெல்லும் விரிந்த சிறகினையுடைய மயிலைச்செலுத்தி உலகெலாம் வாழ்த்தும் எம்பெருமான் ஒப்பற்ற திருச்செந்திலை எய்தினன்.*

(வி - ம்.) *அவுணர்கோன் - சூரபதுமன். உவணம்-கருடக்கொடி. உம்பர் - தேவர். பவனம் - காற்று.* (கூ0கூ)

தானவர் கரந்தி யாங்குத் தவிரினுந் துருவி மீண்டு
ஞானநா யகற்குக் கூறி நலித்துமென் றகன்றுன் போல

மீனுளர் கடலிற் பட்டு வெய்யவன் மறைந்தா னன்பின்
வானவர் கந்த வேளை வரன்முறை பூசை செய்தார்.

(இ - ள்.) அசுரர் மறைந்து எவ்விடத்து உறையினும் அவரைத் தேடிக்கண்டு மெய்யறிவுடைய முழுமுதல்வனுக்கு அறிவித்து அழிப்பிப்பேம் என்று கருதிப் போவான்போன்று ஞாயிற்றுத்தேவன் மீன்கள் திரிதரும் கடலின்கண் வீழ்ந்து மறைந்தருளினன். தேவர்கள் கந்தப் பெருமானை வரலாற்றுமுறையானே வழிபாடு செய்தனர்.

(வி - ம்.) தானவர் - அசுரர். தவிர்தல் - உறைதல். துருவி - தேடி. ஞானநாயகன் - முருகன். வெய்யவன் - ஞாயிறு. (௩0௯)

தாவுமா விரதந் தூண்டித் தரணிவந் தெழுத லோடும்
ஆவயிற் கந்த வேளு மமலனைப் பூசை யாற்றித்
தேவர்கண் முதலோர் சூழத் திருப்பரங் குன்றம் புக்கான்
காவல்செய் மகவான் றாழ்ந்து கன்னியை மணக்க வென்றான்.

(இ - ள்.) தாவுகின்ற குதிரைபூட்டிய தனது தேரினைத் தூண்டிக் கொண்டுவந்து மறுநாள் ஞாயிறு தோன்றிய வளவிலே அத்திருச் செந்திலின்கண் முருகப்பெருமானும் சிவபெருமானை வழிபாடுசெய்து பின்னர்த் தேவர்கள் முதலியோர் தன்னைப் புடைசூழ்ந்துவரத் திருப்பரங்குன்றத்தே எழுந்தருளினன். பாதுகாத்தற்றொழிலைச் செய்யும் இந்திரன் எம்பெருமானை வணங்கித் தன் திருமகளாகிய தேவசேனையைத் திருமணம் புரிந்தருளும்படி இரந்தனன்.

(வி - ம்.) தரணி - ஞாயிறு. ஆவயின் - அவ்விடத்தே. அமலன் - சிவபெருமான். மகவான் - இந்திரன். கன்னி - தேவசேனை. (௩0௮)

தூதுவர் தம்மை விட்டான் றுனைமுலை மகளைக் கொண்டு
மேதகு சசிமான் போந்தாள் விறன்முசு குந்தன் போந்தான்
ஆதிநா யகனுந் தானே யறிந்துபல் கணங்கள் சூழ
மாதொடும் போந்தான் வைவேல் வள்ளலும் வதுவை செய்தான்.

(இ - ள்.) இந்திரன் தூதுவரைப்போக்க மேன்மையுடைய இந்திராணி செய்தியுணர்ந்து தேவசேனையை அழைத்துக்கொண்டு திருப்பரங்குன்றத்திற்கு வந்தனள். வெற்றியுடைய முசுகுந்தனும் வந்தனன். சிவபெருமானும் இச்செய்தியையுணர்ந்து பலவாகிய சிவகணங்கள் புடைசூழ உமையம்மையாரோடு வந்துற்றனன். கூரிய வேற்படையேந்திய முருகப்பெருமானும் தேவசேனையைத் திருமணம் புரிந்தருளினான்.

(வி - ம்.) மகள் - தேவசேனை. விறல் - வெற்றி. முசுகுந்தன் - சக்கரவர்த்திகளில் ஒருவன். ஆதிநாயகன் - சிவபெருமான். மாது - உமை. (௩0௧)

சிலபகல் கழிந்த பின்றைத் திருப்பரங் குன்றி னீங்கி
இலகுவிண் ணுலக மாக்கி யிந்திரற் கரசு நல்கிப்

பிறரையுந் தத்தம் வைப்பிற் படர்தர வேவிப் பூதர்
குலவிய வீரர் சூழக் குறுகினன் கந்த வெற்பு.

(இ-ள்.) இவ்வாறு திருப்பரங்குன்றத்தே சிலநாள் கழிந்த பின்னர் அம்மலையினின்றும் அகன்று விளங்குகின்ற வானுலகத்தைச் சீர்திருத்த இந்திரனை ஆளும்படி பணித்துப் பிறதேவரையும் அவரவர் நாட்டிலே செலுத்திப் பின்னர் தன்னோடு குலாவிய பூதரும்வீரரும் படைசூழக் கந்தமாதன மலையை எய்தினன்.

(வி-ம்.) வைப்பு - நாடு. கந்தவெற்பு - கந்தமாதனமலை. (சுக0)

குவிமுலைக் களிநல் யானை கோட்டுமண் கொள்ளப் பட்ட
சவிமணி மார்பிற் செவ்வே லுடையலோ டமர்ந்து சின்னாள்
அவளையங் கிருவிக் கொண்ட வமரர்கள் வளத்தி னோடும்
புவிபுகழ் தணிகைக் குன்றம் போந்துவீற் றிருந்தா னன்றே.

(இ-ள்.) தேவசேனையின் குவிந்த முலைகளாகிய யானைக்கோடுகளாலே குத்தப்பட்ட ஒளிமணியுடைய மார்பையுடையனாய் முருகவேள் அத்தேவசேனையோடு சிலநாள் உறைந்து பின்னர் அவளை அக்கந்தமாதனத்திலேயே இருக்கச்செய்து தான் சூரபதுமனிடத்திருந்து மீட்டுக்கொண்ட பெருஞ் செல்வத்தோடு உலகம் புகழ்தற்குக் காரணமான திருத்தணிகை மலையினை எய்தி வீற்றிருந்தருளினன்.

(வி-ம்.) கோட்டுமண்கொள்ளல்-கோட்டாற் குத்திமண்கோடல். இச்செயல் குத்துதல் என்னும் தொழிற்பொருட்டாய் நின்றது. (சுகக)

பொருவில்வை குந்த மாதிப் புலவர்க ணகரந் தோறும்
ஒருவுறி னமையா வாக வுற்றபல் வளங்க ளென்னும்
திருவெலா நிறைந்த வாற்றாற் சீபரி பூர ணப்பேர்
மருவிய தென்ப வேற்கை வள்ளலார் தணிகைக் குன்றம்.

(இ-ள்.) ஒப்பற்ற வைகுந்தமுதலிய தேவர்கள் நகரங்கடோறும் நீங்கின் அமையாதனவாக வந்தெய்திய பல்வகைப்பட்ட வளங்கள் என்கிற செல்வமெலாம் வந்துநிறைந்த காரணத்தால் வேலேந்திய கையையுடைய வள்ளற் பெருமான் வீற்றிருக்கும் திருத்தணிகைமலை சீபரிபூரணமலை என்னும் அழகிய பெயரை உடைத்தாயிற்று என்று சான்றோர் கூறுகிற்பர்.

(வி-ம்.) பொருவு - ஒப்பு. திரு - செல்வம். வேற்கைவள்ளல் - முருகன். (சுகஉ)

கந்தரந் தோறுமின் னோர்கள் வளமெலாங் கதுவுந் தோற்றம்
எந்தைவேற் குமரப் புத்தே ளிருந்தரு டணிகைக் குன்றில்
முந்துபல் வளத்தோ டொப்ப முதிர்தவம் புரிதல் போன்று
நந்தினல் வளத்தை யஞ்சிக் கரந்ததும் போன்ற தன்றே.

(இ - ள்.) மலைதோறும் தேவர்கள் வளமெல்லாம் நிறைந்துள்ள காட்சி எம்பெருமானாகிய முருகக்கடவுள் எழுந்தருளிய திருத்தணிகை மலையின்கண் முதன்மையுடைய பலவாகிய வளத்தைத் தாமும் நுகர்தல் வேண்டி முதிர்ந்த தவஞ் செய்திருத்தலை ஒத்தது. இனி அத்தணிகை வளத்தைக் கண்டஞ்சி வளமெலாம் மலைதோறுஞ் சென்று மறைந்துள்ளன என்றலும் ஆம்.

(வி - ம்.) கந்தரம் - மலை. கஞலுதல் - நிரம்பியிருத்தல். புத்தேள் - தெய்வம். அந்தில் - அவ்விடத்துள்ள. தோற்றம் தவம்புரிவது போன்றது. பின்னும் அஞ்சிக் கரந்ததும் போன்றது என்க. (கககூ)

தீயவர் புரத்திற் பட்ட செயிர்கழீஇப் புனித மெய்த
ஆயிடை வதிதல் போல வமரர்கள் வெறுக்கை முற்றும்
பாயின வண்ணஞ் சொற்றும் பங்கயன் முதலோர் யாரும்
மேயினர் தவங்க ளாற்றி மீட்டனர் போதல் சொல்வாம்.

(இ - ள்.) தேவர்கள் செல்வமனைத்தும் தீயோராகிய அசுரர் நகரத்தின்கட் கிடந்தமையானே தமக்குண்டாய குற்றத்தைப்போக்கித் தூய்மை பெறுதற்குக் கருதி அத் திருத்தணிகைமலையின்கண் வந்து பரவிய தன்மையை இதுகாறுங் கூறினோம். இனி, பிரமன் முதலிய தேவர் பலரும் அத்திருத்தணிகைமலையினை எய்தித் தவம்பல செய்து மீண்டு போதலைக் கூறுவேம் கேண்மின்.

(வி - ம்.) தீயவர் - அசுரர். செயிர் - குற்றம். புனிதம்-தூய்மை வெறுக்கை - செல்வம். பாயின - பரவிய. சொற்றும் - கூறினோம். மேயினர், மீட்டனர் இரண்டும் முற்றெச்சம். இது சூதமுனிவர் கூற்று. (கஉ0)

ஸ்ரீபரிபூரண காமப் படலம் முற்றிற்று.

( ஆகத் திருவிருத்தம்—உ000 )

இப்பகுதியில்

## சீபரிபூரண நாமப் படலம்

முற்றும்.

---

அடுத்த பகுதியில்

## பிரமனருள்பெறு படலம்

தொடங்கும்.